ஓம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மணிவாசகப் பெருமான்

திருவாய் மலர்ந்தருளிய

# திருவாசகம்

## ஆராய்ச்சிப் பேருரை

உரையாசிரியர் :

மாவைக் கவுணியன் வெண்ணெய்க் கண்ணனார் என்னும்

பண்டித மணி

திரு. க. சு. நவநீத கிருஷ்ண பாரதியார் அவர்கள்

பதிப்பாசிரியர் :

இலந்தையடிக் கவுணியன்

வித்துவான் இராஜ. சிவ. சாம்பசிவ சர்மா

வெளியிடுவோர் :

பத்மா பதிப்பகம்

மாவிட்டபுரம் :: தெல்லிப்பழை

இலங்கை



[விலை ரூபாய் 15

# பதிப்புரை

" தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர் "

என்பது அருந்தமிழ் அன்னையான ஔவைப் பிராட்டியாரின் அருள் வாக்கு. இதில் 'கோவை திருவாசகம்' என்பன இரண்டும் சைவ சமய குரவர் நால்வருள் ஒருவரான அன்பு வள்ளல், அன்புப் பிழம்பு எனத் திகழும் ஸ்ரீ மாணிக்கவாசகர் உலகமுய்யத் திருவாய் மலர்ந்தருளிய இரு நூல்களாகும். 'கோவைத் திருவாசகம்' என்னும் இரு நூல்களையும் பிரிக்காது இணைத்துக் கூறுவதே சைவ மரபாகும். ஆராய்ச்சிப் பேருரை ஆசிரியர் இவ்விரு நூல்களையும் ஒரு திருநூலின் இரு பேருறுப்புக்கள் எனக் கூறுங் கருத்தும் ஊன்றி நோக்கி இன்புறற்பாலது. இவையிரண்டும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் எட்டாந் திருமுறையாக வகுக்கப்பட்டுள்ளமையும் இக்கருத்தை வலியுறுத்தும் போலும்.

திருவாசகம் என்பது 'இன்பத் தேன்.' 'ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல் மலர்வாய்ப் பிறந்த வாசகத்தேன்.' 'தொல்லை இரும் பிறவி சூழும் தளைநீக்கி அல்லல் அறுத்து ஆனந்தமாக்குந் தேன்.' சிவப்பிரகாசரும் இராமலிங்க சுவாமிகளும் இத்தேனைப் பருகித் தம் அனுபவத்தால் வியந்து கூறும் செந்தமிழ்த் தேன்.

" பாய்பரியோன் தந்த பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து—மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன்." (திருக்களிற் : 73)

என்று உய்யவந்த தேவனார் போற்றிப் புகழ்ந்த தேன்.

இத்தகைய தெய்வத்தமிழ் நூலுக்கு நல்லுரை கண்டார் யாழ்ப்பாணத்து மாவைக் கவுணியன் வெண்ணெய்க் கண்ணனார் என்னும் பண்டிதமணி க. சு. நவநீத கிருஷ்ண பாரதியாரவர்களா

வர். இந்தப் பேருரை பலவகையில் நனி சிறந்து விளங்குவ தொன்றும் என்பதை இதனைப் படிப்பார் நன்குணர்வர்.

திருவாசகம் என்ற தமிழ்வேத நூல் பலப்பல பதிப்புக்கள் பெற்றுள்ளது. அவற்றுள், இப்பதிப்பில் பல திருத்தங்களும் அறிதல் கூடும். இப்பேருரை நூலைப் படிக்குங்கால் இவ்வுரை யாசிரியர் தேவாரம், திருமந்திரம், திருக்குறள் முதலான நூல் களுக்கும் உரை காண்பாராயின் அறிதற்கரிய அரும்பெருஞ் செய்தி களைத் தமிழ் உலகம் அறிந்து மகிழும் என்பதைப் படிப்போர் எண்ணுதிரார் என்பது திண்ணம். இவ்வுரையைப் படிக்குங்கால் நச்சினார்க்கினியர், பேராசிரியர், பரிமேலழகர், சேனாவரையர் முதலான பேருரையாசிரியர்கள் நினைவு தோன்றாமலிராது. இவ்வுரையாசிரியர் அனைவரும் சேர்ந்து ஒருவராய்த் திகழ்பவரோ என்றே எவரும் வியந்து நினைப்பர் உரையின் போக்கும் நடையும் தமிழ் மரபு வழுவாது பண்டைத் தமிழ்ப் பேருரையாசிரியர்கள் உரை போன்றே திகழும். இனிமை, தெளிவு, செறிவு, பொருளாழம், சொற் சுருக்கம், தர்க்க முறை, இலக்கணக் குறிப்பு யாவும் இவ் வுரை கொண்டு திகழ்தலை நன்குணரலாம்.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்கு வைணவப் பெரியார்கள் கண்ட வியாக்கியானங்களைப் போலச் சைவத் திருமுறை ஒன்றற் கேனும் உரைவரையப்பட்டிலதென நின்ற குறையை இவ்வா ராய்ச்சிப் பேருரையாசிரியர் போக்கியுள்ளார் எனத் துணிந்து கூறலாம். மாணிக்கவாசக சுவாமிகள் வரலாற்றை அறிவதற்கு ஆதாரமாக இருப்பன திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம், திருவாதவூரர் புராணம், திருவுத்தரகோச மங்கைப் புராணம், திருப்பெருந்துறைப் புராணம் முதலியனவாம். இவைகளுள்ளும் அடிகள் வரலாற்றில் வேறுபாடுகள் உள்ளன ஆராய்ச்சிப் பேருரையாசிரியர் இப்புறச்சான்றுகள் கொண்டு அடிகள் வரலாற்றைத் துணியாது அகச்சான்று மூலம் அடிகள் வரலாறு காலம் ஆதியனவற்றை ஆங்காங்குக் கூறியுள்ளார்.

இவ்வாராய்ச்சிப் பேருரையினைக் கையெழுத்துப் பிரதியில் பார்வையிட்ட யான் இதனைத் தமிழ் நாடு துய்க்கும் வண்ணம் விரைந்து வெளிவரச் செய்ய வேண்டுமென எண்ணி என் கருத்தை உரையாசிரியர்க்குத் தெரிவித்தேன். உரையாசிரியர் என் கருத்தை ஏற்றுக்கொண்டதோடு என்னைப் பதிப்பாசிரியனாக இருந்து நூலைச் சிறந்த முறையில் அச்சேற்றி வெளிப்படுத்தும் வண்ணம் பணித்

தார்கள். உரையாசிரியரோடு பூண்ட பெருநட்பாலுந் தமிழுலகத்துக்கு இஃது ஒரு பெருந்தொண்டாகு மென்னும் பெருவிருப்பாலும் எனது சிரமம் ஆதியனவற்றைப் பொருட்படுத்தாது இந்நற்பணியை மேற்கொண்டேன்.

அச்சுப்பிழைகளின்றி இந்நூலைப் பதிப்பிக்க வேண்டுமென முயன்றும் சில பிழைகள் ஆங்காங்கு நேர்ந்துள்ளன. அச்சுவேலை விரைந்து நடைபெற்றமையாலும் எனது உடல்நலக் குறைவாலும் நேர்ந்த சில பிழைகளை அறிஞர்கள் திருத்திப் பிழை பொறுப்பார்களாக.

திருவாசகப் பதிகங்கள், பாடப்பட்ட தலங்கள் பற்றியும் திருவாசகப் பாவினங்கள் பற்றியும் திருச்சதகம் முதலாயவற்றின் உட்பிரிவுகள் பற்றியும் உரையாசிரியர் தம் கருத்தை ஆங்காங்குங் காட்டியுள்ளார் எனினும் முன்னோர் கருத்தைத் தழுவிப் பழைய பிரதிகளில் இருந்தவாறு அவை குறிக்கப்பட்டன உரையாசிரியர் வரலாறு, உரையுள் எடுத்தாண்ட நூல்கள், பதிகவகராதி, செய்யுள் முதற்குறிப்பகராதி ஆதியன என்னால் எழுதிச் சேர்க்கப்பட்டுள. திருவாசகத்தின் இறுதிக்கண்ணதாகிய அச்சோப்பதிகத்தின் இறுதியில் "செத்திடமும் பிறந்திடமும்" என்னும் பாட்டினையும் அதற்கு உரையினையும் யானே சேர்த்துள்ளேன். அச்செய்யுள் பல ஏட்டுப் பிரதிகளிற் காணப்படாமையின் உரையாசிரியரால் தவிர்க்கப்பட்டமை கண்டு தொடரெண் கொடாது சேர்த்துள்ளேன்.

இவ்வனைத்தையுஞ் சேர்த்து இந்நூலைப் பதிப்பதற்கு எனக்கு அநுமதி வழங்கிய உரையாசிரியர்க்கு எனது நன்றியும் வணக்கமும் உரிய.

வாதவூர்ப் பெருமான் திருவருளைத் துணையாகக் கொண்டு செய்யப்பெற்ற இத்திருவாசக ஆராய்ச்சிப் பேருரை தமிழுலகிற் பரவித் தமிழ் மக்களுக்கு இன்பமூட்டி நின்று நிலவுக !

"தென்னா டுடைய சிவனே போற்றி !
என்னாட் டவர்க்கும் இறைவா போற்றி !"

சென்னை
11-3-54.

இராஜ. சிவ. சாம்பசிவ சர்மா

# உரையாசிரியர் முன்னுரை

திருவாசகம் முழுவதற்கும் உரையெழுத வேண்டுமென்னும் எண்ணம் பல நாட்களாக என்னுள்ளத்தில் வேரூன்றியிருந்தது. திருக்கோவையாரைப் பேராசிரியருரையுடன் ஆராய்ந்து கற்றுங் கற்பித்தும் வந்தமையானும் திருவாசகத்தைப் பலருரைகளோடும் பயின்றமையானும் அவ்வெண்ணம் உரம் பெறுவதாயிற்று. ஆறுண்டுகளுக்குமுன் யான் இவ்வுரையை எழுத ஆரம்பித்த போது சில நாட்களில் எழுதி முடித்துவிடலாமெனக் கருதி யிருந்தேன். ஆனால் தெய்வத்தன்மை பொருந்திய இந்நூற்கு விரிவான உரையெழுதாக்கால் மற்றதன் மாட்சி தெரித்தலாகா தெனக் கண்டு விரித்தெழுதப் புகுந்தமையால் இவ்வுரை சென்ற ஆண்டிலேதான் ஒருவாறு நிறைவேறுவதாயிற்று.

நம்பி திருவிளையாடல், திருவாதவூரடிகள் புராணம், திருப் பெருந்துறைப் புராணம் முதலாயவற்றிற்கும் இந்நூலின் அகச் சான்றுகளுக்கும் முரண்பாடு நேருதல் கண்டு இந்நூற் கருத்தை நுணுகி ஆராய்ந்து அடிகள் வரலாற்றை ஒருவாறு துணிந்து ஆங்காங்குக் காட்டியுள்ளேன். அடிகள் முதற் காட்சியும் முதல் ஆட்சியும் பெற்ற தலங்கள் மதுரையும் உத்தரகோச மங்கையு மென்றாங்கு இந்நூலகத்துட் காணப்படுகின்றன. புராணகாரர் அவை திருப்பெருந்துறையில் நிகழ்ந்தன வென்பர். புராண வரலாறுகள் ஒன்றினொடு மற்றொன்று சிற்சில இடங்களில் மாறு பட்டுஞ் செல்கின்றன. புராண வரலாறுகளுட் பல பொருந்தா வென முன்னுஞ் சான்றோர் கூறியுள்ளதை உட்கொண்டு இன்னோ ரன்ன இடங்களில் இந்நூலகச் சான்றினையே உண்மை யெனக் கொண்டு உரைவரைந்துள்ளேன்.

அடிகள் காலம் முதலாயவற்றைத் திட்டமாகக் கூறற்கியலா தேனும் அத்துறையில் ஆராய முற்படுவார்க்குப் பயன்படுமாறு ஆங்காங்குப் பலப்பல சான்றுகள் காட்டியுள்ளேன். இந்நூலிற் காணப்படுந் தலப் பெயர்கள், வரலாறுகள், பதிகப்பெயர்கள் ஆதியன பலவும் அடிகளின் காலமிதுவென வரையறை செய் வார்க்குப் பயன்படுவனவாமென்க.

சித்தாந்த சாத்திரக் கருத்துக்களை யெல்லாம் அன்பினைந் திணை யொழுக்க வாயிலாக வெளிப்படுத்துந் தூய தமிழ் மரபு பேணி அடிகள் திருவாசகத்தையுந் திருக்கோவையாரையும் அருளிச் செய்தாரென்பதற்கு நூலுட் பல சான்றுகள் புலனுகின்றன. அவற்றை ஆங்காங்கு விரித்துக் காட்டியுள்ளேன். ஆன்றோர் கூறும் காதற் பகுதிக்குரிய தலைமக்களின் திருவுருவங்கள் செயல்கள் முதலிய அனைத்தும் புனைந்துரை வகையாற் கூறப் பட்டனவன்றி உண்மையவாகா எனக் கூறின் இறைவன் கொண்ட திருமேனிகளும் திருவிளையாடல்களும் அன்ன பிறவும் புனைந் துரைப் பாற்பட்டு வற்றுமாகலின் அங்ஙனம் கொள்ளப்பட்டில என்க திருஎம்பாவை முதல் திருப்பள்ளியெழுச்சி யீருன பதிகங்க ளனைத்தும் அகப்பொருள் நுதலிவருவன வெளிப்படையாகவும், பிற நுதலிவருவன குறிப்பாகவுங் காணப்படுகின்றன. அடிகள் தம்மைத் தலைமகளாகப் பாவனை பண்ணியும், பாவனை கழிந்து தெய்வச் சோதித் தலைமகளாக அமைந்தும், இறைவனுகிய தலைமகன் தமக் குச் செய்த அருளையும், அதனுலுண்டாய குறைவையும், அவன் பிரிந்ததனுல் நேர்ந்த துயரையும், அவனைக் கூடவேண்டு மென்னும் வேட்கையையும் அன்ன பிறவற்றையும் சுவை நனி பயப்பத் திருவாசகத் திருப்பாட்டுக்களால் வெளிப்படுத்தினரென்க

சிவபுராணத்தைத் தற்சிறப்புப் பாயிரமாகவும் அதனையடுத் துள்ள மூன்றகவல்களையும் நூல் வரலாருகவுங் கொள்ளுதல் தக்க தெனக் கண்டு, அவ்வாறு கொண்டு உரை வரைந்துள்ளேன். அடிகள் திருச்சதகத்தால் அவனைப் பாடவேண்டுமென நுதலியும், நீத்தல் விண்ணப்பத்தால் அவன் பின்னருந் தம்மை விட்டுவிடு கின்ருனென்பது கூறியும், அதன்மேற் காதற் பாவனையாகவும் பிற வாருகவுஞ் கூறிச் செல்கின்ருர்.

இறைவனை ஒருவாறு பூச்சியத்திற்கு (0) ஒப்பிடலாம். பூச்சியம் இன்றேல் கணிதமும் பயன் வற்றும். அங்ஙனமே இறைவன் இலனேல் உலகமும் உலக நுகர்ச்சியும் இல்லையாம் இப்பூச்சிய மானது ஒன்று முதலாக ஒன்பது இறுதியாக உள்ள எண்களை எல்லாம் பத்தே, நூறே, ஆயிரமே என்றுங்கு மதிப்பேற்றி வருவது கண்கூடு. அங்ஙனமே இறைவனும் தனக்கெனக் கொள்ளும் உருவம் பயன் என்பன இன்றி ஏனையவற்றிற்கு உருவமும் பயனும் அன்ன பிறவும் வழங்கி வருவன் என்க. கணித இயல்பு அறியார் பூச்சியத்தின் மதிப்பை யறியாதவாறுபோல இறைவன் இயல்

புணரார் இறைவனை இகழ்ந்தொதுக்குவர். இவர் சூழலில் நந்தமிழ் மக்கள் அகப்படாது உய்வடைதற்கு மாணிக்கவாசகப் பெருமான் அருளிய திருவாசகம் நல் வழிகாட்டியாகுமென்க.

அன்பு நெறிப் பாடலாக மட்டுமன்றித் தமிழ்ப் பேரிலக்கியங் களில் முதலிடம் பெறற்குரியது இந்நூலென்பதனையும் இதுவுந் திருக்கோவையாரும் ஒரு திருநூலின் இருபேருறுப்புக்களாகத் தொடர்புபட்டுச் செல்கின்றன வென்பதனையும் இலக்கியச் சீர் தூக்காளர் சிந்திக்கக் கடவர். இந்நூற் பகுதிப் பாடல்களுக்கு இயற்கைப் பொருளடைவு, கூறுக்கால் உரைப்பயன் வற்றுமெனக் கண்டு இயற்கைப் பொருளடைவு காட்டியுள்ளேன். ஆங்காங்கு இயற்கைப் பொருளடைவு நூற் பொருளடைவு என்பனவற்றிற்குக் காரணமும் அட்டவணையுஞ் சேர்த்துள்ளேன். நூலின் எல்லாப் பகுதிகளுக்கும் இவை தரப்பட வேண்டு மென்பது நோக்கமேனும் பல வசதிக் குறைவுகளால் அவ்வாறு செய்ய முடியவில்லை. அடுத்த பதிப்பில் இறைவனருளால் அது நிறை வெய்துவதாகுக

இந்நூற்கிலக்கணந் தொல்காப்பியமே யாதலால் தொல்காப் பியத்திற் காணப்படாத பாவினங்களும் பிறவும் இந்நூற்குக் கொள்ளப்படலாகா தென்பது எனது துணிபேனும் சான்றோர் கொண்ட நெறிபற்றி அவை இந்நூலில் அநுவதித்து அமைக்கப் பட்டன பாடற் பகுதிகள் அருளிச் செய்யப்பட்ட திருத்தலங்கள் குறித்தும் யான் கொண்ட கருத்து சிற்சில விடங்களில் முன்னோர் கருத்தொடு முரணுகின்றதேனும் அவர் கருத்தையுஞ் சேர்த் துள்ளேன். என் கருத்தையும் ஆங்காங்குக் காட்டியுள்ளேன். பேரறிஞர் இவற்றைச் சீர்தூக்கி ஆராய்வார்களென்னுந் துணி புடையேன் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம் என்பனவற்றைப் பல உட்பிரிவுகள் உடையனவாகக் கொள்வதும் எனது கருத்தன் றேனும் மூதறிஞர் கொண்டாங்குக் கொண்டேனென்க. திருப் பாட்டுக்களின் கருத்தும் பொழிப்புரையும் விளக்கவுரையுந் தரப்பட் டுள்ளன

இவ்வுரை நிறைவேறுதற்கும் நூலுருப் பெற்று வருதற்குந் துணையாக நின்றுதவினோர் பலராவர். பயன் கருதாது உதவி புரிந்து உரையெழுதுமாறு தூண்டிய சரஸ்வதி புத்தகசாலை அதிபர் பிரம்ம ஸ்ரீ சி பத்மநாபையர் அவர்களின் பேருபகாரம் என்றும் நினைவுகூரத் தக்கது. இவ்வுரையினை எழுதி வருங்கால் சோர்வு நீக்கி மேன்மேலும் ஊக்கி உதவிபுரிந்த அன்பர் பலராவர்.

அவருள்ளும் அமைச்சர் திரு. சு. நடேச பிள்ளை, B.A , B.L. அவர்கள், கலாநிதி. கு சிவப்பிரகாசம் M Sc. அவர்கள், திருமதி. தங்கம்மா-நடராசா அவர்கள், ஆதியோர் குறிப்பிடற் பாலர். இந்நூலை அச்சிட்டு வெளியிடுதற்குப் பல அன்பர்கள் முற்பண மாகவும் அன்பளிப்பாகவும் உதவி செய்துள்ளார்கள். அன்னுர்க்கு எம் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்வதோடு அவர்களுக்கு நீண்ட ஆயுளும் நீள்பெருஞ் செல்வமும் உண்டாக எல்லாம் வல்ல இறைவன் அருள் பாலிக்கும்வண்ணம் அவன் பொன்னடியைப் போற்றி இறைஞ்சுகின்றேன்.

என்னுல் எழுதப்பட்ட உரையை அச்சேற்றி வெளிப்படுத்த முன்வந்து சிவபுராணத்தை மற்றதன் உரையோடு பார்வைப் பிரதியாக வெளிப்படுத்தித் தமிழ் அன்பர்களின் ஆதரவைப் பெறு வதற்குப் பெருந்துணை புரிந்த எனது மருகர் திரு கு பூரணு னந்தா B A. (Hons ) அவர்களின் நல்லுதவி பெரிதும் பாராட்டற் பாலது. இவ்வுரை நூலின் கையெழுததுப் பிரதியைச் சிதை வுருது பாதுகாத்தும் ஆங்காங்குச் சில பகுதிகளை உசாவி எழுதியும் அன்ன பிறவாறும் அவர் பேருதவி புரிந்துள்ளார். என்னுல் எழுதப்பட்டு அச்சில் வெளிவராத வேறு நூல்களையும் வெளிப்படுத்த உன்னி அவற்றைச் செப்பஞ் செய்து திரட்டிவரும் அவர் முயற்சி இனிது நிறைவேறத் திருவருள் துணை நிற்ப தாகுக.

சென்னை மாநகரில் இவ்வுரைநூல் அச்சேறி வருகையில் இவ் வுரையின் பல பகுதி செப்பமாகப் பிரதி செய்யப்படாமலும் ஒழுங்கின்றியுங் காணப்பட்டமையால் இரவு பகலாக ஓய்வின்றி உழைத்து அவற்றைச் செவ்வனே எழுதி நிறைவேற்றிய எனதினிய மாணவர், பண்டிதர். திரு. க. நாகலிங்கம் அவர்களுக்கும், பிரம்ம ஸ்ரீ. கு. பாலசுந்தரக் குருக்கள், B.A. (Hons.) அவர்களுக்கும் எனது பெருநன்றி உரித்தாகுக.

இந்நூல் விரைந்து வெளிவருதற்கு முக்கிய காரணரும் பதிப் பாசிரியரும் எனதினிய நண்பருமாகிய சென்னை கிறிஸ்டியன் காலேஜ் ஸ்கூல் தமிழாசிரியர் வித்துவான் பிரம்ம ஸ்ரீ. இராஜ சிவ. சாம்பசிவ சர்மா அவர்களுக்கும், இந்நூலின் உரையை யான் எழுதத் தொடங்கிய நாள்தொட்டு என்னுடல் நலம் பேணி யுழைத்தும் உரையின் ஒரு பகுதியைப் பிரதி செய்தும் உதவிய திரு. பூ. கந்தையா அவர்களுக்கும், இவ்வனைவர் உதவியும் பயன்

படும் வண்ணம் இந்நூலைப் பதித்துதவ முன்வந்த சென்னைக் கபீர் அச்சகத்தார்க்கும் எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்து

இந்நூற் பிரதிகளுக்காக முன்னரே பொருளுதவி புரிந்த வள்ளல்களுக்கும், முன்னர் வெளிவந்த பார்வைப் பிரதியைப் பாராட்டி மதிப்புரைகள் வழங்கிய பத்திராசிரியர்கள், புலவர்கள், பெருநாவலர்கள் அனைவர்க்கும் எனது வணக்கம் உரியதாகுக.

திருவருட் பேறும் கலைபயில் தெளிவும் உரைவன்மையுங் கைவந்த சான்றோர்க்கேயுரிய இப்பெரும் பணியிற் பேராசையால் ஈடுபட்ட எனது அறியாமை முதலியவற்றால் நேர்ந்த பிழைகளை ஆன்றோர் அறிவித்து நல்லுரை காட்டுவாராயின் அவர்கள் செய்ந் நன்றி போற்றி அடுத்த பதிப்பில் அவற்றைத் திருத்தமாக வெளியிடுவேன்.

மாவிட்டபுரம்
20-2-1954

க. சு. நவநீத கிருஷ்ண பாரதி

# உரையாசிரியர்

[இராஜ. சிவ. சாம்பசிவ சர்மா]

பண்டிதமணி நவநீத கிருஷ்ணபாரதியார் அவர்களின் தந்தையார் சோழ வளநாட்டில் மணல்மேற்குடிக்குப் பாங்கரிலுள்ள கரவட்டங்குடி எனும் ஊரில் பரம்பரைப் புலவர்கள் மரபிற்றோன்றி, முத்தமிழ்ப் புலமையும் சீரிய ஒழுக்கமும் நிரம்பிய சுப்பிரமணிய பாரதியார் அவர்களாவர்; தாயார் கற்பொழுக்கங்களிற் சிறந்த தைலம்மையார் ஆவர். அவர்கள் மணமுடித்த பின்னர்த் தம்பிக்கு நல்லவன் கோட்டைப் புகையிரத நிலையத்திற்கு அருகே முத்தூர்க் கூற்றத்தைச் சேர்ந்த கிருஷ்ணாபுரத்திற் குடியேறி வாழ்ந்து வந்தார்கள்.

ஆங்கு 1—3—1889-ல் அவர்களுக்கு இளைய புதல்வராக இப்புலவர் பெருந்தகை தோன்றினர் இளமையில், சர்க்கரை இராமசாமிப் புலவரிடத்திலும், பின்னர், பண்டித அ கோபாலையர், நற்றிணை உரையாசிரியர் பின்னத்தூர் அ. நாராயண ஐயர், சோழவந்தான் அரசன் சண்முகனார் முதலியவர்களிடத்தும் கல்வி பயின்று, இலக்கணம், இலக்கியம், சமய சாத்திரங்கள் என்னும் இன்னோரன்னவற்றில் பெரும்புலமை படைத்து விளங்கினார். இயல்பாகவே பா யாத்தலிலும், சலியாது சொற்பொழிவு ஆற்றுதலிலும் திறமை படைத்தவர்.

சில காலம் பாலைக்காடு விக்ரோறியாக் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதராகக் கடமை புரிந்து பின்னர்த் திருவாவடுதுறை ஆதீனத்தில் மகா சந்நிதானம் சுப்பிரமணிய தேசிக சுவாமிகளுக்குப் பின்னர்ப் பட்டமெய்திய சீல ஸ்ரீ. அம்பலவாண தேசிக சுவாமிகள்பால் திருமுறை ஆராய்ச்சித் துணைவராய் அமர்ந்தார் இவற்றால், கற்பிப்பதில் பயிற்சியும், நூலாராய்ச்சியில் அநுபவமும், வடமொழியில் பாண்டித்தியமும் எய்தினர்.

1917-ம் ஆண்டில், இவரது புலமையை வியந்த ஈழநாட்டு வள்ளல் ஸர். பொன்னம்பலம் இராமநாத துரையவர்கள் இவரைத் தமது ஆஸ்தான கவியாகவும், தமது பெண்கள் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பண்டிதராகவும் நியமித்தார்கள் இவரும் தம் ஆற்றல் தோன்றப் பண்டித வகுப்புகளை நடாத்தி, மாணவிகள் பரீட்சையில் விசேஷ சித்தி, தங்கப் பதக்கப் பரிசில் என்பன பெற்றுச் சிறப்பெய்தக் காரணராக

பின்னர், பிரபு அவர்களால் நிறுவப்பட்ட பரமேஸ்வராக் கல்லூரிக்குத் தலைமைத் தமிழ் விரிவுரையாளராக நியமிக்கப் பெற்றுர். ஆங்குக் கடமையாற்றி வருங்கால், 1936-ம் ஆண்டு பரமேஸ்வர பண்டித ஆசிரிய கலாசாலை நிறுவப்பட்டது. இக் கலாசாலை, ஆசிரிய பயிற்சிக்குரிய அதே கால எல்லையுள்ளேயே, ஆசிரிய மாணவர்களைப் பண்டிதர்களாக்கவும் அருந்தொண்டாற்றி வந்தது. இங்ஙனம் மிகக் குறைந்த கால எல்லையில் பெருந் தேர்ச்சி பெற்ற நூற்றுக்கணக்கான தமிழறிஞர்களைத் தோற்றுவிப் பதில் பெரும் பணியாற்றியவர் நம் பாரதியார் என்பது மிகை யாகாது.

இனி, ஆசிரியர் இயற்றிய நூல்களோ பல. சங்கச் சான்ருேர் செய்யுட்கோத்த பாவான் இயன்ற, 'உலகியல் விளக்கம்' என்னும் சிறந்த இலக்கிய நூல் தமிழன்னைக்கு 1922-ல் அளிக்கப்பட்டது. இந்நூல் பல்லாண்டுகளாக, யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கப் பண்டித பரீட்சைக்குப் பாட நூலாகவிருந்தது. இந்நூல் மட்டுநகர் வித்துவான் ச. பூபால பிள்ளை அவர்கள் கண்ட நல்லுரையோடும் சேர்த்துப் பண்டித மயில்வாகனனுர் (சுவாமி விபுலானந்த அடிகள்) அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது.

1929-ல் 'புத்திளஞ் செங்கதிர்' என்னும் செய்யுள் நூலும், 1934-ல் 'பறம்புமலைப் பாரி' என்னும் நாடக நூலும் இயற்றப் பட்டன. 'செழுங்கதிர்ச் செல்வம்' முதலிய பல நூல்கள் வெளி வாராவாய் உள்ளன.

இளஞ் சிறுவர் விரும்பிக் கற்றற்கேற்ற இலக்கண நூல் தமிழ் மொழியில் இல்லாக் குறையைப் போக்கியவரும் பாரதியாரே. அன்னுரின் அரிய உழைப்பால் 1947-ம் ஆண்டில் 'பாரதீயம்' எனப் பெயரிய மூன்று தொகுதிகள் எழுதப்பட்டன. அவை இப்பொழுது அச்சிடப்பெற்று வெளிவந்து பெரிதும் பயன்படுகின்றன.

இவைமட்டும் அன்றி, இவர் காலத்துக்குக் காலம், ஈழநாட்டுப் பத்திரிகைகளுக்கும், இந்தியப் பத்திரிகைகளுக்கும் எழுதியுதவிய கட்டுரைகளும், யாத்த கவிதைகளும் பல. அவற்றுள்ளும் 'செந் தமிழ்' என்னும் திங்கள் வெளியீடு வெளியிட்டன மிகப் பல.

கல்வி பயிற்றுவதிலும், நூல் இயற்றுவதிலுமே, காலம் முழுமையும் செலவிடாது வேறும் எத்தனையோ அரிய பணிகள் ஆற்றியுள்ளார்கள்.

ம தமிழ்ச் சங்கத்தாலும், யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாவிருத்திச் சங்கத்தாலும் நடாத்தப்படும் தமிழ்ப் பரீக்ஷைகளுக்குப் பரீட்சகராய் அமைந்து பல்லாண்டுகளாகத் தொண்டு புரிந்து வந்துளார்கள்.

தமிழ் மொழி வளர்ச்சியின் பொருட்டு ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் மன்றம் ஒன்றினை நிறுவுதற்குக் காரணராயிருந்தோரில் இவரும் ஒருவர். இம் மன்றம், இவரைத் தலைமைப்பீடத்தில் இருத்தியதுமன்றிப் பண்டித மணி என்னும் பட்டத்தையும் இவர்க்குச் சூட்டியது. இச்சங்கத்தால், இவர் கைப்படப் பட்டம் வழுங்கப்பட்டோர் பலராவர்.

மேலும், 1952-ம் ஆண்டில் யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம் இவருக்குப் புலவர் மணி என்னும் பட்டத்தினை வழங்கியது.

இவ்வாண்டிற்றானே, ஈழநாட்டு அன்பர்களின் பெருமுயற்சி யால் இப்புலவர்க்குப் பொற்கிழிப் பரிசில் ஒன்று வழங்கப்பட்டது. இப்பொற்கிழி நிதி சேகரிப்புச் சபைக்குத் திரு மு. ஞானப் பிரகாசம் B.A., B. Sc. அவர்கள் தலைவராகவும், பண்டிதர் திரு க. நாகலிங்கம் அவர்கள் காரியதரிசியாகவும் இருந்து பேருக் கம் காட்டி வந்தனர்.

1953-ம் ஆண்டில், இப்புலவர் இயற்றிய நூல்கள், எழுதிய கட்டுரைகள் ஆதியன பலவற்றையும் சேகரித்து வெளிப்படுத்து வதற்கென ஒரு குழு நிறுவப்பட்டுளது. இதில் திரு கு. பூர்ணா னந்தா B A , (Hons) அவர்களும், திரு. கு பாலசுந்தரக் குருக்கள் B.A., (Hons) அவர்களும் பெரிதும் முயன்று வருகிறார்கள். இவர்களின் முயற்சி இனிது நிறைவேறத் தமிழ் மக்கள் தகுந்த ஊக்கம் அளிப்பார்களாக.

இத்திருவாசக ஆராய்ச்சிப் பேருரையை ஆறாண்டுகளில் எழுதி நிறைவேற்றியதாக இவ் உரையாசிரியர் கூறினும், பல்லாண்டு களாக அரும்பாடுபட்டுள்ளார் என்பதனைத் தேதியிட்டு எழுதப் பட்ட அவரது ஆராய்ச்சிக் குறிப்புகள் எடுத்துக்காட்டுகின்றன. அன்புநெறிப் பாடல்கள் எனமட்டுங் கருதப்பட்ட திருவாசகத்தைத் தமிழ் இலக்கியங்களில் முதலிடம் வகிக்கத்தக்கது எனக் கொள்ளும் வகையில் உரை எழுதப்பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை. அவ்வுரை தானும், பேரிலக்கிய வரிசையில் வைக்கற்பாலது என்பது, இந்நூலின் பதிக முன்னுரைகளைப் படிப்பார்க்கு இனிது

புலனாகும். கவிஞர்கள் இவ்வாராய்ச்சிப் பேருரையைத் தமிழுக்கு வரம்பெனப் புகழ்ந்துள்ளார்கள். கவிதைப் பண்பு பழுத்த ஒருவர் தெய்வீகக் கவிக்கு உரை எழுதி உதவியது தமிழ் நாடு செய்த தவப் பயனே ஆகும்.

சாந்த குணமும், எவர்க்கும் தீங்கு நினையா உள்ளமும், கலையில் தெளிவை எடுத்துக்காட்டும் தோற்றமும், அவை அஞ்சா ஆற்றலும், தர்க்க நெறிபற்றி யுரைக்கும் சொல்வன்மையும் சங்க இலக்கியம், தொல்காப்பியம் ஆதியனவற்றை மெய்ப்பொருள் கண்டு உரைக்கும் இயல்பும் படைத்த இவ்வுரையாசிரியர் நீண்ட நாள் வாழ்ந்து தமிழ் மொழிக்கு அரிய தொண்டு பல புரிய இறைவன் திருவருள் பாலிப்பானாக.

திருவாதவூரடிகள் துணைத்தாள் போற்றி

# ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் காலம் பற்றிய குறிப்பு

ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகளின் வரலாற்றினைத் தமிழ் நாட்டில் யாவரும் அறிவர் அடிகளது காலத்தைப் பற்றிப் பல பேரறிஞர்கள் பல்வேறு வகைப்பட்ட ஆராய்ச்சிகளைச் செய்து ஒருவர்க்கொருவர் முரண்பாடுடையோராய் இன்ன காலம் எனத் துணிதற்கியலாதவராயுள்ளனர்.

திருஞான சம்பந்த சுவாமிகளும், அப்பர் சுவாமிகளும் வாழ்ந்து வந்த காலத்தில் சமண சமயமே மிகப் பல்கியிருந்தது என்பது வெளிப்படை. சமண சமயத்தினும் காலத்தால் முந்தியது பௌத்த சமயம். சம்பந்த சுவாமிகளும் திருநாவுக்கரசு சுவாமிகளும் பதிகங்கள்தோறும் சமண சமயத்தை இழித்துக் கூறியுள்ளனர் மாணிக்கவாசக சுவாமிகள் சமண சமயத்தை அறவே குறியாது புத்தனைப் பற்றியே குறித்துள்ளார். ஆதலின் அடிகள் காலத்தில் பௌத்த சமயமே பரவியிருந்தது. எனவே, தேவாரம் பாடிய இருவர் காலத்தினும் மாணிக்கவாசக சுவாமிகள் காலம் முற்பட்டது எனக் கொள்ளற்கிடனுண்டு.

ஞானசம்பந்த சுவாமிகள் கணபதியைக் குறித்துள்ளார். ஆனால் மாணிக்கவாசக சுவாமிகளோ தம் திருவாசகத்தில் முருகனைக் குறித்துள்ளார். இதனால் தமிழகத்தில் கணபதி வழிபாட்டிற்கு முன்பு முருகன் வழிபாடே பரவியிருந்ததெனவும் கணபதி வழிபாடு அடிகளால் கூறப்படாமையால் முருகன் வழிபாட்டிற்குப் பின்னரே கணபதி வழிபாடு தமிழகத்தில் புக்கதெனவும் கொள்ளின் மாணிக்கவாசகர் காலம் அவ்விருவர் காலத்திற்கு முந்தியது என்பது புலனாகும்.

பல்வேறு வகைக் கொள்கைகளுக்கு இடனாகும் அடிகள் வரலாற்றைப் பற்றியும் காலத்தைப் பற்றியும் ஆராய்ந்து வெளியிட இப்பொழுது அவகாசம் இல்லாமையால் தனித்ததோர் நூலாகச் செவ்விய முறையில் ஆராய்ந்து வெளியிட எண்ணியுள்ளேன். திருவருள் கூட்டுவிப்பதாக.

# உரையுள் எடுத்தாண்ட நூல்கள்

1. அகநானூறு
2. அடியார்க்குநல்லார்உரை
3. அதர்வ வேதம்
4. அப்பர் தேவாரம்
5 கடோபநிடதம்
6. கந்தபுராணம்
7 கம்பராமாயணம்
8. கல்லாடம்
9. கலிங்கத்துப்பரணி
10. கலித்தொகை
11 களவழிநாற்பது
12. குமாரசம்பவம்
13. குறுந்தொகை
14 கொங்குமண்டல சதகம்
15. சோயிற்புராணம்
16 சடகோபரந்தாதி
17. சம்பந்தர் தேவாரம்
18. சிலப்பதிகாரம்
19 சிவசகத்திர நாமம்
20. சிவஞான சித்தியார்
21. சிவரகசிய காண்டம்
22. சிவவாக்கியர்பாடல்
23. சீவகசிந்தாமணி
24 சுந்தரர் தேவாரம்
25. சுவேதாசுவேதரோப நிடதம்
26 சூளாமணி
27. தக்கயாகப்பரணி
28. தனிப்பாடல்
29 தக்ஷகாண்டம்
30. திருக்குறள்
31. திருக்கோவையார்
32. திருக்கோவையார் உண்மை
33 திருமந்திரம்
34. திருமுருகாற்றுப்படை
35 திருவள்ளுவமாலை
36. திருவாரூர்ப் புராணம்
37. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்
38. தைத்திரிய உபநிடதம்
39 தொல்காப்பியம்
40. தொல்காப்பியம் – இளம்பூரணர் உரை
41. தொல்காப்பியம் – பேராசிரியர் உரை
42. நச்சினார்க்கினியர் உரை
43. நல்வழி
44. நற்றிணை
45 நன்னெறி
46. நாலடியார்
47. நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
48. நான்மணிக்கடிகை
49 நீதிநெறி விளக்கம்
50 பதிற்றுப் பத்து
51. பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற் புராணம்
52 பரிபாடல்
53. பிங்கலந்தை நிகண்டு
54. பிரபுலிங்கலீலை
55. பிருகதாராணியோபநிடதம்
56. புறநானூறு
57. புறப்பொருள்வெண்பாமாலை
58 பெரிய புராணம்
59 பெருங்கதை
60. பொன்வண்ணத்தந்தாதி
61. மணிமேகலை
62. மாவைக்கவுணியனார்பாட்டு
63. மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை
64 யாப்பருங்கலக்காரிகை
65. யாப்பருங்கலவிருத்தி
66. லலிதா சகத்திர நாமம்
67. வில்லிபுத்தூராழ்வார் பாரதம்
68. விஷ்ணுசகத்திர நாமம்
69. வேதீயபிரபதப் பிரமாணம்
70. ஸ்ரீமத் பாகவதம்
71. ஸ்ரீருத்திரம்

பிறவுமாம்

## இந்நூலில் வந்துள்ள உவமைகள்

அடவிமரம் (உயிருண். 10)
அன்பெனுமாறு கரையது புரள (போற்றித். 81)
ஆடகமாமலை அன்னகோ (திருப்பொற். 7)
ஆற்றங்கரை மரமாய் (நீத்தல்வின். 9)
ஆனை வெம்போரிற் குறுந்தூறு என (நீத்தல்விண். 21)
இருதலைக் கொள்ளியினுள் எறும்பொத்து (நீத்தல். 9)
இரும்பின் பாவை அன்ன (திருச்சத. 22)
இருவினை மாமரம் (திருவண்ட. 87)
இருள்கடிந் தெழுகின்ற ஞாயிறேபோன்று (கோயிற்றிருப். 7)
இருள்திணிந் தெழுந்திட்டதோர் வல்விலை (அதிசயம். 10)
இரைதேர் கொக்கொத்து (கோயில் மூத்த. 5)
இன்பான் மொழி (தசாங் 8)
இன்னுழை கதிரின் துன்னணுப் புரைய (திருவண்ட 5)
ஊரா மிலைக்கக் குருட்டா மிலைந்தாங்கு (திருச்சத. 87)
ஊற்று மணற்போல் (புணர்ச். 2)
எள்ளும் எண்ணெயும்போல் (திருச்சத. 46)
எறும்பிடை நாங்கூழெனா (நீத்தல். 25)
ஒண்ணித் திலநகை (திருஎம்பா. 4)
கடலினுள் நாய்நக்கியாங்கு (நீத்தல். 13)
கடலே அனைய ஆனந்தம் (பிரார்த். 7)
கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு (திருக்கோத். 2)
கண்கெட்ட ஊரேறு (திருச்சத 53)
கதிரை மறைத்தன்ன சோதி (திருப்பாண்டி. 2)
கல்நாருரித்தன்ன (திருத்தெள்ளே. 9 ; திருப்பூவ 9)
கல்லைப் பிசைந்து கனியாக்கி (திருவம்மானை. 5)
கரிய பானலார் கண்ணியர் (திருச்சதக 19)
கற்ரு மனமென (போற்றித்திருவ. 73)
கறந்த பால் கன்னலொடுநெய் கலந்தாற்போல (சிவபுரா. 46)
கறங்கோலை போல்வதோர் காயம் (திருத்தெள். 8)
கற்றுவின் மனம்போல (திருப்புலம். 3)
கற்றுமனம் என (போற்றித் திரு. 73)
கயல் மாண்டகண்ணி (திருத்தெள் 11.)
கன்றை நினைந்தெழுதாயென (திருப்படையாட்சி. 2)
கிஞ்சுகவாய் அஞ்சுகமே (தசாங்கம். 5)
கிளியனுர் கிளவி (அச்சப். 4)
குவளைக் கண்ணி (திருவண்ட. 64)

குன்றே அனைய குற்றங்கள் (குழைத்த பத். 3)
குன்றேயனையாய் (குழைத்தபத். 7)
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்படி (போற்றித்திரு. 63-64)
கொம்பரில்லாக் கொடிபோல (நீத்தல் விண் 21)
கொம்பில்லாக் கொடிபோல் (நீத்தல்விண். 20)
கோற்றேன்மொழி (தசாங் 7)
செக்கர்போலும் திருமேனி (புணர்ச்சி 8)
செங்கயலொண்கண் (திருப்படையாட்சி 8)
செந்தழல் போல்வாய் (வாழாப். 8)
செந்தழல்போல் திருமேனி (குயிற்பத். 10)
செந்தழல் புரைமேனி (திருப்பள்ளி. 8)
செந்தாமரைக் காடனைய மேனி (திருச்சத 26)
செழிக்கின்ற தீப்புகுவிட்டிலில் (நீத்தல்விண் 5)
சேலோர்கண் (திருத்தெள். 14)
தடக்கையினெல்லிக்கனியென (திருவண்டப். 162)
தயிரிற் பொருமத்துறவே (நீத்தல்விண் 29)
தமிழ்ச்சிறை நீரிற் பிறைக்கலஞ் சேர்தரு (நீத்தல்விண். 47)
தழலதுகண்டமெழுகு (போற்றித்திரு 60)
தாம் வளர்த்ததோர் நச்சுமரம் ஆயினும் கொலார் (திருச்சத. 96)
தாயிலாகிய இன்னருள் (திருச்சதக 39)
தாயிற் பெரிதும் தயா (திருப்பூவல்லி. 3)
தாய்போல் தலையளி (திருவெம்மானை. 4)
தாரகைபோலும் தலைத்தலைமாலை (நீத்தல்விண். 48)
திணியார் மூங்கில் அனையேன் (திருச்சத 89)
திணியார் மூங்கிற் சிந்தையேன் (பிரார்த்தனை. 8)
தினையின் பாகமும் (திருச்சத 37)
தினைத் துணையேனும் பொறேன் (நீத்தல். 39)
துளங்கொளி வயிரத்தொப்பன் (அருட்பத்து. 6)
தூண்டா விளக்கின் சுடரனையாய் (பிரார்த்தனைப் 4)
தேனையும் காலையும் கன்னலையும் ஒத்தினிய கோனவன்போல் (திரு வம்மானை. 14)
தோலின்பாவைக் கூத்தாட்டு (ஆனந்தமாலை. 3)
நறுமலரெழுதரு நாற்றம் போல் (அதிசயப் 9)
நன்பொன் மணிச்சுவடு ஒத்த (குயிற்பத் 6)
பத்திக்கடல் (திருத்தெள்ளே. 12)
பத்திவலை (திருவண்டப் 42)

பரிதிவாழ் ஒளியாய் (வாழாப். 7)
பலாப்பழத் தீயினெப்பாய் (நீத்தல் விண். 46)
பள்ளந்தாழுறு புனலில் (திருச்சத 21)
பார்ப்பு என (திருச்சத. 44)
பால் நினைந்தூட்டுந் தாயினும் சாலப்பரிந்து (பிடித்த பத்து. 9)
பாவிடை யாடுகுழல்போல் (அடைக்கல 8)
பானற் றடங்கண் மடந்தை நல்லீர் (திருப்பொற்சுண் 7)
பிரைசேர் பாலினெய் போல (கோயின் மூத்த திருப்பதி 5)
பிறிவினை யறியா நிழலது போல (போற்றித் திருவ. 78)
புளியம் பழமொத்து (ஆசைப்பத்து. 5)
பூவில் நாற்றம் போன்று (திருவண்டப் 115)
பெருநீரறச் சிறுமீன் துவண்டாங்கு (நீத்தல் விண் 26)
பொதுபுறு தீப்போல் (நீத்தல் விண் 36)
பொற்றவிசு நாய்க்கிடுமாறு (திருவேசறவு 5)
பொன்னியலுந் திருமேனி (திருப்படையாட்சி 6)
பொன்னே ரனை யமலர் (ஆனந்தமாலை 1)
மரகதக் குவால் மாமணிப் பிறக்கம் (திருவண்டப். 124)
மத்திடு தயிர் (திருச்சத 40)
மத்துறு தண்தயிர் (நீத்தல்விண் 30)
மாவடுவின் வகிரன்னகண் (திருப்பொற் 2; அடைக்கல 8)
மான்பழித் தாண்ட மென்னோக்கி (குயிற்பத் 4)
மின்னிய னுண்ணிடையார் (திருப்படையாட்சி 6)
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழ (திருவண்டப் 125-6)
மின்னே ரனைய பூங்கழல் (ஆனந்தமாலை 17)
முத்தன்ன வெண்ணகை (திருஎம்பாவை 3)
மெள்ளனவே மொய்க்கு நெய்க் குடந்தன்னை எறும்புனவே (நீத்தல். 24)
வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கின் வலை (நீத்தல்விண். 40)
வற்றல் மரம்போல் (பிரார்த்தனைப். 11)
வன்மத்திட வுடைந்து தாழியைப் பாவுதயிர் (அடைக்கல 6)
வாழைப்பழத்தின் மனங்கனி வித்து (நீத்தல் விண். 34)
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற் போல் (திருவம்மா 18)
வெண்டலை முழையில்..... குளித்தொளிக்குஞ் சடை (நீத்தல். 42)
வெள்ளத்துள் நாவற்றியாங்கு (நீத்தல் விண் 14)
வேய்தோள் (சென்னிப் 5)

# திருவாசகப் பதிக வரிசை

(வெண்பா அந்தாதி)

திருவகவல் நான்கின் திறங்கேளாய் நெஞ்சே
அருவமாய் எங்கும் அமர்ந்தோன் - ஒருவன்
சிவபுரா ணங்கீர்த்தி சீரண்டம் போற்றி
அவைபிரான் என்றெண்ணி யாய். 1

எண்ணுஞ் சதகந் திருநீத்தல் விண்ணப்பம்
அண்ணலார் எம்பாவை அம்மானை - சுண்ணமொடு
கோத்தும்பி தெள்ளேணம் கொண்டாடுஞ் சாழலுடன்
ஏத்தும்பூ வல்லியென் றேத்து. 2

ஏத்தரிய உந்தி எழிலாருந் தோணோக்கம்
பாத்தாடும் பொன்னூசல் பண்பினுடன் - கூத்தனுறை
அன்னை குயிலும் அழகார்த சாங்கமுடன்
பன்னியநா லேபரிந்து பார். 3

பாராரும் பள்ளி யெழுச்சியுடன் பண்கோயிற்
சீராரு மூத்த திருப்பதிகம் - ஏராரும்
கோயிற் றிருப்பதிகம் கொண்டாடி நெஞ்சமே
நீயிறையை வாழ்த்தாய் நெகிழ்ந்து. 4

நெகிழாத நெஞ்சமே நீசெத்தி லாப்பத்
திகழா தடைக்கலமென் றேத்திப் - புகழுடைய
ஆசைப்பத் தோதி அதிசயத்தை இப்பொழுதே
பாசத்தை விட்டுநீ பற்று 5

பற்றற்று நெஞ்சே பகராய் புணர்ச்சிப்பத்
துற்றெருவா வாழாப்பத் தோதியபின் - மற்றை
அருட்பத்தை ஓதி அகற்றாய் வினையை
மருட்புத்தி ஏது மறந்து. 6

மறவாது நீகழுக்குன் றந்தனையே வாழ்த்தி
இறவாதே கண்டபத் தேற்றி - உறவாம்
பிரார்த்தனைப் பத்தைப் பிதற்றிப்பே ணாய்பிரமன்
அராத்தலையோன் காணா அடி. 7

காணாய் குழைத்தஉயி ருண்ணி கவலச்சம்
பேணாய் திருப்பாண்டி பேணியபின் - கோணார்
பிறைசூடி தாளைப் பிடித்தபத் தென்றும்
கறைபோம் மனமே கருது.

கருதே சுறவுபுலம் பல்காண் குலாப்பத்
தரிதேயும் அற்புதமே சென்னி - பெரிதாம்
திருவார்த்தை எண்ணமுடன் யாத்திரையும் தேறி
ஒருவார்த்தை யாயிருந்தே ஓது.

ஓதும் படையெழுச்சி ஓங்குந் திருவெண்பா
நாதனுறை பண்டாய நான்மறையே - ஆதியதாய்
நற்படைய தாட்சிசிவா னந்தமச் சோவையே
செப்படையும் முத்தித் திரு. 10

# திருவாசகப் பதிகத்தொகை

சிவபுரா ணங்கீர்த்தித் திருவண்டம் போற்றித்
திருவகவன் முதனான்காஞ் சதக நூறும்
இவர்நீத்தல் விண்ணப்ப மைம்ப தாகும்
மெம்பாவை யம்மானை சுண்ணங்கோத் தும்பி
புவனமகிழ் தெள்ளேணஞ் சாழலிரு பஃதாம்
பூவல்லி திருவுந்தி பத்தொன்ப தாகும்
உவமையிலாத் தோணோக்கம் பத்தொன்ப தாகும்
ஊசலொன்ப தாகுமென வுரைத்த வாறே.

திருவன்னை குயிற்பத்துத் திருத்த சாங்கம்
திருப்பள்ளி யொடுகோயின் மூத்ததிருப் பதிகம்
அருள்கோயிற் றிருப்பதிகஞ் செத்திலடைக் கலமே
யாசையதி சயம்புணர்ச்சி வாழாப்பத் தருட்பத்
தொருபதென வுரைசெய்வர் கழுக்குன்ற மேழா
மொருபதாங் கண்டபத்துப் பிரார்த்தனைபன் னொன்றே
திருமருவு குழைத்தபத்தோ ருயிருண்ணி யச்சம்
திருப்பாண்டி பிடித்தபத்தோ டேசறவும் பத்தே

திருப்புலம்பன் மூன்றுகும் குலாப்பத்தற் புதமே
சென்னிதிரு வார்த்தைபத் தெண்ணப்பத் தாறும்
பரற்குரிய யாத்திரைப்பத் தொருப தாகும்
படையெழுச்சி யிரண்டாகும் பதினொன்று வெண்பா
இருட்டவிரும் பண்டாய நான்மறையே மூகு
மெட்டாகும் படையாட்சி மின்னேரே ழாகும்
அருட்பெறுமச் சோவொன்பா னூற்பத்தேழ் பதிக
மகவலுடன் பாட்டறுநூற் றைம்பத் தாறே.

# பதிகவகராதி


| பதிகம் | பக்கம் |
|---|---|
| அச்சப்பத்து | 993 |
| அச்சோப்பதிகம் | 1174 |
| அடைக்கலப்பத்து | 836 |
| அண்டப்பகுதி (செய்யுள்) | 133 |
| ,, (உரை) | 139 |
| அதிசயப்பத்து | 858 |
| திருஅம்மானை | 505 |
| அருட்பத்து | 903 |
| அற்புதப்பத்து | 1054 |
| அன்னைப்பத்து | 731 |
| ஆசைப்பத்து | 847 |
| ஆனந்தமாலை | 1163 |
| உந்தியார் | 668 |
| உயிருண்ணிப்பத்து | 980 |
| எண்ணப்பதிகம் | 1087 |
| எம்பாவை | 457 |
| ஏசறவு | 1028 |
| கண்டபத்து | 932 |
| கழுக்குன்றப்பதிகம் | 919 |
| கீர்த்தித் திருவகவல் (செய்யுள்) | 65 |
| ,, (உரை) | 70 |
| குயிற்பத்து | 744 |
| குலாப்பத்து | 1043 |
| | 963 |
| கோத்தும்பி | 563 |
| கோயிற்றிருப்பதிகம் | 804 |
| கோயின்மூத்ததிருப்பதிகம் | 788 |
| சதகம் | 244 |
| சாழல் | 617 |
| சிவபுராணம் (செய்யுள்) | 7 |
| ,, (உரை) | 11 |
| செத்திலாப்பத்து | 819 |
| சென்னிப்பத்து | 1065 |

| பதிகம் | பக்கம் |
|---|---|
| தசாங்கம் | 758 |
| திருவாசகப்பேறு | 1 |
| தெள்ளேணம் | 594 |
| தோணோக்கம் | 696 |
| நீத்தல் விண்ணப்பம் | 395 |
| நூல்வரலாறு | 60 |
| படையாட்சி | 1144 |
| படையெழுச்சி | 1117 |
| பண்டாயநான்மறை | 1134 |
| பள்ளியெழுச்சி | 770 |
| பாண்டிப்பதிகம் | 1007 |
| பிடித்தபத்து | 1017 |
| பிரார்த்தனைப்பத்து | 947 |
| புணர்ச்சிப்பத்து | 874 |
| புலம்பல் | 1039 |
| பூவல்லி | 642 |
| பொற்சுண்ணம் | 534 |
| பொன்னூசல் | 718 |
| போற்றித்திருவகவல் (செய்யுள்) | 182 |
| ,, (உரை) | 190 |
| யாத்திரைப்பத்து | 1096 |
| வார்த்தை | 1076 |
| வாழாப்பத்து | 888 |
| வெண்பா | 1121 |

ஓம்

திருச்சிற்றம்பலம்

# உரிமையுரை

மெய்ப்பதி விரதை தைலம்மை என்ன
மேதினி புகழுமென் அனைக்கும்
சுப்பிர மணிய மெனுமிலக் கணநூல்
சுவைமிகு முத்தமிழ்ப் பனுவல்
பப்பற வளித்த சுப்பிர மணிய
பாரதி யாகுமெந் தைக்கும்
திப்பியத் திருவா சகவுரை யிதுதான்
சீர்பெற உரிமையாக் கினனே.

-உரையாசிரியன்

# திருவாசக ஆக்கம்

[க. சு. நவநீத கிருஷ்ண பாரதி]

என்பை உருக்கி இருள்சேர் இருவினைத்
துன்பத் தொடக்கறுத்துத் தூயசிவன் தாள்மலருக்(கு)
அன்பைப் பெருக்கியெமை ஆளாக்கி வீற்றிருக்கும்
இன்பைத் தருவதுவே எந்தையருள் வாசகமே. 1

குருவாக வந்து குறும்பரைவர் கோட்டைக்
கருவா சகற்றியெம் கண்ணுதலான் தாட்கன்(பு)
ஒருவா துளநிலைக்க ஒன்றுபடக் காட்டும்
திருவா சகமென்னும் தெய்வத் திருமறையே. 2

சொல்லா தவர்களையும் நெஞ்சுருகச் சொல்லவைக்கும் ;
நில்லா தவர்களையும் செந்நெறியில் நிற்கவைக்கும்
பொல்லா தவர்களையும் போக்கறுத்து வாழவைக்கும்
வல்லாளன் றன்தெய்வ வாய்மலர்த்தேன் வாசகமே. 3

கல்லைப் பிசைந்து கனியாக்கிச் சைவரசம்
புல்லப் பிழிந்து புதுமைசெயும், பொல்லாத
தொல்லைக் கடற்பிறவித் துன்பகல ஈதென்ன
மல்லற் கரைகாட்டும் வான்சோதி வாசகமே. 4

அம்பலத்தே நின்ற அருட்பொய்கைக் குள்வளரும்
நம்பன் நளினத்தாள் நம்வாத வூரன்கோத்
தும்பிவாய் ஊதித் தொகுதேன் இருலதுவே
கொம்பிற் குயிலிருந்து கூவுதிரு வாசகமே. 5

ஓம்

திருச்சிற்றம்பலம்

## கடவுள் வணக்கம்

வாதவூர் அன்புவள்ளல் மாமலர்த்தாள் வந்தித்துக்
காதலார் வாசகத்தேன் காப்பாக—ஓதியே
நல்லுரையை மற்றதற்கு நான்காணற்(கு) என்றென்றும்
தொல்லருளே ஆகும் துணை.

## அவையடக்கம்

ஆன்றோர் அவையடக்கம் அத்தனையும் பொய்-என்னைப்
போன்றோ ரதுமெய்யாப் போகுமெனச்—சான்றீர்
திருவா சகஉரையைச் செய்தேன் அதனை
ஒருவாமல் ஏற்பீர்என்(று) ஓர்ந்து

திருச்சிற்றம்பலம்

# திருவாசகப் பேறு

திருச்சிற்றம்பலம்

தொல்லை இரும்பிறவி சூழுந் தளைநீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகம் என்னும் தேன்.

என்னும் இவ்வெண்பாவினால், திருவாசகத்தேன் பிறவி நோயை நீக்கி ஆனந்தத்தை ஆக்கியது என, அதனால் வரக்கடவதாகிய பேறு கூறப்படுகின்றது.

பொழிப்புரை.—வரம்பு பெறாத வழியைத்தரும் திருவாத வூரில் அவதரித்தருளிய எம் தலைவராகும் திருவாதவூரடிகள் திரு வாய்மலரில் தோன்றிய, திருவாசகம் என்று சொல்லப்படும் தேனாகிய மருந்தானது தொன்றுதொட்டு வரும் பெரும் பிறவி யாகிய உயிரைச் சூழுங் கட்டினை வலியறப் போக்கி, துன்பத் திற்குக் காரணமாகிய அறியாமையை அறுத்து, அறிவுடைமை யைத் தந்து, இன்பத்தை உளதாக்கியது என்றவாறு.

விளக்கவுரை:—எல்லை மருவா நெறியாவது, பிறப்பு இறப்பு என்னும் வரம்புகளைப் பெறாத வழி அது வீட்டினைக் காட்டும் வழி என்க. அந்நெறியையே 'அன்பின் ஐந்திணை நெறி' என யாம் கோடும். இதனை இதன் இறுதியில் விரித்துக் கூறுதும். இனி நெறியென்றதனை ஆகுபெய ராகக் கொண்டு வீடு எனப் பொருள் கொள்ளலும் பொருந்தும். எல்லை மருவிய நெறியாவது, பிறப்பு இறப்பு என்னும் வரம்புகளுக்குட்பட்ட வழி. அஃது உலகிலே மீண்டும் மீண்டும் வந்து போகுமாறு காட்டும் வழி எல்லை மருவா நெறியடைந்தார், இடரின் நீங்கி நல்லறிவு பெற்று இன்புறுவர். எல்லை மருவிய நெறியடைந்தார், தாம் எய்தும் இடர் களைந்து இன்பம் பெற்றுக் கொள்ளும் அறிவாற்றல் பெறாராய்த் துன்புறுவ ரென்க.

மருவா நெறியளிக்கும் வாதவூரன்; அவன் எங்கோனென்க. தாவர சங்கமங்கள் என்னும் இரண்டுருவில் நின்று மா பரன் பூசைகொண்டு மன் னுயிர்க்கு அருளை வைப்பன் என்பது மரபாகலின் "எல்லை மருவா நெறிய ளிக்கும் வாதவூரெங்கோன்" என்றா ரென்க. மருவாநெறி யளித்தலை வாத வூருக்கு அடையாக்கின், அது முதற்கண் வாதவூரைச் சிறப்பிக்கு முகத்

தால், அவ்வூர்ப் பிறந்தார் அனைவரையும் பொதுப்படச் சிறப்பிக்கும். அங்ஙனம் சிறப்புற்றோருள் திருவாதவூரடிகளும் ஒருவராக, ஆக்கியோன் பெருமைக்குத் தனிப்பட்டதொரு சிறப்பின்றி இழுக்குண்டாமாதலின், அதனை அடிகளுக்கே அடையாக்குக. இங்ஙனமாக்கின், அடிகளுக் கமைந்த தனிச் சிறப்பானது, அவர் அவதரித்தருளிய ஊருக்கும் ஆங்குத் தோன்றினோர்களுக்கும், அவர் காரணமாகப் புத்தம்புதிய பெருஞ்சிறப்புண் டாக்குமென்க. இதுகொண்டு அவ்வடையைத் திருவாசகத் தேனுக்கு அடையாக்குதலையும் தவிர்க, நூலிற்குப் பெருமை கூறாத காலையும், ஆக்கி யோன் பெருமை தானே நூலுக்கு இயைவது ஒருபுறமாக, ஈண்டு முன் னிரண்டடிகளாலும் நூலின் பெருமை கூறப்பட்டதாகலின் என்க.

வாதவூரெங்கோன் என்றதனால் அடிகளுக்குத் திருவாதவூரர் என்னும் பெயரும் உளதென்பது பெறாம். இன்னும்,

“ வருவா சகத்தினின் முற்றுமுணர்ந் தோனைவண் தில்லைமன்னைத்
திருவாத வூரச்சிவ பாத்தியனை செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயு மற றப்பொருளைத்
தெருளாத உள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே ”

என நம்பியாண்டார் நம்பியவர்கள் குறிப்பிட்டவாறு சிவபாத்தியன் என்னும் பெயரும் அடிகளுக்குளதென்பதும் உடன்கொள்ளப்படும். இன்னும் திருவாதவூரிறைவன் திருவருளினாலே திருவவதாரம் செய்தார் என்பதும் பெறுதும். அடிகள் எமக்கு வீட்டுநெறி காட்டி ஆட்கொள்ளும் அருள் நிரம்பியவருமாவர் என்க இனி, எங்கோன் என அடிகளைக் குரவ ராகக் கொள்ளுதற்கிருந்த காரணம் திருவாசகம் என்பதும், எனவே, இவ் வெண்பாவைப் பாடியவர் அடிகளபால் திருவைந்தெழுத் துபதேசம் பெறாக் கொள்ளாதவர் என்பதும், அத்திருவாசகத்தையும் அடிகள் உப தேசிக்கப்பெறாதே பிறர்பாற் கேட்டுப பயின்றவராவர் என்பதும இவ்விலே சிறாற் பெறப்பட்டன. இனி, இவ்வெண்பாவை இயற்றியவர் அடிகள் பால் உபதேசம் பெறாரே யெனினும்,

“.............................. ....அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமையென்று இகழாதே திருவடி யிணையைப்
.............................................
சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி” (போற்றித். 75 87)

என அடிகள் ஓதியதனால், உடம்படு புணர்த்தி அடிகளை கட்டளை யளிக்கப் பெற்றவர் ஆவார் என்க. மாறறிதலால் அடிகளையே எங்கோன் எனக் குரவராகக் கொண்டு திருவாசகமோதிப் பயன் பெறுதலும் கூடு மென்றறிக. இனி, இயைபு பற்றி இவ்வெண்பாப் போந்த வரலாற்றினையுஞ் சிறிது ஆராய்வாம்.

திருவைந்தெழுத்தினை முறைப்படி உபதேசம் செய்யப்பெற்று, குரு லிங்க சங்கமங்களிலே வேறுபாடற்ற அன்பு பூண்டும், காலைக்கடன் நீரில் மூழ்குதல், நித்திய கர்மானுஷ்டானம் செய்தல் என்னும் இவற்றிலே குறையின்றியும், அதன்பின் குறித்த நேரத்திலே ஏற்ற இடத்திலே உரியதொரு திசைநோக்கி இயைந்த இருக்கையில் வீற்றிருந்துகொண்டு, ஐம்புலனடக்கி, மனதை ஒருவழி நிறுத்தி, அதன்கண் இறைவனை வாழச் செய்து, அத்தியான உருவிற போந்த அவனையே சிந்தித்து ஐந்தெழுத்தோதி, ஓதுங்கால் எண்ணப்படும் பொருளினும் எண்ணுமுறையினும் தொகையினும் குறையின்றியும் செவ்விபெறறு வருவோர் நற்பயன் பெறுவர். இந்த நியமத்திலே ஒன்றன் பகுதியிலே ஒரு சிறிது மாறுபடினும், அம்மாறுபாட்டைப் பெற்றவர் இம்மை மறுமை வாழ்வெல்லாம் ஒருங்கே இழத்தலோடு மீளா நரகமும் எய்துவர் எனபது ஆத்தர் கட்டளை.

மேற்கூறிய நியமங்களைக் கைக்கொண்டொழுகி வருமபோது இடையிலே நேர்தற்கிருக்கும் இடையூறுகளுக்கு அஞ்சினுன் ஒருவன் தன் வாழ்வை முனிநது, இனி இன்னதுதான் செய்வல் எனத் தெரியாது மயங்கி இருந்த காலத்தே, திருவாசகப் பாக்களை ஓதக் கேட்டான், அவன் செவியிலே தேனூறு பாய்ந்தது; அவ்வழியாக உள்ளம் புகுந்தது; அவனது மனப்புண்ணைத் தீர ஆற்றி இனபமூட்டியது; அவன் புலன்களிலே சிவமணங் கமழ்நதது; சிவனே ஆண்டவன் என்றும், தான் அவற்கு அடியவன் என்றும் உணர்ச்சி மேலிட்டு, திருவாசகத்தேனை மேன்மேலும் பாய்சசிச் சிவத்தை விதைத்துச் சிவபோகம் விளைய நுகர்ந்தான். அவனது நுகர்ச்சியின் விளைவே இவ்வெண்பாவாகும்.

இனி, விதிவிலக்கின்றிப் பழிபாவங்களுக்கஞ்சாது இரக்கம் என்பது எள்ளளவேனுமின்றி, எல்லாவுயிர்களும் கண்டு அஞ்சுதற்குரிய கூற்றினையொத்த கொடுஞ் செயலாளன் ஒருவன், இந்நூலின் ஒரு திருப்பாடலைக் கேட்டுத் தன்வயமழிந்து பரவசப்பட்டுத் தானும் பாடினுன்! உள்ளுருகினுன்! நாக்குழறினுன்! மெய்ம்மயிர் சிலிர்த்தான்! ஆனந்தப் பித்தேறிக் கூத்தாடினுன்! திருவாசகப் பித்தன் எனப்பட்டான், மறுபிறப்பெய்தினுன்; நூல் முழுவதையும் கற்றுத் தெளிய வேணவாக் கொண்டான்; நல்லாசிரியன் ஒருவனை வழிபட்டு ஆக்கியோன் பெருமை முதலியவற்றை உணர்த்த உணர்ந்துகொண்டு நூலைக் கறறுக் கேட்டுத் தெளிந்தான். அவனது உள்ளத்துள் விளைந்த விளைவே இவ்வெண்பா எனினும் பொருந்தும்.

அடிகள் இறைவன்பாற் பெற்ற உபதேசத்தின் விளைவே திருவாசகமாம். திருவென்பது, ஈண்டுப் பிறவி யல்லலை அறுத்து எய்தப் பெறுவதாகிய வீடு. வாசகமாவது மணிவாசகம். மணி என்றது குருமணியை. மணிவாசகமென்றது குருமணியால் அறிவிக்கப்பட்ட திருவைந்தெழுத்தை என்க.

"வாக்குன் மணிவார்த்தைக் காக்கி" (திருச்ச. 26)

என்றும்,

"பேச்சிறந்த மாசில் மணியின் மணிவார்த்தை பேசி" (பண்டாய. 7) என்றும்,

"மறைபயின்ற வாசகன்" (திருவார்த். 1)

[மறைபயின்ற வாசகம் - திருவைந்தெழுத்து] என்றும் கூறப்பெற்ற அடிகள் திருவாக்குகளே அதனை வலியுறுத்தும். திருவைந்தெழுத்தின் விளக்கமே திருவாசகம் என்பது. திருவாசகத்தின் மூலப்பொருள் திருவைந்தெழுத்தும், திருவைந்தெழுத்தின் மூலப்பொருள் சிவமுமாம். எனவே, திருவாசகம் என்பது ஆகுபெயரென்க.

தளை - கட்டு. உயிரைச் சூழுங் கட்டு மலக்கட்டு, உடலைச் சூழுங் கட்டும் மலக்கட்டே. உயிரைச் சூழும் மலம் ஆணவம் முதலாயின. உடல் மலத்தை நீக்குவது தேனீக்களால் சேர்க்கப்பட்ட மலர்த்தேன். உயிர் மலத்தை நீக்குவது அடிகளின் திருவாய் மலரினின்றும் பெருகிய திருவாசகத்தேன. தேனீக்கள் மலர்க் கண்ணுள்ள தேனை வலிந்து பெற்றுத் தாமும் தம்மரபும் நுகராதே பெரும்பான்மையும் வைத்திழக்கும.

"வைத்தீட்டினார் இழப்பர் வான்தோய் மலைநாட,
உய்த்தீட்டும் தேனீக் கரி" (நாலடி 10)

என்பதுங் காண்க. உலகம் உய்தல் வேண்டுமென்னும் உணர்ச்சியற்ற அம்மலர்போலாது, திருவருள் உணர்ச்சி வடிவாகிய அடிகளின் திருவாய் மலர்த்தேனோ தானும் அழியாது, தன்மரபில் வந்த அடியார்களும் அழிவெய்தப் பெறாமல் ஓம்புதற்குரியதாய் ஆனந்தம் பயக்கும் இயல்பிற்றென்க. கைப்பு முதலாய வெறுக்கத்தக்க சுவைகொண்ட மருந்தினை உள்ளே கலந்த தேனுமுண்டு. திருவாசகத்தேன் பிறிதொன்றனையும் வேண்டாது தன்னியல்பானே உயிர்மலங் களையு மென்க. அதாவது, உடற்பிணியை நீக்குதற்பொருட்டு வெட்டியும், கிண்டியும், கீறியும், அரிந்தும், எரியும் மருந்தினை உள்ளிட்டும் கைப்பு முதலிய வெறுக்கத் தக்க மருந்தினை உண்பித்தும் உணவு சுருக்குவித்தும் வரும்முகத்தால் நோய் நீக்குதல் ஒருவகையும், அத்துன்பமெல்லாம் தோன்றப்பெறாதே இனிய மருந்தினையூட்டித் துன்பம் போக்குதல் பிறிதொருவகையுமாக உடல்நோய் நீக்கும் முறைகள் இருவகை உள்ளனபோலவே, உயிர்நோய் நீக்குதற்கண்ணும் இருவகை முறைகள் உள. இனி, ஒரு மருத்துவன் இயல்பாகிய இனிய தேனைக் கொண்டு எல்லா நோய்களையும் நீக்கியாங்கு, உயிர்நோய் அனைத்தினையும் அடிகளாகிய உயிர் மருத்துவனார் திருவாசகத் தேன் கொண்டு நீக்கினர் என்பதாம். இம்முறை அவ்விரு முறைகளினும் வேறுபட்டதொரு புத்தம் புதிய முறையாம் என்க. திருவாசகமென்னும் தேன் என்றமைக்கேற்பத் திருவாய் மலர் என்றும், அல்லலறுத்து என்றமைக்கேற்பத் தேனாகிய மருந்து என்றும் விரித்தேம்.

"ஏனைப் பிறப்பறுக்கும் எம்மருந்தே" (கோயிற்றிருப். 4)

என்றதும் காண்க. இனி இறைவன் திருவடி மலரில் அடிகளாகிய கோத்தும்பி நுகர்ந்தீட்டிய தேன் என உரைத்தலுமொன்று.

உயிரும் தளையும் அநாதியாகவே தொடர்புடையன என்பது தோன்றத் "தொல்லை" என்றும், தளையானது தளையின் எளிதில் தடுத்தற் கரியதாகிப் பெருகிக்கொண்டே வரும் என்பது தோன்ற " இரும்பிறவி " என்றும், தளை உயிரை வளைந்து முற்றுதல் செய்யும் என்பது தோன்றச் " சூழுந்தளை " என்றும், அறியாமை அல்லலைப் பயந்தே தீரும் என்பது தோன்ற ஆகுபெயரான் அறியாமையை " அல்லல் " என்றும் கூறிய வாறுயிற்று.

ஏகாரம் ஈற்றசை. வீடுபேறுனது தன்னையே யன்றிப் பிறிதொன் றனையும் அறிவியாதும், அறியச் செய்யாதும் நிறகும் நிலையைச் செய்வது போன்றே இவ்வேகாரமும் ஆனந்தத்திலே அழுந்துமாறு அசைத்து நிற்கு மாதலின் என்க.

இனி, இத்திருவாசகம் அன்புநெறியான் இயன்றதென்பது வெளிப் படை. அந்நெறியாவது, காதலன்-காதலி, மக்கள்-பெற்றேர், பாங்கர்-பாங் கியர், ஆண்டான்-அடிமை, மாமன்-மருகன் என்ருங்கு வரும் தொடர்போடு இறைவன்பாலீடுபட்டு ஒழுகிவரும் ஒழுக்க நெறியென்க. இவ்வனைத் துள்ளும் காதலர் முறையே மிக்க சிறப்புடையது ; அஃது எலா நெறி யையும் பயக்க வல்லது ; வீடுபேறறைத் தவிர்த்துப் பிறவற்றைப் பேணுத பெருமை படைத்தது , வானவர் நெறியினும் சாலச் சிறந்ததென்க. இந்நெறியையே அடிகள் விழைந்து மேற்கொண்டார் என்பது தெளிவு.

இத்திருவாசகத்தின் செலவு, இறைவன் பலவிடங்களிலும் அடிகளை ஆங்காங்கு அளித்தும் குழைத்தும் ஊக்குதலால், அடிகள் அவனையே பாடிக் கூடவேண்டும் என நுதலிப் புகுந்து, பாடிவருங் காலத்தே, முன் பிரிந்த நினைவு வரப்பெற்று வருந்தி ஈற்றில் அவனை அணைதற்குரிய காதல் கைம்மிக்குத் திருவெம்பாவை முதலாய காதல் விஷயங்களை மேற் கொண்டு, அங்ஙனமே சென்று, ' என்னுள்ளே ஆறுதற்காக இங்ஙனம் இயமபினேன் ' என ஆறுதல் பெற்று, மேலும் இந்நிலையே பறறி நின்று உண்மையுணர்ந்து வியப்புற்றதாகக் காணப்படுகிறது. இப்பகுதி, கந்தரு வத்தின் இழிந்த பெருந்திணையாமேனும் அடிகள் உள்ளம் ஐந்திணை யன்பு நிரம்பி, தலைமக்களும் பிறருமாகிய (பிற சுற்றமாகிய) பலவடிவுகளைக் கொண்டு ஒரு காதற் குடும்பமாகிக் கருத்துலகில் நிலைபெற்று, அன்பின் துறைதோறும் காணப்பட்ட இன்பமெலலாம் துய்த்து ஊடல் கொண்ட வழித் தோழி தேற்ற ஊடல் நீங்கி ஒன்ருகிப் புணர்ந்த தலைவியின் ஆக்கமே தலைவறகும் வீடுபேருய பெற்றிக்கண் நிலைநிற்றலின், அங்ஙனம் கொள்ளாது, திருவாசகமும் திருக்கோவையும் ஒரு திருநூலின் இருபே ருறுப்புக்களாம் எனக்கொண்டு, அன்பின் ஐந்திணைக்கு நிமித்தமாக நிற் றலின் அத்திருவாசகத்தினையும் கந்தருவம் எனவே கோடும். கோவைக் கண் பயின்ற கைக்கிளைபோல என்க மேலும் திருவாசகத்தின்கண் பயின்றுவந்த பெயர்கள் எல்லாம் புனைபெயர்கள் என்க. தலைவன் இயற் பெயர் இன்னதென்றியாரும் கூறற்கியலாது.

" ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம்
திருநாமம் பாடி " (திருத்தெள். 1)

என்றலுங் காண்க.

இனி, பெருந்திணைக்குரிய உறுப்புக்களையடக்கியும், சுட்டியொருவர் பெயர் கொண்டும் ஐந்திணை வருதலுமுண்டு. கந்தபுராணத்து வள்ளியம்மை திருமணம் இங்ஙனமே வந்தது. அதனுள், விநாயகராகிய யானையைக்கொண்டு வள்ளியை அஞ்சுவித்தது நடுங்கநாட்டத் துட்படடுப் பெருந்திணைப்பாலதாம். இங்ஙனமாகவும் அப்படலத்தை அன்பின் ஐந்திணை எனவே சான்றோர் கொள்ளுவர்.

நிற்க, அடிகள் அன்பின் ஐந்திணை நெறிக்குத் தக்கவர் என்பதும், திருவாசகம் அதற்கு நிமித்தம் என்பதும்,

" வருவா சகத்தினின் முற்றுமுணர்ந் தோனைவண் டில்லைமன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயும்மற் றப்பொருளைத்
தெருளாத உள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப் பரே.

என்னும் நம்பியாண்டார் நம்பி திருப்பாட்டால் ஐயமற விளங்கு

" இருந்துதி என்வயிற் கொண்டவன் " எனத் திருக்கோவையாரின்கண் கூறுதலானே, அவ்விருந்துதியாவது திருவாசகம் என்பது பெறும். கொண்டவன் எனவே, அதனைப் பாடுவித்துக் கேட்டு ஏற்றுக் கொண்டவன் என்பதும் பெறப்படும். இங்ஙனம் இறைவன் தம்பால் இத்துதி நூலை ஏற்றுக்கொண்டமையால், அதற்குத் தற்சிறப்புப்பாயிரமும் அடிகள் கூறவேண்டுமென இறைவனால் கட்டளையிடப் பெற்றார் என்பதும் உணரப்படும். அதன் விரிவை அடுத்த திருப்பாடல் உரையுட் காண்க. இங்ஙனம் அடிகள்கூற இறைவன் கேட்டருளுதலின், இத் " தொல்லை யிரும் பிறவி " என்னும் வெண்பாவை இறைவனே கூறினான் எனக் கூறுதற்கும் இடனுண்டு. மேலும் ஆராய்க. இறைவனே இயற்றினான் எனின், " எங்கோன் " என்றது காதல்பற்றி வந்ததென்றும், தன்னிலைபற்றி " ஆக்கும் " எனற்பாலது "ஆக்கியதே" என வந்ததென்றும் கொள்க.

# திருவாசகம்

## சிவபுராணம்

### தற்சிறப்புப் பாயிரம்

கலிவெண்பா

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க
ஈசன் அடிபோற்றி எந்தை அடிபோற்றி
தேசன் அடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவன்அரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை *
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை இலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யாயின எல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்கள்ஓர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய*இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்

புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலன்ஐந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்கும்எங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவே என் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப

ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டுஇங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்.

திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

## உரை

சிவபுராணம், சிவனைப்பற்றிய பழைய வரலாறு எனப்படும். அஃதாவது தொன்று தொட்டே பிறவியை அஞ்சித தன்னைவிடாது அடைக்கலம் புகுந்த அன்பரைச் சிவபுரத்தினுள்ளே தன் அடிக் கீழ் இன்பந்துய்க்குமாறு வைக்கும் அவனது இயல்பாகிய திரு வருட் செயலைக் கூறும் பகுதி என்க. சிவபுராணன், சிவனாகிய பழையவன்; அவனைப் பற்றிய புராணம் எனினுமாம். இனி, புராணம் என்பது நூலுக்குப் பெயராவதோடு நூலுறுப்புக்கும் பெயராதலைப் பெரிய புராணத்துள்ளும், நூலுறுப்பு ஒன்றற்கே பெயராதலைத் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த இலிங்க புராணம், ஆதிபுராணக் குறுந்தொகை என வருவனவற்றுள்ளும் காண்க.

சிவபுராணம் ஒழிந்த ஏனையவற்றுக்கும் இங்ஙனம் உரைப்பன் எனவும், இதனைச் சொல்லுவார் இது பயன் பெறுவர் எனவும் கிளந்தோதாதுவிட்டமையின், சிவபுராணம் என்பதே இத்திரு வாசகத்திற்கு அடிகள் இட்ட பெயராகும். அன்றேல், சிவனைப் பற்றிய நூல் யாதேனும் அதனைக் கூறுவோர்-கேட்போர் என்பவர் கள், சிவபுரம் சொல்லுவார்கள் எனப் பொதுப்படக் கூறியவாறெ னினும் அமையும். அங்ஙனம் அமைந்த சாலையும் திருவாசகமும் சிவபுராணம் எனவே படும்.

இத்திருப் பாடலில்

“ நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க ”

என்னும் முதலாமடி தொடங்கி,

“ அவனரு ளாலே அவன் தாள் வணங்கி ”

என்னும் பதினெட்டாமடி இறுதியாகவுள்ள பகுதியால் கடவுள் வணக்கமும்,

“ சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினை முழுதும் ஓய உரைப்பன் யான் ” (19–20)

என்னுமடிகளால் செயப்படு பொருளும்,

“ கண்ணுதலான் தன் கருணைக் கண்காட்ட வந்தெய்தி ”

என்னும் 21-ஆம் அடிதொடங்கி,

‘ பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன் ’

என்னும் 25-ஆம் அடி இறுதியாகவுள்ள பகுதியால் அவை யடக்கமும்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி"
என்னும் 26-ஆம் அடி தொடங்கி,

"சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்"
என்னும் 93-ஆம் அடி இறுதியாகவுள்ள பகுதியால் தியான வழியினால் அடைக்கலம் புகுதலும்,

"செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து"

என்னும் 94-ஆம் 95-ஆம் அடிகளால் அங்ஙனம் இறைவன்பால் அடைக்கலம் புகுந்தார் எய்தும் பயனும் கூறப்பட்டுள்ளன. இதனால் உரைவரைதலும் அடிகட்கு உடன்பாடாயிற்று என்பதும் துணியப்படும். எனவே, இத்திருப்பாடல் இந்நூலுக்குத் தற்சிறப்புப்பாயிரமாக அமைந்துள்ளது. சிவபுராணம் உரைப்பன் (19-20) "சொல்லிய பாட்டின்" (93) என்றலின், சிவபுராணம் பாட்டு வடிவாய தென்பதும், அப் "பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக் கீழ்ப் பல்லோருமேத்தப் பணிந்து" என்றலின், அதனைச் சொன்னவரும் கேட்பவரும் தமிழரேயாவர் என்பதூஉம் பெறப்படும்.

அடிகள் பலவிடங்களிலும் இறைவன்பால் அருளும் உபதேசமும் பெற்றனர். முதலில் "நமச்சிவாய" என உத்தரகோசமங்கைக் கண்ணும், பின்னர் "சிவாயநம" எனக் கோகழியின்கண்ணும் உபதேசம் செய்யப் பெற்றனர். உத்தரகோச மங்கையில் அருள் புரிந்த குருமணியாவோன் "இங்குத்தானே நிற்றி" எனப் பணித்து அடிகளை நிறுத்தி, ஆங்கு நின்றும் திருப்பெருந்துறைக்குப் பிரிந்து சென்று, அவ்விடத்தே அடியவரொடும் தோய்ந்து செந்தீயில் கரந்து சென்றனன். அதனையறிந்த அடிகள் புலம்பியிருந்தனராக, அவர்க்கு ஆவடுதுறையாகிய கோகழிக்கண் கலக்கம் தீர உபதேசித்தனன். ஆதலால் அடிகளுடைய வாழ்க்கையில் கோகழிநாதனும் திருப்பெருந்துறையானும், தில்லையம்பலவனும் (தில்லைக்கு வருக என்று பணித்தமையின்) பெரிதும் தொடர்புடையவராயினர். ஆதலால் இச்சிவபுராணமாகிய பாயிரத்தின்கண், அம்மூத்தலத்தும் வீற்றிருந்த குருமணியானவரையே அடிகள் குறிப்பிட்டனர். இதனைப் பின்னர் உரையுள் விரிவாக உணர்க.

இனி, இறைவன் திருவருள் நோக்கத்தானும், சாற்றினாலும், வார்த்தைகளினாலும், அடிகள் செவ்வி முற்றித் தாம் தலைமகளாகவே கருத்துலகில் அமைந்துவிட்டனர். அங்ஙனம் அமைந்தவர் இறைவனோடு ஊடியும், உணர்த்த உணர்ந்து கூடியும் களிப்புற்று வருகின்றனர். இந்நிலையில் தலைவன் தலைவி என்னும் தொடர்பு

நெகிழப் பெருதே அத்தகுதியோடும், ஆண்டான் அடிமை இயல்போடும், ஆசிரியன் மாணவன் இயல்போடும் பொருந்தி, இறைவனுடன் கடமை புரிந்து இன்புற்று வருகின்றனர். இங்ஙனம் கருத்துலகக் காட்சியற்றிருக்கும்போது வாசனை காரணமாக உலகம் வந்து தாக்குதலும், அதனின் விடுபடுமாறு ஆண்டான் ஆகவும் அடியவனுகவும் இறைவனையும் தம்மையும் மதித்துக்கொண்டு ஒழுகுவாராயினர். அவற்றையெல்லாம் அவ்வப் பதிகங்கள்தோறும் காண்க.

இனி, தலைவன் திருவடிகளைப் புகழுமாறு அழியாத பொல்லா வினையேன், அவன் அருளாலே அவன் திருவடிகளை வாழ்க-வெல்க-போற்றி என்று துதித்து வணங்கி, எம்பெருமானே, உய்யவென்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா என்றுங்குச் சிந்தித்து அடைக்கலமடைந்து, எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன், இப் பிறப்பின் உன் பொன்னடிகள் மெய்யாகவே கண்டேன் எனச் சிவ புராணம் உரைப்பேன், அங்ஙனம் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் சிவபுரம் சென்று சிவனடிக்கீழ்ப் பேரின்புறுவர் என்பதே ஈண்டு இப்பாட்டின் திரண்ட பொருளாம்.

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க

என்றுமிவ்வடிகளிஞல் வாழ்த்துக் கூறப்படுகின்றது.

(பொ - ரை.) நமச்சிவாய என்று சொல்லப்படும் திருவைந்தெழுத்து வாழ்க, தலைவன் திருவடி வாழ்க, இமை இமைக்கும் நேரமளவுதானும் என் நெஞ்சில் நின்றும் நீங்காதிருப்போன் திருவடி வாழ்க, திருவாவடுதுறைக்கண் என்னையாண்ட குருமணியின் திருவடி வாழ்க; மெய்யறிவு நூலைத் தனக்குரிய திருமேனியாகக் கொண்டு நின்று இனிமை செய்வோன் திருவடி வாழ்க, ஒருவனும் ஒருவனல்லாதவனுமாகிய தலைவன் திருவடி வாழ்க எ - று.

(வி - ரை) நமச்சிவாய - வணக்கம் சிவனுக்கு. உருத்திரத்தின் கண்ணும் முதற்கண் வணக்கம் என்பதும், அதன்பின் இறைவன் திருப்பெயருமாகக் கூறப்படுதல் காண்க. இங்ஙனமே ஓம் நமோநாராயணுய என்றும், நாராயணுய நம என்றும் பிருண்டு வழங்கிவருதலும் ஆராயத்தக்கன. சிவ என்னும் பெயர், நான்காம் வேற்றுமை உருபேற்கும்போது, வகரத்தின்மேல் நின்ற அகரம் ஆகாரமாகி, யகர அகரமாகிய உயிர்மெய் பெற்றுச் சிவாய என்ருகின்றது.

இனி, இத்திருவைந் தெழுத்துக்களில் ந என்பது திரோதனசத்தி என்றும், ம என்பது மலம் என்றும, சி என்பது சிவன் என்றும், வ என்பது சத்தி எனறும், ய என்பது ஆன்மா என்றும் பொருள்படுமெனக் கொள்ளப்படுமேல், அவை நமசிவய என்றும்—சிவயநம என்றும் வருதலின்றி, நமச்சிவாய என்றும—சிவாயநம என்றும் வருதற்கு ஓரியைபுமின்மையின், நமச்சிவாய—சிவாயநம என வருவனவற்றுள்ளே, நமசிவய சிவயநம என வருவனவற்றுக்குரிய அக்கரப்பொருளை ஏறறி ஆராய்வது மரபாகாது.

இனி, இந்நூலகத்திலே

"போற்றியோ(ம்) நமச்சிவாய" (திருச்சதகம். 62.)

என்றும்,

"நமச்சிவாயஎன் றுன்னடி பணியாப் பேயனுகினும்" (செத்திலா. 7.)

என்றும்,

"சிவாயநம எனப் பெற்றேன்" (திருவேசறவு 10)

என்றும், தேவாரத்திலே (சம்பந்தர் நமச்சிவாயப் பதிகம)

"நாதன் நாமம் நமச்சி வாயவே"

என்றும்,

"சொல்லும்நா நமச்சி வாயவே" (சுந்தரர்)

"நற்றுணை யாவது நமச்சி வாயவே"

(திருநாவுக்கரசர் நமச்சிவாயப் பதிகம்)

என்றும் நமச்சிவாயப் பதிகங்களில் வருவனவெல்லாம், திருவைந்தெழுத்துக்களுக்குத் தனித்தனி பொருள் குறித்து வந்தனவல்ல அவையெல்லாம் வடமொழி மரபுப்படி நான்காம வேற்றுமை உருபேறுங்காலத்து விகாரம் பெற்றனவாம் வேதம் உபநிஷத் முதலியவற்றுள்ளே அக்நிமி முதலிய பதங்களுக்கு எழுத்துத் தோறும் பொருள் விரித்துச் சென்ற மரபேபற்றி, திருவைந்தெழுத்திறகும் சான்றோர் எழுத்துத்தோறும பொருள் விரித்தனர் போலும்.

மலமற்றவிடத்தன்றி வெளிப்படாத இயல்புடைய இறைவனின் வெளிப்பாட்டிற்குக் காரணமாய்ச் சிறந்து நிற்றலின், அதனையே முதலாக வைத்துக் கூறினர். சிவனையும், ஆன்மாவை மூடிய கட்டறுத்து அவ்வான்மாவையும், ஒன்றுபடுத்தும் ஆற்றல் திருவைந்தெழுத்திற்கு யுளதாகும. அவ்வாசனு மலத்தையும் அறுக்கவல்லது.

சிவயநமவெனச் சிந்திக்கப் பெற்றேன்—நமசிவாய வாழ்க எனக் கூறுதலை இனியதொரு முறையாகவும், அம்முறையைக் கருதிக் கொள்ளாராய், நமச்சிவாய—சிவாயநம என அடிகள் கூறிய திருக்குறிப்பு ஊன்றியுணர்ந்து இன்புறற்பாலது.

நாதன் - ஆன்மநாதன். அதனை நாதத் தத்துவத்தின் பொருளாக உள்ளவன் என்றல் பொருந்தாது. என்னை, நமச்சிவாய வாழ்க என்ற காலையே அப்பொருள் புலப்பட்டு உடம்படுபுணர்த்தலால் அனாதியின்

என்க. அது திருப்பெருந்துறையில் கோயில் கொண்டருளிய இறைவன் திருப்பெயராகும். இன்னும் அடிகள்,

“ சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கி நின்று
ஊடுவேன் செவ்வாய்க்கு உருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச்சிவன் கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய்.” (திருவம். 17.)

என்னும் திருப்பாட்டால், இறைவனைத் தலைவனாகவும், தம்மைத் தலைவியாகவும் உணர்ந்து வந்ததைப் புலப்படுத்துதலால், நாதன் ” என்றது தலைமகனை உணர்த்துமெனவும், மேலும இறைவனை ஆண்டானாகவும், தம்மை அடிமையாகவும்; பிறவாகவும் உணர்ந்துவருதலால், அஃது ஆண்டானாகவும் பொருள்படுமெனவும் உய்த்துணர்ந்துகொள்க.

பெற்றோர் உடன்பிறப்பாளர் மக்கள் ஏனைய உறவினர், நண்பர் அடிமை குடிமையோர் என்னும் தொடர்புடையார்மாட்டெல்லாம் அடிப்படையான அன்பைக் காணலாம். இவவகை உறவுபூண்ட அன்பினர் எல்லாருள்ளத்திலும் தலைவர் தலைவியர் என்னும் எண்ணமிக்க அன்பு நிலையும் ஆஙகாங்கு நிலவி வரும் தந்தை தாய் மைந்தன் முதலாய சுற்றத்தவரெல்லாரும் ஒரொரு காலத்திற் பிரிதற்குரியராகக் காதலன் காதலி என்னும் இருவருமே உள்ளளவும் பிரிவின்றி உடனுறைந்துவருதல் கண்கூடாகும். இங்ஙனம் எழுமையுந் தொடர்ந்து உடனுறைவிற்குக் காரணமாகிய அன்பு நிலையே ஏனைய அன்பு நிலைக்குக் காரணமாகிய நிலைக்களம் பூண்டது. ஆண்டானடிமை அன்புத்திறன பயின்று முற்றிய பின்னர், இநதப் பேரன்பு நிலையையே அடிகள் எய்தினர் என்பதற்கு, திருவெம்பாவை, திருவம்மானை, திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, குயிற்பத்து ஆகிய பகுதிகள் சான்றும்

இங்ஙனம் பயின்று வந்த பயிற்சி விசேடத்தினால், கலக்கமற்றவோர் உண்மை கண்டு, அவ்வுண்மையே ஐந்திணையன்பு நெறிகாட்டிய பேரின்ப நிலையாகத் திருவருள் வழிகாட்டத் திருக்கோவையைத் திருவாய் மலர்ந்தாரென்க இவ்வரிய பேரின்ப நிலையை எளிதாக மக்கள் உலகிற்கு உதவிய சிறப்பு தமிழ்மொழி ஒன்றற்கே உரியதாகும்.

திருவைந்தெழுத்தாகிய திருமேனி பூண்ட ஆன்மநாதன் என்நாதன் ஆவான. அவன் தாளை வணங்கின் அவனது தோள்களைக் கூடலாம்; ஊடலாம்; உணர்த்த உணரலாம; உவக்கலாமாதலின், “நாதன்தாள் வாழ்க” என்றனர் ாண்டு, தாள் என்பதற்குத் திருவருட்சத்தி என்று பொருள் கொள்ளற்க. ஆண்டானாகக் குரவனாகப் பாவனை செய்யுங்கால் கொள்ளலாமன்றி, இங்கே கொள்வது பொருந்தாதென்க.

நமச்சிவாய என்பது, பெயர் கேட்டு அவனை வணங்கினாள் எனப்

பொருள்படும். நாதன் என்றது, அப்பெயருடையானைப் பேரின்பக் காதலன்பினனாகக் கொண்டு வணங்கி வருகின்றான் எனப் பொருள்படும். அந்நாதன் தாள் அவன் பெயர் சொல்லிய அளவிலே தம்பாற் போந்தன ஆதலான் நாதன் வாழ்க என்னாது, "நாதன்தாள் வாழ்க" என்றார்.

"நின்னிற் சிறந்த நின்தா ளிணையவை—
நின்னிற் சிறந்த நிறைகட வுளவை" (பரிபா. 4 அடி. 62-63.)

எனவும்,

"மறுபிறப் பறுக்கும் மாசில் சேவடி" (பரிபா. 3. அடி. 2.)

எனவும்,

"முடிந்ததும் முடிவதும் முகிழ்ப்பதும் அவை மூன்றும்
கடந்தவை அமைநத கழல் நிழலவை" (பரிபா. 13. அடி 46-47)

எனவும்,

"திருவடி ஞானம் சிவமாக் குவிக்கும்
திருவடி ஞானம சிவலோகம சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலர் மீட்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே" (திருமந். 1598)

எனவும்,

"மந்திர மாவதும் மாமருந் தாவதும்
தந்திர மாவதும தானங்க ளாவதும்
சுந்தர மாவதும் தூய்நெறி யாவதும்
எந்தைபி ரான்தன் இணையடி தானே" (திருமந். 1604)

எனவும் சான்றோர் அருளிப்போதலானும் அஃதுணர்க. நமச்சிவாய என்றபோதே அவன் பெயரோடு அவனையும வாழ்த்தினாராகலின், ஈண்டு அவன் தாள் வாழ்க என்றாருமாம். தாள்வாழ்தலாவது, வாயகத்தன்றிச் சிந்தையுள்ளும், செய்கையுள்ளும் பயின்றுவருதல்.

"சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச் சோதி தோன்று மாபோல்
ஆரியனும் ஆசான்வந்து அருளால் தோன்ற
அடிஞானம ஆன்மாவில் தோன்றும தோன்றத்
சூரியனும் சிவன்தோன்றும் தானும தோன்றும்
தொல்லுலகெ மெல்லாந்தன் னுள்ளே தோன்றும்
நேரியனாய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும
நின்றநிலை எல்லாமும் நிகழ்ந்து தோன்றும"

(சிவஞானசித். சுபக். சூத். 8. செய். 23)

எனவும் இதனானும் குருவினருளால் அடிகட்கு ஞானமுண்டாயவாறு முணர்க.

நெஞ்சு—இருதயகமலம். அதனுள்ளே செந்நெல்லின் முனை யளவாய் துணைத்தாய், நெருப்பெனச் சிவந்து, ஒளியுடைத்தாகி விளங்கும்பெற்ற

தோன்றுண்டு. அதுவே அயனும் அரியும் வேந்தனும் சிவனும் வுலகோடு பற்றற்று ஒன்ருயவனுமாம் என்றும், அவ்வொளியின் வெப்பி ஞலே உயிரும் உடலும் ஓம்பப்பெறுகின்றன என்றும் வேதம் கூறு கின்றது. அவ்வொளியை இக்காலத்து மேலைநாட்டார் "மின்ஞெளி யாற்றல்" என்று கூறுகின்றனர்.

யான் அறியாப் பருவம் முதற்கொண்டே என்நாதன் என் நெஞ்சகத்தே வீற்றிருந்து வருகின்ருன்; அவனே என்னையும் என் னுடலையும் ஓம்பி வருகின்ருன்; யானே அவனை யுணர்ந்து பேணுது இங்கு உண்டுடுத்து உவந்து வந்தேன், அங்ஙனமாகவும், அவன் என்னை முனியாது, என்னுள்ளத்தே புகுந்து, என்னை என்புருக்கி, அன்பு பெருக்கி வாராநின்ருன். யாவர் தாம் என்னே இங்ஙனம் ஓம்புதற்குரியவர்! தானும் அன்பும் ஒன்றேயாவன் ஆதலின், அவன் தாள் வாழ்க என்ருர். இன்னும் இறைவன் சிந்தைக்கண் அநாதியாகவே வாழ்ந்து வருதலை "மலர்மிசை யேகினுன்" எனத் திருவள்ளுவர் இறந்த காலத்தாற் கூறுவர்.

"உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்து என்னை உளம்மன்னிக்
கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினுல் ஆண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானை......" (கண்டபத்து. 3)

என்றலும் ாண்டு உணரப்படும். இனி,

"இசைந்தெழும் அன்பின் எழுந்த படியே
பசைந்தெழும் ாசரைப் பாசத்துள் ஏகச்
சிவந்தகுரு வந்து சென்னிகை வைக்க
உவந்த குருபதம் உள்ளத்து வந்ததே" (திருமந். 1590)

என்பது தோன்ற "இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" என்ருர்.

கோகழி என்றது திருவாவடுதுறையை. திருவாவடுதுறை என்றே எல்லாரும் உரைத்துப் போந்திருக்கவும், மற்றதனை அடிகள் கோகழி எனக் குறித்தனரேயன்றித் திருவாவடுதுறை எனக் கூறிற்றிலர். திருவாவடுதுறைக்குக் கோகழி, கோமுத்தி எனவும் பெயர்கள் உள வென்பதை, அத்தலவரலாறுகள் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இனி, கோகழி என்றது திருப்பெருந்துறையை எனச் சாதிப்பர் ஒருசாரார். குயிற்பத்து இரண்டாவது திருப்பாடற்கண் உத்தரகோச மங்கையும், ஆருவது திருப்பாடற்கண் கோகழியும், ஏழாவது திருப்பாடற்கண் பெருந் துறையும் கூறப்படுகின்றன. ஆரும் பாடற்கண் கூறப்படுகின்ற கோகழி என்றது பெருந்துறையாகுமேல், மூன்ரும் பாடலில் கூறப்படுகின்ற உத்தரகோசமங்கையும் பெருந்துறையேயாகும். உத்தரகோசரமங்கையும் பெருந்துறையும் ஒன்றெனப்படா வேறெனவே படும் என்பது வெளிப்படை யாதல்போலக் கோகழியும் பெருந்துறையும் ஒன்றெனப்படாவாய் வேறெனவே படும். அங்ஙனமாகவும், கோகழி என்றதற்கு நலிந்து பொருள்கூறி, அது பெருந்துறையேயாகும் என நாட்டுதல் வலியற்ற தாகும். மேலும்

" நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணியெழு கோகழிக் கரசை " (பண்டாய. 5)

என்புழியும் அவ்விரு தலங்களும் வேறுதல் கண்கூடு. கோகழிக்கரசு என்றது ஆங்குள்ள சிவபோதி விருட்சத்தை.

" சேர்ந்திருந்தேன் சிவபோதியின் நீழலின் " (89)

என்பது திருமந்திரம். அரசின் அடி அயனாகவும், நடு அரியாகவும், முடி அரனாகவும் கொண்டு, ஏத்தி வணங்கி வலம் வருதல் வழக்கம். இதனானும அது சிவமாதல் தெளியப்படும். கோகழிக்கு (திருவாவடுதுறைக்கு)த் தலவிருட்சம் அரசென்பது அறியப்பட்டதொன்று. இன்னோரன்னவற்றால் கோகழி என்பது திருவாவடுதுறையாதல் தெளியப்படும்

இனி, ஒருசாரார் அடிகளை முதன்முதலில் ஆண்டவிடம் திருப்பெருந்துறை என்பர். பெருந்துறை ஈண்டு உரையுள் அதிகரித்ததினால் அதனைச் சிறிது ஆராய்வாம.

பெருந்துறையே அடிகளை முதற்கண் ஆண்ட இடம் என்பார், தமக்கு ஆதாரமாகத் " திருந்துவார் பொழில் திருப்பெருந்துறையில செழுமலர்க் குருந்தம் மேவியசீர் இருந்தவாறெண்ணி " எனபதனையும், " செல்வத் திருப்பெருந்துறையில் நிறைமலர்க் குருந்தம் மேவியசீர் ஆதியே " என்பதனையும் இன்னும், அருட்பத்தென்னும் அப்பதிகத்தே " குருந்தம் மேவியசீர் " என வருவனவற்றையும் காட்டுவர். உத்தரகோசமங்கையிலே அங்ஙனம் காட்டிய சீரைத் திருப்பெருந்துறையிலும் எண்ணி எனப் பொருள் கொள்ளின் அவர் கூறுவப் பொருந்தாதாகும். உத்தரகோச மங்கையிலே குருந்த நீழலிலே தமக்களித்த கோலம் வெண்காட்டிலுமுள்ளதாக

" விருந்தின னாகி வெண்கா டதனில்
குருநதின் கீழன் றிருந்த கொள்கையும் " (கீர்த்தி. அ. 60-61.)

என அடிகள் கூறியுள்ளார். ஆதலின் அவ்வுத்தரகோசமங்கையிலே தமக்குக் காட்டிய திருக்கோலத்தைப் பெருந்துறையிலும், வெண்காட்டிலும் இறைவன் காட்டினான் என்பதே பொருந்துவதாகும்.

" திருவார் பெருந்துறை மேயபிரான்......
அவன் மேவும் திருவாரூர் பாடி " (தெள்ளே. 2.)

எனவும்,

" உத்தரகோச மங்கைக்கோன் தங்கும் இடமருது "
(திருப்பொன். 2.)

எனவும்,

" ஏகம்ப மேயபிரான்.........அம்பலமே யிடமாக நடமாடுமா பாடி "
(பூவல்லி. 14.)

எனவும் வருவனவும், ஓரிடத்துக் காட்டியதனை மற்றோரிடத்திலும் காட்டினான் என வருவதை வலியுறுத்தும். " வெண்காடதனில் குருந்தின்

கீழன்றிருந்த கொள்கையும்" என்றபோது, அன்று என்றது, உத்தரகோச மங்கையிலே குருந்தநீழலில் வீற்றிருந்த அக்காலத்தை உணர்த்துமென்க.

" எங்களை ஆண்டுகொண்டு இங்கெழுந்தருளும்
மதுவளர் பொழில் திருவுத்தர கோச
மங்கை யுள்ளாய் திருப்பெருந்துறை மன்னா" (திருப்பள்ளி. 7)

அடிகள் கூறுதல் திருப்பெருந்துறையினும் உத்தர கோசமங்கைக்கு முதன்மையைக் கொடுக்குமன்றோ? ஈண்டு, இங்கென்றது பெருந்துறையைக் குறிக்கும். அப்பதிகம் பெருந்துறையில் இருநதே பாடப்பட்டதாகலின் என்க. மேலும்,

" தன்னீ றெனக்கருளி......உத்தர கோசமங்கை
மின்னேறு மாடவியன் மாளிகை பாடி" (திருப்பொன். 3.)

எனவும்,

" உத்தர கோச மங்கையுள் இருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்" (கீர்த்தி. 49-50)

எனவும் வருவன அதற்கு உடன் சான்றுகளாகும்.

" திருவார் பெருந்துறைச் செல்வனுகிக் கருவார்
சோதியிற் கரந்த கள்ளமும்" (கீர்த்தி. 54-55)

என்னுமிது, இறைவனுடன் சென்ற அடியார்களைத் தான் திருவுருவாக எடுத்த தேனுந்து செந்தீயிலே தன்னுடன் ஒன்றக் கலந்த வரலாற்றைப் புலப்படுத்தல் காண்க. இங்ஙனம் அடியவர்களை உடன் கலந்தருளும் திருக்குறிப்புக் கொண்ட இறைவன், அடிகளைத் திருவுத்தரகோசமங்கையிலே ஒழித்தருளியபின், அவ்வடியார்களைப் பெருந்துறைக்கு இடடுச் சென்று, அங்கே தேனுந்து செந்தீயிலே கலந்துகொள்ளச் செய்தனன். அங்ஙனம் கலவாது எஞ்சிய சிலர் எரியிற புகுநதும், மயக்கமெய்தியும், வரைபுரண்டும, கடற்பாய்ந்தும் நாத நாத என்றழுது, இறைவன் திருவடி நீழலை எய்தினர். இவ்வுண்மை,

" நாயி னேனை நலமலி தில்லையுள்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல வென்னை ஈங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழு தரற்றிப்
பாத மெய்தினர்................" (கீர்த்தி. 127-137.)

என்னுமிவ்வடிகளினுல் தெளியப்படும். ஈங்கு என்றது உத்தரகோச

மங்கையை. என்னை உத்தரகோசமங்கையிலே நீக்கிவிட்டுத் திருப்பெருந் துறையின்கண்ணே அடியவர்கள் ஒன்ற ஒன்ற உடன்கலந்தருளி, ஆங்கு இமயமொத்த தில்லைப்பொதுவினுட் புக்கருளினன் என்க. திருப்பெருந் துறையிலே இறைவன் அடியவர்கட்காற்றிய திருவிளையாடல்களைப் பல்லோ ரும் புகழ்ந்து பாராட்டக் கேட்டருளிய அடிகள், அவனது கீர்த்தியைத் திரு வுத்தரகோசமங்கையிலே இக்கீர்த்தித் திருவகவலாகப் பாடினர் என்பதை

" நாயி னேனை நலமலி தில்லையுள்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல வென்னை ஈங்கொழித் தருளி "

என்னுமடிகள் வலியுறுத்தும்.

அன்றுடன் சென்ற அடியவர் - ஊங்குத் திருப்பெருந்துறைக்கு உடன் சென்ற அடியவர்; அருள்பெறும் செவ்வி வாய்ந்திருந்த அடியவர் என்க. எய்த வந்திலாதார் - இறைவனுடன் கலத்தற்குச் செவ்வி நிரம்பப் பெறாது ஆற்றலின்மையால் அவனுடன் பெருந்துறைக்கு வந்திலாதார், அவர் பொதுவினில் வருகெனக் கட்டளை பெறாதவராகலின், அழுதரற்றி, எரியிடைப் பாய்தல் முதலாயின செய்து பாச மொழிந்தார் அடிகள் இவ்விரண்டனுள்ளும் ஒன்றனையேனும் மேற்கோடற்குக் கட்டளை பெறாத வராயினர். ஆதலின் தம்மை

" வருந்துவனத் தமியேன் " (திருச்ச. 13.)

என்றும்,

" இரண்டுமில் இத்தமியேன் " (ஷை. 29.)

என்றும் அவர் கூறிய தன்மை உற்றுநோக்கி யின்புறற்பாலது. தில்லைக்குப் போதலையே யன்றித் தாம் ஒன்றனையும் ஆற்றற்கு அவா பெறாமை குறித்து வருந்திய வரலாறே, இத்திருவாசகம் முதலிய சார்புப்பொருள் என்பதும் ஈண்டுப் பெற்றாம். இனி,

" சீரார் பெருந்துறையில் எளிவந்திருந் திரங்கி யெண்ணரிய
இன்னருளால் ஒளிவந் தெனுள்ளத் திருள்ளே யொளிதிகழ
அளிவந்த அந்தணனை " (திருவம்மானை. 18.)

எனவும்,

" பேதமில்லதொர் சற்பளித்த பெருந்துறைப் பெருவெள்ளமே "
(திருக்கழுக்குன். 6.)

எனவும் வருவன, பெருந்துறைக்கண் ஆட்கொண்டமையை வலியுறுத்தற் கமையுமன்றோ எனின், ஆங்கு எளிவந்திருந்தருள் செய்தது பின்னர் என்க. என்னை,

" பிணைத்தான் புகுந்து எல்லே பெருந்துறையில் உறைபெம்மான்
மனத்தான் கண்ணின் அகத்தான் மறுமாற்றத் திடையானே "
(உயி. உண். 4.)

என்றலின் என்க. மேலும்,

" நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி யெழுகோ கழிக் கரசைப்—பண்ணின்

மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண் " (பண்டாயநாண். 5.)

என்னும் திருப்பாடலும், பண்ணின்மொழியாளோடு உத்தரகோசமங்கை யிலே மன்னிக் கழியாதிருந்தவன், அதன் பின்னர்ப் பெருந்துறையை நண்ணினுன் ; ஆங்கிருந்து நம்மிடர்கள் போயகலுமாறு எண்ணிக் கோகழி யில் வீற்றிருந்தான். ஆதலால் அவனையும், அவனையும், அவனையுங் காண்க எனப் பொருள்பட்டு, உத்தரகோசமங்கையிலே காட்டிய வித்தக வேடத்தையே பெருந்துறையினும் கோழியினும் காட்டினுன் என்பதனை வலியுறுத்தும்.

இதுகாறுங் கூறியவற்ருல், அடிகள் முதலில் உபதேசம் பெற்ற தலம் திருவுத்தரகோசமங்கை என்பதும், திருப்பெருந்துறையில் இறைவன் அடியார்களோடும் கருவார் சோதியிற் கரந்தமை கேட்டு, ஆற்ருதழுதரற்றி, அவ்வுத்தரகோசமங்கை வித்தக வேடத்தையே அத்திருப்பெருந்துறைக் கண்ணே கண்டனர் என்பதும், அதன்மேற் பல தலங்களையும் தரிசித்து வருகையிலே திருவாவடுதுறையில் இரண்டாம்முறை உபதேசிக்கப் பெற்றனர் என்பதும், ஆண்டிருந்த மாசிலாமணீச்சுரனையே ாண்டுக் குருமணி என்றனர் என்பதும் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் கூறப் பட்டன. திருவுத்தரகோச மங்கையிலே உபதேசம் பெற்றதனை " நமச்சி வாய வாஅழ்க " என்றும், திருவாவடுதுறையில் உபதேசம் பெற்றதனைக் குறிப்பாகக் " குருமணிதன் தாள்வாழ்க " என்றும் கூறினுரென்க.

" சிவாய நமவெனப் பெற்றேன் " (திருவேசறவு. 19.)

என்னுமிதனுனும் இருவகையான திருவைந்தெழுத்துக்கள் அடிகட்கு உபதேசிக்கப்பட்டன என்பது புலனும்.

முத்திநெறி தெளியாதார் அந்நெறியை உணர்ந்துகொள்ளற்காக வணங்கும் வணக்கமும், அந்நெறியுணர்ந்தார் அந்நெறியில் இடையறவு படாது செல்வதற்காக வணங்கும் வணக்கமுமெனை, அடியவர் வணக்கம் இருவகைப்படும். முதலாவது வகையினர், இறைவன் சிறப்பு வகையை உபதேசவகையாற் கேட்டறிந்து கொண்டு, முன்னர் அன்புசெய்து வணங்கிய வணக்கமெல்லாம் இறைவனுக்கே உரியனவாருக எனக் கருதி வணங்கி வருவார். அங்ஙனம் வணங்கித் தெளிந்த இரண்டாம் வகையினர், தம்மகத்திலே வீற்றிருந்துகொண்டும், புறத்திலே திருவுருக்கொண்டும், ஆங்காங்குக் காட்சியளித்து, இறைவனே வழிகாட்டி வருதலின், அவன் பெயர் கூறி அவனை வணங்கி வருவர். இவ்விருவகையினரும் முறையே நமச்சிவாயவென்றும், சிவாயநமவென்றும் வணங்கி வருதல்வேண்டும். திருஞானசம்பந்தப் பெருந்தகையும், நாவுக்கரசுசுவாமிகளும், சுந்தர மூர்த்தி சுவாமிகளும் சிவாயநமவென்னும் பதிகங்களை அருளிச் செய்யா ரராய், நமச்சிவாயப் பதிகங்களையே அருளிச் செய்தமையும் இக்கருத்தினை வலியுறுத்துதல் கண்டுகொள்க. நமச்சிவாய எனப் பாவனை செய்வார்க்கு உலகியலிற் செல்லும் நோக்கம் நாளடைவிற் குன்றி வீட்டு நெறிச் செல்லும் நோக்கமே வீறுபெறும்.

குருமணி யென்றனர், கோகழிக்கண் வீற்றிருந்த இறைவன் திருநாமம் மாசிலாமணீச்சுரர் என்பதாகலின்.

"மாசில்மணி" (பண்டாய. 7)

என்றதும் அம்மாசிலாமணீச்சுவரையே குறிக்கும். குருமணி - அறியாமையாகிய இருட்கண் ஒளிகாட்டி நிற்கும் மாணிக்கம். இதனை

"வந்த மரகத மாணிக்க ரேகைபோல்
சந்திடு மாமொழிச் சற்குரு சன்மார்க்கம்
இந்த ரேகை இலாடத்தின் மூலத்தே
சுந்தரச் சோதியுட் சோதியு மாமே" (திருமந். 2670)

என்னும் திருப்பாட்டான் உணர்க. குருமணி காட்டிய நெறி மணிநெறி எனப்படும். அவரருளிய வாசகம் மணிவாசகம், மணிவார்த்தை எனப் பெயர் பெறும். இதனானே அடிகள் மாணிக்கவாசகர் எனப்பட்டமைக்குக் காரணமும் பெற்றாம். மணி என்றது, உதயகிரியிலே சிந்தூர அருவி வீழ்ந்த சிந்தூராகரத்திலே பதினாறு சதுர்யுகம் [illegible] சிவப்பேறிய மாணிக்கமணியுமாம் [சிந்தாமணி 169-ஆம் பாட்டின் விளக்கவுரையைக் காண்க.] இனி அதற்கு மணியோசை என வுரைத்தலு மொன்று. திருவைந்தெழுத்தின் நுண்வடிவு ஓங்காரவடிவாகும். அது மணியோசை வடிவினதாதல்பற்றி அங்ஙனமுரைத்தலும் கூடுமென்க.

ஆகமம் - நூல். ஆகமம் வந்த வரலாறு கீர்த்தித் திருவகவலுட் கூறப்படும். ஆண்டுக் காண்க.

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுத்தா னாகும்—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்" (நாலடியார்)

என்னுமிதனால், ஆகமஅறிவு வீடுபேற்றினுக்குத் துணையாதல் உணரப்படும்.

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்,
நற்றாள் தொழாஅ ரெனின்" (குறள். கடவுள். 2.)

என்னும் திருக்குறளும் ஆகம அறிவின்பயன் நற்றாள் தொழுதலே என வலியுறுத்தி நிற்றல் காண்க. "அருங்கலை விநோதன்" என்றதனின், கலைச்சுவை மனத்தை ஒருவழிப்படுத்துமென்ப. ஆனால் திருக்குறட் காமத்துப்பாலைப் பயிலுங்கால் அது தெய்வ உணர்ச்சியை எழுப்பி, இதயக் கட்டினை யறுத்து, ஆனந்தக் கங்கை அமுதாற்றிற் படியத் தோய வைத்து, உயிர்க்கு ஆறுதலளித்தலைக் காண்க. திருக்கோவையாரைப் பயிலும் பேறுமிதுவே. பிறவுமன்ன.

நூலுட் கூறப்பட்ட அறனே இறைவன் திருமேனி என்ப. அஃதாவது, இல்லற துறவறங்களையே அவன் திருமேனியாகக் கொண்டுளான் என்பது. காதலும் வீரமுமே அவன் குணங்கள். அவற்றுட் பயிலும் அன்பே அவன். அவனைப் பெற ஆகமத்தாற் போந்த நெறி அன்பு நெறியாம். அந்நெறியே

இனிது செல்லற்குரிய செந்நெறியாம். ஆண்டு இறைவன் இனியனாக உடன்தோன்றி இனிமை பயப்பன். அதனையே ஈண்டு அண்ணிப்பான் என்றனரென்க. அண்ணிப்பான் - இனிமை செய்வான். தான் இனியனாதலோடு அவ்வாசகம் பயில்வார்க்கும் இனியனவே செய்வான் என்க.

அங்ஙனம் இனிமை செய்தலைத் "தொல்லை யிரும்பிறவி" என்னும் வெண்பாவிறகுக் கூறிய விளக்கவுரையானும் தெரிந்துகொள்க. இன்னும் அதனை,

"அண்ணிக்கும் அமுதூறும் என்நாவுக்கே"

எனவும், (திவ்ய கண்ணி. நுண். 1.)

"தித்திக்கும் தீங்கரும்பாய் அமுதாய்நின் றண்ணிக்கின்றானே"

(திருமந். 2365.)

எனவும்,

"அண்ணிக்கும் தேனர்" (அப்பர்)

எனவும் வருவனவற்றானுணர்க. ஈண்டு "நின்று" என்பது நிலைபெற்று எனப் பொருள் தருதலின், பின்னும் அண்ணிக்கின்றான் என்பதையும் பொருந்துகின்றான் எனப் பொருள்கொள்ளின் அது வற்றுமாதலின், அவனை இனிக்கின்றான் எனவே கொள்க. இனி, ஆகமம் என்பதுவே போய்ச் சேர்தல் (அணுகுதல்) என்னும் பொருளைத் தந்து நிற்கவும், பின்னும் அணுகிநிற்பவன் எனின் வெறறென வற்றுமன்றோ? இறைவனைத் தன்வழியாக அணுகச் செய்யும் நூல் ஆகமம் என்க. இறைவனை "ரசக்ஞன்" என்ப. அது சுவைக்குள்ளே இனிமை என்றதனை ஈண்டுக் குறிக்கும். ஆதலின் தன்னை நுகர்வார்க்கு ஆனந்த மூட்டுவோன் என்பதையே அண்ணிப்பான் என்பதற்குப் பொருளாகக் கொள்க.

ஏகன் - ஒருவன். அநேகன் - ஒருவனல்லாதவன்.

"வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறத்தும்" (கம்ப.)

அவ்வொருவனே உளனாதல்பற்றி அநேகன் என்றனர்.

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே" (திருச்சத. 15.)

என்னும் திருப்பாட்டும் அகச்சான்றாய் நின்று உணர்த்தும். பதி ஒன்றே உள்பொருள்; ஏனையவை இல்பொருள்கள் என்பது இந்நூலுடையார் கொள்கையென நாட்டப் புகுதல், இதற்குரை காண்பார்க்கு முறையாகாது. சான்றோர் யாவரும் தத்தம் அரும்பயிற்சியாற் கண்டனவற்றையே எடுத்தோதியருளிப் போந்தனர். யாமும் அன்னோரன்னவற்றையெல்லாம் பயிற்சியாற் புலன்கொள்ளல் வேண்டும். பத்தித் தேன்மழை வெள்ளத்திலே தாகமெல்லாம் பறந்தோட ஆழ்ந்து குடைந்து ஆடிப்பாடி அள்ளூறி

ஆனந்தப் பித்துக் கொள்ளற்குரிய இந்நூலகத்தே, அன்னவை இடம் பெறற்குரியவாகா.

" ஒருவன் என்னும் ஒருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க" (திருவண். 43-44)

எனவும்,

" ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமிலாற் காயிரம்
திருநாமம் பாடிநாம் தென்னேணம் கொட்டாமோ" (திருத்தென் 1.)

எனவும் ஈண்டு நோக்கத்தக்கன. "தனக்கோர் வடிவும் பெயருமின்றி, அன்பராயினுர் கருதிய வடிவே வடிவாகவும், அவரிட்ட பெயரே பெயராக வும் உடையனுதலின் முக்கை முனிவ என்பது முதலாக நூறாயிரங்கை ஆறறிகடவுள் என்பதீறாக வடிவு வேற்றுமையும் பெயர் வேற்றுமையும் சொல்லப்பட்டன" (பரிபா. 3-ஆ பாட்டு. 35—43 அடி.) எனவும்,

" மனக்கோள் நினைக்கென வடிவுவே றிலையே" (பரிபா. 4-ஆம் பா. 56 அடி)

என்பதற்கு "அன்பர் மனத்திற் கொண்டவையன்றி நினைக்கென வேறு வடிவுடையை யல்லை" எனவும் பரிமேலழகர் எழுதிய உரைப் பொருளும் அநேகன் என்பதற்குக் கொள்ளலாகும். ஈண்டு அன்பர் என்றது, அவன்பால் அதிகாரம் பெற்ற தேவர் முதலாயினாரும், முறுகிய அன்பும் செவ்வியும் நிரம்பிய அடியவருமாவர். எல்லாவற்றை யும் உறுப்புக்களாகக் கொண்டு தான் உறுப்பியாய் நிற்றலின் "ஏகன்" என்றும், அங்ஙனமன்றி அவற்றுக்கெல்லாம் அப்பாலாகியும் நிற்பானுதலின் "அநேகன்" என்றும் அருளிச் செய்தார் என்பாரு முளர். ஏகனுகவும் அநேகனுகவும் அவன் [illegible] யன்றே "ஏகனநேகன்" எனப்பட்டான்? பிறரும் [illegible] என்றதும் அப்பொருள்படவே வந்ததென்பது பொருந்துமாயினும், அது தலைவன் என்னும் பொருளையே தரும். முன்னர் நாதன் என்றது தலைவன் எனப் பொருள் தரவும் இஃதும் அப்பொருள்படவே வந்தமை பொருந்தாதெனின், அது திருவைந்தெழுத்திற்குரிய தலைவன் அவனே என் குருமணியானவன், அக்குருமணியே ஏகனும் அநேகனு மாகி, எல்லார்க்கும், எல்லாவற்றுக்கும் நாதனுவான் என்பது பட்டுப் பொருந்துமென்க. இங்ஙனம் எளியனுகி என்பால் வந்தவன், யாவர்க்கு மரியனுகிய அவன் என்பது இதனுல் தோன்றியதென்க. இதனை,

" வானின் றிழிந்து வரம்பி கந்த மாபூதத்தின் வைப்பெங்கும்
ஊனு முயிரும் உணர்வும்போல் உள்ளும் புறத்தும் உளவென்ப
கூனும் கொடிய கோத்தாயும் கொடுமை இழைப்பக் கோல் துறந்து
கானும் கடலுங் கடந்திமையோர் இடுக்கண் காத்த கழல்வேந்தை"
(கம்ப. அயோத்தி. கடவுள் வாழ்த்து)

என, கம்பநாடர் கூறிய பாட்டானும் உணர்ந்துகொள்க.

யாக்கை நிலையாமை, இளமைநிலையாமை, நுகர்ச்சி நிலையாமை,

செல்வம் நிலையாமை என்னுமிவை முதலாய நீக்குதற்கரிய பலப்பல நிலையாமைகளானும், அவற்றால் நிகழும் இன்னல் பொறுத்தற்கரியன வாகலானும், அருவருத்து ஒதுக்குதற்குரிய இவ்வுடம்போடு கூடிவாழ்தற்கு விழையாமையானும், இந்நிலையற்ற உலகவின்பத்தினும் நிலைபெற்றதோர் பேரின்பம் பெறுதற்கு வேணவாக் கொண்டமையானும், வஞ்சகக் களவுக் கெல்லாம் இருப்பறையாகி இருள்நிரம்பிய மனஅறையைத் திறந்துவிடுவ தன்றி உலகவாழ்விற்கு வேற்றுவழி ஒன்று மின்மையானும், அன்னபிறவ வற்றானும், இவ்வுலகிற் கண்டறியப்படாத ஒரு பொருளைக் கண்டறிந்து துணைகோடற்காக ஆராய்ந்தும், அடங்கியும், எழும்பியும், திரிந்தும், அழுதும், அரற்றியும், வாடியும், வற்றியும், பித்துற்றுடியும், பாடியும், மயங்கியும் மலர்ந்தும் வந்த சான்றோர் மரபினரும், இயற்கைவனப்பு முதலியவற்றுள்ளே ஈடுபட்ட மனத்தினராய் அன்பு ததும்பிவழியத் தம் வயமிழந்து அகக்கண்ணாலே தாந்தாங் கொண்ட காட்சிப்பொருள் கருத்துப் பொருள்களிலே ஒன்றுபட்டு அவ்வவற்றுள்ளே ஆழ்ந்து கரந்துகிடந்த உண்மைகளை வெளிப்படுத்திவந்த சான்றோர் மரபினரும் அனுபவித்து, இவ்வுலகுக்கருளிய ஞான மாணிக்கமே இறைவன், அவனே ஏகனும் அநேகனுமாவன் எனக் கூட்டியுரைக்க.

வேகம் கெடுத்து ஆண்ட வேந்தன் அடி வெல்க,
பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்கள் வெல்க;
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க,
கரம்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க,
சிரம்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன்கழல் வெல்க,

(பொ - ரை) என் விரைவினைக் கெடுத்து என்னை ஆட் கொண்ட சிவபுரத்து வேந்தன் திருவடி வெற்றி பெறுக, கோல முடையவனாகிய சிவபெருமானது பிறவியின் வேரை யறுக்கும் அருள்பெய்த வீரக்கழல்கள் வெற்றி பெறுக, புறத்தார்க் குத் தூரத்தே உள்ளவனது பொலிவுடைய வீரக்கழல்கள் வெற்றி பெறுக, கைகூப்புவோர் உள்ளம் மகிழும் மகிழ்விற்குக் காரண மாகிய தலைவன் வீரக்கழல்கள் வெற்றி பெறுக; தலைவணங்கு வாரை மேலோங்கச் செய்யும் புகழுடையவனது வீரக்கழல்கள் வெற்றி பெறுக எ - று

(வி - ரை) விரைவென்பது, இயற்கைவகையானன்றி ஒரு பொருட்கண் விரைந்து தொழிற்படுதல். இது நிகழும் உள்ள நிகழ்ச்சியை விரைவென்ப. (தொல். பொருள். மெய். சூத். 14) இவ்விரைவு என்பது அடிகட்கு உபதேசம் பெற்றபோது எய்திற்று. இதனை,

"புலையனேனையும் பொருளென நினைந்துன் அருள் புரிந்தனை
புரிதலுங் களித்துத் தலையினால் நடந்தேன்" (செத்திலா. 3.)

எனவும்,

" தனித்துணை நீநிற்க யான் தருக்கித்
தலையால் நடந்த வினைத்துணை யேனை " (நீத்தல். 39 )

எனவும், பிறவாறும் அடிகள் அருளிப்போதல் கண்டு தெளிக. " நம்மை யகப்படுத்தாட்கொண்டருமை காட்டும் பொய்யர் தம் பொய்யனை " (திருபபொற. 12) என, அக்களிப்பு நீங்கி யருளுதலையும் உற்று நோக்குக. இதுகொண்டு தெளிவின்மையினாலே விரைந்து பெற எண்ணியதைப் பெரும் பாலுமுடையது திருவாசகமெனவும், துணிவு பற்றியமையினாலே அமை வுறறுப் பெறுதலையுடையது திருக்கோவையார் எனவும் உய்த்துணரலாகும்.

பிஞ்ஞகன் - சிவபெருமான். பிஞ்ஞகம் - தலைக்கோலம்.

" பங்குசம் பிஞ்ஞகம் பயில்தலைக் கோலம் " (பிங். அறு. 101.)

என்பது காண்க. இதனானும்,

" பிறைகுலாஞ்சடைப் பிஞ்ஞகா " (செத்திலா 7.)

எனக் கூறப்படுதலினானும், சடையும் பிஞ்ஞகமும் வேறுவேறென்க. பிறை என்றது ஈண்டுச் சடைக்கடையாயிறறு பினனகத்தில் அணியப்படும் அணி என்றாயிற்றுப்போலும் பின்னகம்—ஆண்பால் மயிர்முடி. (பிங். ஆடவர்வகை. 348.) " உஷ்ணீஷ " என்றது தலைப்பாகை கிரீடம் என வடமொழியில் பொருள்படுவதோர் சொல. சிவபெருமான் தலைப்பாகை அணிந்தருளியவன் என உருத்திரம், மூன்றும் அநுவாகம், எட்டாவது மந்திரத்தில் " உஷ்ணீஷிணே " என்று கூறப்பட்டமையின், பிஞ்ஞகம் என்பது தலைப்பாகையைக் குறிக்கும். ஆதலின் திங்களைக் குறிக்காது என்றுணர்க. கபிலமுனிவராற் சபிக்கப்பட்ட சகரர்கள் வீடு பெறுதற்காகப் பகீரதன் செய்த தவப்பயனால் வானிழிந்து வந்த கங்கையைத் தரித்த சடையின் சிறப்பு நோக்கிப் " பிஞ்ஞகன் " என்றனர். இறைவன் திருவருள் பெய்யப் பெற்ற கழல் பெய்கழலாயிற்று. " நின் அருள் பெய்கழல் " என்பதும் நோக்குக. இறைவன கீர்த்திகளை விளக்கும் வரலாறுகள் பொறிக்கப்பட்ட கழல் என்பதும் கொள்க.

" சிவமாநகர் குறுகப்போனார் அடியார் பொய்யும்
யானும் புறமே போந்தோம் " (திருச்ச. 86.)

எனவும்,

" புறமே போந்தோம் பொய்யும் யானும் மெய்யன்பு
பெறவே வல்லேன் அல்லாவண்ணம் பெற்றேன் " (ஷை. 87.)

எனவும் அடிகளே கூறியிருத்தலின், புறத்தாரைப் பொய்யன்பர் எனக் கொள்க. நாத்திகரினும் இவர் கொடியோர் என்க. இதனை அச்சப்பத்து முதலியவற்றானு முணர்க. அவன் எவரிடத்தும் அணுகியே வீற்றிருக்கின்றான்; இவரே புறம் போந்தார் எனினும், அவராற் காண்டற் கருமை குறித்துச் " சேயோன் " என்றனர்.

குவிவார் - சுருங்குவார். கை தலை என்பவற்றின் ஒழுங்குமை நயம் பற்றி முதன்மே லேற்றப்பட்டன. கரங்குவிவார் - இரு கரங்களையும் ஒருசேர நெஞ்சகத்திலே கூட்டி வணங்குவார். சிரங்குவிவார் - தலையைக் கீழே சுருக்கிக்கொள்வோர். குவிதல் - சுருங்குதல்.

" குவிதலுடன் விரிதலற்று " (தாயுமா. சின்மயா. 8)

என்பதனுனும் அஃதுணர்க. ஆசிரியன் உணர்த்தினன்றிச் சிந்தைக் குள்ளே திருவடி வீற்றிருத்தலை அறிந்துகொள்ள மாணுக்கனுல் இயலாது. ஆசிரியன் திருவடி தீட்சை முதலியவற்றைச் செய்தவுடன் அகக்கண் திறக்கப்பட்டுச் சிந்தைக்கண் வீற்றிருக்கும் திருவடிகளைக் கண்ட மாணவன், தனது கைகளை நெஞ்சின் மேலேற்றிக் குவித்துக்கொண்டு அவற்றை வணங்குவான். அக்காட்சியினுல் அவனதுள்ளம் மகிழ்வெய்தும். கரங் குவிதலாகிய காரியம் முன்னும் அதன் காரணம் பின்னுமாக ாண்டு வைத்துரைத்தவாறு.

உள்ளத்திலே திருவடிகளைக் கண்டு வணங்குவார் " நாமார்க்குங் குடியல்லோம்......இடர்ப்படோம்......பிணியறியோம்.........பணிவோமல் லோம்......கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகிஞேமே " எனத் தம்மை யாண்ட இறைவனையே பேணுபவாகலின் " கரங்குவிவார் உள்மகிழும் கோன் " என்றனர். இனி, செம்மை பெற்ற உள்ளத்திலே இறைவன் இனிது வீற்றிருக்குமென் பவாகலின், அம்மகிழ்ச்சியை இறைவனுக்கேற்றினும இழுக்காகாது

சீரோன் - புகழுடையோன். தன்னையே தமர்க்கு நல்கும் தனிச் சிறப்புடைமையால் வந்த புகழ் என்க.

அன்பிலார் அகத்தும் புறத்தும் சேயோனுகியும், அன்புடையார் அகத்தும் புறத்தும் அண்ணியோனுகியும் இறைவன் இருந்து வருகின்றுன். அவ்வன்பிலார் அகத்தும் புறத்தும் இன்பம் எய்தினர்போலத் துன்பத்தில் மூழ்குவர். அன்புடையார் துன்பம் எய்திஞர்போன்று இன்பத்தில் மூழ்குவர். இவ்விரண்டுமிலியாகி, இடைப்படடுழலும் என்னை விரைவு கெடுத்தாண்டான் என்பதே, இவ்வைந்தடிகளாலும் போந்த பொருளென்க. அன்பிலார் உலக நுகர்ச்சியிலும், அன்புளார் வீட்டு நுகர்ச்சியிலும் அமைந்து நிற்பர். இவ்விரண்டனுள் ஒன்றனைத் துணிந்து கொள்ளா மையால் ஐயமேலிட்டு " வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன் " என, அடிகள் தங்கருத்தினை இனிது புலப்படுத்தினர்.

போலியன்பரும், இல்லையென்போரும், தோலுலக நுகர்ச்சியிலீடுபட்டு வருமுகத்தால், அகத்தும் புறத்தும் ஆற்றற்கரிய பலப்பல இன்னல்களுற, ஆங்கு அவரை நெறிப்படுத்த நின்ற இறைவன் வெல்லுதல் வேண்டும்; அங்ஙனம் ஆளப்பட்டவர், உலகப்பேறும், இறைவனருட் பேறுமாகிய இவ்விரண்டனுள்ளே ஒன்றனையும் துணியாராய்ச் பேரவலமுற்றுழலும் போது அவர் தோல்வியுற இறைவன் வெல்லுதலும் வேண்டும்; அங்ஙனம் வெல்லப்பட்டவர் நாணுராய் அடிமைப்பட்டு நிற்கவும், அவர் சென்னியிலே திருவடிகளை வைத்தலும் வேண்டும்; அதன்மேலும் அவனருளால் அவரைப் புறத்தடிமை கொண்டதுவுமன்றி, அகத்தையும் அடிமை கொள்ளுதலும் வேண்டும்; என்றுங்குக் கூறுமுகத்தானே, அவன் மக்களை அடிமைகொள்ளுந் திறன் விளக்கப்பட்டவாருயிற்று. மக்கள் யாண்டும் தோற்க; இறைவன் யாண்டும் வெல்க என்க. புறத்தார் ம

உளன்கொல் என்றையுற்றுராய் அவனே யணுகினும் சேயவன் (திருமந். 420.) என்க.

"திருவடி யேசிவ மாவது தேரின்
திருவடி யேசிவ லோகம் சிந்திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம உள்தெளி வோர்க்கே" (திருமந். 138.)

எனவும்,

"விரும்பில அவனடி வீர சுவர்க்கம்
பொருந்தி லவனடி புண்ணிய லோகம்
திருந்தி லவனடி தீர்த்த மதாகும்
வருந்தி யவனடி வாழ்த்த வல்லார்க்கே" (ஷெ. 2996.)

எனவும், அவனினும் அவனடியே சிறப்பிக்கப்படுதலின், அவனது திருவடியையே பெரும்பான்மையாக வாழ்க, வெல்க எனக் கூறினர். திருவைந்தெழுத்தின் வாழ்வும், அவனது வாழ்வும் திருவடி நல்காவிடின் பயனற்றனவாகும் என்க.

ஈசன் அடி போற்றி; எந்தை அடி போற்றி,
தேசன் அடி போற்றி, சிவன் சேவடி போற்றி;
நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி;
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடி போற்றி;
சீர் ஆர் பெருந்துறைநம் தேவன் அடி போற்றி;
ஆராத இன்பம் அருளும் மலை போற்றி, 16

(பொ - ரை) ஈசனுடைய திருவடிகள் நம்மைப் பேணிக் காப்பனவாகுக, எம் அப்பனுடைய திருவடிகள் நம்மைப் பேணிக் காப்பனவாகுக, எல்லாத் தேசங்களிலும் கோயில் கொண்டருளியோனுடைய திருவடிகள் நம்மைப் பேணிக் காப்பனவாகுக; சிவனுடைய செம்மை பயப்பனவாகிய திருவடிகள் நம்மைப் பேணிக் காப்பனவாகுக; அன்பிலே நிலைபெற்ற மாசில்லாதவனுடைய திருவடிகள் நம்மைப் பேணிக் காப்பனவாகுக, மாயா மலத்தினாலே உண்டாகிய பிறப்பின் வேரை அறுப்பவனாகிய மன்னவனுடைய திருவடிகள் நம்மைப் பேணிக் காப்பனவாகுக, புகழ் நிரம்பிய திருப்பெருந்துறையிலே வீற்றிருந்த தேவனுடைய திருவடிகள் நம்மைப் பேணிக் காப்பனவாகுக நுகர்ந்தமையாத பேரின்பத்தை அளித்தருளும் (கொடுத்தருளும்) மலையனையவனுடைய (திருவடிகள்) நம்மைப் பேணிக் காப்பனவாகுக எ - று.

(வி - ரை.) ஈசன் - எப்பொருளையுமாள்வோன். அவனால் அளிக்கப் படுவது ஐசுவரியம் எனப்படும். ஐசுவரியம் - சம்பத்து. ஈண்டு வீடு பேறாகிய சம்பத்தை யுணர்த்திற்று. அது திருவடி யென்க.

இறைவன் ஆசானாக வந்தருளியது கண்டு "எந்தை" யென்றனர். எல்லார்க்கும் தந்தையும் எனக்கெந்தையுமாவோன் என்க. எனவே தமக்கொரு தாயுமுள்ளாள் என்றவாறுமாயிற்று. தந்தை செல்வம் தனயற்குரியதாதல் கருதி இங்ஙனம் கூறினர்.

"தந்தையர் ஒப்பர்மக்கள்" (பொருள். கற். 6.)

என்பது தொல்காப்பியம்.

ஒத்தல் என்றமையால் ஒவ்வாமையும் உடன் பெற்றும். இயல்பாகவே மலத்துடனியைந்தும், அவனருளால் அறுக்கப்பட்டு அவனுடன் இயைந்தும் வருதலுடைமையும் கொள்க

தேசம் - மூர்த்தி தலம் தீர்த்தம் என்பன. உலகிலே இத்தகைய இடங்களிலே இறைவன் விளங்கி வருகின்றானாதலின், அன்னவை யெல்லாம் விளக்கமுடையனவாயின.

சிவம் என்பதற்குச் சாந்தம், மங்கலம், இன்பம் எனப் பல பொருள்களுள்ளன. எனவே, தன்னைச் சார்ந்தார்க்கு ஆறுதலும் மங்கலமும் ஆனந்தமும் அளித்தருளுவோன், சிவன் எனப் பெயர் பெற்றான் என்க. அவனடியே விகாரமற்ற நிலையை அளித்தருளுமென்பது தோன்றச் "சிவன் சேவடி" என்றனர். "சிவன் சேவடி போற்றி" என்றது சிவாயநம என்னும் திருவைந்தெழுத்தைக் குறிக்கும். அடியவருள்ளத்திலே பள்ளிகொள்வோனாதலிற் சிவன் எனப்பட்டான் எனவும் வடமொழிச் சான்றோர் இப்பெயர்க்குப் பொருள் விரிப்பராகலின், முதற்கண் அவனருளால் அவன் தாள் வணங்கலும், அவ்வணக்கப் பயிற்சியால் ஆசான் எதிர்வந்து உள்ளத்தே காட்ட, அவன் திருவடியை உள்ளத்துட் கண்டு களித்தலும் மரபாகலின், முதற்கண் "நமச்சிவாய" என்றும், ஈண்டுச் "சிவாயநம" என்றும் அருளிச்செய்தார் என்க.

அச்சிவன் மாசற்ற தூயன். நிமலன் - அழுக்கற்றவன். அவன் தானும் இயல்பாகவே மாசற்றிருந்தவாறே தன்னை நினைப்பாருடைய மன மாசுகளையும் அறுத்துத் தன்னோடு சேர்த்துக்கொள்ளும் இயல்பினன்.

"அழுக்ககன்றாய் போற்றி - எங்கள் அழுக்கறுப்பாய் போற்றி"

என லலிதா சகத்திர நாமத்துள்ளும் வந்தன.

"பொறிவாயில் ஐந்தவித்தான்" (குறள் கட. வாழ். 6)

என்பர் திருவள்ளுவரும். தன்னைப்போலவே தமரையும் ஆக்கவல்லவன் என்க.

மாயை, தன்பால் மயங்கிய உயிர்களைச் செவ்விபெறத் தெளிவிக்கும்.

"ஆறு கோடி மாயாசக்திகள்
வேறு வேறு தம் மாயைகள் தொடங்கின"

எனவும், "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை" எனவும் அடிகள் கூறுவர். மாயை - தன்மயமாக்குவது.

"நோய் வேரோடிற்று" என்னும் மரபு பற்றிப் பிறப்பின் வேரறுக்கும் என்றுரைத்தாம். களைதற்கருமை குறித்து "அறுத்து" என்றும்,

பிறப்பறுத்து வாழ்விக்கும் அரசாட்சி அவனதாகலின் "மன்னன்" என்றும் கூறினர்.

தெய்வம் என்றது திரிந்து பால்தோன்ற நின்றது.

ஆர்தல் - நுகர்தல். ஆராத - நுகர்ந்தறியாத நுகர்ந்தறிந்த இன்பம் சிற்றின்பம். நுகர்ந்தறியாத இன்பம பேரின்பம. முன்னும் பின்னும் துன்பமுடைத்தாய் வரும் இன்பமே யாரும் நுகர்ந்துவருமின்பம். முன்னும் பின்னும் துன்பங் கலவாத இன்பமே நுகர்ந்தறியாத இன்ப மாயிறறு. [ஆராத இன்பம் - கோணுத போகம். (திருமந். 161.)] அதனை யருள்வது அவனமரும மலையென்க.

"மஞ்சன் மருவும் மலைபகராய் - நெஞ்சத்து
இருளகல வாள்வீசி இன்பமரு முத்தி
அருளுமலை என்பதுகாண் ஆய்ந்து" (திருத்தசாங். 5)

எனவும்,

"இருள் கடிந்தருளிய இன்பவூர்தி
அருளிய பெருமை அருண் மலையாகவும்" (கீர்த்தி. 123—124)

எனவும் வருவனவற்ருல், இருள் நீக்கி யருளும் அருள்மலை எனவே யுரைக்க. அம்மலையிலிருந்து ஆனந்த ஆறு பாய்கின்றது. அது மலங் கழுவுமியல்பிற்று எனபது தசாங்கத்தானும உணரப்படும். இனி, இன்ப மருளுமலை யென்றது, அன்பினைந்திணைக் களவு கற்பென்னும் ஒழுக்கத் துக்கு மூலமாகிய புணர்ச்சியைக் குறித்ததெனினும் இழுக்காகாது.

" மூலமாகிய மும்மல மறுக்கும்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல ளுகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்" (கீர்த்தி. 111-114)

என்றலின், நேயத்தே நின்ற நிமலன் என்பதற்குக் காதலனாகிக் கழுநீர் மாலை யணிந்து பரிமாவின்மிசைப் பயின்று நின்ற எனப் பொருள் [illegible]ள்க.

சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
முந்தை வினை முழுதும் ஓய உரைப்பன் யான்

என்னும் இவ்வடிகளிலே நூல் நுதலிய பொருள் கூறப்படு கின்றது.

(பொ - ரை.) சிவனாகிய அவன் என் சிந்தையுள் [illegible] நிலை பெற்ற காரணத்தால், அவன் திருவருளினாலே அவன் திருவடிகளை வணங்கி, உள்ளம் மகிழவும், முற்செய்த வினை முற்றும் தேய்ந்து போகவும் யான் சிவபுராணத்தை உரைப்பேன் எ - று.

(வி - ரை.) " முந்தை வினை முழுதும் ஓய உரைப்பன் " எனவும், "செல்வர் சிவனடிக்கீழ் " (சிவபுரா. 94) எனவும் கூறிய அதனாலே உரைத்தோரும், அதனைச் சொல்லியோரும் எய்தப்பெறும் பயன் கூறப் பட்டமை காண்க. 'வணங்கி என அளபெடுத்துக் கூறினர் வணக்கத் தின் திண்மை புலப்படுத்தற்கு.

சிவன் அவன் என்றது, எல்லாங்கடந்து சேணிலத்துள்ளோன், ஆங்கு நின்றும் குருமணியாகி வந்து அருள் செய்தான். அங்ஙனம் செய் தவன் சிவன் என்று தெளிந்தவாறு கூறியதுமாம். யாதானுமோர் தெய் வத்தை வணங்கினும் அத்தெய்வமாகி வருவோனாகிய அவன் சிவனாவான் என்றலுமாம்.

" இசைந்தெழு மன்பில் எழுந்த படியே
பசைந்தெழு மீசரைப் பாசத் திலேவிச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
உவந்த குருபதம் உள்ளத்து வந்ததே " (திருமந். 1590)

என்னுமிதனால், குருவந்து சென்னியிற கைவைக்க உவநத அக்குருவின் பாதம் உள்ளத்தே தோன்றப் பெறும் என்னும் உண்மை கண்டு தெளிக.

" இதயத்தும் நாட்டத்தும் என்றன்
சிரத்தும் பதிவித்த பாதம் " (திருமந். 1596.)

என்றலால், திருவடி சென்னியில் வைத்தலையுமுணர்க. இன்னும் இந் நூலகத்தே திருப்பூவல்லி, சென்னிப்பத்து முதலாய வறறுள்ளும் காண்க.

" இருள்சே ரிருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" (குறள். கட. வாழ்த். 5)

என்பதனை, " முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் " என்பதனோடு ஒப்பிட்டுணர்க. வாசனுமலந் தேயத் தேயச் சிந்தைக்கண் மகிழ்ச்சி அதி கரிக்கும். யான் - இடர்க்கடலுள் விழுந்து அழுந்தற்குக் காரணனாகிய யான்.

இங்ஙனமே தெளிந்து வணங்கி நூலுரைத்தல் வேண்டுமென்பதனை,

" நந்தி இணையடி நான் தலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றி செய்து
அந்தி மதிபுனை அரனடி நாடொறும்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே " (திருமந். 73.)

என்பதும் வலியுறுத்தும்.

**கண்ணுதலான் தன்கருணைக் கண் காட்ட வந்தெய்தி**
**எண்ணுதற்கு எட்டா எழில் ஆர் கழல் இறைஞ்சி**
**விண்நிறைந்தும் மண்ணிறைந்தும் மிக்காய் விளங்கு ஒளியாய்**
**எண் இறந்து எல்லை இலாதானே நின்பெருஞ்சீர்**
**பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன் 25**

என்னு மிவ்வடிகளில் அவையடக்கம் கூறப்படுகின்றது.

(பொ - ரை.) நெற்றிக்கண்ணுடைய சிவபெருமான் (என்பால்) வந்தடைந்து தனது கருணைக் கண்ணால் காட்ட, அவனுடைய நினைவிற் கெட்டாத எழுச்சி மிக்க திருவடிகளை வணங்கியும், வானுலகளவும் நிறைந்தும் - மண்ணுலகளவும் நிறைந்தும் - இவற்றுக்கு அப்பாலும் உப்பாலும் உள்ளவனே, விளங்குகின்ற ஒளி வடிவனே, எண்ணுந் தொகையைக் கடந்து எல்லையின்றி விரிந்தவனே, நின்பெரும் புகழைத் தீவினையுடையேன் புகழ்ந்துரைத்தற் கேற்றவழி யொன்றினையும் அறியேன் எ - று.

(வி - ரை.) கண்ணுதலான் தனது கருணைக் கண்ணால் எனது அகக் கண்ணைத் திறந்து தன் திருவடிகளை இறைஞ்சுக என்று சுட்டிக்காட்ட என்க. இங்ஙனமே

"களிம்ப றுத்தான் அருட்கண் விழிப்பித்து" (திருமந். 116.)

எனத் திருமூல நாயனார் அருளுதலும் காண்க.

நுதற்கண்ணன் என்னுந் தொடர் கண்ணுதலான் என இடமாறி நின்றது. இங்ஙனம் வருதலை இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வென்பர் நச்சினார்க்கினியர்; அவ்வாறியின்பாற்படும் என்பர் நன்னூல் விருத்தியுரையாசிரியர், வேறுங் கூறுப. கண்ணினின்று கசிவது கண்ணோட்டமாதலின் கருணைக்கண் எனப்பட்டது. உமையம்மை ஒரு காலத்திலே தமது இரு திருக்கரங்களாலும் இறைவனுடைய இரு திருக்கண்களையும் விளையாட்டு நிமித்தம் புதைத்தருளவும், அதனால் எல்லாவுலகமும் இருள் மூடிற்றாக, அவ்வவ் வுலகத்து உயிர்கள் யாவும் வருந்த, அவற்றின்மேற் கருணை பாலித்துத் தனது நெற்றியங் கண்ணால் பேரொளி அருளி செய்தான் என்பது நெற்றிக்கண் வரலாறு. அக்கருணையை நோக்கி "கண்ணுதலான் தன் கருணைக் கண் காட்ட" என்றனர் அடிகள்.

எண்ணுதற் கெட்டா என்றமையால், சொல்லுதற்கும், காணுதற்கும், வணங்கற்கும் எட்டாதன என்பது கூறாமலே போதரும் ஆதலின், அவை யாற்றுதற்கு அவனருள் இன்றியமையாததென்பது பெறப்படும்.

வீடுபேற்றை யளித்தற்கு மேலோங்குவிக்கும் திருவடி என்பது தோன்ற "எழிலார் கழல்" என்றனர்.

கழலிறைஞ்சவே கடைக்கணித்தான். அவன் திருமேனித் திறன் ஈதெனப் புலப்படாவாதலாலும், அத்திறன் அறிந்தன்றி, அவனது ஆற்றல்கள் புலப்படா ஆதலாலும், அவனது திருமேனியோ விண்ணையும், மண்ணையும், அப்பாலும், உப்பாலும் நிறைந்தும், எல்லையற்ற பேரொளிப் பிழம்பாகவே யாண்டும் தோற்றப்பெறுதலாலும், அப்பேரொளியை அகத்தும் புறத்தும் ஊடுருவித் தாம் தமதென்னும் பாகுபாடு படுத்தற்கும் அரியதாக இருத்தலாலும், அவ்வுருவத்தைத் தியானியா நின்றவர், அவ்வுருவமே தோன்றப்பெறுவதன்றி, அவன் திருவுருவம் தோன்றப் பெறாமையாலும், புகழும் வழி அறியேன் என்று கவன்றுரைத்தனர்.

" பரத்தை மறைத்தது பார்முத லண்டம்
பரத்தில் மறைந்தது பார்முத லண்டம் " (திருமந்திரம்.)

என்னும் திருவாக்கும் இதனையே புலப்படுத்தும்

(ஏழிலார் கழல்) இறைஞ்சியும் என உம்மை விரிக்க. இறைஞ்சியும் புகழும் வழியறியேன் என்க. அவன் உலகுருவத்தில் கழலளவே கண்டு வணங்கற்கு அருள் கிடைத்தது. அதன்மேல் யாதொன்றும் அறிகிலராய்ச் சிவபுராணம் யாங்ஙனம் உரைப்பன் என அடங்கினர். அடிகள் கழல் இறைஞ்சியும் உரைக்கும்வழி அறியாராக, ஏனையோர் உரைக்கும்வழி எவ்வழி யென்க. இஃது ஒரு சாரர் வேண்டும் சிறப்புப் பாயிரமாம்.

இச்சிவபுராணம் உலகோரமேல் வைத்த கருணைப் பெருக்காதலின், தமக்குப் பயன்படக் கூறினர் என்பதிழுக்காம். அடிகள் குருமணியைக் கண்ட உவகையானும், பிரிந்த அவலத்தானும் ஆங்காங்குப் பாடியன வெல்லாம் வீணாகாது, உலகு துய்க்க உதவல் வேண்டும் என்பது இறைவன் திருக்குறிப்பு. இதனை

" இருந்துதி யென்வயிற் கொண்டவன் " (திருக்கோவை. 300.)

என்றும்,

" நினைவித்துத் தன்னையென் நெஞ்சத் திருந்து
அம்பலம பனைவித்த ஈசன் " (ஷை. 140.)

என்றும் அடிகள் கூறியவற்றானு முணர்க இனி,

" பாடவேண்டும் நான் " (திருச்ச. 100.)

எனவும்,

" சோதியை யாம்பாட " (திருவெம். 1.)

எனவும்,

" சிற்றம்பலம் பாடி " (ஷை. 14 )

எனவும்,

" ஐயாறன் அம்மானைப் பாடி " (திருப்பொற். 1.)

எனவும்,

" குலம் பாடி " (திருத்தெள். 20 )

எனவும்,

" அருள்தாளிணை பாடி " (திருப்பொன்னூசல். 1.)

எனவும்,

" பரமா என்று பாடிப்பாடி " (புணர்ச் 10 )

எனவும், பிறவாறும் தாம் இறைவனைப் பாடவேண்டுமென அடிகள் விழைந்தனரேனும், அங்ஙனம் விழைந்தது இறைவன் அருளாலேயே என்னும் உண்மையைக் கண்டார் என்னுமிதற்கு,

" நாயேனைத் தம்மடிகள் பாடுவித்த நாயகனை " (திருக்கோத். 12 )

என்னும் திருப்பாட் டொன்றே சான்று பகரும். திருவாசகத்தைப் பாடிய பின்னரும்,

" இருந்துதி யென்வயிற் கொண்டவன் " (திருக்கோவை. 300.)

எனவும்,

“ நினைவித்துத் தன்னை யென் நெஞ்சத் திருந்து
அம்பலம் புனைவித்த ாசன் ”

எனவும் கூறுதலின் இவ்வுண்மை நனி விளங்கும்.

பொல்லாவினையேன் புகழுமாருென்றறியேன் (25) யான் (20) வாழ்க (1—5) வெல்க (6—10) போற்றி (11—16) (என்று) வணங்கி (18) சொல்லற்கரியானை (92) அல்லற்பிறவி அறுப்பானே (33—91) என்று சொல்லி (92) இளைத்தேன் (31) வீடுறறேன் (32) ஓவென்று (91) சிவபுராணம் உரைப்பன் (20) (அங்ஙனம்) திருவடிக்கீழ்ச் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் (93—94) என வினை தொகுத்து வைக்க.

பொல்லா வினையேனும் புகழுமாருென்றறியேனுமாகிய யான், அவன் சிந்தையுள் நின்றவதனுல் அவனருளால் இங்ஙனம் அவன் தாள் வணங்கி இங்ஙனம் சிவபுராணம் உரைப்பன் என வினைகளை முறைப்படுத்திக் கொள்க.

புல் ஆகிப் பூடாய்ப் புழுவாய் மரம் ஆகிப்
பல்விருகம் ஆகிப் பறவையாய்ப் பாமபாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யே உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடுற்றேன் 32

என்னுமிவ்வடிகளால், முன்னரே தாம் இறைவனை யுணர்ந்து போற்ருமையால் பிறவியல்லற்பட்டமையும், இங்ஙனம் போற்றாது அவன் தானே வந்து ஆட்கொண்டமையால் எய்திய பேறும் கூறப்படுகின்றன. [இறைவனை யுணர்ந்து பெறுதற்கு அவ்வுணர்வு இல்லாவிடத்து, இறைவன் தானே காட்சி தந்து ஆண்டுகொள்வான் எனினும் அமையும் ]

(பொ - ரை.) எம்பெருமானே, புல்லாகியும், பூடாகியும், புழுவாகியும், மரமாகியும், பல்வகைப்பட்ட விலங்குகளாகியும், பறவைகளாகியும், பாம்புகளாகியும், கற்களாகியும், மனிதராகியும், பேயாகியும், (தேவர் பேய் எனவும் இரு வகைகளாக நீங்கிய பதினறுவகைக்) கணங்களாகியும், வன்மைபொருந்திய அசுரர்களாயும், முனிவராகியும், தேவராகியும் மேற்கூறப்பட்டவாறு நின்ற அசையும் பொருள் அசையாப் பொருளாகிய இவற்றுள் எல்லாப் பிறவிகளிலும் பிறந்து அலுத்துப் போனேன், இன்று உண்மையாகவே உன்னுடைய பொன்போன்ற அடிகளைக் கண்டு வீடுபேறுற்றேன் எ - று.

(வி - ரை.) புண்ணிய பாவங்களின் இயல்பிற்கேற்றவாறே ஏறியும், இறங்கியும், மாறியும, திரும்பியும் பிறவி யெடுக்கப்படுமென்பதே நம் சான்றோர் கொள்கையாதலின், உயிர்த்தோற்ற நூலார் கொள்கையை முதலாக்கொண்டு உரைநடைப்படுத்துதல் வேண்டாவென்க. ஓரறிவு முதலாக ஆறறிவு இறுதியாக அறிவுநிலை கொண்டு உயிர்களைச் சான்றோர் பகுத்திருத்தலின், அப்பகுப்பு முறைகொண்டும் இப்பிறவிகளை எளிதாகப் பகுத்தறிந்து கொள்ளலாமென்க. உயிர்த்தோற்ற நூலார் கொள்கையும் வேறு, சானறோர் கொள்கையும் வேறென்று கூறிவிடுக்க.

கல்லாகிய பிறவிக்கு ஓரறிவுமில்லை என்க. "கற்றேன்றி மட்டோன்றுக் காலத்தே" உயிர்கள் எல்லாம் நுகர்தறகென ஒரு புலனும் பெறுதனவா யிருக்கும். சாபத்தானும் கல்லாதலும் உண்டென்ப. இக்காலத்திலும் மிக்க குளிருடைய நாடுகளுள்ளே ஒவவோர் பகுதியுள் மக்கள் கல்வடிவின ராக மாறிவிடுகின்றனர் என்றுங் கூறுப.

இஃதிங்ஙனமாக, இக்காலவாராய்ச்சிக்கு ஒத்தன கொள்ளுதலும், ஒவ்வாதன தள்ளுதலும் வேண்டுமென்பாருமுளர். அவர் கூற்றைக் கொள்ளின், அடிகள் கொள்கைகளுள்ளே பலவும் களைதறகு நேருமாகலின் அன்பிற்குரிய இநநூலகத்து அத்தகையவாராய்ச்சிகள் வேண்டற்பால வல்ல.

ஓரறிவுமில்லாத பிறவி முதற்கண்ணும், பிறவியுட் சிறந்த தேவப் பிறவி இறுதியுமாகக் கூறப்பட்டன. தேவரும் பேயும் பதினெண் கணங்க ளுள்ளே அடங்குதலின, கணங்கள் என்புழி ஒழிந்த பதினறுவரையும் கொண்டாம்.

பிறந்திளைத்தேன் என்றதனுல், அவ்வப்பிறவிகடோறும் இறத்தலும், அல்லலுறுதலும் உடன்கொள்ளப்படும். இப்பிறவிகள் ஆறறறகரிய துன்பந தந்தனவாதலின், எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் என்றனர்.

இஙஙனம பல பிறப்பும் பிறந்திளைத்ததாகவும், மேல்வரும் பதிகங் களில் மங்கையர்பால் இடருற்றதாகவும் அடிகள் கூறுதற்குக் காரணம் இறைவனின் இந்திரசால வித்தையே யாகும்.

எத்துணை இழிவுடையோனும் இறைவன்பாற் பேரன்பு பூண்டு உய்ந்து கடைத்தேறுதற்குரிய நெறியை உலகிறகு அறிவுறுத்துவான் வேண்டி இறை வன தன் இந்திரசாலத்தால் அடிகளைப் பல்லாறறுனும் மயக்கமுற்றதாகக் கறபித்துத் திருவாசகத் தேனை உலகுக்கு அருளச்செய்தான் என்றுணர்க. முன்னரே வீட்டின்பம் நுகர்நதிருநத அடிகள் "இன்று வீடுறறேன்" என்றும்,

> "நீக்கி முன்னெனைத் தன்னெடு நிலாவகை
> குரம்பையிற் புகப்பெய்து" (அதிசயப். 8.)

என்றும்,

> "மானேர் நோக்கி மணவாளா மன்னே நின்சீர்
> மறப்பித்திவ் வூனேபுக வென்றனை நூக்கி" (குழைத்த. 4.)

என்றும் கூறுவதுகொண்டு இவ்வுண்மை துணியப்படும்.

மாயை தம்மை வருத்தாதெனச் செருக்கிய நாரதமுனிவர் தண்ணீரின் பொருட்டுக் கண்ணன் ஏவலின்றுச் சென்று புலைமகள் ஒருத்தியைக் கண்டு காமுற்றுச் சந்ததி பெருக்கி இருப்ப, ஒருநாள் அப்புலைச்சேரி வெள்ளத்தால் அழிவுற்றமை கண்டு தன் மரபழிந்ததெனப் புலம்பியிருந்தனராக, ஆங்குக் கண்ணன் தோன்றி அவரை நாணுவித்து மாயை நீக்கினன் எனப் பாகவதம் கூறுவதையும் ஏற்ற பெற்றி கொள்க. கண்ணனை நாரதனுர் செருக்ககல இந்திரசாலம் காட்டினன் எனவும், ஈண்டு இறைவன் உலகுய்ய அடிகட்கு இந்திரசாலம் காட்டினன் எனவும் கொள்க.

"பொன்னி ஞகும் பொருபடை யப்படை
தன்னி ஞகும் தாணி" (சீவக 1931)

என உலகியல் நுகர்வார்க்குப் பொனன்றி இன்றியமையாமையைச் சான்றோர் கூறியவாறே வீட்டியல் நுகர்வார்க்கு அன்பு பெருகி, ஐம்புலன்களை வென்று, வீடாட்சிசெய்து, உவகை பொங்கித் தித்திக்கவடியாகிய பொன் இன்றியமையாதாதலின் "பொன்னடிகள்" என்றும், சிறந்த பொருள்களைக் கண்டவர் தம்பாலுள்ள இழிந்த பொருள்களைக் கைவிடுவாராதலின் "கண்டு வீடுற்றேன்" என்றும், கண்டு தெளிந்தமை தோன்ற "மெய்யே" என்றும் கூறினர்.

தமது துன்பத்தைச் சொல்லாற் கூறி மெய்ப்படுத்தற்கியலாமையின் "மெய்யே" என்றுருமாம். இன்னேரன்னவிடத்து உலகோர் "உண்ணுணை" என்பர்.

முன்னர்ப் பொய்யை மெய்யெனப் பற்றியதனுல் வந்த அல்லலை, இப்போது மெய்யை மெய்யாகப் பற்றியதனுல் அறுத்து, பிறப்பினை நீக்கி, ஆனந்த மெய்தினேன் என்பது இசைபெச்சம்.

எம்பெருமானே, இனைத்தேன், வீடுற்றேன் என்று சொல்லியபாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் என வினையைத் தொகுத்து வைத்துக் கொள்க.

உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே 35

என்னும் இவ்வடிகளிலே, எனக்கு எளிவந்தனை பெருமான் நீ வேதங்கட்கரியை என்பது கூறப்படுகின்றன.

(பொ - ரை) யான் உய்வடையும் வண்ணம் என் நெஞ்சத்துள்ளே "ஓம்" என்ற மந்திர ஒலி வடிவாய் நின்ற மலக்கட்டில்லாதவனே, எருத்தினைச் செலுத்துவோனே, அறிவுநூல்கள் ஐயனே என ஒலமிடும் வண்ணம் மேலோங்கியும், ஆழ்ந்தும் சென்றும், விரிந்தும் நுட்பமானவனே.

(வி - ரை) எழுத்துக்கள், குறில் நெட்டெழுத்துக்கள், ஒற்றியும், அன்ன பிறவாறுறியும் தோற்றப் பொருள்கள் அவ்வொலியின் வடிவங்களுமுள. ஒலிகளாலேயே காற்று, தீ, நீர், மண் முதலிய அணுக்

கள் இயக்கப்படுதலின், அன்னவையெல்லாம் அவ்வொலி வடிவிற்கேற்ற வாறே உருவம் பெறுகின்றன. உயிர்த்துக் கூற வரும் எழுத்துக்கள் நுண்ணிய வடிவுடையன. அவற்றுள்ளும மிக நுண்ணியது அகரவுயிரே யாம். அகரம் பிற வெழுத்துக்களால் வேறுபடாது, தான் ஏனையவறலெல் லாம் இயக்குந் தன்மைத்தென்பது புலப்பட்டதொன்று. இவ்வகரம் வாய் அங்காத்தலால் விகாரமின்றி வெளிப்படும், ஏனைய எழுத்துக்களின் முன்னும் பின்னும் நினறும், அவற்றையெலலாம இயககும் ஆறறல் இயல் பாகவே கொண்டது. வாய் அங்காவாதபோதும் அகத்தே இயல்பாகவே நிற்பதொன்றும. இவ்வகரம் அண்பல் முதலையும், நா விளிம்பினையுமபற்றி எழும்பின், இகர ஈகார எகர ஏகார உயிர்களாகவும, இதழ்களைக் குவித்துக் கொள்ளுதல் பற்றி எழும்பின், உகர ஊகார ஒகர ஓகார ஔகார உயிர் களாகவும, வெளிப்பட வுயிர்க்காது. அண்ணம நா பல் இதழ் என்னு மிவைகளை ஏற்றபெறறி ஒறறவும் வருடவும இயைந்தும், கண்ணுற் றடைந்தும் ககர முதலிய எழுத்துக்களாகவும் தோன்றும். ஆதலின, இவறறுக்கெல்லாம் அகரமே விகாரப்படுத்தப் பெறுத மூல காரணமாகவுள்ள தோர் எழுத்தெனத் தெளிநதுகொள்க. அகரம பிறவற்றை இயக்கப் புகுங் காலத்தே ஊன்றி உயிரக்கப்படவேண்டுவ தியல்பாகலின், ஆண்டு உகர மும, உயிர்ப்பை வாயின் வழியாக வெளிபபடுத்தாதபோது அவவொலி மூககின் வழியாகச் செல்லுமாதலின், ஆண்டு மகரமும் தோன்றுதல் நெறியே யாகுமென்க. இங்ஙனம் தோன்றப்பெறும அ உ ம் என்னும் ஒலி ஒன்றனைத் தொழிறபடுத்த முயலுங்காலத்து, அவை அகத்தின் கண்ணே அத்தொழிறகு முதனிலையாக அமைவனவாம். அவை அகத் துட் பயில்வனவாதலின் "ஔம்" என இசைத்தறகாகாவாய் 'ஓம' எனவே இசைக்கு மென்பதைப் பயிற்சியினுலேனும், வல்லார்வாய்க் கேட் டேனு முணர்க. இவ்வொலியே உயிரையும உடலையும் ஓம்பிவரும் இயல் பினது. இவ்வோசை குருமுகமாக உபதேசம் பெற்ற அனுபவத்தான் உணரப்படுவதொன்றுகும.

இறைவன்பால் உபதேசம் பெற்ற அடிகள், அவ்வோசை உள்ளத் துள்ளே தாம் உய்யக் காரணமாகி நின்று, தம்மை ஓம்பிவருதலை அறிந்தவுடன், பிறப்பெடுத்த ஞான்று முதலாகவே அவ்வொலி தமக்குச் செயத நன்றியைப் போறறிவராத பாதகத்துக்கிரங்கி "உயய வென்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற" என மனமுருகிக் கூறினர். மெய்யா - ஒலிவடிவானவனே. ஓங்காரத்துள்ளே அகரமே சிவனுதலின் "ஓங்காரமாய் நின்ற மெய்யா" என்றும், தனக்கொரு தளையும் இயல் பாகவே இல்லாதிருந்தும், தளையுட்பட்டு வருந்தும் தாமுய்யும்பொருட்டுச் தம்முள் வீற்றிருந்துகொண்டு இயக்குகிறுன் என்பது கண்டு "விமலா" என்றும், அறஞ் சான்றூர்க்கு அகத்தேயுமன்றிப் புறத்தேயும் புலப்பட்டு அருள்புரியும் இயல்பினன் என்பதைத் தமதனுபவத்தானும் அறிந்து கொண்டாராதலின் "விடைப்பாகா" என்றும், மந்திரவடிவாகிய வேதந் தோன்றுதற்குக் காரணமாக மற்றதன் முன்னர்ச் சென்று எழுமபித்

தொழிற்படுவது ஓங்கார ஓசையாதலின், அதன்பின்னர்த் தோன்றும் வேதத்தால் அறியப்படாது ஓங்கியுள்ளவன் என்றும், அவ்வேதவொலியின் முடிவிடத்தும் ஆழ்ந்து போதலின் ஆழ்ந்தவன் என்றும், அவ்வேதவொலிக்குப் பயனாகத் தானே வேறுபட்டு விரிதலின் அகன்றோன் என்றும், அவ்வேதவொலியின் ஆதியிலும் அந்தத்திலும் நுண்ணியனாகத் தோன்றியும் ஒடுங்கியும் நிற்போனாதலின் “நுண்ணியனே” என்றும் கூறினார்.

ஒலியும் பொருளும் ஒன்றென்ப உணர்ந்தோர். தீ எரியும்போது “அர்” என்றாங்கு இசைக்கும் ஒருவகை ஒலியும், மண்ணாய் “புலபுல” (கறையான் மண்ணையசைக்கும்போது புலபுல) என்றாங்கு இசைக்கும் ஒருவகை ஒலியும் உற்று நோக்கிற புலனாகும். அவ்வோசைகளின் உண்மை வடிவை முறையே “ரம” என்றும் “லம” என்றும் மந்திர சாத்திரங்கள் வகுத்துக் கூறும். இதனால் ஓசைவடிவு பொருள்வடிவு என்றுணர்க.

விமலன் - அழுக்கில்லாதவன். வி என்பது வடமொழியிலே இன்மைப்பொருள் தருவதோர் உபசருக்கம்.

பாகன் - செலுத்துவோன். அவனது அருமைப்பாடு குறித்து “ஐயா” என்றனர்.

மெய்யா என்பது முதலாக இனிவரும் விளிகளையெல்லாம், சொல்லற்கரியானை (92) மெய்யா, விமலா, விடைப்பாகா, ஓங்கியோனே, ஆழ்ந்தோனே, அகன்றோனே எனறாங்கு அழைத்து, சொல்லி, திருவடிக் கீழ்ச் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் என வினையைத் தொகுத்து வைக்க.

வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா
பொய்யாயின எல்லாம் போய் அகல வந்தருளி
மெய்ஞ்ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே 38

என்னுமிவ்வடிகளால், இறைவன் மறக்கருணையால் உயிர்கட்கு அழுக்ககற்றி, அறக்கருணையால் அருள்பாலிக்கும் ஆசானாகவும், வினையற்றார்பால் தான் வினையற்றவனாகவும் இருப்பான் என்பது கூறப்படுகிறது

(பொ - ரை) வெம்மையுடையவனே, குளிர்ச்சியுடையவனே, உயிரானவனாகும் தலைவனானவனே, பொய்யாகிய பொருள்கள் யாவும் அகன்றுபோக எழுந்தருளிவந்து மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ம்மையாகிய ஒளிவிடுகின்றவனே எ - று

(வி - ரை.) பாவஞ்செய்தாரை முனிந்து ஒறுத்து, அவர் குற்றம் போக்குதற்கண் வெய்யனாகவும், புண்ணியஞ் செய்தாரை உவந்தளித்து ஓம்புதற்கண் தண்ணியனாகவும், அவ்விருசாரார்க்கும் தோன்றப் பெறுதலின், “வெய்யாய் தணியாய்” என்றும், வெய்யனாகி ஒறுத்தலும்,

தண்ணியனுகி அருளலும், அவ்வவற்றைச் செய்த அவ்வவர் செயலால் அவ்வவரே அவ்வவறறைப் பெறுகின்றனரேயன்றி, இறைவன் தன்னியல் பாகிய குற்றமற்ற நிலையிலே ஒரு பெற்றியனுகவே இருந்து வருகின்றனன் என்பார் "விமலா" என்றும் கூறினுர். வெய்யாய் தணியாய் என்றனுமைப்படுத்திக் கூறிய அதனுல் வெம்மை பூணும்போதும் அகத்திலே தண்ணளியுடையன் என்பதும் பெறுதும். வெய்யன் - உருத்திரன். தண்ணியன் - சிவன். நீதிபதி நடுநிலைமைபற்றி ஒரு பெற்றியனுக வீற்றிருக்கவும், கொலை முதலிய குற்றங்களைச் செய்தார்க்குக் கூறறுவன் போலவும், அவை செய்யாதார்க்கு அருள்தெய்வம் போலவும், அவ்வொருவனே தோற்றம் பெறும் இயல்போடு இதனையும் ஒப்பிட்டுணர்க. மேலும், தூக்குத்தண்டம் விதிக்கும் நீதிபதி கொலைஞன் ஆகாதவாறே, இறைவன் மறத்தொழில் மேறகொள்ளும்போதும் கொடியோன் எனப் படான்.

"அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்"

எனச் சான்ருேரும் இது கருதியே கூறினுர் என்க.

"அடித்த டித்து அக் காரமுற் றீற்றிய அற்புத மறியேனே" (அற்புதப். 3) என்னுமிதனுல், முன்னர்த் தமபால் இறைவன் வெய்யோனுகித் தம்மைக் கயக்கி ஆட்கொண்டதனைப் புகன்றனர். "நெல்லிக் கனியை" என்றதும் இதனையே குறிக்கும்.

"எனைக் கயக்கவைத் தடியார் முனேகாட்டினுய்" (திருக்கழுக். 7.)

என்னுமிதனையும் ஒப்பிட்டுக்கொள்க.

"ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறுங்
கூற்றமன்னதொர் கொள்கை யென் கொள்கையே" (திருச்ச. 45.)

என, அடிகளும் இறைவன் வெய்யோனுக வந்து தம்மை ஆட்கொள்ளுதல் வேண்டுமென உடம்பட்டுக் கூறுதலையும் உற்றறிக "விமலா" என்றது, முன்னர் அவன் வடிவுத் தூய்மைக்கும், ஈண்டுக் குணத் தூய்மைக்கும் வந்தனவென்க.

இயமானன் - உயிரானவன். மனம் முதலிய கருவிகளைக் கொண்டு யாகஞ் செய்விப்போன் என்க.

ஐம்புலன்களின் சேட்டைக்கு உடன்படுதலும், மெய்யன்பின்மையும், முன்பு கைக்கொண்ட அறத்தினையாதல், பின்னர் இறைவனுற் பெற்றுக் கொண்ட அறத்தினையாதல் துணிந்து ஒழுகாமையும, அன்னபிறவும் பொய்யாயினவாம். அவற்றுளொன்றிருப்பினும், ஏனையவற்றையெலலாம் அவ்வொன்றே பின்னும் தோறறுவிக்குமாதலின் "எல்லாம்" என்றும், இறைவன் தம்மால் எதிர் வருந்தோறும் அப்பொய்யாயின எல்லாம் தம்மை யகன்று சென்றுகொண்டிருக்குமென்பார் "போயகல" என்றும், தம்பால் முன்னர்ச் சூழ்ந்து மயக்கிய மயக்க விருளெல்லாம் பிறழ்ந்து அறிவொளி யாகித் திகழ்கின்றன; அத்திகழ்வெல்லாம் இறைவனே ஆவான் என்பது தோன்ற "மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே" என்றும்

கூறினர். ஞானம் சுடர்வடிவாம். மெய்ஞ்ஞானச் சுடரே மெய்ம்மையாகிய சுடராகுமென்க. அஃது என்னுள் மெய்யறிவாகி விளங்குகின்ற மெய்ம்மையாகிய சுடரென்க. அதனது கலங்காத தெள்ளிய இயல்பு தோன்றப் பின்னரும் மெய்ச்சுடரே என்றனர். மெய்ஞ்ஞானன் - சிவசூரியன்.

எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே 40

என்னுமிவ்வடிகளினலே, அச்சத்தினாலும், அன்பினாலும் திருந்து தற்கரிய தமக்கும் இன்பமூட்டியிருந்தனன் என்பது கூறப்படு

(பொ - ரை) எந்த அறிவுமில்லாதேனுக்கும் இன்பமூட்டு தலிற் பெருமை பெற்றவனே, அறியாமையை யொழியச்செய்யும் நல்லறிவானவனே எ - று

(வி - ரை.) எஞ்ஞானமும் எனவும், இல்லாதேனுக்கும் எனவும் உம்மைகள் விரிக்க. சித்தும் சடமுமாயக் கலந்த பொருள்களுள்ளே இது சித்து, இது சடம் என்றும, இவற்றது இயல்புகள் இவையிவை என்றும், இவ்வியல்பானே பற்றற்குரியது இது, விடுதற்குரியது இது என்றும், பற்றற்குரியதைப் பற்றும் நெறி இது வென்றும, இன்னோ பிறவாறும் அறிதற்குரிய அறிவுகளுள்ளே யாதொன்றனையும் அறியேன் என்பார் "எஞ்ஞானம் இல்லாதேன்" என்றும், சுவையாகவும், ஒளியாகவும், அணியாகவும், கலவியாகவும், விநோதமாகவும், கவியாகவும் அமைந்தன வற்றால் வரும் இன்பம் யாவும் இறைவன் பயனாகவும், அவற்றினுக்கு அவையவையேயாகியும் தோன்றப்பெறுதலின் "எஞ்ஞானமில்லாதேன் இன்பப் பெருமானே" என்றும், [ஆசிரியன் விநோதமாகக் கலைகளூடு முகத்தானே நுவலும் சிறப்புத் தோன்றக் கூறியவாறுமாம்] எனவுமிதும் நாளடைவிற் செவ்வி பெற்று இறுதியில் பேரின்பப் பெருவாழ்வு தருதற்கேயாதலானும், அவற்றினகத்தே தோன்றாத் துணையாக இறைவன் மறைந்து கொண்டு, தன்னை விடுத்து நுகர்வனவற்றை முனிவித்துத் தன்னை யடைந்து ஆனந்தங்கொள்ளச் செய்வது, அவற்றை யொழியாத அமைந்த அருட்டிறனுகலான் "அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே" என்றும் கூறினர்.

ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின் 43

என்னுமிவ்வடிகளால், ஐந்தொழிலியற்றும் ஆற்றல் சான்ற இறைவன், தம்மையும் ஒரு பொருளாகக் கருதி ஆட்கொண்ட இனிய எளிய அரிய திறன் கூறப்படுகின்றது.

(பொ - ரை) படைக்கப்படுதலும், யாதானுமொரு கால அளவாக நிலைபெறுத்தப்படுதலும், ஒடுக்கப்படுதலும் ஆகிய இவை இல்லாதவனே, எல்லா உலகங்களையும் படைப்போனே, நிலைபெறச் செய்வோனே, ஒடுக்குவோனே, அருள்பாலிக்கின்றவனே, என்னை (இந்நிலவுலகத்தின்கண்) போக்கியவனே, நின் திருவடித் தொண்டில் ஈடுபடும்படி செய்பவனே எ - று

(வி - ரை.) ஆக்கப்படுதல் முதலிய மூன்றும் இல்லாதவனாகலின், அவனே படைப்பு முதலியவற்றுக்கெல்லாம் மூலகாரணனாவான் என்க. க்ஷேத்திர கணிதம் கற்றற்குரிய நேரிணைக்கோடுகள் (சமாந்தர ரேகைகள்) யாண்டும் தமமுள் இணையா என்றுங்குச் சில கோள்களை உடன்பட்டாரே அந்நூலைக் கற்றற்குரியாராவர். உடன்படாதார் உரியராகார். தான் ஒரு காரணத்தான் ஆக்கப்படாதது எதுவோ அதுவே எல்லாவற்றுக்கும் ஆதிகாரணமாகும். சீட்டு விளையாட்டிலே அரசனுக்கு மூன்று தொகையும், அரசிக்கு இரண்டு தொகையும் என்றவாறு, ஒரு காரணமும் இலலாத தொரு மதிப்பிட்டுக்கொண்ட பின்னர், அம்மதிபபே அவ்விளையாட்டயர் வோர்க்கெல்லாம் காரணப்பட்டு நிறறலும், ஈண்டு உற்று நோக்குந் தகையதாம். இங்ஙனம் காரணமறறிருத்தலே மூலகாரணத்திற்கு ஒருண்மை நிலைககளாகும். என்னை, எல்லாவற்றையும் படைத்து, நிலைக்கவைத்து, ஒடுக்கும இறைவனைப் படைப்பதும், நிலைபெறுத்துவதும், ஒடுக்குவதுமாகிய செயல்களை நிகழ்த்தும் பிறிதொரு பொருள் இல்லையாம் என்பது. "முதல் வித்தினை" (சென்னி. 10) என்பர் பின்னும். இங்ஙனம் எல்லாவித அளவைகட்கும் காரணமாகிய சிற்றளவிற்கும் ஒரு காரணமு மில்லாமையுமுணர்க.

ஆக்கமென்பது மற்றென்றினால் ஆக்கப்படுவது. அது முதலும், ஒடுக்கப்படுவது இறுதியுமாக நிறறலின், அவறறைக்கொண்டு அலகிட நின்றதை "அளவு" என்றனர். ஆக்கப்பட்ட பொருள் சிறிது நிலைத்த பின்பே அழிவுறுதலின், ஆக்க இறுதிகளைக்கொண்டே உணர்தறபால தாஙகிய காத்தலை இடையே வைத்தனர். காக்கப்பட்ட கால அளவையின் தொடக்கமே ஆக்கமும், அதன் முடிவெல்லையே ஒடுக்கமுந் தோன்ற வைத்தலின், காத்தலுக்கு அளவெனப் பெயரிட்டனர் என்க.

மறைத்தலையும், வீடருள்தலையும் பொதுப்பட "அருள்" தருதலில் அடக்கினர். செவ்வி பெற்ற உயிர்கட்கு ஞானம் வாயிலாக வீட்டின்பத்தையும், அது பெறாத உயிர்கட்கு மயக்கத்தின் வாயிலாக உலக நுகர்ச்சியையும் கொடுத்தருளுதலினென்க.

என்னைப் போக்குவாய் - அடியேனை நிலத்திலே பிறவியெடுக்குமாறு போக்குவாய். இதனை,

"நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை
குரம்பையிற் புகப்பெய்து" (அதிசயப். 8.)

என்பதனாலும்,

"மானேர் நோக்கி மணவாளா மன்னே நின்சீர் மறப்பித்திவ்
வூனே புகவென் றனைநூக்கி உழலப் பண்ணுவித் திட்டாய்"
(குழைத்த 4.)

என்பதனானும் உணர்க. பின்னர் அடிகளை ஆட்கொண்டருளியதை இம்மேற்கோள்களானும், பிறவற்றானும் உணர்க. அங்ஙனம் இறைவன் தன்பால் நின்று தம்மை நீக்கியதை முனிந்தும், இகழ்ந்தும், பின்னர்த் தெளிந்து உவந்தும் வந்துளார் என்பதை, நீத்தல் 18, 19, 50-ஆம் திருப்பாடல்களானும், குழைத்த பத்து 7, 8, 9 ஆம் திருப்பாடல்களானும், அன்ன பிறவற்றானு முணர்க

நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்து அடியார் சிந்தனையுள் தேன் ஊறி நின்று
பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான் 48

என்னுமிவ்வடிகளால், இறைவன் புலனறிவுக்கும் அப்பாற்பட்டவனாக இருந்தும், மெய்யன்பர் சிந்தையிலே இனிமைபெற வீற்றிருந்துகொண்டு, அவர் தம் பிறவியை அறுப்பான் என்பது கூறப்படுகின்றது.

[எல்லாவுயிர்களும் பிறவியறுக்க வேண்டி அவ்வவற்றின் இதயந்தோறும் இறைவன் வீற்றிருக்கின்றான் எனபதும் பொருந்தும்.]

(பொ - ரை) (பருப்பொருட்டாகிய பூவிலே நுண்பொருட்டாகிய) நாற்றம் போன்ற அணுவின் அணுவாயிருப்பவனே, சேய்மைப்பட்டவனே, அணுமைப்பட்டிருப்பவனே, சொல்லையும் மனதையும் கடந்துநின்ற மறைப்பொருளானவனே, அடியவர்கள் சிந்தனையிலே, கறக்கப்பெற்ற பாலில், சருக்கரையுடன் நெய்யும் கலக்கப்பெற்றால் (உளதாகிய கலவை நாவிற்கு இனிமை பயந்தாற்) போல இன்பமூறுமாறு நிலைபெற்று, அவரெடுத்த பிறவியை அதன் வேருட்பட வேருக்கிவரும் எங்கள் பிரானாயுள்ளானவனே எ - று.

(வி - ரை.) பொருளின் தன்மையாய் அதனுள் அடங்கி அணுவாய் இருப்பவன் என்பது தோன்ற "நாற்றத்தின் நேரியாய்" என்றும், அதனின் வேறுபட்டு உயிர்கட்குச் சேய்மையினும் அண்மையினும் நிற்பவனாதலின் "சேயாய் நணியானே" என்றும், அவனது தத்துவங்கடந்த நிலைகள் சொல்லுதற்கும் நினைத்தற்கும் அரியனவாதலின் "மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே" என்றும், கறந்த பாலுடன் சருக்கரையும் நெய்யும் ஒன்றாகிக் கலந்திருப்பது, அதனைப் பருகுவார்க்கு இனிமை பயந்தாற்போல, மெய்யன்பர் சிந்தனையுட் கலந்து ஒன்றுபட்டு இனிமை

செய்துவருவான்; மற்றதனுல் அவரது பிறவிநோயை வேருக்கி நலன் செய்யும் பெருமானுவான்; அவன் எங்கள் பெருமான் என்பார் "கறந்தபால்......எங்கள் பெருமான்" என்றும் கூறினர். நோயுடையாரை நலியாது நோய் நீக்கியாளும் மருத்துவன் (வைத்தியநாதன்) என்பது இதனுல் சேர்ந்த பொருளென்க. இதுகொண்டே "திருவாசகமென்னும் தேன்" என்பதன் பொருளையும் உணர்க.

மாற்றம் - புகழ்ந்து பாடும் பாக்கள். ஈண்டு ஆகுபெயரென்க. திருவாசகம் என்பதுபோல. அவன் சிறப்பினைப் பாடப்புகுந்தால், ஆங்கு ஒரு சொல்லேனும் வந்துதவாது எனப் பொருள் கொள்ளினும் கொள்க. அங்ஙனம் வராதது கொண்டு அவனுருவையும் திறனையும் சிந்திக்கப் பும், அது சிந்தைக்கட் பயின்றிலது எனலுமாம்.

"மனவாசகங் கடந்தான்" (உயிருண். 3)

என்று கூறுவர் பினனும். இங்ஙனமுள்ளவனை வாழ்த்துவது எங்ஙன மெனா, திருச்சதகம் 15-ஆம் 76-ஆம் திருப்பாடல்களாலும் அன்னபிற வற்றுலும் அடிகள் வெளியிடுதல் காண்க. ஆங்காங்கு உள்ளானபோல இலனுதல் கண்டு இங்ஙனம் கூறினர் ஆங்காங்குப் பயின்றுகொண்டே ஆங்காங்கு ஒளிப்பது இயல்பென்றலைத் திருவண்டப்பகுதி 126-ஆம் அடி முதலியவற்றுனும், அன்னபிறவற்றுனு முணர்க

பிறந்த பிறப்பு - தன்னைக் காணறகெனப் பிறந்திறந்து வந்த பிறப்பு. கரும்பின் கோதினை வேறுபடுத்தே அதன் சாறு கொள்ளப்படுதல்போலப் பிறவியை அறுத்தே முத்தியளித்தல் வேண்டுமாகலின், இறைவனைக் கண் டெய்துதற்குக் காரணமாகிய இந்தப் பிறப்பினையும் அறுத்தல் வேண்டு மென்பார், பொதுப்படப் பிறந்த பிறப்பென்றனர்.

பால்-ஆனந்தமேற்றும் இறைவனை வேறுபாடில்லாது அமர்ந்திருக்கச் செய்யும் உள்ளத் தியானம். நெய்-வீடுபேறு. பால் புளிப்பேறின தன்னைப் பருகுவார்க்கு நோய் வருவிக்கும். அதேபோல் உள்ளத்தில் உலக நுகர்ச்சி களைப் பற்றிய சிந்தனை ஏறின் அல்லலுண்டாகும். உள்ளந் தூயதல்லா விடத்து இறைவன் சிறவாது நிற்பன். எனவே, அன்பு தோன்றியபோதே தன்னை இறைவனுக்கு உரிமையாக்குதல் வேண்டுமென்பது குறிப்பாயிற்று.

அடியார்க்கு நணியனுகியும், இரண்டற்றவனுகியும் இறைவன் வீற்றி ருப்பான் என்க.

நாற்றம் ஞாலத்திற்குரியது. அவனது புரத்தலும் நோன்மையும் (பொறையும்) அஞ்ஞாலத்துள்ளும், மென்மையும் மணமும் நுண்மையும் பூவினுள்ளும் நுட்பமாய்ப் புலப்படும். ஆதலின் நாற்றம் என்றதை, ஞாலத்துள்ளே, கொன்றை செங்கழுநீர் தாமரை முதலாய இறைவன் அணிந்துகொள்ளும் பூவின் நாற்றத்துக்கே ஆக்கிக்கொள்க. அதன் கண்ணே இறைவன் நாற்றமும வண்மையும் உள்ளன. இவற்றல், நெஞ்சத்தைப் பூவாக்கி அவனைத் தியானித்தால், அவனது புரத்தலும் நோன்மையும் வண்மையும் வண்ணமும் நாற்றமும் புலனுமென்றும், மறையோன் என்றமையால், மறை ஒலிவடிவிறறு; அதற்கிடம ஆகாயம்;

செவ்வி பெற்றும் ஞானங் கைவரப் பெறுமையின், அதனைப் பெறுதற்குரிய குருவினை, இறைவன் அருள் காட்டக் கண்டு, அளவளாவிக் குறையிரந்து, அவன் தீக்கை செய்யப்பெற்றும், அவ்வாற்றானே தமதுள்ளத்தே நீங்காது திருவடி வீற்றிருப்ப புறத்திலே அவன் திருமேனியைப் பூசித்து, என்புருகிக் கட்டுவிட்டு, அன்பு நிரம்பி, அருள்மயமாகி அமைதி பெற்றும், அவ்வமைதியாகிய ஞான ஆனந்தத்தை விட்டு நீங்காராய் அதிலே நிலை பெற்றும் வந்த சான்றோர் திறனை, இதுகாறும் அடிகள் எடுத்துரைத்த வரலாறுகளின் மூலம் ஒருவாறுணர்ந்துகொள்ளுதல் கூடும்.

அங்ஙனம் அகத்தும் புறத்தும வெளிப்பட்ட இறைவனை உருவஞ் செய்து பூசித்தும், அகத்திலே சிந்தனைசெய்து நிறுத்தியும், உலகெலா முய்யுந் திறல்பெறத் திருக்கோயில்களையும், அங்ஙனம் வெளிவந்த இறைவன் திருவுருவங்களையும், ஆங்காங்கு அமைத்தும், அவனருளால் திருவருட்பாக்களை யாத்தும் சகுணபாவனை செய்து வாராநின்ற உண்மை யும் இதனால் உய்த்துணர்ந்து கொள்க.

நிறங்கள் ஓரைந்து உடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறம் தோல் போர்த்து எங்கும் புழுவழுக்கு மூடி
மலம் சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலம்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாஆன தத்துவனே

என்னுமிவ்வடிகளால், இறைவன் தன்மாட்டு அன்பற்றுத் தந் நலங்கருதி ஏத்துவார்க்குக் கரந்திருத்தலும், தன்மேல் மெய்யன் புடையராய் அழைப்பார்க்கு எளிதில் வந்தருளிப் புரத்தலும் மரபாக வுடையனாயினும், அன்பு சிறிதும் இல்லாத என்னைத் தாய்போல் அன்பு செய்தாண்டான் என்பது கூறப்படுகின்றது.

(பொ-ரை) பூதங்களைத் திருமேனியாகக் கொண்டருளிய வனே, தேவர்கள் துதிக்க அவர் காணாதவாறு மறைந்திருந்தவனே, எங்கள் பெருமானே, அழுக்கற்றவனே, கொடிய வினையுடையே னாகிய என்னையும், அக்கொடுவினையேனது அறிவு மறையும்படி மூடி யுள்ள மயக்குந் தன்மை கொண்ட ஆணவ இருளையும், நல்

வைத்தும் பெருதவனேயாகிப் பயன் வற்றுகிறன். விலங்குதல் - மாறு படுதல்.

" விலங்காதல் ஆதலினுல் விலங்கினேன் " (கம்பரா. சடாயு. 22.) என்பதுங் காண்க.

புழுக்களும் மாசுகளும் நிரம்புங்காறும் அவை வடிதற்குரிய வாய் திறவாதிருக்கும் இயல்பு கருதிப் "புழுவழுக்கு மூடி" என்றனர். மலம் நீர் முதலியவற்றை வேண்டும்போது அடக்குதற்கும் வெளிப்படுத்தற்குமுரிய வாயில் என்பது கருத்தாகக் கொள்க.

ஆணவ இருளால் உண்டாவது பாவம்; அதனை அறுப்பது அறம். அவ்விரண்டும் உயிரைப் பிணித்தலாற் கயிருக உருவகஞ் செய்தனர். பாவப் பிணிப்பற்றபோதே அறப்பிணியும் தானே அற்றுப்போகும் என்க. அதன்மேற் செய்யப்படுவன பயன் கருதாதனவாதலின், அவற்ருல் வரும் நன்மையும் தீமையும், முறையே உலகில் வாழும் நல்லோரையும தீயோரை யும் சாருமாகலின், செய்தாரைப் பற்ரு வென்க. இந்நிலை இருவினையொப் பெனப்படும்.

எளியேன் அறம் மறம் என்பவற்றைப் பயின்று, அறஞ் செய்தலில் விருப்பும் மறஞ்செய்தலில் வெறுப்பு முடையேனுகி, அறத்தை மேற் கொண்டு மறத்தை விலக்கித் தன்னையே பற்ருகப் பறறி, அந்நல் வினை தீவினைகளை ஒத்த பண்பினவாக்கிக் குரு தரிசனம் பெற்றுத் தன் திருவடிக் காட்சி பெற்று, ஆனந்தத்தில் மூழ்கி வாழ்தல் வேண்டுமென்னும் கருணைமேலீட்டால், தனு கரண புவன போகங்களை உளவாக்கித் தந்த நன்றி போற்ருதும், ஆணவ இருளை வேரறுத்தற் கென எனக்கருளிய மன முதலாய படையுறுப்புக்களையும் அரண் களையும் கொண்டு, அவ்விருளை எதிர்த்தழித்தற்கு மாருக, அதனுக்கே அப் படைகள் முதலாயவற்றை ஒப்படைத்து அவறருல் அலைக்கப்பெற்றும், ஆனந்தமடைதற்குரிய யான், அதறகு மாருய இன்னலுற்றுழன்றும், எனக்குமட்டுமன்றி என்னுண்டானுகரும் கொடியேனுகி இருந்துவரும் என் இழிதகமை கண்டு என்மேற் கழிபேரிரக்கங் கொண்டு, தன்மேற கசிந் துருகும் உள்ளத்தை உதவிக் குருவாகிவந்து, திருவடிக் காட்சியளித்துக் கட்டறுத்து ஆனந்தமளித்தான். யான் இறைவனுக்கிழைத்த இக்குறைக ளுள்ளே, கோடியில் ஒரு பங்களவினதாகிய குறையை இவ்வுலகத்தார்க்குச் செய்திருப்பேனேல், எனக்கவர் எத்துணைத் தீங்கு செய்திருப்பர்? ஆதலின் ஆண்டவனே, நீயே தூயன் என்பதுபட " விமலன் " என்றும், அவனே உண்மையாகிய பெரியோனுவான்; அவனையே யாம் பெரியோ னுகக் கொள்வேம் என்பது கருதி " எம்பெருமான் " என்றும் அவனை அழைத்தனர்.

இறைவன் நில் என நின்ருராகலின், ஒறுத்தடக்கியகாலையும் அடங் காது தலைவனைப் பின்தொடர்ந்து செல்லும் நற்பண்பு வாயந்த நாய் போன்றிலேன் என்பார் "நாயிற் கடையாய்க் கிடந்த அடியேன்" என்ருர்.

மலமாசுகளைப் பெருது குழநதையைத் தூய்மை செய்தும்,

நிலையறிந்து பாலூட்டியும், அதன் வாழ்வொன்றனுக்கே வாழ்ந்தும் வருத லாகிய செயலுடையாள் தாய் ஆகையால், அவள்போற் சிறந்த கருணை யுடையவன் இறைவன் என்றபடி. இனி, அறிவாற்றல் இல்லாதாயினும், அவை தம்மையுடைய இறையன்பு அவளன்பினும் மேற்பட்டதொன்றும் என உறழ்ந்து கூறினும் கூறிக்கொள்க.

மாசு அற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேன்ஆர் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்று அறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சம் கெடப் 65
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவுஇலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே 69

இது முதலாகத் தமக்கும் தம்போன்றார்க்கும் அருளிச் செய்து வரும் இறைவன் அருட் டிருவிளையாடல்கள் கூறப்படுகின்றன

(பொ - ரை ) குறைவுபாடில்லாத, ஒளி விரியப்பெற்ற பூப் போன்ற ஒளியுருவனே, பல தலங்களிலும் எழுந்தருளியிருப்ப வனே, இனிமை நிறைந்த பிறவி மருந்தாவோனே, சிவபுரிக்கர சனே, பாசமாகிய புல்லுருவியின் பற்றை வேரறுத்து (உயிராகிய பயன் மரத்தை) வளர்த்துவரும் பெருமையுடையோனே, அன்பினால் அருள்செய்து நெஞ்சத்தே கிடந்த வஞ்சனைகள் கேடடையும் வண்ணம் (வற்றாது ஓட்டம்) நிலைபெற்ற பெருமைத்தாகிய கருணை வெள்ளத்தையுடைய பேராறென்னும் பெயர் பெற்றவனே, தெவிட் டாத இன்னமுதே, அளவற்ற பெருமையுடையவனே, ஆராய்த லில்லாதவருடைய உள்ளத்திலே ஒளித்திருக்கும் ஒளிவடிவான வனே, என்னை நீராக உருகும்படி செய்து என்னுயிர்க்குயிராக நின்றவனே எ – று.

(வி - ரை.) குற்றமற்ற ஒளி மலரப் பெற்ற மலரென்க. இஃதொரு ளுவமம். சோதியுடன் நாற்றமுமுடைய மலருமாம். அவ்வழியும் மாசு தீர்ந்த மலரென்க.

“ என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போல் ”

(திருவள்ளுவ மாலை 3.)

என்னுமிதனானும் அது தெளியப்படும். மலர்க்குச் சோதியுண்மை,

“ செந்தாமரைக் காடனைய மேனித் தனிச்சுடரே ” (திருச்ச. 26.)

எனவும்,

"சுனைக்குள் விளைமலர்ச் சோதியினானை" (திருமந். 2667.)
எனவும், வருவனவற்றானுமுணர்க.

இலிங்கம் முதலாய திருமேனிகள், தியானத்தின்கண் எழுந்தருளப் பெறும் அவதாரத் திருமேனிகள், தீர்த்தம், தலம், கோயில், ஒளி முதலாய வற்றை உடையானாதலின் பொதுப்படத் "தேசன்" என்றனர். ஒளி யுடையான் என்றுரைத்தல் பொருந்துமேனும், அது முன்னரே பெறப்பட்ட தாகலின், பின்னருங் கொள்ளல் சிறப்பின்றென்க. ஆதலின், பல தலங் களிலும் எழுந்தருளியிருப்பவன் எனப் பொருள்கொண்டாம். மேலும், சிவபுரனே என்றமைக்கேற்ப, மண்ணுலகிலே தில்லை முதலாய திருக் கோயில் - சான்ற திவ்விய தேசங்களைக் குறிக்கவேண்டியது இன்றியமையாத தொன்றாதலும் ஓர்க.

தேனாரமுது - உண்டற்கினிய மருந்து. ஆராவமுது - உண்டியாகவு முண்ணற்குரியதும், உண்ண உண்ணத் தெவிட்டாததுமாகிய ஊண். "அம்ருதம்" என்னும் வடசொல் திரிந்து அமுதம் என்றாயது. இறைவன் பிறவி நோயை நீக்குதற்கண்ணும், நீக்கியபின்னர் நுகர்ச்சிக் கண்ணும் இனிமைசெய்தலின் "அமுதன்" எனப்பட்டான்.

பாசம் என்பது, கட்டுவதற்குரிய கயிற்றினையும், சேர்ப்பதற்குரிய பிசின் முதலியவற்றையும் குறிப்பதொரு வடசொல். அது "பச்" என்னும் முதனிலையிற் பிறந்தது பச் - கட்டு, சேர், பொருத்து.

"பயினொடு சேர்த்திய கல்" (அகநா. 1.)
என்றார் அகத்தினும். அறியாமை என்னும் பொருளை ஈண்டு அது குறித்து நின்றது.

இறைவனடியைச் சேர்தற்கென இயல்பாகவே அவன்பால் வைத்தற் குரியதாக உயிர்கள் மாட்டமைந்த அன்பு, அறியாமையால் மனைவி மக்கள் உடம்பு முதலாய தமர்மேலும், ஏனைய பொருள்கள் மேலும் செலுத்தப்பட்டு வருதலின், அவ்வறியாமையை நீக்கித், தன்மேல் அன்பு செய்யுமாறு அருள் செய்தலின், "நேச அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்—பாசமாம் பற்றறுத்துப் பாரிக்குமாரியன்" என்றனர்.

"பற்றறுத்து" என்பதற்கேற்ப, பாசத்தைப் புல்லுருவியாகவும், உயிரைப் பயன் மரமாகவும் உருவகித்தாம். அவைக்கேற்ப ஆரியனைப் பயிரோம்பும் உழவனாகக் கொள்க. ஆரியன் - பெரியோன்.

பெயர் எனற்பாலது பேர் என்றாயது. பேராது என்றது நிலை மாறு படாமையை. அதாவது எஞ்ஞான்றும் வெள்ளம் வற்றப் பெறாமை என்க.

பெம்மான் என்பது, பெருமையென்னும் பண்பினடியாகப் பிறந்த தொரு பெயர். சுடராகவும், தேசனாகவும், பெருங் கருணைப் பேராறாகவும், இருவகை அமுதமாகவும் இருந்துவரும் பெருமை அளவிடற்கரியதாகலின் "அளவிலாப் பெம்மான்" எனப்பட்டான்.

ஓராதார் - அறிவில்லாதவர். ஆணவத்தால் மறைக்கப்பட்டமையின், அறிவிருந்தும் ஓராராயினர் என்க. ஓர்தல் - ஆராய்ந்துணர்தல்.

எமக்கு உடலும், கரணங்களும், உலகும், நுகர்ச்சியும் என்னுமிவை

யெல்லாம், எவனால் ஏன் வந்துற்றன? என ஓர்ந்துணராதவர்பாற் புலப் படாது, அவையவையாகவே மறைந்து இறைவன் இருத்தலின், அவனை அவர் அறியாராகலால் "ஒளிக்குமொளியானே" என்றனர். குருடர் முன் ஒளியிருந்தும் பயன்படாவாறே ஓராதார்க்கு அவ் (அறி) வொளியும் பயன்படாதென்க. அவர் தன்னை உணருங்காறும் மற்று அவர்தம் உள்ளத்திலே ஒளிந்திருக்கும் ஒளியானவன் என்க. அவன் ஒளியாகலின் அவர் இருளாயினர்.

உருக்குண்ட பொருளும், உருக்கிய நெருப்பும் வேறுவேறாகாது ஒன்றுகலந்தவாறே, தாமும் இறைவனும் ஒன்றுகலந்தமை குறித்தனர். நீராய் உருக்கி என்பதனால், தம்மியல்பு கல்போன்றதெனக் குறித்தனர். லோகம் எனக் கொள்ளினு மிழுக்காது. செம்பு முதலாயவற்றை உருக்கி நினைத்த நினைத்த உருவங்களை ஆக்கிக்கொள்ளுமாறே, இறைவனும் உயிர் களைத் தனக்குத் தேவையான உருவங்களாகச் சமைத்துக்கொண்டான் என்க; உருக்குதலளவிற் கொள்ளின் பெரும்பயன் இல்லை யாகலின்.

உயிர்க்குரிய இன்பம் இறைவனால் அருளப்படுதலின், "என் ஆருயி ராய் நின்றான்" என்றனர். எனவே அவன் உயிராய காலைத் தாமுடலா யினர் என்று குறித்தமை பெற்றாம்.

இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக்கு அன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்இருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்துஎன்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே

என்னுமிவ்வடிகளால், எல்லாமா யல்லவுமாய் நின்ற இறைவன், தம்மை வலிந்திழுத்தாட்கொண்டான் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) இன்ப துன்பங்கள் இல்லாதவனே, அவற்றை உடையவனே, அன்பர்களுக்கு அன்பு செய்பவனே, எல்லாப் பொருள்களுமாகி அவ்வனைத்துமல்லவாயும் ஆகும் ஒளிவடிவனே, செறிந்த இருள் வடிவனே, தோன்றாத பெருமையுடையவனே, மூல காரணனே, முடிவும் நடுவுமாகியவனே, அம்மூன்றுமல்லாதவனே, என்னை வலிந்திழுத் தாட்கொண்ட எந்தையாகிய பெருமானே எ - று.

(வி - ரை.) இயல்பாகவே விருப்பு வெறுப்பில்லாதவனாகலின், அவை காரணமாக வரும் இன்ப துன்பங்களும் இலவாயின.

"வேண்டுதல் வேண்டாமை யிலான்" (குறள்-கடவு. 4)
என்பது தமிழ் மறை.

இங்ஙனம் அமைந்தவனேனும் கருணையே உருவாகக் கொண்டா ர், அடியவர்பொருட்டு அவ்விரண்டும் உள்ளவன் என்பார்

"உள்ளானே" என்றும், ஓர்ந்தவருள்ளத்திலே இன்பமாகவும், ஓராதவர் உள்ளத்திலே துன்பமாகவும் அமைந்துவருதலால், அங்ஙனம் அவர் இன்புறுதலும் துன்புறுதலும், இறைவனைக் காணப் பெற்றமையானும் பெறுமையானும் நிகழ்வனவாதலின், காரியத்தைக் காரணமாக்கி "உள்ளான்" என்றும், அவ்வினப துன்பங்கள் அவனுக்குரியனவல்ல ஆதலின் "இல்லானே" என்றும் உபசரித்தும், உண்மையுரைத்தும் போந்தனரென்க.

இன்ப துன்பங்களும், சோதியும் இருளும், அன்ன பிறவும் தத்தமை நோக்கும்வழித் தாந்தாமேயாகவும், அவனை நோக்கும்வழி மற்றவை யெல்லாம் அவன் வடிவங்களாகவும் தோன்றப்பெறுதலின், அங்ஙன மெல்லாம் அடங்கக் கூறினர்.

இனி, எல்லார் உளளத்துள்ளும் இறைவன் உளனுதலானும், பிற வற்றுனும், அவ்வுயிர்ப் பன்மைக்குள்ள இன்ப துன்பங்கள் இறைவற்கு முளவாகுமென உபசார வழக்கான் உரைத்தாருமாம். இன்னும் "ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமிலாறகு ஆயிரம் திருநாமம் பாடி" (திருத்தெள்-1) என்னுமிதனுனும், இல்லாற்கு என்புழி இன்ப துன்பங்களில்லாதவனுகவும், ஆயிரம் திருநாமம் என்புழி, அவையுள்ளானுகவும் கொள்ளப்படும்.

"தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினு மன்ப" (திருச்ச. 69)

என்றலும் காண்க.

எல்லாப் பொருளுமாய சோதி ; அவை நீ யல்லே எனப்படும் சோதி என்க. யாதேனுமொன்றனைச் சுட்டி, ாதல்லன் என்புழி, ஏனையவை யாவன் என்பது பட்டவிடத்து, யாவையுமாய், அங்ஙனம் ஆயபொருளனைத்தும் அல்லன் என ஓதுக்கப்பட்டவிடத்து, அல்லையுமாம் சோதியனே என்றன ரென்க. எல்லாப் பொருளுமாகியும், அவை யெலலாம் நீயல்லே எனப்படு கின்றவன் என்க. இறைவன் எல்லாப்பொருள்களினும் ஊடுருவிக் கலநது செல்லும் ஒளி வடிவினனுதலின், பொதுஅறிவான நோக்குழி, அவ்வவை போலவும், சிறப்பறிவான் நோக்குழி, அவை யல்லனுமாகி நிற்குமியல்பி னான் எனக் கொள்க.

அங்ஙனம் யாவையுமாகிய அவ்வொளி, அவையெல்லாங் கடந்து அப்பாற் சேரலின், காண்பார் அறிவு மழுங்க, அஃது இருளாகித் துன்னு தலின் "துன்னிருளே" என்றனர்.

"பொருளா எனைப் புகுந்தாண்டு புரந்தரன் மால்அயன்பால்
இருளாய் இருக்கும் ஒளி நின்ற சிறறமபலம" (திருக்கோ. 73)

என்பதுங் காண்க.

தோன்றுமாறு காட்டிப் பின் இருளாய் மயக்குதலின், "தோன்றாப் பெருமையனே" என்றார். அத்தகையனேனும் தம்மை ஈர்த்தாட்கொண்ட எளியோன் என்னுங் குறிப்புங் கொள்ளப்படும் ; குரவனுக எளிவந்து காட்சி கொடுத்து மாட்சிபெறச் செய்தானுகலின் என்க.

எல்லாப் பொருளும் தன்னிடத்தே தோன்றுதலின் "ஆதியனே" என்றும்,

"முதற்சோதியை முக்கண்ணப்பனை முதல்வித்தினை" (சென்னி. 10.) என்று கூறுவதுங் காண்க. தன்னில் தோன்றிய பொருள்கள் வளருந் தோறும், அழியுந்தோறும், இறைவனும் வளர்பவன் போன்றும், அழிபவன் போன்றும் தோன்றப்பெறுவதனால் "அந்தம் நடுவாகி" என்றும், ஆதி காரணனே யன்றித் தனக்கென ஒரு தோற்றமுமில்லாதவனாகலானும், உண்மையின் அப்பொருள்களே அழிவாக்கங்களைப் பெற்று வருதலினாலும் "அல்லானே" என்றும் கூறினர்.

அறிவுறுத்தலை ஏற்றுக்கொள்ளும் செவ்வியின்மை தோன்ற "ஈர்த்து" என்றனர். செவ்வி பெறுவதன் முன்னரும் பின்னரும் ஆங்காங்குக் காட்சி கொடுத்தாள்வது இறைவற்கு மரபாகுமென்பதும் ஈண்டுப் பெற்றும்.

தமக்குக் குரவனென்பார் "எந்தை" என்றும், யாவரக்குந் தேர்வரிய பெருமையுடையோனாதலின் "பெருமான்" என்றும் கூறினரென்க.

ஆணை மீறி அல்லனவே செய்துவரினும், நன்மக்கட்கு நல்லனவே பேணிப் புரிந்துவரும் பேரன்பின் நிலையை இறைவனிடத்தே கண்டு "தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" என, குற்றமெல்லாங் குணமெனக் கருதி அன்பு மிக்காளாய்த் தன் மகனை ஒறுத்தடக்க வல்லளல்லாத் தாயின் நிலையை முன்னும், அதன்மேல் ஆசானாக அறிவுத்தியமை கண்டு, ஆரியனே என, இயல்பின் வேறுபட்ட மாணவனை ஏற்றுக்கொள்ளா ஆசான் இயல்பினை இடைக்கண்ணும், ஆசானே தந்தையாகலின் "எந்தை" எனத் தனயனைக் குற்றங்கண்டுழி ஒறுத்தடக்கவல்ல தந்தையின் இயல்பினைப் பின்னுமாகக் கூறியவாறு.

காமதிற்கிடனாய ஒருத்தி, தன்மேற் காமங்கொண்ட ஒருவனை நோக்கி "நீ நின் தாயின் இதயத்தைத் துணித்துக் கொடுவந்து எனக்குக் கொடுப் பின் நின்னைப் புணர்வல்" என்றதும், அவனும் அவ்வாறே அதனை அறுத்துக் கொண்டுவரும் வழிக்கண், கல்லாலுறுத் துண்டு சிறிது நடைப் பட்டு நிற்றலும், அதனையுணர்ந்த அவ் இதயம் "மகனே, பைய நடந்து செல்" என்று கூறியதென, பிரன்சுநாட்டுப் பெரும் பாவலன் ஒருவன் பாடிய பாட்டும் தாயின் பேரன்புத் திறனை இனிது புலப்படுத்தாநிற்கும்.

கூர்த்த மெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே
காக்கும் எங்காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்று இன்ப வெள்ளமே அத்தாமிக்காய் நின்ற
தோற்றச் சுடர்ஒளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவே என் சிந்தனையுள்
ஊற்றான உண்ணார் அமுதே உடையானே 83

என்னுமிவ்வடிகளால், இறைவனது அருமையும், தூய்மையும்,

அவனைத் தெளிதற்குரிய முறைமையும், தமது அடிமையும் ஆதியன, தம் திருவுளத்துட்பட்டு ஆனந்தமூட்டுதல் புலப்படுத்தப் படுகின்றன.

(பொ - ரை ) கூர்மை செய்யப் பெற்ற மெய்யறிவினாலே (பேத மறக் கருதிக்) கொண்டு உணர்கின்றவர் தம் கருத்தின்கண்ணே யுள்ள (பிறராலே) மதித்தற்கரிய கருத்துப் பொருளே, நுண்மைப் பட நுணுக்குவதற்கரிய நுண்ணுணர்வுப் பொருளே, போதலும் வருதலும் சேர்தலுமாகிய தொழிற்பாடுகட்குட்படாத கலப்பற்ற வனே, காத்துவரும் எம் காவலாளனே, காணுதற்கரிய பெரிய ஒளி யுருவனே, இன்பமாகிய ஆற்றுவெள்ளமே, அப்பனே, எஞ்சியதா யும், நிலைபெற்ற விளக்கத்தினையுடைய கதிரொளியாயும், எவரு முணர்ந்து சொல்லாத அத்துணை நுண்ணிய உணர்வாயும் (இருந்து) மாறுபட்டுக்கொண்டேவரும் இவ்வுலகத்துள், வெவ் வேறாய் எண்ணும் ஐயங்களில் முடிவிடத்து ஒருதலைப்பட வந்து அறிவாகும் அறிவுள்ளவனே, அறிவைத் தெளிவிக்கும் தெளிவுப் பொருளே, என் சிந்தனை ஊற்றுள் உண்டான உண்ணத் தெவிட்டாத அமுதமே என்னை அடிமையாக உடையவனே எ - று.

(வி - ரை.) கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தம் கருதீ நோக்கே; (பிறர்) நோக்கரிய நோக்கே என்றுரைத்தலுமாம். தங்

க என்றது உபசாரம்; அறிவும் அறியப்படு பொருளும் தாமும் வேறற நிற்றலே உண்மையாதலின்.

" உணர்ந்தார்க் குணர்வரியோன் " (திருக்கோ. 9.)

என்றதற்கு ஒருகால் தன்னையுணர்ந்தவர்களுக்குப் பின் உணாதற்குக் கருவியாகிய சித்த விருத்தியும் ஒடுங்குதலான் மீட்டும் உணர்வரியோன் எனவும், தவத்தாலும் தியானத்தாலும் எல்லாவற்றையும் உணர்ந்தவர்க்கும் உணர்வரியோன் எனவும் உரைப்பர் பேராசிரியர்.

ஏனைய பொருள்களையெல்லாம் அணுகி

இறைவன் தோன்றுவன். அந்த நுண்ணிய ஞானமயனாக இறைவனை மேலும் நுணுக்கி அணுச்செய்து காணற்கியலாதென்பார் " நுணுக்கரிய நுண்ணுணர்வே " என்றும், எங்கும் அவன் பரந்து இடையீடற்றிருத்த லின், போதல், வருதல், புணர்தல், பிரிதல் என்னுஞ் செயல்கள் அவனுக் கில்லை என்பார் " போக்கும் வரவும் புணர்வுமிலா " என்றும், அத்தகை யோன் அறத்தையே தனக்குத் திருமேனியாகக் கொண்டுளான் என்பார் " புண்ணியனே " என்றும், யாண்டும் அவனுடைய காவலேயன்றிப் பிறி தொரு காவலுமில்லை, காப்போனுமில்லை யாதலின் " காக்குமெங் காவலனே " என்றும், எல்லாப் பொருள்களிலும் கரந்துநின்று எல்லா வற்றையும் காத்துவருதலின் " காண்பரிய பேரொளி " என்றும் வன்பா

லெல்லாம் மென்பாலாக மலை நீர் யாருகி ஆங்காங்கே பாய்ந்து நலன் செய்யுமாறே, தமமைத் தாமே உணர்ந்து எய்தும் ஆற்றலற்றூர்கெல்லாம் ஆங்காங்கு அவ்வவர் இன்பமுடையன வெனக் கருதித் துயக்குங்கால், அவ் வவை இன்னலுடையன என அறிவித்தும், தானே அவர் முன்னர்ச் சென்றும், அருள் வெள்ளத்தை நுகரச் செய்தலின், "ஆறறின்ப வெள்ளமே" என்றும், கவலை யறுத்த புதுமை சான்ற அவ்வெளளத்திலே தோய்நதும், பயிர் விளைத்துப் பயன் எய்தியும் வருங்காலத்தே இளைப்பாறிவரும்போது தானுகவே அம்மா அப்பா என்றுரைப்பது இயல்பாகலின், "அத்தா" என்றும், எல்லாம் தன்னகத்துள் ஒடுங்கவும தானே மற்றொன்றனுள் ஒடுங்காது மிருத்தலின் "மிக்குஆய்" என்றும், எல்லாப் பொருள்களினுமுள்ள ஒளியே மற்று அவற்றைப் பிறர்க்குப் புலப் படச் செய்தலின் "தோற்றச் சுடரொளியாய்" என்றும், அவ்வொளியை நுகரும் பொறியும், அதற்கு முதலாகிய உயிரும் ஆகியும், அவ்வுயிரறிவி னுள்ளும் நுண்ணறிவாகியும் இறைவன் வீறறிருக்கின்ருன் என்பார் "சொல்லாத நுண்ணுணர்வாய்" என்றும், பொன், நிலம், ஆணுக்குப் பெண், பெண்ணுக்கு ஆண், மக்கள், பெற்றோர், உடன் பிறப்பாளர் ஆதிய வற்ருல் இன்பமுண்டென்று ஆங்காங்குப் புக்கு நோக்கும்போது அவறருல் துன்பமே விளைதலின், அவற்றை எல்லாம் படிப்படியே அல்ல அல்ல என ஒதுக்கி, இறுதியில் மெய்யன்பனுகிய இறைவனையே அடைந்து நுகர் தலின் "மாற்றமாம்..........தேறறனே" என்றும், சேறு முதலியன நீக்கிக் கண் திறக்கப்பட்ட ஊற்றின்கண் ஊறும் நீர், தூயதாய், இனிய தாய், தெவிட்டாததாய் இருக்குமாறே மலம் நீங்கிய உள்ளத்திலூறும் அன்பு நீரும், மாசற்றதாய், இனியதாய், தெவிட்டாததாய் இருக்குமென் பார் "சிந்தனையுள் ஊற்றுன உண்ணுரமுதே" என்றும், உண்மையறிவு மயமாகி நிற்பவன் அவனேயென்று யாம் தெளியுமாறு தேற்றறுகும், தானே அஃதென்று தெளிந்துகோடற்கும் உரியவன் அவன் என்பார் "உடை யான்" என்றும் உரைத்தனர்.

சேறு முதலியவற்றோடு கலந்து ஊறிய நீர் நஞ்சாகி உண்போரைக் கொல்லும். அங்ஙனமே மாசு கலந்த உள்ளத்திலூறும் தீயாகிய நினைவுகள் பிறவிக் கடலுள் அழுந்தி அல்லறபடுத்துமென்க. தாம் தம் சிந்தைக்கண் மாசுடன் பட்டெழுநத நினைவு நீரருந்தியமையால், தமக்குண்டாகிய துன் பத்தையும், அதனுல் அதன்மேல் எழுந்த வெறுப்பினையும், அம்மாசற்ற நினைவு நீரருந்தியமையால் தமக்குண்டாகிய இன்பத்தையும், அதனுல் அதன்மேலெழுந்த விழைவினையும் ாண்டுப் புலப்படுத்தினுர் என்க.

கூர்த்த - கூர்மை செய்யப்பட்ட. நுணுக்க அரிய - நுண்ணிய அணுக் களாகச் செய்துகொள்ளற்கரிய. மாற்றம் - மாறுபட்ட நிலை. புண்ணியம் - நலச்செயல் (இன்பச் செயல்) எனப்படுவதோர் வடசொல். புண்ணியன் என்பது நன்மையையே திருமேனியாகக் கொண்டவன் எனப் பொருள் படும். சிவன், சங்கரன் என்பனவும் அப்பொருள்பட வந்தன.

வேற்று விகார விடக்கு உடம்பின் உள்கிடப்ப
ஆற்றேன் எம் ஐயா அரனே ஓ என்று என்று
போற்றிப் புகழ்ந்து இருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டு இங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டு அழிக்க வல்லானே
நள் இருளில் நட்டம் பயின்று ஆடும் நாதனே
தில்லையுள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லல் பிறவி அறுப்பானே ஓ என்று
சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவன் அடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

இவ்வடிகளால், தன்னடிப்பற்றுடையார்க்கு, அவர் மீண்டும் இங்கு வருவதற்கேதுவாகிய உடம்பின் மூலத் தொடர்புகளை அறுக்க வல்லவனே என்றும், பிறவாறும் இதுகாறுங் கூறிய சிவபுராணப் பாயிரத் திருப்பாட்டானது, தம்முடைய குறைவுகளையும், இறைவன் நிறைவுகளையும், அவன் திருவடிக்கீழ் எடுத்துச் சொல்லிப் பாடிய திருவாசகப் பாட்டின் பொருளைத் தாம் உணர்ந்து, பிறர்க்கு எடுத்துச் சொல்லிவருமவர், சிவபுரத்தில் சிவனுடைய திருவடிக்கீழ்ச் சென்று நிலைபெற்றவராவர் என்பதுணர்த் என்

[உரைப்பயனும், உடம்படு புணர்த்தலால் கேட்போர் பயனும் உடன் கூறப்பட்டவாறுமாயிற்று ]

(பொ - ரை.) அடிமைத்திறனுக்காகாது வேறுபடுதற்கென வேறுபட்ட திரிபினையுடைய ஊன் முதலாகிய கட்டுக்களோடு கூடிய இச்சிறிய வீடாகிய உடம்பின்கண்ணே சிறைப்பட்டு அதனுள்ளே கட்டுண்டு கிடத்தலை இனிப் பொறுக்கமாட்டேன், எம் தலைவனே, அரனே, ஓ என்றலறி வழிபட்டுப் பாடி அந்நிலையிலே இருந்து அறியாமை நீங்கப்பெற்று மெய்யறிவுப் பொருளாகிய நின்னைச் சேர்ந்தவர்கள், திரும்பவும் தம் பழைய வாசனையால் இவ்வுலகின் கண் வந்து, வினைகளை இயற்றிப் பிறவியிற் சாராவண்ணம், கள்ளத் தொழில் பூண்ட ஐம்புலன்களுக்கும் இடமான உடற் கட்டினை யவிழ்த்து அவரை விடுவிக்க வல்லவனே, நள்ளிருளிலே நடனம் பயின்றாடும் தலைவனே, தில்லையுள்ளே கூத்தாடும் கூத்தனே, தெற்குக் கண்ணுள்ள பாண்டியநாட்டை யுடையவனே, அல்லல்தரும் பிறவிக்கட்டினை அறுத்து உயிர்களைச் சிறைவீடு செய்

பவனே, ஓவென்றலறிச் சொல்லாற்சொல்லித் தெளிவித்தற்கு ஒண்ணுதானே, (இங்ஙனம்) சொல்லி அழைத்து அவனது திரு வடியின்கீழ்ப் பகுதிக்குச் சொல்லிய இப்பாட்டின் பொருளைத் தம் மனத்தாலுணர்ந்து, உணர்ந்ததனைப் பிறருணர எடுத்துரைக்க வல்லார், தம்மைப் பலரும் வணங்கித் துதிக்க முதற்கண் சிவ புரத்தின் கண்ணே செல்வாராகிப், பின்னர் ஆங்கு வீற்றிருக்கும் சிவபெருமானுடைய வீடுபேருகிய அடிநிழற்கண் சென்று நிலை பெறுவர் எ - று.

(வி - ரை.) ஒன்ருகிய திரிபும் வேருகிய திரிபும் எனத் திரிபுகள் இரு கூறுடையன. அவற்றுள் வேற்று விகாரம் என்பது வேருகிய திரிபு. ஒன்ருகிய திரிபென்றதனை,

“ பப்பற வீட்டிருந் துணரு நின் னடியார்
பந்தனை வந்தறுத் தார் அவர் பலரும்,
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின்ருர் அணங்கின் மணவாளா ” (திருப்பள்ளி. 6.)

என்னுமிதனுலறிக. வேருகிய திரிபினை,

“ நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து நுகமின்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத் தொழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே.” (அதிச. 8.)

என்னுமித் திருப்பாட்டானுமுணர்க.

அரன் என்பது, பாவத்தைக் கெடுப்பவன் என்னும் பொருளைத் தரும் வடசொல்.

ஓவென்று - ஓவென்றலறி. இங்ஙனமாதலை,

“ ஓவெனக் கிளக்கும் கால முதல்வனை ” (பரி. 3. அடி. 61)

என்னுமிதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையானுமுணர்க.

இக்குரம்பை ஒழித்து, உனக்கு அடிமை செய்தற்கேற்றதாய பிறப் பினைத் தந்தால் ஆற்றுவேன் என்பது குறிப்பு. இதனை,

“ நின் திருவடிக் காம் பவமே.........
யருளு கண்டாய் அடியேற்கெம் பரம்பரனே ” (திருச்ச. 5)

என்பதும் வலியுறுத்தும்.

“ வேற்றுவிகார விடக்குடம்பி னுட் கிடப்ப ஆற்றேன் ”

என்றதனுல் யாக்கை நிலையாமையும், அதன் காரணமாக இளமை செல்வம் என்னுமிவற்றின் நிலையாமைகளும் உணர்ந்துகொண்டாராகலின், அவ்வாக்கையை வெறுத்து “வேற்றுவிகார விடக்குடம் பென்றும்”, “கிடப்ப ஆற்றேன் ” என்றும், தமது துறவுத்தூய்மை தோன்ற, “ ஐயா அரனே ஓ என்று போற்றிப் புகழ்ந்திருந்து ” (ஐயா இங்கு வந்தேன் பாவத்தை அழிப்பாய்) என்று கூறினர்.

தமது பற்றற அவனைப் பற்றியபோதே அவனும் காட்சி தந்தருளி னன் என்பது தோன்றப் "போற்றிப் புகழ்ந்திருந்து" என்றும், போற்று தலும் புகழ்தலும் ஆற்றுங் காலத்தே, அங்ஙனமாற்றுவார்தம் உடலெல் லாம் உள்ளமெல்லாம் ஆனந்த ஊற்றெடுப்ப, அப்போதவர் தம்முடம்பை வெறுப்பது நிகழாதாதலின் "இருந்து" என்றும், அங்ஙனமவர் சிவப் பணி மேலீட்டினால் பொய்யறிவு போக மெய்யறிவு மேலிட்டு வரப்பெறுவர்; அங்ஙனம் பெற்றாரைப் பிறவிக்கேதுவாகிய வினைக்கண் சாரவிடாது, அவர்தம் கள்ளப் புலக்குரம்பைக் கட்டழித்தருளுவான் ஆதலின் "கட் டழிக்க வல்லானே" என்றும் கூறினர்.

"பொய்யாவது மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும், மற்றும் இத்தன்மையவும் இல்லெனச் சொல்லும் மயக்க நூல்வழக்குகளை மெய் யெனத் துணிதல்" என்பர் பரிமேலழகர் (திருக்கு. 351. உரை). இதனை விபரீத உணர்வென்பர் வடநூலார். இதனுற் பிறவி உளதாகும். இவ்வுணர்வு கெடுதற்குப் பற்றற்றானைப் பற்றிய வழியே வழியாம். அப் பற்றும் துறவாகிய காரணவகையால் உளதாகும்; அத்துறவும் புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய யாக்கையின்கண்ணும் உளதாம் பேற்றினை அவற்றது நிலையாமை நோக்கிவிடுதலால் உளதாகும். இன்ன வற்றையெல்லாம் ஆங்காங்கே பரிமேலழகர் உரைத்த உரையானு முணர்க.

மெய்யானர் - மெய்ப்பொருளாகிய சிவத்தினைத் தாமேயாகப் பாவனை செய்து, அப்பயிறசியால் பிறப்பறும் பெற்றியர்.

குரம்பை - சிறுவீடு.

"கொன்னிலைக் குரம்பையின்" (குறுந். 284-7.)

என்பதும் காண்க. அஃதவர்க்குப் பொருந்தாது என்பது தோன்றக் "கள்ளப் புலக் குரம்பை" என்றனர்.

காவலாக வைக்கப்பட்ட புலன்கள் அமையம் நேர்ந்தவிடத்து, தமது கரந்து வைத்த செயல்களை வெளிப்படுத்து, உள்ள முதலை முதல்வன் அறியாது கவர்ந்தும், கொடிய செயல்களைச் செய்யத் தூண்டியும், அன்ன பிறவாறு ஆற்றியும், சேர்ந்தாரையலைக்கும் களவுத்தொழில் பூண்டு வஞ்சம் செய்தலின் "கள்ளப்புலம்" என்றனர்.

இருள் நடு எனற்பாலது நள்ளிருள் என்றாயது. எல்லாம் ஒடுக்கப் பெற்ற காலத்தை நள்ளிருள் என்றனர். நள் - நடு. நண்பகல்போலப் பொருள்பட்டு நின்றது.

அவற்றையெல்லாம் படைத்தற் பொருட்டுப் பயின்றாடும் என்க. உயிர்கள் உடலோடும் கருவிகளோடும் இயைந்திருப்பின் அவையும் தொழிலியற்றும். இவனும் அத்துணைப் பயின்றாடலும் வேண்டா. உயிர் களை இயக்குதற்கு அவற்றின் இதயத்துள்ளும், பூவுலகை இயக்குதற்கு அதன் இதயமாகிய தில்லையுள்ளும் இருந்து இறைவன் கூத்தாடுவான் என்க. உடல் முதலாயின ஒழிந்தவிடத்து, அவை மீண்டும் உளவாதற் பொருட்டும், உயிர் உடலோடியைந்து ஆசை தீர நுகர்தற்பொருட்டும் நள்ளிருட்கண் பயின்றும், அவ்வுயிர் உடல் முதலியவற்றைப் பெற்று

நுகர்ந்து வரும்போது, ஆங்காங்கு நேரும் தளர்வகற்றுதற்பொருட்டு உடம்பின் இதயத்துள்ளும், உலகில் தில்லையுள்ளும் இருந்தும் கூத்தாடுவான் என்க.

திருச்சிற்றம்பலத்துள்ளும் சிந்தையுள்ளும் உறைகின்ற சிவபெருமானாகிய முதல் தலைமகன், அங்கயற்கண்ணியாகிய தலைவியோடும இல்லறத்தை நடாத்திக் காட்டியும், அவ்வில்லறத்திறகு இன்றியமையாத களவு கற்பென்னும் இருபகுதித்தாய அகப்பொருள் நூல் அருளிச் செய்தும், **தமிழ்மரபே உலகின் மரபாகும்** என நிலைநாட்டிய நாடு பாண்டிய நாடாதலின், "தென்பாண்டி நாட்டானே" என்றனர். அங்கு ஆய்ந்த நூலைக்

"கூடலி னுய்ந்த ஒண்டீந்தமிழ்"

எனக் கோவையார் எட்டாஞ் செய்யுளிற் கூறியுள்ளார் அடிகள்.

"தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டிநாடடானை"

(திருப்பா. திருப்பொற்-10.)

என்பதுங் காண்க. தண்மை - அகப்பொருளாகிய காதல், வெம்மை - வீரம் முதலாய புறப்பொருள். அகத்திற்குத் தண்மையும் புறத்திறகு வீரமும் இன்றியமையாதன. ஒண்டீந்தமிழ - வீடடிற்கு வழிகாடடும ஒளளிய அன்பு நெறியால் இனிமை பெற்ற அகப்பொருளிலக்கணம் தமிழ் இலக்கணம.

சொல்லிய பாட்டென்றது, ஈண்டுத் திருவாசகத்தை என்க. இறைவன் திருவடி நீழலிற் புணர்ந்திருந்து சொல்லிய பாட்டென்க.

"எம்பரமா என்று பாடிப்பாடிப் பணிந்து
பாதப் பூப்போ தணைவது என்று கொல்லோ
என் பொல்லா மணியைப் புணர்நதே" (புணர்ச்சி. 10)

என வரும் பகுதியினுல், அடிகள் வேணவா, தாம் இறைவன் திருவடியைப் புணர்ந்து ஆங்கிருந்து தலைவன் இழைத்த கொடுமைகள், அருளகள் என்ற யாவற்றையும் அவன் கேட்பப் பாட்டினுல் உணர்த்தி, அவனையும் உருக்கித் தாமும் உருகவேண்டுமென்பதே. இவ்வவாவுடன் இருந்தவர் இறைவனடி புணர்ந்த பின்பு, தாம் பிரிந்திருந்த காலத்தே உண்டான துன்பமெல்லாவற்றையும் எடுத்துக் கூறிய பகுதியே இத்திருவாசகமாதலின் சொல்லிய பாட்டென்பதாயிற்று. மேலே "குழைத்த சொல்மாலை" என்பர். அதன் பொருள் வகைப்பட்டுப் பலவாருகக் கிடப்பினும் ஐந்திணை அன்பென்று தொகுத்துணரல் வேண்டுமென்க. அங்ஙனமுணர்ந்தவழி இத்திருவாசகப் பாமாலையில் பயின்ற பாக்கள் யாவும் ஐந்திணையன்பின் துறைகளாக அமையுமென்க; அடிகள் தலைவியாகவும், ஆண்டான் தலைவனாகவும் சிவபுரத்தில் இருந்தவாறே இருந்துகொண்டே இத்திருவாசகப் பாமாலையைத் தோற்றுவித்தனராகலின் என்பது.

இனி இப்பாட்டின் வினை முடிபு வருமாறு காண்க :—

மிக்காய், விளங்கொளியாய் (23), ...இலாதானே (24) பொல்லா வினையேன், (நின் பெருஞ்சீர்) புகழுமாறொன்றறியேன் (25) யான் (20) சிவனவன் என் சிந்தையுள் நின்ற அதனுல் (17) வாழ்க (1—5) வெல்க

(6—10) போற்றி (11—16) (என்று) அவனருளாலே..................வணங்கி (18) சொல்லற்கரியானை (92) எம்பெருமான் (31) (என்பது முதல்) அல்லற் பிறவி யறுப்பானே (91) (என்பதிறுதியாக) (என்று) சொல்லி (92) (அழைத்து) இளைத்தேன் (31) வீடுற்றேன் (32) (என) சிவபுராணந்தன்னை (19) உரைப்பன் (20) (அங்ஙனம்) திருவடிக்கீழ்ச் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் (92—93) பல்லோரும் பணிந்தேத்த (95) சிவபுரத்திற செல்வர், சிவனடிக் கீழ் உள்ளார். (94).

இனி, இப்பாட்டு, பன்னிரண்டடிக்கு மேற்பட்டமையின், வெண்டளை திரியாது வந்ததேனும், வெள்ளோசையற்றுக் கலியோசை பெற்று வெண்பா நடையான் இயன்று வந்தமையின் கலிவெண்பா எனப் பெயர் பெற்றது.

இது வாழ்த்தியும், வெற்றிகூறியும், போற்றியும், சிவபுராணம் உரைப்பன் என நுதலிப்புகுந்தும், ஒன்றறியேன் என மயங்கியும், அவனது அருளின் திறன் ஆற்றல் அருமை பெருமை எளிமை ஆதியன வற்றை உடம்படு புணர்த்து முகத்தான் சேய்மைப் பாட்டிலும், அணுமைப் பாட்டிலும் விளித்தும், ஓவென்றலறியும், அடங்கியும், தமக்கும் பிறர்க்குமுளதாம் பயன் கூறியும் அடிகள் அருளிச்செய்யச் செல்லாநின்றது. வாழ்த்திலும் போறறியிலும் தாழ்ந்த ஓசையும், அருளின் திறன் ஆற்றல் அருமை பெருமை என்னுமிவை நுதலியவிடத்து ஓங்கித் தாழ்ந்தசைந்தடங்கும் ஓசையும், எளிமை விளி முதலியன நுதலி வருங்காலத்தே மேலெழுந்திசைக்கும் ஓசையும் பெற்றுவந்தமை இயல் பாகும். இத்தகைய பொருள் நுதலி ஒரு நிகரற்றுத் தாழ்ந்தும, எழுந்தும், அவற்றிடைப்பட்டுச் சுழன்றும் வரும ஓசை “துள்ளலோசை” எனவும், அது பரவி நடக்கும் பாட்டு “கலிப்பாட்டு” எனவும் பெயர்பெறும். பாட்டைப் பயில விருப்புடையார்க்கு, ஏதோ செப்பப் புகுந்தவர், பலதிறப் பட்ட பொருளால் ஓசை வேறுபடப் பாடினாராதலின், இது கலிவெண்பா எனப்பட்டது கலிவெண்பா, வெண்கலிப்பா என்னுமிரண்டும் ஒக்கு மேனும், வெண்பா வோசையற்றுப்போகக் கலியோசை வீறுற்றமையானே, வெண்கலிப்பா என்னுது, கலிவெண்பா எனவே கொள்ளப்பட்டது.

“நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்” (திருமந். 95) என்று அருளிச் செய்தவாறே அடிகளும் தாம்பெற்ற இன்பத்தை இவ்வுல குய்யுமாறு பெற்று நுகர இதனை அருளிச் செய்தாரென்க.

சொல்லுவார் சிவபுரஞ் செல்லுவார்; சிவனடிக்கீழ் உள்ளாராவர் எனவே, பொருளுணர்ந்து கேட்போரும், பிறர்க்கு எடுத்துரைத்து அங் ஙனமாவர் என்க.

“நீலாங்க மேனியன் நேரிழையாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே” (திருமந். 77)

எனத் திருமூல நாயனர் அருளுதல் கொண்டு, இத் திருவாசகப் பாடற்பொருளும், இறைவன் திருநடனத்தியல்பே என்பது கோடும்.

திருச்சிற்றம்பலம்

முதலாவது

# கீர்த்தித் திருவகவல்

## நூல் வரலாறு

கீர்த்தி, திருவண்டப்பகுதி, போற்றி யென்னும் மூன்றகவல் களையும் நூல்வரலாறு எனக் கொண்டனம். " சிவபுராணம் உரைப் பன் " எனப் பாயிரத்துள் கூறியவர், இந்நூல் வரலாற்றுள் அவற்றை வகுக்கின்றார். சிவபுராணம் என்னும் இத் திருவாசகம், இறைவன் என்னை ஏற்ற நெறியில் ஆண்டருள் புரிந்து வஞ்சித் துப் பிரிந்தான், அங்ஙனம் அவன் பிரிதலும் யான் இருப்ப தானேன், அதனால் உண்டாயது குழைவு, அதனாற் போந்ததே இக் குழைத்த சொல்மாலை என்னும் பொருள்களையுடையதாய் இந்நூல் வரலாற்றுள் வகுக்கப்பட்டிருக்கிறது. இதனால் திருவாசகத்திற்கு அடிகள் இட்ட பெயர் சிவபுராணம், குழைத்த சொல்மாலை என் பனவேயாம் திருவாசகம் என்பது அதன் பெருமையை நோக்கி, திருவாசகப் பேறு எனக் குறித்த " தொல்லை யிரும் பிறவி " என் னும் முதலையுடைய வெண்பாவை இயற்றிய ஆசிரியரோ, அவர்க்கு முற்பட்ட சான்றோர்களோ இட்ட பெயராக இருக்கலாம்போலும். அது நிற்க. இறைவன் ஆண்டருளிப் பிரிந்து இருத்திய தும், மற்றதனால் போந்த குழைவே இப்பாமாலை வருதற்குரிய காரண மாய் இருந்ததனால், அப்பொருளைப் புலப்பட வகுக்கும் அம்மூன் றகவல்களையும் நூல் வரலாறு எனக் குறித்தாம் மேலே, திருச்சதகம் முதலாக விரிப்பர் ஈண்டு விரி என்றது, ஏனைய நூல்களுட்போலப் படிமுறையாக விரிப்பதையன்று. தமது அனுபவத்தில் நேர்ந்தன வற்றுள் அவ்வச்சமயங்களில் ஞாபகத்திற்கு வந்தவற்றை ஞாபகக் குறிப்புகள் போலவே விரித்தார் என்றுணர்க. இன்றேல் இத்திரு வாசகத்தின் பெரும்பகுதி மறைந்துளது என்க

இனி, அடிகளின் ஒழுகலாற்றிற்குரிய முதனூல் வரலாறும் ஓரளவிற்குக் கீர்த்தியுள் கூறப்பட்டுளது அம்முதனூலை மகேந் திரத்தில் தோற்றுவித்தான் என்கின்றார். அவ்வரலாற்றை மீண்டும் விரிப்புழி,

" கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புற வெய்தியும்

கேவேடர் ஆகிக் கெளிறது படுத்து

மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றஐம் முகங்க ளாற்பணித் தருளியும் ''

என விரிக்கின்றார். இவ்வரலாற்றுள் வலைவாணன் மகளாகத் தோன்றிய உமையம்மையின் பொருட்டு, இறைவன் வலைவாண ளுகி வலைவீசிக் கௌிற்றுமீனைப் பிடித்து ஆகமம் மீட்டமை பொறிக்கப்பட்டுளது. திருவிளையாடற் புராணங்கள் இவ்வரலாற் றைச் சில வேறுபாடுகள் தோன்றக் கூறுகின்றன. இனி இறை யஞர் களவியலுரையை, இறைவனுற் சபிக்கப்பட்டு மூங்கையாகப் பிறந்த உருத்திரசன்மன் எனப்படும் முருகக்கடவுள் கேட்டான் என, இன்று காணப்படும் அந்நூலுரை கூறுகின்றது இறைவன் முருகனை மூங்கையாகப் பிறக்குமாறு சாபம் விதித்தமை திரு விளையாடல்களாற் பெறப்படுகின்றது

'' நல்வேலன்தாதை எந்தரமாள்
உமையாள் கொழுநற்கு '' (திருப்பொற் சுண்ணம்-3)

என்னும் அடுக்குள் முருகக் கடவுளை நல்வேலன் என அடிகள் விதந்ததும் தான் சாபமேற்று அம் முதனுல் வருகைக்குக் காரண னுய் இருந்த நன்றியைப் போற்றிப் போலும். நிற்க, கயிலையிற் கூறப்பட்டுக் கடலுள் வீசப்பட்ட ஆகமத்திற்கும், இறையனுர் களவியலிற்கும் தொடர்பு உண்டென ஊகித்தற் கிடனுண்டு எனவே கடலுள் வீசப்பட்டுப் பின்னர் வெளிப்படுத்தப்பட்ட அவ்வாகமமே இறையனுர் களவியலாகும் எனத் துணிதற்கும் இடனுண்டு இங்ஙனமிருப்ப, திருவிளையாடல்கள் ஆகமந் தோற்றியது உத்தரகோச மங்கையில் என்றும், அடிகள் மகேந்திர மலையில் என்றும் கூறுப. களவியல் தோற்றியது மதுரையில் என்ப. இங்ஙனமும் பிறவாறும் வரலாற்றுக்கு வரலாறு வேறு பாடுகள் பலவுள. எனினும் உண்மை நாளடைவிற் புலனுகு மென்க. இவ்வாகமம் அகப்பொருள் ஆகமம் எனக் கீர்த்தியுட் காட்டினும். மேலும்,

'' நந்தம் பாடியுள் நான்மறை யோனுய்
அந்தமில் ஆரிய னுய்அமர்ந் தருளியும் ''

என்றலானே நான்மறைகளும் அவற்றின் வழிநூல்களும் புடை நூல்களும் பெறப்பட்டன. இன்னவற்றால் அடிகள் பொதுவான தத்துவக் கருத்துக்களை மேற்கொண்டு, மற்று அவற்றை அன்பின் ஐந்திணைத் தமிழ் நெறியுட் பொதிந்து பெரும்பாலும் கூறினுர் என்பது நோக்குவார்க்குப் புலனும்.

முற்கூறியவாறு ஞாபகக் குறிப்புகள் போலவே இப்பாமாலை காணப்படுதலின், இறைவன் அடிகளை ஆண்டதும் பிறவும் தெளிவாகப் புலப்படவில்லை. அடிகள் கூற்றை நோக்குமிடத்து இறைவன் தானே தன்னருளால் யாவற்றையும் செப்பிடுபவர் (செப்பிடு வித்தை செய்பவர்) போலச் செய்தான் என்பதே பெறப்படுகின்றது. எனினும் கூர்ந்து நோக்குமிடத்து, அடிகள் செவவிக்கு அயன் மால் என்போருடைய மூலமும் முடிவுமில்லா ஆராய்ச்சி நெறியே உற்ற துணையாய் இருந்ததென்பதும் புலப்படுகின்றது. இதனாலேயே அவனருளால் அவன் தாளடையும் முறையும், அன்பு மார்க்கமும் கைகூடும் என்பதனை, இத்திருவாசகம் நன்கு விளக்கிக் காட்டுகிறது நிற்க, அடிகள் இல்வாழ்வினை மேற்கொண்டு அவ் வாழ்க்கையுள் விளைந்த தவிர்க்கமுடியாத துன்பத்துட் சிக்கி, யாரும் பற்றுக்கோடின்றி இறைவனையே அடைக்கலமாக அடைந்து, அத்துன்பத்தினின்றும் நீங்கி, இல்வாழ்வின் நிலையாமை யுணர்ந்து அதனைத் துறந்து, இறைவன் ஆங்கருளிய அதுவே அடிப்படையாக எண்ணித் தாம் பயின்ற தத்துவங்கள் எல்லாவற்றிலும் அவ்வெண்ணமே பிரதிபலிப்ப, எங்கும் இறைவனையே கண்டு ஞானமுற்றினர் எனக் கூறுதல் நன்கு பயன்படுமேனும், அக்கூற்றுக்கு ஏற்ற ஆதாரங்கள் இந்நூலுட் பெறப்படவில்லை. சாஸனங்களின் துணையுமில்லை. ஆதலால் எதனையும் துணிந்து கூற முற்பட்டிலம்.

இனி, இறைவன் எல்லாரோடும் ஒப்பப் பொதுப்படத் தம்மையும் ஆண்டு பிரிந்தமையைக் கீர்த்தியுள்,

“ எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்
அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி

கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல வென்னை ஈங்கொழித் தருளி ”

எனவும், தம்மைச் சிறப்புற ஆண்டு இருந்திப் பிரிந்தமையைத் திருவண்டப்பகுதியுள்,

“ அழிதரும் ஆக்கை ஒழியச்செய்த ஒண்பொருள்

அளிதரும் ஆக்கை செய்தோன்.

ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்

ஆற்றே ருகை அவயவம் சுவைதரு .........
கோற்றேன் கொண்டு செய்தனன்
..................................................
தடக்கையின் நெல்லிக் கனிஎனக் காயினன்
..................................................
விழுங்கியும் ஒல்லகில்லேன் (ஆதலும்)
..................................................
................................ உருகுவது
உள்ளங் கொண்டோர் உருச் செய்தாங்கு எனக்கு
அள்ளூறாக்கை அமைத்தனன்
..................................................
என்னையும் இருப்பதாக்கினன் "

எனவும் கூறுவர். இத்திருவண்டப் பகுதியுள் ஊனுடலின் பற்றறுத்து, அன்புடலை உதவி அதனைப் பேரன்புடலாக வளர்த்த திறம நன்கு கூறப்பட்டுளது. பிரிவினுல் நேர்ந்த குழைவுகளைப் போற்றியுள்,

" ஆவா என்றனக் கருளாய் "
" கடையேன் அடிமை கண்டாய் "
" தொழுதகை துன்பம் துடைப்பாய் "
" நனவிலும் நாயேற் கருளினை "
[இன்று கனவிலும் அரியை]
" மற்றோர் பற்றிங் கறியேன் "
" தளர்ந்தேன் அடியேன் தமியேன்
களங்கொளக் கருத அருளாய் "
" முறையோ தரியேன் "
" அலந்தேன் நாயேன் அடியேன் "
" எந்தமை உய்யக் கொள்வாய் "

என்றாங்குக் கூறுவர்.

இத் திருவாசகப் பாக்கள் பொதுநோக்கமாகப் பார்க்குமிடத்து இரு பகுதியனவாகக் காணப்படுகின்றன ஒரு பகுதியானவை அகப்பொருள் நுதலியன. அவை திருவெம்பாவை, திருப்பொற் சுண்ணம் முதலாயின. மற்றொரு பகுதியானவை ஆண்டான் அடிமைப் பொருள் நுதலியன. அவை சதகம், நீத்தல் விண்ணப்பம் முதலாயின. இங்ஙனம் இரு பகுதியாகப் போந்தமை பற்றிச் சிறிது ஆராய்வாம்.

யாவர்க்கும் அகவாழ்க்கை புறவாழ்க்கை என இருவகையான வாழ்க்கைகள் உண்டு. அகவாழ்க்கை என்றது, யான் இன்ன குணங்களோடும் செயல்களோடும் இருப்பேன் என்றும், எனக்கு

இன்னுர் இன்னுர் சுற்றம் என்றும், பிறர் இங்ஙனம் இங்ஙனம் இருப்பார் என்றும், தான் வாழும் உலகம் இப்படி இப்படி இருக்கு மென்றும், அவ்வுலகத்தில் தனக்குரிய மதிப்பு இத்தகையது என்றும் பிறவாறும் யாவற்றையும் தத்தம் மனத்தே படைத்துக் கொண்டு ஒழுகுதல் இது கற்பனை வாழ்க்கை எனவும் படும். புறவாழ்க்கை என்றது, மனைவிமக்கள் சுற்றம் முதலானவரோடு நிர்ப்பந்தத்தால் ஒட்டிப் பழகுதல் என்க இவை மக்களுக்கு ஏற்ற பெற்றி வெவ்வேறு வகையாக அமையும் இங்கு அடிகள் இறைவனைத் தலைமகனுகவும், தம்மைத் தலைவியாகவும், ஏனைய அடியார்களை ஏனைப் பிறராகவும் எல்லாரையும் தம்மனத்தே கற்பனை செய்துகொண்டு ஒழுகியவாற்றையே திருவெம்பாவை முதலிய அகம் நுதலிய பதிகங்கள் உணர்த்தும் அடிக ளுடைய இக்கற்பனையில் தோன்றிய அகவாழ்க்கையே பின்னர் இரண்டும் ஒத்த வாழ்க்கையாகவும் புறத்தே மலர்ந்ததைத் திருக் கோவையாரினுல் உணரலாம். ஆதலால் கோவைக்கு நிமித்தமாக இத்திருவாசகப் பாக்கள் அமையும். எனவே, அவற்றையும் அக னைந்திணையுள் அடக்கினும். அன்றியும், இத்திருவாசகம் முழு வதையும் அடிகள் தலைமகளாக இருந்து தலைமகனுக இருந்த இறைவனுக்குத் தில்லையிற் கூறினுர் என்பது கொண்டும் அங்ஙனம் அடக்க அமையுமென்க. இக்கற்பனை ஒழிந்திருந்த நேரங்களில் உலகந் தோன்ற அதனுல் தாக்குண்டு அதனினின்றும் விடுபடுமாறு பாடியனவே திருச்சதகம் முதலாயினவென்க இவ்விரு பகுதி களும் அடிகட்கு அகமும் புறமுமாகவும், திருக்கோவை இரண்டு மொத்ததாகவும் அமையலாயின. அவ்விரண்டிடத்தும் இறைவனை பற்றுக்கோடாதலின், அவை மெய்ப்பொருளுடையனவாயின. எனவே, சிந்தனை வழியால் உலகை மறந்து இறைவனுடன் ஒன்றி இன்புற்றும், சிந்தனை கழிய, இறைவன் பிரிய, உலகம் தோன்ற, அதனுல் துன்புற்றும் அடிகள் ஒழுகிவரலாயினர் கீர்த்தியினும் திருவண்டப் பகுதியினும் இறைவன் ஆண்ட திறம் கிளந்தோதப் படுதலும், போற்றியுள் குழைவுகளை விதந்தோதப் படுதலும் கண்டு கொள்க.

முதலாவது

# கீர்த்தித் திருவகவல்

*நிலைமண்டில ஆசிரியப்பா*

திருச்சிற்றம்பலம்

தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயிர் எல்லாம் பயின்றனன் ஆகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோர் உலகும்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்
என்னுடை இருளை ஏறத் துரந்தும்
அடியார் உள்ளத்து அன்பு மீதூரக்
குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்
மன்னு மாமலை மகேந்திர மதனில்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்
கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புற வெய்தியும்
பஞ்சப் பள்ளியில் பால்மொழி தன்னொடும்
எஞ்சா தீண்டும் இன்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேட ராகிக் கெளிறது படுத்தும்
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றஐம் முகங்க ளாற் பணித் தருளியும்
நந்தம் பாடியில் நான்மறை யோனாய்
அந்தமில் ஆரிய னாய் அமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி
ஏறுடை ஈசன்இப் புவனியை உய்யக்

கூறுடை மங்கையும் தானும் வந்தருளிக்
குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்
தர்ப்பணம் அதனில் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்
மொக்கணி அருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டியன் தனக்குப் பரிமா விற்று
ஈண்டு கனகம் இசையப் பெருஅது
ஆண்டான் எங்கோன் அருள்வழி இருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி ஆண்டுகொண் டருளி
இந்திர ஞாலம் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநகர் இருந்து
குதிரைச் சேவகன் ஆகிய கொள்கையும்
ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையுள் இருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
பூவண மதனில் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்
திருவார் பெருந்துறைச் செல்வன் ஆகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்
பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாசம் ஆக்கிய பரிசும்

தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவகன் ஆகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனில்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்டமங் கையிற் பாங்காய் இருந்தங்கு
அட்டமா சித்தி அருளிய அதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்
மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கான் ஒருவன் ஆகிய தன்மையும்
ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலகன் ஆகிய பரிசும்
பாண்டூர் தன்னில் ஈண்ட இருந்தும்
தேவூர்த் தென்பால் திகழ்தரு தீவில்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்
தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்தஅப் பரிசும்
ஏகம் பத்தின் இயல்பாய் இருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்திற் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்
சேவகன் ஆகித் திண்சிலை ஏந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனிற் சைவ னாகியும்
துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்
கழுமல மதனில் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்

புறம்பய மதனில் அறம்பல அருளியும்
குற்றா லத்துக் குறியாய் இருந்தும்
அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்டு
இந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத்
தானே ஆகிய தயாபரன் எம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திரன் ஆகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்
மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை அருளுடை அண்ணல்
எந்தமை ஆண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை ஒருங்குடன் அறுக்கும்
ஆனந் தம்மே ஆறா அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்
மூல மாகிய மும்மல மறுக்கும்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் அடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்
ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய

தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை அருள்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்
அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை ஈங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழு தரற்றிப்
பாத மெய்தினர் பாத மெய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகஎன்று
இதஞ்சலிப் பெய்தநின் றேங்கினர் ஏங்கவும்
எழில்பெறும் இமயத் தியல்புடை அம்பொன்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடம்நவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை உயர்கிழ வோனே.

திருச்சிற்றம்பலம்.

## உரை

இத்திருப்பாடலின் திரண்ட பொருள், என்னைப் பன்முறையும் தோற்ற ஒடுக்கங்களுள் பட்டுழலச்செய்து, என்பால் குடிகொண்டிருந்த அறியாமையாகிய இருளை வெளியேற ஓட்டியும், அங்ஙனம் அரும்பாடுபட்டு என்னைச் செவ்வியுறச் செய்தும் உடன் இருந்து என் நலன் நுகர்ந்து இன்புறுவாய், ஏனைய அடியார்களுக்கு அருள் புரியும் பொருட்டு, அம்மையுந் தானுமாக இவ்வுலகிற் போந்து, களவு கற்பென்னும் இருவகைக் கைகோள்களின் வாயிலாக ஒழுகி, அவ்வனுபவங்கள் அடங்கிய முதல் நூலை மகேந்திரத்தில் இருந்து தோற்றுவித்து, அடியவர்களுக்கு அறிவுறுத்தியருளி, அவர்களுக்குப் பல்லாற்றானும் அருள் செய்கின்றவனாய், குதிரையைக் கொண்டெழுந்தருளிச் செய்த அருள்களும், பிறவாறு செய்த அருள்களும் பாண்டூரில் செறியும்படியாக இருந்தும், மேலும், தென்தேவூர் முதல் திருவாஞ்சியம் ஆதியன இறுதியாக உள்ள தலங்கள் தோறும் செய்த அருள்கள், கடம்பூரில் இடம் பெறுமாறு இருந்தும், ஈங்கோய்மலை முதலாகவுள்ள இடங்கள்தோறும் அருள் செய்தும, இங்ஙனமெல்லாம் தன் அழலுருவத் திருமேனியைக் கரந்து, அவ்வவர்க்கு ஏற்றபெற்றி அழகு வாய்ந்த உருவங்களை மேற்கொண்டு, அவர்கள் யாவரையும் தவறாது தன்னுள் அடக்கிக் கொண்ட பெருங் கருணையாளன், என்னையும் என்னுடன் இருந்த அடியார்களையும் ஆண்ட தன்மையைக் கூறுமிடத்து, நம்பால் விளங்கிய அவனது கொள்கையும் சிறப்பும் எங்ஙனமிருந்தன வென்றால், தன் பத்து உறுப்புக்களையும் காட்டிப் பொதுவகையானே நம்மெல்லோரையும் அடிமைகொண்டு, அதன்பின்பு, என்னைப் பின்பு தில்லைக்கு வாவெனக் குறிப்பால் உணர்த்தி, என்னை நீக்கி விட்டுப் பிரிந்து சென்று, என்னுடனிருந்த அடியவர்களுள்ளே ஐந்திணை யன்புடையவர்களை ஒன்றுபடுமாறு தன்னுடன் கலந்து கொண்டு, ஏனைய பெருந்திணை யன்பர்கள் பல்லாற்றானும் உடலை நீக்கிப் பாதமெய்த, கைக்கிளை யன்புடையோர் ஏங்க, இவ்வளவிற்கும் வினைமுதலாகிய கைலைமலையுடையான், புலியூர் சென்று இனிதாக வீற்றிருந்தான் என்று இங்ஙனமிருந்தனவாம் என வரும் என்றவாறு.

இங்ஙனம் தலைவனுடன் ஊடிய தலைமகளின் ஊடல் தணியுமாறு, தலைவன் இயலைப் புகழ்ந்து கூறிய வாயில்களை மறுத்து, அவன் இயலைப் பழித்துத் தலைமகள் கூறினாள் எனத் துறையுணர்க.

தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயிர் எல்லாம் பயின்றனன் ஆகி
எண் இல் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோர் உலகும்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும் 6
என்னுடை இருளை ஏறத் துரந்தும்

என்னும் இவ்வடிகளினால் தோற்ற ஒடுக்கங்களுள் வைத்து இருள் அகற்றியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை) தில்லை என்னும் பழைய ஊரிலே ஆடிய திருவடிகளினால், பலவகைப்பட்ட குணங்கள் எழுச்சி பெற, அவற்றுடன் விளங்கி, மண்ணணுக்களையும் விண்ணணுக்களையும் தேவருலகினையும் செறிந்த கல்வியுடன் தோற்றுவித்தும், ஒடுக்கியும், என்னுடைய அறியாமையை வெளியேறி ஓடும்படி செய்தும் எ - று.

(வி - ரை.) எல்லாம் தோன்றி ஒடுங்குதற்கிடமாய் முற்பட்ட தில்லை எனப் பெயர் பெற்ற ஊர் தில்லை மூதூராகும் என்க. எனவே ஏனைய வெல்லாம் புதியனவாகி விரிந்த ஊர்கள் என்க. ஈண்டு முதுமை என்றது அடிப்பாட்டை. அது தோன்ற, ஆடிய என இறந்தகாலத்தாற் கூறினர். தில்லை மூதூர் என்றாரேனும், எல்லையற்ற பாழான வெளி என்பதே கருத்தாகக் கொள்க.

தாமரை, வெள்ளம், ஆம்பல் என இறுதி வரையறுக்கப்பட்ட எண்ணிக்கைகளுள் அடங்காத பல்குணம் என்க. இறைவற்குக் குணங்கள் எட்டுள என நூல்கள் கூறுமேனும், அவற்றையெல்லாம் கூர்ந்து நோக்கும்போது அவை ஒவ்வொன்றும் பலவகைப்பட்டும், அங்ஙனம் பலவகைப்பட்டவை தாம் ஒவ்வொன்றும் மேன்மேலும் அங்ஙனமே பலவகைப்பட்டும் பலவகைப்பட்டும் செல்லுதலின் "எண்ணில் பல்குணம்" என்றனர். இது கருதியன்றே "எல்லை யிலாதன எண்குண மானவை" (திருப்படை. 7.) என மேலே கூறுவர்.

இறைவன் அங்ஙனம் விளங்கினான் எனவே எல்லாப்பொருள்களும் குணங்களுடன் விளங்கலாயின என்பது தானே பெறப்படும்.

பயிலல், இடையீடின்றிச் செய்தல். தோற்றத்திலும், ஒடுக்கத்திலும், அவற்றிடைப்பட்ட வளர்ப்பிலும் இறைவன் கூத்து ஒரேமாதிரி நிகழ்ந்து வரும் என்க. ஒடுங்கியிருந்த உயிர்க்கு அக்கூத்துப் புதியதொன்றுதல் பற்றிப் "பயின்றனனாகி" என்றனர். கூத்து இலதேல் யாதொன்றும் இல்லையாகும். உடல் ஒருவிய உயிர்கள்மாட்டும் அவன் ஊடறுத்துச் சென்று கூத்தயருவான் என்க. செவ்வி பெறாத உயிர்கள் சிறிது ஓய்வு பெறுதற்கும், அவாவினை யறுக்கப் பிறவி எடுத்தற்கும், நிலைபெறுதற்கும்,

செவ்வி பெற்ற உயிர்கள் மேலேறுதற்குமாக, இறைவன் கூத்துப் பயின்று ஊக்கி வருவான் என நூல்கள் கூறும்.

இறைவனுடைய துடியொலியினின்றும் மந்திரம் முதலாய கல்வியுடன் உடல் கருவி உலகம் முதலாய பிறவும் போந்தமையானும், அவ்வொலி ஒடுங்கியபோது அவை தாமும் ஒடுங்கிப்போதலானும் "மண்ணும் விண்ணும் வானோருலகும் துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்" என்றார். அழித்தல் – ஒடுக்குதல்.

மண்ணும் நீரும் தீயும் காற்றும் விண்ணும் என்பவற்றாலாய நிலவுலகத்தை, மண்ணும் விண்ணுமென்னும் ஈரெல்லைகளாலும் வரையறுத்தார். தோற்றத்தின் முடிந்த காரியம் மண்ணும், ஒடுக்கத்தின் முடிவு விண்ணுமாதல்பற்றி "மண்ணும் விண்ணும்" என்றவாறும்.

செவ்வி நிரம்பாத உயிர்கள் தத்தம் அவாவினை நுகர்ச்சியால் தீர்த்துக் கொள்ளற்பொருட்டு இந்நிலவுலகாற் பெறப்படும் வானவர் உலகும் வேண்டப்படுமாதலின் "வானோருலகும்" என்றனர். வானோருலகும் என்றதனால் நரகுலகுங் கொள்ளப்படும். நரகத்துட் சென்று வருந்துவது இறைவன் திருக்குறிப்பன்றாகலின் அதனைக் கூறாதே விட்டனர்.

"நாயேனைத் தினையின் பாகமும் பிரிவது
திருக்குறிப் பன்று" (திருச்சத. 37.)

என்றலும் இங்கு ஏற்றவாறுதவும்.

உள்ளத்தே வெற்றிடமின்றி அவன் நிறைந்தானாகலின் ஆங்கு இருளுக்கு இடம் இல்லையாயிற்று.

பன்முறையும் அத்தோற்ற ஒடுக்கங்களுள் வைத்து ஊசலாடச்செய்து, பொன்னைப் புடமிட்டு மாசு களைந்தாற்போல என் மாசாகிய இருள் துரந்தான். தோற்றியும் அழித்தும் துரந்தும் என்க.

துரந்தும் என்றதன் உம்மையால், என்னையும் ஒன்ற ஒன்ற உடன் கலந்துகொண்டு சென்று, என் இருள் துரந்த பயன் கொள்ளாது என்னும் எச்சம் உணரப்படும்.

என்னுடையிருள் என்றார்; அது துரத்தற்கரிதென்பது பட. அத்தகைய தொன்றனை அரிதின் முயன்று துரந்தும் என்க.

பொதுவான உயிர்களுள் ஒன்றாகிய என்னுடை இருளை நீக்கினான் எனவே, என்போன்ற பிற உயிர்களுக்கும் உய்தியுண்டாம் என்பது தானே பெறப்படும்.

இனி, இத்திருவகவற் பாட்டுக்கு அகப்பொருள் திணைபற்றியே பொருள் வகுக்கவேண்டியதாகிறது. அதனைச் சிறிது ஆராய்வாம்:

"காதலன் ஆகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்" (கீர்த்தி. 113, 114.)

என்னும் இவற்றால், இறைவனைக் காதலனாகவும், அவன் மாலையைக் காதற் கிழமைக்கு ஏலுடைத்தாகிய செங்கழுநீர் மாலையாகவும் செப்புகின்றார்.

மேலும், ஓதற்குப் பிரிந்து சென்ற தலைமகனது வருகையை

வாயில்களால் உணர்ந்த தோழி, தலைமகளை நோக்கி, நீ நல்லன என நயந்த நயப்பும், தீயன என வெறுத்த வெறுப்பும் இனி நினக்கு உள்ளனவாகா என்றலும், அதனைக் கேட்ட தலைமகள், இனி எனக்கு நல்லனவும் நல்லனவாம்; அல்லனவும் நல்லனவாம் என்னும் துறையுடையதாகிய திருப்படையாட்சியில்.

"சேலன கண்கள் அவன்திரு மேனி திளைப்பன ஆகாதே" (3)
எனவும்,

"என்னணி யார் முலை யாக மளைந்துடன் இன்புறு மாகாதே" (4)
எனவும் கூறியருளியமையால், இறைவன் தலைமகனாகவும் தாம் தலைமகளாகவும் கிழமைபூண்டு வருவது தெளியப்படும். இக்கீர்த்தித் திருவகவலினும் ஒருபடி ஏற்றமாக அவன் அணிந்த காதற் செங்கழுநீர்மாலை அவனால் என் தலையிற் சூட்டப்பட்டது என்று கூறப்பட்டது. கீர்த்திக்கண் அவன் மாலை செங்கழுநீர்மாலை எனவே கூறப்பட்டது. இவற்றை,

"இன்னியற் செங்கழு நீர் மலர் என்தலை எய்துவ தாகாதே"
எனவும், (திருப்படையாட்சி. 4.)

"காதல னாகிக் கழுநீர் மாலை..............." (கீர்த்தி. 113.)
எனவும் வருவனவற்றால் அறிந்துகொள்க.

இன்னும், திருவாசகப் பதிகங்களுக்கெல்லாம் அகத்திணைத் துறைகளையே துறைகளாகக் கொண்டு உரை வகுப்பது அடிகள் திருக்குறிப்புமாகும் என்பதற்கு, அகத்திணைத் துறைப்பொருள் அமையாதது போல வெளித்தோற்றங் காட்டும் பிரார்த்தனைப் பத்திலே,

"கூடிக்கூடி உன்னடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடிவாடி வழியற்றேன் வற்றல் மரம்போல் நிறபேனோ
ஊடிஊடி உடையாயொடு கலந்துள் ளுருகிப் பெருகிநெக்கு
ஆடிஆடி ஆனந்தம் அதுவேயாக அருள் கலந்தே" (பிரார்த்த. 11.)

என வரும் இதன்கண்ணே, அடியார்கள் தலைமகளிர்களாகவும், நீ தலைமகனாகவும் இருந்து ஊடியும் கூடியும் இன்பம் நுகர்கின்றீர்கள். யானும் தலைமகளாகிய நின்னோடு ஊடியும் கூடியும் இன்புறேனாய் வற்றல் மரம் போல் நிற்பேனோ என, அகங்குழைந்து கூறுவதொன்றே போதும். இன்னும் வேண்டுமேல் கோயில் மூத்த திருப்பதிகத்தின்கண் வரும் ஒன்பதாவது திருப்பாட்டினையும் கொள்க. இன்னும், தில்லையில் இறைவனும் அடிகளும் தலைமக்களாகவே இருந்துகொண்டு, இத்திருவாசகத்தை வெளிப்படுத்தினர்கள் என்பதனானும் அஃதுணரப்படும் என்க.

இனி, இக்கீர்த்தித் திருவகவற்குப் பின்வருமாறு விரித்துத் துறை வகுத்துக் கொள்க:

நின்னை வஞ்சித்துப் பெரும்பழி பூண்ட தலைமகன், பரத்தையரை ஊடியுங் கூடியும் இன்புற்றுவருதலைக் கண்ட யாம், அவனை இடித்துக் கூறி ஈண்டு வரச் செய்தேம். ஆதலின் அவனை வெறுக்காது ஏற்றுக்கொள்ளுவாய் என வாயில் அவனைப் புகழ்ந்து கூறியது கேட்ட தலைமகள், அவனது

மிக்க புகழ்களைக் கூறுவாள்போல அவனது பெரும்பழியை விரித்துக் கூறியது.

தலைமகளை, சிற்றம்பலம் பூவணம் தில்லை புலியூர் முதலாய தலங்களோடு ஒப்பிட்டவாறே பரத்தையையும்,

"கையுறு மான்மறி யோன்புலி யூரன்ன காரிகை"

(திருக்கோவை. 399)

என ஒப்பிட்டவாற்றான், ஈண்டுப் பரத்தையர் என்றது, அடிகள் ஒழிந்த ஏனைய ஒன்றாக் கலந்த அடியர்களை என்க.

மேலே அடியவர்களுக்குச் செய்த அருள் திறங்கள் சிலவற்றை எடுத்துக் கூறுகின்றார். அங்ஙனங் கூறினாரேனும், ஆங்காங்கு இறைவன் அருள்செய்ய வந்தமை எல்லாம் அடிகள் பொருட்டே என்பது உய்த்துணரப்படும். என்னை; இறைவன் பிரிந்து சென்றதனால் வெறுப்புற்றவள் அவன் கொடுமை கூறுதலின் என்க. தலைமகன் தலைமகளின் மனம் மகிழும்பொருட்டே, ஊரில் மலர்ச்சோலையிடத்தும, மன்றங்களிடத்தும், கடற்கரையிடத்தும் அழைத்துச்சென்று அருள் புரிந்தானாகவும், பரத்தையிற் பிரிவுபற்றி ஊடிய தலைமகள், 'அக்காலத்தே தலைவன் அவ்வவ்விடங்கட்கெல்லாம் என்னைக் கொண்டு சென்றது என்பொருட்டாமோ? என்னை மகிழ்விப்பான்போல நடித்து, ஆங்காங்கே பரத்தையர்க்குக் கண்ணருள் செய்தற்பொருட்டன்றோ' எனப் புலப்படக் கூறுதல் கொண்டு அஃதுணரப்படும். இறைவன் உத்தரகோசமங்கை, மதுரை, வாதவூர் முதலியனவாக ஈண்டுக் குறிக்கப்பட்ட தலங்கள்தோறும் எழுந்தருளி அருள் செய்ததும் அறிவுறுத்தியதும் ஆதியன தம்பொருட்டேயாகவும், அவையெல்லாம் என்பொருட்டாகவாமோ? அடியவர் பொருட்டாகவா மன்றோ என, அவ்வவ்விடங்கள்தோறும் தமக்கருளியதை மறைத்து, பண்டு ஆங்காங்கே அடியவர்கட்குச் செய்த அருள் திறங்களையே வெளிப்படுத்திக் கூறியருளிய திறன் சுவைநனி பயப்பதாகும். இங்ஙனம் தமக்குச் செய்த அருளை மறைத்துப் பழியொன்றனையே கூறியருளிய இத்திருப்பாட்டு, கீர்த்தித் திருவகவல் என்னும் பெயர் பெற்றமையின், புகழ்வதுபோலப் பெரும்பழி கூறியதாம் என்க.

இவற்றால், என்னைத் தோற்ற ஒடுக்கங்களுட் பட்டுழலச் செய்தான்; அடியவர்களை அவற்றின் நீங்கி இன்புறச் செய்தான் இறைவன் என்பதுவே அடிகள் கூறிய பொருள் என்றுணர்க.

இனி, இப்பாட்டு, தோற்றியும் அழித்தும் துரந்தும் (துரந்த பயன் பெறுவாய்) எவ்வெவரையும் அவ்வப் பரிசுகளால் ஆண்டுகொண்டு என்னை யீங்கொழித்துப் புலியூர் புக்கனன் என மேலியைந்து முடியும்.

அடியார் உள்ளத்து அன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும் 8

என்னும் இவ்வடிகளினால் எந்தமை யாண்ட பரிசு, கொள்கையும் சிறப்பும் என்னும் இரண்டனுள் அடங்கும் எனத் தொகுக்கின்றார்.

(பொ - ரை) அடியவர் உள்ளத்துப் பெருகும் அன்பானது (தன்னை யகப்படுத்தி) மேலெழுந்து பாய, (அந்த அன்பு கிடந்த அவர்தம் உள்ளத்தை) உறைவிடமாகக் கொண்ட உறுதிப்பாடும் தலைமைப்பாடும் எ - று.

(வி - ரை) அடியவர் உள்ளத்தின் அன்பு சுருங்குதலும் இன்றி, ஒரே பெற்றியதாய் இருத்தலும் இன்றி, மேலும் மேலும் பெருகிக்கொண்டே வருதலின் பெருகும் என்றும், அப்பெருக்கு அவன் உள்ளத்தே கிடத்தலி னல் உண்டாகி, அவன் அப்பெருக்குள் மூழ்கி மறைந்துபோமாறும், வெளியேருவாறும் மேலெழுந்து பெருகுதலின் தன்னையகப்படுத்தி என்றும், அவன் கிடந்தது அவ்வடியவர் அன்பு மண்டிய உள்ளத்தே யாகலின், அந்த அன்பு கிடந்த அவர்தம் உள்ளத்தை என்றும் விரித்தாம்.

கொள்கையும் சிறப்பும் எனத் தொகுத்தார்; அவை தம்பால் வஞ்ச முடையன என்பதறிவித்தற்கு. கொள்கையும் சிறப்பும் எங்ஙனமிருந்தன வெனில் என விரிக்க. எந்தமை யாண்ட பரிசது பகரின் (103), கொள் கையும சிறப்பும் (எங்ஙனமிருந்தன வெனில்) என, இவை இயல்பின் வழாது மேலியைந்து முடியுமாறு ஆண்டுக் காண்க.

இனி, தம்மையொழித்து அடியார் உள்ளத்து அன்புமீதூரக் குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும் எங்ஙனமிருந்தன வென்ருல் எனக் கொள்ளலும் மிகப் பொருந்தும். அடியார்க்கே பெரிதும் அருள் செய்தானுகலின், அடியாருள்ளத் தன்புமீதூரக் குடியாக்கொண்ட கொள் கையும் சிறப்பும் எனப் பெயரிட்டழைத்தனர் என அதற்கு உரை செய்க.

**மன்னும் மாமலை மகேந்திரம் அதனில்**
**சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்**

என்னுமிவ்வடிகளினல், ஆகமநூல் தோற்றுவித்தருளியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை) நிலைபெற்ற பெரிய மகேந்திர மலைக்கண்ணே உமையம்மைக்குச் சொன்ன ஆகமத்தைத் தோற்றுவித்தருளியும் எ - று.

(வி - ரை.) ஈண்டு ஆகமந் தோற்றுவித்தான் என முகஞ் செய்தனர்; இதனை மேல் இருபதாம் அடி முடிய விரித்துக் கூறுவர்.

மகேந்திரம் என்பது, பொதியமலைக்குத் தெறகே உள்ளதென வான்மீகம், கம்ப ராமாயணம், சிவதருமோத்திரம் முதலாய நூல்கள் கூறுகின்றன. அது கன்னியாகுமரியை அடுத்துப் பரந்திருந்தது; அதன பெரும் பகுதி அழிவெய்த எஞ்சிய பகுதி சிறு குன்றுப் பிரதேசமாக மகேந்திரம் என்னும் பெயருடனேயே இன்றும் நிலவி வருகின்றது; ஆங்கே சுசீந்திரம் என்னும் திருக்கோயிலும் ஒன்றுளது. இனி, மகேந்திரம் என்பது, கஞ்ச நாட்டிலே பிருகாம்பூருக்குத் தென்மேறகில் முப்பத்திரண்டு நாழிகை கழித்துள்ளது என்று சாதிப்பாருமுளர்.

என்றது முதல்நூல் என்னும் ராண்டு அஃது அகப்பொருள் நூல் எனக. அங்ஙனமாதல் மேற் கூறப்படும்.

இறைவன் கைலையங்கிரியில் உமையம்மைக்கு ஆகமம் சொல்ல, அவள் கருத்தூன்றிக் கேளாமை கண்டு, "வலைஞன் மகளாகப் பிறக்குதி" எனச் சாபம் விதிக்க, அதனால் ஐங்கரனும் அறுமுகனும் வெகுண்டு, முறையே அவ்வாகமத்தைக் கடலுள் வீசியும், கிழித்துச் சிதைத்தும் விட்டனராக, அவ்விறைவன் அறுமுகனை "ஊமைப்பிள்ளையாக நிலவுலகிற் பிறக்குதி" என்றும், அவர்களை உட்புகவிட்ட நந்தியைச் "சுறவாகி அவ்வாகமத்தைச் சுமந்து கடலுள் உலாவுதி" என்றும் சபித்து, விடுதலையுங் கூறி, பின்னர்த் தான் வலைஞர் குமாரனாகத் தோன்றிச் சுறவுக்கு விடுதலையருளி, அது சுமந்த ஆகமத்தை மீட்டு, உமையம்மையாகும் வலைஞர்குமாரியை மணந்து, மீட்ட ஆகமத்தை உத்தரகோசமங்கையில் உபதேசித்தனன் என ஆகமம் சொன்னதும் மீட்டதுமாகிய வரலாற்றை, நம்பி திருவிளையாடற்புராணங் கூறுகின்றது. இஃதிங்ஙனமாக அடிகள், சுறவைக் கெளிறு மீன் என்றும், ஆகமம் மீட்டுக் கூறியது மகேந்திரத்தில் என்றும், பிறவாறும் வேறுபட உரைப்பர். அடிகள் காலத்தால் தொன்மையுடையவராதலின், அவர் குறிப்பிட்ட வரலாறுகள் அறிதற்கரியனவாக இருக்கின்றன.

இனி, கொள்கையும் சிறப்பும் சொன்ன ஆகமம் என இயைத்துப் பொருள் கூறுதலும் பொருத்தமானதே.

கல்லா டத்துக் கலந்துஇனி தருளி
நல்லா ளோடு நயப்புறவு எய்தியும்
பஞ்சப் பள்ளியில் பால்மொழி தன்னொடும்
எஞ்சாது ஈண்டும் இன்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேடர் ஆகிக் கெளிறது படுத்தும்
மாஏட்ட ஆகிய ஆகமம் வாங்கியும்
மற்று அவை தம்மை மகேந்திரத்து இருந்து
உற்ற ஐம் முகங்க ளால் பணித்து அருளியும்

என்னுமிவ்வடிகளால், மேல் தொகுத்துக் கூறிய ஆகம வரலாற்றை விரித்துக் கூறுகின்றார்

(பொ - ரை) கல்லாடம் என்னும் இடத்தில் நல்லாளாகிய உமையவளோடும் கலந்து, இன்பமுண்டாகச் செய்து, விருப்பு உறவாடுதல் எய்தியும், பஞ்சப் பள்ளியிலே பால்போல இன்மொழி பேசுவாளோடும் குறையாது நிறையும் இன்னருளை விளைத்தும்,

வேட்டுவ வடிவத்துடன் கூடிய முருக்க மலர் போன்ற வாயினை யுடையாளது இடையீடின்றிச் சேர்ந்த முலைகளாகிய நன்மை பொருந்திய குளத்திலே படிந்து மூழ்கியும், வலைவாணருள் தானும் ஒருவனாகி நந்தியாகிய கெளிற்றுமீனை அகப்படுத்தியும், பெருமை பொருந்திய ஏட்டிடத்தனவாகிய ஆகமங்களைப் பெற்றுக்கொண்டும், அவற்றை அம்மகேந்திர மலைக்கண் சென்று பொருத்தமான ஐந்திறங்களால் சொல்லியருளியும் எ - று.

(வி - ரை.) நல்லாளும் பால்மொழியும் கிஞ்சுக வாயளும் என்றுணர்த் தப்பட்டவள் வலைவாணறகு மகளாகத் தோன்றிய உமையவளேயாவள் என்க.

அவளைக் கல்லாடத்துப் பஞ்சப்பள்ளியில் களவிற் கலந்துறவாடியும், அருள் விளைத்தும், கொஙகை நறறடம் படிந்தும், குல வொழுக்கப்படி கெளிறறுமீனை அகப்படுத்தியும், கறபின்வழி அவளை வதுவை செய்து மென்க , கெளிறுபடுத்து ஆகமம் வாங்கியுமென்க.

அக்களவு கறபென்னும் இருவகைக கைகோள்களின் இலக்கணம் ஆகிய ஆகமங்களை, குறிஞ்சி பாலை முல்லை நெய்தல் மருதம் என்னும் ஐந்து திறங்களிலும் வைத்துக் காட்டியருளியும் என்க. முகம் என்ற தறகு 'ஆயிரம முகத்தான் அகன்ற தாயினும்' என்புழிப்போலப் பொருள் கொள்க.

வேட்டுவ மகளுடன் கலந்தினிதருளி நயப்புற வெய்தியும், இன்னருள் விளைத்தும், கொங்கை நற்றடம படிந்தும் விளையாடிய பின்னரே கெளிறறு மீனைப் படுத்தது கூறப்படுதலானும் அக் கெளிறறுமீனை அகப்படுத்திய பின்புதான் வதுவை நிகழ வேண்டியது முறையாதலானும், கெளிறு படுத்தற்கு முற்பட்ட நிகழ்ச்சிகள் யாவும் களவின்பாற படடனவெனறும், கற்பினவழி வந்தனவறறை ஏற்ப விரித்தும், இன்றியமையாதனவறறை எச்சங்களாகக் கொண்டும் உரைத்தாமென்க.

கல்லாடம் ஓரிடம். அஃதியாண்டுளது என்பது புலப்படவில்லை. எங்ஙனமாயினும், வலைவாணன் மகளாகிய உமையவட்கும், வலைஞகுமார ஞகிய இறைவனுக்கும் தெய்வப் புணர்சசி நடந்த இடம என்றே அதனைக் கொள்ளுதல் தக்கது. கல்லாடத்திலே, பஞ்சப்பள்ளியிலே நலலா ளோடும், பால்மொழியோடும் கலநதருளி நயப்புற வெய்தியும், இன்னருள் விளைத்தும், மற்றதன்மேல் கெளிறுபடுத்து வதுவை செய்தும எனக் கொள்க.

பஞ்சப்பள்ளி, அன்னத்தூவி, பூ, இலவம்பஞ்சு, கோரை, மயிர் என்னும் இவற்றுலாகிய ஐவகைப் படுக்கை. அழகு, தண்மை, மென்மை, நறுமணம், வெண்மை என்னும ஐவகைத் தன்மை கொண்டதொரு படுக் கையுமாம். பள்ளி - சயனம். அது தோழியிஞல், தலைமகள் ஆடிக் களைத்தபோது ஆறுதல் பெறுதற்கென அமைக்கப் பெற்றதென்க. அதனை ஓரிடமாக உரைப்பாருமுளர்.

முன்னர்ப் பிரிந்தானாகலின் அக்குறைவு நீங்கக் கலந்தும், பிரிவின் கண் இன்னானாகித் துன்புறுத்தியமையின் அது தீர இனிதருளியும், கடிந்தொதுக்கினானாகலின் அது தீர விருமபி முறைகூறி நயந்தும, எல் லாம் வல்லவனாகலின அவள் நயப்புறுமாறு எய்தியும, "அவளைப் புணராத முன்னிருந்த வேட்கை புணரச்சிக்கண் குறைவுபடும்; அக்குறைவுபாட் டைக் கூட்டத்தின்கண் தம்மிறபெறற குணங்களினானய அன்புநிறைக் கும்" (திருக்கோவை. 9. உரை) என்பவாகலின அங்ஙனமே இன் னருள் விளைத்தும் ஒழுகினான் இறைவன் என்க.

வலைஞனாகிய தன் கோலத்திற்கு எவ்வாற்றானும் ஒத்தவள் ஆதலின், "நல்லாள்" என்றும், நயப்புற வெய்தலால் அவளும் கரவற்று உரையாடி னாள் ஆதலின் "பால்மொழி" என்றும் கூறினார். சிவனவன் எனாருங்குக் கிஞ்சுக வாயவள் என நின்றது.

கிராத வேடம் - வேட்டுவ வடிவம். ாண்டு வலைஞ குமாரனாகிய இறை வன், தலைவியாகிய வலைவாணன் மகளாகும் இறைவியின் காதல் தோழியை மதியுடம்படுத்தற்கு மேற்கொண்டு சென்ற வேட்டையாளன் வடிவத்தை உணர்த்திறறு. முன்னர, கலந்தினிதருளி நயப்புற வெய்தி யும், இனனருள் விளைத்தும் என்றவற்றால் தெய்வப் புணர்ச்சியும, இடந் தலைப்பாடும நிகழ்ந்து முடிந்தன. மறறிவற்றினமேல், தலைவியை நிலை யாகப் புணர எண்ணி, அதறகு அவள் காதல் தோழியை வயப்படுத்தலே முறையாம் எனத் துணிந்து, முன தலைவியை ஆயத்துய்த்து நின்ற போது, நெருங்கிய தொடர்பு காரணமாக இவளே இவள் காதல் தோழியா வள் என்பதுணர்ந்தவன், அவ்விருவரும் நின்ற பொழிறகண், வேடட மேல் வந்தான் போலச் சென்று, வேழமும கலையும் வழியும பதியும் பெய ரும் பிறவும வினாவி, குறைவேண்டி நிற்ப, தோழியானவள, அவ்விருவர் ஒழுகலாறறினையும், தலையாய அன்பினையும் பல்லாற்றானும நாடி உண்மையுணர்ந்து, இறைவன் இறைவியை வதுவையிற கொளளாளும் பெருங்காதலுடையன் எனத் துணிநதபின்னர், தலைமகள்பாற் சென்று குறை நயப்பித்து, அவ்விருவரையும பகற்குறிக் கண்ணும் இரவுக்குறிக் கண்ணும் புணர்விக்க, அப்புணர்ச்சி யின்பத்தைத் தந்த கொங்கைகளிலே இறைவன் படிவானாயினான் என்பது கிராதவேடம் என்பதனாற் பெறப் பட்டது. கொங்கைத்தடம், கொங்கைகளின் ஊறறறியாற் பெருகிய இன்பவெள்ளமாகிய தடம். கொங்கை ஆகுபெயர். கூட்டம் நிறை வேறியபின் கொங்கைகளிலே முகம்வைத்துறங்குதல் மரபாகலின்

"கொங்கைத் தடம்படிந்தும்"

என்றனர்.

"தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு" (குறள். 111-3.)

என்பது குறள்.

கேவேடர் - வலைஞர். கேவர்த்த என்பது கேவேடர் என மருவி வட சொல்லாயது. கேவேடராகி, கேவேடருள் தானும் ஒருவனாகி, கேவேடர்

என்றது ஈண்டு, கௌிறு படுத்து வலைவாணன் மகளை வேட்டற் பொருட் டுத் தொக்கு நின்ற வலைஞ குமாரரை. அவருள் தானும் ஒருவனாகி என்க.

இறைவன் வலைஞ குமாரர்களுள் ஒருவனாகி, தலைவியைக் களவிற் புணர்ந்து, மற்றதன்மேல் வதுவைசெய்து, அவளோடும் கூடியிருத்தற் பொருட்டு, குலவொழுக்கப்படி கௌிறு படுத்தது, இறுதிப் பயனாகிய ஆகமம் மீட்டதிற்போய் முடிந்தமையின், " கேவேடராகி .....கல்லாடத் துப் பஞ்சப் பள்ளியில்......நற்றடம் படிந்தும்......ஆகமம் வாங்கியும் பணித்தருளியும் " என்றார் எனக் கொள்க. இனி, இங்ஙனம் கற்பொழுக் கம் நிகழுமுன் களவொழுக்கமும் நிகழும் என்பதனை முல்லைக்கலி 104-105-ஆம் பாடல்களுள் கொல்லேறு தழுவித் தலைவன் தலைவியை வதுவையிற கொள்ளுமுன்பே களவிற் கூடியமை பெறப்படுதலானு முணர்க.

கௌிறுபடுத்து ஆகமம் வாங்கியும், அம்மையை மணந்து பணித் தருளியும் என்க. வலைஞன் மகளாகிய அம்மையை மணந்தது எஞ்சி நின்றதென்க.

ஐமுகம் - ஐந்துவகை. அவை குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐந்திணைகளாம். இவ்வைந்திணை ஒழுகலாற்றினை அம்மையுடன் கூடிக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியச் செய்து, மற்றவற்றை மீட்ட ஆகமங்களிலே காட்டி, பொருளும் சொல்லும் ஒப்ப விளக்கி உளங்கொளச் செய்தான் என்க. அங்ஙனமின்றேல் அகப் பொருள் விளக்கமுறாதென்க.

கயிலையங்கிரியிலே அகப்பொருள் இலக்கணத்திலே கருத்தான்று திருந்தவளுக்கு, அது கருத்துள் பதிவதோர் உபாயத்தை நாடி, அவளைச் சபிப்பான்போல நடித்து மண்ணிற் பிறக்கவைத்து, பராமுகஞ் செய்யப் பட்ட ஆகமங்களையும் கடலுள் வீசச்செய்து, அவளுடன் தானும் அவளுக் குத் தலைவனாகச் சென்று, களவினும் கற்பினும் பயின்றும், அவளைப் பயில் வித்தும், மற்றவற்றின்மேல், அவளுக்கு ஆகமங்களின் பொருளை அறி வுறுத்தினான் எனறபடி. அவ்விருவரும் இங்ஙனம் இல்லறக் கிழமை முதலிற பூண்டும், ஆகமங்களை அறிவுத்தியும் வருதலின், அவர்கள் பிரதம கிருகஸ்தனும் பிரதம கிருகணியுமாவர் எனச் சிவபுராணம் முதலாயின கூறும். இன்னும்,

" தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகநதான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ " (திருச்சாழல். 9.)

என அடிகள் கூறுவதும் அதனை வலியுறுத்தும்.

இங்ஙனமே பல்வகைத் தொழிலாளர், கொள்ளைக்காரர், நல்லோர் முதலாய பலருள்ளும் சென்று, அவ்வவர்க்கெல்லாம் தலைவனாக இறைவன் நின்று வருகின்றான் என உருத்திரம் முதலாயின கூறும்.

இசையவே இழிந்த குலத் தலைமக்களாகி உலகமுய்ய ஆகம நூற்பொருளைப் பயின்று காட்டி நூலையும் அறியச்செய்தனர் என்க.

மகேந்திரத்தில் மீன் வேடனாக இருந்து அன்னைக்கு ஆகமங் கூறினான் என்க.

"வேடுரு வாகி மகேந்திரத்து மிகுகுறை வானவர் வந்து தன்னைத்
தேட இருந்த சிவபெருமான்" (திருவார்த். 4.)

என்பதுங் காண்க. இங்ஙனமாதலின், ஐந்து திருமுகங்களோடிருந்து வடமொழி ஆகமம் பணித்தான் என்பது பொருந்தாது. அஃது ஒருவாற்றாற் பட்ட காலையும், அவ்வாகமம் பணித்தது ஐந்தாம் முகமாகிய ஈசான முகத்தானன்றே? ஆதலின், வடமொழி யாகமம் பணித்தான் என்றல் ஈண்டு முற்றிலும் பொருத்தமற்றதாகும் என்னை? ஐந்தாம் முகத்தாற் பணித்தான் என்னாது, ஐம்முகங்களாற் பணித்தான் என்றே காணப்படலின் என்க. இன்னும், அவ்வாகமத்தை ஐம்முகங்களால் மகேந்திரத்தில் பணித்தான் என்றதோடு, ஆங்கு அவன் வேடுவனாகவும் இருந்தான் எனவும் வருதலை உற்று நோக்கின், வேடுவனாக அவன் ஆங்கிருந்தமையால், மிகுகுறைகளையுடைய வானவர்கள் அவனைக் காணாராய வருந்தினர் என்பதும், அவ்வருத்தந் தீர அவர்க்கும் ஆகமங்களை அறிவுறுத்தினான் என்பதும் போதரும். ஆதலின் வேடுவன் மகேந்திரத்துச் சொல்லிய ஆகமமும் வடமொழி ஆகமமும் வேறுவேறெனவே படும். எனவே, அதனைத் தமிழ் அகப்பொருள்நூல் எனவே கொண்டாம் என்க.

"துணையி லாமையில் தூங்கிருட் பேய்களோடு
அணைய லாவது எமக்கரி தேயெனா
இணையி லாஇடை மாமரு தில் எழு
பணையில் ஆகமம் சொல்லுந்தன் பாங்கிக்கே."

"மண்ணை யுண்டமால் காணான்ம லாடி
விண்ணை விண்டயன் காணான்வி யன்முடி
பெண்ணைமா மருதா வென்றென் மொயகுழல்
பண்ணை யாயமும் தானும் பயிலுமே"

"மங்கை காணக் கொடார்மண மாலையைக்
கங்கை காணக் கொடார் முடிக் கண்ணியை
நங்கை மீர் இடை மருதரிந் நங்கைக்கே
எங்கு வாங்கிக் கொடுத்தார் இதழியே"

(ஐந்தாம் திருமுறை. திருவிடைமருதூர். திருக்குறுந்தொகை. 4-6) என்னும் இம்மூன்று தேவாரத் திருப்பாடல்களுமே அகப்பொருள் நுதலி வந்தன.

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் மீண்டு வருவதற்குள், ஊரவர் வேற்றுமணம் பேசி வருதலையறிந்த தலைமகள் ஆற்றாளாகித் தன் ஆற்றாமை வாயிலாகப் பாங்கிக்கு அறத்தொடு நிற்ப, அப்பாங்கியும் செவிலியையடைந்து, அக்காலத்தில் இடைமருதீசனார், தமது மணமாலையையும் முடிக்கண்ணியையும் என் தோழிக்குச் சூட்ட அவளும்

அறியாளாகி அவற்றை உவந்தேற்றுக்கொண்டாள். அது முதலாக அவனையே தன் காதலனாகக் கருதிக் கற்பொழுக்கம் பூண்டு வருவாளாயினாள். நீங்கள் அதனை அறியாது இப்போது வேற்று மணம் பேசிவருதலை அறிந்து உயிர்நீக்க அவள் துணிந்திருத்தலை யான் அறிந்து, அரிதின் முயன்று அவளை ஆற்றியிருக்குமாறு வற்புறுத்தித் தீது நிகழாவாறு காத்தேன் என, செவிலியும் அங்ஙனமே நற்றாய்க்கும், அவளும் தந்தை முதலாயினோருக்கும் அங்ஙனமே அறிவிக்க, அவர்களும் தலைவி கற்பின் மேம்பாட்டை அறிந்து வேற்றுமணம் விலக்கி, அவள் விழைந்தவாறே மணமயர்தற்கு உடன்பட்டனர் என்பதை அறிந்த தலைமகள் "என் பெற்றோர்கள் என் விருப்பப்படி என்னை மணஞ் செய்யவிட்டிலரேல், அம்மிக்க இருளிலே பேய்களையே துணையாகக் கொண்டு அவரை அணுகுவதாகிய பெருந்திணை ஒழுக்கம் மேறகொள்வது எமக்கு அரிய தொன்றாகுமாதலின், யான் அவமே உயிர் நீத்து மறுமையில் அவரை எய்த நேரிடும். அங்ஙனம் ஒன்றும் நிகழாவாறு என் பெற்றோர் யான் விரும்பியவாறே அன்பின் ஐந்திணை ஒழுகலாற்றுள் என்னை ஒழுகி வருமாறு ஆகூழ் முன்னிற்ப எனக்குறுதுணையாக நின்றனர் எனச் சொல்லுவாள்" என்று அதனை உற்றறிந்த செவிலி கூறினாள் என்பது, முதலாவது திருப்பாட்டின் திரண்ட பொருளாகும்.

மண் முழுவதையும் உண்ட திருமாலும், அங்ஙனம் செய்தும் நின் திருவடி காணான். விண்ணை விண்டுசென்ற அயனும் நின் திருமுடி காணான். அங்ஙனம அவர்க்கு நீ அரியவனாக இருநதும், எனக்கு எளியையாக வந்தனை என, என் மகள் தன் விளையாட்டிற்குரிய ஆயத்தாரோடும் பயில்கின்றாள் என, அப்பயிற்சியை உற்றறிந்த செவிலி கூறினாள் என்பது, இரண்டாவது திருப்பாடலின் திரண்ட பொருளாகும்.

என் மகள் தன் பாங்கிக்கு அங்ஙனம் ஆகமஞ் சொன்னதையும், அவள் ஆயத்தாருடன் அங்ஙனம் பயில்வதையும் உற்றறிந்தமையால் எழுந்த பேருவகையால், செவிலி ஆயத்தாரை நோக்கி, இடைமருதீசனார் தம்மிடப் பாகத்தில் நீங்காது நிலைத்திருக்கும் உமைப்பிராட்டி, அவன் அணிந்த மணமாலையைத் தனக்குரியதெனக் கொண்டு எப்போதும் காத்து வருகின்றாளாதலின், அவள் காணாதவாறேனும், காணும்படியேனும், அம்மாலையைக் கொடுத்தற்கியலாமையின், அவர் இவளுக்கு அதனைக் கொடுத்திருக்கமாட்டார் அங்ஙனமே முடிக்கண்ணியைத் தனக்கெனக் காத்திருக்கும், முடிமீதுறையும் கங்கை காணாதவாறேனும், காணும்படியேனும் அதனை இவளுக்குக் கொடுத்திருக்கமாட்டார். ஆதலால், அம்மாலையையும் கண்ணியையும் அவர் கொடுத்தார் என்பதும், இவள் பெற்றாள் என்பதும் முழுப்பொய்யாகும் என்னும் பொருள் தோன்ற வினவு முகத்தால், தான்பெற்ற பேருவகையை அவர்களுக்கு, அவர்கள் பெற்ற பேருவகையைத் தனக்குமாகப் பங்குபற்றிப் பெறும் பேருவகையிலாழ்ந்தார் என்பது மூன்றுவது திருப்பாடற் பொருளாகும்.

இம்மூன்று திருப்பாக்களும் இங்ஙனமாக அகத்திணைத்துறைப் பொருள்களையே நுதலிவருதலானும், பேய்களைத் துணையாகக் கொண்டு தூங்கிருட்கண் அவனை அணைவது எமக்கு அரிதெனத் தலைமகள் கூறுதலானும் அத்துறைப் பொருளைத் தன் பாங்கிக்குச் சொல்லுவதை ஆகமம் சொல்லும் எனக் கிளந்தருளியமையானும், வடமொழிக்கண் அகத்திணை நுதலிவருவதோர் ஆகமமும் காணப்படாமையானும், தென்தமிழ்க் கண்ணே அங்ஙனம் கேட்கப்பட்டு வருதலானும், ஆகமம் என்பது நூல் எனப் பொதுவாகப் பொருள்படுமேனும், ஈண்டு அகத்திணை இலக்கணத்தையே குறிக்கும என்பது பெற்றும். எழுபணையில் ஆகமம் - ஏழுவகையாகித் தவறுதல் இல்லாத ஆகமம். கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுதியாக ஏழாதல் தவறுபட்டதாம் என்க. எனவே, தவறுதலுக்குரிய கைக்கிளையும் பெருந்திணையும் இல்லாத ஆகமம்—அஃது அன்பின் ஐந்திணை நெறியாம என்க. ஈண்டு ஆகமம் என்பது ஐந்திணை ஒழுகலாற்றிற்கு ஆகுபெயராயிற்று. பணை - தவறுதல்.

இனி, அகப்பொருள் நுதலிவரும் திருக்கோவையாரும் அதனைப் போன்ற இலக்கியங்களும், பாக்களும் பேரின்பத் தோத்திரங்களாம். இது கருதியே சுந்தரமூர்த்திசுவாமிகளும்,

"அரஒலி ஆகமங்கள் அறிவார் அறிதோத்திரங்கள்
விரவிய வேதஒலி விண்ணெலாம் வந்தெதிர்ந்திசைப்ப"

(திருநொடித்தான்மலை, 8.)

என, அகத்திணை நுதலிய இலக்கியங்களை ஆகமங்கள் அறிவார் அறிதோத்திரங்கள் என்றார்.

[ஈண்டு ஆகமங்கள் என்றது தமிழ் அகத்திலக்கணத்தை—ஐந்திறங்கள் அடங்கிய ஆகமத்தை. அவற்றை அறிவார் தமிழ்நெறிப் பண்பில் அறிவு மிக்கோராவர்; அந்நெறி கைவரப்பெற்ற அறிவால் என்க. அவர் செய்த தோத்திரங்கள், களவும் கற்புமாகக் கிளந்து கூறும பேரின்ப இலக்கியத் தோத்திரங்களாகும் என்க.]

இனி, மாவேட்டாகிய ஆகமம் வாங்கியும் என்பதனை மாவேட்டு ஆகிய ஆகமம் வாங்கியும் எனக்கொண்டு, அக்கெளிற்று மீன்வேடுத் தொழிலால் ஆகிய அவ்வேட்டுவக் குமாரியை மணம்புரிய பெற்றமையோடு, முன்கடலுள் வீசிய ஆகமங்களையும் பெற்றும் எனப் பொருள் கொள்ளலாமேனும், அது கெளிறது படுத்தும் என்பதனால் தானே பெறப் படுதலின் அவ்வுரை கொண்டிலம்.

இனி, இங்ஙனம் ஐந்திறங்களால் செய்யப்பட்ட ஆகமம் யாதென்று புராண வரலாறுகளைக் கொண்டு நோக்கும்வழி, அஃது இறையனார் களவியல் என்றே பெறப்படும். இஃது ஆராய்ந்து கொள்ளற்குரியது. இனி,

"இந்திரத்தை இனிதாக ஈந்தார் போலும்"

(ஆறாந்திரு திருவாரூர், தாண்டகம். 8.)

என அப்பர் சுவாமிகள் கூறும் இந்திரம் என்பதும, இவ்வாகமத்தையே

குறிக்கும் என்பது துணிபு. எனவே, அவ்வைந்திற ஆகமத்தின் பெயர் இந்திரம என்றே கொள்வாம்.

நந்தம் பாடியில் நான்மறை யோனாய்
அந்தம் இல் ஆரிய னாய்அமர்ந் தருளியும் 22

என்னுமிவ்வடிகளினால், முன்னர் வேடுவனாகித் தமிழ்நூல் தோற்றுவித்துப் பணித்தருளியமை கூறியவர், பின்னர் அதனையே நான்மறையாரியனாகிப் பணித்தமை கூறுகின்றார்.

(பொ - ரை ) நந்தம்பாடி என்னுமிடத்திலே, நான்கு வகைப் பட்ட வேதங்களையும் உணர்ந்தவனாய், அவற்றை அறிவுறுத்தற் குரிய ஈறில்லாத ஆசானாக அமர்ந்தருளியும் எ - று.

(வி - ரை ) அமர்ந்தருளி, செவ்வியுடையாரைப் பயில்வித்தான் என எச்சமுரைக்க.

இனி, கல்லாடம் முதலாக மகேந்திரம் இறுதியாக வேட்டுவக் கோலத் தோடு இருந்தமையால், இப்போது நான்மறை ஆரியனாகி அத்தமிழ் ஆகமங்களையே அருளிச் செய்தான் என்றலே நன்கு பொருந்துவதாம் என்க. அன்றியும், அந்தணனாகி வந்து தமிழ் ஆகமத்தை அடிகளுக்கும் உணர்த்திய தொன்றே அதனை வலியுறுத்தும்.

நான்மறையோன் என்றமையால், இருக்கு முதலாய வேதங்களையும், தமிழ் ஆகமங்களையும் அடியவர்களுக்கு ஆங்காங்கே உரைத்துவருவோன் என்க. இன்னுமிதனால், நானமறைகளையே இங்கு அறிவறுத்தினான் எனினும் பொருந்துமேனும், தமிழ்மறையை அநதணனாகிப் பணித் தருளாத குறைபாடு நீங்க அங்ஙனமுரைத்தாம்.

அது நிறக, ஆரிய திராவிட வேறுபாட்டினை ஈண்டுப் புகுத்தி மலையறக. ஆரியமும் செந்தமிழும் பரதகண்டத்தில் பொதுவும் சிறப்பு மாகிய இருபெரு மூல மொழிகளாகும். தெய்வமொழி என வடமொழியைக் கூறுவது அபபொதுமை பறறியேயாம். ஆதலின் அஃது எல்லார்க்குமுரிய மொழி என்பது சொல்லாதே யமையும். ஊர்க்குள் ஒருவர்க்குரியதாகாது பொதுப்பட இருக்கும் நிலத்தை முடிக்குரிய நிலம் என்பர். அதுபோலவே வடமொழியும ஒருசாரார்க்கு மட்டும் உரியதாகாது எலலார்க்குமுரியதாய் அமைந்ததொரு பொதுமொழியாயினமையின், அது தெய்வமொழி எனப் பட்டது. சில காலங்களுக்குமுன், ஐரோப்பாக் கண்டத்து மொழிகளை யெல்லாம் சேர்த்து எஸ்பராண்டம் எனப் பெயற் பெறற வொரு பொது மொழியை (அமமொழி இன்று வழக்கற்றது ) உண்டாக்கியதுபோலப் பல காலங்களுக்கு முன், பரதகண்டத்துள் நிலவிய மொழிகள் யாவற்றையும் சேர்த்து ஒரு பொது மொழியை உண்டாக்கினர். அம் மொழியே சமஸ்கிருதம் என்று சொல்லப்பட்டு வரும் பொதுமொழி. "உலகம் என்பது தமிழ்ச்சொல். அது வடமொழிக்கண்ணுள்ளதோ வெனின் அது பொதுமொழி என மறுக்க." என இளம்பூரண அடிகள்

கூறுவர். ஆதலால், அது நமக்குரியதாகாது எனக் கருதி அதனைப் புறக்கணிப்பது நம்மை நாமே இகழ்ந்து ஒதுக்குவதுபோலாகும். நம் தமிழ்ச் சான்றோரும், பண்டு பலமொழி பேசுவோருமாகிய பலரும், எலலாராலும் அறியப்படவேண்டிய உயர் கலைச் செல்வங்களை எல்லாம் பொதுமொழியாகிய சமஸ்கிருதத்திலே யாத்தனர் என்றுணரக. வடமொழிக் கண்ணுள்ள வேதங்கள், உபநிஷத்துக்கள், ஸ்மிருதிகள், ஆகமங்கள் என்னும் இவை முதலாயவற்றில், நந்தமிழ்ச் சான்றோர்கள் அருளிச்செய்த கலைச்செல்வங்களே மிக்கமைந்திருத்தலை யுணர்ந்து இன்புறுவோமாக.

இறைவன் வரலாறுகிய வேதம் அவனுடனேயே பிரிவின்றியுள்ளதாகலின் அதனை அபௌர்ஷிகம் என்றும், அதனை அவனருளாலே அடியார்கள் உணர்ந்து யாத்தனராகலின் மற்றதனையே பௌர்ஷிகம் என்றும கூறுப.

வேறுவேறு உருவும் வேறுவேறு இயற்கையும்
நூறுநூ றுயிரம் இயல்பினது ஆகி
ஏறுஉடை ஈசன்இப் புவனியை உய்யக்
கூறுஉடை மங்கையும் தானும் வந்தருளி 26

என்னும் இவ்வடிகளினுல், இறைவனும் இறைவியும் தம்முட் கூடி, இவ்வுலகம் உய்யுமாறு பல நூறுயிரம் உருவும் இயற்கையுமாக விரிந்தருளியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) எருதாகிய ஊர்தியினை உடையவனாகி, இவ்வுலகத்துயிர்களை உய்யக்கொள்ளும்படி, தன் திருமேனியில் ஒரு கூறுடைய அம்மையும் தானுமாகப் போந்தருளி, (அங்ஙனம் போந்த) உருவத் தொகுதி வேறு வேறாக நூறு நூறுயிரம் இயல்பினதாகவும், இயற்கைத் தொகுதி வேறுவேறாக நூறு நூறுயிரம் இயல்பினதாகவும் ஆகி எ - று.

(வி - ரை.) தான் தன்னுள் அடங்கியிருந்த இறைவியைத் தனது நடனத்தாலே வெளிப்படுத்தி, அவளோடும் கூடி, இத்தகைய உருவங்களாகவும், இயற்கைகளாகவும் வேறுபட்டு வளர்ந்தான் என்க; பொன்னே பல்வேறு அணிகளாவதுபோல.

அறத்தின்மீது இவர்ந்தருளி ஆங்காங்கு அருள் புரியும் இயல்புடையான் ஆகலின் "ஏறுடையீசன்" என்றும, ஒடுக்கத்தில் மங்கையும் தன்னுள் ஒடுங்கியேபோக உருவுங் குணங்களும இல்லாதிருந்தவன், உயிர்கள் மாட்டு வைத்த பேரருளால், அவை உடம்பும் கருவிகளும் இடமும் என்பவற்றைப் பெற்றுக்கொள்ளுமாறும், ஒழுக்கம் கடைப்பிடித்து நுகர்ச்சி பெறுமாறும், அங்ஙனம் ஒழுகி வரும் உயிர்களுக்கு அருளை வைக்குமாறும், ஈற்றில் செவ்வி பெற்ற உயிர்களுக்கு வீடுதனை அளிக்குமாறும் இங்ஙனம் போந்தான் என்பார் "இப்புவனியை உய்ய வந்தருளி" என்றும், அங்ஙனம் போந்தருளிய உருவங்களும் இயற்கைகளும் அளவில்

அடங்காதன என்பார் "நூறு நூறுயிரம் இயல்பினதாகி" என்றும் கூறினர்.

ஏறுடையீசனுகி என்க. இனி, ஏறுடையீசனுகிய அவன் என்றலுமாம். எங்ஙனமுரைப்பினும் வினைமுதல் கைலைக்கிழவோனே என்க.

உருவம - உருவத் தொகுதி. இயறகை - இயற்கைத் தொகுதி. உருவம் நூறு நூறுயிரம் இயல்பினதும், இயற்கை நூறு நூறுயிரம் இயல்பினதும் ஆகி என்க.

இறைவன் பலவடிவும் இயற்கையுமாக விரிந்தான் என்பதை, திருவுருத்திரம, சமகப்ரக்சினம் என்னுமிவற்றுள் பரக்கக் காணலாம்.

புவனி ஆகுபெயர்.

இனி, உருவம் நூறு நூறுயிரம் இயல்பினதாக மங்கை தானேயாகி, இயற்கை அங்ஙனமேயாக இறைவன் தானேயாகி, (அம்மங்கையும் தானு மாகப் புணர்ந்திருந்த) ஏறுடையீசன் வந்தருளி என்றுரைத்தலும் நன்கமையும்

இனி, இவ்வுருவங்களும் இயற்கைகளும் என்றவற்றுள் ஒருசாரன பறறி, அவற்றுள்ளும் சிலவற்றை இத்திருப்பாட்டுள் எடுத்துக் கூறு கின்றுர். அவறறை மேலே காண்க.

கைலைக்கிழவோன் இங்ஙனம் போந்தருளி, கல்லாடத்துக் கலந் தருளியும், இனனருள் விளைத்தும், படிந்தும், பணித்தருளியும், அமர்ந் தருளியும என இயைக்க.

தோறறியும, அழித்தும், துரந்தும் (துரந்த பயன் கொள்ளானுய்) மங்கையும தானும் வந்தருளி......(அமர்ந்தருளியும) என வினை தொகுத்து வைத்துககொளக.

குதிரையைக் கொண்டு குடநாடு அதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும் 28

என்னும் இவ்வடிகளால், குதிரை வாணிகனுக எழுந்தருளி வந்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) மேலை நாட்டிற்கமைந்த திறமைகள் தோன்றக் கூட்டமாகக் குதிரைகளைச் செலுத்திக்கொண்டு தான் (வணிகனுய்) எழுந்தருளியும் எ - று.

(வி - ரை ) சாத்து - கூட்டம். சாத்தாய்க் குதிரையைக் கொண்டு என்க. சதுர் - திறமை. குதிரைக்குச் சிறந்த இடம குடநாடென்பார்கள். அந்நாட்டுக் குதிரைகளின் திறம் தன் குதிரைகளின்பால் தோன்ற என்க. எனவே, குடநாடதன்மிசைச் சதுர்படச் சாத்தாய் குதிரையைக் கொண்டு தான் எழுந்தருளியும் எனக் கொள்க. உடம்படு புணர்த்தலால், அக்குட நாட்டுக் குதிரை வாணிகர் திறங்கள் தன்பாலும தோன்ற என்பதுங் கொள்க. வணிகனுய் என்பது வருவித்துரைக்கப்பட்டது.

நரிகளே இங்ஙனம் குடநாட்டுச் சதுர்பட அமைந்து நின்றன. நரி களைக் குதிரைகளாக்கியதை "நரியைக் குதிரைப்பரி யாக்கி" (ஆனந்த. 7.)

என்பதனுலுங் காண்க. அத்திருவிளையாடலால் மதுரையெல்லாம் பிச்சேறியது என்றலும நோக்கற்பாலது. "நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்" (கீரத்தி 36.) என்றதும் அதனையே குறித்து நின்றதென்க

இங்ஙனம் இறைவன் புலப்படும் சத்தியுருவுள் புலப்படாது நின்று அருள் செய்ய, அன்பர் அதனை உடனே தெளிகிலராய்ப் பின்னர், அவ்வவற்றின் விளைவு நோக்கி, "அந்தகோ! இறைவனே இங்ஙனம் எளி வந்தருளினன்" என ஞானத்தினுல் உணர்ந்துகொண்டனர் என்பதே உண்மையாதல் குறித்து, முன்னர் மங்கையும் தானும் வந்தருளி என்றும், ஈண்டுத் தான் எழுந்தருளி என்றும் கூறினர் இதனை ஈண்டு முதறகண் கூறியதுகொண்டு இனி வருவனவற்றுக்கெல்லாம் கொள்க

இனி, முன்னர் அமர்ந்தருளியும் (22) என்பதுகாறும் தொகுத்தவற்றுடன், இதனையுங் கூட்டி, அமர்ந்தருளியும் (22) எழுந்தருளியும் (28) என வினை தொகுத்து வைத்துக்கொள்க.

இன்னும், "குதிரையைக் கொண்டு ........எழுந்தருளியும்" என, அதனுல் நேர்ந்த வரலாறுகளைக் கூற எண்ணியவர், அங்ஙனமே முகஞ் செய்துகொண்டு, அப்பால் விரிக்கின்றுராதலின், எழுந்தருளியும், அங்ஙனம் எழுந்தருளிச் செய்த கொள்கை முதலாயினவும், பிறவாறு செய்த இன்ன இன்ன அருள்களும் ஈண்ட இருந்தும் (70) என மேலே முடியுமாறு ஆண்டுக் காண்க.

வேலம் புத்தூர் விட்டேறு அருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும் 30

என்னுமிவவடிகளினுல், வேலம்புத்தூரிலே சிற்றூற்று ஒன்றனைப் பேரூற்று ஆக்கினமை கூறப்படுகின்றது

(பொ - ரை) வேலம்புத்தூர் என்னுமிடத்திலே வேற்படையை விட்டருளி, ஆங்கிருந்த சிற்றூற்றினைப் பொலிவுடைய பேரூற்ருகக் காட்டிய கொள்கையும் எ - று.

(வி - ரை) விட்டேறு - வேறபடை. கோலம் - நீரோட்டம். "அழகும் இலந்தையும் ஆங்கதன் கனியும் பன்றியும் பீர்க்குமை பாக்கு நீரோட்டமும் கோலம் என்னும் குறியினவாகும" (பிங்கலம் 427.) என்பதுங் காண்க.

வேலம்புத்தூர், வேற்படையால் பேரூற்றின் ஆக்கம் பெற்ற புத்தூர் என்க. அவ்வேறபடையுடையவனுல் ஆக்கம பெற்ற புத்தூருமாம்.

"மொக்கணி .....குதிரைச் சேவகனுகிய கொள்கையும்" (33-15) எனத் தொடர்ந்து கூறபபடுதலால், இதனையும் குதிரைவீரன் பொருட்டுச் செய்ததாகவே கொள்ளுதல் வேண்டும். இத்திருவிளையாடற்கு வரலாறு கண்டிலம். ஓரளவிற்கு இங்ஙனம் ஊகித்து எழுத நேர்ந்தது.

தர்ப்பணம் அதனில் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற்கு ஈந்த விளைவும் 32

என்னுமிவ்வடிகளினால் கூறப்பட்ட திருவிளையாடற்கும் வரலாறு காணப்பட்டிலது ஊகித்து எழுதற்கும் அருமையுடைய தாகவே இருக்கின்றது எனினும், குதிரைகளின் பொருட்டுச் செய் யப்பட்ட திருவிளையாடலாகவோ, குதிரைகளைக் கொண்டுவரும் வழியிலே எதிர்பட்ட இரங்குதற்குரிய வேடன் ஒருவனுக்கு ஆக்கம் செய்த திருவிளையாடலாகவோ இருக்கலாம் என ஊகித்தற்கிட னுண்டு இனி, வேடர்க்கு எனப் பாடங்கொண்டு, ஆங்குள்ள வேடர்களைக் குதிரை வீரர்களாக ஆக்கித் தன்னுடன் கொண்டு சென்றான் எனக் கருதற்கும் இடனுண்டு.

மொக்கணி அருளிய முழுத்தழல் மேனி
சொக்கது ஆகக் காட்டிய தொன்மையும் **34**

என்னுமிவ்வடிகளினால், தொன்மையுடைய ஒளியுருவத் திரு மேனியைப் பாண்டியன் காணுதற்கேற்ற அழகுடையதாகக் காட்டியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) குதிரையின் உணவை இட்டுவைத்த பையைக் குதிரையின் வாயிலே பொருத்தியருள வந்தாங்கு, தன் நெருப்பை ஒத்த திருமேனியை அழகுடையதாகக் கரந்து காட்டிய பழைய தன்மையும் எ - று.

(வி - ரை ) குதிரைகளை விழைந்து காணவந்த பாண்டியன் முன்னே, கருணை மேற்கொண்ட இறைவன், தன் குதிரைக்கு உணவிட்டு வைத்த வைத்த பையை அதன் வாயிலே பொருத்த வந்தான்போலத் தன் அழலுருக்கரந்து, பேரழகுடைய உருவத்துடனே, அவன் ஒருவாறு தெளிய முகம் புகுந்தான் என்றவாறு. முன்னும் பின்னும பாண்டியன் தொடர்பே கூறுதலால், இதனையும் அவனுக்குச் செய்ததாகக் கொள்ளு தலே ஏற்புடையதாகும்.

மொக்கணி, அவித்த பயறு கொள்ளு கடலை முதலியவற்றை இட்டு வைக்கும் குதிரையின் தீனிப்பை.

“ கழுவிய பயறும் கொள்ளும் கடலையும் துவரையோடும்
முழுவதும் சிறக்கவிட்டே மொக்கணி முட்டக்கட்டி”

என்பது நம்பி திருவிளையாடல்.

சிவ பூசை நியமம் பூண்ட ஒரு வணிகன் கோட்டூரில் தங்கி நீராடிச் சிவபூசைக்கு வருங்கால், மைத்துனன் பரிகாசத்திற்குக் குதிரைக்குக் கொள்சட்டும் பையை மணலால் நிரப்பி நாட்டுவித்துச் சிவலிங்கமெனக் கூற, வணிகன் பூசையைச் செய்து முடித்த பின்னர், மைத்துனன் பையைப் பூசித்தைக் கூறிப் பரிகசித்து, அதனை அவன் எடுக்கச் செல்ல, வாராது சிவலிங்கமாக விளங்கியது என்னும் வரலாறு கொங்குமண்டல

சதகம் 24-ஆம் செய்யுளால் அறியலாகும். அங்கு இறைவனுக்கு 'மொக்கணீசுரர்' என்ற நாமமும் உண்டாயிற்று.

" ஏத்து சிவபக்தி யாளொரு செட்டிமு னீசுரனைத்
தோய்த்து முழுகித் தொழவெழ வாங்கொரு சூழ்ச்சிகற்றேன்
பூத்த வணக்குடக் கோட்டூரில் மொக்கணி யைப்புதைக்க
வாயத்த சிவலிங்க மானது வுங்கொங்கு மண்டலமே."

(கொங்குமண்டல சதகம் 24)

இப்பொழுது காட்டியருளிய தொன்றைத் தொன்மைத்து என்றார், அழலுருவைக் காணற்கு ஆற்றலுடையார் இலராதலின், அவ்வாறறல் இல்லாதார் கண்டுவத்தற்கு ஏற்ற சொக்கதாகத் தன்னுருவத்தைக் காட்டி வருவது, இறைவற்குத் தொல்லியல்பாகும என்பது அறிவித்தற்கு. இதனை,

" அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத்து ஒருமுதல் உருவுகொண்டு " (கீர்த்தி 92-93)

எனப் பின்னர்க் கூறுதலானும்,

" கரந்துரு வெய்திய கடவுளரும் " (மணிமே விழா. 15 )

எனவும்,

" அந்தரத் துள்ளோர் அறியா மரபின்
வந்துகாண் குறூஉம் வானவன் விழவும் " (சிலப். 6-72)

எனவும்,

" அவளுக்குப் பூவந்த உண்கண் பொறுக்கென்று
மேவித்தன் மூவா இளநலங்காட்டி " (சிலப். 9. 33-35)

எனவும், வருவனவற்றானும் அவற்றினுரையானும் உணர்க.

தழல் மிக்க தூரத்துள்ள ஞாயிறறினின்றும் ஈண்டு வருதல் கண்கூடு. அப்பிழம்பு, வெளியினை ஊர்தியாகக் கொண்டு யாண்டும் பரந்து எல்லாவற்றையும் ஆக்கியும் காத்தும் அழித்தும் வருமியல்புடையதாகும் என்னு முண்மையை,

" ஒளிகாட்டி வெளிநாட்டினை "

(தொல் பொருள். 146-ஆம் சூ. பேர். நச். உரைமேற்கோள்.) என வரும் தேவபாணிச் செய்யுளால் அறியலாம்.

[எதனையும் விடாது மேலும் மேலும் ஆராய்ந்து உண்மை காணும் இயல்புடைய விஞ்ஞானப் புலவர்கள், வெளி என்பதொன்றில்லை என்னும் தம் முன்னோர் கொள்கையை முடிவானதாகக் கொள்ளாராய், அத்துறையிலே மேலும் ஆராய்ந்து, ஞாயிற்றின் ஒளியும் சூடும் நிலவுலகுக்கு எங்ஙனம் வருகின்றன எனத்தோற்றுவாய் செய்து ஆராய்ந்து, வெளி என்பதனையும் ஒரு பொருளாக ஒத்துக்கொண்டமையும் யாம் அறிய வேண்டிய தொன்றாகும் ]

அஞ்ஞாயிறே எம்பெருமான் திருமேனியில் ஒருபாகமாகி ஒளிபெற்று விளங்குதலின், இறைவன் திருமேனி " முழுத்தழல்மேனி " எனப்பட்டது. யாண்டுமுள்ள ஒளியெல்லாம் உறுப்பாகப் பெற்ற முழுமைத்தாகிய

திருமேனியில் தோன்றும் பேரழகானது குதிரைப்பாகன் மேனியிலே சொக்கதாகக் கரந்து தோன்றப்பெற்றது என்க.

நிலமும் நீரும, ஒளியும வெப்பமும் கலந்தவிடத்துத் தூய்மையும், அவை கலவாவிடத்து அஃதின்மையும் பெறுதல் கண்கூடு. காற்றும் அங்ஙனமே தீயானது தன்னுள் நுண்ணிய வடிவுடைத்தாய் நிற்பத் தூய்மையும், நில்லாவழி அஃதின்மையும் எய்துதல் காண்க. அச்சூடும் ஒளியும் மண் நீர் முதலாயவற்றுட் புலனுகாது, அவற்றிலிருந்து தோன்றும் வழித் தீயுருவாகவே தோன்றுதலானும், காற்றின்கண் ஒருவாறு சூட்டியல்பே வெளிப்படுதலானும், வெளிக்கண் அவை அறவே புலப் படாமையானும், ஓமத் தீயினும் விளக்கினும் கருப்பூரச் சோதியினும் விண்ணிற செங்கதிர் முதலாயவற்றினும் இறைவன் அழலுருவைக் கண்டு வழிபட்டு வநதனர் நம்முன்னோர். உடலுயிர் வாழ்க்கைக்கும் அச்சூடும் ஒளியும் இன்றியமையாதனவாகும். அவையே எஞ்ஞான்றும் இயங்கியும், எல்லாப் பொருளும் தூய்மையாம் வண்ணம் இயக்கியும் வருகின்றன. அங்ஙனம் இயக்குவதே திருக்கூத்தென்பர்.

அரியொடு பிரமற்கு அளவு அறி(ய) ஒண்ணுன்
நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும் **36**

என்னுமிவ்வடிகளினுல், இறைவனுடைய அறிய ஒண்ணு அருமைப்பாடும், அறிதற்குரிய எளிமைப்பாடும் தன்மைகளும் கூறப்படுகின்றன.

(பொ - ரை) திருமாலுடனேகூட நான்முகனுலும் அள விட்டு அறியமுடியாதவனுயிருந்தும், நரிகளைக் குதிரைகளாகச் செய்த நன்மையும் எ - று.

(வி - ரை.) பிரமற்கு, உருபுமயக்கம். பிரமனுலும் என உம்மை க

நிலனுகியும் நீராகியும் நிற்கும் திசைமுகனுக்கும், திருமாலுக்கும், தழலாகி நிறகும் இறைவன் புலப்படான ஆதலின், "அரியொடு பிரமறகு அளவறி யொண்ணுன்" என்றனர். அவ்விருவரும், தம்மைத் தீயனுப் பொருள்களின் இருப்ப ஆக்கிக்கொள்ளின், ஆங்கு அவர்க்கு அவ்வொளிக் குள் வீற்றிருக்கும் இறைவன் புலப்படுவான்; அஙஙனமனறி, நிலம் நீர் எனபவறறைத் திருமேனிகளாகக்கொண்ட அவர்களால் அறியப்படாத வனுனன் என மேலதனை விரித்துணர்க.

இனி, வானவர்கள் யாவரும், தாம் வாழ வேண்டியும், தம்மைப் பிறர் தொழவேண்டியும் இறைவனை வணங்குகின்றுரன்றி, இயல்பானே எழுநத பேரன்பினுல் வழிபடுகின்றவரல்லராதலின், அவர் இருவகைச செருக்காலும் பற்றப்பட்டவராவர்; இத்தகையோரால் இறைவன் அறியப்படான் என்பதும், அவ்விருவரும தாம் தாமே பெரியர எனக் கலாம் விளைத்த போது, தமக்குமுன் தோன்றிய செந்தழல் மலையைக் கண்டு ஆராதனை

செய்து அன்பு கொள்ளாராய், அடிமுடி தேட முற்பட்டனரன்றே? அவர்க்கு அன்பிலாலன்றி வேறெவ்வாற்றானும் காணறகரிய இறைவன் அரியனு யினை என்பதும், வானவருட் சிறந்த அவ்விருவருக்கும் அறிய ஒண்ணாமை, அவரை முதல்வராகக் கொண்ட எல்லா வானவர்க்கும் இயை யும் என்பதும் கொள்க. வானவருட் சிறந்த அரிக்கும் பிரமற்கும் அரியனாய் இருந்தும், இங்ஙனம் பாண்டியற்கு எளிவந்தான் என்றவாறும்.

நரியைக் குதிரையாக்கிய வரலாறறுடன் அடிகளும் தொடர்புடைய வராவார் என மேலே குறித்தாம் அங்ஙனம் இயறறியது தீயதுபோல முதலில் தோன்றி, முடிவில் அளப்பரிய நன்மையை விளைவித்தமையின் "நன்மையும்" என்றனர். நன்மையும என்னத் தம் மனத்து அச்சந் தீர்ந்த குறிப்பும வெளிப்படுத்தியவாறு.

அளவறியாதவனாகியிருந்தும் அறிதற்கு எளியவனாகி என விரிக்க. இனி, இதனையும் ஏறுடை ஈசன் என்புழி உரைத்தாங்குச் சுட்டாக்கி யுரைத் தலுமாம் இது, மேல்வரும் மகேந்திர வெறபன், அண்ணல, கருணையன், அருள்பவன் என்பவை முதலாயவற்றிறகும் ஏறகும். ஆங்காங்குக் கொள்க.

ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டியன் தனக்குப் பரிமா விற்று
ஈண்டு கனகம் இசையப் பெறாது
ஆண்டான் எங்கோன் அருள்வழி இருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும் 41

என்னுமிவ்வடிகளினால், இறைவன் அருள்வழியே இருப்பச் சோதி தோன்றியமை கூறப்படுகிறது.

(பொ - ரை) ஆண்டுகொண்டருள்வதற்கு அழகுடைய திரு வடிகளையுடையோன், பாண்டியனுக்குக் குதிரையை விற்றுத் திரண்ட பொன்னை (அவற்றின் விலையாக)ப் பெற்றுக்கொள்ள மனமிசையாமல், (அவனுயிரையே அவற்றின் விலையாகக்கொள்ள மனமிசைந்து) ஆண்டுகொண்டான்; (அங்ஙனம் ஆண்ட) எங்கோனது அருள் வழியிலே இருப்பத் தூண்டுகின்ற சோதி யானது தோற்றிய தொன்மையும் எ - று.

(வி - ரை.) திருவடி அதனை யுடையானை உணர்த்திற்று; அன்மொழித் தொகை ஆண்டருளும் சிறப்பு நோக்கித் திருவடி என்றே மொழிந்தார்.

பரிமா விற்று ஈண்டு கனகம பெறாது என்றமையால், பரிமாவைக் கையுறையாகக் கொடுத்தான் என்பது பெறாம். அஃதறியாத பாண்டியன், விலையாகப் பொன் கொடுக்க முறபட்டனன்; இறைவன் அதனை ஏற்றுக் கொள்ளாது யான் வேண்டுவது பொன்னன்று, உன் நன்பே எனக் குறிப் பால் உணர்த்தினன். அங்ஙனம் உணர்த்தி அவ்வழியிலே செலுத்துகின்ற

சோதி, அங்ஙனமே செலுத்தித் தோன்றியதென்க. எனவே கண்டதும் காட்டியதும் காணப்பட்டதும் சோதியே யாயிற்றென்க. தூண்டுதல் - செலுத்துதல். தூண்டு சோதி என்றதன் பொருளை,

" ஈண்டிய மாயா இருள்கெட எப்பொருளும் விளங்கத்
தூண்டிய சோதியை மீனவனும் சொலவல்ல னல்லன் "
(திருப்பாண்டி. 6.)

என, அடிகளே நாம் உணருமாறு கூறுதல் காண்க.

அந்தணன் ஆகி ஆண்டுகொண் டருளி
இந்திர ஞாலம் காட்டிய இயல்பும் 43

என்னுமிவ்வடிகளால் முன்னர் அந்தணனாகி ஆண்டுகொண்டு பின்னர் மயக்கம் செய்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) அந்தணனாகி வந்து ஆண்டுகொண்டருளி, (பின்னர்) மாயை வித்தை காட்டிய தன்மையும் எ - று.

(வி - ரை ) அந்தணர், அழகிய தண்மை பூண்டவர், அருமறை அந்தத்தை அணவுவோர் என்னும இவ்விருபொருளும் உடையதென்பதை,

"அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர்" (திருமந். 234.)

எனவும்,

" அந்தணர் என்போர் அறவோர் மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்" (குறள். நீத். 10 )

எனவும், அந்தணர் இயல்பு கூறுமுகத்தானே, அவர் பெயரின் பொருளையும் இனிது புலப்படுத்தி யிருக்குமாறறுன் அறிக. அந்தம், மறையிற் கூறிய முடி பொருளாகிய செமபொருள். அணவுதல் ஈண்டுச் சிந்தித்தல். வேத மாகிய சிகையும், வேதாந்தமாகிய நூலும் ஆகியவற்றை, அகத்தும் புறத் தும பூண்டுள்ளவனும், மஹா காயத்திரி மந்திரப்பொருள் கைவரப்பெற்று, மற்றதன் அருளைப் பூண்டவனும், அக்கினி காரியம் முதலாயினவற்றை நியமமாகச் செய்துவருபவனும், அவற்றிற்கேற்ற குணங்களை மேற் கொண்டு வருபவனுமாகியவனையே அந்தணன் என்ப. பிறப்புரிமை ஒன்றையே கொண்டார்க்கு இடுகுறியாகவும், குணஞ்செயல்களைப் பூண்டார்க்குக் காரணக்குறியாகவும் அது கொள்ளப்படும். அவற்றுள் ஒன்றனையே பெற்றார் ஈண்டு அடங்கப் பெறார் என்பது நூறறுணிபு.

இந்திரஞாலம இந்திரசாலம் என்பன ஒருபொருட்கிளவிகள். காணற் கரியனவற்றைக் காட்டி மறைப்பது என அவை பொருள்படும். இது வியப்பிற்றற் போந்ததென்க பாண்டியனுக்குத் தோன்றிய சோதித் தோற்றத்திற்கும், அக்குதிரைச் செயலோடு பட்ட சேவகனாயதற்கும் இடையே அந்தணனாகி யாண்டது காணப்படுதலானும், பாண்டியனுக்குக் குதிரைச் சேவகனாகவே காட்சியளித்தமையானும், மேல்வரும் மண்சுமந்த வரலாற்றில் கூலிக்காரனாகக் காட்சியளித்தமையானும், ஈண்டு அந்

தணாகி யாண்டுகொண்டு இந்திரஞாலம் காட்டியது அடிகட்கே தொடர் புடையது என்றுரைப்ப அமையும பிறர்க்குச் செய்த ஆக்கங்களையே எடுத்துக்கூறி வருகின்றவர், அவற்றையெல்லாம் எண்ணுங்கால், அன்பு பெருகுதலானே நெகிழ்ந்துபோய்த் தமக்குச் செய்தனவற்றையும் கூற முற்பட்டு, அந்தணனாகி ஆண்டுகொண்டெனக் கூறி, மீண்டும் ஊட லுணர்ச்சி மிகுதலின் இந்திரசாலம் காட்டிய இயல்பும் என முடித்தனர் என்க.

“ மாஆர ஏறி மதுரைநகர் புகுந்தருளித்
தேவார்ந்த கோலந் திகழப் பெருந் துறையான்
கோவாகி வந்தெமமைக் குற்றேவல் சொண்டருளும்
பூவார் கழல்பரவிப் பூவலலி கொய்யாமோ ” (பூவல்லி 20 )

என்னுந் திருப்பாடடிலே, பெருந்துறையான் மதுரை நகரிலே, கோவாகித் தம்மைக் குற்றேவல் கொண்டதாகவும்,

“ பெருந்துறை மேய சேவகன் நாயகன் மங்கைமார் கையில்
வளையுங்கொண்டு எம்முயி நங் கொண்டுஎம் பணி கொள்வானே ”
(சென்னி 3.)

என்னும் பகுதியில் மதுரையில் நிகழ்ந்த திருவிளையாடலொடு உடன் சேர்த்துத் தமமை யடிமைகொணடதாகவும்,

“ மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போறறி
கூடலில் இலங்கு குருமணி போற்றி ” (போற்றி 88-91.)

எனக் கூடற்பெருமானைத் துதுசெய்வதாகவும் காணப்படும் பகுதிகளால், அடிகட்கு முதற்கண் மதுரையில் அரசனுடைய காட்சி கொடுக்கப்பட்டது என்பது தானே வலியுறுகின்றது. இறைவனை பெருந்துறையில் நின்று மதுரைக்கு வந்தபின்னரே, அவர் குதிரைச் சேவகன் அல்லன், இறை வனே யாவான் என அடிகள் கருதிக் கொண்டு, தங்கருத்துப் பிழை பட்டமைக்கு நடுநடுங்கி உருகியமையால், குதிரை மேற்கொண்ட இறை வனை, அந்தணனாகி அடிமை கொண்டபொழுதே [illegible] நிகழ்ந்தனவை யெல்லாம இந்திரசாலம் ஆகுமெனக் கருதிக் கொண்டனர் என்க.

அடிகளுக்கும் பாண்டியனுக்கும் தன்னைப் பெருந்துறையானாகவே இறைவன் உணர்த்தியமையால், பெருந்துறையானை தம்மை யடிமையாகக் கொண்டமை கூறுமிடமெல்லாம், மதுரையையும் தொடர்புபடுத்திப் பேசுவது இதனாற் பெறப்படுகின்றது. மதுரையில் தெய்வக்காட்சி கொடுக்கப் பட்டதே, பின்னர் உத்தரகோசமங்கையிலும், பிற தலங்களிலும் ஆட் கொள்ளப்படுதற்கு மூலமாயினமையின், மதுரையில் ஆட்கொண் டான் எனவும் உடன்கூறினர். எனவே முதற்காட்சி மதுரையிலும், முதலாட்சி உத்தரகோசமங்கையிலும் நிகழ்ந்தன என்பதற்கு இழுக் கின்மையுமுணர்க.

**மதுரைப் பெருநன் மாநகர் இருந்து**
**குதிரைச் சேவகன் ஆகிய கொள்கையும் 45**

என்னுமிவ்வடிகளினால், மதுரையில் குதிரைச் சேவகனாகிய கொள்கை கூறப்படுகின்றது.

(பொ - ரை) மதுரையென்னும் பெரியதும் நல்லதும் சிறந்தது மாகிய நகரத்தில் இருந்து குதிரைச் சேவகனாகிய கொள்கையும் எ - று.

(வி - ரை) தோற்றத்தால் பெரியதும் பண்பால் நல்லதும் ஆட்சியாற் சிறந்ததுமாகிய மதுரை "பெருநன் மாநகர்" எனப்பட்டது.

இருநது என்பது அவனது கொள்கையின் வலிமை உணர்த்தி நின்றது எனக

ாண்டுக் கொள்கை என்றது, தன்னையேயன்றிப் பிறர் எவரையும் நினைககச் செய்யாமையும, தொண்டர்களைத் தன்பால் அணைத்துக் கொள்ளுதலும் அவர்தம் பிறப்பையற வீசுதலும், அடியவர் வேண்டிய காலையே அருள்செயது தன் செல்வம எல்லாம கொடுத்தலும், அவ்வடியவர் தமமைத் தாமே மறநதிருக்கச செய்தலும, அவர ஆருயிர் உண்ணுதலும் என்னும இவை முதலாயவற்றை என்க

குதிரைகளைச சாத்தாகக் கொண்டு சென்றவன், பாண்டியன் உளங் கொண்டவாறே அவன் முன்னிலையில், குதிரைச சேவகனாகத் தன் குதிரை மீது இவர்ந்தருளி, அதனைப் பல கதியினும் செலுத்தி, அப்பாண்டியனை மகிழ்வித்த கொள்கையும் எனக.

**ஆங்கது தன்னில் அடியவட்கு ஆகப்**
**பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும் 47**

என்னுமிவ்வடிகளினால், ஓர் அடியவள் பொருட்டு இறைவன் மண் சுமந்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை) அம் மதுரையில்தானே செம்மனச் செல்வி என்னும் அடியவள் பொருட்டு, அவளுக்குத் துணையாளாச் சென்று மண் சுமந்தருளிய இயல்பும் எ - று.

(வி - ரை) மண் சுமந்த திருவிளையாடல் வெளிப்படை. அதனுக்கும் அடிகட்கும் ஏதேனும் தொடர்புளதோ என்பது ஆராய்தற்குரியது.

இருபத்தேழாம் அடி முதலாக இதுகாறும கூறிய நிகழ்சசிகள் ஒரு வரலாறறுத் தொடர்புபட்டன. நாளடைவில் இதனுண்மை புலனாகும்.

**உத்தர கோச மங்கையுள் இருந்து**
**வித்தக வேடம் காட்டிய இயல்பும் 49**

என்னுமிவ்வடிகளால், உத்தரகோச மங்கையில் ஞானசாரியனாய் வந்து அருள் செய்தமை கூறப்படுகிறது

(பொ - ரை.) உத்தரகோச மங்கையிலே வீற்றிருந்து ஞானம் உணர்த்தும் ஆசிரியத் திருமேனியைக் காட்டிய இயல்பும் எ - று.

(வி - ரை) இறைவன் ஆகமங்களைக் கடலினின்றும் மீட்ட பின்னர் இறைவியின் வேண்டுகோளுக்கிணங்கி, உத்தரகோசமங்கையிலே உபதேசித்தருளினன் என்றும், ஆங்குத் தவங் கிடந்த அறுபத்துநான்கு முனிவர்க்கும் உமையொடு பொருந்திய தமது ஞான வடிவங் காட்டி, அவர் உய்ய ஆகமப் பொருளை உரைத்தருளினன் என்றும், அத்தலத்தே உத்தர கோசங்கள் (பின்வந்த நூலகள்) மன்னுற வைத்தலாலும். மங்கைக்கு அறிவுறுத்தியமையாலும், அத்தலத்திற்கு அப்பெயரிடலாயிற்று எனவும் நம்பி திருவிளையாடல் கூறும். இக்கருத்தும் அடிகள் கருத்தும் வேறுபாடுடையன என்பது முன்னரே பெறப்பட்டது.

வித்தகம் - ஞானம். ஈண்டு ஞான நூலகளை உணர்த்திற்று.

"தன்னீறு எனக்கருளித் தன் கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி யுத்தர கோசமங்கை" (பொன்னூ. 3.)

என்பதனால், உத்தரகோசமங்கையில இறைவன் வித்தக வேடங் காட்டித் தன்னீற்றினை அடிகட்கு அளித்தான் என்க.

பூவணம் அதனில் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும் 51

என்னுமிவ்வடிகளினால், பூவணம என்னுமூரில் வண்ணத் திருமேனி காட்டியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை) பூவணம என்னுமிடத்திலே பொலிவுற்றிருந்தருளிப் பொன்வண்ணத் திருமேனியைக் காட்டியருளிய பழமையும் எ - று.

(வி - ரை.) இவ்விடம் மதுரைக்குக் கிழக்கே பன்னிரண்டு நாழிகை வழிதூரம் கழித்துள்ளதெனத் திருவாலவாய்த் திருவிளையாடல் கூறும.

ஆங்கு, பொன்னனையாள் என்னுந் தாசி, இறைவனைப் பொன்னாலாக்கிப் பூசிக்க விரும்பியும், அங்ஙனம ஆக்கவியலாது வருந்தி விழைந்திருப்ப, இறைவன் சித்தவடிவுடன அவளகத்திற்குச் சென்று, அவள் பொருள்கள் யாவற்றையும் பொன்னாக்கிப் போந்தனனாக, அவளும இறைவனருளைப் போற்றி, அப்பொன்னால் இறைவன் திருவுருச் சமைத்து வழிபட்டுப் பேறுபெற்றாள் எனப் புராணங் கூறும்.

"பொருப்பமர் பூவணத்தானே" (போற்றி. 182)

எனப் போற்றி யருளியமையாலும,

"பூவணமன்ன பொன்னே" (திருக்கோ. 305)

எனவும்,

"பொன்மாப் புரிசைப் பொழில்திருப்
பூவணம், அன்ன பொன்னே" (ஷ . 338.)

எனவும் தலைமைகளுக்கு அதனை ஒப்பிட்டுக் கூறியருளியமையாலும், ஈங்கு "பொலிந்திருந்தருளித் தூவணமேனி காட்டிய தொன்மையும்"

என்றருளியமையாலும், இறைவன் அடிகட்கும் அப்பொன்வண்ணத் திருமேனியைக் காட்டியருளினன் என்பதும், அத்திருமேனி தூவண்ணத்ததாய்ப் பொலிவுற்று அருள் பூத்திருத்தலின், அவளுக்கு அருளியவாறே தாமும் அருள்பெறல் சாலும் எனத் துணிந்தனர் என்பதும் உய்த்துணர்க.

வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும் 53

என்னுமிவ்வடிகளினுல், இறைவன் திருவாதவூரில் பாதச் சிலம்பொலி காட்டியமை கூறப்படுகின்றது

(பொ - ரை ) திருவாதவூரின்கண் வந்தருளித் தனது பாதச் சிலம்பினின்றும் உண்டாகும் ஒலியைக் காட்டிய பண்பும் எ - று.

(வி - ரை ) இத்திருவிளையாடலை அடிகளைத் தவிர வேறு யார் பொருட்டு இறைவன் செய்தருளினுன் என அடிகள் கருதினுர் என்பது விளங்கவில்லை.

அடிகள் சிலம்பொலி கேட்டு உவகையடைந்தார் என்பது,

"சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
பேரானந்தம் பாடிப் பூவல்லி கொய்யாமோ!" (பூவல்லி. 18)

என்று கூறுவது கொண்டு உய்த்தறியலாம்.

இனிது வந்தருளி எனக் கொண்டுரைக்க. சிலம்பொலியினுலே தான் வரும் குறிப்பைப் புலப்படுத்துதலினுலே, அது தோன்ற எழுப்பிய பண்பும் என்னது காட்டிய பண்பும் என்றனர்.

"பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்" (கலி. 133.)
என்பது தோன்றக் காட்டியவாறென்க.

திருவார் பெருந்துறைச் செல்வன் ஆகிக்
கருவார் சோதியில் கரந்த கள்ளமும் 55

என்னுமிவ்வடிகளினுல், திருப்பெருந்துறையில் இறைவன் செய்த கள்ளம் கூறப்படுகின்றது

(பொ - ரை ) செல்வம் நிறைந்த திருப்பெருந்துறையின் செல்வனுகி அங்கு மூலமாகிய சோதியிலே மறைந்த கள்ளமும் எ - று

(வி - ரை.) பேரின்பமாகிய திருவென்க. செல்வன் அத்திருவிற்கு உரிமை பூண்ட இறைவன். ஞானமாகிய செல்வத்தை நிரப்பியுள்ளவனுகி என்றபடி பெருந்துறையின் செல்வனுகி ஆங்கு என விரிக்க.

இருட்கண்ணே கரந்துபோதலே கள்வர்க்கியல்பாகவும், இவன் ஒளிக்குள்ளே கரந்துபோனுன்; இந்திரஞாலக் கள்வனுகி இராநின்றுன் என்றபடி.

பிறவிக் கருவை உண்ணுஞ் சோதி என்றலுமமையும். ஈண்டு ஆர்தல் உண்ணுதலின் மேற்று.

தம்மை ஒழித்து ஏனைய அன்பரைக் கலந்துகொண்டருளியமையால் "கரந்த கள்ளமும" என்றனர் இங்ஙனம் உரைத்தாரேனும,

"திருவார் பெருந்துறைச் செல்வனாகி
அருளார் அன்பர்க் கருளிய ஆக்கமும்"

என்பதே கருத்தாகக் கொள்க

பூவலம் அதனில் பொலிந்தினி தருளிக்
பாவ நாசம் ஆக்கிய பரிசும் 57

என்னுமிவ்வடிகளினால், பூவலம் என்னுமிடத்தில் மாபாதகந் தீர்த்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை) பூவலம் என்னுமிடத்திலே பொலிவுற்று இனிதாக விளங்கியருள்செய்து தீவினையை அழித்த தன்மையும் எ-று.

(வி - ரை.) பூவலம் என்னும் பெயராற்றலால, இந்நிலவுலகத் திருப்பதிகளை யெல்லாம வலம் வந்து கண்ட காட்சிப்பயன் யாவரறையும் தானே தரவல்லது அஃதென்பது பெறப்படும.

அன்பர் பாவங்களை அழிக்கப போந்தமையால் பொலிவும் இனிமையும் மேவினன் என்க. அன்பர், தம பாவங் கருதி இறைவன் வெகுள்வானோ என அஞசாராய் அணுகுதற்கு, அவன் பொலிவும இனிமையும் வாய்ந்தனன் என்றபடி. ஈண்டுப் பொலிவென்றது, அனபர் குற்றங்கண்டு வெறுப்புக் குறிப்பு ஒரு சிறிதுமிலனாய் அவர்க்கு ஆக்கம் செய்யுமாறு அமைதலை. அண்மையில அவர் வந்தவுடன இனிதாக உரைத்தருளி என எச்சம விரிப்பினும் விரிக்க. இஃதவன் இயல்பாதலின "பரிசும" என்றார்.

இவ்வரலாறும் சிறிதும் புலப்பட்டிலது

தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவகன் ஆகிய நன்மையும் 59

என்னுமிவ்வடிகளினால், ஒரு பாண்டியன் பொருட்டு, அவன் வெற்றிபெறும் வண்ணம் இறைவன் தண்ணீர்ப்பந்தல் அமைத்துத் தானும் நீருதவும் தொண்டனாகியமை கூறப்படுகிறது.

(பொ - ரை.) (தன் அன்பனை பாண்டியன் ஒருவன்) வெற்றி பெறும் வண்ணம் தண்ணீரப் பந்தல் ஒன்றை உண்டாக்கி, அங்கே நல்ல நீரமையுடைய (நீரினையுதவும்) தொழிலாளனும் தானாய் அமைந்த நன்றியும் எ - று.

(வி - ரை.) சோழன் ஒருவன் தன் மகளை அப்பாண்டியற்கு மணஞ் செய்வித்தற்கு முடிவு செய்திருத்தலை உணர்ந்த அப்பாண்டியன் தம்பியானவன், வலிதில் தானே அச்சோழன் மகளை மணந்துகொண்டு, அவனை யும் தனக்குத் துணையாக்கித் தன் தமையன் ஆட்சியைக் கவரச்செய்த

போரிலே, தன் அன்பனுகிய பாண்டியன் பேரன்பிற்கு இரங்கித் தண்ணீர்ப் பந்தல் வைத்துத் தானே நீருதவுவோனுகவும் நின்றுதவி, அவன் வெற்றி பெறுமாறு செய்தான் இறைவன் எனப் புராணங் கூறும்.

தண்ணீர்ப்பந்தல் என்னும்போதே தண்ணீருதவும் இடம் என்பது பெறப்படுதலின், அதனை ஒழித்துப் பொழுது நிகழ்ச்சி என்பவற்றின் இயல்பறிந்து நீரினைத் தூய்மை செய்து, ஏற்புடையதாக்கி, இளைப்பாறு தற்கும், சுவைப்பதற்கும், வெப்பினைப் படிப்படியே நீக்கி நோயணுகா வாறு ஓம்புதற்கும், போரில் வெல்லுமாறு ஊக்குதற்கும், உபசரித்தற்கும், அன்ன பிறவற்றிற்கும் இன்றியமையாத நீர்மை (பண்பாடு) முற்றினும் அமையப்பெற்றுத் தொண்டாற்றுவதில் வல்லவனுகிய தொண்டன் என விரித்துரைக்க.

தன் அன்பனுடைய படை மேற்கூறியவாற்ருல் ஊக்கம் பெற்று வருதலால், தன் அன்பன் வெற்றிபெற என்க. இவன் சய ; பெற என்றலால், இவன் மாற்றுன் இப்பந்தலில் வந்து உபசாரம் பெறுதற்கு அவன் பாவம் இடங்கொடாமையால் அவன் தோல்வியுற என்க. சயம் எனவே அதனைப் பெறுதற்குரிய போர்க்களமும், தண்ணீர்ப் பந்தல் வைத்தமையால் வேனிற் காலமும் பெறப்பட்டன.

விருந்தினன் ஆகி வெண்காடு அதனில்
குருந்தின் கீழ்அன்று இருந்த கொள்கையும் **61**

என்னுமிவ்வடிகளினுல், திருவெண்காட்டிலே புதியோன் ஒருவனுகக் குருந்தின் நீழலில் வந்திருந்தமை கூறப்படுகிறது.

(பொ - ரை ) திருவெண்காடு என்னுமூரிலே, குருந்தமர நீழலிலே, (அவ்விறைவனே) புதியவன் ஒருவனுக (நடித்து) வீற்றிருந்த கோட்பாடும் எ - று.

(வி - ரை.) திருவெண்காட்டிற் குருந்தின்கீழ் ஆசானுக இருந்து அன்பர்களுக்குக் கலையறிவுறுத்தினுன் எனபதும், பழையவனே இங்ஙனம் புதியவனுக நடித்தான் என்பதும், அவனைப் புதியவனுகக் கருதிக்கொண்டிருந்தபொழுது, அவன் மாணவ அன்பர்களுடன் மறைந்தமையால், அவனை இன்னுன் என்று கண்டுகொண்டார் என்பதும், பிறவும் ஈண்டுப் பயின்ற சொற்களால் அறியக் கிடக்கின்றன. ஆனுல் வரலாறு யாதொன்றும் புலப்படவில்லை.

பட்ட மங்கையில் பாங்காய் இருந்தங்(கு)
அட்டமா சித்தி அருளிய அதுவும் **63**

என்னுமிவ்வடிகளினுல் இயக்கிமார் அறுவர்க்கு எண் பெரிய சித்திகளை அருளியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) பட்டமங்கை என்னுமூரில் சார்பாக இருந்து, அவ்விடத்தே எட்டுப் பெரிய சித்திகளை வழங்கிய அவ்வல்லமையும் எ - று.

(வி - ரை) அறுமுகக் கடவுளுக்குப் பாலூட்டிச் சிறப்புற்றிருந்த இயக்கிமார் அறுவர், இறைவனிடம் எண் பெரிய சித்திகளை அருளுக என இரநது நிறப, இறைவனும் அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி அறிவுறுத்துகையில், அவர்கள் பராமுகஞ் செய்தமையால், இறைவன் விதிப்படி பட்டமங்கையில உள்ள ஓர் ஆலமரத்தடியில் கற்களாகக் கிடந்தனர். பின்னர் விடுதலை பெறுதற்குரிய காலத்தே, இறைவன் அவர்களை ஆட்கொள்ளப்போந்து, எண் பெரிய சித்திகளை அவர்களுக்கு வழங்கினுன் என, திருவிளையாடல்கள் இரண்டும் கூறுகின்றன.

பட்டமங்கை என்னும் பெயராலும் அவ்வரலாறு பெறப்படுதல் காண்க.

அறுவருஞ் சாபம் பெற்றமையால் திருத்தமுற்றனராதலின், அவர்க்குப் பாங்காய் என்றவாறு.

தான் கொடுத்த சாபத்தைத் தீர்க்தற்குத் தன்னாலன்றிப் பிறரால் ஆகாதாகலின், தானே போநதிருநது விடுவித்தருளினன் ஆதலால், அதுவும் எனறதறகு அவ்வல்லமையும என்றுரைத்தாம.

எண்பெரிய சித்திகளாவன, அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம என்பன.

1. அணிமா (அணுவாதல): நுண்ணிய அணுவாகி எங்குமியங்குதல்.

2. மகிமா (பேருலகாதல்): எல்லாம் தன்னுளடங்கத் தான் பேருலகாதல்.

3. லகிமா (நொய்தாதல்): தோற்றத்தால் மலைபோலவும், நிறையால் அணுப்போலவுமாதல்.

4. கரிமா (வலிதாதல்): தோற்றத்தால் அணுப்போலவும், நிறையால் மலைபோலவுமாதல்.

5. பிராத்தி (நுண்ணியதாதல்)' வானும் மண்ணும் பாதலமும் ஆகிய எல்லா இடங்களிலும் நினைத்தவாறே சென்றுவருதல்.

6. பிராகாமியம் (பருமைத்தாதல், நொய்ம்மையும் பொறையுமாதல், எங்குமியங்குதல், எதனினும் இன்புறல் முதலியன): வேண்டுருவங் கொள்ளுதலும, இன்புறலும், வேண்டுங் கூட்டுடம்புகுதலும், வேண்டும் நாடடைதலும், வேண்டியவாறே எல்லாவற்றையும் முறுங்கு கண்டுணர்தலும வல்லராதல்.

7. ஈசத்துவம் (இறையியல் கொள்ளுதல்): இறைவனை ஒப்பமுத்தொழிலும், நாளகோள் முதலாயவற்றை ஏவுதலும் செய்தல்.

8. வசித்துவம் (தன்னுட்படுத்தல்). உலகு உயிர் முதலாய எப்பொருளும் தன்வயப்படுமாறு செய்து தான் அவற்றை ஆளுதல்

அடிகள், எண்ணிலியாகிய சித்திகளும், எல்லையில்லாத எண்குணமானவையும் எய்தியமை, திருப்படையாட்சி, ஐந்தாம் ஏழாம் திருப்பாடல்களால் அறியப்படுதலின், அப்பேறுகள் பெற்ற தலம் இதுவென்றே கோடும்.

வேடுவன் ஆகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னில் கரந்த கள்ளமும் 65

என்னுமிவ்வடிகளினால், ஒரு பாண்டியன் பொருட்டுக் காட்டில் மறைவான்போல மடுவில் மறைந்து, அவன் மாற்றானாகிய சோழனை மடியச்செய்து பாண்டியனுக்கு வெற்றி யீந்தமை கூறப்படுகிறது.

(பொ - ரை) வேட்டுவன் வடிவுடையனாகித் தானே விரும்பிய அச்சத்தை மேற்கொண்டு காட்டில் மறைந்த வஞ்சனையும் எ - று.

(வி - ரை) உரு - அச்சம்.

" உரு வுட்காகும் " (தொல் சொல். உரி. 4)

என்ப. சோழனை மடுவில் வீழ்த்தி இறக்கச் செய்தற்காகத் தான் அஞ்சினான்போல ஓடி, அச்சோழனைப பினதொடர்ந்து ஓடிவரச் செய்து, காடடகத்தே மறைவான்போல நடித்தமையின, அவ்வச்சம் அவனால் வேண்டப்பட்ட தொன்றாயிற்றென்க.

காடு அடர்ந்ததொரு பகுதியின் நடுவகத்துள்ள மடுவானது சோழனுக்குக் காடுபோன்று தோற்றியதாகலின " காடது தன்னில " என்றும் அத்துணையளவுஞ் சென்றானைச் சோழமன்னன் காணற்கியலாமையால், அவவேடன் காட்டினுள் ஒளிந்துகொண்டான் எனச் சோழன் கருதுமாறு மறைந்தானாதலின் " கரந்த " என்றும், வேடனுக்கு மடுவெனப் புலப்படட தொனறனைச் சோழன் காடெனக் கருதுமாறு வைத்து அவனை வஞ்சித்து அதனுள் வீழ்த்தினமையின் " கள்ளமும் " என்றும கூறினர்.

வேடன் அமமடுவுள் வீழ்ந்து மறைந்தான்போலத் தோன்றச் சோழனும் அதனுட் குதித்து இறந்தான. இறக்கும்போது சோழன் கருத்தும், பின்னர வநது கணடவர் கருத்தும் ஒரே பெறறியனவாக அமைநதமைக் கேற்பத் திருவிளையாடற்புராணம கூறும் வரலாற்று விபரத்தைப் புராணத் துட் காண்க மடுக்கண் வீழ்நது மறைதலினும், வீழ்ந்தாங்கு மறைதலே சூழ்ச்சிச் சிறப்புத் தந்து நிறறலின் அஙஙனம கூறப்பட்டது.

மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கான் ஒருவன் ஆகிய தன்மையும 67

என்னுமிவ்வடிகளால், சுந்தரசாமந்தன் என்னும் அன்பன் பொருட்டுப், போர்ப்படைகளின் இயல்பெல்லாவற்றையும் பாண்டியனுக்கு இயல்பு கூறப்படுகிறது

(பொ - ரை.) மெய்க்காட்டிற்கெனச் சிறப்பித்து வேண்டப் படும் உருவத்தை மேற்கொண்டு, தகுதி பொருந்திய ஒரு வீரனாக ஆகிய இயல்பும் எ - று.

(வி - ரை ) இவ்வரலாறு, பாண்டியன் ஒருவன், தன் நாட்டின்மேல் பகைவர் படையெடுப்பதறகு வேண்டிய ஒழுங்குகள் செய்துவருவதை உணர்ந்து, தன் அமைச்சனாகிய சுந்தரசாமநதன்பால் பொருள் கொடுத்துப்

படை திரட்டுமாறு அவனைப் போக்கிவிட, "இப்பெரும் பொருள் சிவத் தொண்டுக்கு உதவின், அரசனும் உலகும் சிறப்படையலாகும், பகைவர் வலியும் தானே அழிவெய்தும்" எனத் துணிந்து, எல்லாப் பொருளையும் சிவப்பணிக்கு உதவி ஆறு திங்கள் கழித்திருந்தான். அந்நாளில் அரசன் அவனை யழைத்துப் படைத்திறம் பற்றிச் சூழ்ந்து வினவ அவன் "இறைவ னருளால் எல்லாப்படையும் நாளை வந்தடையும்" என்று விடை கூறி யிருந்தான். அரசன் பின்னும் அவனை நோக்கி, நாளைக்கு அவற்றை மெய்க் காட்டெனக் கூறிவிடுப்ப, அவன் இறைவன் திருக்கோயிலுட்போய் இறை வன்பால் முறையிட்டனன். இறைவனும் அவனது முறையீட்டிற்கு இரங்கி "நானே படைகளை நாளை மெய்க்காட்டுவல்; நீ வருந்தற்க" என, வானில் ஒலி எழச்செய்து அவனுக்கு அறிவுறுத்தி விடுத்தனன். அவ்வாறே மறுநாள் இறைவன், படைகளை விச்சையாற் படைத்துத் தானே அவற்றின் தலைவனாக இருந்து, மற்று அவற்றை அழைத்துக்கொண்டு சென்று பாண்டியனுக்கு மெய்க்காட்டினன். அப்பால் அவன் சிறந்த வீரனாகத் தோன்றிக் குதிரைமீதிவர்ந்து வெண்குடை நிழலில் மறையநின்று உலாவக் கண்ட பாண்டியன், "இவன் யாவன்?" எனச் சாமந்தனை வினவ, அவன் உண்மையுரைத்து நிற்றலும், பாண்டியன் விரும்பியபடியே இறைவன் அவன்முன் வந்து, அவன் செய்த உபசாரங்களைப் பெறறு மறைந்தான் எனத் திருவிளையாடற்புராணங் கூறும்

மெய்க்காட்டு, மெய்க்காட்டிற்கென, இட்டு வேண்டுரு, சிறப்பித்து வேண்டப்படும் வடிவம்.

"இவ்வுலகில் இட்டுரையின் எய்துவ எய்திற்றால்"

(புறப். வெண். 4-வது, காஞ்சி. 11.)

என்னுஞ் செய்யுட் பகுதியில், இட்டுரைத்தல் சிறப்பித்துரைத்தல் எனப் பொருள்படுமாறே, ஈண்டு, இட்டுவேண்டுதலும் சிறப்பித்து வேண்டுதல் எனப் பொருள்படும். இனி,

"மலரிட்டுத் தொடுத்த மாலை"

(புறப். வெண். 4-வது, காஞ்சிப் 19. உரை)

என்னும் இதனுள் வந்த இட்டு என்பது மூன்றாம் வேற்றுமை உருபாகும் என, அதன் பதிப்பாசிரியர், அரும்பத முதலியவற்றின் அகராதி என்னும் தலைப்பின்கீழ்க் குறித்துள்ளனர். அங்ஙனம் கொள்ள இயையுமேல் கண்டுகொள்க

இனி, மெய்க்காட்டிட்டு என்பதற்கு, மெய்க்காட்டுதல் காரணமாக என, உலக வழக்குப்பற்றி உரைத்தலும் நன்றாம்.

மெய்க்காட்டிட்டு வேண்டுருக்கொண்டு, படைகளை மெய்க்காட்டியதன் மேல் தக்கான் ஒருவன் ஆகிய தன்மையும் எனக்கொண்டு புராணம் வர லாற்றிற்கேற்ப வுரைக்க

மெய்க்காட்டாவது, ஒருவர் முன்னிலையில், அவர் வேண்டிய தொன்

றனே வேண்டியவாறே காட்டுதல். பாண்டியனுக்குப் படைகளின் மெய் யையும், தன் மெய்யையும் காட்டினன் என்றுணர்த்தியபடி என்க.

ஓரி ஊரின் உகந்து இனி தருளிப்
பார்இரும் பாலகன் ஆகிய பரிசும் 69

என்னுமிவ்வடிகளினுல், மூத்த இளைய, பால வடிவங்களைக் கொண்டு, அன்புடையாள் ஒருத்திக்கு அருள் புரிந்தமை கூறப்படு

(பொ - ரை ) ஓரியூரிலே உயர்வாகிய விருத்த வடிவத்தைக் கொண்டு விருந்தினனுகப் புக்கும், அதன்மேல் அவனே அன் பினைந்திணைக் கேற்ற (குமார வடிவங் கொண்டு) இன்பத்தை யருளி யும், மற்றதன்மேல் பார்க்கில் பெரிய பாலகனுகிய தன்மையும் எ -

(வி - ரை.) பழைய திருவிளையாடலாகிய நம்பி திருவிளையாடலில் காணக் கிடையாத தாய தந்தையர் பெயர், மகன் பெயர், ஊர்ப் பெயராதி யன பரஞ்சோதியார் திருவிளையாடலிற குறிப்பிடப்பட்டுள்ளன. அடிகள் ஓரியூரென வைணப் பிரமசாரியின் ஊரைக் குறிப்பிட்டிருப்பதை, எக் காரணம் பற்றிப் புராணங்களிரண்டுங் குறிப்பிட்டிலவோ தெரியவில்லை. ஆதலால் அடிகளால் எடுத்துக் கூறப்பட்ட திருவிளையாடல் அவ்விரு புராணஙகளிலுங் குறிப்பிடப்பட்ட திருவிளையாடலோ அன்றி வேருே என்பதும் ஆராய்தற்கிடனுண்டாகின்றது.

புராணஙகள் இரண்டும விருத்த குமார பாலராய திருவிளையாடலை வெளிப்படையாகக் கூறுகின்றன. அடிகள் பாலனுகிய திருவிளையாடலையே வெளிப்படையாகக் கூறியுள்ளார். எனினும், ' உகந்து ', 'இனிதருளி' என்பவை பாலனுகிய பரிசும் என்றுந் தொடரோடு இணைந்து வந்த ஒப்புமை கருதி அவை விருத்த குமார நிகழ்ச்சிகளைக் குறித்தனவெனக் கொண்டு அடிகள், விருத்த குமார பாலரான திருவிளையாடலையே குறிப் பிடடனரென உரைத்தாம். மேலும் ஆராய்தற்கிடனுண்டு. ' உகப்பே உயர்தல் ' என்பது தொல்காப்பியம். பாலகுமாரப் பருவங்களின் உயர்ந் தது விருத்தப் பருவமாகலின், ' உகந்து ' எனவும் குமாரப் பருவமே அன் பினைந்திணை இன்பந் துய்த்தற்கு உரியதாகலின், ' இனிதருளியும் ' என வுங் கூறினுர். சார்ந்து இயைவது சாரியை என ஆசிரியர் நச்சினுர்க் கினியர் கூறுதலானும், கடந்து உள்ளது கடவுள் என வருதலானும், பார்க்கில் என்பது பார் என நின்றதெனக் கொண்டு உரை வகுத்தாம். பார் என்பதற்கு உலகு எனப்பொருள் கொள்ளின் வற்றுமென்க. பால குமார விருத்தராவதே உலகியற்கையாகவும் ாண்டு விருத்த குமார பால ராய பருவங்கள் பெற்றமை பெருவியப்பென்பது தோன்ற ' பார் இரும் ' என்ற சொற்களை முன் தந்துரைத்தார். விருத்த விருந்தினனுகி, காதற் கிழமை யூட்டக் குமாரனுகிய அம்மட்டோடும் நில்லாது, அந்நுகர்ச்சியுறு

தற்கியலாத பாலனாகியமை தலைமகளுக்குப் பேரூடலூட்டியதென்க. ஈண்டு அடிகளாகிய தலைமகளுக்கும் அக்காட்சியே கிடைத்தமையின ஊடல

உகந்தருளி, இனிதருளி, பாலகனாகிய பரிசும் என்க. உகத்தல், உயர்தல் என்றது, ஈண்டு மூத்தலை. பாலகன் என்றமையின், மூத்தவன் இளையவன் என்பவற்றை வருவித்து உகத்தற்கும், இனிதருளற்கும உரியவர்களாகக் கொள்க மூத்தோனாகி உயர்ந்ததையருளி, இளையோனாகி இனியதையருளி, அப்பால் பாலனாயினன் என்க உயர்ந்தது - அறம்; இனியது - இன்பம். இனி, பாலனா என்றதில் அன் விகுதியை, உகந்தது இனிது என்பவற்றோடுங் கூட்டி, உகந்தனனாகி, இனிதினனாகி அருளி என்று உரைத்தலுமொன்று. இங்ஙனமாகுமேல, இறைவனின ஓருருவமே மூவகையாயிற்று என்பதை, இலகுவில அறியுமாறு, இங்ஙனம விகுதி கூட்டி உரைபபவைத்தனரென்க.

இவ்வரலாறு இரு திருவிளையாடல்களிலும் விரித்துக் கூறப்பட்டது. ஆண்டுக் காண்க. ஆனால் ஓரியூர் யாண்டையது என்பது புலப்பட வில்லை.

**பாண்டூர் தன்னில் ஈண்ட இருந்தும்**

என்னுமிவ்வடியினால், அக்கொள்கையும் பரிசும் முதலாயவை எல்லாம் பாண்டூரில் செறிய வீற்றிருந்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) பாண்டூர் என்னுமிடத்தில் (மேற்கூறிய அருள் தன்மைகள் யாவும்) செறிய வீற்றிருந்தும் எ - று

(வி - ரை ) இதுகாறுங் கூறிய திருவருள் இயல்புகளைப் புலப்படுத்தும் வரலாற்று ஓவியங்களோ, வேறு சாதனங்களோ பாண்டூரில் இருந்திருக்க வேண்டும் போலும்.

வேறு வரலாறுகள் யாதொன்றும் புலனாகவில்லை.

இதுகாறும் பயின்ற திருவருள் இயல்புகள் யாவற்றையும், அடிகள் பாண்டூரில் இருந்து நினைவுக்குக் கொண்டுவந்து அருள்பெற்றார் என்பது குறிப்பினால் உணரப்படும். அங்ஙனம் அவர்க்கு நினைவூட்டிய புறப் பொருள்கள் யாவை என்பது ஆய்தற்கிடமாகும்.

இனி, இதற்கு வேறு வரலாறுகள் கூறுவாருமுளர். அவையாவும் வெவ்வேறு இடங்களிலும் காலங்களிலும் நிகழ்ந்தனவாதலானும் பொருந்துமாறு காட்டியுரைக்கப்படுவனவாதலின், அவற்றை யாம் கொண்டிலம்.

இனி, இங்ஙனம உரைத்து முடியாக்கால், கொள்கை முதற்பரிசு இறுதியாகக் கிடந்தனவெல்லாம், மிக்க சிரமத்துடன் கொண்டு கூட்டாகத் தானேயாகிய தயாபரன் என்பதுடன் முடிக்கப்படுவதும், அத்திருப்பாடல் உணர்ச்சியான் உந்தப்பட்டு வந்த இயல்புக் கவியாகாது, வேண்டுமென்றே பிறரை மலைக்க வைக்கும் இலக்கண அடிமைக் கவியாதற்கேற்ற குற்றம் தங்குமாதலின், அம்முடிபு கொள்ளாது, ஈண்ட என இங்குப் பயின்ற

இதனோடு முடித்தலே அடிகள் கருத்தாகும், எனக் கடைப்பிடித்து இங்ஙனம் உரைத்தாம்.

இனி, கொள்கையும் (30) விளைவும் (32) தொன்மையும் (34) நன்மையும் (36) தொன்மையும (41) இயல்பும் (43) கொள்கையும் (45) பரிசும் (47) இயல்பும (49) தொன்மையும் (51) பண்பும் (53) கள்ளமும் (55) தன்மையும (67) பரிசும் (69) (ஆகிய இவைகள் எல்லாம் எனத் தொகுத்து) ஈண்ட இருந்தும் என வினைமுடிபு செய்க.

முன்னர் எழுந்தருளியும (28) என்பதுகாறும் தொகுத்தவற்றுடன், ஈண்டுவந்த இருந்தும் (70) என்தபனையும் தொகுத்து வைத்துக் கொள்க.

தேவூர்த் தென்பால் திகழ்தரு தீவில்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும் 72

என்னுமிவ்வடிகளிறற் கூறப்பட்ட வரலாறும் யாதொன்று புலப்படவில்லை. எனினும், ஈண்டுப் பயின்ற சொற்போக்கினைக் கொண்டு ஒருவாறு யூகித்து உரை கண்டுள்ளோம். அதனைக் கீழே காண்க.

(பொ - ரை.) தேவூர்த் தீவுகளுள் தென்பாகத்தே விளங்குகின்ற தீவொன்றில், முன் ஆண்ட அரசனது 'இயல் நிறைந்த கோலங்கொண்ட கொள்கையும் எ - று.

(வி - ரை ) தேவூர்த் தீவுகளுள்ளே தென்பால் தீவே, மற்றவற்றின் தலைநகராகி, அரசிருக்கைக் கிடமாயிற்று என்பதுபட "தென்பால் திகழ்தரு தீவில் - கோவார் கோலங்கொண்ட கொள்கையும்" என்றனர். கோவார் கோலங் கொள்ளுதற்குரிய இடம் இராஜதானி எனப்படும்.

கோலங்கொள்ளுதல் - சமயத்திற்கேற்ற வடிவங் கொள்ளுதல். அது,

" கொற்றவை கோலங் கொண்டோர் பெண்" (பரிபா. 11-100 )

என்றதனுலும் அறியப்படும். கோலத்திற்கு உருவம் என்னும் பொருளும் உண்டாகாலின் உருவங்கொண்டு என்பதும் ஈண்டுக் கொள்ளப்பட்டது.

இங்கே குறிப்பிட்ட கோ என்றது, முன்னே ஆண்டிருந்து பின்னர் மறைந்த அரசனே; அவன் மறையாவிடில், இறைவன் அவனது கோலங் கொள்ள வேண்டாமையின் என்க. அவனே இவனென்ன அத் தீவுனுள்ளார் எல்லாரும் கொள்ளுமாறு இறைவன் தோன்றினன் என்பது தோன்ற "ஆர்கோலம்" எனப்பட்டது. இறைவன் தானே கோவாகி அத்தீவினை ஆண்டிருப்பனேல், சோலங்கொண்டான் என்பது வற்றும் என்க. முந்திய அரசன் இறந்துபட்டதை ஊரவர் அறியின், இறைவன் அவனது கோலங் கொள்ளவேண்டியது பொருளாகாமையின், ஊரவர் அறியாவாறு அவன் மறைந்தான் எனவே கொள்க. அவ்வேந்தனது செங்கோற் சிறப்பும், அவனும அவன் குடிமக்களும் இறைவன் திருவடியிற பூண்ட பேரன்பும், இறைவனை அவன் கோலங்கொண்டு அந்நாடாளச் செய்தன என்க.

தேவூர்த்தென்பால் திகழ்தரு தீவில் என, அத்தீவின் பெயர் இன்ன தெனக் கூறுது வாளா கூறியமையால், அது தென்தேவூர் எனப்படும் போலும்.

தேன்அமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும் 74

என்றுமிவ்வடிகளினுல், திருவாரூரிலே ஞானம் அளித்தருளி யமை கூறப்படுகிறது.

(பொ - ரை) வண்டுகள் (இடம் பெயராது) தன்பால் விரும்பி வாழ்கின்ற சோலை சூழ்ந்த திருவாரூரில் மெய்யறிவூட்டிய நலமும் எ - று.

(வி - ரை.) அன்பர்களுக்கு அவர்கள் தன் திருவடியை விட்டுப் பெயராத முறையில் மெய்யறிவைக் கொடுத்தான் என்றபடி.

இனி, அடிகள் தம் செவ்விக்கு மேற்பட்ட காட்சியை இறைவன் பெருந்துறையில் அருளிச் செய்தமையால, அதனைப் பொறுக்கலாற்றுத அடிகள், திருவாரூர்க்குச் சென்று முறையிட்டமையால், இறைவன் அங்கே தன்னைப் பெருந்துறையாஞகவே காட்டி அடிகளது ஆற்ருமையையும் அமையுறச் செய்தான்; அடிகளும் ஆற்ருமை நீங்கிப் பெருந்துறை யானையே உறுதுணையாகப்பற்றி, அத்திருவாரூரன் திருவடிகளைப் புகழ்ந்து வரும் மெய்யறிவை இறைவனருளால் எய்தினர் என்க.

"புலையனேனை உன்கோயில் வாயிலிற் பிச்சனுக்கிஞய்"
எனவும், (திருச்சத. 96)

[ாண்டுக் கோயில் என்றது, பெருந்துறைக் கோயிலே. கோயில் திருப் பதிகம் என்பதில் கோயில் என்றதும் அதனையே குறிக்குமென்க. கோயில் மூத்ததிருப்பதிகம் என்பதில் மூத்தகோயில் என்றது, தில்லைக்கோயிலைக் குறிக்கும் என்பதையும் ாண்டு நினைவுகூர்க.]

"அச்சத்தாலே ஆழ்ந்திடு கின்றேன் ஆரூர் எம்பிச்சைத் தேவா"
(திருச்சத. 81)

எனவும் வருமிவற்றுல், என்னைப் பெருந்துறையில் பித்தனுக்கிஞய்; [பித்தனுக்குதல் - ஆற்றுதற்கரிய அருளை நல்குதலால் ஆற்றவியலாது மயக்குதல்.] யானும் எனக்கு இனியாது நிகழுமோ என அச்சத்தினுலே ஆழ்ந்திடுகின்றேன் என்று, அடிகள் திருவாரூரிற் சென்று முறையிட்டார் என்பதுணர்க.

"ஏரார் இளங்கிளியே..................என்று" (தசாங். 1.)

"..............பெருந்துறையான்............
அருவாய் உருவமு மாயபிரான் அவன் மருவும்
திருவாரூர் பாடி............" (தெள்ளே. 2.)

எனவரும் இவ்விரண்டும் திருப்பாக்களாலும், திருவாரூரில் இறைவன் தன்னைப் பெருந்துறையாஞகவே காட்டிஞன் என்பது வலியுறும்.

இன்னும், திருப்புலம்பலில், பெருந்துறையானையே உறுதுணையாகக் கொண்டு, அவன் மருவும் திருவாரூரிலே அவன் திடிவடிகளைப் புகழும் ஞானமும், குற்றாலத்தில் அவன் கழறகே கசிந்துருகும் ஆழ்ந்த பத்திமை யும் பெற்றார் என்பது திரண்ட கருத்தாகக் காணப்படலின் "ஞானந் தன்னை" என்றும், அம்மெய்யறிவினால் திருப்பெருந்துறையானை வெறாது அவன் திருவடி துதிக்கும் ஒழுகலாறு பூண்டமை குறித்து "நல்கிய நன் மையும்" என்றும் கூறினார். திருவாரூரில் அங்ஙனம் நல்காவிடின், பெருந்துறையானிடம் பூண்ட வெறுப்பு நீங்காதிருக்க, அதனால் மாபெருந் தீமையே விளைந்திருக்கும் என எச்ச முரைக்க.

இன்னும் தேனமர்சோலை என்னும் அடைச்சிறப்பால், அடிகளும் திருவாரூரை எய்தி ஞானத்தேன் உண்ணவிழைந்து ஓலமிட்டுப் பாடி அவன் திருவடி மலர்த்தேனை நுகர்ந்து ஆனந்தத்தே ஆழ்ந்து புறம் போகாது ஒரே தன்மையராய் ஆறுதலுற் றமைந்தார் என்பது விரித் துணரப்படுமென்க.

இடைமருது அதனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்த அப் பரிசும் 76

என்னும் இவ்வடிகளினால், திருவிடைமருதூரில் இறைவன் அன் பர்கள் உள்ளத்தில் தன் படிமப் பாதம் வளர்ந்து வருமாறு பதிய வைத்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) திருவிடைமருதூரில் கூட இருந்து (தலையின் மீது வைத்த பாதத்தின்) பிரதியாகிய பாதம் (உள்ளத்திலும் பதிய) வைத்த அக்கருணைத்திறனும் எ - று

(வி - ரை.) ஈண்டுதல் - கூடுதல். அடியவர் சென்னியின்மிசை வைத்த பாதம், மற்று அவர் உள்ளத்திலும் தோன்றியதனால், அது படிமப் பாதம் எனப்பட்டது. படிமம் - பிரதி.

இனி, இங்கே அடிகள் சென்னியின்மிசைத் திருவடி வைக்கப்பட்டதும் உய்த்துணர்க.

"மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதோறும் மிகவலறிச் சிவபெருமான் என்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமாறு
அருள்எனக்கிங்கு இடைமருதே இடங்கொண்ட அம்மானே"
(திருவேசறவு. 9.)

என்று விண்ணப்பித்தபடியே,

"பந்தம் அறுத் தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த இடைமருதில் ஆனந்தத்தேன் இருந்த
பொந்தைப் பரவி" (திருப்பூவல்லி. 2)

எனக் கூறிப் பெற்றுக்கொண்டமை மேலதனை வலியுறுத்துமென்க.

இனி,

" வாடா முலைமங் கையும் தா னும் மகிழ்ந்து
ஈடா உறைகின்ற இடைமரு தீதோ " (சம்பந். முதல். இடை. 1.)

எனவும்,

" அன்பிற் பிரியாது அவளோடும் உடனாய்
இன்புற றிருந்தான் இடைமரு தீதோ " (ஷெ. ஷெ. ஷெ. 6.)

எனவும்,

" எங்கும் எழிலார் மறையோர் கணம் முறையால் இடைமருதில் "
(ஷெ. இரண். ஷெ. 1.)

எனவும்,

" தேசம் புகுந்து ஈண்டியோர் செம்மை யுடைத்தாய்ப்
பூசம் புகுந்து ஆடிப் பொலிந்தழ காய
ஈசன் உறைகின்ற இடைமரு தீதோ " (சம்பந் முதல். இடை. 5 )

எனவும் வருந் திருப்பாக்களால், தேசம் ஈண்ட, மறையோர் கணம் ஏத்த, அம்மையோடும பூசம புகுந்தாடி இருந்தான் என்று கூறியருளப்பட்டிருத்தலான், இடைமருதில் தேசமெலாம ஈண்ட இருந்து என்றதனையும் அடையாக வருவித்துரைக்கினும் உரைக்க.

ஏகம் பத்தின் இயல்பாய் இருந்து
பாகம் பெண்ணோடு ஆயின பரிசும் 78

என்னும் இவ்வடிகளால், காஞ்சிமா நகரில் அம்மையோடும் புணர்ந்திருந்தமை கூறப்படுகின்றது

(பொ - ரை.) காஞ்சிமா நகரில் இயல்பாக எழுந்தருளியிருந்து இடப்பாகம் உமையம்மையுடன் கூடி ஆயின தன்மையும் யும் எ - று.

(வி - ரை ) கைலையிலே உமையம்மை விளையாடல் கருதி, இறைவன் பின்புறமாக ஒளிந்துவந்து அவனிரு கண்களையும் இறுகப் பொத்துதலும், எல்லா உலகங்களும் ஞாயிறு முதலாய ஒளியுடைப் பொருள்களும் இருண்டுபோக, உயிர்கள் பலகாலம் ஒளியின்றி வருந்தலாயின. இப் பாவந் தீரக் காஞ்சிபுரத்திற்குச் சென்று தவம் புரியுமாறு இறைவன் இறைவியைப் பணித்தலும, அவளும் அங்கே சென்று, கம்பையாற்றங் கரையிலே சிவலிங்கம் ஒன்றை உண்டாக்கி வழிபாடாற்றி வருநாளிலே, இறைவன் திருக்கருத்தால் கம்பாநதி பெருகிச் சிவலிங்கத்தைக் கடுகி யீர்ப்ப, அன்னை அதுபொறாது அவ்விலிங்கத்தை இறுகத் தழுவிக் கொண்டனள். அப்போது இறைவன் வெளிப்பட்டு அம்மையைப் புணர்ந்து தன் இடப்பாகத்தே அமர்த்திக் கொண்டான் எனக், காஞ்சிப்புராணம் தழுவக் குழைந்த படலத்துட் கூறப்பட்டது.

அங்குள்ள கோயில்களிலே எழுந்தருளுவித்த திருவுருவங்களுள் ஒன்றேனும் சத்தி திருவுருவம் அமையப்பெறாதாக வில்லை. சத்திக்குரிய

பூசனையனைத்தும் பாவனை முறையில் தீர்த்தத்திலேயே ஆற்றப்பெற்று வருகின்றன அங்ஙனமாதலின், அன்னையும் அப்பனும் வெவ்வேறு திருவடிவம் கொண்டிலர் என்பதுபடப் "பாகம் பெண்ணோடு ஆயின பரிசும்" என்றும், கைலைக்கண் வெவ்வேறு திருவுருவினராக இருந்து விளையாடிய காரணத்தால், உலகுக்கு இருளும தனக்குப் பிரிவும் நேர்ந்தமை கருதிய அன்னை, இறைவனோடு ஓருருவம் பெறறுக்கொள்ளுதலே சிறப்புடையதெனத் திருவுளங்கொண்டு பூசித்தாளாதலின், விகாரத்தாலாகிய இருவேறுருவின் நீங்கி, இயல்பால் நிகழும் ஓருருவில் அடக்கிக் கொள்ளப்பட்டமை உணர்நது "இயல்பாய் இருந்து" என்றுமுரைத்தார் என்க.

இனி, "ஏகம் பத்தறை எந்தாய் போற்றி" (போற்றி. 151.) [எந்தை - குருபரன்.] என வருதலினாலும்,

"படமாக என்னுள்ளே தன்னிணைப் போ தவையளித்திங்
கிடமாகக் கொண்டிருநது ஏகம்பம மேய பிரான்" (திருப்பூவல்லி. 14.)

என வருதலினாலும்,

"தேசமெல் லாம் புகழ்ந் தாடுங்கச்சித்
திருவேகம்பன் செம்பொறகோயில்படி" (திருப்பொற். 4.)

என வருதலினாலும், அடிகள் காஞ்சிமாநகரில் இறைவன் திருவருள் பெற்றமை உணரப்படும் என்க.

திருவாஞ் சியத்தில் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும் 80

என்னுமிவ்வடிகளினால், திருவாஞ்சியம் என்னுமிடத்தில், நாக கன்னிகை ஒருத்தியுடன் மகிழ்ந்தமை கூறப்படுகிறது.

(பொ - ரை) திருவாஞ்சியம் என்னுடத்தில் மிகு புகழ் உண்டாகும்படி வீற்றிருந்து, நல்லமணம் நிரம்பிய கூந்தலையுடையவளாகிய ஒரு நாக கன்னிகையுடன் கலந்து மகிழ்ந்த அழகும் எ - று.

(வி - ரை.) இவ்விடத்தில், ஒரு, காலத்தில், நாககன்னிகை ஒருத்தி, சிவலிங்கப் பெருமானைப் பூசித்து வருகையில் தழுவிக்கொள்ள, அவளது காதல் மிகுதி கண்ட இறைவனும் எழுந்தருளி அவளைத் தன்னுடன் கலந்து மகிழ்ந்தான் என்ப. இவ்வரலாறு அத்தலத்து வடமொழிப் புராணத்துட் காணப்படுகிறது.

இனி, அக்கன்னியை அம்மையின் கூற்றிலே அடக்கிக்கொண்டமையின், அவ்வன்னைக்கு வாழவந்த நாயகி என்னும் பெயரும், அவளும் மகிழ்ந்து இன்பம் உதவியமையின், ஆங்குள்ள தீர்த்தத்திற்குச் சுகவாஞ்ச தீர்த்தம் என்னும் பெயரும், அவ்விடத்தில் அவளுடைய இச்சை நிறைவேறியமையால் அவ்விடத்திற்குத் திருவாஞ்சியம் என்னும் பெயரும் உளவாயின என்ப. வாஞ்சை -

தலைவி கூந்தல் தலைவனுக்குரியது. இதனை,

" ஒரூஉ நீ எங்கூந்தல் கொள்ளல் " (கலி. 87. 1.)

என்பதனானும்,

" யாரிவன் எங்கூந்தல் கொள்வான் " (கலி. 89. 1.)

என்பதனானும்,

" கூந்தல் தொடேல் " (சீவக. 1029.)

என்பதனானும் அறிந்து கொள்க. அந்நாக கன்னிகையை மருவார் குழலி என்றும், அவளொடு மகிழ்ந்ததும் என்றது, மகிழ்ந்த வண்ணமும் என்றும் கூறியவாற்றால், அவள் கூந்தற்கு இறைவன் கிழமை பூண்டவனாயினன் என்பது பெறாும்.

இனி, மகிழ்ந்ததும் என்றது மகிழ்ந்தவண்ணமும் என, அம் மகிழ்வின் அழகினையும் புலப்படுத்தியதனால், அவளை மணந்து அவள் கூந்தற்பாயலிலே தலைமகன் துயிலாறனன் என்பதும், இறைவன் மார்பு அவட்கு உரியதாக அவளும் அவனைபோல் அதன்கண் துயின்றுள் என்பதும், இஃதுணர்ந்த தலைமகள மிக்க பொருமை எய்தினள் எனபதும் கொள்ளப்படும். தலைவன் மார்பு தலைவிக்குரியதாதலை

" மருந்து பிறிதில்லை அவன் மணந்த மார்பே ",

" மாரபு உரித்தாகிய மறுவில நட்பே " (குறுந். 68. 278.)

என வருமிவற்றானும் அறிந்துகொள்க.

ஈண்டு, அடிகள் அருள் பெற்றமைக்கு அகச்சான்றுகள் காணப் படவில்லை. ஒருவாறு உய்த்துணர்க.

சேவகன் ஆகித் திண்சிலை ஏந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும் 82

என்னுமிவ்வடிகளினால், வில்லேந்திய வீரன் ஒருவனாகித் தன் உள்ளக் கருத்தினை வெளிப்படுத்திய இயல்பு கூறப்படுகின்றது

(பொ - ரை ) வீரனாய்த் தோன்றி, வலிய வில்லைத் தோளில் ஏந்திக்கொண்டு, தன்னுட்கிடைகள் பற்பலவற்றையும் காட்டிய இயல்பும் எ - று.

(வி - ரை.) மதுரையில், இறைவன் திருவடியிற் பேரன்பு பூண்டவனும், செங்கோல் வேந்தனுமாகிய ஒரு பாண்டியனைப் போர் செய்து வெற்றிபெறுதற்கு ஆற்றல் இலலாத சோழமன்னன் ஒருவன், அவனையும் அவன் நாட்டவரையும் ஒருங்கே அழிக்குமாறு அமணமுனிவர் ஒருவர்பால் முறையிட்டு, அவர்மூலம மந்திரவலியால் ஒரு யானையை உண்டாக்குவித்து, அதனைப் பாண்டிய நாட்டின்பால் ஏவ, அதுவும் அங்ஙனமே சென்றது. அஃதுணர்ந்த பாண்டியன், அதனை எதிர்க்கும் வகை அறியானாய்ச் சோமசுந்தரப் பெருமானை அடைக்கலமாக அடைந்து முறையிடுதலும், " யான் உதவிசெய்ய வருவேன் ; நீ அஞ்சாதே " என

ஆகாயத்தே ஒலி கேட்டது. அவனும் அச்சமகன்று இறைவன் கட்டளைப் படி மதுரைக் கிழக்குவாயில் மதிலின்கண் பகைவர்பால் இலக்குவைத்து அம்பெய்தற்கு ஏற்றவாறு ஓர் அட்டாலை மண்டபம் உண்டாக்கினன். இறைவனும் போர்வீரனாய் வில்லேந்தி அமமண்டபத்திற்குப் போய் இருந்து அவ்வானையை இலக்குத் தவறாது நரசிங்காஸ்திரத்தால் எய்தான். உடனே யானை ஆற்றாது ஓடி இலத்தி சொரிந்து உயிர் நீத்தது. யானையும் இலத்தியும் ஆங்கு மலைகளாகக் கிடந்தன என நம்பி திருவிளை யாடல் கூறும்.

இவ்யானைக்கு அழிவைச் செய்த நரசிங்கப்பெருமானைக் கண்டு போற்றி இவ்வுலகம் உய்யவேண்டும் என விரும்பிய பாண்டியன், யானை மலைமேல் நரசிங்கப்பெருமானையும் பிரதிட்டை செய்தான்.

அன்றுதொடங்கி இறைவனும் அட்டாலைச் சேவகன் எனச் சிறப்புப் பெயர பெற்றான்.

யானைமலைக் காட்சியால், மெய்யன்பர்பால் மாயவித்தைகள் பயன் பெறுவாய் வலிகுன்றும்; அவரைப் பகைத்துத் தீங்கு செய்தாரும் கல்லாவர் என்பதும், இலத்திமலையால் தீங்கு செய்ய வந்தார் இறக்கும் போது படும் துன்பம இதுவாகும் என்பதும், அவ்வானை மலைமேல் பிரதிடடை செய்யப்பட்ட நரசிங்கப்பெருமானால், அன்பர்க்குத் தீங் கிழைப்போர் இதனால் கொல்லப்படுவர் என்பதும் ஆகிய பல உட்கிடைகள் காட்டப்படுதலினால் "பாவகம் பலபல காட்டிய பரிசும்" என்றும், வில்லேநதிய கையோடு அட்டாலைச் சேவகனாகி இன்றும் விளங்குகின்றான் ஆதலின் "சேவகனாகித் திண்சிலை ஏந்தி" என்றும், நரசிங்காஸ்திர வேகத்தினைத் தாங்கும் வலிபடைத்த சிலையாதலின் "திண்சிலை" என்றும் கூறினர் என்க.

கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும் 83

என்னும் இவ்வடியால், மேற்கூறியவை எல்லாம் கடம்பூரில் இடம் பெற இருந்தமை கூறப்படுகின்றது

(பொ - ரை.) கடம்பூரில் மேற்கூறியனவெல்லாம் இடம்பெறு மாறு வீற்றிருந்தும் எ - று

(வி - ரை.) பாண்டூரில் ஈண்ட இருந்தமையும், தென் தேவூரில் கோவார் கோலங் கொண்டதுமுதல் சேவகனாகி... . பாவகம் பலபல காட்டியமை இறுதியாக உள்ளன வெல்லாமும் இடம்பெறக் கடம்பூரில் இருநதான் என்க.

இங்ஙனமெல்லாம் திருவருள் செய்தல் இறைவற்கு இயல்பாதலால் அது தோன்றக் கடம்பூரில் விடங்கனாக இருத்தலினாலும், அன்பர்களுடைய செவ்வி முதிர்ச்சிக்கேற்ப இறைவனும் அருள் மிக்கோனாக—இனியனாக—காட்சிக்கெளியனாகத் தோன்றுதலினாலும், தென்தேவூராரும், இறைவியும், நாககன்னிகையும் பாண்டியனும், பிறரும் ஆகிய எலலாரும், இடம்பெற்று

நலன் நுகர்ந்தமை கண்டு, அவர் ஒவ்வொருவரும் ஏனையோரும் தனித் தனியே பிற அன்பர்களைப்போல் தாமும இடமபெறலாம் எனத் துணிந்து இடம பெறறு நுகர்தலானும " இடம்பெற இருந்தும " என்றார்

ஈண்டு "இடம்பெற" என்னுந்தொடர, முன்வந்த மொழிகள் யாவற்றையும் மேற்கூறிய இருவகைப் பொருள்களையும் கொண்டு முடிநதமை கண்டு இன்புறுக.

இனி, அடிகளும் அவ்வடியார்களைப்போலவே தில்லைக்குப் போவதற்கு இடமபெறுமாறு கடம்பூரில இருநதமையையும் உய்த்துணர்க.

இனி, கொள்கையும் (72) நனமையும் (74) பரிசும (76) பரிசும் (78) வண்ணமும (80) பரிசும் (82) இடம்பெற இருந்தும என இப்பகுதியுட் பட்டவற்றை முடிக்க.

முன்னர்த் தொகுத்த வினைகளோடு இதனையுங் கூட்டி ஈண்ட இருநதும, இடம்பெற இருநதும என வினை தொகுத்துவைக்க.

ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும் 84

என்னுமிவ்வடியினால், ஈங்கோய் மலையில் எழிலது காட்டியமை கூறபபடுகின்றது.

(பொ - ரை) ஈங்கோய்மலையில் தன் அழகுமிக்க மரகதத் திருமேனியைக் காட்டியருளியும் எ - று.

(வி - ரை)

" எழிலார் சுனையும் பொழிலும் புடைசூழ்
ஈங்கோய் மலையீசன்" (ஞானசம். முதலாம் ஈங்கோய் 11)

என்றனர் ஞானசம்பந்தர். இங்கு இறைவன் பெயர் மரகதாசலர் என்பது. அம்மலையும், பொழில் முதலாயவற்றினதும, அன்னையின் திருமேனி யினதும் பசுமை நிறத்தால பச்சைமலை எனப்பட்டது. அம்மலையினதும் அன்னையினதும் பச்சொளி, இறைவன் திருமேனியில் ஊடுருவிப் பாய் தலினால், ஒரு தனியழகு புலப்பட்டமையால் "எழிலது காட்டியும" என்றார். அஃதாவது; குறிஞ்சியாதலின், கூதிர்ப்பருவமும் நள்ளிருட் போதும் இரவுக்குறியும் அன்ன பிறவுமாதியவற்றால் எய்திய எழில் என்க.

பொன்வண்ணமேனி பிறவற்றின் சார்பால் பசிய நிறங்கொண்ட தாகலின், தமக்கும் சார்புடையனாதற்கு உரியன் என்னும் கருத்தும் தோன்றிற்று.

ஐயாறு அதனில் சைவன் ஆகியும் 85

என்னுமிவ்வடியினால், திருவையாறு என்னுமிடத்தில் சைவனாக வந்து காணிப் பிணக்கைத் தீரத்தமை கூறப்படுகிறது.

(பொ - ரை.) திருவையாறு என்னுமிடத்தில் சைவமறையோனாகியும் எ - று.

(வி - ரை.) முன்பு, திருவையாற்றுக் கோவில் அர்ச்சகரும், ஆதி

சைவ மறையோருமாகிய இருபத்து நால்வருள் ஒரு மறையோன், மனைவியையும் மைந்தனையும் விடுத்துச் சிலகாலம் பிரிந்து காசிப்பதியில் வாழ்ந்தானாக, ஏனைய மறையோர், அவன் மீண்டு வாராமை கண்டு, அவனுக்குரிய காணி முழுவதையும் தம்முட் பங்கீடு செய்துகொண்டனர் ; அதுகண்ட அவன் மனைவி மிக வருந்தி இறைவன்பால் முறையிட்டு வருவாளாயினள் ; அப்போது அம்மறையோன் மீண்டும் தன்னிடம் வந்து சேர்ந்தான், அதுகண்ட ஏனைய மறையோர், அவன் பங்கு அனைத்தையும் கொடுத்துத் தமமைப் பொறுக்குமாறு இரநது நிற்ப, அவனும் அவ்வறே செய்து தன்னில்லத்தில் வீறறிருந்தான். பின்னர் அவனையே முற்றிலும் ஒத்த மறையோன் ஒருவனும ஆங்கு வந்தனனாக, அவ்விரு மறையோர்க்கும் இடையே வழக்குண்டாயிறறு. இருவரும் தத்தம் முறியோலை காட்டி வாதித்தனர். இரு முறியோலைகளும் பெருமபாலும் தம்முள் ஒத்திருப்பினும், சிற்சில வேறுபாடுகள் இருப்பனவாகக் கண்டு, பொய்யை மெய்யென்றும், மெய்யைப் பொய்யென்றும அவையத்தார் ஒருமித்துக் கூற, அதுகாலை ஆங்குவந்த மறையோன், தான் காட்டிய முறியோலையே மெய்யானது என நிறுவி மறைந்தான என வடமொழிப் புராணங் கூறும்.

"ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானாய்"

(திருவம்மானை. 13.)

எனவும்,

"அத்தன் ஐயாறன் அம்மானைப் பாடி" (திருப்பொற். 1)

எனவும்,

"கையால் தொழுது......ஐயாற்
றரசே ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே" (ஆசைப் 8)

எனவும் வருவனவற்றால், ஐயாறனிடம் அடிகள் அருள் பெறறார் என்பது ஈண்டும் உணரப்படும்.

துருத்தி தன்னில் அருத்தியோடு இருந்தும் 86

என்னுமிவ்வடியினால், திருத்துருத்தியில், அன்னையுடன் மணக் கோலங்கொண்டிருந்தமை கூறப்படுகிறது.

(பொ - ரை) திருக்குத்தாலம் என்னுமிடத்தில் அன்னையோடு அன்புற்றமர்ந்திருந்தும் எ - று.

(வி - ரை.) இவ்விடம் கும்பகோணத்திற்கு அணித்தாக உள்ளது. இறைவன் பெயர் உத்தரவேதேசுவரன் என்பது. இறைவி பெயர் முகிழாம்பிகை என்பது. உத்தரவேதம என்பது, கடலினின்றும் மீட்டபின்னர் வழக்கிலிருந்து வருவதாகிய அகத்தியனை ஆகமம். உத்தரகோசாகமம் என்பதுபோல என்க. பகற்பொழுதெல்லாம் அன்னையுடனிருந்து திருத்துருத்தியில் அடியவர்க்கு ஆகமப்பொருளை அருளிசெய்து வந்தமையால் ஆங்கு அவன் உத்தரவேதேசுவரன் எனப்பட்டான. அவன் உரைக்கும் பொருளையே அவன் பாங்கில் உறைந்து கேட்டுவருதலின்,

அன்னை யுவகையுற்று வாராநின்றுளாதலின், அவள் முகிழாம்பிகை எனப்பட்டாள். முகிழாம்பிகை - நகைமொக்குள் உடைய தலைவி.

துருத்தியில் பகல்முழுதும் ஆகமப்பொருள் உரைத்து, இராமுழுதும் திருவேட்குடிக்குச் சென்று மணக்கோலங்கொண்டு மணவழகனுகி இறைவனும், காதறகேண்மையுடன் நறுமண நங்கையாகி, இறைவியும் அமர்ந்திருப்பாராயினர். இவ்வரலாற்றினை, ஞானசம்பந்தர் மூன்றுந் திருமுறையில், திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் என்றருளிய பதிகத்தானும் உணர்ந்துகொள்க. இவ்வரலாற்றினுலே அவ்வாகமம் அன்பின் ஐந்திணைப்பொருள் முதலிவந்ததென்பது வலியுறுத்தப்படும்.

இத்துருத்தி காவிரியாற்றின் நடுவில உள்ளது. ஆற்றிடைக்குறை.

"பொன்னியின் நடுவு தன்னுள் பூம்புனல் பொலிந்து தோன்றும்
துன்னிய துருத்தி" (அப்பர் 4-ஆம் திரு. திருத்துருத்திப் பதிகம் 3)

எனக் கூறுவதனுலும் அதனை அறிக. அருத்தி - அன்பு, விருப்பமுமாம்.

"திருத்துருத்தி மேயானைத் தித்திக்கும்.. கண்டேனே"
(கண்டபத். 3.)

என்பதனுல், ஆங்கு அடிகள் அருள்பெற்றமை உய்த்துணரப்படும்.

திருப்பனை யூரில் விருப்பன் ஆகியும் 87

என்னுமிவ்வடியால், திருப்பனையூரில் அன்பர்க்கு அருள் செய்யும் விருப்பமுடையோனுய் இருந்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) திருப்பனையூரில் விருப்பமுடையவனுகியும் எ - று.

(வி - ரை.) விருப்பம் - அன்பு, ஆசை. ஆங்குள்ள இறைவன் சௌந்தரேசுவரன் எனப்படுதலால், எல்லாராலும் விரும்பப்படுதற்குரிய அழகன் என்றுரைத்தலுமாம்.

ஈண்டு, அடிகள் அருள்பெற்றமைக்கு இந்நூற் சான்றுகள் பெறப்படா விட்டாலும், விரும்பியருளப்பட்டமை உய்த்துணரப்படுமென்க.

கழுமலம் அதனில் காட்சி கொடுத்தும் 88

என்னுமிவ்வடியினுல், சீகாழியில் காட்சி கொடுத்தமை கூறப் படுகிறது.

(பொ - ரை) சீகாழி என்னுமிடத்தில் தனது திருக்கோலங் காண்பித்தும் எ - று.

(வி - ரை) உயிர் தூய்தாக அதன்பாலிருந்த அழுக்கை நீங்கக் கழுவி, அவ்வுயிரைப் புரக்குமிடம் கழுமலம் எனப்பட்டதென்க. அழுக்கினைக் கழுவியகாலையே அவன் காட்சி கிடைக்குமாதலின் "காட்சி கொடுத்தும்" என்றனர்.

இனி, கழுமலத்தைப்பற்றி இந்நூலுள் வேறொன்றுங் காணப்படவில்லை

யேனும், அடிகள் மாசு நீங்கக் கழுவப்பட்டமையும், இறைவனுடைய காட்சியைப் பெற்றுக்கொண்டமையும் உய்த்துணர்க.

கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும் 89

என்னுமிவ்வடியினால், திருக்கழுக்குன்றில் தப்பாமல் இருந்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) திருக்கழுக்குன்றில் தப்பாதிருந்து எ - று.

(வி - ரை.) அன்பர்களுக்கு யாண்டு வழுக்கினும் ஈண்டு வழுக்கிலன் என்றபடி வழுக்குதல் - தவறுதல். மறத்தலுமாம்

அடிகட்கு வழுக்காதிருநதமை கழுக்குன்றப் பதிகத்தாலுணரப்படு மென்க.

புறம்பயம் அதனில் அறம்பல அருளியும் 90

என்னுமிவ்வடியினால், புறம்பயத்தில் பல அறங்களையும் அருளிச் செய்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) புறம்பயம் என்னுமிடத்தில் பலவகைப்பட்ட அறங்களையும் அறிவுறுத்தியருளியும் எ - று.

(வி - ரை.) அறம் - அறநூற்பொருள் இல்லற துறவறங்களின் கூறுபாடுகள் பலவாதலின் "அறம் பல" என்றார்.

"புத்தகங் கைக்கொண்டு......புறம்பயம் நம்மூரென்று போயினாரே"
(ஆருந். புறம்ப. திருத்தாண் 5.)

என அப்பர் சுவாமிகள் கூறுதலானும், ஆங்கு இறைவன் சாட்சிநாதே சுவரன் எனப்படுதலானும் அவ்வுரை வலியுறும். மேற்காட்டிய அப்பர் சுவாமிகள் திருப்பாடற் பகுதியைக் கொண்டு, அப்புத்தகம் அகத்திணை புறத்திணைகளை யடக்கியது என்பது பெறப்படும்

இனி, "செல்வப் புறம்பயம்" எனவும், "பொன்விளை புறம்பயம்" (ஏழாநதிருமுறை) எனவும் அது சிறப்பிக்கப்படுதலின், அச்செல்வங்களைக் கொண்டு அறஞ் செய்தருளியும் என உரைக்க அமையுமேனும், அறநூல் இல்வழி இலதாயும், உள்வழி உளதாயும் அஃது அமைதலின் அவ்வுரை கொள்ளற்க.

குற்றா லத்துக் குறியாய் இருந்தும் 91

என்னுமிவவடியினால், திருக்குற்றாலத்து அகத்தியர் கருதிய வாறு திருமால் உருக் குறுகிச் சிவலிங்கமாக இருந்தமை கூறப் படுகிறது.

(பொ - ரை ) திருக்குற்றாலத்தில் (அகத்தியமுனிவர்) கருத்தினால் (அங்ஙனமே நெடியோன் உருக் குறுகிச் சிவலிங்கம்) ஆகி இருந்தும் எ - று.

(வி - ரை.) குறி - கருத்து, நோக்கம். இவ்வரலாறு அத்தல புராணத்துட் கூறப்பட்டது. இனி, குறி என்றதற்குத் தியானம் எனப் பொருள்கொண்டு தியானிக்கத்தக்கதாய் இருந்தும் எனினுமமையும்.

"குற்றாலத்தெங் கூத்தா போற்றி" (போற்றி. 156.)

எனவும்,

"குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரைகழற்கே
கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே"
(திருப்புலம்பல் 3.)

எனவும் அடிகள் மேற்கூறுதலின், குற்றாலத்தில் அடிகள் இறைவன்பால் அருள் பெற்றமை ஓர்ந்துணர்க.

இனி, முன்னர்த் தொகுத்த வினைகளோடு இடம்பெற இருந்தும் (83), காட்டியும் (84), ஆகியும் (85), இருந்தும் (86) ஆகியும் (87), கொடுத்தும் (88), இருந்தும் (89), அருளியும் (90), இருந்தும் (91) என, இவற்றையுங் கூட்டி வினைதொகுத்து வைத்துக்கொள்க.

அந்தம் இல் பெருமை அழல்உருக் கரந்து
சுந்தர வேடத்து ஒருமுதல் உருவுகொண்டு
இந்திர ஞாலம் போல வந் தருளி
எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத்
தானே ஆகிய தயாபரன் எம்இறை 96

என்னுமிவ்வடிகளினால், இதுகாறும் கூறியவற்றைத் தொகுத்துத் தயாபரனுக்கு அடையாக்கி முடிக்கின்றார்.

(பொ - ரை) இங்ஙனமெல்லாம் முடிவற்ற பெருமைத்தாகிய தன் அழலுருவத்தை உள்ளடக்கி, அழகிய வேடத்துடன் முதன்மைத்தாகிய ஓருருவத்தை மேற்கொண்டு, இந்திரசால வித்தையினால் தோன்றுவதுபோல அடியவர்முன் தோன்றிவந்தருளி, உவ்வகைப்பட்டாரதும் எவ்வெவ்வியல்பினையும் தன்னிடத்தில் அடங்குமாறு செய்து, தான் ஒருவனே மிகுந்த பொருளாக ஆகிய கருணையாளனாகும் எம் தலைவன் எ - று.

(வி - ரை) இங்ஙனமெல்லாம் என வருவித்துரைக்க. அழல் உருவென்பதற்கு முழுத்தழல்மேனி என்றதற்கு உரைத்தாங்கு உரைக்க.

வேடம் - சமயத்திற்கு ஏற்றவாறு கொள்ளப்படும் கோலம். அது கண்டார் கருத்தைக் கவர்வதோர் பேரழகுடைத்து என்பது தோன்றச் "சுந்தர வேடத்து" என்றும், அங்ஙனம் கோலங்கொள்ளுதல் தனக்கன்றிப் பிறர்க்காகாது என்பதும், முன்னர்க் கூறப்பட்டுவந்த உருவபேதங்கள் எல்லாம் உண்மையில ஒன்றே என்பதும், அவ்வேடத்தால் ஆட்கொள்ளப் புகில் ஆட்கொள்ளப்படுவன தன்வழியாக அடங்கும் என்பதும் தோன்ற "ஒரு முதல் உருவுகொண்டு" என்றும், தன்னிற் பிற அடங்குவன

வன்றித் தான் எவற்றினும் அடங்கப்பெறுன் என்பது தோன்றத் "தானேயாகிய" என்றும், அங்ஙனமெல்லாம் எளிவந்தருளுவது தன் கருணையால் என்பது தோன்றத் "தயா" என்றும், தன் கருணை ஒன்றே கொள்ளப்பட்டவாறு அருள்செய்யவல்லது என்பது தோன்றப் "பரன்" என்றும், எமக்கும் அவனே தலைவனுவான் ஆதலால், யாமும் இங்ஙன மெல்லாம ஒவ்வோராற்றுன் அவன் வழிப்பட்டார்போல ஓராற்றுன் அவன் வழிப்படுதலும் வேண்டும்; அவன் அங்ஙனம் படுத்தலும் வேண்டும் என்பது தோன்ற "எம்இறை" என்றும் கூறினர் என்க. தயாபரன் எம்மிறை என அடுக்கி மொழிந்தார், அவன் புகழ்கள் எல்லாமும், கருணையும் இழிவுடையன என்னுந் துறைப்பொருள் தோன்ற அவ்வத்தலங் கள்தோறும் மங்கையும் தானுமாக வந்தருளிய உருவத் திருமேனிகள் யாவற்றையும் முழுத்தழல் மேனி கரந்துவந்தருளி எனவும், ஆங்காங்குச் செய்த அருட்செயல்கள் யாவற்றையும் "எவ்வெவர்......அப்பரிசதனுல் ஆண்டுகொண்டருளி..... தயாபரன்" எனவும் தொகுத்தனர்.

மங்கையும்தானும் வந்தருளி, எங்ஙனமெனின், இங்ஙனமெல்லாம் முழுத்தழல் மேனி கரந்து வந்தருளி எனக்கொள்க.

அனபர்கள், ஆண்டான் அடிமைத் தொடர்புடையராகவும், தந்தை மைந்தன் தொடர்புடையராகவும், தோழமைத் தொடர்புடையராகவும், காதலன் காதலித் தொடரபுடையராகவும் ஒழுகலாற்றில வேறுபாடுடைய ராதலின், "எவ்வெவர் தன்மையும்" என்றும், அவ்வவர்க்கேற்ப ஆண்டாளுகவும, தந்தையாகவும், தோழனுகவும, காதலனுகவும் வந்து தன்னுட்படுத்தினுன் என்பார், "தன்வயிற் படுத்து" என்றும கூறின ரென்க.

இனி, கரந்து, உருவுகொண்டு, வந்தருளி, படுத்து, ஆகிய தயாபரன் என்க.

முன்னர்த் தொகுத்த வினைகளோடு இருந்தும் (91), படுத்து (95), ஆகிய தயாபரன் என, இவற்றையுங் கூட்டி வினைதொகுத்து வைத்துக் கொள்க.

இனி, மன்னுமாமலை மகேந்திரமதனில் சொன்னவாகமம் தோற்று வித்தருளியும் என்பது முதல், எவ்வெவர் தன்மையும் தன்வயிற்படுத்து என்பது வரையுமுள்ள பெரும்பகுதி, தயாபரனுடைய கீர்த்திகளாக நின்று அவனை விசேடித்தமை தானே பெறப்படும்.

சந்திர தீபத்துச் சாத்திரன் ஆகி
அந்தரத்து இழிந்(து)வந்து அழ(கு)அமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்(து)இருந் தருளியும் 99

என்னுமிவ்வடிகளால், இங்ஙனமெல்லாம் பிறர்க்கருள்செய்து, தலைவிக்குக் கொடுமைசெய்து பெருங்கீர்த்தி பெற்ற அத்தயாபரன், சந்திரதீபத்து ஆசிரியனுகத் திருப்பாலையுள் இருந்தமை கூறப்படு

(பொ - ரை ) சந்திரதீபத்தில் ஆசிரியனாகி ஆகாய வழியாக இறங்கிவந்து அழகு வீற்றிருக்கின்ற பாலையின் கண்ணே அவ்வழகிய இயல்போடு படிந்திருந்தருளியும் எ - று.

(வி - ரை ) சந்திரதீபம், ஒன்பது வருடங்களுள் ஒன்றாகிய குரு வருடத்திற்கு வடபால் அணித்தாயுள்ளதொரு தீவாகும்.

சாத்திரன், கலைவல்லோன், ஆசிரியன் என்றபடி. சந்திரதீபத்தின் இயல்பெலலாம் உற்றறிந்த ஆசிரியன் என்க.

சந்திரதீபத்துச் சாத்திரனாகி என்றார்; குருவருடத்திற்கு அணித்தாக வுள்ளதீவு சந்திரதீபம் எனவே, வடபாலுள்ள குருவருடம் முதலியவற்றோடு தானும ஒருபோக பூமியாம் என்பது பெறப்படுதலின், ஆண்டுள்ள இன்பமெல்லாம் நீயிர முறறப் பெறுமாறு ஈண்டுத் தருவேன் என்றான் என்பது தோன்ற.

தண்ணார்தமிழ், சந்திரதீபத்துச் சாத்திரம், கந்தருவ வழக்கம் என்பன ஒருபொருட்சொற்கள். (தமிழ - இலக்கணம) பாண்டியன் வமசம் சந்திர வம்சம எனப்படுதலும், இன்ப ஒழுக்க முறைகள் தொடர்புடையன என்பதும், சந்திரதீபத்து மொழியும தமிழ்மொழியேயாகும் என்பதூம ஒருவாறு உய்த்துணரப்படும.

அழகமர்பாலை என்றது திருப்பெருந்துறையை.

" தென்பாலைத் திருபபெருந்துறை " (திருவேசறவு. 17.)

என்றலுங் காண்க. அங்ஙனங் கூறிப் பாலையுள் அமர்ந்தான் என்க. பாலையாகவே இருந்த பெருந்துறை, இறைவனால் மருதமாக்கப்பட்டமை பெருந்துறைப் புராணத்துள்ளும், நமபி திருவிளையாடலுள்ளும் கூறப் பட்டுளது. அதன் காரணம வேறுபட உரைக்கப்பட்டிருப்பினும், அங்கு மருதவளஞ் சிறந்தமை, திருவாசகத்தினாலும் பெறப்படுதலால் அது கொள்ளப்படும். இனி, தென்பாலைத் திருப்பெருந்துறை என்றதற்கு, சோழநாட்டின் தெற்கே உள்ளதாகிய பெருந்துறை என்றோ, தென் நாட்டிலுள்ள பெருந்துறை என்றோ பொருள் கொள்ளலாமேனும், அழகமர்பாலை என்றமைக்கேற்ப, ஈண்டும் பிறாண்டும் பெருந்துறைக்கு அடையாகவரும் தென் என்பதற்கு அழகெனவே பொருள்கொள்ள வேண்டியிருத்தலின், அவ்வுரை கொண்டிலம் என்க.

பிரிவிற்குரிய பாலையுள், அடியார்களைப் புணர்ந்தானாகலின் அழகமர் பாலை எனப்பட்டது. என்னைப் புணர்ந்தானல்லன்; அச்சுந்தரத் தன்மையுடன் வாளா இருந்தான் என்க. அச்சுந்தரத் தன்மை எனச் சுட்டியது சுந்தரவேடத் தொருமுதல் உருவினை.

இருந்தளிருயும் என ஈண்டுக் காட்டப்பட்டதும், ஏறத் துரந்தும் என முன்னர்க் காட்டப்பட்டதும், ஏனைய அடியார்களுக்கும், அடிகளுக்கும செய்யப்பெற்ற அருள் வகைகளின் வேறுபாடுகளை விளக்குதற்கு இன்றியமையாத மூலங்களாய்த் தம்முள்ளும் வேறுபட்ட பொருள் பொதிந்து நின்றன.

இருந்தும், அங்ஙனமிருந்து பத்துறுப்புமுடைய தன் பெருந்தலைமை காட்டி ஆண்டான் என, பின்வருவனவற்றோடு இயைந்து முடியுமாறு ஆண்டுக் காண்க. என்னுடை யிருளைத் துரந்து பிரிந்தான்; ஏனை அடியார் களை இருந்தாண்டான் என வேறுபாடு முணர்க.

மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை அருளுடை அண்ணல்
எந்தமை ஆண்ட பரிசது பகரின் 102

என்னுமிவ்வடிகளால், தம்மையுள்ளிட்ட அன்பர்களை ஆண்ட ஆட்சித்திறன் கூறப்படுகிறது.

(பொ - ரை) மறை உபதேசம் செய்த பெருமை வாய்ந்த மகேந்திரம் என்னும் மலையில் உறைகின்ற வெற்பனும், முடிவற்ற பெருமையினையும், அருளினையும் உடைய தலைவனுமாகி, எங்களை யாண்டுகொண்ட தன்மையினைச் சொல்லுமிடத்து. எ - று.

(வி - ரை) வெற்பன் என்றது குறிஞ்சி ஒழுக்கம் பூண்ட கிழவனை. மந்திரம் - மறை, அகப்பொருள் என்க.

ஆங்கிருந்து அகப்பொருள் அறிவித்தமையால், அம்மகேந்திரமலைக் குப் பெருமையுண்டாயிறறு. அம்மலையையுடைய வெற்பனும் அண்ணலு மாகி எனக.

குணஞ் செயலின்றி யிருந்தும், தில்லைத் திருநடனத்தினால் அன்னையும் தானுமாக வேறுபட்டுப் போந்து இத்துணை அருட்செயல்களையும் செய் திருந்த மகேந்திர வெற்பன் என்க.

வெற்பன், அந்தமில் பெருமை அருளுடையண்ணல் என்பவை குறிப் பினால் இழிவு குறித்து வநதன. மிக்க சிறுமைப்பாடும் கொடுமையும் உடையான் என்றனள் தலைவி என்க. அந்தமில் பெருமை, பின்வரும் பத்துறுப்புமுடைய தலைமை என்க.

அவன் ஏனைய அடியார்களுக்குச் செய்தது வேறு; எனக்குச் செய் தது வேறு என்பது தோன்ற "எந்தமை யாண்ட பரிசு" என்றும், அப் பரிசு வேண்டுமேற கிளக்கப்படும் என்பது தோன்றப் "பரிசது பகரின்" என்றும் கூறினள். கிளவாவிடில் ஆறுதலில்லை என்பது குறிப்பு.

ஒன்ற ஒன்ற உடன் கலந்தும, எரி பாய்ந்தும், மயக்க மெய்தியும், பூதலமதனிற் புரண்டுவீழ்ந்தலறியும, கடல்புகமண்டியும் கலந்துகொண்ட அன்பர்களைத் தன்னுடன் கூட்டி "எந்தமை" என்றாள்.

இனி, (என்னுடை இருளை) ஏறத் துரந்தும,.. ...தன்வயிற்படுத்துத் தானேயாகிய தயாபரன், வெற்பனும் அண்ணலுமாகி (ஏனைய அன்பர் களின் பொருட்டு) துதைந்திருந்தருளியும், எந்தமை யாண்ட பரிசது பகரின் அவன் கொள்கையும் சிறப்பும் (எங்ஙனமிருந்தனவென்றால்) என, இதுகாறும் கண்ட வினைகளைத் தொகுத்து வைத்துக்கொள்க.

ஆற்ற லதுஉடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும் 104

என்னுமிவ்வடிகளினால், இறைவன் பத்துறுப்புங் காட்டிவந்து தங்களை யாண்டமை கூறப்புகுந்து அப்பத்துறுப்புகள் கொடி காட்டியமை கூறப்படுகிறது.

(பொ - ரை ) ஆற்றலுடைய (ஏற்றின்) திருவுருவத்தை எழுதிய திருநீறு பூசப்பட்ட கொடியை மேலுயர்த்திக் காட்டியும் எ - று.

(வி - ரை.) கொடி என்றது கோடியென நீண்டு நின்றது.

“ ஒரேழ் பாலை ” (சிலப் 3-71.)

என்றதனுரையில, கோடிப்பாலை என்றதனை, இக்காலத்தார் கொடிப்பாலை என வழங்குமாறே, முற்காலத்தில கோடி யெனவும் வழங்கியதைப் பிற்காலத்தார் கொடியெனவே வழங்கினர் போலும். இனி இதனை, வளைவாக இடப்பெற்ற திருநீற்றினைக் குறிப்பதாகப் பொருள்கொள்ளின், தசாங்கத்துள் ஒன்று குறைவுறும், அவற்றின் இலக்கணம் நிரம்பாமையறிக.

ஆற்றலதுவுடை அழகமர் திருவுருக்கொடி ; நீற்றுக் கொடி என்க. கொடிக்குக் காப்பாகத் திருநீறு பூசப்பட்டது என்க. இதனைத் திருநீற்றுக்காப்பென்ப.

“ஆன நீற்றுக் கவசம் அடையப் புகுமின்கள்” (திருப்படையெ. 1.) என்றலுங் காண்க.

ஆற்றலதுவுடை அழகமர் திருவுரு என்னுமிதனானே ஏற்றின் திருவுருவம் என்பது பெறாரும்.

“ ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம்
ஏற்றைக் கிழவி உரித்தென மொழிப ” (தொல் பொருந மர. 49.)

என்பவாகலின். மேலும், கொடி என்றலானும், ஆற்றலதுவுடையழகமர் திருவுரு என்றலானும், ஆற்றல் மிக்க ஆண்பால் விலங்குகட்குப் பொதுவாக அவ்வாற்றல் நின்றதேனும், ஏற்புழிக்கோடலால், அக்கொடிக்கண் எழுதிய உருவம் எருத்துருவம் என்பது பெறப்படும். அதனது உருவத்தைத் திருவுரு என்றலானும் அங்ஙனமே கொள்க.

இக்கொடியுடன் வருதல் அடியார்க்கு அருள்செய்தற் பொருட்டாகலின், அக்குறிப்பு அடியார் அனைவர்க்கும் தோன்ற உயர்த்திக் காட்டியும் எனப்பட்டது.

கொடி நிமிர்ந்து என்றாரேனும், உடையான் நிமிர்த்த அது நிமிர்ந்து என்பதே கருத்தாகக் கொள்க.

ஊனம் தன்னை ஒருங்குடன் அறுக்கும்
ஆனந் தம்மே ஆறு அருளியும் 106

என்னுமிவ்வடிகளினால் ஆறு கூறப்படுகிறது.

(பொ - ரை ) உடம்பினை அது தோன்றுதற்குரிய காரணங்களோடும் ஒருசேர வேருக்கி விலக்கும் பேரானந் தினையே தனக்குரிய ஆருகக் கொண்டருளியும் எ -று.

(வி - ரை.) ஊனையுடைமையால் உடல் ஊனம் என அம்முப் பெற்றது.

உடல் தோன்றுதற்குரிய காரணங்கள், அவாவும், அதனாலாய வினைகளும் முதலாயினவாம்.

ஆருக வெனற்பாலது ஆரு எனக் குறைந்து நின்றதென்க.

ஆனந்தமே என்றது ஆனந்தம்மே என விரிந்து நின்றது; அன்பர்க்கு அருள் செய்வதால் அவர் பெறுமபேறு அதுவேயாக விரிந்து செல்லுதலின்.

உயிர் எய்தும் ஆனந்தத்தால் உடலமும் பிறவும் தோன்ருது கழிதலின் அறுக்கும ஆனந்தம் என்ருள். இனி, காரியத்தைக் காரணமாக உபசரித்தவாறுமாம்.

பொருளும் உவமனும் ஒன்ருய் அமைவது உருவகமாதலின், அந் நிலையினின்றும் அப்பொருள் ஏற்றம் பெற்றமை தோன்ற, உவமனைக் குறைத்தும் பொருளை விரித்தும் அமைத்த திறன் போற்றற்பாலது.

மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும் 108

என்னுமிவ்வடிகளிஞல் பறை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) உமையம்மையின் வலக்கூற்றையுடைய மிகப் பெரிய கருணையுடையோனுகி, நாத தத்துவத்தை ஒலிக்கும் பெரிய பறையை ஒலிக்கச் செய்தும் எ - று.

(வி - ரை.) கருணை - அருள். அது கைம்மாறு கருதாதும், கைம்மாறு செய்தறகியலாதும் நிற்பதொன்றென்பது வெளிப்படை. அவ்வருள், சான்ருேர் அருளினும், தேவர் அருளினும் மேம்பட்டதாகலானும், செவ்வி நிரம்பாதோர்க்குச் செய்யப்படும் நிலைபேறற்ற அருள்போலாது, செவ்வி நிரமபிய அடியார்களுக்குச் செய்யப்படும் நிலைபேறுடைய அருளாகலானும், உயிர்களின் நலங்கருதி அம்மையப்பர்களாக வேறுபட்டும் ஒன்றுபட்டும் செய்யப்படுவதாகலானும் "மாப்பெருங்கருணை" எனப்பட்டது.

நவின்று கறங்குதலாவது, அம்மூலவொலியின் அசைவினுற்போந்த பல்லாயிர வேறுபாடுகளையுடைய ஒலிகள் தோன்றுதல் என்க. உடுக்கை பறை எனப்பட்டது.

கறங்கவும் என்ருரேனும் கறங்கச் செய்தும் என்பதே கருத்தாகக் கொள்க.

அழுக்(கு)அடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும் 110

என்னுமிவ்வடிகளிஞல் படை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) (உயிரின்மீது) அழுக்குப் பொருந்தாமல் அதனை ஆண்டருள்பவனாகி, முத்தலைவேலைக் கையிற்பிடித்துக் கொண்டருளியும் எ - று

(வி - ரை ) இன்பம் மெய்யறிவு நற்செயல் என்னும் மூன்று ஆற்றல் களாகிய தலைகளையுடையது அக்கழுக்கடை எனவும், அவற்றால் அவாவும் மயக்கமும் வெகுளியும் என்னும அழுக்குகள் அகற்றப்படுமெனவும் கூறுப.

மூலம் ஆகிய மும்மலம் அறுக்கும்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதலன் ஆகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும் 114

என்னுமிவ்வடிகளினால் மாலை கூறப்படுகிறது

(பொ - ரை ) பிறவித் துன்பத்திற்கு மூலகாரணமாகிய முக் குற்றங்களையும் வேருக்கி விலக்கும் மாசற்ற கதிர்விடுகின்ற ஒளி மயமான மேனியை உடைய காதலனாகிக் காதலைப் புலப்படுத்துதற் குப் பொருத்தமாகச் செங்கழுநீர் மாலையை அன்பருள்ளம் எழுச்சி பெற அணிந்தும் எ - று.

(வி - ரை ) மும்மலம், காமம் வெகுளி மயக்கங்கள். ஆணவம் முதலாயவற்றைக் கொள்ளுவாருமுளர்.

கழுநீர்மாலை காதல் இன்ப நுகர்ச்சிக்குரியது.

" மாக்கவின் வளரத் தீண்டி மணிநகை நக்கு நாளும்
பூக்கவின் ஆர்ந்த பைந்தார் புனைமதுத் தேறெ டேந்தித்
தாக்கியெம் முலைகள் தம்மை நெருக்கிறாய் தரணி மன்னின்
நீக்கிநீ எம்மை நோக்காய் நீத்தியோ நீயும் என்பாள் "

(சிந். முத். 353.)

என, சீவன் துறவுகேட்ட அவன் தேவியர், செங்கழுநீர்மாலையை விளித்து இரங்கிக் கூறிய இதனாலும் அவ்வுண்மை தெளியப்படும்.

காதற்கு ஏலுடைத்தாக என்க. காதற்குறிப்பினைக் கண்ட அன்பர் உள்ளம எழுச்சிபெற என்க.

தூய சுடர்விடு சோதி மேனிக் காதலான் எனக் கொண்டுரைக்க.

அரியொடு பிரமற்கு அளவுஅறி யாதவன்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும் 116

என்னுமிவ்வடிகளால் ஊர்தி கூறப்படுகிறது.

(பொ - ரை.) திருமாலுடன் பிரமனும் தன் மேனியின் அளவு அறியப்படாதவனாயிருந்தும் குதிரையின்மீதிவர்ந்து சிறப் புப் பயின்றும் எ - று.

(வி - ரை.) பயில்தல், பலமுறையும் ஈடுபடுதல். வண்ணம் பயின்றும் என மாறுக. வண்ணம் - சிறப்பு. ஈண்டுக் குதிரையோட்டங்களின் சிறப்பை உணர்த்திற்று என்க. வேறுங் கூறுப.

இறைவன் பரிமாவூர்ந்து வந்துசெய்யும் அருள்களைத் திருப்பாண்டிப் பதிகத்துள் நிறைய ஓதினர். ஆண்டுக் காண்க.

அளவு அறியப்படாதவனாகியிருந்தும், அன்பர் அறிதற்கு எளியவனாகி என விரிக்க.

அப்பரிமா ஆனந்தப்பரிமா என்க. இருள் கடிந்தருளிய இன்பவூர்தி என மேலே கூறுதல் காண்க.

மீண்டு வாரா வழிஅருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும் 118

என்னுமிவ்வடிகளினால் நாடு கூறப்படுகிறது.

(பொ - ரை) திரும்பவும் வராதபடி அருள் புரிபவனாகிப் பாண்டிநாட்டையே தனது மரபு மரபாக வந்த திருநாடாகவும் எ - று.

(வி - ரை) உலகம் என்பது, காடுறையுலகம் என்றவாறு அதன் ஒரு பகுதிக்கும் பெயராயவாறே, நாட்டின் பகுதியாகிய பதி என்பதும் அந்நாட்டிற்குப் பெயராயிற்றென்க இனி, பதி என்றது பூமியையும் உணர்த்தும் என்பவாகலின், அப்பெயரே நாடு நகரங்களுக்கும் ஆயதெனக்கொண்டு, ஈண்டு அது நாட்டினை யுணர்த்தியது என்றலுமாம்.

இனி, மீண்டுவாராவழி என்றதற்கு, மீளற்கு இடங்கொடாது போதற்குமட்டும் இடங்கொடுப்பதொரு மீன்பொறிபோன்ற பொறிநெறி என்றுரைத்தலும் சிறப்பாம். இது சென்று மீளாமை என்னும் அளவிற்கே ஒப்பாயதென்க.

பாண்டியன் நாடு என்பது பாண்டிநாடு என மருவிற்று. பாண்டி அது எனவும் கூறப்படும்போலும்; திருப்பாண்டி எனவும், பாண்டி வெள்ளமே எனவும் வருதலின் என்க. பாண்டியன் தமிழன்; அவன் நாடு தமிழ்நாடு; அந்நாட்டுமொழி தமிழ்மொழி, அம்மொழிக்கண் சிறந்து விளங்கும் இலக்கணம் அன்பின் ஐந்திணை; பொருளதிகாரம் ஞானம் உணர்த்துங் கருவி; அதனை, "'என்னை பாவம்! அரசறுக் கவற்சி பெரியதாயிற்று. அதுதானும் ஞானத்திடையதாகலான், யாம் அதனைத் தீர்க்கற்பாலம்' என்று இவ்வறுபது சூத்திரத்தையும் செய்து, மூன்று செப்பிதழ் அகத்து எழுதிப் பீடத்தின்கீழிட்டான்" என்னும் இறையனார் களவியல் உரைப் பகுதியான் அறியலாம். இதனால் பண்டுதொட்டே பாண்டி நாட்டகத்தே இம்மறையைப் புலப்படுத்தி வருதல் இறைவற்கும் இயல்பாகும் என்பது பெறரும். அதனை,

"அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த
அப்பார் சடை யப்பன்" (திருவம்மானை 11.)

என வருவதொன்றே வலியுறுத்தும். இது கருதியன்றே,

" கூடலின் ஆய்ந்த ஒண்டீந் தமிழின் துறை " (திருக்கோவை. 20)
எனவும்,

" வியனுலகேழும் விளங்க விழுமிய நூல் ஆய்ந்தான் "
(அப்பர் நாலாந்திரு. பொது ஆரூர்த் திருவிருத். 6.)

எனவும் அருளிச்செய்யப்பட்டன. இன்னும், உலகத்து ஆதிமொழிகள் ஐந்தனுள்ளே தமிழ் ஒன்றே இன்றும் வழக்கிறவாது விளங்குதல் கொண்டும் அதன் சிறப்பினை உணர்க. இப்பாண்டிநாடே இறைவனுக்குப் பழைமையான நாடாகும் என்பதைத் " தென்னாடுடைய சிவனே " எனவும், " தண்பாண்டி நாட்டானை " எனவும், " பாண்டி நன்னாடர் " எனவும், " பாண்டிப்பிரான " எனவும், " பாண்டிவெள்ளமே " எனவும் அடிகள் கூறியனவற்றால் உணர்க. இன்னும் அதன் பழைமையை, ஸ்ரீபாகவத புராணத்தின் எட்டாவது காண்டத்தில், விஷ்ணுபகவான் மீன் அவதாரங்கொண்டு ஆதிகாலத்தில் அறவடிவினனாகிய ஒரு பாண்டியனைக் காத்தருளினன் என்றும், அவன் பழவினை தீர்ந்தபின் வைவச்சுதமனு வானான் என்றும் கூறப்பட்டிருத்தல் கொண்டும் அறியலாகும். இப்போது வைச்சுத மன்வந்திரம் நடைபெற்று வருகிறது.

அப்புராணத்தில் பாண்டியனது வரலாற்றுப் பகுதி பின்வருமாறு காணப்படுகிறது :

அவன் கிருதமாலா என்னும் ஆற்றில் தண்ணீர் அள்ளுகையில் ஒரு சிறுமீன் அவன் கையில் அகப்பட்டது. அதனை அவன் பார்த்தபோது அது தன்னை ஒரு பாத்திரத்தில் விடுமாறு கேட்டது. அவன் அப்படியே செய்தான். அடுத்தநாள் அதனுடைய நிலைமை எப்படி என்றறியுமாறு போய்ப் பார்த்தான். அது பாத்திரம் நிறைய வளர்ந்திருந்தது. பாத்திரம் இடம் போதாமையால் தன்னை ஒரு குளத்தில் விடுக என்றது. அப்பால் அதுவும் இடம் போதாமையால் சமுத்திரத்தில் விடுக என்றது. பாண்டியன் அங்ஙனம் செய்ததும் அஃது அவனை நோக்கி " அன்பனே, இன்னும் சிறிது காலத்துள் நீர்ப்பிரளயம் ஒன்றுவரும்; அதற்குமுன் யான் ஒரு மரக்கலத்துடன் சமுத்திரக்கரையில் வந்து நிற்பேன்; நீ சான்றோர்களோடும், பசுக்களோடும், மூலிகைகளோடும், ஏனைய பிற வற்றுள் வகைக்கொவ்வொன்றோடும் மரக்கலத்துட் புகுந்து அதனை என் கொம்பிற் பிணைத்துவிடுக " என்றது. அவனும் அவ்வாறே செய்து தானும் உய்ந்து உலகத்தையும் உய்வித்தான்.

இனி, பாண்டிருந்து திருவாசகமோதினும் தமிழ் நாட்டின் இயல்புகளை கைக்கொள்ளப்பட வேண்டுமென்பதும், திருவாசகநெறி தமிழ்நெறி என்பதும், தமிழ்நெறிக்கு முற்பட்ட நாடு பாண்டி நாடென்பதும், அந்நாட்டின் இயற்கை வனப்பும், பருவகால மாறுபாடுகளும், மக்கள் இயற்கையும் உணராதார் இந்நெறி கைவரப் பெறார் என்பதும் உணர்க.

பத்திசெய் அடியரைப் பரம்பரத்(து) உய்ப்பவன்
உத்தர கோச மங்கைஊ ராகவும் 120

என்னுமிவ்வடிகளினல் ஊர் கூறப்படுகிறது.

(பொ - ரை ) மெய்யன்பு செய்துவரும் அன்பரை மிக மேலான வீட்டின்கண் செலுத்தி நிலைபெறுத்துவோனுகி, உத்தர கோசமங்கையே தனதூராகவும் எ - று.

(வி - ரை.) பத்தி - அன்பு. தொடர்புடையார்மாட்டு அது நிகழும் என்றதனல், உயிர்களுக்கும் இறைவனுக்கும் அறியப்படாத கால முதறகொண்டே தொடர்புண்டென்பதும், பிறவும் ஈண்டுப்பெற்றும். பத்திசெய் அடியர், அவனருளாலே அத்தொடர்புண்மை கண்டு அவன் மேல் அன்பு செயதுவருவோர். அவர் அவனையன்றி வேறெவற்றையும் விரும்பாராகலின் " பரமபரத்துய்ப்பவன் " என்ருர்.

இனி " ஏறுடையீசன் " என்பது முதலாகப் " பரம்பரத்துய்ப்பவன் " என்பது இறுதியாகக் கண்ட இறைவன் பெயர்களுள் ஆங்காங்கு எழுவாய் கள்போல நின்றனவற்றை எச்சங்களாக்கி உரைத்தாம, கைலைக்கிழ வோனே தன நடனத்தால் ஒவ்வொரு கடமைக்குமுரிய கோலங்களை மேற் கொண்டு நிலைவேறுபட்டு வந்தானுகலின் என்க. அவறறைச் சுட்டுக் களாக்கி உரைப்பினும அப்பொருள் பெறப்படுமேனும், ஆங்காங்கு வேறறு வடிவங்களை மேற்கொண்டு செய்த அகப்புறச் செயல்கள் அவற்றல் பெறப் படாமையின் அங்ஙனம கொண்டிலம்.

ஆதி மூர்த்திகட்(கு) அருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெயர் ஆகவும் 122

என்னுமிவ்வடிகளினல் பெயர் கூறப்படுகிறது.

(பொ - ரை ) ஆதிக்கடவுளர்க்கு அருள்புரிந்தருளிய தேவ தேவன் என்பதே தனது திருப்பெயராகவும் எ - று.

(வி - ரை.) ஆதிமூர்த்திகள், இறைவனருளால் அதிகாரம் பெற்று அவ்வப்பதவிகளில் இருந்து வருவோராவர். இவர்களை ஆட்டுத்தேவர் என்ப. இவர் ஆதியாக இவர்க்கு அருள்புரிந்தவன் அனுதியானுன் என்க. இறைவன் அருளே ஆதிமூர்த்திகள்பாலும் அமையக்கிடத்தலின், அருள் ஒன்றே; அதுவும் அவனதே என்றுணர்க. ஆதிமூர்த்திகள் அனைவரும், தாந்தாமே ஆருயிர்க்கெல்லாம் அருள்புரிகின்றுர்கள் என, பொ.்து நோக்குடையார்க்கெல்லாம் புலப்படும் வண்ணம், அவர் தம்மைக் கொண்டே அருள் புரிவித்தும், தான் ஆங்காங்கே மறைந்தும் வரும் அவனது பேரருள்திறன் புலப்பட " ஆதிமூர்த்திகட்கு அருள்புரிந் தருளிய " என்ருர். அவ்வாதிமூர்த்திகளும் தம்மைத் தாமே படைப்பு முதலாயவற்றுக்கெல்லாம் ஆதி என, அறியாவுயிர்களை மயக்கியும் வருவர்.

இனி, செவ்வி குறைந்த உயிர்கள் அவரை அங்ஙனமாகப் பாவித்தலும் மரபாகும் எனினும் அமையுமென்க.

இறைவன் செவ்வி நிரம்பிய உயிர்களுக்கு அருளும்போதும் அங்ஙனமே தேவதேவனுக வந்தருள்வன் என்க. என்னை, அவர் ஏனைய விரிவிலா அறிவினரைப போல ஆதிமூர்த்திகள்பால் மயங்கிவருமட மயக்கம் நீங்கி, எப்பொருட்கண்ணும், எச்சொற்களின்கண்ணும் மெய்ப்பொருள் காண்டற்குரியவராகலின் என்க.

இருள்கடிந் தருளிய இன்ப ஊர்தி
அருளிய பெருமை அருள்மலை யாகவும் 124

என்னுமிவ்வடிகளினுல் மலை கூறப்படுகிறது.

(பொ - ரை ) அறியாமை ஆகிய இருளை நீக்கி, அருள் செய்த இன்பமாகிய குதிரையைக் கடாவி வருவோனுகி, (அன்பர்க்கு) அளித்தருளிய பெருமை வாய்ந்த அருளே மலையாகவும் எ - று

(வி - ரை ) இருள் கடிந்து அருளிய இன்பமே ஈண்டு ஊர்தி எனப் பட்டது. அவ்வின்பம் இறைவனுல உதவப்பெற்று அடியவரபால் நிலைபெற்றுள்ளது. அவ்வானநதத்திலே மூழ்கிய அன்பர், மேலும் மேலும அதனைப் பெற்று நுகரவிரும்பி, பேரன்போடும் அவனை நினைந் திருப்ப, அத்தவமாகிய இன்பவுணர்வானது அவனைச் சூழ்ந்து ஈர்ப்ப, அவனும் அவன் வலைப்பட்டு அதன்மேலூர்ந்துவந்து அருள் செய்தலின், ஈண்டு அவ்வானந்தம் பரிமா ஊர்தியாக உருவகஞ் செய்யபபடடது. இறைவன்பாற் பெறற ஆனந்தம தனனுள் மூழ்கி இருப்ப வைத்துப் பிறவறறின் தொடர்பைக் கழுவி நீக்குதலும, இறைவனை மீண்டும் மீண்டும் இழுத்து வருதலும் என்னும் இரண்டும் வல்லதாகலின், ஆண்டு ஆறெனவும், ஈண்டு ஊர்தி எனவும் உருவகிக்கப்பட்டது.

இறைவனின் ஆனந்தம் அன்பர்க்கும, அனபரின் ஆனந்தம் இறைவற்கும் பற்றுக்கோடாயின என்றபடி. எனவே, இறைவனும் அன்பரும் ஒருவரை ஒருவர் மகிழ்விக்கும் பரஸ்பர அன்புடையர் எனக. இங்ஙனமாதலின், அருள் மலையினின்று பாயும் ஆனந்த ஆறெனவும், அவ்வன்பர் விடுத்த ஊர்தி எனவும, அஃது அருள் மலையையும் யாறையும் கொண்டு மீண்டுவந்து அன்பர்க்குக் கொடுக்கும் எனவும் உரையிற் கொளக.

பெருமையருள் என இயல்பாகப் புணர்ந்து நின்றது; மும்மைத்தமிழ் என்பதுபோல. விகாரமற்ற அருளாதலின், அங்ஙனம் பெருமை இயல்பாயிற்றென்பாரு முளர்.

ஊர்தி, ஊர்வோன். ஊர்வோனுகி என எச்சமாக்கி முற்கூறிய விளக்கவுரையை ஈண்டும் அமைத்துக்கொள்க.

இறுதியில் கொண்டென ஒருசொல் வருவிக்க.

பாண்டிநாடே நாடாகவும, உத்தரகோசமங்கை யூராகவும், தேவ

தேவன் திருப்பெயராகவும், பேரருளே மலையாகவும்கொண்டு, ஏற்றுக் கொடியுயர்த்தி, ஆனந்த ஆறருளி, நாதப்பறை ஒலித்து, கழுக்கடை கைப்பிடித்து, கழுநீர்மாலை அணிந்து, இருளகற்றி, ஆங்குப் பிறந்த இன்பப் புரவி ஊர்வோனுய் என்க.

இனி, தசாங்கம் யானை, நாடு, ஊர், ஆறு, மலை, குதிரை, தேர், முரசு, தார், கொடி என்பனவாம் என்பர் திவாகரனுர். சூடாமணி நிகண்டுக்காரர், தேரை நீக்கித் தானை என்பதைக் கொண்டு கூறுவர் வெண் பாப்பாட்டியலுடையார், தேரினை நீக்கிச் செங்கோலாட்சியினைக் கொண்டு கூறுவர். அடிகள் யானையை நீக்கித் தலைவன் பெயரையும், தேரினை நீக்கிப் படையையுங்கொண்டு திருத்தசாங்கத்துட் கூறுவர். ஈண்டு அம்முறைமாறி, கொடி, ஆறு, பறை, படை, மாலை, ஊர்தி, நாடு, ஊர், பெயர், மலை என்று கூறினர். ஈண்டுச் செங்கழுநீர்மாலை எனவும், ஆண்டுத் தாளியறுகந் தார் எனவும் கூறுவர்.

எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்
அப்பரிசதனுல் ஆண்டுகொண்டருளி 126

என்னுமிவ்வடிகளினுல், அப்பத்துறுப்புங்கொண்டு தம்மையும் ஏனைய எத்திறப்பட்ட அடியார்களையும் ஒருசேர ஆட்கொண்டமை கூறப்படுகிறது.

(பொ - ரை ) எவ்வெத்தகையோரதும் எந்தப் பெரிய பேரன்பு நிலையையும், ஏனைய அன்புத் திறங்களையும் அவ்வத்தன்மை யோடும் தானுமிருந்து ஆண்டுகொண்டருளி எ - று.

(வி - ரை.) எவ்வெவர் எப்பெருந்தன்மையும் திறமும் எனக் கொண்டுரைக்க.

பெருந்தன்மையென்றது, ஐந்திணைப் பேரன்பை. திறம் என்றது பெருந்திணையன்பை என்க. ஐந்திணையன்பையே முடிபாகக்கொண்டு, ஏனைய இவ்வித்திறத்தன என அளந்தறிதலின், பெருந்தன்மையும் திறமும் என்றனர். திறம - வகை. அன்பின் வகை.

எந்தமை யாண்ட பரிசது பகரின், என நுதலிப் புகுந்து கூறுகின்றுளா தலின், எவ்வெவர் என ஈண்டுத் தன்னையும் அடக்கிக் கூறினுள் என்ப துணர்க. எனவே, தன்னையும், பின் ஒன்றக் கலந்த அடியார்களையும், பல்லாற்றுனும உடல்விட்டுப் பாதம் எய்திய அடியார்களையும், இங்ஙனம் பத்துறுப்புங் காட்டி முன்னர்ப் பொதுப்பட ஆண்டுகொண்டருளி என்றபடி. இங்ஙனம் கூறவே பின்னர்ச் சிறப்புற ஆண்ட விளைவுகள் முற்றும் மாறு பட்டன என்பது பெறப்படும் என்க. இங்ஙனம் பொதுவாக எல்லாரையும் ஒருசேர ஆண்டுகொண்டபின், தன்னைப் புறக்கணித்ததும், ஏனைய அடியார்களுள், அவ்வவர் அன்பின் இயல்புக்கேற்றபடி சிறப்புற அருள் செய்ததும ஆகியவற்றை மேற்கிளந்து கூறுகின்றுள்.

நாயினேனை நலம்மலி தில்லையுள்
கோலம் ஆர்தரு பொதுவினில் வருகஎன
ஏல என்னை ஈங்(கு)—ஒழித் தருளி 129

என்னுமிவ்வடிகளினால், தன்னைப் புறக்கணித்தமை கூறுகின்றாள்.

(பொ - ரை.) நன்மை நிரம்பிய தில்லைமாநகருள், அழகு நிறைந்த அம்பலத்தின்கண்ணே வருவாயாக என்று கட்டளையிட்டு நாயின் இயல்புடைய என்னை முன்பே இவ்விடத்தில் நீக்கிவிட்டருளி எ - று.

(வி - ரை.) தனது அடிமைத் தன்மையின் சிறப்புணர்த்துவாள் "நாயினேன்" என்றும், அவனுடனன்றித் தனித்துச்செல்லும் இயல்புடையேனல்லேன், அறிவும் உடையேனல்லேன்; அத்தகைய என் இயல்பு கண்டு, அவனே தானாக வந்து பல இடங்களிலும் வைத்து ஆட்கொள்ள, அங்ஙனம் ஆட்கொண்ட அவன் குறிப்பின்வழி நின்றவளுமாவேன்; அத்தகைய "என்னை" என்றும், தலைவன் செல்ல அவன் அடிச்சுவடினை மோந்துகொண்டு பின்றொடரும் நாய்போல, யானும் அவன் உள்ளக் குறிப்பினைத் துணிந்துகொண்டேன் என்பாள் "நலமலி தில்லையுட் கோலமார்தரு பொதுவினில் வருகென" என்றும், எனக்குச் செய்த அருளாவது என்னைப் புறக்கணித்தமையே என்பதுபட "ஒழித்து" என்றும், என்னை எங்ஙனமும் ஏவிக்கொள்ளலாம் என்பதுபட "அருளி" என்றும், தில்லைப்பொதுவினில் அவன் நன்மைகளை நுகர்தற்கு இச்சித்தும், இச்சித்தவாறே கைக்கெட்டி வந்தும், ஈற்றில் யாதொன்றுமின்றி ஏமாந்தமை குறித்து "நலமலி தில்லையுட் கோலமார்தரு பொது" என்றும் கூறினள் என்க.

ஈண்டுக் கூற எடுத்த பொருள் அன்பர்களுக்கு அருள் செய்தமையே யாகலின், பெருந்துறையில் அவர்களைக் கலந்துகொண்ட அருட்செயலை நோக்க ஈங்கொழித்த செயல் முந்தியதாகலின் "ஏல" எனப்பட்டது.

ஈங்கென்றது உத்தரகோசமங்கையை. இறைவன் உத்தரகோசமங்கையை விடுத்து எழுந்தருளுகையில், தலைமகளும் உடன்செல்ல எழுந்தனள். அப்போது இறைவன் "நீ இங்குத்தானே இருக்குதி" என நாயைப் பணிக்குமாறுபோலக் குறிப்பாற் பணித்தனன். அதனைப் புறஞ்சென்று மீளுவன் என்று எதிர்பார்த்திருந்த தலைமகள், காலங் கடந்தும் அவன் வாராமையால், சிந்தனை செய்திருக்கையில், அவன் பெருந்துறையில் பல அன்பர்களைச் சோதியிற் கலந்தேகினான் என்று கேள்வியுற்றாள் என்பது "ஏலவென்னை ஈங்கொழித்தருளி" என்றும்,

"அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்"

என்றும் கூறியவாற்றாற் பெறப்படும்.

பொதுவினில் "வருக" என்றது இறைவன் கூற்றினுலன்றிக் குறிப்பினுல் உணர்த்தப்பட்டது. இதனை,

"பொருத்த மின்மையேன் பொய்ம்மை யுண்மையேன்
போத வென்றெனைப் புரிந்து நோக்கவும்" (திருச்ச. 93)

என்றலானும உணர்க (போத - என்னைப் பிரிந்து போதற்கு, புரிந்து நோக்க - உற்றுப் பார்க்க பிரிதற குறிப்பொடு பார்க்க என்றபடி.)

"அன்றுடன் சென்ற" என மேலவருவதனுல் அடிகள் உத்தரகோச மங்கையில் இருந்தாரன்றி உடன்சென்றிலர் என்பது தேற்றம்.

உத்தரகோசமங்கையில தன்னை ஒழித்தும், பெருந்துறையில் அன்பரைக் கலந்தும் சென்றமையால் உளதாகிய கிளர்ச்சியாலும் மதுரையில் அவனைக் கண்டு காதல் கொண்டபோது அவன் பெருந்துறை நாடன் என்றே அறிநதபடியாலும் பெருந்துறை முழக்கம், இந்நூலுள்ளே யாண்டும் பயின்றுவரப் பெற்றதென்க.

அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும் 131

என்னுமிவ்வடிகளினுல், செவ்வி சான்ற அடியவர்களை இறைவன் உடன் கலந்தருளியமை கூறப்படுகிறது.

(பொ - ரை) (திருவுத்தரகோசமங்கையிலே என்னை ஒழித்து எழுந்தருளிய) அந்நாளிலே தன்னுடன் சென்ற அருள்பெறுந் தகுதி வாய்ந்த அடியவர்களை ஒன்றுபடுமாறு தன்னுடன் கலந் தருளியும் எ - று.

(வி - ரை.) உடன் சென்ற அடியவர், அருள் பெறும் அடியவர் என்க. ஒன்றுபடுதலின் மிகுதி தோன்றவும தனது ஆராமை தோன்றவும் அடுக்கிக் கூறினர்.

அடியவர்களுக்கு எவ்வாற்ருனும் தான் குறைந்தவனல்லன் ; அவர்கள் பெற்ற இன்பத்திலும் மிக்க பேரின்பம் பெறும் தகுதி வாய்ந்தவனாவேன் என்னும் கருத்து நுண்ணிதிற் புலனுகுமாறும், அடியவர்கள் பெறற பேறே பேருகுமென்று உணருமாறும், தன் தவமின்மை குறித்துத் தன்னைத் தானே நொந்துகொள்ளுமாறும் தோன்ற "அருள் பெறும் அடியவர்" என்ருள்.

எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது ஆகி மயக்கம் எய்தியும்
பூதலம் அதனில் புரண்டு வீழ்ந்(து) அலறியும்
கால்விசைத்(து) ஓடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழுது அரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும் 137

என்னுமிவ்வடிகளினுல், ஐந்திணையன்பு சாலாதவர்கள் செய்த திறங்கள் கூறப்படுகின்றன.

(பொ - ரை ) (அவனை சோதியிற் கலக்கும் ஐந்திணையன்பு) பொருந்துமாறு கைவரப் பெற்றிலாதாருள்ளே ஒரு சிலர் தீவளர்த்து அதனிற் பாய்ந்தும், சிலர் (அவனைப் புணரும் அவா மிக்கு) மனம் மயங்கி உடல்விட்டும், சிலர் மலைமீதேறி நிலத்திலே அலறிப் புரண்டு வீழ்ந்து செயலற்று உடல்விட்டும், சிலர் கால்களை விரைவு படுத்தி ஓடிக் கடலினுள்ளே நெருங்கிச் சென்று உடல்விட்டும் தலைவனே தலைவனே என்று கூவியழுது பலவும் பகர்ந்து திருவடி யடைந்தவர் அவ்வாறே யடையவும் எ – று.

(வி - ரை ) பாயவும் என்றதனைப் பாய்ந்தும் என்னக் கொள்க. உடல் நீக்குதலை இத்திறங்கள் யாவற்றோடும் ஏற்புழிக் கொண்டு கூட்டுக.

இனி, நாத நாத என்றழுதரற்றிப் பாதம் எய்தினர் பாதம் எய்தவும் என்னுமிதனை, மேல்வந்தன ஒவ்வொன்றோடும் தனித்தனி கூட்டுக. கடல் புக மண்டியும் என ஏற்புழிக்கொண்டு உண்மை விரிக்க

பாதம் எய்தினர் என்றொழியாது, மேலும் பாதம் எய்தவும் என்றருளினர், அதன் மிகுதிப்பாடும், தாமும் அங்ஙனம் செய்ய இயலாமையும் தோன்ற

" தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள்கிலேன்
செழுங்கடல் புகுவேன் " (திருச்ச. 39.)

என மேலும் இவ்வரலாற்றை உணரவைத்தல் காண்க. " திண்வரை உருள்கிலேன் " என வந்தமைக்கேறபக், ஈண்டு மலைமீதேறிப் பூதலமதனிற் புரண்டு என விரித்தாம். (மலைமீதேறிப்) பூதலமதனில் அலறிப் புரண்டு வீழ்ந்தும் என்க.

பதஞ்சலிக்(கு) அருளிய பரம நாடக என்று
இதஞ்சலிப்பு எய்த நின்று ஏங்கினர் ஏங்கவும் 139

என்னுமிவ்வடிகளினால், சிலர் கைக்கிளை வகையால் துன்புற்றமை கூறுகின்றார்.

(பொ - ரை ) (தம்முடைய இன்பம் நிலையற்றதாக மனத் துணையும் இலராய்த் தமியராய்) நின்று, பதஞ்சலி முனிவற்கு முன்னம் அருள்செய்த மேலான கூத்துடையவனே என்றழைத்துத் தளர்ச்சியடைந்தவர் தளர்ச்சியடையவும் எ – று

(வி - ரை ) உடன் சென்றவர் என்றுதல், எய்தவுந்திலாதார் என்றுதல் கிளந்து கூறப்பட்டிலராய, வாளா ஏங்கினர் என்றே கூறியமையின் கைக் கிளைக் கேண்மையராதல் பெற்றும்.

இதம் - தம்மனதால் மட்டும் கற்பித்து நயந்து வந்தமையால் உளதாகிய வெறறின்ப நலன். சலித்தல் - நிலையிலாது போதல்.

ஆதிசேடன், அத்திரி முனிவருடைய மனைவியாகிய அனசூயையின் கையிலே அராக்குட்டியாகப் புகுந்தான்; அவள் அஞ்சி அதனைக் கீழே

வீசினுள். அஃதவள் அடியில் வீழ்ந்தது. அங்ஙனம் வீழ்ந்த அராக் குட்டியே பதஞ்சலி எனப் பெயர்பெற்றது. பதஞ்சலி முனிவர் அவ் வுருவத்தையே பின்னும் கொண்டு தில்லைக்கண் சென்று, புலிக்கால் முனிவ ருடன் திருநடனக் காட்சி கண்டனர். எஞ்சிய வரலாறு பின்னர் கூறப் படும்.

தாருகாவனத்தில் இறைவன் இன்பக் கூத்தினைக் கண்டு களித்த திருமால்பால் அதனைக் கேள்வியுற்ற ஆதிசேடன், தானும் அவ்வாறே காண விரும்பிப் பெருந்தவமாற்றிப் பதஞ்சலி முனிவராக அவதரித்துத் தில்லைக்குச் சென்று, புலிக்கால் முனிவருடன் பூசனையாற்றித் தைப் பூசத் தன்று அக்கூத்தினைக் கண்டவாறே யாமும் நின்னடியவர் துணையால் நின்னைக் காதலனுகப் பெற்று, நின் கூத்தினை நுகரலாம் என எண்ணி னோம் என்பது தோன்றப் "பதஞ்சலிக்கருளிய பரம நாடக" எனப் பட்டது.

எழில்பெறும் இமையத்து இயல்புடை அம்பொன்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடம்நவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத்து அழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்குஇனி தருளினன் 146
ஒலிதரு கைலை உயர்கிழ வோனே

என்னுமிவ்வடிகளினுல் இத்தனையும் நிகழ இறைவன் புலியூர்ப் புக்கருளியமை கூறப்படுகிறது.

(பொ - ரை) எழுச்சிபெறும் பனிமலையின் இயல்புடைய அழகிய பொன்மயமான பொலிவு பெற்ற தில்லையம்பலத்திலே திருக் கூத்தியற்றியவரும் கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாயினை யுடைய உமையம்மைக்கும் காளிதேவிக்கும் அருள் செய்த அழகிய திருமுகத்திடத்ததான அழகு மிக்க முறுவலினையுடைய இறைவ னும், வளர்ச்சிதரும் கைலை மலையை உடைய உயர்வு பொருந்திய தலைவனுமாவோன், தன்னுடன் (இங்ஙனம்) சேர்ந்த அடியவரோடும் விளங்கா நின்ற தில்லைக்கண்ணே புகுந்து இனிதாக அமர்ந் தருளினன் எ - று.

(வி - ரை.) என்றிங்ஙனம் இருந்தனவாம் எனவரும் என, இறுதியை விரித்து முடிக்க.

தோற்றத்திற்கு முதலிடமாகிய தில்லையே ஒடுக்கத்திற்கும் முடி விடமாம் என்பது கொண்டு தில்லை, இத்திருப்பாட்டின் முதற்கண்ணும், இறுதிக்கண்ணும் கூறப்பட்டதென்க.

இமயம் பொன்னுல் இயன்று பொலிவுறுமாறே ஆங்குள்ள மன்றமும்

பொலிவுறுதலின், அந்த ஞானசபைக்கு "இரண்மய கோசம்" என்று நூல்களும் பெயர் கூறும் அம்மன்றம எல்லாரானும் அறிதற்குரிய தொன்றன்று அவ்வருமைப் பாடுடையதனை உலகோர் எளிதிற கண்டுவக்குமாறு, அதனைத் தில்லைக்கண் அருளிச் செய்தான் ஆகலின்,

"எழில்பெறும் இமயத்து இயல்புடை யம்பொன்
பொலிதரு புலியூர்ப் பொது"

எனப்பட்டது. இதனை முதுநூலுள்,

"சின்மயமா மன்று இரண்மயம் ஒன்றுண்டு அதுசேரப்
பொன்மய மாகும் புவியினர் காணும பொழுதென்றுன்"
(கோயிற்புரா. நடரா. 42)

என்பதனானு மறிக. இம்மேற்கோட் பகுதிக்கு, முதியனவாகிய ஆகமங்களிலே கூறபபட்டதும், இமயத்திலே யுள்ளதுமாகிய இரண்மயகோசம் என்னும் சின்மயமாமன்று ஒன்றுளது என்பது பொருளாகும்.

பண்டு மத்தியந்தன முனிவர் என்பவர் ஒருவர் இருநதார். அவர்க்குத் தவப் பேறறினுலே ஒரு புதல்வர் பிறநதார். அப் புதல்வரக்கு இளமையும் கல்வியும் ஒருங்கே நிரமபியவுடன் தந்தையார் இறைவன் பெருமையையும் திருவைநதெழுத்தையும் அவர்க்கு உபதேசித்து, தென் தில்லை நகரத்திற் சென்று பெருநதவமாற்றி இறைவனருள் பெறறுய்யுமாறு பணித்தார்.

அங்ஙனமே மைந்தரும் தில்லை வனஞ் சென்று ஆங்குச் சிவலிங்கப் பெருமானும் பொய்கையும் இருப்பக் கண்டு உளம் பூரித்து அப்பெருமானை முறைப்படி பூசித்து வரலாயினர். மேலும் அவர் அதன் பக்கத்தே மலர்ச் சோலையும் குளமுமுள்ள வோரிடத்தினைக் கண்டு அவ்விடத்தே ஒரு சிவ லிங்கப் பெருமானை நாட்டி, அப் பெருமானையும ஆதிப் பெருமானையும் நாடோறும் வழுவாது பூசித்து வரலாயினர். இங்ஙனம் நிகழுங் காலத்தே இறைவன் பூசனையின் பொருட்டுப் பறிக்கப்பெற்ற மலர்கள் பழுதுபட்டிருப்பதைக் கண்டு மனம் வருந்தி, அவை வண்டூதிப் பழுதடையுமுன் வைகறையிற் சென்று செவ்வி சான்ற மலர்களைக் கண்டறிதறகேறற புலிக் கண்ணும், வழுக்காது மரங்கள்மேல் ஏறுதற்கேற்ற புலிக் காலும் வேண்டுமென இறைவன்பால் விண்ணப்பஞ் செய்து அவ்வாறே அவற்றைப் பெற்றுக்கொண்டு வழுவின்றித் தவம் புரியலாயினர். அதுமுதல் அம் முனிவர் புலிக்காலர் (வியாக்கிரபாதர்) எனப்பட்டார். அவர் தவம் புரிந்த தில்லையூர் புலியூர் எனப்பட்டது எனப் புலியூர் வரலாறுணர்க.

இப்புலிக்கால் முனிவர் சிவத்தியானத்தில் அமர்ந்திருநதபோது அவ ரகத்தில, முன் தேவதாரு வனத்து நாறபத்தெண்ணாயிரம முனிவர்களது செருக்கடங்குமாறு இறைவன் நிகழ்த்திய திருக்கூத்தின் வரலாறு உதயமாயிற்று. அத்திருக் கூத்தினைத் தில்லையின்கட் காணுதறகு விழைந்த வாறே அம்முனிவர் அன்றுதொட் டிருந்துவரலாயினர்.

இறைவன் திருநடனத் தியல்பெல்லாம் திருமால் கூற அறிந்த ஆதிசேடன், திருமால் பணித்தவாறே அந்நடனங் கண்டுய்யுமாறு கைலை

மலைக்குச் சென்று பெருந்தவமாற்றினன். அதற்கு மகிழ்ந்த இறைவன், "அனபனே இவ்வுலகிறகு மத்திய இடமாகிய தில்லையிலே என் நடனங் காண விழைந்திருக்கும் புலிக்கால் முனிவனுடன் நினக்கும் அந்நடனத்தைக் காட்டுவேன். ஆங்கு வருக" எனப் பணித்தான்.

அஙஙனமே அம் முனிவரும் தில்லைக்குச் சென்று புலிக்கால் முனிவருடன் ஒனறுபட்டொழுகி வரலாயினர். அந்நாளில் இறைவன் அவவிருவர்க்கும் தன் நடனத்தை அமபலத்தே காடடியருளினன் எனத் தில்லைத் திருநடன வரலாறுணரக. இதன் விரிவைத் தோயுஞ சுவைசால் கோயிற் புராணத்துள் கண்டறிக.

பொதுவினில் நடம் நவில் இறைவன் ; உமையொடு காளிக் கருளிய இறைவன் ; அழகுறு சிறுநகை இறைவன் என்க.

இறைவியின் பசுமை சான்ற திருமுகத்திலே வாய் சிவந்திருப்பது மிக்கதோர் அழகாகும் என்பதும், இறைவனுடைய ஆனந்தம பறறி அவளும ஆனந்தித்து நின்ருள் எனபதும தோன்றக் "கனிதரு செவ்வாய் உமை" எனப்படடாள் என்க.

முன் தாருகன் என்னு மசுரனைக் கொல்லுமாறு துர்க்கையால் ஏவப்பட்டுச் சென்ற காளி, அவனுடலைப் பிளந்து குருதியைப் பருகி இரத்த வெறியேறி உலகத்துயிரகள்மேல் தாவுதலும, இறைவன் சென்று கொடுங் கூத்தயர்நது அவளை அமைதியுறச் செயதானன்றே. அவ்வொடுக்கங் கருதி அவள் வாளர் "காளி" எனப்படடாளெனக.

சாந்த நெறிபற்றி உமையையும, கொடுநெறி பற்றிக் காளியையும் இன்புறுத்தியவன், அடியவரை ஒரு நெறிபறறி ஆண்டு, என்னையும என் திறத்தாரையும கண்ஞேட்டமினறிக் கைவிடடு வாளா போயினன. காளிக் கருளிய கொடுநெறி பறறியேனும எமக்கருளாது போயது, அவன பொது நிலை நின்றமைக்குப் பேரிழுக்காம் என்ற குறிபபுமுணரக.

ாண்டிய அடியவர என்றது ஒன்ற ஒனற உடன் கலந்தும், எரிபாய்தல் முதலாயின செய்து உடல்விடடும சென்ற அடியார்களை எனக.

இனி, கைக்கிளை நெறிபறறிப் பதஞ்சலிக் கருளிய பரம நாடக, வென்று இதஞ்சலிப் பெயதநின்றேங்கிய அடியார்களை அன்பின் ஐநதிணை நெறிபறறி ஒழுகச் செய்தவர் தலைமகளாந் தகுதிவாயந்த நம்மடிகளே யாவர். இதனை உயிருண்ணிப்பத்து ஐநதாந் திருப்பாடடானும், திருபபாண்டிப பதிகத்தானும், சென்னிப்பத்து பத்தாந் திருப்பாடானும். யாத்திரைப் பத்தானும, திருப்படையெழுச்சியானும, பண்டாய நான்மறை இரண்டாம் திருப்பாட்டானும உணர்க. ஒனற ஒன்ற உடன் கலத்தறகும, அஙஙனமின்றி எரிபாயந்தும், வரைபுரண்டும், அன்ன பிறவாறுற்றியும் பாதமெய்தறகும் இயல்பாகவே ஆறறல வாய்க்கப்பெறறிருந்த அடியார் களுக்கு இறைவன் தானே தோன்றி அருள் புரிவன் என்பது நூறகருத் தாகலின, அவவாற்றல் வாய்க்கப் பெறதிருந்தேங்கும அடியாரகளுக்கு உறுதுணையாக இருந்து, அவர்களை அன்புநெறிக்கண் பயில்வித்து மேலேறறுமாறே இறைவன் குறிபபாலுணர்த்தி அடிகளைப் பெருந்துறைக்

கண் ஒன்ற ஒன்ற உடன் கலந்தருளாது விடுத்துத் தில்லை புக்கான் என்பதும் ஈண்டுணர்க.

இனி, பின்வந்த பொலிதருபுலியூர்ப் பொதுவென்றதற்கு, அடியவர் ஈண்டியதனாலே பொலிவு பெறற புலியூர் என்றுரைக்க. புலியூர், இமயத்தின் இயல்பு வாய்ந்து பொன்னனியன்றும், அடியவர் ஈண்டியும் பொலிவுற்ற தென்றபடி.

இனிது புக்கருளினன் எனக் கொண்டுரைத்தலும் செவ்விதாம்.

இனிமை, இறைவன் கோடிய செயலையும், அடிகள் ஆற்றாமையான் வந்த சீற்றத்தையும், குறிப்பாலுணர்த்தி நின்றவாறுங் கொள்க

இனி, காட்டியும் (104), அருளியும் (106), கறக்கியும் (கறங்கவும்) (108), கைக்கொண்டருளியும் (110), அணிநதும் (114), வண்ணம் பயின்றும் (பயின்றவண்ணமும்)(116), பதியாகவும் (118), ஊராகவும் (120), பெயராகவும் (122), மலையாகவும் (124), (கொண்டு) ஆண்டு கொண்டருளி (126), ஒழித்தருளி (129), கலந்தருளியும் (131), பாயந்தும் (பாயவும்) (132) எய்தியும் (133), அலறியும் (134) மண்டியும்) (135), அரற்றி (136), பாதமெய்தவும் (137), ஏங்கவும் (139), புக்கினிதருளினன் (145) (என்றிங்ஙனமிருந்தனவாம) என மேற்கண்ட வினைகளைத் தொகுத்து வைக்க.

கறங்கவும் என்னும் வினையை அங்ஙனம் பிறவினையாக்காது அங்ஙனமே கொண்டு வேறாக ஆண்டு கொண்டருளி என்பதுடன் முடித்தலு மொன்று; வேண்டுமேல் அங்ஙனங் கொள்க.

இனி இப்பாட்டுள் ஆங்காங்குத் தொகுத்து வைத்திருந்த வினைகளைக் கூட்டி, ஒலிதரு கைலை உயர்கிழவோன் (146), என்னுடைய யிருளை ஏறத் துரந்தும் (6) (துரந்த பயன் கொள்ளாதாய்), வந்தருளி (26), அமர்ந்தருளியும் (23), எழுந்தருளியும் (22), ஈண்டஇருந்தும (70), இடம்பெற இருந்தும் (83), குறியாயிருந்தும் (91), படுத்து (95), ஆகிய தயாபரனும், எம்மிறையும் (96), அருளுடை அண்ணலுமாகி (101), (ஏனைய அன்பர்களின் பொருட்டுத்) தமைந்திருந்தருளியும (99), எந்தமையாண்ட பரிசது பகரின் (102), சொள்கையுஞ் சிறப்பும (8), (எங்ஙனமிருந்தன வென்றால்) ஆண்டு கொண்டருளி (126), என்னை ஒழித்தருளி (129), உடன் கலந்தருளியும் (131), எய்தவும் (137), ஏங்கவும் (139), புக்கினிதருளினன் (145) (என்றிங்ஙனமிருந்தனவாம்) என, இத்திருப்பாட்டிற்கு வினைமுடிபு செய்க.

திருச்சிற்றம்பலம்

## இரண்டாவது

# திருவண்டப் பகுதி

### இணைக்குறளாசிரியப்பா

திருச்சிற்றம்பலம்

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் தெரியின்
வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாபே ரூழியும் நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறைமா ருதத்து
எறியது வளியில்
கொட்கப் பெயர்க்கும் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்கும் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழவோன் நாடொறும்
அருக்கனிற் சோதி அமைத்தோன் திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன் திண்டிறல்
தீயில் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கம் கண்டோன் நிழல்திகழ்
நீரி லின்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்று

எனைப்பல கோடி எனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று
முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்நேர் இல்லோன் தானே காண்க
ஏனத் தொல்லெயிறு அணிந்தோன் காண்க
கானப் புலியுரி அரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறும் நினைதொறும்
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க
அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவன் என்னும் ஒருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தரும் தன்மையி லையோன் காண்க
இணைப்பரும் பெருமையில் ஈசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவிளப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண்ஆண் அலியெனும் பெற்றியன் காண்க
கண்ணால் யானும் கண்டேன் காண்க

அருள்நனி சுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானும் தேறினன் காண்க
அவனெனை ஆட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க
பரமா னந்தப் பழங்கடல் அதுவே
கருமா முகிலில் தோன்றித்
திருவார் பெருந்துறை வரையில் ஏறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளரவு இரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழில் தோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியில் கோபம் மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட வரையுறக்
கேதக் குட்டம் கையற ஓங்கி
இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன
ஆயிடை வானப் பேரியற் றகவயின்
பாய்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொருது அலைத்திடித்து
ஊழூழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித் தெழுந்து
உருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்

மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேல் மகிழ்தலின் நோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த
அண்டத் தரும்பெறல் மேகன் வாழ்க
கருங்குழற் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பம் துடைப்போன் வாழ்க
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூறிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதிலெம் இறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க
நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றெடு தோற்ற வல்லோன் போற்றி நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியில் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனுல் காட்சியும் இல்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவுற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளம் களிப்போன் போற்றி
ஆற்ரு இன்பம் அலர்ந்தலை செய்யப்

போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி ஒற்றி முயன்றவர்க்கு ஒளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்து
உற்றவர் வருந்த உறைப்பவர்க்கு ஒளித்தும்
மறைத்திறம் நோக்கி வருந்தினர்க்கு ஒளித்தும்
இந்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்கு
அந்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும்
முனிவுற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென ஒளித்தும் சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத்து அருவரை தொறும்போய்த்
துற்றவை துரந்த வெற்றுயிர் ஆக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த ஒளித்தும்
ஒன்றுண் டில்லை என்றறி வொளித்தும்
பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்கும் சோரனைக் கண்டனம்
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்
தன்நேர் இல்லோன் தானேயான தன்மை
எந்நேர் அனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி ஆட்கொண் டருளி
மறையோர் கோலம் காட்டி யருளலும்
உளையா அன்பென்பு உருக ஓலமிட்டு
அலைகடல் திரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பவும்

கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவம் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூர் எழில்நகை எரியின்
வீழ்வித் தாங்கன்று
அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாஅமை ஒடுக்கினன்
தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியேன் நாயேன் தானெனைச் செய்தது
தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்கு
அருளிய தறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடல் திரைபுரை வித்து
உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகம் ததும்ப
வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுடல் அகத்தே
குரம்பைகொண் டின்தேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவது
உள்ளங் கொண்டோர் உருச்செய் தாங்கெனக்கு
அள்ளூ றாக்கை அமைத்தனன் ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன் என்னில்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மால் அறியாப் பெற்றி யோனே.
திருச்சிற்றம்பலம்

தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

## உரை

இத்திருப்பாட்டு, அண்டப்பகுதியென, முதற்கண் நின்ற தொகைச் சொற்களையே தனக்குப் பெயராகக்கொண்டு திரு வென்னும் அடையொடு சார்ந்து வந்தது இங்ஙனம் வருதலைக் குறிப்பென்பர். ஆத்திசூடி என்பது அந்நூல் முழுவதற்கும் ஆகிய பெயர் இஃது அங்ஙனமாகாது, அகரமுதல என்பது அகரமுதல எனத் தொடங்கும் திருக்குறளை உணர்த்திஞற்போன்று இத்திருவகவற் பாட்டினை யுணர்த்திற்று.

இனி, அண்டப்பகுதி என்பது அண்டங்களுக்கெல்லாம் மூலப் பகுதியாகிய சிவபுரம் அதுவே வீடாகிய திருவுடைமையால் திருவண்டப்பகுதி எனப்பட்டது எனினும், சிவபுரம் சேர்தலைப் பற்றிய உட்கோள்கொண்டு அடிகள் கூறியனமையின் இதற்கு இப்பெயராயிற்று எனினும் பொருந்தும்

இத்திருப்பாடலின் திரண்டபொருள், என்னை இந்நிலவுலகில் இருத்திவிட்டுச் சென்ற பிரமன் மாலறியாப் பெற்றியோன் என்ப வன், அண்டங்கள் யாவும் அணுவையொத்துச் சிறியனவாகத் தோன்றும்படி தான் மிக்குப் பெரிய வடிவுடையவனும், அவ் வண்டங்கள் யாவற்றையும் தோற்றுவித்துக் காத்து ஒடுக்கிவரும் இளைஞனும், அம்முத்தொழிலையும் செய்தற்கு வேறொருவர்பால் அதிகாரத்தைப் பெற்றுக்கொள்ளாத தன்மதிப்புடையவனும், அறுவகைச் சமயப்பேறுகளையும் தன்னுள் ஒவ்வொரு பகுதியாக அடக்கிக்கொண்டவனும், இருசுடர் ஐம்பெரும் பூதங்கள் ஆகிய வற்றுக்குரிய தன்மைகளை அவ்வவற்றின்பால் வைத்தவனுமாகிய உலகினைக் கடந்த நிலையையுடையோனுமாவன், அன்றியும், உலகத் துயிர்களை மேலேற்றும்படி அவ்வுயிர்களுக்குச் செய்த ஆக்கங் களினுல் உண்டாகிய பெரும் புகழ்களை யுடையவனாய் உலகத்துடன் ஒன்றுபட்ட நிலையையுடையோனுமாவன் ; அவனே என்தலை மகனாய்—தோன்றாத்துணையாக இருந்த—ஒரளவுக்கு யான் செவ்வி பெற்றகாலைத் தலைமகனது இன்றியமையாமையை யுணர்ந்து அவன்பாற் பெறுதற்குரிய பேரின்பங்களைப் பாவனை பண்ணி யிருப்ப, அதனால் வந்த உணர்ச்சிகளை அவன் ஒன்றக் கலவாமை யால் என்னுடல் பொறுதாக, அந்நிலைக்கண், அயன் அரி முதலா னேரும்—மறை முதலாய நூல்வல்லாரும்—விரதங்களை ஆற்றி வந்தோரும—தவம் புரிந்தோரும் என்றித்தொடக்கத்தோர்க்கெல்

லாம் அறியமுடியாத தன் அருமைப் பாட்டை எண்ணாது எளியனாய், வேதிய வடிவங்கொண்டு என்பால் வந்து அறிவூட்டி ஒன்றக் கலந்து அன்புடல் ஈந்து என்னுடன் பயின்றிருந்தானாக, அவனாற் பெற்ற ஆக்கங்களை அவ்வன்புடலும் பொறாதாக, மற்ற தன்மேல் அவ்வுடலை மேன்மேலும் வளரச்செய்து பேரன்புடலாக்கிப் பயின்றிருந்து, என்னுடனிருந்த அடியவர்களைத் தன்னுள் ஒடுக்கிக்கொண்டு, என்னைமட்டும் இங்கே இருத்திச் சென்றானு மாவன் எனவரும் என்க.

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றஎழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இல்நுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் ; 6

என்னுமிவ்வடிகளினால், தலைவனைப் பிரிந்திருந்த தலைமகள் அங்ஙனம் தன்னை இருத்திய தலைமகனுடைய செயலுக்கு மாறு பட்ட பெருமைகளை எண்ணத் தொடங்கி, கருணை வான் தேன் கலக்க அருளொடு பராவமுதாக்கினானாகிய பிரமன் மாலறியாப் பெற்றியோன் என்பவன், உலகத்தைக் கடந்தவனும், உலகத் துட் பட்டவனும், என் தலைவனுமாகிய முத்திறங்களில் வருணிக்கப்படத் தக்கவன். அவனுடைய உலகினைக் கடந்த நிலையை வருணிக்கு மிடத்து, அவன் அண்டங்களெல்லாம் அணுவாகத் தான் பெரியனு மாவன் எனத் தொகுத்துரைத்தாள் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) அண்டப்பகுதியினுள்ளே ஓர் அண்டத்தி னுடைய தொகுதியும், அவற்றின் அளக்க வொண்ணாத இயல்பும், அழகிய பெரிய பெரிய தோற்றமும், ஒன்றனுக்கு மற்றொன்று மேலாக நின்ற எழுச்சியும் ஆகிய இவற்றை இவ்வளவினவென்று சொல்லப் புகின், மற்று அவைதாம் நூற்றொரு கோடியினும் மிகுதிப் பட விரிவு பெற்றனவாகும் (அங்ஙனம் விரிவு பெற்ற எல்லா அண்டங்களையும் தன்னுள் அடக்கிய அண்டப்பகுதியானது) மனையின்கண்ணுள்ள நுண்ணிய வெள்ளிடை வழியாகப் புகுகின்ற ஞாயிற்றின் கதிர்களிடையே செறிந்து காணப்படும் அணுக்களை ஒப்ப அத்துணைச் சிறியனவாகத் தோன்றும்படியாகத் தான் மிக்குப் பெரிய வடிவுடையோனுமாவன் எ - று.

(வி - ரை.) இது தொடங்கி "என்றென் றெனைப்பல கோடி எனைப் பல பிறவும் அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன்" என்பதீருக அவனுடைய உலகினைக் கடந்த நிலை கூறப்படுவதாகக் கொள்க.

கருணை வான் தேன் கலக்க அருளொடு பராவமுதாக்கிய பிரமன் மாலறியாப் பெற்றியோன் என்பவன் இங்ஙனம் பெரியோனுமாவான் என்றபடி.

"உண்டை" என்றது, அண்டப்பகுதி என்னும் தொகுதியுள் அடங்கிய ஓர் அண்டத்தை என்க. ஒரு ஞாயிறு ஒரு திங்கள் முதலாய ஒளியுள்ளனவும், நிலமும், அன்ன பிறவும் சூழ்ந்துள்ள ஒரு பகுப்பினை அண்டம் என்ப. இறைவன் தான் ஒடுக்கியவற்றையெல்லாம் மீண்டும் தோன்றும் படியாகவும் இயற்றும் திருக்கூத்தினாலே ஒடுங்கிய அணுக்கள் எல்லாம் சுழன்று திரண்டு பேருலகங்களாதலின் அவ்வுலகங்கள் உருண்டைவடிவுற்றன என்க. இங்ஙனம் உருண்ட ஓர் அண்டத்தினுடைய பிறக்கமும், அளப்பருந் தன்மையும், காட்சியும், ஒன்றனுக்கொன்று நின்ற எழிலும் ஆதியனவற்றைக் கூறுமிடத்து நூறறொரு கோடியினும் மேற் பட்டனவாம். அவ்வோரண்டத்தினைப்போலப் பலகோடி யண்டங்களை உள்ளடக்கிய அண்டப்பகுதி அணுவை யொப்பத் தான் பெரியனுளன் என்றவாறு.

பிறக்கம் - குவியல், தொகுதி.

"பிணத்தின் பிறக்கம்" (கம்பரா நாக. 156)

என்பதுங் காண்க. ஓரண்டத்துள் அடங்கியனவாக மேற்கூறியதும், இனனும் கந்தபுராணம் அண்டகோசப்படலம் முதலாயவற்றுள் விரிக்கப் பட்டனவும அறிந்தவரையில் அன்றி முடிந்த முடிபல்ல எனக் கொள்க.

தன்மை - அவற்றின் இயல்புகள். காட்சி - தோற்றப் பெருமை. நூற்றொருகோடி எனபது, ஆயிரந்தலை என்றாங்கு அளவின்மையைக் குறிக்க வரும எண்ணினும மிக மேற்பட்டு நிற்கும் ஓர் அளவின்மையைக் குறித்து நின்றதென்க.

பகரின் இங்ஙனம் பகரலாமேயன்றி அறுதியிட்டுப் பகரமுடியா தென்றபடி.

இல்நுழை கதிரின் "துன்னணு" என்றது பரமாணுவை. அணுவை நோக்க அண்டம் எப்படியோ அப்படியே அண்டத்தை நோக்க அவனும் எல்லையற்றுப் பெரியனுவான் என்க. நுழை என்னும் சொல்லாற்றற்கேற்ப அங்ஙனம் விரிக்கப்பட்டது.

நின்ற எழில் என்பது நின்றெழில் என விகாரப்பட்டது. புரை என்பது, மெய்யுவமத்துள் துணிபொருட்கண்ணன்றி ஐயப்பொருட்கண் வந்த உவமச்சொல். இதனை,

"நாலிரண் டாகும் பாலுமா ருண்டே"

(தொல். பொருள். உவம. சூத். 8.)

என்பதற்குப் பேராசிரியர் உரைத்த உரையானும் உணர்ந்துகொள்க.

இனி, இத்திருவண்டப் பகுதியுள்ளே, கீர்த்தியுள் "ஏலவென்னை ஈங்கொழித்தருளி" எனத் தொகுத்த வரலாற்றினையே அம்முத்திறங்களினும வைத்து விரிக்கப்படுகின்றதென்றுணர்க.

தெரியின்
வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பேரூழியும் நீக்கமும நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறைமாருதத்து
எறியது வளியில்
கொட்கப் பெயர்க்கும் குழகன், 12

என்னுமிவ்வடிகளினால், அவன் பெருமையை ஓரளவுக்குத் தெரிந்துகொள்ளின், அவனே அவ்வண்டப்பகுதியைத் தோற்று தலும் ஒடுக்குதலும் செய்வோனுமாவன் என்பது கூறப் படுகின்றது.

(பொ - ரை) அவனியல்பை ஓரளவுக்குத் தெரிந்துகொள்ளின், படைப்புக் கடவுளின் வாழுநாள்தொகையுடன் காவற்கடவுளின் அவற்கு மிகுதிப்பட்ட வாழுநாட்களும், அவற்றின் தோற்றமும், அவை வளர்ச்சியடைந்து வரும் சிறப்பும், அவற்றின் முடிவொடு பொருந்திய மிகப் பெரிய ஊழிக்காலமும, அக்காலத்தே எல்லாப் பொருளும நுண்மையொடு பொருந்தினவாகத் தத்தம இயல்பின் நீங்கின நீக்கமும், அவ்வூழி முடிந்து தோற்றம் பெறுங்காலையில் பருமையொடுபட்டு நிலைபெறுதலும் ஆகிய இவ்வனைத்தும், சூறைக் காற்றின் வீசுகையினால் முன்னியல்பாக வீசிய காற்றானது எங்ஙனம் தன்னியல்பிற் பெயர்ந்து அதன் நிலையிற் பட்டுச் சுழலுமோ அச்சுழற்சிபோலத் தம் நிலையிற் பெயர்ந்து தன நிலையிலே சுழலுமாறு வைக்கும் இளைஞனுமாவன் எ - று.

(வி - ரை) தொகை - எண். அஃதீண்டாகுபெயராய் அக்கடவுளின் வாழுநாள்மேல் நின்றது. படைப்புக்கடவுள வாழுநாளினும் காப்புக்கடவுள் வாழுநாள் விஞ்சியதாகலின் மாலவன் மிகுதியும் எனப்பட்டது.

தோற்றமாவது, அவ்விருவர் தம் வாழுநாட்களும, அன்ன பிறவும், அவர் அதிகாரத்திற்குட்பட்டனவும் தோன்றுதல். அவையெல்லாம் அவ்வக் காலத்தில வளர்ந்து வருதலாகிய சிறப்பென்க. அவற்றிற்கு ஒருங்கே முடிவு வருங்காலம மாப்பேரூழி என்பது தோன்ற "ஈற்றொடு புணரிய மாப்பேரூழியும்" என்றும், அவையனைத்தும நுண்மையுடைப் பொருள்களாகப் பிரிதலின் "சூக்கமொடு நீக்கமும்" என்றும், அவை தோன்றுங் காலத்துப் பருமையவாகி உருக்கொள்ளுமாதலின் "தூலத்து நிலையும்" என்றும்

கூறினள். " சூக்கமொடு நீக்கமும்," " தூலத்தொடு நிலேயும் " என்றியைக்க.

மாருதம் - காற்று. சூறைமாருதம் - சுழல்காற்று. எறியது வளி என்றதற்கு ஈண்டு முன்னியல்பாகவே வீசிவரும் காற்று என்றுரைக்க. இன் உவம உருபு. சுழல்காற்று வந்து அடிக்குங்கால், அங்கு முன்னியல் பாக வீசிய காற்ருனது, தனதியல்பாகிய இயக்கத்தினின்றும் மாறுபட்டு அதனியக்கத்துள் அகப்படுதல்போலவே, படைப்புக் கடவுளும், அவனது படைப்பு முதலாயினவும், காப்புக்கடவுளும், அவனது காவல் முதலா யினவும், இறைவனது அழித்தல் தொழிலுககுட்பட்டன என்றவாறு.

தன்னே யொழிந்தவரெல்லாம் குழந்தைகளாகத் தோன்றியும், இளேஞ ராக வளர்ந்து சிறந்தும், மூப்புடையராகி அழிந்தும் செயற்படவும், தான் ஒருவனே எஞ்ஞான்றும் இளமையும் அழகும் நிரம்பியுள்ளான் என்பதும் இங்ஙனம் கொட்கப் பெயர்க்கும் தொழில் அவனுக்கு ஒரு சிறு விளே யாட்டினே ஒக்குமென்பதும் தோன்ற " குழகன் " எனப்பட்டான்.

அண்டங்கள் முதலியவற்றை நுண்ணியனவாக ஒடுக்குதலே அவை தம்மை அழித்தலாகலின் " சூக்குமத்து நீக்கியும் " என்றும், நுண்ணியன வாகப் பிரிந்தவற்றை மீண்டும் தன் கூத்தினுலே பருமையனவாகத் திரட்டுதலே தோற்றமாகலின் " தூலத்து நிலேயும் " என்றும் இயைத்தாம். ஒடுவைத் தூலத்திற்கும் கூட்டுக. காலத்தின் நுண்மையும் பருமையும், உயிரின் நுண்மையும் பருமையும், அண்டத்தின் நுண்மையும் பருமையும் அன்ன பிறவற்றின் நுண்மையும் பருமையும் என்னுமிவற்றையெல்லாம் விரித்துக்கொள்க. உயிரின் நுண்மையாவது மும்மல அழுக்கும் அவற்ருடைய திரட்சியும் ஒடுங்கியிருத்தல். அதன் பருமையாவது, அவறறுடன் தொடர்புற்று அவை விரியப் பெற்றிருத்தல் என்க.

ஊழி - தினப் பிரளயம் பேரூழி - கற்பாந்தப் பிரளயம் மாப்பேரூழி- சர்வசங்காரப் பிரளயம. இவற்றின் விரிவை திருமந்திரம் (மந். 2. பிரிவு. 11 ) முதலியவற்றுட் காண்க.

தெரிந்துகொள்ளுதலின் அருமை தோன்றத் " தெரியின் " எனப் பட்டது. தெரியின் என்றலானே, முற்கூறியவை இறைவனது வாக்கு மனு தீத சோசர நிலேயைத் தெரிப்பனவென்பதும், பின்வருபவை அவனது உலகத்துடன் ஒன்றுபட்ட நிலேயை ஓரளவிற்கு வருணிப்பவை என்பதும் பெறப்படும் என்றுணர்க.

—முழுவதும்

படைப்போற் படைக்கும் பழையோன், படைத்தவை
காப்போற் காக்கும் கடவுள், காப்பவை
கரப்போன்; கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள், 16

என்னுமிவ்வடிகளினுல், அவன் முத்தொழிற்கும் மூல காரணனு மாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) படைப்புக் கடவுளாகிய நான்முகனைப் படைக்கும் முன்னோனும், அங்ஙனம் படைக்கப்பட்ட நான்முகனால் படைக்கப்பட்டனவற்றைக் காவல் செய்துவருங் கடவுளையும் காக்கின்றவனும், அக்கடவுளாற் காக்கப்படுகின்றனவற்றை ஒடுக்கி மறைக்கின்றவனும், இங்ஙனம் மறைக்கப்பட்டனவற்றிற்கு அதிகாரியாகிய தன்னைச் செயற்படுத்துதற்குத் தன்னின் மேற்பட்ட பிறர்வினை முதலாகக் கருதுவதற்கில்லாத தன்மதிப்புள்ள கடவுளுமாவோன் எ - று.

(வி - ரை) நான்முகனைப் படைத்தோன்; அவனுக்கு ஆற்றலும் பதவியும் கொடுத்தான்; திருமாலைப் படைத்து அவனுக்கு ஆற்றலும் பதவியும் அளித்து அவனையும் அவன் தொழில் பதவி முதலாயவற்றையும் காப்போன்; அக்கடவுளர்களையும் அவர்கள் அதிகாரத்திற்கு உட்பட்டனவற்றையும் செவ்விபெறும் பொருட்டுத் தானே சென்று மறைப்போன்; அங்ஙனம் மறைத்த தன்னினமேல் ஒரு கடவுள் வேறாக வந்து தன்னையும் செயற்படுத்தற்குளது என்று கருதாத தன்மதிப்பையுடைய கடவுள் என்க.

படைக்கப்பட்டும் காக்கப்பட்டும் வரும் பொருள்களைச் சிதைக்கில், அவற்றுக்கெல்லாம் முன்னமைந்திருந்த வடிவங்கள் மறைந்து போமாதலின், அழிப்போன் என்னது கரப்போன் எனப்பட்டது உருத்திரர் வரையிலுமுள்ளவர்களைச் சிவமாகப் பாவிக்கலாம் ஆதலின், அவர்கள் செயல்களையும் அவன் செயலாக அமையக் கூறப்பட்டது.

கருத்தென்பது தன்பொருட்டாதலை,
"கற்றுரை நோக்கிக் கருத்தழிக"
என்னும் நீதிநெறிவிளக்கச் செய்யுட் பகுதியானுமுணர்க.

பழையோன் என்பது புராணன என்னும் வடசொற் போன்றதொரு தமிழ்ச்சொல்லென்க. சர்வசங்கார காலத்திலே உயிர் உடல் பொருள் முதலியவெல்லாம் தன்னுள் ஒடுங்கவும், தான் மற்றொன்றினும் ஒடுங்காது அங்ஙனமே நின்று நான்முகனைப் படைத்தலின் பழையோன் எனப்பட்டது இனி, நாடுகிழவோன் என்றுங்குப் பழையோனும் இறைவனுக்குரியதொரு பெயர் எனினுமாம்.

சார்ந்து இயைவது சாரியை என்றுங்குக் கடந்து உள்ளது கடவுள் என்றாயதென்க.

—திருத்தகும்
அறுவகைச் சமயத்து அறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழவோன் 19

என்னுமிவ்வடிகளினால், அவன் பெரும்பேரின்பத்தைத் தருதற்குரிய தலைவனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

**(பொ - ரை.)** சிறப்புத் தரும் ஆறு வகைப்பட்ட சமயக் கொள்கைகளிலே ஈடுபட்டுவரும் ஆறு வகைப்பட்ட கோட்பாடுகளை யுடையோர் தமக்கெல்லாம் அவ்வந்நெறிச் சென்று பெறுதற்குரிய வீடுபேறுகளாய் அமைந்த பகுதுகளில் நிலைபெற்ற தேவர்களும், அவ்வப்பகுதிகளும், புழுக்களாகவும் மலகூடங்களாகவும் ஒக்கும்படி தான் ஒருவனே மிக்குப் பேரின்ப வீட்டினை அளித்தற்குரிய **தலைவனுமாவன் எ - று.**

(வி - ரை ) திரு - சிறப்பு. வெறுவியராய்க் கிடந்துழலும் மக்களினும் கலை நிரம்பி ஒரு கோட்பாடுபற்றி யாதேனும் ஒரு நூலைக் கற்றுத் தேர்ந்து ஒழுகிவருதற்குரிய வழி பயப்பது சமயமாதலின் "திருத்தகு சமயம்" எனப்பட்டது. சமயம் - தன்வயப்படுத்துவது. களவு செய்தல் பாவ முடைத்தேனும் வறியோர்பாலும், பாற்சோறு கொடுத்தவர்பாலும் களவு செய்தலாகாது ; திருமங்கலியத்தைக் களவு செய்தலுமாகாது என்றாங்கு வரும் கள்வர்க்குரிய அறநெறிபற்றியும், தெய்வங்களை வழிபட்டும், குரவர் பால் உபதேசம் பெற்றும், நன்றிபாராட்டியும் வருங் கள்வர்கள், அறவொளி யும் அன்பொளியும் நாளடைவில் வழிகாட்ட, அவற்றின் துணையால் தமக்கு இன்னல் தருவனவற்றைப் படிப்படியே யுணர்ந்து இறுதியில் நன்னெறிக்கட் செல்வாராதலின், அவர்கள் பகுதி நெறியும் திருத்தகு நெறியெனவே படும். இந்நாடொழிந்த ஏனைய நாட்டு மறையெல்லாம் உல கியலும் மறையியலும் வேறு வேறாய் வழக்கியலுக்கு ஒவ்வாதாவறு அமைந்துள்ளன எனறுணர்க. நமநாட்டு மறைகளோ மக்கள் உளப் பாங்கினையும், அறிவு நிலையையும் பாகுபாடுசெய்துகொண்டு குறவர், கள்வர், கொலைஞர், அன்ன பிறர் என்றனைவர்க்கும உரிய வாழ்க்கைக் குள்ளேயே அன்பொளியும், அறிவொளியும் புககொளிரும்வண்ணம் இயம்பாநின்றன. ஆதலால் அமமறைகள் வகுத்த விதிவிலக்குகட் கேற்பவே நம் நாட்டவர், வாழ்க்கையும் ஒன்றுபட்டு வருதல் கண்கூடு. வேற்று நாட்டுக்கலை நாகரிகம் ஆதியன இந்நாட்டினுட் புகுந்த பின்னரே, நம்நாட்டின் பண்டைய தெய்வீக நாகரிகம ஒளிமழுங்கி வாராநின்றது. மற்றிதனை அறிஞர்கள் ஓர்ந்து பாதுகாப்பாராக. தலம் கோயில் தீர்த்தம் ஆதியனவற்றில் தெய்வங்கள் உறைவனவாகக் கண்டுணர்ந்த நம் முன் னோர்கள் அவற்றையெல்லாம் தூயனவாக வைத்து ஓம்பிவந்தனர். புறநாட்டு நாகரிகக் கலையால் இக்காலத்தார் எங்ஙனம் அவற்றை ஓம்பிவருகின்றனர் என்றும், அவையெல்லாம் முன்னர் எத்தகைய நிலையில் இருந்தன என்றும், இக்காலத்தே அவை யாவும் மலகூடங்களை ஒப்பவும், களவுச்சாலைகளை ஒப்பவும், காமம், கவறு முதலியன வளரும் மன்றங்களை ஒப்பவும் ஏன் இருந்துவருகின்றன என்றும் அன்பர்கள் சிந்திப்பார்களாக. இந்த அன்பு நூலிலே பல தீர்த்தங்களும் தலங்களும் தெய்வ வழிபாடுகளும் இடை யிடையே செறிந்துவருதலின், இன்னவற்றை ஒரு சிறுது ஈண்டே விளக்கி னும். இதனால் இறைவன்மேல் அன்பு பூண்டுவருதற்குரிய சமயம் யாதே

யாயினும் ஆகுக, அத்தகையன எல்லாம், தெய்வத் திறம் பகராத ஏனைய வற்றினும் சிறப்புடையனவாகும் என்பது போதரத் திருத்தகும் என அவற்றைச் சிறிபபித்தவாறுமாமென்க.

அறுவகைச் சமயங்கள் நூல்களிலே பலவாருகக் கூறப்படுகின்றன. மணிமேகலேயுள் பூதவாதத்தை உள்ளடக்கிய உலகாயதம், பௌத்தம், சாங்கியம் எனவும், அளவை சைவ வைணவ வாதங்களை உள்ளடக்கிய நையாயிகம், வைசேடிகம் எனவும், பிரம வேத வாதங்களை உள்ளடக்கிய மீமாஞ்சகம் எனவும் சமயங்கள் அடக்கப்பட்டுள்ளன. இவ்வடைவினுள் ஆசீவக நிகண்டாவாதங்கள் பெருவழக்கு அன்மைபற்றி இடம்பெற்றில வேனும், அவ்விரண்டும் பின்னர் எடுத்துக்கூறப்படுதலின், அக்காலத்திலே தான் தமிழ்நாட்டில் அவை முளைத்தன என்பது பெறப்படும. இனி, திவாகர நூலாசிரியர், சாங்கியமதம், நையாயிகம முதலாய மதங்களுள் அடங்கிநிறறலின் அதனை ஒழித்து, அதற்காக ஆருகதத்தைக்கொண்டு, வைசேடிகம், நையாயிகம், மீமாஞ்சை, ஆருகதம், பௌத்தம், உலகாயதம் என்னும் ஆறினையும் அறுவகைச் சமயங்களாகக் கொண்டனர் இத்திவாகரர் காலத்திற்கும் மணிமேகலை நூலாசிரியர் காலத்திறகும் இடைப்படட காலமே ஆருகதம் அறுவகைச் சமயங்களுள் ஒன்றெனக் கொள்ளப்பட்ட கால மென்க. திவாகரர்க்குப் பிந்தியவராகிய பிங்கலந்தை நூலாசிரியர் அறுவகைப் புறச்சமயங்கள் எனவும், அறுவகை அகச்சமயங்கள் எனவும் இருகூறு படுத்து, உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சகம், பாஞ்சராத் திரம், பாட்டாசாரியம் என்பவறறை அறுவகைப் புறமாகவும், வைரவம், வாமம, காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்னுமிவறறை அறுவகை அகமாகவும் கொண்டுரைத்தார். இவர் சைவம் நுதலிய ஆறனை யும் அகச்சமயங்களாகவும், பாஞ்சராத்திரத்தைப் புறத்துள் ஒன்ருகவும் அமைத்தமையால், நையாயிகமானது சைவ வைணவவாதங்களுள் அடங்கு தலின், அந்நையாயிகத்தையும், மீமாஞ்சகத்துள் வைசேடிகம் அடங்கு தலின் அவ்வைசேடிகத்தையும் நீக்கினர். இவர்க்கும் பிற்பட்ட சூடாமணி நிகண்டாசிரியர், புறச்சமயங்களுள், பாட்டாசாரியம் மீமாஞ்சகத்துள் அடங்குதலின் அதனையொழித்து அதறகாக அக்காலத்திற் பிரசித்திபெற்ற மாயாவாதத்தைக்கொண்டு புறச்சமயமாறும் எண்ணினர். அகச்சமய மாறும் பிங்கலந்தையார் கொண்டவாறே கொண்டனர். இங்ஙனம் பிங்கலந்தையாரும், சூடாமணி நிகண்டுடையாரும், அகச்சமயமாருகவும், புறச்சமயமாருகவும் புதியன புகுதலாகக் கொண்டனர். இனி அடிகள்,

"இருமுச் சமயம்" (திருவண்டப் 79.)

எனவும்,

"அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்" (ஷை. 17.)

எனவும், புறம் அகம் என்ற பாகுபாடின்றிக் கூறுதலின், முற்கூறிய இரு வர்க்கும், திவாகரனுர்க்கும இடைப்பட்ட காலத்தவராவர் என்பது வலியுறும் என்க. இன்னுமிதனுலே, அகப்புறச் சமயங்களை வகுத்துக் கூறிய அவ்விரு

வருட் பிற்பட்டவராகிய சூடாமணிநிகண்டுடையார், புறச்சமயங்களுள் ஒன்றெனக் கொண்ட மாயாவாதமே போற்றித்திருவகவல் 54 முதலாக 58 இறுதியாகவுள்ள அடிகளில் கூறப்பட்ட மாயாவாதம் ஆகும் எனபது பொருந்தாமையுமுணர்க. இனி, திருவாகரர்க்கும் பிறபட்ட காலத்திலே தான் பிங்கலந்தையாரன்றியும், அருக சமயத்தவராகிய சூடாமணியாரும், சைவம் நுதலிய சமயங்களை அகச்சமயங்கள் ஆறெனககொண்டமையே அதன் பரிணுமத்தினையும், வைணவத்தைப் புறசசமயத் துடகொண்டமையே அதனது அப்பிரசித்தத்தையும் நன்கு புலப்படுத்துமென்க. இனி, அறுவகைச் சமயங்களின் இயல்புகளை இனனும ாண்டு விரிப்பின் அது மற்ருென்று விரித்தலாகும் என்றஞ்சி விடுகின்ரும்.

விண்ணேரும் பகுதியும எனக்கொண்டு, அங்ஙனம் கொண்டமைக் கேற்பக் கீடமும் மலகூடமும் புரையும் என விரிக்க. பதவியைமட்டுங் கொள்ளாது, அதனையும் அதன் தலைவரையும் உடன்கொள்ளுதல் சிறப்புடையதன்ரே! இவ்வறுவகைச் சமயத்தோரும் தாநதாம் நின்ற சமயங்களிலே நுகரும் நுகர்ச்சிகள் யாவும் இனபமாவன எனத் தம் நிலை பற்றி உணரினும், அவற்றினும் மேற்பட்ட சமய நிலைகளை அறியும் பேரறிவு பெற்றவழி அவை யாவும் துன்பமாகும் என உணர்வர் என்பதும் கீடம்புரையும் என்றதனுலே கொள்ளக்கிடந்தது.

—நாள்தோறும்
அருக்கனில் சோதி அமைத்தோன், திருத்தகு
மதியிற் தண்மை வைத்தோன்; திண்திறல்
தீயின் வெம்மை செய்தோன், பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன், மேதகு
காலின் ஊக்கம் கண்டோன்; நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன், வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன், என்றென்று
எனைப்பல கோடி எனைப்பல பிறவும்
அனைத்தனைத்து அவ்வயின் அடைத்தோன் 28

என்னுமிவ்வடிகளினுல், செங்கதிர் முதலாய பலவற்றுக்கும் உரிய கருப்பொருள்களை எல்லாம் படைத்தோனுமாவன் என்பது கூறப் படுகின்றது

(பொ - ரை ) ஒவ்வொரு நாளும் ஞாயிற்று மண்டலத்திலே ஒளி வீசும் வண்ணம் அதன்பால் ஒளியை வைத்தவனும், அழகிய திங்கள் மண்டலத்தே குளிர்ச்சியை வைத்தவனும், தீயிலே வலிதாகிய ஒளியுடன்கூடிய வெப்பத்தினைச் செய்தவனும், மெய்ம்மை சேர்ந்த வானத்திலே பரத்தலை வைத்தோனும், மேன்மை பொருந்திய காற்றிலே எப்போதும் வீசுதலாகிய முயற்சியை

உண்டாக்கிஞேனும், குளிர்ச்சியையுடைய நீரிலே இன்சுவை விளங்கச் செய்தோனும், மண்ணிற் புலனுகும்படி வலிமையை வைத்தோனும், இங்ஙனமே எவ்வெக்காலங்களிலும் எத்துணையவாகிய பலகோடியும் அக்கோடியினும் மேம்பட்ட எண்ணிக்கையுடைய அவ்வளவினவாகிய அவ்வப்பொருள்களிடத்திலே அவ்வவற்றுக்குரிய தன்மைகளையும் அமைத்தோனுமாவன் எ - று.

(வி - ரை.) செங்கதிர்க் கடவுள் இரவிலே தனது ஒளியைத் தீக்கடவுள் மாட்டளித்தும், பகலிலே மீண்டும் பெற்றும் வருமென்பது வேதக் கொள்கையாதலின் " நாள்தொறும் " என்றும், வெம்மை தீர நிலவுப் பயன் துய்க்கும் திருவுடைமைபற்றித் " திருத்தகு மதி " என்றும், (ஒளியை இவ்வுலகத்திற்கு வரச்செய்தமையால் வெளியென்பதோர் பொருள் உளதெனக் கதிரவன் அறிவித்தான் என்ப.)

" ஆயிரங் கதிராழி " (தொல். செய். பேர். நச். உரைமேற் கோள்) என்னும் பாட்டினுல்,

வெளியென்பது ஒரு பொருளாகாதென, உலகாயதர் முதலியோர் கூறும் வாதத்தால் உளதாகிய பொய் தீரப்பெற்றுச் சிறப்புற்றமையால் " பொய் தீர்வான் " என்றும், தீயாகிய மாபெரும் பூதம் வெம்மையும் ஒளியும் ஏனையவற்றினும் வலியும் உடையதாகலின், அது தோன்றத் " திண்திறல் தீ " என்றும் கூறிஞர். திறல் - ஒளி. இஃதிப் பொருட்டாதலைத்

" திறல்விடு திருமணி இலங்கு மார்பின் " (பதிற். 4-63.)

என்பதஞனு முணர்க.

கலத்தல் - பரத்தல். " கட்டுரை கலந்த காலை " (கம்பரா. ஆர. 88.) என்பது கொண்டுணர்க. இன்னும் அவையெல்லாம் தோன்றுதற்கு இன்றியமையாதனவற்றையும் இறைவனே அமைத்தான் என்பதூங் கொள்க. ஒளிவேறு, வெம்மைவேறு என்பது தோன்றத் " திண்திறல் தீயின் வெம்மை " என்றார். ஊக்கம் - முயற்சி, என்றது விசுதலாகிய முயற்சியை. இதனுல் காற்றுக்குச் சதாகதி என்னும் பெயர் உளதாயிற்று. கால் என்னும் சொல்லின் பொருள் இனிது தோன்ற அங்ஙனம் கூறிஞர். இருசுடரும் ஐம்பூதமும் எமக்கு இன்பமூட்டி வருகின்றன என்றறிதல் பொய்யறிவென்பது இவற்றுன் உணர்த்தப்பட்டதென்றுணர்க.

இனி, " அருக்கனிற் சோதி அமைத்தோன் " என்பதற்கு, உமையன்னை இறைவன் கண்களை மூடியபோதில் நெற்றிக் கண்ணைத் திறந்த வரலாற்றினைக் காட்டின், ஏனையவற்றுக்கும் அங்ஙனமே வரலாறு காட்ட வேண்டுமாதலின், அவ்வொன்றுமட்டும் காட்டியொழிதல் போலியென்க.

மண் - அறு. இவ்வறு ஏனையவற்றினும் திண்ணியதாதல் தோன்ற " மண்ணில் திண்மை வைத்தோன் " எனப்பட்டான். " இனி, திண்திறல் தீ" என்றதனுல் திண்மை மண்ணின் கண்ணுமுள்ளது; அது விறகு முதலிய

வற்றை வெளிப்படும் இடமாகக்கொண்டு தோன்றுவது என்பது தோன்றத் திண்ணென்றுரைத்தவாறுமாம்.

நீரின் நிறம் வெண்மையாகலின் நிழல் என்றதற்கு வெள்ளிதாகிய ஒளி எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். நீர்க்கு இன்சுவை யொன்றே உளதாகலின் " நீரி லின்சுவை நிகழ்ந்தோன் " எனப்பட்டான்.

" நீருள் நிழல்போல " (கலி. நெய் 24.)

என்றுங்கு நிழல் என்றதற்குப் பிரதிபிம்பம் எனப்பொருள் கொள்ளலா மேனும், அந்நீர் இன்சுவைதீதாதற்கு அதன் தண்மையே காரணமாதலின், மற்றதனுக்கு அப்பொருள் கொள்ளாமாயினம்.

அருக்கன், திங்கள், வெளி என்னுமிவற்றை முறையே கொடிநிலை, வள்ளி, கந்தழி எனக் கொள்வாருமுளர். அவை பொருளாகாவென்பது வருமாறு :—

" கொதித்துராய்க் குன்றிவர்ந்து கொடிக்கொண்ட கோடையால்
ஒதுக்கரிய நெறியன்னூர் " (கலி. நெய். 33.)

என்னுமிதனுள் வந்த கொடி என்றதற்குக் கீழ்த்திசை எனப் பொருளுரைத்தார் ஆசிரியர் நச்சினார்க்கினியர. இச்செய்யுட் பகுதியிலே வந்துள்ள குன்று எனறது உதயகிரியாகலின், அதுவே கிழக்கெனனும் திக்கைக் காடடி நிறறலின, அதன்பின வரும கொடி எனறதும் அக் கிழக்கினையே உணரத்திற்றென்றல் கூறியது கூறலாம். இங்குக் கோடை யின கொடுமை தோனறக் கூறுதலவேணடும. செங்கதிர் உச்சியில் வந்து பொருந்தும்போதே அக்கொடுமை புலப்படும. பாலைக்கு முது வேனிலும் நணபகலும சிறந்தன என்ப. அங்ஙனமாதலின் அந்நண்பகலை விளக்ககிலலாது வறிதே கீழத்திசையை விளக்கிபோதல மறறொன்று விரித்தலாம். இக்கொடி என்பது உச்சி என்னும் பொருளிலேதான் வந்த தென்றல் நேரிது. இன்னும்,

" பொய்தீ ருலகம எடுத்த கொடிமிசை
மையறு மண்டிலம வேட்டனள் " (கலி நெய். 24.)

என்னும் பகுதியில் வந்துள்ள கொடி என்றதன் பொருளையும் ஆராய் வாம. இதன்பொருள், குற்றமற்ற நன்மக்கள் உயர்த்திப் புகழ்ந்த கொடியின் மேலுள்ள மாசறற ஞாயிற்று மண்டலத்தை ஒத்தாள் என்ப தாம். வேட்டனள் - விரும்பி ஏறறுக்கொண்டனள். ஞாயிற்று மண்ட லத்தை விரும்புதலாவது, (ஞாயிற்றின் கொடுமையைத் தானும் விரும்பிக் கொள்ளுதல்.) இனியளாகாது கொடியவளாய் வெறுத்திருத்தலை என்க. உலகம் எடுத்த மண்டிலம் ; மையறுமண்டிலம் ; கொடிமிசை மண்டிலம் என்க. காலையிலும் மாலையிலும் உலகம் பரவிப் பழிச்சும் மண்டிலம் என்க. உச்சியிற பழிச்சப்படுதலும் வேண்டுமேற்கொள்க. தலைமகளின் கொடுமை யின் மிகுதி தோன்றக் கொடிமிசை என்றற்கண், அதன் கொடுமை போதர உச்சியென்னும் பொருள் ஈண்டமைந்திருத்தல் சிறுரானும் போற்றப்படும்.

ஞாயிற்றினைப்போன்று தலைமகள் தலைமகனால் புகழப்படுதற்குரியளேனும், அவள் அவனது தீவினையினாலே எப்போதும் உச்சியில் ஞாயிறனை ஒத்தவளாயினள் என்றும், அவன் தான் வருந்தியதைப் புலப்படுத்தவே ஈண்டுக் "கொடிமிசை ஞாயிறு வேட்டனள்" எனக் கொடுமையும் வருத்தமும் தோன்றக் கூறினன் என்றும் உரைத்தலே நேரிதாகும். இனி, படுஞாயிறுபோல் இரங்கற் பொருளையும் தருதற்கு விழைகின்றமையும் குறிப்பாலுணரப்படும். இன்னோரன்னவற்றால் கொடி என்றது, உச்சி உயரவு என்றாங்குப் பொருள்படுதல் காண்க

அங்ஙனம் பட்டகாலை, கொடிநிலை என்றது உச்சியில் நிலைத்திருப்பது, உயர்ந்த நிலையில் வைப்பது என்றாங்குப் பொருள்பட்டு, ஒரு சொல் விழுக்காடாய் நின்று ஆகுபெயராய் வானினை உணர்த்தும் என்றுணர்க. அஃதாவது மழையின் சிறப்பென்றுணர்க.

வள்ளி என்பது, வழங்குவது எனப் பொருள்படடு, யாவும் ஒழுக்க நிலையில் வழங்கிவருதற்கு இன்றியமையாத அறத்தினை உணர்த்துமென்க.

கந்தழி என்பது, கந்தை அழிப்பது, அஃதாவது பற்றுக்களை விலக்குவது எனப் பொருள்பட்டுத் துறவினை உணர்த்துமென்க.

இங்ஙனமாக, நீத்தார் பெருமையுணர்ந்து அவரை வணங்கி அறங் கேட்டு அதன் வழிநின்று இறைவனை வேண்ட வான் மழை பொழிந்து உலகம நிலைபெற்று வரும் என்பது காண்க.

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

(தொல். பொருள். புறத். 33.)

என, ஆசிரியர் தொல்காப்பியனார் இம்மூன்றனையும் விதந்து கூறு மாற்றானே, இம்மூன்றும் வேறு, கடவுளும் வேறு என்பது பெறப்படும். இஃதிலக்கணமாக, இதற்கியைபுடைய இலக்கியமாகத் திருக்குறட்பாயிரம் என வழங்கப்பட்டு வரும் முறபகுதி அமைந்திருப்பது கண்டின்புறுக.

எனவே, அருக்கன், திங்கள், வெளி என்னுமிவற்றையே கொடி நிலை, வள்ளி, கந்தழி என்றல் சொற்பொருள் அமைவிற்கும, சான்றோர் வழக்கிற்கும், அறிஞர் அறிவிற்கும் பொருந்திவாராமை யுணர்க.

அஃதான்று,

முன்னோன் காண்க ; முழுதோன் காண்க ,
தன்நேர் இல்லோன் தானே காண்க ,
ஏனத் தொல்லெயிறு அணிந்தோன் காண்க ;
கானப் புலியுரி யரையோன் காண்க
நீற்றோன் காண்க , நினைதொறும் நினைதொறும்
ஆற்றேன் காண்க , அந்தோ கெடுவேன், 34

இவ்வடிகள் முதலாக 108-ஆம் அடி முடிய அவனது உலகத்

தொடுபட்ட நிலைமையாற் போந்த புராண வரலாறுகளுள் காணப் படும் புகழ்ப் பெருமைகளை எடுத்துக்கூறி அவனை அறிமுகப்படுத்து கின்றவள், இவ்வளவில் ஆற்ருளாய் நெடுமூச்செறிந்து தடை பட்டாள் என்பது கூறப்படுகின்றது

(பொ - ரை) அங்ஙனமுமன்றி, யாவற்றுக்கும் முன்ஞேனு மாவன் அறிந்து கொள்ளுக, எல்லாமாஞேனுமாவன், தன்னை ஒப்பார் பிறர் இல்லாது தானே யாஞேனுமாவன், பன்றியின் பல்லை அணிந்தோனுமாவன்; காட்டிற் புலியின் தோலையணிந்த அரை யினையுடையோனுமாவன், திருநீறு பூசியுள்ளோனுமாவன்; இவற்றையெல்லாம் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் ஆற்ற மாட்டேன்! அறிந்து கொள்ளுக! அந்தோ கெடுவேன்! எ - று

(வி - ரை) இதுகாறும், இறைவன் அவ்வண்டப்பகுதியைத் தோற்று வித்தலும் ஒடுக்குதலும் செய்வோன் என்றவள் அவனது அத்தொழில் களிஞற் போந்த வரலாறுகளாகிய—அவனை யறிந்தோர் கூறிய புகழ் மொழிகளை அவன்மேலேற்றி அவனை யறிமுகஞ்செய்யத் தொடங்கினுளா தலின், அவ்விகற்பந்தோன்ற "அஃதான்று" எனப்பட்டது.

"முன்ஞேன்", "முழுதோன்", "தன்னேரில்லோன்" என்பனவெல் லாம் முன்னர்த் தத்துவ உணர்வின் மூலமாகப் பெறப்பட்டன. ஈண்டுப் பிறர் கூற்றிஞல் அறியப்பட்டன வென்க. முன்ஞேனை ஏகன் என்றும், முழுதோனை அநேகன் என்றும் உரைக்கலாம். நேர் உவமவுருபு.

பண்டொரு காலத்தில், இரணியன் என்பான் இவ்வுலகத்தைச் சுருட்டிக்கொண்டு பாதாளத்திற் சென்ருகை, திருமால் பன்றியுருக் கொண்டு சென்று அவனுடலைக் கிழித்துக் குருதியைப் பருகிய வெறியிஞல் பிற வுயிர்களுக்கும் தீங்கிழைத்து வருதலைக் கண்ட சிவபெருமான், அடக்கி அதன் பல்லைப் பிடுங்கித் தனது மார்பில் அணியாக அணிந்துகொண்டான் என, பன்றிப் பல்லணிந்த வரலாற்றைச் சிவரகசியம் கூறும். ஏனத் தொல் லெயிறு என்றதனைத் தொல்லேனத் தெயிறு என மாற்றுக. புலித்தோல் அணிந்த வரலாறு வெளிப்படை.

நீற்ருேன் என்றது உண்மையினின்றும் பிறழக்கூடாதவன் என்னும் பொருள் குறித்து நின்றது.

எனக்கும் அவனுக்கும் இடையேயுள்ள பழந்தொடர்பை நினைதொறும் நினைதொறும் ஆறறேன் என்க. அந்தோ கெடுவேன் எனத் தன்னையே நொந்து கொண்டவாறு. இவ்வளவில் சிறிதே நெடுமூச்செறிந்து ஆறிஞள் என்பதுங் காண்க.

காண்க என்றது இப்பாட்டில் யாண்டும் அறிந்துகொள்க என அறிமுகஞ்செய்யும் பொருளிலேயே வந்தது. மேல்வருவனவற்றிற்கும் அங்ஙனமே கொள்க.

**இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க,**
**அன்னதொன்று அவ்வயின் அறிந்தோன் காண்க; 36**

என்னுமிவ்வடிகளால் அவன் யாழிசையும், இசையை மீட்டுவோனு மாவன் ; என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) வீணையின் கண்ணே எழும் இன்னிசையாகப் பொருந்தியோனுமாவன், அவ்விசையை அவ்யாழினின்றும் எழுப்புவோனுமாவன் எ - று

(வி - ரை.) "மருவற்கினிய பண்ணகத்தான்" என்றும்,

"பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடல் மூடி இறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமும் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின்று எமமிறை நல் வீணை வாசிக்குமே"
(திருநாவுக. தேவா. தனித்திருவிருத். 7.)

என்றும்,

"தில்லை யிறையமைத்த திறலியல்யாழ்" (திருக்கோவை. 375)
என்றும வருவனவற்றால், வீணையில இசையாக இருத்தலும, அன்ன தொன்று அவ்வயின் அறிதலும் உணர்க. அறிந்தோன் இசைத்தற்கு அறிந்தோன். இறைவன் தன்னைத் தனிமையில் நின்று யாழிசைக்கின்றானாதலின், அதனைத் தன்னியல்பாகவே அறிந்துள்ளான் என்க. இனி,

"மணிகடல் யானை வளர்குழல் மேகம்
மணிவண்டு தும்பி வளை பேரிகை யாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண்ணாதே" (திருமந். 606.)

என வருவதும் அதனை யுணர்த்தும்.

**பரமன் காண்க, பழையோன் காண்க;**
**பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க; 38**

என்னுமிவ்வடிகளினால், அவன் மேன்மையும், பழமையும், அயன் அரி என்போரால் அறியப்படாத அத்தனை வித்தாரமும் உடையோனுமாவன் என்பது கூறப்பெறுகிறது.

(பொ - ரை.) மேலானவனுமாவன், முற்பட்டோனுமாவன், பிரமன் திருமால் என்போர் காணமுடியாத பெரியோனுமாவன் எ - று.

(வி - ரை) மேலோனும் பழையோனுமாக இருந்தமையாலேயே பிரமனும் மாலும அறியாப் பெருமை அவனுக்குண்டாயிற்று. மேலோனும் பழையோனுமாக இருப்பவனை அறியமுற்படாமை அவ்விருவர்க்கும் சிறுமையாயிற்றென்க.

அற்புதன் காண்க, அநேகன் காண்க;
சொற்பதம் கடந்த தொல்லோன் காண்க; 40

என்னுமிவ்வடிகளினுல், அவன் சொற்களுள் அடங்கியோனும் அடங்காதோனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) வியக்கத் தக்கவனுமாவன்; அநேகனுமாவன், சொல்லாற் பொருளுணரும் செவ்வியையும் கடந்த பழமை யுடையோனுமாவன் எ - று

(வி - ரை.) அண்டமாகவும், அணுவாகவும், ஏகனுகவும், அநேகனுகவும், எல்லாவுயிர்களுமாகவும், அவையல்லனுகவும், எவரெவர் எங்ஙன மெல்லாங் கூறினும் எண்ணினும் அங்ஙனமே யாகவும், அல்லனுகவும் அவன் இருத்தல் அற்புதமாயிறறென்க.

அநேகன், சொல்லாற் குறித்துணரப்படும் பலவகை வேறுபாடுகள் பொருந்திய உருவங்களையுடையோன். இங்ஙனங் கூறினும் அவன் சொற் பதங் கடந்தவன் என்றலே உண்மையென்க. அநேகனுயினும் சொற்பதங் கடந்த தொல்லோன் என்றபடி.

சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க,
பத்தி வலையிற் படுவோன் காண்க, 42

என்னுமிவ்வடிகளினுல் அவன் அன்பினுல்மட்டுமே அறியப்படு வோனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) மனமும் சென்றடைய முடியாத தூரத்திலுள்ள வனுமாவன், ஆனுல் அன்பென்னும் வலையுள் அகப்படுவோனு மாவன் எ - று

(வி - ரை.) சொல்லகத்தும் பொருளகத்துமன்றி மனத்தகத்தும் அவன் வீற்றிருப்பினும், மற்று அவற்றுடன் அம்மனத்தினுலும் அறிய முற்படின், அணுகிய நிலையையுடைய அவனே சேய நிலையுடையனுகப் புலப்படானுய் மறைந்து நிற்பன் என்றவாறு.

பத்தியை வலையாக உருவகித்தும் அவனை இன்னதென்று உருவகி யாதும் போந்தமை வலைஞனுக்குளள கரவு சூழ்ச்சி முதலியவற்றைக் கொள்ளாது இலேசாக அகப்படுத்திக் கொள்ளுமளவே கொள்ளற்கா மென்க.

ஒருவன் என்னும் ஒருவன் காண்க;
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க, 44

என்னுமிவ்வடிகளினுல், அவன் ஒரு தன்மையும் பல தன்மையும் உடையனுமாவன் என்பது கூறப்படுகின்றது

(பொ - ரை) எப்போதும் ஒரே தன்மையுடையவன் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவோனுமாவன், விரிந்த உல தன்மைகள் முற்றுமாக விரிந்தோனுமாவன் எ - று

(வி - ரை) விரிபொழில் என்றது ஈண்டுப் பிரபஞ்சம் என்னும் பொருள் பயந்து நின்றது. அதன் தன்மைகள் முறறுமாக விரிந்தா னேனும் தனக்கெனவுள்ள தன்மை என்றும் ஒரே பெறறித்தாக உள்ளவன் என்க. சனாதன தருமம்போல.

அணுத்தரும் தன்மை இலயோன் காண்க ,
இணைப்பரும் பெருமையில் ஈசன் காண்க , 46

என்னுமிவ்வடிகளினால், அவன் சடத்தன்மை சற்றுமில்லாதவனும், சித்துக்களுக்கெல்லாம் பெருமை வாய்ந்தோனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) அணுக்களினாலே தரப்பட்ட தன்மைகள் ஒன்றும் இல்லாதவனுமாவன் , இணைத்துக் கூறுதற்கரிய பெருமை யிலே ஈசத்துவம் உடையோனுமாவன் எ - று.

(வி - ரை) அணுத்தரும் தன்மை, சடத்தன்மை என்க. அஃது எல்லைப்படுத்தப்பட்ட தன்மையாம். இணைப்பரும் பெருமை, ஈண்டுச் சித்தின் தன்மை. அப்பெருமையில் ஈசனாதலாவது, சடப்பொருள் முற்றை யும் தன்னுட்படுத்தி முத்தொழில் செய்தல். நுண்மைக்கண்ணும் பெரு மைக்கண்ணும் எல்லைப்படுத்தப்படாத தன்மையுடையோன் என்றபடி. இனி அணுத்தரும் தன்மையாவது மிக்க நுண்மை எனக்கொண்டு, அந் நுண்மையில்லாதவனாதலாவது, அதனினும் நுண்ணியனாதல் என்றும், ஆயினும் இணைப்பரும் பெருமையையுடைய ஈசன் என்றும் விகற்பப் பொருள் தோன்ற உரைத்தலுமாம்.

அரியதில் அரிய அரியோன் காண்க ,
மருவிஎப் பொருளும் வளர்ப்போன் காண்க , 48

என்னுமிவ்வடிகளினால் அவன் மிக்க அருமையும் எளிமையும் உடையவனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) அரிய பொருளுள்ளும் மிக அருமையுடைய அரியோனுமாவன் , ஆனால் எல்லாவற்றொடும் மருவியிருந்து மற்ற வற்றை வளர்ப்போனுமாவன் எ - று.

(வி - ரை.) மிக அண்மையிலும் சேய்மையிலுமுள்ளான் என்றபடி. அவற்றுக்கு அவவவர் அனுபவ வேறுபாடே காரணமாயின வென்க.

நூலுணர்வு உணரா நுண்ணியோன் காண்க ;
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க ; 50

என்னுமிவ்வடிகளினால், அவன் பிறர் கூற்றுக்களினாலே அறிந் துணரப்படாதவனும், தாந்தாமே அனுபவித்துணரத் தக்கவனு மாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) நூல்களால் உண்டாகும் உணர்வினுல் உணரப் படாத நுண்ணியனுமாவன், மேலுங் கீழுமாகிய எல்லாமாக விரிந்தவனுமாவன் எ - று

(வி - ரை.) அனுபவித்துணரும் உணர்விற்கு நூலுணர்வு கருவி மாத்திரையாகவே நிறறலின் " நூலுணர்வுணரா நுண்ணியோன் " எனப் பட்டது.

எந்த மத்திய இடத்திலிருந்தும் மேல்கீழ் என வரையறை யில்லை என்க. எவ்விடமும் மத்திய இடமே. மேல்கீழ் என்றது எல்லாம் என்னும் பொருட்டாகவே நின்றது. எல்லாமானுேன் எனவே, ஏதாவதொன்றன் மூலம் இறையுணர்வைப் பெருக்கி, ஏனையவற்றையும் அவ்வவ்வாறே கண்டு கூட்டி, இதனுடன் இதுவும் இதுவும் ஆகியவெல்லாம் இறைவன் எனப் பூரணப்பட வேண்டுமென்பது கருத்தாகக் கொள்க. முன்னர் " விரிபொழில் முழுதாய் விரிந்தோன் " எனவும், பிறவாறும் இப்பொருள்பட வந்தன வெல்லாம் உபயோக வேறுபாடு பற்றியன வென்றுணர்க.

**அந்தமும் ஆதியும் அகன்றேன் காண்க ;**
**பந்தமும் வீடும் படைப்போன் காண்க , 52**

என்னுமிவ்வடிகளினுல், அவன் தொடக்கம் முடிவென்பன இல்லாத வனும், அவற்றையுடையோனும் ஆவன் என்பது கூறப்படு

(பொ - ரை ) முடிவும் தொடக்கமும் அகலப்பெற்றவனு மாவன், கட்டும் வீடும் என்னுமிவற்றைப் பெற்றுக்கொள்வோனு மாவன் எ - று.

(வி - ரை.) பந்தத்தையும் வீட்டையும் உண்டாக்கிஞேன் என் றுரைப்பின் விகற்பப் பொருள் தோன்ருமையின் அங்ஙனம் கொண்டிலம்.

**நிற்பதும் சொல்வதும் ஆஞேன் காண்க ;**
**கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க ; 54**

என்னுமிவ்வடிகளினுல், நிலேத்தலும் ஒடுங்குதலுமுடையவனும் அவற்றைத் தனிநின்று இயற்றுவோனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) நிலேத்தலும் ஒடுங்குதலும் உடையனுமாவன் ; கற்ப காலங்களேயும் அவற்றின் இறுதியையும் உண்டாக்கியவனு மாவன் எ - று.

(வி - ரை.) நின்று சென்றவிடத்தும், பின்னர்த் தோன்றிக் கற்பமும் இறுதியும் கண்டானல்லன் ; எக்காலத்தும் தோற்றமென்பதே இல்லாதவன் என்பது வலியுறும் பொருட்டு, இதுகாறும் ஓதிய முறை

போன்று "கற்பமும் இறுதியும் கண்டோன்... நிற்பதும் செல்வது மானேன்" என்றோதாது அமமுறை மாறி ஓதினார் என்க.

யாவரும் பெறவுறும் ஈசன் காண்க ,
தேவரும் அறியாச் சிவனே காண்க , 56

என்னுமிவ்வடிகளினால், எல்லாருமடைதற்குரியவனும், தேவரால் அறிந்தடையப் பெறாதவனுமாவன் எனபது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) எல்லாராலும் அடைதற்குரிய ஈசனுமாவன் , தேவர்களாலும் அறியப்படாத சிவபெருமானுமாவன் எ - று.

(வி - ரை.) அவன் எல்லார்க்கும் எளியவன் என்னுங் கருத்துடனேயே இருப்பவும், தேவர்களானோர் தாமொனறு கருதி அவனைத் தமக்கு அரியனாக்கினார் என்க.

பெண் ஆண் அலியெனும் பெற்றியன் காண்க , 57

என்னுமிவ்வடியினால், அவன் முற்கூறியபடி விகற்பித்தறியல் புடையனேயன்றி, அதன்மேலும் வேறுபட்ட இயல்புகளுள்ள பெண் ஆண் அலியென்னும் மூவியல்பும் ஒருமித்துடையயனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) பெண் ஆண் அலியென்னும் மூன்று தன்மைகளையும் ஒருங்குடையவனுமாவன் எ - று.

(வி - ரை.) எனவே ஒன்றன்பால் ஒன்று விழையும் விழைவு மில்லான் என்றவாறு.

இதுகாறும் கூறியவற்றால் ஒருவன் ஒருத்தி அலி ஒன்று எனமுங்குப் பாகுபாடுடைய எலலாமும், அவற்றது இனமையுமாதியவெல்லாம் அவன் தன்மைகள் என்பது பெறப்பட்டது.

கண்ணால் யானும் கண்டேன் காண்க 58

என்னுமிவ்வடியினால், மேற்கூறியவற்றை நம்புமாறு உறுதிப் படுத்தினான் என்பது கூறப்படுகின்றது

(பொ - ரை.) யானும் அவனை என் கண்ணாலேயே கண்டேன் அறிவாயாக எ - று.

(வி - ரை ) இவ்வளவு அவ்வளவு தன்மைகளையுடைய ஒருவன் இருக்கின்றான் என்பது நிச்சயமாக உண்மை போலும், அவனை யடைந்து இன்புறுவதென்பது எவ்வளவு என்றுணராதிருக்க, யானோ அவனை என் கண்ணாலேயே கண்டேன், முழு உண்மை; இதனை நம்புக என்றான் என்றவாறு. காட்சி நுபாயமாத்திரையேயன்றி வேறொரு நுகர்ச்சியும் பெற்றிலேன் என இப்போது ஆற்றாமையும் எய்தினனாகலின், அந்தோ கெடுவேன் என முன்வந்த அடிபோல இதுவும் இடையே அப்பொருளும்

அருள்நனி சுரக்கும் அமுதே காண்க ; 59

என்னுமிவ்வடியினால், அவன் மிகுந்த அருளைச்செய்யும் தன்மையு முடையவன் என்பது கூறப்படுகின்றது

(பொ - ரை ) அருளை மிகுதியாக ஊறச்செய்யும் அமுதமு மாவன் எ - று.

(வி - ரை.) அமுதே என்றது இடுகுறியளவாய் நின்று இறைவனை உணர்த்திற்று.

கருணையின் பெருமை கண்டேன் காண்க ; 60

என்னுமிவ்வடியினால் அவனருளின் பெருமை உறுதிப்படுத்தப் பட்டமை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) அவனது கருணையின் பேரளவை யான் அறிந்துகொண்டிருக்கின்றேன் அறிக எ - று

(வி - ரை.) இதுவும் முன்னின்று கேட்டோர் அவன் கருணைக்கண் ஐயுற்றாராக, அங்ஙனம் வேண்டாமென உறுதிப்படுத்தியதென்க ; முன் வந்த 'கண்ணால் யானும் கண்டேன்' என்பதுபோல.

புவனியில் சேவடி தீண்டினன் காண்க , 61

என்னுமிவ்வடியினால், தன் திருவடி பூமியில் தொடும்படி வந்த அருள் திறமையுடையோனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) செம்மையாகிய அடிகள் நிலத்திலே பொருந்து மாறு வந்தோனுமாவன் எ - று.

(வி - ரை ) ஆசிரியனாக நடந்துவந்த தன்மையைக் குறித்துக் கூறியவாறு; அருளின் மிகுதியைக் காட்டியவாறுமாயிற்றென்க.

சிவன்என யானுந்தேறினன் காண்க ;
அவன்எனை ஆட்கொண்டருளினன் காண்க ; 63

என்னுமிவ்வடிகளினால், தன்னைச் சிவன் என்று தெரிவித்து என்னை யாண்டருளியோனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) அவனைச் சிவபெருமான் என்று யானும் தெளிந்துகொண்டேன் , அவனும் என்னை ஆட்கொண்டருளினன் ; அவன் அத்தகையோனுமாவன் எ - று

(வி - ரை.) புவனியில் சேவடி தீண்ட வந்தோன் சிவனாவன் என்று யான் தேறினேன் என்றபடி. அங்ஙனம் தெளிந்து முற்கூறிய தன்மைகள் யாவற்றையும் அவன்பால் அமைய உணர்ந்தபடியென்க.

குவளைக் கண்ணி கூறன் காண்க,
அவளும் தானும் உடனே காண்க, 65

என்னுமிவ்வடிகளினால், இங்ஙனமாண்டவன் உமைபாகனுமாவன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) நீலமலர்போலும் கண்களையுடைய உமையம்மையை ஒருகூற்றிலுடையவனுமாவன்; அவளும் தானும் உடனாகியோனுமாவன் எ - று

(வி - ரை.)

" ஏறுடையீசன் இப்புவனியை யுய்யக்
கூறுடை மஙகையும தானும் வந்தருளி" (கீர்த்தி. 25-26.)

என்னுமடிகளும்,

" தானும் தன் தையலும் தாழ்சடையோ னுண்டிலனேல்"
(திருக்கோத். 15.)

என்னும் செய்யுட் பகுதியும் இக்கருத்தினை வலியுறுத்துவன. முதல் தலைமக்களும், தமது நெறிக்கு ஏறபுடையோருமாதல் கருதிக் "குவளைக் கண்ணி கூறன் காண்க; அவளும் தானுமுடனே காண்க" என்றபடி.

குவளைக்கண்ணியை வேறாக ஒரு கூற்றிலுடையனல்லன்; ஒருருவில் செம்பாதியாக உடனாகவேயுடையன் என்றவாறு. இனி, வேறாகவும் உடையவன்; உடனாகவும் உடையன் என உறழக் கூறியவாறுமாம்.

பெரியோனும், குழகனும், கிழவோனும், அடைந்தோனும், முன்னோன் முழுதோன் முதலியவனாகப் பலவகைப்பட்டோனும் ஆகியோன், தன் பேரருளால் புவனியிற சேவடி தீண்ட எளிவந்து என்னை ஆடகொண்டருளினன்; அவன் எங்கள் நெறியில் முதல் தலைமகனாகிய தன்மையுமுடையவன் என்க.

பரமா னந்தப் பழங்கடல் அதுவே
கருமா முகிலில் தோன்றித்
திருவார் பெருந்துறை வரையில் ஏறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளரவு இரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழில் தோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியில் கோபம் மிகுத்து
முரசு எறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட வரையுறக்
கேதக் குட்டம் கையுற ஓங்கி

இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன
ஆயிடை வானப் பேரியாற்று அகவயின்
பாய்ந்து எழுந்து இன்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்து-எம் பந்தமாக் கரை-பொருது அலைத்து இடித்து
ஊழ் ஊழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித்து எழுந்து
உருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறைஅகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேல்மேல் மகிழ்தலின் நோக்கி
அருச்சனை வயலுள் அன்பு-வித் திட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த
அண்டத்து அரும்பெறல் மேகன் வாழ்க ;

என்னுமிவ்வடிகளினால், அவன் அன்பர்களுக்கு அன்பை வித்திப் பயன் பெறுமாறு அருள்மழை பொழியும் மேகனுமாவன், அவன் வாழ்க என வாழ்த்தினமை கூறப்படுகின்றது.

பரமா னந்தப் பழங்கடல் அதுவே
கருமா முகிலில் தோன்றித்
திருவார் பெருந்துறை வரையில் ஏறித் 68

(பொ - ரை ) மேன்மையானதாகிய இன்ப நீரையுடைய பழைய அந்தக் கடலே சூற்கொண்ட மேகம்போலத் தோன்றிச் செல்வத்தால் நீண்ட பெருந்துறை மலையில் ஏறி எ - று.

(வி - ரை.) பரமானந்தக் கடல் - பேரின்பக் கடல். உவர்க்கடல் என்பதுபோல. பெரியோன் குழகன் முதலியவாகக் கூறப்பட்டவற்றையெல்லாம் முடிபாகக் கொண்ட, இருவரு முடனாகிய குவளைக் கண்ணி கூறனே பரமானந்தப் பழங்கடல் என்க. கடலாகிய அதுவே முகிலாகத் தோன்றி என்க.

பெருந்துறையாகிய வரை யென்க. முகிலாகிய ஆசான் எனக் கொள்க.

திருத்தகு மின்ஒளி திசைதிசை விரிய 69

(பொ - ரை ) தெய்வத்தன்மை பொருந்திய மின்னலின் ஒளி திசைதோறும் திசைதோறும் விரிந்து செல்ல எ - று.

(வி - ரை.) ஈண்டு மின் ஒளி யென்றது ஆசான் திருமேனி ஒளியைக் குறித்து நின்றது.

ஐம்புலப் பந்தனை வாளரவு இரிய

(பொ - ரை ) ஐவகைப்பட்ட புலன்களாகிய தலைகளையுடைய கட்டென்னும் ஒளியுடைய பாம்பு கெட்டோட எ - று.

(வி - ரை.) ஐம்புலப் பந்தனை என்றமைக் கேற்ப ஐந்தலை நாகம் என்க. இதனை,

"ஐந்து தலைப்பற்றி" (திருமந். 159.)

எனவும்,

"நாகமதொன்று படமைந்து" (ஷ 1629 )

எனவும் வருவனவற்றால் உணர்க. இனி உவமத் தொகையாகக் கொண்டு உரைத்தல் ஈண்டுப் பொருந்தாது.

வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப 71

(பொ - ரை ) வெவ்விய துயரமென்னும் கோடையானது பெரிய தலைகளை வெளியே நீட்டாவாய் உள்ளே மறைந்துக்கொள்ள எ - று.

(வி - ரை ) பிறவியால் உளதாகிய துயரம் எனப் பொதுப்பட உரைக்க. அஃதெவ்வாற்றானும் முகம்புகுந்து பற்றிக்கொள்ள முடியா தென்பதுபட "மாத்தலை கரப்ப" எனப்பட்டது. தலைகாட்ட முடியா தென்றபடி.

-ழில் தோன்றி வாளொளி மிளிர 72

(பொ - ரை.) நீண்ட மெல்லாழுதலையுடைய தோன்றிப் பூக்களின் நுண்ணிய ஒளியானது பிறழ்ந்து வீச எ - று.

(வி - ரை.) தோன்றி கொடியாகலின் நீடெழில் என்ற அடைமொழி புணர்க்கப்பட்டது. நீடெழில் - நீண்டெழுதலையுடைய. தோன்றியும் காந்தளும் வேறு வேறினத்தைச் சார்ந்தன. தோன்றிப்பூ, விளக்கெரிக்கும், பவளத் திற்கும், கோழிச் சேவலின் தலைக்கும் ஒப்பாக உரைக்கப்படுகின்றது. கைக்கொப்பாகப் பயின்ற மேற்கோள் புலப்படவில்லை. காந்தட் பூவினையே கைக்கொப்பாகப் பழைய நூல்களில் கூறியிருக்கின்றனர். ஆங்காங்குக் காண்க. இனி, தோன்றிக்குச் செங்காந்தள் என உரைவகுத்து வருகின்றனர். மாரியின்மையால் செயலற்றுப் படிந்திருந்த செங்காந்தள், மழையின் வரவினால் தோன்றி வளர்ந்து பூத்துப் பொலிவுற்று ஒளிவீசி நிற்குமாறே அடியவர்களும் இறைவன் வரவினால் தோன்றிப் பொலிந்து அறிவு விளக்கம் பெற்று நின்றனர் என்க.

எந்தம் பிறவியில் கோபம் மிகுத்து
முரசெறிந்து மாப்பெரும் கருணையின் முழங்கி 74

(பொ - ரை ) எங்கள் பிறவியாகிய கோடையின்மீது கோபம் அதிகரித்து முரசவொலியாகிய இடியேற்றினை எறிந்து, மிகப் பெரிய கருணையினலே ஆரவாரித்தலாகிய முழக்கத்தினைச் செய்து எ - று

(வி - ரை.) இடியேறு விழுதலின் உக்கிரத்தை நோக்கி மேகத்தின் மேல் கோபத்தை ஏற்றுதல்போல இறைவன்பாற் கோபத்தை ஏற்றியது உபசாரம் என்க. முரசவொலி கேட்டுப் பிறவி கெட்டவாருயிற்று. ஐம்புல மும் வெந்துயரும் பிறவியின் காரியங்கள். பிறவியில் எரிதலும், அதன் காரியங்களும் இரியவும் கரப்பவும் பெற்றன என்க. இனி, கோபத்தைக் கருமையின்மேலேறறிப் பிறவியைப்போலக் கறுத்தென்றுரைப்பினுமாம்.

தோன்றிகளாகிய அடியவர்பால் வைத்த பெருங்கருணையால் என்க. அவரைப்பறறிய பிறவி யிடுக்கண் கண்டு அதனைக் களைதற்காக ஆரவா ரித்து என்க.

பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட 75

(பொ - ரை ) பூவுடன் கூடிக் கைகுவித்தலைக் காந்தள்கள் காட்டி நிற்ப எ - று.

(வி - ரை.) இறைவனுகிய குருமூர்த்தியின் வருகையறிந்து அடியவர் புஷ்பாஞ்சலி செய்தனர் என்றபடி.

எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ள 76

(பொ - ரை.) குறையாத இன்னருளானது நுண்ணிதாகிய துளி துளித்தலைக் கொள்ளுதலினலே எ - று.

(வி - ரை.) ஆசான்பால் மக்களின் நிலைமை காரணமாக உண்டாகிய அருளானது அவன் கண்களிடத்து நுண்ணிய கண்ணீர்த் துளிகளைத் தோற்றுவித்தவாறென்க. ஆரவாரித்தலாகிய மறத்தொழில் பூண்ட அள வானே சென்றெடுங்காது மீண்டும் இரங்குதலின் அது "எஞ்சா இன் னருள்" எனப்பட்டது. ஆனந்தக் கடல் குருவாகிய முகிலாகி இரக்கத் தால் ஆரவாரிப்ப அருள் துளித்தது எனக் கொள்க.

செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட 77

(பொ - ரை ) செவ்வொளி வாய்ந்த வெள்ளம் திசைதோறும் சென்று தேங்க எ - று

(வி - ரை ) செஞ்சுடர் கலப்பினுல் உளதாகியது. அவனது அருளின் பரம்பின்மை கூறியவாருயிற்று.

அன்பர் செவ்வியை வளர்த்து வருதற்காகச் சிறிது சிறிதாகத் தன் பால் அவர்தம் உள்ளத்தைக் கவியச் செய்து இன்பமூட்டி முறையாகப்

பேரின்பமருளுவன் என்க. இதனை மேகத்தின் இயற்கையோடு உவமித்த வாறு. இங்ஙனமே செகப்பிரியராகிய ஆங்கிலக்கூத்துப் பெரும்புலவரும் தமது வேனிஸ் வர்த்தகன் என்னும் கூத்திலே,

"வாடுமிளம் பயிருக்கு ஓடு முகில் நின்று
பயப்பயத் துளித்த பாங்கிற றென்ன"

என்றுங்கு இறைவனுடைய இரக்கத்தினை மழை நுண்துளியுடன் உவமை செய்தமை கருதற்பாலது. நுண்ணிய ஆவித்திரளே மழைத்துளியாகப் பருத்து வெள்ளமாய் மிகுதல்போல இறைவன் அருளும் நுண்ணிதாய் அவனுள் ஒடுங்கியிருந்து பருமைத்தாகி அணுவாய் அண்டமெலலாமாய் நிறையுமென்க.

வரையுறக்
கேதக் குட்டம் கையற ஓங்கி 78

(பொ - ரை) மலைச்சிகரமளவிற்குப் பொருந்த—துன்பம் என்னும் ஆழிய நீர்நிலை மீண்டும் தன் தோற்றம் பெறுதலரிதாம்படி உயர்ந்து எ - று.

(வி - ரை.) ஈண்டு வரையென்றது அன்பர்களின் குணமென்னும் குன்றை. அவ்வளவிறகு வெள்ளம் உயர்வெய்திறறென்க.

வரையுற ஓங்கி; கையற ஓங்கி என இயைக்க கையறுதல், மீளுதல் அரிதாதல்.

"கையறு துன்பம் காட்டினும் காட்டும்" (சிலப். 10 71. உரை.) என்பதுங் காண்க. ஈண்டுக் குட்டம குன்று முதலிய பாகுபாடுகள் தெரியாமல் பெருகிய வெள்ளத்துள் அவை யெல்லாம அகப்பட்டு மீண்டும் தம் தோற்றம் வெளிவரப் பெறுவாறு போயின என்றுரைத்துக் கொள்க. குட்டம் - அழிய நீர்நிலை.

"நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து" (புறம் 243. 9.) என்னும் பாட்டானும இதனை யுணர்க.

இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவபெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன 82

(பொ - ரை) அறுவகைச் சமயங்களிலும் அடையப்பெறும் பயனாகிய ஒரு கானல் நீரினை இயல்பாகவே பிறவியிலுழுள்ளதாகிய நீர் வேட்கை செலுத்தவரும் நெடிய கண்ணையுடைய மான் கூட்டம், மிகப் பெருகிய வாயிலூற் பருகியும், தளர்ச்சியோடும் வேட்கைச் செய்யும் பெரிய வெம்மை நீங்கபபெறாது வருந்தின. அங்ஙனம் வருந்திய அவை எ - று.

(வி - ரை ) இருமுச்சமயங்களைக் கோடையுடன் கூட்டி யுரைக்க. இயல்பாகவே யுண்டாகிய நீர்நசை கோடையால் மிக்க தென்றபடி.

நீர்வேட்கை மிக்க மான் கூட்டம் பேய்த்தேரினை நீரென மயங்கி விரைந்து சென்று அதனைப் பருகுவதாகப் பாவனை செய்தன என்க. அதனால் தாகம் தீரப் பெறுமையால் அசைநதன என்க.

அறுவகைச் சமயங்களின் முடிபும் சூழ்ந்து நோக்கில் ஒன்றேயாம் என்பது கருதி 'ஒரு பேய்த் தேரினை' என்று கூறப்பட்டது.

நீர்வேடகை மிக்க மான் கூட்டம் பேய்த்தேரினை நீரென மயங்கி விரைந்து சென்று அதனைப் பருக முயன்றும் தாகந் தீரப் பெறுவாய் வருந்தியவாறே அறுவகைச் சமயக் கோட்பாட்டினரும், அவ்வவர் சமயவெளியீடுகளினால் உளதாகும் இன்ப வெள்ளத்தைப் பருக வேண்டுமென முயன்றும், அவை துன்ப வெள்ளமாக அமைதலின், தமது விருப்பம் நிறைவேறாது வருந்திக் கிடந்தனர் என்க.

இவ்வுலக நுகர்ச்சியுடன் அமையாது சேய்மையிலுளதாகிய அவ்வுலக நுகர்ச்சியையும நெடிது நோக்குதலின் நெடுங்கண் என்பப்பட்டது. மானுக்கு அஃதியல்பாயிற்று. தவப்பெறுவாய் என்றதும் பேரின்பத்தைப் பெற விழைந்த வாய் என்பதுபட நின்றது.

நீர்நசை - நீர்விடாய். கணம் - கூட்டம். தவ - மிகுதி. அவம் - கேடு. தாபம் - விடாய், (வட சொல்); அசைதல் - வருந்தல்.

ஆயிடை வானப் பேரியாற்று அகவயின்
பாய்ந்து எழுந்து இன்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்துஎம் பந்தமாக் கரைபொருது அலைத்து இடித்து
ஊழ்ஊழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித்து எழுந்து
உருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேல்மேல் மகிழ்தலின் நோக்கி 92

(பொ - ரை.) அப்பொழுது மிகப்பெரிய ஆற்றினுள்ளே பாய்ந்து எழுச்சி பெற்று, இன்பமாகிய பெரிய சுழியானது தன்பாற் பட்டவற்றைத் திரட்டி ஒதுக்கிச் சுழித்து, எங்கள் கட்டுக்களாகிய பெரிய கரையை மோதி நிலை கெடுத்துத் தூளாக்கி, முறை முறையாக ஓங்கி வளர்ந்த நம்முடைய இருவினைகளாகிய பெரிய மரங்களை வேருடன் பறித்து எழுந்து, அருளுருவமாகிய நீரைப் பாயச் செய்து, அரிய மலையின் சந்திப்பில் பெரிய அணையைக் கட்டி, தேன் பிலிற்றும் வாசனை நிறைந்த மலர்களையுடைய குளத்திற் றுப் பாய்காலினைக் கோலி, நிறைந்த அகிலின் பெருமை வாய்ந்த புகை

யையுடைய கரைசேர்ந்த வண்டுகள் மொய்க்கும் குளத்தில் மேலும் மேலும் நீர உயர்ச்சி பெற, அதனை நோக்கி உள்ளம் மகிழ்தலின் எ – று

(வி - ரை ) பேரியாற்றகவயின் பாய்தல் என்றது. சிற்றுறு பேராற்றுடன் கலத்தலை என்க. அதாவது, கிளைநோக்கம் பெருநோக்கத்தை எய்தியவாறென்க.

கொழித்துச் சுழித்தெனக் கூட்டுக. சுழியின்கண் அகப்பட்டன யாவும் வளைக்கப் பெற்று அதனுள் அமிழ்ந்துபோதல போல இன்பமாகிய சுழிக்கண் துன்பம் யாவும் அமிழ்ந்து மறைந்தன என்க. பேராற்றுடன் சிறறுறு கலக்குமிடத்துச் சுழியுண்டாதல் இயலபென்க.

இப்போது பேராற்றில் வெள்ளம் மிகுந்துபோதலின் கரையிடம் பெறுது அழிக்கப்பட்டதென்றபடி. கரைக்கண்ணும யாற்றினுள்ளும் வேர்வீழ்த்து நின்ற மரங்கள் அரிக்கப்படடு வீழ்த்தப்பட்டன என்க. மரங்களை இருவினைகளாக உருவகித்தார்.

அருள் உருவ நீர் எனக் கூடடுக. ஒட்டா என்பது செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். அது தந்த என்னும் பெயரெச்சத்துடன் முடிந்தது.

அருவரைச் சந்தென்றது, ஒரு பக்கத்தே கனவாயுடையதாய், ஏனைய பக்கங்களில் உயர்ந்த மலைகளையுடையதாய், நடுவிலிருக்கும் பள்ளத்தாக் கென்றுணர்க. அக்கணவாயினிடத்தே அணைகட்டி என்க. வான்சிறை – பெரிய அணை.

மட்டவிழ் வெறிமலர் என்னும் தொடர் குளத்திற் கடையாய் வந்தது. அக்குளத்திறகு வாய்கோலி என்றது பாய்காலினை என்க

அகிற்புகை, புதுநீர் குடையும் மகளிர் கூந்தற்கு ஊட்டிய புகையாம்.

நோக்கி மகிழ்தலின் என மாறுக.

அருளாகிய வெள்ளமானது கிளைநோக்கங்களின் வழியாகப் பாய்ந்து வந்து பெருநோக்கத்துடன் ஒன்றுசேர்ந்து பாய்ந்து, இருவினைகளை அழித்து, இயமம் நியமம் முதலிய யோக முயற்சிகளை அரமுறைகவுடைய மனமென்னும் பள்ளத்தாக்கிற் பாய்ந்து, அங்கிருந்து தியானமென்னும் பாய்காலின் வழியாக ஆன்மாவென்னும் குளத்துள் மண்டியது என்றறிக.

வான்சிறை கட்டுதலும் குளவாய் கோலுதலுமாகிய முயற்சிகள் தொண்டர் உழவருடையனவாம். அவர் இங்ஙனம் செய்து மகிழ்தலின் என்றுரைக்க.

அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த
அண்டத்து அரும்பெறல் மேகன் வாழ்க ; 95

(பொ - ரை.) வழிபாடாகிய வயற்கண் அன்பாகிய விதையை விதைத்துத் தொண்டர்களாகிய உழவர்களாகி நுகரும்படியாகத்

தந்தருளிய இவ்வுலகத்துட் பெறுதற்கரிய மேகமாயினோனுமாவன்; அவன் வாழ்க எ – று.

(வி - ரை.) அசைந்தனவாகிய அவை (அடி. 82) உழுவராகி ஆர எனக் கொள்க.

குளத்திலிருந்து அருள் வெள்ளத்தைப் பாய்ச்சி பண்படுத்தப்பட்ட அருச்சனையாகிய வயல் என்க. அன்பாகிய நெல்லை வித்தி என்க. அது முளைத்தபின் பருவந்தோறும் செய்யவேண்டியன செய்து விளைவை நுகர என்க.

கருமாமுகிலில் தோன்றி இன்னவெல்லாம் செய்துதந்த மேகன்; அருள் வெள்ளத்தைத் தநத மேகன் ; அரும்பெறல் மேகனெனக. இவனே கீர்த்தியுள் 'சந்திரதீபத்துச் சாத்திரன்' எனப்பட்டானென்க.

கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க ;
அருந்தவர்க்கு அருளும் ஆதி வாழ்க ,
அச்சம் தவிர்த்த சேவகன் வாழ்க ;
நிச்சலும் ஈர்த்து ஆட் கொள்வோன் வாழ்க ,
சூழ்இருந் துன்பம் துடைப்போன் வாழ்க ;
எய்தினர்க்கு ஆரமுது அளிப்போன் வாழ்க ;
கூர்இருள் கூத்தொடு குனிப்போன் வாழ்க ,
பேரமைத் தோளி காதலன் வாழ்க ;
ஏதிலர்க்கு ஏதில்எம் இறைவன் வாழ்க ,
காதலர்க்கு எய்ப்பினில் வைப்பு வாழ்க ,

என்னுமிவ்வடிகளினால் முன்னர் அருச்சனைப் பயின்றமைக்கு வாழ்த்துக் கூறப்படுகின்றது

(பொ - ரை ) படத்தையுடைய கொடிய பாம்பை அரைப்பட்டிகையாக அணிந்தோனுமாவன், அவன் வாழ்க; அரிய தவமுடையார்க்கு அருள்செய்யும் முதல்வனுமாவன், அவன் வாழ்க, அச்சத்தை அகற்றிய வீரனுமாவன், அவன் வாழ்க; எப்போதும் வலிதில் இழுத்து ஆட்கொள்வோனுமாவன், அவன் வாழ்க, சூழ்ந்து கொள்ளும் பெரிய துன்பத்தை நீக்குவோனுமாவன், அவன் வாழ்க, அடைந்தவர்க்கு அமைந்த இன்ப அமுதினை அளிப்போனுமாவன், அவன் வாழ்க, மிக்க இருளில் ஆடும் கூத்தொடு (உயிர்களை) ஆடச் செய்வோனுமாவன், அவன் வாழ்க ; பெரிய மூங்கிலை ஒத்த தோள்களையுடையவராகிய உமையம்மை காதலனுமாவன், அவன் வாழ்க; அயலவர்க்கு ஏதுமில்லாத எங்கள் இறைவனுமாவன், அவன் வாழ்க , அன்புடையார்க்கு அவர் இளைத்த காலத்துச் சேமப் பொருளுமாவன். அவன் வாழ்க எ – று

(வி - ரை) பஞ என்னும் வடசொல்லின் சிதைவாகிய பணம் என்பது படம் எனப் பொருள்படும். கருமை பாம்பை விசேடித்தமையால் பணம் என்பது அன்மொழித் தொகையாகாது அடையடுத்த ஆகுபெயராகுமென்க.

செயற்கரிய தவஞ் செய்வோர்க்குத் தேவர் எவரேனும் முன்வருதலின்றி ஆதிபகவனே முன்வருதலின் அவன் "ஆதி" எனப்பட்டான். ஆதி என்றது ஈண்டு அநாதி என்னும் பொருளை ஆற்றலாற் குறித்து நின்றதென்க.

உடலுயிர் வாழ்க்கையில் எஞ்ஞான்றும் துன்பம் மலிந்து கிடத்தல் கண்கூடு. அத்துன்பத்துள் நம் அறிவாற் போக்கக்கூடியனவும் உள, கூடாதனவும் உள. அங்ஙனம் போக்க முடியாதவைகள் சூழ்ந்தவழி, நம்மறிவு இறைவன்பாற் சார்தலின் "நிச்சலும் ஈர்த்தாட்கொள்வோன்" என்று கூறப்பட்டது.

இங்ஙனம் அவன் இழுப்ப அறிவு அவனை நாடுதலால் சூழ்ந்துள்ள துன்பம் யாவும் தொலையுமாதலின் "சூழிருந் துன்பம் துடைப்போன்" எனப்பட்டது. இங்ஙனம் நிகழ்வது ஈண்டு நிலையற்ற வகையில் என்ற அளவே கொள்க.

இதனைத் தத்துவ உணர்வு கைவந்து நிலைபேறாக அடையப் பெற்றவர் "எய்தினர்" என்று இயம்பப்பட்டார். முன்னர்ப் போந்த பகுதியிலும், இனிவரும் பகுதியிலும் தத்துவ உண்மைகள் பலவற்றையும் ஓதியுள்ளமை காண்க. ஆரமுது - பேரின்பம்; ஆகுபெயர்.

இவ்வழியானே பேரின்பம் அடைவோர் துறவறம் பேணி யோக மார்க்கத்து ஒழுகி வருவோராவர் என்க. அவர்க்குக் கரும்பணக் கச்சைக் கடவுளாகி, யோகமுணர்த்தி, அருந்தவம் பயிற்றி, அச்சமகற்றி, நித்தலும் இழுத்தாட்கொண்டு, அதனை நிலைபேறுடையதாக்கிப் பேரின்பம் உதவுவன் என்க. இக்கருத்துக் 'கரும்பணக் கச்சைக் கடவுள்' என்னுந் தொடராற் போந்ததென்க.

'கூரிருள் கூத்தொடு குனிப்போன்' என்றதனால், ஒடுக்கியவற்றைத் தோற்றுவிக்குமாறு பெறப்படும். கூரிருட்காலம் சர்வசங்கார காலம். தான் கூத்தயர்தலினால் உயிர்களையும் ஆட்டி வைப்போன் என்க. குனிப்பிப்போன் எனப் பிறவினையாகக் கொண்டுரைக்க.

பேரமைத்தோளி காதலன் என்றவாற்றால் இல்லறம் பேணுவார்க்கு முதன்மையானவன் அவனென்பது பெறப்படும்.

உமை பாகனாகிய முதல்வனை இல்லறம் பயின்று காதல் மார்க்கத்தில் ஈடுபடுத்தி, அக்காதலர்க்கு எய்ப்பினில் வைப்பாயினான் என்க.

இங்குக் கூறிய இருநெறிகளிலும் இல்லறக் காதல் நெறியே சிறந்ததாம். அன்றியும் துறைதோறும் பிரவர்த்தித்தலே நிவிர்த்தியாகவும் அமைதலின் என்க.

நச்சரவு ஆட்டிய நம்பன் போற்றி
பிச்சுஎமை ஏற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி நாற்றிசை

நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதம் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியில் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனால் காட்சியும் இல்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவில் நாற்றம் போன்றுயர்ந்து எங்கும்
ஒழிவுஅற நிறைந்து மேவிய பெருமை
இன்று எனக்கு எளிவந் தருளி
அளிதரும் ஆக்கை ஒழியச்செய்த ஒண்பொருள்
இன்று எனக்கு எளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந்து உள்ளம் களிப்போன் போற்றி 121

என்னுமிவ்வடிகளினால், பூதங்களையும் பொறிகளையும் அவற்றின் விளைவுகளையும் கடந்துநின்ற அவன், அவற்றாலாகிய இவ்வுடலினை ஒழியச்செய்து, தன்னை யுணர்தற்கேற்ற அன்புடலைக் கொடுத்தோனுமாவன், அவனுக்கு வணக்கம் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) நச்சுப் பாம்பினை யாடவைத்த நம் தலைவனுமாவன், அவனுக்கு வணக்கம்; எமக்கு அன்புப் பித்தினை ஏற்றிய பெரியோனுமாவன், அவனுக்கு வணக்கம், நான்கு திக்குகளுக்குட் பட்டனவாகிய நடத்தற்குரியனவற்றை நடக்க வைத்தும், கிடத்தற்குரியனவற்றைக் கிடக்கவைத்தும், நிற்றற்குரியனவற்றை நிற்கவைத்தலும் (காப்பாற்றி) மற்றவற்றை ஒடுக்குதலுடன் தோற்றுவித்தலும் வல்லோனுமாவன், அவனுக்கு வணக்கம்; சொல்லாற் பொருளுணரும் செவ்வியைக் கடந்தோனுமாவன்; மனவுணர்வினால் உணர்ந்து கொள்ளப்படாதோனுமாவன், கண் முதலாகிய பொறிகளினால் காணப்படாதோனுமாவன்; விண் முதலாகிய பூதங்களை வகுத்தோனுமாவன், பூவின் கண்ணுளதாகும் வாசனையைப்போல எல்லாவற்றின்கண்ணும் நீக்கமற நிறைந்து உயர்ந்து நிற்கும் பெருமையுடையோன், இன்று எனக்கு எளிதாக வந்தருளி, அவமே அழிதற்குரிய உடலினைக்கொண்டு பிறவியை ஒழியச் செய்த ஒளியுடைப் பொருளுமாவன், இந்தச் சமயத்தில் எனக்கு எளிதாக வந்திருந்தோனுமாவன், அவனுக்கு வணக்கம்; இன்பத்தினைத் தரும் அன்புடலைப் படைத்தோனுமாவன், அவனுக்கு வணக்கம், அவ்வன்புள்ளத்தின் இன்பவூற்றுக்கண்ணி லிருந்து இன்புறுவோனுமாவன், அவனுக்கு வணக்கம் எ - று.

(வி - ரை.) ' நீள்அர வந்தனைப் பற்றி யாட்டுவர் '
(5-ஆம் திருமு. திருப்பாசூர். 4.)

எனவும்,

" புற்றிலா டரவாட்டி " (ஷெ. ஒற்றியூர். 5.)

எனவும்,

" புற்றிலா டரவாட்டும் புனிதனூர் " (திருமணஞ்சேரி. 3)

எனவும் வழங்கப்பட்டு வருவதோடு,

" மூர்க்கப் பாம்புப் பிடித்தது மூச்சிட
வாக்கப் பாம்பினைக் கண்ட தணிமதி
பார்க்கப் பாமபினைப் பற்றும் பழனத்தான்
தார்க்கொள் மாலைச் சடைக்க ணிரந்திட் டதே "
(5--ஆம் திரு மு., தி நப்பழனம்.)

என்றும் நாவுக்கரசு சுவாமிகள் கூறுவர், இவ்வாலாறு புலப்படவில்லை. இன்னும்,

" நச்சர வாட்டிலர் போலும் " (திருமு., 2 திருப்பிரம. 4)

எனச் சம்பந்தமூர்த்தி சுவாமிகளும் கூறுவர்.

" பச்சைத்நா ளரவாட்டி "

என அடிகள் பின்னரும் கூறுவர். திருவிளையாடல்களில் கூறப்படும் விடந்தீர்த்த வரலாறு இங்குப் பொருந்தாதென விடுக்க.

பிச்சு - பித்து இஃது உன்மத்தம், மால் எனப் பிறவாறு வழங்கப் படும்.

" உன் கோயில் வாயிலில் பிச்ச னுக்கினாய் " (திருச்சதகம். 96.)

எனவும்,

" எனை......மத்தோன் மத்தனுக்கி " (உயிருண்ணி. 3.)

எனவும்,

" மாலுங்காட்டி வழிகாட்டி " (ஆனந்த. 3.)

எனவும் அடிகள் கூறுவர்.

"நாற்றிசை நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய் நிற்பன நிறீஇ', என்னும் தொடரால் அவனது காவல்திறம் கூறப்பட்டது. நடாஅய், கிடாஅய், நிறீஇ, நீற்றொடு தோற்றவல்லோன் என்றியைக்க நடப்பன நிறபன என்றவற்றால் இயங்கிய பொருள்களையும், நிலையியற் பொருள் களையும் கூறியவாறும். கிடப்பன என்றதனுல் செயலற்றுக் கிடப்பன வற்றைக் கூறியவாறும்; நத்தை முதலாயினவற்றை என்றறிக நீற்றொடு - நீற்றுதலுடன் என்றது அழித்தலை தோற்ற - தோற்றுவிக்க. தோற்று விக்கவும் என உம்மை விரிக்க. நடாஅய், கிடாஅய் என்னும் அளபெடை கள், செய்யுளில் ஓசை நீட்டம் வேண்டிப் புலவர் செய்துகொண்ட செயற்கை அளபெடைகளாம். நிறீஇ என்பது இயற்கையளபெடை.

பதம் - செவ்வி. சொற்பதம் - சொல்லாற் பொருளுணரும் செவ்வி, சொல் தோன்றுதற்கும் மூலகாரணனுதலின் "தொல்லோன்" எனப் பட்டான்.

இன்ப துன்பங்களாலாகிய வடுக்களுடையீ உள்ளமென்க. அவ்வுள்ளத் துணர்வு இன்ப வுணர்வாகவோ துன்ப வுணர்வாகவோ இருத்தலன்றிப் பேரின்ப உணர்வாகாதாகலின், அவ்வுணர்வுகளால் கொள்ளப்படான் என்க.

பொறிகள் ஐந்தனுள்ளும் கண் சிறந்ததாகலின் கண்ணை முதலாகக் கொண்டுரைத்தபடி. அப்பொறிகள் ஒளி முதலாயவற்றை அறிதலன்றி, அவற்றினுள்ளிருக்கும் உண்மையை வேறாய் அறியமாட்டாவாகலின் கண் முதற் புலனுல் காடசியுமில்லோன் எனப்பட்டான்.

பொறிகள் அறிதற்குரிய விண் முதலாகிய தத்துவங்களை வகுத்தோன் என்க. எனவே அத்தத்துவங்கள் விரிந்திருக்கின்றவாற்றை உணர்ந்து, அவற்றை முறைப்படி ஒடுக்கி ஒடுக்கிச் சென்று, அவற்றினெல்லாம் நீங்கி நின்று, முதல்வனை ஆத்மா உணர்தல் வேண்டுமென்றவாறுயிற்று.

வகுக்கப்பெற்ற விண்முதற் பூதங்களில் பூவில் நாற்றம் போன்று நிறைந்துள்ளான் என்க. நாற்றத்தை முதலாக வைத்துப் பூவை விரும்புவதும் அறிவதுமபோல இறைவனை முதலாக வைத்து விண் முதலாகிய பூதங்களை விருமபுதலும் அறிதலும் வேண்டுமென்றவாறும். பெருமை, பெருமையுடையோன் என்க. சிறப்புக் கருதிப் பண்பியைப் பண்பாக உபசரித்துக் கூறியவாறு.

இன்று என்றது இறைவனுடன் தில்லையில் ஒன்றியிருந்து இப்பாமாலையை வெளிப்படுத்தும் அந்தச் சமயத்தைக் குறித்து நின்றது.

அழிதருமாக்கை - பூதவுடல். அதனை ஒழியச் செய்தலாவது தேவ உடலைக் கொடுத்துப் பூதவுடலை மீட்டல என்க. தேவ உடல் - தலைமகளின் உடல்.

அளிதருமாக்கை - பேரின்பந் தருமுடல். இதுவே மேற்காட்டிய தலை மகள் உடல் என்க.

அவ்வுடலினுளதாகும் எத்தகைய நிகழ்ச்சிகளையும் துய்த்து இன்புறுவோன் என்க.

இனி, இவ்வுடல் போந்தவாற்றை மேல்வருமடிகளால் விரித்துக் கூறுவது ஆங்காங்குக் காண்க.

"ஆற்று இன்பம் அலர்ந்துஅலை செய்யப்
...... ...... ......... ......
அள்ளூறு ஆக்கை அமைத்தனன்"

என்னுமிவ்வடிகளினுல், அவன் அந்த அன்புடலை எங்ஙனம் ஈந்தான் என்பதை விரித்துரைக்கின்றுள், என்பது கூறப்படு கின்றது.

**ஆற்று இன்பம் அலர்ந்துஅலை செய்யப்**
**போற்று ஆக்கையைப் பொறுத்தல் புகலேன் 123**

(பொ - ரை ) தாங்குதற்கரிய இன்பமானது விரிந்து அலைப்ப அதனை ஏற்றுப் பொறுத்திருக்கலாற்றாத ஊனுடலைத் தாங்கியிருத்தலை விரும்பாத யான் எ - று

(வி - ரை ) அளிதரும் ஆக்கை செய்து அதனுள்ளிருந்து களிப்புறுதல் எங்ஙனமெனின் எனத் தொடங்கி மேலே யுரைக்க.

அவனுடைய இயல்புகளையும் பெருமைகளையும் பிறவற்றையும் நூல்களிற் படித்தும், உலகத்தே கண்டுணர்ந்தும் போந்த நல்லறிவினால் பெற்ற இன்பத்தினையே ஈண்டு ஆற்று இன்பம் என்றதற்குப் பொருளாகக் கொள்க. இதனால் ஊனுடலின் இழிவு குறிக்கப்பட்டது மேலும் குருவின் இன்றியமையாமை யுணர்ந்து நின்றவாறு முணர்க

பொறுத்தல் புகலேன், ஆற்றேனாக (156) செய்தனன் (157) என மேலியைந்து முடியும்.

பின்னர்த் தமக்கு அன்புடலீந்தவனும், பேரறிவும் பேரன்பும் உண்டாதற்குரிய அருமைப் பாடுகளையுடையவனுமாகிய அவனது அருமை பெருமைகளை எடுத்தோதுமாறு காண்க.

**மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்**
**மின்ஒளி கொண்ட பொன்ஒளி திகழத்**
**திசைமுகன் சென்று தேடினர்க்கு ஒளித்தும் 126**

(பொ - ரை ) பெரிய மரகத மணியின் குவியல் ஒளியும் மின்னலின் ஒளியை ஒத்த பொன்னின் ஒளியும் விளங்க மேல் கீழ் என்னும் திசையிடங்களிலே சென்று தேடிய அயன் அரியென்னும் இருவர்க்கும் மறைந்தும் எ - று.

(வி - ரை.) மரகத மாமணிக் குவாஅல் என்க. மரகதமணி - பச்சை மணி. குவால் - குவியல். பிறக்கம் - ஒளி

நடுவே அனற் பிழம்பாகத் தோன்றிய இறைவன் அடி முடி தேடப் பாதலம் புக்க திருமாலின் திருமேனி யொளியும், விண்ணிற் புக்க அயன் திருமேனி யொளியும், முறையே மரகதமணியின் ஒளியோடும், பொன் ஒளி கொண்ட மின்னொளியோடும் உவமிக்கப்பட்டன.

மேல் கீழ் என்னும் இருதிசைகளையும் கொள்க. அவ்விரண்டு திசைகளையும் கொண்ட காலை ஏனைய திசைகள் எல்லாம் நேரானவாய் அவ்விரண்டனுள்ளும் அடங்கின என்க திசைமுகம் என்றது திசைமுகன் என இறுதிப் போலியாயிற்று. நிலம் நிலன் என வருதல் போல என்க. இனி, திசைமுகனை அயன் எனக் கொண்டுரைத்தாருமுளர். திசைமுகன் சென்று தேடினர் என்னுந் தொடரினால், இறைவன் அனற்பிழம்பாய் நின்றதும், அயனரி என்னும் இருவரும் தேடப் புக்கதும் கூறாதே பெறப்

பட்டன என்க. அவ்விருவரும் தேடிய வகையை அறிந்துகொள்ளுதலே ாண்டைக்கு உபயோகமாதலின், திசைமுகன் என்பதறகு யாங் கூறிய பொருளே சிறப்புடைத்தாமென்க

அனற்பிழம்பின் அடி முடி தேடியறிய முற்பட்ட காலையும் தாந்தாமே முதல்வர என்னும் எணணம் அருமையின், அச்செருக்கே கண்டனரன்றி முதல்வனைக் காணப்பெறு தொழிந்தனர் என்க. அடிகட்கு உய்தி பெறக் கைவந்த வரலாறு இதனைப்போற் சிறந்தது வேறின்மையின், ாண்டும் இறைவன் அருமை தெரித்தறகண் முதலில் இவ்வரலாறே தரப்பட்டது. இனி, ஏனையோர்போலன்றி இருவரும் இவ்வுலகத் தினையே பகுத்து ஆராய்ந்தாராகலானும், தேவருள்ளும சிறந்தாராகலானும் முதறகண்ணும், வேறுபடுத்தும் கூறப்படடனர் என்பதும் உணர்க. ாண்டு, வானவர்களால் அறியப்படாத அருமைப்பாடே கொள்ளப்பட வேண்டியதென்க.

முறையுளி ஒற்றி முயன்றவர்க்கு ஒளித்தும் 127

(பொ - ரை ) நூல்களிலே ஆராய்ந்து விரதங்களைச் செய்ய முயன்றவர்க்கு மறைந்தும் எ - று.

(வி - ரை ) முறை - நூல் சிறு நூல்கள் எனக் கொள்க. ாண்டு விரத கற்பகங்களுள் ஒன்றினகண்ணுள்ள ஒரு பகுதியை மட்டும் அறிந்து கொண்டு அதனை ஆற்றிவர முயன்றவர் என்க.

ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்து
உற்றவர் வருந்த உறைப்பவர்க்கு ஒளித்தும் 129

(பொ - ரை.) அன்பினால் நிரம்பிய கருதும் உள்ளத்தை யுடைய உறவினர்கள் வருந்தும்படியாகக் கடிய விரதங்களினாலே உறைத்து நிற்கின்றவர்களுக்கு மறைந்தும் எ - று.

(வி - ரை.) உற்றவர் மனைவி மக்கள் முதலியோர் என்க. உண்ணு விரதம் முதலியவற்றைக் கொண்டொழுகப் புக்கமையால் அவர்க்கு நேரும் இடையூற்றுக் கஞ்சி வருந்தினார்கள் என்க.

முறையுளி யொற்றி முயன்றவரும், ாண்டு உறைப்பவரும் ஆகிய இரு பாலாரும் சிறு நூலகளையுணர்ந்து சிற்றறிவு பூண்டோராவர். பத்திமை யென்பதின்றிப் பயன் வேட்டு வறிதேயொழுகினர் என்க.

மறைத்திறம் நோக்கி வருந்தினர்க்கு ஒளித்தும் 130

(பொ - ரை ) வேதங்களையும் அவற்றின் கூறுகளையும் ஆராய்ந்து வருந்தியவர்களுக்கு மறைந்தும் எ - று

(வி - ரை.) மறையும் அதன் திறமும் எனக் கொள்க.

"அறத்துறை" (சிலப். 14-11.)

என்பதுபோல. அந்நூல்களாற் பெற்ற அறிவு உற்றுழியுதவாமையால் வருந்தினர் என்க. இவர்கள் நூலறிவு ஒன்றனையே மேலாகக் கொண்டவர் என்க. விரதங்களும் நூலறிவும் துணைக்கருவிகளேயன்றி வேறன்மையின், அவற்றையே பரமாகக் கொண்டு, ஞானமென்பதின்றி, இறைவன் அருளுணராதார்க்கு மறைந்தான் என்க.

இத்தந் திரத்தில் காண்டும் என் றிருந்தோர்க்கு
அத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும் 132

(பொ - ரை) இந்தத் தந்திரத்திலே கண்டுகொள்ளுவோம் என்று அந்தந்திரத்தை ஆராய்ந்துகொண்டிருந்தவர்களுக்கு, அத்தந்திரத்தினுள்ளே அதன் உயிர்நிலைபோன்ற ஒன்றனுள் மறைந்தும் எ - று.

(வி - ரை) மறை இறைவன் வாக்காகலின் தந்திரம் என்பது முனிவர் வாக்காகிய ஆரிடங்களாதல்தானே போதரும்.

முன்னவர்க்கு நூலறிவு சிறிதுமின்மையானும், பின்னவர்க்குச் செய்கையின்றி நூலறிவொன்றே யுடைமையானும், அவ்விரு பகுதியினர்க்கும் இறைவன் மறைந்தான் என்க. இங்குக் கூறிய தந்திரம் பயின்றோரும் நூலறிவையே துணைகொண்டவர் என்க.

முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆண்எனத் தோன்றி அலிஎனப் பெயர்ந்து
வாள்நுதற் பெண்என ஒளித்தும் 135

(பொ - ரை) கருணையுடன் நோக்கி நன்கு வளர்ச்சி யடையுமாறு அகத்திட்டு, ஆண் எனக் கருதியவாறே தோன்றி, அலியெனக் கருதியவாறே பெயர்ந்து, ஒளிபொருந்திய பெண் எனக் கருதியவாறு (தோன்றி) ஒளித்தும் எ - று.

(வி - ரை.) இங்கு ஒளிக்கப்பட்டவர், அவன் அருளைப் பெறுதற்குரிய பக்குவம் கொண்டு உருகி நிலலாது, தாமறிந்த நூலறிவின்படி வேள்வி முதலியன செய்யப் புகுந்தவர் என்க.

நூலறிவின்படி அவர் மனத்தமுந்திய அவன் ஆணாய், ஆண் அல்லனும், அலியும், அலியல்லனும், பெண்ணனும், பெண்ணல்லனுமாவன். ஆதலின் ஆண் எனவும், அவ்வளவில் அவர் மனம் அமையாமையின் அலியெனவும், பெண் எனவும் தோன்றிப் பெயர்ந்து மறைந்தான் என்க. ஆண் எனப் பெண்ணென அலியென என்றுரைத்த வந்த ஆற்றலால் அவன் அவ்வத்தன்மைகளையுடையனல்லன் என்பதும் பெறப்படுமென்க.

இவர் இல்லறத்தினின்றும் இனித் துறத்தற்கு முதற்படுதலினாலும், துறந்தவர்களும் உருவெளிப்பாடு கண்டு வருந்துதலினாலும், அதன்மேல்

இறைவன் தானே வந்து ஆட்கொள்ளுதலினாலும், ஈண்டு அவரை அருளி நோக்கியும், நனிவளர்ந்துவரக் கௌவியும் வருவானாயினன் என்க.

முறையொளி யொறறி முயன்றது கொண்டு இதுவரையும் இல்லறத்தார் இயல்புகள் கூறப்பட்டன. மேலே துறவறத்தார் இயல்புகள் கூறப்படு மென்க.

சேண்வயின்

ஐம்புலன் செலவிடுத்து அருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயிர் ஆக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த ஒளித்தும் **138**

(பொ - ரை ) ஐம்பொறியறிவுகளையும் நெடுந்தூரத்தே செல்லுமாறு விடுத்து, அரிய மலையிடங்கள்தோறும் சென்று, நுகர்ச்சிகளை நீக்கிய வெறுவிதாய உயிரோடுங்கூடிய உடம்பினையுடைய அரிய தவத்தைச் செய்வோர்கள் காணும் காட்சியுள் நன்றாக மறைந்தும் எ - று

(வி - ரை.) ஐம்புலன்களையும் வலிந்தடக்கினரென்க. நுகர் பொருள்களின் நிலையின்மை கண்டு அவறறை வெறுத்து விலக்கி, மீண்டும் அவை தம்மைப் பறறாவாறு மலைகளையடைந்து தவஞ் செயவோர் என்க. பன்னத்தை முதலிய பிராணிகள், தமக்குரிய உணவு முதலாயின கிட்டாத போது செத்துக்கிடந்தும், கிடடியபோது உயிர்த்தியங்கி நுகர்ந்தும் வருவதுபோல அத்தவசிகள் அடக்கிய ஐம்புலன்களும், காலகதியில் வெறுப்படங்கியபோது விஷயங்களை நோக்கிக் கிளர்நதெழுந்து பேரிடர் விளைக்குமாதலின், அத்தவத்தால் எய்தும்பேறு வருத்தமேயொழிய வேறொன்றுமில்லை என்க. திருமூலநாயனாரும்,

" அஞ்சு மடக் கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சு மடக்கும் அமரரு மங்கிலை
அஞ்சு மடக்கில் அசேதனமா மென்றிட்டு
அஞ்சு மடக்கா அறிவறிந் தேனே." (திருமந். 2033.)

எனவும்

" எண்ணு யிரத்தாண்டு யோக மிருக்கினும்
கண்ணு ரமுதனைக் கண்டறி வாரிலை
உள்நாடி யுள்ளே ஒளிபெற நோக்கிடில்
கண்ணாடி போலக் கலந்திருந் தானே." (திருமந். 603 )

எனவும், பிறவாறும கூறியிருப்பனவும காண்க. அவனருளே கண்ணாகக் கொள்ளினன்றி வேறெவ்வாற்றானும் தெய்வக்காட்சி பெறலரிதென்பதை வடமறையும தென்மறையும் ஒருங்கே முழங்கும். ஆங்காங்குக் காண்க.

உலகினையாதல் இறைவனையாதல் நுகராத உயிர் வெற்றுயிர் எனப்பட்டது. அது நின்ற உடலும் வெற்றுடல் என்க. வெற்றுயிர், வெற்றி யாக்கை என்றியைக்க.

அருந்தவர் காட்சியென்றது, துறவறம் பூண்டவர், தாம் முன்னர் இல்லறத்திற் கண்ட காட்சிகளைப் போலி உருவெளித் தோற்றமெனக் கொண்டவராகி, அவனைச் சூனியனாகவே கொண்டு கடும் யோகு செய்து பெற்ற காட்சியை என்க.

ஒன்றுஉண்டு இல்லை என்றறி வொளித்தும் 139

(பொ - ரை) கடவுள் என்ற ஒரு பொருள் இருக்கிறது; இல்லை என்று கலங்கிய அறிவுடையார்க்கு ஒளித்தும் எ - று.

(வி - ரை.) இல்லறத்திற் கண்ட காட்சிகளும், துறவிற் கண்ட சூனியக் காட்சிகளும் என்னும் அவ்விரண்டினுள்ளே ஒன்றினை மேற்கொள்ளுதற்கும், மற்றொன்றினை இல்லை எனத் தள்ளுதற்கும் இயலாராகிய அவர் தம் ஐயப்பாட்டினாற் கலக்குண்ட கலக்கறிவினுள்ளே இறைவன் மறைந்தான் என்க.

பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்கும் சோரனைக் கண்டனம்
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்
தாளதனை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும் 145

(பொ - ரை) பண்டைக் காலத்திலே பயிலுந்தோறும், இக்காலத்திலே பயிலுந்தோறும் அகப்படாது ஒளிக்கும் கள்வனை யாம் கண்டுகொண்டோம்! ஆதலின் இங்கு வந்து நிறையுங்கோள்! நிறையுங்கோள்! அன்றலர்ந்த மலர்களால் தொடுத்த மாலையினால் அவன் கால்களைக் கட்டுங்கோள்! வலமாகச் சுற்றி வாருங்கோள்! வளைந்துகொள்ளுங்கோள்! (ஓடமுயல்கின்றாராதலின்) பின் தொடர்ந்து போங்கோள்! தப்பிப்போக விடாதேயுங்கோள்! பற்றிக்கொள்ளுங்கோள்! என்று கூறினவர்களுடைய பற்றுக்களுள் அகப்படாது முற்றாய் ஒழித்தும் எ - று.

(வி - ரை.) இவர்கள் இறைவன்பால் இப்பொழுதே கொண்ட பற்றுடையராதலின், அவர்க்கு உருவெளியாகக் காட்டி மறைந்தமையே ஈண்டுக் கூறப்படுகின்றது.

பண்டும் இன்றும் பயின்றமை கூறுதலினாலே மேற்கூறிய பகுதிகளைத் தாண்டி இப்பகுதியை எய்தியவர் என்பது பெறப்படும்.

இவ்வாறு உருவெளிப்பாடு கண்டு ஆழ்வார் கூறியமை திருவாய்மொழி. 7, 11. 7 என்னும் பதிகம் முழுதிலும் காணப்படும்.

தன்நேர் இல்லோன் தானே ஆனதன்மை
என்நேர் அனையோர் கேட்கவந்து இயம்பி
அறைகூவி ஆட்கொண் டருளி
மறையோர் கோலம் காட்டி யருளலும் 149

(பொ - ரை) பிறர் எவரையும் ஒப்புரைத்தற்கு இல்லாதவன் எதற்கும் தான் ஒருவனேயான தன் மெய்யியல்பினை, என்னைப் போன்றவர்கள் கேட்கும்வண்ணம் வந்து கூறி, வன்மை கூவி யழைத்து ஆண்டுகொண்டு, அந்தண கோலத்தைக் காட்டி யருளிய மா ...தை எ - று.

(வி - ரை) தன் நேரில்லோன் எனவே பிறரெல்லாம் குறைவுடையர் என்க.

தானேயான தன்மை, எல்லாவற்றினும் தானேநின்று அவற்றைத் தொழிற்படுத்தி, அவற்றிற்கு அப்பாலாய் நிற்கும் மெய்யியல்பாமென்க. அதாவது, இங்ஙனமெல்லாம காண்டறகரியனாய் நிற்பினும், தானே யாவற்றுக்கும் முதல் என்னும் ஐயமற்ற தன்மை யென்க. இத்துணை முயற்சிக ளாலும் காணப்படாததொன்று உண்டென்பதென்னை! அது வீண் கற்பனையே யாகும் என்று எண்ணற்க; இத்தனை நெறிகளையும் கடந்து ஒன்றுள தென்பது உண்மை, அதுவே தானேயான தன்மை என்றபடி. சமயாதீதம் எனக.

அநதண கோலத்துடன் வந்து அத்தன்மையை இயம்பி, ஆட்கொண்டு காட்டியருளலும் என்க. மெய்யியல்பினை உணர்த்தாதே அந்தண கோலத்தைக் காட்டின், யாவருங் காணுவது போன்றே என்பு, தோல், தசை முதலாயின கண்டிருப்பரன்றி, அக்கோலத்துள் இறைவன் மெய் யியல்பு காணாராகலின், மெய்யியல்புணர்த்திய, தனது அந்தண கோலத்தைக் காட்டினன் என்க. எனவே, மெய்யியல் இயம்புமுன் கண்ட கோலமும், பின் கண்ட கோலமும் ஒன்றேயாயினும், பின் கண்ட கோலத்தை நோக்கிய நோக்க வேறுபாடுபற்றி "மறையோர் கோலங் காட்டியருளலும்" எனப்பட்ட(

அறைகூவியாட் கொள்ளுதலைத்

"தாபிக்கு மந்திரம் தன்னை யறிந்த பின்
கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே"

என்னும் திருமந்திரப் பாட்டானுமுணர்க.

தன்நேரில்லோன் இங்ஙனமெல்லாம் ஒளித்தும் ஒளித்தும் தானேயான தன்மையை இயம்பி ஆட்கொண்டு காடடியருளலும் என்க.

உளையா அன்பென்பு உருக ஓலமிட்டு
அலைகடல் திரையின் ஆர்த்தார்த்து ஓங்கித்
தலை தடு மாறா வீழ்ந்துபுரண்டு அலறிப்

பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பும்
கடக்களிறு ஏற்ருத் தடப்பெரு மதத்தின்
ஆற்றேன் ஆக 156

(பொ - ரை) இயல்பாகவேயுள்ள அன்பினுலாகிய உடம்பு உருகிப்போக ஓலமிட்டுக் கொந்தளிக்கின்ற கடலின் அலையைப் போல ஆரவாரித்து ஆரவாரித்துத் துள்ளி மேலெழுந்து தலைதடுமாறிக் கீழ் விழுந்து புரண்டு அலறிப் பித்தற்ருர்போல மயங்கிச் செருக்குற்ருர்போல மதித்து, நாட்டிலுள்ளார் பயந்து மருளவும், கேள்விப்பட்டவர் இறும்பூதடையவும், பாகனை ஏறவொட்டாத களிற்றின் மிக்க மதத்தினைப் போன்ற இன்ப மதத்திஞல் பொறுக்கலாற்றேனாக எ - று.

(வி - ரை.) உளைதல் - தோற்றுதல்.

"சுடருக்குளைந்து" (திவ் இயற் திருவிருத் 69)

என்புழியும் இப்பொருட்டேயாம. எனவே இயல்பாகவேயுள்ள அன்பென்று கூறினும். அன்பென்பு - அன்பினுலாகிய உடம்பு.

ஓலமிட்டு ஆர்த்தல் முதலியனவாகக் கூறப்பட்டனவெல்லாம் தம் வயமின்மையைக் காட்டி நின்றன.

மத்தர் - செருக்குற்ருேர். மதித்தல் - கருதியிருத்தல். செருக்குற்ருேர் செருக்கிய பொருளையே கருதியிருக்குமாறுபோல அன்பரும் அன்பின் பொருளையே கருதியிருந்தாரென்க. பித்தரும் அங்ஙனமே அதனில் மயங்கியிருந்தாரென்க.

நாட்டவர் - நாட்டிலுள்ளோர். கண்முறைக் கண்டவரென்க. கேட்டவர் பிறநாட்டிலிருந்து கேட்டோர் என்க.

ஏற்ருமதத்திற்குப் பாகன் ஏறுதற்கு இடங்கொடாத மதம் என்க. இன்பமாற்ருமையால் தலைவனை மதியாமை பெற்ரும்.

கடக்களிறு என்பது இடுகுறியளவாய் நின்றது; கருங்கண்ணன் என்பதுபோல.

அவயவம் சுவைதரு
கோல்தேன் கொண்டு செய்தனன் 157

(பொ - ரை) உறுப்புக்களையெல்லாம் சுவைதருங் கொம்புத்தேனைக்கொண்டு செய்தனன் எ - று.

(வி - ரை) பொறுத்தல் புகலேன் (123) காட்டியருளனும் (149), ஆற்றேஞக (156), செய்தனன் (157) என முடிக்க.

அவன் தன்னருளாலேயே தானுக வந்து மெய்ம்மையை யுணர்த்திக் கோலங் காட்டுதலும், அதனுல் போந்த பேரானந்தத்தைச் சுவைத்தற்குரிய பேரன்புடலை உதவிய திறத்தைப் படிமுறையாக விரிக்கின்றவாறுணர்க.

"ஆற்று இன்பம் அலர்ந்தலை செய்யப் போற்று ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்" என்பது தொட்டு இதுகாறும் அன்புடலின் ஒரு பகுதியை விரித்தவாறு காண்க.

ஏற்றார் மூதூர் எழில்நகை எரியின்
வீழ்வித் தாங்கன்று
அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன் 161

(பொ - ரை) எதிர்த்தவர்களுடைய பழைய முப்புரங்களையும் தனது நகையினின்றும் எழுச்சிபெற்ற நெருப்பினுட் படுத்துச் சாம்பராக்கி அழித்தாற்போலத் தன் அருளென்னும் பெரிய நெருப்பினுள்ளே அடிமைகொண்ட அந்நாளிலேயே அடியேங்களுடைய மூலவுடலை ஒருவருடையதேனும் தவறாது ஒடுக்கினன் எ - று.

(வி - ரை.) முப்புரமெரித்த வரலாறு வெளிப்படை. அடியோம் என்றது உடனிருந்த அடியார்களை. ஒற்றுமை நயங்கருதி உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாக உரைத்தவாறும்.

அழிதருமாக்கை ஒழியச்செய்த ஒண் பொருள் என மேற்கூறியதே ஈண்டு விரிக்கப்படுகின்றது என்று கூற அமையுமேனும், அருட்பெருந் தீயில் அடியார்களை அடக்கியதேயன்றி அடிகளையும் அடக்கினன் இறைவன் என, வரலாறுகள் கூறாமையானும், மேலும் ஈண்டே அடிகளை இறுத்திலன் ஆகலானும் அது பொருந்தாதென்க.

"கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல வென்னை ஈங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறு மடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளி"

என, மேலே கீர்த்தியுள் தொகுத்த வரலாற்றினையே இத்திருவண்டப் பகுதி முற்றிலும் விரித்துக் கூறப்படுகின்றது என்பதை ஓர்ந்துணர்க.

அடிக்குடில் என்றது பிரவிர்த்திக்குக் காரணமான மூலவுடலே என்க. அடியோம் அடிக்குடில் ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன் என்று கூறப்பட்டதேனும், அடியோம் அடிக்குடில் ஒன்றும் வழாமை ஒடுக்கினன் எனவே கொள்க. இவற்றால் அடியார்களை ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளிய திறம் கூறப்பட்டது. மேல்வருவனவற்றால் தம்மை ஈங்கொழித் தருளிய திறம் கூறப்படும்.

தடக்கையின் நெல்லிக் கனிஎனக்கு ஆயினன் 162

(பொ - ரை.) பெரிய உள்ளங்கையில் நெல்லிக்கனியைப் போல என்பால் ஆயினன் எ - று.

(வி - ரை.) உள்ளங்கை நெல்லிக்கனிபோல வெளிப்படையாகத் தோன்றி எளிதாக அகப்பட்டான் என்றபடி.

சொல்லுவது அறியேன் வாழி முறையோ
தரியேன் நாயேன் தான்எனைச் செய்தது
தெரியேன் ஆஆ செத்தேன் அடியேற்கு
அருளியது அறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்லகில்லேன்
செழுந்தண் பாற்கடல் திரைபுரை வித்து
உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகம் ததும்ப
வாக்கிறந்து அமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுடல் அகத்தே
குரம்பை கொண்டு இன்தேன் பாய்த்து நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதோறும் ஏற்றினன் உருகுவது
உள்ளங்கொண்டு ஓர் உருச்செய் தாங்கு எனக்கு
அள்ளூறு ஆக்கை அமைத்தனன். 177

(பொ - ரை ) (அவர் எனக்கு அங்ஙனமாகிய தன்மையினை) இத்தன்மையானது என்று சொல்ல அறியேன்! பிறர்க்கு அதனை அறிவுறுத்த அறியேனாயினும் அவ்வநுபவம் என்பால் வாழ்வதாக! நாயேனாகிய என்னை அவன்தான் செய்தனவற்றை யான் பொறுக்க மாட்டேன்! இது முறையோ! அவன் செய்தனவற்றைத் தெரிந்து கொள்ளவும் மாட்டேன்! ஆ! ஆ! உணர்வற்றுப்போனன்! அடியேனுக்கு அருள் செய்ததையும் அறியாதொழிந்தேன்! அவன் அருளைப் பருகியும் நிறைந்திலேன்! விழுங்கியும் நிறைவு பெற்றிலேன்! இந்நிலையிலே, உவா நாட்களிலே கொந்தளிக்கும் உவர்க் கடல் நடுவில் பொருந்திய நீராகிய உள்ளத்தைச் செழுமையும் தண்மையும் வாய்ந்த திருப்பாற்கடலின் திரையோடு ஒப்பச் செய்து, அது நிறைந்து ததும்ப, சொல்லால் உணர்தற்கரிய அமுதத்தை மயிர்ப்புரைதோறும் நிறைவுபெறச் செய்தனன்! கொடியேனுடைய ஊன் தழைக்கின்ற—நாயுடல் போன்றழிந்த உடம்புகள்தோறும் அவற்றின் உள்ளிடத்தை வீடாகக்கொண்டு குடியிருந்து இனிய தேனைப் பாய்ச்சி நிரம்பப் பெற்ற ஆச்சரியகரமான அமுத ஒழுக்குகளை என்புத் துளைகள்தோறும் ஏறும்படி செய்தனன்! இடையறாது உருகும் உள்ளத்தைக்கொண்டு ஓர் உடலைச் செய்தாங்கு எனக்கு அன்பு கசிந்தூறும் உடலைச் செய்தனன் எ-று.

(வி - ரை.) அவன் உள்ளங்கை நெல்லிக்கனிபோல நின்ற தன்மையைச் சொல்ல அறியேன் என்க.

தரியாமை தெரியாமை முதலியனவெல்லாம், அவனருளிய ஆனந்தத்தைப் பொறுக்கும் ஆறறல் அவ்வறிவுடலுக்கும் இல்லாது போனமை குறித்துநின்றமையானே, அவ்வுடலை யீந்து அது பொறுத்தற்கரிய ஆனந்தத்தை அதன்மேலேற்றியது முறையோ என்க. ஒல்லகிலலேனாகிய இந் நிலையிலே என விரித்துக்கொள்க. பாற்கடல் என்றமைக்கேற்ப உவாக் கடலை உவர்க்கடலென்க.

"உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகம்" என்றது உருவகம் உவர்க்கடல் நீராகிய உள்ளத்தைத் திருப்பாற் கடல் நீராக ஆககினான் என்க.

வாக்கிறந்த அமுதம் எனக் கொண்டுரைக்க. தழை குரம்பை-வினைத் தொகை. குரம்பை தோறும் என்ற பன்மையானே பல பிறவிக்கண்ணும் எடுத்த உடம்புகள்தோறும் என்றுரைக்க. மேல்வந்த குரம்பை வீடு. எலலா ஊனுடலையும் வீடாகக்கொண்டு குடியிருந்து என்க.

உருகுவதோர் உள்ளங்கொண்டு உருவம் செய்ததுபோல அன்பு கசியும் உடலை அமைத்தான் என்க. உடல்களை வீடாகக்கொண்டு உள்ளத்துள் இருந்து, உள்ளத்தையும் உடலையும் திருத்திப் பண்படுத்தி, இஃதுள்ளம், இஃதுடல் என்ற பேதம் உணரமுடியாதபடி எப்போதும உருகிய வாறே யிருக்கும் உள்ளமயமாக்கினான் என்க.

அவனால் வரக்கடவதாகிய ஆனந்தத்தைப் பொறுக்கலாற்றாத ஊனுடலின் நீங்கி, அவ்வானந்தத்தைப் பொறுத்தற்குரிய வேறுடலே அவாவியிருந்தேனாக, இறைவன், திருமாலும, அயனும ஏனைய மக்கள் திறத்தாரும் என்றித் தொடக்கத்தோரால் உணரப்படாத தன் அருமைத் திறத்தை அந்தணனாய் வந்தறிவுறுத்தியாளுதலுட, அதனால் வந்த உணரச்சிப் பெருவெள்ளத்தை ஓரளவு தாங்குமபடி அந்நிலைக்கண் ஓர் அன்புடலை உதவி, மீண்டும் மீண்டும் பேரின்ப உணர்ச்சிகளை மிகுவித்து, அவ்வன்புடலைப் பேரின்பவுடலாக வளரத்தான் என, அன்புடலின் வரன் முறையைத் தொகுத்துணர்ந்து கொள்க.

—ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறுஎனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன், என்னில்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமுது ஆக்கினன்
பிரமன் மால்அறியாப் பெற்றி யோனே. 182

என்னுமிவ்வடிகளினால், அவன் தலைவன் தன்னை ஈண்டே இருத்தியமை கூறுகின்றான் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) விளக்கம் பொருந்திய கரும்பின் இனிமையை மீண்டும் நுகர்தற்கு அவாவியிருக்கும் களிற்றியானையை ஒப்ப

என்னை யாவர்க்கும் கடைமுறையாக இவ்வுலகத்தில் இருத்தினுன். அவன் யாரெனின், என்பால் தன் கருணையாகிய பெருமை மிக்க தேன் கலத்தலினுலே அருளுடன் மேம்பட்ட அமுதத்தை உண்டாக்கினேனுகிய அயனும் மாலும் அறியாத பெருந்தகைமை யினையுடையோன் என்க எ – று.

(வி - ரை.) கனி - இனிமை. தேர்தல், அவ்வினிமையை நுகர்தற்கு மீண்டும் அவாவியிருத்தல். அங்ஙனமிருத்தல் கனிற்றுக்கு எங்ஙனம் இயல்பாகுமோ, அங்ஙனமே அவன் பேரானந்தத்தை நுகர்தற்கு யான் அவாவியிருத்தல் எனக்கியல்பாயிற்று என்க. கடைமுறை - கடைசிமுறை. எல்லா அடியார்களுக்கும் பிற்பட்ட முறை என்க.

என்பால் தன் கருணை வான்தேன் கலத்தலினுல் முன்னரோதிய பல வகைப்பட்ட இன்பங்களையும் செய்தான் என்க. பராவமுது - மேலான அமுது. பெற்றி - பெருந்தவமுமாம்.

இனி இத்திருப்பாடலை, கருணை வான்தேன் கலக்க அருளொடு பராவமுதாக்கினேனுகிய பிரமன் மாலறியாப் பெற்றியோன் (181—182) பகரின் (3) பெரியோன் (6) தெரியின் (6) குழகன் (12) பழையோன் (13) கடவுள் (14) கரப்போன் (15) கடவுள் (16) கிழவோன் (19) அமைத்தோன் ……அடைத்தோன் (20—28) ; அஃதான்று (28) முன்னேன்……அவளும் தானும் உடனே காண்க (29—65) அதுவே (66) தோன்றி (67) ஏறி…… மகிழ்தலின் (68—92) அசைந்தன (82) உழுவர் (ஆகி) 94) நோக்கி (92) ஆர (94) தந்த (94) மேகன் வாழ்க……காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க (95—105) நம்பன்……களிப்போன் போற்றி (106—121) பொறுத் தல் புகலேன் (123) தேடினர்க்கொளித்தும் ….. பற்றுமுற்றுமொளித்தும் (126—145) தன்னேரில்லோன் (146) காட்டியருளலும் (149) ஓலமிட்டு… ஆற்றேனுக (150—156) கோற்றேன்கொண்டு செய்தனன் (157) அடியோம் அடிக்குடில்……ஒடுக்கினன் (160—161) தடக்கையின் நெல்லிக்கனி எனக் காயினன் (162) சொல்லுவதறியேன்….. ஒல்லகில்லேன் (163—167) (அந்த ளும்) தேக்கிடச்செய்தனன் (171) ஏற்றினன் (175) அமைத்தனன் (177) என்னையுமிருப்பதாக்கினன் (179) என வினைமுடிபு செய்க.

இனி, இவ்வகவல் திருப்பாட்டு செந்தூக்கு (நாற்சீர் கொண்ட) அடி யல்லாப் பிற அடிகளாலும் நடந்தமைக்கு மெய்ப்பாடும் பொருளும் காரணங்களாக அமைதலை ஒரு சிறிது தொகைவகையாகக் கூறுவாம் :

" ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கில்
தோற்றம் முச்சீர்த்து ஆகும் என்ப." (தொல். செய். 67.)

எனவும்,

" இடையும் வரையார் தொடையுணர் வோரே " (தொல். செய். 68.)

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனுர் விதித்தலின், ஆசிரிய அடிகள் இடை யிடையே முச்சீரானும் வரப்பெறும் என்பதுணரப்படும்.

" எழுத்து முதலா ஈண்டிய அடியில்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர் " (தொல். செய். 78.)

என்றலின் இருசீரினும், முச்சீரினும், நாற்சீரினும் பொருள்முடிய நாட்டுதல் வேண்டும். ஓரடிக்கண் யாக்கற்பாலதாகிய பொருள் பிறிதோர் அடிக்கண் செல்லுதல் தகாது என்பது இதனாற் பெறப்பட்டது.

" அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோ ராறே " (தொல். செய். 11.)

என்னும் சூத்திரத்தினுள், " அசையும் சீரும் " உம்மையால் அடியினை வகுத்துணர்த்தலும் கொள்க.

" நுதலது இமையா நாட்டம் ; இகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே " (அகம். கட. வாழ்த்.)

என்புழி, இகலட்டு என்னும் சீர் எழுத்து முதலா ஈண்டிய அடியில் குறித்த பொருளை முடியநாட்டப் பின்வந்ததாகலின், யாப்பென்னும் உறுப்பினுள் அடங்காது, இகலட்டுக் கையது என மேலடியுடன் பொருள் கூடியும், இசையொடுகூடி வகுத்துணர்த்தியதூஉம் எனப் பேராசிரியர் உரைத்த தலின், சிறுபான்மை இசை கருதி மேலடியொடு பொருள் கூடியும் வரும் என்றவாறாயிற்று.

திருச்சிற்றம்பலம்

மூன்றாவது

# போற்றித் திருவகவல்

நிலைமண்டில ஆசிரியப்பா

திருச்சிற்றம்பலம்

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மால் அன்று
அடிமுடி அறியும் ஆதர வதனில்
கடுமுரண் ஏனம் ஆகிமுன் கலந்து
ஏழ்தலம் உருவ இடந்து பின் எய்த்து
ஊழி முதல்வ சயசய என்று
வழுத்தியும் காணா மலரடி இணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கடல் உலகினில்
யானை முதலா எறும்பீ றாய
ஊனமில் யோனியி னுள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்தஅக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல தழைத்தும்

காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கிஉள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்துமுன் பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து புடை பரந்து
ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்
தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியரும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களில்
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாத மென்னும்
சண்ட மாருதம் சுழித்தடித் தாஅர்த்து
உலகா யதனெனும் ஒண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்

தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுளம் உருகி அழுதுடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறு அன்பிற்
பசுமரத் தாணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய் மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுதல் இன்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாரும்
கதியது பரமா திசய மாகக்
கற்று மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமை யென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் ஆகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாத என் றரற்றி
உரைதடு மாறி உரோமம் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பச்
சாயா அன்பினை நாள்தொறும் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதியன் ஆகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூடலில் இலங்கு குருமணி போற்றி

தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னார் உருவ விகிர்தா போற்றி
கல் நார் உரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்தனக் கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையேன் அடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை
ஆழா மேயருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றி என் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி

உரையுணர் விறந்த ஒருவ போற்றி
விரிகடல் உலகின் விளைவே போற்றி
அருமையில் எளிய அழகே போற்றி
கருமுகில் ஆகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையும் ஒருவன் ஆக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பம் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவர் உள்ளத் தமுதே போற்றி
கனவிலும் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலும் நாயேற் கருளினை போற்றி
இடைமரு துறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலையெம் அண்ணா போற்றி
கண்ணார் அமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி

குற்றா லத்தெம் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்கு
அத்திக் கருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சேல் என்றிங் கருளாய் போற்றி
நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி
இலங்கு சுடரெம் ஈசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி

குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையார் அரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுஈ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்

குழைத்த சொல்மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி
திருச்சிற்றம்பலம்

*தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.*

## உரை

போற்றித் திரு அகவல் திருமாலுக்கும் அறிவரிய திருவடிகள் உலகில் அன்பர்கள் வழுத்துதற்கெளிதாகி, அவ்வன்பர் பிறப்புத் துன்பம், வளர்குழவிப் பருவத்துன்பம், காமத்துன்பம், அவாத் துன்பம், கல்வி செல்வம் நல்குரவென்னும் இவற்றான் வருந் துன்பங்கள் என்பவற்றை அவனருளால் பிழைக்கும், கடவுள் உண்டு என்னும் சித்தம் உண்டாக மாயைகளின் பேதச் செயலால் அறுவகைச் சமயக் கோட்பாடுகள் ஆயவற்றுக்கெல்லாம் அசையாத சித்தம் படைத்தும், மனமுருகி உலகோர் சிரிக்க நாணும் அகன்று அவன் ஆசானாக அருளிய பெருமையை இழக்காது அன்பு செய்தும் தழைப்பவர்கட்கெல்லாம் ஒரு தாயேயாகி வளர்த்தனை யென முதலாம் அடி தொடங்கி எண்பத்தேழாம் அடிவரையிலும் இறைவன் திருவடிகளின் அருமைப்பாடும், அடியவர்கட்கு அவற்றின் எளிமைப்பாடும், அன்பர்கள் தன் திருவடியே பேணுமாறு காப்பன காத்துக் கடிவன கடிந்து ஓம்பிவரும் அவன் அருளிப்பாடும் ஆகிய இவையெல்லாம் அவனைப் போற்றுதற்குக் காரணங்களாகி நிற்றலின், அவற்றை முதற்கண் விளந்து கூறியருளியும், எண்பத்தேழாம் அடி தொடங்கி இருநூற்றி யிருபத்தைந்தாம் அடியாகிய இத்திருப்பாட்டு இறுதிவரையிலும் அக்காரணங்கள் அடிகளை இறைவனைப் போற்றுமாறு தூண்டு தலின், அங்ஙனம் போற்றி செய்தும் நிறைபெறுகின்றது. உடம்படு புணர்த்தலால் அடியவரைப் போற்றுதலையும் சார்த்தி இப்போற்றி நிறைவு பெறுகின்றது என்பதாம் பெற்றும்

சகத்தின் உற்பத்தியாவது உலகுயிர்களின் தோற்றத்தாலாகிய பயன். யானை முதலா எறும்பீறாகிய பிறவிகளிற் பிறந்து, இறை வனருளால் மக்களாகப் பிறந்து, அவனருளால் பலவகை இடையூறு களில் பிழைத்தும், அவனருளாலே அவனைப் போற்றியும் வருதலே, இவ்வுலகில் உயிர்கள் பெறற்பாலதாகிய பயனாம். உற்பத்தி என்பது அதன் பயனுக்காயிற்று.

மூன்றாவதாகிய திருவண்டப் பகுதியில் இறைவனைப் போற்றி செய்யின், அவன் தானே வந்து அருளிக் காப்பானாகலின், அவன்

வாழ்க, அவன் காண்க; அவற்குப் போற்றி எனக் கலங்கிய மனந் தெளிந்து துணிந்து முடித்தருளினாராகலின், அங்ஙனந் துணிந்த துணிவு சிதையாதிருத்தற்பொருட்டு, அடியார்க்கருளிய தன்மையை முதன்முதல் கருத்திலே தோற்றி, அது காரணமாகப் போற்றி செய்தருள்வாராயினர் என்க.

போற்றித் திருவகவல் என்பது, இறைவனுடைய பலவகைப் பட்ட புகழ்களையும் எடுத்தோதிப் போற்றி செய்து, மற்றவனுடைய உள்ளத்தை நெகிழவைத்துத் தமது விண்ணப்பத்தை எடுத்துரைத்தல் என்னும் பொருளடங்கிய அகவற்பா. இதன்கண் பிரபஞ்சத் தோற்றத்தினால் உளதாம் பயன் நன்கு ஆராயப் பட்டுளது.

இத்திருப்பாடலின் திரண்ட பொருள், யானை முதலாக எறும்பீருகச் சொல்லப்பட்ட யோனி பேதங்கள்தோறும் சென்று பிறத்தலும், மக்கட்பிறப்பினுள்ளும் தாயின் கருவினுள் அழிதலும், குழவிப்பருவத்துளதாகும் இடையூறுகளுட்படுதலும், காளைப் பருவத்தில் காமத்தால் உந்தப்படுதலும், இல்வாழ்க்கையுள் அமிழ்ந்து போதலுமாகிய முந்தை வினைகளினின்றும் பிழைத்து, இறையுணர்வுண்டாகி, அம்மெய்யுணர்வில் தலைப்படுதலும், பல சமயநெறிகளாலும் பாதிக்கப்பட்டு மெய்ந்நெறியினின்றும் புறஞ் செல்லாது வைராக்கியம் பூண்டு நற்செவ்வியுற்றிருப்ப, இறைவன் குருமணியாய் வந்து அருள்செய்தனவற்றைப் போற்றி அவற்றை மறவாது அவனுடைய திருமாலும் அறியாப் பெருமையும் அருமையும் வாய்ந்த திருவடிகள் எளியனவாகும்படி பேரன்பில் தழைக்கின்ற பேரன்பர்களுக்குத் தாய்போல இருந்துவருகின்ற வனே, என்னையும் அங்ஙனமே வளர்த்து இன்னமுதமாகச் சுவைக் கின்றவனே, எனக்கு மீண்டும் அருள்புரியாயோ! யான் நின்னுடைய விழுத்தொண்டினுள்ளேன்! யாதொன்றற்கும் பற்றாத சிறுமையுடையேனையும் ஒப்பற்ற பெரியோனுக்கித் திருவடியையும் தலைமீது வைத்தாய்! யான் அதனைத் தொழுது வருகின்றேன்! அங்ஙனம் தொழுதகையின் துன்பத்தையேனும் துடைத்தருள்க! என்னுடைய கனவின் கண்ணும் நனவின் கண்ணும் பிரியா துறைந்து அருள்செய்தாய்! இன்று யான் பற்றுக்கோடின்றி வருந்துகின்றேன்! தளர்ந்தும் போனேன்! தனியனேன் நின் னுடைய ஞானசபைக்கண் இன்புற்றிருக்க வேண்டியனவற்றைச் செய்வாயாக! அதுவரையும் என்னை அஞ்சாதிருக்கும்படி அருளுக! என்னையும் உய்யக்கொள்ள வேண்டும் என்பதை மறந்துவிடாதே! என்றிங்ஙனமெல்லாம் பிதற்றிக் குழைத்த பாமாலையாகிய திருவாச

கத்தை ஏற்றுக்கொண்டருள்க என, தமது விண்ணப்பத்தை ஏற்றருளுமாறு அவன் புகழ்களை எடுத்தோதிப் பரவி வேண்டிய வாறும் எனவரும்

எனவே, பாடக்கேட்டோன் இறைவனும், பாடியவர் அடிகளும் என்க.

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுலகு அளந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மால்அன்று
அடிமுடி அறியும் ஆதரவு அதனில்
கடுமுரண் ஏனம் ஆகிமுன் கலந்து
ஏழ்தலம் உருவ இடந்துபின் எய்த்து
ஊழி முதல்வ சயசய என்று
வழுத்தியும் காணா மலர்அடி இணைகள்
வழுத்துதற்கு எளிதாய்

என்னும் இவ்வடிகளினால், திருமால் முதலாய எல்லாத் தேவர் களுக்கும் அரியனவாகிய இறைவன் திருவடிகள், மண்ணுலகில் உள்ளவர்களுக்கு எளியனவாகிய இயல்பைக் கூறுகின்றவர் அவற்றிற்குத் தோற்றுவாய் செய்கின்றார்.

(பொ - ரை.) நான்முகன் முதலாகிய எல்லாத் தேவர்களும் வணங்கி எழுந்து நிற்ப, தன்னுடைய இரண்டு திருவடிகளினாலும் மூன்று உலகங்களையும் அளந்து, நான்கு திக்குகளிலுமுள்ள முனிவர்கள் யாவரும் தங்கள் ஐம்புலன்களும் விரிவடையுமாறு போற்றுதலைச் செய்யப்படுகின்ற, ஒளிவீசும் திருமுடியைக் கவித்த திருநெடுமால் என்பவன், அன்றொரு காலத்திலே, சோதிப்பிழம்பின் அடியையும் முடியையும் அறியவேண்டும் என்னும் விருப்பத்தில் (தன் விருப்பமாகிய அடியைக் காணும்பொருட்டு) கடுமையான வலிமையமைந்த பன்றியுருக்கொண்டு, முற்படத் தன் தொழிலுட்கலந்து, கீழ் ஏழுலகங்களையும் ஊடுருவ இடந்துசென்று, பின்னர் இளைப்படைந்து, உலக முடிவிற்கு முதல்வனே வெல்லுக! வெல்லுக! என்று வணங்கித் துதித்தும் கண்டறியப்படாத இரண்டு மலரடிகளும் (இந்நிலவுகில்) வழிபாடு செய்தற்கு எளிமையாகும்படி எ - று.

(வி - ரை.) மாபலி என்பானுடைய அநீதியைப் பொறுக்கலாற்றாத வானவர்கள், தத்தமக்குட் பெரியோராயினாரை நாடி,

திருமாலையே அடைக்கலமாக அடைந்தனராகலின், திருமால் ஒழிந்த தேவர்கள் நான்முகன் முதலாக எண்ணப்பட்டுத் தாமடைந்த இன்னல்கள் அத்திருமாலினுல் தீர நின்றமை குறித்து வணங்கினர் என்க. கீழே வீழ்ந்து வணங்கி எழுந்துநின்று துதித்தனர் என்பதுபடத் "தொழு தெழ" என்று கூறப்பட்டது.

முன்னர்ப் போற்றிய நான்முகன், பின்னர் அறியாமை மேலிட்டுச் செருக்கித், திருமாலுடன் மாறுபட்டுக் கலாய்த்தமையும், அடிகளை நாடியறிய முற்படாது முடிகாண முற்பட்டமையும் அவனது இழிவினைப் புலப்படுத்துவனவாம். இனி, திருவடிகளை ஈண்டுக் கூற எடுத்துக் கொண்டதனுல், முடிதேடப் புகுந்த நான்முகன் வரலாற்றுக்கு முடிவு கூருதொழிந்தாரென்க.

ஈரடியாலே மூவுலகளந்த திரிவிக்கிரம மூர்த்தியைக் கண்டு முனிவர்கள் ஐம்புலன் மலர்ந்தார்கள் என்க தேவர்கள் தம்மின்னல்கள் தீர வணங்கினர். முனிவர் அங்ஙனமன்றி அவனைக் கண்டு ஐம்புலன் மலர்ந்தார்கள். இரு பாலார்க்கும் நோக்கம் வேருயினவாறு காண்க. இனி, இருபாலாரும் இன்னல் தீர நின்றமை குறித்தே வணங்கினர் எனினும், தேவர்தம் செல்வத் திற்கு நேர்ந்த இன்னல் தீரக் குறித்தும், முனிவர்தம் தவத்திற்கு நேர்ந்த இன்னல் தீரக் குறித்தும் வணங்கினர் எனவே படுதலின், ஆண்டும் அடிப்படை நோக்கம் வேறுபட்டமை காண்க. "தொழுதெழ" என்றும், "ஐம்புலன் மலர" என்றும் வந்தனவற்ருலும் அவ்வேறுபாடு இனிதறியப் படுமென்க.

தலை என்னும் பொறியும் வணங்குதல் என்னும் புலனைக்கொண்டு மலர்ந்தது என்பது "போற்றிசெய்" என்பதனுற் பெறப்பட்டதென்க. திருக்குறளின்கண் வரும்,

"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை" (குறள். கடவு. 9.)

என்னும் குறளினுலும், "தலையே நீ வணங்காய்" என, ஏனைய மூக்கு, கண் முதலாய பொறிகளோடு தலையையும் சார்த்தி, திருவங்கமாலையில் அப்பர் சுவாமிகள் கூறுதலினுலும், தலை ஆரும் பொறியொப்ப அமையுமென்பதும், அதன் புலன் வணக்கம் என்பதும் உற்றுணர்வார்க்குப் புலனுமென்க.

முனிவர்களும், தேவர்களும் வணங்குந்தோறும் தானுந் தன் முடியை அசைத்து அவர் வணக்கத்தினை ஏற்றுக்கொள்ளுதல் குறித்துக் "கதிர் முடித் திருநெடுமால்" என்ருர். அங்ஙனம் முடியசையுந்தோறும் அசையுந் தோறும் முடியில் இழைக்கப்பெற்ற மணிகள் தனி ஒளி வீசுதல் ஓர்க.

ஈரடியாலே மூவுலகளந்த வரலாறு வெளிப்படை. மூவுலகென்றது நில வுலகும் வளியுலகும் வானுலகும் என்றவற்றை. இங்ஙனம் வான்மீகம் கூறும். அங்ஙனம் கொள்ளுதலே ஈண்டுப் பொருத்தமாம் என்க.

அன்று ஆங்குத் தோன்றிய தீச்சுவாலையின் அடியையும் முடியையும் அறியவேண்டும் என்னும விருப்பத்தினுள்ளே, தான் அடியினைக் கண்டு முதல்வனாகவேண்டும் என்னும் விருப்பத்தினால் ஏனமாகிக் கலந்து என விரித்துரைக்க. ஆதரவது சாதியொருமை. ஆதரவு - விருப்பம். அக்கினிச்சுவாலையின் அடியினையோ முடியினையோ கண்டறிவோரே முதல்வராவார் எனத் தம்முள் ஒழுங்கு செய்துகொண்டபடியினால், அதற் கேற்பத் தாந்தாமே ஒன்றனைக் கண்டு முதல்வராக வேண்டுமெனத் திருமாலுக்கும், நான்முகனுக்கும் உண்டான விருப்பம் என்க.

அத்தகைய அவாவினால் யான் அடியை அறிவேன் என, அவ் வொழுங்கில் நெடுமால் கலந்துகொண்டான் என்க.

' மூவுலகையும் அளந்த எனக்கு இதன் அடியினை அறிதல் எத்துணை எளியதொன்றாகும்! நான்முகனோ அப்பயிற்சியும் வன்மையும் உடைய னல்லன்; ஆதலின் அவன் முடி காணாது தோல்வியுற, யான் அடியினைக் கண்டு வெல்வேன் என்பது திண்ணம் ' எனக் கருதி, அவ்வொழுங்கினுள் முற்படக் கலந்தானாகலின் " முன் கலந்து " என்றார்.

ஏழ்தலம், அதல விதல சுதல நிதல தராதல இரசாதல மகாதலங்க ளாம். இடத்தல் - பிளத்தல்.

எய்த்தல் - இளைத்தல். தனது வேணவா நிறைவேறாது கழிதலின் மன மருண்டானாகலின், உடலும் சோர்வுற்றதென்க.

ஜய என்னும் வடசொல் சய எனத் திரிந்தது. சய - வெற்றி. உறுதிப் படுத்தற்பொருட்டு அஃதிருகாலுங் கூறப்பட்டது.

வழுத்தல், பரவுதல், துதித்தல் என்பன ஒரு பொருட் சொற்கள்.

அவனருளால் அன்பு செய்து காண்பதொன்றிற்கு, ஏனமாகிப் போந்தது அறியாமையான் நிகழ்ந்ததாகலின் " மால்.........இடந்து " எனப்பட்டது.

மால் எய்த்தமையானே ஆற்றானாயினன். அங்ஙனமாகியும் அடியினைக் கண்டு முதல்வனாகல் வேண்டுமென்னும் அவா அருமையால், இறைவனுக்கு வெற்றி கூறிப் பணிந்தேனும் அடியினைக் கண்டு பிரமனை வெல்லுதல் வேண்டுமெனத் துணிந்து யுத்தியால் வெற்றி கூறினானாகலின், அன்பினால் மட்டும காணப்படுவதாகிய திருவடி காணப்படுவதன்றாயிற்று.

இங்ஙனம் மால் நிகழ்த்திய நிகழ்ச்சி, வன்புநெறி விடுத்து அன்புநெறி பற்றற்குப் பேருதவியாக இருந்ததென்பதும், உலகின் தொடக்கமும் முடி வும் அறிப்படாமலே இடைநடுவில் இருந்துகொண்டு அவற்றுள் ஒன்றை எங்கள் அறிவினைத் துணையாகக்கொண்டே நாடி யறியப்புகின், அது கைகூடாது மயக்கமே பலனாகப் பெறப்படும் என்பதும், ஆதலால் எந்த ஒரு பொருளையும் அவனருளே கண்ணாகக் கொண்டு காண வேண்டு மென்பதும், அடிகட்கு அன்புநெறி கைகூடச் செய்த இவ்வரலாறு, இங்ஙனமெல்லாம் உரைத்து வெளிச்செயலால் உள்நாடும்படி அவரைத் தூண்டிற்று என்பதும், பிறவும் ஈண்டு உடம்படுபுணர்த்திக் கொள்க.

இப்பத்தடிகளிற் பயின்றவைகள் எல்லாம் தம்மை நோக்கவைக்கப் பெற்றிலவாய்த் திருவடியையே நோக்கவைக்கப் பெற்றிருத்தலின், அவை நோக்கென்னும் உறுப்பாய நின்றன. இங்ஙனமே பின்வரும் செவ்வியும், நெறியும் என்னுமிவைகளும் நோக்குகளாகவே நிற்ப, அவை பின்வந்த பல அருள் திறங்களையும் நோக்க, அவ்வருள் திறங்கள் வணக்கத்திற்கு மூல மாய்நிற்ப, வணக்கங்கள் யாவும் விண்ணப்பத்தை நோக்கி நின்றன என்க. எனவே, குழைத்த சொல்மாலையை ஏற்றருளச் செய்தலே முதல் நோக்காக, அங்ஙனம் செய்வித்தற்கு அவன் மனதை நெகிழச்செய்ய வேண்டுமன்றே, அதன்பொருட்டு அவனுடைய அருள்திறங்கள் பலவற்றையும் எடுத்தோதி வணங்குதல் அதனை அடுத்தும், அவ்வருள் நிகழ்ச்சிக்கு இடமாக நின்றார் அதனை அடுத்தும், அவர் நின்ற அன்புநெறி கைகூடுதற்குரிய செவ்வி அதனை அடுத்தும், அச்செவ்வியை அவாவுதற்கு மாலறியாத் திருவடியின் அருமை உதவியாதலின் அஃததனை அடுத்தும் தொடர்புற்று நின்றன என்க.

இனி, மேலே திருவடி எளிதாதற்குரிய செவ்வியும் நெறியும் என்பவை களும், அவையுடையார்க்குச் செய்த அருள்களும், வணக்கமும் என்பவை களும், விண்ணப்பமும் கூறப்படுகின்றன.

அவற்றுட் செவ்வியென்பது, பிற யோனிகளின் வாய்ப்பட்டுழலாது அவற்றின் நீங்கி மக்கள் யோனியுள் தோன்றி, அதனுள்ளும் பல பருவங் கள்தோறும் உடல் அழிவெய்தப் பெறுதும், காமம், பொருளவா, கல்வியில் ஆழ்ந்துபோதல், செல்வம், வறுமை முதலிய தாக்கங்களைப் பெறுதும் தூய்மையடைவதற்குரிய நல்வினைப் பயனால், நற்பிறப்பெய்தி, அத்தாக்கங் களின் நீங்கி, மெய்ப்பொருள் உணர்வுண்டாகி இருத்தல் என்க. இது 11-ஆம் அடிமுதல் 43-ஆம் அடி முடியக் கூறப்பட்டது.

அவற்றுள் நெறி என்பது, தத்தம்முள் ஆராய்ச்சி வகையான் மாறு பட்டு மலைந்து மோதி நிற்கும் பலகோடி வல்லாராய்ச்சி நெறிகட்குப் புறம்பான அன்பு நெறி என்க. அன்பு நெறியாவது, அம்மெய்ப் பொருளைக் கருதியவாறே இருந்து, அதன் இன்றியமையாமை உணர்ந்து மற்றதனைப் பெற விழைந்து வருந்தி நிற்ப, அஃதுணர்ந்த இறைவன் ஆசானாய் வந்து, தன் திருவடியை அன்புப் பணிகள் செய்வதற்கு இடனாகக் காட்டி, இவையே பொருள் என உணர்த்தியருளலும் அது கொண்டு அவன்பால் கொண்ட பேரனபு பலதுறைப் பணிகள்தோறும் பற்றித் தழைவடையுமாறு நிற்றலாகிய நெறி என்க. இது 44-ஆம் அடிதொடங்கி 86-ஆம் அடி முடியக் கூறப்பட்டது.

அவற்றுள் அருளும் வணக்கமும் என்பவை அவன் அருள்களை எடுத்துக்கூறி வணங்குதலாக அமைந்துள்ளன. அவை 87-ஆம் அடி தொடங்கி 219-ஆம் 220-ஆம் அடிகள் நீங்கலாக ஏனைய அடிகளால் கூறப்பட்டன.

அவற்றுள் விண்ணப்பம் என்பது (யானும் திருவடி வழுத்துதற்கு

எளிதாய்) என் பாடலை ஏற்றுக்கொள் என வேண்டி நின்றது. அது 219-ஆம் 220-ஆம் அடிகளால் கூறப்பட்டது.

இங்ஙனமாதலினால், அத்திருவடிகள், அச்செவ்வியும் அன்பு நெறியும் கைவரப்பெற்று எளியனவாகும்படி தழைப்பவர் என மேலியைத்துப் பொருள் செய்யப்படும். இனி, எளிதாய் என்பதை அவனியில் வந்து (75) என்பதனோடு இயைத்துப் பொருள் செய்தல், ஈண்டு நாம் கொண்ட பொருளுக்கு ஏற்காதென்க.

**வார்கடல் உலகினில்**
**யானை முதலா எறும்பு ஈறாய**
**ஊனம்இல் யோனியின் உள்வினை பிழைத்தும் 12**

திருவடியை எளிதாகப் பெறுதற்குரியார் செவ்வி கூறத் தொடங்கி, அச்செவ்விக்குப் புறம்பானவற்றை விலக்குகின்றவர். இவ்வடிகளினால், மக்கள் யோனி ஒழிந்த ஏனைய யோனிகளை விலக்குகின்றார்.

(பொ - ரை) நெடிய கடல் சூழ்ந்த உலகிலே யானை முதலாக எறும்பு இறுதியாக உள்ள குறைவற்ற யோனி பேதங்களினுள் தோன்றுதற்குரிய வினையினின்றும் தப்பியும் எ - று.

(வி - ரை.) யானை முதல் எறும்பீறாக என்றனர். கீழே கீழே இழிந்து போதலினின்றும் விலக்கி, மேலே மேலே உயர்வடைந்து போதலைக் குறித்தற்கு. செவ்வி நிரம்பியமை குறித்தற்கு. "ஊனமில்யோனி" என்றனர். ஊனம் - குறைவுபாடு. யோனி ஈண்டு பிறவி வகைகளைக் குறித்து நின்றது, சாதி ஒருமை.

இயங்குதிணை உயிர்களுள்ளே கட்புலனாவனவற்றுள் அடங்கிய எல்லா உயிர்களையும் யானை எறும்பு என்னும் இரு வரம்புகளுள் அடக்கிக் கூறினார். வார்கடல் உலகென்றமையின் கடல்வாழ் உயிர்களையும் திமிங்கிலம் முதலாக அடக்குக.

இவ்யோனிகளுள் பிறவி எடுக்கச் செய்யும் பழவினையினின்றும் நீங்கி என்க. இங்ஙனம் பழவினையை முதற கூறியது கொண்டு இனி வரும் பிழைத்தல்கட்கும் கொள்க.

**மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து**
**ஈனம்இல் கிருமிச் செருவினில் பிழைத்தும் 14**

என்னுமிவ்வடிகளினால், மக்கள் யோனியுள்ளும் விலக்க வேண்டியனவற்றை விலக்குகின்றவர், தாயின் கருப்பையுள்பட்டு வளர்ச்சியடையாது, கிருமிப்போரில் அழிவெய்துதலினின்றும் தப்புதல் கூறுகின்றார்.

(பொ - ரை.) மக்கட் பிறப்பினுள்ளும் தாயின் கருப்பையினுள்ளே, கேடடையாத புழுக்களுடன் நிகழ்த்தும் கிருமிப்போரில் அழிவுறாது தப்பியும் எ - று

(வி - ரை.) மானுடப் பிறப்பினுள்ளும் என உம்மை விரிக்க. உதரம் - கருப்பை.

தந்தையின் சுக்கிலம் தாயின் கருப்பையினுட் சென்று புழுக்களாகப் பரிணமிக்கும். அவை ஒவ்வொன்றும் அப்பையினுள்ளே இடம் பெற்றுக் கொள்ள வேண்டித் தத்தம்முட் போர் செய்யாநிற்கும். இதனையே கிருமிச் செரு என்பர். அச்செருவினுட்பட்டு அழியாது பிழைத்தும் என்க. இனி, பத்துத் திங்களும் படுதற்குரியனவற்றைக் கூறுவர்.

ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களில் ஊறுஅலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்த அக்காலை 26

என்னுமிவ்வடிகளினால், தாயின் கருப்பையினுள் ஒரு மாத முதல் பத்தாமாதம் ஈறாகவுள்ள மாதங்கள்தோறும் நிகழ்தற்குரிய ஆபத்துகளுட்பட்டு அழியாது பிழைத்து வளர்ச்சியடைந்தமை கூறப்படுகிறது

(பொ - ரை.) (தாயின் கருப்பையினுள்) முதலாந் திங்கள் நிறைவிலே தான்றிக் காயின் வடிவினை ஒப்பத் திரளும் கருவானது இரண்டு தன்மைகளால் அழியும் இடையூற்றினின்றும் பிழைத்தும், இரண்டாந் திங்களிலே ஏனைய புழுக்களும் கருவினுட் புகுந்து தீங்கு செய்யும் ஒரு தன்மையினால் அழிவுறாது பிழைத்தும், மூன்றாந் திங்களிலே பெருகும் மதநீர்ப் பெருக்கினுட் பிழைத்தும், நாலாந் திங்களிலே கருப்பை வாயிலடைபட்டும், மதநீர் மிகப் பெருகியும், கருப்பை வெடித்தும் வரும் பல தீங்குகளினின்றும் பிழைத்தும், ஐந்தாம் திங்களிலே சாதலினின்றும் பிழைத்தும், ஆறாந் திங்களிலே கருப்பையின் நெருக்குதலிற் பிழைத்தும்,

ஏழாவது திங்களிலே பூமியிற் பிறத்தலில் பிழைத்தும், எட்டாவது திங்களில் உண்டாகும் இடையூறுகளிற் பிழைத்தும், ஒன்பதாம் திங்களில் உளதாகும் துன்பங்களிற் பிழைத்தும், தகுந்த பத்தாம் திங்களிலே தாயுடனே தானுமாக அனுபவிக்கும் துன்பக்கடல் எனப்படும் துயரினின்றும் பிழைத்தும், ஆண்டுகள்தோறும் வளர்ந்துவரும் காலத்திலே எ - று

(வி - ரை ) இருமையிற் பிழைத்தலாவது, முதலாந் திங்களிலே தந்தையின் வெண்பாலில் தோன்றிய புழு ஒன்று, தாயின் செம்பாலில் தோன்றிய கருவிற் பதியுமிடத்து இருகூறுபட்டுச் சிதைதலும், தாயின் கருவுள் தோன்றிய மஞ்சட்கரு மெல்லிய தோலாகி அதன்வாயிலை அடை யாவிடுமிடத்து, அங்கே நுழைந்த புழு தாயின் கருவினுட்கரைநது ஒன்று படாது அழிவுறுதலும் என்னுமிவற்றுள் ஏதேனும் ஒன்றிற்பட்டு அழி வுறாது பிழைத்தல் என்க.

ஒருமையிற் பிழைத்தலாவது, கிருமிச்செருவில் முன்னேறிக் கருவி னுட் கலந்த புழு உருவெடாதவாறு தாயின்பாற் காணப்பட்ட நோய் மயக் கம் ஆதிய காரணங்களால் கருப்பையின் வாயில் அடைபடாதபோது, ஏனைய புழுக்களும் உள்நுழைந்து கெடச்செய்தலினின்றும் பிழைத்தல் என்ப.

மதம் - மதநீர். தாயின் கருப்பையினூறும் கொழுப்பு நீரென்க. அந்நீர் அளவுமீறிப் பெருகினால் தீங்குண்டாகும்.

அம்மதநீர் முன்னரிலும் தடித்து இடைவெளியளவிற் குறைவுபடாத இன்னலால் உண்டாகும் சாவு ஐந்தாவது திங்களில் உண்டாகும. முஞ்சு தல் - சாதல். ஐந்தென்பது அஞ்செனு நின்றது.

ஊறு அலர் - பரிசம் விரிதல். இனி, அலர் என்றதற்குப் பழிச்சொல் என உரைகொண்டு, கொலை முயற்சிகளால் வரும் இடையூறுகளுக்குப் பிழைத்தும் எனக் காட்டினாரும் உளர். ஈண்டுப் பத்துத் திங்களுள்ளும் ஒவ்வொரு திங்கள்தோறும் உளதாகும் நிகழ்ச்சிகளைக் கூறுகின்றாரே யொழிய, தோன்றிய கருப்பம் முறையற்ற நெறியால் உளதாயதோ முறை யான நெறியால் உளதாயதோ என்ற வேறுபாட்டை யாராயப் புகாமையா னும், முறையற்ற கருப்பமாயினன்றே அங்ஙனம் கொலை முயற்சிகளுள் மனந்தாழ்வர் ; முறைமையானதாயின் அங்ஙனம் தாழாரன்றே, ஈண்டுக் கூறியது அவ்விரண்டனுள் யாதென்று துணியப்படாததாயினும், பொதுவாகக் கூறுமிடத்து முறைமையானதென்றே துணியப்படும் ; ஆதலின் ஆண்டு அக்கொலைமுயற்சிக்கிடமின்மையானும் அவ்வுரை பொருந்தாதென்க.

ஏழாந் திங்களிலே குழவி கனங்கொள்ளுதலின், தாயின் கருப்பை ஆற்றலற்றிருப்பின் அக்குழவியை வெளிவிடும். அங்ஙனம் வெளிவந்த குழவி ஆற்றல் குறைந்ததாகலின் இறந்துபடவுங்கூடும். அன்றேல்

என்றும் ஆற்றல் குறைந்ததாகவே இருக்கும். ஆதலின் இயம நியமங்கள் முதலியவற்றுள் ஒன்றையும் சாதித்து முன்னேறமாட்டா தென்க.

எட்டாந் திங்களிலே ஐம்புலவுணர்ச்சி மிகுதலின், அச்சிறிய கருப்பையுட் வதிந்துகிடக்கும் துன்பங்களால் தாக்குண்டு அறிவுருது தப்பியும் என்க. கஷ்டம் என்னும் வடசொல் கட்டம் என்ருயது.

ஒன்பதாம் திங்களிலே உறுப்புக்கள் எல்லாம் வளர்ந்து இயங்குதற்கு முற்படுதலின், ஆங்கு அவற்றிற்கேற்ற இடம் முதலியன இன்மையால் உளதாகும் துன்பம் என்க.

கருமுதிர்ந்து வெளிவருவதற்கேற்ற காலமாதலின் "தக்க தசமதி" என்ருர். தச என்னும் வடசொல் தசம் என நின்றது. கருவுயிர்க்குங்கால் உளதாகும் துக்கத்தின் மிகுதிதோன்ற துக்க சாகரம் என்ருர். துன்பக் கடலினின்றும் உளதாகும் துயரத்திற் பிழைத்தும் என்க. அவை, தாயின் அவல மிகுதியோடு குழவிபடும் அவல மிகுதியும், அவற்ருல் உளவாகும் நோவும், நோயும், உறுப்புக்கள் சிக்குண்டலும் முதலாயினவாம்.

இங்ஙனம் எத்தனையோ இடையூறுகளின் நீங்கிப் பிறந்து பின்னர் ஆண்டுகள்தோறும் வளர்ச்சியடைந்து வருங் காலத்தே என்க. அங்ஙனம் வளருங் காலத்தே நிகழ்வனவற்றை மேலே கூறுப.

ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகல் பசி நிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழல் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கி உள் மதர்த்து
கச்சுஅற நிமிர்ந்து கதிர்த்துமுன் பணைத்து
எய்த்து இடை வருந்த எழுந்து புடை பரந்து
ஈர்க்கு இடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறுஎனும் அவாஇடைப் பிழைத்தும்
கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குரவு என்னும் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம்பு ஆய பலதுறை பிழைத்தும் 41

என்னுமிவ்வடிகளினுல், ஆண்டுகள் ஆண்டுகளாக வளர்வுற்று வருங்காலத்திலே இல்வாழ்க்கையில் இழியும் நெறிகளில் விலக்க வேண்டியனவனற்றை விளக்குகின்ருர்.

(பொ - ரை.) நெருக்கியும் குந்தவைத்தும் செய்துவரும்

இன்னோரன்ன எத்தனையோ சிரமங்களில் இருந்தும் தப்பியும், காலைப் பொழுதிலே மலங்கழித்தலும், கடுமையாகிய பகற்பொழுதிலே பசி தவிர்த்தலும், இராப்பொழுதிலே நித்திரை செய்தலும், அயலூர்க்குப் போக்குவரவு புரிதலுமாகியவற்றிற் பிழைத்தும், கருங்கூந்தலும், செவ்வாயும், வெண்பல்லும், கார்காலத்து ஆண் மயிலினை நிகர்த்த ஒருங்கு சேர்ந்த மென்மையும், பருத்துவிடுதலின் ஒன்றனோடொன்று செறிவுற்று, அகத்தே செருக்குற்று மேலே மூடிய கச்சானது பீறுற்றுச் சிதைவுற மேலெழுந்து வெளிப்பட்டு, எதிரே பருத்துச், சுமை தாங்காது இடையானது மெலிந்து வருந்தும்படி எழுச்சிபெற்று, சுற்றுப்புறங்களிற் பரந்து, ஈர்க்கும் நடுவே நுழைவதற்கு இடமில்லாத முலைகளையுமுடைய இளமகளிர் தம் கூரிய கண்களின் சூறையாடலுக்குத் தப்பியும், மயக்க அறிவினையுடைய குழுவினர்தம் பெரிய மயக்கத்துறைப் பரப்புகளுள்ளே, மதங்கொண்ட ஆண்யானை என்னும் அவாவினிடைத் தப்பியும், கல்வி என்று சொல்லப்படும் பல கடல்களிலே மூழ்கிவிடுதலினின்றும் தப்பியும், செல்வம் எனப்படும் அல்லலினின்றும் தப்பியும், வறுமை எனப்படும் பழைய நஞ்சின் தாக்குதலுக்குத் தப்பியும், தாமே வந்து தழுவிக்கொள்ளும், இன்னோரன்ன பல வகைப்பட்ட மனைவாழ்க்கையில் இழியும் நெறிகள்தோறும் இறங்குதலினின்றும் தப்பியும் எ - று.

(வி - ரை.) ஈண்டுதல் - நெருங்குதல். மகளிர் குழந்தையின் காட்சியழகு காணப் புடைசூழ்ந்து நெருங்குவர். இது பெரும்பாலும் மகளிர் இயல்பாகும்.

இருத்துதல் - குந்தவைத்தல். எனைப்பல - எத்துணையோ பல. அவை, கண்ணூறு முதலியன உண்டாயவிடத்து அவை கழித்தலும், வேண்டாதன புனைந்தும் பூசியும் தீங்குவிளைத்தலும், தங்கள் இழிசெயல்களையும் கோட்பாடுகளையும் பேச்சுக்களையும பின்பற்றச் செய்தலும், பல முறையும் தூக்கியும் கயக்கியும் அன்ன பிறவாறு ஆற்றியும் நலக்கேட்டினை உண்டாக்குதலும், பாலாரிட்டமும் முதலியன பலவாம் என்க.

மலநீக்கத்திற்கும் கடும்பசி எடுத்தற்கும் நித்திரை செய்தற்கும் இயல்பானே அமைந்த காலங்கள் முறையே, காலையும் கடும்பகலும் இரவுமாம். அவை கூறவே, ஏனைய காலங்களில் உண்டாகும் மலநீக்கமும் பசியும் நித்திரையும் என்பவையும் உடன்கொள்ளப்படும். கடும்பகல், கடும்பசி என்றியைக்க. வேலை - பொழுது. இதனைக் காலை கடும்பகல் என்பவற்றோடும் இயைக்க. உணவும் நித்திரையும் என்பவை மிகினும் குறையினும் நோய் செய்யும். ஏற்ற காலங்களில் நீங்காது மலங்கட்டுப் படுதலும் அவ்வாறே நோய் செய்யும். இங்ஙனம் நோய்கொண்ட உடம்பிற்கு விடுதலை தேடுதலே பெரிய கடமையாக அமைதலினாலும், அவ்

வுடம்பு அன்புநெறி நிற்றற்கு எவ்வாற்ருனும் ஒவ்வாது போதலினுலும் அவற்றிடைப் பிழைத்தும் என்ருரென்க.

யாத்திரை - ஏனைய ஊர்களுக்குப் போக்குவரவு செய்தல். ஈண்டு அரசாங்க அலுவல்களின் மூலமும், இனம் நண்பு முதலியவற்றின் மூல மும், ஏனைப் பிறவற்றின் மூலமும் செல்லுதல் குறித்து நின்றதென்க. உணவும் உறக்கமும் மலநீக்கமும் ஆதியனவற்றிற்கு வேண்டிய முயற்சி களும், இடம் அமைத்தலும், வைத்திய உதவியை நாடலும், யாத்திரைக்கு வேண்டிய ஊரதிகளும் பிறவும் அமைத்தலும், அயலூரில் வேண்டிய தொடர்புகளை ஆக்குதலும், இன்னோரன்ன பிறவும் கொள்ளப்படும். இவை யெல்லாம் பெரும்பாலும் பொருள்தேடவேண்டுமென்னும் ஊக்கத்தை எழுப்புவன என்க.

குழல் - கூந்தல். வெண்ணகை - வெண்பல். அகத்து நயப்பை வெளிப்படுத்திச் சிறிது வெளிப்பட்டு முகிழ்த்த சிரிப்பென்க.

கார்மயில் - கார்காலத்து மயில். கருமேகத்தைக் கண்ட காட்சி நயப்பி னுல் களிப்புற்ருடும் இயல்புடைய மயில் என்க. கோடையிலே கார் காணுது வாடியிருந்து, மாரியிலே காரினை முதறகண்டபோது உள்ளக்கிளர்ச்சி யால் தோகையை விரித்தாடிப் பளபளப்புற்றிருக்கும் மயில்போல, காம வெப்பத்தால் அல்லற்பட்டு, இளமை வனப்பமைந்த ஆடவரைக் கண்ட போது உள்ளக் கிளர்வுண்டாகிக் கூந்தலை யவிழ்த்து விரித்துக் கோதியும், அசைந்து ஒதுங்கிப் பையெனச் சென்று, ஓரிடையில் சாயல் காட்டி நிற்பர் மங்கையர் என்க. ஒருங்கிய சாயல் - ஒன்றுகூடிய மென்மை.

நெருங்கி - செறிந்து மதர்த்து - செருக்கி. கச்சு - முலையை மூடிக் கட்டிய துகிலுடை.

கதிர்த்து - வெளிப்பட்டு. பணைத்து - பருத்து. எய்த்து - மெலிந்து. புடை - சுற்றுப்புறம். கூர்த்த - கூரிய. கொள்ளை - சூறையாடல்.

"கொள்ளைப்போர் வாட்கண் நல்லாள்"

(கம்பரா. பால. உண்டாட். 59.)

என்புழியும்,

"கொள்ளையோர் உருவை நூறு கொண்டன"

(ஷெ. யுத்த. மூல. 221.)

என்புழியும் அஃதிப்பொருள்படும் கண்ணுற் பார்வையைச் சுழற்றி வீசி ஆடவரைத் தன்னகப்படுத்திக் கொண்டேகுதல் கொள்ளை என்க.

கூந்தல், காதலர்க்குரிய அழகும் மங்கலமுங் கொண்டது; செவ்வாய் பருகற்கினியது; வெண்ணகை, புணர்ச்சி விழைவினை வெளிப்படுத்துவது, கார்மயில், இன்றியமையாமை உணர்த்துவது; முலை, தன்னையடக்கவல் லார் எனக் காட்டி அடக்குமாறு ஏவுவது; இடை, காமத்தால் நைதலைப் புலப்படுத்துவது; கண், நுண்ணிய செறிந்த நோக்கொளியால் காம நஞ் சினை ஏற்றவல்லது என்ருங்கு, அவை எல்லாம் உணர்க.

"சொல்லு மாடுப கண்ணி னுனே"

என்றும்,

"கண்ணெடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில" (குறள். 110–10)

என்றும் கூறுபவாகலின், தன் குறிப்பை வாயாற் கூறியாங்குக் கண்ணால் வெளிப்படுத்தி என்றுங் கொள்க. மகளிர் கண் ஒன்றே யசைய மைந்தர் ஐம்புலன்களும் அசையுமென்க.

தேவரை அடி முதலாகவும், மக்களை முடி முதலாகவும் வருணிப்பது மரபாதலின், கருங்குழலை முதலாகக்கொண்டனர் இடையுடன் முடிந்தது இடையினது துன்பங்கண்டு மீண்டும் மேல்நோக்குதலும், கண்ணுற் சூறையாடப்படுவராகலின். அன்றியும் இடையின்கீழ் உறுப்புக்களை நோக்குதற்கு இங்கு இடமின்றென்க.

பித்தவுலகர் - மயக்க அறிவினையுடைய கூட்டத்தார். பித்தவுலகர் பெருந்துறைப் பரப்பென்றது, நோக்கம் வேறுபட்ட அரசியல் துறைகளை என்க. அப்பரப்பினுள்ளே, அவாவும் கல்வியும் செல்வமும் நல்குரவும் ஆதியவற்றுள் தப்பியும் என்றவாறும். அவா என்றது ஈண்டு, பதவிகளின் ஆசையையும், முதன்மையுடையராக இருக்க வேண்டுமென்னும் விருப்பத்தையும் உணர்த்திநின்றது. இது, மத்தக்களிறெனும் அவா என்னும் சொற்போக்கினுலும், மங்கையர் அவாவை முன்னும், செல்வம் கல்வியாதியவற்றைப் பின்னும் கிளந்து கூறியவாற்றனும் வலியுறுத்தப் படுமென்க.

அம்முதன்மைப் பாட்டை விரும்பி அதற்கேற்பப் பட்டம் பெறும் பொருட்டுக் கல்விக் கடலுள் ஆழ்ந்து போதல் என்றபடி. கல்வி பலதுறைப் பட்டன. அவ்வத்துறைகள் ஒவ்வொன்றுமே எல்லையறப் பரந்து செல்லும் கடல் போன்றவை. அவற்றுள் ஒன்றனுள்ளே தானும் மூழ்கின், அஃது ஆராய்ச்சி, நுகர்தல், வாதித்தல், ஒன்றிலிருந்து ஒன்றற்கு உந்தப்படுதல் என்னும் இவை முதலாயவற்றுல் ஆழ்த்தப்பட்டு உள்ளத்தைத் திணற அடிக்குமென்க.

"கல்வி கரையில" (நாலடி. கல்வி. 2.)

என்ப. நூல்கள் யாவும் முதல் நூல்களும் கருவி நூல்களும் எனப் பிரிக்கப் பட்டுள்ளன. எனவே கருவி நூல்களைக் கற்றலும், முதனூற் பொருளுணர்ந்து கட்டறுத்து வீடுபெறும் நோக்கமுடையதாதல் வேண்டும். ஆதலினன்றே

"கறறதனு லாய பயன் என்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅ ரெனின்" (குறள். கடவுள். 2.)

என்றும்,

"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்ருரோ டேனை யவர்" (குறள். கல்லாமை. 10)

என்றும் திருவள்ளுவர் கூறினர். எனவே, கல்வியைக் கருவியாகக் கொள்வதன்றிப் பெறுபேருகக் கொள்ளலாகாது என்பது கருத்து.

" செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமும் சிறிது பேணார்
சொல்வன அறிந்து சொல்லார் சுற்றமும் துணையும் நோக்கார்
வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணார்
வல்வினை விளைவு மோரார் மண்ணின்மேல் வாழு மாந்தர் "
(வில்லிபாரதம் : கிருட்டினன் தூது, 143.)

என்பாகலின், மெய்ப்பொருளுணர்வு பெறநின்ருர், பல்லாற்ருனும் சிரமப் பட்டுப் பொருள் தேடியக்கால், மற்றதனுள் அழுந்தித் தமது குறிக்கோளை நெகிழ்ந்துபோக விட்டுவிடுவாராகலானும், அங்ஙனம் விடுதலானும், செல்வச் செருக்கானும் பல அல்லல்களே நேருமாதலானும் " செல்வம் என்னும் அல்லல் " என்ருரென்பதுணர்க.

நல்குரவு - வறுமை. அது பொருள் இல்வழி ஆற்ருமை செய்வதென்க. நல்குரவு இயல்பாகவே உடலைப் பற்றிநின்று வருத்தி வருதலினுலும் உயிர் வாழ்க்கையைத் துறைபோகவிடாது தடுத்து வருதலினுலும் தொல்விடம் என்றனர்.

இன்னோரன்ன பல துறைகளென்க. வரம்பு - மனை. ஈண்டு மனை ஒழுக்கத்தின்மேற்று. மனையிடை ஒழுகுகையில் இன்னோரன்ன பலதுறைகளினின்றும் தப்பியுமென்க. பலதுறை என்றலான் புகழ் முதலாயினவற்றை அறிந்தடக்கிக்கொள்க. பிற யோனிகளுட் பிறவாமை, கருவினுள் அழிவெய்தப் பெருமை, குழவிப்பருவத்தே நல்வளர்ச்சி பெறுதல், காமமுருமை, அவாவுருமை முதலிய நற்செவ்விக்கு இன்றியமையாதனவற்றையும், அச்செவ்வியையும், பிறவற்றையும் வினையே கூட்டிவைத்தல் வேண்டுமென்ற வாரும்.

இத்துணையும் தாயின் கருவிற்பட்டுப் பிறந்து வளர்ந்து மனை வாழ்க்கை எய்தி நிறகுங்காறும், மெய்ப்பொருள் உணர்விறகேற்ற நற் செவ்விக்குத் தடையாயினவற்றை விளக்கினுர். மேல் துறவு நெறியுட்பட்ட பல சமயபேதங்களும், உண்மைத்தாய அனுபவமுடைய அன்பு நெறியும் உணர்ந்து பேரன்பு செய்தற்குரிய செவ்வி இயம்புவர. உடம்படுபுணர்த்த லால், பெரும்பான்மை பற்றி மனைவாழ்க்கை யெய்தி, மற்றதன் நிலையாமை கண்டே துறவுநெறியுட் பயிலல் வேண்டுமென்பதும் கொள்க. இன்னும், இல்லறத்தார் செய்யும் கடவுள் வணக்கத்தின் நோக்கமும், துறவறத்தார் செய்யும் வணக்கத்தின் நோக்கமும் வேறுபாடுடையன வென்க

தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும் 43

என்னுமிவ்வடிகளினுல், நற்செவ்வி வாய்ந்தமை கூறப்படுகிறது

(பொ - ரை) (இங்ஙனமெல்லாம் பிழைத்து) தெய்வம் எனச் சிறப்பித்துச் சொல்லப்படுவதொருபொருள் உளதென்னும் துணிவுணர்ச்சி யுண்டாகி, இயல்பாகவே அழுக்ககன்ற மெய்ப்பொருள் ஒன்றை வரைந்துகொண்டு அதனைக் கருதலும் எ - று.

(வி - ரை.) தெய்வம் என்பதோர் சித்தம் என்பது பொதுமை கருதியும், முனிவிலாததோர் பொருள் என்பது சிறப்புக் கருதியும் வந்தன. தெய்வ உணர்வுண்டாகி, எங்கள் தெய்வம் இவ்வியல்பினையுடைய இதுவாகும் என வரைந்துகொண்டு கருதலும் என்க.

முனிவு - வெறுத்தல். பாசம் பிறவி முதலியவற்றை வெறுத்தல் என்க. மேலனவற்றை முனிந்து விடுதலைபெறும் நம்மனோர் போலாது முனியாதே விடுதலையுடன் இருப்பதாம். எனவே இயல்பாகவே அழுக்ககன்று விடுதலையோடிருப்பதென்க. அது மெய்ப்பொருள். முனிவிலாத என்பது கொண்டே விருப்பிலாமையும், விடுதலையும் அதனாற் பெறப்படும் எல்லா நலன்களும், நிறைவும் உடைய பொருளென அப்பரம்பொருளின் இயல் புணர்த்தினாராயிற்று.

இனி, இங்குக் கூறிய செவ்வியே துறவுடையாரதற்குரிய உண்மைச் செவ்வி என்பதறிக. இச்செவ்வியுடையவர்களே சமயநெறி நிற்றற்கு உரிமை பூண்டோராவர்.

கருதலும் என்றதனால், அக்கருத்திற்கு மாறுபட்ட வேறு விளைவுகள் உளவாயின என்பது உணரவைத்தவாறும். அவை மேற்கூறப்படும

ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின , 45

என்னுமிவ்வடிகளினால், மெய்ப்பொருட் கருத்திற்கு மாறுபட்டனவற்றைத் தொகுக்கின்றார்.

(பொ - ரை.) அளவுட்படாத, மயக்கவல்ல மாயையின் ஆற்றல்கள், வெவ்வேறு வகைப்பட்ட தத்தமக்குரிய வஞ்சனைகளைச் செய்யத் தலைப்பட்டன எ - று.

(வி - ரை.) ஆறுகோடியென்பது அளவின்மை குறித்து நின்றது. அவ்வளவில்லாதனவற்றுள் ஒரு சிலவற்றை வரைந்து கூறுவேன் என்றபடி. அவை, துறவெய்த வொட்டாவாறு தடைசெய்யும ஆத்தமானாரதும், சுற்றத்தவரதும் செயல்களுடன், துறவு பூண்டபின் மயக்கும் அன்புநெறிக்குப் புறம்பான சமயவாதங்களுமாம என்க. அம்மாயாசத்திகள் உள்ளத்துள் இடம் பெறுமாறு போராடின என்றபடி. மாயாசத்திகளின் மயக்கம் இல்லறத்தார்க் குரியனவாதலின், மாயாசக்திகள் மாயைகள் தொடங்கின என்புழி, அவற்றைக் கடந்து நின்ற துறவுநெறி பெறப்படுமென்க.

ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர் ; 47

என்னுமிவ்வடிகளினால், அவற்றுள் ஆத்தராகிய அயலவர் செய்கை கூறப்படுகின்றது

(பொ - ரை.) நம்புதற்குரியோராகிய அயலவர் கூடி நாத்திகப் பேச்சுக்களைப் பேசி நாவில் வடுப்பட்டனர் அவர் அங்ஙனமாகவும் எ - று

(வி - ரை.) ஆத்தர் - நம்பத் தகுந்தவர். ஆத்தர் வாக்கென்ப. அயலவருக்குள்ளே ஆத்தராயினர் என்க. அறிவுறுத்தப்படுவோர்க்கு நேர்வன வெல்லாம் இவர் தாமேயறிந்துகொள்ள இடம் பெற்றவராதலின் "அயலவர" என்றும், நேரவிருக்கும் இடையூறுகளை அகற்றி ஆக்க நெறிகளை அறிவுறுத்தி வந்தவராதலின் ஆத்தர் என்றும் கூறியவாறு.

ஆத்தர் கூடிப் பயன் பெறறிலராகவே, குடும்பத்தினரும் பிறரும் கூடி முன்பே வற்புறுத்தியும் பயன் பெற்றிலாமை தானே பெறப்படும். ஆதலால் ஆத்தமானரும் அயலவரும் எனக் கொண்டுரைக்கவேண்டுவதில்லை என்க.

இவ்வாத்தமானர், தம் நல்லறிவும் நற்செயலும் ஆற்றலும் நடுவுநிலையும் கொண்டதுவிடாமையும் என்னும் இவை முதலாயவற்றையெல்லாம் முன்னரே பலகாலும் அறிவுறுத்தியிருந்தும், ஊர்க்கும், குடும்பத்தவர்க்கும், தமக்கும், அவர் துறவினல் நேரவிருக்கும் இழவை மிக நினைநதமையால் அயர்ந்து, அவர் தம்மை மீட்டற்குப் பிறவழியின்றி, அப்போதைக்கே பற்றுக்கோடாக இருந்த நாத்திக வாதத்தை மேற்கொண்டு வாதிடலாயினர் என்க.

எதிர்மறைப் பொருள்தரும் நா என்பது, (கடவுள்) உள்ளது எனப் பொருள்படும் அஸ்தி என்றதனேடு தொடர்ந்து நாஸ்தி என்ருகி அங்ஙனம் கூறுவோர் கொள்கைகு நாத்திகம் எனப் பெயராயிற்று. ஈண்டு ஆகு பெயராய் அக்கொள்கையின் பொருட்டுச் செய்யும் வாதத்திற்காயது. ஈண்டு ஆத்திகர் கூறிய நாத்திகம், வியாழபகவான் இந்திரனை மீட்கப் பேசிய நாத்திகம் போன்ற தென்க.

அளவு கடந்து பேசினர் என்பதும், அதனல், தம் மனக் கருத்து நிறைவேறப் பெறறிலர் என்பதும் குறித்து "நாத்தழும்பேறினர்" என்ருர். இதனல் நாவடுப்பட்டார் என்பதும் கொள்க. அவர் அங்ஙனமாகவும் என எச்சமுரைக்க.

முன் ஆறுகோடி என விரித்து, ஆத்தமானர் நாத்தழும்பேறினர் எனத் தொகுத்தவற்றுள் விரிக்கவேண்டியனவறை அறிந்து விரிக்க. மேல் வருவனவற்றிற்கும் ஈதொக்கும்.

சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும் 49

என்னுமிவ்வடிகளினல், அவற்றுள் சுற்றத்தவர் நிகழ்ச்சிகள் கூறப் படுகின்றன.

(பொ - ரை.) சுற்றம் என்னும் பழைய பசுக்கூட்டங்கள் பற்றி அழைத்து மிகவும் பதறினர் (அவர் அங்ஙனமாகவும்) எ - று

(வி - ரை ) தமது பற்றுக்கோடாயினுர் துறவெய்த, ஆத்தமாருர் சொல்லுஞ் சொற்கேட்டு அமைந்திருப்பர் என, ஆத்தமாருரைப் பற்றுக் கோடாகக் கொண்ட சுற்றத்தார், அவராலும் தடையுருது துறந்தமை கண்டு, பற்றியழைத்துப் பதறுதலேயே பற்றுக்கோடாக்கிஞர் என்க.

சுற்றத்தார், பெற்ருேர் உடன்பிறப்பாளர் மனைவி மக்கள் உறவினர் நட்பினர் முதலிய சூழவிருப்போராவர். பசுக்குழாங்கள் என அவர் அறிவின்மை குறித்து இழித்தவாறு. சுற்றம் பல திறப்பட்டதாகலின் குழாங்கள் என்ருர். தொல்பசுக் குழாங்கள் என்ருர், தவிர்த்தற்கரிய பழவினைத் தொடர்பும், இரங்குதற்குரிமையுந் தோன்ற. சுற்றமென்னும் தொல்பசுக் குழாங்கள் என்றமைக்கேற்பத் தலைவர்களாய இடையர்கள் தம்மைப்பற்றி என விரிக்க.

உரிமையும் இழத்தற்கருமையும் தோன்றப் "பற்றி" என்றும், முன்னர் எங்கட்கு இத்தன்மையாகிய இருந்த நீ இன்று இத்தன்மையை யாகிப் பிரிகின்றனையே என்னும் பொருள் குறித்து, பிரிபவர் மனம் இரங்கிப் பிரிவு தடைபடுமாறு, அவர்தம் இயற்பெயர், முறைப்பெயர், வருத்தங் காரணமாகப் படைத்துக்கொண்ட பெயர்கள் ஆதியனவற்ருல் விளித்தமை தோன்ற "அழைத்து" என்றும், அவற்ருலும் பயனின்மை யால் பற்றுக்கோடின்றிப் "பதறி" என்றும், உரைக்கப்பட்டது. பெருகவும் பதறினர் எனக் கொள்க; நாத்தழும்பேறினர், சாத்திரங் காட்டினர், மலைந்தனர் என்றவாறு முன்னும் பின்னும் வருதலால். அவர் அங்ஙனமாகவும் என விரிக்க.

முற்கூறியாங்கு இத்தொகுதியுள்ளும் அடக்க வேண்டியனவற்றை அறிந்தடக்கிக் கொள்க.

விரத மேபரம் ஆகவே தியரும்
சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர் ; 51

என்னுமிவ்வடிகளிஞல், அவற்றுள், ஆத்தமாருர்பாலும், சுற்றத் தவர்பாலும் நீங்கி மேற்செல்லும் வழி, வேதியர் விரதங்காட்டிப் பயன் பெருமை கூறப்படுகின்றது.

(பொ - ரை ) வேதியர்களும் விரதங்களையாற்றுதலே, மெய்ப் பொருளையடையும் மேலான சாதனமாக அமையும்படி நூலுண்மை களாகவே ஏதுக்கள் காட்டினர் , அவர் அங்ஙனமாகவும் எ - று.

(வி - ரை ) வேதியர் - வேதத் தொடர்புடையவர். வேதபாடஞ் செய்பவரை விப்பிரர் என்பவாகலின் இங்ஙனம் உரைக்கப்பட்டது. சாத்திரங்கள் ாண்டு, நிருத்தம் வியாகரணம் கற்பம் கணிதம் பிரமம் சந்தம் என்னும் வேதப் பொருளை மெய்ப்பித்தற்குரிய ஆறங்கங்களாம்.

நூலுண்மைகளையே எடுத்துக்காட்டி வாதித்தனரன்றி, அவற்றின் உட்பொருளை உற்றறிந்து அமைந்திலர் என்க. சமயத்திற்குக் கருவி யாகிய கொள்கைகளையே சமயம் என வாதித்தனர் என்க.

" வீடும் ஞானமும் வேண்டுதி ரேல் விர தங்களால்
வாடி ஞானமென் னுவது மெந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன் செந்தமிழ் கொண்டிசை
பாடு ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே "

(தேவா. திருமுறை. 2. வலஞ். 4.)

என ஞானசம்பந்தப் பெருமான் அருளியதுங் காண்க.

விரத வேதியர் என்றலின், அவர் விரதங்களை மேற்கொள்ளவும், அவற்றுக்குத் தடையாயினவற்றை வெறுத்துத் தண்டிக்கவும் வற்புறுத்தினரேயன்றி, அன்பைப் பற்றுமாறு உணர்த்தினருமல்லர் ; உணர்ந்தாருமல்லர் என்க.

இத்தொகுதியுள்ளும் காணப்படும் கொள்கை வேறுபாடுகள் யாவற்றையும் அறிந்தடக்குக.

சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர் ; 53

என்னுமிவ்வடிகளினால், சமயக்கணக்கர் கொடுமை கூறப்படுகிறது.

(பொ - ரை.) சமயவாதம் செய்வோர் ஒவ்வொருவரும் தத்தம் சமய நூல்களே, அம்மேலான பொருளை அடைவித்தற்கண் அமைவுடையன என ஆரவாரித்து மயங்கினர் (அவர் அங்ஙனமாகவும்) எ - று.

(வி - ரை.) சமயவாதிகளாவார், தத்தம் சமயநெறிப்படி அமைந்தொழுகாது, ஏனையவற்றை எல்லாம் எங்ஙனமேனும் தம் வயப்படுத்த முயல்வோர்.

அரற்றுதல் - சொற்போர் புரிதல். அச்சொல்லாற்றலால், அப்போரினுள், பொய்ம்மையும், பயனில் சொற்களும், அச்சுறுத்தலும், அன்பின்மையும், அன்ன பிறவும் மண்டிக்கிடந்தன என்பது பெற்றும்.

மலைதல் - மயங்குதல். 'அப்போரின் பயன் மயங்குதலாகவே முடிந்ததன்றி, வெற்றியும் தோல்வியுமறியப்பட்டு உண்மைப்பயன் பயந்தில

மதங்கள் அமைவதால் என்றமையால், தாம் அவற்றில் அமைந்திலர் என்பது தேற்றம். மதங்கள் - மதநூல்கள்.

மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மருதம் சுழித்தடித்(து) ஆஅர்த்து
உலோகா யதன்எனும் ஒண்டிறல் பாம்பின்
கலாபே தத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும் 58

என்னுமிவ்வடிகளினால், பொய்வாதம் புரிந்து மயங்கியவர்களால் அவர்க்கும் பிறர்க்கும் நேரும் தீங்குகள் கூறப்படுகின்றன.

(பொ - ரை ) (புறக்கோலத்தானும் அரற்றுதலானும்) கலைப் பெயரான்மட்டும் அறுவகைப்பட்ட சமயவாதங்கள் என வேறுபட்ட, (அவற்றின் பயத்தானும் அகக்காட்சியானும் ஒன்றெனப்பட்ட) குத்திக் கிளப்பும் பொய்வாதம் எனப்படும் சூறுவளிக்காற்றுனது சுழன்று வீசி முழங்க (அதன் சுழற்சியுள் அகப்பட்டு அதனுட் கிடந்த தன் இயல்பு கோடிய) உலோகாயதம் எனப்படும் ஒள்ளிய வலியுடைய பாம்பு தீண்டுதலால், அதன் நஞ்சு, அச்சுழற்சியுட் பட்டார் தம் மனமாகிய உடற்கண் ஏறியமையால், (அவர்மூலம்) பெரியனவாகிய மயக்கங்கள் எவ்வளவினவோ சூழ்ந்து வருத்தவும் எ - று.

(வி - ரை.) மிண்டுதல் - குத்திக் கிளப்புதல். மாயாவாதம் - பொய் வாதம். கலாபேதத்தனவாய புதிது மிண்டிய அறுவகைச் சமயங்கள் என்க. அவ்வச்சமய நெறியின்படி அகத்தும் புறத்தும் அமைந்தொழுகிலராகவும், சொல்வன்மை முதலாய வன்மைகளைத் துணைக்கொண்டு, ஏனையோரை வஞ்சித்துத் தம்பால் சாரவைத்தும், தம் கரவுக்கு அகப்படாதாரை வறபுறுத்தியும், ஒடுக்கியும், அவர்தம் நாடு முதலாயவறறை நிலை கெடுத்தும், அவரையும் அவர் சார்பினரையும் ஏற்றபெற்றியாற் கொன்றும் வருதலின், அவர் அகத்தில், செந்நெறிக்குப் படிமுறையே ஏறச்செய்யும் இயல்பினதாகிய உலோகாயதம் போலாது, அந்நெறி நின்றும் கோடிய, பல தீங்குகளையும் விளைவிக்கும் கொடிய உலோகாயதமும், புறத் தோற்றத்தான்மட்டும் தத்தம் சமயக் கோலங்களை மேற்கொண்டமையின் அவர் வாதங்கள் அனைத்தும் ஒன்றுக்கி ஒதுக்கப்பட்டன உலோகாயதம் ஒழிந்த ஏனைய சமயப் புறத்தோற்றத்தான்மட்டும் தத்தம் சமயக் கோலங்களை மேற்கொண்டவர் வாதங்களனைத்தும் உலோகாயதமெனு மொண்டிறற் பாம்பின் கலாபேதத்த கடுவிடமெய்திய மிண்டிய மாயாவாத மென ஒதுக்கப்பட்டன வென்றுணர்க. இச்சமயவாதிகளால் நேரும் கஷ்டம் மிகப் பலவாம். கொடிய யுத்தங்களும், அழிவுகளும் காலாகாலந் தோறும் நேரிட்டுவருவது கண்கூடு.

ாண்டு உலோகாயதமென்றது செந்நெறிக்குப்படி முறையே ஏறச் செய்யும் இயல்பினதாகிய உலோகாயதமன்றி, அந்நெறி நின்றும் கோடிய உலோகாயதமென்க அஃதொழிந்த ஏனைய இயல்பு கோடிய மதங்கள் மிண்டிய மாயாவாதம் எனப்பட்டன. இங்ஙனமியல்பு கோடிய உலகா யதத்தை உள்ளடக்கிய ஏனைய மாயாவாதங்கள் என்க.

இச்சமயங்கள் யாவும், பெயர் மாத்திரையால் கலைவேற்றுமைப் பட்டனவன்றி, உள்ளீடற்றன என்பது தோன்றக் "கலாபேதத்த" என வும், அவை அங்ஙனம் வேறுபட்டனவேனும் பொய்வாத ஒற்றுமையால் ஒன்றெனவே படும் என்பது தோன்ற மாயாவாதங்கள் என்னுது மாயா வாதம் என்றும், அஃது ஏனையோர்களைத் தத்தம் நெறி ஒழுகிவரவிடாது,

அவ்வந்நெறிகளினின்றும் குத்திக் கிளப்பும் என்பது தோன்ற "மிண்டிய மாயாவாதம" என்றும், அதுவும் சூறுவளிபோலத் தத்தம் சமயங்களுட் பட்டு அமைந்து ஒழுகிவரும் மெய்யன்பர்களைத் தன் இயல்பினராகச் சுழன்று சூழ்ச்சி செய்தும், ஆசை வார்த்தை கூறுதலோ அச்சுறுத்துதலோ ஆதியவற்றால் வெற்றாரவாரம் புரிந்து தாக்கித் தன்வயப்படுத்தும் இயல் பினதும் என்பது தோன்ற "மிண்டிய .. சுழன்றடித்தார்த்து" என்றும், அஃது அங்ஙனம் சுழன்றடித்தார்த்தலின் அச்சமயவாதிகளை அறியாதே நல்லியல்பிதனதாகி உலோகாயதமல்லாத, தீங்கன்றி நன்மை சிறிதும் கலவாத கொடிய வலிய கோடிய உலகாயதம் என்பதொன்று, அதன் சுழற்சியால் அதனகத்துப்பட்டுக் கிடந்தது. அஃது ஒள்ளிய திண்ணிய நச்சுப் பாம்பேயாகும என்பார். "உலோகாயதன் எனும் ஒண்டிறற் பாம்பு" என்றும், அவ்வாதத்துள் எவ்வகையானும் பங்குபற்றியவர்களை அது தீண்டுதலின், அதன் மயக்க வெறியேறப்பெற்று அவர் கெடுவர் என்பது தோன்றக் "கடுவிடம்மெய்தி அதிற் பெருமாயை எனைப் பல சூழவும்" என்றும் கூறினரென்க.

இயல்பாகிய காற்றுக்கள் பருவங்களையாக்கியும் நலன்புரிந்தும் இவ் வுலகிற்கு ஆக்கஞ் செய்யுமாறே அறுவகைச் சமயமும், தத்தம் நெறிப்பட்டு அமைந்து வருவோரை நல்வழிப்படுத்தி நலன் செய்யுமென விரித்துக் கொள்க. இம்மாயாவாதச் சண்டமாருதம் அவற்றுடன் மாறுபட்டதென்க. அம்மாயாவாதத்தின் அகத்துக் கிடந்த கோடிய உலகாயதமும், படிமுறை யானே ஏற்றம் பெறுதற்குரிய இயல்பினதாய உலோகாயதமும் வேறு வேறும் என்க.

இனி, அறுவகைச் சமயநெறிப்படி அமைந்தொழுகிவரின், அவ் வொழுகலாறு இறுதிக்கண் வீடுபேற்றினைத் தரும் என்பது முணரப்படும். நல்லியல்பினதாய உலோகாயதமும், பசுக்காத்தல் வாணிபம் முதலாய தொழில்களையும், செங்கோன்மையையும் வரவேற்றலின், அன்பு அருள் பொறுமை முதலாய அறங்களை இன்றியமையாது கொள்ளும். எனவே, அவ்வறத்தினையே உருவமாகக் கொண்ட இறைவனும் அவருக்குத் தோன்றாத் துணையாக நின்று, அதன் வழிப்படுவோரைப் படிமுறையிற் செவ்வி பெறவைத்து ஆட்கொள்வனாகலின், உலோகாயதமும் தன்னு லறியப்படாதே ஆத்திகத்துட் கொண்டுய்க்கும் என்க. இங்ஙனமே ஏனைய சமயங்களுக்கும் உரைத்துக் கொள்க. இதுவே அடிகளுக்கும் கருத்தாதலே,

"அறுவகைச் சமயத்து அறுவகை யோர்க்கும்
வீடுபே றாய் நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழவோன்" (திருவண்டப். 17-19.)

[உலோகாயதம முதலாயவற்றக்கு விண்ணோரும் அவர் பகுதிகளும் உளவென்பதும், அவரும அவர் பகுதிகளும் இறைவனுக்கும் இறைவன் பதத்திற்கும் கீடம்புரையும் என்பதும் பெறப்பட்டமையின், எச்சமயநெறி களையும் உள்ளவாறே கடைப்பிடிப்போர் ஆத்திகர் எனவேபடுவர் என் பதும் ஈண்டுப் பெற்றாம்] எனவும்,

" புத்தன் புரந்தராதி அயன்மால் போற்றிசெயும்
அத்தன் " (திருத்தெள். 16.)

[புத்தன் புரந்தராதிகளும் அயன் மாலும் போற்றி செயும் அத்தன் என்க. இதனால் அவர்களை முதல்வராகக்கொண்ட சமயத்தவர்களும் தத்தம் முதல்வர்க்குச் செய்யும் வணக்கம் எல்லாமும் அவ்வத்தனையே சார அதனால் படி முறையே அவர்களும் உய்வு பெறுவர் என்பதும் உடன் பெற்றாம். இந்திரன் விண்ணாட்சி முதலியவற்றில் வெறுப்புற்றமையால் விண்ணாட்சி வீணாகி உலகம் தடுமாறுதலைக் கண்ட வியாழபகவான், அவனுக்கு உலோகாய தத்தை அறிவுறுத்தினர். ஆதலின், செவ்வி நிரம்பாதாரக்கும், உலகு நிலை பெறுதற்கும், அவ்வுலகாயதம் இன்றியமையாததாகி, இறைவன் திருக்குறிப் பிற்கு ஏற்றதாதலும் அறிக. பௌத்தமும் உலகாயதமும் மாயாவாதங் களாதல் பற்றி, அது தோன்றுமாறு புத்தன் புரந்தராதி என ஒருவகைப் படுத்தியவாறு] எனவும் கூறுதல் கொண்டறிக.

[அங்ஙனமாகுமேல், அறுவகைச் சமயத் தலைவர்களையும்,

" புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்தம் மதங்களிலே தட்டுளுப்புப் பட்டுநிற்க " (திருத்தோள். 6)

என, அவர்கள் புல்லறிவையும் தடுமாற்றத்தையும் எடுத்துக்கூறி இழித் தனரேயெனின், அவர்களும் அம்மதச் சார்பினரும் தத்தம அறிவால் தடுமாற்றமுற்று இறுதிக்கண் இறைவனையே பற்றுக்கோடாகக் கொள் ளுதலின், அவரறிவும் சமயமும் புல்லியன என்றிரங்கி யருளினரேயன்றி, அவரை யிகழவேண்டும் என்னும் கருத்தின்மையும், நல்லவேளை அங்ஙனம் தடுமாறாது உய்ந்தேம் என்னும் தெளிவுமே அவற்றால் புலப்படுதலின், அங்ஙனம் இகழ்ந்தார் என்றல் அமையாதென்க.]

இனி, இதுகாறுங் கூறியவற்றால், பிற்காலத்தார் கூறும் மாயாவாத மும், இங்குக் கூறிய மாயாவாதமும் வேறு வேறாம் என்பது தானே போந்ததென்க.

தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகிக் கருதலும் மாயைகள் தொடங்கின ; நாத்தழும்பேறினர் ; காட்டினர் ; மலைந்தனர் என, அவ் வவர் செயல்களை முடித்தருளினர் , அவ்வவர் கூற்றுகளினாலே தம்மனம் மாறுபடாதுபோக அவ்வவர் பயன்பெறாது கழிந்தனர் என்பதறிவித்தற்கு. அங்ஙனமாதலின் அம்முற்றுக்கள் எல்லாம் உம்மை பெறற செயவென் னெச்சப் பொருள் பயந்தன என்க.

தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுது உளம் உருகி அழுதுஉடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாது எனும்
படியே யாகிநல் இடையறா அன்பில்

பசுமரத்து ஆணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடல்என மறுகி
அகங்குழைந்து அனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுதல் இன்றிச்
சதுர்இழந்து அறிமால் கொண்டு சாரும்
கதிஅது பரமா திசயம் ஆகக்
கற்று மனம் எனக் கதறியும் பதறியும்
மற்று ஓர் தெய்வம் கனவிலும் நினையாது
அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமை என்று இகழாதே திருவடி இணையைப்
பிறிவினை அறியா நிழலது போல
முன்பின் ஆகி முனியாது அத்திசை
என்பு நைந்து உருகி நெக்குநெக்கு ஏங்கி
அன்பு எனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாதஎன்று அரற்றி
உரைதடு மாறி உரோமம் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி அரும்பச்
சாயா அன்பினை நாள்தொறும் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதியன் ஆகி வினை கெடக்
கைதரவல்ல கடவுள் போற்றி; 89

என்னுமிவ்வடிகளினால், உலகியலும் பல சமய பேதங்களும் உணர்ந்து, இறைவர்க்கும் தமக்குமுள்ள பெருந்தொடர்பு வெளிப் படுதலும், அவன் திருவடிகளின் மாட்டுப் பேரன்பு செய்யும் அன்பு மார்க்கம் ஒன்றே மெய்ப் பொருளையடையும் மார்க்கமென உறுதி பூண்டு, அந்நெறி நின்றார் இயல்பு கூறுகின்றார்.

(பொ - ரை) (அவையாவற்றாலும்) வழுவாது, தாம் கைக் கொண்ட முனிவிலாத பொருட் கருத்தினைச் சலித்துவிட்டுவிடுத லின்றி, தழலொடுபட்ட மெழுகு உருகுவதுபோல உள்ளம் உருகி, தொழுது, அழுது, உடல் அசைவற்று(ப் பின்னர்), ஆடியும், அலறி யும் பாடியும் வணங்கியும், குறடும் அறிவிலியும் பிடித்ததை நெகிழ விடாமைபோல நெகிழ்தலின்றி, இடையறவுபடாத அன்பினாலே

பசிய மரத்தில் இருப்பாணியை அடித்து இறுக்கினாற்போல உறுதி பூண்டு, கண்ணீர் கசிதல் பெருகிக் கடல்போலாக, சுழன்று மனங் குழைவடைந்து, அவை அனுகூலமடைய உடலும் நடுங்கி, உலகத் தார் இவர் பேய் என்று தம்மைப் பழித்துரைப்ப, அதற்கு நாணாது, நாட்டவருடைய பழிப்புரைகளை ஆபரணமாகப் பூண்டு, மனங் கோணாது, (அங்ஙனம் பழித்தாரை வழிப்படுத்தற்காகச்) சூழ்ந்து கூறும் உபாயங்களும் இழந்து, எல்லாம் அறிந்தும் அறியார்போல இருந்து அடையப்பெறும் முடிபாகிய வீட்டினையே மிக மேலான சிறப்புடையதாகக் கருதிக் கன்றையுடைய பசு அக்கன்றினைக் காணுக்கால் கதறியும் பதறியும் மனங் கலங்குதல் போல, கதறிப் பதறிக் கலங்கி, வேறு கடவுளரைப் பொய்யான கனவிலுங்கூடக் கருதாது, அருமைத்தாகிய வீட்டினுக்குரிய ஒப்பற்றவன் இந்நில வுலகில் தலைமை ஆசானாக எளிவந்து ஆண்டருளிய பெருமை யினைச் சிறுமைப் பாடாகக் கருதி அவமதியாது, தனக்கு முதலாகிய உருவை முன்னும் பின்னும் என்றும் விட்டுப் பிரியாத நிழலைப் போல, இரு திருவடிகளையும் வெறுத்துப் பிரிதலின்றித் தொடர்ந்து அவ்விடத்து என்பு திண்மையற்று உருக, நெஞ்சம் கனிவுற்றுக் கனிவுற்று இரங்கி, அன்பாறு இருகரையும் புரண்டோட, ஐயறிவு களும் ஓரறிவேயாக ஒருமித்துத் தலைவனே என்று புலம்பி, உரை குழறி, மயிர்புளகித்து, மலர்க்கரங்களைக் குவித்து, இருதயம் விரி வடைய, கண்கள் களிகூர்ந்து நுண்ணிய நீர்த்துளிகளைத் தோற்று விப்ப, குறைவுபடாத பேரன்பினை நாள்தோறும் வளர்ப்பவர்க்குத் தாயாகி அங்ஙனம் வளர்த்துவரும் இயல்புடையாய் வணக்கம்; மெய்யறிவினைக் கொடுக்கும் வேதியனாகிய ஆசானாய் வந்து, அப் பேரன்பர்களது முக்கால வினைகளும் கேடடைய உதவியருளும் வல்லமையுடைய கடவுளே வணக்கம், எ – று

(வி - ரை.) வழுத்துதற்கு எளிதாய்த் தழைப்பவர்; ஊனமில் யோனி யின் உள்வினைப் பிழைத்தல் முதல், புல்வரமபாய பலதுறை பிழைத்தல் இறுதியாக உள்ளவை யாவும் பிழைத்தும், தெய்வம் என்பதோர் சித்த முண்டாகிக் கருதலும், ஆறுகோடி மாயா சக்திகளாகிய பொய்வாதங்கள் பல சூழவும், தப்பாது, சலியாது, உருகி, கம்பித்து, ஆடியும்.........பரவி யும், ஆகி, பெருகி, மறுகி, விதிர்த்து, பூணுகக்கொண்டு, இழந்து, அதிசய மாக(க் கருதி) கதறியும் பதறியும், நினையாது, இகழாது, ஆகி, உருகி, ஏங்கி, புரள, அரற்றி, உரைதடுமாறி, சிலிர்ப்ப, மொட்டித்து, மலர, கூர, அரும்பத் தழைப்பவர் என்க.

அவர்களை அங்ஙனமெல்லாம் தாயேயாகி வளர்த்தனை என்க. எனவே, அவர்க்கு அவனும், அவனுக்கு அவரும் இன்றியமையாதவராயினர் என்க.

ஈண்டும் அவனருளாலே 'அவன்தாள் வணங்குதல்' வேண்டும் என்பதே வலியுறுத்தப்பட்டது.

தப்பாமே - தவருது. தாம் கருதியதை, ஆத்தமாஞர் சுற்றத்தார் பொய் வாதம் புரிவோர் ஆதியவர் தம கூறுக்களிஞலே மாற்றியும் ஐயங் கொண்டு, விடாமை என்க.

சலித்தல் - இளைத்துக் கைவிடுதல். தவறவிடாதே பற்றி ஒழுகிஞேர், முடிவு போங்காறும் ஒழுகாது, இடையில பயன்கிடடவில்லையே ; ஆதலால் இது வீண் செயல்போலும் எனக் கருதி நெகிழ்நதுபோதல்.

தழல்கண்ட மெழுகு - தழலொடுபட்ட மெழுகு ; சுவை கண்ட நா. என்பதுபோலக் கொள்க. தழல் அன்பிறகு உவமையாயிற்று. உளம் உருகித்தொழுது எனக் கொண்டுரைக்க.

கம்பம் - தூண். கம்பித்து என்பது அதனடியாகத் தோன்றிய வினையெச்சம். தூண்போலாகி எனக. எனவே அசைவற்று என்பது பொருளாயிற்று. அங்ஙனம் கருதியதில் மனமொடுங்கிய காரணத்தால் அசைவற்ற மெய், பின்னர், ஆடுதல் பாடுதல் முதலாயின செய்து மீண்டும் மறுகுதற்கு அனுகூலமாய் விதிர்த்து எனக.

தப்பாது சலியாது மெய்ப்பொருட்கண் மூழ்கி லயித்தும், மீண்டும் மனவெழுச்சியுறுங்காலை, ஆடிப் பாடி அலறி வணங்கி அபபொருளையே குறடும் பேதையும் கொண்டது விடாமைபோலப் பற்றுதலும் வேண்டுமென்க.

இங்ஙனம் ஆத்தமாஞர் முதல் மாயாவாதிகள் ஈருக உள்ள அனைவராலும் கூறப்பட்ட கூற்றுக்கள் பற்றித் தாம் பிடித்தது நெகிழாத உறுதிப்பாடு கைவந்த பின்னர், தமது விழிப்பின்மையிஞல் அக்குறி விலகிப் போகாமைப் பொருட்டு, அன்பென்னும் சம்மட்டியிஞல், உறுதிப்பாடென்னும் ஆணியை, உள்ளமென்னும் பசிய மரத்தில் அடித்து இறுக்கிப் பதித்தல் வேண்டுமென்பார்

"நல்லிடையரு அன்பில் பசுமரத்தாணி அறைந்தாற்போல"

என்றனர் அறைந்தாற்போல உள்ளமெனும் பசிய மரத்திலே பதித்து என எச்சம் விரிக்க. பத்தியும் வைராக்கிய மும என்னுமிரண்டும், முத்தியென்னும் உயர்ந்த கோட்டைக்குட் பறநது செல்வதற்குரிய இரு வான் சிறகுகளாம் எனப் பிற சான்ரே நும் உரைப்பர். ஈணடும அவ்விரண்டும் சிறப்புறக் கூறியிருப்பது காண்க.

பசிய மரத்திஞள் ஆணியை இறுக்குந்தோறும் இறுக்குந்தோறும் அதனுள் ஆணி இலகுவாகச் செல்ல, அகத்துள்ள நீர் கசிநது வெளியேறிப் பெருகுதல்போல, அன்பிஞல் வைராக்கியம் இறுகுநதோறும் கண்ணீர் கசிநது பெருகிக் கடல்போலாக என்க.

அங்ஙனமாக அகங்குழைந்து மீண்டும் மறுகி என்க. மறுகி - மயங்கி. அதாவது தாம் பிடித்த மெய்ப்பொருட் காட்சியுள் மூழ்கிக் கிடத்தல் என்க. இங்ஙனம் மூழ்குதலும், மீண்டும உணர்வடைந்து ஆடிப்பாடி அலறி

அன்ன பிறவற்றையும் ஆற்றி அதனுள் மூழ்குதலும், இங்ஙனமே மறித்தும் மறித்தும் ஆற்றிவருதலும் அவர் இயல்பாகும் என்றவாறு.

உலகத்தவர் இந்நிலை கண்டு பேய் என்று பழித்தலைச் செய்ய என்க. அதனால் மனம் நாணுதலும் கோணுதலுமின்றி, அவ்வுரைகளை அணியாகக் கொள்ள வேண்டுமெனவே, மனக்குற்றமும் நாணமும் அகன்றார் என்பதுபட்டு, அவர் தம் செவ்வி, இருவினையொப்பு எனச் சாஸ்திரங்களுட் பயிலும் நிலையாயிற்று என்றுணரப்படும். இதனைத் தமிழ்நெறி நூல்கள் நாண் நீக்கம் எனக் கூறும்.

சதுர், இங்ஙனம் உலகத்தார் தம்மைப் பழிப்ப, அவர் நயங் கருதி, அவர்களை வழிப்படுத்தற் பொருட்டு தக்க உபாயங்களைச் சூழும் சூழ்ச்சித் திறமையாம் என்க. இறைவன் வழிநின்றாராகலின், அவர்க்கு எச்செயலும் எச்சொல்லும் இறைவனைக் கடந்து அப்பாற் செல்லமாட்டாவாகலின், தன்னயமும் பிறர்நயமும் மற்று எந்நயமும் அற்றார் என்பதுணர்க.

அறிமால், எல்லாவற்றையும் அறிந்தும், உணர்ந்தும், நுகர்ந்தும் இருந்தாராயினும் அவற்றை அறியாதிருத்தலாம். நீறு பூத்த நெருப்புப் போல இருத்தல் என்றுணர்க. அதாவது, பிரகிருதியின் வழிபட்டுழலும் தேக தர்மத்திற்கேற்ப, அவ்வுடல் எங்ஙனம் அசைந்து நுகர்ந்துகொண்டிருப்பினும், அறிவு மெய்ப்பொருள் கண்டிருத்தலாம் என்க.

இங்ஙனமெல்லாங் கூறியவற்றைச் சாதித்துப் பெறுவது கதி என்க. கதி - முடிவு. அதாவது முத்தி என்க.

கன்றையுடைய பசு, தன்னைச் சூழ உணவும் நீரும் பிற பசுக்களும் ஆகிய எல்லாம் இருப்பினும், அவற்றை நுகர்தற்கண்ணும் அவற்றின்பால் ஈடுபாடிலதாய், தன் கன்றினையே அவ்வெல்லாவற்றினும் மிக மேலாக மதித்து, அக்கன்று தன் அண்மையில் சற்று விலகியக்கண்ணும் கதறிப் பதறும். அங்ஙனமே இவரும் எல்லாம் தம்மைச் சூழவிருப்பினும், தாமடையுங் கதியொன்றனையே மிக மேலாகக் கருதி, தாம் அதனைப் பிரியாதிருப்பவும் கதறிப் பதறுவர் என்பார் "கற்று மனமெனக் கதியது பரமா, வதிசயமாகக் கதறியும் பதறியும்" என்றார். இங்ஙனம் கதறிப் பதறுதல் அன்பிற்கு இயல்பாகவுள்ள குணங்கள் என்க. காரண காரிய முறைப்படி நிரூபிக்கக் கூடியனவல்ல.

சிறிதும் நினையாமை குறித்துக் கனவினும் நினையாதென்றனர். இவர்கள்தாம் அறுவகைச் சமய பேதமும் கடந்து, பேதமற்ற அன்புநெறிக்கண் நின்றாராகலின், இவன் சிவன், இவன் திருமால், இவன் புத்தன் என்றுங்குப் பேதப்படுத்தி நோக்குதலின்றி, எல்லாம் சிவன் என்றே கண்டார் என்பது தோன்றுதலின், மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாராயினரென்க.

இத்தகைய செவ்வி கண்டபோதே, தன் இன்றியமையாமை குறித்து இன்னார் வருந்துகின்றனர்; யாம் சென்று அதனைத் தீர்க்கற்பாலம் எனக் கருதி, இறைவன் ஆசானாய் அவனியில் வந்தென்க. உயர்வும் எளிமையும் ஒருங்கே தோன்ற,

" அருபரத் தொருவன் அவனியில் வந்து "

என்றனர். குருபரன் - தலைமையாசான். எளியனும் வந்து அருளிய பெருமை என்க.

அஙஙனம் எளிவந்தமை குறித்து, ஓகோ ! இது நமக்குக் கைக்கெளிய தாகும். அத்துணை யரியதன்று என்று கருதியிராதென்க.

" மையி லங்குநற் கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட பின் மழுக்
கையி லங்குபொற் கிண்ண மென்றலால்
அரியை என்றுனைக் கருது கின்றிலேன் " (திருச்ச. 92.)

என வருவதும் ஈண்டு நோக்குக.

பேரன்புப் பெருக்காதலின் " அன்பெனுமாறு கரையது புரள " என்றனர்.

ஐயறிவும் ஓரறிவாகவே ஒன்றுபட்டன என்பார் " நன்புலன் ஒன்றி " என்றனர்.

" ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள "

(பெரியபுரா. தடுத்தாட். 106.) என்பர் சேக்கிழார்.

அரும்பு விரிதலே வழக்காறுதலின் மலர்மொட்டித்து எனப் புதுமை கூறினர். கரமலர் மொட்டித்து இருதயம் மலர என்பது பொருள் முரண் தொடை. சாயா - கெடாத; குறையாத.

ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தல் முதல், சாயா அன்பினை நாடோறும் தழைத்தல் இறுதியாக உள்ள எல்லா நலங்களையும் அவ்வன்பர் அடையுமாறு தாயாக இருந்து வளர்த்தும், வேதியனாக இருந்து அறி வூட்டி வினைகெடுத்தும் உதவியருளினன் என்க. ஊனமில் யோனியிற் பிழைத்தல் முதல் மறற்றோர் தெய்வம் கனவிலும் நினையாதிருத்தல்காறும், தாய்போலத் தோன்றாத் துணையாக இருந்து, இவனே நின் தந்தை என்றுணர்த்தினன் என வரும் பகுதியைத் " தாயே யாகி வளர்த்தனை " என்பதனாலும், அருபரத்தொருவன் அவனியில் வந்து என்பது முதல் சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர் என்பதுகாறும் அத்தாயான வனே பின்னர்த் தந்தையாகிய குருபரனாய் அறிவுறுத்தி வினைக்கட்டை வேரறுத்து விலக்கி, ஒருமைத்தாகிய நல்லுணர்வை நிலைபெறச் செய்தான் என்றாங்கு வரும் பகுதியை "மெய்தரு வேதிய னாகி வினைகெடக் கைதர வல்ல கடவுள் " என்பதனாலும் தொகுத்துக் கூறினார் என்க.

வேதியன், வேதவுணர்வு கைவரச் செய்வோன். வேதவுணர்வு பொது வுணர்வாகலின் ஒருமையுணர் வென்றுரைத்தாம். விரிந்த நோக்கம் என்றபடி. அஃதாவது ஒரு பொருளைப் பல வாய்பாடுகளால் உணர்தல் என்க. சமரச ஞானம் என்பதும் இக்கருத்தினதே கைதருதல் - உதவுதல்.

வார்கடல் உலகினுள் என்பவைதொட்டுச் சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர் என்பதுகாறும் உள்ளனவாகிய செவ்வித்திறங்கள் அவன் அருள் திறங்களை நோக்கிநிற்றல் உணர்ந்துகொள்க.

ஆடக மதுரை அரசேபோற்றி
கூடலில் இலங்கு குருமணி போற்றி
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றுஎனக்கு ஆரமது ஆனாய் போற்றி 93

என்னும் இவ்வடிகளினாலும், இனி வருவனவற்றாலும், முற்போந்த மூன்றடிகளாலும், அவன் அருள் திறங்களை எடுத்தோதித் தமது நிலையை அவன் உளங்கொள்ளுமாறு உணர்த்துகின்றனர் இவற்றால், அவன் எளிவந்தும் இன்று தமக்கு அரியனாயினமை கூறுகின்றார்.

(பொ - ரை.) பொன் மயமாக விளங்கும் மதுரைக்குத் தலைவனே வணக்கம், ஆங்குள்ள மரமடர்ந்த சோலை ஒன்றனுள் விளங்கிய குருமணியே வணக்கம், அழகு வாய்ந்த தில்லையம்பலத்தில் கூத்தாடுவோனே வணக்கம், இன்று எனக்குப் பெறுதற்கரிய அமுதமாயினை; அங்ஙனமானவனே வணக்கம், எ - று.

(வி - ரை) ஆடகமதுரை, பொன்னாலாகிய மாடங்களை யுடைய மதுரை. நீரூழிக்கண் அழிவெய்தப் பெருமை குறித்து ஆடக மதுரை எனப்பட்டதென்க. புடமிடுங்கால் ஏனைய யாவும் அழிந்தொழியத் தூய பொன்னே நிலைபெறுவதுபோல, நீரூழிக்கண் யாவும் அழிந்தொழிய மதுரை ஒன்றே நிலைபெற்றதென விரிக்க. மதுரை யழியாதாகவே அங்குள்ளாரும் பாண்டியனும் அழிந்திலர் என்பதும் பெறப்பட்டது. பாண்டியனைப் பழையோன் என்றுங் கூறுக. நீரூழிக்கு முன்னரும் அவன் இருந்தமைபற்றி, அவன் குலத்தார் பழையவர் எனப்பட்டார். பண்டு என்னு மடியாகப் பாண்டியர் என்பது தோன்றியதோ என்றெண்ணவும் இடனுண்டு. இந்நீரூழி 'வரலாற்றுடன் போந்த பாண்டிய' நாட்டின் இயல்பை, முன்னர்க் கீர்த்தியுள் பாண்டிநாடே பழம்பதியாகவும் என்றதன் உரையுட் கூறினும். ஆண்டுக் காண்க.

கூடல் என்றது, அம்மதுரைக்கண் அமைந்ததொரு மரமடர்ந்த சோலையை. குருமணி - முதனூலாசிரியன். அகப்பொருள் முதல் நூலைத் தோற்றுவித்தவன். "கூடலினாய்ந்த ஒண்டீந்தமிழ்" (திருக்கோ. 20) என்றலுங் காண்க. ஈண்டுக் கூடல் என்றது மதுரையை. பாண்டியனுக்கும் பாண்டிய நாட்டிலுள்ளார்க்கும் அருள் புரிந்த சிறப்பினையே முதலில் உளங்கொண்டனர். பாண்டியற்கு அருள்புரிந்த சிறப்பே பலவிடத்தும் கிளந்தோதப்படுகிறது. அவன தமிழனாகலானும், தமிழ் நெறியே ஈண்டுக் கைக்கொள்ளப் படுதலினாலுமென்க. பாண்டியனுக்குத் தூண்டு சோதி தோற்றியமை கண்ட அடிகள் இறைவன்மேல் பேரன்புமிக்கு ஆற்றுதிருத்தலும், அதுகண்ட இறைவன் ஆங்கு ஒரு சோலையுள் அந்தணனாகத் தோன்றி இந்திரஞாலங் காட்டினன் எனபது தோன்ற "ஆடக மதுரை அரசே"

எனவும், " கூடலிலங்கு குருமணி " யெனவும், மற்றதன்மேல் உத்தரகோச மங்கையுள் தன்னீறளித்து மெய்யுற்றுப் புணர்ந்தும, ஆங்குத் தானே அடிகளை ஒழித்தும், அன்றுடன் சென்ற அடியவரை ஒன்றக் கலந்தும், அன்ன பிறவற்றை ஆறறியும் போந்து தில்லை மன்றினுள் நடம்பயிலு கின்ருன் என்பது தோன்றத் "தென்தில்லை மன்றினுள் ஆடி " எனவும், அன்று நுகரமுதாகவும், இன்று நுகர்தற்கரிய அமுதாகவும் ஆயினு ருதலின் "இன்றெனக் காரமு தாருய்" என்றும், அவன் அங்ஙனமாயினும் யான் அவனை மறவேனுய் அவன் செய்த அருள்கள் யாவற்றையும் எடுத்துக் கூறி வணங்குவேன் என்பதுபட " ஆரமு தாருய் போறறி " எனவும் கூறிஞர். எனவே ஆரமுதாருயேனும் போறறி என்க.

என்னையும் அவற்றிலெலலாம பிழைக்க வைத்தும், மெய்யுணர் வுண்டாக்கியும, குருமணியாய் வந்தருள் புரிந்தும் வளர்த்து வந்தவன், பின்னர் அவற்றைக் கருதாருய் என்னைக் கைவிட்டு அரியருயினன் என்பது இதுகாறும் போந்த பொருளாயிற்று.

மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்ஆர் உருவ விகிர்தா போற்றி
கல்நார் உரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக்கு அருளாய் போற்றி 99

என்னுமிவ்வடிகளிஞல், தம்மைக் காத்தலும் அருளுதலும் செய்ய வேண்டும் என்று கூறப்படுகின்றது.

(பொ - ரை.) கெடுதலில்லாத, நான்கு மறைகளைத் தோற்று வித்த முதன்மைப்பாடுடையவனே வணக்கம் ; எருத்தின் உருவ மமைந்த வெற்றிக்கொடியை உயர்த்திய சிவனே வணக்கம் ; மின்ஞெளிபோன்ற உருவ வேறுபாடுகளையுடையவனே வணக்கம் ; கல்லில் நாருரித்த கனியாவோனே வணக்கம் ; பொன்மலை ஒத்தவனே நினக்கு வணக்கம் , என்னைக் காத்தருள்வாயாக ; அந்தோ ! எனக்கு அருள் செய்வாய் , நினக்கு வணக்கம் , எ - று.

(வி - ரை ) மூவா முதல்வன் ; நான்மறை முதல்வன் எனக் கொள்க. அறம் பொருள் இன்பம் வீடு என நாற்கூறுபட்ட மறை என்க.

விகிர்தன் - வேறுபட்டவன். தத்தங் கருத்து வகையால் உணர்வார் நினைவுருவங்கள் பல திறத்தனவாகலின், அவ்வவ்வுருவங்களாக வேறு பட்டவன் என்க. அவ்வுருவங்கள் நினைந்த வழித்தோன்றி நினையாவழி அற்றுப் போதலானும், செவ்வி முறுகுந்தோறும் அவ்வுருவங்களும் வேறு பட்டு வேறுபட்டுப் போதலானும், வேறுபாடற்ற முழுமுதல் உருவமே நிலை பேறுடையதாகலானும் " மின்ஞர் உருவ விகிர்தா " என்றனர்.

'கல்நார் உரித்தல்' என்பது ஒருவகைக் குறிப்பு. ஓரியல்புடைய பொருளை இன்னேரியல்புடைய பொருளாக மாறறியமைக்கும் செயற் கருஞ்செயல் எனபது கருத்து. அதனுல் கல்போன்ற, உருக்கமும் எண்ணமுமற்ற நெஞ்சைக் கனிபோல நெக்கவைத்து உணரவூட்டுதல் என்னும் வெளிப்படைப் பொருள் கொள்ளப்படும். இதனுல் தமமை இறைவன் இங்ஙனம் செவ்வி பெறச்செய்து ஆண்டருளிய செயல், கல்லில் நாருரிக்கும் செயல் எங்ஙனம் அரியதோ அங்ஙனமே யரியதாகும் என்ருர் என்க.

யான் நிலைபேறும் நிறையும் ஆதியவை பெற்றிருக்குமாறு காவாய் என்க. இது கனகக் குன்றே என்பதனுற் போந்த பொருளாம். அடைக் கலம் புகுந்தவாறு; பிற தீங்குகள் நலியாமல் புரந்தருளும் வெல்கொடி கண்டு துணிந்தாராகலின் என்க.

காவாய் எனவும், அருளாய் எனவும் ஈண்டும், ஆரமுதானுய் என முன்னரும், கடையேனடிமை கண்டாய் என்றும் பிறவாறும் பின்னரும் வருவனவெல்லாம், தாம் இன்னுரெனவும், தமக்கும் இறைவற்கும் இன்ன தொடர்பெனவும், தாமவன்பால் ஒன்று வேண்டிவந்திருப்பதைக் கூருதே புலப்படுத்திக் காத்தலும் அருளுதலும் செய்யவேண்டுமெனவும், அன்ன பிறவாறும எடுத்தோதி, இறைவன் நெஞ்சம் தம்மாட்டுப் பெயராவகை ஈடுபடுமாறு தம்மை அறிமுகப்படுத்துவனவாக அமைந்துள்ளமை கண்டின்புறுக. இங்ஙனம் வந்தனவெல்லாம், தமது விண்ணப்பத்தை இறைவன் ஏற்றருளுதலையே நோக்கி நின்றவாறுங் கடைப்பிடிக்க.

கல்நார் உரித்தாற்போல மறையின்மூலம் என் மனத்தின் இயல்பைப் புரட்டிப் பிறிதோர் ஏற்ற வழியிற் பெயர்ந்து செல்லும் இயல்புடையதாக்கி நெக்கச் செய்தான் எனவும, வெல்கொடியான் காத்தருளத் தகுதியுடையான் எனவும், விகிர்தனுகலின், முற்றுணர்வற்ற எனக்கு அருள்வான் எனவும் கருதி நிறுத்தியமையின், "வெல்கொடிச் சிவனே,......கனியே காவாய்" எனவும்,...... "......விகிர்தா அருளாய்" எனவும் இயைத்துரைக்க.

படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி.
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி

உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையேன் அடிமை கண்டாய் போற்றி ; 111

என்னுமிவ்வடிகளினால், நின் காவலையும் அருளையும் பெறவிருப்பவன், நின் அடிமைகாண் எனத் தம்மை அறிமுகப்படுத்துகின்றார்.

(பொ - ரை ) படைப்பவனே, காப்பவனே, ஒடுக்குபவனே, வணக்கம் ; துயர் நீக்குகின்ற ஆசானே, வணக்கம் ; எல்லாத் திருவினையும் உடையவனே, வணக்கம் , எங்குந் தங்குவோனே, வணக்கம் , ஒளி வீசும் படிகப்பிழம்பே, வணக்கம் , அதிகாரம் செய்பவனே வணக்கம் , அமுதமானவனே, வணக்கம் ; பலவகை நறுமணங்களெல்லாம் கமழுகின்ற திருவடியையுடைய கடவுளே வணக்கம் , உள்ளத் தாமரைப் பொகுட்டில் இருப்பவனே வணக்கம் ; அழுக்ககற்றுவோனே வணக்கம் ; மூலப்பொருளே வணக்கம் ; அறிவே வணக்கம் ; முடிவானவனே வணக்கம் , கனியானவனே வணக்கம் , ஆகாய கங்கை அடங்கியிருக்கப்பெற்ற சிவந்த சடையுடைய நம்மவனே வணக்கம் தலைவனே வணக்கம் , உணர்வே வணக்கம் , கீழ்ப்பட்டோனாகிய யானும் நின்னடிமையாவேன் ; காண்குதி , வணக்கம் எ - று.

(வி - ரை.) எந்தை - ஆசான். அவன் களையுமிடர் பிறவித்துன்பம். அஃதாவது, பொதுவகையான் நிகழும் படைத்தல், ஒடுக்குதல் அவ்விரண்டெல்லையுள்ளும் நிலைபெறுதல் என்னும் முத்தொழிலுள்ளும் படாது வேறாகி நிற்றல் என்க.

ஈசன் - எல்லாச் செல்வமும் உடையோன். எந்தை ஈசன் என்றபடி. தந்தையின் செல்வம் தனயற்குரியதாகவும், அது பெருமை குறித்து " எந்தாய் " எனவும், " ஈச " எனவும் விளித்துப் போற்றினர்.

இறைவன் - எங்குந் தங்குவோன். தன் செல்வத்தை ஏற்ற பெற்றி பங்கீடு செய்யும் பொருட்டு அங்ஙனமாயினன் என்க. எல்லாப்பொருளும் நுகர்தற்கண் இன்பந் தருதல் அவன் அவ்வவற்றுள் தங்குதலால் என்பதுங் கொள்க. இதுவும் ஏனையனவும் தாம் பெறவேண்டியன பெருமை குறித்து வந்தனவென்பது வெளிப்படை.

பளிங்கின் திரள் என்பதற்குப் பலபடப் பொருள் விரிக்க இயலுமேனும், ஈண்டு, தன்னயலிலுள்ள நல்லவும் கெட்டவுமான எப்பொருள்களையும் தன்னுள் அடக்கிக்காட்டும் பெருமை என்ற அவ்வளவே பொருளாகக் கொள்க. என்னை நல்லடியார்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு தம்மைப் புறத்தே விட்டான் என்பதே அடிகள் கலக்கத்திற்குக் காரணமாகி, இத்திருவாசகப் பாமாலை வெளிப்பட்டதாகலின் என்பது.

ஆடக மதுரையரசே என முன்னர்ச் சிறப்பிக்கப்பட்டானாகலின், ஈண்டு அரசே என்றது பொதுப்பட நின்றதென்க. எல்லாவுலகுக்கும் ஒரே பேரரசன் என்றபடி. அவன் அதிகாரத்திற்குரிமையுடையோன் எனவே,

நின்னதிகாரத்திற் கேற்பவே நீ செய்யவேண்டியது செய்வாய். அங்ஙனம் செய்தாயை இங்ஙனம் ஏன் செய்தாய் என வினவுவார் யார்? யாருமிலர்; யாவரும் நினனுற கொடுக்கப்பட்ட அதிகாரமேயுடையராகலின். எனவே வேண்டியவாறே செய்குதி என, தமமையுங் கடைக்கணிக்க வேண்டு மென்பதை உள்ளிட்டுரைத்தவாறும்.

முன் எளிவந்த அமுதே என விரிக்க; பின்னர் அரியனுயினமை முன்னர் உணர்த்தப்பட்டதாகலின். தம்முயிரக்கு அவனே பறறுக்கோ டென்பது உணர்த்தியபடி. பிரிந்தாலும் இருநதாலும் அவ்வாறே என்க; உயிரிற் பிரியானுகலின்.

சரணம் - திருவடி. அருச்சித்த மலர்களின் மணஞ்சேர்ந்த திருவடி என்க. முன்பு திருவடிக்கண் வீழ்ந்து வணங்கியகாலை இம்மணம் அறியப்பட்டதென்க. இதனுல் முன்பு தம்பால் இருநத தொடர்பைக் குறிப்பிட்டவாறும். விரைமலருமாம். விகிர்தன் என்பது கடவுள் என்னுந் துணைத்தாய் நின்றது தமக்குரியது திருவடியாகலின், அது பெருமை குறித்துச் "சரண விகிரதா" என்றனர்.

வேதி ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணைக்கினி என்னுமங்கி களின் நடுவிலுள்ள பீடம். இஃதுடற்கண் உள்ளத்தாமரையை உணர்த்து மென்ப. உளளத்திலுள்ளான் எனவே யாவுமவனே செய்தான்; உயிர் செய்தன ஒன்றுமிலலையாயிறறு. அங்ஙனயாகவும் அவை உயிரைச் சூழ்தல் மனவழுக்கால் என்க. இறைவனைச் சூழாமை அவ்வ ழுக்கின்மை யாலாம. இதுபற்றியே மேலே "விமலா போறறி" என்றனர். யாவற் றுள்ளும் இருந்தும அழுக்கின்றியிருக்கின்றவாறே என்னையும் அழுக்கறச் செய்த என்றவாறும்.

மனவழுக் ககன்றகாலையே மூலப்பொருள் புலப்படும். அஃதகலாத போது புலப்படாது, இதுவோ அதுவோ எனப் பல நெறியாளரும் கூறும் மூலப் பொருள்களில் ஐயமுண்டாகி மலைவுநேர, அதனுல் செவ்வி கெட்டுப் பயன் இன்றி வாளா போக நேரும். அழுக்கறறவனே அழுக்குடைய உயிர்க்கு ஆதியாயினன் என்க.

அழுக்கற்றுப் பெற்ற முழு மூலத்திலிருந்து விரிந்த அறிவே மெய் யறிவு. இறைவனை யறியும் அறிவென்பது பெற ஆதி என்றதன்பின் அறிவே என்றுரைக்கப்பட்டது.

அவ்வறிவாற் பெற்ற பயன் வீடுபேறென்க. மூலமும் அறிவும் முடிவு மவன் என்க.

மரத்தின் வாழ்வில் முடிந்த பயன் கனியேபோல உயிர் வாழ்வில் முடிந்த பயன் வீடுபேற்றுச் சுவையென்க. கனியென்றது ஈண்டு அதன் சுவையை உணர்த்திறறு. வீடுபேறு கனியோடும், ஆண்டுள்ள இன்பச் சுவை கனிச்சுவையோடும் ஒக்குமெனக

படைத்துக் காத்து ஒடுக்கிச் செவ்விக்கண் குருவாகி வந்து இடர் களைந்து தன் செல்வமெல்லாம் வழங்கித் தங்கியிருந்து தன்பால் ஒடுக்கிக்

கொண்டு, அதிகாரம் செலுத்தி, இன்புறச் செய்து, திருவடிப்பயில் வுண்டாக்கி, உள்ளத்தில் இருந்துகொண்டு, ஆங்குள்ள அழுக்ககற்றி, ஆதிப் பொருள்காட்டி, அறிவை வளர்த்து, வீடுநல்கி, இன்புறச் செய்கின்ருன் என்பது இதுகாறும் போந்த பெயர்ப் பொருளாயிற்று.

இங்ஙனமன்றி, அகங்காரம் பற்றினேரையும் அடக்க வல்லவன் என்பார் " நதிசேர் செஞ்சடை நம்பா " எனருர். கங்கை சடைக் கரந்த வரலாறு வெளிப்படை.

இவ்விருவகையில் எவ்வகையாலேனும் என்னையடக்கி நின்னுடன் சேர்த்துக்கொண்டாயல்லை! அங்ஙனம் எனக்கு அருள் செய்யாதும், நினனுடன் ஒன்றுகலந்து கொள்ளாதும் என்னை விட்டு விடுதற்கு யான் புறத்தேனுமல்லேன்! நின் விழுத்தொண்டினுள்ளேன்! நீ எனிலோ என்னை யாண்டுகொண்ட தலைவனுவை! இருவேமும் அடிமையும் உடையானும் என்னும் பயில்வுடையேம்! தலைவன் எதை உணர் கின்ருனே, அவ்வுணர்வே அடிமைக்குமாகுமென்பது கண்கூடு! என்னுடையாய் நீ எங்ஙனம் நின்ருய்! யானும் அத்திறம் நின்றேன்! வேறு எனக்கென ஒன்றுடையனே! அங்ஙனம் அடிமைத்தொண்டு பூண்டவருள் யான் எத்துணையும் இழுக்குடையேனுமல்லேன்! இவற்றை ஆராய்ந்து கண்டு ஆவன செய்குதி என்பார் " உடையாய்...உணர்வே... கடையேனடிமை கண்டாய் " என்றனர். இனி, கடையேனடிமை கண்டாய் என்றதற்கு, கடையேனை யடிமையாக ஏற்றுக்கொண்டாய் என்றலும் சிறப்புடையதாகும. கடையேனும் என உம்மை விரிக்க. அறிவுடன் விழைவு கலந்தபோது நிகழ்வதுணர்வெனப் படுமென்க.

ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானேர்க்கு அரிய மருந்தே போற்றி
ஏனேர்க்கு எளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை
ஆழா மே அருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றி-என் வைப்பே போற்றி 121

என்னுமிவ்வடிகளினுல், எளியனுய் வந்து தமக்குரிய ஆக்க மெல்லாம் உளதாக்கினன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) பெரியோனே வணக்கம்; நுண்ணியனே வணக்கம், தலைவனே வணக்கம், கருதி மதிப்பிடுதற்கு இடமாக உள்ளவனே வணக்கம், அதன் குணமாக உள்ளவனே வணக்கம்;

அக்குறியும் குணமும்பற்றி ஒழுகுகின்ற நல்வழியாவோனே வணக்கம், அந்நெறிக்கண் எழும் நினைவானவனே வணக்கம்; வானிலுள்ளார்க்கு அரிய மருந்தானவனே வணக்கம், ஏனைய அன்பர்க்கு எளிய இறைவனே வணக்கம், தாய் தந்தை மனைவி என மூவகைப்பட்டு அவையொவ்வொன்றும் ஏழேழாக விரிந்து பட்ட சுற்றமானது, யாம் மேற்கொண்ட நெறிப்பயனுக்கு முரண் பட்ட நரகில் சென்று அழுந்தாவண்ணம் அருள் செய்கின்ற அர சனே வணக்கம்; நமக்கு வேண்டிய வினைகளை ஆற்றுவோனே வணக்கம். துணையாளனே வணக்கம், அத்தொழிலானும் துணை யானும் பெறப்படும் பேரானந்த வாழ்வே வணக்கம், அப்பெருவாழ் வைப் பெற்று நுகர்தற்கு இன்றியமையாத என்னலீட்டி வைக்கப் பெற்ற செல்வமே வணக்கம் எ - று.

(வி - ரை.) ஐயன் என்பது, இழிந்தோன் உயர்ந்தோனை அழைக்கும் பெயர்களுள் ஒன்று. அது தன்னிலும் அவன் இயலபு நனி பெரிதெனக் கொண்டு வியப்பதன்கண் வந்ததாகலின், ஐ என்னும் முதனிலையிற் றேன்றியது. ஐ - வியப்பு. வேறுங் கூறுப அங்ஙனமே அவனது அறிதற்கரிய நுண்மையும் பெறப்படுதலின், அவன் பெருமையும் நுண்மையும் ஒருகாலத்தே தோன்றுதல் பெரிதும் வியப்புடைத்தாக "ஐயா, அணுவே" என அடுத்து மொழிந்தார்.

சைவன், சைவநெறியால் உணரப்படும் அதன் தலைவன் அவனே யாவர்க்கும் தலைவன் என்றபடி. அவன் முதல்வனாக, அவனினின்றும் சைவநெறியும், அந்நெறி நிற்கும சைவரும பிறரும தோன்றியவாறும.

குறி என்றது, வழிபாடுகளையும் விண்ணப்பங்களையும் செய்தற்கு இடமாக உள்ளதொன்று. அது இலிங்கம் என்க.

குணம் என்றது குறியின் அமைதியும் செயலுமாகப் பலவகைப்பட்ட குணங்கள். அவை அடியார் வழிபாடுகளின் வாயிலாகப் போந்தன வென்க.

நெறி, அக்குறியும், அதன்பண்பும் என்னும் இவற்றை வைத்துக் கொண்டு, அக்குணங்களின் வாயிலாக அக்குறியினபால் தாம் பெற விரும்பியதைப் பெறும செவ்வி வாய்க்குமவரையும் அச்செவ்வியைப் பெறுதற்குரிய துறைகள்தோறும் இழுக்கின்றி ஒழுகி வருவதாம்.

நினைவென்றது, அவற்றிற்கு மூலமாகிய காதலை. இச்சை எனவும் சங்கலபம் எனவும் பிறர் கூறுப. காதல் கைவர நெறிநின்று குறிபற்றிக் கதியடைய வேண்டுமென்க.

இக்குறியும் குணமும் நெறியும் நினைவும் வானுலகில் இல்லையாதலின், அவை பெறுதற்கு அவ்வுலகோர் அலைந்து மண்ணில் இழிந்தே தீர வேண்டுதலின், அவ்வருமை குறித்து "வானோர்க்கு அரிய மருந்தே" என்றனர். ஏனையோராவார் மண்ணுலக அன்பர்கள்.

அவ்வன்பர்தம் நெறிக்கு முரண்பாடில்லாத மூவேழ் சுற்றமமைத்து, மேலும் வேண்டியன செய்து, அவர் அந்நெறியில் மேன்மேலும் உயர் வடையுந்தோறும் அங்ஙனம் உயர்விக்கும் துணைவனாயிருந்து, இறுதியில் பேரானந்தப் பெருவாழ்வில் பகுத்தி, அவ்வாழ்வும் தானேயானான் என்றபடி.

ஒரு குடும்பத்திலே ஒருவனது தாய்தந்தையர் மனைவி என்போர் தாய்தந்தையர், மேலும் அவர் தம் தாய்தந்தையர் என்போரும், அம்மரபிலே இன்மையானும் அறியாமையானும் அறியப்படாதோர் ஆகிய பிதிரர் எழுவர் என்பாரும் ஒரு மரபினராவர். இங்ஙனமே ஒருவர்க்குத் தாய் தந்தை மனைவி என்பார் தம் மூன்று மரபினர்க்கு முரிய மூவேழ்தலை முறையினுள்ளாரும், ஒரு சிவஞானியின் சுற்றத்தவராகுவரேல் அவர் நரகிடையாழார் என்க. சிவஞானியின் பெருமையைச் சுற்றம் நரகிடை ஆழாமை மேலேற்றிக் கூறியவாறென்க. ஈண்டுத் தம்மைபொறுத்த அளவே கூறுகின்றாராதலின், "மூவேழ்சுற்றம் முரணுறு நரகிடை ஆழாமேயருள் அரசு" என்றாரேனும், முரண்பாடில்லாத சுற்றம் அமைத்து என்னை நரகிடையாழாமற் காத்தனன் என்பதே கருத்தாகக் கொள்க. ஒருவன் நன்னெறிப்படுதற்குச் சூழல் இன்றியமையாததாதும் என்பதும் அறிக. நன்னெறி நிறுத்தற்கு இன்றியமையாதவன் அரசனாக லின் "அரசே" என்றார். இனி ஒருவன் தோன்றிய தந்தையின் வழியில், தனக்கு முன்னுதல் பின்னுதல், அவன் தன்னோடு அகப்படுத்திய முன்னு தல் பின்னுதல் இருபத்தொருதலைமுறை என மூவேழ்சுற்றத்திற்குப் பொருள் கொண்டாருமுளர்.

தோழன், தொண்டு செய்வோன், தொழுவென்னும் முதனிலையில் தொழும்பென்றது தோன்றியாங்குத் தோழன் தோழி என்பவையும் தோன்றின. அம்முதனிலை அடிப்படு என்னும் பொருட்டாகும். அம்முதனிலையில் தோன்றிய தொழுகை என்னும் சொல்லானும் அப் பொருள் தெளியப்படும். தொழில் என்பதற்கும் அதுவே முதனிலையாகும். அடிப்பட்டுச் செய்யும் வினை என்பது அதன் பொருள். இப்பெயரே மேலும் பகுதியாக நின்று இகரவீறு பெற்றுத் தொழிலி என்றாகி, அத் தொழில் செய்யும் கருத்தாவிற்குப் பெயராகி நிற்கும். தொழிலி அடிப் பட்டுப் பணிசெய்வோன். எனவே தோழன் தோழி என்பனவும், தொழிலி என்பதும் வேறுவேறுதல் காண்க. இவ்வேறுபாடுணராதார், இளம்பூரண அடிகள் (தொல். சொல். சூத். 8) மேற்கோளாகக் காட்டிய தொழிலீஇ என்பதனையும், கலித்தொகை 103-ஆம் 104-ஆம் பாடல்களில் அது பயின்று வந்ததனையுங்கொண்டு, ஆசிரியர்கள் சேனாவரையரும் நச்சினார்க் கினியரும், அச்சூத்திரத்துக்கு மேற்கோளாகக்கொண்டு காட்டிய தோழீஇ என்றதனைத் தொழிலி என அஞ்சாது திருத்தினாருமுளர். அவர் கொள்கை கொள்ளற்குரியதுபோற் காணப்படவில்லை. அதுவேயுமன்றி அவராங்குத் தோழீஇஇஇஇ என்னுமிது தொழில் செய்கின்றவளே என் னும் பொருள் தந்து நிற்பதோர்சொல் என, ஆசிரியர் நச்சினார்க்கினியர்

கூறிய உரைக்குறிப்பும், தொழில் என்றதன் முதனிலை தொழு என்றதே யாதலும் நோக்காராயினர்.

தோழன், தன் நண்பனைத் தொழிற்படுத்தி அவற்குப் பாங்காகி நிற்பவன்.

இங்ஙனம் இறைவன் நின்றவாற்ருல் போந்த பேரானந்த வாழ்வென்க. அவ்வாழ்வு இனிவரும் வாழ்வாகும். அவ்வாழ்வில் வாழ்வதற்குரிய நிதியமும அவனே. அந்நிதிகொண்டு அவ்வாழ்வைப் பெறவேண்டு மாதலின் "வாழ்வே.........வைப்பே" என்ருர்.

முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர்வு இறந்த ஒருவ போற்றி
விரிகடல் உலகின் விளைவே போற்றி
அருமையில் எளிய அழகே போற்றி
கருமுகில் ஆகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையும் ஒருவன் ஆக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பம் துடைப்பாய் போற்றி 131

என்றுமிவ்வடிகளினுல், அவவளவோடமையாது, என்னை யும் பெரியேனுக்கி உலகறியச் செய்தான் என்கின்ருர்.

(பொ - ரை) தளையினின்றும் நீக்குவோனே வணக்கம், முதன்மையுடையாய் வணக்கம், அப்பனே வணக்கம், ஒடுக்கத் தொழில் செய்வோனே வணக்கம், சொல்லுணர்விற்கு அப்பாற் பட்டவனே வணக்கம், விரிந்த கடலாற் சூழப்பட்ட உலகவாழ்வின் பயனே வணக்கம்; பெறுதற்கரிய பேரருமையுள்ளும் எளிமை காட்டி நிற்பதோர் அழகுடையவனே வணக்கம்; கருக்கொண்ட முகிலாகிய கண்ணே வணக்கம், நிலைபெற்ற திருவருள் பொழியும் மலையே வணக்கம்; ஒன்றற்கும் பற்ருத என்னையும் மதிப்பிற்குரிய ஒருவனுக்கி, நின்பெரிய திருவடிகளைத் தலையின்மீது வைத்த வீரனே வணக்கம்; நின்னைத் தொழுத கையின் துன்பத்தைத் துடைத்தருள்வாயாக; வணக்கம், எ - று.

(வி - ரை) தன்னிடம் எதுவுண்டோ அதுவே பிறர்க்கும் உதவப் படும்; தன்னிடம் எது இன்ருக அது பிறரிடம் காணப்படுகின்றதோ அதை அவர்க்கும் இன்மை செய்யப்படும என்ப ஆதலின், தளையறறவன் முத்தனுதலின், தனது இன்மையைப் பிறர்க்கும் இன்மை செய்வான் என் பது கொண்டு, தளையினின்றும் நீக்குவோனே என்றுரைத்தாம். இங்ங னமே ஏனையவற்றுக்கும் உடம்பாடும் எதிர்மறையும் பற்றி உரைக்கப்படும்.

இங்ஙனம் பின்னர்த் தளையறுப்போனே முன்னர்த் தளைப்படுத்தினுகலின் முதல்வன் எனப்பட்டான். முடிவும் முதலும் ஒன்றுகலின் முத்தனும் முதல்வனும் ஒன்றே யென்க.

அம்முதல்வனே அத்தனுகிப் படைத்தலும், அரனுகி அழித்தலும் செய்வன்.

முத்தனுகி உலகின் விடுபட்டும், முதல்வனுதல் மூலம் அத்தனும் அரனுமாகி உலகுடன் ஒன்றுபட்டும் நிற்கின்றனுதலின், அவன் இத்திறத்தன் என உரைக்கப் பெறுன்; உரையினீங்கி உணரினல்லது. அது கொண்டு "உரையுணர்விறந்த" என்றும், அன்புணர்வில் அகப்படுவனுதலின் "ஒருவன்" என்றும் கூறினர்.

உலகிறுதியாக விரிந்ததன் பயனுவோன் என்க. எனவே, தளையற்றவனுக விருந்து, தளையுட் பட்டவனுமாகி, உயிர்களைப் பயிற்றி, இறுதியாகிய பேரின்பப் பயனுமாகுன் என்றவாறு. இவற்ருல் படைத்தலும், காத்தலும், அழித்தலும், அங்ஙனமே உயிர்களைப் பயிற்றி அவற்றின் விளைவீதலும் என்னும் அவனது அருள்திறங்கள் கூறப்பட்டன. முன் "படைப்பாய் காப்பாய் துடைப்பாய், இடரைக் களையும் எந்தாய்" என வந்தவை தொழில் மாத்திரையே உணர்த்தி நின்றன என்க.

பெறுதற்கருமை என்றபடி. அவ்வருமையுள்ளும் எளிமையாதலாவது, தனக்கு இன்றியமையாத தலைவன் ஒருவனை வேண்டி அல்லும் பகலும் எப்போதும் சிந்தித்திருந்து அருந்தவமாற்றி வருகின்ற தலைவியின் தவ வலியானது, அவளையும் அறியாவண்ணம அத்தலைவனை ஈர்த்து நிற்ப, அவனும் அஃதறியானுய் வேறு வினைமீது வந்தவன் எளியனுய் எதிர்பாரா வண்ணம் அத்தலைவியை எதிர்ப்பட்டு அருள்செய்தல் என்க. அவ்வெளிமையுள்ளும் அரிய பேராற்றல் உண்டென்பார் "அழகே" என மேலுங் கூறினரென்க.

கருக்கொண்ட முகில் மழைபொழிவதுபோலக் கண் திருவருள் பொழியுமென்க. முகிலாகிய கண் என்றமைக்கேற்ப மழையாகிய திருவருள் என விரிக்க. அவற்றையுடைய மலை என்க. முகிலாகிய கண்ணையும், மழையாகிய திருவருளையுமுடைய மலையாகிய இறைவன் என்றுணர்க. இனி, அவவருள்மலையே திருவருளாற்றினையும் தன்னினின்று பெருகச் செய்யும் என்பதுங் கொள்க.

யான் ஒருவனுனது நின் திருவருட் சிறப்பினுலேயே யாகும் என்பது, அவன் திருவள் இயல்பினை யடுத்து "என்னையு மொருவனுக்கி" என்றலால் போதருமென்க. இருந்த என்னை ஒருவனுக்கியது ஆயுத பலத்தினுலன்று; அன்பும் அருளும் என்னும் இவ்வாற்றல்களாலாகும்; அவ்வாற்றலுடையவனே சுத்த வீரன் என்பதுபடச் "சேவக" என்றருளினர். ஒருவன், அன்புடைய ஒருவன்.

தமது வருத்தத்தைக் கையின்மேலேற்றிக் கூறியவாறு தம்மேல் அவன் விருப்பிலன் என்று எண்ணினுராகலின், யாதொன்று மறியாத தீங்

கற்ற கையின் பொருட்டு இரங்குவன் என்பது குறித்தவாறும். இங்ஙனம் கூறுதலும் உடையான் உள்ளத்தை நெகிழவைப்பதொரு முறையாமென்க. உலகின் கண்ணும் பொருளுடையான் ஒருவன்பால் பொருள்பெறச் சென்றார் பல கூறியும் அவன் நெகிழாமை கண்டவித்து, என்பொருட்டு இரங்கீராயினும், நும்மை நாடி வந்த கால்களின் வருத்தந் தீரவேனும் இரங்குதலாகாதா என்றலும் காண்க. ஏனைய கால்களும் வாயும் ஆகிய வற்றையும உடன்கொள்க.

அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மான்நேர் நோக்கி மணாளா போற்றி
வான் அகத்து அமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவர் உள்ளத்து அமுதே போற்றி
கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி
நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி 144

என்னுமிவற்றால், அன்பர்க்கும் தேவர்க்கும் ஒப்பத் தாயே யாகுபவை; அங்ஙனமாயக்கண்ணும், அன்பர் உள்ளத் தமுதமாயும் தேவர் உள்ளத்து அரியையாயும் இருக்கின்றனை. அங்ஙன மாகியமை நின்னாலன்று, அவ்வவர் உள்ளப் பண்பாட்டினாலேயாம். அங்ஙனமாக, நீ எனக்கு நனவின்கண்ணும் அருள் செய்தனை. இன்று அரியையாயினை, அவை என்னாலானவையன்று, நின்னா லாயினவென்கின்றார்.

(பொ - ரை.) கெடுதலில்லாத ஆனந்தக்கடலே வணக்கம்; கேடும் ஆக்கமும் இல்லாத ஒரே பெற்றித்தானவனே வணக்கம்; யாவையுமழிந்த பின்னர் எஞ்சிய முதற்பொருளே வணக்கம்; மானின் உருண்டோடி மருண்டு நோக்கும் கண்ணே போன்ற கண்ணினையுடைய இறைவிக்கு மணவாளனே வணக்கம்; வானிடத்துள்ளார்க்குத் தாயானவனே வணக்கம்; நிலத்தின் கண்ணே ஐந்து தன்மையுடையவனாக விரிந்தவனே வணக்கம்; நீரின்கண்ணே நான்கு தன்மையுடையவனாகத் தங்கியவனே வணக்கம்; தீயின் கண்ணே மூன்று தன்மையுடையவனாக

விளங்கியவனே வணக்கம், காற்றின்கண்ணே இரண்டியல் புடையவனாக மகிழ்ந்தவனே வணக்கம், வெளியின்கண்ணே ஓரியல்புடையவனாக விளைந்தவனே வணக்கம், இரங்கி உள்ளம் நெகுவாரது உள்ளத்துள் விளையும் அமுதமானவனே வணக்கம், கனவின்கண்ணும் தேவர்களுக்கு அருமையுடைய வனாய் இருப்பவனே வணக்கம், நனவிடத்தும் நாயினேற்கு அருள் செய்தவனே வணக்கம், எ - று.

(வி - ரை.) தொழுவார் உறுப்புக்களையும் உணர்வுகளையும் ஆங் காங்கு நின்று தூயனவாக்கித் தான் ஆனந்தக் கடலாக இருந்து அவற்றுள் அவரை மூழ்குவித்து, பிறவியென்னும் உவர்க்கடலால் அவரெய்திய விடாயை நீக்கியருள்வோன் என்க.

அழிவிலா ஆனந்தவாரி என்றவாற்றானே ஆவதுண்டோ வென்றை யுற்றாற்கு, அங்ஙனமுமன்று, என்றும் ஒரே பெற்றியனாவன் என்பார் "அழிவதும் ஆவதுங் கடந்தாய்" என்றனர்.

முழுவதும் இறந்தபின் எஞ்சிய முதல்வா என்க. முழுவதும் என்றது, அவாவினின்றும் விரிந்த உலகம் யாவையுமென்க. அவாவும் அதன் விளைவுகளும் இறந்தபின்னர், அன்பும் அதன் விளைவுகளும் எஞ்சும். அங்ஙனம் எஞ்சியவெல்லாம் அம்முதன்மைப்பாடுடைய அவனே என்க. ஈண்டு முதன்மையென்றது, அழிவதும் ஆவதுங் கடந்த ஆனந்தத்திற் குரிய முதன்மையே என்க. முன்வந்தது முழுவதுமடங்கிய முதன்மை. எனவே, பின்னர் விரிதற்குரியது. ஆதலால் அதனை விதைத்தற்குரிய விதைபோலவும், ஈண்டு வந்ததனைத் துய்த்தற்குரிய விதைபோலவும் கொள்க. இனி, ஒடுக்கம் விரிவென்னுமிரண்டற்கும் அன்பே முதலாயவாறு முணர்க.

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போ டியைந்த தொடர்பு" (குறள். 8 : 3.)

என்றும்,

"சொற்பா லமுதிவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நான் இவ ளாம்பகுதிப்
பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்வெற்பிற்
கற்பா வியவரை வாய்க்கடி தோட்ட களவகத்தே" (திருக்கோ. 8.)

என்றும் வருவனவற்றாலும், அன்ன பிறவற்றும் அஃதுணரப்படும்.

வானகத்தமரர், சாயா அன்பில் தழைத்து உள்ளம் அளிபவர் என்னு மிருதிறத்தார்க்கும் ஒப்பத் தாயேயாக இருந்துவருகின்றான்; தோற்ற ஒடுக்கங்களில் ஈடுபடுத்தி வருகின்றான்; அங்ஙனமே பிறவாரும் ஓம்புதற் குரிய துறைதோறும் ஓம்பிவருகின்றான் என்பார். ஈண்டு "அமரர் தாயே" எனவும், முன்னர்த் "தழைப்பவர் தாயே யாகி" எனவும் கூறினர் என்க. அவன் தாய்மை இயல்பு தோன்ற "மானேர் நோக்கி மணாளா"

என்றனர். மணவாளா என்பது மஞ்ஞளா என்று மருவிற்று. வளி, தீ, நீருலகங்களுக்கும் தாயானுன் என்பதுமுடன் கொள்க.

அதனலன்றே அன்பின் மூலத்திலிருந்து வான்தொடங்கி மண் வரையும் இழிந்து அவ்வவற்றின் தன்மைகளானுன் என்பது. நாற்றமும் சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் என்னும் ஐந்து தன்மைகளும் உடையவன்; அத்தன்மைகள் முறையே மண்ணுக்கும் நீருக்கும் நெருப்புக்கும் காற்றுக்கும் வானுக்கும் உரியவை எனச் சிறப்புப்பற்றிக் கூறப்படும். அங்ஙனமேனும், மண்ணில் அவ்வைந்து தன்மைகளும், நீரில் நாற்றம் ஒழிந்த ஏனைய நான்கு தன்மைகளும், தீயில் நாற்றமும் சுவையும் ஒழிந்த ஏனைய மூன்று தன்மைகளும், காற்றில் நாற்றமும் சுவையும் ஒளியும் ஊறும் ஒழிந்த ஏனையிரண்டு தன்மைகளும் வானில் நாற்றமும் சுவையும் ஒளியும் ஊறும் ஒழிந்த ஒரேயொரு தன்மையும் உணரவென்க. வித்தே மூலமும் முடிவுமாதல்போல, வானமே பூதங்கட்கு முதலும் முடிவுமாதலின் "வானிடை ஒன்ருய் விளைந்தாய்" எனவும், இரண்டாயவிடத்தே இன்பந் துய்க்க ஒண்ணுமாதலின் "வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய்" எனவும் அம்மகிழ்ச்சி ஒளிபெறுதலின் "தீயிடை மூன்ருய்த் திகழ்ந்தாய்"எனவும், அவ்வொளி தண்ணியதாகி மாறி நிலைபெறுதலின் "நீரிடை நான்காய் நிகழ்ந்தாய்" எனவும், அஃதாவது எல்லா நுகரவும் பெறுமாறு விரிந்தமையால் "பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய்" எனவும் கூறினர். வெளியிடை விளைவது கருவாக வளியிடை மகிழ்தலும், அம்மகிழ்தல் கருவாகத் தீயிடைத் திகழ்தலும், அத்திகழ்தல் கருவாக நீரிடை நிகழ்தலும், அந்நிகழ்தல் கருவாகப் பாரிடைப் பரத்தலும் முறையே அகத்திலிருந்து வெளிப்போந்தவாரும்.

இத்தகைய விளைவு அன்பின் மூலத்திலிருந்து போந்தமையின், அஃதுணர்ந்து அவ்வன்பினுலேயே உள்ளம் நிறைந்து முறறிக் கனிந்து நோக்கார்க்கு, அக்கனியுள்ளத்தின் பெருஞ்சுவையாகிய அமுதச்சுவையாக இருப்பான் என்பதும், அஃதுணராது ஆசையின் வலைப்பட்டு உள்ளம் வைரமேறினுர்க்கு, அவ்வுள்ளத்தின் பெரிய மருள் நஞ்சு விஞ்ச, அவன் அதனுட்படாது விலகி அரியனுய் இருப்பான் என்பதும் தோன்ற "அளிபவர் உள்ளத் தமுதே" என்றும், "கனவிலும் தேவர்க்கு அரியாய்" என்றும் கூறினர். கத்தி செய்தான் நோக்கத்தினை அறிந்து அதனை உபயோகித்தார் நற்பயனடைந்து மகிழ்தலும், அஃதறியாது பிறழ உபயோகித்தார் தீமை எய்தித் துன்புறுதலும், அவ்வின்ப துன்பங்கள் கத்தி செய்தானைச் சாராது அவன் ஓதிய முறையே கடைப்பிடித்தார் அறிவையும், கடைப்பிடியாதார் அறியாமையையும் சார்ந்து நிற்றலும்போல, அளிபவர் ஆனந்தமடைதலும், அமரர் அவனை யடைதற்கருமை யெய்தலும், அவை அவனைச் சாராது, அவன் ஓதிய முதுநூல் அறிவே கடைப்பிடித்து நின்ருர் அறிவையும், கடைப்பிடியாதார் அறியாமையையும் சார்ந்து நிற்றலும் என்பவை அமையும் என்க.

இனி, இறைவன் அங்ஙனம் எளியனுயதும், அரியனுயதும், பாரிடை ஐந்தாய்ப் பரந்ததினுலும், வெளியிடை ஒன்ருய் விளைந்ததினுலுமே யாமெனின், அங்ஙனமன்று, இவையெல்லாம் முக்குணத்தின் காரியமாத லின்றி வேறன்ருமாதலின், அன்பர் அறிவு விரிதலும், அன்பிலாரறிவு சுருங்குதலும் என்பவையே அவற்றின் காரணமாயின வென்று மூலம் நாடி ஈண்டுரைக்க. மேலும் அவனது அருமையும் எளிமையும் "வானேர்க் கரிய மருந்தே...ஏனேர் கெளிய இறைவா" என்புழியும், அங்ஙனமாய காரணம் ஈண்டும் உரைக்கப்பட்டனவென்க.

இவை இங்ஙனமாக, அவன் என் நனவிடத்தும், குருபரனுய் வந்து, தாயாகவிருந்து, அருள் செய்து, என்னை யடிமையாக ஏற்றுக்கொண்டு, என் வாழ்வுக் கின்றியமையாத செல்வமுமாகி, என் முடிமேல் தன் அடி வைத்து, வேண்டிய அருள்கள் யாவும் செய்தான்! என் கனவிடத்தும் அங்ஙனமேயென்பது கூறுதேயமையுமன்றே! அங்ஙனமாகவும் இன்று என் உள்ளத்தில் அமுதமில்லை! எனவே அருமை காணப்படுகின்றது! இதன் பொருள் என்னை என்பது, " அளிபவர் உள்ளத்தமுதே...கனவிலும் ...நனவிலும் நாயேற்கருளினை " என்னுமடுக்குகளினுற் போந்தவாருயிற்

இடைமரு துறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
சீர்ஆர் திருவை யாரு போற்றி
அண்ணு மலைஎம் அண்ணு போற்றி
கண்ஆர் அமுதக் கடலே போற்றி
ஏகம் பத்து-உறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு ஆனுய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்ருேர் பற்றுஇங்கு அறியேன் போற்றி
குற்ரு லத்து-எம் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத்து அழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க்கு அருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழ்இரு மூவர்க்கு
அத்திக்கு அருளிய அரசே போற்றி
தென்னுடு உடைய சிவனே போற்றி

எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக்கு அருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சேல் என்றிங்கு அருளாய் போற்றி
நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி 173

என்னுமிவ்வடிகளினால், பாரிடை ஐந்தாய்ப் பரந்ததோடமையாது, அப்பார்க்கண் உள்ள தலங்களாகவும், அவற்றின் தலைவனாகவும் அமைந்திருக்கும் அமைதியே பற்றுக்கோடாகக் கொண்டிருத்தலன்றி வேறொன்று மறியாத யான், தனித்திருந்து அஞ்சித் தளர்வடைந்தேன். அத்தகையேன் தளர்வகன்று இறுமாந்திருக்குமாறு அருள் செய்வாயாக என்று கூறுகின்றார்.

(பொ - ரை) திருவிடைமருதூரில் உறையும் எம்மப்பனே வணக்கம்; சடையின்கண்ணே கங்கையாற்றைத் தடுத்து நிறுத்தித் தாங்கியவனே வணக்கம், திருவாரூரில் விரும்பி வீற்றிருக்கும் தியாகராசனே வணக்கம்; செம்மை வாய்ந்த திருவையாறுடையானே வணக்கம், திருவண்ணாமலையிலுறையும் எம்மிற் பெரியோனே வணக்கம்; கண்ணால் நுகரப்படும் அமுதம் விளையும் கடலே வணக்கம், திருவேகம்பத்திலுறையும் எந்தையே வணக்கம்; இடப்பாகம் உமையம்மை வடிவாயவனே வணக்கம், திருப்பராய்த் துறையுறையும் மேலோனே வணக்கம்; திருச்சிராப்பள்ளியில் மேவிய சிவனே வணக்கம், (என்றிங்ஙனம் அத்தலங்களோடு பொருந்திய நின்னை வணங்குதலேயன்றி (வேறொரு பற்றுக் கோடு மில்லாதேனாவேன் யான். அங்ஙனம் என்பற்றுக் கோடானவனே வணக்கம்; (அங்ஙனமே தான் இன்னும் போற்றி வருவேன்.) திருக்குற்றாலத்திலே கூத்தயரும் எம் கூத்தப்பெருமானே வணக்கம்; திருவாவடுதுறை மேவிய குருமணியே வணக்கம்; ஈங்கோய் மலையில் உறையும் எந்தாய் வணக்கம், நன்மை நிறைந்த திருப்பழனத்தில் அழகனே வணக்கம், கடம்பூரில் மேவிய தான் —தோன்றிக் கடவுளே வணக்கம், தன்னைச் சரணடைந்தார்க்கு அருள் செய்யும் அப்பனே வணக்கம், பட்ட மங்கையில் உள்ள இத்திமரத்தின்கீழ் இயக்கிமார் அறுவர்க்கும் அந்தப் புகலிடமளித்த அரசனே வணக்கம்; பாண்டிய நாட்டைத் தன்னுரிமை நாடாகக்

கொண்ட சிவனே வணக்கம் ; அஃதொழிந்த எல்லா நாட்டவர்க்கும் இறைவனே வணக்கம் ; பன்றிக்குட்டிக்கு அருள்செய்தவனே வணக்கம், பெருமையிற் சிறந்த கயிலாயமலையை உடையவனே வணக்கம் ; எனக்கும் அருள்செய்தல் வேண்டும், அது செய்யவல்ல அம்மானே வணக்கம் ; அறியாமை இருள்கெடும் வண்ணம் அருள் புரியும் இறைவனே வணக்கம், நின்னடியேன் யான்; தளர்வடைந் தேன் ; தனித்தவனுமானேன் ; வணக்கம், நின் ஞான சபைக் கண்ணுள்ளார் என்னையும் ஒருவேனுக ஏற்றுக்கொள்ளுமாறு கருதும்படி அருள்செய்வாயாக, அச்சபையின் தலைவனே வணக்கம், அதுகாறும் நீ அஞ்சாதே என்று இங்குள்ள எனக்கு அருள்செய்வாயாக, வணக்கம் ; நஞ்சினையே இனிய அமுதமாக விரும்பியுண்டவனே வணக்கம், எ - று.

(வி - ரை.) நனவின்கண்ணும் அருள்செய்து பிரிந்து துழல விடுத்துச் சென்றுருகலின், தாம் அவனோடு பயின்ற இடங்களும், அவன் பிறரொடும் பயின்ற இடங்களும், ஆங்காங்குச் செய்த அருள்களும் பற்றுக்கோடாயின என்க. இனியாரொடு பயின்ற இடங்களும் அவ்வினி யாரையே யொக்குமென்ப. அது கருதி மற்றோர் பற்றிங் கறியேன் என்றருளினாராதலின், அத்தலங்களோடு பொருந்திய நின்னை வணங்கி வருதலேயன்றி வேறொரு பற்றுக்கோடுமில்லேன் என விரித்தாம். அங்ஙனமே இன்னும் போற்றிவருவேன் எனவும் விரித்துக்கொள்க.

பாங்கு - நன்மை. விடங்கன் - தானே தோன்றி. அப்பன், எந்தை, அரசு, அண்ணு, கோ, அம்மான் என்பனவெல்லாம் காதல்பற்றி எழுந்தன. அடைதல் - அடைக்கலம் புகுதல். திக்கு - புகலிடம். அத்திக்கு - நெஞ்சறி சுட்டு.

" முத்திக் குழன்று முனிவர் குழாம் நனிவாட
அத்திக் கருளி அடியேனை ஆண்டுகொண்டு " (திருத்தெள். 12.)

என மேலுங் கூறப்பட்டுளது. இனி, அத்தி வெள்ளானை எனக்கொண்டு அதன் சாபந் தீர்த்த வரலாறுரைப்பாருமுளர் இயக்கிமார் அறுவர் வரலாறு கீர்த்தியுட் கூறப்பட்டது. புராணகாரர் இத்தியை ஆலமரம் என்றுரைப்பர்.

தென்னுட்டை உரிமை நாடாக உடையவன். ஏனைய எல்லா நாடு களையும் ஆட்சி செய்வோன் என்க. எனவே, எல்லாவிடத்துயிர்களும் அவன் தலைமையில் அடங்கியுள்ளன என்பதாயிற்று.

ஏனக் குருளைக்கருளியது என்பது பன்றிக்குட்டிக்குப் பாலூட்டிய திருவிளையாடல். அது வெளிப்படை. இதனுல் அவன் எளிமையும், கயிலைமலை யுடைமையால் அவன் அருமை பெருமைகளும் புலப்பட்டன. மானம் - பெருமை. எவ்வாற்றுனும் அழியாமையும், சலியாமையும், பேரின்பமுடைமையும், ஆண்டு இறைவன் உண்மை வடிவுடையனுக இருத்தலும் என்னுமிவை முதலாயின அதற்குப் பெருமை தருவனவென்க.

இத்தலங்களிலெல்லாம் இறைவன் பிழை பொறுத்து உயிர்களை ஆண்டுகொண்டமையே கருத்திலிருத்தி அவற்றை அடைவுபடுத்திக் கூறினர். தம் பிழையையும் பொறுத்துத் தமக்கும் ஆக்கம் செய்ய வேண்டுமென்பது அறிவித்தற்கு. இன்னின்ன இடங்களில் இங்ஙனமும் இங்ஙனமும் வீற்றிருந்து இன்னின்ன அருள்களைச் செய்தவனே, என் அம்மானே, அங்ஙனமே எனக்கும் அருளிடவேண்டும் என்றவாறும். ஈண்டுப் பயின்ற தலவரலாறுகளை அவ்வத்தல புராணங்களுட் காண்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

யான் நின் அடியேனுவேன் ; நின்னருளாகிய பற்றுக்கோடின்மையால் இருள் கவிந்துகொள்ளத் தளர்வடைந்தேன் ; தமியனுமானேன். ஆதலால், என் தனிமை நீக்கி நின் சபையிலுள்ள அடியாருடன் கூட்டித் தளர்வகற்றி, அருள்பெய்து இருள்கெடச் செய்வாயாக. இவற்றையடைதற்கு இன்றி யமையாததாகிய நின் ஞானசபையானது, என்னையும் தன் உறுப்பாளருள் ஒருவேனுக ஏற்றுக்கொள்ளக் கருதுமாறு அவர்களுக்கு உணர்வூட்டுதி. நீயே அதன் தலைவனுதலால் நின் கருத்திற்கு அச்சபை உடன்படும். அவ்வுடன்பாட்டால் விரைவில் யான் அங்கு அழைக்கப்படுவேன். ஏனென்றுல், நீ என்னை விலக்கமாட்டாய். விலக்கும் கருத்துடையையேல், பண்டு கொடிய நஞ்சினையும் விலக்கியிருப்பாய். விலக்குதற்குரிய அதனை விரும்பி அமுதமாக உண்டாயன்றே! அதனுல் அதுகாறும் யான் அஞ்சா திருக்கும்படி இங்கிருக்கும் எனக்கு நீ " என் அடிமையே நின் கருத்தின் படி நின்னை விரைவாக என் ஞான சபையில் ஏற்றுக்கொள்வேன். அது காறும் அஞ்சாதிரு " என, ஆறுதல் வார்த்தைகளை உய்த்துவிடுக என்பது அருளிடவேண்டும் என்பது தொட்டு இதுகாறும் போந்த பொருளாயிற்று.

அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி

என்னுமிவ்வடிகளினுல், நீயே யாவைக்கும் நினக்கும் பற்றுக் கோடாவை ; அங்ஙனமாக யான் இங்ஙன மலைதல் முறையாகுமோ ? இம்முறையின்மையினைத் தரியேன் என்றுரைக்கப்படுகின்றது.

(பொ - ரை.) யாவர்க்கும் உயர்ந்தோனே வணக்கம் ; தலை வனே வணக்கம் ; என்றுமுள்ளவனே வணக்கம், தளையற்றவனே வணக்கம் ; அன்பர்பால் அன்புடையவனே வணக்கம் ; யாவையும் தோன்றுதற்கு இடமாக இருப்பவனே வணக்கம் ; பெரியோனே வணக்கம் ; யாவற்றுக்கும் இறைவனே வணக்கம் ; அறிதற்கரிய

வனே வணக்கம்; இயல்பாகவே தளையற்றவனே வணக்கம், அறிஞர் மேற்கொண்ட அழகிய இன்ப ஒழுக்கமே வணக்கம், நின்னியல்பு அங்ஙனமாக யான் இங்ஙனமாதல் முறையோ! இது பொறுத்தற்கியலேன், முதல்வனே வணக்கம்; எ – று.

(வி - ரை.) அறிவிற்கும், தலைமைக்கும், அழிவின்மைக்கும், அழுக்கின்மைக்கும், அன்பிற்கும், தோற்றத்திறகும், பெருமைக்கும், இயங்குதற்கும், பற்றுக்கோடாவோன் இறைவன் என்க. அத்தகையோன் பெறுதற்கரியனுமாவான்! அவ்வருமைக்கண்ணும் பற்றுக்கோடாகவே இருக்கின்றான் - எத்துணைவியப்பு! என்றபடி.

அறிவும், தலைமையும், அழியாமையும், அழுக்கின்மையும், அன்பும், பேதமும், பெருமையும், இயக்கமும் என்னுமிவை முதலாயினவற்றைத் தரும் நெறி என்க. மறையுட் பயின்ற எண்வகை மண நெறிகளுள் அன்பின் ஐந்திணை நெறியே அந்நெறியென்பார் மறையோர் கோல நெறி என்றார்.

என்னை அந்நெறிப்பயில்வித்து, அவ்வாக்கமெல்லாம் உளவாக்கி, இன்புற உடனிருந்து, என்னைத் தனியே விட்டுப் பிரிந்துசென்று இப்போது அரியையாயினை. யான் பெற்ற அவ்வாக்கமெல்லாம் இப்போது பெறுதற்கருமையினாலே பெருந்துன்பமாக மாறி வருத்தாநின்றன. அதனின் நீங்குதற்கு ஒரு பற்றுக்கோடும் இன்றியே வருந்துகின்றேன். யான் அங்ஙனமிருத்தல் முறையாகுமோ? அத்துன்பங்களையும் முறையின்மையையும் பொறுக்கமாட்டேன் என்க.

அறிவூட்டுவோனாகலின் அத்தன் என்றும், தலைவனாகலின் ஐயன் என்றும், அழிவின்றி நிலைநிற்க வைப்பவனாகலின் நித்தன் என்றும், எல்லாவற்றோடும் கலந்திருப்பினும் அவற்றாலுளவாகும் அழுக்கேறா வண்ணம் அறுப்பவனாதலின் நிமலன் என்றும், இயல்பாகவே மலமின்றியிருக்கச் செய்பவனாதலின் அமலன் என்றும், அன்பு செய்தற்கு இடமானவனாதலின் பத்தன் என்றும், தலைவன் தலைவியராகவும், அவ்வவர் குணங்களாகவும் பேதப்பட்டு நின்று இன்பந் துய்க்குமாறு வைப்பவனாதலின் பவன் என்றும், பிறர் தீண்டி அழுக்குச் செய்யாவாறும், மதிக்குமாறும், அன்புற்றுப் பணி செய்யுமாறும் எம்மை வைப்பவனாதலின் பெரியோன் என்றும், பேதப்பட்டு நின்றவனே பிரிந்து போக ஒருமைப்பாடெய்தலால் அருமையுடையனாகவிருத்தலின் அரியன் என்றும், இவை யாவும் தனக்குத் தருவார் பிறர் இன்றாகவும், தானே இயல்பாக உடையனாய் இருந்து, பிறர்க்கு வழங்கும் முதன்மைப்பாடுடையனாகலின் முதல் என்றும் கூறினார்.

உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சேர் அடியாள் பங்கா போற்றி

அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி
இலங்கு சுடர்-எம் ஈசா போற்றி 185

என்னுமிவ்வடிகளினால், இறைவன் என்போன்றார் இயல்பை நன்றாக அறிபவனாகவிருந்தும் என்னை யலையுமாறு செய்தனன் என்று கூறப்படுகின்றது.

(பொ - ரை.) சுற்றமானவனே வணக்கம், உயிரானவனே வணக்கம்; வீடானவனே வணக்கம்; அவ்வீட்டின் பயனாகிய சிவமே வணக்கம்; அதன் தலைவனாகிய இளமையும் அழகும் ஆற்றலுமுடையவனே வணக்கம், மணவாளனே வணக்கம், பஞ்சினை ஒத்த திருவடிகளையுடைய உமைபாகனே வணக்கம்; நீ அத்தகையையாகவும் யான் வருந்தினேன், அவ்வருத்தமுடையேன் நின் நாய்போன்றேனும் அடியேனுமாவேன், வணக்கம்; விளங்கா நின்ற சுடர்மேனியையுடைய ஈசனே வணக்கம் எ - று.

(வி - ரை.) பின்னர் மணவாளன் என வருதலின், அவனே தலைவிக்குப் பிற சுற்றமாக அமைபவன் என்பது கொண்டு, ஈண்டுறவே என்றதற்கு ஆயத்தார் என்றுரைக்க. என்றது அடியவரை என்க

அச் சுற்றத்தவராற் பற்றப்படுதற்குரிய தலைவியின் உயிர் என்க.

அவ்வுயிர்க்குப் பற்று வீடென்க. சிறப்புடையதாகலின் சிறவென்றார். துறவு என்பது போலக் கொள்க.

அவ்வீட்டின் பயன் சிவம். மங்கலம் இன்பம் செம்மை முதலாய இத்தொடக்கத்தனவற்றை அப்பயன் என்றுணர்க.

அதன் தலைவன் மஞ்சன். மஞ்சன் என்பது இளமையும் அழகும் ஆற்றலுமுடையோன் எனப் பொருள்படும். வேறுங் கூறுப.

அவன் உறவாகவும் உயிராகவும் சிறவாகவும் சிவமாகவும் போற்றப்படுதலும், அவ்வவராகவிருந்து ஆக்கந் தருதலும், மணவாளனாக விருத்தலினாகலின் "மணாளா" என்றார். அவனே அங்ஙனம் பெறுதற்கு அவன் பிரமசரியனாகவே யிருப்பான் என்க.

இவை யாவற்றுக்கும் மூலமாகிய அம்மையப்பர் இயல்பைப் "பஞ்சேரடியாள் பங்கா" என்பனாலுணர்த்தினான். செம்பஞ்சுக் குழம்பூட்டிய அடி என்றுரைக்கலாமேனும், 'மிருதுபாதநாயகி' என்னும் அன்னை திருப் பெயரைப் பஞ்சின் மெல்லடியாள் என மொழிபெயர்த்துவரும் ஆன்றோர் வழக்காறு கருதி அங்ஙனமுரைத்தாம்.

அவன் என் உறவும், உயிரும், சிறவும், சிவமும், மஞ்சனும், மணாளனும், பஞ்சேரடியாள் பங்கனுமாவன் என்பார் நாயேன் அடியேன் என்றனர்.

எனவே, அவன் எல்லாருடைய இயல்புகளையும் நன்கறிவான். என்னியல்பும் அறிவான்; பஞ்சேரடியாள் பங்கனன்றே! ஆதலின், தலைமகளின் குணவியல்பும் ஒழுக்கவியல்பும் பிறவும் நன்கறிவான்; அங்ஙனம்

அவன் அறிந்து வைத்திருப்பவும் யான் துன்புறுகின்றேன். அம்மம்மா! இது பேரிரகசியம் என்றவாறும்.

அத்துன்பமாகிய பேரிருளில் தோன்றும் சுடர் என்க. ஈண்டுத் துன்பம் என்றது, அவன் புணர்ச்சியாற் பெற்ற ஆக்கங்கள், பிரிவினுற் கிடைக்கப் பெருமையால் மாறுபட்டவை என்றும், அம்மாறுபாடு மனத் தகத்தே அவன் சுடராய் இலங்குதலினுல் உளதாயதென்றும், அச்சுடரா வது, அவனளித்த இன்ப ஆக்கங்களின் நினைவென்றும், ஈசனுகலின் அவை யெல்லாம் மீளத் தருதற்குரியனென்றும் உரைக்க.

கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையார் அரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றில் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத்து அரனே போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட்கு அன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேர்ஆ யிரம்உடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீள்ஒளி ஆகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி. **206**

என்னுமிவ்வடிகளினுல், அவ்வலைவின்கண்ணும் எனக்குப் பற்றுக் கோடாக இருந்தவனே, என்னையும் உய்வடையுமாறு ஆண்டு கொள்வாயாக என வேண்டுதல் கூறப்படுகிறது.

(பொ - ரை) கவைத்தலை என்னுமிடத்திலே விரும்பியிருக் கின்ற கண்ணே வணக்கம்; குவைப்பதி என்னுமிடத்திலே நிறைந் திருக்கின்ற தலைவனே வணக்கம், மலைநாட்டை ஆட்சிசெய்யும் வேந்தனே வணக்கம், கலைகள் நிறைந்த அரிகேசரி என்னும் நாடுடையவனே வணக்கம்; திருக்கழுக்குன்றிலுறையும் செல்வனே வணக்கம், மலைகள் பொருந்திய திருப்பூவணத்தில் அரனே

வணக்கம், அருவமும் உருவமும் உடையவனே வணக்கம், பொருந்திய அருள் ஒழுகும் மலையே வணக்கம், துரியாதீத நிலையில் தோன்றும் ஒளியானவனே வணக்கம், அறிதற்கரியதாகிய தெளிந்த பொருளே வணக்கம், தொளைக்கப்படாத முத்தொளி போன்றவனே வணக்கம், ஆட்பட்டவர்களுக்கு அன்பு செய்பவனே வணக்கம், உண்ணற்கு அமையாத அமுதமானவனே, அதனை யூட்டும் அருளுடையவனே வணக்கம், ஆயிரம் திருப்பெயர்களை யுடைய பெருமானே வணக்கம், தாளியறுகந் தாரணிந்தவனே வணக்கம், வளர்ந்து செல்லும் ஒளியாகிய கூத்துடையவனே வணக்கம், சந்தனக் கலவை பூசிய அழகனே வணக்கம், சிந்தனைக்கு எட்டாத பெரிய பொருளே வணக்கம், ஆகமங் கூறுதற்கு இடமாக அமைந்த மகேந்திர மலைக்கண் வீற்றிருப்பவனே வணக்கம், எம்மையும் உய்வடையும்படி ஆட்கொள்வாய் வணக்கம், எ - று.

(வி - ரை.) "கழுக்குன்ற தனில் வழுக்கா திருந்தும்" (கீர்த்தி. 89.) எனவும், கழுக்குன்றப்பதிகம் ஒவ்வொரு பாடலிறுதிக் கண்ணும்,

"காட்டினாய் கழுக் குன்றிலே"

எனவும் வருவனவற்றாலும்,

"பூவண மதனில் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்" (கீர்த்தி. 50-51.)

எனவருவன வற்றாலும், இறைவன் அடிகளை ஆட்கொண்டருள் செய்து பின்னர்ப் பிரிந்தானாக, அதனால் அலைக்கப்பட்டவர் தமக்குப் பற்றுக்கோடாகத் தலங்கள்தோறும் திரிவாராயினர். அச்சமயத்திலேயே இவ் விறுதிப் பகுதி கூறப்படுதலாலும், அங்ஙனம் திரிந்தபோது எதிர்ப்பட்ட தலங்களுள், கீர்த்திக்கண் திருமேனி காட்டிய தலங்களாகப் பெறப்பட்டன வற்றுள், கழுக்குன்றமும் பூவணமும் எடுத்து மொழியப்படுமாற்றாலும், ஈண்டுக் கூறப்பட்ட அவ்விரண்டு தலங்களோடும் பிற கவைப்பதி, குவைப் பதி அரிகேசரி மலைநாடு மகேந்திரம் ஆதியனவும், அப்பிரிவின்கண் அலைந்த அடிகளுக்குப் பற்றுக்கோடாகக் கோலங்காட்டிய தலங்களாம் என்பது துணியப்படும். இங்குக் குவைப்பதி கவைத்தலை அரிகேசரி மலை நாடு ஆதியவற்றை, இறுதிக்கண் தந்துரைத்த வாற்றானே, ஆண்டுக் கீர்த்தித் திருவகவலுள் கூறப்பெறற கழுக்குன்றம் பூவணம் ஆதிய கோலங்காட்டிய தலங்களோடு இவற்றையும் ஞாபகத்தாற் கொள்ளும்படி வைத்தருளினரென்க. அத்தலவரலாறுகளும் இன்று பெறுதற்கரியன. இன்னுமிதனானே, திருக்கோவையாருள் கூறப்பெற்ற திருப்பரங்குன்று திருக்கொடுங்குன்று பொதியில் திருமூவல் திருச்சுழியல் திருவியலூர் ஆதியனவும் திருவாசகத்துள் இடம் பெற்றிலவேனும், இடம் வகுத்துக் கீர்த்திக் கண் கொண்டுரைக்க வேண்டுமெனவும் கொள்க.

இனி, கவர்பட்ட பல வழிகள் பிரியும் ஓரிடம் கவைத்தலை எனச் சொற் போக்கிறகேற்பப் பொருள் கொண்டு அப்பல வழிகளின்கண்ணும் வழிச் செல்வோர் மயங்காவாறு விளக்கி நிற்கும் வழிகாட்டிபோல, பல சமய நெறிகளுள்ளும் இடர் படாது, அறிவுக்கண்ணுகி நல்வழி தேறச் செய்வான் என விளக்குதலும் ஓரளவு பொருந்துமேற்கொள்க.

இனி, கலையார் அரிகேசரியாய் என்றதனை அரிகேசரி ஆர் கலையாய் என இயைத்துக் கொல்லும் சிங்கத்தினது அரிய தோலையுடுத்தியவனே எனப் பொருள் கொள்ளலாமேனும், இவ்வெந்தமை யுய்யக் கொள்வாய் என்னும் பகுதியுட்பட்டவற்ருேடு யாதொரு தொடர்பும் இன்றிப் பொருள் வேறுபட்டுப்போதலின் அங்ஙனம் கொண்டிலம்.

அருவம் உருவம் முதலியனவாகப் பேதப்படுதல் உயிர்கள் செவ்விக் கேற்றவாறென்க. அருவம் - நுண்ணிய உருவம். மூத்திறத் திருமேனி களுள் அருவுருவத் திருமேனியே சிந்தனைக்குப் பெரிதும் சிறந்திருத் தலின், அதனை மருவிய கருணைமலையே என்றனரென்க.

துரியமுமிறந்த சுடர், துரியாதீதநிலைக்கண் விளங்கும் சுடர். நால் வகை நிலைகளையும் கடந்தநிலை துரியாதீதம் என்க. நாலாவது நிலைக் கணுள்ளது சிவம் என்னும் செம்பொருள் என்பாரும், அதனைக் கடந்தது அப்பொருள் என்பாருமாகத் தம்முள் முரண்பட்டார் பலர். ஒன்று இரண்டு மூன்று முதலாய எண்களுக்கு எங்ஙனம் முடிவில்லையோ, அங்ஙனமே பரமபொருளும் முடிவறியப்படமாட்டாது. பூரணம் என்னும் சொல்லே முடிவறியப்படாததன்ருே! எனவே, இறைவன் முழுதும் அறியப்படாருகை, அஃதுணர்ந்துப்பணிவுடையராகி, அடைக்கலம் புகுதலே அறிவு மார்க்கமாகு மென்க.

அங்ஙனம் அறியப்படானேனும், அவ்வறியப்படாத பொருளே எல்லா வுலகங்களையும் இயக்கி வருகின்றதென்று முண்மையை, காணப்பட்ட வுலகின்மேல் வைத்துணரப்படுமென்பார் "தெரிவரிதாகிய தெளிவே" என்ருர்.

தோளா முத்தச் சுடர், இறைவனது இடையீடின்றிப் பூசப்பட்ட வெண் ணீறு விளங்கும் திருமேனியை உணர்த்திநின்றது. அதனுல், எல்லாம் ஒடுங்கிய எல்லையற்ற பாழ்வெளிக்கண் உணரப்படுவான் என்பது உணர்த்தப்பட்டது.

இங்ஙனம் அரியனேனும் அன்புத் தொடர்புடையார்க்கு எளியனுவான் என்க. எனவே, ஆராய்ச்சி நெறிக்கண் ஆராயுந்தோறும் ஆராயுந்தோறும், அவ்வம்முடிபுகளை விட்டுவிட்டு நீங்கி அப்பாற்பட்டும் அப்பாற்பட்டும் நிற்பான் என்பதும், அன்பு நெறிக்கண் அவ்வன்பு பெருகுந்தோறும் பெருகுந்தோறும் அவ்வத்துறைகளுள் அகப்பட்டு அண்மையில் நிற்பான் என்பதும் வற்புறுத்தியவாறும்.

பேராயிரம் என்பது அளவின்மை குறித்து நின்றது. அடியவர் தத்தம் சிந்தனை வடிவங்களுக்கு இட்டுவழங்கிய பெயர்கள் என்க.

தார் மாலை கண்ணி என்றவற்றுள் தார் விசேடத்தின் பொருட்டும், மாலை அழகின் பொருட்டும், கண்ணி போரின் பொருட்டும் அணியப்படுவன என்ப. இத்திருப்பாடற்கண் தாளியறுகந் தாரும், கழுநீர் மாலையும் பயின்றுள்ளன. தாளியறுகு, ஒருவகை யறுகு. வேறுங் கூறுப.

திகிரி சுழலும்போது அதன் உறுப்புக்கள் தோன்றுவாய், வட்டித்த ஒளியே தோன்றுதல்போல, நிருத்தத்தினால், உலகின் நீங்கிநின்ற பேரறிஞர்களுக்கு, உலக வேறுபாடுகள் தோன்றுவாய் ஒளியே தோன்றும் என்க. வேறுவேறு சமயங்களில் எடுக்கப்பட்ட நிழலுருவப் படங்கள் சுற்றப் படுகையினாலே திரையில் ஒவ்வொன்றின் செயலையும் தொடர்பாகக் காட்டுதல்போல, அணுக்களும் முக்குணங்களும் செறிந்து உலகமும், உலகத்துத் தலங்களும், ஒழுக்க முறைகளும், பிறவும், இறைவன் நடனத்தினால் தொடர்புற்று நிகழ்ந்துவருகின்றன. இவை உலகத்துள் ஒன்றியிருந்தார்க்கு அவ்விரண்டும தோன்ற “ நீள் ஒளியாகிய நிருத்தா ” என்றார்.

பிறரைத் தன்பால் ஈடுபடச் செய்தலின் “ சந்தனச் சாந்தின் சுந்தர ” என்றனரென்க.

தாய் எனவும், வேதியன் எனவும், ஆடகமதுரை அரசெனவும், பிறவாறும் சிந்தித்துரைக்கப்பட்டவை எல்லாம் உபசாரமாக, உண்மையில் நீ சிந்தித்தற்கரிய முழுப்பொருளாவை , ஆதலால் அப்பிழை பொறுத்தல் வேண்டும் என்பார் “ சிந்தனைக் கரிய சிவமே ” என்றனர். சிவம் - முழுப்பொருள்.

இதுகாறும் இங்ஙனமெல்லாம் கூறப்பட்டவன் மகேந்திர வெற்பன் என்க. அவனே இந்நூற்கும், தலைமகளாகிய அடிகளுக்கும், அவர் ஆயத்தார்க்கும் இந்நிலவுலகில் முதல்வனாயினான் என்க. மந்திரமாமலை மேயாய் என்ற காலையே, இறைவன் தன்னை ஆண்டருளிய ஆக்கங்களும், பிரிந்த துன்பமும் நினைவிற்கு வருமென்க. இனிமேல் ஆற்றுதற்கரியேனாவேன் ; ஆதலால் உய்யக்கொள் என்றபடி.

புலிமுலை புல்வாய்க்கு அருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்குஅன்று அருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுஈறு ஆனாய் போற்றி 212

என்னுமிவற்றால் பிறவற்றின் வாட்டந் தீருமாறு அருள் செய்தனை, என் அறிவு வாட்டமடையும்படி உடன்பட்டனை என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) பெண்புலி தன் முலைப்பாலை மான்கன்றுக்கு ஊட்டும்படி ஏவியருளியவனே வணக்கம் ; அலைவீசுகின்ற கடலின்

மீது நடந்து சென்றவனே வணக்கம், கருங்குருவிக்கு அன்றொரு காலத்தே அருள்செய்தவனே வணக்கம், என் பேரறிவானது வாட்ட மடைதற்கு உடன்பட்டவனே வணக்கம், பூமியில் நிலைபெறும்படி பலமுறையுங் காட்டிய காதலை வெளிப்படுத்துங் குறிப்புக்களை யுடையவனே வணக்கம், முதலும் நடுவும் முடிவுமானவானே வணக்கம், எ – று.

(வி - ரை.) புல்வாய் - கலைமான். கலைமான் கன்றின் வாட்டந் தீர்த்தான் என்க. முன்பொரு காலத்தே, பாண்டிநாட்டுக் கடப்பங் காட்டிலே, புலிமரபு பெருகிப் புல்வாய் மரபு அருகிற்று. அக்காலத்தில் ஒரேயொரு புல்வாய்ப்பிணை ஒரு கன்றினை யீன்று, ஒரு பற்றை மறைவில் விட்டுவிட்டு நீரருந்த ஒரு மடுவை நாடிச் சென்றபோது, கல்நெஞ்ச வேட்டுவன் ஒருவனால் கொலைசெய்யப்பட்டு இறந்தது. இறைவன் அக்கன்றுக்குப் பாலூட்டி வளர்க்குமாறு ஒரு பெண்புலியை ஏவ, அப்புலியும் அங்ஙனமே அதனைப் பாலூட்டி வளர்த்ததெனத் திருவிளையாடற் புராணங் கூறும்.

கருங்குருவிக் கருளிய வரலாறு, முற்காலத்தில், கரிக்குருவிகள் காக்கைகளால் நலிவுறுத்தப் பெற்று வருந்துகையில், அவற்றுள் ஒன்று, இறைவன் திருவருளால், ஆலவாய்ப் பொற்றாமரைக் குளத்தில் நீராடி இறைவனை வணங்கி ஒழுகி வருகையில், இறைவன் அதன்முன் தோன்றி மிருத்தியுஞ்ஜய மந்திரத்தை அறிவுறுத்தினன். அதுவும் அம்மந்திர வலியால் பகை வென்று, வலியான் எனனும் பெயரையும் தன் சாதிப் பெயராகப் பெற்றதென அப்புராணங் கூறும்.

எளியாரை வலியார் வருத்தினால் வலியாரைத் தெய்வம் வாட்டும் என்ப. ஆற்றல் குறைந்தவை ஆற்றல் நிறைந்தவற்றால் அழிக்கப்படுதல் மரபு மரபாகவே அறியப்பட்டு வருவதொன்று. அங்ஙனம் நிகழுமபோது ஆற்றல் இல்லாதவை இறைவனையே ஆற்றலாகப் பெற்றுத் தம் பகை வென்று மரபினையுங் காத்து இன்புறும் என்ரவாறும்.

இங்ஙனமாதலினாலே அலைகடல்மீமிசை நடந்த வரலாறும் அக்கடல் வாழும் ஆற்றல் குறைந்த உயிர்களுக்குச் சார்பாகவே நடைபெற்றதாக அமையுமென்பது கூருதேயமையுமென்க. இனி, இவ்வரலாறு, வண்டோதரியின் பொருட்டு இலங்கைக்குச் சென்றதனைக் குறிக்குமெனவும்,

“ ஆர்கலி சூழ் தென் னிலங்கை அழகமர் வண்டோ தரிக்குப்
பேரருள் இன்ப மளித்த பெருந்துறை மேய பிரானை ” (குயிற். 2.)

என்றும்,

“ ........................ பெருந்துறை ஆதி அன்னாள்
உந்து திரைக்கட லைக்கடந்துஅன்று
ஓங்கு மதில்இலங் கையதனில்
பந்தணை மெல்விர லாடகருளும் பரிசு ” (திருவார்த்தை. 5.)

என்றும் வருவன அதனை வலியுறுத்து மெனவும் ஒரு சாரார் உரைப்ப. வேறுங் கூறுப.

காட்டில் வாழும் உயிர்களுக்கும், வானில் வாழும் உயிர்களுக்கும், நீரில் வாழும் உயிர்களுக்கும் வாட்டம்தீர அருள்செய்தான். அவை வாட்டமுறுவதை உடம்படாதவன் என்னறிவு வாட்டமுறுவதை உடம் பட்டான் என்றபடி. இசைதல் - உடம்படுதல். அறிவுக்குப் பற்றுக்கோ டாகிய இறைவன் பிரிந்தமையால் அதுவாடிற்றென்க. இரும்புலன் - பேரறிவு. இதனால், இறைவனைப் பற்றிப் படராத அறிவெல்லாம் அறி வெனப்படா என்பது பெறப்படும்.

பாவகம் - காதலை வெளிப்படுத்துங் குறிப்பு. யாண்டுமுள்ள இயற்கை வனப்பெல்லாம் அக்குறிப்பெனவே கொண்டு கடைப்பிடிக்க. இக்குறிப் பினால காதல் அரும்பி வளர்தலால் பெற்ற இரும்புலன் எனக் கொள்க.

வேறு பற்றின்மையின் "அடியொடு நடுவீறானாய்" என்றார். யாண்டு மவனாகவும் பற்றுக்கோடில்லாது போதலும் பேரிரகசியமாயிற்றென்க.

நரகொடு சுவர்க்கம் நாணிலம் புகாமல்
பரகதி பாண்டியற்கு அருளினை போற்றி
ஒழிவுஅற நிறைந்த ஒருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத்து அரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி 217

என்னுமிவ்வடிகளினால் பாண்டியனுக்குப் பரகதி யீந்தமை கூறப் படுகின்றது.

(பொ - ரை.) நரகத்துடன் சுவர்க்கம் நால்வகைப்பட்ட நிலவுலகம் என்னும் மூவுலகங்களினும்படாது, அப்பாற்பட்ட மேலான நிலையைப் பாண்டியனுக்கு அருளியவனே வணக்கம், அந்நிலைக்கண் அம்மூவுலகங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கும் ஒருவனே வணக்கம், (அங்ஙனம் நிறையப்பெற்ற) செழுமை வாய்ந்த சிவபுரத்திற்கு வேந்தனே வணக்கம், செங்கழுநீர் மாலை யாகிய காதல்மாலையை யணிந்தவனே வணக்கம், எ - று.

(வி - ரை.) அறியப்படும் உலகமெல்லாம் நரகுலகும் துறக்கவுலகும் நிலவுலகும் என மூவகையில் அடக்கப்படும். நரகொழிந்த ஏனையவுலகங் களில் பொறிகளால் நுகரப்படும் இன்பங்களும் துன்பமாகவே முடிதலின், நரகொடு சுவர்க்கம் நானிலம்புகாமல் எனத் துன்பத்திற்குச் சிறப்புடைய நரகை முதலாக வைத்து ஏனையவற்றை அதனுடன் கூட்டி யெண்ணினா ரென்க.

நரகனாகி நரகின் கண்ணும், வானவனாகித் துறக்கத்தின் கண்ணும், மானுடனாகி நிலவுலகின் கண்ணும் புகாது, முத்தனாகிப் பரகதியடையுமாறு அருள் செய்தான் என்க. எங்ஙனம் செய்தான் எனின், மக்கள் யோனியுள் தோன்றச்செய்து, அதனுள் கருப்பையின் கண்ணும், குழந்தைப் பருவத் தின்கண்ணும், வாலிபப் பருவத்தின்கண்ணும் உண்டாகும் இடையூறு

களின் நின்றும் நீக்கி, தெய்வத்தன்மை யடையுமாறு மேலேற்றி, பலவகை யான ஆராய்ச்சிச் சமயங்களுள்ளும் சென்றுழலாது அன்புநெறிப் பயில்விற்கேறற நறசெவ்வியுடையோனுக்கிப் பற்றறச் செய்து, குருபரனுகி வந்து அறிவுறுத்திப் பிரியாதுடன் இருந்து அருள் செய்து அடிமையாக்கி, அவன் சுற்றமெல்லாம் நரகிடைப் புகாது மேலேற்றி, அவன் நுகரும் பெரிய செல்வமெல்லாம் தானேயாகி, அவன் தலைமேல் திருவடி நாட்டி ஞானங் கைவருதலும், அவனுக்குப் பற்றுக்கோடாக எல்லாவிடங்களிலும் வீற்றிருந்து, தளர்வும் தனிமையும் அச்சமும் அகல அடியார் அடிக்கூட்டி, ஐந்திணையன்பு நெறியில் வைத்து முறைப்படி பயிற்றித், துன்பமில்லா வண்ணம் என்றும் இன்பத்தில வைத்து உய்வடையுமாறு பேரறிவின் வாட்டந் தீர்த்துப் பரகதியருளினன் என்றிங்ஙனமாம் என்றுரைக்க.

அப்பரகதி, நரகுலகு நிலவுலகு துறக்கவுலகு முதலாய காணப்பட்ட, காணப்படாத எல்லாவுலகங்களினும் நீக்கமற நிறைந்துளதாகலின் "ஒழிவற நிறைந்த" என்றும், அது குன்றுத வளம் நிறைந்த சிவபுர மெனவே யாண்டு மழைக்கப்படும் என்பார் "செழுமலர்ச் சிவபுரம்" என்றும், ஆங்குப் பேதமற்ற ஐந்திணையன்பின் பேரின்பமே நுகரப்படு மென்பார் "கழுநீர் மாலைக் கடவுள்" என்றும் கூறினுர்.

என்னையும் அவனை யொப்பவே யாண்டு, தனித்திருத்து தளர்வெய்தி அஞ்சி வருந்துமாறு பிரிந்தும், அமமுறையின்மை தரியாது துன்பப்படு மாறும், உய்வின்றி யுலையுமாறும அறிவு வாட்டமடையுமாறும் வைத்துக் குழைத்தான் என எச்சமுரைக்க.

தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியா நாயேன்
குழைத்த சொல்மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி 225

என்னுமிவ்வடிகளால், தமது விண்ணப்பத்தைக் கூறுகின்றுர்

(பொ - ரை) வணங்குவார் தங்கள் மயக்கத்தினை அறுப்ப வனே வணக்கம்; பிழைபாடிது, பிழையின்மையிது என்று ஒன்றையும் பகுத்தறிய முடியாத அறிவிலியாகிய நாயேன் (நீ குழைவடையுமாறு) குழைத்துச் செய்த சொல்மாலையை ஏற்றுக் கொண்டருள்வாயாக வணக்கம், பல புரங்களையும் எரித்த பழைய வனே வணக்கம்; மேலானதற்கும் மேலான சோதியாகிய மேலோனே வணக்கம், வணக்கம், பாம்பையணிந்தவனே

வணக்கம், வணக்கம், பழமைக்குக் காரணமாவனே; வணக்கம், வணக்கம், வெற்றியுடையானே, வெற்றியுடையானே, வணக்கம். எ - று.

(வி - ரை.) தொழுதல், வணங்குதல், பணிதல். மையல் - மயக்கம், அறிவின்மை. அறிவுபெறும் வழி பணிவொன்றே என்க. நன்கு அறியப் படடன எனக் கருதியிருப்பனவும் ஆழ்நது நோக்கும்வழி முடிவறியப் படாதே போதலின், பிழைப்பும் வாய்ப்பும் அறிதல் இலகுவான தொன்றன்று. ஆதலின், எவ்வாற்றுனும் பணிவே தலைக்கூடவேண்டுவ தென்க. யானும் அங்ஙனமே தருக்கித் தலையால் நடந்து, இறுதியில் இதுவே பொருள் என்றுணர்ந்து பணிகின்றேன். அப்பணிவின் பரப் பெல்லாம் இக்குழைத்த சொல்மாலைக் கண்ணுள்ளன. அதில் மலிந்துள்ள பிழைகள் நின்னைக் குழைய வைப்பன என்பது முன்னரே அறியப்பட்ட தொன்றுகும். ஆதலின் அதற்குக் குழைத்த சொல்மாலை என்றே பெய ரிட்டேன் என்பார் "தொழுவார் மையல்............குழைத்த சொல்மாலை" என்றுர். குழைத்த சொன்மாலை - திருவாசகம். ஒன்றும் அறியா என உம்மைவிரிக்க.

புரம் - முப்புரம். "முப்புரமாவது மும்மல காரியம்" எனத் திருமூலர் விளக்கியுள்ளார். பல முப்புரம் என்க. முப்புரங்கள் பல என்பது. யுகந்தோறும் யுகந்தோறு முள்ளனவாய் அழிக்கப்பட்டனவற்றை என்க. ஆதலானன்றே புராணன் எனப்பட்டான். புராணன் பழையவன். பல முப்புரங்களையும் எரித்த பழையவன் என விசேடித்தவாறு. அப்புரங் களுள் பிழை புரிந்தாரை அழித்து ஏனையோரைக் காவல் செய்தான் என்க.

தமது ஆற்றலுக்கு மிக மேற்பட்டவற்றைக் காட்டிஞ்ஞகலானும், அவனது மேன்மையின் எல்லையை அளக்கலாற்றுமையானும "பரம் பரஞ் சோதிப் பரனே" என்றுர். அத்தகைய பெரியோன் சிறியேனது பிழை களைப் பொறுத்தற்குரியன் என்க.

யாவற்றுக்கும் ஆதாரமாகலின் புயங்கப் பெருமான் என்றும், எல்லா நிகழ்ச்சிகளுக்கும் நிமித்தமாகலின் புராண காரண வென்றும் கூறிஞர்.

புராரியும், மேலோனும், புராண காரணனும், புராணனும், புயங்கனும், வெற்றி முதல்வனுமாதலின், என் பிழைகளையும், தோல்வியையும் ஒப்புக் கொண்டு, அடைக்கலங் குறித்துப் பணிந்து கூறிய சொல்மாலை, எத்துணைப் பிழை மலிந்ததேனும் ஏற்றருளுவான் என்னும் நம்பிக்கை யுடையாராகலின் "குழைத்த சொல்மாலை கொண்டருள்" என்றுரென்க.

குழைத்த சொல்மாலை இரட்டுறமொழிதல். இறைவன் அடிகளைப் பிரிந்து சென்று குழைத்தமையால் குழைந்த அடிகள் அக்குழைவினையே எடுத்துப் புகல்கின்றமையால், இறைவனும் குழைக்கப்படுவானுதலின் குழைத்த சொல்மாலை என்றுயிற்று என்னும் பொருளும் பெறப்பட்டது.

எங்ஙனமேனும் அதன் காரணன் இறைவனேயாதலின் புராண காரண

என்றுர். எல்லாப் பழமைக்கும் அவன் காரணனென்றுல், தலைமகளாகிய அடிகள் பழைமையும் அதனுட்பட்டதன்றே.

ாண்டுக் குழைவென்றது, அவனுற் பெற்ற ஆக்கங்களின் இன்மையாற் போந்த துன்பம். அவறறை " இன்றெனக் காரமு தானுய் " (93) எனவும், " ஆவா என்றனக் கருளாய் " (99.) எனவும், உடையாய்... "கடையே னடிமை கண்டாய்" (110-111.) எனவும், "என்வைப்பே" (121) எனவும், " என்னையும் ஒருவனுக்கி இருங்கழல் சென்னியில் வைத்த சேவக " (129-130) எனவும, " நனவிலும் நாயேற் கருளினை " (144) எனவும், " மற்ருேர் பற்றிங கறியேன் " (155.) எனவும், " தளர்ந்தேன் ...அஞ்சேல் என்றிங்கருள்வாய் ", (170-172) எனவும், " முறையோ தரியேன் " (180) எனவும் " அலந்தேன் நாயேன் அடியேன் " (185) எனவும், " எந்தமை யுய்யக் கொள்வாய் " (206) எனவும், இப்போற்றித் திருவகவலுள் எடுத்துக் கூறித் துதித்தனர். மேலே திருச்சதகம் முதலாக விரித்துக் கூறப்படும். அங்ஙனம் கூறப்படுவனவே குழைத்த சொல் மாலை என்க.

" போற்றி போற்றி " என வந்த இறுதி மூன்றடிகளும் பணிவின் எல்லை குறித்து நின்றன. அதன்மேல் ஒடுங்கியே போயினர். என்பது அவற்றின் நடையால் பெறப்படும். ஓதியுணர்க.

ஆராய்ச்சி நெறிக் கண்ணும், அன்புநெறிக் கண்ணும் " சய சய " எனப் பணிதலே முடிபாயிற்று. எனினும் ஆராய்ச்சி வகையாற் பணிந்தார், வேறு வழியின்றி ஆற்ருமையாற் பணிந்தாராகலின், அவர் பயன் பெற்ருர் என்பதும், அனபினுற் பணிந்தார் எல்லாம் பெறுவர் என்பதும் உணர்க.

திருச்சிற்றம்பலம்

# திருச்சதகம்

இறைவன் அடிகளை உத்தரகோசமங்கைக்கண்ணே ஆட்கொண்டு "நீ இங்கேயே இருப்பாய், யான் பிறிதோரிடத்திற்குச் செல்கின்றேன், மறுபடியும் தில்லையில் உன்னை ஆட்கொள்வேன்" என்று கூறிப் பிரிந்தான் என்பது முடிந்தது. இப்பிரிவினால் உளதாகிய துன்பங்களைப் போற்றிக்கண் வகுத்துக் கூறினார் என்பதும் காட்டப்பட்டது. இனி, அத்துன்பங்கள் இங்கு விரித்துரைக்கப் படுகின்றன. இங்கு அடிகள் ஆண்டான் அடிமை இயல்புக்குப் பங்கம் விளையாவாறு ஒழுகுகின்றார் என்பதையும் ஆங்காங்குக் காண்க.

பிரியப் பெற்றவர் முதலில் இனிப் புணருங்காலம் என்று வரும் என்றே வருந்துவராகலின் அடிகளும், தன் ஆண்டானைப் பிரியப் பெற்றவர், என் ஆண்டான் முற்காலந்தொட்டே என்னுட் புகுந்திருந்தனன்; அவனே என்போலும் பொய்யரை ஆட்கொள்ளுமாறு எட்டுருக்கொண்டு பேதப்பட்டு நின்றனன், அங்ஙனம் நின்றானாயினும் பேதவுணர்ச்சியினால் அடைதற்கரியனாவான்; ஆனால் பலவகையிலும் பேதப்பட்ட உணர்ச்சியை அடக்கி ஒருவழிப்படுத்தி மெய்யுணர்வுற்று நோக்கின், எமக்கு அண்மையில் பற்றுக்கோடாய் இருப்பான்; இங்ஙனம் உணர்வு விரிதற்கும் ஒடுங்குதற்கும் ஏற்ற காலங்களாயும் இருப்பவன் அவனேதான். இவ்விருவகைக் காலங்களுள் 'என் தலைவா, உன்னைக் காண்பது எக்காலத்தே. அக்காலம் அண்மையில் உள்ளதா, அன்றி நெடுநாட் கழித்துவரும் ஊழிக்காலத்திலேதானா?' என்றிரங்கி வருந்துகின்றார்.

இங்ஙனம் காலங்கருதி வருந்துகின்றவர், தம் நெஞ்சையும் நெஞ்சொடுபட்ட உறுப்புக்களையும் வெகுண்டு இழித்துக் கூறும் இயல்பிற்கேற்ப அடிகளும், 'என் பாழ்நெஞ்சே, நின்மாட்டு நாடி வந்த என் ஆண்டவனை நீ பேணாது பிறவற்றைப் பேணினமையால் அவன் வானின்கட் சென்றானாக, மீட்டும் அவனை அடைதற்குரிய மார்க்கத்தினை ஓராதே நின்வாழ்வு கெடப்பெற்றனை உன்னுயிராகிய இறைவன் நீங்கப் பிணமாகி வாழ்வுகெட்ட நெஞ்சே, காமத்துறையிற் செல்லுமதுவே வாழ்வாகும், பிற ஆகா என்று, அக்காமத்தின் நிலையின்மையை யுணர்ந்தும், நின்னிடன் நீயே மாறுபட்டு மற்றது நிலையுடைத்தெனப் பெருமைப்படுத்தி இல்வலியுறுத்துகின்ற உனக்கு 'இவையெல்லாம் வாழ்வாகா, அவனையகத்துட் கொண்ட வாழ்வே வாழ்வாகும்' என்று பன்முறை நெருக்கியும் நீ கேட்டிலை; மீண்டும் மீண்டும் துன்பக் கடலினுள்ளேயே

தோய்கின்றனை ; இஃதொன்று. இதன்மேல் இங்ஙனம் நீ அறிந்தும் அறியாய்போலச் செய்வதற்குக் காரணம் யாதென்று கேட்டால், அவன் செய்த அருளெல்லாம் உனக்கேயன்றி எனக்கல்ல என்று என்னுடன் மாறுபட்டு, அவன்மாட்டு நீ துடிப்பதுபோல யானும் துடிப்பதற்கு அவனிடம் எதனைப் பெற்றேன் என, நீயும் பெற்றுக் கொண்டவற்றைப் பெருதாய்போல மாருட்டமாகப் பேசுகின்ருய். இஃது இரண்டு அந்தப் பாழ் எண்ணத்தால் அவன் நன்றிபோற்றி ஆடுதல் முதலியவற்றைச் செய்திலை, அதுவுமன்றி உன் உள்ளிடத்தை அவன் வீற்றிருத்தற்குரிய திருக்கோயிலாகச் செய்ததுமில்லை ; இஃது மூன்று கண்டாய். இத்தகைய நீ இப் பொழுதைய நிறைவிற்காக அவனை இயற்பழித்தும், அவனுக்குப் புறமானவற்றை இயற்படுத்தியும் கூறுகின்றனையாதலின், அவற்றையெல்லாம் யான் மதிப்பதுமில்லை, நீ எக்கேடு கெட்டுப் போனலும் யான் ஏனென்று கேட்பதுமில்லை. இது திண்ணம்.

எல்லாவுறுப்புகளுக்கும் தலைமையாகிய நெஞ்சு, அவ்வெல்லா வற்றையும் தன் மயமாக்கிக்கொண்டு உருகும் பாக்கியம் பெருமல் கல்லாய்ப் போயிற்று. அஃது அங்ஙனமாக, அதனேடு சேர்ந்து கொண்டு கண்நீரைப் பெருக்காமல் மரக்கண்ணும், பாவனை அவனைப் பாவிக்காமல் இரும்பாயும் போயின. இவை இங்ஙனமாக, அவன் கற்பித்ததைச் செவ்வனே கேட்டு உணர்த்தாத செவி என்ன பொருளால் ஆயதென்றறியேன். நான் இவற்றேடு சேர்ந்திருக்கும் தீவினையுடையேனுயினேன்.

இத்தகையேன் அவ்வுறுப்புக்களை நொந்தென்? அவற்றிற்குத் தலைவன் யானுவேன் அன்றே. அவற்றைத் தொடர்புபடுத்தி வைத் திருந்தேன். யாவர்க்கும் யாவைக்கும் அரிய நீ எளிவந்தருளிய காரணத்தால், அருமையறியும் செவ்வியற்ற யான், இவன் எனக்கு எளியனுவான் என்று கருதிச் செருக்குற்றமையால், நின்னைப் பிரியப் பெற்றேன், இங்ஙனம் யான் மாறுபட்டமை கண்டு நீ செவ்வி பெற்றுத் தில்லைக்கு வருதி என்று பணித்தனை. அவ்வாருக, யான் ஓலமிட்டுத் துடிதுடித்து முறையிட்டேனும் உன்னுள்ளம் இளகுமாறு செய்து சிவமாநகர் குறுகப் போகாது, மனத்தொடு பட்டுக் காமமே பற்றி உலகில் உண்டுடுத்திருந்தேன். ஆதலால் நீ தில்லைக்கு வாவென்று பணித்தலும் எனக்குத் தக்கதாயிற்று. ஆத லால் யானே எனக்குக் கேடு வருவித்துக் கொண்டேன். எனினும் அடியார் பலர் பிரிவாற்ருது பல்லாற்ருனும் தம்முடலை விட்டு உன்னை அடைந்தமை கண்டேன். அவர்களுட் சிலர் தீயில்

வீழ்ந்தும் சிலர் மலைமேலேறிப் பூமியில் உருண்டு வீழ்ந்தும் தம்முடலை விட்டு உன்னை அடையவும் யானும் அங்ஙனமே யாற்றி உன்னை யடைந்திலேன். அத்தகையேன் கடலுள் வீழ்ந்து உடல் நீக்கி உன்னை யடைந்தாரைக் கண்டு கடலுள் வீழ்வேனோ? இங்ஙனம் அடியார் உடல் நீத்த நெருப்பும் இருந்தது; மலையும் இருந்தது; கடலும் இருந்தது, யானும் உண்டு உடுத்திருந்தேன் என்றால் அதன் பொருள் யாது? என் அன்பு நடிப்பு மாத்திரையில் உள்ளது என்பதுதான். கலப்பற்ற அன்பினாலேனும், அஃதற்றகாலை வலிந்து உடல்விட்டேனும் வருதற்குரிய இயல்பற்ற யான் அறிவற்ற பொருளாயினேன் அத் தகையேன் இனி எதனைக்கொண்டு உன்பால் வருவேன்? இங்ஙனம் நின்பால் வருதற்கேற்ற வாயில்களற்ற யான் இனி எக்காலத்தி லேனும் உன்பால் வருதற்குரியன் ஆவேனோ? இனி எக்காலத்தி லாயினும் நின்னையடையுமாறு சரியைத் தொண்டுகளையேனும் செய்தேன் இல்லை ஏன்? ஆண்டான் பொருட்டு நினைவில்லையாத லின் செயலுமில்லையாயிற்று. இங்ஙனம் கூறித் தப்பிக்கொள்ள லாம் என்று நினைக்கின்றேன். அது தவறு. பார்ப்பைப்போல யான் இருக்கிறேன். உண்மையில் யான் அப்படிப்பட்ட குழந்தை யல்லேன். மூத்தோனாவேன். ஆனால் சோம்பியிருக்கிறேன். மேலும் நீ கற்பித்த கற்புநெறியன்றி வேறொன்றும் அறியாத அடியார்கள் அதனையே போற்றியும் உடல் நீத்தும் நின்பால் வந்தனராக, யான் நின்னொடு கொடுமை பறைந்தும் உடலுறுப்புக்களுடன் இணங்கி யும் பொய் முழுவதற்கும் வித்தாய் அவர், ஓம்படைக்குரியராக யான் ஊரேறுபோல் நீங்கப்பெற்று இழிந்தவனாயினேன் அந்தோ! என்னுயிர் கெட்டிலது. இங்ஙனமெல்லாம் ஆற்றி வருவதற்குரிய கட்டளையைப் பெறாத தீவினையேன் ஆயினன். ஆதலால் என் தன்மை நின்னால் சிரித்தற்குரியதும் என்னால் பொறுக்கத் தகாததும் இதனை நீக்குதற்கு உன்மாட்டு வலிமையுண்டோ என்னு மளவிற்கு ஐயப்படத்தக்கதுமாகிய இழிவுடையதாகும். ஆதலால் பிறரால் ஏசப்படுதல் எனக்குத் தகுவதேயன்றி, இனிப் பட விருக்கும் தில்லைக்கு வருதல் எனக்கு அமையாது. எனினும் நின்னைக் காண வீணே ஆசைப்பட்டேன். ஆசைப்பட்டும் மூர்க்க னாதலால் எனக்குரிய நெறியிலேயே யான் போவேன். ஆதலால் என்னுடைய கொள்கை இயமனுடைய கொள்கைபோன்றது. இங் ஙனம் எல்லாவற்றாலும் யான் இழிவடைந்தேன். என்னையுடை யாயும் இப்படியே யான் இருக்கும்படி முடித்துவிட்டாய்.

ஆனால் முன்பு, இருநெறியும் கெட்ட மூர்க்கனாகிய எனக்கு, என் புலன் வாக்கு சிந்தை ஆதியவற்றை விச்சையினால் திருப்பி உன்னைத் தந்தனை. அங்ஙனம் தந்த நீ நான் காணுமுன் மின்னல் வேகத்தில் மறைந்துவிட்டாய். மறைதற்கு முன்னுள்ள அவ்வொரு கணத்திலே எல்லாம் தந்தனைபோலிருந்தது. ஆனால் அடுத்த கணத்தில் எல்லாம் மாயமாயின. இப்படிப்பட்ட ஒரு மாய வித்தையை ஆகா, நான் கண்டறியேன்! ஆதலால் நின்னை என் சொல்லிச் சிந்திப்பேன்? எம்பெருமானே, நீ செய்ததெல்லாம் நாடகமாயிற்று. அஃது என்னால் நகைத்தற்குரியதாயிற்று. இது நிற்க, நீ மெய்ம்மையாக ஆட்கொள்ளுதலும் உண்டோ என்று உன்னினேன். ஆம், உண்டு. நின் பெயரே ஓதியும் பூதியே புனைந்தும் புகழே போற்றியும் வந்த அடியாரை ஆண்டுள்ளாய். அங்ஙனமெல்லாம் ஆண்டு பழக்கமும் பெருமையும் அடைந்த நீ என்மட்டில் தோல்வியுற்றாய். ஏன்? என்னை எப்படி ஆண்டாய்? பொய்யில் நிலைக்கவைத்தாய் அன்றே! அதுவும் அமையாதென்று குழந்தைபோன்ற என்னை இங்குத் தனியாக விட்டு, அடியாருடன் அங்கெழுந்தருளி, 'உன் செவ்வி தகுதியற்றது, நீ சிறிதே தாழ்த்தி வா' என்று என்மேற் குறையும் ஏற்றிவிட்டாய். இது முறையோ! முறையோ! உன் பற்றேயன்றி வேறு பற்றற்ற எனக்கு நீ செய்த திருவருள் இங்ஙனமெல்லாம் கடையனாக்கிவிட்டதுதான். இன்னமுங் கேள்: எத்தகையவரும் தாம் வளர்த்த மரம் நோயுற்றுப் பயன் தராவிடினும் அதைப் பேணுதலன்றிப் படச் செய்யாரன்றே! நீயும் யாதொன்றும் அறியாத என்னை அன்பரோடு கூட்டி வளர்த்த பின்னர்க் கைவிடுவையேல் வேறெவராவது என்னை ஏற்றுக்கொள்வார்களோ? அன்றி யான் அதற்கமைவனோ? அமையேனாதலால் எனக்கு வேறு புகலிடம் கிடையாதே. எனவே என்னைப் புறந்தள்ளாதே. நின் கட்டளை பெறுதற்கே உடலோம்பினேன் எனினும் என்னுயிர் கெட்டிலது. இன்னமும் கைவிடுவையேல் தீ நெறியில் புகுந்தாலும் புகுவேன். அப்போது யான் குற்றமுடையவனாகேன்.

நீதான் எப்பொருளின் கண்ணும் எந்நினைவின்கண்ணும் எச்செயலின்கண்ணும் நீக்கமற நின்றுயாதலின், நின்னையடைதற்கியலாது திகைக்கின்றேன். யான் அங்ஙனம் திகைப்படைய நின் செம்பாதி பெண்ணுருவத் திருமேனியை அடியார்கள் மட்டும் காண்பார்களோ? இன்னும், நீ அடியார்களை உன் திருவடி காட்டி மீட்டாய் எனக்குக் காட்டியது மட்டுந்தான். என்னையும் அங்ஙனம் காட்டி மீட்டருளவல்லையே? நிற்க, வேண்டியவாறு அருள் செய்யாமல், 'யான் ஒருவனே யன்றி வேறியார் இவர்கட்கு? யான்

எப்படியும் கலங்கவைக்கலாம்' என எண்ணுகிருய் போலும். அது பொருந்தாது நீ எம்போன்ருர்க் கிரங்கும கொங்கை மங்கையைப் பங்கில் கொண்டுளாயன்றே அவள்வழி நிற்கும் நீ என்பால் எண்ணுவதென்ன? அவள் இடிக்குமுன் அருளைச் செய்குதி.

இங்ஙனமெல்லாம் மெலிந்து யான் உன்மாட்டு இரப்பன பல. அவற்றைக் கூறுகின்றேன் கேள்: யான் நின் அருளாலே பெற வேண்டியவற்றைப் பெறவிருப்பவன். அன்றேல் அதற்காகவே வருந்த இருப்பவன். ஆதலால் முதலில் நின் அருளை என்மேல் ஊற்றுக. அதன்மேல் நின் திருக்குறிப்புணர்ந்து ஒழுகுதலாகிய கற்புநெறியை யான் அறியும்வண்ணம், ஆண்ட நின்னியல் பினையும், ஆளப்பட்ட என்னியல்பினையும் இயம்புதல் வேண்டும். இதனை யுணர்ந்து ஒழுகுதற்கேற்ற சிறந்த பிறவி வேண்டும். இனி மேல் ஏதேதோ பெரிய அளவில் அருள் செய்வேன் என்னும் நீ, இப்போது அவை யாவற்றுக்கும் மூலமாகிய நின் திருவடிக்கண் நிலைபெற்றதும், உடலின் எவ்விடத்தும் தனதுண்மையைப் புலப் படுத்துவதும், உன்மாட்டு உருகுவதற்கேற்றதும், உன் கழற்கண் போகம் புணர்ப்பதும், மெய்யன்பர் பெற்றதுமாகிய அன்பினை, அப் பிறவிச் சிறப்பால் இயல்பாகவே பெறுமாறு அருளுக அவ்வாற் ருனே என் பொறிகளை நின்னைப் புணர்தற்கேற்ற அன்புக் காட்சி பெறும் பொறிகளாக்குதி. அதனுல் உலகப் பற்றினை நீக்கி, இக்காய வாழ்வை ஒழித்து, பண்டுபோல் ஆட்கொண்டு "வருக" என்று அழைத்து வீட்டினைத் தா. இவ்வறநெறி என்பால் அமையாதேல், மறநெறிபற்றி என்னையடக்கிப் பண்டுபோல் ஆண்டு வீட்டினைத் தா. அதுவும் அமையாதேல், உன் சிறுபிள்ளை என்று இரங்கி யேனும் பேணுக.

நீ இங்ஙனமெல்லாம் என்மாட்டுச் செய்ய, யான், வானவர் வீண் வாழ்வுடையராகலானும், நின்னருளுக்குப் புறமானவராக லானும், தம் உயர்வு குறித்தே வாழ்த்துவோராகலானும் அவரை எள்ளளவும் கருதாது, பிறவியறுதல் கருதியே வணங்குவேன். யாண்டும் நின்னருளாலேயே இருக்க விரும்புவேன். அவ்வருள் பெற்று ஞானமடைவது என்று என வருந்தி, அந்நாள்காறும் பொய் தவிர்ந்து மெய்யில் நிலைபெற்று உன்னைப் போற்றும் ஒழுகலாற்றில் தவறுபடேன். இஃது உறுதி என, இறைவனைப் பிரிந்தவர் அதனுலுள தாகிய துன்பமெல்லாம் கூறி மீண்டும் அவனையடைய விழைந்து கூறினர் என இயற்கைப் பொருளடைவிற் கேற்ப உரைக்க.

இஃது திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

## 1. மெய்யுணர்தல்

### கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்(து)
    உன்விரை ஆர்கழற்(கு) என்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
    ததும்பி வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்(து) உன்னைப் போற்றி
    சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழ விடேன் உடை
    யாய் என்னைக் கண்டுகொள்ளே. 1

முந்திய திருப்பாட்டு முடிவின்கண் "சயசய போற்றி" என ரப் போற்றல் வேண்டும் என்ற திருவுள்ளங்கொண்டு புகுந்தமையை இத்திருப்பாட்டினாலே நிலைபெறச் செய்தருளுகின்றார்.

(பொ - ரை) என்னை அடிமையாக உடையவனே, உனது நறுமணம் நிரம்பிய திருவடிகட்கு வணக்கம் புரிதற்கு, உடல் மயிர்ப் புளகங்கொண்டு நடுநடுங்கியும், கைகளைத் தலைமேல் வைத்தும், கண்களில் நீர் ததும்பி வழிந்து வெப்பங்கொண்டும், உள்ளம் பொய்ப்பொருளை வேட்டுவரும் பொய்யொழுக்கம் நீங்கியும் உன்னை வணங்கி "வெற்றியுடையானே, வெற்றியுடையானே" என்று இங்ஙனமாகப் போற்றிவரும் ஒழுகலாற்றினை ஒரு சிறிதும் நிலைகுலையவிடாது நிலைபெறச் செய்வோனாகிய எனது செயலை (இனி) அறிந்துகொள்ளாய் எ - று.

(வி - ரை.) மெய் அவனது திருவடிப் பரிசத்தானும், "விரையார் கழல்" என்றருளியவதனால் மூக்கு அவனது திருவடியின் நறுமண முகர்ச்சியானும், செவி நா என்பன, அவன் திருநாமங்களையும் திருப்புகழ் களையும் கேட்டலானும் உரைத்தலானும், கண் அவனது திருவடிக் காட்சி யானும், உள்ளம் அவன் திருவடிக்கண் அழுந்திய நினைவானும்,கை அவன் திருவடியால் தீண்டிய தலையின்மேல் ஏறக்குவிதலானும் ஆனந்தம பெற்றன என்க. கால், திருக்கோயிலை வலம் வருதலானே ஆனந்தம் பெறுமென இயைத்துக்கொள்க. எனவே, ஐம்பொறிகளும் அவனையே நுகர்ந்தன; கரணங்களும் அவன்பால் தொழிற்பட்டன என்க. இங்ஙனமாய ஒழுக லாற்றினை நெகிழவிடேன் என்க. வெதும்புதலை உள்ளத்திற்கேற்றினும்

அமையும். உள்ளம் வெம்புதலானே கண்ணீரும் வெப்பமுடையதாயிற்று என்றறிக. உள்ளம் பொய் தவிர்தலால், உடம்பு முதலியவற்றுக்குப் புளகம் முதலியன ஏற்படலாயின என்க. மனத்தின் உளதாகிய பொருட்பாடு மெய்யரும்புதல் முதலாயவற்றால் புலப்படுமாகலின், "உடையாய், என்னுடைய மனோநிலையைக் கண்டுகொள்ளுக" என்றருளிச் செய்தார். மெய்யன்பே கொண்டுள்ளேன் ஆகலின், என்னையும் மெய்யடியானாகக் கொண்டருள் என்பதும், இந்நிலையினின்றும் பிறழாது என்னைக் கடைக் கணித்தருள்க என்பதும் போதரக் "கண்டுகொள்" என்றருளினார். 'இறைவனாகிய நீ என்னைவிட்டுச் சென்றாய் ஆகினும் அடியனாகிய யான் நின்பால் ஒழுகும் நெறியைக் கைவிடவில்லை. இதனை நீ கண்டுகொள்' என்று கூறியவாறும் என்க. 'என் வைராக்கியத்தைக் கண்டுகொள்' எனினும் நனி பொருந்தும்.

உடையான் - பசுபதி. நெகிழ்தல் - நிலைகுலைதல். அரும்புதல் முதலாய சினைவினையெச்சங்கள், ஒற்றுமை நயத்தால் முதலோடு முடிந்தமையான், அவற்றைச் செயவென்னெச்சங்களாகத் திரித்தல் வேண்டா. கை - ஒழுக்கம்

"கலந்த நோய் கைம்மிகக் கண்படா" (கலி. 46.)

வீடுபேறாகிய நறுமணம் உடைமையானும், அன்பர் உள்ள மலரின்கண் வீற்றிருத்தலானும், அவரிட்ட மலரான் நறுமணங் கமழ்தலானும் "விரையார் கழல்" என்றருளப்பட்டது. திருக்கோவையாரில் 256-ஆம் செய்யுளில் 'வெறியார் கழல்' என்பதற்கு, "இறைவன் திருவடிகள் எல்லாப் பொருள்களையும் கடந்து நின்றனவாயினும், அன்பர்க்கு அணிய வாய், அவரிட்ட நறுமலரான் வெறிகமழும் என்பது போதர 'வெறியார் கழல்' என்றார்" என எழுதிப்போதலும் அறிக. இனி, அவை எல்லாப் பொருளையுங் கடந்துநின்றனவாயினும் அன்பர்க்கு அணியவாய், அவரிட்ட நறுமலர்களால் விரைகமழும் என்பது போதர "விரையார் கழல்" என்றருளினாருமாம்.

"நறுமலராய் நாறுமலர்ச் சேவடி"
(திருவதிகை வீரட்டானம். திருவடித் திருத்தாண்டகம். 4.)

என அப்பர் சுவாமிகள் அருளிச் செய்த திருப்பாசுரப் பொருளையே கொள்ளினும் அமையும்.

உன் கழல் என்றும், "என் கை தலைவைத்து" என்றும் அருளியமையானே இறைவன் உடையானும், தாம் உடைமையுமாதலைப் புலப் படுத்தியருளினார். மற்றிதனால் "உடையாய்" என்பதற்குப் பசுபதி எனப் பொருள்கொண்டாம். "கண்டுகொள்" என்பதற்கு நீயும், "விடேன்" என்பதற்கு யானும் அவாய் நிலையான் வந்தன.

இதனால், தமது அகப்புறத் தூய்மையும் அதனோடுபட்ட செயல்களும் தோன்றப் பத்திப் பணியில் பற்று நெகிழாமை கூறியருளப்பட்டது.

கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினது அடி யாரொடு அல் லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே இருக்கப் பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னைஅல் லாது எங்கள் உத்தமனே.
2

இதனால், ஆக்கவாசை காரணமாகப் பிறவிகளை விரும்புதலையும், அழிவுக்கஞ்சி அன்பரை வெறுத்துப் புறத்தாரைச் சார்தலையும், இன்னல் கருதி இறைவன் அருளியதை இகழ்தலையும், பிற கடவுளரை நினைத்தலையும் செய்யேன் எனத் தமக்குப் பிறவற்றால் நேரும் இடையூறுகளுக்கு அஞ்சாத தமது மனத் திண்மையாகிய நிறையினைக் கூறியருளுகின்றார்.

(பொ - ரை) எங்கள் நலத்திலேயே கருத்துடையவனே, தாங்கி எங்களை இயக்குவோனே, திருமால் பிரமன், இந்திரன் என்போர் முன்வந்து வலிதிற்கொள்க எனத் தத்தம் பதவிகளை ஈவரேனும் யான் அவற்றைக் கொள்ளமாட்டேன்; யானேயுமன்றி, யான்வாழ்தற்குரிய இடனும் அழியுமேனும் நின்னன்பருடன் நண்பு செய்வேனேயன்றி, ஏனையோருடன் நட்புச்செய்யேன்; நரகம் புக்காலும் அங்ஙனம் புக்கது உனது திருவருள் காரணமாகவே அமையப்பெற்றால் அதனையும் யான் விழைந்துகொள்வனேயன்றி வெறுத்து இகழேன்; (பிற கடவுளர் பதங்களும், பிறர் உறவும் வேண்டாத எனக்கு) நின்னையல்லாத பிற கடவுளரும் தேவைப் பட்டிலராதலின், அவரை மனத்தால் நினைத்தலையும் செய்யேன் எ - று.

(வி - ரை.) இங்ஙனமாய எனது மனத் திண்மை கண்டு என்னை ஆண்டுகொள்ளாய் என்பது எச்சம்.

உத்தமம் - நன்மை (பிங்கலம்). உத்தமன், தானும் நல்லனாய்த் தன்னைச் சார்ந்தார்க்கும் நன்மையே செய்பவன். இருளைக் கடந்தவன் எனப் பொருளுரைப்பாருமுளர். அவர் 'தமம்' இருள் எனக் கொள்ப. புரந்தரன், பகைவர் புரங்களை யழிப்பவன் எனப் பொருள்படுவதோர் வடசொல்லின் திரிபு. அஜன் (பிறப்பிலி) என்னும் வடசொல் அயன் எனத் திரிந்தது; உபசாரவழக்கு. நள்ளல் - நட்புச் செய்தல். நள் - செறிவு.

பதவி விழைவு இன்மையான் அப்பதவிக்குரியார் நட்பும் தேவைப்படாதாயிற்று. இறைவனடியார் வெறுத்து ஒதுக்கினும், அவரை நண்பு செய்தலும், ஏனையோர் நண்பு செயயவரினும் அவர் நண்பினை ஏற்றுக் கொள்ளாமையும் உடையேன் என்றருளியபடி. அடியாரல்லாரோடு

நட்புச் செய்தவர்க்கே முத்தியென் றுரைப்பினும் யானங்ஙனம் செய்யேன் என்பதும் கொள்ளக்கிடந்தது. நரகத்திலே தமமைப் புகுத்தலும் திருத்தி யாட்கொள்ளறபொருட்டேயாகலின், அதனையும் விழைந்துகொள்வனே யன்றி, வெறுத்து எள்ளேன் என்பதுபட "நரகம் புகினும எள்ளேன்" எனத் திருவாயமலர்ந்தருளினர். வாழ்வு - வாழ்தற்குரிய பதம். குடி - வாழ்தற்குரிய இடம் உடம்புமாம.

முந்திய திருப்பாட்டானே தாம் இறைவனை மெய்யன்பு கொண்டு போற்றியருளியமைக்குக் காரணங்களாக நின்ற கொள்ளாமையும், நள்ளாமையும், எள்ளாமையும், உள்ளாமையும் ஆகிய நான்கும் இவை யாகும என இத்திருப்பாட்டால் கிளந்தருளிச்செய்தார்.

இந்திர பதவியின் இழிவு தோன்ற அதனினும் உயர்ந்ததாகிய அயன் பதமும், அவ்வயன் பதத்தின இழிவு தோன்ற அதனினு முயர்ந்த திருமால பதமும, அஃதும் இழிந்தது எனறறிந்தமையால் அதுவும் கொள்ளேன் எனறருளினார் கொள்ளுதலாலும, நள்ளுதலாலும, எள்ளுதலாலும், உள்ளுதலாலும் பிறவி மல்குமாதலின் அதற்கஞ்சி, உடன்பாட்டினை எதிர் மறுத்துக் கூறியருளினார். ஒவ்வொன்றினையும், அவ்வவற்றால் வரும் இன்னல்களையும் கிளந்து கூறி மனத்தைத் தேற்றிய வரலாறுகளை உயத் துணரச செய்தருளினாருமாம. "எங்கள் உத்தமனே" எனறருளினார், எங்கள் பிறவித் தளை நீக்கிப் பேரின்ப வாழ்வினை அளிப்பவன் அவன் ஒருவனேயாகலின். திருவருளுணர்ச்சியுடையார் யாண்டிருப்பினும் இன்பவுணர்ச்சியுடனேயே இருப்பாராகலின், அவர்க்கு நரகம சுவர்க்கம் என்பனவும் இல்லையாம் என்பது தோன்றத் "திருவருளால் இருக்கப் பெறின்" என்றருளினாருமாம். நரகிற் புகுவார்க்குத் திருவருளுணர்ச்சி யின்மையின் "புகினும்" என்றொழியாது "இருக்கப்பெறின்" என்று மேறகிளந்தருளினார். இறைவன் அடியாரை நட்டலும், இறைவனை யுள்ளுதலுமே தமக்கு ஆக்கமாகும் எனத் துணிந்து, அங்ஙனமே ஆறறு தறகு முறபட்டருளினார் என்க. "குடிகெடினும்," "நரகம புகினும" என் பன தமக்குரிய பொருளையொழித்து எதிர்மறைப்பொருள் பயந்தன. 'நெற் றிக் கண்ணன் எதிர்நது தடுப்பினும் நின்னைக் கொல்வேன்' என்பதுபோல.

உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்து உருகி
மதத மனத்தொடு மால்இவன் என்ன மனநினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட ஊர்ஊர் திரிந்து எவரும்
தத்தம் மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே. 3

இதனால், முன்னர்த் திருப்பாடலின்கண் கிளந்தெடுத்துக் கூறிய கொள்ளாமை முதலாய நான்கனையும் பெற்றுக்கொள்ளு தற்குக் காரணமாயிருந்த திறன் இதுவெனக் கூறியருளப்படு

(பொ - ரை ) (பிற கடவுளரைப்போல மயங்க வைக்காது தெளிவுபெற) நன்மை ஒன்றனையே செய்வானும், எந்தையாவா னும், எம்மை உடைமையாக உடையானுவானும், ஆகிய சிவபெரு மானுடைய திருவடிகளையே நினைந்து, (அந்நினைவு மேலீட்டால் மனக் கசடற) உருகி, (அவ்வுருக்கங் காரணமாக மனத்துள்ளே பெருகிய பெருங்களிப்பின் காரியத்தினைக் கண்டு) "இவன் பெருங் களிப்பொடு கூடிய பித்தனுவான்" என்று கருதிட, உள்ளக்கருத் திற்கு ஒத்தன ஒத்தனவாகிய (பொருளொடு புணராத) சொற்களை ஊர்தோறும் ஊர்தோறும் சென்று சொல்லிட, அச்சொற்களைக் கேட்ட எத்தகைய இயல்புடையாரும் தங்கள் தங்கள் உள்ளத்திலே தோன்றியவாறே (உண்மைப் பொருளை நாடாது) பேசிட, அவற்றை யெல்லாம் கேட்டற்கண்ணும் மனம் எழுச்சி பெருது, தன்னுறு செயலிலே ஈடுபட்டுக் கிடப்பது எக்காலத்திலே நிகழ்வதாகும் எ - று

(வி - ரை ) அக்காலம் கைவரப்பெறின் கொள்ளாமை முதலாய நான்கனையும் பெற்று, அப்பேற்றினுலே மெய்யரும்புதல் முதலாயவற்றுடன் உய்தியும் பெற்றுக்கொள்ளுதல் கூடும் என்பது இசையெச்சம்.

மத்தம் - உன்மத்தம் ; பெருங்களிப்பு. மால் - மயக்கம் மயக்கமுடைய வனை ஆகுபெயரால் உணர்த்த "மால்" எனக் கூறியருளினுர். "இவன்" என்றது, முன்னர் இவ்வியல்புடையனுக இருந்தவன் இப்போது இவ்வியல் பினனுனுன் எனச் சுட்டி நின்றது "எவரும்" என்றதனை முன்னும் பின்னும கூட்டிக்கொள்க. "எவரும்" என்றது, தம் இயல்பினை அறிந்த தக்காரும் தகாதாரும், தம்மியல்பினை அறியாத அவ்விருவகைப்பட்டோரும் ஆகிய இரு பகுதியினரையும். அவர்தாம், இளமை முதுமை அறிவுடைமை அஃதின்மையாகிய இத்தொடக்கத்தன கொண்டவர். "சகம்பே யென்று தம்மைச சிரிப்ப நாணது வொழிந்து நாடவர் பழித்துரை பூணது வாக" (போற்றித்திருவகவல். 68-70 ) என்றதும் அறிக.

ஊர் ஊர் திரிந்து - ஊர் தோறும் ஊர்தோறும் திரிந்து. யான் சொல்லிட, அவ்விருதிறத்தாரும் பேசிட, என் மனம் சாவது எஞ்ஞான்று என்க. சுற்றத்தரர் பற்றியழைத்துப் பதறியும், பகைவர் தூறறி இகழ்ந்தும், ஏனையோர ஏற்றவாறு தத்தங் கருத்துப்படி பேசியும் என்க.

சாவமுன் னுள்தக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சம் அஞ்சி
ஆவஎந் தாய்என்று அவிதா இடும்நம் அவர்அவரே
மூவர் என் றேஎம் பிரானுெடும் எண்ணிவிண் ஆண்டு மண்மேல்
தேவர்என் றேஇறு மாந்து என்ன பாவம் திரிதவரே. 4

இதனுலும், விண்ணவர் தம்மால் வணங்குதற்குரியர் அல்லர் என்றமைக்குரிய காரணங்களும், அவ்விண்ணவர் தாமும் கடவுள

ரெனத் தம்மை மதித்துக்கொள்ளற்கும், நிலவுலகிலுள்ளோரும் அவ்வப்பகுதியில் உள்ளோரும் மும்மூர்த்திகளுள் ஒருவராக அவர் களைத் தனித்தனி மதித்துக்கொள்ளற்குமுரிய முறையும் யாவை என்றுங்கு வினவிக்கொள்ளும் முகத்தானே பிற கடவுளர் பதங் களைக் கொள்ளாமை முதலியவற்றுக்குரிய காரணங்களைப் புலப் படுத்தி யருளுகின்றார்.

(பொ - ரை) முன்னொரு காலத்திலே தக்கனுடைய செருக் கொழிய, அவனுடைய வேள்வியும் அழிய, அவன் செய்த வேள்விக் குச் சென்று, ஆங்கு அவிப்பலியாக அவன் கொடுத்த ஆட்டின் ஊனைத் தின்றும், (அவ்விடத்தே இறைவனை முன்னிட்டுக் கொள்ளாமையாகிய குற்றத்திற்காக இறைவன் நெற்றியங் கண்ணினின்றும் தோன்றிய வீரபத்திரனைக் கண்டும், பின்னர் ஒருகாலத்தே திருப்பாற்கடலில் தோன்றிய) நஞ்சினைக் கண்டு அச்சங்கொண்டும் ஆற்றாராகி, ஐயோ! எங்கள் அப்பனே! (காப்பாற்றுக) என்று சொல்லி முறையிடும் இயல்பினையுடைய நம்மைப் போன்றவர்களாகிய அக்கடவுளரே, எம்பிரானொடு தாமும் சேர்ந்து மூவருள் ஒருவரெனத் தனித்தனியே தம்மை யெண்ணிக்கொண்டு, வைகுந்தமும் சத்தியலோகமுமாகிய வானுல கத்திலுள்ள பதங்கட்குத் தாந்தாமே தலைவரென்று உரைத்து ஆட்சி செய்துகொண்டும், மண்ணகத்திலே தமக்குச் செய்துவரும் ஆராதனைகளைப் பெற்றுக்கொள்வதால் செருக்குற்றும் இருந்து வருதற்குரிய மாறுபட்ட தவத்தினை முற்பிறவியிலே செய்தவர் களாகிய அவர்கள் அங்ஙனம் செய்தமைக்குரிய முறைமைதான் என்னை? எ - று.

(வி - ரை.) "உழிதர்வர்" (அப்பர். தேவா. திருவொற்றி. 5.)

"திரிதர்வர்" (அப்பர். திருநல்லூர். 5.)

என்பவைபோலத் "திரிதர்வர்" எனப் பாடங்கொண்டு, எண்ணி விண் ணுண்டு இறுமாந்து திரிதர்வர்; என்ன பாவம்! என்று உரைத்தலும் ஒன்று. திரிதர்வர் - திரிவர்.

சாவ - செருக்கொழிய. வேள்வி சாவ எனவும் இயைத்துக்கொள்க. இறைவனை முன்னிடடுச் செய்யாமையால், அவ்வேள்வியிற் கொடுத்த அவிப்பயன் அமுதமாகாது ஊனேயாகும் என்பது தோன்ற "வேள்வித் தகர் தின்று" என்றருளிச்செய்தார். தகர் தின்று அஞ்சி, நஞ்சம் அஞ்சி என இயைக்க. தகர் தின்று சாவதற்கும், நஞ்சினுற சாவதற்கும் அஞ்சி யெனினும் இழுக்காது. ஆவ - அபயக் குறிப்பு. அவிதா - ஆபத்தில் முறையிடும்போது கூறுவதோர் சொல்.

ஆக்கமுற்றபோது செருக்கியும், அழிவுற்றபோது இறைவனை அழைத்தும் வரும் நம்மினத்தைச் சார்ந்தவர்களாகிய அககடவுளர் என்க. நாம் நம் குணஞ் செயல்களைக் கண்டு யாமே சிறியம், நரகர் எனற்குரியம்; அவனே பெரியன், தேவன் எனற்குரியன் என்றுதல் உணர்ந்துளோம். அதனையும் அறியும் அறிவற்றவராவர் என்னும் அவரது இழிவு தோன்ற "அவரே" என்றருளிச் செயதார். "நோவுள்ளார் வாயுள்ளார்" என்பது தமிழ்மறை.

தேவர் என்று மயங்கி இறுமாந்தமையால் அவரேயன்றி அவர்க்கு அன்பராயினரும் தண்டிக்கப்பட்டனர். அங்ஙனம் தண்டிக்கப்பட்டும் அவர் செருக்கடங்கி இறைவற்கு அன்பராயினரல்லர் என்பது தோன்ற "இறுமாந்து என்ன பாவந் திரிதவரே" என்றருளிச் செய்தார்.

ஒறுப்பதற்கும் இடையூறு நீக்கி அளிப்பதற்கும் அவனொருவனே யாவான் எனத் தேவரும் அறிந்துகொள்ளாத மறைப்பொருளை அடிகள் தெளிந்துகொண்டு வெளிப்படுத்தியருளினர் என்க.

மூவரென்று - மூவரை முதலாகக் கொண்டவரென்று. எனவே, அரி தன்னோடு இருவராகவும், அயன் தன்னோடு மூவராகவும், இந்திரன் தன்னோடு நால்வராகவும், அங்ஙனமே பிறரும் பிறவாறுகவும் எண்ணினரென்க. எண்ணுதல் - எண்ணலளவிடுதல். எனவே, அப்பொருளின் ஆற்றலோடு அளவிட்டாரில்லை என்க. தம்மினும் உயர்ந்தாரும் தாழ்ந்தாருமாகியவர் இலராகலின், அவ்விருவகைப்பட்டாரும் தாழ்ந்தோரே என்பது தோன்ற இருவர் என்றுது மூவர் என்றே எண்ணினர். அப்பிற கடவுளரும் அங்ஙனம் தம்மையெண்ணிக் கொள்வதனல், ஏனையோரும் அங்ஙனமே அவரை யெண்ணினர். இறைவன் ஒருவனே என்பது அறிந்திருந்தும் தாமும் மயங்கியும் பிறரை மயக்கியும் வரும் பேரிருள் அமைந்தவர் என்க. நல்ல வேளையாக யான் அங்ஙனம் செய்யாது பிழைத்தேன் என்று உவந்தருளியபடியாம்.

தேவர்கள் தக்கன் வேள்விக்கு இறைவனை முன்னிட்டுச் செல்லாது, தாமே சென்றமை அவருடைய செய்ந்நன்றியறிதல் இன்மையையும், முன்பின் நிகழ்ச்சிகளை நாடும் அறிவின்மையையும், ஒறுப்புண்டபோது பணிந்தமை அவரிடத்து ஆண்மையும் நாணமும் இல்லாமையையும், இறுமாப்புக்கொள்ளல் அவரது அவா மிகுதியையும், அவர் ஒறுக்கப்பட்டதோடமையாது தம்மைச் சார்ந்தாரையும் ஒறுப்படையச் செய்தது அவரது கீழ்மையையும், அளி யின்மையையும், பகுத்தறி வின்மையையும், அன்ன பிறவற்றையும் அடிகள் உணர்ந்தருளுமாறு செய்தனவாகலின் "கொள்ளேன் புரந்தரன்" என்றுங்குக் கூறியருளினர். தக்கன் வேள்வி செய்தமையும் தேவர்கள் நஞ்சமஞ்சியமையும் ஆகிய வரலாறுகள் வெளிப்படையானவை.

**தவமே புரிந்திலன் தண்மலர் இட்டுமுட் டாது இறைஞ்சேன்**
**அவமே பிறந்த அருவினை யேன்உனக்கு அன்பருள்ளாம்**
**சிவமே பெறுந்திரு எய்திற்றி லேன்நின் திருவடிக்கு ஆம்**
**பவமே அருளுகண் டாய்அடி யேற்குஎம் பரம்பரனே. 5**

இதனால், அடிகள் இறைவனை வழிபடாது உழல்வது ஊழின் பயன் எனத் தெளிந்து, அப்போகூழினை அடியை வணங்குவிக்கும் ஆகூழாக மாற்றியருள்க என வேண்டாநின்றமை கூறியருளப் படுகின்றது.

[மற்றிவ்வெண்ணம், போகூழினை ஆகூழாக மாற்றுவிடில், யான் நாணுதும், செய்ந்நன்றி மறந்தும், இறுமாந்தும் உழலும் புல்லிய கடவுளரைப்போன்று திரிதற்கு நேரும் எனத் தமது போகூழாற் பெறற்பால கொடுமைகளை நினைவூட்டியது.]

(பொ - ரை.) மேலான பதங்களையுடைய கடவுளர்க்கும் மேலான பதத்தினை உடையானே, (ஐம்புலன் அடக்கலும், தமக்கு நேரும் இன்னலைப் பொறுத்தலும், உயிரக்கு இடுக்கண் செய்யாமையுமாகிய வடிவினைக் கொண்ட) தவத்தினை யான் செய்தேனல்லேன், நின்னுடைய திருவடிக்கண்ணே குளிர்ந்த மலரைச் சொரிந்து தடைபடாது வணங்குதலையும் செய்யேன், (பொருட்பற்றும் காமப்பற்றும் பற்றி) யான் எனக்குக் கேட்டினைத் தேடிக்கொள்ளற்கே எவரானும் செய்தற்கரிய முற்பிறப்பிற் செய்த தீவினை காரணமாக இப்பிறவியை எடுத்தேன், அப்பிறவியை எடுத்த காரணத்தால் நினக்குரிய அன்பர் குழுவிற்குள் ஒருவனாக மதிககப்படுதலாகிய சிவப்பேற்றினைப் பெற்றுக்கோடற்குரிய நல்வினையாகிய ஆக்கத்தை முன்னர்த் தேடிவைத்துக் கொண்டே னில்லை. ஆதலால் இப்பொல்லாத பிறவியை நீ எடுத்துக்கொண்டு நின்னடிகளைச் சார்தற்கேற்ற நல்லதொரு பிறவியை எனக்கு அருளிச் செய்யாய் எ - று.

(வி - ரை.) சிவம் - வேறுபாடற்றது; பேரின்ப மூட்டுவது; மெய்யன்பர்கரு மன்றமாவது; இறைவன் துயிலும் அன்பர் உள்ளப்பள்ளி; அழியா மங்கலம். இவற்றால் வேறுபாடற்றதாய், பேரின்ப மெய்தியதாய், அடியாரக்கு மன்றமாய், இறைவறகுத் துயிலும் பள்ளியாய், அழியா மங்கலஞ் சான்ற உள்ளமாகிய செல்வத்தினைப் பெறுதற்கேற்ற நல் வினையை முன்னர்ச் செய்யாமையால் யான் இப்பிறவிக்கண்ணே பெற்றுக் கொண்டேனில்லை என்று விரித்துக்கொள்க. இம்முயற்சியால் சிவமே பெற்றுக்கொள்ள வேண்டிய திருவினை (நாணயப் பொற்காசை) எய்தினே னில்லை என்றருளியபடி.

இட்டு - சொரிந்து. தண்மலரிட்டு வணங்குதலைப் புஷ்பாஞ்சலி செய்து வணங்குதல் என்பர்.

"திருவடிக்காம் பவமே யருளு" எனக் கேட்டருளியமையால், அங்ஙனமாகாத இப்பிறவியை எனக்கு வேண்டேன்; நீயே கொள் என்னும் கருத்து வெளிப்பட்டதென்க. இறைவன் ஆசானுதல் கருதி, இப்பிறவி வேண்டேன்; நீயே கொள் என்றனராய், அங்ஙனம் அம்மரபு பற்றி உரைத்தருளினர். இப்பிறவியைத் தாம் ஏற்றுக்கொள்ளின் செய்ந்நன்றி மறத்தல் முதலாய பெரும்பழிகட்கு ஆளாவதற்கு அஞ்சி இங்ஙனம் இரந்து வேண்டியருளினர் என்க. அங்ஙனம் மறந்து இறுமாந்து அழிந்தவர் தக்கன் முதலியோராவர்.

உள்ளமாகிய ஊற்றினுடைய தூய்மையின் காரணமாக அதன்கண் ஊறும் அருளாகிய அமுத நீரும் செவ்வி கெட்டு நஞ்சமாக மாறு படுகின்றது என்பது ஈண்டுப் பெறப்பட்டது.

"நிலத்தியல்பால் நீர் திரிந்தற்று" (திருக்குறள். 46-2)

என்பர் திருவள்ளுவனாரும்.

அருளமுதம் பாழ்போகாமே ஊற்றாகிய உள்ளத்தினையும் தூய்மை செய்தருள் என விண்ணப்பித்தருளினர் என்பது கண்டுகொள்க.

புஷ்பாஞ்சலி என்பது துதியும் மலரிடுதலும் வணங்கலுமாகிய மூன்றினையும் ஒருங்கே கொண்ட செயலாகலின் "முட்டாது தண்மல ரிட்டு" எனவும், "முட்டாதிறைஞ்சி" யெனவும் இயைக்கவேண்டா.

**பரந்துபல் ஆய்மலர் இட்டுமுட் டாதுஅடி யேஇறைஞ்சி**
**இரந்தஎல் லாம்எமக் கேபெற லாம்என்னும் அன்பர்உள்ளம்**
**கரந்துநில் லாக்கள்வ னேநின்தன் வார்கழற்கு அன்புஎனக்கு**
**நிரந்தர மாய்அரு ளாய்நின்னை ஏத்த முழுவதுமே. 6**

இதனால், அன்பர்க்குக் காத்தலில்லாதவனே, எனக்கும் நின் மேல் அன்பு வைத்தற்கு அருளாய் என்று இறைவனை இரந் தருளியமை கூறியருளப்பட்டது.

[இத்திருப்பாட்டால் வேண்டி யருளப்பட்ட இடையீடு அற்ற அன்பு பெறுதல் வேண்டுமென்னும் எண்ணமே, உள்ளந்தூயதாதல் வேண்டுமென்னும் எண்ணத்தினை நினைவூட்டியது, அது, தூய தாகாவிடின் தக்கன் முதலாயினோர் எய்திய நிலையையே தாமும் எய்த நேரும் என்பதனை நினைவூட்டியது]

(பொ - ரை) பலவகைப்பட்ட (ஆராதனைக்குரியனவாக) ஆராய்ந்தெடுக்கப்பட்ட மலர்களைச் சொரிந்து தடைபடாது பரந்து வணங்கி, வேண்டியனவற்றையெல்லாம் இரத்தலினாலே எங்களுக்கே பெற்றுக்கொள்ளுதல் ஆகத்தக்கது என்னும் உறுதிப்பாட்டை யுடைய மெய்யன்பருள்ளத்திலே ஒளித்து நிற்றலிலாத இயல்பினை

யுடைய கள்வனே, நின்னையே முற்றிலும் வாழ்த்தி வழிபாடு செய்வதற்கு நின்னுடைய நீண்ட கழலையணிந்த திருவடிக்கண்ணே செய்யுமன்பினை (அடிமையாகிய எனக்கு) இடையீடின்றி அருள் செய்வாய். எ - று.

(வி - ரை.) பரந்து வணங்குதலாவது, வணங்குதற்குரிய முறைகளிலே யாதொன்றும் சுருங்குதலின்றிப் பரக்குமாறு வணங்குதல். ஆய்மலர் - பூசனைக்குரியவை இவையெனத் தெரிந்தெடுக்கப்பட்ட மலர்.

இரந்தனவெல்லாம் என்றருளினார்; இம்மைக்கும் அம்மைக்கும் ஆகவேண்டியன எவையோ அவையெல்லாவற்றையும் பெற்றுய்யலாம் என்பதறிவித்தருளற்கு. அவை: பொன்னும் மணியும் பூசுசாந்தும் நெல்லும் ஆடையும் காதற்குத் தூதும் அன்ன பிறவுமாம். அங்ஙனமெல்லாம் அன்பர் பெற்றுய்ந்த வரலாறுகளைப் **பெரியபுராணம் திருவிளையாடற் புராணங்களுட்** காண்க.

நிரந்தரம் (இடையீடின்மை) வடசொல். அன்புடை இனத்தார்க்கு ஒளியாதும், அஃதிலார்க்கு ஒளித்தும் நிற்குமியல்புடைமைபற்றிக் "கள்வன்" என்றருளினார். கள்வன் என்பது காதற்பேச்சு.

"உள்ளங் கவர் கள்வன்"

என ஆளுடைய பிள்ளையார் அருளியதுங் காண்க.

"அன்பு நிரந்தரமா யருளாய்" எனக் குறிப்பிட்டருளியவாற்றானே, இறைவன் அடிகளுள்ளத்திலே கரந்தும் கரவாதும் நின்ற ரியல்பும் பெற்றாம். அன்பர்க்கு எப்போதும் கரவாதும், அன்பிலார்க்கு எப்போதும் கரந்தும், அன்புண்மையும் இன்மையுமாயினார்க்குக் கரந்தும் கரவாதும் நிற்றல் இறைவற் கியல்பென்க. அன்பருள்ளம் வெளிப்பட்டே நிற்கும் மெய்யனே எனக் கூறவந்த அடிகள், ஆங்கு இறைவனது வெளிப்பாட்டின் உண்மை அன்பிலார் உள்ளத்தின்கண்ணும், அவ்விரண்டுமுடையார் உள்ளத்தின்கண்ணும் கரந்தும் தோன்றியும், கரந்தும் பொய்த்தும் நிற்றலால், அங்ஙனம் "மெய்யனே" என்னாது "கள்வனே" என்றே யருளினார்.

இனி, "அன்பருள்ளங் கரந்துநில்லாக் கள்வனே" என்றதற்கு, நேர் சென்று அன்பருள்ளத்தைக் கவர்ந்து கொள்ளும் கள்வன் என்றும், அன்பிலார்மாட்டுக் கரந்துசென்று, அவர் விழை பதங்களாய், அணியும் பொன்னும் மணியுமாய்க் காதற்குரிய தலைமக்களாய், அவர் நுகரும் நுகர்ச்சியாய், அன்ன பிறவுமாய் அவர் உள்ளத்தைக் கவர்ந்துகொள்ளும் கள்வன் என்றும் விரித்து உரைகொள்ளினும் அமையும். காண்பனவெல்லாம் அவனேயாகக் கண்டு அன்பு செய்தலை முழுவதும் ஏத்துதலாகக் கொள்க.

வார்கழல் என்றருளினார், திருமால் பாதலம் புக்குத் தேடவும் அதன் மேலும் நீண்டிருத்தலின்.

முழுவதும் கண்ட வனைப்படைத்
　　தான்முடி சாய்த்துமுன்னாள்
செழுமலர் கொண்டுஎங்கும் தேடஅப்
　　பாலன்இப் பால்எம்பிரான்
கழுதொடு காட்டிடை நாடகம்
　　ஆடிக் கதிஇலியாய்
உழுவையின் தோல்உடுத்து உன்மத்தம்
　　மேற்கொண்டு உழிதருமே. 7

*இதனால், அறிவாற்றலால் இறைவனைப் பெற்றுக்கொள்ள நினைப்பாரும் இறுதியில் வீணே முயன்றவராகி இடர்ப்பட இறைவன் அவர்க்கு அப்பாற்பட்டவனாவான்; அவன் மற்றொரு பால், செருக்குற்றார் செருக்கடங்க ஒடுக்கிய அடையாளத்தொடு பெருமிதம் மிக்குக் கூளிக் கூட்டத்தொடு அன்பற்றார் பற்றிய பற்றுக்களில் தானின்மையானும், அவர்க்கியைந்த உடல் உறுப்பு உலகம் நுகர்வு என்பன இல்லாது பயனும் அற்றுப்போனமை யானும், அவரை வளர்க்கும் திருவுள்ளக் குறிப்பில்லானாகி, அலை காற்று எல்லாவற்றினதும் நிலையைப் பெயர்க்குமாறே எல்லாம் அணுவாகிச் சிதைய மறக்கூத்தாடா நிற்பான் என்பவை கூறி யருளப்படுகின்றன.*

(பொ - ரை) ஒடுக்கியவற்றையெல்லாம் படைத்தற்கேற்ற பெற்றிமை அறிந்தருளிய காலத்தே எல்லாவற்றையும் படைத்த வனாகிய நான்முகக் கடவுளைப் படைத்தவனாகிய திருமால் என்பவன் முன்னொரு காலத்தே மிக்க மனமலர்ச்சி கொண்டு, தன் தலையை அசைத்து (பன்றியுருவோடு) கீழுலக மெங்குந் தேட அவனுக்குப் புலப்பட்டிலனாய் அப்பாற்பட்டு அரியனானவனாகிய எம்பெருமான், ஒடுங்குங் காலமாகிய இப்பகுதிக்கண்ணே, புலித் தோலுடையினை உடுத்தி, சுடுகாட்டிடத்தே பேய்களுடன் மறக் கூத்தினைப் பயின்று, பற்றுக்கோடிலனாய், பெருமிதமிக்குச் சுழலா நின்றனன் எ - று.

(வி - ரை.) கண்டவன் - படைத்தவன். "முனைவன் கண்டது முதனூலாகும்" என்பதுபோல. கதி - பற்றுக்கோடு. ஒடுக்கும்போது உயிர்கட்குற்ற பற்றுக்களை நீக்குவோனாதலின் "கதியிலி" என்றருளப் பட்டான். பிறப்பிலி என்றருளியபடி. கதியிலி என்பதற்குப் பேச்சில்லாத வனாகி எனவும் பொருள் கொள்ளலாம். "கூருமற் குறித்ததன் சொல்லும்" (கலி கட) என்றதும் இதனை வலியுறுத்தா நிற்கும். கதியிலியாய் உழுவையின் தோலுடுத்து என்றது பழிப்பதுபோலப் புகழ்தற் பொருளில்

வந்தது. உழிதா என்னும் முதனிலை உழிதரும் என வினைமுற்றியது. உழிதருதல் - சுழலுதல் ; திரிதல்.

உணர்வுற்ற இடத்தில் ஒளிக்கின்றான் ; எல்லாம் உணர்வற்று ஒடுங்கிய இடத்தில் வெளிப்பட்டு நடிக்கின்றான், இவன் இயல்பு இருந்தவாறு என்னை ! என்க.

கழுது - பேய். இறைவன் பேயோடாடி எனவும் பெயர் பெறுவன். இதனால் அவன் தனது பெருமைகளையும், ஏனையவற்றுக்கு அமைந்த சிறுமைகளையும் கருதாது, அவற்றோடு உடன்விளையாடும் எண்பதம் உடையவன் என்பது பெறப்பட்டது.

புலித்தோல் உடுத்திய வரலாறு முன்னர் உரைக்கப்பட்டது. கடவுளை மதித்து அன்பு செய்தார் நிலையைப் புலித்தோல் விளக்கிற்று.

"கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவல்புரளத்
தலையங்கை கொண்டுநீ காபாலம் ஆடுங்கால்" (கலி. கட.)

எனக் கூறுதலின், புலித்தோல் உடுத்தது குறிக்கப்பட்டமை கொண்டு, கொன்றைத் தார் சுவலிலே புரளுதலையும, காபாலம் கைக்கொள்ளுதலையும் உடன்கொண்டு ஆடிய காபாலக் கூத்தினையே இங்குக் குறிப்பிட்டருளினார் என்பது பெற்றும். எல்லாம் அழிவுற்றனவேனும், இறைவன் உறுப்பிலே அணிந்துகொண்டனவும, அவனுடன் ஆடும் கூளிக்கூட்டமும் அவனால் அழிக்கப் பெற்றிலவென்க. கூத்தினுள்ளே இறுதிக்கண் அயர்வதாகிய காபாலம் ஒன்றனையே கிளந்தோதியருளினாரேனும் அதற்கு முன்னயர்ந்த பாண்டரங்கம், கொடுகொட்டி என்பவற்றையும முன்னர் முறைப்படுத்திக் கூறிக்கொள்க. கொடுகொட்டி எல்லாவற்றையும் எரிக்கையிலே ஆடப் படுவது. பாண்டரங்கம் எரித்ததனால் உளதாகிய நீற்றினையணிந்து ஆடப்படுவது. காபாலம், அரி முதலானோர் தம் எலும்புகளையும், அயனுடைய காபாலத்தினையும் அணிந்துகொண்டு, எல்லாம் அறுவாகிய காலத்தே தூய பரவெளியிலே ஆடப்படுவது. இம்மூவகைக் கூத்தும் அயர்தறகண்ணே எல்லாம் அழிந்தொழிய இறைவியும் இறைவனுமே எஞ்சி நிற்பர். இக்கூத்துக்கள் ஒடுங்குதற்கண் ஆடப்படுவன ஆதலின், ஆண்டு இறைவியும் உடன்நின்று ஆடாளாய், உடன் சான்றாக நிற்பள் எனபதை, கலித்தொகைக் கடவுள் வாழ்த்து முதலியவற்றுள்ளே உய்த்துணர்ந்துகொள்க. காடு - சுடுகாடு. ஊழிக்காலத்தே உலகெல்லாம் சுடுகாடாகும் என்க.

செழுமலர் - செழித்த மனமலர்ச்சி. மிக்க மனமலர்ச்சியென்க. தன் தலைமைக்கு இடையூறாக இன்னொருவன் முளைத்துவிட்டானோ என்ற எண்ணத்தாலும், அங்ஙனம் இடையூறாக இருந்த அயனோடு புரிந்த போரினாலும முன் குறையப்பெற்ற மனமலர்ச்சியானது பின்னர், அவ்விருவர்க்கு மிடையே யேற்பட்ட பணயத்தால் மிகப்பெறுதலின் "செழுமலர் கொண்டு" என்றும், அம்மகிழ்ச்சியினாலே திருமால் தன் தலையை யசைத்தான் என்பது தோன்ற "முடிசாய்த்து" என்றும்,

[மகிழ்ச்சியால் தலையசைத்தலைப் "பெருமான் மகுடம் - சாய்க்கும்படிக்குக் கவிபாடும் ஞானத்தமிழ்க் கடலே" என்னும் கம்பநாடர் கூற்றானும் அறிந்துகொள்க] இங்ஙனம் அகங்காரங்கொண்டு ஆராய்தலின் உலகம் பிரவிர்த்தியாகி எல்லையறறு இறைவன் திருவடியாய் வளர்ந்துகொண்டே போதலின "அப்பாலன்" என்றும், [அபபாலன் என்றருளினரேனும் திருவடியால் அப்பாலன் எனக் கொள்க ] அங்ஙனம் அகங்காரங்கொணடு பிரவிர்த்தியடையும் நெறியின் நீங்கி, எமக்குப் பொருந்திய கருவிகளை விரிவடையாவாறு ஒடுக்கியாளும் பகுதி எமது பகுதியாகும் என்பது தோன்ற "இப்பால்" என்றும், அப்பாலிருநத அத்திருடாலுக்கு அப்பாலனாயிருந்த அவனே இப்பாலிருந்த எமககு இப்பாலனாய் எம் தலைவனுமாயினன் என்பது தோன்ற "அப்பாலன்..... எமபிரான்" என்றும், இப்பாலாகிய நெறி காபால நடனத்துள் ஒடுங்கியிருத்தலே என்பது தோன்ற "கழுதொடு......உழிதருமே" என்றும் கூறியருளினர்.

"செழுமலர் கொண்டு" என்பதறகுக் கையில் செழுமை வாய்ந்த மலரைக்கொண்டு என்றும், பிறவாறும உரைப்பின் சிறவாது; அவ்விலிங் கத்தின் அடிப்பகுதியைத் திருமால் தேடியறிய முற்படடபோது மற்று அதனைப் பரமபொருள் என்றுட்கொண்டிலனாதலின் என்க.

அரிய திருவடி, எளிய திருவடி என்றலே அடிகள் கருத்தாகலின், திருமுடி தேடிய வரலாற்றினை விடுத்தருளினர் என்க.

உழிதரு காலும் கனலும் புனலொடு மண்ணும்விண்ணும்
இழிதரு காலம் எக் காலம் வருவது வந்ததற்பின்
உழிதரு காலத்த உன் அடி யேன் செய்த வல்வினையைக்
கழிதரு காலமு மாய் அவை காத்து எம்மைக் காப்பவனே. 8

இதனால், ஊழியிறுதிக்கண் என்னையுள்ளிட்ட எல்லாவுயிர் களையும் மலம் களைந்து காக்கும் அருளுள்ளத்து இறைவனை இப்போதே வழிபட்டு இரந்து அவன் அன்பினைப் பெற்றுக்கோடலே இனிதெனக் கருதி யருளா நின்றார்.

(பொ - ரை ) படைப்பு முதலாயவற்றை நடாத்துதற் பொருட்டு இயங்குகின்ற கூத்தினை இயற்றும் கால்களையுடைய அப்பனே, வெளியும், அவ்வெளியொடு கூடிய (சுழன்று) செல்லா நின்ற காற்றும், அக்காற்றோடு கூடிய நெருப்பும், அந்நெருப்பொடு கூடிய நீரும், அந்நீரொடு கூடிய மண்ணுமாகிய ஐம்பெரும் பூதங்களும் ஒடுங்கிவிடுகின்ற காலம் வந்த பின்பு, உனது அடிய வனாகிய யான் செய்த வல்வினையை அனுபவித்துக் கழித்தற்குரிய கால தத்துவமுமாகி, அவவினைகள் அனுபவித்துக் கழியுங்காறும் நீங்காமல் மற்று அவற்றைக் காத்து, (பக்குவமுற்ற ஞான்று

அவ்வினைகள் சேரவொட்டாமல் அவற்றை எரித்து) எம்மைக் காப்பவனே, அந்தப் பூதங்கள் இழியுங்காலம் வருவது எப்போதாகும் எ - று

(வி - ரை ) அவை காப்பவன் - பால்வரை தெய்வம் இந்தக் காலம் ஏற்றதன்று; இழிதரு காலம் என்று வரும் என்றருளியபடி. மெய்யுணர்ந்தும் அவனைப் பின்பற்றி அன்புற்று நிற்றலின் இப்பகுதிக்குப் " பத்தி வைராக்கியம் " எனப் பெயரிட்டனர் போலும்.

அவ் விறுதிக்காலம் வருவதற்கு இன்னும் எத்தனையோ காலங்கள் உள்ளனவே! அத்துணையும் யான் எத்தனை அல்லல்களில் அகப்படவேண்டுமோ! யான் ஒரு கணமும் பொறேன்; ஆதலின் நின் திருவடியை இன்றே அளித்தருள்வாய் என்பன இசையெச்சம்.

**பவன்எம் பிரான்பனி மாமதிக்**
**கண்ணிவிண் ணோர்பெருமான்**
**சிவன்எம் பிரான்என்னை ஆண்டுகொண்**
**டான்என் சிறுமைகண்டும்**
**அவன்எம் பிரான்என்ன நான்அடி**
**யேன்என்ன இப்பரிசே**
**புவன்எம் பிரான்தெரி யும்பரிசு**
**ஆவது இயம்புகவே** 9

இதனால் இறைவன் அறிவுறுத்திய விதிமுறைகளைச் சொல்லளவிலேயே வைத்துவிடாமல் எண்ணத்தினும் செய்கையினும் பயின்றுவருதற்கு அவனையே இயம்புமாறு வேண்டியருளாநின்றார்.

[இவ்வேண்டுகோள் நிறைவேறுவிடின் தாம் ஆறுதல் பெறுவது ஊழியிறுதியிற் போலும் என்னும் நினைவுண்டாவது இயல்பாகலின், இவ்வேண்டுதலே " உழிதருகாலும் " என்னும் திருப்பாட்டின் கருத்தினை எழுப்பியதென்க.]

(பொ - ரை.) புவனாகிய எம்பிரானே, யான் நின்பால் அறிந்துகொள்ளும் இயல்பதாவது, என்னுடைய குணஞ் செயல்களிலே யான் குறைவுபட்டிருத்தலை அறிந்துவைத்தும் இயல்பாகவே உயிர்கள்மேல் வைத்திருக்கும் பேரிரக்கத்தால் எம்முன்னர் அந்தணர் கோலத்தோடு கூடிய ஆசானாக வந்துதோன்றி, பவனாகிய எம்பிரானும், குளிர்ந்த பெருமையையுடைய ஒருகலை வளர் திங்களைத் திருமுடியிற் குறுங்கண்ணியாக அணிந்தவனும், எல்லாத் தேவர்கட்கும் பிரானும், சிவனும் ஆகிய எம்பிரானும்

(நானே யாவேன்; நீ என் அடிமையாவாய் என்று எனக்கு அறிவுறுத்திய) அவனே எம்பிரான் எனவும், யான் அவன் அடியேன் ஆவேன் எனவும்படும் இயல்புதான்; அவ்வாறுதலை நீ என் முன்னர் வந்து சொல்லுக எ - று.

(வி - ரை) புவன் - சுயம்பு (தானே தோன்றியவன்), என்றும் குறைவுபடாத ஒளியுடையவன், எல்லாவற்றையும் தோற்றுவிப்போன் என்னும் பொருள் பயக்கும் வடசொல். புவனுகிய எம்பிரானே யான் தெரியும் பரிசாவது இப்பரிசே, அதனை நினைவினும் செய்கையினும் பயிலும் பரிசை இயம்புக என முடிக்க.

பிரான் - ஆண்டவன். இஃதிப்பொருட்டாதலை,

" என்னைத்தான் என்று அறிதலும் தன்'ன நானும் பிரான்
என்றறிந்தனன் " (பொது. குறுந் அடி 8-9)

எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய் மலர்ந்தவாற்றுனும் அறிக.

பெருமான் - அரசன். விண்ணோர் அவனருளிய பதங்களை நச்சிப் பணியாறறி வருபவர். அப்பதவி வேட்கை தமக்கின்மையால் விண்ணோர் எம்பிரான் என்றுராயினர். தமக்கும் பெருமான் ஆதல்பற்றி விண்ணோர் தம் பெருமான் என அருளிச்செய்திலர்.

சிவன், நலன் செய்வோன், நன்மையுடையோன், பேரின்ப வடிவினன், தண்ணியன், அறிஞர் உள்ளத்துறைவோன் எனப் பல பொருள் பயக்கும் வடசொல்.

மதி - ஒருகலை வளர்திங்கள். இறைவனை அடைக்கலம் புகுந்து தேய்ந்த கலை வளரப் பெற்றமையானும், அவன் சடைமுடிக்கு அணியா யினமையாலும் அதனைப் பாராட்டி இறைவனையும் அத்திங்களஞ் செல் வனையும் உலகம் ஏத்தி வருதலினுல் அச்செல்வன் " மாமதி " என்றருளிச் செய்யப்பட்டான்.

கண்ணி - ஆடவர் தலையில் அணியும் மாலை.

" பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன் " (திருமுருகு. 44.)

எனக் கூறப்படுதலானும் அறிக.

பவன், எல்லாம் தன்னில்நின்றும் வெளியாதலையுடையவன் எனப் பொருள்பயக்கும் வடசொல்.

தான்தோன்றியும், குறையாத ஒளியுடையோனும், எல்லாப் பொருள் களையும் தோற்றுவிப்போனும் ஆதல்பற்றி அவனை விளித்து " இயம்புக " என்றருளினர்; அவனே தன்னில் தோன்றியவற்றை எல்லாம் நலனும், தண்மையும், பேரின்பமும் உடையனவாக ஆக்கித் தன்னுள்ளே ஒடுக்கிக் கொள்ளும் அருள்திறன் அறிந்து " சிவன் " என்றருளிச் செய்தார் என்க. சாபத்தினுல் கலைதேய்ந்த மதியைக் காத்தவனும், விண்ணோர்தம் வேந்த னும் அச்சிவனுவான் என்க. அவன், தமக்கென்று ஒருபொருள் பெற்றுக்

கொள்ளற்பொருட்டேனும், தன்னையே பெற்றுக்கொள்ளற்பொருட்டேனும் யாவர் அன்பு செயினும அவரைக் காத்துவரும் இயல்பினன் என்க.

முன்னர் ஆசானாக வந்து பவன் முதலாம் பெரும்பொருட் சிவன் யானே என்றருளியவாறே, சிவனே, நீ இப்போது எம் முன்னர்வந்து ஆசானாக வநதவன் யானே என்றுஇயமபுக என வேண்டியருளாநின்றார். உடம்படு புணரத்தலால் அப்புவனும் அசசிவனே யாவன் எனக் கொள்க. உலகினொடு எழுத்துக்கட்கெலலாம் முதலதுவாகிய அகரத்திற்கும் ஆதி பகவனே முதல்வனாயினாற் போல.

அறியப்பட்டவனாகிய ஆசானால் அவனே சிவனாவான் எனத் துணிந் தருளினர். அங்ஙனந் துணியப்பட சிவனால் அவனே ஆசான் ஆவான் எனத் தெளியும் பொருட்டு இங்ஙனம் இறைவனை வேண்டியருள்கின்றார் என்க.

இங்ஙனம் தெளிந்துகொண்டாலன்றி அறிவுறுத்திய மந்திரம் முதலாயினவெல்லாம நினைவின்கண்ணும் வந்து பயன் தராவாய்ச் சொல் மாத்திரையிலே நின்று வற்றும் என்க

ஆசான் அறிவுறுத்திய உரைகளிலும் அவனே சிவனாவான் என்றதி லும் ஐயம் அற்றாரேனும, தம்முடைய குணஞ்செயல்களின் குறைகளையும், அவனுடைய நிறைவுகளையும் உற்றுநோக்கி ஒவ்வாமை கணடு, தமக்கு நிகழ்ந்த நிகழ்ச்சியெல்லாம் நனவோ கனவோ என ஐயம் மேலிட்டவராய், அது நனவு என்னின், நீயே ஆசான் எனச் சொல்லுக என வேண்டி யருளினர் என்க.

மதியைத் திருமுடிக்கண் அணிந்தாங்கு என்னையும் நின் திருவடிக் கண் அணிந்தருள்க என்பது குறிப்பு. சிவபெருமான் மதியைத் திருமுடிக் கண் அணிந்த வரலாறு வெளிப்படை.

புகவே தகேன்உனக்கு அன்பருள்
யான்என்பொல் லாமணியே
தகவே எனைஉனக்கு ஆட்கொண்ட
தன்மைஎப் புன்மையரை
மிகவே உயர்த்திவிண் ணோரைப்
பணித்திஅண் ணாஅமுதே
நகவே தகும்எம் பிரான்என்னை
நீசெய்த நாடகமே. 10

இதனால் இறைவன் அருளிச்செய்தது தமது புல்லிய இயல் பிற்குத் தக்கதன்று எனக் கண்டு அச்செயல் நகைக்கத் தக்கது என்றருளியவாறு.

(பொ - ரை.) எனது தொளை செய்யப்படாத மாணிக்கமே! அண்ணாமலையானே! அமுதம் போன்றவனே, எம்பிரானே,

(உனக்கு அன்பராயினர் கூடியிருக்கும் கூட்டத்திடையே யானும் ஒருவன் ஆவேன் என்று தானும் சேர்ந்துகொள்ளற்கும் தகுதி யில்லாதேன்; அங்ஙனமாகிய) என்னை நின் அடிமையாகக் கொண்ட நின் இயல்பு தகுதிப்பாடுடையதாகுமோ? எத்தகைய கீழ்ப்பட்டோரையும் மேலாக உயர்த்துகின்றாய், மேலான வான வரைக் கீழ்ப்பட்டோர்க்கும் கீழாக மிகத் தாழ்த்திவிடுகின்றாய். (இவ் வியல்பினையுடையையாகிய நீ) என்பாற் செய்த கூத்து நகைக்கத் தக்கது, (அன்றிக் கொள்ளற்பாலதன்று) எ - று.

(வி - ரை.) இவ்வாறுதல் தகாது எனத் தன் இழிவைக் கூறுமாற் கூறியருளினார்.

பொள்ளா(த) என்பது பொல்லா(த) என நின்றது. பொல்லா மணி (தொளை செய்யப்படாத மாணிக்கம்) என்றது முழுமாணிக்கத்தை; சிதைக்கப்படாத மாணிக்கம் என்க. புகுதல் - சேர்தல். அண்ணா என்ற றருளினார் அடிமுடியைக் காணலாம் என அரியும் அயனும் ஆவலுடன் நம்பி முயலுமாறு அண்ணாமலையாகி மயக்கி நடித்தவாறே நானும் அடிய னாகி உயர்ச்சி பெறலாம் என நம்பி முயல ஒரு நகைதரு நாடகம் நடித் தாய் என்பது தோன்ற. அண்ணா, மேலோனே, அப்பனே எனவும் கொள்வர்.

நகவே தகும் நாடகமாவது விதூடகக் கூத்து. அது காணற் குரிய தன்றி, மற்று அதன் உட்பொருள் கைக்கொள்ளற்குரியதன்று. அங்ஙன மாதலின் அதனைக் கண்ட யான் நகைத்து மகிழ்வேனேயன்றி, அதனை உற்றுணர்ந்து உட்பொருளைக் கொள்ளேன் என்றருளியபடி. அந்நாடகம் தாழ்ந்தோரை உயர்த்தலும் உயர்ந்தோரைத் தாழ்த்தலும் ஆகிய உட் பொருள் கொண்டது. அக்கூத்தயர்விக்கும் ஆசிரியன் இறைவன். அதனுக்கு உறுப்பாயினார் அடிகள். இங்ஙனம் அமையும் கூத்து நகை விளைத்தற்குரியது. அது புகழ்க் கூத்தாக இருப்பினும் அதனை உவந் தேற்றல் கூடும். அங்ஙனமன்றி நகைக் கூத்தாய்க் காண்போர்க்கேயன்றி அயர்வோர்க்கும் நகை விளைவிக்கும் தன்மைத்தாய் அக்கூத்து இருந்த தென்க. ஆதலின் அதனை அயர்தல் நன்றன்று.

"என்றனக்கே நகைதருமால்"

(யாப்பருங்கலக்கா. அவையடக்.)

என்பதுபோன்றது இது.

இறைவன் தனக்கு ஆசானாக வந்து அறிவுறுத்தியதாலே தாம் பெறற் பாலவற்றையெல்லாம் பெற்றுக் கொண்டாராகக் கருதாராய் அதனை நகவே தகும் என்றருளியமையால் அந்நினைவு மெய்ஞ்ஞானத்திற்கு ஆணிவேர் போன்றது. "நகவே தகும்" என்னும் இந்நினைவே "அவன் எம்பிரான் என்ன நான் அடியேன் என்ன.........தெரியும பரிசாவது இயம்புகவே" என்றதனை நினைவூட்டியது.

"தெரியும் பரிசாவது இயம்புகவே" என்னும் நினைவு, இங்ஙனம் இயம்பாயாகில் ஊழி இறுதிக் கண்ணேதான் எமமைக் காப்பாய்போலும் என்றதனை நினைவூட்டியது. இங்ஙனமே முன்னர் உரைக்கப்பட்டன வற்றை எல்லாம கொண்டுணர்க.

திருச்சிற்றம்பலம்

## 2. அறிவுறுத்தல்

### தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

**நாடகத்தால் உன்அடியார் போல்நடித்து நான்நடுவே**
**வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்**
**ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புஉனக்குஎன்**
**ஊடகத்தே நின்றுஉருகத் தந்தருளஎன் உடையானே. 11**

இதனால் மெய்யன்பிலேன் ஆயினும் வீடுசேர விரைகின்றேன் ஆதலின் உன்னை நினைந்து உருக எனக்கு அருளிச் செய்க என வேண்டியருளுகின்றார்.

(பொ - ரை) மாணிக்கம் பதிக்கப்பட்ட மிக்க புகழினை உடைய பொன்மலை போன்றவனே, என்னை அடிமையாக உடையானே, (யான் உன்மேல் அன்பிலன் ஆயினும்) அன்புடைய அடியார் போலக் கூத்தயர்தலால் உலகோர் மனங்கொள்ளுமாறு பாசாங்கு செய்து (அன்பராயினார் வீடு அடைவதற்கிடையில்) அவ்வீட்டினுட் சென்று சேர்வதற்கு மிகவும் பெரிய விரைவினைக்கொள்ளா நின்றேன். ஆதலால் உன்னிடத்தில் நடுவில் அற்றுப் போகாத அன்பினை என் நெஞ்சினுள்ளே நிலைபெற்று உருகும்படி எனக்கு உதவியருள்வாயாக எ - று.

(வி - ரை.) அன்பற்ற தாம் மெய்யன்பர்க்குரிய கோலங்கொண்டு அவர்க்குரிய நிகழ்ச்சிகளைத் தம்பாலும் நிகழ்வனவாகக் காட்டலால் "நாடகத்தால் நடித்து" என உரைத்தருளினார். நடிப்போன் காட்டும் நகை, அச்சம் முதலாய மெய்ப்பாடுகள் எல்லாம் பொய்ப்பாடுகளாம் என்க. நடிப்போன் நாடகம் முடிந்தவுடன் தான் பூண்டிருந்த கோலம் களைந்து தன் இயல்பினை மேற்கொள்வான். யானோ அங்ஙனமன்றி வாணாள் முழுவதும் அக்கூத்தினையே அயரா நின்றேன். ஒரு கூத்தன் அங்ஙனம் அயர்ந்து வருவானேல் அவன் கூத்துப்பித்தன் என்று இகழப்படுமாறே, யானும் போலிவேடம் பூண்டவனாதலின், உலகத்திலே பத்திப் பித்தன் என்றும், போலி வேடதாரி என்றும் பலவாறாக இகழப்படுகின்றேன். எவை

எங்ஙனமாயினும் நீயோ பெருங்கருணையும் பேராற்றலும் உடையை ஆதலால், எனனை ஏற்று, அன்பினை வளர்த்தருள்வாய் என்றருளியபடி. இப்போது மெய்யன்பன் ஆகேன் எனினும மெய்யனபன் ஆதல் வேண்டு மெனனும் எனது எண்ணத்தினை அறிந்து பிறிதொரு காலத்தாதல் நீ யீவை என்பது திண்ணம; எனினும் இப்பிறப்பிலேயே அதனைத் தந்தருள் என இரந்தருளினர்.

இனி நாடகம் என்றது டகர ஒற்று இரட்டாது நாடகம் என்றாயிற்று எனக்கொண்டு நாட்டில் என்று உரைப்பாருமுளர். ஆங்கு "ஆல்" என் பது சாரியை.

"காடகம் இறந்தார்க்கே" (யா. வி. சூத் 91. உரை. மேற்.)

என்பது போலவே வீடகம் என்பது வீட்டகம் என இரட்டிற்றிலது.

பொற்குன்றே எனவும் மணிக்குன்றே எனவும் கொளளுதல் கூடும். உனக்கு - உன்னில். விரைவு என்பது ஒரு மெய்பபாடு. அதனைச் சிவ புராணத்துள்ளும் 'வேகம்' என்று குறித்தருளினர்.

**யான்ஏதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கு என்கடவேன்**
**வானேயும் பெறில்வேண்டேன் மண்ஆள்வான் மதித்துமிரேன்**
**தேனேயும் மலர்க்கொன்றைச் சிவனேஎம் பெருமான்எம்**
**மானேஉன் அருள்பெறுநாள் என்றுஎன்றே வருந்துவனே. 12**

இதனால், "யான் மெய்யன்பு இலாதேன் ஆயினும் உன்னருள் பெற்றுக்கொள்ளும் நாள்தான் எந்நாளாகும்" என இரங்கா நின்றார்.

(பொ - ரை) தேன் பொருந்திய கொன்றைமலர் மாலையைக் கண்ணியாக அணிந்த சிவனே, எங்கட்குப் பெருமை செய்வோனே, எமக்கு உரியவனே, விண்ணுலகம் முழுவதையும் யான் பெறுவதாய் இருந்தாலும் அதனையும் வேண்டிலேன், இப்பூமி முழுவதையும் ஆட்சி செய்யவேண்டுமென யான் கருதியிருந்தேனும் அல்லேன்; இவ்வின்பங்களை வேண்டாத யான் உன் அருள் பெறும் நாள் என் றுகும் எனக் கருதியே வருந்தும் வருத்தமுடையவனாய் எனக்குள்ள நாள்தோறும் இருப்பேன். அத்தகையேன் பிறப்பினைப்பற்றிச் சிறிதும் அஞ்சினேன் அல்லேன். இறப்பு என்னும் மெய்மையைப் பற்றி எண்ணுவதற்கு என் வருத்தத்தில் தீர்ந்தபொழுது இன்மை யால் மற்றதன்பொருட்டு என் செய்யக் கடவேன் எ - று.

(வி - ரை) பிறந்தது கழிவற்றதாகலின் "பிறப்பஞ்சேன்" என்றும், இறப்பு இனி வருவதாகலின் "இறப்பதனுக்கு என் கடவேன்" என்றும், இறந்தாரே இந்திரன் முதலாயினேர் பதங்களை ஆளற்குரியாராவர் எனி னும், அப்பதங்களை அடைய விழையேன் என்பார் "வானேயும் பெறில் வேண்டேன்" என்றும், உயிரொடு நீடு வாழின் மண்ணுலக ஆட்சி

யெய்துவர் எனினும் அதனையும் ஒரு பொருளாகக் கருதியிருந்திலேன் என்பார " மண்ணுள்வான் மதித்துமிரேன் " என்றும், இவைதாம் இல் லெனின் என் கருதி வாழ்கின்றாய் எனின், அது தான் நின் திருவருட் செல்வம் பெறுநாள் எந்நாளாகும் எனக் கருதி வருந்துவதறகே என்பார் " உன் அருள பெறும் நாள் எனறென்றே வருந்துவன் " என்றும் அருளிச் செய்தார என்க.

மண்ணும் விண்ணும் ஆளுதலை விரும்பாமையின் அவற்றால் உளவாகும இன்ப துன்பங்களும் அவர்க்கு இலவாம் என்க. அற்றாகலின் அடிகள் அருள்பெறு நாள் எந்நாள் ? இந்நாளோ, அடுத்த பிறவியுள்ளோ, ஊழியிறுதியிலோ என ஐயுறறுத் தெளிகிலராய் வருந்தாநின்றார் எனக.

மண்ணுள்வான் என்பதை எசசமாகக் கொள்ளாது பெயராகக் கொள் வோரும் உளர். அவர், ஆட்சி வேட்கை காரணமாகவே ஆள்வோன் மேலும வேட்கையுண்டாகின்றது என்றலை நோக்கிலர் போலும். தனக்கு ஒரு பொருளில் மதிப்பு உளதாயின் அன்றே அப்பொருளுடையாரையும் மதிக்க நேரிடும் என்னும் உண்மையை அவர் அறிந்துகொள்வாராக. விதிதான் உளதென்று கருதி வேண்டியவாறு திரித்துப் பொருள் செய்வ தால உளதாகும கேடு இதனுற பெற்றாம.

"வானேயும் " என்பதில் ஏயும் என்றது, எனினும் என்றதன் மரூஉ. எம்மான் - எமமவன் ; எமக்குரியவன். மான் பெயர் இறுதிநிலை. எம் மஹான் என்பது எம்மான் என நின்றது என்றல் ாண்டைக்கு வேண்டாத தொன்று. (எமமான் = எம் + மான். எம் + ஆன.) இனி, எம்மவன் என்றது எம்மான் எனத் திரிநதது எனக் கொள்வோரும உளர். தமன், நமன் முதலிய வறறையெல்லாம் இயற்பெயர்களாக ஆசிரியர் தொல்காப்பியனார் எடுத் தோதுதலின் எம்மான் முதலியவும் அங்ஙனே ஆன் விகுதி பெறற இயற் பெயர்களாகும் என்க. எம்மோன தமமோன் என்பவையும் அஙஙனமே ஓன் இறுதி பெற்ற பெயர்கள். எம்மவன் தம்மவன் என்பன இடையே அகரப் பேறுபெறறு வந்தனவாகக் கொள்க.

தோன்றியவெல்லாம் அழியும் என்பது ஓர் உண்மையாகலின் தமது உடல் அழிவது திண்ணமே, ஆதலின் அதறகும, எடுத்த பிறப்புக்கும், அப்பிறபபினால் நேரும் இறப்புக்கும் அஞ்சுதல் வேண்டா, அவறறை மாறறுதற்கும் செய்யக்கடவன இலலை ; அஙஙனமாதலின் இனிப் பிறவி எடுப்பினும இறப்பினும் அதனுக்கும் யான் அஞ்சிறறிலேன், அதனுக்கும் யான் செயயக்கடவன இல்லை எனினும் இழுக்காது. எடுத்த பிறவிக்கு அஞ்சேனாயினும் இனி வரும் இறப்பினுக்கும் அஞ்சாதவனாகிய என்னால் செய்வதறகு என்ன உண்டு என்பதே கருத்தாகக் கொள்க. இனி உணர் விலலாக் காலத்தே யான் பிறந்தேன் ஆகலின் அதனுக்கு அஞ்சிலேன் ; ஆனால் உணர்ச்சி கொண்டுள்ள இக்காலத்தே இறப்பினுக்கு அச்சமுற்றும் அதனால் என் செய்யக்கடவேன் ? அக்கடப்பாட்டாற் போந்த பயன்தான் என்னை ? எனவும் விரித்துப் பொருள் கொள்ளலுமாம். இதனால்

இறப்பினையும் அஞ்சாது விரும்பி ஏற்றுக்கொள்ளுதலே நேரிதென்பது பெறுர் பிறந்ததன் பயனாகிய வீடுபேற்றினை இறப்பதற்கு முன்னரே பெறமுக்கொள்ளாமையால் இங்ஙனம் அருளிச்செய்தார். மண்ணாட்சி விண்ணாட்சிகளிற் பற்றிலாதேனுக்கு வீட்டாட்சியே பெறற்பாலதாக இருந்தும் அதனை இப்போதே பெற்றுக்கொள்ளப் பெறாத யான், இன்னும் எத்தனைப் பிறப்பு இறப்புக்களைப் பெறல் வேண்டும் எனக் கருதி "வருந்துவன்" என்றருளியபடி. அவ்வருத்தம் பிறப்பு இறப்புக்களைக் குறித்ததாகாது அருள் பெறுங் கால நீட்டிப்பினையே குறித்ததாகும் எனக் கொள்க. இங்ஙனமெல்லாம் விரிப்பதனால் அடிகளின் உள்ளக்கிடக்கை இதுவெனத் துணிந்து உணர்ந்து தெளிதலாகிய பயனுண்டாமென்க.

**வருந்துவன் நின் மலர்ப்பாதம் அவைகாண்பான் நாயடியேன்**
**இருந்துநல மலர்புனையேன் ஏத்தேன் நாத்·தழும்புஏறப்**
**பொருந்தியபொற் சிலைகுனித்தாய் அருளமுதம் புரியாயேல்**
**வருந்துவன்அத் தமியேன்மற்று என்னேநான் ஆமாறே. 13**

இதனால், எனது வருத்தம் நின்னால் நீக்கப்படுவதொன்றன்றி, என் முயற்சியால் மட்டும் நீக்கப்படுவதன்று என்று இறைவன்பால் விண்ணப்பித்தருளுகின்றார்.

(பொ - ரை ) (பொருந்துவதற்காகாத) மேரு மலையைப் பொருந்திய வில்லாக வளைத்தவனே, நாயை ஒத்த அடிமைத் தொழில் பூண்ட யான், நின்னுடைய மலர் போன்ற பாதங்களாகிய அவை இரண்டனையும் காண்டற்காக வருந்தாநிற்பேன்; (அக் காட்சியைப் பெற்றுக்கொள்ளுதற்குக் காரணங்களாக இருக்கின்ற) நலம் பொருந்திய மலர்களை ஓரிடத்திலிருந்து கையாகிய உறுப்பால் தொடுத்தலையும் செய்யேன், நாவிலே தழும்பு உண்டாக நலஞ் சான்ற சொற்களால் புகழ்ந்து துதித்தலையும் செய்யேன்; நீயே அவ்வருத்தம் நீக்கும் அருளாகிய மருந்தினை விரும்பி உதவா யாகில், ஆங்கு எடுத்துரைக்கப்பட்ட தனிமையினையுடைய யான் துன்புறுவேன்; (யான் துன்புறாது) உய்யும் வழிதான் வேறு என்னை எ - று.

(வி - ரை ) இருப்பின் அதனை இயம்புக என விரிக்க. வருந்துவன் + அ + தமியேன் எனப் பிரித்து அந்தத் தமியேனாகிய யான் வருந்துவேன் எனப் பொருள் உரைத்துக் கொள்க. "நல் தமியேன்" என்பதும் பாடம். அங்ஙனமாயின் மிக்க தனிமையை உடையேன் எனப் பொருள் உரைக்க. மண்ணோர் நலனும, விண்ணோர் நலனும், நின் நலனாகிய வீடு பேற்று நலனும் ஆகிய அம்மூன்றனுள் ஒன்றன் பகுதியுள்ளும் படாது தனித்துள்ள யான் என்க. இங்ஙனமே,

" இரண்டுமில் இத்தமிய னேற்கே " (திருச்ச. 26.)
என்பர் மேலும்.

மலர் புனையாதும், ஏத்தாதும் திருவடிப்பேறு கிட்டாது என்பது இதனாற் பெறப்பட்டது. இன்னும் இதனானே சரியை முதலாய மூன்று மின்றி ஞானமடைதல் ஒண்ணாது என்பதும் தெளிக. இதனால் நெடுநாட்களாக இறைவன் அருளிய திறத்தினையே நினைந்து நினைந்து பித்தேறிய அடிகள், சரியை ஒழுக்கம் முதலாய நியமம் தப்புதலின் தளர்வெய்தி, இங்ஙனம் முறையிடலாயினர் என்க. "ஏத்தேன்" என்றதனாற் பாமாலை பெறப்பட்டது. " நலமலர் " என்றது, ஆராதனைக் கேற்ற குற்றமற்ற மலர்களை. புரிதல் - தானே விரும்பியுதவல்.

பொருந்திய பொற்சிலையைச் சிலையாகக் குனித்தாய் என இரட்டி விரிக்க. மலையை வில்லாக வளைத்தலும், மண்ணைக் கயிறுகத் திரித்தலும் செயற்கரும் செயல்கள் என்று வழங்கிவரும் பழமொழி இவ்வில் வளைத்த தினின்றும் கிளைத்தது போலும். மலையை வளைத்த நினக்கு என் மனத்தை வளைப்பது ஒரு செயலாகுமோ எனப் பண்டையோர் பொருள் விரிப்பர். "என்" என்பது இன்மை குறித்து நின்றது.

சிவபெருமான் பொற்சிலை குனித்த வரலாறு, தாரகாக்கன் கமலாக்கன் வித்தியுன்மாலி என்னும் மூவரும் பெருந்தவம் புரிந்து, தெய்வத் தச்சனாகிய மயன் என்பவனால், மண்ணிலும் விண்ணிலும் பாதலத்திலும் வேண்டிய வாறே இயங்கவல்ல இரும்பு பொன் வெள்ளி என்பவற்றால் இயன்ற மூன்று நகர்களைப் பெற்று, அவற்றிடையூர்ந்து, உயிர்கட்கு இடுக்கண் செய்து வருவாராயினர் ; அவர் கொடுமைக்கு அஞ்சி ஆற்றாது முறையிட்ட தேவர்கட்கும் முனிவர்கட்கும் இரங்கியருளிய சிவபெருமான், சூரிய சந்திரர்களை உருளைகளாகவும், மறைகளைக் குதிரைகளாகவும், நான்முகனைப் பாகனாகவும் நிறுவி, நிலவுலகாகிய தேர்மீது இவர்ந்து, பொன் மலையை வில்லாக வளைத்து, ஆதிசேடனை நாணாகப் பூட்டி, காற்றுக் கடவுளைச் சிறகாகவும் திருமாலைக் கூர்வாயாகவும் தீக்கடவுளை அம்பாகவும் கொண்டு அம்மூன்று நகர்களையும் அழிக்க முயன்றபோது, அவற்குக் கருவிகளாகப் போந்தவர்கள், இவ்வழித்தறெழிலுக்குத் தாமே காரண மெனச் செருக்குற்றார்களாக, அவர் செருக்கினை ஒழித்தற் கெண்ணிய இறைவன், தனது திருப்புன்னகையால் அம்மூன்று நகர்களையும் எரித்துச் சாம்பராக்கினான் என்பதாம்.

ज्ञानामि धर्मं न च मे प्रवृत्तिः ज्ञानाम्यधर्मं न च मे निवृत्तिः ।
के नापि देवेन हृदिस्थितेन यथानियुक्ता विधितो करोमि ॥

" அறமிதென் றறிகுவென் அதுகடைப் பிடிக்கிலென்
மறமிதென் றறிகுவென், மறறது விலக்கிலென்
அதனால்,
உன்னுவழி யானும் ஒழுகுவென்
என்செயலாவ தென்னினி யுனதே." என்பது வைதிகப் பாட்டு.

ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே. 14

இதனால், சரியை நியமங்களை விடுத்தமையால் தமது பிறப்பு அவமாகிச் சாதலிலே விரைந்து செல்லாநின்றது எனக் கவன்றருளுகின்றார்.

(பொ - ரை ) தேவர்க்கும் மேம்பட்டவனே, அன்பர் அறிந்து கொள்ளுதற்கரிய திறமையொடு அவரைச் சார்பவனே, யான் உன் திருவடிப் பேற்றினை எய்தி நிலைபெற்ற வாழ்வினை உடையேன் ஆகும்படி அத்திருவடிக் கண்ணேயே மனங்குழையேன் ; அம்மனங் குழைதற்பொருட்டு நின்மேல் அன்பு செய்வதனால் மனம் முதலியன உருகுதலோடு யானும் உருகுதலைச் செய்யேன் , மனம் முதலாயினவும் யானும் உருகுதற்குக் காரணமாகிய பூக்களால் மாலை தொடுத்தும் அங்ஙனம் தொடுக்கப்பட்ட மாலையை நின் திருமேனியில் சாத்துதலும் செய்யேன் , (அங்ஙனம் புனைந்து சாத்துதலானே நின்னழகும், நறுமணமும், நின் மெல்லிய ஊறும் பெற்று, நாவிலே தேனூறும் இனிய சொல்லூற, அதனால் நாவானது துதிக்க, அத்துதி கேட்ட செவி களிக்க) நின்னை வாழ்த்து தலையும் செய்தேனில்லை , அங்ஙனம் வாழ்த்தும் பொருட்டு நின்னுடைய சிறப்புக்களை அறிந்து புகழ்ந்துரைத்தேனுமில்லை. நின் சிறப்பியல்புகளைப் பொதுப்படக்கொண்ட நின்னுடைய திருக் கோயிலை அலகிடுதலும் செய்தேனில்லை ; ஆப்பிகொண்டு மெழுகுதலையும் செய்தேனில்லை ; அங்ஙனமெல்லாம செய்யாமை யால் யான் இன்பமெய்திக் கூத்தாடவும் இல்லை. ஆதலால் பிறந்த பிறவிப்பயனை இழந்து அவமே இறக்குமாறே எனது வாழ்நாளை விரைந்து கடத்துகின்றேன் எ - று.

(வி - ரை ) இத்தகைய எனக்கு உய்யும் நெறி ஒன்று உளதாமோ என விரிக்க. "சதுர்" என்றது, (இறைவன் அன்பரால் அறிந்து கொள்ளற் கரியனாய் அவர் முன் தோன்றும்) அறிவாற்றலின் திறத்தை. முன்னரும்,

"சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்" (கீர்த்தி. 28 )

என்றருளினர். இனித் திறமை சான்ற பணிஎனக் கொள்ளின், இறை வனும் அப்பணிக்குள்ளே ஒளிப்பானுதல் திருவண்டப் பகுதியானறிக. அறிவாற் சார்தலும் பொருந்தாது. அதனையும் அப்பகுதி கொண்டறிக.

**வானாகி மண்ணாகி வளிஆகி ஒளிஆகி**
**ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்**
**கோனாகி யான்எனதுஎன்று அவர்அவரைக் கூத்தாட்டு**
**வான்ஆகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே. 15**

*இதனால், இறைவனே நீ எல்லாமாய் அல்லவுமாய் இருப்பதனால் சிற்றறிவுடையேன், நின்னை எத்தைச் சொல்லி எங்ஙனம் வாழ்த்து வேன் என அவனை வாழ்த்துதற்கியலாத தனது தன்மை தோன்றக் கூறியருளாநின்றார்.*

(பொ - ரை ) மழையாகியும், மண்ணாகியும், காற்றாகியும், ஒளியினையுடைய நெருப்பாகியும், உடம்பாகியும், உடம்போடு கலந்துள்ள உயிராகியும், (அன்பர்க்கு) மெய்ப்பொருளாகியும், அன்பிலார்க்குப் பொய்ப் பொருளாகியும், (எல்லாவற்றுக்கும்) தலைவனாகியும், உடையோன் யான் என்றும் உடைமையும் எனது என்றும் (தமக்குள்ளே சொல்ல வைத்து) அங்ஙனம் சொல்லிக் கொள்ளும் அவர்களை உவப்பு அச்சம் முதலியன கொள்ளச் செய்து கூத்தாடச் செய்யும் கூத்தாசிரியன் ஆகியும் நிலைபெற்ற நின்னை, யான் யாது கூறி வாழ்வாயாக என வாழ்த்துதலைச் செய்வேன் எ - று.

(வி - ரை ) வாழ்த்துதற்கு அரியை என்றருளியவாறு. வளியாகி, ஒளியாகி, என்று அருளியவைக்கேற்ப "வான்" என்றது மழையைக் குறித்து நின்றதென்க. இவற்றையெல்லாம் கிளந்த பின்னர் வெளியாகி நிற்றல் தானே போதருதலின் அதனைக் கூறாது விடுத்தருளினார். இவற்றுள் மண்ணை முதலாகக்கொண்டு இடப்புறமாகச் சூழக் காணின் மண்ணும், மழையும், ஒளியும், வளியும் என முறை போதரும. "வான்" என்றதற்கு வெளியெனவே பொருள்கொண்டு, தீயின் காரியமும் மண்ணின் காரணமு மாவது நீராகலின், அந்நீரை அவற்றிடையே கொள்ளினும் அமையும். இனி வானினின்று மண்ணளவும் விரிதற்கு வளியும் ஒளியும் நீரும் வேண்டி யனவாகும். அவற்றுள் நீரை உய்த்துணர வைத்தார் எனினுமாம்.

அன்பராயினார்க்கு வான் முதலாய ஐம்பூதங்களும், உடல் உயிர் களும் இறைவனாகவே தோன்றப் பெறுதலின, அவன் அங்கெல்லாம் தான் ஒருவனே உள்ளோனாகவும், அன்பரல்லாதார்க்கு அவற்றுள்ளே தான் புலப்படாது கரந்து நிற்றலின், அவர் அவற்றைக் காண்பார் அன்றி, அங்கெல்லாம் அவனைக் காணாராகலின், இல்லோனாகவும் இயைந்து வருதல் அவற்கியல்பென்க.

மெய்யன்பராகில் தம்முளும் பிறவற்றுளும் சிவமாகிய ஒரு பொருளே உளதாக, அக்காட்சிக்கண் தான் என்பதும் அவன் என்பதும் ஆகிய

அவ்விரண்டும் அறக் கலந்து நிற்றலின், அக்காட்சி நிலைக்கண் இறைவனை வாழ்த்துதலும இயையாது.

பொய்யராகில் அவர்க்கு ஐம்பெரும் பூதங்களும் உடல் உயிர்களுமே தோற்றுவனவன்றி, இறைவன் தோன்ருமையாகலின் அவ்விடத்தும் அவனை வாழ்த்தல் இயையாது.

நீதான் நல்லையாகவும் பொல்லாய் ஆகவும் இருத்தலின் நின்னை வாழ்த்தல் மட்டும் அமையாது, இழித்தலும் வேண்டுமாகலின், உன்பால் யாதும் நன்மை பெருத யான் எங்ஙனம் வாழ்த்துவேன் என்க. இவ் விரண்டனையும் உட்கொண்டே "நின்ருயை என் சொல்லி வாழ்த்து வனே" என்றருளிச் செய்தார். இவ்விருபாற்பட்ட நிலையினும் சரியை நியமம் தப்புமாகலின், அடிகள் அவறறின் வழுவினர் என்க.

இன்னும் இதனுல் முதற்கண் இறைவனை உருவத் திருமேனியுடை யனுக வழிபட்டுவருதலே, ஞானம் பெறுதற்கு ஏதுவாம் என அடிகள் ஐயமகற்றித் தெளிந்து கைவந்த பொருளாகும் என்பது பெற்ரும். மற்றும், ஏனைய அன்பரைக் கலந்தருளியபோது அடிகளையும் உடன் கலந்தருளாது தில்லைக்கு வருக என்று அருளிச்செய்ததுவும் இவ்விருபாற்பட்டு மயங்கிய காரணத்திளுலேதான் என்பது பெற்ரும்.

அகப்பற்றும் புறப்பற்றும் ஆகிய மலங்களை இறைவன் ஒடுக்கும் ஆற்றல் படைத்திருந்தும் அங்ஙனம் அவற்றை ஒருங்கே ஒடுக்கி உயிர் களை ஓம்பாதிருந்தமை கருதி, "யான் எனதென்று அவரவரைக் கூத் தாட்டுவானுகி" என்றருளிச் செய்தார்.

இது கருதிய அடிகள் ஐம்புலன் ஒடுக்குவது இறைவற்குரியதே யன்றித் தமக்குரியது அன்றென வாளா இருந்தமையின், அஃதுணர்ந்த இறைவன் அடிகளைத் திருத்தம் செய்வதற்கு உடன்கலந்தருளானுய்த் தில்லைக்கண் வருக என்று கட்டளையிட்டருள்வானுயினன் என்க.

இந்நினைவானன்றே அடிகளை வாசனுமலம் இடையே ஈர்த்து இடர்ப் படுத்தவும் அதன் பெற்றியுணர்ந்து, அதனை வெறுத்து ஒதுக்கி யருள் வாராயினர். இங்ஙனே ஆங்காங்கு இயையுமாறு வகுத்து விரித்துரைத் துக் கொள்க.

வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மைஎல்லாம் தொழவேண்டிச்
சூழ்த்து மது கரம் முரலும் தாரோயை நாயடியேன்
பாழ்த்த பிறப்(பு) அறுத்திடுவான் யானும் உன்னைப் பரவுவனே. **16**

அடிகள் இம்மைப் பயனையேனும் வான்பதங்களை யேனும விழையாது, தமது பிறவியறுத்தற்பொருட்டே இறை வனைத் துதிப்பான் புகுந்தருள்கின்ருர்.

இப்பரவுதற்குரிய கடப்பாடாவது, திருக்கோயில் அலகிடலும் மெழுகலும் முதலாயினவும், மலர்பறித்தல், அம்மலரால் மாலை பல தொடுத்தல் ஆதியனவும், அமுதாக்கிப் படைத்தலும், இன்பக் கூத்தாடல் ஆதியனவுமாம். மற்று இதனால், இம்மைப் பயனும், துறக்கச் செல்வங்களும் விழைகிலராய், வீடுபேற்றின் பொருட்டு, சரியை ஒழுக்க நியமங்களை ஆற்றற்குத் துணிந்து முற்பட்டமை பெற்றும்.

(பொ - ரை) வண்டுகள் சூழ்ந்து ஒலிக்கும் மாலையை அணிந்த நின்னை, வானவர்கள் (குறையேதுமின்றி நீடு) வாழ்ந்து வருதற் பொருட்டே வாழ்த்தி வருதலும், அவர்தாம் ஏனையோரினும் அங்ஙனமே வாழ்த்திப் பெற்றுக்கொண்ட அதிகாரம், அஃதொழிந்த பிற செல்வம் முதலியவற்றைப் பெற்றுக்கொண்டமையால் உயர்வு பொருந்தி, அங்ஙனம் பொருந்திய திறன் கண்டு தம்மைப் பிறர் எல்லாரும் வணங்கச் செய்வதன்பொருட்டே அவர் தம் உள்ளத் தைப் பணிவித்தலுமாகும். ஆனால் யானோ எனது பிறவியை வேரறுத்தற்பொருட்டே நின்னைப் பரவுவேன் ஆவேன் எ - று.

(வி - ரை.) அகப்பற்றும் புறப்பற்றும் நனியுடையரேனும் தமது ஆக்கங் கருதித் தமது மனத்தினைத் தாழச் செய்தலின், "மனம் நின்பால் தாழ்த்துவதும்" என்றும், அவர் மனத்தொடு தம்மை ஒன்று படுத்தாது வேறு படுத்தலின் "தாழ்த்துவதும்" என்றும் அருளிச் செய்தார். இறைவனே தமக்கெல்லாம் முதல்வனுவான் என்பதனை அறிந்துவைத்தும், பற்றுமிகுதியால் மயங்கி மனத்தினைக் கைவிட்டவராகலின், அவனை வணங்குவதற்கு அது நாணியமையால், அவர்க்கு அதனை வற்புறுத்தித் தாழ்த்த வேண்டியதாயிற்றென்க.

சூழ்ந்து என்பது வலிந்து நின்றது. மதுகரம் - வண்டு. (மது - தேன். கரம் - செய்வது; ஈட்டுவது.) வடசொல். வண்டு மலரைச் சூழ்வது அம்மலர்ப் பொருட்டன்றி, அதன்கண்ணுள்ள தேனைப் பெறும் பொருட்டாவதுபோல வானவரும் நின்னை வாழ்த்துவது, நின்பால் வைத்த அன்பினால் அன்று; நின்கண்ணுள்ள செல்வங்களைப் பெறும்பொருட்டே யாம் என விரித்துக்கொள்க. இவ்வுண்மை தெரித்தற்பொருட்டன்றே வானவர் செயல் கூறற்கண் "தாரோயை"என வினையாலணையும்பெயரால் அழைத்தும், தமது செயல் உரைத்தற்கண் வாளா "உன்னை" என்றும் அருளிச் செய்தார் என்க. கிளந்தோதாது பொதுப்பட "மாலை" என்று அருளினரேனும் கொடை முதலிய பெருமிதம்பற்றி அணிந்த கழுநீர், மந்தாரம் முதலாயவற்றுள் ஒன்றனையே கொள்க.

வானவர்போல யானும் நின்னை வாழ்த்தி வணங்குவனேல், யான் இறுதியில் பிறவியெடுத்து உழல்வதோடு, என்னிடம் மயங்கிக் கெடுமாறு

பிறர்க்கும் கேடு சூழ்ந்தவனுவேன் ஆதலால், அம்முறை நீக்கிப் பிறவி யறுத்தலேயே குறிக்கொண்டு வணங்குவேனுயினேன் என்றருளினுர் என்க.

பரவுவார் இமையோர்கள் பாடுவன நால்வேதம்
குரவுவார் குழல்மடவாள் கூறுடையாள் ஒருபாகம்
விரவுவார் மெய்யன்பின் அடியார்கள் மேல்மேல் உன்
அரவுவார் கழலிணைகள் காண்பாரோ அரியானே. 17

இதனுல், இருவகைப் பற்றும் நீங்கப்பெருத இமையவரும், வேதமும், உமைப்பிராட்டியும், மெய்யன்பரும் நின் திருவடிக் காட்சி பெறுவார் போலும், அப்பேற்றினைப் பெறுதற்குரிய நல் வினையை யான் முன்னர்ச் செய்தேனில்லை என உள்ளம் உருகா நின்றுர்.

(பொ - ரை.) (எத்தகைய மேம்பட்டவர்க்கும் அறிதற்கு) அரியானே, நின்னை (த் தத்தம் பயன் கருதித்) துதிப்பவராகிய வானவரும், நின் புகழ் பாடும் நான்கு கூறுபட்ட வேதங்களாகிய புருடனும், குரா மலரை யணிந்த கூந்தலையுடையாளும், நின்னிடப் பாகமாக ஒரு கூற்றினைத் தனக்கு உரிமையாகப் பெற்றுக கொண்ட வளுமாகிய உமைப் பிராட்டியும், நின்னைக் கலந்தவராகிய மெய் யன்பினையுடைய அடியவர்களும் நின்னுடைய அராவிய நீண்ட கழலையணிந்த இரண்டு பாதங்களையும் கண்டு உவப்பார்களோ! எ - று

(வி - ரை.) யான் அது பெற்றேனில்லையே என்றிரங்கியவாறு. யான் முன்பு நல்வினை செய்திருப்பேனுயின் அக்காட்சி பெறறிருப்பேன் என்க இனி, அறறைப் பெற்றும் பெருதேனுயினேன் என்றலுமாம். இதனேடு,

> அகத்தாரே வாழ்வார்என்று அண்ணுந்து நோக்கிப்
> புகத்தாம் பெருஅர் புறங்கடை பற்றி
> மிகத்தாம் வருந்தி இருப்பாரே மேலைத்
> தவத்தால் தவஞ்செய்யா தார்.

என்னும் பாடற் பொருளும் ஒத்திருத்தல் காண்க.

இனி, இமையோர் பொய்யன்பராகலின் அவர் கண்டும் காணுர்; வேதங்கள் இறைவனடி காணுங்கால் ஓங்காரமாகத் தொகுதலின் அவை யும் காணு, உமைப்பிராட்டி திருவடியே திருவுருவாகக் கொண்டாளாதலின் அவளும் காணுள், யானே சரியை ஒழுக்கம் பூண்டுளன்; அங்ஙனமாத லின் புறத்தே அத்திருவடிகளைக் காணு நின்றேன், இனிக் கிரியை ஒழுக்கம் பூண்டு அகத்திலும் புறத்திலும் அவற்றைக் காண்பேன் ; அதனுல யோக ஒழுக்கம் பூண்டு உள்ளத்திலே கண்டு உவப்பேன் என்ருங்கு அடிகள் தம்

மாக்கங்கண்டு உவந்தருளினர் என்றலும் ஒன்றும். ஆண்டு அவலங் கொண்டருளினர் என்க.

இனி, இவ்வருமைப் பாடுடைய திருவடிகளை யானே காண்டற் குரியேன் என நகைத்தருளினருமாம். பிறவுமன்ன.

குரா என்பது ஆக் குறுகி உகரம் பெற்றுக் குரவு என்றாயிற்று. குரா மலர் ஒருவகை மலர். அழகுமாம். வார் - நீண்ட. அராவு - பெருமிதம் விளங்கும் சித்திரம் அமைய அராவப்பட்ட. அரத்தால் அராவப்பட்ட கழல் என்க. அராவுதலின் அஃது அரம் எனப் பெயர் பெற்றது. அரவு வார் கழல் என்பதற்கு ஒலிக்கின்ற கழல் என்றும், அரவும் கழலும் அணிந்த திருவடிகள் என்றும் பொருள் கொள்வாரும் உண்டு. அரவு - பாம்பு. இமையார் என்றது இமையோர் என நின்றது. எதிர்மறை ஆகாரம் இடையே புணர்ந்து கெட்டது. விக்கனஹரேசன் விக்நேசன் என நின்றது போல.

அரியானே யாவர்க்கும் அம்பரவா அம்பலத்தெம்
பெரியானே சிறியேனை ஆட்கொண்ட பெய்கழற்கீழ்
விரைஆர்ந்த மலர்தூவேன் வியந்துஅலரேன் நயந்துஉருகேன்
தரியேன்நான் ஆமாறுஎன் சாவேன்நான் சாவேனே. 18

இதனால், செய்ந்நன்றி மறந்தமையும், புலன்களும் உறுப்புக்களும் இறைபணிக்கு உதவாதிருத்தலும் குறித்துத் தாம் உயிர் வாழாது இறத்தற்குத் துணிந்தமை கூறியருளப்படுகின்றது

(பொ - ரை ) எத்தகையோர்க்கும் எத்தகைய முயற்சியாலும் அறிதற்கரியவனே, அருளாகிய வெளியகத்து இருப்போனே, அவ் வெளியின் நடுவண் அமைந்த மன்றத்திலே நின்று கூத்தயரா நின்ற எமக்குப் பெருமை தரும் பெருமையையுடையோனே, குணஞ் செயல்களிலே குற்றம் உடைய என்னை அடிமை கொண்டருளிய (மாணிக்கம் முதலியன அகத்தே) இடப்பெற்ற (ஒலிக்கின்ற) வீரக்கழல்களை யணிந்த கால்களின் கீழிடத்தே மணம் நிறைந்த பூக்களைச் சொரியேன்; நீ எனக்கு அருளிய பெருந்திறனை நான் நினைந்து வியப்பெய்திப் பேரிரைச்சலிட்டுத் துதியேன், அத்திரு வடிப் பேற்றினை விரும்பி மனம் உருகாமையால் அன்பும் செய் யேன், ஆதலால் இனி யான் உடலைச் சுமந்திருக்கப் பொறேன்; அங்ஙனம் இவ்வுடலைச் சுமப்பதனலாகும் பயன் யாது? இயல் பாகவே அவமே சாகவேண்டியவனுகிய யான் இங்ஙனம் ஆட் கொள்ளப்பட்டும் அவையொன்றும் செய்யாமையால் முன்போல இறக்கவே போகின்றேன் எ - று.

[இதனால் ஆண்டமையாற் பெறும் பயனை நீ பெற்றிலை எனக் குறிப்பாலுணர்த்தினர் என்க ]

(வி - ரை.) அம்பரம் - அருளாகிய வெளி. அம்பலம், அதன் நடு வண் உள்ள மன்றம். அவ்வெளி தில்லை எனப்படும். தில்லைவனம், குறிஞ்சி முதலாயின அழியப் பெற்ற பாலையுலகு. அது பாழ் உலகு. எல்லாவற்றையும் ஒடுக்கிய பாழ் வெளியிலே இறைவன் கூத்தயரும் இடத்தை, நிலவுலகிற குறிப்பது சிதம்பரம் பெருமைக்கு இயல்பாவது சிறுமையை நீக்கி ஆளுதல். இஃது அப்பெருமைக்குரிய அருஞ் செய லாகும். இது கொண்டே இறைவனை "அரியானே" என்றழைத் தருளினர். சிறுமைக்குரிய செயல் பெருமையை வியவாது தன்னையே வியந்திருத்தல். "ஆட்கொண்ட பெரியானே" என்றருளியமையால் அவன் அப்பெருமையினும் மிக்கதொரு சால்பும் உடையனுயினன் என்பதும் பெறப்பட்டது. அதனுல் நல்லன வெல்லாம் நிறையப் பெற்றோனுய் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்பன பொறுத்த வனுய், தாழ்வுடையனுய், இழிந்தார் தோல்வியைத் தன்மாட்டு ஏற்றுக் கொள்வோனுய், ஏனையோர் செய்த இன்னுதவறறை இனியனவாகவே மனங் கொள்வோனுய்த் தமக்கு இறைவன் அருள் செய்தான் என அவனது சால்பும், அவன் கழற்கீழ் மலர் தூவேன், அலறேன், உருகேன் எனத தமது செய்ந்நன்றி மறந்த கொடுமை சான்ற சிறுமையும் தோன்ற உரைத்தருளியவாறு காண்க.

என் ஏவலை ஏற்றுச் செய்யாத உடலை யான் பொறேன்; அதனைப் பொறுத்தலால் வரும் பயன் யாது? ஆதலின் அதனை விடுத்து நீங்கு வேன் யான் என்க. மூல காரணத்தை அழிக்காது மறறதன் காரியத்தை அழிப்பது பயனில் செயல் ஆதலால், மலத்தினை அழிக்காது அதன் காரிய மாகிய உடலினையழிப்பதனுல் மேலும் வினையேற மலமும் ஆற்றல் படைக் கும் என்பது கருதி மனமிரங்கிச் "சாவேன்" என அடுக்கியருளினுருமாம்.

கையாலும் மலர் தூவேன்; அதற்குச் சோம்பினும வாயாற் புகழ்ந்து. அலறேன்; அதற்குச் சோம்பினும் நெஞ்சால் உருகேன்; ஆதலின் அதற் கும் சோம்பினேன் என்றருளியபடி. "நயந்துருகேன்" என்றருளியமை யால் நயத்தலே உருகுதற்குக் காரணம் என விளக்கியவாறு. வியந்தலறேன் என்றருளியமையால் நயப்புக்குக் காரணம் வியப்பும், அவ்வியப்பால் அலற லும் நிகழும் எனவும், அங்ஙனம் நயந்து வியந்து அலறவே மலர் தூவலும் நிகழும் எனவும் கொள்ளக்கிடந்தமை தெளிக. இதனுல் சரியையின் தனிப் பெருஞ்சிறப்புத் தெரித்தருளப்பட்ட தென்க.

இனி, நயவாதும் அலறுதும் கையால் மலர் தூவுதலினும் உயர்ந்தது நாவால் நவிறல் எனவும், தூவுதலோடும் நவில்வதோடும் வியந்து நயத்தல் அதனினும் உயர்ந்தது எனவும் கொள்ளின், ஏனையவற்றிற சரியை இழிந்ததாகும். அடிகள் கூறியருளிய சரியை ஒழுக்கம் அன்னதன் றென்க.

திரிகரணங்களும் ஒன்றுபட்ட சரியை ஒழுக்கமுடையாரே தூய ஞானம் பெறுதற்குரியார் என்பது, அடிகளால் வடிததெடுத்துக் கொள்ளப் பட்டதோர் உண்மையாகும் என்பது தெளிக.

முக்கரணங்களாலும் இறைபணி ஆற்றிவந்தாலேயன்றி அவை தூய்மையடையாவென்க. அவறருல் மேற்கொள்ளப்பட்ட இறை பணியே நிறைபணியாம் என்க. இங்ஙனம் மேறகொள்ளாதார் வாசனுமலத்தால் மனந் தாக்குண்டு அல்லற்படுவர் என்க அவர் அங்ஙனம் அல்லலுழுப் பதை அடுத்த திருப்பாட்டினுற் கூறியருள்கின்ருர்.

வேனில்வேள் மலர்க்கணைக்கும்
　　வெண்ணகைச்செவ் வாய்க் கரிய
பானல்ஆர் கண்ணியர்க்கும்
　　பதைத்துருகும் பாழ் நெஞ்சே
ஊன்எலாம் நின்றுருகப்
　　புகுந்தாண்டான் இன்று போய்
வான்உளான் காணுய் நீ
　　மாளாவாழ் கின்ருயே. 19

)ல், அருட்கடவுட்கு அன்பு செய்யாமையால், மருட் கடவுளால் மயக்கப்பட்டுப் பதைக்கும் மனத்தினை நெருக்குதல் கூறியருளப்படுகின்றது

(பொ - ரை.) இளவேனிலாகிய சித்திரை வைகாசித் திங்களுக் குரிய மருளினை விளைவிக்கும் காமக்கடவுள் எய்யாநின்ற ஐம் பூவகைகளாகிய அம்பு தைப்பதற்கும், வெள்ளிய ஒளியையுடைய பல்லைக்காட்டிக் கரிய குவளை மலர்போன்ற கண்களாற் கொலை செய்யும் மகளிர் கொடுமைக்கும் ஆற்ருது துடித்து உருகுதலைச் செய்யும் பாழ்பட்ட நெஞ்சே, நமக்கு இன்னலைச் செய்து வருகின்ற உடம்பு முழுவதும் கட்டுவிட்டு உருக முன்னர் வந்து தோன்றி நின்னுளே புகுந்து நிலைபெற்று நின்ஞெடு என்னையும் முன்னர் அடிமைகளாகக் கொண்ட சிவன், இன்று ஞானவெளிக்கண்ணே புகுந்து மறைந்தவனுயினுன், அங்ஙனமாகவும் நீ சாவாது வாழ்ந்திருக்கின்ருயே எ - று.

(வி - ரை.) இங்ஙனம் நீ வாழ்ந்திருப்பது என்ன விந்தை என் றருளியபடி. காமத்தின் பொருட்டே ஏனைய பொன்னும் மணியும் பொருளும வேண்டப்படுதலின், ஏனையவற்றைக் கூருது காமம் ஒன்றனையே கிளந்தருளினுர். ஆண்டவனை ஏத்தாமையால் வேனில் வேளால் பாழாக்கப்பட்டனை என்க. மண்ணிஞுள் நின்ருல் இனிக் காண்டற்கரியன் என்பார் "இன்றுபோய் வானுளான்" என்றருளிச் செய்தார். அவன் இன்னும் சிற்றம்பலத்துள் வீற்றிருக்கின்ருன்; நின் பதைப்பும் பாழ்பட்ட தன்மையும் நீங்க ஆங்குச் செல்லின் அவனைக் கண்டு வாழ்வு பெறலாம் எனத் தமது மனத்தினைத் தூது செல்லற்கு

ஊக்கியருளினருமாம். அங்ஙனம் செல்லுமுன் மலர்தூவி, வியந்தலறி, நயந்துருகி நிற்றல் வேண்டுமெனப் பணித்தருளியவாறுமாம்.

செய்ந்நன்றி கொன்ற நீ அப்பழி பாவ மிகுதியானே சாதற்குரியை யாவாய்; ஆயினும் சாவாதிருக்கின்றாய்; இதன் காரணம் யாதோ எனினுமாம்.

முன்னர்ப் "புலியூர்ப் புக்கினி தருளினன்" எனக் கூறியருளுதலினலே ஈண்டு "வான்" என்றதற்குப் புலியூர்க்கண்ணுள்ள "ஞான வான் மன்றம்" எனப் பொருள் கொள்க.

இறைவனை ஏத்தாமையால் இங்ஙனம் பாழ்பட்டனை; இனியேனும் வானாகிய தில்லை மன்றத்துள்ளானைக் காணாய் என அறிவுறுத்தியருளினார். அவனை அங்குச் சென்று காணும் பேறு உனக்கு உண்மையால், பாவ மிகுதியால் மாளவேண்டிய நீ இன்னும் மாளாது வாழ்கின்றாய்; இதனை ஆராய்ந்து கடைப்பிடித்து அவன்பால் தூது போதற்கு ஆயத்தம் செய்து கொள்ளுதி என விரிக்க. "காணாய்" என்றதற்கு ஈண்டுக் காண்பாய் எனவும், ஆண்டுக் காணகில்லாய் எனவும் பொருள் கொள்க. இறைவன் தன்னைத் தில்லைக்கு வருக எனப் பணித்தமையால் மனத்தினைத் தூது செலவுமாறு பணித்தருளினார் என்பது பொருந்துமென்க. "காணாய்" என்றதனை முன்னிலையசை என்பாரும் உளர். தூது செலுத்தியதன் உண்மையை வேனிற்காலத்துக்குரிய குயிலினையும் தும்பியையும் இறைவன்பால் தூது போக்கினமையால் உணர்க. பிறவுமன்ன.

**வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்டு**
**ஆழ்கின்றாய் ஆழாமல் காப்பானை ஏத்தாதே**
**சூழ்கின்றாய் கேடு உனக்குச் சொல்கின்றேன் பல்காலும்**
**வீழ்கின்றாய் நீ அவலக் கடலாய வெள்ளத்தே. 20**

இதனால், தில்லைக்குட் சென்று பிழை பொறுக்கும்படி இறைவற்கு விண்ணப்பஞ் செய்துகொள்ளாவிடில் வரும் இழுக்கு இதுவெனப் பலகாலும் மனத்தினை வற்புறுத்தியும் பயனற்றமை கூறியருளப்படுகிறது.

(பொ - ரை) (யாதாயினும் ஒருபொழுதேனும் நல்) வாழ்வினைப் பெற்றுக்கொள்ளாத மனமே, நீ இப்போது வாழ்ந்து வருவதாக மயங்கிக் கருதுகின்றாய்; (உண்மையிலே) கொடிய வினையுள் அகப்பட்டு வருந்துகின்றனையாவை, (அங்ஙனம் வருந்துவதற்குரிய நின்னைத் துன்பத்துள்ளே அகப்பட்டு) வருந்தி அழியாமற் காத்துவருதற்குரிய இறைவனைப் போற்றி அழையாமல் நீயே உனக்குக் கேட்டினைத் தெரிந்தெடுத்துக்கொள்கின்றனை—யாவை, இக்காரணங்களால் வருத்தம் தோன்றி நிற்கும் கடலாகிய

வெள்ளத்திலே வீழ்கின்றுயாவை என யான் பலமுறையும் உனக்குக் கூறிவருகின்றேன் எ - று

(வி - ரை.) இனி என்றுற் சொல்லத்தக்கது ஒன்றேனுமில்லை என எச்சம் விரித்து முடிக்க. அக்கடற்குள் வீழ்ந்த நீ இனி யாது செய்வேன் என்று மூர்ச்சிதது வாழ்வுவிட்டு அழுது சாவாய் போலும் எனக் குறிப்பு

" அவலக் கவலை கையாறு அழுங்கல்
தவலா உள்ளம் தன்பால் உடையது " (மணிமே. பளிக். 118-119.)

எனக் கூறுதலால், மனத்திற்கு இங்ஙனமெல்லாம் எய்தி வருந்துதல் இயல்பாகும் என்க.

மனமே, நீ இத்தகையை ஆதலால் நின்னெடு கூடிய யானும் இத் துன்பங்களை உடன்பெற்று அழிந்தனன் ஆயினேன். நின் நட்பு இருந்தவாறென்னை என இரங்கியருளினுர் என்க.

நின் தாழ்வு கருதி வருந்தி இங்ஙனம் புகன்று வருகின்றேன். நீயோ என் தாழ்வைத் திருத்தற்கு முன்வந்திலை. அஃதொழிக. அதனுக்காக நீ என்னுரை கேட்டு நடத்தலே எனக்குப் போதியதாகும். அதனையும் செய்தாயில்லையே எனப் பேரிரக்கங்கொண்டு உரைத்தருளினுர். அறிவும் மனமும் இங்ஙனம் வேறுபட்டன என்க.

திருச்சிற்றம்பலம்

# 3. சுட்டறுத்தல்

## எண்சீர் ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

வெள்ளம்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணேர்
பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளம்தாழ் உறுபுனலில் கீழ்மேலாகப்
பதைத்துருகும் அவர்நிற்க என்னை ஆண்டாய்க்கு
உள்ளந்தாள் நின்றுஉச்சி அளவும் நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணுய் அண்ணு
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சம் கல்லாம்
கண்இணையும் மரமாம்தீ வினையி னேற்கே. 21

இதனுல், அடிகள் தம்முடைய சிறுமையும் தமக்கு அருள் செய்த இறைவன் பெருமையும் அறிந்துகொண்டவராய், இறைவன் மேற் பேரிரக்கங் கொண்டு நெஞ்சமே, எல்லா வுறுப்புக்களும் நீயேயாகி இறைவன் நன்றி போற்றி உருகுவாயாக ; கண்ணே,

நீயும் அங்ஙனமேயாகி வெள்ளம் பொழிக என ஏவவும் அவைதம் ஏவலை மேற்கொள்ளாமை குறித்து வருந்தியருள்கின்றார்.

(பொ - ரை) (வானில் நின்றும் விரைவுற்றுக் கீழே பாயும் கங்கையினுடைய பெருக்கானது ஒரு கடுகளவினதாகச் சிறுமை யுற்று விரைவு கெட்டுத்) தங்குதற்கு ஏற்ற விரிந்த சடையினை உடையாய், எருத்தினைக் கொடியாகவும் ஊர்தியாகவும் உடையாய், வானவர்க்கு மேம்பட்ட தலைவனே எனப் பிற அன்பர் (கனிந்து) சொல்லக்கேட்டு, (அங்ஙனம் கேட்டவுடனேயே) கீழிடம் மேலிட மாம்படி பின்னும் பள்ளத்திலே தாழ்ந்து செல்லும் இயல்பினை யுடைய மிக்க நீரைப்போலத் (தாம் பெற்ற பேற்றுடன் நில்லாது பின்னும் நுணுகி உட்சென்று பெறுமாறு) தமது நெஞ்சம் ஆர்வம் மண்டியதாகிப் பதைபதைத்து உருகுகின்ற அப்பேரன்பர் ஒருபுறத்தே எதிர்பார்த்து நிற்ப, (அவர் விரும்பியவாறே அத் தகுதியையுடைய அவர்க்கு அருள் செய்யாது) என்னை யாண்டு கொண்ட நின்பொருட்டு எனது மனமானது உள்ளந்தாள் முதல் உச்சி வரையிலும் தானேயாகி உருகாது, அதுவன்றி என் கண்ணனது உடம்பெல்லாம் தானேயாகி கண்ணீர் பொழியாது, ஆதலால் அண்ணு, கொடுவினையேனுகிய எனக்கு அமைந்த நெஞ்சம் எக்காலததும் குழையும் தன்மையற்ற வலிய கல்லாகும். இரண்டு கண்களும் மரக்கண்களேயாகும் எ - று.

(வி - ரை.) இறைவனுடைய பேரருள் திறனும், அதனைப் பெற்றுக் கொள்ளும் அருமைப்பாடும, அவனுடைய ஆற்றலும், சிறப்பும் அன்ன பிறவும் தோன்ற "வெள்ளந்தாழ் விரிசடையாய்" என்றும, நல்வினையே விடையாகி அவனைக் கொண்டுய்க்கும் என்பவேனும் தாம் செய்த நல்வினை அவனைத் தாங்கி வந்திலது என்பார் "விடையாய்" என்றும், தன்னுட் கலத்தலையே பெரிய திருவாகக் கருதும் செவ்வியற்ற சிற்றுயிர்கட்கும் அவ்வவர் விரும்பியவாறே பதங்களையும ஆட்சியையும் அளிக்கும் பெருமை யுடையவன் என்பார் "விண்ணோர் பெருமானே" என்றும் அருளிச் செய்தார்.

அவன் புகழ் சொல்லக்கேட்ட அடியவர் திருமேனி முழுவதும் அவனை விரும்பியுருகும் நெஞ்சமேயாகி என விரிக்க. அவர் அங்ஙனமாகிப் பதைத்துருகா நிறபர்; யானோ அவனால் அடிமை கொள்ளப்பட்டவனு யிருந்தும் எனது நெஞ்சம் அங்ஙனம் உருகிற்றிலது. என் கண் நீர் பொழிந்திலது என்றருளினர் என்க.

காமன் அம்பிற்கும் மங்கையர் காமத்திற்கும் பதைத்துருகும் பாழ் நெஞ்சினேன் என்பார் "என்னை" என்றிழித்தருளினர். மெய்யன்பர் நிற்கவும் என்னை வலிந்து புகுந்து ஆண்டான் என்க. அங்ஙனம் ஆண்டானுக்குச் செய்யும் கைம்மாறு நெஞ்சுருகாமையும்

பொழியாமையும் ஆகிய இவைதாமோ என்றிரங்கியருளினூர். நெஞ்சினையும் கண்ணினையும் வெறுத்து வெகுண்டருளியவாறு.

நீரின் இயல்பு பின்னும் பின்னும பள்ளத்திற் செல்வதாகும். அதற்குக் கீழிடம என்பதொன்றின்றி, பற்றிய கீழிடத்தையே மேலிடமாகக்கொண்டு பின்னும் பின்னும் பள்ளத்திற செல்லும் அங்ஙனமே சிவன் புகழ் கேட்ட நெஞ்சம் பின்னும் பின்னும் அவற்றுள்ளிடந்தோறும் உள்ளிடந்தோறும் மூழ்கி அவற்றுட் பொருளைப் பெற முயலும். அன்புடையாராதலால் நீரோடொப்பிட்டருளினூர்.

நெஞ்சமானது உள்ளந்தாள் நின்று உச்சியளவும் ஆய், கண்ணுனது உடம்பெல்லாம் ஆய் எனக் கொள்க. உறு மிகுதிப் பொருட்டு. நெஞ்சாகவும் கண்ணுகவும் ஆகவேண்டுமெனக் கூறியது அன்பால எழுநத வேணவா. அங்ஙனம் ஆகுங்காலத்தும், கண்ணுங் காலத்து நெஞ்சாகவில்லையே என்றும், நெஞ்சாங் காலத்துக் கண்ணுகவில்லையே என்றும் உருகினூராயிறறு. கண் புறவுறுப்பும் மனம் அகவுறுப்புமாம். எனவே அகமும புறமும் உருகவேண்டுமென்க. மன நிகழ்வைக் கண் வாங்காது தானே நீர் பொழிதல் வேண்டும், கண்ணை எதிர்பாராது மனம் தன் மெய்ப்பாட்டை வெளியே புலப்படுத்தல் வேண்டும்; மனமும் கண்காட்ட உருகாது தானுகவே உருகுதல் வேண்டும், மனமும கண்ணும் தம்முள் ஒன்றுகவேண்டும். இதன்கண்ணும் அத்துவிதம் கூறியருளியவாறு. உருகாதால் பாயாதால் என்பவற்றுள் 'ஆல்' இரண்டும் அசைகள்.

நெஞ்சம் உருகாது என்பது முதலாக உள்ளனவெல்லாம் செயல் அளவின அல்லவாய்ச் சொல்லளவினவாகியே நிற்றல்போல மகளிர் காமத்தினைக் கருதி நெஞ்சம் அழிந்து பாழ்படுவதாக அடிகள் கூறுவதும் சொன் மாத்திரையளவே என்பது பெற்றும். இதுவே வாசனுமலப் பேறு என்ப. இங்ஙனம் சொல் தோன்றுதலையும் ஒழித்தற்பொருட்டே திருவைந்தெழுத்தினை உருவேற்றுதலினும், அவன் புகழ் பாடுதலினும் வாயானது பயின்று வருதல் வேண்டும். அன்னவற்றையெல்லாம் நெஞ்சம் நினையாவிடத்தும், செயல் நிகழாவிடத்தும் வாயாற் சொல்லின் குற்றமாம். அதனுலன்றே அடிகள் அச்சொற்களையும் வெறுத்து மறுத்து ஒழித்தருள்கின்றூர். இங்ஙனம் ஒழித்து வருதலினுல் வாயகத்து அம்மறைச் சொல்லும் பயிலாவாய்த் தெளிவுற்ற தண்ணிய இனிய நறிய தூய்மை சான்ற செம்பொருளோடு ஒன்றுபட்டு அத்துவிதமாகிய ஆறுதலே அளிக்கவல்ல சொறகளோடு பொருந்திய தொடர்களைப் பேசிவரும் உயர்நிலையை உள்ளத்தோடும் செய்கையோடும் நாவும் ஒருங்கே பெறறுத் திகழாநிற்கும் என்க. இதனுனன்றே வள்ளுவனுரும்,

"இன்சொலால்.........செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்"

(குறள். 10-1.)

என்பார் ஆயினர். அதற்குப் பரிமேலழகர் கண்ட உரைவிசேடமும் காண்க.

அவன் புகழ்கேட்ட அன்பர்க்கு உடம்பு நெஞ்சாகி உருகிற்று ; எனவே கண்ணும் அங்ஙனமே யாகி வெள்ளம் பெருகியது எனவும் கொள்ளவைத் தருளினுர் எனலும் இழுக்காது என்னே, அவன் புகழை அவர் பிறர்வாய்க் கேட்டவாறுபோல் ஆகாராய், இறைவனைக் கண்டு அவன் வாயாலும் பின்னர்ப் பிறர் வாயாலும கேட்டருளினுராகலான். நெஞ்சினுள் அவன் திருவடி பயின்றமையைக் கண்டிருந்தும் அதனை நினைந்துருகிற்றிலது என்க. அத்திருவடியை முதற்கண் சென்னியில் வைக்கப் பெற்றனர் ஆதலின் "உச்சியளவும்" என்றருளினுர். அங்ஙனமே கண்ட கண்ணும் ஆகல்வேண்டுமென்க. மரக்கண்ணுதலின் உருகிற்றிலது என்க.

"அண்ணு" வென்றதற்கு நெருக்கமுடியாத எனப்பொருள் கொள்வாரும் உளர். 'அண்ணுத்தேரி' என்பதுபோல 'அண்ணு வெளளம்' என்றியைப்பினும் அமையும்.

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன் நான் என்று உன்னை அறிவித்து என்னை
ஆட்கொண்டுஎம் பிரான்ஆனுய்க்கு இரும்பின் பாவை
அனையநான் பாடேன்நின்று ஆடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே முறையோநான் ஆன வாறு
முடிவு அறியேன் முதல்அந்தம் ஆயி னுனே. 22

இதனுல், அங்ஙனம் உருகாதும் பாயாதும் இருப்பது முறையோ ? வழிகாட்டியாக எனக்கு முன்னின்று நீ என்னைக் காத்து வாரா நின்றுயன்றே ? என் முடிவு யாதாகும் என நின்வழித் தொடர்ந்துவரும் யான் அறிந்திலேன் எனத் தங்குறைவால் நேரும் முடிவினை யறியாது மயங்கியமை கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை ) தோற்றத்திற்கும் முடிவிற்கும் அடியானவனே, வினையிலே (இயற்கையாலும் செயற்கையாலும்) அகப்பட்டு அழுந்தி உள்ளவனுகிய எனக்கு (எதிரே) முகம் புகுந்து நின்று (யான் இயல்பாகிய சிவன்) வினைக்கேடன் (ஆவேன் ஆதலால்) யானும் நீயும் செல்வேம் என்று சொல்லுவாய்போல அந்தணர் கோலத்தேனுகிய என்னை யான் இவ்வியல்புடைய சிவன் ஆவேன் என்று நான் அறியும்படி செய்து என்னையும் நின் அடியவனுகக் கொண்டு (அவ்வியல்பால்) எம் போன்றுர்க்குத் தலைவனுகிய நினக்கு இரும்பினுற் செய்த பதுமைபோல (நினைவும் புலனும் செயலுமற்ற) யான் நின் புகழினைப் பாடமாட்டேன் , நின்னுடன் ஈடுபடுதலில் நிலைபெற்று (இன்பம் மிக்கு)க் கூத்தாடமாட்டேன் ;

அந்தோ எனக் கதறமாட்டேன்; இடையறாது நின்னில் அங்ஙன மெல்லாம் இயற்றி உடல்வற்றுதல் அடையப்பெற்றேன், வற்றுத லால் உயிர்விடேன், நான் (நற்செயலொடு மாறுபட்டு நிற்கும்) இவ்வாறாகிய முறை நின் அடிமைக்குரிய முறையாகுமா? இத் தகைய என் செயல் யாது பயனைத் தரும் என்பதை அறிந்து கொள்ளும் ஆற்றலையும் அறிந்திலேன் எ - று.

(வி - ரை.) அறிந்திருப்பேனேல் முறையொடு பொருந்தியவற்றை யெல்லாம் செய்திருப்பேன் என்றருளியவாறு.

போதும் யான் வினைக்கேடன் என்பாய்போல - யான் இயல்பாகிய சிவன், ஆதலால் யானும் நீயும் போவோம் என்று சொல்லுவாய்போல. நின் வினை கெட்டு ஒழியுமாறு என்னுடன் வருக என்பது தோன்றப் "போது" என்றருளிச் செய்தார். போதும் + நான் என்பதில் வருமொழி நகரம் நோக்கி மகரங்கெட்டு உயிர் ஏறாய நின்றது.

மக்கள் தோற்றத்தானாகிய ஆசானையும் சிவனேயாகக் கருதல் வேண்டும் என்பது முறை. இங்கு வந்த ஆசான் தோற்றத்தால் ஓர் அந்தணனாகக் காணப்பட்டு யான் சிவனாவேன்; அங்ஙனமே நீ என்னைக் கருதுக என்று கட்டளையிட்டானேனும் அச்சிவனே இங்ஙனம் அந்தண னாகவும் வந்தமையால் யான் "வினைக்கேடன் (சிவனாவேன்) எனபாய் போல" என ஒப்பில் போலியாக உரைத்தருளினார். வினைக்கேடன் - இயல்பாகவே வினைகெட்டவன்; சிவன். அவன் ஏனைய பசுக்களின் வினை யைக் கெடுத்தற்குரியவன் என்க. யான் வினைக்கேடனாவேன் ஆதலால் நீயும் என்னியல்பினைக் கருதி வருதலால் வினைகெட்டு வாழ்வாயாக என்க.

"யானும் நீயும் போதும்" என்றது, என்னால் அருளிச் செய்யப்பட்ட இப்பாவனையிலே நிலைத்திருந்து என் திருவடிப் பேற்றினை எய்துக என்னும் குறிப்பின. யான் வினைக்கேடன் ஆதலால் உன் வினையையும் கெடுக்கும் இயல்பு என்பாலுளது என்பது குறிப்பு.

முகம்புகுதல், தன்னைக் காணாது நிற்கும் ஒருவன் காணுமாறு மற்று அவன் எதிர் செல்லுதல் வேறொரு நோக்கத்தில் ஈடுபட்டிருக்கும் அடிகள் தன்னையே நோக்குமாறு அவர் எதிரிலே இறைவன் புகுந்தான் என்க. இதனால் இறைவன் அடிகளைக் காணும் விருப்புடையனேனும், அடிகளே தன்னைக் காணுமாறு செய்வித்துத் தனது விருப்பினை நிறை வேற்றிக் கொள்ளல் வேண்டும் என்னும் குறிப்புடையவனாதல், அவன் முகம் புகுந்தவற்றால் பெறப்பட்டது.

இனையன் நான் - நான் இனையன்; அந்தணனாகிய யான் இவ்வியல் புடையேன் என்க. சிவனாவேன் என்றவாறு. "எம்பிரான்" என்பது எம்பி, எந்தை என்றாங்கு ஒருமை குறித்து வரும் பன்மை வழக்கு.

பொன் முதலாய பொருள்களாலே தான் கருதிய வடிவுக்கேற்ற உறுப் புக்கள் அமையுமாறு செய்யப்படுவது பாவை. "ப்ரதிமா" என்னும் வட சொல் பதுமை எனத் திரிந்தது. பாவை தமிழ்ச் சொல். பா - பகுத்தல்.

சிற்பியினுல் ஒன்றனது ஒருநொடிப் பொழுதிலே நேர்ந்த ஒரு குறிப் பினையே தானிருக்கும்வரையும் கொண்டுவருமாறு அமைக்கப்பட்ட பாவை போலத் தாமும் இறைவன் தமக்கு அருள் செய்தற்கு முன்னிருந்த நோக்கத்தினையே இப்போதும் உடன்கொள்ளுதலானும், அந்நோக்கத் தானும் அப்பாவை அகத்துள்ளதனறிப் பிறிதொன்றறகுரியதைப் போலி யாகப் புலப்படுப்பதுபோலவே தாம் முன்னர்க் கொண்டுள்ள நோக்கமும் தமக்குரியதன்றிப் போலியாக அமைந்ததொன்ருகப்படுதலானும் "பாவை" என்றும், அந்நோக்கம் வற்கு என்னும் பெற்றித்தாய் வெறுத்து ஒழிக்கத்தக்கதாகும் என்பது தோன்ற "இரும்பின் (பாவை)" என்றும், பொருளினும் உவமை சிறந்ததாகலின் அப்பாவைதன்னினும் இழிந்தவர் தாம் என்றும் கூறியருளினுர்.

முதலானவனும், முடிவானவனும், அவற்றுக்கெல்லாம் முன்னேனும் ஆவன் எனவே பின்னேன் ஆனவனும் நீயே யாகலின் என் முடிவினையும் நீயே அறிகுவை ஆதலின் அதனை இப்போதே அறிவித்தருள்க என்க.

பின்வரும் பயனை முன்னரே எய்தப்பெறின், அதனைப் பெறுதற்குரிய காரணமும் தேவைப்படாமையின் அப்பயனுக்குரிய பாடாமை ஆடாமை முதலாயினவும் இலவாகும் என்பது கருத்தாகக் கொள்க. முடிவறியேன் ஆகிய எனக்கு அம்முடிவினை அறிந்துய்ய அருள்செய் என்க. முனைவற் கண்டது காட்சிமாத்திரையிலே நில்லாதவாறே ஈண்டறிதலும் அறிதல் மாத்திரையில் நில்லாததாயிற்றென்க

ஆயநான் மறையவனும் நீயே ஆதல்
அறிந்துயான் யாவரினும் கடையன்' ஆய
நாயினேன் ஆதலையும் நோக்கிக் கண்டு
நாதனே நான் உனக்கு ஓர் அன்பன் என்பேன்
ஆயினன் ஆதலால் ஆண்டு கொண்டாய்
அடியார்தாம் இல்லையே அன்றி மற்றுஓர்
பேயனேன் இதுதான்நின் பெருமை அன்றே
எம்பெருமான் என்சொல்லிப் பேசு கேனே. 23

இதனுல், இறைவன் தம்மை யாண்டமைக்கு அவனது பெருங் குணமே காரணமாவதன்றித் தம்பால் ஒரு காரணமும் இல்லை யெனத் துணிந்து தெளிந்தமை கூறியருளப்படுகின்றது

(பொ - ரை.) எம்போன்ருர்க்குப் பேரருளைச் செய்யும் பெருங் குண ஆற்றல்களை உடையவனே, தலைவனே, நீயே நான்கு கூறு பட்ட வேதங்களுக்குரிய மெய்ப்பொருளாக உள்ளவனும் ஆகி இருத்தலை அறிந்துகொண்டு அடியேனுகிய யான் எல்லாரினும் கீழ்ப்பட்ட நாயின் இயல்புடையேன் ஆதலையும் ஆராய்ந்து தெளி வுற்றமையால், யானும் நின்னுடன் உரிமை பாராட்டுவதனுல்

பெருமை பெறுவேன் எண்ணெண்ணிச் செல்வேனுயினேன். அக் காரணத்தால் நீயும் என்னை அடிமையாக ஆண்டுகொண்டாய். ஈதன்றி, பேயின் தன்மையை ஒத்தேனுகிய என்னை அல்லாது, அடியவர் அதற்குரியார் மற்றெருவர் உனக்கு இல்லையா? இங்ஙனம் வலந்து ஆட்கொள்வதுதான் நின் பெருமைக்குரிய ஆற்றல் சான்ற செய்கையாகும். இப்போலி யுறவு பூண்ட யான், அவற் றைப்பற்றியே யன்றி இத்தகைய நின் குணஞ் செயல்களை எங்ஙனம் பேசுவேன்? (பேசமாட்டேனுதலால் நினது உண்மைக் குணஞ் செயல்களை இனியேனும் அருள்க) எ - று.

(வி - ரை.) "மறையவன் நீ" என்றது "சிவனவன்" என்பதுபோல நின்றது. ஆண்டு "அவன்" என்றதும், ஈண்டு "நீ" என்றதும் அந்தண னுகிய ஆசானை. பேயேன் அன்றி மற்றோர் அடியார தாம் இல்லையே எனினு மாம். மற்றோர் அடியார் என்றது, மற்றும் ஓர் பெயராகிய அடியார் என விரியும்.

அந்தணக் கோலம் கொண்ட நீ, மறையின் உண்மைப் பொருள் சிவன் ஆவேன் என்று அறிவித்தலால் யானும் அறிந்து என்க. "நாதன்" "எம்பெருமான்" என்பன அந்தணனுகிய ஆசானை உணர்த்தி நின்றன. "மறையவன்" என்றது அவ்வாசானை உணர்த்திற்றென்றல் மரபாகாது.

ஏனையோர் பெருமை கண்டு அவரோடு உறவு பாராட்டுதற்கு விழைந்து நடிப்பு மாத்திரையானே நீர்ப்பறவையோடொப்பக் கலந்துற வாடுவார்போல, யானும் நின் அளப்பரிய பெருமை கண்டு உறவு பூண நடிப்பு மாத்திரையானே விழைந்து அன்புரிமை பாராட்டினேன் என்பார் " நானுனக்கோர் அன்பனென்பேன் ஆயினன் " என்றருளினர். அங்ங னம் போலியுறவு பூண்ட யான், அலறலும், உலறலும், பூமாலை புனைந் தேத்தலும் முதலிய அன்புறு பணிகள் ஆற்றிலேனுதலின் என் கபடம் இதுபோது வெளிப்படையாயிற்றன்றே? அங்ஙனமாதலின் அகப்பட்டுக் கொண்ட யான் அன்பினன் என்றது, கபடத்தாலன்றி அன்பினுலன்று என்று சொல்லிப் பேசுதலேயன்றி வேறென் சொல்லிப் பேசுவேன் என் றருளியவாறு.

மக்களுருவில் ஒரு பேயிருப்பின் அஃது என்னை ஒக்கும் என்பார் " பேயனேன் " என்றருளினர். அத்தகையேன் எனப் பொருள் விளக்கும் சான்றோரும் உளர். அவர் கூறும் பொருள் சேய்மைப்பட்டதாகலின் கொள்ளறக சிறுமை பல பொறுத்து ஆட்கொள்ளுதல் பெருமைக்கு அழகு என்க. " யான் பேயனேன் " என்றது, மக்கட் பிறப்பினேன் ஆகிய யான் பேயினை ஒத்துளேன் ஆதலால் பேய் என்னினும் சிறந்ததொன்ருயிற்று என்பது பயந்துநின்றது. அப்பேய் மக்கள் வடிவு மேறகொண்டு நிற்கும் இயல்பினதாகி நின்னருளைப் பெற்றுக் கொள்ளின், அஃது என்னினும் சிறக்குமாதலால், அவ்வாருதலை "மற்றோர் அடியார் தாம் இலலையே" எனக்

குறிப்பிட்டருளிச்செய்தார். பொதுவாகப் பேயன் என்பது பயன் கொள்ளாது உழல்வோர்க்கு ஒப்பாயிற்று. இன்னவெல்லாம் "மற்றோர்" என்னும் சொல்லாற்றலாற் பெறப்பட்டன. "மற்றையோர்" என்பது "மற்றோர்" எனக் குறைந்து நின்றது. வினைமாற்றாகக் கொள்ளினும் கொள்க. அங்ஙனம் கொள்ளுங்கால் "மற்று ஓர் அடியார்தாம் இல்லையே" என மாறுக.

பேசில்தாம் ஈசனே எந்தாய் எந்தை
பெருமானே என்றுஎன்றே பேசிப் பேசிப்
பூசில்தாம் திருநீறே நிறையப் பூசிப்
போற்றிஎம் பெருமானே என்று பின்று
நேசத்தால் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
ஆண்டானே அவாவெள்ளக் கள்வ னேனை
மாசற்ற மணிக்குன்றே எந்தாய் அந்தோ
என்னைநீ ஆட்கொண்ட வண்ணந் தானே. **24**

இதனால், தம்மையும் ஆட்கொண்டவகைதான் எவ்வகையைச் சார்ந்தது என்று இறைவனைக் கூறியருளுமாறு வேண்டியருளுகின்றார்.

(பொ - ரை.) குற்றம் அற்ற மாணிக்க மலையே, எமக்கு அப்பனே, வாயால் யாதாயினும் பேசுவதற்குத் தொடங்குவாராயின், எமது எண்வகையான செல்வங்களுடையவனே, எமக்கு அப்பனே, எம் அப்பனுக்கும் அப்பனாகி அவர்க்கும் அருள் செய்த பெருமையுடையவனே என்று (நின்னைப் பாராட்டிப்) பேசியும், யாதேனும் ஒன்றனைப் பூசிக்கொள்ளப் புகுந்தால் திருநீற்றினையே திருமேனி எங்கணும் நிறையப் பூசியும், (அங்ஙனமே வணங்கப் புகின்) 'எமக்கும் பெருமை செய்வோனே, நினக்கு வணக்கம்' என்று வணங்கியும் (நீ அருளினும் அருளாது ஒழியினும் பேசுதலினும் பூசுதலினும் வணங்குதலினும்) பின்னடையாத பேரன்பால் பிறப்பதையும் பிறந்திறப்பதையும் கடந்து மீளாநெறிக்கண்ணே செல்வோர்தம்மை ஆட்கொள்வோனே, பிறந்து சாதலுக்குக் காரணமாகிய ஆசையாகும் வெள்ளப்பெருக்கிலே விடாது விழைந்து சென்று அழுந்தும் இயல்பினை உடையேன் ஆயினும் நின் அன்பன்போல வேடம் பூண்டுள்ள என்னையும் ஐயோ! நீ ஆட்கொண்ட வகைதான் என்ன? எ - று.

(வி - ரை.) வாக்குப் பேசுதலும், திருநீறு பூசுதலும் ஆகிய இச் செயல்களால் மனம் நினைப்பது, அவன் வடிவினையும் குணஞ்செயல்களையுமே என்று பெறப்பட வைத்தருளினார். போற்றுதல் தலையினதும் வாயினதும் செயல்கள். அதுவும் மனத்தோடொன்றியதே. இதனானும் சரியை

யின் சிறப்புப் புலப்படுத்தியருளியவாறு. பழவினையின் மணம்பற்றி "அவா வெள்ளக் கள்வனேனை" என்றருளிச்செய்தார்.

என்னினும் இழிந்த பேய் என்னைப்போன்று வேடங் காட்டவும் அதனை ஆட்கொள்ளாது, என்னையாட்கொண்ட வண்ணந்தான் யாது? அப்பேய் தான் கடையிடத்ததாயினும், அதற்கே இறைவன் அருள்பெறும் தகுதிப்பாடிருந்தும், அதனையறிந்து கொள்ளாததாய் என்னால் ஏமாற்றப்பட்டுத் தன் வடிவினை எனக்குத் தந்து என் வடிவினைத் தான் கொண்டமையால், அது பெறுதற்குரிய பேற்றினைத் தாம் பெற்றுக்கொண்டு வஞ்சித்தாராக அடிகள் பத்திப் பித்தினால் கருதி யருள்வாராயினர் என்க. அக்கருத்தினால் அப்பேய்க்கு அருளாது எனக்கு அருளிய வண்ணந்தான் என்னை என்று வினவியருளுகினறார். தாம் உய்வதினும் பேய் உய்வதே தகுதி என்றருளினாராகக் கொள்க.

"அவா வெள்ளக் கள்வன்" என்றது, அவனடியார்போல் நடித்து வருதலை. பின்று நேசத்தாரை ஆண்டது தக்கது; என்னையாண்டது தகாதது என்க.

அவனது தூய்மையும், சார்ந்தாரைத் தூயராக்கும் ஆற்றலும், தன்னிலை தளராமையும, வன்மையும், சிறப்புயர்வும், அன்னபிறவும் தோன்ற "மாசற்ற மணிக்குன்றே" என்றும், அத்தகையவன் எமக்குக் குரவனாகிய அப்பனாகியான் என்பது தோன்ற "எந்தாய்" என்றும் அருளிச் செய்தார்

அவனுடைய பெருமைக்கேறறவாறு அறிந்து அடிமைத்திறம் பூண்டு ஒழுகும் ஆற்றல் அறறேன் என்று இரங்கிய இரக்கம் தோன்ற "அந்தோ" என்னும் இடைச்சொற் பெய்துரைத்தருளினர்.

"ஆட்கொண்ட வண்ணந்தான் என்னை" என்றது, என்னை ஆண்டு கொண்டாய் என்னும் அளவிலேதான் என் வாழ்க்கை நிறைவேறும் போலும் என்பது பட நின்ற திறத்தினை.

பின்று நேசத்தால், பேசில்தாம்....பேசியும், பூசில்......பூசி, போற்றிப் பிறப்பிறப்பைக் கடந்தார் என்க. இனி, "பேசில்" "பூசில்" என்றமைக் கேற்பப் "போற்றில்" எனப் பாடங் கொண்டு "என்று" என்பதை "என்று போற்றி" என இசையெச்சம் விரித்துப் பொருள் கொள்ளல் மிகச் சிறப்புடைத்தாகும்.

வண்ணந்தான் சேயதுஅன்று வெளிதே அன்று
அநேகன் ஏகன் அணுஅணுவில் இறந்தாய் என்றுஅங்கு
எண்ணந்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்தும்ஆறு அறியாத எந்தாய் உன்தன்
வண்ணந்தான் அதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்கள் அவைகாட்டி வழிஅற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமல் காத்துஆட் கொண்டாய்
எம்பெருமான் என்சொல்லிச் சிந்திக் கேனே. 25

இதனால், இறைவன் தனது வண்ணம் முதலாயவற்றைக் காட்டி யருளினானேனும், தம்மால் அவற்றைச் சொல்லுதற்கும், எண்ணுதற்கும் இயலாமை கண்டு வருந்தியமை கூறியருளப்படு கின்றது.

(பொ - ரை ) (வானவர் தொகுதியால் நின்திருமேனி) வண்ணம்தான் சிவப்பன்று, வெள்ளை நிறம் உடையதும் அன்று, நீ ஒருவன் அல்லாதவன் அல்லை, ஒருவனும் அல்லை, நின்னுருவம் நுண்ணியதோர் அணுவன்று, அணுக்கடந்த அண்டமும் அன்று என்று நின்னைக் கருதும் அவ்விடத்தே மனம் தடுமாற்றம் அடைந்து உன்னைச் சாருந் திறன் அறியப்படாத (நிறம், எண், உருவம் என்னுமிவற்றையுடைய) எமக்கு அப்பனே, எமக்குப் பெருமை தருதற்கெனவே பெருமை படைத்தவனே, உன்னுடைய நிறந்தான் இதுவாகும் என எனக்கு அதனைக் காட்டி, அவ் வண்ணத்தினையுடைய உருவமும் அதுவாம் எனக் காட்டி, கழலை அணிந்த மலர் போன்ற திருவடிகள் அவைதாம் ஆகுமென உள்ளத்திலே காட்டி, செல்லும் நன்னெறி அற்றமையால் தீநெறிக் கட்சென்று வருந்துவேனாகிய என்னை உறுதியாகவே பிறவாமல் தடுத்து ஆட்கொண்டவனே, இத்தகைய கைம்மாறற்ற பேரருளே, இயல்பாகவே கொண்டுள்ள நின் புகழை எசசொற்களால் தொடுத்துரைத்து, நின்னுரு, ஆற்றல், அருள், செயல் என்னும் இவற்றையெல்லாம் எவ்வெண்ணங்களால் எண்ணி வருவேன் எ – று.

(வி - ரை ) அங்ஙனம் தொடுத்தற்குச் சொல்லும் நினைத்தற்கு நினைவும் போதா என்றருளியபடி.

வண்ணம் இதுவாகும் எனக் கிளந்து கூறியருளிற்றிலர்; அது சொல்லுள் அடங்காதாதலால். பிறவும் அன்ன.

"இப்படியன் இந்நிறத்தான் இவ்வண்ணத்தான்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே"

(திருநாவு. வினாவிடைத் திருத்தாண்டகம். 10.)

என்றருளினர் நாவுக்கரசரும். சேயது வெளிது என்பன, திருமேனியின் வண்ணத்தினுக்கும் அத்திருமேனியின் மேற பூசிய திருநீற்றின் வண்ணத்தினுக்கும் ஒப்பாகா என்றருளியபடி.

தாம் செல்லும் நெறி திண்ணமாகப் பிறவிக்கண் கொண்டு சேர்க்கும் இயல்பிற்றாகலின், திண்ணமாகப் பிறக்கவேண்டிய எனனை, பிறவாமல் திண்ணமாகத் தடுத்து என விரிக்க காத்தலாவது, தீயன உட்புகாதும் நல்லன வெளிச் செல்லாதும் தடுத்தல் என்க.

நின்னுடைய அருட்செயலை இனிது நிறைவேற்றிக்கொண்டவனே, என் செயலாகிய புகழ்தலும் நினைதலும என்னால் நிறைவேறறிக்

கொள்ளப்படாவாய் எஞ்சியுள்ளன. அவற்றையும் அருள்செய்து நீயே நிறைவேற்றியருள்க என்றருளியபடி.

சிந்தனை நின் தனக்கு ஆக்கி நாயி னேன்தன்
கண்இணை நின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்கு உன்
மணிவார்த்தைக்கு ஆக்கி ஐம் புலன்கள் ஆர
வந்தனை ஆட் கொண்டுஉள்ளே புகுந்த விச்சை
மால் அமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனை செந் தாமரைக்காடு அனைய மேனித்
தனிச்சுடரே இரண்டும் இல் இத் தனிய னேற்கே. **26**

இதனால், நீ நின்னை நுகருமாறு தந்தனை, யான் அங்ஙனம் நுகர்ந்திலேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) (என்னை) அடிமையாகக் கொண்டு உன்னுள்ளே சென்ற மாய வித்தையை உடைய காதல் இன்பமாகிய அமுதினை அகத்துக்கொண்ட பெருங்கடல் ஆகியவனே, அக்கடலைக் கடையும் மத்தாகிய மந்தரமலை ஆகியவனே, செவ்விதாகிய தாமரைக் காட்டினை ஒத்த உறுப்புக்களோடு கூடிய திருமேனியை உடைய ஏனைய சுடர்கட்கெல்லாம் மூலமும் முடிவுமாகித் தனித்து நிற்கும் ஒளியாகியவனே, நாயின் இயல்பினையுடைய யான், என்னுடைய எண்ணத்தினை உனக்குரியதாக ஆக்கியும், என்னுடைய வணக்கத்தினையும் அத்திருவடிமலருக்கே உரியதாக்கியும், என்னுடைய வாக்கினை நின்னுடைய (பொருள் எல்லாம்) திரண்ட ஐந்தெழுத்துக்குரியதாக்கியும் (இங்ஙனம் ஆக்கிக்கொள்வதனால் கண்ணை ஒழிந்த ஏனைய பொறிகட்குரிய நான்கு புலன்களோடும் கண் உட்கலந்து நிற்றலின் அக்கண்ணகத்தே) ஐம்புலன்களும் நிறையும் பெற்று நுகர, உள்ளே எனக்கு உரிமையாக்கிக் கொள்ளத் தந்தருளினாய்; இரண்டியல்பும் இல்லாத இத்தனிமையையுடைய எனக்கு எ - று.

(வி - ரை.) யான் அங்ஙனம் ஆக்கி நுகரும் ஆற்றல் இன்மையால், நீ நின்னைத் தந்தும் பயன்பெறறிலேன் ஆதலால், நீ நின்னைத் தந்தும் அங்ஙனம் தந்த பயனைப் பெற்றில யாவாய்; ஆதலால் என்னை அங்ஙனம் ஆக்கி நுகர வைத்தலும் நினது கடப்பாடாகும் என எச்சம் விரிக்க. முன்னர்த் திருப்பாட்டிலே காட்டியதும் பயனின்று என்றருளினர்; இத் திருப்பாட்டிலே தன்னைத் தந்ததும் பயனின்றாயிறறு என்றருளினர் என்க.

இறைவன் ஆக்கி நுகரச் செய்தான் எனப் பொருள் கூறின், அதன்மேல் சிந்தை முதலாயவற்றான் ஆக்கலும், நுகரலும், செய்ந்நன்றியறிந்து

போற்றலும், அங்ஙனம் போற்றுமை குறித்து வருந்தலும், அன்ன பிறவும் உளவாதல் மரபு வழுவாக முடியுமாதலின், அங்ஙனம் உரைத்தல் பொருந்தாது என்க.

சுற்றத்தாரொடும் நின்னெடும் சாராது, அவராலும் நின்னாலும் வெறுத்து ஒதுக்கப்பட்டுத் தனித்து நிற்கும் இயல்பினையுடையேன் என்பது தோன்ற "இரண்டும் இல் இத்தனியனேன்" என்றருளினுர்.

உறுப்புக்கள் ஒவ்வொன்றும் தாமரையே போன்று எழில் செய்தும் அவ்வெழில் எல்லாம் ஒன்றுயதோர் வனப்பினைச் செய்தும் வரும் இயல்பு தோன்றத் "தாமரைக் காடனைய மேனி" என்றருளிச் செய்தார்.

கடலே என்றதனுக்கு அடுத்து மலையே என்றருளலால் மந்தரமலை பெற்றும். அமுதக்கடல் என்றருளலும் அதனை வலியுறுத்தும். ாண்டு அமுதம் என்றது, காதலால் ஆகிய இன்ப அமுதினை. மால் - காதல். வாக்கினை மணிவார்த்தைக் காக்குதலை "அஜபாஜபம்" என்பர். இவற்றை யெல்லாம்,

"ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" (பெரியபு. தடுத்தாட். 106.) என்னும் திருவிருத்தம் முதலியவற்றுலும் உணர்க.

இரண்டுமிலித் தனியனேற்கு உன்னைத் தந்தனை என இயைத்துக் கொள்க.

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்து எவ்வத்
 தடந்திரையால் எற்றுண்டு பற்றுஒன்று இன்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னும் காலால்
 கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனிஎன்னே உய்யுமாறு என்றென்று எண்ணி
 அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லல்
 கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே. 27

இதனுல், பழவினை வந்துபற்றி அலைக்க அதனுல் அலைப் புண்டு திருவைந்தெழுத்தைப் புணையாகப் பிடித்துக்கிடக்கின்ற எனக்குப் பிறவிக்கடலைக் கடத்திக் கரையைக் காட்டினுய்; காட்டி யும் பயன் பெற்றிலேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) முதல்வனே, பிறவியாகிய பெரிய கடலகத்தே இருவினைத் துன்பங்களாகிய பேரலைகளால் தாக்கப்பட்டுப் பிடித்துக் கொள்வதற்கேற்ற பொருள் ஒன்றேனும் இன்றி, கொவ்வைக் கனியை ஒத்துச் சிவந்த வாயினையுடைய மகளிராகிய சுழல் காற்றுல் (அலைக்கப்பட்டு) மனக்கலக்கமுற்றுப் பெரிதாகிய காமமென்னும் சுறுமீன் வாயில் அகப்பட்டு, இப்போது உயிர்

கொண்டு வாழ்ந்து வருதற்குரிய வழிதான் யாதாகும் என்றும் யாதாகும் என்றும் கருதி, நீ முன்னர் அருளிச்செய்த திருவைந்தெழுத்தாகிய புணையை ஓர் உணர்வும் இன்றிக் கையால் (வாளா) பற்றிக்கொண்டு அக்கடலிலே கிடந்து உழல்வேனும், தனிமைப் பட்டவனும் ஆற்றலற்ற சினம் மிக்கவனும் ஆகிய எனக்குத் தோற்றமும் அழிவும் இல்லாத செல்வத்தையுடைய முத்தியாகிய கடற்கரையைக் காட்டி, அதனால் என்பால் உள்ள சினத்தை நீக்கி ஆளுதற் பொருட்டு அடிமையாகக் கொண்டாய் எ - று.

(வி - ரை) அங்ஙனம் கொண்டமையாலும் யானும் நீயும் யாது பயன் பெறறேம் ; ஆட்கொண்ட உன் முயற்சியும், அடியேன் அடிமையாகி ஆற்றிய முயற்சியும் பயன் தந்தில என எச்சம் விரிக்க.

" வெண்ணெய்க் கட்டியும் சீனியும் ஊட்டலாம்
விக்கிக் கொள்வதற்கு என்செயலாம் ஒரு
பெண்ணைக் கட்டிக் கொடுத்திடலாம பிள்ளை
பெறுவதற்கும் உடன்படுவார்களோ "

என்னும் பிற்காலத்துச் சான்றோர் கூறிய தனிப்பாடலாலும் இறைவன் முயற்சி பயன்தராது போந்தமை உய்த்துணர்தல் கூடும்.

" மூரக்கனேற்கு " என்றது, என்பதுபட நின்றதெனினும் ஒக்கும். இஃது அகத்தால் வினைமுடிபு தெளிந்துகோடற்கு மிக எளிதாகவும், முடிக்கப் புகின் பரந்து சேயதாகவும், வெளியேபோன்று காட்சிக்குட்பட்டுக் கைக்கு அகப்படாத தன்மைத்து. ஆசிரியர் தொலகாப்பியனார்க்கும் அடி கடகும இவ்வியல்பு வெறி புலப்பட்டதென்க. இன்னோரே தெய்வப்புலவர் என்க.

" எற்பொரு நாகர்தம் இருக்கை ஈதெனக்
கிற்பதோர் காட்சிய தெனினும் கீழுறக்
கறபகம் அனையஅக் கவிஞர் காட்டிய
சொற் பொரு ளாம் எனத் தோன்றல் சான்றதே "

(கம்ப. பம்பை. 5)

எனக் கம்பநாடரும் அவ்வியல்பினைப் பாராட்டல் கண்டுவக்க. இங்ஙனே முன்னும் பின்னும பலவுள. அவற்றையெல்லாம் விரிப்புழி விரிப்பாம்.

ஐந்தெழுத்தின் புணை என்றற்கண் இன் அல்வழிச்சாரியை.

மூர்க்கம - ஆறாச் சினம் அது பிறவி இன்னலாலும், மடவோரால் உளதாகிய காமத்தாலும் தமது நிலை அலைக்கப்பட்டதால் தோன்றியது. காமமாகிய அச்சம காரணமாகவும், பிறவியாகிய அலை காரணமாகவும் தோன்றியதென்க. முத்திநெறி காணலாலாகிய உவகை காரணமாகத் தணிந்து ஒடுங்கியதென்க அவ்வலைப்பினைப் பொறுத்துக் கடத்தற்குரியது திருவைந்தெழுத் தென்க ஐந்தெழுத்தாகிய புணையினைச் செலுத்தி முத்தியாகிய கரையினைக் கொண்டு சேர்க்கவல்ல மீகாமனாகிய இறைவன்

முன் தோன்றி அங்ஙனமெல்லாம் தேற்றினன் என்க. நீ அளித்த புணையை யான் இயக்குதற்குப் பயின்றேனில்லை என்பார் "புணை பிடித்துச் செலுத்து வேனை" என்னது "புணைபிடித்துக் கிடக்கின்றேனை" என்றருளிச் செய்தார். புணையும் அவனது, அதனைச் செலுத்த வல்லானுமவன் என்க. தமது கைக்கு அப்புணை எட்டியது; அதனைபபறறி வாளா கிடக்க அதனகத்தே காத்திருந்தவன் வெளிப்பட்டுக் கரைகாட்டிச் செலுத்தி ஆளுதலைச் செய்தான் என்க. "மூர்க்கனேற்கு (உபகாரமாக) மல்லற்கரை காட்டி" என

துவர் - சிவப்பு. "தனியனேன்" என்றதற்கு உடம்பெடாத நிலை என்பாரும் உளர்.

கேட்டுஆரும் அறியாதான் கேடுஒன்று இல்லான்
கிளை இலான் கேளாதே எல்லாம் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்து உள்ளே
நாயினுக்குத் தவிசுஇட்டு நாயி னேற்கே
காட்டா தனஎல்லாம் காட்டிப் பின்னும்
கேளா தனஎல்லாம் கேட்பித்து என்னை
மீட்டேயும் பிறவாமல் காத்துஆட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே. 28

இதனல், ஞாலத்தவர் முன்னிலையில் ஒரு மாயவித்தை காட்டி ஆட்கொண்டான் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) எத்தகையோரும் கேளிராக முன்வந்து நலம் தீங்குகளை வினவி அறியப்படாதவனும், அங்ஙனம் வினவப்படுதற்கு ஏற்றதொரு துன்பமும் இல்லாதவனும், யாவரும் (தன் நலம் தீங்குகளை) வினவாமலே தான் (எல்லார் நலம் தீங்குகளையும்) கேட்போனுமாகிய எம்பெருமான், இந்நிலவுலகின் கண்ணே உலகோர் குழுமிய முன்னிலையில் நாயின் இயல்பினையுடைய எனக்கு ஓர் இருக்கை உதவி (அதன்மேல் இருக்க என இருத்தி) இவ்வுலகின்கண்னே பிறரால் காட்டத்தக்கன அல்லாதனவாகிய கண்டறியாத புதுமைகள் அனைத்தினையும் யான் காணுமாறு காட்டியும், அதன் பின்னும் கேட்டறியப்படாத விஞக்களை யெல்லாம் என்னைக்கொண்டு வினவச் செய்தும் என்னை மீண்டும் பிறவாமல் தடுத்து, அழியாத பேரின்ப நிலையினின்றும் நீங்காத வாறு அருளினன், எனக்கு அமைந்த பெருமான் என்னை இங்ஙனம் செய்திட்ட மாயவித்தைதான் இது எ - று.

(வி - ரை) நலம் தீங்குகளை வினவும் கேளிரை இயல்பாகவே இல்லாதவன்; அங்ஙனம் வினவுதற்குக் கேடும் (நலனும) இல்லாதவன்;

அங்ஙனமாதலின் தனக்கென ஒரு கிளையும் இல்லாதவன் என்க. இதனால் யாவரதும் நலம் தீஙகுகளைக் கேட்டற்கும, கேட்டு நிற்றற்கும் தானே மற்று அவரெல்லார்க்கும் கிளையாக நிற்பவனாவான் என்பதும் பெற்றாம். தம்மையாண்டது ஒரு விச்சையாகும் என்பது தோன்ற " நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே " என்றருளிச் செய்தார். எனவே அது யாவராலும் நமபப்படத் தக்கதன்றாகிய ஒரு புதுச் செயலாவது பெற்றாம். நிலையுமற்றதென்க. உலக இயலபுக்கு மேற்பட்டது அச்செயல் என்பது தோன்ற " ஞாலத்துள்ளே " என்றருளினார். என்னுடைய பழம் பிறவிகளும, இனி யான் எய்தற்குரிய நிலைகளும், அன்னபிறவும் காட்டத் தகாதன அல்ல. அவற்றை எல்லாம் எனக்குக் காட்டி என விரிக்க.

யான் கண்ட புதுமைக் காட்சியில் தெளிந்துகொள்ளற்பாலனவாகிய ஐயங்கள், என்னால் தன்னையும் பிறரால் என்னையும் வினவச் செய்த வினாக்கள் என்பன, காணாதனவாகக் காட்டப்பட்ட காட்சியால் எழுந்தன வாகலின் அன்னவையும் கேளாதன கேட்டன என்றருளப்பட்டன வாயின.

இங்ஙனம் கண்ட காட்சியாலும், இக்காட்சியால் எழுந்த வினாவாலும், அவ்வினாக் குறித்து என்னாலும், அவன் தன்னாலும் எழுநத விடையாலும் என்னை மீடடும் பிறவாதபடி காத்தாட்கொண்டான். ஆதலினாலே அங்ஙனம் கொண்ட செயல் ஒரு மாயவித்தை ஆயிற்று. அதனைச் செய்தானும் ஒரு விச்சைக்காரனாயினான் என்க.

உலகோர், ஒரு விச்சைக்காரனால் அடிகட்குச் செய்யப்பட்டது ஒரு மாய வித்தைதான் எனக் கொள்ளவும், அடிகள் அதனை உண்மை நிகழ்ச்சி தான் எனக் கொண்டருளினர் என்க. இதனாலன்றே

" நாடவர் நந்தமை ஆர்ப்ப ஆர்ப்ப
நாமும் அவர்தமை ஆர்ப்ப ஆர்ப்ப " (திருப்பொற்சுண். 7.)

எனப் பிரண்டும் அடிகள் கிளந்தோதுவாராயினர். அவ்விச்சை காட்டற் குரிய ஆளாதற்குத் தகுதியில்லை என்பது தோன்ற " நாயினுக்குத் தவிசிட்டு " என்றும், " நாயினேற்கு " என்றும் கூறியருளினார்.

" கேட்டு, கேளாதே, கேட்டான், காட்டாதன காட்டி, கேளாதன கேட்பித்து " என்னும் இவற்றுக்கெல்லாம் தம் மனம் போனவாறே பொருளுரைப்பாரும் உளர் அவர் உரையெல்லாம் " நாட்டார்கள் விழித் திருப்ப ஞாலத்துள்ளே " நிகழ்ந்தது என்பது கொண்டு நோக்கின் பயன் அற்றனவாதல் தெளிந்துகொள்க.

**விச்சைதான் இதுஒப்பது உண்டோ கேட்கின்**
**மிகுகாதல் அடியார்தம் அடியன் ஆக்கி**
**அச்சம் தீர்த்து ஆட்கொண்டான் அமுதம் ஊறி**
**அகம்நெகவே புகுந்துஆண்டான் அன்பு கூர**

அச்சன்ஆண் பெண்அலிஆ காசம் ஆகி
ஆர்அழலாய் அந்தமாய் அப்பால் நின்ற
செச்சைமா மலர்புரையும் மேனி எங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே. 29

இதனால், அங்ஙனம் என்னைக்கொண்டு செய்திட்ட விச்சை யாளன், என்புறத்தே நின்று செய்ததோடு அமையாமல், அகத்தும் புகுந்து ஆண்டருளுதலாகிய பிறிதோர் விச்சையையும் செய்திட் டான் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) அப்பனும், ஆண் பெண் அலி என்பவை களுமாகி, எல்லாவற்றுக்கும் இடங்கொடுக்கும் வானவெளியுமாகி, கடத்தற்கு அரிய ஒளியுமாகி, முடிவுமாகி, அதனுக்கும் அப்பாற் பட்டு நின்ற வெட்சியின் சிறந்த பூவண்ணத்தை ஒத்த செம்மேனி படைத்த சிவமாகி, பெருமானுமாகி, தேவர்க்கு வேந்தனுமாகி, என்புறத்தே நின்று, தன்பால் மிக்க அன்பினை உடைய அடிய வருக்கு அடியவனாக என்னையும் ஆக்கி, எனது பிறப்பு இறப்புக் களால் உளதாகும் அச்சத்தை ஒழித்து ஆண்டுகொண்டான் ஆகியோன், இப்போது பேரின்பமாகிய அமுதம் ஊற்றெடுத்துக் கட்டுநெகிழ, அன்பு மிக என் உள்ளத்துள்ளே புகுந்து ஆட்சி செய்து கொண்டான். (ஆதலால் அவன் இப்போது எனக்குச் செய்த) மாயவித்தையை ஒப்பதொரு வித்தை உளதோ எனின், அங்ஙனமொன்று உளதாகுமோ ? அன்று எ - று.

(வி - ரை.) அச்சன் - அப்பன். நுண்ணிய வடிவினன் என்பாரும் உளர். ஆர்அழல் - கடத்தற்கரிய நெருப்பு ; ஒளி. வெளி அந்தம் என்பவற்றுக்கு வேறு வேறு பொருளுரைப்பாரும் உளர் அப்பால் - முத்தி யுலகு. இப்பால் செச்சைமா மலர்புரையும் மேனியனாய் வந்து அன்பரை ஆண்டுகொள்வான் என்க.

அடிகளுடைய சென்னியிலே இறைவன் தன்னுடைய திருவடிகளை வைத்தும், அத்திருவடிகள் அடிகளது திருவுள்ளத்தே தோன்றுதலின் " அகம் நெகவே புகுந்தாண்டான் " என்றருளிச் செய்தார். இவ்விளக்கத் தைச் சிவபுராணத்துட் காண்க. செச்சை - வெட்சி. மா - சிறந்த.

எல்லாத் தோற்றத்துக்கும் மூலமானவன் என்பது தோன்ற அப்பன் என்றும், அவனருளாற் படைக்கப்பட்ட ஆண் பெண் அலி வடிவங்களும் அவன் தானேயாகலின் ஆண் பெண் அலி என்றும், அவற்றுக்கெல்லாம் இடங்கொடுக்கின்ற ஆகாசமும் தானேயாகி என்றும் கூறியருளினர். இவையெல்லாமாகியும் அவனுக்கே இயல்பாயுள்ள ஆரழலாகியும், (அவ் வழலே அயனரியாலும் கடந்து காணற்கரிய பேரொளி என்க.) ஆகலின்

அவன் தானே அந்தமும் முடிபுமாகி (முன்னோனும் பின்னோனுமாகி) யவன் தானே சிவன் என்க. படைப்புக் கடவுள் முதலிய ஐவர்க்கும் ஏனைய தேவர்க்கும் தானே தலைவனாயினான் என்க. அவனே மாதேவன் என்க.

தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத்து அழிக்கும் மற்றை
மூவர்கோன் ஆய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத்து எந்தை
யாவர்கோன் என்னையும்வந்து ஆண்டு கொண்டான்
யாம்ஆர்க்கும் குடிஅல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவன்அடியார் அடியா ரோடு
மேன்மேலும் குடைந்தாடி ஆடு வோமே. 30

இதனால், அடிகள் அடியவராகத் தாம் ஆக்கப்பட்டமையால் பிறர்க்குக் குடியல்லோம், அஞ்சோம், அவரோடு குடைந்தாடு வோம் என்றருளுகின்றார்

(பொ - ரை) விண்ணவர்க்கு வேந்தனாகிய உணராத அவனை உள்ளிட்ட தேவர்க்கு எல்லாம் தானே தேவனானவன், வளம் பொருந்திய உலகங்களைப் படைத்தும் காத்தும் ஒடுக்கியும் வரும் ஏனைய மூவராகிய அயன் அரி உருத்திரன் என்பார்க்கும் தலைவனாக நின்ற பகவன், எட்டு வகையாகிய திருவுருவங்களையுடையவன், பாட்டன், உமைப்பிராட்டியானவள் ஆண்டுகொள்ளும் இடப்பாகத்தையுடைய எம்மப்பன், ஏனையோராகிய அவுணர், மக்கள், நரகர், பேய் முதலாகிய அனைவர்க்கும் அரசன் ஆகிய இத்தகைய ஆற்றல் பொருந்திய அவனே (எம் புறத்தும் அகத்தும் தானே) வந்து (புகுந்து) ஆண்டு கொண்டான். (பிறர் எம்மைத் தமக்கு அடியோம் எனக் கருதவும் செய்யார் ஆதலால்) யாம் இறைவனுக்கே அடியோம் எனப்படுவோமன்றி) ஏனையோர்க்கு அடிமைகள் அல்லோம், (எமக்குத் தீங்கு இயற்ற எவரும் கனவிலும் நினையார் ஆதலின்) எத்தகைய இடர்ப்பாட்டிற்கும் அஞ்சுதலையும் செய்யமாட்டோம்; அவனுக்கு அடியாராய் உள்ளார்க்கு அடியவராய் உள்ளாரோடு மனம் பொருந்தி உடன் கூடினோம், அவனுடைய இன்பக் கடலிலே (இதுகாறும் எய்திய இன்னல் ஒழியக் கவலையின்றி) மேலும் மேலும் மூழ்கித் திளைத்து நீர் விளையாட்டினை அயர்ந்து வருவோமாக எ - று.

(வி - ரை.) தடுப்பார் எவரும் இல்லை என்றருளியவாறு. யாதும் - எதனுக்கும்; சிறிதுமாம்.

"செப்பும் சிந்தையும் சேர்கிலாச் சேண்பொலி
அப்பரம் பொருள் ஆனந்தம் பெற்றவன்
எப்பொருள் செய்யும் எவ்விடை யூறுக்கும்
தப்பிஉய் வான்தனக் கச்சம் இனறியே"

என்று தைத்திரீய (உபநிடதம்) கூறும். இங்ஙனமே திருநாவுக்கரசு சுவாமிகளும் திருவாய்மலர்ந்தருளுவர்.

திருச்சிற்றம்பலம்

## 4. ஆத்தும சுத்தி

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற்கு அன்பிலை என்புருகிப்**
**பாடு கின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை பாதமலர்**
**சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணை இலி பிணநெஞ்சே**
**தேடு கின்றிலை தெருவுதோறு அலறிலை செய்வதொன்று**
**அறியேனே. 31**

இதனால், இறைவன்பால் இல்லாத மனத்தினுடைய புல்லறிவாண்மை கண்டு தளர்வுறுதல் கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) துணை இயல்பு இல்லாத பிணத்தினை ஒத்த நெஞ்சே, நின் ஆண்டவனாகிய, கூத்துஇயற்றும் தொழிலை உடைய வனாகிய சிவபெருமானுடைய திருவடிக்கண் அன்பில்லாதிருக்கின்றாய், அதனால் ஆனந்தங்கொண்டு கூத்து அயர்தலையும் செய்கின்றாயில்லை; அன்பு மேலிட்டு எலும்பும் உருகிப் பாடுதலையும் செய்கின்றாயில்லை, அங்ஙனம் செய்யாமை கருதி நடுங்குதலையும் செய்கின்றாயில்லை, தாழ்ந்து வணங்குதலையும் செய்கின்றாயில்லை; அவனுடைய திருவடியாகிய தாமரை மலர்களைத் தலைக்கு அணியாகச் சூடிக்கொள்கின்றாயுமில்லை, அம்மலர்க்கண் வேறு மலர்களைச் சாத்துகின்றாயுமில்லை, அத்திருவடிகளைக் காணல் வேண்டும் என்று நாடப் புகுகின்றாயுமில்லை, அங்ஙனம் நாடிக் காணாமையின் தெருக்கள் தோறும புகுந்து கதறுகின்றாயுமில்லை; இங்ஙனம் என் அறிவுரைகள் எல்லாம் பயன்பெற்றில ஆதலால் யான் இனி உனக்குச் செய்வது இதுதான் உளதென ஒன்றையேனும் அறியேன் ஆயினேன் எ - று.

(வி - ரை.) இன்னும் பின்னும் மன அறிவும் புலனறிவும் என்னும் இவற்றை எல்லாம் வேறுபட நிறுத்திப் பலவகையாற் பேசுதல் முதலாயின செயயுள் மரபாதலைத் தொல்காப்பியத்துப் பொருளியல் இரண்டாம் சூத்திரத்தான் உணர்க. தாம் வெறுத்து ஒதுக்கலின் "துணையிலி" என்றும், அறிவுறுத்தியும் உணர்ச்சி எய்தப் பெருமையால் "பிண நெஞ்சே" என்றும் அருளிச் செய்தார். உயிர் உடையை என்று நண்பு செயதேன்; நீயோ பிணம் ஆவாய் என்று தம் செயறகு இரங்கியருளினரு மாம். இங்ஙனம் அழைப்பின், அஃது உயிருடன் இருநதால் நாணி எழுந்து பணிகேட்கும் என்பது கருத்து. என்புருகினர்க்கே பாட்டுத் தோன்றும் என்பது பெற்றும். அன்பினுற் கூத்தாட்டு நிகழும் என்க. அவ்வாட்டம் என்பினை உருக்கிப் பாடச் செய்யும். இன்னவற்ருல் தன் குற்றம் கருதிப் பதைத்தலும், அப்பதைப்பினுல் தலைவணங்குதலும் உளவாகும். ஆடுகின்றுயில்லை ஆதலால் அன்பும் இல்லை என்பது கண்டாராக, "ஆடுகின்றிலை" "அன்பிலை" என்று அடைவு செய் தருளினர். இதனுல் மனத்தின் புல்லறிவு புலப்பட்டது. இதனை,

"ஏவவும் செய்கலான்; தான்தேருன்; அவ்வுயிர்
போஒம் அளவும்ஓர் நோய்." (திருக்கு. 848.)

என்பதனுனும் அறிக.

அறிவுஇ லாத எனைப்புகுந்து
ஆண்டுகொண்டு அறிவதை அருளிமேல்
நெறிஎ லாம்புலம் ஆக்கிய
எந்தையைப் பந்தனை அறுப்பானைப்
பிறிவுஇ லாதஇன் னருள்கள்பெற்று
இருந்தும் மாறு ஆடுதி பிணநெஞ்சே
கிறிஎ லாம்மிகக் கீழ்ப்படுத்
தாய்கெடுத் தாய்என்னைக் கெடுமாறே. 32

இதனுல், என்னைப் பகைத்து என்னையும் நீயே கெடுமாறு கெடுத்தனை என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) பிணத்தின் இயல்பினை ஒத்த நெஞ்சே, அறிந்துகொள்ளும்) அறிவில்லாத என்னை (வலிய வந்து உள்ளத்துட் புகுந்து) அடிமையாகக் கொண்டு, தன்னை அறிவதற்குரிய மெய்யுணர்வினை அருளிச்செய்து, வீட்டிற்குச் செல்லும் வழியனைத்தையும் தெளிய எனக்கு அறிவுறுத்திய என் அப்பனும், பிறவித் தளையை வேரறுப்பவனும் ஆகிய என் ஆசானை (நின்னிற்) பிரியாத இனிய அருளை (நினக்குச் செய்தற்பொருட்டு நீ) பெற்றிருந்தும் அவனுடு (சேராது) தடுமாறுகின்றுய்.

அதனால் பொய்யெல்லாம் என்னில் மிகுதிப்பட என்னைத் தாழ்த்தினாய் ஆவாய் (நின்னுடைய சூழ்ச்சியால்) என்னைக் கெடும்படியாகவே கேடு செய்தாய் ஆகுவை எ - று.

(வி - ரை) எனது நிலையையும் கீழ் நிலையாக்கி என்னையும் கெடுத்தாய் என்க. ஆதலால் அப்பழிப் பயன்களுக்கு நீயே யுரியையானாய் என்க. "மாறுடுதி" என்றமையால் நீயும் கீழ்பட்டுக் கேடடைந்தாய் எனக் கொள்க. கெடுமாறு - கெடும்படி. கெடும்படி கெடுத்தலாவது, புறத்தே நல்லது போலத் தோற்றங் காட்டிக் கரந்து சூழ்ச்சியினாற் கெடுத்தல் என்க. பிரிவிலாத இன்னருள் புரிதற்கென அவனைப் பெற்றிருந்தும், அவனோடு சேராது, தடுமாறுகின்றாய் என விரிக்க மறக்கருணையினின்றும் பிரித்தற்கு "இன்னருள்" என்று கூறியருளினார். மாறுடுதல் - தடுமாறுதல். அஃதாவது, சாதல் பிரிதல் என்னும் இரண்டனுள் ஒன்றன்பாற்படாது, மாறிமாறி இருபாற்பட்டு வருதல் என்க. பநதம் - கட்டு. அஃது அன் சாரியையுடன் ஐயுருபேற்று நின்றது. வேறுங் கூறுப. அவன் சார்பு பெறுயாகில் நின் இயல்புதான் யாதாகும் என்பது குறிப்பு. நீ அங்ஙனம் தடுமாறுகையால் மெய்ம்மை சான்ற என்னிடத்தும் பொய் மலிந்தன. நின் பொய்யை என்மேல் ஏற்றி என்னைத் தாழ்த்திக் கெடும்படியே கருதிப் பாழ்படுத்தினாய்; ஆதலால் யானும் பொய்யனாகிப் பாழானேன் என்க.

"நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம்" (திருக்குறள். 320.) என்பவாகலின், எனக்குக் கேடும் தாழ்வும் எய்தா. அவை நினக்கே எய்தும். அது கருதியே யான் பரிவுறுகின்றேன் என எச்சத்தை விரித்துரைக்க. இங்ஙனமே அறிவுறுத்தல், நெருக்குதல், வெருட்டல், வெறுத்தல் முதலாயவற்றுக்கும் ஏற்குமாறு இசை எச்சங்களை விரித்துக் கொள்க. சொல்லளவில் இனிமை ஆகிச் செயலளவிலே இன்னா செய்தாய் ஆதலின், இனி உன்னை நம்பேன் என்றருளியபடி.

மாறி நின்றுஎனைக் கெடக்கிடந்
 தனையைஎம் மதியிலி மடநெஞ்சே
தேறு கின்றிலம் இனிஉனைச்
 சிக்கெனச் சிவன்அவன் திரள்தோள்மேல்
நீறு நின்றது கண்டனை
 ஆயினும் நெக்கிலை இக்காயம்
கீறு கின்றிலை கெடுவதுஉன்
 பரிசுஇது கேட்கவும் கில்லேனே. 33

இதனால், நன்னெறியில் ஈடுபடுவதாகக் கூறிய மனம் இக் காயத்தைக் கீறாமையால் அதனது சொல்லைத் தெளிகிலம் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை ) எம்முடைய அறிவுரையை ஏற்றுக்கொள்வதற்கு ஏற்ற அறிவிலாத மடம்பட்ட நெஞ்சமே, சிவனே ஆசானுகி வந்த அவனுடைய திரட்சி பொருந்திய தோள்களின் மேலே (உலக நிலையாமைக் காவலாகி அணிந்த குறியாகிய) திருநீறு நிலைபெற்று இருந்ததனை நீ (அப்போது) பார்த்திருந்தும் (இப்போதேனும் அதன் உண்மையை உணர்ந்து) இளகினுயில்லை. இளகுவையேல் (அவனையடைதற்கு மாருகிய) இவ்வுடலைப் பிளந்திருப்பாய். அங்ஙனமும் செய்திலை. ஆதலால் என்னைப் பகைத்து நின்று யான் கெடுமாறு கிடந்து வழிமறுத்த நின்னைத் திண்ணமாக இனித் தெளிகின்றமையைச் செய்யேம் இங்ஙனம் நீ கெட்டொழியும் இயல்பினைக் கேட்டற்கும் வலியற்றேன் ஆவேன் எ - று.

(வி - ரை ) எம் நெஞ்சே, மடநெஞ்சே எனக் கொள்க. அறவே அன்பிலாத நெஞ்சு ஏனக. கிடந்தனையை (கிடந்தனை + ஐ) கிடந்தனை யாகிய நின்னை. கிடந்த + அனையை எனப் பிரித்துப் பொருள் கொள்ளல் பொருந்தாது. ஐகாரவீறறு முன்னிலைவினைமுறறுப் பெயராகி இரண்டனுருபேற்று நின்றதாகலின். இனி, கிடக்கின்றபோது ஒத்தாய் எனப் பொருளுரைத்தல் மரபறியாமையின்பாற் படும. யாம் தெளி கின்றிலேம் , அதனோடு நின் கேடடினையும கேட்டறகு ஆற்றல் இல்லேம் ஆயினேம் என இயைக்க. நின்னைத் திருத்தும் ஆறறலோடு இனிக் கேட்கும் ஆற்றலும் அற்றுத் தளர்வடைந்தோம் என்க.

உலக நிலையாமைக்கும் அதனை நீக்கி இன்பம் சுரக்கக் காத்தற்கும் உரிய சாதனம் திருநீறே ஆதலைக் கண்டும, இன்றுதானும் முன்னர் இகழ்ந்தமை குறித்து உருகிலை, அத்தகைய நீயே அதனை அணிந்து கொள்வாய் எனக. அணிந்திலை என்னுது ''உருகிலை'' என்றே ஓதியொழிந் தருளினர், அன்பிலார்க்கு அணிதல் இயலாமையால். ஏனைய சாதனங் களுள்ளே திருநீறே சிறந்ததொன்ருகலின், அதனை அணிந்துகொள்ளா தார், உருத்திராக்கமணி முதலியவற்றையும் அணிதலும, ஆராதனை செய்தலும், அவை போல்வன பிறவும் மேறகொள்ளார் எனக. அகத்திலும் உறுப்பிலும் அன்பின்றி, சொல்லளவிலேயே என்னுடைய அன்பு நிலை பெறுவதாயிற்று என இரங்கியருளியவாறு.

அவன் அழகிய தோளிலே நீறு பொலிவுற்றிருப்பது மிக்கதோர் அவாவினை அடியார்மாட்டு எழுப்பும் என்க. அதனைக் கண்டும் நெஞ்சு உருகாதவர்மாட்டு அன்பு சிறிதும் இல்லை என்பது முடிந்த முடிபாயிற்று. "அமுத யோக நீற்றினை" என்றருள்வர் அபபர் சுவாமிகளும்.

"அவன்ருேள் பூசத் திருநீறென வெளுத்து" (திருக்கோ. 109.) என்றது கொண்டு தோள் அவன் வெறறியை விளக்கும். அதன்கட் பூசிய திருநீறு காதலை யெழுப்பும என்க.

" தவளத்த நீறணியுந் தடந்தோளண்ணல் " (திருக்கோ. 112.)
என்றதும நோக்கத் தக்கது.

கிற்ற வா மன மே கெடு வாய் உடை
யான் அடி நாயேனை
விற்று எ லாம் மிக ஆள்வதற்கு உரியவன்
விரைமலர்த் திருப்பாதம்
முற்றி லா இளம் தளிர் பிரிந்து இருந்து நீ
உண்டன எல்லாமுன்
அற்றவா றும் நின் அறிவும் நின் பெருமையும்
அளவறுக் கில்லேனே. 34

)ல், என்னை எவ்விதமும் செய்துகொள்ளுதற்குரிய உரிமை உடையவன் என்று என்றால் தெளிந்துகொள்ளப்பட்ட இறைவனை நீ பிரிந்து கெட்ட செயலைக் கரந்து தருக்கினைக் காட்டினையேனும் நின்நிலையை அளவறுக்கும் ஆற்றல் எனக்கில்லையா என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை ) (சிற்றின்பத்தில் செலுத்துதலில்) வல்லமையுடைய அவாப்பொருந்திய மனமே, கேடடைதற்குரியாய், நீ குரவனாக எளிவந்து ஆண்டு கொண்டமையானே, என்னையுடையவனுக்கு உடைமையேயாகிய நாயின் இயல்பினையுடைய என்னையும் எனக்குரிய எல்லாவற்றையும் விலைப்படுத்தி ஆட்சி செய்தற்கு மிகவும உரிமை பூண்டவனுடைய மணம் பொருந்திய தாமரை மலர்போன்ற திருவடிகளாகிய (ஒருபோதும) முற்றாத (எப்போதும்) இளமை வாய்ந்த தளிர்களைச் சேராமுன்னர், நின் பழவினை முதலாயவற்றால் தேடிக்கொண்டு நுகரந்துவந்த எல்லாத் துன்பங்களும், சேரந்த பின்னர்ப் பெற்று நுகர்ந்து வந்த இன்பங்களும், பிரிந்து தனித்திருப்பதனால் (முறையே) முன்னும் (பின்னும்) அற்றுப் போனபடியும், துன்பம் நீங்கப் பெற்றுக்கொண்ட இன்பத்தை இழந்து வறிதுபட்ட நின்னுடைய சிற்றறிவினையும், நின்னுடைய (போலிப்) பெருமை தன்னையும், யானு அளவறுத்துக் கண்டு கொள்ளும் ஆற்றல் இல்லாதவன் எ - று.

(வி - ரை ) யான் எல்லாவற்றையும் நன்கு அறியவல்லேன் ஆதலின், என்னைக் கெடுத்தற்கு முயலும நீயே கெடுவாய் என விரிக்க.

அவன் திருவடிகளைச் சேராமுன் பழவினையாற பெற்றிருந்த துன்பங்கள் எல்லாம சேர்ந்தபோது அற்றவாறும், அவற்றைச் சேரந்த பின்னர் நுகர்ந்து வந்த இன்பங்களெல்லாம பிரிந்த பின்னர் அற்றவாறும் ஆகிய இவற்றை யானு அளவறுக்ககிலலேன் என வகை செய்துகொள்க.

நின்னறிவு - துன்பத்தினை நீக்கிய இன்பத்தினையும் நீக்கும் நின்னுடைய சிற்றறிவு. நின்பெருமை - பெற்ற இன்பத்தினை இழந்து நீ வருத்தம் மிக்கும் அதனைப் புலப்படுத்தாது உட்கரந்துகொண்டு யாதோ பெருமை இருப்பதாக வெளிக்காட்டும் நின்போலிப் பெருமை.

கிறறவாமனம் (கிற்று + அவா + மனம்) - ஆற்றலுடைத்தாகிய அவா வினை மேற்கொண்ட மனம்.

"அவா பிறப்பீனும் வித்து" (குறள். 361.)

என்பவாகலின், அது "கிற்றவா" என்று கூறியருளப்பட்டது. கில் + தவா எனப் பிரித்துப் பொருள் கூறுவாரும் உளர். அவர் "மனம்" என்னும் சொல்லாற்றலைக் கொண்டு "கில்" என்பதற்கு நலிந்து பொருள் கூறுவர். நேர் பொருளுக்கு இடனற்றபோதே அன்னவாறு கையாளுதல் வேண்டும். ஈண்டைக்கு அது வேண்டப்படாதென்க.

அளவறுத்தல் - அளவையாகிய கருவித் துணைகொண்டு மேற்கொண்ட ஐயத்தினை முறையே முழுவதும் சிதைத்து வேறுபடுத்தல். அறுக்ககில்லேன் என்பது "அறுக்கில்லேன்" எனத் தொக்கது. ஐயத்தினைக் களைந்துகொள்ளும் வகைகளை ஈண்டு உரைப்பிற் பல்குமாதலின், அவற்றையெல்லாம் வல்லார் வாய்க் கேட்டுணர்க. மனம் முதலாய எல்லாம் அடங்குதற்கு "விற்றெலாம்" என்றருளினுர்.

முந்திய நிலையும் இடைநிலையும் இப்போதைய நிலையும் என்னுல் தெளியப்பட்டன ஆதலின், யான் நீ அறறவாறு முதலிய மூன்றனையும் அளவறுக்கும் ஆறறல் இல்லேன் ஆவேனு எனக் காரணங் காட்டிக் காரியத்தை நிறுத்தியருளியபடி. ஆதலால் மனமே என்றும் கெடுவாய் என்றும் உரைத்தருளினுர்.

நீ என் சொற் கேட்டொழுகும் ஆற்றல் கொண்டிலை யாதலால், நின் சொற் கேட்டொழுகும் ஆற்றல் இல்லேன் ஆயினேன் என்க.

அளவுஅ றுப்பதற்கு அரியவன் இமையவர்க்கு
அடியவர்க்கு எளியான்நம்
களவுஅ றுத்துநின்று ஆண்டமை கருத்தினுட்
கசிந்துஉணர்ந்து இருந்தேயும்
உளக றுத்துஉனை நினைந்துஉளம் பெருங்களன்
செய்ததும் இலைநெஞ்சே
பளகுஅ றுத்துஉடை யான்கழல் பணிந்திலை
பரகதி புகுவானே. 35

இறைவன் அருளிச்செய்த இடத்திலே எனக்கு ஒரு துணையாக நின்று காத்து வருவாய்போல அவன் முன்னர் நடித்தும் இப்போது இங்கே என்னை வருத்தி என் இயல்பினைக் கெடுக்கின்ற மனமே, என்னைக் கெடுக்கவேண்டிய நீயும் கெட்டுவருகின்றுய்;

இதுவே நின் புல்லறிவாண்மையாகும் என்பது கூறியருளப் படுகின்றது.

(பொ - ரை ) மனமே, இமையாத கண்களையுடைய வான வர்க்கு (மெய்யன்பின்மையின்) அளந்து அறிதற்கு இயலாத வனும், மெய்யன்பு உடையவராகித் தன்னுடைய திருவடிகளையே அடைக்கலமாகப் புகுந்தவர்க்கு (அவர்தம் மெய்யன்பாகிய வலை யுள் அகப்பட்டு) எளியவன் ஆவோனும் ஆகிய சிவபெருமான், ஆசானாக எதிர்வந்து பிறவிக்குக் காரணமாகிய வஞ்சனைகளைச் செய்யும் கட்டுக்களின் வேர் அறுத்து, எம்முள்ளே நிலைபெற்று, எம்மை ஆட்கொண்ட பேரருள் திறனை (நின்னுடைய துன்பநிலை யின் நின்று நீங்கிப் பேரின்ப நிலையாகிய) வீடுபேற்றினை அடைதற் பொருட்டு, (இப்பொழுதேனும்) நின் எண்ணத்துள்ளே அன்பு உண்டாக நெகிழ்ந்து உணர்ந்திருந்தாகிலும் (நின் நன்னெறிச் செலவிற்குத் தடையாக) உள்ளனவாகிய உடம்பு உலகம் என்னும் இவற்றை எல்லாம் வெறுத்துச் சினங்கொண்டு (நின் ஆக்கம் கருதி) நின்னுடைய உள்ளத்து, (நின்னுடைய பழவினைகளாகிய) குறைகளை (முன்னம்) அறுத்து ஆண்டவனுடைய திருவடிகள் வாழ்ந்துவருதற்கு ஏற்ற பெருமை பொருந்திய இடமாக இன்னும் செய்து கொண்டதுவுமில்லை ; அங்ஙனம் அவனைப் புறத்தே கண்டு வணங்கினாயுமில்லை எ - று.

(வி - ரை.) தான் கெடுவதுமன்றித் தக்கார்க்கும் கேட்டைச் சூழும் புல்லறிவாளர் இயல்பினையுடைய நின் சொறகேட்கும் ஆற்றல் எமக்கிலலை என்றருளியபடி.

களவென்பது வஞ்சனையைச் செய்யும் கட்டுக்கு ஆகுபெயராயிற்று. கறுத்தல் - சினத்தல். பெருங்களன் - பெருமைத்தாகிய இடம். "பளகு உ(ள்)ள(ன) கறுத்து" என்றது, நின்பால் உள்ளனவாகிய உடல் உலகு என்பவற்றின் நட்பினை நீக்கிப் பதைத்தலை. "உனை நினைந்து" என்றது, எனது ஆக்கங் கருதிலையேனும், உனது ஆக்கத்தை ஓமபுதற் பொருட் டேனும் உன்னை ஊக்குதற்கு நினைந்து என்பதனை.

மனமாகிய உறுப்பினை ஓர் உறுப்பியாக மதித்தனராகலின், அதற் கேற்ப உனது உள்ளத்தைப் பெருமையுடைய இடமாகச் செய்தல் வேண்டும் ; அதுவும செய்திலை என்பார், " உளம் பெருங்களம் செய்தது மிலை நெஞ்சே" என்றருளினர். "ஆண்டமை கருத்தினில் உணர்ந்தேயும" என்றருளிய பின்னர், ' (யான்) உள' கறுத்து (நெஞ்சாகிய) உனை(ப்பறறுக் கோடாக) நினைந்துளன் ' என்றது, "நினைநதுளம" எனப் பன்மையாகக் கூறியதனால் (நின்னுடைய) உள்ளம் (அதனைப்) பெருஙகளன் (ஆகச்) செய்ததும இல்லை என்று பொருள் கோடலே அடிகள் கருத்தாதல்

பெற்றும். "பணிந்திலே" என்றதற்குப் பணிதலேச் செய்தாயும் இல்லே என அச்சொல்லின் அகத்தே உம்மையை விரித்துப் பொருள் உரைத்துக் கொள்க. பளகு - குற்றம், குறை

நின்னேயும் ஒரு மெய்யன்புடையையாகக்கொண்டு நின் பளகு அறுத் தான் அதுபோது நீ அவனே எதிர்க்கும் ஆற்றல் இல்லாயாவை ஆதலின் களவாக அடங்கி ஒழுகுவாய்போலக் கரந்திருந்தும் (அவன் சென்ற பின்னர்) நின்னே இடிப்பாரின்மையால், அவ்விறைவன் வாழ்தற்கென நின் உள்ளத்தினேப் பெருங்களஞகச் செய்ததுமில்லே; அங்ஙனம் செய்து முடித்தற்குரிய அவனது அருளினேப் பெற அவன் சழலேப் பணிதல் செய்ததும் இல்லே என வகை செய்து விரிக்க "பெருங்களன் செய்திலே" என்றது "பெருங்களன் செய்தது மிலே" என இடையே உம்மை கொடுத்துக் கூறியதற்கேற்பப் "பணிந்திலே" என்றதனேயும் பணி தலேச் செய்ததுமில்லே என விரிக்க.

கள்ளமுடையாரைப் பொருள் காப்பவராக வைப்பின் அவர் தம் தலேவர் முன்னிலேயிலே நறகுண நறசெய்கை உடையார்போல அடங்கி நடித்தும, அத்தலேவர் இலலாத இடத்தே தம் குணம் செயல் அடங்காராய்ப் புலப்படுத்துத் தீயன செய்தும் வருவதுபோலவே நெஞ்சே, நீயும் இறைவன் அருளிச் செய்த ஞான்று அவன் முன் நல்லாய் போல நடித்தும் அவன் இல்லாத இற்றை ஞான்று அவன் பணி மீறியும் வருகின்றனே. ஆதலினுலே இவ்வியல்பு நினக்குக் கேடு பயக்கவல்லது என்ருங்கு ஒப்புரைத்துத் தெளிந்து கொள்க.

புகுவ தாவதும் போதர வில்லதும்
பொன்னகர் புகப்போதற்(கு) டிலே யா
உகுவ தாவதும் எந்தைஎம் பிரான்என் என்க.
ஆண்டவன் கழற்கன்பு
நெகுவ தாவதும் நித்தலும் அமுதொடு வர்க்கு
தேனெடு பால்கட்டி
மிகுவ தாவதும் இன்றெனில் மற்றிதற்கு
என்செய்கேன் வினேயேனே. 36

இது முதலாக, முன்னர் (31–35) உள்ள ஐந்து திருப்பாடல் களால் தாம இங்ஙனம் இறைவனே அன்பு செய்யாததுபற்றி மனத்தினே நெருக்கி உரைத்த அடிகள், அதனுல் வரும் குற்றம் தம்மையே சார்தல் உணர்ந்து நொந்துரைத்துக்கொள்ளுதல் கூறியருளப்படுகின்றது.

இத்திருப்பாடலால், வீடுபேறு அடைவதற்குத் தம்முள்ளே பற்றுக்கள் நீக்க இறைவன் திருவடிகட்கு அன்புருகி ஆனந்தம்

ஏறப் பெற்றிலேன். இதனை நீக்குதற்கு யாது செய்தல் வேண்டு மென அடிகள் தம்மையே தாம் வினவியருள்கின்றார்.

(பொ - ரை) உட்செல்வதற்கு வழியுள்ளதும், வெளிச் செல் வதற்கு வழி இல்லதும், மெய்ம்மையாகிய இன்பம் தரும் பொன் நகரம் என்னும் பெயர் உடையதும் ஆகிய வீட்டினுள்ளே செல்வதற் காக அழிவதும், எனக்கு அப்பனும் எம தலைவனும் ஆகிய என்னை வந்தடிமை கொண்டவனுடைய திருவடிக்கு அன்பு செய்து உருகு வதும், நாள்தோறும் அமுதினொடும் தேனினொடும் பாலினொடும் சர்க்கரையினொடும் கூடிய இனிமையினும் மிக்கு வருவதோர் இனி மையும் எனக்கு உளதாவது இல்லையெனில் யான் அதனைப் பெற் றுக்கொள்வதற்கு என்ன செய்வேன்? எ - று.

(வி - ரை.) ஒன்றேனும் செய்துகொள்ளும் ஆற்றல் இல்லேன் ஆவேன் என எச்சம் உரைக்க.

வீடு பெறுதற்கு வேட்கை மேலிட்டு அழிதல் வேண்டும்; அங்ஙனம் அழிந்தால் அதனுக்குரியோன என்னை ஆண்டவன் ஆதலால் அவனடிக்கு அன்பு செய்தல் வேண்டும், அன்பு செய்து உருகுதல் வேண்டும்; அங் ஙனம் உருகினால் இனிமை மிகும் அமமிகுதலும் எனக்கின்றெனில் இதற்கு யான் என் செய்வேன் என முடிக்க இனி, வீடு புகுவதற்கு உருதலும் இன்றெனில் என்றாங்குத் தனித்தனி முடிப்பினும் இயையும்.

வீட்டின் இயல்புணர்ந்து அதன்கண் ஆசையால் அழிதலும், அவ் வழிவால் அதனை உடையானை நாடி அவன் அடியைத் துணைக்கொண்டு மற்றதன்மேல் அன்பு செய்து உருதலும், அவ்வுருக்கத்தால் நாள்தோறும் மிக்கு வரும் இனிமையும் ஒன்றினின்று ஒன்று முறையே உண்டாவனவாம். வீட்டின்கண் ஆசையின்றேல் இம்முறைமைத் தோற்றங்களும் இன்றாம். அங்ஙனமாயின் அவமே இறப்பதுதான் கடன் என்றருளியபடி.

உருவதும் வீட்டிற்புகும் ஆசையோடு நெகுவதும் என்றது அவ்வுருத லோடும், மிகுவதும் என்றது நெகுதலோடும் இயைதற்கு உம்மை பெற்றன ஆதலின், 'இல' எனில் எனவும், 'இவற்றிற்' கெனவும் பன்மைப் பாலாக ஓதியருளாராயினர்.

" உருதல் " என்றதற்கு பற்று உருகுதல் எனப் பொருள் கூறுவாரு முளர். உலகப் பற்றினை நீக்குதறகும் வீட்டின்கண் ஆசை கொள்ளுதற்கும் நடுவே தொடர்புபட்ட இறைவன் திருவடிப்பற்று அமைதல் வேண்டு மென் பதனை அவர் கண்டிலராவர் என்க.

திருவடிக்கன்பு செய்தலாவது, புறத்தும் அகத்தும் உள்ள தடை நீக்கி அதனைக் கண்டு வழிபட்டு உள்ளிருக்கும் அன்பினை வளர்த்தல். தானும் தன்னகமும் புறமும என்னும் பாகுபாடின்றி இரண்டறக் கலத்தலே வீடு பேறுகிய திருவடி என்க. இன்பம் மிக்குப் பாகுபாடின்றி ஒரு பெற்றித்தா

தற்கு முன்னுள்ள நாட்களே நிச்சலும் எனப்பட்டன. அந்நாட்களுக்கு மேலே அந்நாடகளும் இன்பமும் உணரப்படாவாகலின் அவற்றைக் கிளந்து கூறியருளிற்றிலர்.

மெய் என்னும் பெயர் பொய்யாகிய உடம்பிற்கு ஆகிப் பயின்று வந்த வாறே பொன்னகர் என்றதும் அமராவதிக்குப் பயின்று வந்த தென்க. பொன்னகர் என்பதை அடைகளால் வரைவித்துச் சிவநகர் எனக் கொள்ள வைத்தாருமாம் இதனை அறியாதார் உருவகம் என்ப. பொன்னகர் என்பது விலக்கப்பட்டுச் சிவநகர் கொள்ளப்படுதல் முதலாய பல காரணத் தால் பல அணிகளாகும் ஆதலின், அவற்றை எல்லாம தோன்றக் கூறுதல் ாண்டைக்கேலா தென்க. இன்னோரன்ன இழுக்குடைமையான் ஆசிரியர் தொல்காப்பியனார் இவைகளையெல்லாம் வகுத்திலர் என்க.

கட்டி, கற்கண்டுமாம். அசுரரை வஞ்சித் துண்டலின் அமுதமும், மரபு கொன்று எடுக்கப்படுதலால் தேனும், கன்றினுக்குரியதைப் பங்கு பற்றலால் பாலும், வருத்தியழித்துக் கொள்ளுதலால் கட்டியும் இழித்திடப் படலின் இவ்வின்பம் மிக்கதே. மற்றும், இவ்வின்பம் நிலைபெற்றதும், மெய்ந்நெறிச் செல்வார்மாட்டே தோன்றப் பெறுவதும், தம்மைத் தாமே வருத்தலிற கைவரப் பெறுவதும், அன்ன பிறவும் எய்தப் பெற்றதுமாகும் என்க.

**வினை என் போல்உடை யார்பிறர்**
**ஆர்உடை யான்அடி நாயேனைத்**
**தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப்**
**பன்றுமற்று அதனாலே**
**முனைவன் பாதநன் மலர்பிரிந்**
**திருந்தும்நான் முட்டிலேன் தலைகீறேன்**
**யன் பாவனை இரும்புகல்**
**மனம்செவி இன்னதென் றறியேனே. 37**

இதனால், உறுப்புகட்குத் தாமே தலைவர் எனத் துணிந்து அவற்றை இறைவனுக்குஅன்பு செய இயக்கியும இயங்காமை கண்டு அவை தம்மை உணர்வு பொருந்தற் கொண்ணாத பிற பொருள்களால் இயன்றனவோ என இழித்துரைத்து வருந்துதல் கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை ) இறைவனுடைய திருவடிக்கு அடிமைப்பட்ட நாயேனாகிய என்னைத் தினையளவிற் பகுதியேனும் பிரிந்திருத்தல், என்னை உடைமையாக உடையோனுடைய திருவுள்ளக் குறிப் பன்று, ஆதலால் அம் முன்னோனுடைய திருத்தாள்களாகிய நன்மை பொருந்திய மலரை என் தலை சூடிக்கொள்ளாதிருந்தும்,

அதனைக் கல் முதலாயவற்றிலே மோதிக்கொள்கிலேன் வாள் முதலிய கருவிகளைக் கொண்டு பிளந்திலேன்,
எண்ணம் நுண்ணணுப் பொருளானன்றி இரும்பினுன் ஆயதோ, அததகைய மனமும் கல்லான் ஆயதோ என்றும், செவி இன்ன தால் ஆயது என்றும் அறியாதவனுக இருக்கின்றேன், இங்ஙன மாகிய என்னைப்போலத் தீவினை நுகர்ச்சியுடையார் என்னை யன்றிப் பிறர் யாவர் உளர்? (ஒருவருமிலர்) எ-று.

(வி - ரை.) தினை பனை என்றாற் போல்வன அளவுப் பெயர்கள். பாகம் - செம்பாகம். இறைவனைப் பிரிந்திருத்தல் தம் குறைவானே நிகழ்ந்தன எனத் தெளிந்து கொண்டனர ஆதலால், "உடையான்... திருக் குறிப்பன்று" என்றருளிச் செய்தனர்.

அவனடியிலே சார்ந்திருத்தற்குரிய நாயை ஒத்த என்னை என விரிக்க. அறிவுடைப் பொருளை வலிந்து சார வைத்தல் மரபு அன்முதலால், உயிர் கள் தமமைத் தாமே உணரந்து திருவடியடைதல் வேண்டும என்பது இறைவற்கு இயல்பு ஆகும் என்க. இதனாலன்றே உயிரகளுக்கு இறைவ னால் உடல் உறுப்பு உலகம் நுகர்வு என்பன கொடுத்தருளப்பட்டன. உயிர் களிலே இயல்பாகக் கட்டு உளதென்பதும், அதனை நீக்கவே அன்னவற்றை யெல்லாம் அவற்றுக்கு அருளினன் என்பதும் ஈண்டே பெறப்பட்டன. "அதனுல்" என்பது, தமக்கு இறைவனுல் உடல் முதலாயன அளிக்கப் பட்ட காரணம், தம்பால் உள்ள கட்டினை நீக்கித் தன்னெடு சாரவைத் தற்கே என்னும் காரணபபொருள்பட நின்றது.

அடியைச் சாரமுயலாது, அதற்கு மாருக அக்கட்டினை வளர்த்தற்கு முயன்றுவந்த உறுப்புக்களை இகழ்ந்துரைத்தலோடு அவற்றைச் சிதைவு படுத்தாத தம்மையும் இழித்துரையாநினறருளினர். உறுப்புகட்கும் உணர்வு அளித்தருளப்பட்டிருநதும் அவை எல்லாம் நன்னெறியிற் செல்லாமையால் எண்ணம் முதலியவற்றைக் கல் முதலாய உணரவற்ற பொருள்களால் இயன்றன என இழித்துரைத்தருளினர். அறிவற்றன வற்றைச் சிதையாமையே முறைகேடாகுமெனத் தமது குறையையும் நினைவுகூர்நதருளினர் என்க. இன்னும இதனானே நல்வழிக்கண் இயன்றிலாத கால் கண் வாய் மூக்கு முதலாயவறறையும் அஙஙனமே ஆயின, அவற்றையும் சிதைத்தல் வேண்டும என்பதும அடிகள் திருவுள மாகும் எனக் கொள்ளப்படும. "செவி இன்னதென்றறியேன்" என்றார் அவன் உபதேசம் கேட்டிருந்தும், அவற்றை எஞ்ஞான்றும் ஒலித்தலின்றி மறந்து பிறவறறைக் கேட்டு ஒலித்தலின்.

இங்ஙன மெல்லாம் நினைந்து வருந்துவதால் உயிர் தூய்மை எய்தும் என்க. இறைவன் திருக்குறிப்புக்கு மாறுபடப் பிரிநதிருநதனராதலின், அவர் வினை தீவினையாயிறறு என்க வழிபடாதாரையும காத்தும், இகழ்ந் தாரையும் கரையேற்றியும் வருதலின் "நறறுள்" என்றும், அந்நலனும்

மெல்லிய இனிய விரையும் உடைத்தாதல் பற்றி "மலர்த்தாள்" என்றும் அருளிச் செய்தார்.

உறுப்புக்களையும் தம்மையும் வெறுத்தற்குக் காரணங் காட்டிக் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளற்பொருட்டு "முனைவன் பாத நன்மலர்" என அருளித் துணிவாராயினர்.

உடையான் திருப்பெயர்களை ஓரிடத்திலே கூறுராய் வேறு வேறு கூறியருளினுர், அவ்வவ் வினைகளைப் புறப்படுத்தற்கும் ஏற்றனவாயிருத்தலின். "உடையானே" "முனைவனே" என்னும் திருப்பெயர்களும் இன்னநலன்களை யெல்லாம் உடையவன் என்றலையும் தெரிவிப்பனவாகும் என்க.

இக் கல்லும் இரும்பும் போன்ற மனத்தோடும் பாவனையோடும் சார்புடைமை பற்றிச் செவியும் கொடிதாகலின் "இன்ன தென்றறியேன்" என அதனையும் இழித்தார் எனக.

நாய் கட்டளையிறந்து செல்லும்தோறும் செல்லும்தோறும் அதனைப் பிரிநதிருத்தற்கு ஒருப்படாத முதலாளிபோல, யான் கறபிழந்து பிரியும்தோறும் பிரியும தோறும் அவன தன்மேல் பிழையிலனுயினும அன்பேகொண்டு மீண்டும் மீண்டும் என்னையேறறுத் தன் பிரியாமைக் குறிப்பைக் காட்டினனன்றே? அவ்வருமைப் பாட்டிற்கு யான் எதனை எங்ஙனம் ஆற்றி ஆறுவேன். அதற்கு எத்தகைய செயல செய்யினும் ஈடாகாதெனினும தலையையேனும் முட்டுதலையும் கீறுதலையும் செய்திலேனே என நெஞ்சழிந்தார் என்க.

ஏனை யாவரும் எய்திட லுற்றுமற்று
  இன்னதென் றறியாத
தேனை ஆன்நெயைக் கரும்பின் இன்
  தேறலைச் சிவனை என் சிவலோகக்
கோனை மான்அன நோக்கிதன்
  கூறனைக் குறுகிலேன் நெடுங்காலம்
ஊனை யான் இருந்து ஓம்புகின் றேன் கெடு
  வேன் உயிர் ஓவாதே. 38

இதனால், அரிய எளிய இறைவனை நெடுங்காலமாகக் குறுகுதற்குத் துணைபுரியாத என் உறுப்புக்களைச் சிதைக்க வேண்டிய யான், அவற்றை வளர்த்து வருகின்றேன் ஆதலால் அவை கொடியன அல்ல, யானே கொடியேன் என்பது கூறியருளப் படுகின்றது.

(பொ - ரை.) (அன்பர் அல்லாத) எல்லாரும் அடைந்திட முயன்றும் (தன் தன்மை) இத்தன்மையுடையது என்று அறியப் படாத தேனை ஒப்பானும், ஆவினுடைய நெய்யை ஒப்பானும், கருப்பஞ்சாற்றின் தெளிவினை ஒப்பானும், சிவனும், சிவலோக

வேந்தனும், மானின் நோக்கினை ஒத்த நோக்கத்தையுடைய உமைப்பிராட்டியை இடது பாகத்திலே உடையவனும் ஆகிய என் ஆசானை நீண்ட காலமாகச் சார்ந்திலேன், அவ்வாறாகிய யான் (அங்ஙனம் சார்தற்குத் துணை செய்யாத என்னுடைய) உடலுக்குள் இருந்து மற்று அதனைப் பாதுகாத்து வருகின்றேன்; இத்தகைய யான் கெடுவேன், (அங்ஙனம் கெடுவதை இப்பொழுதே அறிந்து கொண்டு தானே யாவது) எனதுயிர் இடையிலே அற்றுப் போகாதே எ - று.

(வி - ரை.) அதுவும் செய்யாது போலும் என்றால் யான் என்ன செய்வேன் என்க.

அன்பற்றார் இறைவனே உடலாகியும் உறுப்புக்களாகியும் உலகமாகியும் அவ்வவர் நுகர்ச்சிகளாகியும் அன்ன பிறவாகியும் அவற்றின் உள்ளும் புறமும் பயின்றுவருதலை அறியாது, உடல் முதலாயவற்றையே அறிதலினால் "ஏனை யாவரும், எய்திடலுற்று மற்றின்ன தென்றறியாத" என்றருளினார் எனினும் ஒக்கும். "மற்று" வினைமாற்று. உலகவழக்கு நோக்கித் தேன் முதலாயவற்றுடன் கூடிய ஐயுருபை ஆசான் என்னும் பெயரை விரித்து அதனோடு இயைத்தாம்.

அறியாத தேன், அறியாத நெய், அறியாத தேறல் என்றாங்குத் தனித் தனி இயைக்க. மலர் கண்டார் அம்மலர்க்குட் பொதிந்த தேனையும், ஆவினையாதல் அதன் பாலினையாதல் மற்று அதன் தயிரினையாதல் கண்டார் அவற்றுட் பொதிந்த நெய்யினையும், கரும்பினைக் கண்டார் அதனுட் பொதிந்த தேறலையும் காணாவாறே, இறைவனையும் தத்தம் உடம்பு முதலாயவற்றுட் கண்டிலர் என்க. இனி, தேன் முதலாயவற்றுக்கு அவ்வவற்றுட் பொதிந்த இனிமை நறுமணம் ஆக்கம் என்னும் இத்தொடக்கத்தன வெல்லாம் அறியப்படாதவாறே, அன்பரல்லாதார் எய்திடலுறறும் அவரால் அறியப்படாதவனாகிய இறைவன் எனினும் ஒக்கும்.

தேனைப் பெறுதலில் அன்புடைய வண்டு முதலாயவற்றுக்கே மலரகத்துள்ள தேன் புலப்படுமாறு போல இறைவன்மேற் பற்றுடையார்க்கே உடல் முதலாயவற்றுள்ளே இறைவன் புலப்படுவானென்க.

"ஏனை யாவரும்" என்றது மால் முதலியோரை. நெடுங்காலம் மறந்து வீணிலே முயன்று இளைத்தலுறறேன் என்றிரங்கியருளினார் என்க.

தடைகளாக இருந்த உடல் முதலியவற்றைத் தகர்த்தெறிந்து யானேயும் குறுகிலேன்; அங்ஙனம் குறுகாமையும் பெரியதொரு கேடாகும் என்க. ஓம்பற்பாலதை ஓம்பாதும், அழிக்கற்பாலதை ஓம்பியும் வருகின்ற என்னியல்புதான் என்னை என்க. பிறவுமன்ன. பிரிந்த கொடுமையும் இறைவன் அருமைப்பாடும் புலப்படுத்தி உயிரைத் தூய்மை செய்து, இறைவன்பால் அழுந்தி ஆனந்தம் எய்தற்பொருட்டுத் தேனை

என்றுங்கு அடுக்கியருளினார். ஒண்மலர்த் தாளிலே வைத்து ஓம்பற்பால தாகிய உயிரினை ஊனில் வைத்து ஓம்புகின்றேன் ஏதென்னே என்றருளினார்.

நீ வருக என்னாமையால் நின்னைக் குறுகிலேன்; கட்டளை வரும் வரையும் ஊனை யோமபுகின்றவனாயினேன் நெடுங்காலமாதலின் என்னுயிர் ஓயாதிருக்கின்றது. இத்தனையும் கண்டேனும் வருக என்னாத நின் கொடுமை பெரிதாயிற்றே இங்ஙனமாதலின் என்னுடல் காமவேட்கை முதலாயவற்றின் கண்ணும் புகும். ஆதலின், என் பிழைகள் யாவற்றிற் கும் நீயே காரணமாவை என்றவாறு.

ஒய்வுஇ லாதன உவமனில்
இறந்தன ஒண் மலர்த் தாள்தந்து
நாயில் ஆகிய குலத்தினும்
கடைப்படும் என்னை நன் னெறிகாட்டித்
தாயில் ஆகிய இன்னருள்
புரிந்தஎன் தலைவனை நனிகாணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரை
உருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே. 39

இதனால், தம்முடைய உயிரைத் தலைவன் திருவடியிலே வைத் தற்கு அவனைக் காணாத பேரன்பினர் முன்னர் உடல்துறந்து நீங்கிய செயல்கள் மூன்றனுள்ளே எளிதாகிய ஒன்றனையேனும் யான் மேற்கொள்வேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) திருக்கூத்து இயற்றும் தொழிற்கண்ணே இடை யறாது பயில்வனவும் (ஒரே தொழிலை ஓய்விலாது செய்துவரும் பொருள் பிறிதின்மையால்) உவமிக்கப்படும் பொருள்கள் இல்லா தனவுமாகிய ஒண்மையையுடைய மலர்போன்ற திருவடிகளை எனக்கு உடைமையாக உதவி, நாய் என்னும் படைப்பு வகை யினும் கடைமுறைப்பட்டு நிற்கும் எனக்கு வீடுபெறுதற்குரிய நல்வழியை இஃதாகும் எனச் சுட்டிக் காட்டித் தாயில் உளதாகிய இரக்கத்தை ஒத்த இனிய அருளை விரும்பிச் செய்த எனக்குத் தலைவனாகிய குரவனை அன்றும் நன்கு கண்டேனில்லை. ஆதலால் அப்பொழுதேனும் அன்பர் பாய்ந்த தீயினைக் கண்டும் அதன்கட் புக்கிலேன், அவர் உருண்டு வீழ்ந்து உடல்விட்ட மலை கண்டும் அதன்மேலேறி உருண்டேனுமில்லை, அத்தகைய யான் (சேய்மைக் கண்ணுள்ள) வளம் பொருந்திய கடற்குச் சென்று அதனுள்ளே புகுந்து உடல் விடுவேனோ? அன்று. எ - று.

(வி - ரை.) "எய்த வந்திலாதார் எரியிற் பாயவும்...பூதலமதனிற் புரண்டு வீழ்ந்தலறியும் கால்விசைத் தோடிக் கடல்புக மணடி பாதம் எய்தினர் பாதம் எய்தவும்" (கீர்த்தி. 132-37) என்றதன்கண் எய்தவந் திலாதார்க்குப் பின்னரேதான அடிகள் ஆங்கெயதினர் என்பது, "செழுங்கடல் புகுவேனே" என்றருளியமையாற் பெறப்பட்டது. தாம் நின்றருளும் இடத்திலேயே அவர் பாய்ந்த தீயும் உருண்ட மலையும் இருப்பக் கண்டும் உடல் விடத்துணியாத தாம் அவருள் எஞ்சியோர் செய்த கடலுள் பாயதலைச் செய்வனோ என்று வினவியருளியமையால், அவர் பாய்ந்த தீயினையும் உருண்ட மலையினையும் கண்டு அவர் புகுந்த கடல் காணுக் குறையை நினைந்து இத்திருப்பாடல் அருளிச் செயயப்பட்ட தென்க. இறைவன் பொருட்டு உயிர்விடப்பெற்ற கடலைச் சென்று காணமாட்டாத யான் நின்னையா காண்பேன் என்றருளியபடி.

திருப்பெருந்துறையில் வரையாதல் மணல்மேடாதல் இருந்திருத்தல் வேண்டும்.

"திருவார் பெருந்துறை வரையில் ஏறி" (திருவண்டப். 68.)
என்றருளியதும் இதனை வலியுறுத்தும்.

"பூதலமதனிற் புரண்டு வீழ்நது" (கீர்த்தி. 134.)
என்புழியும, "வரை உருள்கிலேன்" என்புழியும வரையினின்றும் உருண்டு பூதலமதனிற் புரண்டு வீழ்ந்து என விரித்தலே அடிகள் கருத் தாதல பெறுரும்.

ஐந்தொழிலும் எஞ்ஞான்றும் இயற்றவேண்டுதலின் ஓய்விலாத அத் திருவடிகளின் ஓய்வின்மை குறித்து இரங்கியருளினர். "உவமனிறந் தன" என்று அவற்றின் பெருமையும், தாம் அவற்றைப் பெற்றமையும் குறித்து இரங்கியருளினர் என்க. ஓய்விலாத அவை என்பால் ஓய்வுற் றனவே என்றருளினருமாம்.

செய்ந்நன்றியறிந்து பேணுமையும் குறிப்பிட்டருளப்பட்டது. தீயன கண்டு ழித் தந்தை வெறுப்பதும் தாய் அங்ஙனமாகாது அன்பு செய்தலும் உளவாகலின் "தாயிலாகிய இன்னருள்" எனத் தாயின் அருளேயே விதந்து கூறியருளினர்.

நாயின் இயல்பு தன்னலம் பேணுது தலைவன் நலத்தையே நனி பேணுவது ஆதலின், தன்னலத்தையே நனிவிழையுந் தம்மை அதனினும் இழிந்தவன் என்பதைக் காட்ட "நாயிலாகிய குலத்தினும் கடைப்படும்" என்றுர் என்க.

வேனில் வேள்கணை கிழித்திட
 மதிசுடும் அதுதனை நினையாதே
மான்நி லாவிய நோக்கியர்
 படிறிடை மத்திடு தயிராகித்

தேன்நி லாவிய திருவருள்
புரிந்தஎன் சிவன்நகர் புகப்போகேன்
ஊனில் ஆவியை ஓம்புதற்
பொருட்டினும் உண்டுடுத்து இருந்தேனே. 40

இங்கே உண்டு உடுத்திருக்கும் யான் காமத்தால் மயங்கிச் சிவன் நகர்க்கும் போகாதேன் ஆவேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை ) இன்னும் என்னுடைய உடம்பிலே ஆவியை வைத்துப் பாதுகாத்தற்பொருட்டு உண்டும் உடுத்தும் இவ்வுலகத்திலே இருந்து வருகின்றேனாகிய யான், இளவேனிற்கு வேந்தனாகிய காமத்தினை உண்டாக்கும் மன்மதனுடைய ஐம்மலர்களாகிய அம்புகள் நெஞ்சு முதலாகிய இடங்களைப் பிளந்திடத் திங்களும் சுடுவதுதன்னை ஒரு பேரின்னலாகக் கருதாது மானின் நோக்கினை ஒத்த நோக்கத்தையுடைய மகளிரது வஞ்சனை வலையுள் அகப்பட்டுக் கடையின், மத்தின் இடைப்பட்ட தயிர்போலக் கலங்கத் தேனினது இனிமைத் தன்மை தங்கிய திருவருளை எனக்கு விரும்பியுதவிய என் சிவனுடைய நகரமாகிய வீட்டின்கண் செல்ல அவனுடன் உடன்போக்கிற்கு இயைந்திலேனாவேன் எ - று

(வி - ரை.) இங்ஙனம் இருந்தேனாதலால் இதனையும் செய்யேன் என்றருளியவாறு.

"மான் நிலாவிய" என்பது உவம உருபின் பொருள்பட நின்றது. மான் விழியார் நோக்காங் கணை கிழித்திட மதியும் சுடும் என்க.

"ஆகி" என்பதனை ஆகவெனத் திரிக்க. போகாமையும் தன் தொழிலாதலால் ஆகி என்றிருப்பினும் அமையும். இங்ஙனமாதலை நச்சினார்க்கினியர் உரைத்த உரையானும் உணர்க.

காரணம் காரியத்தைப் பயந்தே விடும் என்பவாகலின் உண்டுடுத்தல் நோக்கியார் படிறறிடைக் கலங்குதலையும், அக்கலக்கம் சிவனகர் புகப் போகாதிருத்தலையும் பயக்கும் என்க.

இன்னே ஊனும் உடையும் இங்கிருத்தலும் ஒழித்துச் சிவன் நகர் புறப்படுதல் வேண்டுமெனத் துணிந்தருளினர். உண்ணுதல் பிச்சையாகவும், உடுத்தல் கோவணமாகவும், இருத்தல் வழிச் செலவாகவும் மாறுபடும் என்க. வாளா உண்டுடுத்திருப்பார் மங்கையர் படிற்றிடை வீழ்ந்துழன்று கெடுவர் என்க. "படிறிடை" என இரட்டிற்றிலது, செய்யுளாதலின்.

திருச்சிற்றம்பலம்

# 5. கைம்மாறு கொடுத்தல்

## கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

இருகை யானையை ஒத்திருந்து என்னுளக்
கருவை யான்கண் டிலேன்கண்டது எவ்வமே
வருக என்று பணித்தனை வானுளோர்க்கு
ஒருவன் ஏகிற்றி லேன்கிற்பன் உண்ணவே. 41

இதனால் உடலோம்பி வந்த பயிற்சி காமத்திலே செல்லுதற்கு ஊக்கத்தையும், நன்னெறிச் செலற்கண் சோம்பலினையும் தரும் என்பது காணப்பட்ட உண்மை என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை ) வானுலகத்திலுள்ள (திருமால் முதலாய) ஒருவர் எனச் சிறப்புற்ற தேவர் எல்லார்க்கும் ஒருவன் ஆகியவனே, (ஏலவே என்னைக் கோலமார்தரு பொதுவினில்) வருகவென்று கட்டளை இட்டனை. அதனை ஆற்றற்கு ஆற்றல் பெற்றிலேனும், இங்கிருந்துண்ணவே ஆற்றல் கொண்டேனும், இரண்டாகிய துதிக்கைகளையுடைய யானையை ஒத்த என் ஆசானை ஒப்ப இருந்து என்னுள்ளக் கருவைக் கண்டிலேனும் ஆகிய யான் இப் போது கண்டது துன்பமேயாகும் எ - று.

(வி - ரை.) இருகை யானை என்றது ஆசானை. எண்டோள் முக்கண்ணனாக எழுந்தருளாது அந்தணனாக வந்தமையின் அங்ஙனம் உரைத்தருளினர். புருடருள் சிறந்தோரை அங்ஙனம் உரைத்தல் மரபு.

"இருகை வேழத் திராகவன்"

என்றார் கம்பரும்.

இருகையானையை ஒத்திருத்தலாவது, தம்மாட்டு அருள் செய்த ஆசானைப் பாவனையான் மனத்தே நிறுவி தான் அவனோடு கலத்தலான் தானே அதுவாய் நிற்றல். சிவோகம் பாவனை என்க. உள்ளக் கரு - இப் பாவனையால் விளைந்த கரு. பணிமேற்கண்டு தில்லைக்குச் செல்ல முயன் றிருப்பின் என்னுள்ளக் கருவைப் புறத்தேயும் கண்டு இன்புற்றிருப்பேன் என்க. கருவைப் புறங்காணுவிடில் எவ்வமே காண்டல் இயல்பென்க. இனி, உள்ளக்கரு உள்ளமாகிய சபையிலே நடநவிலும் மூலப் பொருளாகிய கூத்தனுமாம். உண்ணுதல் - உலக நுகர்ச்சிகளை மேற்கொள்ளல். "உண்ணவே கிற்பன்" என மாற்றுக. உலக இன்பங்களை நுகர்தற்கே வலிமை படைத்தேன் என்க. உண்டு உடலை யோம்பிக் காமமுழத்தற்கே வலிமை படைத்தேன் எனினும் ஒக்கும்.

கிற்றிலேன் - தில்லைப் பொதுவில் வந்து சேர்ந்து இன்ப நுகரும் வன்மை பெற்றிலேன்.

உண்டுஓர் ஒண்பொருள் என்றுணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி என்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டும் கண்டிலன் என்னகண் மாயமே. 42

இதனால், அறிவால் அளப்பார்க்கு அறியவொண்ணாத இறைவன் தானே அறிவிக்க அறிந்துகொள்வதே இயல்பாகவும், அவனருள் செய்தும் உணர்ந்திலேன் என்பது கூறியருளப்படுகிறது.

(பொ - ரை) காணப்பட்ட உலகிற்கெல்லாம் உண்டாக்கவல்ல காணப்படாததோர் அறிவொளிப் பொருள் உளது என்று தம்மறிவுகொண்டு புகுவார் எல்லார்க்கும், அது பெண்ணோ ஆணோ அலியோ என்றறியவொண்ணாத நீ, அடியேனாகிய எனக்கு உள்ளவாறே வந்து காட்சியளித்தாய் அக்காட்சியால் ஆய பயனை நுகரப் பெற்றேனில்லை. இது என்ன கண்மாயமாக இருக்கின்றது எ - று.

(வி - ரை.) இறைவனைக் கண்டார்க்குப் பிறவித் துயர் இல்லை என்பவாகலின், அது நீங்கக் கண்டிலேன் என்றருளியவாறு கண்மாயம் - கண்கட்டு வித்தை. நின்னைக் கண்டமையால் யான் பிறவித் துயர் கடந்தேன். ஆதலால யான் இப்போது துயருறுவதாகக் காணும் இதுவும் ஒரு கண்கட்டு வித்தைபோலும என்றருளினார் எனினும ஒக்கும். இவ்விரு பொருளாலும் இறைவனைக் கண்டும் பிறவித் துயர் முடிவுகண்டேனில்லை; இஃதென்ன கண்கட்டு வித்தை என்பதும், இறைவனைக் கண்டு பிறவித் துயர் அற்ற யான் அற்றிலாதேனைப்போல வருந்தும் இஃதெனன கண்கட்டு வித்தை என்பதும் கொள்ளப்படும்.

தொண்டன் - வனதொண்டன். "பெண்டிர்" என்பது பெண்டு என்பதன் போலி. பெண்ணாகக் காணில் அப்பெண்ணுக்குப் பறறுக்கோடாகிய ஆணும், ஆணாகக் காணில் அவ்வாணுக்குப் பறறுக்கோடாகிய பெண்ணும், அவவிரண்டு மல்லாத அலியாகக் காணில் அஃதல்லாத அவ்விரண்டும் காரணங்களாகித் தத்தம காட்சிகளை முன்னர் வந்து சிதைத்தலால் "என்றறியொண்கிலை" என்றும, தமக்குக் குரவனாக முன்வந்து தோன்றித் தன்னுளளே எலலாம் அடங்கிநிறறலை அறிவித்தலால் "தொண்டனேற்குள்ளவா வநது தோன்றினாய்" என்றும் அருளிச் செய்தார் என்க.

திருவண்டப்பகுதியில்,

"ஆணெனத்தோன்றி ... பெண்ணெனவொளித்தும்" (134-135.) என அடிகள் கூறியருளியதும் காண்க. பெண் ஆண் அலி என்பதே அடிகள் கருத்தென்பது புலப்படுதலால் பெண்டிர் என்பதை இறுதிப் போலி எனக் கொண்டாம. மகளிர் என்பதைப்போலப் பெண்டிர் என்ப

தையும் பன்மையீருக உரைத்தல் கூடுமேனும் ாண்டுக் கொள்ளாமாயி னோம். உள்ளவாறு என்பது " உள்ளவா " என ாறுகெட்டு நின்றது.

அறியவொண்கிலே என்பது " அறியொண்கிலே " எனத் தொக்கது. ஒண்ணுகில்லே என்பதும் "ஒண்கிலே" என நின்றது. ஒன்று என்பது " ஒண்ணு " என மருவிற்று. ஒன்றுகில்லேயாகிய நீ என்க.

மேலே வானவ ரும்அறி யாததோர்
கோல மேஎனே ஆட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேஇவை வந்துபோம்
கால மேஉனே என்றுகொல் காண்பதே. 43

இதனுல், நின்னே உள்ளவாறு கண்டு களிக்கும் காலமும் இடமும் எவை யாகும் என்று விஞவியருள்கின்றுர.

(பொ - ரை ) மேலிடத்துள்ள வான்பதவிகட்கு உரிய தேவர் களும் அறியக்கூடாததாகிய ஒப்பற்ற திருவுருவத்தை உடைய வனே, அடியேனே ஆண்டுகொண்டதொரு கூத்தினேயும் மேற் கொண்டவனே, தோற்றத்தின் முடிவும் ஒடுக்கத்தின் மூலமுமாகிய நிலவுலகானவனே, தோற்றத்தின் மூலமும் ஒடுக்கத்தின் முடிவு மாகிய வெளியானவனே, நிலனும் விசும்பும் ஆகிய இவை தன்பால் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும் உரிய காலமானவனே, உன்னேக் காணுவது எந்நாள் (எவ்விடத்தில், எவ்வுருவில்) எ - று.

(வி - ரை.) இந்த நாளில் இவ்விடத்தில் குரவனுக வந்த இவ்வுருவத் திலே இனிக் காணேன் போலும், கண்டு கலவேன்போலும் என்று இரங்கியருளினுர் இது கழிந்ததற்கு இரங்கியதாகவும் கொள்ளப்படும்.

வானவர் அறியாக் கோலம் முன்விளக்கப்பட்டது. அடிகள் கண்ட கோலமும் ஆண்டே விளக்கப்பட்டது. எல்லாக்கால இடங்கட்கும் முடிவிற் கொரு முடிவாய் அவற்றின் முதலுக்கொரு முதலாய் இறைவன் அமைந்து வருகின்றுன் என்க. "ஞாலமே விசும்பே" என்றருளியமையால் அவற் றிடைப்பட்ட ஏனைய பூதங்களேயும், " இவை வந்து போங் காலமே " என் றருளியமையால் ஏனேயவும் வந்துபோங் காலங்களேயும் உடன் கொள்க.

இயல்பாகவே ஒரு கூத்துடையனேனும் தன்னேயாட்கொள்ளற்கு அயர்ந்த கூத்து ஒரு மாயமுடைத்தாகும் என்பது தோன்ற ' என்னே யாட்கொண்ட கூத்தனே " என்றருளிச் செய்தார். " கூத்தன் " என்றது தொழில்மேல் நின்றதாகலின், " கோலம " என்றதற்கு வானவர்க்கறியாத தும் எனக்கு அறிந்ததும் ஆகிய உருவத்தன் எனப்பொருள் கொள்ளினு மமையும்.

" வந்துபோம் காலமே " என்றமையால், அவையெல்லாம் வந்த கால மாகிய இக்காலத்திலா, அன்றி அவையொக்கப் போங்காலத்திலா, உன்னேக் காண்பதென விரிக்க.

காண லாம்பர மேகட்கு இறந்ததோர்
வாள்நி லாப்பொரு ளேஇங்கோர் பார்ப்பெனப்
பாண னேன்படிற் ருக்கையை விட்டுனைப்
பூணும் ஆறுஅறி யேன்புலன் போற்றியே. 44

இதனால், நெறிநின்று காணற்குரிய நின்னைக் காண்டற்குரிய அந்நெறியை அறியேன் ஆதலின் என்னை மாணவனாகக் கொண்டதன் பயன் என்னை என்றுரைத்தருளுகின்றார்.

(பொ - ரை.) புலன்கள் பொறிகளைச் சென்று தாக்கிக் கலக்காவண்ணம் அவற்றைத் தடுத்து(ப் பேரன்பு பெற்றால்) காணத்தக்க மேன்மையாளனே, கண்ணொளிக்கு அகப்படாது கடந்து நின்ற ஒளி விளங்கும் பொருளாக உள்ளவனே, வீணனேனாகிய யான் கூட்டைவிட்டு வெளிப்படுதற்கு அறியாத பறவைக் குஞ்சுபோல வஞ்சனையையுடைய என்னுடலை நீந்து நின்னைச் சூழும் நெறியை அறியாதவனாயினேன் எ - று.

(வி - ரை.) ஆதலின் நீ என்னை மாணவனாகக் கொண்டறிவுறுத்திய தன் பயன், புலன்களை வளர்த்துப் போற்றி செய்தலோ, அன்றித் தடுத்துப் போற்றி செய்தலோ, அவற்றை விருத்தி செய்யும என்னியலபில் நிற்றலேயாகலால் நின் ஆசிரிய போதனையால் ஆயதென் என விரிக்க. இனி, பூணுமாறறியேன் அந்தகோ என் செய்வேன் என விரிப்பினுமாம்.

புலன்களைப் பொறிகளைச் சென்று தாக்காவண்ணம் போற்றலால் காணலாம் பரமே, புலன்களைப் பொறிகள் அவாவுமாறு வளர்த்துப் போற்றலால் கட்கிறநததோர் வாணிலாப்பொருளே எனக் காரணங்களை விரிக்க. எனவே, இறைவன் தன்மயமாகிய புலன்களாலேயே காணற்குரியன் அன்றி, வேறுபட்ட புலன்களால் அறியப்படான் என்பது துணிபாகும்.

யான் பார்ப்பே போல மேல்நெறியில் இயங்கும் ஆற்றல் இன்றி இருக்கின்றேன். ஆனால் யான் பார்ப்பினோடு ஒத்தவன் அல்லன்; சிறைபெற்று முதிர்ந்த பறவையை ஒத்தவனே யாவேன். தாய்ப் பறவையினால் கற்பிக்கப் பட்ட பின்னும் வானில் இயங்க மனமின்றிச் சோம்பலுற்றுக் கூடே கதி என்று கிடக்கும் சிறை பெற்ற பார்ப்பு ஒன்று இருக்குமேல், ஆசானால் வேண்டிய வெல்லாம பயிற்றப்பட்டும புலன்போற்றி உடல் விட்டுத் தில்லைக்குச் செல்லும மேல்நெறியில இங்குதற்கண் சோம்பலுற்று இருக்கும் யான் அதனோடு ஒப்பேன் என விரிக்க. ஆதலால் யான் பாணன் என்க. பாண் - வீண், பயனற்றதென்றபடி. "பாணே பேசி" (திருச்சத. 84.) என்றருளியதும் காண்க.

இனி, பரமே, வாணிலாப் பொருளே, பாணனேன் புலன்போற்றி, ஆக்கையைவிட்டு, பூணுமாறறியேன் ஆதலின் நின்னைக் காணலாமோ

என விஞவாக்கி முடித்தலும் ஒன்று. ஆண்டுத் தம் புலன் வளர்த்துப் போற்றும் அறியாமையின் இழிவு தோன்ற விஞவெழுத்தினைத் தொகுத் தருளினர் என்க.

புலன் போற்றுதல் உடல் விடுதற்கும், உடல் விடுதல் பரத்தைக் காணற்கும் காரணங்களாய் நின்றன.

" அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு " (343)

என்னும் துறவுச் சிறப்புரைக்கும் குறட்பொருளையும் ஈண்டு நோக்குக.

**போற்றி என்றும் புரண்டும் புகழ்ந்துநின்று**
**ஆற்றல் மிக்கஅன் பால் அழைக் கின்றிலேன்**
**ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறும்**
**கூற்றம் அன்னதொர் கொள்கை என் கொள்கையே. 45**

இதனுல், உடற் பற்று மிக்கு உன்னை அழைக்காத யான் மாறு பட்ட கூற்றுவன்போல நின்னுடைய திருவடியால் ஒறுக்கப்படற் குரியேன் போலும் என்றருளுகின்ருர்.

[யான் அறக்கருணை காட்டி யாளுதற்குரிய தகுதிப்பாடுடை யேன் அல்லேன், மறக்கருணை காட்டி யாளுதற்குரிய தகுதியே யுடையேன் என்றருளியபடி]

(பொ - ரை) (யான் நின்முன் வணங்கி நின்று) நினக்கு வணக்கம் என்று சொல்லியும், (நின்னுடைய தலத்தே) வலமாகப் புரண்டும், நின்சீர் பலவற்றையும் கிளந்து கூறியும், உறுதிப்பட அழுந்திய பேரன்பால் (என்னைக் கடைக்கணித்து ஏன் என்று விஞவுமாறு) உன்னை விளித்தலைச் செய்யும் வலியிலேன். ஆதலால் என்னுடைய கோட்பாடு, தானே மாறுகொண்டுவந்து தன்னை யெதிர்த்த தாமரை மலர்போன்ற தாளால் உதைபட்டமையால் பின்னர் வலிகெட்டு எதிர்த்த அதனையே அடைக்கலமாக அடையும் கூற்றுவனுடைய நாணமற்ற கோட்பாடேயாகும் எ - று.

(வி - ரை.) யான் ஒரு கயவன் ஆதலால் அன்புமுறை எனக்குப் பயன்படாது. வன்புமுறைதான் என்னைப் பயன்படுத்தும் என்றருளியபடி. தனக்கு ஒரு பரிதமும் பதவியும் கொடுத்தருளிய இறைவனை வணங்குதற்கே உரியவஞகிய கூற்றுவன், இறைவன் திருமுன்னர் அன்பனைத் தன் ஞெடுபடுத்துக் கயிறறிஞல் வளைத்திழுத்து, அவ்வன்பன் இயற்றிய வழிபாட்டினைச் சிதைத்தமையால், அவன செருக்கடங்க இறைவன் அவனை உதைத்தருளிஞன். யானும் நின்னை வழிபடுவார் தம்முடன் போறறுகின்றிலேன்; புரண்டு வருகின்றிலேன்; புரண்டுவரும் அன்பர்

முன் விலங்கி நின்று வாளாவருகின்றேன் ; புகழ்ந்து நின்றழைக்கின்றிலேன். இத்தன்மையனாகி, அவ்வன்பர் வழிபாட்டினையும் நின் பெருமையினையும சிதையாநினறேன். ஆதலால் என் கொள்கை கூறறுவன் கொள்கையை ஒத்தது என்றருளியபடி. கூற்றம், உடலையும் உயிரையும் கூறு செய்வதொரு தெய்வம்.

அன்பர்க்குத் தாமரைத்தாள் ; அல்லார்க்கு உயிர்கொல் படைத்தாள் என்க. கூறறுவன் தாமரைத்தாள் கண்டும் அதன்பால் ஈடுபடாத வன்னெஞ்சின னென்க. அவனறியாமையால் எழுந்த செருக்கானது, அவனை அடங்கச் செய்து நல்வழி காட்டியவாறே எனது செருக்கும் எனக்கு நல்வழி காட்டும்போதும் எனத் தம்மை இழித்தருளினார்.

கொள்ளுங் கில்எனை அன்பரிற் கூய்ப்பணி
கள்ளும் வண்டும் அறுமலர்க் கொன்றையான்
நள்ளும் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல்நின்ற எந்தையே. 46

இதனால், யான் அழைத்திலேன் ஆயினும் என்னைத் தானாக வேனும் அழைத்து அன்பரைப்போலப் பணிகொள்வனோ என்றருளப்படுகின்றது.

(பொ - ரை) தேனும் வண்டும் நீங்காத கொன்றைப்பூவாற் செய்த கண்ணியையும் மாலையையும் சூடிக்கொள்ளும் இறைவனும், எப்பொருள்களிலும் அப்பொருள்களின் நடுவிலும் கீழிலும் மேலிலும் எள்ளின்கண் அமைந்த எண்ணெயே போல எங்கும் பரந்து எம்போன்றார்க்கு அப்பனும் ஆகிய சிவன், மெய்யன்பரைப் போலவே அடியேன் வலியில்லேனை அழைத்துப் பணியாளனாகக் கொள்ளுவானோ எ - று.

(வி - ரை.) "கொள்ளுங்கில்லோ" என்பதன் வினா ஈறு தொக்கு நின்றது. தம் கொடுமை தோன்றற்கு வினாவிடைச்சொல் தொகல்வேண்டுமென்க. அவன் தானே கருதில் ஆட்கொள்ளவல்லன் என வாளா உரைக்கில் ஒருவகை ஊக்கமும் இன்றாகும் என்க. அன்பு செயயினும் செய்யாதொழியினும் அவன் அளிக்க விழையின் அளிக்கவல்லான் எனில், அன்பு செய்வதால ஆவதென் என்பது பட்டு, சோம்பல் மேற்கொள்ளற்கே இடனாதல் கண்டு கொள்க.

எல்லாப்பொருள்களின் நடுவிலும் இருந்துகொண்டே அவற்றின் கீழும் மேலும் இயங்கிவருதலின், "நள்ளும" என்பது முதற்கண்ணும், அவற்கும்மேல் போன்றது கீழ் என்பது தோன்ற மேல்கீழ் என்னாது "கீழுளும் மேலுளும்" என அதன் பின்னரும் அடைவுபடுத்தி யருளப்பட்டன. "யாவுளும" என்றது, உயர்வும் இழிவும் என்னும் பாகுபாடின்றி, எல்

லாப் பொருள்களுள்ளும் என்றபடி. எல்லாவற்றுள்ளும் எங்குமுள்ள இறைவன் என்னுள்ளும இருக்கின்றான் ஆதலின், என்னையும கூய்ப் பணிகொள்ளவலலன் அன்றே? அங்ஙனமாயின் இதுகாறும் என்னைக் கூவிப் பணிகொள்ளாதது என்கொல் எனத் தன்னுள் எழுந்த வினவோடு இவ் வினவும் உடனெழுந்தது என்க.

"கள்ளும் வண்டும் அறு மலர்க் கொன்றையான்" என்றது, தான் அணிந்த ஓரறிவு படைத்த மாலையானது, அங்ஙனமிருந்தும் தன்னைப் பாடிய வண்டர்க்கெல்லாம் இனிய கள்ளுணவை இடையறாதீயும் பெரு வண்மை பெற்றிருந்தும், மற்று அதனை அணிந்த எல்லா அறிவாற்றல் களையும் இயல்பாகவே கொண்ட இறைவன், எனது பாடலுக்கு வீட்டின்ப விருந்தை இன்னும் அளித்திலனே; இனியேனும் அளிக்கவல்லனோ என்னும் குறிப்புப் பொருள் பொதிந்து நின்றது. அன்றியும் அடியாராகிய வண்டு கள் அவன் திருவடிக் கமலத்தில் ஊதி இன்புறவும் யான் புறம்போந்து துன்புற்று உழன்று அலறுகின்றேன்; எனக்கு இறைவன் தாட்கமலத்தில் இடமில்லை போலும் எனவும் இயைத்துக்கொள்க.

எள்ளுணவு முழுவதினும் ஒரே பெற்றித்தாய எண்ணெயின் நெய்ப் புடைமை இருந்துவருமாறு போலவே எல்லாவற்றின் கண்ணும் ஒரே பெற்றியனாக உறையும் இறைவன் என்மாட்டு அங்ஙனம் அருள் பூணாதது என்னை என விரிக்க. யான் "எந்தை" என முறை கூறுவதற்கேனும் அருள் பாலித்தல் அவனது கடப்பாடாகும் என்க.

நள்-நடுவு. நள்ளுளும் என விரிக்க. எல்லாவற்றுள்ளும், அவற்றின் எப்பகுதிகளுள்ளும் நின்ற இறைவன் என்னுள்ளே நின்றிலனே, எனக் கருளவல்லனோ என்றருளியபடி. ஆதலால் என்னைக் கொள்ளமாட்டானோ? அங்ஙனமாயின் யான் என் செய்வேன் என்று இரங்கியருளியவாறு.

**எந்தை ஆய் எம் பிரான் மற்றும் யாவர்க்கும்**
**தந்தை தாய் தம் பிரான் தனக்கு அஃதிலான்**
**முந்தி என்னுள் புகுந்தனன் யாவரும்**
**சிந்தை யாலும் அறிவரும் செல்வனே. 47**

இதனால், அவலத்து வழிவந்த நகையொடுபட்ட அடிகள், அறிவருஞ் செல்வன், எந்தை முதலாய பெருமையுடையவனாக முந்தியே என்னுட் புகுந்தனன் ஆவன் என்றருளுகின்றார்.

(பொ - ரை) எனக்கு அப்பனும் அன்னையும் எம் தலைவனும், மற்றும், எவ்வகை மேம்பட்டோர்க்கும் தந்தையும் தாயும அவர்தம் தலைவனும், தனக்குத் தந்தையும் தாயும் தம்பிரானும் ஆகிய அவ் வொன்றும் இல்லாதவனும், எவரானும் அறிதற்கரிய செல் வனும் ஆகிய இறைவன், யான் உடல் முதலியவற்றைக் கூடு

வதற்கு முந்தியுள்ள காலத்திலேயே என்னுள்ளே புகுந்துள்ளான் எ - று.

(வி - ரை.) அதனால் யான் பெற்றுக்கொண்ட பேறென்னை ? இடருழத் தலே பேறுபோலும் என விரிக்க.

தந்தையானவன் கல்வி செல்வம் முதலியவற்றை அளித்தற்குரியான். தாயானவள் பொறுத்தற்கரிய பிழையினையும் பொறுத்துச் சேயினுடைய இன்னலைத் தானேற்றுப் பேரன்பு செய்தற்குரியாள். தலைவனானவன் காப்பன காத்துக் கடிவன கடிந்து ஓம்புதற்குரியான். இம்மூவரும் தான் ஒருவனேயாகி, அவ்வவர்க்குரிய செல்வங்களும் தன்பாற் கொண்டுள்ள இறைவன்மாட்டுச் செல்வமும் கல்வியும் அறவே பெற்றுக்கொள்ளாராய், தம் பிழையைத் தாமே ஏற்றுக்கொண்டு, எல்லா இன்னல்களையும் நுகர்ந்து உழல்வாராய், நயப்பாரும் கடிவாரும் இல்லாதவராய் இருந்துவருதல் போன்று எண்ணி இரங்கியருளினார் என்க. என்னைப் போன்றே யாவரும் அவனைத் தந்தை தாய் தலைவன் என்னும் முறைபெற்று இருந்து வருகின்றார் போலும் எனக் கூறிக்கொள்க.

எமக்கும் பிறர்க்கும் என அவன் வைத்த செல்வம் எம்மனோர் சிந்தையாலும அறிதற்கும் அரியதொன்றாக உள்ளது. அங்ஙனமாகிய அதனை வாயால் எங்ஙனம் அழைப்பது ? கையால் எங்ஙனம் பெறுவது என அவலத்தொடுபட்ட நகைமிக்கு இங்ஙனங் கூறியருளினார் என்க.

" உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்து என்உளம் மன்னிக்
கருத் திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானை " (கண்டபத்து. 3)

எனவும்,

" என்னை முன்னாள் ஊழுடையான் " (சிற்றம்பலக். 7.)

எனவும் வருவனவற்றோடு " முந்தி என்னுட் புகுந்தனன் " என்னும் இதனை ஒப்பிட்டு நோக்குக.

செல்வம் நல்குரவு இன்றிவிண் ணோர்புழுப்
புல்வரம்பு இன்றி யார்க்கும் அரும்பொருள்
எல்லை இல்கழல் கண்டும் பிரிந்தனன்
கல்வ கைமனத் தேன்பட்ட கட்டமே. 48

இதனால், அரும்பொருளானவனே, யான் பட்ட கட்டமெல்லாம் நின் கழல் பிரிந்தமையே என்று முறையிட்டருளுகின்றார்.

(பொ - ரை.) செல்வமும் வறுமையும் ஆகிய காரணங்களால் அடையப்படுவதுமில்லாமல், வானவர் புழுப்புல் என்னும் கதி வரையறையும் இல்லாமல், செல்வர்க்கும் வறியார்க்கும் புண்ணிய மிகுதியுடைய தேவர்க்கும் பாவ மிகுதிப்பட்ட புழுவிற்கும் அஃதொழிந்த ஏனைய நரகரை உள்ளிட்டார் யாவர்க்கும் அரிய

பொருளானவனே, கல் வகைகளுள் ஏதோ ஒன்றினால் ஆக்கப்பட்ட மனத்தினையுடையேனாகிய யான், நின்னுடைய முடிவு பேறில்லாத திருவடிகளை (நின்னருளினாலே) கண்டும் (என்னூழ்வினையினாலே) பிரிந்தனனாகிய யான் பட்டன கட்டமேயாகும் எ – று.

(வி - ரை.) "நல்குரவு செல்வம்" என்றமையால் மக்கள் குறிப்பிடப் பட்டனர். அவற்றால் நுகர்ச்சியுடையோர் அவராகலின். இயங்குதற் பொருள்களுள்ளும் நிலையியற் பொருள்களுள்ளும் தாழ்ந்தனவற்றைக் கூறிய அதனானே, மக்கள் முதலாகப் புழுவிறுதியாகவும், மரம்முதலாகப் புல்லிறுதியாகவும் என விரித்துக்கொள்க. செல்வத்தாலும், நல்குரவாலும், உயர் பிறப்பாளராய தேவராலும், புழுக்களாலும். புல்லாலும், இவையுட் பட்ட அநந்த பேதங்களாலும் அறியப்படாத பொருள் என்றலால், அன் பின் ஆற்றலால் பெற்றுக்கொள்வதற்கு எளிய பொருள் என்பது பெற்றாம்.

"கண்டும் கண்டிலேன்" என்றருளியமையால் அடிகளது மெய்யன்பு நிலை நிறைவடையாது, ஏறியும் இறங்கியும் தத்தளிக்கும் இயல்புடைய தாயிற்று என்பது அவர் கருத்தாதல் தெளிவுபட்டது

தமது மனம் நுண்ணிய வெளியணுவான் இயன்றிலது என்பார் "கல் வகை மனத்தேன்" என்றருளிச் செய்தார் "வகை" என்பது உவம உருபுமாம். நல்வகை மனத்தேனாயின் இங்ஙனமிரேன் என்பது திருவுளம்.

(இங்ஙனம்) 'பிரிந்தது' என்னும் எழுவாய் வருவிக்க இனி "பட்ட கட்டம் எல்லையில்" என முடித்தலும் நன்கு பொருந்தும். மேலும், "எல்லையில்" என்றதனைக் "கழலு"க்கடையாக்கிப் "பட்ட கட்டம் எல்லை யில்" என இசை எச்சம் வருவித்து முடித்தலும் ஒன்று.

போக்கு வரவினாலும், பரந்திருக்கும் தன்மையினாலும் எல்லையில் கழல் என்க. உலகியலிலும் பெற்றிழத்தலே பெருந்துன்பம் பயக்கும்.

'கண்ணிலான் பெற்றிழந்தானெனா உழந்தான்
கடுந்துயரங் கால வேலான்' (கம்பரா. பாலகா. கையடைப். 11.)

எனக் கம்பநாட்டாருங் கூறுவர். அடிகளுக்கும் திருவடியைக் கண்டு பிரிந்த துயர் பெரிதாயிற்றென்க.

எல்லை யிருப்பின் அன்று மாலுங் கண்டிருப்பராதலின் "எல்லையில் கழல்" என்றனர் என்க.

கட்டுஅ றுத்தெனை ஆண்டுகண் ணார நீறு
இட்ட அன்பரொடு யாவரும் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டி னோடுஇரண் டும்அறி யேனையே. 49

இதனால், ஒன்றும் அறியாதேனையும் புலவர் மன்றத்துப் புலவ னாக ஏற்றினை. இத்தகைய நீ எதுதான் செய்யாய் என்றருளு கின்றார்.

(பொ - ரை ) திருநீறு பூசிய அன்பரோடு ஏனைய எல்லோரும் கண்கூடாகக் காண எட்டும் இரண்டும் இன்னதென அறியும் அறிவுதானும் அறிந்துகொள்ளேனாகிய என்னை, மலங்களின் கட்டினைச் சிதைத்து வேறாக்கி அடிமைகொண்டு, அறிவுறுத்து மண்டபத்திலே அமைந்துள்ள கேட்போர் வீற்றிருத்தற்குரிய இருக்கையிலே ஏறுகவென்று ஏறச் செய்தனையாகி மேம்படச் செய்தாய் எ - று.

(வி - ரை.) பண்டி மண்டபம் என்றது, மந்திரோபதேசம் செய்தற் குரிய மண்டபத்தை. ஏறுதலாவது, அம்மண்டபத்தே குரவன் வீற்றிருத் தற்குரிய இருக்கையிலே குரவன் வீற்றிருந்துகொண்டு, அங்ஙனமே கேட் போனையும் அவனுக்குரிய இருக்கையிலே வீற்றிருக்கச் செய்தல். முன்னர் உள்ள "ஏற்றினை" என்றதை ஏறச் செய்தனையாகி என எச்சமாகவும், பின்னர் உள்ள "ஏற்றினை" என்றதை மேம்படச் செய்தாய் என முற்றாக வும் கொள்க.

என்னைக் "கட்டறுத்து" எனவும், "எட்டினோடிரண்டும் அறியேனை" எனவும் தமது அறியாமை தோன்ற ஈரிடத்தும் தம்மைக் கிளந்தோதி யருளினார். "அறியேனை" என்றதனை,

"அறிவுடை யந்தணன் அவனைக் காட்டு"

என்றாங்கு நான்கனுருபாகத் திரித்தும் பொருள் கொள்ளலாம்.

எட்டும் இரண்டும் முறையே அ, உ என வரி வடிவிற் குறிக்கப்படும்.

"அ உ அறியா அறிவில் இடைமகனே
நொ அலையல் நின்னாட்டை நீ"

(யாப்பருங்கலம். சூத். 7. பக். 50.)

என்றாங்கு அறிவிலிகட்காவதொரு பெயர். இஃது "எட்டிரண்டறியா அறிவிலி" எனவும வழங்கும. அகர உகரங்களைச் சிவசக்தியின் இயல் பினை அறிந்து கொள்ளும் இயல்பென்றும் பிறவாறும் கூறுவாருமுளர்.

அன்பரொடு எல்லாருங் காணக் கட்டறுத்து அறிவுறுத்தி ஆண்டனை ஆகலின், நீ என் உடையவன் ஆயினாய்; யானும் நினக்கு உடைமை யாயினேன் என்று குறித்தருளியவாறு. இக்குறிப்பே கைம்மாறு கொடுத்த லாகும். கைம்மாறாகிய தாம் அங்ஙனமாதற்கு ஏற்ற குணஞ் செய்கைகளைப் பெறறுக்கொள்ளாது பழையபடியே பின்னும் அமைந்து வருதலையே இதன் முன்னரும் எடுத்துரைத்தருளினார். ஆதலின் அவையும் இதனது சார்புபட்ட பொருள் எனவேபடும் என்றறிக.

அறியாத என்னைச் சான்றாரொடு பட்டிமண்டபம் ஏற்றினையாதலின், என்னால் நீ பெற்ற கைம்மாறு இதுவேயாம் என விரிக்க. நீ பெற்றுக் கொண்ட அவ்விழிவு தீரவேண்டுமேல் என்னை நினக்கேற்ப அமைந் தொழுகுமாறு பணித்தல் நின் கடப்பாடாவதன்றி எனது ஆகாது என்று கொள்ளவைத்தருளினார். பயன்படாவாறு மாரி பெய்தாங்கு நின் வண்மை யும் என்பாற பயன்பட்டிலது என்க.

அறிவ னேஅமு தேஅடி நாயினேன்
அறிவன் ஆகக்கொண் டோஎனை ஆண்டது
அறிவி லாமைஅன் றேகண்டது ஆண்டநாள்
அறிவ னோஅல்ல னோஅருள் ஈசனே. 50

இதனால், இறைவனைச் சில வினாக்கள் வினாவி, அவன்பால் குற்றத்தை ஏற்றியருளுகின்றார்.

(பொ - ரை) பெரிய எட்டாகிய ஐசுவரியங்களை யுடையோனே, அறிவு வடிவானவனே, அன்பர்க்கு இனிமை தரும் பண்புடைய அமுதமானவனே, அடிமையாகிய நாயின் இயல்புடையேனாகிய யான், என்னை ஆண்டருளிய அந்நாளிலே (நினது உரைப் பொருளை) அறிந்துகொள்ளும் வல்லவன் என்று கருதியோ ஆண்டு கொண்டது? இப்போது என்பால் நீயும் உலகமும் அறிவில்லாமை யன்றே கண்டது? ஆதலின் அக்காலத்தே யான் அறிவுடையனோ? அல்லனோ? இதனை எனக்கு அருள்செய்வாயாக எ – று.

(வி - ரை) அறிவுறுத்தப்படும் பொருளை அறிந்துகொள்ளும் இயல் புடையானுக்கு அறிவுரை அருள்வது ஆசாற்குக் கடன். தமமையாண் டருளிய இறைவனை மரபு அறிநது அறிவுறுத்தினைகொல் என்பார் "அறிவனாகக் கொண்டன்றே ஆண்டது" என்றும், அங்ஙனம் நீ ஆண்டனையேயாகில் இப்போது என்பாற் கண்டது அறிவிலாமையே யாதலின், என்னையாண்ட நாளிலே யான் "அறிவனோ அல்லனோ" எனத் துணிந்து ஒன்றனைத் தெரியச்செய்க என்றும் வினவியருளினார். இவ் வினாக்களாலே இறைவனே பிழைபாடுடையவன் என்பதைப் புலப்படுத்தி யருளினார் என்க. இதனால் அடிகளின் பிறருள்ளம் அறியுமாற்றல் இனிது விளங்குதல் காண்க. இஙஙனமே,

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்" (கோயிற்றிருப். 10.)

என்று பின்னரும் கூறியருள்வர்.

ஒருங்கு முயன்ற அசுரரை வஞ்சித்துத் தேவர்க்கூட்டிய அமுது போல என்னை வஞ்சித்து ஏனைய அடியார்களுக்கு நுகர்பொருளானாய் என்பது தோன்ற "அமுதே" என்றும், எனக்கு இந்திரசாலங் காட்டிய நீ வஞ்சனையுடையாய், இன்ன நின் அறிவும் நல்லறிவாகாதென்பது குறிப் பாற்றோன்ற "அறிவனே" என்றும், தலைவன் குறிப்பறிந்து ஏவல் செய்யும் நாய்போல நின் பணியே செய்கின்றேன் என்பது தோன்ற "அடி நாயி னேன்" என்றுங் கூறினார். தன்பால் குற்றம் யாதோ என வினவினா ரென்க.

திருச்சிற்றம்பலம்

# 6. அநுபோக சுத்தி

## அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**ஈச னேஎன் எம்மானே எந்தை பெருமான் என்பிறவி**
**நாச னேநான் யாதும் ஒன்று அல்லாப் பொல்லா நாயான**
**நீச னேனை ஆண்டாய்க்கு நினைக்க மாட்டேன் கண்டாயே**
**தேச னேஅம் பலவனே செய்வது ஒன்றும் அறியேனே 51**

இதனால், நல்லனவற்றுள் ஒன்றையேனும் நினைக்கவும் அறியேன் எனத் தமது கொடிய மனநிலைமை கூறியருளப் படுகின்றது.

(பொ - ரை) அரிய பெரிய மெய்ம்மைத்தாகிய செல்வ முடையவனே, எம் போன்றார்க்கும் உரியவனே, என் அப்பனே, பெருமையுடையவனே, என் பிறவியைக் கெடுப்போனே, அம்பலத்தை இடமாகக் கொண்டவனே, யாதானும் ஒரு பொருளும் ஆவதற்கில்லாத அத்துணைப் பொல்லாத குணஞ் செய்கைகளை யுடைய நாயை ஒத்தேனாகிய சாதி மரபு கெட்ட சண்டாளனாகிய என்னையும் வலிய வந்து ஆட்கொண்ட கருணைத் திறத்தின் பொருட்டேனும் நின்னை நினைத்தலைச் செய்யமாட்டேன் எ - று

(வி - ரை.) எந்தைக்குப் பெருமானுமாம். "பிறவி நாசன்" என்றதனை இறைவனது ஒரு திருப்பெயராகக் கொண்டு என்னுடைய பிறவி நாசன் எனினும் ஒக்கும். "எந்தை" என்பது "யாம்" என்னும் முதனிலையும் "தை" என்னும் முறைப்பெயர் இறுதிநிலையும் பெற்று ஒரு சொல்லாகி நின்றமையின், அஃது ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுப்பட வழங்கிவரும் மரபுடையதாயிற்று. "எம்மான்" முதலியனவும் அன்ன.

எட்டாகிய பெருஞ்செல்வம் உடையனாதலின் "ஈசன்" என்றும், அச்செல்வத்தை எம்மனோர்க்கு அளிக்குமாறே வைத்துளானாதலின் "எம்மான்" என்றும், என்னை உலகிற் பெறறுள்ள தந்தை எனக்களித்த செல்வம் வேறு, நீ எனக்களித்த செல்வம் வேறு என்பது தோன்ற "எந்தை பெருமான்" என்றும், எந்தை அளித்த செல்வம் பிறவியிடர்க்குள் புகுத்துவது, நின் செல்வமோ பிறவியிடரை அறுப்பது என்பது தோன்ற "என் பிறவி நாசனே" என்றும், அங்ஙனம் அரிய பெரிய செல்வம் அளித்த நின்னையும் அதனை ஏற்றுக்கொண்ட அன்பரையும் ஒளிரச் செய்கின்றாய் என்பது தோன்றத் "தேசனே" என்றும், இங்ஙன மெல்லாம் நடுநின்று எல்லாத் தொழில்களையும் இயற்றி வருகின்றாய்

என்பது தோன்ற " அம்பலவன் " என்றும், யான் வறிதே மரபு முதலாய நெறியினின்றும் இழிந்து பயன் பெருது போயினேன் என்பது தோன்ற " நான்... நீசனேன் " என்றும், நீசன் செய்வனவெல்லாம் செய்ந்நன்றி மறத்தல் முதலாய பாதகங்களாகும் என்பது தோன்ற " ஆண்டாய்க்கு நினைக்கமாட்டேன் கண்டாய்" என்றும், நீசனை ஒத்த யான் செய்யற்பாலன வற்றுள் ஒன்றனையும் அறியாதிருத்தலே இயல்பாகும் என்பது தோன்றச் " செய்வது ஒன்றும் அறியேன் " என்றும் அருளிச் செய்தார். தேசன்-புகழாகிய ஒளியுடையவன்.

இங்ஙனமே ஒவ்வொரு சொற்களும் காரண காரிய முறைப்படி அடைவுபெற்று இத்திருவாசகத் திருப்பாட்டுக்கள்தோறும் பயின்று வருவது எல்லாரானும் அறியப்பட்டதொன்ருகலான், ஏற்புழியே ஆண்டாண்டுக் கிளந்து கூறப்படும்.

நீ அம்பலவன் ஆதலால் யான் நின்ளுற் கருணை காட்டி ஆளற் குரியவன் அல்லன், ஒறுத்தாளற்கே உரியவன் என்க. அம்பலம் என்பது மன்றம். மன்றத்திலே எத்தகைய இழிந்தவர் குழுக்கூடினும் நடுவு நிலையும் நீதியும் பேணப்படுவது நன்கறிந்ததொன்று. கலாசாலை மாணவர் வகுப்பில் ஒழுகுதலினும் தமது மன்றங்களில் ஒழுகுதல் பல்லாற்ருனும சிறந்த தென்பது அறியப்பட்டது. இறைவனைச் சில புறச் சமயங்கள் போலாது மன்றத்தலைவனுக்கி மகிழும் சைவ சமயக் கோட்பாடும் தமிழர் பண்பாடும் ஆராய்ந்து உவத்தறகுரியது.

செய்வது அறியாச் சிறுநாயேன்
செம்பொற் பாத மலர்காணுப்
பொய்யர் பெறும்பேறு அத்தனையும்
பெறுதற்கு உரியேன் பொய்யிலா
மெய்யர் வெறிஆர் மலர்ப்பாதம்
மேவக் கண்டும் கேட்டிருந்தும்
பொய்ய னேன் நான் உண்டு உடுத்துஇங்கு
இருப்பது ஆனேன் போரேறே. 52

இதனுல், நான் அன்பர் அடிமேவக் கண்டும் கேட்டிருந்தும் உண்டுடுத்து இங்கிருக்கலுற்றேன் ஆதலால் பொய்யனுவேன்; பொய்யர் பெறும்பேறுகள் அனைத்தும் பெறுதற்கும் உரியேன்; இப்போது பெற்றுவரும் பேறுகள் போதா என்று முறைப்படி துணிந்து தெளிந்து முடிவுகட்டியது அறியப்படும்.

(பொ - ரை ) புறத்துச் செய்துமுடிக்கும் போரேயன்றி அகத்துச் செய்து முடிக்கும் போரிலும் வல்லமை சான்ற ஆண் ஒப்பவனே, நின்னிடத்திலே பொய்யே விரவாத

மெய்யன்பு செய்யும் அடியவர் (தேனும்) மணமும் நிறைந்த பூவை யொத்த நின் திருவடிப் பேற்றினை விரும்பி எய்திய செயலை நேரிலே கண்டிருந்தும் கேட்டிருந்தும் (மெய்யே விரவாத) பொய்யியல்பினை அகம் பொதிந்துள்ளவனாகிய யான் மெய் யியல்புடையேன்போல நடித்துக் காட்டிச் சாவத் துணியாது இந்நிலவுலகிலே (காமம் நுகர வேண்டி) புலன்கள் ஆர நுகர்ந்தும் உடை முதலாயவற்றை அணிந்தும் உடலினை ஓம்பி வருவே னாயினேன். (ஆதலால்) செய்யத்தக்க நற்செயல்களுள் ஒன்றனை யேனும் அறிந்துகொள்ளாத (செய்யத்தகாதனவாகிய தீச் செயல்கள் பலவற்றையும் செய்தற்கு அறிந்துகொண்ட) சிறுமைப் பாடுகொண்ட நாயினுடைய இனத்தவனாகிய யான், நின் செவ்வி தாகிய பொற்றாமரைத் திருவடிகளைக் காணாத பொய்த் தன்மையில் ஈடுபட்டோர் அடையக்கூடிய துன்பப்பேறு முழுவதையும் அடைதற்குரியனாவேன் எ - று

(வி - ரை) உண்டுடுத்திருத்தல் என்பவற்றுள் ஒன்றே ஏனைய வற்றை மேற்கொள்ளச் செய்யும். இவ்விருப்பே காமத்தில் உழல வைக்கும் இயலபினது.

"மெய்யர்......கண்டும் கேட்டிருந்தும்" என்பதும், "பொய்யனேன் ......இருப்பதானேன்" என்பதும துணிவதற்குக் காரணங்களாகி நின்றன. ஈண்டுப் "பொய்யனேன் நான்" என்றது, இதனால் இஃதாம் எனத் துணிந்தவாறு விளக்கி நின்றது.

"செய்வதறியாச் சிறு நாயேன்" என்றதால் கடப்பாடு கடந்த குற்றத்தினை உடையேற்கு விதிக்கவேண்டிய தண்டம் ஆராயப்படுதல் வேண்டும் என்பது வலியுறுத்தியருளப்பட்டது.

"செம்பொற் பாத மலர் காணாப் பொய்யர் பெறும் பேறு" என்றத னால், பாத மலரைக் காட்டி இதனையே கண்டு வருக என்னும் கட்டளை யைப் பேணாது வேறு பலவற்றைப் பேணினார் பெறுதற்குரிய தண்டங் களை எடுத்துக் கூறக் கேட்டல் வேண்டுமென்பது வலியுறுத்தப்பட்டது.

பாதமலர் காணா - பாதமலரைக் காட்டக் கண்டும் பின்னரும் அதனைப் பேணிக் காணாத. பொய்யர் - காணாரைப் போல நடித்துப் பொய்த்த பொய்யினை உடையவர்; விரும்பாதிருந்தும் விரும்பினார்போல நடித்துக் காட்டிய பொய்யர். தன்னுடன் கூடினோர் அனைவரும் மெய்யன்பராக இருந்தும் அவர் கூட்டத்தாலும் திருந்தப் பெறாதவன்; திருந்தும் அறிவில்லையேனும் பின்பற்றாதவன்; பின்பற்றிவிடினும் மாறுபட் டொழுகியவன்; இறைவனையும் அன்பரையும் பொய்த்த பொய்யன்; ஆகிய இன்ன தன்மையேனாதலால், பொய்வகையாற் பொய்யர் எனப்பட்டார் தனித்தனியே பெறுதற்குரிய தண்டங்கள் அனைத்தினையும் பொருந்திய

ஒரு காலத்திலாகாது முழுதும்பட விரித்துப் பெறுதற்குரியேன் என்பது கருத்தாகக் கொள்க.

இறைவனைத் தண்டம் விதிக்கும் அறப்போர்க் காவலனாகக் கொண்டா ராதலின் "போரேறே" என்றருளிச் செய்தார் இறைவன் அறப்போரக் காவலன் என உருத்திரம் முதலாய மறைப்பகுதிகளிலே கூறப்படுதல் காண்க.

கேட்டிருந்தும் யாது காரணத்தால் அன்பருடன் செல்லாது, ஈண்டு இங்ஙனம வாழ்ந்துவருகின்றாய் என்றாங்கு உலகோர் என்னைக் கேட்க யானும் அதனைக் கேட்டிருந்தும் என விரிப்பினுமாம். அன்பரும் அங்ஙனம் கேட்டனர் எனினும் இழுக்காது. **திருப்பாண்டிப் பதிகம் யாத்திரைப் பத்து** எனபவற்றுள்ளே அடிகளும் இங்ஙனம் பிறரை அழைத்தருளல் காண்க.

இத்தகைய என்னை நல்லன்போல வாழ்ந்துவரச் செய்வது என்னை என எச்சம் விரிக்க.

என் பகையை வெல்லுதற்குரிய வலியிருந்தும் அங்ஙனம் செய்யாது என்னை வஞ்சித்தருளின இகழ்ச்சி தோன்ற "போரேறே" என்றருளினார்.

போர்ஏ றேநின் பொன்னகர்வாய்
நீபோந் தருளி இருள்நீக்கி
வார்ஏ றிளமென் முலையாளோ(டு)
உடன்வந் தருள அருள்பெற்ற
சீர்ஏ றடியார் நின்பாதம்
சேரக் கண்டும் கண்கெட்ட
ஊர்ஏ றாய்இங்(கு) உழல்வேனோ
கொடியேன் உயிர்தான் உலவாதே. 53

இதனால், அன்று உடன் செல்லாது இன்று கண் கெட்டுச் சாவாது உழல்வேனோ என்று இறைவற்கு மனம் வருந்தி விண்ணப்பித்தல் கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) அறப் பாதுகாப்பின் பொருட்டுப் போர் செய்து வெற்றி கொள்ளும் ஆண் சிங்கத்தைப் போன்றவனே, நின்னுடைய தில்லையாகிய பொன்னகர்க்கண்ணே சென்றருளி, கச்சத்துட் படாது மேற்படுகின்ற இளமை பொருந்திய மென்மை சான்ற முலைகளையுடைய உமைப்பிராட்டியோடு ஒருசேர வந்து (அன்றுடன் வந்து காத்தலை எய்தப் பெறாது எரி பாய்ந்தும் வரை பாய்ந்தும் கடல் வீழ்ந்தும் தம்முடற் களைவாரை) மிகு புகழ் பரவிய அன்பர்க் குரிய ஆணவமாகிய இருளை நீக்கியருள, மற்று, அவர் நின்னுடைய திருவடிகளை இரண்டறக் கலந்ததைக் கண்டும் (கொடிய குணஞ்

செயல்களையுடைய யான் மட்டும்) கண்கெட்ட ஊரிலே பன்றியை ஒத்துச் சுழன்று திரிவேனோ? என் நிலையைக் கண்ட உயிர்தானும் தன்னுடைய வாழ்நாள் கெட்டு ஒழியாது போலும் எ - று.

(வி - ரை.) ஈண்டும் "போரேறே" என இறைவனை அழைத்தருளினார் உடன் கலக்க வேண்டி முனைந்தும், தீப்பாய்தல் உடல் கீறல் முதலாயவற்றை மேற்கொள்ள முனைந்தும் வெற்றி பெற்றிலராய்த் தாம் தோற்றமையும், இறைவன் வென்றமையும் உட்கொண்டு.

ஊர்ப்பன்றி உணவற்றுப் பவ்வீ முதலாயவற்றையே உண்டு வருதல் போல யானும் இழிந்த காமத்தை விழைந்து வருகின்றேன் என்க.

முந்திய திருப்பாட்டிற் கூறிய "கண்டும்" என்றதற்கு, எய்த வந்திலாதார் எரியிற் பாய்ந்ததும், மயக்கமெய்தியதும், வரை பாய்ந்ததும், கடல் வீழ்ந்ததும் ஆகிய செயல்களைக் கண்ணாரக் கண்டிருந்தும் என்றும், "கேட்டிருந்தும்" என்றதற்கு இறைவனோடு உடன்கலந்தருளிய அன்பர் திறனைக் காதாரக் கேட்டிருந்தும் என்றும் பொருள் கொள்ளலே நேரிதாகும் என்றதற்கு இடமுண்டேனும், தில்லையிலே திருவடி "சேரக் கண்டும்" என இத்திருப் பாட்டிலே கூறிய இதனானே "முனைவன் கண்டது" என்றவாறே ஈண்டைக்கேற்குமாறு "சேரக்கண்டும்" என்றதற்கு அடைந்ததைக் கேள்விப்புலனால் அறிந்திருந்தும் எனப் பொருள் கொள்வதே தக்கதாதல் கண்டு தெளிக. "காணுதல்" என்றதற்குப் பொதுவாகப் பொறியறிவுக்குப் புலனாதல் எனப் பொருள்பட்டுவரும் வழக்காறு வலியுறுத்தப்பட்டதென்க.

பொன்னகர் - தில்லையாகிய பொன்னகர். பொன்னம்பலம் என்ற வழக்காறும் தில்லைப் பொன்னகர் என்றலை வலியுறுத்தாநிற்கும். சிறந்ததும் தூயதும் ஆகிய பொன்னையொத்த நகர் என்க. அடியவர்க்குரிய இருளாகிய களிம்பினை நீக்கி என விரிக்க. ஆணவ இருளை இறைவன் அந்தணனாக வந்து தனது திருவடிகளைச் சென்னியில் வைத்த பேற்றினாலே நீங்கப் பெற்ற அத்துணைச் செவ்வி நிரம்பிய அடியவருடனே அவனது சோதியில் உடன் கலந்தருளினர் என்க. ஆண்டு, இறைவன் திருவடிகளே சத்தியாக நின்றன. ஆணவ இருள் வலி மிக்கவரை அங்ஙனம் ஆட்கொள்ளுதல் சாலாதாகலின், அவர்க்கு இறைவனும் இறைவியுமாக உடன் வந்து ஆட்கொள்ளுதலே நேரிதாகும். அவருள்ளே அன்புமிகப் பெற்று ஆற்றாமையினாலே தாமே உடல்விடும் அடியார்க்கு இறைவன் இறைவியுடன் ஏறூர்ந்து வந்தும், அவ்வாற்றல் படையாராய் உறுப்புக் குறைத்தும் பிறவாறாற்றியும் உயிர்விடும் அடியாரைத் தில்லைக்கு வரச்செய்து இறைவியுடன் இறைவன் தோற்றியும் ஆண்டு கொள்ளுதல் மரபென்பது, இத்திருப்பாட்டாற் புலனாதல் கண்டு தெளிக.

அடிகளை வலிந்து உடல்விடாது பலதலங்களையும் வணங்கிச் செவ்வி நிரம்பப் பெற்றுத் தில்லைக்கு வரின் யாம் ஆட்கொள்வோமென்று இறைவன் கட்டளையிட்டதன் காரணமும் இதனாற் பெற்றாம். "எரிபுகேன், வரை பாயேன், கடல் வீழேன், தலைகீறேன், மோதேன்" என்றாங்குப் பிறண்டும் கூறுவன எல்லாம் காலந் தாழ்க்காது விரைந்து திருவடிப் பேறு எய்துதற் பொருட்டே கூறியனவாகவும், தாம் கூறியவாறே செய்துகொள்ளாதது தில்லைப் பொதுவின்கண் தன்னைவந்து காண்க என்றிட்ட கட்டளைக்கு அஞ்சி நடத்தல் வேண்டுமென்னும் உட்கோள் குறித்தாகும் எனக் கொள்க. இன்னும் இன்னோரன்ன பல வரலாறும் ஈண்டுக் கொள்ளப்படும்.

**உலவாக் காலம் தவம்எய்தி**
**உறுப்பும் வெறுத்திங் குனைக்காண்பான்**
**பலமா முனிவர் நனிவாடப்**
**பாவி யேனைப் பணிகொண்டாய்**
**மலமாக் குரம்பை இதுமாய்க்க**
**மாட்டேன் மணியே உனைக்காண்பான்**
**அலவா நிற்கும் அன்பிலேன்**
**என்கொண் டெழுகேன் எம்மானே.** **54**

இதனால், கட்டளையின்மையால் உடலினை மாய்த்துக்கொள்ளும் வல்லமையற்றேனுக்கு நின்னிடத்தில் அன்பும் இன்றேல் தில்லை வழிச் செலவிற்குப் பற்றுக்கோடாக எதைக் கொண்டுபோவேன் என்றருளுகின்றார்.

(பொ - ரை.) எமக்குரியவனே, மாணிக்கமே, ஊழி முதலாகிய காலங்கள் எல்லாம் தமக்குக் கெடாத தவம் செய்யும் காலங்களாக அடைந்து தம்முடைய மெய் வாய் முதலாகியவற்றின் நுகர்ச்சியை நுகரப் பண்ணுதலிலும் வெறுப்புற்று, தாம் எடுத்த இப்பிறவி யிலேயே உன்னைக் காண வேண்டிப் பல பெரிய முனிவர்களும் (நின்னைக் காணப் பெறாது) மிக(க்கவலையுற்று) வாடாநிற்ப, (அவர் தளர்ச்சியினைப் பொருட்படுத்தாது) தீவினையேனை ஏவலாளனாகக் கொண்டவனே, உன்னைக் காண்பதற்கு மாறுபட்டு நிற்கும் செருக்கு மிக்க இவ்வுடலை மாய்த்துக்கொள்ளும் வலியிலேனாகிய யான், நின்னைக் காணாமையால் வருந்தி நிற்கும் இயல்புடைய அன்பினையும் கொண்டிலேன் ஆதலால், எதனைப் பற்றுக்கோடாகக் கொண்டு இங்கிருந்து தில்லைக்குப் புறப்படுவேன் எ - று.

(வி - ரை.) மாறுபட்டு நிற்கும் உடம்பினையும் அழிக்கும் வலி எனக்கில்லாமையால், யானும் நின்னில் அன்பிலன் என்பது தெளிவாம்.

காணுதலில் வேட்கையும் காணுமையால் கலக்கமும் கொள்ளும் அன்பென்க. அத்தகைய அன்பில்லேன் என்க.

'யான்' 'எனது' என்னும் செருக்குகளை மேற்கொள்ளுதலின், பெருமை வாய்ந்த குரமபை எனக. அதன் கொடுமை தோன்ற "இது" எனச் சுட்டியருளினுர். தாம் நினைந்த மாத்திரத்திம் அழிக்கவல்லது என்பது தோன்ற நின்றதுமாம்.

மலவிருள் நீக்கலானும், பேரொளியுடைமையானும், அரியதொன்ருக லானும், ஐம்புல நாகத்துட்பட்டுக் கிடத்தலானும், அன்னபிறவற்ருனும் "மணியே" என்றருளிச்செய்தார். அம்மணியைப் பெறுதற்கு அந்நாகத் தினை மாய்த்தல் வேண்டுமன்றே? அங்ஙனம் அந்நாகத்தினைக் கொன்று மணியைப் பெறும் ஆற்றலற்றவர் அதன் விழைவால் நாகத்தினையும் போற்றி வருவரேல், மற்று அதனுல் தீண்டப்பெறறு நஞ்சேறி மயஙகி உழன்று அவமே இறப்பரென்க. உயிரக்கு மணியாகிய இறைவன் ஐம்புலன்களாகிய அரவகத்து மணியாக அமைந்துள்ளான் என்க. அவ் வரவினைக்கொன்று அமமணியைப் பெறுவது உயிர்க்கு இன்றியமை யாத தொன்ருகும்.

'எம்மானுகிய மணியே, நீ ஐம்புல அரவின் மணியாகி நிற்க யான் காண்பேனு?' என வருந்தி அவ்வரவினைக் கொன்று அதனைத் தனக்குரிய தாகப் பெற்றுக்கொள்ளுதல் வேண்டுமென்க. ஆதலாலன்றே இறைவனை "எம்மானே, மணியே" என்று அழைத்தருளினர் என்க. எம்மான் மணி-உயிர்களாகிய எமக்குரிய மணி ; ஐம்புல அரவுக்குரியதல்லாத மணி.

**மான்நேர் நோக்கி உமையாள் பங்கா வந்திங் காட்கொண்ட**
**தேனே அமுதே கரும்பின் தெளிவே சிவனே தென்தில்லைக்**
**கோனே உன்தன் திருக்குறிப்புக் கூடு வார்நின் கழல்கூட [55**
**ஊனுர் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்ப தானேன் உடையானே.**

இதனுல், இயல்பாகவே அவனைப் பிரியாது ஒழுகிவந்த அன்பர், அவனே சோதியாக அதனுள்ளே கலந்துகொள்ளவும், செவ்வி நிரம்பப் பெருதாருள்ளே பலரும் தங்குறை உணர்ந்து அதனிற் கூடுவான் தம்முடல் விட்டு அவனடி சேரவும், அத்திருக்குறிப்பு அவ்வன்பரால் வெளிப்பட்ட இடத்தும் தம் முடம்பினை விடுதற் கஞ்சியது ஒருபுறமிருக்கவும், தில்லைக்குப் புறப்படாமை மற்ருெரு புறமிருக்கவும், அவ்வூர் இருந்து உண்டுடுத்து உடம்பினைப் போற்றற்கு முற்பட்ட கொடுமை எத்துணை இழிவுடைத்து என்று வருந்துவது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) மானை ஒத்த பார்வையையுடைய உமைப் பிராட்டியை இடப்பாகங் கொண்டவனே, தில்லைப் பொன்னகரில்

நின்று யானிருக்கும் இவ்விடத்தே குரவனாக வந்து ஆட்கொண்டருளிய (பல மலரினின்று திரட்டிய) தேனை ஒப்பவனே, கடைந்தெடுத்த அமுதினை ஒப்பவனே, ஆலைக் கரும்பினின்றும் வெளிப் போந்த சாற்றை ஒப்பவனே, தூயோர் உள்ளத்திலே தங்கும் செம் பொருளே, தென்தில்லை நகர்க்கண்ணே எல்லாரும் காணக் கூத்தயரும் தலைவனே, எல்லாவற்றையும் உடைமைப் பொருளாக உடையவனே, உன்னுடைய திருவுள்ளக் குறிப்பினைத் தாமே உணர்ந்து அந்நெறியே ஒழுகி வருவோர் நின்னுடைய திருவடியைக் கூடவும், அங்ஙனம் உணர்ந்து ஒழுகிவராத யான் தசை பொருந்திய புழுக்கள் நிறைந்த கூடாகிய இவ்வுடம்பினைக் காத்தலை மேற்கொண்டு இவ்வூரின் கண்ணேயே உண்டுடுத்து இருப்பதாயினேன். எ - று.

(வி - ரை.) இறைவன் உளப்பாங்கிலே இவர் கழல் கூடற்குரியவர் என்றவரே கழல் சேர்வர் எனவும் கொள்ளலாம் திருக்குறிப்பிற் கூடினவர், இறைவன் கழலில் கலப்புற்றவர். அக்குறிப்பிற கூடுவோர், தாமே தீப் புகுதல் முதலாயவற்றால் உடல்விட்டவர்.

"உடையான் அடிநாயேனைத் தினையின் பாகமும்
பிரிவது திருக்குறிப்பு அன்று" (திருச்ச. 37)

என்றருளியமையால், இறைவனுடைய திருக்குறிப்புத் தம்மொடு பிரியாது சேர்ந்திருப்பதே என்பதுணர்ந்து தம்முடலை விட்டு, அவன் கழல் சேர்ந்தனர் என்க. அக்குறிப்பு அன்பரால் வெளிப்பட்டிருக்கவும் யான் அவ்வன்பர் ஆற்றியவாறு ஆற்றினேன் அல்லேன்; ஆயினும தில்லைநகரைச் சேர்தற்கேனும் எழுதலையும் செய்யேனாய் இங்கு உண்டு உடுத்து இருப்பதாயினேன் என விரிக்க.

உலகிற் பலபட விரிந்த இன்சுவைப் பொருள்கள் எல்லாம் ஒன்றுபட்டுக் கெடாது சிறப்புற்ற தேனேபோன்று கண்டு கேட்டு உண்டு உயிரத்து உற்று நுகரப்படும் எல்லாப் பொருள்களின் இன்பமும் தன்னிடத்ததாகி ஒடுங்குதலின் "தேன்" என்றும், அல்லவர்க்கு உரியதாகாது அன்பர்க்கே உரியதாகி அழியா நிலைமை எய்துவித்தலின் "அமுதம்" என்றும், வானுலகில் நின்று இந்நிலவுலகில் குருபரனாக வந்து தோன்றிப் பெரும் பயன் விளைத்தலின் "கரும்பே" என்றும், அக்கரும்பின் சாறுவான் "சிவன்" என்றும, அச்சிவனே தில்லைக்குள் நடுவில் நிற்கும் "கோனுவான்" என்றும், அக்கோனே எல்லாவற்றையும் "உடையனுவான்" என்றும் அருளிச் செய்தார்.

அதியமான் நெடுமானஞ்சி என்பவனின் முன்னோர்கள் தேவரை வழிபட்டு விண்ணுலகிலிருந்து இந்நிலவுலகிற்குக் கரும்பைக் கொண்டு வந்தனர் என்பது புறப்பாட்டுக்களால் (99, 392) இனிது விளங்கும்.

" வையகம் எல்லாம் கழனியா—வையத்து
செய்யகமே நாற்றிசையின் தேயங்கள்—செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு—வான்கரும்பின்
சாறே அந்நாட்டுத் தலையூர்கள்—சாறட்ட
தானேற் றமான சருக்கரை மாமணியே
ஆனேற்றான் கச்சி யகம் "

என்னும் பழைய பாட்டானும், "நிலத்திற் கணி என்ப நெல்லும் கரும்பும்" என்னும் நான்மணிக் கடிகைப் பாடற்பகுதியானும் இந்நிலவுலகில் கரும்பே சிறந்ததென்பது பெற்றாம். இன்சுவைப் பொருளாக இறைவன் அமைதல் பற்றி இங்ஙனம கிளந்தருளினர். இத்திருப்பெயர்களைக் கூறு வார் நாவில் தேனும் அமுதும் ஊற்றெடுத்தலின் இங்ஙனம் திருவாய் மலர்ந்தருளினருமாம்.

"உமையாள் பங்கா" முதலிய மூன்றும், "தேன்" முதலாய மூன்றும் தம்முள் ஒத்துச் சுவைதருதலின், அவற்றை ஒருசேரக் கூறியருளினர்.

" உமையாள் பங்கா " என்றருளியதனாற் படைப்பும், " தேனே அமுதே தெளிவே " என்றருளியதனால வளர்ச்சி வகைப்பட்ட காப்பும், " சிவனே " என்றருளியதனால் ஒடுக்கமும், " தில்லைக்கோனே " என் றருளியதனால் அம்முத்தொழிலும் அவன் இயற்றும் கூத்தால் நிகழ் கின்றன என்பதும், " உடையானே " என்றருளியமையால் அவனுடைய முதன்மையும் புலப்படுத்தியருளியவாறுமாம்.

உடையா னேநின் தனைஉள்கி
உள்ளம் உருகும் பெருங்காதல்
உடையார் உடையாய் நின்பாதம
சேரக் கண்டிங்(கு) ஊர்நாயின்
கடையா னேன்நெஞ்சு உருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூடு இதுகாத்திங்கு
இருப்ப தாக முடித்தாயே. 56

இதனால், நீ வளர்த்த நாய் ஊர்நாயாகி மலம் முதலாயின நுகர் தற்குக் காத்திருக்குமாறு முடிவு செய்தனையே, இதுவோ நின் கருணை என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை ) முதல்வனே, உன்னை நினைந்து மனம் உருகும் பேரன்பினை உடைய அடியவர்களை உடைமைகளாகக் கொண்டு சிறப்புற்றவனே, அவர்கள் நின் திருவடிகளைச் சேரக் கண்டிருந்தும் ஊரிலே பற்றுக்கோடு இன்றித் திரிகின்ற நாயைக்காட்டிலும் கீழ்மைப்பட்டேன்; மனம் உருகாதேன், அங்ஙனம் உருகுதற்குக் கற்றுக்கொள்ளாத மன விருப்பத்தினேன்; கல்லாது போகினும்

அது குறித்து வருந்தியேனும் அன்பினைப் பெற்றுக்கொள்ளாதேன். இத்தகைய என்னை முடைநாற்றம் நிரம்பிய புழுக்கூடாகிய இவ் வுடம்பினைக் காத்திருப்பதுவே எனக்குப் பொருந்துவதாகும் என நீயும் முடித்துவிட்டனையே (நின் பழியையேனும் கருதிற்றிலையே) எ - று.

(வி - ரை.) வீட்டுநாய் பவ்வீ முதலாய அசுத்தப் பொருள்களை விழையாது. ஊர்நாய் இவற்றையே விழைந்துண்ணும். வீட்டுநாய்க்கு ஊரில் மதிப்பும், இடையூறுவரின் அதனை நீக்குவதற்குரிய உதவிகளும் உள. ஊர்நாய்க்கு மதிப்பின்மையும் இடையூறுமே உள. ஊர்நாய்களுள் வலிமையற்ற நாய் அவற்றுள்ளே கடையாயதெனப்படும். அஃது ஏனைய நாய்களால் அலைப்புண்டு இன்னலையே எய்திவரும் இயல்பினது. அவ்வா றாகிய ஊர்நாய்க்குள்ளே கடையாயதை ஒத்தவனாய்த் துன்பமே மேற் கொண்டுளேன் என்பார் "ஊர்நாயிற் கடையானேன்" என்றருளினார். வளர்க்கப்பட்ட நாய் விதிவசத்தால் தலைவனைப் பிரிந்து ஊர்நாய்களோடு கூடி அவற்றுட் கடைப்பட்ட நாயாகிக் கலாம் விளைத்துத் துன்புற்றவிடத்து ஆற்றாது தலைவனை நாடுவதுபோல அடிகளும் இறைவனைப் பிரிந்து உலக இன்னலிற் சுழன்று ஆற்றாராய்ப் பின்னரும் இறைவனை நாடித் தம்மை ஆட்கொள்ளுமாறு அழைத்தருளுகின்றார். நாய் இயல்பு அமைந்த தம்மை இறைவன் ஆண்டு வீட்டுநாயாக்கியும், தாம் அவனைப் பிரிந்து ஊர்நாயான செய்தியை அடிகள் ஆங்காங்குக் கூறியருளுகின்றார்.

"தன்மை பிறரால் அறியாத தலைவா பொல்லா நாயான
புன்மையேனை ஆண்டு புறமே போக விடுவாயோ" (திருச்சதகம். 59.)

என மேலுங் கூறியருள்வர்.

முடித்த வாறும் என்தனக்கே
  தக்க தேமுன் அடியாரைப்
பிடித்த வாறும் சோராமல்
  சோர னேன்இங் கு ஒருத்திவாய்
துடித்த வாறும் துகில்இறையே
  சோர்ந்த வாறும் முகம்குறுவேர்
பொடித்த வாறும் இவைஉணர்ந்து
  கேடுஎன் தனக்கே சூழ்ந்தேனே. 57

இதனால், குறிப்பொடு கூடிய அன்பரைக் கைப்பற்றிய வகை யும், என்னை இங்கு இருப்பதாக முடித்தவகையும் தக்கனவே என்று அருளிச் செய்யப்படுகின்றது.

(பொ - ரை.) களவுப்புணர்வில் ஈடுபட்டமையால் இறை வனுக்கும் வஞ்சனையைச் சூழும் யான், இவ்வூர்க்கண்ணே

ஒருத்தியினுடைய வாயிதழ்கள் படபடவென்று அசைந்த வகையும், அவளாடை சிறிது நழுவிய வகையும், அவள் முகத்தே குறு வேர்வு அரும்பிய வகையும் ஆகிய இவையெல்லாம், என்மேற் காதல் மேலிட்டு என்பொருட்டால் நிகழ்ந்தனவாக உணர்ந்து எனக்கே கேடு சூழ்ந்துகொண்டேன். (ஆதலால் இங்கு உடல் காத்திருப்பதாக) எனக்கு முடிவு செய்த வகையும் தக்கதாகும்; நின் திருக்குறிப் பொடுபட்ட அன்பரைத் தளராமல் கைப்பிடித்த வகையும் தக்கதாகும் எ - று.

(வி - ரை.) முடித்தவாறும் தக்கது, பிடித்தவாறும் தக்கது எனத் தனித்தனி முடிவு செய்க. முன் - குறிப்பு. முன்னதிறொடுபட்ட அடியாரை என்க. களவுப் புணர்ச்சியில் ஈடுபட்டமை தோன்றச் "சோரனேன்" என்றருளினர். "நவநீதசோரன்" என்றுங்கு இச்சோரத்தனம் இகழ் வொடுபடாது புகழோடுபடுதலுமுண்டு. "சோராமற் பிடித்தவாறும்" என இயைக்க. "சோராமல் உணர்ந்து" என இயைப்பினுமாம். அன்றி அவ்விரண்டனோடும் தனித்தனி இயைப்பினும் அமையும்.

துகில் சோர்தலோடு வாய் துடித்தலையும் ஒருங்கு கூறியதால் அதுவும் காமக் குறிப்பினைப் புலப்படுத்த வந்ததாயிற்று. வாய் துடித்தல், முகங் குறுவேர் பொடித்தல், துகில் சோர்தல் என்னும் சத்துவங்கள் எல்லாம் காமத்தின் உண்மையையும் பிரிவாற்றுமையையும் புலப்படுத்தி வந்தன ஆகலானும், தலைமகள் கூற்று நிகழாது குறிபபே நிகழ்ந்தன என்றலானும், அன்ன பிறவற்றுனும் உள்ளப் புணர்ச்சியொன்றே பெற்றுர்க்குரிய மெய்ப் பாடுகள் பெற்றும். தம்முள்ளம் அவள்மேற் செல்லாதிருக்கவும தன்பாற் சென்றதாகப் பிறழக் கருதி நயந்தாள் எனினும் இழுக்காது. இங்ஙனம் பிறழ உணர்ந்தாளுக்குரிய மெய்ப்பாடுகளை அடிகள் உணர்ந்தாராதலின், அவ்வுணர்ச்சி தமக்குக் கேடு சூழ்ந்ததாயிறறு தம்முள்ளத்தே அவள் மேற் செல்லும் காதல் இல்வழியும், அவளை உற்று நோக்கிய குறைபாடே இறைவன் தம்மை உடன்கலந்துகொள்ளாமைக்கும், தாமும் உடல் களைந்து சேராமைக்கும் காரணமாதலின் "உணர்ந்து கேடு என் தனக்கே சூழ்ந்தேனே" என்றருளிச் செய்தார். அவள் நெஞ்சிற புக்கமைக்கு இரங் கினு நமாம். அன்றியும் இறைவனுல் அடிகளுக்குக் காட்டப்பட்ட இந்திரசால வித்தையில் நிகழ்ந்ததாஉம் ஆம்.

பெண்டிர் எனப் பன்மையாகக் கூறுமிடத்தில் எல்லாம் மண்ணே பொன்னே பெண்ணே என்னும் இயைபுபுறறிக் கூறியருளியதாகவும், ஈண்டுத் தம்மொடு படுத்துச் சிறப்புக் கூறியருளியதாகவும் கொள்க. ஒருத்தி துடித்தவாறும் பிறவாறும் இவர் உணர்ந்தாரேயன்றி அவள்மேற் காமங்கொண்டிலர் என்பது இத்திருப்பாட்டாற் பெறப்படாமையால், அடிகள் மோகமுற்றுர் என மயங்கிப் பொருள்கொண்டு வேறுவேறு உரைக்கும் உரையெல்லாம் பொருந்தா வென்க. இங்கே மாயாசக்தி

இங்ஙனமெல்லாம் மயக்கினுள் என்று கூறற்கண் அதனை வலியுறுத்தும் அகச் சான்றுகள் யாதுமின்மையினுலே, அவர் கூற்று தன்னுல் ஒன்று கருதிக் கூறலாய் முடியும என்க. இறையைப் பற்ருது பெண்ணைப் பற்றியதாகவே முடியும். பெண்ணுலேயே பொன்னும் மண்ணும் போற்றப்படுதலின்.

வாய் துடித்தலால் நாணுடைமையும், துகிலிறை சோர்தலால் காதொன்று கனைதலினும் விஞ்சிய நோயுடைமையும, குறுவேர் பொடித்த லால் ஆற்ருமையும தோன்றியவாறு காண்க. மரபொடு படாத பலவற்றை யும் சிலர் ஈண்டு ஏற்றிச் செல்வர். இவையெல்லாம மெய்ப்பாடுகள் ஆதலின், மாயாசத்தியைப் பெண்ணுக உருவகித்தனர் என்றல் சாலா தென்க. முன்னர் "ஊர் நாயேன்" என்றதும் யாமுரைத்த பொரு ளினையே வலியுறுத்தாநிற்கும்.

இறைவனை முன்னிலைப்படுத்தாது படர்க்கை முகமாக்கி உரைத்த ஒன்றே, ஒருத்தி தம்மீது காமமுற்றதும், அதனைத் தாமுணர்நது கொண்டதும், அது பெருங்குற்றமாதலும் புலப்படுத்திற்று. இவ்வாறு புலப்பட அருளிய செய்யுள் திறன் பெரிதும் பாராட்டற்குரியது.

அடியார் தோற்றத்துக்கு அடியாருகவும், காதலி தோற்றத்துக்குக் காதலனுகவும் தோன்றுதலால் "சோரனேன்" என்றருளினுர் இவ் விரண்டனுள் ஒன்றனைப்பற்றின் ஒரு துறைப்படலாம். இல்லறம் அல்லது துறவறம் என்றவற்றுள் ஒன்றைப்பற்றுதல் வேண்டுமென்பது கருத்து.

"இரண்டுமிலித் தனியனேன்" (திருச்ச. 26.)

என்றருளலும் நோக்குக.

காதற்பறறிலராயினும் ஒருத்தி தம்மேற் காதற்பற்றுடையளாயிருந்த மையின், அவள் காதற்குத் தாம் பறறிலர் எனபது, அவளால் உணரப் படுங்காறும் தாமதித்தே தில்லைக்கு வருதல் வேண்டுமென்பது இறைவன் கட்டளை.

தேனைப் பாலைக் கன்னலின்
தெளிவை ஒளியைத் தெளிந்தார்தம்
ஊனை உருக்கும் உடையானை
உம்ப ரானை வம்பனேன்
நான்நின் அடியேன் நீஎன்னை
ஆண்டாய் என்ருல் அடியேற்குத்
தானும் சிரித்தே அருளலாம்
தன்மை யாம் என் தன்மையே. 58

இதனுல், இறைவனை ஆண்டானுகவும் தம்மை யடிமையாகவும் வாயாற் சொல்லுதலே நகைப்பிற்குரிய இயல்புள்ளதாகும் என்றருளுகின்ருர்.

(பொ - ரை.) தேனை ஒப்பானும் பாலை ஒப்பானும் கரும்பின் சாற்றினை ஒப்பானும் ஒளி உருவுடையானும் நம்பினவருடைய உடம்பினையும் உருகச் செய்யும் முதல்வனும் வீட்டுலகை யுடையவனுமாகிய நின்னை நோக்கி, நீ என்னை ஆண்டாய், வீண னாகிய யான் உன்னடியேன் என்று செப்பிக் கூறினால், அங்ஙனம் விடையிறுத்த அடிமைப்பாடுடைய எனக்கு நீதானும் நகைத்தலைச் செய்தருளலாகும் இயல்பே என்னுடைய இயல்பாகும் எ - று

(வி - ரை.) தேன், பால், கன்னல்தெளிவு என்பன இறைவனைப் புகழ்ந்து கூறும் வாயினின்று ஊறும் இனிமை யூற்றுக்கு ஒப்பாக வந்தன. ஒளி என்பது, புலனாகிய அவன் திருமேனிக்கு ஒப்பாக வந்தது. அவனையே அங்ஙனம நுகர்ந்து காணுதல் வேண்டும் என்றற்கண் அவா மேலிட்டும், உலக இயல்பின்கண்ணுள்ள நுகர்ச்சிகளை நுகர்தற்கண்ணும், அவற்றை யெல்லாம் புகழ்தற்கண்ணும், காணுதற்கண்ணும் வெறுப்புமிக்கும், முன்னவை எய்தப் பெருமையானும் பின்னவை எய்தப் பெறுதலினாலும் உள்ளமேயன்றி உடலும் கட்டுவிட்டு நெகிழ்வடையச் செய்தலின் "தெளிந்தார்தம் ஊனை உருக்கும" என்றும், அங்ஙனம் உருக்கவே அவர்களை உடைமைப் பொருள்களாகக் கொண்டுளான் என்பதுதோன்ற "உடையான்" என்றும், இவ்வுலகத்தே வந்து உயிர்களை அடிமை கொண்டு தனக்குரிய அவ்வுலகத்திலே சேர்த்துக்கொள்வோன் என்பதுதோன்ற "உம்பரானை" என்றும், இவற்றை யெல்லாம் தான் பல பொருள்களிலும் குடிகொண்டு ஆங்காங்கே ஊறிவரும் இனிமையெல்லாவற்றையும் ஒரு சேரத் திரட்டப்பட்ட பேரினிமையாக இருந்தும், அன்பர் உள்ளங் கசிந்து அலறுதல் முதலாயவற்றால் அருளமுது சுரந்தும், அன்பர்தம் புலன்களை ஒடுக்கி வருத்தியலைக்க வெளிப்பட்டும், அங்ஙனம் ஐம்புலன்களும் ஒடுங்கிக் கண்ணென்னும் ஒரு புலனாகவே நிலைபெற்றிருக்க அதற்குப் புலனாகியும் இயற்றி வருதலாலே "தேனைப் பாலைக் கன்னலின் தெளிவை ஒளியை" என்றும, தாம் தெளிவிக்கத் தெளியாதவன் என்பது தோன்ற "வம்பனேன்" என்றும் அருளிச்செய்தார். உம்பர் - வீட்டுலகு. உம்ப ரான் - வீட்டுலகுக்குரியவன்.

"உடலிது களைந்திட் டொல்லை
உம்பர்தந் தருளு போற்றி" (திருச்ச. 64.)

என்றருள்வர் பின்னும்.

இங்ஙனமெல்லால் அழைத்தற்குரியையாகிய நீ யாவன், யான் நினக்கு என்ன முறையினேன் என்று இறைவன் தம்மை வினவியதாக உட்கொண்டு நான் நின் அடியேன், நீ என்னை ஆண்டாய் என விடையிறுத் தருளினார். "என்றால்" என்பது நீ அங்ஙனம் வினவின் நான் இங்ஙனம் விடையிறுப்பேன் என்பதுபட நின்றது. அந்நிகழ்ச்சிதானும் என்பது அடிகள் திருவுள்ளம்.

நீ யாவன், எத்தொடர்புபற்றி என்னை அழைக்கின்றனை என்றாங்கு நீ என்னை வினவவும், அதற்கு யான் விடையிறுக்கப் பெறின், அங்ஙனம் விடையிறுத்தற்குரிய அடிப்பாடுடையவன் யான் ஆவேன். அவ்வடிப்பாடு நகைப்பினை விளைக்கும் என்க. வெறுத்தழித் தொதுக்கி எள்ளி நகையாடற் பாலதுவே ஆண்டுக் கூறியருளிய நகைப்பும் இயல்பும் என்க.

**தன்மை பிறரால் அறியாத தலைவா பொல்லா நாயான**
**புன்மை யேனை ஆண்டுஐயா புறமே போக விடுவாயோ**
**என்னை நோக்கு வார் யாரே என்நான் செய்கேன் எம்பெருமான்**
**பொன்னே திகழும் திருமேனி எந்தாய் எங்குப் புகுவேனே 59**

இதனால், ஆண்ட நீ பின்னர்க் கைவிடுவையேல், என்னை நோக்குவார் யார்? யான் என் செய்வேன்? எங்குப் புகுவேன்? இப்படியாய என்னை விடுவாயோ என்றருளுகின்றார்.

(பொ - ரை.) (நின்னியல்படைந்த அன்பரானன்றிப் பிறரால் அறியப்படாத இயல்பினையுடைய தலைவனே, ஐயனே, எம்பெருமானே, பொன்போல் விளங்குந் திருமேனியையுடைய எந்தையே, (கொடிய நாயின் இயல்பினையுடையவனாகிய புல்லிய தன்மையுடைய யான் நின்னால் (கைவிடப்படின்) என்னைக் கடைக்கணிப்பவர் யார்? யான் என்ன செய்யவல்லவனாவேன்? யான் எங்கே அடைக்கலம் புகுவேன்? இத்தகைய என்னை ஆண்டுகொண்டு உன்னருளுக்குப் புறம்பாகச் செல்லவிடுவாயோ எ - று.

(வி - ரை.) நோக்குவார் இல்லாதும் செய்வதொன்று இயலாதும் புகுமிடம் இன்றியும் இடர்ப்படும் எனக்கு, நீ கடைக்கணித்துச் செய்வது அறிவித்து புகுமிடமாகத் தோன்றியும புறந்தருதலன்றிப் புறமபோக விடுவாயோ என்க. "விடுவாயோ" என்றது, நின்னால் விடுதல் சாலாது; விடினும் நீ ஆண்டதும் யான்ஆளப்பட்டதுமாகிய தொடர்பும் நீங்காது; அங்ஙனமாதலின் நீயே எவ்வாற்றானும் நின் பெருமையைப் பேணும் பொருட்டுப் புறந்தருதல் வேண்டும் ஆதலால், கைவிட்டு இழிவடைந்து பின் புறந்தருதலினும் இன்னே கைவிடாது புறந்தருதல் பிறர் அறியாது பெருமை தழைத்தற்கு ஏதுவாகும் என்னும் அறிவுறுத்துமாற்றை உள்ளடக்கி நின்றது.

தன்னைத்தான் அறிதலன்றிப் பிறரால் அறியவொண்ணாத தலைவனுமாம். அறியாதான், தலைவன் என்க.

"சிவமாநகர குறுகப்போனார் அடியார்
யானும பொய்யும் புறமே போந்தோம்" (திருச்ச. 85)

என்றருள்வர் பின்னும். "எம்பெருமான" என்றருளினர் "பிழைத்தவை பொறுக்கை யெல்லாம் பெரியவர் கடமை" எனபது குறித்து. "ஐயா, எநதை" என்பன ஆசிரியனாவான் என்பதைப் புலப்படுத்தி நின்றன.

நன்மை செய்யப்படவேண்டிய தலைவனுக்குக் கேடு சூழ்ந்த நாய் என்பதுபடப் "பொல்லா நாய்" என்றார்.

புகுவேன் எனதே நின்பாதம்
போற்றும் அடியார் உள்நின்று
நகுவேன் பண்டு தோள்நோக்கி
நாணம் இல்லா நாயினேன்
நெகுமன்பு இல்லை நினைக்காண
நீஆண்டு அருள அடியேனும்
தகுவ னே என் தன்மையே
எந்தாய் அந்தோ தரியேனே. 60

இதனால், என்தன்மையே என்னால் ஆற்றற்கு இயலாதபோது நின்னை நொந்து ஆவது என் என்றருளுகின்றார்.

(பொ - ரை ) எந்தாய், நின் திருவடிகளைப் போற்றுதல் செய்யும் அடியார் நடுவுள் இருந்து (நின்னால் எனக்கு அளிக்கப்பெற்ற பேற்றினை உன்னி யானே மேலானவன் என்று) அகங் களிப்படைவேன். ஆனால் அப்பண்டைக் காலத்திலேயே (அவ்வடியார் தோள்நோக்கம் ஆடுங்கால் அவருடன் கலந்து) என் தோளினை நோக்கி (இது தலைவன் துயில்கொள்ளும் இன்பாயலன்றே என் றெண்ணுதலால் நின்மேல் வேட்கை மிக்கு) நின்னைக் காணுமாறு நெகுதலைச் செய்யும் அன்பு என்மாட்டில்லை. (அது காரணமாக நீ என்னைப் பிரிந்தனையாக அப்பிரிவுணர்ந்தும்) நாணமடையாத நாயாவேன் யான். ஆதலால் எனக்கு அமைந்த புன்னெறிக் கண்ணேயே யான் புகுவேனாவேன். அத்தகைய அடியேனாகிய யானும் நீ ஆண்டருளுவதற்குத் தகுதியுடையேன் ஆவனோ? (தகேன் ஆதலின்) ஐயகோ! என் தன்மையையே யான் தாங்ககில்லேன். (அங்ஙனமாக நின்னை நொந்து ஆவதென் எ - று.

(வி - ரை.) அடியாருள் நின்று நகுதல் புல்லறிவு குறித்து நின்றது. குழலும் தோளும் தலைவற்குரிய என்பர்.

"தாம் வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிது கொல்
தாமரைக் கண்ணா னுலகு" (குறள். 111-3.)

என்பது காண்க. இத்தோள் தலைவற்குரியது என மகிழ்ந்து அத்தோளினை நோக்கியாடுதல் என்க; "தோள் நோக்கி" என்றது தோணோக்கமாடுதலை.

தோணோக்கமாடுதற்கும் உன்னைக் காண்டற்கும் உரிய அன்பு இல்லை என்றருளியபடி. தலைவன் தன்னைப் பிரிந்தனனாக, அப்பிரிவு தன் குற்றத்தான் ஆயதன்றே? ஆகலின் ஏனையோர் தன்னைக் கற்பிலி என்றுங்கு எள்ளி நகையாடுவரே என்றிங்ஙனம் இழிவடைதற்கு நாணமற்ற

நாயினேன் என்க. நாணற்ற நாயாதலின் புன்னெறிக்கண்ணேயே புகுவன் என்றருளியபடி.

முன்னர்ப் "புறமே போக விடுவாயோ" என்றவாற்றான் இறைவன் இழிவு உரைத்தருளியவர், இத்திருப்பாட்டால் தம்மிழிபு உரைத்தருளினார். இங்ஙன மெல்லாம் ஒருகாலைக் கொருகால் மாறுபடும் மன அலைவே இத் திருவாசகத்தில் பெரும்பாலும் காணப்படுகின்றது. அவற்றையெல்லாம் ஆங்காங்கு உய்த்துணர்க.

நெகுமன்பு இன்மை, நகுதலுக்கும், தில்லை புகாமைக்கும், தரியா மைக்கும் காரணமாயிற்று. ஆற்றாமையுடைய அடிகள் திருவுள்ளம் அதனை ஆற்றற்பாலதாகிய காயத்தை ஒழித்தல் என்பது பற்றி நின்றது.

இனி, பெண்ணொருத்தி அடிகள்பால் காதலுற்று ஆயத்தாரோடும் தோணோக்க மாடினளாக, அடிகள் அது குறித்து இகழ்ந்து நக்கனர். அது குற்றமாயிற்று. ஆதலால் ஆண்டருளத் தகுவனே என்றுரைத்தலும் ஒன்று. இதுவும் இறைவன் அருளிய இந்திரசால மென்க. அடிகள் தம்மைச் 'சோரனேன்' என முன்னர்க் கூறிய திருக்குறிப்பும் ஈண்டு நோக்கி இன்புறற்பாலது.

திருச்சிற்றம்பலம்

# 7. காருணியத் திரங்கல்

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**தரிக்கிலேன் காய வாழ்க்கை சங்கரா போற்றி வான**
**விருத்தனே போற்றி எங்கள் விடலையே போற்றி ஒப்பில்**
**ஒருத்தனே போற்றி உம்பர் தம்பிரான் போற்றி தில்லை**
**நிருத்தனே போற்றி எங்கள் நின்மலா போற்றி போற்றி. 61**

இதனால், உடல் வாழ்க்கையை ஆற்றகில்லேன் என இறைவற்குப் போற்றி உரைத்து விண்ணப்பித்தருளுகின்றார்.

(பொ - ரை) இன்பம் அளிப்போனே வணக்கம், பாழ் வெளியிலே உறையும் பழையோனே வணக்கம், அடியேங்கள் பெருமையிற் சிறந்தோனே வணக்கம், நிகரற்ற ஒருவனே வணக்கம், வானவர் தலைவனே வணக்கம், தில்லைப் பொதுவில் கூத்தயர்வோனே வணக்கம்; எங்கள் தூயவனே வணக்கம், உடம்பொடு உறவுபூண்டு வாழ்ந்துவரும் வாழ்வினை ஆற்றேனாகிய எனது வணக்கம் எ - று.

(வி - ரை.) இன்பம் அளிப்பவனுதலின் "சங்கரன்" என்றும், அவ்வின்பந்தானும் பேரின்பம் என்பது தோன்ற "வான விருத்தன்" என்றும், திண்ணியனுய் எங்கட்குப் பெருமையும் சிறப்பும் தருதற்கென அவைதம்மையுடையோன் என்பது தோன்ற "எங்கள் விடலை" என்றும், ஏனைய அரி அயன் என்பாரோடு ஒப்புமைக்கும் ஒப்பற்றவன் ஆதலின், அவனே படைத்தற்கும் காத்தற்கும் ஒடுக்கற்கும் வல்லான் என்பது தோன்ற "ஒப்பில் ஒருவன்" என்றும், அக்காரணத்தாலே தேவர் தமக்கும் பிரான் அவனே என்பது தோன்ற "உம்பர் தம்பிரான்" என்றும், அவனே உலகோர் உய்யும் பொருட்டுத் தில்லையிற் கூத்தயரா நின்றான் என்பது தோன்றத் "தில்லை நிருத்தன்" என்றும், அவனடி சார்தலாலே காயக் கட்டு அற்றுப்போகும் என்பது தோன்ற "நின்மலன்" என்றும், அடைவுபடுத்தியருளினர். தனக்குள்ள இயல்பெல்லாம் எனக்கு என வைத்துள்ளவன் என்பது கருதிக் "காய வாழ்க்கை தரிக்கிலேன்" என்று தமது உட்கோளை வணக்கம் கூறி வேண்டிக்கொண்டருளியவாறு. இவ் வேண்டுகை பிரார்த்தனை எனப்படும்.

போற்றி - வணக்கம். பின்னர்க் "கண்டு கொண்டருளு" எனக் கூறியருள்வர் ஆகலால் காக்க என பொருளுரைத்தல் சிறவா தென்க.

போற்றிஓம் நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றிஓம் நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றிஓம் நமச்சி வாய புறம்எனைப் போக்கல் கண்டாய்
போற்றிஓம் நமச்சி வாய சயசய போற்றி போற்றி. 62

இதனுல், திகைக்கின்றேன், திகைப்பு நீக்கும் புகலிடம் வேறிலேன்; என்னைப்புறம் போக்கற்க எனத் தமது ஆற்றுமையைப் புலப்படுத்தியருளுகின்றார்.

(பொ - ரை) ஓம் நமச்சிவாயனே நினக்கு வணக்கம், பாம் பணிந்தவனே அடியேன் திகைப்புறுகின்றேன், ஓம் நமச்சிவாயனே, நின்னையே அன்றித் தஞ்சமாகப் புகுமிடம் வேறில்லை; ஓம் நமச்சிவாயனே, நினக்கு வணக்கம், அடியேனை நின்னருளுக்குப் புறமே செல்லவிடற்க, ஓம் நமச்சிவாயனே, நினக்கு வணக்கம், சயமுடையவனே சயமுடையவனே, நினக்கு வணக்கம் வணக்கம் எ - று.

(வி - ரை.) அரவின் விழைவினை நிறைவேற்றி அதனை அணியாக அணிந்து கொண்ட பேரருளினை உடைய நீ, யான் மயங்காவாறு புகலிடம் தந்து புறம் போக்காது என்னைக் காத்தற்கும் உரியையாவை என்க.

"ஓம் நமச்சிவாயன்" என்றது இடுகுறியளவாய் இறைவனுக்குப் பெயராயிற்று. "ஓ" எனக்கொண்டு கூறுவாரும் உளர்.

"மயங்குகின்றேன்", "புகலிடம் பிறிதொன்றில்லை", "புறமெனைப் போக்கல்" என்பன இடையிடையே வேண்டிக்கொண்ட வேண்டுகோள். கண்டாய், முன்னிலையசை.

*நீ எனக்கு அருளிச் செய்த பிரணவத்தோடு கூடிய திருவைந்தெழுத்தினை யான் இப்போது நான்கு முறை ஓதிவிட்டேனுதலால் இனி எனக்குத் திகைப்பில்லை ; புகலிடம் உளதாயிற்று ; அருளகம் புக்கு உரிமை பெற்றேன் ; வெற்றி பெற்றேன், நீயும் வெற்றி பெற்றாய் என உட்கொண்டு இங்ஙனம் போற்றிசைத் தருளினர்.*

**போற்றி என் போலும் பொய்யர் தம்மை ஆட் கொள்ளும் வள்ளல்**
**போற்றி நின் பாதம் போற்றி நாதனே போற்றி போற்றி**
**போற்றி நின் கருணை வெள்ளப் புதுமதுப் புவனம் நீர்தீக்**
**காற்று இய மானன் வானம் இருசுடர்க் கடவு ளானே. 63**

இதனால், எல்லாமாய் நிற்கும் இறைவன் பொய்யரையும் ஆட் கொள்ளும வள்ளல் எனப் போற்றியருளுகின்றார்.

(பொ - ரை ) *நிலம் நீர் தீ காற்று வேள்வியாசான் வெளி ஞாயிறு திங்கள் என்னும் எட்டினையும் உருவாகக்கொண்டு எல்லாவற்றையும் கடந்துள்ள பொருளே, நினது அருளாகிய புதிய தேன் வெள்ளத்திற்கு வணக்கம், அஃதுடைமையானே என்னைப்போலும் பொய்ப் பொருளாகிய நிலையுதல் இல்லாதவற்றுட் பற்றுடையாரையும் ஆட்கொண்டருளும் பெருங்கொடையாளனே, வணக்கம் ; அக்கொடைப் பொருளாகிய உன்னுடைய திருவடிக்கு வணக்கம்; உடல் உயிர் உலகு என்னும் இவற்றிற்கெல்லாம் தலையாயவனே, வணக்கம், வணக்கம் எ - று.*

(வி - ரை.) எல்லாவற்றையும் கடந்துள்ளவனாகிய கடவுள் தன் மாட்டு இயல்பாகவுள்ள கருணையினால் எட்டு உருவங்களையும் பூண்ட மூர்த்திமானாய், வள்ளன்மை பூண்டு அவ்வெட்டு உருவடங்கிய திருவடியை வழங்கி ஆட்கொண்டு, அங்ஙனம் ஆட்கொண்ட உரிமைப்பாட்டினாலே நாதனாயினான். இது தெரித்தற்கன்றே "நாதனே போற்றி போற்றி" என இரு முறை எடுத்துப் போற்றிசைத்தருளினர்.

*இயமானன் - வேள்வியாசான். உயிர் என்று சாதிப்பாரும் உளர். வள்ளல் - தன்னிலையோடு கொள்வோன் நிலையையும் வரைந்தறியாது கொடுப்பவன். " புவனம்...இருசுடர் " என்பவை இறைவற்குரிய எட்டு வடிவங்கள். புதுமது வெள்ளம் என்றதற்கேற்ப இறைவனாகிய கற்பகம் என்க.*

கடவுளே போற்றி என்னைக் கண்டுகொண் டருளு போற்றி
விடஉளே உருக்கி என்னை ஆண்டிட வேண்டும் போற்றி
உடலிது களைந்திட் டொல்லை உம்பர்தந் தருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி. 64

இதனால், என்னைக் காண்க; என்னுள்ளத்தினை உருக்கி ஆள்க. உடல் களைந்து உம்பர் அருளுக என வேண்டிப் போற்றுதல் கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) கடவுளே நினக்கு வணக்கம்; என்னிலையைக் கண்டு இரங்கி அருள் செய்வாய் (நினக்கு) வணக்கம். என்னுட்பற்றெல்லாம் ஒழிய என்னை நெகிழ்வித்து ஆட்கொள்ள வேண்டும்; (அங்ஙனமாட் கொள்ளும் ஆண்டவனே, நினக்கு) வணக்கம், (இழிவுடைத்தென்று கருதப்பட்ட) உடலாகிய இதனை நீக்கி விரைந்து வீட்டினைக் கொடுத்தருள்க; (அங்ஙனம் கொடுப்பவனே, நினக்கு) வணக்கம்; சடையின் அகத்தே கங்கையை ஒடுங்குமாறு வைத்தவனே நினக்கு வணக்கம், சங்கரனே, நினக்கு வணக்கம் எ - று.

(வி - ரை.) சடையுளே கங்கையை வைத்து உலகமழியாது இன்புறச் செய்தமையால், சங்கரன் என்பதற்குப் பொருள் புலப்பட வைத்தருளியமை பாராட்டற்பாலது. ஒரு துளியாகிய கங்கையே இவ்வுலகில் உள்ளார் தீவினையைக் கெடுத்தலின், நின் சடைக்கண் அமைந்த கங்கைப் பெருவெள்ளம் வாளா நிரம்பியுள்ளதென உயிர்களின் சிறுமையும், கங்கையின் பெருமையும் குறித்து நிற்றல் காண்க. விட - பற்று விட. உளே - என்னுள்ளே.

முன்னர் உள்ளம் உருக்காதும் உடல் களையாதும் ஆண்டருளியது போதும்; இனி அங்ஙனம் ஆளாது இங்ஙனம் ஆண்டுகொள்க என்க.

சிறிது தாழ்ப்பினும் அவமே ஏக்கங்கொண்டு இறந்துபடுவேன் என்பது தோன்ற "உடலிது களைந்திட்டு ஒல்லை உம்பர் தந்தருளு" என்றருளினர். கங்கையின் செருக்கடக்கியாங்கு என் செருக்கினையும் அடக்கியாளுக என்றருளியபடி.

உள்ளம் உருகத் தானே உடலழிவதாய் இருக்கவும், அவ்வுடலின் கொடுமை நினைந்து அதனையும் நீ களைந்தருளல் வேண்டும் என்றருளியவாறு.

"கண்டு கொண்டருள்" என்பதற்கு எனது நிலைகண்டு என்னைப் புறம் தள்ளாது அகத்திலே கொண்டருள்க எனினும் பொருந்தும். உள்ளத்திற்கு நெகிழும் ஆக்கமும், உடலிற்கு அழிவும், உயிர்க்கு வீடுபேறும் உண்டாமாறு என்னைக் கடைக்கணித்து அடிமை கொண்டருள்க என்க.

**சங்கரா போற்றி மற்ருேர் சரண்இலேன் போற்றி கோலப்**
**பொங்கரா அல்குல் செவ்வாய் வெண்ணகைக் கரிய வாட்கண்**
**மங்கை ஓர் பங்க போற்றி மால்விடை ஊர்தி போற்றி**
**இங்(கு)இவாழ் வாற்ற கில்லேன் எம்பிரான் இழித்திட்**
**டேனே. 65**

*இதனுல், உலக வாழ்வினைத் தாங்கற்கு இயலேன்; யானே என்னை இழிவுடையனுக்கிக்கொண்டேன் என்றருளுகின்ருர்.*

(பொ - ரை.) நலன் ஆக்குவோனே நினக்கு வணக்கம்; நின்னைத் தவிர்த்து வேறு புகலிடம் இல்லாதேன் (சரணுகதியாக உள்ளவனே) நினக்கு வணக்கம், மேற்கிளர்ந்த நல்ல பாம்பினுடைய விரித்த படம்போன்ற தோற்றத்தினையுடைய அழகிய அல்குலினை யும் சிறந்த இதழினையும் வெள்ளிய பல்லினையும் வாட்படையை ஒத்த கருங்கண்ணினையும் உடைய உமை மங்கையை இடது பாகத்திலே கொண்டவனே, நினக்கு வணக்கம். திருமாலாகிய எருத்தினை ஊர்ந்து செல்பவனே, நினக்கு வணக்கம்; எம்பெரு மானே, இவ்வுலகிலே (பேரின்பத்தைப் பெற்றுக்கொள்ளற்கியலாத) இந்த வாழ்க்கையை ஏற்றுப் பொறுத்தற்கு இயன்றிலேனுகிய யானே இவ்வாழ்க்கையை இழிவாக்கிவிட்டேன் எ - று.

(வி - ரை.) ஈற்றடியிற் கூறியவை வேண்டுகோளும் ஏனையவை வணக்கமுமாம். தாம் வீடு பெறுதற்பொருட்டு, இறைவனை உமைபங்க னுகவும் இடபாரூடனுகவும் தியானம் செய்து நலன்புரியும் திருப்பெயரினை அவனுக்கிட்டு அழைத்தருளினுர் என்க.

நின்னருளாலாகிய உடல் உலகு முதலிய கருவிகளைக்கொண்டு நின் திருவடி எய்தற்கேற்ப இங்கு நடாத்தற்குரிய இவ்வுலக வாழ்வைக்கொண்டு நின் திருவடிப்பேறு எய்தாவாறு யான் நடத்தினேன் ஆதலால் "இங்கு இவ்வாழ்க்கையை ஆற்றகில்லேன்" என்றும், நீ அளித்த உடல் முதலாய கருவிகளையும் இழிவுடையனவாகச் செய்து யானும் இழிந்திட்டேன் ஆதலால் "இழித்திட்டேன்" என்றும் அருளிச்செய்தார்.

அரா சீற்ற முற்ற காலத்தே படமெடுத்து அதனை உடனே ஒடுக்கி விடும்; இசை முதலாயவற்றின் இன்பத்தை நுகரும்போதே எழும்பிப் பட மெடுத்து அசைந்துகொண்டிருக்கும் இயல்பினது. அன்னவாருதலின் "பொங்குதல்" என்பதற்கு மேற்கிளர்தல் என்ருதல், மகிழ்தல் என்ருதல் பொருளுரைக்க. அரா - நல்ல பாம்பு.

**இழித்தனன் என்னை யானே எம்பிரான் போற்றி போற்றி**
**பழித்திலேன் உன்னை என்னை ஆளுடைப் பாதம் போற்றி**
**பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர் கடமை போற்றி**
**ஒழித்திடுஇவ் வாழ்வு போற்றி உம்பர்நாட்டு எம்பி ரானே. 66**

இதனால், என் பிழை பொறுத்து இவ்வாழ்வினை ஒழித்தருள் என்பது கூறியருளப்படுகின்றது

(பொ - ரை) எம்பிரானே, நினக்கு வணக்கம், என்னை யானே கீழ்ப்படுத்திக்கொண்டேன், உடல் உறுப்பு உலகு என்னும் இவைகளை அளித்த உன்னைப் (பழி செய்தாய் எனப்) பழித்தலையும் செய்தேன் இல்லை (அங்ஙனம் பழிக்கப்படாதவனே, நினக்கு) வணக்கம், என்னை அடிமையாக ஆளுதலையுடைய திருவடிகளுக்கு வணக்கம், (எண்ணம் சொல் செய்கை என்னுமிவற்றால் செய்த) பிழைகளை எல்லாம் பொறுத்து இரங்கி அருள்புரிவது பெருமையை யுடையார் கடப்பாடாகும் (ஆதலால் என் பிழைகள் எல்லாவற்றை யும் பொறுத்துஇரங்கி அருள்வோனே, நினக்கு) வணக்கம், இவ் வுலக வாழ்க்கை கயை நீக்கிவிடுக, (அங்ஙனம் என் பிறவியை நாசஞ் செய்வோனே, நினக்கு) வணக்கம், வீட்டுலகிலுள்ள எமது தலைவனே நினக்கு வணக்கம் எ - று.

(வி - ரை.) வீடுபேறு எனக்கு அளிப்பவன் என்பார் "உம்பர் நாட்டு எம்பிரான்" என்றருளினர். உம்பர் நாட்டுப் பிரான், எம்பிரான் என இயைக்க.

இறைவன் அளித்தருளிய உறுப்பு உடல் உலகு என்னுமிவை தக்கனவல்ல, தீயனவற்றையே அளித்தான்; ஆட்கொண்டு கைவிட்டான்; ஓரம் செய்தான் என நின்னைப் பழித்திலேன். ஆட்செய்யும் அறிவின்மை யால் உறுப்பு உடல் உலகு என்னுமிவற்றால் தீது எய்தினேன்; யானும் இழிந்தேன், அவற்றையும் இழித்தேன் என்க.

உன்னைப் பழித்திலேன், அங்ஙனம் பழிக்கப்படாதவனே, போற்றி என இசை எச்சங்களை விரித்துரைக்க. இங்ஙனமே முன்னும் பின்னும் பெயர் வரும்போது அதன் பொருட்குரிய வினைகளையும், வினைவரும்போது அவ்வினையை இயற்றிய பெயரினையும் விரித்து நிரப்புக.

என்னை இழிவாக்கிக்கொண்டமையே யான் செய்த பிழை என்க.

எம்பிரான் போற்றி வானத் தவரவர் ஏறு போற்றி
கொம்பரார் மருங்குல் மங்கை கூறவெண் நீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத் திருச்சிற்றம் பலவ போற்றி
உம்பரா போற்றி என்னை ஆளுடை ஒருவ போற்றி 67

இதனால், தன்னை யடிமையாகவுடையவன் இறைவன் ஒருவனே எனத் துணிந்து அச்சம் அகன்று வீடு பெறுதல் கூறியருளப்படு

(பொ - ரை.) எம்முடைய தலைவனே, நினக்கு வணக்கம்; வானுலகங்களில் உள்ள தேவர்கள் தலைவர்களாகிய அவர்களுக்கு

ஓர் ஆண்சிங்கம் போன்றவனே, நினக்கு வணக்கம்; கொடி போன்ற இடையையுடைய உமை மங்கையை இடப் பாகத்திலே கொண்டவனே, திருவெண்ணீறு பூசியவனே, நினக்கு வணக்கம்; செய்ய மேனிகொண்டு செவ்விதாகிய நெறிகாட்டும் தலைவனே, நினக்கு வணக்கம்; வீடுபேருகிய திருவினை உடைய தில்லை ஞானப் பொதுவினை உடையவனே, நினக்கு வணக்கம்; வீட்டுலகத்தவனே, நினக்கு வணக்கம், என்னை அடிமையாக உடைய ஒருவனே, நினக்கு வணக்கம் எ – று.

(வி - ரை.) செம்மை, நிறமும் நேர்மையுமாம். செம்பிரான் என்றது, அந்தண கோலத்தோடு வந்து ஆண்டருளிய ஆசிரியனை. வானத்துள்ள வராகிய அவர் தமக்கு ஏருவான் எனினும் இழுக்காது. வானத்தவர் - வான் பத ஆட்சி பெற்றிருப்போர்.

"செம்பெருமான்" (திருத்தசாங். 1.)

என்பதுபோலச் "செம்பிரான்" என்பதும் பொருள்படும்.

பொய்யருகிய தன்னை ஆட்கொள்ளவல்லுநர் பிறர் எவரும் இலர் என்பது தோன்ற "என்னை ஆளுடை ஒருவ" என்றருளினர்.

திருநீறு பூசியவனுய், உமையைக் கூற்றின்கண் உடையனுய் அமைபவனே செம்பிரான் என்க. இறைவனை அம்மையப்பராகக் காணுருக்கு வீடுபேறில்லை என்ப ஆகலின், அவன் வானத்தவர் ஏருகிக் கைலைக் கண்ணும், மண்ணுளார்க்கு எளியனுகித் தில்லைச்சிற்றம்பலத்தின்கண்ணும் வீற்றிருப்பான் என்க.

வானத்தான் உம்பரான் என்றும், மண்ணகத்தான் திருச்சிற்றம்பலவன் என்றும் அழைக்கப்படுவன் என்க. போலியன்பு செய்யும் தேவர்க்கு ஏருகவும், மெய்யன்பு செய்வார்க்கு எளியனுய் எம்பிரானுகவும் நிற்றலினுல், அவன் "செம்பிரான்" எனச் சிறப்பித்தருளப்பட்டான் என்க. அச்செம்பிரான் ஆயவனே என்னையும் ஆளுடை ஒருவன் ஆவன் என்க.

என்னை ஆளுடை ஒருவன் உம்பரானுய், வானத்தவர் ஏருய், மண்ணகத்தவர்க்குத் திருச்சிற்றம்பலவனுய், அன்பரை ஆட்கொள்ள உமை கூறனுய், என் பெருஞ்செல்வம் நல்கும் திருநீற்றை அவ்வன்பர்க்கு அருளுதற்கு உடையவனுய் எழுந்தருளுவோன் ஆதலின், அவனே செம்பிரான் ஆவன்; எம்போன்ருர்க்குப் பிரானுமாவன் எனினும் ஒக்கும்.

**ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி வானேர்**
**குருவனே போற்றி எங்கள் கோமளக் கொழுந்து போற்றி**
**வருகஎன்று என்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி**
**தருகநின் பாதம் போற்றி தமியனேன் தனிமை தீர்த்தே. 68**

இதனால், என்னைத் தில்லைக்கு வருகவென்றழைத்துப் பாதம் நல்கவேண்டும் என்றருளுகின்றார்.

(பொ - ரை.) (எல்லாவற்றையும் எல்லாம் செய்யவல்ல) ஒருவனே நினக்கு வணக்கம்; (தந்தைமுறையுடையார் தம்முள்ளே) ஒப்பில்லாத அப்பனே நினக்கு வணக்கம், தேவர்க்கு ஆசானாகிய அந்தணனே நினக்கு வணக்கம்; அடியேங்கள் அழகின் கொழுந்தே நினக்கு வணக்கம்; நீ இங்கே வா வென்று (எனக்குக் கட்டளையிட்டு இவ்வுலக வாழ்வினின்றும்) என்னைப் பிரித்தெடுத்து நின்பால் வாங்கிக்கொள்ளவேண்டும், (அங்ஙனம் செய்வோனே, நினக்கு) வணக்கம்; அங்ஙனம் செய்வதால் தனிமைப்பட்ட எனது துணையின்மையை ஒழித்து என்னை வாங்கியதற்கு மாறாக உன்னுடைய திருவடியைக் கொடுத்து அருளுக. (அங்ஙனம் அருள்வோனே, நினக்கு) வணக்கம் எ - று.

(வி - ரை.) வாங்குதல் என்பதற்குத் தப்புமாறு உய்வித்தல், பிரித்தெடுத்தல், பெயர்த்தெடுத்தல், ஏற்றுக்கொள்ளுதல் என்னும் பொருள்கள் ஈண்டுக்கொள்ளற்பாலன. தக்கயாகப்பரணி யுரையாசிரியரும் இங்ஙனமே உரை உரைத்துச் செல்வர். தக்கயாகப்பரணி, 38, 54, 104, 476, என்னும் தாழிசைகளின் உரைகளை நோக்குக.

तदन्ते भगवान् शंभुरा विरासीज्जगद्गुरः ।

எனச் சிவரகசிய காண்டம் கூறுதலின், இறைவன் எல்லா உலகங்களுக்கும் குரவன் எனப்படுதல் தெளியப்பட்டமையின் வானோர்க்குங் குரவனாயினன் என்க.

" சகந்த னக்கோர் குரவனும் சம்புவும்
பகவ னுமாம்ப ரன்உல கோர்படும்.
மிகுதுயர் கண்டு வேதியன் மாலெதிர்
தொகும் அழற்பிழம் பாகவே தோற்றினன் "

என்பது அஃதடங்கிய பொருட் செய்யுள்.

சிவபெருமான் வானவர்க்கே யன்றி அவுணர்களுக்கும் குரவன் ஆவான் என்பதை

देवासुरगुरुर्देवो देवासुर नमस्कृत:

(தேவர்களுக்கும் அவுணர்களுக்கும் இறைவன் ஆசானவான்) எனச் சிவ சகச்சிரநாமம் 145-ஆம் சுலோகத்தானும்,

गुरप्रिया

(குருவாகிய சிவபெருமானுக்குக் காதலாட்டி) என லலிதா சகச்சிர நாமம் 140-ஆம் சுலோகத்தானும் அறிந்துகொள்க. குருவென்பது ஒருமைச் சொல்லாகலின் 'குருவன்' என இறைவனை அழைத்தனர் அடிகள். " மிழலையுட் குருவனே " என்றார் அப்பர் சுவாமிகளும்.

त्व देवेषु ब्राह्मण:

(நீவிர், (சிவபெருமான்) தேவர்களுள்ளே அந்தணர்) எனச் சாம வேதீய பிரபதப் பிரமாணத்துள்ளும்,

ब्राह्मणोऽस्य महादेव: क्षत्रियो विष्णुरित्यपि ।

எனத் தக்ஷகாண்டத்துள்ளும் கூறப்பட்டமையால் "வானவர் குருவனே" என்றருளிச் செய்தார். இன்னுமிதனுனே தேவகுருவாகிய வியாழ பகவானும் இறைவன் அமிசமே யாவன் என்பதும் தெளியப்படும்.

"விற்றெலாம்மிக ஆள்வதற்குரியவன்" (திருச்ச. 34.)

விற்றற்கும் ஆளற்கும் உரியவன் எனவும்,

"இருந்தென்னை ஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை"
(நீத்தல். 18.)

எனவும் கூறியருளுதலால், இங்கே "வாங்கிடவேண்டும்" என்றதற்கு, உலகிலே ஒற்றிவைத்திருந்த என்னை மீண்டும் திருப்பிக்கொள்ளல் வேண்டும் எனப் பொருளுரைப்பினுமமையும்.

எல்லாமாய் அல்லதுமாய் நிற்கும் ஒருவன், அரசன் முதலாய ஐவரும் தந்தையர் எனப்படுவரேனும் அவரெல்லாம் இறைவனுக்கு ஒப்பாகார்; முடிவிலே இறைவனையே பெறுதலால், இறைவன் அளிக்கும் செல்வமும் இன்பமும் அழிவற்றன என்க. இறைவனை ஒழிந்த விண்டு அரசனுகவும், பிரமன் வைசியனுகவும், ஏனையோர் சூத்திரராகவும் கொள்ளப்படுதலால், அவ்வானவர்க்கும் இறைவனே குருவனுவான் எனக் கொள்க. என் குருவே எல்லாமாய் அல்லவுமாய் நிற்பவனும், எங்கட்கும் வானவர்கட்கும் உய்தியளிக்கும் குருவனும் ஆவான் என, அவனடி சேர்தலால் உளதாகும் சிறப்புத்தோன்ற இங்ஙனமெல்லாம் இறைவனைப் போற்றி செய்து அருளினுர்.

விற்க வாங்க ஒற்றிவைக்க எல்லாம் உரியையேனும் வேண்டுவார் வேண்டுவதனையே ஈயும் வண்மையுடையையாதலால், நீ என்னை "வருகென வாங்கல் வேண்டும்; தனிமை தீரப் பாதம் நல்க வேண்டும்" என வேண்டியருளினுர்.

'சுடர்க்கொழுந்தே' என்றுங்கு இளமைச் செவ்விக்கு ஏற்ற "கொழுந்து" என்க.

உலகத்தவர் உறவினின்றும் பிரிக்கப்பட்டனராதலின் "தமியேன்" என அருளிச் செய்தார். தீர்த்து என்றதனைச் செயவென்னெச்சமாகக் கொண்டு பொருள் கொள்க. மனம் ஏதாவதொன்றனைப் பற்றியே தீர வேண்டுமாதலால், தனிமை தீரத் திருவடி நல்குதல் வேண்டுமென்றருளினுர். பற்றற்றுன் தாளைப் பற்றுதலால் ஏதம் ஒன்றும் விளையாதெனக் கொள்க.

தீர்ந்த அன்பாய அன்பர்க்கு
அவரினும் அன்ப போற்றி
பேர்ந்துமென் பொய்ம்மை ஆட்கொண்
டருளிடும் பெருமை போற்றி
வார்ந்தநஞ்சு அயின்று வானோர்க்(கு)
அமுதம் ஈ வள்ளல் போற்றி
ஆர்ந்தநின் பாதம் நாயேற்(கு)
அருளிட வேண்டும் போற்றி. 69

இதனால், எனக்குரிய திருவடியைப் பின்னும் அருளுக என வேண்டியருளுகின்றார்.

(பொ - ரை ) (தனக்கென்றே) உரிமையாக்கிவிட்ட பேரன்பாகிய அன்புடையாருக்கு, அவர் தமக்குச் செய்யும் அன்பைப் பார்க்கிலும் மிக்கதோர் அன்பு செய்யும் அன்புடையவனே, நினக்கு வணக்கம், பின்பும் என்னுடைய பொய்ம்மையைப் பொறுத்து ஆட்கொள்ளும் நின்னுடைய பெருமைக் குணத்திற்கு வணக்கம், அரவின் வாயில்நின்றும் ஒழுகிய நஞ்சினையுண்டு தேவர்க்கு அமுதத்தை ஈந்த பெருங்கொடையாளனே, நினக்கு வணக்கம், பேரின்ப நலன் நிறைந்த நின்னுடைய திருவடிகளை நாயை ஒத்த எனக்கு உதவவேண்டும். (அங்ஙனம் எனக்கு உதவுவோனே, நினக்கு) வணக்கம் எ - று.

(வி - ரை.) தீர்ந்த - உரிமையாக்கிய. கண்ணுய கண்ணு என்பது போல அன்பாய அன்பர் என்பதும் வந்தது. மெய்ம்மையாகிய பெருமை எனவும், பொய்ம்மையாகிய சிறுமை எனவும் விரிக்க. குணங்கள் குணிகளாக உபசரிக்கப்பட்டன. தேவர்க்கு உணவும் உயிரும் ஒருங்கு நல்கலின் "வள்ளல்" என்றருளினார். இந்த நஞ்சுண்டமை ஒன்றே இறைவனுடைய பெருங் கருணைத் திறனை யாவரும் உணரச் செய்யவல்லது. அமுதாக்கி அளித்த திருமாலின் செயலினையும் அவன் ஆக்கிய அமுதினையும், அதனை உண்ணவிருந்த தேவரையும் பாதுகாக்குமாறு தான் நஞ்சு அயின்றான் ஆகலின், அமுதம் ஈந்தானும் அவ்விறைவனே யாதல் காண்க. திருமாலின் அமுதக்கொடையையும், அதனை உண்பார் உயிரையும் உதவிய வள்ளல் என்க தனது உயிரையும், கொடைப்பொருளையும், ஏற்போர் உயிரையும் ஒருங்கு கொடுத்த பெருங்கொடை வள்ளல் என்க.

பெயர்த்தும் - பெயர்ந்தும், பேர்ந்தும். 'பொய்ம்மை பெயர்த்து ஆட்கொண்டருளியும்' என இயைத்துப் பொருள் கொள்வாரும் உளர். மீளவும் மீளவும் பிழை செய்யினும் பெருமையுடையவர் பொறுத்தே தீர்வர் ஆகலான் அவருரை பொருந்தாதென்க. இப்பிறவிக்கண் ஆண்டுகொள்ளுதற்குத் திருவுளம் இலதாயின், யான் மாண்டு மாண்டு, வந்துவந்து, போற்றிப்

போற்றி என்றும் நின்னை வணங்கப் பேர்ந்தும் என் பொய்ம்மையைப் பொறுத்து மெய்ம்மையாகவே ஆண்டுகொள்ளும் பெருமைக்கு வணக்கம் என்க. திருச்சதகம் (74.) பார்க்க. பின்னும் தம் பிழை பொறுத்து, தில்லையிலே ஆட்கொள்ளும் இயல்பினைக் கருத்துட்கொண்டு இங்ஙனம் அடிகள் அருளிச் செய்தனர் என்க.

இனி, "அன்பர்" என்பது இடுகுறியளவாய் நின்று பொதுவாக அடியவரை உணர்த்திற்றெனவும், தீர்ந்த அன்பு அடியாக நின்றதெனவும் கொள்ளினும் இயையும். அன்பும் அன்பரும் ஒன்றேயாதல் தோன்றத் "தீர்ந்த அன்பாய அன்பர்" என்றருளிச் செய்தார். அன்பருட் சிலர் இறைவனை வெகுண்டு இகழ்தலும் இகழ்வர், மறத்தலும் மறப்பர்; வெறுத்தலும் வெறுப்பர்; பிழைசெய்வர். இறைவன் உவந்து புகழ்ந்து மறவாது விரும்பிப் பிழையாது அன்பு செய்துவரும் இயல்பினன் ஆதலால் "தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும் அன்ப" என்றோதியருளினர்.

"ஓர்த்துள்ள வாறு நோக்கி உண்மையை யுணராக் குண்டர்
வார்த்தையை மெய்யென் றெண்ணி மயக்கில்வீழ்ந் தழுந்து வேனைப்
பேர்த்தெனை ஆளக் கொண்டு பிறவிவான் பிணிக ளெல்லாம்
தீர்த்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே"

(திருநேரிசை. 2)

என்னும் அப்பர் சுவாமிகள் திருப்பாடலின்கண்ணே பேர்த்தென்றது, சமணர் நிலையில் ாடுபட்டிருத்தலினின்றும் பெயர்த்து எனப் பொருள் படுமாறே ாண்டும் உலகிலே செல்லும் எனது பொய்ந்நிலையில் நின்றும் பெயர்த்து ஆட்கொண்டு அருளிடும் என உரைத்தலும் ஒன்று. உடலும் உறுப்பும் ஆகியவெல்லாம் அன்புருவாய அன்பர் எனக.

**போற்றிஇப் புவனம் நீர்தீக் காலொடு வானம் ஆனாய்**
**போற்றிஎவ் வுயிர்க்கும் தோற்றம் ஆகிநீ தோற்றம் இல்லாய்**
**போற்றிஎல் லாஉயிர்க்கும் ஈறாய்ஈறு இன்மை ஆனாய்**
**போற்றிஐம் புலன்கள் நின்னைப் புணர்கிலாப் புணர்க்கை**
**யானே. 70**

இதனால் எல்லாப் பொருள்களும் உயிர்களும் தானாகவே இருந்தும் ஐம்புலன்கள் புணரப்பெறாத எல்லாவற்றையும் உணர ந்துகொள்கின்றாய் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ-ரை.) இந்த நிலம் நீர் தீ காற்று என்னுமிவற்றுடன் வெளியும் ஆகிய இவ்வைம் பூதங்களுடன் கலந்து அவற்றோடு ஒன்றானவனே, நினக்கு வணக்கம், எல்லாவுயிர்களும் தோன்றுவதற்குக் காரணமாகி, நீ தோன்றுவதற்குப் பிறிதொரு காரணமும் இல்லாதவனே, நினக்கு வணக்கம், எல்லாவுயிர்களும் ஒடுங்கும் முடிவிடமாய், நீ ஒடுங்குவதற்கு ஓரிடமும் இல்லாதவனே, நினகரு

வணக்கம் ; ஐம்புலன்களும் நின்னைச் சேராத மாயையை யுடைய வனே, நினக்கு வணக்கம் எ - று.

(வி - ரை.) தன்னைப்போலவே ஏனைய பூதங்கள் நான்கும் தன்னுள் ஒடுங்க இடங்கொடுத்தும் தான் அவற்றொடு கலவாது வானம் இருத்தலின் அதனைப் பிரித்தருளினர். புவனம் நீர் தீ என்பவற்றுக்கும் ஒடுக்கொடுக்க.

இறைவனையின்றிச் சத்திக்கும், சத்தியை இன்றி இறைவற்கும் இயக்க மின்மையின் "தோற்றமானாய்" "முடிவுமானாய்" என்றருளிச் செய்த னர். சிவதத்துவத்துள்ளே சிவமே ஒடுங்குதலும் அன்ன பிறவும் ஈண்டு ஆராயத்தக்கன.

புலன் வழியாக அறிந்துகொள்ளுவதன்றி, தான் நேரே எல்லாவற் றையும் அறிந்துகொள்ளும் இயல்பினனாகலின், அவ்விறைவனை ஐம் புலன்கள் புணரும் ஆற்றல் அற்றனவாயின என்க. எனவே அவற்கு அவாவும் இல்லையாயிற்று. இது கருதியே அப்பர் சுவாமிகளும்,

"துறவாதே கட்டறுத்த சோதியானை"
"நோக்காதே எவ்வளவும் நோக்கினானை"

(திருப்புன்கூர், திருநீடூர். திருத்தாண்டகம். 1, 5.)

என்றருளிச் செய்தார். துறவாதே கட்டறுத்தல் - இயல்பாகவே எல்லாவற் றினும் நீங்கியிருத்தல். நோக்காதே நோக்குதல் - கண்ணாதிய புல னுதவியின்றி எல்லாவற்றையும் நோக்கியறிதல். ஏனைய புலன்களுக்கும் இங்ஙனமே உரைத்துக்கொள்க. இன்னும் இதனை,

"பாணி யின்றியே பற்றும் பதமின்றி
மாண வேசெலும் மற்றுங்கண் ணின்றியே
காணும் கேட்கும் காதின்றி என்னவே
பேணி மாமறை யீசனைப் பேசுமே"

(சுவேதாசுவதரோபநிஷத். 19. மொழிபெயர்ப்பு.)

என்பதனானுமறிக.

புலன்வழியாகவே எல்லாவற்றையும் அறிந்துகொள்ளும் இயல்புடை யார்க்கே அவாவிடைப்பட்டு அல்லறபடுவதும் உளதாயிற்றென்க. புலனறி வின்றித் தம்மால் ஒன்றும் உணரப்படாதிருக்கவும், இறைவன் அவற்றின் உதவியின்றித் தானே எல்லாவற்றையும் அறிந்துகொள்வது அடிகட்கு வியப்பினைத் தருதலின் "ஐம்புலன்கள் நின்னைப் புணர்கிலாப் புணர்க்கை யானே" என்றருளிச் செய்தார். தனித்த சிற்றுடலில் எமக்கு ஐம்புல அவா மிக்கிருத்தலின் உலகெலாம் உருவாகிய இறைவனுக்கு ஐம்புல அவா அளப் பரிதாக இருத்தல் வேண்டும் ; அதற்கு மாறாக அவாவென்பதே புணரா திருத்தலை உணர்ந்து வியப்புற்று அவனடி போற்றியருளினர் என்க.

போற்றி என்பது வாயால் வணக்கம் எனக் கூறிக் கைகுவிப்பதென்க.

"போற்றிசைத் துன்னடி பரவநின்றாய் போற்றி"

(ஸ்ரீ கைலாயம். போறறித்திருத்தாண்.)

என அப்பர் சுவாமிகள் அருளுதலும் ஈண்டு நோக்கற்பாலது.

திருச்சிற்றம்பலம்

# 8. ஆனந்தத் தழுந்தல்

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**திருச்சிற்றம்பலம்**

**புணர்ப்ப தொக்க எந்தை என்னை ஆண்டு பூண நோக்கினாய்**
**புணர்ப்ப தன்றி தென்ற போது நின்னொ டென்னொ டென்னதாம்**
**புணர்ப்ப தாக அன்ற தாக அன்பு நின்க ழற்கணே**
**புணர்ப்ப தாக அங்க ணாள புங்க மான போகமே. 71**

*நீயருளியது மாயமேனும் பட்டாங்கேனும், அன்று பயின்று கொண்ட அன்பு குறையாது வளர்ந்து திருவடி நுகர்ச்சியை எனக்குச் சேர்ப்பதாக என்றருளுகின்றார்.*

(பொ - ரை ) அழகிய மங்கலப் பண்புடையோனே, என் ஆசானாகிய அப்பனே, மாய வித்தை செய்தால் ஒப்ப என்னை ஆண்டுகொண்டு உன்னையே விரும்புமாறு எனக்கு அருட்பார்வை அருளிச் செய்தாய். அப்பார்வை மாயைபாற்படாது பட்டாங்கின் பாற்பட்டதாக உணர்ந்தபோதும் அந்நோக்குப் பயன்படாமையான், நின்னொடு கூடிய யானும் என்னுடன் முயன்ற நீயும் பெற்ற பயன் யாதாகும்? ஆதலால் அது மாயமே யாகுக, அன்றிப் பட்டாங்கே யாகுக, அவ்வன்பு நின் திருவடியிடத்துள்ள உயர்வான இன்பநுகர்ச்சியை எனக்குச் சேர்ப்பதாகுக எ - று.

(வி - ரை.) அருட்பார்வை நல்கியபோது எல்லா நலனும் பெற்றுக் கொண்டதாகக் கண்டமையாலும் பிறறை ஞான்று ஒன்றுமின்மை கண்டமையாலும் "புணர்ப்பதொக்க..... நோக்கினாய்" என்றும், மற்றதனைப் பட்டாங்காகக் கொள்ளினும் மாணாக்கனாகிய தானும் குருவனாகிய இறைவனும் பழியே யடைந்தமையால் "புணர்ப்பது......என்னதாம்" என்றும், ஆதலால் புணர்ப்போ பட்டாங்கோ யாதாயினும் ஆகுக; அப்பார்வையால் அன்பு செய்யும் முறை ஒன்று கண்டுகொண்டேன்; அவ்வன்பே நின் திருவடி நுகர்ச்சியை எனக்குச் சேர்ப்பதாகுக என்பார். "புணர்ப்பதாக... கழற்கண்ணே புணர்ப்பதாக...புங்கமானபோகமே" என்றும் அருளிச் செய்தார்.

"புங்கமான போகமே" என்னுமிதற்கு உயர்வான நுகர்வாக இருப்பவனே என்று பொருள்கொண்டு, அப்பார்வை நின் கழற்கண் அன்பினை எனக்குப் புணர்ப்பதாக எனக் கொள்ளினும் நனிபொருந்தும்.

புணர்ப்பதாக என்பதற்கேற்ப அன்றதாக எனப் பாடங் கொள்ளலே பொருந்துவதாகும்.

நின்னொடு என்னொடு பெற்றுக்கொள்வது என்னதாம் என விரிக்க. என்னதாம் - யாதாகும்.

"என்னிதாம" எனப்பாடங்கொண்டு, 'இதுஎன்ஆம்' என இடம் மாற்றி இதனால் என்ன பயன் எனப் பொருள் செய்வோரும் உளர். 'இது' வென்பது குற்றுகரமன்மையால் அப்பொருள் பொருந்தாதென்க.

புணர்ப்பதொக்க - மாயத்தது நிகர்க்க. இதற்கு இங்ஙனம் பொருள் கொள்ளாது, "புணர்ப்பது" என்றதற்கு அருள்புரிதற்குரிய எனவும், "ஒக்க" என்றதற்கு ஒத்துவர எனவும் பொருள் கொள்வாரும் உளர். அவருரைத்த உரை கொள்ளின், ஒத்துவர என்றது இறந்தகாலம் காட்டிற்றேல் அது திரிபுணர்ச்சியாகவும், எதிரகாலங் காட்டிற்றேல் ஆசான் ஆற்றலும் அறிவும் படைத்திலன் ஆவான் ஆகவும் கொள்ளப்படுமாதலின் அவ்வுரை பொருந்தாதென்க ஆதலால் "ஒக்க" வென்றதனைச் செயவென்னெச்ச மாகக் கொள்ளாது அவ்வெச்சப் பொருள்படுவதோர் உவமத் திரிபாகக் கொள்க. ஈண்டுப "புணர்ப்பது" என்றதற்கு மாயத்தது எனப் பொரு

"புங்கமான போகமே" என்றதற்கு உயர்வான போக வடிவாக இருப் போனே எனப் பொருள்கொள்ளின், நீ பூண நோக்கிய நோக்கு என்ப தனைத் தோன்றா எழுவாயாகக் கொண்டு, "புணர்ப்பதாக" என்றதனை அதற்குப் பயனிலையாகக் கொண்டு முடிக்க.

"புணர்ப்பதாக அன்றதாக" என்பது, மாயத்ததாகுக அன்றிப் பட் டாங்கினதே யாகுக; அஃதெங்ஙனமாயினும் மற்று அதனால் அன்பு செயும் பயிற்சியைப் பெற்றுக்கொண்டேன் ஆதலால், அங்ஙனம் பெற்றுக் கொண்ட அன்பு நின்னுடைய திருவடிக்கண்ணதாகுக என்னுங் கருத்துப்பட வந்ததென்க.

'கல்யாணன்' என்னும் வடசொல் கண்ணாளன் என மருவியது. "கண்ணாள ஓலை" எனச் சான்றோர் உரைத்தலும் காண்க ஈண்டுக் கல்யாணம் என்றது மங்கலப் பண்பினை. அது அழியா மங்கலம் என்பது தோன்ற "அம்" என்னும் அடை அடுத்து வந்தது "கண்ணாளன்" என்ற தற்குத் தோழன் எனவும் கணவன் எனவும் பொருள் கொள்வாரும் உளர். அவருரை "நோக்கினாய" என்பதனோடு ஒத்துவராமையாற் கொள்ளாமாயி னேம். அம் கண் ஆளன் எனப் பிரித்து அழகிய (வீடாகிய) இடத்தினை ஆள்பவன் என்றுரைப்பாரும் உளர். ஈண்டுத் திருவடி விதந்து கூறி யருளப்பட்டமையால், அதனை அத்துணை நலிந்து பொருள்கோடல் இன்றியமையாததொன்றாகாது.

போகம் வேண்டி வேண்டி லேன்பு ரந்த ராதி இன்பமும்
ஏக நின்க ழல்லி ணைய லாதி லேன்என் எம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி அஞ்ச லிக்கணே
ஆக என்கை கண்கள் தாரை ஆறது ஆக ஐயனே. 72

இதனால், நீ நோக்கி எனக்கருளிய அன்பினால், யான் நின் கழலின்பத்தைப் பெற்றுக்கொள்ளக் கை அஞ்சலிக்கண்ணே ஆகுக; கண்கள் தாரை ஆறதாகுக என்பது கூறியருளப்படுகின்றது

(பொ-ரை) அப்பனே, ஒருவனே, எம் ஆண்டவனே, இந்திரன் முதலிய கடவுள்களால் அளிக்கப்பெறும் இன்பத்தையும் யான் விழைந்திலேன்; உன்னுடைய இரண்டாகிய திருவடிகளைப் பெறுதலையே பேறாகக் கொண்டேனேயன்றிப் பிறிதொரு துணையும் இல்லாதேன் அங்ஙனம் விழைந்திலேனும் துணையிலேனும் ஆகிய என்னுடைய கைகள் மனத்தினின்றும் வேறுபட்டு நடுக்கம் வரப்பெற்றுத் தலைமீது கும்பிடுதற்கண்ணே அமைவனவாகுக; அங்ஙனமே என் கண்களினின்று வரும் நீர் ஒழுக்கும் ஆற்றின் பெருக்கினை ஒத்தது ஆகுக எ-று.

(வி-ரை.) நீயே என் ஐயன் ஆகலின் நீ தரும் இன்பமே யான் விழைவேன்; புரந்தராதி இன்பம் வேண்டிலேன்; நீ எல்லாவற்றுள்ளும் அமைந்திருக்கும் ஒருவனாவாய் ஆகலின், நின் கழல் அல்லாது வேறிலேன். எம்பிரானே நீ என்னை ஆண்டவனாதலால், கைஅஞ்சலிக் கண்ணே யாகுக; கண்கள் தாரை ஆறதாக எனப் பெயர்களை அவ்வவ் வினையிற்கு ஏற்குமாறு அணுகிய நிலையிலே மாட்டெறிந்தாரேனும் பொருள்கோளுக்கு இயைய முதற்கண் அவற்றையெல்லாம் ஒருசேரக் கூறிக் கொள்க

செயல் உறுப்புக்களுள்ளே சிறந்த கைகளையும் அறிவுறுப்புக்களுள்ளே சிறந்த கண்களையும் எடுத்துக் கூறியருளினாரேனும், ஏனையவற்றையும் ஏற்குமாறு உரைத்துக்கொள்க.

ஆகம்-மனம். மனத்தின் ஏவலிற்படாவாய் அதனின் வேறுபட்டுச் செயலுறுப்பும் அறிவுறுப்பும் இங்ஙனமாயின், மனமும் தானே செயலின்றி இறைவன்பாலேயே புகும் என்பதே அடிகள் கருத்தாகக் கொள்க.

"ஆகம்" என்றதனுக்கு மனம் எனப் பொருள் கொள்ளாது உடல் எனப் பொருள் கொள்ளின் "ஆகம் விள்ளக் கம்பம் வந்து" என்றாதல், "ஆகம் விண்டு கம்பம் எய்த" என்றாதல் இருத்தல்வேண்டும். அங்ஙனம் இன்மையின் அங்ஙனம் கொள்ளுதலும் இயையாது. உலக நுகர்வுக்கு அடிமைப்பட்டுள்ள மனத்தினின்று அறிவு செயல் என்னும் இரண்டுக்கும் உரிய உறுப்புக்கள் வேறுபடுத்தப் படல்வேண்டும் என்னும் அடிகள் கருத்தொடு அங்ஙனம் கொள்ளும் பொருள் மாறுபடும் என்க.

குஞ்சி-ஆண்பால் மயிர். அஃது ஆகுபெயராய்ச் சென்னியை உணர்த்திற்று. விண்டு-வேறுபட்டு கம்பம்-நடுக்கம். "நின்னதல்லதில்லை மற்றோர் பற்று" என அடுத்த திருப்பாட்டிலே கூறப்படுதலின், ஈண்டு "நின்கழல் அல்லதிலேன்" என்றதற்கும் நின்கழலைப் பற்றும் பற்றேயன்றிப் பிறிதொரு பற்றும் இல்லேன் எனப் பொருள் உரைத்தலே நேரிதென்க.

ஐய நின்ன தல்ல தில்லை மற்றோர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை பொய்ம்மை யேன் என் எம்பிரான்
மைக லந்த கன்னி பங்க வந்துநின்க ழற்கணே
மெய்க லந்த அன்பர் அன்புள னக்கும் ஆக வேண்டுமே. 73

இதனால், அஞ்சலி செய்தற்கும் கண்ணீர் பெருக்குதற்கும் நின் திருவடிக்கண் மெய்கலந்த அன்பர் அன்பு எனக்குமாக வேண்டும் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) ஐயனே, எனக்குரியேனாகிய எம்பிரானே, மை தீட்டிய கண்ணையுடைய உமை மங்கையை இடப்பாகத்திற் கொண்டவனே, பொய்யினைக் கலந்ததுவேயன்றி மெய்யினைச் சேர்ந்தது இல்லையாதலால் யான் பொய்யனேன் ஆவேன், அங்ஙனம் பொய்யனாக இருந்தும் நின்னதுவாகிய திருவடிப் பற்றே யன்றி அல்லதாகிய மற்றொரு பற்றும் என்பாலில்லை ஆதலால் யானே சிறுமையுடையேனாவேன், இன்னணமாகிய எனக்கும் மெய்யைச் சேர்ந்த நினக்கேயுமின்றி நின்னன்பர்க்கும் அன்பு செயும் அன்பு உளதாகவேண்டும் எ - று.

(வி - ரை.) முற்றும் பொய் கலந்ததே யன்றிச் சிறிதேனும் மெய்கலந்த பொய்யாக ஆவது என் பொய் ஆகாதெனினும் இழுக்காது. வஞ்சனேன் - சிறுமைக் குணமுடையேன். வஞ்சம் - சிறுமை. அழிவுடையேன் எனினுமாம். பொய் அழிவுடைத்தாகலின்.

அன்பர் அன்பு - அன்பர்க்குச் செய்யும் அன்பு எனவும் அன்பரை ஒத்த அன்பு எனவும் பொருள்கொள்ளலும் தம்முள் ஒக்குமேனும் அடியவர் கூட்டமின்றி, இறைவன் மேலன்பு செய்தல் சாலாதாகலின் அதனையே மேற்கொண்டாம்.

"ஆசை தீர்த்து அடியார் அடிக் கூட்டிய அற்புத மறியேனே" எனவும், (அற்புத. 8.)

"மேவினோம் அவனடியார் அடியா ரோடு" (திருச்ச. 30.) எனவும்,

"இணங்கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்து" (திருப்பூ. 7.) எனவும்,

"...................... தன் சீரடியார் பொன்னடிக்கே
குறிசெய்து கொண்டென்னை யாண்டபிரான்" (திருப்பூ. 8.)

எனவும் வருவனவே அதற்குப் போதிய சான்றுகளாம்.

"மெய்கலந்த அன்பர்" என்றதற்கு மெய்யின்கண்ணும் அன்பு கலந்தவர் என்று பொருள் கூறினும் இழுக்காது. திருவடிப் பற்றின்

வேறொரு பற்றும் எனக்கு இன்றேனும் பிற பற்றற்ற யானே பொய்மையனு னேன். ஆதலால் திருவடிக்கன்பு செய்த அன்பரது அன்பு எனக்கும் கிடைக்க வேண்டும் என முறையிட்டார் என்க.

வேண்டும் நின்க ழற்கண் அன்பு
 பொய்மை தீர்த்து மெய்ம்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை
 ஆவ என்றுஅ ருளுநீ
பூண்டுகொண் டடிய னேனும் போற்றி
 போற்றி என்றும் என்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து
 மன்ன நின்வ ணங்கவே. 74

இதனால், நீ பட்டாங்காகவே என்னை யாண்டருள் செய்க, யான் நின்னை இடைவிடாது வணங்குதற்பொருட்டு. இப்போது அன்பே வேண்டும் என்றருள்கின்றார்.

(பொ - ரை) மன்னவனே, அடியவனாகிய யான் நீ அருளி யதைப் பூண்டுகொண்டு (ஒரு பிறவி போதாதேல் மேலும் மேலும்) இறந்து தோன்றியும் இறந்து தோன்றியும் நினக்கு வணக்கம் நினக்கு வணக்கம் என்று பல பிறவிகளிலும் சொல்லியும் நின்னை வணங்குமாறு, நாயின் இயல்பினை ஒத்த என்னை மாயமாக ஆட்கொள்ளுதலை விடுத்து பட்டாங்காகவே ஆவ என்றிரங்கி (மிக அதிகமான) அருளை நீ செய். அதுபற்றி எனக்கு இப்போது எவ் விதமான ஆராய்ச்சியும் இல்லை (ஆனால் எனக்கு இப்போது மிகச் சிறிய காரியமாகிய) நின்கழற்கண் பொருந்திய அன்பே வேண்டும் எ - று.

(வி - ரை.) அந்தப் பெரிய அதிகமான அருளைச் செய்வேன்; செய்வேன்; பொறுத்திரு என்று கூறும் நீ உனக்கு மிக எளிதாகிய திருவடி யன்பு அருளுதலைச் செய், பார்ப்போம். அதுவன்றே முதலில் வேண்டப் படுவது. அதனை அருளினையேல் நீ கூறியவாறே முழுவதையும் செய்து முடிப்பாய் என்று எதிர்பார்த்திருக்கலாம் என இசையெச்சம் விரிக்க.

இறைவன் 'நின்னைப் பட்டாங்காகவே ஆள்வேன்' என்று கூற, அடி கள் இங்ஙனம் கேட்டருளினர் என்க.

அவன் அருளின் பெருக்கம் தோன்ற "மாண்டு மாண்டு...... வணங்கவே" என்றருளினர்.

வணங்கும் நின்னை மண்ணும் விண்ணும்
 வேதம் நான்கும் ஓலமிட்டு
உணங்கும் நின்னை எய்தல் உற்று
 மற்றொர் உண்மை இன்மையின்

வணங்கி யாம்வி டேங்கள் என்ன
வந்து நின்ற ருளுதற்கு
இணங்கு கொங்கை மங்கை பங்க
என்கொ லோநி னைப்பதே. 75

இதனால், எல்லாம் உன்னை அறியமாட்டாவெனில், யான் நின்னை நினைப்பது என் என்றருளுகின்றார்.

(பொ-ரை.) "நின்னையன்றி வேறுமோர் உண்மைப் பொருள் இல்லாமையினாலே, மண்ணின் கண்ணுள்ளாரும் வானின் கண்ணுள்ளாரும் வணங்குகின்ற (நின்னை), அடைய முயன்று நான்கு வேதங்களும் ஓலமிட்டும் காணற்கியலாவாய் வாட்டமுறுகின்ற நின்னை, யாம் வணங்கி (நீ அகப்படாமையால்) அகப்படக் கூடிய வேறு ஒரு பொருளைப் பற்றுவோம் என எண்ணி (மன வுறுதியை நெகிழ) விடமாட்டோம்" என்று சொல்ல (அவர் தமக்கு) அருளும்பொருட்டு இணங்குகின்ற கொங்கைகளையுடைய உமை மங்கையை இடப்பாகத்திற் கொண்டவனே, என்பால் நீ நினைப்பது என்ன எ-று

(வி-ரை) மண்ணுலகத்தும் விண்ணுலகத்தும் எளியனாகிய உருவோடும் அருளுதலின் அவை வணங்கும்; வேதத்துக்கு அப்பாற்பட்டு நிற்றலின் அஃது உணங்கும் என்க. வணங்கும் நின்னை, உணங்கும் நின்னை என 'நின்னை' என்றதனை இரட்டித்துக் கூறியருளினார், தொழில் வேறுபாடுடைமையானும், அருமை பெருமைகள் உண்மையானும் என்க. "மற்றோர் உண்மை யின்மையின் வணங்கி யாம் விடேங்கள்" என்பது அவ்வன்பர் கூற்று. அதனை இங்குக் கொண்டு கூறியருளியவாறு.

முன்னும் பின்னும் அடிகள் தம்மைப் பன்மையில் கூறிக்கொள்ளாமையும், யாமுரைத்த பொருளையே வலியுறுத்தா நிற்கும் என்க. பிறர் எல்லாரும் "யாங்கள்" என்றதனை அடிகள் பிற அடியார்களை உட்கொண்டுரைத் தருளிய தன்மைப் பன்மைப் பெயராகக் கொண்டு வாளா போவர்.

இனி அருளுதற்கு என்கொல் நினைப்பது, யாம் விடேங்கள் என்ன நீ அருள்; அதற்குத் தடையாகி நீ நினைப்பது என்னை எனவும் வேண்டிய வாறே உரைத்து உரைக்குனம் வாளா போவர். அன்றியும் விடேங்கள் என்ன இணங்கு, என்கொல் நினைப்பது எனாருங்குக் கேட்பது, இப்பகுதிப் பொருட்போக்கிற்கு ஒவ்வாதாதலையும் முன்னும் பின்னும் உற்றறிந்து கொள்க.

அன்பர் வணங்கி யாம விடேங்கள் என்ன அன்னை அவர்க்கருளுதற்கு இணங்குவாள். யானும் அங்ஙனம் விடேன் என்ன என் அன்னை எனக்கும் அருள்வாளன்றோ? அப்போது நீ என் செய்வை? யாதும் செய்தற்கு இயலாது விழிப்பாய் ஆகலின் இன்னே அருளுதி என்றருளியவாறு.

நினைப்ப தாகச் சிந்தை செல்லும் எல்லை ஏய வாக்கினால்
தினைத்த னையும் ஆவ தில்லை சொல்லல் ஆவ கேட்பவே
அனைத்து லகும் ஆய நின்னை ஐம்பு லன்கள் காண்கிலா
எனைத்தெ னைத்த தெப்பு றத்த தெந்தை பாதம் எய்தவே. 76

இதனால், இப்புறத்திலுள்ள சிந்தை அப்புறத்திலுள்ள திருவடிகளைக் காண்டற்கு எவ்வியல்பிற்றாகும்? எப்புறத்தாகும்? அதனாலும் முடியாது ஆதலின் அவனருட் கருவிகளே அவனைக் காணற்கு வேண்டும் என்பது குறித்தருளப்படுகின்றது.

(பொ - ரை.) (சிந்தையையும் வாக்கையும் புலன்களையும் ஒருங்கே வைத்து, நீவிர் என்றும் இறைவன் திருவடியைக் காணகில்லீர், அதற்கு இறைவன் அருட்கரணங்களாக அவனருளால் மாறுபடுதல் வேண்டும் என்று யான் இடித்திடித்து அறிவுறுத்திய என் சொற்களைக் கேளாதனவாகிய அவற்றால், (சிந்தையினால் நினைக்கப்படும் நினைவு) எல்லையைப் பொருந்திய வாக்கினால் எந்தையே, நின் பாதங்களையடையத் தினையளவுதானும் (அதன் இயல்புகளைப் பற்றிச் சொல்வதற்கு) ஆதல் இல்லை; (அதனால் வாக்கும் தோற்றுவிட்டது,) ஐம்புலன்களானவை அனைத்துலகினும் பரந்து விரிந்த நின்னைக் காணகில்லா; (அவையும் அங்ஙனமே தோல்வியுற்றன,) இனிச் சிந்தையானது நினைப்பதாகச் செல்லும்; அதுவும் நின் பாதத்தையடைவதற்கு எவ்வியல்பிற்று, எவ்வியல்பிற்று? எவ்விடத்தது? (இவைகள் யான் அறிவுறுத்துச்) சொல்லலாவனவற்றைக் கேட்கின்றலவே? (கேட்டால் எனக்கும் அவைகட்கும் ஏன் இவ்வளவு அலமரல்) எ - று.

(வி - ரை.) மனநினைவுக்கேற்பத் தோன்றும் பொருளோடு ஒற்றுமை பூண்ட சொல்லாதலின் "எல்லை யேய வாக்கினால்" என்றருளிச் செய்தார். மனம் நினைவுள்ளும் பொருட்பகுதிகளுள்ளே பல வாக்கிற்கெட்டாதனவும் உள. "எதனையோ போன்றிருந்தது" என வரும் உலகவழக்கானும் அஃதுணரப்படும். ஆதலின் அதனால் தினைத்தனையும் ஆவதில்லை யென்க.

இடத்தானும் காலத்தானும் சேய்மைப்பட்டவற்றை யுணர்த்தவல்ல வாக்குக் காண்கிலாதே தோற்றதாக, அவ்விருபாற்பட்டனவற்றையும் அறிதற்கியலாத ஐம்புலன்கள், அங்ஙனம் சேய்மைப்பட்டவற்றிற்கும் அப்பாற்பட்ட இறைவனை எங்ஙனம் அறியவல்லன என்க. கூறுபடுத்தப் பட்ட சிற்றளவு கொண்டனவற்றையே காணும் புலன்களின் இழிவும் அவன் பெருமையும் தோன்ற "அனைத்துலகும் ஆய நின்னை" என்றருளினார்.

யானே காண்பல் எனச் சொல்லும் மனம் "எனைத்து எனைத்து எப்புறத்தது" என்க. உலக வின்பங்களுள் தோய்ந்து நிலையிலாதே

இயல்பினையுடைய மனம், என்றும் ஒரே பெற்றித்தாய் நிலையுதலுற்ற திருவடியின் குணவியல்பு செயலியல்பு என்பவற்றை யறிதற்கு எங்ஙனம ஒல்லும் என்பார் "எனைத்தனைத் தென்றும்", மன மிருக்கும் நிலை இப்பாறபட்டதும், அத்திருவடி நிலை அப்பாற்பட்டது மாகலின் இடத்தானும் அணுகற்கியலாதது என்பார் "எப்புறத்தது" என்றும் இழித்தோதியருளினர்.

இம்முத்திறத்தவற்றின் இழிவையும், இறைவன் பெருமையையும், அவனைக் காணறகு இவற்றால் இயலாதென்பதையும், அவனைக் காணும் கருவிகள் அவனருளும் சிவக்கருவிகளே என்பதையும், ஆதலின் அம் மூவகைக் கருவிகளும் அடங்கியிருத்தலே பெரிதும் நன்று பயப்பதாம் என்பதையும் ஒருமுறையன்று, இருமுறையன்று, பன்முறையும் இடித்துக் கூறியும் பயனின்று என்பார் "சொல்லலாவ கேட்பவே" என்று அருளிச் செய்தார்.

இங்ஙனம் பொருள் கொள்ளாது 'சொல்லலாவ கேட்பவே' என்றும் 'எனைத்து......எய்தவே' என்றும் வரும் இவற்றிற்குத் தாம் வேண்டியவாறே முடிபு கொண்டு பொருள் உரைப்பாரும் உளர். "சொல்லலாவ கேட்பவே" என்பதற்குச் சொல்லக்கூடிய எல்லாம் காதாற் கேட்கக்கூடியனவே என உரைத்தாரேயன்றித் தம் கருத்தினைப் புலப் படுத்தினாரில்லை. வாய்க்கு வந்த சொற்கள் காதுக்கு எட்டும் என்பது அவர் கருத்தாயின், வாயை அசைத்துக் காது கேளாதவாறு சொல்லும் முறையுளதாதலில் அதுவும் பொருந்தாது. அன்றியும் 'வாயினாற் சொல்லலாவது இல்லை' என அடிகளே கூறியிருப்பவும் வாயாலியலாத தொன்று காதாலெங்ஙனம் கேட்டற்கியலும் என விடுக்க. இனி "எனைத் தெனைத் தெந்தை பாதம் எய்த" என்றதற்கும் எழுவாயும் பயனிலையும் தாமே விரித்துக் கொள்வர். அங்ஙனம் விரித்து இடர்ப்படுதல் வேண்டா வென்க.

எய்தல் ஆவது என்று நின்னை
    எம்பி ரான்இவ் வஞ்சனேற்(கு)
உய்தல் ஆவ(து) உன்கண் அன்றி
    மற்றோர் உண்மை இன்மையின்
பைதல் ஆவது என்று பாது
    காத்தி ரங்கு பாவியேற்கு
இஃத லாது நின்கண் ஒன்றும்
    வண்ணம் இல்லை ஈசனே. 77

இதனால், இறைவனை குணம் செயல்களினால் மைப் பாடுடையேனாகிய என்னை இரங்கிப் பாதுகாத்தலே நின் பெருமைப்

பாட்டிற்குரிய இயல்பாகும்; இதனையன்றி, நின்னை யடைதற்கேற்ற வேறியல்பு என்பால் இல்லை என்றருளுகின்றார்.

(பொ - ரை) அன்பர்க்கென எண்வகைச் செல்வங்களையு முடையவனே, எம்போன்ற சிறுமைக் குணம் உடையராயினார்க்கு இரங்கியருளும் பெருமைக் குணம் உடையவனே, இக்கள்வனாகிய எனக்கு உன்னிடம் அன்றி, வேறுமோர் உண்மையான இடம் இன்மையால், இப்போது இவன்பாலுளதாவது துன்பமே என்று கருதிப் பாவியேனாகிய என்னைக் காப்பாற்றி எனக்கு இரங்கியருள் புரிக. இங்ஙனம் நீ செய்தற்குரியது இஃதொன்றுளதாவதன்றி, நின்பால் அருளைப் பெற்றுக்கொள்வதற்கு உரிய இயல்பு வேறில்லை ஆதலால் அங்ஙனம் ஆவதனை யான் அடைவது எப்போது?

(வி - ரை.) எண்வகைச் செல்வத்தைக் கொடுப்போன் அவனும் ஏற்போன் தானும் ஆதலால் ராசனை முதற்கண்ணும், சிறியோன் செய்த சிறுபிழை பொறுத்தல் பெரியார்க்கு இயல்பாதலால் எம்பிரானை அதன் பின்னுமாக அடைவு செய்தாம்.

பைதல் - துன்பம். ஒருவன் பெருந்துன்பத்திடை ஆழ்ந்துழலும்போது இத்துன்பத்தினை ஆக்கியவன் நீயே; முன்னரும் பலமுறை நன்னெறி கூறினேன், கேட்டனையோ? அங்ஙனம் கேளாது சென்று துன்பம் பட்ட நினக்கு இதுபோதாது, இன்னமும் படு என்று அத்துன்பமுடையானுக்குக் கூறுதல் உதவியும் பெருமையுமாகாது. வீடு பெருந்தீப்பற்றி யெரியுங்கால், அதனை யவித்தற்கு முற்படுதலின்றி, வீடுடையானை நோக்கி 'வீட்டில் தீ வைத்தவன் நீயன்றே? ஆதலால் உன் பிழையை நீயே தணித்துக்கொள்', என்று வாளாவிருத்தலும், பலகாற் சொல்லியும் கேட்டிலாது குழந்தை யொன்று பேரிடுக்கண் ஒன்றில் அகப்பட்டுழி அதனை அதனின் நீக்காது, 'சொல்லியும் கேளாதே சென்றாய், படுதி' என்று வாளாவிருத்தலும் பெருமடைமையின்பாற்படுதல்போல என்க. ஆதலால் துன்படைந்தாரைத் துன்பத்தின் நீக்குதலே முதற் கடமை என்க. அங்ஙனமே இவனுக்கு இப்போது ஆவது பைதலே. ஆதலால் அதனை யுண்டாக்குதற்குக் காரணமாயிருந்தவன் யாரெனல் வேண்டா. எது எங்ஙனமாயினும் பைதலைத் தீர்ப்போம்; ஆராய்வைப் பின்னர்ப் பார்ப்போம் என்றிரங்கி யருள் என்றுரைக்க.

ஒன்றும் வண்ணம் - நின் திருக்குறிப்பாகிய பிரியாதிருத்தல்; என்றும் அதனோடு ஒன்றுபட்டிருக்கும் இயல்பு. அவ்வியல்பு பெற்றக்கால் திருவடி யடைதலும் ஒன்றும் என்க.

தனக்கு அளித்தாகத் தோன்றப் பெற்றது சிறியோர் செய்யும் பிழை பொறுத்து அருளுதல் என்பதாகலின் அதனை "ராது" எனச் சுட்டி யருளினர். அதுவும் தன்னாலாயதன்று என்பது தோன்ற "நின்கண்"

என்றருளிச் செய்தார். 'அவ்வுனது' என்பால் வந்து ஒன்றின் நன்று என்பது திருவுளக் குறிப்பு.

உண்மை, உளதாகுமிடமுமாம். துணிந்த முடிபென்பது தோன்ற "இன்மையின்" என்றருளிச் செய்தார்.

இறைவற்கே வஞ்சம் செய்தலின், அவன்கண்ணன்றி உய்யுமிடம் வேறின்றாக, நீ அருளும் காலம் எதுவென்று கா என்றருளியவாறு.

ஈச னேநீ அல்ல தில்லை இங்கும் அங்கும் என்பதும்
பேசி னேன்ஓர் பேதம் இன்மை பேதை யேன்என் எம்பிரான்
நீச னேனை ஆண்டு கொண்ட நின்ம லாஓர் நின்னலால்
தேச னேஓர் தேவர் உண்மை சிந்தி யாது சிந்தையே. 78

இதனால், நீ அங்ஙனம் அருளினும் அருளாயாகினும் நின்னை யன்றிப் பிறிதொரு கடவுளரை என் சிந்தை சிந்தியாது என்றருளு கின்றார்.

(பொ - ரை) ஈசனே, என் எம்பிரானே, புலைத்தன்மை கொண்டவனாகிய என்னையும் ஆண்ட அழுக்கற்றவனே, தேசனே, இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் நின்னையல்லாத பிறிதொரு பொருள் இல்லை என்பதையும், மக்கள் தேவர் என வேறுபடுத் தும் உயர்வு தாழ்வுகளைக் காட்டும் குணம் நின்பால் இல்லை என் பதையும், அப் பெருநிலையை அறிந்துகொள்ளும் அறிவிலாத நான் எடுத்துரைத்தேன் (இங்ஙனம் உரைத்துவந்த பயிற்சித் திறனால்) ஒப்பற்ற நின்னையே நினைவதன்றிப் பிறிதொரு கடவுள் உளதென்பதனையும் எனது மனம் நினையவும் செய்யாது எ - று.

(வி - ரை.) நாவின் பயிற்சியினாலே உள்ளமும் உன்னையே உன்னு மென, இறைவன் புகழ் பேசலால் எய்தப்பெறும் சிறப்பினை ாண்டு இனிது கிளந்தருளினர். உள்ளம் மறந்து வாய் புகழ்தலினும், வாய் புகழ உள்ளம் மறவாதிருத்தல் சிறப்புடையதென்க.

"இங்கும் அங்கும் நீ யொருவனே ஆவாய்" என்றருளியதனால் இவ் விரண்டு உலகங்களிலும் உள்ளவர் உள்ளத்திலே நின்று நீ இயக்கியருள அவ்வனைவரும் இயங்குகின்றனர் என்பது பெற்றாம். நல்வினை தீவினை செல்வம் வறுமை நண்பு பகை தெய்வம் மானுடம் என்னும் இத் தொடக்கத்தனவற்றால் உளதாகும் வேறுபாடு ஒன்றேனுமின்றிப் பயிலும் இயல்பினன் என்க. "பேதமின்மை பேசினேன், என் சிந்தை பிறிதொரு தேவருண்மை சிந்தியாது" என்பன மெய்யேயெனினும் இவற்றால் மட்டும் இறைவன் அருள் கிடையாதென்பது திருக்குறிப்பு. ஆட்பட்டு அன்பு செய்தாலன்றி இறைவன் திருவருள் பெறப்படாதென்பதை அடியார்

பலரும் ஆங்காங்குக் கூறிச் சென்றனர். இறைவனையன்றிப் பிறிதொரு பொருள் இல்லையென்பதையும் இறைவன் பேதமற்றவன் என்பதையும் எடுத்துப் பேசுதலையே தாயுமானாரும் வாசா கைங்கரியம் எனக் குறிப்பர்.

அன்பு செய்தலாவது, குருவன் உபதேசத்தால் அகத்து உயிர் பெற்று வளர்ந்து வரும் அத்திருவுருவத்தோடு புறத்தும் அதே போன்ற திருவுருவம் சமைத்து ஆராதனை செய்து வருவதன்றிப் பிற வழியால் இறைவன் திருவருளைப் பெறுதற்கு இடமில்லை என்பதை

"மரகதக்குவால்......பற்று முற்றொளித்தும்" (திருவண். 124–145.)

என்பதனாலும் உணர்க.

வீடு பேறாகிய செல்வத்தை அடியேனுக்கு அருளிச்செய்ய என் தலைவனாகி, என் அழுக்ககற்றி, ஒளி செய்வோன் என்பது, "ஈசன் எம்பிரான் நின்மலன் தேசன்" என்னும் பெயர்களாற் பெறப்பட்டது.

"பேதமின்மை பேசினேன்" யாண்டெனின்,

"கொள்ளேன்......நரகம்புகினும் எள்ளேன்
திருவருளாலே இருக்கப் பெறின் இறைவா
உள்ளேன்......உத்தமனே" (திருச்ச. 2.)

என்றதன் கண்ணும் வேறு பலவிடத்தின்கண்ணும் என்க.

சிந்தை செய்கை கேள்வி வாக்குச் சீரில் ஐம்பு லன்களால்
முந்தை ஆய காலம் நின்னை எய்தி டாத மூர்க்கனேன்
வெந்துஐ யாவி முந்தி லேன்என் உள்ளம் வெள்கி விண்டிலேன்
எந்தை ஆய நின்னை இன்னம் எய்தல் உற்றி ருப்பனே 79

ஐம்புலன்களின் தடை காரணமாக முந்தியே அடையாத யான் அப்போதே இறந்திலேன் அத்தகைய யான் இன்னும் இங்ஙனமே அடிமைப்பட்டு உயிர் வாழ்ந்திருப்பேன் போலும் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) (நீ என்னை யாட்கொள்ள) எதிர்ப்பட்ட அந்தக் காலத்திலே ஐம்புலன்களின் மாறுபாட்டாலே, எனது எண்ணத்தினையும் செய்கைகளையும் யான் கேட்ட அறிவுரைகளையும் என் பேச்சினையும் நினக்குரியனவாக்கி, நின்னை எய்திடும் ஆற்றல் இல்லாத மூடனேன், அப்பொழுதே தீப்பாய்ந்து உடல் வெந்தேனுமல்லேன், உள்ளத்தோடு நண்பு பூண்டு இருத்தற்கு நாணமுற்று அதனைப் பகைத்து அதனின் நீங்கினேனும் அல்லேன்; எம்போன்றார்க்கு அப்பனாகிய நின்னை அன்புடையேன்போல இப்பொழுதும் முன்னே சார்ந்தவாறு சார்தலுற்று (உண்டுடுத்து இவ்வுலகிலேயே வாழ்ந்து) இருப்பவனாயினேன் (ஈதென்னை ?) எ - று.

(வி - ரை.) என்னை ஆண்டுகொள்ள எனக்கு முன்னாகத் தோன்றிய அப்பொழுதே என் எண்ணம் செயல் கேள்வி பேச்சு என்னுமிவற்றை

நினக்கு உரியனவாக்கி நின்னை எய்தும் அறிவிலேன் என்க. ஐம்புலன்கள் என் எண்ணம் முதலியவற்றிலே ஈடுபடச் செய்துவிட்டன. என்னுடைய எண்ணமெல்லாம நின்னுடைய எண்ணமாகவும், என்னுடைய தொண்டுக ளெல்லாம் நினக்குச் செயயும் தொண்டுகளாகவும், யான் பிறர்பால் கேட்கும் கேள்விகளெல்லாம் நின்னைப் புகழ்ந்து பேசப்படுவனவாகவும், யான் பேசுவன எல்லாம் நின்னுடைய புகழ்பற்றிய பேச்சுக்களாகவும் மேற்கொள்ள வேண்டியிருப்ப, ஐம்புலன்களுடைய சூழ்ச்சியாலே, உலகத்தைப்பற்றியனவேயாகக் கொள்ளப் பெற்று, நின்வழி பற்ருது, உலகவழி பற்றியிழுக்க அவ்வழிப்போந்த யான் இறந்திலேன் ; அதுவன்றி, மனத்தினைத் துறந்தேனுமல்லேன். இத்தகையேன், நின்னை அன்பு டையேன்போலச் சார்தலுற்று, இன்னமும் உண்டுடுத்து உயிர்வாழ்ந் திருப்பேன் ஆயினேன் என்றருளிச் செய்தார்.

" எந்தையாய நின்னை " என்றருளிச் செய்தார், யான் இத்தனை அருமை பெருமை அருள்களையுடைய நினக்கு வஞ்சம் செய்தேனே எனத் தமது புன்மை தோன்றறபொருட்டு.

இறைவன் அறிவுறுத்தும்போது, அடிகள் பராமுகமாயிருந்தருளினர் என்பதும், அதுகொண்டே இறைவனும் பின்னர்த் தில்லைப் பொதுவின் கண் வருகவென்று ஆணை அளித்தான் என்பதும் தோன்ற " முந்தை யாய காலம் நின்னை எய்திடாத மூர்க்கனேன் " என்றருளிச் செய்தார் என்க. முந்தையாய காலம் - எதிர்ப்பட்ட காலம்.

இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை
ஆண்டு கொண்ட நின்னதாள்
கருப்பு மட்டு வாய்ம டுத்தெ
னைக்க லந்து போகவும்
நெருப்பும் உண்டு யானும் உண்டுஇ
ருந்தது துண்டஃ தாயினும்
விருப்பும் உண்டு நின்கண் என்கண்
என்ப தென்அ விச்சையே. 80

இதனல், என்னைக் கலந்தருள் செய்து நீ பிரியவும் சாவா திருக்கும் எனக்கு நின்பால் அன்பு உண்டென்று யான் கருதுவது என் அறியாமையே யாகும் என்பது கூயறிருளப்படுகின்றது.

(பொ - ரை.) இரும்புபோல (உருகாத அத்துணை வலிய தாகிய) நெஞ்சத்தினையுடைய கள்வனாகிய என்னையும் ஆண்டு கொண்டருளிய நின்னுடையவாகிய திருவடிகளில் ஊறி வழியும் கருப்பஞ்சாற்றினை என் வாயால் உண்ணச் செய்வித்து என்னை உடன்கலந்து நீ பிரிந்து செல்லவும், அப்பிரிவாற்ருமையை

ஒழித்தற்குரிய நெருப்பும் உளதாயிருந்தது ; கல் நெஞ்ச வஞ்சனே ளுகிய யானும் இறவாது உணவுண்டு வாழ்ந்ததுண்டு. அங்ஙன மாளுலும் (யான்) நின்னிடத்தே வைத்த அன்பு என்னிடத் துளதாவது என்று சொல்வது என் அறியாமையே யாகும் எ - று.

(வி - ரை.) உடன் கலக்கப்பெருத அடியவருள்ளே சிலர் தீப்பாய்ந்த நெருப்பும் அப்போதுண்டு என விரிக்க. இதனுல் அத்தீயை அடிகளும் உத்தரகோசமங்கையிலிருந்து கடிதோடி வந்து கண்டருளினர் என்பது பெற்ளும். இங்ஙனம் கொள்ளாது வாளா தீயெனப் பொருள் உரைப்பது பயனில் கூற்ளும் என்க.

வற்புறுத்தி, அறிவுறுத்துப் பேரின்பம் அளித்தமையால் அதனுக்குக் கருப்பு மட்டு உவமையாயிறறு.

" யானுமுண்டு இருந்ததுண்டு " எனச் சொற்ருெடர் முற்றுதலின், " அதாயினும் " என்னும் பாடங்கொள்ளாது, " அஃதாயினும்" என்னும் பாடமே கொள்க.

" நின்ன " வென்பது ' அ ' என்னும் பன்மையுருபினை ஏற்றமைக் கேற்பதீ " தாள் " என்றதனுக்கும் பன்மை யீறுவிரிக்க. " தாள் " என் பதே பன்மைப் பொருள் தருமெனக் கொள்ளினும் இழுக்காது.

என்னை நெருப்புண்டிலது, யானே உணவினை உண்டிருந்தேன் எனக் கூறிய திறன், அடிகளின் நெஞ்சிரக்கத்தினையும், சொல்லாற்றலையும் புலப் படுத்தவல்லது என்க.

தில்லேக்கும் போந்திலேன் உயிர் தானேயும் போயிலது என்ருங்கு விரித்துக் கொள்க. ஆகலின் அவ்வன்பு போலி அன்பென்பது அடிகள் கருத்து. தாமரைத்தாளில் கருப்பு மட்டூறியது என்ற குறிப்பு இறைவன் மற்றைய அடியார்களை நுகர்வித்தது போலல்லாது அடிகளை வருத்தி நுகர் வித்தான் என்ற திருக்கருத்துப் போலும்.

இரும்பு + நெஞ்சு = இருப்பு நெஞ்செனவும், கரும்பு + மட்டு = கருப்பு மட்டு எனவும் புணர்ச்சி நோக்கித் திரிந்தன. எதுகை நோக்கித் திரிந்தன வல்ல வென்க. இவற்றைக் ' கருப்பு வில்லி ' என்ருங்குக் கொள்க.

திருச்சிற்றம்பலம்

# 9. ஆனந்த பரவசம்

## கலிநிலைத்துறை

திருச்சிற்றம்பலம்

விச்சுக் கேடு பொய்க்காகா தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானார் எல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்
அச்சத் தாலே ஆழ்ந்திடு கின்றேன் ஆரூரெம்
பிச்சைத் தேவா என்நான் செய்கேன் பேசாயே 81

இதனால், அன்பர் எல்லாரும் உடல் நீங்கி நின்னையடைவுற்றனர் யான் அது செய்ய அஞ்சா நின்றேன் என்றருளுகின்றார்.

(பொ - ரை.) திருவாரூர்க்கண் கோயில் கொண்டருளியோனே, தாருகாவனத்து முனிவர் தம்முடைய மனைவியர்பால் அவர் இல்லந்தோறும் சென்று பிச்சை எடுத்தோனே, பொய்யின் மரபு கேடாகாதவாறு அதன் வித்தாகிய எனக்கும் கெடுதல் உளதாதல் தகாதென்று கருதி என்னையும் இவ்வுலகத்தில் இருத்தினாய். தம் உடலை விடுத்தமையால் நின்னுடைய விருப்பத்திற்குரியவர் ஆயினாராகிய மெய்ம்மைக்குரியார் அனைவரும் உன்னுடைய திருவடிகளை எய்தி இன்புறுகின்றார். யான் உடலை விடுதற்கு அஞ்சும் அச்சத்தாலே துன்பத்துள்ளே அழுந்துகின்றேன் ஆயினேன் அத்தகையேன் உய்வதற்கு யாது செய்வேன், நீ கூறியருள்வாயாக எ - று.

(வி - ரை.) ஆரூர்த் தேவா, பிச்சைத் தேவா என்க. திருவாரூரிற் கோயில் கொண்டருளிய பெருமான், எண்வகைச் செல்வங்களையும் யாவர்க்கும் வரையாது கொடுக்கவந்தருளிய எண் செல்வக் கொடைவள்ளல் ஆதலின், இறைவன் மெய்யன்பர்க்கு ஆரூர்த் தேவனாகவும், போலிமுனிவர் தம மனைவியர்களுடைய போலிக் கற்பினைக் கலக்கிய பிச்சைத் தேவன் தம் போன்ற பொய்யன்பர்க்குப் பிச்சைத் தேவனாகவும் இருந்து வருகின்றான் என்னும் பெரும் பொருளை “ ஆரூர்ப் பிச்சைத் தேவன் ” என்னும் சிறு தொடர்கொண்டு விளக்கியருளிய சைவக் கவித் திறன் உலகினரையெல்லாம் உருக்கிச் சைவநெறிக்கட் செலுத்தும் பெற்றிய தென்க.

நீ பிச்சைத் தேவன் ; யான் கேடில்லாத பொய்க்கு வித்து ; ஆதலால் உன்னொடு மாறுகொள்வதால் உன் ஊன்றிய திருவடிக்கீழ் உறைபவன் ஆகேன் என்னும் குறிப்புக் கொண்டு “ என் நான் செய்கேன் பேசாயே ” என்றருளிச் செய்தார்.

பொய் விச்சுக் கேடாகாது என்க. பொய்க்கு உருபு மயக்கம்; பொய்யின் எனக் கொண்டு பொய்யானது என விரித்தலின் ஆண்டு அவர்

விரித்தது 'இன்' உருபாகாமையால், உருபு மயக்கம் என்று விளக்கப் போந்து, எதனை விரிக்கவேண்டுமோ அதனை விரிக்காது மற்றொன்று விரிப்பாராயினர்.

பொய்விச்சுக் கேடாகாது - பொய்யினது விதைக்குக் கேடாகாது. வித்தென்பது விச்செனா மருவியது.

'பிக்ஷா' என்னும் வடசொல் பிச்சை எனத் திரிந்தது. 'இச்சா' வென்பதும் அங்ஙனமே இச்சையென்றாயிற்று.

அச்சத்தால் கவலைக்கண் அழுந்துகின்றேன் ; ஆதலின் என் கவலை தீர்த்து ஆட்கொள்க என்பது இசையெச்சம் யான் இங்ஙனமே கவலையுள் அழுந்தி இருந்துவருவதுதான் எனது முடிபாகுங் கொல்லோ என்னும் அச்சமுமாம்.

நிலையுதலில்லாத பொய் நிலைபெறுவது என்றால் என்று கருதி என்னை ஈங்கு வைத்தாய்போலும் எனினும் இழுக்காது. இங்ஙனம் கூறுவதும் சொல் வன்மையாகும். நின் திருவருள் இஃதாகுமேல் என்செய்வேன் நான் எனினுமாம்.

**பேசப் பட்டேன் நின்அடி யாரில் திருநீறே**
**பூசப் பட்டேன் பூதல ரால்உன் அடியான்என்று**
**ஏசப் பட்டேன் இனிப்படு கின்றது அமையாதால்**
**ஆசைப் பட்டேன் ஆட்பட் டேன்உன் அடியேனே. 82**

இதனால், அடியாரால் பேசப்பட்டுப் புகழினையும், உலகோரால் ஏசப்பட்டு இகழினையும் பெற்றுக்கொள்ளுதல் எனக்கு ஏற்புடையதெனினும், நின்னால் புறமே போக்கப்படுதல் ஏற்புடையதாகாது என்றருளுகின்றார்.

(பொ - ரை.) (தொண்டு புரிதலிலே மாறுபட்டேன் எனினும்) உன்னில் ஆசைப்பட்டவனும், உன்னால் அடிமையாகக் கொள்ளப் பட்டவனும் ஆகிய அடியேன், நின்னடியாரைப்போல (நின்னாலும் அடியாராலும் புகழ்ந்து) பேசப்பட்டேன் நின்னடியாரைப்போல நின்னால் திருநீறு அணியப்பட்டேன், பூதலத்துள்ள பொதுமக்களால் பித்தன் என்று ஏசப்பட்டேன் , இனி அடைவதற்குரித்தாகிய நின்னாற் புறம்போக்கப்படுவது ஒன்றுமே ஏற்புடையதாகாது எ - று.

(வி - ரை.) அடியாரில் - அடியாரைப்போல. நின்னாலும் அவ்வடியாராலும் "பேசப்பட்டேன் ; பூதலரால் ஏசப்பட்டேன்" என்றருளியதனால், ஈண்டுப் பேசப்படுதல் என்றது புகழ்ந்து பேசப்படுதலை

குருவினாலே மாணாக்கனுக்குக் காப்பாகத் திருநீறணியப் படுதலையே "திருநீறே பூசப்பட்டேன்" என்றருளிச் செய்தார்.

"பூசில் தாம் திருநீறே நிறையப் பூசி" (திருச்ச. 24)
என்றாங்கு, விரைச்சாந்து முதலியனவற்றைப் பூசாது திருநீறே பூசப் பட்டேன் எனினும் ஒக்கும்.

பேசப்பட்டும் பூசப்பட்டும் வந்த புகழ், ஏசப்படுதலால் ஒழிந்ததோடு அமையாது, பழியையும் விளைத்ததென்க. என் பழியை அவர் கண்டு சான்றாகின்றார் என்க. ஒரு செயல் நிகழ்ந்ததே யெனினும், அன்றதே யெனினும், சான்றால் கூறப்பட்டதொன்றே நிலைபெறும் என்பது அறநூல் முடிபு. இதனால் உலகுடன் ஒத்துவாழ்தல் வேண்டு மென்பது பெற்றாம்.

"நல்லோ னேனும் அல்லோ னேனும் உலகோர்தாம்
அல்லோன் என்னில் மற்றவன் தானும் அல்லோனாம்
நல்லோன் என்னில் நல்லா னவான்; ஞாலத்து
வல்லோர் சிந்தை கொள்ளநின் வாழ்வை வகைசெய்யே"

என அதர்வ வேதத்துள்ளும் இதனை வலியுறுத்துவது காண்க.

இனி - இப்போது. படுகின்றது - யான் படக்கிடப்பது. அதுதான் உலகோர் கூறும் சான்றால் எய்துகின்ற பழி. அதன் பேறு, என்னையும் என் பொய்யையும் புறமே போக்குதல்.

"யானும் பொய்யும் புறமே போந்தோமே",
"புறமே போந்தோம் பொய்யும் யானும்" (திருச்ச. 85, 86.)

என வருவனவற்றால் ஈதுணரப்படும்.

தனது தூய்மை தோன்றத் திருநீறு பூசப்பட்டதும், அகத்தார் மணங் கொண்டது தோன்றப் பேசப்பட்டதும் உளவேனும், பெரும்பான்மை யோரால் ஏசப்பட்டமையால் புறம் போக்கப்படுதல் திண்ணியதாயிற்று. கொலைக்கு உரை முடிபுசெய்யினும் சைவநாடு கடத்தப்படுதல் தமக்கு அமையாதென்று அருளிச் செய்தார். அமையாது - ஏற்புடையதாகாது.

நின் அடியேனாகிப் பெருமை பெற யானும் ஆசைப்பட்டேன். அப் போது நின்னாலும் அடியவராலும் தக்கான் இவனே என்று பேசப் பட்டேன்; நீயும் ஆட்கொண்டு எனக்குத் திருநீறு பூசினாய்; யானும் திருநீறு பூசப்பட்டேன்; இப்போது உலகோர் தீயேன் என என்னில் வழக் காடிச் சான்றுரையாநின்றார்; அதன் உரைமுடிபு யாதானுமாகுக. அம் முடிபுகள் என்னைப் புறம்போக்குமாயின் ஏற்புடையவாகா என அடிகள், இறைவனாகிய அறமன்றத் தலைவன்பால் விண்ணப்பஞ் செய்தருளுகின்றார். இவ்விண்ணப்பம் செய்தும் ஒதுக்கப்பட்டுப் புறமே போக்கப்பட்டனர் என்க. உடன் கலந்து கொள்ளாதும், உடல்விடுத் தொன்றாமலும், உல கிடை உண்டுடுத்து வாழ்ந்திருத்தலையே தாம் புறம்போக்கப்பட்டதாக நினைந்தருளினர். அங்ஙனமாதலின் இங்ஙனமருளினர்.

"நாட்டவர் மருளவும்" (திருவண்டப். 154.)

எனவும்,

" மருளார் மனத்தோர் உன்மத்தன் வருமால்
என்றிங் கெனைக்கண்டார்
வெருளாவண்ணம் " (பிரார்த். 3 )

எனவும் வருவனவற்றால் உலகோர் அடிகளைக் கண்டு வெருண்டு ஏசுகின்றார் என்பது பெற்றாம் இவன் இங்கிருப்பது பெரிதும் ஏதம் தரவல்லது என்று வெருண்டு ஏசுதலின், இறைவனும் அடிகளைப் புறமபோக்கினான் என்க. பொய்யன்பு பூண்டாரைக் கண்டு வெருண்டு அஞ்சி உலகம் ஒதுக்கும் என்பதும், மெய்யன்பரைக் கண்டு உலகம் உவகை கொண்டு விரும்பும் என்பதும் பிரார்த்தனைப் பத்து மூன்றாம் திருப்பாடலால் உணரப்படும் என்க. உலகோர் வெருண்டு இகழவும் அதனால் இறைவன் புறம்போக்கினன் ஆதலால், பொருந்துதல் என்றதற்கு, இவ்வுலகிற் பொருந்துதல் என உரைப்பது மரபறிந்து உரைப்பதாகாது பாட்டின் வினைமுடிபு தோன்ற "அமையாதால்" என அவ்வினை "ஆல்" என்பதனால் அசைக்கப் பட்டது.

அடியார் எல்லாவற்றையும் சிவமேயாகக் காணற்கு முயலும் பெற்றிய ராதலால் அவர்சான்று கொள்ளற்பாலதன் றெனவும், உலகோர் குணம் குற்றம் ஆராயும் இயல்பினராதலால், அவர் சான்றே ஈண்டுக் கொள்ளற் பால தெனவும் கூறினுமமையும்.

அடியேன் அல்லேன் கொல்லோதான்
எனையாட்கொண் டிலைகொல்லோ
அடியார் ஆனார் எல்லாரும்
வந்துன் தாள்சேர்ந்தார்
செடிசேர் உடலம் இதுநீக்க
மாட்டேனெங்கள் சிவலோகா
கடியேன் உன்னைக் கண்ணாரக்
காணுமாறு காணேனே. 83

இதனால், இறைவன் ஆண்டு விடுத்தமையாலும், தாமும் உடலை நீக்கிச் சென்றடையாமையாலும், தில்லைக்காவது புறப்படாமை யாலும், தாம் அடியனோ, அல்லனோ என ஐயுற்றருளுகின்றார்.

(பொ - ரை ) சிவலோக முதல்வனாகிய எங்கள் பெருமானே, உடன் கலக்கப் பெறாராய் எஞ்சியிருந்த அடியார் எல்லாரும் உடல் விடுத்து உன் திருவடியை எய்தினர். அதனைப் பார்த்திருந்த யான் தீவினை பொருந்திய உடலாகிய இதனை ஒழிக்கும் வல்லமை யில்லேன், விலக்கத் தக்கேன், உன்னை நேரே கண்குளிரக் காணற் குத் தில்லை செல்லும் நெறியிலேனும் சென்றிலேன் இத்தகையேன் ஆதலால், யானுன்னுடைய அடியேன் அல்லனோ? நீ என்னை

இங்ஙனம் விடுத்துநிற்கின்றாய் ஆதலால் பட்டாங்காக ஆட் கொண்டாய் அல்லையோ எனத் தெளியக் கூறுவாயாக எ - று.

(வி - ரை.) அன்பராயினார் உடல் நீக்கிச் சென்றமையும், தாம் அங்ஙனம் செய்யாமையும், தில்லைக்குச் செல்லாமையும் ஆகிய இவை அன்பனுதலை விலக்க வந்தன.

ஆட்கொள்ளப் பெறுதார் நிலையிலேயே தாம் இருந்துவருதலாலும், ஆட்கொண்டதும் உள்ளதாதலாலும், ஆட்கொண்டது மாயமுடையதாம் என நினைத்தற்கு இடனுதலாலும் (பட்டாங்காக) ஆட்கொண்டிலை கொல்லோ என ஐயுற்றருளினார்.

தாம், பட்டாங்காகவே ஆண்டுகொண்டருளினான் என்று கருதி இருந்தமையால் இங்ஙனம் அருளிச்செய்தார்.

செடி - தீவினை. தொண்டு செய்தற்கு உதவாமையால் உடல் "செடி சேருடல்" என்றருளப்பட்டது. 'உடல்' அம் சாரியை பெற்று நின்றது.

கடியேன் - விலக்குதற்குரியேன்; செய்ந்நன்றி போற்றி ஒழுகாமை யால் என்க.

காணுமாறு - தில்லை காணும் நெறி. காணேன் என்றது, அந்நெறியிற் செல்லுதலை மேற்கொண்டிலேன் என்று பொருள்பட்டது

**காணுமாறு காணேன் உன்னை**
**அந்நாட் கண்டேனும்**
**பாணேபேசி என்தன்னைப் படுத்த**
**தென்ன பரஞ்சோதி**
**ஆணேபெண்ணே ஆரமுதே அத்தா**
**செத்தே போயினேன்**
**ஏண்நாண் இல்லா நாயினேன்**
**என்கொண் டெழுகேன் எம்மானே. 84**

இதனால், இறைவனே நீ என்பால் முன்னர் இனிப்பன கூறி ஆட்கொண்டும் பின்னர்க் கீழ்ப்படுத்திய தென்ன? நான் என் செய்கேன்? இருந்தும் இறந்தவனாவேன் என்பது கூறியருளப் படுகின்றது.

(பொ - ரை.) மேலாகிய ஒளிப்பிழம்பே, ஆணாகியவனே, பெண்ணாகியவனே, தெவிட்டாத அமுதம் ஆகியவனே, அப்பன் ஆனவனே, எம் போன்றாரைக் காத்தற்குரியவனே, நீ என்னை முன்னர் இச்சகம் பேசி ஆண்டுகொண்டும், (அதன் பின்னர்த் தாழ்த்தியதற்கும்) ஒழிந்ததற்கும் காரணம் யாது? நீ ஆட்கொண்ட அந்நாளிலே காணப்பெற்றும், நீ பிரிந்த பின்னர் நின்னைச் சென்று காணுதற்குரிய வழியை நாடேன்; வலிமையும் மானமும்

இல்லாத நாய் அனையேன், எதனைத் துணைக் கொண்டு தில்லையைச் சேர்தற்கு எழுவேன். யான் இருந்தும் நல்லன செய்யாமையால் செத்துப்போனவன் ஆயினேன் எ - று.

(வி - ரை) ஒளிப்பிழம்பு கட்கெல்லாம் ஒளியுதவும் பிழம்பென்க.

"அருக்கனிற் சோதி யமைத்தோன்" (திருவண். 20)

ஆதலால் "பரஞ்சோதி" என்றருளப்பட்டான. இருள் நீக்கிப் பொருளின் இயல்பு அறிவித்து, ஆணாக நின்று கரு நிரம்பி, பெண்ணாகி நின்று கரு ஏற்று, அக்கரு வளரதற்கண்ணும் பிறந்தபின்னும் உணவாகி நின்று வளர்த்து, ஆசானாகிநின்று கலையாக்கம பெறச்செய்து, எமக்குரியவன் ஆயினான் என்பது, "பரஞ்சோதி ஆண் பெண் அமுது, அத்தன், எம்மான்" என்னும திருப்பெயர்களாற் பெறப்பட்டது.

பாண் - இச்சக வார்த்தை. அஃது அறிவுறுத்தப்படுவோனுக்கு அறிவுறுத்துவோனால் கூறப்படுவது. அப்பேச்சினையே,

"ஓர் வார்த்தை யுட்படுத்தாய்" (செத்திலா. 2.)

எனப் பின்னும் அருள்வர். படுத்தியது - தாழ்த்தியது; ஒழித்தது. இனி, "பாண்" என்றதற்குப் பாழ் எனப் பொருள் கொள்ளின, "பேசி" என்றதனைச் செயவென்னெச்சமாக்க நேரிடுதலானும், யாம் ஆண்டுரைத்த பொருளுக்கு இயல்பாகவே அது கொள்ளப்பட்டிருத்தலினாலும் அவருரை பொருந்தாதென்க. "பாண்" என்றதற்கு இனிய சொறகள் (காதலுண்டாக்கும் சொற்கள்) எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

"एकोवशी" - ஒருவனே வசீகரிப்பவன். (கடோ. 5 : 12.)

எனவும்,

"सर्वस्ववशी" - அனைத்தையும் வசீகரிப்பவன்.

(பிருகதா. 6 : 4 : 22.)

எனவும் வருவனவற்றால் இது வலியுறுத்தப்படும்.

மான்நேர் நோக்கி உமையாள் பங்கா
    மறையீ றறியா மறையோனே
தேனே அமுதே சிந்தைக் கரியாய்
    சிறியேன் பிழைபொறுக்கும்
கோனே சிறிதே கொடுமை பறைந்தேன்
    சிவமா நகர்குறுகப்
போனார் அடியார் யானும் பொய்யும்
    புறமே போந்தோமே. 85

இதனால், கொடுமை சிறிது கூறியதற்காகச் சிவமாநகர்க்குப் புறம்போக்கப்பட்டேன். ஈதென்ன உரைமுடி வென்றருளுகின்றார்.

(பொ - ரை.) மானை ஒத்த நோக்கத்தை உடைய உமை மங்கையை இடப்பாகத்திற் கொண்டவனே, நால்வேதங்களிலே கூறப்பட்ட பொருள்களினுடைய முடிந்த முடிபாகிய நுண்ணிய ஞானப்பொருளாலும் அறியப்படாத நுண்பொருளே, தேன் ஆனவனே, அமுதம் ஆனவனே, மனத்தாலும் நினைத்தற் கியலாதவனே, சிறுமைக் குணமுடையேன் செய்த பெருங்குற்றத் தினையும் பொறுத்தருளும் வேந்தனே, உடனே சோதியிலே கலந்து கொள்வதற்கேற்ற செவ்வி நிரம்பாத அடியார் (அங்ஙனம் உடன் கலக்கப் பெறாமைக்குக் காரணம் தமது குறையே எனத் துணிந்து தம்மையே முனிந்துகொண்டு உடல்விட்டுப்) பெருமை பொருந்திய சிவநகர் அடைய வழிச்சென்றனர். (யான் என் குறையை நின்மேலேற்றி) நின்னைச் சிறிதே கொடுமை கூறினேன் (அதற்காக மெய்ப்பொருளாகிய) யானாகிய உயிரும், (என்னை யுள்ளிருத்திக் காவல்புரிந்து வரும் நடமாடும் சிறைக் கூடமாகிய) பொய்யாகிய உடலும், அந்நகர்க்குப் புறத்ததாகிய துன்பந் தரும் உலகத்துக்குச் செல்லும் வழிச்செலவினை மேற்கொண்டோம் எ - று.

(வி - ரை ) பொய் - உடம்பு, ஆகுபெயர்.

"கோனே உன்தன் திருக்குறிப்புக் கூடுவார் நின்கழல்கூட
ஊனார் புழுக்கூடு இதுகாத்திங்கு இருப்ப தானேன்"

(திருச்ச. 55)

என்றருளியதனாலும் "பொய்யும்" என்றது, கூடு என்பதாம் எனக் கொள்ளுதலே அடிகள் திருக்குறிப்பாதல் அறிக. இதனால் உடலும் வேறென்று கொள்ளவேண்டுமென்றருளியபடி. நின் அங்ஙனம் கொண்டனர் ஆதலின், அதனை நீக்கி, மெய்ப்பொருளாகிய தாம், மெய்ப்பொருளாகிய இறைவனோடு ஒன்று சேர்ந்திருக்கப் போயினர். அவ்வுண்மையைக் காணமாட்டாத யான, அவ்வுடம்பினை ஒன்றெனவே போற்றி, அவ்வன்பர் வழிச்செலவிற்குப் புறம்பாகிய இன்னல் உலகினையும், அதறகுச் செல்லும்வழிச் செலவினையும் பொய்யொடு மேற்கொண்டனன் என்றருளியபடி.

இவ்வரலாறறினை எழுதுங்கால் அடியேமும் இருபஃதொடை வெண் பாக்களைக் கருவுயிர்த்தனம. அக்குழவிகளைக் கண்டும், அவற்றின் பொருள் நிரம்பா மழலையைக் கேட்டும் அவை எள்ளி ஒதுக்கப்படா எனத் துணிந்து ாண்டு அவற்றைப் பயிலத் தருதும்:

"காட்சிக்குப் பூதமாக் காட்டுங்கூட் டுள்மறைந்து
மாடசிப்பு, தம்மியக்கு வாறும்பல்—சூழ்ச்சிக்கூடு
உள்ளுயிர்த்து வாழ்வோனும் ஓர்பெற் றியரேனும்
கள்ளுயிர்க்கும் கூந்தால் கழறக்கேள்—எள்ளளிக்கும்
பூதமும் தானும் புறம்பெனவே கண்டறிவான்

பூதவுடல் தானகப் போற்றி மயங்குவான்
ஏதமுற மறறவனும் ஙகு ''

என்பதும்,

'' கோலித் தொடர்ப்பூட்டுக் குற்றியொடு கால்பற்றி
வாலில குரஙகின் வரலாறும—கேலிக்காம்
கூட்டுத் தொடர்ப்படுக் கூத்தனது கூத்தாட்டும்
பார்க்கில் ஒன்றெனவே பட்டாலு ம—வாட்கண்ணாய்
குற்றித் தொடரறுக்க வேதறித்து நிற்குமது
மறறிக் குரஙகறுக்கு மா ''

என்பதுமாம்.

துயில் எழுப்புங் காலத்தில் துயின்றேன், துயிலெழுப்புவோனைத் துயில் மயக்கத்தால் வைதால ஒப்ப, உலகியலுள் அமிழ்ந்தி மயங்கி அயர்ந்த யானும் அதனினின்றும் எழும்பி நின்னைச் சிறிதே கொடுமை பறைந்தேன் என்க. பறைதல் - கூறல.

இச்சிறு பிழைக்காக யான் புறமபோதலாகிய பெரியதோர் தண்டத்தை ஏற்றுக்கொண்டேன் என்றருளினர் என்க சிவமாநகரக்குப் புறம்பானது இருளுலகு. சிவமாநகர் - ஒளியுலகு, தில்லைச்சிற்றமபல மென்க.

மயக்கத்தானகிய பெரும்பிழைகளையும் பொறுப்பது பெரியோர் கடப்பாடாகவும், என் சிறுபிழையைப் பொருது இஙஙனம் என்னைப் புறம் போக்கியது, நின் பெருமைக்கு அழகிதாகாது என்பது குறிப்பு.

என் பிழை சிறியது என்று யான் கருதினேன். அது நினக்குப் பெரியதொன்றுயது. அதுவும் என் தீவினையால் ஈட்டப்பட்டதென இரங்கினுருமாம்.

எஞ்சிய அவ்வன்பர் செவ்வி நிரம்பாக் குறை ஒன்றே யுடையர்; அவர் மெய்யனபு நுண்ணிதாகவுடையார், ஆதலால் உடல் விடுத்தேனும் சிவநகர்க்கு வழிச்செல்வாராயினர். என்பால் அவ்வன்பு அணுவளவேனும் இன்மையால் யான் உடம்பொடுபட்டு இங்ஙனம் ஆயினேன என்று கருதி யருளினுர் என்க.

தில்லைக்கு வாவென இறைவன் பணித்தருளியதை ஒப்பாராயின், குரவன் சொற்கடந்த பெருங்குற்றத்திறகுள்ளானவர் ஆவர் ஆதலால், அங்ஙனம் ஒப்பியது கொடிதெனபபடாது என்னும இதனையும் அறிந்து கொள்ளாதார சிலர், ஒப்பியதே கொடிதெனக் கொள்வர். எனவே, கொடுமை பறைந்தேன் என்றது, உலகியலிற் செல்லும் செலவினை விடுத்து, வீட்டுலக வாழ்க்கைக்கண்ணே செல்லுதலை மறுத்ததை என்ற வாருயிற்று இன்னும் இதனல்,

'' முடித்தவாறும '' (திருச்ச. 57.)

என்னும் திருப்பாடற்கு நேர் பொருளை கொள்ளவேண்டுமென்பதூஉம், ஆசைப்பத்தின் ஆருவது திருப்பாடற்கண் ''இல்வாழ்க்கை'' எனப் பாடங்கொள்ளலே அடிகள் கருத்தாகுமென்பதூஉம் பெற்றும்.

வாவென்றபோதே ஆங்கு அருளுவன் என்று எண்ணித் தமது விருப்பத்தினை உணர்த்தாதருளினர். இதனை,

"உடையாய் நீயே அருளுதிஎன்று
உணர்த்தா தொழிந்தே கழிந்தேன்" (பிரார்த். 7.)

எனப் பின்னும கூறியருள்வர். ஆதலால், இங்கே அவன் கட்டளைக்கு இசைந்தமையைக் கொடுமை எனக் கூறுவது பொருந்தாதென்க. அருளுவன் அருளுவன் என்றே தாம் காலம கழித்தாராகக் கூறுதல் ஆராயதற்பாலது. கோயின் மூத்ததிருப்பதிகம் ஏழாந் திருப்பாட்டில்

"இரங்கும் நமக்கம்பலக் கூத்தன்
என்று என்று ஏமாநதிருப்பேனை"

என்றருள்வதனையும் ஈண்டு நோக்கல் வேண்டும்.

"கள்ளேன் ஒழியவுங் கண்டு கொண்டு ஆண்டதெக் காரணமே"
(நீத்தல் விண்ணப்பம். 2)

என மேலும் அடிகள் கூறுதலின் கொடுமை பறைந்தது உலகியலைவிட்டு இறையியலை நாடத் தாழ்த்ததே என்பது தெளிவாகின்றது.

புறமே போந்தோம் பொய்யும் யானும் மெய்யன்பு
பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன்யான்
அறவே நின்னைச் சார்ந்த அடியார் மற்றொன் றறியாதார்
சிறவே செய்து வழிவந்து சிவனே நின்தாள் சேர்ந்தாரே. 86

, நின்னையன்றி மற்றொன்றறியாத அன்பர் நின்னடி அடைந்தார் யான் மற்றையன அன்றி நின்னையறியும் அறிவிலேன் ஆதலால், யானும் பொய்யும் புறமே போந்தனம் என்றருளுகின்றார்.

(பொ - ரை.) செம்பொருளாகிய சிவனே, நின்னடியார் உன்னையே அறிவதன்றிப் பிறிதொன்றனையும் அறியாராதலால், அவர் சிறந்தனவாய நினது நற்றொண்டுகளையே முற்றும் புரிந்து, அதனால் நன்னெறியில் சேர்ந்து உன் திருவடிகளைச் சேர்ந்தனர். அங்ஙனமே அடியேனும் நின்னிடத்து உண்மையான அன்பினைப் பெற வல்லவனாயிருந்தும் (அதனைப் பெற்றுக்கொள்ளுமாறற்று நிலைபெற்ற இன்னல்கட்கு இருப்பிடமான நினக்குப் புறம்பான தாகியவற்றைப் பயக்கும்) அல்லனவாகிய குணமே பெற்றேன். ஆதலால் பொய்யாகிய உடலும் (அதனொடு சார்ந்த) யானும் இன்னல் தரும் நெறியிலே போயினேம் எ - று.

(வி - ரை.) திருவடியாகிய இன்பப் பொருளைப் பெற்றமைக்குக் காரணம், திருவடியை அறிந்து கொள்ளுதலேயன்றிப் பிறிதொன்றினையும் அறியாமையாம். அத்திருவடியை யறியாது பிறவற்றையே யறிவார் பிற

வற்றல் நிகழற்பாலனவாய இன்னல்களையே பெறுவர் என்க. இது கருதியன்றே திருவள்ளுவனாரும,

" யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன் " (திருக்கு. 341.)

எனவும்,

" பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு " (ஷை. 350.)

எனவும் அருளிச் செய்தார்.

வல்லோனுயிருந்து பெற்றுக்கொள்ளாது புறம்போந்தேன் என்க. நீ அறிவுறுத்தும்போது வல்லேன் போன்றிருநதேன் ; பின்னர் அல்லேன் ஆயினேன் என்று கூறினுமமையும். உண்மையன்பு பெற உரிமையற்ற திறத்தினைப் பெறறேன் எனினுமாம்.

சிறவு - சிறந்த செயல், வீடுமாம். என் குணமே என்னைக் கெடுத்தது என்றருளியவாறு. துறத்தலையுடையது 'துறவு' என்றாயதுபோலச் சிறத்தலையுடையது 'சிறவு' என்றாயிற்று.

தாராய் உடையாய் அடியேற்
குன்தா ளிணையன்பு
பேரா உலகம் புக்கார் அடியார்
புறமே போந்தேன்யான்
ஊர்ஆ மிலைக்கக் குருட்டா
மிலைத்தாங் குன்தா ளிணையன்புக்(கு)
ஆராய் அடியேன் அயலே
மயல்கொண் டழுகேனே. 87

இதனால், எனக்கு வழிகாட்டிகளான அடியாரெல்லாம் நின் தாள் சேர்ந்தார் ஆதலால் யான் மயங்கி யழுகின்றேன். உன் தாளிணை யன்பைத் தருவாயாக என்றருளிச் செய்கின்றார்.

(பொ - ரை ) என்னை யடிமையாக உடையவனே, ஊரவர்க் குரிய ஆவினங்கள் தத்தம் மேய்புலங்களிலே மேயப்புகும் போது கனைத்தலைச் செய்யவும், அதனைச் செவியேற்றதொரு குருட்டா வும் தானுமுடன்சென்று கனைத்தாற்போல நின்மேல் அன்பு செய் தற்கு எனக்கு வழி காட்டுவாராக என்னுடனிருந்த அடியவரெல் லாரும் போர்வையால் மூடப்பெறாத வீட்டுலகம் புக்காராயினர். அங்ஙனமே அடியேனும் செல்லுதற்கென ஒரு வீடும் எனக்கின்மை யினாலே அப்புலத்தினின்று இன்னல் தரற்பாலதாகிய புறம்பாகிய இடத்திற்குப் போய்ச்சேர்ந்தேன் உன்னுடன் இரண்டாகிய திருவடிகளில் அன்பு வைத்து இன்புறுதற்கு யான் எத்தகையேன் ?

அவ்வாறாய் இன்பந் தருமிடத்திற்கு அயலதாகிய துன்பந் தருமிடத்தில் அத்துன்பத்திற்குக் காரணமாகிய மயக்கத்தினை மேற்கொண்டு அழுகின்றேன் ஆதலால், அடியேற்கு உன் தாள்களைக் காணற்குரிய அன்பினைத் தருவாயாக எ - று.

(வி - ரை.) மிலைத்தல் - கனைத்தல்.

"எப்படி ஊராமிலைக்கக் குருட்டா மிலைக்கும் என்னும்
அப்படி யானும் சொன்னேன் அடியேன் மற்றும் யாதென்பேனே"
(நம் இயற்பா. திருவிருத் 94)

என்னுந் திருப்பாட்டிலே 'மிலைத்தல்' என்பது கனைத்தல் எனப் பொருள்தருதல் காண்க. "எப்படி ஊரா . யானும் சொன்னேன" என்னும் இது, தலைவனால் தலைமகளின் இயலிடங் கூறக் கேட்டுச் சென்று கண்டு மீண்டு வந்த பாங்கன், அவளுடைய இயல்புகளைத் தலைமகன்பால் வியந்துரைத்த பகுதி. பாங்கன் அவள் இயல்பினைத் தன்பால் உரைத்த கூற்றினுக்கும் தான் அவளைக் கண்டு மீண்டு வந்துரைத்த தன் கூற்றினுக்கும் முறையே ஊராவின் கனைப்பினையும் குருட்டாவின் கனைப்பினையும் ஒப்பாகக் கூறினான். ஆதலால் "மிலைத்தல்" என்றது அப்பொருள்படுமாற்றை அறிந்துகொள்க. "எப்படி" என்றதற்கும் மேற்கொண்ட பரிசு எனப் பொருள் கொள்ளின் "அப்படி" என்றதற்கும் "மேற்கொண்ட பரிசே" என்றவாறே பொருள்கொள்ளவேண்டும் அப்படியே என்றதுவோ சொன்னேன் என இயைதலின், அப்பரிசும் கூற்றாகவே முடிதலின், "மிலைத்தல்" என்றதற்குக் கனைத்தல் என்னும் பொருளையே நம்மாழ்வாரும் கொண்டருளினார் என்பது தேற்றம்.

இனி, "மிலைத்தல்" என்றதற்கு மேற்கொள்ளல் எனப் பொருள் கொள்ளின், ஊராமேற்கொள்ளும் புல் தின்றலைக் கண்ணால் அறிந்துகொள்ளும் ஆற்றல் குருட்டாவினுக்கு இன்மையால், அதனைச் செவியினாலேதான் அறிதலும் வேண்டும். அக்குருட்டா மேற்கோடற்கு ஊராவின் கனைப்பும் இன்றியமையாததொன்றாக இருத்தலின், புல்லை மேய்தற்கும் காதாற் கேட்டலே காரணமாதல் கண்டுகொள்க. கேட்டவிடத்தன்றி மேய்தலும் நிகழாமையின், அங்ஙனம் கேட்டற்கு ஏற்றதாகிய செவிப்புலனும் ஒலியையே கண்டு மிலைத்தல் என்றது குறித்து நின்றதெனக் கொள்ளலே ஏற்புடையது. முன்னர் உரைத்த உரையாசிரியர், "'ஊராமிலைக்கக் குருட்டா மிலைத் தாங்கு' என்னும் தொடருக்குப் 'பொருள் நன்கு விளங்கவில்லை'" (வாசுதேவ முதலியார் பதிப்பு பக்க. 86) எனக் கூறி, மிலைத்தற்கு மேய்தல்என ஒருவாறு பொருள்கொண்டிருக்கவும், அதற்குப் பிந்திய உரையாசிரியர்களுள் ஒருவர், "மிலைத்த" என்பதற்குச் சூடுதல், அணிதல் என்னும் பொருள்கள் உளவாதல் கண்டு மேற்கொள்ளுதல் (மேய்தல்) எனத் தாமும் ஆராய்வின்றி உரை வரைந்து செல்லுதல் உரை மரபாகாதென்க.

ஊர்ஆ - ஊரவர்க்குரிய ஆ. ஊர் ஆகுபெயர். குருட்டா - ஆதரிப்

பாரில்லாத ஆ. அங்ஙனம் கொள்ளின் காட்டிலே கரு முற்றுங்காறும் வளர விட்டிருநத ஆவினங்களை, அவை கன்றீனற்குரிய பருவம் வந்தவுடன், அவறறையெலலாம், அவற்றினுக்குரியராயினர், தத்தம நாட்டின்கண்ணுள்ள ஊர்களுக்குக் கொண்டு புக்காராக, ஆங்கவற்றுடன் குருட்டாவொன்று, அவை கனைப்பத் தானும் உடன்கனைத்து, அவறறெடு குருட்டால் எய்தப்பெறும் துன்பம் ஒன்றேனுமினறி ஒருங்கு சென்று உண்டு வாழ்ந்து வந்தது; ஊராவினத்தை அவற்றையுடையராயினர் கொண்டு செல்ல, தன்னுடையானல் பராமுகஞ் செய்யப்பட்ட அக்குருட்டா, தங்குமிடம் மேய்புலம் வனவிலங்கு மேடுபள்ளம் நீர்நிலை என்பன கண்டறிந்து வாழற்கு இயலாததாய், வாய்ப்புள்ள இடம நீக்கியும், வாய்ப்பற்ற இடங்களைச் சார்ந்தும் பேரிடரப்பாடு எயதிக் கதறிறறென வரலாறு விரிக்க.

அங்ஙனமே தம்முடைய நல்வாழ்விறகு வழிகாட்டுவோராகிய அடியார் எல்லாரும், உடையானாகிய இறைவனுடைய மீளாவூர் புக்கனராக, அன்பாகிய கண்ணற்ற தாம் செய்வதும் தவிர்வதும் அறியாராய் வருந்தி, அவரோடு தமக்கும உடையவனாகிய இறைவனை அன்புக்கண் அளிக்குமாறு அடிகள் வேண்டியருளுகின்றார் எனப் பொருள் விரிகக.

"உடையானே" என இறைவனை அடிகள் அழைத்தருளியமையானே இறைவனுக்கு அடியவராயினர அடிகள் என்பதும், அன்புக் கண்ணைத் தம் கொடுமை காரணமாக இழந்தனர் என்பதும், அங்ஙனமாய அடிகள் இறைவற்குப் பயன்படார் ஆகலின், இறைவனால கொள்ளப்படார் ஆயினர் என்பதும், அன்னபிறவும் பெறப்பட்டன. இன்னவெல்லாம் குருட்டாவாகிய உவமத்திற்கும் கொள்ளப்படும். அன்புக்கு ஆர் - அன்பினைப் பெற்றுக் கொள்ளற்கு யானர்? ஆய் - அதனை இறைவனே ஆராய்.

அன்புள்ளவர், இறைவன் திருவடியைக் கண்டு இன்பம் நுகர்ந்து நீடு வாழ்ந்திருப்பவர்; அவர்க்கு ஐம்புலன்கள் முதலாய வெல்லாம் அன்பொன்றேயாகும். அன்பினையே உடலாகவும் கொண்டவர் என்பவாகலின், அன்பில்லாராகிய தம்மை அடிகள் குருட்டாவோடு ஒப்பிட்டருளினர் என்க.

"போரா வீடு" என்பதற்குப் பிறிதொன்றனுலே மூடப் பெறாத வீட்டுலகம் என்க. எனவே தூயவுலகம் பேராவுலகம் எனப் பாடங் கொண்டு மீளா உலகம் எனப் பொருள் கூறுவாரும் உளர்.

அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய் அழல்சேர்ந்த
மெழுகே அன்னார் மின்னார் பொன்னார் கழல்கண்டு
தொழுதே உன்னைத் தொடர்ந்தா ரோடும் தொடராதே
பழுதே பிறந்தேன் என்கொண் டுன்னை பணிகேனே. 88

இதனால், அன்பரோடும் பின் தொடராத யான் எதனைப் பற்றுக் கோடாகக் கொண்டு உன்னைப் பணிவேன் என்றருளுகின்றார்.

(பொ - ரை) நின்னில் அன்புளதாகும் உள்ளமாய் அழுதலை (இயல்பாகவே) செய்யாதேனும், நின்னைச் சேர்ந்து உருகும் மனம் உறுப்பு உடல் என்னும் இவற்றால் தீயைச் சேர்ந்து உருகும் மெழுகினையே ஒத்தவராகிய, மின்னின் ஒளியும் பொன்னின் அருமையும் பொருந்திய உன் கழலைக் கண்டு வணங்கி, உன்னைத் தொடர்ந்த அவ்வன்பரோடும் உடன் வணங்கித் தொடர்ந்து செல்லாதே பாழ் பட்டவற்றை நுகரவே பிறவி எடுத்தேனும் ஆகிய யான், மற்று எதனைத் துணைக்கொண்டு உன கழல் கண்டு வணங்குவேன்? (இன்னலுழக்கவே பிறந்தேன் போலும்) எ - று.

(வி - ரை.) இயல்பாகவே அன்புள்ளவர் அழுது இறைவன் திருவடி காண்பர். அங்ஙனம அன்பில்லாதவர், மெய்யனபரோடு கலந்து அவர் செய்யுமாறே தாமும செய்து அன்பு வெளிவரப் பெறறுத் திருவடி காண்பர்.

அவ்விரண்டியல்பும இல்லாத யான் இறைவன் திருவடிகளை எதனைத் துணைக்கொண்டு எங்ஙனம் பெறுதல் கூடும் என்பதுவே ாண்டுப் போந்த பொருளென்க.

"ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவும் ஓர் நோய்" (848)

என்னும் அருமைத் திருக்குறள் ாண்டு நினைவில் வருகின்றது.

இறைவன் கழலையன்றி அவனைக் காணல் இயலாது என்பவாகலின்

"கழல்கண்டு நின்னைத் தொடர்ந்தார்"

என்றருளிச் செய்த அநுபவம் கூர்ந்து நோக்கி உவத்தற்குரியது. முன்னர் அத்திருவடிகளைக் கண்டருளியவர் ஆதலின் "மின்னார் பொன்னார் கழல்" எனப் புனைந்துரைத்து இரங்கியருளினார். இதனால் இடையிலே கண்ணற்ற குருட்டாவாக முன்னர்த் திருப்பாட்டின் உவமத் திற்கும அடை கொடுக்க.

இங்ஙனம் பொருளும் உவமனும் பல பல ஆக்க அழிவுகளை அகற்றியும் அணைத்தும் வரும் இயல்பும் ஒன்றுளது. அதனைத் தோன்றக் கூறில் மிக விரியும ஆதலின் கூறிற்றிலம்.

"அன்பர் மெழுகே யன்னார்" என்றதனால் தாம் கல்லே இரும் பேயன்னார் என்பதும் பெற வைத்தருளினார்.

பணிவார் பிணிதீர்த் தருளிப் பழைய அடியார்க்குன்
அணிஆர் பாதம் கொடுத்தி அதுவும் அரிதென்றால்
திணிஆர் மூங்கில் அனையேன் வினையைப் பொடியாக்கித்
தணிஆர் பாதம் வந்தொல்லை தாராய் பொய்தீர் மெய்யானே. 89

எடுத்த திருவடியையாதல், ஊன்றிய திருவடியை யாதல் எனக்கு விரைந்து கொடுக்க என்றருளுகின்றார்.

(பொ - ரை ) (ஐம்புலன்களாற் பற்றப்பட்ட) அவாவாகிய பொய்யை ஒழிக்கின்ற மெய்ப்பொருளாக உள்ளவனே, வழிபடு வாரது நோயை அகற்றியருளி நின்றால் ஆட்கொள்ளப்பட்ட பழமையாற் கெழுமிய அன்பர்கட்கு உனது அன்பின் நிலை பெறுதற் குரிய எடுத்த திருவடியை அளித்தனை எனக்கு அத்திருவடியை அளித்தல் அரியதொன்றாக இருப்பின், செறிவு பொருந்திய மூங்கிலை ஒத்த மனத்திலே உடையேனது தீவினையைச் சிதைத்துக் கோபப் புன்மையைத் தணிவிப்பது பொருந்திய ஊன்றிய திருவடியையேனும் விரைவாக எதிர் வந்து தருவாய் எ - று.

(வி - ரை ) பணிவார் பிணிதீரத்தலை,

" நீரார் சடையானை நித்த லேத்துவார்
தீரா நோயெல்லாம தீர்தல் திண்ணமே "

என்னும் திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பாட்டானும் உணர்க.

அணி - அன்பு. அன்பிற்குப் பொருந்திய பாதம் " அணியார் பாதம் " என்றருளப்பட்டது. அண்ணம் - மேல்வாய். என்றதன்கண் " அண் " என்னும் முதனிலை மேன்மை யெனப் பொருள் தருதல்போல அணி என்ற தற்கும மேலிடத்ததாம் எனினும் ஒக்கும். இதனை "நான்ற மலர்ப்பாதம்" எனவும் கூறுப.

திணியார் மூங்கில் - கெட்டி மூங்கில். இது சிந்தைக்குவமை.

" திணியார் மூங்கிற் சிந்தையேன் " (பிரார்த். 8 )

என்றருள்வர் பின்னும். திணி - செறிவு, அடக்கம், வன்மை. மூங்கில் புல்லினத்ததாகலின், புறச்செறிவுற்றதேனும் அகக்காழற்ற தாகும். சிந்தையிற் செறிவற்றார் என்பது தோன்றத் " திணியார் மூங்கிலனையேன் " என்றருளினர். உள்ளீடற்றவர் தம்மைச் சாரந்தாரையும் தம்மொடு கெடுக்கும் தீய கயவர் எனப்படுவர. 'முந்திரிமேற காணி மிகுவதேல் இந்திரனை எண்ணிவிடுவர்.' மூங்கிலும் புறச்செறிவு முதிர்ந்த விடத்துத் தீப்பற்றித் தன்னொடு சேர்ந்த ஏனையவற்றையும் எரித்தழிக்கும் இயல் பினது உள்ளீடற்றவர்க்குக் கொறுக்கையையும் ஒப்பாகக் கூறுதலுண்டு. அவ்வாறு கூறுதலை,

" எருவைபோற போத்தரார் புல்லறிவினார் " (நாலடி. 351.)

என்றதனானும் உணர்க.

பொடியாக்குதல் - ஈண்டு இல்லையாக்குதல். வினையென்றது இறையடி பேணாப் பிற செயல்கள்.

தணியார் பாதம் - தணிதல் பொருந்திய பாதம்; தாழ்வு பொருந்திய பாதம், தாழ்வுடையோர் பொருந்துதற்குரிய பாதம். அஃது ஊன்று மலர்ப் பாதம் என்க. பாவ வடிவினனாய முயலகனை மிதித்து வருத்தியடக்கிய வரலாற்றாலும் அது தெளியப்படும். அது திரோதத்தைச் செய்வது. அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் கொடும்பாதகச் செயல் என்னுமிவை

மிக்குடையாரைக் கீழ் வீழ்த்தி அவர் மீதேறி அவர் கயமையை மிதித்து மிதித்து அடங்கவைப்பது ; கூற்றின் கொடுமையற உதைத்தது. இவ் வூனறிய மலரடியே தம கொள்கைக் கேற்றதென,

"ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறுங்
கூற்ற மன்னதோர் கொள்கையென் கொள்கையே" (திருச்ச. 45.)

என முற்கூறியருளியதும் காண்க.

"ஒல்லைதாராய்" என்றருளினர், இங்கு வாழ்வதற்கு விருப்பமின்மை தோன்ற. மற்றிதனை,

"எண்ணமே உடல் வாய் மூக்கொடு செவிகண்
என்றிவை நின்கணே வைத்து
மண்ணின் மேல அடியேன் வாழ்கிலேன் கண்டாய்" (வாழாப். 5.)

என்றருளியதனானும காண்க. இன்னுமத் திருவடிகளை,

"காலன் ஆருயிர் கொண்ட பூங்கழலாய்" (செத்திலாப். 9.)

எனவும்,

"கூற்றெடுங்க உறுங்கடிப் போதவையே
உணர்வுற்றவர் உம்பர் உம்பர் பெறும்பதமே" (நீத்தல். 25.)

எனவும் பிறண்டும் அருளியவை யெல்லாம் இக்கருத்தே பற்றியன.

முயலகனை மிதித்து வருத்தி அவனுடைய செருக்கினை யடக்கியவாறே என் வினையையும் சிதைத்துப் பொடியாக்கி, அவ்வூன்றிய திருவடிக் கீழிருத்தி மிதித்து என்னுடைய செருக்கினையும் அடக்கியருள்க என விண்ணப்பித்தருளினர். செருக்கினை ஒருவாறு அடங்க வைத்த பின்னரே தனியார் திருவடிக்கீழிட வேண்டுமாதலால், 'ஆக' எனச் செய வெனெச்சமாகக் கூறுது "ஆககி" எனவே கூறியருளினர்.

மிகப் பல காலம் பயின்றுவந்த கிழமையால் பேரன்பினைப் பெற்றுக் கொண்டவர் என்பது தோன்றப் "பழைய அடியார" என்றருளிச் செய்தார். இதனை,

"ஈசன் பழவடியீர் பாங்குடையீர் புத்தடியோம்
புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ"
(திருவெம்பாவை. 3.)

என்பதனானும் உணர்க. இதனால் அடிகள் புத்தடியார் என்பது பெற்றும். ஈண்டு அடியார்களை ஆட்கொண்டாற் பொல்லாதோ? என விஞவியருளிய வாறே,

"எங்கோவே குன்றே யனைய குற்றங்கள் குணமாம்
என்றே நீகொண்டால் என்தான் கெட்டது"
(குழைத்தபத்த. 3.)

என இறைவனையும் இதனினும் நயப்பட விஞவியருள்வர். இவ்வகையால் அடியவர் குற்றம் போக்கி யாட்கொள்ளற்கும், இறைவன் அங்ஙனமே அக்குற்றங்களையே குணமாகக் கொண்டு அருள்புரிவதற்கும் உரியவராவர்

என்பது பெற்றும். இங்ஙனமே எசுர்வேதமும் கூறுநின்றதென முன்னர்க்காட்டினேம்.

பொடி - சிதைவுற்ற அணு.

யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனைவந் துறுமாறே. 90

இதனால், உன்னைப் பெறுதற்கு இரங்கி அழுதலையேனும் எனக் கருள்செய்வாய் என்றருளுகின்றார்.

(பொ - ரை) தேனே அமுதமே கரும்பினின்றும் வெளிப் படும் சாறே என்ன இனிமை செய்யும் பெருமைக் குணமானவனே, யான் என்பதாகிய உயிரும் என்பால் இருப்பது பொய், அங்ஙனம் இருப்பதெனக் கொள்ளினும் அதனுக்கு நெஞ்சம் என்பதொன்று உளதென்பதும் பொய், அங்ஙனம் நெஞ்சொன்று இருப்பதெனக் கொள்ளினும் அதன்மாட்டு அன்புளதென்பதும் பொய், அதன் கண் அன்புளதானால் தீவினையேன் அழுதால் உன்னை யடைய லாகுமே? அங்ஙனம் அழுதிலேனாகிய அடியேன் உன்னை வந்து கலக்குமாறு (நின் பிரிவிற்காக இரங்கி அழுதலையேனும்) எனக் கருள் புரிவாய் எ - று.

(வி - ரை) வண்டுகளாலன்றிப் பிறவற்றால் ஈட்டற்கரிய தேனே போல அன்பராலன்றிப் பிறரால் தேடற்கரியவன் என்க. அத்தேனால் இன்புறுதல்போல அன்பரீட்டிய அறிவால் இவ்வுலகம் இன்புறுகின்றது. இன்பமுற்றகாலை விரும்பாது துன்பமுற்றகாலையே அடைக்கலம் புக்காலும், அன்னவர்க்கும் அருள் செய்யும் பெருமைக்குணம படைத்தவன் என்பது தோன்ற "அமுதே" என்றருளினர்.

ஐம்புலனடக்கல் பசிகிடத்தல் நீர்நிலைநிற்றல் எரிசூழ்படவிருத்தல் முதலியவற்றால், தம்மை நசுக்கி வருத்தினார்பாலும், நசுக்கப்பட்டார் பாலும் இறைவன் வெளிப்படுதலால் "கரும்பின் தெளிவு"போன்றவன் என்றருளப்பட்டான்.

தேனும் அமுதமும் கரும்பின் தெளிவும் பெற்றுக்கொண்ட பின்னர் இனிமை பயத்தல்போல இறைவனையும் பெற்றுக்கொண்ட பின்னர் இனிமை பெறுவர் என்பார் "தேனே அமுதமே கரும்பின் தெளிவே தித்திக்கும் மானே" என்றருளிச் செய்தார். தேன் முதலாயவற்றை ஆகுபெயர்களாகக் கொள்ளின், "தித்திக்கும் மானே" என்றது பயனற்றுவற்று மென்க.

"தேனாய் இன் னமுதமாய்த் தித்திக்கும் சிவபெருமான்"

(திருவேச. 10.)

என அருளியவாறே ஈண்டும் தித்திக்கும் மானே என்றருளினார்.

தேனும் அமுதமும் தெளிவும் என விரும்பி நுகர்ந்த நுகர்ச்சியெல்லாம் இப்போது தமக்கு இறைவனேயாயின எனக்கொள்ளினும் கொள்ளுக.

யான் நின் பிரிவு கருதி அழுதிலேன் ஆதலால் என்பால் அன்பில்லை; அன்பிருப்பின் உள்ளமுமுண்டு, உயிரும உண்டு. அன்பின்மையின் யான் முதலியவும் இல்லையாயின என்றருளியபடி.

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போ டியைந்த தொடர்பு" (குறள். அன்புடை. 3.)

"அன்பகத்தில்லா உயிரவாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம் தளிர்த் தற்று" (குறள். அன்புடை. 8)

எனவும் கூறுபவாகலின், அன்பின்மையின் யானும் நெஞ்சும் பொய் எனக் காரணம் காட்டி புரைக்க. இனி, அஃதிருப்பின இறைவனமாட்டிரங்கி அழுது நாடியே தீருமாதலால், தாம் நாடாமையாலும் இரங்கியழாமை யாலும் தம்பால் அன்பில்லை யெனத் தெளிந்துகொணடருளினர் என்க.

இதனால், தமமை உயிரில்பொருள் என்றுதல், மன அறிவற்ற பொறியறிவுடைய, ஓரறிவு முதல் ஐயறிவுவரையும் அமைந்த உயிர்ப் பொருள் என்றுதல் கொள்ளல்வேண்டும என்றருளியவாறு பெறறும். அவறறுள்ளும் தத்தம் மரபுக்குரிய இளம்பொருளகளைப் புரநதுவரும் அன்புண்மையால் ஓரறிவுயிரையே தமக்கு ஒப்பாகக்கொண்டருளினர் என்பதும் சூழ்ந்து நோக்கில், அஙஙனமன்றி உயிரில் பொருளாகவே தம்மை மதித்தருளினர் என்பது புலனும்.

நீ ஆத்திகனுனல் உன்னை வந்துறுமாறு அருள்செய் என்றபடி.

திருச்சிற்றம்பலம்

# 10. ஆனந்தாதீதம்

எண் சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மாறி லாதமாக் கருணை வெள்ளமே
  வந்து முந்திநின் மலரகொள் தாளிணை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
  மெய்ம்மை அன்பருள் மெய்ம்மை மேவினர்
ஈறி லாதநீ எளியை ஆகிவந்து
  ஒளிசெய் மானுடம் ஆக நோக்கியும்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
  கடையன் ஆயினேன் பட்ட கீழ்மையே. 91

இதனால், கீறிலாத நெஞ்சுடையவனுதலால் கீழ்மையே பட்ட கடையன் ஆயினேன் என்றருளிச் செய்கின்றார்.

(பொ - ரை ) காலம் இடம் நிகழ்ச்சி என்னுமிவை காரணமாகத் தன்னியல்பினின்றும் மாறுபடாத பெரிய அருளாகிய வெள்ளத்தை அன்பர்க்கென உடையானே, அன்பர் போற்றியிடும் மலர்களைக் கொண்ட நின்னுடைய இரண்டு திருவடிகளாகிய தமக்குத் தாமே ஒப்பாவதன்றி ஒப்புச்செய்வதற்குப் பிறபொருள் இல்லாத நிலையையுடைய நின் கொடையைப் பெற்றுக்கொண்ட நின் மெய்யன்பர், உன்னுடைய மெய்மையாகிய சிவத்துவத்தை யடைந்தருளினர். பிறவற்றுக்கெல்லாம் தானே முடிவாகித் தனக்கென ஒரு முடிவுமில்லாத நீ எனக்கு எளிய பொருளாக (அந்தணனாக) என் முன்னர்வந்து, ஒளியற்ற யான் ஒளிபெற்ற மக்கட் பண்புடையனாக என்னை நோக்குதலைச் செய்தும், பிளந்து கொள்ளாத மனத்தினையுடையேனாகிய நாயின் இயல்பினை ஒத்த யான், கீழ்மக்களுடைய பண்பினையே பொருந்தி, அவருள்ளும் கடைப்பட்டேன் ஆயினேன் எ - று.

(வி - ரை.) மனத்தினைக் கீறியிருப்பின் மேற்பட்டவனாகியிருப்பேன் என்றருளியவாறு.

பயனைச் செய்யாத மனமாகிய காரணத்தை உடனே களைந்திருப்பின், மற்றதன் காரியமாகிய அனபு செய்தலும் இல்லையாகி, தமமேல்வரும் பழியும அற்றுத் தாம் மேற்பட்டிருத்தல் கூடும் என்க. அங்ஙனமாற்றியிருப்பின், உள்ளமில்லாத ஒன்றற்கு அறிவுறுத்திய குறை இறைவனைச் சூழ்ந்துகொளளும் என்றும் கருதியருளினர் என்க.

“ மாறிலாத நீ ” என்றருளிச் செய்தார் அரியை என்பது தோன்ற. நீ மாறிலியாதலின், நின்னை யடைந்தார்க்கும் மாறின்மையை அருளிசசெய்யும் பெற்றியை யாவை என்க.

அருள் என்பதே, வரையறை யின்றிப் பயனும் கருதாது நிகழ்வ தொன்றாகலின், ஈண்டு “ மாறு ” என்றதற்குப் பயன் என்று பொருள் கோடல் சிறவாதென்க.

மெய்மை - உள்ளது ; சத்து. ஆகுபெயர். பின்னது குணம். மானுடம் - மக்கட்பண்பு மக்கட்பண்பு ஞானஒளி பெறுதறகுரிய தொன்று அஃதாமாறுநோக்கியும் கீழ்ப்பட்ட கடையன் ஆயினேன் என்க. முன்னரக் கடையனாயிருந்த யான் இப்போது அதனினும் கீழ்ப்பட்ட கடையனாயினேன் என்றது, கடையருட் கடையனாயினேன் என்றதை.

மக்கட் பிறப்பினனாக இருந்திருப்பின் மனத்தைப் பிளந்திருப்பேன். அங்ஙனம் பிளவாத இழிவு தோன்ற “ நாயினேன் ” என்றருளிச் செய்தார்.

மாறிலாத கருணையாதலின் அது “மாக்கருணை” என்றருளப்பட்டது.

தேவர் மக்கள் முதலியோர்க்கும் அருள் என்பதோர் அருங்குணமுண்டேனும் அவ்வருளால் பயனாடடத் தக்க ஆற்றல் அவர்பாலின்மை

யின் இறைவன் அருள் "மாறிலாக் கருணை" என்றருளப்பட்டதெனினும் ஒன்றும். ஏனையோர் அருள் முறையே சுருங்கிவற்றும்; இறைவன் அருள் வரவர வளர்ந்துவரும் பெற்றித்தென்பது போதரக் "கருணை வெள்ளமே" என்றருளினர்.

"மலர்கொள்தாள்" என்றதற்கு மலரையொத்த திருவடி எனவும் பொருளுரைக்கலாமேனும், அன்பர் மலரிட்டுப் பரவிய சிறப்பும் அதனால் அவரடைந்த பயனும் வெளிப்படாமையின் அப்பொருள் ாண்டுக் கொள்ளா மாயினம். பரிசு - கொடை. திருவடி பெறுதலே விட்டுநீங்காததொன்றாத லால் பரிசு என்றதற்கும் விடடுநீங்காமையாகிய சிறப்பு எனப் பொருளுரைத்தல் பொருந்தாதென்க.

கீழ்மக்களுக்குரிய இயல்பினை,

—மிக்க

"கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினும் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும்" (நாலடி. 341.)

என்னும் செய்யுளானும் உணர்க.

மைஇ லங்குநற் கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட பின்மழக்
கைஇ லங்குபொற் கிண்ணம் என்(று) அலால்
அரியை என்றுனைக் கருது கின்றிலேன்
மெய்இ லங்குவெண் ணீற்று மேனியாய்
மெய்மை அன்பருன் மெய்மை மேவினார்
பொய்இ லங்கெனைப் புகுத விட்டுநீ
போவ தோ சொலாய் பொருத்தம் ஆவதே. 92

இதனால், நின்னருள் பெரியதொன்றாக இருப்பினும், மற்றதனை எளியதொன்றாக மாறுபட நினைந்து இழந்து வருந்துகின்றேன். நீயும் அங்ஙனம் என்னைக் கைவிடலாமா என்றருளுகின்றார்

(பொ - ரை) தீட்டிய மை விளங்குகின்ற கண்களையுடைய உமையம்மையை இடப்பாகத்திற் கொண்டவனே, செந்நிறம் வாய்ந்த உடம்பிலே வெண்ணிறம் பொருந்திய திருநீற்றின் ஒளி யுடையவனே, நீ ஆசானாகி எழுந்தருளி வந்து என்னைத் தொண்ட னாகக் கொண்ட பின்னர்க் குழந்தையின் கையிலே விளங்காநின்ற பொற்கிண்ணம் அக்குழந்தைக்கு எங்ஙனம் எளிய தொன்றாதுமோ அங்ஙனம் எனக்குமாகுமென்று உன்னை எண்ணியிருந்ததல்லாமல், எய்துதற்கு அருமை உடையை என்று இன்னமும் எண்ணுகின்றே னில்லை பொய்யாகிய உடல் முதலாயவற்றால் பற்றப்பட்ட பற்றுக் குள்ளாகிய என்னை இப்பொய்யின் சூழ்ச்சி மிக்க இவ்வுலகத்துள்ளே

செல்லுமாறு விடுத்து நீ (அவ்வுலகத்திற்குப்) பிரிவதுவோ நினக்குத் தகுதியாவது என்று சொல்வாயாக எ - று.

(வி - ரை) பொற்கிண்ணத்தைப் பெறுமுன்னர் அதன்பால் மதிப்பும், பெற்ற பின்னர் அம்மதிப்பின்மையும் கொள்வது குழந்தையின் இயல்பு. அங்ஙனமே அறிவிற் குழந்தையாகிய யானும் நின்னைப் பெறுங்காறும் நின்னில் மதிப்பும், பெற்ற பின்னர் மதிப்பின்மையும் கொண்டுள்ளேன். பொற்கிண்ணத்தை விளையாட்டுப் பொருளாகக்கொண்டு விளையாடும் குழந்தையைப் பலரும் உலாவும் வெளியிடத்தில் விடுத்துக் தாய் தந்தையார் வீட்டுக்குட் புக்கவாறே, நீயும் அன்னையும் வேற்றிடம் செல்லப் பார்க்கின்றீர்கள். தனித்து விடப்பட்ட குழவி பொற்கிண்ணம் காரணமாகக் கள்வர் முதலியோரால் பொற்கிண்ணமும் பறிக்கப்படுவதோடு மற்றதன் உயிர்க்கும் கேடும் விளையுமாறே, நினது தியான உருவமும் பறிக்கப் படுவதோடமையாமல் யானும் கெடுவேன் என உவமும் பொருளும் ஒருங்கமைய விரித்துக்கொள்க.

மற்றதன் உடன் பிறப்பாளர்களாகிய அண்ணன்மார்களும் அறிவு நிரம்பியவராய் அவர் பெற்றோருடன் உடன்சென்றவாறே என்னுடன் பயின்று விளையாடியவர் எல்லாரும் மெய்யறிவும் மெய்யன்பும் மேவியோராய் என்னின் நீங்கி நின்னொடு மேவினர் எனவும் இயைக்க.

"கண்ணி பங்க" என்றருளியமையால் அன்னையும் நின்னுடன் போந்தாள் என்பது பெற்றாம். "நின்னை" என்றது இறைவனுடைய பொன்மயமான தியான உருவத்தினை என்க.

அடிகள், குழந்தை. இறைவனும் இறைவியும், பெற்றோர்கள். மெய்யன்பர், உடன் பிறப்பாளர். பொற்கிண்ணம், மனத்தால் நினைந்து போற்றப் பொலியும் திருவுருவம். ஐம்புலன்கள், கள்வர். வெளியிடம், உடல் உலகு. பிறவும் அன்ன.

"மழக் கை" என்றதற்கு மெல்லிய கை எனப் பொருளுரைப்பாரும் உளர் மழகளிறு, மழவர், மழபுலவர் என்றாங்கு "மழ" என்பது இளமைப் பண்பினைக் குறித்து வருவது காண்க. மென்மை குறித்துவருதற்கு இலக்கியமும் இலக்கணமும் கண்டிலேம். அது மழமரம் மழக்கன்று மழமுகம் என ஓரறிவுயிர்களின், உயிரல் பொருள்களின் முதலொடும் சினையொடும் பயின்று வருதலும் கண்டிலேம். ஆதலால், "மழக்கை" என்றதற்குக் குழந்தை கை எனப் பொருளுரைத்தாம்

"அழுமழப்போனும்" (திருக்கோ. 147.)

எனக் கூறுதலும் காண்க.

"இக்கருவிகள் இல்லோர்க்குச் சில விதிகள் அகப்படுமாயினும்

'தெருளாதான் அறம்'

போலவும்,

'மழக்கையிலங்கு பொற்கிண்ணம்' (இலக். கொத். பாயி. 11.)

போலவும் ஆகும் என்க."

என்றதனால் அந்நூலாசிரியரும் "மழ" என்றதனுக்குக் குழந்தை எனவே பொருள் கொண்டனர் எனபது பெற்றும்.

பொற்கிண்ணத்தின் அருமை குழந்தையாலறியப்படாது சிதைவுறு மாறே யானும் நினசீர் அறியாது நினனைச் சிதைக்கின்றேன் எனவும் விரிக்க. மறறும், இஃதோர பழமொழியாகும் என்றலே,

"பிள்ளை தன்கையிற கிண்ணமே ஒக்க"

(பெரிய. 10. 9. தி. புள். 1)

என்றதனுமறிக.

இனி, மெல்லியகை எனப் பொருள்கொள்ளின் அஃது உவமனொடு பொருநதிச் சிறவாதெனக.

பொருத்தம் இன்மையேன் பொய்மை உண்மையேன்
போத என்றெனைப புரிந்து நோக்கவும
வருத்தம் இன்மையேன் வஞ்சம உண்மையேன்
மாண்டி லேன்மலர்க கமல பாதனே
அரத்த மேனியாய் அருள்செய் அன்பரும்
நீயும் அங்கெழுந் தருளி இங்கெனை
இருத்தி னாய்முறை யோஎன் எம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி இல்லையே. 93

இதனால், இங்கு என்னை இருத்தியதும், யான் சாவாதிருப்பதும் முறையோ, என் வினைக்கு இறுதி இல்லையோ, என்றருளுகின்றார்.

(பொ - ரை.) தாமரை மலர்போன்ற திருவடியுடையாய், சிவந்த ஒளியுடையாய், எனக்குரிய எம்பெருமானே, பொய்ப் பொருளையே மெய்ப்பொருளாகக் கொண்டுளளேன் (ஆதலால் நின்னருட் பேற்றிற்குத) தகுதி இல்லாதேன் என்று ஆராய்நது, களளக் குணததினையே உளகுணமாகக் கொண்ட யான், அதனால் இறநதிலேன், ஒரு கவலைதாளும் கொண்டிலேன், (யான் இத் தகைமையனாகவும்) நீயோ என்னை இவ்வுலகில் இருக்கச செய்து, எனககு அருள் செய்யும் அன்பருடனே அவ்வுலகிற்கு எழுந்தருளினாய், (என் செயலையனறி) நின் செயல்தான தகுதியுடையதாகுமா? ஒரு நிலைப்படாத என் செயலுக்கு ஒரு முடிவும் இலலையா? இலலைபோலும எ - று.

(வி - ரை.) புரிந்து நோக்குதல் - ஆராய்ந்தறிந்து உற்றுப் பார்த்தல், பணி செய்யும தகுதியின்மையும, பொய்மைய மெய்யாகக் காட்டும் நடிப் புண்மையும எனனியபெனக. தில்லைப பொதுவின்கண் வருகவென்ற போதே பொருத்தம் இன்மையும் பொய்மையுண்மையும புலனாயிற்று. இது

புலனாகியும் இறவாதும் கவலைகொள்ளாதும் உண்டுடுத்திருத்தலால், பொய்யுண்மை நன்கு வலியுறுத்தப்படும்.

நீயும் கைவிடாது திருத்தி யாட்கொள்ளாது செல்லலால் என் செயல் போல நின் செயலும் முறையற்றதாம் என்க.

"ரத்தம்" என்னும் வடசொல் அரததம் எனத் திரிந்தது. இங்கு 'இரு' என்றிருத்தினாய். யானும் இருந்தேன். நீ 'வருதி' என்னின் வந்திருப்பேன். இதனால் தன்வயமின்மை தெளியப்படும். "முறையோ" என்றது, அஃதாகாது என்பது பயந்து நின்றது.

உலகியல் வீட்டியல் என்னும் இருவகையுள் ஒன்றினும் நிலைப்படாதேன் என்பார் "வம்பனேன்" என்றும், அறியாமையினால் அங்ஙனம் கரவுகொண்டு சூழ்ந்து வருதலால் "வஞ்சமுண்மையேன்" என்றும், 'இங்கிருந்து புறம் செல்க' என்றபோது போதற்கும், அறிவுறுத்தியபோது அங்ஙனம் அறிந்து உடனிருந்து பயின்றுகொள்ளற்கும் ஒருப்படாதிருந்தும், ஒருப்பட்டேன் போன்று நடந்து வந்தேன் ஆதலால், "பொய்மையுண்மையேன்" என்றும், அன்ன தன்மையேன் ஆதலின் "பொருத்தமின்மையேன்" என்றுமருளிச் செய்தார்.

இன்பத்தேன் ஊற்றெடுத்து ஒழுக்கி இன்னல்தீர இனிமை செய்தலும், ஞானக் கதிர்க்கொழுந்து விரிந்து வீசும் ஞாயிறாகிய தன்னின் நீங்காது இருந்தே வருதலும், அத்திருவடியாகிய அருட்சத்திக்குரிய இயல்பாகலால் "மலர்க்கமல பாதனே" என்றும், அத்திருவடிமலரை எப்போதும் ஒரு பெற்றியதாக மலர்த்திவரும் இறைவனை ஞானச் செங்கேழ் மேனியன் என்பார் "அரத்த மேனியாய்" என்றும் இன்னதாகிய இயல்பினனே எனக்கும் எம்போன்றார்க்கும் பிரானாவான் என்பார் "என்னெம்பிரான்" என்றும் அருளிச்செய்தார்.

பாதமலர்க் கமலம் வளர்ந்து வேரோடுதற்கு என்னுள்ளத்திலே அன்பு நீர் சிறிதும் இல்லையென்க.

நினக்குத் தகுதியுளது; எனக்கு அஃதின்று. நினக்கு மெய்யுளது; எனக்குப் பொய்யுளது. நினக்கு என்னைப் பிரிதலால் பேரிரக்கம் உளது; எனக்கு அஃதின்று. நீ நின் திருவுருவை என்பால்விட்டுச் சென்றாய்; யான் என்னுடலைவிட்டு உன்னைத் தொடர்ந்திலேன். நீ ஆட்கொள்ளல் வேண்டுமென்னும் ஒரு நிலையிற்பட்டவன்; யான் இருநிலைப்பட்டவன். இன்னவற்றால் யானே தவறுடையன்; நீயே தவறற்றவன். இங்ஙனமாயினும், என்னுடனிருந்து என்னைத் திருத்தி யாட்கொள்ளாது, என்னை இங்கே விடுத்து அங்கே எழுந்தருளியதும், அங்ஙனம் எழுந்தருளினையேனும், என்னைப் பாதுகாத்தற்கு ஒரு மெய்யன்பரையேனும் என்னுடன் இருத்தாது, அனைவரையும் உடனழைத்துச் சென்றதும் முறையாகுமா, என விரிக்க.

அங்கெழுந்தருளி இங்கெனை இருத்தினாய், இங்கு எனை இருத்தி அங்கு எழுந்தருளினாய் என மாற்றுக. அங்கெழுந்தருளினாய் இங்கெனை இருத்தினாய் எனினுமாம்.

அங்கென்றது, சேய்மையும் எய்தற்கருமையும் இன்றியமையாமையும் உடைய வீட்டுலகு. அங்கெழுந்த கொடுமைதான் நின்னருளாக இருந்த தென்பதுபட "எழுந்தருளி" என்றருளினர். அஃதிருக்க வைத்த கொடுமையால் புலப்படுதல் காண்க. இருத்தியருளினாய் என்றது, "இருத்தினாய்" என்றருளிச் செய்தமை அதனை வலியுறுத்தும்.

இல்லை நின்கழற் கன்ப தென்கணே
ஏலம் ஏலுநற் குழலி பங்கனே
கல்லை மென்கனி ஆக்கும் விச்சைகொண்(டு)
என்னை நின்கழற் கன்பன் ஆக்கினாய்
எல்லை இல்லைநின் கருணை எம்பிரான்
ஏது கொண்டுநான் ஏது செய்யினும்
வல்லை யேயெனக் கின்னும் உன்கழல்
காட்டி மீட்கவும் மறுவில் வானனே. 94

(பொ - ரை.) குற்றமற்ற ஞானவெளியில் உள்ளவனே, மயிர்ச் சாந்து பூசுதலை ஏற்றுக்கொண்ட நன்மை பொருந்திய கூந்தலையுடைய உமையம்மையை இடது பாகத்தில் உடையவனே, உன்னுடைய திருவடிக்கு அன்பு செய்வது என்னிடத்தில் இல்லை. அங்ஙனமாகவும் கல்லை மென்மையான கனியாகச் செய்வதொரு வித்தைபோன்ற வித்தையினால் என் வலிதாகிற சிந்தையை மென்மையானதாகச் செய்து உன் திருவடிக்குரிய அன்புடையவனாகச் செய்தாய். ஆகா ! நின் கருணைக்கு அளவே இல்லை. எம்பெருமானே ! பண்டேபோல எந்தக் கொடிய நினைவினைக்கொண்டு எந்தக் கொடிய செய்கையைச் செய்தகாலையும் (விச்சையால் திருவடியை காட்டியதேயன்றிக் காட்டியாங்கே மீட்டிலாத நீ) எனக்கு இன்னமும் உன் திருவடியைக் காட்டி (நீ முன்னர்ச் செய்யாது குறையாக விட்ட) என்னை மீட்டலையும் செய்யவல்லையோ எ - று.

(வி - ரை.) கருணைக்கு எல்லையில்லாமையை, அன்பனாக்கியவாற்றானும், கழல் காட்டி மீட்கவல்லவாற்றானும் அறிக. இனி, நின் கருணைக் கெல்லையில்லை என்னுமிதனை, "ஆக்கினாய்" "மீட்கவும் வல்லை" என்னுமிவற்றிடைப் பெய்துமுடிப்பார் முடிபு பொருளொடு புணராப் பொய்முடிபாமென்க.

இன்னும் "வானன்" என்றதனை வானம் என்பதன் போலியாகவும் கொள்வர். அஃது இணைக்குறிலடுத்துவாராமையின் அவர் கொள்கையும் போலியாமென்க.

ஐம்புலன்களாற் பற்றப்பட்டு எதனைக்கொண்டு, (வாக்கு முதலாயவற்றால்) எதனைச் செய்தாலும் என்க.

ஏலம் - தகரம் முதலிய நறிய பொருட்கலவையாலாகிய மயிர்ச்சாந்து.

மீள மீட்கவும் வல்லே எனக. இதனால் "மீட்க" வென்னும் சொல்லே மீள ஆட்கொள்ள என்னும் பொருளைத் தந்தது என்றல் சொறபொருள் மரபறியார் கூறறென்க.

கலலை கனியாக்குவதென்பது ஒரு வித்தை. அஃதோர் பழமொழி யாகப் பயின்றுவந்தது.

வான நாடரும் அறியொ ணாதநீ
மறையில் ஈறுமுன் தொடரா ணாதநீ
ஏனை நாடரும் தெரியொ ணாதநீ
என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நான்உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே. 95

இதனால், என்னுடைய பற்றுமட்டும் கெடுக்கிலையாய் உடலின் கண் ஒரு கூத்தும் அறிவின்கண் ஒரு கூத்து மாக இரு கூத்துக்கள் என்னைக் கொண்டு செய்வித்தனை. அங்ஙனமே எனனுடைய பற்றும் இன்னும் ஒரு கூத்தாடுவிப்பதனால் கெடுவதாக என்றருளு கின்றனர்.

(பொ - ரை) வானுலகில் உள்ளாரும் அறிந்துகொள்ளற் கியலாத நீ, வேதத்தின்கண்ணுள்ள அதன் முதலும் முடிவும் ஆகிய பிரணவத்தாலும் தொடர இயலாத நீ, விண்ணை ஒழிந்த ஏனைய உலகத்தாராலும் அறியமுடியாத நீ, அடியேனை இததன்மைத்தாய் ஆண்டுகொண்டபடி, உடம்பினைப் புளகங்கொண்டு கூத்தாடச் செய்தபடி, நான் உள்ளமுருகி உன்னை நுகரும்படி (என்னைக் கொண்டு) ஞானக் கூத்தொன்றினை இயற்றுவிததவாறு (இன்னும் இயற்றுவித்தலால்) எனக்கு அமைந்த வையகத்தின்மேற் பற்றிய பற்றும அஙஙனமே நைவதாக எ - று.

(வி - ரை.) அறியவொண்ணாத, தொடரவொண்ணாத என்பன தொக்கு நின்றன. 'ஒன்ருத' என்பது "ஒண்ணாத" என நின்றது. இனனிது - இத்தன்மைத்து. 'கொண்டவாறு' எனபது ஈறு கெட்டு நின்றது. 'இசசா' (பற்று) என்னும் வடசொல் "இச்சை" எனத் திரிநதது. "நைய" என்பது அகரவீற்று வியங்கோள்.

ஊனைக்கொண்டு ஒரு கூத்தியற்றுவித்து என்னை உருக்கி நின்னைப் பருகச செய்தவண்ணமே என்னறிவினைக் கொண்டு ஒரு கூத்து இயறறுவித் தாய். அக்கூத்தினால் உளதாகும் பற்றறுதலாகிய பயனை இன்னும பெற்

றிலேன். உடற்கூத்தின் பயனைப் பெற்றுக்கொண்டவாறே அறிவுக் கூத்தின் பயனையும் பெறுவேனாக என்றருளியபடி.

" ஏது கொண்டு நான் ஏது செய்யினும் ", " உன் கழல்காட்டி மீட்கவும் வல்லை " என்றருளியமைக்கு ஏற்ப ஈண்டும் " நைய வையகத் துடைய இச்சையே " என்றருளிச் செய்வாராயினர். ஆதலால், மற்றிதனை ஞான நாடகத்திற்கு அடையாக்குதல், வினையியைந்து முடியினும் மரபாகாதென்க.

விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணும் மண்ணகம் முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
புலைய னேனை உன் கோயில் வாயிலில்
பிச்சன் ஆக்கினாய் பெரிய அன்பருக்கு
உரியன் ஆக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமரம் ஆயி னும்கொலார்
நானும் அங்ஙனே உடைய நாதனே. 96

இதனால், வலிந்தாண்டுகொண்ட நீயே என்னை வருத்தலாகுமா என்றருளுகின்றார்.

(பொ - ரை ) (உலகோர்) முன்னர் தாம் நட்டு வளர்த்த மரம் பின்னர்ப் பெரிய நோய்கொண்டு பயன்தராத மரம் எனத் தெளிந்தாரேனும் அதனையும் படச்செய்யார் அங்ஙனமே என்னையும் அடிமையாகவுடைய அன்பனே, வானுலகத்தையும் நிலவுலகம் வரையிலும் ஏனைய உலகங்களையும், உடம்பு முதலாயவற்றையும், அவை தோன்றுதற்குரிய முதற்காரணம் தானன்றி நிமித்த காரணமாக நின்று தோன்றச் செய்வோனே, வளர்ப்போனே, தன்னுள் ஒடுக்குவோனே, கள்ளத்தாற் பெருமைப்பட்ட புலைத்தன்மையுடைய என்னை, நின்னுடைய திருக்கோயில் வாயிலிலே பித்தனாகும்படி இப்போது ஆக்கினாய். நின்னுடைய பேரன்பருக்கு ஏவலனாகும் உரிமையுடையவனாக அப்போது செய்தனை எ - று

(வி - ரை.) நீ உலகினை ஆக்கிக் காத்தொடுக்கும் இயல்புடையையேனும், நின்பாற் கூறக்கிடந்த தொன்றுளது. அதுதான் ' வளர்த்ததோர் நச்சுமரமாயினும் கொலார் ' என்பது.

இப்போது பித்தனாக்கினாய், அப்போது அன்பனாக்கினாய்; இங்ஙனம் ஆக்குதற்குரிய முதற் காரணம் என்பாலில்லை என்பது இசையெச்சம்.

"வைச்சு வாங்குவாய்" என்றதற்பின் "நாதனே" என்றதைச் சேர்க்கினும் சேர்க்க. " உடையன் நாதனே " எனப் பாடங் கொள்ளினும் ஒன்று.

" தாம் வளர்த்ததோர் நச்சுமாமர மாயினும் கொலார் "

என்பதோடு,

विषवृक्षोपि सवर्ध्य स्वय छेत्तुं असाम्प्रतम् ।
(குமார சம்பவம். 2–55.)

இதனை ஒப்பு நோக்குக.

நச்சுமாமரம் - நோய்கொண்ட பெரிய மரம் 'பிணி பயிலும் புல்' என்பதற்குப் 'பிணியை வருவிக்கும் நச்சுப் புல்' என்பது (நான் மணி. 33. காண்க.) முன்னர் நன்மரம் எனக் கருதி வளர்க்கப்பட்டது, பின்னர் நோய்மரம் எனத் தெளியப்பட்டவாறே, அடிகளும் நல்லார் என முன்னர்க் கருதப்பட்டுப் பின்னர் அல்லர் எனத் தெளியப்பட்டனர் எனப் பொருளுக்கும் கொள்க. கொல்லுதல் - அழித்தல்; வருத்தலுமாம்.

உலகின் பொருள்களெல்லாம் தத்தம் மரபினைத் தாமே ஆக்கிவருமாறு போலாகாது, இறைவன் எல்லாவற்றையும் தோற்றுவித்தலின், அவன் "விச்சதின்றி விளைவு செய்குவான்" என்றோதி யருளப்பட்டான்.

தாம் படைத்தவற்றை அழிப்பார் யாருமிலர். நீயோ தம் பார்ப் புண்ணும் முதலை முதலியவற்றை ஒத்துளாய் என்பார் "வைச்சு வாங்கு வாய்" என்றருளினர். தம்மையும் அங்ஙனம் கொல்லாது ஓம்புக என்பது குறிப்பு. வைச்சு - வைத்து, பிச்சு - பித்து என்பன போல்.

முன்னர் அறிவுறுத்தி அன்பர்க்குரியனாக்கியும், பின்னர்ப் புறம் போக்கிப் பித்தனாக்கியும எனக் காலமும் இடமும் தொடுக்க. இப்பொழுது பித்தனாகி உழலும் சிறுமை காரணமாகக் கோயிலுள்ளே அறிவுறுத்திப் பேரன்பர்க்கு உரிமையாக்கிய அப்பொழுதைய பெரிய நிலை நினைவிற்கு வந்தமையால், பின்னர் நிகழ்ந்ததை முன்னரும், முன்னர் நிகழ்ந்ததைப் பின்னருமாக அடைவுபடுத்தியருளினாரென்க.

கோயில்வாயிலிற் பிச்சன் ஆக்கினாய் - என்னைக் கோயிலினுள்ளே செல்லாவாறு புறம்போக்கி யான் பித்துற்று மயங்குமாறு செய்தனை.

உடைய நாதனே போற்றி நின்னலால்
பற்று மற்றெனக் காவ தொன்றினி
உடைய னேபணி போற்றி உம்பரார்
தம்ப ராபரா போற்றி யாரினும்
கடையன் ஆயினேன் போற்றி என்பெரும்
கருணை யாளனே போற்றி என்னைநின்
அடியன் ஆக்கினாய் போற்றி ஆதியும்
அந்தம் ஆயினாய் போற்றி அப்பனே. 97

இதனால், என்னை உயர்ந்தவனாகவும் கடையனாகவும் ஆக்கினாலும், நின்னையன்றிப் பற்றுதற்குரியார் பிறரின்மையால் நினக்கே வணக்கங் கூறுவேன் என்றருளுகின்றார்.

[குறிப்பு: முதற்கண் "ஆதிஅந்தம்" என்ற தொடரினையும், அதன்பின்னர் "உடைய நாதனே" என்றதனையும், அதன்

பின்னர் "உம்பர்தம் பராபரா" என்றதனையும், அதன் பின்னர் "என் பெருங் கருணையாளனே" என்றதனையும், அதன் பின்னர் "என்னைநின்" என்றதனையும், அதன் பின்னர் "அப்பனே போற்றி" என்றதனையும், அதன் பின்னர் "யாரினும்" என்றதனையும், அதன் பின்னர் "நின்னலால்" என்றதனையும் முறையே அமைத்துக் கொள்க ]

(பொ - ரை ) முதலும் முடிவும் ஆனவனே, வணக்கம்; (என்னை இறுதியாகவுடைய எல்லாவற்றையும் தனக்கு உடைமையாக உடைய) தலைவனே, வணக்கம், வானத்திலுள்ள தேவர்களுள்ளே மேலானவர்க்கும் மேலானவனே, வணக்கம், எனக்கெனத் தனித்துச் செய்யும் பெரியதொரு அருளினை ஆள்வோனே, வணக்கம்; அக் கருணை காரணமாக என்னையும் முன்னர் உன்னுடைய அடியானாகச் செய்தோனே, வணக்கம், அதனால் எனக்குத் தகப்பன் ஆனவனே, வணக்கம், இப்போது யான் எல்லாரினும் கீழ்ப்பட்டவனானேன், (யான் அங்ஙனமாகவும் எனக்கருள் செய்யாதிருப்போனே,) வணக்கம்; நீ யாது செய்யினும் நின்னையே (பற்றிக் கொள்வது) அல்லாமல் பற்றக் கூடிய பற்றுக்கோட்டை எனக்கென இப்போதேனும் உடையேன் ஆயினேனா? சொல்லியருளாய் (அன்பரைப் புறத்தே விடுக்கினும், அகத்தே இருத்தினும் தன்னையே பற்றிக்கொண்டு முறையிடச் செய்யும் வல்லமையுடையவனே,) வணக்கம் எ - று.

(வி - ரை.) "உடைய" என்பதற்கு எம்முடைய வாழ்விலும் தாழ்விலும் எம்மை அடிமைகளாக உடைய என உரைப்பினும் அமையும். "நின்னலாற்பற்று மற்றெனக்காவதொன்றினி உடையனோ" என்றது, அருளிச் செய்த காலத்திலேயும், ஒதுக்கப்பட்ட காலத்திலேயும் நின்னையல்லால் மற்றும் ஒரு பற்றினை யான் உடையனோ? கண்டறிந்து சொல்லுக எனத் தமது மனத்திண்மையைப் புலப்படுத்தி, அருள்பெற நிற்றலைக் குறிப்பிட்டதென்க.

"பணி" என்றதனை 'நீ பணியாய், அங்ஙனம் நின் அன்பரைச் செய்வோனே நினக்கு' என விரிக்க. இனி - கடையேனாகிய இப்பொழுது (ஏனும்).

உம்பரார் - தேவர். உம்பர் - வானுலகு. தேவர்க்கு மேலோனும் கீழோனும் ஆனவன் எனப் பொருள்கொள்ளினும் ஒருவாறு பொருந்தும். 'பராபர:' என்னும் வடசொல் "பராபரன்" எனத் திரிந்து விளியேற்றது.

உயர்வு தாழ்வுகளிலும் விரும்பிப் பற்றிக்கோடற்குரிய பெருமையுடையவன் என்பது தோன்ற "உம்பரார் தம் பராபரா" என்றருளிச் செய்தார்.

*'அப்பனே நின் அலால் உடையனே பணி; நினக்குப் போற்றி' என*

எப்போதும் அவனே தலைவன் என்பது தோன்ற "உடைய நாதனே" என்றும், அங்ஙனம் அடிமைப்பட்டும் கேட்டினுட் கிடந்தமை தோன்ற "நின்னலால்.........உடையனே பணி" என்றும், யான் இங்ஙனம் கிடந்தமைக்குக் காரணமாவது அவனது பெருந்தலைமைத் தனிச் சிறப்பறிந்து கொண்டமையே யாகும் என்பது தோன்ற "உம்பரார்தம் பராபரன்" என்றும், இத்தகைய சிறப்புடைய நின்னால் ஆக்கம் பெற்றும் என்னுடைய தீவினை காரணமாகச் செய்ந்நன்றி மறந்தமையால் யாரினும் கீழ்ப்பட்டேன் என்பார் "யாரினும் கடையனாயினேன்" என்றும், இங்ஙனம் கடைப்பட்டது என் செயலினாலாதலின் நீ என்பாற் பேரருள் உடையையாவாய் என்பார் "என் பெருங்கருணையாளனே" என்றும், என்பாற் பேரருள் உடைமையாலே என்னை நினக்கு அடியவனாக ஆக்கிக்கொண்டனை என்பார் "என்னை நின் அடியனாக்கினாய்" என்றும், என்னை அடியனாக்கிய நீயே எல்லாவற்றினுக்கும் முதலும் முடிவுமாக நிற்பாய் என்பார் "ஆதியும் அந்தமாயினாய்" என்றும், அத்தகைய நீயே எனக்கு ஆசானாக வந்து அருளிச்செய்தனை என்பார் "அப்பனே" என்றும் அருளிச் செய்வாராயினார்.

**அப்ப னேஎனக் கமுத னேஆ**
**னந்த னேஅகம் நெகஅள் ளூறுதேன்**
**ஒப்ப னேஉனக் குரிய அன்பரில்**
**உரிய னாய்உனைப் பருக நின்றதோர்**
**துப்ப னேசுடர் முடிய னேதுணை**
**யாள னேதொழும் பாளர் எய்ப்பினில்**
**வைப்ப னேஎனை வைப்ப தோசொலாய்**
**நைய வையகத் தெங்கள் மன்னனே. 98**

இதனால், என்னை அடிமைகொண்டு இன்புறுத்திய நீயே என்னைப் புறம்போக்கித் துன்புறுத்துவது முறையோ என வினவி யருள்கின்றார்.

(பொ - ரை.) எனக்கு ஆசானாகிய தந்தையே, ஞானக்கலை யுணவாகிய அமுதத்தையளித்து அவ்வமுதம் போன்றவனே, ஆனந்தம் அளிப்பவனே, உள்ளங் கட்டுவிடச் செறிந்தூறும் தேனை ஒத்தவனே, உனக்கே யுரிமை பூண்ட அடியவரைப்போல யானும் உரிமை பெற்றவனாய் உன்னையே நுகரநின்ற ஒப்பற்ற நுகர் பொருளானவனே, திங்களை அணிந்த முடியுடையவனே, பாங்கனாகவும் இருந்து காப்போனே, நின் திருவடிக்குத் தொண்டு செய்யும் ஆட்சியுடைய அன்பர்க்கு நேரும் இடையூறுகளை நீக்கிக் கோடற்கு என அவராற் சேமித்துவைக்கப்பட்ட செல்வம்

போன்றவனே, எம்போன்றாரைப் பாதுகாப்பதையே தன்னுறு தொழிலாகக் கொண்ட மன்னவனே, இந்த வுலகத்திலே யான் வைத்த பற்றுக் காரணமாகத் துன்பப்படுமாறு என்னை வைத்திருப்பதுதானோ நின்னுடைய பாதுகாவற் பயனாகும்? சொல்லியருள்க எ—று.

(வி-ரை.) சுடர் - இளம்பிறைத் திங்கள். ஒளி குறையுந்தோறும் திங்களை ஒளிவரச் செய்தாங்கு அடைந்தார் இடையூற்றினைக் களைந்து வாழ்வு பெருகச் செய்வோன் என்க.

"துப்பார்க்குத் துப்புஆய துப்புஆக்கித் துப்பார்க்குத்
துப்புஆய தூஉம் மழை." (குறள். வான்சிறப். 2.)

துப்பு - நுகர்பொருள். துப்பன் - காதலன். தொழும்பு - தொண்டு. எய்ப்பினில் - இளைத்த இடத்தில். அன்பரில் - அன்பரைப்போல. எனவே தாம் மெய்யன்பர் அல்லர் என்று கருதியருளினர் என்பது பெற்றாம். தேன் ஒப்பனே - ரசமானவனே; இனியவனே. (அன்பால், எய்தப் பெற்றுத் தம்போன்றார்க்குக் கிட்டிய இனியோன்.) முன்பின் பேணாது இடையூறு வந்தபோதே அடைக்கலம் புகுவாரையும் காக்கும் அமுதம் அளித்தவன் எனினும் ஒக்கும்.

"உன்துணைத் தோழியுமாவன்" என்றருள்வர் குயிற்பத்துள்ளும் (7) ஆசானாகி, அமுத ஞானக் கலையாகி, அக்கலை பொதிந்த சுவையாகி, அச்சுவையின் நுகர்ச்சியாகி, இடையூறு நீக்கி அவ்விடையூற்றினை நீக்கும் செல்வனுமாவன் என்பது, "அப்பன்" முதலாயவற்றாற் போந்ததென்க.

"அப்பன்" முதல் "துப்பன்" வரையிலும் உள்ளவற்றாற் போந்த எல்லாம் அடிகளுக்கும் ஏனைய மெய்யன்பர்களுக்கும் ஒத்தனவாம்.

"சுடர்முடியோன், துணையாளன், எய்ப்பினில் வைப்பு" என்னுமிவற்றால் போந்தனவெல்லாம் அம்மெய்யன்பரால் பெறப்பட்டன. தாமும் அவற்றைப் பெறுதல் வேண்டுமென்பார் "எனை, நைய வைப்பதோ சொலாய்" என்றதனாற் குறிப்பிட்டருளினார்.

"கழிபெருஞ் சுவையும் உறுதியும் பயப்பதால் 'அமுதனே'" (திருக்கோ. 5 உரை.) என்றும், உயிரின் மலக்கட்டு நீக்குதலால் "தேன் ஒப்பனே" என்றும் உரைத்தருளினருமாம்.

அள் - செறிவு. 'வள்' எனக் கொண்டு 'மிகுதி' எனப் பொருள் கொள்வாரும், அவர் உரைப்படி யெடுத்துக் காட்டுவாரும் உளர். அன்னவெல்லாம் ஈண்டுப் பொருந்தாதென்க.

மன்ன எம்பிரான் வருக என்எனை
மாலும் நான்முகத் தொருவன் யாரினும்
முன்ன எம்பிரான் வருக என்எனை
முழுதும் யாவையும் இறுதி உற்றநாள்

பின்ன எம்பிரான் வருக என்னெனைப்
பெய்க ழற்கண்அன் பாய்என் நாவினால்
பன்ன எம்பிரான் வருக என்னெனைப்
பாவ நாசநின் சீர்கள் பாடவே. 99

இதனால், பன்னவும் பாடவும் தம்மை வருக என்று இறைவன் பணித்தருளல் வேண்டும் என்றல் கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) வேந்தனே, எம்பிரானே, என்னை நின்பால் வருக வென்று பணித்தருள்க, திருமாலும் நான்கு முகங்களையுடைய ஒருவனுமாகிய இவர் தம்மினும், மற்றுமுள்ள எவரினும் முற்பட்டவனே, என்னை நின்பால் வருகவென்று பணித்தருள்க. எல்லாம் எஞ்சாது ஒடுங்கிய காலத்தினும் (அக்காலத்தின்) பின்னரும் (எஞ்சாது) இருப்பவனே, என்னை நின்பால் வருகவென்று பணித்தருள்க. அன்பர் செய்த பாவத்தை அழிப்போனே, எம்பிரானே, நின்னுடைய செறிந்த கழலையுடைய திருவடிக்கண் அன்பாகி, என்னுடைய நாவினாலே நின்னைப் புகழவும், நின்னுடைய புகழைப் பாடவும் என்னை நின்பால் வருகவென்று பணித்தருள்க எ - று.

(வி - ரை.) பன்ன - புகழ. 'மன்னனாய எம்பிரான்' என்பாரும் உளர். மன்னன் எம்பிரான் என்னும் நினைவால் அங்ஙனம் கூறினர் போலும். (யான்) மன்ன - நிலைத்திருக்க என்று பொருள் கொள்வாருமுளர். அங்ஙனம் உரைப்பினுமாம்.

முன்னோனும் பின்னோனுமாகிய எப்போதுமுள்ளவனைப் புகழவும், அவன் சீர் பாடவும் பெற்றால், தாமும் நீடு வாழ்ந்திருத்தல் கூடும் என்க. முன்னோனும் பின்னோனுமாதலே அவனுடைய மிகு புகழ் என்க. அத்தகையோனே எல்லா உலகங்கட்கும் மன்னவனாவான் என்றும், ஏனையோர் ஒரு வீட்டிற்கும் தலைமை தாங்கற்காகார் என்றும் அறிக.

பாட வேண்டும்நான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்(கு)
ஆட வேண்டும்நான் போற்றி அம்பலத்(து)
ஆடும் நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டும்நான் போற்றி இப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டும்நான் போற்றி வீடுதந்(து)
அருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே. 100

இதனால், தாம் பாடி ஆடிக் கூடிப் பொய்யெல்லாம் விட வேண்டும் நீயும் வீடு தந்தருள்க என இறைவனுக்கு வணக்கம் கூறியருள்கின்றார்.

(பொ - ரை) நின்னுடைய மெய்யன்பர்க்கு மெய்ப்பொருளாகத் தோன்றுவோனே, நின்னையே யான் பாடவும் வேண்டும்; (அங்ஙனம் பாடுதற்கு அருள்புரிவோனே, நினக்கு) வணக்கம்; அங்ஙனம் பாடி, அப்பாட்டினால் எனக்குளதாகும் மெய்ப்பாட்டினால் என் மனம் இரங்கி இரங்கி உருகிக் கட்டுவிட்டுக் கட்டுவிட்டுக் கூத்தாடவும் வேண்டும். (அங்ஙனம் என்னை ஆட்டுவிப்போனே, நினக்கு) வணக்கம், (அங்ஙனம் ஆட்டுவிப்பதனால்) திருச்சிற்றம்பலத்திலே கூத்தாடுகின்ற நின்னுடைய கழலையணிந்த பூவாகிய திருவடியை நாயினேனாகிய யான் இங்கிருந்து சென்றடைதலும் வேண்டும். (அங்ஙனம் அடைவிப்போனே, நினக்கு) வணக்கம், புழுக்கள் வாழ்தற்கிடமாகிய இவ்வுடற்பற்றினின்றும் என்னை நீக்குக. (அங்ஙனம் நீக்குவோனே, நினக்கு) வணக்கம். அதனால் நான் பொய்யெல்லாவற்றையும் விடுதல்வேண்டும். (அங்ஙனம் விடுவிப்போனே, நினக்கு) வணக்கம். அதன்மேல் நீயும் வீட்டினை எனக்குத் தந்தருளுக. (அங்ஙனம் தநதருள்வோனே, நினக்கு) வணக்கம் எ - று.

(வி - ரை.) இறைவனுடைய புகழ்பாடுதலால் நெஞ்சம் கட்டுவிட்டுருகும்; உடம்பு கூத்தாடும்; இந்நிலை எய்தியக்கால் தில்லையைச் சேர்தறகு ஊக்கமுண்டாகும்; தில்லையைச் சேர்ந்தால் உடற்பற்று இறைவன் அருளால் நீங்கும்; அங்ஙனம் நீங்கின் பிறவிக்கேதுவாகிய பொயப்பொருள் அனைத்தினையும் விடுதலுண்டாம். அஃதுண்டாயின் இறைவனும் உடனே வீடுதந்தருளுவன் என்க. இதனால் வீடடையும் நெறி இதுவெனக் காட்டியருளியவாறு.

"இருள்சேர் இருவினையும சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிநதார் மாட்டு" (கடவுள். 5.)

என்னும் குறள் ாண்டு நினைக்கத் தகும்.

பாடுதலும், ஆடுதலும், கூடுதலும், வீடுதலும் ஆகிய இவை இறைவன் அருளால் தாம் முயனறு பெறுதறகுரியன. கூறி நீக்குதலும் வீடளித்தலும் ஆகிய இவ்விரண்டும் தம் முயற்சியாலாகாது, இறைவனால் ஆகறபாலன என்று கொள்க.

இத்திருப்பாட்டிற் கூறியருளிய ஆக்கப்பாடுகள் அனைத்தினையும் ஒருங்கு பெற்றுக்கொள்ளும் திருக்குறிப்புக் கொண்டே இத்திருச்சதகம் பாடியருளப்பட்டதென்க.

திருச்சிற்றம்பலம்

# நீத்தல் விண்ணப்பம்

நீத்தல் விண்ணப்பம் என்பது இறைவன் தம்மை நீத்துத் தில்லைக்கண் சென்றமைபற்றிய முறையீடு. இதனுள் இறைவன் தம்மை நீத்தமைக்குரிய காரணங்கள் விளங்கக் கூறப்பட்டுள்ளன. அவை செருக்கடைந்தமை, ஐம்புலப்பற்று, காமம், கொள்கையின்மை, அணைக்கவும் அகன்றமை, அன்பின்மை, பொய்யொழுக்கம் எனப் பலவாறாக இதனுட் காணப்படுகின்றன இத்தகைய காரணங்களினாலே என்னை விடுகின்றாய், அங்ஙனம் விட்டுவிட்டால் யான் கெட்டுவிடுவேன்; ஆதலால் என்னை விட்டுவிடாமல் உடனிருந்து திருத்தி ஆட்கொள்ளுக என்பதே, இந்நீத்தல் விண்ணப்பத்தின் உட்கோள் என்க.

இனி, மெய்ப்பொருளானவனே, பொய்யனாகிய என்னை மெய்ப்பொருளாவான் என மதித்து, என் குலத்திலுள்ள குற்றங்களையும் ஏனைய பிற குற்றங்களையும் களைந்து ஆட்கொண்டாய் இங்ஙனம் ஆட்கொண்ட நின்னை அரும்பொருளென மதியாமல் 'இவன் எனக்கு எளியன்' என்று கருதிச் செருக்குற்றுத் தலையினால் நடக்கலானேன். நின் கருத்தோ 'இந்த அடிமை எவ்வகையிலும் தன் செயல் நினைப்பு ஆகியவை இன்றி, "என் ஆண்டவனாகிய நீயே என்னை ஆண்டனுபவித்துக் கொள், அல்லது விற்றுக்கொள்; அல்லது ஒற்றி வைத்துக்கொள். இன்னவற்றுள் எதனைச் செய்யினும் யான் நிலைகுலையேன்" என்றாங்கு இருத்தல் வேண்டும்' என்பது. அங்ஙனமாக, ஐம்புலன்கள் மிகுந்த வலிமையோடும் மொய்த்துத் தாக்கி வஞ்சிப்ப யான் அவற்றோடும் சார்ந்த நின் திருவடிகளுக்கு மாறுபட்டுப்போய் அவற்றின் விளைவாகிய மங்கையர் காமத்தில் ஈடுபட்டு யாதொரு கொள்கையுமின்றி நீ அணைக்குந்தோறும் அணைக்குந்தோறும் அவ்வணைப்பினின்றும் விலகி விலகிப் பொய்யொழுக்கத்திலேயே ஈடுபட்டு வரலானேன் அதனால் நின்னைத் தேடவும் தேடிக் கண்டாரை வினவவும் அன்ன பிறவற்றை ஆற்றவும் இயலாதேனாய் நெகிழ்ந்து போனேன். அதனால் நின் ஆட்சி பயனற்றதாயிற்று. எவ்வாற்றானும் நீ விரும்பி நின் திருவடியை எனக்குக் கொடுக்கவும், யான் அதனைப் பெற்றுக்கொண்டு செருக்கடங்கி ஒழுகும் விதியற்றவனானேன். நீ எவ்வகையிலும் ஒப்பற்ற பெருமையுடையாய் ஆகலின், நான் விலகவும் விடாதே எல்லாவற்றையும் பொறுத்துப் பொறுத்து ஆண்டாய். அங்ஙனம் ஆண்ட நீ இப்போது விட்டு விடுகின்றாய்.

அங்ஙனம் விடுவையேல் நின்னைப் பழியுறச் செய்வேன். யான் எங்ஙனம் செய்யினும் யானே குற்றவாளி என என் மனச்சான்று இடித்தலினால், என்னையே யான் நொந்துகொள்ளும் தன்மை யுடையேனாயினேன். ஆதலால் என் ஆண்டவனே, என்னை விட்டு விடாதே. என் பற்றுக்கோடாக இருந்து என்னைத் தாங்கிக்கொள் என, இறைவன் தம் பிழை கண்டு விதி முறைப்படியே ஒழுகினனாக, அங்ஙனம் ஒழுகுதல் வேண்டா, அன்புமுறை பற்றிப் பண்டு போலவே ஒழுகுதல் வேண்டுமென விண்ணப்பம் செய்தார் என, இயற்கை பொருளடைவிற்கேற்ப உரைக்க.

[குறிப்பு : இறைவன் நீக்கினான் என இத்திருவாசகத்துள் வரு வனவெல்லாம், இறைவன் விதிப்படி ஒழுகி நின்றதையே குறிக்கு மென்க. முன்னர்த் திருச்சதகத்தின் ஈற்றில் "முன்ன வருக என்," "பின்ன வருக என்", "நாவினாற்பன்ன வருக என்" என்றும், அவன் புகழ் பாடி, ஆடிக் கூடிப் பொய் எலாம் விட்டு வீடு தந்தருளுமாறு பொறுக்கலாற்றாது நனியிரங்கிக் கூறிய பின்னரும் அவன் விடுகின்றான் என்பதை ஊகித்துணர்ந்து இப்பகுதியால் அவன் நீத்தலை உணர்ந்தவராய் இறைவனுக்கு விண்ணப்பம் செய்துகொள்ளுகின்றார். ஆதலின் முந்திய பகுதியோடு இதுவும் இயைபுடைத்தாயிற்று என்க.]

இப்பகுதியின் பொருள் அடைவு ஒருவகையிற் பின்வருமாறு

(அ) தம்முடைய இயல்பும், உத்தரகோசமங்கையும் கிளந்து கூறப்பட்ட விண்ணப்பப் பிரிவு உத்தரகோசமங்கையைத் தமது ஊராக உரைத்து ஆண்டுகொண்ட பின்னர்த் தம்மை நீக்கிய செயல் தம்மைக் கன்றவைத்தலின் இப்பொருளே இப்பகுதிக்குத் தோற்றுவாயாக எழுந்தது எனத் தெளிந்து கொள்க.

இதன்கண் முதலாவது முதல் ஆறாவது வரை ஆறு பாக்கள், எட்டாவது முதல் பதினாறாவது வரை ஒன்பது பாக்கள், பதினெட் டாவதும் இருபதாவதும் நாற்பத்தெட்டாவதும் ஆகிய மூன்று பாக்கள் என மொத்தம் பதினெட்டு.

(ஆ) தம்மைப் புரப்பது இறைவனுடைய கடப்பாடு என ஒருவாறு தெளிந்தமையால் தம்மை இறைவன் பெயரோடு சார்த்தியும் உத்தரகோசமங்கையைக் கிளந்து கூறியும் *விண்ணப் பஞ் செய்தருளிய பிரிவு.

இதன்கண், ஏழாவதும், பதினேழாவதும், பத்தொன்பதாவது மாகிய மூன்று திருப்பாட்டுக்கள் அடங்கும்.

எத்தலத்தில் ஆண்டாலும் என்னை ஆண்டுகொள்வானுகை ஆதலால் உத்தரகோசமங்கையில் உரைத்தருளியதை மறப்பது நலன் எனக் கருதி உத்தரகோசமங்கையைக் கிளவாது தமக்குரிய நிகழ்ச்சிகளையே கிளந்து விண்ணப்பஞ் செய்யும் பிரிவு

இதன்கண் இருபத்தோராவது ஒன்றும், இருபத்து மூன்று முதல் முப்பது வரை எட்டும், முப்பத்து மூன்றுவது ஒன்றும், முப்பத்தைந்து முதல் முப்பத்தேழு வரை மூன்றும், முப்பத்தொன்பதாவது ஒன்றும், நாற்பத்தொன்றுவது நாற்பத்திரண்டாவது இரண்டும், நாற்பத்து நான்காவது முதல் நாற்பத்து ஏழாவது வரை நான்கும், நாற்பத்து ஒன்பது, ஐம்பது, இரண்டு மாகிய இருபத்திரண்டு திருப்பாட்டுக்கள் அடங்கும்.

(ஈ) உத்தரகோசமங்கையிலேதான் ஆளவேண்டும் என்னும் யாப்புறவும் இல்லை, தம் செயலைக் கிளத்தலினும் வாளா இறைவனை அழைத்து விண்ணப்பஞ் செய்து கொள்ளுதலே வாய்ப்புடைத்து எனத் துணிந்த பிரிவு.

இதன்கண்ணே இருபத்திரண்டாவதும், முப்பத்தோருவதும் ஆகிய இரண்டு திருப்பாட்டுக்கள் அடங்கும்.

(உ) எவ்விடத்தேனும் ஆண்டுகொள்ளினும் அதுவே போதும் என்னும் கருத்து மேலிட்டுத் தம்முடைய குறைகளைத் தனித்தும் விடுத்தும் கூறுதற்குத் திருவுளம் பற்றுது நின்றமையால் உத்தரகோசமங்கையைக் கிளந்து கூறுதும், தமக்கு ஆவனவற்றை இறைவன் திருப்பெயரொடு சார்த்தியும் விண்ணப்பஞ் செய்து கொள்ளும் பிரிவு

இதன்கண் முப்பத்திரண்டாவதும் நாற்பத்து மூன்றுவதும் ஆகிய இரண்டு திருப்பாட்டுக்கள் அடங்கும்.

(ஊ) உத்தரகோசமங்கைதனில் தம்மை ஆண்டு அகற்றித் துன்புறுத்தும் காரணமாக அதனை விடுத்து கையை, சுடுகாடு என்னும் இவ்விடங்களைக் கிளந்தும் தம் முறையீடு எடுத்தும் கூறி விண்ணப்பஞ் செய்தருளிய பிரிவு.

இதன்கண், முப்பத்துநான்காவதும், முப்பத்தெட்டாவதும்-நாற்பதாவதும் ஆகிய மூன்று திருப்பாட்டுக்கள் அடங்கும்.

இந்நீத்தல் விண்ணப்பம், உத்தரகோசமங்கையிலே அருளிச் செய்த வண்ணத்தை நினைந்து வருந்தியும், அவ்வருத்தத்தை யுண்டாக்கும் உத்தரகோசமங்கையை மறந்தும் அன்னவாறு பல பல திறன்களைக் கொண்டு ஏறியும் இடைநின்றும் இறங்கியும் வந்து, ஈற்றிலே அடிகள் தம்முடைய இயல்பினைக் கிளந்து

விண்ணப்பஞ் செய்தருளுவதோடு நிறைவேறுகின்றது எனக் கொள்க.

மேற்கூறிய பொருள் அடைவை ஈண்டுள்ள அட்டவணையைக் கொண்டு பகுத்துக் கொள்க .

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ |
|---|---|---|---|---|---|---|
| | 1-6 | 7 | | | | |
| | 8-16 | 17 | | | | |
| | 18 | 19 | | | | |
| | 20 | | 21 | 22 | | |
| | | | 23-30 | 31 | 32 | |
| செய்யுள் | | | 33 | — | — | 34 |
| | | | 35-37 | | | 38 |
| | | | 39 | | | 40 |
| | | | 41-42 | | 43 | |
| | 48 | | 44-47 | | | |
| | | | 49-50 | | | |
| மொத்தம் | 18 | 3 | 22 | 2 | 2 | 3 |

[illegible] த்தரகோசமங்கையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

## பிரபஞ்ச வைராக்கியம்

### கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

கடையவ னேனைக் கருணையி
　　னல்கலந்(து) ஆண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண்
　　டாய்விறல் வேங்கையின்தோல்
உடையவ னேமன்னும் உத்தர
　　கோசமங் கைக்(கு) அரசே
சடையவ னேதளர்ந் தேன்எம்
　　பிரான்என்னைத் தாங்கிக்கொள்ளே. 1

என்னுமிதனால், யான் இழிந்தவன் என்பதை அறிந்து வைத்தும் ஆண்டு கொண்ட நீ இப்போது விட்டுவிடுதல் நன்றன்று. ஆதலால்

என்னை விட்டுவிடாமல் · தாங்கிக்கொள்க என்பது கூறப்படு

(பொ - ரை ) வலிமையமைந்த வேங்கைப்புலியின் தோலை உடுத்தியவனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கைப்பதிக்கு வேந்தனே, சடையுடையவனே, எம் தலைவனே, கடைபட்டவனாகிய என்னை இரக்கமே பற்றுக்கோடாகக்கொண்டு மனம் பொருந்தி ஆண்டுகொண்டு, எருத்தினை யூர்வோனே, என்னை விட்டுவிடுகின்றாய். யான் தளர்வடைந்து போனேன். ஆதலால் என்னைத் தாங்கிக் கொள்ளுவாய் எ - று.

(வி - ரை.) வேங்கைக்கு விறல் தாருகவனத்து முனிவர்கள் எண்ணிய மந்திர ஆற்றலால் உளதாகிய தென்க. பாவ உருவாகிப் பகைத்து மேல்வந்த விறல்வேங்கையின் தோல், இறைவனால் உரித்து அணியப்பட்டமையினாலே, அவ்வேங்கை பாவத் தொடர்பற்று வீடு பெறறவாறே, அதனை ஒத்த யானும் அவ்வண்ணமேயாயினும் வீடு பெறல் வேண்டுமென்பது குறிப்பு.

இந்நீத்தல் விண்ணப்பத்தில் உத்தரகோசமங்கையேயன்றிப் பிற பதிகள் கூறப்படாமையினாலே, முன்னர் யாம் கூறிய உத்தரகோசமங்கை ஆட்சியே முந்தியதென்பது ஒருவாறு வலியுறு மென்க.

விடையவனே அந்தணனாக வந்து ஆண்டுகொண்டருளினான் என்பது போதர " என்னை..........விடையவனே " என்றும், அங்ஙனம் ஆள்வதற்குத் தம்பால் தவம் இன்றென்பதும், அத்தகைய தவமும் பிறவுமாயவெல்லாம் அவனருளாலேயே உளவாவன என்பதும் தோன்றக் " கருணையினால் கலந்தாண்டுகொண்ட" என்றும், யாக்கை, செருக்கு என்னுமிவை முதலாயவற்றை அழித்தாள்வல்லவன் என்பார் " விறல் வேங்கையின் தோலுடையவன் " என்றும், கங்கையைத் திங்களை எருக்கை அன்ன பிறவற்றைத் தளராது தாங்கியவாறே தம்மையும் தாங்கிக் கொள்ளவேண்டு மென்பார் " சடையவன் " என்றும் கூறினார். தாங்கிக் கொள்ளுதல் - மீண்டும் அடிமையாகக் கொள்ளுதல்.

அன்பிலும் கடப்பாட்டிலும் கடையவனாகிய என்னை என்க. இதனால், ஆண்டபின்னர் இழிவு கருதி விட்டுவிடுதல் அடாதென்றபடி.

கருணையினால் ஆண்ட நீ பின்னர், இவன் ஐம்புல வஞ்சனையில் அகப்பட்டவன் ; காமமே கன்றிநின்ற கடையன் ; செருக்குடையவன் ; கொள்கையற்றவன் ; பொய்யொழுக்கம் பூண்டவன் ; அன்பில்லாதவன் ; அணைக்கவும் அகலுகின்றவன் என்றாங்கு என் குற்றமெல்லா மெண்ணி என்னை விடுதி. அதனால் தனித்திருந்து தளர்ந்தேன். இவை நினக்கு இழிவாகும் ஆதலால் தாங்கிக்கொள் என்றார் என்க. தமது தளர்வை இத் திருவாசகம் முற்றினும் ஓதியுள்ளார். இறைவன் கண்ட குற்றங்களை, இங்ஙனம் இங்ஙனம் கண்டான் என அவன்மேல் ஏற்றாது, உண்மையில்

அவையெல்லாம் குற்றமே என உடம்பட்டு அவற்றைத் தம்மேலேற்றி மேலே விரிக்கலாயினர் என்க. அவற்றை ஆங்காங்குக் காண்க.

- கொள்ளேர் பிளவக லாத்தடங்்
 கொங்கையர் கொவ்வைச்செவ்வாய்
விள்ளேன் எனினும் விடுதிகண்
 டாய்நின் விழுத்தொழும்பின்
உள்ளேன் புறமல்லேன் உத்தர
 கோசமங் கைக்(கு) அரசே
கள்ளேன் ஒழியவும் கண்டுகொண்(டு)
 ஆண்ட(து)எக் காரணமே. 2

என்னுமிதனுல், நீ என்மேற் குற்றமெனக் கண்ட காமமுடையேன் யானெனினும், நினது தொண்டிற் குற்றமுடையேனல்லேன். எனினும் என்னை விடுகின்ருய். அத்தகைய நீ யான் முன் விரும்பாத போதும் எதற்காக ஆண்டாய் என்கின்ருர்.

(பொ - ரை.) உத்தரகோசமங்கைக்கு அரசே, எழுச்சியினைக் கொண்ட பிளப்புற்று அகலுதலில்லாத பருமையினையுடைய கொங்கை மங்கையர் தங்களுடைய கொவ்வைப்பழம் போன்ற சிவந்த வாயின் இன்பத்திற்கு விழைதலினின்றும் நீங்காதவனுயினும், நினக்குரிய மேலான தொண்டுகளைப் புரிதலினின்றும் நீங்கிப் புறத்தே போனவனல்லேன் அங்ஙனமாகவும் என்னை விட்டுவிடுகின்ருய். கள்ளன் எனப்பட்ட யான் நின்னின் நீங்கி நிற்கவும் அதனை அறிந்துகொண்டும் என்னை ஆண்டுகொண்டது எந்தக் காரண 'ல எ - று.

(வி - ரை.) இருகொங்கைகளும் பிளவுபட்டு அகலாவாகி என்க. பிளவு ஒரு சிற்றளவினையும் உணர்த்தும். துண்டமுமாம். துண்டமாக அகலாத எனக் கொள்க. அஃதாவது ஈர்க்கிடைபோகா இளமுலை என்க. "கொள்" என்றதனை ஒரு நிறுத்தல் அளவுப் பெயராகக் கொள்வாரும், கொள் ஏர்பு இளவு எனப் பிரித்து நலிவு செய்வாருமுளர்.

விள்ளேன் எனினும் நின் விழுத்தொண்டினுள்ளேன் புறமல்லேன் (ஆகவும) விடுதி என்றியைக்க. நின் தொண்டுகளில் தவறுஉண்மை காணினன்றே விட்டுவிடுதல் வேண்டும். யான் அங்ஙனம் அத்தொண்டுகளில் தவறுபட்டேனல்லேன். "ஆரியக் கூத்தாடினும் காரியத்திலே கண்;" அதுபோல யான் மங்கையர்பால் போக்குவரவுடையேனுயினும் நின் தொண்டுகளில் கண்ணுங் கருத்துமாகவே இருந்து வருகின்றேன். அத்தகையேன் விடுதற்குரியேனல்லேன. எனினும் நீ விடுகின்ருய். அங்ஙனம் விடுதல் முறையன்று என விரித்துக்கொள்க.

கள்ளேன் – கள்ளமுடையேன் ; அங்ஙனம் கூறினர், இறைவன் கருத்தை உட்கொண்டு. அதாவது இறைவன், ‘இவன் எனக்குரியன வற்றைச் செய்யாது, மங்கையர்பால் ஈடுபட்டு வரும் கள்ளன்’ என்று கருதியதை, அங்ஙனமே கொண்டு, அவர்க்கு விண்ணப்பிக்கு மிடத்தே கூறினர் என்க. ‘தக்கேனல்லேன் என உணர்ந்து யான் ஒழிந்து நின்றேன் ஆதலால் யான் தொண்டிற் கள்ளனல்லேன்’ என்பதே அடிகள் உள்ளக் கருத்தாயிற்று என்க. மங்கையர்பால் தாம் காமம் கொண்டதாக அடிகள் கூறுவது இறைவனது இந்திரஜாலத்தைக் குறிப்பிட்டு ; இவை கொண்டே “கள்ளேன் ஒழியவும்” என்று கூறினர்.

முன்பே அளவிடற்கரிய குற்றங்கள் என்பால் மலிந்திருக்கவும் அவற்றை மதியாமல் ஆண்ட நீ, பின்னர்க் காணப்படுகின்ற குற்றங்களை மதிப்பதென் என்பார் “கள்ளேன் ஒழியவும் கண்டுகொண்டது எக் காரணமே” என்றார்.

இன்னும் நீ என்னை நீக்காமையால் உனது தொண்டிலே உள்ளேன் என்பார், “நின் விழுத்தொழும்பின் உள்ளேன்” என்றும், “புறமல்லேன்” என்றும் கூறினர் என்க. இன்னும் இதனுனே நீ அருள் செய்தற்கும், நான் விண்ணப்பித்தற்கும் இடனுண்டு என்பது குறிப்பு. எங்ஙனமெனின் நீ நீக்காமையினுலே உன் திருவுள்ளத்திலே என்னை ஓம்பும் எண்ணம் உளதென்பதும், நானும் உன் திருத்தொண்டின் விலகாமையினுலே நின் பால் தொண்டு செய்யும் விருப்பம் உடையேனென்பதும் தாமே போதரு தலின் அடிகளது நீதிவாத மதிநுட்பம் உய்த்துணரந்து இன்புறற்பாலது.

“உத்தரகோசமங்கை” எனக் கூறியருளினமையால் அம்மையாரை யும் நந்தி எம்பெருமானையும் சாபம் நீக்கி ஆட்கொண்டமையும், ஆகமத்தை மீட்டும் பெற்றமையும், அறிவுறுத்தியருளினர் ஆதலால் தமது குறைகளை யும் அங்ஙனே நீக்கி ஆகமப்பொருள் அறிவுறுத்துதலும் வேண்டும் என்பதை வேண்டிக்கொண்டருளினர் ஆவர் என்க.

கீர்த்தித் திருவகவல் உள் திருநீற்றுக் கொடி முதலியவும் அங்ஙனமே திருத்தசாங்கத்துள் அரசர்க்குரிய தசாங்கமும கூறப் படுதலின் “உத்தரகோச மங்கைக்கரசே” என இறைவனை அரசனுக விளித்தருளினர் என்க.

**கார்உறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங் கரைமரமாய்**
**வேருறு வேனை விடுதிகண் டாய்விளங் குந்திருவா**
**ரூர்உறை வாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**வார்உறு பூண்முலை யாள்பங்க என்னை வளர்ப்பவனே. 3**

என்னுமிதனுல், என்னை வளர்த்தற்குரிய நீயே யான் கெட்டுப் போதல் கண்டும் இன்னமும் கெட்டுப் போமாறு விடுகின்றாய். அது தக்கதன்று என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) கீர்த்தியினையுடைய திருவாரூரில் உறைபவனே, நிலையுள்ள உத்தரகோசமங்கைக்கு அரசனே, கச்சினை அணிந்த தாலி முதலாய அணிகளை அணிந்த முலைகளையுடையவளாகும் உமைபாகனே, என்னை வளர்த்தற்குரியவனே, மழையின் இயல் போடு பொருந்திய கண்களையுடைய மடவோர் ஐம்புலன்களாகிய ஆற்றின் கரையிலே வேரூன்றி வளர்ந்து வருகின்ற மரம்போலாகி மனமழுந்தி வளர்ந்து வருகின்ற என்னை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) நடுவிற் கருமணியும் இளமையிற் பூசிய மையும் கறுப்பு நிறம் மிக்குக் கவின்று காமங் கவற்றுதலிற் "காருறுகண்" என்றாருமாம்.

"காசலம்பு முலையவர் கண்ணெனும் பூசலம்பும்"

(கம்ப. பாலகா. நாட்டுப்.)

என்றலால் மங்கையர் கண்ணியர் என அவ்வுறுப்பாற் பெயர் பூண்டனர் என்க.

ஆற்றங்கரை மரத்தின் அடிப்பகுதி நீர்ப்பசையற்றதாகக் காணப்படினும் அதன் வேர்கள் ஆற்றுநீரை யுண்ணுமாறு வீழ்த்தப் பெற்றமையால் அது செழிப்புற்று வளருமென்க. அங்ஙனமே யானும் மங்கையர் தம் மெய்யுற்றுப் பயிலேனாயினும், நல்லோன்போல இருந்து அவர்மேற் பற்றுள்ளத்தால் செழிப்புற்று வளர்கின்றேன். ஆங்கு வளர்கின்ற மரம் அவ்வாற்று நீர்ப்பெருக்கால் வீழ்ந்தழிவது திண்ணம்; அவ்வாறே யானும் அவர் இன்பவெள்ளத்தில் வளர்வேன்போன்று கெடுவது திண்ணம் என்றும், யாற்றங்கரையின் மரம் வெள்ளப் பெருக்கோட்டத்தால் வேரறப்பெற்றுக் கீழேவிழுந்து புரண்டு உருண்டோடி உவர்க்கடலுள்ளே புக்கு ஆழ்ந்து பயனற்று அழியுமாறே, யானும காமயாற்று வெள்ளப் பெருக்கோட்டத்தால் அங்ஙனமே புக்காழ்ந்து பயன் அற்றழிவேன் என்றும் விரிக்க.

இனி யாறல்லாத குளன் முதலியவற்றின் கரையிலே வளரும் மரம் அழியாது செழிப்புறும். அங்ஙனம் நின்னைப் போற்றினால் ஆக்கமுறுவேன். ஆதலால் என்னை இல்லறப் பகுதியினின்றும் நீக்கித் துறவறப்பகுதியில் நிலைத்து வளருமாறு விடுதி என்று குறிப்பித்தருளினார். இதனை,

"நளிநீர் நீத்தத் திண்கரைப் பெருமரம் போலத்
தீதில் நிலைமை முயங்குகம் பலவே" (குறுந். 368; 6, 8; இது வரைவு மலிந்த தோழிக்குக் கிழத்தி கூறியது.) என்பதனாலும்,

"வெறிமலர்க் குளவாய் கோலி" (திருவண். 90.)

என்பதனாலும் உணர்ந்துகொள்க.

"இருபேர் யாற்ற ஒருபெருங் கூடல் விலங்கிடு
பெருமரம்போல உலந்தன்றுகொல் அவன்மலைந்த மாவே"

(புறநா. 273.)

எனவும்,

" ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே " (நல்வழி. 12.)

எனவும் வருவன காண்க.

ஞானக் கொடைவள்ளலும், குறைபோக்கி அருள்வோனும் மீட்போனும், என்னை ஆட்கொண்டு வளர்ப்போனும் ஆகிய நீயே என்னை இங்ஙனங் கைவிட்டுக் கெடுப்பது நினக்கு அழகாகுமா? நீதான் மறப்பினும் நின் பங்கினளாகிய என் அன்னைதான் மறப்பாளா? ஆதலால் அத்தகைய நீ என்னை விடுகின்றாய் என்று அருளினர் என்க.

" இஃது 'உடைமை' என்னும் மெய்ப்பாடாகும். உடைமை என்பது செல்வம். செல்வ நுகர்ச்சியா பின உவகைப் பொருளாம். இஃது அன்னதன்றி, நுகராதே அச்செல்வந்தனை நினைந்து இன்புறுதற்கேதுவாகிய பற்றுள்ளமாம். அஃதாவது நீர்மேல் நின்ற மரம்போலச் செல்வமுடைமையால் வரும் மெய்வேறுபாடு " (தொல். பொருள். மெய்ப் சூ 12 உரை) எனப் பேராசிரியர் உரைத்தல் காண்க இவ்வுண்மை தெளியாதார், அடிகள் ஐம்புல இன்பத்திலே வளர்ந்து வருவாராயினர் என்ப. அந்நுகர்ச்சி 'இன்புறல' எனப் பிறிதொரு மெய்ப்பாடாகும் என்றறிக. இதனால் மங்கையர் இன்பத்திலே உள்ளம் ஈடுபட்டதென அடிகள் பாவனை மாத்திரையால் கூறிய திறன் ஓர்ந்து இன்புறுக. அம்மங்கையர்க்குத் தம்பாற் காதலுளதெனப் புலப்படுத்தியவர், இதனால் அவர்பால் தம்முள்ளப் பற்றைப் புலப்படுத்தினர். இவ்வகநிலை யேறறமுறை உலகிறகெல்லாம் விருந்தேற்கத்தக்கதொரு மருந்தேயாகும். அம்மங்கைமார்க்கு இன்புறுதலும் அடிகட்கு உடைமையும் ஆகிய மெய்ப்பாடுகள் இவ்விரு திருப்பாட்டுக்களாலும் புலப்படுத்தப்பட்டன.

இம்மெய்ப்பாடுகளைக்கொண்டு அடிகள் ஆண்டில் இளையவர் ஆவர் என்பது பெற்றும்; என்னை? தமக்கும் 'உடைமை' என்னும் மெய்ப்பாடு உளதாதலைப் புலப்படுத்துதலின் என்க. முதியராயிருப்பின்,

" தளையவிழ் கோதை நல்லார்
தங்களோடு இன்பம எய்த
இளையனும் அல்லேன் எந்தாய்
என்செய்வான் ரேன்றி னேனே " (திருமுறை. 4. பொது.)

என அப்பர் சுவாமிகள் தமது முதுமையை அருளிச்செய்வதும் ஆராயற்பாலது.

திருவாரூர் ஈண்டும், கீர்த்தி, சதகம், தெள்ளேணம், தசாங்கம், புலம்பல் என்பவற்றின் கண்ணும், பிறாண்டும் கூறப்படுதலால், பின்னர் அறிவுரை பெற்ற தலம் அதுவே. கூர்ந்து ஆராய்தல் வேண்டும்.

" என்னை வளர்ப்பவனே " என்றதனால், யான் இங்ஙனே வளர்கின்றேன் என்பதும், இறைவனது காப்புச் செவ்வியும், அதனால் தாம் பெற்ற பேறும இவைதாம் எனப் புலப்படுத்தி யருளினர்.

நின்னால் வளர்த்தற்கு இயலாதாயின் அன்னையைக் கொண்டே என்னை வளர்த்துவரச்செய் என்பது தோன்ற "முலையாள்பங்க" என்றருளிச் செய்தார்.

வளர்கின்ற நின்கரு ணைக்கையில்
வாங்கவும் நீங்கிஇப்பால்
மிளிர்கின்ற என்னை விடுதிகண்
டாய்வெண் மதிக்கொழுந்தொன்று
ஒளிர்கின்ற நீள்முடி உத்தர
கோசமங் கைக்கரசே
தெளிகின்ற பொன்னும் மின்னும்அன்ன
தோற்றச் செழுஞ்சுடரே. 4

என் அங்ஙனம் வேறுறுதல் செய்யாது என்னை நீ இழுத்துக்கொள்ளவும் யான் ஊழ்வயத்தால் மேலும் மேலும் நின் அருட்பிடிப்புக்குத் தப்பி மங்கையர் பற்றினுள் ஆழ்ந்துபோய் வேர்வீழ்க்க இயலாது அலைகின்ற என்னை மேலும் அடக்கிக்கொள்ளாமல் விடுகின்றாய் என்று கூறியருளுகின்றார்

(பொ - ரை.) வெள்ளிதாகியவோர் இளம்பிறைத்திங்கள் ஒளிவீசிக்கொண்டிருக்கப்பெற்ற நீண்டசடை முடியையுடைய உத்தர கோசமங்கைக்கு மன்னவனே, ஒளிவீசுகின்ற பொன்னையும் மின்னையும் ஒத்த தோற்றப் பொலிவினையுடைய செழிப்பான ஒளிப்பிழம்பே, வளர்ச்சியடைந்துகொண்டே யிருக்கின்ற நின்னுடைய கருணைக் கைகளினாலே என்னை வளைத்திழுத்துப் பெயர்த்து மீட்கவும், அதனினின்றும் நீங்கி இப்பகுதியிலே விளங்கிவருகின்ற என்னை விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) தன்னுடைய வளர்ச்சிக்கு எல்லையே இன்மையால் "வளர்கின்ற கருணை" என்றார் என உரைத்தல் நன்றாமேனும், அடிகள் செவ்விக்கேற்ப, யான் சேய்மைப்படுந்தோறும் தானும் அணிமைப்பட நீண்டுவருகின்ற கருணை என உரைக்க.

"மிளிர்தல்," போகவிச்சையுடையாருள் இவன் ஒருவனே எனக் கருதுமாறு விளங்குதல். கீழ்மேலாக முறைமாறிப் பிறழ்தலுமாம். அதாவது, பெயர்க்குந்தோறும் அருளிறபடாது புறம் போதல்.

வெண்மதிக்கொழுந்தை அருள்செய்து நின் திருமுடிக்கண் கண்ணியாக அணிந்தாய். என்பாலும அருள்புரிகின்றாய் என்பது உண்மை. ஆனால் யான் புறம்போகின்றேன். வெண்மதி புறம்போகவில்லை. இனி யான் புறம்போகவேண்டும் என எண்ணவுமில்லை. வெண்மதிமுடியிற் கிடந்தவாறே யான் நின்னடியிற்கிடக்க விழைந்தேன். அங்ஙனமாகவும்,

அஃது எனக்கு அருமையுடையது போலவும், யான் நின்புறத்தே மிகச் சேணில் இருப்பவன்போலவும் உணருகின்றேன். இதற்குரிய காரணம் என்ன? ஆராயுமிடத்து, எனக்கு எல்லா அருள்களையும் புரிகின்றாய். அவற்றை உபயோகிக்கும் முறைகளைக்கூட இருந்து இடித்துணர்த்தாமல், என் பொறுப்பிலேயே விட்டுவிட்டாய். இதனால் என் மனம் நிறைவடையாமல் குழம்புகிறது. அதனாலேதான் நீ கருணைக்கையில்.வாங்கவும், யான் நீங்கவும் இங்ஙனமாக வேறுபட்ட இயல்புகள் உண்டாகின்றன. நீ கருணைக்கையில் வாங்குமிடத்தும் நின் உள்ளம் ஒரு வகை மாறுபாட்டுணர்ச்சியடைகிறது. ஆதலால் நின் கருணையை நிறைந்த உள்ளத்துடன் நீ புரியவில்லை. இத்தகைய மாறுபாட்டுணர்ச்சிகள் இருத்தலினாலே நீ என்பால் சட்டப்படி ஒழுக விரும்புகின்றாய் என்பது பெறப்படுகின்றது. இங்ஙனம் சட்டத்தைக் கையாண்டு என்னை அன்புடன் கொள்ளாமல் விட்டுவிடுகின்றாய் எனப் பொருள் விரிக்க.
மேல்வரும் ஆறுவது திருப்பாட்டில் விளங்க உரைத்தனர். ஆங்குக் காண்க.

" மின்ஒளி கொண்ட பொன்ஒளி திகழ " (திருவண்டப். 125)
என்றதற்கு உரைத்தாங்கு ஏற்குமாறு ஈண்டு உரைப்பினும் அமையும். வாங்குதல் - வளைத்து அசைத்துப் பெயர்த்து மீட்டல்.

செஞ்சடையை மின்னலுக்கும் திருமேனியைப் பொன்னுக்கும் உவமங்கள் ஆகக் கொள்ளினும் அமையும். மின்னல் பூணூலுக்குமாம்.

" பொன்வண்ணம் எவ்வண்ணம்
அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம்
அவ்வண்ணம் வீழ்சடை " (பொன்வண்ணத்தந்தாதி. 1.)

என மேற்கோளும் காட்டுவர் பண்டை உரையாசிரியர்.

**செழிகின்ற தீப்புகு விட்டிலில் சின்மொழி யாரில்பன்னாள்**
**விழுகின்ற என்னை விடுதிகண் டாய்வெறி வாய்அறுகால்**
**உழுகின்ற பூமுடி உத்தர கோசமங் கைக்கரசே**
**வழிநின்று நின்னருள் ஆரமு(து) ஊட்ட மறுத்தனனே. 5**

என்னுமிதனால், நீ அருள் புரியவும் அதனை அறியமாட்டாது மறுத்த யான் மங்கைமார் இன்பம் அழிவுதரற்பாலது என்று பலநாட் பயிற்சியாலும் அறிந்துகொள்ளாது அதன்கண் இன்னும் உள்ளம் பற்றுகின்ற என்னை விடுகின்றாய் என்று கூறியருளுகின்றார்.

(பொ - ரை) வண்டுகளால் உழப்படுகின்ற தேன் அகத்தே பொருந்திய கொன்றைப் பூவை முடித்த முடியையுடைய உத்தர கோசமங்கைக்கு மன்னவனே, அன்று வழிமறித்து நின்று நின் அருளாகிய அரிய அமுதத்தை எனக்கு ஊட்டவும் அதனை மறுத்தேனாய், இன்று வளர்கின்ற தீயினுள்ளே புகுகின்ற விட்டிலைப் போல

சில்லென இன்பமூட்டும் மொழிகளைப் பேசும் மங்கையர்பால் பல் நாட்களாக உள்ளத்தை வீழ்த்துகின்ற என்னை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) வழிகின்ற-கிழிகின்ற-இழிகின்ற என்பனபோலச் செழி கின்ற என்பதும் அமைந்தது செழிதல் - வளர்தல்.

இறைவன் இங்ஙனம் பொறுப்பின்றி ஒழுகுவதற்கு அவன் அருளை மறுத்தமை காரணமாயிற்று என்க. "அருளை மறுத்தமை"யால் "சின்மொழியாரிற பன்னாள் விழலாயினர்" என்க.

"வழிநின்றூட்ட" என்றதனால் இறைவனது பற்றுள்ளமும், "மறுத் தனன்" என்றதனால் ஊட்டுவோன்மேல் தமது விருப்பின்மையும் குறிக்கப் பட்டன.

அருளமுதை முனிந்தேன் ஆதலால் அதன் சுவையும் என்னால் அறியப்பட்டிலது என்க.

காமத்தீயானது என்னைப் பன்முறை சுடவும் யான் அதனைப் பொருட் படுத்தாது, சிந்தனையின்றி, ஒருநாள் இருநாள் அன்றிப் பலநாளும் சென்று புகும் உள்ளப்பாங்கினை உடையனாயினேன் என்க.

வண்டுகள் நின் திருமுடிக் கண்ணுள்ள மாலைத் தேனை நுகர்ந்து இன் புறுகின்றன. யானோ நின் திருவடி யின்ப அமுதை நுகரப் பக்குவம் வாய்த்திலன். அவ்வாறாயினும் நீ வழிநின்று தடுத்து நுகர்விக்க முயன்றாய். தீவினையேன் அதனையும் மறுத்துச் சின்மொழியாரிற் பன்னாள் விழுகின் றேன். அவற்றை மனத்துட்கொண்டு என்னை விடுகின்றாய் என்க. இதனை மேல்வரும் திருப்பாட்டானு முணர்க.

தீ சேயதாகிய இடத்திலுள்ளதேனும் தானே அதனை விழைந்து செல்லுதல் விட்டிற்கு இயல்பு என்க.

தீப்புக்க விட்டில் இறக்கும்; யானோ பல நாட்புகினும் இறந்திலேன் என்று கொள்ளற்க; உள்ளம் பற்றியதே ஈண்டுப் பொதுத்தன்மை ஆதலின் என்க.

மறுத்தனன் யான்உன் அருள் அறி
யாமையின் என்மணியே
வெறுத்(து)எனை நீவிட் டிடுதி கண்
டாய் வினை யின்தொகுதி
ஒறுத்(து)எனை ஆண்டுகொள் உத்தர
கோசமங் கைக்கரசே
பொறுப்பர் அன் றே பெரி யோர் சிறு
நாய்கள் தம் பொய்யினையே. 6

என்னுமிதனால், சிறியேனாகிய யான் அறியாமையால் நின்னருளை

மறுத்துப் பெரும்பிழை செய்துவிட்டேன். அதனால் என்னை விடு கின்றாய் அங்ஙனம் செய்யாமல் பொறுத்துக்கொள் என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை) எனக்கு உள் நலம் செய்யும் ஒளிவீசும் மாணிக்க மணியே, உத்தரகோசமங்கைக்கரசே, யான் உன் அருளை அறியும் அறிவின்மையால் அதனை மறுத்தேன். அதனால் நீ என் மேல் வெறுப்புற்று என்னை விட்டுவிடுகின்றாய். மிகப் பெரியோர்கள் நாய்கள் போன்ற சிறியோர்கள் செய்யும் பெரும் பொய்ச்செயல்கள் அனைத்தையும் பொறுத்தருளுவரன்றே! ஆதலால் என்னை விட்டு விடாமல் என் வினைக்கூட்டம் அனைத்தையும் அடக்கி என்னை ஆண்டுகொள்ளுதி எ - று.

(வி - ரை) உன் அருள் அறியாமையின் மறுத்தனன் என, வழி நின்று அருளாரமிர்தூட்ட மறுத்தமைக்குக் காரணங் கூறினார். அறியாமை யிருள் நீங்காமையின் அதனை நீக்குதற்குரிய கடப்பாடுடைய இறைவனை "என் மணியே" என விளித்தார். அருளறியாமையாவது, இறைவன் ஒழுகும் ஒழுக்க முறைகளுள் காணப்படும் குறிப்புக்களை உணர்ந்து கொள்ளாமை என்க.

நின்னருளுக்குப் புறமாகச் செய்த வினையின் தொகுதி என்க. ஒறுத்தல் - அடக்குதல். இறைவனையும் தம்மையும் சேட்படுத்தது வினையின் தொகுதி என்றவாறும்.

பெரியோர் சிறியோர் என்பதே வழக்காறுகவும், ஈண்டு இறை வன் பெருமையும் தம் சிறுமையுமே குறித்தாராகலின், அவன் பெருமையுடன் எதிர்கோடற்கியலாத சிறுமை யென்பார் "பெரியோர்" என்றும் "சிறு நாய்கள்" என்றும் குறித்தார் என்க.

பொய்யவ னேனைப் பொருளென
ஆண்டுஒன்று பொத்திக்கொண்ட
மெய்யவ னேவிட் டிடுதிகண்
டாய்விடம் உண்மிடற்று
மையவ னேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
செய்யவ னேசிவ னேசிறி
யேன்பவம் தீர்ப்பவனே. 7

என்னுமிதனால் என் பொய்யை அறவே நீக்காது மெய்ப்போர் வையால் மறைத்து என்னைப் பொருளென ஆண்டமையால் நான் தளர்வேனாயினேன். ஆதலால் அப்பொய் என்னைவிட்டு நீங்குமாறு அருளுதி என்று கூறுகின்றார்.

(பொ - ரை) நஞ்சு உண்ட கழுத்திலே கருநிறம் மேவப் பெற்றவனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கைப்பதிக்கு வேந்தனே, செம்மேனியனே, சிவனே, சிறியேனுடைய பிறவியை நீக்கு வோனே, பொய்யனாகிய என்னையும் மெய்யன் என மதித்து ஆண்டு கொண்டு நின்னுடன் ஒன்றாகவே அணைத்துச் சேர்த்துக் கொண்ட மெய்ப்பொருளானவனே, என்னைப் பின்னர் விட்டு விடுகின்றாய் எ - று

(வி - ரை.) ஏனையவற்றுடன் கலந்த பொய்யை வேறாக்கி மற்றதனை நின்னுள்ளேயே அடக்கிக்கொண்டு ஏனையவற்றைப் புனிதமாகவே வைத்திருக்கும் இயல்பு வாய்ந்த நீ, என்பால் விளங்கிய பொய்யை வேறாக்கி நின்னுள் அடக்கிக்கொள்ளாமலே, வேறாக்கிய பொய்யை மீளவும் என்பால் விளங்க வைத்தாய் என்பார் "விடமுண் மிடற்று மையவனே" என்றும், அங்ஙனம் பொய்யை நின்னுள் அடக்கிய காலையும் நின் திருமேனி வேறு பாடு அடையாய்; பொய் பொய்யாகவும், நீ நீயே யாகவுமே இருப்பாய் என்பார் "செய்யவனே" என்றும், பொய்யின் நீங்கிய காலை விளங்கும் இன்பப் பொருளாவாய் என்பார் "சிவனே" என்றும், தீர்த்தற்கரிய கொடிய பிறவியாகும் எனது பிறவி என்பார் "சிறியேன் பவம்" என்றும், அதனைத் தீர்த்தறகுரிய நெறி, எல்லாவற்றையும் என் பொறுப்பிலேயே விட்டுவிட்டு அதனால் எனக்கு ஆற்றாமை நேர்ந்த வழி நின்னையே சரணாக அடைய வைத்தல் தக்கதன்று. அங்ஙனமாயின் ஆற்றாமை தீர்ந்தவழிப் பின்னரும் நின் புகழை மறந்துவிடுவேனன்றே; ஆதலின் ஆற்றாமை நேர்தலும் அது தீர்தலும் என்றின்னோரன்னவற்றை உளதாக்கும் பொய்யை வேரறுத்து, அதனை நின்னுள் வெளிப்படாவண்ணம் அடக்கிக்கொண்டு, என்னை மெய்யில் நிலைபெறுத்தலே ஏற்ற நெறியாகும். அங்ஙனம் ஆற்ற ஒருப்பட்டவனே என்பார் "சிறியேன் பவம் தீர்ப்பவனே" என்றும், யான் பொய்யன் என்பதை அறிந்து வைத்தும், இவன் மெய்யனாவான் என மதித்து ஆண்டபின்னர், என்னைக் கைவிட்டு, மெய்யன்பர்கள் பலரோடும் சோதியிற் கரந்தவனே என்பார் "மெய்யவனே" என்றும் கூறினா ரென்க.

செய்யவனும், சிவனும், என் பவம் தீர்ப்பவனும் ஆவோன், உத்தரகோச மங்கைக்கு அரசன்; என்னை ஆண்டுகொண்ட மெய்யவன் என இவற்றிலும் ஒரு வரலாறு தோன்ற நின்றமை காண்க.

**தீர்க்கின்ற வாறுஎன் பிழையைநின்**
**சீரருள் என்கொல்என்று**
**வேர்க்கின்ற என்னை விடுதிகண்**
**டாய்விர வார்வெருவ**

ஆர்க்கின்ற தார்விடை உத்தர
　　கோசமங் கைக்கரசே
ஈர்க்கின்ற அஞ்சொடுஅச் சம்வினை
　　யேனை இருதலையே 8

நின் பொறுப்பற்ற ஆளுகையால் என்னை ஐம்புலன்களும் அச்சமும் இருதலையும் பற்றி இழுப்பப் பற்றுக் கோடின்றி அவலமுற்று நின்மேல் வெறுப்புற்ற என்னை விடுகின்றாய் என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை.) பகைவர்கள் அஞ்சும்படி ஆரவாரிக்கின்ற கிண்கிணி மாலையணிந்த எருத்தினை ஊர்தியாகவுடைய உத்தர கோசமங்கைக்கு மன்னவனே, தீவினையினேனை ஐம்பொறிகளும் ஐம்புலன்கள்மேல் ஒருபுறமும், நின்னைப்பற்றிய அச்சம் இன்னொரு புறமுமாக இருபுறமும் இழுக்கின்றன. அதனால் நீ என்னுடைய பிழையைத் தீர்க்கின்ற விதம் என்ன? நின் சிறப்புடைய அருள்தான் யாதாகும் என்று மனம் புழுங்குகின்ற என்னை விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) "விரவார் வெருவ ஆர்க்கின்ற தார் விடை" யிருந்தும் அச்சமின்றி அஞ்சும் என்னை "ஈர்க்கின்றன" என்றபடி. ஐந்தின்வழிப் பட்டுச் சென்றகாலை இறைவன் யாது செய்வானோ என்ற அச்சமென்க. இதனாற் பற்றுக்கோடின்றி அவலமுற்றார் என்க. அங்ஙனம் பற்றுக் கோடற்றவழிப் பற்றுக்கோடாக இருத்தற்குரிய அவன் சீரருள் மேற் சீற்றமுற்றார் என்க.

இந்த அவலநிலையில் கைகொடுத்து உதவவேண்டிய நீ, இன்னமும் பாடுபட்டுத் திருந்துவாயாக என்று விட்டுவிடுகின்றாய் என்க.

இருதலைக் கொள்ளியின் உள்எறும்(பு) ஒத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண் டாய்வியன் மூவுலகுக்கு
ஒருதலை வாமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
பொருதுஅலை மூவிலை வேல்வலன் ஏந்திப் பொலிபவனே. 9

என்னுமிதனால் உன்னை அடைய இயலாதும் மீட்டும் உலகியலிலே சேரமாட்டாதும் அவலமுறுகின்ற என்னை விட்டுவிடுகின்றாய் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) பெரிய மூன்றுலகங்களுக்கும் ஒரேயொரு தலைவனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கைக்கு மன்னவனே, மாற்றாரைப் பொருதழிக்கும் முத்தலை வேலை வலக்கையில் ஏந்தி வெற்றி விளக்கம் பெறுவோனே, இருபுறத்தும் தீப்பற்றிய குற்றியின்

உள்ளகப்பட்ட எறும்பினைப்போல நின்னைப் பிரிந்த குஞ்சி விரிக்கப்பெற்றதலையுடையேனை விடுகின்றாய் எ - று.

(வி - ரை ) என்னுடைய இந்த அவலநிலையை வேறு யார்க்கு முறையிடடேனும் அகற்றமுடியாது, நீயே அகற்ற வேண்டும் என்பதுபட "வியன் மூவுலகுக்கு ஒருதலைவா" என்றும், அவ்வெற்றியைத் தரும் மூவிலை வேலை என் அவலங்கண்டும் உபயோகிக்காமல் வைத்திருக்கின்றாயே என்பார் "பொருதலை...பொலிபவனே" என்றும் கூறினர்.

இருதலைக் கொள்ளியினுள் எறும்பு, அவ்விருதலையையும் கடந்து ஓராற்றானும தான் கருதிய இடத்தை அடைய முடியாது தான் கருதிய கதியைப் பிரிந்து அவலமுறுதல்போல, ஐம்புலன்கள் ஒருபுறமும், ஆங்குச் செல்லின் இறைவன்பால் உளதாகும் அச்சம் ஒருபுறமுமாக இருபுறமும் போகமுடியாது, தாமடையக் கருதிய இறைவனைப் பிரிந்து அடிகள் அவலித்தார் என்க.

தலைவிரி கோலமுடையராயிருந்தமையின் "விரிதலையேன்" என்றார். அஃது அவலநிலையைக் காட்டும்.

மூவுலகுக்கும் ஒருதலைவனே, என்னை ஆண்டருளிய அரனே, வேல்வலனேந்திப் பொலிவோனே, "நின்னைப் பிரிந்த விரிதலையேன்" எனப் பன்னிப் பன்னி அழைத்தருளுகின்றார் என்க.

பொலிகின்ற நின்தாள் புகுதப்பெற்(று)
ஆக்கையைப் போக்கப்பெற்று
மெலிகின்ற என்னை விடுதிகண்
டாய் அளி தேர்விளரி
ஒலிநின்ற பூம்பொழில் உத்தர
கோசமங் கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யால் எரித்
தாய் புரம் மாறுபட்டே. 10

என்னுமிதனால், நின் திருவடியைச் சரணடைந்து என்னுடலைப் போக்கிய பின்னரும் துன்பப்படுகின்ற என்னை விட்டுவிடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) ஆராய்ந்து பாடற்குரிய விளரிப் பண்ணை வண்டுகள் பாடுகின்ற பாட்டின் ஓசை நிலைக்கப்பெற்ற பூக்கள் பொருந்திய சோலைகள் சூழ்ந்த உத்தரகோசமங்கைக்கு அரசே, முப்புரங்களைப் பகைத்து (உலகினைத் தாங்கும்) வலிமை நிலை பெற்ற திண்ணிய பொன்மலையை வில்லாக வளைத்து எரித்தோனே, விளங்குகின்ற நின்னுடைய திருவடிகளில் அடைக்கலம் புகப்

பெற்றும் நினக்கெனவே என்னுடைய ஆக்கையைக் கொடுக்கப் பெற்றும் வருந்தி இளைக்கின்ற என்னை விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) போக்குதல் - கொடுத்தல்.

" கலன்களும் தூசும் போக்கினான் " (கம்ப. எழுச்சி. 6.) என்பதனாலும் இஃது இப்பொருட்டாதல் காண்க உடம்படு புணர்த்தலால் உயிரும் உடைமை முதலியனவும் கொள்ளப்பட்டன.

ஆவி முதலாயினவற்றையெல்லாம் ஆசான் ஆண்டு கொண்டபோதே தன்னுடையவாகக் கொள்ளுதல் மரபாகும் இதனை,

" அன்றே என்தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூறு எனக்குண்டோ எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே."
(குழைத். 7.)

" மாயப் பிறவி உன்வசமே வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக்கடவேன் நானோதான்...
...... .. ............ ........................
காயத்தி டுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே "
(ஷை. 8.)

" ...................... அதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ ................ " (ஷை. 9.)

என்னும் இவை முதலாயவற்றால் அறிந்து கொள்க. அங்ஙனந் தெளிந்து கொள்ளுதற்கு முன்னர் இங்ஙனம் " மெலிகின்றேன் " எனக் கூறி யருளினார்.

" நலந்தருவோனே, அறனொடு அறனல்லா வடிவுகொண்ட புல்லிய செயல் என்னாற் செய்யப்பட்டிருப்பினும் அவற்றையெல்லாம் நின்னுடைய திருவடியில் எப்போதும் ஏற்றுக்கொள்வாய் " என்னும் பொருளைத் தரும் மந்திரம் செயல் ஒப்புவித்தலாகும். " வள்ளலும், நுகர்வோனும், உலகுரு வானவனுமாகிய சிவனே எல்லாப் பொருள்களிலுங் கலந்துள்ளான். ஆதலால் அவனடியேனாகிய யானும் சிவவடிவம் பெற்றேன் ஆவேன் " என்னும் பொருளமைந்த மந்திரம் இறைவனுடைய கொடைக் கையில் ஆவியை ஒப்புவித்தலாகும். இவ்விரண்டினையுங் கருத்தகத்துக் கொண்டே இப்பாடல் அருளப்பட்டதென்க. முன்னர்த் திருப்பாட்டிலே சடமாவேன் போலும் என்று அஞ்சி வெறுத்ததும் இத்திருப்பாட்டில் இறைவனிடம் முன்பே செயலுக்குரிய உடலையும் ஆவியையும் ஒப்படைத்து அவன் திருவடிக்கண் அடைக்கலம் புக்க யான் இன்னும் ஏன் மெலியாநின்றேன் எனத் தம்மைத் தாமே வினவிக்கொண்டதுங் காண்க.

மலையை வளைத்ததுபோல என் மனத்தினையும் வளைக்க. முப்புரம் முடித்தவாறே என் மும்மலங்களையும் முடிக்க. மும்மல காரியங்களை இறைவன் செறுத்தலையே முப்புரஞ் செற்றதாகத் திருமூல நாயனாரும் அருளிச் செய்வர் .

" அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை ஆரறி வார்களே " (திருமந். 343.)

" விளரி " என்றது நெய்தற்குரிய இரங்கற்பண். ' ஒ ' வென்றிசைக்கும் ஒலியைக் குறித்து நின்றதெனினுமாம்.

மாறுபட்(டு) அஞ்(சு) என்னை வஞ்சிப்ப
யான்உன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண்
டாய்வினை யேன்மனத்தே
ஊறுமட் டேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
நீறுபட் டேஒளி காட்டும்
பொன்மேனி நெடுந்தகையே. 11

என்னுமிதனால், எனக்குப் பற்றாக இருந்த திருவடிகளை ஐம்புல வஞ்சனையால் பிரிந்தேனாகலின் என்னை விட்டு விடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) தீவினையேன் மனதிலே இடையீடின்றிப் பெருகி வரும் இன்பத் தேனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கைக் கரசே, திருநீறு பூசப்பட்டும் தன்னொளியை விளங்கக் காட்டும் பொன்போன்ற திருமேனியுடையனாய் மேம்பட்டவனே, என்னுடைய இயல்பிற்கு மாறுபட்டு ஐம்பொறிகளும் எனக்கு வஞ்சனையைச் செய்ய, யான் அவற்றைப்பற்றி, நின் அழகிய மலர்போன்ற திருவடிகளுக்கு வேறுபட்டேன். அத்தகையேனை விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) திருவடி மலர் பிலிற்றும் ஆனந்தத் தேன் நினைக்கும் நெஞ்சத்தில ஊறுகின்றது. ' ஊறுபட்டே மன்னும் ' எனவும் பாடமுண்டு. அங்ஙனமாயின் மனத்தே ததும்பு பட்டு நிலைபெறும் என்றுரைக்க.

நீற்றினூடாகத் தன் திருமேனியின் பொன்னொளியை விளங்கக் காட்டும் நெடுந்தகை என்க. அவன் மெய்யியல்பு கூறியவாறு.

முன்னர் ஆட்கொண்ட அன்றே ஒப்படைக்கப்பட்ட பொறிகள் அவன்பால் அமைந்திலவாய் மீண்டும் தம்பால் வந்துவிட்டமையால்

" மாறுபட்டு அஞ்சு என்னை வஞ்சிப்ப " என்றார். ஐந்து மகன்றகாலைப் பற்றுக்கோடாயிருந்த மணிமலர்த்தாள், அவை மீண்டும் வந்தவழிப் பற்றின் நீங்கிய வென்க.

திருவுருவத்தினை நினைக்கில் அந்நினைவுள்ள வரையும் ஆறுதல் பெறுதலின்றல் என் "மனத்தே ஊறுமட்டே" என்றருளிச் செய்தார். இங்ஙனம் ஏனைய உறுப்புக்களும் ஆற்றினுல் அவையும் இனிமை எய்தப்பெறும். அங்ஙனஞ் செய்துகொள்ளமாட்டாமையால் அவை என்னையும் வஞ்சிக்க யானும் மாறுபட்டேனென அவலித்தாரென்க. வாக்கு முதலிய உறுப்புக்களும் அங்ஙனஞ் சென்றனவாகக் கொள்ளற்க; உடைமை இன்புறல் முதலியவற்றிற்கு மனமேயன்றிப் பிற கரணங்கள்மேற் சேறல் இன்மையின் மாறுபடுதல் - பொய்படுதல். வேறுபடுதல் - மெய்யினின்று திரிந்து பொய்ப்பொருளோடு சேர்ந்துகொள்ளல். நெடுந்தகை - மேம்பட்டவன். வஞ்சித்தல் - மெய்போலப் பொய்யினை மேற்கொள்ளச் செய்தல்.

நெடுந்தகை நீஎன்னை ஆட்கொள்ள யான்ஐம் புலன்கள்
விடுந்தகை யேனை விடுதிகண் டாய்விர வார்வெருவ [கொண்டு
அடுந்தகை வேல்வல்ல உத்தர கோசமங் கைக்கரசே
கடுந்தகை யேன்உண் ணும் தெண்ணீர் அமுதப் பெருங்கடலே
12

என்னுமிதனுல், நீ என்னை ஆளுந்தோறும் யான் நினது பற்றினின்றும் நீங்கி ஐம்புலப் பற்றையே கொள்ளுகின்றேன். அத்தகையேன் துய்த்தற்குரியவனாக நீ இருந்தும் என்னை அங்ஙனமே விட்டு விடுகின்றாய் என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை) பகைவர்கள் அஞ்சும்படி அடவல்ல வேற்படையைச் செலுத்துதலில் வல்ல உத்தரகோச மங்கைக்கரசே, மிக்க வேகத்தையுடைய யான் உண்ணுதற்குரிய தெளிந்த நீரினை உடைய அமுதமாகிய பெரிய கடலே, மேம்பாடுடையவனே, நீ என்னை ஆட்கொள்ளவும் ஆட்கொண்ட நின்னைக் கைக்கொள்ளாது ஐம்புலன்களையே பற்றிக்கொண்டு, விடத் தகாத தகுதிப்பாடுடைய என்னை நீயும் விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) கடுந்தகை - வேகங் கொண்ட குணம். அதனைக் கெடுக்க வல்ல வேல்வல்ல உத்தரகோசமங்கைக்கரசு என்க. அங்ஙனமிருந்தும் கெடுக்கவில்லை என்க. பிழை கண்டு பேசாமல் இருந்தான் எனக் கருதி அவன் சிறுமை பொறுக்கும் பெருமை தொனிக்க " நெடுந்தகை " என்றார். கண் சொல் முதலாயின கடுமையுடன் கூடிக் கடுங்கண், கடுஞ்சொல் எனப் பொருள் வேறுபட்டமைபோலத் " தகை "யென்பதும் அங்ஙனமே பட்டுத் தகுதியுடைத்தாகாதது என்று பொருள்பட்டது

யான் உண்ணுதற்குரிய தெண்ணீரமுதப் பெருங்கடலாக நீ இருந்தும், யான் நினைனத் துய்க்காது, ஐம்புலன்களைத் துய்த்து, நின்னைவிட்டு விடுகின்றேன். நீயும் அங்ஙனமே என்னைவிட்டு விடுகின்றாய் என்க.

கடுந்தகையேன் - வேகங்கொண்ட குணத்தினேன். அக்குணமுடையேனுதலால் விடற்பாலதைக் கொண்டும் கொள்ளற்பாலதை விட்டும் வருவேனுயினேன் என்றார் "வேகங் கெடுத்தான்" என முன்னர்க் கூறியமை காண்க.

**கடலினுள் நாய்நக்கி யாங்குஉன் கருணைக் கடலின்உள்ளம்**
**விடல்அறி யேனை விடுதிகண் டாய்விட லில்அடியார்**
**உடல்இல மேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**மடலின்மட் டேமணி யேஅமு தேஎன் மதுவெள்ளமே. 13**

என்னுமிதனால், என்னுடைய இன்பப் பொருளானவனே, யானே நின் கருணையைத் துய்க்கும் இயல்பு சற்றேனும் உடையேனல்லேன். ஆதலால் இங்ஙனமெல்லாம் மாறுபடுகின்றேன் அத்தகையேனை விடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) நின்னை இடையே விடுதல் இல்லாது எஞ்ஞான்றும் பற்றுதலையுடைய மெய்யன்பர்களுடைய திருமேனியையே நினக்குரிய வீடாகக்கொண்டு வீற்றிருக்கும் உத்தரகோசமங்கைக்கரசே, பூவிதழ்களினுள் அடங்கியிருக்கும் தேன்போன்றவனே, மாணிக்கமணியே, அமுதமே, மதுவெள்ளமே, கடலினுள்ளே நாய் தண்ணீரை நக்கிப் பருகினாற்போல நின் கருணைக் கடலினுள்ளே என் உள்ளத்தினை நனி பருகவிடல் இயலாத என்னை விட்டு விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) ஆனந்த வெறியூட்டுவோனுகலின் "மதுவெள்ளமே" என்றார். கடலுள் மிக அதிகமாக நீர் இருப்பினும் நாய் தன்னியல்பிற்கேற்ப நக்கிப் பருகும். அவ்வாறே இடையிடையே சிறிது சிந்தனை வழியால் யான் இன்புறுகின்றேன். அது நாய்க்கு இயல்பானாற்போல இதுவும் எனக்கு இயல்பாயிற்று என இகழ்ந்து கூறியவாறு.

தம்மியல்பு, வெள்ளத்தை நாய் நக்கிப் பருகுவதை ஒக்குமென அதனை இகழ்ந்தும், முழுதும் பருகவேண்டுமென அதனை அவாவியும, இங்ஙனம் கூறியருளினார் என்க.

என்னைப் புறமே போக்கி அடியார் உடலுள்ளே நீ வாழ்கின்றாய் என்றருளினார், அன்பர் உயிரைத் திருவடிக் கீழிருத்தியும் அவர் உடற்கண் தான் புகுந்தும் இருந்து வருகின்றது குறித்தற்கு.

வெள்ளத்துள் நாவற்றி யாங்குன்
　　அருள்பெற்றுஇத் துன்பத்தின்றும்
விள்ளக் கிலேனை விடுதிகண்
　　டாய்விரும் பும் அடியார்
உள்ளத் துள் ளாய் மன்னும்
　　உத்தர கோசமங் கைக்கரசே
கள்ளத்து ளேற்கு அரு ளாய்கழி
　　யாத களிஎனக்கே. 14

என்னுமிதனால், யான் உன்னுடைய அருளைப் பெற்றும் பெரு தேன்போல அதனைத் துய்த்திலேன் அத்தன்மையேனை விட்டு விடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) விரும்புகின்ற அடியார்களின் உள்ளத்துள் இருப்பவனே, நிலைபெறும் உத்தரகோச மங்கைக்கரசே, நல்ல நீர் வெள்ளத்துள் இருந்தும் நா வறந்தாற் போன்றே, உன்னுடைய அருளைப் பெற்றுக்கொண்டு இத்துன்பத்தினின்றும் நீங்கும் ஆற்ற லற்ற என்னை விட்டுவிடுகின்றாய். அங்ஙனம் விட்டு விடாமல் களவிலே தங்கியிருக்கும் எனக்கு எண்ணின் நீங்குதல் இல்லாத ஆனந்தத்தை அருள்கின்றாயில்லை எ - று.

(வி - ரை) அருள் என்ற பொருள் நோக்கி "வெள்ளத்தை" நன்னீர் வெள்ளம் என்றாம்.

வெள்ளத்துள் நாவற்றுதல் இன்மையால், வெள்ளத்துள் நாவற்றியாங் கென்றது வியப்பு என்னும் மெய்ப்பாடாயிற்று. இஃது உலகநடை பிறழ்ந்த தோர் உவமையாகலின் பெருமைபற்றிய வியப்பின்பாற்பட்டதாகும்.

"மலைநாடன், ஈரத்துள் ளின்னவை தோன்றின் நிழற்கயத்துள்
　நீருட் குவளை வெந்தற்று" (கலித் குறிஞ். 5 : 30, 31.)

என்னுமடிகட்கு எழுதிய குறிப்பும், மற்றிதனுக்கு,

"பெருமையும் சிறுமையும்" (தொல். பொ. உவ. 19.)

என்னும் சூத்திரத்திலே பேராசிரியர் எழுதிய குறிப்பும் ஈண்டு ஒப்புநோக் கற்பாலன.

வெள்ளத்துள் இருந்தும் நாவற்றுதற்கு "யான் இவ்வெள்ளத்தைப் பருகேன்" என வைராக்கியம் பூண்டிருத்தல் வேண்டும். இங்ஙனமே அடிகளும் இறைவன்பாற் கொண்ட சிறு பிணக்கினால் அவன் எல்லா அருள்களையும் செய்யவும் அவற்றை நுகராதே வைராக்கியம் பூண்டிருந்தா ராகலின் "கள்ளத்துளேற்கு" என்றார். இங்ஙனம் கள்ளம் பூண்டது அவன்பாற் கழியாத களிபெறுதற்கே என்க. "களியாத களி" எனவும் பாடமுண்டு. அதனை 'நிரதிசய வானந்தம்' என்க.

**களிவந்த சிந்தையொடு உன்கழல் கண்டும் கலந்தருள**
**வெளிவந் திலேனை விடுதிகண் டாய்மெய்ச் சுடருக்கெல்லாம்**
**ஒளிவந்த பூங்கழல் உத்தர கோசமங் கைக்கரசே**
**எளிவந்த எந்தை பிரான் எனை ஆளுடை என்னப்பனே.** 15

என்னுமிதனால், உன் திருவடிகளைக் கண்ணாரக் கண்டும் அவற்றை அடைவதற்கு நாணங்கொண்டு வெளிப்பட வாராதிருந்தேனை விட்டு விடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) மெய்ம்மையுடைய ஒளியுடைப் பொருள்கட் கெல்லாம் மற்றவற்றின்பால் ஒளியை வரச் செய்த பொலிவுடைய வீரக்கழல் கட்டிய திருவடியையுடைய உத்தரகோசமங்கைக்கு அரசனே, எளிதாக வந்தருள் செய்த எங்கள் அப்பனாகிய பெரியோனே, என்னை அடிமைகொண்ட என் அப்பனே, உன் திருவடிகளைக் கண்டுகொண்டும் அவற்றுடன் அணைந்துகொள்ளும்படி உவகையுடைய உள்ளத்தோடும் வெளிப்பட வந்திலாத என்னை விட்டு விடுகின்றாய் எ - று.

(வி - ரை) "மெய்ச்சுடர்" என்றது ஈண்டு ஞாயிறு நாண்மீன் முதலாய ஒளியுடைப் பொருள்களை. அவற்றின் ஒளியாக அவன் திருவடியே அமைந்துள்ளது என்க. பிற பொருள்களின் தன்மையும் அவனே என்க. இதனை "அருக்கனில் சோதி அமைத்தோன்" என்பது முதலாகத் திருவண்டப் பகுதியுள் விளங்கவுரைத்தமை ஆங்குக் காண்க.

எல்லா மெய்யன்பர்க்கும் பொதுப்பட எளிவந்தானாதலின் "எந்தை பிரான்" எனப்பட்டான். "என்னையாளுடை என்னப்பனே" என்றது அடிகட்குமட்டும் சிறப்பென்க. "எந்தைபிரான்" என்பதற்கு எமக்குத் தந்தைக்குப் பிரான் எனினுமாம்.

தம் கருத்தினை நாணத்தினால் மறைத் தொழுகினாராகலின் "கலந்தருள வெளிவந்திலேனை" என்றார். அடிகளைத் தன் திருவடியிற் கலக்க வேண்டும் என்னும் குறிப்புடன் இறைவன் இருந்தான். அதுபோது அடிகட்கும் அக்கருத்துண்டேனும் தம் கருத்தை மறைத்து நீ கலந்தருள வெளி வந்திலேனை என அடிமை இயல்பு முற்றக் கூறினார்.

மெய்ச்சுடருக்கெல்லாம் அவற்றின் தன்மையான ஒளியைக் கொடுத்தாங்கே என் உள்ளத்தின் பாலும் அதன் மெய்யியல்பாக மகிழ்ச்சியை ஈந்தாயில்லை; வெறுவிதாக விடுகின்றாய் என்றவாறு.

களவுப் பகுதியில் தன் காதலனுக்குத் தன் கருத்தினை நாணத்தாற் கரந்தொழுகுங் காதலியை ஒப்ப யானும் என் கருத்தினைக் கரந்து நின் பால் ஒழுகினேன்; நீயும அவ்வியல்பு அறியாய்போல விடுகின்றாய் என்றாங்கு விரிக்க.

என்னைஅப் பாஅஞ்சல் என்பவர்
இன்றிநின்று எய்த்து அலைந்தேன்
மின்னைஒப் பாய்விட் டிடுதிகண்
டாய்உவ மிக்கின்மெய்யே
உன்னைஒப் பாய்மன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
அன்னைஒப் பாய்எனக்கு அத்தன்ஒப்
பாய்என் அரும்பொருளே. 16

என்னுமிதனால், எனக்கு அன்னையும் அத்தனும் ஒப்ப நீ இருந்தும் யான் தேற்றுவாரின்றி நிலைகுலைந்தபோதும், என்னைப் பாராமல் விட்டுவிடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) மின்னலை ஒத்தவனே, ஒப்புநோக்கப் புகின், உண்மையாக நீயே நின்னை ஒப்பாக அமைவோனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கைக்கரசே, எனக்குத் தாயைப் போன்றவனே, தந்தையைப் போன்றவனே, எனக்கு அருமையான பொருளே, என்னை நோக்கி "அப்பா! அஞ்சற்க," எனத் தேற்றுவார் யாரும் இன்றித் தனிநின்று வருந்தியலைநதேன். அத்தகைய என்னை விட்டுவிடுகின்றாய் எ - று

(வி - ரை) அடிகள் நாண்விட்டுத் தம்மைத் திடப்படுத்திக்கொண்டு வெளிவருமுன் மறைந்தானாகலின் "மினனை ஒப்பாய்" என்றும், உருவினும் செயலினும ஏனையவற்றினும் ஒப்பார் பிறர் இன்மையானும், எங்ஙனமேனும் அவனே பற்றுக்கோடாதலினாலும் "உவமிக்கின்...... உன்னை ஒபபாய்" என்றும், குறறத்தைத் துடைத்தலும், தந்தையானவன் குற்றத்தைப் பொறுக்குமாறு அவற்கு உணர்த்தலும் வல்லவள் தாயாகலின், தம்பால் அவற்றைச் செய்திலாத இறைவனை "அன்னை ஒப்பாய்" என்றும், மைந்தன்பால் தோன்றிய குறைகளைக் கண்டு அவனுக்குப் பற்றுக்கோடாக இருந்து அவற்றைக் களைந்து உறுதிபெறச் செய்யும் தன்மை தந்தையின்பாலதாகவும் அங்ஙனம் செய்யாதே கழியப் பறறுக்கோடின்றி எய்த்தலைந்தமையால் "அத்தன் ஒப்பாய்" என்றும், எளிவந்தான் எனினும் இன்று அடைதற்கரியனாக மாறுபட்டு நிற்றலின் "அரும்பொருளே" என்றும், நின்னால் ஆட்கொள்ளப்பட்டவனும், பிறர் பற்றென்பதே இல்லாதவனும, இங்ஙனமெல்லாம வருந்தியிருப்பவனும், தனித்தவனுமாகிய "என்னை" என்றும், இரங்கற் குறிப்புத் தோன்ற "அப்பா" என்றும், 'நின் ஆண்டான் ஏதோ ஒரு பிணக்கினாலே இங்ஙனம் வேண்டாவெறுப்பாக இருக்கின்றான், யான் அதை யுணர்ந்து உங்கள் இருவரையும் ஒன்றுகூட்டி வைப்பேன்; அதுவரையும் யான் சொல்வதுபோலவே நடந்துகொள்; யான் உனக்குத் துணைவனாக இருந்து

நின் கருத்தை நிறைவேற்றி வைப்பேன் ; இஃதுறுதி ; இதனை நம்புக' என்றுங்கு உறுதி கூறி அவ்வத்தருணத்திற்கேனும் பற்றுக்கோடாக இருத் தற்குரியர் ஒருவரேனும் இன்றி முற்றுகத் துறநது தனித்திருந்து அலைந் தேன் என்பார் "அஞ்சல்......எய்த்தலைந்தேன்" என்றும் கூறினரென்க.

'அப்பா அஞ்சற்க' என்று தேற்றுவார் ஒருவரும் இல்லை என்னு மிதனை, "தீர்ப்பரிய......தாழ்ந்து" என்னுந் திருவெண்பா(2)வாலும் உணர்க.

பொருளே தமியேன் புகலிட மேநின் புகழ்இகழ்வார்
வெருளே எனைவிட் டிடுதிகண் டாய்மெய்ம்மை யார்விழுங்கும்
அருளே அணிபொழில் உத்தர கோசமங் கைக்கரசே
இருளே வெளியே இகபர மாகி இருந்தவனே. 17

என்னுமிதனுல், நீயே எல்லாமாக இருந்தும், என் புகலிடமாக இருந்தும் என்னை விட்டுவிடுகின்றுய் என்பது கூறப்படுகின்றது.

(பொ-ரை.) மெய்ம்மையானவனே, தமியேன் புகலிடமே, நின் புகழ்களை இகழ்ந்து கூறுவார்க்கு அச்சத்தை விளைவிப்போனே, மெய்யன்பர்கள் நுகரும் அருளையுடையானே, அணி செய்யப்பட்ட பொழில் சூழ்ந்த உத்தரகோசமங்கைக்கரசே, இருளானவனே, வெளிப்படையாகத் தோன்றுவோனே, இம்மை மறுமையாகிய இரண்டுமாகி இருந்தவனே, என்னை விட்டுவிடுகின்றுய் எ - று.

(வி - ரை.) பொருள் - மெய்ம்மை. புகலிடம் - அடைக்கலமாகப் புகு மிடம். வெருள் - அச்சம். "விழுங்கும்" என்றது, ஈண்டுத் துய்த்தல் என் னும் துணைத்தாய் நின்றதேனும், அடியார் துய்க்கத் தாம் அது பெறுது வருந்தும் வருத்தத்தையும் உணர்த்தி நின்றதென்க. அணி - நிறை. வெளி - வெளிப்படையாகத் தோன்றுதல். அதற்கேற்ப இருளுக்கு மறைந் திருத்தல் எனப் பொருள்கொள்க.

பொருளல்லவற்றைப் பொருளாக்கொண்டிருக்கும் தம் மருளுணர்வு நீங்காமையின் "பொருளே" என்றும், 'அப்பா அஞ்சல்' என்பவரின்றி நின்று எய்த்தலால் "தமியேன்" என்றும், தமக்குப் புகலிடமாயிருக்க வேண்டியவன் மிக்க சேணில் இருந்தமையால் "புகலிடமே" என்றும், எஞ் ஞான்றும் அவன் புகழ்களை எடுத்தோதிவரும் தமக்கு ஆக்கஞ் செய்யாது விட்டுவிட்டமையால் "நின்புகழ் இகழ்வார் வெருளே" என்றும், தேனுந்து 'செந்தீயில் உடன் சென்ற அன்பர்களை "மெய்ம்மையார்" என்றும் அவ ரோடும் பிரியாதிருந்து மேலும் இன்புறுத்திவருதலின் அவர் "விழுங்கும் அருளே" என்றும், அவன் பிரிவினுற் போந்த துன்ப மயக்கத்தை "இருள்" என்றும், அவ்விருளகல அவன் செய்த ஆக்கங்களை நினைந் திருப்புழி அவன்முன் நிற்பவன்போலத் தோன்றுதலின் "வெளியே" என் றும், இங்ஙனமே இம்மை மறுமை இரண்டிலும் அவன் ஒருவனே தானே

முதல்வனுகியும், துய்க்கப்படும் பொருளும், துய்த்தலும், பிறவுமாகி இருந்தான் என்பார் "இகபரமாகி இருந்தவனே" என்றும கூறினுர் என்க.

பொருளுணராதும், புகலிடமின்றியும், புகழை இகழ்ந்தார்போல வெருண்டும், அருளின்றி வற்றியும், மயங்கியும், ஒருவேளை தேறியும், இங்ஙனமே இகபரமிரண்டையும் மதித்தும் செய்வதின்னதென்று அறியாது திகைப்படையும் என்னை விடுகின்றுய் என்றவாறு.

இருந்(து)என்னை ஆண்டுகொள் விற்றுக்கொள்
ஒற்றிவை என்னினல்லால்
விருந்தின னேனை விடுதிகண்
டாய்மிக்க நஞ்சு அமுதா
அருந்தின னேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
மருந்தின னேபிற விப்பிணிப்
பட்டு மடங்கினர்க்கே. 18

என்னுமிதனுல் எல்லாப் பொறுப்புக்களையும் உன்பாலேயே வைத்துவிட்டு யான் எத்தகைய பொறுப்புமின்றி வாளாவிருந்தாலேயன்றிப் பொறுப்புக்களை மேற்கொண்டபோது என்னை விட்டுவிடுகின்றுய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) வேக மிகுதிப்பட்ட நஞ்சினை அமுதமாக உண்டவனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கைக்கரசே, பிறவிநோய் வாய்ப்பட்டுச் செயலற்று ஒடுங்கினவர்களுக்கு மருந்தானவனே, உடனிருந்து நீயே என்னை ஆட்சி செய்துகொள், விற்றுக்கொள், ஒற்றிவைத்துக்கொள் என்று கூறுவதேயல்லாமல் திருந்தா வாழ்க்கையுடையவனுகிய என்னை விட்டுவிடுகின்றுய் எ - று.

(வி - ரை ) நஞ்சை அமுதாக அருந்தினன் என்றதனுல், தனக்கு மோர் ஊறின்றிப் பிறர்க்கு வரும் இடையூற்றினையும் நீக்கியருளும் ஆற்றலும் அருளும பெருமையும் உடையன் என்பது பெறப்படும்.

இயல்பாகவே யுளதாகித் தன்னிற் பிறவில்லை என்னும் தரத்ததாகிய " மருந்து " என்க.

ஆளுதல், விற்றல், ஒற்றிவைத்தல் என்னுமிவை முதலாயவற்றை எல்லாம் அவன் பொறுப்பிலேயே விட்டுவிட்டுத் தன் தலைமையற நிற்றலே அடிமைக்குரிய நல்லியல்பென்க. " ஆண்டுகொள், விற்றுக்கொள், ஒற்றிவை " என்னுமிவை அடிமையியல்பைக் குறிப்பாலுணர்த்தி நின்றன என்க.

இங்ஙனம் இருக்கவேண்டுமென்பதே நின் கருத்தென்பதையும், அங்ஙனம் இருக்கும் பயிற்சியையும் அறியாமையின் " விருந்தினன் " என்றுர்.

நின் அருளமுதம் உண்ணற்கென நின் கோயிற்கண் வந்த விருந்தினன் எனினுமாம். விருந்து, புதிது எனப் பொருள்கொள்ளலுமொன்று.

மடங்களன் வல்வினைக் காட்டைநின் மன்னருள் தீக்கொளுவும்
விடங்களன் தன்னை விடுதிகண் டாய்என் பிறவியையே
ரொடுங்களைந்(து) ஆண்டுகொள் உத்தரகோசமங்கைக்கரசே
கொடுங்கரிக் குன்றுஉரித்து அஞ்சுவித் தாய்வஞ்சிக் கொம்பினையே 19

என்னுமிதனால், என் வினைத் தொகுதியை எரித்து நீக்கி என்னைப் புனிதனாக்கவேண்டிய நீ அங்ஙனம் செய்யாது விட்டுவிடுகின்றாய். அங்ஙனம் என்னைவிடாது ஆண்டுகொள் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) உத்தரகோசமங்கைக்கரசனே, தறுகண்மையுடைய மலைபோன்ற யானையின் தோலையுரித்து (அதனைப் போர்த்து) வஞ்சிக்கொடிபோல் மெல்லியல்புடைய உமையம்மையை அஞ்சுவித்தோய், என்னுடைய வல்வினைக் கூட்டமாகிய காட்டை ஒடுங்கும்படி நின் நிலைபேறுடைய அருளாகிய தீயைக் கொளுத்தும கடமை பூண்டவனே, என்னை விட்டுவிடுகின்றாய் அங்ஙனம் விடாதே. என் பிறவியை அது தோன்றுதற்குரிய முதலோடும் களைந்து என்னை ஆண்டுகொள்வாய் எ - று.

(வி - ரை) கரிக் குன்றுரித்த வரலாறு, பிரமனை நோக்கித் தவஞ் செய்து சிவபிரான் ஒழிந்த மற்றொருவராலும் அழியா வரம் பெற்ற கயமுகாசுரன் என்பவன், சான்றோர்களை வருத்தி வருகையில் அவனது கொடுமைக்கு ஆற்றாத அவர்கள் காசியென்னுமிடத்தை அடைந்து சிவபெருமானிடம் அடைக்கலம் புகுதலும், அங்கும் சென்று அவர்களை வருத்திய அக்கயமுகனைச் சிவபெருமான் சங்காரகால உருத்திர உருவங்கொண்டு உதைத்துருட்டிப் பிடரியைக் கீறித் தோலையுரித்துப் போர்வையாகக் கொண்டனர் என்பதாம் அப்போது அத்தோற்றத்தையும் செயலையும் கண்ட உமையம்மை தன் மெல்லியல்பிற்கேற்ப அஞ்சி நடுங்கினாள் என்க. அங்ஙனமே என்னையும் அஞ்சுவித்து என் பிறவியை வேரொடும் களைந்தாண்டுகொள் என்றபடி. மடங்குதல் - ஒடுங்குதல். விடங்கன - தொழிலோன். மாறுமைபற்றி "மன்னருள்" எனப்பட்டது. மிகுதிபற்றிக் "காடெ"ன்றார். என்னை விடுதல் நின் தொழிலன்று; ஆளுதலே தொழிலென்றபடி.

கொம்பர்இல் லாக்கொடி போல்அல மந்தனன் கோமளமே
வெம்புகின் றேனை விடுதிகண் டாய்விண்ணர் நண்ணுகில்லா
உம்பர்உள் ளாய்மன் னும் உத்தர கோசமங் கைக்கரசே
அம்பர மேநில னேஅனல் காலொடுஅப்பு ஆனவனே. 20

என்னுமிதனுல், நீ எல்லாமாக எங்குமிருந்தும் யான் பற்றுக்கோடின்றிச் சுழன்று வெம்புகின்றேன். அத்தகையேனை விட்டுவிடுகின்றுய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) இளையோனே, தேவர்களும் அடையப் பெருத அத்துணைச் சேய்மைக்கண்ணுள்ள வெளியில் இருப்போனே, நிலைபெற்ற உத்தரகோசமங்கைக்கரசனே, வானமும், நிலமும், தீயும், காற்றும், நீரும் என்னும ஐம்பூதங்களுமானவனே, யான் கொழுகொம்பில்லாத கொடியைப்போலச சுழற்சியடைந்தேன். பற்றுக்கோடொன்றின்பொருட்டுத் தவிக்கின்ற என்னை விட்டுவிடுகின்றுய் எ - று.

(வி - ரை.) விண்ணவர்களுக்கு அவர் அடையமுடியாத சேய்மைக்கண் அரியையாய் இருக்கின்றனை. எம்பொருட்டு வாயுய், காறறுய், தீயாய், நீராய், நிலமாய், அவற்றின் நுண்ணணுக்களாய, கருவிகளாய், பிறவாய் எளிவந்தனை எனறபடி. நீ இத்துணை எளிவநதும் யான பற்றுக்கோடின்றி அலமநது வெம்பலானேன. அஙஙனம் வெமபுகின்ற எனக்குக் கொழுகொம்பாக இராது இனனுமம வெமபியழியுமாறு விட்டுவிடுகின்றுய் என்றபடி.

உலகப்பற்றினை அடிகள் பற்றப் புகினும் இறைவன் அருளால் இவராற் பறறறகு அரியனவாய்ச் சேய்மைப்படுகின்றன. கொடிக்குக் கொழுகொம்பு இன்றியமையாதவாறே உலகப்பறறுக்களிலே வெறுப்புக்கொண்டு அவறறை அகறறிவருமு அடிகளுக்கும் இறைவனுடைய திருவடிப் பறறு இப்போது இன்றியமையாததொன்றுயிற்று.

**ஆனைவெம் போரில் குறுந்தூறு எனப்புல னல்அரிப்புண்**
**டேனைஎந் தாய்விட் டிடுதிகண் டாய்வினை யேன்மனத்துத்**
**தேனையும் பாலையும் கன்னலை யும்அமு தத்தையும்ஒத்து**
**ஊனையும் என்பினை யும்உருக் காநின்ற ஒண்மையனே. 21**

என்னுமிதனுல், எனக்குப் பல்லாற்றனும் இன்ப நுகர்ச்சியை உண்டுபண்ணியவனே, யான் இப்போது ஐம்புலன்களால் அரிக்கப்பட்டு அழிவு செய்யப்படுகின்றேன் அத்தகையேனை விட்டு விடுகின்றுய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) கொடுவினையேனுடைய மனத்தினுள்ளே முன்னர்த் தேனையும் பாலையும், பாகையும், அமுததததையும் ஒப்ப இனிமை செய்து, பின்னர் என் ஊனையும் எலும்புகளையும் உருகிப்போகுமாறு செய்யாநின்ற ஒண்மையுடையோனே, அப்பனே, யானைகள் புரியும் வெவ்விய போர்க்களத்தில் அவற்றின்

கால்களுக்கிடையில் அகப்பட்டழியும் சிறு செடிபோல ஐம்புலன் களால் அரிக்கப்பட்டு அழிவுண்டேனை விட்டுவிடுகின்ருய் எ - று.

(வி - ரை.) ஒண்மை - அறிவு. தேன் பால் கன்னல் அமுது எனு மின்னவை இன்ப வுணர்ச்சிச் சிறப்புக்களைக் குறித்து நின்றன. அவனது பிரிவால் ஊனும் என்பும் உருகலாயின என்க.

தூறு - செடி. ஐம்புலன்கள் வெவ்வேருய் மனதை இழுத்தல், யானை வெம்போருடன் உவமிக்கப்பட்டது. மனம் செடிபோலச் சிதறுண்டது. இறைவன் பற்றைவிட்டு ஐம்புலன்களில் ஈடுபட்டமையால், பற்றுக் கோடாகிய மனம் அரிப்புண்டமையைத் தம்மேலேற்றி மொழிந்தார்; பயனடைதற்குரியார் அவராகலின்.

இறைவனுடைய திருவடியாகிய பெருங்கொம்பின் பற்றைவிட்ட மனமாகிய செடி புலனுகிய யானைப்போரால் அலைப்புண்டு அழிந்த தாகக் கொள்க. புலனுகிய ஐம்பெரும் யானைகள் ஒன்றினென்று முற்பட்டுத் தம் வழிச்செல்லுமாறு தூண்டலின் "ஆனை வெம்போரெ"ன அடிகள் கூறினர். கண்கள் காணற்கு விரையவும் கைகள் பரிசிக்க முற்படவும் செவிகள் இன்சொற் கேட்க விழையவும் இன்னவாறே பிற பிறவாறு செல்லவும் அவற்றின் போருக்காற்ருது மனம் நலிந்ததென்க. அந்நலிவையே உய்தியாகக் கருதித் தமக்குத் தேனும் பாலும் பிறவுமாகத் தித்திக்கும் இறைவன் கழலை மறந்திருந்த அடிகள் தமது மடமைக்கு இரங்கினுரென விரித்துரைக்க. புலனுல் வருத்தப்பட்டு நேர்ந்த தீங்கினை யானை அடிப்பட்டு நேர்ந்த தீங்கிற்கும் இறைவன் கழலால் வரும் இனிமையைக் கொம்பு பெற்ற செடிக்கு வரும் நன்மைக்கும் ஏற்ப உரைத்துக் கொள்க.

தேன், பால் முதலிய சொற்களால் செவிக்கு இனிமையும் அப்பொருள் களால் பிற புலன்களுக்கு இனிமையும் கொள்க.

ஒண்மையை னேதிரு நீற்றைஉத் தூளித்து ஒளிமிளிரும்
வெண்மைய னேவிட் டிடுதிகண் டாய்மெய் யடியவர்கட்கு
அண்மைய னேஎன்றும் சேயாய் பிறர்க்குஅறி தற்குஅரிதாம்
பெண்மைய னேதொன்மை ஆண்மைய னேஅலிப்
பெற்றியனே. 22

என்னுமிதனுல், நீ அறிதற்கரிய தன்மையும், அறிவும், உண்மை யும் பிறவும் உடையையாக இருந்தும், யான் அவ்வரியனவற்றை உணரவில்லை என்பதற்காக மற்றவற்றை உணர்த்தாதே விட்டு விடுகின்ருய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) இயற்கையழகுடையானே, திருநீற்றைப் பரவப் பூசிக்கொண்டு ஒளிவீசும் வெண்ணிறமுடையானே, மெய்யடியவர் களுக்கு அண்மையில் இருப்போனே, பிறருக்கு எஞ்ஞான்றும்

தாரமானவனே, அவர்க்கு அறிதற்கரிய தொன்மை வாய்ந்த பெண்மையுடையவனே, ஆண்மையுடையவனே, அலித்தன்மை யுடையவனே, என்னை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) "வெண்மை" என்றது ஈண்டுப் புனிதமுடைமையை யுணர்த்தி நின்றது. அதனால் மெய்யறிவும் பெறப்படடதாகலின், "ஒண்மையன்" என்றதற்கு இயற்கையழகுடையோன் எனப் பொருள் கொண்டனம்.

"ஆண்மை, பெண்மை, அலி" என்றவற்றுற்கு,

"ஆண்எனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென ஒளித்தும்" (திருவண்டப். 134, 135.)

என்ற அடிகட்கு உரைத்த உரையை நோக்கி உரைக்க. சத்தி தத்துவத்தி னின்று சதாசிவ தத்துவம் தோன்றலின் "தொன்மைப் பெண்மையன்" என்றும், அவனிடத்தினின்று எல்லாம் முகிழ்த்தலின் "ஆண்மையன்" என்றும், அவ்விரண்டும் ஒன்றெனப்பட்ட சிவசத்தி தத்துவநிலை நோக்கி "அலிப்பெற்றியன்" என்றும் கூறினர் என்பாருமுளர். தெய்வம் புருட வடிவினதாகலின் "தொன்மை யாண்மையன்" எனவுருமாம்.

இத்திருப்பாட்டால் இறைவனின் மிக்க அருமைப்பாடு கூறினர், தாம் பிறரைப்போல இருப்பவரல்லராகலின, அவ்வருமையைத் தம்பாலும் உபயோகிக்காது, அவற்றையுணர்த்தி அணைத்துக்கொள்வதன்றி விட்டு விடுதல் அடாதென்றபடி.

அன்பர் சேய்மைப்படுந்தோறும் தானும் அவர்பால் அணிமைப்பட்டு வருதலும் அறிவாற்றல்களாற் காண முயல்வார் தன்பால் அணுகுந்தோறும் தானும் அவர்க்குச் சேய்மைப்பட்டு வருதலும் இறைவறகு இயல்பாகு மென்க.

**பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்குமன்பின்**
**வெற்றடி யேனை விடுதிகண் டாய்விடி லோகெடுவேன்**
**மற்றுஅடி யேன்தன்னைத் தாங்குநர் இல்லைஎன் வாழ்முதலே**
**உற்றுஅடி யேன்மிகத் தேறிநின் றேன்எனக்கு உள்ளவனே 23**

பிழை மலிந்த யான், நீயேயன்றி எனக்கு வேருக அயல் ஒன்றும் இல்லை என்பதையும், நின்னால் விடப்பட்டால் கெடுவேன் என்பதையும் பிறவற்றையும் நன்ருகத் தெளிந்துணர்ந்து விட்டேன் ஆதலால் என்னை விட்டுவிடாதே என்பது கூறப்

(பொ - ரை ) என் வாழ்வின் அடிப்படையே, எனக்காக உள்ளவனே, நின்பாற் பெற்ற அறிவுரைகளை ஏற்றுக்கொண்டு பிழைகளையே அதிகமாகச் செய்து அன்பைக் குறைத்துக் கொண்டே வருகின்ற வெறுவிதாகிய அடிமைத் தொழில்

பூண்டேனை விட்டுவிடுகின்றாய் அங்ஙனம் விட்டுவிடுவையேல் யான் கெட்டுவிடுவேன். அடியேனைத் தாங்கிக்கொள்வார் பிறர் ஒருவருமிலர். அடியேன் இவற்றை நன்றாகத் தெளிந்து கொண்டேன் எ - று.

(வி - ரை.) பிழையை நீக்கித் திருத்தத்தை ஆக்கிக்கொள்வதற்கு இடமாக நின்பாற் பெறறுக்கொண்ட அறிவுரை என்க. "பெற்றது" என்றதற்கு உடம்பு எனப் பொருள் கொள்ளின் உடம்பின் இயல்பு அன்னது ஆகலான் அது பிழையைப் பெருக்கி வருவதும் அதனால் அன்பு சுருங்குவதும் வியப்பாகா என்க. அருளைப் பெற்றுப் பிழை பெருக்கு வதும் அன்பிற் சுருங்குவதுமே வியப்பாகும் என்க.

"வெள்ளத்துள் நாவற்றி யாங்குன் அருள்பெற்றுத் துன்பத்தின்றும் விள்ளக் கிலேனை" (நீத்தல். 14)

என முன்னர்க் கூறியருளியதும் இக்கருத்தினை வலியுறுத்துவதாகும்.

பெற்றவற்றை வைத்துக்கொண்டு மற்றவற்றை உபயோகிக்க வேண்டிய முறைகளை அறியாமல், அவற்றின் மூலமாகவே பிழை பெருக்கி என்க. அங்ஙனம் பிழை மலியுந்தோறும் செருக்குப் பெருகி அன்பு சுருங்குதல் இயல்பாமென்க. அன்பு சுருங்கிய அடிமை "வெற்றடிமை" எனத் தொடுத்து மொழிந்தார்

"விடுதி கண்டாய் விடிலோ கெடுவேன்" என்றலானே இன்னும் தொடர்புண்மை பெற்றாம். முற்றாக நீங்கவில்லை. ஆதலாலன்றே இந் நிலையில் இவ்விண்ணப்பம் உதிக்கலாயிற்று.

என்னயலே உள்ள யாவும் துறந்து எனக்கென வைத்துக் கொண்டிருக் கும் ஒரே ஒருபொருள் நீ ஒருவனே என்பார் "எனக்குள்ளவனே" என்றார்.

என் பிழைகளையும், அவற்றால் நின் நீத்தலையும், நீத்தவிடத்துக் கெடுதலையும், நின்னிற் பிறர் இன்மையையும் யான் நன்கு தேறிவிட்டேன். ஆதலால் இனி என்னை விட்டிடாதே என்றபடி.

எனக்கு உள்ளவன் - எனக்கென உள்ளவன். இதனால் தமக்கு ஒரு தனி உரிமை பாராட்டிக்கொண்டார். 'என்னைத் தாங்குநர் இல்லை' என்பது முன்னர்ப் பதினைருவது திருப்பாட்டிலுங் கூறப்பட்டது.

**உள்ளன வேநிற்க இல்லன செய்யும்மை யல்துழனி**
**வெள்ளன் அலேனை விடுதிகண் டாய்வியன் மாத்தடக்கைப்**
**பொள்ளநல் வேழத்து உரியாய் புலன்நின்கட் போதலொட்டா**
**மெள்ளென வேமொய்க்கும் நெய்க்குடந் தன்னை**
**எறும்பெனவே. 24**

என்னுமிதனால், புலன்களின்பால் இழுக்கப்பட்டும், பொய்யான

வற்றைச் செய்துகொண்டும், வெற்றுரவாரம் செய்து கொண்டும் வரும் அறிவிலியை விட்டுவிடுகின்றுய என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) மிகப் பெரிய வளைந்த உள்தொளை பொருந்திய மிக அகன்ற கையையுடைய கயாசுரனுகிய யானையின் நல்ல தோலுடையாய், நன்மை பயத்தற்குரிய உண்மையான செயல்கள் இருப்ப அவற்றை விடுத்து, தீமை பயக்கும் பொய்யான செயல் களையே செய்துவரும் மயக்கத்தையும் வெற்றுரவாரத்தையும் உடைய , கள்வனே விட்டுவிடுகின்றுய் புலன்கள் நின்பால் என்னைப் புகுதவிடாது தடையாகின்றன அதனுல் (நெய்யை நுகரப் பெருதே) குடத்தினை மெள்ள மொய்க்கும் எறும்பு போல வருந்தா நின்றேன் எ - று.

(வி - ரை.) புலன்களின் ஒறுத்தலைத் தாங்கமாட்டாராய், அதனை நீக்கவல்லவனுயிருந்தும் வாளாவிருக்கும் இறைவனை " வேழத்துரியாய் " என்றழைத்தார்.

வெள்ளன் - தூயவன். அல்லாதவன் கள்வன் என்க துழனி - ஒலி ; பித்துற்றுப் பிதற்றும் ஒலி. நெய்யிற் பித்துற்று மொய்க்கும் எறும் பென்ன யானும் நின்னிற் பித்துற்று முயன்று வருவேன். எறும்பு நெய்யினைப் பெறமாட்டாது குடத்தினைப் பெற்றவாறே யானும் நின்னைப் பெறமாட்டேனுய் ஐம்புலன்களைப் பெறறேன். நெய்க்குத் தடையாகக் குடம் நின்றவாறே நின்னைப் பெற்றுக்கொள்ளுதற்குத் தடையாகப் புலன்கள் இடை நின்றன. நெய்க்குடத்தைத் திறநது நெய்யைப் பெறறு நுகர்தற்குரியோர் மக்களாதல்போலப் பேரன்பரால் புலன்களுக்குள்ளே திறக்கும் வழியறிந்து திறந்து நீ நுகரப்படுவாய் எறும்பு போன்ற என்னனையார் இங்ஙனமே புறஞ்சூழ்ந்து உழலவேண்டும் என்றுங்குப் பொருளை உவமஞெடு ஏற்குமாறு அறிந்து விரிக்க.

இங்ஙனம் பொருளையும் உவமத்தினையும் பொருந்த விரியாது, 'என்னை நெய்க்குடத்தை எறும்பு மொய்ப்பது போலப் பையப்பைய உன் பாற் செல்ல வொட்டாமல் தடுப்பதற்காகப் புலன்கள் நெருங்கிச் சூழ் கின்றன' வென உரைப்பாரும் உளர்.

ஐம்புலன்களைக் குடமாகக் கொண்டால் அதனகத்து நெய்யினை அக் குடம் விரும்பாது அதனை நுகரவரும் எறும்பினைத் தடுக்கவல்லது. இயலாத எறும்பு புறம்போகாது அதனையே மெள்ள மொய்த்துக்கொண் டிருக்கும். அங்ஙனமே புலன்களைப்பற்றி நுகரும் உயிரும் உலகப் பற்றிலுஞ் சிறிது நுகர்ந்து இன்புறும். அவ்வின்பமே சிற்றின்பம் எனப் படும். சிற்றின்பத்தை நுகர்வது எறும்பு நெய்க்குடத்துப் புறத்தில் மெள்ளெனவே நுகரும் நுகர்ச்சி போலும். அந்நுகர்ச்சியை வெறுத்து நெய்க்குடத்தின் கட்டவிழ்த்து நுகர்தற்கு ஒருவன் விழைந்தாங்கு

அடிகளும் இறைவனைப் புலன்களின் கட்டவிழ்த்து நுகர்தற்கு விரும்பினர் என்க.

" வேழம் " என்றது ாண்டுக் கயமுகாசுரனை ஆதலால் ாண்டு அதனை அடுத்து வந்த " நல் " என்றது தீமை மிகுதியைச் சுட்டி நின்றது.

'நல்லரா' (புறநா. 309.)

என்பதும்

'நாமநல்லரா' (அகநா. 72.)

என்பதும் போல.

வருந்தா நின்றேன் என வினை வருவித்தேனும் " எறும்பெனவே உள்ளனவே நிற்க......விடுதிகண்டாய் " எனக் கூட்டியேனும் முடித்துப் பொருளுரைக்க.

**எறும்பிடை நாங்கூழ் எனப்புல னால்அரிப் புண்டுஅலந்த**
**வெறுந்தமி யேனை விடுதிகண் டாய்வெய்ய கூற்றொடுங்க**
**உறுங்கடிப் போதவை யேஉணர் வுற்றவர் உம்பரும்பர்**
**பெறும்பத மேஅடி யார்பெய ராத பெருமையனே. 25**

என்னுமிதனால், நின்னையடைந்த அடியார் பிறிதொன்றன்பாற் பெயர்ந்து படராத பெருமையையுடையனாகி நீ இருந்தும் யான் புலன்களின்பாற் படருமாறு விட்டுவிடுகின்றாய் என்பது கூறப் படுகிறது.

(பொ - ரை.) வெய்யோனாகிய இயமன் ஒடுங்குமாறு அவனை உறுத்தியடக்கும் விளக்கத்தையுடைய திருவடி மலர்களையே உணர்ந்திருக்கப் பெற்றவர்கள் மிக மேலானதாகப் பெற்றுக் கொள்ளும் பதமாக அமைவோனே, அடைந்த அடியார்கள் பெயர்ந்து நீங்காத பெருமையுடையோனே, எறும்புக் கூட்டத்துள் அகப்பட்ட நாங்கூழ்போலப் புலன்களினுள் அகப்பட்டு அரிக்கப் பட்டுச் சுழன்ற, ஒன்றற்கும் உதவாத தமியேனை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) உறும் - வருத்தும். கடி - விளக்கம். போது, திருவடிக் கானது. அவன் எளிவந்தமை யுன்னிச் செருக்குக்கொண்டு, இவன் நமக்கு எளிவந்தானாகலின், நாமே இவற்கு அருமையுடையேம். அதனால் நாம் எதனைச் செய்யினும் இவன் நம்மைவிட்டகலான் என எண்ணி மாறு படாது, அவன்பால் அச்சமுடையராய் ஒழுகினர் பெரும்பதம் பெறுவர் என்பார்,

" ...........வெய்யகூற் றொடுங்க
உறுங்கடிப் போதவையே உணர்வுற்றவர் உம்பர் உம்பர்
பெறும்பதமே........... "

என்றார். இன்னும், யான் அவர்போலாது விருந்தினன் ஆகலின் செருக்

குற்றேன். ஆதலால் கூற்றை ஒறுத்து அவனுக்கு நல்லுணர்வை வருவித் தாங்கு என்னையும் ஒறுத்து நல்லுணர்வு நல்கிடுயல்லை என்பது குறிப்பு. உம்பர் - மேலிடம். உம்பர் உம்பர் - மிகமேலான இடம்

ஒருமுறை அணைந்த அடியார் மீண்டும் புலன்களிலே பெயர்ந்து படராமைக்குக் காரணமாகிய பெரியோன் என்றவாறு. தம்பால் அப் பெருமை பயன்படாமை குறித்தவாறு. நாங்கூழ் - நாக்குப்பூச்சி.

முன்னர்த் திருப்பாட்டிலே எறும்பினை உயிராகக் கூறியவர் இத்திருப் பாட்டிலே எறும்பினைப் புலன்களோடு ஒப்புக்கூறியருளினர். இவ்வேறு பாடு நுனித்துணர்ந்து கொள்க.

பெருநீர் அறச்சிறு மீன்துவண் டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர்மை யேனை விடுதிகண் டாய்வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுள் மலைச்சிறு தோணி வடிவின்வெள்ளைக்
குருநீர் மதிபொதி யுஞ்சடை வானக் கொழுமணியே. 26

என்னுமிதனுல், நின்னையின்றி உய்வடைய இயலாது அஞ்சுகின்ற என்னை விட்டுவிடுகின்றுய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) பெரிய கங்கை வெள்ளம் பொங்கி வந்து பாயும் நீர்நிறைந்த மடுவுள்ளே, மலையினதும் சிறு தோணியினதும் வடிவினை ஒப்ப வெண்ணிறமும் பெருநீர்மையும் உடையனவாய சந்திரனையும் அதனை முடித்த சடையையும் உடைய ஞானவா னிடத்துறையும் வளமிக்க மாணிக்க மணியே, பெரிய நீர்நிலைக் கண்ணுள்ள தண்ணீர் வற்றிப்போகச் சிறியனவாய மீன்கள் துடித்து வாடிக்கிடந்தாற்போல நின்னைப் பிரிந்ததனுல் அஞ்சும் தன்மையுடையேனை விட்டுவிடுகின்றுய் எ - று.

(வி - ரை.) "மடு" என்றது, ஆகாய கங்கை வந்து தங்கிய அவன் திருமுடியை என்க. "மலை" என்றது, தூக்கி முடித்த சடையை ; குடுமி என்க. அவன் திருமுடியாகிய மடுவினுள்ளே, குடுமியாகிய மலையும், அதன்மேல் மதியாகிய தோணியும் விளங்கலாயின என்க. சிரசின்மேல் முடித்த சடையும் அச்சடையின்மேல் விளங்கிய மதியும், ஒரு பெரிய மடுவுள் மலையையும், அம்மலைக்கப்பால் நெடுந்தொலைவில் வரும் தோணியையும் ஒத்திருந்தனவாகக் கூறிய உவமை நயம் பாராட்டற் குரியது. "வெள்ளைமதி", "குருநீர்ச்சடை" என்று கொள்க. செருக்குற்ற கங்கையை அடக்கியும், ஆருமற்ற மதியை அளிசெய்தும் நீர்மையுடையன வாக்கிச் சடையின்மேல் ஒப்பத் தரித்தாங்கே, செருக்குற்ற என்னையும் அடக்கியாண்டு, முன் அளி செய்து ஆண்டு கூட்டிய அடியாரொடும் ஒப்ப அணைத்துக் கொள்ள வேண்டுமென்பது குறிப்பு.

அக்கங்கையும் திங்களும் அணிந்த வரலாருகிய ஆற்றினுட்பட்ட பொருளாகிய கொழுமணி யென்க.

வெருவுநீர்மை என்றது "வெருநீர்மை" என நின்றது. மீனுக்கு நீர் இன்றியமையாதவாறே எனக்கு நின்னருளும் இன்றியமையாததென்க.

மலை என்பதற்கு மலைதல், எதிர்த்தல் எனப் பொருள்கொள்வாரும் உளர். அங்ஙனங் கொண்டாரேனும் 'எதிர்த்து நிற்கும்' என வினைத் தொகையாகவே கொண்டு இடர்ப்பட்டுப் பொருள் விரித்தாராதலின் அவர்க்கே அது கருத்தன்றென்க.

கொழுமணி ஏர்நகை யார்கொங்கைக்
குன்றிடைச் சென்றுகுன் றி
விழும்அடி யேனை விடுதிகண் டாய்
மெய்ம்முழு துங்கம்பித் து
அழும்அடி யாரிடை ஆர்த்துவைத் து
ஆட்கொண்டு அருளி என்னைக்
கழுமணி யேஇன்னும் காட்டுகண்
டாய்நின் புலன்கழலே. 27

என்னுமிதனால், முன்பு உன்னையே நினைந்து அழுது நின்னைப் பெற்ற அடியாருடன் கூட்டி என்னைத் தூயனாக்கி ஆண்டுகொண்ட நீ, பின்பு யான் மங்கையர்பால் ஈடுபடுமாறு விட்டுவிடுகின்றாய். அங்ஙனம் விடாமல் பண்டுபோலவே இன்னமும் ஆட்கொள்க என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) உடலின் எப்பகுதியும் நடுங்கப் பெற்று அழுகின்ற அடியார் நடுவுள் என்னைப் பிணித்து வைத்து ஆண்டுகொண்டருளித் தூய்மை யுறுமாறு அருள்பெய்து கழுவிய மணியே, செழித்த முத்தின் அழகினை ஒத்த பல்வரிசைகளையுடைய மங்கையர் கொங்கைகளாகிய மலையின்மேல் சென்று மனமொடுங்கி விழுகின்றேனை விட்டுவிடுகின்றாய் அங்ஙனம் விட்டுவிடாமல் மேலும் நின் அறிவூட்டும் திருவடிகளைக் காட்டுவாயாக எ - று.

(வி - ரை ) பேரன்புடையார் ஆதலின் "மெய்ம்முழுதும் கம்பித்து அழுமடியார்" என்றார். 'கழுவிய மணியே' என்க.

கொழுமை - செழிப்பு. மணி - முத்து. அவர் நகையாலும் கொங்கைகளின் பருமையாலும மனமொடுங்கி என்க. குன்றுதல் - மனம் ஒடுங்குதல். விழுதலை அல்குலுக்கேற்றி உரைக்க.

அடியார்பாற் பிணித்து ஆண்டமையால் பிற நிகழ்ச்சிகளில் ஈடுபடுதல் இல்லாமே கழிந்தது. தானும் பிரிந்து அடியார்களையும் ஒடுக்கிக் கொண்டமையால், தனித்திருந்து மங்கையர்பால் ஈடுபடலானேன் என்றபடி.

இன்னமும் ஆங்கே அழுமடியாரிடை ஆர்த்துவைத்து நின்கழல் களைக் காட்டுக என்றவாறு. புலன - அறிவு.

சூரிய காநதம் அழல்நீரையும் சந்திரகாந்தம் தண்ணீரையும் பொழியும் என்ப. அங்ஙனமே இக்கழூஉ மணியும் அருள்நீரைப் பொழியும் என்க. அவ்வருள் நீரால் இறைவன் உயிரிற் படிந்த மலங்களைக் கழுவித் தூய்மை செய்தருள்வான் என்க.

புலன்கள் திகைப்பிக்க யானும்
திகைத்திங்கோர் பொய்ந்நெறிக்கே
விலங்கு கின்றேனை விடுதிகண்
டாய்விண்ணும் மண்ணும் எல்லாம்
கலங்கமுந் நீர்நஞ்சு அமுதுசெய்
தாய் கரு ணாகரனே
துலங்குகின் றேன்அடி யேன்உடை
யாய்என் தொழுகுலமே. 28

என்னுமிதனுல், தீயனவற்றை விலக்கி உயிர்க்குறுதி செய்யும் நீ, என்பால் காணப்பட்ட தீமையை விலக்காமையால், யான் பொய் பட்டேன். அதனுல் என்னை விடுகின்ருய் என்பது கூறப்படு கின்றது.

(பொ - ரை ) விண்ணுலகமும் மண்ணுலகமுமாய எல்லா வுலகங்களும் தத்தம் நிலைகுலைய, கடற்கண் எழுந்த நஞ்சினை அமுது செய்தோனே, கருணுகரனே, என்னை உடையவனே, யான் வணங்குங் கோவிலானவனே, புலன்கள் மயக்கமுறுத்த யானும் மயக்கமுற்று இவ்வுலகில் பொய்வழியிலேயே விலகிச் செல் கின்றேன். அதனுல் என்னை விட்டுவிடுகின்ருய். அவ்விடுகையினுல் அடியேன் நடுங்குகின்றேன் எ - று.

(வி - ரை.) ‘ விண்ணும் மண்ணும் கலங்கியபோது பெருங் கருணையை மேற்கொண்டு நஞ்சை உண்டவனே ’ என்க. அங்ஙனமுண்ட “ கருணுகரனே ” என்க.

கடிகாரம் பொழுதினை மாறிக் காட்டினும் ஒருவகைக் குறிப்பால் இது பொய்பொழுது என்ருங்கு அறிந்துகொள்ளுமாறே அடிகளும் புலன் காட்டு நெறி மெய்ந்நெறியாகாது பொய்நநெறியாகும் என உணர்ந்து கொண்டருளினர்.

“ தொழுகுலம் ” என்றது அந்தணர் குலமும் ஆகும். இறைவன் அந்தணனுக வந்தமையால் அக்குலம யாவராலும் தொழற்குரிய குல மாயிறறு “ தொழுகுலம ” என்பதற்குக் குலதெய்வம் எனச் சார்புப் பொருள் கொள்ளலுஞ் சாலும்.

கோவில் இறைவன் திருவுருவே யாதலின் "தொழுகுலம்" என்றாரென்க.

முந்நீர் - மூன்றுநீர், ஆறுநீர் மழைநீர் ஊற்று நீரென்க. இவற்றை உடைமையாற் கடல முந்நீரெனப்பட்டது

குலம்களைந் தாய்களைந் தாய்என்னைக்
குற்றம் கொற்றச்சிலையாம்
விலங்கல்எந் தாய்விட் டிடுதிகண்
டாய்பொன்னின் மின்னுகொன்றை
அலங்கல்அந் தாமரை மேனிஅப்
பாஒப்பு இலாதவனே
மலங்கள்ஐந் தால்சுழல் வன்தயி
ரில்பொரு மத்துறவே 29

என்னுமிதனால், நீ என்பாற் களையவேண்டிய எல்லாக் குற்றங்களையும் களைந்தாய் அங்ஙனமாகவும் யான் ஐம்புலன்களால் சுழற்றப்படுகின்றேன். அத்தகையேனை விட்டுவிடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது

(பொ - ரை ) வெற்றி தரும் வில்லாகிய மேருமலையையுடைய எம்மப்பனே, பொன்னினும் ஒளி விளங்கும் கொன்றைத்தார் அணிந்த, அழகிய தாமரை மலர்போலும் செம்மேனியுடையவனே, நிகர் ஒருவருமில்லாதவனே, என் குலப்பற்றை நீக்கினாய்; என் பிற குற்றங்களையும நீக்கினாய் அங்ஙனமாகவும் மத்தால் இடையுறப்பட்டுக் கடையப்படுதலால் சுழல்வுறுந் தயிரைப்போல யானும் ஐம்புலன்களாற் சுழற்றப்படுகின்றேன். அங்ஙனமாக நீ என்னை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) "கொன்றையலங்கல்" என்றமையால் அது சிறப்புக் கருதி யணியும் தாராகவும் அழுக்கு அணியும் மாலையாகவும் போர்க்கு அணியுங் கண்ணியாகவும் கொள்ளப்படும். "கொற்றச்சிலையாம் விலங்கல் எந்தாய்" என்றமையால் போர்க்குரிய கண்ணியாகவும் கொள்ளப்படும்.

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மிலைந்த கண்ணியன்" (அகநா. கட. 1. 2.)

என்னும் பகுதியுரை பார்க்க. ஏனைய அடியார்களைத் திருவடிக்கு மாலையாகச் சூட்டிக்கொண்டாய். என்னை அப்படிச் செய்யாது வஞ்சித்தாய். (திருக் 400. 'தாரணி கொன்றையன்' என்னும் பகுதி நோக்குக )

"அயந்திகழ்.........தெரியலான்" (கலி. நெய். 33, 1.)

என்பதன் உரையையும் நோக்குக.

மறநெறி பற்றிக் குற்றங் களைதலினும் அறநெறிபற்றி உயிர்க்கு அருளுதலினும் "ஒப்பு இலாத தலைவன்" என்றபடி.

"குலம்" ஒரு கோத்திரத்து நின்றும் பிரிந்து தலைமைப்பட்ட சான்றோரைத் தலைவராகக் கொண்டு மதிக்கப்படுவதாகும்.

" சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாடகொண்டு
பேதைகுணம் பிறர்உருவம் யார்எனதென் றுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலவுதில்லைக் கண்டேனே" (கண்டபத். 5)

என மேற்கூறுதலால், குலமாகிய குற்றத்தையும் பிறகுற்றங்களையும் களைந்தாய் என நேரே பொருள்கொள்ளுதலே அடிகட்குக் கருத்தாகுமென்க.

தயிரில் வெண்ணெய் பெறும் பொருட்டு மத்தினைச் சுழற்றுதல்போல, இன்பம் பெறும்பொருட்டு ஐம்புலன்கள் என்னைச் சுழற்றலாயின என்க. இனி, 'தயிர் சுழற்சி யடைதல்'போல எனக் கொள்வாருமுளர்.

எல்லாக் குற்றங்களையும் போக்கினுயாகவும், அவை மீண்டும் என்பால் வந்து சுழற்றலாயின. அதுகண்டு விடுகின்ருய் என்றவாறு. இனி எல்லாக் குற்றமும் போக்கிப் பிரிந்தாய். அதனால் போன குற்றங்கள் மீளலாயின என்று உரைப்பினுமாம்.

'இன்றும் தனக்குவமை இல்லானடி சார்ந்தேன்; அவனும் ஆட்கொண்டான்; எனக்கு மனக்கவலை என்பதுவே கிடையாது. எனினும் மலங்கள் ஐந்தாற் சுழல்வன்; ஈதென்ன வியப்பு!' என்று கருதியருளியதாகவும் கொள்க.

**மத்துறு தண்தயி ரில்புலன் தீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண் டாய்வெண் தலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து குடர்நெடு மாலைசுற்றித்
தத்துறு நீறுடன் ஆரச்செஞ் சாந்துஅணி சச்சையனே. 30**

எ அறக்கருணையாலேனும் மறக்கருணையாலேனும் ஏற்றபெற்றி என்னைப் புனிதப்படுத்த வல்ல நீ, யான் புலன்களினால் அலைக்கப்பட்டுக் கலங்கித் தவிக்குமாறு விட்டுவிடுகின்ருய் என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை.) வெள்ளிய தலையோடுகளை அணிந்து, கொன்றைப்பூங் கொத்துக்களைச் சூடிய குடராகிய தோள்மாலையைக் கழுத்தைச் சுற்றி யணிந்து, பரக்கப் பூசப்பெற்ற திருநீற்றுடன் செவ்விய சந்தனச் சாந்தினையும் அணிந்துகொள்கின்ற நறுமணக் கலவையுடையோனே, மத்தினலே கலக்கப்படுகின்ற தண்ணிய தயிரே போல ஐம்புலத் தீயானது பற்றிச் சூழ்ந்துகொள்ளக் கலக்கமடைந்து சிதறுண்டு போவேனை விட்டுவிடுகின்ருய் எ - று.

(வி - ரை.) வெண்டலை - இறந்துபோன திருமால் பிரமன் முதலியோருடைய தலைகள், தாருகாவனத்து முனிவர்களால் விடப்பட்ட தலையுமாம். தத்துதல் - பரவுதல். சசசையன் - சந்தனம், குங்குமம் முதலிய குழம்புகளைப் பூசிக்கொள்வோன். 'சர்ச்சை' என்பது இப்பொருட்டாதலை அமரகோசம் இரண்டாவது விம்பம் 381-ஆவது சுலோகத்தாலும் தெளியப்படும். இனி அதற்கு 'ஆராய்ச்சி' எனவும பொருளுண்டு. அது

"சச்சை மறையின் பொருளென்னும்" (வியாசபார. இராச. 114.)

என்பதனுலுணரப்படும் எனவே "சச்சையன்" என்றதற்கு வேதத்தாலும் அறிஞராலும் ஆராயப்பட்டவன் எனப் பொருள் கொள்ளலுமொன்று. அப்பொருளை அடுத்த பாடலிற கொண்டுரைக்க. சச்சையனைச் சிறப்பித்து வந்த அடைகளால், அவன் அறக்கருணையும், மறக்கருணையும் புலப்படுமென்க.

"மத்துறு தண்தயிர்" கலங்குமளவே பொருளிற்கும் கொள்க. "புலன் தீ" என்பதனைத் 'தீப்புலன்' என மாற்றித் தீயனவாகிய புலன்கள் எனப் பொருள் கூறுவாருமுளர். வித்துறுதல் - விதைக்கப்படுதல். ாண்டு விதைக்கப்படு பொருள் சிதறுண்டுபோமளவே கொள்க மத்துறு கட்டித் தயிர் உடைந்து நீரத் திவிலைகளாகச் சிதறுண்டு போதல்போல யானும் புலன்களினுலே சிதறடிக்கப்படுகின்றேன் என்றவாறு. இனி, "வித்துறுவேன்" என்பதற்கு, என் துன்பமெல்லாவற்றையும் நின் செவியினிடமாக விதைக்கின்றேன் என்றும், புலன் தீயால் கலங்கிய கலக்கத்தினிடமாக விதைக்கப் பெற்று வேர் வீழ்த்துகின்ற விதைபோல்வேன் என்றும் பொருள்கூறுவாருமுளர். ஆரம் - சந்தனம்.

**சச்சைய னேமிக்க தண்புனல் விண்கால் நிலம்நெருப்பாம்**
**விச்சைய னேவிட் டிடுதிகண் டாய்வெளி யாய்கரியாய்**
**பச்சைய் னேசெய்ய மேனிய னேஒண் படஅரவக்**
**கச்சைய னேகடந் தாய்தடந் தாளா அடற்கரியே. 31**

என்னுமிதனுல், ஐம்பெரும் பூதங்களும் அவற்றின் கூறுபாடுகளும் பொய்யாகவும், அவற்றினுல் ஆராய்ந்து மெய்யெனக் கொள்ளப்படும் நீ, அப்பொய்ப்பொருள்கள், தம்மினமாகிய பொய்யை நாடியவழி, நின் மெய்யினமாகிய என்னை விட்டுவிடுகின்ருய் என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை) அறிஞர்களால் ஆராய்ந்து கொள்ளப்பட்ட உண்மைப் பொருளானவனே, மிக்க குளிர்ந்த நீர், வெளி, காற்று, மண், நெருப்பென்னும் ஐம்பூதங்களாய மாயவடிவுடையானே, வெண்ணிறமுடையாய், கருநிற முடையாய், பச்சைநிற முடையாய், செந்திருமேனியுடையாய், ஒளிவீசும் படத்தினை விரிக்கும் பாம்பைக்

கச்சையாகக் கட்டியவனே, பெரிய அடிகளையுடைய வலி மிக்க யானை வடிவுடைய கயாசுரனை வெற்றிகொண்டவனே, என்னை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) வெளியாய் கரியாய் என்னும் இவற்றோடு புகையாய் என்பதனையும் ஏற்புழிக்கொண்டு 'நிறங்களோர் ஐந்துடையாய்' என்க. ஐம்பூதங்களுடன் ஏனைய மூன்றையுங் கூட்டி எட்டுருவுடையாய் என்க. எட்டுருவும் ஐந்நிறமுமாய அவறறொடும், கட்டப்பெற்ற அரவக்கச்சையு மாகிய இவற்றை "விச்சை"யால் உடையவனே என்க.

அவற்றைக்கொண்டு பொய்யுணர்ந்து அதன்மேல் மெய்யெனக் காணப்பட்டவனாகலின் "சச்சையன்" என்றார்.

சச்சையனாகவும் விச்சையனாகவும் இருப்பினும், அவ்விச்சைப் பொருள் களின் வேறாய்நின்று அவற்றை இயக்கும் தலைமைப்பாடு தோன்ற "அடற் கரியைக் கடந்த"மை கூறப்பட்டது. தாம் அங்ஙனம் விச்சைப்பொருள் களின் வேறாய் அவற்றைக் கடந்து, நில்லாது அவற்றிற்கு அடிமையாய்க் கிடந்தாரென்பதும், அதனால் அவன் விடுகின்றான் என்பதும் பெற வைத்தவாறாயிற்று. எவை எங்ஙனமாயினும் பொய் பொய்யை நாடிற்று ; மெய்யாகிய நீ மெய்யாகிய என்னை விட்டுவிடாதே என்பது குறிப்பாற் பெறவைத்தாரென்க.

எட்டுறுப்புக்களாலும் ஐவகை நிறங்களாலும் விச்சையனாகி மறைந் திருப்போன் சச்சையால் (தத்துவ ஆராய்ச்சியால்) வெளியாவான் என்க. இத்தத்துவ ஆராய்ச்சி அன்பின் வழியது என்க.

கயாசுரனைக் கொன்று முனிவர்களைக் காத்தவாறே ஐம்புலன்களையும் ஒடுக்கி என்னையும் காத்தருள்க.

அடற்கரி போல்ஐம் புலன்களுக்கு
 அஞ்சி அழிந்தஎன்னை
விடற்குஅரி யாய்விட் டிடுதி கண்டாய்
 விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்குஅரி யாய்சுடர் மாமணி
 யேசுடு தீச்சுழலக்
கடற்குஅரி தாய்எழு நஞ்சுஅமு
 தாக்கும் கறைக்கண்டனே. 32

என்னுமிதனால், யான் இதுகாறுங் கூறிய பல குற்றங்களைக் கண்டேனும், இன்னும் பலவற்றைக் கண்டேனும் என்னை விலக்கு தற்கரிய நீ புலன்களினால் அழிவு செய்யப்படும் என்னை விடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) மேன்மை தங்கிய அடியவர்களுக்கேயல்லாமல் பிறரால் பற்றப்படுதற்கரியவனே, சுடர்விட்டுப் பிரகாசிக்கும் பெரிய மாணிக்க மணியே, திருப்பாற்கடற்கண் அடக்குதற்கரிதாய், சுட்டழிக்கும் தீயானது சுழன்றடிக்க எழுந்த ஆலகால விஷத்தை அமுதுசெய்யும் நீல கண்டனே, வலியமைந்த யானையை ஒத்த ஐம்புலன்களின் மாட்டு அச்சமுற்று அழிவெய்தப் பெற்ற என்னை விட்டுவிடுதற்கு இயலாதவனே, அங்ஙனமாகவும் விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) "சுடுதீச்சுழல" என்றது நஞ்சின் வேகத்தை விசேடித்தது, பிரளயகாலாக்கினிபோன்ற நஞ்செனப் புராணங் கூறும். இனி அத்தீயை வடவைத்தீ எனக்கொண்டு நஞ்சின் வேகத்திற்குத் தன் வேகம் தண்ணீரை ஒப்பச் சுழற்சியடையுமாறு அத்துணைக் கடிய வேக முடைய நஞ்சென உரைத்தலுமாம். அங்ஙனமாயின் 'சுடுதீயும்' என உயர்வு சிறப்பும்மை விரிக்க.

கடற்கென்றது உருபுமயக்கம்; கடற்கண் என்க. 'அடக்குதற்கரி தாய்' என அவாய்நிலையாற் கொள்க.

ஐம்புலன்களால் அழிவெய்தப்பெற்ற குற்றத்துடன் முன்னும் பின்னும் வரும் எல்லாக் குற்றங்களையும் உடன்கூட்டிக்கொள்க. அத்துணைக் குற்றம் மலிந்தேனாயினும் நின்னால் என்னை விட்டுவிடுதல் இயலாது என்றபடி. எனினும் விடுகின்றாய்; எவ்வளவு காலம் விட்டு என்னைக் கெடவைத்தாலும், அக்கேடுகள் எல்லாவற்றையும் சீர்செய்து பின்னர் ஒருநாள் ஆண்டுகொள்வாய் என்பது திண்ணம். இதனால் நேரக்கூடியது என்னவென்றால், அவ்வளவு காலமும் யான் பெற்ற அளவிறந்த கேடுகளை யும் விலக்குதற்கு நீ அரும்பாடுபடவேண்டும் என்பதுதான். இன்று எனிலோ நின் முயற்சிகள் அதிகம் தேவையில்லை என்றபடி.

**கண்டது செய்து கருணைமட் டுப்பரு கிக்களித்து**
**மிண்டுகின் றேனை விடுதிகண் டாய்நின் விரைமலர்த்தாள்**
**பண்டுதந் தாற்போல் பணித்துப் பணிசெயக் கூவித்தென்னைக்**
**கொண்டு என்எந் தாய்களை யாய்களை யாய குதுகுதுப்பே. 33**

என்னுமிதனால், பண்டு என் செருக்கினை அடக்கி ஆண்ட வாறே, நின் அருள் பெற்றமையால் வந்த செருக்கினையும் இப்பொழுது அடக்கி ஆட்கொள்ளவேண்டிய நீ, அங்ஙனம் செய்யாது விடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) எனக்குரிய எங்கள் அப்பனே! நின்னுடைய மணம் பொருந்திய பூவையொத்த திருவடிகளைப் பழைய காலத்திலே எனக்குப் பணியக் கொடுத்ததுபோலவே இப்பொழுதும் கொடுத்து

அதனில் என்னைப் பணியச் செய்வித்து என்னை நின் தொழும்பினைச் செய்யக் கட்டளையிட்டு அழைப்பித்து அடிமைகொண்டு என் வளர்ச்சிக்குக் களை போன்றிருப்பதாகிய அவாவினைப் பிடுங்கி எறிவாய், அங்ஙனங் களைந்து நின் அருளாகிய நறவினைப் பருகி(த் தாங்கும் ஆற்றல் இல்லாமையால்) மயக்கமுற்றுப் புலப் பட்டதனையே (நன்று தீது எனத் தெளியாது) செய்து வாயாலும் இழிந்த சொற்களைச் சொல்லுகின்ற என்னை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) கண்டது செய்தலாவது, ஆராய்வின்றித் தோன்றிய வாறே செய்தல். அது கருணைமட்டுப் பருகிய வெறியால் போந்தது. மிண்டுதல் - இழிசொற் சொல்லுதல். பணித்தல் - கொடுத்தல்.

" திருவிரல் நெகிழ்த்து வாள் பணித்தான் " (தேவா. 685, 8.)

என்புழியும் அப்பொருட்டே. குதுகுதுப்பு - ஆசைப்படுதல். (பரி. 20. 13 அடி குறிப்பு.)

" வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன் "
(திருச்ச. 11.)

என்றாங்கு வரும் ஆவல் விரைவே குதுகுதுப்பென்க.

**குதுகுதுப்பு இன்றிநின்று என்குறிப் பேசெய்து நின்குறிப்பில்**
**விதுவிதுப் பேனை விடுதிகண் டாய்விரை யார்ந்துஇனிய**
**மதுமதுப் போன்றுஎன்னை வாழைப் பழத்தின் மனங்கனிவித்து**
**எதிர்வதுஎப் போது பயில்விக் கயிலைப் பரம்பரனே. 34**

என்னுமிதனால், என் பொறுப்பிலேயே செய்கைகள் எல்லாவற்றையும் செய்துவிட்டுப் பிழை கண்டபோது அவற்றை நின்மேலேற்றி மகிழுகின்ற என்னை விட்டுவிடுகின்றாய். இனிமேல் எதிர்ப்படுவதெப்போது என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) விசும்புற உயர்ந்த கயிலைக்கண்ணுள்ள மிக மேலானவனே, விரைவின்றி ஆலோசனை செய்துகொண்டு என்னுடைய குறிப்பின்படியே செய்கின்ற யாவற்றையும் செய்துவிட்டு, மற்றவற்றை நின்னுடைய குறிப்பின்படியே செய்தேன் எனச் சாதித்து மகிழ்ச்சியுறுவேனை விட்டுவிடுகின்றாய். இனி, என்னைக் கனிந்த வாழைப்பழத்தைப்போல மனங் கனியவைத்து, மணமும் நிரம்பி இனிமையும் பயக்கின்ற கள்ளின் தெளிவை ஒப்பத் தெளியவைத்து எதிர்ப்படுவது எந்நாளோ எ - று.

(வி - ரை.) விப்பயில் கயிலை எனக் கொண்டுரைக்க. வி - விசும்பு. (யாழ். அக.) இனி, "வி" என்பதற்கு மலர் எனப் பொருள்கொண்டு ' மலர் பொருந்தும் கயிலை ' என்று உரைப்பாரும், 'எப்போது பயில்வு இக்கயிலைப்

பரம்பரனே' எனக் கொண்டுரைப்பாருமுளர். அவற்றுற் பொருள் சிறவா தென்க. என்னை? முதல் இரண்டடிகளினும் போந்த ஏமாற்று முறையை அறிந்து, அதனுற் சலிப்படையாத அவன உயர்ச்சியை ஆகாயம் அளாவ உயர்நத அவனுறையும் கயிலைமலை விளக்கி நிற்றலின் என்க.

குதுகுதுப்பு - மிக விரைதல், தம்முடைய பொறுப்பிலேயே நன்ருகத் தீர யோசித்துச் செய்யவேண்டியனவற்றை எல்லாம் செய்து முடித்துவிட்டு, அச்செயல்களிலே பிழைகள் கண்டவிடத்து, அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமையும் எல்லாம் உன்பால் ஒப்படைத்துவிட்டேன். அதனுல் என் செயல் என்பதே இனிமேல் இல்லை. 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானே இதற்கு நாயகமே' என்ருங்கு நீதிவாயிலாக நிறுவிக் காடடினுர்போல "விதுவிதுத்தார்" என்க.

மதுமது - கள்ளின் தெளிவு. பருகுதற்கு நன்மை செய்யும் வண்ணம் கலப்பினுல் உண்டாய விரை என்க. கள்ளின் மயக்கத்தைத் தீர்ப்பது கட்டெளிவென்க. இதனை,

"மருந்தில் தீராது மணியினும் ஆகாது
அருந்தவ முயற்சியின் அகற்றலும அரிதே
தான் செய்நோய்க்குத் தான் மருநதாகிய
தேனிமிர் நறவின் தேறல்போல"

(தொல். பொ. கள. 1. இளம். மேற்.)

என்னும் சான்ருேர் பாட்டானும் உணர்க. கருணைமட்டுப் பருகிக் களித்து மிண்டுதல் தீர மதுமதுப் போன்று தெளியவைத்து அமைதியுறுத்த வேண்டுமென்றவாறு.

**பரம்பர னேநின் பழஅடி யாரொடும் என்படிறு**
**விரும்புஅர னேவிட் டிடுதிகண் டாய்மென் முயற்கறையின்**
**அரும்புஅர நேர்வைத்து அணிந்தாய் பிறவிஐ வாயரவம்**
**பொரும்பெரு மான்வினை யேன்மனம் அஞ்சிப் பொதும்புறவே. 35**

என்னுமிதனுல், என் தவறுகளை எண்ணுது ஆண்டுகொண்டு பின்னர் விடுகின்றமையால், யான் ஐம்புலன்களுக்கு அஞ்சிப் பணிந்து ஒழுகலாயினேன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) மெல்லிய முயற்கறை பொருந்திய அரும்பு போன்ற சந்திரனையும் பாம்பினையும் நண்புற வைத்து அணிந்து கொண்டவனே, மிக மேலானவனே, நினனுடைய பழமைத்தாகிய பயிற்சிப் பண்புடைய அடியவர்களோடும் என்னுடைய வஞ்சனை யையும் விரும்பி ஏற்றுக்கொண்ட அரனே, என்னை இப்போது விட்டுவிடுகின்ருய் பெருமைப் பண்புடையவனே,

தீவினையேனுடைய பிறவிக்குக் காரணமாகி அவாவுக்கு வித்தாகும் புலன்களாகிய ஐந்து வாயையுடைய பாம்பு மனமானது அச்ச மேலிட்டு அந்நாகத்துக்குப் பொந்தாகுமாறு போர் செய்யா நிற்கும் எ - று

(வி - ரை.) என் படிறு என்றமைக் கேற்பப் பழவடியார்க்கு மெய்ம்மையையும், பழவடியார் என்றமைக்கேற்ப எனக்குப் புத்தடிமையை யும் வருவித்துக் கொள்க.

ஒன்றற்கொன்று முரண்பாடுடைய இளமதியையும் அரவையும் நேர்வைத்தாண்டவாறு பழவடியாரையும் என்னையும் நேர்வைத்து விரும்பும் அரனே என்றபடி. கலைவளரும் தன்மை குறித்தும், ஈரெண் கலை பெற்று மலர்வது நோக்கியும் அரும்பு என்றனர். ''அரா'' என்பதன் '' குறியதன் இறுதி '' (தொல். எழுத். உயிர்மயங். 32) ஆகாரம் குறுகிற்று.

மனம் பிறவிக்கும் உயிர்க்கும் பொதுவாயிற்று. வன்மை பெற்றது. தன்னைத் தனதாக்கிக் கொள்ளுமென்க வினையேன்பாலதாய மனத்தினைப் பெற நீ பிரிந்த அற்றம் நோக்கியிருந்து பிறவி பொருதலைச் செய்யா நிற்கின்றது என்றபடி.

பொதும்புறு தீப்போல் புகைந்துஎரி யப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண் டாய்விரை ஆர்நறவம்
ததும்புமந் தாரத்தில் தாரம் பயின்றுமந் தம்முரல்வண்டு
அதும்பும் கொழுந்தேன் அவிர்சடை வானத்து அடலரசே. 36

என்னுமிதனால், அவ்வைம்புலன்களும் என்னை வெற்றிகொண்டு மனதைப்பற்றி என்னை வெதுப்ப வெதும்புகின்றேனை விட்டுவிடு கின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) நறுமணம் நிறைந்த தேன் நிரம்பி வழிகின்ற மந்தார மலரிலே எடுத்தலோசையாக எழுப்பிப் பயின்று படுத் தலோசையாக ஒலிக்கும் வண்டுகளைக் கண்டு, தேனுண்டு ஒதுங்கு கின்ற விட்டுவிட்டொளி செய்யும் சடையை முடித்த வான நாட்டினை ஆளும் வலிமை வாய்ந்த அரசனே, மரப்பொந்திலுற்ற நெருப்பினைப்போல எனதுள்ளத்திலே ஐம்புலன்களாற் கொளுத் தப்பட்ட நெருப்பானது ஆங்கே புகைந்தெரிய அதனால் கலங்கு கின்ற என்னை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) பொதும்பரை ஒத்த உள்ளம் என்க. வெதும்புறுதல் - கனலுதல்.

தேன் ஒருவகை வண்டு. வண்டுகள் சுரும்பு, மிஞிறு, வண்டு, தேன், என நான்கு வகைப்படும்.

" சுரும்புகாள் வண்டுகாள் மகிழ் தேனினங்காள்
மதுவுண்டு தேக்கிடும் ஒண்மிஞிறு ஈட்டங்காள் (சிந்தா. 892.)

என்பதனாலறிக. இவற்றுள் வண்டும் தேனும் ஒரு குணத்தன என்பதனை

" என்றன தேனினம் இரங்கு வண்டொடு சென்றன "
(சிந்தா. 3034.)

என்பதனாலும்,

" அரவ வண்டொடு தேனின மார்க்கும் " (மணிமே. 18. 43.)

என்பதனானுமுணர்க. இதனால் ஏனைய விரண்டும் தம்முள் ஒத்தன வென்க.

கொழுந்தேன் - தேனுண்டு செழித்த தேன் வண்டு. இதனால் மற்றைய வண்டு இன்னுந் தேனுண்டிலதென்பது பெற்றாம். தன்னின மாகிய தேனினைக் காணாது எடுத்திசைத்த வண்டு மற்றதனைக் கண்டு படுத்திசைத்தவாறாம். வேறுங் கூறுப.

வண்டுகள் விருந்தயர்தலை "இரிந்த தேன்" (சிந்தா. 19.) என்பதனா லுணர்க.

இதனால் நறவுண்டு கொழுத்த தேனானது அங்ஙனமுண்ணப் பெறு தினைத்த வண்டிற் கொதுங்கி உண்டு கொழுக்க இடமளித்தாற்போல நீதான் என் கவலை அறியாதிருப்பினும் நின்அருளுண்டு கொழுத்த மெய்யன்பர்கள் உளராக யானும் அவ்வருளுண்டு கொழுக்குமாறு செய்தலாகாதா என்னும் குறிப்புணர்க.

அதும்பும் - ஒதுங்கும். வண்டு சென்று தேனோடு ஒதுங்கும் என்க. வண்டு செல்ல ஆங்கிருந்த தேன் பிறிதோர் இடஞ்சென்று ஒதுங்கும்

**அரைசே அறியாச் சிறியேன் பிழைக்குஅஞ்சல் என்னின்அல்லால்
விரைசேர் முடியாய் விடுதிகண் டாய்வெண் நகைக்கருங்கண்
திரைசேர் மடந்தை மணந்த திருப்பொற் பதப்புயங்கா
வரைசேர்ந்(து) அடர்ந்தென்ன வல்வினை தான்வந்து அடர்
வனவே. 37**

என்னுமிதனால், நீ என்னுடைய பிழையைக் கருதி யான் அஞ்சுதலை அறிந்தும், அங்ஙனம் நீ அஞ்சாதி என்று அபயம் தராவிட்டால், வலிய வினைகள் என்னை நெருக்கி அழித்துவிடுகின்றன. அங்ஙனம் அழிவேனை விடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) அரசனே, மந்தாரம் கொன்றை முதலாகிய பூக்களின் தாதுவும் தேனும் ஆகிய மணப்பொருள் சேர்ந்த முடியை உடையவனே, வெள்ளிய பல் வரிசையினையும் கரிய கண்களையும் உடைய பாற்கடலுள் தோன்றிய திருமகள் மணந்த, திருவினையுடைய பொன் போன்று ஒளிரும் பாதத்தினையுடைய

புற்றிடங்கொண்ட புயங்கனே, மலைகள் தம்முள்ளே சேர்ந்து நெருங்கினால் ஒப்ப எனது வலிதாகிய வினைகள் ஒன்று சேர்ந்து நெருங்குகின்றன. ஆதலால் (இப்போழ்து) அறிவு செயல்களிற் சிறியேனாகிய என்னை நோக்கி "நீ நின் பிழைக்காக அஞ்சற்க" என்று சொல்லுவதன்றியும் விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) அறிவூட்டுங் கடப்பாடுடையன் என்பது தோன்ற "அரைசே" என்றார்.

திரை - அலை, ஆகுபெயர்; திருப்பாற்கடலை யுணர்த்திற்று. திருவாரூரிலே புற்றிடங்கொண்ட பெருமானை நோக்கித் திருமகள் தவங் கிடந்து வரம் பெற்றுத் திருமாலை மணந்துகொண்ட வரலாறு அவ் ஊர்த் தல புராணத்தால் அறியப்படும். தவங் கிடந்தபோது அவள் தன் னுள்ளத்துள் இடைவிடாது சேர்த்துக்கொண்ட திருவடியாகலின் "மடந்தை மணந்த திருப்பொற்பதம்" எனப்பட்டது. மணத்தல், ாண்டுப் பொருந்துதல். அதாவது இடைவிடாது நினைத்தல் என்க. மடந்தை மணந்த திருப்பாதம் என்றமைக்கேற்பக் கங்காதேவி மணந்த திருமுடி என்றல் சிறக்குமாதலின், அவள் அணிந்த வாசனைகளை "விரை" என்புழிக் கொள்க. இனி, அவள் அணிந்த கொன்றை மந்தாரம் ஆகிய வற்றின் விரை என்றலுமாம்.

இனி, திருவாரூர் இறைவன் புற்றிடங்கொண்டானாகலின் அவனைப் "புயங்கன்" என்றழைத்தார். பாம்பணிந்தவன் என்பதே அதற்குப் பொரு ளாகுமேனும் ாண்டு அக்குறிப்பும் பெறப்படுமாறு அறிக.

திருவடியும் திருமுடியும் பிறர்க்கு அபயமளித்துப் பற்றுக்கோடாய் இருந்த பெருமையையும், தம் வினை தீராமையையும் குறித்து "முடியாய்" என்றும் "பதப்புயங்கா" என்றும் கூறினார்.

வல்வினையின் பெருந்தொகை நோக்கி "வரைசேர்ந்தடர்ந்தென்ன" என உவமித்தார்.

மலைகள் அங்ஙனம் பெயர்ந்து அடர்வதற்குரிய காலம் ஊழிக்காலம். உலகுக்கு எல்லாம் பொதுப்பட வரும் ஊழிக்காலம் எனக்கு இப்போது சிறப்பொடுபட்டு வந்ததுபோலும் என்றருளினார் என்க. இனி "வரை" என் பதற்கு மூங்கில் எனப் பொருள் கொள்ளலுமாம். மூங்கிற் புதரிடம் - உள் ளம்; மூங்கில்கள், ஐம்புலன்கள்; தீ - அவா; மூங்கிலிடைப்பட்ட முத்து நெல் - உயிர்.

அடர்புல னால்நிற் பிரிந்துஅஞ்சி அஞ்சொல்நல் லார்அவர்தம்
விடர்விட லேனை விடுதிகண் டாய்விரிந் தேஎரியும்
சுடர்அனை யாய்சுடு காட்டுஅர சேதொழும் பர்க்குஅமுதே
தொடர்வுஅரி யாய்தமி யேன்தனி நீக்கும் தனித்துணையே. 38

என்னுமிதனால், எனக்கு உரிய ஒரே யொரு துணையாளனாக நீ

இருந்தும் யான் புலன்களின்பாற் பட்டழியுமாறு விட்டுவிடுகின்றாய் என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை.) வளர்ந்தே எரிகின்ற ஒளிப்பிழம்பு போன்றவனே, ஊழிக்காலத்துச் சுடுகாட்டு அரசனே, தொண்டர்களுக்கு அமுதம் போன்றவனே, மெய்யன்புடையார்க்கன்றிப் பிறரால் தொடர்வதற்கு அருமையுடையவனே, அடியாரிலிருந்து பிரிந்து தனித்திருப்பேனாகிய எனக்கு ஒரேயொரு துணையாவோனே, ஐம்புலன்கள் நெருங்கி வருவதால் நின்னொடு வாழ்ந்து வருதற்கு அச்சங்கொண்டு, நின்னைப் பிரிந்து, அவ்வச்சம் போக்குவதற்கு உரிய அரண் ஆவாய். கேட்டற்குமாத்திரம் அழகிய சொல்லையுடைய, மிக்க காமத்தைச் செய்யும் பெண்டிர் எனப் பயனில் சொற்களைப் பயின்று வருவோருடைய தொடர்பினைவிட்டு விலகாத என்னை விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) பொருளின் இயல்பினை வெளிப்படுத்துவதனாலும், நெய்யின்மை, காற்று நீர் ஆதியனவற்றால் அவிதலின்றி விரிந்து ஒளி விட்டு வருதலினாலும் தீயனவற்றை எரித்து நல்லனவற்றைப் பேணி வருதலினாலும் "விரிந்தே எரியும் சுடரனையாய்" என்றும், எல்லாப் பொருள்களும் எரிக்கப்பட்டு நின்பால் ஒடுங்கிய காலத்தே அப்பாழுக்கும் அரசன் நீயே யாவை என்பார், "சுடுகாட்டரசே" என்றும், அங்ஙனம் பாழாகிய மனத்தினோடும் பற்றற்ற பணி புரிவோரே மெய்த்தொண்டர் என்பார் "தொழும்பர்க்கு" என்றும், அப்பணியினால் அவர் பெறும் இன்பம் அமுதச் சுவையோடு ஒக்குமென்பார் அவர்க்கு "அமுதே" என்றும், அமமெய்த் தொண்டரும் இறைவனும் பிரியத் தனித்திருந்தாராகலின் "தமியேன்" என்றும், என் மனம் அங்ஙனம் பாழுடைந்து யான் பற்றின் நீங்கிலேன் என்பார், "தொடர்வரியாய்" என்றும், எங்ஙனமாயினும் என் தனிமையையும் பற்றையும் பிறவற்றையும் நீக்கித் துணை புரியவல்லாய் நீயே ஆவாய் என்பார் "தனி நீக்கும் தனித்துணையே" என்றும், வினைகளின் எண்ணிக்கை பெருகுந்தோறும் ஐம்புலப்பற்றும் பெருகியே வருதலின் "அடர்புலனால்" என்றும், அப்பற்றினைக் கண்டு நீ என்னை வெறுத்துப் பிரிய யானும் நின்னைப் பிரிந்தேன் என்பார் "நிற்பிரிந்து" என்றும், பிரிந்தாலும் மீண்டும் அணைதற்குரிய தொடர்பு அருமையின் ஐம்புல வழிப்படுதற்கு அச்சமுற்றேன் என்பார் "அஞ்சி" என்றும், அங்ஙன மாயவழியும் புலன்களின் வலிமிக்கு என்னைப் பெண்களின் காமத்தில் ஆழ்த்துதலின் யானும் அங்ஙனமே வீழ்ந்தேன் என்பார் "அஞ்சொல் நல்லார் அவர்தம் விடர்விடலேனை" என்றும், நீ நல்லன பேணித் தீயன அழிக்கும் சோதியாயும், தொழும்பரோடு ஒப்ப என்னையும் தொழும்பு கொண்ட அமுதமாயும், என் தொடர்பின் நீங்குதற்கரிய துணைவனாயும் இருந்து கொண்டும், அவற்றை எண்ணிப் பாராமல், யான் எவ்வழியில்

கேடடைந்து செல்கின்றேனே அவ்வழியே சென்று கெட்டழியுமாறு விட்டு விடடுப் பிரிகின்றாய் என்பார் "விடலேனை விடுகின்றாய்" என்றும் கூறினார் என்க.

"அடர்புலனால்" என்றதை புலன் அடர்வால் எனப் பொருள் இனிது புலப்பட மாற்றிக்கொண்டாம். அம்சொல் - கேள்விக்கு இனிதாகியும் கேட்டாரை மயக்கித் தீயநெறியிற் செலுத்துவதுமாகிய சொல். விடர் - பயலின் சொல்லினராகிய மக்களுள்ளே பதடிகள்; உள்ளீடில்லாதவர். இப் பொருள்படுதலை "வறுமொழியாளன் பயனில் சொல்லாளன் - விடன் என்றபடி" (சிலப். 10 : 219, 220, அடி. உரை) என்பதனானுமுணர்க.

தனித்துணை நீநிற்க யான்தருக் கித்தலை யால்நடந்த
வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய
மனத்துணை யேஎன்தன் வாழ்முத லேஎனக்கு எய்ப்பில்வைப்பே
தினைத்துணை யேனும் பொறேன்துயர் ஆக்கையின் திண்
[வலையே. **39**

என்னுமிதனால், நீ துணையாக நிற்கின்றாய் என்ற காரணத்தால் யான் செருக்குற்று வினை பெருக்கினேன். அதனால் நீ என்னை விடுகின்றாய். ஆனால், யானோ இன்று அப்பிழைக்குக் காரணமாகிய உடல்வலையைப் பொறுக்கமாட்டேன் ஆதலால் என்னை விட்டுவிடாதே என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை) என் மனதுக்குரிய துணையாளனே, என் வாழ்விற்குரிய முதற்பொருளே, எனக்கு இளைத்த காலத்துதவும் சேமப்பொருளே, நீ என் ஒப்பற்ற துணைவனாக நின்றதனால், யான் செருக்குற்றுத் தலைதடுமாறி ஒழுகிய வினைகளையே துணையாகப்பற்றிய என்னை விட்டுவிடுகின்றாய். ஆனால் யான் இன்று துயர் செய்யும் உடற்பற்றினாலுளதாகும் திண்ணிய பாசவலைக்குள் இருத்தலைத் தினையளவுதானும் பொறுக்கமாட்டேன் எ - று.

(வி - ரை.) ஆதலால் என்னை அங்ஙனம் விட்டுவிடாதே. உடனிருந்து உடற் பொறை போக்கி, என் செருக்கினை விலக்கி ஆண்டுகொள் என்றார் என்க.

எதனையும் பற்றிப் பற்றி அலையும் மனம், அங்ஙனமெல்லாம் பற்றி அலையாமல், தன்னையே பற்றிப் படருமாறு அதனைக் கவர்ந்துகொண்டு தன்மீது படரவைத்த துணையாளனாதலின் "மனத்துணையே" என்றார்.

"வாழ்முதல்" என்றது ஈண்டுப் பரம்பரையாகவே கிடைத்த செல்வத்தை என்க. தம் பரம்பரையில் முற்பட்ட சான்றோர் தேடிக்கண்ட இறைவனை அவர்கள் கொடுக்கப்பெற்று மேலே வளர்ச்சியடைந்தாராகலின் "வாழ்முதல்" என்றார். "எய்ப்பில் வைப்பென்றது," தாம் முயன்று

சேமித்ததை என்க. சான்ளேர் காட்டிய முதலினின்றும் சிந்தனையை வளரவிட்டுத் தேடிச் சேமித்த அரிய சிந்தனைச் செல்வக்கருத்துகள், பிற கருத்துக்களால் நலிவுற்று இளைத்தபோதில் பயன்படலாயின என்றபடி.

" தனித்துணை நீ நிற்க யான் தருக்கித் தலையால் நடந்த
"

ஏ

" கண்டது செய்துகருணை மட்டுப்பருகிக் களித்து
மிண்டுகின்றேனை " (திருச்சதகம். 33.)

என, முன்வந்த அடியுடன் ஒப்புநோக்கிக் கொள்க.

தருக்குற்றமைக்கு ' அவன் தனித்துணையாவான், யான் எதனைச் செய்யினும் செய்யலாம், கேட்பார் யார் ?' என்ற எண்ணம் காரணமாயிற்று. " தலையால் நடத்தல் " என்பது முரண்பட்ட செய்கைகளைக் குறிப்பாலுணர்த்தும். இதனாற் போந்தபயன் நின் துணையின் நீங்கி வினையைத் துணையாக்கிக்கொண்டதுதான் என்பார் " வினைத்துணையேனை " என்ருர்.

வலை - சூழ்ச்சிப்பொறி. அவன் துணையைப் பிரித்து வினைவழிக் கூட்டியதாகலின் " திண்வலை " என்ருர். ஈண்டு " ஆக்கை " என்றது வினைக்கருவிகளின் கூட்டத்தை எனக் கொள்க.

யான் வினைவழிப்பட்டு மாயாது நின்வழிப்பட்டு உய்யுமாறு துணை நிற்கும் துணையாளனுகவும், என்னியல்பிற்கேற்ற யான் பிற தலைவர்களைப் பின்சென்று ஏமாந்து இழிவுருவண்ணம் பரம்பரையாகவே என் முதற் பொருளாகவும், என்ளுல் ஈட்டப்பட்ட வைப்புப் பொருளாகவும் நீ இருந்து கொண்டும் ; மனம் நின் துணை கழிந்து வினைவழிப் படர்ந்து அதனுள் என்னை ஆழ்த்தி, என் முதலும் வைப்புமெல்லாம் கெட்டொழியுமாறு செய்ய விட்டுவிடுகின்ருய். நீ விடுந்தோறும் விடுந்தோறும் உடலின் வலைக்குள் வீழ்ந்து வீழ்ந்து துயருறுகின்றேன். அதனை இனித் தினையளவுதானும் பொறேன். ஆதலால் என்னை அணைத்துக்கொள்ளுதி என்பார் " வினைத் துணையேனை விடுதிகண்டாய் " என்ருர் என்க.

**வலைத்தலை மான்அன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு**
**மிலைத்தலைந் தேனை விடுதிகண் டாய்வெண் மதியின்ஒற்றைக்**
**கலைத்தலை யாய்கரு ணகர னேகயி லாயம்என்னும்**
**மலைத்தலை வாமலை யாள்மண வாளஎன் வாழ்முதலே. 40**

)ல், விடர்விடாமையால் தலையால் நடந்து இப்போது மடவார் நோக்கத்தால் இழுக்கப்பட்டு மயங்கித் திரிவேனை விடுகின்ருய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) வெள்ளிய ஒற்றைக் கலையுடைய திங்கள் தங்கிய முடியுடையாய், அருட்கடலே, கயிலாயம் என்று சிறப்பித்துக் கூறப்படும் மலைக்குத் தலைவனே, மலையரசன் மகளாகும் பார்

வதிக்கு மணவாளனே, என் வாழ்விற்கு முதற் பொருளே, வலையில் அகப்பட்ட மானின் நோக்கத்தை ஒத்த வெருண்ட நோக்கினை யுடைய மங்கையர்தம் பார்வையாகிய வலையிடத்து அகப்பட்டு மயங்கித் திரிந்தேனை விட்டுவிடுகின்றாய் எ - று

(வி - ரை.) வெண்மதியின் ஒற்றைக்கலையும் ஈற்றில் அழிவுறுவாறு அதனை முடிமீதுஅணிந்து கலை வளர்த்தவாறே, மங்கையர் மையலில் பட்டு அழிவுற்று இனி என்னே உய்யுமாறு எனக் கருதிவந்த தம்மைத் திருவடிக் கீழிட்டு வளர்க்காமையானே " வெண்மதியின் ஒற்றைக் கலைத் தலையாய் " என்றும், இரங்குதற்குரிய தம்பால் இரக்கங் கொள்ளாமையால் " கருணாகரனே " என்றும், தமக்கும் மறுப்பின்றி உரியதும், அடியார்களுக்கே வழங்கப்பெற்றதும், தமக்கும் வழங்காமையானே தாம் மங்கையர் மையலில் புகப்பெற்றதும், இனிமேல் என்றேே ஒருநாள் தமக்குக் கிடைக்கக் கூடியது மான கயிலைமலையின் பெருமையை யுன்னி ஆராமையால் " கயிலாயம் என்னும் மலைத் தலைவா " என்றும், முதல் அதனையுடையானுக்குப் பயன் படாவிடத்து அதனாற் போந்த பயனின்மை குறித்து " என் வாழ்முதலே " என்றும் கூறினார். மிலைத்தல் - மயங்குதல்.

மங்கையர்தாம் நோக்க விரும்புமிடத்து நோக்காதார் போன்றிருத்த லும், அண்மைக்கண் சார, விரும்பும்போது சேண்மையர் ஆதலும் வேட்கையை மிகுத்தற்பொருட்டாதலின், தம்மைக் கண்டு அஞ்சினர்போல நடித்தனர் என்பது தோன்ற " வலைத்தலை மான் அன்ன நோக்கியர் " என் றும், அவர்தம் காமக் குறிப்பறிந்து மயங்கித்திரிந்தேன் என்பார் " மிலைத் தலைந்தேன் " என்றும் கூறினார்.

**முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந் நீரிற் கடிப்பமூழ்கி**
**விதலைச்செய் வேனை விடுதிகண் டாய்விடக்(கு) ஊன்மிடைந்த**
**சிதலைச்செய் காயம் பொறேன்சிவ னேமுறை யோமுறையோ**
**திதலைச்செய் பூண்முலை மங்கைபங் காஎன் சிவகதியே. 41**

என்னுமிதனால், யான் இந்த உடலைச் சுமந்திருத்தலை விரும்பாத விடத்தும், அவ்வுடல் தன் காமப்பசியைத் தணித்துக் கொள்ளு மாறு என்னை விட்டுவிடுகின்றாய் (இவ்விடுகை நீதியானதா?) என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை.) தேமலை உண்டாக்குகின்ற பூண்களை அணிந்த முலைகளையுடைய உமைபங்கனே, என் சிவமாகிய போக்கிடமே, சிவனே, தசையும் கொழுப்பும் கலந்த பல நோய்களை யுண்டாக்கு கின்ற உடம்பினைத் தாங்கியிருக்கமாட்டேன். இவ்விழிந்த ஆக்கை யின் அகத்து யான் அகப்பட்டு வருந்த நீ வாளா இருப்பது நினக் குரிய முறைதானோ? முறைதானோ? இன்னும் அவ் ஆக்கையைக்

கொண்ட நான் காமப்பற்ருகிய தாகம் தணிக்கும் நீரிலே சிவந்த வாயையுடையவராகிய முதலைகள் கடிக்கும்படியான ஆழிய நிலைக் குள்ளே புக்கு அழுந்தி மூழ்கி அச்சம் காரணத்தால் நடுங்குதலையும் உடையேனை விடுகின்ருய் எ - று.

(வி - ரை.) சிவகதி என்றது வீட்டை. சிவன் என்றது வீட்டின் தலைவனை. காமமாகிய நீர் விருப்பத்தைத் தருதலின் வெந்நீர் என்ருர். காமவேட்கை கொண்ட உள்ளம - தண்ணீர் நிரம்பிய ஆழிய நிலை. செவ் வாய்ச்சியராகிய முதலைகள் என்க. அக்காமமாகிய நீர் நிறைந்த பறறுள்ளத் தில் உறையும் மங்கையரால் பற்றப்பட்டு விடப்படாமையின் அவர்களை முதலைகளாக உருவகித்தார். அவர்களாற் பற்றப்பட்டவர் விடுதலையின்றி அழிவுறுவர் என்றபடி. தம் சிவகதியையும், சிவனையும் நினைந்தும், மங்கைமாரைப் பற்றிய உள்ளத்திலே அவா நீர் மிக்கு ஆங்கு மங்கைமார் ஆகிய முதலைகள் உலா வித் திரிதலால் அப்பற்றினின்றும் விடப்படாமை யால், இனி என்னே உய்யுமாறென எண்ணியும் அச்சங்கொண்டு நடுங்கி ஞர் என்க. விதலை - நடுக்கம்.

சாயம் பொறேனுகவும், காயத்தாலுளதாகும் இன்னல்களுக்குள்ளா கின்றேன். நீயும் அங்ஙனமே விடுகின்ருய். காயம் பொறேனைக் காயத் துள்ளிட்டு இன்னலுள் விடுமிது முறையோ என்றபடி என்க.

இனி, "வெந்நீர்" என்பதற்கு, வெவ்விதாகிய நீர் எனப் பொருள் கொள்ளின், ஆண்டு முதலைகள் வாழ்தலும், கடித்தலும், இயலாவாகலின் அங்ஙனம் கொண்டிலம்.

கதிஅடி யேற்குஉன் கழல்தந் தருளவும் ஊன்கழியா
விதிஅடி யேனை விடுதிகண் டாய்வெண் தலைமுழையில்
பதியுடை வாள்அரப் பார்த்துஇறை பைத்துச் சுருங்கஅஞ்சி
மதிநெடு நீரிற் குளித்துஒளிக் குஞ்சடை மன்னவனே. 42

என்னுமிதனுல், நீ நான் மீளுமாறு அருள்புரியவும், மீளுதற்குரிய விதியற்றவனுனேன் நான். அதுகண்டும் என்னை விட்டுவிடுகின்ருய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) வெண்மையான தலையிலுள்ள பொந்தில் அதனையே இருப்பிடமாகக் கொண்டு வசிக்கும் ஒளிபொருந்திய பாம்பானது ஆங்குள்ள ஒரு கலைத்திங்களைக் கண்டு சிறிதே படத் தினை விரித்து இறைவனுடைய சடைமுடியிலே தான் இருந்து வருதல் நினைவிற்கு வருதலால் விரித்த படத்தினைச் சுருக்கிக் கொள்ள, அதற்கு அஞ்சித் திங்கள் ஆங்குள்ள கங்கையின் நெடிய நீரினுள்ளே மூழ்கி மறைந்துகொள்ளும் சடையையுடைய அரசனே, நினக்கு அடிமைப்பட்ட எனக்கு வீடாகிய உன்னுடைய

திருவடிகளை நீ கொடுத்தருளவும் அவ்வருளைக்கொண்டு என்னுடைய ஊன் உடலை நீக்கிக் கொள்ளமாட்டாத தீவினையேனை விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) கதியாகிய கழல் என்க. பேடி கை ஒள்வாளே போன்று அவ்வருள் எனக்குப் பயன்பட்டிலது என்க.

அவ்வருளை ஆற்றல் இல்லாத என்பால் அளித்ததுவும் நின் குற்றமாகவும் அக்குற்றத்தைத் தன்மேற் போட்டுக்கொண்ட நயம் பாராட்டற்பாலது.

இப்பொறுமை அளவிற் படாமையால் " பழிப்பன் " " சிரிப்பிப்பன் " " ஏசுவன் " எனப் பின்னர முனிந்தருளுவர். இம்முனிவு முன்னர் அகத்துள் நின்று சிறிது வெளிப்போந்து அடங்கினமை " கள்ளேன் ஒழியவும் கண்டுகொண் டாண்ட தெக் காரணமே " (நீத்தல். 2 ) என்னும் பகுதியான் உணர்க.

இங்ஙனமே முன்னும் பின்னும் ஆராய்ந்துணர்ந்து கொள்க. விதி - ஊழ்வினை.

கலை நிரம்பாத் திங்களைக் கண்டு முன்னர் விரித்த படத்தினைச் சிறிது சுருக்கிற்று எனக் கொள்ளற்கு அமையுமேனும் இறைவன் சடைமுடிமேல் அம்மதியும் தானும் அமைநது வருதலைச் சாதியறிவால் மறந்து தெளிதல் அதனுக்கு இயல்பாகலால் அதனையும் அதன்பின்னர்க் கலைத்திங்கள் என்றலையுங் கொள்ளல் வேண்டும் என்று தெளிக.

ஈரெண் கலையும் நிரம்பா மதியை அரவு விழுங்கா தென்பதை அறிந்திருந்தும் அச்சாதிப் பகைமையால் திங்கள் அஞ்சி ஒளித்ததென்க. இவ் விளையாடல்களை யெல்லாம் பார்த்து உவந்துவரும் நினக்கு யான் படும் துன்பத்தினையும் பார்த்து உவத்தல் ஒரு பொருளாகும் போலும் !

இப்பகுதியை நோக்கும்போது,

" பாகம் ஒருபெண் குடியிருக்கும் பரமன் அணியிற் பரித்தமணி
நாக நுழைவுற்று உடல்சுருண்டு கிடந்து நகுவெண் தளைப்புழையிற்
போக மெல்லத் தலை நீட்டிப் பார்த்து வாங்கப் போகுமொரு
தோகை மயில் வா கனப் பெருமாள் துணைத்தாள் கமலந் தொழுதிடு
வாம் " (பிரபு. துதி. 4 )

என்னும் பாட்டு நினைவிற்கு வருகின்றது. அஞ்ச வேண்டாத மதியம் நெடு நீருள் மூழ்கி மறைந்தது போலவே ஒன்றுக்கும் அஞ்சவேண்டாத யானும் அஞ்சி நடுங்கிப் பலவற்றையும் அரணுக்காகக் கருதிப் புக்கு மறைந்து கொள்ளாநின்றேன் என்பது குறிப்பு.

கங்கை வானுலகினின்று ஈண்டு வந்தமை தோன்ற அது நெடுநீர் எனப்பட்டது எனலுமாம்; பிறவாறும் கூறுவர். பைத்து - படம் விரித்து. இறை - சிறிது ; நேரமுமாம்.

இறைவன் சந்நிதியில் பாம்பு மதியைக் கண்டு முனிந்து அடங்குமாறே என் பகையாகிய கட்டுக்களும் (பாசங்களும்) நின் சந்நிதியில் முனிந்தடங்கும். அவ்வாறாக என்னைப் பற்றிய கட்டுக்கள் அடங்கவில்லையே என்க.

மதியம் நெடுநீரை அரணாகக் கொள்ளக் கொடுத்தவாறே என்னையும் செவ்வியுடையனாக்கிக் கழலைத் தந்தாயில்லை. அக்கழலாகிய அரணைப் பகை கடிதற் பொருட்டுப் பயன்படுத்திக் கொள்ளும் செவ்வி பெற்றிலேனாகலால் நீ அதனைத் தந்தும் பயன் என்?

எனவே என் கட்டுக்களை நீக்கிச் செவ்வி பெற வைக்காமையால் உன்னுடன் வாழ்ந்து வருதலால் பயன் ஒன்றுமில்லை; அத்துடன் நீயும் என்னை விடுகின்றாய் என்க.

**மன்னவ னேஒன்று மா(று)அறி யாச்சிறி யேன்மகிழ்ச்சி**
**மின்னவ னேவிட் டிடுதிகண் டாய்மிக்க வேதமெய்ந்நூல்**
**சொன்னவ னேசொற் கழிந்தவ னேகழி யாத்தொழும்பர்**
**முன்னவ னேபின்னும் ஆனவ னேயிம் முழுதையுமே. 43**

எ எல்லாமானவனே நீஅவ்வாறிருந்தும் நின்னை அடையும் வழியை அறியேன்; சிறியேனைப் பொறுத்தருளாது இவ்வாறு வருந்துமாறு விடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது

(பொ - ரை.) இப்பிரபஞ்ச முழுவதும் ஆனவனே அவற்றுக்கெல்லாம் வேந்தனே, நின்னோடு பொருந்திக்கொள்ளும் வழியைத் தெரிந்துகொள்ளாத சிறியேனது மகிழ்ச்சியாகிய மின்னல் ஆயவனே, மேம்பட்ட வேதமாகிய உண்மை நூலை (மெய்யன்பர்க்கு) உரைத்தவனே, சொல் உணர்ச்சியைக் கடந்து நின்றவனே, அன்பு நீங்காத தொண்டர்க்கு முன்னர் அவர் தியானித்தவாறே அவர் முன்னர்த் தோன்றுவோனே, அவருக்குப் பின்னும் நின்று தோன்றாத் துணையானவனே, இவ்வாறாகிய நீ என்னை விடுகின்றாய் எ - று.

(வி - ரை.) "முழுதையும்" என்பதில் ஐகாரம் சாரியை. ஆன்மாக்கள் பொருட்டு வேதமெய்ந்நூலை யருளியும் அவற்றின் சொற்களுக்கு அகப்படாது அப்பாற்பட்டு நின்றும் அவ்வேதத்திற் கூறியாங்கு ஒழுகிச் சாதனை பண்ணினோர்க்கு முடிந்த பயனாய் முன்னின்றும் பின்னரும் இம் முழுவதும் ஆன்மாக்கள் பொருட்டானேன் என்க. எனவே அந்தமும் ஆதியுமானேன் என்க.

மகிழ்ச்சி ஒருசிறிதே நிற்கப் பெற்று மறைந்தமையால் "மகிழ்ச்சி மின்னவனே" என்றருளிச் செய்தார். "மின்னவனே" என்றதற்குச் சோதியனே எனப் பொருள் கொள்ளின் மகிழ்ச்சியற்ற அடிகள் பிறழ்ந்து கூறியருளினார் ஆவர் ஆதலால் அங்ஙனம் கொள்ளற்க.

இருளகத்து மின்னுத்தோன்றி மறையின் முன்னர்க் கொண்ட சிற்றொளியும் இழக்கப்பெற்று மயங்குதல் கண்கூடு. அங்ஙனமே திருவடி அருளி உடன் மறைந்தமையால் தாம் பெற்ற மகிழ்ச்சி இருட்கண்ணே தோன்றி மறையும் மின்னொளியை நிகர்த்தது என்று வருந்தியருளினார் என்க.

வினைவசப்பட்டுச் சிறியேன் ஆயினேன் ஆதலால் கலக்குமாறறியேன். அங்ஙனம் கலக்குமாறறியான் துன்பெய்தல் ஒருதலையாகலின் "மகிழ்ச்சி மின்னல்" என்று அருளப்பட்டது. அம்மகிழ்ச்சி முன்பு திருவடி கண்ட மகிழ்ச்சி.

"வேதம்" என்பது இருக்கு முதலாய நான்கினையுமே குறிக்கும் என்பது இந்நூல் உள்ளே பொதுநோக்காக நோக்குவார்க்கும் புலப்படுவது ஒன்றாகலால் அவையல்லாத பிறிதொரு வேதமே ஈண்டு அடிகளாற் கிளந்து ஓதப்பட்டது என்று கூறுவார் கூற்றை அறிவுலகிற்கு விட்டொழிதலே சால்புடைத்து என்க.

"மிக்க வேதம்" என்றதற்கு வேதத்தின் மிக்க ஆகமம் என்றுரைப்பாரும் உளர். "சொன்னவன்" என்றதற்கு இயற்றி அது விளங்கும் பொருட்டு அன்பர்க்கு உரைத்தவன் என்று விரித்துப் பொருள் கொள்க.

முன்னர் "உத்தரகோசமங்கைக் கரசன்" என்றமையால் அன்புநெறி பற்றி ஆகம நூலாட்சி செய்யும் வேந்தன்; அவன் நாடு பாண்டிவளநாடு; அவன் ஊர் உத்தரசோசமங்கை என்பனவெல்லாம் காண்க. ஈண்டு வேதம் அடியார் என்பவற்றோடு மன்னவன் என்பதும் கிளக்கப்பட்டமையால் பூர்வ கோசமாகிய வேதஆட்சி செய்யும் வேந்தனும் இவனே ஆவன் என்பது பெற்றாம்.

வேதத்தையருளியும் அதனைக் கடந்துநின்றும் அவ்வேத வொழுக்கத்தில் நின்றார் பயனாக முன்வந்தும் அன்பரைக் கலந்தாய்; எனக்கு அவ்வாறு அருளிலை. ஆதலின் சிறியனாய்த் துன்படைவேன். நீ காட்டிய மகிழ்ச்சியும் மின்னலை ஒத்தது. அங்ஙனமாகவும் என்னை விடுகின்றாய் என்றார் என்க.

என்னுமிதனால், பெரியோனே; யான் செய்தவெல்லாம் நினக்கு மாறுபட்டன என, அறியாது செய்த சிறியேனைப் பொருத்தருளாது இங்ஙனம் வருந்துமாறு விட்டுவிடுகின்றாய் என்பது கூறப்படுகிறது.

**முழுதயில் வேற்கண் ணியர்என்னும்**
**மூரித் தழல்முழுகும்**
**விழுது அனையேனை விடுதிகண்**
**டாய் நின் வெறிமலர்த்தாள்**

தொழுது செல் வான்நற் றொழும்பரில்
கூட்டிடு சோத்தெம்பிரான்
பழுதுசெய் வேனை விடேல்உடை
யாய் உன்னைப் பாடுவனே. 44

என்னுமிதனுல், யான் பழுதுள்ளவன் எனக் கருதி என்னை விட்டுவிடாதே. அங்ஙனம் விட்டுவிட்டால் யான் முற்றுகக் கேடடைவேன். ஆதலால் யான் உன்னைப் பாடுவேன். நீ உன் திருவடியை யான் தொழும்படி தொழும்பருடன் கூட்டி விடுதி என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) எங்கள் தலைவனே, எல்லாமுடையவனே, முழுவதும் கூர்மையான வேற்படை போன்ற கூரிய கண்களையுடைய பெண்களது காமமென்னும் வலிய நெருப்பிலே உருகி உட்புகுந்து ஒழியும் நெய்த்திரள் போன்ற என்னை விட்டுவிடுகின்றாய். அங்ஙனம் குற்றம் புரிவேனை விட்டுவிடாதே. யான் உன் புகழ்களை யெல்லாம் பாடிவருவேன். ஆதலால் நின்னுடைய வாசனை கமழும் மலர்போன்ற திருவடிகளைத் தொழுது ஒழுகுமாறு நல்ல அடியார்களோடும் கூட்டிவை. வணக்கம் எ – று

(வி - ரை.) "கண்ணியர் (காமமென்னும்) மூரித்தழல்" என்க. மூரி, வலிமை, விழுது, வெண்ணெய், நெய் முதலியவற்றின் திரள். வெண்ணெயை உருக்கித் தேன் முதலியவற்றோடு கலந்து நல்லோர் நுகர்வர். என் மாசு நீக்கித் தூய்மை செய்த நீ, என்னை உருக்கித் திருவடித் தேனில் கலந்து நுகர்ந்து பயன் பெற்றிலை; மங்கையர் கண்ணிற பெருகும் நஞ்சொடு கலக்கச் செய்து காமத்தீயிலே முழுகி அவமாகுமாறு விட்டனை என்க.

அன்பாகிய ஓமத்தீயிலே புக்கு நற்பேறு பெறுதற்குரிய நெய்யாகிய யான் நச்சுக் காமமாகிய மயக்கத் தீயிலே முழுகி அவமாகுமாறு விடுகின்றாய் என்க.

மங்கையர் தொடர்பினின்றும் பிரித்து நல்ல தொழும்பரோடும் கூட்டுக என்க.

சோத்தம் - இழிந்தோர் உயர்ந்தோர்க்குச் செய்யும் வணக்கம். அஃது ஈறு தொக்குச் "சோத்து" என நின்றது. அப்பொருள் தோன்றச் "சோத்தெம்பிரான்" என்றார். கண்ணியர் மூரித்தழல் முழுகும் விழுதனையேன் என்றமைக்கேற்பச் "சோத்தெம்பிரான்" என்றவாறு.

பாடிற்றி லேன் பணி யேன் மணி
நீ ஒளித் தாய்க்குப்பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண்
டாய் வியந் தாங்(கு)அலறித்

தேடிற்றி லேன் சிவன் எவ்விடத்
தான்எவர் கண்டனர்என்று
ஓடிற்றி லேன் கிடந்(து) உள்ளுரு
கேன் நின்(று) உழைத்தனனே. 45

என்னுமிதனால், நீ பிரியவும் யான் தொடர்ந்து நின்னைத் தேடிப் பற்றிக்கொள்ளாது வாளாவிருந்து பயன்பெறுமைக்கு வருந்தினேன். அத்தகையேனை விட்டுவிடுகின்றாய் என்பது கூறப்படுகிறது.

(பொ - ரை ) மாணிக்க மணியாகிய நீ ஒளித்துச் சென்றனை ; அங்ஙனம் சென்றாய் பொருட்டுப் பாடுதலையும் செய்யேன் , பணிதலையும் செய்யேன் , பசிய ஊனுடல் அழிந்திடவும் பெற்றிலேன் ; வியப்புற்று அழுதுகொண்டே தேடினேனுமல்லன் , சிவன் எந்த விடத்தில் இருக்கின்றான், யார் கண்டார்கள், என வினவிக் கொண்டு ஓடினேனுமல்லன் , செயலற்றுக் கிடந்து உள்ளமுருகினேனுமல்லன். அத்தகையேனை விடுகின்றாய். நானும் வறிதே வருந்தினேன்.

(வி - ரை ) முன்னர் ஆசானுகக் கருதியமை தோன்ற "மணி" என்றும், பின்னர் அவனே இறைவன் எனக் கருதியமை தோன்றச் "சிவன்" என்றும கூறியவாறு.

ஒளித்தாய்க்கு - ஒளித்தாய் பொருட்டு. ஒளித்த நீ பின்னர் மனம் நெகிழ்ந்து என்பால் வரும்பொருட்டு என்க. வரும்பொருட்டு யானும் மனம் நெகிழ்ந்து பாடுதலும் பணிதலும் செய்திலேன் என்க. அங்ஙனம் செய்யாமை கண்டு விடுகின்றாய் என்க.

அங்ஙனம் விட்டமையால் யானும் தேடுதல், வினவுதல் முதலிய வற்றைச செய்யாது சினந்திருந்தேன். அதனால் இத்துன்பம் எல்லா வற்றையும் தேடிக்கொண்டேன் என்க நின்று உழைத்தல்-வேண்டியவாறு முயலாது பயன்பெறுமைக்கு வருந்துதல்.

பாடுதல் முதலியவற்றைச் செய்து வருகின்றாராகவும், 'செய்யேன்' என எதிர்மறையாற் கூறியமை அயரா அன்பு மிகுதியை உணர்த்துவதாம்.

ஓடாமை, உருகாமை, பாடாமை பணியாமை என்னுமிவற்றுக் கெல்லாம் அடிமுதலாகவுள்ளது தேடாமையேயாகும் எனக் கொள்க.

உழைதரு நோக்கியர் கொங்கைப்
பலாப் பழத்து ஈயின்ஒப்ப
விழைதரு வேனை விடுதிகண்
டாய் விடின் வேலைநஞ்சுண்

மழைதரு கண்டன் குணமிலி
மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபரன் என்றுஎன்று
அறைவன் பழிப்பினையே. 46

என்னுமிதனால், யான் பெண்களை நயப்பவன் என்பதற்காக என்னை விட்டுவிடுகின்றாய்; விட்டால் இங்ஙனமெல்லாம் சீரைக் கவர்படு பொருள்படுமாறு கரந்துரைப்பேன் கூறப்படுகின்றது.

(பொ - ரை) மானை ஒத்த நோக்கினையுடைய மங்கையரை மருளவைத்து அவருடைய கொங்கைகளாகிய பலாப்பழத்தின் கண்ணே மொய்த்துவரும் ஈயைப்போல நோக்கம் வைத்து விரும்பி வருவேனை விடுகின்றாய். அங்ஙனம் விட்டுவிடின் வேலை செய்யும் பொழுதிலே பழிக்காற்றாது நஞ்சையுண்டு அது புறத்தார்க்குப் புலப்பட கறுத்த கண்டத்தினையுடையோன், நற்பண்பில்லான், கொன்று தின்பதற்காக மானை அகப்படுத்திக்கொண்ட வேடன், வரவரத் தேய்ந்துபோன அறிவினையுடையவன், கள்ளைக் கொண்டு தரும் வெறுக்கத்தக்க அயலான் என்று இங்ஙனம் எல்லாம் உன்னுடைய புகழ்களைக் கவர்பொருளாக்கிக் கூறுவேன்.

(வி - ரை.) சொல்வலைப் படுவோருள் சிறப்புற்றவர் மங்கையர் என்றலை,

" கறங்கு வெள்ளருவி ஏற்றலின் நிறம்பெயர்ந்து
தில்லை அன்ன புல்லென் சடையொடு
அள்இலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே. (புறநா. 252.)

எனவும்,

முகைப்பதம் பார்க்கும் வண்டுபோலத் தலைவியரை
நகைப்பதம் பார்க்கும் அறிவுடைமை.
(தொல். பொரு. மெய். 11. பேர் உரை.)

எனவும் வருவனவற்றால் உணர்ந்துகொள்க.

பழத்தினுடைய நறுமணத்தால் அதனகத்துள்ளதை நுகர விரும்பி உட்செல்ல முடியாமையால் அதன்மேல் மொய்க்கும் ஈயைப்போல, கச்சகத்துட்பட்ட கொங்கையைக் காணமாட்டாமையால், அதன்மேல் வேர்க்கொண்ட காட்சியறிவிலே இடையீடுபடாது நிலைபெற்று விழைந்துவரும் என்னை அதற்காகவே விட்டுவிடுகின்றாய் என விரிக்க. நஞ்சினை உண்டு கறுத்த கண்டத்தை யுடையவன், குணங்கட்கு அப்பாற்பட்டவன், மானை இடக்கையில் கொண்டவன், பதினைந்து கலையும் தேய்ந்த ஒரு கலையை

யுடைய சந்திரனை அணிந்தவன், பழமையைத் தருகின்ற பெருமையைப் பொருந்திய மேலோன், என்று கொள்ளல் இறைவனுக்கு இயல்பாகவுள்ள புகழுரையாம். இதுகாறும் உன்னைப் புகழ்ந்தே கூறிவந்தேன் ஆகலின் இகழ்ந்துரையேன் என எண்ணற்க. புகழ்மொழிக்குள்ளும் வசைப்பொருள் உண்டெனக் கூறுவார் இவ்வணம் கவர்பொருள்படக் கூறினார்.

அங்ஙனம் விடின் நஞ்சுண்ட நீலகண்டன் முதலாகக் கூறப்படும் புகழ்மொழிகள் எல்லாம் பொருள்படாவன்றோ? ஆதலின் அவற்றின் பொருள்களை வசைக்குரிய பொருள்களாகவே மாற்றி வெளிப்படுத்துவேன் என்றவாறு.

பழி தாங்கற்கியலாமையால் நஞ்சுண்டவனும், அதனை மறுக்க முடியாதவாறு கழுத்திற் கறையுடையவனும், தீய குணமுடையவனும், பேரளவில் தேவனேயன்றி, செயலளவில் யாதொன்றையும் செய்துமுடிக்க வியலாத மனிதனெனவும், அறிவு கெட்டவனும், கள்ளிறக்கி விற்கும் வெறுக்கத்தக்க இழி குலத்தினனும் சிவனாவான் என, உன்னுடைய புகழ்களை வசைகளாக்கிப் பரப்புவேன் என்க. பழை - கள், பழைமை; மா - வெறுப்பு, பெருமை; பரன் - அயலவன், மேலோன்.

மானிடன், கொன்று தின்பதற்காக மானை அகப்படுத்திக்கொண்ட வேடன், மானை இடக்கையில் கொண்ட சிவன், மான்போன்ற உமையை இடப்பாகத்திற் கொண்டவன்.

இதற்கு, பிரம விஷ்ணுக்களின் எலும்புகளை அணிந்தவன், சுடுகாட்டு எலும்புகளை அணிந்த ஊர்ப்பித்தன் என உரைத்தலுமாம்.

மக்கள் தேவர் முதலியோர்பால் வைத்த பெருங் கருணையால் அவர்களைக் கொல்லுமாறெழுந்த நஞ்சையுண்டதும், தனக்கென வொரு குணமுமின்றி, இயல்பாகவே அவற்றின் நீங்கியிருத்தலும், உமையை இடப்பாகத்திற் கொண்டதும், எலும்புகளை அணிந்ததும், சாபமெய்தி நலிவுற்ற இளமதியைத் திருமுடிமேலணிந்து காப்பாற்றியதும், எல்லாப் பழமைகட்குமுரிய மிக்க மேன்மையுடைமையும் என்னும் இவையெல்லாம் அவனுக்குப் போலிப் புகழ்களாம். யாரோ மயங்கி இங்ஙனம் புகழ்ந்திருத்தல் கூடும். அவற்றை நம்பாதீர்கள்! யானும் அங்ஙனமே மயங்கிப் புகழ்ந்து கூறியதும் உண்டு. அதற்காக அவன் செய்தது இங்ஙனம் என்னைத் துணையற்றவனாக்கிவிட்டமைதான். உண்மையில் மேற்கூறிய புகழ்கள் அவனுக்கு அமையுமேல், யான் இப்படி இருக்கவேண்டியதில்லையன்றோ? என்னுடைய பிழைகளினாலேயே யான் இப்படி இருப்பதாக அறிவுறுத்துகிறான். எனவே என்னாலேயே யான் திருந்திக்கொள்ள வேண்டுமென்பதும் பெறப்படுமன்றே? அங்ஙனமாகுமேல், அவனுக்குப் புகழ் ஏது? பிழைகளைத் தானே மேற்கொண்டு பிழை செய்தாரைப் புனிதமாக்கிய திறத்தினையே மேற்கூறிய புகழ்கள் எடுத்துக் காட்டுகின்றன. யான் பிழை கண்டு விடப்படின் அவனுடைய அப்புகழ்கள் எல்லாம் பொய் என்பது உ( யாக்கப்படும். ஆகலின் அவற்றுள் வசைகளே பொதிந்துள்ளன என்க.

இங்ஙனம் பழிப்பதுபோலக் காணப்படினும் சிலேடை வகையால் இப்பாட்டுப் புகழ் பொதிநது நின்றதெனக் கொள்க. இதனுள்ளீடு இங் ஙனமாதல் போலவே ''விடுதிகண்டாய'' என இப்பகுதியில் வருவனவற்றிற் கெல்லாம் விடடுவிடாது அணைத்துக்கொள் என உயிரப்பொருட் குறிப் பாகக் கொள்க.

பழிப்பில்நின் பாதப் பழந்தொழும்(பு) எய்தி விழப்பழித்து
விழித்திருந் தேனை விடுதிகண் டாய்வெண் மணிப்பணிலம்
கொழித்துமந் தாரம்மந் தாகினி நுந்தும்பந் தப்பெருமை
தழிச்சிறை நீரில் பிறைக்கலம் சேர்தரு தாரவனே. 47

என்னுமிதனால், நின்னால் அடக்கப்படுதற்குரிய என்னை அடக்கா மல், பழிப்பற்ற நின் திருவடியடைந்தும் மாறுபட்டு நின்னைப் பழித்துச் செய்வதறியாது திகைத்திருந்த என்னை விட்டுவிடுகின் ருய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) வெள்ளிய முத்துக்களோடு கூடிய சங்கினைத் தெள்ளி மந்தார மரத்தினைத் தள்ளும் (மெல்லிய செலவினை உடைய) ஆகாய கங்கையைக் கட்டுப்படுத்தும் பெருமையும், ஆங்கு அக்கட் டினைத் தழுவித் தங்கும் நீரிலே பிறையாகிய தோணியும் சேரா நின்ற சடையின்கண்ணே கொன்றைமாலையை அணிந்தவனே, பழிப்பற்ற நின் திருவடிகளுக்கு மரபு மரபாகவே தொண்டு பூண் டும், அதற்கு மாறுபட்டு வீழ்ச்சியடைந்த காரணத்தால் நின்னைப் பழித்துவிட்டு, அதன்மேல் செய்வதொன்று மறியாமல் திகைக்கும் என்னை விட்டுவிடுகின்ருய் எ - று.

(வி - ரை.) மணிப்பணிலம் - முத்துக்களுடன் கூடிய சங்கு. கொழித்தல் - (அலையினால்) தெள்ளுதல், ஒதுக்குதல் மந்தாரம் - மந்தார மரம். அது வானினின்றும் பெயர்க்கப்பட்டு இழுத்து வரப்பட்டது. நுநதும் - தள்ளும். இவற்ருல் வான்கங்கையின் ஆறறல் குறிக்கப்பட்டது. அவ்வாற்றல் இறைவனது ஆற்றலை நோக்குமிடத்து இல்லாததொன்ருகவே கருதப்படுமாகலின் ''மந்தாகினி'' என்ருர் மந்தாகினி, மெல்லிய செலவினை யுடைத்தாய் வானிற் செல்வது. 'மந்தாகினீ' என்னும் வடசொல் இறுதி குறுகி ''மந்தாகினி'' என நின்றது. தழிச்சு - தழுவுதல். இறை - தங்கு தல். வான் கங்கையின் செலவு தடைப்படுதலால தங்கிய நீர் என்க. 'பந்தப் பெருமைத் தாரவன்' என்றியைக்க. பந்தப்படுத்திய பெருமையை யுடைய தார் என்க. தார் - ஈண்டு சடையைக் கூட்டிக் கட்டிய கொனறை மாலை என்க. அக்கட்டிற்குள் கங்கை கட்டுப்படடு நின்றதென்க. அக்கங் கையின்மேல் இளமதி தோன்றிய தோற்றம தோணியின் தோற்றத்தை நிகர்த்தவாருயிறறு. கங்கையின் இறைநீர் மடுவாயிற்று. இதனை முன் னும்,

" வியன்கங்கை பொங்கி
வருநீர் மடுவுள் மலைச்சிறு தோணி வடிவின் வெள்ளைக்
குருநீர் மதி பொதியும் சடைவானக் கொழுமணியே "

என்றுங்குக் கூறினர். "தாரவனே" என்றதற்கு ஆற்றலால் கங்கையின் செருககடக்கி அவளை மணந்துகொண்டவனே என்பதுங் கொள்க. கங்கை வேகங் குன்றிச் சடைக்கண் தங்கியவாறு, என் மனமும் வேகங் குன்றித் திருவடிக்கண் தங்கிற்றிலது எனவும், வேகம் குன்றி அமைதி பெற்ற மனத்தின மேலாகத் தேய்வடைந்து வரும் யான் ஊர்ந்து பிறை கலை வளரப் பெற்றுங்கு வளர்ச்சியடைந்தேனில்லை எனவும் அநநீரக்கணனே தோணி போன்ற வளர்பிறை செல்லுமாறே என்னுள்ளத்து நிரம்பிய ஆனந்த நீர் மேல் யானும் மிதநது செலலுதல் வேண்டும் எனவும், எனையும் நாட்களையும் உரோகிணியை ஒப்ப விழையாது இருத்தலால் வரும கேட்டினை இகழ்ந்து கலை கெடப் பெற்ற திஙகளைப்போல யானும் நின்னருளாற் பெறற தொண்டினை இகழ்தலால் வரும் கேட்டினை உணரமாட்டாது இகழ்ந்து கேடுற்றேன் எனவும் குறிப்புப்பொருள் கொள்க. இன்னும், வான கங்கையைத் தாரிஞல் அணைத்தாங்கு என்னையும அணைத்தாயல்லை என்பதும் கொள்க.

விழித்திருத்தல் - செய்வதொன்று மறியாது திகைத்திருத்தல். முன்னர்ப் பழித்தமைக்கு இங்குக் காரணம் கூறினர். தொழும்பெய்தி விழுந்தமையே பழிப்பற்ற பாதத்தைப் பழிப்பதற்குக் காரணமாயிற்று. விழுதல் - திருவடித் தொண்டில் நிலை பெருது புறஞ் செல்லுதல்.

" தழிச்சிறை நீர் " என்பதை 'தழீஇ சிறைநீர்' எனக் கொண்டுரைப்பாரும் உளர்.

**தாரகை போலும் தலைத்தலை மாலைத் தழல் அரப்பூண்**
**வீரஎன் தன்னை விடுதிகண் டாய்விடில் என்னைமிக்கார்**
**ஆர்அடி யான்என்னின் உத்தர கோசமங் கைக்(கு) அரசின்**
**சீரடி யார்அடி யான்என்று நின்னைச் சிரிப்பிப்பனே. 48**

என்னுமிதஞல், நீ என்னைத் தொடர்பற்றவன்போலக் கருதி விடுகின்ருய், அங்ஙனம் விட்டுவிடின், எனக்கும் நினக்கும் உள்ள தொடர்பினை எடுத்துக் கூறி நின்னை இகழ்ந்து உலகம் சிரிக்குமாறு செய்வேன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) தாரகைபோன்ற தலைகளாலாகிய தலைமாலையினையும் தழலினையும் அரவாபரணத்தினையும் உடைய வீரனே, என்னை விட்டுவிடுகின்ருய். அங்ஙனம் விட்டுவிடின், பெரியோர்கள் என்னை நோக்கி இத்துணைத் துன்பத்துட்பட்ட நீ யாருக்கு அடியவன் என்று விஞவிஞல், உத்தரகோசமங்கைப் பதிக்கு அரசனுக்குச் சிறந்தவர்களாகிய அடியவர்களுக்கு அடியேஞவேன்

என விடை பகர்ந்து அவர்கள் உன்னை எள்ளி நகையாடுமாறு செய்வேன் எ - று

(வி - ரை.) தாரகை - நட்சத்திரம். 'அரா' என்றது "அர" எனக் குறுகிநின்றது. தலைமாலை - தலையிலணியும் மாலை.

"தலைமாலை தலைக்கணிந்து"

என்றலுங் காண்க. "சிரிப்பிப்பன்" எனப் பின்னர் வருதலால் "வீர" என்றது இழிவு குறித்து நின்றதென்க.

தம்மைப் புறக்கணித்து உடன்சென்ற அடியாரைச் "சீரடியார்" என்று குறிப்பிட்டார்; தம்மினும் இறைவனுக்கு உகந்தாராகலின் என்க இறைவன் விட்ட காலையும், "அது தவறு, அவ்வடியவனையும் உடன்கொள்ள வேண்டும்" என்றுணர்த்தாது வாளாவிருந்தாராகலின், "சீரடியார் அடியான்" என்று கூறினர். அவர் இழுக்குத் தோன்ற அவனைச் சிரிப்பித்த போது அடியவரும் சிரிக்கப்படுவார் என்க. இனி, ஒப்ப ஆளப்பட்ட அடிகள் நிலை இஃதாயின், சீரடியார் நிலையையும் ஆராயவேண்டியதில்லை என, "மிக்கார்" இகழ்தலையும் உடன்கொள்க.

சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத்
தொழும்பையும் ஈசற்(கு) என்று
விரிப்பிப்பன் என்னை விடுதிகண்
டாய்விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் தோல் உடைப் பிச்சன்நஞ்(சு)
ஊண்பிச்சன் ஊர்ச்சுடுகாட்(டு)
எரிப்பிச்சன் என்னையும் ஆளுடைப்
பிச்சன்என்(று) ஏசுவனே. 49

என்னுமிதனால் என் பிழைகளை நீ சீறினும், என் நற்றொண்டினை இகழினும் பெரியோரால் நகைக்கச் செய்வதோடு யானும் பலவாறு இகழ்வேன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) நீ குற்றம் எனச் சினந்துகொள்ளும் என் செயல்களைக் குற்றமாகா நற்றம் எனப் பெரியோரால் கொள்ள வைத்து எள்ளி நகையாடச் செய்வேன். அங்ஙனமே என் நற்றொண்டினையும் நீ உனக்குரியனவாகா எனக் கூறின் அவை யாவும் ஈசனுகிய நினக்கே உரியனவாம் என்று அவரால் எடுத்துப் பரப்பி நீ வெட்குமாறு வலியுறச் செய்வேன். நீ எனக்குச் செய்த வாறே, உன்னையும் யான், கொடிய யானையின் தோலையுரித்த பித்தன், புலியின் தோலையுடுத்த பித்தன், நஞ்சுணவை உண்ட பித்தன், ஊர்க்குப் பொதுவாகிய சுடுகாட்டு எரியோடாடும் பித்தன், தகவற்ற என்னையும் அடிமையாக்கிக்கொண்ட பித்தன்

என நின் புகழ்களைக் கரந்து இழிபொருள் தோன்றவும் ஏசுவேன் ; அதனையும் உணர்ந்துகொள்ளாது என்னை வாளாவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) விடின் விட்டதன் பேறு பின்னர் விளங்குமென அச்சுறுத்தியவாறு. பிழைப்பு - குற்றம். சீறுதல் - சினத்தல். பண்பிற் சிறந்த பல்லோர் நாப்பண் இத்தகை இழிந்தேனையும் ஆண்டு கொண்டாய் என்னும் பொருள் தோன்ற "என்னையும் ஆளுடைப்பித்தன்" என்றார். ஆட்கொண்டு வருந்த வைத்தாய் ஆகலின் பித்தனுவாய். அங்ஙனம் ஆக்கியமைக்கு உலகோரும் மற்று அடியோரும் சான்றுவர். இனி, தோலுரித்தல், அதனையுடுத்தல், நஞ்சுண்டல், சுடுகாட்டு ஆடல் முதலிய அனைத்தும் பித்தன் செயல் என்பது போதரும். இங்ஙனமாக நீ பித்துற்ற செயல்களையே செய்திருப்பினும், அவற்றை மெய்யறிவு கொண்டு செய்தன வாகவே நின் அடியாரையும் மனங்கொள்ள வைத்துப் பெருமை பெற்றாய். அப்பெருமையனைத்தும் சிறியனவேயாகும் என உலகத்திற்குத் தோன்றி நகை யெய்துமாறு மெய்ப்பிக்கும் வண்ணம் ஏசுவேன் என்க.

வஞ்சனையுற்றேன் தன் செயல்களைக் கரந்து வைப்போனாகலின், நீ வஞ்சனையுடையை அல்லை, பித்தனே ஆவாய்.

இனி, "பிழைப்பு" என்பதற்கு வாழ்க்கை யெனப் பொருள் கொள் வாருமுளர். அதனை "உத்தர கோசமங்கைக்கரசின் சீரடியார் அடியான்" என முன்னர்க் குறிப்பிட்டமையின் அங்ஙனம் கொள்ளற்க.

யானையுரி முன்னர்ப் பெறப்பட்டமையால் பின்னர் வந்த"தோல்" என்பதற்குப் புலித்தோல் என்றுரைக்க.

**ஏசினும் யான்உன்னை ஏத்தினும் என்பிழைக் கேகுழைந்து**
**வேசறு வேனை விடுதிகண் டாய்செம் பவளவெற்பின்**
**தேசுடை யாய்என்னை ஆளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்**
**காய்சின ஆலம்உண் டாய்அமு துண்ணக் கடையவனே. 50**

என்னுமிதனால், யான் உன்னை ஏசினாலும் ஏத்தினாலும் நெஞ்சம் என் பிழைக்கே வருந்துகின்றது அங்ஙனம் வருந்துவேனை விடக் கூடாத நீ விட்டுவிடுகின்றாய் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) செம்மை சான்ற பவளமலையின் ஒளியும் தோற்றமும் உடையோனே, என்னையும் அடிமையாக உடையவனே, சிறிய ஆற்றலையுடைய உயிர்களுக்காகக் கருணை கொண்டு, அவைகள் அமுதுண்ணுமாறு சுடுகின்ற வேகம் மிக்க நஞ்சையுண்டவனே, கடைத்தொழிலாகிய சங்காரத்தொழிலைச் செய்பவனே, யான் உன்னை ஏசினாலும் புகழ்ந்து துதித்தாலும் யான் செய்த

பிழைக்காக மனமிளகி வருந்துகின்றேன். அங்ஙனம் வருந்து கின்றேனை விட்டுவிடுகின்றாய் எ - று.

(வி - ரை.) "செம்பவளத் தேசு" என்றமையால் தோற்றமும் கொள்ளப்பட்டதென்க. ஆசானுக்கு அஃது ஒப்பாதல் நோக்கி "வெறுப்பு" என்றார்.

"காய்சின ஆலம்" என்றமைக்கேற்ப இனிய தண்ணிய அமுதம் என்க.

கடையவன் - கடைத்தொழில் செய்வோன். அஃதாவது இறுதித் தொழிலாகிய சங்காரத் தொழில் என்க. எனவே, அவனின் மேற்பட்டவர் இல்லை என்றபடி.

இங்ஙனம் மிக மேற்பட்ட கருணையுடையோனாக விருந்தும், யான் என் பிழையை உணர்ந்து வேசறவிடத்தும் விட்டுவிடுகின்றாய் என நயந்து கூறியவாறு.

ஏசுதல், வெங்கரியின் உரிப்பிச்சன் முதலாயவாறு ஏசுதல் என்க. ஏத்துதல், இத்திருவாசகம் முற்றினும் உணரப்படும். இரண்டிடத்தும் மனம் தன் பிழையை உணர்ந்து இடிக்கின்றது என்றவாறாம்.

"சிற்றுயிர்க்...... துண்ண" என்றமையால் என்னுள்ளத்திலே வந்து பாய்ந்து வருத்தும் நஞ்சினை நீக்கி நின்னருள் அமுதை யான் பருகுமாறு செய்க என்பது புலப்பட்டது.

திருச்சிற்றம்பலம்

# திரு எம்பாவை

"திரு எம்பாவை" யாவது, கன்னிப் பருவத்துப் பெண்கள ஒருவரையொருவர் துயில் எழுப்பி மார்கழி நீராடும் வரலாற்றினைக் கூறும் பகுதி. அங்ஙனம் நீராடப் புகும் கன்னியர் தாம் பூசித்து வரும் பாவையை உள்ளத்தில் நினைத்து அ... விளித்துத் தம் மியல்புகளைக் கூறி ஏனைய மகளிரைத் துயில் எடை செய்வதனுல் இப்பகுதி திரு எம்பாவை யெனப்பட்டது இப்பகுதித் திருப் பாடல்களின் இறுதிகள்தோறும் "எம்பாவாய்" என விளித்துக் கூறுதலைக் காண்க. ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை யினையும் நோக்குக.

மேற்போந்த திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம் என்ப வற்றுல், அடிகள் தம் செவ்வி போதாமையின் திருப்பெருந் துறை யில் இறைவன் அருளிய அவனே எல்லாமாய காட்சியும் தமக்கு ஒவ்வாது வெறி ஏற்றுவதொன்ருகலின் இறைவனைப் புகழ்ந்தும் இகழ்ந்தும் பலவாருகப் பாடி நெக்குவிட்டுருகுவதை யுணர்ந்த திருவருட் சத்தி, ஈற்றில் அன்பின் ஐந்திணைப் பேற்றைப் பயக்க வல்ல பலவகைக் காதல் நெறி பற்றியே பாடுக என நினைவுறுத் தலின் அங்ஙனமே திரு எம்பாவை முதல் திருப்பள்ளி எழுச்சி ஈருகப் பல்வகைக் காதல்நெறி பற்றியே பாடியருளினுர் திரு அண்டப்பகுதி கோயில் திருப்பதிகம் அன்ன பிறவற்றினும் அங்ஙனமாதலைக் கண்டு கொள்க.

இப்பகுதிக்கண் அமைந்த பாடல்கள் பாவைப் பாட்டுகள் எனப்படும். பேராசிரியர் அம்மனைப் பாட்டிற்கும் பாவைப் பாட் டிற்கும் தொல்காப்பியத்துள் விதியமைத்துப் போதலானும், ஆண்டாள் திருப்பாவைக்கருளிய தனியன்களுள் ஒன்ருகிய "சூடிக்கொடுத்த" என்னும் திருவெண்பாவின்கண் "தொல் பாவை பாடி" எனக் கூறியருளப்பட்டிருத்தலானும், பாவைப் பாட்டுப் பாடுதல் பழைய வழக்காரும் என்பதும், பாவைப் பாட் டிற்கும், அம்மனைப் பாட்டிற்கும் பேராசிரியர் 'திரு' என்னும் அடை புணர்த்தாது வாளா கூறியமையானும், ஆண்டாளும் அடிகளும் அப் பாவைப் பாட்டை முறையே திருப்பாவை, திருவெம்பாவை என அருளுதலானும் முற்காலத்தே வாளா கன்னியர் தாம் விரும்பிய தலைவரை மணக்கக் கருதிப் பாடியும் நோற்றும் வந்தனர் என்பதும், பின்னர் ஆண்டாளும் அடிகளும் முறையே கண்ணனை

யும் இறைவனையும் மணக்கக் கருதிப் பாடி அருளிச் செய்தனர் என்பதும பெறப்படும்.

பாவைப் பாட்டும் அம்மனைப் பாட்டும் நான்கடியின் மிக்கும் பத்தடிகாறும் வரும் தரவு கொச்சகங்களால் இயன்றனவாம் என்பதை (தொல். செய். 149-ம் 155-ம் சூத்திரங்கட்குப்) பேராசிரியர் உரைத்த உரையான் உணர்ந்து கொள்க. பாவைப் பாட்டுப் போன்றுவரும் அம்மனைப் பாட்டை அம்மனை வரி எனச் சிலப்பதிகார வாழ்த்துக் காதைக்கண்ணே கூறப்பட்டமையால் இதனையும் வரிப்பாட்டு (இசைப்பாட்டு) எனக் கூறுவதும் பொருந்தும்.

வரிப் பாட்டாவது, தலைவனுக்குரிய நிலனும் அவனுடைய சிறந்த தொழிலும் அறியக் கூறுவது. அங்ஙனமாதலை,

" வரி எனப்படுவது வகுக்குங் காலை
பிறந்த நிலனும் சிறந்த தொழிலும்
அறியக் கூறி ஆற்றுழி வழங்கல் "

(சிலப்பதி. அரங். 12-25 அடி.)

என்பதனுல் அறிக.

இனி மார்கழி நீராடி நோற்கும் இயல்பினையும் அதனுல் நாடு பெறும் பேறுகளையும் நோற்ருர் பெறும் பேறுகளையும் அன்ன பிற வற்றையும் ஆராய்தல் நலந்தருவ தொன்ரும்.

## மார்கழி நோன்பு வரலாறு

வினைமாசு தீர்ந்து அந்தக் கரணங்கள் தூயனவாதற் பொருட்டுப் பலவித நோன்பு முதலாய கருமங்களைப் பண்டைக் காலத்தோர் செய்துவந்தார்கள் அவ்வாருகிய கருமங்களுட் சில, தமக்கு முற்பட்டோர் பயின்று வந்த முறைகளைப் பின்பற்றிப் பிற்பட்ட சான்ருேராலும் பயிலப்பட்டு வருகின்றன. இவ்வாறு இல்லறத்தார் நிகழ்த்தி வந்த விரதங்களிலே மார்கழி நோன்பு என்பதும் ஒன்று, பண்டைக் காலத்திற் பிரசித்தமாக வழங்கிய தென்பது ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவையானும் இத் திருஎம்பாவையானும் நன்கு அறியக் கிடக்கின்றது.

நாடு வளங்குன்றிய போது மழை பெய்யவும், உத்தம நாயகர்களை யடைந்து இம்மை மறுமை நலன் எய்தவும் வேண்டிக் கன்னியர்கள் காத்தியாயனி தேவியைக் குறித்து மார்கழி முழுதும் நோற்பதும் அதன்பொருட்டு அவர்கள் வைகறையில் எழுந்திருந்து ஒருவரை யொருவர் துயிலெழுப்பிச் சென்று நதி தீரமடைந்து நீராடித் தேவியின் பிரதிமை யொன்றைச் செய்து தத்தம்

மனோரதம் நிறைவேறப் பூசிப்பதும் பண்டைய மரபு. இவ் வரலாற்றினை ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை வரலாற்றுடன் சிறிது ஒப்பிட்டுப் பார்ப்போம் :

" ஆயர்பாடியிலே கண்ணனும் ஆய்ச்சியரும் யௌவனப் பருவத்து விளையாடல் செய்து திரிந்தாராக, அதனைக் கண்ட முதியோரான ஆயர் ' கண்ணனைப் பெண்கள் விழிக்கலாகாது ' என்று கருதி அவ் வாயர் மங்கையரை நிலவறையில் அடைத்தார்கள், அன்றுதொட்டு அவ் வாயர்பாடியில் மழை பெய்யாது போக ஆயர்கள் அப் பெண்களை அழைத்து ' மழை வேண்டி நோற்பீர்களாக' என்று ஏவினர் அவர்களும் தாம் முன்பு கண்ணனையே தலைவனாக அடையவேண்டும் என்று கருதியிருந்தாராகலின் மழை பெய்யாக் குறையை நீக்க வேண்டிக் கண்ணனைத் தலைமையாக நியமித்துக்கொண்டு தங்கள் தோழிமாரையும் துயிலுணர்த்தி அழைத்து வந்து யமுனா நதியில் நீராடி நோற்றுக் கண்ணனை நாயகனாக அடைந்துகொள்ளும் மனோரதம் நிறைவேறப் பெற்றார்கள் " என்பதே திருப்பாவையின் வரலாறாகும்.

இம் மார்கழி நோன்பு வரலாறு ஸ்ரீமத் பாகவதம் தசமஸ் கந்தம் 22-ம் அத்தியாயத்தில் பின்வருமாறு கூறப்படுகின்றது :

" ஏமந்த ருதுவின் முதல் மாதத்தில் (மார்கழியில்) கோகுலப் பெண்கள் காத்தியாயனி விரதத்தைத் தொடங்கி அவிசைப் புசித்துக் கொண்டு அதனை நடத்தி வந்தார்கள். சூரியோதயத்தில் அவர்கள் எழுந்திருந்து யமுனா நதியில் நீராடி மணலால் காத்தியாயனி உருவம் சமைத்துச் சந்தனம் மலர் தூபம் தளிர் பழம் என்பவற்றைக் கொண்டும் சிறந்த நைவேத்தியங்கள் படைத்தும் அத்தேவியைப் பூசித்து வந்தனர். ' காத்தியாயனீ, ஏ மஹாமாயே, ஏ மஹா யோகினீ, ஏ ஈஸ்வரீ உன்னை வணங்குகின்றோம். எங்களுக்கு நந்தகோபர் திருமகனாகிய கண்ணனை நாயகனாக அருள் செய்வாயாக ' என்று செபித்து ஒரு மாதம் பூசை செய்து விரதத்தை விடாது நடாத்திவந்தனர். அக்கோபிகாஸ்திரீகள் ஒரு நாள் வழக்கம்போல வைகறையில் எழுந்து கண்ணன் நாமங்களைப் பாடிக்கொண்டு சென்று தங்கள் ஆடைகளைக் களைந்து நீரில் இறங்கினர். கண்ணன் அவ்விடம் சென்று அவர்கள் ஆடைகளைக் கவர்ந்துகொண்டு ஆங்குள்ள ஒரு கடம்ப மரத்தில் ஏறியிருந்தான். பெண்கள் நீராடி முடிந்த பின் ஆடைகளைக் காணாமையால் அங்கு கடம்ப மரத்திலிருந்த கண்ணனைக் கண்டு தங்கள் ஆடைகளைத் தருமாறு வேண்டினர். கண்ணன் அவர்கள் அன்பைப் பலவாறு

சோதித்து அவர்கள் ஆடைகளைக் கொடுத்து 'உங்கள் நோன்பின் பயனை இன்றிரவு உங்கட்கு நிறைவேறுமாறு செய்வோம்' என்று கூறி விடை கொடுத்து அனுப்பிவிட்டான்.''

இவ்வரலாறுகளினாலே நாடு வளம் குன்றியபோது மழை பெய்யவும், உத்தம நாயகர்களை யடைந்து நலன் எய்தவும் வேண்டிக் கன்னியர் காத்தியாயனி தேவியைக் குறித்து மார்கழி முழுதும் நோற்பதும் அதன்பொருட்டு அவர்கள் வைகறையில் எழுந்திருந்து ஒருவரை யொருவர துயிலெழுப்பிச் சென்று நதி தீர மடைந்து நீராடித் தேவியின் பிரதிமையைச் சமைத்துப் பூசிப்பதும் பண்டைய மரபென்பது நன்கு பெறப்படும்.

இங்ஙனமே பிங்கலந்தையிலும் ஐந்து முதல் ஒன்பது ஆண்டு வரை உள்ள சிறு கன்னிப் பெண்களே பனி நீர் தோய்தற்கும் பாவையாடற்கும் உரியர் எனக் கூறப்பட்டுள்ளது.

இனி இந்நோன்பு காத்தியாயனி தொடர்புடையதென்பதைத் திருப்பாவையின் ஈறுகடோறும் வரும் ''எம்பாவாய்'' என்ற தொடரும் அடிகள் கூறும் திருவெம்பாவைப் பாக்களில் வரும் ''எம்பாவாய்'' என்ற தொடரும் விளக்கும். அப்பாவை ஈர நுண் மணலாற் செய்த தேவியின் பிரதிமையைக் குறிக்கும் ''நம் பாவைக்குச் செய்யுங் கிரிசைகள்,'' ''நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்,'' ''பிள்ளைகளெல்லாரும் பாவைக் களம் புக்கார்'' என வரும் திருப்பாவைத் தொடர்களிலும் பிரதிமை வைத்துத் தேவி வணக்கம் செய்யும் குறிப்புத் தோன்றுதல் காண்க.

இனி இத்திரு எம்பாவையை அடிகள் திருஅண்ணாமலையில் மார்கழித் திங்களில் மகளிர் வைகறையில் எழுந்து ஏனைய மகளிரையும் துயிலெடை செய்து பொய்கையில் நீராடிய இயல்பைக் கண்டு பாடினார் என்பாரும் உளர். இப் பாசுரங்களுள் ''எம்பாவாய்'' என முடிந்து நிற்றலோடு ''போற்றியாம் மார்கழி நீராடேலோ ரெம்பாவாய்'' என மார்கழி நீராட்டம் கூறுதலும், அம்மாதந்தே கோபியர் கண்ணனைக் கணவனாக அடையவேண்டி நோற்றது போலவே அவர்களும் சிவனடியாரைத் தம் நாயகராக அடைய நோற்றதை யுணர்த்தலும் காணக்கிடக்கின்றன.

மேலும், ஆண்டாள் ''ஆழி மணிவண்ணா'' எனும் திருப் பாட்டிலே வருணனை வேண்டியவாறே, ''முன்னிக் கடலைச் சுருக்கி'' என வரும் திருப்பாட்டிலே மழைக் கடவுளை அடிகள் வேண்டுதலும் காண்க. இன்னோரன்னவற்றால் திருப்பாவையும் திரு எம்பாவையும் வேறு வேறு தெய்வச் சார்புடையவேனும் ஒரே பொருட்

குறிப்புடையன என்பது தெளிவு. இவற்றுள் எது முந்தியது என இப்போது துணிதற்கிடனின்று.

திருவாசகத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் அதன் பொருள் விளங்குமாறு பண்டைக்காலத்துப் பெரியாரொருவரால். தலைக் குறிப்புகள் எழுதப்பட்டுள்ளன. திரு எம்பாவைத் தலைக்குறிப்பு "சத்தியை வியந்தது" என்பதனால் திருப்பாவையும் தேவியின் வணக்கத்தையே கருத்தாக உடையது என்பது தெளியப்படும். எனவே, திருப்பாவை திரு எம்பாவை என்னும் இரண்டும் தேவி யின் விரதத்தை மகளிர் கொண்டாடிய முறையைக் குறிப்பனவே எனக் கொள்வதில் இழுக்கின்மையுணர்க ஆனால் யை வியந்தது" என்பதற்கு மனோன்மணி முதல் வாமை ஈருக உள்ள நவசத்திகளும் ஒன்றையொன்று பிரேரிக்க அதனால் பிரபஞ்ச உற்பத்தி தொடங்குங் காலம் மார்கழி என்றும் அச்சத்திகளின் பிரேரகங்களையே வாதவூரடிகள் துயிலுணர்த்துவதாகக் கூறினர் எனவுங் கருத்துரைப்பர்.

அதனுண்மை எத்தகையதாயினும் பெண்கள் மார்கழி நீராடி நோற்பதையே கொண்டருளினர் அடிகள் என்பதே யாவரும் எளிதில் உணரக்கூடியது. இத்திரு எம்பாவையில் சத்தி விரதமே கூறப்பட்டது என்னும் கொள்கையை "முன்னிக் கடலை" என்ற பாசுரத்தில் பராசத்தி உவமை கூறப்பட்டிருத்தலும் "பேதித்து நம்மை" என்னும் பகுதியும் நன்கு வலியுறுத்தும்.

இவைகளேயன்றி, யாப்பருங்கல விருத்தி 93-ம் சூத்திர வுரையுள்,

"கோழியுங் கூவின குக்கி லழைத்தன
தாழி யுணீலத் தடங்கணீர் போதுமினோ
ஆழி சூழ் வையத் தறிவ னடியேத்தி
கூழை நனையக் குடைந்துங் குளிரபுனல்
ஊழியுண் மன்னுவோ மென்றேலோ ரெம்பாவாய்"

என்ற பாட்டொன்று உதாரணங் காட்டப்பட்டுள்ளமையானும் திருப்பவை, திரு எம்பாவை போல வேறும் பிரபந்தமுளவென்று தெளியப்படும்.

## நோன்பினுக்குரிய செயல்கள்

"ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்து பரம னடிபாடி
நெய்யுண்ணோம், பாலுண்ணோம், நாட்காலே நீராடி

மையிட்டு எழுதோம், மலரிட்டுநாம் முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம் ”
(திருப்பாவை 2.)

என்னும் பாடற்பகுதியினாலே மார்கழி ஆதிரை நாளிலே கன்னிமை கழியாதார்க்கு உரிய விரதங்கள் கூறப்பட்டுள்ளன. அந்நோன்பினால் உலகம் பெறும் பேறுகள்,

“ உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்,”

“ நீங்காத செல்வம் நிறைந்து ”

“ தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்குபெருஞ் செந்நெல் ஊடு கயல் உகள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள் ”
(திருப்பாவை 3.)

என்னும் இவைகளாம்.

## நோற்றார் பெறும் பேறுகள்

“ தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது
வாயினாற் பாடி மனத்தினாற் சிந்திக்க
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசு ஆகும்.”

என்னும் இவைகளாம்.

இவை நிற்க, திரு எம்பாவையினும் வேறுபட வந்த பகுதிகளும் திருப்பாவைக்கண்ணுள்ளன. ஆண்டாள் அருளிய திருப்பாவை இயற்கையழகொன்றே உடையதாகவும் அடிகளருளிய திரு எம்பாவை அவ்வியற்கையழகொடு செயற்கையழகும் ஒருசேரப் பெற்றதாகவும் இருத்தல் கால ஆராய்ச்சி, கவித்துவ வரலாறு முதலாயவற்றை ஆராய்தற்கு உபகாரப்படுவனவாம். இவை பின்னர் உரைக்கப்படும்.

திருப்பாவை பாடியருளிய திருநோக்கம் வேங்கடவற்குத் தம்மை விதித்தற்கும், உடம்படு புணர்த்தலால் திரு எம்பாவை பாடிய திருநோக்கம் இறைவன் திருவடியைப் புணர்தற்கும் ஆகும் என்பது அத்தனியனாற் புலப்படும்.

“ தொல்பாவை பாடியருளவல்ல பல்வளையாய் ” என அத்தனியன் அருளிச் செய்தலால் பாவைப் பாட்டினைத் தெய்வத் திறத்தோடு புணர்த்துப் பாடிய வல்லமையும் அது பிறர்க்கு அரிது

என்பதுவும் பெறப்பட்டன. இன்னும் இதனுல் ஆண்டாளும் பாவைப் பாட்டினைத் திருப்பாவைப் பாட்டாக மாற்றிச் சாற்றி யருளினுள் என்றும், அன்பின் ஐந்திணைப் பேறே வீடு பேருகும் என்னும் தமிழ்மறை மரபோடு ஒன்றித்துச் சேரற்கு வைணவத் திற்கு இடந்தந்தருளியவள் ஆண்டாளே ஆவாள் என்றும் ஒரு வாறு எண்ணற்கு இடமுண்டு.

## மார்கழி நீராடலும் சங்கநூல் வழக்காறும்

இம்மார்கழி நீராடலைத் "தைந்நீர் ஆடுதல்" எனப் பண்டை நூல்கள் எல்லாம் கூறுநிற்கும். தலைவர் கண்ணிமை கழியாத பேதையர்பால் வலிய வந்து தாரும் தழையும் அவரை ஏற்குமாறு தந்த பின்னர்த் தமது உட்காதலை வெளிப்படுத்திச் சென்ருராக, அவற்றை அறியாது ஏற்றுக்கொண்ட அக்கன்னியர் கற்பின் மேம் பட்டு அவரையே கணவராகப் பெற்றுக்கொள்ளுதல் வேண்டும் மரபாகும் எனக் கருதி அதனைப் பெறும் பொருட்டு மார்கழிநீர் ஆடுதல். இதனை,

"பெரும்புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து
தழையும் தாரும் தந்தனன் இவன் என
இழைஅணி ஆயமொடு தவிநாண் தடைஇத்
தைஇத் திங்கள் தண்கயம் படியும்
பெரும்தோள் குறுமகள்" (நற். 80.)

எனவும்,

"தையில்நீர் ஆடிய தவம் தலைப் படுவாயோ" (கலி. 59.)

எனவும் மார்கழிநீர் ஆடலையே தைநீர் ஆடலாகப் பண்டை யோர் வழங்கி வந்தனர் என்பதை இதன்கீழ்க் காட்டப்படும் பாட்டும் வலியுறுத்தும்·

"கனைக்கும் அதிர்குரல்கார் வானம் நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிரும் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்
புரிநூல் அந்தணர் பொலம்கலம் ஏற்ப
வெம்பாது ஆக வியன்நில வரைப்புஎன
அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர்பு ஆடிப் பருமணல் அருவியின்
ஊதை ஊர்தர உறைசிறை வேதியர்

நெறிநிமிர் நுடங்கு அழல் பேணிய சிறப்பில்
தையல மகளிர் ஈர்அணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று." (பரி. 11. 74-87)

இதன் பொருள் வருமாறு

கரியமுகில் இடிக்கும் குரல் நீங்கப் பனி மிகுதலால் குளிரால் நடுங்குதலையுடைய (முன்பனி ஆகிய) பருவத்தின்கண் ஞாயிறு காந்துதலைச் செய்யாத செறிந்த கடைமாரியையுடைய மார்கழி மாதத்தின்கண்ணே திங்கள் மறுவோடு நிறைந்த திருவாதிரை நாளின்கண் விரிந்த ஆகம நூற்பொருளையுணர்ந்த பூசகர் அத் திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்கு விழாவைத் தொடங்கக் கன்னிமை கழியாப் பேதையர் தாம் அணிந்துள்ள ஆபரணங்களைப் பூணூலை அணிந்த அந்தணர்களுக்குத் தான மாகக் கொடுத்தலினாலே அவர் அவற்றை ஏற்றுக்கொள்ள, அங்ஙனம் அவர்க்குக் கொடுத்த ஆராய்ந்த வளையல்களையணிந்த கன்னியர், 'பெரிய நில உலகம் வெயிலால் வெவ்விது ஆகாது மழையாற் குளிர்வது ஆகு' என்று சொல்லித் தாயருகில் நின்று அம்பா ஆடுதலினால் சாத்திரக் கூறுகளை உணர்ந்த முனிவருடைய முது பார்ப்பனிமார் நோன்பு நோற்கு முறைமையைக் காட்டப் பனியை உடைய விடியலின்கண்ணே நீராடிப் பருமை ஆகிய மணலை உடைய ஒழுகுகின்ற நீரிலே குளிர்வாடை வீசுதலால் வைகையாகிய நின்னுடைய கரைக்கண் உறையும் அந்தணரது வேத நெறியால் வளர்க்கப்பட்ட அசைதலையுடைய தீயினைப் பேணிய சிறப்புடனே அவ்வொப்பனையையுடைய மகளிர் சென்று தம்முடைய ஈர அணியைப் புலர்த்தா நிற்க அவ் அந்தணர் அவ் அழற்குக் கொடுக்கும் மடை, வையையே, நினக்கு வாய்ப்புடையது வாய இருந்தது.

இதனால், பூசகர் இறைவற்குச் சடங்குகள் தொடங்குங் காலத் திலே அந்தணர்க்குப் பொற்கலங்களைக் கொடுத்து முது பார்ப்பனி முறைகாட்ட பனியையுடைய விடியலிலே உலகம் வெம்பாது மழை பொழிக என்று வாழ்த்தித் தாயருகு நின்று நீராடிக் கரைக்கண்ணே போய்ப் பூசகர் வளர்க்கும் தீயருகே நின்று ஈர அணியைப் புலர்த்தா நிற்பர்.

தைநீர் ஆடுகையில் பூசகரை உள்ளிட்ட ஆடவர் எவரும் ஆங்குச் செல்லார் என்பது தோன்ற "முனித்துறை முதல்வியர் முறைமை காட்ட" என்றார்.

[நளிமாரிப் பிற்குளத்து - நளி பின்மாரிக்குளத்து - செறிந்த

மாரியை உடைய மார்கழிமாதத்துக் குளம். மார்கழி மாதத்து ஆதிரை நாளில் நிறைமதி என்க. பொலம்கலம் - பொன்னு பரணம். வெம்பாது - வெவ்விது ஆகாது. அம்பா - தாய் (வட சொல்), தாயொடு ஆடப்படும் சடங்கு அம்பா ஆடல் எனப்பட்டது. முனித்துறை முதல்வியர் - துறை முனி முதல்வியர். துறை - ஆகமத்துறை தையல் - ஒப்பனை. நுடங்குதல் - அசைதல்.]

"மை ஆடல் ஆடல் மழபுலவர் மாறு எழுந்து
பொய் ஆடல் ஆடும புணரப்பின் அவர் அவர்
தீ எரிப்பாலும் செறிதவம் முன்பற்றியோ
தாய் அருகா நின்று தவத் தைந்நீர் ஆடுதல்
நீ உரைத்தி வையை நதி." (பரி. 11; 88-92.)

இதன் பொருள் வருமாறு "மை ஓலை பிடித்த இளைய புலவரது (பாட்டுக்கள் பாட முயலும்) விளையாட்டிற்கு மாறாய் எழுந்து காமக் குறிப்பில்லாரேனும் உள்ளார் போலப் பொய்யாக விளையாட்டைச் செய்கின்ற ஆயத்தினையுடைய அம்மகளிர் முற்பிறப்பிலே நீர்க்கண் அன்றி நெருப்பின்கண் நின்று ஐம்புலன்கள் அடக்கிச் செய்யும் தவத்தை அடுத்து அடுத்துச் செய்ததாலோ இப்பிறப்பிலே (அங்ஙனம் வருந்தி ஐம்புலன் அடக்காராய்த்) தாயருகா நின்று தவமாகிய தைந்நீர் ஆடுதலை நின்கட் பெற்றது? வையை ஆகிய யாறே, அதனை எனக்கு உரைப்பாயாக"

மார்கழி ஆதிரை நாள் முதலா ஆடிவருதல் என்றே அங்கே கூறிய அதனையே இங்குத் தைந்நீர் ஆடல் எனக் கூறிய அதனாலே தை மாதத்துப் பூசம் வரையிலும் அந்நீராடல் நிகழப்பெறுவது என்று தெளிக முன்னோர் அம்பா ஆடலை முடிவு கருதித் தைந்நீர் ஆடல் என்றும், அதனையே பின்னோர் அதன் தொடக்கங் கருதி மார்கழிநீர் ஆடல் என்றும் வழங்கிவந்தனர் எனத் தெளிக தைந்நீர் ஆடல் அரியது ஒன்று என்பது ஈண்டு விளக்கியவாறு காண்க.

கல்வி தொடங்கிய மழபுலவர் பாட்டுப் பாடப் புகுந்ததுபோல இவ்விளங் கன்னியரும் காமக் குறிப்பில்லாராக விருந்தும் இன்னானைக் கணவனாகப் பெற்று இல்லற மாண்பு சிறத்தல் வேண்டும் என்று முதுபார்ப்பனி சொல்லியதனையே தாமும் சொல்லி நீராடுதலினாலே அவர்க்கு மாறாக இவர் எழுந்தனர் என்றார்

தெய்வத்தைப் போற்றி உயிர் பன்னிரண்டும், மெய் பதினெட்டும் எழுதி, மை பூசிய ஏட்டினைக் கைப்பிடித்துக் கல்வி நலன் இஃது என்னும் உணர்வில்லாராய் ஆசான் சொல்லியவற்றையே கேட்டுச் சொல்லும் இளைஞரை "மழபுலவர்" என்றார்.

மை ஆடல் - எழுத்துக்கள் எழுதப்பட்டு மை பூசிய ஏடு; ஆகு பெயர். ஆடல் மழுபுலவர் - கற்றலையும் ஒரு விளையாட்டாகக் கொண்ட சிறுர். தீஎரி - தீக்கும் எரி. தைந்நீர் ஆடுதலும் ஒரு தவம் எனக் கொள்க.

" கழுத்தமை கைவாங்காக் காதலர்ப் புல்ல
விழுத்தகை பெறுகென வேண்டுதும் என்மாரும்
பூவீழ் அரியில் புலம்பிப் போகாது
யாம வீழ்வார் ஏமம் எய்துக என்மாரும்
கிழவர் கிழவியர் என்னுது ஏழ்காறு
மழ வீன்று மல்லற்கேள் மன்னுக என்மாரும்."

(பரி. 11; 116-121.)

என்னும் இவற்ருல் அம்மகளிர் நுதலிப்புகுந்து ஆடுதலையும் அவர் ஆடற்கண் நுவலும் ஏனையவற்றையும் உணர்ந்து கொள்க.

கழுத்தமை - மங்கல அணி. கைவாங்கா - நீங்காது. விழுத் தகை - விருத்தகை, தனிச்சிறப்பு. மல்லல் - செல்வம். கேள் - சுற்றம். ஏழ் - ஏழ் பிறவி. மழஈன்று - இளமைதர.

மார்கழி மாதத்துத் திருவாதிரைத் திருநாளுக்கு முதல் நாள் செவிலி தலைமகளை நோக்கி, "மார்கழிநீர் ஆடல் நாளைக்கு ஆதலால் யானும் நின் ஆயத்தாரும் ஊரவரும் உன் பள்ளியறைக் கண் வைகறை வந்து துயில் எழுப்புவோம். அங்ஙனம் எழுப்பும் போது நீ எதிர்மொழி பகராதும், சினவாதும் எழுதல் வேண்டும்" என்ருள். அதனைக் கேட்ட தலைமகள் "நீவிர் வந்து என்னை எழுப் புதல் வேண்டா. யானே நும்மை வந்து எழுப்புவேன்" என எதிர் மொழிந்தாள்.

திருவாதிரை நாட் காலையிலே தலைமகள் தம்மை வந்து எழுப் பாத தன்றித் தாம் எழுப்பியும் எழாமை குறித்த வெகுளியோடு இப்பகுதி தொடக்கம் பெறுகின்றது. ஆதலால் இதன் பாக்கள் எல்லாம் வெண்டளை கொண்டு வந்தனவேனும் வெகுட்சி காரண மாகக் கலிஓசை பெற்றமையால் இறுதியடி முச்சீரொடு முடியா வாய் அடிநிரம்பி அந்நான்கடிகளிலும் மிகப்பெற்றுக் கொச்சகத் தரவுகள் ஆயின.

இதன் சிறப்பினை,

இன்ன பண்பில் இன்தைந்நீர் ஆடல்
மின்இழை நறுநுதல் மகள்மேம பட்ட
கன்னிமை கனியாக் கைக்கிளைக் காம
இன்இயல் மாண் தேர்ச்சி இசைபரி பாடல்
முன்முறை செய்தவத்தின் இமமுறை இயைந்தேம்

மறுமுறை அமையத்தும் இயைக
நறுநீர் வையை நயத்தகு நிறையே. (பரி. 11, 134-140)

என்னும் பாடற் பகுதியானும் அறிந்துகொள்க.

இத்திரு எம்பாவைப் பகுதியினைத் தலைமகள் கடைதிறப்பதற்கு முன்னும் அவள் எழுந்து கடைதிறந்த பின்னும் நிகழ்ந்தனவாய இரு பால்களாகக் கொள்ளல் கூடும்.

அவற்றுள் கடைதிறப்பதற்கு முன்னதுவாகிய பால், ஆயத்தார் கூற்றொன்றே அமைந்ததுவும், ஆயத்தாரும் தலைமகளும் தம்முள்ளே வினவிக் கொண்டதுவும் என்னும் இரண்டு உட்பால்களையுடையது. ஆயத்தார் கூற்றொன்றே அமைந்ததாகிய உட்பாலின்கண் முதலாவதும் ஐந்தாவதும் ஆகிய இரு திருப்பாட்டுகளும் அடங்கும். மற்று ஆயத்தாரும் தலைமகளும் தம்முள்ளே வினவிக் கொண்டதாகிய உட்பாலின்கண் இரண்டாவதும் மூன்றாவதும் நான்காவதும் ஆகிய மூன்று திருப்பாட்டுகள் அடங்கும்.

கடைதிறந்த பின்னதுவாகிய பாலும், தலைமகள் ஆயத்தாரொடு ஒன்று படாததுவும், ஒன்று பட்டதுவும் ஆகிய இரு உட்பால்களையுடையது ஒன்று படாததாகிய உட்பாலின்கண்ணே, ஆறாவதும், ஏழாவதும், எட்டாவதும் ஆகிய மூன்று திருப்பாட்டுகள் அடங்கும். ஒன்று பட்டதாகிய உட்பாலின் கண்ணே, ஒன்பதாவது தொடக்கம் இருபதாவது வரையுமுள்ள பன்னிரண்டு திருப்பாக்களும் அடங்கும்.

இதனைக் கீழ் உள்ள அட்டவணையிற் கண்டு தெளிக.

திருவெம்பாவை

| கடை திறக்கு முன் | | கடை திறந்த பின் | |
|---|---|---|---|
| ஆய்த்தார் கூற்று | தம்முள்ளே வினவியது | ஒன்று படாதது | ஒன்று பட்டது |
| செய் 1, 5 | 2, 3, 4 | 6, 7, 8 | 9-20 |

இத்திரு எம்பாவைப் பகுதி திருவண்ணுமலையில் அருளிச் செய்யப்பெற்றதென்ப.

---

குறிப்பு: மார்கழி நீராடலைப்பற்றி மேலும் அறிய விரும்புவோர் செந்தமிழ்ப் பத்திரிகை-1 தொகுதி 19, 428-ம பக்கத்தினை நோக்குக.

# சத்தியை வியந்தது

## கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடம்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
விதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னேஎன்னே
ஈதேஎம் தோழி பரிசேல்ஓர் எம்பாவாய். 1

இஃது, ஆதிரை நாட்குமுன் மார்கழி நீராடற் சிறப்பினை உணர்ந்து, அவ்வாதிரை நாளில் நீராடல் வேண்டுமெனத் தலைமகளும் ஆயத்தாரும் தம்முட் கலந்து பேசிய பேச்சின்படி, அவ்வாதிரைநாள் வைகறையில், முன்னம் துயிலுணர்ந்த ஆயத்தார், தலைமகளைத் துயிலுணர்த்த வேண்டி, அவள் பள்ளியறை வாயிற்படியைப் பனி தலைக்கண் வீழப்பற்றி நின்று, தலைவன் புகழ்களை எடுத்தோதித் துயிலுணர்த்தியும் உணராதாளை எள்ளி, அவளது பயனற்ற நிலையைத் தம்முள்ளே வெறுத்துக்கொண்டு, இன்னோரன்ன இயல்புகளைத் தாம் பூசித்தற்குரிய பாவையை விளித்து முன்னிலைப்படுத்திக் கூறிக்கொண்டது.

(பொ - ரை ) (ஆயத்தாருள் ஒருத்தி துயில்வாள்போலப் புறத்தே புலனாகும்படி செய்து தன்னைத் துயிலுணர்த்தினரோ எனக் கவன்று விம்முதலுடன் கிடந்த தலைமகளை நோக்கி) ஒளியுடைத்தாய் அகன்ற கண்களையுடைய பெருமை பொருந்தியவளே, முதலும் முடிவும் இல்லாத அரிய பெரிய ஒளியானவனை யாம் புகழ்ந்து பாட(ப் பெண்ணே, நீ அதனைக் கேட்டனையாகியும் கேளாதாய் போல) இன்னமும் துயில்கின்றனையோ ? (யாம் அனைவரும் எடுத்துப் பாடிய பாட்டின் ஒலியை உட்கொள்ளாத) நின்னுடைய செவிதான் (என்ன) வன் செவியோ என்றாளாக,

(அதன்மேல் மற்றொருத்தி) கடவுளர் கடவுள் ஆயினானுடைய நீண்ட கழலணிந்த திருவடிகளை யாம் வீதிக்கண் நின்று வாழ்த்திய வாழ்த்துப் பாக்களின் ஒலி சென்று அவள் காதினுட் கேட்ட அளவில் உடலை மறந்து ஏங்கித் தேம்பியழுது மலர் நிறைந்த படுக்கையினின்றும் கீழே புரண்டு மார்கழி நீராடலுள் ஒன்றற்கும்

பயன்படாதவளாகி இன்னவாறு கிடந்தனள்; இஃது என்னே என்னே! (நாங்கள் பூசித்தற்குரிய) பாவையே, எங்கள் தலைவியி னுடைய இயல்பாவது இது என்றுள் எ - று.

(வி - ரை.) "ஏலும" "ஓரும்" அசை. "தங்கையேல் ஓர் அம்மானை" (சிலப். வாழ்த்து. அம்மானைவரி. அரும். உரை.) என்றது போல "பாவாய் ஓர்" எனக்கொண்டு பாவையே எந்தோழி பரிசு ஈது; இதனை ஓர்ந்துணர்வாயாக என உரைப்பினும் நனி பொருந்தும்.

தம் வேட்கை மிகுதியால் திருவெம்பாவையாகிய நோன்பினை முன்னிலைப்படுத்தினர் எனக் கூறுதலும் ஒன்று. பாட்டினை அங்ஙனம் அமைத்தார் என்றலுமாம, "அமமானை" என அம்மானையாடுகின்றார் அழைத்தல் போல. (சிலப். வாழ்த். காதை. அம். வரியையும் அதன் குறிப்பையும் நோக்குக.)

இனி "எமபாவாய்" என்றது தலைமகளையே குறிக்கும் எனக் கொள் வாரும் உளர். அங்ஙனம் கொள்ளின் (வலிதாகக் கூறுவாரைச் செவிலி விலக்கி) 'எம்பாவாய் துயிலுணர்ந்தெழாய்' (என வாளா துயிலெடை செய்தது) என உரைத்துக் கொள்வாராக.

மேலும் "கோயிறபிணுப் பிள்ளைகாள்" என அவரை விளித்து விறைய பின்னும் தலைமகளை விளித்துத் துயிலெடுப்புதல் முரண்பாடாகும். அன்றியும்,

"என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்"

(திருவெம். 16.)

என்னும் திருப்பாடற்கும் நலிந்து பொருள் செய்ய நேரும். பிறவுமன்ன.

"வளருதியோ" எனப்பட்டாளும் "கிடந்தாள்" எனப்பட்டாளும் தலைமகளையன்றிப் பிறரைக் குறிப்பன என்பாரும் உளர். அங்ஙனம் அவர் கொள்ளின் அடுத்த பகுதிக்கண் வரும் "அம்மானாய்" என்றதனை யும் அங்ஙனம் கொள்ளாமைக்குக் காரணம் இன்மையால் அவர் உரை கொள்ளற்க.

விமமுதல்-தேம்பியழுதல், ஏங்குதல். தலைமகள் ஆழ்ந்து உணர்வற்றுத் தூங்கும்போது வாழ்த்தொலி கேட்டு, தான் முன்தினம் நானே வந்து உங்களைத் துயிலெழுப்புவேன் எனச் சபதம் செய்து கொண்டவளாதலின் ஏங்கி விம்மி உருண்டு கீழே கிடந்தனள் என்க. உடல் நோகும் என்னும் உணர்வின்றிப் போயதோடு கீழே வீழ்ந்தமையும் உணர்ந்திலள். இஃதறி யாத தோழியர் இங்ஙனம் துயில்கின்ற இவள் யாதொன்றிறகும் ஆகாள் எனத் தம்மான் ஒன்று கருதிக் கூறினர் என்க.

"என்னே என்னே" எனத் தலைவி பரிசை இழித்தனர். இன்னவற்றை யெல்லாம் ஒருத்தியே கூறினள் எனின் அத்துணைச் சிறவாது. இத்துணை ஆழ்ந்து துயில்கின்றுளை எழுப்புதற்கு உபாயமாக வேறு சிலரையும் அஙஙனமே சார்த்திக் கூறி எழுப்புதல் மரபன்மையின் அங்ஙனம் கொள்ளாமாயினேம்.

"நேரிழையாய்", "முத்தன்ன வெண்ணகையாய்", "ஒண்ணித்தில நகையாய்", "படிறீ", எனருங்குப் பாக்கள் தோறும் அழைக்கப்பட்டவள் தலைமகளாதலின், ஈண்டு அவ்வாயத்தார் சிலரைத் துயிலெழுப்பினர் என்றல் முரணும்.

தாரும் தழையும் தந்து நம்மைக் காதலித்து எளியனாகி நம்மில்லங்கள் தோறும் வந்தருளியவன் (திரு எம். 17.) ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதியாவான் ; மாதேவன் ஆவான் என அவனுடைய பெருமையை நினைந்துருகியும் அங்ஙனம் எளிவந்த திருவடியைச் செய்ந்நன்றி போற்றி உருகியும் அவர் பாடினர் என்க இத் திருப்பாட்டால் துயில் இழிவும், எழுப்புவோர் ஆற்றாமையும் விளங்கக் கிடந்தமை காண்க.

**பாசம் பரஞ்சோதிக்(கு) என்பாய் இராப்பகல்நாம்**
**பேசும்போ(து) எப்போ(து) இப்போதார் அமளிக்கே**
**நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்**
**சீசீ இவையும் சிலவோ விளையாடி**
**ஏசும் இடம்ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்**
**கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்**
**தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்**
**ஈசன்ஆர்க்(கு) அன்பார்யாம் ஆர்ஏல்ஓர் எம்பாவாய். 2**

இஃது, ஆயத்தார் தலைமகளை எள்ளி நகையாடித் துயி லெழுப்பினராக, தலைமகளும் அவற்றிற்கு மாறாகப் பரிகாசம் செய்திருக்குமளவில், காலம் நீட்டிக்காது இன்னொருத்தி இடைப் புகுந்து அவர்களை நெருக்கி இடித்துக் கூறியது.

(பொ - ரை.) (ஆயத்தாருள் ஒருத்தி தலைமகளை நோக்கி) செவ்விய இழையை யணிந்தவளே, இரவும் பகலும் நாம் கூடிப் பேசிக்கொண்டிருக்கும்போதெல்லாம் நீ என்னுடைய பற்று முழுவதும் மேலான ஒளியானவனுக்கே யுரியது என்று கூறுவாய், (அவ்வாறு கூறும் நீ) இந்தப் பூக்கள் நிரம்பிய படுக்கையின் மாட்டுப் பற்றினை எப்போது வைத்துக் கொண்டனையோ (கூறுவாயாக என்றாளாக,)

(இங்ஙனம் தன்னை நகையாடி இகழ்தலைக் கேட்ட தலைமகள் அவ்வாயத்தாரை நோக்கிச்) செவ்விய இழையை யணிந்த நங்கைமீர், சீச்சீ! இங்ஙனம் நகைத்து இழித்துக் கூறும் சொற்களும் நும்பால் சிலவே உள்ளன போலும்! (வேறு பல இல்லையோ என்றனளாக,)

(இவற்றையெல்லாம் கேட்டிருந்த வேறொருத்தி அவமே காலக் கழிவு உண்டாதலை உணர்ந்து அவ்வாயத்தாரையும் தலைமகளையும்

நோக்கி) நீயிர் எல்லீரும் விளையாடி இகழ்ந்துரையாடும் இடம் இதுவேயோ ? மெய்யன்பற்ற வானவர்கள் தாம் செய்யும் வணக்கத்திற்கு (உணரமாட்டாமையினாலே) கூச்சமடையும் மலர் போன்ற திருவடிகளை நமக்குத் தந்தருளும் பொருட்டு எளிவந்தருளும் ஒளியையுடையானும், சிவலோகத்திற்கு வேந்தனும் ஆகிய தில்லைக் கண்ணுள்ள சிற்றம்பலத்து நடுவே நின்று கூத்தயரும் எண்வகைச் செல்வங்களை யுடையானது கொன்றை மாலையைப் பெற்றுக் கொள்ளும் உரிமையுடையார் யாவர்? யாம் எத்தகையேம்? பாவையே (எங்கள் இயல்பு இதுவே என்றாள்) எ-று.

(வி - ரை.) "நேரிழையாய்" எனவும் "நேரிழையீர்" எனவும் ஒருவரை மற்றொருவர் அழைத்துக்கொண்ட வாற்றானே அவர் அணிந்து கொண்ட இழைகள் செவ்வி வாய்ந்தனவேயன்றி அவற்றுக்கேற்ற குணங் கொண்டிலர் என்பதை அறிவித்துக் கொண்டனர் என்க

பல இருந்திருப்பின் அவற்றையெல்லாம் உரைத்திருப்பீர்; அங்ஙன மின்மையால் நும்பாற் சிலவேயுள்ளன போலும் என்று தலைவி கூறினள் என்க.

அவர் தம் இல்லத்தை நாடித் தானே வந்தருளும் என்று உரைக்க. அங்ஙனம் வருதலால் இறைவற்கு ஒரு பேரொளி உண்டாயிற்றென்க.

ஆர் - கொன்றைமாலை. "ஆர்க்கு அன்பார்" என்றதனை "ஆர் அன்புக்கு ஆர்" எனக் கொண்டு, 'ஆரைச் சூடிக்கொள்ளும் அன்புரிமைக்கு ஆர் தகுதியுடையவர்" என்க. முன்னர் இறைவன் காதல் காட்டித் தந்தருளிய தாரைச் சூடற்குப் பொருந்திய அன்புக்குரியார் பிறராவதன்றி யாம் ஆர் என்றபடி. இங்ஙனம் இந்நேரம் விளையாடி நிற்கும் யாம் ஈசன் தாரைப் பெற்றுக் கொள்ளும் அன்புரிமை யுடையராதற்கு யார் என்க. ஆர், ஆத்தியுமாம்.

இனி, "பாசம்.........நேரிழையாய்" என்னும் துணையும் ஆயத்தார் கூறிய கூற்றாகவும், ஏனையவற்றைத் தலைவி கூற்றாகவும் கொள்ளற்

"பாவாய்" என்றதனைத் தலைமகளாகக் கொள்ளின், "நேரிழையீர்... ஆர்" என்பவற்றைத் தலைவி கூற்றாகக் கொள்ளாது ஆயத்தாருள் ஏற்ற பெற்றியர் கூறிய கூற்றாகக் கொண்டு "எம்பாவாய் ஏல்" என அமைத்துப் பொருள்கொள்க.

முன்னர் ஆயத்தார் சினந்தும் இகழ்ந்தும் துயிலுணர்த்தியும் உணராதாளை இவ்வாறு எள்ளி நாடி எழுப்பத் தலைமகளால் மேற்சென்றிடிக் கப்பட்டனர் என்க. செவிலியால் அங்ஙனம் நெருக்கப்பட்டாருமாம்.

இன்னவற்றால் தலைவிக்கு நகை அரும்பிற்று என்றலை "முத்தன்ன வெண்ணகையாய்" என்றதனாலும், அதனால் ஆயத்தார்க்கு முனிவு தோன்றிற்று என்றலைத் "தித்திக்கப் பேசுவாய்" என்றதனாலும அருளிச் செய்தல் உணர்ந்துகொள்க.

"விண்ணினர்" என்றதனை, அல்லது "விண்ணவர்" என்றதனை "விண்ணர்" என (நீத். 20.) உரைத்தருளியபடியே "அன்பினுனர்" என்றதனையும் "அன்பார்" என உரைத்தருளினர்.

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன்ஆ னந்தன் அமுதன்என்று அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழவடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த்(து) ஆட்கொண்டாற் பொல்லாதோ
எத்தோநின் அன்புடைமை எல்லாம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய். 3

இது துயிலுணர்ந்த தலைவியைத் தோழியர் எள்ளி மொழிந்து கடைதிற என்றனராக, தலைமகள் அவர்களை இடித்து மொழிந்து ஏளனம் செய்தலும் அவர்கள் இத்தனையும் எமக்கு வேண்டுமெனத் தம்மைத் தாமே நொந்துகொண்டது

(பொ - ரை.) (முன்னிகழ்ந்தவற்றுனே முறுவல் உடைய வளாகிக் கடைவாயிற் கதவம் திறந்திலளாய் நின்ற தலைமகளை ஆயத்தாருள் ஒருத்தி நோக்கி) முத்துப்போன்ற வெண்பற்களின் ஒளியால் எங்கள் பேதமையையாதல் நின் உவகையையாதல் காரணமாகக்கொண்டு தோன்றிய நகையைப் புலப்படுத்துவோயே, (நாங்கள் நேற்று துயிலெடைபற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது) நீ எங்கள் முன்னே எதிர்த்தெழுந்து என் அத்தன் ஆனந்தன் அமுதன் (அவன் முழுக்குக்கு யான் எழாது துயில்வேனு?) என்றெல்லாம் மிகவும் வாயூறிப் பேசுவாய், (உன் பேச்செல்லாம் எனக்குத் தெரியும், அஃதிருக்க) இப்போது எழுந்துவந்து நின் வாயிற் கதவினைத் திறக்குதி என்றுளாக,

(தன்னை ஏளனம் செய்கின்றுள் என்பதை உணர்ந்த தலைவி அவளொடு அவ்வாயத்தாரை நோக்கி) 'இறைவன்மேல் பற்றுடைய மெய்யன்பர்களே, ஈசனுக்குப் பழைய காலந்தொட்டு அடிமைபூண்டவர்களே, அடியவரோடும் இறைவனோடும் பயின்றுவரும் சார்பினையுடையவர்களே, (அங்ஙனம் இறைவன்மேற் பற்றின்மையும் பாங்கறியாமையும் படைத்த புதிய அடிமைகளாகிய எமது புன்மையை நீக்கி அடிமைகொண்டால் அது (பழியும் பாவமும் பொருந்திய) பொல்லாத செயலாகுமோ என இடித்து மொழிந்தனளாக,

(அது கேட்ட முன் மொழிந்த தோழி) நீ இறைவனிடத்துக் கொண்டுள்ள அன்புடைமை வஞ்ச முடையதோ? நின்னுடைய குணஞ்செயல்களையெல்லாம் நின்னெடு பயின்றுவரும் நாம் அறியோமோ? (அழகு வாய்ந்த) சித்த சுத்தியுடையவர்கள் நமக்குரிய சிவபிரானைப் பாடாது (நின்னைப்போல் வாயும் திறவாது கடையும் திறவாது கல்லைப்போல் அசைவற்று)இருப்பார்களோ! (அஃதிருக்க) பாவையே, இவளைத் துயிலெழுப்ப வந்தமைக்கு இவள் கூறிய இத்தனை மொழிகளும் வேண்டப்படுவனவாகும் (எனத் தம்மையே நொந்து கூறினள்) எ - று.

(வி - ரை.) துயிலெழுப்பவும் எழாததைக் குறித்தெழுந்த முனிவை யுள்ளடக்கித் தலைமகட்கு நகை தோன்ற "முத்தன்ன வெண்ணகையாய்" என விளித்தாளுமாம்.

"முத்தன்ன......கடைதிறவாய்" என்றளவும் ஆயுத்தாருள் ஒருத்தி கூற்றுகவும், "பத்துடையீர்..... பொல்லாதோ" என்றளவும் தலைவி கூற்றுகவும், ஏனையவற்றை அவ்வாயத்தாள் கூற்றுகவும் கொள்க. பின்னையதை அவ்வாயத்தாருள் இன்னெருத்தி கூற்றுகக் கொள்ளினுமாம்.

பாங்கு - சார்பு. எத்து - வஞ்சம்.

தலைமகள் கூற்று இதனுட் பயிலாததாகக் கொள்ளுமிடத்து "இத்தனையும் வேண்டும் எமக்கு" என்றதைச் செவிலி கூற்றுக்கி, அவள் "பாவையே ஏல்" என்ருள் எனக் கொள்ளவேண்டிற் கொள்க.

தம்மால் துயில் எழுப்பப்பட்டுக் கடைவாய்க் கதவம் திறவாது அதன் அகத்தே வந்து நின்று இறைவன் திருப்பெயர்களை ஓதிக்கொண்டிருந்த தலைமகளைக் கடைதிறவாய் என ஆயத்தார் கூறவும் அவள் பழ அடியாரை இறைவனை அழைக்குமாறு அழைத்து ஆயத்தார் சிறுமை தீர்க்குமாறு வேண்ட, மற்றதனைக் கேட்ட ஆயத்தார், 'நின் வஞ்ச அன்பியல்பு அறிவேம்', என்ன, 'சித்தமழகியார் சிவனைப் பாடுவரே யன்றி இங்ஙனம் விளையாடி ஏசுவரோ?' எனத் தலைமகள் எதிர்மறுத்துரைப்ப அதனைக் கேட்ட ஆயத்தார், 'துயிலெழுப்ப வந்த எமக்கு இத்தனையும் வேண்டும்' என்றுர் எனப் பொருள் தொகுத்துக்கொள்க.

"எத்தோ நின் அன்புடைமை" முதலியவற்றுல் அடக்கிய வெகுளியும் புலப்பட்டு நின்றது. "சித்தம்......சிவனை" என்றது வெகுளியை எதிர்த்து வெகுளித்திறம் புலப்படுத்தியது.

**ஒண்ணித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றே**
**வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ**
**எண்ணிக்கொ(டு) உள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்**
**கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே**

விண்ணுக்கு ஒருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக்(கு) இனியானைப் பாடிக் கசிந்(து) உள்ளம்
உள்நெக்கு நின்றுருக யாம்மாட்டோம் நீயேவந்(து)
எண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய்

வைகறைபற்றியும் ஆயத்தார் எல்லோரும் வந்தமை பற்றியும் ஆயத்தாரும் தலைமகளும் கலந்துரையாடியது.

(பொ - ரை) (ஆயத்தாருள் ஒருத்தி) ஒள்ளிய முத்துப் போன்ற பல்வரிசையையுடையவளே, இன்னும் உனக்குப் பொழுது விடிந்ததில்லையோ எனக் கேட்டனளாக,

(அதுகேட்ட தலைமகள்) அழகிய கிளியின் மொழியினை யொத்த மொழியினை உடையராய ஆயத்தார் அனைவரும் துயிலுணர்ந்து வந்தனரோ என்று கேட்டனளாக,

(அதன்மேல் ஆயத்தாருள் ஒருத்தி) வந்தவர்களைக் கணக்கிட்டு அவர் இத்துணையர் என நினக்கு உள்ளவாறு சொல்லுவோங்காண். ஆனால் அவ்வளவுக்கும் வானவர் அனைவர்க்கும் ஒப்பற்ற மருந்து போன்றவனும் வேதத்துக்குச் சிறந்த பொருளாக இருப்பவனும், காண்பார் காட்சிக்கு இனியனாவானும் ஆகிய இறைவனைப் பாடி உள்ளம் இளகிக் கட்டுவிட்டு நின்றுருகுதலாலே யாம் அதைச் செய்தற்கு இயன்றிலேம். ஆதலால் நீ கண்துயின்று பொழுதை வீணாக்காது வந்தவரைக் கணக்கிட்டுத் தொகை குறைந்தால் துயிலுதி; எம்பாவையே, (இவ்வியல்புகளை அறிவாய் என்றாள்) எ - று.

(வி - ரை.) "பொழுது புலர்ந்தின்றோ" என்னும் வினாவுக்கு "எல்லாரும வந்தாரோ" என்னும் எதிர்வினாவானது குறிப்பாற் சிலர் வந்திலர், அதனாற் பொழுதும் புலர்ந்தின்று என்னும் இறைபயந்து நின்றது.

பொழுது புலர்ந்தது என்றதை வலியுறுத்த எல்லாரும் வந்ததை நிலை நிறுத்தல் "புலர்ந்தின்றோ" என வினவினாள் பொறுப்பாயது. ஆதலின் அவள் "எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம்" என்றனள். அங்ஙனம் சொல்லற்குரியோமாயினும் எங்கள் உள்ளம் இறைவன்மாட்டு உருகா நிற்றலின் எண்ணுதலின்மாட்டுச் செல்கின்றிலது. நீயோ அங்ஙனமல்லை. ஆதலால் எண்ணவும் வல்லுநை ஆவை. ஆதலால் இங்ஙனேவந்து வந்தாரை எண்ணிக் கணக்கிட்டுக்கொள். அவ்வாறு கணக்கிட்டுக் குறையின் மீளவும் சென்று துயிலுதி என்றாள் என்க. இதனால் வந்தாரை எண்ணவும், குறையில் துயிலவும் வல்லுநையாவையன்றி, இறைவனைப் பாடிக் கசிந்துருக வல்லுநையாகாய் எனக் குறிப்பிட்டாள் என்பது பெற்றாம்.

வைகறையின் வருகையை ஆயத்தார் வருகையின்மேல் ஏற்றிக் கூறிய அதனானே பறவை முதலியவும் அப்போது எழுந்தில வென்பதும், வானத்திலே வியாழம் உறங்காதும் வெள்ளியெழாதும் இருந்தமையின், அக்காட்டினை எடுத்துக்காட்டற்கு இயலாது போந்தமையும் பெற்றும். மார்கழிநீர் ஆடவேண்டும் என்னும் வேட்கை மிகுதியானே வைகறைப் போது வருமுன்னரே ஆயத்தார் இத்துணையளவு விரைந்து ஆரவாரமிட்டனர் என்க. இதனால் ஆயத்தார் இங்ஙனம் ஆரவாரித்தல் வேண்டா வென்பது தோன்ற "எல்லாரும் வந்தாரோ" என்று தலைமகள் வினவினள் என்பது பெற்றும். ஆயத்தாருள் வினவிய அவ்வொருத்தியும் அதனது ஆகாமை அவளால் தெளியப்பட்டதோ என்னும் ஐயமேலீட்டானே அவளை "இன்னம் புலர்ந்தின்றோ" என வினவினள் என்பது புலனாதல் காண்க. கோழி கூவாமை வியாழம் உறங்காமை முதலியவற்றைக் காட்டுதலில் தலைமகள் ஊக்கம் செலுத்தாமைப்பொருட்டே "எண்ணிக் குறையில் துயில்" என்றதூஉம் என்க.

'உள்ளவாறு சொல்லுகோம் ஆயினும் நீ எம்மை நம்பாய்' என்றமையும் தமது வார்த்தையை அவள் நம்பும் இயல்புடையள் என்றலைக் கொள்ள வைத்து அவளை எழுப்புதலை நோக்காகக் கொள்ளற்பொருட்டு என்க.

முன்னர் யாம் எண்ணுகோம் என உடன்பட்டும், அதன்மேல் இறைவனைப் பாடி உருக யாம் மாட்டேம் ஆவேம் ஆதலின் யாம் எண்ணேம், நீயே எண்ணிக்கொள், குறையில் துயிலுதி என மாறுபட்டும் தலைமகள் எண்ணத்தினை எண்ணுதல் மேலாக்குமாற்றான் இறைவனைப் பாடி உருகுமாறு குறிப்பாற் பணித்தமை அகநூலாராய்வார்க்கு ஒரு விருந்தாம் என்க.

புலர்தல் - விடிதல். வண்ணம் - ஓசை வேறுபாட்டால் எய்தப்படுவதோர் அழகு. கொடு - கொண்டு. உள்ளவா - உள்ளவாறு. கசிதல் - இளகுதல்; கண்ணீர் அரும்புதல் எனக் கண்ணிற் கேற்றினுமாம். கண்ணுக்கினியான் - காதலன். பாடி - வாயாரப்பாடி.

"ஒண்ணித்தில நகையாய்" என்றது தலைமகளையன்றி ஆயத்தாருள் ஒருத்தியைக் குறிக்குமெனில், கரவாக ஒருவர் தம்மொடு பேசுதலைக் கண்டபோதே மற்றவர்க்கு நகை தோன்றுதலால் அந்நகை முகத்தினளை அங்ஙனம் அழைத்ததாகக் கொள்க.

மால்அறியா நான்முகனும் காணா மலையினை நாம்
போல் அறிவோம் என்றுள்ள பொக்கங்க ளே பேசும்
பால்ஊறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் சிவனே சிவனேஎன்று
ஓலம் இடினும் உணராய் உணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய். 5

இஃது, ஆயத்தார் இறைவன் சீலங்களைப் பாடக் கேட்ட தலைமகள் திருமாலும் அயனும் என்போர் காணற்கரிய இறைவனை யாங்கள் தாமோ அறியவல்லேம் என்றுளை ஆயத்தாருள் ஒருத்தி படிறீ என்றுளாக மற்றொருத்தி அவளைத் தகைந்து கூறியது.

(பொ - ரை.) (முன் ஆயத்தார் உள்நெக்கு நின்றுருக யாம் மாட்டோம் எனக் கூறியதை உட்கொண்ட தலைமகள் மாலும் நான்முகனும் காண்டற்கரிய இறைவனை நாங்கள்தாம் அறிந்து கொள்வோம் போலும் என உரைத்தாளை ஆயத்தாருள் ஒருத்தி நோக்கி) அடியினைத் திருமால் அறியாத முடியினை அயன் காணுத (தொடக்கமும் முடிவுமில்லாத பெருமையையுடைய) மலையானவனை நாங்கள் தாம் போலும் அறிந்துகொள்வோம் என்றித் தொடக்கத்தனவாய பொய்யுரைகளைப் பேசும் பாலொடு ஊறுகின்ற தேன்போன்ற பேச்சுக்களை வெளிப்படுத்தும் வாயினையுடைய வஞ்சகியே, கடைவாயிற் கதவைத் திறவாயோ என்றுளாக,

(அதுகேட்ட ஆயத்தாருள் இன்னொருத்தி) மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் ஏனைய உலகத்தாரும் (தாமுயன்று) அறிந்து கொள்ளுதற் கரிய தன்மையோனது திருக்கோலமும் (வலிய வந்து காதலூட்டி) நம்மை யாண்டு கொண்டருளி நம்மில் அமைந்த குறைபாடுகளை நீக்கி வரும் சிறப்பும் ஆகிய இவற்றைப் பாடிச் சிவனே சிவனே என்று உரத்து ஓலமிடுதலைச் செய்தாலும் அங்ஙனம் ஓலமிடும் குறிப்பியல்பினை உணராதிருக்கின்றாய், அதுவுமன்றி, மயிர்ச் சாந்து பூசிய கூந்தலையுடையாளாகிய தலைமகளது இயல்பினையும் நீ உணர்ந்துகொள்ளமாட்டாய். எம்பாவையே, இங்ஙனமிருக்கின்ற இஃதென்ன பாவம் என்றுள் எ - று.

(வி - ரை.) முன் தினங்களிலே தலைமகள் "மலையினை யாம் போல் அறிவோம்" என்று தம்முடன் கலந்து உரையாடியதை உட்கொண்டு அவ்வாயத்தாருள் ஒருத்தி அஙஙனம் கூறினளுமாம்.

ஒருத்தி "படிறீ" என்று கூறப்புகுவதை உட்கொண்ட இன்னொருத்தி அவ்வுரை தலைமகள் காதிற புகாவண்ணம் "ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்" எனறித் தொடக்கத்தனவாய சிவநாமங்களைக் கூறி ஓலமிட்டாள். அதனை உணராது கூறிய அவ்வாயத்தாளின் அறியாமையை முனிந்து "உணராய்" என்றும், அவ்வாயத்தாளின் செவ்வியற்ற மனநிலைகணடு தலைவியின் பெருமை இளமை முதலிய ஒன்றையுமே அறியும் இயல்பில்லாய் ஆவாய் என வெறுத்து "ஏலக குழலி பரிசு உணராய்" என்றும் தகைநது கூறினள். இத்தகையளாய தோழியின் பாவம் இருந்தவாறு என்னே என்பதை உட்கொண்டு தாம் பூசித்தற்குப் பொருந்திய பாவையை "எம்பாவாய்" என விளித்து முன்னிலைப் படுத்தினள்.

"மாலும், அறியா நான்முகனும் காணு மலையினை" எனக் கொண்டு திருமாலும், மெய்கூறல் அறியாத நான் முகனும் காணப் பெற்றிலாத மலையினை என உரைப்பினுமாம். பிரமன் பொய்ச்சான்று கொண்டு பொய் யுரைத்தமையும் உணர்க.

"மாலும நான்முகனும் அறிதற்கு அரிய பெரிய தொன்றினை எளியே மாகிய யாம் அறிவேம் போலும்" என்று கூறுவது சொற்சித்திரம் எனப் படும்

படிறு உடைமையால் அதுகேட்டற்கினிமை பயந்து இன்சொல் எனப் படாதென்பது இப்போழ்து கதவம் திறவாமையாற் காணப்பட்டது என்க.

உருவிறகேறற நலனும் ஒருங்குடையான் என்பாள் "கோலமும் ...சீலமும்" என்று கூறினாள் என்க.

பாலின் கண்ஊறும் தேனுமாம். இனிமை மிகுதியைப் புலப்படுத்தப் "பாலூறுதேன்" எனப்படடது. பால் கரவின்மையையும் தேன் இனிமை யையும் குறிக்கும்.

மானேநீ நென்னலை நாளைவந்(து) உங்களை
நானே எழுப்புவன் என்றலும் நாணுமே
போன திசைபகராய் இன்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானேவந்(து) எம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே உருகாய் உனக்கேஉறும் எமக்கும்
ஏனோர்க்கும் தங்கோனைப் பாடேலோர் எம்பாவாய். 6

கடை திறந்த பின்னர் எல்லாரும் கூடி வீதியிற் செல்லும்போது ஆயத்தாரும் தலைமகளும் தங்களுட் கலந்துரையாடிய வகை இத் திருப்பாடல் முதல் ஒன்பதாம் திருப்பாடல் வரையும் கூறப்படு

இஃது, எல்லாரும் வழியிடைச் செல்கையில் ஆயத்தார், "நாளை நானே வந்து எழுப்புவல்" என்று கூறியவுடன் போன திசையைச் சொல் எனவும், இன்னம் புலர்ந்தின்றோ எனவும், கோனைப் பாடு எனவும் கூறியது.

(பொ - ரை.) (ஆயத்தார் தம்முடன் கூடிவரும் துயில் மயக் கம் பொருந்திய தலைவியை நோக்கி) மான்போன்ற விழியுடைய வளே, நேற்று (எங்களுடன் கலந்து பேசிய போது) உங்களை நாளைக்கு நானே (முந்தித துயில் உணர்ந்து வந்து) துயில் உணர்த் துவேன் (கண்டீர்) என்று எமக்குக் கூறியவுடன் (ஒருத்தி சென்ற னள். அவள்) சென்ற திசையை நீ நாணுது கூறுதி, இப்போதும் அவள் வந்து எழுப்புவதற்கு விடியவில்லையோ? அஃதிருக்க, (தன்

னில் தோன்றி ஒடுங்கும்) வானுலகும் நிலவுலகும் பிறவுலகும் அறியவொண்ணாத அரிய பெருமான் நம்பொருட்டாகத் தானே வலிய வந்து முகமலர்ந்து இனியவை கூறித் தண்ணளி செய்து எம்மையாட்கொண்டு (எமது இன்பத்துக்குரிய இடமாகக்) கொடுத்தருளும் பெருமை பொருந்திய நீண்ட கழலையணிந்த திருவடிகளைப் புகழ்ந்து பாடிவந்த எம்பொருட்டேனும் நின் வாயைத் திறந்தாயுமல்லை, உடல் உருகினையுமல்லை; அங்ஙனம் இருப்பது உனக்கே பொருந்தும்! (எனினும் உனக்கு அவன் கோன் அல்லனேல்) எங்கட்கும் ஏனையோர்க்கும அவ்வவர் தங்கோனைப் பாடுதி. எம்பாவாய், (இங்ஙனமும் கூறிச் செய்வித்தல் வேண்டுமோ) இதனை நீ ஏற்று ஓர்க எ - று.

(வி - ரை) முதல் ஐந்து திருப்பாட்டானும் துயிலுணர்த்தலும் கடைதிறப்பும் கூறப்பட்டன. இத்திருப்பாடல் தொடக்கம் ஒன்பதாம் திருப்பாடல் வரையும் எல்லாரும் கூடி வீதியிற் செல்லற்கண் அத்தலைமகள் தம்முடன் கூடவந்தும் துயில்மயக்கம் அறவே நீங்கப் பெறுமையான் அதனை உன்னியும், பள்ளியறையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை யுன்னியும் "வாய் திறவாய்," "உருகாய்," "இன்னம புலர்ந்தின்றோ?" என்றாங்கு ஆயத்தார் கூறுகின்றனர்.

தலைவியும் ஆயத்தாரும் மார்கழி நீராடற் பயனையும், அந்நீராடுமியல்புகளையும் தம்முட் கலந்து பேசிக்கொண்டிருக்கும்போதே ஒருவரையொருவர் பிரிந்து தத்தம் இடங்கட்குச் செல்லும்போதே தலைமகள் நானே நாளைக்கு முன்னம் துயிலுணர்ந்து வந்து உங்களைத் துயிலுணர்த்துவேன் என்றாள் என்க நென்னலை நாளை வந்து உங்களை நானே எழுப்புவன் என்றொருத்தி கூறிச் சென்றாள். அங்கு நீயும் இருந்தாயன்றே? அவள் கூறியபடி வந்து நம்மைத் துயிலுணர்த்தினாளல்லள்; அவள் போனதிசை யாது என்று தெரியவில்லை. அத்திசையை நீ சொல்லுதி, யான் தேடிப் பார்க்கின்றேன் எனத் தலைவியையே படர்க்கையினும் முன்னிலையினும் வைத்துக் கூறினாள் என்க. இனி, 'நீ எழுப்புவன் என்றுரைத்த உரை எத்திசையாகப் போயிற்று, அதனைக் கூறுதி' என்றலுமாம்.

போன திசை யாது என்பதும், எங்களெல்லார்க்கும் விடிந்தும் உனக்கு மட்டும் இன்னும் விடியவில்லையோ என்பதும், யாங்கள் கூறுவது பொய்யோ என்பதும் தோன்ற "இன்னம் புலர்ந்தின்றோ" எனவும், நீ இறைவனை நின் காதலனாகக் கொண்டிலையேனும் அவன் கழல் பாடி வந்தேம்பொருட்டேனும் அப்பள்ளியறையிலோ அன்றி இவ்விடத்தோ நின் வாயைத் திறந்தாயில்லையே என்பது தோன்ற "வந்தோர்க்குன் வாய் திறவாய்" எனவும், அவ்வாறு மனமேயன்றி ஊனையினும் உருகினையல்லையே எனவும், இன்னவையெல்லாம் உன் இயல்புக்குத்தான் பொருந்தக்கூடியவையாகும் எனவும், ஆயத்தார் வழியிடைக் கூறினர் என்க.

அன்னவை உன்னிலையில் உனக்குப் பொருந்தினும் எம் நிலையில் எமக்குப் பொருந்தா. நீதான் எமமேற காதல் உடையையாதலால் எம் காதலனை யாம் நின்னெடு சேர்ந்து பாடுவோமாக எனத் தலைமகட்குக் கூறி அவளை வெகுள வைத்தல் மூலமாக அவளிடத்துக் காதலை ஊன்ற வைத்தனர் என்க.

நின்னின் நீக்கி எங்கட்கும் ஏனோர்க்கும் அவரவர் தங்கோன் எனப் பாடு என்று குறித்தவாறு. நினக்காகப் பாடாயேனும் எம்பொருட்டுப் பாடுதி என்றபடி. இனி, "உனக்கே உறுங்கோனை," "எமக்குக் கோனை," "ஏனோர்க்குங் கோனை"ப் பாடுவோமாக எனினும ஒருவாறு பொருந்தும். "தம்பிரான்" என்றாற்போலத் "தங்கோன்" என்பதும் கொள்ளப்படும்.

"எம்பாவாய் ஏல்ஓர்" என எல்லாப் பாக்களும் தலைமகளைத் துயில் எழுப்பியனவாகக் கொள்ளின், இது பள்ளியெழுச்சி எனப்படுமேயன்றித் திரு எம்பாவை எனப்படாதென்றுணர்க.

**அன்னே இவையும் சிலவோ பல அமரர்**
**உன்னற் கரியான் ஒருவன் இருஞ்சீரான்**
**சின்னங்கள் கேட்பச் சிவன்என்றே வாய்திறப்பாய்**
**தென்னாஎன் னாமுன்னம் தீசேர் மெழுகொப்பாய்**
**என்னானை என்னரையன் இன்னமுதென் றெல்லோமும்**
**சொன்னோம்கேள் வெவ்வேறாய் இன்னம் துயிலுதியோ**
**வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்**
**என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய் 7**

இதுவும் அது

(பொ - ரை) (ஆயத்தாள் ஒருத்தி தலைமகளைப் பார்த்து) அம்மா உன்னுடைய விளையாடல்களுள்ளே எழுந்துவந்து எம்மொடு கூடியும் துயில்வாள்போல வாளாவிருக்கும் விளையாடல்களாகிய இத்தகையனவும் சிலவே உள்ளனபோலும். (அவை பலவாக அமைந்திருப்பின் பலவாறாக விளையாடியிருப்பாய். யான் சொல்வதை இன்னமும் கேட்பாய்) முப்பத்துமூவர் எனப் பல வகைப்பட்ட தேவர்களானும் நினைத்தற்கும் அரியவனும், ஒப்பற்ற ஒருமுதல்வனும், பெரிய மிகுபுகழ் உடையானும் ஆகிய சிவபிரானுக்குரிய வெற்றியின் அடையாளங்களாகிய ஊதுகொம்பு முதலாயின இசைக்க அதனைக் காதிற் கேட்ட அளவிலே அவ்வோசையைச் சிவன் என்றே பேதமறக்கொண்டு அவனைப் புகழ்ந்து சொல்லற்கு (முந்திய நாட்களில்) வாயைத் திறக்கும் இயல்புடையாய். (அன்றியும்) யாம் அவன் புகழைப் பாட வேண்டித் "தென்னா" என்று தொடங்கற்குமுன் • நீ ஆற்றாயாகித் தீயிற் சேர்ந்த மெழுகினை

ஒப்ப உருகும் இயல்பும் உடையாய் (அன்னையை ஆகிய நீ இப்போது) எனக்கு உரிமையுடையானை எனக்கு அரசன், எனக்கு இனிய அமுதமாயினன் என்று யாமனைவரும் தனித்தனியே சொன்னோம். (அங்ஙனமே நீயும் சொல்லாயாய்) உருகும் தன்மையுடைய மென்மையற்ற வன்னெஞ்சினையுடைய அறிவிலிகள் போல் வாளா கிடக்கின்றாய், (எங்களோடு எழுந்துவந்து கொண்டிருக்கின்ற நீ) பின்பும் துயில் செய்கின்றனையோ? உன்னுடைய நித்திரையின் இயல்பு எத்தன்மையதாகும் எ - று.

(வி - ரை.) சின்னஙகள் - இறைவன் விழாவிற்குக் கால்கோள் கொள்ளற்காக எடுத்த சின்னங்கள், ஊது கொம்பு முதலாயின என்க.

சிவன் என்றே வாய் திறத்தலும் தீசேர் மெழுகொத்தலுமாகிய பெருந்தகைமையினையுடைய நீ வாளா கிடந்தனையே? இஃதென்ன இழிதகைமை? அன்றியும் நிற்கையிலும் நடக்கையிலும துயிலுகின்றாயே என அத்தலைமகளை இகழ்வாள் "என்னே துயிலின் பரிசு" எனத் துயில்மேலேற்றிக் கூறினள்.

உய்த்துணரும் காலை வலிதாகவும் வாளா கேட்டற்கண் மெலிதாகவும் கொள்ளுமாறு 'வன்னெஞ்சப் பேதாய்' என்னளாய் "வன்னெஞ்சப் பேதையர போல்" என உவமை முகத்தாற் கூறினள்.

"என்னானை, என்னரையன், இன்னமுதன்" என்று ஒவ்வொருவரும் தனித்தனியே கூறினர் என்க "என்னானை" முதலியவாகக் கூறி அன்பு செய்யும் உரிமையுடையாரே இறைவனைத் தலைவனாகப் பெறும் தலைவியர் ஆவர் எனக் குறிப்பிக்குமுகத்தால் தலைமகட்கு உணர்வூட்டி உருவேற்றினாள் என்க.

துயிலுணர்ந்து ஒருங்கு கூடியும் இடைக்கண் நின்றோ அன்றி ஆயத்தார் தோள்மேற் சாய்ந்தோ துயில்மேற் கொள்ளுதலால் அவ்வியல் பினை "இவையும் சிலவோ" என ஏசி வினாவினள் என்க.

"அன்னை என்னை என்றலும்" (தொல். பொரு. பொருளி. 52.) என்னும் நூற்பா விதி பற்றித் தோழி தலைவியை "அன்னே" என்றழைத்தாள் என்க.

"என்னரையன்," "இன்னமுதம்" என்று என்னானை எல்லோருஞ் சொன்னோம் ஆதலால் தானே தலைமகள் என்றும் தன்னொடு கூடியோர் சொல்லியதுந் தன் பொருட்டேயென்றும், ஆதலால் அவளால் இறைவன் "என்னான்" எனப்பட்டான் எனவுங் கொள்க. என் ஆனை - எனக்கு யானை போன்றவனை; மகளிர் தமமைப் பிடி என்று கருதியதற்கேற்ப இறைவனை ஆனை என்றாள் எனலுமாம். 'எனக்குத் தந்தை' எனப் பொருள் கொள்ளின், அன், சாரியை; ஐ, தந்தை எனக் கொள்க. இதனால் நீ தலைமகள் அல்லை; யானே தலைமகள் ஆவேன்; நினக்கு இறைவன் காதலன் எனப்படான்; எனக்கே காதலன் எனப்படுவான்

என ஒவ்வொருவருங் குறிப்பித்தாரென்க. தலைமகளின் உட்கிடையை முக வேறுபாட்டான் அறிந்து கோடல் குறித்துத் தலைமகன் தன்னைக் காதலித்தான் போலத் தோழியர் கூறுதலைச் சானறோர் செய்யுட்கண் கண்டு கொள்க. "தென்னு" என்பது இசைபாடுவார் பாடத்தொடங்கும் காலத்து எழுப்பும் ஒலிக்குறிப்பு. தென்னவன், இராவணனைக் குறிக்கும். அகத்தியனார் பொதியமலைக் கெழுந்தருளுமுன்னர் தென்னாட்டை இராவணன் ஆண்டுவந்தான் என்பதும், அகத்தியனாரே அன்னானை இலங்கைக்குப் போக்கினர் என்பதும் பண்டைய வரலாறு. இதனையே "இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கி" (தொல். பாயிரம், நச்சி.) என்னும் தொடரும் வலியுறுத்தும். பத்துப்பாட்டுள், மதுரைக் காஞ்சிக்கண் நாற்பதாவது அடிக்கு நச்சினிக்கினியார் எழுதிய உரையையும் நோக்குக. அக்காலத்து ஆண்டிருநத இராவணன் இசையில் தலைசிறந்தவன் என்பது பலசான்று களாலும அறியலாகும் எனவே, இசைபாடுவோரும் இசைபாடத் தொடங்குங்கால் அவன் பெயரை முதலாகக் கொண்டு "தென்னு தென்னு" என்று இசை எழுப்பிப் பாடத் தொடங்குதலே மரபு என்ப.

"தென்னு தெனு என வண்டு முரலுஞ்சோலை"

என்னும் ஆழ்வார் திருப்பாடலும் இப்பொருளையே வலியுறுத்தும். ஈண்டு வண்டுகள் தாமே தென்னு முதற்கொண்டு முரலுப என்றாராகலின் மக்களும் தவறாதே தென்னு முதறகொண்டு பாடுவர் என்பது தானே அமையும்.

இனி ஈண்டுத் "தென்னு" என்றது தென்பாண்டி நாட்டானே எனவும், அழகுடையவனே எனவும் பொருள்பட்டு இறைவனையே குறிக்கும் என்பாருமுளர். அங்ஙனம் கூறுங்கால் 'தென்னு தெனு' என ஓசையெழுப்பி இறைவன் பெயர் இசைக்குங்காறும் கேட்டுத் தலைவி வாளா இருப்பள் என்ற பொருள்படுகின்றமையானும், 'தென்னு' எனும் ஓசை எழுப்பிய உடனேயே மெழுகொப்ப உருகினள் என்றலே சிறக்கு மாதலானும் "தென்னு" என்பது இறைவனைக் குறித்தது எனக் கொண்டிலம்.

கோழி சிலம்பச் சிலம்புங் குருகுஎங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்கும்
கேழ்இல் பரஞ்சோதி கேழ்இல் பரங்கருணை
கேழ்இல் விழுப்பொருள்கள் பாடினோம் கேட்டிலையோ
வாழிஈது என்ன உறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய். 8

[யாம் இறைவனைப் பாடினோம் கேட்டிலேயோ? உறங்கு கின்றாயோ? அன்புடைமை என்பது இவ்வாறானதோ? என்றாங்கு ஆயத்தார் கூறியது ]

(பொ - ரை.) (ஆயத்தாருள் ஒருத்தி தலைமகளை நோக்கி) கோழி கூவவும், மற்றதன் கூவுதலைக் கேட்டு ஏனைய பறவைகள் எங்கும் ஓசை எழுப்பாநின்றன; இசைவாணர் ஏழிசையை இயம்பவும், மற்றதன் பின்னே சங்கூதுவோர் ஊதும் சங்கொலிகள் எங்கும் இயம்பாநிற்கும். (இவ்வாற்றானே நன்றாகப் புலர்ந்த போதும்) ஒப்பற்ற மேலாகிய அவனுடைய மேனி ஒளியையும், அவனுடைய ஒப்பற்ற திருவருளையும், அதனாலாம் ஒப்பற்ற சிறந்த பயன்களையும் நாம் அனைவரும் புகழ்ந்து பாடுதலைச் செய்தோம். அதனைக் கேட்டிலே போலும் இங்ஙனம் எம்முடன் வந்துநின்றும் நீ உறங்கும் இவ்வுறக்கம் எவ்வகைப்பட்ட உறக்கமாகும்? வாய் திறந்து பேசாய். நீ கடல் இழைப்பதனால் அன்புடைமையாகும் வழியும் இவ்வழியாகுமோ? ஊழிக்காலங்களுக்கும் முதல்வனாக நிலைபெற்ற ஒப்பற்றவனாய், அம்மையை இடப்பங்கிலே கொண்ட வனை இனியேனும் பாடுவோமாக எம்பாவையே, (எம் தலைவியின் இயல்பும் உறக்கமும் இத்தகையன,) இதனை ஏற்று உணர்க எ - று.

(வி - ரை.) ஏழில் (ஏழ் + இல்) - ஏழிடம். ஆகுபெயராய் இசைகளை யும், அதன்மேற் பண் முதலாயவற்றையும் உணர்த்திற்று. (ஏழில் என்பது வயிர் முதலியவற்றுள்ளே ஒன்றனைக் குறிக்கும் போலும்.)

இசைவாணர் இயல்பாகவே வைகறையில் எழுந்து இசைப்பயிற்சி செய்வாராதலின், அவர் இசை கேட்டுச் சங்கூதுவோர் சங்கம் இசைத்தனர் என்க. ஆலயங்களில் அம்முறையே இசைக்கப்பெற்றன எனினுமாம்.

குருகுகளிலே கோழியே முதற்கண் எழுந்து இயம்புவதுபோல வெண்சங்கம் முதலிய இயமபுவதினும் ஏழிலே முதற்கண் இயம்பும் எனக் கொள்க. கோழி துயிலெழுப்பக் குருகுகள் துயிலெழுந்தியம்பின. ஏழில் இயம்ப வெண்சங்கமும் இயம்பின அங்ஙனமே யாம துயிலெழுந்து பாடி நின்னை ஊக்கவும் நீ துயில் ஒழிந்து பாடினாயில்லை எனத் தொடர்பு படுத்துக்கொள்க.

வாழி, அசைநிலை. உறங்குதல் கேடுதருமாகலின் வாழ்த்தினாளுமாம்.

ஆழியான் - கூடல் இழைத்தலான். கூடலிழைத்தலாவது, தலைமகனைப் பிரிந்த தலைமகள், அத்தலைவன் வரும் குறிப்பை நிலத்திற் சுழிக்கும் ஒரு வகைக் குறியால் அறிவது. தனக்குத் தார் முதலியன தந்து காதலூட்டிப் பிரிந்த இறைவனாகிய தலைமகனது வருகையைக் குறித்து ஆழி யிழைத்த லால் அன்புடைமையாகும் நெறி என்க. அதனைக் கற்பின்பாலதாக்கித் தலைமகள் இனிச் செய்யப்போகும் மனையறச் சிறப்பினை ஈண்டுணர்த்தினர் எனினும் இழுக்காது; கற்பினைப் பிரிவென்றே ஓதுபவாகலின்.

"ஆழியான்" என்றற்கு அறவாழியான் என்றுரைத்தலும் ஒருவாறு பொருந்தும்.

"ஏழை பங்காளனுக ஊழி முதல்வனுய்" நிற்போன் அவன் என்றமையாலே நம்மையும் அங்ஙனம் பிரியாது ஒருங்கு கலந்து வாழ்வோனுவான் என இறைவனுடைய பெருந்தகைமையை எடுத்துக் கூறியவாறு.

"ஏதென்ன உறக்கம்" என்றது, இஃது உறக்கமாகாது என்பதுபட நின்றது. உடன்பயின்றும் உறங்குதலின் புதுமை கருதிய வியப்பெனினுமாம்.

அவனைப் பாடி நீராடில் நீயும் அங்ஙனம் அவனெடு பிரியாது கலந்து வாழும் பேற்றினைப் பெறுவாய் எனக் குறிப்பிட்டாள் பாடு - பாடுவோமாக (வியங்கோள்). இங்ஙனம் வருதலைச் சிலப்பதிகார அம்மனை வரிக்கண் காண்க.

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே
உன்னைப் பிரானுகப் பெற்றஉன் சீர்அடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவர் ஆவார் அவர்உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோமேலோர் எம்பாவாய் 9

இஃது, அவ்வாயத்தார் துயில் மயக்கம் ஒழிந்த தலைமகளை அழைத்துச் சென்று இறைவனை நினைந்து உன்னைப் பிரானுகப் பெற்ற யாம் இம்மார்கழி நீராடலினுல் உன்னடியாரையே கணவராகப் பெற்றுய்யுமாறு அருள்வாயானுல் என்ன குறையுமிலோமாவேம் என்றது.

[இது "சங்கற்பம்" என்னும் கிரியையுமாம். உடம்படுபுணர்த்தலால் எம் தலைவிக்கு நீ தலைவனுதலால் யாமும் நின் பாங்கர்களாகிய அடியார்க்கு மனைக்கிழத்தியராவேம். அங்ஙனமாதலை அருள்புரிக என்று அவர் வேண்டினுர். தலைமகளும் எம்பிரானையே தலைமகனுகப் பெறுதல் வேண்டுமென வேண்டிக்கொண்டாள் என்பது பெற்றும்]

(பொ - ரை) எமக்குரிய வேந்தே, காலம் இடம் ஆற்றல் என்னும் இவை முதலாயவற்ருல் முற்பட்ட பழையனவாகிய பொருளுக்கும் அங்ஙனமே முற்பட்ட பழைய பொருளானவனே, காலம் முதலாயவற்ருல் பிற்பட்ட புதுமைப் பொருளுக்கும் அங்ஙனமே பிற்பட்ட புதுமைப் பொருளாக உள்ளவனே, இத்தகைய உன்னைத் தலைமகனுகப் பெற்ற (தலைமகளுக்குப்

பாங்கியராகிய அதனால் நினக்கும் பாங்கியராகி நின்னுடைய அடித் தொண்டு புரிதலால்) மிகுபுகழ் பெற்ற யாம், இது முதலாக உனக் கடியவராகிய அவர் தாள்களையே பணிந்துவருவோம் நின் பாங்க ராகிய அவர் தமக்கு யாம் பாங்காகி நின்று வருவோம் (உன்னைப் பிரானாகப் பெற்று உன்னடியோமாகி உன்னடியார் தாள் பணிந்து பாங்காகிய) எமக்கு அத்தகையவர்களே கணவருமாவர் அவர் விரும்பிச் சொல்லிய இயல்பிலே யாமும் விருப்பங்கொண்டு அதனையே பணியாக ஏற்றுப் பணி செய்துவருவோம் இவ்வகை யினையே (இம்மார்கழி நீராடற் பயனாக யாம் பெற்றுக்கொள்ள) எமக்கு அருள்புரிவாயேல், எவ்வகைத்தாகிய குறைவுபாடும் (இல்லேமாவேம் என இறைவனை வேண்டிக்கொண்டு) எம்பாவையே, (இறைவன் இங்ஙனம் நல்குதற்கு நீ துணைபுரிக) எ - று

(வி - ரை ) பழைமையும் புதுமையும் அவனாகவே அமைதலாலும், அவர் பாவனையும் அங்ஙனமே அமைதலாலும் அவர்க்கு அவனே தலை மகன் ஆயினான் என்க. "பிரானாக அவனைப் பெறுதல்" என்றது, அவனைப் பண்டு காதலிக்கப்பட்டவளும், அவனையே தலைவனாகப் பெறுதல் வேண்டும் என்று நினைவுறறிருப்பவளும் ஆகிய தலைமகளுக்கு அவர் ஆயத்தாராக அமைந்தமையால் அவள் காதலனுக்கும் அடியாராயினமையை என்க. தலைமகட்கு அடியராயினவர் அத்தலைமகள் காரணமாகத் தலைமகனுக்கும் அவன காரணமாகப் பிற அடியார்க்கும் தொழும்பர் ஆயினார் என்க.

சீர - மிகுபுகழ். முன்னருள்ளது புகழும் இப்போதுள்ளது மிகுபுகழு மாயிற்று. தாமும் தலைமகளும கன்னிமை கழிந்து கற்புப் பூணறகுக் காரணமாயினமையால்.

ஈண்டு ஆயத்தாரும் தலைமகளும் கன்னிமை கழியாதவராகவும் கற்பு நெறியின்பாற்படும் மிகுபுகழ்க்கு உரியராயினர் என்பது என்னை யெனின், அவர் கன்னிமை கழியாராகவும் கற்புநெறிக்குரிய இயல்புகள் எங்கும் துறைபோய் முதிர்ந்த முதுபார்ப்பனியர் கரைக்கண் நினறு சங்கறபம் செய்வித்து நீராட்டுகின்றவர், 'இங்ஙனம் கூறுதிர், இங்ஙனம் செய்திர்' எனக் கூறியும் காட்டியும் கொடுத்துக் கன்னிமை கழிந்து கணவனைத் தலைக்கூடிக் கற்பு நெறி நிற்கவென வாழ்த்துதலும் செய்தனராக, அது பெற்ற அம்மகளிர அங்ஙனம் தம்மைக் கருத்தின்றி யுரைத்தனர் என்க. எனவே முதியோர் கருத்தைத் தாமும் கருத்தின்றி யுரைத்தனர் என்க. இக்கன்னியர் கூற்று இப்பொழுது பொருளொடு புணராவாயினும் இந்நீராடற் பயனால் பின்னர்ப் பொருளொடு புணரும் என்க. இவர் தம் இத்தகைய நிலைகண்டன்றே,

"மையாடல் ஆடல் மழபுலவர் மாறெழுந்து பொய்யாடல்
ஆடும் புணர்ப்பின்" (பரி. 11. 88. 89. அடி )

எனக் கூறியதும் என்க.

"உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்" என்றமையால் அவர் விரும்பிய வெல்லாம் தாமும் விருமபியனவாகவும, விருமபாதன வெல்லாம் தாமும் விருமபாதனவாகவும் கொண்டு நோறறுக் கற்பினை மேறகொள்வேம எனப் புலப்படுத்தியமை காண்க.

'இஃதொரு குறையே எமக்குள்ளது. அதனையே நீக்குதல் வேண்டும்' எனப் பாவைக் கூடாகக் கேட்டனர் என்க. இஃதொன்று அருளப்படின் எமக்குள்ள எல்லாக் குறைகளும் நீங்கப் பெறறேமாவேம் என்றார் எனினுமாம் உகத்தல் - விரும்புதல்.

"இன்னவகை" என்றது, அடியாரைப் பணிதலும், அவரைக் கணவராகக் கோடலும, அவர் உகந்ததைத் தாமும் உகந்து செய்தலும ஆதிய வறறை.

முன்னர்த் தலைமகளும் ஆயத்தாரும் இறைவனுக்கு முறையே ஆட்பட்டு இதனல் மாரகழி நீராடற்குச் சஙகற்பம் செய்துகொண்டு அதன் பயனை வேணடினர் என்க.

"பாங்காவோம" என்றமையால் இறைவன் தலைமகனும் அடியார் பாங்கரும, தாம பாங்கியரும் ஆயினமை குறிப்பிடப்பட்டது.

இனனும் இதனலே அவர் இறைவனையும் அடியாரையும் வணங்குதற்குக் காரணமும பெற்றும்.

பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்
வேதமுதல் விண்ணேரும் மண்ணும் துதித்தாலும்
ஓத உலவா ஒருதோழன் தொண்டருளன்
கோதில் குலத்து அரன்தன் கோயிற் பிணுப்பிள்ளைகாள்
ஏதவனூர் ஏதவன்பேர் ஆர்உற்றார் ஆர்அயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய். 10

இது, கோயிற்பிணப் பிள்ளைகளிடத்தே இறைவன் ஊர் பேர் முதலாயவற்றையும் அவனைப் பாடும் பரிசையும் அப்பெண்கள் வினயது.

(பொ - ரை) குற்றமற்ற அழித்தல் தொழிலை உடையானது திருக்கோயில் தொழும்பிற்கு உரிமை பூண்ட திருக்கூட்டத்தினராய பெண்பிள்ளைகாள், (இறைவனுடைய) சொல்லின் தொடர்பினைக் கழிதலையுடைய பாதமலர்களோ கீழ் உலகங்கள் ஏழினுக்கும் கீழ்ப்பட்டனவாகும். (அவனுடைய) ஆத்திப் பேரரும்பினலாய மாலையை அணிந்த திருமுடியும் எல்லாப் பொருள்களும் முடிந்து நிற்கும் முடியாயது. (அவன்) உமையம்மையை இடப்பாகத்தே

கொண்ட திருமேனி (அர்த்த நாரீசுவரத் திருமேனி) ஒன்றுமே யுடையனல்லன். வேதத்தை முதலாகக் கொண்டு விண்ணுலகத் தவரும் மண்ணுலகத்தவரும் ஆதிய எல்லாரும் புகழ்ந்து கூறினும் தனது புகழ் அங்ஙனம் புகழ்ந்து பயிலக் கெடாத ஒப்பற்ற துணைவன். அன்பர் உள்ளத்தே உள்ளவன். (இனையனாகிய அவனுடைய ஊர் யாது? பேர் யாது? அவனுக்கு உறவினர் யார்? அவனுக்கு அயலவர் யாவர்? அவனைப் பாடும் இயல்பு யாது எனக் கூறுமின். (என்றாங்கு அப்பெண்களை வினவி) எம்பாவாய் (யாம் இன்ன தன்மைகளை அறியாது மயங்குகின்றேம்) ஏற்று உணர்க எ - று.

(வி - ரை.) திருவடியோ சொல்லணுகற்கியலாததாய்ப் பாதாளம் ஏழினும் கீழாய்ப் பெருகிச் செல்லும் உலகங்கள் யாண்டும் அவையாகவே விரிந்துள்ளது. திருமுடியோ அவற்றுட்படாததாய் அப்பாலாகி உள்ளது.

உலகங்கள் யாவுமாகப் பெருகியிருக்கும் இயல்பை அவ்வுலகத்துள்ள மண்ணே கல்லே ஏனைப் பொருளே என்றேனும், பாரதம், சீனம், தாரகை, சந்திரன் என்றாங்குப் பாகுபடுத்துப் பெயரிட்டேனும் அறியும் அறிவு திருவடியறிவாகாது. திருவடி என்பது அறிதற்கரிய ஒன்றற்குக் கூறப் பட்ட குறிப்பு மொழி என்க. கணித நூலார் தெரியாத எண்ணுக்கு $x$ என்று உரைப்பதுபோல. இங்ஙனமே பிரமம், ஞானம் என்று கூறப்படும் சமயக் கூற்றுக்கட்கும் கொள்க. எண் கண்டுபிடிக்கப்பட்ட பின்னர் $x$ என்னும் குறியீடு அதனை அணுகற்கியலாததாய் நீங்குமாறே சமய மொழிகளும் பின்னிடும் என்றுணர்க. அதனாலன்றே "சொற்கழிவு பாதமலர்" என்று உரைக்கப்பட்ட தென்க. இவ்வியல்பைச் சமயநெறி நின்றார் பொருள் செய்துகோடலன்றி ஏனையோர் உணர்தலும் உணர்த் தலும் அரிதென்க.

இங்ஙனம் திருவடியாய் விரிந்தும் திருமுடியாய் நுணுகியும் தானே தானாய்ச் சொற்கழிந்து நிற்பினும், "பேதை ஒருபால் திருமேனி" முதலிய பல எல்லைப்படுத்தப்பட்ட திருமேனிகளுடையனாய்த் துதியுள் அசப்பட்டு நிற்பான்போலத் தோன்றலும் உரியன். அங்ஙனமாயினும் அவனை எல்லைப்படுத்துந்தோறும் படுத்துந்தோறும் மிகுதிப்பட்டு மிகுதிப்பட்டு அவன் புகழும் புகழுக்குரிய பகுதியும் நுணுகியே போதலானும், எல்லைப் படுத்தப்பட்டு அதனுள் நிற்பான்போலத் தோன்றுமாறு எல்லைப் படுத் தினர் தம் கருத்திற்கேற்பக் கூறும் துதி 'நிந்தாஸ்துதி' முதலியவற்றுள் அகப்படாது மிக்குப் போதலானும் "வேதமுதல்.........உலவா" என்றுரைக்கப்பட்டது.

நம்முணர்வு மூலப்பகுதி வரைக்குமே செல்வதாக, அவன் அதற்கப் பாலனாய் இருந்து நமக்கு ஆவனவாகிய மூலப்பகுதியே பிறவே என்றாங்கு விரிந்து துணைபோதலின் "ஒரு தோழன்" எனப்பட்டான்.

"விண்ணோர்" என்றமைக்கேற்ப "மண்" என்பது ஆகுபெயராகக்

கொள்ளப்பட்டது. "வேத முதல்" என்றதை 'வேதமுதல்வன்' என்பாரும் உளர்.

"வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர்" (கம்ப. ஆரணி. காப்) எனக் கம்பநாடர் கூறுதலின, வேதத்தை முதலாகக் கொண்ட விண்ணோர் என்று உரைப்பதும நன்கு பொருந்தும். வேதமே விண்ணோரே மண்ணோரே என்று உரைப்பினும் வேதத்தை முதலாகக் கொண்ட விண்ணோரே மண்ணோரே என்று உரைப்பினும் பொருள் ஒன்றேயாகலான் எங்ஙன முரைப்பினும உரைக்க.

அவன் அளப்பரும பெருவடிவினன்; பேதையைப் பங்கிற்கொண்ட ஏகனே அல்லன், அநேகனுமாவான்; துதித்தாலும் எட்டான்; அங்ஙன மாயினும் அனபர் உள்ளத்தான் என்க. எனவே ஆராய்வுக்கும் துதிக்கும் அகப்படான் எனவும் அன்பில் அகப்படுவான் எனவும் சமயத்துணிவு கூறியவாறாயிற்று

"பாதாளம்.........முடிவே" என்பதனுல் அவனகத்துள்ளே எல்லாம் அகப்பட்டன என்பதும, மூலமும் முடிவுமாவான் என்பதும், "பேதை ஒருபால் திருமேனியன்" என்பதனுல் அவனே படைத்தளிப்போனு மாவான் என்பதும், "திருமேனி ஒன்றல்லன்" என்பதனுல் அறிதற் கரியன் என்பதும், அவனே "தோழனும் உளத்தனும்" என்பதனுல் அவனை யடைந்துய்தலும் இன்றியமையாதது என்பதும் கருதிய தலை மகளும் ஆயத்தாரும் அன்னவையெல்லாம் தெளிதறகுக் கோயிறபிணுப் பிள்ளைகளிடத்தே விஞவுவாராயினர் என்க.

பொருளை விளக்கிக் கொள்ளற்குரிய வரையறைப்படுத்துவது இடம் ஆதலால் ஊரும், இவ்விவ்வரையறைக்குட்பட்ட இவ்விப் பெயரின எனப் பொருளை வழங்கற்கு ஏற்றது பெயராதலால் அதுவும், அப்பெயர்ப் பொருட்கு எவ்வியல்புகள் ஒன்றுபட்டன, எவை அயன்மைப்படடன என அறியாவிடில் அப்பொருளைத் தமதாக்கிக் கொள்ளல் சாலாதாகலின் உற்ருர் அயலார் என்பதும், அங்ஙனம் விஞவியறியின் அதன்பால் தம் உள்ளம் புக்குச் சுவையூற்றெடுத்துப் பாடுதலும் மரபாகலின் பாடும் பரிசும் முறையே விஞவப்பட்டன என்க. இங்ஙனம் விஞயதற்குக் காரணம் அவன் திருவடியும், திருமுடியும், திருமேனியும் ஏனைய இயல்பும் அறிதற்கருமையும், அவனியல்பு கேட்டு அவன்பால் தம்முள்ளம் பறறி நிற்பதுமாம். இறைவனை உறவுசெய்து இன்பமுற்ருரையும், அயன்மை செய்து துன்பமுற்ருரையும், இடைப்பட்டு வறிது போனுரையும் கிளந்து கூறிப்பாடுதலே சிவபுராணம் ஆதலின், அவரை இவர் அங்ஙனம் விஞவினர் என்க.

"பப்பற வீட்டிருந் துணரும் நின் னடியார்
பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்கு கின்ருர் அணங்கின் மணவாளா" (திருப்பள். 6.)

என்றருளிச் செய்வர் ஆதலால் இங்கே "அரன்கோயிற் பிணுப் பிள்ளை

காள்" என்றது, வீடுபேற்றுணர்வு முற்றி இறைவன்பால் உடன் அமர்ந்து இன்பம் நுகரந்து வந்த மெய்யனபர், இறைவன் மண்ணுலகத் திலே திருக்கோயில் கொள்ளுதலால் அவனோடு பிரிவற்ற தாமும் ஆண்டுச் சென்று அவனையே தம் தலைமகனுகக் கொண்டு அன்புசெய்து தொழும்பு பூண்டு வருவாராகிய அவரையே என்க.

முன்னர் இறைவனுடன் ஒருவராகி இருந்தவரே இப்போது இன்பம் நுகர்வான்வேண்டி இருவராயினர் என்க. இதனை,

"சொற்பாலமுதிவள் யான்சுவை" (திருக்கோ. 8)

என்பதனுனும் அதன் உரையானும் அறிக. இத்திருப்பாட்டிலே அமுதம் இவளாவாள்; அதன்கட் கரந்துள்ள சுவை யான் ஆவேன் என்றமையானே தலைமகள் சத்தியாகவும, தலைமகன் அச்சத்தியுள்ளே கரந்துகிடக்கும் சிவமாகவும் அமைதலால் திருக்கோவையார் உண்மை என்னும் நூலுடையார் கூற்றுப் பொருந்தாதாதல் அறிக. அமுது அதன் சுவையை நுகர்வது என்றல் பொருந்தாது. அமுதமானது அதன் சுவையைச் சுவைக்க வந்தால் ஒப்ப என விரிக்க.

"பூவிடைப்படினும்" என்னுங் குறுந்தொகைப் (57) பாட்டிலே,

"பிரிவரிதாகிய தண்டாக் காமமொடு
உடனுயிர் போகுக தில்ல
கடன் அறிந்து இருவேம் ஆகிய உலகத்து
ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கே"

என்னும் பகுதிக்கண் "கடன் அறிந்து" என்றதற்குப் புணர்ச்சியால் வரும் இன்பம் துய்க்கும் கடப்பாடறிந்து எனவும், "இருவேமாகிய உலகத்து" என்றதற்கு முன்னர் வானுலகத்திலே குணியும் குணமும் போல ஒன்ருகி இருந்து பின்னர் அக்குணிக்கு ஒரு குணனும், அக் குணத்திற்கு ஒரு குணியும் உளவாயமைதல் ஒப்ப இரண்டுபடப் பெற்ற இந்நிலவுலகத்திலே புணர்ச்சி இன்பம் துய்க்காது பிரிந்தமையால் ஒருமைப்படடேமாகிய நாம் இப்புன்மையின் நின்று நீங்கித் தப்புதற்கு எனவும்,

"தண்டாக் காமமோடு உடனுயிர் போகுக"

என்றதற்குப் பிரிதல் அரிதாகிய குறையாத காமத்தோடு ஒருங்கே என்னுயிர போவதாகுக எனவும பொருள் கொள்க.

முன்னர் வானுலகில் குணனும் குணியும்போல் ஒன்றுபட்டிருந்தேம். பின்னர்ப் புணர்சசியின்பம நுகரும் கடப்பாடறிந்து இருவேமாயினேம். இன்னே இருவேமாகிய நாம பிரிவால் ஒருவேம் (தனிப்பட்டேம்) ஆயினேம். ஆதலால் அத்தனிமைப்பாடு நீங்குதற் பொருட்டு என் காமத்தோடு உயிரும் உடனே நீங்குக எனக் காப்பு மிகுதிக்கண் ஆற்ருளாய தலைமகள் தோழிக்குச் சொன்னுள் என இங்ஙனம் இப்பகுதிக்கு மெய்ப்பொருள் கொண்டு,

" வீட்டிருந்துணரும் நின்னடியார்......(வந்து)
கன்னியராகி வணங்குகின்றார் "

என்றதன் உண்மைப் பொருளையும் தெளிந்துகொள்க.

இன்னவற்றால் கோயிற்பிணாப் பிள்ளைகள் முன்பு அன்பராவார் என்றும், அவர்க்குத் தலைமகன் இறைவனாவான் என்றும், அவர் முன்னர் வீட்டுலகத்திலே குணியும் குணமும்போல ஒன்றுபட்டிருந்தனர் என்றும், பின்னர்ப் புணர்ச்சி இன்பம் நுகர்தற் பொருட்டு இங்ஙனம் பலராயினர் என்றும் கொள்ளக் கிடத்தலைக் கண்டு தெளிக. இன்னும் இதனானே மெய்யன்பர் வீட்டிலே இறைவனொடு ஒருவராயும், இவ்வுலகிலே அவனும் தாமும் என இருவராயும் இருந்து வருவார் என்பதும், அவர் திருவிளையாடல்களைப் பரவிப் பாடுதலே இருமைப் பயனையும் விளைக்கும் என்பதும், அதுவே தமிழ்மறைப் பொருளாம் என்பதும், அவ்வுண்மை அறிந்த அடிகளும் இறுதியிலே திருக்கோவையார் பாடியருளி வீடு பெற்றார் என்பதும் கொள்ளக்கிடத்தல் காண்க. இனையோரன்னவற்றையெல்லாம் யாம் எழுதிய " திருக்கோவையார் " என்னும் கட்டுரைக்கண் காண்க.

கோயிற் பிணாப்பிள்ளைகள் இறைவனுடைய ஊர் பேர் இன்ன என்றலையும், அவனுக்கு உற்றார் அயலார் யாவர் என்றலையும், அவனைப் பாடும் பரிசினையும் இயல்பாகவே அறிந்தவர்கள் ஆதலால் அவரை அவர் வினவினார் என்க. இதனால் தாமும அவர் நிலை எய்துதற்கு விழைந்தனர் என்பது பெறாம். கோயிற்பிணாப் பிள்ளைகள் என்பது பெண்மக்களைக் குறித்தது. (அங்ஙனமாதலை தொல். பொருள். மரபியல் 61, 69-ஆம் சூத்திரங்களாலும் கண்டுகொள்க.) உருத்திர கணிகையர் எனக் கொள்ளுதலுமாம்.

**மொய் ஆர் தடம்பொய்கை புக்கு முகேர்என்னக்**
**கையால் குடைந்து குடைந்துன் கழல்பாடி**
**ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போல்**
**செய்யா வெண்ணீருடி செல்வா சிறுமருங்குல்**
**மைஆர் தடங்கண் மடந்தை மணவாளா**
**ஐயாநீ ஆட்கொண் டருளும் விளையாட்டின்**
**உய்வார்கள் உய்யும் வகைஎல்லாம் உய்ந்தொழிந்தோம்**
**எய்யாமல் காப்பாய் எமையேலோர் எம்பாவாய்.** **11**

இஃது இறைவன்தன் ஊர் பேர் முதலாயவற்றையும், அவனைப் பாடும் பரிசையும் முதுபார்ப்பனிமாரால் தெரிந்துகொண்டவர், அவனை நோக்கி உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்; இன்னும் அங்ஙனமே எம்மை எய்யாமற் காப்பாய் என நீராடற் பயனை வேண்டிக்கொண்டது.

(பொ - ரை ) (அவர் இறைவனை நோக்கி) தலைவனே, நிறைந்த நெருப்புப் போன்ற செந்நிறத் திருமேனியனே, வெளி

தாகிய திருநீறு பூசியோனே, எல்லாவற்றையும் பெற்றுக்கொள்ள எளிதாக அமைந்த எங்கள் செல்வனே, சிறிய இடையையும் மையுண்ட பெரிய கண்ணையும் உடைய உமையம்மை கணவனே, ஐயனே, பூக்கள் முதலாயின நெருங்கி நிறைந்து அகன்ற இயல் பாகத் தோன்றிய நீர்நிலையில் புகுந்து கையால் " முகேர் " என்னும் ஒலியுண்டாக முழுகி முழுகி உன் திருவடிகளைப் பாடி உன் மரபடியேமாக நாங்கள் வாழ்வடைந்தேம். (செவ்விக்கேற்ப) அழ காக அடிமை கொண்டுவரும் அற்புக்காதல் திருவிளையாட்டால் உய்தி எய்தும் அன்பர்கள் உறுதிப்பயன் எய்தும் வகைகள் எல்லாம் யாங்களும் பெற்று ஈடேறிவிட்டோம் ; எங்களை இங்ஙனமே இனிமேலும் வருந்தாமல் காத்துவருவாயாக ; எம்பாவையே, (இவ்வாறு எங்கள் முறையீட்டை) ஏற்று உணர்க எ – று.

(வி - ரை.) மொய், வண்டுமாம். அது வைகறையாதலைக் குறிக்கும். பொய்கை - மானிடராக்காத நீர்நிலை. கையால் முகேர் என்ன - கையினுல் 'முகேர்' என்னும் ஒலியுண்டாக. குடைதல் - மூழ்குதல். பலகாலும் பயின்றமை தோன்றக் " குடைந்து குடைந்து " என அடுக்கப்பட்டது.

மார்கழிநீர் ஆடிப் பாடினமையால் யாம் நின்னடியவரைக் கணவராகப் பெற்றேம் என்றார் என்க. வழியடிமைப்பட்டு வந்தமையால் மார்கழி நீராடவும் நின்னைப் பாடவும் பெற்று, நின்னடியாரைக் கணவராகவும் பெற்று உய்ந்தோம் என்றார் என்க. மாணுக்கியராகவும், பணியடியார் களாகவும், தோழியராகவும், கணவராகவும், அன்ன பிறராகவும் கொண்டு நீ விளையாடிவரும் விளையாட்டால் நின்னன்பர் உய்ந்தவாறெல்லாம் யாமும் பெற்று உய்நதோம் என்றார் என்க.

முன்னரும் வருந்தாது அன்ன பேறுகளை யெல்லாம் எய்திவந்தோம் ; இன்னும் அங்ஙனே எய்தியவாறு எம்மைக் காப்பாயாக என்று விண்ணப்பித்தபடி. எய்யாமை - வருந்தாமை ; மெய்வருந்தாமையுமாம்.

தாம் இங்ஙனம் இங்ஙனம் ஆட்கொள்ளப்படுதல் வேண்டும் எனக் கருதியிருந்த கருத்தெல்லாம் நிறைவேறின என்பார் " ஐயா.........உய்ந் தொழிநதோம " என்றருளிச் செய்தார்.

தலைவனுய்ச் செமமேனியில் வெண்ணீறு பூசி மடந்தை மணவாளனுய் முன்வந்து எங்களைத் தம் வயம் இழக்கச்செய்து அன்பராக்கித் தன்னடி யார்க்கு அன்புசெயச் செய்வித்தவன் என்பது " ஐயா " முதலியவற்றுற் போந்தன என்க.

**ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடும்**
**தீர்த்தன்நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீ ஆடும்**
**கூத்தன்இவ் வானும் குவலயமும் எல்லோமும்**
**காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி**

வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவம் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துஉடையான் பொற்பாதம்
ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடேலோர் எம்பாவாய் **12**

*இஃது, அவ்வாயத்தார் தலைமகளோடு இறைவனைப் புகழ்ந்து பேசி அவன் திருவடியை ஏத்திச் சுனை நீராடுவோமாக என்றது*

(பொ - ரை ) (நம்மைப்) பிணித்த பிறவித் துன்பம் கெட்டொழியுமாறு நாம் மகிழ்ந்து முழுகும் தூய நீருடையானும், நல்ல தில்லைக் கண்ணுள்ள ஞானமாகிய அம்பலத்திலே தீயினைக் கையிலேந்தி நடனம் புரிகின்ற கூத்தனும், இந்த நிலவுலகத்தையும் அந்த வானுலகத்தையும் உயிர்க்கூட்டமாகிய எல்லோமையும் தோற்றுவித்தும் நிலைபெறச் செய்தும் ஒடுக்கியும் விளையாடுவோனுமாகிய இறைவனுடைய செய்தியைப் புகழ்ந்து பேசும் பேச்சுக்களையும் பேசி, வளையல்கள் ஒலிக்கவும் நீண்ட மேகலைகள் ஆரவாரஞ் செய்யவும், அழகிய கூந்தலின்மேல் வண்டுகள் ஆரவாரிக்கவும், பூக்கள் விளங்காநின்ற பொய்கையிலே (முன்னர்) நீராடி நம்மை அடிமையாக உடைய பெருமானுடைய பொன் போன்ற திருவடியை வணங்கி, அதன்பின் சுனையின்கண்ணுள்ள கரிய நீரிலே மூழ்குவோமாக (என்றார்), எம்பாவையே, மற்றதனை ஏற்று உணர்க எ – று.

(வி - ரை.) ஆடு, வியங்கோள். ஆர்த்தல் - கட்டுதல். பிறவி - பிறவிப் பிணி ஆர்த்து - ஆரவாரம் செய்து. நீர் - நீர்மை, தன்மை. வான் முதலாய எல்லாம் இறைவன் திருமுன்னர் இருத்தலால் " இவ் " வெனச் சுட்டிக் கூறப்பட்டது. இகரச் சுட்டினை ஏனையவற்றுக்கும் கூட்டியுரைக்க. தோற்ற ஒடுக்கங்கள் காத்தற்பொருட்டே செய்யப்படுவன ஆதலால் காத்தலை முற்கூறினர். தோற்ற ஒடுக்கங்கட்கு இடைப்பட்ட காத்தலும், அவற்றிடைப்படாத காத்தலும் எனக் காத்தல் இருவகைப்படும். அவற்றுள் இது முன்னையது. " விளையாடி " என்பதனுள் இகரம் வினைமுதற் பொருளை உணர்த்தி நின்றது. வார்த்தை - செய்தி. அரவம் - ஒலி. ஆர்ப்பரவம் - ஆரவார ஒலி.

நாம் ஆடும் தூய நீருடையான் என்க. ஆடுதல் - இறைவனுடைய அளவற்ற குணக்கடலினுள்ளே மனம் மூழ்கப்பெறுதல். தீர்த்தன், தூய்மை செய்வோனுமாம்.

அன்பரை இன்பக்கடலுள் மூழ்க வைத்தற் பொருட்டுத் தில்லைச் சிற்றம்பலத்துள்ளே நின்று அவர்க்குக் காட்சி தந்து நடித்தும், அந்நடிப்பால் வான் முதலாயவற்றைக் காத்தும் படைத்தும் கரந்தும்

உயிர்கட்குப் பிறவிப்பிணி நீக்கியும் வருதலை ஒரு விளையாட்டாகவும் கொண்டவன் என்பது "தீர்த்தன்" முதலியவற்றுற் போந்தது என்க.

வார்த்தை பேசல் நாவிற்கும், கேட்டல் செவிக்கும் உரியதாக, நீராடல் ஏனைப் பொறிகட்கும தொழிலுறுப்புகட்கும் உரியதாமென்க.

முன்னர் பொய்கையிலும் பின்னர்த் தூய சுனைநீரிலும் ஆடுதலே தீர்த்தமாடுவார் மரபென்க. முன்னையது நாடோறும் நீராடலெனவும் பின்னையது விசேட தின நீராடலெனவுங் கொள்க.

பைங்குவளைக் கார்மலரால் செங்கலப் பைம்போதால்
அங்கம் குருகினத்தால் பின்னும் அரவத்தால்
தங்கள் மலம்கழுவு வார்வந்து சார்தலினல்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கும் மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். 13

இஃது, இறைவனும் இறைவியும் போன்ற மடுவிலே புகுந்து தலைவியே, நீ நீராடுதி, யாமும் உன்னுடன் சேர்ந்து ஆடுவோமாக என ஆயத்தார் கூறியது.

[இங்ஙனம ஒப்புமை செய்தமையால் மார்கழி நீராடலும் காதலின்பம் நுகர்தலும் ஒன்ருக உரைத்து நீராடற்கண் ஊக்கமூட்டிய திறன் ஆராய்தற்பாலது ]

(பொ - ரை ) பசிய கருங்குவளை மலர்களையுடைமையானும், செம்மைத்தாகிய தாமரையினது பேரரும்புகளை யுடைமையானும், தன்னிடத்தே பறவைக் கூட்டங்களை உடைமையானும், தங்கள் தங்கள் அழுக்குகளைக் கழுவுவோர் தன்மாட்டு வந்து சார்தலினலும், தொடர்ந்து செல்லும் ஒலியுடைமையானும், பசிய குவளை மலர்போன்ற நிறமுடைமையானும், திருவாயும் திருவடியும் திருக்கரமும் செந்தாமரைப் போதுபோன்ற செந்நிறமுடைமை யானும், அழகிய இனமாகிய வளையல்கள் அணிந்துள்ளமை யானும், கூந்தற்பின்னலாகிய அரவத்தையுடைமையாலும், உயிரின் அழுக்கைக் கழுவுவோர்கள் வந்து அடைதலினலும், எம்பிராட்டியை யுட, பசிய கருங்குவளைபோன்ற நீலகண்டத்தை யுடைமையானும், செந்தாமரைப் போதுபோன்ற செந்நிற முடைமையானும், அடையாளமாகக் குருக்கத்தி மலர்மாலை அணிந்திருத்தலானும், ஒன்றேடு மற்றென்று இணைந்துகொள்ளும் பாம்புகளை அணிந்திருப்

பதனாலும், உயிரின் அழுக்கைக் கழுவவேண்டுவோர் வந்தடைதலி னாலும் எங்கள் பெருமானாகிய சிவபெருமானையும் ஒப்பத் தோற்றம் பெற்ற பெருகிவருகின்ற ஆழிய நீர்நிலையிலே நமது வளையல்கள் ஒலிக்கவும், காற்சிலம்பு அவ்வளையொடு மயங்கி ஒலிக்கவும், கொங் கைகள் (காதலைப் பெற்றுக்கொள்ளும் உள்ளக் கிளர்ச்சியால்) பூரிக் கவும், தாமரைப் பூப்படர்ந்த அழகிய நீருட் பாய்ந்து (தலைவியே நீ) ஆடுவாயாக, (உன்னுடன் யாமும் ஆடுவோம்,) எம்பாவாய், (யாங் கூறுவதனை) ஏற்று உணர்க எ - று

(வி - ரை ) கார் - கருமை போது - பேரரும்பு; வைகறையாதலால்· அங்கம் - இடம்; அழகு; அடையாளம். குருகு - நீர்ப்பறவை, பொதுவு மாம், வளையல் - அரிபெய் சிலம்பு; குருக்கத்தி யினமாகிய மலரமாலை. பின்னுமரவம் - தொடர்ந்து செல்லும் ஒலி; பின்னப்பட்ட அரவம் போன்றதாகிய கூந்தற்பின்னல், பிணைந்துகொள்ளும பாம்பு. மலம் - உடலின் அழுக்கு; உயிரின் அழுக்கு சங்கம் - கைவளையல். சிலம்பு கலநதார்த்தலாவது சஙகவொலியுடன் சிலம்பொலியும் கலந்து ஒலித்தல். சிலம்பு தமமுள்ளே கலநது எனினுமாம். மார்கழி நீராடறபேறு கருதிக் கொங்கை பொங்க என்க.

இறைவிக்குள்ளனவெல்லாம் இறைவற்கும், இறைவற்குள்ளனவெல் லாம் இறைவிக்கும உள என்றலும் ஒன்று.

தங்கள் மலங் கழுவுவார் வநது சார்தலினால் என்புழி, அவரால் சாரப் படுதல அமமையப்பர்கட்குப் பொதுவாதல் போல மடுவிற்கும் அம்மையப் பரகட்கும பொதுப்படக் கார்மலர் முதலியனவும் அமைந்து நின்றன என்க

அம்மையப்பர்களின் அருட்கடலில் தோயப்பெறும் காரியத்தினை மடுக் கண்ணே நினைவூட்டிய திறன் பாராட்டற்பாலது.

இசசெமமொழிசசிலேடைகளும் பிறவும் போகம் நுகரும்போது நிகழ்வனவறறை நினைவூட்டி அது நிகழ்வதுபோன்றே எண்ணி இனபுறச் செய்வது காண்க.

காதார் குழைஆடப் பைம்பூண் கலன்ஆடக்
கோதை குழல்ஆட வண்டின் குழாம்ஆடச்
சீதப் புனல்ஆடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மா பாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தம்ஆமா பாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய். 14

இஃது, அவர் குழை முதலியன ஆடச் சிற்றம்பலம் முதலியன

பாடித் தலைவியே நீ ஆடுதி, யாமும் உன்னுடன் ஆடுவோம் என்றது.

(பொ - ரை ) காதிற் பொருந்திய தோடு ஆடவும், அணியப் பட்ட பசிய பொன்னால் ஆகிய அணிகலன்கள் ஆடவும், மாலையும் கூந்தலும் ஆடவும், (கோதையைச் சூழ்ந்து) வண்டுக் கூட்டங்கள் ஆடவும், குளிர்ந்த நீருள்ளே மூழ்கித் தில்லைச் சிற்றம்பலத்தைப் பாடியும், மறைநூலின் உட்பொருளைப் பாடியும், இறைவன் அப் பொருளாமாற்றைப் பாடியும், (மறைநூல் நுதலிய அறம்பொருள் இன்பங்கள் ஆதியவற்றின்) சோதியாய் நிற்கும் கூறுபாட்டினைப் பாடியும், அவனுடைய சென்னியிலே சிறப்பாக அணியப்பட்ட கொன்றை மாலையைப் பாடியும், எல்லாவற்றுக்கும் முதல்வனாகிய அவனுடைய ஆற்றலைப் பாடியும், எல்லாவற்றுக்கும் அவனே முடிவாக நிற்கும் நிலையைப் பாடியும், நம்மை மலங்களினின்று வேறு படுத்தி வளர்த்து மேம்படச் செய்த பெய்யப்பட்ட வளையலை அணிந்த அன்னையின் திருவடி இயல்பைப் பாடியும் தலைவியே நீ நீராடுதி, யாமும் உன்னுடன் நீராடுவோம், எம்பாவாய், (இதனை ஏற்று உணர்க) எ - று.

(வி - ரை.) தில்லைச் சிற்றம்பலத்துள்ள "வேதப்பொருள்". அப் பொருள் வேத ஒழுக்கத்தானும் பத்தியானும் ஞானத்தானும் பெறப்படுவது.

அவ்வேதத்துள் ஓதிய அறனும் பொருளும் இன்பமும் அவற்றின் காரண காரியங்களும் இறைவனுமாறுபாடி என்க. அவற்றகத்திலே இறை வன் "சோதி"யாக விளங்கிவருவன் என்க.

அறனொடு மாறுபட்ட பொருள் இன்பங்களை அழித்துச் சூடிய "கொன்றைத்தார்" என்க.

வேதத்துக்கும் ஏனையவற்றுக்கும் அப்பொருள் "ஆதியந்த"மாக நிலவும் இயல்பிறறு.

அவ்வியல்பனைத்தையும் அறிவித்து உணர்த்தி அழுக்கு அகற்றி நம்மை வளர்த்து மேம்படச் செய்த "பெய்வளை" என்க.

சிற்றம்பலமாகிய பரவெளியினின்று வேதமும், அதனினின்று வேதப் பொருளாகிய மெய்யுணர்வும், அம்மெய்யுணர்வில் இறைவன் வெளிப் பாடும், அங்ஙனம் வெளிப்பட்ட அவனது சோதியின் இயல்பும், அச்சோதி அறனொடுபடாத பொருள் இன்பங்களை அழித்துப்பெற்ற வெற்றிக்கு அறி குறியாகச் சூடிய கொன்றைத்தார் காட்சியும, அக்காட்சியால் திருவடியின் ஆதியந்தங்களின் அமைதித் திறனும் அறிந்துகொண்டு வீடுபேறு உறும் செம்மையும், அவ்வனைத்தும பெற்றுய்யத் துணையருளும் பாலித்தது அம்மை திருவடி என்க. இன்ன எல்லாவறறையும் உடன்கொண்டு

அவற்றை மேன்மேலும் பெறவேண்டி "எம்பாவாய்" என அழைத்தனர். இன்னவற்றையெல்லாம் பாடுதல் மார்கழி நீராடற்கண் இயல்பென்க.

ஓர்ஒருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீர்ஒருகால் வாய்ஓவாள் சித்தம் களிகூர
நீர்ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பார்ஒருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்
பேர்அரையற்கு இங்ஙனே பித்துஒருவர் ஆமாறும்
ஆர்ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
வார்உருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏர் உருவப் பூம்புனல் பாய்ந் தாடேலோர் எம்பாவாய். 15

இது, காதற் பித்துடையவராக்கி ஆட்கொள்ளும் வித்தகருடைய தாளை நாம் வாயாரப் பாடித் தலைவியே, நீ புனலிற் பாய்ந்தாடுதி என்று ஆயத்தார் கூறியது

(பொ - ரை) கண்டவர் நெஞ்சம் உட்கத்தக்க கச்சுக் கட்டிய கலன் அணிந்த முலையுடையீராவீர், இடையிடையே ஒவ்வொரு முறை எம்பெருமான் என்றென்று நம்பெருமானுடைய சிறப்புக்களை ஒருபொழுதேனும் ஒழிவில்லாமல் சொல்வதில் வாயோயாதவளாகிச் சித்தம் உவத்தல் மிகும்படியாக ஒருபோதேனும் ஒழிவில்லாமல் கண்கள் நெடிய நீர்த்தாரையைச் சொரிய (இவ்வண்ணமாய கோலத்துடனே) ஒருமுறை பூமியில் அவதாரம் செய்தாற் போன்றவளாகிய தலைமகள் (ஏதேனும் ஓர் உதவியை வேண்டியேனும்) தான் விண்ணவர்களைப் பணிதல் செய்யாதவளாய்(ப் பேரரசனாகிய தலைவன்மாட்டுக் காதற் பித்துடையளாய் இங்ஙனம்) இருக்கின்றாள். பேரரசனாகிய தலைவன் பொருட்டு இவ்வாறு பித்துக்கொண்டிருக்கும் ஒருவராகின்ற விதமுடையவர்களும் வேறு யாரொருவர் ? (யாருமிலர் ) இவ்வண்ணமே (காதற்பித்துடையவராக்கி) அடிமை கொள்ளுகின்ற திறமைப்பாடுடைய தலைவனது திருவடிகளை நாங்கள் வாயாரப் பாடித் தலைவியே, சிறந்து தோன்றும் பொலிவு பொருந்திய நீருட் பாய்ந்தாடுதி, எம்பாவாய், (இவ்வாறாடுங்கால் தலைவனும் தலைவிமேல் காதற்பித்துடையனாமாறு) ஏற்று (அருள்செய்வதற்கு) ஓர்வாயாக எ - று

(வி - ரை.) வாயோவாது நம்பெருமான் சீர் கூறும்போது இடையிடையே ஒவ்வொருமுறை "எம்பெருமான்" என்று கூறுவள் என்க.

தன்னை நோக்கினார்க்கு இனிய காட்சி அளித்துத் தன்னில் மூழ்க வைக்கும் இயல்பிற்று அந்நீர் என்பது தோன்ற "ஏருருவப் பூம்புனல்" எனப்பட்டது.

காவலும் வீறும் இயற்கையழகும் செயற்கையழகும் பொருந்திய முலை என்க. "வார்" என்றமையால் காவலும, "உருவ" என்றமையால் வீறுமாகிய இயறகையழகும், "பூண" என்றமையால் செயற்கையழகும் கொள்ளப்படும். கனனிமைப் பருவம் உடையர் ஆதலின் முலையுடையீராவீர் என விரித்தாம்.

எம்பெருமான் என்றலும் சீர் கூறலுமாகிய இரண்டன்கண்ணும் வாயோவாளாகி, நெடுந்தாரை கண்பனிப்ப இவ்வாறுய உருவத்துடனே பாருக்கு இறங்கி வந்தாறபோன்றவள் என்க.

'வந்தெனையாள்' என்றும் பாடம். அங்ஙனமாயின் பாரில் ஒருகால் வந்து எனை ஆட்கொள் என விண்ணோரைப் பணியாள் என்றுரைக்க.

முன்இக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்
என்னத் திகழ்ந்துஎம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்துஎம் பிராட்டி திருவடிமேல்
பொன்னம் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய். 16

இஃது, அம்மகளிர் நிலவரைப்பு வெம்பாதாக மழை பொழிய வேண்டுமெனை எண்ணிக் கூறியது.

(பொ - ரை.) முகிலே, (நீ) முன்னர் இக்கடல் நீரைத் தொகுத்து (மலைமேலேறிக் கரு முற்றிய பின்னர்) வான்மேலெழுந்து, எம்மைப் பொருளாகவுடைய அன்னையின் திருமேனி போல நீலநிறம் விளங்கப் பெற்று, எம்மை அடிமையாகவுடையாளது சிற்றிடைபோல மின்னுதலைச் செய்து, பொலிவு பெற்று, எம்பிராட்டியின் திருவடியின்மேல் விளங்கும் பொன்னாலாகிய அழகிய சிலம்பு ஒலிப்பதுபோல இடித்து, அவளுடைய அழகிய புருவம் போலத் திருவில்லை வளைத்து, அன்னையிற் பிரிதலில்லாத எம் தலைவணகிய இறைவன் தன்னுடைய மெய்யன்பர்கட்கு (யாம் அருளற்குரியம் என) நினைந்து, அவ்வம்மை நமக்கு முன்னர்ப் பொழிகின்ற இனிய அருள்போல மழை பொழியாய். எம்பாவாய், (வியனில வரைப்பு வெம்பாதாக மழை பொழிய) இதனை ஏற்று அருள்க எ - று.

(வி - ரை ) இறைவியை விட்டு நீங்காத இறைவனை ஒப்ப அவன் அடியார கன்னியரை விட்டுநீங்காவாறு அவள் பொழியும் இன்னருள் என்க. அவ்வருளைப் பெறக் கருதுவார் மார்கழி நீராடல் இயல்பென்க.

தலைமகளை இறைவனும் மணந்துகொள்வான் என்பது இதனுலும் பெற்ரும்.

அம்மையானவள், எம்மை அடியாரோடும் தலைமகளை இறைவனொடும் கலந்து கொள்வித்தற்குத் திருவருள் பாலிப்பாள். அவ்வின்னருள்போல "மழையே பொழியாய்" என்று கூறினர் என்க.

முன்னே என்றதற்குக் கார்காலத்துக்கு முன்னே எனப் பொருள் கொள்ளின், திரு எம்பாவை நிகழ்வது மார்கழித் திங்கட்கண்ணே ஆதலின் அங்ஙனம் உரைப்பது கால முரண்பாடாகும் என்க. முன்னே - எமது கண்முன்னே.

மார்கழித் திங்கள் வைகறையிற் பொழியும் மழைநீர் ஆடற்கினிய பெற்றியுடைத்து. அது நம்மை அடியவர்க்குரியவராக்கும் அம்மையின் அருளை நிகர்த்தது. கற்புக்கடன் பூண்டு மார்கழி நீராடும் கன்னிமை கழியாக் கன்னியர் நீராடுகையில் தமது கறபின் திறத்தால் உலகின்மேல் அருள் கொண்டு மழையே பொழிகுதி எனக் கட்டளையிட்டனர் என்க.

கன்னியர்க்கு அருள் சுரத்தலே இறைவனடியார்க்கும் அருள் சுரத்தலாக முடிதலால், எங்கோமான் அன்பர்க்கும் நமக்கும் சுரக்கும் இன்னருள் என்று கூறுவது மரபன்று.

செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நம்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட்கு ஆரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலம்திகழப்
பங்கயப் பூம்புனல் பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய். **17**

இது, நம்முடைய இல்லங்கள்தோறும் தானே எழுந்தருளி வந்து இன்பமளித்த சேவகனைப் பாடி மார்கழி நீராடுவாய் எனத் தலைமகட்கு ஆயத்தார் கூறியது.

(பொ - ரை ) மணத்தினையுட்கொண்ட கூந்தலையுடையவளே, சிவந்த கண்களையுடைய திருமாலிடத்தும், திசைக்கொன்ருக நான்கு திசைக்கும் நான்கு முகங்களையுடைய அயனிடத்தும், (இந்திரனை முதலாகவுடைய) விண்ணுலகத்தாரிடத்தும், பிறவுலகத்துள்ளாரிடத்தும் இல்லாத ஒப்பற்ற இன்பமானது நம்மிடத்ததாக நம்மைச் சீராட்டி இவ்வுலகத்து நம்முடைய வீடுகள்தோறும் (தாமும் தம்மடியவரும் காதலராக) எழுந்தருளித் தமது செந்தாமரை மலர் போன்ற அழகிய திருவடியை எமக்குத் தந்தருளும தொண்டினை

யுடையானும், தண்ணளி நோக்காகிய அழகிய கண்களையுடை யானும், அடியோங்களாகிய நமக்குக் கிடைத்தற்கரிய அமுதம் போன்றவனுமாகிய எங்கள் பெருமை வாய்ந்தவனை (செய்ந்நன்றி யறிந்து போற்றுதலால் நமக்கு அமைந்த) நன்மை விளங்குமாறு பாடித் தன்னுள்ளாடினூர்க்குப் பொலிவினைச் செய்யும் நீரிலே பாய்ந்து ஆடுவாயாக. எம்பாவையே, (எம் வேண்டுகோளை) ஏற்று அருளுக எ - று.

(வி - ரை.) திருமால் முதலியோர்க்கு இறைவன் தனது திருவடியைத் தானே வந்து தந்தருளாமையாலும், அவர் தாமே முயன்றும் பெறாமையானும் அவர்பால் அவ்வின்பமும் இல்லாதாயிற்று. பேரின்ப நுகர்ச்சியை உதவும் உலகுடைய செங்கண்ணன்பாலும் இவ்வின்பம் இல்லாதாயிற்று என்க. இது கருதியன்றே,

“ தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.” (திருக்குறள். 1103.)

எனக் கூறி யருளினர்.

ஐம்புலன்களை அடக்கித் தவ யோகங்களைச் செய்து உடலை நீத்துப் பெறும் இன்பம் தாமரைக்கண்ணான் உலகின் கண்ணுள்ளது. ஐம்புலன்களை யடக்காதும் தவ யோகங்களைப் பயிலாதும் உடம்பினை ஒருவாதும் நுகர்வது அன்பின் ஐந்திணை இன்பமாகலின் அதனினும் இது சிறந்ததென்க.

இறைவனை அன்பினானன்றி மற்றெவற்றானும் பெறுதற்கியலாது என்றலைத் திருவண்டப் பகுதி 124-ஆம் அடி முதலியவற்றானும் கண்டுணர்க.

அன்பின் ஐந்திணை நெறிபயில்வார் சிவபுரத்தினைப் பெறுவார் என்பது இத்திருப்பாட்டானும், திருக்குறளானும், திருக்கோவையாரானும், அன்னபிறவற்றானும் விளங்கிக் கிடத்தல் காண்க. இதனால் அன்பின் ஐந்திணைநெறி தமிழ்நெறியாயினமை பெற்றாம். அதனைக் கூறும் நூல்களே தமிழ் நூல்கள் என்க.

மார்கழி நீராடுவார் இல்லங்கள்தோறும் தலைமகனாக இறைவனும், அவனோடு அடியவரும் வந்து திருவடி நலந்தரும் திறனைப் பாடுதல் அதன் வரலாறு கிளத்தலாதலால் “ நலந் திகழப் பாடி ” என்றார்.

இறைவன் தலைவியர்க்குத் தனது பூங்கமலப் பொற்பாத இன்பநுகர்வு தருதற்பொருட்டு வேட்டுத் தொழில் பூண்டுவருதலால் “ சேவகன் ” என்றும், அங்ஙனம் வேட்டைமேற் செல்வோன் அரசனாகவும் தண்ணளி யுடையனாகவும் வருதலின் “ அங்கண் அரசை ” என்றும், அவ்வரசனே தலைவியர்க்கு இன்ப அமுதை ஊட்டுதலால் “ அடியோங்கட்கு ஆரமுதை” என்றும், அவர்தமக்கு அவன் பெருமை செய்தவன் ஆதலால் “ நங்கள் பெருமானை ” என்றும் உரைத்தனர்.

கன்னிமை கழியாக் காதற்புராணம் திரு எம்பாவை போன்றதும், கன்னிமை கழிந்த காதறபுராணம் திருக்கோவையார் போனறதுமாம் என அறிநது போறறுக. இன்னவெலலாம தமிழ்மறை என்றேதுக.

முன்னும் பின்னும இறைவனைப் பாடுதலாகக் கூறியவெல்லாம் இக் காமஙகளையே குறித்தனவென்று உய்த்துணர்ந்துகொள்க.

அண்ணா மலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறு அற்றாற்போல்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாம்அகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக்
கண்ணார் அமுதமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேஇப் பூம்புனல்பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய். 18

இதுவும் தலைவியே, நீ தலைவன் கழல் பாடிப் பூம்புனலிற் பாய்ந்தாடுதி என ஆயத்தார் கூறியது

(பொ - ரை ) பெண்ணே, (தலைவியே)
கண்ணுறையும் இறைவனுடைய திருவடித் தாமரைக்கட் சென்று வணங்கும் வானவருடைய முடிக்கண் இழைத்துள்ள அரதனக் கூட்டங்கள், இறைவனுடைய திருவடி ஒளிமுன்னர்த் தமக்கு அமைந்த சிறப்பொளி விளக்கம் இழந்தாற்போல உலகிற்கெல்லாம் கண்ணாக அமைந்த ஞாயிற்றின் கதிரக்கு (முன்னர்) வந்து இருள் மறையவும், நட்சத்திரக் கூட்டங்கள் தமமுடைய தண்ணொளி மழுங்கி அவ்வொளியோடு தாமும் தோற்றம் பெறுவாய் அகலவும் (அப்போது), ஆண்மையைத் தன்னுள்ளே கரந்துகொள்ளும் பெண்ணாகியும், பெண்மையைத் தன்னுள்ளே கரந்துகொள்ளும் ஆணாகியும், அவ்விரண்டனையும் தன்னுட் கரந்துகொள்ளும் அலியாகியும், அம் மூன்றனுக்கும் இடனாகிய வானகமாகியும், மண்ணகமாகியும், ஆண் முதலாய இவையனைத்தும் வேறாகத் தான் அவற்றின்வேறாகியும், காணும் கண்ணுக்கு நிரம்பிய அமுத வடிவாகியும் நிலைபெற்றவனுடைய திருவடியைப் பாடி இந்தப் பொலிவினையுடைய நீரிலே பாய்ந்தாடுவாயாக. எம்பாவையே, (தலைவன்தான் கண்ணாரமுத மாமாறு கருணை புரிக) எ - று.

(வி - ரை.) "கண்ணார் இரவியின்முன் கார் வந்து கரப்பவும், தாரகைகள் தாம் வந்து அகலவும் பெண்ணே, பெண்ணாகி... நின்றான் கழல் பாடிப் புனல் பாய்ந்து ஆடுதி" என்றார் என்க. இங்ஙனம் முடிக்க அறியாதார் 'வந்து' என்னும் செய்தெனனெச்சத்தை 'வர'எனச் செயவென்னெச்ச

மாக்கிப் பொருட்பயன் பேணுது வாளா போவர். இன்னும் அவர் வன் அடிக் கமலத்தின்கண் வானவர் முடி(வந்து) வணங்கி ஒளியறுந் போல்' என்னும் உவமஞெடு பொருளேயும ஏறகப் புணர்த்தி உரைக்கு மாறும் உணர்ந்திலர் என்க.

"அண்ணுமலேயான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும்" என அண்ணுமலே இங்குக் கிளந்து கூறப்பட்டமையால் மலேயில் இயற்றியருளப்பட்டது என ஒருவாறு நினேத்தற்கும இடனுண்டு. தில்லேக்குச் செல்வதே அடிகள் திருவுள்ளக் கருத்தாகலின, தில்லேக்குச் செல்லும்போது இடையிலே பாடப்பட்டது என்பது துணிவாம் என்க.

ஆணே விரும்பிய பெண்ணும், பெண்ணே விரும்பிய ஆணும், அவ் விரண்டனேயும் ஒருங்கே அவாவிய அலியுமாம்-எனினும் இழுக்கின்று.

"இத்தனேயும் வேருகிக் கண்ணுரமுதமுமாய் நின்றவன்" சாதலன் என்றபடி.

மாரகழிநீர் என்பது தோன்ற "இப்பூம்புனல்" எனப்பட்டது.

தலேமகளுகித் தலேவியையும், அங்ஙனமே அடியவாதமையும காதலித் துத் தம்பால் வந்தமையின், அவனுடைய கழலேப் பாடுதல் செய்ந்நன்றி யறிந்து போற்றும் செந்நெறியாயவாறு காண்க

நினேத்த கணவரை மணக்கச்செய்யும் பொலிவினேயுடைய "மார்கழி நீர்" என்க.

உலகிற்கு ஞாயிறு கண்ணுகும் என மறை கூருநிற்கும். அன்றியும் இதனே,

"எண்ணுக்குவரும் புவனம்
யாவினுக்கும் கண்ணுவான் இவனே யன்றே"
(வில்லி. ஆரணி. அருச். 43.)

என்பதனுனும் உணர்க. வீறு - தனிச்சிறப்பு.

**உன்கையில் பிள்ளே உனக்கே அடைக்கலம் என்று**
**அங்குஅப் பழஞ்சொல் புதுக்கும்எம் அச்சத்தால்**
**எங்கள் பெருமான் உனக்கு ஒன்று உரைப்போம்கேள்**
**எம்கொங்கை நின்அன்பர் அல்லார்தோள் சேரற்க**
**எம்கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க**
**கங்குல் பகல்எம்கண் மற்ருென்றும் காணற்க**
**இங்குஇப் பரிசே எமக்குஎங்கோன் நல்குதியேல்**
**எங்குஎழில்என் ஞாயிறு எமக்குஏலோர் எம்பாவாய். 19**

இஃது, அவர் எங்கொங்கை நின்னன்பர் அல்லார் தோள் சேரற்க, எங்கையுனக்கல்லா தெப்பணியும் செய்யற்க, எங்கண் மற்ருென்றும் காணற்க என்னும் பரிசினே மார்கழி நீராடிய எமக்கு அந்நோன்பு முற்றியகாலத்தில் நீ நல்கின் உலகம் எவவாறு திரிவு

படினும் எமக்கென் என்றது. உடம்படுபுணர்த்தலால் தலைவியும் இறைவன்பால் தான் அங்ஙனமாமாறு வேண்டியமைகொள்ளப் படும

(பொ - ரை ) எங்கள் பெருமானே, "உன்னுடைய கையில் உள்ள பிள்ளை உனக்கே அடைக்கலப் பொருளாகும்" என்னும் பழமொழியை எமக்கு நிகழ்ந்த அசசத்தால் புதுப்பிக்கும் யாம், உமக்கு ஒரு விண்ணபபம் செய்கின்றோம், மற்றதனை நீ கேட் டருள்வாயாக எம்முடைய முலைகள் நினனுடைய அன்பர் அல்லா தாருடைய தோள்களைத் தழுவாதொழிக எம் கைகள் எவ்வகைப் பட்ட பணிகளையும் உனக்கன றி(ப்பிறரக்கு எக்காரணங்களை முன் னிட்டும்) செய்யாதொழிவனவாக. இரவும் பகலும் எங்கள் கண் கள் நின்னைக் காணுதலன்றி வேறொன்றனையும் காணாது ஒழிவன வாகுக. இவ்வுலகததிலே பிறந்த எமக்கு இவ்வியல்பினையே நீ அருள் செய்வாயாகில், (அவ்வருளைப் பெற்றுக்கொண்ட) எமக்குப் பகலவன் கிழக்குத் திக்கிலன்றி எத்திசையில் உதயம் செய்தாலும் ஆவதென்ன ? (யாதுமின்று ) எம்பாவாய், (எமது நோனபின் முடிந்த பயனாக யாம் பெறககடவதாய பரிசு இதுவே, இதனை அருளவாயாக என ஆயத்தார வேண்டினர் எ - று

(வி - ரை.) "உஙகையிற பிள்ளை உனக்கே அடைக்கலம்" என்பது வண்டோதரிக்கு அமமையாற கூறப்பபட்டு வழக்காறறில வநத பழமொழி யாகும எனக் கேளவிபபட்டுளளோம. "உன கை" என றது 'எமபி' எனறுறபோல மரபுபறறி "உஙகை" என வந்தது. இக்கூறறு உலகிலே வெளிபபட்டதாக இருபபினும அதனைப் பினனும கிளந்தோதுவது மிகை யாயினும யாம அச்சம காரணமாக அதனைப் புதுபபிக்கினறேம, சினவாது கேட்டருளக என்றபடி.

அவ்வச்சம அன்பரல்லார் வந்து தோள் சேர்வரோ என்றித் தொடக்கத் தனவாமென்க. இப்பழமொழிக்கு மேறகூறிய பொருளே அனறி, மணக் காலத்துப் பெறறோர் மணமகனுககுக் கூறியதாகவுங கொள்ளுப. மண நிகழுங காலத்துப பெறறோர மணமகனை நோககி "உன் கையிற பிள்ளை உனக்கே யடைக்கலம்" எனப. இங்ஙனம மரபு மரபாகக் கூறிவருதலின் இது பழமொழியாயிற்று. திருமணக்காலத்திற பெறறோர் கூறிவநத இப் பழமொழியை மணநிகழப் பெறாத கன்னியரகளும இறைவனைக் குறித்துத் தாமே வேண்டிக்கொள்ளுதலின் அங்ஙனம அப்பழமொழியின் இயலபைப் புதுக்கிய அச்சத்தால் என விரித்துரைத்துக் கொளக. மார்கழி நீராடலில் குறைவுண்டோ என்ற ஐயத்தினால அஙஙனம் உரைத்தனர்.

இனித் தன் கைப்பிள்ளையைத் தாய் காத்துவருவது இயல்பு. அங்ஙன மிருப்ப "நின் கைப்பிள்ளையைக் காத்துக்கொள்" எனத் தாயை வேண்டு

வது ஒரு புதுமை. ஆதலால் அப்பழஞ்சொற் புதுக்கும் எனவும், அவ் வாறு புதுக்கும் அச்சத்தோடு "உரைப்போம் கேள்" எனவும் கூறப் பட்ட தெனினும் சாலப் பொருந்தும்.

ஞாயிறு கிழக்கின்கண்ணன்றிப் பிற திசைக்கண் உதிப்பின் உலகழி யும். அப்பரிசு பெற்றார்க்கு அவ்வுதயத்தால் ஆகும் கேடு ஒன்றேனும் இன்று என்க.

உன் கை என்பது எதுகை நோக்கி உங்கை எனத் திரிந்து நின்றது என்க.

"எம்கொங்கை நின்னன்பர் தோள்சேர்தல்" வேண்டும் என்றவர், இறைவன் தலைமகன் ஆதலையும் தாம் பாங்கியர் ஆதலையும் கருதி எம் கை உனக்கே பணிசெய்க எனறார் என்க. தம் கணவராகிய அடியார்க்குரிய பணியைத் தம் பணியாகவே கொண்டனர் எனக் கொள்க.

எம்முடைய அறிவுக்கும் தொழிலுக்கும் உரிய உறுப்புக்களை நின் அன்பர் அல்லாதாரை அறியவும் அவர்க்குத் தொழிற்படவும் அவராற் பற்றப்படவும் விடாது எம்மைப் பாதுகாப்பின் எம் உள்ளமும் நின்னையும் நின் அடியரையும் பற்றி இன்புறும் என்றார் என்க.

அங்ஙனம் இறைவன் அருள்பெற்றார் அவன் விதிவழியன்றிப் பிற வழிப்படுதல் இலர் என்னும் இதனைச் "செற்றிலென்" (திருமந். ஊழ். 1-6) என்பவற்றால் உணர்ந்து கொள்க. ஈண்டுக் "கொங்கை" என்றது கறுப்புப்பூண்ட காலத்து உளவாதலை.

போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுக நின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றிஎல் லாஉயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றிஎல் லாஉயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றிஎல் லாஉயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய். 20

இஃது, அவர் இறைவனே நீ எமக்கு உன் திருவடியை ஓம்பி யருளுக யாமும் அவற்றைப் பெற்றுக் கொண்டோமாகி அவற்றை யும் மார்கழி நீரையும் போற்றி எஞ்ஞான்றும் பாடியாடி வருவோம் எனக் கூறியது.

(பொ - ரை) இறைவனே, நின் மலரனைய திருவடிகள் எவ் வகைத் தோற்றங்கட்கும் ஆதியாகவுள்ளன ஆகலின் அவற்றை நீ காத்தருள்வாயாக. அவ்வாறே செந்நிறம் பொருந்திய தளி ரனைய நின் திருவடிகள் தோற்றங்கள் யாவைக்கும் அந்தமாகவு

முள்ளன. ஆகலின் அவற்றை நீ காத்தருள்வாயாக. அங்ஙனம் காக்கப்படுதற்குரியனவும் பலவகைப்பட்ட உயிர்களுக்குப் பிறப்பிட மாக வுள்ளனவும் ஆகிய நின் பொன்போன்ற திருவடிகளுக்கு வணக்கம். அங்ஙனம் தோன்றிய உயிர்கட்கெல்லாம் ஏற்ற பெற்றி யறிந்து போகங்களை அருளும் பொலிவினையுடைய கழல்களை யணிந்த திருவடிகளுக்கு வணக்கம் பலவகைப்பட்டுத் தோன்றிப் போக நுகர்ந்து இறுதிப்பட்டு ஒடுங்குவதற்குக் காரணமாய் அமைந்த இணைந்த திருவடிகளுக்கு வணக்கம். இத்தகைய தோற்ற ஒடுக்கங்கட்குக் காரணமாய செந்தாமரை போன்ற திருவடிகள் அரி அயன் என்பார்க்கும் அறிதற்கரியன. ஆதலின் அவற்றிற்கும் வணக்கம். அவ்வாறுய அருமை சான்ற பொன் போன்ற நின் மலரடி கள் யான் உய்யும் பொருட்டு எளிவந்து ஆட்கொண்டருளினவாக லின் அவற்றிற்கு வணக்கம்.

இவ்வகையாகப் பிறவியின் பயனை நுகர்வதற்குக் காரணமாக அமைந்த மார்கழி நீரக்கும் வணக்கம் எம்பாவையே, இவ் வணக்கத்தை ஏற்றுக் கொண்டு எனக்கு அருள்வதற்கு ஓர்வாயாக; (உனக்கும் வணக்கம்) எ - று.

(வி - ரை.) ஏற்புழிக்கோடலால் பாவைக்கும் வணக்கம் கூறப் பட்டது. எல்லா உயிரகளும் தோன்றுதற்கும், தோன்றி வினைப்பயனை நுகர்தறகும், ாற்றில் ஒடுங்குதற்கும் காரணமாய் நின்று கூத்தயர்வது அவ னுடைய திருவடிகள் ஆதலால் "ஆதியாம் பாதமலர், அந்தமாம் செநதளிர் கள், ாறும் இணையடிகள்" என்றுரைத்தனர். போறறியருளுக 'நின் இடைகாக்கும் பொறபாதம்' எனவும இயைத்துக்கொள்க.

'புண்டரீகம்' என்னும் வடசொல் "புண்டரிகம்" என்றுயது. புண்ட ரீகம் என்பதறகு வெண்டாமரை என்பது பொருளாக இருப்பினும் அதனையே இறைவன் திருவடிக்கு ஒப்பாகக் கூறினுர். அஃது ாண்டுத் தாமரை என்னும் பொருளேயே உணர்த்தி நின்றது; 'புண்டரீகக் கண்ணுன்' என்பது போல.

வேதத்திற் பொதுப்படத் திருமாலின் உந்தியந் தாமரையே எல்லா வற்றையும் ான்றது என்றுங்கு, இறைவன் திருவடியே அவற்றை எல்லாம் தோற்றுவித்ததென்று ஒழியாது, அவற்றை எல்லாம் நுகர்வித்தும் ஒடுக்கி யும் நிலைபெறுவதாகும் என அமமறையின் உட்பொருளேத் துருவிக் கூறிய திறன் போற்றற்பாலது.

இம்மையில் அன்பின் ஐந்திணை இன்பமும் மறுமையில் வீட்டின்ப மும் பெற்று உய்திபெற அருளும் திருவடி யென்க.

" ஆம் மார்கழிநீர் போற்றி " எனக் கொண்டு தன்கண் மூழ்கினுர்க்கு அன்பின் ஐந்திணை இன்பம் உளதாக்கும் மார்கழிநீர் என்றலும் ஒக்கும்.

'மார்கழி நீராட' என்றும் பிறவாறும் பிரித்துக் கூறல் மரபன்று. மார்கழி நீர் என்பதே இப்பகுதிக்கு உயிராக இருப்பவும் 'ஆர்கழிநீர்' எனப் பிரித்துச் சொற்பொருள் வாளா போவோரும் உளர்.

மூலமாய் முடிவாய் எல்லா உயிர்களையும் தோற்றுவித்தும், நுகர்வித்தும், ஒடுக்கியும, மறைத்தும், அருளியும் வரும் திருவடி என்க. அதனை நீயும் போற்றி வருக. யாமும் போற்றுவோம் என்பது திரண்டபொருள். மாலும் அயனும் ஆணவ மிகுதியுடையராய்த் திருவடிக்காட்சி எய்தாமையின் அவர் மறைக்கப்பட்டாராவர்.

"போற்றியருளுக............எம்பாவாய்", 'யாம் மார்கழி நீர் ஆடற்கென அமைந்த பொற்பாவைக்கு வணக்கம்' என உரை வகுத்தலும் ஒன்று.

இங்கு "போற்றியருளுக" என்பதற்கு ஓம்புக எனப் பொருள். என்னை? எல்லாம தோன்றியதற்கு முன்னும், அவை ஒடுங்கிய பின்னும் திருவடிகளைப் போற்றுதறகு ஒன்றேனும இன்மையானும், அவற்றுள்ளே எல்லாம் அடங்கி நிற்றலின் அத்திருவடிகளை இறைவன் ஓம்பத் திருவுளம் கொள்ளாவிடின் எல்லாம் நிலைபெறுமையானும் என்க அவனிற சிறந்தன அவன் இணையடிகள் என்பவாகலின் அவற்றைப் போற்றியருளுக என்றருமாம்.

திருச்சிற்றம்பலம்

# திரு அம்மானை

"அம்மானை" என்பது இசைப்பாட்டோடு அம்மானையாடுத இது மகளிர் ஆடும் ஆடல்களுள் ஒன்று இப்பகுதி, தலைவனு குரிய நிலனும் அவனது சிறந்த தொழிலும் அறியக் கூறும் இய பிற்று. இவ்வாறுதலைத் திரு எம்பாவை உரைக்கண் கண்டு கொள்க.

ஒரு பகுதியார் ஆடுதலைக் கண்ட மற்றோரும் அவர்போலத் தாமும் அம்மனையாடுவார் என்பதும், அங்ஙனம் அவர் ஆடுதலை யும் கிளந்து கூறி முன்னர் ஆடத் தொடங்கினோரும் ஆடுவர் என்பதும்,

" அம்மனை தங்கையிற் கொண்டங்கு அணியிழையார்
தம்மனையிற பாடும் தகையேல்ஒர் அமமானை." (சிலப். அம். 29.)

என்னும் இவ்வடிகளாற் புலனாகின்றன.

தலைமகன் தலைமகளின் முலைமேற் கூடுதற் பொருட்டே அவர் அம்மானை ஆடாநின்றார் என்பது,

" தம்மனையிற் பாடும் தகையெல்லாம் தார்வேந்தன்
கொம்மை வரிமுலைமேற் கூடவே அம்மானை." (ஷை. ஷை.)

என்னும் அடிகளால் புலனாகின்றது.

அம்மானை யாடுவாரைத் தலைமகன் கூடுவது வழக்காறாகும் என்றலை,

" கொம்மை வரிமுலைமேற் கூடில் குலவேந்தன்
அம்மென் புகார்நகரம் பாடேலோர் அம்மானை." (ஷை. ஷை.)

என்னும் அடிகளால் அறிந்து கொள்க.

'அம்மானை' என்றது, விளிவேற்றுமை ஏற்றற்கு ஐயீறுகெட்டு ஆய் ஈறுபெற்று "அம்மானாய்" என நின்றது. பிறவாறு உரைப் போர் பொருள் மரபாகாமையால் அவற்றைக் கொள்ளாமாயினேம். இனி, இங்ஙனம் வரும் வரிக்குள் சில பகுதிக்கண் அமைந்த பாட்டுக்களின் ஈறுதோறும் அப்பகுதிக்குரிய பாட்டினையே வேட்கை மிகுதியால் முன்னிலையாகக் கூறுதலும் உண்டு இதனைச் சிலப் பதிகாரத்தில் 'அம்மானை வரி'க்கெழுதிய அரும்பதவுரைக் குறிப் பானும் உணர்க

இங்ஙனமாயின், "சாழலே" என்றதற்குத் "தோழீ" என வும், "எம்பாவாய்" என்றதற்கு "எம்பாவையே ஏல்" எனவும் பொருள் கொள்ளுதலும் வேண்டா என்க.

அம்மானைவரி, வள்ளைப்பாட்டு, அம்மனை வள்ளை இம் மூன்றனையும் ஈண்டு ஆராய்தல் வேண்டும். அம்மனை வள்ளை என அம்மனையாலும் வள்ளையாலும் ஒன்று போந்தமையால், அம் மூன்றும் ஈண்டு ஆராய்தற்கு இடம் பெற்றன.

அம்மானைவரி .

" அம்மனை தங்கையிற் கொண்டங்கு ஆயிழையார்
தம்மனையிப் பாடும தகையேலோர் அமமானை
தம்மனையிற் பாடும் தகைஎல்லாம் தார்வேந்தன்
கொமமை வரிமுலைமேற கூடவே அம்மானை
கொம்மை வரிமுலைமேற கூடிற் குலவேநதன்
அம்பொன் புகார்நகரம் பாடேலோர் அமமானை. "

(சிலப். வாழ். அம். 4.)

என்னும் இதனால், தலைமகன் தன்னை வந்து கூடற்கு அம்மானை யாடிப் பாடுதல் வழக்காறுயிற்று என்பது புலனுகும். அம்மானை வரிப்பாட்டுப் பாடுதலின் பயன நினைத்த கணவரை மணம் முடித்துக் கொள்வதாம் என்க.

வள்ளைப்பாட்டு :

" நின்னை யான் வந்து மணந்து கொள்வேன் " எனப் பிரிந்த தலைமகன் அங்ஙனம் வாராமையால், வள்ளைப்பாட்டினைப் பாடி மகளிர் உரலிடிப்பர். அதனுல் தலைமகன் தலைமகளை மணந்து கொள்ளுதலாகும் என்க.

கருமபு பவளம் யானைக்கோடு என்பனவற்றை உலக்கையாகக் கொண்டு, சந்தனம் முதலிய மரங்களானும் அவையன்றிக் கல்லானும் ஆகிய உரற்கண், முத்துக்களையாதல் ஐவன நெற்பொரியை யாதல் அன்ன பிறவற்றையாதல் குறுவார் என்பது சிலப்பதிகார வாழ்த்துக் காதை, கலித்தொகை (40, 41, 42, 43), பெருங்கதை (2 14 50–52), சூளாமணி சுயம். (106) என்பனவற்றுல் தெளியப்படும்.

அங்ஙனம் அவர் கூறும்போது தலைமகனுடைய தார், கொடி, தேர், மலை, வீரம், அவன் தன்னைப் பிரிந்து பொய்த்தமை என்னும் இவற்றையெல்லாம் கொச்சகத் தரவாற் பாடுவர்.

அம்மனை வள்ளை :

தன்னையர் (தமயன்மார்) தலைமகனுக்கு மறுது மகட் கொடைக்கு உடம்படுவர் என்றலைத் தலைமகன் குறிப்பால் உணர்ந்து கொள்ளும்படி அவர்கள் இயல்புதனைப் புகழ்ந்து பாடுவது என்க.

" வெங்கண் மறவர் வில்லின் வீழ்த்த
பைங்கண் வேழத்துப் பணைமருப்பு உலக்கையின்
அறைஉரல் நிறைய ஐவனப் பாசவல்
இசையொடு தன்னையர் இயல்புபுகழ்ந்து இடிக்கும்
அம்மனை வள்ளை இன்னிசை கேட்கும்" (பெருங். 2. 48-52.)

என்னும் இதனால் அறிக

[பாசவல் இசையொடு-பச்சென்னும் அவலாக இடிக்கும் ஓசையுடன் பசுமை+அவல்=பாசவல் ]

இப்பகுதிக்கண் வந்த பாக்கள் எல்லாம் ஆறடியான் இயன்ற கொச்சகத் தரவுகள் இவையும் வெண்தளை தழுவிக் கலியோசை பெற்று வந்தன.

இனி, இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு

இப்பகுதி ஐந்து பெரும் பிரிவான பொருட் பகுதிகளையுடையது அவை, தலைவன் கழல்களைப் பாடியது, அவன் மேனி பாடியது, அவன் மாலை பாடியது, அவன் புகழிற்குரிய சிறப்புக்களைப் பாடியது, ஆனந்தம் பாடியது என்பன

(i) தலைவன் கழல் பாடியது :

1. என்னைத் தன் தொழும்பிற் கொண்ட வானவன் பூங்கழல் பாடுதும் என்றது. (14)
2. ஊடி வாடிக் கூடி மகிழ்வேனுக்குரிய அனலேந்திச் சேவடி பாடுதும் என்றது. (17)
3. என் உள்ளே ஒளிவந்த வார்கழல் பாடுதும் என்றது. (4.)
4. அந்தணனாய் அறைகூவி வீடருளும் வார்கழல் பாடுதும் என்றது.

(ii) அவன் மேனி பாடியது :

5. புண் சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் என்றது. (8.)

(iii) அவன் மாலை பாடியது

6. மந்தார மாலையே பாடுதுங்காண் என்றது. (15.)

(iv) அவன் புகழிற்குரிய சிறப்புக்கள் பாடியது :

இப்பிரிவு, பிறர்மாட்டுச் செய்த புகழற்குரிய செயலான் வந்த சிறப்பு, தம்மாட்டுச் செய்த புகழற்குரிய செயலான் வந்த சிறப்பு என இரண்டு உட்பிரிவுகளையுடையது

பிறர் மாட்டுச் செய்தவை.

7. முன்னானை ......என்பார்கட்கு இன்னமுதமானானைப் பாடுதும் என்றது. (19.)

8. அடியாருள்ளத்திருக்கும் அப்பாலைக் கப்பாலைப் பாடுதும் எனறது. (11)
9. மெயயர மெய்யனை அல்லார்க்கு அல்லாத வேதியனைப் பாடுதும் என்றது. (13)

தமமாட்டுச் செய்தவை.

10. என்னுளம் புகுநது அமுதமாய் மீன் விசிறும் பேராசை வாரிய னைப் பாடுதும என்றது. (2)
11. என் வினை கடிந்து சிறறமபலம் மன்னும் ஒல்லை விடையானை என்றது. (5)
12. நாயேனை ஆண்ட அண்ணாமலையானைப் பாடுதும் என்றது. (10.)
13. வானவரதேட எனனை யாண்டு காத்த சிவனைப் பாடுதும் எனறது. (12)
14. எனக்கு இனியனுயு அரிய வழிகாட்டிய சேவகன் எல்லார்க்கும் தலைவனுய் நினற சிறப்பைப பாடுதும் என்றது. (16.)
15. உள்ளத்தே ஒளி திகழ எளிவந்த அநதணனை என்றது. (18.)
16. நாம் மேலைவீடெய்த ஆண்டவா பாடுதும என்றது. (6.)
17. ஆள்வானைப் பாடுதும என்றது. (7.)

(v) ஆனந்தம் பாடியது

18. நாம் பறறுவான பற்றிய பேரானந்தம் பாடுதும் என்றது. (20.)
19. பழவடியார்க் கீந்தருளும் ஆனநதம பாடுதும என்றது. (9.)
20. பரிமேற்கொண்டான் தநத அந்தமிலா ஆனநதம் எனறது. (3.)

இனி, அத்திருவடியானது என்னைத் தொழும்பிற் கொள்ள யான் ஊடிக் கூடி ஒளி பெற்றேன் எனக் கழலையும், அக்கழல் வநதாண்ட வழியே அவன் புண சுமந்த மேனி காணப்பட்டது எனத் திருமேனியையும், அப்பால் அவன் திருமேனிமீது காதல் மாலை காணப்பட்டதென அவன் அணிந்திருந்த மந்தார மாலையை யும், அவன் தன் திருப்பெயர்களைப் பாடியாடுவார் உள்ளத்தில் இருந்து அமுதுபோல் இனித்து, அப்பாலைக்கப்பாலாவன், அஙஙனமாயினும் மெய்யர்க்கு மெய்யனுகியும அல்லாதார்க்கு அல்லாதானுகியும் இருப்பான் எனவும், அவன் என்னுளம் புகுந்து கூடியிருந்த, ஒல்லை விடைமேற்கொண்டு பிரிந்து, பின்னரும் அண்ணாமலையானுய் ஆட்கொண்டு, வானவர் தேடவும் அவரைக் காவானுய் என்னை ஆண்டமை தவருது காத்து, எனககு இனிமை செய்து அவவினிமையைப் பின்னும் பின்னும் தவறு படாமே நுகர்தற்குரிய கற்பு நெறியையும் அறிவுறுத்தி, அந்தணனுய் ஒளி திகழச் சிறந்தது பயிற்றி, நாம் வீடடையுமாறு ஆண்டுகொண்ட ஆளவான் எனவும், பிறரையும் தம்மையும் ஆட்கொண்டு இயற்றிய மிகுபுகழ்ச் சிறப்புக்களையும், இங்ஙனம் நாம் வீடுபெற்று நுகர்தற்

கென அவன் பற்றியதும், பழவடியார்க் கீந்தருளியதும், பரிமேல் வந்து நமக்குத் தந்ததும் ஆனந்தமாகுமென ஆனந்தத்தையும் பாடியருளினுர் என இயற்கைப் பொருளடைவு முறை ஓதுக.

நூற்பொருள் அடைவு வருமாறு :

முந்திய பதிகத்தின் இறுதித் திருப்பாடற்கண் இறைவன் திருவடியின் இயல்பை விதந்துரைத்தருளியவர், அப் பெருமைப்பட்ட திருவடி என் பொருட்டு எளிவந்து அறைகூவி வீடருளிற்ருக, அத் திருவடி புகுந்த வழியே அவனும் உட்புகுந்து அமுதமாய், அந்தமிலா ஆனந்தம் அருளியோன், அவ்வானந்தம் மயிர்க்கால் தோறும உயிர்ப்பெய்திற்ருக, அதனைத் தருதற்கு மூலமாயிருந்த வான் வந்த வார்கழலைப் பாடுமளவில், ஒல்லைவிடை கொண்டு பிரிந்து சென்றனன், சென்றவன் எம்மை ஆட்கொண்ட வகையினையும், இன்னும் ஆள்வானுதலின் அங்ஙனம் ஆள்வானையும், இப்போது இத்துணை அருமை காட்டுமவனே அப்போது கோவால் மொத்துண்டு புண் சுமந்தான், அவன் புண்சுமந்த மேனியையும், அடியாரக்கீந்த ஆனந்தத்தையும் முறையாகக் கொண்டு எமது இரங்குதல் நிலையை அவன் உள்ளத்துறுத்துமாறு கூறுதலும், அண்ணுமலையானுய் வந்து ஆண்டனன், அங்ஙனம் ஆண்டவன் அடியாருள்ளத்திருக்கும் அப்பாலைக்கப்பாலானவன், அடியாருளளத்திருப்பவன் எனினும் யாவைக்கும் பற்றுக்கோடாகிய வீடாயும் மெய்ப்பொருளாயும் இருப்பவன், அவன் மெய்யர்க்கு மெய்யனுயும் அல்லாதார்க்கு அல்லாதானுயும் இருப்பதை ஐயாற்றில் விளங்கக் காட்டினன், பிறர் மாட்டிங்ஙனம் செய்தவன், என் மாட்டு யான் கீடம் முதற்கொண்டு தேவர் ஈருய்ப் பிறந்திறந்த பிறவிகடோறும் அவ்வவற்றிற்கேற்ற பெருமையுடைய பொருளாய்த் தோன்றி மேலேற்றி ஈண்டுத் தலைமகனுய் வந்தாண்டான்; ஆதலால் அவனுடைய காதல் மாலையாகிய மந்தார மாலையையும், எனக்கன்றி எல்லார்க்கும் தலைமகனுய் நின்ற தன்மையினையும் எனக்குக் கற்பு நெறி யறிவுறுத்திய தன்மையினையும், அவனை யான் நுகருமாற்றையும் சிந்தித்திருந்த காலை, அவன் அந்தணனுய் என்னை ஒளிபெறச் செய்து சிறந்தது பயிற்றினுன், அவன் பொது வியல்பு "முன்னுன் . . . . அம்மான்" முதலிய பலவாகும். அத்தகையோனுடைய ஆனந்தத்தைப்பற்றி நாமும் ஆனந்தம் பெறுவோம் என அவனை இயற்பழித்தும், இயற்படவும் கூறியவாறு என்க.

இது திருவண்ணுமலைக்கண் அருளியது என்ப.

# ஆனந்தக் களிப்பு

## தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

செங்கண் நெடுமாலும் சென்றிடந்தும் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட்டு எந்தரமும் ஆட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்.

இது, தோழி தலைமகளை நோக்கி, தம்மை ஆட்கொண்டருளிய தலைமகனுடைய திருவடி பாடி அம்மானையாடுவோம் என, தலைமகனை இயற்பழித்துக் கூறியது

அவன் திருப்பெருந்துறைக்குக் கரந்தான் என்றதனால் அவனை இயற்பழித்தும், கழலே பாடுதும் என்றமையான் கற்பின் பொறுமையை வெளிப்படுத்தும் தோழி புகன்றமையால், தலைமகன் இயல்பினைப் பழித்துத் தோழி கூறினாள் என்பது பெற்றும்.

(பொ - ரை.) (தோழீ, நாம்) தெங்கஞ்சோலை சூழ்ந்த திருப் பெருந்துறையானும் அழகிய அருட்கண்ணுடையானுமாகிய இறைவன் ஓர் அந்தணக் கோலங்கொண்டு, சிவந்த கண்ணை யுடைய திருமாலும் (பன்றியாக உருவெடுத்து மண்ணைத் தன் கொம்பால்) தோண்டிச்சென்றும் கண்டுகொள்ளற்கு அரிதாகிய மேலெழுந்து பொலியும் மலர்போன்ற தனது பாதம் நிலத்தே தோய வந்தருளி, எம்முடைய கூட்டத்தையும் வலிய அழைத்து ஆட்கொண்டு, எங்கள் பிறவியின் வேரை அறுத்திட்டு எமக்கு வீட்டினைக் கொடுத்தருளும் அவனுடைய கருணையும் நீண்ட கழலும் பொருந்திய திருவடியையே முதற்கண் பாடுவோமாக அம்மானை (என்றாள்) எ - று.

(வி - ரை.) திருமால் செருக்கினால் தேடினான் ஆதலின் இறைவன் பாதமலர் அவனாற் காணற்கரியதாயிற்று. ஆயின், அன்பும் வன்பும் அற்ற எம்போலியரை அறைகூவி ஆண்டமை என் கருதி என வினா எழுதலால், அதற்கு 'அங்கருணையேயாகும்' என விடை பெறுதற குறிப்பால் "அங்கருணை வார்கழல்" என்றருளிச்செய்தார்.

வார்கழல் - நீண்ட கழலையணிந்த திருவடி; அன்மொழித்தொகை.

திருப்பெருந்துறையிலே அடியாருடன் கூடிக் கலந்தருளித் தம்மைப் பிரிந்தனனாதலின், திருப்பெருந்துறை குறிக்கப்பட்டது. வந்த சிறப்பும் அருளிய சிறப்பும் தோன்றத் " திருவடி " இரண்டிடத்துக் கூறப்பட்டது. மேல் தம்மைப் பிரிந்த திறனையும் " சிற்றம்பலம் மன்னும் ஒல்லை விடையானை " (5) என்றருளிச் செய்வர்.

இதனால் அம்மனையாடும் தலைமகள், கலவாது வஞ்சித்துச் சென்ற தலைமகன் புகழினைப் பாடினாள் என்பது பெற்றாம். தோழி அக்கூற்றினை வாங்கிக்கொண்டு, தலைமகளை நோக்கி, தலைமகனை இயற்பழித்துக் கூறினாள் எனக் கொள்க.

தானே வலிய வந்தருளிய "வார்கழல்," அங்ஙனமே இன்னமும் அருள்செய்யும் என்னும் துணிவு மேலிட்டால் அதனைப் " பாடுதும் " என நுதலிப் புகுந்தருளினள், தமது கற்பின் பொறுமை தோன்ற.

" பெருந்துறையான் " என்ற அதனானே, தம்மையொழித்து ஏனைய பழ அடியாரை உடன்கலந்துகொண்ட அவனது கொடுமை குறிப்பிக்கப் பட்டதென்க.

தோழீ, நாம், திருப்பெருந்துறையான் தென்னன் அங்கணன் அந்தணனாய்ப் பாதம் பூதலத்தே (தோயப்) போந்தருளி, எந்தரமும் அறைகூவி, எங்கள் பிறப்பறுத்திட்டு வீடருளும் (அவனது) கழலைப் பாடுதும் என உரைப்படுத்துக.

செங்கண்ணனாயினும் அவன் திருவடி காணும் ஆற்றல் பெற்றிலன்; இடந்து சென்றும கண்டிலன் என்க. சென்று இடந்தும் - இடந்து சென்றும். இடத்தல் - தோண்டுதல். பொங்குதல் - எழுந்து பொலிதல். " மாலும் " என்றது உயர்வு கருதிற்று. பாதமானது பூதலத்தே தோய என்க. அன்பர் நெஞ்சமாகிய ஞானப்பாழ் வெளியிலே தோயும் அஃது அன்பற்ற எம்பொருட்டுப் பூதலத்தே தோய என விரிக்க. தரம் - கூட்டம். எம்தரம் - எங்கள் கூட்டம். தென்னன் பெருந்துறையில் வந்தமையால் அவன் பெருந்துறையான் எனப்பட்டான். தென்னன் - தென்னாடாகிய பாண்டி நாடுடையவன். அறைகூவுதல் - வலியஅழைத்தல். இங்ஙனம் எளிவந்தாட் கொள்ளற்குக் காரணம் அவன் அருளுடைமையே என்பது போதர " அங்கணன் " என்றருளிச் செய்தாள் என்க.

அம்மானைப் பாடலை "அம்மானாய்" என வேட்கை மிகுதியால் விளித்தனர் என்க. "பாடுதுங்காண் அம்மானாய்" என்று எல்லாப் பாக்களும் இறுதலின் இப்பகுதி, மகளிரை அமமனையாடுவோம் என அழைத்தலால், இஃது அழைப்போர் சொல்லாயதன்றி அம்மனையாடிப் பாடிய தாகாதுபோலத் தோன்றுகின்றது. இனி, சிலப்பதிகாரத்துக் கந்துகவரியிலே "பந்தடித்துமே" எனப் பந்தடித்துப் பாடுதலை உணர்த்தியதுபோல இதுவும் அம்மனையாடிப் பாடியதாகும் எனக் கோடலுமாம். வினாவும் விடையும் பயிலாது " பாடுதும " என நின்றமையால் இத்துணையளவு கூறப்பட்டதென்க.

பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்
ஆராலும் காண்டற்(கு) அரியான் எமக்(கு) எளிய
பேராளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி
வாரா வழிஅருளி வந்துஎன் உளம்புகுந்த
ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதுங்காண் அம்மானாய்.

தலைமகனை இயற்பழித்துரைத்த தோழிக்கு, அவன் அலைகடற்கண் மீன் விசிறுவோன் ஆதலால் நல்லன் ஆவன் என அவனை இயற்படவுரைத்து அவன் புகழ் பாடி ஆடுவோம் எனத் தலைமகள் கூறியது.

பெருந்துறைக்கண்ணே கரந்தானேனும், அவன் உமையையும் நந்தியம்பெருமானையும் மீண்டும் போந்து காத்தருளிய வாரியன் கண்டாய், ஆதலால் அவன் என்னையும் மீண்டும் வந்து காத்தருள்வன் என்பதனால், இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தமை பெற்றாம்.

(பொ - ரை ) (தோழீ, நாம்) நிலவுலகத்தவரும், வானுலகத்தவரும், கீழ் உலகத்தவரும், இவர்க்குப் புறவுலகத்தவரும் ஆகிய எத்தகையவராலும் கண்டுகொள்ளற்கு அரியவனும், எமக்கு எளிதாக வந்தருளிய பெருமையுடையவனும், தென்னாடுடையவனும், திருப்பெருந்துறையுடையவனுமாகிய சிவன், தன்மேற் காதற்பித்தை எனக்கு ஏறச்செய்து, பிறவிக்கு மீளாத வழியிற் செல்ல வழிகாட்டி, என்னுள்ளத்திலே வந்து புகுந்த, (முன்னொரு காலத்திலே) அலை வீசுகின்ற கடலிடத்து அமுதமாகி நின்று மீனைப் பிடிக்க வலை வீசிய, அடியவரிடமிருநது பேரன்பாகிய வருவாயை யுடையவனைப் பாடுவோமாக அம்மானாய் (என்றாள்) எ - று.

(வி - ரை ) பேரன்புக் கடலுமாம். இனி, பேரன்பாறு வந்து பாய்தற்கு இடமாகிய கடலனையானுமாம்.

உமை நந்தியம்பெருமான் என்னுமிவர்கள் செய்த குறையை நீக்கி அருள் செய்தவாறே தமமையும் காத்தருளும் பெற்றியன் என்றபடி. அன்னையை மணநது உபதேசித்தவாறே தமமையும் கலந்து உபதேசித் தருளுவன் எனபது குறிப்பு.

தானிடட சாபத்தைத் தானே நீக்கியருளினன்றிப் பிறரால் நீக்கற்கு இயலாதவனும் என்க. அன்றியும மனை, மக்கள் முதலாய சுற்றமும் நோக்காது நீதி செலுத்துவோனும் ஆவன் என்றபடி. அருள்புரிவோர் தன்னிற் பிறரின்மையால தானே தணிந்து அருளும புரிவோன என்க.

இந்திரனும் மால்அயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவன்அவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றினனாய்ச்
சிந்தனையை வந்துருக்கும் சீரார் பெருந்துறையான்
பந்தம் பரியப் பரிமேற் கொண்டருளி
அந்தம்இலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய் 3

இது, நம்மைப் பிரிந்து துன்புறுத்துவோன் ஆதலால், நமக்கு அவன் செய்த அத்திறனை மறந்து பிறர்க்குப் பரிமேல் வந்தருளி இன்பம் கொடுத்ததைப் புகழ்ந்து பாடுவோம் என இயற்பட மொழிந்த தலைவிக்குத் தோழி இயற்பழித்துக் கூறியது.

(பொ - ரை) இந்திரனும் திருமாலும் நான்முகனும் அவர்க்குரிய அமைச்சர் முதலானோரும் தேவர்களும் ஆகாயத்தே நிற்பவும், அவருடன் கலந்துள்ள சிவன், அவர் அங்ஙனமே ஆகாயத்து நிற்ப விடுத்து, நிலவுலகத்திலே தோளிலே அணியப்பட்ட நீற்றினனாய் வந்தருளி, எம் கூட்டத்தினையும் ஆட்கொண்டு, எங்களுடைய மனத்தினையும் அதனுள் புக்கு உருக்கிவரும் மிகுபுகழ் நிறைந்த திருப்பெருந்துறையை உடையவனாகிய அவன், பாண்டியன் முதலியோர்பொருட்டு அவர் பாசக்கட்டு அவிழக் குதிரைமேற்கொண்டு எழுந்தருளினனாகி, அவர் தமக்குத் தந்தருளிய முடிவில்லாத இன்பத்தினைத் தோழி நாம் பாடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை) பரிமேற்கொண்டானாகிய பாண்டிப்பிரான், பாண்டியன் உயிரையுண்டு தொண்டர் உள்ளங்கொண்டு பூங்கொடியார் மரமபோலாகத் தம்மையும் தாம மறக்குமாறு செய்தனன். இதனைப் பாண்டிப் பதிகத்தாலறிக.

இந்திரன் முதலியோர் வானகத்தில் இன்பம் பெற்றிலராய் நிற்ப, அவன் அவனியில் வந்து அடியவர்களுக்கு ஆனநதம் ஊட்டினன் என்க. ஆனந்தக் குதிரைமீது இஙகு வந்தான் ஆதலால் அங்கு (வானத்தில்) அவர் ஆனந்தம் அறறனர் என்க.

அவன் தந்த ஆனந்த மாக்கடலில் யாமும் அங்கு அவனைச் சார்ந்து வாழலாம் ஆதலின், அவ்வானநதத்தைப் பாடுவாம்; பாடியக்கால் அவன் பரிமேல் வந்தருளி அந்தமிலா ஆனந்தத்தை நமக்கு அருளிச் செய்வான் எனத் தோழி இயற்பழித்தாள் என்க 'ஏனோர் வானவர் இந்திரன் அயன் மால்' என முறைபறறிக் கூறுது, ''இந்திரன மால் அயன் ஏனோர் வானோர்'' எனத் தாம வேண்டியவாறே கூறியருளினர், அவரனைவரும் அடிகளுக்கு ஒரு பெறறியராகக் காணப்படுதலால். ஏனோர்—அமைச்சர், குரவர முதலாயி

ளுர். அந்தரம் - விண். பந்தம் - தளை, கட்டு, பாசம். பரிதல் - அறுதல். 'பறிய' எனப் பாட மோதின் கட்டவிழ என்றுரைக்க.

பரிமேல் வந்தருளிய திருவிளையாடலை அடிகள்தம் பொருட்டு வந்த தாகவும் கொள்ளுப. ஆட்கொண்டருளியதோடு பரிமேல் வந்தருளியதை யும் பாடுவோமாக என்றாள் எனக.

வான்வந்த தேவர்களும் மால்அயனோடு இந்திரனும்
கான்நின்று வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்(டு)
ஊன்வந்(து) உரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந்(து) அமுதின் தெளிவின் ஒளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 4

இது, அன்பில்லார் வருந்தவும் அவரை நாடாது, அன்புற்ற எம்மை நாடிக் கலந்து இன்புறுத்தியவன் அவன் ஆதலால், எங்குறை காரணமாகவே அவனைப் பிரிந்துள்ளேம் என அவனை இயற்படமொழிந்து, அவனைப் புகழ்ந்து பாடியாடுவோம் எனத் தலைவி தோழியை அழைத்தது.

(பொ - ரை.) (தோழீ) வானின்று தோன்றிய தேவர்களும், திருமாலும், அயனோடு இந்திரனும் ஆகியோர் (தன்னருளைப் பெற்றுக்கொள்வான் வேண்டித் தம்முடைய இருக்கைகளை விட்டு நீங்கிக் மண்ணகத்துப் புக்கு) காட்டிலே நிலைபெற்று (உண்ணுராய்) உடல்வற்றியும், தம்முடல்மீது புற்றுவளரப் பெற்றும் காணப் பெறுத (அருமையினையுடைய) ஒருவன், தானேயாகிய அச்சிவன், வலிய இந்நிலவுலகிற்கு வந்து நாயைப்போன்ற
தாயைப்போன்று பேரன்பு செய்து, ஊனுள்ளே வந்து, முளைத்த உரோமத்தினுள் வந்து, அவ்வூனும் உரோமமும் உயிர் கொள்ளும்படி இன்பத் தேனுக வந்து, தேனமுதமாகவும் மற்றதன் தெளிவாகவும் (என் இதயத்துள்) ஒளி பெருகச் செய்யுமாறு வருவித்த பெருமை தங்கிய நீண்ட கழல்களைப் பாடுவோமாக அம்மானாய் (என்றாள்) எ - று.

(வி - ரை.) ஐம்பூதங்களுள்ளே முதற்கண்ணே தோன்றப்பெறும் ஆகாயத்திலே இந்திரன் முதலியோர் இருப்பாராயினும், அவர்க்கு அன்பில்லாமையால, அவர் மண்ணகத்தே வந்து தவம் புரிந்து வருந்தியும் அவனைக் காணற்கு அரியராயினர். முன்னும் அவரைவிட்டு நீங்கியதும் அது கருதியே என்க.

இன்னோரன்னவற்றால் பேதையர்க்குக் கருணை மேலீட்டால் இறைவன் தானே வலியவந்து ஆட்கொள்ளும் பெருமை வாய்ந்தவன் என்பது

உணர்த்தியருளியவாறு. முற்குறித்த ஆனந்தம் திருவடியால் எய்துவ தொன்றாகலின், அதனை இத்திருப்பாட்டாற் பாடுவோம் எனப் புகுந் தருளினார்.

இத்திருப்பாட்டானும் அடிகள் தம்மைத் தலைமகளாகவும், இறைவனைத் தலைமகனாகவும பாவித்து வந்தருளினர் என்பது பெற்றாம். இங்ஙனம் பாவிப்பது பெருந்திணையின்பாற்படுதலால், அன்பின் ஐந்திணைக்கு உரிமை பூண்ட தலைமக்கள் கூட்டமாகப் புனைந்து திருக்கோவையார் அருளிச் செய்தனர் எனத் தெளிந்து கொள்க.

ஊன் ; தசை ; அஃது உடலுக்கானது உடல் என்றது 'உடலம்' என அம்முப்பெற்று வருமாறே, கான் வான் என்பனவும் அம் முப்பெற்று வரும். அவை மீண்டுப் பெருதுவந்தன. 'ரோமம' என்னும் வடசொல் "உரோமம" எனத் திரிந்துவந்தது. அஃது மயிர்ச்சிலிர்ப்பை உணர்த்தி நின்றது. "தேன்" என வந்தமைக்கேற்ப மற்றதன் 'தெளிவு' என்றாம். தேனால் வந்த களிப்பினை அதன் தெளிவு நீக்கும். அமுது, தேனமுது என்க.

கழலை வணங்குதற்கு அதனை புறத்துக் காணப்பாடுவேம் என்றாள் அங்ஙனம் அருளிச்செய்த கழலையுடைய அவனை விடையானது தில்லைச் சிற்றம்பலத்துக்குக் கொண்டு சென்றது என இயற் பழித்துத் தோழிமேற் கூறுவள்.

கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனிஆக்கித் தன்கருணை
வெள்ளத்து அழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குத் திருச்சிற்றம் பலம்மன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 5

இது, தலைமகன் பிறர்க்கு எத்தகைய நலனைப் புரிந்துள்ளான் என நீ சொல்லினும், அவன் நம்மைப் பிரிந்து வருந்தவைத்துத் தான் வருந்தாது விடையூர்ந்து அம்பலம் புக்கானுவான் என அவனைப் பாடுவோம் எனத் தோழி இயற்பட மொழிந்த தலை மகளுக்கு இயற்பழித்துரைத்தது

(பொ - ரை.) தென்னாடுடைய சிவனும், வல்லவனும், திருப் பெருந்துறையானும், (என்னுறு தொழிலையன்றித் தன்னுறு தொழிலைக்) கற்றறியாத மனத்தினையுடைய நாயிற் கடைப்பட்ட என்னைக் கல்லைப் பிசைந்து கனியாக்கியதொரு விஞ்சையை ஒப்ப என்னுடைய (நெஞ்சமாகிய) கல்லைக் கனிவித்துத் தனது அருளாகிய ஆனந்த வெள்ளத்திலே என்னை ஆழச்செய்து என்னுடைய இருவினைகளையும் விலக வைத்த வேதம் பயிலும்

அந்தணனும், தில்லையம்பதியினுள்ளே புகுந்து ஆங்கு அதன் கண்ணுள்ள திருவடபலததே வைகும் விரைந்து செலலும் இடப வாகனத்தையுடையானுமாகிய இறைவனைத் தோழீ, நாம் பாடுதும் (என்றாள்) எ - று.

(வி - ரை) அடிகளை உத்தரகோசமங்கையிலே ஒழித்துப் பெருந் துறையிலே புகுந்து அடியவர்களை ஒன்ற ஒன்றக் கலந்து மறைந்தவன் திருப்பெருந்துறையானாதலின், அவனையே இப்பகுதியுள்ளே பெரும் பான்மையாகக் கிளநது கூறியருளினர்.

நெஞ்சங் கனிவுற்றார் ஆனந்த வெள்ளத்துள் அழுந்துவர் என்க. தலைமகளாகிய நீ அங்குச் செலலுதல் தகாது, அவனே இங்கு வருமாறு பாடுதும என்றமையால, தலைமகளைத் தோழி இயறபழித்துரைத்த திறன் அறிநது இன்புறலாம் என்க. முன்னும் பின்னும் இதன் கண்ணும் தலைமகளுக்குத் தலைமகன் செயதனவற்றை எல்லாம, தோழி தனக்குச் செய்தனவாகக் கொண்டு கூறுதல் மரபின்பாற்பட்டதே என்னுமிதனைத் தொல்காப்பியத்துப் பொருளியற்கண்ணே "தாயத்தின் அடையா" (27) என்னும் நூறபாவால் அறிந்துகொள்க.

அவன் கற்பித்தவாறு ஒழுகும் பெற்றியரைத் துன்புறுத்தும் ஆற்றல் இல்லாதவன், எம்போலியரையே துன்புறுத்தும் வல்லமை பெற்றவன் என "வல்லாளன்" என்றததற்கு இயறபழித்தாங்குப் பொருள் விரிக்க. கல்லைக் கனியாக்குவது ஒரு விஞ்சையே அன்றி மெய்ம்மைத்தன்று என்பதுபட நின்றது. கருணை வெள்ளத்தழுத்துதலும் அத்தகைத்தே. என்னை? இது தோழி கூறுறுதலின் என்க.

முன்னரத் திருப்பாட்டிலே தலைமகள் பெருந்துறையை நீக்கிக் கிளந் திருப்பவும், இத்திருப்பாட்டிலே தோழி அதனை வாஙகிப்பெயது கிளந்து கூறிய நுட்பம உளஙகொளறபாலது.

தலைமகள், தலைமகனை "வலலாளன் தென்னன் பெருந்துறையான்" எனக் கூறினள்; அவன் வினைகடிந்த வேதியனுதலை உட்கொண்டு தோழி, "அவ்வேதியன் தில்லைநகர் புக்குத் திருச்சிறறம்பலம் மன்னும் ஒலலை விடையானுதலை" உட்கொண்டு, ஒலலை விடையானுதலினன்றே நினனைக் கடுகப் பிரிநதான் என்றாள்.

தென்னன் - தெனனுடுடைய சிவன். அவன் அன்பின் ஐந்திணைக்கு இலக்கணமும் இலககியமும ஆனவன். அவற்றுக்கு அவனே ஆசானும் ஆவான எனக.

கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறுஒருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனஎலலாம காட்டிச் சிவம்காட்டித
தாளதா மரை காட்டித தன்கருணைத் தேன் காட்டி

நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடுஎய்த
ஆள்தான்கொண் டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய். 6

இது, தென்னன் பெருந்துறையான் எல்லாங் காட்டிக் கிறி செய்து நம்மை ஆட்கொண்டவன் ஆதலால், அவனை நாம் பாடுவோம் எனத் தலைமகள் தோழிக்கு இயற்பட மொழிந்து, அம்மனையாடி அவனைப் புகழ்ந்து பாடுவோம் என்றது

(பொ - ரை) தோழியே, ஒருவன் என் பொருட்டுச் செய்த மாயத்தைக் கேட்டனையோ? (அதுதான்) சுதையொடு சித்திரமும் தீட்டியதால் அழகு மிக்க மதில் எல்லாப் பக்கமும் சூழ்ந்துள்ள திருப்பெருந்துறையிலே அந்தணனாய் வந்தானாகிய தென்னாடுடைய சிவன், யான் காணாதற்கு ஒண்ணாத எல்லாவற்றையும் எனக்குக் காட்டித் தனது செம்பொருளாகிய மங்கலப் பொருளையுங் காட்டித் தனது திருவடித் தாமரைகளையும் காட்டித் தனது அருளாகிய நறவினையும் காட்டி (அதனால் என்னைக் கண்டு) நாட்டவர் இகழ்ந்து நகைக்கவும், நான் மேலிடத்தில் உள்ளதாகிய வீட்டினை அடையவும் என்னை அடிமை கொண்ட விதத்தினைப் பாடுவோமாக (என்றாள்) எ - று

(வி - ரை) கிறி - மாயம். அவன் காட்டிக் கரந்தான் ஆதலால் அவனது செயலை ஒரு மாயம் என்றாள். அவன் உள்ளவாறே காட்டினனேனும், அவற்றை எல்லாம் நுகரத் தனக்கு ஆற்றல் இல்லாது போந்தமையால், அவைதம்மை ஒரு மாயத்தால் ஆகியன எனக் கருதினாள் என்க.

புத்தடியார் முதற்கண் ஆட்கொள்ளப்படுகையில் இங்ஙனமெல்லாம் மயங்குவர் என்னும் இதனை "ஒரொருகால்" (திருஎம். 15) என்னும் திருப்பாட்டான் உணர்ந்து கொள்க.

உலக வழக்கினுள்ளே பயிலப்படாதன என்பது தோன்றக் "காட்டாதன எல்லாம்" என்றருளிச் செய்தாள். இவை பிறன்கண்ணே தோன்றிய பெருமைபற்றியும், "கிறி செய்தவாறு" என்பது அதனால் தான் சிறுமை எய்தியதுபற்றியும் வந்த மருட்கையின்பாற் படுவனவாம். இதனால் அவனது புதுமையும், அதனால் தான்பெற்ற சிறுமையும் பற்றிய வியப்புச் சுவை புலப்படுத்தும் பாட்டுக்களைப் பாடுவோமாக என்று தலைமகள் தோழியை அழைத்துத் தலைமகனது புதுமையும், தன் சிறுமையும் புலப்படுத்தினமையால் இஃது இயற்பட மொழிந்ததாயிற்று. தனது செவ்வி அறியாதவனாய்த் தனக்குப் புதுமை காட்டினன் என்பது கருத்தாயின், தோழி அறிவுறுத்தியவாறே தானும் அவனது கொடுமையில் ஈடுபட்டவளாகி அவளொடு அவனை இயற்பழித்துச் சொனனாளாகக் கொள்க. முன்னர்ப் பகுதிப் பொருளுக்குப் "பெருந்துறையான்" என்றதனை

அவன் தவறிலன் தானே தவறுடையன் என்றும், பின்னர்ப் பகுதிக்கு அவனே தவறுடையன் என்று முரைக்க.

"காட்டி மேலை வீடெய்த ஆட்கொண்டவாறு", நகை செய்ய ஆட்கொண்டவாறு எனப் பகுத்து இயைக்க. அவன் காட்டினன்; அதனால் நாட்டார் நகைத்தனர்; நாம் மேலைவீடெய்திேனம் என்க.

உலகியலும் வீட்டியலும் தம்முள் மாறுபட்டன ஆதலால் உலகியல் நெறிச் செல்வார் வீட்டியல் நெறிச் செல்வாரைக் கண்டு நகைசெய்தல் அவர்க்கு இயல்பாயிற்று என்பாரும் உளர்.

"காட்டாதன" என்றது, ஆசானாகிய கோலம் முதலியவற்றை. ஆசானாகிய கோலத்துள்ளே சிவம் நின்றதென்க. தன்னுடைய தாளைக் காட்டி அருளையும் காட்டினன் என்க.

ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையில்
மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை
நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்
தாயான தத்துவனைத் தானே உலகேழும்
ஆயானை ஆள்வானைப் பாடுதுங்காண் அம்மானாய். 7

இஃது, எல்லா உலகங்களையும் நடுவு வீற்றிருந்து ஆட்சி செய்துவரும் அவனே பிரிந்து நினக்கு இன்னல் செய்யாநின்றான். அவனை வினவுவார் பிறர் எவரும் இலர். அவனை அம்மனை ஆடிப் பாடுவோம் எனத் தோழி தலைமகளுக்குக் கூறியது.

(பொ - ரை) இடைவிடாது நினைப்பவருடைய நெஞ்சத்திலே வீற்றிருக்கும் உண்மைப் பாட்டினை உடையவனும், (அங்ஙனம் நினையாதார்க்கு அவர் புறத்தேயும் நில்லாது) சேய்மைப்படுவானும், தொண்டனும், தென்னாட்டவனும், திருப்பெருந்துறையானும், அந்தணனும், குணத்தால் நாயான நம்மை அடிமையாகக் கொண்ட தலைவனும், தாய்மை பொருந்திய உண்மையோனும், தானாகவே உலகேழும் ஆகி நிற்பவனும் (உலகங்கள் அனைத்தினையும் படைத்தும் காத்தும் ஒடுக்கியும்) ஆட்சிசெய்து வருபவனுமாகிய (அச்சிவனே நின்னைப் பிரிந்து துயரம் செய்தான் என அவனது உள்ளம் உருக) அவனைப் பாடுவோமாக அம்மானாய் (என்றாள்) எ - று.

(வி - ரை) உள்ளுவார் உள்ளத்துள் அவரைப் பிரியாது இருப்பவன் ஆதலால், நாமும் அவனை யுன்னி ஆடிப் பாடுவோம் என்றும், அவன் "சேவகன்" ஆதலால் நமக்கு நலன் செய்ய நம் முன்னே வந்து நிற்பன் என்றும், "தென்னன்" (அன்பின் ஐந்திணைநெறி அளித்தவன்) ஆதலால்

நின்னை அவன் வந்து கூடுவான் என்றும், "வேதியன்" ஆதலால் இல்லற துறவறங்களையும் அவற்றின் பயன்களையும அளிப்பவன் என்றும், "மாதிருக்கும் பாதியன்" ஆதலால் உலகம வழங்கி வருதற்கேற்ற அருளுடையன் என்றும், "தாயான தத்துவன்" ஆதலால அன்பு செய்து ஆதரிப்பவன் என்றும், "உலகேழும ஆயானை ஆள்வானை" என்றதனால் அவன் உலகினுள்ளே அந்தர்யாமியாய் இருப்பதனால் அவ்வுலகம வழங்கி வரலாயிற்று என்றும், அவனைப் பாடி ஆடி யாமும் நலன் பெறுவோம் என்றும் குறிப்பித்தாள் என்க.

மாதிருக்கும் பாதியன், தாயானதத்துவன், உலகேழு மானவன், அவற்றை ஆள்பவன், தென்னன், திருப்பெருந்துறையிலே வேதியனும் நாயான நம்மை யாண்டான், அவன் உள்குவார் உள்ளத்து அணியனும் உள்ளார்க்குச் சேயனுமாகும சேவகன் என்றுரைக்க.

நம்மை இறைவன் நாடிவந்து அருளியது உடையான் தனது நாயை நாடி வந்ததை ஒக்கும் என்க. காட்டு நாயை வீட்டு நாயாக்கும் வேடன் அவன என்க.

எளிதாக நம்மை ஆட்கொண்டு பிரிந்து அருமை காட்டி வருத்திப் பின்னரும் ஆள்வான் எனறபடி.

அவன் சீறில் அதனை நீக்குவார் பிறரின்மையின் அவனைப் பாடுவோம் எனக் குறிப்பிட்டு அவனை இயறபழித்தவாறுயிறறு.

பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன் மண் டலத்து ஈசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய் 8

இஃது, இபற்பட மொழிந்தாள்போலக் குறிப்பால் இயற்பழித்த தோழிக்கு, அவன் பெமமான் ஈசன் நெற்றிக்கண் கடவுள் என்று உரைக்கும் ஆற்றலும் பெருமையும் வாய்ந்தவனேனும், அடியார் பொருட்டு அப்பாண்டியனால் பிரம்படிபட்டுப் புண்ணுற்றான் ஆதலால், அவனது பொன்மேனிப் புண்ணைப் பாடுவோம் எனத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை) (தோழீ) பெண்ணைத் தனது இடப்பாகத்திற் கொண்டவனும், விண்ணின்று வெளிப்பட்டு அகன்ற மண்டலங்களுக்கும் வேண்டிய செல்வங்களை அவற்றுக்காகவே கொண்ட புகழுடையவனும், (அழல் வடிவினதாகிய) கண்ணைக் கொண்ட நெற்றியையுடைய கடவுளும், (சிறுமைக்கு இரங்கியருளும்)

பெருமையுடையவனும், ஆகிய திருப்பெருந்துறையை உடைய வனுடைய (பாட்டொலி முதலாய) ஒலியையுடைய மதுரைக் கண்ணே (பேரன்புடைய பிட்டு வாணிச்சிக்காக அவள் தரும் (உதிர்ந்த பிட்டாகிய) கூலியைப் பெற்றுக்கொண்டு மண்ணைச் சுமந்தும், அம்மதுரைக்கு அரசனால் அடிபட்டும் (அதனால் உண்டாகிய) புண்ணைக் கொண்ட திருமேனியைப் பாடுவோம் அம்மானாய் (என்றாள்) எ - று.

(வி - ரை.) இத்துணைப் பெருமையும் ஆற்றலும் வாய்ந்தவன் ஒரு வந்தியின் அன்புடைமைக்காகக் கூலியாளாகச் சென்று மண் சுமந்தும், அதனால் மொத்துண்டு புண் சுமந்தும் சிறுமை பெற்ற திருமேனியுடைய வனானன் எனப் புலவராற் பாடப்பட்டவன். புண்ணுற்றமைக்காகப் பாடலா கிய பரிசிலைப் பெறறவன் என்க. பரிசு - கொடை.

பெருந்துறையானாகி மண்சுமந்து மொத்துண்டு புண்சுமந்த திரு மேனியனானன் என்றலே கருத்தாகில், அடிகள்பாற் பண்சுமந்த பாடலைப் புண்சுமந்த மேனிக்குப் பரிசாகப் பெற்றவன் எனப் பொருளுரைத்துக் கொள்க. இங்ஙனம் அடிகள்பாற் பாடலை இறைவன் பெற்றுக்கொண் டான் என்றலை,

"இருந்துதி என்வயிற் கொண்டவன்" (திருக்கோ. 3.)

என்னும் திருப்பாட்டானும் உணர்ந்துகொள்க.

பண்சுமந்த பாடல் - இசைப்பாட்டு. திருவாசகம் முதலியன இயற் றமிழேயன்றி இசைத்தமிழும் ஆகலின் அவை இசைப்பாட்டுக்கள் எனவும் படும்.

அப்பெம்மான் புண்சுமந்தவன் என அவனைத் தலைமகள் இயற்பட மொழிந்தவாறு காண்க. தன்னைப் பாடினார்க்குப் பரிசில் தந்தருள்வோன் எனினும் ஒருவாறு பொருந்தும். "பரிசு" என்றதற்குப் பண்பெனப் பொருள் கொள்ளுவது ஈண்டுச் சிறவாது. "பொன்மேனி" என்றாள் அதுவும் சொல்ல மனமின்று என்பதுபட.

துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்
கொண்ட புரிநூலான் கோலமா ஊர்தியான்
கண்டங் கரியான்செம் மேனியான் வெண்ணீற்றான்
அண்டமுதல் ஆயினான் அந்தமிலா ஆனந்தம்
பண்டைப் பரிசே பழவடியார்க்கு ஈந்தருளும்
அண்டம் வியப்புறுமா பாடுதுங்காண் அம்மானாய். 9

இஃது, இறைவன் வன்கண்ணன்; அவனை அடைதற்குச் சார்பு ஒன்றேனும் இன்று ஆதலால் நமக்கு அவன் செய்த துன்பத் தினை மறந்து பழவடியார்க்கருளிய ஆனந்தத்தைப் பாடுவோம் எனத் தோழி இயற்பழித்துரைத்தது.

(பொ - ரை ) ஒரு கலையுடைய இளந் திங்களை அணிந்தவனும், மறைகளை வெளிப்படுத்தினேனும், தில்லைப் பெருந்துறை அந்தணனும், முப்புரிநூலை மார்பில் அணிந்துகொண்டவனும், அழகிய காளையைத் தனக்கு ஊர்தியாக உடையவனும், நஞ்சுண்டு கரிதாகிய கழுத்தினை உடையவனும், சிவந்த திருமேனியனும், வெளிதாகிய நீற்றினை அணிந்தவனும், உலக முதல்வன் ஆயவனும் ஆகிய சிவன், தனது பழைய அடியார்களுக்கு உலகம் வியப்புறுமாறு பழங்காலத்து முறைப்படியே கொடுத்தருளும் ஆனந்தத்தை நாமும் பாடுவோமாக அம்மானாய் (என்றாள்) எ - று.

(வி - ரை ) அண்ட முதலாயினான், கோலமா வூர்தியான், துண்டப் பிறையான், கண்டங்கரியான் ஆகிய சிவன், செமமேனியனாய் வெண்ணீறு அணிந்தவனாய் மறையவனாய்ப் பெருந்துறையிலே மன்னினான்; அவன் புத்தடியார்க்குத் துன்பமும பழவடியார்க்கு இன்பமும் நல்கினான், அவன் செய்த துன்பத்தை ஒழித்து இன்பத்தினையே பாடுவோமாக என்று கூறிய குறிப்பினால் தோழி தலைமகளுக்கு இயற்பழித்துரைத்ததாக உணர்க.

அவன் இங்ஙனம செய்வது புதுவதன்று பழையதுவே என்றபடி. பழையதாகிய ஆனந்தமுமாம். உயிர்களுக்கு இயல்பாக உள்ளது ஆனந்தமாகலால் அஃது அங்ஙனம் சிறப்பிக்கப்பட்டது

அண்ட முதல்வன் செய்யத் தக்கதை யாமே ஏற்றுக்கொள்ளாது மறுக்க வல்லோம் என்று குறித்தபடி. இது நமக்கெனச் செய்ததுவு மன்று, பழைய பரிசாகவே உள்ளது என விரிக்க.

இச்சிறியோர்க்கு இவ்வின்பப் பெருமை யாங்ஙனம் எய்திற்று என்றாங்கு அண்டத்துள்ளார் வியக்குமாறு என விரிக்க. வானம் முதலாய எல்லா அண்டத்தவரும் வியக்க என்க. அண்டம் - அண்டத்தில் உள்ளவர்; ஆகுபெயர்.

துண்டம் - பிளக்கப்பட்ட பிரிவு ஈண்டு அது திங்களின் கலைப் பகுதியை உணர்த்தி நின்றது மறையான் - மறையை உடையவன்; மறையின் உட்பொருளாக உள்ளவன்.

"கோலமா வூர்தியான்" என்றது, ஆசானாக வந்தருளிய பின்னர் விடை மேலேறிப் பொதுவுட்சென்று மன்னியதை. இப்போது அவன் அம்பலத்திலே கண்டங்கரியானாய்த் துண்டப் பிறையணிந்தவனாய் அண்ட முதல்வனாய்த் திருக்கூத்தாடிப் பழவடியார்க்கு ஆனந்தம் நல்குகின்றான். அவன் நல்கிய ஆனந்தத்தை எம் துயர மறந்து அம்மனை யாடிப் பாடி யாமும் பெற்றுக் கொள்வோம் என்றாள் என்க.

விண்ஆளும் தேவர்க்கும் மேலாய வேதியனை
மண்ஆளும் மன்னவர்க்கும் மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழ் அளிக்கும் தண்பாண்டி நாட்டானைப்

பெண்ஆளும் பாகனைப் பேணு பெருந்துறையில்
கண்ஆர கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணு மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 10

இது பழவடியார்க்கருளிய ஆனந்தத்தைப் பாடில் நம்முடைய துன்பம் அதிகப்படுதலால் அம்முறையை நீக்கி நம்மைக் கழல் காட்டி ஆண்டமையே ஆனந்தமூட்டவல்லது என அன்பின் ஐந்திணை இயல்புரைக்கு முகத்தால் அவனைத் தலைவி தோழிக்கு இயற்பட மொழிந்தது.

(பொ - ரை) விண்ணுலகங்களை அரசாளும் வானவர்க்கு (அவர்கள் கண்டறியாத பேரின்பப் பதவியின் நிலைபெற்று) மேலாகிய வேதத்தின் உட்பொருளாயவனும், மண்ணுலகங்களை ஆண்டுவரும அரசர்களுக்கு அவர்கள் மாட்சிபெறும மாண்பாக நிலைத்தவனும், தண்ணிய இயல்பு நிரம்பிய அகப்பொருள் இலக்கிய இலக்கணங்களை ஆக்கியும் காத்தும் வரும் தண்ணிய பாண்டி நாட்டினைக் கொண்ட பாண்டியனும், அங்ஙனமே அவ்வகப்பொரு ளுககுத் தானே இலக்கியமாக உமையம்மையைக் களவிலே புணர்ந்தபின் உலகறியத் தீவேட்டு இடப்பாகத்திற் கொண்ட வனும், (யாவரும்) விரும்பும் திருப்பெருந்துறைக்கண் எனக்குத் தனது காட்சி நிரம்பிய திருவடியைப் பின்னுங் காட்டி நாயின் இயல்பினையுடைய என்னைத் திருவண்ணுமலையிலே பின்னும் அடிமையாகக் கொண்டவனுமாகிய சிவனைத் தோழி, நாம் பாடுவோ மாக அம்மானாய் (என்றுள்) எ - று

(வி - ரை.) வானவர் நிலைக்கு மேலான "வேதியன்" அவனுகலின், அவன் அளிக்கும் "தண்ணர தமிழாகி"ய அகப்பொருளும் தமிழாய தென்க. எனவே அகப்பொருளின் முடிவே வேத முடிவாகிய திருவடி என்பது பெற்றும்.

மண்ணுளும் மன்னவர் அவ்வன்பின் ஐந்திணையை உலகத்திலே காத்துவருதற்கு அவன் இலக்கியமாக நின்றருள்வான் என்க. எனவே வானத்திறைவர் தம்மினும் மண்ணுளும் மன்னவரே சிறந்தவராவர் என்பது பெறப்பட்டது.

"பேணு பெருந்துறை" என்றது பிறிது ஒரு தலத்தினையும் குறிக்கும்; அண்ணுமலையை அடையுமுன் அத்தலத்திலே அடிகளுக்குத் திருவடி பின்னரும் காட்டப்பட்டதெனினும் ஒத்தலின். வேதியன் - வேதம் ஓதுவோன்; வேதத்தைத் தந்தவன், அவ்வேதப் பொருளாகியவன். கண்ணுர்கழல் - காணும் கண்ணின் காட்சிக்கு நிரம்பிய கழல்.

தமிழ் அளித்த நாடு பாண்டிநாடு (சிவலோகமாகிய தமிழ் நாடு) ஆதலின், அது "தண்பாண்டிநாடு" என்றருளப்பட்டது. வீரம் செறிந்த

தமிழ் - புறப் பொருளுக்குரிய தமிழ். தமிழ் என்றது இலக்கணத்தை. இதனை இறையனார் அகப்பொருளுரையானும், தமிழ்நெறி விளக்கம் என்னும் நூற்பெயரின் குறிப்புரையானும் உணர்க.

செப்பார் முலைபங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்கும் தன்மையினன்
அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த
அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தார் உள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய். 11

இஃது, இறைவன் நமக்கு எல்லா நலனையும் தந்து நம் நாட்டையே சிவலோகம் ஆக்குவித்தான், அவன் இப்போது அப் பாலைக் கப்பாலாயினன், அவனைப் பாடுதும் எனத் தோழி தலை விக்கு இயற்பழித்துரைத்தது

(பொ - ரை.) (தோழி தலைமகளை நோக்கி) சிமிழை ஒத்த முலையையுடைய அம்மையை இடதுபாகத்திற் கொண்டவனும், தென்னாடுடையானும், திருப்பெருந்துறையானும், திருவடியை அடைந்தவர் உள்ளத்தைத் தவறாமே உருக்குவிக்கும் இயல்புடைய வனும், அந்தத் (தமிழ் விளங்கும்) பாண்டி நாட்டைச் சிவலோக மாகச் செய்வித்த கங்கை அமைந்த சடையையுடைய அப்பனும் இன்பமாகிய நீண்ட கழலை அணிந்த திருவடிக்கே தம்மை ஈடாக ஒப்புவித்த பேரன்பினரோடு அகத்தே புக்கிருக்கும், அப்புறத்திற்கு அப்புறமாகிய அம்பலத்தை நாம் அம்மானை ஆடிப் பாடுவோமாக என்றாள் எ - று.

(வி - ரை ) திருப்பெருந்துறையிலே காட்சி தந்து பிரிந்தவனேனும் இங்கு (அண்ணாமலையில்) வந்தும் காட்சி கொடுத்தான் என அவன் முன் செய்த கொடுமையை மறந்து அவனை இயற்பட மொழிவாளாய், "பேதாய், இப்போது அவன் முன்பேபோல அம்பலத்தின் கண்ணே சென்று உன்னைப் பின்னரும் வஞ்சித்துப் பிரிந்து போயினன் ஆதலால் அவன் கொடுமையை இனியேனும் அறிந்துகொள்," எனத் தோழி அவனை இயற்பழித்துத் தலைமகளுக்குச் சொன்னாள் என்க.

பங்கனும் தென்னவனும் பெருந்துறையானும் தன்மையனும் ஆக்குவித்தோனும் சடையப்பனும் ஆகிய அவனுடைய கழல் இருக்கும் அப்புறத்துக்கு அப்புறமான அம்பலம் என்றமையால் அவன் வஞ்சித்துப் பிரிந்து சென்ற செயலைப் புலப்படுத்து முகத்தானே அவனைத் தோழி இயற்பழித்தவாறு காண்க அண்ணாமலையானாய் அண்ணி அருளின னேனும் இனி அம்பலத்தான் ஆயினன் என அவனது கொடுமை தோன்ற நின்றவாறும் காண்க.

செப்பு - சிமிழ். ஆர் - (உவம வாசகம்) ஒத்த. அப்பாண்டி நாடு - அந்தத் தண்ணிய தமிழையுடைய பாண்டிநாடு. அவன் அன்பின் ஐந்திணை அளித்தான் எனினும், உமை பங்கனுகி அவ்வின்பம் நுக நுதற்கு இலக்கியமானுன் எனினும், பாண்டி நாட்டைச சிவலோக மாக்குவித்தான் எனினும், கங்கையின் தெறலை நீக்கிய திறலினன் எனினும், முன்பே போல் அண்ணுமலையில் வந்து காட்சி நல்கினுன் எனினும், அவன் இப்போது நின்னைப் பின்னரும வஞ்சித்து அம்பலத்தே முன்போலப் புக்கு அமைந்தான் என விரிக்க.

" செப்பார் முலைபங்கன் " முதலாய வெல்லாம் அப்பாலையே நோக்கி நின்றவாறு தெளிக. பாலை - புறவிடம் இப்பாலை - இவ்விடமாகிய சரியை கிரியை யோகங்களுக்கு ஏற்ற புவனங்கள். அப்பாலை - ஞானத்துக்குரிய அந்தப் புறவிடம். அதனுக்கும் அப்பால் என்றது, ஞானுதீதமாகிய திருவம்பலத்தை. அப்பால் என்றதனைத் தில்லைக்கும், அதனுக்கும் அப்பால் என்றதனைப் பொதுவிற்கும் கொள்க.

உள் - அகம்; பொது. தமக்கு அவன் கழல் தந்தமைக்கு ஒப்பாகத் தாமும் அவனுக்குத் தம்முள்ளத்தை ஒப்புவித்த பேரன்பருடன் வீற்றிருக்கும் மன்றம் என்க.

**மைப்பொலியும் கண்ணிகேள் மால்அயனேடு இந்திரனும்**
**எப்பிறவி யும்தேட என்னையும்தன் இன்னருளால்**
**இப்பிறவி ஆட்கொண்டு இனிப்பிறவா மேகாத்து**
**மெய்ப்பொருட்கண் தோற்றமாய் மெய்யே நிலைபேருய்**
**எப்பொருட்கும் தானேயாய் யாவைக்கும் வீடாகும்**
**அப்பொருளாம் நம்சிவனைப் பாடுதுங்காண் அம்மானுய். 12**

இஃது, அவனை இயற்பழித்துரைத்த தோழிக்குத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்து அம்மனையாடுவோம் என்றது.

(பொ - ரை.) மை பூசிப் பொலிவுறும் கண்களையுடைய தோழீ, யான் சொல்லுவதைக் கேட்பாயாக. திருமாலும் நான்முகனேடு இந்திரனும் ஆகிய அவர் தாமெடுத்த எல்லாப் பிறவிகளிலும் தன்னைத் தேடி வருந்தவும் (அதனைப் பொருளாகக்கொண்டு) அவர்பாற் செல்லாது தகுதியற்ற என்னையும் ஒரு பொருளாக நன்கு மதித்து எனக்குக் காட்சி நல்கி) தன்னுடைய இனிய அருளாலே இப்பிறவியிலே அந்தணனுகி ஆண்டுகொண்டு இனி மேற் பிறவி எடுக்காது காப்பாற்றி, மெய்ம்மையாகிய பொருளின் கண் தோற்றம் உடையதாய் அம்மெய்ம்மையாகிய பொருளையே தான் நிலைபெறுதற்குரிய இடமாய், எவ்வகைப்பட்ட பொருள்களுக்கும் தானே சார்பாய், எல்லாப்பொருளும் பிறப்பு இறப்பு

என்னும் எல்லையினின்றும் நீங்கி நிலைபெற்றுய்யும் வீடுபேறும் நிற்கும் அந்தப் பொருளாகிய நமக்குரியனுகும் சிவனைப் பாடு வோம் அம்மானை என்றுள் எ - று

(வி - ரை.) காத்து உரியனுகும் பொருள், தோற்றம் முதலியதுவாய் வீடாகும் பொருள், அப்பொருள் என்க.

திருமால் முதலியோரால் ஒரு பிறவியிலும் காணற்கரிய சிவன் நமக்கு பலமுறை வந்து காட்சியளித்திருக்கவும், அவனுடைய ஆறறல் அருமை பெருமைகளை அறியாயாகி அவனை இயற்பழித்துரைக்கும் தோழீ, நீ யார் முன்னர் யாது கூறினை ? நின் கண்ணிணை விழித்துப் பார் என்னும குறிப்புத் தோன்ற "மைப்பொலியுங் கண்ணுய் கேள்" என்றுள். பராமுகமா யிருத்தலின் இயறபழித்து மொழிகின்றுய் , என்னை உற்றுப் பார் என்பது தோன்ற"மைப் பொலியுங் கண்ணி" என்றுள் மெய்ப்பொருட்கண் தோற்ற மாய் இன்பந் தந்தும், பொய்ப்பொருடகண் தோற்றம் பெறுது துன்பந் தந்தும் வருதலால் உயிர்களை மெய்ப்பொருளையே நாடுமாறு செய்து, நிலைபேற்றிறகுத் தானே சார்பாக அவற்றுடன் வீற்றிருந்து வீடுபேறுகி நிறபவன். திருமால் முதலியோர்க்குப் பிறந்தவிடத்தும் பிறவாவிடத்தும் காணப்பெறுதவன். அத்தகைய அவனே வலியவந்து ஆட்கொண்டு இனிப் பிறவா வகை காத்தான். அவனது உதவிக்கு அவனை இயற்பழித் துரைப்பதோ நல்லறிவாகும் என்றுள் என்க.

கைஆர் வளைசிலம்பக் காதார் குழைஆட
மைஆர் குழல்புரளத் தேன்பாய வண்டுஒலிப்பச்
செய்யானை வெண்ணீறு அணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை எங்கும் செறிந்தானை அன்பர்க்கு
மெய்யானை அல்லாதார்க்கு அல்லாத வேதியனை
ஐயாறு அமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானுய். 13

இது, தலைமகளும் தோழியும் அவனை ஒருவர்க்கொருவர் இயற்படமொழிந்து அம்மனை யாடிப் பாடுவோம் எனச் சொல்லியது.

(பொ - ரை ) நம்முடைய கைகளிலே அணிந்துள்ள வளை யல்கள் ஒலிப்பவும், காதிலணிந்துள்ள தோடுகள் அசைந்தாடவும், மயிர்ச்சாந்து பூசி அணி செய்யப்பட்ட, சுருட்டி முடித்த முடி உருளவும், அங்ஙனம் புரண்ட குழலிலிருந்து தேன் பாயவும், வண்டு ஆரவாரிக்கவும், செம்மேனி உடையவனும், வெளிதாகிய திருநீற்றினை அணிந்தவனும், எக்காரணம் பற்றியும் பிறரை வணங்குதற் பொருட்டுத் தமமுள் சேர்ந்தறிதல் இல்லாத கைகளை யுடைய மகாதேவனும், எவ்விடத்தும் நிறைந்தவனும், அன்பர்க்கு

மெய்ப்பொருளாவானும், அன்பில்லாதார்க்கு மெய்ப்பொருளல்லாத பொய்யாகி, வேதப்பொருளாக உள்ளவனும், திருவையாற்றில் வீற்றிருப்பவனுமாகிய சிவனை நாம் பாடுவோமாக எ - று.

(வி - ரை.) காசிக்குச் சென்றிருந்த ஐயாற்றுக்கோயிற் பூசகன்போலக் கோலங்கொண்டு வந்து அவன் மனைவியின் துயரைப் போக்கிய அவ்விறைவன் நம் துயரையும் போக்கி இன்புறுத்தும் பொருளுடையவன் என்க. " அல்லாதார்க்கு அல்லாத வேதியனை " என்றமையால் மெய்யன்பற்ற ஏனைய பூசகர்பொருட்டுக் காசிக்குச் சென்றிருந்த வேதியனைப் போலக் கோலங்கொண்டமை பெற்றும் எனினும் ஒக்கும்.

" சேர்ந்தறியாக் கையானை " என்றதற்கு ஐயாற்றில் அப்பார்ப்பனியைப் போலிக் கணவனாகச் சென்று கலந்தும் அவளால் அறியப்படாத அக்கள வொழுக்கமுடையவன் என்றுரைப்பாருமுளர். சேர்ந்தறியாக் கையானை - பிறரை வணங்கற்கில்லாமையின் தம்முட் சேராத கையையுடையவன்.

" பொருந்தாத செங்கை பொலியக் கண்டேன் "

(திருநாவுக் 6-ம் திரு. திருவாய்மூர்த் திருத். 8.)

என்றலுங் காண்க. சேர்தல் - குவிதல்.

இனி, நலன் புரிதற்கண்ணும் போலி வேடங்கொள்ளும் இயல்பினன் என அவனைத் தோழி தலைமகளுக்கு இயற்பழித்துக் கூறியதாக கொள்ளற்கும் இடனுண்டு.

**ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்**
**ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந்து எய்த்தேனை**
**ஊனையும் நின்றுருக்கி என்வினையை ஓட்டுகந்து**
**தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்துஇனிய [டருளும்**
**கோனவன்போல் வந்தென்னைத் தன்தொழும்பில் கொண்**
**வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 14**

இஃது, அருளே சார்பாக என்மாட்டு வந்து, என் வினை ஓடுதலை விரும்பி, தலைமகனாகி என்னைப் பணியாட்டியாகக் கொண்டானை நாம் அம்மனை யாடிப் பாடுவோமாக எனத் தோழிக்குத் தலைவி அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை ) (தலைமகள் தோழியை நோக்கி) ஆனையாயும் புழுவாயும் மக்களாயும் வானவராயும் மற்றைய பிறவிகளாயும் பிறந்தும் இறந்தும் இளைப்புற்று வந்த என்னை என்னுடைய உள்ளத்தோடு உடலையும் உருகச்செய்து எனது இரு வினைகளையும் ஓட்டுதலை மேற்கொண்டு, தேனையும் பாலையும் சர்க்கரையையும்

ஒத்து இனிமை கொண்ட என் தலைமகன் போல எதிர்வந்து என்னைத் தன்னுடைய தொண்டிலே ஏற்றுக்கொண்டு, அருள்செய்து வரும் தேவனுடைய பொலிவு பெற்ற வீரக்கழல் அணிந்த திருவடிகளைப் பாடுவோம் அம்மானை என்றாள் எ - று.

(வி - ரை.) கீடம் - புழு. பிறவு - பிறவி.

" பிறவினோடு இறவுமானான் " (தேவார. 447-1.)

இறைவன் தன்னுடைய முயற்சியால் இன்பந் தந்தான் ஆதலின் தேனும் அருளால் அழைத்து இனபம் செய்தலால், அன்பினால் ஊட்டுவிக்கக் கன்று உண்ணும பாலும், இப்போதுதான் அவனை வருத்த இனிமை பயத்தலால் கருமபினை நெரித்துப் பிழிநத சாற்றினைக் காய்ச்சுதலால் ஆகிய சருக்கரையும உவமங்களாயின அன்பர் பொருட்டு மொத்துண்டு இனிமை பயத்தலால் "கன்னலும்" எனக் கூறினும் அமையும். இன்னவற்றால் அவனைத் தலைமகள் இயற்பட மொழிந்தவாறு கண்டுகொள்க.

' என் கோனவன் ஆசான்போல் ' என இயைக்க. ஒட்டு - ஒட்டுதல். உகத்தல் - மேற்கொள்ளுதல். தனக்குக் கணவனும் தெய்வமும் அவ்வொருத்தனே ஆவான் என்பாள் " கோனவன்போல் வானவன் " என்றனள். வீரச்செயல் விளங்கச் சித்திரிக்கப்பட்டமையால் அவன் கழல் பூங்கழலாயிற்று. அவனுடைய தொழும்பாவது அவனுக்கு இல்லறப் பணியாட்டியாக இருப்பது. அருளுதல் - இன்பத்தை அளித்தல். "தன்" என்றது, கணவனாகிய தனக்குரிய எனப் பொருள்பட்டு நின்றது என்றவாறு.

சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்திட்டு எச்சன் தலைஅரிந்து
அந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை ஓட்டுகந்த
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய். 15

இது, தன் தலைமைக்கு மாறுபட்டோர் தம்மவரேனும் அவரையும் சிதைக்கும் இயல்புடையான் தலைவன் என அவனுடைய அன்பின்மையைக் கூறுமுகத்தானே அவனை இயற்பழித்து அவனுடைய மந்தார மாலையைப் பாடுவோம் எனத் தோழி தலைவிக்குக் கூறியது.

(பொ - ரை ) (தோழி தலைமகளை நோக்கி) தன்னைத் தலைவனாகக் கொள்ளாது தக்கன் தான் செய்த வேள்வியிலே பங்கு பற்றிய திங்களை உடல் தேய்த்தருளி, இந்திரனைத் தோள்நெரித்து, வேள்வித் தலைவனைத் தலையரிந்து, வானகத்திலே செல்லும் அலரும் கதிர்களையுடைய ஞாயிற்றைப் பல்லுடைத்து, விண்ணவர்களைத் திசைதோறும் சிதைந்து ஓடச் செய்தலை மேற்கொண்ட செவ்விதாகிய

பூங்கொத்துக்கள் பொருந்திய சோலைகள் பக்கங்களில் எல்லாம் சூழ்ந்த பெருந்துறையானாகிய தென்னாடுடைய சிவன் முன்னர் நமக்கு அளித்த மந்தாரப் பூவாற் பிணைத்த மாலையை நாம் பாடுவோமாக அம்மானாய் (என்றாள்) எ - று

(வி - ரை.) தக்கனாற் பெற்ற சாபத்தினை நீக்கி அருளியிருப்பவும், தனக்கு மாறாகவும், அத்தக்கனுக்குச் சார்பாகவும் அவ்வேள்வியிலே பங்கு பற்றிய திங்களை முறைகூறினார்

கைலைக்கண் இறைவியொடு கூத்தயரும் இறைவன்மேல் இந்திரன் வச்சிரம் வீச, அதனை இறைவன் கண்டவுடன் அவனுடைய கை வழங்கு மாறற்றும், வலத்தோள் வாதப் பிணியுற்று வலியற்றும் போயின என்க. அதனையும் மறந்தவனாய் இப்போது தக்கன் வேள்வியிலும் மாறுபட்டுப் பங்கு பெற்றான் ஆதலால் அவன் தோள் நெரிக்கப்பட்டான என்க

முன்னர் நெற்றிக்கண் ஒளியால் செருக்கு அடங்கியதை மறந்து பின்னரும் அவ்வேள்வியிற பங்கு பற்றிய ஞாயிற்றைப் பல் தகர்த்தான் என்க வேறுங் கூறுப.

தானே நம் முன்னர் வந்து மந்தார மாலையைத் தந்து அன்பு செய்த வன் என்க.

சார்பில்லாத சந்திரன் முதலியோரையும் சார்பாக உள்ள நம்மையும் ஒருங்கே துயர்செய்வோன் என அவனது கொடுமை கூறப்பட்டதென்க.

"மந்தாரமாலை" என்னும் குறிப்பால் அவன் அவளைக் களவிற் புணர்ந்தான் என்பது பெற்றாம்; அது தெய்வ மணம் என்றலைத் தெய்வப் பூவாற குறித்தலால்.

ஊனாய் உயிராய் உணர்வாய்என் உள்கலந்து
தேனாய் அமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோர் அறியா வழிஎமக்குத் தந்தருளும்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்கும்
கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய். 16

இது, பேரின்ப நெறிகாட்டி எம்மையாட்கொள்ளும் தலைமகன் பேரறிஞன், எல்லா உயிர்க்கும் வேந்தன், அங்ஙனம் அவனுடைய வேத்தியல்பினை அம்மானை யாடிப் பாடுவோமாக எனத் தோழிக்குத் தலைவி அவனை இயற்பட மொழிந்தது

(பொ - ரை) (தலைமகள் தோழியை நோக்கி) உடலாயும் அதன் அகத்துள்ள உயிராயும் அவ்வுயிர்க்கண்ணே கலந்துள்ள உணர்வாயும் என்தன் அகத்துள்ளே கலந்து ஆங்கூறித் தேனையும் அமுதயாயும் கரும்பினது இனிமை வாய்ந்த வெல்லக்கட்டியாயும்

இனிமை செய்து வானவரும் கண்டறியாத அன்பின் நெறியின் வழியை எமக்குத் தந்து அருளைச் செய்யும் தேன் நிரம்பிய கொன்றை மலரைத் தார் முதலியனவாக அணிந்த அற்புத் தொண்டரைப் புகழ் மிக்க ஒளியிலே கொண்டு சேர்க்கும் கெடாத அறிவுருவாகி எல்லையற்ற பலவகைப்பட்ட உயிர்கள் எல்லாவற்றுக்கும் தலைமகனுகி (வேந்தனுகி) நின்று இன்பம் தருதலில் நிலைபெற்ற வரலாற்றினைப் பாடுவோமாக அம்மானுய் (என்ருள்) எ - று

(வி - ரை ) முன்னர் வடிவினையும் அதன்பின்னர் உயிரினையும் அதன்மேல் உணர்வினையும் தனக்கெனக் கொண்டவனுகி என உரைத்துக் கொள்க. உடம்பு, கரும்பு ; அதன் பயன், கட்டி ; (அடை, மனமும் புலன்களும்) தேன், அவற்றின உணரவு ; அமுதம், உயிர். அறிவு உயிரிலிருந்து மனம் புலன் என்பவறறிலும பரவும் இயல்பிற்று. இவ்வரலாறே அன்பின் ஐந்திணை இலக்கியமாகும "பல்லுயிர்க்கும் கோன்" என்றது, அவன் ஒவ்வோர் உயிரையும் தலைவனுக நின்று இன்பமூட்டி ஆட்கொள்ளுதல ஆறு அறிவு - கேடடையாத அறிவு ; நீங்காத அறிவு ; நல்லறிவு. அறிவாகிய கோன் எனறமையால் நல்லறிவும் நல்லின்பமும் தான் படைத்து, அவற்றை அன்பர்க்கருளும் இயல்புடையவன் ஆவான் என உரைத்துக் கொள்க.

சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்று
ஊடுவேன் செவ்வாய்க்கு உருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்தும் மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானுய். **17**

இது, கற்பின் திறத்திலேபட்டுக் கூடி ஊடி உருகி வாடி மலரும் பெற்றியை நுகர்தற்கு என் மனம் அவாவி நின்றது ; ஆதலால் அத்தகைய என்னேடு நீயும் அம்மானை யாட நாம் பாடுவோமாக எனத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது

(பொ - ரை ) (தோழீ, யான்,) பொலிவுடைத்தாகிய கொன்றையந்தாரை என் தலைக்கு அணியாக அணிந்துகொள்வேன் ; அங்ஙனம் அணிந்து சிவபிரானுடைய திரண்ட தோள்களைச் சேர்வேன் , அங்ஙனம் சேர்ந்து அவனை முயங்கி அம்முயக்க மயக்கத்திலே நிலைபெற்று அவன்பால் நுணுகிக் குறையேற்றி ஊடுதலைச் செய்வேன் , அங்ஙனம ஊடிய யான் அவனுடைய செவ்விதாகிய வாயின் நின்றும் ஊறும் அமுதம் பெறக் கருதி முன்னர் ஊடியது தவறென உணர்ந்து உள்ளம் உருகா நிற்பேன், அதனைப் பெற்றுக்

கொள்ளும் வழியை ஆராய்வேன் ; அங்ஙனம் ஆராய்ந்து ஒரு வழியும் காணமாட்டாமையால் அவன் திருவடியை அந்நெறியருளும் வண்ணம் சிந்தையால் தியானிப்பேன் ; அதனுனும் பெற்றுக் கொள்ளமாட்டாமையால் அகமும் முகமும் வாட்டமடைவேன் ; மீளவும் வாடும் என் வாட்டங் கண்டு அவன் அருள்பாலிப்ப அதனால் அகமும் முகமும் ஒருங்கு மலராநிற்பேன், அங்ஙனமே தீயைக் கையிலேந்தித் தில்லைப் பொதுவில் கூத்தயரா நின்றானை (நின்னுடன் அம்மானை யாடிப் பாட விழையாநின்றேன் ஆதலால்) யாம் ஒருங்கு சேர்ந்து பாடுவோமாக அம்மானாய் (என்றாள்) எ - று.

(வி - ரை ) இறைவன் திருவடியில் அணிந்த தாரை அன்பர் தம்முடைய திருமுடிக்கு அணியாகச் சூட்டிக்கொள்ளுதலை,

"அணிதில்லைச் சிவனடிக்குத் தாரணி கொன்றையன்"

(திருக்கோ. 400.)

என்னும் திருப்பாட்டின் பகுதிக்குப் பேராசிரியர் எழுதிய விசேடவுரையானும் உணர்க.

"சூடுவேன் பூங்கொன்றை" என்றது கற்பு மேம்பட்டு இருமைக்கும் ஒருவனாகிய தலைமகனை வழிபாடு செய்வதை. "கூடி மயங்கி நின்று ஊடுவேன்" என்றது, கலவியின்பத்தைப் புதுப்பிக்க வேண்டுமென அக்கலவி மயக்கத்தாற் செய்யும் புலவி நுணுக்கத்தை.

தேடுதல் - ஆராய்தல். "பேர்த்தும் மலர்தலா"வது, முன்னர்ப் பூங்கொன்றைத் தார் சூடிப் புணர்ந்து இன்புற்றவாறே பின்னரும் நுகர்ந்து இன்புறுதல்.

ஆடூஉவிற்கு மகடூஉவின் கொங்கைமேலும் மகடூஉவிற்கு ஆடூஉவின் தோள்மேலும் நோக்கம் பாயுமாதலின் "சிவன்தோள் கூடுவேன்" என்றாள். ஆதலின் அவன் தோளைத் "திரள்தோள்" எனப் பாராட்டினாள் என்க.

யான் களவின் திறம் நீங்கிக் கற்பின் திறம் பூணுவேன் என யாம் பாடுவோமாக என்று தோழிக்குக் கூறினாள் என்க.

கிளிவந்த மென்மொழியாய் கேழ்கிளரும் பாதியனை
வெளிவந்த மால்அயனும் காண்பரிய வித்தகனைத்
தெளிவந்த தேறலைச் சீர்ஆர் பெருந்துறையில்
எளிவந்து இருந்துஇரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் உள்ளத்தின் உள்ளே ஒளிதிகழ
அளிவந்த அந்தணனைப் பாடுதுங்காண் அம்மானாய். 18

(பொ - ரை.) கிளியை ஒத்த மெல்லிய மொழியைப் பேசும் தோழியே, தன்னிறம் பாதியாக, அம்மையின் நீல நிறம் விளங்கப்

பெறும் இடப்பாகத்தை உடையவனும், ஊழிக் காலத்தில் ஒடுங்கி யிருந்து பின்னர் வெளிப்பட்ட திருமாலும் நான்முகனும் (முறையே அடிமுடிகளைத் தேடியும்) காணற்கரிய ஞான ஒளி வடிவத்தானும், இல்லற இன்பமாகிய காம நறவின் மயக்கம் தீர்க்கும் அன்பின் ஐந் திணை இன்பமாகி அதன் தெளிவானவனும் ஆகிய மிக்க புகழ் நிரம்பிய திருப்பெருந்துறைக்கண்ணே எம்போன்றாரும் எளிதில் கண்டு பயன்பெற ஆசானாக வந்திருந்து என் நிலைக்கு இரக்கங் கொண்டு இன்னதெனக் கருதுதற்கும் அரிய அருளாகிய காரணத் தாலே செருக்கு ஓட்டெடுப்ப ஒளி வடிவினனாக என்னுள்ளத்தி னுள்ளே வந்து ஆங்கு அஃது ஒளிகொண்டு திகழ்தலைச் செய்ய அருள்புரிந்த அந்தணனைப் பாடுவோமாக அம்மானாய் (என்றாள்) எ - று.

(வி - ரை.) உலகியற் காமம் நீங்கத் தெய்வக் காம ஒளியாக என்னுள் வந்து அறியாமையாகிய இருள் நீங்கி என்னுள்ளம் ஒளி திகழ அருள புரிநத "அந்தணன்" என்க.

முன்னானை மூவர்க்கும் முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையில்
மன்னானை வானவனை மாதியலும் பாதியளைத்
தென்ஆனைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
என்னானை என்னப்பன் என்பார்கட்கு இன்னமுதை
அன்னானை அம்மானைப் பாடுதுங்காண் அம்மானாய். 19

இதுவும் அது.

(பொ - ரை) (தலைமகள் தோழியை நோக்கி) மூவராகிய (பெரிய) தேவர்க்கும் (மூலப் பொருளாக) முற்பட்டவனும், அம் மூவர் முதலாகிய எல்லாப் பொருளுமாய் அவ்வெல்லாப் பொரு ளுக்கும் பிற்பட்டவனும், தலைக்கோலம் என்னும் முடியை உடைய வனும், விரும்பத்தகும் திருப்பெருந்துறையில் (அந்தணனாக) நிலை பெற்றவனும், (தில்லைப் பொதுவின்கண்ணே கூத்தயரும்) தேவ னும், உமை அம்மை இயலுகின்ற பாதி உருவத்தானும், அழகிய திருவானைக்காவிலே உள்ளவனும், தெற்கின்கண்ணே நிலைபெற்ற பாண்டிநாடு ஆள்வோனும், எனக்குக் காதலனும், என் அப்பனே என்று அன்பூற அழைப்பவர்கட்கு இனிய அமுதத்தையே ஒத்த வனுமாகிய எனக்குத் தலைவனைப் பாடுவோமாக அம்மானாய் (என் றாள் (எ - று)

(வி - ரை.) "முன்னானை பின்னானை" என்றவதனால் அவற்றுக்கு இடைப்பட்ட காலத்திலும் உள்ளவன் என்பதும் அதனால் எப்போதும்

உள்ளவன் என்பதும் பெறப்பட்டன. இதனால் எல்லாம் தன்னுள்ளே ஒடுங்கவும் தான் பிறிதொன்றனுள் ஒடுங்கி விரியாது எப்போதும ஒரு பெற்றியனாக இருப்போன எனபது கூறியருளப்பட்டது அத்தகையவன் ஆதலால் அவனே முடியுடை வேந்தன் என்பது தோன்ற "பிஞ்ஞகன்" என்றும, அவனே அடியார்கள் வீட்டின்பம் பெறப் பெருந்துறையில் அவர்களைக் கலந்து மன்னினான் என்பத தோன்றப் "பேணு பெருந்துறையில் மன்னனை" என்றும், அவனே உயிர் உய்ய ஐந்தொழிற் கூத்து இயறறுவோன் என்பது தோன்ற "வானவன்" என்றும், அவனே அன்பின் ஐந்திணை நெறிக்கு முதலாகிய இல்லற நெறி பூண்டவன் எனபது தோன்ற "மாதியலும் பாதியன்" என்றும், அவனே முன்னர் உமையாள் பொருட்டு அன்பு நெறியை அறிவுறுத்திய திருவானைக்கா என்னும் தலத்தினன் என்பது தோன்றத் "தென்னானைக் காவானை" என்றும், அன்பு நெறி அருளிச் சிவலோகமாக்கிய தென்பாண்டி நாடுடையன் என்பதுபடத் "தென்பாண்டி நாடடானை" என்றும் கூறினார் என்க.

இறைவன் தென்திசை குற்றம்தீரப் பாண்டிநாட்டிலே களவியலாகிய தமிழ்மறையை அருளிச் செய்தான். இதனை,

"தென்மாத் திசை வசைதீர்தர" (திருக்கோ. 338.)

என்பது முதலிய திருப்பாக்களாலறிக

பெற்றி பிறர்க்குஅரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்
குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்வுஅறுப்பான் தொல்புகழே
பற்றிஇப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபேர் ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய். 20

இது, தன் அடியார்பால் குதிரையின்மேல் வந்தருளிக் குற்றம் நீக்கிக் குணங்கொண்டு தொடர்வறுப்பானாகிய அவன் பற்றிய பேரானந்தத்தைப் பற்றிப் பாடுவோம் எனத் தலைமகள் தோழிக்குக் கூறியது.

(பொ - ரை.) (தலைமகள் தோழியை நோக்கி) அன்பரல்லாத பிறர்க்கு இன்ன தன்மையன் என்று அறிந்துகொள்ளுதற்கரிய பெருமையுடையவனும், திருப்பெருந்துறையுடையவனும், வெற்றி பெறும் வழியிலே செல்லும் குதிரையின் மேல் எழுந்தருளி வந்து, தன்னடியவருடைய குணஞ் செயல்களிலுள்ள குற்றங்களையும் வலியறச் செய்து, அவர் தன் பொருட்டாகக் கொண்ட நற்குண நற்செயல்களைத் தான் ஏற்றுக்கொண்டு அவரைச சூழ்ந்துள்ள சுற்றமாம் தொடர்புகளாகிய குற்றங்களை மற்றவற்றால் அலைத்து நீக்கு

வோனும், நாம் அவன் பழைய புகழ்களைப் பாடுதலைப் பற்றிக் கொண்டு இப்பாசப்பற்று அறும் வண்ணம் பற்றுதற்குரியானு மாகிய அவன் பற்றிக்கொண்டுள்ள பேரானந்தத்தைப் பாடுவோம் அம்மானாய் என்றாள் (எ - று.)

(வி - ரை.) குற்றம் களைந்து குணம் பெய்து சுற்றிய சுற்றத் தொடர்வு கோதாட்டி அறுப்பவன் எனக. கோதாட்டி அறுத்தலாவது, குற்றத்தின்கண் வருந்தவைத்து அறுத்தல் என்க. சுற்றக் கோதாட்டி - சுற்றக் கோதால் அலைத்து ; அஃது இனஞதெனறு நீக்கச்செய்து.

பாசப் பற்றறுமாறு தொல்புகழ்பற்றி, ஆக்கம் பெறுமாறு நாம் பற்று வான் என்க. இருள்சேர் இருவினையும பொருள்சேர் புகழ்புரிந்து பற்றி ஞரைப் பறரு என்ப. எம்ஆக்கம் கருதி நாம் பற்றுவான் பற்றிய பேரா னந்தம் என்க. "பற்றுவான் பறறிய பேரானந்தம" என்றது, பறறற்ருன் பற்றினை என்க.

அவன் பிறர்க்கு அரியன். அவர் செய்ந்நன்றி அறியமாட்டாராய்ப் பெற்ற பொருளையெல்லாம நுகர்ந்து வரும பெற்றியராய் இருத்தலன்றி மனத்தால் அவனைச் சாரமாட்டாமையின்.

இனி, பெரியோனும், திருப்பெருந்துறையானும், நீக்குவோனுமாகிய இறைவனுடைய புகழைப் பறறுக் கோடாகப்பறறி இநத வினைக்கட்டற்றுப் போக நாம் பறறும் பொருட்டு நம்மைப பறறிய பேரின்பத்தினைப் பாடு வோம் என்றுரைத்தலும் அமையும்.

"பாசத்தை" என்றற்கண் அத்தும் ஐயும் சாரியைகள்.

திருச்சிற்றம்பலம்

# திருப்பொற்சுண்ணம்

"பொற்சுண்ணம்" என்பது தலைமகன் வரவை அவன் மஞ்சனம் ஆடுதற் பொருட்டு மஞ்சள் முதலாய முழுக்குப் பொடிக்குரியவற்றை உரலிலிட்டு, அவன்மேற் காதல்கொண்ட மகளி ரால் இடித்து ஆக்கப்படும் முழுக்குப்பொடி. ஈண்டு இறைவன் தலை மகன் ஆயினமையால் 'திரு' வென்னும் அடை புணர்க்கப்பட்டது. இது ஆகுபெயராய் அதனைப் பாடிய செய்யுட் பகுதிக்குப் பெய ராயிற்று. பொன் - பொலிவு.

இப்பாட்டானது வள்ளைப்பாட்டு, உரற்பாட்டு, உலக்கைப் பாட்டு, அவலிடி, அம்மனைவள்ளை எனவுங் கூறப்படும் இத் தகைய பாட்டுக்களையும், அவற்றியல்புகளையும் அடியார்க்கு நல்லார் (சிலப் 3 13 ) பல்வரிக்கூத்துள் அடக்குவர்.

இப்பகுதியில் இடிப்பவரும் அன்பினுக்குரியாரைத் தலைவ ராகக் கொண்டுவருதல் மரபாகும் மகளிர், அரசர்களையும் (சிலப். 29 ), தமையன்மாரையும் (பெருங் 2 · 14 50-52 ) காதலனையும் (கலித். 40-42 ) தலைவர்களாகக் கொண்டு பாடிப் பொற் சுண்ணம் இடியாநிற்பர்.

இனி, தலைமகள் ஆயத்தாரை நோக்கி, "மங்கையர்காள்! எங்கள் தலைவன் எம்மிடம் வருகின்ருனுதலின் அவன் திருமுழுக் காடப், பொற்சுண்ணம் இடிக்கவேண்டு மன்றே? ஆதலால் எல்லீரும் இங்கே வாருங்கோள்! வந்து பாடுங்கோள்! சிலர் புறத்தே நிற்கிருர்கள் போலும்; அவர்களையும் கூவுங்கோள்" என ஆரவாரம் செய்து, சுண்ணமிடிக்குமிடத்தை அணி செய்வித்து, பொற்பொடி சிந்தி, கற்பகம் நாட்டுவித்து, சுடர்வைத்து, கொடி எடுப்பித்து, உலக்கை உரல்களை அணிவித்து, தலைமகன் வந்த போது சத்தி முதலியோரைப் பல்லாண்டிசைக்கவும், சித்தி முதலி யோரைக் கவரியிரட்டவும் நியமித்து, அறுகெடுக்கும்படி விரையும் அயன் அரி இந்திராதி தேவர்களை விலக்கித் தாமே அதனை முதலிற் செய்யவேண்டுமென முடிவு செய்துகொண்டு, அவற்றின்மேல், தலைவன் இயல்பு, தம்மை ஆண்ட வகை, அவன் ஊர் முதலாய வற்றையும், அவன் பேர்களையும் பாடியவாறே அணிகள் ஆர வாரிக்க, அங்கங்கள் பூரிப்ப, "அவன் திருமுழுக்காடுமாறு பொற் சுண்ணமிடிப்போமாக" எனக் கூறினுள் என்ருங்கு, இப்பகுதியை இயற்கைப் பொருளடைவிற்கேற்பத் தொகுத்துரைக்க.

இப்பகுதியின் பொருட்பாகுபாடு வருமாறு :—சுண்ணம் இடித்

தற்குச் சார்பாக நின்றுரை இன்னது செய்கென ஏவி இடிப்போர் தமக்குள்ளே இயம்பிக்கொள்ளல் என்பது ஒருபாலும் இடிப்போர் சார்பாயினருடன் பேசாது தமக்குள்ளே பேசிக்கொள்ளுதல் மற்றொருபாலுமாகிய இவ்விருபால்களையும் இப்பகுதி கொண்டுள்ள தாகக் காணப்படுகின்றது.

இப்பகுதியின் உட்பிரிவுகளும் அவற்றின் வகைகளும் அடைவு கருதி இப்பகுதிக்கண் அமைந்த திருப்பாட்டுக்களின் மாற்றி யமைத்த எண்ணு நிலையும் திருப்பாட்டுக்களுக்கு இயல்பானே அமைந்த எண்ணு நிலையும் அன்னபிறவும் பின்னால் வரும் அட்ட வணையிற் காட்டப்பட்டுள :

| பகுதிகள் | அடைவு கருதி மாற்றியமைத்த பாக்களின் எண்ணு நிலை | உட்பகுதி எண் | இயல்பாயமைந்த எண்ணு நிலை | பொருள் |
|---|---|---|---|---|
| I (அ) | 1<br>2 | 1<br>2 | 2<br>3 | ஆளச் சுண்ணம் இடித்தல்.<br>ஏய்ந்த சுண்ணம் இடித்தல். |
| I (ஆ) | 3<br>4 | 1<br>2 | 4<br>6 | வாழ்த்திக் கோயில் பாடிப் பாசம் பறித்துப் பாடி இடித்தல்.<br>அவனைப்பாடிப்பாடி மகிழ்ந்து சுண்ணமிடித்தல். |
| I (இ) | 5<br>6<br>7 | 1<br>2<br>3 | 1<br>5<br>11 | அவற்கு ஆடச் சுண்ண மிடித்தல். |
| II (அ) | 8<br>9<br>10<br>11<br>12<br>13<br>14<br>15 | 1<br>2<br>3<br>4<br>5<br>6<br>7<br>8 | 15<br>12<br>16<br>13<br>14<br>17<br>19<br>18 | பாடிச் சுண்ணம் இடித்தல். |

| பகுதிகள் | அடைவு கருதி மாற்றியமைத்த பாக்களின் எண்ணு நிலை | உட்பகுதி எண் | இயல்பாயமைந்த எண்ணு நிலை | பொருள் |
|---|---|---|---|---|
| II (ஆ) | 16 | 1 | 9 | ஆடச் சுண்ணம் இடித்தல். |
| | 17 | 2 | 8 | |
| | 18 | 3 | 10 | |
| | 19 | 4 | 7 | |
| | 20 | 5 | 20 | |

I (அ-ஆ) உட்ப.

இப்பகுதியின் இரண்டாவது திருப்பாட்டில் செய்பொருளும் பயனுங் கூறப்பட்டமையால் அது முதலாவதாகவும் மூன்றாவது திருப்பாட்டிலே நீறணிந்து மெழுகுதல் முதலாயினவும் நான்காவது திருப்பாட்டிலே உலக்கையணிதல் முதலாயினவுங் கூறப் படுதலின் அவற்றை முறையே இரண்டாம் மூன்றும் எண்ணு நிலையவாகவுங் கொண்டாம் ஆறாவது திருப்பாட்டிலே அடியவரை வாழ்த்தியதால் உளதாய நெகிழ்ச்சி கிளக்கப்பட்டமையான் அது நான்காய் நிலைபெற்றது.

I (இ) உட்பகுதி :—

முதலாவது திருப்பாட்டிலே தாமம் முதலாயின தூக்கல் வேண்டுமென்பது கூறப்பட்டமையின் அஃது நான்காவது திருப் பாட்டாகக் கொள்ளற்கியைபுடைத்தேனும் 'ஆடிப் பாடல்' என்றலைப் பொருளாகக் கொண்டு முடிதல் கருதி ஐந்தாவதாகக் கொண்டனம்.

ஐந்தாவது திருப்பாட்டில் முழுக்காட்டுதற் கண் முதலாவதாகச் செய்யப்படும் அறுகெடுத்தல் கூறப்பட்டமையால் அஃது ஆறாவது எண்ணு நிலை பெற்றதாயிற்று.

பதினொராவது திருப்பாட்டில் பாடி அருள்பெற்ற பின்னர் நிகழும் நிகழ்ச்சிகளும் தம்மைச் சார்ந்தாரைப் பாடவும் ஆடவும் ஏவுதலுங் கூறப்பட்டமையால் அதனை ஏழாவதாகக் கொண்டாம்.

சுண்ணஞ்செய்ய உட்கொண்ட நோக்கங் கருதி அவற்றை முதலாவதாகவும் (I-அ) பாடுதலும் பாடி மகிழ்தலும் அந்நோக்கத் தால் எழுந்தனவும் சுண்ணம் இடித்தற்குத் துணைக் காரணங்கள் ஆதலின் அவற்றை இரண்டாவதாகவும் (I-ஆ) இங்ஙனம் இடிக்

கப்பட்ட சுண்ணம் இறைவன் ஆடுதற்குக் காரணமாக நிற்றலின் அன்னவற்றை மூன்றுவதாகவும (I-இ) அடைவுபடுத்தினும். இங்ஙனே இரண்டாம் உட்பகுதிக்கும் உரைத்துக்கொள்க.

II (அ) உட்பகுதி :—

பதினைந்தாவது திருப்பாட்டிலே அவ்வருளுடையானை வாழ்த்தல் வேண்டும் என வாழ்த்தியபின் அவனைப் பாடி இடித்தல் வேண்டுமெனப் புகுதலால் அதனையே இப்பகுதிக்கு முதலாவதாகக் கொண்டாம். பன்னிரண்டாந் திருப்பாட்டிலே பொற்சுண்ணம் இடித்தற்குக் காரணமாகப் 'பொய்யர்தம் பொய்யனை' என அவன் பிரிவு சுட்டப்படுதலால் அதனை இரண்டாவதாகக் கொண்டாம்.

பதினாறுவது திருப்பாட்டிலே அரிய திருவடியை எளிதாகச் சூட்டத் தந்த பெருமை தம் நினைவில் வர அவனைப் பாடுதலால் அதனை மூன்றுவதாகக் கொண்டாம் பதின்மூன்றுவது திருப்பாட்டிலே திருவடித் தொண்டின் பரிசும் திருவடியருளிய நன்றியும் தம் நினைவில் வந்து அவனைப் பாடினமையால் அதனை நான்காவதாகக் கொண்டாம்.

பதினான்காவது திருப்பாட்டில் அவனைப் பாடிய பாட்டு இன்பம் விளைத்துக் கொங்கையைப் பொங்கச்செய்தல் கூறியமையின் அது ஐந்தாம் எண்ணுநிலை பெற்றது

பதினேழாவது திருப்பாட்டில் இன்பந்தருங் கொன்றை முதலாயினவும் அவன் அருட்டிறங்களுங் கூறப்பட்டமையால் அதனை ஆறுவதாகக் கொண்டாம்

பத்தொன்பதாந் திருப்பாட்டில் தம்மை விடுத்துச் சென்ற தில்லை கூறி எல்லாவற்றையும் ஆளவல்லவன் என்பது பெற வைத்தமையால் அதனை ஏழாவதாகக் கொண்டாம்.

தம்மை ஆண்டுகொண்ட நயமும் அந்நயத்தைப் பாடுதலோடமையாது ஆடுதலை வேண்டினமையும் பதினெட்டாந் திருப்பாட்டாற் பெறப்படுதலின் அதனை எட்டாவதாகக் கொண்டாம்.

II (ஆ) உட்பகுதி :—

ஒன்பதாவது திருப்பாட்டிலே சுண்ணம் இடித்தலின் உண்மை புலப்படுத்தப்படுதலான் அதனை இப்பகுதிக்கு முதலாவதாகக் கொண்டாம்.

எட்டாவது திருப்பாட்டிலே வளையார்த்தல் முதலியனவும் ஆட்கொண்ட வண்ணமுங் கூறப்படுதலின் அதனை இரண்டாவதாகக் கொண்டாம்.

பத்தாந் திருப்பாட்டில் கொங்கையாடல் முதலிய உடல் நிகழ்ச்சிகள் கூறப்படுதலின் அதனை மூன்றாவதாகக் கொண்டாம்.

ஏழாவது திருப்பாட்டில் சுண்ணம் இடித்தலால் புகழும் இகழும் உளவேனும் எங்கள் பராபரன் அவன் ஆதலால் அவனுக்கு ஆட யாம் வழுவாது இடிப்பாம் எனக் கூறப்பட்டமையால் அதனை நான்காவதாகக் கொண்டாம்.

இருபதாவது திருப்பாட்டில் எல்லாம் அவன் ஆயினன் ஆதலால் யாமும் அங்ஙனே ஆகி அவற்குச் சுண்ணம் இடிப்போம் எனபது கூறப்பட்டமையால் அதனை ஐந்தாவதாகக் கொண்டாம்.

இப்பகுதியில் அமைந்த பாக்களின் இயல்பாகிய எண்ணுநிலை மாற்றமுங் காரணமும் வருமாறு —

பாடிச் சுண்ணமிடித்தல் ஆடச் சுண்ணமிடித்தல் ஆகிய இப் பகுதிக்குரிய பொருள்களும் பந்தரை அணிதல் மங்கலப் பொருள் வைத்தல் முதலிய சார்பாகிய பொதுப் பொருள்களும் பல்லாண் டிசைத்தல் முதலியவற்றைச் செய்யச் சத்தி முதலாய தெய்வத் தேவியரை ஏவிய சிறப்பும் பொருளடைவிலே ஐந்தாவதாக அமைந்த பாடலிற் காணப்படுதலின் அதனை அடிகள் முதலாவ தாகக் கொண்டருளினர். அதனுல் பொருளடைவில் முதலாவது இடம் பெறற்குரிய திருப்பாட்டு இரண்டாவதாகவும் களன் நீறணியப் பெறுதல் கூறுந் திருப்பாட்டு மூன்றாவதாகவும் உரல் உலக்கைகள் அணிசெய்யப் பெறுதல் கூறுந் திருப்பாட்டு நான்காவ தாகவும் அடிகளால் வைத்தருளப்பட்டன.

இறைவனை முழுக்காட்டுகையில் நெய் தோய்த்த அறுகினைச் சென்னியில் வைத்தற்கு அயன் அரி என்பவர்க்குப் பின்னர் யாம் எடுத்தல்லது இந்திரன் முதலியோரை விடேமெனா இடையிலே வஞ்சின மூண்ட அவ்வியைபு கருதி, பொருளடைவில் ஆறுவதிடம் பெற்றதனை ஈண்டு ஐந்தாவதாகக் கொண்டருளினர். இதனுல் முன்னர் நான்காவதாகக் கொள்ளற்பாலதாய திருப்பாட்டை ஆறுவதாக அமைத்தருளினர்.

சுண்ணமிடிக்கையில் நிகழும் ஆரவாரம் புலப்படுதலால் அவ்வியைபு கருதி, முன்னர்ப் பத்தொன்பதாவதாகக் கொள்ளற் பாலதனை ஈண்டு ஏழாவதாகக் கொண்டருளினர்.

அவ்வாரவாரத்தோடு சுண்ணமிடிக்கையில் இறைவன்மேற் காதலாற் கொங்கை பொங்குதல் முதலாயின நிகழும் அவ்வியைபு கருதிப் பதினேழாவதாகக் கொள்ளற்பாலதனை எட்டாவதாகக் கொண்டருளினர்.

யிடிப்பதனால் உளவாய காட்சிக்குப் பின்னர் அங்ஙனம் ப்பதனைத் தெய்வீகப் பாவனை செய்து கொண்டமை கருதி பதினொருவதாகக் கொள்ளவேண்டியதனை ஒன்பதாவதாகக் கொண் டருளினார்.

அங்ஙனம் பாவித்தமையாற் சித்தஞ் சிவனொடும் ஆடுதலும் அன்ன பிறவுங் கூறுந் திருப்பாட்டைப் பத்தாவதாகக் கொண் டருளினார்.

அங்ஙனம் பாடிப்பாடித் தாம் காதற்பித்துற்றவாறே பிறரையும் ஏவுதல் இயைபு கருதி ஏழாவதாகக் கொள்ளற்பாலதனைப் பதினொன் றுவதாகக் கொண்டருளினார்.

அங்ஙனம் பாடிக் காதல் கொள்ள ஏவிய அவர் தம்மை அகப்படுத்து ஆட்கொண்டு அருமை காட்டும் நிகழ்ச்சி கருதி ஒன்பதாவதாக அமைதற்பாலதைப் பன்னிரண்டாவதாகக் கொண் டருளினார்.

உமைக்குக் கேள்வனும் மகனும் தகப்பனும் தமையனும் ஆவது போலவே எமக்கும் ஆவான் என அவர் கருதிய இயைபு கருதிப் பதினொன்றுவதாகக் கொள்ளற்பாலதனைப் பதின்மூன்றுவ தாகக் கொண்டருளினார்.

அங்ஙனம் கருதியவர் சிவலோகம் பாடுதல் வேண்டுமென நினைந்த அதனால் அதனைப் பதினான்காவதாகவும் சிவலோகம் பாடிய அவர் அதனை நாத்தழும்பேற வாழ்த்தியது கருதி அதனைப் பதினைந்தாவதாகவும் அவன் ஆண்ட வண்ணமும் நாமங்களும் பாடியது குறித்து அதனைப் பதினாறுவதாகவும் கொன்றை மலர் முதலாய உறுப்புக்கள் பாடியதனைப் பதினேழாவ தாகவுங் கொண்டருளினார்.

அவனது வெற்றித் திறனும் அவன் தமக்கு அருளிய திறனும் கூறிய திருப்பாட்டைப் பதினெட்டாவதாகவும், தில்லைக்கட் சென்று தம்மைப் பிரிந்த திறன் கூறிய திருப்பாட்டைப் பத்தொன்பதாவ தாகவும், ஏனையதை இருபதாவதாகவும் கொண்டருளினார் என்க.

இப்பகுதியில் நாற்சீரின் மிக்கு அறுசீர்கள் பெற்று வெண்டளை தழுவி, நான்கடிகள் பெற்ற தரவு கொச்சகப் பாக்கள் பயின்று வந்தன.

இப்பகுதி திருத்தில்லையில் அருளிச் செய்ததென்ப

# ஆனந்த மாலை? ஆனந்த மனேலயம்

## அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

முத்துநற் ருமம்பூ மாலைதூக்கி
 முளைக்குடம் தூபம்நற் றீபம்வைம்மின்
சத்தியும் சோமியும் பார்மகளும்
 நாமக ளோடுபல் லாண்டு இசைமின்
சித்தியும் கௌரியும் பார்ப்பதியும்
 கங்கையும் வந்து கவரிகொண்மின்
அத்தன்ஐ யாறன்அம மானைப்பாடி
 ஆடறபொற் சுண்ணம் இடித்தும்நாமே. 1

தலைமகள், சுண்ணமிடித்தற்குச் சார்பாக நின்றுரை முத்துமாலை தூக்குதல் முதலாயினவற்றைச் செய்ம்மின் எனவும், சத்தி முதலாய தெய்வத் தேவிமாரைப் பல்லாண்டிசைமின் எனவும், சித்தி முதலாயினுரைக் கவரி இரட்டுமின் எனவும ஏவிச சுண்ணம் இடித்தற்குரியாரை'' நாம் சுண்ணம் இடிப்போமாக என்றது. [தோழி கொண்டு கூறினுளுமாம் ]

(பொ - ரை.) மங்கைமீர், முத்துமாலை பூமாலை என்னு மிவற்றைத் தூக்கவேண்டிய இடங்களில் தூக்கிப் பாலிகைக்குடம் நறுமபுகைக்கால் தீபக்கால் என்னுமிவற்றையும் வைக்கவேண்டிய இடங்களில் வைப்பீர்களாக. துர்க்கையும் திருமகளும் நிலமகளும் ஆகிய நீவிர் நாமகளுடன் கூடிப் பல்லாண்டு பாடுவீராக. சித்தியும் கௌரியும் உமையும ஆகிய நீவிர் கவரியிரட்டுவீராக. நாம், அத்தனும் திருவையாறனும் ஆகிய தலைவனைப் பாடி, அவன் திருமுழுக்காடப் பொன்வண்ணப் பொடி இடிப்போமாக எ - று.

(வி - ரை ) சோமி - சோமனுடன் பிறந்தவள்; திருமகள். சோமன் - திங்கள். திருமகள் நாமகள் எனபவரோடு உடன் எண்ணப்பட்ட சத்தி, துரக்கை எனப்படுவாள் என்க திருமகள் கூறப்பட்டமையால் அவளுடன் நிலமகளும் கூறப்பட்டாள. கௌரி பார்ப்பதி கஙகை என்னும் இவருடன் சத்தி என்பாளும் கூறப்பட்டமையால், சித்தி என்பாள், இறைவியின ஓர் உருவ வேறுபாடாவாள் என்பது பெறறும். முருகனையே அன்றிக் கணபதியை இத் திருவாசகத்தின்கண்ணும், திருக்கோவையாரின் கண்ணும் அடிகள் கூறிறறிலர். ஆதலாலும, ஈண்டமைந்த இயைபாலும், கணபதியின் சத்தியே சித்தி எனப்பட்டாள் என்றல் சாலாது.

பூ இயல் வார்சடை எம்பிராற்குப்
பொன்திருச் சுண்ணம் இடிக்கவேண்டும்
மாவின் வடுவகிர் அன்னகண்ணீர்
வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்
கூவுமின் தொண்டர் புறம் நி(ல்)லாமே
குனிமின் தொழுமினஎங் கோன்எங்கூத்தன்
தேவியும் தானும்வந்து எம்மைஆளச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்தும்நாமே 2

இது, தலைமகள், சார்பாக வந்து நின்றாரை ஆடலும் பாடலும் தொண்டரைக் கூவுதலும் செய்யுமாறு ஏவிச் சுண்ணம் இடித்தற் குரியாரை நாம் சுண்ணமிடிப்போமாக என்றது.

(பொ - ரை.) பிளந்த மாவடுவினைப்போன்ற கண்களை உடையீர், பொலிவுபெற்று இயலாநின்ற நீண்ட சடையையுடைய எம்பெருமான் திரு முழுக்காடத் திருப்பொற் சுண்ணம் இடித்தல் வேண்டும். ஆதலால் எல்லீரும் ஈண்டு வாருங்கோள்! வந்து எம்முடன் கூடிப் பாடுங்கோள்! தொண்டர்கள் புறத்தே நில்லாதவாறு அவர்கள் எல்லாரையும் கூப்பிடுங்கோள்! கூத்தாடுங்கோள்! வணங்குங்கோள்! எம் கூத்தாகிய தலைவன், தேவியும் தானுமாக வந்து எம்மை ஆட்கொள்ளும்படியாகச் செம் பொன்போல ஒளி செய்யும் முழுக்குப்பொடி இடிப்போமாக எ - று.

(வி - ரை.) சுண்ணமிடித்தற்கு உடன்பாடுதல், ஆடுதல், அடிய வரைக் கூவுதல் என்பனவெல்லாம இன்றியமையாதன என்பது பெற்றும்.

சுண்ணமிடித்தலால் வரும் பயன், இறைவன் தேவியும் தானுமாக வந்தாட்கொள்ளப்படுதலாம என்க.

இருவேறு தோற்றப் பொலிவினையுடைய ஒருருவத்து எம்மிறைவன் நிலை எல்லாவற்றையும் தன்னகத்து அடக்கிய தோன்றுகலால், அதனை விடுத்துத் தேவியும் தானுமாக இருவேறு வடிவுகொண்டு உலகத்திலே பயில்வது அன்பரை ஆட்கொள்ளற்பொருட்டு என்பதும், அதனுல் யாமும அவனை நுகர்தற்கு இடம் பெறறேம் என்பதும் தோன்றத் "தேவியும் தானும் வநது எமமை யாள" எனறனள்.

தொண்டர்களுட் பலர் சுண்ணமிடிக்குங் காலத்தை எதிர்நோக்கிப் புறத்தே நின்றனர். சுண்ணமிடிக்கத் தொடங்கியதும விரைந்து கூவுமின் என்றனர் என்க.

சுண்ணப் பொடிபூசித் தலைவன் திருமுழுக்காடியபின் செய்ய விருக்கும் பேரருளை எண்ணிக் கூத்தாடுக என்றபடி.

தாம் தொடங்கிய வினைமுட்டின்றி முடிதறபொருட்டுத் தொழுமின் என்றனர்.

சுந்தர நீறுஅணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பகம் நாட்டிஎங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடிஎடுமின்
அந்தரர் கோன்அயன் தன்பெருமான்
ஆழியான் நாதன்நல் வேலன்தாதை
எந்தரம் ஆள்உமை யாள்கொழுநற்கு
ஏய்ந்தபொற் சுண்ணம் இடித்தும்நாமே. 3

இது, தலைமகள், சார்பாயினாரை நோக்கிச் சுண்ணாம்பு பூசி மெழுகுதல் முதல் கொடியெடுத்தல் ஈருக வுள்ளனவற்றைச் செய்யுமாறு பணித்துச் சுண்ணமிடித்தற்குரியாரை நாம் சுண்ண மிடிப்போமாக என்றது.

(பொ - ரை ) (மங்கைமீர், நீவிர், சுண்ணம் இடிக்கும் இடத்தினைச்) சுண்ணச் சாந்து பூசி அணிசெய்து மெழுகிக் கலப்பற்ற பொற்பொடியைச் சிந்தி முத்து முதலாய பொருள் திரளைப் பரவ வைத்து இந்திரனுக்குரிய கற்பகதருவைக் கொண்டுவந்து நாட்டி எவ்விடங்களிலும் எழுச்சி பெற்ற விளக்குகளை ஏற்றி வைத்துக் கொடிகளையும் மேலே தூக்கி எடுப்புங்கோள் வானவர் வேந்தனும், நான்முகன் பாராட்டும் பெருமையுடையவனும், சக்கரப்படையுடையானுக்குத் தலைவனும், நன்மை சான்ற வேலைக் கையிலேந்தியவனாகிய முருகனுக்குத் தந்தையும் ஆகிய, எம்போலியரையும் ஆட்கொள்ளும் உமையவள் கணவனுக்கு இயைபுடைத்தாகிய பொன் ஒளி வீசும் பொடியை நாம் இடிப்போமாக எ - று.

(வி - ரை.) "அந்தரர்கோன்," இந்திரன் எனப் பொருள் கொள்வாரும் உளர். அங்ஙனமாயின், 'அந்தரர்கோன் அயன்தம் பெருமான்' என்றிருத்தல் வேண்டுமாகலானும், அந்தரர்கோன்தன் பெருமான், அயன்தன் பெருமான் என நலிந்து முடித்தல் வேண்டுமாகலானும் அங்ஙனம் கொள்ளாமாயினம்.

அந்தரர் கோன்முதல் உமையாள் கொழுநன் ஈருக எண்ணப்பட்ட அவனது பல்வேறு வகைப்பட்ட கொள்கைகளுக்குரிய தலைமைகளுள், எமக்குரியது உமையாள் கொழுநனாய் இருக்கும் தலைமையே என்பாள் "எந்தரமாள் உமையாள் கொழுநற்கு" என்றாள். மேலும், "நல்வேலன் தாதை உமையாள் கொழுநன்" என அடுத்து மொழிந்தவாற்றானே முன்னர்க் கீர்த்திக்கண் உரைக்கப்பட்ட ஆகம வரலாறும், இறைவி வலைஞன் மகளாயதும இறைவன் வலைஞகுமாரனாய் அவளைக் களவினும் கற்பினும் கூடியதும் ஆகிய வரலாறுகள் உணரப்படும். அன்றியும் வேலன் வள்ளி

யைக் கூடிய அன்புநெறிகொண்டு அவன் தந்தை விசேடிக்கப்பட்டது முணர்க. அத்தைகய ஐந்திணை அன்பின் நெறியிலேயே யாங்களும் ஆளப்பட்டோம என்பது தோன்ற “ ஏநதரமாள் உமையாள் கொழுநன் ” என்றது கொள்க.

இந்நெறி கைவருதற்கு உற்றதுணையாய் இருந்த அறிவு நெறியை மற்றிதன் முன்னதாக அயன் திருமால் என்போர் தம்மேல் வைத்து “ அயன்தன் பெருமான், ஆழியான் நாதன் ” என மொழிந்தாள். இதனைப் போற்றித் திருவகவல் தொடக்கத்தினும் ஓராற்றற் கூறினும். அதனையும நோக்குக. இனி, இவ்விருவருள்ளும் அறிவுச் செவ்வியில் ஆழியான் முதிர்ந்தான் ஆகலானும, அவ்வறிவினுல்மட்டும் பயனில்லை என்பதை உணர்ந்து அன்புணர்வுட் புகுதற்குரிய நிமித்தங்களோடும் புணர்ந்திருந்தான் ஆகலானும், ‘ அயன் ஆழியான் நாதன் ’ எனப் புணர்த்தோதாது “ அயன் தன்பெருமான் ஆழியான நாதன் ” எனப் பிரித்தும் ஆழியானை இறுதியில் வைத்தும் கூறினுள் என்க.

அன்பு நெறிக்கு நிமித்தமாகிய அறிவு நெறிக்கு நிமித்தமாய் நிற்கும் நல்வினைத் தொடர்புடைய தேவர்களை அவற்றிற்கு முதலில் மொழிந்தாள் என்க.

எனவே, நல்வினைப் பயிற்சியால் அறிவுண்டாகும்; அதுகொண்டு மேன்மேலும் ஆராய்தலினுல் அஃது எல்லையற்று விரிவடையும் ; அங்ஙனம் விரிவடைய ஆற்றுமை தோன்றும்; அதனுல் அன்பு உணர்ச்சியை ஆற்றுவ தொன்ருகப் பற்றும் என, அன்பின் வரலாற்றைத் தொகுத்துணர்க. விரித்துரைப்பிற் பெருகு மென்க.

இதனுல் எவ்வெவருடைய எவ்வெச்செவ்விக் கண்ணும் இறைவன் தலைவனுயிருந்து அவ்வவர்களை அவ்வச் செவ்விகளினின்றும் படிப்படியாக மேலேற்றி வருகின்ருன் என்பது முணர்ந்து கொள்க.

நீறு, திருநீறு என்பாரும் உளர். அது கருத்தாயின் தோய்ந்து நீறணிந்து என்றுரைத் திருப்பாரென்க.

**காசுஅணி மின்கள் உலக்கைஎல்லாம்**
**காம்புஅணி மின்கள் கறைஉரலை**
**நேசம் உடைய அடியவர்கள்**
**நின்று நிலாவுக என்றுவாழ்த்தித்**
**தேசம் எலாம்புகழ்ந்து ஆடுங்கச்சித்**
**திருஏகம் பன்செம்பொற் கோயில்பாடிப்**
**பாச வினையைப் பறித்துநின்று**
**பாடிப் பொற்சுண்ணம் இடித்தும்நாமே. 4**

இது, தலைமகள், சார்பாக நின்ருரை நோக்கி, நீயிர் உலக்கை உரல்களை அணிசெய்ம்மின் , நாம் சுண்ணமிடிப்போமாக என்றது.

(பொ - ரை ) மங்கைமீர், (நீவிர்,) உலக்கை எல்லாவற்றுக்கும் பொன் மணி முதலாயவற்றைக் கொண்டு அணி செய்ம்மின்கள்; இரத்த நிறம் பொருந்திய உரலை (இலை பூ என்பவற்றின்) காம்பை ஒப்பச சித்திரிக்கப்பட்ட பட்டாடையைச் சுற்றி அணி செய்ம்மின் கள். நாம இறைவன்பால் அன்புடைய அடியவர்கள் எப்போதும் நிலைபெற்று வாழ்வாராக என அவரை வாழ்த்தி, நாடெல்லாம் புகழ்ந்து உரையாடும் காஞ்சிமா நகரிலுள்ள ஏகம்பநாதனுடைய திருக்கோயிலைப் பாடி, வினைக்கட்டை அறுத்து நின்று பாடித் திருப் பொற்சுண்ணமிடிப்போமாக எ - று.

(வி - ரை ) காசு - பொற் காசுமாம். காம்பு - இலை பூ முதலிய வற்றின சித்திரம் தீட்டிய பட்டுச்சீலை. கறை - இரத்த நிறம். கறை நிறக் காவியால் அணி செய்யபபட்ட உரல் என்க

இறைவன் தேவியும் தானுமாக இவவுலகத்து வந்து நிலைபெறுவது, நேசம் உடைய அடியவர்கள இவ்வுலகத்து உண்மையானன்றே? அவர்க்கு அருள் செய்யவரும் இறைவன் எமபோலியர்க்கும் அருள்புரிவான்; 'நெல்லுக்கிறைத்த நீர் புல்லுக்கும் பொசிதல்' போல. ஆதலின் நேச முடைய அடியவர்கள் நின்று நிலாவுக என்று வாழ்த்தியவாறு.

இறைவன் தன் இடப்பாகத்தைப் பின்னரும் பெறுமாறு உமைக்கு அருளிய இடம் கச்சி ஆதலால், அங்ஙனமே பிரிந்த தம்மையும் பின்னர் வந்து புணர்ந்து இன்புறுத்துவன் என்பது ஒருதலை என்று உன்னித் "திரு வேகமபன் செம்பொற் கோயில்பாடி" என்றனள்.

திருவேகம்பன் செம்பொறகோயில் பாடவே வினைப்பாசம் அற்றுப் போகும் ஆதலால் "பறித்து" என்றதனைச் செயவென்னெச்சமாகத் திரித்தல் வேண்டா வென்க

பாசவினையைப் பறித்தாங்கே இன்பமடைதல் ஒருதலையாகலின், அவ் வின்பத்தில் நிலைபெற்று வெற்றியைப் பாடி என விரிக்க.

காஞ்சிமாநகரத்திலே இறைவியை இடப்பாகத்திலே ஏற்றுக்கொண்டு இயல்பாக வீற்றிருநதனன் என்பது கீர்த்தித் திருவகவலுள்ளும் போற் றித் திருவகவலுள்ளும் கூறப்பட்டது. இப்பகுதிக்கண் ஐயாறு, திருப் பெருந்துறை, தில்லை, அதன்கண் அம்பலம முதலியவற்றுள்ளே கச்சிக் கோயிலும் தில்லையும் பின்னும் கூறப்பட்டனவேனும் தில்லையே வீடுபேறு பெறுங்காறும் பாடப்படுவதொன்றாகலானும் தில்லைக்கண்ணே அடிகள் சென்றதும் இறைவன் அருள்பெற்று இரண்டறக் கலந்தனர் ஆதலானும் "நம்மை அகப்படுத்து அருமை காட்டும பொய்யர்தம் பொய்யனை" எனக் கூறி யருளியமையானும் "எஙகூத்தன் தேவியுந் தானும் வந்து எம்மை யாள" எனப் பின்னும் பாகத்தைத் தேவிக்களித்தவனே எமமை ஆட்கொள் ளச் சுண்ணம் இடிப்போம் என நுதலிப் புகுதலானும் அன்ன பிறவற்றானும் திருக்காஞ்சிச் செம்பொற் கோயிலிலே தான் இப்பகுதி பாடியருளப்பட்டது

போலும் என நினைத்தற்கும் இடனுண்டு. அருமை காட்டுதல் முதலியன இறைவன் முன்னர்த் தமக்குச் செயதவற்றைக் கொண்டு கூறினராகலின் தில்லையிலருளப்பட்ட தெனபார் கூற்றும் ஒதுக்குமாறில்லை. ஆகலின் கச்சியிலா தில்லையிலா அருளப்பட்டதென்பது நன்கு புலப்படவில்லை.

அறுகுஎடுப் பார்அய னும்அரியும்
அன்றிமற்று இந்திர னோடுஅமரர்
நறுமுறு தேவர் கணங்கள் எல்லாம்
நம்மிற்பின்பு அல்லது எடுக்கஒட்டோம்
செறிவுஉடை மும்மதில் எய்தவில்லி
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடி
முறுவல்செவ் வாயினீர் முக்கண்அப்பற்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும்நாமே 5

இது, தலைமகள், மங்கைமீர், தலைவன் திருமுழுக்காடுதற்கு அவன் திருமுடிமேல் நெய் தோய்ந்த அறுகினை எடுத்து வைத்தற்கு, அரி பிரமேந்திராதி தேவர்கள் முற்படுவர் அவர் அங்ஙனம் முற்படினும், நமக்குப் பின்னரே அவர்கள் எடுக்குமாறு நாம் முற்படுவோம் என, பின்னர் நடந்து கொள்ளவேண்டிய முறைகளை முன்னரே அறிவுறுத்திவிட்டு, இப்போது சுண்ணமிடிப்போமாக என்றது.

(பொ - ரை.) நகை பொருந்திய செவ்வாயினையுடைய தோழிமீர், நான்முகனும் திருமாலும் அறுகு எடுத்தற்கு முற்படுவர். முணு முணுத்துக்கொண்டு நிற்கும் இந்திரனுடன் ஏனைய தேவர்களும் ஆகிய எல்லாரும் நமக்குப் பின்னரே அன்றி முன்னர் அங்ஙனம் எடுக்கவொட்டோம் (அது நிற்க, நாம் இப்போது) செறிவுடைய அவுணர்தம் மூன்று மதில்களையும் எய்து அழித்த அம்பினை ஏவிய வில்லையுடையானாகிய திரு ஏகம்பநாதனுடைய செம்பொன்னாலாகிய கோயிலைப் பாடி, மூன்று கண்களையுடைய அப்பனுக்குத் திருமுழுக்காடற்குரிய திருப்பொற்சுண்ணத்தை இடிப்போமாக எ - று.

(வி - ரை.) மங்கல முழுக்காடற்குரியார் சென்னியிலே, முதற்கண் அறுகம்புல்லை நெய்யிலே தோய்த்து ஆடவைத்தல் மரபு என்பதை,

"நாழியுள்இழுது நாகுஆன் கன்றுதின்று ஒழிந்தபுல் தோய்த்து
ஊழிதொறு ஆவும் தோழும் போன்றுஉடன் மூக்க என்று
தாழ்இருங் குழலி னாளை நெய்தலைப் பெய்து வாழ்த்தி
மூழைநீர் சொரிந்து மொய்கொள் ஆய்ச்சியர் ஆட்டி னாரே."
(சீவக சிந். 487.)

என்பதனானும் அறிந்துகொள்ளலாம். இக்காலத்துச் சில இடங்களில்

அறுகைப் பாலில் தோய்த்துச் சென்னியில் வைப்பர். இங்ஙனம் அறுகு எடுத்தலில் சில நுட்பங்கள பண்டும் இன்றும் நடைமுறையில் உள்ளன. அதனுள் முதன்மை பெறப் பலரும் விழைவர். இம் முதன்மையினாலே சிலருக்கிடையில் மனவேறுபாடு ஏற்படுதலும் உண்டு. இங்ஙனம் முதன்மை பெறுமாறு அயனும் அரியும் என்பார் அறுகு எடுக்க முற்படுவார்கள் என்க. அதனைக் கண்டு மனம் புழுக்கமெய்திய இந்திராதி தேவர்கள் முணுமுணுப்பர் என்க. இந்திராதி தேவர்களினும் அயன் அரி என்பார் முதன்மை பெறற்குரியாராகலின் "அன்றிமற்று" என இடையிற் பிரித்தார் என்க. இனி,

"அயனும் அரியும் அன்றிமற் றிந்திர னோடமரர்
நறுமுறு தேவர் கணங்க ளெல்லாம் அறுகெடுப்பார்"

எனக் கொண்டு உரைப்பினும் அமையும். அங்ஙனம் கொள்ளின் "நறுமுறு" என்னும் அடையை அரி அயன் முதலிய யாவர்க்கும் இயைத்து, 'நாமே முதலில், நாமே முதலில்' என, யாவரும் தம்முள் முணுமுணுப்பார் எனப் பொருள் கொள்க.

அரி அயன் என்போர் முற்படினும், தேவகணங்கள் நறுமுறுப்பினும் நம்மிற் பின்பு அல்லது முன்பு எடுக்கவொட்டோம் எனத் தலைமகளும், தோழியரும் தம்முள் நிச்சயம் செய்துகொண்டனர் என்க. பின்வரும் நடைமுறைகளை முன்னரே கூடி இங்ஙனம் முடிவு செய்தல் மரபாகும்.

இதன்மேல் சுண்ணம் இடித்தற்குரியாரைத் தலைவி ஊக்குகின்றாளாதலின், 'அது நிற்க நாம் இப்போது' என்பவற்றைப் பெய்துரைக்க.

"மும்மதில்" என்றது, மும்மல காரியத்தை என்க. செறிவுடை மும்மதில் எய்து வீடு திரும்பியுள்ளானுக்கு முழுக்காடற்கு அறுகெடுத்தற்குரியார், சுற்றமாயுள்ள மும்மலகாரியங் கெடுத்தாரேயாகலின், அவ்வுரிமையுடையார் தாமே என்பதும், வானவர் அங்ஙனமிலராகலின், அவர் உரிமையுடையாரல்லர் என்பதும் தோன்றச் "செறிவுடை மும்மதில் எய்த வில்லி" என்றும், மேலே தாம் இருந்து ஆட்சி செய்தற்குரிய தலைவன் மனையாகலின் "திருவேகம்பன் செம்பொற் கோயில்பாடி" என்றும், உலகம் இருள் மூடிற்றாகப் பண்டு ஒளி கொடுத்தாங்கு எங்கள் மலகாரியங்களின் மறைப்பு நீங்க ஒளி கொடுத்தான்; இனிமேல் அவை நம்மைப் பற்றா என்பது தோன்ற "முக்கண் அப்பன்" என்றும் கூறினார்.

இறைவறகுச் சுண்ணமிடிக்கும் உவகையால் மங்கையர் கலந்துரையாடி இடிக்கும்போது ஒருவரையொருவர் ஏளனம் செய்தல் முதலியவற்றாற் போந்த நகையுடையாராகக் காணப்பட்டமையின் செவ்வாயினீர்" என்றார் என்க.

"விரிபுனல் வேலை நான்கும் வேதங்கள் நான்கும் ஆர்ப்பத்
திரிபுவ னங்கள் வாழத்தத் திருஅபிடேகம் செய்தே"

(கலிங். 263.)

" அறைகழல் அரசர் அப்பொழுது அடிமிசை அறுசூட னடுத்திட
மறையவர முடிஎடுத்தனர் மனுநெறிதலை எடுக்கவே "
(கலிங். 264.)

(திரு அபிடேகஞ் செய்யப்பட்டவுடன் விஜயதரனுடைய திருவடியிலே வேந்தர் யாவரும் அறுகெடுத்திட்டனர்) என்றுங்குக் கூறுதலினாலே, அம் மரபு பற்றி அறுகெடுப்பார் என்புழிக் கூறலும் அமையுமென்க.

உலக்கை பலஓச்சு வார்பெரியர்
உலகம் எலாம்உரல் போதாதுஎன்றே
கலக்க அடியவர் வந்துநின்றார்
காண உலகங்கள் போதாது என்றே
நலக்க அடியோமை ஆண்டுகொண்டு
நாள்மலர்ப் பாதங்கள் சூடத்தந்த
மலைக்கு மருகனைப் பாடிப்பாடி
மகிழ்ந்துபொற் சுண்ணம் இடித்தும்நாமே. 6

இது, தலைமகள், இடிப்பாரை நோக்கி, இடித்தற்குரியாரும், நம் இடித்தல் விழவிலே பங்குபற்றும் காட்சியாளருமாக அடியவர் பலரும் வந்து நின்றார்கள் ஆதலால், நாம் மகிழ்ந்து பொற்சுண்ண மிடிப்போமாக என்றது.

(பொ - ரை.) உலகம் முழுதும் உரலாக அமையினும் இடித் தற்கு அவ்வுரல் இடம் போதாது என்று சொல்லிப் பலவகைப்பட்ட உலக்கைகளையும் கைக்கொண்டு பெரியார்கள் ஓங்கி இடிக்கின்ற வர்களாயினர். இவ்விடித்தல் காட்சியை நின்று காண்பதற்கு இவ் வுலகங்கள் இடம்போதா என்று சொல்லி அடியவர் கலந்து கொள்ளற்கு வந்து நின்றார்கள். ஆதலால், நன்மையடைய அடியேங்களை ஆட்கொண்டு அன்றலர்ந்த மலர்போன்ற திருவடி களைச் சென்னியிலே சூடும்படி தந்த மலையரசனுக்கு மருகனாகிய இறைவனைப் பாடி மகிழ்வுற்றுப் பொற்சுண்ண மிடிப்போமாக எ - று.

(வி - ரை.) "உலகங்கள்" என்றது ாண்டு அண்டங்களை என்க எல்லா அண்டங்களையும் உரல்களாகக் கொண்ட காலையும், அவ்வளவும் போதா என்று சொல்லிக்கொண்டு, இடித்தற்குரியார் பல உலக்கைகளைக் கொண்டுவந்து நின்றார் என்க. காணுதற்கென வந்த அடியவர்கள் நின்று காண்பதற்கு, உலகங்கள் இடம்போதா என்று சொல்லிக்கொண்டு வந்து நின்றார்கள். இவற்றால் இடித்தற் பொருட்டும், இடித்தலைக் காணற் பொருட்டும் வந்தோர் அளவிறந்தவராவர் என்பது உணர்த்தப்பட்டது. ஓச்சுதல் - ஓங்கியிடித்தல்.

இடிப்போர் பலரும் காண்போர் பலரும் போந்தமையால் மகிழ்ச்சி என்க. மலை, ஆகுபெயர். ய

சூடகம் தோள்வளை ஆர்ப்பஆர்ப்பத்
தொண்டர் குழாம்எழுந்து ஆர்ப்பஆர்ப்ப
நாடவர் நம்தம்மை ஆர்ப்பஆர்ப்ப
நாமும் அவர்தம்மை ஆர்ப்பஆர்ப்ப
பாடக மெல்லடி ஆர்க்கும்மங்கை
பங்கினன் எங்கள் பராபரனுக்கு
ஆடக மால்வரை அன்னகோவுக்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும்நாமே

தலைமகள், சுண்ணமிடிப்பாரை நோக்கி நாம் பலவகையான ஆரவாரங்களோடும் சுண்ணமிடிப் போமாக என்றது.

(பொ - ரை.) கைவளைகளும் தோள் வளைகளும் ஒலிசெய்யா நிற்ப, ஒலிசெய்யா நிற்ப, அன்பர் கூட்டங்கள் எழுந்து ஆரவாரிக்க, ஆரவாரிக்க, பங்குபற்றுதலில்லாத நாட்டவர்கள் நம்மை நகையாநிற்ப, நகையாநிற்ப, நாங்களும் அவர்களை நகையாநிற்ப, நகையாநிற்ப, ஒலித்தலைச் செய்யும் பாடகம் எனப் பெயரிய அணிகளை அணிந்த திருவடிகளையுடைய உமை மங்கையை இடது பாகத்திலே கொண்டவனும், எங்களுக்கென அமைந்த மேலான கடவுளர்க்கும் மேலானவனுமாகிய பொன் மலையை ஒத்த மன்னவனுக்குத் திரு முழுக்காடப் பொன்வண்ணஞ் சான்ற முழுக்குப் பொடியை இடிப்போமாக எ-று.

(வி - ரை.) சூடகம் - கைவளை. தொண்டர் - காட்சியாளர். நாட்டவர் - உலகிலேயே அழுந்திய பற்றுடைய நாட்டு மாக்களுமாம். அதாவது அகத்தமிழ் நெறியை இகழும் வேறு கொள்கையுடையவர் என்றவாறென்க. நாம் - வீட்டிலேயே பற்றுக்கொண்டோமாகிய நாம். எம்மியல்பினை அறியாதே அவர் நகையாநிற்ப என்க. அவர் இயல்பினுள்ளே எம் நெறி இயல்பு கலந்திருப்பவும், அதனை ஓராதே தம்மைத் தாம் இகழ்தலின், அவர்தம் இயல்பு கருதி யாமும் நகையாநிற்ப என்க.

"ஆர்க்கும் பாடக மெல்லடி மங்கை" என்றமையால், அர்த்த நாரீஸ்வரமாகாது இடப்பாகத்தில் உடன்வீற்றிருக்கச் செய்துகொண்டான் என்பது பெற்றும்.

இறைவன் தேவியுந் தானுமாக எம்மை ஆள வருகின்றுனதலின் அவனுக்கு ஆட என்பது கருத்தாகக் கொள்க. "பராபரன்" என்பதற்குப் பரம் அபரம் ஆகிய இரண்டினுக்கும் இறைவன், முதல்வன் எனவும் பொருள் கொளலாம். நாடவர்க்கு அன்பரும் அன்பர்க்கு நாடவரும்

பித்தராகக் காணப்பட்டனர், அவ்விரு பகுதியாரும் இரு வேறு நெறியின ராதலின்.

வாள்தடங் கண்மட மங்கைநல்லீர்
வரிவளை ஆர்ப்ப வண் கொங்கைபொங்கத்
தோள்திரு முண்டம் துதைந்துஇலங்கச்
சோத்துஎம் பிரான்என்று சொல்லிச்சொல்லி
நாள்கொண்ட நாள்மலர்ப் பாதங்காட்டி
நாயிற் கடைப்பட்ட நம்மைஇம்மை
ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும்நாமே. 8

இது, தலைமகள், இறைவன் நம்மையாட்கொண்ட வகையினைப் பாடிப் பொற்சுண்ணம் இடிப்போமாக என்றது

(பொ - ரை ) வாளையொத்து அகன்று நீண்ட கண்களை யுடைய நலன் அமைந்த மங்கைமீர், வரிகளையுடைய கைவளை யல்கள் ஒலிக்கவும், வளவிய கொங்கைகள் காதல் மிக்குப் பொங்கு தலைக் கொள்ளவும், தோள்களிலே தீட்டிய திருநீறு படிந்து விளங் கவும், எம்பிரானுக்கு வணக்கம் என்று ஓயாது சொல்லி, நமக்கு நல்ல நாளிலே பூத்த அன்றலர்ந்த பூப்போன்ற திருவடிகளைக் காட்டி, நாயினும் கடைப்பட்ட நம்மை இம்மையிலே அடிமையாகக் கொண்ட இயல்புகளை இடையீடுபடாது பாடி எம்பிரான் திருமுழுக் காடப் பொற்சுண்ணம் இடிப்போமாக எ - று.

(வி - ரை.) வாள் - ஒளியுமாம். முண்டம் - திரிபுண்டரம். துதைதல் - படிதல். சோத்து - வணக்கம், இழிநதோர் உயர்ந்தோர்க்குச் செய்யும் வணக்கம். நாள் - மங்கலம் பொருந்திய நல்ல நாள். நாள்மலர் - அன் றலர்ந்த மலர், என்றது புதிதாக மலர்ந்திருத்தலை.

"நாள் அல்லா நாட்பூத்த நன்மலரும் போலுமே"

என்னும் ஔவை பாடலானும் நாள்மலர் இன்னதென விளங்குதல் கூடும். இனி, நாளல்லா நாட்களிலே மலர்கள் மலரப்படா என்பதனை,

"இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாடினி அணியாள்
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே" (புறநா. 242.)

என்பதனானும் உணர்க.

"ஆட்கொண்ட வண்ணங்கள்" என்றது, பொய்யாய உலகிலே பொய்யாயினவற்றையே மெய்யென விரும்பி அவற்றுட் புக்கு அழுந்திக் கிடக்கவும், இவன் அத்தகையன் என இகழாது வலியவந்து ஆட்கொண்டு பின்னும் பிழை பொறுத்துப் பாடுவித்துச் செய்யும் பணிகளை ஏற்றுக் கொண்டு தம் மனத்தினைத் தன்வழிப்படுத்தியதன்மேல் அருமை காட்டி வருதல் முதலாயவற்றை என்க.

இங்ஙனம் ஆட்கொண்ட வண்ணங்களைப் பாடும் வழி ஏற்புடைய இடங்கள் தோறும் 'சோத்தெம்பிரான்' என்பதையும் சொல்லி என்க.

"முண்டம்" என்பதற்கு நெற்றி எனப் பொருள் கொள்வாரும் உளர். அவர் நெற்றிக்குமட்டுந் திருமுண்டம் எனச் சிறப்பித்தல் பொருந்தா தென்பதனை உணராராவர். அடிகட்கு அது கருத்தாயின் 'தோட்பிறை முண்டம்' என உவமமுங் கூட்டி விளங்க அருளிச் செய்வார்மன்?

வையகம் எல்லாம் உரலதாக
மாமேரு என்னும் உலக்கைநாட்டி
மெய்யெனும் மஞ்சள் நிறைய அட்டி
மேதகு தென்னன் பெருந்துறையான்
செய்ய திருவடி பாடிப்பாடிச்
செம்பொன் உலக்கை வலக்கைபற்றி
ஐயன் அணிதில்லை வாணனுக்கே
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும்நாமே 9

இது, தலைமகள், சுண்ணமிடிப்பார்க்கு வேண்டிய பாவனை கூறியது

(பொ-ரை.) அவ்வுரல் நிலவுலகம் முற்றுமாக, அந்நிலத்திலே நடுவில் ஆதாரமாக அமைந்த மகாமேருமலையென்னும் அவ்வுலக் கையை, உள்ளத்திலே நிலைநாட்டி, மெய்யென்னும் மஞ்சளை உரலகத்திட்டு, மேன்மை தக்க தென்னாடுடையானாகிய பெருந்துறை யானது செவ்விய திருவடியைப் பாடியவாறே செம்பொன் மயமான உலக்கையை வலக்கையினாலே பிடித்துத் தலைவனாகிய அணி யமைந்த தில்லையிலே வாழ்ந்து வருவோனுக்குத் திருமுழுக்காடப் பொற்சுண்ணம் இடிப்போமாக எ-று.

(வி-ரை.) முற்கூறிய கறையுரலை வையகமுற்றுமாகவும், உலக் கையை மேருவாகவும், மஞ்சளை மெய்யாகவும் பாவனை பண்ணவேண்டு மென்றபடி. ஈண்டு இடிக்கப்படும் பொருள்களுள்ளே மங்கலம் பற்றி மஞ்சள் ஒன்றே கூறப்பட்டதாயினும், மஞ்சளை முதலாகக் கொண்ட இடிக்கப்படும் பொருள்களை எல்லாம் கொள்க.

"மெய்யெனும் மஞ்சள்" என்றமையால் அன்பு நெய்யாகவும் அறம் நீராகவும் அன்ன பிறவாருகவுங் கொள்ளப்படும். "ஆண்டு கொண்டவன்" என்பது தோன்ற "ஐயன்" என்றும் அதன்மேல் 'தில்லைக்கு வா' வெனக் கட்டளையிட்டவன் என்பது தோன்ற "தில்லைவாணன்" என்றும் அருளிச் செய்தார். திருப்பெருந்துறையிலே தன்பாற் கொள்ளப்பட்ட நலனைக் கொடுத்தற்குரிய இடம் தில்லை ஆதலால் "அணிதில்லை"யெனச் சிறப்பிக் கப்பட்டது.

முத்தணி கொங்கைகள் ஆடஆட
மொய்குழல் வண்டினம் ஆடஆடச்
சித்தம் சிவனொடும் ஆடஆடச்
செங்கயற் கண்பனி ஆடஆடப்
பித்துஎம் பிரானொடும் ஆடஆடப்
பிறவி பிறரொடும் ஆடஆட
அத்தன் கருணையொடு ஆடஆட
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே

இது, தலைமகள், இன்னவெல்லாம் ஆட யாம் பொற்சுண்ணம் இடிப்போமாக என்றது

(பொ - ரை) முத்துமாலை யணிந்த கொங்கைகள் ஆடஆட, மொய்குழற்கண் உள்ள வண்டுக்கூட்டங்கள் உலவாநிற்ப உலவா நிற்ப, மனம் சிவபிரானை நுகராநிற்ப நுகராநிற்ப, செங்கயல் போன்ற கண்களிலிருந்து நீர்த்துளி துளியாநிற்பத் துளியா நிற்ப, எங்காதல் மயக்கம் எம்பிரானொடும், பயிலாநிற்பப் பயிலா நிற்ப, பிறவி பிற கொள்கையுடையவரோடும் சூழாநிற்பச் சூழா நிற்ப, இறைவன் எம்மேல் அருளுடன் கூத்தாடா நிற்பக் கூத் தாடா நிற்ப, நாமும் அவன் முழுக்காடப் பொற்சுண்ணம் இடிப் போமாக எ - று

(வி - ரை.) கூந்தல் அசைதலால் வண்டினம் அசைந்தன. கொங் கைகள் ஆடுதலால் முத்துமாலைகள் ஆடுதலும் கொள்க. உலகெலாம் உய்வான் வேண்டும் என்னுங் கருணையோடு இறைவன் கூத்தயரும். அக் கூத்தினைக் கண்டு நுகர்தலே அடிகளின் நோக்கம் என்க. கொங்கையும் குழலும் தலைவற்கு உரிய ஆதல் பற்றி அக்களிப்பில் அவையும் ஆடுதலைச் செய்தன என்க. அங்ஙனம் இடிக்கையிலே சித்தம் தியானத்தால் அவனொடு ஒற்றுமைப்பட்டுப் புணர்ந்து இன்ப நுகர்தல் வேண்டும். அங்ஙனம் சித்தம் நுகர அவன்மேல் அது காதல் மயக்கு எய்தல்வேண்டும். இங்ஙனம் பித்தாயினாரைக் கண்டு நகையாடுவாரோடு பிறவி சூழாநிற்கும். அத்தன் கருணையோடு தில்லைக்கண்ணே கூத்தயர்தலைச் சித்தம் தியானஞ்

செய்து பித்துக்கொள்ளின் அஃது ஆனந்தம் மேலிட்டுப் பிறவியறும். அங்ஙனம் தியானித்துப் பித்துக்கொள்ளாவிடில் தகாநெறிப்பட்டுத் துன்பம் மிக்குப் பிறவியுள் அழுந்தி வருந்தாநிற்கும். ஆதலால் எம்மனம் உலகியல் நுகர்ச்சியிலீடுபடாது வீட்டியல் நுகர்ச்சியுள் ஆனந்தங் கொள்ளுமாறு அத்தனுக்கு ஆடச்சுண்ணம் இடிப்போமாக வெனத் தலைமகள் கூறினாள் என்க.

மாடு நகைவாள் நிலாஎறிப்ப
வாய்திறந்து அம்பவ ளம்துடிப்பப்
பாடுமின் நம்தம்மை ஆண்டவாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடித்
தேடுமின் எம்பெரு மானைத்தேடிச்
சித்தம் களிப்பத் திகைத்துத்தேறி
ஆடுமின் அம்பலத்து ஆடினானுக்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே. 11

இது, தலைமகள், சார்பாக நின்றுரைத் தலைவன் நம்மை ஆண்டவாறு பாடுதிர் எனவும், பாடியாங்குத் தேடுமின் எனவும், ஆடுமின் எனவும் ஏவி, நாம் சுண்ணமிடிப்போமாக என்றது.

(பொ - ரை.) (நங்கைமீர், கைலைக்கிழவோன் அந்தணனாக வந்து) நம்மை ஆண்டவகையையும், (அதன்மேலும் தொண்டர்களாக்கிப் பணிகொண்டவகையையும், பற்களின் முத்தொளி பாங்கெல்லாம் கதிர் வீசவும், இதழ்கள் துடிப்பவும் வாய்திறந்து பாடுவீராக; அங்ஙனம் பாடிக்கொண்டே அவனைத் தேடுவீராக, எம்பெருமானை அங்ஙனம் தேடுகையில் மனக்களிப்படைய, அதன் மிகுதியினாலே திகைப்புற்றுப் பின்னர்த் தெளிந்து ஆடுவீராக; நாம் தில்லையிலே கூத்தியற்றினானுக்குத் திருமுழுக்காடப் பொற்சுண்ணமிடிப்போமாக எ - று.

(வி - ரை.) மாடு - பாங்கு. பவளம், இதழுக்கு உவமையாகு பெயர். ஓசைச் செவ்வியும் பொருட் செவ்வியும் எடுத்துப் பாடாமையால், அவர்க்கு அவை அமையுமாறு அங்ஙனம் தலைவி கிளந்து கூறினாள் என்க.

"ஆண்டவாறும் பணிகொண்ட வண்ணமும்," தலைவன் தில்லையினின்றும் எம்பால் வந்த நெறியினை உணர்த்துவன. அவையே இங்கிருந்து அவனைத் தேடியடைதற்குரிய நெறியையும் துலக்குமாகலின் "பாடிப் பாடித் தேடுமின்" என்றாள் என்க.

"சித்தங் களிப்ப" என்றலானே தேடிக் கண்டமை பெய்து உரைக்க களிப்பு மிகுதியால் வந்த திகைப்பு என்க. அதன் தெளிவே கலக்கமற்ற

இன்பமாம். இனி, 'தேடிச் சித்தந் திகைத்துத் தேறிக் களிப்ப' எனக் கொண்டு உரைத்தலுமாம்.

இறைவன் தன்மேற் காதலூட்டுதலும் தான் கரந்து வருந்த வைத்தலும் வருந்துதலைக் கண்டு கருணைகொண்டு தேற்றி மகிழ வைத்தலும் தனக்கு அடிமைப்பணி அவரைக் கொண்டு செய்வித்துக்கொள்ளுதலும் அவன் பணிகொள்ளும் வகைகளாம்.

மைஅமர் கண்டனை வானநாடர்
 மருந்தினை மாணிக்கக் கூத்தன்தன்னை
ஐயனை ஐயர் பிரானைநம்மை
 அகப்படுத்து ஆட்கொண்டு அருமைகாட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர்மெய்யைப்
 போதுஅரிக் கண்இணைப் பொற்றொடித்தோள்
பைஅரவு அல்குல் மடந்தைநல்லீர்
 பாடிப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே. **12**

இது, தலைமகள், சுண்ணமிடிப்பார்க்கு நாம் தலைவன் இயல்பைப் பாடிப் பொற்சுண்ணம் இடிப்போமாக என்றது.

(பொ - ரை.) மலர்போன்ற செவ்வரி பரந்த இரு கண்களையும, பொன்வளையணிந்த தோள்களையும், பாம்பின் விரித்த படம் போன்ற அல்குலினையும் உடைய மடந்தைநல்லீர், நஞ்சு தங்கிய கழுத்துடையோனும், வானத்துத் தேவர்க்கு அமுதமானவனும், மாணிக்கத்தின் செவ்வொளி வீசத் திருநடஞ் செய்வோனும், அந்தணனும், அந்தணர்தம் தலைவனும், நம்மைத் தன் வயப்படுத்தி ஆட்கொண்டு பின்னர் அரியனாகி நிற்கும் பொய்யர்க்குப் பொய்யனும், மெய்யர்க்கு மெய்யனுமாகிய நம் தலைவன் இயல்புகளைப் பாடிப் பொற்சுண்ணம் இடிப்போமாக எ - று.

(வி - ரை.) மை - கருமை, நஞ்சின்மேற்று. மருந்து - அமிர்தம். வானவர் அமுதுண்ணத் தான் நஞ்சுண்டான் என்றவாறும்.

மாணிக்கக்கூத்தன் - மாணிக்கம் போன்றவன்; அவன் கூத்தன் என்க. ஐயன், தம்மையாட்கொள்ளவந்த அந்தணன். இங்ஙனம் பொது வகையாற் கூறியபடி. ஐயர்பிரான் - அந்தணர் தலைவன். இங்ஙனம் சிறப்புற மொழிந்தவாறு.

தான், யாங்கள் அருமை காட்டவும் எளியனாகி வந்து எம்மைத் தன் வயப்படுத்தியபின், யாங்கள் அருமை காட்ட வியலாமையின் பொறுமையையே மேற்கொள்ளத் தான் அருமை காட்டி நிற்கின்றான் என்க.

அன்புடையார்க்கு இறைவனருள் உண்மையும், அஃதிலார்க்கு அஃதின்மையும் அவ்வவ்வாற்றாற போதருமேனும், உபசார வ(கை) இறைவன் மேலேற்றிக் கூறினாள் என்க.

மின்இடைச் செந்துவர் வாய்க்கருங்கண்
வெண்ணகைப் பண்அமர் மென்மொழியீர்
என்னுடை ஆரமுது எங்கள் அப்பன்
எம்பெரு மான்இம வான்மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்
தமையன்எம் ஐயன் தாள்கள்பாடிப்
பொன்உடைப் பூண்முலை மங்கைநல்லீர்
பொற்றிருச் சுண்ணம் இடித்தும்நாமே. 13

(பொ - ரை.) மின்னல் போன்ற இடையினையும், செவ்விதாய பவளம் போன்ற வாயினையும், கரிய கண்களையும், வெண் பற்களையும், இசை இனிமை தங்கிய மென்மொழிகளையும் உடைய நங்கைமீர், பொன்னலாகிய பூண்களையணிந்த முலைகளையுடைய நலன் அமைந்த மங்கைமீர், என்னை அடிமையாக உடைய, யான் பெற்று நுகர்தற்கரிய அமுதமானவனும், எங்கள் அப்பனும், எங்கள் பெருமானும், மலையரசன் மகளுக்கு அவள் தன்னையுடைய கணவனும், மகனும், தகப்பனும், தமையனும் ஆவான், எங்கள் தலைவன். அவன் அடிகளைப் பாடிப் பொற்சுண்ணம் போமாக எ - று.

(வி - ரை.) எம்மையன் இன்னவாறுவன் எனவுரைக்க. ஆரமிர்தம் போல்வான். ஆதலால் எல்லார்க்கும் அன்னவாறல்லன், "மகன், தகப்பன், தமையன், மாமன்" என்றறடுக்கத்து எம்முறை பாராட்டியும் அன்பு செய்தற்குரியன் என்க.

" அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ
அன்புடைய மாமனும் மாமியுமநீ
ஒப்புடைய மாதரும ஒண்பொருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓருரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும தோற்றுவாய்நீ
துணையாய் என்னெஞ்சம் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இமமுத்துநீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன்நீயே "

(ஆருந்திரு. 309. தனித்திருத்தாண். 1.)

என அப்பர் சுவாமிகள் அருளுவதும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலதென்க. இவ்வுண்மையை முதல்விமேல் வைத்துக்கூறின் எல்லார்க்கும் ஒக்கும்

என்பது குறித்து "இமவான் மகட்குத்......தமையன்" என்றனர். இப்பொருள் புலப்பட இறைவன்மேல் மாற்றியமைத்து,

"வாயும் மனமும் கடந்த மனோன்மணி
பேயும் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளுநல் தாரமு மாமே" (திருமந். 1178.)

எனத் திருமூலர் கூறுவர்.

"சிவ தத்துவத்தினின்று சத்தி தத்துவம் தோன்றலின் அவன் அத்தனாகுமென்றும், சத்தி தத்துவத்தினின்றும் சதாசிவதத்துவம் தோன்றுதலின் மகனும் என்றும கூறினர்" (திருக்கோ. 112. உரை.) என, திருக்கோவை உரையாசிரியர், இவ்விருமுறைகளுக்கும் விளக்கங் கூறியுள்ளார். இருவரும் சேர்ந்து படைப்புச் செய்யப் புகுதலின் அவன் கணவனும் ஆயினன். ஒரே நிலைக்களத்தில் முன்னும் பின்னுமாக அமைந்துகிடந்த பெற்றி நோக்கிச் சிவத்தைத் தமையனாகக் கூறினர் போலும்.

சங்கம் அரற்றச் சிலம்புஒலிப்பத்
தாழ்குழல் சூழ்தரு மாலைஆடச்
செங்கனி வாய்இத ழும்துடிப்பச்
சேயிழை யீர்சிவ லோகம்பாடிக்
கங்கை இரைப்ப அரா இரைக்கும்
கற்றைச் சடைமுடி யான்கழற்கே
பொங்கிய காதலிற் கொங்கைபொங்கப்
பொற்றிருச் சுண்ணம் இடித்தும்நாமே 14

இது, தலைமகள், சுண்ணமிடிப்பார்க்குத் தலைவன் ஊரைப் பாடிச் சுண்ணம் இடிப்போமாக என்றது

(பொ - ரை.) செவ்விய அணிகளை அணிந்த மங்கைமீர், சங்கினாலாய கை வளையல்கள் ஆரவாரிக்கவும், சிலம்புகள் ஒலிக்கவும், பின்னே தாழ்ந்து தொங்கிய குழலிலே சூழச்சுற்றிய மாலை அசையவும், செய்ய கொவ்வைக்கனி போன்ற வாயிதழ்கள் அசையவும், சிவபுரத்தின் சீரைப் பாடிக் கங்கை நீரின் ஒலியைக் கேட்டு ஆங்குள்ள பாம்பும் அஞ்சி ஒலிக்கும் தொகுதியாகிய சடைமுடியானுடைய வீரக்கழல் கட்டிய திருவடிக்கே மிக்க காதலால் கொங்கைகள் விம்மாநிற்பவும் பொற்சுண்ணம் இடிப்போமாக எ - று.

(வி - ரை.) சங்கம், வளையல்; ஆகுபெயர். சங்கம் அரற்றல் முதலாயின எல்லாமும், இடிக்கும்போது உளவாகிய அசைவும், ஒலியும் பாடும் பாட்டின் தாள அறுதியோடு ஒத்துச்செல்வன. ஈது முன்னும் ஒக்கும்.

இடிக்கே அஞ்சும் இயல்புடைய அரவம் இடி ஒலியை ஒத்த கங்கை யின் ஒலி கேட்டு அவமே அஞ்சும் என்பதனாலே, யாமும் அன்பும் அடிமைத் தொழும்பும் கொள்ளச்செய்த அவன் இடையிட்டுப் பிரிந்த அதனை, நம்மை முற்றும் துறந்தொழிந்தான் என எண்ணி அஞ்சா நின்றேம் என்னும் குறிப்பு உணரப்படுமென்க. இனி, இங்ஙனம் அரவம் பிறழவுணர்ந்து அஞ்சியவாறே ஊரவர் கூறும் பொய், அலரை மெய்யென நினைந்து அன்னையும் அஞ்சினள் என்னும் குறிப்பு வெளிப்பட்டது என்றலும் ஒக்கும்.

இன்னும் இதனானே தலைமகன் சிறைப் புறத்தானாக அவன் விரைந்து தலைமகளை வரைந்துகொள்வான் வேண்டித் தோழி தலைமகளுக்குக் கூறியது எனினும் நனி பொருந்தும்.

ஞானக் கரும்பின் தெளிவைப்பாகை
நாடற்(கு) அரிய நலத்தைநந்தாத்
தேனைப் பழச்சுவை ஆயினானைச்
சித்தம் புகுந்துதித் திக்கவல்ல
கோனைப் பிறப்(பு)அறுத்(து) ஆண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்திப்
பானல் தடங்கண் மடந்தைநல்லீர்
பாடிப் பொற்சுண்ணம் இடித்தும்நாமே. 15

இது, தலைமகள் தலைமகன் நுகர்ச்சியின் இனிமையைப் பாடிச் சுண்ணம் இடிப்போமாக என்றது.

(பொ - ரை.) கருங்குவளை போன்ற பெரிய கண்களையுடைய நலம் வாய்ந்த மடந்தைமீர், அறிவென்னும் கரும்பில் நின்றும் எடுக்கப்பட்ட சாற்றின் தெளிவும், அதனாலாகிய பாகும், நாடி அடைதற்கரிய நலனும், குறைவுபாடத தேனும், பழத்தின் சுவையும் என்னுமிவற்றை ஒத்தவனும், உள்ளத்துட் புகுந்து இனிக்கவல்ல தலைவனும், பிறப்பினை வேரறுக்கி ஆட்கொண்ட கூத்துடையானும் ஆகிய தலைவனை நா வடுவேறும்படி வாழ்த்திப் பாடிப் பொற்சுண்ணம் இடிப்போமாக எ - று.

(வி - ரை.) கரும்பும் தெளிவும் பாகும் என்னுமிவை, வேறுபாடற்ற, வேறுபாட்டுடன் கூடிய அறிவுகளையும், பேரறிவையும் உணர்த்தி நின்றன. இங்ஙனம் படிமுறையாக வடித்தெடுக்கப்பட்ட அறிவினோடும் துறவு நெறியின் நின்று தத்துவங்களை நாடி இவையல்லன் இவையல்லன் என விலக்கி முன்னேறினும், இறைவன் தத்துவங் கடந்த தனிப்பெரு முதல்வனாகலின் அவர்தம் காட்சியுட்படான் ; படாத காலையும், இறைவன் நலத்தையே குறிக்கோளாகக் கொண்டு அதனைப் பெற ஆராய்ந்து வந்தாராகலின் " நாடற்கரிய நலம் " என்றார்.

"நந்தாத் தேன்" என்றது அன்பின் ஐந்திணைக் களவு நெறியான் வந்த இன்பத்தை உணர்த்திற்று; தேனீக்களாற சேமிக்கப்பட்ட தேனைப் பிறர் நுகர்ந்து இன்புறுதல்போலத் தெய்வமும் பாங்கும் நிமித்தமாகத் தலைவன் தலைவியர் புணர்ந்து இன்புறலின் என்க. அவ்வின்பம் குறையுந் தோறும் நிறைவு பெறுதலின் நந்தாத் தேனுடன் உவமித்தார். பல பூக்களிலிருந்தும் சேகரிக்கப்படுவது தேனாதலின், அதனோடு ஒப்பக் கொண்ட அன்பு நெறிக்கண் எல்லாப் புறநெறிக்கண்ணும் உள்ள நலன் யாவும் அடங்கும் என்க.

தேனைக் களவிற்கு ஒப்பாகக் கூறியமைக்கேற்பப் பழத்தைக் கற்பிற்கு ஒப்பாகக் கொள்க.

"சொற்பா லமுதிவள் யான் சுவை" (திருக்கோவையார். 8.)

என்றதிற்போலப் பழச்சுவை அவனாகப் பழம் தலைவியாவள் என்றுணர்க. இவ்வன்பின் ஐந்திணை நெறியால் நாடற்கெளிய நலன் எனவும் கூறிக் கொள்க; அன்புநெறி உணர்வு நெறியாகலின்.

மேற்காட்டிய அறிவு நெறியாளர்களையும் அவ்வாயிலானே அன்பு நெறியாகிய உணர்வு நெறிக்கண் வருவித்து அவர்தம் உள்ளத்தும், முன்பே அன்புநெறிப் பயின்றார் தம் உள்ளத்தும் புகுந்து தித்திக்கவல்ல "கோன்" என்க.

அங்ஙனம் உள்ளம் புகுந்தவாற்றானே, பிறப்பிற்கு உரியனவெல்லா வற்றையும் வேருக்கித் தனக்கே முற்றுடைமையாக "ஆண்டுகொண் டனன்" என்க. இந்நிகழ்ச்சிகள் யாவற்றையும் தோற்றுவிக்கும் "கூத்தன்" என்றபடி.

இங்ஙனமே அன்பு நெறியின் வைத்து, உள்ளம் புகுந்து, பிறப்பறுத்து நம்மையும் ஆண்டுகொண்ட "கூத்தன்" என்க

ஆவகை நாமும் வந்து அன்பர்தம்மோடு
  ஆட்செய்யும் வண்ணங்கள் பாடிவிண்மேல்
தேவர் கனவிலும் கண்டறியாச்
  செம்மலர் பாதங்கள் காட்டுஞ்செல்வச்
சேவகம் ஏந்திய வெல்கொடியான்
  சிவபெரு மான்புரம் செற்றகொற்றச்
சேவகன் நாமங்கள் பாடிப்பாடிச்
  செம்பொன்செய் சுண்ணம் இடித்தும்நாமே. **16**

இது தலைமகள், தலைவனுக்கு யாம் புரியும் தொண்டின் தன்மை களையும், அவன் நாமங்கள் பற்பலவற்றையும் பாடிச் சுண்ணம் இடிப்போமாக என அவர்க்குச் சொல்லியது.

(பொ - ரை.) அன்பர்களுடன் நாமும் ஒருங்கு கூடிவந்து, (அடிமைத் தொண்டுகள் செய்யும் தன்மை நமக்கும்) கைகூடும்

வண்ணம் தலைவனுக்கு அடிமைத் தொண்டுகள் புரியும் தன்மைகளைப் பாடிக்கொண்டும், விண்ணில் இருக்கும் தேவர்கள் கனவிற்றும் கண்டறியாத (அருமை வாய்ந்த) சிவந்த மலர் போலும் திருவடிகளை நமக்கு (எளிதில் வந்து) காட்டாநிற்கும் செல்வமாகிய எருத்தின் வடிவம் எழுதப்பட்ட வெற்றிக் கொடியுடையான் என்றும், சிவபெருமான் என்றும், முப்புரங்களையும் அழித்த வெற்றி வீரன் என்றும் அவன் திருப்பெயர்களைப் பாட்டாகப் பாடிக் கொண்டும் செம்பொன் ஒளிவீசும் சுண்ணம் இடித்தலைச் செய்வோமாக எ - று.

(வி - ரை.) தாம் கடைப் பிடித்து நிற்கும் அன்பு நெறிக்கண்ணும், பாங்கியர் முதலானோர்பாற் செய்யும் அன்பினையும் ஒருமுகப்படுத்தி, தலைவனுக்கே முற்றும் உரிமை செய்துகொள்ளும்படி எண்ணிய தலைமகள், தன் பாங்கியர் தலைவன் பாங்கர் முதலானோரைத் தலைவராகக் கொண்டு அவர் தம்மோடும பயின்று வருதலை இதுபோது விலக்கித் தன்னுறு தொழிற்கே ஆதரவை வேண்டியும், தன்னுறு தொழில் தனக்குப் புதிதாகலின் பழமை பெற்றாரபாற் பயின்றுகொள்ளவேண்டியும் எண்ணிக்கொண்டு " ஆவகை நாமும் அன்பர் தம்மோடு வந்து " என உட்செறித்துரைத்தாள் என்க.

புண்ணியச் செல்வமாகிய சே என்க. சே - எருது. ஈண்டு அதன் உருவத்தைக் குறித்தது. அதனை அகத்தே (எழுதப்பட்டு) ஏந்திய கொடி என்க. அஃது அறக்கொடியாகலின் என்றும் தோல்வியறியாததென்பது குறித்தற்கு "வெல்கொடி" எனப்பட்டது.

" ஆட்செயும் வண்ணங்கள் பாடுதல் " அன்பு முறுகுதற்கென்க. " நாமங்கள் பாடுதல் " செய்ந்நன்றி போறறி என்க. திருவடி நீழலளித்தமையும், சொல், செயல் முதலியவற்றில் புறப்பகைகளை அழித்தமையும், காமம் முதலாய அகப்பகைகளை அழித்தமையும் ஆகிய தலைவன் செயல்களை மறவாது நன்றி போற்றி அமையை ஈண்டுப் பயின்ற பெயர்களைக் கொண்டறிக.

தேனக மாமலர்க் கொன்றைபாடிச்
சிவபுரம் பாடித் திருச்சடைமேல்
வானக மாமதிப் பிள்ளைபாடி
மால்விடை பாடி வலக்கைஏந்தும்
ஊனக மாமழுச் சூலம்பாடி
உம்பரும் இம்பரும் உய்யஅன்று
போனக மாகநஞ் சுண்டல்பாடிப்
பொற்றிருச் சுண்ணம் இடித்தும்நாமே. 17

இது தலைமகள், அவன் அணிகளையும், படைகளையும், ஊணையும் ஊரையும், ஊர்தியையும் பாடிச் சுண்ணமிடிப்போமாக என அவர்க்குக் கூறியது

(பொ - ரை ) தன்னுள்ளே தேனையுடைய பூக்களால் நிறைந்த கொன்றைமரத்தைப் பாடி, சிவநகரத்தினைப் பாடித் திருவினையுடைய சடையின்மேல் அணியப்பட்ட வானை இடமாகக் கொண்டிருந்த இளம்பிறையைப் பாடி, பெரிய ஊர்தியாகிய விடையைப் பாடி, இறைவன் தன் வலக்கையில் ஏந்தியிருக்கும் மாற்றார் தசையை அகத்திற்கொண்ட பெரிய மழுவையும் முத்தலைச் சூலத்தினையும் பாடி, வானுளோரும் மண்ணுளோரும் உய்யும்படி அக்காலத்தில் தன் உணவாக நஞ்சுண்ட அருஞ்செயலைப் பாடி பொற்சுண்ணம் இடிப்போமாக எ – று.

(வி - ரை.) கொன்றை சிவநகரத்துக் காவல் மரமாகும். அதனோடு சிவபுரத்தைக் கூட்டியுரைத்தமையால், அக்காவல் மரத்தினைத் தடிந்து பகைவர் உட்புகுந்தறியாத சிவபுரம் என விரிக்க.

ஒரு கலையுடைமையால் “மதிப்பிள்ளை” எனப்பட்டது. முன்னர் வானை இடமாகக் கொண்டிருந்த மதி எனவும், இப்போது இறைவன் திருச்சடைமேல் வளரும் மதிப்பிள்ளை எனவும் உணர்க. தனக்குற்ற இடுக்கண் குறித்து அஞ்சுமாறில்லையாதலின் “மாமதி” எனப்பட்டது.

“—பலியேல்,

கடவுள் அவிர்சடைமேல், கட்செவி யஞ்சாதே,
படர்சிறைப் புள்ளரசைப் பார்த்து” (நன்னெறி)

என்பதும் ஈண்டு நினைக்கப்படும்.

திருமாலாகிய விடையுமாம். அது பகைமுகத்துச் சென்று அழித்தற்கும், அன்பரிடைச் சென்று அளித்தற்குமுரிய ஊர்தியாம். மழுச்சூலம் - மழுவும் சூலமும். ‘ஊனகமழு,’ ‘ஊனகச்சூலம்’ எனக் கொண்டுரைக்க. “,போனகமாக நஞ்சுண்டல் பாடி” என்றாரேனும் முன்வந்தவற்றின் இயைபுபற்றிப் போனகமாக நஞ்சுண்டு கறுத்த கண்டம் பாடி எனவே கொள்க.

“பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.” (திருக்குறள். 580.),
“நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்” (நற். 355.)

என்னும் இவற்றை “நஞ்சுண்டல் பாடி” என்பது நினைவூட்டுகின்றது.

ஊனக மழுப்படை, சூலம் என்னுமிவற்றை உடைய அவனே இங்ஙனம் கண்ஞேட்டமுமுடையனுயினுன் என்றபடி.

தேனக மலர்க்கொன்றை அகத்தே ஆனந்தமுடைமையையும், சிவபுரம் ஆனந்தத்தின் நிலைக்களத்தையும், மதிப்பிள்ளை சரணடைந்தாரைச் சாப வீடு செய்து புரத்தலையும், மழு தனக்கே பயன்படுதலையும், சூலம் உயிர்

களின் அழுக்காற்றுதலையும், நஞ்சுண்டல் கண்ணோட்டத்தையும் குறித்து நின்றன என்க. இனி, தேனகமலர்க் கொன்றை அன்பரை அகத்திலே ஆனந்தங் கொள்ளச் செய்தற்குத் தான் ஏதுவாதலையும், சிவபுரம் ஆனந்த நிலைக்களன் ஆதலையும், சடைமதி சரண் புக்கார் இடுக்கண் நீக்கி ஆட்கொள்ளுதலையும், விடை அறங்காத்தலையும், மழுச்சூலம் தீயோரை அழித்தலையும், நஞ்சுண்டல் கண்ணோட்டத்தினையும் குறிக்குமென்ப.

அயன்தலை கொண்டுசெண் டாடல்பாடி
அருக்கன் எயிறு பறித்தல்பாடிக்
கயந்தனைக் கொன்றுரி போர்த்தல் பாடிக்
காலனைக் காலால் உதைத்தல் பாடி
இயைந்தன முப்புரம் எய்தல்பாடி
ஏழை அடியோமை ஆண்டுகொண்ட
நயந்தனைப் பாடிநின் றாடியாடி
நாதற்குச் சுண்ணம் இடித்தும்நாமே. 18

இது தலைமகள், அவன் மறத்தை எடுத்துப் பாடி, அம்மறமுடையான் எம்மை ஆண்ட வகையினையும் பாடி, அதனால் ஆனந்தம் முறுகக் கூத்தாடியவாறு சுண்ணமிடிப்போமாக என அவர்க்குச் சொல்லியது.

(பொ-ரை.) நான்முகன் தலையைக் கிள்ளி அவனை நிலைகுலைத்தமையைப் பாடி, பூஷன் என்னும் சூரியனுடைய பற்களைப் பறித்தமையைப் பாடி, கயாசுரனைக் கொன்று அவன் தோலையுரித்துப் போர்த்திக்கொண்டமையைப் பாடி, காலனைக் காலினாலே உதைத்துக் கொன்றமையைப் பாடி, ஒருங்கு சேர்ந்துலாவிய முப்புரங்களையும் எய்துஅழித்தமையைப் பாடி, ஒன்றற்கும் பற்றாத அடியோங்களை ஆட்கொண்ட நன்மையைப் பாடி, அதற்கேற்ப நின்றாடிக்கொண்டே தலைவனுக்குப் பொற்சுண்ணம் இடிப்போமாக எ-று.

(வி-ரை.) செண்டு - பூப்பந்து; செண்டாடல் - பந்துவிளையாடலைப் போல் ஆடி, அதாவது நிலைகுலையச் செய்தல். ஈண்டுப் பயின்ற திருவிளையாடல்கள் யாவும் வெளிப்படையானவை. ஈண்டு விரிப்பிற் பெருகும். பூஷன் - பன்னிரண்டு சூரியர்களுள் ஒருவன்.

கெட்டவர்களை அழித்து நல்லோரை ஓம்பும் இறைவனுடைய தன்மையைக் காட்டியவாறு காண்க. இத்துணை மறமுடையானேனும அன்பின் தலைக்கண் நின்றவனுமாவன் என்பதை, அம்மறச் செயல்களோடு ஏழை அடியோமை ஆண்ட நயந்தனைப் பாடி எனக் கூட்டி மொழிந்தமை கொண்டுணர்க

வட்ட மலர்க்கொன்றை மாலைபாடி
மத்தமும் பாடி மதியும்பாடிச்
சிட்டர்கள் வாழுந்தென் தில்லைபாடிச்
சிற்றம் பலத்தெங்கள் செல்வம்பாடிக்
கட்டிய மாசுணக் கச்சைபாடிக்
கங்கணம் பாடிக் கவித்தகைம்மேல்
இட்டுநின் ருடும் அரவம்பாடி
ஈசற்குச் சுண்ணம் இடித்தும்நாமே. 19

இது, தலைமகள், அவன் அணிகளையும், புலவோர்க்கும் தங்களுக்கும் உரிய இடங்களையும் பாடிச் சுண்ணம் இடிப்போமாக என அவர்க்குச் சொல்லியது.

(பொ-ரை.) கொன்றையினது வட்டவடிவு உடைத்தாகிய பெருமை பொருந்திய மலராலாகிய மாலையைப் பாடி, ஊமத்தை மலரையும் பாடி, பிறையைப் பாடி, புலவோர்கள் வாழ்ந்துவரும் தெற்குக்கண்உள்ள தில்லைநகரைப் பாடி, அந்நகர் நடுவேயுள்ள ஞான மன்றிலே நடமாடும் எங்கள் செல்வமாகியோனைப் பாடி, அவன் அரையிலே கட்டிய பெரும்பாம்பாகிய கச்சினைப் பாடி, கையிற் கட்டிய பாம்புக் காப்பினைப் பாடிக் கவித்த கையின்மேலே அணியப் பட்டுப் படம் விரித்தாடாநிற்கும் பாம்பினைப் பாடிக் கொடைச் செல்வனுகிய தலைவனுக்குப் பொற்சுண்ணம் இடிப்போமாக எ — று.

(வி-ரை.) கொன்றைமாலை ஆக்கற்கும், மத்தம் பூ அழித்தற்கும், பிறை அருளற்கும் அடையாளங்களாவன.

பின்னர்த் தில்லைக்கு வருக என்று சென்றுனுகலின் சிற்றம்பல முடையான் அவர்கள் செல்வமாயினுன்.

இட்டுநிற்றல் - அணியப்பட்டு நிற்றல். சிட்டர் - புலவர். எல்லா வுலகங்களையும் ஒருங்கு பெயர்த்து ஒடுங்க ஆடுவோனும் ஆங்காங்குச் செருக்கினுரை ஒறுத்து ஆடுவோனும் அவ்வொருவனே ஆதலால் நாமும் அவனை இப்போது உணர்ந்து அவனடிப் படுதல்வேண்டும் என்பது குறிப்பு.

வேதமும் வேள்வியும் ஆயினுர்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினுர்க்குச்
சோதியு மாய்இரு ளாயினுர்க்குத்
துன்பமு மாய்இன்ப மாயினுர்க்குப்
பாதியு மாய்முற்று மாயினுர்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயினுர்க்கு
ஆதியும் அந்தமும் ஆயினுர்க்கு
ஆடப் பொற்சுண்ணம் இடித்தும்நாமே. 20

இது தலைமகள், எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிய முழுப் பொருளானவனுக்குப் பொற்சுண்ணம் இடிப்போமாக என அவர்க்குச் சொல்லியது.

(பொ - ரை) வேத மந்திரமும், அவற்றின்வழிச் செயப்படும் வேள்விகளும் ஆனவரும், மெய்ப்பொருளும் பொய்ப்பொருளும் ஆனவரும், துன்ப உணர்வாகவும் இன்ப உணர்வாகவும் ஆன வரும், பாதிப் பங்காகவும், முற்றுமுழுதாகவும் ஆனவரும், கட்டும் அதன் விடுதலையும் ஆனவரும், முதலும் முடிவும் ஆனவருமாகிய இறைவனுக்குத் திருமுழுக்காடும் பொருட்டுப் பொற்சுண்ணம் இடிப்போமாக எ - று.

(வி - ரை) வேதமாயினன், வேள்வியாயினன், அன்ன பிறவாயினன் எனக் கூறப்பட்டார் பலர் என்னும அறிவுடைமையால், 'ஆயினன்' என்னது "ஆயினர்" எனப் பன்மை வாசகத்தால் இறைவன் கூறப் பட்டான். இவ்வுண்மை நோக்கியே ஆயினரும் ஆயினருமாகிய இறைவற் கென ஒருமை வாசகத்தால் இறுதியில் முடித்தாம்.

வேதம் வேள்விக்கு இன்றியமையாதது. இதனை முற்கூறிய தொடர்பு கொண்டு மேல்வரும் பொய்ம்மை மெய்மமை, சோதி இருள் என வருவன வற்றுக்கெல்லாம் உடன்பாடும் எதிர்மறையும் பற்றி உரை இன்றியமையாமை பறறியே உரை வகுத்துக் கொள்க.

வேத வழிப்பட்டவர்க்கு வேள்வி, மெய்ம்மை, சோதி, என்றாங்கு முறையே ஆயினும், படார்க்குப் பொய்மமை இருள் துன்பம் என்றாங்கு முறையே ஆயினும் என்பதும் ஒன்று. இனிச் செய்கை ஒன்றிலே நின்று மேலேறுதார்க்கு முதறகண்ணே மெய்ம்மையும் சோதியும் ஆகி இன் புறுத்திப் பின்னர்ப் பொய்யும் இருளும் ஆகி அதன்மேல் கருணையினால் இன்பமாகி நிற்பான் எனக் கூறற்கும இடனுண்டு.

'ஆயினர்க்கு' எனப் பன்மையீருகவன்றி என ஒருமை யீருகப் பாடங் கொள்வாருமுளர்.

திருச்சிற்றம்பலம்

# திருக்கோத்தும்பி

இப்பகுதியுட் பயின்ற திருப்பாட்டுக்களின் இறுதிதோறும் "கோத்தும்பீ" என இற்றமையால், இது "திரு" என்னும் அடையொடுகூடித் "திருக்கோத்தும்பி" எனப்பட்டது. தலைமகனாகிய இறைவன்பால் தூதேகும் சிறப்புடைமையால் "திரு" என்னும் அடையொடு அது புணர்த்திக் கூறப்பட்டது கோத்தும்பி - அரச வண்டு.

திருமங்கையாழ்வார் அருளிய பெரியதிருமொழி 8-ஆம் பத்து 4-ஆம் திருமொழி, விண்ணவர் என்னும் பகுதி முழுவதும் "கோல் தும்பீ" எனத் திருப்பாட்டுக்கள் தோறும் இறுகின்றது. கோல் தும்பி, தேனைக் கோலும் தும்பி எனப் பொருள்படும். ஆங்குத் திருமாலின் திருமுடி மார்பு அடி என்பவற்றையெல்லாம் ஊது மாறு தும்பிக்கு ஆழ்வார் கட்டளையிட்டருளாநின்றார். ஈங்கு அவன் அடிக்கண்ணும் அவன்கண்ணும் சென்று ஊதுமாறு கட்டளையிட்டருளப்பட்டது திருவடியும் திருவுறுப்பும் திருமேனியும் கமலங்களாதலால் அவற்றை ஊதப் பணித்தருளினர்.

தூது போக்கிய வண்டு தலைமகள்பாற் பயிலும் வண்டென்பது தலைமகனால் அறியப்பட்டதாகலின், அதனைக் கண்டதும் அவன் தலைமகளைக்கூட உடன்மீளுவன் என்க மூவேந்தரும் பறம்பு முற்றியிருந்த காலத்திலே கபிலர் குருவிகளையும், கிளிகளையும் நெற்கதிர்களைப் புறஞ்சென்று கொண்டுவரப் பயிற்றுவித்த செயதியும் (அகநா. 78, 303 ) இதனை வலியுறுத்தும். தெய்வயானை வள்ளி என்பார் மயிலும் கிளியும் வண்டும் ஒன்றனை மற்றொன்று முறையே ஏற்றும், மழலை ஏற்றும், பாய்ந்தும் இகலியதை (பரி 9 41-44 ) உற்று நோக்கில், ஈண்டு வண்டினைத் தூதனுப்புதலும் செய்யுள் மரபாகும் என்பது நன்கு புலனாகும்

இவ்வண்டுவிடுதூது, தலைமகள் காப்புச் சிறைப்பட்டவிடத்தும் வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் காலம் நீட்டித்த இடத்தும், களவின்ப நுகர்வு கருதி வரையாது அவன் நீட்டித்த இடத்தும் அவள் கூறும் கையறு கிளவிகளின்பாற்படும். இங்ஙனம் கூறித் தலைமகளால் விடுக்கப்பட்ட வண்டுகள் தூது சென்று தலைவரொடு மீண்டுவந்து முரல்வனவாகவும் செய்யுள் செய்தலும உண்டு. இதனை,

> "தூதுஏய வண்டின் தொழுதி முரல்வுஅவர்
> காதல்மூ தூர்மதில் கம்பலைத் தன்று" (பரி. 8. 36, 37 )

என்பதனால் அறிந்துகொள்க. அங்ஙனம் தூதுவிட்டும் வரக்

காணாது தலைமகள் வருந்துதலும் உண்டு என்றலைத் திருமங்கை யாழ்வார் அருளிய திருநெடுந்தாண்டகம் 27-ஆம், 28-ஆம் பாசுரங்களாலும் அறிந்துகொள்க.

மக்களுட் பெண்பாலைப் பாடுதல் சிறப்பின்மையால் " 'செயிர் தீர் கற்பிற் சேயிழை கணவ' (புறநா. 3) என்றாற்போலச் சிறுபான்மை ஆண்மக்களோடு படுத்துப் பாடுப" (தொல். புறத். 26, நச். உரை) என்னும் மரபினை ஒத்தே வண்டு முதலாயவற்றைத் தூதாக விடுக்கும்போது, ஆணைத் தானே செல்லவும், பெண்ணைத் தன் ஆணொடு கூடிச் செல்லவும் விடுத்தலும் மரபாகும் எனக் கருதுதற்குப் பின்னர்க் காட்டப்படும் மேற்கோள்கள் இடனாகின்றன :

" கொடியை வாழி தும்பி இந்நோய்
படுகதில் அம்ம யான்நினக்கு உரைத்தென
மெய்யே கருமை அன்றியும் செல்வன்
அறிவும் கரிதோ அறன்இலோய் நினக்கே
மனைஉறக் காக்கும் மாண்பெரும் கிடக்கை
நுண்முள் வேலித் தாதொடு பொதுளிய
தாறுபடு பீரம் ஊதி வேறுபட
நாற்றம் இன்மையிற் பசலை ஊதாய்
சிறுகுறும் பறவைக்கு ஓடி விரைவுடன்
நெஞ்சுநெகிழ் செய்ததன் பயனோ அன்பிலர்
வெம்மலை அரும்சுரம் இறந்தோர்க்கு
என்நிலை உரையாய் சென்றவண் வரவே." (நற்றிணை. 277.)

என்னும் செய்யுளானும்,

" அம்ம வாழி " (குறுந். 392.)

என்னும் செய்யுளானும் வண்டு புள் முதலாயவற்றுள் ஆணினைத் தனியாகத் தூது விடுத்தவாறும்,

" ஒண்தூவி நாராய்நின் சேவலும் நீயுமாய்
வண்டூது பூங்கானல் வைகலும செல்கதிர்ஆல்
பெண்தூது வந்தேம் எனஉரைத்தெம் காதலரைக்
கண்டீர் கழறியக்கால் கானல் கடிபவோ "

(தொல். 20. கள. நச். மேற்.)

என்னும் இப்பாட்டு " நாராய் " என ஒருமையாக அழைத்தும் " கண்டீர் கழறியக்கால் " எனப் பன்மையாகக் கூறியும் செல்லுதலால் புள்ளும் வண்டும் ஆகியவற்றுள்ளே பெண்ணைத் தூதாக விடுக்கும்போது அதனுடன் ஆணினையும் கூடிச்செல்லுமாறு விடுத்தல் மரபாகும்போலும். இப்பகுதி " கோத்தும்பீ சென்றா

தாய்'' என ஒருமை வாசகத்தால் இறுதலால் இத்தும்பியை ஆண் தும்பி என்று கருதற்கு இடனுண்டு.

தும்பியின் சாதிகளாகிய சுரும்பு, வண்டு, தேன், மிஞிறு என்னும் நான்கனுள்ளே இடைப்பட்ட வண்டும் தேனும் நன்மணம் நாடிச் செல்லும். ஏனைய இரண்டும் எல்லா மணத்திலும் செல்லும்.

"மிஞிற்றினும் சுரும்பு சிறக்கும்" (சிந்தா. 893. நச். உரை.)

எனக் கூறுதலால், ஈண்டுக் "கோத்தும்பி" என்றது நல்ல மணத் செல்வனவாகிய அவ்விரண்டனுள்ளே தேனை.

"வண்டுகாள் மகிழ்தேனினங்காள்" (சிந். 893.)

எனச் சுரும்பினையடுத்து வண்டு கூறப்பட்டமையானும்,

"தேன்காள் வண்டுகாள்" (சிந்தா. 2509 ).

என்பதனுள்ளே தேனினை முதற்கண் வைத்தமையானும் மிஞிறு, சுரும்பு, வண்டு, தேன் எனக் கூறியது, இழிவினின்று ஏற்றங் காட்டிய முறைமைத்து என்பதும், தேன் வண்டு சுரும்பு மிஞிறு என்பது உயர்வினின்று இறக்கம் காட்டிய முறைமைத்து என்பதும் தானே போதருதலின். இப்பகுதியைத் தோழி தலைவிக்குச் சிறைப் புறமாகக் கூறியது எனக் கொள்ளல் அத்துணைப் பொருத்த முடையதாகத் தோன்ற வில்லை. சொல்லுதலைக் கேட்டலும், சொல்லியவாறே செய்தலும் ஆகிய மரபல்லாத வண்டினைத் தூதாக விடுவது வழுவுடைத்தேனும் அதனை,

"நோயும் இன்பமும்" (தொல். பொரு. பொருளி. 2.)

என்னும் நூற்பாவிலே,

"செல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்
செய்யா மரபில் தொழிற்படுத்து அடக்கியும்"

என்பதனானும்,

"முட்டுவயிற் கழறல்" (ஷை, ஷை, மெய். 23.)

என்பதனாலும்,

"ஞாயிறு திங்கள்" (ஷை, ஷை, 201.)

என்பதனாலும், அன்ன பிறவற்றாலும் ஆசிரியர் அமைப்பாராயினர். அங்ஙனம் தூது விடுத்ததாகப் புனைந்துரைப்பின், எடுத்துக் கொண்ட பொருள் மனங்கொளச் சிறந்து எழில்பெறத் திகழா நிற்கும்

இனி இப்பகுதியை இயற்கைப் பொருள்வைப்புமுறைக்கேற்ப உரைக்குமாறு கீழ்க்காண்க :

தும்பீ, நீயோ தினையத்தனை தேன் பொருந்திய மலர்களின் மாட்டுத் தேன் பெறுதலை விரும்பி அலைந்து திரிகின்றாய் அங்ஙனம்

அலைந்து திரிதல் வேண்டா. சற்றேனும் அலையுமாறின்றி இருந்த விடத்திருந்தே ஊதுதலைச் செய்யப் பெருக்கெடுத்துப் பாயும் ஆனந்தத தேன் நிறையப் பொருந்தப் பெற்ற மலர் ஒன்றுளது. அம்மலரதான், யான் எவ்விதச் செவ்வியும் பெறாது பயனற்ற பொருளாக இருந்தகாலையும், என்னிடத்துப் பயனுண்டாகாமைக்குக் காரணமாயிருந்த உலகியல் மயக்கத்தையும், இறப்பு பிறப்பு என்பவற்றால் வரும் கலக்கத்தையும் தெளிவித்தும், அன்பற்றேனாய் இருந்தபோதும் தாய்போல என்னை நாடிவந்து நாயைத் தவிசில் வைத்தாற்போல என்னை மேலிடத்தில் வைத்த கருணையாளனுடையதும், நீ மலர்த்தேனை நுகர்ந்து திரிந்தாங்கே யான் உலகியலில் மயங்கியிருந்தபோது, யான் கெட்டவன் என்றும் கருதாதே ஆட்கொண்டதும ஆகிய திருவடி மலராகும் இங்ஙனம் அவனும், அவன் திருவடி மலரும் என்னையாட் கொள்ளாவிடில் யானும் என் மனமும் ஞானமும் யாவாகும் என்று கருதுகின்றாய்? என்னை அறிவாரும் இவ்வுலகத்தில் உளராவரோ? வாழ்நாள் முழுவதும் செட்டறிந்த யான், என்னையாட் கொண்ட அவன் கேடறியாத் திருவடியை இனி எக்கணத்தேனும் மறந்துய்வனோ? அந்தகோ! என்ன பாதகம் அது! நினைக்குந்தோறும் மனத்தே அமுதவூற்று மடை திறக்கும்போது, அதனை மறத்தலும், இன்னொன்றை நினைத்தலும் இயல்பாகவே இல்லாது கழிதல் வேண்டும். அத்திருவடி இவ்வாறு எளிவந்ததெனினும், அது நமக்கெளிய பொருள் என்று கருதித் தவறுபடாதே. அது அயனே அரியே நாமகளே காயத்திரியே வானவரே என்ற இவர் யாவர்க்கும் அறிதற் கரும்பொருள் ஆகும். ஏதோ நமது நல்வினை காரணமாக இங்ஙனம் வந்தது எனறு அறிந்துகொள். அவன் அரும் பொருளாயினும் அவனை அறிதற்குரிய இயல்புகள் சிலவற்றை ஒருவாறு கூறுவேன் அவன் உலகத் தோற்றத்துக்குக் கருவாய் அப்பாற்பட்டிருத்தலும், அம்மையொடு கூடி உலகங்கள் யாவற்றையும் தோற்றுவித்து இப்பாற்பட்டிருத்தலும், நுண்பொருள் பொதிந்த மறை பயிலும் குருவாய் வந்து அவ்வீரியல்பும் உணர்த்தி ஆட்கொள்ளுதலும் உரியன். இங்ஙனமாதலால் அவன் உலகியலும் வீட்டியலுமாகிய ஈரிடத்தும் ஒப்பச் செம்பாதி பெண் மேனியனாய் இருப்பன். [இவையெல்லாம் மெய்யுணர்வு கொண்டறிய வேண்டியவை] இத்தகையவனே, அநேக தேவர்களைத் தெய்வமென ஏற்றுக் கொண்டு, ஒருவரோடொருவர் மாறுபட்டுப் பொய்ப் பேச்சுகள் பேசுகின்ற பொய்யர் நிறைந்த இப்பூமியில் என்னால் பற்றும்படி வரைந்து கொள்ளப்பட்டவன். இங்ஙனமாயினும் அவ்வள்ளல் என் மனத்தே

வருவதும் போவதுமாகவே இருத்தலன்றிச் செவ்வனே நிலைபெற்றிலன். ஆதலால் யான் கள்ளமுடையேன், கடுமையுடையேன், கலதி என்று நீ கருதி என்னை இகழாதே. என்னை மதித்து எனக்கோர் உதவி செய்குதி என் துயரமெல்லாம் அவன் திருவடியாகிய நீ ஊதும் மலர் நன்கறியும் ஆதலால் என் துயரத்தை உரைக்கின்ற நின்னோடு அது வெகுளாது. ஆதலின் நீ அஞ்சற்க. அம்மலரில் நீ தேன் எடுக்கையில், யான் ஆட்கொள்ளப்படும்போது என்னிடத்தே அன்பு சிறிதும் இல்லை என்பதை யானும் அவரும் அறிகுவம் என்றும், ஆட்கொள்ளப்பட்டதை உலகம் முழுவதும் அறியும் என்றும், இதன்பின் இங்ஙனம் கைவிடப்படின் இழிவு நேரும் என்றும் ஊதுகின்ற சாதுரியப்பாட்டால், அவர் என்னை ஆட்கொளற்குத் தான் இருக்குமிடத்திருந்தே கருணை பொருந்தப் பெற்றுத் தானாகவே என்னை நாடி வருமாறு செய்தலே அவ்வுதவியாகும் எனத் தும்பியை அழைத்து உணர்வூட்டலும், அவன் என்னை ஆண்டவாறும், ஆளாவிடின் எனது நிலை யாதாம் என்பதும், அவனை மறவாத மன வைரமும், அவன் அருமைப்பாடும், அவனை அறிதற்குரிய இயல்புகளும், யான் தூது போக்கற்குரிய என் நிலையும், தூதுரைக்கும் வகையும் ஆகிய இவற்றைத் திருவடி நலன் அத்திருவடியுடையான் நலன் என்னும் இரு பகுதிப்பட்ட நலன்களையும் ஓதும் இயல்புள் வைத்துப் பாடியருளினர் என்க.

இனி இத் "திருக்கோத்தும்பி"யுள் செய்யுட்கள், இயற்கையடைவினின்றும் தமது கருத்துக்கேற்ப ஏற்றவிடத்து அமைத்துப் பாட நூற்பொருளடைவு முறை வருமாறு —

தலைமகன் திருமுழுக்காடற் பொருட்டுப் பொற்சுண்ணமிடித்த தலைமகள், அவன் வாராமையினாலே தும்பியைத் தூது விடுகின்றாள் என்க. வேதமே, வேள்வியே, மெய்ம்மையே, பொய்ம்மையே, என்றுங்கு எண்ணப்படுவன எல்லாமாய் அவன் இருத்தலின், ஒவ்வொரு துறைக்கண்ணே முயன்றுகொண்டிருக்கும் அயன், அரி, இந்திரன், வானவர் முதலிய யாவர்க்கும் அவன் திருவடி அரியதாயிற்று. அஃது என் உள்ளத்திருந்தது, இப்போது சேஏறிச் சென்றது எனவும், அங்ஙனம் சென்ற அடிக்கமலத்திலே ஆனந்தத்தேன் ஆழ்ந்துளது எனவும், அத்தேனை அவன் கூத்தயர்வதனால் சொரிகின்றான் எனவும், அவ்வியல்பினோன் கண்ணப்பனுக்கே அருளுவது இயல்பாகவும் வான்கருணையினால் எனக்கும் அருளினான் எனவும், அவ்வருட்டிறத்தானே பொய்த்தேவர்பால் ஈடுபட்டிருப்பின் யாதாம் என நினைந்தனர் எனவும், அதனால் என் கலக்கம் தெளிவித்த அவனையும் அவன் திருவடியையும் மறத்தலும்

ஏனைய தேவரை நினைத்தலும் ஆகாது எனவும், அதனால் அவன் தன் மரபிற்கும் மூலமாயிருந்து தனக்குச் செய்த மேம்பாட்டை நினைந்தார் எனவும், அதனால் தம்முடற்பற்றால் வரும் மயக்கங்களை அறுத்தான் எனவும், அங்ஙனம் செய்யாவிடின் மேன்மேலும் பிறந்து நோயுற்று மூத்து இழிந்த உலகியல் இன்பங்களை வெஃகிக் கெடல்வேண்டும், அங்ஙனம் கேடடையாவாறு தாய்போல வந்து ஆண்டான் என நினைந்தார் எனவும், இவற்றிற்குக் காரணம் அவன் கருணையே யன்றி வேறொன்றும் இன்று எனவும், அதனால் அவன் தன்னைப் பாடுவித்தும் உள்ளக்குறை நீக்கியும் குறைப்பணிகளை ஏற்றுக்கொண்டு வருகின்றான் எனவும், இவற்றைச் செய்யினும் என் பால் அன்பென்பது காணப்படவில்லை, அவ்வன்பினை இயல்பாகவே பெற்றுக் குளிர்ந்து கூடுமாறு செய்தல் வேண்டுமெனவும், அங்ஙனம் செய்தலும் பண்டுபோலவே இன்றும் நிகழ்தல் வேண்டுமெனவும், அந்நினைவால் பண்டு ஆட்கொள்ளாக்கால் தாமும் தம் சிந்தையும் இருக்கும் எல்லை எப்புறம் என அஞ்சி அவன் திருவடியை இறுகப் பற்றினர் எனவும், அப்பற்று உறுதியால் தாம் வேறே ஆட்கொள்ளப்படுதல் வேண்டுமெனவும், அதற்கு அவனுக்கும் தமக்கும் இடையேயுள்ள செய்திகளை அவன் திருவடிக் கூடாகவே விண்ணப்பித்தல் வேண்டுமெனவும், அவ்விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்ளக்கூடிய காலம் அவன் மங்கையொடு கூடிப் பகுதிப்பட்டிருக்கும் காலமே எனவும், விண்ணப்பியாது ஒழியினும் அவன் திருவடி எல்லாவற்றையும் தானே அறிந்து அருள் செய்யும் எனவும், அத்திருவடி எவ்வெவற்றை யுணரும் எனத் தமக்கும் அவனுக்கும் பண்டு நிகழ்ந்த இன்பச் செயல்களைப் பகுத்துப் பார்க்கும்போது ஆக்கம் பெற்று இறுமாந்தார் எனவும் உணர்க.

இஃது திருத்தில்லையில் அருளிச்செய்யப் பெற்றதென்ப.

# சிவனோடு ஐக்கியம்

## தரவு கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

பூஏறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த
நாஏறு செல்வியும் நாரணனும் நான்மறையும்
மாஏறு சோதியும் வானவரும் தாம் அறியாச்
சேஏறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ! 1

இது, புரந்தரன் முதலியோரும் நான்மறையும் அறியாத சேவேறு சேவடி அவன் திருவடி என அதன் பெருமை எடுத்தியம்பி அதன்பால் தூதாகச் சென்று ஊதுமாறு கோத்தும்பியைத் தலைமகள் திருவடியின்பால் தூதாக விடுத்தது.

(பொ - ரை ) அரசவண்டே, செந்தாமரை மலர்மீது ஏறிய மரும் நான்முகனும், இந்திரனும், பொலிவு பெற்ற (நான்முகன்) நாவில் ஏறியமரும் கலைமகளும், திருமாலும், நான்கு கூறுபட்ட வேதங்களும், திருமகள் ஏறியமரும் செங்கதிர்ச் சோதியும், விண்ணவரும் ஆகிய அவர்தாம் கண்டறியாத காளையிலே ஏறியூரும் செவ்விதாகிய அடிக்கண்ணே சென்று ஒலித்து அதனை நீ நுகர்வாய் எ - று.

(வி - ரை.) " ஆ ஏறு சோதி " எனப் பாடங்கொண்டு உரைத்தலும் ஒன்று. 'ஆ வேறு சோதி' என்றது, இடபத்தின்மீது ஏறியமரும் சோதிவடி வினளாய சாவித்திரியை எனக் கொள்ளின், அவளே காலையில் இளையள், இளஞாயிற்றின்கண் இருப்பவள், செம்மேனியள், செவ்வாடையள், நான்முகத்தி, அன்னவூர்தியள், அயனைத் தேவனு உடையள், இருக்கு மறை இயம்புவோள், மண்ணுலகத்தின் வண்ணத் தெய்வமாகிய காயத்திரி யாகவும், நடுப்பகலில் கன்னிமை கனிந்தவள், உச்சிக்கதிர்மண்டிலம் நச்சியிருப்பவள், வெள்ளை மேனியள், வெள்ளையாடையள் முகந்தோறும் கண் மூன்றுடைய ஐம்முகத்தள், விடைமேல் அமர்வோள், உருத்திரன் காதலி, எசுர்மறை இயம்புவோள், பரம்பொருள் தேவியாகிய சாவித்திரி என்னும் தானும், மற்றிவளே மாலையில் வீழ்கதிர்மண்டிலம் விழைந்து வீற்றிருப்போள், பெரியோள், கருமேனியள், காருடையாட்டி, நான்கு கையொடு ஒருமுகம் கொண்டவள், கலுழனை ஊர்வோள், மால்விழை செல்வி, சாமம பாடும் ஏமச் செல்வி, சுவர்க்கத் தேவி எனும் சரசுவதியாக வும் இருத்தலின், காயத்திரி நான்முகன் தேவியாகவும், சாவித்திரியே இறைவன் தேவியாகவும், சரசுவதி திருமால் தேவியாகவும் கொள்ள வேண்டுதலால், அது பொருந்தாதாக, விடையின்மேல் ஏறியிருக்கும் சோதியாகிய சந்தியாதேவி எனப் பொருள் கொள்ள நேரிடும். அங்ஙனம்

கொள்ளினும், சந்திரா தேவியையும் பிரமத்தையும் வேறு வேறாக மறைமுடிபு காணுமையின், 'ஆவேறு சோதியும் தாமறியா' என்றல் இருக்குமாதலின், "மாவேறு சோதி" எனவே பாடங்கொண்டு திருமகளாகக் கொள்ளுதலே அடிகள் திருவுளம் போலும். திருமகள் சூரிய சந்திரர்களிடம் சோபையாக விளங்கி வருவோள் ஆதல்பற்றி மாவேறிய சோதியும என்றருளினர் எனினும் ஒக்கும். இவ்விரண்டுடன் அக்கினியிடும் அவள் ஒளி வடிவினளாய் வீற்றிருத்தலின் அக்கினியுமாம். சுவர்க்கம், அரசு, இல்லம், ஆன், குதிரை, யானை, தேர், வீரம், செல்வம், கல்வி முதலாய எல்லாவற்றின்கண்ணும் அவ்வவற்றின் விளக்கமாக வீற்றிருப்பவளாகலான் அவளேறிய அவ்வவ்விளக்கங்களுமாம். இங்ஙனம் கூறினுரேனும் அவ்வவ்விளக்கங்களாக ஏறிய திருமகள் என்பதுவே கருத்தாகக் கொள்க.

இனி, "மா" என்றதற்குக் குதிரை எனப் பொருள்கொண்டு திருமாலாற் குதிரையாகுக எனபபட்டமையால் குதிரை உருவத்தில் ஏறியவள் என உரைப்பினும் அமையும் இவ்வரலாறு தேவிபாகவதத்திற் காணப்பட்டது. ஆராய்நது ஏற்பன கொள்க. மாவென்னும் பல பொருள் ஒரு சொல்லை ஈண்டுக் கூறி மயங்குமாறு வைத்தது எறறுக்கென மயங்கற்க, உய்த்துணர்தற்கு இலேசாகச் சுருங்க ஈண்டு அமைந்திருத்தலால்.

அயன் முதலியோர், இறைவன் திருவடியின் சிறப்புணர்ந்திருப்பரேல், அவர் தங்கள் தங்கள் பதங்களை மோகித்து ஆடசி செய்யாராகி இறைவன் திருவடிக்கண் அடைக்கலம் புகுந்திருப்பர். அங்ஙனம் அவர் செய்யாது அவமே போயினமையால் அவரால் திருவடிச் சிறப்பு அறியப்பட்டிலது. அவரையும் அவரை உள்ளிட்ட ஏனையோரையும் நம்பியிருந்த அறத் தெய்வமே அதன் சிறப்பினை இறுதியில் உணர்ந்துகொண்டு சேவடி கொண்டு அவன் திருவடியைத் தாங்கிற்றென்க. இதனுல் திருவடியின் சிறப்பறியாத அயன் முதலியோர் அழிவு பெற்றமையும், அறத்தாலே ஊழி இறுதியிலே அறியப்பட்டு உயர்ந்தமையும் எடுத்துக்கூறித் தும்பியை அதன்கண் ஆற்றுப்படுத்தியவாறு காண்க. ஈண்டுத் தும்பி என்றது மனத்தைப்போலும்.

உருத்திர கணங்களையும் அங்ஙனம் வேறுபடுத்துக் கூறும் வழக்காறு அடிகள் கொள்ளாமையும் ஈண்டுக் கருதற்பாலது. ஸ்காந்தத்தில் வீரபத்திரர் திக்குப் பாலகர்களைத் தாக்கியபோது ஈசானனைத் தாக்காது விட்டதும் சிநதிககற்பாலது

நான்ஆர்என் உள்ளம்ஆர் ஞானங்கள்
ஆர்என்னை யார்அறிவார்
வானோர் பிரான்என்னை
ஆண்டிலனேல் மதிமயங்கி

ஊன்ஆர் உடைதலையில்
　　உண்பலிதேர் அம்பலவன்
தேன்ஆர் கமலமே
　　சென்றூதாய் கோத்தும்பி 2

இஃது, இறைவன் என்னை ஆண்டிலனேல் யான் எத்தகையேன் ஆவேன்? என் உள்ளமும் அறிவும் எத்தகையனவாகும்? என்னை அறிவார் யாவர்? என்னையும் என் இயல்பினையும் அவன் ஆண்டமையால் யான் இன்னவற்றையெல்லாம் எய்தினேன். ஆதலால் நீயும் சிறப்படைய அவனுடைய திருவடிக் கமலத்தின் கண் தூதாகச் சென்று ஊதுதி என அவர் அதனை விடுத்தது.

(பொ - ரை ) அரச வண்டே, தசை நிரம்பிய உடைந்த நான்முகனது தலையோட்டினை (உண்கலமாகக் கொண்டு) அதன் கண் உண்ணுதற்குரிய பிச்சையை நாடிச் சேர்த்துக்கொள்ளும் அம்பலத்தின்கண் உள்ளவனாகிய விண்ணவர் தலைவன், என்னை முன்னே ஆண்டுகொண்டான் இல்லையேல், இன்னே மயக்கமுற்றேறனாகிய யான் எத்தகையேன் ஆவேன்? என் உள்ளம் எத்தகையதாகும்? என்னுடைய அறிவுகள் எத்தகையனவாகும்? என்னை அறிந்து உவந்து கைக்கொள்வார் எத்தகையவராவர்? (நீயே ஆராய்ந்து பார்த்துக்கொள். ஆதலால் நீயும் என்னை ஒத்து நன்னெறி பெற) அவனுடைய (ஆனந்தத்) தேன் நிரம்பிய (திருவடியாகிய) செந்தாமரைக் கண்ணே தூதாகச் சென்று (அதனை) ஊதுவாயாக எ - று.

(வி - ரை ) மதி மயங்கி – அறிவு மயங்கி. தலைமகள் இங்ஙனம் தன்னைக் கூறிக்கொண்டாள். இனி "மதிமயங்கி" என்றதனைப் பெயராகவே கொண்டு பிரமன் என்றலுமாம். நான்முகன் தலைகிள்ளப்பட்ட வரலாறு வெளிப்படை.

'யார்' என்பது "நான்ஆர் என் உள்ளம் ஆர் ஞானங்கள் ஆர்" என மருவியதும், அஃது உள்ளம் ஞானம் என்னும் அஃறிணைப் பொருட்களின் கண்ணே பயின்றுவந்ததும் 'புதியன புகுதலாம்' என்க. தன்னை இப்போது அறிவார் அன்பராகவும், ஆளாவிடத்து அறிவோர் அன்பரல்லாத பிறராகவும் உட்கொண்டு "எனனை அறிவார் ஆர்" எனக் கூறிய படி. ஈண்டு 'யாரெனவும்' "ஆரெனவும்" கொள்ளற்கு இடனுண்டேனும் முன்னும் பின்னும் ஈண்டும் அடிகள் வழக்காற்றினை நோக்கில், ஈண்டும் "ஆரெனவே" கொண்டு அதனையும் புதியன புகுதலாகக் கொள்ள வேண்டுதல் புலனும்.

"அம்பலவன்" என்றமையால் கூத்தயர்வோன், தனக்கென ஒரிடம் இல்லாதவன் என்பன கொள்க.

"வானோர்பிரான் என்னையாண்டிலனேல்" என்பதன் குறிப்பால், தமது செய்நநன்றியறிதலைக் கிளந்து விண்ணப்பம் செய்யுமாறு அதற்குச் சொன்னாள் எனவும் கொள்ளலாம்.

முந்திய திருப்பாட்டில் அயன் முதலியோரால் அறியப்படாத திருவடி என அதன் சிறப்புரைத்து இதனால் அதனையுடையானது எண்பதம் சான்ற இயல்பு கூறப்பட்டது. இனி அயன் முதலானோர் அத்திருவடியை மதிமயங்கி இகழ்ந்தமையால் எய்திய ஏதங் கூறப்பட்டதென்றோ, யானே அன்றி நீயும் அதனைப் போற்றாவிடில் வரும் ஏதம் இதுவெனக் குறிப்பிற் புலப்படுத்தப்பட்டதென்றோ, முன்னர்க் கூறிய அரிய அறத்திற்குச் சார்பிடமான திருவடிக்கண்ணே அழியாத இன்பத்தேன் உளது எனக் குறிப்பிற் புலப்படுத்தப்பட்டதென்றோ கொள்ளினுமாம். அடுத்த திருப் பாடலிலே அத்தேனின் இயல்பும், உலகப் பூவின் தேனும் ஆகிய அவற்றின் உயர்வு இழிவுகள் கூறப்படும் என்க.

தம்மை வருமாறு பணிக்கப்பட்டது திருவம்பலமாதலால், அங்குச் சென்று அவனடிக்கண் ஊதுக என இடத்தினையும் இடத்தில் வீற்றிருப் போனையும் அதனுக்கு உரைக்குமுகத்தால் "அம்பலவன்" என அருளப் பட்டது. அவ்வம்பலவன் எண்பதத்தன், பலியேற்க யாண்டும் திரியும் இயல்பினன் ஆதலால் அவனை அன்னன் என்று இகழற்க என்றும், அவன் யாண்டும் செல்கினும் அம்பலத்திற்கே வந்து சேரும் இயல்பினன் என்றும் அவன் இயல்பினை நன்குணர்த்தியவாறு காண்க.

இத்திருப்பாட்டினும் ஆறும் திருப்பாட்டினும் முதலடிகளிலே ஐந்து சீர்கள் பயின்று வந்துள்ளன, இவையெல்லாம் தரவு கொச்சகங்கள் ஆயினமையால்.

**தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே**
**நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்**
**அனைத்தெலும்(பு) உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்**
**குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 3**

இது, நீ தினையளவுள்ள இப்பூவினை ஊதுதலை விடுத்து எப்போதும் எவ்விடத்தும் ஆனந்தத் தேன் சொரியும் திருவடி மலரால் நடிப்போன்கண்ணே தூதாகச் சென்று ஊதுமாறு அதனை அவள் விடுத்தது.

(பொ - ரை.) அரச வண்டே, இப்பூவிலே ஒரு தினை அளவாக உள்ள தேனை விரும்பி உண்டு உழலாது, தன்னை நினைக்குந் தோறும், நினைத்துப் பேசுந்தோறும், பேசி அதன்பாற் சென்று காணுந்தோறும், அங்ஙனம் நினைத்தலும் பேசுதலும் காணுதலும் அற்ற ஏனை எக்காலத்திலும், உடம்பின்கண்ணுள்ள எல்லா எலும்புகளும் இளக, இன்பத் தேனைச் சொரியும் (மலர்த் திரு

வடியால்) திருக்கூத்தயர்வோன்பால் (தூதாகச்) சென்று அவன் திருவடிமலரை ஊதுவாயாக எ - று.

(வி - ரை ) உலகினுள்ள பூக்களில் தினையளவு தேனே உள்ளது. பல பூக்களிலும் சென்று சென்று ஊதினும் பனையளவு பெற்றுக்கொள்வதற் கிலலை. அஃது உண்ணப்பட்டபோதே இனிக்கும் பெற்றியது. மலத்தினை மட்டும் நெகிழ வைப்பது. இறைவன் திருவடிமலரோ நினைப்பினும், நினையாதொழியினும், பேசினும், பேசாதொழியினும், காணினும், காணுதொழியினும இனிப்புடையது. அம்மலர்கட் சென்று ஊதின் போதிய அளவிறகுப் பலகோடி மடங்கு தேன் சொரிவது. எலும்பினையும் நெகிழச் செய்து நலந்தரும் ஆற்றல் வாய்ந்தது. இத்தேனே இன்ப மயமானது என்றறிக. மலர்த்தேன் காரணங் குறைபடில் அதன் காரியமாகிய இன்பம் வற்றித் துன்பம் பெருக்குவது. இஃது அன்னதன்று.

தினை அளவு. தினை சிற்றளவுக்கும் பனை பேரளவிற்கும் உரியன.

" தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்." (குறள். 11-4 )

உலகியல் இன்பம் முதற்கண் இன்பமாகத் தோன்றிப் பின்னர்த் துன்பமாக முடிவதென்பதும், வீட்டியல் இன்பம் என்றும நிலைபெற்று வற்ருது முற்றி வருவதென்பதும் இதனுல் தெரிக்கப்பட்டன.

ஆனந்த வெள்ளத்து அழுந்தும்ஓர் ஆர்உயிர் ஈர்உருக்கொண்டு
ஆனந்த வெள்ளத் திடைத்திளைத் தால்ஒக்கும் அமபலத்சேர்
ஆனந்த வெள்ளத்து அறைகழ லோன்அருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளமவற் ருதுமுற் ருதுஇவ் அணிநிலத்தே (திருக்கோ. 307.)

எனனும் திருப்பாட்டானும இத்தேன் பெருமையை அறிநதுகொள்க.

இங்ஙனமாதலால், தும்பீ, நீ இப்பூவினை விடுத்து அப்பூவினை ஊதுதி என அறிவுறுத்தியவாறு காண்க. தான் கூறுவதில் கருத்துககொள்ளாது மேலும் மேலும் பூக்களை அவாவி நாடிக்கொண்டே நிறகும் துமபிக்கு இங்ஙனம் கூறினுள் என்க. குனிப்பு - கூத்து. ஆனந்தத் தேன் சொரியும் கூத்து - ஞானக்கூத்து. உனக்குப் பயன் கிட்டுவதோடு எனக்கும் பயன் கிடைக்கும் என்ருள் என்க.

**கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்**
**என்அப்பன் என்ஒப்பில் என்னையும்ஆட் கொண்டருளி**
**வண்ணப் பணித்தென்னை வாஎன்ற வான்கருணைச்**
**சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 4**

இஃது, அன்பிற் பெரியாரையே ஆட்கொள்ளுதல் அவனது பெருமைக்குத் தக்கதாக இருப்பினும், அன்பென்பதுவே இல்லாத என்னையும் ஆட்கொண்டு, அதன்மேலும் என்பிழை கண்டு வெரு து வா என்று அழைத்து ஆட்கொள்ளும் பெற்றியுடையான் கண்ணே தூதாகச் சென்று ஊதுமாறு அதனுக்கு அவள் கூறியது.

(பொ - ரை) கண்ணப்ப நாயனருக்கு ஒப்பாகிய அன்பு இவ்வுலகில் எவர்மாட்டும் இல்லாமை கண்டவிடத்து (அப்பொருளை ஒருவரக்கும் செய்தல் தகாமையால் வாளா இராது) எனக்கு அப்ப னுவான என்னும் ஒப்புரைக்கேனும் அன்பு இல்லாத என்னையும் வலியவந்து ஆளாக ஏற்றுக்கொண்டருளி, இனமாகச் சிறப்புப் பெறக் கட்டளையிட்டு, என்னைத் (தில்லையம்பலத்திற்கு) வாவென்று சொன்ன சிறந்த அருளையுடைய பொன்போன்ற திருமேனியிலே பொடியாகிய திருநீறு பரக்கப் பூசியவன்பால் தூதாகச் சென்று அவன் மலரடியை ஊதாய் எ - று.

(வி - ரை.) இறைவனுடைய ஆட்கொள்ளும் பெருமையும், அங்ஙனம் ஆளப்படுதலை ஏற்றுககோடற்குரிய கண்ணப்பனுடைய அன்பின் பெருமையும ஆகிய அவ்விரண்டும தக்கனவாகும. அவனை ஒழித்து ஏனையவரை ஆட்கொள்ளுதலும், ஏனையோர் ஆட்கொள்ளப் படுதலும் முறையாகா என்பது கருதிக் "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு" என்றருளினர். பின்னும் பின்னும் பலரையும் அவன் ஆட் கொள்ளுதல் அவனது அருள்மடத்தையே காட்டாநின்றது என்பது குறிப்பு. இது முன்னும் பின்னும் பெறப்படும்.

"என்னப்பன்" என்று ஒப்புரையாகச் சொல்வதற்கும் அன்பில்லா என்னை என்க. "இல்" என்றதறகேறப அன்பென்பது வருவித்துரைக்கப் பட்டது.

கண்ணப்பனை ஆண்டபின், அவன்போன்ற அன்புடையார் ஒருவரும் இவ்வுலகத்திலலாமையால் அவன் கருணை என்மாடடும் வருவதாயிற்று. பயிர்த்தொழில் செய்வோன் அளவிறந்த பயனைத்தரும் பயிரினஙகளை அவற்றுக்கு வேண்டிய நீர பசளை ஆதியன தந்து, இடையூறு விலக்கி ஓமபிப் பயன் பெற்றுக்கொண்டவன, அவை போன்ற பயிர்கிடையா மையினலே பின்னர்ச் சிறிதும் பயன் தராதபடி கெடடுப்போன அவ் வினத்தைச் சார்ந்த பயிரகளையும் முன்னையவற்றுக்குச் செய்தவாறே செய்து வாழ்க்கைக் கடமையின் பொருட்டு ஏதோ கிடைத்தவற்றைக் கொண்டு முயல்வோம் எனக் கருதி ஓமபுதலபோல எனக் கொள்க.

ஆண்டருளிய பின்னும் ஏற்ற செவ்வி பெறற்கு ஆவன முயலாது குறைவுபாடு கண்டவிடத்தும் "தில்லைக்கு வா" என்றருளிய கருணை "வான்கருணை" எனப்பட்டது. முன்னர அருளியது 'கருணை'யாகும்; பின்னர வா வென்றது 'வான்கருணை'யாகும் என்க.

இதனல் அறிவும் ஆற்றலும் இல்லாரை அவன் ஒறுக்காது அருள் பாலிக்கும இயல்புடையான் எனபது கூறப்பட்டது. இரண்டாவது திருப் பாட்டிலே நான்முகன் ஒறுக்கப்பட்டான் என்பது, அறிவும ஆறறலும் உடையானகி இகழ்ந்தமையால் அவன் ஒறுக்கப்பட்டான் என்பது கூறியருளினர்.

வண்ணம் - இனஞ்சாரும் சிறப்பு. பணித்தல் - கட்டளையிடுதல்.

பொன்மேனியிலே பூசப்பட்ட வெளிதாகிய திருநீறு அப்பொன் வண்ணத்தையும உடன்கொண்டு ஒளிவிசுமாதலால், அதனைச் சுண்ணப் பொன்னீறு என்றருளிச் செய்தார். திருநீறு எல்லாவற்றின் அழிவையும் தனது அழியா நிலையையும் அறிவுறுத்திக் காப்பாக அழகு செய்து அன்பர்க்கு அமைவதென்க. அடியாருள் உயர்ச்சி பெற்ற கண்ணப்பரை முதலாகவும் அவருள் மிக இழிந்த தம்மையும கூறியமையால் இடைப்பட்ட வராவர் ஏனையோர் என உய்த்துணர்க.

அத்தேவர் தேவர் அவர்தேவர் என்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேதும் இல்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 5

இது, பொய்த்தேவு பேசி உலகினையாதல், உண்மைத் தெய்வத்தையாதல் பற்றிக்கொள்ளாது தனித்து வருந்தும் பரிசினையுடைய இவ்வுலகிலே யான் உலகின் பற்றுக்கள் நீங்கப் பற்றி நிற்கின்ற உண்மைத் தெய்வத்தின்பால் தூதாகச் சென்று ஊதுமாறு அதனுக்கு அவள் சொல்லியது.

(பொ - ரை ) அரச வண்டே, அறுவகைப்பட்ட சமயத்தவரும் அவர்வழி நின்றவரும் எம்மால் அறியபபட்ட அந்தத் தேவர்களுக்கு எல்லாம் (மேம்பட்ட) அவரே எம்மையலலாத உமக்கும நீயிர் வழிபாடு செய்துவருகின்ற உம்முடைய தேவர்களுக்கும் தேவர் ஆவார் என்று இவ்வகையாகவே கடவுளியல்பு இல்லாத கடவுளைப் பற்றிப் பேசி (இம்மை மறுமை என்பவற்றுள்ளே) ஒன்றனையேனும் பற்றிக்கொள்ளாது தனித்து நின்று வருந்தும் இயல்பினையுடைய இவ்வுலகத்திலே நான் அன்பு சிறிதும் இல்லாது என்னுடைய பற்றுக்கள் அற்றுப்போகப் பற்றி நிலைப்பட்ட உண்மைத் தேவர் களுக்குத் தேவனாகிய மகாதேவன்பால் (தூதாகச) சென்று (அவன் திருவடி மலரை) ஊதாய் (என்று அதனுக்கு அவள் சொன்னாள்) எ - று.

(வி - ரை.) அந்தத் தேவர் எல்லார் தமக்கும் அவரே தேவர் ஆவார் ஆதலால் அவரே "தேவர்" ஆவார் என்க. இவரே தேவர் ஏனையோர் புனைந்துரைக்கப்பட்டவரேயன்றி, உண்மையானவர் என்றுதல், ஏனையோர் உயிர்கள் எனருதல் இங்ஙனமே இவ்வுலகம கூறும் என்க. உலகப்பற்றை விடுதற்கு மெய்த்தேவனைப் பறறுதல் இன்றியமையாதது ; இரண்டுமிழந்து தனித்தாராகி வருந்துவர் என்றபடி.

"பொய்த்தேவு" என்றது புனைந்துரைக்கப்பட்டதாதல், இல்சிறப்பு ஏற்றப்பட்டதாதல் போன்றதை. புலம்புதல் - தனிப்பட்டு வருந்துதல். புலம்புதலே இப்பூதலத்திற்கு இயல்பாயிற்று என்க. இதன்கண் யானே பேறு பெற்றேன் என்றபடி. பூதலத்தே அன்பின்றி அவ்வின்மையால் என இருவகைப் பற்றுக்களும் அற என்க. பூதலத்தே பற்றேதும் இல்லாதாரே பற்றறுக்க வல்லவர் என்க. இறைவனைத் தமக்குத் தலைவனாகக் கொண்டும், அவனால் நிறுவப்பட்ட தம்மிற சிறந்த தலைவர்க்கும் அடங்கி ஒழுகியும வருவோர் எல்லாரும் மெய்த்தேவர் எனப்படுவர் என்க. "தேவ தேவன்" என்பது இறைவறகு ஒரு திருப்பெயராகும்.

இதனாற் சிற்றின்ப உலகினை விடுவோர் பற்றி உய்தற்குரிய நெறி யாதாகும எனக் கிளக்கப்பட்டது. இதனால் பொய்த்தேவர்பால் சென்று ஊதியக்கால் வரும் கேடும், மெய்த்தேவன்பால் சென்று ஊதியக்கால் வரும் ஆக்கமும் கூறப்பட்டன.

இங்ஙனம் பொய் எனவும் மெய் எனவும் வகுத்தோதியது கொண்டு, முடிந்த முடிபு இதுவே என்று செவ்வியற்றாரும் அதனைப் பற்றிக்கொண்டு ஏனையவற்றை இழித்தலும், இவர்க்கு மாறாக ஒருசில செவ்வியற்றார் சமரச ஞானம் ஓதுதலும் அடாதன என்க. அறுவகைச் சமயங்களும் படிமுறையானே அனுட்டித்து மேலும்மேலும் உயர்ந்து செவ்வி பெறுமாறு அவ்வச்செவ்வியுடைய உயிர்ப்பன்மைகள்பொருட்டு வகுக் கப்பட்டவை. பாடசாலைகளில் வகுக்கப்பட்டிருக்கும் வகுப்புக்களும், அவ்வகுப்புக்கேற்ப உணர்த்தும் ஆசிரியர்களும்போல இவ்வறுவகைச் சமயமும் பரம்பரையுடையன என்க. ஒரு பரம்பரையிலுள்ளார் செவ்வி பெற்றுத் தம்மை அறியாமலே மேலுயர்தலன்றி ஒரு பரம்பரையிலுள்ளார் மற்றொரு பரம்பரையிலுள்ளார் நெறியை அவாவுதலும், தம்முள் முரண் பட்டு வாதித்தலும் அறியாமையின்பாலன. பாடசாலையில் ஒரு வகுப்பி லுள்ளார் மற்றொரு வகுப்பிலுள்ளாரோடு உயர்வு தாழ்வுபற்றி முரண்படா ரன்றே? கீழ் வகுப்பிலிருந்து மேலே உயர்வடைநதோர் கீழ்வகுப்புப் பாடங்களும், உபகரணங்களும் ஆதியவை தாமிருக்கும் நிலையை நோக்கப் பயன்படாதும் பொய்யாயும் இருநதாலும் அங்ஙனம் மதியாது, தாம் அவற்றை விலக்கி, அதற்குரிய செவ்வியுடையாரை அவற்றின்கட் செலுத்துவர். இதுவே சமரசம் என்க. அடிகளின் நுண்கருத்தும் இதுவேயாகும். அறுவகைச் சமயநெறி நின்றாரும் தம்முள் மாறுபட்டுச் சொற்போராடி வருதலின், அவர் தம்மைத் தாமே நிலைநிறுத்தற்குக் கொண்ட தெய்வங்களும் தம்மாட்டில்லாது சொல்லளவில் போதலால் "பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலம்" என்றார்.

பத்து - பு; தொண்டு 'பக்தி' என்னும் வடசொல் ஈண்டு விகாரப் பட்டு நின்றது.

வைத்த நிதிபெண்டிர் மக்கள்குலம் கல்வியென்னும்
பித்த உலகிற் பிறப்போடு இறப்பென்னும்
சித்த விகாரக் கலக்கம் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பி ! 6

[குறிப்பு இத்திருப்பாட்டின் முதலடி சிலர் கொண்டது போல் ஐஞ்சீரடி ஆகாது என்க ]

இது, நிதி மனைவி மக்கள் குலம் கல்வி என்னுமிவைதம்மேல் மயங்கும் மயக்குநோய் கொண்ட இவ்வுலகிலுள்ள பிறப்பு இறப்பு என்னும் மனத் திரிபினைத் தெளிவித்த அறிஞனாகிய இறைவன்பால் தூது சென்று ஊதுமாறு அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை ) அரச வண்டே, தேடிவைத்த செல்வம் மனைவியர், மக்கள், குலம், கல்வி என்னும் இவை தம்மில் மயங்கும் மயக்க நோய் மிக்க இவ்வுலகின்கண்ணே பிறத்தலோடு இறத்தல் என்னும் மனவேறுபாடாகிய குழப்பத்தைத் தெளியச் செய்த அறிஞன் கண்ணே (தூதாகச்) சென்று (அவன் மலரடியை) ஊதுவாயாக எ - று.

(வி - ரை.) நிலையற்றுத் துன்பந் தரற்பாலவாகிய நிதி முதலாய வற்றிலே மனத்தை அழுந்தச் செய்து, முன்னர் இனியவைபோலக் காட்டிப் பின்னர் அவற்றால் இன்னாமை உளதாக்குதலால், இவ்வுலகியல்பைப் "பித்த வுலகம்" என்றும், இத்தகைய இழிந்த உலகிலே பிறந்து அந்நிலையற்ற இன்பத்தை உடையவற்றிலே மனமழுந்திப் பின்னர் அவற்றை இழத்தற்கண்ணும், இடையே விட்டுவிட் இறத்தற்கண்ணும் உளவாகும் போலி மயக்கமெல்லாம் மனத் திரிபாகிய கலக்கத்தாலாகியனவாதலால் "பிறப்போடு......கலக்கம்" என்றும், அக்கலக்கத்தைத் தெளிவித்த பேரறிஞன் ஆதலின் "வித்தகன்" என்றும் அருளிச்செய்தார். வித்தகன் - மெய்யறிஞன் ; அறிவுக்கடவுள். எனக்கு அவன் அருள் காரணமாகத் தெளிவித்தான் என்க. யான் பற்றிய கடவுள் அருளும் அறிவும் உடைய கடவுள் என்றபடி.

மன மயக்கத்தை உலகத்தின்மேலும், மனோவிகாரத்தால் உளவாகும் பிறப்பிறப்புக்களை மனத்தின்மேலும் ஏற்றிக் கூறினார் ; அவற்றிடையே அது நிற்றலால்.

சட்டோ நினைக்க மனத்தமுதாம் சங்கரனைக்
கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை
ஒட்டாத பாவித் தொழும்பரை நாம் உருவறியோம்
சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 7

இது, நினைக்க அமுதாம் சங்கரனை யான் மறப்பேனோ? மறவேன். அதற்கேற்ப அவன் திருவடியை ஒட்டிப் பணி செய்யார் உருவினையும் அறியேம். நீ என்னால் அறியப்பட்டனையாதலால் அவன்பால் தூதாகச் சென்று அவன் அடிமலரை ஊதாய் என அவள் அதற்கு உரைத்தது.

(பொ - ரை.) அரச வண்டே, (என்னுடைய வறந்த) உள்ளத்தே சட்டென நினைக்க அமுதமாக ஊற்றெடுக்கும் சங்கரனை, முன்னரே கெட்டறிந்தவனாகிய யான் பின்னும் கேடடையுமாறு மறத்தலைச் செய்வேனோ? (செய்யேன் என்றபடி ) யாம் அவனுடைய கெடுதலைச் செய்யாத தானும் கேடுபடாத திருவடியை (அன்புடன்) ஒன்றுபடாத தீய எண்ணத்தையுடைய இழிந்தோர் வடிவத்தையும் அறிதலைச் செய்யோம் (ஆதலால் நமக்கு அருளும்) பெருமை கொண்ட பெரியோன்பால் தூதாகச் சென்று (அவன் அடிமலரை) ஊதாய் எ - று

(வி - ரை.) சட்டு - விரைவுக் குறிப்பு. பொருளையன்றிச் சங்கரன் என்னும் சொல்லைத் தானும் மனத்தால் நினைக்க அமுதமாம் என்றபடி. "நோயுள்ளார் வாயுள்ளார்" என்பவாதலால் நோயுள்ளபோது தானாகவே அவன் நாமம் மனத்திலே எழுந்து வாயளவும் செல்லாது அங்கேயே அடங்கி நின்றதேனும், அதனாலும் அவர் நோயாகிய நஞ்சினைப் போக்க வல்ல அமுதம் ஊற்றெடுக்கும் என்றபடி. இதனால் நினையாதார் மனத்திலே அச்சொல் தானே எழுந்தாலும் நற்பேறு எய்துவிக்கும் என்றருளிச் செய்தார். 'சங்கரன்' என்னும் வடசொல் சுகத்தைச் செய்பவன் என்னும் பொருளுடையது. 'சிட்டம்' என்னும் வடசொல்லும் பெருமை என்னும் பொருளுடையது. சிட்டன் - பெரியோன். அது மாணாக்கன் எனப் பொருள் படுமிடத்தும் பெருமையுறுவோன் எனவே படும் என்க. பாவித்தல் - எண்ணுதல். தொழும்பர் - இழிந்தோர். திருவடியை ஒட்டாத எண்ணமுடைய தொழும்பராவோர், தாம்தாம் விரும்பிய வைகுந்தம் முதலாய பதவிகளைப் பெறுதற்பொருட்டு, அத்திருவடியிலே ஒன்றுபட்டு அடங்குதற்கு மனமில்லாமையால், அவ்வன்பு நெறியை விடுத்துக் காமியங் கருதி இறைவன் திருவடிக்குத் தொழும்பு செய்துவரும் திருமால் முதலியோராவார். அவர் அடிமை போலியாதலின் அவரைத் தொழும்பர் எனவும், இறைவனைச் சேரும்பொருட்டு அவர் சார்பாகும் எண்ணமும் இல்லை எனவும் குறிக்கப்பட்டன. 'ஒன்றாத' என்பது "ஒட்டாத" என மருவியது.

அறியோம் என்னும் பன்மை வாசகத்தாலே தம்மொடு தும்பியையும் உடன் அமைத்துக்கொண்டார். நம்மை அவன் பிரிந்தவிடத்தும், நாம் இது போதுற்ற துயர் நீங்கப் பற்றுதற்குரியார் பிறர் ஒருவருமின்மையால் அவனையே நாடி அவன் அடிக்கண் ஊதுமாறு உரைத்தருளினர்.

முன்னரே மறந்து கெட்டறிந்தவராகலானும், பின்னும் மறந்தாங்கே கேடும் உடன் சூழ்தல் ஒருதலையாகலானும் " கெட்டேன் மறப்பேனோ " என்றருளிச் செய்தார். அங்ஙனம் மறவாதபோதெல்லாம் தமக்கினிமையும், மறந்தபோதெல்லாம் இன்னாமையும் பயந்து வருதலால், தாம் மறக்க நினைப்பினும் தன்னை மறவாதவாறு அஃது ஆக்கி வாராநின்றது என்றருளினருமாம். இனி, தாம் இன்னலுறும்போதெல்லாம் தம்மை யறியாதே தம்முடைய மனத்திலே தானே எழுந்து இன்பஞ்செய்துவரும் இயல்பினையுடைய அதனை எங்ஙனம் மறப்பது என்றும் அருளியவாறு மாம். அவனுடைய பிரிவும், அவன் இன்றியமையாப் பண்பும் ஆகிய வையே அன்னவாறெல்லாம நினைக்கவும், கூறவும் செய்தன என்க.

ஒன்றாய் முளைத்தெழுந்து எத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை ஏற்றுவித்த
என்தாதை தாதைக்கும் எம்மனைக்கும் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 8

இது, மேன்மேலும் படைக்கப்படுதற்குரிய என்னையும் குறை வுறுதவகை உளனாக்கி மேம்படுத்தியவன்பால் தூதாகச் சென்று அவன் அடிமலரை ஊதுக என அவள் அதற்கு உரைத்தது.

(பொ - ரை ) அரச வண்டே, பாழாக இருந்த அதுதானே ஒரு பொருளாகத் தோன்றித் தன்னினின்றும் எவ்வளவோ கிளை களையும் போகவிடுத்து அவற்றால் நலனுறும்படி உயிர்களைக் கரணங் களுடன் ஒன்றுகூட வைத்துக் குணத்தால் நாயினை ஒத்த என்னை யும் உயர்ந்த இருக்கையில் ஏற்றி ஆண்டு இருக்குமாறு செய்த என் தந்தைக்கும் எம் அன்னையர்க்கும் தங்கள் தங்கள் பெருமானா கிய குறைவுபடாத செல்வனாகிய (அந்தக் கற்பகத்தின்பால்) தூதா கச் சென்று (அவனுடைய திருவடி மலரை) ஊதாய் எ - று.

(வி - ரை.) "ஒன்றாய்" என்றது எல்லாவற்றையும் கருவகத்தே கொண்டு உலகின் அப்புறத்தே நின்றதை. "முளைத்து" என்றது சத்தி தத்துவம் முதலாகக் கிளைத்ததை. "கவடு விட்டு" என்றது ஏனைய தத்துவ வேறுபாடுகளை. " நன்றாக வைத்தல் " என்றது, உயிர்க்கு உடல் உறுப்பு உலகு முதலாயவற்றை நுகருங்கால் உண்மை உணர்வும் அறநெறி நிற்ற லும் பற்றி ஞானத்தை உளவாக்கிக் கொடுத்தலை. "நாய் சிவிகை ஏற்று வித்தல் " என்றது, தகாத தம்மை இப்படி முறையானே உயர்ந்த இடத்தில் வைத்ததை. வாளா தாதை என்னின் அயனையும் குறிக்கும். "என்தாதை" என்றலால் அடிகள் தமக்குத் தாதை என்றே குறிப்பிட்டருளியதாகக் கொள்க. எனக்கேயுமன்றி எந்தைக்கும், அவன் தந்தைக்கும் தந்தை என அடுக்கிக் கூறுவதே அடிப்பட்ட அன்பைத் தெரிவித்தலால், தாதை அயன், அவன் தாதை திருமால் என்றல் அத்துணைச் சிறவாது. தம்

முடைய தாயையும் அவள் தாயையும் எனக் குறியாதிருத்தற்பொருட்டு ''எம்மனைக்கும்'' என்றருளிச் செய்தார். எம்மனை - எம்முடைய கோத்திர வழியே போந்த அன்னை. என்னன்னை அன்னைக்கும் தம்பெருமான் எனில், அடிகளுக்குத் தாயும் அவளைப் பெற்றதாயும் என மாறுமாதலால், அங்ஙனம் ஒருமை வாசகப்பட அன்னை மரபினைக் குறித்தருளிற்றிலர்.

குன்றுத செல்வன் - நித்திய ஐசுவரியன். அவனே எங்குல முதல்வன் ஆகிய குன்றுத செல்வன் என்க.

இறைவனை வேற்றுவழிக்கொண்டு அன்பு செய்தலினும் அவனைத் தன் மரபினனாகக் கொள்வது பேரன்பு நெறியும் உண்மையுமாகும் என்க.

'' அன்னைக்கும் '' எனப் பொதுவாகக் கூறியவதனாலே தந்தை தன் தாய் முதலாய பிறர்க்குங் கொண்டுரைப்பதும் ஒன்று. இவ்வாறுயின் '' அன்னை '' யென்பதைச் சாதியொருமையாகக் கொள்க.

**கரணங்கள் எல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன்**
**சரணங்க ளே சென்று சார்தலுமே தான்எனக்கு**
**மரணம் பிறப்பென்று இவைஇரண்டின் மயக்கறுத்த**
**கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 9**

இது, யான் அடைக்கலம் புகுதலும் அப்பொழுதே இறப்புப் பிறப்புக்களினால் உண்டாகும் மயக்கத்தை நீக்கிய அவன்பால் தூதாகச் சென்று ஊதுமாறு அவள் அதனுக்குக் கூறியது.

(பொ - ரை.) அரச வண்டே, அகமும் புறமுமாகிய உடற்கருவிகள் எல்லாவற்றையும் கடந்து அப்பாலாய் நின்ற கருங்கழுத்தை உடையானுடைய திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொண்டு அதன் கண் சார்ந்த அளவில் எனக்கு இறப்பு பிறப்பு என்று சொல்லப்பட்டனவாகிய இரண்டனாலும் உளவாகும் மயக்கத்தை அறுத்த அருட் கடல் போல்வான்பால் நீ தூதாகச் சென்று அவனடி மலரை ஊதாய். (அவ்வாறு ஊதி என்னைப்போலப் பேறு உறுவாய்) எ - று.

(வி - ரை.) முன் ஆறுந் திருப்பாடலால் ''பித்தவுலகிற் பிறப்போடிறப்பென்னும் சித்த விகாரக் கலக்கத்தை'' அறுத்தான் என்றும், எங்ஙனம் அறச் செய்தான் எனின் இங்ஙனம் அறச்செய்தான் என்றும் இத்திருப் பாடலோடு ஒட்டியுரைக்க.

கரணம் - கருவி. கரணங்களெல்லாம் கடந்து நின்றவன், கறைமிடற்றன் என்க. அவற்றகத்தும் நின்ற அவனே அவற்றையெல்லாம் கடந்து நின்றவனுமாவான். உயிர், கரணங்களைக் கொண்டு தனக்கு வேண்டியவற்றை அறிந்து நுகர்ந்து வருமாறு, அறிந்து நுகர்ந்து வருவோனல்லன். எனவே அவனைக் கரணங்களைக் கொண்டு அறிந்து நுகர்தல் இயலாது என்றபடி. அவனை அறிதற்கு வல்லது அன்பு என்பது பெற்றும். அதீ

துணைப் பெருமையும் சேய்மையும் உடையவனேனும் பேரருள் உடையவன் என்பது போதர " கறைமிடற்றன் " என்றருளிச் செய்தார். எல்லாத் துன்பங்களினும் மிகப் பெரியவாய இறப்பு பிறப்பு என்பவற்றை நீக்குதலே எல்லா அருளினும் சிறந்ததாதலால் " கருணைக்கடல் " என்றருளிச் செய்தார். இறப்பு இன்றேல் பிறப்பில்லையாதலானும், பிறப்பினும் வாணுள் முழுதினும் கவலையையூட்டி வரும் இயல்புண்மை தோன்றலானும் பிறப்பு மரணம் என்னுது மரணம் பிறப்பென்றருளினுர். கருணையாகிய அமுதத்திற்கு இடமாகிய கடல் எனினும், கருணையாகிய கடல் எனினும் ஒக்கும்.

சரணம், அடைக்கலம் புகுமிடமாகிய திருவடி.

பிறப்பிறப்புக்களின் மயக்கறவே அவற்றுட்பட்ட செல்வம் மனை குலம் கல்வி என்பனவும் அறப்பெற்றன என்க. ''மயக்கு'' என்பதற்குக் கலப்பெனப் பொருள் கொள்வாருமுளர். நாய் சிவிகை ஏற்றி இங்ஙனம் ''மயக்கறுத்தான்'' என்றபடி. தும்பீ, நீயும் அவன் சரணங்கள் சார்ந்து ஊதி மயக்கறுதி என அறிவுறுத்தியவாறும்.

நோய்உற்று மூத்துநான் நுந்துகன்றுய் இங்கிருந்து
நாய்உற்ற செல்வம் நயந்தறியா வண்ணம்எல்லாம்
தாய்உற்று வந்தென்னை ஆண்டுகொண்ட தன்கருணைத்
தேய்உற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 10

இஃது, இவ்வுலகிலுள்ள புல்லிய செல்வத்தை நுகர்ந்து நோய் கொண்டு மூத்து ஒதுக்கப்படாமல் என்னைத் தாய்போல வந்து ஆண்டுகொண்ட செல்வன்பால் தூதாகச் சென்று அவனடி மலரை ஊதுமாறு அவள் அதற்குக் கூறியது

(பொ - ரை.) அரச வண்டே, தாயினுலும் ஒதுக்கப்பட்ட கன்றைப்போல நான் இவ்வுலக வாழ்விலே நிலையுற்றிருந்து பிணியுற்று மூப்படைந்து நாய்க்குத்தான் உரித்தாகுமென இழித்திடப்பட்டமையால் அதன்மாட்டுற்ற செல்வத்தில் யான் ஈடுபட்டு அதனை நயந்து அதனுல் வரற்பாலவாய இன்னல்களை அறியாத வகையெல்லாம் பெற்ற தாயின்பால் அமைந்த இரக்கத்தினைத் தான் உற்றுத் தானே என்பால் வந்து என்னை ஆண்டுகொண்ட (அவன் தன்னுடைய) அருளாகிய ஒளியுடைய செல்வன்பால் தூதாகச் சென்று ஊதாய் எ - று.

(வி - ரை.) முன்னர்த் திருப்பாட்டால் மயக்கறுத்தவாறும், இத் திருப்பாட்டால் தாம் வீணுக ஆளப்பட்டவாறும் கூறியபடி. மயக்கறுத்து ஆளப்படாவிடில், செல்வம் மனை முதலாயவற்றினை நயந்து, பிறப்பிறப்பால் அல்லலுற்று, ஈற்றில் உறவினராலும் ஒதுக்கப்பட்டு உழலுதல் வேண்டும் என்றருளிச் செய்தார்.

நுந்துதல் - தள்ளப்படுதல். புரப்போர்களேயன்றித் தாயாலும் உய்யாது எனக் கண்டு ஒதுக்கப்பட்ட கன்றென்க. "நோயுற்று" என றருளிச் செய்தார், இளமை கழியுந்தோறும் வாழ்க்கையாலுளதாகும் முனிவாலும், பிறவற்றாலும் நேரிடுதலால். இயல்பாகவே மூவாது நோய் காரணமாக மூப்புறூ என்றுமாம். இங்கிருத்தலால் உளவாம் பயன் இவையேயாம் என்க.

இழிந்த உணவும் இடமும் முதலாயவற்றை விரும்புவது நாய் ஆகலால் அது நயந்த செல்வமே உலகச் செல்வமும் என்பதுபட "நாயுற்ற செல்வம்" என்றருளப்பட்டது. "நயந்தறியா வண்ணம்" என்றதனாலே அதனை வெறுத்தறியும் வண்ணம் என்பதும் பெறப்பட்டது. நாயுற்ற செல்வத்தை நயவாது தேயுற்ற செல்வத்தை அவன் நயக்க வைத்தான் என்க. அதுவே அவன் அருள் என்றவாறு.

'தேஜஸ்,' என்னும் வடசொல் "தேயு" என மருவியது. தேஜஸ் - ஒளி. அது விழையப்படுதல், வன்மையுற்றது என்பவை முதலாய பொருளுடையது. இங்ஙனமாதலின், ஒளியுடைமையால் தன்னை அறிவித்து, என் பால் வந்து, தன்னை விழையச்செய்து, மெலிவு நீக்கி வலியுறச் செய்தது என விரித்துரைத்துக் கொள்க. "தேயு" என்பது குற்றுகரம் போன்று ாறு கெட்டு வருமொழி முதற்கண் உள்ள உயிரேற இடங்கொடுத்தது.

இதனால், தாம் பெறற்கிருந்த அழிவை நீக்கி ஆக்கம் அளித்தவாறு விளக்கப்பட்டது. கன்று நோயுற்று நுந்து கன்றாகிப் பின்னர் மூப்புற்றாங்கு என உவமனுக்கும் இயைத்துக்கொள்க. முனிவே கொள்ளும் இயல்பற்ற பேரிரக்கம் கொண்ட தாயாலும் வெறுத்தொதுக்கத் தக்க அத்துணை நோயுற்றமையால் அஃது அதனை நுந்தியதென்க. இனி, "நுந்து கன்று" என்றது, வளர்ந்த பின்னும் புலம் போந்து புல்லை மேயாது பாலூட்ட வரும்போது தாயால் தள்ளப்பட்ட கன்றுமாம். அங்ஙனமாயின் தாயாகிய இறைவனால் அறிவு முற்றுங்காறும் நுகர்தற்கென அளித்தருளப் பட்ட கருவிகளைக் கொண்டு, அவனால் அறிவு கொளுத்தப்பட்ட பின்னரும் செவ்வி சான்ற அடியவர் ஒப்ப நற்செயலிலே ாடுபடாது, உலகியற்கண் அழுந்தி நின்றமையால் அவனால் அடிகள் தள்ளப்பட்டனர் எனப் பொருள் விரிக்க. [நுந்துகன்று அங்ஙனம் மேய்புலம் சென்று புல்லார்தற்கு வலியும் பயிற்சியும் அற்று அதனால் நோயுற்று வலிகுன்றி வீணாகினாலொப்பத் தாமும் வீணாகாது அவனுடைய தாய்மையால் ஆளப்பட்டனர் என விரிக்க.]

நுந்துகன்றெனத் தம்மை உவமித்துக்கொண்டவாற்றானே தாம் சிறிதே முறையினின்று முரண்பாடுற்றமையும், அதனால் தாம் ஏனைய அன்பரொடு உடன் ஆட்கொள்ளப்படாமையும், அவன் அருளாலே தில்லைக்கு வருமாறு கட்டளையிடப் பெற்றமையும் பெறப்படும்.

மலம் எச்சில் இவற்றை உண்ணல், சாம்பற் குப்பைமீது உறங்குதல் என்றாங்கு இவற்றையே நாய் பெரியவாக மதிக்கும். பேரறிவுற்ற இடத்து இவ்வுலகச் செல்வமும் அத்தகைத்தென உணரலாகும்.

தாம் அருள்பெருவிடில் இழிந்த பொருளைப் பெரியதாக நாய் மதித்து விழைந்து நுகர்ந்தாங்கு தாமும் நுகர்ந்து அது நோயுற்றாங்குத் தாமும் நோயுற்று ஒதுக்கப்பட்டிருப்போம் என்று நினைந்து உருகினார் என்க. நுந்துகன்று பாலும் புல்லும் உண்ணாது நாய் நுகரும் மலம் முதலிய வற்றை நுகரப் புக்காங்குத் தாமும் இறைவன் அருளை நுகராது உலக நுகர் விலே ஈடுபட்டுக் கெட்டிருத்தல் வேண்டும் என்றாங்கும் உரைத்துக்கொள்க.

வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே
கல்நெஞ்சு உருக்கிக் கருணையினால் ஆண்டுகொண்ட
அன்னம் திளைக்கும் அணிதில்லை அம்பலவன்
பொன்அம் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 11

இது, தம்மைக் கள்வன் என்றும் மனவலியன் என்றும் ஒதுக்கி விடக் கருதாது, நெஞ்சை உருக வைத்து அருளால் ஆண்டு கொண்ட அம்பலவன்பால் தூதாகச் சென்று அவனடிமலரை ஊது வாயாக என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை) அரச வண்டே, "இவன் பிறரால் அறிந்து கொள்ளற்கரிய அத்துணை வன்மையான கரவு படைத்த நெஞ்சின னுமாவான் அஃதன்றியும் அக்கரவினை மாற்றற்கியலாத மனத் திண்மையும் படைத்தவனுவான், ஆதலால் இவன் ஒதுக்கப்பட வேண்டியவனேயன்றி ஆளப்படத்தகான்" என்று நினையாது, என்னுடைய கல்போன்ற திண்ணிய மனத்தினையும் உருகச் செய்து, அருள் காரணமாக என்னையாட்கொண்ட, அன்னமானது தன் பேடுகளுடன் விளையாடும் அழகிய தில்லை நகர்க்கண்ணே உள்ள பொதுவிலே கூத்தயர்வோன்பால் தூதாகச் சென்று, அவனுடைய பொன்னாலாகிய (வீரச் சிறப்பு முதலாயின பொறிக்கப்பட்ட) அழ கினையுடைய கழலணிந்த திருவடி மலரை ஊதாய் எ - று.

(வி - ரை.) 'நெஞ்சம் வல் கள்வன்,' என மாற்றுக. புறத்திலே வெளி யன்போலக் காட்டும் அகங் கரியோன் என்றபடி. வஞ்சத்தால் மேம்பட்ட வனை இரக்கத்தால் மேம்படச் செய்தல் இயலாதென்க.

இங்குக் கூறிய இரண்டனுள் ஒதுக்கப்படுதற்கு ஒன்றே அமைவதாக வும், இரண்டனையும் உடன்பெற்றிருப்பவும் அவன் ஆண்டுகொண்டானாதலால், அவனது கருணை என்ற சிறப்பானே அது வான்கருணை எனவே படும் என்க.

"அன்னம் திளைக்கும்" என்றமையால் தாமரைப் பொய்கையும், அதன் கண் ஆண்பால் வந்து மயங்குதலும் கொள்க. அங்ஙனம் கொண்டு, நீர் பிரித்துப் பாலுண்டு தன் பேடோடு மகிழ்ந்து விளையாடும் அழகினை யுடைய தில்லையென விரித்துரைக்க. இன்னும் இதனானே, உலகியலும்,

விட்டியரும் மயங்கிய இவ்வுலகிலே உலகியல் நுகர்வை ஒழித்து விட்டியற் கேதுவாய இறைவன் திருவருள் நுகர்ச்சியை நுகர்ந்துவரும் அன்பரொடு அவன் விளையாடி மகிழா நின்றான். அங்ஙனமே நீயும் மகிழ்ந்து என்னை யும் மகிழச்செய்வாய் எனத் தும்பிக்குத் தலைவி உரைத்தாள் எனவும் கொள்க.

அங்ஙனம் யான் நாயுற்ற செல்வம் நயவாதும், என்னைத் தகாதவன் என்று வெறுதும் ஆட்கொண்டவன், இப்போது தில்லைக்கண் அன்பரொடு திளைக்கின்றான். நீயும் அங்குச் சென்று அவனடி மலர்த்தேனை நுகர்ந்து என்னையும் திளைக்கச் செய் என வருவித்துரைக்க.

தலைமகள் கூற்றாக வரும் இப்பகுதியில் 'வன்னெஞ்சக் கள்வன்' 'மனவலியன்' என்றாங்கு ஆண்பாலிறு பெற்ற சொற்றொடர்கள் வருதலின் கருத்துலகில் தலைமகளாக அமைந்த அடிகள் தமது பழைய நிலையைக் கொண்டு மொழிந்தார் எனக் கொள்க. இன்னுமிதனானே போற்றித் திரு வகவலில் "என்னையும் ஒருவன் ஆக்கி" என மொழிந்ததும் தலைமகள் கூற்றாதற்கு முரண்படாமை காண்க. மேலும் இவ்வாறு வருமிடங்களையும் மற்றிதனால் அமைத்துக் கொள்க. தலைமகனைத் தில்லையம்பலவன் எனக் கூறுதலானும், ஆங்குச் சென்றூதும்படி வண்டைப் பணிப்பதாலும் இப் பகுதி தில்லையிற் பாடப்பட்டதன்றென்பதும் புலப்படுகின்றது.

நாயேனைத் தன்அடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேனது உள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீஏதும் இல்லாதென் செய்பணிகள் கொண்டருளும்
தாய்ஆன ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 12

இஃது, என் வாயால் தன்னடிகளைப் பாடச்செய்து என் வாக் கின் குறைகளையும், உள்ளத்தால் தன் அடிகளை உள்ளச் செய்து உள்ளக் குறைகளையும், உடலால் பணி இயற்றுவித்து உடற்குற்றங் களையும் ஒருங்கே போக்கி, என் திரிகரணப் பணிகளையும் ஏற்றுக் கொண்டு, தாயின் இரக்கத்தை என்மேல் வைத்த ஈசன்பால் தூதாகச் சென்று ஊதாய் என அவள் அதற்கு உரைத்தது.

(பொ - ரை.) அரச வண்டே, நாய்போல வெகுண்டு குரைக் கும் இயல்பினேனாகிய என்னைத் தன் திருவடிகளையே நயந்து இனிமை பெறப் பாடுமாறு செய்த என் தலைவனும், பேய் போலச் சுழன்று திரியும் எனது உள்ளம், தன்னின் நிலைத்து நில்லாது பிற வற்றில் அலைந்து சுழலும் குற்றங்களைப் பொறுக்கும் பெருமை வாய்ந்தவனும், சீ என்று இகழத்தக்க எனது தொண்டுகளை அவ் விகழ்வுக்குரிய குறைகள் இல்லாதனபோலவே ஏற்றுக்கொண்டு அருள்செய்யும் அன்பின் மிக்க தாயானவனும் ஆகிய ஈசன்பால் தூது சென்று அவன் திருவடி மலரை ஊதாய் எ - று

(வி - ரை.) பேராசைப் பேய் என்ப. " உரைப்பினும் நாய் குரைத் தறறு " (நாலடி) என்ப. இதனல் அடங்காமையும் கல்லாமையும் கூறப் பட்டன.

தாம் பேசுவனவும் நினைப்பனவும் செய்வனவும் ஆகிய எல்லாம் குற்றம உடையனவாகத் தம்மால் நன்கு அறியப்பட்டனவாயிருந்தும், இறைவன் அவற்றையெல்லாம் ஏற்றுக்கொள்ளும் பேரருள் உடையன் என்றபடி. அவன்பாற் சென்றூதும் ஆற்றலும் தூய்மையும் நினக் கில்லையே என்று கருதற்க. நீ எதனை நினைந்து எதனைச் சொல்லி எங் ஙனம் ஊதினும் அவன் அவற்றையெல்லாம் தூயனவாகக்கொண்டு அருள் புரியும் இயல்பினன் எனத் தும்பிக்கு ஊக்கம் எழுப்பியவாறு உணர்க.

" சீயேதும் இல்லா "தெனவே அவற்றுள் இகழ்ச்சி இயல்பாக அமைந் துளது என்பது பெற்றும். பிழைகள் பொறுப்பதில் தாய் நிகரற்றவள் என்க. பாடுவித்தலும், உள்ளப் பிழை பொறுத்து மேம்படச் செய்தலும் ஆசானுக்குச் சிறந்தன.

**நான்தனக்கு அன்பின்மை நானும் தா னும் அறிவோம்**
**தான்என்னை ஆட்கொண்டது எல்லாரும் தாம் அறிவர்**
**ஆன கருணையும் அங்குஉற்றே தான்அவனே**
**கோன்என்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ ! 13**

இஃது, அவன்பால் எனக்கு அன்பின்மை உலகத்தார் அறியாத படி யானும் அவன்தானுமே அறிவோம். அவன் என்னை ஆட் கொண்டது உலகம் முழுவதும் அறிந்ததொன்று. ஆதலால் என் மேற் பழிவராது, அவனையே உலகம் தூற்றும். ஆதலால் நமது காரியம் கைகூடும் என்று குளிர்ந்து அவன்பாற் சென்றூதாய் என அவள் அதற்கு உரைத்தது.

(பொ - ரை.) அரச வண்டே, நான் அவன் மாட்டு அன் பில்லாது இருத்தலை நானும் அவனுமே அறிவேம், பிறர் அறியார். அவன் என்னை ஆட்கொண்ட செய்தியை உலகினர் யாவருமே அறிந்துள்ளனர். (ஆதலால் பழிக்கு உரிமை பூண்டவன் யான் அல்லன். அவனே யாவன்.) என்னை யாண்டு கொண்ட தலைவன் (நீ தூதாகச் சென்று இவ்வரலாறுகளை ஊதுகின்ற திறமைப் பாட்டினலே என் மாட்டுவருதற்குரிய) மேலான அருளையும் தான் இருக்கும் அவ்விடத்திற்றனே பொருந்தப் பெற்று (என்னை அவ் விடத்துக்கு வாவென்று அழைத்துக்கொள்ளாது, யானிருக்கும் இவ்விடத்துக்கு) அவன் தானே எழுந்தருளிவந்து என்னைக் கூடு மாறு குளிர்ந்து அவன்பாற் சென்று அவன் திருவடிமலரை ஊதாய் எ - று.

(வி - ரை.) அன்பின்மையை அவனும் யானுமே அறிகுவம் ஆதலின், அவன் தன்மேல் எனக்கு அன்பில்லை ஆதலால் பயிலற்கியலாமல் விட்டேன் என வழக்குரைப்பினும், அவ்வன்பின்மை மற்றெவராலும் அறியப்படாமையின், சான்றுவார் இன்மையானும், அவன் ஆண்டமையை யாவரும் அறிவராதலின், இவன் முன்னர் ஆண்டதும் இப்போது கைவிட்டதும் உண்மையே 'ஆம்' எனச் சான்றுரைப்பார் பலர் உண்மையானும், அவன் தோற்றுனாக, யான் வெற்றிகொண்டு, விதிப்படி அவனே எனக்குக் கோன் என்ற உரைமுடிபால் அவனொடு கூடுதல் அமையும். ஆதலால் இவ்வுண்மை கொண்டு நீ மனம் குளிர்ந்து, அதனை அவனுக்கு எடுத்துரைத்து என்னை அவன் கூடுமாறு தூதுசெல் என அவள் அதனை ஊக்கினாள் என்க.

உரைமுடிபால் தோல்வி யெய்துவன் என்பது திண்ணமேனும் ஒத்துப் போதலே இருவர்க்கும் இனியதாகும் எனத் துணிந்து என்னைத் தலைமகள் தூதாக விடுத்தாள் எனக் கூறி ஊதுக என அவள் தும்பிக்குக் குறிப்பிட்டுக் காட்டினாள் என்க. அவன் பழியேலாது இங்கு வந்து என்னைக் குளிர்ந்து கூடுமாறு திறம்பட ஊதாய் என்க. "குளிர்தலை"த் தும்பிக்கும் கூடுதற்கும் ஏற்றுக.

இங்ஙனம் அடிகள் கூறியருளிய நுணுக்கம் பாவுலகம் எல்லாம் உணர்ந்து இன்புறற்பாலது.

தான் அன்பிலார் என்பது உண்மையாகவும் சான்றின்மையால், அஃதின்மையை அவனால் நிலைநாட்டற்கியலாது என்றாங்குப் புனைந்துரைப்பது அகத்திணையின்பாற்பட்டு விரைந்து வரைந்துகொள்ளுதல் வேண்டுமென்னும் பொருளை வற்புறுத்துவதாய் நிற்றலால் வழுவாகாது அமைந்ததென்க.

"அன்பே அறனே" (தொல் - பொருளி. 21.)
என்பதன்கண் உரையிற் கோடலால் அஃது அமைந்ததென்க.

கருவாய் உலகினுக்கு அப்புறமாய் இப்புறத்தே
மருவார் மலர்க்குழல் மாதினொடும் வந்தருளி
அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட
திருவான தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ! 14

இஃது, அப்புறத்தே எல்லாவற்றையும் அருவாக்கிக் கருவாகத் தன் அகத்திலே அவற்றை ஒடுக்கியிருந்தும், இப்புறத்தே தானும் தையலுமாக உருவாகி விரிந்த அனைத்தையும் காத்தற்பொருட்டு வந்தும், என்பால் அந்தணனாக வந்தும் என்னை ஆட்கொண்ட என் செல்வமாகிய தேவர்பால் தூதுசென்று அவர் திருவடி மலரை ஊதாய் என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை.) எவ்வகைப்பட்டனவும் தோன்றுதற்குரிய கருவாய் அவற்றுக்கு அப்புறமாகி இருந்து, இப்புறத்தே உருவத்தோடு

மணம் நிரம்பிய மலர் சூடிய குழலையுடைய உமையம்மையும் தானு மாக வந்தருளி, அருவாகி மறைக்கண்ணே பயின்றுவரும் அவன் தானே அதனைப் பயின்றுவரும் அந்தணனாக வடிவுற்று என்பால் வந்து என்னை ஆண்டுகொண்ட உம்பர்க்குச் செல்வமான தேவர் பால் தூதாகச் சென்று அவன் திருவடி மலரை ஊதாய் எ - று.

(வி - ரை.) உலகம் உடல் உறுப்பு அவற்று உருவங்கள் என்றினைய எல்லாவற்றையும் தனது கூத்தால் துகளாக்கித் தன்னுள்ளே ஒடுங்கச் செய்து தானே ஒரு முதலாய்க் கருவாகியும் என்க. "உலகுக்கு அப்புறம்" என்றது, அழித்துத் துகளாக்கிய பாழ் இடத்தை. "இப்புறம்" என்றது, உயிர்க்கு உடல் உறுப்பு உலகம் நுகர்ச்சி என்றாதியவற்றைக் கொடுத்துதவி முனைவந்த வளர்ச்சி நெறியிடத்தை.

மலர்போல மருவார்ந்த குழலுமாம். உமையொடுதான் உருவங் கொண்டு முன்னர்வந்து, படைப்புக்கும் காப்பிற்கும் உரிய கடவுளரைத் தன்னினின்றும் தோற்றுவித்து, ஏனைய தேவகணங்களையும், மக்கள் முதலாயினோரையும், பிறவற்றையும் தோற்றுவித்தருளினன் என்க.

அருவாய் மறைக்கண் மறைந்திருக்கும் அவனே அந்தண வடிவம் கொண்டு மறையோதினன், அன்பர்பால் வைத்த பேரருளால்.

திருவானவன், அவன் தேவன் என்க அன்பர்க்கு அருள் வடிவாக நிற்றலால், "அருட்செல்வன்" எனப்பட்டான். அருளே அவ்வுலகச் செல்வம் என்றபடி.

இனி, குழலில் மலர் சூடிய உமையம்மை என்றலின், அவன் அவளை வேட்டனன் ஆதலின், அவ்விருவரும் இல்லறக்கிழமை பூண்டாருள்ளே முதல்வர் எனப்பட்டனர் என்க.

நானும்என் சிந்தையும் நாயகனுக்கு எவ்விடத்தோம்
தானும்தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்
வானும் திசைகளும் மாகடலும் ஆயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 15

வான்திசை கடல் என்னுமிவையெல்லாம் தானேயாய தலைவனாகிய தாழ்சடைப்பிரான், தானும் தையலுமாகிய வடிவுடன் வந்து என்னை ஆளாவிடத்து, அவனுக்கு அணித்தான இடத்திலே இப்போது இருந்து வரும் யானும் என் மனமும் எத்துணைச் சேய தான இடத்திலிருந்து உழல்வேமோ? (அறியேன்) இப்போதிருந்து வரும் இவ்விடத்திலிருந்து இனிமேலும் சேய்மைப்பட்டு உழலா வாறு (இன்னும் வேறுபட்டேம் எனப்படாது) ஒன்றுபட அவன் பால் தூதாகச் செல்க என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை.) அரசவண்டே, வானும் பத்துத் திசைகளும் ஏழ்

பெருங் கடல்களும் தானேயாகிய தலைவனாகிய தாழ்ந்த சடையை யுடையவன், சிவமாகவும் சத்தியாகவும் வேற்றுருவம் பூண்டமையால் என்பால் அந்தணனாகி வந்து என்னை ஆட்கொண்டான் அல்லனோ, தன்னுடன் அணுகி உறவு பூண்டுவரும் நானும் என்னுடைய மனமும் அவனுக்கு எவ்விடத்தினேம் ஆவேம்? (ஆதலால், அவனருளால் அவனுக்கு அணிமையாக உள்ளவிடத்தைப் பெற்றுள்ள நான், இப்பேற்றினை இழந்து முன்னிலும் சேய்மைப்பட்டுழலாது, ஒன்றுபட்டு உய்யும்வண்ணம், அவன்பால் தூதாகச் சென்று, (அவனுடைய இன்பத்) தேன் துளிக்கும் செவ்விதாகிய திருவடிமலரை ஊதுவாயாக எ - று

(வி - ரை.) வான்முதலாயவற்றைத் தனக்கு உறுப்புக்களாகக் கொண்டவன் என்க. "மாநிலம் சேவடியாக" என்னும் நற்றிணைக் கடவுள் வாழ்த்தானும், "பூ:பாதௌ" என்னும் விஷ்ணுசகஸ்திர நாமச் சுலோகத்தானும், அன்ன பிறவற்றானும் அஃதறிக. விசும்பு, மெய், கடல், உடுக்கை, திசை, செவி. உலகவடிவினனாகிய இறைவன், எளியேன் மேற் கருணைமேலிட்டு, ஓர் அந்தணனாக வந்து, என்னை ஆண்டு கொண்டான். என் முயற்சியால் அப்பேறு கிட்டியதுமாகாது; அங்ஙனம் பெறற்பாலதுமன்று. தானும் தையலுமாக அவன் வடிவங்கொண்டமைக்கேற்ப என்னையும் வந்தாண்டு கொண்டான். அற்பர் செல்வம் பெற்றானகுத் தமது பழைமையை மறக்குமாபோல் நாமும் மறப்பது தகாது. ஆதலால், நாம் இன்னும் ஆளப்படாத எளியேம்போல நம் பழைமையை நினைந்து செருக்கற்றுப் பணிவுடன் அவன் அடிப் பணியாளர்களாகவே எப்போதும் இருந்துவருதல் வேண்டும். ஆதலால் அவன் நம்பால் தானே வந்து சேர்வான் என இறுமாக்காது, அவனை வந்தருளும்வண்ணம் தூது சென்று, அவனடிக்கீழ் விண்ணப்பஞ் செய்தலே, அவனருளைப் பெற்றுக் கொண்ட நம்மனோர் கடப்பாடாகும் என அவள் குறிப்பித்தாள் என்க. இதன்கண்ணே பெரியாரைப் பேணிக் கொள்ளலும், தன்னைத் தான் கொண்டொழுகலுமாகிய அரும்பெறற் பொருளாம் அமிழ்தம் பொதிந்துளது. மகளிர் ஒருமைக் குணமே படைத்தல் வேண்டும் என்பதும் ஆண்டே கொள்ளற்பாலது.

உள்ளப் படாத திருவுருவை உள்ளுதலும்
கள்ளப் படாத களிவந்த வான்கருணை
வெள்ளப் பிரான்எம் பிரான் என்னை வேறே ஆட்
கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ! **16**

இஃது, அவன் அருளாலே அவன் திருவடியை உள்ளுதலும் பொய்யாகாத இன்ப மகிழ்ச்சி என்பால் உண்டாக வந்த தூய அருள் வெள்ளத்தை உடைய பிரானும், எங்கள் பிரானுமாகிய

பிரான்பால் தூது சென்று என்னை வேறே யாட்கொள்ளுமாறு அவன் திருவடி மலரை ஊதாய் என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை ) அரச வண்டே, அவன் அருள் பெருது உள்ளத்தால் உள்ளுதற்கு இயலாத தன்னுடைய திருவடிவத்தை உள்ளுக எனத் தான் காட்ட நான் உள்ளுதலும் பொய்படாத மகிழ்ச்சி எய்த என்பால் வந்த தூய அருள் வெள்ளத்தை உடைய பிரானும், எங்கள் பிரானுமாகிய பிரான்பால் என்னைத் தனிமையில் ஆட்கொள்ள(த் தூது)சென்று (அவன் திருவடி மலரை) ஊதாய் எ - று.

(வி - ரை.) மனுதீதன் ஆதலால் அவனே தன் வடிவத்தைக் காட்டி உள்ளுக என அருளிச் செய்தாலன்றித் தானே உள்ளப்படாத திருவுருவம் என்க. உள்ளுக எனக் கட்டளை பெற்று உள்ளினுல் கள்ளப்படாத களியுண்டாக்கும் கருணை வெள்ளம் பெருக்கெடுக்கும் பிரானுவன். அங்ஙனம் எனக்கு மகிழ்ச்சியுண்டாக என்பால் வந்த கருணை "வான்கருணை வெள்ளம்" எனச் சிறப்புப் பெற்றதொன்ருகும். திருப்பெருந்துறையில் அன்பர் பலருடனும் தாமும் ஆட்கொள்ளப்பெருமையால், அவன் அருளியவாறே திருவம்பலத்திலே தம்மைத் தனியாக ஆட்கொள்ளறபொருட்டு நீ தூது சென்று ஊதாய் என அதனுக்கு அவள் சொன்ளுள் என்க. அம்பலத்தே சென்று ஊதுமாறு தும்பியைத் தூது விடுக்கின்றமையின் அவள் இருந்து விடுத்த ஊர் வேற்றூர் என முன்னர்ப் பதினொராந் திருப்பாட்டின் உரையிற் கூறிய கருத்து வலியுறுதல் காண்க.

எல்லாவற்றுக்கும் எல்லார்க்கும் பிரானுகிய அவன், வான்கருணை வெள்ளப்பிரானும், எங்கள் பிரானும ஆவான் என்க.

அவன் வா வென்றருளியவாறே யானும் அங்கு வந்துசேரக் கட்டளை பெற்றுவருமாறே அவன் ஈண்டு உடன்வருமாறே அதனை அவன்பால் தூது விடுத்தனள் என்க. அவன் தானே ஈண்டு வந்தருளானுயினும் ஆண்டுச் சேறற்குக் கட்டளையாவது பெற்று வருக என அதனை அவன்பால் தூது விடுத்தாள் என்க.

**பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாள்தோறும்**
**மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட**
**ஐயாஎன் ஆருயிரே அம்பலவா என்றவன்தன்**
**செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ ! 17**

இது, பொய்யாய இவ்வுலகச் செல்வத்துள்ளே பலகாலும் உட்புகுந்து அழுந்திக்கிடந்தும், அது செல்வமன்று என்னும் உணர்வின்றிக் கிடக்கும் எனக்கு, பொய்ச் செல்வ நுகர்ச்சியை நீக்கி மெய்ச் செல்வ நுகர்ச்சியை உளதாக்கிய ஐயனே, என் அரிய உயிரே, அம்பலவனே என்று சொல்லி, அவன் திருவடி மலரை ஊதாய் என அவள் அதனுக்குச் சொல்லியது.

(பொ - ரை) அரச வண்டே, பொய்யின்பாற்பட்டதாகிய (பித்த உலகின்கண்ணே உள்ள) பொருளிடத்து மெய்யின்பாற் பட்டதாகிய இன்பம் உளதென்று நாள்தோறும் கருதி யீடுபட்டு, அதனைப் பெற்று நுகரும் துறைக்குள்ளே சென்று, மேலும் அதன் ஆழத்துள்ளே போந்து, பின்னர்ச் செல்லுமிடம் இன்மையால், அங்கேயே செயலற்றுக் கிடவாநின்ற என்னைப் பயன்பட ஆட் கொண்ட ஐயனே, என் அருமையான உயிர் போன்றவனே, திரு வம்பலத்துக் கூத்தனே என்று முறையிட்டு உரைத்து, அவனுடைய செங்கேழ் வண்ணம் சான்ற திருவடிமலரை ஊதாய் எ - று.

(வி - ரை.) நாடோறும் பொய்ப்பொருளையே நுகர்ந்து கிடந்தும் மெய்ம்மையுடைத்தன்று எனத் தெளிந்து கொள்ளாத அத்துணை மயக்குற்ற என்னை தமது எளிமையும் "ஆண்டுகொண்ட ஐயா" என அவன் பெருமையும் கூறியவாறு. தமது முயற்சியானன்றி அவனருளால் ஆட் கொள்ளப்பட்ட வியப்பும் அவன் தலைமையும் தோன்ற "ஐயா" என்றும், தம்முயிரைக் காத்தமையால் தாம் ஓருயிர் உடையேம் எனப் படேம், அவன் உயிரே ஆக்கம் செய்தது என்பது கருதி "என் ஆருயிரே" என்றும், தில்லைக்கு வாவென்றமையும், அதுவே அறமன்றமும், அவனே உரைமுடிபு செய்வோனும் என்பவை கருதி "அம்பலவா" என்றும், அவன்மேல் உரைக்கும் முறையீட்டை அவனடிக்கே உரைப்பதன்றி வேறிடம் இன்மை யின் "என்று அவன்தன் செய்யார் மலரடிக்கே" என்றும் தொடுத்தபடி என்க. செய் - செங்கேழ்வண்ணம்.

"என்றூதாய்" எனக் கிளந்தோதினமையின், அங்ஙனம் கூறுதன வெல்லாம் தும்பிக்கே அவள் அறிவுறுத்தினள் என்பது பெற்றும்

தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ ! 18

இது, நமக்குத் தலைமகன் அருள்பாலிக்கும் கோலம் உமை யொரு கூறனாய் நிற்பதாகும். அக்கோலம் கொண்டபோது நோக்கி அவன்பால் தூதாகச் சென்றூதாய் என அவள் அதற்கு உரைத்தது.

(பொ - ரை.) அரச வண்டே, (நீ அவன்பால் தூது சென்று) வலப்பால் புலித்தோலும், இடப்பால் (மெல்லிய) ஆடையும், வலப் பால் குண்டலமும், இடப்பால் வட்டித்த வடிவினையுடைய தோடும், வலப்பால் பால்போன்ற வெண்ணிறம் வீசும் திருநீறும், இடப்பால் ஈரம் புலராத சந்தனமும், வலப்பால் மூவிலைச் சூலப்படையும், இடப்பால் வளையலொடு பச்சென்ற நிறம் படைத்த கிளியுமாக

வுடைய பழைமையாகிய உமை யொருபாகங்கொண்டிருக்கும் வடிவைக் கண்டு (இதுபோது தூது செல்லத் தக்கதென்று) மனங் குளிர்ந்து அவனுடைய மலரடியை ஊதாய் எ - று

(வி - ரை.) தோடு - ஓலை 'குழை' என்றது, பண்டைய தமிழ் நூல்களிலே பெரும்பாலும் பெண்பாற் காதணிக்கே பயின்று வருமேனும்

"ஒருகுழையவன்" (மரு. 5.)

எனக் கலித்தொகைக் கண்ணும்,

"ஒருகுழை யொருவனை" (பரி. 1.)

"ஒருகுழையவை" (பரி. 1.)

எனப் பரிபாடற்கண்ணும் ஆண்பாற் காதணிக்கும் சிறுபான்மையாக வந்தது. 'குழை' என்றதற்கு ஆசிரியர் நச்சினர்க்கினியர், மகர வடிவமாகச் செய்யப்பட்ட குண்டலம் எனப் பொருள் கூறிச் செல்லுத லானும், மகர குண்டலம் என வழங்குதல் உண்மையானும்,

"எரிநிறக் குழையோர் காதிற்கு" (சிந்தா. 696.)

எனவும்,

"குண்டலம் ஒருபுடை" (சிந்தா. 1009.)

எனவும் முறையே சீவகனும் காந்தருவதத்தையும் தத்தம் காதுகளில் அணிந்துகொண்டனர் என்றலானும், குண்டலமும் குழையும் ஒரு பொருள் குறித்த இரு வேறு சொற்களாம். "குண்டலத்தை (குழையை) ஆடவர் அணிந்து கொள்ளுதல் அக்கால வழக்கு, இக்கால வழக்காகாது" (தொல். செய். 72. நச். உரை.) எனக் கூறுதலும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. தமிழ்மறைக் காலத்திலே குழையை ஆடவர் அணி தலும் வழக்கென்பது,

"தோடு பெய்தொரு காதிற் குழைபெய்து"

என்னும் சுந்தரர் அருளிய திருப்பனையூர்த் தேவார முதலியவற்றானும் அறியக் கிடக்கின்றது.

இங்ஙனம் இருவரும் ஒருருவாக அமர்ந்தது படைப்பு நெறிக்குரியது. ஆதலால் அதனைக் கண்டூதுமாறு உரைத்தாள் என்க. ஒடுக்க நெறிக் குரிய கோலம் காணில் ஊதற்க என்பது குறிப்பு.

"தொன்மைக் கோலம்," படைக்குங் காலத்துக் கொள்ளப்படும் தொன்மை சான்ற கோலம் எனப் பொருள் விளங்க விரித்துரைக்க.

**கள்வன் கடியன் கலதிஇவன் என்ருதே**
**வள்ளல் வரவர வந்தொழிந்தான் என்மனத்தே**
**உள்ளத் துறுதுயர் ஒன்ருெழியா வண்ணமெல்லாம்**
**தெள்ளும் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ! 19**

இது, படிப்படியாக என் மனத்து வந்தொழிந்தானுகிய வள்ளல் பால் தூதாகச் சென்று அவனுடைய என் துயரம் அனைத்தையும்

தானே தெரிந்து கொள்ளும் திருவடி மலரை ஊதுக என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை.) அரச வண்டே, இவன் வஞ்சகன், கடுமை யுடையவன், தீக்குணமுடையவன் என்றென்னைக் கருதாது, அருட்கொடையாளனாகிய கடவுள் (முன்னர் என் காட்சியிலும் பின்னர்) என் மனத்தகத்தும் படிப்படியாக வந்து (இப்போது) அம்மனத்தினின்றும் நீங்கிவிட்டான். (அங்ஙனம் அவன் ஒழிந் தானேனும்) அவனுடைய கழலை அணிந்த திருவடி மலர் என்னுடைய மனத்திலே உற்ற துன்பங்களுள் ஒன்றும் விடாதவண்ணம் எல்லாவற்றையும் தானே தெளிந்து கொள்ளும் (ஆதலால் விண்ணப்பஞ் செய்வதைப்பற்றிய அச்சமின்றி) அத்திருவடி மலரை ஊதாய் எ - று.

(வி - ரை.) அப்போது புறக்காட்சி யளித்து ஆட்கொண்ட இறைவன், தம்மையும் உடன்கலந்து கொள்ளாது பிரிந்தமைக் காற்றாது, தாம் வருந்துதலைக் கண்டு தம்முள்ளத்திலே திருவடிக் காட்சி யளித்ததும், அதனால் தாம் ஆறுதல் எய்தியவிடத்தே அக்காட்சி இப்போது நீங்கப் பெற்றதும் ஆகிய இவையே ஈண்டுக் குறிக்கப்பட்டன. ஆதலால் வேறறக் கலப்புறும் வரையும் எக்காட்சிகள் காணினும் அவற்றால் தாம் ஆறுதல் பெறாதவாறு அத்துணை இன்னல் எய்தி வருதலையே "உள்ளத் துறுதுயர்" எனக் குறிப்பிட்டருளினர்.

"வந்தொழிந்தான்" என்றதற்குப் பூரணமாக வந்து தோன்றி யருளினன் எனவும், "ஒன்றொழியாவண்ணம் தெள்ளும் கழல்" என்ற தற்கு மனத்தின்கண்ணுள்ள இடர்ப்பாடுகள் யாவற்றையும் தப்பாது தெளிவு செய்தொளித்த திருவடி என்றும் பொருள் கூறின், அவை முன்னர்க் கூறப்பட்டமையானும், மயக்கறுத்த என்பதன்றித் துயரை ஒன்றும் ஒழியாவண்ணம் தெளிவு செய்ததெனின், அங்ஙனம் செய்யப் பெற்றார்க்குப் பின்னர் ஆகக் கடவன இன்மையானும், ஈண்டு அடிகள் கையாண்டருளிய அடைவொடு மாறுகொள்வதனானும், அன்ன பிறவற்றா னும் அங்ஙனம் கொள்ளற்க.

இனி, "எல்லாம் தெள்ளும் கழலுக்கு உள்ளத் துறுதுயர் ஒன்றொழியா வண்ணம் சென்றூதாய்" எனக் கொண்டுரைத்தலும் ஒன்றுமேனும், பதினேழாவது திருப்பாட்டால் விண்ணப்பஞ் செய்து ஊதுமாறும் அதன் மேற் கோலம் நோக்கி அஞ்சாது குளிர்ந்து விண்ணப்பியாது ஊதுமாறும் கூறப்பட்டமையானும், விண்ணப்பஞ் செய்யாமைக்குக் காரணம் கிளத்தலே மேல்வேண்டப்படுவதாகலானும், மேற்காட்டிய இருவகைத் துறை விளக்கங்களுள்ளே இரண்டாவதையே அடிகள் திருக்கருத்திற்கு இயைந்ததெனத் துணிந்தாம். கலதி - கீழ்மைக் குணம் படைத்தோன்.

அவன் திருவடியை நீ ஊதில், அதுகொண்டே என் துயர் அனைத்

தினையும் ஒழியாதறிந்து கொண்டு, நின்னெடு எனக்கும் அருள்பாலிக்கும் என்றபடி.

இனி, "வந்தொழிந்தான்" என்றதற்கு வந்து நீங்காதான் ஆயினன் எனப் பொருள்கொண்டு, என் அகத்திலே அவன் குடிகொண்டனனுதலின், புறத்தும் வந்து இன்னருள் செய்வான் என்றலும் ஒன்று. இதனல் அவள் அன்பு பூண்டவளாதலின் அவனும் அன்புள்ளவன் ஆவான் என்னும் துணிபு மேற்கொண்டு அதனைத் தூது விடுத்தாள் என்க.

பூமேல் அயனெடு மாலும் புகல்அரிதென்று
ஏமாறி நிற்க அடியேன் இறுமாக்க
நாய்மேல் தவிசிட்டு நன்ருய்ப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பி ! 20

இஃது, அயனும் திருமாலும் புகுந்து காணற்கியலாது ஏமாற்ற மடைந்து நிற்ப, யான் திருவடிப் பேற்ருல் இறுமாப்படைய, யானை முதலியவற்றின் மேலிடு தவிசை நாய்மேலிட்டாங்கு, அன்பர் பெறுதற்குரிய பெருமையை வன்பனேனுக்கு உளதாக்கிப் பொருளாக மதிக்கச் செய்த அழலுருவன்பால் தூது சென்றூதாய் என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை.) அரச வண்டே, செந்தாமரைப் பூவில் வீற்றிருக்கும் நான்முகனுடன் திருமால் என்பவனும். முறையே அன்னப் புள்ளாகவும், பன்றியாகவும் உருவேற்றுத் தமக்கிடையே தோன்றிய அழலுருவத்தின் முடியையும் அடியையும், மேலும் கீழும் சென்று முயன்று வருந்தியும் அவை இருக்குமிடங்களிற் புகுதல் அரிதென் றுணர்ந்து ஏமாற்றமுற்று நிற்ப, அடியேன் இறுமாப்பெய்த (யானை முதலியவற்றின் மேலிடப் பெறும்) மெத்தையை நாய் மேலிட்டவாறே, அன்பற்ற என்னை (ஆளாக்கி அன்பர் சென்னி மேல் வைத்தற்குரிய திருவடியை என் சென்னிமேல் வைத்து) உலகம் நன்ருக மதிக்குமாறு பொருட்படுத்திய அழல்போன்ற மேனியுடையவன்பால் (தூதாகச்) சென்று (அவன் திருவடி மலரை) ஊதாய் எ - று.

(வி - ரை.) அறியாமையின் முற்பட்டவன் நான்முகனுதலின் அவன் முற்கூறப்பட்டான். அதிகார வேட்கையும் தற்காப்பும் இல்லாத தமக்கு அவன் திருவடி தானே வந்து கிட்டியதால் "இறுமாக்க" என்றருளிச் செய்தார். பொருள் - மெய். புகல் - புகுதல். 'நன்ருக' என்பது ஈறுகெட்டு "நன்ரு" என நின்றது. தவிசு - யானை முதலியவற்றின் மேலிடும் மெத்தை. நாய்மேல் தவிசிடின் அஃது அதன் பெருமையுணராது அதனைக் கீழே தள்ளி விடும் என்க.

திருச்சிற்றம்பலம்

# திருத்தெள்ளேணம்

திரு - தெய்விகம் தெள் - தெளிந்த ஓசை ஏணம் - (கத்தூரி) மான் ஏணம் என்பது இப்பொருள்படுமாறு பிங்கலந்தையுள்ளும் அமரகோசத்துங் கண்டது. இது பெயர் ஒற்றுமையால் படகம் என்னும் தோற்கருவியை உணர்த்தி நின்றது. " படஹ " என்னும் வடசொல், 'படு'வென்னும் ஒலி செய்யும் காரணத்தால் அதற்குப் பெயராகியது. கரடிகை, சல்லிகை என்பவைபோல. "ஆனபடகம்" என்பது பெரும்பறை இனத்தைச் சார்ந்து பேரிசையைச் செய்யும் பெற்றித்து என்பவாதலின், அதுவும் இதுவும் வேறு வேறெனவே படும் இனி, "பல்லிலனாகப் பகலைவென்றோன்" (திருக்கோ. 60.) என்னும் திருப்பாடலில் " எல்லிலனாகத் தோடேணம் வினவி " என்றிருக்கற்பாலதனை, 'ஏணம்' என்னும் சொற்பொருளறியாமையினாற்போலும், அதன் உரையாசிரியர் காலத்துக்கு முற்பட்டோர், மற்று அதனை 'ஏனம்' என மாற்றியமைத்துவிட்டனர் என்பது ஈண்டுத் துணியப்படும் "ஏணம்" என்ற பாடத்தினையே உரையாசிரியர் 'ஏனம்' என மாற்றிக்கொண்டிருத்தலுங் கூடும். முன்னர் 'ஏனம்' வினவப் பட்டிலதாதலாலும் கலைமான் வினவப் பட்டுள்ளதாதலாலும் "ஏணம்" என்பதே பாடம் என்பதில் ஐயமின்று.

படகம் என்னும் தோற்கருவி வட்டவடிவினதாய்ப் பெண்பாலாராலும் முழக்கத் தகுந்தது என்பது " வட்டவானமெனும் வான் படகத்தைக் கொட்டு மன்மகள் " (கந்தபுரா. உயுத். முதனாள். 53.) என்னும் செய்யுட்பகுதியால் அறியப்படுகின்றது இஃது ஒரு கண்ணுடைய பறையினத்தைச் சார்ந்ததும், அகன்ற வாயுடையதுமாம் என்பது இப்போது அறியக்கிடக்கின்றது. [கல்லாடம் (8.) நோக்குக ]

இது, மத்தளத்தை முதலாகவுடைய அகமுழவு ஏழனுள்ளே ஒன்றாக அமைந்தது. இதனோசை 'தென்னா தென்னா' என்னும் ஈரசையோடு கூடிய பாடலெழுத்தாக இசைக்கும் என்பது, பாடலெழுத்தோடு ஒத்து இசைக்கும் மத்தளத்துடன் இனம் சேர்க்கப்பட்டமைக்கேற்ப அடிகளும் " தென்னா தென்னா வென்று தெள்ளேணம் கொட்டாமோ " (திருத்தெள். 9 ; 16.) என்றருளுதலாலும் அறியப்படுகின்றது.

"ஏணம்" என்பது " தெள் " என்பதற்கும் " கொட்டாமோ " என்பதற்கும் இடையே வந்தமையால் அது"படகம்" என்னும் தோற்கருவியையே உணர்த்திற்றென்பது பெற்றாம்.

இப்படகம் கவரிமானுரி போர்க்கப்பட்டதுபோலும். அங்ஙன

மாகில், "மானமழியின் உயிர்வாழாக் கவரிமா"னுக்கும், அதனுரி போர்த்த படகத்தைக் கொட்டற்கு முற்பட்ட தலைவிக்கும் ஓரொற்றுமை கொள்ளற்கு இடனுகின்றது.

தலைமகன் தனக்குச் செய்த பேருதவியும், தன்னையாண்ட வரலாறும், அன்ன பிறவுமே இப்பகுதியுட் கூறப்படுதலானும், முற்கூறிய கந்தபுராணச் செய்யுள், அசுரர்களாகிய பாவிகளைச் சுமக்கலாற்றுத மண்மகள், அவர்தம் அழிவை ஒரு சிறிது கண்டவள வில், தன் இன்னல் நீங்கிப் படகத்தைக் கொட்டினுள் எனப் பொருள் தந்து நிற்றலானும், வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் வரவுணர்ந்த தலைவி, உவகை மேலிட்டுத் தன்னை யாட் கொண்ட நேர்பாடலும், அவனுடைய சீர்பாடலும் பாடித் தோழியரை ஊக்கிப் படகங் கொட்டாநின்றுள் என்பதே இப்பகு திக் குரிய பொதுப் பொருளாம் என்று உணர்க.

இப்பகுதியுள் அமைந்த செய்யுட்களின் தெள்ளேணம் கொட்டாமோ" என முடிதலின் இது "திருத்தெள்ளேணம்" எனப் பெயர் பெற்றது.

இப்பகுதியில், ஊரவர் அலர் தூற்ற அதனால் நற்றாய் முதலியோர் தன்னைச் சினக்க உள்ளம் வெம்பித் தும்பியைத் தூது போக்கிய தலைமகள், வினைமுடித்து வெற்றியோடு புறப்பாடுற்று வந்த தலைமகன் திருவாரூர்க்கண்ணே தங்கியுள்ளான் என்ப தறிந்து தோழியரைக் கூவிப் படகங்கொட்ட முற்பட்டவள் அப் படக மிசைத்தற்குரிய பாடல்கட்குத் தனக்கும் தலைவற்குமிடையே பண்டு நிகழ்ந்த அகவொழுக்கத்தையே பொருளாகக்கொண்டு பாடப் புகுந்தாள் என்க

இனி, இப்பகுதியை இயற்கைப் பொருளியைபிற் கேற்ப உரைக்கும் முறை வருமாறு —

தலைமகன் தன்னை ஆட்கொண்டவாறு நயந்தும் (10) அவன் தன்பாலே பரிந்து புகுந்து உருக்கும் பாவகம் பேணியும் (14) அவன் கழல் சித்தம் புகுந்தவாறு உன்னியும் (16) தனக்குரியனவாக அவன் கழலிணைகள் தந்த செயலைப் பரவியும் (17) அவன் கழலை நினைந்து கருணையை மருவி அத்திருவைப் பரவியும் (15) தெள் ளேணங் கொட்டி வருதலை ஒருபாலாகக் கொள்ளல் சாலும்.

அவன் தன் பிறவிக் கருவறுத்துச் சென்றபின் அவனையே யன்றி அவன் அன்பர் முதலாகிய யாரையுங் காணற்கியலாது சென்ற அவன், இத்போது வந்து தங்கியிருக்குந் திருவாரூரைப் பாடியும் (2) ஒரு பெயரும் ஒரு வடிவமுந் தனக்கென இல்லாத அவனுக்கு ஆயிரந் திருப்பெயர் கூறியும் (1) அவனுடைய குலம்

முதலாயவற்றைப் பாடியும் (20) கண்ணுரை வந்து நின்ற அவன் கழல் பாடியும் (19) அவன் தன்னை ஆண்டுகொண்டமைக்காக இவ்வுலகம் அலர் தூற்றுந் திறம் பாடியும் (3) தன் உரை உள்ளொளி கண்ணீர்த்திறன் ஆடுமாறு அவன் வந்தாண்ட திறம் பாடியும் (6) மறந்தேயுந் தன் கழல் மறவாதவண்ணம் தன் கழல் நல்கிய திறம் பாடியும் (8) அவனுக்காகத் தன் ஊர் முதலியனவுந் தானுங் கெட்டவாறு பாடியும் (18) தன்னுடைய ஊழுஞ் செய்கையும் மாண்டவாறு பாடியும் (11) பத்திக்கடலுட் பதிந்த பரஞ்சோதி தனக்குத் தித்திக்குமாறு பாடியும் (12) கருணையினுற் பொன்னூர் கழல் பணித்தாண்ட பிரான் புகழைப்பாடியும் (9) தன்னை யாண்டு கொண்ட நேர்பாடலும் அவனுடைய சீர்பாடலும் பாடியும் (13) அலர் கூறிய உலகத்தவர் உகப்பெய்தத் தன்னைக் கடைக்கணித்து உள்ளம் புகுந்த திரு தன்பால் வந்தவாறு பாடியும் (5) அவன் அடிச்சுவடு தன் தலைமேல் வைத்தலுமே தான் தேவானது பாடியும் (7) தன்னை ஆண்டுகொண்ட அவன் நலமாய செஞ்சுடர் நல்குதலும் தாம் ஒழிந்து சிவமானவாறு பாடியும் (4) தெள்ளேணங் கொட்டி வருதல் மறுபாலாகக் கொள்ளல் பொருந்தும்

இனி இப்பகுதிக்கு உரைக்கும் நூற்பொருளடைவு முறை, தும்பியைத் தூதிடைப் போக்கி அவன் வரவுணர்ந்த தலைமகள், தலைமகனின் பேரருளைப் பெறுதற்கு அவன் குணமும் உருவு மில்லானுயினும் அவன்மேல் புகழ் பொருந்திய பெயர்களையும் அதற்குரிய உருவங்களையும் புனைந்து கூறித் தாழ்ந்து நின்றுள் எனவும், அவன் அருள் செய்யவந்து இடையே தங்கியிருக்குமிடம் திருவாரூராதலின் அதனைப் பாடுதலின்மேல் வைத்துத் தன் கற்பை வெளிப்படுத்தி அவன் ஊரையும் நற்றுய் முதலியோர் அறியுமாறு கூறினுள் எனவும், அவன் பிரிவால் தான் இருந்து அவனியல் புகளை உசாவி அழுங்குதல் கண்டு உலகோர் அலர் தூற்றினர் எனவும், எவர் எங்ஙன முரைப்பினும் அவன் அன்பின் ஐந்திணை ஞானத்தினைத் தந்து என்னைத் தானுமாறு இயற்கைப் புணர்ச்சிக் கண் ஆக்கினுன் எனவும், இங்ஙனம் களவிற் புகுந்ததும் ஊரவர் அலர் தூற்றலும் உயர்வெய்துமாறு ஆட்கொண்டருளிப் பிறவியை நீக்குமாறு திருவாரூர்க்கண் இப்போது வந்ததுமாகிய அன்பின் ஐந்திணைத் திருவை அது வந்திருக்குமாறு பாடுவோம் எனவும், இன்று இங்ஙனம் வந்தது அருள் செய்வது எங்ஙனம் இருக்கும் என்று நினைக்குமிடத்துப் பண்டு அருள் செய்தமை நினைவில் வருதலின் அந்நினைவால் உரையிலும், உள்ளொளியிலும் கண்ணீரிலும் அவனருள் ஆடலுற்றது எனவும், அங்ஙனம் அவன் அருள் செய்த

பண்டைய நினைவு வருதலும் மறித்தும் தேவான தன்மை (இடந் தலைப்பாட்டுக் கலந்தது) பெற்றேன் எனவும், அதனால் அலர் தூற்றல் முதலிய உலக நிகழ்ச்சிகளுள் உண்டாகும் அச்சம் தன்னை அணுகாது அகற்றினன் எனவும், இங்ஙனம் ஆக்கம் பெற்றபின், ஆக்கம் பெறுமுன் தாமிருந்த இழிந்த நிலை நினைவுக்கு வருதலின், அவ்விரு நிலையினையும் மாறிமாறி எண்ணி அவன் தம்மை யாண்ட அருமைப்பாட்டில் வியப்புண்டாயிற்று எனவும், இங்ஙனம் வியத்தலால் கனவு நனவென்ற இரண்டு நிலைகளும் ஒன்றுடனொன்று மயங்குதலால் சிறிதே கலங்கிப் பின்னர் நனவென்றே தெளியப்பட்டதெனவும், அந்நனவிலே ஆண்டதும் தாம் பெற்ற இன்பம் மறித்தும் நினைவுக்கு வருதலின் தன்னைப் பிணித்திருந்த பிற தொடர்புகள் எல்லாம் மாண்டன எனவும், அங்ஙனம் மாளப்பெற்றுக் கலந்திருந்தமை நினைவிற்கு வந்தபோது அக்கலப்பாலாகிய அகவுணர்ச்சி இனித்தலின் அவ்வினிமையைப் பாவனையில் நுகர்ந்து இன்புறுவோம் எனவும், அதனால் ஏனைய மண நெறிகளின் இழிவு தோன்றலின், அவற்றின் நீக்கி அன்பு நெறியில் வைத்தருளிய இன்ப அனுபவத்தோடு அதனை ஆற்றிய சீரும் பாடப்படவேண்டுமெனவும், அதனால் அவன் திருவாரூர்க்கண் இருப்பினும் இங்குவந்து உருக்காநிற்றலால் கண்ணீர் மல்கிற் றெனவும், அங்ஙனம் உருக்குவோன் உருகுமாறளித்த அன்பின் ஐந்திணை இன்பக்கடலை நாமடைதற்கு அவனை ஈர்த்துவந்த திருவடியை நினைத்தல் வேண்டுமெனவும், அத்திருவடி நினைவுக்கு வந்து நிற்றலின் அதுதான் புறத்திருந்து படிப்படியே சித்தம் புகுந்தவகை இங்ஙனமெனவும், அவன் யான் ஒவ்வாத செவ்விக் கண் இருப்பவும் அச்செவ்வியைக் கெடுத்து அத்திருவடியை உளத்தே புகுத்தினன் எனவும், இங்ஙனமெல்லாம் வலிந்து அருள் செய்தான் பொருட்டு நான் என்னுடலும் உயிரும் உணர்வும் ஆதிய வெல்லாம் கெட்டேன் எனவும், அக்கெட்ட பொழிலிடத்தே அவன் கண்ணாரக் காணுமாறு நின்றான் எனவும், இவ்வெல்லாவற்றையும் அவன் ஐந்தொழிலாகிய நடனத்தால் ஆற்றுகின்றான் எனவும் தலைவி ஆயத்தார்க்குக் கூறினாள் என வரும்.

ஆயிரந் திருநாமம் பாடுதல் சகத்திரநாமத் தோத்திரமெனவும் படும். அஃது அன்பு நெறிபற்றினார்க்கு இன்றியமையாததொன்று. அதனைப் பயிலாதார் எத்துணை ஆற்றலும் ஊக்கமும் பிற பயிற்சியும் உடையரேனும் அவர் செய்யும் பூசை அவர்க்குப் பயன்தராது. நித்திய கருமஞ் செய்யாமை முதலிய அதிபாவங்களையும் அத்தோத் திரப் பாராயணமே தீர்க்கவல்லது. ஆதலால் இப்பொருள் நுதலிய

திருப்பாட்டை அடிகள் முதலாவதாக வைத்தருளினாரெனவும் அதனால் முன்னர்க் காட்டிய ஒழுங்கில் மற்றைய திருப்பாட்டுக் களும் இயைபு பெற்று வைக்கப்படுவனவாயினவெனவும் உணர்க. அவ்வியையை விரித்துரைத்துக்கொள்க.

இஃது திருத்தில்லையில் அருளிச்செய்யப்பட்ட தென்ப.

## சிவனோடடைவு

### தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநாம் அறியஓர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்
ஒருநாமம் ஓர்உருவம் ஒன்றும் இல்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ 1

இது, வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலை மகனது வென்றித் திறங்கேட்ட தலைமகள், உவகை மிக்காளாய், அவனுடைய வெற்றித் திறனைப் பாடிப் படகங் கொட்டுவோமென ஆயத்தாருக்குக் கூறியது.

குறிப்பு· "सादयश: पटहो" (நா ஸ ப்ரா. நாடல 187) புகழ் கருதி யடிக்கப்படுவது என்பவாதலின், ஈண்டுத் தலைமகன் பெற்ற புகழானது, போரைப் பொருளாக இடைவைத்துப் பிரிந்த தலைமகன் அவ்வினைக்கண் வெற்றி பெற்றான் என்பதாம் படக மடிப்பது போர்முகத்தெய்திய வெற்றிப் புகழையே கொள்ளும் என்பது முற்காட்டிய கந்தபுராணச் செய்யுளால் தெளியப்பட்டது.

(பொ - ரை ) (தோழிமீர் !) திருமாலும் பன்றி வடிவம் எடுத்து (நிலத்தைப் பிளந்து) சென்றும் உணர்ந்துகொள்ள முடியாத திரு மிக்க அடியை நாம் மற்று அதன் உண்மையான வடிவத்தை (ப்புறத்தும் அகத்தும்) அறிந்துகொள்ள ஒப்பற்ற அழகிய தண் ணளியுடைய பார்ப்பானாகி (முன்னர் வலிய வந்து) எம்மை ஆண்டு கொண்டவனாகிய ஒரு பெயரும் ஒரு வடிவும் தனக்கெனக் கொள்ளா தவனுக்கு ஆயிரம் திருப்பெயரிட்டு அவனுடைய புகழைப் பாடி நாம் தெளிந்த ஓசையையுடைய படகத்தைக் கொட்டுவோமாக (எனத் தலைமகள் ஆயத்தார்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) திருமாலால் அறியப்படாத திருவடியென அதன் அருமை பெருமைகளை உரைத்தபடி. நாம் அவன் உருவறிய அந்தணனாய் வந்து

அத்தகைய திருவடியை எனக்குரியதாக அருளி எம்மை ஆண்டு கொண்டது எனினுமாம்.

வினையை நுகர்தறபொருட்டு ஏனையோர் பிறந்திருக்குமாறே அவன் பிறந்தானல்லன். ஆதலால் அவனுக்கென ஒரு நாமமும் ஒரு வடிவும் இல்ல வாயின. 'ஆயிரம் திருநாமம்' எனவே அப்பெயர்கட்குரிய ஆயிரம் வடிவங் களையும் பாடுவோம் என விரிக்க.

அவ்வாயிரக் கணக்கான பெயரும் உருவும், தீயோரை அழித்தற் பொருட்டு அவ்வவர் கொடுமைக்கேற்றவாறும், நல்லோரைக் காத்தற் பொருட்டு அவ்வவர் நினைந்தவாறும் இயைந்தவை என்க. "ஆயிரம்" என்றது அளவின்மை குறித்துநின்றது. சகத்திரநாமமுமாம். "பாடி நாம் கொட்டாமோ" என்றமையால் ஒவ்வொரு பாடலாகப் பாடியும், பாட்டினிறுதியில் படகங் கொட்டியும் வருதல் மரபென்பது பெறரும்.

தலைமகன் திருவடியைத் தனக்குரிய செல்வமாகப் பெற்றுக்கொள்வது தலைமகளுக்குரிய மரபென்பவாதலின், "திருவடியை நாம உருவறிய" என்றாள். அந்தணனாக வந்தானேனும் அவன் திருவடியே தன்னால் அறியப்பட்டதென்பது தோன்ற அங்ஙனம் கூறினாளுமாம்.

திருஆர் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவேர் அறுத்தபின் யாவரையும் கண்டதில்லை
அருவாய் உருவமுமாய் ஆயபிரான் அவன்மேவும்
திருவாரூர் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ.

தலைமகன் இப்போது வீற்றிருக்கும் திருவாரூரின் சிறப் பினைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டுவோம் என அவர்க்கு அவள் சொல்லியது.

(பொ - ரை ) (தோழிமீர் !) திரு நிரம்பிய திருப்பெருந்துறை யிலே மெய்யன்பர் தன்னோடு கலந்துகொள்ள ஒளிவடிவான பிரானும், ஒளியே தனக்குரிய வடிவாகக் கொள்ளுங்கால் அருவா யும், அருள் செய்யவருங்கால் உருவாயும் தோற்றங்கொள்ளும் பிரானுமாகிய, அவன், என் பிறப்பின் அடிவேரைக் களைந்து அகற்றிய பின்னர், யான் அவனையே எங்குங் காண்பதன்றிச் சுற்றம் முதலாகவுள்ள வேறு எத்தகையவரையும் கண்ணால் கண்டேனில்லை அவன் (இப்போது இங்கு வருதற்குப் புறப்பா டுற்றுத்) திருவாரூரில் தங்கியிருக்கின்றான் ஆதலால் அவன் வீற் றிருக்கும் திருவாரூர்ச் சிறப்புக்களைப் பாடிப் படகம் கொட்டுவோ மாக (என்று கூறினாள்) எ - று.

(வி - ரை.) எல்லா உருவங்களும் அவனாகவே யான் காணுநின்றேன் என்றருளிச் செய்தாள் என்க.

"கருவேரறுத்த"தென்றது ஆண்டுகொண்டதை. பெருந்துறைமேய பிரான் - பெருந்துறைக்கண் அன்பர் கலந்துகொள்ள ஒளி வடிவமாக மேவிய பிரான். செவ்வி நிரம்பிய அன்பர்க்கு அருவமுமாய், அவ்வருவமு மாயவனே ஏனைய செவ்வி சாலாத அன்பர்க்கு அவர் செவ்வி முற்ற "உருவமுமாய பிரான்" என்க. அத்தகையோன் இப்போது தனது வெற்றியாற் பெற்ற பொருளனைத்தையும் தன்கீழ் வாழும் அன்பர்க்கு ஏற்றவாறு எல்லாச் செல்வமும் பட்டமும் வழங்கி வாராநின்றான். ஆதலால் அவ்வாரூரைப் பாடிக் கொட்டுவோம் என்றனள். அக்கொடை வேநதன் திருவாரூர் என்க.

" தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்" (கீர்த்தி. 73-74.)

எனவும்,

" ஆரூர் அமர்ந்த அரசே போற்றி " (போற்றி. 147.)

எனவும் கூறியருளியதனால், அக்கொடைவேந்தன்பால் தாம் யருளிய செல்வம் மெய்யறிவுச் செல்வம் என்பது பெற்றாம்.

அவன் பெற்ற வெற்றிகள், தக்கன் வேள்வி தகர்த்தல், காமனைக் காய்தல், திரிபுரமெரித்தல் முதலாயினவாம்.

**அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும் என்பது கேட்டு உலகமெலாம்
சிரிக்கும் திறம்பாடித் தெள்ளேணம் கொட்டாமோ. 3**

இது, களவின்கண்ணே தலைமகன் புணர்ந்து செல்லுதலால், அவன்மேல் ஈடுபட்டு உருகி மயங்கியமைபற்றி ஊரவர் அலர் தூற்றி நகைத்தலை நாம் இப்போது பாடித் தெள்ளேணம் கொட்டு வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (நங்கைமீர் !) திருமாலுக்கும் நான்முகனுக்கும் ஒழிந்த வானவர்கட்கும் உணர்த்தப்படும் தரத்ததன்றி நிலைபெற்ற சிவபெருமான், எம்முன்னர் வந்து எம்முடைய உள்ளத்தை உருக்குவான், தனக்குரிய தொண்டுகளை ஏவிக்கொள்வான் என்னும் நிகழ்ச்சிகளை இவ்வுலகமடங்கலும் கேள்வியுற்று (அலர் தூற்றி) இகழும் வகையைப் பாடித் தெளிந்த ஓசையையுடைய படகத்தைக் கொட்டுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) தேவர் பிரமன் அரி என்று ஓதாதொழிந்தார், சிவம் என்னும் உணர்வில் ஒரு படித்தானவர் என்பது தோன்ற. அரி பிரமர்கள் ஏனை வானவரினும் சிறந்தவர் என்பது போதர "அல்லாத தேவர்கட்கும்" என்றருளினர் எனினுமாம். அவர்கட்குத் தெரிக்கப் புகினும் அவர் அவனை

உணர்ந்துகொள்ளும் செவ்வியிலர் என்க. பதவியைச் சார்தற்கு அவா வியே அவர் நிற்றலின், அவர்க்குத் தெரிவிக்கும் படித்தாகாது நின்ற சிவம் என்க. எனவே அன்பராவார் அகப்புறப் பற்றுக்களைக் களைதலே நோக்காக உடையர் என்பதும், பழவினை முதலாயவற்றல் பற்றப்பட்டமையின், அவற்றை நீக்குதற்கு ஆற்றலிலராய் உழல்கின்றார் என்பதும், அவர் பற்றுக் களையவேண்டுவது அவன் கடப்பபாடாதலின், அங்ஙனமே ஏற்ற பெற்றி நீக்கி ஆள்கின்றான் என்பதும் ஈண்டுப் பெற்றாம். பேண வேண்டிய அவனைப் பேணிப் பற்றாதும், விடத்தக்கனவற்றைப் பேணிப் பற்றியும் உழன்றுவரும் செயலைநினைந்து மனமுருகுமாறு இறைவன் செய்துவரு கின்றான் என்பதும், அங்ஙனம் உருக்கிக் கற்புப் பணியிலே ஈடுபடுத்து கின்றான் என்பதும் ஈண்டருளிச் செய்யப்பட்டன. "உலகஞ் சிரித்தல்" என்றது, ஊரவர் அலர்தூற்றி நகைத்தலை. இதனால் அம்பலும் முன்னர் உளதாயிற்று எனக் கொள்க. அத்திறம் பாடுதல் என்றது, வரைவிடை வைத்துப் போரிடைச் சென்ற அவன் போர்முடித்த வெற்றியாலும் கொடையாலும் புகழ்பெற்று இன்னே திருவாரூர்க்கண்ணே வீற்றிருக் கின்றான்; இனி வந்து விரைந்து தம்மை வரைந்து கொள்வான் எனப் படுதலை.

அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயம் காத்தென்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம்ஒழிந்து
சிவமான வா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ. 4

இஃது, எம்மைத் தீநெறி சென்றுழலவிடாது காதல் செய்து ஆண்டுகொண்டமையால் அவனே நாமாகிப் பின்னர் நாம் அவ னை வரலாற்றைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (நங்கைமீர்!) கேடே வடிவாகிய வானவ ருடைய கேட்டினைப் பயத்தற்கிடமாகிய தீய இடத்திற் சென்று அதன்கண் அமிழ்ந்தி ஒழியாது பிறவிக்கண்ணே அமைந்த வஞ்சனையினின்று நீக்கி என்னைப் பாதுகாத்து அடிமையாகக் கொண்ட மேம்பட்ட ஒளிவடிவுடைய சிவபெருமான் புதிய செவ்வி தாகிய அருளொளியை நமக்கு உரியதாகக் கொடுத்த அவ்வளவிலே யான் என்பதும் எனதென்பதும் ஆகிய இருவகையான் நமக்கு உரிய பற்றுக்கள் யாவும் நீங்கிச் சிவமாகியவாற்றைப் பாடித் தெள் ளேணம் கொட்டுவோமாக (என்றார்) எ - று.

(வி - ரை.) இறைவன் அடிக்கீழ் வாழ்தற்குச் செலுத்தும் நெறியை அறியாதும் அவமாகிய வானவர் எனினும் ஒக்கும். அங்ஙனம் கெட்டாரே பிறரையும் தம்போலக் கெடவைத்தலை இயல்பாகவுடையர் என்க. அவ்

வியப்புகொண்டிலரேல் தம் கேட்டினை யுணர்ந்துகொண்ட பின்னரேனும் இறைவன் அடிக்கீழ் வாழ முயன்றிருப்பார் என்க அவர் அங்ஙனம் முயன்றிலராதலால் அவரே கேடாவர் எனப் பொருள் உரைக்கப்பட்டது.

பவமாயம் - பவத்தால் உளதாகும் மாயம், பவமாகிய மாயமுமாம்; அது தன்னால் வரும் கேட்டினையுணர்த்தாது நல்லதுபோலவே காட்டி வருதலால் என்க.

பரஞ்சோதியின் அருட்சுடர்; அது செவ்விதென்க. தாம் இதுகாறும் கொண்டிருந்த அறிவுச்சுடர் பொதுவாகிய கொடுஞ்சுடர்; நான் எனதென்னும் இவற்றைப் பறறுமாறு அறிவிக்கும் சுடர். இச்சுடரோ அவற்றைக் காட்டாது சிவம் ஒன்றனையே காணக் காட்டுதலால் " நவமாய " என்றும், அங்ஙனம் காட்டுதலே செவ்விது ஆதலால் "செஞ்சுடர்" என்றும், அது பெறுதற்கரியதொன்றாதலால் " நல்குதலும்" என்றும், ஏனைய சுடர் பிற பொருளைக் காட்டுமேயன்றித் தானாகத் தன்னைச் சார்ந்தவற்றை ஆக்குமாற்றலற்றது; இதுவோ அங்ஙனம் ஆக்கிக்கொள்ளும் ஆற்றலுற்றது; ஆதலால் " நாமொழிந்து சிவமானவாறு" என்றும் கூறியருளினார். அவகதி, தீப்பாற செல்லும் போக்குமாம்.

அருவந்த தேவர் அயன்திருமாற்கு அரியசிவம்
உருவந்து பூதலத்தோர் உகப்பெய்தக் கொண்டருளிக்
கருவெந்து வீழக் கடைக்கணித்தென் உளம்புகுந்த
திருவந்த வாபொடித் தெள்ளேணம் கொட்டாமோ. 5

இது, வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகனது வரவறிந்த தலைமகள் மணத் திரு வந்தவாறு பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என அவர்க்கு உரைத்தது.

(பொ - ரை) (தோழிமீர்!) அருமையாக எய்தி வரப்பெற்ற பிறவிகளையுடைய வானவர், திசைமுகன், திருமால் என்னுமிவர்க்கு அரியனாக நின்ற சிவபெருமான் திருவுருவங்கொண்டு எம்முன்னர் வந்து, முன்னர் அலர் தூற்றிய உலகத்தினர் (இன்னே என் ஒழுகலாற்றினைப் புகழ்ந்துரைத்தலால்) உயர்ச்சி எய்த என்னை யடிமையாகக் கொண்டு அருள்செய்து, எனது பிறவி மரமானது வேர் எரிந்து கீழ்வீழ்ந்தொழியக் கடைக்கண்ணின் பார்வையால் அறிவுத் தீயைக் கொளுவி என்னுள்ளத்தின்கண்ணே முன்னர்ப் புகுந்த அந்தச் செல்வம் இன்னே என்முன் வந்தபடியைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) பெருமை வந்த என்பது 'பெருவந்த' என நின்றாங்கு அருமை வந்த என்பதும் "அருவந்த" என நின்றதென்ப. அருமருந்தன்ன என்றது மருவி "அருமந்த" என நின்றதெனப் பாடங்கொண்டுரைத்தலும்

ஒக்கும் வேள்விகள் பல ஆற்றி வானவராயினமையின் அங்ஙன முரைக்கப் பட்டார்.

'பூதலத்தோர் உசப்பெய்த உருவந்தருளி' எனினுமாம். '(அன்று) கொண்டருளிக் கருவெந்துவிழக் கடைக்கணித்து என்னுள்ளம் புகுந்த திரு (இன்று என் முன்னர்) வந்தவாறு' என விரித்து இயைத்துக் கொள்க. அன்று உள்ளம் புகுந்த திருவாகிய களவு மணம் இன்று என் முன்னர் கற்பு மணமாதற்கு வந்ததென்க. உகப்பு - உயர்வு. பூதலத்தோர், நற்றாய் முதலியோரைத் தன்மேல் சினக்கவைத்து வாளா அலர் தூற்றி நகை செய்தவர் இன்று, மெய்ம்மை கண்டனராகிப் புகழ்தலின், இழிய வேண்டிய அவரும் உயர்வெய்த என்க. அன்று புறத்தேநின்று என் உள்ளத்தே புகுந்த திரு, இன்று உளத்தே நின்று புறம் வந்ததென்க.

அரைஆடும் நாகம் அசைத்தபிரான் அவனியின்மேல்
வரைஆடு மங்கை தன் பங்கொடும் வந்து ஆண்டதிறம்
உரைஆட உள்ஒளி ஆட ஒண் மாமலர்க் கண்களில்நீர்த்
திரைஆடு மா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ. 6

[இத்திருப்பாட்டின் மூன்றுமடிக்கண் சீர்மிக்கு வரப்பெற் றுள்ளன கொச்சகமாதலின் அமையுமென்க ]

இது, தலைமகன் நம்மையாட்கொண்ட வகையை மெய்ப்பாடு தோன்றப் பாடிப் படகங்கொட்டுவோம் என அவள் அவர்க் குரைத்தது.

(பொ - ரை ) தோழிமீர்! நாம், ஆடுகின்ற பாம்பினை அரைக் கண்ணே கச்சாகக் கட்டிய பிரான், மலையில் விளையாடிய மலை மகளைத் தன்னுடைய இடப்பாகத்திலே கொண்ட கோலத்தோடும் இவ்வுலகிலே என் முன் வந்து ஆண்டுகொண்ட வரலாற்றினை, நம்முரையும் நுகருமாறு, நம்முள்ளேயுள்ள அறிவும் நுகருமாறு, மலர்களுள்ளே பெருமை பெற்ற தாமரை மலர்போன்ற கண்களி னின்று துளிக்கும் கண்ணீர்த் துளியும் நுகருமாறு தெள்ளேணம் கொட்டுவோமாக என்றாள் எ - று.

(வி - ரை.) 'உரையாடுமாறு,' 'ஒளியாடுமாறு,' 'திரையாடுமாறு' என இயைத்துக்கொள்க. இனி, உரையும், ஒளியும, கண்ணீர்த்திரையும் அவன் ஆண்டதிறம் சொல்லுமாறு எனவும் கூறிக்கொள்க. மனவுணர்ச்சி யோடு ஒருங்கெழும் ஓசையே சொல்லினையும், சொற்பொருள் அறிவொளி யினையும், கண்ணீரையும் பயக்கும் என்க இங்ஙனம் உரைப்பின் பாட்டுத் தோன்றுமாறு கூறியருளினருமாம். இதன் விரிவை கவுணியத்துட் காண்க.

"மங்கை தன் பங்கொடு வருதல்" என்றது, உலகத்திலே இல்லறத்தை நிலைநாட்டற்குத் திருவுளங் கொள்ளுதலை. இதனானே அடிகளையும்

இறைவன் இல்லறக் காதல் வழியாகவே ஆட்கொண்டருளினன் என்பதும் பெறப்பட்டது.

ஆவா அரிஅயன்இந் திரன்வானோர்க் கரியசிவன்
வாவாஎன் றென்னையும் பூதலத் தேவலித் தாண்டுகொண்டான்
பூவார் அடிச்சுவடென் தலைமேற் பொறித்தலுமே
தேவான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ 7

[இத்திருப்பாட்டின் இரண்டாம் அடிக்கண்ணே சீர்மிக்கு வந்துள்ளன.]

இது, நான் களவுக்கண் காட்சியளித்து நயந்த அன்றே தெய்வத்தன்மை எய்தினேன். அவ்வரலாற்றினைப் பாடிப் படகங் கொட்டுவேம் என அவள் அவர்க்கு உரைத்தது.

(பொ - ரை) (தோழியரே நாம்) திருமால் திசைமுகன் இந்திரன் வானவர் என்னும் இவர்க்கும் அறிதற்கரிய சிவனும், ஆவா! (அவ்வானுலகத்தைவிட்டு நீங்கி) இப்பூவுலகத்தே (யான் சேய்மைக் கண்ணே செல்லவும் தான்) மனம் வலித்திரங்கி வாவா என்று அழைத்து (வலிய என்முன் வந்து) ஆண்டுகொண்டவனுமாகிய அவன், தன்னுடைய மலர் இயல்பு நிரம்பிய திருவடியை என்னுடைய தலைமேல் வைத்துச் சுவடு செய்தலும் யான் தெய்வ இயல்புடையேனாயினேன் ஆகிய வரலாற்றினைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) தலைமகன் தன்னைக் காதலித்துக் கடைக்கண்ணால் நோக்கியபோதே தன்பாலமைந்த இழிபிறப்பு நீங்கியதென்பதாம். இது வள்ளியம்மை திருமணப்படலத்தாலும் அறியப்படும். அடிச்சுவடு பொறித்தல் – காதலியாக்கொள்ளுதல் சென்னிக்கண்ணே பொறிக்கப்பட்டபோதே ஊற்றுணர்வுற்றனர் ஆதலின் "பூவார் அடிச்சுவடு" என்றருளினர். திருமால் முதலியோர் தேடியும் பெறற்கரிய சிவன் என்க.

களவின்கண்ணே பயிரப்பு மிகுதியால் தலைமகள் சேய்மைப் படுந்தோறும் தலைமகன் அணிமைப்பட்டு வற்புறுத்திக் காதலித்தல் இயல்பு. அதனையே ஈண்டுக் கூறியருளினார் என்க.

கறங்கோலை போல்வதோர் காயப் பிறப்போடு இறப்பென்னும்
அறம்பாவம் என்றிரண்டு அச்சம் தவிர்த்தென்னை ஆண்டு
கொண்டான்
மறந்தேயும் தன்கழல் நான்மறவா வண்ணம் நல்கியஅத்
திறம்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ. 8

[இத்திருப்பாட்டின் 2-ஆம் 3-ஆம் அடிகளில் சீர்மிக்கு வந்துள்ளன ]

இது, களவுப் புணர்ச்சியால் உளவாகும் அச்சம் அகற்றித் தன் திருவடியை எனக்கு உரித்தாக நல்கிய திறத்தைப் பாடிப் படகங் கொட்டுவோமாக என அவர்க்கு அவள் கூறியது [கற்புத்திறம் அடைதலின் துணிபுபற்றி அங்ஙனங் கூறினாள்.]

(பொ - ரை ) (தோழிமீர் !) ஓலையினால் ஆக்கப்பெற்றுச் சுழலா நின்ற) ஓலைக்காற்றாடியைப் போல்வதாகிய காயத்திற்கு உளவாகிய பிறப்புடனே இறப்பென்னும் இரண்டினால் உளதாகும் அச்சமும், அப்பிறப்பிற்குக் காரணமாகிய அறம் பாவம் என்ற இடண்டனால் உளதாகும் அச்சமுமாகியவற்றை நீக்கி என்னை ஆண்டுகொண்ட பெருமான், நான் தன்னை மறப்பினும் அங்ஙனம் மறவாதவாறு தன் கழலை எனக்குரித்தாக்கி நல்கிய கூறுபாட்டினுக்கேற்ற பாடல் களை நாம் பாடித் தெள்ளேணம் கொட்டுவேமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) "கறங்கோலை" என்பது, சிவி நுனியை வட்டித்து நறுக்கிய ஓலையை நீளமும் குறுக்குமாக நடுவிலே பொருத்திக் காற்றிற் சுழலுமாறு வைப்பதொரு விளையாட்டுக் கருவி. அது பெருங்காற்றிற் சுழலுங்கால் அவ்வோலைகள் இரண்டும் ஒன்றேபோலத் தோன்றும். கறங் கோலை, கொள்ளிவட்டம், கடற்றிரை கடைமத்து என்னும் இன்னோ ரன்னவை மேலும் கீழுமாக மாறிமாறி வருதலால் அவை பிறவிக்கு உவமங் களாதற்குரிய. பிறவிச் சுழலிலே அகப்பட்டு நின்ற உயிர்கள் அறம் பாவம் என்னும் இவற்றை அறியாவாய் மயக்குற்று அஞ்சும் என்க. காயப் பிறப் போடு இறப்பென்னும் இரண்டச்சம், அறம் பாவம் என்னும் இரண்டு அச்சம் என்க. உள்ளது உயிராதலால் காயத்தோடுபட்டுப் பிறத்தலும், அதனி னின்று இறத்தலும் உளவாயின. அவ்விரண்டும் துன்பப்படுத்தற்குரியன. அறஞ்செய்யாமையும், அதனொடு மாறுபட்ட மறஞ்செய்தலும் கேடு பயக்குமாதலால், அவ்விரண்டானும் அச்சம் உளவாயின. தன் கழலை அவன் எனக்கு நல்காவிடில் நான் அவனை மறந்திருப்பேன் என்பதாம். பிறப்பு இறப்பென்னும் அச்சம் எனவும், அறம் பாவம் என்னும் அச்சம் எனவும் காரணங்கள் காரியமாக உபசரிக்கப்பட்டன.

**கல்நார் உரித்தென்ன என்னையும்தன் கருணையினால்**
**பொன்னார் கழல்பணித்து ஆண்டபிரான் புகழ்பாடி**
**மின்நேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்**
**தென்னாதென் னாஎன்று தெள்ளேணம் கொட்டாமோ. 9**

தலைமகன் வெற்றியினால் ஈட்டிய புகழைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) மின்னலை ஒத்து அசையா நிற்கும் இடையினை யும், சிவந்த பவளம் போன்ற வாயினையும், வெள்ளிய பற்களையு

முடைய நங்கைமீர்! கல்லினின்று நார் உரித்தாங்கு (உணர்ச்சி யற்ற சடப்பொருளாகிய என்மாட்டு உணர்வை யுளதாக்கி, என்னைத் தன் செயல் செய்யுமாறு ஏவி) எனக்குப் பொன்போன்ற தன்னுடைய அரிய திருவடியைப் பணியச்செய்து கருணையினால் ஆண்டுகொண்ட பெருமானுடைய வெற்றித் திறனால் உளதாகிய புகழை நாம் பாடித் தெளிந்த ஓசையையுடைய படகத்தினைத் தென்னா தென்னாவென்று பாட்டொலி எழக் கொட்டுவோமாக (என்றாள்) எ - று

(வி - ரை.) பிறராலும் தம்மாலும் திருத்துதற்கரிய இயல்புடையோம் என்பதும், இறைவன் ஒருவற்கே திருத்துதற்கு எளியதாகும் என்பதும் தோன்றக் "கல் நார் உரித்தென்ன" என்றருளிச் செய்தார். "பொன்னார் கழல்," தமக்குப் பொன்னை யொத்து யாண்டும் பெறுதற்கரிய கழல். அவ்வுலகத்துக்குப் பொன்னாகிய அருளே கழலாதலால், அஃது அங்ஙனம் உரைக்கப்பட்டது.

"தென்னா தென்னா"வென்றது பாட்டொலியை. சுருதி செய்துகொண்டு புகழ் பாடிக் கொட்டுவோம் என்றபடி. இதனால் முன்னும் அங்ஙனம் செய்துகொண்டமை பெற்றாம். பின்னும் அவ்வாறுவது பத்தொன்பதாம் திருப்பாடலாற் பெறப்படும். இங்ஙனம் கருவியாளர் செய்துகொள்வதை இடனறிந்து கூறியருளிய திறன் பாராட்டற்பாலது. பணித்து - பணியுமாறு செய்து. "தென்னா என்னாமுன்" என முன்னர்த் திரு எம்பாவை யுள்ளுங் கூறினார்.

கொட்டும்போது இடை நுடக்கமும், பாடும்போது பல் வாய்களின் அசைவும் உளவாமன்றே? ஆதலின் அவரை அவ்வியல் தோன்ற அழைத்தாள் என்க. இதனால் இத்திருப்பாட்டிற்கு முன்னரே பாடிக் கொட்டுதல் பயின்றுவந்தமை பெற்றாம். அங்ஙனம் பாடிக்கொட்டுவோர்க்குப் படகத்தின் சுருதி குறைவுபட்டிருத்தலையும், அதனால் அவரது பாடல் இனிமையற்றதையும் கண்டு சுருதி செய்துகொண்ட பின்னர் அதனைக் கொட்டுவோம் என நினைவுறுத்திய திறனை உன்னுந்தோறும் இன்பம் மிகும்.

முன்னே கழல் பணித்து ஆண்டபிரான், இன்னே வரைவிடை வைத்துப் பொருள்வயிற் சென்று புகழ் ஈட்டிய பிரான். அவனுடைய புகழைப் பாடி என விரித்துக்கொள்க.

**கனவேயும் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்**
**புனவேய் அனவளைத் தோளியொடும் புகுந்தருளி**
**நனவே எனைப்பிடித்தாட் கொண்டவா நயந்துநெஞ்சம்**
**சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணம் கொட்டாமோ. 10**

இது, கனவிலும் பிறர்க்கு அறிவரிய அத்துணைப் பெரியவன்,

நனவிலே வந்து பிடித்தாட்கொண்டதை நயந்து கண்ணீர் மல்கத் தெள்ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை) (வேற்கண்ணீர் !) தேவர்கள் நனவினன்றிக் கனவிலும் காணற்கரிய ஒளிக்கின்ற விரக்கழலை அணிந்த திரு வடியை உடையவன் மலைச்சார்புக் கொல்லையிலே விளைந்த மூங்கிலை யொத்த வளையலணிந்த தோளினையுடைய உமையம்மையோடும் நிலவுலகத்துள்ளே வந்தருளி, நனவிலே என்னைக் கைப்பிடித்து ஆண்டுகொண்டருளிய வரலாற்றினை நெஞ்சம் நயக்க, வேலை யொத்த சினத்தையுடைய கண்களினின்று நீர் பாய நாம் தெளிந்த ஓசையையுடைய படகத்தைக் கொட்டுவோமாக (என்றார்) எ - று.

(வி - ரை.) "தோளியொடும்" ஈண்டுப் புகுந்தமையால் அவன் எம்மையும் ஆட்கொண்டான் என்க. பிடித்தல் - கைப்பிடித்தல். களவிலே மணந்துகொள்ளுதல். வேய், நிறம் வடிவு ஊறு மலையிற் பிறந்தமை என்னும் இவற்றால் உவமமாயிற்று. உடையானது சினம் வேலின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. மாறுபட்டாரைச சினந்து அஞ்சியொடுங்கச் செய்யும் வேல் என்க. ஈண்டுக் கற்பின் ஆற்றலையும் புலப்படுத்த வந்தது. மழை பெய்யுமாறு கடைக்கணித்தலும அதனுக்கு உண்டு.

பாடிக் கொட்டுதற்கண்ணே அவர்பால் மெய்ப்பாடு தோன்றுமையின், அது தோன்றுமாறு புரிக என அவரை அவள் ஊக்கியவாறென்க. உரு வெளித்தோற்றமன்று என்பது தோன்ற "எனைப் பிடித்து" என்றாள்.

எளிமை சான்ற தன்னையும் ஆண்டதனையும, ஆளப்போவதனையும் 'நெஞ்சம் நயந்து' என மாற்றிக்கொள்க. கண்கலங்கிச் சிவந்து "நீர்மல்க" என்க.

**கயல்மாண்ட கண்ணிதன் பங்கன்என்னைக்கலந் தாண்டலுமே**
**அயல்மாண்(டு) அருவினைச் சுற்றமும்மாண்(டு) அவனியின்மேல்**
**மயல்மாண்டு மற்றுள்ள வாசகம்மாண்(டு) என்னுடைய**
**செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ. 11**

இது, தலைமகன் தன்னை மணந்து ஆண்டுகொண்ட அப்போதே தனக்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளை இப்போது பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை) (தோழிகாள் !) கயல்மீனின் மாட்சிமையுடைய கண்களைப் படைத்துள்ள உமையம்மையை இடப்பாகத்திலே கொண்ட பெருமான், அப்போது என்னைப் புணர்ந்து ஆளுதலைச் செய்தலும், இந்நிலவுலகத்திலேயுள்ள பக்கச் சார்பு ஒழிந்து, கடத் தற்கரிய என் வினையொடு மருவிய சுற்றமாகச் சுற்றற்குரிய சுற் றத்தினுறவும் ஒழிந்து, இப்பூவுலக வாழ்க்கையில் அமைந்த (மன

மயக்கமும் ஒழிந்து, அதன் காரணமாக எழுவதற்குரிய சொற்களும் ஒழிந்து, அவற்றை முதலாகக்கொண்டு செய்யும் என்னுடைய தொழிற்பாடுகளும் ஒழிந்து போனவாறு நாம் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) புதுவினை ஒன்றேனும் ஆற்றாதவாறும் பழவினை பற்றாதவாறும் ஆண்டுகொண்டான் என்றபடி. ஆண்டுகொண்டலும், மாளற்கரியவாய் மேலும் மேலும் வளர்தற்குரிய அவற்றையெல்லாம் ஒருங்கழித்த அவ்வரலாற்றினைப் பாடிக் கொட்டுவோம் என்றாள் என்க. கடைக்கண்ணால் உயிர் உலகுகளைப் பாதுகாத்துவருதல் அன்னை அருட்கண்ணின் இயல்பாம் என்க. கலத்தல் - மணந்து கொண்டு புணர்தல்.

மயல் மனத்தினையும், செயல் காயத்தினையும் உணர்த்தி நின்றன.

எவ்வகைத் தொடர்பும் இல்லாதிருக்கவும், தத்தமக்குள்ளே முற்பிறப்புக்களிலும், இப்பிறப்பினும் பெறுதற்கும் கொடுத்தற்கும் ஒருவர்க்கொருவர் காலம் இடம் துணை ஆற்றல் என்பவை வாய்க்கப் பெறுமையால் ஆற்றற்கியலாது எஞ்சியிருந்த வினை அயல்வினை எனப்படும். ஒருவர்க்கொருவர் அறிந்துகொண்டு அங்ஙனம் ஆற்றப்பெறாது இருந்தன சுற்றம் எனப்படும். வினை அயல்; அருவினைச் சுற்றம் எனக் கொள்க. அயல் வினை, ஆற்றப்படுவோர் மனத்துள்ளே உணரப்பெறுமையால் அது வினையயல் எனவும், சுற்றவினை ஒருவர்க்கொருவர் அறிந்துகொண்டமையின் அருவினைச் சுற்றமெனவும் ஏற்குமாறு பகுத்துக்கொண்டாம். இங்ஙனம் கூறுவதனை "ஏற்புழிக்கோடல்" என்ப அயலும் சுற்றமும் இருவகைப்பட்ட புறத்தொடர்புகள். மயல் முதலாய மூன்றும் அகத்தொடர்புகள். இவற்றால் இருவகைப்பட்ட தொடர்புகளும், தாமும், இறைவனும் எனப் பிரிந்து போயினேம் என்றும், இனி அவ்விருவகைத் தொடர்புகளும் நீங்கி ஒன்றாக உள்ளடக்கப் பெறுதல்வேண்டும் என்றும் குறித்தருளியவாறு. பிறவுமன்ன.

**முத்திக் குழன்று முனிவர்குழாம் நனிவாட**
**அத்திக் கருளி அடியேனை ஆண்டுகொண்டு**
**பத்திக் கடலுள் பதித்த பரஞ்சோதி**
**தித்திக்கு மாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ. 12.**

இஃது, அறிவுக்கடலுள் பதித்து ஆழ்ந்துபோய் வாடச் செய்யாது, என்னை அன்புக்கடலுள்ளே அமிழ்த்திய பரஞ்சோதி, எனக்கு இனிமை செய்யுமாறு பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழிகாள்!) அறிவான் அறிந்துபெற்றுக் கொள்ளல் வேண்டுமென (அவ்வறிவுக் கடலுள் அமிழ்ந்திய) முனிவர்

கூட்டம் (அதுகொண்டு அங்கே விடுதலை எய்தப்பெறுதாய்) மிகவும் வாட்டமுறவும், (அவர் வாட்டத்தினை ஒரு பொருளாகக் கொள்ளாது) அத்தியென்னும் சிவகணத் தலைவனுக்கு முத்தியருளிச் செய்து, அடியேனையுமாட்கொண்டு, அன்பு நெறிக்கடலிலே அழுத்திய மேலான ஒளிவடிவாகிய பெருமான் எனக்கு இனிமை செய்யும் வகையை நாம் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றுள்) எ - று.

(வி - ரை ) "அத்தி" என்பானுக்கு அருளிய இடம் திருக்காளத்தி என்ப கடம்பவனம் என்பாருமுளர். இதனாற் பத்தி நெறியின் சிறப்புக் கூறப்பட்டது. அன்பு நெறி, அன்பின் ஐந்திணை வழிப்பட்ட களவும் கற்பும். இதுவே தமிழ் நெறி. முனிவர் குழாத்தை விடுத்து அத்திக்கும் எனக்கும் அருளி என்றபடி. அத்தியொடு தம்மையும் உடன்புணர்த்திக் கூறுமதனானும், அத்தியைப் போற்றித்திருவகவலிலே பட்டமங்கையிலே ஆட்கொள்ளப்பட்ட இயக்கிமாருடன் புணர்த்திக் கூறியவதனானும், அன்ன பிறவற்றானும் அடிகளும் சிவகணத்தாருள் ஒருவராவர் என்பது பெற்றும்.

நூலறிவாலும், மரபறிவாலும், உபதேச அறிவாலும் நாடாது, 'அவன் அருள்கொண்டு அவனடியை வணங்குவோர்' இன்புறுவர். ஏனையோர் வாடுவர் என்க. முனிவர் புக்கு வாடும் நெறியிற் புக்கு வாடாமல் அருளிய பெருங்கருணைத் திறம் பாடும் பாடலே பாடலாம். அதுவே இப்பெருந் திறனை நமக்கு அளித்தது எனவும் குறிப்பித்தருளினர் என்க.

**பார்பாடும் பாதாளர்பாடும் விண்ணோர்தமபாடும்**
**ஆர்பாடும் சாரா வகைஅருளி ஆண்டுகொண்ட**
**நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்**
**சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ. 13**

[இத்திருப்பாடலில் முதலடிக்கண் சீர்மிக்கது ]

இஃது, எம்மைத் தீய சார்பிலே பட்டுழலாமல் ஆண்டுகொண்ட வரலாற்றுப் பாடல்களையும், தலைமகனுடைய மிக்க புகழினைக் கிளந்து கூறும் பாடல்களையும் நாம் பாடித் தெள்ளேணம் கொட்டு வோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) நிலவுலகத்தார் பக்கலிலும், கீழ் உலகத்தார் பக்கலிலும், விண்ணுலகத்தார் பக்கலிலும், மற்றுமுள்ள எவ்வுலகத் தார் பக்கலிலும் போய்ச் சாராத வண்ணம் எமக்கு அருளிச்செய்து ஆண்டுகொண்ட தமக்கு எதிரிய பாடல்களை முதற்கண்ணே நாம் பாடி அதன்மேல் எண்ணத்திற்கு எட்டாத ஒப்பற்ற பெருமை யுடைய பெருமானது மிக்க புகழ் நுதலிவரும் பாடல்களைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் (என்றுள்) எ - று.

(வி - ரை.) "விண்ணோர்தமபாடும்" என்றதை விண்ணோர்தம்பாடும் எனப் பாடங்கொண்டாரும் உளர. பாடு - பக்கல். பார் - உலகோர். ஆகுபெயர். பார் முதலியவற்றைச் சார்பாகச சார்வது, அவ்வவற்றுக்குரிய தலைமையாளர்தம் அருளைப்பெற்றுக்கொள்ளுமாறே நிகழ்வதாகலின் "பார்" என்றதை ஆகுபெயராகக் கொண்டாம். மூவுலகிலும சாராமை பிறவியறுத லால் உளதாவது. தமக்கு முற்பட்ட நிகழ்ச்சியைப் பாடுதலினால் அது "நேர்பாடல்" எனப்பட்டது. நேர்தல் - முன்னுதல். நேரே கண்கண்ட நிகழ்ச்சியைப் பாடும் பாடல் நேர்பாடல் என்க. தன்னிகழ்ச்சியை உரைத் தலினும் தன்னை ஆண்டானுடைய நிகழ்ச்சியுரைத்தல் சீரிது என்க. 'நினைப்பரியோன்,' 'தனித்தோன்,' 'பெரியோன்' என்க.

மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே
நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்தடியேன்
பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தால்
சேலேர்கண் நீர்மல்கத் தெள்ளேணம் கொட்டாமோ. 14

இது, தேவர்க்கரியவன் என்பால் நுண்ணியனாய்ப் புகுந்து உள்ளத்தை உருகச்செய்யும் இயல்பினால் கண்ணீர்மல்கத் தெள் ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர்,) திருமாலும் திசைமுகனும் அவர் கள் ஒழிந்த தேவர்களும் மறைகளும் தன்னுள் நுழைந்து கொள் வதற்கரியனாகிய நுண்ணிய வடிவுடைய அவன், அந்நுண்வடி வோடே (யான் கண்டு கொள்ளாதபடி) என்னுள்ளே வந்து புகுந்து எனக்கு இரங்கி என்னை உருகச் செய்யும் இயல்பால் நீயிரும் சேல் மீனை ஒத்து அழகிய நும் கண்களினின்றும் கண்ணீர் பெருக அவ் வியல்போடே நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) யான் காணுவாறு வந்து என்னுட்புகுந்து என் நிலை கண்ணீர் மல்க என்னை யுருக்காநின்றான். ஆதலால் என் கண்கள் பெருக்கின. இதனைக் கண்டேனும் நும் கண்கள் சேலின் ஒத்தமைக்கேற்ப நீர் பெருக்குவீராக, என்னொடு தெள்ளேணம் கொட்டுவீராக எனக் கண்ணீர் மல்காத தன் தோழியரை நோக்கிக் கண்ணீர் பெருக்குமாறு வற்புறுத்தினாள் என்க. இங்ஙனம் பாடும் திறன் பாட்டுலகின் உயிராம் என்க.

யானும் தேவரும் நூலும் கண்டறியாவாறு அத்துணை நுண்ணியனாய் என்னுட் புகுந்தான் என்க. என்பால் ஈரமின்மைக்கு இரங்கி என்னை உருக்கி இரங்க வைத்தான் என்க. மால் முதலியோர்பால் நுழைந்து அவர்கள் இயல்பினைப் புலப்படுத்தும் நான்மறைநூல் நுழைவரிய நுண்ணியன் என்க. பாவகம் - இயல்பு ; கருத்து. அவன்மேல் அன்பிலாத

என்னை இரங்க வைத்தான், என்னுடன் சார்ந்த நும்மை ஏன் அங்ஙனம் செய்திலன் என்றவாறுமாம்.

உருகிப் பெருகி உளம்குளிர முகந்துகொண்டு
பருகற் கினிய பரங்கருணைத் தடங்கடலை
மருவித் திகழ்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
திருவைப் பரவிநாம் தெள்ளேணம் கொட்டாமோ. 15

இது, தலைமகன் திருவடியை நினைந்து அடியேம் திருவாகிய அன்பு நெறியைப் பரவி, உளம் உருகிப் பெருகிக் குளிரக் கருணையை முகந்து கொண்டு தெள்ளேணம் கொட்டுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது

(பொ - ரை) (தோழிமீர்) தென்னாட்டிலே விளங்காநின்ற தென்னவனாகிய சிவனுடைய (எமக்கென அருளிய) திருவடிகளை நினைந்து (அவனுக்கு) அடியோமாகிய எமக்குரிய திருவாகிய அன்பு நெறியைப் புகழ்ந்து (அவனுடைய) உண்ணுதற்கு (நுகர் தற்கு) இனிய மேம்பட்ட கருணையாகிய பெரிய கடலை மருவி இது காறும் பெற்றிலாத காரணத்தால் மனமுருகி (அதனால்) அவன் மேல் ஆர்வம் பெருகி (அதனால்) குளிர அதனை அவ்வுள்ளத்தால் முகந்துகொண்டு நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றாள்) எ - று

(வி - ரை.) கழலை நினைந்து, திருவைப் பரவி, கருணைக்கடலை மருவி, உருகிப் பெருகிக் குளிர உள்ளத்தால் அதனை முகந்து கொண்டு கொட்டு வோமாக என வினைமுடிவு செய்க. வாளா கொட்டப் புகுந்த தோழியரை இங்ஙனம் செய்து கொட்டுக என அவள் வலியுறுத்தினாள். திரு - காதலா கிய செல்வம். பரவுதல் - புகழ்தல்; புகழ்ந்து பாடுதலுமாம்.

சிங்கள நாட்டிலே சடங்கு முதலாய சிறப்புக்களை அயர்வுழிப் பல பெண்டிர்கள் ஒருங்கு குழுமித் தம் நடுவே வட்டித்த பெரியவொரு தோற் கருவியை வைத்து, அதனைச் சூழக் குந்தியிருந்து பலவகைப் பாக்களைப் பாடி, ஒவ்வொன்றின் எலலாரும் ஒருங்கு சேர்ந்து அதனைக் கொட்டிவரும் வழக்காறுண்டு. இதனை மலையாள நாட்டின் கண்ணும் கண்ட நினைவு எனக்கு உளது "பாடித் தெள்ளேணம் கொட் டாமோ" என முடியும் இப்பகுதியைப் படிக்குந்தோறும் அந்நினைவு பின்னும் பின்னும் எழாநின்றது.

முன்னரத் தமக்கென அளிக்கப்பட்டது என்பது தோன்ற வார் " எனப்பட்டது.

புத்தன் புரந்தராதியர் அயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேய பிரான் பிறப்பறுத்த

அத்தன் அணிதில்லை அம்பலவன் அருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணம் கொட்டாமோ. 16

இஃது, அவனருட்கழல் எங்ஙனம் எம் சித்தம் புகுந்தனவோ அப்புகுந்தபடி தாளவறுதியிட்டுத் தெள்ளேணம் கொட்டுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) புதியவனும், இந்திரனைத் தமக்கு முதல்வனாகக் கொண்ட வானவரே, அயனே, திருமாலே என்னும் இவர்கள் போற்றி செய்துவரும் பித்தனும், திருப்பெருந்துறையிலே பொருந்திய பிரானும், பிறவியை அகற்றிய அப்பனும் ஆகிய அழகிய தில்லையம்பலத்துள் கூத்தயர்வோனுடைய அருட்கழல்கள் எம்முள்ளத்தே நடித்துப் புகுந்தபடியே தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) பழையோன் என்னும் பெயர் போன்றது புதியோன் என்பதும். பின்னோன் என்றபடி. எல்லாவற்றின் இறுதிக் கண்ணும் இருப்பவன் அவன் ஒருவனே ஆதலால். 'புரந்தராதி' எனப் பாடங் கொள்வாரும் உளர். அவர் கொண்ட பாடம் யாப்பினுக்கும் பொருளினுக்கும் பொருந்தாதென்க. போறறி செயப்படுவோன் என விரித்துக்கொள்க. "பித்தன்" என்னும் சொற்போக்கிற்கு அமைய அங்ஙனம் தொகுத்தருளினர். போற்றி செயப்படுவோன் பித்தன் என்றவாறு. உய்யும்நெறி காணவிடத்து அவர் போற்றி செய்வர் அங்ஙனம் செய்வோரையும் பாதுகாத்தலினால் பித்தனாயினன். அன்றியும் அவனே அவரை அழிப்பவனுமாதலின் அங்ஙனம் கூறினாருமாம். பெருந்துறையிலே செவ்வி நிரம்பிய அன்பரைத் தன்னுள்ளே ஒடுக்க அழல்வடிவம் மேவிய பிரான் எனவும், அங்ஙனம் தம்மை அடக்கிக்கொள்ளத் தில்லையம்பலத்தே கூத்தயர்வோன் எனவும் இசையெச்சங்களை விரிக்க.

தம்முடைய சென்னியிலே பொறிக்கப்பட்ட திருவடி, ஆங்கிருந்து தம் சித்தத்துள்ளே நடந்து புகுந்த தாள அறுதிப்படியே தெள்ளேணம் கொட்டவேண்டும் என்றபடி.

"புத்தன்", பௌத்த நூற்கருத்தின்படி ஒழுகுவோன் எனவும் "புரந்திரன்", பிரகஸ்பதி நூற்கருத்தின்படி ஒழுகுவோன் எனவுங் கொள்ளினும் நனி பொருந்தும்.

உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரங்கள்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்
கவலைக் கெடுத்துக் கழலிணைகள் தந்தருளும்
செயலைப் பரவிநாம் தெள்ளேணம் கொட்டாமோ. 17

இஃது, அவனுக்கு உரிய நெறியல்லாத புன்னெறிகளை நன்னெறிகளாகக் கொண்டு மயக்கமுற்று அதனுள்ளே கிடந்த என் கவலை

யைக் கெடுத்து அன்பின் ஐந்திணை நெறியைக் காட்டி அதன்பாற் செல்லுமாறு கழலையும் விளங்கக் காட்டியுதவிய செயலைப் புகழ்ந்து தெள்ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர்) சாரமற்ற சமயங்களும், நெறி முறைக்கு ஒவ்வாத அவற்றைக் கிளந்து கூறும் நூல்களும் என்றும் கடலுள்ளே கிடந்து வளர்தற்கியலாது சவலையனாய்ச் சுழன்று வரும் என்னுடைய (அவலஞ் சான்ற) கவலையை ஒழித்துத் தன்னுடைய திருவடியிரண்டனையும் எனக்கு உதவியருளிய இறைவனுடைய அருட்செயலைத் துதித்துத் தெளிந்த ஓசையையுடைய படகத்தினைக் கொட்டுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) சமயங்களும் அவை கூறிய சாத்திரங்களும் இறைவனுடன் கலத்தற்குரிய நெறி காட்டுவன. ஆதலின், அவை காட்டிய நெறிகளை மணநெறி எனக் கொள்க. மணநெறி என்றது அன்பின் ஐந்திணை நீங்கலாகவுள்ள ஏனைய மண நெறிகளை என்க. அவை செவ்வி சிறந்தன அன்மையின ஒவ்வா எனபது முன்னரும் காட்டினும். ஆண்டுக் காண்க.

"கவல்" என்பது விகுதி குன்றி நின்றது. கவலல் என்க. "கவல" என்றது யாது செய்வேம் என்றலை. அஃது அவலத்தின் பின்னர் நிகழ்வது.

" அவலக் கவலை " (மணிமேகலை. பளிக். 118.)

என்றல் காண்க. உவலை - பயன் வற்றியது; உலர்ந்தது. சவலை - வளர்ச்சி பெறுதது. உவலைச் சமய சாத்திரக் கடல், அவலக கவலையைத் தநதன, அதனுள்ளே சவலையனாய்க் கிடந்தேன். அத்தகைய எனக்கு அருட்கடலை யுதவி ஒளி விளக்காகிய கழலளித்தனன் என்க.

**வான்கெட்டு மாருதம் மாய்ந்தழல்நீர் மண்கெடினும்**
**தான்கெட்டல் இன்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு**
**ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டென்உள்ளமும்போய்**
**நான்கெட்ட வா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ. 18**

இஃது, எல்லாம் கெடநின்ற ஊழியினும் தான் அசைவின்றி நின்ற இறைவனைக் கலத்தற்கு யான் அனைத்தும் கெட நின்றவாறு பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) வானமழிந்து காற்று மறைந்து நெருப்பும் நீரும் நிலனும் ஆகியுவையும் ஒருங்கு அழிந்த காலத்தும், தான் ஒருவகையான அசைவுமின்றி நின்ற தன்மையையுடைய நம் தலைவனைக் கலந்து இன்புறுவதற்காக என்னுடைய உடம்பு ஒழிந்து, உயிர் நீங்கி, சுட்டறிவு அடங்கி, அகவுறுப்புக்கள் மறைந்துபோய்,

நான் என்பதும் இல்லாதுபோன வரலாற்று முறையைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றுள்) எ - று.

(வி - ரை ) அவனைப் பற்றிய காரணத்தால் பிற எல்லாம் கெட்டு வெறிதானேன் என்றபடி.

அவனுக்கு வடிவமாகிய ஐம்பெரும் பூதங்களும் கேடடைந்தவிடத்தும் அவன் அதனுல் சலிப்பின்றி உளனுகும் இயல்புடையான். யானும் என் உருவும் உறுப்பும ஆகிய எல்லாவற்றையும் அவன்பொருட்டு இழந்து அவனுயினேன் என்க.

மண் நீர் அனல் கால் வெளியென ஒடுக்க முறையின்றி, வான் முதலாய கெட்டென்றருளிச் செய்தார், ஐம்பெரும் பூதங்களும் மரபு மாறிக் கெட்ட விடத்தும் சலியான் என்பது அறிவித்தற்கு. எனவே அவையும் அம்மரபு மாறு என்பதும் பெறப்பட்டது.

''ஊன்'' என்றது உடலை. அது கெட்டதனுல் உயிர் கெட்டது என்க. உயிர் கெடுதலாவது தான் என்பதொன்றற்றுச் சிவத்தோடு ஒடுங்கிநிற்றல் என்க. உயிர் கெடவே அவ்வுயிரைப்பற்றிய உள்ளவுணர்வும் அற்ற தென்க. உணர்வற்றதென்றது, கண்டு கேட்டு உண்டு உடுத்து உற்றறியும் ஐம்புல அறிவும், அவற்றின் நிலைக்களனுய உள்நினைவும் சிவ அறிவாக அமைந்து நிற்றலை. எனவே உயிர் அகப்பற்றும் புறப்பற்றும் நீங்கிச் சிவஒளி பெற்றதென்க.

உயிரை உழலவைப்பது உடலாதலின் அதனை முன்னும், அதன் மாட்டு உயிர் உற்றே உள்ளமும் அறிவும் தோன்றலின், உயிரை அதன் பின்னும், உள்ளமின்றியும் புலனுணர்வுண்டாதலின் அறிவினை அதன் பின்னும், புலனறிவு முற்றிய பின்னரே மனனுணர்வுதித்தலின் அதனை அதன் பின்னுமாகப் படியெடுத்து மொழிந்தருளினர்.

ஐம்பெரும் பூதங்களுக்கு மேலும் இறைவன் நிலைபெற்று இருத்தலின், ஐம்பெரும் பூதங் கூட்டுறவுபட்ட வுயிர், அந்நிலையுடையானைப்பற்றி யக்கால், அப்பூதக்கூட்டங்கள் அழிந்தகாலையும், சலிப்பின்றி நிலைபெறும் எனவும், எனவே உயிர்க்குப் பற்றுக்கோடு உடலுறுப்புக்கள் என்றல் பொய்யாயொழிய, அவனே பற்றுக்கோடென்னும் மெய்ம்மை தெளியப்படும் எனவும் கூறிக்கொள்க.

ஊன் முதலாயின வளர்ந்த வழியே உயிர் சலிப்பின்றி நிலைபெறும் என்பதே இயல்பாகவும், யான் அதனுடன் மாறுபட அவையெல்லாம் கெட்டவிடத்தே நிலைபெற்றேன் , ஈதொரு வியப்பாகும். ஆதலின் அச்சுவை தோன்றப் பாடுவோமாக என்றவாறு.

**விண்ணேர் முழுமுதல் பாதாளத் தார்; வித்து**
**மண்ணேர் மருந்து அயன் மாலுடைய வைப்பு அடியோம்**
**கண்ணுர வந்துநின்ருன் கருணைக் கழல்பாடித்**
**தென்ன தென்ன என்று தெள்ளேணம் கொட்டாமோ. 19**

இஃது, எல்லார்க்கும் தான் ஒருவனாக நின்ற அத்துணைப் பெரியோன், என் கண் களித்து நுகர முன்னர் வந்து நின்றான். அவனுடைய கழலைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர்!) தேவர்க்கு முழுமுதலாகிய தெய்வமும், கீழுலகங்கள் ஏழினும் கடையாய பாதாளவுலகத்தார் பூமி முதலாய உலகங்களிலே முளைத்தற்குத் தன்னகத்திலே அடக்கிய வித்தப்போன்றவனும், மண்ணுலகத்தார் பிறவிப் பசி நோய் நீங்க உட்கொள்ளும் மருந்தாவானுமாகிய சிவபெருமான், அவனுக்கு அடித்தொழில் பூண்ட எம்முடைய கண்கண்டு பருகி இன்பமெய்த வந்துநின்ற அவனுடைய திருவடியைப் பாடித் தென்னா தென்னாவென்று தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) இறைவனை ஒரு தெய்வ மரமாக்கி, அம்மரம் பாதாளத் தார்க்கு வித்தாகவும், விண்ணோர்க்கு அடிமரமாகவும், மண்ணோர்க்குத் தளிர், பூ, பிஞ்சு, காய், கனி முதலாகிய நுகர்பொருளாகவும், அடியேமுக்கு இன்னவற்றையெல்லாம் கண்டு நுகரும காட்சிப் பொருளாகவும் கொண்டு உரைத்தவாறெனக் கூறினும் இயையும். மருந்து - உணவு.

"தென்னா தென்னா"வென்று பாடி எனவும், "தென்னா தென்னா" வென்று கொட்டாமோ எனவும் இயைக்க.

கண்ணார வந்துநின்றான், முழுமுதல் முதலியோன் ஆவன்; அவன் கழல் எனக் கொள்க.

**குலம்பாடிக் கொக்கிற கும்பாடிக் கோல்வளையாள்**
**நலம்பாடி நஞ்சுஉண்ட வாபாடி நாள்தோறும்**
**அலம்பார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற**
**சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ. 20**

இது, தலைமகன் குலம் முதலாயவற்றைப் பாடித் தெள்ளேணம் கொட்டுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

[சீர்பாடல் பாடிக் கொட்டுவோம் என்றவாறென்க]

(பொ - ரை.) (தோழிமீர்!) ஆங்காங்கு அவன் அவதரித்த குலங்களையும் பாடி, அவன் சூடிய கொக்கிறகினையும் பாடி, திரண்ட வளையல்களை அணிந்த அன்னையின் நன்மைகளையும் பாடி, அவன் நஞ்சுண்ட வகையினையும் பாடி, எந்நாளும் நிரம்பி அசைந்து வழிந்தோடுகின்ற நீர்வளமிக்க தில்லைக்கண்ணுள்ள பொது மன்றத்திலே அவன் கூத்தயர்தலால் தானுமாடுகின்ற சிலம்பினது

ஆட்டத்தினையும் பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக (என்றுள்) எ - று.

(வி - ரை) தேவர்களை வருத்திய கொக்கு வடிவினனுகிய குண்டாசுரனைக் கொன்று அவனது இறகைப் பறித்துச் சென்னியில் இறைவன் சூடிக்கொண்டான் என உபதேச காண்டத்துள் ஓதியவாறு காண்க.

ஒரு குலமு மில்லாத இறைவன் அருளலும் அழித்தலும் செய்தற்காக இழிந்த பன்றி, வேடர்குலம் முதலியவற்றுள்ளும் உயர்ந்த அந்தணர் குலம் முதலியவற்றுள்ளும், இடைப்பட்ட, ஏனைய குலங்களுள்ளும் அவதரித்தான் ஆகலின், அங்ஙனம் அவதரித்த குலங்களைப் பாடுதல் வேண்டுமெ என்றனள் என்க.

அன்னை உயிர்களின் செவ்விக்கேற்ப அவற்றை அணைத்தும் ஒறுத்தும் வளர்த்து வருதல் அவளால் நமக்குளதாகும் நன்மை என்க.

"அம்பலத்தாடுதல்" எல்லாவுயிர்களையும் ஐந்தொழிற் படுத்தற்கு நிகழ்த்துவது. ஆட்கொள்ளுமிடமாதலால் அதனை இறுதிகட் கூறினர். அவனேயன்றி அவன் தில்லையின் நீரும் அங்ஙனம் ஐந்தொழில் நிகழப் பெருகா நின்றதெனக் குறித்து உரைத்தவாறு. ஈண்டு "ஆர" என்றதற்கு உயிர்கள் நுகர எனப் பொருள் கொள்க.

கொக்கிற்கு என்றே கூறினாராயினும் உபலக்கணத்தால் ஏனத்தொல் லெயிறு, புலித்தோல் அன்ன பிறவும் பாடல் கொள்க.

"கோல்வளையாள் நலம் பாடி" என்றமையால் சாப வீடு பெற்ற அன்னையின் நலம் குறித்தாரென்க. அது அன்பினை நத்தினை நல மென்க.

திருச்சிற்றம்பலம்

# திருச்சாழல்

தோழி தலைமகனை இயற்பழித்தலும், அதனை எதிர்த்துத் தலைமகள் அவனை இயற்பட மொழிதலுமாகிய பொருளையுடைய இப்பகுதிக்கண், அவனை அவள் இயற்பழித்தது பொருந்தாது என்னுங் குறிப்பினை, "சாழல்" என்பதனால் ஒவ்வொரு திருப்பாட்டின் இறுதிதோறும், தலைமகள் தோழிக்குக் கிளந்து கூறி உணர்த்தலால் இப்பகுதி "சாழல்" என்னும் பெயர் பெற்றது. சாழல் - விளையாட்டாகக் கைகொட்டி நகைத்துப் பேசுதல். அஃது ஆகுபெயரால் அவ்விளையாட்டைக் குறித்துப் பின்னர்ப் பாடலுக்காயிற்று.

"ஸ்யாலன்" என்னும் வடசொல் மைத்துனன் முதலியோரை உணர்த்தும். அதுவே 'சாழலன்' எனவும் 'சாழலி' எனவும் மைத்துன மைத்துனிமார்களைக் கூறுவது தமிழ்மரபு. சாழல் என்னும் ஆட்சி காரணமாகவே அவ்விருவகைப் பெயரும் வழக்கில் உளவாயிருந்தனவென ஊகித்தற்கிடனுண்டு.

இனி, சாழல் என்றதற்குத் தோழி எனப் பொருள் கொள்வாரும் உளர், சாழி என்றோ சாழிலி என்றோ வரின் அல்ல. அஃது அப்பாலை உணர்த்தாமையானும், இப்பகுதியில் வந்த திருப்பாடல்கள் எல்லாம் தோழியும் தலைமகளும் தம்முள் உரையாடிக் கொள்வதாகவே காணப்படுதலானும், இப்பகுதியின் 4-ஆம் 9-ஆம் திருப்பாடல்களிலே "தாழ்குழலாய்" என்றும் "பேதாய்" என்றும் வரப்பெற்று முடியவும் அதன்மேலும் "சாழலோ" எனத் தனித்து நிற்றலானும், 'நீ இயற்பழித்தது பட்டாங்கன்று, விளையாட்டேயாகும்' என்பதுபட்டு நிற்றலானும் அவர் கொண்ட பொருள் பொருந்ாதென்க.

இச் "சாழலை"ப் பல்வரிக் கூத்துள் ஒன்றெனக் கொள்வாரும் உளர் என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப் அரங். 12—25 உரை).

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு :—

தோழி தலைமகளை நோக்கி நின்னுடைய தலைமகன் தைத்தலாற் செறிக்கப்பட்ட கோவணத்தை யாத்துக்கொண்டானெனவும் (2), அவன் கோயில் சுடுகாடும் நல்லாடை கொல்புலித் தோலுமாகவுமுடையு பெற்றோரில்லாத தனியன் எனவும் (3), அம்பலம் புகுந்து நட்டம் பயிலுவான் எனவும் (14), அமுது செய்யப் பலி திரியும் நம்பன் எனவும் (17), குறைவுபாடுடைய அவனை மருவுவார் நின்னையன்றி வேறியாவர் எனவும் (12), கரி, மா, தேர் ஏறுது

இடபம் உகந்து ஏறினன் எனவும் (15), பாம்பினை அணிந்து கொள்ளுதலோடு பேசுவது திருமறைபோலும் எனவும் (1), இழி குலத்தேனுய என்னையும் புணர்ந்து இன்பக்கடலுள் அழுந்து வித்தான் எனவும் (10), மலைமகளை முன்னர் மணஞ்செய்து கொண்டவன் எனவும் (13), அதுவேயுமன்றிப் பெண்பாலுகந்த பெரும்பித்தன் " எனவும் (9), மலைமகளை அவன் ஒருபாகம் வைத்தலைக் கண்டு கங்கையும் அவன் சடைமேற் பாய்ந்தாள் எனவும் (7), தீய சலந்திரனைக் கொன்ற வலிய ஆழியை நாரணற்கு நல்கினன் எனவும் (18), அயனையும் அரியையும் தத்தமுள் மாறு பட்டுக் கலாம் விளைக்கச் செய்து போலிச் சிறப்படைந்தான் எனவும் (6), பிழை செய்த தேவர்களைப் பொறுத்து அருள் செய்யாது அவர்களுககு வடுச்செய்தான் எனவும் (4), தன் மாமன் தலையறுத்தான் எனவும் (5), தோண்மேற் கங்காளத்தினை நரம்பாற் கட்டியணிந்து தவங் காதலித்தான் எனவும் (11), முப்புரங்களையும் அங்குள்ளார் சாக எரித்தான் எனவும் (16), உலகியல் கடந்த நால்வருக்கு மெய்யறிவொன்றே உணர்த்தாது அறமுதலாய உலகியல் வீட்டியற் பொருள்களையெல்லாம் உணர்த்தினன் எனவும் (20), ஆலம் உண்டான் எனவும் (8), தோலுடுத்து ஆலம் உண்டான் எனவும் (19) இயற்பழித்து மொழிந்தாளென்க.

இனி இப்பொருளை நூற்கண்ணே அமைத்த இயல்பு வருமாறு :—

பூசுவது சாம்பர், பூண்பது அரவம், அவ்வேடத்தோடு ஒவ்வாது பேசுவதுந் திருமறைபோலும் என்பது காண்பார் அனைவராலும் அறியப்பட்டதொன்றாகலானும் வெறுப்பினை இலகு வாக ஆக்குவதாகலானும் அப்பொருளமைந்த செய்யுள் முதலாவ தாகக் கொண்டருளப்பட்டதென்க ஆகலான் உடுப்பது 'துன்னம் பெய்கோவணம்' என்பது கூறுந் திருப்பாட்டு இரண்டாவதாக அடைவுபடுத்தப்பட்டது வறியருள் வறியன் என்பதை மேலும் அறிவுறுத்தற்குப் பெற்றேரிலி தனியன் என்னும் பொருள் குறித்த செய்யுள் அதன்பின் வைத்தருளப்பட்டது. அயன் முதலியோர்க்கு வடுச்செய்த நிகழ்ச்சி அவன் சிறுமைக் குணமுணர்த்துவதனல் அது அடுத்து வைத்தருளப்பட்டது. பேணிப் போற்றத்தகும் இனத்திற்கும் அவ்வினச் சார்புக்குங் கேடு விளைத்ததனைக் கூறுஞ் செய்யுள் அதன் பின்னர் வைத்தருளப்பட்டது. சிறுமைப் பழிகளை அஞ்சிக் கரந்து புகழிட்டத் துணிந்த இயைபால் ' அலரவனும் மாலவனும் ' என்னும் முதலையுடைய திருப்பாட்டு ஆறுவதிடம் பெறுவதாயிற்று.

மேலும் அவ்வஞ்சமுடையான் மலைப்புறத்தன்றி அதன்

அகத்தருஞ் சிறுமை எய்தினான் எனவும் அவ்வாறு பழியும் இடர்ப்பாடும் மிக்கமையால் தற்கொலை செய்தலை மேற்கொண்டு ஆல முண்டான் எனவும் தற்கொலை செய்யப்புக்குஞ் சாவாமையால் பழிபாவங்களுக்கு அஞ்சானாய்க் காமத்தைக் கரந்து நுகராது இழிந்த விலங்கனையனாயினான் எனவும் கழிகாமத்தனாய் இழிந்தாரையும் புணர்ந்தான் எனவும் கழிகாமப் பழியையுங் கொலைப்பழியையும் வஞ்சகமாக மாற்றற்பொருட்டுத் தவங் காதலித்தான் எனவும் இவ்வாறாய அவனுக்கு ஆட்படுவார் யாவரே எனவும் தாயர்க்கு மகட்பாற்காஞ்சியாகவும் பலரறிய மணந்தான் எனவும் மன்றம் புகுந்து நடம் பயிலுவது தலைவன் இயல்புக்கு ஒவ்வாதெனவும் (மேலும் அக்கருத்தை வலியுறுத்தி) கரி, பரி, தேர் ஏறாது எருது ஏறினான் எனவும் நெறியல்லா நெறியில் அறமுரைத்துக் கொலைவினைஞன் ஆயினான் எனவும் பிரமகத்திக்கு அறிகுறியான தலையோட்டில் அமுது செய்யப் பலியேற்பானைத் தேவனெனக் கொண்டாய் எனவும் (தனக்கே கேடு சூழ்வானாய்) அரிக்கு ஆழி நல்கினான் எனவும் பட்டு உடுத்தாது தோலுடுத்தும் அமிழ்தமுண்ணாது நஞ்சுண்டும் வருமியல்பினன் எனவும் கேட்போர் திறனும் நுவலும் திறனும் அறியாது நெறிபிறழ உரைப்பவன் எனவும் நூலடைவு வைப்பு முறையும் அதன் இயைபும் கண்டுகொள்க

இப்பகுதியின் துறைப்போக்கு வருமாறு :—

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் வராது காலம் நீட்டிக்க ஆற்றாத தலைமகள் ஆற்றுமாறு தோழி தலைமகனை இயற்பழித்தனளாக, அதுகேட்ட தலைமகள் தனது ஆற்றாமை அயர்தற்கண் மனஞ் செலுத்தாளாய்த் தலைமகனை இயற்பட மொழிந்தாளென இப்பகுதிக்குரிய செய்யுள்களுக்குத் துறை வகுத்துக்கொள்க.

நூற்பகுதிக்கண் பதினாறுவது திருப்பாட்டில் தலைமகள் இயற்பட மொழிதல் முன்னும் தோழி இயற்பழித்து மொழிதல் பின்னுமாகக் கூறப்பட்டுள.

பன்னிரண்டாந் திருப்பாட்டிலே தலைமகள், தலைவன் எல்லா விண்ணோர்க்கும் ஆசிரியன் என்பதனை நாட்டிய கிளர்ச்சியால் அவனே வானவர்க்கு அன்றி மண்ணகத்துள்ளே சிறந்த முனிவர்களுக்கும் ஆசிரியன், ஆவான் எனவுங் கூறியருளினாள் , அதனைக் கேட்ட தோழி அறமுரைப்போனுக்குப் புரம் மூன்றனையும் கொல்லுதல் எவ்வாறு பொருந்துமென விடையிறுப்பாளாயினள் எனக் கொள்ளற்கும் இடனுண்டு. இவ்வாறு கொள்ளின் அடிகள் நூற்

பகுதியை ஏற்றவாறு மாற்றியமைத்துக் கொண்டருளினர் என்ற கருத்து வலியுறுமாறு காண்க.

நாற்பகுதிக்கண்ணே, பதினேந்தாவது திருப்பாட்டு புரமெரித்த அந்நாளில், "இடபமதாய்த் தாங்கினன் திருமால்" என்னுந் தலைமகள் விடையொடு "ஆலின்கீழ் அறமுரைத்தான்" என்னும் வினு செவ்விதாக ஒன்ருதும், தேவர் இடர்களையவே புரமெரிக்கப்பட்டது என்பது பட்டுக் குறிப்பால் ஏற்றவாருகியும் அன்ன பிறவாருகியும் நிற்றலே மேலதனை வலியுறுத்தா நிற்கும் என்க.

இஃது தில்லையில் அருளிச்செய்யப்பட்டது என்ப.

## சிவனுடைய காருணியம்

### நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

**பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்**
**பேசுவதும் திருவாயால் மறைபோலும் காண் ஏடீ**
**பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை**
**ஈசன் அவன் எவ்வுயிர்க்கும் இயல்பானன் சாழலோ.**

தலைமக்களுக்கு ஏற்றனவாகிய பூச்சும் பூணும் மேற்கொள்ளான் தலைவனுகில், அவன் வாயால் மறைபேசுவது எற்றுக்கெனத் தலைமகனை இயற்பழித்துரைத்த தோழிக்குத் தலைவி, அவற்ருல் அவனை இயற்பட மொழிந்தது

(பொ - ரை) ஏடி, தோழீ (தலைமகளே,) நின்ருற் காதலிக்கப்பட்ட தலைமகன் திருமேனியிலே பூசிக்கொள்வதும வெளிதாகிய நீறே யாகும், பூண்டுகொள்வதும் சீருநிற்கும் பாமபேயாகும். திருவாயாற் பேசிக்கொள்வதும் மறைமொழியாகிய நிறைமொழியே போலும் (எனத் தோழி தலைமகளை வினுவினளாக,)

ஏடி, தோழீ! என்னை! என் தலைவனுகிய ஈசனவன் பூசுவதும் வெள்ளிதாகிய பிணச் சாம்பராகவும பேசுவதும் மறைமொழியாகவும், பூண்பதுவும் அரவமாகவும் கொண்டு எவ்வகைப்பட்ட உயிர்கட்கும் தான் இலக்கணமாயினன்காண் சாழலோ (எனத் தலைமகள் தோழிக்கு விடையிறுத்தாள்) எ - று.

(வி - ரை.) தோழி உரைத்தவற்றைக் கொண்டே அவளைத் தலைமகள் அடக்கினள். அங்ஙனம் பேசும் நகையாட்டினையும் தோழியையும்

அழைத்துக் கூறித் தான் நகைத்தாள் ஆதலின் இப்பகுதி "சாழல்" எனப் பட்டதென்க.

விரைக் கலவை பூசாது நீறும், அணிகலன்கள் பூணாது அரவும், வெளிப்படப் பேசாது மறைவுபடப் பேசும் பேச்சும் உள்ளக்கரவுடைய கூடாவொழுக்க முடையார்க்குரியவாம் என இறைவன் பூச்சு முதலாய வற்றை இழித்துத் தோழி கூறினளாக, அங்ஙனம் உரைத்ததலைக் கேட்ட தலைமகள் அந்நீறே நிலையாமையையும், அவ்வரவமே அவன் சத்தியை யும், பேச்சே மெய்யறிவையும் விளங்க வைத்தலால், எல்லாவுயிர்கள் மாட்டும் அணுகிய சிறப்பியல்பினேன் என அவனை இயற்பட மொழிந் தாள் என்க.

எல்லாவுயிரும் உடல் உறுப்பு உலகம் நுகர்ச்சி என்பவற்றின் நிலை யாமை உணர்ந்து, யோகப் பயிற்சியால் மனத்திண்மை கொண்டு, மறை மொழியாகிய நிறைமொழி பெற்று மெய்யுணர்தல் வேண்டும் என எல்லா உயிர்க்கும் தான் இலக்கணமாயினன் என்க. இனி, வெறுக்கத்தக்க நீறும், அஞ்சத்தக்க அரவும் ஆகிய இன்னோரன்னவற்றை எல்லாம வெறு தும் அஞ்சாதும் ஏற்றுகந்தமையே அவன் மெய்யறிவாற்றலை வெளிப்படுத் தும் எனினும் ஒக்கும். "எவ்வுயிர்க்கும் இயல்பாதலா"வது, அவ்வுயிர்கட் குரிய தன்மையாகத் தான் நிற்றல் என்க.

"என்னே" என்பது நகைபற்றி வந்த வெகுளியை யுணர்த்திற்று.

"ஈசனவன்" என்றது 'சிவனவன்' என்பதுபோல நின்றது. எல்லா வுயிர்க்கும் தானோர் இலக்கணமாக நின்று வீடுபேறாகிய பெருஞ் செல் வத்தை அளிப்பவனாதலால் அவன் "ஈசனவன்" எனப்பட்டான் என்க.

"மறை"க்கு வேதமெனவே பொருள்கொண்டு, "பூச்சு" "அணி" யென்னும் அவற்றோடு ஒன்றுபடாத பேச்சும் என்றலுமாம்.

"சாழலோ" என அவள் அதனிலீடுபட்டு அதனையும் அழைத்தாள் என்க.

**என்அப்பன் எம்பிரான் எல்லார்க்கும் தான்ஈசன்**
**துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்ஏடீ**
**மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்**
**தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ. 2**

இஃது, என்னப்பன் எம்பிரான் என்றுங்குப் பலபடப் புகழ்ந்து பேசப்பட்ட நின் தலைவன், தைத்தலாற் செறியப்பட்ட கோவணத் தையே தனக்குக் கோவணமாகக் கொள்வது என் என்று தோழி வினவ, வேதமாகிய சரட்டிலே அதனோடு தைக்கப்பட்ட பொரு ளையே கோவணமாகக் கொண்டான் என அத்தோழிக்குத் தலை மகள் கூறியது.

(பொ - ரை.) ஏடி தோழீ (தலைமகளே,) என் அப்பன் என்

றும், எம்மனோர்க்குப் பிரான் என்றும், எல்லார் தமக்கும் அவன் தான் ஈசன் என்றும் நின்றுற் சிறப்பித்துச் சொல்லப்பட்ட அவன் தைத்தலாற் செறியப்பட்ட அதனையே தனக்குக் கோவணமாகக் கொள்வது எற்றுக்கு (எனத் தோழி வினவினளாக,)

நான்கு மறைகளையும் சிறந்த அரைஞாணகவும், அதிற் பொருந்தி இருக்கப்பட்ட நிலைபெற்ற கலைப்பொருள்தனையே கோவணமாகவும் கொண்டு சாத்தினன்காண் சாழலோ (எனத் தலைமகள் விடையிறுத்தாள்) எ - று.

(வி - ரை ) வான்சரடாகிய நான்மறைக் கண்ணே நிலைபெற்றதாகிய கலை; அதன் கண்ணே துன்னிய பொருள்; அப்பொருளாகிய கோவண மென்க. கலைப் பொருளுக்கும் கோவணத்திற்கும் சொல்லால் ஒற்றுமை தோன்றத் " துன்னுகலை " என்றுள். சரடு, வரிவடிவ நூலுக்கு உரிய தாகக் கொள்ளற்கும் ஒருவாறு இடனுண்டு. இதனுல், இவனில் நின்றே உலகமெல்லாம் தோன்றா நின்றன என்பது கூறியவாறு. மெய்யறிவின் மூலமுமாம். கோவணம் வடசொல் திரிபு. சரடு, கோவணத்தோடு துன்னப்பட்ட கயிறு போன்றது.

கலைப்பொருள் தன்னையே என இயைக்க. நல்ல கோவணத்திற்கும் வழியற்ற வறிஞன் எனத் தோழி தலைமகனை இயற்பழித்தாள் என்க. ஈசன் (செல்வன்) என்னும் அவன் பெயரும் அவனுடைய " துன்னம் பெய்கோவண"மும் தம்முள் அறவே பொருத்தமற்றனவென இழித்தாள் என்க.

கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தைஇலி தான்தனியன் காணேடீ
தாயுமிலி தந்தைஇலி தான்தனியன் ஆயிடினும்
காயில் உலகனைத்தும் கற்பொடிகாண் சாழலோ. 3

இது, நின் தலைமகன் வாழுமிடம் சுடுகாடாகவும், உடுக்கும் உடை திருத்தமற்றவர் உடுத்துக்கொள்ளும் புலித்தோலாகவும் அமைந்தன அன்றியும் குலம் இன்னதென்றறியப்படாத தனித் தவனுமாவன் அல்லனே எனத் தோழி தலைமகளை வினவ அவள், அத்தகையோன் எனினும் வெகுண்டானேல் உலகனைத்தும் நிலை கெட்டு அணு அணுவாகப் பிரிந்து சிதைவுறும் என விடையிறுத்தது.

(பொ - ரை.) ஏடீ (தோழி,) நின் தலைமகன் வாழுமிடம் சுடுகாடாகும், அவன் உடுத்த நல்லாடை எனப்படுவது கொன்று பெற்ற புலித்தோலாகும் அவன் (தன்னைப் பெற்றெடுத்த) தாய் (இவள்தான் எனச் சுட்டிக் கூறற்கும்) இல்லாதவன். தந்தையும்

(அங்ஙனமே) அற்றவன் (அவனை எவரும் இனத்தானாகவும் நண்ப னாகவும் ஏற்றுக் கொள்ளாமையால்) அவன் தனித்தவனாகவே இருந்து வருவோனாவான் (எனத் தோழி தலைமகளை இயற்பழித் துரைக்க),

ஏடீ தோழீ ! என் தலைமகன்தான் தாயுமில்லாதவன், தந்தையு மில்லாதவன், அவன்தான் தனித்தவன் என நீ கூறியவாறே அமை வன் எனினும், அவன் வெகுள்வானாயின், திண்ணிய கல்லைப் போன்ற உலகங்கள் யாவும் கற்பொடியாகச் சிதைவுறுங்காண் சாழலோ (எனத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை.) சுடுகாடு என்பது, வெறுப்பும் அச்சமும் பயந்து அடுங் காலத்துக் குரியது புலித்தோலாடை, கொலைப்பழியும் வேட்டுவத் தொழி லும் திருத்தமின்மையும் ஆகியவற்றைக் குறிக்கும். " தாயுமிலி......தனி யன் " என்பது, குலமறியப்படாதவன், பழியேற்றற்குரியவன், சுற்றத் தாற் சூழப்படாத சிறுமையோன் என்பவற்றைக் குறிக்கும்.

எல்லாம் ஒடுங்கிய இடம் சுடுகாடாகவும், தன்னைப் பேணார் செருக்கை ஒடுக்குவதே கொல்புலித் தோலாகவும், தன்னில் எல்லாம் தோன்றவும் தான் ஒன்றினும் தோன்றாமையே " தாயுமிலி .....தனியன் " என்றதாக வும் அவள் பழித்தவற்றைக் கொண்டே இயற்பட மொழிந்தவாறு என்க.

உலகமெல்லாம் அவன் அருளின் தோன்றவும், வெகுளின் பொடியாய் அழியவும் தக்கன ஆதலின், அவன் அடிமுடிகளை அறியப்பெறாய் எனத் தோழியின் அறியாமையும், அவனது இரண்டாற்றலும் உடன் புலப்பட ஈற்றடியிற் கூறினாள். இவற்றால் அவனே முழுமுழுதற் பொருள் என நிலைநாட்டினாள் என்க. சுடுகாடு முதலியனவும் அவனுக்குச் சிறப்பினையே பயந்து நின்றன எனவும் நிலைநாட்டினாள்.

அயனை அநங்கனை அந்தகனைச் சந்திரனை
வயனங்கள் மாயா வடுச்செய்தான் காணேடீ
நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயம்அன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ. 4

இது, நின் தலைமகன் தன் பாங்கில் உறைவோரைப் பேணிக் கொள்ளாததோடு அமையாது அவர்க்கு மாறா வடுச்செய்த குறை பாடும் உடையவன் எனத் தோழி தலைமகளை இயற்பழித்துரைக்க, அதுகேட்ட தலைமகள், தலைவன் கீழ்வாழ்வார் தம் தலைவனால் தண்டிக்கப்படுதல் அவர்க்கு வெற்றி தருவதொன்றன்றோ என அவனை இயற்படமொழிந்தது

(பொ - ரை ) ஏடீ (தோழி !) நான்முகனையும் காமனையும் கூற்று வனையும் திங்களையும் குறைவுபாடு தரும் அடையாளங்கள் உடைய

வராகச் செய்தான், அங்ஙனம் செய்தானைப்பற்றிய பழிச்சொற்கள் என்றும் கெடமாட்டாகாண் (எனத் தோழி தலைமகனை இயற்பழித்துரைக்க),

தாழ்ந்த கூந்தலையுடையாய்! கண்மூன்றுடையவனுகிய எங்கள் தலைவனே தன்கீழ்வாழும் அவ்வானவரைத் தண்டித்தால் (அவன் தனக்குப் புகழாவதோடு) அவர்க்கு வெற்றியும் ஆவதன்றே? சாழலோ (எனத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது) எ - று.

(வி - ரை.) "அந்தகன்" என்றது அந்தகாசுரனை எனக் கூறுவாருமுளர். அவன் அசுரனுதலால் ஈண்டைக்கேலா தென்க. 'வசனம்' னும் வடசொல் "வயனம்" என மருவிற்று; ஏற்புழிக் கோடலால் அதற்குப் பழிச்சொல் எனப் பொருள் கொண்டாம். வடுச்செய்தான் வயனங்கள் - வடுச்செய்தானைப்பற்றி உலகம் கூறும் வயனங்கள். வயனங்கள் மாரு என முடிக்க பகைவரை வடுப்படுத்துவதே முறையாகவும் தன்கீழ் வாழ்வாரை வடுச்செய்தான் எனப் பழித்தவாறு.

தன் கீழ்வாழ்வாரையும் அவர் குற்றங்கண்டு ஒறுப்பது தலைவற்குப் புகழே யன்றி இகழ் அன்று என்றும், தண்டிக்கப்பட்ட அவ்வானவரும் தம்மைச் சூழ்ந்த பாவங்களை அழித்துக்கொண்டனராதலானும், தலைவன் மாட்டன்றிப் பிறர்பால் தண்டம் பெருமையானும், குறையைக் கரந்து செய்யாராய் எதிர்ந்து செய்தாராகலானும் அன்ன பிறவாற்ருனும் அவர் பெற்றது வெற்றியாவதன்றித் தோல்வியாகாது என்றும் தலைமகள் தோழியின் அறியாமையையும் உடன் நீக்கினுள் என்க. ஏனைக் கடவுளர்க்கு இல்லாத தனிப்பெருஞ் சிறப்புத் தன் தலைவற்கு உண்டென்பது தோன்ற " நயனங்கள் மூன்றுடைய நாயகன் " என்ருள்.

அயன் தலைகிள்ளப்பட்டான், அநங்கன் எரிக்கப்பட்டான்; அந்தகன் உதைக்கப்பட்டான்; சந்திரன் காலால் தேய்க்கப்பட்டான். அவ்வவராலாய பழிமொழிகள், அவ்வவர் ஆற்றிய குறைகளைப் போக்கித் தூயவராக ஆக்கினமையால் புகழ்மொழிகள் ஆவனவன்றிப் பழிமொழிகள் ஆகா என்க.

**தக்கனையும் எச்சனையும் தலையறுத்துத் தேவர்கணம்**
**தொக்கன வந்தவர்தம்மைத் தொலைத்ததுதான் என்னேடீ**
**தொக்கனவந்தவர்தம்மைத்தொலைத்தருளிஅருள்கொடுத்தான்**
**எச்சனுக்கு மிகைத்தலைமற்று அருளினன்காண் சாழலோ. 5**

குற்றம் பார்த்தற்கு ஒண்ணுத சுற்றத்தினது சிறுமையைப் பெரிதாகக்கொண்டு அதற்குப் பேரிடர் விளைத்துப் பெரும் பழி பூண்டவன் நின் தலைவன் அல்லனே எனத் தலைமகள்பால் அவனை இயற்பழித்துரைக்க, தலைமகள் அவ்வனை அதுகொண்டு இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ! நின் தலைமகன் தக்கனையும் அவன் தன் யாகத் தலைவனையும் தலையறுத்தும், வேள்வியிற் பங்கு பெறத் தொகுதியாக வந்த வானவர்களையும் வருத்தியது என் என்று எனக்கு அறிவிப்பாய் எனத் தோழிகூற,

ஏடீ தோழி! கூட்டமாக வந்தவர்களை (அவர் செய்த குற்றங் காரணமாக) அழித்தருளியும் (பின்னர் அவர்க்கு இரங்கி) அருளைப் புரிந்தும், யாகத் தெய்வத்திற்கு வேருக எஞ்சியிருந்த அதன் தலையை அதனுக்கே அருள் செய்தான்காண் (எனத் தலைமகள் அவளுக்குத் தலைவனை இயற்பட மொழிந்தது) எ - று

(வி - ரை.) வேள்வியையும், வேள்வியிற் பங்குபற்றிய தேவர் முனிவர் களையும் அழிப்பது தலைமக்களாவார்க்குப் பழியும் பாவமும் பயக்கவல்லது என்றபடி.

எச்சனுக்கு அவன் தலையை நல்காது, அவன் எடுத்துக்கொண்ட உருவாகிய மான்பிணையின் தலையையே அவனுக்கு அளித்தனன் ஆதலால் அவன் பெற்றுக்கொண்ட நலை மிகைத் தலையாயிற்று.

மறையின் உட்பொருள் அறியாது இருந்தும் அறிந்தான்போலச் செருக்குற்று வேள்வியாற்றப் புக்க தக்கனும், அவனுக்கு வேள்வியாகப் போந்த எச்சனும், அவ்வேள்வியிற் பங்குபற்றினோர் யாவரும் தண்டிக்கப் படாவிடின், அவரும் உலகும் கெடுதல் ஒருதலையாகலானும், தண்டிக்கப் பட்டாரை இரங்கி அருள் செய்தாகலானும், அவனை பெரியோன், அவன் ஆற்றலே பேராற்றல், அவன் செயலே பேரருட்செயல் எனத் தலைமகள் தோழிக்கு அறிவுறுத்துவாள் போன்று அவனை இயற்பட மொழிந்தாள் என்க.

இதனல் இனமும் அறமும் பேணி நடப்போன் என்பது வலியுறுத்தப் பட்டமை காண்க.

அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்
நிலமுதற்கீழ் அண்டமுற நின்றதுதான் என்னேடீ
நிலமுதற்கீழ் அண்டமுற நின்றிலனேல் இருவரும்தம்
சலமுகத்தால் ஆங்காரம் தவிரார்காண் சாழலோ. 6

இது, நான்முகனும் திருமாலும் தம்முள்ளே போர் செய்கின்ற போது, அவ்விருவரையும் சமஞ்செய்து முறைநாட்டப் புகாது, அவரை மயக்கி, அவர் கருத்தினைத் தன்னைக் காணுதற்கண் மாற் றித் தானே பெரியோன் என்று நின் தலைமகன் போலிச் சிறப் பெய்தியது என்னை எனத் தோழி தலைமகனை இயற்பழித்து வினவிய போது, தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை ) ஏடீ தோழீ ! நின் தலைவன், தம்முள்ளே பொரு கின்ற செந்தாமரை மலரைத் தனக்கு இருக்கையாகக் கொண்ட நான்முகனும் திருமாலும் முறையே முடியும் அடியும் காணுவாறு நில முதலாகிய மேலண்டங்களிலும், அந்நிலத்தின் கீழாகவுள்ள அண்டங்களிலும் தன்னுடைய முடியும் அடியும் பொருந்த அழலுரு வாக அவர்பக்கல் நின்றதுதான் என்னை (எனத் தோழி தலைமகளை வினவ),

ஏடீ தோழீ ! நிலம் முதலாய மேல் அண்டங்களிலும், அதன் கீழ் அண்டங்களிலும் பொருந்த அங்ஙனம் அவர் பக்கலில் அவன் நின்றிலனேல், அவ்விருவரும் தமக்குள்ள வஞ்சனையால் செருக் கொழியார்காண் (எனத் தலைமகள் தோழிக்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று

(வி - ரை.) அவ்விருவரும் தன்னை இன்னனென்று அறியாதபடி தன்னைக் கரந்துகொண்டு அழலுருவாக நின்றதும், அவ்விருவருள் ஒருவ னைப் பெரியோன் என்னுது நின்றதும், அங்ஙனம் நிற்றலால் அவர்கள் மனத்தை மயக்கித் தன்பால் ஈர்த்து அவராற்றலை மறக்க வைத்ததும், அம் மறந்த நிலையே தனக்குரிய ஆற்றலாகக்கொண்டு அவ்விருவரினும் தானே பெரியன் என் அவரை வஞ்சித்ததும் நின் தலைமகனின் இயல்பெனத் தோழி அவனை இயற்பழித்தாள் என விரிக்க.

திருமால் தன்னினும் மிக்கான் ஒருவன் உளன் என்னுது, தானே முழுமுதல்வன் எனப் பொய்யுரை புகன்றமையானும், அயன் தன்னினும் மிக்கானுய திருமாலை மதித்து அவன்கீழ் அடங்கானுய் அவனை இகழ்ந்து பகைத்தமையானும், அவ்விருவரும் வஞ்சர் ஆதலின், அவ்வஞ்சரின் செருக்கறுப்பவே அங்ஙனம் அவ்வியல்பொடு நின்றான் ; நில்லானேல், அவர் அவ்வஞ்சச் செருக்கினுல் மிக்கு மாழ்குவர் எனத் தலைமகள் தோழிக்கு அவனை இயற்பட மொழிந்தாள் என்க.

நிலமுதலண்டம் - நிலத்தினை முதலாகக் கொண்ட மேலேழு உலகம். நிலக்கீழண்டம் - நிலத்தின் கீழுள்ள கீழேழுலகம். நிலமுதலண்டம், நிலக் கீழண்டம் எனக் கொள்க.

**மலைமகளை ஒருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி**
**சலமுகத்தால் அவன்சடையில் பாயுமது என்னேடீ**
**சலமுகத்தால் அவன்சடையில் பாய்ந்திலளேல் தரணிஎல்லாம்**
**பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம் சாழலோ. 7**

இது, நின் தலைமகன் பெண்வழிப்பட்டு ஒருத்திக்குத் தன் இடப் பாகங் கொடுத்த ஒளிமை கண்டு, மற்றொருத்தி கோபத்தால் அவன்

மேற் பாய்ந்தது என்னை என அவனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை ) ஏடீ தோழீ (நின் தலைமகன்) இமயமலையரசன் மகளாகிய பார்வதியைத தனது இடப்பாகத்திலே வைத்த அப் பொழுதே வேறுமொரு மகள் சினத்திடத்தாளாகி அவனுடைய சடைமேற் பாய்வது தான் என்னை (எனத் தோழி தலைமகனை இயற் பழித்துரைக்க),

அங்ஙனம் அவள் சினத்திடத்தாளாகி அவன் சடைக்கண் அங்ஙனம் பாய்ந்திலளேல், இவ்வுலகமெல்லாம் அவள் வேகத்துட் பட்டுப் பாதாளத்திலே புகுமாறு பாய்ந்து கெட்டொழியுங்காண் (எனத் தலைவி அவனை இயற்பட மொழிந்தது) எ - று.

(வி - ரை.) கங்காதேவி சடைமேற் பாய்தற்கு மலைமகளை இடப்பாகம் கொண்டது காரணமாகக்கொள்ளப்பட்டது. பெண்ணுக்கு எளியனு வோன், இல்லறம் பூணற்கு இடம் பெருதவனுவான் என்பது பட்டு, நீ அவனை மணப்பது பேதைமைப்பாலது என அவனை இயற்பழித்தலோடு அமையாளாய் அவளையும் இயற்பழித்தாள் என்பது பெற்ரும்.

கங்காதேவி, 'சிவனே என்னைத் தாங்கவல்லவன்!' எனப் பகீரதன் பாற் சினங்கொண்ட வரலாறு வெளிப்படை. அங்ஙனம் அவனைச் சினந் திலளேல் அவள் வேகம் தாங்காது உலகு பிலமுகஞ் செல்லும் என்றவாறு. கங்காதேவியே நீர் வடிவினளாதலால் அவள் நீர்வடிவாகி என உரைப்பது வரலாற்று முறையொடு பொருந்தாதென்க. பிலம் - பாதாளம். புகுதல் - உட்சேரல் தரணியெல்லாம் பிலமுகத்தே புக அதனிற் பாய்ந்து கேடாம் என இயைக்க.

**கோலாலம் ஆகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த**
**ஆலாலம் உண்டான் அவன்சதுர்தான் என்னேடீ**
**ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட**
**மேலாய தேவர்எலாம் வீடுவர்காண் சாழலோ. 8**

இது, நின் தலைமகன் அன்று கடலினின்றும் எழுந்த அமுதம் உண்ணுது நஞ்சினை உண்ட வகை யாது எனத் தோழி அவனை இயற்பழித்து விருவத் தலைமகள் அவனை இயற்பட உரைத்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ! கூட்டத்தவரால் செய்யப்பட்ட பேரொலியுடன் திருப்பாற் கடலிடத்தே அன்று எழுந்த ஆலகாலம் எனப் பெயரிய நஞ்சினை உண்டான் என்ப. அவன் அங்ஙனம் உண்ட திறமைதான் என்னை? (எனத் தோழி அவனை இயற்பழித்து விருவ),

ஆலகால விஷத்தை அன்று அவன் உட்கொண்டிலனேல், திசைமுகன் திருமால் என்னும் இருபெருந் தேவரை உள்ளிட்ட மேன்மை தக்க தேவர்கள் எல்லாரும் இறந்தொழிவர்காண் சாழலோ (எனத் தலைமகள் அவளுக்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை.) 'கோலாஹல' என்னும் வடசொல் 'கோலாகலம்' எனத் தமிழில் மருவி ஈண்டுக் "கோலாலம்" எனத் தொக்கது. அது கூட்டத் தவரால் செய்யப்படும் பேரொலி என்பது. ஒரு கூட்டத்தார் தாம் கூடியிருப்பது கேடுடைத்து எனத் தம்முளே இட்டுக்கொள்ளும் பேரொலி என்க. கோலா - கூட்டம். ஹல - அதைக் கெடுக்கும் பேரொலி.

'ஹாலாஹல' என்னும் வடசொல் 'ஆலாகலம்' என மருவி, ஈண்டு "ஆலாலம்" எனத் தொக்கது. 'ஆலகாலம்' எனவும் மருவியதென்ப.

'சதுர' என்னும் வடசொல் 'சதுரம்' என மருவி ஈறு குறைந்து நின்றது. சதுரம் - திறமை. நான்கு பக்கமும் சூழ்ந்து பார்க்கும் அறிவுடைமையைக் குறிக்கும். ஈண்டு, அறியாமையைக் குறிப்பால் உணர்த்தி நின்றது.

மனையின் அகத்தும் புறத்தும் பழி மிக்கு வாழ இயலாமையால் நஞ்சுண்டான்; அங்ஙனம் உண்டனனேனும் வாளுள் இன்னும் உண்மையால் இறந்திலன் என்க. இயற்பழித்துரைத்தல் என்பது இல்லாத தொன்றினைப் புனைந்து ஏற்றிக் கூறுவது.

**தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்**
**பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடீ**
**பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்**
**விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ. 9**

இது, நின் தலைமகன் உலகெலாம் அழிந்தொழிந்த அவ்வூழியிறுதியில் பெண்பாலைமட்டும் உகந்து கூத்தயர்வதனால் என்ன பயன்? அவன் ஒரு பெரிய பித்தனுவான் அல்லனோ எனத் தோழி அவனை இயற்பழிக்க, தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ! தில்லைக் கண்ணுள்ள சிற்றம்பலத்திலே தென்பகுதியை நோக்குதலை விரும்பிக் கூத்தயரா நிற்கும் நின் தலைமகன், தன் மனைவியே ஆண்டுக் கண்டு உவத்தலை உயர்வாகக் கொண்டான். அவன் பெரியதொரு பித்தனுவான்காண் (எனத் தோழி தலைமகனை இயற்பழித்துரைக்க),

அறிவிலீ! அவன் பெண்பாலை அங்ஙனம் விரும்பி உடன் கொள்ளாவிடில், பெரிய நிலவுலகத்தார் எல்லாரும் விண்ணிடையிலே ஒன்றுகச் சேர்ந்தவராய் இவ்வுலகில் இல்லற வாழ்வினை

விட்டொழிவர்காண் சாழலோ (எனத் தலைமகள் அவளுக்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ-று.

(வி - ரை.) "பெண்பாலுகந்தான்" உமாமகேசுரன் எனப்படுவான். பெண்பால் ஒரு கூறுடையான் அர்த்தநாரீஸ்வரன் எனப்படுவான். இம் மூர்த்தங்கள் அன்னையின் தவப்பேறு என்க. உலகு படைக்க இறைவனால் எடுத்துக்கொள்ளப்பட்டவை.

அமங்கல திசையில் விருப்புடையனாதலால் அவன் அறிவிலி என்றும், கூத்தயர் களத்திற்குத் தலைமகளையும் உடனழைத்துப் போதல்பற்றிப் "பித்தன்" என்றும், கூறினார். 'யோகம்' என்னும் வடசொல் ஈறு குறைந்து நின்றது. யோகம் - சேர்க்கை. விண்பால் யோகெய்தி - விண்ணின் கண்ணே ஒன்றாயடங்கி. வீடுவர் - அறிவின்றிக் கிடப்பர். "விண்" என்பது ஆகுபெயராய் இறைவன் திருவடியை உணர்த்திற்று. செவ்வி பெறாத உயிர்கள், இறைவன் பெண்பாலுகந்தாங்கு ஆடாக்கால் அத்திருவடிக் கண், செவ்வியுறாது அடங்கிக் கெடுவர் என்க. இதனால் இறைவனது ஊழிக்கூத்தின் சிறப்பியல்பு உணர்த்தியவாறு. உமையம்மை காண இறைவன் திருக்கூத்தயர்வதைக் கலித்தொகைக் கடவுள் வாழ்த்தானும் அன்ன பிறவற்றானும் உணர்க. ஆண் பெண்ணென்னும் பகுப்பு விட்டொழிவர் என்க. அஃதாவது ஐந்திணைக் காதல்வழி நில்லாராய்க் கெடுதல் என உரைக்க.

பெண்பால் தன்பால் அமர்ந்து காணக் கூத்தயர்வதனால் ஆணும் பெண்ணுமாகக் கூடி உயிர்கள் ஐந்திணை நுகர்ச்சிபெற்று இன்புறுகின்றன

தான்அந்தம் இல்லான் தனைஅடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத்து அழுத்துவித்தான் காணேடீ
ஆனந்த வெள்ளத்து அழுத்துவித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ. **10**

இது, நின் தலைமகன் நின் பாங்கியாகி என்னையும் புணர்ந்து இன்பத்து அழுந்தச் செய்தான் எனத் தோழி அவனை இயற்பழித் துரைக்கக் கேட்ட தலைமகள் அவளுக்கு அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ! காமம் நுகர்தற்கென ஒரு வரம் பில்லாத நின் தலைமகன், அவன் தன்னைச் சார்ந்த நாயை ஒத்து இழிந்த என்னையும் இன்ப வெள்ளத்துள்ளே அமிழ்த்தினான்காண் (எனத் தோழி அவனை இயற்பழித்துரைக்க),

(பெருமையற்றவளே,) அடைந்தாரை இன்ப வெள்ளத்துள்ளே அழுந்துமாறு செய்த அவன் திருவடிகள் வானவர்கட்கு வானுலகத்

துட் செலுத்தும் சிறந்த பொருளாகும்காண் சாழலோ (எனத் தலைமகள் அவளுக்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ-று.

(வி - ரை.) "தான் அந்தம் இல்லான்" என்றது, ாண்டு, இன்பந் துய்க்கும் நெறியிலே விதிவிலக்குகளைக் கொள்ளும் வரம்பில்லாதவன் என்பது பட்டு நின்றதென வுரைக்க ; இயற்பழிக்கும் தோழி கூற்றுதலால், "அந்தமிலான்" என அவனுக்கு நீயுரைத்துவரும் சிறப்பெல்லாம், என் போன்றுரையும் அவன் நுகர்ந்து வருதலால், அவனுக்கு அமையும் என யான் அவற்றினுட் பொருளை இப்போதுதான் அறிந்துகொண்டேன் எனப் பழித்தாள் என்க. ஆதியிலான் என்பதும் ாண்டுக் கொள்ளப்படும். அதற்குப் பெற்றுரிலி, தனியன் எனக் குறிப்புப் பொருள் கொள்க.

"தேவர்கட்கு" என்பதற்குத் தேவர் ஆவதற்கு எனப் பொருளுரைப் பினும் அமையும். இந்நிலவுலகினர் தேவராதற்கு ாண்டு வந்து அவர்களை வானகத்தில உந்தும் திருவடிகள் என விரித்துரைக்க.

தானும் தலைவியும் வேறுபாடில்லார் என்பது கொண்டும் அகப் பொருள் வழுவமைதியாதலை நோக்கி இறைவன் தன்னையும் புணர்ந்தான் என உட்கொண்டு தோழி கூறினாள் என்க. அகப்பொருள் அமைதியைத் தழுவி இங்ஙனம் உரைக்கப்பட்டது. தோழி இங்ஙனம் கூறுவது இலக்கண மரபென்பது முன்னுங் காட்டினும்.

தலைமகளுக்குத் தலைமகனாகவும், காதற்பாங்கிக்குப் பாங்கனாகவும் அவன் அமைந்து அவ்வவரைத் தன் திருவடித் தொண்டாகிய கற்பொழுக் கம் பூணுவித்து, ஊடலும் கூடலுமாகிய ஒழுகலாற்றுட் படுத்துச் செவ்வி செய்து தன்னுள் அடக்கிக் கொள்வான். அவன் ஒருவனும் ஒருவனல்லனும் ஆவான். அவன் அருட்பெற்றியை நீ அறிதற்கரியை ஆதலால் இங்ஙனம் உரைத்தனை போலும் எனத் தலைமகள் தோழிக்கு அறிவுறுத்தினாள் என்க.

**நங்காய் இதுஎன்னதவம் நரம்போடு எலும்பணிந்து**
**கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ**
**கங்காளம் ஆமாகேள் காலாந் தரத்திருவர்**
**தம்காலம் செய்யத் தரித்தனன்காண் சாழலோ** 11

இது, நின் தலைமகன் பாவத்தையும் பழியையும் அறிவிக்கின்ற எற்புக் கூடுகளைத் தோள்மேலணிந்து அதனொடு எதிரிய தவத்தினை யும் காதல் செய்யாநின்றான்காண் ; இஃதென்னை எனத் தோழி தலைமகனை இயற்பழித்து உரைக்க தலைமகள் அவளுக்கு அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) மகளிருள்ளே சிறந்தவளே ! ஏடி ! நரம்போடு எலும்புங்கூடிய கங்காளத்தைத் தனக்கு அணியாக அணிந்து கொண்டு தவத்தை விரும்பிக்

தோடு கூடிய இச் செய்கை என்னே? (எனத் தலைமகனைத் தோழி இயற்பழித்து உரைக்க),

தவம் காதலித்த அவனுக்குக் கங்காளம் அணியாமாறு ஈதெனக் கிளப்பேன், அதனைக் கேள். (இயற்பட மொழிவேன் என்றபடி) பேரூழி முடிவிலே அயன் அரி என்பவருடைய வாழ்நாட்காலத்தை அலகு செய்யத்தான் அதனை அணிந்தான் காண் (எனத் தலைமகள் அவளுக்கு அவனை இயற்பட மொழிந்தது) எ-று.

(வி - ரை.) நங்கை - பெண்பாலுட் சிறந்தவள்; தலைமகள் என்றபடி. கங்காளம் தோள்மேலணிந்து தவங் காதலித்தான், ஈதென்ன என இயைக்க. தோல் இறைச்சி யாதியவை நீங்கிப் பிணைப்புண்டு கிடக்கும் தொகுதியாகக் கூடிய எற்புக்கூடு கங்காளம் எனப்படும் என்பது தோன்ற "நரம்பொடு எலும்புக் கங்காளம்" என்றாள். அருள்மேற் செல்லும் தவத்திற்கும், அதனால் அறவே மறுக்கப்பட்ட பழிபாவங்கட்கும் தொடர்பு யாது என்றபடி.

காலாந்தரத்திலே அதுகாறும் ஆங்குத் தலைவர்களாக இருந்த அவ்விருவர் காலத்தையும் அறச்செய்யாவிடின், அக்காலம் அந்தரமாகாது ஆதலால் அவர் காலங்களையும் அந்தரம் செய்ய அவரைக் கொன்று, அவர் எற்புக் கூடுகளைப் பெற்ற வெற்றிக்கு அடையாளமாகத் தோள்மேல் அணிந்துகொண்டனன். இருவர் தம் காலம செய்ய - இருவர் தம்முடைய காலங்களையும் முடிவு செய்ய.

நரம்பினை யாழ்க்கு அணிந்தான்; ஆமையோட்டினை மார்பிலணிந்தான்; வராகமூர்த்தியின் கொம்பினை யணிந்தான் என வரலாறு உளவெனக் கருதி வேண்டியாங்கு இயைப்பினும் இயைக்க. கற்ப முடிவிலே அயன் அரி என்பவருடைய கங்காளமே அணியப்பட்டமையால், அதுவே ஈண்டுக் கிளந்து கூறப்பட்டது.

உலகினை எல்லாம் தன்னுள்ளே ஒடுக்க இங்ஙனம் அணிந்து தவம் காதலித்தான் என இயற்பட மொழிந்தாள் என்க.

**கானார் புலித்தோல் உடைதலைஊண் காடுபதி**
**ஆனால் அவனுக்கிங்கு ஆட்படுவார் ஆர்ஏடீ**
**ஆனாலும் கேளாய் அயனும் திருமாலும்**
**வான்நாடர் கோவும் வழியடியார் சாழலோ. 12**

இது, நீயே அவனைத் தலைமகன் எனக் கொண்டனையல்லாது பிறர் யாவர்தாம் அவனுக்கு ஆட்படுவர் எனத் தோழி அவனை இயற்பழித்துரைக்கத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ! காட்டகத்து வாழும் புலியின் தோலே அவன் உடுத்தும் உடையாகும்; அயன் தலையே அவன் உண்ணும் கலமாகும், சுடுகாடே அவன் வாழும் இடமாகும்.

அவனுடையும் உண்கலமும் வாழிடமும் அங்ஙனமாஞல் தகைய அவனுக்கு அடிப்பட்டு அன்பு செய்வார் யாவர்தாம் ஆவர்? (ஒருவரும் ஆகார் எனத் தோழி அவனை இயற்பழித்துரைக்க),

அங்ஙனம் அவன் உடையாலும் உண்கலத்தாலும் வாழுமிடத்தாலும் அஞ்சுதற்கும் வெறுத்தற்கும் உரியவன் போன்றவனே யாஞலும், நான்முகனும் திருமாலும் வானுலகத்தார் கோமகஞய இந்திரனும் ஆகிய பெருங் கடவுளர்களும் அவனுக்கு மரபுமரபாக அடியவர்களாக வாராநின்றனர்காண் சாழலோ (எனத் தலைமகள் அவளுக்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை.) தலைமகனுடைய ஆற்றலும் செயலும் பெரியன என்பதை மறுத்தற்கியலாத தோழி, அவன் அங்ஙனம் சிறந்தவன் எனினும், தலைமகனுக்குரிய உடைநடை வாழ்க்கை முதலாயின இழிந்தனவாயிருத்தல், பலரையும் ஆட்கொள்ளற்கு ஏற்றனவாகா, புறத்தோற்றம் இங்ஙனம் இயைதலால் அவனுடைய ஆற்றலும் செயலும் பயன்படா என வேறு வழியாக அவனை இயற்பழித்துரைத்தாள் என்க. இங்ஙனம் இயற்பழித்தலிஞலே தோழி தலைமகன் இயல்புகளை நன்கு அறிந்துகொண்டவள் என்பதும், தலைமகளுடைய இன்னாற்கண்ணே சென்ற உள்ளத்தினை வேற்று வழிக்கண் மாற்றுதற்பொருட்டே இங்ஙனம் இயற்பழித்துரைத்து வருகின்ருள் என்பதும் பெறப்பட்டன.

அறிவிலிகள் அவனுடைய திருவுள்ளத்தை அறியாராய் அவனை அஞ்சி வெறுப்பரேனும், திருமால் முதலியோர்க்கே அவனுடைய பெருமையும் அருமையும் எளிமையும் உணர்ந்து கொள்ளற்பாலன. அவனை அடிப்படா விடத்து உற்ற கேடுகளையும், அடிப்பட்டவிடத்து உற்ற நலன்களையும் அவர்களே அறிவார்கள்; நீ யாது அறிவாய், எனத் தலைமகள் தோழிக்கு அறிவுறுத்தி அவனை இயற்படமொழிந்தாள்.

இதஞல், புறத்தோற்றத்தினைக் கண்டு ஒன்றினை முடிவு செய்தல் பேரிழுக்காகும் என்பதுணர்த்தியவாறு.

அயன் முதலாஞேர் அவனுக்கு வழியடியார் எனவே அவர்களுக்குக் கீழ்ப்பட்ட உலகோர் அனைவரும் அவனுக்கு அடியராவர் எனத் தலைமகள் தோழிக்குக் கிளந்து கூறிஞள் என்பது தானே பெறப்பட்டது. என்பாலன்றி அறிந்தார்பால் நீ கேள் எனினும் இழுக்காது.

**மலைஅரையன் பொற்பாவை வாள்நுதலாள் பெண்திருவை**
**உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடீ**
**உலகறியத் தீவேளா(து) ஒழிந்தனனேல் உலகனைத்தும்**
**கலைநவின்ற பொருள்கள்எல்லாம் கலங்கிடுங்காண் சாழலோ. 13**

இது, நின்தலைமகன் தான்விரும்பிய பார்வதியை அவள் தாய்

உடன்படாமை கண்டுட், மலையரசனுடன் போர் புரிந்து வலிதிற் கொள்ளானாய், வேற்றோரைக் கொண்டு சமன்செய்து, உலகறி மணமாகிய கற்பு மண வேள்வி செய்து அவளை மணந்துகொண்ட தென்னை என, தோழி அவனை இயற்பழித்துரைக்கக் கேட்ட தலை மகள் அவளுக்கு அவனை இயற்படமொழிந்தது.

(பொ - ரை ) ஏடீ தோழீ ! நின்தலைமகன், மேருமலையரசன் மகளும், ஒள்ளிய நெற்றியையுடையவளும், பெண்தன்மையால் விழையப்படும் இயல்பினளும் ஆகிய பார்வதியன்னையை, உலகினர் சான்றாக, தீத்தெய்வம் கருவியாக நிற்க மணஞ்செய்து கொண்டான் என்று உலகோர் அவனை இழித்துச் சொல்வது என்னை (எனத் தோழி அவனை இயற்பழித்துரைக்க),

அவன் அவளை உலகோர் சான்றாகத் தீக்கடவுள் சார்பாக மணஞ்செய்யாது விடுவனேல் எல்லாவுலகமும், உலகுநடைபெற உரைத்த மறைமுதலாகிய எல்லாநூல்களும் நிலையிற்கெட்டொழிந் திடுங்காண் சாழலோ (எனத் தலைமகள் அவனை அவளுக்கு இயற் பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை.) மலையரசன் மனைவியாகிய மேனை தன் மகளை இறைவற்குக் கொடுத்தற்கு மறுத்தாள் ஆதலால் அது மகட்பாற்காஞ்சியாகும். அங்ஙனமாதல்,

" முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை
மதிமுடிக்கு அளித்த மகட்பாற் காஞ்சியும் "
(சிலப். காட்சி. 133, 134.)

என்றதனானும் உணரப்படும். மதிமுடி - சிவபெருமான். ஆங்கு மேனை என்பாள், இறைவன் தன் மாமனாகிய தக்கன் தலையறுத்தல் முதலாய வற்றுக்கு அஞ்சினமையால் அது மகட்பாற் காஞ்சியாயதென்க.

மகண் மறுத்தமையால் அவனொடு பொருது மகள் கொள்ளலின்றி, அவ்வலிதிற் கொள்ளற்குரியானை, சமன்செய்து பலரறிய மணமயர்ந்து கொள்ளுதல் அவனது வீரத்திற்கும் இழுக்காகும் எனத் தோழி அவனை இயற்பழித்தாள் என்க.

வீரத்தால் ஒருத்தியை வலிதிற்கொள்வது ஒருவழக்காறே எனினும் அதனைச் சால்புடைய தலைமகன் ஆற்றான்; அங்ஙனம் அவன் ஆற்றின், அகத்தியத்துக்கு முற்காலத்து வழங்கிய இலக்கண மரபும், அவற்றின் வழிப்பட்ட பிற்காலத்துத் தோன்றிய இலக்கண மரபும் பயனற்றனவாய் ஒழிய உலகமும் நிலையிற் கலங்குதலும் நேரும். நிலையிற் கலங்குதலாவது மேரு நிலைகுலைய உலகும் அங்ஙனம் கெடுதல் என்க. ஆதலால் அவன் அவளை "உலகறியத் தீவேட்டான்" எனத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தாள் என்க.

" பொய்யும் வழுவும் பொருந்திய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம என்ப " (தொல். கற். 4.)

என்பதனையும் ஈண்டு விரித்துரைத்துக்கொள்க. இன்னதன் வ யெல்லாம் எமது கவுணியத்துட் காண்க.

வாள் - ஒளி. கலை - நான்மறையும் இறையனார் களவியலும் அகத்தியம் தொல்காப்பியம் போல்வனவும் என்க.

உமை தக்கன் மகளாகிய காலத்து அத்தக்கன் சிவனையும் தன்னையும் இகழ்ந்த காரணத்தால், தக்க சம்பந்தமான உடலை மாயா சம்பந்தத்திலே நீக்கினாள். அவள் மலையரசன் தவப்பேற்றால் இமயமலைச் சாரற்கண் குழந்தையாகச் சென்றுகிடந்து, அவனால் எடுத்து வளர்க்கப்பெற்று, செவ்வியடைந்த பின்னர் இறைவனை மணக்கவேண்டிப் பெருந்தவமியற்ற இறைவன் அவளை மணந்து கொண்டான். இதனால் மெய்த்தவத்தினால் தம்மையடைந்த சிறுமைகள் நீங்குமாறும், இறைவன் பேரருளின் திறன் விளங்குமாறும் அன்பினைந்திணை வளஞ் சிறக்குமாறுங் காண்க.

**தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணிஎல்லாம்
ஊன்புக்க வேற்காளிக்(கு) ஊட்டாம்காண் சாழலோ. 14**

இஃது, அவையெல்லாம் நிற்க, நின் தலைமகன் அம்பலம்புக்கு ஒரு மகளோடு உடன் நடம்பயில்வது என்னை என்றாட்குத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை) ஏடீ தோழீ! சோலை முதலாயவற்றிலிருந்து தேன்பாய்ந்து பெருகிய குளிர்ந்த வயல் சூழ்ந்த தில்லைப் பகுதிக் கண்ணுள்ள சிறுமை பொருந்திய மன்றத்திற்குரிய நின் தலைமகன் தான் (ஆலங்காட்டுள்ளே) புகுந்து (காளியுடனே ஒரு கால் தூக்கி) நடம் செய்தல் என்னை (எனத் தோழி தலைமகனை இயற்பழித் துரைக்க),

(அறிவிலீ!) அவன் ஆங்குப் புக்கு அவளொடும் அங்ஙனம் கூத்து அயர்ந்திலனேல், அசுரருடைய ஊனகத்துட் புக்க வேலேந்திய காளிதேவிக்கு இவ்வுலகமெல்லாம் உணவாகும்காண் சாழலோ (எனத் தலைமகள் அவட்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று

(வி - ரை.) துர்க்காதேவி, ஒரு காளியின் நாவகத்திலே வீற்றிருந்து கொண்டு, இரத்தாசுரன் இரத்தபீசாக்கன் என்னும் இருவர்களையும் கொன்று, அவர் இரத்தம் கீழே பெருகினால் அதினின்றும் பின்னரும் அசுரர் பலர் உயிர்த்து எழுவர் என்னும் எண்ணம் மேலிட்டு, அக்காளி

யின் நாவால் அவ்விரத்தம் அனைத்தையும் உறிஞ்சி வெறிமிக்கு, உலகையெல்லாம் அழிக்கப் புக்கனளாக, இறைவன் ஆங்குச் சென்று அவளொடு கூத்து அயர முனைந்து, தன் காலை மேலே தூக்கியாடி, அவள் நாணுற்றுத் தலை கவிழுமாறு செய்தான் எனக் கந்தபுராணம் கூறும். திருவாலங்காட்டிலே இது நிகழ்ந்ததென அதன் புராணம் கூறு நிறகும்

சிற்றம்பலத்து ஆடினான்; அதன்மேலும் காளியுடன் ஆடினான். அங்ஙனம் அவளுடன் ஆடும்போது அவையல் செயலாகிய கால்மேல் தூக்கியாடுதலையும் செய்தான். அங்ஙனம் அவன் அவ்விழிதொழிலைச் செய்தது ஏறறுக்கென அவனைத் தோழி இயற்பழித்தாள் என்க. இயற்பட மொழிந்தது வெளிப்படை. நடம் - கூத்து என்பது "நட்டம்" என விரிந்து நின்றது.

கடகரியும் பரிமாவும் தேரும்உகந்(து) ஏருதே
இடபம்உகந்(து) ஏறியவா(று) எனக்கறிய இயம்(பு) ஏடீ
தடமதில்கள் அவைமூன்றும் தழல்எரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ. 15

இது, தலைவர்க்குரிய மரபுட்படாத இடபத்தினை நின்தலைமகன் ஊர்வது என்னை என இயற்பழித்தாட்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ! தலைமக்கள் எனச் சிறப்பிக்கப் பட்டவர் ஏறுதற்குரிய மதத்தினையுடைய யானையையும், நடை நவின்ற குதிரையினையும், அவை பூண்ட தேரினையும் தனக்கு ஊர்திகளாகக் கொண்டு அவற்றின் மேலேறிச் செல்லாது (அவர்க் குரிய மரபினதெனக் கிளக்கப்படாததனால் இழிந்த) இடபத்தினை விரும்பி ஏறிய திறத்தினை யான் அறியுமாறு இயம்புவாயாக (என அவனைத் தோழி இயற்பழித்துரைக்க),

பெரிய மதில்கள் சூழ்ந்த திரிபுரங்களாகிய அவை மூன்றனையும் (தான் செய்த நகைப்பினாலுண்டாகிய) தீயினால் எரித்த அந்நாளிலே திருமால் இடபமாக அவனைத் தாங்கினான்காண் சாழலோ (எனத் தலைமகள் அவட்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை.) "நடைநவில் புரவியும் களிறும் தேரும்" (தொல். மர. 71.) என்றதனானும் இடபமேறுதல் தலைமக்களாவார்க்கு ஏலாதென்க. கடம் - யானையின் மதநீர். பன்மைபற்றி மதநீர் கடமெனப்பட்டது. அது கன்னமதத்தைக் குறிக்கும். கரம் - (துதிக்)கை; கரத்தையுடைமை யால் யானை கரி எனப்பட்டது. ஊழிமுடிவில் அறமே காளை வடிவினதாகி இறைவனைச் சுமந்ததென்ப. புரமெரிமடுத்த காலையில் தேரின் அச்சு

இற்றபோது திருமால் இடபமாய் இறைவனைச் சுமந்தான் என்க. மதில்களை யுடைய "அவை". அவை - திரிபுரங்கள்.

இயற்பழித்து மொழிந்ததும் இயற்பட மொழிந்ததும் வெளிப்படை.

நன்றாக நால்வர்க்கு நான்மறையின் உட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங்(கு) அறமுரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங்(கு) அறமுரைத்தான் ஆயிடினும்
கொன்றான்காண் புரமூன்றும் கூட்டோடே சாழலோ. 16

இது, நின் தலைமகன் இல்லறநெறிக்கு இயைந்தவனல்லன் என அவனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ, நின் தலைமகன் அக்காலத்தே தன் மனை துறந்து கல்லால மரத்தின்கீழிருந்து அங்கு வந்திருந்த முனிவர் நால்வர்க்கும் நான்காகிய கூறுபாடுகளைக் கொண்ட மறைநூல்களின் மறைந்த உட்பொருளைச் செவ்விதாக அறவுரை பகர்ந்தான் (எனத் தோழி தலைமகளை இயற்பழித்துரைப்ப),

(அறிவிலீ !) அந்நாளிலே ஆலின்கீழிருந்து அந்நால்வருக்கும் அறம் உரைத்தானாயினும், அவன் முப்புரங்களையும் அங்குள்ளவர் களையும் ஒருங்கே அழித்தான்காண் சாழலோ (எனத் தலைமகள் அவட்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை.) தோழீ ! நீ காதலித்து அளவிறப்ப இயற்பட மொழிதற் குரிய நின் தலைமகன், அன்று தன் இல்லாளைத் துறந்து துறவு பூண்டு மனையறம் பிற்பட ஆலிடம் பொருந்தி, ஆண்டு வந்திருந்த முனிவோர்க்கு அறமுரைத்தான் அன்றே? ஆதலின் அவன் இல்லறக்கிழமைக்கு இயையான் கண்டாய் எனத் தோழி கூறினாள்.

அவன் அறமுரைத்தானாயினும் வீரம்பற்றி புரமூன்றும் கொன்றான் ஆதலின், காதலும் பற்றி வருதற்குரியன் ஆவன் என்று அறிதி எனத் தலைமகள் கூறினாள் என்க.

இனி, நின் தலைமகன் ஆலின்கீழ் அறமுரைத்த பெரியோன் காண் என அவனை இயற்பழித்தலை மறந்தாள்போல இயற்பட மொழிந்த தோழிக்குத் தலைமகள் தானும் அவனை இயற்படமொழிதலை மறந்தாள் போல அவனை இயற்பழித்துரைத்தது இத்திருப்பாடலின் துறையெனக் கொண்டு, தலைமகட்கு எய்திய வெகுளியைத் தோழி தன் திறனால் தம் மிருவர் பேதைமையையும் புலப்படுப்பாள்போல இயற்பட மொழிந்து நகையாக மாற்றினாள் என முதலிற் கருதினும்.

அங்ஙனம் கொள்ளின், இருவரும் தங்கோள் மாறிக் கூறியவதனால் ஒருவரை மற்றொருவர் உள்ளநிலை நாடி ஆய்தற்பொருட்டே இங்ஙனம் மாறு

பட்டனர் என்றும், இருவரும் தத்தம் நிலையிலேயே இருந்துவருகின்றனர் என்றும் அவ்விருவரும் உணர்ந்துகொண்டமை பெற்றும். தோழி தலைமகள் கொள்கையொடு ஒத்தாள்போலக் கூறினும், தலைமகள் அவள் கூற்றெடு ஒவ்வாது அவளேபோலத் தானும் மாறுபட்டதாகக் கூறிய நுட்பம் அகநூல் உலகுக்கும் கவியுலகுக்கும் உயிர்மணி போன்றதென்க.

மேலும், ஆலின் கீழறமுரைத்தல் இழிவன்மையின் அது புத்தனால் வினவப்பட்டதென்றல் பொருந்தாதன்றே? ஆதலின் இப்பகுதி புத்தன் வினயவற்றுக்கெல்லாம் ஊமைப்பெண் விடையிறுத்தவற்றை அடிகள் பாடல் செய்தார் என்றலும் பொருந்தாதே போமென்க.

அறமுரைத்தலாவது, அறக்கூறுகளாகிய நான்கனையும் திறம்படக் கூறல். பொருளினையும் நுகர்ச்சியையும் பெறுங்கால் இது செய்யத்தகாதது', இது தக்கது எனக் கூறலே அறவுரையாதலால், பொருளின்பங்களைப் பற்றாதது அறவுரையாகாது. ஆதலின் அறமுரைத்தலும், அறம்முதல் நாற்பொருள்களையுரைத்தலும் பொதுவினும் சிறப்பினும் அடங்காநிற்கும் எனத் தெளிக.

அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையும் தேவன் என்று நண்ணுமது என்னேடீ
நம்பனையும் ஆமாகேள் நான்மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாஎன்(று) ஏத்தினகாண் சாழலோ. 17

இது, நின் தலைமகன் கூத்தயவர்தனால் உலகை உவக்கச் செய்து, ஐயமேற்றுக் கொண்டுவந்து கொடுத்த உணவினை உண்பதற்காகவோ நீயும் அவனைத் தேவன் என்று நண்ணுநின்றாய்; அங்ஙனம் அவனை நீ நண்ணுவது என்னை என அவனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது

(பொ-ரை.) ஏடீ தோழீ! திருவம்பலத்திலே கூத்தயர்ந்து உண்பதற்கு ஐயம் காரணமாக ஊரெல்லாம் திரிதரும் விருப்பமுடையோனை நீ நின் தேவன் (நாயகன்) எனக்கொண்டு (அவனை மணக்குந் துறையிலே) செல்வது என்னை (என அவனை இயற்பழித்த தோழிக்கு),

வஞ்சீ! யான் விரும்பியோன் எனக்கு மணமகனுமாறு சொல்வேன், அதனைக் கேட்பாயாக: யானேயுமன்றி எல்லா உயிர்கட்கும் உலகங்களுக்கும் மேம்பட்ட நான்கு கூறும் மறைந்த பொருளும் உள்ளனவாகிய வேதங்களும் தாம் அவனை நண்ணியும் அறியமாட்டாவாய்' (நீ யாங்குள்ளாய் என அவனை) எம்பெருமானே, ஈசனே என்றழைத்துப் போற்றின காண் சாழலோ (எனத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தாள்) எ-று.

(வி - ரை.) கூத்தாடிப் பலி திரியும் அவனைத் தேவன் எனக்கொண்டு நீ அவனுக்குத் தேவியாக நண்ணுவது யாது கருதி என வினவினள் என்க. அவனை மணந்தால், உன் அட்டில் தொழில்வன்மையும், ஒப்புரவு செய்தலும், துறந்தார்ப் பேணலும், விருந்தயர்தலும், வறியார்மாட்டரு ளுடைமையும் பயன்படா என்னும் குறிப்புத் தோன்ற இங்ஙனம் கூ.

அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கினையும் பயக்கவல்ல நான் மறைகளுமே வேணவா மிக்கு அவனை நாடியும் பெறுவாய் இளைக்கும் போது யான் அங்ஙனம் அவனை நாடி இளைத்தலால் ஓரிழிவும் இன்று; அறம முதலாய யாவற்றையும் எய்தினேனவேன் எனத் தலைமகள் இயறபட மொழிந்தாள் என்க. நம்பு - விருப்பம். நம்பன் - விருப்பமுடையவன். நமக்குச் சிறந்தவன் எனவும் உரைப்பர். அன்றியும் பலியேற்றதனல் மீமாஞ்சை நெறிபற்றியொழுகிய முனிவர்களுக்கு அறிவுவிளக்கஞ் செய்து கடவுட் கொள்கையின் பெருமையையும் நாட்டினன் என்பது கொண்டு இயறபழித்து மொழிந்த அதுவே இயற்பட மொழிந்ததுமாம்.

**சலம்உடைய சலந்தரன்தன் உடல்தடிந்த நல்லாழி**
**நலம்உடைய நாரணற்(கு)அன்(று) அருளியவா(று) என்னேடீ**
**நலம்உடைய நாரணன்தன் நயனம் இடந்(து) அரன்அடிக்கீழ்**
**அலர்ஆக இடஆழி அருளினன்காண் சாழலோ. 18**

இது, நின் தலைமகன் வெகுளி மிக்க வீரனைக் கொன்ற ஆழியை நாரணனுக்கு அளித்து, தான் வெறிதாயினவா றென்னை என அவனை இயற்பழித்த தோழிக்கு, அவன் தன் கண்ணை இடந்து மலராக அவன் அடிக்கீழ் அருச்சித்தான். அதனினும் அவ்வாழி பெரியதொன்றாகுமா? ஆகாதாகலின் அதனை அளித்தான் எனத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழி! தீயகுணஞ் செயல்களையுடைய சலந்தராசுரனுடைய உடலை இருதுண்டங்களாகப் பிளந்த நல் வலன் மிக்கதோர் ஆழிப்படையை வெற்றி நலனை ஊழான் எய்திய நாரணனுக்குக் கொடுத்தருளிய திறந்தான் என்னை (என பழித்த தோழிக்கு),

(உள்ளீடற்றவளே) வெற்றி நலனையுடைய நாராயணன் தன்னுடைய கண்ணைத் தோண்டிச் சிவபெருமானுடைய திருவடிக் கீழ் அணியும் அருச்சனைப் பூவாக இட அதுகண்டு அவ்வாழியை அவனுக்கு அருளிச் செய்தான் காண் சாழலோ (எனத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை.) சலந்தரன் வரலாறு, இந்திரன் சிவபெருமானைக் கயிலை

பிற் கண்டு போற்றற்குச் செருக்குடன் சென்றதைக் கண்ட சிவபெருமான், அவன் செருக்கினையடக்க ஒரு வீரனாக அவன் எதிர்நிற்ப, மற்று அவனைக் கண்ட இந்திரன் நீ யாவன் என்று வினவவும் விடையிறுக்காது வாளா நின்றமையால் சினமிக்குத் தன் உயிரப்படை கொண்டு அவன்மேலெறிய, அப்படை அப்பொழுதே துகளானது. ஆங்குச் சிவபெருமான் சினமிக்குத் தன்முன் நிற்றலைக் கண்ட புரந்தரன் தன் குறையைப் பொறுத்தருள்க என அடிபணிந்து விண்ணப்பம் செய்தான். சிவனும் அவனுக்கிரங்கி அச் சினத்தீயை மேல்கடற்கண் வீச அதுவே சலந்தரனாயது. அச்சலந்தரன் நான்முகன் உரைத்தவாறு வருணனால் வளர்க்கப்பட்டான். திருமால் முதலிய வானவர் அவனொடு போர்செய்தற்கு ஆற்றாராய்த் தோற்றோடித் தன்பால் முறையிடச் சிவபெருமான் ஒரு மறையவனாக அவன் முன்னர் வந்து நிலத்திலே வட்டமாக ஒரு கோடிட்டு மற்று இந்நிலப் பகுதியைப் பேர்த்து எடுப்பின் நீ சிவனை வெல்லறகுரியை ஆவாய் எனக் கேட்ட அவ் வசுரன் அங்ஙனமே பேர்த்தெடுக்கையில் அஃதோர் ஆழிப்படையாகி அவனைக் கொன்றது என்றவாறும்.

திருமால் முதலியோரால் வெல்லற்கரிய சலந்தரனைக் கொன்ற ஆழிப் படையை நாரணனுக்குக் கொடுத்தமையால் அவனை வலியனுக்கித் தான் எளியனானான் எனத் தோழி தலைமகளை இயற்பழித்தாள்.

வட்டித்ததாகக் கோடிட்ட அவ்விடத்தினையே ஓர் ஆழியாக்கிய ஆற்றல் இறைவற்கே உளதாகவும், அதனைச் சலந்தரனைத் தடிந்த ஆழிக்கு உளதாகப் புனைந்துகொண்டே தோழி சலந்தரனும் இறந்தானாதலால் நின் னிறைவன் அத்தகைய படையை அவனுக்கு அளித்தது அறியாமைப்பால தென இழித்தவாறென்க.

இதனைக் கேட்ட தலைமகள் நாரணன் பூசைத் தொண்டினுக்கிரங்கியே அதனை அவனுக்கு அருளினன் எனக் கூறிய அதனாலே அஃது இறைவன் ஆணையால் ஆயிற்று என்பதும் பெறப்படுதலால் அதனையே இறுத்தாள். இன்னும் இதனானே திருமால் படையால் வலியன் என்பது இறைவன் வலியன் ஆதல் கொண்டே என்பதும், சலந்தரனைக் கொன்ற இறைவ னாற்றலைக் கண்டே திருமால் அவனை வழிபடுவானாயினான் என்பதும் பெறப்பட்டன.

**அம்பரம்ஆம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்**
**எம்பெருமான் உண்டசதுர் எனக்(கு)அறிய இயம்பேடீ**
**எம்பெருமான் ஏதுடுத்தங்(கு) ஏ(து)அமுது செய்திடினும்**
**தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ. 19**

இது, நின் தலைமகன் தோலுடையுடாது பட்டுடுத்தினால், நஞ் சுண்ணாது அமுதருண்டால், அவனுக்கு யாது இழுக்கு வரும்; அவ்விழுக்கினைப் போக்க இவற்றை மேற்கொண்ட திறமைப் பாட்டினை எனக்கு அறிவிப்பாய் என அவன் அறியாமையை

வெளிப்படுத்தி இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ! எம்பெருமான் புள்ளிகளையுடைய புலித்தோலை ஆடையாக உடுத்து, ஆலகால நஞ்சினை உணவாக உட்கொண்ட திறமைப் பாட்டினை எனக்கு அறிந்துகொள்ளுமாறு இயம்புவாயாக (எனத் தோழி அவனை இயற்பழித்துரைக்க).

ஏடீ! எம்பெருமான் எதனை உடுத்தாலும் எதனை உண்டாலும் தனக்குரிய பெருமையைத் தான் அறிந்துகொள்ளாத இயல்பினை உடையவன்காண் சாழலோ (எனத் தலைமகள் அவட்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை.) தோலே அன்றிப் பட்டும், நஞ்சேயன்றி அமுதமும் உடுத்தும் உண்டும் வரின் அவன் தன் நலம் மிக்கு அன்பர்க்கு ஆக்கமும் அல்லார்க்குக் கேடும் செய்யா இயல்பினனுவன் என விரித்துரைத்துக் கொள்க. இதனுல் வேடம் இழித்திடப்பட்டது.

நல்லோன் உடையால் உணவால் தீயனுகான் எனக் குறிப்பித் தருளினுள் என்க. தீயோன் பட்டுடுத்து அமிழ்தருந்தினுல் நல்லோனுவன் என்பது நின் கருத்தாம் போலும் என அவளை நெருக்கியுரைத்தாளுமாம்.

இத்துணைப் பேராற்றலும் பெருங்கருணையும் படைத்த நின் தலைமகன் பட்டு உடுத்து அமிழ்தம் உண்ணுவானுயின் எத்துணை மதிப்பிற்குரியவ னுவான் என அவளுக்கு அறிவுறுத்துவாள்போல இயற்பழித்த தோழிக்கு வஞ்சி, நின்னைப் போன்று அவன் உடை உணவுகளைப் பேணுவதன்றி நல்லாரை யாக்கி அல்லாரைப் போக்குதற்கண்ணே கருத்தான்றியவனுகை யால் நீ கருதுமாறு அவன் இருப்பின் அவன் தற்பெருமை கொள்வோன் என்னும் குற்றத்திற்குள் ஆவான் எனத் தலைமகள் குறிப்பால் விளக்கினுள் என்க.

தன் பெருமை என்றது எதுகை நோக்கித் "தம் பெருமை" எனத் அம்பரம் - ஆடை. ஆர்தல் - உண்ணுதல்.

**அருந்தவருக்(கு) ஆலின்கீழ் அறமுதலா நான்கினையும்**
**இருந்(து)அவருக்(கு) அருளுமது எனக்கறிய இயம்பேடீ**
**அருந்தவருக்(கு) அறமுதல்நான்(கு) அன்றருளிச் செய்திலனேல்**
**திருந்(த)அவருக்(கு) உலகியற்கை தெரியாகாண் சாழலோ. 20**

நின் தலைமகன் இல்லறத்தார்க்கு உணர்த்தற்பாலதாய பொருள்களைத் துறவறத்தார்க்கு அருளிச்செய்த முறையை எனக்கு அறிய உணர்த்தி என அவனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் அவனை இயற்பட மொழிந்தது.

(பொ - ரை.) ஏடீ தோழீ! செய்தற்கு அரியதாகிய பெரிய செய்துமுடித்த சனகாதி முனிவர்க்குக் கல்லால

மரத்தின்கீழ் நின் தலைமகன் வீற்றிருந்து அறம் முதலாகிய நான்கு பொருள்களையும் அருளிச்செய்ததை எனக்கு அறியச் சொல்லாய் (எனத் தோழி தலைமகனை இயற்பழித்துரைக்க),

ஏடீ ! அரிய தவத்தினை முடித்த அந்நால்வர்க்கும் அந்நாளிலே அவ்வறம் முதலா நான்கினையும் அருளிச்செய்திலனேல், அந்நால்வர்க்கும் உலகின் இலக்கணங்களாகிய அகம் புறம் என்பவற்று மரபின் உண்மைகள்தாம் திருத்தம் எய்த விளங்கப்பெறுகாண் சாழலோ (எனத் தலைமகள் அவளுக்கு அவனை இயற்பட மொழிந்தாள்) எ - று.

(வி - ரை ) 'அவர் திருந்த உலகியற்கை அவர்க்குத் தெரியாகாண்' என இயைக்க. திருந்த அவருக்கு என்பது "திருந்தவருக்கெ"னத் தொக்கது. இதனால் உலகியற்கையை அறிந்து கொள்ளாதார் ஞானம் கைவரப் பெறுதார் எனப்படுவர் என்பது பெற்றும். இது கருதியன்றே பொருளதிகாரம் ஞானத்தின் மேலதென நக்கீரனாரும் களவியற் கண்ணே உரைத்தருளியதும் என்று உணர்க. அந்நால்வரும் அரிய தவம் முடித்தனரேனும் மெய்யறிவு பெற்றிலர் என்க. இன்னும் இதனானே வடமொழி மறையகத்துள்ள கருமகாண்டப் பொருள்களை அறியார்க்கு ஞான காண்டப் பொருளும் இனிது விளங்காது என்றலும் உணரப் படும். கருமங்களின் உட்பொருள்களை உணர்ந்து செய்வதுவே ஞான மாகும் என்னும் உண்மையும் ஈண்டே தெளியப்படும். உடம்படுபுணர்த்த லால் தோழிக்கு அவற்றுட் பொதிந்துகிடந்த பொருளைத் தலைவி விரித்துரைத்து விளக்கினாள் என்பதும் கொள்ளப்படும்.

அறம் பொருள் இன்பங்களை மதியாராய், அவற்றை வெறுத்தொதுக்கி, மேலதாகிய ஞானத்தினையே பெற விழைந்த அடிகளுக்கு இறைவன், அவற்றை விடுத்ததொரு ஞானமுமில்லை, ஞானம் என்பது அவற்றகத்தே தான் பொதிந்துளது, அதுவே மறையின் உட்கோள் என விளக்கியருளி னான் என்பது இப்பகுதியானும்,

"முடித்தவாறும்" (திருச்ச. 57.)

என்னும் திருப்பாட்டு முதலியவற்றானும் தெளியப்படும். பிறவுமன்ன.

உலகியற்கையானது, இல்லறம் பயின்ற பின்னர்த் துறவறம்மேற் கொள்ளுதல் என்க.

இவ்வுண்மை "காமஞ்சான்ற" (தொல். கற். சூத். 51.) என்பதனானும், "அறஞ்செய விரும்பு" "இல்லறமல்லது நல்லற மன்று" என்னும் ஒளவை திருவாக்கானும், அன்ன பிறவாற்றானும் நன்கு தெளியப்படும்.

தலைமகளும் தோழியும் ஆன்மாவும் மனமும் எனக் கொள்ளற்கும் போலும்.

திருச்சிற்றம்பலம்

# திருப்பூவல்லி

"திருப்பூவல்லி" என்பது வல்லிப்பூக்களைக் கொய்வோமெனத் தலைவி தோழியொடு கூறிக்கொண்டே பூக்கொய்யும் ஒருவகை விளையாட்டு. இங்ஙனமே நாடகப் பெருமாப் புலவராய காளிதாசனும் முனிவராச்சிரமத்துப் பாங்கர்க்கண் உள்ள பூஞ்சோலையில் சகுந்தலையும் அவள் ஆயத்தாரும் "நான் முல்லை நறும்பூக் கொய்யா நின்றேன்" என்றுங்குத் தத்தமக்குள்ளே கூறிக்கொண்டு பூக்கொய்தனராகக் கூறியிருத்தலும் ஈண்டுக் கருதற்பாலது. வல்லிப்பூ என்பது நால்வகைப் பூக்களுள்ளே கொடிப்பூக்களைக் குறிப்பதாகும். "கொய்யாமோ" எனக் கூறிக்கொண்டே ஏனையோரோடும் தலைமகள் பூக்கொய்யாநின்றாள். ஏனை மூன்றுவகைப் பட்ட பூக்களும் கொய்யப்பட்டமையால் எஞ்சி நின்ற கொடிப்பூ ஒன்றுமே குறிக்கப்பட்டது. அவ்வுண்மை "புனைகொன்றைப் பொன்தாது பாடி" என்னும் இப்பகுதியின் பதின்மூன்றாவது திருப்பாட்டானுந் தெளியப்படும்.

இனி, "வல்லிப்பூ" என்பது வல்லியும் பூவும் என உம்மைத் தொகையாக நின்றதெனக் கொள்ளலும் நனிபொருந்தும். இங்கே வல்லி என்பது வல்லிக்கொடியைக் குறிக்கும் என்க. அதன் விளக்கத்தினை உரைக்கட் காண்க.

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் வதுவை அயர்தற்கு வருகின்றான் எனக் கேட்ட செவிலியின் கட்டளையால் அவன் அணியும் மாலைக்கும், அவன் திருவடியில் இடுதற்குமாகப் பூக்கொய்வோமாக எனத் தலைமகள் தோழி முதலாய ஆயத்தார்க்குச் சொல்லி அவருடன் பூப்பறிப்பது தமிழ் மரபென்பது இப்பொழுது தெரியவருகின்றது. அம்பலத்தே ஆடுகின்றானுக்கு,

> "உலகர் முன்னே நான்நாடி ஆடிநின்று ஓலமிட
> நடம்பயிலும் வானவர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ."

என அடிகள் கூறியருளுதலின் கற்பிற் பிரிவாக இப்பகுதியைக் கொள்ளாமாயினும்.

தலைமகன் கனவிலே தனது பிரிவினைக் கூறுது பிரிந்தானாகத் தோழி தலைமகளை ஆற்றுவதற்கு வழியின்றி மயங்காநின்றாள். அங்ஙனம் மயங்கிய தோழியும் தலைவியும் அவன் அன்பிலனாகியே

பிரிந்தான் எனத் துணிவர். ஆற்றுவாரின்றித் துன்பம் மீதூரப் பட்ட தலைமகள் அன்பினைந்திணைக் களவு மரபாகிய கந்தருவ நெறியினின்றும் வழுவிப் பெருந்திணை ஒழுக்கத்தினை மேற் கொண்டு நாடறியப் புலம்புவாள். புலம்பி வரும்போது பிரிந்த தலைமகன் தன்னை வதுவை அயர வருகின்றானெனத் தூதுவரால் அறிந்தவள் மனந்தெளிந்து உவகை மிக்காளாய்த் தோழி முதலாய ஆயத்தாரோடும் அவன் அணிதற்காகவும் அவன் திருவடியில் இடுதற்காகவும் பூக்கொய்யாநின்றாளென இப்பகுதியின் துறைப் பொருள் விரிக்க.

" நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடெய்த " (திருஅம். 6.)

எனவும்,

" நாடவர் எம்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப " (திருப். 7.)

எனவும்,

" கெட்டேன் மறப்பேனோ " (திருக்கோத். 7.)

எனவும்,

" பணிகொள்ளு மென்பது கேட்டு உலகமெல்லாஞ் சிரிக்கும் " (திருத்தெள். 3.)

எனவும் வருவனவெல்லாம் இத்துறைப்பாற்பட்டனவேயாகும். மனம் மயங்கிய தோழி தலைமகனை அன்பிலனென இயற்பழிக்க அவன்பால் அன்புமிக்க தலைமகள் தன் ஆற்றாமை மறந்து அவனை இயற்பட மொழிந்ததே திருச்சாழல்; ஆதலால் திருச்சாழலும், அதன்மேல் திருக்கோத்தும்பியும், அதன் பின் ஏனையவும் பாடியருளப்பட்டனபோலும். அவை ஆங்காங்கு விளக்கப்படும்.

இத்துறைப்பொருளை நெய்தற்கலி 25-ஆவது செய்யுளுக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிய துறைக் குறிப்புக் கொண்டறிக

இனி இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு.— நூற்பகுதியில் 12-ஆவதாக அமைந்த பொருளாகிய வானவர் கோன் குணங் குறி கடந்தவன் ஆலம் உண்டவன் என்னும் இதனுள் ஆலாலம் உண்டல் என்றது அமுதம் கடைவோர் தன்னையும் ஆங்கு அழைத்திலாத குற்றத்தைப் பொருட்படுத்தாத பெருமையும், அவர்க்குத் தீங்கு வந்தவிடத்து அவர் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு அவர் இடர் தீர்த்த அருமையும், அமுதுண்டு வாழ்வதற்கு மாறாக நஞ்சுண்டு வாழ்தல் மாயோன் முதலியோர்க் குக் கோனாகுஞ் சிறப்பும் அருளுங் காட்டுதலால், இது அடிகள் எடுத்துக்கொண்ட பொருள்களுள் முதலிடம் பெற்றது

வானவரை வருத்திய திரிபுரர்களேயும் அவர் புரங்களேயும் தான் ஒருவனுக நின்று எதிர்த்து எரித்த அவனது பகைவெல்லுந் திறம் நஞ்சுண்டலே அடுத்துச் சிறத்தலின் நூற்பகுதியில் ஆறுவதாக அமைந்த திருப்பாட்டு இரண்டாவதாகக் கொள்ளற்பாலது.

இனி, நஞ்சுண்டும், புரமெரித்தும், தன்ருற் காக்கப்பட்டவரேனும் அவரைப் பரவி ஒழுகாவிடிற் கெடுவர் ஆதலால் தக்கன் முதலியோர் புண்பட்டதும் (4), பிழை கண்டவிடத்து ஒறுக்கும் அவனே அடியவர் தம் அன்பின் மிகுதி கண்டவிடத்தே அவர்க்குக் கீழ்ப்படுதலும் அவரால் ஒறுக்கப்படுதலும் (16), அத்தகையோன் மாபெரும் மெய்யறிஞுய் ஆலடியமர்ந்தவாறும் (13), முறையே இயைபு பெற்றன

இவ்வாறு திருப்பாட்டுக்களும் அடிகள் வரலாறு கலவாதனவாதலின், இவை ஒரு பகுதிப்பட்டனவெனவும், இனி வருவன அடிகள் வரலாற்ருெடு கலந்து வந்தன ஆதலால் வேறு ஒரு பகுதிப் பட்டனவெனவும் உணர்க

பத்தொன்பதாம் திருப்பாட்டிலே உத்தரகோசமங்கைவள்ளல் புத்தி புகுந்தவாறு கூறப்பட்டமையின் அதனே ஏழாவதாகக் கொள்க.

அங்ஙனம் புத்தி புகுந்தவன் மதுரைக்கண்ணே குதிரை மீதிவர்ந்து வந்து தம்மையாட்கொண்டவன் என்றும் (20), அங்ஙனம் ஆட்கொண்ட அவனே தாம் ஓலமிடப் பிரிந்து அம்பலம் புக்கான் என்றும், அங்ஙனம் புக்கனனேனும் என் பிறப்பறுத் தாண்டான் எனவும் (3), அவனே தன் திருவடியைத் தம்முடைய சென்னியிலே வைத்தருளிய திறத்தால் கொண்ட துன்பம் நீங்க இன்பம் எய்தியது எனவும் (2) இயைக்க.

இங்ஙனமெல்லாம் அவன் திறங்கூறிய அடிகள் அவ்விருவகை முறையும் பற்றி அவற்றையெல்லாம் பாடிக் கொடிப்பூக் கொய்வோமாக என இனிச் சொல்லியருள்வர்.

" ஆசைப்பிண்டம் அறத்தன் திருவடியை என் சென்னியில் வைத்தாண்டவன் " " கடனஞ்சுண்டுகந்த காபாலி " " திரிபுரத் திற் செய்த போரைப் பாடி " எனவும் (10),

என் அகம்புக்குள்ள அவனேத் தேவரும் அரக்கரும் முன்னறியார் ஆதலோடு இனியும் அறியார் ஆதலால் அவனடி அவர் போற்றற்குரியதாகுமோ (17) எனவும்,

நாம் தேறி நலம்பெற எல்லாம் வைத்து என்னைப் பிரிந்து சென்ற அவன் அம்பலத்தானுதலால் அவன்பால் நற்குணம் மிகும் எனவும் (7),

அத்தகைய நற்குணங்களைப் பரவியும், அடியவர்க்கு அடிமை யாக நம் வல்வினையைக் கேடுசெய்தவாறு பாடுதல்வேண்டுமெனவும் (8), அதனுல் நான் துணைச்சுற்ற மெல்லாந் துறந்தொழிந்தேன் (1), என்னை யாண்டுகொண்ட அக்கழலிணைகள் இப்போது எனக் குப் பொன்னுயின (9) எனவும், அங்ஙனம் பொன்னுகிய கழல்கள் தம்மைப் பரவுவார்க்கு ஒரு நன்னெறியாகும் அவையே யொப்பீது அவனுடைய புகழும் (11) எனவும், என்னுடைய உள்ளத்திலே திருவடிகளைப் படமாக வைத்தவன், ஏகம்பம் மேவியிருந்தான், இப்போது அம்பலத்திலே ஆடுகின்றுன்; இங்ஙனமே தன் அன்பர் ஓரிடமாகவும், தான் மற்றோரிடமாகவும் இருந்து வருவோன் (14) எனவும், அங்ஙனம் அவன் நடிக்க அங்கு ஒலிக்கும் அடிச்சிலம் போசைக்கு ஆசைகொண்ட யான் மகிழ ஆங்குள்ளதாம் பேரின்பம் (18) எனவும் சேர்த்துக்கொள்க

இப்பொருள் நூற்பகுதிக்கண்ணே மாறுபட அமைக்கப் பட்டமைக்குரிய அடைவு வருமாறு —

அடிப்பாட்டுப் பொருளடைவிலே பதினுருவதாகிய அவன் திருவடியைத் தம் சென்னியில் வைத்தலும் தம்முடைய துணை எல்லாம் ஒழிந்தது என்பதனைத் தன் பாரம் போகிப் புறத்தொடர் பால் வரும் இன்னல் நீங்கியது என்னும் இயைபால் முதற்கண் வைத்தருளினுர் அவ்வாறு கொண்டமைக்கேற்ப மற்றையன இயைபுபட்டவாறு.

அங்ஙனம் அப்போது அறுத்த பாண்டிப்பிரான் இப்போது இடைப்பகுதியிலே இன்பத்தேனூற எனக்குக் காட்சியளித்தான் என்றும், அவ்வாறு என் பிறப்பறுத்துக் காட்சியளித்தானுதலின் இதுகாறும் அரித்துத் தின்று வந்த என் வினையின்வாயிற் புழுதியிடு வோம் என்றும், ஆண்டமையாற் செருக்குக்கொள்ளின் தாமும் அங்ஙனம் புண்படவேண்டுமென்ற குறிப்பால் தன் வழியொழுகா தோரைத் தன் அதிகாரிகளாற் தண்டிப்பவன் என்றும்,

[குறிப்பு:—அவன் ஆண்டான் ஆதலால் வல்வினையின் வாயிற் பொடியிடுவோம் என்றபோக்குச் செருக்கினைப் பயப்பது ஒன்றுக அமைதலால் அம்முறையாகக் கூறுதல் தகாதென்பதுபட இத்திருப்பாட்டு நின்றது.]

வானுடர்கோவாகிய என் தலைவன் என்னை ஆண்டுகொண்ட பின்னர் நான் ஓலமிடப் பிரிந்து அம்பலத்தே ஆடுகின்றான் என்றும், வானவர்க்குக்கோனாகி அவர்க்கு இரங்கி எரிமூன்றினையும் அருள் செய்தவன் ஆவன் (பேராற்றல் வாய்ந்த அவனைக்கொண்டே தம்மிடரைத் தீர்த்துக்கொள்ளல் வேண்டும் என்ற கருத்தால்) என்றும் அவர்க்கருள் செய்தவாறு தமக்குமிரங்கித் தன் தொண்டி லீடுபட வாய் ஆதியன தந்தான் என்றும், தாம் தேறுமாறு தன்னடி யார்க்கெனத் தம்மைக் குறி செய்துகொண்டவன் ஈண்டு தம் கிறிசெய்தான் என்றும்,

[நாம் வினையின் வாயிற் பொடியட்டிக் கொய்வோம் என்ற வாய்பாடு செருக்கினை விளைவிப்பதாகவும், அவன் நம் வினையைக் கிறி செய்தவாறு என்றது செருக்கறுப்பதாகவும், உண்மையில் மூன்றும் திருப்பாட்டிற்குப் பிந்தியது எட்டாந்திருப்பாட்டென்பது பெற்றும் ]

அங்ஙனம் தம்மை ஆண்டுகொண்டவன் இப்போது எனக்கு அரியவாயினன் என்றும், (எனினும் தனக்கு அருள்வான் என்னுந் துணிபால்) தேவர் வேண்டப் புரமெரித்து அருள்செய்தவன் என்றும், புரமெரித்தல் பாடுவது அவன் கழல் பரவுவதுபோல நன்னெறி பயக்க வல்லதாதலால் பாடுவோம் என்றும்,

[குறிப்பு.—இப்போது அவன் கழல் கிட்டாமையின், அவன் புகழைப் பரவில் பெறுதற்குரியோம் எனத் துணிந்தமையால் "கழலிணைகள் பொன்னுனவாறு" என்றதன் பின்னதுவே இத்திருப்பாட்டென்பது தெளிவு ]

அவன் புகழ் பாடல் எங்களுக்கு இயலாததேனும் அவன் நஞ்சினை உண்டவன் ஆதலால் எம் பாடலையும் ஏற்றருள்செய்வான் என்றும், அத்துணிவால் 'நிறைகழலோன் புனைகொன்றைப் பொன்றுது' பாடுவோம் என்றும், திருவடிக் கொன்றை பாடியதன் மேல் தம்முள்ளத்துப் படமாகத் திருவடியை வைத்து ஏகம்பமே யவன் அத்திருவடியால் நடமாடுதல் பாடுவோமென்றும், அங்ஙனங் கூத்தயர்வோனல் வெருளப்பட்டவர் தம் பரிசழிவராதலால் தாமும் அவன் வெகுளிக்கிடமாகாது வெகுளப்பட்டார் திறம் பாடுவோ மென்றும், அன்பில்லாரை வெகுள்வனேனும், அன்புடையாரை அருள்வனென்றும், அன்பர்க்கு எளியனாய அவனே மக்களேயன்றி நஞ்சுடைப் பாம்பினையுந் தனக்கு அணியாகக்கொண்டுள்ளான் என்றும், கொடிய நாகங்களையும் அணிந்து அவற்றையுஞ் சிறப்

பித்த அவனே சிலம்பொலி கேட்க ஆசைகொண்ட யான் மனமகிழ நடனஞ்செய்யும் என்றும், அங்ஙனம் நடஞ்செய்யுமவன் புத்தி புகுந்தானென்றும், புத்தியுட் புகுந்த அவனே மதுரையிலே குதிரை யின்மேல் எழுந்தருளி என்னைத் தன் அடிமையாக்கி அருளினன் என்றும் இயைத்துக்கொள்க.

இஃது திருத்தில்லையில் அருளிச்செய்த தென்ப.

## மாயாவிசய நீக்குதல்

### நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

இணையார் திருவடி என்தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்
அணையார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 1

இஃது, ஆறிய மிகுபுகழ் உடையவனாய் என் முன்னர் வந்து என் சென்னியின்மேல் தன் திருவடியை வைத்த அவ்வளவிலே முன்னர்த் துணையாக என்பால் நிலைபெற்ற சுற்றங்கள் முழுவதை யும் நீங்கி ஒழிந்தேன். ஆதலால் அவன் சீர்பாடி அவன் அணிதற் குக் கொடிப் பூக்களைக் கொய்வோமாக எனத் தலைமகள் தன் ஆயத் தார்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர் !) இறைவன் என் தலைமீது தனது இரண்டாகி ஒத்த திருவடிகளை வைத்த அவ்வளவிலே, முன்னர்த் துணையாகும் எனக் கருதிய சுற்றம் அனைத்தும் தாமே நீங்கப் பெற்றேன். (அங்ஙனம் அன்று திருவடி சூட்டிய அவன் இன்று) தடுக்கும் கரைகள் பொருந்திய நீர்வளத்தையுடைய தில்லைக் கண்ணே உள்ள திருவம்பலத்தே கூத்தயர்கின்ற (என் துன்பக் கடற்கு) ஒரு புணையாளனாக உள்ளான். அவனது ஆறிய மிகுபுகழ் பாடி (அவனை மணக்கும்போது யான் சூட்டற்குரிய மாலை தொடுப்பதற்குவேண்டிய) கொடிப்பூக்களைக் கொய்வோமாக (எனத் தலைமகள் தன் ஆயத்தார்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) *இணை - இரண்டு. ஆர் - ஒத்த.* என்றால் துரத்தப் படாமல் தாமே நீங்கின என்றபடி. *புணையாளன் - தன்திருவடியால் எம்போன்றாரை இன்னாற்கடலின் நின்று கரைசேர்ப்போன். கரை என்றது*

பேரின்பத்தை. பொங்கிய 'சீர்' பதினைந்தாவது திருப்பாடற்கண் கூறப் பட்டமையால், ஈண்டுக் கூறிய "சீர்" ஆறிய சீராகும் எனக் கொண்டாம். அவன் சீர்பாடுதல், கழல் பரவுதலை ஒத்து நன்னெறிப்படுப்பதாகும் என்க. அவன் சீர்பாடின் யானும் கரையேற்றப்படுவேன் என்பது தலைமகள் கருத்தாகும்.

இனி, "பூவல்லி" என்றதற்குப் பூவும் வல்லியும் எனக் கொண்டுரைத் தலே பொருந்துவதுபோலும் ; முல்லைக்கொடி கொண்டு மாலை தொடுத்தல் வழக்காறுதலின் அதுவே கற்பினை விழைந்தவாற்றையும் புலப்படுத்தா நிற்கும். ஆதலால் அங்ஙனமே இனிப்பொருள் உரைத்துச் செல்லுதும். ஈண்டுக் "கொய்தலை"ப் பூவிற்குப் பறித்தலும் கொடிக்கு அறுத்தலுமாகப் பொதுப்பட நின்றதெனக் கொள்க.

அவனால் ஈண்டுள்ளன யாவும் துறந்தேன், அவனும் அகன்றானயின் யான் யாது செய்வேன் எனத் தனது ஆற்றாமை புலப்படுத்தியவாறு. ஆதலால் இனி அறத்தொடுநிற்றலும், அதனாலும் பயனின்றேல் மன்றத்தே முறையிடுதலும் செய்தலன்றி, எனக்கு வேறுவழியில்லை என்று குறிப் பிட்டாள் என்க.

இனி, "பூவல்லி கொய்யாமோ ?" என வினவுவதாகக் கூறுமுகத்தால், அறத்தொடு நிற்பதாகக் கூறினும் ஒருவாறமையும்.

எந்தை எம்தாய் சுற்றம் மற்றும் எல்லாம் என்னுடைய
பந்தம் அறுத்தென்னை ஆண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த இடைமருதில் ஆனந்தத் தேன்இருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ. 2

இஃது, இடைமருதூர்க்கோயிற்கண்ணே இருந்த, என்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரானாகிய தேனைத் துதித்து, அவனுக்கு மாலை தொடுக்கப் பூவும்வல்லியும் பறிப்போமாக என அவள் அவர்க்குக் கூறியது.

[குறிப்பு :—தலைமகளும் அவள் ஆயத்தாரும் பூவும் வல்லியும் கொய்யும்போது வாளா கொய்யாது, அவன் சீர் பாடியும், அவனைப் பரவியும் கொய்வேமாக என்றாங்குத் தலைமகள் தோழிக்குக் கிளந்து கூறும்முகத்தாலே அறத்தொடு நின்றாள் எனக் கொள்க. ஆற்றாமை மிக்குக் கூறினளேல், அனைவர்க்கும் கூறினளுமாம். இங்ஙனம் கூறுதல் கந்தருவத்தின் வழுவிய பெருந்திணையாம் கந்தருவ ஒழுக்கம் அடங்கி ஓயவும், பெருந்திணை ஒழுக்கம் தலைகாட்டவும் ஏய்ந்த நிலையிலே அங்ஙனம் அனைவர்க்கும் கூறியதாகக் கொள்க. இங்ஙனம் வழுவிய நிலையை வழுவமைக்கவே திருக்கோவை பாடியருளப்பட்டது என்பதும் பெறப்படும்.]

(பொ - ரை.) தோழீர்! (முன்னரே எனக்கு அமைந்திருந்த தந்தை தாய் சுற்றம் முதலிய) என்னுடைய கட்டுக்களை அறுத்து விலக்கி, எங்கள் அப்பனும் எங்கள் தாயும் சுற்றமும் மற்றுமுழிந்த எல்லாமும் தானேயாகி என்னை ஆட்கொண்ட பாண்டிப்பிரானாகிய அந்தத் திருவிடைமருதூரில் இன்பத்தேன் இருக்கப்பெற்ற பொந்தை வணங்கி நாம் பூவும்வல்லியும் பறிப்போமாக (என அவள் அவர்க்குக் கூறினள்) எ - று.

(வி - ரை.) பாண்டிப் பிரானாகிய இன்பத்தேன்; அத்தேன் இருந்த திருவடியாகிய பொந்து; அப்பொந்தையுடைய மருது என்க.

"இடைமரு ததனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்" (கீர்த்தி. 75, 76.)

என்றருளிச் செய்தார் ஆகலான். மருது, அத்தல விருட்சம்; அதன்கண் அவன் வீற்றிருந்தாண்டான் எனக. எந்தை வழிச்சுற்றம், எந்தாய் வழிச்சுற்றம், ஏனைய சுறறம், அயல் முதலிய எல்லாம் பாண்டிப்பிரான் தானேயாகி இடைமருதில் தேனேயாகித் திருவடியுள் இருந்தாண்டான் என்க. என் தந்தை தாய் சுற்றம் முதலிய பந்தம் அறுத்ததாலுகலின் அவை எல்லாம் தானேயாகி எனக்குப் பற்றுக்கோடாயினன் என்றவாறு.

अवटयाय च (பொந்தில் இருப்பவனை உனக்கு, ஸ்ரீருத். அநு. 7.) என்றலின் இறைவன் பொந்தில் உறைதல் தெளியப்படும.

**நாயிற் கடைப்பட்ட நம்மையும் ஓர் பொருட்படுத்துத்**
**தாயிற் பெரிதும் தயாஉடைய தம்பெருமான்**
**மாயப் பிறப்பறுத்து ஆண்டான் வல்வினையின்**
**வாயிற் பொடிஅட்டிப் பூவல்லி கொய்யாமோ. 3**

இஃது, தம்மைச் சேயாக நினைப்பவர்க்குத் தாயினும் மிக்க தண்ணளி உடையனாய், அவர் தமக்குப் பிரானாக உள்ளவன், எளிய நம்மையும் ஆட்கொண்டான் ஆதலால், நாம் வலிதாகிய வினையின் வாயிலே புழுதியை இட்டுக் கவலையின்றி, பூவினையும் வல்லியையும் கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

[குறிப்பு :—முதலாம் திருப்பாட்டால் சுற்றம் துறந்தமையும், இரண்டாவதால் அவனே சுற்றமாயினமையும், மூன்றாவதால் அவன் தம்முடைய ஊழ்வினையின் வாயில் பொடியிட்டமையும் கூறப்பட்ட முறையே முறையாதலால், ஈண்டு அங்ஙனமே கொண்டு தலைமகள் கூறினாள் எனக் கொள்க. அங்ஙனமன்றி, அவன் ஆண்டான்; நாம் வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்வோம் என அமைக்கின், ஆண்டுச் செருக்குறுதலின், தக்கன் முதலியோர்போல அழிவுண்டாம் ஆதலின் அங்ஙனம் கொள்ளற்க.]

(பொ - ரை.) தோழிமீர்! தன்னைத் தாயாகக்கொண்டு அன்பு செய்வார்க்குத் தான் அத்தாயினும் மிக்க பேரருளைச் செய்தலை யுடைய அவர் தம் பிரானுவோன், நாயினும் கீழ்ப்பட்ட நம்மையும் ஒரு பொருளாக மதிக்கும் பகுதியுள் படுத்து நம்முடைய வலிய வினையின் வாயிலே மண்ணையிட்டு வஞ்சனையை ஆற்றிவந்த பிறப்பினை அறுத்து ஆண்டுகொண்டான் ஆதலால் அவனுக்கென நினைந்து பூவினையும் கொடியினையும் பறிப்போமாக (என அவள் அவர்க்குக் கூறினுள்) எ - று.

(வி - ரை.) "நம்மையும் ஓர் பொருட்படுத்தாண்டான்" என்றருளின ரேனும், ஆண்டு நம்மையும் ஓர் பொருட்படுத்தான் என்பதுவே திருக் கருத்தாகக் கொள்க.

தீயவை களைந்தும், சுற்றமாகியும், வல்வினை கெடுத்தும் நம்மையும் ஒருபொருட்படுத்த உதவியாளனைப் பரவாவிடின் செய்ந்நன்றி கோறலுக்கு ஆளாவேம் என அச்சுறுத்தாநின்ருள். அதனுல் வருங்கேடு அடுத்த திருப்பாட்டிற் கிளந்து கூறப்படும்.

எம்பிரான் என்னுது, தம்பிரான் என்று அருளிச் செய்தார், தமக்கே யன்றி, அங்ஙனம் நினைப்பவர்க்கெல்லாம் பிரானுகி ஆட்கொள்வது அவனது பெற்றிமை என அறிவித்தற்கு. தாம் அவர் போல நினைத் தருளிற்றிலர் என்பது தோன்ற "நாயிற்...பொருட்படுத்து" என்றருளிச் செய்தார்.

பண்பட்ட தில்லைப் பதிக்(கு)அரசைப் பரவாதே
எண்பட்ட தக்கன் அருக்கன் இந்(து)அனல்
விண்பட்ட பூதப் படை வீர பத்திரரால்
புண்பட்ட வா பாடிப் பூவல்லி கொய்யாமோ. 4

இஃது, அவனைப் பரவாதார்க்கு எய்திய கேட்டினைக் கிளந்து கூறிப் பரவிப் பூவல்லி கொய்யுமாறு அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) தோழிமீர்! கையில் விரல் மடித்தெண்ணப்பட்ட தக்கனும், ஞாயிறும், வேள்வியாசானும், திங்களும், அங்கியும் ஆகிய இவர்கள், நீர்நிலை பொருந்திய தில்லையம்பதிக்கு அரசனுகிய இறைவனை, வேள்விக்குரிய விண்ணவர்களுள் ஒருவன் என் றெண்ணி, தமக்கு முதல்வனுக வேள்வியிற்கொண்டு தொழுகில ராய், வானிற்பொருந்திய பூதங்களாகிய சேனைகளையுடைய வீரபத்திரரால், உடலம் வடுப்பட்ட திறனைப் பாடிப் பூவும் வல்லியும் கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினுள்) எ - று.

(வி - ரை.) பண் - நீர்நிலை. தில்லைக்காடு இறைவன் ஆட்சியின்

மாட்சியால் நீர்வளமுடையதாயிற்றென்க. எண் - எண்ணிக்கை. புண் - உடம்பின்கண் படை ஊற்றன் எய்திய வடு.

ஐந்தொழிலாற்றும் கூத்தனையுடையவன், அவனே கடவுளருள் மேம்பட்ட கடவுளாவன் என்பது போதரத் "தில்லைப்பதிக்கரசு" என்றருளினர். இனி, "அரசென்றதற்கு" கூத்தரசு எனப் பொருள் கொள்ளின், "பண்பட்ட" என்றதனையும் உடன்கூட்டிப் "பண்ணோடுபட்ட கூத்தினைத் தில்லைப் பதிக்கண்ணே அயரும் அரசன்" என்றுரைத்தல் அமையும்.

அவன் அவர் மேற்கொண்ட வெகுளி வீரபத்திரரைத் தோற்றுவித்து புண்படுத்திற்றென அவனது ஆற்றல் புலப்படுத்தியவாறு காண்க.

தேன்நாடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்
ஊன்நாடி நாடிவந்து உள்புகுந்தான் உலகர்முன்னே
நான்நாடி ஆடிநின்று ஓலமிட நடம்பயிலும்
வான்நாடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ 5

நான் கந்தருவ ஒழுகலாற்றினின்றும் வழுவிப் பெருந்திணை ஒழுகலாற்றைப்பற்றிச் சான்றோர் மன்றெதிர்புக்கு வழக்காடி ஓலமிடுமாறு என்னை அறிவுகெடுத்தும், என் நிலைக்கு இரங்காதும் தான், திருவம்பலத்தின்கண்ணே கூத்தயராநிற்கும் விண்ணோட்டார் வேந்தனுக்கெனப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது

[குறிப்பு —இன்னும் பெருந்திணை ஒழுகலாற்றினைப் பற்றி னளல்லள் என்பது போதர ஓலமிட்டேன் என்னாது "ஓலமிட' என்றருளிச் செய்தாள் என்பது பெற்றும் அறத்தொடு நிற்றலையே தனக்குத் துறையாக உடையது என்பதும் உடன் பெற்றும்.]

(பொ - ரை.) தோழிமீர்! மக்கட் பிறவி எடுத்த என்னைத் தேடிவந்து ஆட்கொண்டு என்னுள்ளத்துள்ளும் முன்னர்ப் புகுந்தானாகிய வண்டுகள் தேனை நாடி அடைவதற்குக் காரண மாகிய கொன்றை மலரைச் சடையிலணிந்த சிவபெருமான், இன்னே நான் சான்றோர் வீற்றிருக்கும் மன்றம் புக்கு அவர் முன்னே சென்று எனக்கு அவன் செய்த தீங்கினை ஓலமிட்டு வழக்குரைக்குமாறு தான் என்னை அறவே மறந்து திருவம்பலம் புகுந்து கூத்தயரா நின்றான். அத்தகைய விண்ணகக் கடவுளர்க்கு வேந்தனாகிய அவனுக்கெனப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) ஊன்நாடி - ஊனை நாடினேனாகிய யான். "நாடி நாடி" என அடுக்குமாம். "முன்னேயும் உலகர் முன்னேயும் உட்புகுந்தான்" என ஈரிடத்தும் கொண்டுரைக்க. ஆடி - வழக்காடி. "ஆடி ஆடி"யென அடுக்காகக் கொள்ளினும் கொள்க. அப்போது எங்கோ ஆகிய அவன் இப்போது "வானுடர் கோவாயினன்" என்றபடி. மண்ணுடர் கோவாக இருப்பனேல் இங்ஙனம் தான் வருந்துமாறு செய்யான். இனி மன்றச் சான்றோரும் அவனை மதியார் என்பதும் பட்டு நின்றது. தன் காதலியை மன்றம்புக்கு வழக்காடி ஓலமிடச் செய்வோனும் ஒரு காதலனோ என அவனை இகழ்ந்து கூறும் முகத்தால் அறத்தொடு நின்றாள் என்க.

எரிமூன்றும் தேவர்க்(கு) இரங்கியருள் செய்தருளிச்
சிரம்மூன்(று) அறத்தன் திருப்புருவம் நெரித்தருளி
உருமூன்றும் ஆகி உணர்வரிதாம் ஒருவனுமே
புரம்மூன்றும் எரித்தவா பூவல்லி கொய்யாமோ 6

இது, தேவர்கள் பொருட்டு வேள்வித்தீயை அருளியும், அவர்களுள்ளே மதியாதாரைப் பரிசழித்து அறிவு கொளுத்தியும், அத்தேவர் பகைவரை அழித்து அவரைப் பாதுகாத்தும் வரும இறைவன் திருவிளையாடல்களைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) தோழிமீர்! சகுணம், நிர்க்குணம், பிராம்மி என்னும் மூவகையான உபாசனைக்குரிய மூர்த்தங்களாக நிற்கும், உணரும் உணர்வுக்கு அரிதாகிய உருவத்தினையுடைய ஒருவனாகிய சிவபெருமானே, அந்தணர் வேள்வித் தீயாகிய மூன்றினையும் தேவர் பொருட்டு அவர்மேல் இரக்கங்கொண்டருளி முனிவர்பால் அருளிச்செய்தும், எச்சன் தக்கன் வியாத்திரன் என்னும் மூவருடைய தலைகளும் அறுமாறு அழகிய புருவங்களை நெரித்தருளிச் செய்தும், புரங்கள் மூன்றனையும் எரித்தருளிய திறனைக் கூறிப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை ) புருவம் நெரித்தல் - சினத்தல். எச்சன் - வேள்வித் தெய்வம். வியாத்திரன் - வேள்வியில் ஆக்கினீந்திரன் என்னும் ஆட்டைக் கொல்வோன். வியாத்திரனை யாகத் தெய்வமாகக் கூறுவாருமுளர். "எச்சன் இணைத்தலையும் கொண்டார்" என்னும் அப்பர் சுவாமிகள் திருத்தாண்டகத்திலே எச்சன் சிரங்கொண்டதனோடு வியாத்திரன் தலையையும் வேறாகக் கொண்டான் என்றருளுதலால் எச்சனும் வேறு வியாத்திரனும் வேறாதல் காண்க. "தக்கனது பெருவேள்வி" என்னும் திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரத் திருப்பாட்டிலே பின்னரும் எச்சன் என வருதலின் எச்சனையே யாகத் தெய்வமாகக் கொள்க.

"வெஞ்சினவேள்வி வியாத்திரனர் தலை துஞ்சினவாபாடி"
(திருவுந்தி. 10.)

என, தலையறுபட்ட வியாத்திரனுக்கு வேறு தலை வைக்கப்பட்டமையால், அவன் தலை துஞ்சியதெனவே அவனும் 'துஞ்சினன்' என்றருளினர் இனி

"மகத்திய மான்பட" (ஷை. 13)

என்றருளியது வழிமொழிதலாகும்; அது "வியாத்திரனர் தலை துஞ்சின வாபாடி" என்றலை நோக்கி நிற்றலால் என்க. ஆக்கினீந்திரன் தலையுடன் அவனும் துஞ்சினன் என்பதும் ஈண்டுப் பெறப்படும். எச்சன் இணைத் தலை என்றது, வேள்வித் தெய்வத்திற்குரிய இயல்பாகிய தலையும், உரு வெடுத்த மான்தலையும் ஆகிய அவ்விரண்டனையும் முத்தியும் இன்றேல், தேவர் பிதிரர் முதலியோர் பசியான் நலிவராதலின் அவர்கட்கு இரங்கி யருள் செய்தனன் என்க. சகுணம் முதலாய பாவனைக்குரிய மூன்று உருவங்கள் என்க. "எரிமூன்றும்" அருளியதற்கும் புரமெரித்ததற்குமிடையே தக்கன் வேள்வி கூறப்பட்டமையின், இறைவற்கு இடையிடையே வெகுளி தோன்றப் பெறுதலும் அருளின்மேற்று என்பது பெற்றாம். உடம்படு புணர்த்தலால் அவுணரை வெகுளலும் அன்னதேயென்க.

வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத்து எம்பெருமான்
அணங்கொடு அணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 7

இஃது அவனுடைய திருவடியை யாம் வணங்கற்குத் தலையை உளதாக்கி, அவனை வாழ்த்த வாயை உளதாக்கி, இணங்கி வாழத் தன்னடியவரை ஈண்டு வைத்துத் தான் என்னைப் பிரிந்து அம்பலத்தே ஆடுகின்ற தலைமகனுடைய நற்குணத்தைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர்!) எம்பெருமான் தன் திருவடியை வணங்கத் தலையை உளதாக்கி, தன்னை வாழ்த்த வாயை உளதாக்கி, சார்ந்து பழகுதற்கு மிக்க புகழினையுடைய அடியார் கூட்டத்தினைத் திரளவைத்து, (அதன் பின்னர் என்னைப் பிரிந்து) உமையம்மையொடு அழகிய தில்லையம்பதிக்கண்ணுள்ள திருவம்பலத்தில் ஆடாநின்ற பண்பினை மிகப் பாடிப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினள்) எ - று.

(வி - ரை.) தாம் "உலகர் முன்னே......ஒலமிட" என முன்னர்க் கருதியதனை மறுத்து, அவன் தம்மைப் பிரிந்தாடுதல் அவனது நற்பண்பினைக் காட்டா நின்றதென ஈண்டுக் கூறியருளியபடி அடியார் கூட்டம் வைத்தது, அவன் அவள்மேல் வைத்த பேரருளைக் காட்டுவதாகும். அவனை

யும், அவன் திருவடியையும் வணங்கவும் வாழ்த்தவும் துணையாக அடியார் கூட்டம் உடன் வைக்கப்பட்டதென்க. அவ்வடியவரே ஈண்டு ஆயத்தவ ராகக் கொள்ளப்பட்டனர். இது முன்னிலைப் புறமொழி என்க.

அணங்கு, காளியுமாம். அவளோடு அழகுபெற்ற தில்லை யென உரைக்க. இனி, அணங்கு தெய்வத்தன்மையுமாம். தில்லையணங்கோடு அம்பலத்தே ஆடுகின்ற குணம் என இயைத்து, அவள் செருக்கு அடங்கக் கூத்தயர்கின்ற என்று உரைப்பினும் அமையும். தன் செருக்கும் அடங்கக் கூத்தயர்கின்றான் என்னும் குறிப்பும் ஆண்டேபோதரும் என்க.

"பிரியேன் என்று அன்று அருளிய அருளும் பொய்யோ" (எண்ணப். 2.) என்றருளிச் செய்தவன் இன்று பிரிந்த குறையைக் குணமாக அமைத்துக் கூறியருளினார். அடியவரைச் சார்ந்து வாழ்த்தி வணங்கினால் அவனைக் கூடுவது திண்ணம் என்பது திருக்கருத்தாகும். கூர - மிக.

**நெறிசெய் தருளித்தன் சீரடியார் பொன்னடிக்கே**
**குறிசெய்து கொண்(டு)என்னை ஆண்டபிரான் குணம்பரவி**
**முறிசெய்து நம்மை முழுதுடற்றும் பழவினையைக்**
**கிறிசெய்த வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 8**

இது, தன்னைப் பிரிந்து யான் அடியாரொடு பொருந்தித் தொண்டாற்றி வருதலையே தனது குறிக்கோளாகக் கொண்டு என்னை யாண்ட பிரானுடைய குணத்தினைத் துதித்து, அவன் நம் பழவினையை இல்லையாக்கிய திறனைப் பாடிப் பூவல்லி கொய்வோ மாக என அவள் அவர்க்குச் சொல்லியது.

[குறிப்பு.—"அடியார் பொன்னடிக்கே குறிசெய்து கொண்டது" என்றது, துறந்தார்ப் பேணல் முதலாய இல்லறக் கடப்பாடுகட்கு உரியவள் இவள் ஆவள் எனத் தெரிந்து தலைமகன் குறிசெய்து கொண்டதனையே என்று துறைக்கேற்ப ஈண்டுக் கூறிக்கொள்க.]

(பொ - ரை.) தோழிமீர்! என்னைத் தன்னுடைய மிகுபுகழ் படைத்த அடியவருடைய பொன்போன்ற திருவடித் தொண்டாற் றற்கே இலக்காகக் கருத்துட்கொண்டு அதற்குரிய வழியைச் செய்து ஆண்டுகொண்ட எம்பிரானுடைய பண்பினை நல னுடைத்து எனத் துதித்து, நம்மை அடிமைச் சீட்டினுக்குள் முற் றிலும் அகப்படுத்தி வருத்திவரும் பண்டை வினைகளை அம்முறி யுடனே பொய்யாக்கிய திறனைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) நெறிசெய்தல் - வழிப்படுத்தல். வெளிப்படையாக அவன் தன்னைப் பிரிந்து வருத்தும் கொடியோன் போன்றானேனும், அவன்

குறிப்பு, அடியார் கூட்டம் வைத்து நெறிப்படுத்தலே ஆதலால் -யித் துணருமிடத்து நல்லதன்பாற்பட்டது என்றுள் என்க.

ஊரவர் நகைத்து ஆர்த்து உரைத்தலாலெய்திய இடர்ப்பாடுகளை எல்லாம் தான்வந்து பொய்யாக்கினுன் என்றவாறு. இதனுனும் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் திரும்பவாராது காலம் நனி கழிவுற்றமையின், கந்தருவ வழக்கம் நழுவிப்போக, அவனது வரவு கேட்டு அவனுக்கு மாலையணியப் பூவும் வல்லியும் கொய்வோமாக என அவள் அவர்க்குச் சொல்லியதுவே இத்துறை என்பதுவும், பிறவும் இதன் பகுதியுட்பட்டன என்பதுவும் பெற்ரும்.

முறி - (அடிமைச்) சீட்டு. குணம் பரவி - (முன்னர்க் குறை கூறியதனை நாணி) இன்னே அவன் குணம் பரவி. கிறி செய்தல் - இல்லையாகச் செய்தல். முழுதும் - திரிகரணங்களையும். உடற்றுதல் - வருத்துதல். இன்னே அவை இன்பம் எய்தின என்க.

பல்நாள் பரவிப் பணிசெய்யப் பாதமலர்
என்ஆகம் துன்னவைத்த பெரியோன் எழிற்சுடராய்க்
கல்நார் உரித்(து)என்னை ஆண்டுகொண்டான் கழல்இணைகள்
பொன்ஆன வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 9

இது, முன்னர் என்னை வலிதாக ஆண்டுகொண்டோனுடைய கழல்கள் அக்காலத்து எனக்கு எளியவாயிருந்தன. அவை இன்று அரியவாயின என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) (தோழிமீர் !) பல காலங்களாகத் தன்னை வணங்கித் துதி செய்து தனக்குத் தொண்டு செய்யுமாறு தன் திருவடி மலரை என் மனத்திலே எழுச்சியையுடைய ஞாயிருகப் பொருந்த என்னுடைய சென்னியிலே வைத்தருளிய பெருமையுடையோன், கல்லினின்று நாருரித்தாற்போல என் வன்னெஞ்சினை அன்புடையதாக நெகிழச்செய்து என்னை அடிமை கொண்டான். அவனுடைய இரண்டாகிய திருவடிகளும் இக்காலத்து எனக்குப் பொன்போன்று அரியவாயின (என அவள் அவர்க்கு உரைத்தாள்) எ - று.

(வி - ரை.) ஆகம் - மனம். வைத்த - சென்னியில் வைத்த. வலிதாக ஆண்டுகொண்டு தன்னைப் பலகாலமும் பரவிப் பணிசெய்யுமாறு என் சென்னியிலே திருவடியை வைத்த பெரியோன் என்க. ''பல்நாள்'' என்றது, ஈண்டு நாளை உணர்த்தாது காலநீட்சியை உணர்த்தி நின்றது. 'சின்னுள்' என்பது, மக்கள் இல்லக் கிழமை நடாத்தற்குரிய சிலவாகிய காலத்தைக் குறிக்குமாறே ''பல்நாள்'' என்றதும் திருவருட் பேரின்பத்திற்குரிய அளவற்ற அழிவற்ற வாணுட்களைக் குறித்துநின்றது. சில்வாழ்நாள், பல்வாழ்நாள், என்பவற்றையும் நோக்குக. 'வலிய ஆண்டுகொண்டான்' என்றலால்,

பன்னுளும் பரவியேத்தினமையால் தன் திருவடியை என்னுள்ளம் துன்னச் சென்னியின்கண் வைத்தான் என்றல் பொருந்தாது.

பொன்னுனவா - இக்காலத்து அவை பொன்னுனவாறு. வாளா கொய்யாது இங்ஙனம் பாடிக் கொய்வோம் என நெருங்கிக் கூறினள்.

இனி, அவன் பிரிந்தமையால் அவையே எனக்குப் பெரும் பொருள் ஆயின என்றலும் ஒன்று. பொன்னின்றி இவ்வுலக வாழ்வு நிரம்பாமை யால் எனக்குப் பொன்னுவது அவன் கழல்களேயாம் என்ருள் எனினும் அமையும். உள்ளத்துப் பொன்னினும் கைப்பொன்னே சிறப்பது போல அவனுடைய கழல் அகத்திருப்பதனினும், புறத்தே அவனைக் கண்டு அவன் கழலை வணங்குவதே சாலச் சிறந்ததாகும் எனக் குறிப்பிட்டாள்.

என் புறத்தே தான் ஒரு கதிராகத் தோன்றி நின்று என் புலன்களின் இருளை ஒட்டியும், அகத்திலே திருவடி ஞாயிற்றினை எழச்செய்து அதன் இருளை ஒட்டியும் அக்காலத்து ஆண்டவாறே இன்றும் ஆளுதல் வேண்டு மெனக் குறிப்பிட்டு மொழிந்தாள் புறத்தே நின்று தன் திருவடியைக் கண்ணும் சென்னியும் கண்டு வணங்கவும், அவன் திருவார்த்தையைச் செவி கேட்கவும், அவனை வாய் வாழ்த்தவும், திருவடி மலரை மூக்கு முகரவும் பெற்றமையால், அவையெல்லாம் புறப்பற்றறறு, அவனையே பற்றிக்கொண்டு, அமைந்து அடங்கின. இக்காலத்தே அவை அவனைக் காணுமையால் பிறவற்றை விழைவான் புக நின்றன. மனம் அவற்றைப் பொன்னுகக் கருதித் தானே வைத்துக்கோடலன்றி, மற்று அக்கருவிகட்கு அதனைக் கொடுக்கும் ஆற்றலின்றி அவறருல் அலைப்புண்ணப்படுகின்றது என விரித்துரைத்துக் கொள்க. இன்னும், அவன் தான்பிரிந்து எனனை வருத்தினும், அவன் கழலிணைகளே நெறிகாட்டி அவனை எனக்கு உரியன் ஆக்கும் பெற்றியனவாதலால் அவற்றைப் பொன்னெடு ஒப்பாகக் கூறினுளுமாம் என்பது ஈண்டே போந்தது. “குரைகழல்கள் ஞாலம் பரவுவார் நன்னெறியாம்” என முன்னர்க் கூறியருளுவதனுலும் இவ் வுண்மை தெளியப்படும்.

பேராசை யாம் இந்தப் பிண்டம் அறப் பெருந்துறையான்
சீரார் திருவடி என்தலைமேல் வைத்தபிரான்
காரார் கடல்நஞ்சை உண்டுகந்த காபாலி
போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 10

இஃது, அவாவின் காரியமாகும் பிறவியற என் தலைமேல் தன் திருவடிகளை வைத்து என்னுள்ளத்திலே பொருந்துமாறு செய்த பிரானும், கடல் நஞ்சையுண்டு மேம்பட்ட காபாலியுமாகிய இறைவன் போர் பொருந்திய திரிபுரங்களைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) தோழிமீர்! திருப்பெருந்துறையானும், பெரிய ஆசை காரணமாக உண்டாகும் பிறவியற்றுப்போக மிக்க புகழ் பொருந்திய தன் திருவடியை என் தலைமேல் வைத்த பிரானும், கருநிறம் பொருந்திய கடலில் நின்றெழுந்த நஞ்சினையுண்டு மேம் பட்ட காபாலியுமாகிய என் தலைமகன் தொடுத்த போர் நிறைந்த திரிபுரத்தினைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினள்) எ - று.

(வி - ரை.) என்னை அலர் தூற்றுவோர் பிரமனைப் போன்று தலை கிள்ளப்படுவர் என்றும், புரம் எரிக்கப்பட்டவாறே அவரிருந்த ஊரும் எரிக்கப்படும் என்றும், தன்னைப் பேணாத தேவர்க்கிரங்கி அவர் அமுதுண்ணத் தான் நஞ்சுண்டவாறே, தன்னை வழிபடாதேன் எனினும், எனது இன்னற்கிரங்கி என்னை இன்ப அமிழ்தம் உண்பித்துத் தான் என் பழியை மேற்கொண்டு உகப்பெய்தும் பெற்றியன் என்றும் இயைய விரித்

காபாலி - பிரமன் தலையோட்டினைக் கையிற் கொண்டவன்.

"நஞ்சுண்ட காபலி" என்றது அவன் அறமறக் கருணைகளை. 'புரமார் போர்' என இயைக்கினும் அமையும். காரார் நஞ்சு, கடலார் சு என்க. உகத்தல் - உயர்தல்.

பாலும் அமுதமும் தேனுடனும் பராபரமாய்க்
கோலம் குளிர்ந்துள்ளம் கொண்டபிரான் குரைகழல்கள்
ஞாலம் பரவுவார் நன்னெறியாம் அந்நெறியே
போலும் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ. **11**

இஃது, எனக்கு முதற்கண் இனியனாய்ப் பின்னர் என்னால் வருந்தி முயன்று இடையூறு கடந்து பெறப்பட்டவனாய் உள்ள, என் னுள்ளத்தைத் தனக்கு இடமாகக்கொண்ட பிரானுடைய கழல்கள், எங்ஙனம் தம்மைப் பரவுவார்க்கு நன்னெறி காட்டுவன ஆகுமோ, அங்ஙனமே அவன் புகழும் நன்னெறி காட்டுமாதலால், அதனைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) தோழிமீர்! பாலொடு தேனும் அமுதமும் சுவையும் வாழ்வும் அளித்தாற்போல என்பால் மாபெரும் பொரு ளாகி (அடியேன் கண்ணுற் காணுமாறு) தனது திருமேனியின் அழல்நிறம் குறைந்து குளிர்ந்து என்னுள்ளத்தைத் தனதிடமாகக் கொண்ட பெருமானுடைய ஒலிக்கின்ற வீரக்கழல்களை அணிந்த திருவடிகள் மண்ணுலகத்திலே துதிப்பவருக்கு நல்வழி காட்டு வனவாகும். அவ்வழிகாட்டிகளையே ஒக்கும் அவன் புகழைப்

பாடிப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினள்) எ - று.

(வி - ரை.) தனது தெய்வத் திருமேனி பிறர் காணற்கு ஒண்ணாத அத்துணை அழல்நிற ஒளிப்பிழம்பாயினும், அதை யான் காணுமாறு குளிர்வித்து என்னுள்ளத்தைத் தான் வாழுமிடமாகக் கொண்டான் எனத் தலைமகள் கூறினள் என்க. "கோலம்" (நிறம்) என்றது, அழல் ஒளி நிறத்தை. "குளிர்ந்து" எனவே முந்தி வெம்மைத்து என்பது பெற்றும்.

கழலை நெறியாக உபசரித்துக் கூறினர் ; அவன் புறத்தே நின்று வழி காட்டாவிடினும், அவன் புகழ் பாடுதலே வழிகாட்டாநிற்கும். அவன் வெளிப்படாவிடத்தும், அவனுடைய புகழைப் பாடின், புலன்களும் புறஞ் செல்லாவாய் இன்பம் நுகருமென ஓர் உபாயத்தைக் கிளந்து கூறினள் என்க. இதனாற் புகழ் பாடுதலின் தனிச் சிறப்புக் கூறப்பட்டது. பரவுவார், பரவப்படுவாருமாம்.

'உள்ளங் கொள்ளுவ'தாவது மனம் அவனை நினைந்துவருதல். 'புகழ் பாடுதலா'வது வாயும் அவனையே வாழ்த்தி வருதல். 'பூவல்லி கொய்தலாவது' காயமும் அவனுக்கே தொண்டாற்றி வருதல். திரிகரணங்களும் இங்ஙனம் அவனில் ஈடுபட்டுவரின் துன்பம் நீங்கிப் பேரின்பம் துய்க்கலாகும் என்பது திருக்கருத்தாகும்.

இனி, பாலும் தேனும் அன்பினைந் திணைக்கு ஒப்பாக வந்தன என்றும், அமுதம் கந்தருவத்தின் வழுவிய பெருந்திணைக்கு ஒப்பாக வந்ததென்றும் கொண்டு பரமாய் (மேலாய்) எனவும், அபரமாய் (மேலல்லாததாய்) எனவும் பிரித்து முடிக்கினும் முடிக்க. அகத்தேயன்றிப் புறத்தும் அவன் கழலைப் பரவுவார் என விரிக்க. "உள்ளம் குளிர்ந்து கொண்ட கோலம்" அந்தணக் கோலம் என்க.

**வானவன் மால்அயன் மற்றும்உள்ள தேவர்கட்கும்**
**கோனவனாய் நின்று கூடல்இலாக் குணம்குறியோன்**
**ஆன நெடுங்கடல் ஆலாலம் அமுதுசெய்யப்**
**போனகம் ஆனவா பூவல்லி கொய்யாமோ.** **12**

இது, புகழ் பாட முற்பட்ட நாம், வானவன் முதலோராகிய அதிகாரக் கடவுளர்க்குக் கோனாகி நிலைபெற்றும் கூடப்படுதலில்லாத குணம் குறிகளையுடைய இறைவனுக்கு நஞ்சமானது உண்டற்குரிய போனகமாய திறனைக் கூறிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) தோழிமீர் ! மேக ஊர்தியாகிய இந்திரனும், திருமாலும், நான்முகனும், வேறுமுள்ள தேவர்களுமாகிய அவர் தமக்கு அரசனாகி நிலைபெற்றும், அவரொடு ஒருங்கு கூடுதலில்லாத

குணத்தையும் பெயரினையுமுடைய நம்மிறைவன், நெடிய கடற்கண் உண்டாகிய நஞ்சானது தன்னை உண்டற்கு அமுதமாகிய திறனை, (நாம் தொடுக்கும் வஞ்சமுடைய மாலையும் அவன் திருவடிக்கு ஆமாறு நினைந்து கூறிப்) பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) வானம் - மேகம். "வானவன்" என்பது 'விடையான்' என்பது போல நின்றது. 'கோன், வானோன்' என்பன, "கோனவன், வானவன்" என நின்றன. அவருடன் கூடும் குணமும், அக்குணத்தாற் பெற்ற குறியும் இல்லாதவன் என்க. எனவே, அன்பரொடு கூடும் குணமும் குறியும் உடையவன் என்றாள் என்பது பெற்றாம். விண்ணவர் எல்லார்க்கும் எனப் பொதுப்படக் கிளவாது "வானவன்...தேவர்கட்கும்" என எல்லாரையும் சிறப்புறக் கிளந்தாள், அவ்வனைவருள்ளும் ஒருபாலும் கூடாதவன் என்பது புலப்படுத்தற்பொருட்டு. மற்றுமுள்ள தேவர்கள் முப்பத்து மூன்று வகையுட்பட்டவர் என்க.

"ஆலாலம் அவன் அமுது செய்யப் போனகம் ஆனவா" எனத் தொடரைக் கருத்தொடு மாறுபடுத்தாது இருந்தவாறே உரைக்க. அங்ஙனமே எம்மால் அன்பின்றிக் கொய்து தொடுக்கப்பட்ட மாலையும் அவன் திருவடிக்கே அமைக என்பது உட்கோள். இஃது ஒருபால் அவையடக்கமாகவும், மற்றொருபால் உண்மை கூறலாகவும் அமைதலால், வாளா புனைந்துரைக்கப்பட்ட அவையடக்கங்கட்கெல்லாம் சிறந்ததென்க.

"குணக்குறியோன்" என்பதும் பாடம். குணத்திற்குரிய தகுதியுடையோன் என அதற்கு உரைக்க.

இனி, "வானவன்" என்பதற்கு இறைவன் எனப் பொருள் கொள்ளலும் ஒன்று. அவன் 'வானவனாகவும், கோனவனாகவும் நின்றும்' என ஆண்டுப் பொருளுரைக்க.

அமுது செய்தல் - உண்ணுதல். போனகம் - உணவு.

"அமுது செய்ய" என்றது, அந்நஞ்சம் தன்னாற்றல் கெட்டு உணவுத் தன்மை பெற்றமையையும், இறைவனுடைய ஆற்றல் சான்ற சித்தினையும், பேரருளையும், அன்ன பிறவற்றையும் விளக்கி நின்றது.

இனி, தேவரெல்லாரும் அமுது செய்யத் தான் ஆலத்தைப் போனகமாகக் கொண்டான் எனினும் ஒருவாறு ஈண்டுப் பொருந்தும். போனகமாகாவிடில், அமிழ்தமும் உண்ணப்படாது, தேவரும் மடிந்திருப்பர் என்க. 'உண்டான்' என்னாது "போனகமானவா" என்ற சிறப்பானே அதுவும் கழுத்தளவிலே தங்கிற்று என்பது குறிப்பு.

முன்னும் பின்னும் ஈண்டும் இங்ஙனம் சொற்பயனும் தொடர்ப்பயனும் கூறுவனவெல்லாம், நோக்குகளாக நின்று, பாக்களுக்கே பயன்படுவன ஆகலான், அவையெல்லாம், இலக்கியச் சுவை நயக்கும் பகுதிகள் எனவே

பெறும். இங்ஙனமாகும் தமிழ் மரபினை அறியாதார், இன்னவற்றை யெல்லாம் இழித்துரைக்கவும் முற்பட்டுத் தம்மிழிவைப் புலப்படுத்து நகைக்க வைப்பர் என்க.

அன்(று)ஆல நீழற்கீழ் அருமறைகள் தான்அருளி
நன்றாக வானவர் மாமுனிவர் நாள்தோறும்
நின்(று)ஆர ஏத்தும் நிறைகழலோன் புனைகொன்றைப்
பொன்தாது பாடிப் பூவல்லி கொய்யாமோ. 13

இது, அவனுக்கு நஞ்சம் போனகமானவாறு நினைந்து கூறிய நாம், இனி, கல்லாலின்கீழ் அறமுதலா நான்கினையும் அருளிச் செய்தோனும், வானவரும் முனிவரும் முன்னின்று வணங்கும் கழலுடையோனுமாகிய தலைவன் புனையும் கொன்றைத் தாது பாடிப் பூவல்லி கொய்வோமாக என்றது.

(பொ - ரை.) தோழிமீர்! அக்காலத்திலே கல்லால மர நிழலின் கண்ணே (பெற்று உணர்ந்துகொள்ளற்கு) அரியனவாகிய நான் மறைகளைத் தன்னையடைந்த நால்வருக்கும் அறிவுறுத்தருளி யோனும், தேவரும் பெருமுனிவரும் ஆகிய இவர்களால் (தாம் ஆக்கமெய்தி) நன்றாக நாள்தோறும் திருமுன்னர் நின்று ஏத்தப் படும் மணிப்பரல்கள் நிறைந்த கழலையணிந்த திருவடிகளை உடை யோனுமாகிய இறைவன் புனையும் பொன்னிறம் பொருந்திய மகரந்தப் பொடியைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) அருளி - அருளிச் செய்தவன். தத்தம் பதவிகள் நிலை பெறுமாறு வானவரும், பிறவியறுமாறு முனிவோரும் ஆலடிக்கட் சென்று அவனை வணங்குகின்றனர் என்க. முனிவருள்ளே ஞானம் பயில்வோர் "மாமுனிவர்" எனச் சிறப்பிக்கப்பட்டனர். அவர், யோகம் முதலியவற்றி னின்றும் மேலேறி, அன்பால் அவனைக் கண்டு போற்றிப் பணி செய்தலே பேறுதரறபாலதெனத் தெளிந்து வந்தவர். தக்கன் வேள்வியிற புக்கிருந்த மையினால், தன்னால் ஒறுக்கப்பட்ட வானவர், இறைவன் வெகுளி நீங்கிக் கல்லால் நிழலில் வல்லார் நால்வர்க்கு, எல்லா மறைப்பொருளும் சொல்லா நின்றான் எனக் கேள்வியுற்று, அங்குச் சென்று, தாம் தாம் நன்றாக அவனை ஏத்தா நின்றார். மாபெரும் முனிவரும், அவன் வெகுளியடங்கி உலகுய் யத் திருவருள் செய்யுமாறு அவனை ஏத்தா நின்றார். ஆங்கு இறைவனும் காமனைக் காய்ந்தும், வெகுளி மாறித் தேவர்கட்கு அருள் புரிந்தும், உமையை மணந்துகோடற்கு ஒருப்பட்டும் நின்றனன். அப்போது தேவ ரும் முனிவரும் கொன்றை மாலைகளை அவன் திருவடியில் அணிந்து துதிக்கையிலே, அவற்றின் மகரந்தங்கள் அவ்விடமெல்லாம் பொன்போலப் பரந்து கிடந்தன. அக்கிடப்பை நாமும் பாடுவோமாகில், அவன் எம்மேற்

கொண்ட வெகுளி தீர்ந்து, எங்குறை பொறுத்து, எம்மையும் மணமயர்ந் தருள்வான் ஆதலால், அங்ஙனமே அதனைப் பாடிப் பூவல்லி பறித்து மாலை தொடுத்து, அவன் திருவடியிற் சூட்டி, அருள் பெற்றுய்வோமாக என்று அறிவுறுத்தியவாறு. இனி, "பொன் தாது புனைகொன்றை பாடி" எனினும் ஒருவாறமையும்.

படமாக என்னுள்ளே தன்னிணைப்போது அவையளித்திங்கு
இடமாகக் கொண்டிருந்து ஏகம்பம் மேயபிரான்
தடமார் மதில்தில்லை அம்பலமே தானிடமா
நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 14

இஃது, அவன் என்னுள்ளத்தானுகவும், ஏகம்பத்தானுகவும், தில்லையம்பலவனுகவும் இருப்பினும், அவனை யாண்டும் அம்பலவனுகவே காணுமாறு பாடிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) தனது மலர்களாகிய இரண்டு திருவடிகளை, எனது உள்ளமாகிய கிழியிலே, ஓவியமாகத் தீட்டினுலொத்து, எனக்கு அருளிச் செய்து, இவ்வுத்தரகோச மங்கையே தான் வாழுமிடமாகக் கொண்டும், திருவேகம்பத் திருக்கோயிலையும் தான் வாழுமிடமாகக் கொண்டும் மேவிய எம்பிரான், நீர்நிலைகள் நிரம்பிய மதில் சூழ்ந்த தில்லைப்பதிக்கண்ணேயுள்ள திருவம்பலமே தான் கூத்தயரும் இடமாகக் கொண்டு ஆங்குக் கூத்தயர்ந்து வருமாறு பாடி அவனுக்குப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினுள்) எ - று.

(வி - ரை ) திருவுத்தரகோசமங்கையிலே அம்மைக்கருளிச் செய்து வீற்றிருந்தவாறே, திருவேகம்பத்தின்கண்ணும் வீற்றிருந்தான் என்றபடி. இதனுல், திருவேகம்பத்தைத் தரிசித்த பின்னரே இப்பகுதி அருளிச் செய்யப்பட்டதென்க. அங்குச் சென்று தரிசிக்க "அம்பலத்திற்கு வருக" என்றுன் என்பது "தடமார்......நடமாடுமா" என்பதனுலும், முன்னர்ச் சார்பாலும் ஒருவாறு பெற்றும்.

தடம் - நீர்நிலை. 'அம்பலமே இடமாக நடமாடும்; அங்ஙனம் நடமாடுமாறு பாடி' என வகைப்படுத்துக. ஏகம்பத்திலும் உத்தரகோசமங்கையிற் காட்சியே அளிக்கப்பட்டதென்க.

'அவன் திருவடியன்பு என்னுள்ளத்தின்கண்ணே படமாக அமையுமாறு அவன் அளித்தலால், யான் கந்தருவ நெறி விலகிப் பெருந்திணை நெறிப்படாது உய்ந்தேன்' என, அவன் பேரருளை நினைந்துருகி இங்ஙனம் கூறினள் என்க.

'அம்பலமே இடமாக நடமாடுகின்றான்' என்றமையினாலே யானும் பிற இடம் செல்லாது அங்கேயே அமைவேன் எனத் தன் துணிபு கூறினாள்.

தன்னுள்ளத்தூள் திருவடி வைத்தமையும், அதன் அம்பலமே நியதி யான இடமாகக் கொண்டு நடித்தலும், இடையே ஏகம்பம் மேவுதலுமாகிய இவையே, இத்திருப்பாட்டிற்குப் பொருளாக அமைந்தமையால், உத்தர கோசமங்கையில் அருளிச்செய்த பின்னர், இறைவன், ஏகம்பத்திலும் காட்சியளித்தருளி, அங்கும் தில்லைக்கு வருமாறே கட்டளையிட்டான் என்ப தும், "அம்பலமே தானிடமா நடமாடுவோன்" என்றமையான், யானும் அம்பலமே புகாது, பிற தலங்கட்குப் போதல், அவ்வமையத்து வேண்டிய தோர் ஆறுதலைப் பெற்றுக்கொள்ளற்கு இடமாகுமேயன்றி, நிலைத்ததோர் ஆறுதலைப் பெறுதற்கு இயலாததாம் என்பதும், அம்பலத்தை உடனே விரைந்து சென்றடைதற்குரிய செவ்வியை இன்னும் பெற்றிலேன் என்ப தும் ஈண்டே பெற்றாம்.

"மேயபிரான் அம்பலமே தான் இடமா நடமாடுமாபாடி" என்றருளிச் செய்தாரேனும், அம்பலமே தான் இடமா நாடும் அம்பலவன், அப்போது உத்தரகோசமங்கையானாகவும், இப்போது ஏகம்பனாகவும் தோற்றம் பெறு கின்றான்; ஆதலால், அவன் இனி எக்கோலங் கொண்டு எவ்விடத்தே காட்சி யளிப்பினும், அத்தலங்களையெல்லாம் திருவம்பலமேயாகவும், அவன் கோலங்களையெல்லாம் அம்பலவாணன் கோலமேயாகவும் அவனை அம்பல வாணனேயாகவும் அவன் யாடல்களையெல்லாம் திருக்கூத்தேயாகவும் யாம் கொண்டு அங்ஙனமே கண்டும் வருவேமாக; அது கைவரப்பெறின், யாம் அம்பலம் புக்கு அவனை வழிபட்டுக் கலக்கும் அன்பினைப் பெற்றுக்கொள் வேம் என அவள் அவர்க்குக் கிளந்து கூறி அவர்களையும் தன்வழிப் படுத்தி யருளினாள் என விரித்துரைத்துக் கொள்க. இன்னுமிதனானே இப்பகுதியானது, திருவேகம்பத்திலே அருளிச் செய்யப்பட்டதெனத் துணி தற்கு மிடனுண்டு.

இனி, அம்பவாணனுள் பிற தல மூர்த்திகளையும் காணலும், பிற தல மூர்த்திகளுள் அம்பலவாணனையும் காணலுமே மெய்யறிவென்க. அம்பல வாணனே ஏகம்பவாணனாக வீற்றிருக்கின்றான் என்றாங்கே, "திருத் துருத்தி மேயானை......தில்லைக் கண்டேனே" என்றருளிச் செய்தமையும் ஈண்டுச் சிந்திக்க. அம்பலவனே எல்லா மூர்த்திகளாகவும் அமைகின்றான், அம்பலத்துள் எல்லா மூர்த்தி தலங்களும் அடங்கியுள்ளன என்பது அடிகள் கருத்தாதல் பெற்றாம்.

**அங்கி அருக்கன்இரா வணன்அந் தகன்கூற்றன்**
**செங்கண் அரிஅயன் இந்திரனும் சந்திரனும்**
**பங்கமில் தக்கனும் எச்சனும்தம் பரிசழியப்**
**பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ.** 15

இது, முச்சுடர் கூற்றம் முப்பெருந்தேவர் இராவணன் தக்கன் வேள்வித் தெய்வம் என்னும் இவருடைய பரிசு கெட வெகுண்டமை யால் உண்டாகிய அவனுடைய மிகு புகழைப் பாடிப் பூவல்லி கொய் வோமாக என அவள் அவர்க்குக் கூறியது

(பொ - ரை.) தோழிமீர்! தீக்கடவுள் ஞாயிற்றுப் புத்தேள் இராவணன் அந்தகாசுரன் இயமன் சிவந்த கண்களையுடைய திரு மால் நான்முகன் இந்திரன் சந்திரன் கேடில்லாத தக்கன் வேள்விக் கடவுள் என்னும் இவர்களுடைய நன்மதிப்புக் கெட மிக்கெழுந்த சினத்தால் உளதாகிய மிக்க புகழைப் பாடிப் பூவல்லி கொய்வோ மாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை) முச்சுடர்த் தேவரும், தம்மொளியினை இறைவன்பாற் பெற்றதனை மறந்து அவனொடு மாறுபட்டாற்றிய தக்கன் வேள்வியிலே பங்கு பற்றிப் பரிசழிந்தனர். இராவணன், தனக்கு வாளும் படையும் வலியும் அளித்த செய்ந்நன்றி மறந்து செருக்குற்று, உமையம்மை அஞ்சி நடுங்கக் கயிலையை எடுத்தமையால் பரிசழிக்கப்பட்டான். அந்தகாசுரன் இறைவனை எதிர்த்துப் பரிசழிந்தான். இயமன் பகுத்தறிவின்றி இறை வனைப் பூசிக்கும் மார்க்கண்டேயரைப் பாசத்தால் இழுத்து இறைவன்பால் உதைவேண்டிப் பரிசழிந்தான். அரி அயன் இந்திரன் சந்திரன் தக்கன் எச்சன் என்போர் பரிசழிந்தமை வெளிப்படை. இங்ஙனமெல்லாம் பரி சழிந்தனரேனும் இறைவனாற் பெருஞ் சிறப்பும் பெற்றனர். இறைவன் இவரைச் சினந்தமையால் மற்று இவரும் சிறப்புற்றனர். அங்கி முதலாயி னர் தம் பிழைக்கு வருந்தி இறைவனை வேண்ட, இறைவனும் அவர்தம் பிழைகளை மறந்து, துன்பங் கண்டிரங்கி அருளினமையால் அஃது அவ னுக்குச் சீர் பயந்தது. இது மறக்கருணை எனப்படும். இது குறை செய் தாரை வருத்தியாண்டது. இனிக் கூறுவது அன்பர் பொருட்டுத் தான் வருந்தியதென்க.

**திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு**
**மண்பால் மதுரையில் பிட்டமுது செய்தருளித்**
**தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட**
**புண்பாடல் பாடி நாம் பூவல்லி கொய்யாமோ. 16**

இது, தீது செய்தாரை அஞ்ச வருத்தி யாட்கொள்ளுமாறே, அன்பரை இரங்கி ஏங்குமாறு தான் வருந்தி ஆட்கொள்ளலும் அவனுக்கு இயல்பு ஆதலால், வருத்தி யாட்கொண்ட சீர்பாடிய நாம் இனி, அன்பரை ஆளற் பொருட்டுத் தான் வருந்திய வருத்தம் பற்றிய பாடலைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என்று அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) தோழிமீர் ! போர்க்கண்ணே கலங்காது செல்ல வல்ல காளையையுடையவனும், சிவலோகத்திலே உள்ள அன்பரைப் பகைத்த ஐம்புலன்களாகிய யானைகளை முழுக்கியோட்டிய போரில் வல்ல ஆண் சிங்கமும் ஆகிய நம் தலைமகன், மண்ணுலகின்பாற் பட்ட மதுரையம்பதியிலே வையையின் பெருக்கினை அடைத்தற் கெனப் பிட்டு வாணிச்சியாகிய வந்தியிடம் பெற்ற (கூலியாகிய) பிட்டினை உண்டருளியும் (வேலை செய்யச் சோம்பிய காரணத்தால்) பாண்டியன் பிரம்பால் தன்னை அடித்துக் கட்டளையை நிறைவேற் றிக் கொண்டமையால் (அவன் திருமேனியில்) உளதாகிய புண் ணைப் பற்றிய பாடலைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) "தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட புண்" என்றதனைப் 'பாண்டியன் தன்னைத் தண்டால் (உளதாகிய) புண்ணாற் பணிகொண்ட' என மாற்றி, பாண்டியன் அடித்த அடியால் உளதாகிய புண்ணால் தான் அவனுக்குப் பணி செய்யாது, அவனையே தனக்குப் பணி செய்யுமாறு அடிமையாகக் கொண்ட "பாடல்" எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

சிவபுரத்திற்குரிமை பூண்ட மெய்யன்பரை ஐம்புலப் பகையினின்று மீட்டுக் கொடுவந்து பாதுகாத்தலால் "சிவபுரத்தார் போரேறே" எனக் கூறியருளினார். "திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு" என்றது, அவன் ஆட்சியும் ஆற்றலும் விளக்கி நின்றது. "மண்பால் மதுரையில் பிட்டமுது செய்தருளி" என்றது அடியார்க்கெளியன் என்றவாறு. "தண் டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட" என்றது, வநதி என்றதனை யும், மெய்யன்புடையாள் என்றதையும் அறியமாட்டாது, பாண்டியன் அவளை மனங் கலக்கினான் ஆதலின், அங்ஙனம் கலக்கிய அவனாலே தானும் வருந்தவேண்டும் என்பது குறித்து நின்றது என்றவாறு. "புண் பாடல்" என்றது, பாண்டியன் அடித்ததால் உண்டாகிய புண் இறைவனை வருத்தாதாய், அவனையும், உலகுயிர்களையும் வருத்தியமையால், அச் செய்கை இரக்கமும் வருத்தமும் பற்றிய வியப்புடைத்தாதலால், அது பாடற்குரிய தென்றபடி.

'தண்டம்' என்னும் வடசொல் ஈறுகுறைந்து " தண்டெ "ன நின்றது. (அடித்த) அடியுமாம். திண்மை - கலங்காமை. " மண்பால் " என எதுகை நோக்கி மெலிந்து நின்றது.

'புண்படல்' என்றது "புண்பாடல்" என நீண்டதென்று கூறுவாரு முளர். புண்பாடல் பாடுதலே பாட்டின் பொருளாகக் கொண்டெழுதலால், அங்ஙனம் கூறுதல் அமையாதென விடுக்க.

முன்றைய மால் அயனும வானவரும் தானவரும்
பொன்றைர் திருவடி தாமறியார் போற்றுவதே
என்றைகம் உட்புகுந்து ஆண்டுகொண்டான் இலங்கணியாம்
பல்நாகம் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 17

இது, தேவரும் அசுரரும் திருவடி போற்றுவதே அறியாராக வும் என் அகம்புக்கு ஆண்டு கொண்டானுடைய அணியாகிய நச்சுப்பல்லையுடைய நாகத்தைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்கு உரைத்தது.

(பொ - ரை.) தோழிமீர்! தேவரை எண்ணுமிடத்து, முதல் வர்களாகிய திருமாலும் அயனும் (அவரை யொழிந்த) தேவர்களும், அசுரர்களும் வணங்குவதே அறியாராகவும், அவரறிவுக் கெட்டாத பொன்போன்று அரிய திருவடியொடும் என்னகத்தினுள்ளே புகுந்து ஆண்டு கொண்டானுடைய விளக்கம் பெறும் அணிகலறைகிய நச்சுப் பல்லினையுடைய அரவத்தைப் பாடிப் பூவல்லி கொய்வோ மாக (என அவள் அவர்க்குக் கூறிறைள்) எ - று.

(வி - ரை.) திருவடி பெற்றால் அதுவே வேண்டியவெல்லாம் விளைக் கும் விழுப்பொருளாதலே அறியாராய் வாறைளும் வலியும் படையும் பத மும் பெறுதற்பொருட்டு மற்றதனை வணங்குவதேயன்றி, அதனைப் பொன் றைகப் பெற்றுக்கொள்ள வணங்கார் என்றபடி.

அவர் திருவடி போறறுவதே அறியார் என்னும்படி, என்னுள்ளே புகுந்து ஆண்டு கொண்டான் எனவும உரைத்தல் பொருந்தும்.

அவரும் திருவடி போற்றற்கு அறியாராதலால் நம்மாற் போற்றற் காவதோ? ஆகாதாகலின் அந்நெறி விடுத்து "அந்நெறிபோலும்" (அவனு டைய அணியாகிய அரவத்தைப் பாடுதலாகிய) புகழ்பாடுவோம் எனக் கூறியருளியதாகவும் கொள்ளலாம். பல், பலவகையுமாம்.

சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகம்மகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடம்செய்
பேரானந் தம் பாடிப் பூவல்லி கொய்யாமோ. 18

இது, சிலம்பொலி கேட்க ஆசைகொண்ட யான் மனமகிழப் பெருந்துறையான், தன் மூலவடிவத்தோடு தில்லையம்பலத்தே கூத் தயரும் பேரின்பத்தைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) தோழிமீர்! இரவும் பகலும் ஓடும் தேர் நிரம்பிய வீதிகளையுடைய திருப்பெருந்துறையுடையான், இப்போது இங்கே

(தில்லையம்பதியிலே) தனது மிகுபுகழ் பொருந்திய திருவடியி லணிந்த அரிய திண்ணிதாகிய சிலம்பொலித்தலைச் செய்யும் ஒலி யைக் கேட்டற்கே நிரம்பாத பேராசையையுடைய யான் கேட்டு மனம் மகிழக் கூத்தயரா நிற்கும் பேரின்பத்தினைப் பாடிப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) அகம் மகிழுமாறு இனி அங்கே எம்முன்னே செய்யும் பேரானந்தமுமாம், இனிமேல் அவன் திருவடியிலே அணிவதற்கென இப் போது பூவல்லி கொய்யாநிற்றலின்.

மனம், அவன் கூத்தயரும்போது உண்டாகும் சிலம்பொலிக்கே ஆசை யுடையதாய், அதனாலுளதாகும் பேரின்பத்தை இப்போது நினைவுகூர, அந் நடனத்தைப் பாடிக் கொய்வோம் என்றருளினாளுமாம். நினைக்கும்போதே பேரானந்தமெனில், காணும்போது யாதாகும் என்றபடி. மனம் பேரானந் தங் கொள்ளில் அதன் வழியுறுப்புக்களும் அங்கே சென்று பயனெய்தும் என்பது குறிப்பு.

**அத்தி உரித்(து) அதுபோர்த்தருளும் பெருந்துறையான்**
**பித்த வடிவுகொண்(டு) இவ்வுலகில் பிள்ளையுமாம்**
**முத்தி முழுமுதல் உத் தரகோச மங்கை வள்ளல்**
**புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமோ. 19**

இது, போரேறு போன்று பகைவரை அழிப்போனும், பெருந் துறைக்கண்ணே மறைந்தவனும், முதியோனாய் வடிவுற்றுச் சென்று, வாலிபனாய்க் குழவியாய் மாறுபவனும், வீட்டிற்குத் தானே முழுமுதலாக நிற்பவனும் ஆகிய திருவுத்தரகோச மங்கை யைத் தன்னூராகவுடையவன் எனக்கு மெய்யறிவைக் கொடுத்த வன், என்னறிவுள்ளே புகுந்த திறனை நினைந்து பூவல்லி கொய்வோ மாக என அவள் அவர்க்குக் கூறியது

(பொ - ரை.) தோழிமீர்! கயாசுரன் என்னும் யானை யுரு வினனைக் கொன்று, அவன் தோலையுரித்துப் போர்வையாகப் போர்த்துக் கொண்டருளும் திருப்பெருந்துறையுடையானும், இவ் வுலகிலே மூப்பால் அறிவுமயங்கப் பெற்ற வடிவினைக் கொண்டு சென்று பின்னர்க் குழவியாக மாறுவோனும், வீட்டிற்குத் தானே ஒருமுதலும், திருவுத்தரகோசமங்கையிலேயுள்ள வள்ளலும் ஆகிய எம்மிறைவன், என்னறிவுக்குள்ளே புகுந்து நின்ற திறனை நினைந்து பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) உமை நடுங்க அத்தியுரி போர்த்தவாறே யானும் நடுங்க

என்னையாட் கொண்டு பிரிந்தான். அன்பர் பொருட்டு விநத்த குமார பாலனாகித் திருவிளையாடல் செய்தான். எனக்கு வள்ளலாயினன். முதலில் உத்தரசோசமங்கை என்னூரென்று கூறிப் புத்தியிற் புகுந்தான். அத்தியுரித்தது போல என் பழவினையையும் அறுத்தொதுக்கினன். அது போர்த்தது போல என்னைப் பிரிந்து வருத்தினன். அவன் பெருந்துறையான் என்க. முத்தி முழுமுதலாக உள்ளவன் இங்ஙனம் செய்யின் யான் என் செய்யவல்லேன் எனக் குறிப்பித்தருளினள். பிறவும் அன்ன. அறிவுக்குள்ளே அவன் புகுந்த திறனை நினைக்குங் காலத்தே சொல்லெழாதாகலின், பாடுவாம் என உரைத்திலள்.

மாவார ஏறி மதுரைநகர் புகுந்தருளித்
தேவார்ந்த கோலம் திகழப் பெருந்துறையான்
கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்
பூவார் கழல்பரவிப் பூவல்லி கொய்யாமோ. 20

இது, குதிரைச் சேவகனாக வந்து, எம்மைக் கட்டுள் நின்று பின்னரும் நீக்கி, குற்றேவலாட்டியாகக் கொண்டானுடைய கழலைப் பரவிப் பூவல்லி கொய்வோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை) குதிரையினழகு நிரம்பித்தோன்ற அதன் மீதேறித் தெய்வத்தன்மை நிரம்பிய தன்கோலம் விளங்க மதுரையம்பதி புகுந்து வந்தருளி ஆங்குப் பின்னரும் யாம் செய்யும் குற்றேவலைச் செய்யுமாறு எம்மையடிமையாகக் கொண்டருளும் திருப்பெருந்துறையானுடைய பூப்போன்ற திருவடியைத் துதித்துப் பூவல்லி கொய்வோமாக (என அவள் அவர்க்குக் கூறினள்) எ - று.

(வி - ரை.) இவன் ஏறுவிடில் அக்குதிரை அழகு நிரம்பாதென்க. தேவார்ந்த கோலம் - முழுத்தழல் மேனி. கோ - தலைவன். எம்மைக் குற்றேவல் கொண்டருளும் - பின்னரும் எம்மைக் குற்றேவல் செய்யும் அடிமையாகக் கொண்டருளும். பூ, தொழிற்பாடுமாம். கழல் பரவுதலாவது, இல்லற ஒழுக்கம் பூண்டு அவனையே தெய்வமாகக் கொண்டு வணங்கி வருதல். மதுரைக்கண் வந்து தம் அடிமைத் தளை நீக்கி ஆண்டான் என்க. தாமும் பாண்டியனும் அருள் பெற்றமை கூறினர் என்க.

முன்னர் மதுரையில் காட்சி கொடுத்துப் பின்னர் உத்தரகோசமங்கையில் காதலனாகிக் களவிற் கூடிய வள்ளல் எனக்குக் கோவாகினன், யான் அவனுக்கு அடிச்சியானேன் என்று நின்றாள் என்க.

திருச்சிற்றம்பலம்

# திருவுந்தியார்

'உ ]'' என்பது பல்வரிக் கூத்துக்களுள்ளே ஒன்றென்பது அரங்கேற்று காதையிலே அடியார்க்கு நல்லார் காட்டிய "சிந்துப் பிழுக்கை'' என்னும் மேற்கோட் சூத்திரத்தாலும், இது மகளிர் ஆடற் குரிய தென்பது பிங்கலந்தையாலும், பெரியாழ்வார் அருளிச் செய்த, "நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று, உந்திபறந்த ஒள்ளிழையார் சொல்'' (3-ஆம் பத்து 9-ஆம் திருமொழி) என்னுந் திருப்பாசுரத்தாலும், "கொங்கை குலுங்க உந்தீபற'' என இந் நூற்பகுதிக்கண் அமைந்த திருப்பாட்டாலும் அறியக் கிடக் கின்றன "உந்தீபற'' என இப்பகுதித் திருப்பாட்டுக்கள் தோறும் ஏவலொருமையாக வருதலாலும், "உந்திபறந்த ஒள்ளிழையார்'' எனப் பெரியாழ்வார் கொண்டு கூற்றுக அருளிச் செய்தலாலும், பல மகளிர் உந்தத் தம்மைத் தாமே அங்ஙனம் முன்னிலையாகக் கொண்டு பாடிப் பறவெனக் கிளவா நிற்பது மற்றிதன் இயல்பாகும் என்க. அன்றியுங் கூறுவோள் தோழியாகவும் கேட்டாடுவோர் தலைவியை உள்ளிட்டோராகவும் அவளது ஏவல் தனித்தனியே ஒவ் வொருவரையுஞ் சுட்டப்பட்டதாகவுங் கொள்ளற்கும் இடனுண்டு.

திருப்பொற் சுண்ணம், திரு அம்மானை என்பன, வரை விடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் வருவே னெனக் குறித்துச் சென்ற பருவம் அறவே கழிந்தமையால் தலை மகள் அன்பினைந்திணை நெறி ஒழுகுவதற்கு ஆற்றலற்று அவன் மேல் தனக்குள்ள காதலை உலகறிய வெளிப்படுத்தும் வகையிலே முதற் பகுதியாகவும், திருக்கோத்தும்பி அருமைத்தாகிய அன் பினைந்திணை ஒழுகலாற்றை விடுத்துப் பெருந்திணை நெறிபற்ற வேண்டி நேர்ந்தமை குறித்து இரங்கிக் கூறியதாகவும், திருத் தெள்ளேணம் தலைமகனது வெற்றித் திறங்கேட்டு வருவான் என்னுந் துணிபுபற்றிக் கொட்டியதாகவும், திருச்சாழல் ஆற்றுமை மிக்க தலைமகளைத் தோழி இயற்பழித்துரைக்கும் முகத்தாற் பெருந் திணை நெறியினைத் தலைமகள் மனம் மேற்கொள்ளாது ஐந்திணை நெறிக்கண்ணே ஒழுகிவர ஆடியதாகவும் திருப்பூவல்லி அவன் வருகை கேட்டு ஆடிக் கொய்ததாகவும், திருவுந்தியார் பெருந் திணை ஒழுகற்கிருந்த தலைமகள் மனம் ஐந்திணை நெறிக்கண்ணே உந்தப் பட்டதாகவும், திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல் என்பன ஆனந்தத்தால் ஆடப்பட்டனவாகவும் அன்னைப் பத்து

தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றதாகவும் கொள்ளற்கு இடனுண்டு

திருப்பூவல்லி கொய்தவுடன் தலைமகனது வரவைத் திண்ணி தென அறிந்துகொண்ட தலைமகளது நெஞ்சம் அன்பினைந்திணை நெறிக்கண் உந்தப்பட்டு இவ்வாட்டத்தினை மேற்கொள்வதினால் இஃது "உந்தி" எனப் பெயர் பெற்றது.

"பாடிப் பற"வெனப் பெரியாழ்வார் அருளியவதனால் இவ்வாட்டம் பாடுதலையும் பறத்தலையும் தனக்கு உறுப்புக்களாகக் கொண்டுள்ள தென்பது பெறப்பட்டது.

இவ்வாட்டத்திலே பாடப்படும் பாட்டிற்குத் தலைமகனுடைய அன்பு அருள் ஆற்றல் போர்த்திறன் முதலாய சிறப்புக்களே பொருள்களாகும் என்பது, இந்நூற்பகுதியானும் பெரியாழ்வார் அருளிச்செய்த அப்பகுதியானும் திருவுந்தியார் என்னும் நூற் பகுதியானும் இனிது விளங்கும். திருவுந்தியார் என்னும் நூலால், தான் பெற்ற ஆக்கப்பேறு கூறப்படுதலும் இப்பகுதிக்கு உண் டென்பது அறியப்படுகின்றது. ஆனந்த மேலீட்டால் இவ்வாட்டம் நிகழப்பெறும் ஆதலால் இறைவனொடு இரண்டறக் கலக்கப்பெறும் செவ்வியைப் பெற்றவரே இதனை அயர்தற்கு உரியவர் ஆவர் என் பதும் அத்திருவுந்தியார் என்னும் நூலால் நன்கு விளங்குகின்றது. "பாடிப்பற" "பற" என்றலே உந்திபறத்தல் என்பதுதானே விளங்கப்பெறும் என்பதும் பெரியாழ்வார் அருளிய அப்பகுதியால் தெளியப்படும் 'உந்திபற' என மிகாமையே "உந்தி" என்பது ஆட்டத்தின் பெயராகவும் "பற" என்பது அதன் செயலாகவும் அறிவுறுத்தாநிற்கும்.

வாராது ஒழிந்தான்போலும் என்னும் இன்னற்கடற்குள் ஆழ்ந்து உணர்வற்றுக் கிடந்த தலைமகள் அவன் வருகையைக் கேள்வியுற்றதும் பேரானந்தத்தால் உந்தப்பட்டவளாகிக் கைகளை இருமருங்கும் நீட்டி மேலுங் கீழுமாக அசைத்தாடுவாளாயினள். அவள் அங்ஙனங் கைகளை எழுப்பி வருந்தோற்றம் பறக்க முயலு மாறு தோன்றும். அத்தோற்றமே பற, பாடிப்பற, உந்திபற என வழங்கலாயது 'உந்திபற' என்றது ஓசை இன்பங் கருதி "உந்தீபற" என ஈண்டு அருளிச் செய்யப்பட்டது.

கால்களை ஒருசேர அசையாது நிறுத்தி கைகளையே பறப்பது போலச் செய்யுஞ் செய்கையை அறிவுறுத்த "கொங்கை குலுங்க" என அருளிச்செய்தார். இந்நுணுக்கம் உற்றுணர்ந்து இன்புறற் குரியதாகும். பறவை பறக்கும்போது அதன் சிறகுகளை அசைத்து

எழுப்புதலையும் கால்களை ஒருசேர அசையாது வைத்தலையும் ஈண்டுக் கருதிக்கொள்க.

பெரியாழ்வார் ''பாடிப்பற'' என்றருளியதும் அடிகள் ''உந்தீபற'' என்றருளியதும் அவ்விருவர்தம் காலவாராய்ச்சி செய்வார்க்குப் பற்றுக்கோடாம்.

''உந்தி'' என்னும் ஆட்டத்தின் இயற்பெயர் அதனைக் கூறும் நூற்பகுதிக்கு ஆகுபெயர் ஆயது அஃது மக்களுள்ளே ஒருவனைத் தலைமகனாகக் கொள்ளாது இறைவனையே தலைமகனாகக் கொண்ட சிறப்புத் தோன்ற திருக்கோவையார் என்பது போல அடையடுத்துத் திருவுந்தியார் என நின்றது

இப்பகுதிக் கண்ணே கூறும் வரலாறுகள் வருமாறு :—முதல் நான்கு திருப்பாக்களால் திரிபுரம் எரித்ததும், ஐந்தாவது முதல் பதினாறாவது இறுதியாகவுடைய பன்னிரண்டு திருப்பாக்களால் தக்கன் வேள்வி அழித்ததும், பதினேழாவது திருப்பாட்டால் அபிமன்யு முனிவர்க்குத் திருப்பாற்கடல் அருளிச்செய்ததும், பதினெட்டாவது திருப்பாட்டால் திசைமுகன் சிரங்கிள்ளப்பட்டதும், பத்தொன்பதாவது திருப்பாட்டால் இராவணன் சிரங்களும் தோள்களும் இறுமாறு செய்யப்பட்டதும், இருபதாவது திருப்பாட்டால் கனலியொடு திரியும் முனிவரையும் அவரினும் மேம்பட்டாரையுங் காத்துவருங் காவலும் ஆகிய வரலாறுகள் கூறப்பட்டுள்ளன.

வரலாறுகள் பெற்றுள்ள திருப்பாடல் தொகைக்குரிய காரணம் வருமாறு —

தக்கன் மருகன் ஆதலால் இறைவன் தன்னைப் பணிய வேண்டுமென்று எண்ணினான் அங்ஙனம் அவன் தன்னைப் பணிந்திலன் ஆதலால் அவன்மேல் அழுக்காறுற்று அவனையொழித்துத் திருமாலையே முதல்வனாகக்கொண்டு வேள்வியாற்றினான். இது மாபெரும் பாதகம் ஆதலால் அவன் செயல் கூறுதலையே இப்பகுதி பெருநோக்காகக் கொண்டமையாலும் எல்லாத் தேவரும் இதன்கண்ணே பங்குபற்றிப் பாதகஞ் செய்தார் ஆதலாலும் அவனைப் பற்றிய வரலாறு பன்னிரு திருப்பாக்களைத் தனக்கு இடமாகக்கொண்டது. [அவ்வேள்வியையும் அவனையும் அவனோடு பங்குபற்றியவரையும் அழிக்க உமைப்பிராட்டி வரம் பெற்றுக் கொண்டமையும் இங்கு நினைவுகூரத்தக்கது ]

இறைவன்மேல் அன்புடையவர்களான திரிபுரர்கள் தேவர்க்கு இடுக்கண் விளைத்துவந்தமையால் அதுவுந் தனக்குச் செய்த தீங்காகுமெனக் கருதினமையாலும் தேவர்கள் வேண்டுகோளாலும் அத்தேவர்செய்த சூழ்ச்சியால் அத்திரிபுரர் தாம் இறைவன்மேல்

வைத்த அன்பினை மறந்தனராகிப் புறச்சமயம் புக்கனராதலால் அவர் மனக்கரவு அற்றவர் ஆவர் என அறியப்படுதலாலும் அவர் தக்கனினுங் குறைந்த பழிபாவமேயுடையர். இதனால் திரிபுரர் வரலாறு நான்கு திருப்பாக்களில் அடிகளாற் கூறியருளப்பட்டது. [தக்கன்பால் இறைவன்தான் செல்லாது விரபத்திரரைச் செல்ல விடுத்ததும் திரிபுரர்பால் தானே சென்றதும் ஆகிய வேறுபாடுகள் கருதற்பாலன.]

முன்னர் இறைவனை வழிபட்டுவந்த பிரமன் இடையே தோன்றிய மயக்கத்தால் இகழ்ந்தான் என்னும் ஒரு செயலை உட் கொண்டமையால் அஃது ஒரு திருப்பாட்டையே தனக்கு இடமாகக் கொண்டது. அன்றியும் இது தக்கன் வேள்விப் பழிக்குச் சார் பாதலாலும் அங்ஙனமாயிற்றென்க.

இறைவன் பெருமையை அறியாதவனும் பெருவரம் பெற்று வந்தோனுமாய இராவணன் செருக்கால் தன்னை எதிர்த்த குறை முன்னையவைபோலப் பெருங்குறை ஆகாமையால் அஃது ஒரு திருப்பாட்டையே இடமாகக் கொண்டது.

உபமன்யு முனிவர், பால்வேட்கையால் தாயின் ஏவுதற்படி பால் பெற்றுக்கொண்டார். உயிர்கண்மேல் இரங்கக் காரணமாகத் தமக்கு நேரும் ஊறுணராராய்த் தொண்டுசெய்யும் இருடிகளைக் காப்பது இறைவன் கடனேயாகும். இவ்விரு வரலாறும் தீயன கலவாத தூயனவேயாதலால் ஒவ்வொரு திருப்பாடல்களிற் கூறப் பட்டன.

ஆனந்தத்தினால் உந்தப்பட்டு ஆடும் ஆட்டத்தின்கண் பொருளும் பேரானந்தமாகவே நிறைவேறவேண்டும் என்பதனாலும் அப்பேரானந்தம் அடிகட்குத் துன்பம் நீங்க எய்தியதொன்றாக லானும் இருடிகளைக் காக்கும் காவலைப் போன்று இப்பகுதியும் அமைந்துள்ளது. அம்முடிபிற்கு அயலாக நிற்கும் இயைபுபட்ட உபமன்யு வரலாறும் அதற்கு அயலாக நிலைபெற்றது.

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவும் நூற்கண் அவற்றின் எண்ணு நிலையும் முறையே வருமாறு.—

தக்கன் வேள்வியின் இன்னே பங்குபற்றிய திசைமுகன் முன்னருஞ் சிவாபராதஞ் செய்து தலைகிள்ளப்பட்டான். (1 18.)

நாமகள் நாசி, பிரமன் சிரம், சோமன் முகம் என்பன சிதைவு பெறுதல். (2. 13.)

சாடியவேள்வியினின்றும் தேவர் ஓடல். (3. 15.)

சூரியனார் பல் உகுத்தல். (4. 15.)

பூசன் கண்களைப் பறித்தல். (5. 12.)
புரந்தரன் குயிலாகி ஓடுதல். (6. 9.)
அங்கியின் கை நா அறுத்தல். (7. 7.)
எச்சன் தலையிழந்தது. (8. 10.)
தக்கனை இனமுறை பார்ப்பது ஏன்? (9. 8.)
தக்கன் படுதல். (10 14)
தக்கன் தலையிழந்த துயரை அவன் மகளிர்பால் உசாவுதல் (11. 16.)
அவிப்பாகங் கொண்ட திருமால் சாவாதிருந்தது. (12. 6.)
தக்கன் ஆட்டுத்தலை பெற்றான். (13 13.)
இறைவன் அடிவைத்ததுந் தேரின் அச்சு முறிந்தது. (14. 3.)
இறைவனுடைய வில் வளைந்தது. (15. 1.)
ஓரம்பே மிகை (16. 2.)
மூவருய்யுமாறும் ஏனையோர் அழியுமாறும் எய்தான். (17. 4.)
இராவணன் தேரை நிறுத்தி எதிர்த்தல். (18. 19.)
உபமன்யு முனிவர்க்குப் பாலருளியது. (19. 17.)
இருடிகளையும் மேம்பட்டாரையுங் காப்போன். (20. 20.)

இனி, நூலடைவு வருமாறு :—

இயற்கைப் பொருளடைவிலே இரண்டாவது பெரும் பிரிவாதற்குரிய திரிபுரவரலாறு அன்பின் ஐந்திணை நெறியை விடுத்துப் பெருந்திணை நெறி சாரக் கருதிய தம் செயலொடு ஒத்துப்போதலால் நூலடைவில் முதலாவதாக மாற்றியருளப்பட்டது

திரிபுர வரலாறு தம் ஊழ்வினை இறைவனால் அழிக்கப்பட்டதனோடு ஒக்கும் என்னும் நினைவினால் முதலாவதாகக் கொள்ளப் பட்டது. இறைவற்கு ஓரம்பே மிகை என்பது அழிக்கப்பட்ட விரைவும் பிறவும், ஆதாரமாகக் கொண்ட இயைபால் இரண்டாமிடம் பெற்றது. அடிப்பாட்டடைவிலே இரண்டாம் பெரும் பிரிவில் முதலாமிடம் பெற்றதாய தேரின் அச்சு முறிந்ததென்பது அவன் திருவடி தம்மேல் வைக்கப் பெற்ற காரணத்தால் இன்னவையெல்லாம் நிகழ்ந்தன என்னும் இயைபால் மூன்றாவதிடம் பெற்றது. திரிபுரத்திலுள்ள மூவரையும் ஆட்கொண்ட நிகழ்ச்சி தம்மையாட் கொண்ட நிகழ்ச்சியோடியையப் பட்டு நான்காமிடம் பெற்றது தக்கன் வேள்வி குலைவதைக் கண்ட தேவர்கள் ஓடியது என்பது திரிபுரர் தாம் செய்த புண்ணியம் ஒழியும் வரையும் அவர் செய்த தீச்செயல் அவரை நலியாது அவர் பக்கலிலே கரந்துநின்று அஃதொழிந்ததும் அவர் தீச்செயலே அவர்க்குக் கூற்றாயவாறு தக்கனுக்கும் ஆயது என்னும் இயைபால்

ஐந்தாவதாயிற்று. தக்கன் வேள்வியில் அவிப் பாகங்கொண்ட மால் ஏனையோர் அழிந்தவாறே அழியாதிருந்தான் என்பது, அவன் செய்த புண்ணியம் இன்னும் அழிந்திலது எனக் கருதிய இயைபால் ஆறுவதிடம் பெற்றது.

அவியை உண்ணத்திரட்டிய அங்கியங் கடவுளுடைய கைகளும் உண்ட நாவும் அரிபட்டனஎன்பது தம்மையெல்லாங் காத்தற்குத் திருமால் முன்னின்றான் ஆதலால் இறைவனால் தடுத்தற்கியலாது என்னுஞ் செருக்காலும் அவன் உண்ணுவிடின் ஏனையோரும் உண்ணார் ஆதலால் அவனே அப்பழிகட்கெல்லாங் காரணனுவான் என்பதாலும் அங்ஙனமாயினான் என்னும் இயைபால் ஏழாவதிடம் பெற்றது. அங்கி வராவிடில் வேள்வியும் இலதாமாறே இவன் அழையாவிடின் எல்லாரும் இடர்படார் என்னும் இயைபால் தக்கனை இறைவனுக்கு மாமனென முறை பார்த்தல் வேண்டாமென்பது எட்டாவதிடம் பெற்றது இந்திரன் குயிலுருவெடுத்து மரமேறினான் என்பது, திருமாலையும் அங்கியையுந் தக்கனையும் நம்பிச் சிவாபராதத்தைப் பொருட்படுத்தாமையால் எய்திய பெரும் பழி இந்திர பதப் பேற்றையும் விழுங்கி எஞ்சிநின்றது எனக் கருதிய இயைபால் ஒன்பதாவதிடம் பெற்றது. எச்சனும் இருத்துவிக்களின் தலைவனும் ஆகிய அவ்விருவர் தலைகளுந் துஞ்சின என்பது, தேவருந் தக்கனும் ஆற்றற்கு இன்றியமையாதவர் அவ்விருவரும் ஆவர் என்னும் இயைபாற் பத்தாவதிடம் பெற்றது. இறைவனைத் துணையாகக் கொள்ளாது பிற தேவரெல்லாரையும் கொண்டு வேள்வி செய்த தக்கன் பெற்றது மாறாப் பழியே என்னும் இயைபால் தக்கன் ஆட்டின் தலை பெற்றது அடுத்து வைக்கப்பட்டது. முன்னர் அங்கியங் கடவுள் அருந்தியது தேவர் அவி யுண்ணற்பொருட்டாதலால் பகன் ஓடாதவாறு கண் பறித்த நிகழ்ச்சி பன்னிரண்டாமிடம் பெற்றது. எஞ்சிய தேவரும் அங்ஙனமே ஒறுக்கப்பட்டமை கூறலால் நாமகள் முதலாயோர் ஒறுக்கப்பட்டமை கூறுந் திருப்பாட்டுப் பதின்மூன்றுவதாக வைக்கப்பட்டது.

பிரமன் இறைவனிடம் அடைக்கலம் புகும் நெறி தேடிப் பிறர்க்கும் வழிகாட்டினான் என்னும் இயைபால் அது பதினான்காமிடம் பெற்றது. பகனைப்போல ஓடற்கும் பிரமன்போல அடைக்கலம் புகற்கும் எண்ணுது அவியுண்ட பாதகத்தைக் காட்டும் இயைபால் பகலவன் பற்களை நெறித்தது பதினைந்தாவதாயிற்று. தக்கன் தலையிழந்தானென அவன் மகளிர்பாற் சூழநின்று உரைத்தல் என்பது தமக்கு வருஞ் சிதைவு கருதாராய்த் தந்தை கணவர் என்போர்

சிதைவு நோக்கி வருந்தும் அவர்க்கு இச்சிதைவுக்குக் காரணரா யிருந்த தக்கன் தலையிழந்தான் என நெருக்கி உரைத்தல் ஏற்புடைத் தாகும் என்னும் இயைபால் அது அடுத்து வைக்கப்பட்டது

அடிப்பாட்டுப் பொருளில் பத்தொன்பதாவதாகிய உபமன்யு முனிவர்க்குப் பாற்கடல் அருளிச் செய்த தென்பது தக்கன் வேள்வி யும் இறைவன் வெகுளியும் ஒழிந்த பின்னர் இறைவனது பேரருள் நினைவிற்குத் தோன்றியவதனால் பதினேழாவதிடம் பெற்றது முன்னரே பிரமன் தலைகிள்ளப்பட்டானென்பது தண்டம் பெற்றும் அறிவினைப் பெற்றுக் கொள்ளாதவன் என அடிகளுக்கு இரக்கந் தோன்றிய இயைபாற் பதினெட்டாவதாக வைக்கப்பட்டது அடிப் பாட்டடைவிலே பதினெட்டாவதாகிய இராவணன் இடர்ப்பட்டான் என்பது பெருவரம் பெற்ற செருக்காலும் இறைவன் இயல்பாற்றல் களை அறியாமையாலும் விளக்கினை எய்திய விட்டிலைப்போலப் பேரிடர்ப்பட்டானென அவனது அறியாமைக்கு இரங்குதலும், பின்னர் அவன் தன் வாணாள் முழுவதும் இறைவன் மேற்கொண்ட அன்பினை மாறாது பேணிவந்த சிறப்பினைப் புகழ்வதும் அப் பிரமனிற் சிறந்தான் எனக் கொண்டாடுதலும் ஆதிய இயல்பால் பத்தொன்பதாவதாக அடைவுபடுத்தப்பட்டது.

உயிர்கள்மேல் இரங்கும் பெற்றிகொண்டு இடையூறு என்ப தொன்று உளது என்பதை அறியாதும் உயிர்கள் வாழும்பொருட்டு கனலியொடு திரிதரும் முனிவர்களையும் அவரின் மேம்பட்டவர்களை யும் தானாகவே இறைவன் காத்துவரவும் தாம் அங்ஙனம் ஒழுகிவர முயலாது அவனை அருளிச்செய் என்றமையும் சிவாபராதமே யாகும் என முடிவு கண்டுகொண்ட இயைபால் அது இறுதிக்கண் வைத்தருளப்பட்டது.

[குறிப்பு —உபமன்யு முனிவர் குழவிப்பருவமுடையவர் ஆத லால் அமுதற்கும் அருளைப் பெற்றுக் கொள்ளுதற்கும் உரிமை யுடையவர் ஆவர், அங்ஙனம் அமையாத தாம் அமுது பெற்றுக் கொண்டது (அன்பினைந்திணை நெறி யொழுகாது பெருந்திணை பற்றியது) தவறுடைத்து எனவும், தங்குறை காணாராய்த் திரியும் முனிவர் போல அமைந்தேனில்லை எனவும் எண்ணிய பெருநாணற் பாடப்பட்டது, "ஏகாசமிட்டு", என்னுந் திருப்பாட்டாதலாலும், அத்திருப்பாட்டின்றேல் இப்பகுதிப் பொருள் நிறைவேறாது வற்றும் ஆதலாலும், பல ஏட்டுப் பிரதிகளிற் கொள்ளப்படாததாக இருப்பதையும் பொருட்படுத்தாது இப்பகுதியில் இயைத்துக் கொண்டாமென்க ]

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்ட தென்ப.

## ஞானவெற்ற

### கலித்தாழிசை

திருச்சிற்றம்பலம்

வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்திபற
ஒருங்குடன் வெந்தவா(று) உந்திபற. 1

இது தோழி, தலைமகனுடைய போர்த்திறனும், அதனாற் பகைவர் புரம் அழிந்தமையும் கிளந்து, தலைமகளை உள்ளிட்ட ஆயத்தார்க்கு உந்திபற என்று சொல்லியது.

(பொ - ரை) தோழி, (தலைமகளையுள்ளிட்ட ஆயத்தாரைத் தனித்தனியே குறிக்கொண்டு புரியுமாறு) மேருமலையாகிய வில்லானது வளைவுற்றது, (அவ்வளவிலே) திரிபுரர்களுடைய துன்ப வரற்றும் நிகழ்வதாயிற்று, (அப்போதே) மூன்றுபுரங்களும் சிதைவுற்றன (என்று கூறி உந்தியாட்டத்திற் பறப்பாயாக) அப்புரங்கள் மூன்றும் உடனே ஒருமித்து வெந்த திறம் கூறி உந்தி பறப்பாயாக (என இருதிறங் கூறிக் கட்டளையிட்டாள்) எ - று.

(வி - ரை) வளையாத மலையும் வில்லாக வளைந்தது, உளையாத புரங்களும் உளைந்தன, வேவாத புரங்களும் வெந்தன, தீராத துன்பமும் தீரப்பெறறேன், வாராத இன்பமும் வரப்பெற்றேன் என்னும் நினைவு வருமாறு கூறிக்கொண்டு ஆடுமாறு தோழி அங்ஙனம் கூறினளென்க.

முப்புரங்கள் உடனே வெந்தன ; ஒருங்கு வெந்தன என்க. உளைதல் - சிதறுதல். புரங்கள் ஒருங்குடன் அழிந்தன எனவே அப்புரங்களிலுள்ளாரும் உடன் அழிந்தமை தானே போதரும் என்க. புன்னகைத் தீயால் திரிபுரர்களையும், அப்புத்தீயால் அவர் புரங்களையும் அழித்தனன் எனப் புராணங் கூறுநிற்கும். அவரை அழிப்பதே போதியதேனும, அவரிருந்த இடங்களும் தீயனவாதலின் அவற்றையு மழித்தான் என்க.

ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற;
ஒன்றும் பெருமிகை உந்தீபற. 2

இஃது, அவள் முப்புரங்களையும் அழித்தற்கு மூன்று அம்புகளேனும் வேண்டப்படுவனவேனும், ஈரம்புகளையாகிலும் அவன் கையிற் கண்டேமில்லை. கண்டது ஓரம்பேயாகும். அவன் ஆற்றிய போர்த்திறனை நோக்கில், அதுவும் தேவைப்படாதவற்றுள்ளே பெரிய தொன்றுகும் என்று உந்தி பறக்குமாறு அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழி!) ஏகம்பநாதராகிய நம் தலைவனுடைய திருக்கரத்திலே இரண்டம்புகளை நாம் கண்டேமில்லை முப்புரங்களையும் எரித்ததாகிய ஓரம்பையே கண்டேம். (ஆதலால் அங்ஙனம் கிளந்து கூறி) உந்தி பற, (அங்ஙனம் அவன் கைக்கொண்ட) ஓரம்புதானும் தேவைக்கு வேண்டாது மிகைப்பட்டவற்றுள்ளே பெரியதொன்றுகும் என்று உந்தி பற (என அவள் அவர்க்குக் கூறியது) எ - று.

(வி - ரை.) ஆட்டத்தின்கண்ணே கூறப்படும் கிளவிகள் சீரொடு மருவிநிற்கும் இயல்பினவாகலால் அவை வரிப்பாக்களாம் என்பது, ஈண்டும் முன்னும் பின்னும் கொள்ளற்பாலது.

"கண்டிலம்" என்றமையால், இறைவனுடைய பல்வேறு வடிவங்களையும், அவற்று ஆடல்களையும், அவர் காண விழைந்தபோழ்தே, அவனும் அங்ஙனமே காட்சியளித்துவரும் பெற்றியுளது என்பது பெற்றும்.

திரிபுரமெரித்த திருவிளையாடல் திருவேகம்பத்திலே அடிகட்குக் காட்டப்பட்டது எனக் கொள்ளினும் இழுக்காது.

'யாம் கண்டிலம், நீ உந்திபற' என முடிக்க. இங்ஙனமே "முன்னோர்? மொழி பொருளேயன்றி" என்னும் வெண்பாவும் முடிவுறும்.

மிகைக்கும் பெரிதாகியது "பெருமிகை" எனப்பட்டது. "கண்டிலம்" என்றமைக் கேற்பக் 'கண்டாம்' என்றும், "ஓரம்பே" என்றமைக் கேற்ப 'எரித்ததாகிய ஓரம்பே' என்றும் விரித்தாம். முந்திய திருப்பாட்டில் வில் வளைந்ததுவும், திரிபுரம் வெந்ததுவும் கூறப்பட்டன. இத்திருப்பாட்டில் அவற்றை வேவித்த அம்பின் இயல்பு கூறப்பட்டது. திரிபுரப்போர் விற்போராயிற்று. புரத்தவர் அழிவினைக் கூருது அவர் புரத்தின் அழிவினையே முற்கூறியருளினுர்; அவருள்ளும் அன்பர் மூவரையும் உய்வித்து, ஏனையோரை அழித்த திறனை வெளிப்படுத்தியருள வேண்டுவதால், அது நான்காவது திருப்பாட்டால் கூறப்படும். அதுவும் அம்பாலன்றி நகையால் எரித்தமையால் தனித்துக் கூறற்குரிய இயையுடைத்தாயிற்று.

திரிபுரரை அவர் செய்த பாவத்தால், அறத்தெய்வம் கூற்றுக நின்று எரிக்குமாதலால், இறைவற்கு ஓரம்பே பெருமிகையாயிற்று. அங்கியும் சோமனும் மாலுமாகிய அம்புகளும் அவற்குப் பெருமிகை என்றவாறு. இறையை மறந்து தவவலி இழந்த திரிபுரர்கள், இப்போது இடவலிமையும் இலராயினர் என்க. அக்கினி ஸோமன் மால் என்பார் தம்மாலே இப்போர் வெற்றி பெறும் என்றெண்ணிச் செருக்குற்றிலர் என்பது, அவரை அம்பாகக்கொண்டு புரங்களை அழித்தமையாற் பெற்றும். எனினும் சிவப்பற்றினை முன்னர்க் கொண்டிருந்தாரை அழிக்க அவர்க்கு அதிகாரமின்மையின், இறைவன் தானே தன் புன்னகையால் அவரை அழித்தான் என்க. அவன் நகைத்த நகைப்பொன்றே, திரிபுரர்களுள் அன்பராய மூவரையும் உய்விக்கும் அமிழ்தமாகவும், ஏனையோரைக்

கோறலும் நஞ்சாகவும் அமைந்ததென்க. சிவப்பற்றுடைய இராவணனைக் கொல்லும்போது, இராகவன் தன்னைச் சிவனாகப் பாவனை செய்து கொண்டதும் கண்டுச் சிந்தித்து உணரற்பாலது. பிறவுமன்ன.

புரங்களை அழித்து அவற்றைத் தூயனவாக்கி, அவற்றையுடையாரை மட்டுந் தூயராக்கினுன் இறைவன் என்க. இங்ஙனமே தாமும் தூயராக்கப் பட்டார் என்பது அடிகள் கருத்து.

**தச்சு விடுத்தலும் தாம்அடி இட்டலும்**
**அச்சு முறிந்ததென்(று) உந்திபற ,**
**அழிந்தன முப்புரம் உந்திபற. 3**

இது, திரிபுரங்களும் தலைமகன் வில்வளைத்து அம்பெய்தமையால் அழிந்தனவாகா , அவர் தேரின்மீது அடிவைத்த அளவிலே அதுவும் அவையும் அழிந்தன வென்று உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது

(பொ - ரை.) தேவர்கள் தேரினை இறைவன் திருமுன்னர் விடச் செய்தலாலும், அதன்மேல் இறைவன் திருவடிகளை இடுக எனச் செய்வித்தலாலும் (நேர்ந்த பயன்) அதன் அச்சுக்கால் முறிந்ததுவேயாகும் என்று பாடி உந்திபற, (இறைவன் அருளாற்றலாலே) முப்புரங்களும் அழிந்தன என்று பாடி உந்திபற (என அவள் அவர்க்குக் கூறினுள்) எ - று.

(வி - ரை.) தேவர்களுள்ளே புலி போலுள்ளார் பூமியைத் தேராகவும், ஏனைத் தேவர்களை உறுப்புக்களாகவும், மேருவை வில்லாகவும், அங்கியை அம்பின் அடியாகவும், ஸோமனை அதன் இடையாகவும், திருமாலை நுனியாகவும், வாயுவை மற்றதன் இறகாகவும் அமைத்தனர். அவர் அமைத்த தேரின்மீது இறைவன் திருவடி இட்ட அளவில், அதன் அச்சுக்கால் முறிந்து போயிற்று. அதனுல் தேவர்தம் பெறலரும் செயலின் பயன் அதன் அச்சு முறிந்ததனேடு அமைந்தது. இறைவன் ஆற்றலினுலே முப்புரங்களும் அழிந்தன என்றவாறு. விடுத்தல் - விடச்செய்தல் ; தேரைக் கொண்டுவந்து இறைவன் முன்னர் விடச்செய்தல் என்க. இட்டல் - இடச் செய்வித்தல். என்று - என்று பாடி. முப்புரம் உந்திபற - முப்புரங்களும் அழிந்தன என்று பாடி உந்தி பற.

இனி, உடம்பு தேரெனவும், திருவடியிடுதல் திருவருள் எனவும், அச்சு ஊழ் எனவும், முப்புரம் மும்மலகாரியம் எனவும் உரை வற்புறுத்துவாரும் உளர்.

**உய்யவல் லார்ஒரு மூவரைக் காவல்கொண்டு**
**எய்யவல் லானுக்கே உந்தீபற ;**
**இளமுலை பங்கன்என்(று) உந்தீபற. 4**

இஃது, இறைவன்மேல் வைத்த பற்றினையே தமக்குக் கவசமாகக் கொண்டு உய்யவல்லவராகிய மூவரை அன்னர் இவரென அறியவல்லவனுக்கு உந்திபற, அவன்தான் உமைபங்கன் என்று கூறி உந்திபறவென அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) இறைவன்மேல் வைத்த மெய்யன்பினையே தமக்குக் கவசமாகக்கொண்டு ஈடேறவல்லவராகிய ஒப்பற்ற மூவரையும் அறியவல்லவனாகிய திரிபுராரிக்கு உந்திபற, அங்ஙனம் பறக்கும்போது இளமைகொண்ட பூலையுடையாளாகிய உமைப் பிராட்டியைத் தனது இடப்பாகமாகக் கொண்டவன் என்று பாடி உந்திபற (என அவள் அவர்க்குக் கிளந்து கூறினாள்) எ - று.

(வி - ரை.) காவல் - கவசம், திருநீறுமாம். அவரும் கவசம் பூண்டு உய்யவல்லர், அவனும் அவரை அறியவல்லன். அங்ஙனம் அறிந்து கொண்டமையானன்றே, தனது புன்னகைத் தீயால் அம்மூவரும் அழியாதும், ஏனையோர் அழியுமாறும் ஆற்றினன் என்க.

"எய்யாமையே அறியாமையே" (தொல். உரி. 44.)

என்பதனால் எய்யாமை (அறியாமை) எதிர்மறையாமாறே எய்ம்மை (அறிவுடைமை) என்பதொன்றுளதென்பதும் பெற்றாம். இதனால் 'எய்' என்னும் உரிச்சொல் வினையடியாகப் பயிலும் என்பதும் பெறாம். அதுவே எய்தல் எனத் தொழிற்பெயராகவும், எய்ம்மை எனப் பெயராகவும், அன்ன பிறவாறும் வந்து பயிலும என்க.

அழியாதொழிந்த அம்மூவரும் தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்தியுன்மாலி என்போராவர். அவர திரிபுரமும், அப்புரங்களிலுள்ளாரும் உடனழிவெய்தியஞான்றும், திருநீறணிந்து, அக்கமாலை பூண்டு, சிவபூசையும் விடாதாற்றிய யோகப் பெருவீரராவர். அவருள்ளே மூத்தோனாகிய தாரகாக்ஷன் மாபெரும் யோகியாவன். வித்தியுன்மாலி மாபேரொழுக்கம் பூண்டோன். கமலாக்ஷன் என்பவன் உலகப்பற்றற்றவன். இத்திரிபுரர் வரலாற்றைப் பலவாறு வடமொழிப் புராணங்கள் கூறும். ஆங்காங்குக் காண்க.

"காவல்கொண்டு" என்றதற்குக் 'காத்து' எனப் பொருளுரைப்பதுவே அடிகள் கருத்தாகுமேல் 'காவல் செய்து' என்றே கூறியருள்வராதலானும், அஃது, ஏனையோரை அழிக்கவல்லானுக்கே என்பதனோடு இயைகுவதன்றி, "எய்யவல்லான்" என்பதனோடு வலிந்து இயைவிப்பினும் பொருள் வற்றுதலானும, "எய்யவல்லான்" என்றதற்கு 'ஏனையோர் அழிய எய்ய வல்லான்' என இடர்ப்பட்டு விரித்தல் வேண்டுதலானும் உய்ய வல்லாரைக் காவற்குக் கொண்டெனப் பொருள் உரைப்பினும் அது பின்னர் அவர் வேண்டுகோளால் ஆயதொன்றுதலை இறைவன் விருப்பத்தால் ஆக்கிக்கொண்டதாக வரலாற்றெடு மாறுபடுவதாலும் திரிபுரங்களை பின்னரே அவரைக் காவற்பணிக்கு அமைத்துக்கொண்டான்

என்பதன்றி அவரைக் காவற்பணிக்கு அமைத்துக்கொண்ட பின்னரே ஏனையோரை அழித்தான் எனல் வரலாற்று முறையோடு மாறுபடுதலானும் அன்ன பிறவற்றானும் அங்ஙனம் உரைத்தல் பொருந்தாதென்க.

அம்மூவர் நிலையை அறிதலாவது அவரைத் தன் புன்னகைத்தீ அழியாது என அறிந்து புன்னகை செய்ததென்க. அதனால் திரிபுரர் களுள்ளே அம்மூவரும் இருப்பினும் அதனுக்கு அஞ்சாது எரிக்கவல்லான் என்க. அங்ஙனம் எரிப்பினும் "இளமுலை பங்கன்" ஆதலால் எம்மையுங் காப்பான் என விரிக்க.

வல்லானுக்காக உந்திபற, அங்ஙனம் பறக்கும்போது "இளமுலை பங்கன்" என்று பாடி உந்திபற என இயைக்க.

சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்
ஓடிய வாபாடி உந்திபற,
உருத்திர நாதனுக்(கு) உந்தீபற. 5

இது, வீரபத்திரரால் தக்கன் வேள்வி நிலைகுலையக் கண்ட தேவர்கள் ஓடிய திறனைப் பாடி உந்திபற; உருத்திரகணத் தலைவன் பொருட்டு உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது

(பொ - ரை) வீரபத்திரனும் பத்திரகாளியும் தங்கள் தங்கள் படைகளொடும் தாக்கிய வேள்வியில் நின்றும் கீழ்வீழ்ந்திடத் தேவர்கள் ஓடிய திறனைப் பாடி உந்திபற, உருத்திர கணங்களுக்குத் தலைவனாகிய சிவபெருமானை நாதனாகப் பெறும்பொருட்டு உந்திபற (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) 'வேள்வி சரிந்திட' என்றுமாம். ஆங்கு அதனைக் கண்ட தேவர்கள் என்க. வந்த போர்க்களத்தே உயிர்விடுத்து மானங்கொள்ளுமாறு அறியாது, உடல் காத்தலையே பொருளாகக் கொண்டு முதுகுகாட்டி யோடிய தேவர்கள் என்க. "ஓடிய வா" (திறன்) என்றது, வேற்றுருக்கொண்டும், அறிவு மயங்கியும் ஓடிய திறனை. அத்திறனாவது, தாம்தாம் காக்கவேண்டு மெனக் கருதிய உடல்கள் சிதைய உயிர் நீத்தமை என்க. ஓடியும் உய்ந்திலர், அதனால் தோற்றேடுவோரினும் மாபேரிழிவுடையர் என்றவாறு. இவர்களையும் ஒரு பொருளாக மதித்த தக்கனின் அறிவின்மையையும் உடன் இகழ்ந்தவாறாயிற்று. இதனாற் சிவ பரத்துவம் நிலைநாட்டப்பட்டது.

பெருந்திணைபற்றி அவனை இகழ்ந்து கூறில் நீயும் அவ்வானவர் நிலையை எய்தியிருப்பாய் எனத் தோழி அறிவுறுத்தினாளுமாம்.

வேள்வியில் நின்றும் ஓடிய தேவர்கள், சரிந்திட ஓடிய தேவர்கள் என்க. சரிந்திடல் - கீழே விழுதல். மேடுபள்ளம் பாராது விரைந் தோடினர் என்க. சாடுதல் - தாக்குதல்.

ஆவா திருமால் அவிப்பாகம் கொண்டன்று
சாவா(து) இருந்தான் என்(று) உந்தீபற ;
சதுர்முகன் தாதை என்(று) உந்தீபற. 6

இது, தக்கன் வேள்வியில் அவியுணவினை ஏற்றுக்கொண்ட திருமால் என்பவன், வானவர் தலைவர் யாவரும் இறக்கவும், தான் இறவாதிருந்தது என் என்று உந்திபற ; அவன்தான் சதுர்முகன் தாதையாவான் என்று உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை.) தக்கன் வேள்வியில் அவியுணவைத் திருமால் ஏற்றுக்கொண்ட அந்நாளிலே ஆவா என்றிரங்கிச் சாவாதிருந்தமை தான் என்னை என்று உந்திபற ; அவன்தான் நான்முகனுக்குத் தந்தையாவான் என்று உந்திபற (என அவள் அவர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) சாக வேண்டியவன் சாவாதிருந்தான் என்க. தக்கன் முதலியோர் இறந்தமை யறிந்த திருமால், வீரபத்திரரோடு போர்செய்து கொண்டிருக்கையில், வீரபத்திரனார் திருமாலைக் கொல்ல நினைந்து உங்காரம் செய்கையிலே "போரை நிறுத்துக" என ஒரு வானுரை எழும்பியதால், அவர் திருமாலைக் கொல்லாது விடுத்தார் எனச் சிவரகசியம் கூறுநிற்கும். இறைவனுக்குத் திருமால் பிரகிருதி சத்தியாதலின், அச் சத்தியை யழிப்பது அவற்கு ஒல்லும் செயலன்றுபோலும். இதனையே அடிகள் திருக்கருத்தில் உள்ளிட்டுக்கொண்டு இங்ஙனம் வினவியருளினர் என்க.

வீரபத்திரரால் சிரத்தில் ஊறு செய்யப்பட்டவன் நான்முகன் ; அவன் தந்தை திருமால் உணர்ச்சிகெட அவரால் குத்தப்பட்டான் என்க.

தக்கனும், அவன் தந்தை நான்முகனும், அவன் தந்தை திருமாலும் ஆதியராகிய ஒரு குடும்பத்தினர் அனைவரும், வீரபத்திரரால் தண்டிக்கப் பெற்றதை நினைக்கவே, அந்நினைவு உந்திபறக்கச் செய்யும் என்றவாறு என்க.

சதுர்முகன் என்னும் பெயரே முன்னர் இறைவனால் ஒரு தலை கிள்ளப் பட்டதை அறிவுறுத்துவதுடன், அவ்வேள்வியிலே குட்டுப்பட்டானுக்குத் தந்தையாகிய இவன் தான் அவியேற்றமைக்காக இறந்தே தீருதல் வேண்டும் என்னும் நீதியை உட்கொண்டு அங்ஙனம் வினவியருளப் பட்டது என்க.

வெய்யவன் அங்கி விழுங்கத் திரட்டிய
கையைத் தறித்தான்என்(று) உந்தீபற ;
கலங்கிற்று வேள்விஎன்(று) உந்தீபற. 7

இது, வீரபத்திரன், அவியுணவை விழுங்குமாறு திரட்டிய அங்கியங் கடவுளுடைய கையை வெட்டினான் என்று பாடி உந்தி பற, அப்போதே தக்கன் வேள்வியும் நிலைகுலைந்தது என்று உந்தி பற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை) அவ்வேள்விக்கண்ணே அளித்த அவியுணவை விழுங்குமாறு திரட்டிய அங்கியங் கடவுளுடைய கையைச் சினங் கொண்டோனாகிய வீரபத்திரன் தடிந்தான் என்று பாடி உந்திபற; அப்பொழுதே அவ்வேள்வியும் குழம்பித் தெளிவற்றது என்று பாடி உந்திபற (என்றாள்) எ - று.

(வி - ரை.) கலங்குதல் - குழம்பித் தெளிவறுதல். அங்கியங் கடவுள் கை தறிக்கப்பட்டமையால், அவன் திரட்டியுண்ணும் உணவினையே தேவரனைவரும் ஏற்றுண்பர் என்பவாகலின், அவன் வழியாகப் பெற்றுக் கொள்ளும் தேவரும் பெறுதற்கியலாது போயினரென்க. ஆதலின் வேள்வியும் கலங்கிற்று என்றாள். நாவால் உண்டான் எனக் கூறுதற் கஞ்சியே உண்ணத் திரட்டிய கை என்றாள். ஈண்டு 'வெம்மை' என்றது சினத்தின்மேல் நின்றது. வெய்யவனாகிய அங்கி யென்றலுமொன்று. அது

" கருங்கண்ணன் " (திருச்சிற். 53.)

என்புழிக் கண்ணளவாய் நிற்றல்போல இடுகுறியளவாய் நின்றது.

பார்ப்பதி யைப்பகை சாற்றிய தக்கனைப்
பார்ப்ப(து)என் னேஏடி உந்தீபற,
பணைமுலை பங்கனுக்(கு) உந்தீபற. 8

இது, தன் மகளாகிய உமையம்மையைப் பகைத்து, இழிவாகிய சொற்களால் சொல்லிய முறைபாராத தக்கனை, அவனாற் பகைக்கப் பட்டவர்களாகிய உமைக்கும், அரனார்க்கும் முறையே தந்தை என்றும், மாமன் என்றும் இனம் பார்ப்பது என்ன என்று பாடி உந்திபற, உமையை இடப்பாகத்தே கொண்டவனுக்காக உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை.) ஏடீ! உமையம்மையைத் தன் மகள் என்று இனம் பாராது பகைத்து இகழ்ந்துரைத்த தக்கனை (உமையம்மைக் குத் தந்தை என்றும், அரனார்க்கு மாமன் என்றும் இனம்) பார்ப்பது என்ன என்று உந்திபற, பருத்த முலையுடையாளாகிய உமைப் பிராட்டியைத் தன் இடக் கூற்றிலே அன்பு பாராட்டி ஏற்றுக் கொண்ட இறைவனுக்காக உந்திபற (என்றாள்) எ - று.

(வி - ரை.) தக்கனை அம்மைக்குத் தந்தையாகவும், அப்பனுக்கு மாமனாகவும் இனம் பார்த்தோ பாடாதும் பரவாதும் இருக்கின்றாய்.

அவன் அம்முறைகட்கு உரியனுகாது அம்மையைப் பகைத்தான். அதன் மேலும் இகழ்ந்தான். அதுகண்டு அம்மையானவள் நீ எனக்குத் தந்தையல்லே என்று இகழ்ந்து ஒதுக்கி, அவனேயும் அவனேச் சார்ந்தாரையும் பகைத்து நீக்கினள் ஆகலின், இனி அவனே இன்னுன் இவன் என்று முகம் பார்ப்பது மாபெரும் பழிபாவங்களாகும் என்பாள் " தக்கனேப் பார்ப்பதென்னேடீ " என்றுள் என்க.

இனி அம்மைக்குத் தாய்வழி உறவினர் இல்லே என்பாள் " பணே முலே பாகன் " என்றுள் என்க. இனித் தக்கனேக் கண்ணுற் காணலும் கூடாதென்றுளுமாம்.

புரந்தர ஞர்ஒரு பூங்குயில் ஆகி
மரந்தனில் ஏறினுர் உந்தீபற,
வானவர் கோன்என்றே உந்தீபற. 9

இஃது, ஆவியை ஏற்றுக்கோடற் பொருட்டு முன்வந்த இந்திரன், ஆங்கு வீரபத்திரனுரைக் கண்டு அஞ்சி ஒரு பூங்குயில் வடிவு கொண்டு ஒரு மரந்தனில் ஏறினுன் என்று உந்தீபற, அவன்தான் வானவர் எல்லார்க்கும் வேந்தனுவான் என்று பாடி உந்தீபற என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) ஏடீ ! இந்திரனுர் என்பார் வேள்வியின் அகத்தும் புறத்தும் ஆருயிர் வெளவற்படுதற்கு அஞ்சிக் குயில் வடிவுற்று ஒரு மரத்திணேயே தனக்குப் பற்றுக்கோடாகக் கொண்டு அதன்மிசை ஏறினுர். (அங்ஙனம் ஏறியும் உய்ந்தாரில்லே என்று பாடி) உந்திபற, அவர்தான் வானவர் எல்லார்க்கும் வேந்தனுகிய சிறப்புடையவர் என்று பாடி உந்திபற (என்றுள்) எ - று

(வி - ரை.) இது வரலாறு கூறப் புகுந்தது அன்று ஆதலின், சிதைவுற்ற எல்லாத் தேவர்களும் கூறப்பட்டிலர் என்க. இந்திரன் அங்ஙனம் உருமாறி மரமேறியும், வீரபத்திரரால் அறியப்பட்டு உயிர் துறந்தான் என்க.

வேள்வியைக் காத்தற்கு முன்வந்த திருமால் இன்னும் செத்திலன் என்னும் நிலேமைக்குள்ளாயினன் ; அவி திரட்டிய அங்கியங்கடவுள் கையும் நாவும் தடியப்பட்டான். அவியேற்க வந்த வானவர் தலேவன் உய்ய முயன்றும பயனறறு உயிர் துறந்தான். ஏனேய வானவர்களேப் பற்றிப் பேசிப் பயன் என் ? அவரும் சிதைவுண்டனரென்க.

" புரந்தரன் " என்றமையால் பகைவர் புரங்களே அழிப்பவன் என்னும் பொருளும், " வானவர்கோன் " என்றமையால் தலேமைப் பொருளும் பயன்பட்டில, பெயரளவிற் பயன்பட்டன என்றவாறு.

இங்ஙனமே முன்னும் திருமாலேச் " சதுர்முகன் தாதை " என்றதற்

கும், படைப்புக் கடவுளைப் படைத்து, அவனாற் படைக்கப்பட்டவற்றுக்குக் காவற்கடவுளாகி, எல்லாவுயிர்களையும், காக்கப் புகுந்தவர்க்குத் தம் முயிரைக் காத்தலே அரியதாயிற்று எனவும் உரைத்துக்கொள்க.

வெஞ்சின வேள்வி வியாத்திர னார்தலை
துஞ்சிய வாபாடி உந்திபற,
தொடர்ந்த பிறப்புஅற உந்திபற. 10

இது, வீரபத்திரனாது வெவ்விதாகிய சினம் காரணமாக எச்சன், இருத்துவிக்களின் தலைவன் என்னும் இவர்களுடைய தலைகள் வெட்டுண்டு தொங்கிய திறனைப் பாடி உந்திபற, நம்மோடு இதுகாறும் தொடர்ந்து வந்த பிறப்பற்றுப் போக உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது

(பொ - ரை) ஏடீ! வீரபத்திரனாருடைய வெஞ்சினங் காரணமாக எச்சனும் இருத்துவிக்களின் தலைவன் ஆகிய இருவர் தம்முடைய தலைகளும் வெட்டுண்டு தொங்கிய திறனைப் பாடி உந்திபற, இதுகாறும் நம்மைப்பற்றி வந்த பிறவியற்றுப்போக உந்திபற (என்றாள்) எ - று.

(வி - ரை.) 'ஏடீ' என்பதனை இங்ஙனமே முன்னும் பின்னும் கூட்டிக்கொள்க. வேள்வி - எச்சன். த்ரு (த்ரு) என்பது வடமொழிக் கண்ணே பிடித்திரு, சும, கடன்படு, கைப்பற்று எனவும், அழி, உடைத்தாயிரு, வை, பகு எனவும், இரு, உய்ந்திடு எனவும், தங்கு, தொடர்ந்திடு எனவும் பொருள்படுவதொரு வினையடி. அது வி, ஆ என்னும் 'உபசர்க்கங்களோடு கூடி வ்யாத்ரு: என்றாயது. (வி + ஆ = வ்யா) அது "வியாத்திரன்" என ஈண்டுத் திரிந்து நின்றது. அது பிடித்திருப்போன், சுமப்போன், கடப்பட்டாளன், கைப்பற்றுவோன் எனவும், அழிப்போன், உடையோன், வைப்போன், பகுப்போன் எனவும், இருப்போன், உய்வோன் எனவும், தங்குவோன், தொடர்வோன், தாங்குவோன் எனவும் பொருள் தரும். இத்திருப்பாட்டிலே வேள்வியொடு அப்பெயர் தொடர்வுற்று நிற்றலையும், மற்றதன் பொருட்டொகையையும் உற்று நோக்கில், இருத்துவிக்களுள்ளே தலைமையாக வேள்வியாற்றுவோனைக் குறித்து நின்றதென்பது தானே போதரும்.

இன்னும், "வேள்வியின் பெயர்தான் யாதோ என்னில் அதுதான் குதிரை வேள்வியாம் என்பது; அதற்கு இயமானன் யாவனோ எனில் அவன்தான் தக்கனாவான் என்பது; அதன் அவையத்தார் யாவரோ எனில் அவர்தாம தருமம் முதலியோராவார் என்பது; அதனைக் காப்போன் யாவனோ எனில் அவன்தான் திருமாலாவான் என்பது; அவிப் பங்கு பெறவந்தார் யாவரோ எனில் அவர்தாம் இந்திரனை முதலாகக் கொண்ட வானவராவர் என்பது. அவ்வேள்வியின் சிறப்பு

அங்ஙனமாகவும், இயமானனும், வேள்வியும், இருத்துவிக்களும் தலை வெட்டப்பட்டனர் " (சிவ. வாயு. தக்.) எனக் கூறுதலால் இருத்துவிக்களுக்குத் தலைமகன் தலைகொய்யப்பட்டான் என்பது அடிகளுக்கும் உடன்பாடாதல் காண்க.

மேலும், ஈசானனும் பதினொரு ருத்திரர்களும் ஒழிய, அங்குப் பங்கு பற்றிய வானவரனைவரும் இறந்திருக்கவும், அவருள்ளே தலைவர்களாகிய சிலர் பெற்ற சிதைவுகளையே அடிகள் கிளந்துபோதலை உற்றுநோக்கின், இருத்துவிக்களுக்குத் தலைமகன் தலை துஞ்சிய தொன்றே கூறியருளிய குறிப்பு வெளிப்படும். பிறவுமன்ன.

தக்கன் பட்டதையும் (13), அவன் தலையிழந்ததையும் (16), ஆட்டின் தலையை அவனுக்குக் கூட்டியதையும் (11), கூறியருளிய அடிகள், வேள்வியைப் பற்றியும் சாடிய வேள்வி (5), கலங்கிற்று வேள்வி (7), மயங்கிற்று வேள்வி (15), மடிந்தது வேள்வி (16), என அவன் வரலாற்றினும் மிகுதிப்படக் கூறியருளுதலால், அத்தக்கன் தலையிழந்தான் என்றவாறே, வேள்வியும் தலையிழந்தது என்றதற்கு, இப்பகுதிக்கண் இத்திருப்பாட்டே இடம்பெறுதலானும், இனி 'வேள்வியாகிய வியாத்திரன்' எனப் பொருள் கொள்ளின், வேள்வித் தொழிலையாற்றற்கே அவன் இடமாவதன்றி, அதனை நடாத்துமாற்றல் இருத்துவிக்களுக்கே உரியதாகும் எனப் பெறப் படுதலானும், வியாத்திரனை இயமானனாக ஒருவேளை கொள்ளினும் பொருந்துவதன்றி எச்சனைக் கொள்வதற்கு ஒருவகையானும் இயைபின்று என்பது இத்துணையும் கூறியவாற்றாற் பெறப்படுதலானும், ஈண்டுக் கூறிய "வேள்வி"யும் "வியாத்திர"னும் வேறுவேறாவர் என்பது பெறலாம். இனி, எச்சன் வியாத்திரன் என்னுமிருவர் தலையும் கொள்ளாக்கால்,

" சிரமூன்றறத் தன் திருப்புருவ நெரித்தருளி " (திருப்பூ. 6.)

என்றதனோடும் மாறு கொள்ளுமென்க.

இவ்விருவர்தம் தலைகளும் துஞ்சியமையால் ஈடுபட்டு உந்தி பறக்கில், நீ நின்னைத் தொடர்ந்துவரும் பிறப்பறுவதன்கண் ஈடுபடுமாறு உந்தப்பட்டுப் பறப்பாய் ஆதலால், அவ்விரண்டனாலும் உந்தப்பட்டுப் பற என்றாள் என்க.

" வியாத்திரனார் " " புரந்தரனார் " என்பவற்றில் 'ஆர்' வந்தன. 'நரியார்' என்பதுபோல.

ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி உந்தீபற ;
கொங்கை குலுங்கநின்று உந்தீபற. 11

இது, சிறு விதிக்குத் தலையாக ஆட்டின்தலை கூட்டிய வாற்றிலே உந்தப்பட்டுப் பறப்பாயாகில், அதனால் இறைவனுடன் மாறுபட்ட தக்கன் எளிமைக்கு அச்சமும் நாணமும்

ஒருங்குற்றனையாகி உந்தி பறப்பாய் ; அங்ஙனம் பறந்த நீ, அதன் மேலும் பெருந்திணை நெறி பற்றற்கு ஒருப்படாயாகி, அன்பின் ஐந்திணை நெறிக்கண்ணே நின்று தலைமகனைக் காதலித்தலிலே உந்தப்பட்டுப் பறப்பாய் என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது. [இங்ஙனமே முன்னுள்ள துறைப்பகுதிகளைச் செவ்வி செய்து கொள்க ]

(பொ - ரை.) (ஏட) சிறுவிதி எனப் பெயரிய தக்கனின் இழந்த தலைக்காக அவ்வேள்வியிலே வெட்டுண்டு கிடந்த ஆட்டின் தலையை அவன் உடலிற் பொருத்தி உயிர்ப்பித்த திறனைப் பாடி அதனால் உந்தப்பட்டு உந்தியாட்டத்திற் பறப்பாயாக; (அங்ஙனம் பறக்கில் இறைவன் மேல் நினக்குக் காதலூற்றெடுத்துப் பெருகுமாதலின்) நின் கொங்கைகள் பருத்தனவாகி (நீ அயரும் ஆட்டத்தில் அவையும்) குலுங்க நிலைபெற்று உந்தி பறப்பாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) "விதி" என்றது தக்ஷப்பிரஜாபதி என்னும் பொருட்டாக நின்றது. விதி, பிரஜாபதி, பிரமன் என்பன ஒருபொருட் சொற்கள். இதனால் பிரமன் தலையறுபட்டான் என்று கூறிய இடங்களிலெல்லாம் தக்ஷப்பிரஜாபதி தலையிழந்தான் என்பதுவே அடிகள் கருத்தாதல் கண்டு கொள்க.

உண்மை நெறியைக் கண்டு கொள்ளமாட்டானாய்த் தலை யிழக்கப் பெற்றும், தன் தலை தீயினால் உண்ணப்பட்டமையினால், அதற்கு மாறாக ஆட்டின் தலையைப் பொருந்தி உய்வுற்றான் எனினும், அவன் என்றும் மாபெரும் பழிக்கே இடனாயினன். அங்ஙனமே நீயும் அன்பின் ஐந்திணை நெறியின் வழுவிப் பெருந்திணை நெறி பற்றி யிருப்பாயாகில், அவனை ஒப்பவே மாபெரும் பழி பூண்டிருப்பாய். நல்வினையுடையை யாதலின் இங்ஙனம் உய்ந்தனை என அவ்வன்பு நெறிக்கண்ணே உந்தப் பட்டுப் பற என அவள் அவர்க்குக் கிளந்து கூறினாள் என்க.

இதனானும், திருவாசகத்திற் கூறப்பட்ட காதல் நெறிகள் யாவும் பெருந்திணை நெறிக்கு ஏதுவாகக் கூறப்பட்டன எனவும், அதனானே கந்தருவத்தின் வழுவிப் பெருந்திணைக்கு அவாவிய அடிகட்குத் திருக் கோவையார் பாடவேண்டிய கடப்பாடு ஏற்பட்டதெனவும் காண்க.

தக்கனுக்கு ஆட்டின்தலை பொருத்தப்பட்டதெனவே எச்சனுக்கு அவன் பிணையாகச் சென்றபோது வெட்டப்பட்ட அப்பிணைத்தலையே பொருத்தப்பட்டதெனக் கொள்க.

"எச்சனுக்கு மிகைத்தலை மாற்றருளினன்" (திருச்ச. 5.) என்பதனானும், வேள்வித் தெய்வ உருவத் தியானத்தானும் உணர்க. வியாத்திரனுக்கு அவன் தலையே பொருத்தப்பட்டதென்க.

நின்று - பெருந்திணைநெறிச் சேரற்கு அவாவுதலை விடுத்து அன்பின் ஐந்திணை நெறிக்கண்ணே நிலைபெறறு.

இயமன் தலையிழந்தான் என வடமொழி தென்மொழிகளிற காணப் படும் சிவரகஸ்யமும், காந்தமும் கூறின எனினும், வியாத்திரன் என்னும் பெயரின் பொருளை நோக்கில், அஃது அவனுக்கேலாமையின் ஈண்டு அவனைக் கொள்ளற்க என்க.

உண்ணப் புகுந்த பகன்ஒளித்(து) ஓடாமே
கண்ணைப் பறித்தவா(று)உந்தீபற,
கருக்கெட நாமெலாம் உந்தீபற. 12

இது மாறுபட்ட வேள்விக்கண்ணே பங்குபற்றிய பகனும் பறிக்கப்பட்டான் என்னும் திறம் பாடி உந்தீபற, அதனால் நாமெல்லாம் கருக்கெட உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை) (ஏடீ! தக்கன் வேள்வியிலே அவனுக்குச் சார்பாக நின்று) அவியேற்று உண்ணுதலில் பங்கு பற்றப் புகுந்த பகன் என்பான், (வீரபத்திரனர்க்கு அஞ்சி) மறைந்து புறத்தே ஓடாது அவன் கண்ணைப் பறித்த திறத்தில் ஈடுபட்டு உந்திபற, (அங்ஙனம் பறித்தலால் நாம் பிறவி யறுவோமாதலின்) நாமெல்லாம் பிறவிகெட உந்தி பறப்பாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) "நாம்" என்றது, கிளந்துகூறித் தொழிற்படுக்கைக் கண்ணே அமைவுற்றதன்றி, அவர் ஆட்டயராவிடத்து அறிவுறுத்தற்கண் அமைந்து நின்றது. மங்கையர், தம கண்கள் நெறியின் புறஞ் செல்லாவிடத்து நலம் பெறுவராதலின், "நாமெல்லாம் கருக்கெட" என்றாள்.

"காசலம்பு முலையவர் கண்ணெனும்
பூசல் அம்பும் நெறியின் புறஞ்செலாக்
கோசலம்" (கம்ப பால. ஆற்.)

என்பது ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

ஒருவர பெருந்திணை நெறிபற்றற்குச் சார்பாய் இருந்தாரும் பகனே போலக் கேடடைவர் என்பது இதனால் குறிக்கப்பட்டது.

பகன் உண்டிலன் என்பது தோன்ற "உண்ணப் புகுந்த" என்றும், அங்ஙனம் கருதிப் புகுந்தோன் தண்டிக்கப்படுதற்குரியோன், அதனைப் பெற்றுக்கொள்ளாது ஓட வழிதேடினன்; அதற்குத் துணையாகிய கண்கள் பறிக்கப்பட்டானதலின் "கண்ணைப் பறித்தவாறு" என்றும் கூறினன் என்க. அவியை வாயிற்கொண்ட பூஷனுடைய வாய் நெரிக்கப்பட்டதும், மென்ற பல் தகர்க்கப்பட்டதும் மேற்கூறியருள்வர்.

தொழிற் கருவிகளுட் கையும், அறிவுக் கருவிகளுட் கண்ணும் கிளந்து கூறப்பட்டன. எச்சன், வியாத்திரன், தக்கன் என்னும் இவர் தலைமை கெட அவர்கள் தலைகள் கொய்யப்பட்டன என்க.

அங்கி கையும் நாவும் இழந்தும், பகன் கண்ணிழந்தும், பூஷன் பல்லிழந்தும, எச்சன், வியாத்திரன், தக்கன் முதலியோர் அங்கமிழந்தும் தூய்மை பெற்றனர். நாமும் அங்ஙனம் ஆறறப்படாது உய்ந்தோம் என்றபடி.

பகன் கண்ணிழந்தமையும், வேள்வி வியாத்திர தக்கர்கள் தலையிழந்தமையும், அங்கி கையும் நாவும் அற்றமையும் நினைக்கில், பிறவியும் வினையும கேடடையும் என்க.

நாமகள் நாசி சிரம்பிர மன்படச்
சோமன் முகம்நெரித்து உந்திபற ;
தொல்லை வினைகெட உந்திபற. **13**

இது, வேள்விக்குச் சார்பாக இருந்த நாமகள் நான்முகன் சோமன் என்பவர் சிதைவுற்ற திறனை நினைந்து ஈடுபாடுற்று உந்தப்பட்டுப் பறப்பாயாக, அதனால் உறுப்புக்கள் தூயனவாகுமாதலின் பழவினை கெடுமாறு உந்தி பறப்பாயாக என அவள் அவர்க்குக் கூறியது

(பொ - ரை.) (ஏட ! தக்கன் வேள்வியிலே) கலைமகள் மூக்கும், பிரமன் உச்சியும், திங்கள் முகமும் நொறுககுதலால் அழிந்துபட நீ உந்தப்பட்டு உந்தி பறப்பாயாக அதன்மேல் நமது பழவினை ஒழிய உந்தி பறப்பாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) சிரம் - உச்சி. நெரித்து - நெரித்தல், தொழிற்பெயர். அதனை, 'பாயத்து' என்பதுபோலத் துவ்வீறுபெற்ற தொழிற பெயர் என்க. நாமகள் நாசி நெரித்துப்பட, பிரமன் உச்சி நெரித்துப்பட, சோமன் முகம நெரித்துப்பட என இயைத்து, அதனால் உநதப்பட நீ உந்திபற எனமுடிக்க.

முன்னர் "விதி" என்றதுபோலவே ாண்டுப் "பிரமன்" என்றதுவும் தக்கனையே குறித்துநின்றதென்க.

"நாமகள்" என்றதனைப் பிரமாணி எனச் சிவரகஸ்யம் கூறும். "காயத்திரி, சாவித்திரி, பிரமாணி என்பவர் மூக்கும முலையுமறுபட்டனர்" என்பது சிவரகஸ்யம்.

நான்மறை யோனும் மகத்(து)இய மான்படப்
போம்வழி தேடுமா(று) உந்திபற ;
புரந்தரன் வேள்வியில் உந்திபற **14**

இது வேள்வித் தலைவனாகிய தக்கன் உயிர்விட்ட அளவிலே நான்முகன் உய்யப்போகும் வழியைத் தேடும் திறனில் உந்தப்பட்டு உந்திபற ; (அது நிகழ்ந்தது) இந்திரனை ஏற்போனாகக்

கொண்ட வேள்வியின்கண்ணேயாம் (என நீ ·தெளிவுற்று) உந்தி பற என அவள் அவர்க்குக் கூறியது

(பொ - ரை.) (ஏடீ !) வேள்வித் தலைவனாகிய தக்கன் இறக்கவும் நான்முகன் தான் உய்ந்துபோகும் வழியைத் தேடியலையும் திறனைப் பாடி அதனால் உந்தப்பட்டு உந்தி பறப்பாயாக; (அங்ஙனம் பறந்த நீ அவ்வேள்வி எவரை ஏற்போராகக் கொண்டதென்னும் ஐயத்தின்பாற் படின்,) அது (புரந்தரன் வேள்வி எனத் தெளிந்து) புரந்தரனை ஏற்போனாகக் கொண்ட வேள்வியிலே என உந்தப்பட்டு உந்திபற (என்றாள்) எ - று.

(வி - ரை.) யாகத் தலைவனும் அவியேற்போனும் பட்டனர். அப்போது திசைமுகன் உய்யப்போகும் வழியைத் தேடா நின்றான் எனப் பாடி அதனால் உந்தப்பட்டு உந்தி பறவாநின்ற நீ, பின்னரும் அவ்வேள்விக்குரிய அவியை ஏற்க முன்வந்த தலைமகன் யார் என்னும் ஐயத்தின்பாற் படுவையன்றே? அதற்கு விடையாக யான் "புரந்தரன்" என்பேன். அப்போது நீ புரந்தரன் வேள்வியில் என எடுத்த லோசையால் என்னையும் வினாவி உந்தப்பட்டுப் பறப்பாயாதலின், பிரமன் தேடுமாறு என்றதும், அது புரந்தரன் வேள்வியிலா என்றதுமாகிய இரண்டனுக்கும் "உந்திபற" என அவள் அவர்க்குக் கிளந்துகூறினாள் என்றவாறு.

தக்கன் இறந்துபட்டதும் பிரமன் என்பான், தானும் தமரும் உய்யுமாறு வீரபத்திரர்க்கு இறைவனால் அனுப்பப்பட்ட தேர்ப்பாகனாயினான். அதற்கு முன்னர் இங்ஙனம் உய்யப்போகும் நெறியை ஆராய்ந்து கொண்டிருந்தான். அதுவே இங்குக் கூறப்பட்டது. இவ்வரலாறு தேறார் இதனுக்குப் பிறவாறு உரைப்பர்.

தக்கன் பட்ட பின்னர் இந்திரன் தப்பியோடும் வழியை நாடினான் எனப் பொருளுரைப்பது புராண நிகழ்ச்சி தேறாது கூறப்பட்டதாம். ஆதலின் அதனைக் கொள்ளற்க.

இனி வரலாற்று முறை, பிரமன், காயத்திரி, சாவித்திரி, பிரமாணி, சந்திரன், கூற்றுவன், அங்கி, சூரியன், பகன், இந்திரன் முதலாய எண்மர், அசுரேந்திரன், தக்கன், அவன் மனைவி, தக்கன் மகளிர், எச்சன் என்னுமிவர் தண்டனை ஏற்ற பின்னரே திசைமுகன் உய்யப்போம்வழி தேடி இறுதியில் வீரபத்திரனர்க்குத் தேர்ப்பாகனாயினான் எனச் சிவகாந்த புராணம், சிவரகஸ்ய கண்டம், தக்ஷகாண்டத்திற் கூறப்பட்டது. புரந்தரன் குயிலுருக்கொண்டு மரம் புக்கது ஒன்பதாவது திருப்பாட்டாற் கூறப்பட்டது. அப்போது அவன் தலை கொய்யப்பட்டான். ஆதலால் போம்வழி தேடுதல் அவற்கியலாமையானும், தக்கன் இறந்த பின்னர் அவன் அங்ஙனம் ஆராய்ந்தான் என்பது முறைமாறிக் கூறப்படுதலாமாதலானும், "பட" என்றற்கே ஒருமுறை குட்டப்படுதலும், பின்னும் ஒருமுறை தலை கொய்யப்படுதலும் எனப் பொருள் கொள்ளப்படவேண்டி யிருத்தலானும்,

"நான் மறையோனும்" என உம்மை கொடுத்தும், "மகத்தியமான்" என உம்மை தொகுத்தும் கூறுதல் செய்யுளியல்பு அறியார்தம் செயலாகி அடிகட்கு இழுக்கெய்தச் செய்தலானும், "போம்வழி தேடுமாற்றி"ற்கும் "புரந்தரன் வேள்வியில்" என்பதற்கும் வேறுவேறாக முடிக்கப்பட்ட உந்திபற என்பவற்றுள் ஒன்றனையே முடித்துப் பிறிதொன்றனை வாளாவிடுக்க நேரிடுதலானும், அத்தகைய உரை அடிகள் கருத்திற்கும் உலகிற்கும் பொருந்துவ தன்று என்க.

அவன் வழிதேடியது "புரந்தரன் வேள்வியிலா?" என்று வினவி "உந்திபற" என முடிப்பினும் முடிக்க.

சூரிய னார்தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா(று) உந்திபற,
மயங்கிற்று வேள்விஎன்(று) உந்தீபற. 15

இது வீரபத்திரனார் கன்னத்திலே அடித்த அடியால் பூஷன் எனப் பெயரிய சூரியனுடைய வாயிற் பற்களைப் பெயர்த்து நொறுக்கிய திறனைப் பாடி உந்தி பறப்பாயாக, அவ்வேள்வியும் நிலைகுலைந்ததென்று உந்தி பறப்பாயாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை.) (ஏடீ!) தக்கன் வேள்வியில் பூஷன் என்னும் சூரியனுடைய (கன்னத்தில் அடித்தலால் அவனது) கொவ்வைக் கனிபோன்ற வாயினிடத்துப் பற்களைப் பெயர்த்து நொறுக்கிய திறனைப் பாடி உந்தி பறப்பாயாக, (அவி யுண்ண வந்தவர் சிதைவால் உந்தப்பட்ட நீ, அவர் சிதைவால் அவர்க்கிடமாயிருந்த வேள்வியும் சிதையும் திறனில் உந்தப்படுவாயாதலின்) அவ்வேள்வி நிலைகுலைந்தது என்று உந்தி பறப்பாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) வீரபத்திரனார் பூஷன் கன்னத்தில் அடித்த அடியானது அவன் வாயிற் பற்களை இடம் பெயரச் செய்து நொறுக்கியதெனப் பொருள் கொண்டால், கபோலத்தே அடிக்கப்பட்டான் என்னும் புராணக் கூற்றோடு ஒத்துப்போதல் காண்க.

வாருதல் - பெயர்த்தெடுத்தல். நெரித்தல் - நொறுக்குதல். மயங்குதல் - நிலைகுலைதல்.

தக்கனார் என்றே தலைஇழந் தார்தக்கன்
மக்களைச் சூழநின்(று) உந்தீபற;
மடிந்தது வேள்விஎன்(று) உந்தீபற. 16

இது, தாக்ஷாயணி ஒழிந்த ஏனைய மகளிர் தன்னைச் சூழ நின்றும் தக்கனார் தலையிழந்தார் என்று உந்திபற; அம்மட்டுமோ!

எச்சன் தலையும் வெட்டப்பட்டமையால் வேள்வியும் இறந்து போயிற்று என்று உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது

(பொ - ரை.) (ஏடீ!) அவ்வேள்விக்குத் தலைவனாகிய தக்கன் (தாக்ஷாயணி ஒழிந்த ஏனைய) மகளிர்கள் சூழ நின்றான் எனினும் அத் தக்கனார் தன் தலையை இழந்தார் என்று பாடி உந்திபற, அதன்மேலும் அவனாற்றிய வேள்வியும் (அதன் தலைவனின் தலை வெட்டப்பட்டமையால்) மடிந்து போயது என்று உந்தி பறப்பாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) தக்கன் மகளிரைச் சூழநின்று "நம் தந்தையாராகிய தக்கனார் தலையிழந்தார், இனிச் செய்வதென்னை?" என்று அவரைச் சாத்துயர் கேட்பதுபோல அவன் இழிவு புலப்படுத்த வேண்டினாள் எனினும் ஒக்கும். இங்ஙனம் அத்தோழியை உள்ளிட்டார்க்குப் பண்டு நிகழ்ந்த வரலாற்றுக்குரியராயினாரோடு அளவளாவுதலும் கூடுமென்பது "ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்" என்னும் இப்பகுதியின் இரண்டாவது திருப்பாட்டானும் பெறப்பட்டது.

இறைவி ஒழிந்த ஏனைய மகளிர் சூழ நின்ற தக்கனும் தலை இழந்தான் என்க. சூழ நின்றும் என உம்மை விரிக்க.

முன்னர்ப் "பணைமுலை பாகன்" என்றதற்கு, பல மருமக்களும் அவர் மனைவியாராகிய தன் மக்களும் வென்று விளங்கவும், தனித்தும் அவர் பகைக்கு இடமாகியும் நின்ற இறைவனும் இறைவியும் தோற்று மடியவும் வேண்டியவர், அந்நியதிக்கு மாறாக, அப்பல்லோரும் தோற்று மடியவும், இறைவனும் இறைவியும் வென்று விளங்கவும் நேர்ந்த திறம்பாடி உந்திபற என ஆண்டு விரிக்க.

தன் ஆக்கத்தையேனும் பகைவர் அழிவையேனும் கருதாது பொறாமையினால் உந்தப்பட்டு ஆற்றப்பட்ட வேள்வியாதலின், தன்னையுள்ளிட்ட யாவரும் மேற்கோடற்கு இடமாயிருந்து அழிவுற்றதென்க.

"மக்கள்" என்னும் பொது மொழி ஈண்டுத் தக்கனொடு சார்த்திக் கூறிய அதனாலே ஆடவரை ஒழித்து நின்றது. இன்னும் இதனானே அவன் மகளிருள்ளும் தாக்ஷாயணியையும் நீக்கி நின்றது.

தக்கனைச் சூழ்ந்த மகளிரும் அவர் கணவரும் அழிவுற்றனர் என்பது, தீயோர் முறையானுந்தப்பட்டு முகமன் கொண்டு சாரும் சார்பும் தீமை விளைக்கும் என்பது பயந்து நின்றது. "தக்கனார்" என்றது இழிவு குறித்து நின்றது. "தக்கன் மக்களைச் சூழ நின்றெ"ன்பது பொதுப்பட அவனது பெற்றி கூறியது. 'தக்கன் மக்களைச் சூழ நின்றும் தக்கனார் தலையிழந்தார் என்றே உந்தீபற' என முடிக்க. 'தக்கனார் அன்றே' என்னும் பாடத்திற்கு, 'என்று' என ஒரு சொல் வருவிக்க வேண்டுதலால் அது

சிறவாதென்க. 'ஆண்டு அன்றே' என்பது அப்பொழுதே என்னும் பொருள் படவும், உந்திபறப்போர் வினவும் விஞவாகவும் நிற்றற்குரியது.

பாலாக ஞர்க்(கு)அன்று பாற்கடல் ஈந்திட்ட
கோலச் சடையாற்கே உந்திபற;
குமரன்தன் தாதைக்கே உந்திபற 17

இஃது, உபமன்யு முனிவராகிய குழந்தையானது உண்டு பசி தீருமாறு அதனுக்குத் திருப்பாற்கடலை அளித்தருளிய இறைவனுக்கு உந்திபற, அங்ஙனம் பறந்த நீ, அவன் குமரனுக்குத் தந்தையாவான் எனக் கண்டு, அவனுக்கு உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்தோதியது.

(பொ - ரை) (ஏடீ!) பண்டொரு காலத்திலே உண்டு பசி தீருமாறு உபமன்யு முனிவராகிய இளமகனுக்குத் திருப்பாற் கடலையே கொடுத்த அழகிய சடைப்பிரானுக்கே நீ உந்திபற, அவனே முருகப்பிரான்தன் தந்தை என்றறிந்து அவனுக்கே உந்திபற (என்ருள்) எ - று.

(வி - ரை.) "பாலகஞர்" என்பதன் ஆரீறு உயர்வு குறித்து நின்றது. உபமன்யு முனிவர் இளமகஞராக இருந்தபோது தம் மாமஞராகிய வசிட்டஞர் ஆச்சிரமத்திலே காமதேனுவின் இனிய பாலை உண்டு வந்தனர். அதன்மேல் அவர் தம் தந்தையாராகிய புலிக்காலஞர் (வியாக்கிர பாதர்) ஆச்சிரமத்திலே வாழ்கையில் அங்கே அரைத்துக் கரைத்த அரிமாப் பாலே உண்ண நேரிட்டது. பாலகஞர் அதனை வெறுத்து உண்ணுது அழுதனர். அவர் அழுகைக்கு ஆற்ருத அவர் அன்னையார், "மகனே, நீ சிவபெருமானைப் பூசிப்பாயாகில் உனக்கு வேண்டிய இனிய பாலைப் பெறுவாய்" எனக் கூறக் கேட்டுத் தன் பசியையும் மறந்து தவமேற் கொண்டு சிவபூசை புரிந்து வருகையில், அப்பாலர்க்கு முன்னர் இறைவன் தோன்றி அவர் உண்டு பசி தீர்ந்து மகிழுமாறு திருப்பாற்கடலை அளித் தருளினன் எனச் சிவரகசியம், வாயுசங்கிதை, **மாபாரதம்,** **இலிங்க புராணம்** என்னும் இவை கூறுநிற்கும்.

அன்று - பண்டறிசுட்டு. ஈந்திட்டவன், கோலச் சடையான், அவற்கே எனக் கருத்துட்கொள்க. அச்சடை கங்கையின் ஆற்றலையும், திங்களின் கலைக்குறைவினையும் நீக்கியது.

முன்னர் முருகனுக்கும் பாலீந்தவன் என்க. பாற்கடலும் இறைவனுக்கே உரியதென்பதும், அதனை அருள் காரணமாகத் திருமாலுக்கு இருக்குமிடமாக ஈந்தனன் என்பதும் பெற்றும்.

அவனுக்கே உந்தி பறத்தலாவது, அவனில் ஈடுபட்டு அன்பால் உந்தப்பட்டு உந்தி பறத்தல் என்க.

உபமன்யு முனிவர் இளமகஞர் ஆதலின் அமுது பெறற்கு உரிய

ராயினர். நீயும் அவர் போல இளையையோ எனக் குறிப்பாகத் தோழி தலைமகளை நெருக்கி உரைத்தவாறும் கொள்ளப்படும். நீ தவறினையேனும் அவன் நின் தவறு கருதி வெறுத்திலனாய் ஆண்டருளினன். அதனால் நின் சிறுமையும் அவன் அருட்பெருமையும் இன்னவாறும் என இனியேனும் உணர்வாயாக என்றாளுமாம்.

நல்ல மலரின்மேல் நான்முக னார்தலை
ஒல்லை அரிந்த தென்(று) உந்தீபற ;
உகிரால் அரிந்ததென்(று) உந்தீபற. 18

இது, தக்கன் வேள்வியில் குட்டுப்பட்ட பிரமன், முன்னர்ச் சிவாபராதத்தால் பைரவனாரால் தலையொன்று அரியப்பட்டவனா வான் என்று பாடி உந்திபற, வீரபத்திரனார் தக்கன் முதலியோர் தலையைப் படைகொண்டு அறுத்தவாறு போலாது அவர்தம் கைந்நகத்தால் அரிந்தார் என்று பாடி உந்திபற என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (ஏடீ ! இவ்வேள்வியிலே குட்டுப்பட்டவனாகிய) நற்பண்பினையுடைய தாமரைப் பூவின்மீது வீற்றிருக்கும் பிரமனார் தலை ஒன்று விரைவாக அரியப்பட்டதென்று பாடி உந்திபற, அங்ஙனம் அரியப்பட்டது எதனால் எனின், பைரவக் கடவுளுடைய உகிரால் என்று பாடி உந்திபற (என்றாள்) எ - று.

(வி - ரை.) ''அரிந்தது'' என்றதற்கு எழுவாயைக் கூறுதொழிந் தருளினார் ; அரிந்தது எதனால் என்னும் வினாவினைத் தலைவி முதலானோர் பாற் பெறல் வேண்டி. தான் கூறுவதன்கண்ணே கேட்போர் மனம் ஈடுபட்டிருத்தலை அறியும் பொருட்டு இங்ஙனம் கரந்துரைப்பனவும் வேண்டற்பாலனவாம். இந்நுணுக்கமும் உணர்ந்தின்புறற்பாலது.

நான்முகனார் தலை ஒன்று அரிந்தது எனக் கொள்க. கேட்போரால் " எதனால் அரியப்பட்டது ?'' எனக் கேட்கப்பட்ட வினாவிற்கு விடையாக " உகிரால் அரிந்தது '' என்பது கூறப்பட்டது என்க.

நான்முகனார் தலை ஒல்லை அரிந்தது என்புழி நான்கு தலையுள்ளும் ஒன்று அரியப்பட்டது என்புழி, நான்கினுள்ளும் ஒன்று அரியப்பட்டதோ ? அங்ஙனமாகில் அவர் மும்முகனார் எனவும் இனிப் பெயர் பெறுவர் என்றாங்கு நகைச்சுவை மிகுதிப்படச் செய்யுள் செய்தருளினார் என்க. அஃது ஈற்றடியால் முன்னர் ஐம்முகனார் இன்னே நான்முகனார் ஆயினார் ; பின்னே எத்துணை முகனார் ஆவரோ அறியேம் என்பது படவும் நின்றதென்க.

இறைவனைப் போலவே தனக்கும் ஐந்தலைகள் இருப்பனவாகச் செருக்கி, இறைவனை மதியாது இகழ்ந்ததற்காகப் பைரவக் கடவுளால்

அவனது நடுத்தலை கிள்ளப்பட்டது எனச் சிவரகசியம் முதலியன கூறும்.

''நான்முக''னென்பது இடுகுறியளவாய்ப் பிரமனை யுணர்த்திற்று. முன்னர் ஐந்து தலையுடையனாயிருந்த காலத்தில் ஒன்று கிள்ளப்பட்ட தென்பது கருத்து.

ஒல்லை - விரைவு. மாபெரும் பழியாதலின் அதன் பயனை உடனே பெற்றான் என்க. அவன் வீற்றிருக்கும் மலர் செவ்வி கெடாதது. அவனே செவ்வி கெட்டான் என்பதுபட ''நல்ல மலரின்மேல் நான்முகனார்'' என்றாள். ஆரிறு இழிவு குறித்தது.

'கிள்ளியது' என்னாது ''அரிந்தது'' என்றாள், அரிந்தாங்கு நேர்படக் கிள்ளிய திறனைப் புலப்படுத்தற்கு.

தேரை நிறுத்தி மலைஎடுத் தான்சிரம்
ஈரைந்தும் இற்றவா(று) உந்தீபற,
இருபதும் இற்றதென்(று) உந்தீபற. 19

இது, சிவபெருமானுடைய பெருமையை மதியாது, இராவணன் என்பான், தன் தேரை நிறுத்தி, அது செல்லாவாறு முன்னர்த் தடுத்து நின்ற கைலைமலையைத் தோள்மேல் ஏற்றினான். அப்போது இறைவன் தன் காற்பெருவிரலால் அழுத்த அவன் வாய் இரத்தங் கக்க, தோள்கள் நெரிந்தன என்று பாடி உந்திபற என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (அளகேசனை வென்று, அவன் புஷ்பக விமானத்தைக் கைப்பற்றி, அதன்மேலேறி வரும் வழியில், எதிரே நின்ற கைலைமலையானது தன் விமானச் செலவைத் தடுத்தலைக் கண்டவுடன்) தன் விமானத்தை நிறுத்தித் தோள்களால் அம்மலையை எடுத்தவனை இராவணனுடைய தலைகள் பத்தும் தளர்வுற்றன என்று உந்தீபற, (அங்ஙனம் தலைகள் நையுண்டமையால், அவற்றின் கீழ்ப்பட்ட அவனுடைய) இருபது தோள்களும் தளர்வுற்றன என்று உந்திபற (என்றாள்) எ - று

(வி - ரை.) அவன் மலையை எடுத்தபோது அவன் தோள்கள் அழுந்தின என வான்மீகமும், ''வாயொருபதும் குருதி பொங்க'' என இராமாயணம் உத்தர காண்டமும் கூறுதலால், தலைகள் கட்டுத் தளரப் பெற்று வாய்வழி இரத்தங் கக்கப் பெற்றமையும், தோள்கள் கட்டு விடப்பட்டமையும் கொள்ளற்பாலன.

'' கருப்பமிகும் உடலடர்த்துக் காலூன்றிக் கைமறித்துக் கைலையென்னும்
பொருப்பெடுக்க லுறுமரக்கன் பொன்முடிதோள் நெரித்தவிரற் புனிதர் ''

எனச் சம்பந்த சுவாமிகள் அருளிய தேவாரத்தானும் அது தெளியப் படும்.

இறுதல், நொறுங்குதலுமாம். வாயிற் குருதி பொங்கிற்றெனவே அவன் தலைகள் நையப்பெற்றமை பெற்றாம்.

மலை எடுத்தான் சிரங்கள் ஈரைந்தெனவே அவன் இராவணன் என்பது பெற்றாம். சிரம் ஈரைந்து என்றதன்மேல் இருபது என்னின் அவை தோள்களாதல் தாமே பெறப்படுதலால் தோள்கள் எனக் கிளந்தருளிறிலர் "இருபதும்" என்னும் எழுவாய் "இற்றது" என்னும் சாதியொருமை வினைகொண்டு முடிந்தது. கைகளால் மேலே தூக்கப் பெற்ற மலை, முதற்கண் தலைகளையும், பின்னர்த் தோள்களையும் நெரித்த தென்க. கைலையையும் நந்தியெம் பெருமானையும் இறைவனையும் வணங்காத தலைகள் முதற்கண் இற்றன. கைலையை நிலைகுலைக்க முன்வந்த தோள்கள் பின்னர் இற்றன. இகழ்ந்த வாய்கள் இரத்தங் கக்கின என்க.

ஈண்டுத்"தேர்" என்றது புஷ்பக விமானத்தை. விட்புலத்திற் செல்லும் விமானமும் தேரெனப்படும். 'தசரதன்' என்னும் பெயராலும் அஃதுணரப்படும்.

ஏகாசம் இட்ட இருடிகள் போகாமல்
ஆகாசம் காவல்என்(று) உந்தீபற,
அதற்குஅப் பாலும் காவல்என்(று) உந்தீபற. 20

ஃது, உலகோர் சுழற்சி நீங்கத் தாம் வெங்கனற் சுடரொடு ...ின்ற மேலாடை இல்லாத முனிவர்கள் கதிரவன் வெப்பத்தால் சாவாமல் அவர்களைக் காப்பது இறைவனுடைய காவலாகும் என்று உந்திபற, அம்முனிவர்கள் செவ்வி மிச்குத் தன்னுடன் ஒன்றியபோது காக்கப்படும் காவலும் இறைவனுடைய காவலாகுமென்று உந்திபற என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை.) மேற்போர்வையைக் கைவிட்டு வானத்திலே சுடரொடு திரிதருகின்ற முனிவர்கள், அச்சுடர்த் தீயால் சாம்பராய்ப் போகாமல் அவர்கள் செல்லும் வானவழியைக் காத்துவரும் காவல் இறைவனுடைய காவலாகுமென்று பாடி உந்திபற, அவர்களை அதன்மேலும் காத்துவரும் காவலும் அவனுடைய காவலேயாகும் என்று பாடி உந்திபற (என்றாள்) எ - று.

(வி - ரை.) ஏகாசம் - உத்தரியம்; மேற்போர்வை. இடுதல் - கை விடுதல். எனவே அதனை அரைச்சீலைக்குமேற் கச்சாகக்கட்டிக் கொண்டனர் என்பது பெற்றாம். போகாமல் - சாம்பராய் ஒழிந்து போகாமல். "போகாமல்" எனவே ஆகாயத்தில் சுடரொடு திரிதரும் முனிவர் என்பது பெற்றாம். மேற்போர்வையின்றி ஆகாயத்திற் போவோர் என்க.

" நிலத்தின்மேல் உயிர்வாழ்வார்க்கு வெம்மையால் உளதாகிய சுழற்சி நீங்கச் சுடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது வெப்பத்தைத் தாம் பொறுத்துக் காற்றை உணவாகக் கொண்டு அச்சுடருடனே சூழ வரும் விளங்கிய சடையையுடைய அருந்தவரும்" (புறநா. 43) என்னும் உரைப் பகுதியும், மற்றதன் மூலமும், சிலப்பதிகாரத்திலே " சுடரொடு திரிதரும் முனிவரும் " (வேட்.) என்பதனுரைப் பகுதியும், திருமுருகாற்றுப் படையிலே " விண்செலல் மரபின் ஐயர்க்கு " என்பதற்கெழுதிய உரைப் பகுதியும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலன.

" அதற்கு " என்றது ஏடெழுதுவோரால் மிகைப்பட எழுதப்பட்டது போலும். " அப்பால் " என்றது இறைவன் திருவடியில் இரண்டறக் கலந்து வாழும் நிலையை. அவ்வாழ்விற்கும் அவன் காவலே இன்றியமையாத தென்க. வேனில் கழிந்த கார் முதலிய பருவங்களைக் குறித்ததென்றற்கும் இடனுண்டு. அவை அவர் தவம் பேணற்குரியன எனவும் கொள்க.

நிலத்தின்மேல் வாழ்கின்ற உயிர்கள் பழிபாவம் மிக்கவராயிருப்பின் அவற்றை ஞாயிற்றுப் புத்தேள் காய்ந்துகொல்லும் என்ப. அவ்வுயிர்கள் செய்த பாவத்திற்காகத் தாய் சேயின்பொருட்டு மருந்துண்டாங்கு அம் முனிவர் பேரிரக்கங்கொண்டு ஞாயிற்றின் வெம்மையைத் தாம் தாங்குவா ராயினர். அம்முனிவர் வானத்திலே செல்லுதலால் ஞாயிறறின் கிரணங் களும் அவர்க்குக் கீழ் ஊடுருவிச் செல்லும் ஆற்றலற்றன என்க. அதனால் நிலவுலகத்துயிர்கள் எல்லாம் நிலவி வருகின்றன. வானத்தூடு கதிரவ னொடு செல்லும் அம்முனிவர்களைக் கதிரின் வெம்மை தாக்காது காத்து வரும் காவலும், அவர் செவ்விபெற்றதன்மேலும் தன் திருவடிக்கண்ணே அமைந்துவரக் காத்துவரும் காவலும் இறைவனுடைய காவல்களேயாகும் என்பது விளக்கியவாறும்.

தம்மை மறந்து உயிர்கள்மாட்டு அருள் பூண்டு வருந்துவார் இறைவ னாற் காக்கப்படுவர் என்பதும், தம் துயரையே நினைந்து உருகுவார் இறை வன் அருள் பெறாது வருந்துவார் என்பதும், தலைமகள் தனக்கு நேர்ந்தவற் றையே நினைந்து வருந்தி வருதல் அன்பின் ஐந்திணை நெறியாகாதென்ப தும், பெருந்திணையை அவாவிய நெறியேயாகும் என்பதும், அன்ன பிற வும் ஈண்டுப் போந்தன. இதனானும் அடிகள் திருக்கோவையார் பாடிய சிறப்பு இனிது புலனாமென்க.

கனலொடு திரிதரும் முனிவர்கள்போன்றே அன்பின் ஐந்திணை நெறி யொழுகி வருவார் அமைந்து வருதல் வேண்டும் என்பது குறிப்பு. இதுவே இல்லற மாண்பாகும். பிறவும் அன்ன.

திருச்சிற்றம்பலம்

# திருத்தோள் நோக்கம்

" ாள் நோக்கம்" என்பது இழிந்த மகளிராய கூத்தியர், தம் வேந்தன் அடைந்த வெற்றித்திறனை அவன் முன்னர் நகைச் சுவை தோன்றக் கை வீசித் தமது காதலைப் புலப்படுத்த ஆடும் ஆட்டமாகும்.

பல்வகைக் கூத்தினுள் ஒன்றாகிய விநோதக் கூத்தின் பகுதிகளில் "நோக்கு" என்பதும் ஒன்று. அது ஈண்டு 'அம்மு'ப்பெற்று "நோக்கம்" என்றாகியது. கூத்தின் இயற்பெயர் அதனைக் கூறும் பாடற் பகுதிக்கு அதன் சிறப்புஞ் செயலும் இனிது தோன்ற 'திரு' 'தோள்' என்னும் அடைகளொடு புணர்ந்து அன்மொழித்தொகைப் பெயராயிற்று. தொகையை நோக்கின் அன்மொழி எனினும் பெயரை நோக்கின் ஆகுபெயரே எனக் கூறுவாரும் உளர். "நோக்கு" என்னுங் கூத்தானது, "பாரமும் நுண்மையும் மாயமும் முதலாயவற்றையுடையது" என்பர் அடியார்க்கு நல்லார். தலைமகன் செய்கைகளாகிய பெருமையும் நுண்மையும் வஞ்சமும் ஆகியவற்றை இது பொருளாக உடையது, அவன் ஆற்றலை அறியாதவர் மயங்கித் தெளிந்து நகை தழுவி அக்கூத்தினை அயர்ன் என்க.

இது தோள்வீசி ஆடப்படுவதாகிய கூத்து என்பது, " ]ந்து .. ..குலம்" (சிலப். 3, 12. உரைமேற்கோள்) என்னும் மேற்கோளின் கண்ணே " நல்லார் தம் தோள்வீச்சு " என்றதனால் தெளியப்படும். 'தோள்' என்பது கையைக் குறித்து வந்ததென்க; வீசுவது அதுவாதலின். "எண்டோள் வீசி நின்றாடும் பிரான்" எனத் திருநாவுக்கரசு நாயனார் கூறுவதும் இப்பொருட்டாதல் கண்டு கொள்க. இன்னும் இதனானும் இப்பகுதியில் வந்துள்ள " துன்றார் குழலினீர் " (2), " மங்கை நல்லீர் " (8), என்னும் இவற்றானும் மகளிரால் ஆடப்படுவதென்பது பெற்றாம். அம்மகளிரும் இழிந்தவர் ஆவர் என்பதனை "எழுவகைக் கூத்தும் இழிகுலத் தோரை ஆட வகுத்தனன் அகத்தியன் றனே" (சிலப். 3, 12 மேற்) என்பதனால் அறிக. 'விநோதக் கூத்தா'னது பல்வகைக் கூத்துக்களுள்ளே ஒன்றாதலை, " பல்வகைக் கூத்தினைப் பகருங்காலை— வென்றிலசையே விநோதமும் ஆகும் " (சிலப். 3 12. மேற்.) என்பதனாலறிக. விநோதக் கூத்துள் இதுவு மொன்றாதலை,

" பரவிய சாந்தி அன்றியும் பரதம்
விரவிய விநோதம் விரிக்குங் காலை

குரவை கலிநடங் குடக் கூத்து ஒன்றிய
கரணம் நோக்குத் தோற்பாவைக் கூத்து
என்றிவை ஆறும் நகைத்திறச் சுவையும்
வென்றியும் விநோதக் கூத்து என இசைப்ப''

(சிலப். 6 : 54, 55, மேற்கோள்.)

என்பதனால் அறிந்துகொள்க. இன்னும் இதனை தலைமகன் வெற்றித் திறனை நகை தோன்ற ஆடுவது என்பதும் பெற்றாம். கண்ணப்பன் பூசனையை விரும்பி ஏற்றவாறு தமது தோணோக்கம் ஆடுதலை இறைவன் விரும்பி ஏற்பானென இந்நூற் பகுதியி லிருந்து தெரிதலால் இக்கூத்து இழிந்த மகளிர்க்கு உரியதென்பது அடிகள் கருத்தெனத் தெளிவாகின்றது இழிந்த மகளிர்க்கு உரிய ஆட்டமேனும் உயர்ந்த பொருட்பயன் கருதிச் செய்வதாகலின் அது இழித்திடப்படாதென்க

இத்திருவாசகத்துத் திருச்சதகம் அறுபதாவது திருப்பாட்டில் அடிகள் "நீ கண்டு உவந்து அருள் செய்தலை வேண்டி அடியவர்கள் ஆடிய தோள்நோக்கத்திலே யானும் ஒருவனாக அவருள்ளே புக்குநின்றேன் அங்ஙனம் புக்குநின்றேனாயினும் அவ்வாட்டத்தின் பேறு பெறும் தகுதி எனக்கு இல்லை'' எனக் கூறுதலும் ஈண்டு ஒப்பு நோக்கி உணர்தற்பாலது.

அடிகளை ஆண்டுகொண்ட அக்காலத்திலே அடிகளொடு உட னிருந்த மெய்யன்பருள்ளே சிலர், வெற்றி பூண்டு வீற்றிருந்த இறைவன் திருமுன்னிலையில் தோணோக்கம் ஆடி இறைவனுடன் கலந்தனர் என்பதும் அடிகளும் அவரொடு சார்ந்து ஆடியருளினர் என்பதும் அப்பொழுது அடிகளுக்குத் திருவுளச் செல்வி முதிர்ச்சி பெருமையால் பின்னர்த் தில்லைக்கு வருமாறு இறைவனாற் கட்டளை யிடப்பட்டனர் என்பதும் மேற்கூறிய திருப்பாடலால் உய்த்துணரப் படுகின்றன.

இனி, இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு —

இப்பகுதி இருபெரும் பிரிவுகளையுடையது. அவற்றுள் முதலாவதன் கண்ணே இறைவனுடைய பொது வடிவமும் பிறர்க் காக அவ்வப்போது எடுத்துக்கொண்ட வடிவங்களும் அவற்றால் ஆகிய திறனுங் கூறப்படுகின்றன. இரண்டாவதன்கண்ணே அடி களின் பிறவித் தாழைத் தானே வந்து திறத்தலும், அது காரணமாக மாண்புற்றதும், அதனால் சித்தம் சிவமாதலும், செய்தன தவமாத லும், மற்றதனால் தாம் அவன் அடியவனென நாட்டில் அறியப்படு

தலும், பின்னும் அருளைப்பெறில் ஆனந்தமாகி நிற்பதும் சேவடி கூடும் வண்ணம் வேண்டுவதும் என்னும் இவை கூறப்படுகின்றன.

முதலாம் பெரும்பிரிவின் உட்பிரிவுகள் வருமாறு —

நிலன் முதலாய எண்வகைப் பொருள்களிலும் இறைவன் ஏகனாகவும், உலகு திசை என்பவையாக அனேகனாகவும் நின்று வருகின்றான் (5) எனவும், செருக்கால் மயங்கினர் மயக் கறுக்க இறைவன் தானே அவர் முன்னர்த் தோன்றுவான் (12) எனவும், இறைவன் தன் செயலுக்கும் தன் அடியார் செயலுக்கும் மாறுபட்டவரைத் தண்டிப்பான் (11) எனவும், கண்ணப்பருக்கு அருள் புரிந்தான் (3) எனவும், சண்டே சுரர்க்கு அருள் (7) எனவும், திருமாலுக்கு அருள் புரிந்தான் (10) எனவும், தாரகாட்சன் முதலிய மூவர் (9) எனவும் அடைவு படுத்துக.

இரண்டாம் பிரிவின் உட்பிரிவுகள் வருமாறு :—

யான் பிறந்திறந்து ஆழாமே ஆண்டுகொண்டான் (2) எனவும், அவன் தானே வந்து என் பிறவித் தாழைப் பறித்தான் (13) எனவும், இறைவன் என்னுள்ளே புகுதலும் ஐம்புலன் பறவைகள் சிதைந்து ஓடின (14) எனவும், என் சித்தத் தினைச் சிவமாக்கி என் செயலைத் தன் செயலாக்கினான் (6) எனவும், தன் அடியானென என்னை உலகம் நவில வைத்தான் (4) எனவும், யான் இனியும் புனலெனப் பேய்த்தேர் முகக்கும் பேதையர் போலாகாது அவனடி கூடல் வேண்டும் (1) எனவும், யாம் மானம் அழிந்தேனும் மதியிழந்தேனும் அவனருளை இனியும் பெறில் ஆனந்தமடைவோம் (8) எனவும் அடைவு படுத்துக இவற்றின் பொருளடைவிற்குக் காரணம் வெளிப்படை யாகலின் விரித்திலமென்க.

நூற்பகுதிப் பொருளடைவு வருமாறு :—முதல் சிறப்பது போலவே முடிபும் சிறக்கும் என்றவாறே இவ்விரண்டும் தம்முள் ஒத்தனவேனும் தோணோக்கம் ஆடுதலுக்குப் பேருகிய கூத்தன் சேவடி கூடுதல் கூறப்படுதலின் அடிகள் இயற்கைப் பொருளடை வில் பதினான்காவதாக நின்ற செய்யுளை முதற்கண் வைத்தருளி னார் என்க. இவ்வியைபு கொண்டு, அங்ஙனம் திருவடிக்கீழ்ப் புகுவதற்கு அவன் குணத்தைப் பரவுதல் வேண்டுமெனவும், பரவினர்க்குப் பேரன்பு கூடுமாதலால் அப்பேரன்பின் அறிகுறியாய கண்ணப்பர் திறனும், கண்ணப்பர் அன்பின் திறம் கூறியமையோ

டியையுபடத் தம்முடைய அன்பில்லாத் திறமும், அன்பிற் பெரியரையும் அன்பிற் சிறியரையும் அன்பர் எனக் கூறுவது இயையுடைத்தாமாறு அவன் எல்லாமாய் நின்றானெனவும், எல்லாமாய அவன் திருவடிகளை நினைக்கிற் சித்தம் சிவமாகும் செய்தனவுந் தவமாகும் எனவும், சித்தஞ் சிவமாதற்குஞ் செய்தன தவமாதற்கும் சான்று சண்டேசுர நாயனார் வரலாறு எனவும், சண்டேசுர நாயனார் நெறியைப்பற்றினால் மானம் போனாலும் அருள் பெறில் ஆனந்தம் பெறலாம் எனவும், அங்ஙனம் அருளைப்பெற முயல்வோர் தீயோரிடை யிருப்பினும் உய்வர் எனவும், அங்ஙனமன்றித் திருமாலைப்போல ஒரு பயனைக் கருதியாவது அன்பு செய்தல் நலந்தருமெனவும், இவ்விருவகையாகவும் அன்பு செய்யாரை ஒறுப்பதும் அவர் நலம்பெறற்பொருட்டே எனவும், அங்ஙனம் ஒறுத்தற்குத் திருவுளமின்றேல் அயன் அரி என்போரை வருத்தி ஆண்டதுபோல வருத்தியேனும் ஆளவேண்டுமெனவும், இவர் மறந்தவாறே யான் மறவாது தானே புகுந்து இன்னல் போக்கினான் எனவும், அங்ஙனம் புகுந்ததால் ஐம்புலப் பறவைகள் சிதைந்து ஓடின எனவும் பொருளடைவு கண்டுகொள்க

இஃது திருத்தில்லைக்கண் அருளிச் செய்யப்பெற்ற தென்ப

# பிரபஞ்ச சுத்தி

## நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

பூத்(து)ஆரும் பொய்கைப் புனல்இதுவே எனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுணம் ஆகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை அம்பலத்தே திருநடம்செய்
கூத்தாஉன் சேவடிகூ டும்வண்ணம் தோள்நோக்கம். 1

இது, தோழி தலைமகள் முதலியோரை நோக்கி, மங்கை நல்லீர்! போலி இன்பத் தோற்றத்தினைக் கண்டு மயங்கி வருந்தாது அதனினின்று நின் திருவடியைக் கூடும் வண்ணம் எம்மை நீக்கியவனே எனப் பாடி நாம் தோள் நோக்கம் ஆடுவோமாக எனச் சொல்லியது.

(பொ - ரை ) (மங்கை நல்லீர்!) விளங்கா நின்ற தில்லை நகர்க்கண் உள்ள திருவம்பலத்தே திருக்கூத்தயரும் கூத்தப்

பெருமானே! யாம் உன்னுடைய செவ்விதாகிய அடியைக் கூடும் வண்ணம் பொய்கைக்கண்ணே பொலிவு பெற்றும் உண்ணற்காகும் நீரானது இங்கே உள்ளதுவே என்று நினைத்து கானல் நீரினை உண் கலத்தால் முகந்து கொள்ளுதற்கண்ணே ஊக்கங்கொள்ளும் அறிவிலியின் குணஞ்செய்கைகள் எமக்கு இயல்பாகாது நீக்கியவனே! (எனப் பாடி நாம்) திருத்தோள் நோக்கம் (ஆடுவோமாக எனத் தோழி தலைமகள் முதலியோர்க்குக் கூறினாள்) எ - று.

(வி - ரை.) 'பூத்தாரும்' புனல், 'பொய்கைப் புனல்'; அஃது இதுவெனக் கொள்க. "கூத்தா சேவடி கூடும் வண்ணம் தீர்த்தாய்" எனப் பின்னும் விளிக்க. "கூத்தனே தீர்த்தாய் எனப்பாடி" என வருவிக்க. அங்ஙனம் இசையெச்சம் விரியாது, 'தீர்த்தானே நின் சேவடி கூடும்வண்ணம் நாங்கள் தோள் நோக்கம் ஆடுவோமாக' என முடிப்பாருமுளர். அம்முடிவின்கண் 'கூத்தா,' 'தீர்த்தாய்' என்பன முடிவின்றி வற்றும் என்க. அவற்றுக்கும் முடிபாக எச்சங்களை விரித்தல் நேரிடும். அங்ஙனம் விரிப்பது மரபுமாகாது; விளித்தொடர்க்கண்ணே எழுவாய் எஞ்சி வருவதன்றிப் பயனிலை எஞ்சிவராதாதலால். இன்னும், இருவேறு முடிபாக்குவாரும் உளர். அவர் கூற்றுக்கள் ஊற்றுக்கு நில்லா.

"தீர்த்தாய்" என்னும் விளி முன்னர் அருளிச்செய்ததையும், "கூத்தா" என்றது தன்னைப் பிரிந்தமையையும் சுட்டி எழுந்தன நிலைபேறுற்ற அக்கூத்து, உயிர்களுக்கெல்லாம் திருவுண்டாகவும், காட்சிக்கு இன்பூட்டவும், அதனை விடுத்துப் பிறிதொன்றனையும் நுகராவாறும் ஆடப்படுவதாதலின், அது "திருநடம்" எனப்பட்டது.

முன்னர் நின் திருவடியைச் சென்னி சேர்த்து உள்ளம் பதிவித்து மயக்கம் தீர்த்தாய், பின்னர் அதன்கீழ்க் கலத்தற் பொருட்டுத் தோள் நோக்கம் எம்மால் ஆடப்படுகின்றது என்றது திருக்குறிப்பாகும்.

உயிரும் இறைவன் வதியும் இடமாதலின், அது துன்பங் கலவாத இன்பத்தினை நுகர்தற்கு நாட்டங்கொண்டு, அதனுற் பெறும் போலி இன்பத்தினை மெய் இன்பமென மயங்கி, நாய் என்பு கறிக்க, ஆங்கு ஊறிய தன் இரத்தத்தை அதன் சுவையென்று கருதி வாய் வாளா போனவாறே போகும் என்றலை உட்கொண்டு, "பேய்த்தேர் முகக்கும் பேதை குண" ஞ் செயலுக்கு அதனை ஒப்பிட்டாள்.

கலங்கற் சின்னீர் நுகர்ந்து வந்தான் ஒரு பேதை, ஓரிடத்தே பேய்த்தேரினைக் கண்டதும் அதுவே நன்னீர் எனக் கருதித் தன் உண்கலத்திலே இருந்த அந்நீரைக் கீழே ஊற்றிவிட்டு அதனை முகக்கும் முயற்சியிலே ஊக்கங் கொண்டாற்போல அறுசமயப் பேதையரும் தத்தம் வினைக்கேற்றவாறு எய்தப் பெற்ற உலகின்பங்களை இழிவுடையன என்று நீக்கி அச்சமயத் தடத்திலுளவாகிய கானலையே நன்னீர் என மயங்கிப் பெற முயன்று

அல்லனுரு நின்றுரென உவமனும் பொருளும் தம்முள் இயைய விரித் ரக.

ஆர்தல் - உண்ணுதல். இஃது ''ஆரும் புனல்'' எனவே தனது உண் கலத்திலுள்ள நீர் ஆர்தற்காகா எனக் கருதிக் கீழே ஊற்றியமை பெற்றும். பேரின்பநீர் திகழும் தில்லை எனினும் ஒக்கும். இன்னும் இதனானே அறு சமயத் தெய்வங்களுள்ள இடங்களெல்லாம் அரும் பாலைக்கும் ஆங்குத் தோன்றும் இன்பமெல்லாம் கானற்கும் ஒப்பாகும் என்பதும் பெற்றும்.

என்றும் பிறந்(து)இறந்து ஆழாமே ஆண்டுகொண்டான்
கன்றால் விள(வு) எறிந் தான் பிரமன் காண்பரியன்
குன்றாத சீர்த்தில்லை அம்பலவன் குணம்பரவித்
துன்றுஆர் குழலினீர் தோள்நோக்கம் ஆடாமோ. 2

இஃது, எளியேமை ஆண்டவன் ஆதலின் எளியோன் ஆகான் என்பது, திருமாலும் நான்முகனும் என்னும் இருவராலும் காண்டற்கும் அரியோன் என்பதனல் இனிது விளங்கும் ஆதலின் எளியனுகவும், அரியனுகவும் தான் வேண்டியவாறே அமையும் பெற்றியனேயன்றி, நம் முயற்சியால் உணரற்பாலன் அல்லன் என்னும் அவனுடைய குணஞ் செயல்களை அங்ஙனமே பொதுப்படப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

[குறிப்பு :—இயற்பட மொழியும் தோழி கூறியனவாக வரும் இடமெல்லாம் தலைமகள் தலைமகனை இலகுவாக எய்தற்குரியனவாகு மென்க. ஈண்டெல்லாம் தோழியென உருவகிக்கப்பட்டது மன மாகலால், மனம் அடிகளுக்குச் செவ்வி யெய்திய திறத்தினையே விளக்குவதாகும். இதனல் இறைவனைக் கண்டிலேன், அவன் என்னைப் பிரிந்து வருத்தம் செய்யாநின்றுன். என் மனமோ உலகப் பற்றில் சுழலா நின்றது, தீயவழிக் கண்ணே ஈர்க்கின்றது ; என் செய்வேன் ; செத்திலேன் என்பன போன்ற தீரப்பெற்ற பெரு நிலையை ஈண்டு அடிகள்மாட்டுக் கண்டு கொள்க.]

(பொ - ரை.) செறிந்த மாலையை அணிந்த கூந்தலையுடைய மங்கைமீர் ! எக்காலத்திலும் பிறந்தும் இறந்தும் (துன்பத்துள்) அழுந்தாமல் (எளிதாகத் தானே வந்து) நம்மையாட் கொண்டவனும், வற்சாசுரனுகிய கன்றினுல் விளங்கனியை எறிந்தவனை கண்ணனும் நான்முகனும் காண்டற்கும் அரிய குறைபடாத மிக்க புகழினையுடைய தில்லையம்பதிக்கண்ணுள்ள திருவம்பலவாண னுடைய குணஞ் செய்கைகளைப் பாடி போற்றித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

வி - ரை.) துன் - செறிந்த. தார் - மாலை. கஞ்சன் ஏவலாற் உருவங் கொண்டு வந்த வற்சாசுரன் என்பவனை விளங்கனியை எறிவது போலக் கண்ணன் எறிந்து கொன்றான். "கன்றால் விள வெறிந்தான்" என்றது ஈண்டுத் திருமால் என்னும் பொருள்பட நின்றது. திருமால் திசைமுகன் என்பார்முன் அழலுருவாய் அரியனாக நின்று அவர் செருக்கடக்கியதும், தன்பால் எளியனாக வந்தாண்டு கொண்டதும் ஆகிய அவனுடைய குணஞ் செய்கைகள் என்றாள் என்க. இனி இவ்வரலாற்றுக் குரியவர் எனக் கொள்ளாது பொதுப்படக் கொள்ளினுமாம். அரியவன் எளியனாக வந்த அவனுடைய குணஞ் செய்கைகள் என்க. குன்றாத சீர் - மேலோங்கு சீர். அரி அயன் சீர்கள் குன்றுவன. நாம் ஆளப்பட்டே மாதலின் நம் சீரும் குன்றா என்க.

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊன்அமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்(து) அங்(கு)
அருள்பெற்று நின்றவா தோள்நோக்கம் ஆடாமோ. 3

இஃது, அன்பின் எல்லை மிகுமேல் அவர் செய்த இழிந்த பூசனை யும், உயர்வாகச் செய்யும் பூசனைப் பயனை நல்க வல்லதாகும் என்ப தற்கு இலக்காகிய கண்ணப்பர் அருள்பெற்ற வரலாற்றினைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) கண்ணப்பனாராகிய வேடனார் இறைவனுக்குப் பூசனை ஆற்றுவதிலே மனவிருப்பங்கொண்டு, உடம்பு குளிர்ந்து, திருக்கோயிற்குள்ளே சென்ற அடி மிகு சீரினையுடைய செருப் பணிந்த அடியாகவும், திருமுழுக்குக் கலன் வாயாகவும், சமைத்த திருவமுது இறைச்சியேயாகவும், கொண்டாற்றிய வேதாகமங் களால் விலக்கப்பட்ட அவர் பூசனை வேதாகமங்களிலே விலக்கப் பட்டவற்றை அறவே பற்றாதும், விதிக்கப்பட்ட அனைத்தையும் விடாது பற்றியும் செய்யாநின்ற பூசனைகளைப்போல விளங்க, அவர் இறைவன் அருளைப்பற்றி அவனுடைய வலச்சார்பிலே நிலை பெற்ற திறனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) பொருட்பற்றிச் செய்தல் - வேதாகமங்களிலே விலக்கிய பொருளை அறவே பற்றாது விதித்த பொருள் அனைத்தையும் பற்றிச் செய் தல். பூசனைகள் போல் விளங்க - இவர் செய்த பூசனைமுன் அவற்றுக்கு அறவே மாறுபடினும் அன்பின் ஆற்றலால் அவைபோலவே விளங்க. வெறுவிதாகிய தூய காலினராகவே கோயிற்குள் செல்லல் வேண்டு மென்பது விதி. இப்பூசனையால் வரற்பாலது மாபெரும்பாதகமாக இருப்

பினும் அவையெல்லாம் அன்பின் ஆற்றலால் மாபெரும் புண்ணியங்களாக மாறிப்போந்தன என்க. திருமஞ்சனம் திருவமுது என்னுமிவையே கூறப்படினும் ஏனையவற்றையெல்லாம் கொள்க.

வேடனார் செருப்படியால் நடந்து செல்லற்கும், வாய்க்கலசநீரால் திரு முழுக்காட்டற்கும், ஊனை அமுது செய்வித்தற்கும் விருப்புற்று ஆற்றிய பூசை மெய்குளிர்ந்து அங்கு ஆற்றிய பூசை. அது பொருட்பற்றி ஆற்றுகின்ற பூசனைகளினும் விளங்க. அவர் தாம் திருவருளைப் பற்றிக் கொண்டு நிலை பெற்ற திறன் என இசையெச்சம் விரித்து வினைமுடித்துக் கொள்க.

இறைவன் திருமேனியைத் தீண்டிய சிறப்புத் தோன்றச் "சீரடி" யென்று அது சிறப்பிக்கப்பட்டது. சேடு - பெருமை.

தம்மை யாண்டருளிய திறனைக் கூறியவள், அங்ஙனமே ஆட் கொள்ளப்பட்டார் திறனும் நினைவில் வந்தமையால், அவருள்ளே சிறந்த கண்ணப்பனார் திறனை முற்கூறினாள். அவர் வரலாறு நினைவில் வரவே அப்பேரன்பினரும் அடியார் எனப்பட்டதும், அன்பே யில்லாத தாமும் அடியேம் எனப்பட்டதும், பூசனைப் பொருள்கள் எவ்வகையனவேனும் அவர் செய்யும் அன்பே பயன்தர வல்லது என்பதும் ஆகிய குறிப்புக்கள் தோன்ற அங்ஙனம் கூறினாள்.

"அருள் பெற்று நின்றவா......தோணோக்கம் ஆடாமோ" என்னு மிதனானே வேதாகமங்களுக்கு விலக்காகிய பூசனையை ஏற்று அருள் புரிந்த இறைவன் இழிந்தோர்க்குரிய தோணோக்கம் ஆடுதலையும் நனி பெரிது ஏற்று அருள்செய்வானென்பது குறிப்பித்தாளுமாம்.

**கற்போலும் நெஞ்சம் கசிந்துருகக் கருணையினால்**
**நிற்பானைப் போலஎன் நெஞ்சின்உள்ளே புகுந்தருளி**
**நற்பாற் படுத்(து) என்னை நாடறியத் தான்இங்ஙன்**
**சொற்பால தானவா தோள்நோக்கம் ஆடாமோ 4**

இது, கண்ணப்பனார் இயல்பாகிய அன்பின் பிழம்பாயினார் ஆதலால் அவர் ஆளப்படுதற்கும், இறைவன் அவரை ஆட்கொள் வதற்கும் சிறப்பு உரிமையுண்டு ஆனால், ஓரியைபும் இல்லாத என்றன்முன் நின்றவாறே என் நெஞ்சினை உருகவைத்து அத னுள்ளே புகுந்து என்னையும் ஓர் அன்பினன் எனச் சொல்லவைத்த அவனது திறனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை.) (மங்கைமீர்!) கல்லையொக்கும் வன்மைத்தாகிய எனது மனத்தினையும் உருகவைத்து, இரக்கமேலீட்டினாலே என் முன்னர்த் திருவுருவங்கொண்டு நிற்பான்போல என் நெஞ்சி னுள்ளே புகுந்தருளி, நல்வழியிற் சென்று உய்யும் வண்ணம் என்னை

நெறிப்படுத்து, என்னை நாட்டவர் அறிந்து கொள்ள (அந்நாட்ட வரால்) தான் இன்னான் அன்பனெனத் தன்னைச் சொல்லற்பாலதா கிய பகுதியின்பாற்பட்ட திறனைப் பாடித் தோள்நோக்கம் ஆடு வோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) கருணையினால் என்னுள்ளே இருப்பான் போல எனினு மமையும். முன்னர் ஆட்கொண்ட காலத்திலே என்மேற்கொண்ட கருணை யினாலே திருவுருக் கொண்டு என்னை உருக்கி நற்பாற்படுத்து, அங்ஙனமே பின்னும் என் உள்ளத்திலும் புகுந்து மற்றதனை உருக்கி நற்பாற்படுத்து, என்னை நாடறியுமாறு அவன் சொற்பாலதாகிய அன்பின் பகுதியிலே பட்டான் என்க. முன்னர்ப் புறத்துமட்டும் நின்றான்; இப்போது அகத்தும் நின்று வருகின்றான் என்றாள் என்க.

யான் அன்பின் ஐந்திணை நெறிவழுவிப் பெருந்திணை நெறியை அவாவி வருந்திய வருத்தம் கண்டு, என் மேற்கொண்ட இரக்கத்தால், யான் தோள்நோக்கம் ஆடாநின்றபோது, என் முன்னே அவன் நிலை பெறுகின்றான். அவன் இப்போது செய்த செயலைப் போலவே முன்னரும் என் நெஞ்சினுள்ளே புகுந்து என்னைக் கனிவித்து நற்பாற்படுத்தி நாடறியச் செய்தான்.

இன்னே புறத்து நிற்பானைப்போல முன்னரும் என்புறத்து நின்று நெஞ்சம் உருக்கி உள்ளத்துட் புகுந்து என்னை நல்வழியுட்படுத்து என்னைப் பிரிந்து காலந்தாழ்த்த, யான் கழிபேரிரக்கமெய்தி நாட்டவர் முற் புகுந்து என் குறை முறையிட நேர்கையில், என்பால் வந்து இன்னே அருளிச் செய்து, மீளவும் என்னை அன்பின் ஐந்திணை நெறியே பற்று மாறு செய்தான். இங்ஙனம் நாடறியச் சொலற்பாலதான திறனைப் பாடி ஆடுவோம் என்றாள் எனத் துறைப்பொருட்கேற்ப இயைவித்து விரிக்க.

இப்போது ஈண்டு நிற்பவன், முன்னர் அன்பு காட்டி என்னை வருந்த வைத்தவனாவான் என்பதுபடப் போலியாக நின்றது. இவன் நல்லன்; அவன் இவனைப்போலக் காட்டிப் பின்னர் வருந்த வைத்தவன் என்க. இவனே முன்னர் அங்ஙனம் என்னை வருத்தினான் என்றபடி.

தோழிக்கும் தலைவிக்கும் வேறுபாடின்மையானும், அவள் ஈண்டுக் கூறும் கூற்றெல்லாம் அவளைப்பற்றியனவே ஆதலானும், அவளுக்காக அவள் நிலைபற்றி, அவள் செயல் மேற்கொண்டு, அவள் சொல்லும் மேற் கொண்டு அவளாகவே நின்றமையானும், ஈண்டுக் கூறியவனைத்தும் தலைவியின் மொழிகளாகவே அமைக்க.

'இங்ஙனம்' என்றது "இங்ஙன்" எனக் குறுகிற்று.

**நிலம்நீர் நெருப்(பு)உயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்**
**புலன்ஆய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்**
**உல(கு)ஏழ் எனத்திசை பத்(து)எனத்தான் ஒருவனுமே**
**பலஆகி நின்றவா தோள்நோக்கம் ஆடாமோ.** **5**

இது, கண்ணப்பனும் தாமும் அன்பர்கள் எனச் சொல்லப் பட்டமை, அவன் எண்வகை உறுப்புக்களைக் கொண்ட ஏகனாகவும், தனித்தனியாகக் கொள்ளப்பட்ட உலகங்களும் திசைகளும் ஆகி அநேகனாகவும் நிற்றலால், அவனுக்கு அன்பிற் பெருமைகொண்ட வரும், அஃதற்றாரும் ஓரியல்பினரே ஆவாராதலின் பொருந்துவ தாகும் எனத் தெளிந்து ஐயம் நீங்கி, அவன் ஏகன் அநேகன் என நின்றவாறு பாடித் தோள்நோக்கமாடுவோம் என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது

(பொ - ரை.) (தோழிமீர்!) நிலம் நீர் தீ காற்று ஞாயிறு திங்கள் அறிவுமயமாகிய ஆன்மா என்னும் எட்டுவகைப்பட்ட வற்றைத் தனக்கு உடலாகக் கொண்டு அதனுள்ளே ஏகனாய் நின்றா னாகிய அவ்வொருவனுமே உலகங்கள் ஏழினையும் திசைகள் பத்தினையும் தனக்கு உடலாகக் கொண்டு (அநேகன் எனக் கூறுதற் கேற்ப) நின்ற திறனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) உயிர் - காற்று. மைந்தன் - புருஷன்; ஆன்மா. ஆன்மா அறிவுமயமாயிருத்தல் பற்றிப் "புலனுய மைந்தன்" எனப் பட்டது. புலம் - அறிவு.

பாதலம் அடியிறுதியாகவும், இரசாதலம் பாதங்களின் முன் பின் பகுதியாகவும், மஹாதலம் குதிக்காலாகவும், தலாதலம் கணுக்காலாகவும், சுதலம் முழங்காலாகவும், விதலம் துடையின் மேற்பகுதியாகவும், அதலம் மற்றதன் கீழ்ப்பகுதியாகவும், பூலோகம் பிரட்டமாகவும், புவருலகம் உந்தி யாகவும், சுவருலகம் மார்பாகவும், மகர் உலகம் கழுத்தாகவும், ஜனவுலகம் முகமாகவும், தபவுலகம் நெற்றியாகவும், நாரணனுக்கு உடம்பாகும் (ஸ்ரீமத்பாக. 2-ம் ஸ்கந். 1-ஆம் அத்.) எனவும், "பூலோகம் முதலாய ஏழுலகங்களும் நாரணன் உடலங்களாகின்றன" (ஸ்ரீமத்பாக.) எனவும் நாரணனுக்கு உலகுருவம் கூறப்படுகின்றது. இன்னும் விஷ்ணு சகத்திர நாமசுலோகத்தின் மொழிபெயர்ப்புப் பாட்டாகிய "மாநிலன் சேவடி" என்னும் நற்றிணைக் கடவுள் வாழ்த்து, நாரணனுக்கு உல குருவம் இதுவெனக் கூறு நிற்கும். இன்னவையெல்லாம் இறைவனுக்கே உரியனவாதலால் ஈண்டு விரித்துரைக்கப்பட்டது.

எண்வகையாய்ப் புணர்ந்து உலகும் அவற்றின் திசை பத்தும் ஆகிய ஒவ்வொன்றும் அவன் உடலாக அமைதலால் ஏழுலகங்களும் அவனுக்கு உடலங்களாயின. அங்ஙனமாதலின் ஏகனே அநேகன் எனவும் பட்டான் என்று அறிக. இனி, ஒவ்வோர் உடலும் ஒவ்வோர் உலகமாதலால் அங்ஙனம் பலவாகியும் நின்றான் என்று உரைப்பினும் உரைக்க.

உடம்பு உறுப்பு செயல் அறிவு என்னும் இவையெல்லாம் தான் அல்லன் என்று உரைக்கப்பட்ட மைந்தன் தானே பொருள் எனத் தெளி

வற்றுத் தனதென்னும் பற்றற்றவனுகித் தன்னகத்தே சிவனைக் கண்டு தான் என்னும் பற்றும் அற்றவனுவான். அங்ஙனம் இருபெரும் பற்றும் அற்றவனுள்ளம் சிவமயமாகவும், அவன் செயல்கள் யாவும் சிவச்செயல்களாகவும் மாறுபடும். அங்ஙனம் மாறுபடுகையில் செவ்வி முற்ருவிடின் மீளவும் கீழ் நிலைக்குச் செல்லினும் செல்லும். அங்ஙனம் கீழ்ச்செல்லாது மேற்சென்ற மைந்தன் உலகுயிராய இறைவனெடு கலக்கும். அதுவே வீடுபேறெனப் படும். அவ்வுலகுயிராய் நிறகும் அதன்கண்ணே ஏழுலகு உயிர்கட்கும் உயிராய் நிற்பதும் அவற்றின் திசைகளாக நிற்கும் உயிரும் அத்திசைகளாக நிற்பவற்றின் உள்ள வுயிர் அன்ன பிறவுயிர்களாகவும் அவ்வுயிர் கூட்ட உடற்கண்ணே வெளியாக நிற்கும் உயிரும் அதன்கண்ணே தூய சிவம் என்பதுந் திகழாநிற்கும். தூய சிவம் தனக்கு உடலாக நிற்பது தூய வெளியாகும். அதுவே பராசத்தி. இன்னவையெல்லாம் சுருங்க வுரைக்கக் குறைவுபடுகின்றனவாகலால் அவற்றின் தொகை வகை விரிவுகளை யாம் எழுதவிருக்கும் "**இறைவனும் அவன் உருவ வகையும்**" என்னும் நூலில் காண்க.

**புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்**
**தத்தம் மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்**
**சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்**
**அத்தன் கருணையினுல் தோள்நோக்கம் ஆடாமோ. 6**

இஃது, இறைவன் ஏகனுய் அநேகனுய் நிற்றலானும், அவ்வியல்பினை உணர்வார்தம் சித்தம் சிவமயமாக அவர் செயல்கள் யாவும் தவமாக அவனுல் ஏற்றுக்கொள்ளப்படுமாதலானும், அன்பின் ஐந்திணை நெறி வழுவிப் பெருந்திணை நெறி அவாவிய நின் செயலும் தவமாகும், நின் உளமும் சிவமாகும் ஆதலால், அங்ஙனம் கருணையினுல் நம்மையுமாக்கும் அத்தனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(**பொ - ரை.**) (தோழிமீர் !) புத்த சமயி முதலாய சிற்றறிவினையுடைய பலவகைப்பட்ட சமயத்தினர், தங்கள் தங்கள் சமயங்கள் காரணமாகத் தத்தமக்கு இயல்பாக அமைந்த நிலைகளிலிருந்து அந்நிலைகளும் தடுமாற்றம் அடையப்பட்டுச் செய்வன அறியாராய்த் திகைத்து நிற்க, (அவர்மேல் இரங்கிய காரணத்தால்) அவருள்ளத்தைச் சிவமயமாக்கி, அதனுல் அவர் செய்தனவெல்லாம் தவச்செயலாம்படி செய்யும் தலைவனுடைய திருவருளால் நாமும் தோள் நோக்கம் ஆடுவோமாக (என்ருள்) எ - று.

(**வி - ரை.**) புறச்சமயிகள் தட்டுளுப்புப் பட்டுத் திகைத்து நிற்கும்

போது அத்தன் கருணை காரணமாக அவர்க்குத்தானே ஓருருவமும் பல உருவங்களும ஆகிநிற்கும் இயல்பினைப் படிப்படியே காட்டி அவரையும் அடிமைகொண்டு, அவர் உள்ளத்தினைச் சிவமாக்கி அவர் மூன்றும் இப்போதும் இனிமேலும் செய்த செய்கின்ற செய்யும செயல்களையெல்லாம் நற்றவச் செயல்களாக்கியும் அருள்செய்வான் என்றபடி. அத்தன் கருணையினால் நாமும் ஆடுவோமாக எனவும் இயைத்துக்கொள்க. எனவே நாமும் அங்ஙனமே ஆக்கப்பட்டேம் எனக் குறித்தாள் என்க. முதலில் அவர்க்குத் தனதென்னும் பற்றறுமாறு தன்னையறியச் செய்தும், மற்றதன்மேல் அவர் மைந்தர்க்கும் தான் இருக்குமாறு உணரச் செய்தும், அருள்வன் என்க. தட்டுளுப்புதல் - தடுமாற்றமடைதல். சிவம் - சிவமயம். அத்தன் தன் கருணையினால் புறச்சமயிகளையும், நம்மையும் அங்ஙனம் ஆககுவான் என்க.

தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாள்இரண்டும்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்
பாதக மேசோறு பற்றினவா தோள்நோக்கம். 7

இது, தலைமகன் தன்மேல் அன்பு வைத்தார் பிறர்க்குத் தீது நினைப்பினும் அவருள்ளத்தைச் சிவமயமாகவும், அங்ஙனம் அவர் நினைந்து செய்த தீய செயல்களைத் தவச் செயல்களாகவும் கொண்டு உவக்கும் இயற்கைப் பண்பினைச் சண்டேசுர நாயனார் வரலாற்று டன் படுத்துப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை ) (தோழிமீர் !) பிரமசரியத்தாராகிய தீதில்லாத விசாரசருமனார் ஆற்றிய சிவச்செயலைச் சிதைத்தவனும், சாதியில் ய முறையில் தந்தையும் ஆவானாகிய என்பானைக் கால்கள் இரண்டுமற வெட்ட, அங்ஙனம் வெட்டிய பாதகமே இறைவனுடைய திருவருளால் சிவபுண்ணியமாகத் தேவர்கள் தொழ ஏற்றுக்கொள்ளப்பட்டனவாகிய திறங்களைப் பாடி நாம் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) பிரமகத்தி பிதிருகத்தி என்பனவாகிய இருபெரும் பாவங்கள் தம் தந்தையின் தாளற வெட்டினமையால் அவர்க்கு உளவாதற் குரியன. இனி, தீதில்லாமையாக மாணியாற்றிய சிவகருமஞ் சிதைத்தான் எனக் கொண்டு, தெளிவித்தானைக் கொன்ற பெரும்பாவமும் சேர முப் பெரும் பாவங்களுமாம். "இல்லை" என்பது ஈண்டுப் பண்பு நுதலியது. "தீதிலலை" என்பது மாணிக்கும் சிவகருமம் சிதைத்தாற்கும் பொதுப்பட நிற்றலால் தந்தையானவன் மகனின் மனப்பாங்கினையும், மகனானவன்

தந்தையின் மனப்பாங்கினையும் அறிந்திலர் என்பது வரலாற்று நிகழ்ச்சியைப் புலப்படுத்த வந்தது. ஈண்டு 'ஐ' சாரியை எனக் கொள்க. மாணியைப் பெற்ற தத்தனார் பெரும் புண்ணியமுடையர் என்பது தானே போதரும். இன்னவற்றால் மாணி மாபெரும் பாதகங்களே செய்தார் என்பது வெளிப்படை. தத்தன் தன் மகனாரை ஆனிரை மேய்க்க விட்டதும் அவையத்தார் அங்ஙனம் செய்யக் கட்டளையிட்டதும் குறிக்கொள்ளற்பாலன.

அவையத்தார்க்கு அஞ்சியே தத்தன் தன் மகனார் செயல் கண்டு சினங்கொண்டு அவரைக் கோல்கொண்டு அடித்து இகழ்வானாயினன். அதனைப் பொருட்படுத்தாது அடிகள் இருந்தமையினாலே, தந்தையானவன் கோபமயக்கத்தால் திருமுழுக்கிற்கென வைத்திருந்த பாற்குடங்களைக் காலால் உருட்டிச் சிதைத்தான். அடிகளும் சினமிக்குத் தந்தையென அறிந்திருந்தும் அவன் கால்களைத் தடிய எண்ணி அங்ஙனமே தடிந்தனர். தத்தனுக்குச் சிவபாதகம் இயைந்தது. அடிகளுக்குப் பிதிர்ப்பாதகம் ஏய்ந்தது. தத்தன் அவையத்தாருக்கு அஞ்சிச் சிவபாதகம் எய்தினன். அடிகள் சிவனுக்கஞ்சிப் பிதிருபாதகம் எய்தினர். தத்தன் அவையத்து மறைபொருளாக வீற்றிருப்போன் இறைவனே என அறியாமையால் அவனுக்கெய்திய அவையத்தையும் இறைவனையும் வேறுபடுத்திய சிவாபராதம் சிவபூசையைச் சிதைக்கும் பாதகத்தினையும் விளைத்தது. அவையத்தார் கட்டளையை அவன் மகன் முறைமையையும் பாராது நிறைவேற்றினமையாலும், அடிகளைப் பெற்றெடுத்த பேற்றினாலும், அவனும், அவன் குடும்பத்தாரும் வீடுபெற்றனர்; சிவபாதகம் அவன் கால்களை வெட்டி வீழ்த்தியது.

அடிகள் தந்தைமுறையை இறைவன்பொருட்டு நீக்கினவராதலின், அவர்க்கு இறைவனே தந்தையாயினன்; தனிப்பெரும் பதமும் அளித்தான். இறைவன் மறை பொருளாயுள்ள அவையத்தினும் அவன் நேரே வீற்றிருக்கும் பூசனையே சிறப்புடைய தென்றபடி.

பல வேறுவகைப்பட்ட அறங்களிலும் அவன் வீற்றிருப்பினும், அவ்வறங்களையெல்லாம் விளங்க அறிந்து போற்றப் புகுந்துழி, அறியாமை முதலாய பலவற்றாலும் இன்னற்படவே நேர்வதன்றி, அவனைக் காணலும் அருள்பெறுதலும் நேராவென்பது, எச்சதத்தன் முதலியோர் வரலாற்றானும், அறிந்தும் அறியாதும் அன்புடன் அவனைத் திருவுருவில் வைத்து வழிபாடாற்றிவருவோர், இடையூறுகளுட்படாராய், அவன் அருள்பெற்று, யாவும் அறிந்து இன்புறுவர் என்பது சண்டேசுரனார் முதலியோர் வரலாற்றானும் பெறப்பட்டன. இன்னும் இதனானே அறஞ்செய்தல் நன்றென்பதும், அதனினும் நல்லது பயன்கருதாது அதனை ஆற்றல் என்பதும், அதனினும் நல்லது தன்னை மறந்து இறைவன்மேல் அன்புமயமாய் அவனைப் பூசித்தல் என்பதும் பெற்றவாறும் கண்டுகொள்க.

சோறு - புண்ணியம். "பாதகமே சோறாக" ஏற்றுக்கொள்ளப்பட்ட

தென்க. தொண்டர்க்கு அதிபராதலின், மாணியானவர் தேவராலும் தொழப்பட்டனர் என்க.

மானம் அழிந்தோ மதிமறந்தோ மங்கைநல்லீர்
வானம் தொழும்தென்னன் வார்கழலே நினைந்(து) அடியோம்
ஆனந்தக் கூத்தன் அருள்பெறில்நாம் அவ்வணமே
ஆனந்தம் ஆகிநின்று ஆடாமோ தோள்நோக்கம். 8

இது, நாம் முன்னர் ஆட்டயர்ந்த தோள்நோக்கம், தலைமகன் மேல் அன்பற்று ஆடிய காரணத்தால், அதன்பயன் காணமாட்டாமையால் வெறுக்கப்பட்டது. இன்னே மெய்யன்புடன் அயர்ந்தமையால் உளதாகும் பயன் புலப்படுதலால், மானம் அழிதலைப் பெற்றே, மதியை மறந்தோ பின்னும் அவனருளைப் பெறின், அதனால் நாமும் இன்புருவாய் நின்று ஆடுவோம் எனப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது

[அப்போது ஆடி அவலம் பெற்றதுபோல் எப்போதும் ஆடப் பெறேம் அப்போது மானம் அழிந்தோம், மதிமறந்தோம். அத்தகையேம் இப்போது அவனருளைப் பெற்று ஆனந்தங்கொண்டு தோள்நோக்கம் ஆடாநின்றேம் இனியும் மானமிழந்தோ, மதிமறந்தோ அவனருளைப் பெறுவோமாகில், நாம் பண்பியாகவும், நம் பண்பு ஆனந்தமாகவும் கொள்ளாது, அவனேபோல நாமுமாகி நிலைபெற்றுத் தோள்நோக்கு ஆடுவோமாக எனப் பாடி ஆடுவோம் என அவள் அவர்க்குக் கூறியதாகக் கொள்க. அவ் வாட்டம்தான் அவனது ஆனந்தக்கூத்தினை ஒக்குமென்றபடி. அஃதாவது அவனுடன் இரண்டறக் கலந்து ஒருங்காடுதல் ]

(பொ - ரை ) நலன் அமைந்த மங்கைமீர்! அடியேம் எனப்பட்ட நாம் (இன்னும் ஒருமுறை) நம் பெருமை அழியப்பெற்றே அஃதன்றி நம் அறிவினை மறந்தோ (அவன் அருளைப் பெறுதல் வேண்டும். அங்ஙனமே அவற்றை இழந்து) தென்னவனுடைய நீண்ட கழலை அணிந்த திருவடியைத் துணையாக நினைந்து இன்பக்கூத்தனுடைய திருவருளைப் பெற்றக்கால் அவன் ஆடும் அவ்வண்ணமே அவனுடன் ஒன்றுபட்டு அவனேபோல நாமும் ஆனந்தமாக நிலை பெற்றுக் கூத்தாடுவோமாக என்று பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) மானம் - (தலைமகளுக்கு விதிக்கப்பட்ட குலம் முதலாயவற்றின்) பெருமை. மதி - (தலைமகளுக்குச் சொல்லப்பட்ட) அறிவு. அஃதாவது களவுக் காலத்திலே தோழி யாற்கொளுத்தப்பட்டபடியே

அறிந்து நடத்தல். தோழி கூறிய அறிவுரைகளைத் தலைமகள் மறந்ததனால் அவள் மானம அழிந்ததென்க. இதனால், அவள் ஐந்திணை நெறியைக் கைவிட்டதற்கும், பெருந்திணைநெறியை அவாவியதற்கும் உரிய காரணம் கூறப்பட்டது. அப்போதாடிய தோள்நோக்கிற்கு நாட்டவர் அலரே பயனாயிறறு. அது திருச்சதகம் அறுபதாம் பாட்டால் விளக்கப்பட்டது. இப்போது ஆடுவது இன்பந் தரறபாலது. இனி யாடுவது இன்பமாய் நிற்கும் பெறறி தரற்பாலது. இம்மட்டோடு அமையாது அதனையும் பெற்றுக் கொள்ளுமாறும் நம் மனத்தை நிலைப்படுத்தித் தோள்நோக்கமாடுவோமாக என்றாள் என்க.

முன்னர் அழிந்த மானத்தினும் இனி அழிந்தேனும், முன்னர் மறந்த மதியினும் இனி மறநதேனும் அவ்வானந்தமாக நிறறலைக் குறிக்கோளாக் கொண்டுநின்று இப்போது ஆடுவேமாக என இயைத்துக்கொள்க.

'மானமழிந்தோம் மதிமறந்தோம் அவனடியை உன்னி அருள் பெறில் ஆனந்தமாய் நின்று தோள்நோக்காடுவோமாக' என்றுங்கு உரைப் பாருமுளர். பெற்றால் ஆடுவாம், பெறாவிடில் வாளா இருப்பாம் எனக் கருதப் பட்டு இப்பகுதிக்கண் அதிகரிக்கப்பட்ட பொருளுடன் மாறுபடுதலால் அவர் உரை கொள்ளற்க.

'முன்னர்த் தோள்நோக்காடி மானமழிந்தோம், மதிமறந்தோமாகிய நாம் அவனருள் பெறில் அவ்வண்ணமே ஆனந்தமாய் நின்றாடுவோம் எனப் பாடித் தோள்நோக்கமாடுவோமாக' என இசையெச்சங்களை வருவிக்க.

**எண்ணுடை மூவர் இராக்கதர்கள் எரிபிழைத்துக்**
**கண்ணுதல் எந்தை கடைத்தலைமுன் நின்றதற்பின்**
**எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்**
**மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோள்நோக்கம். 9**

தம்மானம் அறிவு என்னுமிவற்றை விடாதுபற்றியோர் அழிவர் என்பதற்கும், விட்டவர் நீடுவாழ்வர் என்பதற்கும் மேற்கோள்களாகத் திரிபுரர்களுள்ளே தாரகாக்ஷன் முதலியோர் நீடு வாழ்வதனையும் இந்திரன் முதலியோர் பலர் சிறுபோதுள்ளே அழிந்தமையையும் மேற்கொண்டு பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ). (மங்கைமீர் !) திரிபுரர்களாகிய அசுரர்களுக்குள்ளே அன்பர் என்னும் நன்மதிப்பினையுடைய தாரகாக்ஷன் முதலாய மூவரும், திரிபுரர்களை எரித்த புன்னகை எரியினின்று உய்வுற்று நெற்றிக்கண்ணையுடைய நம்மப்பன் திருவாயிற்கடைக் கண்ணே நிலைபெற்ற பின்பு கணக்குள் அடங்காத

எத்துணையோ பிரமர்களும், பூமியை உண்ணுகின்ற திருமால் பலரும் இறந்துபட்டனர்காண் என்று பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) எண் - மதிப்பு. இராக்ஷஸர்—"காக்க" என ஒலியிட்டார்; அப்பெயர், ஈண்டுச் சாதியாரைக் குறியாது, அவர் பிறந்தவுடன் தம்மைக் காக்கவெனக் கூறிய கூற்றினால் அங்ஙனம் காரணங் காட்டிக் கூறும பொதுப்பெயராய் நின்றது.

திருக்கயிலையின் வாயிற்காவலராகத் தம்மை ஆக்குமாறு இறைவனை அம்மூவரும் வேண்ட அங்ஙனமே அருளிச் செய்தாரெனச் சிவரகஸ்யம் முதலாயின கூறுநிற்கும். அங்ஙனம் நின்ற அவருள் ஒருவரைப் பின்னர் முரசொலிப்போராகவும் கொண்டனன் என்றும் கூறுப.

எண்ணிலி - எண்ணில்லாதது. அஃதாவது அநந்தம். மிசைதல் -

இந்திரர் முதலாயினர் பலருடைய அழிவுகள் கூறவே ஊழியும் பலவாயின என்பது விளக்கப்பட்டது.

பிறப்பிலும் சிறப்பிலும் பெருமைப்பட்ட இந்திராதியோரினினும், அவற்றிற் சிறுமைப்பட்டவர் மெய்யன்பே சிறந்ததென்பது இதனால் விளக்கப்பட்டது. இதனாற் குலச்சிறப்பும் மதிச்சிறப்பும் இழப்பினும் ஐந்திணை நெறிவழுவிப் பெருந்திணை நெறி அவாவியும் தலைமகள் சிறுமைப் பட்டனளேனும், அவனது மெய்யன்பினால் பெருமைப்பட்டவளேயாவாள் என்பது விளக்கியவாறு.

**பங்கயம் ஆயிரம் பூவினில்ஓர் பூக்குறையத்**
**தம்கண் இடந்(து) அரன் சேவடிமேற் சாத்தலுமே**
**சங்கரன் எம்பெருமான் சக்கரம்மாற்(கு) அருளியவா(று)**
**எங்கும் பரவிநாம் தோள்நோக்கம் ஆடாமோ. 10**

இஃது, இறைவனைப் பெறுதற்பொருட்டே மற்றவனை அன்பு செய்யாது, வேறும் ஒரு பயனை விரும்பி அன்பு செய்வோரையும் காப்பவன் என்னுமிதற்குச் சான்றாக இறைவன் திருமாலுக்குச் சக்கரமருளிய வரலாற்றை இவ்விடத்தன்றி எவ்விடத்தும் போற்றுவோம் எனப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோம் என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை) (தோழிமீர்!) சக்கரப்படை பெறக் கருதிய திருமால், இறைவனுக்கு தாமரைப்பூவால் சகத்திரநாமார்ச்சனை ஆற்றி ஆராதனை செய்துவரும் நாட்களில் ஒருநாள், செய்யும் அருச்சனையிலே ஒரு பூக்குறையக்கண்டு, அதற்கு மாற்றாகத் தனது கண்ணைத் தோண்டிச் சிவபெருமானுடைய சிவந்த திருவடியின்

மேலே சாத்திய அவ்வளவிலே, நலன் தரற்பாலனாகிய எம்பிரான் அவனுக்குச் சக்கரப்படையைக் கொடுத்தருளிய திறனை நாம் எவ்விடத்தும் துதித்து(ப்பாடி)த் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) முழுப்பூவாலும் இதழாலும் அருச்சனை செய்யும் வழக்காறுண்டு. 'தன்' என்பது எதுகை நோக்கித் "தம்"மெனநின்று புணர்ந்தது. தன்னெனவே பாடங்கொள்ளினும் இழுக்காது.

சங்கரன் - நலம்செய்வோன். திருமாலையே பரம்பொருளெனக் கொண்டு மயங்குவோரிடையினும், சிவபூசைப்பேறு அறியாரிடையினும் துதிக்கின், அவர்களும் கரையேறுவர்' என்பதுபட "எங்கும் பரவி" என்றருளிச் செய்தாள்.

கண் இடந்து அப்பிய செயலில் கண்ணப்பரும் திருமாலும் தம்முள்ளே ஒப்பரேனும், கண்ணப்பர் சிவபெருமான்மீது பேரிரக்கங்கொண்டவராய்த் தன் புலனையும் மறந்தவராகவும், திருமால் பிறிதொரு பயன் கருதியவராகவும் ஆற்றினராதலின், அவ்விருவர்தம் நிலைகளும் வேறு வேறெனவே படும். இதனால்,மனக்கோளைக் கொண்டே பெருமை சிறுமைகளைக் கணிப்பதல்லது, செயல் முதலாயவற்றால் கணிப்பது முறையாகாது என்பது பெறப்பட்டது.

திருமால், சுபன் என்னும் அரசன் காரணமாகத் ததீசி முனிவருடன் போர் செய்கையில், அவர்மீது விடுத்த ஆழிப்படை அவரைத் தாக்கி முனை ஒடிந்துபோனமையால், இறைவனுக்கு அருச்சனை செய்கையில், ஒரு பூக் குறையக் கண்டு, அதற்கு மாற்றாகத் தன் கண்ணையிடந்து அருச்சித்தனன். ஆங்குச் சிவபெருமான் அவன் முன்னர்த் தோன்றி அவன் கண்ணையும் அமையச்செய்து ஆழிப்படையையும் அருளினன் என உபதேசகாண்டம் முதலாயின கூறும். அவன் இறைவன் வலப்பாதத்தே கண்ணிடந்து அர்ச்சித்தான் என்ப.

பங்க - சேறு. ஜம் - முளைப்பது. பங்கஜம் - தாமரை. அது "பங்கயம்" என மருவிற்று. திருமால் செய்தவாறு அவனடியவரையும் செய்விக்க அங்ஙனம் கூறியதுமாம்.

திருமால் கண்ணிடந்தமைக்குக் காரணம் அவன் குறைவேயாகும். கண்ணப்பனார் இடந்தமைக்குக் காரணம் இறைவன் பெற்ற குறைவேயாகும்.

**காமன் உடல்உயிர் காலன்பல் காய்கதிரோன்**
**நாமகள் நாசிசிரம் பிரமன் கரம்எரியைச்**
**சோமன் கலைதலை தக்கனையும் எச்சனையும்**
**தூய்மைகள் செய்தவா தோள்நோக்கம் ஆடாமோ. 11**

இது, சிவாபராதம், அடியார்க்குத் தீங்கு செய்தல் முதலாய பெரும்பாவங்களைச் செய்த உறுப்புக்களைச் சிதைத்தலால்,

அவற்றுக் குரியராயினுரைத் தூய்மை செய்தலும் தலைமகற்கு இயல்பாகும் என்னுமிதற்கு மேற்கோளாகக் காமன் காலன் ஞாயிறு திங்கள் நாமகள் நான்முகன் தக்கன் எச்சன் அங்கியங்கடவுள் என்னும் இவ்வொன்பதின்மரும் உறுப்புச் சிதைவுற்றமையால் தூயவராயினுர் என்று பாடி நாம் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர்!) இறைவன் தவநிலைக்கு ஊறுசெய்ய வந்த காமன் உடலை எரித்து அழித்தும், மார்க்கண்டனுர் உயிரைக் கவர வந்த காலனுடைய உயிரை நீக்கியும், தலைவனை மறந்து அவியை மென்ற தெறுகின்ற ஞாயிற்றின் பற்களைத் தகர்த்தும், தலைவனை மறந்து அவ்வவியை மணந்த நாமகளது மூக்கினை அரிந்தும், தலைவனுக்குரிய அக்கிர உறுப்பினுக்கு மாறுபடப் புகுந்த நான்முகன் உச்சியைக் குட்டியும், இறைவனுக்கு உண்ணத் திரட்டாது பிறர்க்கெனத் திரட்டிய தீக்கடவுள் கையை வெட்டியும், தலைவனை மதியாது முகப்பொலிவுகொண்ட திங்களது முகத்தினை ஒளிகெடத் தேய்த்தும், இறைவனுடைய தலைமையொடு மாறுபட்ட தக்கனுக்கும் எச்சனுக்கும் தலைகளைக் கொய்தும் அவரைத் தூயராகத் தூய்மைகள் செய்த திறனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றுள்) எ - று.

(வி - ரை.) இதனுல், தீதுசெய்தார் தீங்கின் அளவிற்கேற்றவாறே ஒறுப்பான் என்பதும், அவர்மேல் இரக்கமேலிட்டு அவரை ஆட்கொள்ளவே அங்ஙனம் ஆற்றுநின்றுன் என்பதும் பெறப்பட்டன. இன்னும் இதனுலே, நம்மை இதுகாறும் வருத்தி வநததும், நம்மேற்கொண்ட கருணையால், நம்மையாட்கொள்ளற் பொருட்டாகும் என்றுள் என்பதும் பெற்றும்.

**பிரமன் அரிஎன்(று) இருவருந்தம் பேதைமையால்**
**பரமம் யாம்பரம் என்றவர்கள் பதைப்பொடுங்க**
**அரனுர் அழலுருவாய் அங்கே அளவிறந்து**
**பரம்ஆகி நின்றவா தோள்நோக்கம் ஆடாமோ.** **12**

இது, நான்முகனும் திருமாலும் என்று சொல்லப்பட்ட இருவரும் யாமே பரம்பொருள், யாமே பரம்பொருள் என்று வாதிட்டவர்களாய்த் தமக்குள்ளே போரிட்டுக்கொள்ளும் அவர்களுடைய பரபரப்பு ஒடுங்க, அவரிடையே சிவபெருமான் அனற்பிழம்பு வடிவாகி எல்லை கடந்த பரம்பொருளாய் நின்ற திறனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை) (தோழிமீர்! நம் தலைவராகிய) அரனார், அயன் அரியென்று சொல்லப்படும் இருவரும் தம்மறியாமையால் யாமே பரம்பொருளாவேம், யாமே பரம்பொருளாவேம் என்று தமக்குள்ளே போரிட்டுக்கொள்ளும் அவர்களுடைய பரபரப்பொடுங்க அனற்பிழம்பு வடிவமாய் எல்லை கடந்து, தானே பரம்பொருளாகி நின்ற திறனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) பரமம் யாம் பரமென்றவர்கள் - யாம் பரம்: யாம் பரம் என்றவர்கள். என்றவர்கள் - என்று சொல்லிப் போரிட்டுக்கொண்டவர்களுடைய. பதைப்பு - பரபரப்பு. வடிவச்சோதியானும் விரிவானும் பரம்பொருளை ஒத்திலர் என்க.

படைப்பும் காப்பும் ஆகிய இவற்றுக்குரிய காலமாகிய பேரூழியின் முடிவிலே, பிரமன் படைப்புத் தொழிலாட்சியற்று, நீரிடைத்துயின்று கொண்டிருந்த திருமாலை எழுப்ப. திருமால் மாயையால் மயக்கப்பட்ட பிரமன் தானே பரம்பொருள் என்றும், அரனார் மாயையால் மயக்கப்பட்ட அத்திருமால் தானே பரம்பொருள் என்றும் கூறிப் போர் புரிகையில், அவரிடையே இறைவன் அழற்றூண் வடிவினனாகத் தோன்றி, அவ்விருவரையும் முறையே அன்னப்புள்ளாகவும் பன்றிவிலங்காகவும் அடிமுடி கண்டற்கண் ஊக்கிக் களைக்க வைத்துத் தன்னுள் ஒடுக்கினன் என்னும் வரலாறேரண்டுப் போந்தது என்க.

வரலாற்றின் நிகழ்ச்சிமுறை நோக்கிப் பிரமன் முதற்கண்ணே கூறப்பட்டான். பிரமனிற் பெரியோன் தான்ஆதலை அவன் காணுவாறு அவனை மயங்கச் செய்தான். பிரமனைத் துன்புறுத்தியமையால் அரனும் அத்திருமாலைத் தன்னினும் சிறியன் என்று உணராவாறு மயக்கினன். அம்மயக்கத்தால் அவர் தம்முட் பொரலாயினர் என்க.

இந்திரனை முதலாகக்கொண்ட எல்லாரும் ஒடுங்கிய அக்காலத்தே எஞ்சியிருப்போன் இறைவனே யாதலானும், அவனே அவர் போரை நீக்கி ஒடுக்கவல்லனாதலானும், அவன் அவரெதிரே அழலுருவாய் அளவிறந்த பரமாகி நின்று அவர் பதைப்பினை ஒடுக்கினனென்க.

அப்பேரூழி முடிவின்கண்ணே கரந்துகொள்ளற்காகத் திருமாலானவன் நான்முகனை மாயையால் மயக்கித் தன்னுள் ஒடுக்கவேண்டி அவனைத் தன்னுடன் போர்புரியச் செய்தான். அங்ஙன மாற்றிய திருமாலைத் தன்னுள் ஒடுக்குமாறு அரனாரும் அவர் எதிரே அழலுருவாய்நின்று அவ்விருவரையும் தன்னுள் ஒடுக்கினன் என்க. இதனால் பிரமனைத் தன்னுள் ஒடுக்குமாற்றல் திருமாலுக்கு இன்றென்பது பெறப்பட்டது. தனது உந்தியிலே பிரமன் தோன்றிய காரணத்தைக்கொண்டு திருமால் மதிமயக்கப்பட்டு அங்ஙனம் நினைத்தான். தான் காவலை நிறுத்தியமையால், ஏனைய படைப்பும் அழிப்பும் ஒடுங்கின என்று எண்ணுமாறு திருமாலை இறைவனும்,

தான் தனது படைப்புத் தொழிலை நிறுத்திவிட்டமையால் ஏனைத் தொழில் களும் ஒடுங்கின என்று என்னுமாறு நான்முகனையு நாரணனும் தத்தம் மாயைகளால் மயக்கினர். அவ்விருவர் மாயையுள்ளே இறைவன் செய்த மாயையே அவ்விருவர் பதைப்பையும் ஒடுக்கிறது.

படைப்புக் காலங்களிலே திருமாலை உள்ளிட்டோரைத் தூய்மை செய்தவாறே, அவர் பதைப்பு அறவே ஒடுங்கி உய்யுமாறு ஊழி முடிவின் கண்ணும் அவரைத் தம்முள் ஒடுக்கியருளுவன் என்னும் இயைபால் முன்னர்த் திருப்பாட்டை இஃது அடுத்துநின்றது எனக. அப்போது அவர் மலங்களைந்து பிரணவமந்திர உபதேசம் செய்து, தான் எதிர்நின்று, காட்சியளித்துத் தூய்மை செய்து, அவரைத் தன்னுள்ளே கரந்து கொள்வான் என்க. முன்னர்த் திருப்பாட்டிலே உலகு நடைபெறுமாறு மாறுபட்டாரைத் தூய்மை செய்தான் என்பதும், இத்திருப்பாட்டிலே அத் தேவர்தம் தலைவர்கள் தன்னுள்ளே ஒடுங்கத் தூய்மைகள் செய்தான் என்பதும் கூறியவாறு.

ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக்(கு) இறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
ஊழிமுதற் சிந்தாத நன்மணிவந்(து) என்பிறவித்
தாழைப் பறித்தவா தோள்நோக்கம் ஆடாமோ. 13

இது, யான் தன்னைப் பணியாதிருப்பினும், நம் தலைவன் தானே வந்து என் பிறவித் தாழைப் பறித்தான், அங்ஙனம் அவன் செய்த திறனைப் பாடி நாம் தோள்நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர்!) எத்தனையோ காலமெல்லாம், விழுப்பொருளாயினர்க்கும் விழுமியோனாகிய நம் தலைமகனைப் பணிந்து இல்லற நெறி மேற்கொள்ளாது, போலியன்புப் பயிர்க்கு வீணுக்கிறைத்து வந்தேனும், அறிவாலும் தொண்டாலும் வறியேனுமாகிய என் பிறவித் தாழை ஊழி முடிவின்கண்ணும் சிதைத்திலாத நன்மணிபோன்றவனாகிய அவன் என்பால் வந்து பிறவித் தாழைப் பறித்தவாறு பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) அருச்சனையாகிய வயலுள் மெய்யன்பாகிய விதையை விதைத்து, இறைவனாகிய மேகம் பொழிந்த அருள்நீரைப் பாய்ச்சிப் பயிர் வளர்த்து, அவன் அன்பனாகி ஆனந்த விளைவை நுகர்வதுவே பரம்பரனைப் பணிவதாகும். ஊழிமுதல் - ஊழி முடிவின்கண்ணும். சிந்துதல் - அழித்தல் பணியாது பாழுக்கிறைத்தமைக்கு தன் அன்பின்மையே காரண மாகுமெனத் துணிந்து இங்ஙனம் கூறினாள்.

பரமாயினுர்க்குப் பரன் பரம்பரன் என்க. போலி வணக்கமாகிய வயலுள்ளே, போலியன்பாகிய விதையை விதைத்துப் பேய்த்தேரைப் பாய்ச்சி வீணுக்கு உழன்றேன் என இரங்கினுள். இத்தகையோர் பிறவிச் சிறையிற்படுவதே முறையாகவும், நம் தலைவன் என் பிறவிச் சிறைச்சாலையின் தாழக்கோலைப் பறித்து என்னை விடுவித்தான், ஈதென்ன வியப்பு! என வியந்து பாடித் தோள்நோககமாடுவோம் என்ருள் என்க.

போலி உழவு புரிந்தவர் விளைவு பெருது பசி பிணி முதலிய மீளாச் சிறையிற்பட்டு உழல்வர். அவர் ஒப்பவே பிறவிச் சிறைக்கண் அடைக்கப் படவேண்டிய என்னைச் சிறைக்கதவின் தாழைப்பறித்து வீடுபுக்கு வதிய அருள் செய்தான் என விரிக்க.

பிறவித்தாழ் - பிறவிச்சிறைக் கதவின் தாழக்கோல். வான்மணி, சிந்தாமணி முதலியவற்றின் கொடையினும் சிறந்த கொடையாகிய வீடு பேற்றையளிக்கவல்ல நன்மணி என்க. ஊழி முதலினும் அழியாத வீடு பேருகிய நன்மை என்க.

தற்சார்ந்தார் குறை கருதாது பேரருள் பாலிக்கும் பெருமையுடையோன் என்றவாறு.

**உரைமாண்ட உள்ளொளி உத்தமன்வந்து உளம்புகலும்**
**கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே**
**இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோடத்**
**துரைமாண்ட வாபாடித் தோள்நோக்கம் ஆடாமோ. 14**

இது, தலைமகன் என்பால் வந்து தன் அன்பினை என்னுள்ளத்திலே பதியச் செய்த அவ்வளவிலே யான் காமக்கடலைக் கடந்தேன், ஐம்புலப் பறவைகள் உணவின்மையால் ஓடின , என் மனமும் வேகமாகிய பரபரப்புக் கெடப் பெற்றது. அத்திறனைப் பாடித் தோள் நோக்கம் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது

(பொ - ரை ) (தோழிமீர்!) தன்னைக் குறிக்கும் சொற்களெல்லாம் அழியப்பெற்ற உண்மை நிலையாகிய ஒளிவடிவினனுகிய என் காதலன், தன்னை என்னுள்ளத்தே பதியச் செய்தலும், அவ்வளவிலே யான், தடுத்த கரைகள் யாவற்றையும் அழியச்செய்த காமமாகிய பெரிய கடலைக் கடந்து அக்கரை ஏறினேன். அங்ஙனம் ஏறுதலும், காமமாகிய இரையை இழந்த ஐம்புலன்களாகிய பறவைகள் சிதைந்தோட, அக்காரணத்தால் மனவேகங் கெட்டு அடங்கி ஒடுங்கிய திறனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக (என்ருள்) எ - று.

(வி - ரை.) உள்ளம் புகுதலாவது, அவள் மெய்யன்பு செய்ய அவன் அவள் உள்ளத்தை இடமாகக் கொள்ளுதல். பெருந்திணையவாவாது,

ஐந்திணை நெறியைக் கைக்கொள்ள மீண்டு வருதலின் அவன் அவள் நெஞ்சிற் புகுந்தான் என்றபடி. முன் திருப்பாட்டிலே பாழுக்கிறைத்தலை நீக்கியதும் இதுவே எனக் கொள்க. காமமே புலன்நட்கு உணவு என்க. துரை - வேகம். 'வேகங்கெடுத்தாண்ட' (சிவபுராணம். 6.) வென முன்னர்க் கூறியதும் இதுவே.

பிரமன் அரி என்னும் அவ்விருபெருங் கடவுளரும் மாபேரூழிக் கண்ணே பெற்றுக் கொள்ளுதற்குரிய அரிய கலப்பை, அன்பற்ற எனக்குத் தானே எளிதாக வந்து அருளினன் என அவன் பெருமையும், ஐந்திணை நெறி வழுவியதன் சிறுமையும் புலப்படச் செய்ந்நன்றி போற்றும் கருத்தொடு இத்திருப் பாட்டும் மேலைத் திருப்பாட்டும் அமைந்துநின்றன.

திருச்சிற்றம்பலம்

# திருப்பொன்னூசல்

"திருப்பொன்னூசல்" ஆவது, தெய்வச் சிறப்பினையும் பொன்னாலாகிய பலகைதனையுமுடைய ஊசல்வரியைப் பொருளாக வுடையது. இது, முதற்கண் ஊசலுக்கு அடையடுத்த கருவி இயற் பெயராய், அதன்மேல் அதுகொண்டு பாடியாடும் ஆட்டத்திற்கும், மற்றதன்மேல் அவ்வாட்டத்தினைப் பொருளாகக்கொண்டு கூறும் நூற்பகுதிக்கும் பெயராய் நின்றதென்க. இவ்வாட்டம் ஆடுங்கால், சிறப்புரிமை பெற்றோரும் அவருடன் தாள அறுதியிடுவோரும் அவ் வூசற்கண் இருந்துவருவர் என்பதும், ஏனையோர் கீழிருந்து அவ் வூசலைப் பாடியூக்குவர் என்பதும், "வடங்கொள் மணியூசல் மேலிரீஇ ஐயையுடங்கொருவர் கைநிமிர்த்தாங்கு ஒற்றைமேலூக்க" என்னும் சிலப்பதிகார வாழ்த்துக்காதைப் பகுதியால் இப்போது புலனாகின்றது. இன்னும் இதனால் ஒற்றைத் தாள அறுதிப்படியே ஊசலாடலும் பாடலும் நிகழாநிற்கும் என்பதும் பெற்றாம்.

இவ்வாட்டம், களவின் பகுதியிலே தலைமகனைத் தோழி இயற் பழித்தலும், தலைமகள் அவனை இயற்படமொழிதலும் ஆகிய கூற் றுக்களைக்கொண்டு, வரைவு நீட ஆற்றாளாய தலைவியைத் தோழி, "அவன் முன்னர் அருமை காட்டி அயர்த்த காலத்து அவன் வரை வினை யான் அறிந்து ஊசலாட நின்னை இட்டுச்சென்று ஆடுகின்ற காலத்து யான் இயற்பழிக்க, நீ இயற்படமொழிவது கேட்டு வந்து ஊசலை ஊக்கியவன், இக்காலத்து நின்னை வருந்தவிடாது நின் வருத்தம் அறிந்து வரைந்துகொள்வன்" என ஆற்றுவித்தது என்னும் துறைப்பொருளுக்கு உரியதென்றலைப் "பெருங்கடல் தெய்வநீர்" (கலி. 131.) என்னும் பாட்டானும் உணர்ந்துகொள்க. "பிள்ளைத்தமிழ்"க்கண்ணும் பிறவற்றின்கண்ணும் இவற்றின் வேறுபட்டுவருதலும் உண்டு.

கண்ணகிக்குப் படிமங் காட்டிக் கடவுள் மங்கலஞ் செய்த பிற்றை நாளிலே, அவளது கோட்டத்திலே வீற்றிருந்த செங்குட்டு வன் முன்னர்க் கண்ணகியின் செவிலித்தாயும், மற்று அவள் மக ளாகிய கண்ணகி தோழியும், தேவந்திகையும், ஐயையும் என்னும் இவர்கள், தத்தம் வரலாறுகளை எடுத்துக் கூறி அரற்றி நிற்புழி, ஆங்குச் செங்குட்டுவன் விண்ணில் கண்ணகியின் தெய்வத்திரு வடிக்காட்சி கண்டிருந்தானாக, அவன் பரிகாரத்தின் மகளிர் கூறிய வாழ்த்து, அயர்ந்த அம்மனைவரி, கந்துவரி, ஊசல்வரி, வள்ளைப் பாட்டு என்பவற்றை ஒப்பவே, இந்நூற்கண்ணே கூறப்பட்ட திரு வம்மானை முதலியவற்றையும் கொள்ளல்வேண்டும் என்பது,

வாழ்த்துக்காதைப் போக்கால் இப்போது புலனாகின்றது. பரிசர மகளிர் எனினும் கோயிற் பெண்டுகள் எனினும் ஒக்கும். "திரு அம்மானை" முதலாய பகுதிக்குரிய பொருள்கள் எல்லாம் அம்மங்கையர்களாலே "கோதில் குலத்தரன்தன் கோயிற்பிணாப்பிள்ளைகாள் ஏது அவன் ஊர் ஏது அவன் பேர் ஆர் உற்றார் ஆர் அயலார் ஏது அவனைப் பாடும் பரிசு" (திரு எம்பாவை. 10) என்று ஆயத்தாரை உள்ளிட்டார் அரனார் கோயிற்பரிகரப் பெண்களை வினவுதலால் அவர் வினாவிற்கு விடையாகக் கூறப்பெற்றன என்பது வெளிப்படும். திரு எம்பாவைக்கண்ணே கூறப்பட்ட காமம் அன்பின் ஐந்திணைக்குரியதாகவும், திரு அம்மானை முதலியவற்றனை கூறப்பட்டது இழிந்தார்க்குரிய பெருந்திணைச்சார்புபற்றியதாகவும் தெளிந்துகொள்க. பொதுப்பட உவகை காரணமாகவும் ஊசலாடுதல் மகளிர்க்குளது. அதுவும் இதுவும் வேறுவேறென உணர்க. இதனானும் திருவாசகத்தின்மேலும் அடிகள் கோவை பாடியருளிய திறன் புலப்படுதல் காண்க

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு :—

இப்பகுதி இறைவன் பொதுத்திறனைப்பற்றியது என்றும், அதனொடு அடிகளுக்கருளிய திறனைப்பற்றியது என்றும் இரு பெரும்பிரிவுகளையுடையது.

| இயற்கைப் பொருளடைவு எண் | | நூற் பொருளடைவு எண் |
|---|---|---|
| | முதலாவது பெரும்பிரிவு :— | |
| 1. | இறைவனுடைய குணம்பரவி ஊசலாடுவோமாக என்பது. | 5. |
| 2. | இறைவனுடைய தூய புகழ்பாடி ஆடுவோம் என்பது. | 4. |
| 3. | இறைவன் தங்கும் இடைமருது பாடி யாடுவோம் என்பது. | 2. |
| | இரண்டாவது பெரும்பிரிவு .— | |
| 4. | நம்மை ஆண்டானைப் பாடி ஆடுவோம் என்பது. | 8. |
| 5. | இறைவன் தங்கும் உத்தரகோசமங்கையின் மாடமாளிகை பாடி ஆடுவோம் என்பது. | 3. |
| 6. | நாயேனை ஆண்டானுடைய காதாடு குண்டலங்கள் பாடி ஆடுவோம் என்பது. | 6. |
| 7. | என்னை ஆண்டுகொண்டான் எழில்பாடி ஆடுவோம் என்பது. | 7. |
| 8. | எம் பிறப்புஅற மங்கையும்தானும் வந்து பணிகொண்டான் குணம் பராவி ஆடுவோம் என்பது. | 9. |
| 9. | நமக்கு ஊராகத் தந்த அவன் திருவடிகளைப் பாடி ஆடுவோம் என்பது. | 1. |

இறைவனுடைய குணத்தையும், குணத்தாலாய புகழையும், புகழுக்குரிய இடத்தையும் காரண காரியமுறையானே அமைத்து இறைவன் பொதுத்திறனையும், தம்மை ஆண்டுகொண்டவதனையும், அங்ஙனம் ஆண்டு கொண்ட உத்தரகோச மங்கையாகிய இடத்தினையும் அங்ஙனம் ஆண்டுகொண்டவனை எதிரே காணப் பெற்றமையால் அவன் காதாடு குண்டலங்களையும், அதனால் எழுச்சி பெற்ற அழகினையும், அவன் மங்கைபங்கனாய்ப் பணிகொண்ட குணத்தினையும், அவ்வாறு பணிகொண்டு தன் திருவடியையே எனக்கு நிலைத்த ஊராகத் தந்தான் எனப் பாடு முறையானே தம்மை யாண்ட திறனையும் பாடியருளினார் என அடைவு செய்க.

நூற்பொருளடைவு வருமாறு :—நாரணன் காணா அடிகளை நமக்கு ஊராகத் தந்த கொடைச்சிறப்பும் செய்ந்நன்றி போற்றலும், அவன் திருவடி ஊன் தங்கி நின்று உருக்குமாறும் உள்ளம் பதியுமாறும் இடைமருதூரிலே சென்னிவைக்கும் பரிசும், அவன் வீற்றிருக்கும் கோயிற்பரிசும், அவன் பெற்ற புகழும், அவன் பெற்ற புகழுக்கியைந்த அவன் குணமும், அவன் அணியின் அழகும், அதனோடு அவனது இயல்பாகிய எழிலும், அவற்றையெல்லாம் உடைய அவனும், அவன் நம்மை ஆண்டபின்னர் நமக்குக் காட்சிப் பட்ட அவனது புதுமைப் பண்பும் ஆகியவையெல்லாம் படிமுறையானே அடைவுபட்டன என்க.

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்டதென்ப.

## அருட்சுத்தி

### ஆறடித்தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

சீர்ஆர் பவளம்கால் முத்தம் கயிறாக
ஏர்ஆரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து
நாரா யணன்அறியா நாள்மலர்த்தாள் நாயடியேற்கு
ஊராகத் தந்தருளும் உத்தர கோசமங்கை
ஆரா அமுதின் அருள்தாள் இணைபாடிப்
போர்ஆர்வேற் கண்மடவீர் பொன்னூசல் ஆடாமோ. 1

இது, தோழி தலைமகளையுள்ளிட்டாரை நோக்கி வேற்கண்மடவீர், தலைமகன் விரைந்து வரைந்துகொள்ளும்படி நமக்கு ஊராக அருளிய அவன் திருவடிகளைப் பாடிப் பொன்னூசல் ஆடுவோமாக எனக் கூறியது.

(பொ - ரை.) போர் செய்யாநிற்கும் தொழிற்கண் அமைந்த வேலினையொத்த கண் நோக்கத்தினை உடைய பெண்காள், மிக்க புகழினையுடைய பவளத்தைத் தாங்குதற்குரிய காலகளாகவும், முத்து வடங்களைக் கயிறுகவும், (பிறவற்றைப் பிறவாறுகவும்) உடைய எழுச்சி பொருந்திய பொன்னாலாகிய ஊஞ்சற் பலகைமீது ஏறி இனிதாக அமர்ந்து, நாராயணன் அறிவுக்கு எட்டாத அன்று மலர்ந்த தாமரையை ஒத்த திருவடியை, நாயினேனுகிய அடியேனுக்கு வாழும் ஊராகக் கொடுத்தருளும் உத்தரகோசமங்கைக்கண்ணுள்ள தெவிட்டாத அமுதத்தின் அருளுருவாகிய இரண்டாகிய திருவடிகளையும் (உரிமை பாராட்டிப்) பாடிப் பொலிவு பெற்ற ஊசலாடுவோமாக (எனத் தோழி தலைமகளையுள்ளிட்டார்க்குக் கூறினுள்) எ - று.

(வி - ரை.) இவ்வுலகத்து ஊர் முதலாய தொடர்புகளை அழித்து, அவன் திருவடியையே எனக்கு ஊராகத் தந்தவன் எனக் கொள்க. தலைமகனை வெற்றிகொள்ளற்குப் போர் செய்யாநிற்கும் கண்கள் என்க. இது வேற்போர் போன்றதொரு கட் போராகும் என்க. ஊராகத் தந்தருள்வோன், அவன் அமுது என்க. அம்மையின் சாபம் நீக்கி அவளுடன் கூடியிருந்து ஆரா அமுதினை நுகர்விப்போன்; முன்னர் அணங்காக நின்று அவளை வருத்தினேன். இங்ஙனமே முன்னர் எனக்கு அணங்காகியும், பின்னர் அமுதமாகியும் இருப்பவன் என்க. நாராயணன் அறியாத் தாள், நாள்மலர்த் தாள் என்க. பேரூழி முடிவின்கண்ணே நாரமாகிய கடலைத் தனக்கு இடமாகக் கொண்டு துயின்றுனே அன்றி, இறைவன் அடியை நாடிற்றிலன்; அதனுல் அவன் பின்னர் நாடியும் அறிந்திலன் என்க. அந்தத் தாள் எனக்கு உலக வளர்ச்சிக்கண்ணும் ஊராக நின்றது. அஃதொரு வியப்புடைத்து என்க. அவ்வியப்பாற் போந்த பாட்டு இது வென்க. பொன்னாலாகிய பலகை காரணமாக அவ்வூசல் பொன்னூசல் எனப்பட்டது எனினும் ஒக்கும்.

மூன்றுஅங்கு இலங்கு நயனத்தன் மூவாத
வான்தங்கு தேவர்களும் காணு மலரடிகள்
தேன்தங்கித் தித்தித்து அமுதுஊறித் தான்தெளிந்தாங்கு
ஊன்தங்கி நின்றுருக்கும் உத்தர கோசமங்கைக்
கோன்தங்கு இடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றுஅங்கு அனநடையீர் பொன்னூசல் ஆடாமோ. 2

இது, தலைமகன் தன் திருவடிகளை நமக்கு வாழும் ஊராக இனித் தந்தருள்வன்; அவை இப்போது எம்முடற்கண் தங்கி இனிமை செய்து நம்மை உருக்காநிற்கும். அவை தம்மையுடைய எம் உத்தரகோசமங்கைக்கோன் வீற்றிருக்கும் திருவிடைமருதூரின் சிறப்

புக்களைப் பாடி நாம் பொன்னூசல் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர்,) மூன்றாக விளங்கும் கண்களை உடையவனுடைய (அமுதமுண்டமையால்) மூப்படையாத வானகத்திலே தங்கிநிற்கும் தேவர்களும் கண்டறியமாட்டாத மலர் போன்ற திருவடிகளையும், அமுதம் தேனோடு கலந்து இனிமை பெற்று ஊற்றெடுத்துத் தெளிவடைந்து என்னுடற்கண்ணே பொருந்தி உருக்குவிக்கும் உத்தரகோசமங்கைக்கு அரசனாகிய நம் தலைவன் வீற்றிருக்கும் திருவிடைமருதூரினையும் பாடி, அன்னத் தால் தான் நடக்கின்றதொரு குலச் சிறப்பினையுடைய மயிலின் இயல்பினை ஒத்தவராகிப் பொன்னூசல் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) அவர் ஊசற்கண் இருப்பது மயிலிருப்பதுபோன்றும் அவர் ஊசலாடுவது அன்னநடையால் இயங்குவதொரு மயில்போன்றும் காணப்பட்டவாறாயிற்று. இக்கருத்தினையே உட்கொண்டு "அன்னத்தின் மேலேறி யாடும் அணிமயில்போல்" (7.) என மேலும் அருளுவர்.

முந்திய திருப்பாட்டால் அவன் திருவடிகள் பாடியருளப்பட்டன. இதனால் அவற்றையும் வழிமொழிந்துகொண்டு அவற்றோடு இடைமருதினை யும் பாடவேண்டுமென்பது அருளியபடியாம். உத்தரகோச மங்கைக்கோன் முன்னர்த் திருவடி அருளிய வரலாறு முதலாவது திருப்பாட்டானும், அவனே "இடைமருததனில் ஈண்ட இருந்து படிமப் பாதம் வைத்தவப் பரிசு" (கீர்த்தி. 75-76.) இத்திருப்பாடலானும் உரைத்தருளியவாறு காண்க என மேலும் உரைக்க. இதனால் இப்பகுதி திருவிடைமருதூரிற் காட்சி பெற்ற பின்னரே அருளிச் செய்யப்பட்டது என்பது பெற்றாம்.

'அமுதம் தான் தேனோடு கலந்து தித்தித்து ஊறித் தெளிந்து ஆங்கு என் ஊன் தங்கி நின்று உருக்கும் கோன்; உத்தரகோச மங்கைக்கோன்' என இயைக்க. "அமுதந்தான்......ஆங்கு" என்னும் இதனைத் திருவடி கட்கும் அடையாகக் கொள்ளினும் இழுக்காது. ஊன் தங்கி, ஊனகத்துத் தங்கி என்றுமாம். அமுதம் - பால். அது "தேன் கலந்து" என்னும் சார் பாற் கொள்ளப்பட்டது. தேனோடு கலந்த அமுதம், உமையொரு கூறு டைய இறைவன். "உத்தரகோச மங்கை" என்றதனை விரித்தருளியபடி. இனி, இறைவன் அன்னைக்குக் கூறிய ஆகமம் தேனென்றும், இறைவன் அமுதம் என்றும் உரைப்பினுமாம்.

"தெளிந்தங்கு" எனவும் பாடம். மூன்று அங்கு (ஆம்) நயனத்தா னுடைய திருவடிகளையும் எனக் கொள்க. அவனே உத்தரகோச மங்கை யானாகவும், மற்று அவன் தானே இடைமருதூரனாகவும் நின்றான் என் பதே கருத்தாகக் கொள்க.

“உத்தரகோச மங்கை ஊராகவும்” (கீர்த்தி. 120.) என உரைத்து அடிகளை இறைவன் ஆண்டுகொண்டதனால், அத்தேவதேவனாகிய உத்தரகோச மங்கைக் கோனையே அடிகள் வழிபடற்பாலர் என்பது பெற்றாம். அவ்வுத்தரகோச மங்கையனே தனக்கு அம்பலவன் முதலாயவனும் ஆவான் என்பதும், இடைமருதூரனாகவும் அங்ஙனமே அருளிச்செய்தான் என்பதும் மேற்காட்டியவற்றால் இனிது புலனாதல் காண்க.

முன்னாறும் ஆதியும் இல்லான் முனிவர்குழாம்
பல்நூறுகோடி இமையோர்கள் தாம்நிற்பத்
தன்நீறு எனக்கு அருளித் தன்கருணை வெள்ளத்து
மன்ஊற மன்னும்அணி உத்தர கோசமங்கை
மின்ஏறு மாடம் வியன்மா ளிகைபாடிப்
பொன்ஏறு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 3

இது, முனிவரும் தேவரும் புறம்பே நிற்க எனக்குத் தன் திருநீற்றை அருளியவனுடைய கருணை வெள்ளத்திலே நிலைபெற்று ஊறிவர நிலைபெற்ற அழகினையுடைய உத்தரகோச மங்கைக்கோன் வீற்றிருக்கும் மாடக் கோயிலைப் பாடிப் பொன்னூசல் ஆடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை) மாற்றேறப்பட்ட பொன்னாலாகிய அணிகலன்களையணிந்த முலைகளையுடையீர், (தோன்றிய பொருள்கட்கெல்லாம்) முற்பட்ட முடிவும் (அதன் மேற்பட்ட) தோற்றமும் இல்லாத பெருமான், பல நூறு கோடிக் கணக்கான முனிவரும் இமையவரும் கூடின கூட்டத்தினர் எல்லாரும், தமக்கு அருள் செய்யப் பெற்றிலராய்ப் புறம்பே நிற்கவும், மெய்யன்பர்க்கும் தனக்கும் உரிய திருநீற்றினை எனக்கு அருளிச் செய்து தன்னுடைய அருள் வெள்ளத்துள்ளே யான் பொருந்தி ஊறுதலைப் பெற்றுய்யப் பொருந்தி வீற்றிருக்கின்ற அழகினையுடைய உத்தரகோசமங்கைக் கண்ணேயுள்ள ஏற்றமடைந்த ஒளியையுடைய மாடஞ்சான்ற பெரிய திருக்கோயிலை நாம் பாடிப் பொன்னூசல் ஆடுவோமாக (என்றுள்) எ-று.

(வி - ரை.) தோன்றுவதற்கு முன்னுள்ளதாகிய ஈறும் என்க ; இடமுன். பன்னூறுகோடி முனிவர்குழாம், பன்னூறுகோடி இமையவர் குழாம் என்க. தன்நீறு - தான் அணிந்த நீறுமாம். மன்ஊற - மன்னி ஊற. ஈண்டு ஊறு என்றது ஊறுகாய் என்புழிப்போல நின்றது. பதன் பெற ஊறுகின்ற காய்.

பொன்ஏறு - ஏறுபொன். “முலையீர்” என்றது, அவன் காதல் பொங்கியதைக் குறித்து நின்றது.

அன்னையின் சாபம் நீக்கி ஆட்கொண்டவாறே நம்மையும் ஆட்கொள்வன் என்பது குறிப்பு. இடைமருது ஒரு முறையே கூறியருளப்பட்டமையானும், பிறண்டும் உத்தரகோசமங்கையே கூறியருளப்படுதலானும், இடைமருதின்கண்ணும் உத்தரகோசமங்கையில் வீற்றிருந்த கோலக் காட்சி அளிக்கப்பெற்றது என்பது பெற்றும்.

அவன் ஆதியந்தம் இல்லான் எனவே அவனால் அளிக்கப்பெறும் இன்பத்திற்கும் அவை இலவென்பது தானே பெறப்படும். அவ்வின்பமும் அவன் அருளாலே பெறற்பாலதென்பது " முனிவர்......நிற்ப " என்றருளியதனாற் பெற்றும்.

அடிகளுக்குத் திருப்பெருந்துறைக் காட்சிக்குமுன் உத்தரகோசமங்கையில் காட்சி கிடைத்ததென்பதும் இதனாற் பெற்றும்.

**நஞ்சுஅமர் கண்டத்தன் அண்டத் தவர்நாதன்**
**மஞ்சுதோய் மாடம்அணி உத்தர கோசமங்கை**
**அஞ்சொலாள் தன்னொடும் கூடி அடியவர்கள்**
**நெஞ்சுஉளே நின்றுஅமுதம் ஊறிக் கருணைசெய்து**
**துஞ்சல் பிறப்புஅறுப்பான் தூய புகழ்பாடிப்**
**புஞ்சம்ஆர் வெள்வளையீர் பொன்னூசல் ஆடாமோ. 4**

இஃது, இறைவன் உத்தரகோச மங்கையிலே அம்மையுடன் கூடி அடியவர் உள்ளம் புக்கு அவர் பிறவியை அறுப்பான் ஆதலால் அவனுடைய புகழை யாமும் பாடி ஊசலாடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) திரட்சி பொருந்திய வெள்ளியவாகிய வளையல்களை அணிந்த மங்கைமீர், நஞ்சு பொருந்திய கழுத்தினையுடையவனாய்த் தேவர் எல்லார்க்கும் தலைவனாகவும், முகில்கள் தவழுகின்ற மாடங்களையுடைய அழகிய உத்தரகோச மங்கைத் திருக்கோயிற்கண்ணே அழகிய இனிய சொல்லை உடையவளாகிய உமைப்பிராட்டியுடன் வீற்றிருந்து (அங்குக் குழுமிய) அடியவர்கள் நெஞ்சிலே நிலைபெற்று ஞான அமுதமாய் ஊற்றெடுத்து அவர்க்கு அருளைச் செய்து அவர்க்கு அமைந்த பிறப்பு இறப்புக்களை அறுப்பவன் (அடியவர்க்கு எளியவன்) ஆகியும் அமைபவனது பெருமையும் எளிமையுமாகிய குணங்களாற் பெற்ற கலப்பில்லாத புகழை நாம் பாடிப் பொன்னூசல் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) குணம் தன்பால் உள்ளது ; புகழ் பிறர்பால் உள்ளது. இறைமைக் குணம் இல்லார் பெற்ற புகழுக்கேற்ப அவர் தம்பாற் குணங்கள் இன்மையால் இறைவன் புகழ் தூய புகழாயிற்று. அவர் புகழ் பொருள் சேர்ந்திலது.

துஞ்சல் - சாதல். புஞ்சம் - தொகுதி, திரட்சி, குவியல். வெள் வளை - சங்கு வளையல்.

அறுப்பவனை யாமும் பாடி அறுப்பாம் என்றபடி. உத்தரகோசமங் கைக் கண்ணுள்ள மாடற் கோயிற்கண் வீற்றிருந்து அன்பர் பிறப்பு இறப் புக்களை அறுப்பான் என்க.

உத்தரகோசமங்கையில் தமக்குமட்டுமன்றி ஏனைய அடியவர்களுக் கும் அருள் செய்தான் என்பதும் இதனாற் பெற்றாம்.

ஆணோ அலியோ அரிவையோ என்றுஇவர்
காணாக் கடவுள் கருணையினால் தேவர்குழாம்
நாணாமே உய்யஆட் கொண்டருளி நஞ்சுதனை
ஊண்ஆக உண்டருளும் உத்தர கோசமங்கைக்
கோண்ஆர் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூண்ஆர் வனமுலையீர் பொன்னூசல் ஆடாமோ. 5

இஃது, அரியும் அயனும் இன்னன் என்று காணப்பெறாத கட வுள், தேவர் அமுதுண்ண அவரைக் காத்துத் தான் நஞ்சுண்டவன்; கலை குன்றிய திங்களைக் குன்றாவாறு சென்னியில் அணிந்தவன்; படைப்பு முதலாகிய தொழில்களை விளையாட்டாகச் செய்பவன்; அவனே நம் தலைவன் ஆதலால், அவனுடைய குணத்தைத் துதித் துப் பாடி ஊசலாடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறி யது.

(பொ - ரை) அணிகலன் நிறைந்த அழகிய முலைகளை யுடைய தோழிமீர், தம் முன்னர்த் தோன்றிய அனற்பிழம்பு வடி வாய தன் வடிவு ஆண் வடிவோ பெண் வடிவோ அவ்விரண்டும் அல்லாத அலிவடிவோ என அயன் அரி என்னும் இருவராலும் காணவொண்ணாத அக்கடவுளர்க்குக் கடவுளாவானும், தனது பேரருளாலே விண்ணவர் கூட்டம் (பாற்கடற்கண் எழுந்த நஞ்சின் வெப்பத்தினால்) அடங்கி அழியாது உய்யுமாறு அவர்களை அடிமை கொண்டருளி அந்நஞ்சினைத் தனக்கு உணவாக உண்டருளும் உத்தரகோச மங்கைக்கண் உறையும் வளைவு பொருந்திய திங்க ளைச் சென்னியிலே நிறுத்திக்கொண்ட கூத்தனது குணங்களைத் துதித்துப் பாடிப் பொன்னூசல் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) முன்வந்த நிகழ்ச்சிகளை மேன்மேலுங் கூறுதற்கு அன் புடைமையே காரணமாகும். அன்பிலார்க்கு அஃது சாலாதென்க.

கோண் - கோணுதல். முதனிலைத் தொழிற்பெயர். பிறவுமன்ன.

மாதுஆடு பாகத்தன் உத்தர கோசமங்கைத்
தாதுஆடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டி நாயேனை ஆட்கொண்டுஎன் தொல்பிறவித்
தீதுஓடா வண்ணம் திகழப் பிறப்பு அறுப்பான்
காதுஆடு குண்டலங்கள் பாடிக் கசிந்து அன்பால்
போதுஆடு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 6

இது, நம் தலைவன் அன்பருள் ஒருவன் என என்னையும் பாராட்டி என் பிறப்பு அறுப்பான் ஆதலால், நாம் அவனுடைய காதின்கண் ஆடுகின்ற குண்டலங்களை அன்பாற் கசிந்து பாடி ஊசலாடுவோமாக என அவள் அவர்க்குக் கூறியது.

(பொ - ரை ) பேரரும்பு போன்று அசைகின்ற பூண்களை அணிந்த முலைகளையுடைய தோழிமீர், உமையம்மை விளங்கா நின்ற இடது கூற்றினையுடையவனும், உத்தரகோசமங்கையில் உறையும், மகரந்தம் படிந்த கொன்றைப் பூமாலையை அணிந்த சடையையுடையவனும், அன்பர்களுக்குள்ளே நாயேனையும் ஒருவனாகப் பாராட்டி அடிமை கொண்டு என்னுடைய பழைமையாகிய பிறவியால் உளதாகும் துன்பத்தால் யான் வருந்தாவண்ணம் (யான் அவற்றின் நீங்கி) விளக்கம் பெற என் பிறவியின் தொடர்பை அறுப்பவனும் ஆகிய சிவபெருமானுடைய காதின் கண்ணே அசையா நின்ற குண்டலங்களின் சிறப்பினை அன்பாற் கசிந்து பாடிப் பொன்னூசல் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) ஓடாவண்ணம் - வருந்தாவண்ணம். கோதாட்டுதல் - பாராட்டுதல்; கொண்டாடுதல். போது - பேரரும்பு. அஃது ஈண்டுத் தாமரையின் பேரரும்பை உணர்த்திற்று. என் ஓலம் கேட்டருளியது அவனுடைய காது ஆகையால், அதனுக்கு அழகுசெய்யும் குண்டலங்களை நினைக்க அன்பால் மனம் கசியும்; அக்கசிவால் பாட்டும் எழாநிற்கும் என்றவாறு. "தோடுடைய செவியன்" என ஞானசம்பந்தப் பெருமான் அருளிச்செய்ததும் இது கருதியே என்க. என்னை விடுத்து ஏனைய நல்லடியார்களைத் தன்னொடு கலந்து தில்லைக்கண்ணே புக்கபோது யான் ஓலமிட, அதனைக் கேட்டருளிய காது என விரித்து இயைக்க. 'பாடிக் கசிந்து அன்பால் ஆடாமோ' எனினும் பொருந்தும்.

உன்னற்கு அரியதிரு உத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்துஇறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேல்ஏறி ஆடும்அணி மயில்போல்

என்அத்தன் என்னையும்ஆட் கொண்டான் எழில்பாடிப்
பொன்ஒத்த பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ 7

இஃது உத்தரகோசமங்கைக்கண் மன்னியிருந்த மறையோனும், தன் புகழைச் சொல்லிப் பணிவோர் பாவங்களை அறுப்போனும் அத்தனாகி என்னையும் ஆண்டுகொண்டு அமைந்தான் ஆதலால் அவனுடைய அழகினைப் பாடி ஊசலாடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை) பொன்னை ஒத்த முலைகளிலே அணியை அணிந்த தோழிமீர், நினைத்தற்கரிய திருவினையுடைய உத்தரகோசமங்கையிலே நிலைபெற்றுப் பொலிவு கொண்டிருந்த பெரிதாகிய ஆகமம் ஏட்டினையுடையவனும், தன்னுடைய மெய்ப் புகழையே சொல்லி வணங்க, அங்ஙனம் வணங்குவாருடைய பாவத் தொடர்புகளை அறுப்பவனும், எனக்கு அத்தனாகி என்னை ஆட்கொண்டவனுமாகிய இறைவனுடைய எழிலை நாம் பாடி, அன்னத்தின்மீது ஏறி இருந்து ஆடாநிற்கும் அழகிய மயிலைப்போல் பொன்னூசல் ஆடுவோமாக (என்றாள்) எ – று.

(வி - ரை.) மறையோன், அந்தணனுமாம். தன் புகழே பன்னுதை என்னையும் என்க. ஆதலால் அவன் என் அத்தன் ஆயினான் என்க. விடையை அன்னமாகக் கோடல் அழகு பயவாமையால் மணிமயில் எனக் கோடலும் அழகு பயவாதென்க. பொன்னொத்த முலை, பூண்முலை என்க. அவன் அணியில் ஈடுபட்ட நாம் இப்போது அவன் அழகில் ஈடுபடுவோமாக என்றாள் என்க. அவன் திருவடி அருளிய கொடை, பின்னும் அதனை யளித்த பெருவண்மை, வேண்டும்போது சென்று வேண்டியவற்றைப் பெற்றுக்கோடற்குரிய அவனது கோயில், சென்ற இடங்களில் எல்லாம் பேசப்படும் அவனது தூய புகழ், வானவர்க்கு அரியனாகவும் உற்றுழி அவரைக் காக்கும் காவலனாகவும் இருந்துவரும் அவன் பண்பு, அவன் அணிந்த அணிகலங்கள் அசைந்து வீசும் ஒளிமினுக்கு என்னும் இவற்றில் ஈடுபட்டுப் பாடிய நாம், இப்போது அவனது இயற்கை அழகில் ஈடுபட்டுப் பாடி ஆடுவோமாக என்றபடி. அவன் அழகு காணில் அவன் அடியை அடைக்கலமாகப் புகுதல் நேரும் என்பது அவள் கருத்து.

உன்னற்கரிய திருவீடு பேறென்க. அதனை அளிக்கவல்லது உத்தரகோசமங்கையென அத்தலச் சிறப்புக் கிளந்தோதியருளியவாறு. முன்னர் உமையொடு கயிலைக்கண் மன்னாது பிரிந்தவன் பின்னர் உத்தரகோசமங்கைக்கண் அவளொடு மன்னினான் எனவும், முன்னர் சினந்து கடுகி உமையை விலக்கியவன், பின்னர் உவந்து தானே வந்து அவளொடு மன்னினான் எனவும் அங்ஙனம் பிரிதற்கும் கூடுதற்கும் காரணமாக நின்றது மாமறை ஆதலால் அவன் "மாமறையோன்" எனப்பட்டான்

எனவும் பிறவாறும் விரித்துரைக்க. மறை - இருக்கு முதலாய வேதங்கள். மாமறை - அன்பினைந்திணை நூல்; சிவாகமங்களுமாம். பிறர் புகழ்கள் எல்லாம் பொருட் புகழ்கள் எனப்படா வாகலானும், அவன் புகழ் பொருள் சேர்புகழ் எனப்படுவது ஆதலானும், அவன் புகழ் உரைத்து அவனைப் பணியாதார், பேய்த்தேரை முகக்குறும் பேதையராய்ச் சுழல்வர் ஆதலானும், ஏனையோர் புகழை விடுத்து, அவன் புகழையே பன்னிப் பணிவார் தமக்கு உரிய பாவங்களின் தொடர்பை அறுப்பான் என்றருளியபடி. இதனுற் போலிப் புகழினை விடுத்து, அவன் மெய்ப் புகழினைப் பன்னி, போலிக் கடவுளரை வணங்காது அவனை வணங்கினோர் அவனாலே பாவத் தொடர்பு அறுக்கப்படுவர் எனத் தெளிக. நாமும் அங்ஙனே பன்னிப் பணிந்து பாவங்களின் பற்றறுப்போமாக என்றாள் என்க. அதற்குரிய இடம் அவன் மங்கையொடு மன்னிப் பொலிந்திருக்கும் இடைமருதும், உத்தரகோசமங்கையுமே ஆவதன்றி நம்மைப் பிரிந்த திருப்பெருந்துறையாகாதென்றபடி.

உத்தரகோசமங்கைக்கோன் இப்போது இடைமருதூரிலே தங்கியுள்ளான். ஊர் மாறினனேயன்றிக் கோலம் மாறிலன் என்க. இதனால், இடைமருதூரிலே மருதமரப் பொந்திலிருந்து இறைவனுடைய திருவடி வெளிப்பட்டு அடிகள் சென்னியிலே வைக்கப்பட்டது என்பது முன்னும் பின்னும் விளக்கியவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன.

கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்
சால அமுதுண்டு தாழ்கடலின் மீதுஎழுந்து
ஞாலம் மிகப்பரிமேற் கொண்டு நமைஆண்டான்
சீலம் திகழும் திருஉத்தர கோசமங்கை
மாலுக்கு அரியானை வாயார நாம்பாடிப்
பூலித்து அகம்குழைந்து பொன்னூசல் ஆடாமோ. 8

இது அழகிய கைலைக்கண் உருவெடுத்துவந்து, உமையம்மைக்கு ஐந்திணை நெறியை அறிவுறுத்தியகாலை, அவள் பராமுகம் செய்தனளாக, அவளைச் சபித்துப் பின்னர்ப் பூமியிலே வந்து அவள் சாபம் நீங்கக் களவிற்கூடி, கற்பிற்கூடவேண்டி வலைவாணனாகக் கடலில் வலைவீசிப் பின்னர்க் குதிரைச் சேவகனாக வந்து நம்மை ஆண்டவனாகிய உத்தரகோசமங்கைக்கணுள்ள திருமாலுக்கு அரியவனை தலைவனைப் பாடி ஊசலாடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை.) (தோழிமீர்!) அழகிய கைலையுச்சிக்கண் உருவொடு தோன்றியும், நிலவுலகில் (உமையம்மையைக் கூடி ஐந்திணை இன்பமாகிய) நிறைந்த அமுதம் நுகர்ந்தும், தாழ்ந்த கடலின்மீது வலைவாணனாக மேற்சென்றும், மண்ணுலகமானது (விண்ணுல

கினும்) மேம்படக் குதிரைமீது இவர்ந்து நம்மெல்லாரையும் அடிமைகொண்டவனும் இல்லற ஒழுக்கம் விளங்காநிற்கும் உத்தர கோசமங்கைக்குக் கோனும் திருமாலுக்கும் அரியனும் ஆகியானை நாம் வாயாரப் பாடி மனம் நிறைவுற்றுக் குழைந்து பொன்னூச லாடுவோமாக (என்றாள்) எ – று.

(வி - ரை.) கோல (பன்றி) வரைக்கண் குடுமித்தேவராக வந்து கண்ணப்பன் அளித்த இறைச்சி யமுதை நிரம்ப உண்டு என உரை கூறலாமேனும் வலைவாணனாக வந்த வரலாற்றோடு இயையாமையின் அங் ஙனங் கொள்ளாமாயினும். வண்டோதரிக்கு இன்பமளித்தற்குக் கடல்மீது சென்ற வரலாறும் இதனாலே ஏற்புடைத்தாகா தாயிற்று.

தாழ்கடல் - ஆழ்ந்தகடல்; எழுந்து - வலைஞனாகப் படகின்மீது மிக்குச் சென்று. காட்டில் வேடனாகவும், கடலில் வலைவாணனாகவும், நாட் டிற் பரிபாகனாகவும் இறைவன் மண்ணகத்துள் வந்து நம்மை ஆண்டான் என்க. "நமை" என்பது மக்களாகிய சாதிப்பன்மை.

"காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிபாகன்" (பண்டா. 3.)

என்றருளிச் செய்வர் பின்னும்.

சீலம் - இல்லற ஒழுக்கம்; உமையம்மையோடு ஒருங்கிருந்து உத்தர கோசமங்கையிலே ஆகமம் உபதேசித்தலால், அதன் கண்ணுள்ள சீலம் இல்லறத்திற்குரிய களவும் கற்பும் என விதந்துரைக்கப்பட்டது. "மாலுக்கு" என்றது, ஏண்டுத் தேவர்களைப் பொதுப்பட உணர்த்தி நின்றது. மாலுக்கு அரியான் எங்கட்கு எளியான் என்க. அங்ஙனம் எளி வந்தமையால் அவர் சொல்லுக்கு அரியவன் நம் சொல்லுக்கு எளியவன் ஆயினமையால் "வாயார" எனவும், மனத்திற்கு அரியவன் அதற்கும் எளியவனாயினமையால் அதுவும் நிறைபெற்றமை தோன்ற "ஆகம் பூலித்து" எனவும், வாயும் மனமும் பூரித்து அவனில் ஈடுபட அகம் தானே குழைவுறுமாதலின் "குழைந்து" எனவும் கூறியருளினாள்.

தெங்குஉலவு சோலைத் திருஉத்தர கோசமங்கைத்
தம்குலவு சோதித் தனிஉருவம் வந்தருளி
எங்கள் பிறப்புஅறுத்திட்டு எந்தரமும் ஆட்கொள்வான்
பங்குலவு கோதையும் தானும் பணிகொண்ட
கொங்குஉலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குஉலவு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 9

இஃது, இருபேர் உருவம் எனப்படாத ஒரு பேருருவச் சோதியினின்று எம்போன்றாரைப் பிறப்பறுத்து ஆட்கொள்வான் வேண்டித் தையலும் தானும் உத்தரகோச மங்கையில் வந்தருளி

அங்ஙனமே எம்போன்றாரைப் பணிகொண்ட சடைமுடித் தலைமகன் குணங்களைப் போற்றிப் பாடி ஊசலாடுவோமாக என அவள் அவர்க்குக் கிளந்து கூறியது.

(பொ - ரை.) பொங்கா நிற்கும் இயங்குகின்ற அணிகலன் அணிந்த முலையுடையீர், தம்பால் விளங்கா நிற்கும் சோதிக் கண்ணிருந்து, எம்போன்றாரையும் எங்களுக்கு அமைந்த பிறவித் தொடர்பை அறுத்தலைச் செய்து ஆண்டுகொள்ளவேண்டி, தென்னஞ்சோலை சூழாநிற்கும் திருவினையுடைய உத்தரகோச மங்கைக்கண்ணே, தனது இடக்கூற்றில் அமைந்த மரகதச் சோதிப் பிழம்பானது உமையாகவும், அவள் வலக்கூற்றில் அமைந்த செம்மணிப் பிழம்பானது தானாகவும் வந்தருளி, எம்மை ஏவல் கொண்ட தேன்பொருந்திய கொன்றைமாலையை அணிந்த சடைப்பிரானுடைய குணங்களை நாம் போற்றிப் பாடிப் பொன்னூசல் ஆடுவோமாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) தெங்கு உலவுசோலை - தெங்குசோலை உலவு - தென்னஞ் சோலை சூழ்ந்த. தெங்கு 'தாளுண்ட நீரைத் தலையாலேதான் (இளநீராகத்) தரும்' பெற்றியதன்றே? அவ்வாறே அன்பர் இயற்றும் சிறுபூசனைக்குப் பெரும்பேறு நல்கும் பெற்றியான் வாழும் ஊர் என அதன் சிறப்பியல்பு குறிப்பிட்டருளியவாறு. திரு - வீடாகிய திரு. தம் குலவு சோதி - இறைவற்கும் இறைவிக்கும் உரியவெனப்பட்ட மரகத மணிகளின் ஒன்றாகிய ஒளிப்பிழம்பின் நின்று. பங்கு உலகு கோதைத் தனி உருவமும், தன் தனி உருவமுமாகத் தான் வந்தருளி என்க. கோதை - மாலை. ஆகு பெயராய் ாண்டுப் பிராட்டியை உணர்த்திநின்றது. கொங்குலவு - தேன் பொருந்திய. குணம் - எண் குணங்கள். பரவி - போற்றிப் பாடி. கோதையுருவில் வந்தானும் அவனேயாவன் என்பது தோன்றத் தாம் வந்தருளி என்னாது " தான்வந்தருளி " என்றருளினார். கோதையும் தானும் பணிகொண்ட என முடிப்பின், சோதித் தனியுருவம் என்பது இறைவற்கே பட்டுக் கோதை நீங்கிய இடம் என்றாகி வற்றும் என்க. பொங்குமுலை, பூண் உலவு முலை என்க. பங்கு, தனது இடமும் இறைவியின் வலமுமாகிய கூறு. பங்குலவு கோதையும், பங்குலவு தானும் என்க. சோதியின் வலப்பங்கிலே தானும், இடப்பங்கிலே கோதையும் என்று உரைப்பினுமாம்.

" ஏறுடை யீசன் இப்புவனியை உய்யக்
கூறுடை மங்கையும் தானும் வந்தருளி " (கீர்த். 25-26.)

என்புழியும், ாசன் வந்தருளினன் என்றருளப்பட்டது காண்க. இதனானும் இறைவனே பிராட்டி வடிவாகவும் வந்தான் என்பது பெற்றாம்.

திருச்சிற்றம்பலம்

# அன்னைப் பத்து

ஊரலர் தூற்றலாலும் ஐயம் கொண்டமையாலும் தலைமகளது ஆற்றாமை கண்ட செவிலி வெறியாட்டெடுக்க முயலுவதைக் கண்ட தோழி தலைமகளுக்கு அமைந்த நோய் காதலால் நேர்ந்த தன்றி அணங்கால் நேர்ந்ததன்றென அவளாற் காதலிக்கப்பட்ட தலைமகன் இயல்பு, அவன் காதலுள் ஈடுபட்ட தலைமகள் இயல்பு என்னுமிவற்றைச் செவிலிக்குக் கூறி அறத்தொடு நின்ற நிகழ்ச்சியே இப்பகுதிக்கண் கூறப்படுகின்றது

தலைமகள் இங்ஙனங் கூறினாள் என அவள் கூறியதனையே தோழி கொண்டு கூற்றாகச் செவிலிக்குக் கூறினாள் என்க.

இப்பகுதிக்கண் "அன்னாய்" என்று பயிலும் விளிகள் தோழி யைக் குறித்தனவாகும் அங்ஙனம் தலைமகள் தோழியை அன்னை யென்பது வழுவமைதியாதலை "அன்னையென்னை" (தொல். பொருள். சூத். 52.) என்னுஞ் சூத்திரத்தால் உணர்ந்துகொள்க

இப்பகுதித் துறைகளை இங்ஙனம் கொள்ளாது புலவோன் கூற்றாகப் பாடாண் பகுதிய வாக்குவாரும் உளர். அங்ஙனங் கொள்ளின் அவை புறத்திணைப்பாலவாய்ப் பெண்பாலைப் பாடி யனவெனக் கொள்ளப்பட்டு மரபு வழுவாகும் என விடுக்க.

தலைமகள் தலைமகனைக் காதலித்தமைக்குக் காரணமாவது பூத்தரு புணர்ச்சியாகும் என்றலைத் "துன்னிய சென்னியின் மத்தம் உன்மத்தமே இன்றெனக்கு ஆனவாறு அன்னே என்னும்" என்னுந் திருப்பாட்டே அசைக்க முடியாத ஆணித்தரமான சான்றாகும் என்பது தெளிவு அன்று அவன் எனக்கு அளித்த மத்த மாலையே இவ்வெறியாட்டு அயர்கின்ற இன்று எனக்கு உன்மத்தமானவாறாகும் எனச் செவ்விதாகப் பொருள் விரித்து உரைத்துக்கொள்க

தலைவர் அன்றொருநாள் தாளியறுக மாலை அணிந்து சந்தனச் சாந்து பூசிக் கையகத்துத் தாளமேந்தினராய் எம்மை அடிமை கொண்டு (8), நித்த மணாளர் ....ஆனந்தராகி என்னுள்ளிருந்து, (3), என்னுள் மன்னுவதை மாலயன் காணாதது குறித்து வியக்க வைத்து (6), (எனது) பரந்தெழு சிந்தையை ஆண்டு அன்பு செய்து (5), வெண்ணீறு அணிந்து நாதப் பறைமுழங்க வேதம் பாடி அயன் மால் அறிதற் கரியரெனக் காட்சி தந்து (1), பரிமா ஏறிவந்து உள்ளங் கவர்ந்து (7), உருக்கிக் கண்ணீர் தந்து (2), தையலொரு

பங்கின் தாபத வேடராய் ஐயம் புக வந்து மீளும்போது உள்ளம் நைவித்து (9), அரவினைப் பூண்டு பொடி பூசிக் காட்சியளித்து என்னுள்ளத்தை வாட்டி (4), தன் சென்னிக்கண் அணிந்த மத்த மாலையை எனக்குத் தந்து உன்மத்தமாக்கினன் (10) என இயற்கைப் பொருளடைவு அமைந்து நிற்றலைக் கண்டுகொள்க. முதலாவது இறைவன் அடிகளுக்குக் காட்சிதந்த வரலாறு கூறுவன, 8, 6, 5, 3, 1 என்னும் திருப்பாட்டுக்கள். இரண்டாவ தாக இறைவன் அடிகட்குக் காட்சி தந்த வரலாறு கூறுவன 7, 2 என்னுந் திருப்பாட்டுக்கள். மூன்ருவதாக இறைவன் அடிகளுக்குக் காட்சி தந்த வரலாறு கூறுவது 9–ஆம் திருப்பாட்டு. நான்காவ தாக இறைவன் அடிகளுக்குக் காட்சி தந்த வரலாறு கூறுவன 4-ஆம் 10–ஆம் திருப்பாட்டுக்கள்.

இனி நூலடைவும் அதன் இயைபும் வருமாறு :—

இயற்கைப் பொருளடைவிலே ஐந்தாவதாகிய திருப்பாட்டு நாதப்பறையினராகிய இந்நாதனர் அயன் மால்களுக்கும் நாதனர் ஆவர் என்பது, தலைமகன் சிறப்புப் பெயராகிய தேவதேவன் என்பது தோன்ற நிற்குஞ் சிறப்பினல் முதலாவதாகக் கொண் டருளப்பட்டது. அத்துணைப் பெரியவர் தன்னைக் கடைக் கணித்தார் எனவும், என்னுள்ளே யிருப்பர் (அணைந்திலர்) எனவும், அங்ஙனம் பிரிந்தவர் அராப் பூண்டு பொடி பூசி வாட வைப்பர் எனவும், வாட்டிய அவரே பாண்டி நாடராக வந்து என் பரந்தெழு சிந்தையை ஆண்டு அடக்கி அன்பு செய்வர் எனவும், என்னல் அறியப்பட்ட அவர் மாலயன் ஆதியோரால் அறியப்படாதது என்ன அதிசயம் எனவும், என்னல் அறியப்பட்ட அவரே பரிமேல் வந்து என் உள்ளம் கவர்ந்தார் எனவும், பரிமேல் வந்து மனங் கவர்ந்த அவரே பின்னரும் உத்தரகோசமங்கையராகக் காட்சி யளித்தார் எனவும், உத்தரகோசரமங்கையராய்க் காட்சியளித்த அவரே தாபத வேடத்தராய் ஐயம் புக்கு மீள்கையில் என் உள்ளம் புக்கு மீண்டும் நைய வைத்தார் எனவும், நைய வைத்த அவரே உன்மத்தம் ஆக்கினர் எனவும் இயைத்துக்கொள்க.

[குறிப்பு —இயற்கைப் பொருளடைவானது பொருளின் இனப்பகுதியை அடைவுபடுத்தலை அறிந்துகோடற்கும் நூலடை வுப் பகுதியானது அவ்வினப் பகுதிப் பொருள்கள் வேருகிப் பிரிந்த நிகழ்ச்சி முறையை அறியவும் உரிய.]

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# ஆத்தும பூரணம்

## கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வேத மொழியர்வெண் ணீற்றர்செம் மேனியர்
நாதப் பறையினர் அன்னே என்னும்,
நாதப் பறையினர் நான்முகன் மாலுக்கும்
தாதர்இந் நாதனுர் அன்னே என்னும். 1

இது, தன் தலைமகன் நாதப்பறையுடையான்; அவன் நான்முகன் மால் என்பார்க்கும் தலைவனுவான் எனத் தலைமகள் அவன் மேல் வேட்கை மிக்கு ஆற்ருளாய் அரற்று நிற்பப் புலன் வேறு பட்டாள் எனக் கண்ட செவிலி வெறியாட்டு அயர முற்பட்டாளுக் குத் தோழி அறத்தொடு நின்றது.

[குறிப்பு —"மத்தம் உன்மத்தமே இன்றெனக் கானவா றன்னே யென்னும்" என்ற பத்தாவது திருப்பாட்டின் பகுதியே தலைமகள் பூத்தரு புணர்ச்சியால் பித்துற்றமையையும், அதனைக் கண்ட செவிலி அஃது எதனுல் ஆயிற்றென அறியுமாறு வெறியாட்டயர முற்பட்டமையையும், "அன்னே என்னும்" என்று இறுவதெல் லாம் தோழி அவர்கட்கு அறத்தொடு நின்றமையையும் தாமே புலப் படுத்துதல் காண்க. தலைவி கோரியதனையே தோழி படியெடுத்து மொழிகின்ருளாதலின் "அன்னே" என்பது ஒன்றே தலைவியிடத்தில் தோழியையும் தோழிகூற்றில் செவிலியையும் குறித்துக்கொள்க.]

(பொ - ரை) அன்னுய்! தோழியானவள், ஒருவர் வேதப் பாட்டினைப் பாடியவராய், வெள்ளிய திருநீற்றினைப் பூசியவராய்ச் செம்மையான மேனியை உடையவராய்த் தமது பறையினுல் நாதத்தை முழக்கினுர் என்று என்பாற் சொல்லுவாள், அங்ஙனம் பறையை முழக்கி நாதம் எழுப்பியவராகிய இத்தலைவரே திசை முகனுக்கும் திருமாலுக்கும் தலைவராவார் என்று என்னிடம் சொல்லுவாள். (ஆதலால் அங்ஙனம் என்பாற் கூறிவரும் அவளது இயல்பினுக்கு, நீ இப்போது மேற்கொண்ட வெறியாட்டு அயர்தலானது தக்கதொன்ருமோவென முன்னர்ச் சூழ்ந்து தெளிந்துகொள்வாயாக எனச் செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்ருள் எ - று.

(வி - ரை.) முதற்கண்ணே அவரது பறைமுழக்கொலியையும், அதன்மேல் அவர் பாடும் சாமவேத கீதத்தினையும், அதன்மேல் அவரது

வெண்ணீற்றுப் பூச்சினையும், அதன்மேல் அந்நீற்றகத்துப் பொலிந்து தோன்றும் அவர் திருமேனியின் செவ்வண்ணத்து இயல்பினையும், அதன் மேல் தன் காதலுக்குரிய தலைவராம் இயல்பினையும், மற்றவரே இரு பெருங் கடவுளர்க்கும் தலைவராகிய முதன்மையினையும் தான் உணர்ந்து அறிந்த வாறே, தன் வாயாலும் உணர்த்துகின்றாளாதலின், அவள் இயல்பாகிய காதற் பித்துற்றனளே அன்றி, நீ கருதுமாறு அணங்கினால் அணங்கப் பட்டவள் ஆகாள் என அளந்து காட்டினாள் என்க.

வேதம் - சாமகீதம். 'நாதப்பறையினர் வேதமொழியர் வெண்ணீற்றர் செம்மேனியர் அன்னே என்னும்' என மாற்றிப் பொருளுரைக்க. நாதப் பறையும் வேதமொழியும் செவிக்கின்பமும், வெண்ணீறும் செம்மேனியும் காட்சிக்கு இன்பமும அளித்தன. ஊற்றின்பம் பெருமையால் தலைமகள் பித்துற்று அரற்றுவாளாயினள் என்பது குறிப்பு.

பிறர் வரைவு நேரும்போது தன் தலைமகனை இன்னன் எனத் தலை மகள் புலப்படுத்துவாள் ஆயினாள் என்க. தலைமகனும் வரைவுடம் படாது அருமை காட்டி வருகையில், வேற்று வரைவுக்கு இல்லத்தாரும் உடம்பட்டு நிற்றலைக் கண்ட தலைவி ஆற்றாது அங்ஙனம் புலம்புதலைக் கண்ட செவிலி வெறியெடுக்க முயலும்போது தோழி அவளுக்கு அறத் தொடு நின்றதெனக் கொள்க.

**கண்அஞ் சனத்தார் கருணைக் கடலினர்**
**உள்நின்று உருக்குவர் அன்னே என்னும்;**
**உள்நின்று உருக்கி உலப்பிலா ஆனந்தக்**
**கண்ணீர் தருவர்ஆல் அன்னே என்னும். 2**

இது, நாதப்பறையினராய் வந்து என்னைக் கடைக்கணித்த மையால் அவர் கணிப்பில் ஈடுபட்ட என்னுள் நின்று என்னை உருக்கி ஆனந்தக் கண்ணீரைத் தந்தாரென்று நின்மகள் அரற்று நிற்பாள் எனத்தோழி செவிலிக்கு அறத்தோடு நின்று கூறியது.

(பொ - ரை.) தாயே நின்மகள் என்னிடம் வந்து தோழீ! கண்ணில் தீட்டிய மையுடையவராய் அருளாகிய கடலினையுடையவ ராய், என்னுள்ளத்திலே நிலைபெற்று அதனை உருகச் செய்வர் என்று அரற்றுவாள், அன்றியும் தோழீ! அங்ஙனம் என் உள் ளத்தை உருக வைத்து வற்றாத உவகைக் கண்ணீரைப்பெய்யச் செய்வர் என்று அரற்றுவாள் (என்றாள்) எ - று.

(வி - ரை.) வெறி எடுத்தற்கு ஊக்கும் நின் செயலாலும், அவள் அதனைக் கண்டு ஆற்றாது அரற்றுநிற்பதாலும் யான் தாக்கப்பட்டு அறக் கலங்கினேன் என்பது குறிப்பு.

"கண் அஞ்சனத்தார் கருணைக் கடலினர்" என்றாளேனும்,

அஞ்சனந் திட்டிய கண்ணும் கருணை காட்டினர் என்பதே கருத்தாகக் கொள்க.

தன் தமர் வேற்று வரைவிற்கு உடம்பட்டமை கண்டு ஆற்றாளாய தலைமகள், தனக்குத் தலைவன் புகுந்து கடைக்கணித்த பண்டைய நிகழ்ச்சியைத் தோழிக்கு உணர்த்த, அங்ஙனம் உணர்த்தியவற்றைத் தோழி செவிலிக்குக் கொண்டு கூற்றாகக் கூறினாள் என்க. முந்திய திருப் பாட்டால் தலைவன் காட்சியும், இதனால் அவன் கடைக்கணிப்பும் கூறப் பட்டன.

அங்ஙனம் கடைக்கணித்தவர் வரைவு நீட்டித்தற்கும், தமர் பிறர் வரைவு நேர்தற்கும் ஆற்றாளாகிய தலைமகள் அங்ஙனம் எல்லாம் அரற்ற நின்றாள் எனத் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள்.

முன்னர்த் திருப்பாட்டால் அவரது பெருவனப்பிற்கும், இதனால் அவர் கருணைக்கும் தான் ஈடுபட்டதைத் தலைவி தோழிக்கும் தோழி செவிலிக்கும் புலப்படுத்தி அறத்தொடு நிற்கின்றாள் என்க.

அவர் அளித்த மாலையை மறுக்கும் ஆற்றல் தனக்கு இன்று என்பது தோன்றக் "கருணைக்கடலினர்" என்றும், அவர் தண்ணளி செய்தமை வெளிப்படுத்தற்கு இயலாததொன்றாதலின் "உள் நின்று உருக்குவர்" என்றும், அதனை அவள் மறைத்தும் அவள் கண்ணீர் புலப்படுத்தா நிற்றலை "உலப்பிலா ஆனந்தக் கண்ணீர் தருவர்" என்றும் கூறியவாறு. அவள் துயர்க்குக் காரணமாவது, ஆனந்தக் கண்ணீர் என்றலின் அவன் செயல் மேலாகாது, தமர் வேற்று வரைவிற்கு உடம்பட்டதன் மேலாயிற் றெனக்கொள்ளினும் கொள்க. 'உலப்பிலா ஆனந்தம்' என்றியைப்பினும் அமையும்.

உயிர் நீத்தல் உடன்போதல் ஆதியவற்றால் தன் கற்பு காக்கப்படு மாதலின், அவன் அளித்த ஆனந்தம் "உலப்பிலா ஆனந்தம்" ஆயிற்று.

'கண்ணஞ்சனத்தர்' என்பதனால் உமையொரு கூறன் என்பது பெற்றாம்.

**நித்த மணாளர் நிரம்ப அழகியர்**
**சித்தத்(து) இருப்பர்ஆல் அன்னே என்னும்;**
**சித்தத்(து) இருப்பவர் தென்னன் பெருந்துறை**
**அத்தர்ஆ னந்தர்ஆல் அன்னே என்னும்** 3

இது, என் முன்னர்க் கருணை காட்டி என்னுள்ளே புகுந்து என்னை உருக்கி ஆனந்தக் கண்ணீர் தந்தவர், என்னுள்ளேயே என்றும் மணவாளராய்ப் பேரழகுடையவராய் வீற்றிருப்பாரென, அன்னாய்! நின் மகள் என்பால் கூறாநின்றாள் என அவள் அவட்கு அறத்தொடு நின்று கூறியது.

(பொ - ரை.) அன்னாய்! நின்மகள், தோழீ! என் தலைவர், என்றும் மணாளர் ஆவர், நிரம்பிய அழகுடையவராவர், என் உள்ளத்தினையே தாம் வாழும் இடமாகக் கொண்டு வீற்றிருப்பர், தோழீ! அங்ஙனம் என் உள்ளத்திருப்பவர் தாம் தென்னவனுக் குரிய திருப்பெருந்துறைக்கு அத்தரும், ஆனந்தருமாவார் என்று என்பாற் கூறாநின்றாள் (என்றாள்) எ - று.

(வி - ரை.) தென்னன் பெருந்துறை அத்தர் - பாண்டியனது திருப் பெருந்துறைக்கண் வீற்றிருக்கும் அப்பர்.

"தென்னன் நன்னாட்டிறைவன்" (திருப்பாண்டி. 4.) என்புழிப்போலக் கொள்க. தென்னனாகிய அத்தர் என்றுரைப்பின் ஒருமை பன்மை மயக்கமாகக் கொள்க.

"நித்த மணாளர் நிரம்ப அழகியர்" என்பன இறைவன் திருமேனி வனப்பினும், "தென்னன் பெருந்துறை அத்தர்" என்பது அவர் சிறப் பினும், "ஆனந்தர்" என்பது அவரொடு நுகர்ந்த போக நுகர்ச்சியினும் வெளிப்போந்த திருப்பெயர்களாகும்.

இப்பகுதியுட் பயின்ற திருப்பாக்களால், வேற்று வரைவு மறுக்கப் பட்டுத் தலைமகளுடைய கற்பு நிலைநாட்டப்பட்டது.

தமர் வேற்று வரைவிலே ஈடுபட்டமைக்கு ஆற்றாத இந்நேரத்தினும், தலைமகனுடைய அழகினும் அன்பினும் தலைமகள் ஈடுபட்டிருக்கின்றாள் என்றலால், அவளது வேறுன்றிய, அசைத்தற்கரிய, எழுமையும் பயின்று வரும் காதற் சிறப்பு விளக்கப்பட்டது.

"பெருந்துறை அத்தர்" என்றலால் சில அடியவர்க்கருளிச் செய்து, எஞ்சியிருந்தோருள் என்னைத் தில்லைக்கு வருகென ஏவினராதலால், அவர் செய்கையால் என்னை வெறுத்தவர் போன்றனரேனும், அவர் சொல்லால் தன்னகத்துள்ளே அமைந்திருந்த அன்பினைப் புலப்படுத் தியோராவர் எனக் குறிப்பிட்டாள் என்க. தென்னவற்கருளிய அத்தர், திருப்பெருந்துறை அத்தர் எனினும் இழுக்காது.

**ஆடரப் பூண்உடைத் தோல் பொடிப் பூசிற்றோர்**
**வேடம் இருந்தவா(று) அன்னே என்னும்;**
**வேடம் இருந்தவா கண்டுகண்(டு) என்னுள்ளம்**
**வாடும் இதுஎன்னே அன்னே என்னும். 4**

இஃது, என் தலைவர் அராவினைப் பூண்டு, தோலையுடுத்து, நீறு பூசிக்கொண்டு, ஒரு திருவேடத்தோடு எனக்குக் காட்சியளித் தார், அவர்க்கு அவ்வேடமும் இயல்பாகவே உள்ளது எனப் பலராலும் பழித்துரைக்கப்படவும் கேட்டுள்ளேன் எனினும், அவ் வேடத்தினைக் காணுந்தோறும் என் உள்ளம் வாடாநிற்கும்.

அங்ஙனம் வாடுவதுதான் என்னை தோழி! என நின்மகள் அரற்றுநின்றாள் என அவள் அவட்கு அறத்தொடு நின்று கூறியது.

[குறிப்பு —அறத்தொடு நிற்றல் - தலைமகள் தலைமகனைக் காதலிக்கப்பட்டு இல்லற நிலையில் அமைந்து நிற்றலைப்பற்றித் தலைமகள் தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை தன்னையர்க்கும் எடுத்துக் கூறுவது.]

(பொ - ரை.) அன்னாய்! நின்மகள், தோழி! ஆடும் பாம்பினை அணிகலனாக அணிந்து, தோலை உடையாக உடுத்து, சாம்பலை மணப்பொடியாகப் பூசிக்கொண்டதாகிய ஒரு திருவேடம் என் தலைவருடையதாக இருந்த விதம் எத்தன்மைத்து என்று சொல்வாள்; அங்ஙனம் சொல்லிய அவளே தோழீ! அவ்வேடம் கொண்டிருந்த வகையை என் கண்ணும் மனமும் நோக்கி நோக்கி வாடாநிற்கும், இப்பெற்றிதான் என்னை என்றுநிற்பள் (என்றாள்) எ - று.

(வி - ரை.) ஏனையோர் அவ்வேடம் அச்சம் முதலாயவற்றை விளைக்கும் எனக் கூறுவர். யானோ அதனைக் கண்டு வாடுகின்றேன் எனக் குறித்தபடி. இதனால் காதல் என்பது, வனப்பு உண்மையினும், அஃது இன்மையினும் தங்கிற்றிலதென்பது பெற்றாம். பொல்லாத யான் அவரைக் காதலித்த பாவத்தால் அவர்க்கு அவ்வேடம் இயந்ததுவோ என்றிரங்கினாளுமாம். யானே அவ்வேடத்திற்கு இரங்கி அன்பு செய்கையில் பிறர் அதன் இயல்பினை எனக்குக் கிளந்து கூறித் தடுக்க முயல்வது பயனில் செய்கையாம் என்பது கருத்தாகும்.

"காணுந்தோறும் உள்ளம் வாடும்" என்றதனால், அவள் அதனை நோக்கியது பொது நோக்கன்றென்பதும், அவள் மனம் அத்திருவேடத்திலே பதியப்பட்டே வாட்டமெய்திற்று என்பதும், அவ்வாட்டம் காதலும் அருளும் பெற்றமையால் உளதாயிற்று என்பதும் பெறப்பட்டன.

வேடம் - உடை முதலாயவற்றால் கொள்ளும் வேற்றுக்கோலம். அங்ஙனம் கொண்டுவந்த வேடம் அவற்கு இயல்பாக உள்ளது அன்று என்பது அவளால் அறியப்பட்டது என்க. அது முன்னர்ப் பாட்டுக்களால் விளங்கா நின்றது.

'அரா' என்பது "அர" எனக் குறுகி நின்றது. பொடி - திருநீறு. தாருகாவனத்து முனிவர்கள் தன்னைக் கொல்லுமாறு விடுத்த அரவினை அணிந்தும், புலியைக் கொன்று அதன் தோலை உடையாக உடுத்தும், சர்வ சங்காரகாலத்தே அயன் அரி என்போர் உடற்பொடியைப் பூசியும் இறைவன் நின்றான் என்க. தோல், கயாசுரன் தோலுமாம்.

இவ்வேடம், பொதுவாக நோக்குவார்க்கு அச்சம் வெறுப்பு என்பவற்றை எய்துவிப்பதாகக் காணப்படினும், அவற்றின் உண்மையினை

உற்றறியப் புகுவார்க்கு, இறைவனைப் பகைத்தார் உய்யார் என்பதும், அவனையன்றி உய்விப்போர் இலர் என்பதும், அவ்வுண்மைகளைக் கண்டு நாம் உய்வு பெறுதற்பொருட்டே அவன் அவ்வேடத்தோடு பொருந்தியுள்ளான் என்பதும், முடிவில் தலைமைக் கடவுளர் எனப்பட்டவர் எல்லாரும் அழியாநிற்க அவன் ஒருவனே நிலையுதல் பெறுவன் என்பதும், ஆதலால் அவனையே அடைக்கலம் புகுதல் அழியா இன்பத்துட்கொண்டு செலுத்தும் பெருநெறியாம் என்பதும் தெற்றெனப் புலப்படும் என்க.

இனி, அரவு இயக்கும் ஆற்றலையும், தோல் காக்கும் ஆற்றலையும், பொடி ஒடுக்கும் ஆற்றலையும் உணர்த்துமென்பாருமுளர்.

முன்னர் எளியராக வந்து அருள்செய்தவர், பின்னர் உலகுக்கெல்லாம் முழுமுதலாகக் காட்சியளித்தலால், அவர் நமக்கு அரியராவர் போலும் என உள்ளம் வாடிஞளுமாம்.

அராவினை அணிந்தமைக்குப் பிற வரலாறுங் கூறுப.

**நீண்ட கரத்தர் நெறிதரு குஞ்சியர்**
**பாண்டிநன் ஞடர்ஆல் அன்னே என்னும்,**
**பாண்டிநன் ஞடர் பரந்(து)எழு சிந்தையை**
**ஆண்(டு)அன்பு செய்வர்(ஆல்) அன்னே என்னும். 5**

இது, தோழீ! அங்ஙனம் வேடங்கொண்டு என் உள்ளத்தை வாட்டினேர் பாண்டி நாடுடையவராவர், பரவியெழும் என் சிந்தையைக் குவியச்செய்து என்மேல் அன்பு செய்யாநிற்பர் என்று அன்னுய் நின்மகள் என்பாற் கூருநிற்பாள் என அவள் அவட்கு அறத்தொடு நின்று கூறியது.

(பொ - ரை.) அன்னுய்! நின்மகள், தோழீ! என் தலைவர் நெடிய கையினை உடையவர், சுருளுதலையுடைய தலைமயிரினை உடையவர், நன்மையுடைய பாண்டி நாட்டினைத் தமது நாடாக உடையவர் என்று என்னிடம் கூருநிற்பள்; அவள் அதன்மேலும் தோழீ! என் தலைவராகிய நற்பாண்டி நாட்டினர்தாம், என்னுடைய பரக்கச் சுழன்று திரிந்து எழுகின்ற உள்ளத்தினை அங்ஙனம் சுழன்றெழாது ஆட்கொண்டு அன்பு செய்யாநிற்பர் என்று என்னிடம் கூருநிற்பாள் (என்றுள்) எ - று.

(வி - ரை.) நீண்ட கரம் - கொடையால் நெடிய கை. உருவால் நெடியதுமாம். நெறிதல் - சுருளுதல். பாண்டிநன்ஞடு - நற்பாண்டி நாடு. தமர் வேற்று வரைவு நேர்தலானும், தலைவர் வரைவு நீட்டித்தலானும் உண்டாகிய சிந்தையினுடைய சுழற்சியென்க. சிந்தையை ஆண்டு அன்பு செய்தலாவது, அவர் தனக்குச் சொல்லிய சொல்லையே பற்றிக் கொண்டு சிந்தை சுழற்சியற்றிருத்தல் என்க. தலைவர் செய்துவரும்

அன்பே மனம் சுழன்றெழாது அதனை அடக்கியதென்க. அவர் தண்ணளியின்றேல், யான் இதுவரையில் இறந்துபடுவேன் என்றனளாகக் கொள்க. யான் இறந்துபடில், என் தலைவர் அரசர் ஆதலால், அவரால் என் இல்லத்தார்க்குப் பெருங்கேடு நேரும் என அச்சுறுத்தினளுமாம்.

> உன்னற்(கு) அரியசீர் உத்தர மங்கையர்
> மன்னுவ(து) என்நெஞ்சில் அன்னே என்னும் ;
> மன்னுவ(து) என்நெஞ்சில் மால்அயன் காண்கிலார்
> என்ன அதிசயம் அன்னே என்னும். 6

இது, தோழீ! உத்தரகோசமங்கையூருடையராகிய என் தலைவர் நிலைபெற்றிருப்பது என் நெஞ்சின் கண்ணே. அவர் அங்ஙனம் இருப்பதை மாலும் அயனும் காண்கின்றிலர். அப்பெருங் கடவுளரும் காண்கிலாமை எத்துணை வியப்பாகும் என நின் மகள் என்பாற் கூறுநிற்பாள் என அவள் அவட்கு அறத்தொடு நின்று கூறியது.

(பொ - ரை.) அன்னாய்! நின் மகள், தோழீ! நெஞ்சாலும் நினைத்தற்கரிய மிகுபுகழையுடைய உத்தரகோசமங்கையை ஊராகவுடைய என் தலைவர் நிலைபெற்றிருப்பது என்னுள்ளத்தே என்று என்னிடம் கூறுநிற்பாள் ; அவள் அதன்மேலும், தோழீ! அவர் என்னுள்ளத்தே வீற்றிருப்பதைத் திருமாலும் திசைமுகனுமாகிய அப்பெருங் கடவுளரும் காண்கிலர், அவர் காணாதது எவ்வளவு வியப்பாகும் என்பாள் (என்றாள்) எ - று.

(வி - ரை.) ‘உத்தரகோசமங்கை’ என்பது “உத்தர மங்கை” என மருவி நின்றது. “சீர்” என்றதை ஊர்க்கும், தலைவர்க்கும் ஏற்றியுரைக்க. எனக்கு இத்துணை எளியராக இருக்குமவர், அவர்க்கு அரியராக இருக்குமது, அவரை அன்பு செய்வார் ஆற்றலின் மேலாகாது, அத்தலைவர் அருள் மேலதுவேயாகும் எனக் குறிப்பிட்டவாறு.

கடற்கண் வீசப்பட்ட ஆகமம் மீட்கப்படும் என்றதும், சபிக்கப்பட்ட அன்னைக்கு அருளப்படும் என்பதும், அவ்வாகமம் இவ்வுலகத்தார்க்கு உபதேசிக்கப்படுமென்பதும், அன்ன பிறவும் “உன்னற்கரிய மிகுபுகழ்” என்க.

அவரே என் நெஞ்சில் மன்னி வருதலால், யானும் அவரால் காக்கப் படுவேன், அவரே என் தலைவருமாவர் என்றாள் என்க.

அண்ணாமலையில் சோதி வடிவாக நின்றானைக் காணமுடியாமையே யன்றி என் நெஞ்சத்துங் காணார் என அவர் சிறுமை குறித்தாளுமாம்.

வெள்ளைக் கலிங்கத்தர் வெண்திரு முண்டத்தர்
பள்ளிக்குப் பாயத்தர் அன்னே என்னும்
பள்ளிக்குப் பாயத்தர் பாய்பரி மேற்கொண்(டு)என்
உள்ளம் கவர்வர்ஆல் அன்னே என்னும். 7

இது தோழீ! என் தலைவர் குதிரையின் மீதிவர்ந்து வந்து என் உள்ளத்தைக் கவர்ந்துகொள்வர் என நின் மகள் என்பால் முறையிடுகின்றாள் என அவள் அவட்கு அறத்தொடு நின்று கூறியது.

(பொ - ரை.) அன்னாய்! நின் மகள், என் தலைவர்தாம் வெண்மைத்தாகிய ஆடையை உடுத்து, திரிபுண்டரமாகத் திருநீற்றினை அணிந்து, பள்ளியறைக்குரிய உடையினை யணிந்தவராயினார் என்று என்பாற் கூறாநின்றாள், அவள் அதன்மேலும், தோழீ! பள்ளிக்குப்பாயம் புகுந்தவராகிய அவர், தாவிச் செல்கின்ற குதிரையின்மேல் எழுந்தருளி என் உள்ளத்தினைக் கவர்ந்துகொள்வர் என்று கூறாநின்றாள் (என்றாள்) எ - று.

(வி - ரை.) கலிங்கம் - கலிங்கநாட்டில் நெய்யப்பட்ட ஆடை; பிறந்த வழிக் கூறலாகிய ஆகுபெயர். திருமுண்டம் - திரிபுண்டரமாகத் தரிக்கப் பட்ட திருநீறு. தோளிலணிந்த நீறுமாம். "பள்ளிக்குப்பாயத்தர்" என்றமைக் கேற்ப நெற்றித் திருநீற்றுப் புண்டரமே ஈண்டுக் கொள்ளப்படும். பள்ளிக்குப்பாயம் - பள்ளியறை யென்பதை "கேசரி ஆசனம்" (தக்கயா. 196.) என்பதற்கு எழுதிய உரையானும், "திருப்பள்ளித் தவிசின்கண் இருந்தருள" (ஷை. 189.) என்பதனாலும் "கழாஅக்கால் பள்ளியுள் வைத் தற்றால்" என்னுங் குறளாலும் (840.) அன்னபிறவற்றானும் உணர்க. இனிப் பள்ளிக்குப்பாயம் என்பது குதிரைச் சேகவஞகி அணிந்த சட்டையையும் உணர்த்துமென்க. குப்பாயம், மெய்ப்பை, படம், சட்டை என்பன ஒரு பொருட்சொற்கள். ஈண்டுப் "பள்ளி" என்றது வினைசெய் இடத்தினை.

"வினைபடு பள்ளியிற் றோன்றும்" (களவழி. 15.)

என்பதன்கண் பள்ளி என்பது வினைசெய் இடத்தினைக் குறித்து நிற்றல் காண்க. "பள்ளிக்குப்பாயம்" என்றது, வினை செய்யுமிடத்திற்கேற்றவாறு இட்டுக்கொள்ளற்குரிய குப்பாயம் என்றவாறாம். ஈண்டு வினையாவது குதிரை மேற்கொள்ளுதல். இடமும் ஆண்டே பெறப்பட்டது. வினை செய்யுமிடம் பலவாதலின் ஆங்காங்கு வினைபுரிதற்கு ஏறறவாறு இட்டுக் கொள்ளும் குப்பாயங்களும் பலவாயின என்க. அஃது உடம்பினை மறைத் தலால்,

"புதைக்குப் பாய்த்து" (பெருங். உஞ். 58, 24.)

எனவும், கட்டப்படுதலால்,

"வரிக்குப் பாய்த்து வார்பொற் கச்சையர்" (ஷை, ஷை. 40, 378.)

எனவும், பிறவாறும் பயின்று வருமாறுணர்க. இறைவன் பரிமேற்கொண்டு

வரும்போது சட்டையிட்டிருந்தான் எனத் திருவாலவாயுடையார் புராணமும் கூறுநிற்கும்.

இறைவன் பரிமேற்கொண்டு அடிகளையும் ஆண்டுகொண்ட வரலாறு, திரு அம்மானை 3-ஆம் திருப்பாட்டானும், திருப்பூவல்லி 20-ஆம் திருப்பாட்டானும் அறியப்படும். பாண்டிப்பதிகம் அருள் பெற்றவுடன் உலகோர்க் கறிவுறுத்தியதாகும் இவ்வாறு "பள்ளிக்குப்பாயம்" என்னும் தொடரின் பொருளைத் தோழி உய்த்துணருமாறு தலைமகளும் செவிலி உய்த்துணருமாறு தோழியுங் கூறிய திறன் பாராட்டற்பாலது. அது அவையல் கிளவியாதலின் மறைத்து மொழிந்தாளென்க.

தாளி அறுகினர் சந்தனச் சாந்தினர்
ஆள் எம்மை ஆள்வர் ஆல் அன்னே என்னும்,
ஆள் எம்மை ஆளும் அடிகளார் தம்கையில்
தாளம் இருந்தவா(று) அன்னே என்னும். 8

இது, தோழீ! பரிமேற்கொண்டு என் உள்ளம் கவர்ந்தவரே முன்னம், தாளியறுக மாலையணிந்து, சாந்து பூசிய மேனியராய் என்னை ஆண்டவராவர், அத்தகைய அவர் கையில் தாளம் இருந்த வகைதான் யாதோ என நின் மகள் என்பால் முறையிடுகின்றாள் என அவள் அவட்கு அறத்தொடு நின்று கூறியது.

[குறிப்பு —என்னை இங்ஙனம் அப்போது ஆண்டவர் இப்போது என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டார், அவர் கையில் தாளம் இருத்தலால் ஆடுதலும் பாடுதலும் வல்லராவர், அவற்றைக் காட்டியும் என்னை வருததும் இயல்புடையவர் என்பது.]

(பொ - ரை) அன்னாய்! நின் மகள், தோழீ! என் தலைவர் என் பால் தாளியறுக மாலையை அணிந்து, சந்தனச் சாந்து பூசிவந்து எம்மை ஆட்கொள்வர் என என்பாற் கூறுநின்றாள், அவள் மேலும், தோழீ! எம்மை ஆண்டுகொள்ளும் அடிகளாவார் தம்முடைய திருக்கையிலே தாளம் இருந்தவாறுதான் என்னை என்று என்னிடம் கூறுநின்றாள் (என்றாள்) எ - று.

(வி - ரை.) ஆள் எம்மை யாள்வர் - அடிமைப்பட்ட எங்களை அங்ஙனம் அடிமையாகக் கொண்டு விடாது ஆண்டு வருவர். தாளம் - கால நிகழ்ச்சியை அறுதியிடுவதற்குரியதொரு கருவி.

தாளியறுக மாலையை முன்னர் எமக்குத் தந்து எம்மை யாண்டவர், பின்னர் மத்த மாலையைத் தந்து எம்மைச் சுழல விடுத்தார் என்றலும் ஒன்று.

இறைவன் கையில் தாளம் இருந்தவற்றிற்கு வரலாறு காணப் பட்டிலது. அர்த்த நாரீச்வர மூர்த்தி இங்குக் குறிப்பிடப்பட்டார் போலும்.

அவள் திருக்கரமே இறைவன் இடக்கரமாக அமைதலின் "அடிகளார் தங் கையில் தாளம்" என்றாள். அவளே ஊழிமுடிவில் தாளம் ஒத்துதலால் காப்பவளாவாள் எனக் கலித்தொகைக் கடவுள் வாழ்த்தும் கூறும்.

"சந்தனச் சாந்து" முதலியன காதல் குறித்து வந்தமையின் தாளமும் காதற்பாட்டுக்கு ஒத்துறுதற்கு இயைந்ததாகும் என்க.

**தையல்ஓர் பங்கினர் தாபத வேடத்தர்**
**ஐயம் புகுவர்ஆல் அன்னே என்னும் ;**
**ஐயம் புகுந்தவர் போதலும் என்னுள்ளம்**
**நையும்இது என்னே அன்னே என்னும். 9**

இது, தோழீ! தாளம் கைக்கொண்டவராகிய என் தலைவர், தையலைப் பங்கிற் கொண்டு ஐயம் புகாநிற்பர், அவர் அங்ஙனம் போதலைக் கண்ட என்னுள்ளம் வருந்தும். இங்ஙனம் வருந்துதற் குரிய காரணம் தான் யாது என்று நின் மகள் என்பால் முறையிடு கின்றாள் என அவள் அவட்கு அறத்தோடு நின்று கூறியது

(பொ - ரை.) அன்னாய்! நின்மகள் தோழீ! என் தலைவர் தாம் மாதொரு பாகத்தினராய்த் தவவேடம் மேற்கொண்டு, இல்லந் தோறும் ஐயம் புகுவாராயினர் என்று என்பால் முறையிடுகின்றாள், மேலும் அவள், தோழீ! ஐயம் புகுந்து அவர் செல்லுதலும் என் மனமானது (அவர் பிரிவு கருதி) வருந்தாநிற்கும், இங்ஙனம் வருந்தும் இதன் காரணம் யாது என்று என்பாற் கூறுகின்றாள் (என்றாள்) எ - று

(வி - ரை.) தவவேடமும், தையலைப் பங்கில் அமைத்ததுவும், ஐயம் புகுதலும், அவளுக்கு வெறுப்பினைத் தரும் காரணங்களாக இருப்பவும், அவர் அவளின் நீங்குதல் குறித்து அவள் உள்ளம் நைவதால், அவளது காதல் அவரொடு எழுமையும் பயின்றுவரும் பண்பிற்றென்பது பெற்றும்

அவர் தவவேடம் மேற்கொண்டும், ஐயம் புகுந்தும் தையலைப் பேணி வருதலும், இல்லறம் மேற்கொள்ளுதல், சிற்றின்பத்தின்பாலதாகிய மெய்யுறு புணர்ச்சிக்கன்று, உயிருறு புணர்ச்சியாகிய உள்ளப்புணர்ச்சி குறித்தற்கே என்றலும் என்னுமிவற்றை, அவர்மேல் உள்ளன்புடையார் உணர்ந்துகொள்வர்.

இப் பிக்ஷாடனமூர்த்தி தாருகவனத்து முனிபன்னியரைக் கற் பழித்து, அவரை முனிவரொடு இல்லறம் பூண்டொழுக அருளிச் செய் தாங்கே, என்னையும் இவ்வுலகில் ஒருவரொடு மனையறம் பேணச் செய் வாரோ என்னும் அச்சத்தாலும் நையாநின்றேன் என்று குறிப்பிட்டாளு மாம்.

இனி, இங்ஙனம் ஐயம் புகுந்தாரைக் கண்டதும் என் உள்ளம் நையும்

என்றலால் தன்னை ஆண்டருளிய அவரை இவ்வேடம் பூண்டுவந்தார் என்பது பெற்றும்.

சகுந்தலைமேல் மனம்பற்றிய துஷ்யந்தன், அவள் தன்னின் உயர் குலத்தினளாவளோ என்று ஐயுற்றுத் தனது தூய நெஞ்சம் அவளைப்பற்றிய காரணத்தால், அவள் தனக்கு இயைந்தவளாவள் எனத் துணிந்த வாறே இவளும் தாபத வேடத்தாரைத் துணிந்தனள் எனக் கொள்க.

கொன்றை மதியமும் கூவிள மத்தமும்
துன்றிய சென்னியர் அன்னே என்னும்;
துன்றிய சென்னியின் மத்தம்உன் மத்தமே
இன்(று) எனக்(கு) ஆனவா அன்னே என்னும். 10

இது, தோழீ! என் தலைவர் சென்னியிலணிந்த ஊமத்த மாலையை எனக்கு அன்று அளித்தமையாலேயே இன்று யான் பித்துற்றேன் என நின் மகள் என்பாற் கூறுநின்றுள் என அவள் அவட்கு அறத்தொடு நின்று கூறியது.

(பொ - ரை) அன்னாய்! நின்மகள், தோழீ! என்தலைவர் கொன்றை மலரும், இளம்பிறையும், வில்வத்தளிரும், ஊமத்தம் பூவும் நெருங்கப் பெற்ற தலையையுடையவர் என்று என்பால் முறையிடுகின்றுள், மேலும் அவள், தோழீ! அவர் நெருங்கிய தலையின்கண்ணே உள்ள, அன்று எனக்கு அளித்த ஊமத்தம்பூவே இன்று எனக்குப் பித்தாக ஆயினமை எக்காரணம் என்று என்பால் முறையிடுகின்றுள் (என்றுள்) எ - று.

(வி - ரை.) தமர் வேற்று வரைவுடம்படுதலாலும், தலைவர் வரைவுடம் படாமையாலும், அன்றளித்த பூத்தரு புணர்ச்சிகொண்டு இன்று ஆற்றுது பித்துற்றுப் புலம்பாநின்றேன் என்றுள் என்றவாறு.

"மத்தமே உன்மத்தம்" எனக்கு ஆனவாறெனக் காரியம் காரண மாகக் கூறப்பட்டது.

என்னையாட்கொண்டவன் சிவனே யென அவன் எனக்குக் காட்டக் கண்ட யான் அவன்மேற்பித்துற்றேன் என்றுள்.

" சிவன் என யானும் தேறினன் காண்க " (திருவண். 62.) என்றதும் இதனையே வலியுறுத்தும். பிறவுமன்ன.

திருச்சிற்றம்பலம்

# குயிற்பத்து

இளவேனிற் காலத்தில் வந்து வரைந்துகொள்வேன் எனப் பருவங் குறித்துச் சென்ற தலைமகன் வராதது குறித்துச் சோலையிடைச் சென்று அங்குத் தலைமகன் சிறைப்புறமாக வந்து நிற்றல் கண்ட தலைமகள், அவன் குறித்த பருவத்தே வழுவாது வந்து உவகை செய்தவாறே இனித் தன்னை விரைந்து வரைந்து கொண்டு உவகை செய்யுமாறு அவனுடைய பேராற்றல் பேரருள் முதலியவற்றைக் குயிலுக்கு எடுத்துக் கூறி, அவனை வரக் கூவுமாறு பணித்துத் தன்னொடு அதனையும் பயனடையுமாறு செய்வித்தது என்னும் பொருளைக் கூறும் பத்துத் திருப்பாட்டுக்களைக் கொண்ட பகுதி "குயிற்பத்து" எனப்படும் "கூவாய்" என்பதன்றிச் 'செல்லாய்' என்னாமையின் தலைமகன் சிறைப்புறத்தான் என்பது பெற்றாம்.

அவனாற் குறிக்கப்பட்டதும் தன்னால் எதிர்பார்க்கப்பட்டதுமாகிய பருவத்திலே தவறாது தலைமகன் வந்து நின்றபடியால் தலைமகள் நொந்து கூறாத இயல்பொன்றே மேற்கூறிய பொருளே இப்பகுதிக்கு உரியதென்பதைப் புலப்படுத்தாநிற்கும். "உன் துணைத் தோழியும் ஆவன்" எனத் தலைமகள் கூறுவதால் அது பெண்குயில் என்பது பெற்றாம். திருவாய்மொழிக்கண்ணும் (9-ஆம் பத்து 5-ஆம் திருவாய்மொழி) பெடைகளையே தூதாக அனுப்பியதும் அவற்றொடு ஆண்களையுங் கூறுதலும் நோக்கத் தக்கது. நாச்சியார் திருமொழியில் (5-ஆந் திருமொழி 3-ஆம் பாட்டு) "மன்னுபுகழ்" என்பதன்கண் காதலியொடு உடன்வாழ் குயிலே எனக் கூறியருளப்பட்டது ஆயத்தக்கது

இப்பகுதி தலைமகனுடைய பேராற்றலும் பேரருளும் கூறியது, தலைமகன் பிறர்க்கு அருளியது, தலைமகன் தலைமகளுக்கு அருளியது, தலைமகன் தன்னை அழைக்குங் குயிலுக்கு ஆக்கம் அருளுவது என்னும் நான்கு பிரிவுகளையுடையது.

முதலாவது பிரிவில் 5, 1, 8, 3-ஆந் திருப்பாட்டுக்கள் அடங்கும் இரண்டாவது பிரிவில் 2-ஆம் திருப்பாட்டு அடங்கும். மூன்றாவது பிரிவில் 9, 10, 4-ஆந் திருப்பாட்டுக்கள் அடங்கும். நான்காவது பிரிவில் 7, 6-ஆந் திருப்பாட்டுக்கள் அடங்கும்.

அடிப்பாட்டுப் பொருளடைவின் அமைதி வருமாறு —

தலைமகன் சிறப்பு முதற்கண் அதிகரிக்க வேண்டிய இயைபினால் முந்து நடுவு முடிவு மறியாச் சிந்துரச் சேவடியானைச்

சேவகனை வரக் கூவாய் என்னும் ஐந்தாம் திருப்பாட்டு முதற்கண் அமைய வேண்டியதாகின்றது இவ்வியல்பானே திருவடியின் தொன்மை முதலாயவற்றின் சிறப்பியல்பு கூறும் முதலாவது திருப் பாட்டு இரண்டாம் இடம் பெறுவதாயிற்று எட்டாவது திருப்பாட் டில் கூறப்படும் அயன் மால் அறியா அனாதிமுழுப் முதலியவற்றை உடையது அதிகரித்த திருவடியாதலால் அஃது மூன்றாமிடம் பெற் றது. ஞாலம் விளங்க உத்தரகோசமங்கையில் உறைகின்றான் என் னும் மூன்றாம் திருப்பாட்டு அவன் இவ்வூரிலுள்ளான் ஆதலின் கூவு தற்கு எளியன் என்னும் பொருள் தந்து நான்காவதாயிற்று. இரண் டாவது திருப்பாட்டு வண்டோதரிக்கு அன்பளித்தான் என்பத னால் அடியவர் ஆசையறுத்தற்குச் சான்றாக அமைதலின் ஐந்தாம் எண்ணுநிலை பெறுவதாயிற்று ஒன்பதாந் திருப்பாட்டு சேவடி காட்டி அடிகளை ஆட்கொண்டதென இரண்டாவது சான்றாக அமை தலின் ஆறாவதாகக் கொள்ளப்பட்டது. பத்தாம் திருப்பாட்டு என்னை அடியாருள் ஒருவன் என ஆண்டுகொண்டான் எனக் கிளந்து கூறுவதால் ஏழாவதிடம் பெற்றது நான்காவது திருப் பாட்டு ஆட்கொள்ளப்பட்டபின் இவ்வாறு ஆயினேம் எனக் கூறுத லின் எட்டாவதாயிற்று ஏழாவது திருப்பாட்டு குயிலே உன்னை உகப்பன் உன் தோழியும் ஆவன் எனக் கூவும் குயிலுக்குத் தான் செய்யும் உதவி கூறுதலின் ஒன்பதாவதாயிற்று நூற்பகுதியிலே ஆறாவதாய ''இன்பந் தருவன்'' என்பது அக்குயில் பெறும் பேறு இதுவென்னும் இயைபால் பததாவதிடம் பெற்றது.

நூற்பகுதிக்கண் அமைக்கப்பட்ட பொருளடைவு வருமாறு :—

அடிப்பாட்டுப் பொருளடைவிலே இரண்டாவதிடம் பெற்ற பொருளாகிய சொல்லிறந்த அடிமுடிகளையுடைய முதல்வனும் தனக்கென ஒரு குணம் இல்லாதவனும் இறைவனுவான் என்பது அவனுடைய அறிதற்கரிய சுயம்புத் தன்மையும், அவன் உயிர்கள் அன்பின் உண்மைக்கும் இன்மைக்கும் ஏற்றவாறு தான் கொள்ளுங் குணமுடையானன்றித் தனக்கெனக் குணங்கொள்ளாமையும், ஏனைய பொருள்களைப்போலத் தோன்றி அழிதல் இல்லாமையும் புலம்படுத்தலானும், அன்பினும் அறத்தினும் நீங்காத இனிய கீதத்தாற் கிளந்தார். முன்னிலையில் எளியனாகத் தோற்றங் கொள் வானென்பது ''கீத மினிய குயிலே'' என்பதனாற் பெற வைத்த சிறப் பாலும், அன்ன பிறவற்றானும் இப்பகுதிக்கு முதன்மை வாய்ந்த சிறப்பால் அடிகளால் முதலாவதாக வைத்தருளப்பட்டது.

ஆதலின் இவ்வியைபுபற்றி வண்டோதரிக்குப் பேரருளின்பம்

அளித்த பிரான் என்பதும் ஞாலம் விளங்க உத்தரகோசமங்கைக் கோயிலிலே மங்கையொடு இருந்த நாயகன் என்பதும், ஞாலம் விளங்க வந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல் என்னுள்ளம் புகுந்து உணர்வதுவாய் ஆனுன் என்பதும், உள்ளம் புகுந்தவனேனும் அடியவர் ஆசை அறுப்பான் மூவர் அறியாச் சேவடியான் என்பதும், ஆசை அறுக்கும் அவனைக் கூவி இன்பம் பெருது வறிதே கொம்பின்கண் மிழற்றுகின்றனை என்பதும், உன்னை உகப்பன் உன் தோழியுமாவன், 'அழகன்,' 'மன்னன்' 'பரிமிசை வந்த வள்ளல்' என்பதும் முறையாக அடைவுபடுத்தப்பட்டன.

அடிப்பாட்டிலே மூன்ருவதாகிய திருப்பாட்டில் அரி அயன் என்பவராலும் அறியப்படாத விரி அழல் மெய்யன், பரிப்பாகன், தாழ்சடையோன் என்பது அரியயனை எளிதிற் பெறுமாறு அறிவித்தும் அறிந்துகொண்டிலை, அங்ஙனம் அறிந்து கூவில் அவன் பரிமீது ஏறித் தாவி வந்து சடையோனுகை முன்னிற்பான் என்னும் இயைபால் எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே ஆருவதாகிய அழகுச் செல்வன், என் பாசம் அறுத்தவன், ஆண்டவன், அம்பொன்மேனி அழகன் என்பது அவன் சிறப்பியல் கண்டமைக்கும் ஆட்கொள்ளப்பட்டமைக்கும் யான் சான்று பகரவும் சோலையில் என் அயல் வாழுங்குயிலே, நீ கேட்டு அவனைக் கூவாதது என்னை ? என் உரையையும் நன்கு மதித்திலைபோலும் என்னும் இயைபால் ஒன்பதாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டில் ஏழாவதாகிய அந்தணனுய் என்னையும் அன்பருள் ஒருவேனுக ஆண்ட தழல்மேனித் தேவர்பிரான் என்பது அவன் இத்தகையன் என யான் கூறவும் நீ கேளாது வாளா கூவுதல் நினக்குத் துன்பமே பயக்கும் என்னும் இயைபாற் பத்தாவதாக வைத்தருளப்பட்டது.

இயற்கை அடைவு திருப்பாட்டு —1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9,10.
நூல் அடைவு திருப்பாட்டு —5, 1, 8, 3, 2, 9, 10, 4, 6, 7.

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பெற்ற தென்ப.

# ஆத்தும விரக்கம்

## அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**கீதம் இனிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்**
**பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக்(கு) அப்பால்**
**சோதி மணிமுடி சொல்லில் சொல்லிறந்து நின்ற தொன்மை**
**ஆதிகுணம் ஒன்றும் இல்லான் அந்தம்இ லான்வரக் கூவாய். 1**

*இது, தலைமகன் குறித்த பருவத்திலே சிறைப்புறத்தானாக மனை அயற்கண் உள்ளதோர் சோலைக்கண் வந்து நிற்றலைக் கண்ட தலைமகள், தலைமகனுடைய அருமைப் பாட்டினை எடுத்துக்கூறி அவனை வருமாறு கூவாய் எனக் குயிலிற்குக் கூறியது.*

(பொ - ரை) *பாடுவதால் இனிமைபெற்ற குயிலே! எங்கள் பெருமானுடைய திருவடிகள் இரண்டும் எங்கு நின்றன என்று வினவில், அவை தாம், கீழ் உலகு ஏழினுக்கும் அப்பாலும், அங்ஙனமே அவனுடைய ஒளி பொருந்திய அழகிய திருமுடி எங்கு முடிந்து நின்றது என நினக்குச் சொல்லப் புகின், சொல்லும் சொல்லினையும் கடந்தும் நின்றன என்க அங்ஙனம் நின்றன வாகிய அடிமுடிகளையுடைய முதல்வனும், தனக்கெனக் குணம் ஒன்றும் இல்லாதவனும், அங்ஙனமே ஒரு முடிவில்லாதவனுமாகிய அவனை இங்கே வருமாறு கூவி அழைப்பாயாக (என்றாள்) எ - று.*

(வி - ரை.) *'சோதி மணிமுடி கேட்டியேல், அதனை இங்ஙனம் எனச் சொல்லின்' என இயைக்க. 'பாதம் இரண்டும் வினவில், நின் வினாவிற்கு விடை சொல்லின்' என இயைக்க. கேட்டல் - வினாதல், புலங்கொள்ளுதல். (வினாவிப் புலங்கொள்வையேல்)*

*நின்ற - நின்றனவாகிய அடிமுடிகள்; வினையாலணையும் பெயர். அவற்றால் தொன்மையையுடைய ஆதி. ஆதி - முதல்வன்.*

*தக்கன் போன்றாருடைய தீய குணத்திற்கேற்பத் தீய குணத்தினனாக வும், கண்ணப்பர் போன்றாருடைய நற்குணங்களுக்கேற்ப நற்குணத்தின னாகவும் தோற்றங்கொள்வானேயன்றித் தனக்கென ஒரு குணனுமில்லாத வன். குணமும் வடிவும் தனக்கென இல்லாதவனென்க. ஆதியாவான் எனினும் அந்தமிலான் என்க. அந்தமிலாமை குறித்தே அவன் ஆதி ஒன்றினையே உடையான்போல என விதந்தோதப்பட்டான்.*

*'இனிய கீதக்குயில்' என மாற்றி உரைக்க. இனிய கீதம் அரிய இறைவனைத் தன்பால் வரவழைக்கும் பெற்றி வாய்ந்தது. குயில் ஒலியே*

காதலை ஊக்குவது, புணர்ந்தாரை உவப்பித்துப் பிரிந்தாரை அஞ்சு விப்பது. இதன் ஓசை, காதலர்களுள்ளே புணர்ந்தாரைப் பிரியாதிருககு மாறும, பிரிநதாரை விரைந்து புணருமாறும் நெருக்கவல்லது. ஈண்டுத் தலைமகள் "கீதமினிய குயிலே" என அதை அழைத்தலால், அவள் தன் தலைமகனைப் புணர்ந்தாளாவள் என்பதும், "வரக் கூவாய்" என்றமையால், தலைமகனைப் பிரிநதமையும் புலப்படுதலால், அவனை அவன் குறித்த பருவம் தவறாது சிறைப்புறத்தே நிற்பக் கண்டாள் என்பதை இப்பகுதிக் குரிய பொதுப்பொருளாகக் கொண்டாம். இப்பகுதி அவனது வருகை யைக் கண்டமையால் எழுந்த உவகையை வெளிப்படுத்தற்கும், இதனை அடுத்துள்ள திருத்தசாங்கம் என்பது, அவன் வரைந்துகொண்டு உவகையை ஊட்டுமாறு புரிதற்கும் உரியனவாயின எனக் கொள்க.

ஓசையால் இனிமையுறாய், பொருளாலும் இனிமை எய்துதறகு அவனை வரக்கூவுதலே செயக என அவள் அதற்கு அறிவுறுத்தினள் என்க. அவனைச் சிறைப்புறத்திலே குறித்த காலத்திலே வரக்கண்ட காட்சி இனிமை ஒன்றுமே போதாது, அவ்வாறே வரைந்து கொள்ளுதலும் வேண்டுமெனக் குறிப்பிட்டாளுமாம்.

"பாதாளம் ஏழினுக்கப்பால்" என்றவாறே மேலுலகம் 'ஏழினுக கப்பால்' எனவும வருவிக்க. பாதமிரண்டும் பாதாளம் ஏழினுக்கும முடி மேலுலகம் ஏழினுக்கும் அப்பால சொல்லிறந்து நின்ற தொன்மை "ஆதி" என்க. "பாதாளம் ஏழினுங் கீழ் சொறகழிவு பாதமலர் போதார புனை முடியும் எல்லாப் பொருள் முடிவே" (திரு எம்பா. 10.) என்னும் திருப் பாடற் பகுதியையும் ஈண்டு ஒப்பு நோக்குக.

புல் நுனிமேல் சிறுபனித் துளி ஆனை வடிவினைச் செவ்விதாகக் காட்டியவாறே நூற்பாவின போக்கினை ஒத்துச் செய்யுள் மரபு வழுவாது இங்ஙனம் எல்லாம இசையெச்சங்கள் தாமே விரியுமாறு தொகுத்தாக்கிய மணிவாசகப் பெருமானுடைய செய்யுள் மரபு அருட்பாவுலகின் ஆருயிர் போன்றதென நெஞ்சார வாழ்த்திப் பிறவிப்பிணி நீஙகுவோமாக.

**ஏர்தரும் ஏழ்உல(கு) ஏத்த எவ்வுரு வும்தன் உருவாய்**
**ஆர்கலி சூழ்தென் இலங்கை அழ(கு)அமர் வண்டோ தரிக்குப்**
**பேரருள் இன்பம் அளித்த பெருந்துறை மேய பிரானைச்**
**சீரிய வாயால் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய் 2**

இஃது, என் தலைமகன் வண்டோதரிக்கு உல்கேழுந் துதிக்க எவ்வுருவும தன்னுருவாக உடையனுய்க் கண்டு களிக்கும் பேரின் பத்தை அளித்த பேரருளாளனும், பெருந்துறையில் மேவி இருந்த வனும், தென்பாண்டி நாடனும் ஆவான் என, அவன் மேவிய ஊரும் நாடும் அளித்த அருளும் என்னுமிவற்றைப் பொருளாகக் கொண்டு கூவுதியென அவள் அதற்குக் கூறியது. [இதுவும் சிறைப்புறம்.]

(பொ - ரை.) ஒலிக்கும் கடல் சூழ்ந்த தெற்கண் உள்ளதாகிய அழகிய இலங்கைக்கு அரசியாகிய வண்டோதரிக்கு இன்பத்தின் எழுச்சியைத் தரும் மேலுலகத்தவர் எல்லாரும் போற்ற, எத்தகைய வடிவும் தன் திருவடிவேயாகப் பேரருளால் வடிவுகொண்டு, பேரின்பத்தை அளித்த பெருந்துறைப் பிரானும், தென்பாண்டி நாடனும் ஆகிய அவனைக் குயிலே! நின்னுடைய மிகுபுகழ் படைத்த வாயால் என்பால் வரக் கூவுவாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) பாண்டிய நாட்டினைச் சிவலோகமாக்குவித்த சிவன், தென்பாண்டி நாடன் எனப்பட்டான்.

அவன் 'ஏழுலகும் எவ்வுருவும் தன்னுருவாய்க் கொண்டேத்தப் பேரருளால் பேரின்பம் அளித்தவன்' எனினும் இயையும். அவ்வின்பம் அவளுக்கு ஆயது அவள் அன்பான் அன்று; இவன் அருளான் ஆயது என்க. இதனால் அவன்மேல் அன்பு செய்துதான் கூறல்வேண்டும் என்னும் யாப்புறவில்லை என்றவாறு.

இது,

"சிவனெனும் நாமம் தனக்கே உடையசெம் மேனி அம்மான்
அவனெனை ஆட்கொண்டு அளித்திடு மாகில் அவன் தனையான்
பவனெனும் நாமம் படித்துத் திரிந்து பல் நாள் அழைத்தால்
இவனெனைப் பல்நாள் அழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே"
(திருநா. பொதுத். தனி 9.)

என்னும் திருப்பாட்டின் திருக்கருத்தொடு ஒத்துப்போதல் காண்க.

பேரருள், பேரின்பம் என்க. "இன்பமளித்த" என்றதற்கு இன்பமளித்தவன் என விகுதி கூட்டியுரைக்கினுமாம். முன் என்னைப் புணராது அகற்றித் தில்லைக்கு வா எனப் பணித்தவன், இங்குச் சிறைப்புறமாகக் குறித்த பருவத்தே வந்துளான் எனக் குறிப்பால் அவன் வரவைத் தோழிக்குணர்த்தினள்; தானே கூறிக்கொண்டதுமாம். இன்னும் "பெருந்துறை மேய பிரான்" என்றமையால், வண்டோதரிக்கு அருளியாங்கு, பெருந்துறைக்கண் செவ்வி பெற்ற அன்பர் பலரோடு ஒன்றாக மேவிய பிரான் என்று உரைத்தலு மமையும். "தென்பாண்டி நாடன்" எனத் தன்னை ஆண்டானுடைய நாட்டினையும், அவன் தில்லைக்கு வா வெனக் கூறியவன் பெருந்துறையான் எனத் தன்னைப் பணித்தான் மேவிய ஊரினையும் குறிப்பிட்டாளுமாம்.

**நீல உருவிற் குயிலே நீள்மணி மாடம் நிலாவும்**
**கோல அழகில் திகழும் கொடிமங்கை உள்ளுறை கோயில்**
**சீலம் பெரிதும் இனிய திருஉத் தரகோ சமங்கை**
**ஞாலம் விளங்க இருந்த நாயக னைவரக் கூவாய். 3**

இது, ஞாலத்திலே இனிய சீலம் பெரிதும் விளங்க, திருவுத்தர

கோசமங்கைக்கண் மாடம் நிலாவும் கோயிலுள்ளே உமையுடனுறையும் நாயகனை வரக் கூவாய் என, அவள் அதற்குக் கூறியது

(பொ - ரை ) நீல நிறம் பொருந்திய வடிவினையுடைய குயிலே! திருவுத்தரகோசமங்கையிலே, உலகத்தே இனிய ஒழுக்கம் மிக விளங்குமாறு, நீண்ட சிறப்புடைய மாடம் விளங்கும் அழகிய வடிவால் விளக்கம் பெறும் பூங்கொடி போன்ற உமையம்மை அகத்து வாழும் கோயிற்கண் அவளுடன் இருந்த தலைவனை இங்கே வருமாறு கூவுதி (என்றாள்) எ - று

(வி - ரை.) "மங்கை உள்ளுறை கோயில்." ஆங்குச் சென்று அவளுடன் இருந்த நாயகன் என்க. "சீலம் பெரிதும் இனிய திருவுத்தரகோசமங்கை ஞாலம் விளங்க இருந்த நாயகன்" என்றதனை, 'ஞாலம் இனிய சீலம் பெரிதும் விளங்கக் (கோயிறகண்) இருந்த நாயகன்' என மாற்றுக. ஞாலம் - ஞாலத்தில்.

அத்தலத்தில் இருந்தும் உமைக்கும் அன்பர்க்கும் ஆகமப் பொருளை அருளிச்செய்தான் ஆதலால், உலகிலே இனிய சீலம் பெரிதும் விளங்க என்றாள். நீ கூவுதியேல் நினக்கும் ஆகமப்பொருளை அறிவுறுத்தி விளங்க வைப்பன் என்பது குறிப்பு. சீலமாகிய பெரியதாகிய திருவினையுடைய உத்தரகோசமங்கை என்று இயைத்தலுமாம். ஞாலம் - சான்றோர். அத்தலம், ஆகமப் பொருளைக் கற்பித்தவாறே கேட்டொழுகவல்ல திருவினைத் தன்மாட்டு உறைவார்க்கு அருளவல்லதென்க. அவ்வொழுகலாறு, இறைவன் பால் நின்று இறைவிக்கும் அன்பர்க்கும் சென்றதென்க. அவ்வழியே யானும் பெற்றேன், நீயும் பெறக்கடவை எனக் குயிலுக்கு அவள் கூறினாள் என்க.

"கீத மினிய குயிலே," "சீரிய வாயிற் குயிலே" என இருமுறை அழைத்துக் கூறியும் அது தன் தொழில் விடுத்து அவள் ஏவலை மேற்கொள்ளாமையால் நீ இருத்தலை யான் கண்டேன் என்றாங்குத் தன்கண் உள்ள குறிப்புப் புலப்பட "நீல உருவிற் குயிலே" என மூன்றாம் முறை அதனை அழைத்தாள். அப்போது அது தன் தொழிலை மேற்கொள்ளுதல் அடுத்த பாடலாற் புலப்படும்.

**தேன்பழச் சோலை பயிலும்**
**சிறுகுயி லேஇது கேள்நீ**
**வான்பழித்(து) இம்மண் புகுந்து**
**மனிதரை ஆட்கொண்ட வள்ளல்**
**ஊன்பழித்(து) உள்ளம் புகுந்(து)**
**என் உணர்வ தாய ஒருத்தன்**
**மான்பழித்(து) ஆண்டமெல் நோக்கிம**
**ணாளனை நீவரக் கூவாய்.** 4

இஃது, என் தலைவன் வானவரை ஆட்கொளாது வானுலகத்தினின்றும் நீங்கி மண்ணுலகம் புக்கு மனிதரை அன்பராக் கொள்ளும் வள்ளல், என் உள்ளத்து உணர்வு பொறிகளின்பாற் செல்லுதலை இகழ்ந்து தன்பாற் செல்லுமாறு அதனுள்ளே புகுந்துள்ளான்; அங்ஙனம் வானவர்க்கு அரியவன் நமக்கு இங்ஙனம் எளியவனாயினன் ஆதலால் அவனை வருமாறு கூவுதி என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை.) தேனொழுகும் கனிகளையுடைய சோலைக் கண்ணே பயிலாநின்ற இளங்குயிலே! நீ இதனைக் கேட்பாயாக; நம்மினும் மேலோராகிய வானவரை ஆட்கொள்ளக் கருதாது, அவர் வாழும் வானுலகங்களையும் இகழ்ந்து நீங்கி, மக்களை ஆட்கொள்ள விரும்பி, அவர் வாழும் மண்ணுலகிற் புகுந்து, அவர்க்குப் பேரின்பத்தை வரையாது வழங்கிவரும் வள்ளலும், என்னுள்ளத்துணர்வு உடலின்மாட்டு அதுவாக அமைந்துவருதலை இகழ்ந்து, அது தன் உணர்வாக அமைய அதனுள்ளே குடிகொண்ட ஒப்பற்றவனும், தன்னொடு மாறுபட்ட மானின் நோக்கத்தினை, அதன் அறிவின்மைக்கு இகழ்ந்து, அருளால் அதனையும் அடிமைகொண்ட மெல்லிய நோக்கினையுடைய உமைப்பிராட்டிக்கு மணவாளனுமாகிய என் தலைவனை இங்கு வருமாறு கூவுவாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) பயிலுதல் - ஒலித்தல். சிறு குயில், சிறுமைப்பாட்டினையுடைய குயிலுமாம். "பழம்" என்றது, ஈண்டு மாம்பழத்தினை. தேன்பழம்- தேமாம்பழம். சோலைக்கண்ணே மாங்கனி இருப்பவும், அதனைக் கோதியுண்ண அறியாது வாளா கூவிக்கொண்டிருக்கும் குயிலே, நீ அறிவிலியாவை என்பது தோன்றச் "சிறுகுயில்" என்றாள். கனி உண்ணாது இங்ஙனம் கூவி வருதல் நினக்கு ஏதம் பயக்கும் என்பது கருத்தாகும். அது தன்னுரை கேட்டுக் கூவுதலை விடுத்துக் கனி உண்ணப் புகுமேல் அச்சாரபினால் இம்மாங்கனியின் இனிமையும், அதனால் எய்தும் மனநிறைவும் நிலையற்றன; பின்னும் பின்னும் அவாவுமாறு இடர்ப்படுத்துமியல்பிற்று. மற்று இறைவனுடைய திருநாமமோ நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும் பேரானந்தம் தரும் தேமாங்கனியாகும் என அறிவுறுத்தித் தானும் உய்வதோடு அதனையும் உய்விக்கலாம் என்னும் கருத்தால் " தேன்பழச் சோலைபயிலும் சிறுகுயிலே " என்றழைத்தாள்.

இனி, வளர்ந்த குயிலை மீட்டு நெறிப்படுத்த இயலாதென்னும் கருத்தால் " சிறுகுயிலே " என்றாளுமாம்.

நினக்கு ஆக்கம் அருளிச் செய்வான் என்பதற்கு யானே சான்றாவேன் எனக் குறித்தாள் என்க.

சுந்தரத்(து) இன்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின்(று) இழிந்(து) இங்(கு) அடியவர் ஆசை அறுப்
முந்தும் நடுவும் முடிவும் ஆகிய மூவர் அறியாச் [பான்
சிந்துரச் சேவடி யானைச் சேவக னைவரக் கூவாய். 5

*இஃது, அந்தரத்தே நின்று இழிந்து அன்பர்தம் ஆசை அறுப்பவனாகிய என் தலைவன், திருவடி தன்னாலும், தன்னில் தோன்றிய அயன் அரி என்பவராலும் அறிதற்கரியன. அத்துணைப் பெருமை வாய்ந்த அடிகளை உடைய அவனை இங்கு வருமாறு கூவுதி என அவள் அதற்குக் கூறியது.*

(பொ - ரை) (காட்சிக்கு இனிமை தரும்) அழகினையும், (செவிக்கு இனிமை தரும்) ஓசையினையும் உடைய குயிலே, (புற விருளை அறுக்கும் சூழ்ந்த கதிர்களையுடைய வானில் தோன்றும் ஞாயிறுபோல ஞான வானில்நின்று அருளாகிய அன்னையொடு இவ்வுலகில் இறங்கிவந்து, அன்பருடைய (அகவிருளாகிய) ஆசையை அறுப்பானும், முதலாக எல்லாம் தோன்றும் தோற்றமும், இடைக்கண்ணே தோன்றிய வெல்லாம் நுகரும் போகமும், நுகர்ந்தனவெல்லாம் முடிவெய்தும் முடிவும் ஆகியதும் மூவராலும் அறியப்படாததுமாகிய செவ்விதாகிய திருவடியையுடையவனும், வீரனுமாகிய நம் தலைமகனை இங்கு வரக் கூவுவாயாக (என்றாள்) எ - று

(வி - ரை.) எல்லாம் பாழாய் நிற்பதுவே திருவடியாகலின், அஃது இறைவனாலும் அறியப்படாத தொன்று என்னும் திருக்கருத்தால் "மூவர் அறியாச் சேவடியானை" என்றாள். மூவரும் என உம்மைவிரிக்க. இக் கருத்தினையே உட்கொண்டு,

"*நின்னிற் சிறந்த நின்றாளிணையவை நின்னிற்*
*சிறந்த நிறை கடவுளவை*" (பரி. 4, 62-63.)

என்றார் சான்றோரும்.

இனி, "முந்தும் நடுவும் முடிவுமாகிய மூவருமாம்."

"சேவகன்" என்றதற்கு அடியார்க் கெளியனாகிய தொண்டன் என்று கூறினும் ஒகரும்.

"மூவரறியா"ச் சேவடி அன்பர் பொருட்டுப் பாரில் நடந்து வந்ததுவே என்னும் இரக்கத்தால் 'சேவடியானை' என்றாளுமாம்.

இன்பம் தருவன் குயிலே ஏழ்உல கும்முழு தாளி [தேவன்
அன்பன் அமு(து) அளித்(து) ஊறும் ஆனந்தன் வான்வந்த
நன்பொன் மேனி மணிச்சுவ(டு) ஒத்த நற்பரி மேல்வரு வானைக்
கொம்பின் மிழற்றும் குயிலே கோகழி நாதனைக் கூவாய். 6

இது, நம் தலைவனால் ஏழுலகும் இன்பம் துய்க்கின்றன; அவன் அன்பர்க்கு அன்பன், அளிசெய்து அமுதமூறச் செய்து அதனால் தோன்றும் இன்பமே தன் வடிவானவன், நம்பொருட்டு வான் பழித்து மண் வந்த தேவன், நம்மையாட் கொள்ளப் பரிமேலும் வருவான், அன்னவனை வரக் கூவுவையேல் எனக்கேயுமன்றி நினக்கும் இன்பம் தருவான்; அக்கோகழி நாதனை வருமாறு கூவுதி என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை ) கொம்பின்கண் இருந்து வாளா கூவுதலைச் செய்யும் குயிலே! உலகேழினையும் முழுதாகத் தானே ஆள்பவனும், அன்பர்மாட்டு அன்புடையவனும், அவர்மேல் இரங்கி அவர் உள்ளத்திலே இனிமையவாகிய திருவடிகளைப் பதித்துத் தன்மாட்டுப் பெருகுதற்குரிய அன்பு நீரை ஊறச்செய்து, அதனால் ஆண்டுத் தோன்றும் இன்ப வடிவினன் ஆவானும், அடியவரை ஆட்கொள்ள விழைந்து வான் பழித்து மண் புகுந்த வானவனும், அங்ஙனம் ஆட்கொள்ளப்பட்டவரை அறவே தன்னுடன் கூட்டுதற்பொருட்டு, நல்ல பொன்னை ஒத்த தன் திருமேனியிலே அரதனங்களைப் பதித்தால் ஒத்த குறிகளாகிய புள்ளிகளையுடைய குதிரையின் மேலேறி அன்பால்வரும் இயல்புடையவனுமாகிய திருவாவடுதுறைக்கண் மேவிய என் குருமணி இங்கு வரக் கூவினால், யான் நினக்கு இன்பத்தை அருளிச் செய்வேன். ஆதலால் அவனைக் கூவுதி (என்றாள்) எ - று.

(வி - ரை.) யான் "இன்பந் தருவன்" என்றது அவன் இன்பந்தர யான் நின்னை விரும்பி நினக்குத் தோழியுமாவேன் என்பதனை உட்கொண்டு உன்னை உகப்பன், உன் துணைத் தோழியுமாவன் எனவரும் அடுத்த பாடற் பகுதியை நோக்குக.

ஏழுலகும் அவனாட்சி நீழற்கண் இன்பம் துய்த்து வருகின்றன அவன் தன்கீழ் வாழ்வார்மீது அன்புடையவன். அவர் படுதுயர்க்கு இரங்கி அவருள்ளத்திலே அமுதூறச் செய்தலால் தானும் இன்புறும் பெற்றியன். அவன் இனபுறுநெறி இதுவேயாகும். மேலுலகங்களின் கீழுள்ள மண்ணுலகினர் புண்ணிய பாவக் கலப்புடையவராதலால், புண்ணியப்பேறே துய்த்துவரும் வானோர் பதங்களில் தான் வாழ்தலினும் மண்ணுலகுட் புக்கு, மக்களைத் தீயவறறுட் செல்லாதும், வான் பதங்களினும் தன் திருவடியே சிறந்ததென்னும் அறிவூட்டி அதன்பாற் செலுத்தியும் ஆளற்கென விழைந்து வந்தவன். தன்னை உணர்த்தித் தன் தாளை அன்பர் உள்ளத்திற் பதித்த பின்னர் அன்னவரை முற்றுமாட்கொள்ளப் பரிமேல் வருபவன். கோகழியிற் பின்னும் வந்து தெளிவித்த பேரருளாளன் என்றவாறு சொல்லாதனவெல்லாம் சொல்லிக் கேளாதன எல்லாம கேட்குமாறு செய்து, குயிலைத்

தலைமகன்பால் ாடுபடுமாறு தலைமகள் முயன்றருளிய திறம் போற்றற் பாலது.

"கோகழி"யென்னும் பெயரோடு தெலுங்கு நாட்டிலுமொரு சிவதலம் உள்ளது. அதுவே அடிகள் குறித்த கோகழியாகக் கொள்ளும்படி பல்லாண்டுகளாகப் பலரும் கூறினரேனும் "சந்திர......அழகமர்பாலையுள் சுந்தரத் தன்மையொடு துதைந்திருந்தருளியும்" எனச் சந்திர தீரத்தில் நின்று திருப்பெருந்துறைக்கு வந்ததாக அடிகளே கூறுதலின் கொள்ளா மாயிறும்.

**உன்னை உகப்பன் குயிலே உன்துணைத் தோழியும் ஆவன்**
**பொன்னை அழித்தநன் மேனிப் புகழிற் றிகழும் அழகன்**
**மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறை மேய**
**தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங் கன்வரக் கூவாய். 7**

இஃது, அழகனும் மன்னனும் பெருந்துறை மேவிய தென்னனும் சேரனும் சோழனும் புயங்கனுமாகிய என் தலைவன் இங்கு வரக் கூவுதி என அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை.) குயிலே! பொன்னின் நிறத்தினைத் தனது உயர்வினால் இல்லையாக்கிய மேனியையுடைய புகழ்க்கண்ணே விளங்கிவரும் அழகனும், வேந்தனும், குதிரைமீதேறிவந்த வள்ளலும், திருப்பெருந்துறைக்கண் வீற்றிருந்த பாண்டியனும், சேரனும், சோழனுமாகிய புகழ்மிக்க புயங்கக் கூத்துடையானைக் கூவுவையாகில், அவன் என்னை உகந்ததுபோலவே யான் நின்னை விரும்புவேன்; (அங்ஙனம் விரும்பிய யான் தலைமகன்பால் நீ கூடி இன்பம் நுகர்தற்கு) நினக்குத் துணையாக நிற்கும் தோழியுமாவேன் ஆதலால், அவனை இங்கு வருமாறு கூவுவாயாக (என்றுள்) எ - று.

(வி - ரை.) இறைவன் மெய்ப்பொருளாதலால் "புகழிற்றிகழும் அழகன்" என்றுள். 'புகழில் திகழ்வோன், மேனிஅழகன்' என்றியைக்க புகழும் அழகும் பொருந்தியமைக்கேற்ப மன்னனுமாவன். தமிழ்நாடு மூன்றற்கும் அவனே மன்னன் என்க.

*நினக்கும் அவன் அன்பனாகி அளிசெய்து அமுதூற்றெடுக்க விளையும் ஆனந்தனாகத் தன்னியல்புடன் பரிமேல் வருவான் என்பதுபட முன்னர்த் திருப்பாட்டால் எதிர்காலம் பற்றியும், தனக்கு அளித்த செயலினை ஈண்டு "வந்த" என இறந்தகாலம் பற்றியும் கூறிப் புலப்படுத்தினள்.*

"உன்துணைத் தோழியுமாவன்" என்றமையால், ாண்டழைக்கப் பட்டது பெண்குயில் என்பது பெற்றாம். இன்னுமிதனால், தலைமகள் தான் பழகிய குயில் கிளி முதலாயவற்றையும், ஆயத்தாரையும், பிறரையும் பிரிதற்கு ஆற்றாமையால் தலைமகன் உடன்போக்கிற்கு விழையாது

வரைந்து கொள்ளுதலையே விழைந்தாள் என்பது குறிப்பால் உணர்த்திய வாறெனத் தெளிக.

வாஇங்கே நீகுயிற் பிள்ளாய் மாலொடு நான்முகன் தேடி
ஓவிஅவர் உன்னி நிற்ப ஒண்டழல் விண்பிளந்(து) ஓங்கி
மேவிஅன்று அண்டம் கடந்து விரிசுட ராய்நின்ற மெய்யன்
தாவி வரும்பரிப் பாகன் தாழ்சடை யோன்வரக் கூவாய். 8

இஃது, அரி அயன் என்பவர் அறியா விரிசுடர் மெய்யன், பரிப்பாகன், தாழ்சடையோனாகிய எங்கள் பிரானை இங்கு வரக் கூவுதியென அவள் அதற்குச் சொல்லியது.

(பொ - ரை) குயிற் பிள்ளையே! நீ இங்கு வருதி. அக்காலத்திலே அரியொடு அயனும் தனது அடிமுடிகளை முதற்கண்ணே நாடப் புக்குச் செயல் அழிந்து தன் இயல்பினை நினைந்து நிற்ப, ஒளிமிக்க அனற்பிழம்பாக விண்ணைப் பிளந்து சென்று அண்டங்களைக் கடந்துநின்ற வடிவினை உடையவனும், பாய்ந்து வரும் குதிரைமேல் ஏறிவருபவனுமாகிய தாழ்ந்த சடையுடையானை இங்கு வருமாறு கூவுவாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) குயிற்பிள்ளை - இளங்குயில். ஒடு, சிறப்பின்கண்ணது. நீ அவனைக் கூவுவையேல் உன்னைக் காதலித்துத் தாழ்சடையனாய்க் குதிரைமேல்வந்து உன்னைக் கலந்து இன்பம் தருவான் என்றாள் என்க. விரைந்துவருவன் என்பதுபடத் "தாவிவரும் பரிப்பாகன்" என்றாள். பரி விரைவு போதாதெனத் தான் அதனினும் விரையப் பாய்ந்து வருவான் எனக் கொள்ளினும் கொள்க.

கார்உடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில் வாழும் குயிலே
சீர்உடைச் செங்கம லத்தில் திகழ்உரு ஆகிய செல்வன்
பார்இடைப் பாதங்கள் காட்டிப் பாசம் அறுத்(து)எனை ஆண்ட
ஆர்உடை அம்பொனின் மேனி அமுதினை நீவரக் கூவாய். 9

இது, செங்கமலத்தால் ஆக்கப்பட்ட வடிவினையொத்த வடிவுடைச் செல்வனும், விண்ணின்று மண்வந்து தன் திருவடிகளை எனக்குக் காட்டிக் கட்டறுத்து ஆண்டவனும், அரிய பொன் மேனியனுமாகிய அமுதம் போன்றவனை நீ வரக் கூவுதியென அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை.) பொன்மை திகழாநின்ற கரிய குயிலே! செங்கேழ்வண்ணம் சான்ற தாமரைபோல் விளங்காநின்ற புகழ்மிக்க திருவுருவச் செல்வமுடையவனும், இவ்வுலகில் வந்து தன் திருவடி

களை எனக்குக் காட்டி என் கட்டினை அறுத்த அருமையினையுடைய அழகிய பொன்மேனி கொண்டு அமுதமானவனுமாகிய எங்கள் பெருமானை இங்கு வரக் கூவுவாயாக (என்றாள்) எ – று

(வி - ரை.) காருடைப்பொன் - செம்பொன் நிறம் கலந்த கரிய நிறம். இரும்பு (கரும்பொன்) எனக் கூறின் அதனை இகழ்நதவாறும்.

காட்சியால் ஆனந்தமாக்குவன் என்பது தோன்ற "மேனி அமுதன்" என உரைத்தாள். காட்சியால் சிந்தை நிறைவுற்றது; திருவடியால் வினைக்கட்டு அறுபட்டது என்றவாறு.

"செங்கமலத்தில் திகழுருவு ஆருடை அம்பொன்மேனி" என்றது, அவ்விரண்டன் பண்பும் ஒன்றுகிய நறுநாற்றப் பொன்மலர் மேனியென உணர்த்திற்று. அழகுத்தேன் ஊறி ஒழுகும் மேனியன் ஆதலின் "மேனி யமுதன்" என்றாள். அதனைக் கண்டு நுகர்வது அமுதம் நுகர்வதுபோலும் என்றபடி. அவனைக் காணுவதால் ஐம்புல இன்பமும் ஒருங்கே பெற்றேன் யான். நீயும் அவனைக் கூவி ஐம்புல இன்பம் பெறுதி எனக் குறிப்பிட்டாள் என்க

கொந்(து)அண வும்பொழிற் சோலைக்
 கூங்குயி லேஇது கேள் நீ
அந்தணன்ஆ கிவந்து இங்கே
 அழகிய சேவடி காட்டி
எந்தமர் ஆம்இவன் என்றிங்(கு)
 என்னையும் ஆட்கொண் டருளும்
செந்தழல் போல்திரு மேனித்
 தேவர் பிரான்வரக் கூவாய். 10

இது, தகாத என்னையும் தக்காருள் ஒருவளாகக் கொண்டு ஆண்டவனை வரக் கூவுதியென அவள் அதற்குக் கூறியது.

(பொ - ரை.) பூங்கொத்துக்கள் நெருங்கிய பெருஞ்சோலைக் கண் இருந்து கூவும் குயிலே! நீ இதனைக் கேட்குதி. இவ்வுலகத் திலே ஓர் அந்தணனாகி உருவங்கொண்டு என்பால் வந்து தனது அழகிய செம்மையனவாகிய திருவடிகளை எனக்குக் காட்டி "எம் அன்பினராகிய சுற்றத்தாருள் இவனும் ஒருவனாவான்" என்று உரைத்து, அன்பற்ற என்னையும் ஆண்டுகொண்டருளும் செவ்விய அனல்போன்ற திருமேனியையுடைய தேவர் பெருமானை இங்கு வரக் கூவுதி (என்றாள்) எ – று.

(வி - ரை.) மலர்போன்றும் பொன்போன்றும் தழல்போன்றும் தோன்றும் "திருமேனி" என்க.

'கொத்து' என்பது "கொந்து" என மெலிந்து நின்றது. 'கூவும்' "கூம்" எனத் தொக்கது.

தளிர் பூ காய்கனி என்பவற்றில் கருத்துக்கொள்ளாது வாளா கூவும் குயிலே! வாளா கூவுதலினும் அவற்றைக் கோதியவாறே கூவின், நீ கூவுதற்கு ஒரு பொருளுண்டாம் என்றக்கால், அஃது அவ்வுரை கேட்டு அவற்றைக் கோதப் புகுங்கால், தலைமகனையே பொருளாக நுகர்ந்து கொண்டு கூவுக என மற்றதனை மீட்கலாமன்றே? அங்ஙனம் அதனை மீட்டற்காகக் "கொந்தணவும்......குயிலே" என்றருள் என்க.

இது "கேள்" என்றது நீ கூவுதலைத் தவிர்த்து யான் சொல்லும் இதனைக் கேட்டற்கு முன் வருக என்பதுபட நின்றது. "எம" என்றது, இறைவனையும், அவனுடன் ஒன்றுபட்ட அன்பரையும் உள்ளடக்கி நின்றது. "இங்கு" என்றது தில்லையை முன்னர் அருளியதோடு அமை யாது, இங்கும் வந்து, தமர்போலத் தன்னுடன் இரண்டறக் கலக்க வைத்து ஆண்டு கொண்டருள்வோன்; அவனைக் கூவு என்றவாறு.

[குறிப்பு:—ஈண்டுப் பயின்ற பாடல்கள் சிறுபான்மையாகத் துள்ளி வந்த கொச்சகங்களாம். தலைமகன் வந்திலனே, குயில் கூவுகின்றதே எனக் கிளர்ச்சி பெற்று எழுந்த உள்ளம், அவனைச் சிறைப்புறத்தே காண்டலால், மேலும் எழுந்து துள்ளாது அமைந்தமையான் அங்ஙனம் எழுந்து துள்ளி அமைந்த நிலைக்கேற்ற சொல்லும், இசையும், தொடரும் பெற்றன என்க.

அவன் வந்திலனே என்று எழுந்த சின எழுச்சி அவனைச் சிறைப்புற மாகக் கண்டமையால் சிறிது அமைந்து, வரைந்துகொளல் வேண்டுமென் னும எழுச்சி மிக்கு வந்த ஊக்கத்திற்கு இயையவே இப்பகுதித் திருப் பாக்கள் அமைந்துள்ளன.]

திருச்சிற்றம்பலம்

# திருத்தசாங்கம்

"திருத்தசாங்கம்" என்பது தலைமகனுக்குரிய பெயர் முதலாய திருமிக்க பத்து உறுப்புக்களையும் ஒரு கிளியொடு வினவி அறிந்த பகுதியாம். தசாங்கம் - பத்து உறுப்பு. அஃது ஆகுபெயராய் அவ்வங்கத்தினை உணர்த்தும் பத்துப் பாக்களுக்கும் பெயராய், அதுவே பின்னர் அவற்றைத் தன்னகத்துக்கொண்ட நூற்பகுதிக்கும் பெயராயிற்று.

தசாங்கத்தைப்பற்றிய குறிப்புக்கள் கீர்த்தித் திருவகவற்கண் கூறப்பட்டன.

முன்னர்ப் பகுதியிற் கூறப்பட்ட குயில் தலைமகளொடு முன்னர்ப் பயிலாததென்பது "இன்பந்தருவன்" "உன்னை யுகப்பன்" "உன்தோழியும் ஆவன்" எனத் தலைமகள் கூறியருளியது கொண்டு இனிது புலப்படும். அதன் இசை இனிமை கேட்டு, இசைக்கு உருகி அருள்செய்யும் இயல்புடைய தலைமகனை வருமாறு அழைக்க அதனை அங்ஙனம் இரந்தாள்.

இப்பகுதிக்கண்ணே தலைமகள் வினவியவற்றுக்கு விடையிறுக்குங் கிளியானது தலைமகளொடும் தலைமகனொடும் பயின்று அவ்விருவர் அருளையும் பெற்றுக்கொண்டதென்பது, இப்பகுதிக் கண்ணுள்ள, "நமையாளுடையான்" "நமையாளும் மாதாடு பாகத்தான்" "நம்சிந்தைசேர் ஐயன்" என வருந் தலைமகள் கூற்றுக்களாலும், "எம்பெருமான்" "தீயவினை நாளும் அணுகாவண்ணம் நாயேனை ஆளுடையான்" என வரும் கிளியின் கூற்றுக்களாலும் நன்கு தெளியப்படும்.

அக்கிளி பெண்பாலதுவாகும் என்பதனைச் "செய்ய வாய்ப் பைஞ்சிறகிற் செல்வீ" என்றருளிச் செய்ததனாலும், அஃது இளமையுடையதென்பதனை, "ஏரார் இளங்கிளியே" என்பதனாலும், அஃது இன்னே பறத்தற்கேற்ற சிறகுடையதென்பதனை உடம்படு புணர்த்தலானும் பெற்றும் தலைமகள் வினவிற்கு விடையளிக்குங் கிளி மெல்ல மெல்லக் கூட்டுள்ளே புகுதற்கு முயலுகையில் அதனை வெளிப்பகுதிக்கண் வந்து விடை இயம்புமாறு தலைவி வேண்டினாள் என்பது, "இப்பாலே வந்து இயம்பு கூடு புகல்" என்பதனாற் பெறப்படும். (பூனை முதலியவற்றின் அச்சத்தாற்) கூட்டின் வெளிப் பகுதிக்கண் வருதற்கும் மனமில்லாதது என்றருளிச் செய்தமையால் அஃது இளங்கிளி என்பது தானே

போதரும் அக்காலமும் மாலை ஆருமென ஊகித்தற்கும் இடனுண்டு. ஈண்டுக் கூறிய கூடு தாய்க்கிளியாற் சமைக்கப்பட்ட கூடு அஃது கூட்டில் வளர்க்கப்பட்ட கிளியாகாதென்றதை, "தாதாடு பூஞ்சோலைத் தத்தாய்," "சோலைப் பசுங்கிளியே" என வருவனவற்ருல் அறிந்து கொள்க.

இப்பகுதிக்குரிய பொருள் வருமாறு —

முன்னர்ப் பகுதியில் புறச்சோலைக்கண்ணே சென்று, தன்னுரை செவியேற்றற்குரிய அளவுள்ள சேய்மைக்கண்ணே தலைமகன் வருதலை அறிந்த தலைமகள் குயிலொடு, அவனை வருமாறு கூவப் பணித்தாள் என்றதும், இப்பகுதியாற் புறச்சோலைக்கண் அவன் சிறைப்புறத்தானுக அவனை விரைந்து வரைந்துகொள்ளுமாறு குறிப்புப் புலப்படக் கிளியொடு வினவுகின்ருள் என்றும் தெளிந்துகொள்க.

இயற்கைப் பொருளடைவு வருமாறு.—

"பறை இயம்பத் தார் அணிந்து
படைபிடித்துக் கொடிஎடுத்துப்
பெயர்நுவலப் பரியூர்நது
போற்றுமலையின் ஆற்றுவழி
ஊரொடுநா டொருங்குகடந்து
சிறைப்புறனுந் திறப்பாடும்
தார் அணிந்து படைகொண்டு
பறை இயம்பப் பெயர்நுவலக்
கொடிதூக்கிக் குதிரை இவர்ந்து
நாடுபுக்கு நதிவழியே
பதியணைந்து பயன்பெறவே
வரையேறித் தனைமருவும்
ஆக்கமும் தோன்றத் தசாங்கம்
ஊக்கிக் கிள்ளையொ டுசாவிய தாமே"

இனி, "நூற்பொருள் அடைவே நுவலின் இதுவென
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் சென்ருேன்
தான்பிரி பொழுதிடை மான்விழிக் கியைந்தது
கரந்துகாண் விருப்பொடு சிறைப்புறன் ஆதலைத்
தெரியலன் போலவும் வரைவுபொருட் டாகப்
பிரிபிரி விதுவாம் பெற்றித் ததனுல்
பிரிதுயர் கொள்ளும் பரிவிலன் போலவும்
உரையாற் காட்ட மற்றவன் ஒருபெயர்
நாடு பதிநதி கோடு புரவி

படைபறை தார்கொடி பகரெனக் கிளேயை
வினவிஅறி விணமேற் கொள்ளும்
அனேமர பிற்ரு அறையவும் படுமே ".

என்பவை உரைச் சூத்திரங்கள்.

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு.—

நூற்பகுதியிலே எட்டாவதாகிய தலைமகன் பறை 'நாதப்பறை' என்றது, தலைமகன் வரைவொடு புகும்போதே பறை இயம்ப வரும் என்னும் இயைபால் முதற்கண் வைக்கப்பட்டது.

நூற்பகுதியிலே ஒன்பதாவதாகிய அவன் மெய்யிலணிவது 'தாளி அறுகந்தார்' என்பது, அவன் அங்கிருந்து பறையொலிக்கப் புறப்படும்போது அத்தாரினை அணிந்துகொள்வான் என்னும் இயைபால் இரண்டாவதாக வைக்கப்பட்டது.

நூற்பகுதியில் ஏழாவதாகிய அவன் பிடிப்பது 'கழுக்கடை' என்பது, அப்போது அவன் பிடிப்பது அதுவாகும் என்னும் இயை பால் மூன்ருவதாக நின்றது

பத்தாவதாகிய 'ஏற்றுக்கொடி' என்பது, அப்போது அவன் எடுக்குங் கொடி இதுவென்னும் இயைபால் நான்காவதிடம் பெற்றது.

நூற்பகுதியில் முதலாவதாய அவன் 'திருப்பெயர்' என்பது, அவன் புறப்படுங் காலத்துப் பராக்குச் சொல்வோரால் அவன் பெயர் நுவலப்படும் என்னும் இயைபால் ஐந்தாவதாயிற்று.

அவன் 'ஊர்தி புரவி' யென்பது, அப்போது அவன் இவர்வது அதுவாமென்னும் இயைபால் ஆருவதிடம் பெற்றது.

அவன்மலே 'அருள்மலே' யென்பது, அவன் புறப்படும் இடம் இதுவாமென்னும் இயைபால் ஏழாவதிடம் பெற்றது.

'ஆனந்தவாறு' என்பது அவன் மலேயிலிருந்து செல்லும் நெறி அதுவாகுமென்னும் இயைபால் எட்டாவதிடம் பெற்றது.

அவன் ஊர் 'உத்தரகோசமங்கை' யென்பது ஆற்றின் வழிச் சென்ற அவன் இறங்குவது அவ்வூர் என்னும் இயைபால் ஒன்பதா வதிடம் பெற்றது.

அவன் நாடு 'பாண்டி நாடு' என்பது, அவன் ஊர் கடந்த பின்னர்க் கடக்கப்படுவது அதுவாகும் என்னும் இயைபால் பத் தாவதாக அமைந்து நின்றது.

நூலுள் இவை அடைவு உரைச் சூத்திரங்களிற் காட்டிரும்.

இஃது திருத்தில்லேயில் அருளிச் செய்யப்பெற்ற தென்ப.

# அடிமை கொண்ட முறைமை

## நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய்—ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று. 1

இது, தன் தலைமகன் திருப்பெயர் யாதெனக் கேட்ட தலைமகளுக்குக் கிள்ளை கூறியது.

(பொ - ரை.) தலைமகளின் வினா '—அழகு பொருந்திய இளங்கிளியே ! எங்கள் தலைவனாகிய பெருந்துறைக் கண்ணிருந்த வேந்தனுடைய மிகுபுகழ் நிரம்பிய திருப்பெயரை இன்னதென்று ஆராய்ந்து சொல்வாயாக (எ - று )

கிளியின் விடை '—வெண்தாமரையில் உறைகின்ற திசைமுகனும், திருப்பாற்கடற்கண் உறைகின்ற திருமாலும், முறையே ஆரூரனே, செம்பெருமானே என்றுங்குச் சொல்லுகின்ற திருப்பெயர்களைப்போல எம்பெருமானைத் தேவர்பிரான் (மஹாதேவன்) என்று சொல்லுக என்றவாறு

(வி - ரை.) காட்சிக்கினியதும், வேற்றுவழிப் பயிலப் பெறுத புலன்களையுடையதுமாம் என்பது தோன்ற " ஏரார் இளங்கிளியே " என்றழைத்தாள்.

" செப்பு " என்றது எஞ்சி நின்றது. ' செப்புவ ' என்பது வினையாலணையும் பெயர். செப்புவனவாகிய பெயர்கள் என்க. " என்று " என்பதற்கு ' என்பேன் ' எனப் பொருளுரைத்தலுமொன்று.

ஆரூரன், திருவாரூர்க்கண் எழுந்தருளிய புற்றிடங் கொண்ட மூர்த்தி. திருமால் தலையிழந்தபோது இந்திரன் இதயத்திலே ஆடகேசுரன் வெளிப்பட்டான் ஆதலால், வெண்மலரான் ஆரூரன் எனப் பெயர் சொன்னான். ஆர் மண் - புற்று. மூலாதாரத் தலமாதலால் அஃது ஆரூர் எனப்பட்டது. மூலம் - புற்று. இறைவனும் "ஆரூரன்" எனப்பட்டான். ஆடகேச்சுர மூர்த்தியைத் தரிசித்தானுதலின் பாறகடலான், செம்பெருமானென இறைவன் பெயர் கூறினன். ஆடகேச்சுர மூர்த்தி செம்மேனிச் செல்வர். திருமாலுக்கு வாழ்வுச் செம்மை அருளிய மூர்த்தி. நான்முகன் ஆரூரன் எனவும், நாரணன் செம்பெருமான் எனவும இறைவனைச் செப்பிய திருப்பெயர்களைப்போல், யானும் எமபெருமானுக்குத் தேவர்பிரான் என்று திருப்பெயர் ஓதுவேன் என்றபடி.

இங்ஙனம் திருப்பெயர் கூறுவதற்கு ஆராய்ச்சி செய்யவேண்டியதன் இன்றியமையாமை தோன்றப் "பெருந்துறைக்கோன் சீரார் திருநாமம் தேர்ந்துரையாய்" என்று வினவினள்.

இத்திருப்பாட்டின் பொருளாழத்தினைக் காண்புழி,

"கற்பக மனையவக் கவிஞர் காட்டிய
சொற்பொரு ளாமெனத் தோன்றுகின்றது"

எனக் கம்பர் பம்பியின் ஆழத்தினையும், தெளிவினையும் புலப்படுத்தியது ^^ாவிற்கு வருகின்றது.

வன்மீகநாதர் வரலாறு, முற்காலத்தே, முசுகுந்த மன்னனும், இந்திரனும், குருக்கேத்திரத்திலே ஆற்றிய வேள்வியில், யானே வேள்விக்குத் தலைவனுவேன் எனத் திருமால் செருக்குற்று நிற்புழி, அவ்வேள்வியில் ஓர் அழற் பிழம்பாகிய வில்லுத் தோன்றியது. திருமால் அவ்வில்லை வளைத்து, பல அம்புகளைப் பூட்டித் தேவர்மேல் ஏவுதலும், அவர்கள் யாவரும் அஞ்சியோடித் திருவாரூரை யடைந்தபோதும், திருமால் அவர்களை விடாது ஆண்டும் தொடர்ந்த அளவில், அத்தலத்தே உமையம்மையின் ஆணைவலியால், மறறவன் வலியற்று மயங்கி, வில்லையூன்றி அதன் மற்றத் தலையிலே தன் தலையை வைத்து உறங்கினுகை, வியாழனுர் என்பவர் அறிவுறுத்தியவாறே இந்திரன் அவன் உறங்கிய இடத்திலே ஒரு புற்றினை உண்டாக்கத் தேவர் யாவரும் அவ்வழிக் கறையான்களாகி அவ்வில்லின் நாணினை அறுக்கவும், அந்நாண் அறுந்த வில் அத்திருமால் தலையைத் தாக்கி அறுந்து போகச் செய்து, மற்றதனை வேள்வியின் பாங்கர் வீசிற்று. அப்புற்றுக்குப் பத்துக் கோலளவில் தெற்கேயுள்ள நாகபிலம் எனப் பெயரிய ஆடகேச்சுவரத்திலே எழுந்தருளப் பெற்ற செம்மேனியெம்மான், அப்புற்றிலே வெளிப்பட்டு, ஆங்குத் தன்னைப் போற்றி நிற்கும் அயன் இந்திரன் முதலாய தேவர்களுக்குக் காட்சி கொடுத்து, அசுவினி தேவரைக் கொண்டு திருமால் தலையை உடலொடு பொருத்தி அவனை எழுப்பிக் காட்சி கொடுத்து வரமளித்தான் என்பதாம் எனத் திருவாரூர்ப் புராணம் கூறுநிற்கும்.

"ஆரூர்" என்றதனைத் திருநகர் என வடமொழிப் புராணம் கூறுதலால், அதுகொண்டு திருமகள் மங்கலம் பெற்றதனை நினைந்து அயன் அங்ஙனம் அழைத்தான் எனினும் ஒக்கும்.

முன்னர்ப் பதிகத்தின் இறுதித் திருப்பாடலில் இறைவன் பெயர் தேவர்பிரான் என முடிவு கட்டிக்கொண்டு ாண்டு அப்பெயரைக் கிளியால் உய்த்துணர வைத்தது ஆராய்ச்சித்துறை வல்லார்க்கு ஒரு பெரு விருந்தாம் என்க.

**ஏதம்இலா இன்சொல் மரகதமே ஏழ்பொழிற்கும்**
**நாதன்நமை ஆளுடையான் நா(டு)உரையாய்—காதலவர்க்கு**
**அன்(பு)ஆண்டு மீளா அருள்புரிவான் நா(டு)என்றும்**
**தென்பாண்டி நாடே தெளி. 2**

இது, நாடியாதென வினைய அவட்கு இஃதெனக் கிளி கூறியது.

(பொ - ரை.) தலைமகள் வினா —குற்றமிலாத இனிய சொற்களைச் சொல்லும் மரகத மணிபோன்ற நிறத்தையுடைய கிளியே! ஏழுலகிற்கும் தலைவனும், நம்மை அடிமையாக உடையவனுமாகிய பெருந்துறை வேந்தனுடைய நாடு யாதா மென்றுரையாய் எ - று.

கிளியின் விடை —(தோழி! தன்மேல்) காதலுடையவர்க்கு, அவர் கொண்ட அன்பினையேற்று, அவர் பிறவியெடுத்தற்கு மீண்டு வராது அருள் புரிகின்ற எம் தேவர்பிரானுடைய நாடு எனப்படுவது எக்காலத்தும் தென்பாண்டி நாடே ஆகுமெனத் தெளிந்து கொள்வாயாக எ - று.

(வி - ரை.) "ஏதமிலா இன் சொல் மரகதமே" என்றாள், இன்சொல் இலக்கணமும், கிளி செம்பொருள் காணும் சீர்மையுடையதும் என்பவை தோன்ற.

உலகெலாம் அழிந்த ஞான்றும் அழியாதிருப்பது தென்பாண்டி நாடாதலால், அஃது அவனுக்கு இயல்பாகவே என்றுமுள்ள நாடு எனக் கூறிற்று. சேரலன் சோழனென அவ்வந் நாடுடையானெனக் கிளப்பன வெல்லாம் நியதிப் பெயர்களாகாமை உணர்க.

"அன்பென்"றதனை ஆகுபெயராக் கொண்டு வழிபாடென்றுரைத்தலுமாம். இல்லறக் கிழமை பூண்டவராக ஆளுதலைச் செய்து என்றபடி.

மரகதம் - பச்சைமணி. பொழில் - உலகம். பூமியை முதலாகக் கொண்ட மேல் ஏழுலகங்கள் என்க. தமிழ் நாடுகட்குத் தெற்றின் கண்ணதாகலின் "தென்பாண்டி" நாடு எனப்பட்டது. கீழ் உலகங்களும் அவனுடையனவேயாயினும், சிறிது இன்பமேனும் விரவியுள்ளனவாகத் தோன்றும் இயைபு கருதி மேலுலகங்களையேயுடையன் எனக் கூறுவது நூன்மரபு. ஏழு உலகம், ஏழு தீவுமாம். நீலவுருவுடைய கிளியை "மரகதமே" என ஒப்புக் கூறினர் என்க.

**தா(து)ஆடு பூஞ்சோலைத் தத்தாய் நமைஆளும்**
**மா(து)ஆடும் பாகத்தான் வாழ்பதிஎன்—கோதாட்டிப்**
**பத்தர்எல்லாம் பார்மேல் சிவபுரம்போற் கொண்டாடும்**
**உத்தர கோசமங்கை ஊர் 3**

இஃது, அவனுடைய ஊரை வினவினட்கு, அஃது இதுவாமெனக் கிளி கூறியது.

(பொ - ரை.) தலைமகள் வினா —மகரந்தம் விளங்குகின்ற பூக்களையுடைய சோலையின்கண்ணே வாழும் கிளியே! நம்மையாட்கொண்டருளும் மங்கைசேர் பங்கினன் வாழும் ஊர் யாது எ - று.

கிளியின் விடை —அஃது உலகின்கண்ணுள்ள சிவபுரமென மிக்க புகழினை எடுத்துக்கூறி ஒன்றுகூடிக் குலாவும் திருவுத்தர கோச மங்கை என்பதுவே அவனுடைய ஊர் எ - று.

(வி - ரை.) தாதாடும பூஞ்சோலை வளனை நோக்காது தன்னுடன் அளவளாவுதலையே அவாவிறறு என்பது தோன்றத் "தாதாடு பூஞ்சோலைத் தத்தாய்" என்றழைத்தாள். பூந்தாதாடும் தத்தையுமாம.

கோதாட்டல் - மிக்க புகழினை எடுத்துக்கூறல. கொண்டாடுதல் - கூடிக் குலாவுதல். அன்பரெல்லாரும் ஒன்றுகூடி மிக்க புகழினை எடுத்துக் கூறுமூர என்பதுவே கருத்தாகக் கொள்க. உத்தரகோசமங்கை என்ற தனுக்கு ஏற்ப "மாதாடும் பாகத்தான்" என்று கூறப்பட்டான். "நம்மை யாளும" என்றதனை அம்மைகரும அப்பறகும் தனித்தனி ஏற்றினும், அம்மைக் காதல் அப்பறகாதல் ஏறறினும் அமையும்.

செய்யவாய்ப் பைஞ்சிறகில் செல்வீநம் சிந்தைசேர்
ஐயன் பெருந்துறையான் ஆ(று)உரையாய்—தையலாய்
வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காண்உடையான் ஆறு. 4

இஃது, அவன் ஆறு யாதென்றாட்கு அஃது இதுவெனக் கூறியது.

(பொ - ரை.) தலைமகள் வினா.—செவ்விதாகிய வாயினையும், பசியதாகிய சிறகினையும உடைய என் செல்வ மகளே! நம்முடைய மனத்தினை இடமாககொண்டு வாழும ஐயனாகிய பெருநதுறை வேந்தனது ஆறுதான் யாதென்று உரைப்பாயாக எ - று.

கிளியின் விடை —மங்காய்! நம்மையாளுடையானது ஆறு னது ஞானவெளியினின்று, பற்றுவந்த சிந்தையின்கண்ணுளள மலங்களைக கழுவ மண்ணில் வநதிறங்கும் ஆனந்தம எனபபடுவ தாகும் எ - று

(வி - ரை.) உண்ணற்கும் பறந்துசெல்லற்கும் உரியையேனும் இறைவன் புகழிலே ஈடுபட்டனையாய் என்னுடன் அளவளாவுகினறனை எனபது தோனறச் "செய்ய வாயப் பைஞ்சிறகிற் செல்வீ" எனறழைத் தாள்.

வநதிழியும் - மண்ணுலகில் வந்திறங்கும். "இழியும்" என்றமையால் வானை ஞான வெளி என்றும. சிநதைக்கண் இறங்கும எனினுமாம. வந்த சிந்தை - தன்பாற் பறறு வந்த சிந்தை. அச்சிந்தைக்கண்ணுள்ள "மலங் கழுவ வந்திழியும்" என்க. மலம் நீங்க எய்துவது இன்பம் என்க.

"தையலாய்" என்றமையின் வினவியவள் தலைமகள் என்பது பெற்றும்.

கிஞ்சுகவாய் அஞ்சுகமே கேடில் பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவும் மலைபகராய்—நெஞ்சத்து
இருளகல வாள்வீசி இன்(பு)அமரும் முத்தி
அருளும்மலை என்பதுகாண் ஆய்ந்து. 5

இஃது, அவன் மலையாதென்றாட்கு அஃது துவெனக் கூறியது.

(பொ - ரை.) தலைமகள் வினா —முருக்கம்பூ வொத்த வாயினையும் அழகினையும் உடைய கிளியே! கெடுதலில்லாத பெருந்துறை வேந்தனாகிய அழகன் புணரும் மலைதான் யாதெனச் சொல்லாய் எ - று

கிளியின் விடை —அன்பர் உள்ளத்துள்ள அறியாமையாகிய இருள் நீங்க, ஞானமாகிய ஒளியை வீசி இன்பம் நிலைத்திருக்கும் முத்தியை அருளிச்செய்யும் மலையாகும்; அதன் பெயரை நீ ஆராய்ந்து அறிதி எ - று.

(வி - ரை.) பேச்சிலீடுபட்ட தன்மையால் பேசும் அதன் மூக்கிலும் ஈடுபட்டு, மற்றதன் அழகிலும் ஈடுபட்டுக் "கிஞ்சுக வாய் அஞ்சுகமே" என்று அழைத்தாள். அம் - அழகு. சுகம் - கிளி.

"முத்தியருளுமலை" என்பதனால் அதுதான் "அருள்மலை" எனப்படுமென்க.

மஞ்சன் - ஆண்மகன்; கணவன். வாள் - ஒளி அருள் ஒளிவடிவிற்றென்பது இதனாற் பெற்றாம். அருளாற் பொய்யும் மெய்யுமாகிய பொருள்களின் நிலைமை புலப்படுமென்க.

"கிஞ்சுகம்" நிற மாத்திரையில் உவமையாயிற்றேனும் மணமற்ற தன்மையால் அதன் இழிவு நீங்க மழலைச்சொற் பேசும் வாய் என்பது குறித்து "மலை பகராய்" என்றாள் "பகராய்" என்பதால் சேட்டதைத் திருப்பிச் சொல்லல் என்பதும் தொனிக்கிறது. கிளியின் வாயினால் தலைமகன் மலையின் பெயரைக் கேட்டலும் தலைமகள் உள்ளங் களிக்கின்றாள் என்பதும் புலப்படும்.

இப்பாடே வந்(து)இயம்பு கூடுபுகல் என்கிளியே
ஒப்(பு)ஆடாச் சீருடையான் ஊர்வதென்னே—எப்போதும்
தேன்புரையும் சிந்தையராத் தெய்வப்பெண் ஏத்திசைப்ப
வான்புரவி ஊரும் மகிழ்ந்து. 6

இஃது, அவன் ஊர்தி யாதென்றாட்கு வான்புரவியாகும் என அது கூறியது.

(பொ - ரை.) தலைமகள் வினா :—என் கிளியே! நீ கூட்டின் இப் பகுதிக்கண் வந்து எனக்கு விடை இயம்புதி. மற்று, கூட்டின் உப் பகுதிக்கண் புகுதலைச் செய்யற்க. ஒப்புரைத்தற்கு இயலாத மிக்க புகழினையுடைய நம் பெருந்துறை வேந்தன் ஊரும் ஊர்தி யாது எ - று.

கிளியின் விடை.—மங்கையே! அன்பர்கள் தேனை ஒத்த இனிய மனமுடையவராக, முத்தியாகிய தெய்வத் திருமகள் வாழ்த்துக் கூற, ஞானமாகிய குதிரையை மகிழ்ந்து ஊர்வன் நம் தலைவன் எ - று.

(வி - ரை.) உரையாடல் என்றதுபோல "ஒப்பாடலும்" நின்றது. மலம் கழுவப்பட்டு எப்போதும் இனித்து வரும் "சிந்தையரா"குமா றென்க. "வான் புரவி மகிழ்ந்தூரும்" என்றதேனும் மகிழ்ந்தூர்வது வான் புரவி என்றே கொள்க. வான் - ஞானவெளி.

பாடு - பக்கம். வினவும் தலைமகளுக்கு அணித்தான பக்கம். தான் ஏவியதைச் செய்யும் இயல்பிற்று என்பது தோன்ற "என் கிளியே" என அழைத்துக் கூட்டின் "இப்பாடு புகல்" என்றாள்.

**கோல்தேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்**
**மாற்றாரை வெல்லும் படைபகராய்—ஏற்றார்**
**அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயும்**
**கழுக்கடைகாண் கைக்கொள் படை. 7**

இஃது, அவன் கைக்கொள் படை யாது என்றாட்குக் கழுக்கடையென அது கூறியது.

(பொ - ரை.) தலைமகள் வினா —கொம்புத்தேனைப் போல இனிய மொழியையுடைய கிளியே! குறைபாடு ஒன்றும் இல்லாத திருப்பெருந்துறைச் செல்வன் தனது பகைவரை வெற்றிகொள்ளும் படையாதெனக் கூறுவாயாக எ - று.

கிளியின் விடை :—அதுதான், தன்பாற் குறையிரந்தாருடைய நெஞ்சமானது மலமாசு படாது உருகும்படி ஆங்குள்ள காமம் முதலாய மலங்களின்மேற் பாய்ந்து அடக்கும் சூலமே அவன் கைக் கொள்ளும் படையாகும் எ - று.

(வி - ரை.) ஏற்றார் - குறையிரப்போர். மாற்றார் - அறத்தொடு மாறுபட்டு அன்பில்லாதவர். அழுக்கு - மலம்; அஃதாகுபெயராய் அதனால் உளதாகும் செய்கைகளை உணர்த்திற்று. மும்மலங்கள், அச்செயல்களாய் நிற்கும் மூன்றாகிய மலங்கள். வெல்லுதல் - மாற்றார் தாம் மேற்கொண்ட தீச்செயல்களை நிகழ்த்தாவண்ணம் ஏற்றவாறு

படையாகிய சூலத்தின்தொழில் அழித்தல் தொழிலாயினும் உயிர்களின் ஆக்கங் கருதியதுவேயாகும் என்பது பெற்றும்.

"பெருந்துறைக்கோன்" என்றது, செவ்வி பெருதாரைச் செவ்வி பெறுங்காறும் பொறுத்திருந்து ஆள்வோன் என்பது குறித்து நின்றது. "கோதில்" என்றதனைக் "கோனு"க்கு அடையாக்குக. பெருந்துறையிலே முன்னர்ச் செவ்வி பெற்ற அன்பரை ஆட்கொண்டது நல்லதன்பாற்படும் என, இப்போது தன்னை ஆண்டமையால் தெளிந்துகொண்டு, தான் முன்னர்க் கோதுடையான் என்று கருதியிருந்தது பொருந்தாதென்பது புலனாகக் "கோதில் பெருந்துறைக் கோன்" என்றாள்.

விரிந்த பல பொருள்களையும் ஒருசேரத் தொகுத்துச் சிறப்புற இனிதாகக் கூறும் என்பது கருதிக் "கோற்றேன் மொழிக் கிள்ளாய்" என்று அழைத்தாள்.

மும்மலப் பகையால் அலைக்கப்பட்டவர் அடைக்கலம் புகுவரேல், அவர் பகையையும் அழிக்கவல்ல "கழுக்கடை" என்க. ஏனையவற்றுக்கும் இங்ஙனமே கூறிக்கொள்க.

இன்பால் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசியம்பாய்—அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத்(து) ஓங்கும்
பருமிக்க நாதப் பறை. 8

இஃது, அவன் முரசியாதென்றாட்கு நாதப்பறையென அஃதுரைத்தது.

(பொ - ரை) தலைமகள் வினா —இனிய பால்போன்ற தூய சொற்கூறும் கிளியே! நம் பெருந்துறைக் கோமானுடைய முற்பக்கத்தே முழங்காநிற்கும் முரசம் யாதெனக் கூறுவாய் எ - று.

கிளியின் விடை .—அடியவர்தாம் தன்மேல் வைத்த அன்பினாலே அவர்தம் பிறவிப்பகை நிலையற்று அழியுமாறு பேரின்பமாகிய வெற்றி நிலையிலேநின்று ஓங்கி ஒலிக்கும் பருமை ஒலியினும் மேம்பட்ட நுண்ணொலியாகிய ஒலியை யுளதாக்கும் பறையாகும். எ - று.

(வி - ரை.) இறைவன் வீற்றிருக்குமிடத்திலும் செல்லுமிடத்திலும் ஒலிக்கும் பறை என்க. பரு (நாதத்திலும்) மிக்க நாதம் என்க. "நாதம்" என்றது நுண் ஒலியை. நாவினால் உரைத்தல்போலாது, பருவொலியாக ஒலிப்பதனைப் பரும்படியாகவே உணர்தற்கேற்றது பறையொலியாகலின், அதன் நாதம் "பருமிக்க நாதம்" எனப்பட்டதெனினும் ஒக்கும்.

இன்பால் - கன்றுக்கெனச் சுரந்த பால். அங்ஙனமே எனக்கென உரைக்கும் உரையுடையை என்பது தோன்ற "இன்பால்

கிள்ளாய்" என அழைத்தாள், அன்புமொழி என்றவாறு. பாலினல் இளங்கன்று காக்கப்பெற்று மகிழ்ந்துவருமாறே நின் மொழியால் யானும் மகிழ்ந்து வாழ்கின்றேன் என்பது குறிப்பு. இனி, கன்றுக்கெனச் சுரந்த பால் அதனையுடையார்க்குப் பயன்பட்டவாறே நீயும் எனக்குப் பயன் பட்டனை என்று குறித்தானுமாம்.

பேரின்பத்து ஓங்கியொலிக்கும் நாதம் தன்னைக் கேட்டாரை ஏனைய தொடர்பின் நீக்கித் தன்பால் ஒடுங்கவைக்கும் இயல்பிற்றென்க எனவே இது 'போர்ப்பறை' என்பது பெற்றும்.

**ஆய மொழிக்கிள்ளாய் அள்ளூறும் அன்பர்பால்**
**மேய பெருந்துறையான் மெய்த்தார்என்—தீயவினை**
**நாளும்அணு காவண்ணம் நாயேனை ஆளுடையான்**
**தாளிஅறு காம்உவந்த தார். 9**

இஃது, அவன் தார் யாதென்றாட்குத் தாளியறுகந்தார் என அது கூறியது.

(பொ - ரை.) தலைமகள் வினா :—கொண்டாடுமாறு சொல்லும் சொல்லையுடைய கிளியே ! தன்னைக் காதலித்து நுகர வாயூறும் மெய் யன்பரிடத்திலே மேவியிருக்கின்ற திருப்பெருந்துறை வேந்தன் அணிந்த மெய்ம்மையாகிய தார் யாதாகும் எ - று.

கிளியின் விடை :—அதுதான் என்னை எப்போதும் கொடிய வினைகள் அணுகாவாறு ஆளுதலையுடைய அவன் மகிழ்ந்து அணிந்து கொண்டதாகிய தாளியறுகால் தொடுக்கப்பட்டதாகிய தாராகும் எ - று.

(வி - ரை.) ஆய்தல் - கொண்டாடுதல். அள்ளூறுதல் - வாயூறுதல். அன்பர்பால் அப்போது மேவிய பெருந்துறையான், இப்போது என்பாலும் மேவியிருப்பவன் என்க. தன்னைத் தீயவினை நணுகாவண்ணம் ஆள்பவன் என்னும் சொற்போக்கில், நின்னைப்போன்று அவனை அப்போது வெறுத்து இப்போது உவக்காது எப்போதும் உவக்கும் இயல்புடையேன் யான் என்பது பெறப்பட்டு நிற்பத் தோழமைக்குரிய மரபு "ஆயமொழி" என்பதனால் புலப்படுதல் காண்க.

அவன் முன்னர்க் கழுநீர்மாலையும், பின்னர் மந்தாரமாலையும், இப் போது தாளியறுகமாலை முதற் பிற மாலைகளையும் அணிந்துவந்து காட்சி யளித்தலால், அவன் "மெய்த்தார் என் ?" என்றும், அதனை இஃதென ஆராய்ந்துரைத்தல் கொண்டாடற்குரியதாதலால் "ஆய மொழிக்கிள்ளாய்" என்று அழைத்தும் போந்தாள் என்க. இந்நுணுக்கமும் பாவரசியின் சிரோமணியே எனப் போற்றற்குரிய தொன்றும்.

சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியும் கொடிகூறாய்—சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி ஏர்காட்டும்
கோதிலா ஏறும் கொடி. 10

இஃது, அவன் போரில் உயர்த்தும் வெற்றிக்கொடி யாதென்றாட்கு ஏற்றுக்கொடியென அதுகூறியது.

(பொ - ரை) தலைமகள் வினா —சோலைக் கண்ணுறையும் பசுங்கிளியே! அலைவீசும் நீர்த்துறைகளையுடைய திருப்பெருந்துறைக் கோமானுடைய வடிவம் விளங்கித் தோன்றும் கொடி யாது என்று கூறாய் எ - று.

கிளியின் விடை '—மங்கையே! அதுதான் பகைவர் துண்ணென்று அஞ்ச ஞான வெளிமேல் விளக்கமுற்று எழுச்சி காட்டும் குறைவு பாடில்லாத ஏற்றின் கோலம் எழுதப்பட்ட கொடியாகும் எ - று.

(வி - ரை.) கோலம் - வடிவம், அவன் அடையாளக்கொடி எக்கோலம் எழுதப்பட்டது என்க. அக்கொடி எக்கோலம் எழுதப்பட்டுப் பொலிவு பெறும் என்பதே கருத்தாகக் கொள்க.

கொடியைக் கண்டபோதே ஏதிலார் துண்ணென அஞ்சிக் கலங்கிச் சிதறுவர் என்க. எனவே அது வெல்கொடி என்பது பெற்றும். அது

" சேவக மேந்திய வெல்கொடியான் " (திருப்பொற். 16.)

என்பதனுனும் தெளியப்படும். மேல் - ஞான வானின்மேல்.

எழுச்சி காட்டுதல் அதன் இயல்பு என்பது தோன்றக் " கோதிலா ஏறும் கொடி " எனப்பட்டது. கோதின்மையை ஏற்றுக்கு ஏற்றினுமாம். ஏர் காட்டும் கொடி; கோதிலாக்கொடி; ஏறுங்கொடி எனவும் கொள்ளலாம். ஏற்றார் நலன் பெறவே அவரை அஞ்சுவித்தலால் அது கோதிலாக் கொடியாயிற்று. ஏர், வீட்டுலகுமாம். ஏறு, அறமாகிய ஏறுமாம்.

திருச்சிற்றம்பலம்

# திருப்பள்ளி எழுச்சி

அஃதாவது மாற்றாரை வென்று வாகை சூடி மனைக்கண் வந்து கவலையின்றி உறங்குந் தலைமகனை, அவன் பரிகரத்தின் மகளிர், பல்லோரும் அவனது காலைக்காட்சி கண்டு உவக்க அத்தாணி மண்டபத்தில் வந்துற்றார் "பொழுதும் புலர்ந்தது" எனக் கூறி அழைத்துத் துயிலெழுப்புவதைக் கூறும் பத்துத் திருப்பாடலைக் கொண்ட பகுதி.

பள்ளி - படுக்கை. அஃது ஆகுபெயராய்த் துயிலுதலை உணர்த்தி நின்றது. எழுச்சி - எழுப்புதல்; எடுப்புதல். அஃது ஆகுபெயராய் அப்பொருள்பற்றிய திருப்பாடலையும் அதன்மேல் அவை அடங்கிய நூற்பகுதியையும் உணர்த்திநின்றது. "திரு" என்பது தலைமகனது தெய்வச்சிறப்பை உணர்த்தி நின்றது.

பள்ளி எழுச்சியைப் பண்டைய நூல்கள் "துயிலெடை" எனக் கூறுநிற்கும். துயிலெடை புறத்திணையிற் பாடாண் பகுதிக்கண் ஒரு துறையாகவுங் கூறப்பட்டுள்ளது. அதனை,

> " தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
> சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் " (தொல். புறத். 36.)

என்பதனால் தெளிக. அத்துயிலெடை, தலைமகன், மாற்றாரை வென்று வீற்றுத் திருவெய்திப் பாசறைக்கண்ணே துயில அவனைச் சூதர் துயிலெழுப்புவதாகும் என்றலை,

> " அளந்த திறையார் அகலிடத்து மன்னர்
> வளந்தரும் வேலோய் வணங்கக்—களம்பொலிய
> பூமலர்மேல் புள்ஒலிக்கும் பொய்கைசூழ் தாமரைத்
> தூமலர்க்கண் ஓர்க துயில் " (புறப். வெண். 9, 9.)

என்பதனால் அறிக.

பாசறைக்கண்ணே தலைமகனைத் துயிலெழுப்புவோர் சூதர் என்பதற்கும், அது புறத்திணைப் பாடாண் பகுதியதாகும் என்பதற்கும் அவை விதியாவன அன்றி அவன் மனைக்கண் வந்து துயில்கையில், அவன் பரிகரத்தின் மகளிர் அவனைத் துயிலெழுப்புவது மரபாகாது எனத் தடுக்கும் ஆற்றல் அவற்றுக்கு இல்லை. ஆதலால் அவனை மனைக்கண்ணே மகளிர் துயில் எழுப்புவது அகத்திணைப் பாற் படுவதன்றிப் புறத்திணை ஆகாது என்பது பெற்றாம்.

பிரிந்த தலைமகனைக் கனவு துயில் எழுப்புவது என்பதனை "வேனிற் பாதிரி" (குறுந் 147.) என்பதனாலும் பொருள் முற்றி

வந்த தலைமகனுடன் துயின்ற தலைமகளைச் சேவல் துயில் எழுப்பியதைக் "குவியிணர்த் " (குறுந். 107.) என்பதிஞலுந் தெளிந்துகொள்க. இன்னவையெல்லாம் அகத்திணையின்பாற் பட்டன.

அன்னம் மெல்நடை நளிநீர்ப் பொய்கை
ஆம்பல் நாறுந் தேம்பொதி நறுவிரைத்
தாமரைச் செவ்வாய்த் தண்அறல் கூந்தல்
பாண்வாய் வண்டு நோதிறம் பாடக்
காண்வரு குவளைக் கண்மலர் விழிப்ப
புள்வாய் முரசமொடு பொறிமயிர் வாரணத்து
முள்வாய்ச் சங்கம் முறைமுறை ஆர்ப்ப
உரவுநீர்ப் பரப்பின் ஊர்துயில் எடுப்பி
இரவுத் தலைப்பெயரும் வைகறை காறும் (சிலப். அந்தி. 72-80.)

என்னுமிதஞல் மகளிர் துயிலெழுப்புதல் மரபாகும் என்பது பெற்றும்

" நீ பள்ளியில் துயிலும் அழகினைக் கண்ட யாம் திருவோலக்க மண்டபத்தில் வீற்றிருக்கும் காலைக்காட்சி அழகினையுங் காண விரும்பாநின்ரேம் " என யாமும், நின் பரிகரத்தின் மகளிரும் ஏனை அன்பரும் வேணவாக் கொண்டவராய் எதிர்நோக்கி இராநின்ரேம் எனப் புணர்ச்சி வேட்கையளுகித் துயில்நீட்டிக்கும் தலைமகனைத் தலைமகளும் ஏனைய ஆயத்தாரும் எழுப்பியதுவே இப்பகுதிக்குரிய பொருளாகக் கொள்க

புலர்ந்தும், கதிரெழுந்தும், அன்பர் முதியோர் பலருங் காண வந்திருந்தும், புணர்ச்சியில் வேட்கை மிக்குப் பொய்த்துயில் நீட்டிப் பானை, நாண் மிக்க தலைவியை உள்ளிட்ட எல்லா ஆயத்தாரும் துயில் எழுப்புவதாகக் கொள்க.

இது வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்துபோய் பொருள் முற்றிவந்த தலைமகனை வரைந்துகொண்டு அந்நாள் இரவின் வைகறைப் பொழுதின்கண்ணே துயிலெழுப்பியதாகும்.

இப்பகுதி திருப்பெருந்துறைக் கண்ணே பாடியருளப்பட்ட தாகாது என்றலை, "உத்தரகோசமங்கையில் உள்ளவனே, திருப் பெருந்துறை மன்னஞகி எம்மைப் பிரிந்தவனே, இங்கு எழுந் தருளியவனே " என அழைத்தருளும் இப்பகுதியின் ஏழாவது திருப்பாட்டே வலியுறுத்தாநிற்கும்

" உத்தரகோசமங்கை உள்ளாய், திருப்பெருந்துறை மன்ஞ" என இருதலங்களில் உள்ளாஞக அவனை விளித்தமையாலும்,

பின்னர் இங்கு எனச் சுட்டியமையாலும், திருவுத்தரகோசமங்கை யும் திருப்பெருந்துறையும் 'அங்கு' எனச் சுட்டற்குரியவென்பது தானே போதரும் போதரவே அத்திருப்பாட்டில் "இது அவன் திருவுரு இவன் அவன் எனவே எங்களை ஆண்டுகொண்டு" எனக் கூறியருளிய தலம் இவ்விரண்டுமல்லாத பிறிதொன்றென்பது புலனாகும்.

இப்பகுதியிற் "பெருந்துறை உறைவாய்" என வருவனவெல் லாம் அங்குத் தலைமகளை விடுத்துக் கரந்து சென்ற கள்வா இங்குப் புணர்ச்சி நீட்டிப்பதன் நோக்கம் யாது என்னும் திருக்குறிப்புப் பற்றி வந்தனவென்க.

இப்பகுதிக்குக் காரணமாக நின்ற அடிப்பாட்டுப் பொருளடைவு வருமாறு —பத்தாவது திருப்பாட்டில் அடிகளை ஆட்கொள்ளுவதற் குரிய அடிப்படைக் காரணங் குறிக்கப்படும் இயைபினால் அஃது ஈண்டு முதலாவதாக அமையத்தக்கதென்க. இனி இவ்வியைபு பற்றிப் பின்வருமாறு கூட்டியுரைக்க. அங்ஙனம் எங்களை ஆட் கொள்ளும் வல்லமை பெற்றவாறே எங்கள் முன்வந்து குறைவு பாடுகளை நிறைவு செய்வித்து எம்மை ஆண்டு அருள்புரிந் துவருவோன் (5) எனவும் திருமேனி, திருப்பெருந்துறைக் கோயில், அந்தணனாதல் என்னும் இவற்றைக் காட்டி ஆண்ட வன் (8) எனவும், அக்காட்சி எம் கண்ணகத்துத் தேனூறிக் களிதருகின்றது (9) எனவும் அடியோம் செய்யத்தகும் பணியாது (7) எனவும், எங்கள் பணிகளில் முதலாவதாக நின் திருவடியைத் தொழ நீ பள்ளி எழுந்தருள் (1) எனவும் அவ்வாறு எழுந்து எமக்கு உன் கழலிணைகளைக் காட்டுக (3) எனவும், தாமரை மலர அதன்கண் வண்டுகள் மொய்த்துத் தேனைப் பருகுதலைப் பாராய் என்பதனால் உன் முகமலர்ச்சி கண்டு கண்ணால் நுகரும் பேறு பெற்றிலேம் (2) எனவும், எம்மைக் கருதாயாகினும் இசைக் குருகியேனும், பூசனையை ஏற்றுக்கொள்ளவேனும், அன்பின் வலைப்பட்டேனும் எழுக (4) எனவும், கட்டறுத்து வீடுபெற்றோர், அவ்வீட்டில் நீங்கி மங்கையர் வடிவுடையராகி வணங்குகின்றனர்; அவர் பொருட்டேனும் எழுக (6) எனவும் ஒழுங்குபடுத்திக் கொள்க.

நூற்பகுதிப் பொருளடைவு வருமாறு —திருவடி தொழுதலே எல்லார்க்கும் அமைந்த குறிக்கோளாகும் என்னும் பொது இயைபால் அடிகள், இயற்கைப் பொருளடைவில் ஆறுவதாகக் கண்ட திருப்பாட்டை முதற்கண் வைத்தருளினார் மலர்ந்த தாமரைத் தேனை வண்டு நுகர்ந்து பாடவும் யாம் நின் முக மலர்ச்சி கண்டு களித்துப் பாடாதிருப்பது என் (2) எனவும், (மேலும் இக்

கருத்தை நன்கு வற்புறுத்தலால்) "கூவின பூங்குயில் கூவின கோழி" (3) எனவும், பலருங் காணற்கு வந்துள்ளபோது நீ துயிலுதல் தகாதெனவும் (4), நின்னையும் நின் இயல்பையும் அறிவார் யாருமிலர் (5) எனவும், வீடுபெற்ற அன்பர்களும் மங்கையராக இங்குளர் ஆதலின் நீ நீட்டித்தல் தகாதெனவும் (6), யாம் பணி செய்யும் வகையில் குறைவுபாடிருப்பின் அதனை உணர்த்தில் ஒழிப்போம் (7) எனவும், முன்னர்த் திருமேனி கோயில் அந்தண னுதல் ஆய அனைத்துங் காட்டினை, இப்பொழுது திருவடி காட்டாமை எற்றிற்கு (8) எனவும், நின் வடிவம் எம் கண்ணகத்தே நின்று களிதராநின்றது, ஆதலால் நின்னைக் காணற்குப் பேரவாக்கொண்டு ஆற்றேமாயினேம் (9) எனவும், நீ விரும்பின் எவ்வகையானும் எம்மை ஆட்கொள்ளுதல் நினக்குச் சாலும் (10) எனவும் நூற்பகுதியில் அமைந்த பொருள் ஒழுங்கு கண்டு கொள்க.

இஃது திருப்பெருந்துறையில் அருளப்பெற்ற தென்ப.

# திரோதான சுத்தி

## எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

போற்றிஎன் வாழ்முதல் ஆகிய பொருளே
 புலர்ந்தது பூங்கழற்(கு) இணைதுணை மலர்கொண்(டு)
ஏற்றிநின் திருமுகத்(து) எமக்(கு)அருள் மலரும்
 எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்(று)இதழ்க் கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
 திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே
ஏற்(று)உயர் கொடிஉடை யாய்எனை உடையாய்
 எம்பெரு மான்பள்ளி எழுந்தருளாயே. 1

இது, தலைமகளும் ஆயத்தாரும் தலைமகனுடைய துயிலெழு காட்சி கண்டு ஆங்கே அவன் திருவடியில் மலரிடுதல் வேண்டுமெனக் கூறி மற்று அவனைத் துயிலெழுப்பியது.

(பொ - ரை) இதழை விரிக்கும் தாமரை பொருந்திய சேற்றினை உடைய வயல் சூழ்ந்த திருப்பெருந்துறை (மன்னலுகிய) சிவபெருமானே! எருத்தின் வடிவெழுதிய உயரிய கொடியுடைய

வனே ! என்னை மனையறப் பணியாட்டியாகக் கொண்டவனே ! எம் பெருமானே ! என்னுடைய இல்வாழ்விற்கு மூலப்பொருளாகிய காதலனே ! பொழுது விடிந்தது. நின்னுடைய பூக்கள் பொறிக்கப் பட்ட வீரக்கழலை யணிந்த திருவடிகளுக்கு, அவற்றோடு பொருந் தித் துணையாக மலர்களைக்கொண்டு நின்னுடைய அத்திருவடிகளி லிட்டு, உன்முகம் எனக்கு அருள் செய்ய மலரும் மலர்ச்சியாகிய மலரை யாம் பெற்றுக்கொண்டு, அத்திருவடிகளுக்கு வணக்கம் செய்வோம். ஆதலால் துயிலெழுந்தருள்வாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) எல்லார்க்கும் ஒக்குமாறு செய்தற்பாலது திருவடி வணக்கம் என்பது போதரப் "போற்றி" என நுதலிப்புகுந்து கூறத் தொடங்கினள் என்க.

வாழ்வு - திருநாண்மங்கல வாழ்வு. பொழுது புலரும்போதே திரு வடிப் பூசனையும் ஆற்றிவருதல் வேண்டும் என்னுமியைபால் புலர்ந்தது என்றாள்.

திருப்பெருந்துறைக்கு மன்னன் கொடி முதலிய பத்துறுப்புக்களை யுடையவன். அவன் கழுக்கடையைப் பிடித்து ஏறு உயர்த்திப் பரிமா வூர்ந்து என்னைப் பகைப்புலத்தின் மீட்டுப் பாண்டிநாட்டின் வழியாக, ஆனந்த அருவியில் தோய்வித்து, உத்தரகோசமங்கையில் மனைமாண்பு பூணச் செய்து, அருள்மலையிற் புணர்வோன் என்பது குறிப்பு.

பள்ளிக்காட்சியழகு கண்டு நுகர்ந்த யான், நின் துயிலெழுகாட்சி அழகும் கண்டு போற்றல் வேண்டுமென்றாள். 'பின்தூங்கி முன்னெழுந்து' கணவன் திருவடியை ஆராதனை செய்தல் கற்புக்கடன் என்பது ஈண்டு விளக்கப்பட்டது.

இழிந்த, அன்பற்ற என்பால் உயர்ந்த நீ தோன்றினாய் என்பது தோன்றச் "சேற்றிதழ்க் கமலங்கள் மலரும் தண்வயல்" எனப்பட்டது. 'இதழ் மலரும் கமலச்சேற்று வயல்சூழ்' திருப்பெருந்துறையென இயைக்க. ஏற்றி - இட்டு.

பரிமேல் வந்து ஆண்டுகொண்டு கற்பு அளித்த திறம் தோன்றத் "திருப்பெருந்துறையுறை சிவனே" என்றும், ஏற்றுக் கொடி எடுத்துப் பரிமா ஏறிவந்து ஆண்டுகொண்டதைக் குறித்து "ஏற்றுயர் கொடி யுடையாய் எனை உடையாய்" என்றும் கூறினாள்.

குயிற்பத்தின் பத்தாவது திருப்பாடலாலும் அன்னைப் பத்தின் முதலாவது திருப்பாடலாலும் திருப்பெயரும், மற்றதன் பத்தாவது திருப் பாட்டாலும் இப்பகுதியின் இத்திருப்பாட்டாலும் ஏற்றுக் கொடியும் அன்ன பிறவும் கூறப்பட்டிருக்கும் இயைபானது, வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிந்து சென்ற தலைமகன், பொருள் முற்றிவந்து வரைந்துகொண்டு அன்றிரவில் ஓர் அறையுள் பள்ளியிடத்தானாகத் துயில்கையில் அன்று

வைகறைக்கண்ணே தலைமகளை உள்ளிட்டோரால் அவன் துயிலெழுப்பப் பட்டான் என்பதற்குச் சார்பாகும் என்றல் ஒருதலை.

திருவடிக்கண் தலைமகள் முதலாயினோர் மலர் தூவுதலைக் கண்டு தலை மகன் கொள்ளும் ஆனந்தத்தால் அவன் முகத்திற் புன்னகை தோன்று மென்க.

அருணன்இந் திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது, உதயம்நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழஎழ நளினக்
கடிமலர் மலரமற்(று) அண்ணல்அம் கண்ணும்
திரள்நிரை அறுபதம் முரல்வன இவைஓர் ;
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகட லேபள்ளி எழுந்தரு ளாயே. 2

கதிரவன் உதிக்கத் தாமரை மலர அதன்கண்ணே வண்டு முரலுதல், நீ துயிலெழுந்து எங்களுக்கு அருள்செய்ய யாம் மகிழ்ந்து பாடுதலை ஒக்குமேனும், வண்டுகள் பெற்ற பேறு யாம் பெற்றேமில்லை இவற்றை ஓர்ந்தேனும் நீ துயிலெழாய் என அவனை, அவளை உள்ளிட்டார் துயிலெழுப்பியது

(பொ - ரை.) திருப்பெருந்துறைக்கண்ணே உறையாநிற்கும் சிவபெருமானே! எமக்கு அருட்செல்வத்தைக் கொண்டுதர ஆனந்த மாகிய ஆற்றினைத் தோற்றுவிக்கும் அருள்மலையே! காற்று முதலிய வற்றால் தோன்றும் அலைப்பெருக்கினையுடைய கடல்போன்றவனே! அண்ணலே! செங்கதிர்ச் செல்வனுடைய தேர்ப்பாகனாகிய அருணன் என்பான் இந்திரனைக் காவலனாக உடைய கீழ்த்திசையை அணுகினன்காண், அவன் அணுகியதும் இருளும் நீங்கிப் போயிற்று; உதய மலையின் உச்சிக் கண்ணின்று செங்கதிரோனும் எழுந்தோறும் எழுந்தோறும் தாமரை முதலாயவற்றின் நறுமண முடைய குவிந்த மலர்கள் விரியாநிற்பக் கூட்டமாக வரிசைப்பட்ட வண்டுகள் பாடுவன அவ்விடத்தாகும், இவற்றை உணருதி; ஆதலால் இனியேனும் நீ துயில் எழுவாயாக (என்றாள்) எ - று.

(வி - ரை.) 'பெருமானே, மலையே, கடலே, அண்ணலே' என இயைக்க. "அண்ணல்" என்றது அண்மைக்கண் நின்று இயல்பாக விளி யேற்றது.

உலகுக்குக் கண்ணுவான் சூரியன் என்னும் கருத்தால் " கருணையின் சூரியன் " என்றருமாம்.

அறுபதங்கள் அவ்விடத்து முரல்வனவாகும் என மாற்றுக. இவ்விடத் தில்லை என்றபடி.

செங்கதிர் தோன்றத் தாமரை முதலாயின கண்விழிப்ப அவ்விடத்து வண்டு பாடும். அங்ஙனமே நீயும் எழ எம் தலைமகள் விழிமலர்ந்து உவக்க யாம் பாடுதலும் வேண்டும். இவ்விரு தோற்றங்களையும் நீ விழித்துப் பார் என்றார் என்க. இது தோழியர் கூற்று. நீ எழாதிருத்தலைக் கண்ட தலை மகள் விழி கூம்பிற்று. யாமும் ஒடுங்கியுள்ளோம் என்பன குறிப்பிற் புலப் படுவன.

நிதியை நமக்குத் தருவான்வேண்டி அங்கிருந்து இங்கு அதனைக் கொண்டுவருவது ஆனந்த யாறு ; அவ்யாற்றினையுடைய "மலை" என்க.

திரள் - கூட்டம். நிரை - வரிசை.

கடல் தன் அசைவால் ஆக்கல் முதலாயவற்றை ஆக்கியும், அமுதம் அளித்தும், எல்லாச் செல்வங்களையும் நல்கியும் வருதலால் அஃது இறை வற்கு ஒப்பாகியது. ஆறுகால் உடைமையின் வண்டு "அறுபத" மெனப் பட்டது.

'நயனக் கடிமலர்' என்பது பாடமாயின், தாமரை முதலாயவற்றின் கண்களாகிய காவலையுடைய மலர்கள் விரியவென்று உரைக்க.

இத்திருப்பாட்டால் அவனது அருள்மலை ஆனந்த யாறு என்பன கூறப்பட்டன.

**கூவின பூங்குயில், கூவின கோழி,**
**குருகுகள் இயம்பின, இயம்பின சங்கம் ;**
**ஓவின தாரகை ஒளிஒளி உதயத்(து)**
**ஒருப்படு கின்றது ; விருப்பொடு நமக்குத்**
**தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய் ,**
**திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே**
**யாவரும் அறிவரி யாய்எமக்(கு) எளியாய்**
**எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 3**

இது, குயில் முதலாயின கூவின , சங்கம் இயம்பின ; தாரகை கள் ஒளி மழுங்கின ; உதய மலையில் கதிரொளி ஒன்றுபடுகின்றது. ஆதலின் நின் திருவடியை எமக்குக் காட்டுவாயாக, எழுவாயாக என அவனை, அவளை உள்ளிட்டார் துயிலெழுப்பியது.

(பொ - ரை.) திருப்பெருந்துறைக்கண் வீற்றிருக்கும் சிவ பெருமானே ! யாவரும் அறிந்து கொள்ளுதற்கு அரியவனே ! எங்களுக்கு எளியவனே ! எங்கள் பெருமானே ! வானவனே ! பொழுது புலர்ந்தமையால் அழகிய குயில்களும் கூவின ; கோழி களும் கூவின , ஏனைய பறவைகளும் ஒலித்தன , சங்குகளும்

முழுங்கின, விண்மீன்கள் ஒளி மழுங்கின; வானத்தின்மேல் மெல்லியவாக விரிந்த ஒளியெல்லாம் உதயகிரிக்கண்ணே ஒன்று பட்டு ஒளிமிகுகின்றது, எமக்கு இனியேனும் வெறுப்புறாது நின்னுடைய வீரக்கழல் செறிந்த நன்மை அமைந்த திருவடிகள் இரண்டினையும் காட்டியருள்வாயாக; அதன் பொருட்டுத் துயிலெழுவாயாக (என்றார்) எ - று.

(வி - ரை.) குருகு, பறவைப் பொதுப்பெயர். தாரகை - விண்மீன். நற்றாள் - செறிகழல்தாள், பிறவிப் பிணிக்கு மருந்தாகியதாள். ஒருப்படுதல் - ஒன்றுபடுதல்.

அன்பில்லேமாயினும் நீ இதுகாறும் எமக்கு எளியையாய் இருந்தனை. இப்போது அரியை போல என்னோ துயில்கின்றனை எனக் குறிப்பு உரைக்க. அரியையாயும் எளியையாயும் விழைந்தாங்கு ஆற்றிவரும் நின்னை யாம் எங்ஙனம் துயிலெழுப்ப வல்லேம் என அழிந்து கூறினர் என்க.

ஓசையினிமையாற் குயிலை முதலிற் கூறினார். இளவேனிற்கு உரியது குயிலாதலின் திரு எம்பாவையிற் கூறிற்றிலர். குயிலைக் கூறினமையின் உடம்படுபுணர்த்தலால் எழில் இயம்பினமையும் பெற்றாம். குயில் இளவேனிற் காலத்தை உணர்த்திக் காதற் சிறப்பை விளைத்தலின் அதனை விதந் தெடுத்தோதினாரென்க.

**இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்,**
**இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்;**
**துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்;**
**தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்;**
**சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்;**
**திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே**
**என்னையும் ஆண்டுகொண்(டு) இன்னருள் புரியும்**
**எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 4**

இஃது இசைவாணர் மறைவாணர் அன்பர் என்போர் பலரும் ஒருங்குவந்து ஈண்டினர், ஆதலால் துயிலெழுக என அவனைத் தலைமகள் துயிலெழுப்பியது.

(பொ - ரை.) திருப்பெருந்துறைக்கண் உறையும் சிவபெருமானே! அன்பற்ற என்னையும் ஒருபொருளாகக் கொண்டு அடிமை செய்து, எனக்கு இன்னருள் புரிந்து வருவோனே! எம்பெருமானே! நின் திருவோலக்க மண்டபத்தின்கண் ஒருபால் இன்னிசையையுடைய வீணை இசைப்பாரும் யாழிசைப்பாரும் நிறைந்தனர், ஒருபால் வேதத்துடன் துதிகளையும் இசைப்பாராயினார், ஒருபால் பலவகை மலர்களையும் தொடுத்துச் செய்யப் பெற்ற

மாலை தூக்கிய கையினராயினர் ; ஒருபால் தொழுபவரும் அழுபவரும் வாடுபவரும் ஆயினர் , ஒருபால் தலையில் கைகுவித்தோராயினர் , (ஆதலால் அவர்களை உவந்தேனும் இரங்கியேனும் அருள் செய்தற்கு) துயிலெழுவாயாக (என்றாள்) எ - று

(வி - ரை.) வீணையும் யாழும் ஒருவகையினத்தன. இருக்கு இயம்புதலென்றது வேதபாராயணத்தை. தோத்திரம் - துதிப்பாடல்கள் ; அன்பினைந்திணை பயிலுந் திருப்பாடல் என்க. பிணைமலர்க்கையினர் முதலியோர் ஒருவரின் மறறொருவர் செவ்வி மிகப் பெற்றவர். உலகினர் அனைவரும் வந்து ஈண்டினர் ஆதலினாலே பழியெய்தி நாண முறாது துயிலெழுக என்பது குறிப்பு.

மலரிட்டுத் தொழுது அழுது துவண்டு தலைமீது திருவடியைச் சூட்டுக என வேண்டுதல் ஈண்டுப் போந்ததென்க. இதனால் பிணைமலர்க்கையரை முன்னும், சென்னியில் அஞ்சலி செய்வாரைப் பின்னும், ஏனையோரை ஏற்ற பெற்றி இடைக்கண்ணுமாக முறைப்படுத்தினாள் என்க.

**பூதங்கள் தோறும்நின் றாய்எனின் அல்லால்**
**போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்**
**கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்**
**கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரைச்**
**சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னா**
**சிந்தனைக் கும்அரி யாய்எங்கள் முன்வந்து**
**ஏதங்கள் அறுத்(து)எம்மை ஆண்டருள் புரியும்**
**எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 5**

இது, நீயே வந்து எம்மை ஆட்கொண்டவாறே இனியும் பள்ளியெழுந்தருள் புரிவாய் என அவனை அவர்கள் துயிலெழுப்பியது.

(பொ - ரை.) குளிர்ச்சி பொருந்திய வயல் சூழ்ந்த திருப்பெருந்துறை வேந்தனே ! (நீ யாவன் என) நினைத்தற்கும் அரியவனே ! அன்பற்ற எம்முன்னர் வந்து தோன்றி எங்கள் குற்றத்தொடர்பினை வேறுக்கி எம்மை அடிமைகொண்டு திருவருளைப் புரிந்து வரும் எங்கள் பெருமானே ! பூதங்கள்தோறும் அவை இயங்குமாறு அவற்றுட் கலந்து நின்றவனே ! (நீயே யான் இவ் விடத்தேன் ; என்னை நினைக்குமாறு இது , யானே நும்மைத் தூய்மை செய்யும் நும்பெருமான் , உலகத்தை இயக்குவோனும் யான் என்றாங்கு நின்னியல்பு எல்லாவற்றையும் இவ்வாறும் என்று) சொல்லின் அல்லாக்கால், புலவோர்கள் போக்கில்லாதவன், வரவில்லாதவன் என்று நின்னைக் கூறிப் பாடுதலும், பாடியதற்கேற்ப ஆடுதலும் செய்வதன்றி, அவருள் நின்னைக் கண்டறிவாரைக்

காதாலும் கேட்டறியோம் (இங்ஙனம் நின் விழைவின்படியே யாவும் செய்யவல்ல நீ) துயிலுணர்ந்தெழுவாயாக (என்றுர்) எ-று.

(வி - ரை.) இறைவன் பூதங்கள் தோறும் உள்ளானெனவும் போக்கிலன் வரவிலன் எனவும் புகழ்ந்து பேசப்படுகின்ருனே யன்றி அத்தகைய அவன் திருவுருவத்தைக் கண்டவர்கள யாண்டும் இல்லையென்றபடி. எனவே இறைவனது விசுவரூபத்தைக் கண்டறிவாரைக் கேட்டும் அறியோம் எனக் குறிப்பித்தாராயிற்று. அன்பருக்கு அவர் காண முன் வரும் அறக்கோலமும், மறவோருக்கு அவரைக் கடிந்து ஆட்கொள்ள வரும் மறக்கோலமும் ஆகிய இத்திருவுருவங்களே கண்டறியப்பட்டன வென்க அடிகள் தம்மையும் சேர்த்து உளப்பாட்டுத் தன்மையால் கூறினமையால் தாம் திருப்பெருந்துறையிற் கண்ட காட்சியும் ஒவ்வாக் காட்சியென்பதும் பெற்றும். அக்காட்சியை அடிகள்

" விமலனே எமக்கு வெளிப்படாயென்ன
வியன்தழல் வெளிப்பட்ட எந்தாய் " (அருட். 4.)

எனக் கூறுதலின் இக்கூற்று வலியுறுமாறு காண்க, பூதங்கள்தோறும் நின்ற அக்காட்சியே அவரைப் பிதகூறச் செய்ததென்பது உணர்க. இசைப்பாட்டு. ஆடுதல் - கூத்தாடுதல். எனவே இசையும் கூ; கிளக்கப்பட்டன.

பப்பற வீட்டிருந்(து) உணரும்நின் அடியார்
பந்தனை வந்தறுத் தார்அவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத்(து) இயல்பின்
வணங்குகின் றுர்அணங் கின்மண வாளா
செப்புறு கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே
இப்பிறப்(பு) அறுத்(து)எமை ஆண்(டு)அருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 6

இது, வீட்டின் கண் வதியும் அன்பரும், ஈங்கிருந்து நின்பால் அடைக்கலம் புகுந்து கட்டறுத்த அன்பரும், நின் முன்னர் தலைமகளிராய் நின்னை வணங்கா நின்றுர் எம்மையாண்டருள் புரிவோனே, துயிலெழுக என அவனை அவர் துயிலெழுப்பியது.

(பொ - ரை.) உமை அம்மைதன் மணவாளா! செப்பினது குவிதல் தன்மையைக் கொண்ட தாமரைப் பேரரும்புகள் மலரும் குளிர்ந்த வயல் சூழ்ந்த திருப்பெருந்துறைக்கண் உறைகின்ற சிவபெருமானே! (இனிப் பிறவாவாறு இந்தப் பிறவித் தொடர்பினை வேருக்கி எங்களை அடிமை கொண்டு அருள்புரிந்து வரும் எங்கள் பெருமானே! வீட்டுலகின்கண் வீற்றிருந்து (காலம் இடம் முதலாய வற்ருல் உளவாகும்) நெருக்கமற நின்னை உணர்ந்துவரும்

உணர்ச்சியையுடைய அடியாரும், நின்னை அடைக்கலமாகக் கொண்டு நின்பால் வந்து தமது கட்டுக்களை அவிழ்த்தவரும் ஆகிய பலவகைப்பட்ட அன்பரும், மக்கள் இயல்பினையுடைய கருநிறம் பொருந்திய கண்களையுடைய (காதல்) மகளிராகி நின்னை வணங்குதலைச் செய்யாநின்றார். ஆதலால் நீ துயிலுணர்ந்தெழுவாயாக (என்றாள்) எ-று

(வி - ரை.) பம்பு+அற=பப்பற. பம்பு - நெருக்கம். காலம் இடம் முதலாயவற்றால் உளதாகும் நெருக்கமற என்க. எனவே அவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்ட என்றபடி. அதுதான் வீடென்க.
ஒன்றுபட்ட அடியவர், இன்பந் துய்த்தற்காக இங்ஙனம்
தாமும இருவராக வந்து புணர்ந்தனரென்க. மற்றிதனைத் திருக்கோவையார் 8-ஆந் திருப்பாட்டிற்குப் பேராசிரியர் உரைத்த உரையானும், " பூவிடைப்படினும் " (குறுந். 57.) என்னும் பாட்டிறகு திரு. உ. வே. சுவாமிநாதையர் அவர்கள் உரைத்த விரிவுரையானும் தெளிநது கொள்க. தம் செயலொழிந்து அவன் செயலுள்ாடுபட்டவர அவராதலால், அவனும் அம்மையும் ாண்டுப் புக அம்மையொடு தாமும் மகளிராக உடன் புகுந்தவர் என்க. ாண்டுத் திருக்கோயிற்கண்ணே அவனை அடைக்கலமாகப் புகுந்த வரும் மானுட மகளிராகத் தங்களைக் கருதிக்கொண்டு வணங்குகின்றார். இவ்விரு பொருளும் புலப்பட " மைப்புறுகண்ணியர் மானுடத்தியல்பின் வணங்குகின்றார் " என்றார்.

இனி, நின்னடியாரும் மைப்புறு கண்ணியராகிய அவ்வடியார்பால் தொண்டராக வந்து சேர்ந்து தம் பந்தனை அறுத்தவருமாகிய பலரும் நின்னை வணங்குகின்றார் எனினும் ஒக்கும்.

" உன்னடியார் தாள் பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவராவார் அவர்உகந்து
சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம் " (திரு எம். 9.)

எனவும்,

" எங்கோமான் அன்பர்க்கு முன்னியவள் நமக்கு
முன்சுரக்கும் இன்னருளே என்ன " (திரு எம். 16.)

எனவும்,

" எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க "
(திரு எம். 19.)

எனவும் கூறியமைகொண்டே பந்தனை வந்தறுத்தார் என்பவர் கோயிற் பிணாப் பிள்ளைகள் ஆவர் என்பது தேற்றமாதல் காண்க. ஆண்டு,

" தன்னடியரிற் கூட்டிய அதிசயம் " (அதிசயப். 3 )
என்றருளியதும் இது கருதியே என்க.

செப்பு - சிமிழ். பேரரும்பு மலரும் தாமரை மலரையுடைய தண்ணிய வயல் என்பது கருத்தாகக் கொள்க. பந்தனை - கட்டு. மைப்பு -

கறுப்பு; மை பூசிய எனினுமாம். இப்பிறப்பற - எடுத்த இவ்வுடம்பு அற. இப்பிறவி இறைவனைக் காட்டிற்றிலது ஆதலால் இஃது அறும் என்பது கருத்தாகுமென்க.

அதுபழச் சுவைஎன அமு(து)என அறிதற்(கு)
அரி(து)என எளி(து)என அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு இவன்அவன் எனவே
எங்களை ஆண்டுகொண்(டு) இங்(கு)எழுந் தருளும்
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கைஉள் ளாய்திருப் பெருந்துறை மன்னா
எதுஎமைப் பணிகொளும் ஆறுஅது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 7

இது, வானவர்க்கு அரிய நீ எளியையாகி எம்மை வந்தாண்ட அப்போது யாம் யாது செய்தமையால் எம்மை உவந்தாய்? யாம் இப்போது யாது செய்யாமையால் எம்மை வெறுக்கின்றாய்? யாம் அறியாமையால் நின் வெறுப்பிற்கு இடமாயினேம் ஆதலின் நீ எதனை ஏவா நின்றாயோ அதனையே யாம் இனிச் செய்வேம் எனத் தம் பிழைக்கு அச்சுற்று அவர் அவனைத் துயிலெழுப்பியது.

(பொ - ரை) அதுதான் பழத்தினுடைய சுவையாகுமென வும், அதுதான் பழத்தினுடைய சாருகிய அமுதமாகும் எனவும், இதுதான் அறிந்து கொள்ளுதற்கு அரியதொன்றெனவும், எளிய தொன்றெனவும், தேவரும் அறியத்தகார் ஆகவும், இதுதான் அவனுடைய திருவுருவுமாகும், இவன்தான் அவனுவான் என்று அப்போது காட்டி எங்களை அடிமைகொண்டு இப்போது இவ் விடத்து எழுந்தருளி இருக்கும் வண்டுகளையுடைய சோலை சூழ்ந்த திருவுத்தரகோச மங்கையை ஊராக உடையவனே! திருப்பெருந் துறை மன்னவனே! எம்பெருமானே! (அறியாமையால் தவறு செய்திருத்தல் கூடுமாயினும், இனிமேல்) எம்மைப் பணி கொள்ளும் நெறி எதுவோ அதனையே (நின் சொற்படி தவறாது) கேட்போம். (ஆதலால் குறை பொறுத்துப்) பள்ளியினின்றும் எழுவாயாக (என்றார்) எ-று

(வி - ரை.) 'பழச்சுவை அதுவென, பழவமுது அதுவென' என இயைக்க. பழத்தின் சுவை அமுது எனபவற்றையே பகுத்துணர்தலை அரி தென்றுதல் எளிதென்றுதல் அமரரும் அறியார். எனவே பிறரைப் பற்றிப் பேசவேண்டியதில்லை என்றபடி. காட்சிக்கெளிய சுவையமுது என்பவற்றை அறியார், காட்சிக்கு அரிய நின்னை எங்ஙனம் அறிய வல்லராவர்

என்றபடி. பழம் - களவும் கற்பும்; அமுது, தலைமகன் எனக் கோடலு மொன்று. திருக்கோவையார் 8-ஆந் திருப்பாடலும் நோக்குக.

திருவுருவம் முதற்கண்ணே காட்டப்பட்டதாதலின் " இது " எனவும், அதனகத்து வாழ்வோன் யாவனோ எனச் சேய்மைப்படுதலால் " அவன் " எனவும், இத்திருவுருவில் வாழும் இவனே முன்னர் நின்றால் அறியப் படாத அவன் ஆவன் என்பது தோன்ற " இவன் அவன் " எனவும் கூறியவாறென்க.

'எமைப் பணிகொள்ளும் ஆறு எது, அது கேட்போமாகிய எங்களை ஆண்டுகொண்டு இங்கெழுந்தருளும் திருவுத்தரகோசமங்கையுள்ளாய்' என்று இயைத்துப் பொருளுரைத்தலும் நன்றின்பால தென்க.

அறிவ னேயமு தேயடி நாயினேன்
அறிவ னாகக்கொண் டோவெனை ஆண்டது
அறிவி லாமையன் றேகண்ட தாண்டநாள்
அறிவ னோஅல்ல னோஅருள் ஈசனே. (திருச்ச. 50.)

என்னும் திருப்பாடல் ஈண்டு நினைவில் வருகின்றது.

**முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்**
**மூவரும் அறிகிலர் யாவர்மற்(று) அறிவர்**
**பந்(து)அணை விரலியும் நீயும்நின் அடியார்**
**பழங்குடில் தோறும்எழுந் தருளிய பரனே**
**செந்தழல் புரைதிரு மேனியும் காட்டித்**
**திருப்பெருந் துறைஉறை கோயிலும் காட்டி**
**அந்தணன் ஆவதும் காட்டிவந்(து) ஆண்டாய்**
**ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே. 8**

இது, பரனே! நீயாகவே எம்மை வந்தாண்டாய். அவ் வண்ணமே நீயாகத் துயிலுணர்ந்தாலல்லது யாமா நின்னை எழுப்ப வல்லேம் என அவனை அவர் துயிலுணர்த்தியது.

(பொ - ரை) பந்து வந்தணையும் விரலினையுடைய (காதற் பண்பு மேம்பட்ட) அன்னையும் நீயும் ஒன்றுகூடி, நின்னுடைய மெய்யன்பர் தம் குடில்தோறும் எழுந்தருளிய மேலானவனே! நீ (எம்பால்) வந்து செவ்விதாகிய அனலை ஒத்து அழகிய மேனி இது தான் எனக் காட்டி, யான் எழுந்தருளியிருக்கும் திருப்பெருந் துறைக்கண்ணுள்ள கோயில் இதுதான் எனக் காட்டி, அங்கு யான் அந்தணனாவேன் என்பதனையும் விளங்கிக்கொள்ளக் காட்சி அளித்து எம்மை அடிமை கொண்டவனே! அரிதாகிய அமுதமே! முற்பட்ட உலகந்தோன்றும் தோற்றத்திற்கும், இடைப்பட்ட வளர்ச் சிக்கும், கடைப்பட்ட மற்றதன் அழிவிற்கும் காரணமாய் நின்ற

நின்னை, நின்பால் தோன்றிய அயன் அரி அரன் என்னும் மூவரும் (தந்தம் அகத்திலிருந்து நீயே அவற்றை நடாத்துகின்றாய் என்பதை) அறிகிலரேல், மற்றெவர் தாம் நின்செயலை அறியவல்லவ ராவர்? (அன்பும் அறிவுமற்ற யாம் நீ துயில்கின்றாய் என வருந்தும் எம் அறியாமைக்கு இரங்கியேனும்) துயிலுணர்ந்து எழுந்தருள் வாயாக (என்றார்) எ - று

(வி - ரை.) அயன் முதலாயினாரை உளராக்கி அவர்க்குள்ளே இறைவன் நின்று படைத்தல் முதலாய தொழில்களை நிகழச் செய்யவும் அம்மூவரும் அதனைக் காணமாட்டாராய் மயங்கித் தாமே அவற்றை ஆற்று பவராக நினைத்துக்கொள்வர். அவரே அங்ஙனம் மயங்கினராகவும், நீ எம்முள் நின்று எம்மை எழுப்பி, நின்னை எழுப்புமாறு ஏவுதலை யாமே எழுப்புமாறு நினைப்பது இயல்பாமன்றே? இது கருதியே நின்னைத் துயி லெழுப்பினோம், என்றாங்குத் தாம் அவனைத் துயிலெழுப்புவதற்கு ஒரு காரணம் கண்டு கூறி, அவனைத் துயிலெடை செய்தனராகக் கண்டு கொள்க.

ஆனாய் - ஆனாயை. அடிக்கப்பட்ட பந்து குவிக்கப்பட்ட விரலகத்து வந்தணையும் என்க. விரலாலே பந்தடித்தலும், எதிரடித்தலும், ஏந்தி எறிதலும், கொள்ளுதலும் அன்னபிறவும் உளவாதலைப் பெருங் கதை, வத்தவகாண்டம், பந்தடி கண்ட பகுதியின் 70-ஆம், 104-ஆம், 105-ஆம், 197-ஆம், 198-ஆம் அடிகளால் உணர்க.

குடில் - ஆச்சிரமம் ; உடம்புமாம்.

" வந்து மேனி காட்டி " என்றலால், அடிகள்பால் தானே வந்தருளி னன் என்பதும், " திருப்பெருந்துறையுறை கோயிலுங் காட்டி " என்ற லால், மேனிகாட்டியது ஆங்கன்று என்பதும், "அந்தணனாவதும் காட்டி" என்றலால், அக்கோயிற்கண் உறைகின்ற அந்தணனே யானாவேன் எனப்படுதலால், வேற்றொரு தலத்தே திருப்பெருந்துறைச் செம்மேனி அந்தணக் கோலத்தைக் காட்டினன் என்பதும் பெற்றாம். முற் பாட்டின் விளக்கவுரையொடு ஒப்பிட்டுத் தெளிந்துகொள்க.

அடிகள் இறைவன் தில்லைக்குச் சென்றான் என
அங்ஙனம் அன்று இங்கே யுள்ளேம் எனக் கோலங் காட்டினான் என்க
திருப்பெருந்துறைக் காட்சியால் பித்துற்ற அடிகளுக்கு
அந்தணக் கோலங் காட்டி ஆண்டானென உணர்க.

**விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா**
**விழுப்பொருளேஉன தொழுப்(பு)அடி யோங்கள்**
**மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே**
**வண்திருப் பெருந்துறை யாய்வழி அடியோம்**

கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடல்அமு தேகரும் பேவிரும்(பு) அடியார்
எண்ணகத் தாய்உல குக்(கு)உயிர் ஆனாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 9

இஃது, எம்மை ஆண்டுகொண்ட காட்சியைப் பின்னும் காணற்கு எங்கள் கண்கள் அவாவினவாய் எம்மை வருத்துதலால், நீ துயிலெழுவாயாக என அவனை அவர் துயிலெழுப்பியது.

(பொ - ரை) வானுலகிலுள்ள வானவர் தாம் எனினும் அவ ராலும் அடையவும் ஒண்ணாத சிறந்த பொருளாவோனே, அவ் வானவர்க்குப் பேரின்ப வாழ்வை நல்காது அவருலகில் நின்றும் மண்ணுலகில் வந்து யாம் நின்னுடையனவாகிய குற்றேவல்களைச் செய்துவரும் அடியோமாக எம்மை நல்வாழ்வில் வாழச் செய்த வனே! (அடியார்க்கு வீடுபேறாகிய) வண்மையை அளிக்கும் திருப் பெருந்துறையானே! (நின்னன்பர்) வழிப்பட்ட அடியோமாகிய எங்கள் கண்ணுக்குள்ளே நின்று காட்சி இனிமையை நுகரச் செய்து களிப்பினைத் தருகின்ற தேன்போன்றவனே! அன்பு நெறி யாகிய ஊடலாற் கயக்கிப் பிழிய இனிமை தரவல்ல கரும்பு போன் றவனே! விரும்பும் அடியவருடைய நினைவின்படியே நடப்பவனே! உலகுக்கு உயிராக நிற்கும் வேந்தனே! எம்பெருமானே! துயி லுணர்ந் தெழுவாயாக (என்றார்) எ - று.

(வி - ரை.) விழுமம் - சிறப்பு விழுமம் + பொருள் = விழுப்பொருள். எனவே இறைவன் அருளைப் பெறும் சிறப்பு வானவர்பாலில்லை என்க. தொழும்பு - குற்றேவல். தொழும்பு + அடியோம் = தொழுப்படியோம். அடி யோமாக என்க. உன, ஆறன்பன்மையுருபு; குறிப்புவினையாலணையும் பெயருமாம். வழியடியோம் - அடியவர்க்கடியோம். வண்மை, வளனுமாம். அவன் காதற்றேனுகிக் கண்டவரைக் களிக்கச் செய்யா நின்றான் என்க. அன்பின் அகனைந்திணையாகிய கடலென்க. கரும்பு, மருதக் கருப்பொருளா தலின், ஊடலாற் கயக்க இனிமை தரும் கரும்பு போன்றவனே என்றாள். இனி, கண்ணகத்தேநின்று (காட்சியளித்துக்) "களிதரு தேன்" என்றமை யால், காட்சி முதலாகிய புணர்ச்சி இன்பமும், "கடலமுதே" என்றமை யால், பிரிந்து இரங்க வைத்த துன்பமும், இரங்கிய பின்னர்க் கூட வருங் காலத்து ஊடல் நிகழ்தலால் காமஞ் சிறத்தலும் ஆதியவற்றையெல்லாம் அங்ஙனம் தன்னை விரும்பும் அன்பரகத்தே நிலைபெற்று விளைத்து வருகின்றான். அவன் களவும் கற்புமாகிய ஒழுக்கமுடையார்க்கு உயிராக உள்ளவன் (காதலன்) என இயைப்பினும் அமையும்.

களவும் கற்புமாகிய இவற்றை விண்ணவர், அவாவி நினைந்தும் சொல்லியும் செயலாற்றி நணுகற்கு இடம்பெறார் என்பது தோன்ற

"விண்.........விழுப்பொருளே" என்றும், அவை மன்னவர்க்கே உரியன வாதலால் அவன் அங்கு நில்லாது இங்கு வந்து எங்களை ஆண்டுகொண்டான் என்றும் கூறியவாறு.

புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
    போக்குகின் றோம்அவ மேஇந்தப் பூமி
சிவன்உய்யக் கொள்கின்ற ஆறுஎன்று நோக்கித்
    திருப்பெருந் துறைஉறை வாய்திரு மாலாம்
அவன்விருப்பு எய்தவும் அலரவன் ஆசைப்
    படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்(து)எமை ஆட்கொள்ள வல்லாய்
    ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே 10

இது, வைகுந்தம் சத்தியலோகம் என்னும் பதங்களிலே தம் அன்பர்களுக்குப் பேரின்பம் அளித்துவரும் அவற்றின் தலைவர்களாகிய திருமாலும் திசைமுகனும், நிலவுலகில் மகளிராகத் தோன்றி இன்பம் துய்த்திலேமாய், நாம் வாழுநாளை அவமே போக்குகின்றோம், எம்மின்பத்தினும் அங்கே சிவன் உய்யக்கொள்ளும் அன்பின் ஐந்திணை இன்பமே நனிசிறந்ததென்று அவ்விருவரும் கருதி அதனைப் பெறும்வழி அறியாராய் வருந்துமாறு எம்மை இங்கு வந்து அன்புநெறியின் வைத்தாண்டு இன்பு தந்தவனே, பள்ளி எழுந்தருள் என அவ்வினை அவர் துயிலெழுப்பியது.

(பொ - ரை.) இந்நிலவுலகத்திலே சிவன்தான் தலைவனும், அன்பர் தலைவியருமாக அன்பின் ஐந்திணை நெறியால் ஆட்கொண்டு இன்பம் அளிக்கும் திறனை ஆராய்ந்து, நாமும் நிலவுலகிலே (தலைமகளிராகச்) சென்று பிறவாமையால் இன்பந் துய்க்கப் பெறேமாய் வீணே வாழ்நாளைப் போக்குகின்றோம் என்று திருமால் அன்பெய்தவும், தாமரை மலர்மேலுறையும் திசைமுகன் ஆசை கொள்ளவும், நின்னுடைய விரிந்த அருள் வடிவாகிய அன்னையும் நீயும் (மணமக்களாக) இந்நிலவுலகத்திலே புகுந்து எங்களை (காதலிகளாக்கி) ஆண்டுகொள்ள வல்லவனே! அரிதாகிய அன்பின் ஐந்திணைக் கடலகத்துத் தோன்றும் அமுதமே! துயிலுணர்வாயாக (என்றூர்) எ - று

(வி - ரை.) திருமால் இறைவன் சக்திகளுள் ஒருவனுதலால் அன்பு செய்யும் திறம் பெற்றான்; அலரவனுக்கு அஃதின்மையின் அவன் அவாவுதலோடு அமைந்தானென்க.

முனிவர்கள் ஆய்ச்சியராகவும், திருமால் கண்ணனாகவும் இங்கு வந்து

தோன்றி, ஆய்ச்சியர் கற்புக்கெடப் புணர்ந்தளித்த இன்பம் பெருந்திணைப் பாலதென்க.

தொல்காப்பியனாரும் இறையனாரும் கூறிய தமிழ்மரபே அடிகளுக்குரிய சமய மரபாதல் முன்னும் பின்னும் பலவாறு விளக்கப்பட்டது.

இத்தமிழ் நெறிபற்றிய திருவாசகம் சைவ பரம்பரையாற் போற்றப் பட்டிலதென்பது கம்பர் கருத்தாகுமென்பாருமுளர். அதனைக் கம்பர் கூறிய,

> " துறவா தவர்க்கும் துறந்தவர்க் குஞ்சொல்ல வேசுரக்கும்
> அறஆ அவைஇங்கோர் ஆயிரம் நிற்கஅந் தோசிலபேர்
> மறவா தியர்சொன்ன வாசக மாம்மலட்(டு) ஆவைப்பற்றிக்
> கறவாக் கிடப்பர்அங்(கு) என்பெற வோதங்கள் கைவலிப்பே."
>
> (சடகோ. 37.)

என்னும் செய்யுளால் அறியலாம். "மறவாதியர்" என்பது வைணவரோடு நேரே மாறுபட்ட சைவரையும், "வாசக"மென்பது அவருள் ஒருவராகிய மணிவாசகனரால் இயற்றப்பட்ட திருவாசகத்தையும் குறிக்கும் எனத் தெளிக. வாசகமெனப் பெயரிய நூலினை உரைத்தார், "மலட்டா" என்றமையினாலே அதற்குக் கன்றில்லை என்பது தேற்றமாதலாற் பெறப்படும் கன்றென்றது அதனை உரிமையாகக் கொண்டு ஓதிவரும் மாணுக்கரை. "சில பேர் கறக்கின்றனர்" என்றலால், அதனை மரபாக உபதேசமுகத்தாற் கேட்டுப் பெருத சிலர் தாமே ஓதிவருகின்றனர் என்பது பெற்றும். எனவே கன்றீனுப் பசுவைக் கறப்பதுபோலவே உபதேசிக்கப் பெருத சிலர் ஆசையால் ஓதிவருகின்றனர் எனினும் வருந்துதலேயன்றி அவர் நற்பயன் பெருர் என்றபடி.

இனி, "துறவாதவர்க்கும் துறந்தவர்க்கும் சொல்லவே சுரக்கும்" என்றமையால், அவ்விருதிறத்தினர்க்கும் திருவாய்மொழி பயனைத் தரும்; எனவே, வாசகம் துறந்தார்க்கே பயன்படுமாறு செய்யப்பெற்றது எனப் பின்னும் ஒரு குற்றம் அதன்மேலேற்றப்பட்டவாறு காண்க. துறவிற்கெனப் பாடிய நூல் சைவநெறிக்கண்ணே இத்திருவாசகமேயாம் என்பது வெள்ளிடை.

கம்பர் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்ப. இவர் காலத்திலே பிரசித்தி பெற்றிருந்த வாசகம் திருவாசகமே யென்பதும், அதனைப் பாடினர் மணிவாசகரே என்பதும் தெளியப்பட்டது. அங்ஙனமாயினும் அந்தப் பிரசித்தி மூவர் பெற்றவாறு போலாது ஒரு சிறிதே யாகுமென்பது கல்வெட்டுகளால் நன்கு புலனாகும். அது கருதியே கம்பரும் "ஒரு சில பேர்" எனக் குறிப்பிட்டார். திருவாசகச் சிறப்பு மேம்படின் திருவாய்மொழியின் சிறப்புக் குன்றும் என்றஞ்சியே கம்பர், வாசகம் மறவாதியராற் கூறப்பட்டதென்றும், ஒரு சிலரே உபதேசம் பெருது ஓதி வருகின்றனரன்றி, உபதேசமுகத்தாற் பெற்றோதுவார் யாருமின்மையின் அது மலட்டாவோடு ஒக்குமென்றும் இத்திருவாய்மொழியோ ஆயிரமாக

இருந்துவருதலின் ஆயிரம் பாற பசுக்களுக் கொப்பாகுமென்றும், அவ்வாசகம் இல்லறத்தார்க்குப் பயன்தராது இஃது இல்லறத்தார் துறவறத்தார் என்னும் இருபாலார்க்கும் பயன்படுவதென்றும், அஃது ஓதப் பயன்தராது இஃது ஓதப் பயன்தருமென்றும், பலவாறுக அவர்க்கு எழுந்த விளுக்களையும் விடைகளையும உற்றுநோக்கில் திருவாசகத்தின் விழுப்பமும், அதனல் திருவாய்மொழிக்கு வரும் இழுக்கமும் அறிஞர்களுக்குப் புலனுகாமற் போகா.

[illegible], பாடுதலும், இலக்கியம் இயற்றுதலும், அன்பு நெறிமுற்றித் துறைபோகிய சான்றோர்க்குக் கடப்பாடாம் என்பது, அடிகள் ஈற்றில் திருக்கோவை பாடியருளியமையால் பெறப்படும். பிறவு மன்ன.

காலத்தால் முந்தியவரும், சமயத்திலே தமிழ் மரபினை வடிவெடுத்துக் கொடுத்தருளிய தனிச் சிறப்புப் பூண்டவரும் ஆகிய அடிகள் திருமரபு நீடு வளர்ந்து வருக!

திருச்சிற்றம்பலம்

# கோயில் மூத்த திருப்பதிகம்

அஃதாவது தில்லைக் கோயிலைச் சேர்ந்து வீடு பெற்று உய்ய அருள் செய்யுமாறு அடிகள் வருந்திக் கூறிய பத்துத் திருப்பாக்களை உடைய பகுதி.

"கோயில் மூத்த திருப்பதிகம்" என்பதனை 'மூத்த கோயில் திருப்பதிகம்' என மாற்றிப் பொருள் கொள்க. அடிகள் தம் வாழ்வினுட் பிரசித்திபெற்ற திருப்பெருந்துறையையுங் "கோயில்" எனவே மதிப்புறக் கருதிக்கொண்டாராகலின், தில்லையாகிய கோயிலை அதனின் வேறுபடுத்தற்கு மூத்த கோயில் என அதனது பழமையையே அதற்குரிய அடையாகப் புணர்த்தோதினர் என்க. "கோயில் மூத்த திருப்பதிகம்" பாடியருளிய பின்னரே "கோயில் திருப்பதிகம்" பாடியருளப்பட்டமையாலும் இது "கோயின் மூத்த திருப்பதிகம்" எனப்பட்டது. கோயிலைச் சார்ந்த பொருளைப் பெற்றமையால் இவை "திரு" என்னும் அடை புணர்த்தப்பட்டது. கோயிற் சிறப்பு இவற்றால் எய்தப் பெறவேண்டியதன்று என்னுந் திருக்குறிப்பால் "திரு" என்பது கோயிற்கு அடையாகப் புணர்த்தப்பட்டிலது. மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை என்பதும் ஈண்டுச் சிந்தித்தற்பாலது. திருச்சிற்றம்பலக் கோவையார் என்றருளியது வேறும் ஒரு கருத்துப்பற்றியதென்க

இது திருச்சதகப் பொருளமைவொடு பெரும்பாலும் ஒத்ததாகி, இறைவன் திருவருளைப் பெற்றுக்கொள்ள இரங்கிக் குறையிரக்குந் தன்மைத்தாகக் கூறியருளப்பட்டது.

திரு எம்பாவை முதலாகத் திருப்பள்ளி எழுச்சி இறுதியாக உள்ளனவெல்லாம் அன்பின் ஐந்திணை நெறிக்கண் தம்மைப் பாவித்துக்கொள்ளுதலைப் புலப்படுத்து முகத்தாற் பாடியருளப் பட்டன. அத்தகைய பாவனைகளால் மனம் ஆறுதல் பெறுமையால் இத்திருப்பதிகம் முதலாகத் தமது வரலாற்று நிகழ்ச்சியைக் கிளந்து உருகிக் கூறி அவன் அருளைப்பெறப் பாடியருள்கின்றார். அங்ஙனம் பாடியருள எடுத்துக்கொண்ட இவற்றுள்ளும் திருப்பாண்டிப் பதிகம், சென்னிப்பத்து என்பவற்றுள்ளும் பிறண்டும் அன்பின் ஐந்திணை நெறி விரவிவருதல் காண்க.

வரலாற்று வகையாலும் புனைந்துரை வகையாலும் அவ்விரண்டின் கலப்பாலும் இறைவற்குத் தம் குறை எ
திருவருள் வயத்தால் ஆறுதலைப் பெற்றுக்கொள்வதே அடிகள் திருக்கருத்தாகும். மற்றிதனை, "நீதியிலேன், போற்றி என்

அமுதே என நினைந்து ஏத்திப் புகழ்ந்து அழைத்து அலறி என் உள்ளே ஆற்றுவன் ஆக'' (எண்ணப். 6.) என்னும் பகுதியே வலியுறுத்தா நிற்கும்.

இங்ஙனமெல்லாம் அழைத்தருளித் தம்முள்ளே ஆறுதலைப் பெற்றருளிய அடிகள், ஐந்திணை அன்பு நெறிக்கு இலக்கியமாகிய திருச்சிற்றம்பலக் கோவையாரைப் பாடி முடித்துத் திருச்சிற்றம் பலத்துட்புக்கு இறைவனொடு கலந்தருளினார் எனத் தெளிக.

தமிழ்மறை இலக்கணமாவன தொல்காப்பியமும், இறையனார் அகப்பொருளுமாகும். தமிழ்மறை இலக்கியமாவது திருவாசகப் பாயிரத்தொடு கூடிய திருச்சிற்றம்பலக் கோவையாராகும் என்க.

இறைவன் தில்லைக்கு வருகவெனக் கட்டளையிட்ட பின்னர் அடிகள் ஆங்குச் சேரற்காக வழிச்செலவு மேற்கொண்டார் என்றலே நேரிது. ஆண்டாண்டுத் திருப்பெருந்துறை முதலாய தலங்களின் திருப்பெயர்களையும் அருளைப் பெறாது வருந்தியருளிய பகுதிகளையும் ஆதாரமாகக்கொண்டு பகுதிகளின் அடைவுகளை மாற்றப் புகுவது அடிகள் திருக்கருத்தொடு மாறுபடுமென்க.

இப்பதிகத்தின் இயற்கைப் பொருளடைவு வருமாறு :— நம்பீ, நின்னைக் *காதலனாக நேர் வழியானும் சார்பு வழியானும் பல்காற் பாவித்தும் நின்னைப் பெற்றுக்கொள்ளாமையின் உயிர் சுருங்கிப் போனதையேனுங் கண்டிரங்காய் (10) எனவும், அன்னையகத்துள் நீயும் நின்னகத்துடன் அன்னையும் இருவீரும் என்னகத்துள்ளும் இருப்பது உண்மையாகில் என்னை அடியார் நடுவில் இருக்கச்செய் (1) எனவும், நடுவிருத்தல் எனக்குத் தகாதெனக் காணில் நீயும் அடியாரும் விளையாடும் மருங்கிலேனும் வர அருளாய் (7) எனவும், என் இரப்புரை கொள்ளாயாகில் என்னை நீ ஆட்கொண்டபோது கண்டிருந்த உன்னடியார் நம்மவனாகிய இவன் அயலான்போல் இருப்பது எற்றுக்கென வினவுவாரோ (2) எனவும், அடியார்க்கருள் செய்தும் எனக்கு வஞ்சனை செய்ததை அறியின் உலகோர் ஏசாரோ (5) எனவும், அத்தகைய உலகினர் நீ செய்தது தக்கதன்றென உரைமுடிபு செய்யாரோ (3) எனவும், அடியார் உவத்தலைக் கண்ட யான் உயிருடன் இருப்பேனோ (9) எனவும், அச்சாவும் அழுதேங்குதலால் நிகழும் (4) எனவும், அழுது செத்தால் உலகம் சிரிக்கும் (8) எனவும், அவ்வாறு ஏசாதும் சமய வாதிகள் வஞ்சினம் முடிக்க இடனின்றியும் நின் நெறிகாப்பேன் (6) எனவும் செல்கின்றதென்க.

அடிகள் மாற்றியமைத்துக்கொண்ட செயற்கைப்

பொருளடைவு வருமாறு: நீ அங்ஙனம் இருப்பது உண்மையாகில் என்னை அடியார் நடுவிருக்கச் செய். செய்யாது என்னைப் புறக்கணிப்பையேல் இவன் ஆரென்று வினவாரோ? அகத்தின்கண் நின் மதிப்புக் குறையும். யானும் உல( முறையிடின் நின் சமயம் தக்கதன்றென இழிக்கப்படுவதற்கு அஞ்சிச் சாவேன். சாமாறு அழுவேன் யான் அழுது சாவா விடினும் நின் வஞ்சம் உலகோர் அறிவர். ஆதலின் அவர் என்னுவர்? எள்ளாதும் ஏனைய சமயத்தவர் வஞ்சினம் முடித்துக் கொள்ளாதும் நின்னருளையே பேணி உயிருடன் இருந்து வருகின்றேனுக்கு நின் ஓலக்கஞ் சேவிக்கவேனும் இரங்காய். இன்னும் என்னில் அருளிருப்பின் அடியாரும் நீயும் விளையாடும் மருங்கே வரவேனும் வா என்று அருள். இனி, கூட்டங்கூட்டா யேல் யான் செத்தால் உலகோர் நகையாரோ? உவகை மீதூரும் அடியார் முன்னர் என்னுலிருக்க முடியுமா? காதற் பாவனையாலும் பயன் பெற்றிலேன், உயிர் சுருங்குகின்றேன். இரங்காய் எனச் செல்லா நிற்கும்.

[குறிப்பு :—கடையின்கண் அடுக்கிய பொருளடுக்கினை அவற்றை வாங்கினோர் தாம் விழைந்தவாறே தம்மனைக்கண் அடுக்குமாறே அடிகளும், தாம் கண்ட இயற்கைப் பொருளடுக் கினைத் தாம் விரும்பியவாறே மாற்றி அமைத்துள்ளார். அவ்வாறுதலை முன்னும் பின்னுங் கண்டுகொள்க.]

இயற்கைப் பொருள், நூற்பொருள் என்பவற்றின் ஒழுங் கினைப் பின்வரும் அட்டவணையால் அறிக:

இயற்கைப் பொருள் :—1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10.

நூல் அடைவு —10, 1, 7, 2, 5, 3, 9, 4, 8, 6.

இஃது திருத்தில்லையில் அருளியது என்ப.

## அநாதியாகிய சற்காரியம்

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

உடையாள் உன்தன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானல் அடியேன்உன்

அடியார் நடுவுள் இருக்கும்அரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே. 1

இது, பல்லாற்ருனும் முயன்றும் இறைவனருள் கிட்டப்பெருத அடிகள், பிறிதோராற்ருன் அதனைப் பெற முயன்று கூறியது.

(பொ - ரை) பொன்னம்பலத்து எங்கள் முடிவற்ற முதற் பொருளே, எம்மைப் பொருளாகவுடைய இறைவி உன் உள்ளீடாக இருந்து வருவாள், அவளுக்கு உள்ளீடாக நீ இருந்து வருவாய், அடியவனுகிய எனக்கு நீயிர் இருவீரும் உள்ளீடாக இருந்து வருவது உண்மையாளுல், என்னுடைய எண்ணம் நிறைவேறுமாறு எனக்கு உறுதுணையாக நின்று உதவி, அடியேன் உன்னடியவர்க்கு உள்ளீடாக இருந்து வருதற்குக் காரணமாகிய அருளைப் புரிவாயாக எ - று

(வி - ரை.) உடையாளும் உடையானும் ஒருவர்க்கொருவர் இன்றி யமையாதவரென்க. அவ்விருவரும் அடியேனுக்கு இன்றியமையாதவராவ ரென்க.

அடியேன் நடுவுள் தாமிருவரும் இருத்தலை அவன் மறுத்தற்கியலா தென்க.

அடிகள் அவ்விருவரையும் தம்முள்ளீடாகப் போற்றி வருகின்ருராத லின், மற்றவ்விருவரும் அடிகள்பால் உள்ளீடாக உறைந்து வருவாராயி னர். இஃதுண்மையாகலின் "அடியேன் நடுவுள் இருவீருமிருப்பதாளுல்" என்ருரென்க இஃது அகத்திற் பிரிவின்றி வாழ்வ தைக் குறித்தபடியாகும். சிவ தத்துவத்திலிருந்து சத்தி தத்துவமும் சத்தி தத்துவத்திலிருந்து சதா சிவ தத்துவமும் தோன்றும் என்பவாதலின் ' உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி" எனக் கூறினர். தோற்ற ஒடுக்கங்களில் தாமும் இறைவனில் நின்று தோன்றியும் இறைவனுடன் ஒன்றிக் கலந்தும் வருதலின் "அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது" எனவுங் கூறினர். ஆதலின் தன்னைத் தாங்கும் அவன் தன் குறை தீர்த்தல் வேண்டுமென முறையிட்டார் என்க.

'அடியார் நடுவுள் இருத்தல்' என்றது அடியார்க்குள்ளீடாகத் தாம் இருத்தலை என்க. அடியார் நடுவில் இருத்தல் என்ற வழியும் அப்பொருட்டேயாம். அதாவது முன்னர்த் தாம் சிவபுரத்தும், அடியார் களை அவன் ஒன்றக் கலக்குமுன் இந்நிலவுலகத்தும் பெற்றிருந்த தலைமைப் பேறு என்க.

"இருக்கும்" என்னும் பெயரெச்சம் அருள் என்னும் காரணப்பெயர் கொண்டது.

அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது உண்மையானால், யான் இங்ஙனம் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரிவாய்; அஃது உண்மையன்றேல் அவ்வருள் வேண்டாவென்க. அங்ஙனமிருத்தல் உண்மையாயின் அவ்வருளை மறுக்கொணுமை உணர்க. அங்ஙனம் மறுக்கொணுவாறு இங்ஙனம் முறைகண்டு செய்து கூறியவாறுயிற்று.

முதல் - முதற் காரணப்பொருள். முதற்காரணம் இடையில் வற்றுமாயின் காரியமும் தோன்றுதே கழியும். அங்ஙனம் இடையிற் காரியந் தோன்றுவாறு இடையில் வற்றுங் காரணப் பொருளல்லன் என்பதுபட "முடியா முதல்" என்றார்.

என் கருத்தாவது அவனை மீண்டும் புறத்தும் புணர்தலே. அது கைகூடுதற்குக் காரணம் "அடியார் நடுவுளிருக்கும் அருள்" என்க.

முன்னிற்றல் - துணையாக நிற்றல்.

முன்னர்க் கற்பனைவாயிலாகத் தலைமகளாகிப் பல்லாற்றுனும் புனைந்து கூறி அவனைப் புணர்தற்கு வேட்கைமிக்கிருந்தவர்க்கு அது கைகூடாமையானே ஆற்றுமைமிக்கு அக்கற்பனை கழிந்து இங்ஙனங் கூறுவாராயினர். இது மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும். இங்ஙனம் கூறுதலும் ஐந்திணை நெறிக்குச் சார்பேயாமென்க.

முன்நின் றுண்டாய் எனைமுன்னம்
யானும் அதுவே முயல்வுற்றுப்
பின்நின் றேவல் செய்கின்றேன்
பிற்பட் டொழிந்தேன் பெம்மானே
என்நின் றருளி வரநின்று
போந்திடு என்று விடில்அடியார்
உன்நின் றிவனர் என்னுரோ
பொன்னம் பலக்கூத் துகந்தானே. 2

இஃது, அவன் அருளாவிடில் அவற்கு வரக்கடவதாகிய பழியை எடுத்துக் கூறி அவனை அடைய முயன்றது.

(பொ - ரை.) பொன்னம்பலத்திலே கூத்தாடுதலை விரும்பி மேற்கொண்டவனே, பெரியோனே, என்பால் நின்று அருள் செய்பவனே, என்னை முன்னின்று வழிகாட்டி ஆண்டாய். அங்ஙனம் ஆளப்பட்ட யானும் நீ காட்டிய வழியே பின்பற்றி நின்று குற்றேவல் புரிந்துவருகின்றேன். வந்தும் பிற்பட் டொழிந்து போனேன். (அத்தகைய யான்) வந்து சேருமாறு தங்கி நின்று இங்குப் புகுதுவாயாக வென்று கட்டளை செய்யாவிடில் உன் அடியார் உன்பால் தங்கி நின்று இவன் யாவன் என்று வினவாரோ எ - று.

(வி - ரை.) நீ முன்னின்று எதனைச் செய்யவேண்டுமெனக் கற்பித்தாயோ அதனையே கடைப்பிடித்து நின்று செய்து வருகின்றேன். அத்தகையேன் எதனைப் பெறவேண்டுமோ அதனைப் பெருது பிற்பட்டொழிந்தேன் என்றவாறு. மற்றைய அடியார்கள் முற்பட்டுப் புகுந்தார்களென்பதுங் கொள்க. இஃது அவன் பெருமைக்கு இழுக்கினைத் தருமென்பது குறித்துப் "பெம்மானே" என்றார்

"என்னின்று அருளி" என்பதற்கு என்கண் அருளோங்க நின்று எனப் பொருள் கொள்ளலாமேனும் அது பின்வரும் "வரநின்று" என்பதனோடு இயைந்து பொருள் சிறவாமையின் கொண்டிலமென்க.

'உன் நின்று' என்பது தொக்கு நின்றது. 'உன் கண் நின்று' என விரிக்க. 'உந்நின்றிவனூர்' எனப் பாடமாயின் 'உங்கே நின்று, இவனூர்' எனக் கூறி இயைக்க. முன்னர் எம்மோடு இயைந்திருந்து இப்பொழுது எம்முடன் வந்து, நின்னை அடையாது பிற்பட்டொழிந்த இவன் யாவனென அடியவர்கள் நின்னை வினவுவார்கள் என்பது அடிகள் கருத்து. அவ்வாறு அவர்கள் வினவுதலால் வரும் இழுக்குத் தம்மைச் சாராது, இறைவனையே சாரும் என்பது திருக்குறிப்பு, இறைவன் தம்மிடத்தில் நின்று அருள்புரிந்து தம்மை நடப்பித்து வருபவனுதலால். பிற்பட்டொழிந்தேன் என்று குறையைத் தம்மேலதாகக் கூறினரேனும் இறைவன் பிற்பட்டொழிய வைத்தான் என்பதும், அஃது அவனது பெருமைக்கு ஒவ்வாதென்பதும், அதுவுமன்றி அடியவர் அறிந்து வினவுங்காற் பெரும் பழியும் அவனைச் சாருமென்பதும் குறிப்பித்தாராயிற்று.

**உகந்தானே அன்புடை அடிமைக்(கு)**
**உருகா உள்ளத்(து) உணர்விலியேன்**
**சகந்தான் அறிய முறையிட்டால்**
**தக்கவா(று) அன்று என்னுரோ**
**மகந்தான் செய்து வழிவந்தார்**
**வாழ வாழ்ந்தாய் அடியேற்(கு) உன்**
**முகந்தான் தாரா விடில் முடிவேன்**
**பொன்னம் பலத்(து)எம் முழுமுதலே.** **3**

இதனால், இறைவனே! நீ முகம் தராவிடில் முறையிட்டு நின் அருளை இரந்து பெறேனாய் இறந்துபடுவேன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) பொன்னம்பலத்தின்கண் நடமாடும் எம்முடைய முழுமுதலே, அன்புள்ள அடிமையையே பெறவேண்டுமென அதற்கு விரும்பியவனே, உருகாத உள்ளத்தையும் உணர்வின்மையையும் உடையேன், இந்நிலவுலகோர் அறியும்படி முறைப்பாடு செய்தால், நின் சமயம் தக்க நெறியுடையதன்று என்று

சொல்லார்களா ? தம் உடலைப் பலியிட்டு வந்தார்களும் வாழும்படி வாழ்ந்தாய், அடியேனுக்கு உன் முகங்கொடாவிடில் இறந் தொழிவேன் எ - று.

(வி - ரை.) 'என்னையும் நின் அடிமைகளுள் ஒருவனாகப் பெற்றமை யால் அன்புள்ள அடிமையைப் பெறவேண்டும் என விரும்பி ஏமாந்தவனே' என்றும், 'உருகாத உள்ளத்து உணர்விலி எனப் பின்னர்த் தள்ளப்பட்டே னாகிய யான்' என்றும் விரித்து உரைக்க. அன்பின் ஐந்திணைநெறி கைவரப் பெருதோர் தம்முடலைத் தீ முதலியவற்றான் அழித்தமையான் அது கைவரப் பெற்றவராகிக் காதலின்பம் துய்த்து வாழ, நீயும் அவருடன் ஒன்றி வாழ்ந் தாய் ஆதலின் யானும் அவர்போல மகஞ்செய்து நின்வழிப்பட நீயும் என்னுடன் ஒன்றி வாழ்வாய், எனினும் அதுவுஞ் செய்யேன், அழுதே இறப்பேன் எனத் தன் துணிபு உரைத்தார் எனக் கொள்க. அடியார்கள் தாமே என்பால் வந்து 'இவன் ஆர் ?' என்னுவிடில் யான் நின் வஞ்சத்தை உலகறியக் கிளந்து கூறி நின்னைத் தகாதவன் என்னும்படி ஆக்குவேன். அஃது என் நிலைக்குத் தகாது ஆதலின் அதனையும் செய்யேன் என்றபடி.

சகம், ஆகுபெயர் ; அதுவே நிலைபேறுடையது என்க ; "முறை யிட்டால்" என்றார் அங்ஙனம் முறையிடேன் என்பது தோன்ற. மகம் - வேள்வி; ஈண்டு அது எரியிற் பாய்ந்தும், அன்ன பிறவாற்றியும், உடலை நீக்கியமை குறித்து நின்றது.

இனி, "மகந்தான் செய்து வழிவந்தார்" என்றதற்கு, தக்கன் போலாகாது, இறைவனையே தலைவனாகக் கொண்டு வேள்வியாற்றி வழி வந்தவர் என்றலும் அமையும். அங்ஙனம் வழிவராதார் ஐந்தாம் திரு முறை ஆதிபுராணத்து 7-ம், 8-ம், 9-ம் திருப்பாக்களானும், பாவநாசத் திருக்குறுந்தொகையின் நான்காவது திருப்பாட்டானும், இலிங்க புராணத் திருக்குறுந்தொகை நான்காவது திருப்பாட்டானும் இகழப்பட்டிருத்தலை அறிந்துகொள்க.

வழி - அன்பின் ஐந்திணையாகிய தலையாய வழி. மகந்தான் செய்து வந்தார், வழிவந்தார் என்க. "வாழ வாழுதலா"வது அவர்கள் தன்னைக் காதலனாகப் பற்றி வாழுமாறு தான் அவர்கள்பால் வாழுதல் என்க. "முகந் தருதல்" என்றது தம்முடைய பொறுப்புக்களினும் ஈடுபாடுடையனாய்த் தாம் வந்து புகுந்து ஒன்றுமாறு நோக்கெதிர் நோக்குதலை. உல கோர்க்கு முறையிடின் நின் சமயம் நெறியதன்று என்பர் ஆதலின் முறையிடேன் என்க.

**முழுமுத லேஐம் புலனுக்கும் மூவர்க்கும் என்றனக்கும்**
**வழிமுத லேநின் பழஅடி யார்திரள் வான் குழுமிக்(கு)**
**எழுமுத லேஅருள் தந்திருக் கஇரங் குங்கொல் லோஎன்(று)**
**அழுமது வேயன்றி மற்றென் செய்கேன் பொன்னம்பலத்**
**தரசே. 4**

இதனால் இறைவனே, நீ அருளாவிடின் யான் அழுது ஏங்கியே முடிவேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை ) பொன்னம்பலத்தரசே! ஐம்புலன்களுக்கும் அறிவு இச்சை செயல் என மூவகைப்பட்ட சத்திகளுக்கும் மூலப் பொருளாக உள்ளவனே, புருடனாகிய எனக்கும் வழிபடு குல தெய்வமே, நின் பழைய அடியார்கள் கூட்டம் வானிற் கூடிப் பொருந்தும் தலைவனே, (அவ்வடியார்களைப்போல எனக்கும்) அருளைத் தந்து தன்னுடன் யானிருக்க இரங்குவானோ என்று அழுவதுவேயன்றி வேறெதனைச் செய்வேன் எ - று.

(வி - ரை.) மூலப் பகுதி முதலாகப் பூதங்கள் இறுதியாக உள்ள தத்துவங்களையும் ஐம்புலன் என்ற உபலட்சணத்தாற் கொள்க.

மூலப் பகுதி முதலிய தத்துவங்களைப் புருடன் உய்தற்கெனக் கொடுத்தவன் ஆதலின், அவன் முதல்வனும் ஆன்மா வழிபட்டொழுகிவரும் அடிமையும் ஆவர் என்க. சாதியொருமையாக "என்றனக்கும்" என்றார்.

'அடியார்களைப்போல எனக்கும் அருள் தந்து அவர்கள் தன்னுடன் இருக்குமாறே யானும் தன்னுடன் இருக்க' என விரித்துக்கொள்க.

என் வாணாள் முழுவதும் அங்ஙனங் இரங்குங்கொல்லோ என்று அழுதே இறந்துபோவேன் என்பது தன் துணிபாகும்.

அரைசே பொன்னம் பலத்தாடும்
அமுதே என்றுன் அருளோக்கி
இரைதேர் கொக்கொத் திரவுபகல்
ஏசற்(று) இருந்தே வேசற்றேன்
கரைசேர் அடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துஉன் அடியேன்பாற்
பிரைசேர் பாலின் நெய்போலப்
பேசா(து) இருந்தால் ஏசாரோ.

நீ என்னை வருந்த வைத்தலைக் கண்ட உலகோர் ஏசாரோ என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) எல்லா உலகினையும் தீது தீர்த்து நன்று புரிந்தாளும் அரைசே, பொன்னம்பலத்தாடும் திருக்கூத்தினால் ஆனந்த மூட்டவல்ல அமுதே என்று உன்னைப் போற்றி, நின் திருவருளை எதிர் நோக்கி, இரையை நாடி நிற்கும் கொக்கினை ஒத்து இரவு பகலாய் விழைந்து நின்று பயன் பெறாது வருந்திப் போனேன், அல்லற் கடலைக் கடந்து வீடுபேறாகிய கரையை அடைந்த ஏனைய

அடியார்கள் மேலும் உவகை மிகும்படியாகப் பிரையூற்றிய பாலில் வெளிப்பட்ட நெய்போல வெளிப்பட்டுக் காட்சி கொடுத்து, உன் அடியேனாகிய என்பால் வெளிப்படாதிருந்தால் உலகோர் நின்னை வையமாட்டார்களோ எ - று

(வி - ரை.) அப்போதைக்கப்போது ஓடித் திரியும் சிறிய மீன்களை விரும்பாது, பெரிய மீன் அகப்படுங்காறும் பொறுத்துத் தாங்கியிருக்கும் கொக்கினைப்போல யானும் கடல் புகுந்தும், தீப்பாய்ந்தும், வரைபுரண்டும், ஏனைப் பிறவாறும், உடல் களைந்து பெருந்திணை முறை பற்றிப் பெறுதலாகிய அருளை விரும்பாது, ஒரே முறையில் ஐந்திணை அன்பு நெறிபற்றிப் பெறும் பேரருளைக் குறிவைத்துக்கொண்டு பொறுத்திருந்தேன் என விரிக்க. கொக்கானது சிறுமீனைக் கொண்டு சிறிது பசி தீர்த்துக்கொள்ளாது அப்போது வாடியிருந்ததேனும், பின்னர் உறுமீனைப் பெற்று வாட்டம் தீர்ந்து உவகை பெறும். யானோ அவ்விரண்டும் இல்லாதவனாகி என்றும் வருந்துகின்றேன் எனத் தம் வருத்த மிகுதியைப் புலப்படுத்தினார் என்க.

அங்ஙனம் இருந்தும் பெறாது ஏமாந்து வருந்தினேன் என்க.

அடியவர்க்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு உண்மை குறித்துப் 'பாலில் நெய்போல' என்னாது "பிரைசேர் பாலில் நெய்போல" என்றார். பாலில் மோர்ப்பிரையை ஊற்றுவதுபோல நீரை ஊற்றி வஞ்சித்தனையோ? அங்ஙனம் என்னை வஞ்சிப்பையேல் நின்னை அவ்வடியவர் இகழாரோ என வினவினார் என்க. என்னில் நின் அருள் இப்போது வெளிப்படாமையின் நீ எனக்கு முன்னர்ச் செய்த அருள் வஞ்சமுடையது என்பது தெளியப் பட்டு உலகோர் நின்னை 'மெய்த்தேவன்' என்னாராய்ப் 'பொய்த்தேவன்' என ஏசுவர் என விரித்துரைக்க.

பிரைசேர் பாலின் நெய் வெளிப்படுவது இயல்பாமாறே காட்சி கண்ட அடியார்களுக்கே அதனை ஒப்பாக்குக. அதனை அடிகளுக்கு ஒப்பாக்கின் அது வற்றும் என்க.

'கரைசேர் உன் அடியார் களி சிறப்பப் பிரைசேர் பாலின் நெய்போலக் காட்சி கொடுத்து உன் அடியேன்பால் பேசாதிருந்தால் அவர் ஏசாரோ' என இயைக்க.

"உன் அடியார்," உன் அடியேன் எனக் கொள்க. அவர்போல ஆளற்குரிய என்னை அப்போது நீ வஞ்சித்ததனை யான் இப்போதே அறிந்து கொண்டேன் என்றபடி.

ஏசா நிற்பர் என்னையுனக் கடியான் "
என்று பிறரெல்லாம்
பேசா நிற்பர் யான்தானும் பேணா
நிற்பேன் நின்னருளே

தேசா நேசர் சூழ்ந்திருக்கும் திருவோ
 லக்கஞ் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடும் எந்தாய்
 இனித்தான் இரங்காயே. 6

இதனுல், யான் அவமே சாவேனுகில் பல தீங்குகள் நினக்கும் நின்னெறிக்கும் உளவாகும் என்பதைக் கருதியேனும் இனி இரங்காயே என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) பொதுவாக உலகோரும் நின் அடியான் (இங்ஙனம் அவமாகினன்) என்று இகழ்ந்து கூருநிற்பர், சிறப்பாகப் பிற சமயத்தலைவர் எல்லாரும் (இதுதான் தருணமென்று ஒன்றுகூடி என் அவச்சாவினை நின்னெறி ஒழுகுவோர்க்கு எடுத்துக் கூறி நீயும் நின் நெறியும் பொய்யாகும் எனத் தாமும் உலகோரும் உணரவைத்துத் தாம் முன்னர்க் கருதியிருந்த) வஞ்சினம் முடித்துக்கொள்வர். யானும் அவற்றுள் ஒன்றேனும் நின்னையும் நின் நெறியையும் அவமுருமற் பேணிவரா நிற்பேன். ஆதலின், ஒள்ளியோனே, ஈசனே, பொன்னம்பலத்தின்கண் நடுநின்று நடிப்போனுகிய எங்கள் தலைவனே, நின் அன்பர் புடை சூழ்ந்திருக்கும் திருவிதாகிய சபாமண்டபத்தில் நீ வீற்றிருக்குங் காட்சியை யானும் தரிசிக்க இப்பொழுதேனும் இரங்கியருளாயே எ - று.

(வி - ரை.) இனி இரங்காயேல் யான் ஆற்ருது சாதலும், சாதல் அறிந்த உலகோர் நின்னையும் நின்னெறியையும் ஏசி ஒதுக்குவர். அவர்க்குச் சார்பாகப் பிற சமயத் தலைவர்களும் தம் வஞ்சினத்தினை முடித்துக்கொள்வர்; ஆதலின் என்பொருட்டாக அன்றி, நீயும் நின்னெறியும் அவமாகாவாறு இன்னே எனக்கு இரங்காயா என விஞவினர் என்க.

அறிவற்ற பாமரர் நின்னெறியை ஒதுக்குவரேல், அவர் ஒருபோதும் நின்னெறிப்படார் என்க.

இருந்தவாறே இராது அவநெறிப்பட்டு மாண்டான் என உலகோர் ஏசுவர் என்க.

சபாமண்டபத்தில் அவன் பெரும் பேரழகுடையவனுகக் காட்சி தருவான் என்பது தோன்றத் "தேசா" என்றும், அவ்வடியவர்தாம் அன்பரோ? யான் வன்பனே? அல்லனே என்பது தோன்ற "நேசர்" என்றும், என்னைப் புறக்கணித்தமை வஞ்சம், யான் ஆற்றேன் என்பது தோன்ற "நேசர் சூழ்ந்திருக்கும்" என்றும், அதனைத் தரிசிக்காவிடில் விரைந்து அழுது சாவேன் என்பது தோன்றச் "சேவிக்க" என்றும் எனக்கு அருளுவதே நினக்கு முறையாகும் என்பது தோன்ற "ஈசா" என்றும்,

தில்லைக்கு வருக எனப் பிரிந்த நீ யான் வர முனைந்தும் அருளாது பொய்த்தனை என்பது தோன்றப் "பொன்னம்பலத்தாடும்" என்றும், இங்ஙனம் வஞ்சிக்கின்ற நீ என் குருவனல்லனோ? யான் நின் மாணாக்கன் அல்லனோ? நினைத்துப் பார் என்பது தோன்ற "எந்தாய்" என்றும், இப்போது அருளாவிடில் நின் அருள் பயனற்றதாகும் என்பது தோன்ற "இனித்தான்" என்றும், இரங்காவிடிற் பழி பூணுவாய் என்பது தோன்ற "இரங்காயே" என்றும் கூறினர்.

இரங்கு(ம்) நமக்(கு)அம் பலக்கூத்தன்
என்(று) என்(று) ஏமாந்(து) இருப்பேனை
அருங்கற் பனைகற் பித்(து) ஆண்டாய்
ஆள்வா(ர்) இலிமா(டு) ஆவேனோ
நெருங்கும் அடியார் களும்நீயும்
நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வர எங்கள்
வாழ்வே வா என்(று) அருளாயே. 7

இதனால், இப்போது என்பால் இரக்கமில்லாதவன்போல நடிக்கின்ற நீ என் ஆற்றாமையை அறிந்தேனும் அருளுதி என்பது கூறபடுகின்றது.

(பொ - ரை.) என்னால் ஆற்றற்கரிய கற்பு முறைகளை அன்று எனக்கு அறிவுறுத்தி ஆண்டவனே, உடையவர் இல்லாத மாடு போல் நின் ஆட்சியில்லாதவன் ஆவேனோ? நமக்கும் அம்பலக் கூத்தன் இரங்கியருள்வன் என்று கருதி இறுதியில் ஏமாற்ற மடைந்திருப்பேனை எங்கள் பேராநந்த வாழ்வே, நெருங்கி யிருக்கும் அடியவர்களும் நீயுமாக நிலைபெற்று ஒப்புடையவர் களாகி விளையாடும் இடத்தினை அடுத்துவரும்படி வா என்று என்னை அழைத்தருள்வாய் எ - று.

(வி - ரை.) 'ஏமாந்திருப்பேனை வா என்றருளாயே' என்க.

அன்று அருங்கற்பனை கற்பித்து ஆண்டாய்; அங்ஙனம் ஆண்ட நீ இருக்கும்போது யான் இன்று "ஆள்வார் இலி மாடு ஆவேனோ" என்க. உடல் களைந்து செல்லாது இழுக்கற்ற அன்பு நெறிபற்றிச் செல்லுமாறும், தில்லைக்கு வருமாறும் பணித்துப் பிரிந்த பின்னர் தம் செவ்விக்கொவ்வாத தாமே எல்லா மாய தன்மையைக் குறிக்கொண்டிருக்க வற்புறுத்திய அரிய கற்பு நெறியே ஈண்டு "அருங்கற்பனை" எனக் கூறப்பட்டது. இதை,

"பேதம் இல்லதொர் கற்பளித்த பெருந்துறைப் பெரு வெள்ளமே."
(திருக்கழுக். 6.)

எனக் கூறுவர். உடம்படு புணர்த்தலான் இது பெருந்துறைக்கண்

அளிக்கப்பட்டு அதனுன் அடிகள் மத்தராகிக் கயக்கமுற்றுர் என்பதும் பெறப்பட்டன என்க.

அருங்கற்பனை கற்பித்து, ஆண்டமையால் "ஆள்வார் இலி மாடு ஆவேனே" என்றுர். அக்கற்பனையின்றேல் சில அடியார்களைப்போல அவனை வலிதிற் பற்றியிருப்பேன் என்றபடி.

நிலவுதல் - ஒருவர்க்கொருவர் ஒப்புடையராதல்; ஈண்டு அடியவர் களும் இறைவனும் உருவினுனும், பண்பானும், அன்ன பிறவற்றுனும் ஒப்புடையவராதல் என்க.

அவர்கள்போல யானும் நின்னுடன் ஒப்ப நின்று விளையாடுதலை வேட்டிலேன். உங்கள் விளையாடலைக் கண்டு மனம் நிறைவடையும்படி யாகவும், அவ்விளையாட்டின்கண் நுங்கட்கு வேண்டிய குற்றேவல்களை யேனும் செய்யும்படியாகவும் யான் மருங்கே சார்ந்துவர வா என்று அழைப் பாயாக என்க.

அடியார்களுடன் வாழுமாறே தம்முடன் வாழவேண்டும் என்பதை அறிவுறுத்தற்காக "எங்கள் வாழ்வே" என்றும், எங்ஙனமேனும் நின் பக் கலில் இருப்பதுவே போதும் என்பதுபட "மருங்கே சார்ந்துவர" என்றும், தமக்கு அடியாருடன் ஒப்ப வருதற்கிடமில்லை என்பதுபட "நெருங்கும் அடியார்" என்றும் கூறினர். ஏகாரம் ஐயம்.

இதுகாறும் ஏமாந்து துன்புற்று ஆற்றேன் ஆயினேன்; இனியேனும் சார்ந்துவர வா என்றருளாயே என்க.

கைக்கிளையன்பரை உள்ளடக்கி "நமக்கு" என்றும், அவர்தம் தலைமைப்பாடு தமது என்பது பட "ஏமாந்திருப்பேனை" என்றும் கூறினர். என்பாடே இங்ஙனமாகவும் என்னை நம்பியுள்ள அவர்பாடு சொல்லுதல் வேண்டா என்றபடி.

**அருளா தொழிந்தால் அடியேனை**
**அஞ்சேல் என்பார் ஆரிங்குப்**
**பொருளா என்னைப் புகுந்தாண்ட**
**பொன்னே பொன்னம்பலக் கூத்தா**
**மருளார் மனத்தோ(டு) உனைப்பிரிந்(து)**
**வருந்து வேனை வாஎன்றுன்**
**தெருளார் கூட்டங் காட்டாயேற்**
**செத்தே போவற் சிரியாரோ. 8**

இதனுல், யான் ஒருவர்க்கும் முறையிடேனுகை ஏங்கிச் சாவேன்; சாகில் அடியார்கள் நின்னை இகழ்ந்து நகையாடாரா என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) (நினக்குப் பொருளாகாத) என்னையும் ஒரு

பொருளாகக் கருதி அகப்படுத்தி ஆண்டுகொண்ட பொன் போன்றவனே ! அங்ஙனம் ஆண்ட நீயே அருள் செய்யாவிடின் அடியவனாகிய என்னை, இந்நிலையில், அஞ்சாதே (யான் அருள் செய்கின்றேன்) என்று ஆற்றுவிப்பார் நின்னை அன்றி யாவர் உளர் ? (ஒருவரும் இலரன்றே !) பொன்னம்பலத்தின்கண் திருக் கூத்தாட்டு அயர்வோனே ! மத்தனாகிய மனத்தால் நின்னைப் பிரிந்து இப்போது வருகின்ற என்னை வா என்று அழைத்து உன்னுடைய தெளிவு நிறைந்த அடியார்களுடன் நீ கூடியிருக்கும் கூட்டத்தை எனக்குக் காட்டாது ஒழிகுவையேல் ஆற்றாமையால் இறந்து படுவேனாகில் அதனை அறிந்த அன்பர்கள் உன்னை இழித்துக் கூறி நகை செய்யாரோ எ - று.

(வி - ரை.)

" தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர் " (திருவா. கோயிற். 10.)

என்னும் இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற " பொருளா என்னைப் புகுந்தாண்ட பொன்னே " என்றும், எவ்வாற்றானும் நீயே அருள் புரிதல் வேண்டும் என்பார் " அஞ்சேல் என்பார் ஆர் " என்றும் கூறினர்.

உடல் களைந்து தன்னை அடையின் அஃது கட்டிளைக்கு இழுக்காக முடிதலின், 'ஆற்றாமையால் இறந்துபோனால்' என விரித்தாம். இனி, யான் சாதல் வேண்டும் என நினையாதே எனது ஆற்றாமை தானே வந்து என்னைக் கொல்லும் என்றபடி.

மருளும், தெருளும் முறையே பிரிவானும் புணர்வானும் எய்தப் பெறுவன என்க.

" ஆண்டு நீ அளித்த அருளினை மருளினால் மறந்த வஞ்சனேன் "
(வாழாப். 6.)

என்னும் இதனால் அவன் அருளியதை அருளெனக் கருதாது மருளென மருண்டு பித்துற்றமை புலனாகும் என்க.

" கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகிக்
கலந்து நான் வாழுமா றறியா
மருளனேன் " (ஷை. 7.)

என்னுமிதனானும் அளித்த அருள் அதனோடு கலந்து வாழுமாறு அமைந் திலது என்பதும் தாமே போதரும்.

மனத்தொடு - மனத்தால்; மருளார் மனங்கொண்டமையால் உன்னோடு கலந்து வாழுமாறு அறியாது உன்னைப் பிரிந்து வருந்துவேன் என்க.

உத்தரகோசமங்கையில் அவன் பிரிந்தான் ; திருப்பெருந்துறைக்கண் அடிகள் பிரிந்தார் என்க.

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்
திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார்
வெவ்வே றிருந்துன் திருநாமம்
திரிப்பார் பொன்னம் பலத்தாடும்
தலைவா என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ
நம்பி இனித்தான் நல்காயே. 9

*இதனால் அடியவர் உவகை கொள்ள யான் ஆற்றேன், சாவேன் என்பது கூறப்படுகின்றது.*

(பொ - ரை ) (உடன்வந்த அடியார்களாகிய தலைமளிர்கள்) சிரிப்பார்கள் , களிப்படைவார்கள் , இன்புறுவார்கள் , கூடிக்கூடி உன் திருவார்த்தையின் பொருளை விரித்து உரைப்பார்கள், விரித்து உரைப்பவற்றைக் கேட்பார்கள் ; உரையின்பம் நயம் முதலிய வற்றை மெச்சுவார்கள் ; வேறுவேருகப் போயிருந்து உன் திரு நாமம் தரிப்பார்கள் , பொன்னம்பலத்தே கூத்தயரும் தலைவனே என்பார்கள் அப்படிப்பட்ட அவர்களின் முன்னே நாய்போன்ற யான் நரித் தன்மையுடையேனுய் இருப்பேனோ? இருக்கத் தகேன் ஆதலால் நம்பியே, இனியாவது அருள் நல்குதி எ - று

(வி - ரை.) அடியார் ஒருவர் மற்றொருவரைக் காணுங்கால் அவர் முகத்தே சிவப்பொலிவினைக் கண்டு உவகையால் நகை தோன்றுமாகலின் "சிரிப்பார்" என்றும், அதன்மேல் ஒருவரையொருவர் நலம் வினவி மகிழ் வராகலின் "களிப்பார்" என்றும், மேலும் அவற்றை எண்ணி எண்ணிச் சுவைப்பாராகலின் "தேனிப்பார்" என்றும், அவர்கள் பலரும் வெவ்வேறே சிறுசிறு குழுவினராகக் கூடிக்கொண்டு, நின்னால் திருவாய் மலர்ந்தருளப் பட்ட அகனைந்திணை ஆகமத்தை ஆராய்ந்து ஒருவர் நிகழ்த்திய விரிவுரை யினும் மற்றொருவர் நிகழ்த்திய விரிவுரையும் அதனினும் மற்றொருவர் நிகழ்த்திய விரிவுரையுமாக இங்ஙனமே கூடிக்கூடி விரிப்பாராகலின் "திரண்டுதிரண்டு உன் திருவார்த்தை விரிப்பார்" என்றும், இங்ஙனம் விரிப்பார் விரிக்க அவற்றைப் பக்கத்தே இருந்து பலரும் கேட்பார் என்றும், கேட்டார் அவ்வுரைகளின் நயங்களை எடுத்துப் பாராட்டி மெச்சுவார் என்றும், இங்ஙனம் சிரித்தும் களித்தும் தேனித்தும் திருவார்த்தை விரித்தும் கேட்டும் மெச்சியும் வந்த பயிற்சியானே தனித்தனியாகப் போயிருந்து அவன் திருநாமப் பொருளை உள்ளத்து நிறுத்திப் புணர்ந் திருப்பாராகலின் "வெவ்வேறு இருந்துன் திருநாமம் தரிப்பார்" என்றும், அவர் அவனைத் தமக்குத் தலைவனாகக் கொள்ளும் உரிமையுமுடையார் என்பார் "பொன்னம்பலத்து ஆடும் தலைவா என்பார்" என்றும் கூறினர்.

இங்ஙனங் கூறினுரேனும் சிவபுரத்துக் காட்சி கண்டு கூறினுர் எனக் கொள்ளற்க. அழைத்துச் செல்லப்பட்ட அடியார் இவ்வளவில் இங்ஙனம் இங்ஙனம் இன்புற்றிருப்பார் எனக் கற்பனை செய்துகொண்டார் எனவே கொள்க. தமயந்திபால் அன்னத்தைப் போக்கிய நளன் "இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற் காணுங்கொல், இவ்வளவிற் காதல் இயம்புங் கொல், இவ்வளவில் மீளுங்கொல்" எனக் கற்பனை செய்திருந்தாற் போல என்று அறிக. இத்திருவாசகத்துள் அடியாரைப்பற்றி வருவன வெல்லாம் இங்ஙனம் பாவித்து உரைத்தன வென்றே கொள்க. இவ்வாறு வரும் அடியார் வரலாறே, இத்திருவாசகத்துள் அன்பாறு பெருக் கெடுத்தோடுதற்கும், ஏனைய தோத்திரப் பாக்களுக்கு இல்லாத பெருமையை அது பெறுதற்கும் அன்ன பிறவற்றிற்குமுரிய முதற்காரணமாக நின்றமையை உணர்ந்து இன்புறுக.

இத்துணை ஆக்கமும் உரிமையும் பெற்ற "அவர் முன்னே" என்க. அவர்க்கு உள்ளீடாக இருந்து பெருமையும் ஆக்கமும் பெறவேண்டிய யான், அழுக்குடையார் பிறர் முன்னிலையை நினைக்கக் கூசுவதுபோல அவ்வடியவர் முன்னிலையில் கூசியிருத்தற்குரியேனல்லேன்; அழிந்தொழி வேன் என்பார், "அவர்முன் நரிப்பாய் இருப்பேனே" என்றுர். அடிமைத் தொண்டிற் சிறந்தமை குறித்து "நாயேன்" என்றுர். இங்ஙனம் பட்சபாதம் செய்யின் அவன் பெருமைக்கு இழுக்கு நேருவது குறித்து "நம்பி" எனப்பட்டான். என் அழிவிற்கு இரங்கியேனும் இனிமேல் அருள் செய்குதி என்றவாறு.

"திருவார்த்தை" இறைவன் ஐந்திறங்களால் மகேந்திரத்துப் பணித்த ஐந்தினை ஆகமத்திற்கு முன்னதாகிய கயிலைக்கண் உமைக்குச் சொல்லிய ஆகமம் என்க. இனி, ஆதிப்பிரமம் வெளிப்படுத்திய வரலாறு முதல் மங்கையர் மல்கும் மதுரை சேர்ந்த வரலாறு இறுதியாகத் திருவார்த்தை என்னும் திருப்பதிகத்துட் கூறப்பட்டவையே திருவார்த்தையாம் என்று உரைக்க ஒண்ணுமேனும், அப்பொருள்கள் யாவும் அவ்வாகமத்துட் பெறப்படுமாகலின், அங்ஙனங் கொள்ளுதலிற் பெரும் பயனின்றென்க.

நரிப்பு - நரித் தன்மை; ஈண்டு அழுக்குடைய இழிந்த தன்மையைக் குறித்து நின்றதென்க.

நல்கா தொழியான் நமக்கென்றுன்
நாமம் பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறு
வணங்கா மனத்தால் நினைந்துருகிப்
பல்கால் உன்னைப் பாவித்துப்
பரவிப் பொன்னம் பலமென்றே
ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி
அருளாய் என்னை உடையானே. 10

(பொ - ரை ) என்னையும் அடிமையாக உடையவனே, என்னுடையான் எனக்கும் அருள்செய்யாது ஒழியான் என்றெண்ணி உன் திருநாமங்களைப் பிதற்றியவாறே கண்ணீர் பெருக்கி வாழ்த்தி வாய்குழறி வணங்கி மனத்தினால் நினைந்துருகி இங்ஙனமே பன்முறையும் உன்னைப் பாவித்துப் பரவிக் கொண்டு இறுதிதோறும் பொன்னம்பலம் என்று கூறிய வண்ணமே ஒடுங்கி நிற்கும் உயிர்க்கு இரங்கியேனும் அருள் செய்வாய் எ - று.

(வி - ரை.) அவ்வாக்கம் பெற்ற அடியாரையன்றி என்னையும் அடிமையாக உடையானே என உம்மை கூட்டியுரைக்க.

இரைதேர் கொக்கொத்திருந்த எனக்கு ஏனைய அடியார்க்கு வைத்த அருளினும் பெரியதோர் அருளை வையாமற் கழியான் என்று கருதியிருந்தமை தோன்ற " நல்கா தொழியான் நமக்கு " என்றார்.

மல்குதல் - பெருகுதல். குழறுதல் - அவசரத்தால் நாத்தடித்துப் பொருள் புலப்பாடின்றி விடாது பேசுதல். ஒல்குதல் - நிலையில் தளர்ந்திருத்தல். பரவுதல் - புகழ்ந்து போற்றுதல். பாவித்தல் - பாவனை செய்தல்.

"மல்கா," "வாழ்த்தா," "குழறு," "வணங்கா" என்பன. 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள், உடன்பாட்டுப் பொருளில் வந்தன.

" உயிர்க்கு " எனத் தம்மைப் புறத்திட்டுக் கூறினர், என்மேல் வைரமுடையையேனும் உயிர்க்கிரங்குக என்பது குறித்து.

ஐந்தாவது திருப்பாடல் தொடங்கி இதுகாறும் இங்ஙனமெல்லாம் மனம் கசிந்தழுது அருள் என்றனர் என்க.

திரு எம்பாவை முதலாயவற்றில் நின்னைத் தலைவனாகவும் என்னைத் தலைமகளாக நேராகவும் சார்பாகவும் பாவித்து உன்னைப் புகழ்ந்து வந்தேன் என்பார், " உன்னைப் பாவித்துப் பரவி " என்றும், இப்பாவனைகளாற் பெறற்பாலதாகிய பொன்னம்பலப் பேறு கிட்டாமையால் அதனையே கூறி என்னுயிர் இயக்கம் உடற்கண் சுருங்காநின்றது என்பார் " பொன்னம் பலம் என்று ஒல்காநிற்கும் இவ்வுயிர்க்கு " என்றும், உன் நெறியும் நீயும் இகழப்படுதல் கருதாயேனும் என் உயிர் சுருங்கும் அவத்தை கண்டேனும், என் மனக் கருத்தின் உண்மை நிலை கண்டேனும் அருளுதி யென்பார் " இவ்வுயிர்க்கு இரங்காய் " என்றும், நின் அடிமைப் பொருளின் கேடு நின் கேடேயாகும் என்பார் " என்னை உடையானே " என்றும் கூறினர்.

திருச்சிற்றம்பலம்

# கோயில் திருப்பதிகம்

"கோயில் திருப்பதிகம்" என்பது அடிகள் திருப்பெருந்துறையானை அழைத்து முறையிடும் பத்துத் திருப்பாடல்களைக் கொண்ட பகுதி என்க. "மூத்த கோயில்" என்பது தில்லைப்பதியையும் "கோயில்" என்பது திருப்பெருந்துறையையுங் குறித்தனவென்க.

கோயில் மூத்த திருப்பதிகத்தானே பொன்னம்பலத்தானை வேண்டி முறையிட்ட அடிகள் அவன் வந்தருளாமையின் தில்லைக்கு வருகவென ஆணையிட்ட பெருந்துறையானை அழைத்து விண்ணப்பித்தருளுவாராயினர் என்க. இத்திருப்பதிகத்தில் பெருந்துறையே பன்னிப் பன்னிப் பேசப்படுதலின் "கோயில்" என்பது திருப்பெருந்துறையையே குறிக்குமென்பது தெளிவு. "கோயில் வாயிலிற் பிச்சனுக்கினாய்" என்றதனாலுங் "கோயில்" திருப்பெருந்துறையே யென்பது கண்டு கொள்க

இத்திருப்பதிகத்தில் அடிகள் தமது செவ்விக்கு ஒவ்வாத திருப்பெருந்துறைக் காட்சியையே பலவாறு விரித்துக் கூறியருள்வர். பெருந்துறைக் காட்சி இறைவன் பூதங்கள்தோறும் நின்ற நிலை பற்றியதென்பது முன்னரும் விளக்கப்பட்டது. இதனை, "எமக்கு வெளிப்படாயென்ன வியன் தழல் வெளிப்பட்ட எந்தாய்" (அருட். 3.) என்பதனால் உணர்ந்துகொள்க. இக்காட்சி தம்மைப் பித்தனாக்கியதென அடிகள் ஆங்காங்குக் கூறுவர். மதிமருள் மருந்து போலவும், கொல்லிப்பாவை போலவும் இக்காட்சி அடிகளுக்கு முதலில் இனியதாய்ப் பின்னர் இன்னாததாயிற்றென்க.

இப்பகுதி முதற்கண் அக்காட்சியால் அடைந்த ஆனந்தப் பேறு, அதனை அறிந்து இன்புறற்கியலாது பித்துறச் செய்யும் போலும் என்று உணர்தல், இக்காட்சி அறிதற்கரியதென உணர்ந்து முன்வந்தவாறு வருக எனல், யாண்டும் பெருந்துறையானைக் கண்ட காட்சி என நான்கு பிரிவுகளையுடையது

## I. அக்காட்சியால் அடைந்த ஆனந்தப் பேறு :

| இயற்கைப் பொருள் எண்ணு நிலை | | நூல் அடைவு |
|---|---|---|
| 1. | இன்றே கண்ணுற் கண்டு களித்தேன் ... | 6 |
| 2. | ஆனந்தமாக்கும் என்சோதி அயலும் உறவும் இனி எனக்கில்லை ... | 8 |

3. குறுகினேற் கினியென்ன குறை ... 4
4. என்பரமல்லா இன்அருள் தந்தாய் யானிதற்
கிலனேர் கைம்மாறு ... 2
5. என் உடலிடங் கொண்டாய் இனி
உன்னை என்னிரக்கேனே ... 5
6. என் உடலிடங் கொண்டாய் யான் இலன்
இதற்கொர் கைமமாறு. ... 10

II. அறிந்து இன்புறற்கியலாது பித்துறச் செய்யும் போலும் என்று உணர்தல் :

7. உன்னை அறியகிற்பார் யார் ... 7

III. அகம் புறமெல்லாம் பெருந்துறையாகக் காணப்படல்:

8. உள்ளவா காண வந்தருளாய் ... 1
9. யானுன்னை உரைக்குமாறு உணர்த்து ... 3

IV யாண்டும் பெருந்துறையாகக் கண்ட காட்சி :

10 யாது போவது ஓர்வகை எனக் கருளாய் ... 6

பெருந்துறைக்கட் கண்ட காட்சியின் விளக்கம் உயிருண்ணிப் பத்தாலும் நன்கு தெளியப்படும். இப்பகுதியின் பொருளடை விற்குக் காரணம் வெளிப்படை.

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பெற்றது என்ப.

## அநுபோக விலக்கணம்

### எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மாறிநின்(று) என்னை மயக்கிடும் வஞ்சப்
புலன்ஐந்தின் வழிஅடைத்(து) அமுதே
ஊறிநின்(று) என்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறைஉறை சிவனே
ஈறுஇலாப் பதங்கள் யாவையும் கடந்த
இன்பமே என்னுடை அன்பே. 1

இது, நீ தியானக் கனவிலே வந்து காட்சி நல்குதலன்றி நன விடையும் காட்சியருளல் வேண்டுமென அடிகள் அருளியது.

(பொ - ரை ) நறவின் தெளிவானவனே! (தண்ணளி முதலாயவற்றால்) பெருமை வாய்ந்தவனே! திருப்பெருந்துறைக்கண் வாழ்ந்து வரும் சிவனே! (இன்பம் தருதற்கு உரியனவென்று கூறப்பட்ட) அளவில்லாத பதங்களின் இன்பங்கள் யாவற்றையும் கடந்து நின்று நிலைபெற்ற இன்ப வடிவானவனே! என்னுடைய அன்பிற்கு உயிராக இருப்பவனே! என்னுடன் மாறுபட்டு நின்றும் புறத்தே நல்லனபோலக் கரந்து என்னை மயங்கச் செய்துவரும் வஞ்சனையை உடையனவாகிய ஐம்புலன்களுக்கும் உரிய ஐந்தாகிய வஞ்ச வழிகளின் கதவுகளை அடைத்து (அவற்றால் உளவாகும் நஞ்சம் சிறிதேனும் ஊறுதுவற்ற) அருளமுதே ஊற்றெடுத்து நிலை பெற்று எழும்படியாக என் உள்ளத்தின்கண்ணே எழுகின்ற மேலான ஒளி வடிவனே! குணமும் திருமேனியும் கொண்டு உள்ள வாறே வந்து, யான் அதனைக் காணுமாறு அருள்புரிவாயாக எ - று.

(வி - ரை.) "தேறலின் தெளிவு" என்பது, அது நறவு அருந்திய மயக்கத்தைத் தெளியவைப்பது. உலகியலாகிய மதுவுண்பார்க்குச் சிவானந்தமாகிய தேறல் மயக்கந் தீர்ப்பது என்க. "தான் செய் நோய்க்குத் தான் மருந்தாகிய தேன் இமிர் நறவின் தேறல்போல." (இளம் - பொருள் - மேற்.) எனச் சான்றோர் கூறுதலுங் காண்க.

"திருப்பெருந்துறையுறை சிவனே" எனப் பின்னும் வருதலால் சிவபெருமானுக்குக் காரணப் பொருள் விரித்தெழுதப்பட்டது.

"ஈறிலாப் பதங்கள்; ஈறிலா இன்பங்கள்" என்று இயைக்க. யான் - உயிர். உயிர்க்கு அன்பு இறைவன் எனக் கொள்ளுதலும் நேர். அன்பே சிவம் ஆதலால், இறை என்பதின்றேல் உயிர் என்பதும் இன்றென்க.

புலன் ஐந்தாகலால் அவற்றின் வழிகளும் ஐந்தாயின. வழி, நஞ்சூறும் கண்ணுமாம். என் மனத்தே புலனூற்றுக்கண் ஊறிவருகின்ற நஞ்சமானது ஊறுது அதனை அடைத்து, நின் அருளமுதம் ஊறுமாறு செய்தாய் என்றார். உள்ளவாறு - காதற் காட்சிக்கு ஏற்றவாறு.

'உலக மயக்கமறத் தெளிவித்துத் தண்ணளி செய்து, அமைதியடைவித்துச் சிவம் பெறச் செய்து, பேரின்பம் அளித்தற்பொருட்டு, என்னை அன்பு நெறியின்பாற்படுத்து, என்னுள்ளேயுள்ள ஐம்புல நஞ்சுக் கண்களை அடைத்து, ஆங்கே அருளமுதூற நிலைபெற்ற புகழொளித் திருமேனியுடையாய்!' என்னும் ஒரு தொடர்புப் பொருள் இத்திருப்பாட்டின் விளிப் பெயர்களாற் போந்தன.

"உள்ளவாறு காணவந் தருளாய்" என்றதனால் முன்னர்த் திருப்பெருந்துறையில் அனற்பிழம்பு வடிவான கோலம் காட்டி என்னைப் பிச்சேற்றியது போதும், பண்டேபோலத் தலைமகனாக வந்து ஆண்டருள் எனக் குறித்தார் அடிகள் என்க.

அன்பினால் அடியேன் ஆவியோ(டு) ஆக்கை
ஆனந்த மாய்க்கசிந்(து) உருக
என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்
யான்இதற்(கு) இலன்ஓர்கைம் மாறு
முன்புமாய்ப் பின்பும் முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே
சீருடைச் சிவபுரத்(து) அரைசே. 2

இஃது, என் தகுதிக்கு உரியதல்லாத இன்னருளை எனக்குத் தந்த நினக்குச் செய்யும் கைம்மாறு ஒன்றும் இல்லாதவனாயினேன், என் செய்வேன்? என, நிர்க்குணக் காட்சி யானந்த மேலிட்டு

(பொ - ரை) எல்லாவற்றுக்கும் முன்னுமாய்ப் பின்னுமாய் அவை முழுதுமாய்ப் பரந்துள்ள (இயல்பாகவே) எல்லாவற்றி னின்றும் விடுபட்டவனே! தன்னை அறுதியிட்டு முடித்தற்கென வேறுமொரு பொருள் இல்லாதவனே! தெற்கண்ணுளதாகிய திருப் பெருந்துறையைத் தனக்கென உடையவனே! சிவபெருமானே! மிக்க புகழினையுடைய சிவபுரத்தரசனே! அன்பு நெறிப்பட்ட அடியேனுடைய உயிரோடு உடம்பும் இன்பமயமாய்க் கசிந்துருகு மாறு யான் எய்துதற்குத் தகுதியல்லாத இனிய திருவருளை எனக்குத் தந்தாய். அங்ஙனம் தந்தமைக்கெனச் செய்யத்தகும் ஒரு கைம்மாறேனும் இல்லாதவனாயினேன். (ஆதலால் செய்ந் நன்றி போற்றும் குணம் என்னிடத்தில்லை) எ - று.

(வி - ரை.) அருள் பெற்றிலேன் என்றேங்கிச் செயலழிந்த உயிர்க் கும், உண்ணாது உறங்காது தளர்ந்த உடற்கும், அவை தம்முள் ஒன்று படாவாய் தன் வயம் இழந்த ஞான்று, நீ வலியப் புகுந்து ஆனந்தந் தந்து அவற்றை உருக்கினை. ஆகையால் உயிரினும் உடலினும் சிறந்ததொன்று என்பால் இன்மையால் நினக்குச் செய்யும கைம்மாறும் இல்லேனாயினேன் என்றவாறு.

பெருந்துறைக்கண், அன்பரும் நீயும் முதற்கண் இணைந்து காதல் செய்த பின்னரே ஒருவீராயினிர். அங்ஙனமன்றி, நீயோ குணங்கடந்து பரந்த திருமேனி உடையையாகவும், யானோ குணத்தொடுபட்ட குறுகிய வடிவுடையேனாகவும் நேர்ந்தால் யாங்ஙனம் இணைந்து ஒன்றாகுதல் கூடும்? இது பெருந்திணைக்கூட்டம் எனப்பட்டு இழித்திடப் படுமாதலால, அதனை விடுத்துத் திருப்பெருந்துறைக்கண் அன்பர்க்கு அளித்தவாறே எனக்கும் அளித்தல் வேண்டும் என்பது புலப்படத் "தென்பெருந்துறையாய்"

என்று அழைத்தார். தமிழ் மரபாதலை உணர்த்தற்குத் "தென்பெருந் துறையாய்" என அடை புணர்த்தப்பட்டது.

"முத்தன்", "முதல் அரசு" என்பன, நிர்ககுணமாகி நின்ற இறைவனை உணர்த்தி நின்றன. 'என்னையும் தொடர்வறுத்து எல்லையற்ற இன்ப நுகரச் சிவமாக்குக' என்பது இவ்விளிகளாற் போந்தது.

பரம் - தகுதி. எனக்குத் தகுதியற்ற, நினக்கே தகுதியாக அமைந்த இன்பம். அது பெருந்திணைக் கூட்டம் என்க. யான் விழைவது அன்பின் ஐந்திணைக் கூட்டமேயாகும் என்றபடி. அன்பின் ஐந்திணைப் புணர்ச்சிக்கண் இருவர்க்கும் ஒத்த காதல் உண்மையின் யானும் அதன் கண்ணே கைம்மாறு செய்யவல்லேன். இப்பெருந்திணைக் கூட்டம் நினைப் பற்றுத் துயில்கையிற் கூடியதாகலின், யான் நினக்கு இன்பந் தந்திலேன் என்று புலங்கொள வைத்தாள் என ஐந்திணைப்பாற்படுத்தி விரித்துக் கொள்க.

அரைசனே அன்பர்க்(கு) அடியனே னுடைய
அப்பனே ஆவியோ(டு) ஆக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின்(று) உருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறைஉறை சிவனே
உரையுணர்(வு) இறந்துநின்(று) உணர்வதோர் உணர்வே
யான் உன்னை உரைக்குமா(று) உணர்த்தே. 3

இது, குணத்துட்பட்டதொரு திருமேனிகொண்டு என்னைக் கலந்து தெளிவிப்பாயாக என அருளியது.

(பொ - ரை.) அன்பர்க்கு அரசே! அடியவனாகிய என்னைப் பொருளாகவுடைய அப்பனே! உயிரோடு உடம்பும் இலேசுபட்டு இலேசுபட்டு, மற்றவற்றின் கனப்பாட்டின் கட்டுவிட்டு உருகும்படி என் உள்ளத்தே புகுந்து நிலைபெற்றுருகச் செய்து, பொய்யாகிய உடற் கட்டினையும், இருளாகிய அழுக்கினையும் என்னினின்று நீக்கிய மெய்ம்மையாகிய ஒளியுருவனே! அவாவாகிய அலையாற் பொரப்படாத நிலைபெற்ற அமைதியாகிய அமுத வெள்ளத்தை யுடைய தெளிந்த அறிவாகிய திருப்பாற்கடலே! திருப்பெருந் துறைக்கண்ணுறையும் சிவனே! சொல்லினையும் சொல்லாற் சுட்டப்பட்டுணரும் உணர்வினையும் கடந்து நின்று (அச்சுட்டுணர் வற்ற பேருணர்வாகிய ஞானத்தால்) உணரப்படுவதோர் உணர்வுப் பொருளே! யான் உன்னை இத் திருமேனிகொண்டு என் முன்னே

வந்தருள்க என்று சொல்லுமாறே தோன்றி என்னைத் தெளியச் செய்வாயாக எ - று

(வி - ரை.) நின் தோற்றம் என்னால் அறிதற்கு அரிது என்றபடி. உடலும் உயிரும் தம்முட் கட்டுப்பட்டனவாய்க் கனப்பட்டிருத்தலை இலே சாக்கி என்க. புரை - இலேசு. "அமுதத் தெண்கடல்" ஆனந்தத் திளைப் பிற் குரியது.

உணர்ந்தமா முனிவர் உம்பரோ(டு) ஒழிந்தார்
உணர்வுக்கும் தெரி(வு) அரும் பொருளே
இணங்கிலி எல்லா உயிர்கட்கும் உயிரே
எனைப்பிறப் பறுக்கும்எம் மருந்தே
திணிந்ததோர் இருளில் தெளிந்ததூ வெளியே
திருப்பெருந் துறைஉறை சிவனே
குணங்கள்தாம் இல்லா இன்பமே உன்னைக்
குறுகினேற்(கு) இனிஎன்ன குறையே. 4

இது, தலைவனும் பெருந் தலைவனுமாகிய நின்னைக் காதல னாகப் பெற்ற எனக்குக் குறையொன்றேனும் இன்றெனக் கூறியது.

(பொ - ரை ) நிலையாமையை யுணர்ந்து பெருமை வாய்ந்த முனிவர்களும், தேவர்களும், பிற பெரியோர்களுமாகிய எல்லார் தம் அறிவினாலும் அறிந்துகோடற்கரிய பரம்பொருளே! எவற் றொடும் சாராதவனே! உயிர்கள் எல்லாவற்றிற்கும் உயிரானவனே! என்னுடைய பிறவியை நீக்கும் எங்களுக்கென அமைந்த மருந்தா வோனே! செறிந்த ஒப்பற்ற அறியாமையாகிய இருளிலே தெளி வடைந்த வழியாக முன்னர்ச் செல்வோனே! திருப்பெருந்துறைக் கண்ணுறையும் சிவனே! முக்குணத் தொடர்வற்ற பேரின்பமே! உன்னைக் காதலனாக அடைந்த எனக்கு இனிமேல் என்ன குறை யுளது? (ஒன்று மில்லை) எ - று.

(வி - ரை.) உலகின்கண்ணுள்ள மகளிர் யாவர்க்கும் தலைவனும், (காதலனும்) பெருந் தலைவனும் என இருவர் உளர். அடிகளுக்கு அவ்விரு வரும் ஒருவராகவே அமைதலால் "உன்னைக் குறுகி......குறை" என்றார். நிர்க்குணத் திருமேனியுடையவனாதலால் அம்மைக்குத் தலைவனும், சகு ணத் திருமேனியுடையவன் ஆதலால் இம்மைக்குத் தலைவனுமாயினான் அவன் என்க.

இணங்குதல் - சார்தல். வெளி - வழி. தூ - பற்றுக்கோடு. "எம்" என்றது, ஆருயிர் அனைத்துமாகிய சாதியைச் சுட்டி நின்றது.

இனி, 'நீ குணத்தொடு கூடிய திருமேனி கொண்டு தானே புகுந்து ஆட்கொள்வாய்' என்பது இசையெச்சம்.

மரங்களடர்ந்த காட்டுப் பகுதியுட்பட்ட " திணி இருள் " என்க. அக் காட்டகத்து, அவ்விருளைத் துன்பமின்றிக் கழித்தற்காகக் கிடைத்த இடை வெளி எனினும் ஒருவாறு பொருந்தும். இறைவனைக் காணுது இன்னல் இருட்கண் ஆற்ருதயர்ந்து சோர்வுறறுத் துயில்கையில், இறைவன் குணங் கடந்த திருமேனி கொண்டு காட்சியளித்ததை இங்குக் குறித்தாரென்க.

உடம்பினை யோம்புதல் உயிரை ஓம்புதலாமாறே போல உயிரை ஓம்பு தலையே தன்னை யோம்புதலாக இறைவன் கொண்டான் என்பதும், உயிர்ப் பறறுக் கேற்றவாறே உடல் திகழ்ந்து வருவதுபோல இறைவனைப் பறறிய பற்றினுக் கேற்பவே உயிரும திகழ்ந்து வருமென்பதும், உடலினை இயக்கு வது உயிராமாறே உயிரினை இயக்குவோனும் இறைவனே யாவான் என்ப தும தோன்ற " எல்லா உயிர்கட்கும் உயிரே " என்ருர்.

" நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம் "

என வரும் **புறப்பாட்டி**ன்கண்ணும் உலகத்தைப் போற்றுதல் தன் னைப் போற்றுதலாகும் என அரசனுக்கு அறிவுறுத்திய திறம் பாராட்டத் தக்கது.

" மருந்து "என்றமையால் பிறப்பு நோயாதல் பெற்ரும்.

எல்லாவற்ருெடும் இணங்கியும் இணங்காதவன் என்க. முனிவர் முத லானோரால் உணரப்படாத் திருமேனியும் குணமும் கொள்ளாததென்க. குணங்கடந்த திருமேனிக் காட்சியும் அடிகட்கொரு பேரின்பம் விளைத்த [illegible]

" உன்னைக் குறுகினேற்கு இனியென்ன குறையே " என வருவது இகழ்ச்சிக் குறிப்பு. முன்னும் பின்னும் இங்ஙனம் வருவனவற்றையும் இவ்வாறு கொள்க.

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறு நீர்போல் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந் துறைஉறை சிவனே
இறைவனே நீஎன் உடலிடம் கொண்டாய்
இனிஉன்னை என்இரக் கேனே. 5

இது, நீ என் சிந்தையிலே தடையிலாது சென்று நிலைபெற்று, என்னுடலினையும் இல்லமாகக் கொண்டனையாதலால், எனக்கு உரிய வேறுமோரிடம் இருப்பினன்ருே அங்கு வந்து அதனையும் ஓம்பல் வேண்டுமென நின்னை இரந்து கேட்பேன் என அருளியது.

(பொ - ரை.) இயல்பிலே குறைபாடே இல்லாத நிறைவு பட்ட பொருளே! நீக்குதற்குரிய கோதென்பதே இல்லாத முழு அமிழ்தமே! அவியாத பிழம்பான ஒளிமலேயே! என் காதின் வழியே மந்திர ஒலி வடிவமாகப் புகுந்து, மனத்தின்கண்ணே அம் மந்திரப் பொருளாக நிலைபெற்ற மன்னனே! கரைகடந்த வெள்ளம் போல் உள்ளத்தின்கண்ணே பாயும் திருப்பெருந்துறையுறை சிவனே! தலைவனே! நீ என்னுடைய உடலையே வாழுமிடமாகக் கொண்டாய் ஆதலால் இனி யுன்னை யாது வேண்டுமென இரப் பேன் எ - று

(வி - ரை.) என்னுடலினையும் உனக்கிடமாக என்பாற் பெறறுக் கொண்டனை. அதனால் நான் கொடை வள்ளலாவேன். என் கொடையைப் பெற்றுக்கொண்ட நின்னை யான் இரப்பது தகுதியன்று என்று உரைப் பினுமாம்.

என் சிந்தை நின் சிந்தையாகவும், என்னுடல் நின்னுடலாகவும் கொண்டு ஒன்றாக என்னுடன் கலந்து நிற்கும் நின்னை "என் இரக்கேன்" என்றருளியதென்க.

குறை நிறைப்பது நிறைவெனப்படும், ஆனால் இநநிறைவு அத் தகையது அன்றென்பது கருத்து.

கரும்பு முதலாயவற்றின் கோதும் அமிழ்தும போலாது இ் அமிழ்து என்றபடி.

விறகு முதலாயின இன்மையானும், காற்று முதலாயின உண்மையா னும் அவியும் நெருப்பல்லாத ஒரு புது நெருப்பு என்க.

"சிந்தைவாய்ப் பாயும்" என்றலால் அருளுருவன் எனக் கொள்க.

'உலகத்துக் களவிற்குரிய குறைவுபாடில்லாத நிறைவினையுடைய கள வென்னும் கைக்கோளானவனே! கைக்கிளை பெருந்திணைகட்குரிய கோதுக ளில்லாத அன்பின் ஐந்திணைப் பொருளானவனே! தலைமகன் எஞ்ஞான் றும் பதினாருட்டைப் பிராயத்தானும், தலைமகள் என்றும் பன்னீராட்டைப் பிராயத்தாளுமாக இருந்து முடிவில்லாத புகழ்ச்சுடரை விட்டொளிரு கின்ற குன்றம் (குறிஞ்சி) ஆனவனே! ஐந்திணைக் களவாய்க் களவுக்குரிய பொருளுமாய் என் மனத்திற் குடிகொண்டு நிலைபெற்றவனே! என் சிந்த னையிற் பாயும் பேரின்ப வெள்ளமே! என் தலைவனே!' என அகப்பொருள் விளங்க உரைக்க.

இதனால் தான் விழைந்தது அன்பின் ஐந்திணை அன்பே யாகுமென் பது உணர்த்தப்பட்டது. 'மற்றிதனுக்கேற்குமாறு இதனை அருளுக என் னுது, வேறுமொரு பொருள் அருளுக என என்னிரக்கேன்? ஒன்றுமில்லை.' எனவும் விரித்துக்கொள்க.

'உடலே திருக்கோயில்; உயிரே இறைவன்; அஞ்ஞானமே நிருமாலி

யம்' என வுரைக்கும் மறைக்கருத்தினை உட்கொண்டு "என்னுடலிடம் கொண்டாய்" என அழைத்தார்.

இனி இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற "என்னிரக்கேனே" எனக் கூறினர் எனக் கொண்டு தம் செவ்விக் கொவ்வாத திருப்பெருந்துறைக் காட்சியால் தாம் பெற்ற பயன் யாதும் இன்றென்பதோடு அமையாமல் பெருந்துன்பம் என்பது குறித்தார் என்பதும் ஒன்று. அதனை, "பிணைத்தான் புகுந்து" (உயிருண். 4.) என்னுந் திருப்பாட்டானும் அறிக.

இரந்திருந்(து) உருக என்மனத் துள்ளே
எழுகின்ற சோதியே இமையோர்
சிரந்தனிற் பொலியும் கமலச்சே வடியாய்
திருப்பெருந் துறைஉறை சிவனே
நிரந்தஆ காயம் நீர்நிலம் தீகால்
ஆயவை அல்லையாய் ஆங்கே
கரந்ததோர் உருவே களித்தனன் உன்னைக்
கண்ணுறக் கண்டுகொண் டின்றே. 6

இஃது, அன்பின் ஐந்திணை யின்பமே வேண்டற்பாலதென இரந்திருந்து, மனத்துள்ளே நினைந்து யான் உருகுமாறு மேலெழு கின்ற எல்லாமும் அல்லவுமாகக் கொண்ட நின் திருமேனியை, யான் இன்று கண்களாற் கண்டு களித்து மருண்டேனேயன்றி என் விழைவு நிறைவேறப் பெற்றேனில்லை என அருளியது

(பொ-ரை) (உன்னுடைய குணத்துட்பட்ட திருமேனிக் காட்சி பெற்றுக் கொள்ளற்காக) நின்னை இரந்திருந்து யான் மனத் துள்ளே உருகுமாறு என் முன்னே எழுந்து தோன்றும் பேரொ ளியே! தேவர்களுடைய சென்னிக்கண் விளங்காநிற்கும் செந்தா மரையாகிய திருவடியுடையானே! திருப்பெருந்துறைக்கண் வீற்றி ருக்கும் சிவனே! வரிசைப்பட்ட ஐம்பூதங்களாகிய வெளி நீர் நிலம் ஒளி வளி என்னுமிவைகளாய், அவை அல்லாதனையாய், அவற் றிடை மறைந்த நின் திருவுருவத்துள்ளே நின்னை இன்று எதிர்ப் படக் கண்டு களிப்பெய்தினேன் எ-று.

(வி-ரை.) குணத்துட்பட்ட நின் திருமேனியைக் கண்டு களிக்க விருப்பங்கொண்ட யான், இன்று அதற்கப்பாலாய்க் கரந்து நின்ற நின் திருமேனியைக் கண்டு களிக்க நேர்ந்தது என்றபடி.

"மனத்துள்ளே எழுகின்ற சோதி" என்பதற்குக் குணத்துட்பட்ட திருமேனி எனினும் பெரிதும் ஒக்கும். என் மனத்துள்ளே யான் பாவித்த குணத்துட்பட்ட திருமேனி கொண்டே புறத்தும் தோன்றுகவென, குணங் கடந்த பேருருவங் கொண்ட நின்னை இரந்திரந்து உருகுமாறு வெளிப்பட்ட

சோதியே என விரிக்க. அவ்விரிவுருவம் தனக்கொவ்வா தென்னும் குறிப்பால் வெளி, வளி, தீ, நீர், நிலன் முறையே கூருது வெளி, நீர், நிலம், தீ, வளி எனக் கூறினர். பிறவுமன்ன.

இன்றெனக்(கு) அருளி இருள்கடிந்(து) என்னுள்ளத்(து)
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீஅலாற் பிறி(து) மற்(று) இன்மை
சென்றுசென்(று) அணுவாய்த் தேய்ந்துதேய்ந்(து) ஒன்றும்
திருப்பெருந் துறைஉறை சிவனே
ஒன்றுநீ அல்லை அன்றிமற்(று) இல்லை
ஆர்உனை அறியகிற் பாரே. 7

இது, நின்னைக் கருதியவாறே காணப்பெருது, புலன்களும் மனமும் செயலற்று ஓயப் பெற்றுங்கே, நீ அல்லாத பிறிதொன்று யாண்டும் இல்லையாதலை நினைக்க நேர்ந்த யான், நின்னுடைய எல்லாமாய் அல்லவுமாய்க் குணங்கடந்த திருமேனி இயல்பினை யாவர் தாமறிய வல்லுநராவர் என்னும் முடிபிற்கு வந்தேன் என அருளியது

(பொ - ரை.) எல்லாப் பூதங்களும் தத்தம் நிலையைவிட்டுப் போய்ப்போய் அணுத்தன்மையுடையனவாகத் தேயப்பெற்று(ப் புலப்படாவாய் நின்னுள் ஒடுங்காநிற்ப ஆங்கு நீயே) ஒரு பொருளாக நிற்கும், திருப்பெருந்துறைக்கண் உறையும் சிவனே! இருளை நீக்கிக் கடல் முகட்டிலே எழுந்து தோன்றப்பெறுகின்ற ஞாயிற்றினை ஒத்து, இப்போது என் மனத்தினின்று அறியாமையாகிய இருளை நீக்கி என் முன்னர்த் திருவருளைத் தந்து தோன்றும் நீயேயன்றி, இங்கும் அங்கும் எங்கும் பிறிதொரு பொருள் இல்லாத நின் இயல்பினை, யான் நினைப்பற்றிருந்தமையால் நினைந்தேன். அங்ஙனம் நினைந்து காணப்பட்ட ஒரு பொருளும் நீ அல்லையாகுய், நின்னையன்றி வேறு ஒரு பொருளும் இல்லையாகுய். இத்தகைய நின்னை அறிய வல்லவர் யாருளர்? (ஒருவருமில்லை) எ - று.

(வி - ரை.) 'ஒன்றும் சிவனே; திருப்பெருந்துறையுறை சிவனே' என இயைக்க. பிறிதுமறநின்மையாகி நின்ற நின் தன்மையென முடிக்க.

'நின்னெடு இரண்டறக் கலந்த நின் தமரன்றிப் பிறர் யார் அறியவல்லவர்? அறிந்து நுகரவல்லவர்?' என விஞவுதற் குறிப்புப்பட நின்றதென்க. அவர்க்கே அஃது அன்பின் ஐந்திணை ஒழுக்கப் பேருவதன்றி, எம்மனோர்க்குப் பெருந்திணை ஒழுக்கப் பேறேயாம் என்பது புலப்படுத்தப்பட்டது.

இன்றெனக்கு அருளிய திறன், நீயலாற் பிறிது மற்றின்றிநின்ற நின் தன்மையாம் என்பதும், அன்றெனக்கு அருளிய திறன், என் உறுப்புக்கள் நுகருமாறு கொண்டதொரு குணத்தொடுபட்ட குருவனுகிய அந்தணத் திருமேனியுடையையாய்க் காதலனுகி அன்பின் ஐந்திணைபற்றிய இன்ப நுகர்வித்தமை என்பதுமாம். ஆதலால் "இன்று" என்பதை, அன்று அவ்விடம் என்பன அல்லாத இன்று இவ்விடம் என விரித்துக்கொள்க. "அவ்விடம்" என்பது உத்தரகோசமங்கையை என்க.

எல்லாம் அணுத்தன்மைபட்ட காலத்திலே அவற்றை இறைவன் வெளிப்பட நின்றியக்குவன். அவை தத்தம் வடிவுகொண்டவிடத்து அவற்றுள்ளே கரந்து நின்றியக்குவன் என்க. இதனுல் அணுத்தன்மையின் பேராற்றலும் செவ்விதிற் புலப்பட்டது. ஆங்காங்கு, அவற்றவற்றிடத்தே கரந்து பலவடிவுடையனுக நின்ற இறைவன், அவை சென்று சென்று தேய்ந்து அணுவாகியவிடத்து, அவையெல்லாம் ஒடுங்கத் தான் வெளிப்பட்டு நிற்பன் என்க.

பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப்
　　பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீர்உறு தீயே நினைவதேல் அரிய
　　நின்மலா நின்னருள் வெள்ளச்
சீர்உறு சிந்தை எழுந்ததோர் தேனே
　　திருப்பெருந் துறைஉறை சிவனே
யார்உற(வு) எனக்(கு)இங்(கு) ஆர்அயல் உள்ளார்
　　ஆனந்தம் ஆக்கும்என் சோதி 8

இஃது, ஐந்திணையன்பால் எனக்கு இன்பத்தை ஆக்கி வைக்கும் புகழ் ஒளியாகிய நீ, இவ்விரிவுருவக் காட்சி அளித்தமையால், யான் நண்பு பகை என்னும் பாகுபாடற்றேன் ஆதலால் நின்னையும் இனையையென்று அறியேனுகி இடர்ப்படுகின்றேன் எனக் கூறியருளினுர்

(பொ - ரை.) பூமண்டலமும், ஆங்கியற்றிய புண்ணிய பாவப் பயனை நுகர்தற்குரிய பதங்களும், அப்பூமியையும் பதங்களையும் அடக்கிய அண்டங்களுமாகிய எல்லாம் ஒன்ருகத் தோன்றி எங்கும் வியாபிக்கப்பெற்ற ஒப்பற்ற (எங்கும் தடையின்றி ஊடுருவிக்) கிளைத்தோடாநிற்கும் விரிவொளியே! நீரொடு பொருந்தும் நெருப்பே! மனத்தால் எண்ணப் புகின், அருமையாகிய குற்றமற்றவனே! அன்பால் மிக்க புகழினைப் பெற்ற (அன்பர்) உள்ளத்தே எழுந்து பாய்கின்ற தேன் ஊற்றே! திருப்பெருந்துறையுறை

சிவனே! அன்பு நெறியால் எனக்கு இன்பந் தரும் புகழ் விளக்கமே! எனக்கு உறவினர் யாவர்? அயலவர் யாவர்? (ஒருவருமிலர்) எ - று

(வி - ரை) நீர் - அருள்வடிவாகிய நீர். இறைவனை நீரில் ஆவாகனம் செய்து தியானித்தாலன்றி அவனருளைப் பெறுமாறில்லை என்பது மறை.

முத்தொழிற்படுத்தி உயிர்களின் மலமகற்றித் தன்னொடு சேர்த்தற்கு, அவற்றை உடலொடு கூட்டுதலாகிய படைப்பினை இயற்ற அம்மையொடு வெளிவந்தமை தோன்ற "நீருறு தீ" என்றும், எல்லாவற்றையும் அழித்துக்கொண்ட திருமேனி என்பது தோன்றப் "படரொளிப் பரப்பு" என்றும் கூறியவாறு நீருறு நெருப்பென்றது திருமாலகத்துக் கரந்துநின்ற இறைவனுமாம் இனி, இந்நெருப்பு நீரிற் கரந்ததெனக் கொள்வழித் தோற்றமும், நீரின் வெளிப்பட்டதெனக் கொள்வழி ஒடுக்கமும் பெறப் பட்டன வென்றலுமொன்று.

ஒளிப் பரப்பே, உன்னை அன்பு செய்து இன்பந் துய்த்தற்கு இயன்றிலேன். நீருறு தீப்போல அன்பின் ஐந்திணை நெறிக்குரிய குணத்தொடு பட்டனையாக எனக்குக் காட்சி அளித்தல் வேண்டும் என்பது குறிப்பு. நீ நின்மலனுதலால் நீ எவ்வுருவும்கொண்டு எதனையும் ஆற்றற்குரியை. யானோ மலக்கட்டுடையேனுதலால், நீருறு தீப்போலக் குணத்துட்பட்ட திருமேனி கொண்டுவந்தாலல்லது, நின்னைக் கண்டு கலந்து இன்புறும் ஆற்றல் பெற்றிலேன் என்று குறிப்பால் உணர்த்தினர் என்க.

சுற்றமும் அயலும் அற்ற எனக்கு அவை நீயே யாகுவை. ஆதலால் யான் விரும்பியவாறே வந்துதோன்றித் துன்பமறக் கலந்து அருள்செய்க என்று இரந்தவாறு.

உறவு - சுற்றம்; அயல் - பக்க உதவி; 'அயன்மை' என்பதற்குப் 'பகைமை' எனப் பொருள் கொள்ளில், என்னைப் பொருளாக மதிப்பவர் ஒருவருமிலர் எனக் கருத்து உரைக்க.

பாரும் அவற்றின் வினைப்பயனை நுகர்தற்குரிய நரக சுவர்க்கம் முதலாய பதங்களும், அவ்விருபாற்பட்டவற்றையும் அடக்கிய அண்டங்களும், அத்தகைய அண்டங்கள் ஆயிர கோடியாகிய அனைத்தும் எனக் கொள்க. ஒளிப் பரப்பே நாளடைவில் அண்டங்களாயின என்பாருமுளர். அவ் வொளியே அண்டத்தை ஆக்கியும் ஆக்கியபின் ஓம்பியும் வருவதென்க.

**சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்**
**ஒருவனே சொல்லுதற்(கு) அரிய**
**ஆதியே நடுவே அந்தமே பந்தம்**
**அறுக்கும்ஆ னந்தமா கடலே**

தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறைஉறை சிவனே
யாதுநீ போவதோர் வகைஎனக்(கு) அருளாய்
வந்துநின் இணையடி தந்தே. 9

இஃது, இறைவனே! நீ நின் திருவடியை உதவிய பின்னும் என்னைக் கைவிட்டுப் போகுமொரு வகையைக் கைக்கொள்ளா நின்றாய், அஃது எவ்வகையைச் சேர்ந்ததென அவர் வினாவியது.

(பொ - ரை) ஒளியாய் விளங்குகின்ற திருமேனியுடையவனே! எவ்வடிவமும் கொள்ளாத ஒரு பொருளாகவும் இருந்து வருபவனே! இன்னதெனச் சொல்லுதற்கு அரியதாகிய எப்பொருட்கும் முதலும் இடையும் முடிவுமாக நிற்பவனே! உயிர்களின் மலக்கட்டினை அறுத்து நீக்கும் பேரின்பமாகிய பெருங்கடலே! உயிர்களுக்கு எய்தும் குற்றங்களை இல்லாமற் செய்கின்ற திருவருள் மலையே! திருப்பெருந்துறைக்கண் உறையும் சிவனே! (குருவாக என் முன்னர்த் தானே) வந்து உன் திருவடி இரண்டினையும் தந்தபின்பு (என்னைக் கைவிட்டுப்) போவதாகிய ஒருவகை யாதாகுமென எனக்கு அருளிச்செய்வாயாக எ - று.

(வி - ரை.) தன்னந் தனித்த ஒளியாகத் தோன்றும் உருவமென்க. பொறி முதலாய பகுப்புக்களைக் கொள்ளாததோர் சோதி எனவும் அச்சோதி தன்னையும் கொள்ளாததோர் அருவத்திருமேனி யெனவுங்கொள்க. முதலும் இடையும் முடிவுமாக இறைவன் அமைந்து வருவதலால், எல்லா உயிர்களும் தன்னிற்றோன்றி, தன்னின் வாழ்ந்து, தனக்குள் ஒடுங்கியும் போகின்றன என்க. முதற்கு முதலாகவும், முடிவிற்கு முடிபாகவும் நிற்பவனாதலின், அவனே இடைக்கும் இடையாகவும் நின்றான் என்றவாறு. திருவருளிலே இயல்பாகவே தீதின்மையால், அது தன்னைச் சார்ந்தாரையும் தீதிலராகச் செய்யவல்லதென்க. இங்ஙனமே "பாவமில்லாளே போற்றி; பாவத்தை அறுப்பாய் போற்றி" என்றாங்கு இலளிதாசகத்திர நாமத்துள்ளும் பயின்று வருதலையும் காண்க. அலை மலை முதலாய கரைகளையும் ஊடறுத்துச் செல்லுமாறே, இறைவனருட்கடலும் உயிர்களின் கட்டுக் கரையை அறுத்துச் செல்லாநிற்கும் என்க. இனித் திருவருளாகிய ஆற்றினையுடைய சிவக்குன்றென உரைத்தலுமாம். 'நீ போவதியாது? வந்து இணையடி தந்து ஓர்வகை எனக்கருளாய்' என்றியைப்பின், திருவடி தந்த பின்னர்ச் செயற்பாலதொருவகை இன்மையால் அது பொருந்தாதென்க. அதுவே அடிகள் திருக்கருத்தாகுமேல் 'வந்து நின்னிணையடி தராதே' எனத் தெளிவுற ஓதியருளியிருப்பார்மன். "பந்த மறுப்பதுவே" ஆனந்தமாகுமென்க.

தந்ததுஉன் தன்னைக் கொண்டதுஎன் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தம்ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன்று என்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறைஉறை சிவனே
எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்
யான்இதற்கு இலன்ஓர்கைம் மாறே. 10

நீ செய்த பண்டமாற்றினாலே எளிய நான் அரிய நீ நீயோ யான் ஆனாய். நம்மிருவருள் எவர் திறமை உடையவர்? என்னுடலினை நீ வாழிடமாகக் கொண்டு என் சிந்தைக் கண் மன்னினாய், யானோ நின்னருளில் மன்னினேன். இத்தகைய அரிய உதவி புரிந்த நினக்குச் செய்யும் கைம்மாறு இல்லேனாவேன் யான் என அருளியது.

(பொ - ரை) என்னுள்ளத்தையே திருக்கோயிலாகக்கொண்டு அதன்மாட்டு வீற்றிருக்கின்ற எங்கள் பெருமானே! திருப்பெருந் துறைக்கண்ணும் உறைகின்ற சிவனே! எங்கள் அப்பனே! ஈசனே! என்னுடலினை நின்னுடலாகக்கொண்டவனே! உன்னருள் திருமேனியை யான் தங்குமிடமாக எனக்குத் தந்தாய். அதற்கு மாறாக நீ தங்குமிடமாக என்னைக் கொண்டாய். இத்தகைய நின் பண்டமாற்றால், நின்னிலிருந்து யான் முடிவற்ற பேரானந்தத்தைப் பெற்றேன், இதற்கு மாறாக என்னிடமிருந்து நீ யாது பெற்றனை? யாதொன்றும் இல்லை. ஆதலால் நின் பண்டமாற்றினால் நாம் இருவேமுள் எவர் திறமையுடையவராவர்? சொல்லுக. இங்ஙனம் காத்திராதவகையில் என்னை மேலோனாக்கிய நின் மடமையின் பொருட்டு நினக்குச் செய்யுமொரு கைம்மாறு இல்லேனாவேன் யான் எ - று.

(வி - ரை.) 'என் சிந்தைக்கண் நீ புகுந்து நின் சிந்தையாக மற்றதனை மாற்றியதனால், என் சிந்தையென்றொன்றில்லாதும், என்னுடலை நின்னுட லாக்கியதனால், என்னுடலமென்றொன்றில்லாதும் போயின. நீ என்னுள் ளம் உடலம் உயிர் என்பவற்றை மாற்றிக்கொண்டவாறே யானும் மாற்று தற்கு என்னிடம் உடலே உள்ளமே உயிரே என்றுதியவை இன்மையின் செய்தற்குரிய கைம்மாறும் இலனாயினேன். யான் இல்லேனாயினும் நின் பால் இன்பம் பெற்றேன்; நீ உள்ளாயேனும் என்பால் யாது பெற்றனை?' என கலந்த பாவனையால் எய்திய ஆனந்தக் களிப்பால் இங்ஙனம் நகைச்சுவை ததும்பக் கூ[illegible] . 'மற்றிதனால், என்பால் நீயும்

இன்பம் பெறவேண்டுதியேல், அன்பின் ஐந்திணை நெறிபற்றிக் குணத்தினையேற்றுக் கோலமும் பொருந்தி என்பால் வருதி. அப்போது யாம் இருவேமாக நின்று ஊடிக் கூடி ஒன்றுவேம். காமநுகர்ச்சிக்கு இன்பமாக ஊடுதலும், அதற்கின்பமாக அதனை அளவறிந்து நீக்கிக கூடுதலுமாகும். கூடும்வழி நாம் இருவேம் என்பதற்று ஒருவேமாக நிலைபெறுவது மற்றதற்கு இன்பமாகும். அங்ஙனம் இன்பந் துய்த்து, நாமிருவர் என்பதனையும் மறந்தொழிந்து ஒருவேமாதலின்றி, நீயே வலியவந்து, என்னை மாய்த்து ஒருவேமாக்க முயல்வது அன்புநெறிக்கு ஏற்றதன்று' என்றுங்கு விரிவன வெல்லாம் இசையெச்சங்கள்.

திருச்சிற்றம்பலம்

# செத்திலாப் பத்து

செத்திலாதன என்னும் பத்து என்பது ''செத்திலாப் பத்து'' எனத் தொக்கது இன்னு நாற்பது என்பதுபோலக் கொள்க. 'செத்தன பத்து' என்பதன் எதிர்மறையாகச் 'செத்திலாதன பத்து' என்பது வரும். 'இனியவை நாற்பது' என்பதற்கு இன்னாதன நாற்பது என்பது எதிர்மறையாதல்போல. 'இன்னாதன நாற்பது' என்பது இன்னா நாற்பது என்றாகியாங்குச் 'செத்திலாதன பத்து' என்பது ''செத்திலாப் பத்து'' என்றாயிற்றென்க. செத்திலாதன-வாகிய பொருளைக் கூறிய பத்துத் திருப்பாட்டுக்களை முன்னர்க் குறித்துப் பின்னர் அப்பாட்டுக்களைக் கொண்ட நூற்பகுதிக்கு ஆகுபெயராயினமை காண்க.

நினைப்பற நினைந்தபோது கண்டதாகிய குணங் கடந்த திருமேனிக் காட்சி தம் செவ்விக்கேற்றதாகாமையால் வருத்தம் மிக வுற்ற அடிகள், '' யான் உயிர் வாழ்வது தகாதொன்றாகவும் வாழ்ந்து வருகின்றேன் , யான் இயல்பாகவே செத்திலேன் ; சாமாறு முயன் றிலேன் , நீ அருள்செய் ; அன்றெனிற் செத்திடப் பணி '' என அருளினர் ஆதலால் முன்னர்ப் பகுதிக்கும் இப்பகுதிக்கும் உரிய தொடர்பு தானே புலப்படும். இன்னும், தில்லையானுக்கும் திருப் பெருந்துறையானுக்கும் முறையிட்டுப் பயன் பெறாத அடிகள் ஆற்றாமை மிக்கு யான் செத்திலேன் என இரங்கிக் கூறி ஆறுதல் பெற்றாரென்க.

இப்பகுதி, இறைவனருளிய பேருருவக் காட்சி தமக்கு ஒவ்வா மையால் எய்திய துன்பமும் வெறுப்பும், தான் இயல்பாகச் சாகாமையும் தன்னைக் கொன்று கொள்ளாமையும், அவனைப் பிரிந் தினிதாக இருத்தற்கு ஓர் வழியையேனும் கூறுக வென்று விழைதலும், அருள் செய்யுமாறு அல்லது சாகப் பணிக்குமாறு கேட்டலும் என்னும் நான்கு பிரிவுகளை உடையது.

## முதலாவது பிரிவு

இது, நின் காட்சியருளால் யான் பெற்றுள்ள களிப்பெல்லாம் கலங்கா நின்றேன் (10) என்றல், நீ பிரிந்தும் இரங்காத கல் நெஞ்சினேனை ஏன் ஆட்கொண்டாய் (4) என்றல் என்னும் இருஉட் பிரிவுகளையுடையது.

## இரண்டாவது பிரிவு

, நீ பிரிந்தபோது இயல்பாகவே லன் (1) என்றல், கொலை செய்துகொண்டேனும் லேன் (2) என்றல் என் இரு உட்பிரிவுகளையுடையது.

## மூன்றாவது பிரிவு

இது, நின்னைப் பிரிந்து வருந்தாது இனிதே யான் இருந்து வருதற்கு ஒரு வழியைக் கூறுக (6) என்றல் என்னும் ஒன்றனையே உடையது

## நான்காவது பிரிவு

இது, தமக்கு அருள் செய்க என்றல், அன்றேற் செத்திடப் பணி என்றல் என்னும் இரு பிரிவுகளையுடையது.

நான்காவது பிரிவின் பகுதிகள் தனித்தனி உட்பிரிவு உடையனவாகக் காணப்படுகின்றன. அவற்றுள் முதலாம் பகுதி, நின் மலரடி சேரப் பணி (9) என்றலும், வந்து சேரப் பெருநெறி காட்டாய் (7) என்றலும், கழல் காட்டிக் காய மாயத்தை ஒழி (5) என்றலும், தொண்டரிற் கூட்டாய் (8) என்றலும் ஆகிய நான்கு உட்பிரிவுகளை உடையது.

இரண்டாம் பகுதி, அல்லது என்னைச் செத்திடப்பணி (3) என்றல் என்னும் ஒரு உட்பிரிவையே உடையது.

அடிப்பாட்டு அடைவின் காரணம் அவற்றின் பெயர் கூறவே தோன்றுதலால் நூற்பொருளடைவின் காரணத்தையே ஈண்டுத் தருகின்றோம்.

அடிப்பாட்டு அடைவிலே மூன்றாவதாய, பிரிந்தும் இன்னுஞ் செத்திலேன் என்பது இப்பகுதிப் பொருளுக்கு உயிர்நிலையதாகுஞ் சிறப்பியல்பால் ஈண்டு முதலாவதாக அமைத்தருளப்பட்டது

அடிப்பாட்டிலே நான்காவதாகிய திருப்பாட்டில் இயல்பாகக் கழியாத உயிரை வலிந்து கழித்தேனும் இடர் போக்காதிருக்கின்றேன் எனக் குறித்தருளும் இயைபால் இரண்டாவதாக வைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே பத்தாவதாகிய "அருள் புரிதலுந் தலையினால் நடந்தேனைச் செத்திடப் பணியாய்" என்றது, உயிரை வலியக் கழித்காத என்னை நீயாவது செத்திடச் செய்தல் அருளியவாறே

நலன் செய்தலுமாம் என்னும் இயைபால் மூன்றாவதாக அமைத் தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே இரண்டாவதாகிய உருகாத என்னை எற்றுக்கு ஆண்டாய் என்பது, இருந்த பயனற்ற என்னைச் சாகவும் பணிக்காத நீ ஆண்டது எது குறித்து என வினவுதலும் நேரிது என்னும் இயைபால் நான்காவதாக அமைத்தருளப்பட்டது.

காய மாயத்தைக் கழித்தருள்செய்யாய் என்பது சாகவும் பணியாத நீ ஆண்டது கழல் காட்டி மாயத்தை ஒழிப்பதற்காக என்னில் அதனைச் செய்க என்னும் இயைபால் ஐந்தாவதாக அமைத்தருள்ப்பட்டது

அடிப்பாட்டிலே ஐந்தாவதாகிய நின்னைப் பிரிந்த யான் வருந்தாவண்ணம் இனிது இருந்துவர இதனைச் செய்க என்பது, நீ அருளினும் அருளாயாயினும் நின் பிரிவால் இன்னல் எய்தாது இனிதாக இருக்கவேனும் ஒரு வழியைச் சொல்லாய் என்னும் இயைபால் ஆறுவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டில் ஏழாவதாக அமைந்த திருப்பாட்டு, நின்னைப் பிரிந்து இனிதாக இருத்தற்கு ஒருவழி கூறுவிடில் நின்னை அடையத்தகும் பெருநெறி ஒன்றினை எனக்குக் காட்டுக என்னும் இயைபால் ஏழாவதாக அமைத்தருளப் பட்டது.

என்னை ஆண்டு தொண்டரிற் கூட்டாய் என்பது அங்ஙனம் நெறிகாட்டுதலோடமையாமல் தொண்டரிற் கூட்டவும் வேண்டு மென அதன்மேலும் இன்னதுவுஞ் செய்தல் வேண்டுமென்னும் இயைபால் எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே ஆறுவதாய திருப்பாட்டில் தொண்டரிற் கூட்ட இப்போதே என்னை வந்திடப் பணித்தல்வேண்டும்; ஆதலால் உடனே வரப் பணி எனத் துணிந்து சொல்லிய இயை பால் அது ஒன்பதாவது இடம் பெற்றது.

அடிப்பாட்டிலே முதலாவது திருப்பாட்டில் கலக்கமடைந்த யான் இனி உருகுவேன் ஆதலால் துணிந்து அருள்புரிக. ஆதலால் இனிப் பிழை செய்யேன் என்பது குறிப்பிற் கொள்ளப்படுதலின் ீகண் வைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டுப் பொருளடைவு, நூற்பொருளடைவு ஆதியன வற்றைப் பின்வரும் அட்டவணையால் உணர்க.

| பெரும் பிரிவு கள் | உட் பிரிவுகள் | தொடர் எண் | நூல் எண் |
|---|---|---|---|
| I | | 1 | 10 |
| | | 2 | 4 |
| II | | 3 | 1 |
| | | 4 | 2 |
| III | | 5 | 6 |
| IV | i | 6 | 9 |
| | ii | 7 | 7 |
| | iii | 8 | 5 |
| | iv | 9 | 8 |
| | | 10 | 3 |

இஃது திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப் பெற்ற ப.

# சிவானந்தம் அளவறுக்கொணாமை

## எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

பொய்யனேன் அகம்நெகப் புகுந்(து) அமு(து) ஊறும்
புதும லர்க்கழல் இணையடி பிரிந்தும்
கையனேன் இன்னும் செத்திலேன் அந்தோ
விழித்திருந்(து) உள்ளக் கருத்தினை இழந்தேன்

ஐயனே அரசே அருட்பெருங் கடலே
அத்த னேஅயன் மாற்(கு)அறி யொண்ணுச்
செய்யமே னியனே செய்வகை அறியேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 1

இது, நின்னைக் குணத்துட்பட்ட திருமேனியுடையையாக இப்போது பெற்றிலாத யான், முன்னர் என்னை நீ பிரிந்த அன்றே செத்தேனில்லை. இப்போது உணர்வோடிருந்தும் என்னுள்ளக் கருத்தினை இழந்தேன். இனிச் செய்யும் வகை இன்னதென்று அறிந்திலேன் என அவர் கூறியது.

(பொ - ரை.) ஐயனே ! அரசனே ! பேரருட்கடலே ! அப்பனே! திசைமுகனுக்கும் திருமாலுக்கும் அரிய செவ்விதாகிய ஒளிவடிவாய் நின்றவனே ! திருப்பெருந்துறைக்கண்ணே உறையும் சிவனே ! அன்பிற் பொய்யனேனும், தனித்துள்ளேனும், கருத்துணர்ச்சியோடிருந்தும் என் உள்ளக் கருத்தினை இழந்தேனுமாகிய யான், நின் இரண்டு திருவடிகளையும் பிரிய நேர்ந்தும் (அங்ஙனம் பிரிய நேர்ந்தபோதே சாதல்வேண்டும். அங்ஙனம் சாகாத நான்) இப்போதேனும் அந்தோ ! செத்தேனில்லை. இனி யான் செய்யத் தக்க வகை ஒன்றினையும் அறிந்தேனில்லை (என்று கழிந்தவை கருதி உள்ளழிந்து அருளினர்) எ - று.

(வி - ரை.) முன்னர்ப் பிரிந்தும் செத்திலேன் ; அங்ஙனம் பிரிந்தமையால் பேரிடர் எய்திய பின்னும் செத்திலேன் ; உள்ளக் கருத்தினை இழந்திருக்கவும் செத்திலேன் என இயைக்க. நான் அன்புநெறியால் ஆளப்பெறலாம் என நம்பி எதிர் நோக்கிக் கருதியிருந்தும், அந்நோக்கத்தை இழந்தேன். அங்ஙனம் இழந்த இனியும் செத்தேனில்லை என்றார் என்க.

அன்பு நெறியைப் பெறலாமென அன்புசெய்து பேணி உள்ளத்தே வைத்திருந்த அவன் திருவடியின் நீழலில் துளிக்கும் இன்பத்தை இழந்தமையால் நெஞ்சம் பொய்பட்டேன் ; தனித்தும் போனேன் என்றார். கையன் - தனித்தவன் ; வஞ்சனுமாம். ஒத்த அன்பின் ஐந்திணைநெறி பற்றுமையால், தான் கருதிய காமம் ஒருதலைக் காமமாகிய கைக்கிளையாயிற்று என்றபடி. இதனைன்றே "விழித்திருந்து உள்ளக் கருத்தினை இழந்தேன்" என்று இங்கருளியதும்,

" இருகை யானையை ஒத்திருந்து என்னுளக்
கருவையான் கண்டிலேன் " (திருச்ச. 41.)

என்றும்,

" தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினுய்
கண்டுங் கண்டிலேன் " (ஷை. 42.)

என்றும்,

"எல்லையில் கழல்கண்டும் பிரிந்தனன்" (திருச்ச. 48.)

என்றும் முன்னர் அருளியதுமென்க. இதற்கும் முற்பகுதிகட்கும் உள்ள தொடர்பும் இதனால் வலியுறுத்தப்பட்டன.

முன்னே என் தலைவனாகித் தனதருட் பெருங்கடலை எனக்கு அளித்த அத்தனாகிய திருப்பெருந்துறையான், அயன் மாலறியாக் குணங்கடந்த செம்மேனியனாகி இன்னே காட்சியளித்தான். யானோ அதனை நுகரும் ஆற்றலற்றேனாகி வருந்தாநின்றேன் என்பது தோன்ற, "ஐயனே...... மேனியனே", "சிவனே" என்றழைத்தார்.

புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
உண்டி யாய்அண்ட வாணரும் பிறரும்
வற்றி யாரும்நின் மலரடி காணா
மன்ன என்னைஓர் வார்த்தையுட் படுத்துப்
பற்றி னாய் பதையேன் மனம் மிக உருகேன்
பரிகி லேன்பரி யாஉடல் தன்னைச்
செற்றி லேன்இன்னும் திரிதரு கின்றேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 2

, மேலோரை விடுத்து எளியேனை ஒருவார்த்தையுட் ப ய நீ என்னைப் பிரிந்தமைக்கு யான் இயல்பாகச் சாவா விடினும் வலிந்தேனும் உயிர் கழித்திலேன். அத்துணைக் கல் நெஞ்சினேன் எனத் தனது ஆற்றாமை தோன்ற இரங்கிக் கூறியது.

[குறிப்பு —"பற்றி னாய்பதை யேன்மனம்(மிக) உருகேன்" என மூன்றாமடியைச் சீர்பிரித்துக் கொள்ளுதலுமொன்று.]

(பொ - ரை.) திருப்பெருந்துறைக்கண்ணே வீற்றிருந்தருளும் சிவனே! வானுலகின் கண்ணே வாழாநின்ற வானவரும், ஏனைய உலகத்தவரும், நின்னைக் காணவேண்டி, நீரையும் காற்றையுமே தமக்கு உணவாகக் கொண்டு உடலம்வற்றிப் பின்னர், அதனையும் நீக்கித் தவ விருக்கையிலேயே நிலைபெற்றமையால் தம்முடலம் புற்றாகியும் மரமாகியும் போகுமப்போதும் மற்றவர் கண்டுகொள்ள முடியாத பூப்போன்ற திருவடியை உடைய மன்னனே! நின்னைக் காணற்கெனக் கருத்துங்கொள்ளாத என்னை, அருளே பற்றுக் கோடாக "நானே நீ ஆதலால் நீயும் யானாவாய்" என்னுமொரு சொற்றொடரால் நினக்கு அடியேனாக ஆண்டுகொண்டாய். (அத் தகைய நீ முன்னர்ப் பிரிந்தபோதும், பின்னர் யான் இடருற்ற போதும், அதன்மேல் எனது செவ்விக்கொவ்வாத காட்சியை அளித்த இப்போதும்) நெஞ்சம் துடித்தேனுமில்லை; (துடித்திலா

மையால்) உள்ளம் பெரும்பாலும் உருகினேனுமில்லை ; (உருகிலாமையால்) உடல் நீங்கினேனுமில்லை , ஆதலால் இவ்வுடலைச் சுமந்து கொண்டு இப்போதும் இவ்வுலகின்கண்ணே சுழன்றலைகின்றேன் எ — று.

(வி - ரை.) அசைவற்றவருகிய உயிரில்பொருளாகவும், உயிர்ப் பொருளாகவும் இருந்து வந்தனர் எனக் கொள்ளினுமாம். புனல் காலே உண்டியாகக் கொண்டு உடல் வற்றியும், அதன்மேல் மரம்போல, ஓரிடத்தில் நிலைபெற்றும், மற்றதன்மேல் புற்றுப் போன்றும் சடப் பொருள்களாக நின்ருர் எனக் கொள்க. இங்ஙனம் இவர் சடமாயினமையால் இறைவன் திருவடியைக் கண்டிலர் என்க. தம் மனத்தினையும் புலன்களையும் இறைவன்பால் பத்திகொள்ளச் செய்து பயின்றிருப்பரேல், அவ்விறைவனைக் கண்டு களித்திருப்பர். யோக முயற்சிக்கண்ணே கருதி முயலற்குரியது இதுவென்பது ஈண்டுப் புலப்படுத்தப்பட்டவாருயிற்று. இதனுனன்றே அடிகள், தமக்கு இறைவன் குணங்கடந்த திருமேனிக் காட்சி அளித்தமையை விழைந்திலர். விழைவரேல் அவ்வாறேர்போலத் தாமும் இறைவனேடு ஒன்றுபடாராய்ச் சடப்பொருளாகி யிருப்பர் எனத் தெளிக.

இறைவனை ஆராதித்தற்கு வேண்டியவற்றை நாடிக்கொண்டு வந்து கொடுத்தும், கிரியையாளர் செய்யும் ஆராதனைக்கண்ணே மனம் பற்றியும் வருதல் சரியை எனவும், ஆராதனைப் பறறு முற்றி அகம் பழுத்த பின்னர்த் தாமும் அங்ஙனமே சரியையாளர் புடைசூழ்ந்து உதவத் தாம் அகத்துட் கொண்டவாறே புறத்தும் இறைவன் உறைகின்ருனுகப் பாவித்துச் சரியாவான்களுக்கு ஆசிரியர்களாக இருந்து இறைவனை அகவழுக்கின்றி அகத்தும் புறத்தும் ஆராதித்தல் கிரியை எனவும், கிரியையாளர் தம்மைக் கண்டு அகம் பழுக்குமாறு அவராற் செய்யப்படும் கிரியைத் தொழில்கள் இனிதே நிறைவேறுமாறு மற்று அவராற் புடைசூழப்பட்டும், அவர்க்கு ஆசிரியராகத் தாம் வீற்றிருந்தும், அகம் புறமெங்கும் ஆராதனை செய்வதாகப் பாவனை செய்து அதிற் பழுத்தலே யோகமெனவும், யோக மார்க்கத்தார் தம்மைக் குறிக்கொண்டு செவ்வி பெற மற்றவர் புடைசூழச் செய்கையும் அகப் புறப் பாவனையும் என்னும் இவற்றின் வேறுபாடறப்பெற்ற மெய்யறிவே எல்லாமாகி நிற்றல், ஞானம் எனவும் அந்நான்கு நெறிகளையும் பகுத்துணர்ந்து கொள்க. சரியையாளர் மாணுக்கர்களாகவும், கிரியையாளர்கள் ஆசிரியர்களும் மாணவர்களாகவும், யோகியரை ஆசிரியராகவும், ஞானியரை ஆசிரியர்க்காசிரியராகவும் ஒப்பிட்டுணர்க.

ஆசிரியப் பயிற்சிக் கழகத்து மாணவர்கள் சரியையாளர்களோடும், அவரைப் பயிற்றும் ஆசிரியர்கள் கிரியையாளர்களோடும், அவர் தம் பேராசிரியர்கள் யோகியர்களோடும், அவர்கட்கு மேற்பார்வையாளர்களாக இருந்து மேற்பார்வை செய்வோர்கள் ஞானியர்களோடும், அவர்கட்கெல்லாம் தலைவராயிருப்பவர் இறைவனேடும் ஒப்பிட்டுப் பார்த்தற்குரியர்.

இன்னும் இந்நான்கு நெறிகளையும் ஒவ்வொன்றும் நந்நான்கு வகைப் படுமாறு பிரித்து ஏற்குமாறு ஒப்பிட்டுக் கொள்க.

இறைவனால் ஞானியரும், ஞானியரால், யோகியரும், யோகியரால், கிரியையாளரும், கிரியையாளரால் சரியையாளரும் முறையே இயக்கப்பட்டு, சரியையாளர் கிரியையாளருள்ளும், கிரியையாளர் யோகியருள்ளும், யோகியர் ஞானியருள்ளும், ஞானியர் இறைவனுள்ளும் அடங்குவர்.

புலைய னேனையும் பொருளென நினைந்(து)உன்
 அருள்பு ரிந்தனை புரிதலும் களித்துத்
தலையி னால்நடந் தேன்விடைப் பாகா
 சங்க ராஎண்ணில் வான வர்க்(கு)எல்லாம்
நிலைய னேஅலை நீர்விடம் உண்ட
 நித்த னேஅடை யார்புரம் எரித்த
சிலைய னேஎனைச் செத்திடப் பணியாய்
 திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 3

நீ குணத்தொடுபட்ட தலைமகனாகத் திருமேனி கொண்டு அன்று காட்சியருளியபோது நின்குணங் கடந்த திருமேனி இயல் பினையும் அகத்துட் கொண்டேனாய் விதி விலக்குகளைப் புறக்கணித் துச் செருக்குற்று நடந்தமையால் எனக்கு இப்போது நீ அளித்த அக்காட்சி எளியேனை வெருளச் செய்யாநின்றது யானோ எனக்குத் தீவினை தேடிக்கொண்டேன் என அவர் கூறியது.

(பொ - ரை.) திருப்பெருந்துறைக் கண்ணுறையும் சிவனே! இடபவாகன முடையவனே! நினைப்பார்க்கு இன்பம் அளிப்போனே! நின் திருவருளால் நிலைபெறுகின்ற தேவர்கள் எல்லார்க்கும் அவ்வவர் பதமும் பதவியும் வாணாளும் நிலைத்திருக்கும் வண்ணம் பொதுவினுள் நிற்பவனே! தேவர் முதலாயினோரை அலைக்கின்ற நீரின்கண் எழுந்த நஞ்சினை உண்ட நிலைபெற்றவனே! (நின்னைப் பெறுமதையே தம் குறிக்கோளாகக் கொள்ளாமையால், நின் அருளுடன் மாறுபட்டு நின்றவராகிய அசுரர்களுடைய மூன்றாகிய புரங்களையும் எரியச்செய்த அம்பினை யேவிய வில்லை யுடையவனே! அவ்வசுரர்களைப்போலவே என்னையும் எரித்தலி னாலே யான் செத்திடுமாறு (அவ்வில்லினைப்) பணிப்பாயாக எ-று.

(வி - ரை.) இறைவனையே பெற்றுக்கோடலை விடுத்து, எல்லாம் இறைவனேயாம் எனக் கருதித் தாம் வேண்டியவாறே விதிவிலக்குகளை விடுத்து நுகர்தற்குப் புகுந்த செருக்கு என விரிக்க. அச்செருக்குடைமை புலைமைத்து என்பது தோன்றப் " புலையனேன் " என்றார்.

"ஈசனே நீயல்ல தில்லை இங்குமங்கு மென்பதும்
பேசினேன் ஓர் பேதமின்மை பேதையேன்" (திருச்ச. 78.)

என்பதும் காண்க.

உவகை வந்த காலத்து நாடாராய் அலைவந்த காலத்து நின்னை நாடினராகிய வானவர்க்கு அவர் துயர் தீர்த்தவாறே, என் துயர் தீர்த்தும், முப்புரம் எரித்து அப்புரத்து அசுரரை ஆண்டவாறே என் செருக்கினை முருக்கியும் ஆள்க என விரிக்க.

எண்ணில், அளவில்லாதனவுமாம். அலை, நீரலையுமாம். 'நித்யன்' என்றது "நித்தன்" என்றுனது. நித்தன் - என்றுமுள்ளவன்.

அன்பர் ஆகிமற்(று) அருந்தவம் முயல்வார்
அயனும் மாலும்மற்(று) அழலுறு மெழுகாம்
என்பர் ஆய்நினை வார்எனைப்பலர்
நிற்க இங்(கு)எனை எற்றினுக்(கு) ஆண்டாய்
வன்ப ராய்முரு(டு) ஒக்கும்என் சிந்தை
மரக்கண் என்செவி இரும்பினும் வலிது
தென்ப ராய்த்துறை யாய்சிவ லோகா
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 4

இஃது, ஆட்கொள்ளுதலால் நினக்கு ஆதல் அன்றி எனக்கு ஆதல் பயன்படும் இயல்பில்லேனை ஆண்டது எற்றுக்கு என வினவியது.

(பொ - ரை.) அழகிய பராய்த்துறையானே! சிவலோகத்திற்கு இயல்புரிமையுடையாய்! திருப்பெருந்துறையில் வீற்றிருப்பவனே! நின்பால் மெய்யன்புடையராகி அரிய தவமாகிய கற்புக் கடன் பூண்டவரும், திருமாலும், திசைமுகனும், நெருப்பிலிட்ட மெழுகுபோல உருகும் உள்ளத்தையும் தசையற்ற என்பு மேனியையும் உடையவராய் நின்னையே நினைந்து வருவோரும், இத்தகைய ஏனைய நிலைகளை மேற்கொண்டவருமாகிய எத்தனையோ பலரும் நின் அருளைப் பெறுராய் நிற்கவும், என் சிந்தை பட்ட மரத்தினும் வலிதாகிய குற்றியை ஒக்கும்; என் கண் மரக்கண்ணை ஒக்கும்; செவியோ இரும்பினும் வலிதாகும் இத்தகைய சிந்தை முதலாயவற்றையுடைய என்னை இங்கே எதற்காக ஆண்டாய் எ-று

(வி - ரை.) பராய் - பட்டது. முருடு - மரத்தின் அடிக்குற்றி. பராய் மர முருடு; பராய் மரக்கண் என்க. வன்பாற்கண் வற்றிய மரத்தின் அடிக்குற்றியையும் அதன் கண்ணையும்போல என் சிந்தையும் கண்ணுமுள்ளன என்றார் என்க. உயிர் மரத்தின்அடியும் கண்ணும் மற்றதன் வளர்ச்சிக்குரியன. அது பட்டபோதே அவை அதற்குப் பயன்தருவன

வாகா. அடிக்குற்றி பணிக்கும் உதவாதென விலக்கப்பட்டது. இதனுல், தான் தனக்கும் தலைவனுக்கும் பயன்படாதிருத்தல் விளக்கப்பட்டது. இரும்பின் வலியதொரு பொருளால் ஆக்கப்பட்ட செவியே எனக்குச் செவியாக உள்ளது. இதனைன்றே,

" செவியின்ன தென்றறியேனே " (திருச்ச. 37.)

என்று ஓதியதூஉம் என்க. இதனை ஆண்டுமுரைத்தாம்.

தென்பராய்த்துறை என்பதையே குறித்துக்கொண்டு ஏனைய அடிகளின் முதலிரு சீர்களும் திரிபு கொண்டு பயின்று வந்தமையினுலே அப்பதியிலாதல், அப்பதியைத் தரிசித்த பின்னுதல் இப்பத்தினைப் பாடியருளியிருத்தல் வேண்டுமெனக் கருதற்குமிடனுண்டு. திருப்பெருந்துறையானுகத் தென்பராய்த்துறையில் காட்சி தந்தான் என்பதைப் " பராய்த்துறையாய் " எனவும் குணங்குறியுடையோனுகப் பின்னர்க் காட்சி தரவேண்டியமையைக் குறித்துச் " சிவலோகா " எனவும் குறிப்பிடடார் என்றலும் ஒன்று.

இதனுல், இம்மை மறுமைகளுக்குப் பயன்படாத என்னை ஏன் ஆண்டாய் என்று வினவியபடி. " எற்றினுக்கென்னும் " வினு, ஒரு பயனுமின்று என்னும் தன் துணிபுரைத்தலோடும், அஃதுண்டேல் நின்னுலே தான் அறியப்படத் தகுமென்னும் தன்னறியாமை காட்டலோடும், அங்ஙனமிருப்பின் அதனைச் சொல்லுவாயாக என்னும் ஏவலோடும், நின்னுலும் அது சொல்லற்கியலாது ; அஃதின்மைதலால் என்னும் முடிந்த முடிபோடும் பயின்று நின்றது.

**ஆட்டுத் தேவர்தம் விதிஒழித்து அன்பால்**
**ஐயனே என்றுன் அருள்வழி இருப்பேன்**
**நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே**
**நாத னேஉனைப் பிரிவுறு அருளைக்**
**காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்**
**காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்**
**சேட்டைத் தேவர்தம் தேவர் பிரானே**
**திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 5**

இது, முன்னர்ப் போலாது இன்னே நின் பிரியா அருளைச் செய்து கழல்காட்டிக் காயமாயத்தை நீக்கின், யான் முன்னர்ப் போல மாறுபடாது நீ அருளிய அருள்வழியே தவருது நிற்பேன் என அருளியது.

(பொ - ரை ) திருப்பெருந்துறை மேவிய சிவனே, (சத்திய லோகம், வைகுந்தம் முதலாய) பத நாடுகளில் உள்ளாராய பிரமன், மால் முதலியோராலும் நாடுதற்கு அரிதாகிய மெய்ப்பொருளே, தலைமைத் தேவனே, உன்னைப் பிரியாவாறு நின் திருவருளை

எனக்குக் காட்டி, நின்னுடைய திருவடிகள் இரண்டனையும் எனக்குக் காட்டி என்னுடல்மேல் எனக்குள்ள மயக்கத்தை நீக்கியருள்வாயாக (அங்ஙனம் செய்தியேல் யான் அத்தகைய நின்னருளால்) ஊழுக்கு அதிபதிகளாகிய பிரமன் முதலிய தேவர்களுடைய கட்டளையை நீக்கி நின்மேற் கொண்ட அன்பாலே (அப்பேருதவியைச் செய்த நின்னை மறவாது) ஐயனே என்று உன் பெயரைச் சொல்லி (நீ காட்டிய) அருள்வழியிலேயே (முன்போல மாறுபடாது) இருப்பேன் எ-று.

(வி - ரை.) ஆட்டுத்தேவர் - ஊழை நுகர்விக்கும் பால்வரைத் தெய்வங்களாய பிரமன் முதலியோர். நாடு - அண்டங்கள். சேட்டை - செய்கை; வேள்வி முதலாயினவென்க. அவற்றுக்குரிய தேவர் என்க. ஆட்டுத்தேவர் விதியொழித்தலாவது, யான் இன்னவாறு பிறந்து வளர்ந்து முடிவேன் என விதித்துள்ள விதியைக் கடத்தல். நின்மேல் வைத்த அன்பால் கடக்கலாகுமென்றபடி. என்றுரேனும் அவனருளே கடப்பிக்கும் எனக் கொள்க.

பிரியா அருள் காட்டலாவது, களவிற் கலப்பது. பிரியா அருளைக் களவென்றும் பிரிந்து செய்யும் அருளைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றிக் கூறுப. மற்றிதனைத் திருக்குறள், காமத்துப்பாலுக்குப் பரிமேலழகர் எழுதிய முன்னுரையானுமுணர்க.

முன்னர் ஆதியிற் காட்டிய புணர்ச்சி களவுப் புணர்ச்சி யெனினும், அது பின்னர்த் தில்லைக்கு வருகவெனக் கட்டளையிட்டமையால், அஃதுடம் போக்கிற்குமாகாது பெருந்திணைப்பாற்பட்டு நிற்றலின், அதனையும் விழையாது, களவுப் புணர்ச்சியையே விழைந்தவாறுயிற்று.

முன்னர்க் காட்டிய அருள் பிரிவுறச் செய்தமையால், இனிச் செய்யும் அருள் பிரிவுறு அருளாகல் வேண்டுமென இரந்தார்.

"நாதன்" என்றது தலைமகன் மேற்று. "ஐயன்" என்றது அருமைப்பாடு குறித்து நின்றது.

நின்னைப் பிரிந்து காயச் சுழலுட்பட்டு உழலுகின்றேன் என்றபடி. "நாட்டகத்தேவர் செய்கையுளானை" (சுந். திருக்கோ. 3) என்பதனுல் நாட்டுத்தேவர் இயல்புணர்க.

அறுக்கி லேன்உடல் துணிபடத் தீப்புக்கு
ஆர்கி லேன்திரு வருள்வகை அறியேன்
பொறுக்கி லேன்உடல் போக்கிடம் காணேன்
போற்றி போற்றிஎன் போர்விடைப் பாகா
இறக்கி லேன்உனைப் பிரிந்(து)இனி(து) இருக்க
என்செய் கேன்இது செய்கஎன்று அருளாய்
சிறைக்க ணேபுனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே 6

இஃது, என்னுடலைச் சிதைத்ததால் இறந்திலாத யான், நின்னைப் பிரிந்தும் இனிதாக இருத்தற்கு இது செய்குதி என்று எனக்கு அதனை அருளிச் செய்க என அவர் அருளியது.

(பொ - ரை.) வரம்பு வரையிலும் நீர் நிலைத்திருக்கும் வயல் சூழும் திருப்பெருந்துறைக்கண்ணே தங்கிவரும் சிவனே! வணக்கம் வணக்கம் என்று சொல்லுவோர் முன்னர் வெளிப்பட்டருளும் இடப வாகனத்தை யுடையவனே! நின் திருவருளைப் பெற்றுக்கொள்ளும் வகையை அறியேனும், அருள் பெறுதற்குக் கருவியாகாத இவ்வுடலொடு வாழ்தலைப் பொறுத்துக்கொள்ளும் மனமில்லேனும், அடைக்கலம் புகுமிடம் காணேனும், அவை காரணமாகத் தோன்றும் துன்பத்தால் இறத்தற்கு மனவலி கொள்ளாதேனும், இயல்பாகவே கழியாத உயிரைப் போக்க என் உடலைத் துண்டம்பட அறுக்கும் வலியிலேனும், தீயின்கண்ணே புகுந்து பொருந்தும் வலியிலேனுமாகிய யான், நின்னைப் பிரிந்தும் இனிதாக இருந்துவர வேறு என் செய்வேன்? நீயேனும் இதனைச் செய்வாயாக என்று சொல்லியருள்க எ - று.

(வி - ரை.) 'அருள்வகை அறியேன், உடல் பொறுக்கிலேன், போக்கிடங் காணேன், இறக்கிலேன், அறுக்கிலேன், ஆர்கிலேன் ஆகிய நான், உனைப் பிரிந்தினிதிருக்க என் செய்கேன்? இது செய்க என்றருளாய்' என வினைமுடிக்க.

இயல்பாகச் சாகவும், வலிந்து உயிர் கழிக்கவும் மாட்டாத யான், நின்னைப் பிரிந்து இனிதே இருந்துவருதற்கு என் செய்வேன் என்றபடி. உயிர் கழிக்காமையால் வருந்துகின்றேன். அங்ஙனம் வருந்துவதன்றி வேறென்ன செய்வேன் எனினும் ஒக்கும். எங்ஙனமேனும் உயிரை விடுத்து என் துயரை நீக்கி இன்புறுதலையா யான் செய்வேன் என்பதே கருத்தாகக் கொள்க.

"என் போர் விடைப்பாகா" என்றதற்கு எனக்கு உரிய போர்விடைப் பாகா எனக் கொள்ளலும் ஒன்று.

சிறையை நீர்நிலையாகக் கொண்டு, நீர்நிலையும் வயலும் சூழ்ந்த திருப்பெருந்துறை எனினும் பொருந்தும் இதனுல் சிறைக்கண் நிலைத்த நீர் வயலுட் பாய்தற்கு ஒரு கால்வாய்தான் வேண்டப்படும். அதுபோல் நின் அருளை யான் பெற்றுக்கொள்வதற்கும் ஒருவழிதான் வேண்டப்படும். அதுதான் யாது எனக் குறிப்பிடுமாறு அருளிச் செய்தாராகக் கொள்க.

**மாய னேமறி கடல்விடம் உண்ட**
**வான வாமணி கண்டத்(து)எம் அமுதே**
**நாயி னேன்உனை நினையவும் மாட்டேன்**
**நமச்சி வாயஎன்(று) உன்னடி பணியாப்**

பேயனாகிலும் பெருநெறி காட்டாய்
 பிறைகு லாம்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய னாகிநின்(று) அலறுவ(து) அழகோ
 திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

யான்தான் நின்னை நினைக்கவும், நின் பெயர் சொல்லவும் நின்னடி வணங்கவும் மாட்டாதவனாக உள்ளேன். நீ மாட்டுவையேல் யான் நினைத்தற்கும், நின் பெயர் சொல்லுதற்கும், நின்னடி பணிதற்கும் ஏற்றதொரு பெருவழியை எனக்குக் காட்டியருள்க என்றது.

(பொ - ரை ) திருப்பெருந்துறைக் கண்ணே பொருந்திய சிவனே! நின் திருக்குறிப்பை எம்மனோர்க்குப் புலப்படுத்தும் சூழ்ச்சியுடையவனே! மறிந்து வீழும் அலைகளையுடைய கடற்கண் எழுந்த நஞ்சினையுண்டமையால் அது கழுத்தின்கண்ணே நீல மணியின் அழகினைச் செய்யும் தேவனே! எமக்கு அமுதம் போன்றவனே! பிறைத் திங்கள் தங்கி விளங்கும் சடைக்கண்ணே தலைப் பாகை அணிந்தவனே! நின் திருவடிவத்தினை நெஞ்சால் தியானம் செய்யமாட்டேனும், 'நமச்சிவாய' என்று உருவேற்றி உன் திருவடியை வணங்காத பேயனும், நாயின் தன்மையுடையேனுமாகிய நான், நினக்குச் சேய்மைப்பட்டவனாய் நின்று அலறுகின்றேன். அங்ஙனம் யான் அலறுவது நினக்கு அழகாகுமோ? (ஆகாமையால் நீ என்னை அணுக்கனாக்கமாட்டுவையேல் நின்னை அணுகுதற்குரியதொரு) பெருநெறியைப் புலங்கொளச் செய்து அதன் வழியாக வந்து நின் திருவடியை யடையச் செய்வாயாக எ - று.

(வி - ரை.) குலா(வு)ம் - விளங்கும்; தங்கும். நஞ்சினை அமுதாகக் கொண்டமையாலும், எத்தனைத் தன்னை ஆண்டுகொண்ட பின்னும் தன்னை எத்தனை மயக்கி வருதலாலும் "மாயோன்" என அவனை அழைத்தார். சூழ்ச்சிக்காரன் என்றபடி. 'திருநீலகண்ட தேவா' என்றவாறு. நஞ்சுண்டும் சாகாமையாலும், தன்னை வாழச் செய்வதொரு மருந்தாக நிற்றலாலும் "அமுதே"யென அவனை அழைத்தார். இப்போதே அம் மருந்தை அருந்தாவிடில் முடிவேன் என்று குறிப்பிட்டவாறு.

நின்பால் யான் அணுகற்குரிய அம்மூன்று செயல்களும் என்னால் எளிதில் ஆற்றற்குரியனவாக இருந்தும் அவற்றையாற்றி நலம் பெற்றேனில்லை என்பார் " பேயனேன் " என்றார்.

உயர்ந்த உணவு உளவாகவும், இழிந்ததனையும் பேணியுண்ணும் நாய் போல, இறைவனே நின்னருளமுதம் இருப்பவும் மற்றதனையே உண்ணாது உலக நலனை உண்ண விழைந்தேன் என்றபடி.

நினக்கு உரிய நாயை உலகின்பமாகிய மலமுண்ணவிடுப்பது நினக்கு அழகாகாது ஆதலால் நின்னடித் தளையால் அதனைக் கட்டிவைப்பாயாக என்பது குறிப்பு.

போது சேர்அயன் பொருகடற் கிடந்தோன்
புரந்த ராதிகள் நிற்கமற்(று) என்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
குறிக்கொள்(க) என்றுநின் தொண்டரிற் கூட்டாய்
யாது செய்வ(து)என்(று) இருந்தனன் மருந்தே
அடிய னேன்இடர்ப் படுவதும் இனிதோ
சீத வார்புனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 8

இஃது, என் பேரிடர்ப்பாட்டால் இனி என்செய்வேன் என்று திகைக்கின்றேன். ஆதலால் இப்போதே என் குற்றத்தை நீக்கித் திருவடி காட்டி நின் தொண்டரைப்போல என்னையும் குறிக்கொள் வாயாக என எனக்குப் பணித்து என்னையும் கூட்டிக் கொள்வா யாக என்றருளியது

(பொ - ரை.) தண்ணியதாக ஒழுகாநிற்கும் நீர் பாய்ந்து தங்கும் வயல் சூழ்ந்த திருப்பெருந்துறைக்கண்ணே சென்று பொருந்திய சிவனே! என் பிறவிப் பிணி தீர்க்க என்னுள்ளே தானே புக்கிருக்கும் மருந்தே! தாமரை மலரில் உறைகின்ற நான் முகனும், அலைமோதுகின்ற பாற்கடற்கண்ணே துயின்று கிடந்தோ னாகிய திருமாலும், இந்திரனை முதலாகக் கொண்ட வானவரும் தத்தம் குறைவுகளை உணர்ந்துகொண்டிலராதலின், அவர் யாவரும் ஆங்காங்கே நிற்பாராக, நின்னைப் பிரிந்த யான் எதனைச் செய்து பின்னரும் நின்னைக் கூடலாகுமென்று கருதி இடர்ப்பட் டிருந்தேன். அங்ஙனம் யான் இடர்ப்படுவது எனக்கேயுமன்றி நினக்கும் இன்னாததாவதன்றி இனியதொன்றாகுமோ? ஆகாமை யால் என்னையும் நின் தொண்டரை ஆண்டவாறே குற்றங்களை இல்லாதழித்து ஒலிக்கின்ற கழலையணிந்த நின் திருவடிகளை யான் வணங்கும்படி காட்டி என்னையும் நின் அன்பருள் ஒருவனாகக் கூட்டிக்கொள்வாயாக எ - று.

(வி - ரை.) குறிக்கொள்ளுதல் - பாதுகாத்துக்கொள்ளுதல். கோது - குற்றம். மாட்டுதல் - அழித்தல். வார்தல் - ஒழுகுதல். கால்வாயின் வழி யாக ஒழுகிச் சென்று வயற்கண்ணே தங்கும் என்க.

நின்னொடு வதியும் தொண்டர்களை நோக்கி, 'நீயிர் இவனைக் குறிக்

கொள்மின்' என அவர்க்குக் கூறி என்னை அவர்பாற் கூட்டாய் என உரைத்தலும் ஒன்றும்.

நான்முகன் முதலாயினேர் தத்தம் பதங்களே நிலைபெறுமாறு நின்னை வாழ்த்துவராதலின், அவரனைவரும ஆங்காங்கே அவ்வவர் பேணியவாறே நிலைப்பாராக, யான் பாழ்த்த பிறப்பறுப்பான் நின்னைப் பரவுவனாதலின் என்னைக் கூட்டாய் என்றார்.

"யாது செயவதென்று இருந்தனன் மருந்தே" என்பதனால், தில்லைக்கு வா வென இறைவன் அருளிச் செய்த காலையில் ாதருளிச் செய்யப்பட்டது என்றல் பொருந்தாதென்பதும், பிரிந்துபோனவன் இப்போது தன் எதிர்ப்பட்டான் என்பதும், "மருந்தே" என்றதனால் அருள்பெறுங் காலம் அணித்தாகும் என்பதும் பெறப்பட்டன.

"வார்புனல் நிலவிய வயல்" என்னும் அடையால், அடிகள்மாட்டு இறைவனருள் பாய்தல் குறிக்கப்பட்டதென்க.

**ஞாலம் இந்திரன் நான்முகன் வானவர்**
**நிற்க மற்(று)எனை நயந்(து)இனி(து) ஆண்டாய்**
**காலன் ஆருயிர் கொண்டபூங் கழலாய்**
**கங்கை யாய்அங்கி தங்கிய கையால்**
**மாலும் ஓலமிட்(டு) அலறும்அம் மலர்க்கே**
**மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்**
**சேலும் நீலமும் நிலவிய வயல்சூழ்**
**திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 9**

திருமால் செருக்கொடு புகுந்து தேடியும் காணப்பெறாது மனம் அயர்ந்து செருக்கற்று அன்பினால் ஓலமிட்டலறிய திருவடிக்கே, செருக்கற்று ஓலமிட்டு அலறும் என்னையும் வந்து அடைக்கலம் புகுமாறு கட்டளை புரிவாயாக என அருளியது.

(பொ - ரை) சேல்மீன்களும், பூக்கும் குவளையும் விளங்கா நிற்கும் வயல் சூழ்ந்த திருப்பெருந்துறைக்கண்ணே வீற்றிருக்கின்ற சிவனே! வானுலகத்துப் பெருந்தேவர்களாகிய இந்திரனும் நான்முகனும் ஏனைத் தேவர்களும் நின்னருளைப் பெறாது நிற்கவும், இவ்வுலகிலே வந்து புக்கு என்னை விரும்பி ஆண்டு கொண்டவனே! அடியானுக்குத் தீங்கு இயற்றிய இயமனுடைய அரிய உயிரைக் கவர்ந்துகொண்ட சித்திர வேலையாற் பொலிவுபெற்ற வீரக்கழலைக் கட்டிய திருவடியை யுடையவனே! சடைக்கண்ணே புகுந்து கரந்த கங்கையை யுடையவனே! தீ தங்கிய கையனே! திருமால் தான் கண்டு கொள்ளாமையால் மனம் சோர்ந்து ஓவென்று ஓலமிட்

டலறும் நின் மலர்த் திருவடிகட்கு, மரக்கண்களைக் கொண்ட என்னையும் வருமாறு ஏவுதலைச் செய்வாயாக எ - று.

(வி - ரை.) ஏரியினின்று கால்வாய் வழியாக நீர் வந்து பாய்தலால் வறந்திருந்த வயற்கண்ணே சேலும் நீலமும் விளங்கியவாறே, அன்று நின் அருளைப் பெருது வற்றியிருந்த என் சிந்தையும், ஒளிமழுங்கிய கண் களும் நின்னருளால், நின் திருவடியைப் பதியப் பெற்றுள்ளமையாலும், மற்று அதனைக் காணப் பெற்றமையாலும் இன்று செவ்வி பெற்று நிலாவு கின்றன என விரிக்க.

கிடைத்தற்கு அரிய அருளை நின் இச்சையினுலேயே பெற்றுக்கொண்ட படியால், செருக்குற்றுத் தீநெறிப் புக்கு, நின்னுல் அலைக்கப்பெற்றுச் செருக் கடங்கி நின் கைப்பட்டு நிற்கின்றேன் என்னும் ஒரு சார்புப் பொருளும், இத்திருப்பாட்டிலே அமைக்கப்பெற்ற பெயர்களால் போந்தது.

தன்கண் அவன் திருவடிகளைக் கண்டு நெஞ்சங்கொள்ளச் செய்யாமை யால், மரக்கண்ணெனை அதனை இகழ்ந்தார் என்க.

அளித்து வந்(து)எனக்(கு) ஆவஎன் றருளி
அச்சம் தீர்த்தநின் அருட்பெருங் கடலுள்
திளைத்தும் தேக்கியும் பருகியும் உருகேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவன் அறியா
வான வாமலை மாதொரு பாகா
களிப்(பு)எ லாம்மிகக் கலங்கிடு கின்றேன்
கயிலை மாமலை மேவிய கடலே. 10

இது, நின்னருளை நுகர்ந்திருந்தும் நின் பிரிவிற்கு உருகாமை யால், நின்னுல் அன்று யான் பெற்ற மனக்களிப்பெல்லாம் இன்று குழம்புகின்றேன் என அவர் கூறியருளியது.

(பொ - ரை.) திருப்பெருந்துறை மேவிய சிவனே ! சங்கினைக் கைக்கொண்ட திருமாலொடு தாமரைமலர் மேவிய நான்முகனும் அறியவொண்ணுத் தேவனே ! மலைமகளை ஒருபாகத்தே கொண்ட வனே ! திருக்கயிலை மலைக்கண்ணே இருக்கப்பெற்ற அருட்கடலே ! ஆ ! ஆ வென்று என்பொருட்டு இரங்கி அருள்செய்து அச்சம் அகற்றிய நின்னருட் பெருங்கடலுள்ளே மூழ்கியும், என் சிந்தை யெல்லாம் அதன் தன்மையை நிறைவித்தும், வாயாற் பருகியும், அன்று நீ பிரிந்த பிரிவு குறித்து இன்னமும் மனமுருகாத நான், அதனுல் நின்பாற் பெற்ற மனக்களிப்பெல்லாம் இன்று குழம்பிப்

போகப் பெற்றேன் (ஆதலால் இனி நின்மேல் மெய்யன்பு பூண்டு வருவேன்) எ - று.

(வி - ரை.) அளித்து - இரங்கி; "ஆவ" என்பது இரங்கற் குறிப்பு. செய்ந்நன்றி போற்றுமையால் வரப்பெறுங் கேட்டினை இஃதெனத் தெளிந்து கொண்டேன்; இனி மெய்யன்பு பூண்டு வருவேன் என்றபடி.

கடலில் மலையிலிருப்பதன்றி மலைக்கண் கடலிருப்பதில்லையாகவும் அடிகள் மலைக்கண்ணிருக்கும் இறைவன் பேரருளை வியத்தற் பொருட்டுக் கடல் என்றாரென்க.

நின்னருளை வருந்திப் பெற்றிலேனாதலால், எளிதெனச் செருக்குற்றுக் களிப்பெலாம் கலக்கமாகப் பெறறேன். இக்கலக்கம் மற்றதனை அரிதெனப் புலப்படுத்தியபடியால், செருக்குற்று அதனை இழவேன் என்றார்.

அரியையேனும் அன்னையை இடங்கொண்டாயாகலின் அருளும் நனி யுடையை எனக் குறித்தவாறு. அத்துணிபால் "களிப்பெலாம் மிகக் கலங் [illegible]" என்றார்.

திருச்சிற்றம்பலம்

# அடைக்கலப்பத்து

"அடைக்கலப்பத்து" என்பது அடிகள் தாம் எவ்விதச் செயலும் ஆற்ற வலியிழந்தாராய் "இறைவனே நான் நின் அடைக்கலப் பொருள் ஆவேன்" எனக் கூறியருளிய பத்துத் திருப்பாட்டுக் களைக் கொண்ட பகுதி.

அடைக்கலம் புகுதல்தானும் எளியதொரு செயலுமன்றே; எத்துணை இன்னல் நேரினும் அற்றன்றி இன்பமே சூழினும் அவற்றை எல்லாம் தலைமகனுக்கே உரியனவாம் என ஒப்படைத்து தமக்கெனப் பிறிதொன்றிலராய், தாமுமே அவனுக்கு உரியர் என உட்கொண்டு வாளா இருப்பது அடைக்கலம் புக்கார்க்கு இயல் பாகும் அரிய பண்பாம் இஃது பேரின்னலுற்றார்க்கே ஆற்றாமை காரணமாக எய்துவதொன்றாகும்.

"பத்து" என்பது முதற்கண்ணே பத்துத் திருப் பாட்டுக்களுக்கும் பின்னர் நூற் பகுதிக்கும் பெயராக அமைந்து நின்றது.

'இன்னுஞ் செத்திலேன், விழித்திருந்துள்ளக் இழந்தேன்,' (செத். 1.) 'செத்திடப்பணியாய்' (செத். 2) 'வந்திடப்பணியாய்' (செத். 3) என்று இன்னவாறு உளம் நைந்து, சாவதேமேல் எனக் கருதி அதற்கும் வழி காணாமையால் இடர்ப்பாடுற்ற அடிகள், அவன்பால் "மலரடிக்கே கூவிடுவாய் கும்பிக்கே யிடுவாய், நின்குறிப்பறியேன்" (அடை. 8) என அடைக்கலம் புகுதலை மேற்கொண்டமையின் இது மேலைப் பகுதியொடு இயைபுடைத்தாயிற்று.

இப்பகுதி

I. பிறவி அறுத்துப் பிச்சேற்றிக் காமம் கெடுத்து எனக்கு அருள் செய்வோய், அடியேன் நின் அடைக்கலம் என்று புகுதலும் (2, 3, 7),

II. காமத்தால் இடர்ப்படுவது கூறி அடிகள் அடைக்கலம் புகுதலும் (5, 6),

III. அடியவர் ஆக்கமும் தம் கேடும் சினந்து கூறி அவனையே அடைக்கலமாகக் கொண்டு புகுதலும் (4, 9, 1),

IV. தமது முடிவுபேறு தம்மால் அறிதற்கு இயலாதிருத்தல் கூறி அவனையே அடைக்கலமாகக் கொண்டு புகுதலும் (8),

V. தாம் அருளின்வழிச் செல்லத் தமக்கு இதனையும் செய்ய

வேண்டும் எனக் கூறி அடைக்கலம் புகுதலும் (10) என ஐந்து பிரிவுகளையுடையது

"எனக்கு இவை செய்தற்கென ஆண்டுகொண்டவனே, யானோ காமத்தினால் இடருறுகின்றேன், நின் அன்பரோ அன்பு மிக்கோராய் இடர்க்கடல் கடந்து நின் திருவடியை எய்தினர்; யானோ அது செய்யமாட்டேனாய்க் காமத்தால் உழலா நின்றேன்; என் முடிவு யாதாகுமோ என்பதும் அறியேன், நின் அருள் நுகர்ச்சியை யான் நுகரமாட்டாது விக்குகின்றேன். ஆதலால் அன்பின் ஐந்திணை நெறியாகிய தண்ணீரையும் எனக்கு உதவி நின் இன்பத்தினை என்னை நுகரச் செய்தல் வேண்டும்." என்பதுவே கூறியருளினர் என்பது இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவாம்.

இனி நூற்பொருள் அடைவு வருமாறு :

1 இயற்கைப் பொருளடைவிலே எட்டாவதாகிய "பழுத்த மனத்து அன்பர் திருவடி சேர்ந்து உடன்போயினர், யான் உன் அடைக்கலம்" என்பது உடன்போகாமைக்குக் காரணமாக இருந்தன, உடலிழிவும் மன அழுக்குமே என உணர்ந்து அடைக்கலம் புகும் சிறப்பியையபால் ஈண்டு முதலாவதாக அமைத்தருளப் பட்டது.

2. இயற்கைப் பொருளடைவிலே முதலாவதாகிய "சிறுமை பொறுப்பவன் பிறவியை வேர் அறுப்பவன்" என்பது, தம் குறைவு பாட்டினைப் பொறுத்தருள் செய்யும் பெருமையுடையவன் எனக்கொண்டு அவன்பால் அடைக்கலம் புகும் இயைபால் ஈண்டு இரண்டாவதாக அமைத்தருளப்பட்டது.

3. இயற்கைப் பொருளடைவிலே இரண்டாவதாகிய "பிறவி வேரறுத்துப் பெரும் பிச்சுத் தரும் பெருமான், என் மனத்தினுள்ளே வரும் பெருமான்" என்பது அங்ஙனம் சிறுமை பொறுப்பவன் இப்போது பித்தேற்றி மனத்துள்ளே வந்துள்ளான் எனக் கருதிய இயைபால் ஈண்டு மூன்றாவதாக அமைத்தருளப்பட்டது.

4. இயற்கைப் பொருளடைவிலே ஆறாவதாகிய "அன்பர் நின் திருவடி பற்றிக் கரை ஏறினர் நீ ஆளற்கு இருந்தும் மங்கையர் காமத்தால் எற்றுண்ணப்படுகின்றேன்" என்பது முன்னரே அவரைப் போலவே யானும் உடன்போகாமையால் வந்த கேடு இதுவாகும் என்னும் இயைபால் ஈண்டு நான்காவதாக அமைத்தருளப்பட்டது.

5. இயற்கைப் பொருளடைவிலே நான்காவதாகிய "பெண்டிர் சுழலுட்பட்டு, உன் திறம் மறந்து இருள்புரி யாக்கையிற் கிடந்து எய்த்தனன்" என்பது காமத்தால் இங்ஙனம் இடர்ப்படாது நீ எனக்கு அருள்புரிதல் வேண்டும் எனக் கூறியருளிய இயைபால் ஈண்டு ஐந்தாவதாக அமைத்தருளப்பட்டது.

6 இயற்கைப் பொருளடைவிலே "காமத்தால் தளர்ந்தேன், எப்போது வந்து எந்நாள் வணங்குவன்" என்பது இத்தகையேனுக்கு இனி உய்வில்லைபோலும் எனக் குறிப்பித்த இயைபால் ஈண்டு ஆறுவதாக அமைத்தருளப்பட்டது.

7. இயற்கைப் பொருளடைவிலே மூன்றுவதாகிய "காமத்தால் அலைவேன் உள்ளே புகுந்து என் கண்ணில் அமுதாக ஊறி இனிமை செய்து என் பிழைக்கு இரங்குவோய்" என்பது என் பிழை பொறுத்துக் காட்சி அளித்து ஆள்வதற்குரியை நீ ஆதலாலும் வேறு பிறர் இன்மையாலும் பின்னும் பின்னும் நீயே எனக்குப் புகலாவாய் எனக் கருதியருளிய இயைபால் ஈண்டு ஏழாவதாக அமைத்தருளப்பட்டது.

8. இயற்கைப் பொருளடைவிலே ஒன்பதாவதாகிய "நின் திருக்குறிப்பறியேன் என் உள்ளம் உலகியலுள் விரியாநின்றது ஆவ கெடுவேன்" என்பது அவன்பால் இப்போது பின்னும் அடைக்கலம் புகுதற்குரிய காரணம் இதுவாகும் எனப் புலப்படுத்தும் இயைபால் ஈண்டு எட்டாவதாக அமைத்தருளப் பட்டது

9. இயற்கைப் பொருளடைவிலே ஏழாவதாகிய "நின் அன்பர் கழற்கீழ் வந்து குறைவு அறியாச் செல்வம் உற்றுர், யானே பத்தி நெறியால் நின்னை அறிந்து கொள்ளாது உழலாநின்றேன்" என்பது பயனைக் கருதி உழலாநின்றேனே அன்றி அதனைப் பெறுமாறு முயன்றிலேன் எனக் கருதியருளிய இயைபால் ஈண்டு ஒன்பதாவதாக அமைத்தருளப்பட்டது.

10 இயற்கைப் பொருள் அடைவிலே பத்தாவதாகிய "உன் அருளமுதினை விதியின்மையால் விக்கினேன் அருள் நீர் தருக" என்பது நின் நுகர்ச்சியை யான் நுகர எனக் கேற்றவாறு அருளுக எனக் கூறிய இயைபால் ஈண்டும் பத்தாவதாக அமைத்தருளப் பட்டது.

இவற்றைப் பின்வரும் அட்டவணையால் தெளிக :

| பொருட்பிரிவு | உட்பிரிவு | இயற்கைப் பொருள் அடைவு | நூற்பா எண் |
|---|---|---|---|
| I | (i) | 1 | 2 |
| | (ii) | 2 | 3 |
| | (iii) | 3 | 7 |
| II | (i) | 4 | 5 |
| | (ii) | 5 | 6 |
| III | (i) | 6 | 4 |
| | (ii) | 7 | 9 |
| | (iii) | 8 | 1 |
| IV | | 9 | 8 |
| V | | 10 | 10 |

இஃது திருப்பெருந்துறையில் அருளிச்செய்த தென்ப.

# பக்குவ நிர்ணயம்

## கலவைப் பாட்டு

திருச்சிற்றம்பலம்

செழுக்கம லத்திரள் அனநின் சேவடி சேர்ந்(து)அமைந்த
பழுத்தமனத்(து) அடியருடன் போயினர்யான் பாவியேன்
புழுக்கண் உடைப்புன் குரம்பைப்பொல் லாக்கல்வி ஞானமிலா
அழுக்கு மனத்(து)அடி யேன்உடை யாய்உன் அடைக்கலமே 1

இஃது, அன்பர் ஆக்கம் பெற்றது அவர்க்கு அமைந்த மனச் செவ்வியால் என்றும், தாம் பெறாதது தம் மனக் குறைபாட்டினால் என்றும் கூறி அவர் ஆக்கம்போன்று தாமும் பெற்றுக்கோடற் பொருட்டு அடிகள் இறைவன்பால் அடைக்கலம் என்றருளியது

(பொ - ரை.) என்னை அடிமைப் பொருளாக உடையவனே!,

செழுமைத்தாகிய திரண்ட தாமரை மலரினை ஒத்த உன்னுடைய செவ்விதாகிய திருவடியைச் சேரப் பெற்றமைந்த கனிந்த உள்ளத் தினையுடைய நின்னன்பர் (அன்றே) உன்னுடன் வீட்டுலகிற்குச் சென்றனர். அங்ஙனம் உடன்போகாத பாவியேனும், புழுக்களுக் கிடமாகிய புல்லியதாகிய உடம்பினையும், கல்வி அறிவில்லாத தீய அழுக்கு மனத்தையும் உடைய நின்னடியேனுமாகிய யான் உன் அடைக்கலப் பொருளாவேன் எ - று.

(வி - ரை.) கனிவு வாராமைக்குக் காரணங்களாக இருப்பன, என் உடலும் மனமுமாம் என்றபடி. "பொல்லா மனம்," கல்வி ஞானமில்லா மனம், அழுக்கு மனமென்க. இவற்றுள் ஒன்றே அமையுமென்க. "அழுக்கு" என்றது, காமம் வெகுளி மயக்கங்களாகிய மனமாசுகளை. கண் - இடம். யான் உடன்வராதது நின்னருட் குறைவான் அன்று, என் குறையால் என்றபடி. நின் திருவடி யின்பம் விழையாது இவ்வுலகியல் இன்பம் விழைந்த மனமுடையேன். கல்வியறிவால் மாசு நீங்கித் தூய்மைப் படாமையால் பொல்லா மனத்தேன் ஆயினேன் என்க. அடைக்கலப் பொருளைச் சிதைவுறுது காத்துவருக என்றும் அறிவுறுத்தியருளி ஞுருமாம்.

வெறுப்பன வேசெய்யும் என்சிறு மையைநின் பெருமையினல்
பொறுப்பவ னேஅராப் பூண்பவ னேபொங்கு கங்கைசடைச்
செறுப்பவ னேநின் திருவரு ளால்என் பிறவியைவேர்
அறுப்பவ னேஉடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 2

இஃது, என் பிழை பொறுக்கும் பெருமையனே, பிறவி வேர் அறுப்பவனே, என அவனை அழைத்து யான் உன் அடைக் கலம் என்றருளியது.

(பொ - ரை ) முதல்வனே! வெறுக்கத் தக்கவற்றைச் செய்யும் என்னுடைய குறையை உன்னுடைய பெருமைப் பண்பால் பொறுத்து வருவோனே! பாம்பினை அணிகலனுகப் பூண்பவனே! பொங்கி வருகின்ற கங்கையைச் சடைக்கண்ணே அமையுமாறு அடக்குவோனே! உன்னுடைய திருவருளால் என்னுடைய பிறவியின் மூலத்தைக் களைந்து வருவோனே! அடியேன் உன்னடைக் கலப்பொருள் ஆவேன் எ - று.

(வி - ரை.) பூணத் தகாத அராவைப் பூண்டாங்கு கொள்ளத் தகாத என்னையும் அடிமைகொண்டு காத்து வருகவென்பதும், வெகுண்டு வந்த கங்கையை அடக்கியாங்கு என்னையும் அடக்கியாள்க என்பதும் புலப்பட வைத்தருளினர் என்க.

பிழை பொறுத்தற்கு அராப் பூணலும், பிறவியறுத்தற்குக் கங்கையைச் சடைக்கண்ணே செறுத்தலும் உவமங்களாயின.

பெரும்பெரு மான்என் பிறவியை வேர்அறுத் துப்பெரும்பிச்சுத்
தரும்பெரு மான்சது ரப்பெரு மான்என் மனத்தின்உள்ளே
வரும்பெரு மான்மல ரோன்நெடு மால்அறி யாமல்நின்ற
அரும்பெரு மான்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 3

இஃது, என் பிறவி கெடுத்துப் பிச்சேற்றி என்னுள்ளே வரும் பெருமானே, யான் உன் அடைக்கலமென்றருளியது.

(பொ - ரை) எல்லாப் பொருளேயும் உடையவனே! பெருமைப் பண்புடையவனே! என் பிறவியை வேரறுத்துப் பெரிதாகிய பித்தினை என்பால் கொடுக்கும் பெருமானே! திறமையுடைய பெருமானே! என் மனத்துள்ளே வரும் பெருமானே! தாமரை மலர்க்கண்ணுறையும் நான்முகனும் திருமாலும் அறியாவாறு ஒளிப்பிழம்பாய் நிலைபெற்ற அரியனாகிய பெருமானே! அடியேனாகிய யான் உன் அடைக்கலப் பொருளாவேன் எ - று.

(வி - ரை.) எல்லாவற்றையும் தனக்கேயுடையவனாகிய என் சிறுமை பொறுக்கும் பெறுமைப் பண்புள்ளவனாய், என் பிறவியைக் கெடுத்துப் பெரும் பித்தனாக என்னை ஆக்கித் தன்னுடைய சதுரப்பாட்டால் என்னுள்ளே வருவானாகி, அயன் மாலறியாச் சோதி வடிவாக என் முன்னர்த் தோன்றுநின்றான். யான் உளங்கொளற்கு இயலாதேனாகி, ஒன்றும் செய்ய அறியேனாய், அவனேயே அடைக்கலம் புகுமிடமாகக் கொண்டு, அவன்பாற் பின்னும் புகுந்தேன் என்பது இதனால் விளங்கக் கிடந்ததென்க.

நான்முகனும் திருமாலும் என்பவரால் அறியப்படாத பண்பு கடந்த திருமேனி உடையனாகிய அரும்பொருளும், பெரியோனுமாகிய இவன் என் பிறவி வேரறுத்துப் பிச்சேற்றிய சதுரப்பாடுடையனாகி என்னுள்ளே வந்து மன்னுவான் என்றலும் ஒன்று.

அவர் அறியாமற் 'கரந்தான்' என்னாது "நின்ற" என்று கூறிய சொற்போக்குச் சுவைத்து இன்புறற்பாலது.

பெருமையிற் பெரியோன், பிச்சுத் தருதலிற் பெரியோன், சதுரப்பாட்டிற் பெரியோன், மனத்துள்ளே வருவதிற் பெரியோன், இருவர் அறியாமல் நிற்பதில் அரிய பெரியோன், அவன் எல்லாமுடையவன் என்றபடி.

பொழிகின்ற துன்பப் புயல்வெள்ளத்
தில்நின் கழற்புணைகொண்டு
இழிகின்ற அன்பர்கள் ஏறினர்
வான்யான் இடர்க்கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த் திரைபொரக்
காமச் சுற(வு) எதிர
அழிகின்றனன்உடை யாய்
அடி யேன்உன் அடைக்கலமே. 4

இது, துன்பத்தின்கண்ணே இழிகின்ற நின் மெய்யன்பர்கள் நின் கழலைப் புணையாகக் கொண்டமையால் வான்கரை ஏறினர். யானோ அவ்வெள்ளக் கடற்சுழிவழியே மங்கையரால் ஏவப்பட்டுக் காமத்தால் எற்றப்பட்டு அழிகின்றேன். அத்தகையேன் நின் அடைக்கலப் பொருளாவேன் என்றருளியது.

(பொ - ரை) எல்லாவற்றையும் உன்னுள் உடையவனே! பிறவியாகிய புயல் பொழிகின்ற துன்பமாகிய வெள்ளத்தில் இழிந்து செல்கின்ற நின் அன்பர்கள் நின் திருவடியாகிய புணையைத் துணை யாகப் பற்றிக்கொண்டு வீடு பேறாகிய கரைக்கு ஏறினர் யானோ அப்புணையைப் பற்றிக்கொள்ளாது அத்துன்ப வெள்ளமாகிய கடற்கண்ணே மாதர்களாகிய அலை வீசுதலால் உண்டாகிய சுழி வழியே சென்று ஆங்கெழுந்த ஆசையாகிய சுறுமீன்கள் தாக்க அத்தாக்குதலால் அழிகின்றேன் அத்தகைய அடியேன் நின் அடைக்கலப் பொருளாவேன் எ - று.

(வி - ரை.) பிறவியாகிய புயல், அது பொழிகின்ற துன்பவெள்ளம்; அவ்வெள்ளத்தின் நிலையாகிய இடர்க்கடல், அக்கடற்கண்ணே மாதராகிய திரை பொர வுண்டாகிய சுழி; அச்சுழியுள் காமமாகிய சுறவு, அப்புயல் பொழிந்த வெள்ளம் நிறைந்த கடற்கண்ணே சுழியின் வழிச்சென்று சுறவின் தாக்குதலால் அழிகின்றேன் என்றபடி.

கழற்புணையைப் பற்றிக்கொண்டமையால் எய்திய ஆக்கமும், அதனைக் கைவிட்டமையால் எய்திய கேடும் உடன்கூறப்பட்டன. அன்பு உண்மையாற் பற்றுதலும், அஃதின்மையாற் பறறுமையும் நேர்ந்தன என்க. ஆதலால் இவ்விடர்ப்பாடு என்னாலே எனக்கு நேர்ந்தது என்றவாறு.

**சுருள்புரி கூழையர் சூழலுள் பட்டுஉன் திறம்மறந்(து) இங்(கு)**
**இருள்புரி யாக்கையி லேகிடந்(து) எய்த்தனன் மைத்தடங்கண்**
**வெருளபுரி மானன்ன நோக்கிதன் பங்கவிண் ணோர்பெருமான்**
**அருள்புரி யாய்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 5**

இது, மங்கையர் காமத்தால் யாக்கை வலைப்பட்டு இளைத்தேன். ஆதலால் அருள்புரிக, யான் நின் அடைக்கலம் என்றருளியது.

(பொ - ரை) எல்லாவற்றையும் உடையவனே! வெருட்சி புரிகின்ற மான் நோக்கினை ஒத்த நோக்கினை உடையவளாகிய உமையம்மையை இடப்பாகத்தே கொண்டவனே! வானவர் பெருமானே! சுருளுந்தலையுடைய கூந்தலினையுடைய மகளிரது மை பூசிய அகன்ற கண்ணின் சூழலுட்பட்டு, உன் வரலாற்றினை மறந்து இவ்வுலகிலே அறியாமையை வளர்க்கின்ற யாக்கை வலைக்

குள்ளே அகப்பட்டுச் செயலற்றுக் கிடந்து இளைத்துப் போனவ ளுகிய உன்னடியேன் உனக்கு அடைக்கலப் பொருளாவேன் எ - று.

(வி - ரை ) 'கண்ணுல் வெருளுதலைப் புரிகின்ற மான்போல் நோக்கி' என்று இயைத்தலும் ஒன்று. உமையைப் பங்கிற் கொண்டமை எல்லாவுயிர் களையும் காத்தற் பொருட்டென்க. விண்ணோர் பெருமாளுக வீற்றிருந்து அவரைக் காத்து வரும் நீ, மண்ணோருள் இழிந்த என்னைக் காவாது விடுதல் இழிவுடைத்து என்றபடி முடி, கொண்டை, பனிச்சை, சொருக்கு, சுருள் என்பன மகளிர் ஐவகை மயிர்முடிகளாகும். சூழல் - சூழ்ச்சி. இருள் - அறியாமை.

மாழைமைப் பாவிய கண்ணியர் வன்மத்(து) இடஉடைந்து
தாழியைப் பாவு தயிர்போல் தளர்ந்தேன் தடமலர்த்தாள்
வாழிஎப் போதுவந்(து) எந்நாள் வந்து வல்வினையேன்
ஆழிஅப் பாஉடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே 6

இது, காமத்தால் தளர்ந்த யான் எந்தப் பருவத்திலே எந் நாளில் உன்பால் வந்து உன்னை வணங்குவேன் என்னும் ஆசையை யுடைய யான் நின் அடைக்கலப் பொருளாவேன் என்றருளியது

(பொ - ரை ) உடையவனே! அறமாகிய கடலையுடைய அப்பனே! மாம்பிஞ்சின் பிளவினை ஒத்த மை பரவிய கண்களை யுடைய மகளிர்களினுல், வலிதாகிய மத்தானது கடைந்திடத் தன் கட்டுடைந்து தாழிக்கண்ணே பரவாநிற்கும் தயிரேபோலத் தாக் குண்டு, கட்டு நெகிழ்ந்து பரந்த மனத்தினேனுகிய வலிதாகிய தீவினையுடையேனும், அகன்ற மலர்போன்ற நின் திருவடியை, எப்பருவத்திலே எந்நாளிலே வந்து சார்ந்து வணங்குவேன் என்னும் நினைவினையுடையேனுமாகிய யான் நின் அடைக்கலப் பொருளாவேன் எ - று.

(வி - ரை.) கண்ணியர் என்ற இலேசினுல், அவர் நோக்கால் மன முடைந்தமை பெற்றும். தாழியை - தாழிக்கண்; உருபுமயக்கம்; தளர்ந் தேன் - மனங்கட்டுவிட்டேன். எந்நாள், எப்போது எனலுமாம். ஒரு நாளேனும் இனிப் பொறுத்தற்கரிது என்பது இதனுற் பெறப்படும். வாழி, அசை. எனக்கு அருளிச்செய்யவேண்டிய திருவடி அருளாதாயினும் அது வாழ்கவென வாழ்த்தியவாறுமாம். ஆழியப்பன் - அறவாழியந்தணன்.

"ஆழியப்பா" என்றுர்,
"ஊழி யந்தத்தி லொலிகட லோட்டத்தில் வுலகங்க ளவைமூட
ஆழி யெந்தையென் றமரர்கள் சரண்புக."
2-ம் திருமு. : சிராமலைப்பதி. 6.)

ஊழிக் காலத்தின் முடிவிலே இவ்வுலகங்களாகியவை பிரளய வெள்ளத்தில் அமிழ்ந்த அப்போது அமரர்கள் 'அப்பிரளய வெள்ளத்தாளுகிய அப்பனே' எனும பொருள் விரித்தாங்கு இயையக் கூட்டிக்கொள்க.

ஆயிழில் அமரரைக் காத்தவாறு என்னையும் பிறவி ஆழியில் காத்தருள்க என்ற வாறும்.

நின்றாற் கடையப்படின் யான் நினக்கு உரியேனுகி வீடுபேற்றினைப் பெறுவேன். அஃதன்றி, மகளிராற் கடையப்படின் அவரடிகளில் வீழ்ந்து நரகிடைப் புகுவேன். எனவே, என்னை நினக்கு உரியனுக ஆக்கிக்கொள்க என்றார் என்பது குறிப்பு.

**மின்கணினுர் நுடங்கும் இடையார் வெகுளி வலையில் அகப்பட்**
**புன்கணனுய்ப் புரள்வேனைப் புரளாமற் புகுந்தருளி [டுப்**
**என்கணி லேஅமுது ஊறித்தித் தித்(து)என் பிழைக்குஇரங்கும்**
**அங்கண னேஉடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 7**

இஃது, என்னை மங்கையர்பால் நின்று நீக்கி என்னின் அமுதூற இனிமை செய்து என் பிழை பொறுத்து இரங்கும் அங்கணனே! யான் நின் அடைக்கலப் பொருளாவேன் என்று அருளியது.

(பொ - ரை.) உடையவனே! மின்னுகின்ற கண்ணையுடையவரும், நுடங்குகின்ற இடையையுடையவரும் ஆகிய மகளிருடைய சினமாகிய வலைக்கண் அகப்பட்டுத் துன்பமுடையவனுய் நிலை மாறுவேனை அங்ஙனம் நிலைமாறுபடாமல் என்னுள்ளே புகுந்து என்பால் அருளமுதம் ஊற்றெடுத்து இனிமை செய்ய என் பிழையால் யான்பட்ட துயர் கருதி இரக்கங்கொள்ளும் அழகிய கண்ணையுடையவனே! அடியேனுகிய யான் உன் அடைக்கலப் பொருளாவேன் எ - று.

(வி - ரை.) புரளுதல் - நிலை மாறுபடுதல். முன்னர் இன்பம் என்று கருதியவை பின்னர்த் துன்பமென மாறுபாடடைதல். இங்ஙனமாகிய எனக்கு அங்ஙனமாகி அருள்செய்ய வேண்டிய நீ இங்ஙனம் வாளாவிருக்கின்றனை என்பது குறிப்பு. "கண்ணிற்கு அணிகலம் கண்ணேட்டம்" (குறள் : 585.) ஆகலின் "அங்கணன்" என்றார்.

'குறிப்பிட்டபோழ்து வந்திலை யான் விழைந்த ஆடை அணிகலன்களும் தந்திலை. அம்மட்டுமன்றிப் பிற மகளிர்பாலும் சென்று காமம் நுகர்ந்தனை. இங்ஙனமாகவும் ஏனே இங்கு வந்தனை?' என்றாங்கு மகளிர்க்கு வெகுளி தோன்றும் என்க. அதனையும் அறியமாட்டாது கொண்டு புரள்வேனுயினேன் என்றார் என்க.

மாவடு வகிர்அன்ன கண்ணிபங் காநின் மலரடிக்கே
கூவிடு வாய்கும்பிக் கேஇடு வாய்நின் குறிப்பறியேன்
பாஇடை ஆடு குழல்போல் கரந்து பரந்ததுள்ளம்
ஆகெடு வேன்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 8

இஃது, எனக்கு நீ இதனைச் செய்வாய் என்னும் குறிப்பறியாது அதனுள் சென்று என்னுள்ளம் பரவுகின்றது. யான் நின் அடைக்கலம் என்றருளியது

(பொ - ரை.) உடையவனே! மாம்பிஞ்சின் பிளவினை ஒத்த கண்ணை உடையவளாகிய உமையம்மையைப் பாகத்திற் கொண்டவனே! நின்னுடைய மலரடிக்கே என்னைக் கூவுவாய் என்றுதல், அல்லது நரகிலே இடுவாய் என்றுதல் நின் திருவுளக் குறிப்பினை அறியேனும், சேலை நெய்தற்பொருட்டு நூலிழைப் பரப்பிலே அங்குமிங்கும் ஓடித் திரிகின்ற குழலேபோலக் காமத்துள்ளே மறைந்து திரியும் உள்ளமுடைமையால், அந்தோ! கேடடைவேனுமாகிய நின் அடியேன் உன் அடைக்கலப் பொருளாவேன் எ - று.

(வி - ரை.) நின்பால் அன்பு உண்மையும் அன்றி இன்மையும் அறிய மாட்டாமையால், நின் திருக்குறிப்பும் அறியாது காமத்துட்பட்டுப் பரக்கும் மனமுடையேனுயினேன் என்க.

பிறி(வு)அறி யாஅன்பர் நின்அருட் பெய்கழல் தாளிணைக்கீழ்
மறி(வு)அறி யாச்செல்வம் வந்துபெற் றார்உன்னை வந்திப்பதோர்
நெறிஅறி யேன்நின்னை யேஅறி யேன்நின்னை யேஅறியும்
அறி(வு)அறி யேன்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே 9

இஃது, அன்பர் எல்லா அறிவும் பெற்றவராதலால் நின்னுடன் சென்று ஆக்கம் பெற்றனர்; யானோ ஓரறிவும் இல்லாதேன், வழியறியாதே கவல்கின்றேன், நின் அடைக்கலப் பொருளாவேன் என்றருளியது.

(பொ - ரை.) உடையவனே! நின் திருவருளை விட்டுப்பிரிதலை யறியாத நின் அன்பர், திருவருளகத்துள்ளே பெய்யப்பட்ட கழலை அணிந்த திருவடியிணைக் கீழேயுள்ள மீளவும் திரும்பாத பேரின்பச் செல்வத்தைச் சென்று பெற்றனர். அவரோடு உன்னையே துதித்துவரும் நெறியை அறியேனும், பிற பொருளை அறியாது நின்னையே அறியும் அறிவில்லாதேனும், பிறபொருளை அறியாது அறியும் அறிவுதானும் இது என அறியேனுமாகிய அடியேன் உன் அடைக்கலப் பொருளாவேன் எ - று.

(வி - ரை.) பிறிவு - பிரிவு. மறிவு - மீளுதல். பெற்று மீளாச்

செல்வம். வழியிற் செல்லினும் இதுதான் அஃதென்று அறியேன்; நின்னைக் காணினும் நீதான் என்று அறியேன், இவ்வறிவுதான் நின்னையே அறியும் அறிவு என்றும் அறியேன். இவற்றுள் ஒன்றையேனும் அறிந்திருப்பின் உய்ந்திருப்பேன் என்றவாறு. அறியேன் அறிய முயலாதே அடைக் கலப் பொருளாவேன் என்று புலப்படுத்தியபடி.

வழங்கு கின் றுய்க்(கு)உன் அருளார்
 அமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை
 யேன்என் விதிஇன்மையால்
தழங்கரும் தேன்அன்ன தண்ணீர்
 பருகத்தந்(து) உய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேன்உடை யாய்அடி
 யேன்உன் அடைக்கலமே. 10

இஃது, எனக்கு விதியின்றாகவும் நின் அருளமுதை நினக்காக உட்கொண்டு விக்கி யான் வருந்துகின்றேன் அதனை யான் நுகரு மாறு அன்பின் ஐந்திணை நெறியாகிய தண்ணீரையும் உடன் தந்து என்னை உய்யக்கொள். யான் நின் அடைக்கலம் என்றருளியது.

(பொ - ரை.) உடையவனே! யான் நுகர்தற்கெனக் கொடுக் கும் நின்னுடைய பெருந்திணைப் புணர்ச்சியாகிய அருளாகிய அரிய அமுதத்தை அங்ஙனம் வழங்குகின்றுய்பொருட்டு யானும் வாரிக்கொண்டு விழுங்கினேன். எனினும் அதனை விழுங்கும் ஆற்றல் பெறாத தீவினையுடையேன், விழுங்கும் விதியும் இன்மை யால் விக்கினேனாகி வருந்துகின்றேன். ஆதலால் ஒலிக்கின்ற அரிதாகிய தேனை ஒத்த தணிந்ததாகிய நீர்மையைக் கொண்ட அன்பின் ஐந்திணை ஒழுக்கமாகிய தண்ணீரை யான் பருகுமாறு கொடுத்து என்னை உய்யக்கொள்வாயாக. இங்ஙனம் நின்னை இரந்துகொள்ளும் அடியேன் நின்னடைக்கலப் பொருள் ஆவேன் எ - று

(வி - ரை.) தழங்குதல் - ஒலித்தல்; விக்காது உட்செல்வுழி உள தாகும் ஒலியென்க. எனக்கு விதியாக உள்ளது ஐந்திணை ஒழுகலாறே என்றபடி. தாம் நுகர முயன்றும் பயன்படாமையால் அது வேண்டிற்றிலர் என்க. எனக்கு நுகரும் விருப்பம் இன்றாகவும், நின் முகத்துக்காக நுகர்ந்து பார்த்தேன்; பயன்பட்டிலதென்க. திருப்பெருந்துறைக்கண்ணே கண்டகாட்சி அடிகளின் செவ்விக்கு நேரியதன்று என்பது இத்திருப் பாட்டானும் நன்கு அறியக் கிடக்கின்றது.

திருச்சிற்றம்பலம்

# ஆசைப்பத்து

அஃதாவது நின்முக அழகு காணவும் நின்னைக் கண்ட என்னை நீ கண்டு ஆவா என்றிரங்கவும், நின் அருளைப் பெறவும், நீ "வா" என என்னைக் கூவுதலையாதல் அன்றி நீ என்பால் வருதலையாதல் எய்துதற்கு ஆசைப்பட்டதனைப் பொருளாக உள்ள பத்துத் திருப்பாட்டுக்களைக் கொண்ட பகுதி.

முன்னர்ப் பகுதியில் தாம் அவனுடைய அடைக்கலப் பொருளாதலை உணர்த்தியருளி, இப்பகுதியால் தாம் ஆசைப்படுவன இவையெனக் கிளர்த்தியருள்கிறார்

ஆற்றுமை மிக்கு சாதற்குத் துணிந்த அடிகள் சிறிது ஆறுதல் பெற்று இறைவனிடம் தம்மை அடைக்கலப் பொருளாக்கி அதனால் தெளிந்து தமது ஆசை இன்னது இன்னதென எடுத்தோதுகின்றாரென்க

இப்பகுதி, 'என்னை அங்கே வரக் கூவாய்' அல்லது 'நீ இங்கே வாராய்' என்னும் இருபெரும் பிரிவுகளையுடையது.

முதலாம் பெரும்பிரிவு இறைவனைக் காண ஆசைப்படுதலும், தம்மைக் கண்டு இறைவன் இரங்க ஆசைப்படுதலும், அவன் அருளைத் தாம் பெற்றுக்கொள்ள ஆசைப்படுதலும் என்னும் மூன்று பிரிவுகளையுடையது

இரண்டாவது பெரும்பிரிவு, பரவி ஏத்த ஆசைப்படுதலும், ஏத்திய மெழுகொப்ப உருக ஆசைப்படுதலும் என இரு பிரிவுகளையுடையது.

நூற்பொருள் அடைவு வருமாறு :—

அடிப்பாட்டுப் பொருள் "யான் காண நீ இரங்க யான் அருளைப் பெறக் கூவாய்" என ஆசைப்படுதலும், "பரவியேத்த யான் மெழுகொப்ப நீ இங்கே வாராய்" என ஆசைப்படுதலும் ஆகிய இயைபுபற்றி அடைவுபடுத்தப்பட்டது.

அடிப்பாட்டிலே எட்டாவதாகிய "இங்கே வா என அங்கே கூவும் அருளைப் பெறுவான் ஆசைப்படுதல்" என்பது இப்பகுதிக்குரிய முடிமணியாகத் திகழுஞ் சிறப்பு இயைபால் ஈண்டு முதலாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டடைவிலே மூன்றுவதாய "அப்பா காண ஆசைப்பட்டேன்" என்பது, அருளைப் பெற்றுக்கொள்ளக் கூவினுற் காட்சி பெறலாம் என்னுந் திருக்கருத்து இயைபால் இரண்டாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே ஆறுவதாகிய வா

என்ன ஆசைப்பட்டேன்'' என்பது ''காணில் இரங்குவாய்'' என்னுந் துணிவு இயைபால் மூன்றுவதாக அமைத்தருளப்பட்டது.

''எளிய உடல் எனைத் தொடர்ந்து நலியத் துயருறுகின்றேன், உடைந்து நைந்துருகி உன் ஒளிநோக்கி நின்பாதம் அடைந்து நின்றிடுவான் ஆசைப்பட்டேன்'' என்பது, தம்மைக் கண்டு இரங்க ஆசைப்பட்ட அடிகள் உடல் துயர் நீங்க இறைவனை அடைக்கலம் புக்கு நிலைபெறவும் ஆசைப்படுதல் என்னுந் தொடர்பால் ஈண்டு நான்காவதாக அமைத்தருளப்பட்டது

அடிப்பாட்டிலே நான்காவதாகிய ''உடற்பற்றற்றிருந்தும் இரங்கத்தக்கவன் என்று இறைவன் சொல்ல ஆசைப்பட்டேன்'' என்பது உடற்பற்று என்னை நலியவும் யான் புளியம்பழம் ஒத்துப் பற்றற்றிருந்தும் அதனால் நலியப்பெற்றேன் ஆதலால் இரங்கத் தக்கேன் என்று நீ சொல்லவும் ஆசைப்பட்டேனெனத் திருவடியடைதற்கு உளதாகும் காரணத்திற்கு இஃதோர் காரணமாக நிற்கும் இயைபால் ஈண்டு ஐந்தாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே இரண்டாவதாகிய ''எய்த்தேன் இங்கு இருக்ககில்லேன், வாங்காய் நின்முக ஒளி காணச் சால ஆசைப்பட்டேன்'' என்பது, இரங்கத் தக்கேனென நீ சொல்லுஞ் சொல்லும் உன் முகத்தின்கண்ணே தோன்றும் அருள் ஒளியுங் காணச் சால ஆசைப்பட்டேன் என்றருளும் இயைபால் ஆறுவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே ஒன்பதாவதாய திருப்பாட்டு, ''நீதான் கூவிக்கொள்ளாயாகிலும் யான் திரிந்து பரவி ஏத்த வாராய்'' என்னும் இயைபால் ஏழாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே பத்தாவதாய திருப்பாட்டு, ''நீ வாராய் எனினும் என்னை இரங்குமாறேனுஞ் செய்தற்கு ஆசைப்பட்டேன்'' என்னும் இயைபால் ஈண்டு எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே முதலாவதாய திருப்பாட்டு, இரங்கியதற்கு மேல் யான் நின்னைக் கூட்டிவைக்கும் அடியார் கூட்டமுங் காண ஆசைப்பட்டேன் என்னும் இயைபால் ஒன்பதாவதாக வைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே ஐந்தாவதாய திருப்பாட்டு அடியார் கூட்டங் காணற்கு அருளாய் எனினும் அஞ்சேலென்று சொல்லவாவது ஆசைப்பட்டேன் எனப்படி குறைத்துக் கூறும் இயைபால் கண் வைத்தருளப்பட்டது.

இவற்றின் அட்டவணை வருமாறு :—

| பிரிவுகள் | உட் பிரிவுகள் | இ. பொருள் | செய்யுட் பொருள் | நூற் பொருள் |
|---|---|---|---|---|
| I (அ) | 1 | 1 | அடியார் கூட்டம் காண ஆசைப்படுல் | 9 |
| | 2 | 2 | இறைவன் முறுவல் காண ஆசைப்படுதல் | 6 |
| | 3 | 3 | காண ஆசைப்படுதல் | 2 |
| I (ஆ) | 1 | 4 | அளியேன் என்ன ஆசைப்படுதல் | 5 |
| | 2 | 5 | அஞ்சேல் என்ன ஆசைப்படுதல் | 10 |
| | 3 | 6 | ஆவா என்ன ஆசைப்படுதல் | 3 |
| I (இ) | 1 | 7 | பாதம் அடைந்து நின்றிட ஆசைப்படுதல் | 4 |
| | 2 | 8 | அருளைப் பெறுவான் ஆசைப்படுதல் | 1 |
| II (அ) | 1 | 9 | பேராயிரம் பரவி ஏத்த ஆசைப்படுதல் | 7 |
| II (ஆ) | 1 | 10 | அழல்சேர் மெழுகொப்ப ஆசைப்படுதல் | 8 |

இஃது திருப்பெருந்துறைக்கண்ணே அருளியது என்ப.

# ஆத்தும விலக்கணம்

## அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

**திருச்சிற்றம்பலம்**

**கருளக் கொடியோன் காண**
**மாட்டாக் கழற்சே வடிஎன்னும்**
**பொருளைத் தந்துஇங்(கு) என்னை**
**ஆண்ட பொல்லா மணியேயோ**
**இருளைத் துரந்திட்(டு) இங்கே**
**வாஎன்(று) அங்கே கூவும்**
**அருளைப் பெறுவான் ஆசைப்**
**பட்டேன் கண்டாய் அம்மானே.** 1

இஃது, என் அறியாமையை நீக்கி இங்கே வா வென்று அத்தில்லைக்கண்ணே என்னைக் கூவிக்கொள்ளும் அருளைப் பெறும் படி ஆசைப்பட்டேன் என அடிகள் இறைவற்குக் கூறியது.

(பொ - ரை.) அம்மானே! கருடனை எழுதிய கொடியை ஏந்தினேனாகிய திருமாலாலும் கண்டுகொள்ளப்படமாட்டாத கழலையணிந்த செவ்விதாகிய திருவடியென்னும் செல்வத்தை இவ்வுலகத்தே எனக்குக் கொடுத்து என்னை ஆண்டுகொண்ட தொளைக்கப்படாத சிந்தாமணியே! எனது அறியாமையைத் துரத்தி இங்கேவா வென்று என்னை அத்தில்லைக்கு வந்துசேர அழைக்கும் நின் திருவருளைப் பெற்றுக்கொள்வதற்கு ஆசைப் பட்டேன் எ - று.

(வி - ரை.) பொருள் - (திருவடியாகிய) செல்வம். பொல்லாமணி, கடைதலாற் செவ்வி பெறுது இயல்பாகவே பெற்றுள்ள மணி. 'அங்கே வா வென இங்கே வந்து கூவும்' எனலுமாம். "இங்கு" என்றது ஐயாற்றினை. அங்ஙனமாதல் பின்வரும் "ஐயாற்றரசே" (8) என்பதனுலும் விளங்கும். இதுகாறும் அங்ஙனம் கூவிற்றிலன் என்க. முன்னர்த் "தில்லைக்கு வருக" என்றது பின்னர் (செவ்வி முற்றியபின்) வருக எனப் பொருள்படும் என்பதும் ஈண்டுப் பெறப்பட்டது. ஆண்டு வருக என்றுனேயன்றி வருக வெனக் கூவிற்றிலன் ஆதலால், இங்கே வருகவெனக் கூவிக்கொள்க என்றருளினர். கருளன் - கருடன்.

மணி - சிந்தாமணி. தம் ஆசையை நிறைவேற்றுவோன் என்னுந் துணிபுபற்றி அவனைச் சிந்தாமணியென அழைத்தருளினுர். "ஏ" "ஓ" என்பன அசைகள்.

வா வென்றழைப்ப தொன்ருனே இருள் தூரக்கப்படுமென்க. அஃதின் மையால் நின் திருவடி பெற்றும் பெறேனுயினேன். நின் கொடையும் பயனற்றதாயிற்று என்றபடி.

மொய்ப்பால் நரம்பு கயிருக
மூளை என்பு தோல்போர்த்த
குப்பா யம்புக்(கு) இருக்க கில்லேன்
கூவிக் கொள்ளாய் கோவேயோ
எப்பா லவர்க்கும் அப்பா
லாம்என் ஆரமு தேயோ
அப்பா காண ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே. 2

ப, வா என்று கூவாயாகிலும் நின்னை வாளா காண ஆசைப் பட்டேன் என அடிகள் இறைவற்குக் கூறியது.

(பொ - ரை.) அம்மானே! அரசனே! எத்தகைய மேம்பட்ட பதவியிலுள்ளார்க்கும் அவற்றுக்கெல்லாம் மேம்பட்ட பதவியில் உள்ளோனே, என் கிடைத்தற்கரிய அமிழ்தமே, அப்பனே, ஓலம். வலிமையுடைய பகுதிப்பட்ட நரம்புகளைக் கயிருகக்கொண்டு கட்டிய மூளையையுடைய எற்புக் கோவையைத் தோலாற் போர்க்கப்பட்ட உடலாகிய சட்டைக்குள்ளே சென்று அங்குத் தங்கியிருக்க இயன்றிலேன், நின்னைக் காண ஆசைப்பட்டேன். ஆதலால் என்னை அழைத்துக்கொள்வாயாக எ - று.

(வி - ரை.) மொய் - வலிமை. பால் - பகுதி. மூளை - எழுவகைத் தாதுக்களுள் ஒன்று. அஃது என்புக்குள் மறைந்திருப்பது. அவ்வென் பினை நரம்பாற் கட்டித் தோல் போர்த்த குப்பாயம் என்க. உடம்பும் இழிவுடைத்து, நின்னைக் காணவும் ஆசைப்பட்டேன்; ஆதலால் எவ்வாற்ருனும் இங்கிருக்ககில்லேன். என்னுடல் வாழ்வினை நீக்கி நின்னைக் காணுமாறு செய்குதி என்றவாறு. உடம்புகொண்டு காணற்கியலாமை பெற்ரும். உடம்பொழித்தலும் அவனருளாலேயே நிகழவேண்டுமென்க.

எப்பகுதிப் பட்டார்க்கும் அப்பகுதியே யாகி நுகர்விப்பவனுமாம்.

அன்பரொடு மகிழ்ந்திருக்கும் நின்னைக் காண எனக் கொள்க. கண்டாய், முன்னிலையசை.

சீவார்ந்(து) ஈமொய்த்(து) அழுக்கொடு
திரியும் சிறுகுடில் இதுசிதையக்
கூவாய் கோவே கூத்தா
காத்(து)ஆட் கொள்ளும் குருமணியே

தேவா தேவர்க்(கு) அரியானே
சிவனே சிறி(து)என் முகம்நோக்கி
ஆவா என்ன ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே. 3

இஃது, என்னுடல் சிதைய முகம் நோக்கி ஆவா என்று நீ இரங்குதலைக் காண ஆசைப்பட்டேன் என அடிகள் இறைவற்குக் கூறியது.

(பொ - ரை.) அம்மானே! அரசனே! கூத்தனே! அடியேனைத் தடுத்தாட்கொள்ளும் குருமணியே! தேவனே! தேவர்க்கு அரியவனே! சிவனே! சீழ் வடிந்து, ஈக்களால் மொய்க்கப்பட்டு, அழுக்கு நிறைந்து, நடந்தோடி அலையும் சிறுமைக்கு இடமாகும் வீடாகிய இது சிதைவுபெற என்னை அடைத்துக்கொள்வாயாக. சிறிது நேரமேனும் என்னுடைய முகத்தை எதிர்நோக்கி இரக்கக் குறிப்புக் காட்ட ஆசைப்பட்டேன் எ - று.

(வி - ரை.) "சீவார்ந்து" என்னும் சினைவினை முதலோடு முடிந்தது. மொய்த்து - மொய்க்கப்பட்டு. "திரிதல்" என்றது ாண்டு இயங்குதல், மேற்று.

'மருவிய மான்' மருமான் என்றுங்கே அழகிய மான் "அம்மான்" என்றுயது. மான், மகானுமாம்; அழகிய பெரியோன் என்றபடி.

அழகனே, காதலனே, திருக்கூத்தாட்டிவைப்போனே, குருவனே, குருதேவனே, எம்போன்றுர்க்கு எளியனுகித் தேவர்க்கு அரியனுகியவனே, சிவனே என்பனவெல்லாம், தேவனும், தேவதேவனும் ஆகிய சிவன், அழகனுய், என் காதலனுய் வந்து, பல திருவிளையாடல்களைச் செய்தருளிய குருமணியாவான் என ஒருவாறு பொருள்பட நின்றன.

முன்னர் உண்ணுது உறங்காது இயங்காது கொக்கொத்திருந்தும் பயன் பெருமையால், பின்னர்ச் சீழ் வார்ந்து ஈமொய்க்க அழுக்கொடு ஆற்ருது திரிந்தருளினர் என்க. நின்னுற் காத்தாட் கொள்ளப்படும் யான் இங்ஙனமெல்லாம் திரியா நின்றேன் என்று குறிப்பிட்டவாறு. முன்னர்த் திருப்பாட்டினும் இதன்கண்ணும் 'கூவிக்கொள்ளாய்,' 'கூவாய்' என முடித்தல் கூடுமாயினும் அதிகரித்த பெயர்ப்பொருள் காரணமாக அங்ஙனம் முடித்திலம்.

சிறிது என் முகம் நோக்கில் 'ஆவா' என்று இரங்கிக் கூவிக் கொள் வாய் ஆதலால் "சிறிது என் முகம்நோக்கி ஆவா என்ன ஆசைப்பட் டேன்" என்றருளிச் செய்தார் அன்றிக் கூவிக்கொள்ள ஆசைப்பட்டேன் என்றருளிற்றிலர். முன்னர்த் திருப்பாட்டினும் "காண ஆசைப்பட்டேன்" என்றதும் அது.

மிடைந்(து) எலும்(பு) ஊத்தை மிக்(கு) அழுக்(கு)
ஊறல் வீறிலி நடைக்கூடம்
தொடர்ந்(து)எனை நலியத் துயருறு
கின்றேன் சோத்தம்எம் பெருமானே
உடைந்துநைந்(து) உருகி உன்ஒளி
நோக்கி உன்திரு மலர்ப்பாதம்
அடைந்துநின் றிடுவான் ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே.

நான் நீங்கினும் தான் நீங்கிலாது உடலானது என்னைத் தொடர்ந்து வருதலால் யான் துயர் மிகுகின்றேன். எம் பெருமானே சோத்தம். நின்மேல் அன்பின் பெருக்கால் என் உடல் முதலாயின கட்டுவிட்டு நைவுத்தன்மை எய்தி அருள் நோக்கி நின் திருவடிகளைச் சார்ந்து நிலைபெற ஆசைப்பட்டேன் என அடிகள் இறைவற்குக் கூறியது.

(பொ - ரை.) அம்மானே! எம்பெருமானே! உனக்கு வணக்கம். எலும்பு நெருங்கி ஊத்தை மிக்கு (வேர்வை நீர் முதலாய) அழுக்கு நீர் ஊறுதலையுடைய சிறப்பிலதாகிய இயங்குதலையுடைய வீடாகிய இவ்வுடல் என்னைத் தொடர்ந்து வந்து துன்புறுத்த அதனால் யான் துயர் மிகுகின்றேன். இத்தகைய யானோ மனம் கட்டுவிட்டுத் தளர்ந்து திரவப் பொருளாயுருகி உன்னருள் ஒளியை நோக்கி நின்று நின் மலர்போன்ற திருவடிகளைச் சார்ந்து நிலைபெறும்பொருட்டு ஆசைப்பட்டேன் எ - று.

(வி - ரை.) உடல் என்னை நலியத் துயருறுகின்றேன். ஆதலால் அதன்மேல் முன்னர்ப் பற்றுவைத்த நான், பின்னர் நின் திருவடி யடைவதற்காக இங்ஙனம் ஆசைப்பட்டேன் என்றருளினர். ஆதலால் உடலை ஒழித்துவிடு என்றபடி.

மிடைதல் - நெருங்குதல். "ஊறல்" என்றமைக்கேற்ப வேர்வைநீர் முதலாயவெனக் கொண்டாம். கூட்டின் இழிவாற் "சோத்தம்" எனக் கூறியருளினர். நைதல் - தளர்தல்; நசுங்குதலுமாம். உடைதல் - கட்டு விடுதல். ஒளி - உருகுதலால் உண்டாகும் அவன் கருணை ஒளி.

அளிபுண் அகத்துப் புறந்தோல்
மூடி அடியே னுடையாக்கை
புளியம் பழம்ஒத்(து) இருந்தேன்
இருந்தும் விடையாய் பொடியாடீ

எளிவந்(து) என்னை ஆண்டு
கொண்ட என்ஆர் அமுதேயோ
அளியேன் என்ன ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே. 5

இது, நான் உடற்பற்று அற்றிருந்தும் நீ என்னைக் கண்டு இவன் அளித்தற்கு உரியவன் என்று சொல்ல ஆசைப்பட்டேன் என அடிகள் இறைவற்குக் கூறியது.

(பொ - ரை.) அம்மானே! இடபத்தை ஊர்தியாக உடையவனே! திருநீறு பூசிய திருமேனியுடையவனே! எளிதாக வந்து என்னை ஆட்கொண்ட என் அருமருந்தே! ஓலம்! தன்னகத்தே அளித்த புண்ணையும், புறத்தே தோலாகிய மூடியையுமுடைய அடியேனுடைய உடம்பின்கண்ணே, புளியமரத்துப் பழமும் மற்றதன் மூடியாகிய ஓடும்போல யான் பற்றற்றிருந்தேன். அங்ஙனம் இருந்தும் (இவன் அதன் தொடர்புவிடப் பெறுமையால் இரங்கத் தக்கவனுவான்) என்று நீ கருதி அருள்செய்ய ஆசைப் பட்டேன் எ - று.

(வி - ரை.) அளிதல் - நைவு பெற்றிருத்தல். தோலாகிய மூடி. என் ஆற்றலால் யாக்கைத் தொடர்பினை நீக்கலாகாது என்றவாறு. தம்மால் இயலாததொன்றினை இயலுமெனக் கொண்டு முயன்று வருந்திய தமது அறியாமைக்கு இரங்கியருளினர் என்பது கருத்து. இதனால் அவன் அருளைப் பெற்றுக்கொள்ளாது யோகம் முதலாயவற்றால் வலிந்துபெற முயல்வது அவம் என்று அறிவுறுத்தியருளியவாறு. எளிவந்த நின்மேல் அன்பு செய்யாது பற்றறுக்க வீணே எண்ணி இடருற்றேன் என்றிரங்கியருளினர் என்க.

எய்த்தேன் நாயேன் இனிஇங்(கு)
இருக்க கில்லேன் இவ்வாழ்க்கை
வைத்தாய் வாங்காய் வானோர்
அறியா மலர்ச்சே வடியானே
முத்தா உன்தன் முகஒளி
நோக்கி முறுவல் நகைகாண
அத்தா சால ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே. 6

இது, நான் இங்கு இருந்து இளைத்தேன். இனி இங்கிருக்கும் வலியுமில்லேன். இவ்வாழ்க்கையை நீக்கிவிடு. உன் முகஒளி

முறுவல்காண ஆசைப்பட்டேன் என அடிகள் இறைவற்குக் கூறியது.

(பொ - ரை.) அம்மானே! வானவரும் அறியாத மலர்போன்ற செவ்விதாகிய திருவடிகளையுடையானே! இயல்பாகவே கட்டினின்று விடுபட்டவனே! அப்பனே! நாய் அனைய யான், (உடம்பினைக் காவி) இளைத்தேன், இனி இவ்வுலகில் வாழ்ந்திருக்கும் வலியுமில்லேன். இவ்வுடலோடு கூடி வாழும் வாழ்க்கைக்கண் என்னை வைத்தவனே, இப்பொழுதே அதனை நீக்கிவிடு. நின் திருமுகத்தின் அருள் ஒளியை எதிர்நோக்கி, நின் புன்னகையைக் காணச் சாலவும் ஆசைப்பட்டேன் எ - று

(வி - ரை.) நீ வாங்காவிடில் யான் அவமே உயிர் விடுவேன் என்றருளியவாறு. இவ்வாழ்க்கை வைத்தவன் நீ ஆதலால் வாங்குதலும் நீயே அன்றி, யான் விடுவித்தல் மரபாகாது என்றருளினர்.

" அம்மான் " ஆதலால் பிழை பொறுத்தாட்கொள்ளுதலும், " முத்தன் " ஆதலால் என்னையும் முத்தியில் வைத்தலும், " அப்பன்" ஆதலால் நின் செல்வமெல்லாம் எனக்கும் உரியனவாக அளித்தலும் நின் கடப்பாடெனக் குறித்தருளியபடி. அச்செல்வந்தான் " வானோர் அறியா மலர்ச்சேவடி " என்க. தந்தை தனக்குரிய செல்வம் யாவற்றையும், தனயனுக்கு ஆசை தோன்றியபோதே கொடுத்துவிடலே முறை என்று குறிப்பிட்டருளினர் என்க.

பாரோர் விண்ணோர் பரவி
ஏத்தும் பரனே பரஞ்சோதீ
வாராய் வாரா உலகம்
தந்து வந்(து) ஆட் கொள்வோனே
பேர்ஆ யிரமும் பரவித்
திரிந்(து)எம் பெருமான் எனஏத்தி
ஆரா அமுதே ஆசைப்
பட்டேன் கண்டேன் அம்மானே. 7

இது, நீ என்னைக் கூவாதொழியினும் இங்கே வாராய் யான் பரவி ஏத்த ஆசைப்பட்டேன் என அடிகள் இறைவற்குக் கூறியது.

(பொ - ரை ) அம்மானே! மண்ணுலகோரும் விண்ணுலகோரும் புகழ்ந்து போற்றும் மேலோனே! மேம்பட்ட ஒளி உருவனே! மீண்டு வருதலில்லாத வீட்டுலகத்தை என்பால் வந்து எனக்குத் தந்து ஆண்டு கொள்ளுதற்குரியவனே! தெவிட்டாத அமுதமே! இங்கே வந்தருள்வாயாக. யான் நீ வீற்றிருக்கும்

தலமெல்லாம் சென்று திரிந்து நின்னுடைய ஆயிரந் திருப்பெயர் களையும் புகழ்ந்து சொல்லி, அப்பெயர்களையெல்லாம் உடையவன் எம்பெருமானேயாவன் எனத் துதிக்க ஆசைப்பட்டேன் எ - று.

(வி - ரை.) ஆரா - தெவிட்டாத. நீ என்னைக் கூவிக் கொள்ளா யாகிலும், யான் தலங்கள்தோறும் சென்று, சகத்திர நாம பாராயணஞ் செய்து, உன்னைப் புகழ்ந்து சொல்லித் துதிக்கவேனும் இனி வாராய் என்க. மக்கள் தேவர் என்போர்க்கு நடுநின்றவன். ஏத்த ஆசைப்பட்டேன் என்க.

கையால் தொழுதுன் கழற்சே வடிகள்
    கழுமத் தழுவிக் கொண்டு
எய்யா(து) என்தன் தலைமேல்
    வைத்(து)எம் பெருமான் பெருமான் என்று
ஐயா என்தன் வாயால் அரற்றி
    அழல்சேர் மெழு(கு) ஒப்ப
ஐயாற்(று) அரசே ஆசைப்
    பட்டேன் கண்டாய் அம்மானே. 8

இது, நின் திருவடியைத் தொழுது தழுவிச் சென்னியில் வைத்து அரற்றி உருக ஆசைப்பட்டேன் என அடிகள் இறை வற்குக் கூறியது.

(பொ - ரை.) அம்மானே! திருவையாறு அமர்ந்த அரசனே! கழலை அணிந்த செவ்வியவாகிய திருவடிகளைக் கையால் தொட்டு வணங்கி மனம் நிறைவு அடையத் தழுவிக்கொண்டு, பிறர் அறி யாது என் தலைமேல் வைத்துக்கொண்டு எம்பெருமானே! எம்பெரு மானே! என்றும், ஐயா! என்றும் என்னுடைய வாயால் அரற்று தலைச் செய்து, அழற்கண்ணே சேர்க்கப்பட்ட மெழுகினையே ஒப்ப (என் மனமுருக) ஆசைப்பட்டேன் எ - று.

(வி - ரை.) கழுமல் - மனம் நிறைதல். எய்யாது - பிறர் கண்ணுற் கண்டறியாது. மெழுகொப்ப ஆசைப்பட்டேனுதலால் ஈண்டு வெளி வருவாயாக என வருவிக்க. பேராயிரமும் பரவியேத்த ஆசைப்பட்ட அடிகள் இப்போது ஐயாற்றின்கண் அண்ணலை வெளிப்பட்டு வருமாறு ஆசைப்பட்டதாக அழைத்தருளுகின்றார். "ஐயாற்றரசே" என்றலால் இப்பகுதி திருவையாற்றில் அருளிச்செய்யப்பட்டதென்பது தானே போதரும். தொழுது தழுவித் தலைவைத்து அரற்றி மெழுகொப்ப என்னும் தொடர்பு, பல நாளாக எதிர்நோக்கியிருந்தும் கிட்டாமையால் எய்திய ஆராமையைப் புலப்படுத்தியது.

செடிஆர் ஆக்கைத் திறம்அற
வீசிச் சிவபுர நகர்புக்குக்
கடிஆர் சோதி கண்டு
கொண்(டு)என் கண்ணிணை களிகூரப்
படிதான் இல்லாப் பரம்பரனே உன்
பழஅடி யார்கூட்டம்
அடியேன் காண ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே 9

இஃது, உடலை ஒழித்துச் சிவநகர்புக்குச் சோதி கண்டு உன் அடியார் கூட்டமும் காண ஆசைப்பட்டேன் என அடிகள் இறைவற்குக் கூறியது.

(பொ - ரை.) அம்மானே! ஒப்பெனப்படுதற்கு ஒன்றேனும் இல்லாது மேம்பட்டவற்றுக்கெல்லாம் மேம்பட்டவனே! குற்றம் நிறைந்த இவ்வுடம்பின் வகையனைத்தும் வெட்டியெறிந்து சிவமா நகர்புக்கு மங்கலச் சோதிக் காட்சியை என் கண்கள் களி மிகக் கண்டு, உன்னுடைய அடியார் உன்னுடன் கூடியிருக்கும் திருக் கூட்டக் காட்சியைக் காண ஆசைப்பட்டேன் எ - று.

(வி - ரை.) கடி - மன்றல்; புதுமையுமாம். அடியார் மங்கலக் கூட்டங்காண்டாலே எனக்கு அமையும் என்றபடி. அக்கூட்டமும் படியொன்றிலதாக இருக்குமெனக் கருதியருளினர்.

வெஞ்சேல் அனையகண்ணார்தம்
வெகுளி வலையில் அகப்பட்டு
நைஞ்சேன் நாயேன் ஞானச்
சுடரே நான்ஓர் துணைகாணேன்
பஞ்சேர் அடியாள் பாகத்(து)
ஒருவா பவளத் திருவாயால்
அஞ்சேல் என்ன ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே. 10

இது, மங்கையர் கண்ணால் வெகுளும் வெகுளியிற்பட்டு நைந்து துணை யொன்றும் காண்கிலேனை அஞ்சேல், என்று நீ சொல்ல ஆசைப்பட்டேன் என்றது.

(பொ - ரை.) அம்மானே! அறிவொளியே! பஞ்சினை யொத்து மென்மைபெற்ற அழகுடைய திருவடிகளையுடைய உமைப் பிராட்டியை இடது பாகத்திற் கொண்ட ஒப்பற்றவனே! விருப்

பத்தை உண்டாக்குகின்ற சேல்மீனை ஒத்த பிறழ்ச்சியை உடைய கண்களைக் கொண்ட மகளிருடைய கோப வலைக்குட்பட்டு நைந் தேனாகிய நான், அதினின்றும் என்னை ஈடேற்ற ஒரு துணையும் கண்டேனில்லை. (ஆதலால் அத்தகையேனாகிய) என்னை அஞ்சற்க என உன்னுடைய பவளம் போன்ற திருவாயாற் சொல்ல ஆசைப் பட்டேன் எ - று.

(வி - ரை.) வெம்மை - விருப்பம். விருப்பங் காட்டி வலைப்படுத்திய பின்னர் வெகுண்டு இகழ்வர் என்க. "ஞானச்சுடர்" என்பதால், காமவிருள் நீக்கமும், "உமைபாகத்து ஒருவன்" என்பதால் திருவருட் கொடையும் உளவென்பது பெற்றும் என்க. "அஞ்சேல்" என்று சொல்லி இடர்கெடுத்து ஆண்டு கொள்ள ஆசைப்பட்டேன் என்க. பஞ்சு அடி, ஏர்அடி, பாகத் தான் ஒருவன் என்க. "அஞ்சேல்" என்னும் வாயினைச் சிறப்பித் தருளினர்.

திருச்சிற்றம்பலம்

# அதிசயப் பத்து

அஃதாவது நீதியும், நீதியாளர் கலைஞர் அன்பர் சார்பும், பத்தி நெறி ஒழுகல், மந்திர உருவேற்றல், நல்வினை ஆற்றல் என்னு மிவையும் மேற்கொள்ளாது மங்கையர் வெகுளி வலைப்பட்டு உழலாநின்ற என்னை இங்ஙனமே நடக்கவிடில் இனியும் இங்ஙனே கெடுவேனையும் ஆண்டு கொண்டு அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமெனக் கூறிய பத்துத் திருப்பாட்டுக்களையுடைய பகுதி.

அருளைப் பெறுதல், காணுதல் என்றின்னோரன்ன தமது ஆசைகளைப் புலப்படுத்திய அடிகள் தம்மை இறைவன் ஆண்டு கொண்ட பண்டைய நினைவு மிக்குத் தோன்றி அவன் ஆண்ட திறம் முதலாய அதிசயங்களைக் கூறுநின்றாரென முன்னைப் பத்தோடு இயைபு காண்க.

இது, மங்கையர் காமத்தால் நீதி நினையாது உடலை மெய்யெனக் கருதி இடர்ப்படுவேனை ஆண்ட அதிசயம், என் முன்னை வல்வினை யெல்லாம் போக ஆண்ட அதிசயம், பழவினையற்றும் உடற் பற்றினாற் கேடு சூழ்கின்றேனை ஆண்ட அதிசயம், உடற் பற்றினை நீக்கிச் சோதியாக்கி ஆண்ட அதிசயம் என நான்கு பெரும் பிரிவு களையுடையது.

முதலாம் பெரும் பிரிவின் உட்பிரிவுகள் வருமாறு: இது, நீதி நினையாமை நினைப்பாரோடு இணங்காமை என்னும் இவற்றைக் கொண்டமையால் ஏதமே பிறந்து இறந்து உழல்வேனை ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாம் (2) என்பதும், பொய் யுடலை மெய்ப் பொருளெனக் கருதி நின்று இடர்ச் சுழலுட் படு வேனை ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாம் (7) என்பதும், மண், பொன் என்னும் இவற்றுக்கு உருகாது மட வரலியர் திறத்திடை நைவேனை ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாம் (1), என்பதும் ஆகிய மூன்று பிரிவுடையது.

இரண்டாம் பெரும் பிரிவு: இது, என்னுடைய முன்னை வல் வினை போக முதற்கண் ஆண்டு கூட்டிய அதிசயம் கண்டாம் (3) என்னும் ஒரு பிரிவுடையது.

மூன்றாம் பெரும் பிரிவின் உட்பிரிவுகள் வருமாறு: இது, அன்பரைச் சாராது அன்புச் செயல் மேற்கொள்ளாது ஆயிழை யார் திறத்து நின்று குடி கெடுகின்றேனை ஆண்டு தன்அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாம் (5) என்பதும், மண்ணுவதற்கு ஒருப் படுகின்றேனை ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாம்

(6) என்பதும் அருநரகிடை வீழ்தற்கு ஒருப்படுகின்றேனை ஆண்ட அதிசயங் கண்டாம் (4) என்பதும், வல்வினைச் சிறுகுடிலை மெய்ப்பொருளெனக் கருதிக் களித்து நரகிடைப் புகுகின்றேனை ஆண்டு தன்அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாம் (10) என்பது மாகிய நான்கு பிரிவுகளையுடையது.

நான்காம் பெரும் பிரிவின் உட்பிரிவுகள் இது, யாக்கையால் நற்பயனைப் பெற்றுக் கொள்ளாத மந்தர் சொல் தெளியாது என்னை ஆண்டு அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாம் (9) என்பதும், என்னைத் தன்னின் நிலாவகை நீக்கி யாக்கையுட் புகப்பெய்து மேலெழும்பித் துகளறுத்துச் சோதியாக்கி ஆண்டு அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாம் (8) என்பதுமாகிய இரு பிரிவினை யுடையது.

முதலாவது பெரும் பிரிவில் இறைவனால் ஆண்டருளப் படு தற்கு முன் அடிகள்தம் நிலையே பெரிதும் விளக்கப்படுகின்றது. வல்வினை போக அடிகள் நின்ற நிலை கூறப்படுதல் இரண்டாம் பிரிவில் அறியத்தக்கது மூன்றுவது பெரும் பிரிவில் ஆண்டவன் உபதேசம் பெற்ற பின்னர் அடிகளுக்கு நிகழ்ந்தனவே பெரிதுங் கூறப்படுகின்றன. நைவேனை ஆண்டும் விழப் புகுதலைக் கண்டு முன்னை வினை போக்கிப் பித்தர் சொல் தெளியாவாறு துகளறுத் துச் சோதியாக்கி ஆண்டு தன் அடியரிற் கூட்டினனென்பது நான் காம் பகுதியிற் கூறப்படுகின்றது. ஒவ்வொரு பிரிவுக்கும் உரிய திருப்பாட்டுக்களை முன் பின்னாக அடைவு படுத்தியதன் காரணம் வெளிப்படையாதலின் விரித்தில மென்க.

இனி நூற் பொருளடைவு வருமாறு அடிப் பாட்டடைவிலே மூன்றுவதாய திருப் பாட்டிலே மடவிரலியர் திறத்திடை நைவேனை ஆண்டு அடியரிற் கூட்டியது என்பது, உடலை மெய்யென்று கருதி நீதியையும் நீதியாளர் சார்பினையுங் கருதாது, மங்கையர் காமத் தின் ஆற்றல் முதலாயின அழியவும் அவற்றுக்கு உருகாதவாறு செய்து தம்மையே கருதி நைய வைத்தமையால் உலகியல்பிற்கும் உதவேனாகியிருந்த அத்துணை எளியேனை ஆண்டான் எனக் குறிப் பித்தருளிய இயைபால் ஈண்டு முதலாவதாக வைக்கப்பெற்றது.

மங்கையர் காமம் வைப்பு முதலாய அழிவனவற்றுக்கே யன்றிக் காமங் கன்றுதலாலும் அவற்றை ஓம்பாமையால் வருங் கேடும் அக்கேட்டால் உளவாகும் பழியும் தண்டமும் நினையாவாறு செய்தது என்னும் இயைபால் அடிப்பாட்டில் முதலாவதாய செய் யுள் இரண்டாவதாக வைக்கப்பட்டது.

உடலப் பற்றினை நீக்காமையால் அது பயன் கொடுத்திலது

எனக் கருதிய கருத்தினையால் நான்காவதாகிய திருப்பாட்டு மூன்றாவதாக வைத்தருளப்பட்டது. ஆளப்பட்டும் ஆளப்படாத வன்போலக் கெடுகின்றேன் என்னுங் குறிப்பால் இயற்கைப் பொருளடைவில் ஏழாவதாயமைந்த திருப்பாட்டு நான்காவதாக வைத்தருளப்பட்டது.

இனி இம் முறையானே, உபாயம் அறியாமையாற் பிறக்கவும், இறந்து நரகுச் செலவுக்கே செல்லவுமே ஒருப்பட்டேன் எனவும், முன்னரும் ஆளப்பட்ட யான் பின்னும் இவ்வுடலால் இன்னலுறு கின்றேன் எனவும், அவ்வுடல்தானும் இப்போது அறுக்கப்பட்டுச் சோதியானேன் எனவும், யான் சோதியாக்கப்படாமைக்குக் காரண மாக நின்றது பித்தர் சொல்லிய மயக்கச் சொல்லே யெனவும், பித்தர் சொல் இவ்வுடலைக் களிக்குமாறு மயக்கிற்று எனவும் அடி கள் அடைவு படுத்தியருளினரென்க

இயற்கைப் பொருளடைவு முதலாயவற்றின் அட்டவணை வருமாறு :

| பெரும் பிரிவு | உட் பிரிவு | இ. பொ. அடைவு | நூல். தொடர் எண் |
|---|---|---|---|
| I | அ | 1 | 2 |
| | ஆ | 2 | 7 |
| | இ | 3 | 1 |
| II | | 4 | 3 |
| III | அ | 5 | 6 |
| | ஆ | 6 | 5 |
| | இ | 7 | 4 |
| | ஈ | 8 | 10 |
| IV | அ | 9 | 8 |
| | ஆ | 10 | 9 |

இஃது திருப்பெருந்துறையில் அருளியது என்ப.

# முத்தி இலக்கணம்

## அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

வைப்புமா(டு) என்றும் மாணிக்கத்(து)
ஒளி என்றும் மனத்திடை உருகாதே
செப்பு நேர்முலை மடவர
லியர்தங்கள் திறத்திடை நைவேனை
ஒப்பு(இ) லாதன உவமன்
இறந்தன ஒண்மலர்த் திருப்பாதத்(து)
அப்பன் ஆண்டுதன் அடியரிற்
கூட்டிய அதிசயம் கண்டாமே. 1

இஃது, என்பாலுள்ள செல்வமெல்லாம் அவமே அழிக்க அழிந்தனவே யென்று அவற்றுக்கு உருகாமல், மங்கையர்களுக்கு இனிக் கொடுத்தற்குரிய செல்வம் சிறிதும் என்பால் இல்லையே, என் செய்வேன் என்று உருகும் என்னையும் ஆண்டுதன் அடியாரிற் கூட்டிய அதிசயம் கண்டாம் என அடிகள் உலகிற்குக் கூறியருளியது. [அதனோடு மனத்திற்குமாம் ]

(பொ - ரை.) மனை மாட்சிக்கெனத் தேடி வைக்கப்பட்ட செல்வமாகிய பொன்னே (பொன்)என்றும் (என்பாலுள்ள) மாணிக்கத்தின் (ஒளியே) ஒளி என்றும் மனத்தே முன்னர்க் கருதியிருந்த நான், அவையெல்லாம் பின்னர் அவமே அழிந்து போதற்கு உருகுதலைச் செய்யாது, செப்பினை ஒத்த முலையினை உடைய மடமை வளர்ந்து வருதலையுடைய மங்கைமார் திறத்திடைப்பட அவர்க்குக் கொடுக்கும் வகை ஒன்றும் இல்லாது மனம் நைகின்ற என்னை, ஒப்புரைக்கும் பொருள்கள் இல்லாதனவாகி, அதனாலே ஒப்பாக நிற்கும் பொருளைக் கடந்தனவாகிய ஒளியுடைய திருவடித் தாமரைகளையுடைய என் அப்பன், ஆண்டு கொண்டு தன் மெய்யன்பருடன் ஒருவனாகக் கூட்டிய வியப்பாகிய செயலை யாம் கண்டாம் எ - று.

(வி - ரை.) வைப்பு - எய்த்த காலத்திற் பயன்படுத்துவதற்கெனச் சேமித்து வைக்கப்பெற்ற செல்வம். செல்வமாகிய பொன் என்க. மாடு - பொன். வைப்பு - வயல் மனை முதலாய இடங்களுமாம். ஏனையோரினும் தன்பாலுள்ள மாணிக்கமே சிறப்புடையது என்பது தோன்ற "மாணிக்கத்து ஒளி" என்றார். மடவரலியர் திறத்துட்பட்டமையால், அவை அழிந்தனவே என்று உருக வேண்டியிருப்பவும், அவற்றுக்கும் உருகாது, என்

குடிக்குரிய செல்வமெல்லாம் அழித்தனரே யென்றும், கையற்றபோது நண்பற்றனரே என்றும் வெறுக்க வேண்டியவரை வெறுத்திலாது, பண்டு போல அவர் நட்பினைப் பெற்றுக்கொள்ள விழைந்து, கொடுத்தற் கில்லாமை யால், அவர்மாட்டு இன்பம்துய்க்கும் திறங்களையெல்லாம் கற்பனை செய்து, அவ்வத்துறை தோறும் நைகின்ற என்னை என விரித்துரைக்க.

அவன் அருளே காரணமாகக் கொண்டு என்னை ஆண்டான் என்க. அவன் அங்ஙனம் ஆண்டதும் ஓர் அதிசயம் என்க.

ஒப்புரைக்கும் பொருள்கள் இன்மையால் உவமனிறந்த திருவடிகள் ஒண் மலர்த் திருவடிகள் என்க. எனவே உவமப் பொருள்களை வென்று புகழீட்ட வேண்டிய கடப்பாடும் அவற்றுக்கில்லையாயிற்று. இதனால், அவற்றைச் சார்ந்தார்க்கு மனக்கவலை தானே இல்லாது போகும் என்பது பெறப்பட்டது. ஒண்மை - நீழல். திரு - வீடுபேறு.

அவன் அப்பனுதலாலும், யான் அவன் மகனுதலாலும், என் சிறுமைக் கிரங்கி ஆண்டு, தன் அடியரிற் கூட்டிக்கொண்டான். அடியரைக் கூட்டியது அவர் பேரன்பினையும், என்னைக் கூட்டியது தன்னருளையும் காரணங்களாகக் கொண்டன என்று புலப்படுத்தியவாறு. "யாம்" என்னும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை, அடியரை நீக்கி நின்றமையால், மனத் ...யே உளப்படுத்தி நின்றதாகக் கொள்க.

மடமை, கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமையாகிய பேதைமை என்ப. அஃதாவது, ஈண்டுத் தாயரால், தம்பால் வந்து நலன் நுகரும் இளைஞரைக்கண்டு மனம் மயங்காது திண்மையோடு இருந்து வருமாறு கொளுத்தப்பட்டதை உளங்கொண்டு, மற்றதனை விடாது பயிற்றப் பயின்று வருந்தன்மை. அது வளர்ந்து கொண்டு வரும் இயல் பினையுடைய பரத்தையர். முலையைக் காட்டிப் பொருள் பறித்தல் அவர் இயல் பென்க. குறித்து வந்த இளைஞர் குறிப்புள் தாம் படாராய், தம் முலைக் காட்சியால் அவரைத் தம்மில் ஈடுபடுத்திப் பொருள் பறிப்பர் என்க. பொருளிழந்தார் அது குறித்து வருந்தாது, மேன்மேலும் சூது, களவு முதலாயவற்றால் பொருள் தேடி, மற்றவர் நண்பினையே பெறுதற்கு முயன்று வருமாறு ஏவும் ஆற்றலுடையது அவர் மேற்சென்ற காமமாகு மென்று விரித்துரைக்க.

'அகதிக்குத் தெய்வமே துணை' என்பது ஈண்டு ஞாபகத்தில் வரு

பொருள் நூலறிவுடன் இன்ப நூலறிவும் பெற்றிருப்பின், ஙனம் செய்திரேன் என்றபடி. இதனுற் கல்லாமையாலாகும் கேடும் உடன் கூறியருளப்பட்டது. அடுத்த திருப்பாடலால் அறநூல் அறிவின்மை கூறியருளப்படும்.

"முடித்தவாறும்" (திருச்ச. 57.) என்னும் திருப்பாட்டினையும் இதனை யும், பிறவற்றையும் கொண்டு அடிகள் வரலாற்றினைத் துணிதல் கூடும்.

நீதி ஆவன யாவையும்
 நினைக்கிலேன் நினைப்பவ ரொடும் கூடேன்
ஏத மேபிறந்(து) இறந்(து) உழல்
 வேன்தனை என்அடி யான்என்று
பாதி மாதொடும் கூடிய
 பரம்பரன் நிரந்தர மாய்நின்ற
ஆதி ஆண்டுதன் அடியரிற்
 கூட்டிய அதிசயம் கண்டாமே. 2

இது, பொருள்நூல் கல்லாமையோடு அறநூல் அறிவினையும் பெற்றுக் கொள்ளாமைக்கு எய்திய கேடு ஈதென்று புலப்படுத்தலோடு தாம் பிறந்தது அவமே எனவும், அத்தகைய தம்மை ஆண்டு கூட்டியது அதிசயமெனவும் அடிகள் கூறியருயளிது.

(பொ - ரை.) தன் திருமேனியின் இடது பாதியாக உமைப் பிராட்டியொடுங் கூடிய மேலோர் எல்லார்க்கும் மேலோனும், முடிவின்றி நிலைபெற்ற முதல்வனுகை உள்ளவனுமாகிய பெருமான், நீதிகள் பலவுள, அவை அனைத்தினையும் நினைக்கவும் மாட்டேன்; நினைந்து நடப்பவரொடும் கூடவும் மாட்டேன்; விதித்தவற்றை வெறுத்து விலக்கியும், விலக்கியவற்றை விரும்பிப் புரிந்தும் வருதற்காகவே பிறந்தும் இறந்தும் துன்புறுகின்றேனைத் தன்னுடைய அன்பன் என்று நினைந்து அடியரிற் கூட்டிய அதிசயத்தை யாம் கண்டு கொண்டாம் எ - று.

(வி - ரை.) நீதிகள், ஸ்மிருதிகளிற் கூறப்பட்டன. யாவையும் "நினைக்கிலேன்" என்றது, சிலவற்றை நினைந்தேன் எனப்படாது, ஒன்றனையும் நினைந்திலேன் என்பதுபட நின்றது. அவற்றை ஒவ்வொன்றுக எண்ணிப் பார்த்து இதனையும் நினைந்திலேன், இதனையும் நினைந்திலேன் என, நீதியாவனவற்றுள் ஒன்றையும் நினைந்திலேன் என முடிவு கட்டிக் கொண்டு, அதனுல் தாம் நினைந்தவை முற்றும் ஏதமாவனவே யெனக் கண்டு இரங்கி யருளினர். ஸ்மிருதி, (நினைக்கப்படுவது) என்னும் பெயர் இயைபினுக்கேற்பக் 'கற்றிலேன்' என்னுது "நினைக்கிலேன்" என்றருளினர் என்க.

நினைப்பவர் - ஸ்மிருதி நூற்புலமையாளர். தாம் கொண்ட காமத்திற்கு மாறுபட்டன மிருதிநூல்களும், மாறுபட்டவர் அந்நூற்புலமையாளருமாகலின், அவையும், அவற்றை அறிந்தார் இணக்கமும் வெறுக்கப்பட்டன என்று குறித்து உரைத்தருளினுர்.

அருளையே காரணமாகக் கொண்டு தம்மையாண்டமை தோன்றப் "பாதிமாதொடும்" என்றும், சிறுமை பொறுக்கும் மேலோர் யாவர்க்கும் மேலோன் என்பது கொண்டு "பரம்பரன்" என்றும், அவனே எமக்கு

நிலைத்த அப்பனுவான் என்பார் "நிரந்தரமாய் நின்ற ஆதி" என்றும் அருளிச் செய்தார். நிர் அந்தம் - முடிவின்மை. பாதி - திருமேனியிற் பாதி. உழலுதல் - அலைந்து துன்புறுதல்.

முன்னை என்னுடை வல்வினை
போயிட முக்கண்ண(து) உடையெந்தை
தன்னை யாவரும் அறிவதற்(கு)
அரியவன் எளியவன் அடியார்க்குப்
பொன்னை வென்றதோர் புரிசடை
முடிதனில் இளமதி யதுவைத்த
அன்னை ஆண்டுதன் அடியரிற்
கூட்டிய அதிசயம் கண்டாமே. 3

இது, சுழித்தலைப்பட்டு நைந்து பிறந்திறந்து உழல்வேனை என் முன்னை வல்வினை போக ஆண்டு கூட்டிய அதிசயம் கண்டாம் என அடிகள் கூறியருளியது.

(பொ - ரை) மூன்று கண்களையுடைய எம் தந்தையும், தான் அறிவிக்க அறிந்துகொள்வதன்றி எத்தகையவரும் எம் முயற்சியாலும் அறிய இயலாதவனும், அன்பர்க்கு எளியவனாகத் தன்னை அறிவித்து அறியச் செய்வோனும், பொன்னொளியை அடக்கி மேம்பட்ட ஒளியுடைய ஒப்பற்ற முறுகிய சடையை முடித்த முடிமிசைப் பிறையினை வைத்த தாய் போன்றவனுமாகிய பெருமான், (தானே வந்து) என்னுடைய முன்னைய வலிதாகிய வினை அகன்றொழிய அடிமை கொண்டு தன் அன்பருடன் கூட்டிய அதிசயத்தை யாம் கண்டாம் எ - று.

(வி - ரை.) சுழித்தலைப்பட்டு நைந்து உழல்வேனை அருள் காரணமாகத் தானே வந்து என் முன்னைய வல்வினை யகல ஆண்டு கூட்டினான் என்றருளியபடி.

"அடியரில்" என்றதற்கு, அன்பற்ற என்னையும் அன்பரைப்போல மதித்துக்கொண்டு ஆண்டு தன்னொடு கூட்டினான் என்றலும் நேரிது.

என்னை நைவித்தல் வேண்டுமென முயன்ற மனமே! நினக்கும், நைவேன் என்றிருந்த எனக்கும் ஆண்டு கூட்டியது அதிசயமென்றபடி.

முக்கண்ணும் முடியில் இளமதியும் சூடியவனே அன்னையாக அருள் மேற்கொண்டு அத்தனாக அறிவுறுத்தினான் என்பது ஈண்டுக் கூறியருளிய திருப் பெயர்களாற் போந்தது.

சுழித்தலைப்படுதல், பிறந்திறந்துழல்தல், நைதல் என்பனவெல்லாம் முன்னைய வல்வினையால் தொடரப்பட்டன. ஏனையவெல்லாம் புது வினைகள். அவையெல்லாம் நினைவு மாத்திரையாற் போந்தனவாம்.

"மதியது" வென்பது விகுதியாற் பால் தோன்ற நின்றது. இங்ஙனமே முன்னும் பின்னும் இலக்கணம் உரைத்துக்கொள்க. புரி - மயிரிழைகள் ஒன்றுசேர முறுக்கிய முறுக்கு.

முன்னர் ஆண்டுகொண்ட காலையே பழவினையும், பின்னர் ஆட்கொள் ளப் படுங்காலைப் புதுவினையும் போகும் என்னும் நூலறிவு காணமாட்டா தார், ஈண்டு "முன்னை" என்பதற்குச் செவ்வி வருவதன் முன்னுக எனப் பொருள் கூறி இறைவனுக்கோர் இழுக்கினையும் அவமே ஏற்றி இடர்ப் படுவர்.

"தன்னை" என்றதற்குத் தானே தலைமையானவன் என்று உரைப் பாரும் உளர். அங்ஙனம் கூறல் குன்றக் கூறலாமென்க.

பித்தன் என்(று)எனை உலகவர்
பகர்வதோர் காரணம் இதுகேளிர்
ஒத்துச் சென்றுதன் திருவருள்
கூ(டி)டும்உ பாயம(து) அறியாமே
செத்துப் போய்அரு நரகிடை
வீழ்வதற்(கு) ஒருப்படு கின்றேனை
அத்தன் ஆண்டுதன் அடியரிற்
கூட்டிய அதிசயம் கண்டாமே. 4

இது என்னைப் பித்தன் என்று உவக்கும் இறைவன் சொல்லை ஒத்துக்கொண்ட என்னை அவர் ஆட்கொண்ட இப்போதும் யான் கெடுதற்கு ஒருப்படுகின்றேன் ஆதலால் இருவேமுக்கும் ஓர் அதி சயமாகும். அதனை இன்று கண்டாம் என அடிகள் அருளியது.

(பொ - ரை.) இறைவன் அருளிய எனக்கு ஒவ்வாத அன்பு நெறியிலே மனம் ஒத்துச் சென்று அவனுடைய திருவருளைக் கூடி வாழும் சூழ்ச்சியை அறிந்துகொள்ளாது அவமே இறந்துபோய் மீளற்கு அரிதாகிய நரகத்திடை வீழ்வதற்கு மனமும் செயலும் ஒன்றுபட்டிருக்கின்றேன். ஆதலால் அவ் ஒருப்பாடு என்னை உல கோர் பித்தன் இவன் என்று பகர்வதற்கு ஏற்றதொரு காரண மாகும். அத்தகைய என்னை என் அப்பன் முன்னர் ஆட்கொண்டு தன் அடியரைப்போல் தன்னொடு கூட்டிய அதிசயத்தையும் யாம் இப்போது கண்டாம் எ - று.

(வி - ரை.) ஆண்டு கூட்டியும் கெடுகின்றேன். இஃது ஓர் அதிசய மாகும் என்க. ஆண்டதும் அதிசயம், ஆண்டு கெடுகின்றதும் அதிசயம். பெருந்திணைப் புணர்ச்சிக்கு ஒத்துப் போதலே அவ் உபாயமாகும். அங் ஙனம் ஒத்துப் போகாமையான் புதியனவாகிய நினைவுத் தீவினைகளால் இழுக்கப்பட்டு நரகிற் புக ஒருப்படுகின்றேன் என வருவித்துக் கொள்க.

அன்பின் ஐந்திணை நெறி பற்ற வேண்டுமென்று பெருந்திணை நெறியை மறுத்த பேறு இதுவாயிற்று என்று குறிப்பித் தருளினர். அத் தனைகி யாண்டு கொண்டவன் இப்போது எத்தனைகி மயக்குகின்றான் என்க. அன்பின் ஐந்திணை நெறிவழி அவன் வராமைக்குரிய காரணங்கள் அன்பு நெறி ஒழுகுவார் இணக்கம் எய்தாமை, அதனை எய்தற் கேற்ற தொண்டு செய்யாமை என்னும் இவற்றால் நனவு வரப்பெற்றுக் காமத்தில் மனம் இழுத்துச் செல்லா நின்றது என அடுத்து வரும் திருப்பாட்டாற் கூறியருளுவர்.

பரவு வார்அவர் பாடுசென்(று)
அணைகிலேன் பன்மலர் பறித்தேத்தேன்
குரவு வார்குழ லார்திறத்
தேநின்று குடிகெடு கின்றேனை
இரவு நின்(று)எரி ஆடிய
எம்இறை எரிசடை மிளிர்கின்ற
அரவன் ஆண்டுதன் அடியரிற்
கூட்டிய அதிசயம் கண்டாமே. 5

இஃது, அன்பு நெறி பயிலாதும், அன்பரைச் சாராதும் குடி கெட்டும் என்னை ஆண்டு கூட்டிய அதிசயம் கண்டாம் என்று அடிகள் அருளியது.

(பொ - ரை.) எல்லாம் ஒடுங்குகின்ற சர்வசங்கார காலமாகிய இரவிலே ஊழித்தீயொடு ஒருங்கே ஆடிய எம்மிறைவனும், தீப் போன்ற செவ்விதாகிய சடைக்கண்ணே பிறழ்ந்து விளங்குகின்ற அரவினையுடையவனுமாகிய பெருமான், அன்பு நெறிநின்று தன்னையே காதலனாகக் கொண்டு பரவி வரும் தோழியை உள்ளிட்ட அன்பராகிய ஆயத்தார் பக்கலே சென்று அவரைச் சார்ந்திலேனாகவும், அவ் வகனைந்திணைக்குரிய தொண்டாகிய பல்வகைப்பட்ட மலர்களைப் பறித்துத் தலைமகன் திருவடிக்கணிந்து ஏத்தேனாகவும், குரவமலரணிந்த குழல்மங்கையர்தம் திறங்களிலெல்லாம் தங்கிக் குடிகெடுகின்ற என்னை ஆண்டுகொண்டு தன்னடியரைப் போலத் தன்னொடு கூடி ஒருங்கிருக்கச் செய்த அதிசயம் கண்டாம் எ-று.

(வி - ரை.) யான் தலைமகளாகவும், இறைவன் தலைமகனாகவும் செய்த பாவனையெல்லாம் போகப்பெறுமாறு நனவு மேலிட்டமையினாலே ஆயத்தார் பக்கலும், தொண்டுமிலேன் ஆதலொடு என் மனம் பின்னும் மகளிரைக் காதலிக்க ஏவுகின்றது. அதனால் என் குடியொழுக்கமாகிய தலைமகட் பண்பும் யானும் கேடடையப் பெற்றேம் என்று இரங்கியருளியவாறு.

பாடு - பக்கம். குரவு - பாலைக்குரிய குரவமரத்தின் நறிய பூ. அதனை

யணிந்த குழல். அதனால் முன்னர்க் காதல்செய்து நீக்கிய மகளிர் பற்றுப் பின்னர் புகுந்தமை கொள்க. திருக்கோவையாருள்ளே அடிகள் திருவுளம் ஒரே படித்தாக ஐந்திணை நெறியிலே தோய்ந்து சென்று திருவடி நீழலை எய்தியவாறு காண்க.

அப்பொழுது என் காதலனைக் காட்சியளித்த அவனே எனக்கு இப்போது எரியாடும் அரவனைக் காட்சியளித்தான். ஆதலால் அவனை என் மனம் பற்றற்கு இயலாது போகப் பாவனை நீங்கப்பெற்று இங்ஙனமாகிக் குடிகெடுகின்றேன். இங்ஙனம் ஆக்கவா என்னை அவன் முன்னர் ஆண்டு கொண்டாள்? அதுவும் இதுவும் எமக்கு அதிசயங்களாகும் எனப் புலப்படுத்தருளினர் என்க.

எண்ணி லேன்திரு நாம அஞ்(சு)
எழுத்தும்என் ஏழமை அதனாலே
நண்ணி லேன்கலை ஞானிகள்
தம்மொடு நல்வினை நயவாதே
மண்ணிலே பிறந்(து) இறந்துமண்
ஆவதற்கு ஒருப்படு கின்றேனை
அண்ணல் ஆண்டுதன் அடியரிற்
கூட்டிய அதிசயம் கண்டாமே. 6

இஃது, அவ்வுலக இன்பத்திற் காதல், இவ்வுலக இன்பத்திற் காதல் முயன்று நயம் பெறாது, இவ்வுலகிலே இறந்து மண்ணாவதற்கு மனமும் செயலும் ஒருப்பட்டிருக்கின்ற என்னை ஆண்டுக் கூட்டிய அதிசயம் கண்டாம் என்று அடிகள் அருளியது

(பொ - ரை.) எனக்கு அறிவுறுத்தப்பட்ட இறைவன் திருநாமமாகிய ஐந்தெழுத்தினையும் நியமத்துடன் உருவெண்ணியேற்றுதலையும் செய்தேனில்லை அன்றியும், நூல் வல்ல அறிஞர்களையும் என் அறியாமையால் சார்தலையும் செய்தேனில்லை. மேலும், ஒரு நல்வினையையேனும் விரும்பாது (எல்லாத் தீவினைகளையும் விரும்பிப் புரிந்து) இவ்வுலகிற் பிறந்திறந்து மண்ணாவதற்கு ஒருப்படுகின்றேன் அத்தகைய என்னையும் அப்பெருமையிற் சிறந்தோன் முன்னர் மெய்யன்பரைப்போல ஆண்டுகொண்டு அவருடன் சேர்ந்த ஒருவனைக் கூட்டிய அதிசயத்தையும் யாம் கண்டுகொண்டாம் எ-று.

(வி - ரை.) "ஏழமை" என்றதனைத் திருவைந்தெழுத்து எண்ணைமைக்கும், அறிஞரை நண்ணைமைக்கும் சேர்க்க.

மண்ணப் போதல் - அறிவின்றிச் சடமாப் போதல். இதுவும் ஒருவகைத்தான தற்கொலைப் பாதகத்தின்பாற்படும்.

முன்னர்க் கலைஞர் உறவு பெற்றிருப்பனேல், உலகியலுள்ளே சிறந்த இன்பமெய்தியும், பின்னே திருநாமம் எண்ணியிருப்பின், கன்னியர் காம வலைப்படாது, இறைவனைக் கூடி ஆனந்தமெய்தியும் சிறக்கலாகுமெனக் கழிந்ததறகிரங்கு முகத்தானே ஆக்கம் பெற்றுக்கொள்ள மனத்தை ஊக்கி யருளுகின்றார் என்க. இஃது கவி யுலகுக்கோர் விருந்தாம் என்க. அறிஞர் இணக்கம் இன்மையால் நல்வினை நயத்தற்கு இயலாது போயிற்று. அண்ணலும் அறிஞரும் குறை செய்திலர்; யானே குறைபாடுடையேன் என்று குறிப்பாற் புலப்படுத்தியருளினார். ஆளப்படுவதற்கு முன்னஞ் சூழ்ந்த பாவங்களோடு ஆண்ட பின்னும் இவ் எண்ணுமையோடு கூடிய பாவங்கள் பலவும் சூழ்ந்து கொண்டன என்க.

பொத்தை ஊன்சுவர் புழுப்பொதிந்(து)
உளுத்(து) அசும்(பு) ஒழுகிய பொய்க்கூரை
இத்தை மெய்யெனக் கருதிநின்(று)
இடர்க்கடற் சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணி மாணிக்க
வயிரத்த பவளத்தின் முழுச்சோதி
அத்தன் ஆண்டுதன் அடியரிற்
கூட்டிய அதிசயம் கண்டாமே. 7

இது, பொய்ப்பொருளாகிய உடலினை மெய்ப்பொருளாக மயங்கி அதனைப் போற்றுதலிலே நிலைபெற்று வந்த என்னையும் ஆண்டு கூட்டிய அதிசயம் கண்டாம் என அடிகள் அருளியது.

(பொ - ரை ) (ஒன்பது வாயில்களும் மயிர்த் துளைகளுமாகிய) பொத்தல்களையுடைய மாமிசமாகிய சுவர்களையுடையதாகிய, புழுக் களைத் தன்னுள்ளேயடக்கி உளுக்கப்பெற்று நிணநீர் ஒழுகப்பெற்ற பொய்யாகும் சிறுகுடிலாகிய இவ்வுடலை மெய்ப்பொருள் எனக் கருதி அதனை ஓம்புதற்கண்ணே நிலைபெற்றுப் பிறவியாகிய துன்பக் கடற்கண்ணே மங்கையராகிய சுழித்தலைக்கண் இழுப் புண்ட என்னையும், முத்தினதும், கருநீல மணியினதும், அரதனம் வயிரம் பவளம் என்னுமிவற்றினுலாய ஒளிமுழுவதும் கலந்து தோன்றும் திருமேனியையுடைய என் அப்பன் அப்போது அன் பரைப் போலவே ஆண்டுகொண்டு அவரொடு கூட்டியதால் உள தாகிய வியப்பினைப் பெற்ற பேற்றினை இப்போது கண்டாம் எ-று.

(வி - ரை.) பொத்தை - பொத்தல். பொதிதல் - உள்ளே அடக்கப் படுதல். உளுத்தல் - புழுவால் அரிக்கப்படுதல். அசும்பு - இடையறாது ஒழுகும் நிணநீர். 'இதை' என்பது "இத்தை" என விரிந்தது, இழிவு தோன்ற. மெய் - ஆகுபெயராய்ப் பொருளை உணர்த்திற்று. சுழி - மங்கைய

ராகிய சுழி. உமையொடு கூடி வெண்ணீறணிந்த திருமேனியின் பொலிவு கூறியருளப்பட்டது. மதி, கொன்றை, என்பு முதலாயவற்றுள்ளும் ஏற்பனவற்றை ஈண்டுக் கொள்க.

நீக்கி முன்எனைத் தன்னொடு
  நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன
  சொற்செய்து நுகம்இன்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்அறத்
  துகள்அறுத்(து) எழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி ஆண்டுதன் அடியரிற்
  கூட்டிய அதிசயம் கண்டாமே. 8

இஃது, இறைவன் தம்மைத் தானாகவே நீக்கிப் பிறக்க வைத்ததும் பின்னர்த் தானாகவே வந்து ஆட்கொண்டதும் அதிசயம் என அடிகள் அருளியது.

(பொ - ரை) மேலெழுதலைச் செய்யும் விளக்கமாகிய ஒளி வடிவப் பெருமான், முன்நாளிலே தானாகவே தன்னுடன் நில்லாதவாறு என்னை நீக்கிச் சிறுகுடிலாகிய உடம்பினுள்ளே சேர்த்து, ஆங்கு ஆசானாகத் தானே வந்து தோன்றிக் கடைக்கணித்து, நுண்மையுடைய ஓசையனவாகிய பிரணவமாகிய சொல்லை அறிவுறுத்தி, நரகிடைக் கீழ்ச் செல்லாது மேலே கரையேற்றித் தான் எனக்கு முன்செய்து கொடுத்த உடம்பாகிய பொய்ப்பொருள் அற்றுப்போக மலங்கெடுத்து (என்னையும் ஒரு பொருளாக) உளதாக்கி அடிமைகொண்டு அடியாரைப்போலத் தன்னுடன் அன்று கூட்டிய, கலப்பையின்றி 'வயலை உழுதலால் வரும் சுற்றுதலையுடைத்தாகிய அதிசயம் இன்று கண்டாம் எ - று.

(வி - ரை.) துணைக் கருவியின்றி உழுதவாறே என்னையும் வினைக் கருவியின்றி நீங்கிப் பிறத்தலும், தன்னைச் சேரலுமாகிய சுற்றுதலைப் பெறச் செய்தருளினான். அஃது அதிசயம் என்க.

விளா - சுற்று. மருள் என்பது மருட்கை என்றவாறே, விளா என்றது "விளாக்கை" என நின்றது. (திருவே. 7.) விளாக்கை - சுற்றுதல். விளாக்கைத்து - சுற்றுதலையுடைத்து. நோக்கி - என்பால் நோக்கி.

நீக்கிப் புகப்பெய்து; நோக்கிச் சொற்செய்து, தூக்கித் துகளறுத்து, ஆக்கி ஆண்டு கூட்டிய அதிசயம், நுகமின்றி விளாக்கைத்தாகிய அதிசயமாம் என்க. தன்னொடு நிலாவகை நீக்குதற்குக் காரணமொன்றுமில்லை யென்க. குழைத்தபத்து நான்காம் செய்யுளையும் குலாப்பத்து ஒன்பதாம் செய்யுளையும் நோக்குக.

" துறக்குமா சொல்லப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாத என்னை மையல்செய்திம் மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படும் உடம்புவிட்டு
இறக்குமாறு காட்டினாய்க்கு இழுக்குகின்ற தென்னையே."
(திருத்துருத்தி தேவா.)

எனச் சம்பந்த சுவாமிகள் அருளியதும் ஈண்டு நோக்கற்பாலது.

நொடி - ஓசை. நுண்ணிய ஓசையுடைய சொல் என்க. அஃது, அ, உ, ம் என்னும் ஓசையுடைய பிரணவமாம் என்க.

ஆக்கி - சிவமாக்கி. " சுடர்ச் சோதி "யாக்கி என்றியைப்பாருமுளர்.

இறைவன் தன்னொடு நிலாவகை நீக்கிக் குரம்பையிற் புகப்பெய்து ஆண்டமையும், திருப்பெருந்துறைத் திருக்கோயிற்கண் நந்திதேவரின்மையும், அத்தலம் மூவராற் பாடல் பெருமையும் முதலாயினவெல்லாம் அடிகள் வரலாற்று முறையை நெறிப்படுத்துதற்குரிய கருவிகளாம்.

உற்ற ஆக்கையின் உறுபொருள்
நறுமலர் எழுதரு நாற்றம்போல்
பற்றல் ஆவதோர் நிலையிலாப்
பரம்பொருள் அப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது
நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரிற்
கூட்டிய அதிசயம் கண்டாமே. 9

இஃது, ஊக்கமின்றி வினையுய்த்தவாறே சென்று அதன் பயனை நுகர்ந்து கெடும் பித்தர் பேச்சுக்குச் செவி கொடாவண்ணம் என்னை அடியரைப்போல் ஆண்டு கொண்டு கூட்டிய அதிசயம் கண்டாம் என அடிகள் அருளியது

(பொ - ரை ) நறியதாகிய மலரானது பற்றியிருப்பது தன் மாட்டு எழுதலைச் செய்கின்ற மணமேயாவது போல, மக்கட்பண்பு பொருந்திய ஆக்கையிற் பொருந்திய பொருளாகும் உயிரானது பற்றற்குரிய பொருளாவது, தனக்கொரு பற்றுக்கோடு மில்லாததாகிய பரம்பொருளேயாம் அப்பரம்பொருளினை நோக்குதலொழிந்து, தம்மானென்று கருதிப் பெற்றுக்கொண்ட பேற்றினையே பெற்று வருவோராகிய பித்தர்களின் சொல்லைத் தெளிந்து உழலாவண்ணம் என் அத்தனவான் என்னை அன்று ஆண்டு தன் அடியாரிடைக் கூட்டிய அதிசயம் இன்று கண்டாம் எ-று.

(வி - ரை.) "நறுமலர்" என்றமைக்கேற்ப "உற்ற ஆக்கை" யென்ற

தற்கு மக்கட் பண்பு என விரித்தாம். நிலை - தங்குமிடம்; அப் பற்றுக்கோட்டினை என்க. ஆக்கையின் பறறுக்கோடு உயிரும், உயிரின் பற்றுக்கோடு பரம்பொருளுமாகத் தொடர்புற்று நிற்புழியே, தனக்கொரு பற்றுக் கோடின்றிப் பரந்த பொருளைப் பாராதே, தம் அறிவின்மையால் தாங் கொண்டது விடாது கொண்டதனையே நுகர்வார் பித்தரெனப்பட்டார் என்க. அவர் காட்சியைத் திருப்ப முயலினும், அவர் கண்டதைக் கேட்பினும், தாம் கண்டவை காணுது, அவர் கண்டதே கண்டுகொள்ள வேண்டுமாகலின் " பித்தர் சொல் தெளியாமே " என்றருளினர்.

அத்தகைய " பரம்பொருள் " எனச் சுட்டு விரிக்க. " பரம்பொருள்; அப்பொருள் " எனப் பிரித்தோதியருளினுர், பரம்பொருளின் மிக்க பெருமையின் கண் வியப்பும், பித்தரின் மனக்கோளின் இழிவும் தோன்ற.

" பித்தர்சொல் தெளியாமே " என்பதனுனும், " நினைப்பவரொடுங் கூடேன், பரவுவார் பாடுசென்றணைகிலேன், நண்ணிலேன் கலைஞானிகள் தம்மொடு " என்றவற்ருனும், அடிகள் பித்தரொடு பயின்று திரிந்தார் என் பதும், ஆனல் அவர் சொல் தெளிந்திலர் என்பதும், நல்ல வேளையாக இறைவன் ஆண்டு கூட்டினுன் என்பதும் பெற்ரும். அங்ஙனம் இன்றெனின் ஆண்டமை அதிசயமின்றென்க. "தெளியாமே" என்பது ஆற்றலால் தெளியப்புகும் அவசரத்தை யுணர்த்தி நின்றதென்க.

மலர் பண்பாகப் பற்றும் நாற்றம்போல் உயிர் பண்பாகப் பற்றுவது "பரம்பொருள்" என்ற மாத்திரைக்கே உவமங்கொள்க.

இனி, உடம்பின் மேற்பட்ட பயனுவது, ' நறுமலரினின்று எழுதலைச் செய்கின்ற மணத்தைப்போன்று, ஐம்புல அறிவாற் பற்றப்படுவதாகிய ஒரு நிலையைப் பெற்றில்லாத மேம்பட்ட பொருளாகிய அப்பொருளைக் காண முயலாதே வினையாற் பெற்றுக்கொண்ட பேற்றினையே பெற்றுவருவோராகிய அறிவிலிகளின் சொல்லைப் பொருளுடைத்து என்று தெளிந்துழலாது என் அப்பன் என்னையும் ' என்கின்றவாறு எனப் பொழிப்புரைத்தலுமாம். அங்ஙனம் கொள்ளின், சேய்மைக்கண் வீசும் நாற்றம் மூக்காற் பற்றப்பட்டு அதன் துணையால் நாடிச் சென்று மலரைக் காணுமாறு போலாது, பருப்பொருளாகிய உடலைக்கொண்டு உயிர் பரம்பொருளை உய்த்துணரற்பாலதெனவும், உயிர்க்குப் பற்றுக்கோடு உடலன்று பரம் பொருளாதலின், உடலைப் பேணலில் ஊக்கமுருது பரம்பொருளை உணர்தலே கடப்பாடாமெனவும் உரைத்துக் கொள்க.

இருள்தி ணிந்(து)எழுந் திட்டதோர்
வல்வினைச் சிறுகுடி லிதுஇத்தைப்
பொருள்எ னக்களித்(து) அருநர
கத்திடை விழப்புகு கின்றேனைத்

தெருளும் மும்மதில் நொடிவரை
இடி தரச் சினப்பதத் தொடுசெந்தீ
அருளும் மெய்ந்நெறி பொய்ந்நெறி
நீக்கிய அதிசயம் கண்டாமே. 10

இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட பின்னும் இஃது, எவ்வாற்ரு னும் இழிவுடைத்தென இயல்பாகவே அறியப்பட்ட பொய்ப்பொரு ளாகிய உடலை மெய்ப்பொருளெனக் கொண்டு களித்து நரகில் விழச் சென்றுகொண்டிருக்கும் என்னை அன்று ஆண்ட அதிசயம் இன்று கண்டாம் என அடிகள் அருளியது.

(பொ - ரை ) அறியாமையாகிய யான் எனது எனும் செருக் கால் ஒப்பற்றவற்கென்ற வினைக்கீடாகிய சிறுமைப்பாட்டினை யுடைய குடிலாகிய இதனை மெய்ப்பொருளென்று கருதி மகிழ்ந்து மீளற்கரிதாகிய நரகத்திடை வீழ, அதனுள்ளே சென்றுகொண்டிருக் கின்ற என்னையும் (மாற்ருரால் அழித்தற்கும் உட்புகுதற்கும் இயலா தெனத்) தெளிவு செய்யும் மூன்ருகிய மதில்களும் ஒருநொடிப் பொழுதின் எல்லைக்குள் நிலைகெட்டுவிழச் சினக்குறிப்போடு கூடிய செவ்விதாகிய நிறத்தினைக் கொண்ட தீயானது அருளிச்செய்யும் மெய்ந்நெறியானது என்மாட்டுக் குடிகொண்டிருந்த பொய்ந் நெறியையும் நீக்கிய அதிசயம் கண்டாம் எ - று.

(வி - ரை.) மாற்ருர்க்குத் தெளிவு செய்யும் என்க. செந்தீ, அம்பு மாம். உடையவன்தொழில் உடைமையின் மேலேற்றப்பட்டது.

" ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறும்
கூற்ற மன்னதொர் கொள்கை என் கொள்கையே " (திருச்ச. 45.)

என்றருளிச்செய்தார் முன்னும். இங்ஙனம் மாறுபட்ட கொள்கையுடைய ஞய், நிக்கிரகம் செய்து ஆளப்படவேண்டியவனை ஐந்திணை நெறியால் அப்போது அனுக்கிரகம் செய்து ஆண்டதும் ஓர் அதிசயம் என்க. இப் போதும் பின்னை நரகிடை விழுமாறு பிரிந்து உழல வைப்பதும் ஓர் அதி சயம் என்க.

திருச்சிற்றம்பலம்

# புணர்ச்சிப் பத்து

அஃதாவது இறைவனுடன் ஒன்றறக் கலத்தல் குறித்துவரும் பத்துத் திருப் பாட்டுக்களையுடைய பகுதியாம். இப்பகுதியிலுள்ள பாட்டுக்களின் இறுதிகள் "என்று கொல்லோ என் பொல்லா மணியைப் புணர்ந்தே" எனப் "புணர்ந்தே" என்பதை இறுதிச் சொல்லாகக் கொண்டுவருதலுங் கண்டுகொள்க.

நெறியல்லாதவற்றை மேற்கொண்ட தம்மை ஆண்டு அடிய ருடன் கூட்டிய திறம் குறித்து அதிசயித்த அடிகள், அத்துணைப் பெரியோனைப் பிரிந்திருத்தல் ஒல்லாதாதலின் அவனுடன் புணர்ந்து பேரின்ப மெய்தத் துணிந்தாரென்க இதனால் முன்னைய பகுதி யோடு இப்பகுதிக்கு இயைபு கண்டுகொள்க.

ஆற்றுமை மிக்குச் சாகத் துணிந்த அடிகள் அது கைகூடாமை யின் இறைவனை அடைக்கலமாக அடைந்து ஆறுதல் பெற்று அவ் வாறுதல் பற்றுக்கோடாக ஆசைப்பட்டும் அதிசயப்பட்டும் நின்று தமது புணர்ச்சி விருப்பை எடுத்தோதுகின்றுரென்க. இதனால் அடிகள்தம் உள்ளத்தில் பல்வகைச் சுவைகளும் மாறிமாறித் தோன்றிவருவது கருத்தான்றத்தக்கது

இப்பகுதி, அவனைச் சார்ந்து புடைபட்டிருந்து பூண்டுகிடப் பது என்றுகொல் எனவும், போற்றிப் புக்குப் புரிந்துநிற்பது என்று கொல் எனவும், புனைந்து புகழ்வது என்றுகொல் எனவும், புல்லி அணைவது என்றுகொல் எனவும் வரும் நான்கு பெரும்பிரிவுகளை யுடையது.

முதலாம் பெரும்பிரிவின் உட்பிரிவுகள் வருமாறு —

இது, அவனைச் சார்ந்து புடைபட்டிருப்பது என்றுகொல் (1) எனவும், அவனைச் சார்ந்து பூண்டுகிடப்பது என்றுகொல் (3) எனவும் இரண்டு பிரிவுகளையுடையது

இரண்டாம் பெரும்பிரிவின் உட்பிரிவுகள் வருமாறு —

இது, அவனைப் போற்றி நிற்பது என்று.கொல் (2) எனவும், அவன்பாற் புக்கு நிற்பது என்றுகொல் (8) எனவும், அவன்பால் புரிந்துநிற்பது என்றுகொல் (6) எனவும் வரும் மூன்றுபிரிவுகளை யுடையது.

மூன்றும் பெரும்பிரிவின் உட்பிரிவுகள் வருமாறு —

அவனைப் புகழ்பெறுவது என்று (7) எனவும், அவனைப் புனையப் பெறுவது என்று (5) எனவும் வரும் இரண்டு பிரிவுகளை யுடையது.

நான்காம் பெரும்பிரிவின் உட்பிரிவுகள் வருமாறு :—

அவன் பாதப்போது அணைவது என்று (10) எனவும், அவன் பாதப்போதினை ஆய்ந்து அணைதல் என்று (9) எனவும், அவனைப் புல்லிப் புணர்வது என்று (4) எனவும் மூன்று பிரிவுகளையுடையது.

அவனைப் புடைபட்டிருந்து, பூண்டு கிடந்து, போற்றிப் புக்கு, இரங்கிப் புகழ்ந்து, புனைந்து, அணிந்து, புல்லுவது என்றுகொல் என்பதுவே அடிப்பாட்டுப் பொருளடைவாகும்.

நாற்பொருளடைவிற்குக் காரணம் வருமாறு —அடிப் பாட்டிலே முதலாவதாய "அவனைப் புணர்ந்து புடைபட்டிருப்பது என்றுகொல்" என்பது முன்னர்ப் பகுதியாற் கூறியருளிய வியப் பின் பின்னர்த் தோன்றிய முதற்காட்சியாக நிற்பதென்னும் இயைபு பற்றி முதலாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே மூன்றுவதாகிய, "அவனை ஏத்தி உருகி ஓல மிட்டுப் போற்றி நிற்பது என்றுகொல்" என்பது புடைபட்டுப் போற்றி நிற்கவேண்டுமென முன்னைய பொருளையே அனுவதித் தலின் ஈண்டு இரண்டாவதாக வைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே இரண்டாவதாகிய "அடியார் முன்னர் வேண்டுந்தனையும் வாய்விட்டலறி மலர்தூவி அவனைப் பூண்டு கிடப்பது என்றுகொல்" என்பது ஓலமிட்டுப் போற்றி நிற்கும் போது அவனொடு புணர்ந்து வீற்றிருக்கும் அடியார்க்கும் நாணுது அரற்றிப் பழகிக் கூடக்கிலன்றி அவனைப் போற்றுதல் இயலாது எனக் கண்டருளிய துணிபால் ஈண்டு மூன்றுவதாக அமைத் தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே எட்டாவதாகிய "அவனைப் புல்லிப் புணர்வது என்றுகொல்" என்பது நாணம்விட்டு ஓலமிட்டாலன்றி அவனைப் புணரலாகாது எனக் கண்டருளிய இயைபால் ஈண்டு நான்காவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப்பாட்டிலே ஏழாவதாகிய "ஆட்கொண்டு ஆவா என்ற நீர்மையெல்லாம் புகழப் பெறுவதென்றுகொல்" என்பது அங்ஙனம்

புல்லிப் புணரும் போழ்திலே அவனுக்கு அப்போது இகழ்விற்கு இடமாய்நின்ற ஆவா என்ற நீர்மை எல்லாம் இப்போது புகழாக மாறுபடும் என்னும் இயைபால் ஐந்தாவதாக அமைத்தருளப் பட்டது.

அடிப்பாட்டிலே ஐந்தாவதாகிய "நீ செய்த அருளைப் பிரிந்து மயங்கினேன் உகந்து அன்பாய்ப் புரிந்து நிற்பது என்றுகொல்" என்பது, இகழ்வெல்லாம் புகழாகத் தனக்கு இயைந்த தாழ்வு நீங்கி உயர்வு வர அன்பாய் விரும்பி நிற்றல் கூடும் என்னும் இயைபால் ஆறுவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப் பாட்டிலே ஆறுவதாகிய
தும் தழுத்த கண்டங் கனையக் கண்ணீர் அருவி பாயக் கை கூப்பிக் கடிமலராற் புனையப் பெறுவது என்று கொல்" என்பது விரும்பிய பின் அவனுக்கு மாலையிடுதல் மரபாகலால் அவ்வியைபு கருதி ஏழாவதாக வைத்தருளப்பட்டது.

அடிப் பாட்டிலே நான்காவதாகிய, "உள்நெக்கு உருகி, இருந் தும் கிடந்தும் எழுந்தும், நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்திக் கூத்து நவிற்றி மேனி நோக்கிச் சிலிர் சிலிர்த்துப் புக்கு நிற்பது" என்பது மாலை சூட்டிய பின்னர்க் காதற் பித்தால் ஆனந்த ஊற்றுள் அழுந்தி அகத்துள்ளே புகுந்து நாணத்தால் நிற்றல் இயைபாதலால் அது கருதி ஈண்டு எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப் பாட்டிலே பத்தாவதாகிய, "அவனை எப்போதும் ஏத்திப் பாதப்போது ஆய்ந்து அணைவது என்றுகொல்" என்பது நாண் நீங்கி அவன் பாதமேதான் கிடத்தற்குரிய இடமென ஆய்ந்து கொண்டு அங்ஙனே கிடப்பது என்று கொல்லென்னும் இயைபால் ஒன்பதாவதாக அமைத்தருளப்பட்டது.

அடிப் பாட்டிலே ஒன்பதாவதாகிய திருப்பாட்டு அங்ஙனம் ஆயுமாறு மற்றதனை அணைதல் வேண்டும் எனக் கருதிய இயைபால் பத்தாவதாக வைத்தருளப்பட்டது.

முதலாவதாகிய புடை பட்டிருத்தலும் பத்தாவதாகிய பாதப் போதணைதலும் தம்முள் ஒத்த சிறப்புடையனவென்க.

இயற்கைப் பொருளடைவு ஆதியனவற்றின் அட்டவணை வருமாறு:

| பெரும் பிரிவு | உட் பிரிவு | இ. பொ. | நூ. பொ. |
|---|---|---|---|
| I | அ | 1 | 1 |
| | ஆ | 2 | 3 |
| II | அ | 3 | 2 |
| | ஆ | 4 | 8 |
| | இ | 5 | 6 |
| III | அ | 6 | 7 |
| | ஆ | 7 | 5 |
| IV | அ | 8 | 4 |
| | ஆ | 9 | 10 |
| | இ | 10 | 9 |

இஃது திருப்பெருந்துறையில் அருளியது என்ப.

# அத்துவித இலக்கணம்

## ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

சுடர்பொற் குன்றைத் தோளா முத்தை
வாளா தொழும்புகந்து
கடைபட் டேனை ஆண்டுகொண்ட
கருணா லயனை கருமால் பிரமன்
தடைபட்(டு) இன்னும் சார மாட்டாத்
தன்னைத் தந்த என்ஆர் அமுதைப்
புடைபட்(டு) இருப்ப(து) என்று கொல்லோ என்
பொல் லா மணியைப் புணர்ந்தே. 1

இது தன் தலைமகனைச் சார்ந்து மற்றவன் புடைபட்டிருப்பது என்று என வேணவாக்கொண்டு அடிகள் தம் நெஞ்சிற்காதல் ஆயத்தார்க்காதல் கூறியது

(பொ - ரை.) ஒளிர்கின்ற பொன்மலை போல்வானும், தொளைக்கப்படாத முத்தின் ஒளி போல்வானும் குலத்திற் கடைப் பட்டேனாகிய எனது பயனில்லாத தொண்டினை ஏற்றுக்கொண்டு என்னை அடிமைகொண்டருளிய அருளுக்கிடமாகியவனும், கரியோனாகிய திருமாலும் நான்முகனும் செருக்கினால் தடுக்கப்பட்டு, இன்னும் சென்றடையமாட்டாத தன்னை எனக்குக் கொடுத்த என் அருமருந்து போல்வானும், என் புரைபடாத முழு மாணிக்கம் போல்வானுமாகிய அவன்தன்னைச் சார்ந்து அவன் பாங்கரில் இருப்பது எந்நாள் எ - று.

(வி - ரை.) இன்னானும் இன்னானுமாகிய நின்னைப் புணர்ந்திருப் திருப்பது என்றென விளித்துக் கூறியதுமாம்.

"வாளா தொழும்பு உகந்து" என்றதற்கு, மங்கையர்க்குச் செய்த லாகிய பயனற்ற தொண்டினை மேற்கொண்டு என்று உரைப்பினும் அமையும்.

"புடைபட்டிருத்தலாவது" அவன் அருளைப் பெறும் பொருட்டு அவன் சூழற் பாங்கர்க்கண் இருப்பது. கருணாலயம் - அருட்டிருக்கோயில்.

அரி அயன் என்னுமிருவரும், பலகாலும் இறைவனாற் செருக்கடக்கப் பெற்ற பின்னரும் செருக்கடங்கிற்றிலர் என்பதுபட "இன்னும்" என்றருளினர். அறிவிலார் மயக்க மிகுதியானே தீ நெறிப்படரில் அவரை அங்ஙனம் படராது ஆள்வதும், செருக்குற்றோரை ஆங்காங்கு ஒறுத்து வருதலும் இறைவற்குரிய செயல்களாகும் என்பது ஈண்டும் புலப்படுத்தியருளப்பட்டது.

பொற்குன்றைச் சார்ந்து புடைபட்டிருப்பின் தானும் பொன்போற் பொலிவு பெறலாகும் எனவும், இப்பியாகிய இழிந்த பொருளுக்குள்ளே விளைந்து முற்றிய முழுமுத்தேபோல் என் உள்ளத்துள்ளே விளைந்து ஒளி செய்யும் ஒளிப்பொருளே எனவும் ஏற்குமாறு விரித்துரைக்க. குன்றத்துக் கனியின் கண்ணுள்ள சுடர்பொன் எனவும் கொள்க. சுடச்சுடரும் போன் போலத் தீமைகெட நோக்கிற்பாரகத்தே ஒளிகொண்டு விளங்குவோன் என்று உரைத்தலுமொன்று. யான் எனதென்னும் செருக்கினையுடைய என்னைப் புடம் வைத்து, இழிந்த என் உடலை அறுத்தும், என்னை நின் போல ஆக்கியும் கொள்க எனக் குறிப்பு விரிக்க.

குன்று முத்து என்னும் பொருட்போக்காலே அகனைந்திணைப் பொருளாற் பதன் செய்து இன்பந் தரவல்லனென்று கொள்ளுதலுமாம். இன்னுமிதனாலே, அவ்வின்பத்தை என்னை வருந்த வைத்தும் அருள் செய்தாயில்லை;

என் முயற்சியாற் பெறுதலும் இயலாது ; நீதான் அதனை உவந்து கொடுக்கும் நாள் எந்நாளோ என வேணவாமேலிட்டு இரங்கி உரைத்தருளினர் என்பதும் கொள்க.

' திருமாலும் திசைமுகனும் தத்தம் செருக்கடங்கிற்றிலராதலால், அவர் நின்னைச் சாரமாட்டாராய் அல்லலுற்று வருதற்கு ஓர் இயையுளது. அங்ஙனமல்லாத என்னை ஏன் ஆட்கொண்டிலை ? ' என்பது குறிப்பு.

என் குருமணி, என் சிந்தாமணி, என் கண்மணி, என் உயிர்மணி, என் சூடாமணி, இத்தகைய மணியைக் கூடுநாள் எந்நாள் என்க.

இனி, அடிகள் ஐந்திணை அன்பிற்குரியராகலின் புணர்ந்து என்றுங்குக் கூறியவற்றை முன்னிலைப்படுத்துக் கூறின் பெருந்திணைபாற் படுமாதலின் நேரே விளித்துக் கூறுது படர்க்கையுட் படுத்துக் கூறினராகப் பொருள் கொண்டாம்.

ஆற்ற கில்லேன் அடியேன் அரசே
    அவனி தலத்(து)ஐம் புலனுய
சேற்றில் அழுந்தாச் சிந்தை செய்து
    சிவன்எம் பெருமான் என்றேத்தி
ஊற்று மணல்போல் நெக்குநெக்(கு)
    உள்ளே உருகி ஓலமிட்டுப்
போற்றி நிற்ப(து) என்று கொல்லோஎன்
    பொல் லா மணியைப் புணர்ந்தே. 2

இஃது, ஐம்புலனுற் கலங்காவண்ணம் அவனைச் சிந்தித்து ஏத்தி உருகி ஓலமிட்டுப் போற்றி நிற்பது எந்நாள் எனக் கூறியது.

(பொ - ரை ) அடியேன் (இவ்வுலகின்கண்) இவ்வுடலோடும் வாழ்ந்துவரும் வாழ்வைப் பொறுக்கும் வன்மை இல்லாதேனுவேன். அத்தகையேன் இவ்வுலகில் ஐம்புலன்களாகிய சேற்றில் அகப்பட்டுக் கொள்ளாவாறு அவனைச் சிந்தித்து, " அரசே " என்றும் "எம்பெருமான் சிவனே யாவான்" என்றும் சொல்லித் துதித்தலைச் செய்து மணற்கண்ணூறும் ஊற்றினைப்போல் உள்ளம் கட்டு விட்டுக் கட்டுவிட்டு உள்ளேயுருகி அன்பூறப் பெற்று அபயம் என அழைத்துப் புரையில்லா மாணிக்கமாகிய அவனைச் சார்ந்து வணங்கி நிற்பது எந்நாள் எ - று.

(வி - ரை.) நின் காவல் வலியறுகின்றது என்பது தோன்ற " அரசே " என்று அழைத்தருளினர். எம்பெருமானுகிய குருமணி சிவனே யென்பார் "சிவன் எம்பெருமான்" என்றருளினர். அங்ஙனம் ஏத்திஞல் ஐம்புலனுல் மனம் கேடடையாது என்பது தோன்றச் " சேற்றில் அழுந்தாச்

சிந்தை செய்து" என்றும், அங்ஙனமெல்லாம் செய்தற்கும் அவனருளே வேண்டுமாதலின் "என்றுகொலோ" என்றும் அருளியவாறு. ஆனந்தக் கடலில் தோயவேண்டிய யான் இன்று துன்ப அளற்றில் அழுந்திக் கிடக்கின்றேன் என்பது குறிப்பு.

இனி, மனத்திற்குக் கூறியதெனக் கொள்ளின் "எம்பெருமானே, சிவனே, அரசனே" என்று ஏத்திப் புணர்ந்து போற்றுவதென்றென உரைக்க.

தாமரையானது சேற்றுள் தோன்றினும் அதனுடன் சேராதவாறே, என் சிந்தையாகிய தாமரையும் ஐம்புலச் சேற்றில் மேலும் அழுந்தாவாறு காத்தருள்வாயாக என்றார் என்க. "சேற்றில் அழுந்தாச் சிந்தை" என்றதனுனே சிந்தையைத் தாமரையாக உருவகித்தாம். இதனுக்கு ஏற்பச் செங்கதிரைக் காணுவிடத்துக் கூம்பியும், கண்டவிடத்து மலர்ந்தும் வரும் தாமரையென்ன என் சிந்தையும் மலர்வது எந்நாளோ என்றார் என்க.

சிவம் முத்தாகவும், தேன் ஆனந்தமாகவும் ஏற்ப இயைக்க.

மாலும் அயனும் வெருவ
நெருப்பை விருப்பிலேனை
ஆண்டு கொண்ட என்னார் அமுதை
அள்ளூ றுள்ளத்(து) அடியார்முன்
வேண்டும் தனையும் வாய்விட் டலறி
விரையார் மலர்தூவிப்
பூண்டு கிடப்ப(து) என்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 3

இஃது, என்னை ஆண்ட அவனை, அன்பர் முன்னர் யான் அலறவேண்டுந்தனையும் அலறுதலைச் செய்து, அவனடிக்கண் மலர் தூவிப் பழி கிடப்பது எந்நாள் என்றருளியது.

(பொ - ரை.) (புரைபடாத என்மணியே!) உலகை அளத்தற்காக நீண்ட வடிவெடுத்த திருமாலும் பிரமனும் அஞ்சி ஆற்றலொடுங்கி நிற்க, எவ்வுலகங்களிலும் நீண்டு வளர்ந்த அனற்பிழம்பாக நின்றவனும், (அடியவன் ஆதற்கு இயல்பாகவே விருப்பிலாத) என்னையும் (தானே விரும்பிவந்து வலிதாக) ஆட்கொண்டருளிய அடைதற்கும் அரிதாகிய அமுதம் போன்றானும், புரைபடாத மணி போன்றானும் ஆகிய அவனைச் சார்ந்து இன்பம் ஊற்றெடுத்துப் பெருகும் மெய்யன்பர் முன்னாக யான் வேண்டும் வரையிலும் வாய் விட்டலறி நறுமணம் பொருந்திய பூக்களை (அவன் திருவடிகளிலே) தூவுதலைச் செய்து பழிமேற்கொண்டு (அவன் வாயிலிற்) கிடக்கும் நாள் எந்நாள் எ - று.

(வி - ரை.) நீண்ட மால் குறுகுமாறு நீண்ட நெருப்பென்க. நீயே

யன்றி நின் அடியாரும் ஓய்ந்தமைக, ஓய்ந்தமைக என்றருளிச் செய்தா லும், என் வேகம் அடங்கும் வரையிலும் அலறியே தீர்வேன் என்றருளிய படி.

உலகியல் வாழ்வில் விருப்பும், அன்பு வாழ்வில் அஃதின்மையும் இயல் பாகவே கொண்டேனை, உலகியலை முனியுமாறும், அன்பு நெறியை விரும்பு மாறும் ஆக்கி ஆண்டுகொண்ட நீ, இப்போது அந்நெறிப் பயனை யான் அடையாது உழலுமாறு எனக்கு அருமை காட்டி நின்றாய்; ஈதென் என வியந்தருளியவாறுமாம்.

பூண்டு கிடத்தல், அருள்பெறுங்காறும் அவன் வாயிற்கண்ணே உண் ணுதும் உறங்காதும் அதனைப் பெறுமாறு பழிகிடத்தல் என்க.

நீ அருள் செய்யாயாயினும் யான் தொண்டு செய்தலிற் குறைவுபடேன் என்பார் "விரையார் மலர்தூவி" என்றருளிச் செய்தார். பிறவுமன்ன.

அல்லிக் கமலத்(து) அயனும் மாலும்
அல்லா தவரும் அமரர் கோனும்
சொல்லிப் பரவும் நாமத் தானைச்
சொல்லும் பொருளும் இறந்த சுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறைஇன் னமுதை அமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ(து) என்று கொல்லோஎன்
பொல் லாமணியைப் புணர்ந்தே. 4

நின்னைப் புல்லிப் புணர்வதென்று கொல் என அருளியது.

(பொ - ரை.) அகவிதழ்களையுடைய தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் அயனும், திருமாலும், விண்ணவர் வேந்தனாகிய இந்திரனும், அவர்களல்லாத பிற தேவர்களும், எமக்கு இவ்வருள் வேண்டுமென முன்னே சொல்லி அவ்வாறே பின் வந்து துதிக்கப் படுகின்ற திருப்பெயருடையவனும், சொல்லினையும், அது குறிக்கும் பொருளினையும் கடந்துநின்ற ஒளி வடிவுடையவனும், நெல்லிக் கனியும் தேனும் பாலும் நிறைவு பெற்ற இனிய அமுதமும் அதன் சுவையும் என்னும் இவற்றை ஒத்தவனும் புரைபடாத மாணிக்கம் போன்றானும் ஆகிய அவனைச் சார்ந்து தழுவிப் புணரப்பெறுவது எந்நாள் எ - று.

(வி - ரை.) சொல்லிப் பரவுதல் - சங்கற்பம் செய்து ஆராதித்தல். இன்னதை அருளின்,' இன்னதைச் செய்வேம் என்று முன்னர்ச் சொல்லி வைத்து அவற்றைப் பெற்றாங்குப் பரவுதலுமாம். எனக்கு செய்தாய் எனச் சொல்லப்படும் திருப்பெயர்.

நெல்லிக் கனியின் புளிச்சுவையானது தண்ணீர் பருகத்

அன்னதாகும். இது முன்னர் விளக்கப்பட்டது. நன் பெறப்படுவது ; நின் அருளும் என்னலன்றி நின் அன்பராற் பெறப்படுவ தொன்று பால் அன்பாற் சுரப்பது ; நின் இன்பம் அகனைந்திணை நெறியாலே பெறப்படுவதொன்று. அகனைந்திணை இன்பமே என்று மிளையதாய் நிறை சுவையுடைத்தாய் ஆக்கவல்லதோர் அமுதம்.

புல்லிப்புணர்தல் - தலைமகன் தழுவத் தலைமகள் தானுமுடன் தழுவிக் கொள்ளுதல். பிறவுமன்ன.

திகழத் திகழும் அடியும் முடியும்
காண்பான் கீழ்மேல் அயனும் மாலும்
அகழப் பறந்தும் காண மாட்டா
அம்மான் இம்மா நிலமுழுதும்
நிகழப் பணிகொண் டென்னையாட் கொண்டு
ஆவா என்ற நீர்மை எல்லாம்
புகழப் பெறுவ(து) என்று கொல்லோஎன்
பொல் லாமணியைப் புணர்ந்தே. 5

இஃது, என்னை ஆண்டுகொண்டு என்னொடுபட்டு இரங்கிய இரக்கமெல்லாம் தோன்றப் புகழ்ந்து பேசுதற்கண் அளவளாவும் பேறு பெறுவது எப்போது என்றருளியது.

(பொ - ரை ) (எல்லா ஒளிப்பொருளும்) விளங்க விளங்கும் தன் அடியையும் முடியையும் காணும்பொருட்டு, அயன் கீழே புக்குத் தோண்டினும், திருமால் மேலே புக்குப் பறந்தாலும் காணற்கு முடியாத அப்பெரியோனும், புரைபடாத மாணிக்கம் போன்றவனுமாகிய என் குருநாதன், இப்பெரிய நிலமுழுவதினும் என்னை யாண்டுகொண்ட செய்தி பரவுதல் நிகழ, ஆண்டு என்னை ஏவல் கொண்டு அந்தகோ ! என்று இரங்கிய தன்மையனைத்தையும், யான் அவனைச் சேர்ந்து புகழும் பேறு பெறுவது எந்நாள் எ - று.

(வி - ரை.) கீழும் மேலுமாக நாடிக் காணமாட்டாத திருமாலும் அயனும் என்போர், அம்முறை மாறி மேலும் கீழுமாக நாடினும் "காணமாட்டார்" என்றருளினர். இஃது அறியாதார் "எதிர் நிரல் நிறை" என்பர். இதுவும் கவி உலகுக்கோர் விருந்தாம் என்க. "அகழ" என்பது காரணப்பொருட்டு.

அம்மான் இங்ஙனம் எனக்கு எளிவந்தருளினன் என்க. ஆதலின் அது நிலவுலகம் முழுவதினும் நிகழ்வதாயிற்று.

"ஆவா என்ற" என்பது அங்ஙனம் ஆவா என்னுத என்பதுபட நின்றது. ஆண்டுகொண்டு அலறவிட்ட "நீர்மை"யை இடித்துரைக்கப் பெறுவது "என்ற" எனக் கொள்க. அதுவும் அவற்கொரு புகழாகும் என்க.

ஐயா, ஆண்டுகொண்டு பிரிந்தபோது யான் அருமாலுற்று இரங்கியது அவற்குப் பழிதருமேனும், அருள்பெற்ற பின்னர் அவையெல்லாம் புகழாக மாறுபடும் என உரைத்தருளினருமாம். அன்றியும், பிரிய இரங்கிய யானும், இரங்காதே பிரிந்த அவனும் ஆகிய இருவேமையும் உலகம் புகழப் பெறுதலுமாம்.

'ஆண்டுகொண்டு பணிகொண்ட நீர்மை, யான் ஆவா என்ற நீர்மை' என இயைக்க. பெயரெச்சத்து அகரம் தொக்கது. இனி, பிரிந்து வருந்தி உழன்ற என்னை இப்போது "ஆவா என்ற நீர்மை" எனலுமாம். அங்ஙனம் கொள்ளின், "என்ற" வென்பதை 'என்னும்' எனத் திரிக்க.

பரிந்து வந்து பரமா னந்தம்
　　பண்டே அடியேற்(கு) அருள்செய்யப்
பிரிந்து போந்து பெருமா நிலத்தில்
　　அருமால் உற்றேன் என்(று)என்று
சொரிந்த கண்ணீர் சொரிய உள்நீர்
　　உரோமம் சிலிர்ப்ப உகந்(து) அன்பாய்ப்
புரிந்து நிற்ப(து) என்று கொல்லோ என்
　　பொல் லாமணியைப் புணர்ந்தே. 6

இது, அவனை யான் பிரிந்து மயங்கினேன் எனக் கண்ணீர் பெருக்கி விரும்பி நிற்பது எந்நாள் என்றருளியது.

(பொ - ரை ) குருவாக இரங்கி வந்து என்பால் பேரின்பத்தை அருள் செய்திருக்கவும், மிகப் பெரிய நிலவுலகத்திலே, (யான் அதனைப் பெற்றுக்கொள்ளாது) அவன் அருளுக்கு இடனாகாது பிரிந்து இடர்க்குள்ளே சென்று மீட்டற்கு அரியதாகிய மயக்க முற்றேன் என்று சொரிந்த கண்ணீரானது எனது உள்ளத்துப் பண்பினைச் சொரியவும், அதற்குத் துணையாவேன் என்று மெய்ம் மயிர் சிலிர்க்கவும், அவனது சார்பினையே மேலாகக்கொண்டு என் பொல்லா மணியாகிய அவனைச் சார்ந்து அவனை அன்பாய் விரும்பி நிற்பது எந்நாளாகும் எ - று.

(வி - ரை.) தன் குற்றத்தாலே தான் பிரிந்தேன் என்றருளிச் செய்தார். கண்ணீரானது, மன மயக்கமாகிய மெய்ப்பாடுஞ் சொரிய, சொரிந்த கண்ணீர் உள் நீரையும் சொரிய உரோமஞ் சிலிர்ப்ப வரும்போது ஊடல் நிகழ்வதற்குரியதேனும், ஆற்றாமை மிக்கமையால், "உகந்து அன்பாய்ப் புரிந்து நிற்பது" என்றருளிச் செய்தார். உகப்பு - உயர்வாகக் கொண்டு உவத்தல். புரிதல் - விரும்புதல் கண்ணீர் சொரிதலும், மயிர் சிலிர்த்தலும் ஆகிய இவை அருமாலுற்றதைப் புலப்படுத்தின. "என்று

என்று" என்னும் அடுக்கு அங்ஙனம் புலப்படுத்தி நின்றதாகவும் கொள்ள லாம். தம் வாயாலுரையாது அவையே அதனைப் புலப்படுத்தா நிற்பது எந்நாள் என்றருளியபடி.

நினையப் பிறருக்(கு) அரிய நெருப்பை
நீரைக் காலை நிலனை விசும்பைத்
தனைஒப் பாரை இல்லாத் தனியை
நோக்கித் தழைத்துத் தழுத்த கண்டம்
கனையக் கண்ணீர் அருவி பாயக்
கையும் கூப்பிக் கடிமலரால்
புனையப் பெறுவ(து) என்று கொல்லோ என்
பொல் லாமணியைப் புணர்ந்தே. 7

இது, அவனை நோக்கிக் கண்டங் கனையக் கண்ணீர் பாயத் தொழுது புனையப் பெறுவது எந்நாள் என்றருளியது.

(பொ - ரை.) தான் நெருப்பாகவும் நீராகவும் காற்றுகவும் நிலனுகவும் வெளியாகவும் தோற்றம் பெற்றிருந்தும் தன் வடிவங்கள் தன்னுல் நினைக்கப்படுவதன்றிப் பிறரால் நினைக்கப்படுவதற்கு அரியவாகிய திருவடிவங்களையுடையவனும், தன்னை ஒத்த கடவு ளரை இல்லாத தனிப்பொருளாக உள்ளவனும் ஆகிய என் புரை படாத மாணிக்கம் போன்ற அவனை, தழைத்துப் பெருத்த மிடறு நெருங்கி ஒலியாநிற்பக் கண்ணீர் அருவியாகப் பாயக் கைகுவித்துக் கும்பிட்டு நறும்பூவினுல் அணிசெய்யப் பெறுவது எந்நாள் எ - று.

(வி - ரை.) பிறர் ஐம்பூதங்கள் என்று நினைப்பாரன்றி அவை யெல்லாமாகிய நின்னை அறியவல்லுநராகார் என்க. உவமனுக நிற்கும் கடவுளரை இல்லாத கடவுள் என்க. உவமனின்றித் தானே நிற்றலின் அது தனிப்பட்டதாயிற்று.

கண்ட ஓசைகள் தழுத்தனவாகிக் கனையாநிற்ப என்றுரைக்க. தழுத்தல் - பெருத்தல். கண்ணீர் - உவகைக் கண்ணீர். கனைதல் - நெருங்கி ஒலித்தல்.

கைகூப்பிக் கடிமலராற் புனையப் பெறுதலாவது, புஷ்பாஞ்சலியாற் புனையப் பெறுதல் என்க. நினைவுள்ள இடத்தும், அஃதற்றவிடத்தும் அவன் ஐம்பூத வடிவம் பிறர்க்குப் புலப்படாவென்க. செய்யுளாதலின் ஐம்பூதங்கள் நிலைமாறின.

நெக்கு நெக்(கு)உள் உருகி உருகி
நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும்
நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி
நாளு விதத்தாற் கூத்து நவிற்றிச்

செக்கர் போலும் திருமேனி திகழ
நோக்கிச் சிலிர்சி லிர்த்துப்
புக்கு நிற்ப(து) என்று கொல்லோ என்
பொல் லாமணி யைப் புணர்ந்தே. 8

இஃது, அன்பு மயமாய் ஆனந்தப் பித்தேறிக் கூத்தாடி அவன் திருமேனி நோக்கிச் சிலிர்த்து அவனோடு உட்புகுந்து நிற்பது எந்நாள் என்றருளியது.

(பொ - ரை.) உள்ளம் குழைந்து குழைந்து இடையீடுபடாது உருகி நிற்பினும், நில்லாதிருப்பினும், இராது கிடப்பினும், கிட வாது எழினும் முறையே, சிரித்தும், அழுதும், வணங்கியும், வாழ்த்திப் பலவகைப்பட்ட குணங்களுக்கும் இடனாகிய கூத்தினை இயற்றியும், செவ்வானை நிகர்த்த திருமேனி விளங்க, மற்றதனை நோக்கி, உடல் புளகங்கொண்டு, என்பொல்லா மணியாகிய அவன் பாற் புணர்ந்து புகுந்து நிற்பது எந்நாளோ எ - று.

(வி - ரை.) இஃது அசைவுகெட வந்த உவகை. *உவகை பற்றிய வியப்புமாம். நிற்றல் முதலாயவற்றிற்குத் தனித்தனியே வாழ்த்தலை இயைத்தலும் ஒன்று. புகுதல் - உட்சேறல். புக்கு நிற்றலை, இறைவி பாகத் தொடுங்குதலாகவும் கொள்ளுதலுமுண்டு.

தாதாய் மூவேழ் உலகுக்கும் தாயே
நாயேன் தனையாண்ட
பேதாய் பிறவிப் பிணிக்கோர் மருந்தே
பெருந்தேன் பில்க எப்போதும்
மேதா மணியே என்றென்(று) ஏத்தி
இரவும் பகலும் எழிலார்பாதப்
போ(து)ஆய்ந்(து) அணைவ(து) என்று கொல்லோ என்
பொல் லாமணியைப் புணர்ந்தே. 9

இஃது, அவனை ஏத்தி அவனடிக்கண் அடியாரிட்ட பூக்களை யும் அவன் திருவடியையும் ஆராய்ந்து இதுதானாகும் எனக் கண்டு கொண்ட திருவடியை அணைவது எந்நாளோ என்றருளியது.

(பொ - ரை.) என் புரைபடாத மாணிக்கமாகிய அவனைச் சார்ந்து, ("சுவர்க்கம் பூமி பாதாளமாகிய) மூவுலகங்களுக்கும் தந்தையானவனே! அவற்றுள்ளே பூமி முதலாய ஏழுலகங்களுக் கும் தாயானவனே! நாய் போன்று இழிந்தனவற்றை நுகர விரும் பும் என்னையாண்ட அறிவுக் குறைவுடையவனே! பிறவியாகிய

நோய்நீக்கும் அருளாகிய ஒப்பற்றமருந்தினையுடையவனே! அறிவு மணியே!'' என்று அடுக்கிக் கூறி, இரவும் பகலுமாகிய நாள் முழுவதும் பூக்களொடு ஒன்றுபட்டுள்ள அழகு நிரம்பிய திருவடி மலரையும், பெருமைத்தாகிய சிவானந்தத் தேன் சிந்துமாறு அணைந்து ஆய்வது எந்நாள் எ - று.

(வி - ரை.) "மூவேழ் உலகுக்கும்" என்றதனை, மூன்றுலகுக்கும் ஏழுலகுக்கும் என இயைக்க. பதினான்குலகுகளும் இறைவனாற் படைக்கப் பட்டனவாதலால், அவையடங்கிய சுவர்க்க மத்திய பாதளம் என மூன்று பகுதிப்பட்ட உலகங்களுக்குத் தாதையாவான் என்பதும், பூவுலகம் முதலாய ஏழுலகங்களில் நின்று ஏற்றம் பெறுதற்குரிய உயிர்களுக்குத் தாய்போல நின்று இன்பமூட்டி வருதலால் ஏழுலகங்கட்கும் தாயாவான் என்பதும் தோன்றத் "தாதாய் மூவேழுலகுக்கும் தாயே" என அழைத் தருளினர். கீழேழுலகங்களிலும் அவன் கருணை நிக்கிரகமாய் நிற்றலின், அவையொழிந்த ஏனைய உலகங்களுக்கே தாயாக நிற்பான் எனக் கொள்க.

"பெருந்தேன் பில்க"ப் பாதப்போது ஆய்ந்து அணைவது என

இறைவன் திருவடியைத் தெய்வக் கஞ்சத் திருவடி என்றும் அது சிவானந்தத் தேன் ததும்பும் என்றும் அத் தெய்வக் கஞ்சத் திருவடி அன்பர் இதயம் என்னும் செழுமலர் ஓடையில் மலரும் என்றும் கூறுதலை,

"எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறந் தலம்ப அன்பர் இதயமென்னும்
செழுமலர் ஓடையில் மலர்ந்து சிவானந்தத் தேன்ததும்பும்
தெய்வக் கஞ்சத் தொழுதகு சிற்றடி" (திருவிளையா. விருத்தகுமார. 28.)

என்பதால் அறிக.

மேதா மணி (-அறிவு மணி) என்றது தக்ஷிணாமூர்த்தியை என்க. 'ஏது ஆம் மணி' எனக் கொண்டு, எல்லா மணிகட்கும் ஆதிகாரணமாக நிற்கும் மணி யெனினும் இழுக்காது.

இறைவன் திருவடி மலர்க்கண் அன்பர் பலரும் மலரிட்டு வழிபாடு செய்வர். அவரிட்ட மலர்களோடு இறைவன் திருவடி மலர்களும் மயங்கி யுள்ளன. அவற்றுள்ளே,அவன் அடிமலரைப் பெருந்தேன் பில்க ஆராய்ந்து கொண்டு, அவனை அணைந்து நிற்றற்கு விழைந்தருளினார் என்க. பில்கு பெருந்தேன், சிறந்த தேனுமாம்.

ஆண்டுகொண்டும் பயன் பெறச் செய்யாமையால் "பேதாய்" என்று அழைத்தருளினர்.பட்டுவரும் அல்லலுக்கெல்லாம் காரணனாக யான் இருக்கவும், பயன்படுத்தற்கியலாத என்னை ஆண்டுகொண்டு பிறரால் பெறற்பால பழியைத் தான் ஏற்றுக்கொண்டமையால் அங்ஙனம் . .
யதுமாம்.

காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதும்
கண்ணோர் விசும்பின் விண்ணோர்க் கெல்லாம்
மூப்பாய் மூவா முதலாய் நின்ற
முதல்வா முன்னே எனையாண்ட
பார்ப்பா னேஎம் பரமா என்று
பாடிப் பாடிப் பணிந்து பாதப்
பூப்போ(து) அணைவ(து) என்று கொல்லோ என்
பொல் லாமணியைப் புணர்ந்தே. 10

இஃது, அவனைப் பாடிப் பணிந்து அவனுடைய திருவடி மலரை அணிவது எந்நாள் என்றருளியது.

(பொ - ரை.) புரைபடாத என் மாணிக்க மணி போன்ற அவனைச் சார்ந்து, "எல்லாவற்றையும் காப்போனே! படைப்பவனே! ஒடுக்குபவனே! இடமகன்ற வெளியின்கண்ணுள்ள வானவர் யாவர்க்கும் மூத்தவனாய், முதிர்விற்குரிய தன்மையில்லாத இளமை பொருந்திய முதன்மையானவனே! முன்னரே என்னை அடிமைகொண்ட பார்ப்பானாகிய குருவனே! எமக்குரிய மேலோனே!" என்று பன்முறையும் அவனைப் பாடி அழைத்து வணங்கி, அவன் திருப்பாதமாகிய மலரை அணைவது எந்நாள் எ - று.

(வி - ரை.) உயிரைக் காத்து வளர்த்து வீடளித்தற்பொருட்டே படைத்தலால் "காப்பாய்" என அவற்றின் முதற்கண் மாறறியுரைக்கப் பட்டது.

அன்று கூடிய அன்பர்களுள்ளே என்னை முதற்கண் "ஆண்ட" என்றலுமாம்; காலமுமாம்.

திருவடிக்கண் அன்பரிட்ட மலர்களை நீக்கி நின் திருவடிப் போதை அணைவது என விரித்துக்கொள்க. பூ - பொலிவு.

தனக்குவமை யில்லாத நின்தாளடைந்து எஞ்ஞான்று கவலையற்றிருப்பேன் என்று குறிப்பிட்டருளியவாறு.

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது." (திருக்குறள், கடவு. 7.

என்றார் தெய்வப் புலமைத் திருவள்ளுவரும்.

அந்நாள்தான் என் வாணாளுள் ஒன்றாகுமோ அன்றி ஊழி முடிவில் ஒருநாளோ என்பதனை அருளுக என்றவாறு என எல்லாப் பாடல்களையும் விரித்து முடிக்க. இங்ஙனம் இரங்கியருளியவாறென்க.

திருச்சிற்றம்பலம்

# வாழாப் பத்து

அஃதாவது, முன்னர்ப்பகுதியால் அவனைச் சார்ந்து புணர் தற்கு வேணவாக்கொண்டு விண்ணப்பஞ் செய்தருளிய அடிகள் அதனைப் பெருமையால் வருக என்று அழைத்துக்கொள்ளப் பெறு விடில் "இங்கு வாழ்கிலேன்" என விண்ணப்பஞ் செய்தலையுடைய பத்துப்பாடல்களைக் கொண்ட பகுதி. இதனானே முன்னர்ப் பகுதி யொடு தொடர்புடைத்தாயிற்று என்க

இதனுள்ளே, மணியே, புரமெரித்தானே, பரம்பரனே, நின்ன லாற் பற்றிலேனைக் கூவிக்கொள் (2, 4, 1) எனவும், பங்க, நீ யல்லாற் பற்றிலேன் (10, 6, 5, 8) எனவும், பாதமே யல்லாற் பற்றிலேன் (3, 7, 9) எனவும் ஆகிய மூன்று பிரிவுகள் உள்ளன. இவற்றுள் ஆண்டாய் என நேரே கூறியருளப்பட்டன 5, 6, 8 என்பன. ஓர் இயைபு கருதி 6, 5, 8 என முறைமாற்றிக் கொள்ளப் பட்டன. ஆண்ட மாமணியே (2) என்பதன்கண் ஆண்டமை அடையொடு புணர்த்தப்பட்ட இயைபால் மற்றதனைப் பிரித்து முதலாவதாகக் கொண்டாம்.

1. (i) என்னை ஆண்ட மணியே வேறு பற்றிலேன், என்னை ஆள்வானே என்னைக் கூவிக்கொள் என்பதும் (2),

(ii) புரமெரித்தவனே வேறு பற்றிலேன் வருக என்று அருள் புரியாய் என்பதும் (3),

(iii) எம்பரனே வேறு பற்றிலேன் நீ யருளாவிடில் யாரொடு நோகேன், யார்க்கு எடுத்துரைக்கேன்? ஆதலால் வருக என்றருள் புரியாய் என்பதும் (1),

ஆகிய மூன்றும் முதற்பிரிவின்கண் அடங்குவனவாம்.

2. (i) பங்க, நீயல்லால் வேறு பற்றிலேன், பிறரைத் தொழு வனோ? துதிப்பனோ? துணை என நினைவனோ? ஆதலால் என்னை வருக என்றருள் புரியாய் என்பதும் (10),

(ii) மெல்லடியாள் பங்கனே, வேறு பற்றிலேனைச் செஞ்சவே ஆண்டாய்; நின் அருளை மறந்து அஞ்சினேன் ஆதலால் வருக என்றருள் புரியாய் என்பதும் (6),

(iii) மொழியாள் பங்க, நீ யல்லால் வேறு பற்றிலேனைத் திண்ணமே ஆண்டமையால் மனம் புலன்கள் என்னும்

இவற்றை என்பால் வைத்து இங்கு வாழ்கிலேன ; அதனால் வருக என்றருள் புரியாய் என்பதும் (5),

(iv) விரலாள் பங்க, நீ யல்லால் வேறு பற்றிலேனை வந்து உய்ய ஆண்டாய் , ஆதலால் வருக என்றருள் புரியாய் என்பதும் (நூல் 8),

ஆகிய நான்கும் இரண்டாம் பிரிவின் கண்ணே யடங்குவனவாம்.

3. (i) மால்புகழும் பாதமே யல்லால் வேறு பற்றிலேனைத் தேடி நீ ஆண்டாய் அதனால் நின்னொடு ஊடுவதும் உவப்பதும் எனக்கும், எனக்கு உறுதியுரைப்பது உனக்கும் ஆம் ஆதலால், என்னை வருக என்றருள்புரியாய் என்பதும் (3),

(ii) ஒளியாய், நின்பதமே யல்லால் வேறு பற்றிலேன் ; நின் கருணை நோக்கி உளங் கசிந்து உருகிக் கலந்து வாழுமாறு அறியா மருட்சியால் வாழ்கிலேன் ஆதலால் வருக என்று அருள்புரியாய் என்பதும் (7),

(iii) பாபநாசனே, நின்பாதமே யல்லாது வேறு பற்றின்மையால் வாழ்கிலேன் ஆதலால் என்னை வருக என்றருள் புரியாய் என்பதும் (9),

ஆகிய மூன்றும் மூன்றும் பிரிவின்கண்ணே யடங்குவனவாம்.

இனி நூற்பொருள் அடைவு விளக்கம் வருமாறு

1. இயற்கைப் பொருளடைவிலே மூன்றுவதாகிய "எம்பரனே, ஆண்ட நீ யருளிலையானால் யாரொடு நோகேன், யார்க்கு எடுத்துரைக்கேன்" என்பது நின்னையே நொந்து நினக்குச் சொல்லியே சாவேன் என்னும் இப்பகுதியின் உயிர் நிலையாகிய சிறப்பியையபால் ஈண்டு முதலாவதாக அமைந்தருளினர்.

2. இயற்கைப் பொருளடைவிலே முதலாவதாகிய "என்னை யாண்ட மணியே, என்னை யாள்வானே" என்பது வாழற்கு நினையாத என்னை வாழுமாறு செய்வது நின் கடப்பாடாகும் என்று குறிக்கும் இயைபால் ஈண்டு இரண்டாவதாக அமைத்தருளினர்.

3. இயற்கைப் பொருளடைவிலே எட்டாவதாகிய "மால் புகழும் பாதமே யல்லால் வேறு பற்றிலேனைத் தேடி நீ யாண்டமையால் எனக்கு உரியன நின்னொடு ஊடுதலும் உவப்பதும் ஆகும் எனக்கு உறுதியுணர்த்துவது நினக்கு உரியதுவாகும். ஆதலால் என்னை அழைத்தருளாய்" என்பது வாழற்கு எண்ணுமைக்குரிய

காரணம் தம்மை அவன் அழைத்துக் கொள்ளாமையே என்னும் இயைபால் ஈண்டு மூன்றாவதாக அமைத்தருளினர்.

4 இயற்கைப் பொருளடைவிலே இரண்டாவதாகிய "புர மெரித் தானே, வேறு பற்றிலேன் வாழ்கிலேன் வருக என்று அருள் புரியாய்" என்பது என்னை வாட்டும் புலன்களைப் புரம் எரித்த வாறே எரித்து அப்புரத்தாருள் நல்லோர் மூவரையும் ஆட்கொண்ட வாறே எம்மையும் ஆட்கொள்ளல் வேண்டும் என்னும் குறிப்பு இயைபால் ஈண்டு நான்காவதாக அமைத்தருளினர்.

5. இயற்கைப் பொருளடைவிலே ஆறுவதாகிய "மொழியாள் பங்க, நீயல்லால் பற்று மற்றிலேனாகிய நான் என் எண்ணம் உடல் வாய் மூக்கு செவி கண் என்னும் இவற்றை நின்னிடம் வைத்து வாழ்கிலேன் ஆதலால் வருக என்று அருள்புரியாய்" என்பது புலன் முதலாயவற்றை நின்னிடம் வைத்து வாழுமாறியலாத வீணனாகி இங்கு வாழ்கிலேன். நான் வாழ விரும்புவது எண்ணம் முதலியவற்றை நின்கண் வைத்தற் பொருட்டாதலால் அதனைப் பெற்றுக்கொள்ளாத நான் வாழ்தலைச் செய்யேன் என்னும் காரண காரியக் குறிப்பியையால் ஈண்டு ஐந்தாவதாக அமைத்தருளினர்.

6. இயற்கைப் பொருளடைவிலே ஐந்தாவதாகிய "மெல்லடி யாள் பங்கனே! நீ அல்லால் வேறு பற்றிலேன். நீயும் செஞ்சவே ஆண்டாய், யானோ மருளால் நின் அருளை மறந்த வஞ்சன் ஆயினேன். அந்நாணத்தால் வாழ்கிலேன். ஆதலால் வருக என்று அருள்புரியாய்" என்பது தாம் வாழாமைக்கு அடிப்பட்ட காரணம் கடப்பாடு இழந்து பழி மிக்கதுவே ஆகும் எனப் புலப்படுத்திய இயைபால் ஈண்டு ஆறுவதாக அமைத்தருளினர்.

7. இயற்கைப் பொருளடைவிலே ஒன்பதாவதாகிய "ஒளி யாய், நின் பாதமே அல்லால் வேறு பற்றிலேன். நின் அருளைக்கிக் கலந்துருகி வாழுமாறறியாதேன், அதனால் பேரிடர்ப் பாய்கின்றேன் இனி உய்தலரிது" என வெளிப்படுத்திய இயை பால் ஈண்டு ஏழாவதாக அமைத்தருளினர்.

8. இயற்கைப் பொருளடைவிலே ஏழாவதாகிய "பந்தணை விரலாள் பங்க, நீ யல்லால் வேறும் பற்றிலேன் வந்து உய்ய அடியேனை ஆண்டாய் நின்னால் ஆளப்பட்ட நான் வாழ்கிலேன்; ஆதலால் வருக என்று அருள் புரியாய்" என்பது யான் அவமே அழிவதோடு என்னை ஆண்டுகொண்ட நின் புகழும் அழியும் என அவன் பழிபூணுமாறு உணர்த்திய இயைபால் ஈண்டு எட்டாவதாக அமைத்தருளினர்.

9. இயற்கைப் பொருளடைவிலே பத்தாவதாகிய "பாவ நாசா, நின் பாதமே அல்லாது வேறு பற்றிலேன் ஆதலால் வாழேன் வருக என்று அருள்புரியாய்" என்பது யான் பற்றெனப் பற்றிய நின் திருவடிப் பற்றுனது எனக்கு நலன் செய்திலாமையால் வாழேன் ஆதலால் வருக என்று அருள்புரியாய் என்னும் பிடித்த பிடி நழுவிக் கீழே விழுதலைப் புலப்படுத்திய இயைபால் ஈண்டு ஒன்பதாவதாக அமைத்தருளினர்.

10 இயற்கைப் பொருளடைவிலே நான்காவதாகிய "புகழாள் பங்க நீயல்லாது வேறு பற்றிலேன் அத்தகைய யான் பிறரைத் தொழுதல் ஆுதித்தல்களையும் துணை என நினைத்தலையும் உடல் வாழ்வின்பொருட்டுச் செய்யேன்" என்பது பற்றிய பற்று நழுவி ஞற் பிறவற்றைப் பற்றிக் கோடல் என்பால் இல்லை என்னும் தமது விடாப்பற்றினைப் புலப்படுத்திய இயைபால் ஈண்டுப் பத்தாவதாக அமைந்தருளினர்.

இவற்றைப் பின்வரும் அட்டவணையால் தெளிக

| பொருட் பிரிவு | உட்பிரிவு | இயற்கைப் பொருளடைவு | நூற்பா எண் |
|---|---|---|---|
| 1 | (i)<br>(ii)<br>(iii) | 1<br>2<br>3 | 2<br>4<br>1 |
| 2. | (i)<br>(ii)<br>(iii)<br>(iv) | 4<br>5<br>6<br>7 | 10<br>6<br>5<br>8 |
| 3. | (i)<br>(ii)<br>(iii) | 8<br>9<br>10 | 3<br>7<br>9 |

இஃது திருப்பெருந்துறையில் அருளியது என்ப.

# முத்தி உபாயம்

## எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

பாரொடு விண்ணுய்ப் பரந்தஎம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத்(து) அரசே
திருப்பெருந் துறைஉறை சிவனே
யாரொடு நோகேன் யார்க்(கு)எடுத்(து) உரைக்கேன்
ஆண்டநீ அருளிலை ஆனல்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்(று) அருள்புரி வாயே. 1

இஃது என்னை ஆட்கொண்ட நீயே என் பிழை பொறுத்து எனக்கு அருள் செய்திலாத இதனை யாரொடு நோகேன்? யார்க் கெடுத்துரைப்பேன்? அங்ஙனம் நோகவும் உரைக்கவும் புகாமை யின் வாழவுமாட்டேனுதலின், என்னை நின்பால் வருக என்று அருள் புரிக என அடிகள் இறைவற்கு விண்ணப்பஞ் செய்தருளியது.

(பொ - ரை.) மண்ணுமாய் விண்ணுமாய்ப் பரவியுள்ள எம் மேலோனே! மிக்க புகழுடன் விளங்குவோய்! சிவநகர் வேந்தே! திருப்பெருந்துறைக்கண் நிலைபெற்ற சிவனே! யான் நின்னையே பற்றப்படும் பொருளாகக் கொள்வதன்றி, வேறுபற்று இல்லே னுவேன். (அத்தகைய) என்னை ஆண்டுகொண்ட நீ எனக்கு அருள்செய்திலையேல், யான் நின்னோடேயன்றி யாரொடு நோவு தலைச் செய்வேன், இந்நிகழ்ச்சியை நினக்கு அன்றிப் பிறர் எவர்க்கு எடுத்துரைப்பேன், நெடிய கடல் சூழ்ந்த இவ்வுலகில் வாழும் வலிமை இல்லேனுயினேன் ஆதலால், என்னை நின்பால் வந்து சேர்க என்று அருள்புரிவாயாக எ - று

(வி - ரை.) பிறரொடு நோவுதலும், துணை செய்க என நேர்தலும், அதனை அவர்க்கு எடுத்துரைத்தலும் அன்பு நெறியன்மையால் அம்முறை விடுத்து, நின்னை நொந்தும் பயன் பெற்றிலேன். ஆதலால் இனி வாழ் கிலேன்; என் நல்வாழ்வு நினக்கு விருப்பம் தருமேல் உடனே அழைத்துக் கொள் என்றருளியபடி. உயிரை விடுத்தேனும் நின்னை அடைந்தே தீரு வேன் என்றதுவுமாம்.

எங்கும் பரந்துள்ள நினக்கு என்னுள்ளக் கிடக்கை விளங்கிற்றிலது போலும் என்பதும், இம்மை மறுமை நலன்களாக எனக்கு இருப்போய்

என்பதும் தோன்ற "பாரொடு.. ......பரனே" என்றும், நின் மிகுபுகழ் என் அழிவினால் மிகுபழியாக மாறுபடும் என்பதும், முன்னர்த் தோன்றிய நின் தோற்றப் பொலிவு இப்போது வஞ்சித்ததுவே என்பதுபடச் "சீரொடு பொலிவாய்" என்றும், என் பகைகளாகிய புலன்களை அழிக்க வல்ல உரிமையாளனாக நீ இருந்தும் அங்ஙனம் இயற்றி என் அல்லல்களை அகற்றினையல்லையே என்பது படச் "சிவபுரத்தரசே" என்றும், அன்று என் குருமணியாக வந்து "நானே சிவன்" என்றனையன்றோ என்பது படத் "திருப்பெருந்துறையுறை சிவனே" என்றும் அருளிச் செய்தார்.

உயிர் விடுதற்குக் கடலுளதென்பார், "வார்கடலுலகு" என்றருளினார். இரங்கலாகிய உரிப்பொருட்குரிய இவ்வுலகென்பதும், அதுதான் தீராதென்பதும் போதர "வார்கடலுலகு" என்றருளியதுமாம்.

**வம்பனேன் தன்னை ஆண்டமாமணியே**
**மற்றுநான் பற்றிலேன் கண்டாய்**
**உம்பரும் அறியா ஒருவனே இருவர்க்(கு)**
**உணர்விறந்(து) உலகம்ஊ டுருவும்**
**செம்பெரு மானே சிவபுரத் தரசே**
**திருப்பெருந் துறைஉறை சிவனே**
**எம்பெரு மானே என்னையாள் வானே**
**என்னை நீ கூவிக்கொண் டருளே. 2**

இஃது, என்னை ஆண்ட மணியே, இன்னும் என்னை ஆட்கொள்ள இருப்போனே. என்னைக் கூவிக்கொண்டருள்க என்றருளியது.

(பொ - ரை.) வீணனேனாகிய என்னையும் ஆண்டுகொண்டருளிய குருமணியே! தேவராலும் அறியமுடியாத ஒப்பற்றவனே! அயன் அரி என்னும் இருவர்தம் அறிவினையும் கடந்து, உலகங்களையும் ஊடுருவிச் சென்ற செந்தழற் பிழம்பாகிய பெரியவனே! சிவபுரத்து அரசனே! திருப்பெருந்துறைக்கண் உறையும் சிவனே! எங்கள் பெருமானே! என்னைக் காப்பவன்போன்று நடித்து ஆள்பவனே! என்னை நின்பால் வருகவென்று அழைத்தருள்வாயாக எ - று.

(வி - ரை.) முன்னர் ஆண்டுகொள்ளப்பட்ட என்னைப்போன்றே ஆண்ட நீயும் உவந்து அன்பு செய்து ஒரு புதிய மணியை ஒத்த நீ இன்னே அவ் ஏனைய போலிமணியை ஒத்தனை என விரிக்க. தம்மை ஆக்கிக் கொண்டவிடத்து உவப்பும் இழந்தவிடத்து அவலமும் கொள்ளாத மணி முதலாயவற்றைப் போலாது புதிதாகிய ஒரு மணியை ஒத்தவன் என்க.

நின் அருவத் திருமேனியையும் உருவத் திருமேனியையும் உம்பரும் அவர்தம் தலைவரும் அறிந்துகொள்ளாதிருக்கையில், யானோ அறிய வல்லவனாவேன் என்றருளினார்.

வம்பு - நிலையின்மை. ஒரு பகுதியுட்பட்டு நிலையாத என்னை என்க. எம் பிழை பொறுத்து எங்களை இனியும் ஆள்வாய் என்பது போதர "எம் பெருமானே" என்று அழைத்தருளினர். எமக்குத் தலைமகனாக நின்று இனி ஆட்கொள்ளற்கு வருகவென்பது குறிப்பு.

வாழாப்பத்தின் பொருளாகிய 'வாழாமை' என்பதனை, ஈண்டு இசையெச்சமாகக் கொள்ளவைத்தருளினார்; வருகவெனக் கூவிக்கொள்ளா விடத்தே நிகழப் பெறுவதொன்றாகலின்.

பாடிமால் புகழும் பாதமே அல்லாற்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேடிநீ ஆண்டாய் சிவபுரத்(து) அரசே
திருப்பெருந் துறைஉறை சிவனே
ஊடுவ(து) உன்னொ(டு) உவப்பதும் உன்னை
உணர்த்துவ(து) உனக்(கு)எனக்கு உறுதி
வாடினேன் இங்(கு) வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்(று) அருள்புரி யாயே. 3

இது, மால் புகழும் நின் பாதமே யல்லால் வேறொரு பற்றும் இல்லாதேனை நீ தேடி ஆண்டாய். ஆதலால் நான் உன்னோடு ஊடுவேன், நீ எனக்கு உறுதி யுணர்த்த யான் உவப்பேன்; அங்ஙனம் நீ என் ஊடலைத் தீராமையால் யான் வாடினேன்; என் வாட்டம் கண்ட இப்போதேனும் வருக என்று அருள்புரியாயேல், யான் வாழ்கிலேன் என்றருளியது.

[குறிப்பு:—அடிகள் மங்கையர் காமத்தால் உழலுவதாக ஈண்டுக் கூறியருளாமையால், புனைந்துரைப் பாவனையாகிய அகனைந்திணைக் களவு நெறியிலே கனவல்லாக் கனவு கண்டு நனவு வந்துகொண்டிருக்கும்போது பாடியருளப்பட்டதென்க. பிறவு மன்ன ]

(பொ - ரை.) சிவபுரத் தரசனே! திருப்பெருந்துறைக்கண் நிலைபெற்ற சிவனே! நீயே என்றனை நாடிவந்து ஆண்டுகொண்டாய். யானோ திருமால் பாடிப் புகழும் நின் பாதமே எனக்குப் பற்றுவதல்லாமல் வேறுமொரு பற்றும் இல்லாதேன். ஆதலால் என்னாற் பற்றப்பட்ட உன்னையே ஊடிப் பிரிவதும், உன்னையே கூடி உவப்பதும் என்னுறு செயல்களாகும். ஊடிய எனக்குக் கூடி உவத்தற்குரிய உறுதி அறிவிப்பது உனக்கு உரிய செயல்களாகும்.

இவற்றை நின்பாற் பெற்றுக்கொள்ளாமையால் யான் வாடினேன். அங்ஙனம் வாடிய யான் இனி வாழ்தலையும் செய்யேன். ஆதலால் உன்பால் என்னை வருக என்று அருள்புரிவாயாக எ - று.

(வி - ரை.) யான் ஊட, நீ உணர்த்த, யான் உவக்கவே நீ என்னைத் தேடி ஆண்டாய் என்க. இதனால் இருவோரும் விழைந்தது களவும் கற்புமாகிய அகனைந்திணை ஒழுக்கமேயாம் என்பது பெற்றும். பெருந்திணை நெறியைச் சற்றுப் பற்ற மனம் செல்லுதலால் "வாடினேன்" "வாழ்கிலேன்" எனத் தம்முடைய வெறுப்புத் தோன்றுமாறு அருளிச்செய்தார் என்றலுமாம்.

திருமால் பாடிப் புகழ்ந்து பயன் பெற்றான். யான் அது பெற்றிலேன் என்பது இசையெச்சம். யான் பெற்றாலும் பெருது ஒழிந்தாலும் அதனையன்றி எனக்கு வேறு ஒரு பற்றிலது. ஆதலால் யான் வாழேன் எனத் தாம் வாழாமைக்குக் காரணத்தை எடுத்துக்காட்டியருளினர். திருமால் பாடிப் புகழ்ந்தமையால் நினக்குத் தலைமகன் ஆயினன் என்க. அவன் இடபமாக அவன்மேல் ஏறிய திருவடியை அவன் புகழ்ந்து பாடினன் எனினும் ஒக்கும்.

வல்லைவாள் அரக்கர் புரம்எரித் தானே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
தில்லைவாழ் கூத்தா சிவபுரத் தரசே
திருப்பெருந் துறைஉறை சிவனே
எல்லைமூ வுலகும் உருவிஅன்(று) இருவர்
காணும்நாள் ஆதிஈறு இன்மை
வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 4

நின்னையன்றி யான் வேறு பற்றிலேன் ஆதலால் நான் வாழ்கிலேன் வருக என்று அருள்புரிக என்றருளியது.

(பொ - ரை) கொடியோராகிய அசுரர்களுடைய திரிபுரங்களை விரைவில் எரித்தவனே! தில்லைக்கண் வாழ்ந்து வரும் கூத்தா! சிவபுரத்தார்க்கு அரசனே! திருப்பெருந்துறையுறை சிவனே! பண்டைக் காலத்திலே அயன் அரி என்போர் உன்னைக் காண முயன்ற நாளிலே, மேல், கீழ், நடுவென்னும் வரையறைப்பட்ட மூன்றாகிய உலகங்களையும் ஊடுருவி முடிவும் முதலும் இல்லாமை கொள்ளுதலில் வல்லவனாக வளர்ந்தவனே! யான் இங்கு வாழ்கிலேன் ஆதலால் வருக என்று அருள்புரிவாயாக எ - று.

(வி - ரை.) வல்லை - விரைவு. வாள் - கொடுமை. "அரக்கர்" என்பது ஈண்டு அசுரர்மேல் நின்றது. அன்று, பண்டைக்காலமாகிய அப்போது.

மூவுலகங்களையும் ஊடுருவி அப்பாற் சென்றமையால் ஆதியீறின்மை உளதாயிற்று. வல்லையாய் - வல்லமையுடையையாய்.

அசுரர்களுடைய முப்புரங்களையும் எரித்தாங்கு காமம் வெகுளி மயக்கம் எனும் என் மும்மலக் கோட்டைகளையும் எரித்தல்வேண்டு மென்பதும், அயன் அரி என்போரால் காணப்படாவாறு வளர்ந்தாங்கு என்றனும் அறியப்பட்டிலை என்பதும், என்பொருட்டும் ஒரு திருக் கூத்து அயர்கின்றாய் என்பதும், திருப்பெருந்துறைக்கண்ணே அன்பர்க்குச் சிவனாக நின்று ஆண்டவாறே என்னையும் ஆட்கொள்ளல் வேண்டுமென்ப தும் ஈண்டுப் போந்தன. தில்லைக்கண் வருக என்றவனே என விரித்தலு மாம். பிறவுமன்ன.

பண்ணினேர் மொழியாள் பங்கநீ அல்லால்
 பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே ஆண்டாய் சிவபுரத் தரசே
 திருப்பெருந் துறைஉறை சிவனே
எண்ணமே உடல்வாய் மூக்கொடு செவிகண்
 என்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய்
 வருகவென்(று) அருள்புரி யாயே. 5

இது, திரிகரணங்களும் ஐம்புலன்களுமாயவற்றை மங்கையர் முதலியோர்பால் வைத்து வாழ்தற்குரிய இவ்வுலகத்தில் வாழேன் ஆதலின், என்னை நின்பால் வருக என்று அருள்புரிக என்றருளியது.

(பொ - ரை) பண்ணையொத்த சொல்லையுடைய அம்மை பங்கனே! என்னை உறுதியாகவே ஆண்டவனே! சிவபுரத்தார்க் கரசனே! திருப்பெருந்துறையுறை சிவனே! என் மனமும், உடல் முதலாய ஐம்பொறிகளும் ஆகிய இவை பற்றுதற்குரிய பற்று நீயே யன்றி வேறுமொன்று இல்லேன் ஆவேன் யான் என் எண்ணத்தை யும் மூக்கினோடு உடல் வாய் செவி கண் என்னும் ஐம்பொறிகளையும் நின்னிடத்திலேயே பதிய வைத்து, இம்மண்மேல் அடியேன் வாழ மாட்டேன். ஆதலால் என்னை உன்பால் வருகவென்று அருள்புரிக எ - று.

(வி - ரை.) மொழியாளைப் பங்கில் அமைத்துக்கொண்டவாறே என்னையும் திருவடிக்கண் அமைத்துக்கொள்க என்று உரைக்க.

ஐயப்பாட்டின் நீங்கித் தெளிந்தமையால் "திண்ணமே ஆண்டாய்" என்றருளினர்.

எல்லார்க்கும் நீ அரசனாக இருப்பவும் சிவபுரத்தாரே நின் அரசுப் பயனை நுகராநின்றார்; யானும் என்போன்றாரும் அங்ஙனம் நுகர்ந்திலேம் என்னும் குறிப்பும் கொள்ளப்படும்.

நின்னை அல்லாத பற்று வேறு ஒன்றும் இல்லேனாகவும் மனம் முதலியன என்னை ஏனையவற்றைப் பற்றுமாறு இழுத்துச் செல்லாநின்றன. யானோ அவற்றின் இழுப்பை எதிர்த்துத் தடுத்து நிற்கும் வயற்றிராநின்றேன். அதனால் இவ்வுலகிலே நின்னையே காதலித்து வாழ்ந்துவரும் வலியற்றுப் போனேன். அத்தகைய என்னை "வருக" என்று அருள்புரிவாயாக என்றார் என உரைத்துக்கொள்க. நின்மேற் பற்றுவைத்து இங்கே வாழேன் என்றாங்கு,

"நீ அளித்த அருளினை மருளினால் மறந்த வஞ்சனேன்" (6.)
எனவும்,

"கலந்து நான் வாழுமாறு அறியா மருளனேன்" (7.)
எனவும், மேல் வருவனவற்றிற்கேற்ப உரைக்க.

நீதான் அருள்செய்திலையேனும், நின் பங்கிலுள்ள அமுத மொழியாளும் எனக்கு அருள்செய் என நினக்கு உரைத்தாளில்லையே என்றிரங்குதல் தோன்றப் "பண்ணின் நேர் மொழியாள் பங்க" என்று அழைத்தருளினாருமாம்.

**பஞ்சின்மெல் லடியாள் பங்கநீ அல்லால்**
**பற்றுநான் மற்றிலேன் கண்டாய்**
**செஞ்சவே ஆண்டாய் சிவபுரத் தரசே**
**திருப்பெருந் துறைஉறை சிவனே**
**அஞ்சினேன் நாயேன் ஆண்டுநீ அளித்த**
**அருளினை மருளினால் மறந்த**
**வஞ்சனேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்**
**வருகவென்(று) அருள்புரி யாயே. 6**

இது, நீ செவ்வனே ஆண்டாய். யானோ நின் அருளை வஞ்ச மயக்கத்தால் மறந்தேன், இனி வாழவே வாழேன் என்று அஞ்சுகின்றேனாதலால் என்னை வருகவென்றருள் புரிவாயாக என்றருளியது.

(பொ - ரை.) பஞ்சினைப்போன்ற மென்மையனவாகிய திருவடிகளை உடைய அம்மை பங்கனே! என்னை மிகச் செவ்விதாகவே ஆண்டுகொண்டவனே! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! நீ எனக்கு நல்கிய திருவருளை மல மயக்கத்தால் மறந்த

வஞ்சனையுடையேனாகிய நான் என் வஞ்சத்தால் அஞ்சுகின்றேன். நின்னை அன்றி வேறுமொரு பற்றும் இல்லாதேன் ஆதலால் என்னை வருக என்று அருள்புரிவாயாக எ - று.

(வி - ரை.) நீ செஞ்சவே ஆண்டாய் ஆதலின் நிற்பாற் குறையில்லை. நான் உலக மயக்கத்தில் மூழ்கி மயங்கினேன் ஆதலின் என்பாலேயே குறையுளது. என் குறைக்கு அஞ்சிச் சுழலுகின்றேன். ஆதலால் இங்கு நின்னைப் பிரிந்து வாழும் ஆற்றல் என்பால் இல்லை. அங்ஙனம் குறையுடையேன் யானாக நின்பால் வர நாணுகின்றேன். ஆதலின் நீயே கூவி அழைத்துக்கொள்க என விரிக்க.

செஞ்செவே, செவ்வே. "செவ்விது" என்பது "செவ்"வென ஈறு கெட்டு நின்றது. நீ என்னை ஆண்டவாறு செவ்விதோ, அன்றோ என ஐயுற்றுத் தெளிந்தது செவ்விது என்பதாயிற்று. ஆதலால் வஞ்சம் நின் பாலதாகாது என்பாலதாம் எனக் கண்டு தம்மை "வஞ்சனேன்" என்றும், இதன் காரணம் காமம் வெகுளி மயக்கங்களால் வந்த மருட்கையே என்பது தோன்ற "மருளனேன்" என்றும் கூறியருளினார். தம்மைத் தீநெறிப் படுத்தும் மலத்தை அழித்தல்வேண்டும் என்பது குறிப்பு.

நீதான் என்பால் வருதற்கு விழைந்திலையேனும் நின்னொடு ஒன்றுபட்ட அருள் வடிவினளாகிய அம்மையின் திருவடியும் என்பால் வருதற்கு இயையாததென் என்று உரைக்க.

பருதிவாழ் ஒளியாய் பாதமே அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறைஉறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகிக்
கலந்துநான் வாழுமாறு அறியா
மருளனேன் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென்(று) அருள்புரி யாயே. 7

இஃது, ஆண்டுகொண்ட நின்னை வஞ்சன் என்று எண்ணியதும், அதனால் நின்னைக் கலந்து வாழுமாறு அறியாததும் என் மருட்சியாலாயவை. ஆதலால் மலக் கூட்டுறவினால் இவ்வுலகில் நல்வாழ்வில் ஈடுபடும் வலிமையிலாதேனை நின்பால் அழைத்துக் கொள்க என்றருளியது.

(பொ - ரை.) ஞாயிற்று வட்டத்துள்ள ஒளிவடிவானவனே! தெய்வத் திருவால் உயர்வுற்ற சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! நான் நின் திருவடியேயன்றி வேறொரு பற்றும்

இல்லாதவன் ஆவேன். நின் அருள் பெறுங்காறும் அதனையே நோக்கியிருந்து உள்ளம் கசிந்து உருகி உன்னோடு கலப்புற்று வாழும் வகையை அறியமாட்டாத மல மயக்குடையேன். இவ்வுலகத்திலே வாழ்ந்துவரும் ஆற்றல் இல்லேன் ஆவேன். ஆதலால் என்னை வருக என்று அருள்புரிவாயாக எ - று.

(வி - ரை.) உச்சிப் பொழுதிலே ஞாயிற்றினிடத்து இறைவன் நுண்ணொளி வடிவினனாக வீற்றிருப்பது முற்கூறப்பட்டது. நண்பகலுக் குரியன் என்று அருளியபடி.

சிவலோகத்தரசன் திருப்பெருந்துறைக்கண் அன்பரோடு கூடிப் பிரிந்து சென்றான். அங்ஙனம் சென்றவன் பாதமே பற்றும் என்க.

நின் கருணை என் முயற்சியானன்றித் தானே பெறப்பட்ட பெற்றித் தாகலின், மற்றதனை இலேசாகப் பெற்றவாறே இலேசாகவே இழந்தேன் என்றருளியபடி. இலேசாக வந்தவாறே மேலும் இலேசாக வரப்பெறும் என்று எண்ணிய மருட்கையை உடையேன் என்க.

பந்(து)அணை விரலாள் பங்கநீ அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செந்தழல் போல்வாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறைஉறை சிவனே
அந்தமில் அமுதே அரும்பெரும் பொருளே
ஆரமு தேஅடி யேனை
வந்துய்ய ஆண்டாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 8

இது, நான் உய்ய என்னை வந்தாண்டவனே! வாழ்கிலேன் ஆதலால் என்னை வருக என்று அருள்புரிவாயாக என்றருளியது.

(பொ - ரை.) பந்துகள் வந்தணையும் விரல்களையுடைய உமாதேவி பாகனே! செந்தழல் போன்றவனே! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! இயல்பாகவே தனக்கும் தன்னைச் சார்ந்தார்க்கும் தான் முடிவில்லாது, முடிவில்லாமையைச் செய்கின்ற சுவையால் இனிய நுகர்பொருளே! அரிய பெரிய பொருளே! முயன்று பெறுதற்கு அரியதொன்றாகிய அமுதமே! அடியேன் உய்யுமாறு (என்னெதிர்) வந்து என்னை ஆட்கொண்ட குருவனே! யான் இவ்வுலகில் வாழும் ஆற்றல் இல்லேனாவேன். ஆதலால் என்னை வருக என்று அருள் புரிவாயாக எ - று.

(வி - ரை.) "பந்தணைவிரல்" என்பது முன்னர் விளக்கப்பட்டது. என் இடர்ப்பாட்டிற்கு இரங்காது பந்தணைத்தலிற் பொழுதுபோக்கா

நின்றுள் என்பதும், நீயிர் இருவீரும் அங்ஙனம் இருப்பினும் எனக்கோ நின் அடியன்றி வேறு பற்றில்லை என்பதும் திருக்குறிப்புக்கள்.

தேவர்க்குக் கோவானுன் ஆங்குறையாது திருப்பெருந்துறையை உறைவிடமாகக்கொண்டும், தான் இறப்பிலியாகவும் தன்னைச் சார்ந்த என்னை இடர்ப்படவிடுத்தும், தான் அரிய பெரிய பொருளாக இருந்தும் தன்னைச் சார்ந்த என்னை எளிய சிறிய பொருளாகச் செய்தும், தான் அரிய அமுதாக இருந்தும் தற்சார்ந்த எனக்கு நஞ்சாகி அச்சுறுத்தியும் வருகின்றுன். ஈதென்னை என மருண்டும், வேறு பற்றின்மையால் அவனுக்கே விண்ணப்பஞ்செய்தும் வருவாராயினர். அவன் வந்தாண்ட பேறு இதுவேயாகும் எனவும் ஆங்கு உரைக்க.

ஏனைய அமுதம் உண்ணுங்காற் குறைவடையுமாபோற் குறைவடையாத அமுதம் எனவும், பாற்கடற்கண்ணே வானவர் முயன்று பெற்றுங்குப் பெற்றுக்கோடற்கு அரிய அமுதம் எனவும் உரைக்க.

பாவநா சாஉன் பாதமே அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேவர்தம் தேவே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறைஉறை சிவனே
மூவுல(கு) உருவ இருவர் கீழ் மேலாய்
முழங்(கு)அழ லாய்நிமிர்ந் தானே
மாஉரி யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 9

இஃது, இறைவனே! நின் பாதப் பற்றன்றி வேறு பற்றிலாத என்னை வருக என்று அருள்புரிவாயாக என்றருளியது.

(பொ - ரை) தீவினையை அழிப்போனே! வானவர் தமக்கெல்லாம் ஒரு வானவனே! சிவபுரத்து அரசே! திருப்பெருந்துறையுறை சிவனே! மூன்று உலகங்களையும் தன் உருவமாக உடையவனே! அரி அயன் என்னும் இருவரும் முறையே கீழுலகின் கண்ணும் மேலுலகின்கண்ணும் சென்று தேடுவாராக ஒலிக்கின்ற அழற்பிழம்பாக ஓங்கி நின்றவனே! யானைத்தோற் போர்வையை உடையவனே! யான் இங்கு வாழ்கிலேன் ஆதலால் வருகவென்றருள்புரிக எ - று.

(வி - ரை.) மூவுலகு உருவ முழங்கு அழலாய் நிமிர்ந்தான் என இயைப்பினும் அமையும். இருவர்க்கு அதனை ஆக்குதல் பொருந்தாது. கீழ் மேலுலகங்களிலேயே சென்றுர் ஆதலாலும் அயன் பூமியை ஊடுருவிச் சென்றிலன் ஆதலாலும் அரி பூமியையும் பாதளத்தையும் அயன்

விசும்பினையும் ஊடுருவிச் சென்றனர் என உரைப்பது வலிந்து உரைத்தலாக முடியும் ஆதலானும் என்க. "ஆய்" என்றதனை 'ஆக'வெனத் திரிக்க. மா - புலியுமாம். பாவநாசம் என்னும் பதிக்கண் உள்ளாய் எனினும் பூவலத்திலே பாவ நாசம் செய்தனன் எனக் கீர்த்தித் திருவகவலிலே காணப்படுதலால் அங்ஙனம் கொண்டு திருப்பூவலத்து எம் பாவநாசன் என்றருளினர் எனினும் ஒக்கும்.

என் பாவம் அழிய நின் பாதம் பற்றினேன் ; வேறு பற்றிலேன் என்க. பிறவும் அன்ன.

**பழுதில் தொல்புகழாள் பங்கநீ அல்லால்**
**பற்றுநான் மற்றிலேன் கண்டாய்**
**செழுமதி அணிந்தாய் சிவபுரத் தரசே**
**திருப்பெருந் துறைஉறை சிவனே**
**தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்**
**துணையென நினைவனோ சொல்லாய்**
**மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்**
**வருகவென் றருள்புரி யாயே. 10**

இது, நீ அருள்புரியாவிடில் நின்னை அது செய்விக்குமாறு யான் பிறரை வணங்கித் துணையென நினைவனோ? அல்லேன் ஆகலின், என்னை நின்பால் வருக என்று அருள் புரிக என்றருளியது.

(பொ - ரை) குறைபடுத்தற்குக் காரணம் ஒன்றேனும் இல்லாத பழமைத்தாகிய புகழையுடைய மெய்ப்பொருளாக நின்ற அம்மை பங்கனே! செழுமையுற்ற திங்களை யணிந்தவனே! சிவபுரத்தார்க்கு அரசனே! திருப்பெருந்துறையுறை சிவனே! இளமை பொருந்திய விடையுடையானே! நின் அருளைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டுப் பிறரை வணங்குவனோ? அதன்றித் துதிப்பனோ? அவையன்றியும் அவரை எனக்கு ஓர் துணையென்று நினைப்பேனோ? சொல்வாயாக. நின் அருளை நீயாகத் தர யான் பெறுவிடில் வாழுமாற்றல் இல்லேனாவேன். (வணங்கல் முதலியன பிறர்மாட்டுச் செய்யாத எனக்கு அவற்றையெல்லாம் செய்தற்கிடனாக நிற்கும் உரிமையுடையை நீ ஆதலின்) என்னை வருக என்று அருள்புரிக எ - று.

(வி - ரை.) நின்க்குப் புகழையளித்தற்கு அன்னை இருந்தும், ஏண்டு வந்தருள் செய்வதற்கு மழவிடை இருந்தும் என்பால் வாராது பழியே பூண்கின்றாய் என்பது குறிப்பு. புகழாளைப் பாகம் பெற்றதும், சிவபுரத்து ஆட்சியும், திருப்பெருந்துறைக்கண் வீற்றிருந்து அன்பரை

ஆட்கொண்டதும், மதி அணிந்ததும், மழவிடை ஏறியதும் ஆகிய இவற்றுளுளவாகிய அரும்பெரும் புகழெல்லாம் எனக்கு அருளாமையினால் பழியாக மாறுபடும் என இடித்து உரைத்தருளியதுமாம்.

பழுதில் தொல்புகழாள் என்னும் இத்தொடர்ப் போக்காலே எனக்கு அருள்செய்க என இரங்கி உரைத்ததுவும் (5), என்பால் வர நீ விழையாதிருப்பவும் தான் மெல்லடி எடுத்துவர முயன்றாள் (6), என்பதுவும் தன் விளையாட்டினையும் இதன்பொருட்டு நீக்கினாள் (8) என்பதுவும் பெற்றாம்.

நீ என்னையுள்ளிட்ட எவரையும் பிரிந்திருந்தும், அவளைப் பிரிதற்கு நின்னால் இயலாமை பற்றி நீயே இகழ் கொண்டாய், அவளே புகழ் பெற்றாள் என்க. அதுதான் பழுதிலாததும், தொன்மையானதும் என்க.

நின்னைத் தெருட்டற்குத் துணையாமாறு பிறரைத் தொழுதல் முதலாயின செய்யேன் என்க. தொழுதல், துதித்தல், நினைதல் என்பன திரிகரணங்களையும் குறித்து நின்றன.

திருச்சிற்றம்பலம்

# அருட் பத்து

அஃதாவது இறைவனருளை வேண்டி முறையிட்ட பத்துத் திருப்பாக்களைக் கொண்ட பகுதியாம். திருப்பாட்டுக்களின் இறுதி தோறும் " அருளாய் " என வேண்டிக்கொண்டனர் அடிகள் என்க.

இறைவனோடு புணர்ந்திருக்க வேண்டுமெனத் துணிந்த அடிகள் அஃது எஞ்ஞான்று கைகூடுமெனச் சிந்தித்தனராக ஆற்றாமை மிகப் பெறுவாராயினர் அதனால் உலக வாழ்க்கையை வெறுத்து வாழாப்பத்தைப் பாடியருளினர் எனினும் தன் செயலால் வரக் கடவது யாதொன்று மில்லையெனவும் எதற்கும் அவன் திருவருளே வேண்டியதெனவும் புலப்பட வைப்பாராய் வாழாப்பத்தின்கண்ணும் " அருள்புரியாயே " எனவும் " அருளே " எனவும் அடிகள் குறிப்பிட்டுள்ள திறம் சிந்தித்தற்குரியது. வாழாப்பத்தின்கண்ணும் அவன் அருளை வேண்டி முறையிட்டாரேனும் வாழாமைக் குரிய காரணங்களை விரித்துப் பேசப்பட்டமையால் அஃது "அருட் பத்து " எனப்படாது வாழாப்பத்தென்றாயிற்று இஃது அன்னவா றன்றி இறைவன் தமக்கு அருளிய திறமும் அருளவேண்டிய திறமும் விரிவுறக் கிளத்தலின் "அருட்பத்து" என்றாயிற்றென்க.

"அருள் புரியாயே" என முன்னர்ப் பகுதியில் தோற்றுவாய் செய்யப்பட்ட பொருளே இப்பகுதியிற் பலபடப் புனைந்து பேசப் படுதலின் இப்பகுதி முன்னையதனோடு இயைபுடையதாயிற்றென்க.

இப்பகுதி அயன் மால் அம்மைக்கு அருளினை நின்னை ஆதரித் தழைத்தால் அதெந்துவே என்றருளாயே எனவும், எதிர்ந்தவர் தம்மை ஒறுத்தருளினை நின்னை ஆதரித்தழைத்தால் அதெந்துவே யென்றருளாயே எனவும், அன்பர்க்கு வேண்டிற்றருள்வோய் நின்னை ஆதரித்தழைத்தால் அதெந்துவே யென்றருளாயே எனவும், ஆண்டபின் நின்னை அன்பு முற்றி ஆதரித்தழைத்தால் அதெந்து வென்றருளாயே எனவும் நான்கு பெரும் பிரிவுகளையுடையது.

முதலாம் பெரும் பிரிவு 5, 1 என்னுந் திருப்பாட்டுக்களையும் இரண்டாம் பெரும் பிரிவு 7, 3 என்னுந் திருப்பாட்டுக்களையும் மூன் றும் பெரும் பிரிவு 8, 4, 6 என்னுந் திருப்பாட்டுக்களையும் நான்காம் பெரும் பிரிவு 9, 2, 10 என்னுந் திருப்பாட்டுக்களையும் முறையே கொண்டுள.

இப்பகுதித் திருப்பாட்டுக்களின் இயற்கைப் பொருளடைவு வருமாறு :—

சுரிகுழல் மடந்தை துணைமுலைக் கண்கள் தோய் சுவடுபொடி

கொள்வான் தழலிற் புள்ளிபோல் இரண்டு பொங்கொளி தங்கு மார் பினனே (5) எனவும், மடந்தை பாதியே பங்கயத்தயனுமால் அறியா நீதியே (1) எனவும், மேலவர் புரங்கள் மூன்றெரித்த கையனே (7) எனவும், காமன் தனதுடல் தழலெழ விழித்த செங் கண் நாயகனே (3) எனவும், பத்தியாய் நினைந்து பரவுவார் தமக் குப் பரகதி கொடுத்தருள் செய்யுஞ் சித்தனே (8) எனவும், எமக்கு வெளிப்படாயென்ன வியன்தழல் வெளிப்பட்ட எந்தாய் (4) என வும், உள்குவார் மனத்தின் உறுசுவையளிக்கும் ஆரமுதே (6) என வும், மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி மறுமையோடு இம்மை யுங் கெடுத்த பொருளனே (9) எனவும், உன்னை ஒலமிட்டலறி உல கெலாங் காணேன் (2) எனவும், குருந்த மேவிய சீரிருந்தவாறு எண்ணி யேசரு நினைத்திட் டென்னுடையெம் பிரானென்றென் றருந்தவா (10) எனவும் இயைத்துக் கொள்க.

நூற்பொருளடைவு வருமாறு —வாழாப்பத்தின் இறுதித் திருப்பாட்டானே தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர் துணையென நினைவனோ எனக் கூறி இறைவன் பெருமையை வெளிப்படுத்திய அடிகள், அவன் பங்கயத்தயனும் நான்முகனும் அறியா நீதி எனக் கூறிய திருப்பாட்டு அதனுடன் இயைபு கொண் டிருக்குந் திருக் குறிப்புப் பற்றி ஈண்டு முதலாவதாக அமைத்தரு ளினார் என்க. பங்கயத்தயனுந் திருமாலுந் தேடிக் காண முடி யாது நின்ற நிருத்தனே உன்னை ஓலமிட்டலறி உலகெலாந் தேடி யும் காணேன் என்று கூறிய கருத்தால் அடிப்பாட்டிலே ஒன்பதாவ தாக அமைந்த திருப்பாட்டு அடிகளால் இரண்டாவதாக அமைத் தருளப்பட்டதென்க. என்றுங் காணப்படாதவனேனும் எங்கள் நாயகனாகவும் என்னுயிர்த் தலைவனாகவும் ஏலவார் குழலிமார் தங் கள் நாயகனாகவும் உள்ளான் என்னும் இயைபால் அடிப் பாட்டிலே நான்காவதாக அமைந்த திருப்பாட்டு மூன்றாவதாக அமைத்தருளப் பட்டது. மேலும் அவர்கள் தேடிக் காண்டலேயன்றி நண்ணுதற் கும் அரியவன் என்னும் இயைபால் "கமல நான்முகனுங் கார் முகில் நிறத்துக் கண்ணனும் நண்ணுதற்கரிய விமலனே" என வருந் திருப்பாட்டு நான்காவதாக அமைத்தருளப்பட்டது.

நூலில் நான்காவதாக அமைந்த திருப்பாட்டில் வெளிப்படா யென்ன வியன்கழல் வெளிப்பட்ட நிகழ்ச்சி அதிகாரப்பட்டமையின் துடிகொள் நேரிடையாள் சுரிகுழல் மடந்தையுடன் அவன் கலந் திருந்த நிகழ்ச்சியைக் கூறுந் திருப்பாட்டை ஐந்தாவதாக அமைத் தருளினார்.

அன்பராயினார்க்கு எளிவந்த நிகழ்ச்சியுடன் இயைபு பட்டமை

யின் உள்குவார் மனத்தின் உறுசுவை அளிக்கும் ஆரமுதே எனக் கூறுவதாகிய அடிப்பாட்டுப் பொருளடைவில் ஏழாவதாக அமைந்த திருப்பாட்டை ஆறுவதாக அமைத்தருளினர். உள்குவார் மனத்தில் உறுசுவை அளிப்பவனேனும் உள்ளாதாராய திரிபுரத்தரையும் காலனையுங் கடிந்தவன் எனக் கூறும் இயைபால் அடிப்பாட்டில் மூன்றுவதாக அமைந்த திருப்பாட்டு ஏழாவதாக அமைத்தருளப் பட்டது. அவ்வாறு மறநெறி சாராது பத்திநெறி பிடித்து மொட்டறு மலர் பறித்து இறைஞ்சுவார்க்குப் பரகதி கொடுத்தருள் செய்பவன் என்னும் இயைபால் அடிப்பாட்டில் ஐந்தாவதாய திருப்பாட்டு எட்டாவதாக அமைத்தருளப்பட்டது. பத்தி நெறிப்பட்டார்க்கே யன்றி மருளனேனுடைய என் மனத்தை மயக்கற நோக்கி மறுமையோடு இம்மையும் அளித்தான் என்னும் இயைபால் அடிப்பாட்டில் எட்டாவதாக அமைந்த திருப்பாட்டு ஒன்பதாவதாக அமைத்தருளப்பட்டது. ஆதரித்தழைத்தால் அலைகடல் நின்று போதராய் கயிலைக்கு என்றருளாய் என்பது அடிப்பாட்டிலும் நூலிலும் பத்தாவது திருப்பாட்டாக அமைத்தருளப்பட்டது.

இயற்கைப் பொருளடைவு ்யவற்றின் அட்டவணை வருமாறு :—

| பெரும் பிரிவு | உட் பிரிவு | இ. பொ. அடைவு | நூல் அடைவு |
|---|---|---|---|
| I | 1 | 1 | 5 |
| | 2 | 2 | 1 |
| II | 1 | 3 | 7 |
| | 2 | 4 | 3 |
| III | 1 | 5 | 8 |
| | 2 | 6 | 4 |
| | 3 | 7 | 6 |
| IV | 1 | 8 | 9 |
| | 2 | 9 | 2 |
| | 3 | 10 | 10 |

்.்து திருப்பெருந்துறையில் அருளியது என்ப.

# மகாமாயா சுத்தி

## எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

சோதியே சுடரே சூழ்ஒளி விளக்கே
சுரிகுழல் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனும்மால் அறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தம்மே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே 1

இஃது, என் குருமணியே! யான் உன்னை ஆதரித்தழைத்தால், நீ கவலையற்றவன்போல் வாளாவிராது, என்னை அழைத்த காரணம் என்ன என்று என்னை வினவியருளுவாயாக என அடிகள் இறைவற்குக் கூறியருளியது.

(பொ - ரை) (நெய் முதலியவற்றைப் பற்றிக்கொள்ளாத) சோதியாகிய தனி வடிவுடையவனே! அதனினின்றும் புறப்படும் சுவாலையானவனே! அச்சுவாலை சூழ்ந்த ஒளிவிடுகின்ற விளக்கானவனே! நெறிப்பினைக் கொண்ட கூந்தலையும், பருத்த முலைகளையுமுடைய உமாதேவியைத் திருமேனியில் நேர் பாதியாக உடையவனே! நெற்றி மார்பு கை முதலாய பகுதிகளில் அணியப்பெற்ற வெண்ணிற விபூதியுடையவனே! தாமரைப்பூவிருக்கையினையுடைய நான்முகனும், திருமாலும் ஆகிய இருவரும் அறியாவாறு நின்ற நீதியே! செல்வம் பொருந்திய திருப்பெருந்துறையில் உள்ள மலர்கள் நிறையப்பெற்ற குருந்த மரத்தின்கீழ் எழுந்தருளி வீற்றிருந்த சிறப்பினையுடைய முதல்வனே! அடிமையாகிய யான் உன்னைப் பேரன்பினால் ஆதரித்து அழைத்தால், அவ்வாறு அழைத்த காரணத்தைக்கொண்டு அது என்ன என்று வினவியருள்வாய் எ - று.

(வி - ரை.) புறப்பொருள்களைப் பற்றிக்கொண்டு சுடர்விட்டு விளக்குவனவெல்லாம் பொய்யாயழியும் போலி விளக்குகள். அவையும் வேறே, இவ்விளக்கும் வேறே என்க. அங்ஙனம் சுடர்விட்டுச் சோதியை வீசி விளக்கும் மெய் விளக்காகிய நீ, எனக்கு அரிய மெய்ந்நெறியை விளக்காது

விட்டதென் என்க. விளக்கு, மூலப்பொருளாகிய தன்னைச் சார வழி விளக்குவோன். சுடர், இன்பச்சுடர்.

"தேனுந்து செந்தீ" (திருவெண்பா. 1.)
என்றும் கூறியருள்வர்.

பணைமுலையும் சுரிகுழலும் கணவனுகிய நீ ஆறுதல் பெறுதற்குரியன. நீ அங்ஙனமே ஆறுதல் எய்தியும், நின்னை அடைந்த எனக்கும் நின் திருவடியை உரியதாக்கி ஆறுதல் செய்யாதிருத்தல் முறையோ என்றருளியபடி.

"மடந்தை பாதி" என்பதனுல், அவன் எங்கள் அப்பனும், எங்களைப் படைத்துக் காப்பவனுமாதல் பெறப்படும்.

"பரன்," பரமபதத்தையுடையவனுதலின், மறுமையும் அருளவல்லான் என்பது பெறப்படுதலின், எங்களைப் படைத்துக் காத்து வழி விளக்கிப் பரமபதத்துட் சேர்ப்பவன் என்று உரைக்க.

நெற்றி மார்பு கை முதலாய திருமேனிப் பகுதிகளிலே அணிந்து கொள்ளப்பட்ட நீற்றினனுதலாலே "பால்கொள் வெண்ணீற்றுய்" என்றருளினர்.

"சிவனவன் திரள் தோள்மேல்
நீறுநின்றது கண்டனையாயினும் நெக்கிலை" (திருச்ச. 33)
என்றலும் காண்க. இதனுல் நீறு கண்டு காதல்கொண்டு வீடடைதல் வேண்டியிருப்பவும், யான் அங்ஙனம் ஆறறிலேன் என்று குறிப்பிட்டருளிய வாறு.

நான்முகனும் திருமாலும் தாமே முதல்வர் எனச் செருக்கி இறைவனை மறந்து தம்முள் வாதிட்டுப் போராடிய ஞான்று, உண்மை இதுவன்று; ஆதலின் உண்மையை அறிதிர் என அவர்முன் அக்கினிச் சுவாலையாக நடுநின்று, அடிமுடி காணுமாறு ஊக்கி, அவர் அகந்தையை அகற்றி, தன் முதன்மையை நாட்டி, அவர் மேற்கொண்ட போரினைத் தீர்த்தருளிய மையால் "அயன் மாலறியா நீதி"யென்றருளினர். அயன் மாலவர் நாடாத போது தோன்றியும், நாடியபோது கரந்தும் நின்றவாறே, யான் நினையாத போது தானே தோன்றியும், நினைந்தபோது கரந்தும் அறியனுக இருப்பான் என்பதும், அவர் அகந்தையை அகற்றி நீதி இது எனக் காட்டியவாறே, என் அறியாமையை அடர்த்து நீதி இது என்று காட்டினுன் அல்லன் என்பதும் குறிப்புக்களாம்.

"ஆதரித்தழைத்தால் அதெந்து?" என்று வினவ வேண்டிய நீ வினவாமை என் என்க. அதெந்து - அஃதென்ன. அது - அங்ஙனம் அழைத்தமை. அழைத்தல் படர்க்கைப் பொருளையாதலின், அழைக்கப் பட்ட இறைவன் சேய்மைப்பட்டுளன் என்பது பெற்றும். முன்னர் வந்து புணர்ந்திருந்தவன், இப்போது புறக்கணித்து அகன்றுன் என்பதும், அவன் பிரிவுக்கு ஆற்றுது அழைத்தருளினுர் என்பதும் பெறபட்டன. "என் என்றுன் எங்கட்கிறை" என்றுர் புகழேந்தியாரும்.

"செல்வம்" என்றது, இறைவன் பூசனைக்கும், அடியார்க்குதவற்கும் உதவும் பொருட்செல்வங்களும், அருட்செல்வங்களும் முதலாயவற்றை. இவற்றையுடைய பெருந்துறை "செல்வத் திருப்பெருந்துறை" என்க.

நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே உன்னை ஓலமிட் டலறி
உலகெலாந் தேடியும் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
அருத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றருளாயே. 2

இஃது, ஒருத்தனே! உன்னை ஓலமிட்டபடியே உலகெலாந் தேடியுங் காணப்பெருமையால், ஆதரித்துக் கூவி அழைத்தால், அதென்ன என்று வினவியருளாய் என்றருளியது.

(பொ-ரை) திருக்கூத்தாடுவோனே! உயிர் அழுக்கற்றவனே! (இறுதியில் பிரபஞ்சத்தை அழித்த சுடலையில் சாம்பராகிய) நீற்றை அணிந்தவனே! நெற்றிக்கண்ணுடையவனே! தேவ நாயகனே! யான் பற்றுதற்குரிய ஒரேயொரு பொருளாயிருப்பவனே! திருத்தமாகிய இயல்பாகவே அமைந்துள்ள நீர்நிலைகளையுடைய திருப்பெருந்துறையின்கண், செழுமை பொருந்திய மலர்களையுடைய குருந்த மரத்தின்கீழ் எழுந்தருளி வீற்றிருந்த சிறப்பினையுடைய பெருஞ்செல்வனே! அடிமையாகிய யான், உன்னை அபயம் அபயம் எனக் கூவி அலறியபடியே உலகெல்லாந் துருவித் தேடியும் காணேனாயினேன். (அங்ஙனம் காணாமையால்) ஆதரித்தழைத்தால் "அது என்ன?" என்று வினவியருளாய் எ-று.

(வி-ரை.) நிருத்தன், தான் ஆடுதலினாலே பொதுவாக எல்லாவற்றையும், இப்போது சிறப்பாக என்னையும் ஆடச்செய்வோன்.

உயிர் அழுக்கற்றனையாதலின், நின்னைச் சார்ந்தார்க்கும் அஃதகற்ற வேண்டிய நீ, யான் அழைத்தும் வாளாவிருத்தல் முறையோவென்பார் "நிமலா" என்றும், மலாதிகளை அழிக்கும் ஆற்றல்படைத்த ஞான நெற்றிக் கண்ணையுடைய நீ ஆற்றலற்றவன்போல் நடித்தல் அழகோவென்பார் "நெற்றிக கண்ணனே" என்றும், இறுதியில் அழித்தொடுக்கும் நீ இப்போதே அதனைச் செய்து என்னை உன்னுள் ஒடுக்கியருள்க என்பார் "நீற்றனே" என்றும் அழைத்தருளினார். "உழிதரு காலும் கனலும்" என்னும் திருச்சதகத் திருப்பாடலையும் நோக்குக.

எங்கள் பிரான் அல்லேப் போலும் "விண்ணுளோர் பிரான்" எனத் தமக்கு அருளாமையின் வந்த ஊடலான் அவ்வாறு கூறியருளினர். தலைமகள் தலைமகனை "மகன் தந்தை வந்துளான்" என்று கூறுதல்போல.

கற்புடையாட்கு யாது செய்யினும் தலைவன் ஒருவனே போல யான் உன்னை விடேன் என்னும் எனது உள்ளக்கிடை கண்டு என்னை உலைய வைக்கின்றாய் போலும், எங்ஙனமாயினும் யான் உலக இருளில் மயங்கு தலாலே அஞ்சியழைத்தால், 'அஃதென்ன? ஏன் அழைத்தாய்?' என்று தொனியேனும் பிறப்பித்தருள்க என்பது தோன்ற "ஒருத்தனே...... அருளாயே" என்றருளினர்.

இன்னும் இத்திருப்பாட்டாலும் உயிர்தானே முயன்று இறைவனைக் காணமாட்டாதென்னும் உண்மையும் பெறப்பட்டது.

அருத்தன் - பொருளுடையவன். நீ பெருஞ் செல்வன் என்பது கண்டு, உன்னை அடைந்து, இன்பம் பெற விரும்பி, எல்லாவற்றையும் இகழ்ந்து நீக்கிய யான், திரிசங்குவைப்போல் இருப்பது முறையோ என்பதைத் திருவுளங்கொண்டு "அருத்தனே" என்றருளினர்.

பொய்கை, இயல்பாகவே அமைந்த நீர்நிலை. திருவடித் தீர்த்தம் என்க. அதனாற் பாவ நீக்கமுண்டாம். அச்சிறப்புத் தோன்றத் "திருத்த மாம் பொய்கை" என்று அருளப்பட்டது. அதனையுடைய திருப்பெருந் துறை என்க.

எங்கள்நா யகனே என்னுயிர்த் தலைவா
ஏலவார் குழலிமார் இருவர்
தங்கள்நா யகனே தக்கநற் காமன்
தனதுடல் தழல்எழ விழித்த
செங்கண்நா யகனே திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
அங்கணா அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 3

எரித்தலும் கிருபாநோக்கஞ் செய்தலுமாகிய ஈரியல்புமுடைய திருக் கண்ணிணையாதலின், நின்னை ஆதரித்தழைப்பேற்கு அவ் வீரியல்புள் ஏற்ற ஓரியல்புடன் என் என விளைவியருளாய் என்று அருளியது.

(பொ - ரை) எங்கள் தலைவனே! என்னுயிர்த் தலைவா! மயிர்ச் சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய உமாதேவிக்கும், கங்கா தேவிக்கும் நாயகனே! (அங்ஙனம் இருப்பவும்) தகுந்த நன்மை செய்தலை மேற்கொண்டு வந்த மன்மதனுடைய உடலம் எரிந்து போமாறு விழித்து நேர்மை செய்த கண்ணிணையுடைய தலைவனே!

திருப்பெருந்துறையில் செழுமை பொருந்திய மலர்களையுடைய குருந்த மரத்தின்கீழ் வீற்றிருந்த அன்றே என்னை அழகுறக் கடைக் கணித்த திருக்கண்ணையுடையானே ! அடிமையாகிய யான் ஆதரித்தழைத்தால் அது என்ன என்று வினவியருளாய் எ - று.

(வி - ரை ) ஊடிய காரணத்தால் நெஞ்சில் அழுத்தப்பட்டவன் அவனேயாகலின், அன்பு மேலீட்டால் "எங்கள் நாயகன்" எனப் பொது வாகவும், "என் உயிர்த் தலைவா" எனச் சிறப்பாகவும் அழைத்தருளினர். 'எம்பெருமான்' எனற்பாலது "எங்கள் பெருமான்" என நின்றது. "எங்கள்" என அடியார்களைக் குறித்தருளினருமாம். " உயிர்த்தலைவன் " என்பது திருப்பெருந்துறையிற் கோயில் கொண்டருளிய இறைவன் பெயர். ஆன்மநாத சுவாமி என்பர். இவன் பசுபதியே யன்றிப் பசுத்தன்மை நீங்கிய ஆன்ம பதியுமாவான் என்க.

பார்வதியை மணப்பதற்கும், தேவர் இன்னல் போவதற்கும் காரண மாய் இருந்தமை பற்றித் " தக்க நற்காமன் " என்றருளிச் செய்தனர்.

செங்கண் - நேர்மை செய்த கண்; நிறம் குறித்ததுமாம். யானும் அழைக்கின்றேன், எரிப்பினும் எரிக்க என்றருளியபடி. என் தன்மை கண்டு நின் நேர்மையைச் செய்க என்றலுமாம்.

" அங்கண் " என்றருளினர், அன்று பார்த்தலாகிய திருநோக்கம் செய்த திருக்கண்ணையுடையானாகலின்.

எனவே எரித்தலும் கிருபா நோக்கம் செய்தலும் ஆகிய திருக்கண் களின் அரியல்பும் ஈண்டுக் கூறப்பட்டன. அடியேனும் ஆதரித்தழைத் தேன், ஆகலின் அதற்காகவேனும் வாளா "அஃதென்" என்று மட்டும் அருள் செய்தால் உய்ந்தேன் என்றபடி.

கமலநான் முகனும் கார்முகில் நிறத்துக்
கண்ணனும் நண்ணுதற் கரிய
விமலனே எமக்கு வெளிப்படாய் என்ன
வியன்தழல் வெளிப்பட்ட எந்தாய்
திமிலநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
அமலனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 4

இது, நான்முகனும் திருமாலும் என்னும் இவர்களாலும் அறிய முடியாத பெருமையுடையையேனும், பேரிரக்கத்தினேனாகிய யான், அப்பெருந்துறைக்கண் வெளிப்படுதி என அழைத்தபோது ஆங்கே, அவ்வழலில் வெளிப்பட்ட அருள் பண்பினை யுடையை

ஆதலின், ஈங்கு நான் அழைத்தக்கால், வாளா அஃதென்ன வென வினவியேனும் அருளாய் என்று அருளியது.

(பொ - ரை.) தாமரை மலரில் இருப்பவனுகிய நான்முகனும், கார் காலத்து முகில்போன்ற கருநிறங் கொண்ட திருமாலும் அணுகுதற்கரிய அழுக்கற்ற திருமேனியுடையவனே! எனக்கு வெளிப்பட்டருள்க என வேண்டுதலும், எம்பொருட்டு அப்பெருமை பொருந்திய அழலில் வெளிப்பட்டருளிய எந்தையே! நான்கு வேதங்களினது ஒலிமுழக்கம் பொருந்திய திருப்பெருந்துறையில் செழுமை பொருந்திய மலர்களையுடைய குருந்த மரத்தடியில் வீற்றிருந்தருளிய அழுக்கற்றவனே! அடிமையாகிய யான் ஆதரித்தழைத்தால் வாளாவேனும் அஃதென்னவென வினவியருளாய் எ - று.

(வி - ரை.) "விமலன்" இயல்பாகவே அழுக்கற்ற திருமேனியுடையவன்; அடியாருடைய திருமேனி அழுக்கையும் நீக்குவோன். அமலன் - மலம் அல்லாதவன்; அடியாரையும் அங்ஙனம் ஆக்குவோன். அவன் மாலயன் இருவராலும் அறியப்படான் ஆகலின், அவ்விருவர் உடலங்களும் இறைவனருளால் தூய்மை செய்யப்படற்பாலன வென்க.

"எந்தையே" என்றருளினர், ஆசான் என்பதனைத் திருவுளங் கொண்டு. அஃதீண்டு இடுகுறியளவாய் ஒருமை குறித்து நின்றது. பிரிப்பப் பிரியாவாகலின். இங்ஙனம் அலமரவைத்தல் ஆசாற்கு இயல்போ என்றருளியபடி.

துடிகொள்நேர் இடையாள் சுரிகுழல் மடந்தை
துணைமுலைக் கண்கள் தோய் சுவடு
பொடிகொள்வான் தழலிற் புள்ளிபோல் இரண்டு
பொங்கொளி தங்கும்மார் பினனே
செடிகொள்வான் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
அடிகளே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. **5**

இஃது, அச்சம் மிகுதியால் அணைத்துப் புல்லிய அம்மையின் முலைத் தழும்பு பூண்டவனே! யானும் அஞ்சி அழைத்தால் அதென்ன என வினவியருளாய் என்றருளியது.

(பொ - ரை ) உடுக்கையின் நடுவினையொத்த இடையினையும், சுரிந்த கூந்தலினையுமுடைய உமாதேவியாரது இரண்டு முலைகளின் கண்களாகிய நுதிகள் (அச்ச மிகுதியானே இறுகப் புல்லிய

போது) அழுந்திய தழும்புகளாகிய பொங்குகின்ற ஒளியானது, சாம்பர் பூத்த தீயின் நடுவே இரண்டு சாம்பரற்ற பொறிகள் தோன்றுமாபோல் தங்கப்பெற்ற மார்புடையவனே! மழைக் காவலினைக் கொண்ட செடிகளையுடைய சோலை சூழ்ந்த திருப் பெருந்துறையில் குருந்த மரத்தின்கீழ் எழுந்தருளி வீற்றிருந்த சிறப்பினையுடைய அடிகளே! அடிமையாகிய யான் ஆதரித்தழைத் தால் வாளாவேனும் அஃதென்னென வினவியருளாய் எ - று.

(வி - ரை.) சுவட்டினை ஒளி யென்றருளினர்; அஃதொளி வடி வுடைமையின். திருமேனியிற் பரவப் பூசப் பெற்றிருந்த வெண்ணிற விபூதியானது முலைக்கண் அழுந்துதலினாலே அவ்விடத்தழியப் பெற்று, மறைப்புண்டிருந்த செம்மேனி தோற்றுதல், சாம்பர் பூத்த நெருப்பில், சாம்பரற்ற தீபிரகாசிக்கும் இரண்டு புள்ளிகளை ஒத்தன வென்க.

"பொழில்" செடிகளைக் கொண்டமை பின்னும் அழியாதிருத்தற் பொருட்டு. ஆகையினால் நீயும் என்னைத் தழுவிக் கொள்ளாவிடின் மாணவ பரம்பரை அழிந்துவிடும் என்றருளியபடி. பொழிலுக்கு வான் காவ லிட்டாங்கு எனக்கும் திருவடிக் காப்பு வைத்திலை என்க. "வான்" என்றற்குப் பெரிய, சிறந்த, வானளாவிய என்றுரைத்தலுமாம். உன்னைப் பூசித்த அம்மையை அஞ்சுவித்து ஆண்ட நீ, யான் அழைத்தும் வாராது அஞ்சுவித்தல் மட்டும் செய்தாய்; அது முறையோ என்றருளியவாறு. இறைவன் உமையொடும் திருக்கயிலாய மலையில் வீற்றிருக்கும் போது இராவணன் அதனை உச்சிமிசை எடுத்தனனாக அம்மலை அசைவுக்கு அஞ்சிய உமை இறைவனைத் தழுவிக்கொள்ள ஆங்கு அமைந்த முலைச் சுவடுமாம்.

"அயிலெயிற் றரக்கன் அள்ளத் திரிந்தநாள் அணங்கு புல்லக்
கயிலையி னிருந்த தேவைத் தனித்தனிக் கடுத்தல் செய்தார்."
(கம்பரா. : சுந்தர. 12.)

என்பதால் இராவணன் கயிலையை எடுத்தகாலை உமை தழுவிக்கொண்டாள் என்பது உணர்க.

இராவணன் மலை எடுக்க அதற்கு அஞ்சிய உமையைத் அணைத்த வாறே புலன்களால் அலைக்கப்படும் என்னை அச்சந் தீர அணைத்தாயில்லை என்று விரிப்பினுமாம்.

துப்பனே தூயாய் தூயவெண் ணீறு
துதைந்தெழு துளங்கொளி வயிரத்(து)
ஒப்பனே உன்னை உள்குவார் மனத்தின்
உறுசுவை அளிக்கும் ஆரமுதே

செப்பமா மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
அப்பனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 6

இது, நினைப்பவர் மனத்திருந்து அவர்க்குச் சுவை அளிக்கின்ற அமுதமானவனே! யான் நினைத்து அழைத்தால் அதுவென் என விஞவியருளாய் என்றருளியது.

(பொ - ரை) செவ்வொளியுடையோனே! தூய்மையுடையவனே! (செவ்வொளியுடையையேனும்) தூய்மை பொருந்திய திருவெண்ணீறு படிந்து வீசுகின்ற ஒளியினுலே வயிரத்தை ஒப்பவனே! உன்னை நினைப்போரது உள்ளத்திலே மிக்க சுவையைக் கொடுக்கின்ற நிறைந்த அமுதமானவனே! ஓதினுரைச் செப்பஞ் செய்கின்ற பெரிய மறைகள் சேர்ந்திருக்கின்ற திருப்பெருந்துறையில் செழுமை பொருந்திய மலர்களையுடைய குருந்த மரத்தின்கீழ் எழுந்தருளி வீற்றிருந்த சிறப்பினையுடைய அப்பனே! அடியேன் ஆதரித்து அழைத்தால் ·வாளாவேனும் அது என்ன என்று விஞவியருளாய் எ - று

(வி - ரை.) துப்பன் - செவ்வொளியுடையோன்; எனவே உருத்திர குணமுடையான் என்பது பெற்றும். உருத்திர குணமுடைமைக்கேற்ப அழிப்பினும், அவ்வழிப்பு தூய்மை செய்தலேயாம் என்பது படத் "தூயாய்" என்றருளினர். 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள்' என்றுணர்க.

அவன் உண்மையில் துப்பனுயினும், திருவெண்ணீற்ருல் வயிரம் போன்ருன் என்பார், "துப்பனே வயிரத்தொப்பனே" என்றருளினர். அன்றியும் கண்டத்து நீலஒளியும் தோன்றிற்று என்க.

புறம் படராதது அகத்திலே இன்பமூறி வருமாதலின், "உள்குவார் மனத்தின் உறுசுவை அளிக்கும் ஆரமுது" என்றருளினர். அவ்வின்பத்தினை யான் பெற்றிலேன் என்றருளியவாறு.

தன்னை ஓதினுரைச் செப்பம் செய்யும் மறை என்க. அஃதோதியும் யான் செப்பமுற்றிலேன் என்க. "அப்பனே" என்றருளினுர், தம் துன்ப மிகுதி உணர்த்துதற்பொருட்டு.

மெய்யனே விகிர்தா மேருவே வில்லா
மேவலர்புரங் கள்மூன்(று) எரித்த
கையனே காலாற் காலனைக் காய்ந்த
கடுந்தழற் பிழம்பன்ன மேனிச்

செய்யனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
ஐயனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 7

இது, வளையாத மேருவை வளைத்தும், வேவாத புரங்களை வேவித்தும் அருஞ்செயலாற்றிய நீ, யான் அழைத்தால் என்ன என வினவியருளாய் என்றருளியது.

(பொ - ரை.) இல்லையாகாத திருமேனியுடையவனே! (அடியார் பொருட்டு மெய்ம்மையினின்றும்) வேறுபட்ட திருமேனியை (அவர் வேண்டியவாறே) உடையவனே! மேருமலையை வில்லாகக் கொண்டு பகைவர்களுடைய முப்புரங்களையும் எரித்த கையம்பு உடையவனே! திருவடிகளினாலே எமனைக் கோபித்து உதைத்த கடிய அனற்பிழம்புபோன்ற செம்மேனியுடையவனே! செல்வத்தினையுடைய திருப்பெருந்துறையில் செழுமை பொருந்திய மலர்களையுடைய குருந்தமரத்தின் கீழ் எழுந்தருளி வீற்றிருந்த சிறப்பினையுடைய தலைவனே! அடியேன் ஆதரித்தழைத்தால் வாளா வேனும் அது என்ன என வினவியருளாய் எ - று.

(வி - ரை.) விகிர்தன், மெய்ம்மையினின்றும் அதுவாகவே வேறுபட்ட திருமேனியுடையவன்.

'வளையாத மேருவை வளைத்தாய்; அழியாத புரத்தை அழித்தாய்; அவற்றை இயற்றியருளிய கை இப்போது யாண்டையது? அப்புரத்துள் மூவரை உய்யக்கொண்டவாறே என் திரிகரணங்களையும் உய்யக்கொள். அன்றி ஏனையோரையும் காலனையும் அழித்தவாறு அழிப்பினும் அழிக்க' என்க.

எமனைக் காய்ந்தபோது உருத்திர குணம் தோன்றலின், அவனை அடர்த்த இறைவன் கடுந்தழற் பிழம்பன்ன மேனிச் செய்யன் ஆயினான் என்க. மேனியாற் செய்யன் போல்வதன்றி, அவற்கொரு நிறமும் இன்றென்க.

மார்க்கண்டனுர்க்கு மாறுபட்ட காலனை அடர்த்து அழித்து அடக்கி அவரை உய்யக்கொண்டாய். என் செயலும் மாறுபட்டதாயின் காலனை அடர்த்தவாறே என்னையும் ஒறுத்தருள்க என்று விரிப்பினுமாம்.

முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறு மலர்பறித்(து) இறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும்

சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 8

*இது, காதலர்க்கு அருள்செய்பவனே! யான் ஆதரித்தழைத்தால் அஃதென்ன என வினவியருளாய் என்றருளியது.*

(பொ - ரை) *இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே! பழமையானவனே! மூன்று திருக்கண்களையுடையவனே! தக்ஷிணா மூர்த்தியே! மொட்டின் தன்மை நீங்காத பூக்களைப் பறித்துத் தூவி வணங்கிப் பத்தியோடு தியானம் செய்து துதிக்கின்றவர்கட்கு, மேலான கதியைக் கொடுத்து அருள்செய்கின்ற அறிவுடையானே! செல்வத்தினையுடைய திருப்பெருந்துறையில் செழுமை பொருந்திய மலர்களையுடைய குருந்தமரத்தின்கீழ் வீற்றிருந்தருளிய சிறப்பினை யுடைய அப்பனே! அடியேன் ஆதரித்தழைத்தால் வாளாவேனும் அது என்ன என வினவியருளாய் எ - று.*

(வி - ரை.) *நீ இயல்பாகவே முத்தனாய் இருந்தும், நின்னைச் சார்ந்த என்னையும் அங்ஙனம் ஆக்கினாயில்லை என்க. சிப்பிக்குள் முத்திருப்பினும், அதனால் அம்முத்துத் தூய்மையும் ஒளியும் கெடாது நிலைபெற்று, அச் சிப்பியையும் பெருமை செய்யுமாறே, இறைவனும் தனது நிறைவினால் அழுக்கடைதலற்று, உலகத்திற்கும் பெருமை ஈந்தான். இறைவன் இருக் கும் பொருட்டு ஆன்மாவும், ஆன்மா இருக்கும் பொருட்டுத் தனு கரண புவனங்களும் ஆயவாறு காண்க.*

"முதல்வன்" என்பது முதுமையென்னும் பண்படியில் தோன்றியது. அது 'முதல்' என முடியும். 'ஒன்று' என்பதற்கும் முதலிற்கும் வேறுபா டறிக. முதனுதல் - முற்படுதல். அது பழமை என்பது பழகி வருதலாம். முதல்வன், முதலாளியுமாம்.

முக்கண்ணுடைமை, ஏனைக் கடவுளரினும் இறைவனுக்கு ஒரு தனிச் சிறப்பாம்.

முனிவன் - தக்ஷிணாமூர்த்தி. இதன் சார்பால் முக்கண்ணன் காமனை எரித்தவாறும், முனிவர்க்கருளியவாறும் போந்தன.

வண்டுதாத மலர் என்பது தோன்ற "மொட்டறுமலர்" என்றருளினர்.

பரம் - மேல். கதி (- போகுமிடம்) என்றது முத்தியை. அம்முத்தி அவனேயாகலின், அவன் சித்தனாயினன். சித்தன் - அறிவுடையோன்; ஞானரூபன்; அணிமா ஆதிய சித்திகளையுடையனுமாம். இவ்விரட்டுற மொழிதலால் 'பத்தியாய்ப் பரவற்கு வல்லனல்லாத எனக்கும் முத்தி தர வல்லாய்; என்னோ அது தந்திலை?' என்றருளியவாறு.

"அத்தன்" என்பது, தலைவன். "அத்தன்" என உரிமையும் அருமையும் பற்றிவரும் பெயராம். 'அஸ்தன்' என வடமொழிப் பெயராகக் கொண்டு அபயக் கையையுடையவனே என உரைப்பினும் அமையும். வரதக் கையாலும் அருள் என வேண்டுதலும் செய்தபடி.

மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ(டு) இம்மையும் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவா ளரவம்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
அருளனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 9

இது, மறுமையும் இம்மையும் எனக்கு இல்லாதபடி கெடுத்தும் என்னை ஆண்டுகொள்ளாதவனே, அடியேன் ஆதரித்தழைத்தால் அஃதென்ன என விஞவியருளாய் என்றருளியது.

(பொ - ரை) மயக்கமுடையேனுகிய எனது மனத்தை மயக்கறும் வண்ணம் அருள் நோக்கம் செய்து, அம்மனம் காரணமாக வரும் மறுமையுடனே இம்மையும் கெடும்படிசெய்த (அவ்வாறு கெடுப்பதையே பொருளாகக்கொண்ட) பொருளனே! (அங்ஙன மாற்றினும் அழுக்கடைதலில்லாத) தூய்மையானவனே! சினக்கின்ற ஒளியினையுடைய பாம்பும் கங்கை நீரும் தங்கப் பெற்ற சிவந்த சடையினையுடையாய்! தன்னுடைய தெருட்சியானே தன்னைப் பயின்றாரையும் தெருட்டுகின்ற நான்மறைகளும் பொருந்திய திருப்பெருந்துறையில் செழுமை பொருந்திய மலர்களையுடைய குருந்தின்கீழ் வீற்றிருந்தருளிய சிறந்த அருளாளனே! அடியேன் [illegible] வாளாவேனும் அது என்ன என விஞவியருளாய் எ - று.

(வி - ரை.) இம்மையும் மறுமையும் அவ்வவற்றிற்குரிய பிறவிகளின் மேலவாய் நின்றன. அவற்றைக் கெடுத்தலும், கெடுத்து ஆங்கேதானே வீடுபேறாய் நிற்றலுமாகிய பொருளையுடையோன் என்க. கெடுத்தல் வீடடைவித்தற்பொருட்டாகலின் புனிதனுயினன்.

அழிக்கவந்த கங்கையைச் சடைக்குள் ஒடுக்கி அதற்குத் தலைமையான இடத்தைக் கொடுத்தானுகலின், அவனுக்கு உயர்வு, தாழ்வு நண்பு பகை முதலியன இல்லை என்றறிக. கங்கையும் எமனும் தம்முள் வேறுபாட்டால் தலையிடத்தையும் காலிடத்தையும் அடைந்தனர் என்க. அரவும் அங்ஙனமே தலையிடம் பெற்றது.

நான்மறை இறைவன் நூலாதலின் தெளிவு பெற்றதாயிற்று. அது தன்னைப் பயின்றுரையும் தெருட்டவல்லதாகலின், திருப்பெருந்துறையும் தெளிவுபெற்ற தென்க.

எல்லா அருட் செயலுமுடைய நீ எனக்கருளாதது என் என்பது தோன்ற "அருளன்" என்றருளிச் செய்தார்.

திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தம்மே வியசீர்
இருந்தவா(று) எண்ணி ஏசறு நினைந்திட்(டு)
என்னுடை எம்பிரான் என்றென்(று)
அருந்தவா நினைந்தே ஆதரித் தழைத்தால்
அலைகடல் அதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறி இதுகாண்
போதராய் என்றரு ளாயே. 10

இஃது, என்னை ஆட்கொள்ளுமாறு திருப்பெருந்துறையில் நீ வீற்றிருந்த நீர்மையெல்லாம் நினைந்து என் எம்பிரான் என்று என்று அழைத்தால், நீ, என்னை நோக்கி, உவ்விடர்க்கடலினின்றும் நீங்கி இந்நெறியானே கயிலைக்கு வருதி என்று அருளுக என்றருளியது.

(பொ - ரை) திருத்தமாகிய வளர்ச்சி முடிவுறுத சோலை சூழ்ந்த திருப்பெருந்துறையில் செழுமை பொருந்திய குருந்த மரத்தின்கீழ் எழுந்தருளி வீற்றிருந்த சிறப்பினை, உத்தரகோச மங்கையில் இருந்தவாறெண்ணி (பிரிந்தமையுன்னி) ஏசுதலற்று நினைவு கூர்ந்து என்னை அடிமையாகவுடைய எம் தலைவன் என்று நின் திருப்பெயர்களைப் பலமுறையும் நினைத்துச் சொல்லிப் பேரன்பினுற் பேணி அழைத்தால், அருந்தவத்தோனே ! நீ பிறவிக் கடலினின்றும் என்னைப் புல்லும் வண்ணம் வருதி , கயிலை புகுதற் குரிய வழி இதுவே கண்டுகொள்; அங்ஙனமே போதுக என்றருளாய் எ - று.

(வி - ரை.) அடியார்க்கு ஆறு நிழலையும், அழியா இன்பத்தினையும் துய்க்க வைத்தலின் "திருந்துவார் பொழில்" என்றருளினர். "வார் பொழில்" என்றருளினர், வளர்ச்சி முடிவுறுமையின். இப்பொழிலினையும் நிழலினையும் சேர்ந்தார் யாவரேனும் தம்மை மறந்து இன்புறுவர் என்க. (முத்திநிலை என்றபடி.) திருந்துவார்க்குரிய பொழிலுமாம். அதனைச் சார்ந்தும் திருந்திலேன் என்க.

உத்தரகோசமங்கையில் அருள்செய்த சீருடையானையே திருப்பெருந் துறையிலும் கண்டு, ஆண்டிருந்த வண்ணமே இங்கும் நினைந்தருளினர் என்பது தோன்ற "இருந்தவாறெண்ணி" என்றும், திருப்பெருந்துறை யில் இறைவன் பிரிந்தானாக, அப்பிரிவை யுன்னி ஏசுதலற்றுப் பிரியினும் அவனே கதி என்று கருதியருளியமை தோன்ற "ஏசறு நினைந்திட்டு" என்றும், அவன் திருப்பெயர்களே பிறவிக்கடல் கடத்தும் புணையெனக் கருதியருளியமை தோன்ற "எம்பிரான் என்றென்றே நினைந்து" என்றும் அருளிச் செய்தனர்.

அருந்தவமுடையாய்க்கு, அலைகடல்நின்று அல்லற்படும் எனது தன்மை கண்டிரங்கித் தண்மை பூண்டொழுகாமை அழகோ என்க.

திருச்சிற்றம்பலம்

# திருக்கழுக்குன்றப் பதிகம்

"திருக்கழுக்குன்றப் பதிக" மாவது, இறைவன் தம்மை முதற் கண் ஆண்டு கொண்ட பின்னர் அருள் செய்யாது அயன்மை காட்டிக் கயக்கித் திருக்கழுக்குன்றத்திலே ஞானசாரியனைத் தோற்றி அருளிய தோற்றத்தினைக் கண்டு அஞ்ஞானசாரியன் தமக்குக் காட்சியளித்தமைபற்றிப் பாடியருளிய ஏழு திருப்பாடல் களைக் கொண்ட பகுதி.

முன்னர்த் திருப்பகுதியிலே அடிகள் இரங்கியும் கலங்கியும் "வாளாவேனும் அதெந்துவே என்றருளாயே" என ஓலமிட்டாராக, திருவருட்சத்தி துணையினால் திருக்கழுக்குன்றத்தில் காட்சியளிக்கப் பட்டமையின் அது பொருளாகக்கொண்டு இயற்றப்பட்ட செய்யுட் களைக் கொண்டமையின் இதுவும் மேலைப் பகுதியினோடு தொடர் புடைத்தாயது.

1. என் முயற்றால் வந்து ஆண்டனை என்றல் 2. வினை ஒத்திட அக்கால் உனை மேவினன் என்றல் 3. என் துயர்க்கு இரங்கி எய்தினை எனை என்றல் 4. ஆண்டநீ கயக்கியருளினை என்றல், என்ற நான்கு பிரிவுகளாக இப்பகுதி பொருள் இயல்பு நோக்கிப் பகுக்கப்படும்.

இறைவன் தம்மை முதலில் ஆட்கொண்டபின்னர் அருள் செய்யாது அயன்மை காட்டிக் கயக்கித் திருக்கழுக்குன்றத்திலே தோற்றியருளிய காரணத்தை உட்கொண்டு அவன் தோற்றரவுக்குத் தமது முயற்சியே காரணமாக அமையும் எனவும், தாம் அங்ஙனம் முயலுதற்குக் காரணம் இருவினை ஒத்த காலமாம் எனவும் கயக்கியமையால் எனக்கு எய்திய ஊடல் தணியப் பெற்று என் தளர்வு கண்டு எய்தினை எனவும், இங்ஙனம் எல்லாம் நின்னை யான் கூறியது கயக்கியருளியமை பற்றியே எனவும் இப்பகுதிக்கு இயற் கைப் பொருள் அடைவு செய்து கொள்க.

இதற்கு நூலடைவு பின்வருமாறு கொள்ளப்படும்

1 பொருள் அடைவிலே மூன்றாவதாகிய "இருவினை ஒத்தபின் எய்தினை எனல் ஏன்பது, தம்முயற்றலாகியது என்பதற்கும் தம் துயர் கண்டு இரங்கினமையால் ஆகியது என்பதற்கும் இடைப்பட்ட வினை ஒத்தது" என்பது இயைதலால் அவ்வியைபு கருதி ஈண்டு முதலாவதாகக் கொள்ளப்பட்டது.

2. பொருள் அடைவிலே ஐந்தாவதாகிய "சாராக் குறை வால் தளரவந்தாய்" என்பது இரக்கமில்லாது கடப்பாட்டிற்குச் செய்துவரும் இயல்புடையவன் இறைவன் எனக் கூறிய தம் குறைவுபாடே தம் மனத்தினை நெருக்குதலால் அவன் அருளே கந்தாகக் கொண்டுவந்து தமக்கு அருள் செய்தனன் துணிந்து கூறியருளிய இயைபால் ஈண்டு கொள்ளப்பட்டது.

3. பொருள் அடைவிலே ஆறுவதாகிய "அடி வைப்பின்றி துலைய வந்தனை" என்பது தம் தளர்வு காரணமாக இருந்தது அடி வைப்பில்லாது போனமையே ஆகும் எனத் துணிந்தருளிய இயைபால் ஈண்டு மூன்றுவதாகக் கொள்ளப்பட்டது.

4. பொருள் அடைவிலே இரண்டாவதாகிய "என் குறையால் இடர் எய்தி உன் அருளைப் பூண்டு உனைப் போற்றப் பொருந்தினை முன்" என்பது இறைவன் அருளே வந்தாண்டது என நினைந் தருளும்போது தாம் வருந்திய வருத்தம் மேலெழும்புதலால் என் முயற்றல் யான் நின் அருளைப் பெற்றேன் எனப் பின்னரும் அருளிய இயைபால் ஈண்டு நான்காவதாகக் கொள்ளப்பட்டது.

5. பொருள் அடைவிலே நான்காவதாகிய "போழ்து வர உன்னைப் போற்ற வந்தாய்" என்பது என் முயற்றலும் நின் அருளாலும் இது நிகழப்பெற்றிலது இவ்விரண்டனுக்கும் இடைப் பட்ட காலமே காரணமாவதன்றி என்றருளிய இயைபால் ஈண்டு ஐந்தாவதாகக் கொள்ளப்பட்டது.

6. பொருளடைவிலே முதலாவதாகிய "ஆண்ட நீ அகற்றவும் அடியினை துணையாப் பூண்டு உனைப் போற்றப் பொருந்தினை முன்" என்பது தன் முயற்றை ஒதுக்கியருளியதோடு அமையா மல் இறைவன் அருளையும் அங்ஙனம் ஒதுக்கிய குறைவால் தாம் என்பது மேற்பட நின் தோற்றத்திற்குத் தம் முயற்சியே காரண மாம் என மயங்கிக் கூறியருளிய இயைபால் ஈண்டு ஆறுவதாகக் கொள்ளப்பட்டது.

7. பொருள் அடைவிலே ஏழாவதாகிய "ஆண்ட நீ இயக்கி அருளினை" என்பது இறைவன் தோன்றியருளியதைத் தம் முயற்றல் ஆயது எனவும் அவனருளால் ஆயது எனவும் மயங்கியும் தெளிந்துங் கூறியதன் காரணம் தம்மைக் கயக்கி யருளினமையால் என்பது புலப்படுத்தியருளிய இயைபால் ஈண்டும் ஏழாவதாகக் கொள்ளப்பட்டது.

இப் பொருளடைவுகளைப் பின்வரும் அட்டவணையால் உணர்ந்து கொள்க :

| பொருட் பிரிவு | உட் பிரிவு | ஐ பொ. அடைவு | திருப்பாடற் பொருள் | நூற்பா எண் |
|---|---|---|---|---|
| I | | | என்முயற்ருல் வந்து எனை ஆண்டனை என்றல் — | |
| | அ | 1 | ஆண்டநீ அகற்றவும் அடியிணை துணையாய், பூண்டு உனைப் போற்றப் பொருந்தினை முன் எனல். | 6 |
| | ஆ | 2 | என்குறை யால்இடர் எய்தி உன் அருளைத் துன்னி யூக்கத் தோன்றினை பறந்தெனல் | 4 |
| II | | | வினை ஒத்திட அக்கால் உனை மேவினன் என்றல் — | |
| | அ | 3 | இருவினை ஒத்தபின் எய்தினை எனையெனல். | 1 |
| | ஆ | 4 | போழ்துவர வெனைப் போற்ற வந்தாய் எனல். | 5 |
| III | | | என்துயர்க்கிரங்கி எய்தினை எனை யென்றல் :— | |
| | அ | 5 | சாராக் குறைவால் தளர வந்தாய் எனல். | 2 |
| | ஆ | 6 | அடி வைப்பின்றி அலைய வந்தனை எனல். | 3 |
| IV | | | ஆண்ட நீ கயக்கியருளினை என்றல் :— | |
| | | 7 | ஆண்ட நீ கயக்கி அருளினை எனல். | 7 |

இஃது திருக்கழுக்குன்றத்தில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# சற்குரு தரிசனம்

## எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

பிணக்(கு)இ லாதபெ ருந்து றைப்பெரு
மான்உன் நாமங்கள் பேசுவார்க்(கு)
இணக்(கு)இ லாததோர் இன்ப மேவரும்
துன்ப மேதுடைத்(து) எம்பிரான்
உணக்(கு)இ லாததோர் வித்து மேல்விளை
யாமல் என்வினை ஒத்தபின்
கணக்(கு)இ லாத்திருக் கோலம்நீ வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 1

இஃது, என் இருவினையும் ஒத்தபின்னர், உன்னுடைய திருக்கோலத்தைக் கழுக்குன்றிலே காட்டினாய் என அடிகள் இறைவனுக்குக் கூறியருளியது.

(பொ - ரை.) மாறுபாடில்லாத திருப்பெருந்துறைக்கண் உள்ள சிறுமை பொறுக்கும் பெருமையுடையவனே! உனக்குரிய திருப்பெயர்களை (வாழ்வின்கண்ணும் தாழ்வின்கண்ணும்) எடுத்துத் துதித்து வருவார்க்கு உளவாகும் துன்பத்தையே ஒழித்துவரும் ஒப்பில்லாத தனித்த இன்பமயமானவனே! இனிமேல் விளையாதபடி, காய வைக்கப்பெற்றிலாத விதையை என் வினையும் ஒத்த பின்னர், அளவில் அடங்காத நின் திருவடிவத்தைத் திருக்கழுக்குன்றின்கண்ணே வந்து காண்பித்தனை எ - று.

(வி - ரை.) பெருந்துறைக்கண்ணே திருவடித் தோணியுள்ளது. ஆகலின் அது பிறவிக் கடற்றுன்பத்தால் உளதாகும் மாறுபாடு இல்லாதது எனச் சிறப்பித்தருளப்பட்டது.

"நாமங்கள் பேசுவார்க்கும்" துன்பத்தை ஒழித்து வரும் இன்பமானவனே என்று உரைக்க. "துன்பத்தைத்துடைத்த இன்பம்," துன்பத்தோடு கலந்துள்ள இன்பத்திற்கு ஒப்பாகாமையால், அஃது "இணக்கிலாத தோர்" இன்பம் என்றருளப்பட்டது. துன்பத்தோடு இணக்கம் செய்யாது தான் ஒன்றாகவே அமைந்துவரும் இன்பம் என்க.

உணக்கல் - காயவைத்தல். என் வினை பிறவாமை பயத்தற்கு உரியதாக அமைந்தபடியால், யும் வந்து தோன்றினாய் என இறைவன் தாம் கலங்கிய காலத்தெல்லாம் கரந்துநின்றன யாவற்றையும் கருதி அவனோடு ஊடிய வெறுப்பால் அவனது தோற்றரவை அங்ஙனம் உரைத்தருளினார்.

"கணக்கில்லாத் திருக்கோலம்," எல்லேப்படாததும், கண்டார்க்கு விருப்பத்தைச் செய்வதுமாகிய அழகிய திருவடிவு. அதனைக் கண்டார் கண்ட காட்சியின் கரை காணுராய்க் கண்ட கண்ட குறிப்புக்களிலேயே அழுந்துவர் என்க.

"வினை ஒப்பு" என்றது, பிறர்க்குரியராக வாழ்தலை. தன்பொருட் டென்னில் உலகமும் இறையும் இல்லை. பிறர்பொருட்டென்னின் அவை யுள. உலகத்தைப் பிரித்துக் கண்டவழி, அக்காட்சி, யான் எனதென்னும் செருக்குக்களை உண்டாக்கி மேன்மேலும் பிறவியுள் அழுத்தும். அதனுல் அறிவும் மழுங்கும். அவ்வெல்லாம் பிறர்பொருட்டாக வாழ்வதும் வாழப் படுவதுமெனக் கண்டவழி, யான் எனது என்பவையற்று, நின்மல நிலை யுண்டாம். அந்நிலையே "வினைஒப்பு" என்றறிக. இவ்வுண்மையறியாதார் வடையை யுண்ணுது தொளையை எண்ணி வறிதுபடுவர்.

பிட்டு நேர்பட மண்சு மந்தபெ
 ருந்து றைப்பெரும் பித்தனே
சட்டம் நேர்பட வந்தி லாத
 சழக்க னேன்உனைச் சார்ந்திலேன்
சிட்ட னேசிவ லோக னேசிறு
 நாயி னும்கடை யாயவெங்
கட்ட னேனையும் ஆட்கொள் வான்வந்து
 காட்டி னுய்கழுக் குன்றிலே. 2

இது, வினையொத்துப் போதற்குரிய இயல்பற்ற யான் முயன் றேனும் நின்னைச் சார்தற்கு மனமின்றிச் சிறுமையோடிருப்பவும், நீ வலிய வந்து கழுக்குன்றிலே நின்கோலத்தைக் காட்டினுய் என்றருளியது.

(பொ - ரை) மதுரைப் பிட்டு வாணிச்சியின்பால் பெற்ற பிட்டாகிய கூலிக்கு ஒப்பாகுமாறு மண்ணைச் சுமந்த திருப்பெருந் துறைக்குரிய (அன்பர்பால் வைத்த) பித்துடையவனே! ஒழுக்க மாகிய அறவடிவுடையவனே! அன்பர் உரிமையாகக் கொள்ளுதற் குரிய சிவலோகத்தை உடையவனே! என் தலையில் எழுதப்பட்ட வினைஒத்துப் போகப் பிறந்திலாத குறையுடைய யான்,அஃதொழியு மாறு முயன்றும் நின்னைச் சார்ந்தேனில்லை. அத்தகைய சிறுமைப் பாட்டையுடைய நாயினும் கடைப்பட்ட வெவ்விதாகிய துன்பங் களைக் கொண்டுள்ள என்னையும், அடிமை கொண்டருளும் பொருட்டு, திருக்கழுக்குன்றிலே வந்து நின் திருக்கோலத்தை எனக்குக் காட்டியருளினுய் எ-று

(வி - ரை.) மண் சுமப்பதற்குக் கூலியாகப் பெற்றுக் கொண்ட பிட்டென்க. "பெருந்துறைப் பித்தன்" பெருந்துறையானாகிய பித்தன் எனக் கொள்க. அவ்விளையாடலைச் செய்தவன் மதுரையானாகவும், அவனே ஒரு வஞ்சனையைப் பெருந்துறைக்கண் செய்தானாகலின், பெருந் துறையான் எனவும், அவன் நன்றுசெய்யுமிடத்து நன்றேனும் தீதேனும் செய்யும் இயல்பினன் ஆவான் என்பது கொண்டு "பித்தன்" எனவும் பெயர் பெற்றான். பிட்டிற்கேற்ப மண்சுமந்தும், பிரம்படி பட்டும், ஈண்டுத் தம்மைத் துன்புறுத்தியும் வரும் ஒழுகலாறுடையவன் என்பது பற்றிப் "பித்தன்" என்றருளினாருமாம்.

சட்டம் - ஓலை. அஃது ஆகுபெயராய் உடம்பினையும், உடம்புக்குக் காரணமாகிய வினைகளையும் உணர்த்திற்று. 'எழுதினான் ஓலை பழுது' என்புழிப்போல.

இருப்புவினை (சஞ்சிதவினை)யுள், வருவினை (ஆகாமியவினை)யும் வந்தொடுங்கும். இருப்புவினை இன்றேல் வருவினையு மின்றாம். இருப்பு வினையுள் எடுக்கப்பட்ட எடுப்புவினையானது, இறைவன் அருள்வயமே பற்றி நின்று பயன்அறும். அறவே அதன் காரணமும் இன்றாம். எனவே அவ்வினையிரண்டும் நேர்படு மென்றறிக. இதுவே சட்டம் நேர்படுதலாம். அடிகள் அஃதின்றென்பார் எதிர்மறுத்துக் கூறியருளினார்.

எடுப்புவினை நல்லதாக இருப்பின் அதனைப் ஏற்க முயலுதலும், அது தீயதாக இருப்பின் போக்க முயலுதலும் உலகவியல்பு. தீவினை யுடையேனாகிய யான், அதனை நீக்கி உன்னைச் சார முயன்றிலேன் என்பது படச் "சார்ந்திலேன்" என்றருளினர். அஃதின்மையால் நாயினும் வெவ்விதாகிய கட்டங்கள் விளையலாயின. தன் தலைவனைச் சார்ந்துள்ள நாயின் பெருமையினையும், சாராத நாயின் சிறுமைகளையும் முன்னர் விரித்தபடியே இங்கும் விரித்துரைக்க.

தலைவன் ஆகிய நின்னைச் சார்ந்து நல்தொண்டு புரிந்து வாழ ஆறறிவு படைத்திருந்தும் பயன்பெறுமையால் ஐயறிவு படைத்த அச்சிறு நாயினும் கடைப்பட்டேன். அதன் துயரினும் பெருந்துயர் அடைந்தேன் என விரிக்க.

சாராமையால் பெருந்துன்பத்திற் குள்ளானமை கண்டு, இறைவன் பேரருள் பூத்துத் தானே வந்தருளினன் என்க.

முயற்சிகளால் அதிகார பதவிகளும் அவற்றால் இன்ப துன்பங்களுமே உண்டென்பதும் எதனையும் விழையாதிருப்பினும் இறைவன் பக்குவம் உணர்ந்து தானே அருளுவன் என்பதும் குறிப்புப் பொருளாம்.

**மலங்கி னேன்கண்ணின் நீரை மாற்றி**
**மலங்கெ டுத்த பெருந்துறை**
**விலங்கி னேன்வினைக் கேட னேன்இனி**
**மேல்வி ளைவ(து)அ றிந்திலேன்**

இலங்கு கின்றநின் சேவ டிகள்இ
ரண்டும் வைப்பிடம் இன்றியே
கலங்கி னேன்கலங் காமலே வந்து
காட்டி னுய்கழுக் குன்றிலே. 3

இது, வினைவயத்தால் விளைவதறியேனாகிய யான் வைத்த இடத்திலே நின் திருவடிகளைக் காணாது வருந்துகையில், யான் வருந்தி அஞ்சாவண்ணம் நின் திருவடிகளைக் கழுக்குன்றிலே காட்டினாய் என்றருளியது.

(பொ - ரை.) அன்பர்களின் பாசத்தைக் கேடடையச் செய்த திருப்பெருந்துறைக்கு வாராது பின்னிட்டேனும், தீவினையால் கேடுடையவனும், அக்கேட்டால் வரும்பயனை அறிந்திலாதேனும், நின்னுடைய செய்யனவாகிய திருவடிகளிரண்டும் (என்னுள்ளமாகிய வைப்பிடத்திலே இல்லாது போக அஞ்சியவனும், மனங் குழம்பியவனுமாகிய எனது கண்ணீரைத் துடைத்து, யான் கலங்கா வண்ணம், திருக்கழுக்குன்றிலே வந்து, அவை என்னுடைய உள்ளத்திலே இருப்பக் காட்டினாய் எ-று.

(வி - ரை.) தீவினையால் விளைவதறியாமல், அன்பரொடு வீடுபேறு அடையுமாறு திருப்பெருந்துறைக்கு வராது பின்னிட்டமையால், தம்முடைய திருவுள்ளத்தே திருவடிகள் இரண்டும் தடுமாற்றத்தால் இல்லனவாக, அஞ்சி மனங்குழம்பி அழுது ததும்பிய கண்ணீரை மாற்றி, ஆண்டுத் திருவடிகளைப் புலப்படுத்தியருளினன் என்க. மலங்குதல் - கண்ணீர் ததும்புதலுமாம்.

"வைப்பிடம்," திருவடிகளை வைத்தற்குரிய உள்ளமாகிய இடம். "இன்றி" அவ்வைப்பிடத்தில் அவை இன்மையால் தடுமாற்றத்தால். கலங்குதல் - அஞ்சுதல்.

கலங்காவண்ணம் காட்டினாய்; அங்ஙனம் காட்டினாய்க்கு யான் செய்யும் கைம்மாறுமுண்டோ என்றாங்கு எச்சம் வருவிக்க. இங்ஙனமே முன்னும் பின்னும் ஏற்றவாறு எச்சம் வருவிக்க.

"நாயி னேனை நலமலி தில்லையுள்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல வென்னை ஈங்கொழித் தருளி" (கீர்த்தி. 127–129.)

என்றதனை யுட்கொண்டு பெருந்துறை விலங்கினேன் என்றருளிச் செய்தார்.

வினைக்கேடனாதலின் விளைவதறிந்திலேன்; முன்னரே அதனை அறிந்திருப்பின், ஆண்டு விலங்காது சென்றிருப்பேன் என இரங்கியருளியவாறு. மலங்கெடுத்த பெருந்துறைக்கு விலங்காது சென்று மலங்கெடுத்திருப்பேன் என்று கருதியருளினர்.

இறைவன் அன்பரொடு கயிலைக்குச் செல்ல, அதனை அறிந்த அடிகள்

வருந்தி அழுதமையாலாகிய கண்ணீரை மாற்றித் துயரினைக் கெடுத்த "பெருந்துறை" என்னும் ஆராய்வு நிலை நிற்பதொன்றன்றென விடுக்க. பிறவுமன்ன.

விளைவறியாற்கு, இறைவன் திருவருளே கந்தாகக் கொண்டு வெளிப் பட ஆண்டு அவன் திருவடி கண்டு வணங்கியவர், உள்ளத்திலும் மற்ற தனைக் கண்டு வணங்கியருளினர் என்க.

உணர்வு கலங்கில் இறைவன் திருவடிக்காட்சி பெறப்படாது. இது பற்றியன்றே இறைவனைக் கலங்காது இடையீடின்றித் தொழவேண்டும் என்னும் பொருள்படத் திருவள்ளுவனாரும் "தொழாஅர் எனின்" (குறள். கடவு. 2.) என அளபெடுத்துக் கூறினர்.

பூணொ ணாததோர் அன்பு பூண்டு
பொருந்தி நாள்தொறும் போற்றவும்
நாணொ ணாததோர் நாணம் எய்தி
நடுக்க டலுள் அழுந்திநான்
பேணொ ணாதபெ ருந்து றைப்பெருந்
தோணி பற்றி உகைத்தலும்
காணொ ணாத்திருக் கோலம் நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 4

இது, என்னை நீக்கிச் சென்ற காரணத்தால் உளதாகிய நாணத் தாலும், துன்பத்தாலும், அப்பெருந்துறையில் கவலைக் கடலுள் ஆழ்ந்தமையால், அக்கடலின் மிதக்கும் நின் திருவடியையே வேறு கதியின்றிப் பற்றிச் செலுத்தலும், அது திருக்கழுக்குன்றிலே கரை யேற்ற, ஆங்கு நீ வந்து நின் கோலத்தைக் காட்டினை என்றருளியது.

(பொ - ரை) பிறிதொன்றன்மேல் வைத்தற்குரிய தல்லாத தனிப்பட்ட வோர் அன்பினை நின்னிடம் வைத்து அதற்குவேண்டிய செயல்களிலே பொருந்தி நாள்தோறும், போற்றி வரவும் (நீ பெருந்துறைக்கண் அன்பர் பலரையும் சோதியுட் கலந்துகொண் டாய் என்பதைக் கேள்வியுற்று அதனால் பிறிதொன்றற்கும்) நாண வொண்ணாத பெருநாணத்தையடைந்து, (அவ்வஞ்சனையாலாகிய) துன்பக்கடல் நடுவே அழுந்தித் தன்னைப் பேணினர்க்குப் பிறி தொன்றனையும் பேண வைக்காத பெருந்துறைக் கடற்குரிய பெருமை படைத்த திருவடியாகிய தோணியை (வெறுக்கப்பட்ட தேனும் இன்னல் காரணமாக அறிவு மயங்கியதால் பற்றிச்) செலுத்துதலும், அது திருக்கழுக்குன்றமாகிய கரையிலே ஏற்றத் தன்னைக்கண்டார் பிறிதொன்றனையும் காணவொண்ணாத நின் திருக்கோலத்தைக் காட்டினை எ - று.

(வி - ரை.) 'நின்னை அவமே நன்கு மதியாத என்னையும் நன்கு மதித்துக் காட்சி ப் போற்றி வருதலேயன்றி, வேறென் செய்வேன் ?' என்பதெச்சம்.

"பெருந்துறைத் தோணி" யென்பது திருவடிக்குப் பெயராம். அஃது இவ்வுலகினரை அவ்வுலகிற்கு ஏற்றுதலன்றி, அவ்வுலகோரை ாண்டு ஏற்றி வருதலில்லை என்க.

தான் போற்றவும் தனக்கு அருள் செய்யாது, தன்போன்ற அன்பர்க் கருளியமையால் உள்ளம் ஒடுங்கி யருளினர் என்க.

"பேணுைத திருவடி" யெனினும் பொருந்தும், அதனது வஞ்சம் தோன்றலின், பேணுைததோர் அன்பு ஐந்திணையன்பு.

"நாணுைததோர் நாணம்" என்றருளினுர், தலைவன் கொடுமை தோன்ற. என்னை? பெருந்திணையாக முடிதலின்.

"நடுக்கடல்" என்றருளினர், இரக்கம் தோன்ற. ஆதலினுலே பேணுைத பெருந்துறையாயிறறு. அதுவும் பெருந்திணையையே சுட்டி நின்றது.

கற்புடையவட்குக் கணவன் திருவடி நன்றே செய்தலை அன்றித் தீதே செய்யினும், அதனை விடுத்தற்கியலாது என்க.

"கடல்" என்றதற்கேற்பக் கரையென்னுது "குன்றம்" என்றருளி னுர்; வேறு இடையூறின்மையின்.

"காண வொண்ணுத திருக்கோலம்" என்பதற்குக் கண்ணுளியாற் காணமுடியாத திருவினையுடைய கோலமெனினும் அமையும். அத்தகைய தேனும், என் கண்ணின் காட்சியளவுக்குக் காணுமாறு காட்டினை என்றருளியபடி. நீ காட்டாயாயின் என்னுற் காணமுடியாதென்க.

"பூணுைத" முதலியவைகள் வினையாலணையும் பெயர்கள்.

அன்பு, நாணம், பேணுகை, காட்சி என்பனவெல்லாம், பிறவற்றுக் கெல்லைப் படுமேயன்றித் தாம் எல்லையுடையனவல்ல. "எய்தி" என்ப தனை 'எய்தலால்' எனத் திரிக்க. "காட்டினுய்" என்றருளினுர், அஃதெவ் விடத்தென்பது தோன்ற. கழுக்குன்றினும் காட்சியே சிறப்புடைத்தென்க. பூண்டு, நாணி, அழுந்தி, பேணி, உகைத்து, கண்டேன் என்க.

அன்பர் பேரன்பு பூண அடிகள் நாணினுர் எனவும், பிறவாறும் உரைப்பன வெல்லாம் ஆராய ாண்டிட னில்லை.

இறைவன், அடிகளைத் திருவுத்தரகோச மங்கையில் இருத்திப் பின்னர்த் தில்லைக்கு வருக எனக் கட்டளையிட்டுத் திருப்பெருந்துறைக்குச் சென்று, ஆங்குள்ள அன்பர் பலரோடும் சோதியுட் கலந்து கயிலை புக் கருளினுகை, அஃதறிந்த அடிகள், திருப்பெருந்துறைக்குச் சென்று, ஆங்கு இறைவனையும் அடியாரையும் காணுராகி, அவன் தமக்குச் செய்த வஞ்சனைக்கு நாணி இடர்ப்பட்டுக் கலங்கும்போது, அப்பெருந்துறையின் நினைவே மேலிட்டு வருதலினுல், அத்தலத்தில் தம்மையாண்ட திருவடியையே துணைக்கொண்டு செல்கையில், கழுக்குன்றில் சேர்க்கப்

பட்டு, ஆங்கு இறைவன் தன் திருக்கோலத்தினைக் காட்ட, மற்றதனைத் தரிசிக்கப் பெற்றருளினுர் என்பதே ஈண்டுப் போந்த வரலாறென்க. இவ்வரலாறு கொண்டே ஆங்காங்கு எச்சங்கள் விரித்துரைக்கப் பட்டனவென்க.

கோல மேனிவ ராக மேகுண
    மாம்பெ ருந்துறைக் கொண்டலே
சீலம் ஏதும்அறிந் தி லாதஎன்
    சிந்தை வைத்தசி காமணி
ஞால மேகரி யாக நான்உனை
    நச்சி நச்சிட வந்திடும்
கால மேஉனை ஓத நீவந்து
    காட்டி ஞய்கழுக் குன்றிலே. 5

இஃது, அன்பின் ஐந்திணை வழியாக ஆட்கொள்ளும் உனக்கும், உன் செயலுக்கும் சான்ருக நிற்றலை விரும்பி நிற்றலும், அக்காலையே வீடு பேற்றினை வரச் செய்தலும் ஆகிய செவ்வியுடைய நின்னை ஓதுதலும் நீ கழுக்குன்றிலே காட்சியளித்தாய் என்றருளியது.

(பொ - ரை.) அழகிய உடம்பினையுடைய பன்றி உரு ஆனவனே! பண்பேயாகும் திருப்பெருந்துறையாகிய மலைக்கண்ணுள்ள மற்றதன் பண்பியாகிய மேகம் போன்றவனே! ஒழுகலாறு சிறிதும் அறிந்திலாத என் உள்ளத்தின்கண்ணே வைக்கப்பட்ட தலைமை மணி போன்ற திருவடியை உடையவனே! எல்லா உலகமும் ஆனவனே, அன்பின் ஐந்திணை வழியாக ஆட்கொள்ளும் உனக்கும் உன் செயலுக்கும் சான்ருக நிற்க விருப்பங்கொண்டு அதனை விரும்ப வீடுபேற்றினை வரச் செய்யும் காலத்தை உடையானே! இன்னற்கடலிற் பட்ட யான் நின் திரு ஐந்தெழுத்தை ஓத நீ திருக்கழுக்குன்றிலே வந்து நின் கோலத்தைக் காட்டியருளினுய் எ - று.

(வி - ரை.) திருவைந்தெழுத்தே இப்போதும் நின்னைக் காட்டியது, இனியும் கரியாக நிற்குமாறும் காட்டியருளும் என்பது எச்சம்.

"பெருந்துறை"யைப் பண்பாகவும் இறைவனைப் பண்பியாகவும் வைத்தருளினுர், அவன் அருள் செய்யாவிடில் அதற்குச் சிறப்பிலதாகும் என்பது தோன்ற. எனக்கு அவ்வாறு செய்திலையே என்பது குறிப்பு. என்னைக் கயங்க வைத்து ஆண்டனையே என்ருர் என்க. மழை பொழியாக் கொண்டல் குணம் கெட்டதாதலின் அதனை இறைவனெடு உவமித்தார். திருப்பெருந்துறையால் அவன் பயன் பெறுதலின் அதனைப் பண்பாகக்

கொண்டனர் என்க. இவற்ருல் தமக்கு ஆங்குப் பயன்படாமல் போனமைக்கு இரங்கினர். திருப்பெருந்துறைக் கொண்டலான நீயே இப்போது திருக்கழுக்குன்றில் வந்து தோன்றினே. ஆண்டு வஞ்சகக் கொண்டல்; ாண்டு நடுவுநிலைக் கொண்டல் என்க. எனவே, திருக்கழுக் குன்றக் கொண்டலே அடிகட்குச் சிறப்புடையதாயிற்று.

சீலம் - ஐந்திணை வழி ஒழுகும் ஒழுகலாறு. அவ்வொழுகலாற்றைச் சிந்தையிலும் புகுத்தியது என்க.

சென்னியில் "வைத்த சிகாமணி"யாகிய திருவடி என்க. உன்னைத் தலைவனாகவும் என்னைத் தலைவியாகவும் கொண்டு பயின்று அனுபவம் மிகு தலால் நான் சான்ருக மாறி நிற்க, வரும் செவ்விக்கண் வீடுபேற்றைக் கொடுத்தற்குரிய காலமும் தானே ஆயினவனே என விரிக்க.

திருஎம்பாவை முதலாகத் திருப்பள்ளியெழுச்சி இறுதியாக வுள்ள பகுதிகளில் காதல்வகை பற்றியே கூறினர். எஞ்சிய பகுதிகளில் சான்ருக நிற்றற்பொருட்டு அடிமையாகத் தம்மைப் பழைய நிலையில் அமைத்துக்கொண்டருளினர். திருக்கோவையாருள்ளே அப்பயிற்சி மிக்குச் சான்ருக நின்றமையால் வீடுபேறடைந்தருளினர் என்க.

இத்திருப் பாடலிலே "கரியாக நானுனை நச்சி நச்சிட வந்திடும் காலமே" என்றலால் நானும் உன்னை அவ்வணம் எதிருற்று உணர்தல் வேண்டும் என்பது குறிப்பு.

திருப்பெருந்துறையில் என்னை வருத்தாது காட்சி அளித்திருப்பின் இன்னும் பேருவகை எய்துவன் என்றருளியபடி. அஃதேயன்றியும் இப் போதே கரியாக நிற்குமாற்றையும் அருளிச் செய்வையாயின் யான் மேலும் கவலல் வேண்டா ஆதலின் அதனை அருளிச் செய்க என்றும் வேண்டி யருளினர் என்க.

பன்றி யுருக் கொண்ட வரலாற்றைத் திருவிளையாடற் புராணத் துட் காண்க. 'வராகம் மலை' என்பாரும் 'கோலம் மேல் நிவர்' எனப் பிரித்துரைப்பாரும் உளர். "கோலமேனி வராகமே" என்ருர், தாயற்ற பன்னிரு குருளைகளுக்கும் தாயாகிப் பாலூட்டினமையின்.

பேதம் இல்லதொர் கற்(பு)அளித்த
பெருந்து றைப்பெரு வெள்ளமே
ஏத மேபல பேச நீஎனை
ஏதிலார் முனம்என் செய்தாய்
சாதல் சாதல்பொல் லாமை அற்ற
தனிச்ச ரண்சர ணும்எனக்
காத லால்உனை ஓத நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே

கஃது, இப்போது கழுக்குன்றிலே வந்து காட்சியருளிய நீ

# கண்ட பத்து

அஃதாவது இறைவனைக் கண்டருளியதாகக் கூறும் பத்துத் திருப்பாட்டுக்களைக் கொண்ட நூற்பகுதியாகும். உத்தரகோசமங் கையில் தம்மை ஆண்டுகொண்ட கோலத்தைத் திருக்கழுக்குன் றத்திற் கண்டு ஆறுதல் பெற்ற அடிகள் தில்லைச் சிற்றம்பலத்தும் இறைவன் எழுந்தருளிய கோலத்தையும் தரிசிக்கப் பெற்றவராய்க் "கண்டபத்து" என்னும் இதனைத் திருவாய் மலர்ந்தருளினுர் என்க.

இறைவன் தம்மையாண்டருளிய திருக்கோலத்தைக் காட்டி யருளக் கண்டு பாடிய திருப் பாட்டுக்களைக் கொண்ட பகுதியாதலா லொப்புமையால் இஃது திருக்கழுக் குன்றப் பதிகத்தைச் சார வைத் தருளப்பட்டது.

"தில்லை கண்டேனே" எனவும், "தில்லையம்பலத்தே கண் டேனே" எனவும், "வணங்கிட நான் கண்டேனே" எனவும் அடிகள் தமது ஆராமையைப் பலவாறு வெளிப்படுத்தியருளினுர்

இது, "பிறவி மாற்றிப் பிணி முதலொழியச் சென்றென் முத லைக் கண்டனன்" எனவும், "உருத்தெரியாப்போழ்து உள்புகுந்து என்னுருவைத் திருத்தியாண்டானைக் கண்டேன்" எனவும், "அல்லலுற்றேனை ஆண்டவனைக் கண்டேன்" எனவும், "அறிவி லெனை ஆண்டானைக் கண்டேன்" எனவும், "தேகங்கெடுத்தாண்ட பேதமிலாளனைக் கண்டேன்" எனவும் வரும் ஐந்து பெரும் பிரிவு களையுடையதாகக் காணப்படுகின்றது.

முதலாவது பிரிவில் ஆறுந் திருப்பாட்டும், இரண்டாவது பிரிவில் மூன்றுந் திருப்பாட்டும், மூன்றும் பிரிவில் ஐந்தாம், முத லாம், எட்டாம், இரண்டாந் திருப்பாட்டுக்களும், நான்காம் பிரிவில் ஒன்பதாம், ஏழாம், நான்காம் திருப்பாட்டுக்களும், ஐந்தாம் பிரிவில் பத்தாந் திருப்பாட்டும் அடங்கும்.

நூற்பொருளடைவு விளக்கம் வருமாறு .—

பொருளடைவில் நான்காவதாகிய "இந்திரிய மயக்குள் இணைந்து நரகிடை விழும் என்னைச் சிவம் செய்வதனைக் கண் டேன்" என்பது, முன்னர்த் திருப்பதிகத்தின் இறுதித் திருப்பாட லாகிய, துயக்கறுத்தெனை ஆண்டுகொண்டு நின் தூய்மலர்க்கழல் தந்தெனைக் கயக்க வைத்தடியார் முன்னே வந்து காட்டிஞய் என் பதனேடு இயைந்து நிற்கும் சிறப்பால் இப்பகுதியில் முதலாவது வைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஆறுவதாகிய "பிறவியிடர்ப்பட்டுத் தளர்ந்து கிடப்பேனை ஆண்டு பிறப்பறுத்தானைக் கண்டேன்" என்பது, ஆண்டுகொண்ட ஆனந்தங் கண்டவர், ஆனந்தத்தைத் தந்த அவ் விணையிலியைக் கண்டேன் என்னும் இயைபால் இரண்டாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் இரண்டாவதாகிய "திருத்தியாண்டானைக் கண்டேன்" என்பது, அவ்விணையிலிதான் இன்று புதியனாகக் காணப்பட்டவனல்லன், யானறியாக் காலத்தே என்னைத் திருத்த என்னுள் வதிந்தான் என்பதை அறிவித்தான்; அவனடியே கண்டேன் என்னும் இயைபால் மூன்றுவதாக வைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஒன்பதாவதாகிய "கடையனை வல்லாளனாய் வந்து வனப்பெய்தியிருக்கும் வண்ணம் மலமறுத்தானைக் கண்டேன்" என்பது, முறைப்படி கற்றறியாத புலையனாயிருந்தும், என்னுள்ளத்துள் அவன் உள்ளவள் ஆதலால் தான் பழகிய காரணத்தால் உண்டாகிய இரக்கம் பற்றுக்கோடாக உத்தரகோச மங்கையில் உபதேசித்தான், திருத்துருத்தியில் மேவினான்; அவனையே அறிந்தாரும் அறியாதாரும் வணங்கி வருந் தில்லையுட் கண்டேன் என்னும் இயைபால் நான்காவதாக வைத்தருளப்பட்டது.

"சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆத மிலி நாயேனை" என்னுந் திருப்பாட்டு அவன் எல்லார்க்கும் பொது வாயவாறுபோல என்னையும் எல்லார்க்கும் பொதுவாக்கினான் என்னும் இயைபால் ஐந்தாவதாகக் கொண்டருளப்பட்டது.

பொருளடைவில் முதலாவதாகிய "பிறவி மாற்றிப் பிணி முதலொழியச் சென்றுஎன் முதலைக் கண்டனன்" என்பது, அங்ஙனம் பொதுவிற் கண்டதுதான் பிறவி மாறவும் பிணி மூப்பு உறவு முதலியன ஒழியவுங் காரணமாக நின்றது என்னும் தற்போத மேலிட்டுக் கூறிய இயைபால் ஆறுவதாக அமைத்தருளப் பட்டது.

பொருளடைவில் எட்டாவதாகிய "பத்திமைப் பரிசால் பசுக் கட்டறுத்துச் சித்தத்தால் திருப்பாதங் கட்டுவித்தோன்" என்பது, அங்ஙனம் தற்போத மேலீட்டாலும் முன்னெடுபின் முரணக் கூறலால் பித்தனென ஆக்கியோன் எனினும் சித்தத்தில் திருவடிப் பற்று அவனருளாற் கட்டப்பட்டது. இது அவன் விளையாடல், இது திருநடனம்; இவையெல்லாவற்றையுந் தில்லையுட் கண்டேன் என்னும் இயைபால் ஏழாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஐந்தாவதாகிய "பாவகத்தழுந்தி விளைவறியே

ளுகைக் கிடப்பேற்கு அன்பு அளித்தானைக் கண்டேன்" என்றது, விளையாடல் கண்ட யான் ஐந்திணையன்பால் வரும் பயனைக் கண்டேன் என்னும் இயைபால் எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஏழாவதாகிய, "பாங்கு பரிசறியாத நாயேனை அன்பளித்து வாங்கி மலம் அறுத்தானைக் கண்டேன்" என்பது, ஆனந்தம் பெறுவதற்குரிய மூலமான அன்பு தந்தானைக் கண்டேன் என்னும் இயைபால் ஒன்பதாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் பத்தாவதாகிய "கேதங்கெடுத்த பேதமிலாளனைப் போதத் தில்லையுட் புகுந்து கண்டேன்" என்றது எல்லா வகையான அன்புக்கும் அவன் பொருந்திப் பேரருள் செய்வான் என்னும் இயைபால் பத்தாவதாக அமைத்தருளப்பட்டது

பொருளடைவு ஆதியனவற்றின் அட்டவணை வருமாறு·

| பெரும் பிரிவு | உட் பிரிவு | இ பொருள் அடைவு | நா. பொருள் அடைவு |
|---|---|---|---|
| I | 1 | 1 | 4 |
| II | 1 | 2 | 6 |
| III | 1 | 3 | 2 |
| | 2 | 4 | 9 |
| | 3 | 5 | 3 |
| | 4 | 6 | 1 |
| IV | 1 | 7 | 8 |
| | 2 | 8 | 5 |
| | 3 | 9 | 7 |
| V | 1 | 10 | 10 |

›து திருத்தில்லையில் அருளிச்செய்யப்பட்டது என்ப.

## நிருத்த தரிசனம்

### தரவுகொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

**இந்திரிய வயம் மயங்கி இறப்பதற்கே காரணமாய்**
**அந்தரமே திரிந்து போய் அருநரகில் வீழ்வேற்குச்**
**சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட**
**அந்தம் இலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே.**

*மீளற்கரிய நரகத்தில் வீழற்குரியேனை, மீளற்கரிய சிவானந்தத்தில் வைத்த அவ்வானந்தத்தைத் தில்லையம்பலத்தே கண்டேன் என அடிகள் மனத்திற்குக் கூறியருளியது.*

(பொ - ரை.) இறந்துபடுதற்குக் காரணமாகிப் பஞ்சேந்திரியங்களின் தலைமையில் ஈடுபட்டு மயக்கங்கொண்டு, யாதொன்றினும் நிலைகொளாது, அந்தரமாகத் திரிந்துழன்று சென்று, அரிய நரகத்தின்கண் வீழ்தற்குரிய எனக்கு (இரங்கி)ச் சிந்தையின் அந்தரம் நீங்குமாறு தெளியச்செய்து, என்னைச் சிவமேயாக்கி, ஆட்கொண்டதாகிய முடிவற்ற ஆனந்தத்தை அழகினைக்கொண்ட தில்லையின்கட் கண்டேன் எ - று

(வி - ரை.) இறத்தற் காரணம், பஞ்சேந்திரியங்களின் வசத்திற்பட்டு மயங்குதல் என்க. அம்மயக்கத்தாற் பற்றுக்கோடின்றி நிலையிலாதுழன்று திரிதலின் "அந்தரமே திரிந்து" என்றருளினர். அஃது "அருநரகில்" தள்ளுமென்க. "வயமயங்கி" என்றதனால் பஞ்சேந்திரியங்கள் மயக்குதல் தொழிலுடையன என்பது பெற்றாம்.

"அருநரகில்" வீழ்வேனைப் பேரானந்தத்தில் வைத்ததென்க.

இறப்பதற்குக் காரணமாய் இந்திரிய வயமயங்கி, அந்தரமே திரிந்து அருநரகில் வீழ்வேனாகிய யான் கண்டேன்; இஃதென்ன வியப்பென்க. கழுக்குன்றிற் காட்டினாய்; தில்லையிற் கண்டேன் எனக் கொள்க.

இந்திரிய வசப்பட்டமையால் அந்தரப்பட நேர்ந்தது. ஆதலின் உயிர்க்கு எஞ்ஞான்றும் இறைவனே பற்றுக்கோடென்பது புலனாயிற்று. இந்திரிய வசமின்றித் தனித்து நிற்றலே ஆன்மாவுக்குச் சிவமாந்தன்மை என்க.

வீழ்வேற்கு 'இரங்கி' என ஒரு சொல் வருவிக்க. சிந்தை தெளிந்து சிவமாகிய செவ்விக்கண் ஊறுமின்பம், "அந்தமிலா" இன்பம் என்க. ஆனந்தத்தைத் தந்த கருத்தாவை ஓதாது, அவன் தந்த ஆனந்தமே இங்ஙனமாக்கிற்று என்றருளினர்; களவின்கட் பெற்ற அவ்வானந்தமே,

அவன் பிரியவும், தம்மனத்தே நின்று கலக்கம் தீர்த்துத் தன்னை விளக்கலின் தெளிவித்து ஆக்கி ஆண்டதாகிய ஆனந்தமென்றருளின ரேனும், இந்திரியத்தைப்பற்றி அந்தரமே திரிந்து, அருநரகில் வீழ்ந்து துன்பம் காணற்குரியேன் என்றதற்கேற்ப, சிவன் தன்னைப் பற்றுவித்து, அந்தரமகற்றி, தில்லைக்கேற்றித் தந்த ஆனந்தத்தைக் கண்டேன் என்று உரைக்க. பண்பியைப் பண்பாக உபசரித்ததுமாம்.

**வினைப்பிறவி என்கின்ற வேதனையில் அகப்பட்டுத்**
**தனைச்சிறிதும் நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை**
**எனைப்பெரிதும் ஆட்கொண்(டு) பிறப்பறுத்த இணையிலியை**
**அனைத்துலகும் தொழுந்தில்லை அம்பலத்தே கண்டேனே. 2**

தன்னை நினையாது யான் தளர்வெய் கிடப்பவும், அவன் நினைவித்துப் பிறப்பறுத்தான்; அத்தகையவனைத் தில்லையம்பலத்தின்கண் கண்டேன் என்றருளியது.

(பொ - ரை) வினை காரணமாக வருகின்ற பிறவி என்று சொல்லப்படுகின்ற துன்பத்தின்கண்ணே மற்று அதனுற் சூழப் பட்டு உள்ளடங்கித் தன்னைச் சிறிதளவேனும் நினைத்தலின்றித் தளர்ச்சியடைந்து அங்ஙனமே கிடத்தற்குரிய என்னை, மிகப் பெரிய அளவில் முயன்று ஆட்கொண்டு என் பிறவியை வேருக்கிய ஒப்பில்லாத தலைவனை, எல்லாவுலகத்து மக்களும் வணங்குகின்ற தில்லையுள்ளே விளங்குகின்ற அம்பலத்தின்கண்ணே கண்டேன் எ - று.

(வி - ரை.) கிடப்பேன், கிடத்தற்குரியேன் என்னும் பொருட்டுத் துணிவுபற்றியது என்க.

"வினைப்பிறவி" யுட்பட்டமையால், யாதொன்றும் தோன்றுதுபோக, என் செய்வல் எனக் கருதி ஏங்கிய மனத்தளர்வு என்க. அது தலைவனை நினைந்து பற்ற நீங்கற்குரியது. அங்ஙனம் பற்றுமையால் தளர்வும் அற்றிலதென்க. பிறவியால் வரும் துன்பத்தைப் பிறவியாகிய துன்பம் என்றது காரணத்தைக் காரியமாக உபசரித்ததாம்.

எனைப் பெரிதும் - மிகப் பெரிய அளவில். கட்டுக்களின் அடிப்படை யில் அகப்பட்டுக் கிடந்தமையின் மிகப் பெரிய அளவில் முயலவேண்டிய தாயிற்று. தன்னை யான் நினைத்திலாதபோதும், அங்ஙனம் நினையாதேனை, அப்பெரிய அளவில் முயன்று ஆட்கொண்டு பிறப்பறுத்தான்; அவனே பெரியன். ஆதலின் "இணையிலி" யாவன் என்க.

தனக்கு உவமையில்லாதான் என்றபடி. வள்ளுவரும் இறைவனைத் "தனக்குவமை இல்லாதான்" என்பர். முன்னர் 'உவமனிலி' என்றதூஉம் அறிக. அவன் சார்வால் மனக்கவலை மடிந்ததென்க.

"தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால் மனக்கவலை மாற்றல் அரிது" (குறள். கடவுள். 7) "வினை பிறப்பு" என்றருளினர்; அருது மேன்மேற்கிளைத்து வருவது என்பது தோன்ற.

நினைவித்துத் தளர்வகற்றி வெளியேற்றி ஆண்டு பிறப்பறுத்தான் என்றபடி.

"உலகு" என்றது ஈண்டு மக்கள்மேற்று. ஒவ்வாத கொள்கைகளை யுடைய மக்கள் யாவரும், தத்தம் கொள்கைகளில் நின்று முதிர முதிர, அக்கொள்கைகள் யாவும் பிற்படத் தாம் முற்பட்டுச் சென்று இறுதியில் அம்பலத்தைச் சார்தலே முடிந்த பேருண்மை எனக் காணலின், "அனைத் துலகும் தொழும் தில்லையம்பலம்" என்றருளினர். யாண்டுத் தொழுதாலும் அம்பலத்தே வந்து முடிதல்பற்றி அங்ஙனம் உரைத்தருளினருமாம். தில்லைக்கு வந்தபோதே பேதவுணர்வற்ற தென்றபடி.

'தளர்வெய்திக் கிடத்தற்கு உரியேன் கண்டேன்' என்க.

**உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்தென் உளமன்னிக்**
**கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட**
**திருத்துருத்தி மேயானைத் தித்திக்கும் சிவபதத்தை**
**அருத்தியினால் நாயடியேன் அணிகொள்தில்லை கண்டேனே. 3**

ஆற்றலும் காதலும் அறிவுமில்லாத என்னைத் கருணையையே காரணமாகக் கொண்டு ஆண்ட அவனைத் தில்லையிலே கண்டேன் என்றருளியது.

(பொ - ரை.) உருவமின்றி ஆணவமலத்தோடு ஒடுங்கிக் கிடந்த முதல் ஊழிக்காலத்தே உயிர்க்குயிராய் என்னுட் புகுந்து, எனக்கோர் உள்ளத்தினை யுண்டாக்கி அதனுள் நிலைபெற்று, நுண்ணுடலாகிய கருவோடு என்னை உறவாக்கி, மற்றதன் விளை வாகிய பருவுடலின் ஊனகத்தும் புகுந்து, கைம்மாறற்ற கருணையி னாலே என்னையும், என்னுள்ளத்தையும், கருவையும் ஊனையும் ஆண்டுகொண்ட திருத்துருத்தியிலே பொருந்தியுள்ள ஆண்ட வனும், தன்னை நினைவார்க்கு இனிய வீடு பேறாய் நின்றவனுமாகிய இறைவனை, அவனது நாய்போன்ற அடியவனாகிய யான் அநாதி யாகவே அவன்மேல் வைத்த ஆசையினால் சென்று, அழகு பொருந்திய தில்லையம்பலத்திலே கண்டேன் எ - று

(வி - ரை.) இறைவனைக் கருணையினால் ஊன் புக்கு வந்தாண்டான் என்பாருமுளர். அப்படி வரும் இறைவற்கு உடல் அங்ஙனமாகாது என்று அவர்க்கு உரைக்க.

பொதுப்பட நின்ற "கரு" வென்க. அஃது உயிரொடு மாறுபட்டது.

வினை முடிதற்பொருட்டு அவ்விரண்டையும் உறவாக்கி என்க. திருத்துதல் - உறவாக்கல்.

"உளம்மன்னி" என்றருளினர் அதற்கு உணர்வுண்டாதற்பொருட்டு.

"கருத்திருத்திக்" கருவொடு தானும் கலந்து, என்னையும் கலந்து, என்னையும் புகுத்தி, ஊன்புகுந்து, என்னையும் புகுத்தி இவ்வாறெல்லாம் இறைவன் செய்வது, அன்னையின் கடைக்காணிப்பாலென்க.

இறைவன் மேவுதலாலே திருவுடைய துருத்தியென்க. அத்துருத்தி ஆகுபெயராய் அவன் உடம்பினை யுணர்த்திற்று. அதனுள் மேயவன் என்க. அவனது இனிமையையுடைய சிவபதமே தில்லையாகும்.

திருத்துருத்தி - குத்தாலம் என்னும் தலமுமாம். அதில் எழுந்தருளியிருப்பவன் என்க.

இவ்வெல்லாம் அவனளித்த அருத்தியாலாயவை என்க.

**கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை**
**வல்லாள னாய்வந்து வனப்பெய்தி இருக்கும்வண்ணம்**
**பல்லோரும் காணஎன்றன் பசுபாசம் அறுத்தானை**
**எல்லோரும் இறைஞ்சுதில்லை அம்பலத்தே கண்டேனே. 4**

இஃது, அறிவற்றிழிந்த என்னை, வலியவந்து, எல்லா வகையான அழகும் திரண்டிருக்கும் வண்ணம் சிறப்பினைக் கொடுத்தவனைத் தில்லையம்பலத்தே கண்டேன் என்றருளியது.

(பொ - ரை) (தானாகவேனும் பிறர் காட்டுதலாலேனும்) கற்றற்கு ஊக்கம் கொள்ளாத புல்லிய அறிவுடைமையால் நாயினும் கடைப்பட்ட என்னையும், அந்தண வடிவுடன் ஆட்கொள்ளுமாறு வலிந்து வந்து, யான் அன்பர்க்குரிய இலக்கணமெல்லாம் ஒருங்கு திரண்டிருக்கும் வண்ணம், என்னை முற்கண்டோரும் காணாதோருமாகிய பலரும் காணும்படி, கட்டுயிராகிய எனது பசுத் தன்மையினின்றும் பாசம் நீங்க அறுத்தவனை, அம்பலத்தின் இயல்பினை அறியினும் அறியாதொழியினும், மற்றதன் தெய்வத்தன்மையால் எல்லாரும் வணங்கும் தில்லையம்பலத்துள்ளே கண்டேன் எ - று.

(வி - ரை.) "கல்லாத புல்லறிவு" என்றருளினர், அறிவின் புன்மையினாலே கற்றற்கியலாமையின். உயிர்க்குள்ளே ஒருவகைச் சடம் என்றபடி.

"ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவும்ஓர் நோய்" (குறள். 858.)

என்றலும் காண்க.

புல்லறிவாவது, தான் சிற்றறிவினனாக இருப்பவும் பேரறிவினனாகத்

தன்னைத் தானே மதித்துச் செருக்குதல். இதனைக் கார்அறிவென்றுங் கூறுப, யாம் ஒண்மையுடையம் எனச் செருக்குதலின்.

"வனப்பு" என்பது, எல்லா அழகும் திரண்டிருத்தல்.

"பசுபாசமறுத்த"லாவது, பசுவிலுள்ள பாசத்தையறுத்தல்.

சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத்(து) ஆட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யான்எனதுஎன் உரைமாய்த்துக்
கோதில் அமு(து) ஆனானைக் குலாவுதில்லை கண்டேனே. 5

இது, பேத உணர்விற்குக் காரணமாயிருந்த எல்லாவற்றையும் மூலமலம் வரையில் அழித்து, இன்பமாகவே காட்சி தந்தவனைத் தில்லையிலே கண்டேன் என்றருளியது

(பொ - ரை) சாதியே குலமே பிறப்பே எனப்படும் சுழியில் அகப்பட்டு அவற்றாற் சுழற்றப்பட்டுப் பற்றுவது விடுவது என்னும் பகுத்துணர்வின் நிலையில் நின்று தடுமாறும் ஆதரவில்லேனாகிய நாயேனையும், (பற்றற்பாலவற்றைப் பற்றாதும் விடற்பாலவற்றை விடாதும் அவற்றொடு முரணுதலால் எய்திய) துன்பங்களின் தொடர்வறுத்து, மேலும் அல்லலுருவண்ணம் தன்னடிமையாக்கிக் கொண்டு, பிறர்பொருட்டு என்றுற் கொள்ளப்பட்ட குணத்தினையும், (அக்குணத்தினைச் செயலிற்கொண்டுவருதற்பொருட்டுப் பிறர்க்காக என்றுற் கொள்ளப்பட்ட) உருவத்தையும், ஒருகால் யானே யாவன் என்றும், மற்றொருகால் எனதே என்றும் மாறி மாறிக் கருதிவரும் என் அறியாமையையும், மற்றதனுக்குரிய சொல்லையும் அறவே இல்லையாகச் செய்து, குற்றமற்ற சாவாமருந்தாக இப்போது எனக்காகிய ஆண்டவனை விளங்கிவருந் தில்லையுட்கண்டேன் எ - று.

(வி - ரை.) 'சாதியாவது', அந்தண்மை ஆண்மை செட்டுடைமை அடிமை எனப்படும் நால்வகைப் பண்புகளும், நினைவினும் செயலினும் பயின்றுவருதற்பொருட்டு மனம் முதலாய கருவிகளை உயிர்க்கெனக் கடவுளாற் படைக்கப்பெற்ற வருணமென்க. அவ்வருணத்தாற்குரிய தொழில்களைத் தொல்காப்பியம் முதலாய நூல்களுட்காண்க.

'குலமாவது', தொன்றுதொட்டே சிறப்புடைய சான்றோர் ஒருவரை முதல்வராகக் கொண்டு, அவர் வழிவழியே பெருகி வருகின்ற, அச்சான்றோர் பெயரொடு சார்த்திக் கூறப்படும் இனப்பெயர் என்க. இது சிலபோது அந்தணகுலம், அரசகுலம் என்றுங்குச் சாதியைக் குறித்து வருதலுமுண்டு. 'அந்தணகுலம்' என வருதற்கு, அந்தணச் சாதியன் உட்பகுப்புக்களுள் யாதேனுமொரு குலம் என்று உரைக்க.

நாற்பண்புகளும் எல்லார்க்கும் உளவேனும் பெரும்பான்மை பற்றியே கொள்ளப்படும். இவை இக்காலத்துக் கலப்புற்றன. அதுவும் இறைவன் திருவுளமேயென்றொழிக.

மற்றும், இப்பெயர்கள் தெய்வப்பெயரோடும், தெய்வப்பெயரைத் திரித்த பெயரோடும் சார்ந்து வருதலுமுண்டு. அவை சூரியகுலம், சந்திர குலம், அக்கினிகுலம் எனவும், சைவகுலம் வைணவகுலம் எனவும் வரும்.

உடம்பொடுபுணர்த்தலால் குடியும் ஈண்டே கொள்ளப்படும். அஃதா வது, நாடே நகரே ஊரே என்னுமிவற்றுள் வாழ்ந்துவரும் உரிமையை : அரசாட்சியாரால் ஒப்புக்கொள்ளப்பட்ட பெயர் என்க. அவர்கள் குடி மக்கள் எனப்படுவர். எனவே இம்மக்கள் பொருட்டே அரசும் உளதா யிற்று என்க. சேரர்குடி, பாண்டியர்குடி, ஆஅய்குடி, கிள்ளிகுடி, பெருங் குடி என வருதல் காண்க.

சாதி முதலாயினவெல்லாம் தங்கள் தங்கள் அறிவு பொருள் உடல்நிலை கட்கு ஏறறவாறு அமைந்த இல்லற துறவற நெறிகளைக் கடைப்பிடித் தொழுகி வரற்குரியவாதலின், அவை இறைவன் இறைவியர்க்குத் திருமேனி யும் அவற்றுட் பொதிந்துள்ள அன்பு அருள் ஆதிய உயிர்க்குணங்களு மாம் என்க.

சிவன் இல்லற துறவறங்களை உண்டாக்கித் தன் சத்தியிடத்து அன்பு செலுத்துவன். அவ்வாறே இல்லறத்தோனும் இல்லாளிடத்தில் அன்பு செலுத்துதல் வேண்டும் என்பது பற்றியே,

"அன்பு மறனும் உடைத்தாயினில் வாழ்க்கை
பண்பும் பயனு மது." (குறள். 55.)

என்றார் வள்ளுவனாரும். சிவன் தானே தன்னில் அன்பு வைப்பின் அது பெருமையடையாது. இல்லறத்தோனும் அவ்வாறாயின் சிறுமையடை வன். சைவத்தின் உண்மையான முடிபு அன்பைப் பெருக்குதலே என்க.

மற்றிவற்றால் உயிர்ப்பண்மைக்குத் தீதகற்றி நன்று செய்தலே பய னுடைத்தென்பது பெற்றாம். அக்குறிக்கோளாகிய அகக்கோலத்தைத் துறநது புறக்கோலத்தைமட்டும் மேறகோடலால் பெருந்தீங்கு நேரும் என்க அவ்வாறாதலினும் கோலங்களைத் தவிர்த்து அன்பு அருள்கொள்ளு தலே சாலச் சிறப்புடையது. இக்காலத்துச் சாதி முதலியவற்றைக் கொண்ட யாவரும் புறக்கோலம் கொண்டவரே யாவர். ஆதலால் அவர் இக்காலத்து அறிஞரால் வெறுக்கப்படுவர்.

'பிறப்பு', ஒருபிறப்பு இருபிறப்பு என இருவகைப்படும். உயர்வும் இழிவும் எனினுமாம். அந்தணர் முதலிய மூவரும் இருபிறப்பாளர், அடிமையாளர் ஒருபிறப்பாளர் எனப்படுவர். அடிமையாளர் தத்தம் தொழிலால் உளவாக்கிய கூலம் முதலியவற்றை' அவை அவமாகாது வேண்டுழி வேண்டுழிக்கொண்டு சென்று பயன்படுத்துவோரும், நாட்டு மக்கட்குரிய உரிமைகள் பழுதுபடாவாறும் அவர்களுக்குத் தீங்கு

வராதவாறும் காத்துய்க்கும் ஆண்மையுடைய அரசரும், தாம் தண்ணளி யுடையராய்த் தெய்வத் திருவருளைப் பெறுவதற்கே வாணாள் முழுவதும் செலவழிப்போராய், ஏனை மூவரையும் அறஞ்செய்யுமாறும் தெய்வத் திரு வருள் பெறுமாறும் முன்னின்று அருட்டுணை புரிவாராய் அமைந்துவரும் சிறப்புத் தொழில் கொண்ட அந்தணரும் ஆகிய மூவரும் ஒருபிறப்பிளரைப் போலாது அவ்வச்செயற் சிறப்பால் பின்னுமொரு பிறப்புடையராகக் குறிக் கப்பட்டனர். ஆகையால் அடிமைத் தொழிலாளர் ஒருபிறப்பாளர் என வும், ஏனையோர் இருபிறப்பாளர் எனவும் சொல்லப்பட்டனர். இனி இவ் வகைப்பட்ட இருபிறப்பினருள் ஆங்காங்கே சிறப்புற்றவர் இழிவுற்றவர் எனப் பல திறப்படுவர்.

இறைவன் அந்தணனாக இருக்கும்போது அடிகள் இவற்றை இழித் துக் கூறினார் அல்லர். அகக்கோலம் கொள்ளாது புறக்கோலம்கொண்டு வரும் சாதி குலம் பிறப்புக்களையே "சுழி" என உருவகித்து இழித் தருளினர். அகக்கோலத்தைக் கைவிட்டுப் புறக்கோலத்தைக் கொள்வதனால் வரும் அல்லல் என்க.

அறநெறி ஒழுகலாருகலின் அதனை வெள்ளத்தோடு ஒப்பிட்டருளினர். போலிச் சாதி முதலியவற்றை அதனுட்பட்ட சுழியாக உருவகித்தருளினர். அல்லல்—அப் புறக்கோலத்தினால் உண்டாகும் இருமை நரகத் துன்பங்கள்.

ஆதம் - ஆதரவு. ஆதமிலி நாய் - தலைவன் அற்ற நாய். இதற்கு முன்னுரைத்தாங்கு உரைக்க.

"இறைவனின்றிக் கொள்ளப்படும் சாதி முதலியனவும் அவற்றின் அறங்களும் பயனற்றனவாம்" என்பது கீதை. இறைவனை முன்னிட்டுச் செய்யின் அவை நன்மை பயக்கும் என்க. என்னை? அவன் அன்புமய மானவன் ஆகலின் இறைவன்பாலன்பு செய்யின் சாதி முதலாயின எல்லாம் தாமே போதரும். இதனானன்றே இறைவனை முற்கொள்ளாது அறம் செய்யும் பௌத்தமும் ஒவ்வாதாயிற்று.

பிறர் உருவம், பிறர் குணம் என்க. பிறர் குணமென்றது, தன் வினை காரணமாகப் பிறர்க்குச் செய்யவேண்டிய செய்கைக்கேற்பத் தனக்கு வாய்த்த குணத்தை என்க. அக்குணத்தைச் செயற்படுத்தப் பிறர் பொருட்டு எடுத்துக்கொண்ட கோலமென்க. அஃது, அயலவர்பொருட்டே எடுத்துக்கொள்ளப்பட்டதென்பது மறை. "பேதை" என்றது, அக்குணங் கொண்ட உடம்பை யானென்றும் எனதென்றும் கொண்ட பேதைமையை. பிறர் குணம் பிறருருவம் என்பவற்றுக்குப் பெற்றோரான் வந்தகுணம் உருவம் என்றும், 'யான்எனதென்னும்', பேதைக் குணம் காரணமாகச் "சாதி குலம்பிறப்பு" என்பனபற்றிப் பிறர் குணம் பிறருருவம் என்றும், பிறவாறும் உரைப்பான் புக்கு வற்றிப்போந்தேன்.

பொருளை மாய்த்ததேயன்றி, அதற்குரிய "உரை"யையும் மாய்த் தென்க.

தன்பாற் "கோதிலாத அமுது"என்க. தன்பாற் கோதில்லாதது என் பாலுள்ள கோதை நீக்குமென்க.

இன்னவற்றோடு தமக்கருள் செய்யாமையால், கோது கொண்டதெனக் கருதியமை தவறுடைத்தெனக் கருதியருளினருமாம்.

**பிறவிதனை அறமாற்றிப் பிணிமூப்(பு) என்(று) இவைஇரண்டும்**
**உறவினொடும் ஒழியச்சென்(று) உலகுடைய ஒருமுதலைச்**
**செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம் பலம்மன்னி**
**மறையவரும் வானவரும் வணங்கிடநான் கண்டேனே. 6**

இது, பிறரைப் பற்றிய உறவு போகத் தம்மைப் பற்றிய பிறவியும் பிணி மூப்புமாதிய உறவுகளும் ஒழிந்துபோக உலக முதல்வனைத் தில்லையம்பலத்தே கண்டேன் என்றருளியது.

(பொ - ரை.) பிணியும் மூப்பும் என்று இழித்துக் கூறப்படுமிவை யிரண்டும், தாம் பொருந்துமிடமாகிய உடம்பினோடும் நீங்குமாறு, பிறவியை (அகப்புறப் பற்றுக்களை அவனருளாலே அவன் திருவடியிலே) மாற்றி வைத்தலால் அறச்செய்து (அப்பற்று வழியே பயின்று) சென்று, சிவலோகத்தைத் தனக்குச் சிறப்பாகவுடைய, உயிர்ப் பன்மைகளை யெல்லாம் ஒன்றாக வைத்துக் காணும்போது முதலாக நிற்கும் பொருளைச் செறிந்த பொழில்கள் சூழ்ந்த தில்லையின் நடுவணுள்ள சிறப்பாகிய செல்வத்தையுடைய அம்பலத்தின் கண்ணே காத்திருந்து (தத்தம் வேணவா முடியுமாறு) நான்மறைகளையும் வாரம் பற்றிப் பயின்றுவரும் முனிவர்களும், வான மண்டலத்துப் பதவிச் செல்வர்களாகிய தேவர்களும் தத்தம் முறைப்பாடுகளைச் சொல்லி வணங்கிட நான் கண்டேன் எ - று.

(வி - ரை.) பிணிப்பது "பிணி"யென விகுதி குன்றி நின்றது. அது தோலை, நரம்பை, என்பை, தசையை, இரத்தத்தை, மனதை ஏற்றவாறு பற்றி உயிர் போமாறு வருத்தவல்லது.

"மூப்பு", காலத்தைப் பற்றி உடலைத் தளர வைப்பது; தொழிலாகு பெயர். பிணியும் மூப்பும் உறுதற்கிடம் உடல் என்க.

அகப்புறப் பற்றுக்களால் வருவது பிறவியாதலின், அப்பிறவியறத் திருவடிமேல் அதனை மாற்றி எனப் பொருள் கொண்டாம்.

யாக்கையின் முடிவுபேறு சாக்காடாதலினாலும், மூப்பென்புழி இளமையும் அடங்குதலின், இளமை மூப்புக்களில் பிணிபோல உயிரை முடிக்க வருத்தும் ஏனைய ஊறுகளும் பிணிக்குள் அடங்குதலினாலும், சாக்காடெனக் கூறுதொழிந்தருளினர்.

பிணி மூப்பிற்கு உறவாகிய உடலைத் தனக்கெனக் கொள்ளாது அவற்றுக்கே மாற்றி எனினுமாம். மாற என்னாது "மாற்றி" என்றருளினர், துணிவு பற்றி. என்னை? தம் பக்கமே வெற்றியெனத் துணிந்தருளியமையின்.

பிறவியல்லலையும் வழிநடந்த அல்லலையும் நீக்கும் "பொழில்" என்க. "செறி" என்றற்கு, நிழலும் பூவும் கனியும் முதலியவை செறிந்த எனவு முரைக்க.

"சிற்றம்பலம்" என்பது சிறுமையை நீக்கும் அம்பலம்; 'விக்கி னேஸ்வரன்' என்பது போல நின்றது. நோய்க்கு மருந்து என்பது போல. 'சிதம்பரம்' என்றது அங்ஙனம் திரிந்தது என்பாருமுளர்.

அம்பலத்தே தத்தமை அழைக்குமட்டும் அங்கே காத்திருத்தலின் "மன்னி" என்றருளினர்.

"வாரப் பாட்டா"வது ஒருவர் முன்னோத அதனைப் பின்பற்றிப் பல ரும் ஓதுவது. அதனைத் தொல்காப்பியம் பேராசிரியர் உரையுட் காண்க. மற்றிதனாலே, தேவரைப் பற்றிய வாரப்பாட்டுத் தேவாரம் என்றறிக. இவ்வுண்மையறியாது, 'தேவுக்குரிய ஆரம்' எனவும், பிறவா றும் கூறுவாருமுளர்.

பத்திமையும் பரிசும்இலாப் பசுபாசம் அறுத்தருளிப்
பித்தன்இவன் எனஎன்னை ஆக்குவித்துப் பேராமே
சித்தம்எனும் திண்கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே. 7

இஃது, என் பசுத் தன்மையை நீக்கி, திண்மையாகிய கொள்கை தவறாமை என்னும் கயிற்றினாலே தன்னை விலகிப் போக முடியாதபடி கட்டுவித்த வித்தகனைத் தில்லையம்பலத்தே கண்டேன் என்றருளியது.

(பொ - ரை.) அன்புடைமையும், குணமுமில்லாத என் பசுத் தன்மையினின்றும், அத்தன்மையின்மேல் வைத்த சித்தமாகிய கயிறு அறுமாறு செய்தருளி, என்னைக் கண்டார், உலகியலறியாது இவன் பித்துக் கொண்டான் என்று என்னை இகழுமாறு செய் வித்து, என்னுடைய சித்தம் என்னும் திண்ணிய கயிற்றினால், தனது திருவடியைப் பேர்க்க வொட்டாவாறு என்னைக் கொண்டு கட்டுவித்த விளையாடலையுடைய மெய்யறிவனை விளங்கிவரும் தில் லையின்கண் கண்டேன் எ - று.

(வி - ரை.) பரிசு, தான் உணர்வதும், உணர்த்த உணர்வதுமாகிய குணம்.

பசுமேல் வைத்த சித்தமாகிய கயிறு "பாசம்" எனினுமமையும். அங்கே கட்டிய திண்மையை அவிழ்த்துத் திருவடியிலே கட்டியென்க.

உயிர் என்றும் பாசம் என்றும் பிரிக்க வொண்ணாதபடி பிணிபட்டுக் கிடந்த பசுத் தன்மையினின்றும் சித்தத்தை நிறுத்தி, உயிர் என்றும் சித்தம் என்றும் இரு கூறுபடுத்து, என் உயிரினிடத்தே தனது திருவடி

களை அச் "சித்தம்" என்னும் கயிற்ருனே தானே பேர்ப்பினும் பேரவொட்டாவாறு என்னைக் கொண்டு கட்டுவித்த என விரிக்க.

பத்திமை - அன்பு கொள்ளும் தன்மை. பசு - பாசத்தை மேற்கொண்ட யாஞகிய பசு.

இங்ஙனம் கட்டுங் காலத்து அகங்காரம் ஒடுங்குமாதலின் அதனைக் கூருதொழிந்தருளினர்.

எனக்காக விளையாடிய விளையாட்டினைத் தில்லைக் கண்டேன் என்க.

"விளங்கு" என்பது பிறவினையாகாது மெலிந்து நின்றது.

**அளவிலாப் பாவகத்தால் அமுக்குண்(டு)இங்(கு) அறிவின்றி**
**விளைவொன்றும் அறியாதே வெறுவியனுய்க் கிடப்பேனுக்(கு)**
**அளவிலா ஆனந்தம் அளித்(து)என்னை ஆண்டானைக்**
**களவிலா வானவரும் தொழுந்தில்லை கண்டேனே.** 8

இது, சடமாய்க் கிடந்தேனுக்கு, உணர்வு வரச் செய்து, ஐந்திணை இன்பம் தந்து ஆண்டானைத் தில்லைக்கட் கண்டேன் என்று அருளியது.

(பொ - ரை.) இப்பிறவியில் அளவற்ற தீய எண்ணங்களால் துன்பக் கடலுள் அழுத்தப்பட்டு அமுக்குண்ட இவ்விடத்திலே, அதனினின்றும் நீங்குதற்குரிய அறிவுமின்றி, அதனுல் வரும் பயன் சிறிதளவேனும் அறியும் அறிவும் இல்லாதே, சடத்தன்மையுடையன் போலச் செயலற்றுக் கிடக்கின்ற எனக்கு, எல்லையற்ற பேரின்பத்தைத் தந்து, என்னைத் தன் அடிமையாக ஆட்கொண்ட தலைவனை, ஐந்திணைக் களவொழுக்கம் அற்ற வானவரும் தொழுது வரும் தில்லைக்கட் கண்டேன் எ - று.

(வி - ரை.) அளவு - தருக்க நூலளவு. தத்துவங்களைத் தொகை வகை விதிகளாக அறிந்து கோடற்குரிய நூலளவு. அவ் அளவினைக் கொண்டு அளந்தால் அவ்வெண்ணங்கள் இலவாம் என்க. அந்த அறிவால் பேரின்பத்தை யளக்க முடியாமை குறித்து "அளவிலா ஆனந்தம்" என்றருளினர்.

அறிவு, விளைவு என்பவற்றுள் ஒன்றையேனு மறியாத என்க. கரணங்களாற் பயன் பெருமையின் "வெறுவியன்" என்றருளியபடி. வெறுவியற்கு அருள் செய்தமை முன்னர் விளக்கப்பட்டது.

**பாங்கினொடு பரிசொன்றும் அறியாத நாயேனை**
**ஓங்கிஉளத்(து) ஒளிவளர உலப்பிலா அன்பருளி**
**வாங்கிவினை மலம்அறுத்து வான்கருணை தந்தானை**
**நான்குமறை பயில்தில்லை அம்பலத்தே கண்டேனே.** 9

இஃது, ஐந்திணை அன்புக்கு உரியனல்லாத என்னை, அவ்வன் பருளி ஆனந்தம் தந்தவனைத் தில்லையின்கட் கண்டேன் என்றருளியது.

(பொ - ரை.) தலைவனைச் சார்தற்குரிய வாயில்களும், அவற்றோடு பழகி வரும் இயல்புகளுள் ஒன்றேனும் அறியாத தனது நாயினை ஒத்த என்னை, இருளோங்கி வளர்தற்குரிய உள்ளத்திலே ஒளியோங்கி வளருமாறு கெடுதலில்லாத அன்பினை அருளிச் செய்து, பாசத்தால் ஈட்டிய வினையைத் தான் கூலியாக ஏற்றுக் கொண்டு, பாசத்தையறுத்துப் பெரிய திருவருள் தந்தவனை, மந்திரம், வேள்வி, இசை, வித்தை என்னும் நான்கு கூறுகிய வேதங்களும், பொருள் சிதைவுரு வண்ணம் வந்து பயிலுகின்ற தில்லையிற்கண் கண்டேன் எ - று.

(வி - ரை.) பாங்கு - வாயில். பரிசு - அவ்வாயில்கட்கும் அவற்றோடு தான் தொடர்பு கொள்ளற்குமுரிய இயல்பு.

உளத்து வளரும் ஒளி திருவடி ஒளி என்க.

"உலப்புமன்பா"வது, மாட்டிலே வீட்டிலே மனைமக்களிலே சுற்றத்திலே வைத்த நேயம். அன்பு உலவாவாறு தன் திருவடியில் வைக்குமாறு செய்து.

"தந்தான்" என்றருளினர், கொண்டது வினை என்பது தோன்ற. இச்செயலால் யான் பேரூதியம் பெற்றேன்; அவன் உடல் வருத்தம் பெற்றான் என்க.

"மறை," தில்லையிற் பயிலாவிடத்துப் பயன்படா தென்க. 'நான்கு மறைகளும்' என உம்மை விரிக்க.

"வான் கருணை" வான் போன்ற கருணையுமாம். வான் - ஆகாசம். அது ஏனைய பொருள்களைத் தன்னுள் அடக்குமாறுபோல இறைவனும் என்னைத் தன்னிடத்து அடக்கிக் கொண்டான் என்க.

**பூதங்கள் ஐந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்**
**பேதங்கள் அனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்**
**கேதங்கள் கெடுத்தாண்ட கிளர்ஒளியை மரகதத்தை**
**வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே. 10**

இஃது, எந்நெறியின் வைத்து அன்பு செய்யினும், அவன் பேரருள் செய்வான் என்றருளியது.

(பொ - ரை) தான் ஒருவனே ஐம்பூதங்களுமாகி அவற்றுலாகிய ஐம்புலன்களுமாகி, அவற்றுள் உறையும் உயிர்ப் பொருளுமாகி, அப்பொருள்களின் வேறுபாடுகள் அனைத்துமாகி வைத்தும்,

அவற்றின் வேறுபாட்டால் தான் ஒரு வேறுபாடில்லாத பெரும் பேரியல் புடையவனும், அவற்றுலாம் சாதி குலம் பிறப்பு முதலிய வற்றுல் உளவாகும் துயர்கள் எனக்கு இல்லனவாகும்படி கெடுத்து என்னை யாண்டுகொண்ட விளங்கித் தோன்றும் செவ்வொளி மய மானவனும், அருள் மயமாகிய பச்சை மணியை யுடையவனு மாகிய என் ஆண்டானை, பயிலும் வேதங்கள் வணங்கித் துதிக்கப் பெறும் அம்பலமுடைமையால் விளங்குகின்ற தில்லைக்கண் கண்டேன் எ - று.

(வி - ரை.) புலன்கள் எனவே பொறிகளும் அடங்கும். "புலனுகி" யென்றமையால் உயிர்ப் பொருளும் பெற்றும். இனிப் "பொருளாகி" யென்றதற்கு மூலப் பொருளும் தானேயாகி எனலுமாம். "பேதங்கள்" அவற்றின் விரி. அடிப்பொருளாகி விரியாகி என மற்றதனை விரிக்க.

தான் எங்குமிருத்தல் பற்றி, இழிவுயர்வு தோன்றுதலும், அவற்றுல் வேறுபாடடைதலும் ஆகிய "பேதமிலான்" என்க.

சிறுமை தாங்கும் பெரியன் என்க.

செங்கதிரும் மழையும் போல அம்மையப்பர் திகழ்வராகலின் "கிளர் ஒளியை மரகதத்தை" என்றருளினர்.

இறைவனருள் பெற்ற உயிரில்பொருளும் உயிர்ப்பொருளாம் என்க.

சிறுமையும் இருளுமே கண்ட யான், இப்போது பெரியோனையும் ஒளி யையும் காணலுற்றேன் என்க.

திருச்சிற்றம்பலம்

# பிரார்த்தனைப் பத்து

சேய்மைக் கண்ணே அடியார் புடை சூழ்ந்து களிக்கத் தில்லை யம்பலத்தானைக் கண்ட அடிகள் தாம் இதுவரை எய்திய இன்னல்களை எடுத்துக் கூறித் தம்மை அணைத்துக்கொள்ளும்படி பிரார்த்தித்த பத்துப் பாக்களையுடைய நூற்பகுதி "பிரார்த்தனைப் பத்து" எனப்படும். பிரார்த்தனை எனினும் வேண்டுகோள் எனினும் ஒக்கும்.

"பிரார்த்தனைப் பத்து" எனப் பெயர் அமைந்துளதேனும் இப் பகுதியில் பதினொரு திருப்பாடல்கள் காணப்படுகின்றன. அடிகள் இப்பகுதிக்குரிய பொருளைப் பத்தாக வகுத்துக்கொண்டு "பிரார்த்தனைப் பத்தெ"ன அதற்குப் பெயருமிட்டுப் பாடியருளப் புக்கனரேனும், உணர்ச்சி வேகத்தாலுந்தப்பட்டு அவன்பால் வலிதிற் சென்று முறையிட்டு அருள் பெறுவேன் என நுதலிப் புகுந்ததாகக் காணப்படுதலின் இறுதித் திருப்பாட்டு பிரார்த்தனைப் பத்துடன் இயையாது வேறுபட நின்றதெனவே கொள்க.

இப்பகுதித் திருப்பாட்டுக்கள் அந்தாதித் தொடை வாய்ந்தனவாகக் காணப்படுகின்றன. இதனால் இயற்கைப் பொருளடைவும் நூற் பொருளடைவும் ஒன்றாக வேண்டுமென்னும் யாப்புறவு இல்லையென்க. அடிகள் கூறப்புகுந்த பொருள்களை வகைப்படுத்தி அவற்றையே அந்தாதித் தொடையமையக் கூறியருளுகின்றாரென உணர்க.

இப்பகுதி, I நிற்பேனோ (11) எனவும், II (அ) உண்டாங்கொல் (4, 5) எனவும், (ஆ) என்று கூடுவது (10) எனவும் (III) துணி (7) எனவும், IV வேண்டும் (3, 6, 9) எனவும் V அருள் 1, 2, 8 எனவும் இயற்கைப் பொருள் பற்றி வகுக்கப்படக் கூடியதாகக் காணப்படுகின்றது.

பதினொராந் திருப்பாட்டு, இப்பகுதிப் பொருளை நுதலிப் புகுந்ததாகக் காணப்படுதலின் ஈண்டு முதலாவதாக அமைத்தனமென்க. வற்றல் மரம்போல் நிற்றல் தகாதெனநுதலிப் புகுந்த அடிகள் அன்பு மேவுதல் உண்டாங்கொல் எனவும், ஆவி யாக்கை யானெனது என்றியாதும் அறுதல் உண்டாமோ எனவும், உண்டாமாயின் என்று கூடுமெனவும், அவ்வாறு கூடுதற்குத் தடையாய் நிற்கும் இருளை நீக்கச் சோதீ, யினித் துணியாயே எனவும், மெய் யன்பை நான்பெற வேண்டும், பேரானந்தம் பேராமை வைக்க

வேண்டும் எனவும் இயற்கைப் பொருள்களை அடைவுபடுத்திக் கொள்க.

அடியார் புடைசூழ்ந்து களிக்கத் தில்லையம்பலத்தில் இறைவனைக் கண்ட அடிகளுக்குத் தம்மை முன்னாள் அவன் ஆண்ட நிகழ்ச்சியும் தாம் அதன்மேலும் வீணே காலங் கழித்த நிகழ்ச்சியும் தோன்றுதலின், அடியாரொடு கலந்து வாளா களித்திருந்தேன், காலங்கள் புலர்ந்து போன, இடர்புகுந்து நின்ற, பின்னாள் உலர்ந்து போனேன், இன்பச் சுடர் காண்பான் அலந்து போனேன், ஆர்வங்கூர அருள் செய்வாய் என்று வேண்டிய திருப்பாட்டை முதற்கண் அமைத்தருளினர்

இன்னும் இவ்வியைபானே அடியார் சிலர் ஆர்வங்கூர அருள் பெற்றார், யான் அவமே மூக்கின்றேன், வினைகளைந்து அருள் பொங்க உருக அருள் என்பது இரண்டாவதாக அமைத்தருளப் பட்டது.

அடியார் அமுதக்கடல் புக்கு அழுந்த யான் உடல் பொறுத்து எய்த்தேன், என்னைக் கண்டார் வெருளாவண்ணம் நான் மெய்யன்பைப் பெறவேண்டும் என்பது மூன்றாவதாக அமைத்தருளப்பட்டது. அவ்வாறு இரண்டும் இல்லாதவனாகிய யான் வேண்டாதொன்றும் வேண்டாது மிக்க அன்பு மேவுதலே அடியேற்கு உண்டாங்கொல் லென்பது நான்காவதாக அமைத்தருளப் பட்டது. அதனால் அடியாருள் மெய்ம்மையே மேவி, ஆவி ஆக்கை யான் எனது என்று யாதுமின்றி அறுதல் பாவியேற்கு உண்டாங் கொல் என்பது ஐந்தாவதாக அமைத்தருளப்பட்டது.

புறமே கிடந்து புலம்புகின்றேன், இன்ப மாகடல் பெற வேண்டும் என்பது ஆறாவதாகவும், கண்டார் ஆனந்தம் உண்ண யான் இடரே பெருக்கி ஏசற்றிருத்தல் அழகா, நீ அருளுக என்று உணர்த்தாநின்றேன் இருள் நீங்கத் துற என்பது ஏழாவதாகவும், மூங்கிற் சிந்தையேன் தேய்கின்றேன், அடியாரன்பு தாராய், பாதந் தாராய் என்பது எட்டாவதாகவும், தமரெல்லாம் தந்தாய் என்று ஆராநின்றார், அடியேனும் அயலார்போல அயர்வேனோ, பேரானந்தம் பேராமை வைக்க வேண்டும் என்பது ஒன்பதாவதாகவும் அமைத்தருளப்பட்டன அவ்வாறு பேரானந்தத்தை நீ அருளுதற்குக் காரணமாய உருகிப் பெருகும் உள்ளத்தை அருளும் காலம் எற்று என்றோ கூடுவது என்பது பத்தாவதாக அமைத்தருளப் பட்டது. அவ்வாறு கூடுங்காலம் வரையும் அடியார் குனிப்பார்,

அடியேன் வாடி வற்றல் மரம்போல் நிற்பேனோ என்பது பதினொரா வதாக அமைத்தருளப்பட்டது.

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு ஆதியன வருமாறு :

| பெரும் பிரிவு | உட் பிரிவு | இ. பொ. அடைவு | நூ பொருள் அடைவு |
|---|---|---|---|
| I | | 1 | 11 |
| II (அ) | 1 | 2 | 4 |
| | 2 | 3 | 5 |
| II (ஆ) | | 4 | 10 |
| III | | 5 | 7 |
| IV | 1 | 6 | 3 |
| | 2 | 7 | 6 |
| | 3 | 8 | 9 |
| V | 1 | 9 | 1 |
| | 2 | 10 | 2 |
| | 3 | 11 | 8 |

இது திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# சதா முத்தி

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

கலந்துநின் அடியாரோடு அன்று
வாளா களித்திருந்தேன்
புலர்ந்து போன காலங்கள்
புகுந்து நின்ற(து) இடர்பின்னாள்

உலர்ந்து போனேன் உடையானே
உலவா இன்பச் சுடர்காண்பான்
அலந்து போனேன் அருள்செய்யாய்
ஆர்வம் கூர அடியேற்கே. 1

இது, நீ என்னை அடியாரிடையே வைத்துப் பிரிந்து போயினையாக, யான் விளைவொன்றும் அறியாது, அவ்வடியாரொடும் எனக்குப் பெரும் பேறு கிடைத்ததென்று களித்திருந்து, இறுதியில் ஏமாற்றமடைந்து எதிர்மறைப் பயனே பெற்றேன், ஆதலின் களிப்பு அடங்கி இப்போது அருள் பெறுமாறு வேண்டிநிற்கும் எனக்கு அருள் செய்வாயாக என அடிகள் இறைவனைப் பிரார்த்தித் தருளியது.

(பொ - ரை.) என்னை அடிமையாக உடையவனே! அன்று உன் அடியாருள் யானும் ஒருவனாக நின் அருளால் கலந்து நின்று அக்கலப்பினாலே அன்பினைப் பெருக்கிக்கொள்ளாது, பயன்பெறாது செருக்குற்றிருந்தேன். அச்செருக்குக் காரணமாக நின்னையடைய வேண்டிய காலச் செவ்விகள் பல விருந்தும் அவை விலகிப் போயின அங்ஙனம் பெறாமையால் உளவாகிய துன்பங்கள் என்னுட் புகுந்து என்னை அலையாநின்றன காலச் செவ்விகள் கெட்ட பின்னாளில் யான் உய்வதற்கரியேனாக வாடிப் போனேன். அவ்வாட்டம் தீரக் கெடுதலில்லாத இன்பச் சுடராகிய நின்னைக் காணமுயன்றும் வாய்க்காமையால் அலக்கணுற்றுப் போனேன். ஆதலால் அடியவனாகிய எனக்கு வெறுப்பு அறவே நீங்கும்படி அருள் செய்யாய் எ - று.

(வி - ரை.) "வாளா களித்திருத்தலாவது" 'அவன் தானே வந்து அருள் செய்தான்; அங்ஙனம் அருள் செய்தவன் பின் வரைந்து கொள்ளும் படி பொருள்வயிற் பிரிந்து சென்றான்; சென்றவன் பின் வந்து பலரறிய மணஞ்செய்துகொண்டருள்வான்; அதனாலன்றே எனக்கு ஆறுதல் செய்யும்படி அடியார்களை ஈண்டு வைத்துச் சென்றான்' என எண்ணி அன்பினைப் பெற முயலாது செருக்குற்றிருத்தல் என்க.

அதனால் செவ்விக் காலங்கள் புலர்ந்து போயின. தம்மாலும் பிறராலும் தடுத்தற்கரியது என்பது தோன்ற "இடர் புகுந்து நின்றது" என்றருளிச் செய்தார்.

"உலர்ந்து போனேன்" என்பதற்கு அன்பும் ஆர்வமும் அற்றுப் போனேன் எனலுமாம். அங்ஙனமாயினும், நீ யளித்த இன்பம் காரணமாக, நின்னைக் காண முயன்றும் ஆர்வம் இன்மையால் அலக்கணுற்றுப் போனேன் என்றருளியபடி.

உலர்ந்தவனாகிய யான் "அலந்துபோனேன்" என முடிப்பினுமாம். வெறுப்பும், அது மேன்மேற் கிளைத்தற்கு உரிய மூலமும் இல்லையாகும்படி அருளாய் என்க.

"உடையானே" என்றதற்கேற்ப "அடியேன்" என்றருளினார். ஆர்வங்கொள்ளற் குரியேன் வெறுப்புக் கொள்ளலாமா, என்றருளியபடி.

அடியார் சிலர்உன் அருள்பெற்றார்
    ஆர்வங் கூர யான் அவமே
முடையார் பிணத்தின் முடிவின்றி
    முனிவால் அடியேன் மூக்கின்றேன்
கடியே னுடைய கடுவினையைக்
    களைந்(து) உன் கருணைக் கடல்பொங்க
உடையாய் அடியேன் உள்ளத்தே
    ஓவாது உருக அருளாயே. 2

ı, நீ எனக்குக் கொடுமை செய்தாய் என யான் அவமே கருதிப் பெற்ற முனிவில் முதிர்ச்சியடையப் பெற்றேன். அத் உள்ளத்தில் முனிவூற்றெடுத்தற்கு மாறாக அன்பு நிலைத்து உருகி ஊற்றெடுக்குமாறு அருள் செய்வாயாக என்று பிரார்த்தித்தருளியது.

(பொ - ரை.) உடையவனே! அடியார் சிலர் ஐந்திணைக் களவு காரணமாக விருப்பமிக் கூர்தலால், நின் அருளைப்பெற்று, நின்னோடொப்பக் கலந்தருளினார்கள் நின் அடியேனாகிய யானோ, அவ்வொழுக்கம் பெறாது புலால் நாற்றம் பொருந்திய பிணத் தன்மை கொண்டாற்போல் உயிரும் அன்புமற்ற வெறும் வாழ்க் கைக்கு முடிவில்லாமல், அம்முடிவின்மை காரணமாக எழுந்த வெறுப்பினால் வீணாக முதிர்ச்சியுற்றுக் கெட்டுப் போகின்றேன். அம்முனிவுக் கடுமையையுடையேனுடைய கொடிய வினைகளை, யான் உய்யுமாறு வேரொடும் பிடுங்கியெறிந்து, நின் கருணைக்கடல் மேற் கிளர்ந்து என் மேற்பாய, எனது உள்ளத்தே இடையீடில்லாத அன்பையும், அது கொண்டு உருகுதலையும் எனக்கு அருள் செய் வாயாக எ - று.

(வி - ரை.) அன்பு மேற்கொண்டு நெகிழாமையின், உயிர்ச் செய லற்றுப் பிணத்தன்மை யெய்தி, அதற்கொரு முடிபு காணாது போனமை யான் உளதாகிய முனிவு காரணமாக "மூக்கின்றேன்" என்க.

இங்ஙனம் அன்பற்ற உயிர் பிறப்பு குடி சாதி முதலியவற்றையே பற்றி, அப்பற்றுக்கு முடிவுமின்றி முனிவையே பொருளாகக் கொண்டு

" அவமே " கெட்டொழியு மென்க. யானும் அங்ஙனமே என்றருளியபடி. ஆதலாற் " கடியேன் " என்றுருமாம். இத்தகைய எனது வினையும் மற்றெல்லாவற்றினுங் கடியதாகலின் " கடுவினை " என்றருளினர். அது பயிரைக் கெடுக்குங் களை போல உயிரைக் கெடுப்பது.

" கருணைக்கடல் " என்றருளினுர், அக்கருணைக்கு முடிவின்மையின். முனியப்படுதலால் " மூக்கின்றேன் " என்பாருமுளர்.

இறைவனைப் பொருளாக அடியவரும், அடியவரைப் பொருளாக இறைவனும் கொண்டிருத்தலே ஐந்திணை அன்பாம். இதுவே ாரன்பு ஒப்பு.

கடுவினையேற்கு அருள்செய்யாதிருப்பதோ உடையானுகிய நினக்குச் சிறப்பு என்றருளியபடி.

அருள்ஆர் அமுதப் பெருங்கடல்
வாய் அடியாரெல்லாம் புக்கழுந்த
இருள்ஆர் ஆக்கை இதுபொறுத்தே
எய்த்தேன் கண்டாய் எம்மானே
மருள்ஆர் மனத்(து)ஓர் உன்மத்தன்
வருமால் என்று இங்(கு) எனைக்கண்டார்
வெருளா வண்ணம் மெய்யன்பை
உடையாய் பெறநான் வேண்டுமே. 3

இது, நின் அருளை நுகர்தற்கும், உலகோர் வெருளாமைக்கும் ஏற்றதாகிய மெய்யன்பை அருளுவாயாக எனப் பிரார்த்தித்தருளியது.

(பொ - ரை ) எம்பெருமானே ! எம்மை அன்றிப் பிறிதொன்றனையும் கொள்ளுதல் இல்லாதவனே ! நின் திருவருளாகிய கிடைத்தற்கு அரிய அமுதம் நிறையப் பெற்ற பெருமை வாய்ந்த கடற்கண், நின் அடியார் எல்லாரும் புகுந்து அழுந்தி இன்பம் துய்க்கவும், யான் மயக்கம் நிறைந்த உடம்பாகிய இதன் பொறையைச் சுமத்தலால் ஒரு பயனும் பெருது இளைத்துப்போனேன். என்னைக் கண்ட உலகினர் எல்லாரும், மயக்கம் நிரம்பிய மனத்தோடுகூடிய ஒரு பித்தன் இங்கு வருகின்றுன் என்று கூக்குரலிட்டு அஞ்சாவண்ணம் அமைதற்குக் காரணமாகிய மெய்யன்பை யான் பெற்றுக்கொள்ளுதல் வேண்டும் எ - று.

(வி - ரை.) ஆக்கையகத்துள்ள உயிர்க்கு அன்பின்மையின் அவ்வாக்கை " இருளார் ஆக்கை " என்றருளப்பட்டது. " இது " என்பது எண்மைப் பொருள் தோன்ற நின்றது. " பொறுத்தது " அறியாமையால் என்க. என்பு கறித்த நாய் தன் உதிரம் உண்டு எய்த்தவாறே " எய்த்தேன் " என்க.

" ஆல் " அசை. " கண்டாய் " முன்னிலையசை. அருட்கடலாதலால் அது "பெருங்கடல்" என்றருளப்பட்டது. "எம்மான்" என்ற பின்னரும் " உடையாய் " என்று அருளினார், முன்னது பொதுவும் பின்னது சிறப்புமாகலின்.

இவர் செயல் உன்மத்தன் செயல்போன்றது என்க. " மருளார் மனத்தோர் உன்மத்தன் " இவன் என்க. 'அவன் வருகின்றான்; நாம் எதிர்நில்லாது ஓடல்வேண்டும்' என்பார் கண்டோர். " அருள் "பெறின் அவ் " வெருள் " இன்றாம் என்க.

இனி, தன் போலி வேடத்தால் பிறரை மயங்க வைத்துத் தான் பொருளும் போகமும் என்பவற்றைப் பெறுதற்குரிய கள்ளப்பித்தன் எனினுமாம். ' தான் உன்மத்தன்போலக் காட்டிப் பிறர் பொருளை வெளவு வோன். இக்கருத்தினை,

" வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று " (283)

என்னும் திருக்குறளான் அறிக. இவ்வாறாகிய கள்ளத்தன்மையின் நீக்கி மெய்யன்பினை அளித்தருள் என வேண்டினார் என்க.

**வேண்டும் வேண்டும் மெய்யடியார்**
**உள்ளே விரும்பி எனைஅருளால்**
**ஆண்டாய் அடியேன் இடர்களைந்த**
**அமுதே அருமா மணிமுத்தே**
**தூண்டா விளக்கின் சுடர்அனையாய்**
**தொண்டனேற்கும் உண்டாங்கொல்**
**வேண்டாது ஒன்றும் வேண்டாது**
**மிக்க அன்பே மேவுதலே. 4**

இது, தம் பிழைக்குத் தம்மையே நொந்துகொண்டு, வேண்டத் தகாதனவற்றை வேண்டாது, வேண்டத் தக்கதாகிய பேரன்பைப் பெறுதலும் உள்ளதாகுமோ எனப் பிரார்த்தித்தருளியது.

(பொ - ரை ) மெய்யடியார்களுடைய கூட்டத்தினுள்ளே, அம்மெய்ம்மையற்றவனாகிய என்னையும், தானாகவே அடிமை கொண்டவனே ! அடிமை கொள்ளப்பட்ட எனது பிறப்பு முதலிய வற்றால் உளவாகிய இடர்களைக் களைந்த அமுதமானவனே ! அரிய மணி முத்தம் ஆனவனே ! தூண்டுதல் செய்யவேண்டாத விளக்கின்கண் எழுந்த சோதியின் கொழுந்தினை ஒத்தவனே ! (இங்ஙனம் நீ என்மேல் இரங்கிப் பெரிதும் முயன்றருள்செய்ய, செருக்கினை மேற்கொண்ட எனக்கு இத்தனை அல்லல்களும்) வேண்டும், வேண்டும். இவ்வல்லல்கள் வேண்டத் தகாதனவற்றை

வேண்டியதனுல் உண்டாயின ஆதலால், வேண்டத்தகாத தொன்றனையும் வேண்டிக்கொள்ளாது, வேண்டத் தக்கதாகிய பேரன்பினையே வேண்டி மேற்கொள்ளுதல் எனக்கு உண்டாகுமோ எ - று.

(வி - ரை.) அப்பேரன்பே எனக்கு வேண்டுவதாகும்; ஆதலால் அதனை அருளிச்செய்க எனப் பிரார்த்தித்தருளியவாறு என்க.

'எனக்கு இது வேண்டும் அஃது உண்டாகுமோ' என முடித்தல் சிறப்பின் றென்க. என்னை? அஃது எனக்கு உண்டாகுமோ என்றவழி, அதனை வேண்டிக் கொண்டமைதானே போந்து கிடத்தலினுலும் "வேண்டும் வேண்டும்" என அடுக்கிக் கூறியவற்ருேடு தொடர்ந்துவரும் விளிகளை யெல்லாம் உற்று நோக்குமிடத்துக் கழிவிரக்கங்கொண்டு தம்பிழைக்கு வருந்தியமை நன்கு பெறப்படுதலானுமென்க.

"இடரைக் களைந்து" ஐந்திணை அன்பாகிய அமுதத்தை யூட்டிய வனே என்க. இயற்கைப் புணர்ச்சியில் என்னை அணிந்து நாணம் கெடுத்த அரிய பெரிய மணியொடு பொருந்திய முத்துப்போன்றவனே என்க. (அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்தல்.) இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண், தலைமகள் அணிந்த கோலம், பாங்காயினுர்க்கு வேறுபடத்தோன்று மென நாணிய தலைவிக்கு, அங்ஙனம் தோற்ருதெனத் தலைமகன் தெளிவித்தல் என்னும் துறையால் கோலம் செய்தல் புலப் பட்டது. அக்கோலம் தம் துன்பத்தை நீக்கியது ஒன்ருகலின், அதனை "அருமாமணி முத்தே" எனப் பாராட்டியருளியவாறு. அணிதலால் தாம் பெற்ற விளக்கமாகிய காரியத்தைக் காரணத்தின்மேல் ஏற்றிக் கூறி யருளினுர். யாண்டும் தொடர்நத அன்பொளி என்பார் "தூண்டா விளக்கின் சுடரனையாய்" என்றருளினுர்.

"இடர் களைந்த அமுதே" "முத்தே" "சுடரே" எனத் தனித்தனி கூட்டுக.

"வேண்டாது" என்பது வேண்டப்படாத என்னும் பொருட்டு.

அடியார்களை ஆளாது என்னை ஆண்டாய் என்க. அடியாருள் எனை வைக்க விரும்பி ஆண்டாய் என வேண்டுமேல், அடியாருள் வைத் தாண்டாய்; யான் அது பெற்றிலேன் என்றுரைக்க.

மேவும் உன்தன் அடியாருள்
விரும்பி யானும் மெய்ம்மையே
காவி சேரும் கயற்கண்ணுள்
பங்கா உன்தன் கருணையினுல்
பாவியேற்கும் உண்டாமோ
பரமா னந்தப் பழங்கடல் சேர்ந்(து)
ஆவி ஆக்கை யான்எனதென்று
யாதும்

இது, வேண்டப்படாதனவாகிய ஆவி, ஆக்கை, யான், எனது என்பவற்றின் தொடர்புகள் அறப் பெற்று மெய் அன்படைதற்கு நின் அருளே வேண்டும், அஃது உண்டாமோ எனப் பிரார்த்தித் தருளியது

(பொ - ரை) (அணித்தாகவுள்ள) குவளை மலரைச் சேரா நிற்கும் கயல்போன்ற கண்ணுளாகும் உமைப்பிராட்டியை இடப் பாகத்து உடையானே! (உனது அருளினாலே) திருவடியின்மேற் பற்றுவைத்த நெறிக்கட் பயிலும் உன் அடியவர் உள்ளத்தே மேவா நிற்கும் பேரானந்தப் பழங்கடலை யானும் மெய்ம்மையாகவே சேர்ந்து, ஆவியே, ஆக்கையே, யானே, எனதே என்பவற்றுள் எதுவுமில்லாமல் அற்றுப்போதல், பாவியேனாகிய எனக்கும் உண்டாமோ எ - று

(வி - ரை.) 'உனது அடியாரின் உள் மேவும் கடல்' என்க. அதனால் அடியாருள் யானும் ஒருவனாதல் வேண்டுமென்பதும் பிரார்த்தனை.

மாறி மாறித் தோன்றும் இன்ப துன்பங்கள் பற்றாத இன்பமாதலின், "பரமானந்தம்" என்றும், அதுவே ஒடுக்கத்துள்ளும் உளதாதல் பற்றிப் "பழங்கடல்" என்றும் அருளிச்செய்தார்.

அடியாரும் நின் கருணையினால் அடைந்தார்; பாவிகளும் அக்கருணை இருப்பின் அடைதற்குரியார் ஆவர் என்க.

ஆவியென ஒன்று உளதெனக் காணுங்காலை நினைவும், ஆராய்வும், அதன் முடிபுகொள்ளலும், செருக்குறுதலும் முதலாயின உளவாதலின், அதனையும் உடன் எண்ணியருளினார்.

வினை காரணமாகப் பெற்றோர்களாற் போந்த கருவிகளை ஒழித்து, அவனருளாலே அவை அமையப்பெற வேண்டுமென்க. "युञ्चते मनु" என்றும் சூக்தமும் இக்கருத்தை வலியுறுத்தல் காண்க.

நிறத்தாற் காவியையும் பிறழ்ச்சியாற் கயலையும் ஒத்த கண்.

**அறவே பெற்றார் நின்அன்பர்**
**அந்தம் இன்றி அகம்நெகவும்**
**புறமே கிடந்து புலைநாயேன்**
**புலம்பு கின்றேன் உடையானே**
**பெறவே வேண்டும் மெய்யன்பு**
**பேரா ஒழியாப் பிரிவில்லா**
**மறவா நினையா அளவிலா**
**மாளா இன்ப மாகடலே. 6**

இது, நின்னுடையவர்களுள் அன்பர்களாயுள்ளோர் பேரானந்தத்தைப் பெற்றனராக, யான் மெய்யன்பில்லாது பெருந்துன்பம்

அடைந்துகொண்டிருக்கின்றேன். ஆதலால் யானும் மெய்யன்பு பெறவேண்டும் என்று பிரார்த்தித்தருளியது.

(பொ - ரை.) மெய்யன்பரோடு என்போன்றோரையும் பொருளாக உடையவனே! நின் அன்பர் துன்பத்திற்குப் பெயராத இன்பமூட்டுதலில் ஒழியாத, இரண்டாகப் பிரிதலில்லாத, பிறிதொன்றன் சிறப்பைக் கொள்ளுதலால் மறவாத, இன்பம் அற்றுப்போகாமையின் நினைக்க வைக்காத, குணம் செயல்களால் அளவிடப்படாத, இல்லையெனப்படாத எழுவகைப்பட்ட தன்மைகளையுடைய பேரின்பக் கடலை, முடிவில்லாது தம்மனம் நெகுதலானே பெற்றுக்கொண்டனர். புலைப்பொருளைப்பற்றி நுகர்தற்குரிய குணம் செயல்களைக் கொண்ட நாயை ஒத்த யான், நின் அன்புக்குப் புறமான இடத்தே செயலற்றுக் கிடந்து புலம்பாநின்றேன். அத்தகையேன், தலைமைப் பொருளாகிய நின்னைப்பற்றி நுகர்தற்குரிய குணஞ்செயல்களைக் கொண்ட மெய்யன்பைப் பெறுதல்வேண்டும் எ – று

(வி - ரை.) அகம் நெகுதலை அன்பர்க்கு ஆக்குக. "கடலே" என்பதை விளியாக்கின், "அறவே பெற்றார்" என்பதற்குச் சொல் வாளா விரிக்க வேண்டுமென்க.

சொல்லிடத்தும் நினைவிடத்தும் வந்து தோன்றும் அன்பினை "மெய்யன்பு" என்றருளினர். மற்றவை பெருமையும் வேண்டுமென்க.

பிரிவுள்ளதன்று என்பார் "பிரிவிலா" என்றும், எப்போதும் உளதாயிருத்தலின் "மாளா" என்றும், இன்பம் உள்வழித் துன்பமுண்டாகலின் அத்தகையது அன்றென்பார் "பெயரா" என்றும், இடையீடில்லாது ஊட்டி வரும இன்பம் என்பார் "ஒளியா" என்றும், வேறு சிறப்புப்பொருள் இன்று என்பார் "மறவா" என்றும், எப்பொழுதும் இடையறாது ஊட்டிவருதலின் நினைக்கவேண்டா என்பார் "நினையா" என்றும், அளவைகளானே அளத்தற்கரிது என்பார் "அளவிலா" என்றும் கூறியருளினர். அடிகள் பெற விழைவது இவையாகவும் இப்போதுள்ளது இவற்றிற்கெதிர் மறையாகவுங் கொள்க.

கடலே அனைய ஆனந்தம்
கண்டார் எல்லாம் கவர்ந்துண்ண
இடரே பெருக்கி ஏசற்(று)இங்கு
இருத்தல் அழகோ அடிநாயேன்
உடையாய் நீயே அருளுதிஎன்(று)
உணர்த்தா(து) ஒழிந்தே கழிந்தொழிந்தேன்
சுடா ர் அருளால் இருள்நீங்கச்
சோதீ இனித்தான் துணியாயே. 7

இது, பெருந்திணை நெறியானே நின்னைக் கண்டாரெல்லாரும் நின் இன்பத்தைக் கவர்ந்து நுகர்வாராக, ஐந்திணைநெறி அவாவிய யான், நின் அருள் பெறாது செவ்வி கழிந்து துன்பமுற்றிருத்தல் அழகாகுமா? ஆகாதாகலின் எனக்கு அருள் செய்யத் துணிவாயாக எனப் பிரார்த்தித்தருளியது.

(பொ - ரை.) என்னை ஆளுமாறு உடையவனே! ஒளி வண்ணனே! காட்சி மாத்திரையால் நின்னைக் கண்டாரெல்லாரும் நீ கொடாதிருப்பவும் கவர்ந்துகொண்டு கடல்போன்ற எல்லையற்ற பேரானந்தத்தை நுகரவும், நினக்கு அடிமையாகிய நாயினை ஒத்த யான், அவர் பேற்றிற்கு மாறாகக் குறைக்கவேண்டிய துன்பத்தைக் குறையாது பெருக்கி இகழப்பட்டு நினக்குப் புறமாகிய இவ்விடத்தே தலைவனாகிய நின்னைப் பிரிந்திருத்தல் வடுவாகாது அழகாகுமோ? வந்து அருள் செய்வாய் என்று கருதி யான் எனது செவ்வியை நினக்கு உணர்த்தாது ஒழிந்து செவ்வி கழியப் பெற்று வறிதே போயினேன். அதனால் உண்டாகிய துன்பமாகிய இருள் நீங்குமாறு நின் அருளாகிய சுடரைப் பரப்புதற்கு இனியாவது துணிக எ - று.

(வி - ரை.) "கடல்," மேற்குறித்த எழுவகைப் பண்பும் பெற்ற பேரானந்தக் கடல்.

"கண்டார்" என்றது, எரி பாய்ந்தும், வரை புரண்டும், கடல் புக்கும், ஆனந்தம் எய்தியவரை என்க. அவர் தாமே முனைந்து பெற்றமை யின் "கண்டார்" என்றருளினர்.

நீ பிரிந்து என்னை இருத்தினமையால், அவர்போலக் காண்டற்கு இயலாத யான், நீ அருளாவிடின் யாது செய்வேன் என்க.

முன்னரும் நீயாகவே வலுவில் வந்து ஆண்டாய்; மேலும் அவ்வாறே செய்வாய் என்று கருதி வாளாவிருந்தேன் என்றலுமாம். இன்னும், யான் நின் அருளை வாயில்களாற் பெறமுயல்வது இருவயினொத்த அன்பாகாது; அங்ஙனம் ஒவ்வா அன்பு யான் விழைந்தது ஒன்றன்று; ஆதலின் என் மாட்டுப் பொருந்திய நின் அன்பானது நின்னை ஈண்டு ஈர்த்துவர நின் மாட்டுப் பொருந்திய என் அன்பானது நின்னொடு பிணங்கி, எதிரேற்றுக் கூடியிருத்தலே யான் விழைந்த ஐந்திணை அன்பாகலின் "உணர்த்தாது ஒழிந்தேன்" என்றலுமாம். பிரிந்து சென்றபோது யான் 'இங்ஙனம் இருத்தல் அழகோ நீயே சொல்லுதி' என்று வினவு முகத்தானே உனக் குணர்த்தாது "ஒழிந்து கழிந்தேன்" என்றலும் நேரிது.

"அழகோ" என்றருளியமையால், யான் அறியேன் என்பதற்கிட மின்று. இனியும் அவ்வாறிருப்பின் உனக்கே இழுக்காம் என்பதுபட "இனித் தான் துணியாயே" என்றருளினர்.

துணியா உருகா அருள்பெருகத்
தோன்றுந் தொண்டர் இடைப்புகுந்து
திணியார் மூங்கிற் சிந்தையேன்
சிவனே நின்று தேய்கின்றேன்
அணியார் அடியார் உனக்குள்ள
அன்புந் தாராய் அருள் அளியத்
தணியா(து) ஒல்லை வந்தருளித்
தளிர்பொற் பாதம் தாராயே. 8

*இஃது, அடியவர்களோடு கூடியும் பயன்பெறாது போனேன், நீதான் எனக்கு அன்பையும் தருவாயல்லை. ஆதலால் நின் ஊன்றிய திருவடியால் என்னை ஒறுத்தேனும் செவ்வி பெறச்செய் என்று பிரார்த்தித்தருளியது.*

(பொ - ரை.) சிவபுரத்தை அடியார்க்குத் தருதற்குரிய சிவ பெருமானே! திண்மை நிறைந்த மூங்கிலினது கணுவை ஒத்த சிந்தையடையேனாகிய யான் இடையில் அற்றுப்போதலின்றி ஒரே பெற்றித்தாக உருகி அதனால் அருள் பெருகத் தோற்றம் பெறுகின்ற தொண்டர்களுடைய நடுவிடத்தே புகுந்து நிலைபெற்றும் பயன் படாது வீணே அழிகின்றேன். தூக்கிய திருவடியாகிய அழகு செய்யும் அடிக்குரியார் உன்பொருட்டு வைத்துள்ள அருள் கனிதற்கு உரிய அன்பினையும் தருவாயல்லை ஆதலால் உனது (அடியார் பொருட்டு) மேன்மேலும் தளிர்க்கின்ற பொற்பாதமாகிய ஊன்றிய திருவடியையேனும் தாராய் எ - று.

(வி - ரை.) இடையறவுபடாமையானும் உருகுதலானும் பெருகுகின்ற "அருள்" என்க. எஞ்ஞான்றும் அவ்வருளுடன் தோன்றும் அடியார் என்க. அத்தகைய சுற்றத்தோடு பழகியும் பயன்படாத சிந்தையாதலின் "திணியார் மூங்கிலை" ஒத்தது என்க. இனி, அருள் பெருகுமாறு ஐயம் தெளியத் துணிந்து உருகித் தோன்றும் தொண்டர் என்றலுமாம். "புகுந்தும்" என உம்மை விரிக்க. அன்பின்மையின் 'உடல் உயிர் தேய்கின்றேன்' என்க.

சிவலோகம் வேண்டும் என்பது தோன்றச் "சிவனே" என்றருளினர். கழிபேரிரக்கத்தால் 'உடையாய்' என்பதை மறந்தருளினர்.

*திணியார் மூங்கில் - உள்ளீடற்ற மூங்கிலுமாம். அதுபோலத் தாமும் உள்ளீடாகிய அறிவு இலார் எனக் குறிப்பிட்டருளினருமாம். இருபுறமும் நல்லனவாய் இடைப்பட்ட கணுவே தீயதாய் இருக்கும் மூங்கிற்கணு, அடியார் இடைப்புகுந்த அடிகட்கு உவமையாயிற்று.*

*ஊன்றிய திருவடியால் துன்பத்தை மிகுவித்தேனும் உன் அருளுக்குள் வைத்தருள்க என்க. முன்னும்,*

"தணியார் பாதம் வந்தொல்லை தாராய்" (திருச்ச. 89.)
என்றருளினர். "திணியார் மூங்கில்" எனவும் ஆண்டே அருளப்பட்டது.

"ஏற்றுவந் தெதிர் தாமரைத் தாளுறும்" (திருச்ச. 45.)
என்பதும் காண்க. அவ்வூன்றிய திருவடியும் அவர்க்கு இனிதாகலின் "தளிர் பொற்பாதம்" என்றருளினர்.

இனி, அன்பினைத் தருவாயாக; அஃது அரிதாகுமேல் தளிர் பொற் பாதம் தருவாயாக எனக் கொள்ளலுமாம்.

**தாரா அருள்ஒன்(று) இன்றியே தந்தாய் என்றுஉன் தமர்எல்லாம்**
**ஆரா நின்றார் அடியேனும் அயலார் போல அயர்வேனோ**
**சீர்ஆர் அருளால் சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா**
**பேரா னந்தம் பேராமை வைக்க வேண்டும் பெருமானே. 9**

இஃது, அருள்பெற்ற நின் தமரைப்போல யானும் பேரானந்தம் பெற அருள் செய்ய வேண்டும் எனப் பிரார்த்தித்தருளியது.

(பொ - ரை.) சிறுமை பொறுக்கும் பெருமையுடையானே! மிக்க புகழ் நிரம்பிய அருளே பற்றுக்கோடாக என்னுள்ளத்தைத் திருத்தி அடிமை கொண்ட சிவலோகமுடையவனே! இனித் தருதற் குரிய அருள் ஒன்றேனுமின்றி அனைத்தையும் தந்தாய் என்று உரைத்து உன் சுற்றத்தினராகிய அடிக்குரியார் எல்லாம் அவ்வருளை இப்போது நிறைய நுகராநின்றார். (அந்தகோ! நின்னாலாட் கொள்ளப்பட்டு நுகர்தற்குரிய) அடியேனாகிய யானும் அயலவரைப் போல (நுகராமையானும், அவ்வடிக்குரியார்போல அருள் பெறாமை யானும்) அயர்வெய்துவேனோ? எய்தத் தகேன் ஆதலின் நின்னாற் கிடைக்கப்பெறும் பேரானந்தத்தில் மற்றது பெயர்ந்து செல்லா வண்ணம் நிலைபெற்றிருக்க வைத்தல் வேண்டும் எ - று.

(வி - ரை.) "தமர்" என்றது ஐந்திணை அன்பாளரை. "அயலார்" என்றது அந்நெறிக்குப் புறமானவரை. இறைவனும், அவன் தமரும் நுகர்தலைக் கண்டு, தாம் மனம் அயர்ந்தார் என்க. "அயலவர்போல" வென்றருளினர்; தாமும் தமராவர் என இடித்தற் பொருட்டு.

"பேராமை" வைத்திலையேல் சீரார் அருள் சீரழிந்து இகழ்ச்சியைப் பெறும் என்றருளியபடி.

"சிந்தனையைத் திருத்தியாளுதல்" சிவலோகத்தில் இருத்துதற் கென்க.

சிந்தனையைத் திருத்தியாண்டாய்; ஆதலால் நீ பிரிந்ததும் சிந்தனை யும் திருத்தமற்றுப் போயது. ஆதலின் பிரியாதிருந்து "பேரானந்தம் பேராமை வைக்கவேண்டும்" என்க.

மான்ஓர் பங்கா வந்திப்பார்
மதுரக் கனியே மனம்நெகா
நான்ஓர் தோளாச் சுரைஒத்தால்
நம்பி இத்தால் வாழ்ந்தாயே
ஊனே புகுந்த உனைஉணர்ந்தே
உருகிப் பெருகும் உள்ளத்தைக்
கோனே அருளும் காலந்தான்
கொடியேற்(கு) என்றோ கூடுவதே. 10

இது, நான் பயனற்ற கரணமுடையேனாக இருந்தால், அஃது உனக்கும் நன்றாகாதாகலின், அன்பினால் உருகிப் பெருகுகின்ற உள்ளத்தினை நீயே விரும்பி நின்பொருட்டேனும் அருளிச் செய்யும் காலம் என்று கூடும் எனப் பிரார்த்தித்தருளியது.

(பொ - ரை) மான் போன்றவளாய உமைப்பிராட்டியை ஓர் பாகத்துடையவனே! நின் அருளாலே நின்னை வணங்குவார்க்கு அங்ஙனம் வணங்கி வருமாறு இனிமை செய்து அவருக்கு வாழ்வைத் தரும் இனிய நெல்லிக்கனி போன்றவனே! ஆளுவதிற் சிறந்தவனே! தலைவனே! மனம் நெகப்பெறாத அடியேனாகிய யான் துளை செய்யாமையால் பயனற்றுப் போன தோண்டு பாரையை ஒப்பேனாயின், நீ வாழ்ந்தனைபோலும் அன்றே? (அங்ஙனம் அன்றாகலின், நின் வாழ்வின் பொருட்டேனும்) என்னுடலாகிய ஊனினுள்ளே புகுந்திருந்த உன்னை உணர்ந்து, மற்று அவ்வுணர்வினால் உருகிப் பெருகுகின்ற உள்ளத்தை நீ அருளிச்செய்யும் காலந்தானும் கொடியவனாகிய எனக்கு எப்போது கூடுவதாகும் எ - று.

(வி - ரை.) அங்ஙனம் உருகிப் பெருகுகின்ற உள்ளத்தை மிக விரைவில் அருளிச் செய்க எனப் பிரார்த்தித்தருளியவாறு.

மதுரக்கனி, ஔவைபெற்ற அருநெல்லிக்கனி போன்றதென்க. முன் புளித்துப் பின் இனிக்க வல்லது.

யான் மனம் நெகாதவன். அங்ஙனம் நெகுவிக்காமையால் "தோளாச் சுரை ஒத்தால்" என்க; பயன்படாக் கருவியாவேன் என்றருளியபடி. சுரை - தோண்டு பாரை வகையுள் ஒன்று. என்னைக் கருவியாக உடைமைக்குப் பயன் நெக்கு உருகிப் பெருகுதல் என்க. நின் குறிப்பின்வழி நின்று என் மனத்தைத் தோண்டி மாசுகளை மிளிர மிண்டி எறியாவிடின் நினக்கு வாழ்வேது என்க. பணி செய்வியாது கருவியை, மழுங்க வைத்தனை என்க.

ஆருயிரைக் கொண்டு வினை அகற்றுதற் சிறப்புத் தொழில் தோன்ற நம்பி" என்றருளினர்; அஃது இழித்தற்கண் வந்தது.

நின் வாழ்வின் பொருட்டேனும் எனக்கு அருள்செய்க எனக் குறிப் பிட்டருளியவாறு.

அங்ஙனம் நீ செய்யாவிடின் காலம் உன்னைச் செய்விக்கும். அக் காலம் என்று வரும் என்க. 'அக்காலம்' என்றது, 'உழிதருகாலும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும் இழிதருகால'த்தை என்க.

என்னைப் பயன்படுத்திஞல் என் கோவைய் என்றருளியபடி.

இனி, யான் மனத்தால் "தோளாச்சுரை ஒத்தால்" எனக் கொண்டு உரைத்தலும் ஒன்று.

கூடிக்கூடி உன்அடியார்
குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடி வாடி வழியற்றேன்
வற்றல் மரம்போல் நிற்பேனே
ஊடி ஊடி உடையாயொடு
கலந்(து)உள் உருகிப் பெருகிநெக்(கு)
ஆடி ஆடி ஆனந்தம்
அதுவே ஆக அருள்கலந்தே. **11**

இஃது, உன்னடியார் உன்மாட்டுப் பெறுதற்குரிய இன்ப மெல்லாம் பெற்றிருக்க, யான் அது பெறாது வற்றல் மரம்போல் நிற்பேஞ என்றருளியது.

(பொ - ரை.) (அன்பர் பலருள் தமக்கெனச் சிலரை வரைந்து கொண்டு அவர்க்கு அளித்தற்குரிய இன்பப் பொருளை) உடையை யாகிய (தலைமகனாகிய) நின்னுடன், (உன்னால் வரைந்து கொள்ளப் பட்ட) உன்னடியார், (நின்னைப் பெறும் பொருட்டு) ஊடிக்கொண் டும், ஊடிக்கொண்டும், அது நீக்கிக் கூடிக்கொண்டும், அக்கூட் டறவினால், உள்ளம் உருகி நெக்குப் பூரிப்படைந்து நின்னை நீங்க விடாராய் அவ்வின்பத்துள்ளே தோய்ந்தும் தோய்ந்தும் பெற்ற அவ் வானந்தமே மறித்தும் நின் அருளுடன் கலந்து ஆகும் வண்ணம் உன்னைக் கூடிக்கொண்டு கூடிக்கொண்டு நகைமொக்குள் செய்வா ராகிப் பின்னர் உவகை மலர்ந்தவராய், மகிழ்ச்சியடைவார்களா? அதனைக் கண்டு பல்காலும் வாட்டமடைந்து, வாயிலாக அனுப்பும் வழியற்ற யான் அன்பின் பயன் துய்க்காது வற்றி மரம்போல் நிற்பேஞ எ - று.

(வி - ரை.) அளவிறந்த உணர்ச்சி வேகத்தால், இன்னே அவன் பால் வலிதிற் சென்று முறையிட்டு அருள் பெறுவேன் என நுதலிப் புகுந் தருளினர். ஆதலின் இத்திருப்பாட்டு வேண்டுகோட் பத்துள் சேராது

வேருக நின்றதென்க. இதுபற்றியே "பிரார்த்தனைப் பத்து" என்றது என்க. இங்ஙனம் உரையாக்கால் பத்து என்றது வ்றிதுபடும். ஆதலின் அடிகட்கும் அதுவே கருத்தென்க.

அவனைத் தில்லையம்பலத்தே கண்டார் ; அங்ஙனம் காணப்பட்டவன் தன்ஞல வரைந்து கொள்ளப்பட்ட அடியவருடன் அங்ஙனம் கூடித் திளைக்கின்ருன். அதனுல் அடிகட்கு உணர்ச்சி வேகமுண்டாயிற்று. அப்போது ஒப்ப வரைந்துகொள்ளப்பட்ட நம்முள் அவர்கள் அங்ஙனம் இன்புற, யான் இங்ஙனம் உலர்ந்து நிற்பேனே என்ற உணர்ச்சி பிறக்கிறது. அவ்வுணர்வொடு நுதலிப் புகுந்து வேண்டுதல் செய்துகொண்டனவாகிய பத்துத் திருப்பாடல்களை அருளிச் செய்தார் எனக் கொள்க. அங்ஙனம் அருளியவாற்ருனே வேகமடங்கப் பெற்றருளினர் என்பதும் கொள்க.

குனித்தல், சிரித்தல், களித்தல் என்பவை முறையே உயர்ந்து தோன்றும் மெய்ப்பாடுகள்.

" வன்பாற்கண் வற்றல் மரம்போல் " (குறள். 88.) என்க.

திருச்சிற்றம்பலம்

# குழைத்த பத்து

"குழைத்த பத்து"என்பது தன் அறியாமையாற் குழைவதை நீக்காது வஞ்சித்தமை தோன்ற விண்ணப்பித்த பத்துத் திருப் பாட்டுக்களையுடைய பகுதியாம்.

முன்னைப் பத்தாற் பிரார்த்தித்தும் பயன் பெற்றிலாத அடிகள் மனங்குழைந்தருளினர் என இயைபு கண்டுகொள்க.

இப்பகுதித் திருப்பாட்டுக்களும் அந்தாதித் தொடையால் அமைந்துள்ளன.

அன்று என்னைப் பணிகொண்ட நீ இன்று குழைப்பது என்னை (10) எனவும், என்னை ஆள்பவனே, நான் பிழை செய்தால் நீ பொறுக்க வேண்டாவோ (1) எனவும், குன்றேயனைய குற்றங் களையும் நீ குணமாகக் கொண்டால் என் (3) எனவும், அடியேனது அல்லல் அனைத்தும் அகல என்னை முன்னர் ஆண்டாய் என யான் நினைத்திருந்தேன், நீ இன்னும் என்னுடலைச் சிதையாதது எதற்கு (2) எனவும், எல்லாம் நீயேயாயிருத்தலின் நான் திகைத்தால் நீ நீக்கவேண்டாவோ (5) எனவும்; அவ்வாறு நீக்காத தோடு நின் சீரையும் யான் மறக்குமாறு செய்தாய் (4) எனவும், உன்னிடத்தில் எல்லாவற்றையும் ஒப்படைத்த யான் இவ்வாறெல் லாம் ஆராய்ச்சி செய்தல் தக்கதன்று (8) எனவும், எல்லாம் உன்னிடத்தில் ஒப்படைக்கப்பட்டபடியால் எனக்கோர் குறையில்லை யென்றிருப்பதே தக்கது (7) எனவும், கழலிணைகளைக் கண்ட யான் அவற்றையே நினைத்திருப்பதல்லது செத்திலாததும் வாழாததும் புணர்ச்சியும் ஆகிய இவை பலவற்றையுங் கூறுதல் தக்கது அன் றெனவும் (9), வேண்டத்தக்கது அறிபவனும் வேண்ட முழுதும் தருபவனும் ஆகிய நீ விரும்பி அருள் செய்வதைக் காண்பதே யல்லாமல் உன்னிடம் வேண்டுவதற்கு யாதுதான் உளது, அவ்வாறு உளதாயின் அதுவும் உன் திருவருளேயாகும் (6) எனவும் இயற்கைப் பொருள்களை ஒழுங்குபடுத்தி விரித்துரைத்துக்கொள்க.

இனி இப்பகுதியில் அமைந்த நூற்பொருளடைவிற்குக் காரணம் வருமாறு :—இயற்கைப் பொருளடைவில் இரண்டாவ தாகிய "குழைப்பது நீயெனிற் புரப்பது யாரெனல்" என்பது, பிரார்த்தனைப் பத்து இறுதியில், "வற்றல் மரம்போல் நிற்பேனோ" என்று அருளியவர் யான் அழைத்தால் (நின் அருளின்றி) பயன் என்னை, நீ வாட்டினுற் பிறர் தழையச் செய்வாரோ, என வினவி

யருளிய இயைபால் ஈண்டு இப்பத்திற்கு முதலாவதாக அமைவ தாயிற்று.

இயற்கைப் பொருளடைவில் நான்காவதாகிய, "புல்லுடல் போக்கிலே என்றே என்னைப் பணிகொள்ளாது ஒறுப்பது போதுமோ வெனல்" என்பது, எனை வாட்டினை; அழைக்கவும் வந்திலை, என்னைக் கொன்றுவிடு எனக் கூறும் இயைபால் ஈண்டு இரண்டாவ தாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் மூன்றுவதாகிய, "குற்றம் குணமாக் கொள்ளில் என் குறை உற்றிடும்? நின்னருள் வற்றியதோ வெனல்" என்பது, என்னைச் சிதையாவிடின் குற்றம் பொறுத்து ஆளல் வேண்டும்; என்னை வருத்தாது ஆட்கொள்ளின் உனக்கு வரும் குறை ஒன்றேனும் இல்லை. அவ்வாறு அருள் செய்யாமை யால் உன்னிடம் அருள் வற்றிப்போய்விட்டதோ, அங்ஙனம் இல்லாதிருக்கவும் இவ்வாறுதல் வஞ்சமே என்னும் இயைபால் மூன்றுவதாக வைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஆறுவதாகிய "நினை மறப்பித்து நீள் பவத் திருத்தினை; அது விடுத்தருள் பொழுது எப்பொழுதெனல்" என்பது, அப்பொழுதும் அவமே பிறப்பித்தவனும் நீ, இப்போது வாட்டுவோனும் நீ; ஆதலின் நீயொரு குறும்பன்போலும் என்னும் இயைபால் நான்காவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஐந்தாவதாகிய "அனைத்தும் நீயாக அகன்றனை ஆதலின் தேற்றவேண்டாவோ திகைப்பேனை என்றல்" என்பது, வாளா பிறக்க வைக்கவும் மயங்க வைக்கவுஞ் செய்தலில் தீயனுமாய் நல்லோரை ஆட்கொள்ளலில் நல்லனுமாய் இருக் கின்றுய் எனக் கூறிய இயைபால் ஐந்தாவதாக அமைத்தருளப் பட்டது

பொருளடைவிற் பத்தாவதாகிய, "என் விருப்பு என்பது ஒன்று அமையுமேல் அதுவும் உன் விருப்பன்றே என்றல்" என்பது, இங்ஙனம் தேற்றுது திகைக்க வைப்பதும் நின் திருவருள் போலும் என உணர்ந்தனன் எனக் கண்ட இயைபால் ஆறுவதாக அமைத்தருளப்பட்டது.

"ஏது நீ செய்யினும் எனக்கென் என்றல்" என்பது, நின் விருப்பப்படியே எல்லாம் நிகழ்வதனுல் எல்லாப் பொறுப்பும் நின்பாலதே என்னும் இயைபால் ஏழாவதாக அமைத்தருளப் பட்டது.

பொருளடைவில் ஏழாவதாகிய "காயத்திடுதல் வீட்டுளிருத்தல்

ஆயவெல்லாம் உன் அதிகாரம் எனல்'' என்பது, அடியானுக்கு அதிகாரமும் இல்லை, ஆராய்வும் இல்லை என்னும் இயைபால் எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஒன்பதாவதாகிய, ''ஆக்கம் நான் பெற அணுவு எண்ணேன் எனல்'' என்பது, அங்ஙனம் என் செயலில் தலைப்பட்டு அதிகாரமுடையான்போல் ஆயப் புகுவேன் எனில் அடிமை இழிவு பட்டு ஆக்கம் இழிவு அறியேனாவேன் என்னும் இயைபால் ஒன்பதாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் முதலாவதாகிய ''வலிதிற் பணிகொண்டு குழைத்தனை நீயெனல்'' என்பது, நன்று தீது பேசாத நீ என்னை வலிதிற் பணிகொண்டு என்னை ஏன் குழைத்தாய் என்னும் இதனாலே என்னை முற்றும் அவன்பால் ஒப்படைத்தற்கு மனச் செவ்வி பெற்றிலேன் என்னும் இயைபால் பத்தாவதாக அமைத் தருளப்பட்டது.

இயற்கைப் பொருளடைவு ஆதியனவற்றின் அட்டவணை வருமாறு :—

| இ. பொ. அடைவு | நூ. பொ. அடைவு | இ பொ. அடைவு | நூ. பொ. அடைவு |
|---|---|---|---|
| 1 | 10 | 6 | 4 |
| 2 | 1 | 7 | 8 |
| 3 | 3 | 8 | 7 |
| 4 | 2 | 9 | 9 |
| 5 | 5 | 10 | 6 |

ீது திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# ஆத்தும நிவேதனம்

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

குழைத்தால் பண்டைக் கொடுவினைநோய்
  காவாய் உடையாய் கொடுவினையேன்
உழைத்தால் உறுதி உண்டோதான்
  உமையாள் கணவா எனைஆள்வாய்
பிழைத்தால் பொறுக்க வேண்டாவோ
  பிறைசேர் சடையாய் முறையோஎன்(று)
அழைத்தால் அருளா(து) ஒழிவதே
  அம்மா னேஉன் அடியேற்கே.

பது, என்னையுடையையாகிய நீ, யான் வினையாற் குழைவுற்று வருந்தும்போது அழைத்தால், அருள்செய்யாது விடுவதோ முறைமையான செயல் என அடிகள் இறைவனுக்கு அருளிச்செய்தது.

(பொ - ரை.) கொடிய வினைத்தொடர்புடையேனை ஆளு மாறுடையவனே! உமையாளுக்குக் கணவனே! என்னை ஆளு வோனே! பிறை சேர்ந்த சடையுடையவனே! அம்மானே! பழைய கொடியவினை என்னைக் குழைத்தால் நீ அங்ஙனம் குழையாவாறு காவல் செய்வாயல்லை. அப்படியிருக்கும்போது கொடிய வினைத் தொடர்பை உடையவனாகிய யானே அதன் குழைவுறுத்தும் செயலை நீக்க முயன்றால் உறுதிப்பயன் ஏதாவது உண்டோதான் உண்டா காதன்றே? (இனி நீதான், யான் பிழை செய்துவிட்டேன்; என்னைக் கடைக்கணித்தல் எற்றுக்கு என்று இருப்பையேல்) யான் பிழை செய்தால் அதனை நின் பெருமைக்கேற்பப் பொறுத்துக் கொள்ள வேண்டாமோ? வேண்டியதொன்றாதலின், இங்ஙனம் யான் குழைக்கப்பட்டிருத்தல் முறையாகுமோ என்று கூவியழைத் தால் உன் அடியவனாகிய எனக்கு அருள்செய்யாதொழிவதோ நின் முறைமையான செயல் எ - று

(வி - ரை.) வினையோடும் ஏற்றுக்கொண்டவனை "உடையாய்" என்றும், அவன் இப்போது அயன்மை செய்தலால் "எனை யாள்வாய்" என்றும், தக்கன் பகையோடு அராவின் பகையையும் ஒலமிட்ட பிறைக்கு நீக்கியருளியவன், தாம் முறையிட்டழைத்தும் வினைப்பகை கடிந்திலனாத லின் "பிறைசேர் சடையாய்" என்றும், குழைத்தால் தேற்றவேண்டிய

அருளுடையவன் என்பார் "உமையாள் கணவா" என்றும், சிறுமையுடையேன் பிழைகளைப் பொறுத்தற்கு உரியோனாதலின் "அம்மானே" என்றும் அழைத்தருளினர். விளிகள் எல்லாம் இழித்தற்கண் வந்தன.

'நினக்கு வேண்டியாங்கு குழையவேண்டிய என்னை வினை தனக்கு வேண்டியவாறு குழையச் செய்தால்' என்க.

'குழையச் செய்தால் காவாய்; ஆனால் உடையாய். நின் வன்மையும் உடையவனும் திறனும் அழகிய!' வென்க.

அடியேன் அல்லல் எல்லாம்முன்
அகல ஆண்டாய் என்றிருந்தேன்
கொடிஏர் இடையாள் கூறுஎங்
கோவே ஆஆ என்றருளிச்
செடிசேர் உடலைச் சிதையாதது
எத்துக்(கு) எங்கள் சிவலோகா
உடையாய் கூவிப் பணிகொள்ளா(து)
ஒறுத்தால் ஒன்றும் போதுமே. **2**

இது, நீ என்னை ஆண்டாய்போலப் பண்ணி ஒறுத்துக் கொண்டிருத்தல்மட்டும் அமையாது, அன்புப் பணி கொள்ளுதலும் வேண்டுமென்று அருளியது.

(பொ - ரை) கொடிபோல் இடையுடையாளாகிய உமாதேவி பாகனே! எம் தலைவனே! எங்களுக்கு ஊராகத் தருதற்குரிய சிவலோகத்தை உடையவனே! என்னை ஒறுத்தற்குரிய அடிமையாக உடையவனே! முன்பு நீ அடியேனுடைய துன்பங்கள் யாவும் அகன்றுபோமாறு ஆ! ஆ! என்று இரங்கி அருளிச்செய்து ஆட்கொண்டு விட்டனை என்று நம்பி வாளாவிருந்தேன் யான், அங்ஙனம் ஆட்கொண்ட நீ வினை சேர்தற்கு இடமாகிய உடலினை அழியாதது எதன் பொருட்டு? (என்னை ஆண்டாய் போல வஞ்சித்து என்னை வினையில் அழுத்தி வருத்துதற்பொருட்டன்றே? அங்ஙனமே யாமெனின்) என்னை அழைத்து அற்புப் பணி கொள்ளுதலாகிய (அருட்செயலும் ஒன்றிருக்கிறதே) அதனையும் இடையிடையே செய்யாது ஒறுத்தலாகிய ஒன்றைமட்டும் நாள் முழுவதும் செய்தால் அஃதொன்றுமே அமையுமோ எ - று.

(வி - ரை.) நீ என்னுடைய துன்பங்கள் முழுவதும் அகலுமாறு ஆண்டு தீர்த்துவிட்டாய். ஆதலின் இனிச் செய்யவேண்டியதென்? யாதொன்றுமில்லை என்று கருதி வாளாவிருந்தேன் என்றார் என்க.

'அக்காலை உடல் என்னைத் தன் வயமே ஈர்த்து அல்லலுட் செலுத்தா நின்றது. நிற்றலும், அவன் என்னை ஆண்டான்! உடல் என்னை ஈர்க்

கின்றது ! இஃது என்னை !' எனச் சிந்தித்தலும் நின் வஞ்சம் புலனாயிற்று. நீ என்னை ஆண்டது உண்மையாயின் உடலைச் சிதைத்திருத்தல் வேண்டும். அதுதான் ஆட்கொள்ளுமாறு. ஆட்கொண்டான் என்றால் அதன் பொருள் என்னை ? உயிரை உடலினின்றும் விடுவித்துத் தன் கீழ் வைத்துப் பணிகொண்டான் என்பதன்றே ? உண்மை அங்ஙனமாக, என்னை ஆண்டமுறை அங்ஙனம் அன்று. உயிரையும் உடலையும் உறவு படுத்திவிட்டு ஒறுக்கின்றாய். ஆதலால் என்னை ஆண்டவகை வஞ்சமுடைத் தாயிற்று. அதனால் உடலைச் சிதையாதது எற்றுக்கு என்னும் ஐயவினா எழலாயிற்று என விரித்துரைக்க.

''ஆஆ'' என்று இரங்கியமையும் வஞ்சமுடைத்தாயிற்று என்க.

எல்லா அல்லலும் புகுதற்கிடம் உடலாதலின் '' செடிசேர் உடல் '' என்று அருளப்பட்டது. 'செடிசேருடலைச் சிதையாதே அல்லலெல்லாம் அகல ஆண்டதெவ்வாறு ?' என்க.

நீ பெரியோனாதலின் வஞ்சியாய் எனத் துணிந்து இவ்வாராய்ச்சியை முன்னர் நிகழ்த்தாதே இருந்தேன் என்க.

இவற்றால் என்னைப் '' பணிகொள்ளுதல் '' நின் கருத்தன்று என்பதும், '' ஒறுத்தலே '' நின் கருத்தென்பதும் பெறப்பட்டவாறாயிற்று ; இங்ஙனம் ஒறுத்தல் ஒன்றுமே அமையுமோ என்று வினவியருளியபடி. நாள் முழுவதும் ஒறுத்தால் அருளுவது என்று ? அடித்தற்குமட்டு முரியாய் ; அணைத்தற்குரியை யல்லையோ என்றருளியவாறு.

உடலைச் சிதைத்தல் உயிரை மண்ணுலகின் நீக்கிச் சிவலோகத்தில் வைத்தற்காதலின் '' எங்கள் சிவலோகா '' என்றருளினர்.

ஒன்றும் போதா நாயேனை
  உய்யக் கொண்ட நின்கருணை
இன்றே இன்றிப் போய்த்தோதான்
  ஏழை பங்கா எங்கோவே
குன்றே அனைய குற்றங்கள்
  குணமாம் என்றே நீகொண்டால்
என்தான் கெட்ட(து) இரங்கிடாய்
  எண்தோள் முக்கண் எம்மானே. 3

இஃது, அன்று என்னிடம் காணப்பட்ட குற்றங்கள் எல்லாவற்றையும் குணமேயாகும் எனக் கொண்ட நின் கருணை, இன்றைக்கும் அங்ஙனமே கொண்டு ஆட்கொள்ளுமானால், அதனால் வரும் கேடென்ன என்றருளியது.

(பொ - ரை ) ஏழை பங்கா ! எங்கோவே ! எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் உடைய எம் பெரியோனே ! ஒன்

றுக்கும் பற்றுத நாயேனை உய்யுமாறு ஆட்கொண்ட நின் கருணை யானது இன்றைக்குத்தான் இல்லாமற் போனதோ? என்மாட்டுப் பொருந்தியுள்ள மலையினை ஒத்துப் பெருகிய குற்றங்கள் எல்லாம் குணங்களேயாகும் என்று அன்புடன் ஏற்றுக்கொண்டால் நின் பெருமையில் கேடுற்றதெது? கேடென்பதின்றி இன்னும் பெரு மையே மிக்குவருமாதலின் இரங்கியருள் செய்யாய் எ - று.

(வி - ரை.) "ஒன்றும் போதா நாயேன்" என்றது குற்றமே உரு வாகிய நான் என்பது குறித்துநின்றது. அத்தகையேனை உய்யக்கொண்ட கருணையாகலின் வற்றுத கருணை என்க. கருணை என்னுது "நின் கருணை" என்றருளினர், தம்பால் அன்று இரங்கினுன்போல இருந்த அவன் இன்று தொடர்பினை மறந்தான்போல வாளாவிருத்தலின்.

"இன்று" என்பது பொறுக்கொணுத அல்லல் சூழ்ந்த அவதரத்தை உணர்த்திநின்றது. இன்றே இன்ருே அல்லது அன்றும் இன்ருே என்க. வஞ்சம் என்பது புலனுயிற்று. நீ இன்பங் கருதியபோது குற்றங்களைக் குணமெனக் கொண்டு எல்லாக் கருணையும் செய்வை. யான் அல்லற்படும் போது கேட்டால் அயன்மை செய்து குற்றம் பார்ப்பை என்றருளியவாறு.

இன்றிப்போகவில்லை; இருக்கின்றது; ஆனுல் நீ மனங்கொள்ள வில்லை; கொள்ளாமைக்குக் காரணம் என்? "குன்றே யனைய குற்றங்கள்" போலும். அங்ஙனமாயின் பண்டு குற்றமே உருவாய என்னை உய்யக் கொண்ட காரணமென்ன? இன்னவற்றுல் குற்றம் காரணமன்று; நின் அன்பின்மையே காரணமாயிற்று; ஆதலால் பண்டுபோலக் குற்றங்களைக் குணமெனக் கொண்டு "இரங்கிடாய்" என்க. இது குணம், இது குற்றம் எனக் காணும் முடிபு உன் இச்சையே ஆகலானும், அவற்றை எங்ஙனம் கொள்ளினும், இங்ஙனம் ஏன் கொண்டாய் எனக் கேட்பார் பிறர் இன்மை யானும், என் குற்றங்களைக் குணமெனக் கொள்ளலும் நினக்குக் கேடு பயவாதே அமையும் எனத் தலைமை சுட்டியவாறும் கொள்க. "என்தான் கெட்டது" என்பது பெருமையே மிகும் என்னும் பொருள் பயந்து நின்ற தென்க. "குன்று" அளவின்மையும் திண்மையும் குறித்து நின்றது. அங் ஙனம் நின்றதேனும், குன்றேயனைய குற்றங்கள் செய்யினும் பொறுக்க வேண்டிய கடப்பாடுள்ள நீ, ஓரிரண்டு குற்றங்கள் செய்தமைக்கு வெகுண்டு ஒறுக்கின்ருய் என்பதே கருத்தாகக் கொள்க.

'போயதோ' என்பது "போய்த்தோ" என நின்றது. பொய்த்ததோ என்பதும் ஞாபகம்.

அபலை என்பதும், நின் வயப்பட்டாள் என்பதும் தோன்ற "ஏழை" என்றும், யாண்டும் விடாது தொடர்தலின் பங்கா என்றும் அருளிச் செய் தனர். அவன் அடியார்பொருட்டு இரங்கி யாண்டது உண்மையாகலின் 'என் கோவே' என்னுது "எங்கோவே" எனவும் "ஏழை பங்கா" எனவும் கூறியருளினர்.

"எண்டோள் முக்கண் எம்மானே" என்றது தியான குற்றங்களை எரித்தற்குக் கண்கள் இருந்தும், தாங்கற்குத் தோள்கள் இருந்தும், பொறுக்கப் பெருமை இருந்தும் பயன்பட்டில என்க.

மான்நேர் நோக்கி மணவாளா
மன்னே நின்சீர் மறப்பித்(து)இவ்
ஊனே புகஎன் தனைநூக்கி
உழலப் பண்ணு வித்திட்டாய்
ஆனால் அடியேன் அறியாமை
அறிந்து நீயே அருள்செய்து
கோனே கூவிக் கொள்ளும்நாள்
என்றுஎன்று உன்னைக் கூறுவதே. 4

நின் விளையாடல் எனக்குப் பொறுக்கொணு வருத்தம் தருதலின், என்னை நின்பால் அழைத்துக்கொள்ளுதலும், நான் நின் விளையாட்டின் திறங்களைப் புகழ்ந்து கூறுவதும் என்று நிகழ்வனவாகும் என்றருளியது.

(பொ - ரை) மான்போன்ற வெருண்ட பார்வையினையுடையளாகிய உமாதேவி மணவாளனே! மன்னவனே! தலைவனே! நின் இயல்பினை யான் மறக்குமாறு மாயை செய்து, அவ்வாற்றானே இவ்வூனுடலுட் புகுந்து பிறக்குமாறு என்னை உன்னினின்றும் நீங்கச் செய்து உழன்று திரியப் பண்ணினாய். அஃதமையும். ஆனால் (அங்ஙனம் உழலும்போது நீக்கியவாறே தூக்கியணைத்தலும் வேண்டும். அது செய்யாமை அமையாததொன்று ஆதலின் நீக்கப்பெற்ற) அடியேனுடைய (நின்னைப் பிரிந்து அதிக தூரம் சென்றமையால் வந்த) அறியாமையை நீயே அறிந்துகொண்டு (இன்னமும் இங்ஙனம் விட்டு விளையாடல் செய்தல் தகாதென்று கருதி அறியாமை நீங்க) அருள் செய்து, (இங்கே வா வெனக்) கூவிக்கொள்ளும் நாள் எந்நாள்? யான் நின்னுடன் ஒப்பவிருந்து நின் விளையாடல் திறங்களையெல்லாம் புகழ்ந்து கூறும் நாள் எந்நாள் எ - று.

(வி - ரை.) "நீக்கி முன்னெனை" (அதிசயப். 8.) என்னும் திருப்பாடலையும், அதனுரையையும், ஆண்டெடுத்துக் காட்டிய சம்பந்த சுவாமிகள் திருப்பாடலையும் ஈண்டு நினைத்துக்கொள்க.

நூக்குதல் - நீக்குதல்; தள்ளுதல். நின்சீர் - நின்னியல்பு.

ஊனின் கொடுமையும் அருவருப்பும், அவ்விடத்துப் புனிதமும் தோன்ற இவ் "ஊன்" என்றருளினர்.

என்தனை - நின்சீர் மறவாது நின்னுடனிருந்த என்தனை.

ஊன்புக நூக்குதலும், நூக்குதற்குரிய அதிகாரமும், நடுவுநிலையு முடையனுதலின் " மானேர் நோக்கி மணவாளா மன்னே " என்றருளினர். இவ்விளையாடற் கருத்தாவாகலின் " கோன் " என்றருளினர்.

'சீர் மறத்தல்' என்றது அன்பின் ஐந்திணைத் துறைகளுள் ஆழ்ந்து அமைந்துவந்த சிறப்புக்களைத் தாம் மறந்திருத்தலை.

" நின்சீர் " மறந்தாங்கே மாயை எனைப் பற்ற, யான் ஊனுடலுட் புகுந்து நின்னைப் பிரிந்து நெடுந்தூரம் போய்விட்டேன் ; அதனால் உழல் கின்றேன் ; யான் மறப்பினும் நீ மறவாது என்னைக் கண்டறிந்து இன்புறுவை ; என்னை ? விளையாட்டாகலின். நினக்கு விளையாட்டாயினும் எனக்குத் தாங்கற்கரிய வருத்தமாயிற்று. ஆதலின், இவ்விளையாடலை நிறுத்தி அறியாமை தீர அருள்செய்து, இனிப் போதும் இங்கே வருதி என்று அழைத்துக் கொள்ளும் " நாள் " என்று என்க.

அறியாமை அறிந்து - இது விளையாடல் என்பதை அறியாமையால் வருந்துகின்றுன் எனவும், அது தன்னுலாயதெனவும் அறிந்து. அறிந் தாங்கே அருள் பிறக்குமாதலின் "அறிந்து அருள்செய்து" என்றருளினர். இஃது, தோற்றத்தில் நீ விளையாட வந்தாயேனும் ஒடுக்கத்தில் நிலை பெறறிருக்கும் நின்னை எனக்குமாகும்படி செய்க என்பதை உட்கொண்டு கூறியருளியதாம்.

"கூவிக்கொள்ளும்" என்றமையால் நெடுந்தூரம் பிரிந்து போனமை பெற்றும். அதுவும் அவன் இச்சையே என்க.

கூறுவது - புகழ்ந்து கூறுவது. அஃதாவது, விளையாடல் முடிந்த தும், அவன் அழைத்து அருகுறவைத்து, புன்னகையோடு 'நெடுந்தூரம் பிரிந்து இளைத்துவிட்டனை, பேதாய் ! இங்ஙனம் இருந்த நின்னை, இங்ஙனம் மயக்கி, இங்ஙனம் விளையாடல் செய்தேன்' எனத் தன் புணர்ப்பை விளங்க உரைத்து, பல்லாற்றுனும் முயன்று ஊடல் நீக்கி, அருள்செய்து அமர்ந்துழி, அவன் ஆற்றலை வியந்து புகழ்தல் என்க. உழலப்பண்ணுவித்தமையை அறியினும், சீர் மறப்பித்த புணர்ப்பை யாரும் அறியாராகலின், அதனை அவன்பாற் பெற்றுப் பெற்றபின் கூறுவது புகழ் என்க. அது மேலான இரகசியம். " உன்னை " என் றருளினர், அவனுற்றல் தோன்ற. திருமால் நாரத முனிவரை இங்ஙனமே விளையாட்டாக மயங்கவைத்தாண்ட வரலாறு சிவபுராணத்துள் விரித்துக் கூறப்பட்டது.

'கூவிக்கொள்ளும் நாள் என்று, உன்னைக் கூறுவதென்று' என முடிக்க.

கூறும் நாவே முதலாகக்
　　கூறும் கரணம் எல்லாம்நீ
தேறும் வகைநீ திகைப்புநீ
　　தீமை நன்மை முழுதும்நீ

வேருேர் பரி(சு)இங்(கு) ஒன்றில்லை
மெய்ம்மை உன்னை விரித்துரைக்கில்
தேறும் வகைஎன் சிவலோகா
திகைத்தால் தேற்ற வேண்டாவோ. 5

இஃது, உடலுறுப்புக்கள் யாவும் அவற்ருலாம் நன்மை தீமைகளும் திகைப்பும் தெளிவுமாகிய எல்லாம் நீயாகவே இருப்பினும், தெளிவடையும் வகையறியாது திகைத்தால் தேற்றவேண்டாமோ என்றருளியது.

(பொ - ரை.) சிவலோகா ! மெய்ம்மையாகிய உன்னை விரித்து உரைக்கப் புகின், கூற்றுக்களை நிகழ்த்துகின்ற நா முதலாகக் கூறப்படுகின்ற கருவிகள் எல்லாம் நீயாவை, தீமைகளும் நன்மைகளுமாகிய செயல்களும் நீயாவை, மயக்கமும் நீயாவை, அம்மயக்கம் நீங்கித் தெளிவடைதற்குரிய உபாயமும் நீயாவை, (அங்ஙனமன்றி) இங்கு (நின்னின் நீங்கிய) வேருேர் இயல்பும் இல்லை. (இங்ஙனமாக ஏனையவற்றின் நீக்கித்) தேறுதற்குரிய உபாய நெறி என்று சொல்லப்படுவது என்ன? (இதனை அறியாது யான் திகைக்கின்றேன்,) அங்ஙனம் திகைத்தால் திகைப்பற்ற நீ தெளியச்செய்ய வேண்டாமோ எ - று.

(வி - ரை.) " கூறும் நாவே முதலாகக் கூறும் கரணங்கள் " என்றது தொழிற்கருவிகள் ஐந்தனையும். உடம்படு புணர்த்தலால் அறிதற் கருவிகளும் அந்தக் கரணங்களும் கொள்ளப்படும். "தீமை நன்மை" என்றது புலன்களை. அஃதாவது இன்பமும் துன்பமுமாகிய இருவகையறிவுகள். திகைப்பும் தெளிவும், அக்கருவிகளைக்கொண்டு, அவ்வின்ப துன்பங்களை நுகர்தற்கண் ஆவன. பின்வந்த தேறும்வகை யென்றது, முத்தித் தெளிவிற்குரியதை என்க. என்னை ? தேறும்வகை நீ, திகைப்பும் நீ என உடன்பாடும் எதிர்மறையுமாக முற்கூறுதலின். இத்தெளிவுகள் இரண்டும் வேறு வேறென்க. இதுவும் மந்தணம் ஆதலின், அஃதறியாது " திகைத்தால்," அஃதிதுவென்று கூறித் " தேற்றவேண்டாவோ " என்க.

" மெய்ம்மை விரித்துரைத்த "லாவது பிரமத்தின் இயல்பு கூறுதல். விசுவரூபம் கூறியருளியவாறும். உபசரித்துக் கூறும் ஏனைய இயல்புகளைக் கொண்டு மயங்கற்க என்பார் " வேருேர் பரிசிங்கில்லை " எனத் தெளிவுறுத்திஞர். இஃதுண்மை கூறுதல் என்க. மெய்ம்மை - பிரமம்.

விரித்துரைக்கப் புகின் இவையும் இவையும் இவையும் நீயாவை ; தொகுத்து ஒன்ருக உரைக்கப் புகின் "மெய்ம்மை" எனப்படுபவை என்க. ஆதலானன்றே " மெய்ம்மை உன்னை விரித்துரைக்கின் " என்றருளியதூஉமென்க.

இனி, உன்னை விரித்துரைக்கின் " கூறும் நாவே...கரணம் எல்லாம்

நீ...முழுதும் நீ" என்பதே மெய்ம்மை. அதுவன்றி வேறோர் பரிசில்லை என்று உரைத்தலும் ஒன்று.

இங்ஙனம் இரட்டை இரட்டையாக வருகின்றவற்றின் நீக்கி உரைக்கப் படும் "தேறும் வகை" என்க.

இம்மெய் வடிவமாக இருப்பின் உன்னை எங்ஙனம் அறியவல்லவனாவேன்? இதை விடுத்து இப்போது தலைமகனாக வந்து தேற்றுக என்பதே குறிக்கோள் என்றுணர்க.

எல்லாம் நீயாக இருப்பவும் யான் கலங்குகின்றேன். என்னைத் தேற்று என்க.

வேண்டத் தக்க(து) அறிவோய்நீ
வேண்ட முழுதும் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற்(கு) அரியோய்நீ
வேண்டி என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயா(து) அருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டின்அல்லால்
வேண்டும் பரி(சு)ஒன்(று) உண்டென்னில்
அதுவும் உன்தன் விருப்பன்றே. 6

இஃது, உலகத்து நிகழ்ச்சிகள் எல்லாம் அவன் இச்சையேயாம் என்றருளியது.

(பொ - ரை.) வேண்டத் தக்கனவற்றை அறிவோயும், வேண்டத் தக்கனவற்றை வேண்டுதல் செய்ய வரையாது கொடுப்போயும், வேண்டத் தக்கனவற்றை வேண்டியபின்றை, வேண்டத் தகாததை நின்னை வேண்டுதல் செய்கின்ற அயன் திருமால் என்பவர்க்கு அரியை யாவோயுமாகிய நீ, யான் வேண்டாதிருப்பவும் நீயாகவே என்னை விரும்பிப் பணிசெய்விக்குமாறு அமைத்துக் கொண்டாய். ஆதலால் நீயாகவே விரும்பி எதனை அருள் செய்தனையோ அதனையே யானும் விரும்பி மேற்கொள்ளுதல் அன்றி, யானாகவே வேண்டுகின்ற இயல்பு ஒன்று உண்டென்னில் அவ்வியல்பும் உண்மையாகவே உன்னுடைய விருப்பமேயாகும் அன்றோ எ - று.

(வி - ரை.) "வேண்டத் தக்கது" என்றது, உயிர்கள் தம் செவ்விக்கேற்ப வேண்டத்தக்கனவற்றை என்க; சாதியொருமை. அவை பொருளும் போகமும் முதலாயின. வேண்டுவார் வேண்டுவதை வரையாது கொடுப்பவன் என்க. அவனே கொடாமையுமுரியன். அது செவ்வி இன்றென்றாக வேண்டப்படுவது பிரிதொன்றாய விடத்தென்க. இது குறித்தே "அயன் மாலுக்கரியன்" என்று அருளப்பட்டான். யாதும் வேண்டாதானைப் பணி

கொள்ளலும் உரியன். என்னை ? தன்னை வேண்டாத என்னைத் தானே வேண்டிப் பணி கொள்ளலின். இங்ஙனம் செவ்விக்கேற்ப நல்கலும், செவ்விக்கேலாதவற்றை நல்காமையும், வேண்டியவாறு பணி கொள்ளு தலும் ஆதியவெல்லாம் அவன் இச்சையாகும் என்க. ஆதலால் அவன் வேண்டியதையே வேண்டினல்லது, யான்வேறு வேண்டுவதோர் இயல்பும் உண்டென்னில் அதுவும் அவனிச்சையே யன்றிப் பிறிதாகாது என்க.

முந்திய திருப்பாடலால் கரணங்களும் தீமை நன்மைகளும், தேற்றமும் திகைப்பு மாதியவெல்லாம் அவன் என்றருளியவர், இத்திருப்பாடலால் அப் பிரவர்த்திக்குக் காரணம் அவன் இச்சையே என்றருளினர் என்க.

நல்கலும் நல்காமையுமுரிய நீ என்னைப் பணிகொண்டாய் என்றருளுத லால், தம் செவ்வியுடைமை குறிப்பிற் புலப்பட வைத்தருளினர் என்க. தமது வேண்டுகோளும் பணிகொள்ள வேண்டுமென்பதே என்பதும் பெற்றும். இவற்றைக் கூருதொழிந்தருளினர் கூறுதல் செவ்வியன்மை யின். இங்ஙனமாதல் உண்மையெனின், என் விருப்பமும் அவன் விருப்பமேயாம் என நிரூபித்தவாருயிற்று.

எல்லாவற்றையும் அறிவோன் அவன் ; அறியாதன உயிர்கள். அவனறிந்து நல்கியவற்றைப் பிறழ வுணர்ந்துகொள்ளுதலால் துன்பம் பெருகுதலும், அன்னவற்றுக்கு அவனே பொறுப்பாவான் என உண்மை கண்டவிடத்து இன்பம் பெருகுதலும் உண்டாம் என உண்மை கூறி யருளியவாருயிற்று.

**அன்றே என்தன் ஆவியும்**
**உடலும் உடைமை எல்லாமும்**
**குன்றே அனையாய் எனைஆட்**
**கொண்ட போதே கொண்டிலையோ**
**இன்(று)ஓர் இடையூ(று) எனக்(கு)உண்டோ**
**எண்தோள் முக்கண் எம்மானே**
**நன்றே செய்வாய் பிழைசெய்வாய்**
**நானோ இதற்கு நாயகமே.** 7

உலகத்துச் செய்யும் விச்சை எல்லாவற்றுக்கும் அவனது இச்சையே காரணம் என முற்கூறிய அடிகள் இதனால் அவ் விச்சைப்படி என்னை நடாத்துவதும் அவனது அதிகாரமேயாகும் என்றருளியது.

(பொ - ரை.) குன்றினை யொத்துக் கலங்காத திண்மையினை யும், தோற்றப் பொலிவினையும் உடையானே! எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையுமுடைய எம் பெரியோனே ! நீ என்னை அன்று ஆட்கொண்ட அமயத்தே என் ஆவியும் உடலும் உடைமைப் பொருள்களும் முதலியவற்றையெல்லாம் நீ உன்னுடையனவாக

ஏற்றுக்கொண்டனை யல்லையோ? ஏற்றுக்கொண்டனை யாதலின், இன்று ஓர் இடையூறேனும் எனக்கு உண்டாகுமோ? நீயே நல்லன வற்றைச் செய்யினும் செய்வாயாக, அன்றி அல்லனவற்றைச் செய்யினும் செய்வாயாக அங்ஙனம் செய்வதற்குத் தலைமைப் பாடுடையோன் நானேயோ? (நான் அல்லன்; நீயே யாவை ஆதலின் அவற்றின் பயனும் உன்பாலனவே) எ - று.

(வி - ரை.) "எண்டோள் முக்கண் எம்மான்" என்றது தியான ரூபத்தை. "குன்றேயனையாய்" என்றது குருமணியை.

ஆவியின் பொருட்டு உடலும், உடலின் பொருட்டு உடைமையும் என்க.

"இன்று" என்றது நின்னருள் பெற்று நின்ற இக்காலத்தே என்க. எவ்வித இடையூறில்லாதிருப்பினும் அங்ஙனம் உளதாகக் கருதியது மயக்கத்தாலாகலின், அஃது தமக்கு உரியதாகாது (நினக்கே யுரிய தென்றபடி.) என்பது தோன்ற "இடையூறு எனக்கு உண்டோ?" என்றார். மேலும், வினவுவார் பிறரின்மையான், நன்றி செய்யினும், அதுவன்றித் தீது செய்யினும் அவற்றை யான், நன்றாகவே கொண்டு ஏற்று அடங்கி ஒழுகல் வேண்டும் என்பதும் எனக்கு வரும் கேட்டுக்கு இரங்கி உருகவேண்டுவது தலைமைப்பாடுடைய அவனுக்கேயன்றி எனக்கு ஆகாது என்பதும் தோன்ற, "நன்றே செய்வாய்......நானோ நாயகம்" என்றருளினார் என்க.

நாயிற் கடையாம் நாயேனை
 நயந்து நீயே ஆட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே
 வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான்
 என்னதோ இங்(கு) அதிகாரம்
காயத்(து) இடுவாய் உன்னுடைய
 கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே. 8

நானோ நாயகம் என முன் வினவிய அடிகள் நீயே ஆவாய் என்பது தெளிந்து, நான் பெறும் பேறு நின்னதே ஆகும் என்றருளியது.

(பொ - ரை) நுதற்கண்ணுடையானே! நாய்கள் யாவற்றுள்ளும் கடைப்பட்டதொரு நாய் போன்ற என்னை நீயாகவே விரும்பியாட்கொண்டாய். அங்ஙனம் ஆட்கொண்ட உன் தலைமையிலேயே, (இதுகாறும் என் தலைமையில் இருந்தனவாகப் பிறழ உணர்ந்தமையான் வந்த) மயக்கத்தினைத் தரும் பிறவிக்

குரியன எல்லாவற்றையும் வைத்துவிட்டு விடுதலை பெற்றிருக்கும் அவ்வின்ப நிலையில் இருப்பதேயன்றி ஆராய்தற்குரியவன் யான் ஆவனோ? ஒருகாலும் ஆகமாட்டேன். என்னை உடலுடன் கூடச் செய்து துன்புறுத்துவாய், அல்லது உன்னுடைய திருவடியின் கண் வைத்து இன்புறுத்துவாய். (எதனை எங்ஙனம் இயற்றினும் இதனை இங்ஙனம் இயற்றியதேன் என்று ஆராயப் புகுதலுமில்லை; நின்னைக் கேட்கப் புகுதலுமில்லை. எல்லாம் உன் அதிகாரத்தின் படியே நடை பெறுபவை, அங்ஙனமாக, அவ்) அதிகாரம் என்பால தாமோ? (யான் அங்ஙனம் காயத்திடு, கழற்கீழ் வை என்றுங்கு நின்னை ஏவிப் பெறுதற்கு) எ – று.

(வி - ரை.) எவ்வளவு ஊழிகள் கழியினும் கழிதற்கரிய அல்லலுட் கிடத்தற்குரியேன் என்பார், "நாயிற் கடையாம் நாயேனை" என்றும், அவ்வல்லலினின்றும் நீங்குமாறு நீ எதிர்ப்பட்டு ஆண்டுகொண்டது யான் எதிர் நோக்காததோர் ஆக்கமென்பார், '"நயந்து நீயே ஆட் கொண்டாய்" என்றும், மயக்கத்தைத் தருகின்ற இப்பிறப்பினை நின்பால் ஒப்படைத்த பின்னரும், நின் அருளாலாம் பேறுகளுள் இது நன்றெனக் கோடற்கும் அது அன்றென விடுத்தற்குமாக நன்று தீது ஆராயும் கடப்பாடுடையேன் நானேயோ (அல்லன் என்றபடி.) என்பார், "மாயப் பிறவி... நானோதான்" என்றும், இனி எவை நிகழினும் எல்லாம் அவன் பொறுப்பன்றி எனக்கும் அவற்றுக்கும் தொடர்பேயில்லை; அவன் ஏவிய வற்றையெல்லாம், அவன்பொருட்டே செய்து, அவனே பயனும் பெறுமாறு அவன் அடிமையாக இருப்பதே என் கடன் என்பார், "காயத்திடுவாய்... அதிகாரம்" என்றும் கூறியருளினர்.

வைத்திட்டிருக்கும் அதுவன்றி – வைத்துவிட்டு இன்புற்றிருக்கும் அந்தப் பேராக்கத்தாற் பெற்ற பேற்றை மறவாதிருப்பதன்றி.

நானோதான் – மாயப்பிறவியின் கொடுமையையும், அதனைத் தலைவன் பால் ஒப்படைத்துவிட்டிருக்கும் ஆனந்தத்தையும் கண்ட நானோதான்.

மாயப் பிறவி எனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தருளினர் என்க.

கண்ணார் நுதலோய் கழலிணைகள்
கண்டேன் கண்கள் களிகூர
எண்ணா(து) இரவும் பகலும் நான்
அவையே எண்ணும் அதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ
அடிமைசால அழகுடைத்தே.

# அச்சப் பத்து

"அச்சப் பத்து" ஆவது, இறைவன் திருவடியையே பற்றுக் கோடாக அடிகள் கொண்டாராக, மற்றுப் பிற தொடர்புகளுக்கும், அத்தொடர் புடையார்க்கும் அஞ்சுவதைப் பொருளாகக்கொண்ட பத்துத் திருப்பாடல்களைக் கொண்ட பகுதி. முன்னர்ப் பகுதியில் உயிருண்ணியாகிய இறைவன்பால் பித்துற்று, ஊன்பாவிய உடலைச் சுமந்து அடவி மரமானேன், நான் பாவியேன் என்று இரங்கிய அடிகள் மேலும் தமக்கு அச்சம் விளைப்பன அகப்புறப் பற்றுக்கள் என முறையிட்டு அருளுகின்றனர். இதனானே இது மேலைப்பகுதியோடு தொடர்பு உடையதாயிற்று

அஞ்சப்படுவன :

1. இறைவனிடத்து அன்பிலாத உயர்திணைப் பொருள்கள்—கிளியனார், மன்னன் ;
2. அஃறிணைப் பொருள்கள்—களிறு, புலி, அரவு ;
3. படை—வேல், வாளி ,
4. பூதம்—உருமு, எரி, மலைவீழ்தல் ;
5. நோய்—பிணி ;
6. முடிவு—இறப்பு, கூற்று ,
7. கலப்புவினை—வேட்கை, வினைக்கடல்

என்னும் ஏழு பிரிவுகளுள் அடங்கும்.

## இயற்கைப் பொருளடைவு

எம்பெருமான் திருவுருவப் பெருமையான், பிற தேவரை அரு வருத்து (2), அவன் கழலின் பெருமையறிந்து (8), அன்பு காரண மாக நெக்குருகி (4), புனைந்து நைதலே அன்றிப் புகழ்களை ஏத்தி நைந்து (7), அவன் அருள் நுகர்ந்து (3), அவனே தஞ்சம் என அவனுக்கு அற்று (1), திருமுண்டம் தீண்டுதல் (9), ஆதிய அருள் நெறிப் படுத்தும் செயல்களில் ஈடுபட்டு (10), அவன் அளிக்கு உரிமையாக்கும் திருநீற்றினை அணிந்து (5), அவனுக்கு ஆட் படாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறும் என இயைக்க.

## நூற்பொருளடைவு

அஞ்சுவன

மற்றுமோர் தெய்வம் உண்டென நினைந்து எம்மாற்கு அற்றிலாதவர் (1),
திருவுரு அன்றி மற்றோர்தேவர் எத்தேவர்என அருவராதவர் (2),
பத்தி இனிது அருள் பருகமாட்டாதவர் (3),
பாதம் நண்ணித் துணி உலாம் கண்ணராகி தொழுதுளம் நெக்கு இங்கு அணியிலாதார் (4),
தொழும்பரோடு அழுந்தி நீறு அணிகிலாதார் (5),
தாள்ஏத்தி மலர்புனைந்து நையும்ஆள் அலாதவர் (6),
பாதம் ஏத்தி அகநெகாதவர் (7),
கழல்கள் ஏத்திச் சிறந்தினிதிருக்க அறிவிலாதவர் (8),
திருமுண்டம் தீண்ட அஞ்சுவார் (9),
நினைந்து நைந்துருகிக் கண்சோர வாழ்த்தி நின்று ஏத்த அறிவிலாதவர் (10) என்பனவாம்.

அஞ்சாதன

| | |
|---|---|
| அரவு, பொய்யர் மெய் | (1) |
| வேட்கை வினைக்கடல் | (2) |
| வேல் கடைக்கண் | (3) |
| கிளியனார் கிளவி, கிளியனார் முறுவல் | (4) |
| பிணி, பிறப்பிறப்பு | (5) |
| எரி, வரைபுரள்வது | (6) |
| பழி, சாவு | (7) |
| களிறு, புலி | (8) |
| உருமு, மன்னருறவு | (9). |

கோனிலாவாளி கூற்றுவன் சீற்றம் (10) என்பனவாம்.

நூற்பொருளடைவுக்குக் காரணம் வருமாறு :—

1 இறைவன்மேல் தம் அழுந்திய பற்றைத் தெரிவித்துத் தம்மதே குற்றமென அமைந்த அடிகள் அப்பற்றுக் காரணமாக அரவுக்கேனும், பொய்க்கேனும் அஞ்சேனுகி மற்றத் தெய்வங்களை நினைந்துவருதலினாலே எம்பெருமானே தஞ்சம் என்று அரற்றிலாதவர்களைக் கண்டால் அஞ்சுவேன் என்றருளிய இயைபால் முன்னர்த் திருப்பதிகத்தின் இறுதித் திருப்பாடலுடன் இயைபுடைத்தாய் இப் பகுதியின் முதலாவதா யமைத்தருளப்பட்டது.

2. பொருளடைவில் முதலாவதாகிய திருப்பாடல், எம்பெருமானது திருவுருவப் பெருமையானே ஏனைய தேவர்மேல் மயக்கம்நீங்கி, அவர்மீது அருவராதவர்களைக் கண்டால் அஞ்சுவன் என்ற இயைபால் இரண்டாவதாக அமைத்தருளப்பட்டது.

3 பொருளடைவில் ஐந்தாவதாகிய திருப்பாடல், எம்பெருமான் எல்லாரையும் இயக்கும் திருக் கூத்தினையுடையோன் என அறிந்தும், அவன் அருள் நுகரமாட்டாதவர்க்கு அஞ்சுவேன் என்ற இயைபால் மூன்ருவதாக அமைத்தருளப்பட்டது.

4. பொருளடைவில் மூன்ருவது ஆகிய திருப்பாடல், எம் பொருட்டு, (குழவியின் நோய்க்கு நோயில்லாதவளாகிய தாய் மருந்துண்ணுதல் போல) நீறணியும் வேதியனுக்காக அவ் அன்புக் காரணமாக இரக்கங்கொண்டு நெகாதவர்க்கு அஞ்சுவேன் என்ற இயைபால் நான்காவதாக அமைத்தருளப்பட்டது.

5. பொருளடைவில் ஒன்பதாவதாகிய திருப்பாடல் அளியற்றவரால் அறியமுடியாத அத்தலைவன் பெருமையினை அறிந்து அவனிடத்து அளியுரியராதற்கு உரிமை நல்கும் அவனது மங்கல சூத்திரம் போன்ற விபூதியினை அணியாதவர்க்கு அஞ்சுவேன், என்றமையின் ஈண்டு ஐந்தாவதாகக் அமைத்தருளப்பட்டது.

6 பொருளடைவில் பத்தாவதாகிய திருப்பாடல் திருநீற்றினை அணிந்து அவனுக்கு ஆட்படாதவரைக் கண்டால் அஞ்சுவேன் என்றமையின், ஆருவதாக அமைத்தருளப் பட்டது.

7. பொருளடைவில் நான்காவதாகிய திருப்பாடல் அவனுக்கு ஆட்பட்டுப் புனைந்து நைதலே அன்றி அவன் புகழ்களையே ஏத்தி நையாதவர்க்கு அஞ்சுவேன் என்ற இயைபால் ஏழாவதாக அமைத்தருளப்பட்டது.

8 பொருளடைவில் இரண்டாவதாகிய திருப்பாடல் அகம் நெக்குருகுதற்குக் காரணமாகிய அவனது கழலின் பெருமையை அறியும் அறிவில்லாதவர்க்கு அஞ்சுவேன் என்றமையின் எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

9. பொருளடைவிலே ஏழாவதாகிய திருப்பாடல் அறிவில்லாமையினுலே அவனது திருமுண்டத்தினது பெருமையை அறியாராகி அதனைக் கையில் எடுத்தற்கு மனம் ஒருப்படாதவர்களுக்கு அஞ்சுவேன் என்றமையான் ஒன்பதாவதாக அமைத்தருளப் பட்டது.

10. பொருளடைவிலே எட்டாவதாகிய திருப்பாடல், அற்றிலார்க்கு அஞ்சுதலும், பிற தேவரை அருவருத்தலும், அன்புடை

மையும் அளியுடைமையும், திருநீறு சாத்துதலும், ஆட்படுதலும், அகம் நெகுதலும், அறிவுடையராதலும், திருமுண்டம் தரித்தலும், ஆகிய செயல்களை அருள்நெறிப் பட்ட வீரர் செயல் என உணர்ந்து அவ்வீர நெறியில் நின்று ஏத்தமாட்டாதவர்க்கு அஞ்சு வேன் என முடித்தருளிய இயைபால் ஈண்டுப் பத்தாவதாக அமைத்தருளப்பட்டது.

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

## ஆனந்தம் உறுதல்

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**புற்றில்வாள் அரவும் அஞ்சேன்**
**பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்**
**கற்றைவார் சடைஎம் அண்ணல்**
**கண்ணுதல் பாதம் நண்ணி**
**மற்றும்ஓர் தெய்வந் தன்னை**
**உண்டென நினைந்(து)எம் பெம்மாற்(கு)**
**அற்றிலா தவரைக் கண்டால்**
**அம்மநாம் அஞ்சு மாறே. 1**

இதனால், அரவுக்கும் பொய்யர்களது மெய்க்கும் அஞ்சேனாகிய யான் எம்பெருமான் பொருட்டு அற்றுப்போகாதவர்க்கு அஞ்சு வேன் என்று கூறியருளுகின்றார்.

(பொ - ரை.) (இன்ன காலத்து இன்னவாறு நிகழும் எனத் துணிதற்கியலாத புற்றின்கண் வாழும் அரவு, பொய்யர், அற்றி லார் என்னும்) மூன்றனுள். புற்றின்கண் வாழும் வாளினது தன்மையை ஒத்து ஒளிவிட்டுத் தோன்றும். பாம்பினுக்கும் அஞ்சுதலைச் செய்யேன், செயலும் நினைவும் வேறுவதன்றித் தாம் சொல்லுகின்ற சொல்லும் வேறாகப் பொய்யர் தமது ஆற்ற லால் மெய்போலப் புனைந்து கூறும் கூற்றுக்கும் அஞ்சுவேன் அல்லேன். தொகுதியாகிய நீண்ட சடையை உடைய எமக்குப் பெருமானாகிய நெற்றிக்கண்ணையுடைய கடவுளாரது திருவடியை அரணாக அடைந்து, ஐயப்பாட்டின் மிகுதியால் வேறுமொரு தெய்வம் மற்று அவன் போலும் உண்டென எண்ணி எம்பெருமான்

பொருட்டுத் தனது உடல் பொருள் ஆவி ஆனவற்றை அற்றுப் போகாதவரைக் கண்டால் அம்ம ! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை,) "புற்றில் வாழும் அரவு" வலிமையுடையது. அதனால் ஏதம் பல உளவாம். வேட்டுவரும் பிறரும புற்றுள் கை விடும்போதும், அன்ன பிற நேரத்தும் அஞ்சுவர். அஃது எனக்கு ஆகாது என்றபடி.

பொய்யர், சமயப்புரட்டர், வேளம்பர், காமுகர் முதலோராலும் தமக்கு ஏதமில்லை என்பார் "பொய்யர் தம் மெய்யும் அஞ்சேன்" என்றருளினர்.

முப்பெருந் தேவருள் ஒருவனாக இறைவனை வழிபட்டுக் கருதி வருவோர், பொதுப்பட மூவர்க்கும் அற்றிலராவரேயன்றி இறைவனுக்குச் சிறப்புற அற்றிலர் ஆகார் ஆதலின் அவரை வெறுக்கவும் ஒதுக்கவும் அணைக்கவும் கூடாமையின் அஞ்சுவேன் என்றார்.

ஏகாரம் அசைநிலை. "அம்ம" என்பது இதனைக் கேள் எனக் கேட்பிக்கும் இடைச் சொல். 'சென்மியா' என்பது போலக் 'கேண்மியா' என்பது 'கேட்டுச் செல்' எனப் பொருள்படுவது கண்டுகொள்க. "கண்டால்" என்றருளினர் காண்டலருமை தோன்ற. இங்ஙனமே மேல் வருவனவற்றுக்கும் உரைத்துக் கொள்க.

வெருவரேன் வேட்கை வந்தால்
வினைக்கடல் கொளினும் அஞ்சேன்
இருவரால் மாறு காணா
எம்பிரான் தம்பி ரானும்
திருவுரு அன்றி மற்றோர்
தேவர்எத் தேவர் என்ன
அருவரா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 2

இதனால் ஊழ்முறை பற்றியனவாகிய வேட்கைக்கும் வினைக்கும் அஞ்சேனாகிய யான் பிறதேவரை அருவராதவரை அஞ்சுவேன் என்று கூறியருளுகின்றார்.

(பொ - ரை.) (வேட்கையும், வினைக்கடலும், பயிர்ப்பின்மையும் ஆகிய மூன்றனுள்) ஆசைவரினும் அதற்கும் அஞ்சேன்; வினையாகிய கடல் என்னைக் கொண்டுசெல்லினும் அஞ்சமாட்டேன்; அயன் மால் இருவராலும், மாறுபட்டுச் சென்றும் காண முடியாத எமக்குப் பிரானும் எல்லார் தமக்கும் பிரானும் ஆகும் இறைவனது திருவுருவினையன்றி மற்றுமோர் தேவர் எவ்வகைப்பட்ட தேவராவர் எனக் கருதி அவரது கோலங்களை அருவருக்கமாட்டாதவரைக் காணில் அம்ம! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) பிறதேவர் கோலங்களைக் கண்டு அருவருத்து வெறுத்த லாலே எம்பெருமானுக்கு அற்றவராதல் அமையப் பெறுவர் என்க. கற்புடையார் பிற ஆடவரை அருவருத்தல் போல அடிகளும் பிற தேவரை அருவருத்தருளினர். அருவருத்தல், அவரொடு ஒன்று சேரற்கண் என்க.

யாமே அவன் அடி முடியைக் காணுவேம் என மாறுபட்டார் என்க. மாறு - மாறுபாட்டால், காண - சென்று காண. இருவரும் தம்முள் முன்னிருந்த மாறுபாட்டைக் காணுதபடி அவர்க்கு நடு வீற்றிருந்து அவர் தமக்கும் தலைவனுயினன்; அவன் எம்பிரான் எனினும் அமையும்.

"திருவுரு" என்றமைக் கேற்பக் 'கோலங்களை' என்பது வருவிக்கப் பட்டது.

"வேட்கை"யையும் "வினைக்கடலை"யும் அகற்ற இறைவன் திருவடித்துணை இன்றிமையாதாதலின் இங்ஙனம் அருளிச்செய்தார் என்க.

சிறப்பும் பொதுவும் தோன்ற "எம்பிரான் தம்பிரான்" என்னப் பட்டான். நம் இறைவனே தேவன் என எக்காலத்தும் நாம் அறிவதன்றி, வேறும் ஒரு தேவனுளன் என்று கருதுவது ஒரு புதுமையாகும் என்பதும், ஏனைய தேவர்க்கு முதன்மை இன்று என்பதும் புலப்பட "மற்றோர் தேவர் எத்தேவர்" என்றருளினர்.

வேட்கையும் வினைக்கடலும் ஊழ்முறை பற்றியன.

**வன்புலால் வேலும் அஞ்சேன்**
**வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்**
**என்பெலாம் உருக நோக்கி**
**அம்பலத்(து) ஆடு கின்ற**
**என்பொலா மணியை ஏத்தி**
**இனிதருள் பருக மாட்டா**
**அன்பிலா தவரைக் கண்டால்**
**அம்மநாம் அஞ்சு மாறே.** 3

இதனுல் வேற்படைக்கும், பெண்களுக்கும் அஞ்சேனாகிய யான் இறைவனது அருள் நுகரமாட்டாத அன்பிலிகட்கு அஞ்சுவேன் என்று கூறியருளுகின்றார்.

(பொ - ரை). (வேற்படை, மகளிர்கட்கடை, ஐந்திணை அன் பிலாதவர் எனும் மூன்றனுள்) மார்பு தோள் முதலாய வல்லிடங் களில் விழுப்புண் உண்டாக அவற்றின் தசையைக் கவரும் வீரப் போர்க்களத்து வேற்படைக்கும் அஞ்சேன் தம்மைப் பிறர் காணுமாறு ஒலி செய்யும் வளையல் அணிந்த கையை உடைய மங்கையர் தம் உயிர் கவரும் கடைக்கண் பார்வைக்கும் அஞ்ச

மாட்டேன். நோக்கினுர் என்பெலாம் அன்பால் உருகுமாறு கடைக்கணித்துத் திரு அம்பலத்தே உலகம் ஈடேறக் கூத்தாடுகின்ற எனது பொள்ளல் இல்லாத மாணிக்க மணிபோன்றுனைத் துதித்து அவனது இனிய திருவருளை நுகரமாட்டாத அன்பில்லாதவரைக் கண்டால் அம்ம, நாம் அஞ்சுமாறும் எ - று

(வி - ரை.) வீரப் போருக்கும், காதற் போருக்கும் அஞ்சிலர் என்க. கைவளை திருத்துவார்போலக் கடைக்கண்ணின் உணர்த்துவ ராகலின் "வளைக்கையார் கடைக்கண்" என்றருளினர். மாணிக்கக் கூத்தன் என்பதுபட "அம்பலத்தாடுகின்ற பொல்லாமணி" என்றனர். வேல் வீரத்தொடு காதல் வீரத்தினைப் பின்னும் எடுத்து மொழிந்தருளு கின்றுர் வேற் போரினும், காதற்போர் வெல்லுதற்கரியது ஆகலின் அதனை வலியுறுத்துவான் வேண்டி என்க. அடுத்த திருப்பாட்டானும் அவரது கிளவியையும் முறுவலையும் கூறியருள்வாராயினர்.

அவன் செய்கின்ற அன்பிற்கு எதிர் அன்பு செய்து ஏத்தி இனிதருள் பெறமாட்டாதவர் "அன்பிலாதவர்" என்க. "இனிதருள்" இருவயின் ஒத்த அன்பால் பெறப்படுவது, பிற வழிகளால் எய்தப்படுவதொன்று அன்றென்க.

கிளிஅனுர் கிளவி அஞ்சேன்
அவர்கிறி முறுவல் அஞ்சேன்
வெளியநீ ருடு மேனி
வேதியன் பாதம் நண்ணித்
துளிஉலாம் கண்ண ராகித்
தொழு(து)அழு(து) உள்ளம் நெக்(கு)இங்(கு)
அளிஇலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 4

இதனுல் காமத்தை விளைவிக்கும் பெண்களுடைய சொற்களுக் கேனும், அவர் தம் நகைக்கேனும் அஞ்சுவேனல்லேன், ஆனுல் நின்பொருட்டு இரங்காதவரைக் கண்டால் அஞ்சுவேன் என்றருளு கின்றுர். [அன்பினுல் தோன்றும் அளி கூறியவாறு]

(பொ - ரை) (மங்கையர் கிளவியும், அவர் தம் முறுவலும், இறைவன்பால் அன்பின்மையும் ஆகிய மூன்றனுள்) கிளியை ஒத்த மகளிருடைய மாயத்தை விளைவிக்கும் மொழிக்கும் அஞ்சேன். அம்மகளிருடைய மயக்கத்தைத் தரும் நகைப்புக்கும் அஞ்சுவேனல் லேன். ஆனுல், வெண்ணிறம் பொருந்திய திருநீறு பூசப்பட்ட திருமேனியை உடைய குருவனுகிய அந்தணனது திருவடியை அரணுக அடைந்து அன்புக் கண்ணீர் துளிக்கின்ற அகநெகிழ்வைத் தோற்றுவிக்கும் கண்களையுடையவராகி, வணங்கி அழுது உள்ளம்

கட்டுவிட்டு எம்பொருட்டு அவன் செய்யும் செயல் கண்டு அதனுல் அவன்மேல் இரக்கங்கொள்ளாதவரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) மங்கையர் திறங்களை மறத்தலருமை குறித்து இருதிருப் பாடல்களில் ஓதியருளினர். காதல் வெல்லற்கரியது என்றுருமாம்.

மங்கையர்பால் வைக்கப்படுதலின், அளி இறைவன்பால் செல்லா தாயிற்று. அது காரணமாக இறைவனது புகழ்களை ஏத்தி அன்பு செய்தலின்மையின் அவன் செய்த நன்றி மறக்கப்படுவதன்றித் தொழுதலும் அழுதலும் முதலாயின நிகழாவாயின. இறைவனுக்கு உரியராகும் இயல்பு களைப் பெருமையின், அவை நிகழாவாயின என்க. எனவே இறைவன் திறமறிந்து நன்றி கடைப்பிடிப்பதால் பிறவற்றின் மேற்செல்லும் மன எழுச்சியைத் தகைந்து, அன்பு கைவரப்பெற்று, செவ்வியடைந்து, அடியார்க்கு உலக மங்கையர் காமக் குறிப்புக்கள் இன்னல் செய்யாவாய்ப் பின்னடைதலின், அவை அஞ்சப்படாது அவற்றை விளைவித்தற்குரிய இறைவன்மேல் அளியின்மை அஞ்சப்படுவதாயிற்று.

அவன் எம்பொருட்டுத் தன்னலம் துறந்தமை குறித்து "வெளிய நீறுடும் மேனி" என்றும், அவன்மேல் முறையிடுதற்கும் துதி செய்தற்கும் அளி செய்தற்கும் அன்ன பிறவற்றை ஆற்றுதற்கும் இடமாவது திருவடியே ஆதலின் "பாதம் நண்ணி" எனவும், மெய்ப்பொருளை உபதேசித் தருளினமையின் "வேதியன்" என்றும், அவன் செய்த அருட்செயல்களை நினையும்தோறும் கண்ணீர் பெருகுமாதலின், "துளி யுலாம் கண்ணராகி" என்றும், அழுந்தொறும் உள்ளம் கட்டுவிட்டு உருகுமாதலின் அழுது "உள்நெக்கு" என்றும், இங்ஙனம் ஒன்றையொன்று தொடர்ந்து நிகழ மனம் அளியுடைத்தாகும். இதுவே அடியார் இயல்பு பெற்றுர்க்கு வளந் தருவது; அஃதிலார் கூட்டுறவினுல் ஏதம் விளையுமாகலின் "இங்கு அளியிலாதவரைக் கண்டால்......அஞ்சுமாறே" என்றும் அருளிச் செய்தார்.

பிணிஎலாம் வரினும் அஞ்சேன்
பிறப்பினே(டு) இறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியி ளுன்தன்
தொழும்பரோ(டு) அழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்தும் காணுச்
சேவடி பரவி வெண்ணீ(று)
அணிகிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 5

இதனுல் பிணி பிறப்பு இறப்பு இவற்றிற்கும் அஞ்சேனுகிய யான் வெண்ணீறு அணியாதவர்க்கு அஞ்சுவேன் என்றருளு

மாற்றால், அளியுடைமை அன்புடைமையாதற்கு உரிமை நல்கும் திருநீற்றினது பெருமையும் தொண்டர் திருக்கூட்டப் பெருமையும், அதனோடு திருநீறு அணிகிலாதார் சிறுமையும் கூறப்படுகின்றன.

(பொ - ரை) (பிணியும், பிறப்பிறப்பும், வெண்ணீறணியாமையும் என்னு மூன்றனுள்,) எவ்வாற்றானும் வரும் எல்லா நோய்கட்கும் அஞ்சேன், பிறப்பிறப்புக்களுக்கும் அஞ்சேன். (ஆனால் தம் நலம் பேணி அவற்றை யஞ்சுதலால்) பிறைத்திங்களைக் கண்ணியாக அணிந்துகொண்டவன் தனக்குத் தொண்டு செய்வாராயினாரோடு கலந்து ஈடுபட்டு, அத்திருமால், அணுக்கள் திணிந்த நிலத்தினைப் பிளந்துசென்றும் காணற்கியலாத (அத்துணைப் பெருமை வாய்ந்த) சிவந்த திருவடிகளை வணங்கி வெண்ணிறத் திருநீற்றினை அணிந்துகொள்ளாதாரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) ஈரிடத்தும் வெண்ணீறு தரித்தல் கூறியருளினார்; ஒருவர்க்கொருவர் செய்யும் தியாகமே இந்நிலை அன்புவாயிலாகப் பெறும் பேரானந்தம் என்பது தோன்ற.

"பிறப்பு இறப்புக்குமஞ்சேன்" என்றார் தமக்கு அவை உளவாகா என்பது தோன்ற.

"பிணியெலாம்......இறப்பும் அஞ்சேன்" என்றருளினர், வெண்ணீறாகிய மருந்து தம்பால் உண்மையின். அஃதாவது யாதொன்றையும் தமக்கென வேண்டாதிருத்தல் என்க. வெண்ணீறு அவ்வுணர்வின் பொருட்டணியப்படுவது. மேலும் தம்மைத் தாங்கும் பாரம் தலைவற்கு ஆதலின், அவன் துணி நிலவின் கேடு அகற்றி ஆண்டவாறே ஆள்தற்குரியனும்போது, அவற்றைப்பற்றி நினைக்கவேண்டியதில்லை என்பதும் கொள்க.

வெண்ணீறு அணிதற்குச் சேவடி பரவுதலும், சேவடி பரவுதற்குத் தொழும்பரோடு அழுந்துதலும் இன்றியமையாதன.

அடிகள் கருத்துக்கியைய எடுத்த "பிறப்பும்" அதற்குரிய "இறப்பும்" என்க. "பிறப்பினொடு" எனப் பிரித்தருளினார், இறப்புப் பிணி முதலியவற்றால் வருதலின்.

அன்பினால் திங்கள் அணியப்பட்டது. செருக்கினால் திருவடி காணப்படாதாயிற்று. பரவி வெண்ணீறணிந்து அளியும் அன்பும் உடையராயக்கால் அத்திருவடி புலனும் என்க. இவை எல்லாவற்றுக்கும் மூலமாவது வெண்ணீறணிதலே என உணர்க.

**வாள்உலாம் எரியும் அஞ்சேன்**
**வரைபுரண் டிடினும் அஞ்சேன்**
**தோள்உலாம் நீற்றன் ஏற்றன்**
**சொற்பதம் கடந்த அப்பன்**

தாளதா மரைகள் ஏத்தித்
தடமலர் புனைந்து நையும்
ஆள்அலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 6

இதனால் எரி, வரைபுரளுதல் ஆகிய பௌதிக வினைகட்கும் அஞ்சேனாகிய யான் நல்லடிமைப்படாதாரைக் கண்டால் அஞ்சுவேன் என்றருளுதலாலே தொண்டுடையார் பெருமையும் அஃதிலார் சிறுமையும் கூறியருளுகின்றார்.

(பொ - ரை.) (எரியும், வரைபுரண்டுவீழ்தலும், அவனுக்கு ஆட்படாமையுமாகிய மூன்றனுள்,) வாள்போல ஒளிவிட்டு நாநீட்டும் தீக்கும் அஞ்சேன், மலைதான் புரண்டு என்மேல் வீழ்ந்திடினும் அதனுக்கும் அஞ்சேன் ஆனால் திருத்தோளிலே விளங்கும் திருநீற்றையுடையவனும், விடையூர்வோனும், சொல்லின் நிலையைக் கடந்த நாதத்துக்கு அப்பனும் ஆகிய இறைவனது தண்டுகளையுடைய தாமரைமலர்களாகிய திருவடிகளைத் துதித்து, பெருமை பொருந்திய பூக்களை மாலையாகத் தொடுத்து அத்திருவடிகளிலே அணிந்து மனம் நெகிழும் அடிமையல்லாதவரைக் கண்டால், அம்ம, நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) "நையும் ஆள்" என முடியும். வரைபுரளுதல் வெள்ளத்தாலும் நெருப்பாலும் என்க. இவை பௌதிகம் எனப்படும். தாமே அழிவதோடு அமையாது பிறவற்றையும் அழிப்பனவாதலின் முன் சொல்லியவற்றின் பின் வைத்தருளினார்.

"சிவன் அவன் திரள்தோள்மேல் நீறுநின்றது கண்டனையாயினும்" (திருச்சதகம் 33.) என்றலும் காண்க.

இவ்வாறு திருப்பாடல்களினாலும் தொண்டர்களாகிய சரியையாளர்களுடைய இயல்பு கூறியருளினார். அதாவது, சமய மரபுகள் பலவாகலின், அவற்றுடன் மோதிக் கொள்ளாவாறு, தம் சமய மரபிற்கு ஏற்ற இறைவனை எவ்வாற்றானும் வழுவுதலின்றி வரைந்துகொண்டு, அந்நிலை வழுவாமைப் பொருட்டு ஏனைய தலைவர்களை அருவருத்துத் தாம் வரைந்துகொண்ட தலைவனையே எவ்விடத்தும் நினைவுற்று, அப்பயிற்சி மிகுதியினானே ஐந்திணை அன்பும் இரக்கமும் பெற்று, அவை மேலும் பெருகுதறபொருட்டுத் தொண்டர்ச் சங்கத் திருக்கூட்டங்களிற் சேர்ந்து அவரோடு கலந்து பணிசெய்து, தம்மை இறைவனுக்கே அர்ப்பணஞ்செய்து, ஏனைய உயிர்ப் பொருள்களினாலும், மங்கையர் காமத்தாலும், பௌதிகப் பொருள்களின் நிலைமாற்றங்களாலும் அஞ்சித் தம் நிலைகெடாய்த் தம் மரபுள்ளிருந்து அவற்றை அஞ்சித் தெளிவின்றியும், அருவருப்பின்றியும், அன்பின்றியும், இரக்கமின்றியும், துறவின்றியும், ஆட்படுதலின்றியும் ஒழுகித் தம் தலைவன்

குறிப்பொடு மாறுபடுவோர், மாறுபாடின்றி ஒழுகும் தமக்கும் ஏதம் விளை விப்பர் என அஞ்சி, அவ்வச்சத்தோடு அவரைக் காணுது ஒழுகுவோர் என்றருளியபடி என்க.

'குருதிக் கோட்டுக் குஞ்சர புரம்' என்பது போல "தாள தாமரைகள்" என்பதையுங் கொள்க. அகரத்தைச் சாரியையாகக் கொண்டு 'தாள் தாமரை' என உரைப்பாரும் உளர்.

தகைவிலாப் பழியும் அஞ்சேன்
சாதலை முன்னம் அஞ்சேன்
புகைமுகந்(து) எரிகை வீசிப்
பொலிந்தஅம் பலத்துள் ஆடும்
முகைநகைக் கொன்றை மாலை
முன்னவன் பாதம் ஏத்தி
அகம்நெகா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே 7

இதனுல், பழிக்கேனும் இறப்புக்கேனும் அஞ்சேனுகிய யான் அவன் பாதத்தை ஏத்தி மனம் நெகாதவர்க்கு அஞ்சுவேன் எனக் கூறியருளுகின்ருர்.

(பொ - ரை.) (பழியும், அதன் காரணமாகிய இறப்பும், இறைவன் பால் அகம் நோகாமையும் ஆகிய மூன்றனுள்) தடுத்தற் கரிய பழிக்கும் அஞ்சேன்; சாதலை, (அப்பழிக்கு முன்னரே) அஞ்சேன். ஆனுல், புகையால் உணரப்படும் நெருப்பைக் கையிலே முகந்து வீசிப் பொலிவு பெற்ற அம்பலத்திலே நின்று திருக்கூத் தாடாநிற்கும் முகை விரியப்பெற்ற கொன்றை மலர்மாலை யணிந்த தலைவனுகிய இறைவனது திருவடியை வணங்கி மனமுருகாத வரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) இன்மை அருமையின் மேற்று. தாம் அகத்தானும் புறத் தானும் இறைவன்பால் ஈடுபட்டிருத்தலின், அவன் கையகத்தேந்திய எரி அவற்றை அழிக்குமென்பது கருதி உபலக்கணத்தால் மான்கன்றும், மழுவும், உடுக்கையும் முதலாயின கொள்ளப்படும். முன்னவன் - நடராசப் பெருமான். கொன்றைமாலை, சரியைத் தொண்டின் நின்ருராலிடப்பட்டது. அகம் நெகுதல், கிரியையாளர்கட்கு. சரியையின் நின்று பயின்றவரேனும், தம்மை முதல்வராக்கொண்டு புடைசூழ்ந்து வணங்கும் சரியையாளர் பயிற்சிபெறுமாறு அகநெகுதல் வேண்டுமென்பது குறித்து, ஈண்டும் அதனைக் கூறியருளினர் என்க. இதனுல் கிரியையாளர் செயல் தருளியவாருயிற்று. முன்னர் "அஞ்சேன்" என்றது, பழி என்ன் சாதல் நேரிடும்; அங்ஙனம் நேரினும் நேருக எனத் துணிந்தமையை.

முன்னர்த் திருப்பாடல்களில் வரும் இறப்பு இயல்பாக நிகழ்வது, ஈண்டுச் "சாதல்" என்றது வலிந்து கொள்ளப்படுவதை.

தறிசெறி களிறும் அஞ்சேன்
    தழல்விழி உழுவை அஞ்சேன்
வெறிகமழ் சடையன் அப்பன்
    விண்ணவர் நண்ண மாட்டாச்
செறிதரு கழல்கள் ஏத்திச்
    சிறந்(து)இனி(து) இருக்க மாட்டா
அறிவிலா தவரைக் கண்டால்
    அம்மநாம் அஞ்சு மாறே. 8

இதனால், காட்டிலும் நாட்டிலும் உள்ள ஊறு செய்யும் விலங்கு கட்கு அஞ்சாதேனாகிய யான், திருவடி ஏத்தி இன்புற்றிருத்தற்கு உரிய அறிவில்லாதவர்க்கு அஞ்சுவன் என்றருளுகின்றார்.

(பொ - ரை) (களிறும், புலியும், சிவயோக அறிவும் என்னும் மூன்றனுள்,) கட்டுத் தறியைச் சினக்கும் நாட்டு யானைக்கும், அஞ்சேன், தீப்பொறி போன்ற கண்ணையுடைய காட்டுப் புலிக்கும் அஞ்சேன். ஆனால், மணம் கமழுகின்ற சடையை உடையவனும், அப்பனுமாகிய இறைவனது, விண்ணவர்களும் அடைதற்கரிய முத்துமணி முதலியவை செறியப் பெற்ற கழல்களை அணிந்த திரு வடியைப் போற்றிச் சிறப்புற்று இனிதாக யோகநிலையில் இருப்ப தற்குரிய அறிவில்லாதவரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) செறிதல் - சினத்தல். ஊறுசெய்யும் காட்டு விலங்குகளிற் புலியும், நாட்டு விலங்குகளில் யானையும் எடுத்துக்காட்டாயின. யோகத்து வீற்றிருப்பின், விலங்குகளும் ஊறு செய்யாவாய் வசப்பட்டொழுகும் என்க.

இயல்பு மணம் பெற்ற "சடை" யென்று உரைத்தலுமாம்.

"கழல்கள் ஏத்தலாவது," அவற்றின்கட் பொறிக்கப்பட்ட புகழ்களைக் கூறும், வேதம் முதலியவற்றை ஓதுதலாம். சிறப்புடைய இறைவனை ஏத்துதலினாலே அவர்தம் இருக்கையும் சிறப்புடையதாயிற்று, விலங்கு களும் ஊறுசெய்யா என்றவாறும்.

"சடையன்" என்பது காதல் செய்யும் அழகுடையன் என்னும் பொருட்டு.

மஞ்(சு)உலாம் உருமும் அஞ்சேன்
    மன்னரோ டுறவும் அஞ்சேன்
நஞ்சமே அமுத மாக்கும்
    நம்பிரான் எம்பி ரானாய்ச்

செஞ்சவே ஆண்டு கொண்டான்
திருமுண்டந் தீண்ட மாட்டா(து)
அஞ்சுவார் அவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 9

இஃது, இடியேற்றிற்கும் அரசர் உறவுக்கும் அஞ்சாத யான் கபாலந் தரித்துப் பிச்சையேற்றுண்டற்கு அஞ்சுவாரைக் கண்டால் அஞ்சுவேன் என்றருளியது.

(பொ - ரை.) (இடியேறு, மன்னர் உறவு, துறவு என்னும் மூன்றனுள்,) மேகங்கள் உலவுதலால் உண்டாகும் இடியேற்றிற்கும் அஞ்சேன்; அரசர்களுடைய தொடர்புக்கும் அஞ்சேன். ஆனால், நஞ்சினையே தனக்கு அமுதமாக உட்கொள்ளும் நம்பிரானாகிய சிவபெருமான், எம்பிரானாகி எம்மைச் செவ்விதாகவே ஆண்டு கொண்டானது கபாலத் திருவோட்டை அவனைப் போலவே தாமும் பிச்சையேற்றற்குக் (கையில் எடாராய் அதனைக் கண்டு) அஞ்சுவாரைக் கண்டால் அம்ம, நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) இது ஞானிகள் இயல்பு கூறிற்று. மேகம் உலவுதலால் இடியுண்டாம் என்க. குடியாக இருப்போர்க்கு அரச பயம் உண்டு. ஞானி கட்கு அவ்வரசன் துரும்பாவன். அவர்கள் அரசியலுட்படார் என்க. 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்பதும் அறிக.

தீண்டுதல் - கையிலெடுத்தல். திருமுண்டம் தீண்டாது அன்பு செய்தல் அஞ்சப்படுவதாயிற்று.

"பவித்திரமார் திருமுண்டத்தானை மறைக்கிற்பேனே"
(திருக்குறுந். பொது.)

என அப்பர் சுவாமிகள் அருளுதலும் காண்க.

அமுதத்தை அமுதமாக்கத் தான் நஞ்சை அமுதமாகக் கொண்டான் என்க. இதனால் அவன் கருணைத் திறம் கூறியவாறுமாம்.

கோணிலா வாளி அஞ்சேன்
கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்
நீள்நிலா அணியி னானை
நினைந்துநைந்(து) உருகி நெக்கு
வாள்நிலாம் கண்கள் சோர
வாழ்த்திநின்(று) ஏத்த மாட்டா
ஆண்அலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 10

இதனால் அம்பிற்கேனும் கூற்றுக்கேனும் அஞ்சாது இறைவன் மாட்டு உருகும் வீரமிலார்க்கு அஞ்சுமாறு அருளப்படுகின்றது.

(பொ - ரை ) (அம்பு, இயமன் சீற்றம், துதிக்கும் வீரமிலார் ஆகிய மூன்றனுள்) வளைவில்லாத அம்பிற்கும் அஞ்சேன், இயமனது சீற்றத்திற்கும் அஞ்சேன் ; ஆனால், நீண்டுவரும் நிலாவைக் கண்ணியாக அணிந்த இறைவனது திருவுருவை நினைந்து கசிந்து மனம் நெகிழ்ந்துருகி, அவனருள் ஒளியே விளங்கும் கண்களினின்றும் அன்புநீர் சோர அவனை வாழ்கவென வாழ்த்தி அந்நிலையிலேயே நிலைபெற்றுத் துதித்தற்குரிய ஆளுந்தன்மையில்லாதவரைக் கண்டால், அம்ம! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) அம்பிற்கு அஞ்சுதலும், கூற்றிற்கு அஞ்சுதலும், இருவகை மரணங்கட்கும் அஞ்சுதலாம். அவ்வச்சம் பொருந்தியவிடத்து இறைவனை வணங்குதல் அவனைப் பெற வணங்குதலன்மையின், அவறறுக்கு அஞ்சாது வணங்குதலே மெய்ம்மைத்தாய வணக்கமாயிற்று. இதனை முன் வந்தனவற்றிற்கும் கொள்க.

" நினைந்து நைந்துருகி நெக்கு...கண்கள் சோர வாழ்த்தி நின்றேத்த மாட்டா" என்னுந் தொடரால் உயிரும், மனமும், அறிதற்கருவிகளும், தொழிற்கருவிகளும் ஆதியவெல்லாம் இறைவன்பாலீடுபட வணங்குதலே உண்மை வணக்கம் என்றருளியபடி.

எனவே, அஞ்சத் தகாத மரண பயத்தை விலக்கி, நால்வகை நெறியினும் படிமுறையானே பயின்றொழுகி, நற்செவ்வி பெற்று, பேரின்பம் பெறுதற்கண் முயலாதவர்களைக் கண்டு அஞ்சுதலே அடிகள் உட்கோளாயிற்று. இன்னும் இதனானே, இந்நால்வகை நெறிகளையும் களவு கற்பென்னும் இருவகை அகப்பொருள் நெறியின் வைத்து இறைவனோடு பயின்று இன்புறுதலே அடிகள் சமயநிலை என்பதும் பெற்றாம்.

நாம் அஞ்சுமாறு இவையாகலின், இவற்றிற்கும் இவற்றிற்கும் அஞ்சேன் எனக் கொள்க. " நாம் " என்றது, தம் மரபினரை. எம் மரபினர் இவ்விவற்றையே அஞ்சுவராகலின், யான் அவையல்லாத இவ்விவற்றை அஞ்சேன் எனக் கொண்டு இப்பத்தின் பொருளை விளங்கிக் கொள்க.

திருச்சிற்றம்பலம்

# திருப்பாண்டிப்பதிகம்

"திருப்பாண்டிப்பதிக"மாவது பாண்டிப் பெரும்பதமாகிய முத்திப்பேற்றைப்பற்றிக் கூறிய தொகுதியாம். இது பத்துத் திருப்பாடல்களைக் கொண்டது.

தில்லைக்கண்ணே தன் செவ்விக்கொத்த இறைவனது பேரானந்தக் காட்சியைக் கண்டவராகிய அடிகள் அவனது ஒப்பற்ற அருட்செயலை வியந்து வழுத்தித் தாம் முன்னர்க் குழைக்கப் பட்டமைக்கு இரங்கி எந்நாட் களித்து இறுமாக்கேன் என ஆனந்தமேலீட்டால் அவனைச் சேர விரும்பினரேனும், அங்ஙனம் சேரவொண்ணாது செய்வனவற்றிற்கு நாம் அஞ்சுமாறு என்னே எனக் கொண்டு தாம் பெற்ற பெரும்பதத்தைப் போற்றி ஏனைய அடியவர்களையும் உடன் வருக என்று அழைத்த இயைபால் இப்பகுதி முன்னர்ப் பகுதிகளோடு தொடர்புடைத்தாயிற்று.

இத்திருப்பதிகம் பொருள் இயைபிலே ஐந்து பெரும்பிரிவுகளாகப் பிரிக்கப்படத்தக்கது. அவையாவன :

I தன் மனத் திண்மையைத் தான் எடுத்துரைத்தல். (1)

II செவ்வியற்றீர் நீர் சேரீர் என்னல். (4, 2)

III கண்டமங்கையர் மரமா மறப்பரெனல் (9)

IV தெளிவிலாதாரைத் தெளிந்து சேர்கென்றல் (10)

V அன்பரை ஆட்பட அழைத்து மொழிதல் (6, 3, 8, 5, 7) என்பனவாம் இதனைப் பின்வரும் அட்டவணையிற் காண்க.

இறைவனையேயன்றி உலகத்து வேறொன்றையும் விரும்பாராய், வேறொன்றுக்கும் அஞ்சாராகி, அவ் அச்சமின்மை காரணமாக மனத்திண்மை பெற்று, தம்போலவே ஏனையோரையும் ஆனந்த முறுவிக்க விரும்பி உலகோரில் சிறிதேனும் செவ்வி பெறுதாரைச் செல்லன்மின் என விலக்கியும் சிறிதே செவ்வி பெற்றுரை நோக்கி மங்கையர் மரமா மறத்தற்குக் காரணமாகிய இறைவன் திறங் கூறி அவ்வாற்றுனே அவன் திறத்தினைத் தெளிந்து சேராதீர் என அவரை ஏவியும் பேரின்பராயினரை உடனழைத்தும் மொழிந்தருள்வார் ஆயினர் என இப்பகுதிக்கு இயற்கைப்பொருள் அடைவு செய்க.

இனி, செய்யுள் பொருளடைவு :—

இறைவனுக்கு ஆட்பட்ட அடிகள் அச்சம் இலராகி மனத்

திண்மையடைந்து, மனத்திண்மையற்றவராகிய பிறவிக்கு உரியோரைக் கூவி இறைவன் குதிரைமேற் கொண்டுவரும் காலம் அஃது எனவும், அக்கால் குடிகெடுவீரெனவும், காரணம் காட்டி அவர் செலவினை விலக்கிச் சிறிது செவ்வியுடையாரை நோக்கி மங்கையர்தம் இயல்பு மறத்தற்குக் காரணமான இறைவன் இயல் இதுவாம் எனக் கூறி அவ்வாற்றானே நீவிர் தெளிந்து சேர்வீராக என அவரை நெறிப்படுத்தித் தம் போன்ற மெய்யன்பர் குழாங்களை அழைத்து அவர்க்கு முத்தியின் பரிசு கூறி அம்முத்தி இயல்பு இவ்வாறாகலின் அதனைப் பெறுமின் என வற்புறுத்தி அவ்வாறு பேணினூர்க்கு அவன் முழுதுலகையும் கொடையாகத் தருவன் கண்டீர், அதனைப் பெற முந்துமின் என ஆர்வங் காட்டி அதனைப் பெறுதற்குக் காலந் தாழ்த்தாது முந்திச் செல்லுங்கோள் என ஏவி அவ்வாறாகச் சென்றார்க்கெல்லாம் தன் அருளையே வரையாது கொடுக்கின்ற இறைவனது திருவடிகளைச் சேர்தலாகிய முத்தியின்பத்தைப் பெறுங்கோள் என ஆற்றுப்படுத்தியருளினர் எனக் கொள்க.

இயற்கைப் பொருளடைவில் திருப்பாடல்கள் அமையுமாற்றைப் பின்வரும் அட்டவணையிற் காண்க.

| பெரும் பிரிவு | பொருள் எண் | தொடர் எண் | திருப்பாடற் பொருள் | நூற்பா எண் |
|---|---|---|---|---|
| I | | 1 | **தன்மனத் திண்மையைத் தானெடுத்துரைத்தல் :—**<br>பரிமேல் அவனுரு அன்றியறியேனெனல் | 1 |
| II | அ<br>ஆ | 2<br>3 | **செவ்வியற்றீர் நீர் சேரீர் என்னல் :—**<br>பிறவிக்கு நல்லீர் பிந்துமின் என்றல்<br>கோன்பரி கூடில் குடிகெடு வீரெனல் | 4<br>2 |
| III | | 4 | **கண்ட மங்கையர் மரமா மறப்பாரெனல் :—**<br>கண்ட நல்லார் மரமா மறப் பாரெனல் | 9 |
| IV | | 5 | **தெளிவிலா தாரைத் தெளிந்து சேர்கென்னல் :—**<br>தேறிச் சேவடி சேர்மின் என்றல் | 10 |

# அச்சப் பத்து

"அச்சப் பத்து" ஆவது, இறைவன் திருவடியையே பற்றுக் கோடாக அடிகள் கொண்டாராக, மற்றுப் பிற தொடர்புகளுக்கும், அத்தொடர் புடையார்க்கும் அஞ்சுவதைப் பொருளாகக்கொண்ட பத்துத் திருப்பாடல்களைக் கொண்ட பகுதி. முன்னர்ப் பகுதியில் உயிருண்ணியாகிய இறைவன்பால் பித்துற்று, ஊன்பாவிய உடலைச் சுமந்து அடவி மரமானேன், நான் பாவியேன் என்று இரங்கிய அடிகள் மேலும் தமக்கு அச்சம் விளைப்பன அகப்புறப் பற்றுக்கள் என முறையிட்டு அருளுகின்றனர். இதனானே இது மேலைப்பகுதியோடு தொடர்பு உடையதாயிற்று

அஞ்சப்படுவன ·

1. அன்பிலாத உயர்திணைப் பொருள்கள்—கிளியனூர், மன்னன் ;
2. அஃறிணைப் பொருள்கள்—களிறு, புலி, அரவு ;
3. படை—வேல், வாளி ;
4. பூதம்—உருமு, எரி, மலைவீழ்தல் ;
5. நோய்—பிணி ;
6. முடிவு—இறப்பு, கூற்று ,
7. கலப்புவினை—வேட்கை, வினைக்கடல்

என்னும் ஏழு பிரிவுகளுள் அடங்கும்.

### இயற்கைப் பொருளடைவு

எம்பெருமான் திருவுருவப் பெருமையான், பிற தேவரை அரு வருத்து (2), அவன் கழலின் பெருமையறிந்து (8), அன்பு காரண மாக நெக்குருகி (4), புனைந்து நைதலே அன்றிப் புகழ்களை ஏத்தி நைந்து (7), அவன் அருள் நுகர்ந்து (3), அவனே தஞ்சம் என அவனுக்கு அற்று (1), திருமுண்டம் தீண்டுதல் (9), ஆதிய அருள் நெறிப் படுத்தும் செயல்களில் ஈடுபட்டு (10), அவன் அளிக்கு உரிமையாக்கும் திருநீற்றினை அணிந்து (5), அவனுக்கு ஆட் படாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறும் என இயைக்க.

## நூற்பொருளடைவு

அஞ்சுவன

மற்றுமோர் தெய்வம் உண்டெனநினைந்து எம்மாற்கு அற்றிலாதவர் (1),

திருவுரு அன்றி மற்றோர்தேவர் எத்தேவர்என அருவராதவர் (2),

பத்தி இனிது அருள் பருகமாட்டாதவர் (3),

பாதம் நண்ணித் துணி உலாம் கண்ணராகி தொழுதுளம் நெக்கு இங்கு அணியிலாதார் (4),

தொழும்பரோடு அழுந்தி நீறு அணிகிலாதார் (5),

தாள்ஏத்தி மலர்புனைந்து நையும்ஆள் அலாதவர் (6),

பாதம் ஏத்தி அகநெகாதவர் (7),

கழல்கள் ஏத்திச் சிறந்தினிதிருக்க அறிவிலாதவர் (8),

திருமுண்டம் தீண்ட அஞ்சுவார் (9),

நினைந்து நைந்துருகிக் கண்சோர வாழ்த்தி நின்று ஏத்த அறிவிலாதவர் (10) என்பனவாம்.

அஞ்சாதன :

அரவு, பொய்யர் மெய் (1)
வேட்கை வினைக்கடல் (2)
வேல் கடைக்கண் (3)
கிளியனார் கிளவி, கிளியனார் முறுவல் (4)
பிணி, பிறப்பிறப்பு (5)
எரி, வரைபுரள்வது (6)
பழி, சாவு (7)
களிறு, புலி (8)
உருமு, மன்னருறவு (9)
கோனிலாவாளி கூற்றுவன் சீற்றம் (10) என்பனவாம்.

நூற்பொருளடைவுக்குக் காரணம் வருமாறு :—

1 இறைவன்மேல் தம் அழுந்திய பற்றைத் தம்மதே குற்றமென அமைந்த அடிகள் அப்பற்றுக் காரணமாக அரவுக்கேனும், பொய்க்கேனும் அஞ்சேனாகி மற்றத் தெய்வங்களை நினைந்துவருதலினாலே எம்பெருமானை தஞ்சம் என்று அரற்றிலாதவர்களைக் கண்டால் அஞ்சுவேன் என்றருளிய இயைபால் முன்னர்த் திருப்பதிகத்தின் இறுதித் திருப்பாடலுடன் இயைபுடைத்தாய் இப் பகுதியின் முதலாவதா யமைத்தருளப்பட்டது.

2. பொருளடைவில் முதலாவதாகிய திருப்பாடல், எம் பெருமானது திருவுருவப் பெருமையானே ஏனைய தேவர்மேல் மயக்கம் நீங்கி, அவர்மீது அருவராதவர்களைக் கண்டால் அஞ்சுவன் என்ற இயைபால் இரண்டாவதாக அமைத்தருளப்பட்டது.

3. பொருளடைவில் ஐந்தாவதாகிய திருப்பாடல், எம்பெரு மான் எல்லாரையும் இயக்கும் திருக் கூத்தினையுடையோன் என அறிந்தும், அவன் அருள் நுகரமாட்டாதவர்க்கு அஞ்சுவேன் என்ற இயைபால் மூன்றுவதாக அமைத்தருளப்பட்டது.

4. பொருளடைவில் மூன்றுவது ஆகிய திருப்பாடல், எம் பொருட்டு, (குழவியின் நோய்க்கு நோயில்லாதவளாகிய தாய் மருந்துண்ணுதல் போல) நீறணியும் வேதியனுக்காக அவ் அன்புக் காரணமாக இரக்கங்கொண்டு நெகாதவர்க்கு அஞ்சுவேன் என்ற இயைபால் நான்காவதாக அமைத்தருளப்பட்டது.

5. பொருளடைவில் ஒன்பதாவதாகிய திருப்பாடல் அளியற்ற வரால் அறியமுடியாத அத்தலைவன் பெருமையினை அறிந்து அவனிடத்து அளியுரியராதற்கு உரிமை நல்கும் அவனது மங்கல சூத்திரம் போன்ற விபூதியினை அணியாதவர்க்கு அஞ்சுவேன், என்றமையின் ஈண்டு ஐந்தாவதாகக் அமைத்தருளப்பட்டது.

6. பொருளடைவில் பத்தாவதாகிய திருப்பாடல் திரு நீற்றினை அணிந்து அவனுக்கு ஆட்படாதவரைக் கண்டால் அஞ்சுவேன் என்றமையின், ஆறுவதாக அமைத்தருளப் பட்டது.

7. பொருளடைவில் நான்காவதாகிய திருப்பாடல் அவனுக்கு ஆட்பட்டுப் புனைந்து நைதலே அன்றி அவன் புகழ்களையே ஏத்தி நையாதவர்க்கு அஞ்சுவேன் என்ற இயைபால் ஏழாவதாக அமைத் தருளப்பட்டது.

8. பொருளடைவில் இரண்டாவதாகிய திருப்பாடல் அகம் நெக்குருகுதற்குக் காரணமாகிய அவனது கழலின் பெருமையை அறியும் அறிவில்லாதவர்க்கு அஞ்சுவேன் என்றமையின் எட்டாவ தாக அமைத்தருளப்பட்டது.

9. பொருளடைவிலே ஏழாவதாகிய திருப்பாடல் அறிவில்லா மையினுலே அவனது திருமுண்டத்தினது பெருமையை அறியா ராகி அதனைக் கையில் எடுத்தற்கு மனம் ஒருப்படாதவர்களுக்கு அஞ்சுவேன் என்றமையான் ஒன்பதாவதாக அமைத்தருளப் பட்டது.

10. பொருளடைவிலே எட்டாவதாகிய திருப்பாடல், அற் றிலார்க்கு அஞ்சுதலும், பிற தேவரை அருவருத்தலும், அன்புடை

மையும் அளியுடைமையும், திருநீறு சாத்துதலும், ஆட்படுதலும், அகம் நெகுதலும், அறிவுடையராதலும், திருமுண்டம் தரித்தலும், ஆகிய செயல்களை அருள்நெறிப் பட்ட வீரர் செயல் என உணர்ந்து அவ்வீர நெறியில் நின்று ஏத்தமாட்டாதவர்க்கு அஞ்சுவேன் என முடித்தருளிய இயைபால் ஈண்டுப் பத்தாவதாக அமைத்தருளப்பட்டது.

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

## ஆனந்தம் உறுதல்

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**புற்றில்வாள் அரவும் அஞ்சேன்**
**பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்**
**கற்றைவார் சடைஎம் அண்ணல்**
**கண்ணுதல் பாதம் நண்ணி**
**மற்றும்ஓர் தெய்வந் தன்னை**
**உண்டென நினைந்(து)எம் பெம்மாற்(கு)**
**அற்றிலா தவரைக் கண்டால்**
**அம்மநாம் அஞ்சு மாறே.**

இதனால், அரவுக்கும் பொய்யர்களது மெய்க்கும் யான் எம்பெருமான் பொருட்டு அற்றுப்போகாதவர்க்கு அஞ்சுவேன் என்று கூறியருளுகின்றார்.

(பொ - ரை.) '(இன்ன காலத்து இன்னவாறு நிகழும் எனத் துணிதற்கியலாத புற்றின்கண் வாழும் அரவு, பொய்யர், அற்றிலார் என்னும்) மூன்றனுள் புற்றின்கண் வாழும் வாளினது தன்மையை ஒத்து ஒளிவிட்டுத் தோன்றும். பாம்பினுக்கும் அஞ்சுதலைச் செய்யேன், செயலும் நினைவும் வேறுவதன்றித் தாம் சொல்லுகின்ற சொல்லும் வேறாகப் பொய்யர் தமது ஆற்றலால் மெய்போலப் புனைந்து கூறும் கூற்றுக்கும் அஞ்சுவேன் அல்லேன். தொகுதியாகிய நீண்ட சடையை உடைய எமக்குப் பெருமானாகிய நெற்றிக்கண்ணையுடைய கடவுளாரது திருவடியை அரணாக அடைந்து, ஐயப்பாட்டின் மிகுதியால் வேறுமொரு தெய்வம் மற்று அவன் போலும் உண்டென எண்ணி எம்பெருமான்

பொருட்டுத் தனது உடல் பொருள் ஆவி ஆனவற்றை அற்றுப் போகாதவரைக் கண்டால் அம்ம ! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) "புற்றில் வாழும் அரவு" வலிமையுடையது. அதனால் ஏதம் பல உளவாம். வேட்டுவரும் பிறரும் புற்றுள் கை விடும்போதும், அன்ன பிற நேரத்தும் அஞ்சுவர். அஃது எனக்கு ஆகாது என்றபடி.

பொய்யர், சமயப்புரட்டர், வேளம்பர், காமுகர் முதலோராலும் தமக்கு ஏதமில்லை என்பார் "பொய்யர் தம் மெய்யும் அஞ்சேன்" என்றருளினர்.

முப்பெருந் தேவருள் ஒருவனை இறைவனை வழிபட்டுக் கருதி வருவோர், பொதுப்பட மூவர்க்கும் அற்றிலராவரேயன்றி இறைவனுக்குச் சிறப்புற அற்றிலர் ஆகார் ஆதலின் அவரை வெறுக்கவும் ஒதுக்கவும் அணைக்கவும் கூடாமையின் அஞ்சுவேன் என்றார்.

ஏகாரம் அசைநிலை. "அம்ம" என்பது இதனைக் கேள் எனக் கேட்பிக்கும் இடைச் சொல். 'சென்மியா' என்பது போலக் 'கேண்மியா' என்பது 'கேட்டுச் செல்' எனப் பொருள்படுவது கண்டுகொள்க. "கண்டால்" என்றருளினர் காண்டலருமை தோன்ற. இங்ஙனமே மேல் வருவனவற்றுக்கும் உரைத்துக் கொள்க.

**வெருவரேன் வேட்கை வந்தால்**
**வினைக்கடல் கொளினும் அஞ்சேன்**
**இருவரால் மாறு காணா**
**எம்பிரான் தம்பி ரானும்**
**திருவுரு அன்றி மற்றோர்**
**தேவர்எத் தேவர் என்ன**
**அருவரா தவரைக் கண்டால்**
**அம்மநாம் அஞ்சு மாறே. 2**

இதனால் ஊழ்முறை பற்றியனவாகிய வேட்கைக்கும் வினைக்கும் அஞ்சேனாகிய யான் பிறதேவரை அருவராதவரை அஞ்சுவேன் என்று கூறியருளுகின்றார்.

(பொ - ரை.) (வேட்கையும், வினைக்கடலும், பயிர்ப்பின்மையும் ஆகிய மூன்றனுள்) ஆசைவரினும் அதற்கும் அஞ்சேன் ; வினையாகிய கடல் என்னைக் கொண்டுசெல்லினும் அஞ்சமாட்டேன் ; அயன் மால் இருவராலும், மாறுபட்டுச் சென்றும் காண முடியாத எமக்குப் பிரானும் எல்லார் தமக்கும் பிரானும் ஆகும் இறைவனது திருவுருவினையன்றி மற்றுமோர் தேவர் எவ்வகைப்பட்ட தேவராவர் எனக் கருதி அவரது கோலங்களை அருவருக்கமாட்டாதவரைக் காணில் அம்ம ! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) பிறதேவர் கோலங்களைக் கண்டு அருவருத்து வெறுத்த லாலே எம்பெருமானுக்கு அற்றவராதல் அமையப் பெறுவர் என்க. கற்புடையார் பிற ஆடவரை அருவருத்தல் போல அடிகளும் பிற தேவரை அருவருத்தருளினார். அருவருத்தல், அவரொடு ஒன்று சேரற்கண் என்க.

யாமே அவன் அடி முடியைக் காணுவேம் என மாறுபட்டார் என்க. மாறு - மாறுபாட்டால், காண - சென்று காண. இருவரும் தம்முள் முன்னிருந்த மாறுபாட்டைக் காணுதபடி அவர்க்கு நடு வீற்றிருந்து அவர் தமக்கும் தலைவனாயினன்; அவன் எம்பிரான் எனினும் அமையும்.

"திருவுரு" என்றமைக் கேற்பக் 'கோலங்களை' என்பது வருவிக்கப் பட்டது.

"வேட்கை"யையும் "வினைக்கடலை"யும் அகற்ற இறைவன் திருவடித்துணை இன்றிமையாதாதலின் இங்ஙனம் அருளிச்செய்தார் என்க.

சிறப்பும் பொதுவும் தோன்ற "எம்பிரான் தம்பிரான்" என்னப் பட்டான். நம் இறைவனே தேவன் என எக்காலத்தும் நாம் அறிவதன்றி, வேறும் ஒரு தேவனுளன் என்று கருதுவது ஒரு புதுமையாகும் என்பதும், ஏனைய தேவர்க்கு முதன்மை இன்று என்பதும் புலப்பட "மற்றோர் தேவர் எத்தேவர்" என்றருளினர்.

வேட்கையும் வினைக்கடலும் ஊழ்முறை பற்றியன.

> வன்புலால் வேலும் அஞ்சேன்
> வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்
> என்பெலாம் உருக நோக்கி
> அம்பலத்(து) ஆடு கின்ற
> என்பொலா மணியை ஏத்தி
> இனிதருள் பருக மாட்டா
> அன்பிலா தவரைக் கண்டால்
> அம்மநாம் அஞ்சு மாறே. 3

இதனால் வேற்படைக்கும், பெண்களுக்கும் யான் இறைவனது அருள் நுகரமாட்டாத அன்பிலிகட்கு அஞ்சுவேன் என்று கூறியருளுகின்றார்.

(பொ - ரை) (வேற்படை, மகளிர்கட்கடை, ஐந்திணை அன்பிலாதவர் எனும் மூன்றனுள்) மார்பு தோள் முதலாய வல்லிடங் களில் விழுப்புண் உண்டாக அவற்றின் தசையைக் கவரும் வீரப் போர்க்களத்து வேற்படைக்கும் அஞ்சேன். தம்மைப் பிறர் காணுமாறு ஒலி செய்யும் வளையல் அணிந்த கையை உடைய மங்கையர் தம் உயிர் கவரும் கடைக்கண் பார்வைக்கும் அஞ்ச

மாட்டேன். நோக்கினுர் என்பெலாம் அன்பால் உருகுமாறு கடைக்கணித்துத் திரு அம்பலத்தே உலகம் ஈடேறக் கூத்தாடுகின்ற எனது பொள்ளல் இல்லாத மாணிக்க மணிபோன்றுனைத் துதித்து அவனது இனிய திருவருளை நுகரமாட்டாத அன்பில்லாதவரைக் கண்டால் அம்ம, நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை) வீரப் போருக்கும், காதற் போருக்கும் அஞ்சிலர் என்க. கைவளை திருத்துவார்போலக் கடைக்கண்ணின் உணர்த்துவ ராகலின் "வளைக்கையார் கடைக்கண்" என்றருளினர். மாணிக்கக் கூத்தன் என்பதுபட "அம்பலத்தாடுகின்ற பொல்லாமணி" என்றனர். வேல் வீரத்தொடு காதல் வீரத்தினைப் பின்னும் எடுத்து மொழிந்தருளு கின்றுர் வேற் போரினும், காதற்போர் வெல்லுதற்கரியது ஆகலின் அதனை வலியுறுத்துவான் வேண்டி என்க. அடுத்த திருப்பாட்டானும் அவரது கிளவியையும் முறுவலையும் கூறியருள்வாராயினர்.

அவன் செய்கின்ற அன்பிற்கு எதிர் அன்பு செய்து ஏத்தி இனிதருள் பெறமாட்டாதவர் "அன்பிலாதவர்" என்க. "இனிதருள்" இருவயின் ஒத்த அன்பால் பெறப்படுவது, பிற வழிகளால் எய்தப்படுவதொன்று அன்றென்க.

கிளிஅனுர் கிளவி அஞ்சேன்
அவர்கிறி முறுவல் அஞ்சேன்
வெளியநீ றுடு மேனி
வேதியன் பாதம் நண்ணித்
துளிஉலாம் கண்ண ராகித்
தொழு(து)அழு(து) உள்ளம் நெக்(கு)இங்(கு)
)லா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 4

இதனுல் காமத்தை விளைவிக்கும் பெண்களுடைய சொற்களுக் அவர் தம் நகைக்கேனும் அஞ்சுவேனல்லேன்; ஆனுல் நின்பொருட்டு இரங்காதவரைக் கண்டால் அஞ்சுவேன் என்றருளு கின்றுர். [அன்பினுல் தோன்றும் அளி கூறியவாறு]

(பொ - ரை.) (மங்கையர் கிளவியும், அவர் தம் முறுவலும், இறைவன்பால் அன்பின்மையும் ஆகிய மூன்றனுள்) கிளியை ஒத்த மகளிருடைய மாயத்தை விளைவிக்கும் மொழிக்கும் அஞ்சேன். அம்மகளிருடைய மயக்கத்தைத் தரும் நகைப்புக்கும் அஞ்சுவேனல் லேன். ஆனுல், வெண்ணிறம் பொருந்திய திருநீறு பூசப்பட்ட திருமேனியை உடைய குருவனுகிய அந்தணனது திருவடியை அரணுக அடைந்து அன்புக் கண்ணீர் துளிக்கின்ற அகநெகிழ்வைத் தோற்றுவிக்கும் கண்களையுடையவராகி, வணங்கி அழுது உள்ளம்

கட்டுவிட்டு எம்பொருட்டு அவன் செய்யும் செயல் கண்டு அதனுல் அவன்மேல் இரக்கங்கொள்ளாதவரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) மங்கையர் திறங்களை மறத்தலருமை குறித்து இருதிருப் பாடல்களில் ஓதியருளினர். காதல் வெல்லற்கரியது என்றருமாம்.

மங்கையர்பால் வைக்கப்படுதலின், அளி இறைவன்பால் செல்லா தாயிற்று. அது காரணமாக இறைவனது புகழ்களை ஏத்தி அன்பு செய்தலின்மையின் அவன் செய்த நன்றி மறக்கப்படுவதன்றித் தொழுதலும் அழுதலும் முதலாயின நிகழாவாயின. இறைவனுக்கு உரியராகும் இயல்பு களைப் பெருமையின் அவை நிகழாவாயின என்க. எனவே இறைவன் திறமறிந்து நன்றி கடைப்பிடிப்பதால் பிறவற்றின் மேற்செல்லும் மன எழுச்சியைத் தகைந்து, அன்பு கைவரப்பெற்று, செவ்வியடைந்து, அடியார்க்கு உலக மங்கையர் காமக் குறிப்புக்கள் இன்னல் செய்யாவாய்ப் பின்னடைதலின், அவை அஞ்சப்படாது அவற்றை விளைவித்தற்குரிய இறைவன்மேல் அளியின்மை அஞ்சப்படுவதாயிற்று.

அவன் எம்பொருட்டுத் தன்னலம் துறந்தமை குறித்து "வெளிய நீறுடும் மேனி" என்றும், அவன்மேல் முறையிடுதற்கும் துதி செய்தற்கும் அளி செய்தற்கும் அன்ன பிறவற்றை ஆற்றுதற்கும் இடமாவது திருவடியே ஆதலின் "பாதம் நண்ணி" எனவும், மெய்ப்பொருளை உபதேசித் தருளினமையின் "வேதியன்" என்றும், அவன் செய்த அருட்செயல்களை நினையும்தோறும் கண்ணீர் பெருகுமாதலின், "துளி யுலாம் கண்ணராகி" என்றும், அழுந்தொறும் உள்ளம் கட்டுவிட்டு உருகுமாதலின் அழுது "உள்நெக்கு" என்றும், இங்ஙனம் ஒன்றையொன்று தொடர்ந்து நிகழ மனம் அளியுடைத்தாகும். இதுவே அடியார் இயல்பு பெற்றூர்க்கு வளந் தருவது; அஃதிலார் கூட்டுறவினுல் ஏதம் விளையுமாகலின் "இங்கு அளியிலாதவரைக் கண்டால்......அஞ்சுமாறே" என்றும் அருளிச் செய்தார்.

பிணிஎலாம் வரினும் அஞ்சேன்
பிறப்பினே(டு) இறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியி னுன்தன்
தொழும்பரோ(டு) அழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்தும் காணுச்
சேவடி பரவி வெண்ணீ(று)
அணிகிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 5

இதனுல் பிணி பிறப்பு இறப்பு இவற்றிற்கும் அஞ்சேனுகிய யான் வெண்ணீறு அணியாதவர்க்கு அஞ்சுவேன் என்றருளு

மாற்ருல், அளியுடைமை அன்புடைமையாதற்கு உரிமை நல்கும் திருநீற்றினது பெருமையும் தொண்டர் திருக்கூட்டப் பெருமையும், அதனெடு திருநீறு அணிகிலாதார் சிறுமையும் கூறப்படுகின்றன.

(பொ - ரை.) (பிணியும், பிறப்பிறப்பும், வெண்ணீறணி யாமையும் என்னு மூன்றனுள்,) எவ்வாற்ருனும் வரும் எல்லா நோய்கட்கும் அஞ்சேன், பிறப்பிறப்புக்களுக்கும் அஞ்சேன். (ஆனல் தம் நலம் பேணி அவற்றை யஞ்சுதலால்) பிறைத்திங்களைக் கண்ணியாக அணிந்துகொண்டவன் தனக்குத் தொண்டு செய்வா ராயினரோடு கலந்து ஈடுபட்டு, அத்திருமால், அணுக்கள் திணிந்த நிலத்தினைப் பிளந்துசென்றும் காணற்கியலாத (அத்துணைப் பெருமை வாய்ந்த) சிவந்த திருவடிகளை வணங்கி வெண்ணிறத் திருநீற்றினை அணிந்துகொள்ளாதாரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) ஈரிடத்தும் வெண்ணீறு தரித்தல் கூறியருளினர்; ஒருவர்க்கொருவர் செய்யும் தியாகமே ஐந்திணை அன்புவாயிலாகப் பெறும் பேரானந்தம் என்பது தோன்ற.

"பிறப்பு இறப்புக்குமஞ்சேன்" என்ருர் தமக்கு அவை உளவாகா என்பது தோன்ற.

"பிணியெலாம்......இறப்பும் அஞ்சேன்" என்றருளினர், வெண்ணீ ருகிய மருந்து தம்பால் உண்மையின். அஃதாவது யாதொன்றையும் தமக்கென வேண்டாதிருத்தல் என்க. வெண்ணீறு அவ்வுணர்வின் பொருட்டணியப்படுவது. மேலும் தம்மைத் தாங்கும் பாரம் தலைவற்கு ஆதலின், அவன் துணி நிலவின் கேடு அகற்றி ஆண்டவாறே ஆள்தற்குரிய னும்போது, அவற்றைப்பற்றி நினைக்கவேண்டியதில்லை என்பதும் கொள்க.

வெண்ணீறு அணிதற்குச் சேவடி பரவுதலும், சேவடி பரவுதற்குத் தொழும்பரோடு அழுந்துதலும் இன்றியமையாதன.

அடிகள் கருத்துக்கியைய எடுத்த "பிறப்பும்" அதற்குரிய "இறப்பும்" என்க. "பிறப்பினெடு" எனப் பிரித்தருளினர், இறப்புப் பிணி முதலிய வற்ருல் வருதலின்.

அன்பினுல் திங்கள் அணியப்பட்டது. செருக்கினுல் திருவடி காணப் படாதாயிற்று. பரவி வெண்ணீறணிந்து அளியும் அன்பும் உடையராயக் கால் அத்திருவடி புலனும் என்க. இவை எல்லாவற்றுக்கும் மூலமாவது வெண்ணீறணிதலே என உணர்க.

**வாள்உலாம் எரியும் அஞ்சேன்**
**வரைபுரண் டிடினும் அஞ்சேன்**
**தோள்உலாம் நீற்றன் ஏற்றன்**
**சொற்பதம் கடந்த அப்பன்**

தாளதா மரைகள் ஏத்தித்
தடமலர் புனைந்து நையும்
ஆள்அலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே.

இதனால் எரி, வரைபுரளுதல் ஆகிய பௌதிக வினைகட்கும் யான் நல்லடிமைப்படாதாரைக் கண்டால் அஞ்சுவேன் என்றருளுதலாலே தொண்டுடையார் பெருமையும் அஃதிலார் சிறுமையும் கூறியருளுகின்றார்.

(பொ - ரை.) (எரியும், வரைபுரண்டுவீழ்தலும், அவனுக்கு ஆட்படாமையுமாகிய மூன்றனுள்,) வாள்போல ஒளிவிட்டு நாநீட்டும் தீக்கும் அஞ்சேன்; மலைதான் புரண்டு என்மேல் வீழ்ந்திடினும் அதனுக்கும் அஞ்சேன். ஆனால் திருத்தோளிலே விளங்கும் திருநீற்றையுடையவனும், விடையூர்வோனும், சொல்லின் நிலையைக் கடந்த நாதத்துக்கு அப்பனும் ஆகிய இறைவனது தண்டுகளையுடைய தாமரைமலர்களாகிய திருவடிகளைத் துதித்து, பெருமை பொருந்திய பூக்களை மாலையாகத் தொடுத்து அத்திருவடிகளிலே அணிந்து மனம் நெகிழும் அடிமையல்லாதவரைக் கண்டால், அம்ம, நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) "நையும் ஆள்" என முடியும். வரைபுரளுதல் வெள்ளத்தாலும் நெருப்பாலும் என்க. இவை பௌதிகம் எனப்படும். தாமே அழிவதோடு அமையாது பிறவற்றையும் அழிப்பனவாதலின் முன் சொல்லியவற்றின் பின் வைத்தருளினார்.

"சிவன் அவன் திரள்தோள்மேல் நீறுநின்றது கண்டனையாயினும்" (திருச்சதகம் 33.) என்றலும் காண்க.

இவ்வாறு திருப்பாடல்களினாலும் தொண்டர்களாகிய சரியையாளர்களுடைய இயல்பு கூறியருளினார். அதாவது, சமய மரபுகள் பலவாகலின், அவற்றுடன் மோதிக் கொள்ளாவாறு, தம் சமய மரபிற்கு ஏற்ற இறைவனை எவ்வாற்றானும் வழுவுதலின்றி வரைந்துகொண்டு, அந்நிலை வழுவாமைப் பொருட்டு ஏனைய தலைவர்களை அருவருத்துத் தாம் வரைந்துகொண்ட தலைவனையே எவ்விடத்தும் நினைவுற்று, அப்பயிற்சி மிகுதியினானே ஐந்திணை அன்பும் இரக்கமும் பெற்று, அவை மேலும் பெருகுதற்பொருட்டுத் தொண்டர்ச் சங்கத் திருக்கூட்டங்களிற் சேர்ந்து அவரோடு கலந்து பணிசெய்து, தம்மை இறைவனுக்கே அர்ப்பணஞ்செய்து, ஏனைய உயிர்ப் பொருள்களினாலும், மங்கையர் காமத்தாலும், பௌதிகப் பொருள்களின் நிலைமாற்றங்களாலும் அஞ்சித் தம் நிலைகெடராய்த் தம் மரபுள்ளிருந்து அவற்றை அஞ்சித் தெளிவின்றியும், அருவருப்பின்றியும், அன்பின்றியும், இரக்கமின்றியும், துறவின்றியும், ஆட்படுதலின்றியும் ஒழுகித் தம் தலைவன்

குறிப்பொடு மாறுபடுவோர், மாறுபாடின்றி ஒழுகும் தமக்கும் ஏதம் விளை விப்பர் என அஞ்சி, அவ்வச்சத்தோடு அவரைக் காணுது ஒழுகுவோர் என்றருளியபடி என்க.

'குருதிக் கோட்டுக் குஞ்சர புரம்' என்பது போல "தாள தாமரைகள்" என்பதையுங் கொள்க. அகரத்தைச் சாரியையாகக் கொண்டு 'தாள் தாமரை' என உரைப்பாரும் உளர்.

தகைவிலாப் பழியும் அஞ்சேன்
சாதலை முன்னம் அஞ்சேன்
புகைமுகந்(து) எரிகை வீசிப்
பொலிந்தஅம் பலத்துள் ஆடும்
முகைநகைக் கொன்றை மாலை
முன்னவன் பாதம் ஏத்தி
அகம்நெகா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 7

பழிக்கேனும் இறப்புக்கேனும் அஞ்சேனுகிய யான் அவன் பாதத்தை ஏத்தி மனம் நெகாதவர்க்கு அஞ்சுவேன் எனக் கூறியருளுகின்ருர்.

(பொ - ரை.) (பழியும், அதன் காரணமாகிய இறப்பும், இறைவன் பால் அகம் நோகாமையும் ஆகிய மூன்றனுள்) தடுத்தற் கரிய பழிக்கும் அஞ்சேன்; சாதலை, (அப்பழிக்கு முன்னரே) அஞ்சேன். ஆனல், புகையால் உணரப்படும் நெருப்பைக் கையிலே முகந்து வீசிப் பொலிவு பெற்ற அம்பலத்திலே நின்று திருக்கூத் தாடாநிற்கும் முகை விரியப்பெற்ற கொன்றை மலர்மாலை யணிந்த தலைவனுகிய இறைவனது திருவடியை வணங்கி மனமுருகாத வரைக் கண்டால் அம்ம் ! நாம் அஞ்சுமாறும் எ - று

(வி - ரை.) இன்மை அருமையின் மேற்று. தாம் அகத்தானும் புறத் தானும் இறைவன்பால் ஈடுபட்டிருத்தலின், அவன் கையகத்தேந்திய எரி அவற்றை அழிக்குமென்பது கருதி உபலக்கணத்தால் மான்கன்றும், மழுவும், உடுக்கையும் முதலாயின கொள்ளப்படும். முன்னவன் - நடராசப் பெருமான். கொன்றைமாலை, சரியைத் தொண்டின் நின்ருராலிடப்பட்டது. அகம் நெகுதல், கிரியையாளர்கட்கு. சரியையின் நின்று பயின்றவரேனும், தம்மை முதல்வராக்கொண்டு புடைசூழ்ந்து வணங்கும் சரியையாளர் பயிற்சிபெறுமாறு அகநெகுதல் வேண்டுமென்பது குறித்து, ஈண்டும் அதனைக் கூறியருளினர் என்க. இதனுல் கிரியையாளர் செயல் குறித் தருளியவாருயிற்று. முன்னர் "அஞ்சேன்" என்றது, பழி எய்தின் சாதல் நேரிடும்; அங்ஙனம் நேரினும் நேருக எனத் துணிந்தமையை.

முன்னர்த் திருப்பாடல்களில் வரும் இறப்பு இயல்பாக நிகழ்வது, ஈண்டுச் “ சாதல் ” என்றது வலிந்து கொள்ளப்படுவதை.

தறிசெறி களிறும் அஞ்சேன்
 தழல்விழி உழுவை அஞ்சேன்
வெறிகமழ் சடையன் அப்பன்
 விண்ணவர் நண்ண மாட்டாச்
செறிதரு கழல்கள் ஏத்திச்
 சிறந்(து)இனி(து) இருக்க மாட்டா
அறிவிலா தவரைக் கண்டால்
 அம்மநாம் அஞ்சு மாறே. 8

இதனால், காட்டிலும் நாட்டிலும் உள்ள ஊறு செய்யும் விலங்கு கட்கு அஞ்சாதேனாகிய யான், திருவடி ஏத்தி இன்புற்றிருத்தற்கு உரிய அறிவில்லாதவர்க்கு அஞ்சுவன் என்றருளுகின்றார்.

(பொ - ரை ) (களிறும், புலியும், சிவயோக அறிவும் என்னும் மூன்றனுள்,) கட்டுத் தறியைச் சினக்கும் நாட்டு யானைக்கும், அஞ்சேன் , தீப்பொறி போன்ற கண்ணையுடைய காட்டுப் புலிக்கும் அஞ்சேன். ஆனால், மணம் கமழுகின்ற சடையை உடையவனும், அப்பனுமாகிய இறைவனது, விண்ணவர்களும் அடைதற்கரிய முத்துமணி முதலியவை செறியப் பெற்ற கழல்களை அணிந்த திரு வடியைப் போற்றிச் சிறப்புற்று இனிதாக யோகநிலையில் இருப்ப தற்குரிய அறிவில்லாதவரைக் கண்டால் அம்ம! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) செறிதல் - சினத்தல். ஊறுசெய்யும் காட்டு விலங்குகளிற் புலியும, நாட்டு விலங்குகளில் யானையும் எடுத்துக்காட்டாயின. யோகத்து வீற்றிருப்பின், விலங்குகளும் ஊறு செய்யாவாய் வசப்பட்டொழுகும் என்க.

இயல்பு மணம் பெற்ற “ சடை ” யென்று உரைத்தலுமாம்.

“ கழல்கள் ஏத்தலாவது, ” அவற்றின்கட் பொறிக்கப்பட்ட கூறும், வேதம் முதலியவற்றை ஓதுதலாம். சிறப்புடைய ஏத்துதலினாலே அவர்தம் இருக்கையும் சிறப்புடையதாயிற்று, விலங்கு களும் ஊறுசெய்யா என்றவாறும்.

“ சடையன் ” என்பது காதல் செய்யும் அழகுடையன் என்னும் பொருட்டு.

மஞ்(சு)உலாம் உருமும் அஞ்சேன்
 மன்னரோ டுறவும் அஞ்சேன்
நஞ்சமே அமுத மாக்கும்
 நம்பிரான் எம்பி ரானாய்ச்

செஞ்சவே ஆண்டு கொண்டான்
திருமுண்டந் தீண்ட மாட்டா(து)
அஞ்சுவார் அவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே 9

இஃது, இடியேற்றிற்கும் அரசர் உறவுக்கும் அஞ்சாத யான் கபாலந் தரித்துப் பிச்சையேற்றுண்டற்கு அஞ்சுவாரைக் கண்டால் அஞ்சுவேன் என்றருளியது.

(பொ - ரை.) (இடியேறு, மன்னர் உறவு, துறவு என்னும் மூன்றனுள்,) மேகங்கள் உலவுதலால் உண்டாகும் இடியேற்றிற்கும் அஞ்சேன், அரசர்களுடைய தொடர்புக்கும் அஞ்சேன். ஆனால், நஞ்சினையே தனக்கு அமுதமாக உட்கொள்ளும் நம்பிரானாகிய சிவபெருமான், எம்பிரானாகி எம்மைச் செவ்விதாகவே ஆண்டு கொண்டானது கபாலத் திருவோட்டை அவனைப் போலவே தாமும் பிச்சையேற்றற்குக் (கையில் எடாராய் அதனைக் கண்டு) அஞ்சுவாரைக் கண்டால் அம்ம, நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) இது ஞானிகள் இயல்பு கூறிற்று. மேகம் உலவுதலால் இடியுண்டாம் என்க. குடியாக இருப்போர்க்கு அரச பயம் உண்டு. ஞானிகட்கு அவ்வரசன் துரும்பாவன். அவர்கள் அரசியலுட்படார் என்க. ‘ துறவிக்கு வேந்தன் துரும்பு ’ என்பதும் அறிக.

தீண்டுதல் - கையிலெடுத்தல். திருமுண்டம் தீண்டாது அன்பு செய்தல் அஞ்சப்படுவதாயிற்று.

“ பவித்திரமார் திருமுண்டத்தானை மறைக்கிற்பேனே ”
(திருக்குறுந். பொது.)

என அப்பர் சுவாமிகள் அருளுதலும் காண்க.

அமுதத்தை அமுதமாக்கத் தான் நஞ்சை அமுதமாகக் கொண்டான் என்க. இதனால் அவன் கருணைத் திறம் கூறியவாறுமாம்.

கோண்இலா வாளி அஞ்சேன்
கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்
நீள்நிலா அணியி னானை
நினைந்துநைந்(து) உருகி நெக்கு
வாள்நிலாம் கண்கள் சோர
வாழ்த்திநின்(று) ஏத்த மாட்டா
ஆண்அலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 10

இதனால் அம்பிற்கேனும் கூற்றுக்கேனும் அஞ்சாது இறைவன் மாட்டு உருகும் வீரமிலார்க்கு அஞ்சுமாறு அருளப்படுகின்றது.

(பொ - ரை) (அம்பு, இயமன் சீற்றம், துதிக்கும் வீரமிலார் ஆகிய மூன்றனுள்) வளைவில்லாத அம்பிற்கும் அஞ்சேன், இயமனது சீற்றத்திற்கும் அஞ்சேன், ஆனால், நீண்டுவரும் நிலாவைக் கண்ணியாக அணிந்த இறைவனது திருவுருவை நினைந்து கசிந்து மனம் நெகிழ்ந்துருகி, அவனருள் ஒளியே விளங்கும் கண்களினின்றும் அன்புநீர் சோர அவனை வாழ்கவென வாழ்த்தி அந்நிலையிலேயே நிலைபெற்றுத் துதித்தற்குரிய ஆளுந்தன்மையில்லாதவரைக் கண்டால், அம்ம! நாம் அஞ்சுமாறும் எ - று.

(வி - ரை.) அம்பிற்கு அஞ்சுதலும், கூற்றிற்கு அஞ்சுதலும், இருவகை மரணங்கட்கும் அஞ்சுதலாம். அவ்வச்சம் பொருந்தியவிடத்து இறைவனை வணங்குதல் அவனைப் பெற வணங்குதலன்மையின், அவற்றுக்கு அஞ்சாது வணங்குதலே மெய்ம்மைத்தாய வணக்கமாயிற்று. இதனை முன் வந்தனவற்றிற்கும் கொள்க.

"நினைந்து நைந்துருகி நெக்கு...கண்கள் சோர வாழ்த்தி நின்றேத்த மாட்டா" என்னுந் தொடரால் உயிரும், மனமும், அறிதற்கருவிகளும், தொழிற்கருவிகளும் ஆதியவெல்லாம் இறைவன்பாலீடுபட வணங்குதலே உண்மை வணக்கம் என்றருளியபடி.

எனவே, அஞ்சத் தகாத மரண பயத்தை விலக்கி, நால்வகை நெறியினும் படிமுறையானே பயின்றொழுகி, நற்செவ்வி பெற்று, பேரின்பம் பெறுதற்கண் முயலாதவர்களைக் கண்டு அஞ்சுதலே அடிகள் உட்கோளாயிற்று. இன்னும் இதனானே, இந்நால்வகை நெறிகளையும் களவு கற்பென்னும் இருவகை அகப்பொருள் நெறியின் வைத்து இறைவனோடு பயின்று இன்புறுதலே அடிகள் சமயநிலை என்பதும் பெற்றாம்.

நாம் அஞ்சுமாறு இவையாகலின், இவற்றிற்கும் இவற்றிற்கும் அஞ்சேன் எனக் கொள்க. "நாம்" என்றது, தம் மரபினரை. எம் மரபினர் இவ்விவற்றையே அஞ்சுவராகலின், யான் அவையல்லாத இவ்விவற்றை அஞ்சேன் எனக் கொண்டு இப்பத்தின் பொருளை விளங்கிக் கொள்க.

திருச்சிற்றம்பலம்

# திருப்பாண்டிப்பதிகம்

"திருப்பாண்டிப்பதிக"மாவது பாண்டிப் பெரும்பதமாகிய முத்திப்பேற்றைப்பற்றிக் கூறிய தொகுதியாம். இது பத்துத் திருப்பாடல்களைக் கொண்டது.

தில்லைக்கண்ணே தன் செவ்விக்கொத்த இறைவனது பேரானந்தக் காட்சியைக் கண்டவராகிய அடிகள் அவனது ஒப்பற்ற அருட்செயலை வியந்து வழுத்தித் தாம் முன்னர்க் குழைக்கப் பட்டமைக்கு இரங்கி எந்நாட் களித்து இறுமாக்கேன் என ஆனந்தமேலீட்டால் அவனைச் சேர விரும்பினாரேனும், அங்ஙனம் சேரவொண்ணாது செய்வனவற்றிற்கு நாம் அஞ்சுமாறு என்னே எனக் கொண்டு தாம் பெற்ற பெரும்பதத்தைப் போற்றி ஏனைய அடியவர்களையும் உடன் வருக என்று அழைத்த இயைபால் இப்பகுதி முன்னர்ப் பகுதிகளோடு தொடர்புடைத்தாயிற்று.

இத்திருப்பதிகம் பொருள் இயைபிலே ஐந்து பெரும்பிரிவு களாகப் பிரிக்கப்படத்தக்கது. அவையாவன :

I தன் மனத் திண்மையைத் தான் எடுத்துரைத்தல். (1)

II செவ்வியற்றீர் நீர் சேரீர் என்னல். (4, 2)

III கண்டமங்கையர் மரமா மறப்பரெனல் (9)

IV தெளிவிலாதாரைத் தெளிந்து சேர்கென்றல் (10)

V அன்பரை ஆட்பட அழைத்து மொழிதல் (6, 3, 8, 5, 7)

என்பனவாம் இதனைப் பின்வரும் அட்டவணையிற் காண்க.

இறைவனையேயன்றி உலகத்து வேறொன்றையும் விரும்பாராய், வேறொன்றுக்கும் அஞ்சாராகி, அவ் அச்சமின்மை காரணமாக மனத்திண்மை பெற்று, தம்போலவே ஏனையோரையும் ஆனந்த முறுவிக்க விரும்பி உலகோரில் சிறிதேனும் செவ்வி பெறுதாரைச் செல்லன்மின் என விலக்கியும் சிறிதே செவ்வி பெற்றாரை நோக்கி மங்கையர் மரமா மறத்தற்குக் காரணமாகிய இறைவன் திறங் கூறி அவ்வாற்றானே அவன் திறத்தினைத் தெளிந்து சேராதீர் என அவரை ஏவியும் பேரின்பராயினாரை உடனழைத்தும் மொழிந் தருள்வார் ஆயினார் என இப்பகுதிக்கு இயற்கைப்பொருள் அடைவு செய்க.

இனி, செய்யுள் பொருளடைவு :—

இறைவனுக்கு ஆட்பட்ட அடிகள் அச்சம் இலராகி மனத்

திண்மையடைந்து, மனத்திண்மையற்றவராகிய பிறவிக்கு உரியோரைக் கூவி இறைவன் குதிரைமேற் கொண்டுவரும் காலம் அஃது எனவும், அக்கால் குடிகெடுவீரெனவும், காரணம் காட்டி அவர் செலவினை விலக்கிச் சிறிது செவ்வியுடையாரை நோக்கி மங்கையர்தம் இயல்பு மறத்தற்குக் காரணமான இறைவன் இயல் இதுவாம் எனக் கூறி அவ்வாற்றானே நீவிர் தெளிந்து சேர்வீராக என அவரை நெறிப்படுத்தித் தம் போன்ற மெய்யன்பர் குழாங்களை அழைத்து அவர்க்கு முத்தியின் பரிசு கூறி அம்முத்தி இயல்பு இவ்வாறாகலின் அதனைப் பெறுமின் என வற்புறுத்தி அவ்வாறு பேணினார்க்கு அவன் முழுதுலகையும் கொடையாகத் தருவன் கண்டீர், அதனைப் பெற முந்துமின் என ஆர்வங் காட்டி அதனைப் பெறுதற்குக் காலந் தாழ்த்தாது முந்திச் செல்லுங்கோள் என ஏவி அவ்வாறாகச் சென்றார்க்கெல்லாம் தன் அருளையே வரையாது கொடுக்கின்ற இறைவனது திருவடிகளைச் சேர்தலாகிய முத்தியின்பத்தைப் பெறுங்கோள் என ஆற்றுப்படுத்தியருளினர் எனக் கொள்க.

இயற்கைப் பொருளடைவில் திருப்பாடல்கள் அமையுமாற்றைப் பின்வரும் அட்டவணையிற் காண்க.

| பெரும் பிரிவு | பொருள் எண் | தொடர் எண் | திருப்பாடற் பொருள் | நூற்பா எண் |
|---|---|---|---|---|
| | | | **தன்மனத் திண்மையைத் தானெடுத்துரைத்தல் :—** | |
| | | | பரிமேல் அவனுரு அன்றியறி யேனெனல் | |
| II | | | **செவ்வியற்றீர் நீர் சேரீர் என்னல் :—** | |
| | அ | | பிறவிக்கு நல்லீர் பிந்துமின் என்றல் | |
| | ஆ | | கோன்பரி கூடில் குடிகெடு வீரெனல் | |
| III | | | **கண்ட மங்கையர் மரமா மறப்பாரெனல் :—** | |
| | | | கண்ட நல்லார் மரமா மறப் பாரெனல் | |
| IV | | | **தெளிவிலா தாரைத் தெளிந்து சேர்கென்னல் :—** | |
| | | | தேறிச் சேவடி சேர்மின் என்றல் | 10 |

| பெரும் பிரிவு | பொருள் எண் | தொடர் எண் | திருப்பாடற் பொருள் | நூற்பா எண் |
|---|---|---|---|---|
| V | | | அன்பரை ஆட்பட அழைத்து மொழிதல் :— | |
| | அ | 6 | கிளத்த லாகாமையே முத்திப் பரிசெனல் | 6 |
| | ஆ | 7 | நீர்மூழ் கன்பீர் கழல் மூழ்கும் மெனல் | 3 |
| | இ | 8 | முற்றுலகுந்தரும் முந்துமின் என்றல் | 8 |
| | ஈ | 9 | கொடைபெறப் போழ்தினில் முந்துமின் என்றல் | 5 |
| | உ | 10 | தனை யளிப்போன்தாள் சார்மின் என்றல் | 7 |

இஃது திருப்பெருந்துறையில் அருளிச்செய்யப்பட்டது என்ப

# சிவானந்த விளைவு

## கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

**பருவரை மங்கைதன் பங்கரைப் பாண்டியற்(கு) ஆரமுதாம்**
**ஒருவரை ஒன்றும் இலாத வரைக்கழற் போ(து) இறைஞ்சித்**
**தெரிவர நின்(று) உருக் கிப்பரி மேற்கொண்ட சேவகனார்**
**ஒருவரை அன்றி உருவறி யா(து) என்றன் உள்ளமதே. 1**

இதனால், குதிரையின்மேல் இவர்ந்து வந்தருளிய இறைவனுடைய திருவுருவையேயன்றி, வேறெவ்வுருவங்களையும் என் மனமானது அறியாது எனத் தமது மனத்திண்மை கூறியருளப் படுகின்றது.

(பொ - ரை.) பருமையாகிய இமயத்து வேந்தன் மங்கையாராகிய உமையம்மையாரைத் தமது இடப்பங்கிலே உடையவரும், பாண்டியனுக்குப் பெறுதற்கரிய அமுதமாகும் ஒப்பற்றவரும், (எல்லாமுடையவராய் இருந்தும்) தமக்கென ஓருடைமையும் இல்லாதவரும், வெளிப்பட்டு நின்று என்னை உருக்கிக் குதிரையின் மேலிவர்ந்து என்முன் வந்து நின்றருளிய வீரருமாகிய அவ்வொருவரையேயன்றி, வேறும் ஒருவர்தம் திருவடியையும் வணங்கி, அவர்தம் உருவத்தையும் என்னுள்ளம் அறியமாட்டாது எ - று.

(வி - ரை.) " கண்ணுதல் பாதம் நண்ணி மற்றுமோர் தெய்வந் தன்னை உண்டென நினைந்து எம்பெம்மாற்கு அற்றிலா "மையும், " எம்பிரான் திருவுருவன்றி மற்றோர் தேவரெத் தேவரென்ன அருவரா " மையும் அஞ்சற்குரியன என்றவர், ஈண்டுத் தமது மனத்திண்மை தோன்ற " உருவறியாது " என்றருளினர்.

பருமை, நுண்மையின் எதிர்மறை. மங்கை தனக்கு வலப்பாகமாக உடையவரெனினுமாம்.

பங்கரை ஆரமுதாம் ஒருவரை, இலாதவரை என்பவற்று ஐகாரங்களை உம்மை விரிக்கக் கெடுத்துச் செய்யுளாதலின் தனித்தனி ஓதியருளினர். 'அன்றி, இறைஞ்சி, உருவறியா'தென இயைக்க.

பாண்டியனுக்குக் குலதெய்வமாய்ப் போகம் நுகர்வித்தலின் " ஆரமுதாம் " என்க. அது கிடைப்பரிதென்க. உடைமையின்மையே பண்ணப் பணைத்த பெருஞ்செல்வமாயிற்று.

தம்பாலும் அங்ஙனம் புதிதாக வந்தமையின் உருகவைத்தார் என்க. யான் அவன் திருவடி சேரப்போகின்றேன் என்பது குறிப்பு. காட்சி வடிவமே கண்ணினும் அகத்தினும் இடம்பெற்று நின்றதென அறிக. " பரிமேற்கொண்ட சேவகனார் ஒருவரையன்றி உருவறியாது " என்ற மையால் மதுரைக்கண் முதலாவதாகக் கண்ட காட்சி ஈண்டும் பெற்றாம்.

சதுரை மறந்(து)அறி மால்கொள்வர்
சார்ந்தவர் சாற்றிச்சொன்னோம்
கதிரை மறைத்தன்ன சோதி
கழுக்கடை கைப்பிடித்துக்
குதிரையின் மேல்வந்து கூடிடு
மேற்குடி கேடு கண்டீர்
மதுரையன் மன்னர் மறுபிறப்(பு)
ஓட மறித்திடுமே.

இதனால் குதிரையின்மேல் வரும் காட்சியினால் பண்பிலார் எய்தும் கேடு கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) ஞாயிறு தன்னையொழிந்த திங்கள் முதலாய வற்றின் ஒளிகளை மறைத்தாலொத்த சோதியாகிய இறைவன், மதுரைவாழ் மக்கட்கு அரசனாகிய பாண்டியனது மறுபிறப்பு மேல் விளையாதபடி (அப்போது தன் குதிரையை) மறுத்திடுவானாயினன். அவன் இப்போது மூவிலைச் சூலத்தைக் கையிற் பிடித்துக்கொண்டு அக்குதிரையின்மேல் ஏறிவருவானாயின், அவனைச் சார்ந்தவர்கள் தமது சதுரப்பாட்டினை மறந்து பற்றியதனையே பற்றி அறிவு மழுங்கப் பெறுவர். ஆதலால் அதனைக் கண்ட நீவிரேயன்றி நும்

குடி முழுவதும் கேடடையும்; என மேற்கோள்காட்டிக் கூறினேம் கண்டீர். (இவ்வாருதலினுலே பிறவிக்கு நல்லீர் வாரற்க, அல்லீர் வருக) எ - று.

(வி - ரை.) 'சதுரம்' என்பது "சதுர்" என நின்று "ஐ" ஏற்றது. "கதிரை" என்றதில் ஐ சாரியை. "அறிமால் கொள்ளுதல்" என்பது, அறிவு மயங்குதல் என ஒரு பொருளும், கண்டதனையே விடாதுபற்றி அதனுட் கலத்தல் எனப் பிறிதொரு பொருளும் பயப்ப நின்றது. சதுரம் - நான் எனதென்றல். அப்பாண்டியனை அரிமர்த்தன பாண்டியன் எனப் புராணம் கூறும். "பரிமேற்கொண்டானை மறவேன்" என்றருளினர், அவன் திருவடியடைய ஒருப்பாடுடையராதலின். தாம் முத்தியுட் புகும் போது ஏனைய அன்பரையும் உடனழைத்துச் செல்லுதல் மரபாதலை முன்னும் பின்னும் கண்டறிக. கூடிடுமேல் சார்ந்தவர் மால்கொள்வர்; ஆதலால் "குடி கேடு கண்டீர்"; அதனைப் பறை சாற்றிஞல் ஒப்ப உரைத்தனம். சாற்றிச் சொலல் - மேற்கோள் காட்டிக் கூறுதல். பண்பிலார் செல்லின் இருமையும் கெடுவர் என்றருளியபடி.

நீர்இன்ப வெள்ளத்துள் நீந்திக்
குளிக்கின்ற நெஞ்சங்கொண்டீர்
பார்இன்ப வெள்ளம் கொளப்பரி
மேற்கொண்ட பாண்டியனர்
ஓர்இன்ப வெள்ளத்(து) உருக்கொண்டு
தொண்டரை உள்ளங்கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ
லேசென்று பேணுமினே. 3

இதனல், பண்புடையார்களை அப் பரிமேற் கொண்டான் தரும் பேரின்ப வெள்ளத்துள் முழுகித் திருவடி பேணுமாறு கூறியருளப் படுகின்றது.

(பொ - ரை.) நீவிர் பேரின்ப வெள்ளத்துள்ளே நீந்தி முழுகி வருகின்ற நெஞ்சத்தினை உடையீராவீர். (ஆதலாலும்) இவ்வுலகத் தினை இன்பமாகிய வெள்ளம் கொள்ளும்படி குதிரையின் மேலேறி வந்த பாண்டிப் பெருமான், ஒப்பற்ற இன்ப வெள்ளத் துருவங் கொண்டு தொண்டர்களை(த் தன் இன்ப வெள்ளத்துள் மூழ்குவிக்கு மாறு) எண்ணங்கொண்டார் (ஆதலாலும் இருவயின் ஒத்தலால்) அவர்தம் பேரின்ப வெள்ளத்துள்ளே மூழ்கிச் சென்று அவரது பரல் செய்த கழல்களையே பேணுமின் எ - று.

(வி - ரை.) நீயிரும் இன்பத்திற்கு "நெஞ்சங் கொண்டீர்" ஆத லால் நற்செவ்வி பெற்றீர். அவனும் இன்ப வுருக்கொண்டு தொண்டர்க்கு

இன்பந் தருதற்கு எண்ணங்கொண்டான். ஆதலால் நுமக்கு அவனும், அவற்கு நீயிரும் இன்றியமையாமை யுடையீராயினிர். ஆதலால் அவன் பேரின்ப வெள்ளத்துட் சென்று பெய்கழலே பேணுதற்கு இழுக்கு ஏதும் இல்லையாதலின், "சென்று பேணுமின்" என்க. "பார் இன்ப வெள்ளங் கொளப் பரிமேற் கொண்டது" பண்டு; அவ்வாறே இன்றும் "ஓரின்ப வெள்ளத்து உருக்கொண்டான்" என்க. அவன் பேரின்பம் தரும் செவ்வி கூறியருளியபடி.

**செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின் தென்னன்நன் னாட்(டு)**
**இறைவன் கிளர்கின்ற காலம்இக் காலம்எக் காலத்துள்ளும்**
**அறி(வு)ஒண் கதிர்வாள் உறைகழித்(து) ஆனந்த மாக்கடவி**
**எறியும் பிறப்பை எதிர்ந்தார் புரள இருநிலத்தே. 4**

இதனால் உலகப்பற்றுடையாரை அவன் வருங்காலங் காட்டி விலக்குதல் கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) எல்லாக் காலங்களுள்ளும் இந்தக் காலம், தென்னாடாகிய பாண்டியனது நன்னாட்டுக்கு, இறைவன் (வருகின்ற காலமாகும். அக்காலமாகிய இப்போது) அவன் இன்பமாகிய குதிரையைச் செலுத்தி, ஒள்ளிய கிரணங்களையுடைய அறிவாகிய வாளை உறை கழித்துத் தன்னை எதிர்ந்தாருடைய பிறப்பைப் பெரிய இவ்வுலகத்திலே புரளும்படி வீசுவான். ஆதலினாலே நும்மோடு நெருங்கிய தொடர்புடைய பிறவிக்கு நல்ல துணையாக உள்ளவர்களே, ஆங்குச் செல்லாதொழிவீர்களாக எ - று.

(வி - ரை.) "இக்காலம் எக்காலத்துள்ளும்" என்றதற்கு, இறைவன் இங்ஙனம் வருகின்ற காலங்கள் எக்காலங்களுள்ளும் என்றுரைத்தலும் நேரிது. செறிதல் - நெருங்குதல். வினைப்பயன் நுகரவல்லீரன்றி வினைகெடுக்கும் ஆற்றல் உடையீரல்லீர் என்பார் பிறவிக்கு நல்லீர் என்றருளினர். செல்லின் இருமையும் கெடுவர் என்க. இறைவன் வெவ்வேறு திருமேனி கொண்டு கிளர்கின்ற பல காலங்களுட் செல்லினும், இக்காலத்துச் செல்லற்க என்க. இக்காலம் பாண்டி நன்னாட்டு மக்கட்குமட்டும் சிறப்புடைய காலம் என்க.

**காலமுண் டாகவே காதல்செய்(து) உய்மின் கருதரிய**
**ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய**
**ஆலமுண் டான்எங்கள் பாண்டிப் பிரான்தன் அடியவர்க்கு**
**மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே. 5**

இதனால் இறைவன் கொடையைப் பெற்றுக்கொண்டு உய்தற்கு காலமுண்டாக முந்துக என்றருளிச் செய்யப்படுகின்றது.

(பொ - ரை ) ஆலமுண்டவனாகிய எங்கள் பாண்டிப் பிரான் தன்னடியாராகிய அனைவர்க்கும், உலகத்தை உண்ட திருமாலுடனே திசைமுகனும் அவர் ஒழிந்த தேவர்களும் கருதற்கு அரியதும், நண்ணுதற்கு அரியதும் ஆகிய அடியாகவுள்ள வீடுபேற்றுச் சரக்கறையில் உள்ள நிதியை இப்போது வழங்கா நின்றான். அங்ஙனம் வழங்குகின்ற காலம் நுமக்கும் பயன்படும்படியாகக் காதலைச்செய்து உய்யுங்கோள்; அங்ஙனம் காதல் செய்வதோடு அமையாது என்னுடனே வந்து அந்நிதியைப் பெற்றுக்கொள்ளற்கும் முந்துங்கோள் எ - று.

(வி - ரை.) காலமுண்டாகவே உய்மின்; காலமுண்டாகவே முந்துமின் என்க. கருதரிய பண்டாரம்; நண்ணரிய பண்டாரம்; மூலபண்டாரம் என்க. திருமால் முதலியோர் துறக்க வேட்கை யுடையராதலின், அந்நிதியைக் கருதற்கும் ஆண்டு நண்ணற்கும் பெறுதற்கும் அரியராயினர் என்க. மூலபண்டாரம், சிவதத்துவம். காதலித்து வந்து முந்துமின் என்க. பிறவியில் இடர்ப்படாது உய்ய முந்துமின் என்றருளியபடி. பண்டாரம் என்பது நிதிக்களஞ்சியம். சிவன் தென்னாடுடைவன் ஆதலின் அவன் பாண்டிப்பிரான் எனப்பட்டான். 'பாண்டிய நாடு' "பாண்டிநாடு" என மருவியவாறே, 'பாண்டியர்பிரான்' "பாண்டிப்பிரான்" எனப்பட்டது. நுமக்கும் காலம் உண்டு ஆகவே "காதல் செய்து உய்மின்" எனினுமாம். பிறவிப் பகைஞராகிய பாண்டி நாட்டாரை அழைத்தருளியவாறென்க.

ஈண்டிய மாயா இருள்கெட எப்பொரு ளும்விளங்கத்
தூண்டிய சோதியை மீனவ னும்சொல்ல வல்லனல்லன்
வேண்டிய போதே விலக்கிலை வாய்தல் விரும்புமின்தாள்
பாண்டிய னார்அருள் செய்கின்ற முத்திப் பரிசிதுவே. 6

இதனால் முத்தியின் இயல்பு கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) நெருங்கிய திரிபுணர்ச்சியாகிய இருள் கெடவும், எல்லாப் பொருள்களின் மெய்யியல்பு விளங்குமாறும், அருள் வழி இருத்தலினாலே தூண்டப்பட்ட சோதியாகிய வீடுபேற்றை அதனைப் பெற்ற பாண்டியனும் இன்ன தன்மைத்தெனச் சொல்ல வல்லவன் அல்லனாயினன். பாண்டிப்பெருமானால் அன்பர்க்கு அருளிச் செய்யப்படுகின்ற வீடுபேற்றின் இயல்பு இதுவேயாகும். அவன் விரும்பிக் கொடுக்கும்போதே யாம் பெறுதற்குத் தடையும் இல்லையாகும். ஆதலால் அவனுடைய திருவடி பொருந்துதலை விரும்புமின் எ - று.

(வி - ரை.) கண்டவர் விண்டிலராதலால் மீனவனும் சொல்லவல்லனல்லனாயினன். சோதி - வீடுபேறு. மாயையிருள் என்பது, ஈண்டு

மாயையால் வரும் திரிபுணர்ச்சி. மீனவன் சோதிக்குள்ளாயினன் என்பது பெறப்பட்டது. அதனை (கீர்த்தி-36-41) யுள் காண்க. முன்னர்க் காலம் வகுத்தலின், இக்காலம் தப்பினுல், பின்னர் அக்காலம் வருங்காறும் பொறுத்திருக்கவேண்டுமோ என்று ஐயப்படுவார்க்கு, அற்றன்று, வேண்டியபோதே அருள்வன் என்றவாறு. ஆண்டுச் செவ்வியில்லாரை விலக்கியதென்க.

மெய்ப்பொருள் பொய்ப்பொருள் என்பன விளங்கித் தோன்ற "எப்பொருளும்" என்றுர் ; மெய்ப்பொருளின் நன்மையும் பொய்ப் பொருளின் தீமையும் என விரிக்க.

**மாயவன் னப்பரி மேற்கொண்டு மற்றவர் கைக்கொளனலும்**
**போயறும் இப்பிறப்(பு) என்னும் பகைகள் புகுந்தவருக்(கு)**
**ஆய அரும்பெருஞ் சீர்உடைத் தன்னரு ளேஅருளும்**
**சேய நெடுங்கொடைத் தென்னவன் சேவடி சேர்மின்களே. 7**

தென்னவன் தன் சேவடி சேர்ந்தார்க்குப் பரிமேற்கொண்டுவந்து பிறவிப் பகை நீக்குவாருதலின், அவன் சேவடி சேருமின் என்றருளிச் செய்யப்படுகின்றது

(பொ - ரை ) செம்மையவாகிய இடையீடுபடாத கொடையையுடைய தென்னவனுகிய இறைவன், மாயமுடைய அழகிய குதிரை மேலூர்ந்து சென்று பிறவிக்கு நல்லர் அல்லாதாரைக் கைவசப் படுத்திக்கொள்ளுதலும், இந்தப் பிறவி என்னும் பகைகள் புகுந்து இடங்கொள்ளப்பட்ட அவர்க்கு அவை முதுகிட்டுப்போய் வேருகி நீங்கும். (நீங்கியவிடத்தே அவன்) ஆக்கம் தருவதாய அரிய பெரிய சிறப்புடைய தன்னுடைய அருளையே அருளிச் செய்வான். ஆதலால் அவன் செம்மையனவாய திருவடிகளைச் சேருதிர் எ - று.

(வி - ரை.) 'மாயவன் அப்பரிமேற் கொண்டு' எனப் பிரித்துப் பொருள் கூறலும் ஒன்று. 'அருளும் தென்னவன்' என்று இயைத்தலுமாம். கைக்கொள்ளுதல் - தனதாக்கிக்கொள்ளுதல்.

குதிரைமேலேறித் தலைமகனுய் வந்து, மற்றவரைப் பொழிலிடைக் கண்டு தன் கைக்கொள்ளுதலும் என்க ; கொண்டாங்கே அவர்க்குப் புறமான பகைகள் நீங்கும் , நீங்குதலும் அவன் புணர்ந்தருளுவன். இங்ஙனம் தலைமகனைப் பொழிலிடை யீர்த்து வருவது தலைமகளின் தவமாகலின், "சேவடி சேர்மின்" என்றருளினர்.

**அழிவின்றி நின்றதொர் ஆனந்த வெள்ளத் திடைஅழுத்திக்**
**கழிவில் கருணையைக் காட்டிக் கடிய வினையகற்றிப்**
**பழமலம் பற்றறுத்(து) ஆண்டவன் பாண்டிப் பெரும்பதமே**
**முழுதுல கும்தரு வான்கொடை யேசென்று முந்துமினே. 8**

இதனால் உலகம் முழுவதையும் அவன் கொடைப் பொருளாகத் தருவன்; அதனைப் பெற முந்துங்கள் என்றருளிச் செய்யப்படு

(பொ - ரை) எக்காலத்தும் அழிதலின்றி நிலைபெற்ற ஒப் பற்ற இன்ப வெள்ளத்திடையே அழுந்தச் செய்து, இடையீடில் லாது சுரக்கின்ற கருணையைக் காண்பித்து, கடுமையவாகிய வினை களை அகலுமாறு செய்து, பழைய மலப்பற்றினை அறுத்து, ஆட் கொண்டருளிய எம் ஆண்டவன், திருப்பாண்டிப் பெரும்பதம் என்று சொல்லப்படுகின்ற சிவபதமாகிய உலகம் முழுவதையும் கொடைப் பொருளாகத் தருவான். அதனைப் பெறுமாறு சென்று முந்துங்கோள் எ - று.

(வி - ரை.) பாண்டியன் பெரும்பதம் பாண்டிப் பெரும்பதமாயிற் றென்க. பாண்டியன் - சிவன். பெரும்பதம் - சிவபதம். முழுதுலகும் தருதலாவது, உலகம் முழுவதினும் நிறைந்திருக்கச் செய்தலென்க. பதவி வேட்போர்க்கு வைகுந்தம் முதல் மண்ணீருக உள்ளவற்றைக் கொடுத்தா ளுகலின் "முழுதுலகும் தரும்" என்றுருமாம். துன்பமற்றதாகலின், "அழிவின்றி நின்றதோர் ஆனந்த"மாயிற்று. "கழிவில் கருணை" யின்றேல் கடிய வினையகலாதென்க. பின்னும் பின்னும் பற்றுமென்றபடி.

மலத்துக்கெல்லாம் பழையது யான் எனது என்பவாகலான் அது "பழமலம்" எனப்பட்டது. ஈண்டு மலத்தினுய "பற்று" என்க.

**விரவிய தீவினை மேலைப் பிறப்புமுந் நீர்கடக்கப்**
**பரவிய அன்பரை என்புருக் கும்பரம் பாண்டியனுர்**
**புரவியின் மேல்வரப் புந்திகொ ளப்பட்ட பூங்கொடியார்**
**மரவியல் மேற்கொண்டு தம்மையும் தாம்அறி யார்மறந்தே. 9**

இதனுல் மங்கையர் இயல்பு கூறி வழிப்படுத்தி யருளப்படு

(பொ - ரை) ஆணவம் மாயை என்பவற்ருேடு கலந்துள்ள வினையாலாகிய பண்டுதொட்டுள்ள முந்நீர்ப்பட்டதாகிய கடலி னின்றும் அதனைக் கடந்து கரையேறுமாறு தம்மை வழிபட்ட அன்பர்க்கு உணர்வு தந்து அவரது என்பை யுருகச் செய்யும் மேலான சிவதத்துவமாகிய பாண்டிநாட்டை யுடையவராகிய பிரானுர், குதிரையின்மேல் வருதலால், அறிவு பறிக்கப்பட்ட, பூக் களையுடைய கொடிபோன்ற, மங்கைமார் ஓரறிவுடைய மரத்தி னியல்பை மேற்கொண்டு நாணம் முதலாகிய தம்மியல்பையும்

மறந்து தம்மைத் தாம் அறியாராயினர். அங்ஙனமே நீவிரும் நும்மை மறந்து ஆட்படுமின் எ - று

(வி-ரை.) ஆணவம், மழை; மாயை, ஆறு; சன்மம், ஊற்று; இது தோன்ற "விரவிய வினை" என்றருளினர். முந்நீர் - ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீரென்க.

"விரவிய தீவினை மேலைப் பிறப்பு முந்நீர் கடந்து" அன்பினால் என்புருகிப் புந்திகொளப்பட்ட பூங்கொடியார் என்று உரைக்க.

கடலுள் அழுந்தியும் இறுதியுணராது வருந்துவார் போன்று பிணம் போற்கிடப்ப அவர்க்கு அறிவு தந்து உணர்வெழுப்பி என்பு உருக்கினன் என்றபடி. திருவடியாகிய தெப்பம் அளித்து என்க.

**கூற்றைவென்(று) ஆங்குஐவர் கோக்களை**
**யும்வென்(று) இருந்தஅழகால்**
**வீற்றிருந் தான்பெருந் தேவியும்**
**தானும்ஓர் மீனவன்பால்**
**ஏற்றுவந்(து) ஆருயிர் உண்ட**
**திறல்ஒற்றைச் சேவகனே**
**தேற்றம்இ லாதவர் சேவடி**
**சிக்கெனச் சேர்மின்களே. 10**

இதனால் தேற்றமிலாதவரைத் தெளிவித்தமை அருளிச்செய்யப் படுகின்றது.

(பொ - ரை) தெளிவில்லாதவர்களே! இயமனையும் வென்று, அவ்வாறே அவனுக்குரிய சித்திரகுப்தன், மிருத்தியு, அந்தகன், காலன், மாலி என்னும் அவனுக்குரிய ஐந்தலைவர்களையும் வெற்றி கொண்டு இருந்த அழகோடு பெருமையுடைய தேவியும் தானுமாக வீற்றிருந்தவன், ஒரு பாண்டியன்பால் வந்து அவன் அரிய உயிரை ஏற்றின்மீது இவர்ந்து வந்து உண்ட திறலையுடைய தனித்த வீரனே யாவன் ஆதலால் அவன் திருவடியைத் தெளிவுண்டாகும்படி உறுதியாகச் சென்று பற்றுமின் எ - று.

(வி - ரை) வரலாறு வந்துழிக் காண்க. ஆட்கொள்ளும் திறம் கூறித் தெளியாரைத் தெளிய வைத்தது. வென்றிருந்த அழகு - வீரத்திரு. மார்க்கண்டேயர் வரலாறுபற்றியே கூற்றும் கோக்களும் வெல்லப் பட்டமை கூறியருளினர். சித்திரகுப்தனுக்குப் ப
என்பானைக் கொள்ளினுமாம்.

திருச்சிற்றம்பலம்

# பிடித்த பத்து

"பிடித்தபத்"தாவது, திருவடியை உறுதியாகப் பற்றிக் கொண்டமையைப் பொருளாகவுடைய பத்துத் திருப்பாடல்களைக் கொண்ட பகுதியாம்.

அன்பரை ஆட்பட அழைத்துக்கொண்டு திருவடி சேர்மின் என்றருளியவர் சிக்கெனப் பிடித்தருளிய இயைபால் முன்னைய பகுதியோடு தொடர்புடைத்தாயிற்று

சிக்கெனப் பிடித்துக்கொண்ட இப்பகுதியில் திருப்பாட்டுக்கள் 7, 8, 4, 5, 9, 6, 3, 1, 2, 10 எனப் பொருளுக்கேற்ப அடைவுறும். இதற்கமைய இப்பகுதியின் இயற்கைப் பொருள் அடைவு வருமாறு —

தன்னருளைத் தருதற்குரியோன் ஈசன் ஆகலின் அவன் தாளைச் சேர்மின் என்று அருளியவர் அவன் தாளைத் தாமே சிக்கெனப் பிடித்தருளினர் எனவும், அவ் ஈசனே பின்பு எத்தனுயபோதும் சிக்கெனப் பிடித்தருளினர் எனவும், அவன் எத்தனுகி வஞ்சித்தமையின் இருள் தோன்ற அவ்விருளிடத்தும் சிக்கெனப் பிடித்தருளினர் எனவும், அங்ஙனமாகிய இருளினுல் இளைப்படைந்த இடத்தும் சிக்கெனப் பிடித்தருளினர் எனவும், அவ்வாற்றுனே அவனை விடாது தொடர்ந்து சிக்கெனப் பிடித்தருளினர் எனவும், அவ்வாறு தொடர்ந்து தொடர்ந்து இம்மை முடிவிலே சிக்கெனப் பிடித்தருளினர் எனவும் இங்ஙனம் எல்லாம் இம்மையிலேயே சிக்கெனப் பிடித்தருளினர் எனவும், அவ்வாறு பிடித்ததுவும் எம்பொருட்டே யாம் எனவும், எம்பொருட்டு இடைவிடாது பிடித்தருளினுர் எனவும், அவ்வாறு பிடித்தமையானே இன்பம் தோன்ற அவ் இன்பமும் அவனேயாகலின் இன்பத்தைச் சிக்கெனப் பிடித்தருளினர் எனவும் கொள்க.

இனி இப்பகுதியின் நூற்பொருள் அடைவிற்குக் காரணம் வருமாறு —

பொருளடைவில் எட்டாவதாகிய திருப்பாடல் நீயும் என் மனத்தின் நின்று எழுந்தருள இனி இயலாது என்றருளிய இயைபால் முந்திய பதிகத்தின் இறுதித் திருப்பாடலோடு இயைபு பட்டு இப்பதிகத்தின் முதலாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஒன்பதாவதாகிய திருப்பாட்டு இம்மைப் பொருட்டுப் பிடித்த பிடி இடைவிடாப் பிடி என்றருளிய இயைபால் இரண்டாவதாக அமைத்தருளப்பட்டது.

இடைவிடாது முயன்றமையே இம்மையிற் பிடித்துக்கொண் டருளியமைக்குக் காரணமாகலின் பொருளடைவில் ஏழாவதாகிய திருப்பாட்டு ஈண்டு மூன்றாவதாகக் கொள்ளப்பட்டது.

பொருளடைவில் மூன்றாவதாகிய திருப்பாடல் இம்மையிலே இருள் சூழ்ந்துகொண்ட இடத்துத் துணையாகப் பிடித்துக்கொண் டேன் என்றருளிய இயைபால் நான்காவதாக அமைத்தருளப் பட்டது.

பொருளடைவில் நான்காவதாகிய திருப்பாடல் இருளினால் எய்த்து அவ்வாறு எய்ப்படைந்த இடத்துப் பிடித்துக்கொண்டேன் என்றருளிய இயைபால் ஐந்தாவதாக வைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஆறாவதாகிய திருப்பாடல் எய்ப்பிடமும் உயிர் போதற்குரிய இடம் எனக் கூறியருளிய இயைபால் ஈண்டும் ஆறாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் முதலாவதாகிய திருப்பாடல், இறுதிக் காலத்தே ஈசன் ஆகி நல்வாழ்வு கொடுத்தனன் என்பது தோன்றக் கூறியருளிய இயைபால் ஏழாவதாகக் கொள்ளப்பட்டது

பொருளடைவில் இரண்டாவதாகிய திருப்பாடல், ஈசனே நீ எத்தன் என்பதை அறிவேன்; அவ்வெத்து இனிச் செல்லா வண்ணம் சிக்கெனப் பிடித்துக்கொண்டேன் என்றருளிய இயை பால் எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

பொருளடைவில் ஐந்தாவதாகிய திருப்பாட்டு, எத்தனாய் நின்ற இறைவனே அறியாப் பருவத்துத் தாயாகிப் பாதுகாத்தான்; ஆதலால் அவனை விடாது தொடர்ந்து பற்றினேன் என்றருளிய இயைபால் ஒன்பதாவதாகக் கொண்டருளப்பட்டது.

பொருளடைவில் பத்தாவதாகிய திருப்பாடல் இறைவன் எவ்வாறாக நின்ற எக்காலத்தும் அவனை இடைவிடாது தொடர்ந்து பற்றியமையானே இன்பம் தோன்றிற்று, அவ்வின்பமும் அவனே யாகலின் அவனைப்பற்றிக் கொண்டேன் என முடித்தருளிய இயை பால் ஈண்டும் பத்தாவதாகக் கொள்ளப்பட்டது.

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு முதலியனவற்றின் அட்டவணை வருமாறு :—

| தொடர் எண் | திருப்பாடல் | செய். தொகை யுள். |
|---|---|---|
| 1 | ஈசனே யுனைச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 7 |
| 2 | எத்தனே யுனைச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 8 |
| 3 | இருளிடத்துச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 4 |
| 4 | எய்ப்பிடத்துச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 5 |
| 5 | தொடர்ந்துனைச் சிக்கெனப் பிடித் தேன் யானெனல் | 9 |
| 6 | இறவிலேயுனைச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 6 |
| 7 | இம்மையேயுனைச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 3 |
| 8 | எம்பொருட்டுனைச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 1 |
| 9 | இடைவிடா துனைச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 2 |
| 10 | இன்பமே யுனைச் சிக்கெனப் பிடித் தேனெனல் | 10 |

இஃது திருத்தோணிபுரத்தில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# முத்திக் கலப்புரைத்தல்

## எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

உம்பர்கட்(கு) அரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் தனக்கு
வம்பெனப் பழுத்(து)என் குடிமுழு(து) ஆண்டு
வாழ்(வு)அற வாழ்வித்த மருந்தே
செம்பொருள் துணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட்(டு) உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்(கு) எழுந்(து) அருளுவ(து) இனியே.

அடியார் பொருட்டுச் சிக்கெனப் பிடித்துக் கொண்டமை கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) விண்ணவர்க்கு வேந்தனே ! நீக்கமற எங்கும் நிறைந்த கலப்பாக உள்ளவனே ! மல அழுக்கையுடைய என்றனக்குப் புதுமையெனும்படி அருள்பழுத்து, என் குடி முழுவதையும் ஆண்டு, இவ்வுலகவாழ்வின் மாயை அறும்படி (பேரின்ப வாழ்வு) வாழ்வித்த மருந்தே! சான்ருேரால் துணியப்பட்ட மெய்ப் பொருளே ! நின்னுடைய மிக்க புகழையுடைய கழலை அன்பர்க்குத் தருவோனே ! அக்கழல் திருவடியாகிய நிலைத்த செல்வத்தை உடையவனே ! சிவமாகிய பெருமையுடையவனே ! அன்பராகிய எம்பொருட்டு உன்னை உறுதியாகப் பற்றிக்கொண்டேன். ஆதலால் இனி எனது பற்றில் நின்றும் நழுவி (திருப்பெருந்துறையின் நீங்கியாங்கு தில்லையின் நீங்கி) எங்கே எழுந்தருளிச் செல்வது? (உன்னாற் செல்லமுடியாதவாறு கலப்புற்றேம்) எ - று.

(வி - ரை.) யோகம் - கலப்பு. யாண்டும் கலந்தமையால் "உம்பர்கட்கு அரசா"யினன். ஏனைய விண்ணவர், தமக்கு உரிய அவ்வப்பகுதிகளில் கலந்திருப்பவர். இறைவன் அவரனைவரையும், அவர் பகுதிகளையும் நீக்கமறக் கலந்திருப்பவன் என்க. தம் யோகமுயற்சியால் சிக்கெனப் பிடித்தமைக்குக் காரணம் கூறியவாறு. அவன் எவ்வாற்ருனும் பெரியனுயினமையே காரணம் என்க. யோகமும் அவனுல் அருளப்பட்டமையின் "வம்பெனப் பழுத்து" என்றருளினர். தனக்கெனப் பழுத்ததென்றருளியபடி. இனி, 'வமபெனப் பழுத்த' எனக்கொண்டு குடிக்கேற்றினுமமையும். தம்மையாளும் பொருட்டுக் குடியையும் ஆளவேண்டியது இயல்பாயிற்று. பிற வாழ்வெல்லாம் அறும்படி "வாழ்வித்த" என்க. "பழுத்து" என்றருளியமையால் மருந்து இனிமையுடையதாயிற்றென்க. அது பிறவிப்பிணி தீர்ப்பதென்க. செம்பொருள், விழுமிய துணிபெனினுமாம். யோகத்தால் தனக்கும் தன் குடிக்கும் மருந்தாகிப் பிறவி தீர்த்த 'செம்பொருள் துணி பொருளா'யினன் என்றருளியபடி. அம்மருந்தாலாகிய பேறு திருவடிப் பேறு ; அத்திருவடியே அவ்வாழ்வு தரும் செல்வம் ; அச்செல்வமே சிவம், அமைதி. அதனையுடைய "பெருமான்" என்க. அச்சிவபெருமானைப் பிடித்தால், அவை யாவும் தாமேயாம் என்க. உள்ளத்துள் வந்த நீ வெளியிற் செல்வது அரிதென்றருளியவாறு.

எங்கெழுந்தருளுவது என்றதறகுத் திருப்பெருந்துறையில் நீங்கியாங்கு தில்லைக்கண்ணிருந்து இனி எஙகு எழுந்தருளிச்செல்வது எனக் கொள்க. இங்ஙனமே இப்பகுதியின் ஏனைய திருப்பாடல்களுக்கும் கொள்க.

விடைவிடா(து) உகந்த விண்ணவர் கோவே
வினையனே னுடையமெய்ப் பொருளே
முடைவிடா(து) அடியேன் மூத்(து)அற மண்ணய்
முழுப்புழுக் குரம்பையில் கிடந்து

கடைபடா வண்ணம் காத்(து)எனை ஆண்ட
கடவுளே கருணைமாகடலே
இடைவிடா(து) உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்(கு)எழுந் தருளுவ(து) இனியே. **2**

இதனால், அங்ஙனம் பிடித்தது முன்போலாது இடைவிடாப் பிடி என்பது கூறியருளப்படுகின்றது

(பொ - ரை ) அறமாகிய விடையை எஞ்ஞான்றும் நீங்காது விரும்பிமேற்கொண்ட வானவர் தலைவனே! தீவினையேனை அடிமையாகவுடைய மெய்ம்மைத்தாகிய பொருளே! உன் அடியேனாகிய யான், முழுவதும் புழுவினாலாகிய கூட்டில் முடைநாற்றத்தை விடாது, அறவே மூத்து, மண்ணாய்க் கிடந்து கீழ்மைப்படாதபடி, என்னைக் காத்து ஆண்ட என் குலதெய்வமே! அருட்பெருங்கடலே! யான் உன்னை இடையீடுபடாதபடி உறுதியாகப் பற்றிக்கொண்டேன் ஆதலால் இனி எனது பற்றின் நின்றும் நழுவி எங்கே எழுந்தருளிச் செல்வது? (உன்னாற் செல்லமுடியாதவாறு கலப்புற்றேன்) எ - று.

(வி - ரை.) 'குரம்பையில், முடைவிடாது, அற மூத்து, கிடந்து, கடைபடாவண்ணம்' என முடிக்க. முழுப்புழுக் குரம்பை; அதன் கணுள்ள முடை, அதனுள் விடாது என்க. குரம்பை - உடல். குரம்பை மண்ணாமாறு முயன்று யானும் வீணாகி என்க.

விண்ணவர் கோவாகினன், மெய்ப்பொருட் குரவனாகி, ஆண்டு தானே கடவுளாயினன். அவன் கருணை இருந்தவாறென்னே என்க.

அம்மையே அப்பா ஒப்(பு)இலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. **3**

இதனால், இடைவிடாது முயன்றமையால் இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் என்பது அருளிச் செய்யப்படுகின்றது.

(பொ - ரை.) அம்மையே! அப்பனே! ஒப்பில்லாத மாணிக்க மணியே! காதல் அன்பில் விளைந்த அரிய அமுதம் போன்றவனே! உலக வாழ்வுக்கு மூலமாகிய பொய்யறிவைப்

பெருக்கி வாளுளை அதிலே தொகுமாறு செய்யும் சிறுமை தலைப் பட்ட கீழ்மையினேன் ஆகிய எனக்குப் பெரு நன்மைக்குக் காரண மாகிய சிவமாகும் தன்மையைக் கொடுத்தருளிய செல்வப் பொருளே ! அச்சிவ பதத்தையுடைய பெருமானே ! உன்னை இப் பிறவியிலேயே உறுதியாகப் பற்றிக்கொண்டேன். ஆதலால் இனி எனது பற்றினின்று நழுவி எங்கே எழுந்தருளிச் செல்வது ? (உன் ளுற் செல்ல முடியாதவாறு கலப்புற்றேம்) எ - று.

(வி - ரை.) தயையுடைமையாலும், தம்மைப் பெற்றமையாலும் " அம்மையே " என்றும், அத்தயைக்குக் காரணமாகிய அறிவுடைமையால் " அப்பா " என்றும், அவ்வறிவை அறிவுறுத்தியமையால் குரு"மணியே" என்றும், காதலளுகி, அதளுல் தம்பால் அறிவு தோன்றப் பெற்றமையால் " அன்பினில் விளைந்த ஆரமுதே " என்றும் அருளிச்செய்தார்.

பெருக்கத் தகாதனவற்றைப் பெருக்கியும், சுருக்கத் தகாதனவற்றைச் சுருக்கியும் ஒழுகியவாறு. புழு, ஈண்டுச் சிறுமையை உணர்த்திற்று ; ஆகுபெயர். தலை - தலைப்பட்ட. எழுமையினும் பெறுதற்கரிய நின்னை இம்மையே பெற்றேன் என்க. செம்மையாகிய சிவபதம் எனினுமாம். அம் மையிலே பெறவேண்டிய நின்னை இம்மையிலே பெற்றேன் என்றலுமாம்.

அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க்(கு) அரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத்(து) அடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத்(து) உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 4

இதளுல், இம்மையிலே இருளிடத்துச் சிக்கெனப் பிடித்தேன் என்பது அருளிச் செய்யப்படுகின்றது.

(பொ - ரை.) இரக்கங் காரணமாக வழி காட்டிய ஒளிப் பிழம்பே ! ஆண்டுத் தோன்றிய என் பெரும் பசிக்குக் கனிந்ததாகிய ஒப்பற்ற கனி போன்றவனே ! பெருமைத்தாகிய ஆற்றலையுடைய செய்தற்கரியதாகிய தவஞ் செய்த முனிவர்க்கு அரசனே ! தன்னையே பொருளாகவுடைய எல்லாக் கலையும் ஆனவனே ! வேதம் முதலாயின புகழும் புகழ்ச்சியைக் கடந்து அப்பாற்பட்ட அனுபவ இன்பமே ! யோக முடிவிலே தோன்றும் ஞானப் பொருளே ! அடி யார் தெளிந்தவிடத்து அவர் சிந்தையுட் புகுந்து வீற்றிருக்கும் அருட் செல்வப் பொருளே ! சிவத்தையுடைய பெருமானே ! நின்

லேக் காணுது வருந்தி மயங்கியவிடத்து உன்னை உறுதியாகப் பற்றிக் கொண்டேன். ஆதலால் இனி எனது பற்றினின்றும் நழுவி எங்கே எழுந்தருளிச் செல்வது (உன்னுற் செல்ல முடியாதவாறு கலப்புற்றேம்) எ - று.

(வி - ரை.) முன்னர்த் திருப்பாட்டில் அன்பு நெறி கூறியருளி இத் திருப்பாட்டில் அருள் நெறி கூறியருளினர். மயக்க இருளிடத்தே, அருட் சுடராகத் தோன்றி வழிகாட்டி, அவர் பசி கெட நுகரும் செவ்வி மிக்க களவும் கற்புமாகிய கனியாகி, அருந்தவர்க்கு அரசனுயினுன் என்க. அவ்வேந்தன் கூறிய கலைப்பொருளாய், அக்கலைக்குள் அடங்கிய துதிக்கு மேற்பட்ட போகம் கொடுப்பதாய், அவர் உள்ளத்துப் பொலிந்த ஞான உருவாய்த் தெளிய வைத்து, அவர் சிந்தையுட் புகுந்த "செல்வணுகிய சிவபெருமான்" என்க. தவர், பெருந்தவர், பெருந்திறல்தவர், பெருந்திறலருந்தவர் என்போர்க்கு முறையே, வழிகாட்டும் சுடராய், கனியாய், கலையாய், அரசனுய் நிற்பவன் எனவும், மேலும் போகமாய், யோகமாய், பொலிவாய், "சிந்தையுட் செல்வமாய்" நிற்பவன் எனவும் கொள்க.

ஒப்(பு)உனக்(கு) இல்லா ஒருவனே அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே
மெய்ப்பதம் அறியா வீறிலி யேற்கு
விழுமிய(து) அளித்ததோர் அன்பே
செப்புதற்(கு) அரிய செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத்(து) உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 5

இதனுல், இளைப்படைந்தவிடத்து உன்னை உறுதியாகப் பிடித்துக் கொண்டேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) உனக்கு ஒப்பு நீயேயன்றி வேறில்லாத ஒருவனுயுள்ளவனே! அடியேனுடைய உள்ளத்துள் ஒளிர்கின்ற அறிவொளியே! உண்மை நிலையை அறியமாட்டாத சிறப்பற்ற எனக்கு உயர்ந்த அன்பின் ஐந்திணை நிலையைக் கொடுத்த அன்பு வடிவானவனே! இன்னதெனத் தெரிந்து கூறற்கரிய செழுமையான ஒளிப் பிழம்பு வடிவானவனே! செல்வமே! சிவபெருமானே! யான் இளைப்பு அடைந்தவிடத்து உன்னை உறுதியாகப் பற்றிக்கொண்டேன். ஆதலால் எங்கே எழுந்தருளிச் செல்வது எ - று.

(வி - ரை.) தன்னின் மேம்பட்டார் இல்லாதவிடத்தே தன்னைச் சார்ந்தவர் மனம் கவலையறுமாதலின், ஒப்பிலனுய்த் தமது உள்ளத்தில் ஒளிவிட்டுத் தமது கவலையற வழிகாட்டும் ஒளியாகி நெறியல்லா நெறிச்

செல்லும் சிறப்பறிவில்லேனுக்கு அன்பினுற் செந்நெறி காட்டிய " செழுஞ் சுடர் மூர்த்தி "யாய்ச் சிவபதம் அளித்தவன் என்க. மூர்த்தி - வடிவுடைய வன். வீறு - சிறப்பு.

அறவையேன் மனமே கோயிலாக் கொண்(டு)ஆண்(டு)
அளவிலா ஆனந்தம் அருளிப்
பிறவிவேர் அறுத்(து)என் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியஎம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 6

இதனுல், உய்யுநெறி காணுது சாகப் புகுமளவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் என்பது அருளிச் செய்யப்படுகின்றது.

(பொ - ரை.) அன்பற்றவனுகிய எனதுள்ளத்தையே கோயி லாகக் கொண்டு எழுந்தருளி ஆட்கொண்டு அளவில்லாத இன்பத் தைக் கொடுத்துப் பிறவியிலேயே வேரூன்றிய தொடர்பை அறுத்து என் குடி முழுவதையும் ஆண்ட தலைப்பாகை யுடையவனே! (சிறு மையைப் பொறுத்தளிக்கும்) பெருமையுடைய (எம்மை யாட்கொள் ளும்) பொருளே! என்உள்ளத்தைத் திறக்கையிலே கண்ட காட்சிப் பொருளே! அடியனேன் உய்தற்குரிய செல்வப் பொருளே! அச் செல்வமாகிய சிவத்தையுடைய பெருமானே! யான் வேறு உய்யும் நெறி காணுது சாகப் புகுமளவிலே உன்னை உறுதியாகப்பற்றிக் கொண்டேன். ஆதலால் எங்கே எழுந்தருளிச் செல்வது எ - று.

(வி - ரை.) பெரிய பொருள் - ஆதிப் பிரமம். என் உள்ள வாயி லைத் திறக்கும்போது என்னுற் காணப்பட்ட பொருள். அறவையேன் - அன்பற்றவன்.

பாசவேர் அறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா(று) அடியனேற்(கு) அருளிப்
பூசனை உகந்(து)என் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேச(சு)உடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
ஈசனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 7

இதனுல் உயிர்விடப் புகும் இறுதியில் நல்வாழ்விற்குரிய ஐசுவரி

யம் கொடுத்த ஈசனை உறுதியாகப் பிடித்துக் கொண்டமை கூறியருளப்படுகின்றது

(பொ - ரை ) மலக் கட்டுக்களின் மூல முடிச்சையும் அறுத்தொதுக்கும் பழம் பொருளாகிய தன்னை, கையான் கட்டிக் கொள்ளும்படி, அடியவனாகிய எனக்கு அருள் செய்து, (சீடனாகிய) யான் செய்யும் பூசனையை விரும்பி, அப்பூசனை காரணமாக என்னுட் புகுந்து, தன் பொலிவு பெற்ற திருவடியை யான் காணுமாறு காட்டிய மதிப்பிற்கு உரியவனே! நெய் திரி முதலியன இல்லாதே ஒளிருகின்ற ஒளியே! செழுமையாகிய அவ்வொளிப் பிழம்பையே தனக்கு வடிவாகவுடையவனே! அருட் செல்வமே! அச்செல்வமாகிய சிவத்தையுடைய பெருமானே! ஐசுவரியம் தருவோனே! உன்னை உறுதியாகப் பற்றிக்கொண்டேன் ஆதலால் எங்கு எழுந்தருளிச் செல்வது எ - று

(வி - ரை.) பழம்பொருள் - ஆதிப் பிரமம். ஒளி கண்டேன் ஆதலால் நன்று தீது அறிவேன் என்றருளியவாறு; இனிக் கவலையற்றிருப்பேன் என்றார் என்க. கிடைத்தற்கரிய செல்வம் பெற்றேன், அதனைச் செந்நெறியிற் பயன்படுத்துவேன் என்பார், "சிக்கெனப் பிடித்தேன்" என்றருளினர். இனி அச்செல்வம் பறிக்கப்படா தென்றருளியவாறு.

அத்தனே அண்டர் அண்டமாய் நின்ற
 ஆதியே யாதும் ஈறில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
 செல்வமே சிவபெரு மானே
பித்தனே எல்லா உயிருமாய்த் தழைத்துப்
 பிழைத்தவை அல்லையாய் நிற்கும்
எத்தனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
 எங்கெழுந் தருளுவ தினியே 8

இதனால், ஈசனே எத்தனாகவும் அவனைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டமை கூறியருளப்படுகின்றது

(பொ - ரை ) அப்பனே! விண்ணவரது பதமாக நின்ற முதல்வனே! சிறிதேனும் முடிவில்லாத சித்திகளையுடையவனே! அன்பர்கள் உறுதியாகப் பற்றிக்கொண்ட நிலைத்த செல்வமே! சிவபெருமானே! ஆக்கியவற்றை அழித்தலால் பித்தன் எனப்படுவோனே! எல்லா உயிரும் நீயேயாகி அவற்றுள் தழைத்தும் அங்ஙனம் தழைப்புற்ற உயிர்கள் செய்யும் தவறுகளுக்கு உரியவன் அல்லையாகி, எல்லாவுயிர்கள்மாட்டும் கலந்திருக்கும் சூழ்ச்சி

யுள்ளவனே ! உன்னை உறுதியாகப் பற்றிக்கொண்டேன். ஆதலால் எங்கு எழுந்தருளிச் செல்வது எ-று.

(வி - ரை.) எல்லாவுயிர்களுமாய் அவ்வுயிர்கள் அன்பு கொள்ளுமாறு நீ ஆங்காங்குத் தழைத்து என விரிக்க உயிர்கள் தழைத்தற்கு மூலமானுன் ஏவிவிட்டுத் தான் ஒழிந்து நிற்பவன்போன்ற "எத்தன்" என்க. "பிழைத் தவை" என்றது அன்பிற் படாது வன்பாற்பட்ட உயிர்களை என்க. அவ் அன்பற்றூர்க்குக் கூற்றுய் நிற்கும் "எத்தன்" என்க. 'அல்ல செய்தார்க்கு அறங்கூற்றம்' என்ப. நற்பயனை விளைவிக்கும் அதுவே அல்லவை செய் யில் தீப்பயனை விளைவிக்கும் என்ப. அண்டர் உலகும் அவன் வியாபியா விடின் இல்லதாகும் என்க; நரகும் அங்ஙனே. "பத்தர்" பிடித்தமை கண்டு யானும் "பிடித்தேன்" என்றூர் என்க. ா றில்லாச் சித்து ஞானமு மாம். தன்னை ஆட்கொண்டு முன் ஒதுக்கினமை தோன்ற "பித்தன்" என்றூர். எல்லார்க்கும் அத்தனுய் அன்னையாய் அறிவிக்கும் ஆசானுய் பத்தரால் பிணிப்புண்ட சிவச் செல்வமுமாகிப் பித்தனுகவும், எத்தனுகவும் இருக்கின்றுய். ாதென்ன வியப்பு ! இவ்வாறுதலின் "சிக்கெனப் பிடித் தேன்" என்றருளியபடி.

பால்நினைந்(து) ஊட்டும் தாயினும் சாலப்
    பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
    உலப்(பு)இலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
    செல்வமே சிவபெரு மானே
யான்உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
    எங்கெழுந் தருளுவ தினியே. 9

இதனுல், இறைவன் செய்த நன்றியின்பொருட்டு அவனைத் தொடர்ந்து பிடித்துக்கொண்டமை கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) (மிகச் சிறு குழந்தைக்கு அக்குழந்தை நினையா தாயினும், அது பசித்தெழு முன்னரே செவ்வியறிந்து) நினைந்து பாலூட்டும் தாயைக் காட்டிலும் மிக இரங்கிப் பாவியாகிய என் னுடைய உடற்பற்று வேருகுமாறு மற்றதனை உருக வைத்து, அஃது உருகுந்தோறும் உள்ளத்தே ஒளியைப் பெருகுமாறு செய்து கெடுத லில்லாத இன்பத் தேனைப் பொழிந்து எனது புறம்பே புறம்பே (கைகொடுத்து) வந்தலைந்த செல்வப் பொருளே ! சிவபெருமானே ! யான் உன்னை விடாது தொடர்ந்து உன்னை உறுதியாகப் பற்றிக் கொண்டேன் ; ஆதலால் எங்கு எழுந்தருளிச் செல்வது எ-று.

(வி - ரை.) அப்பொழுது ஊட்டிய சிவனை வளர்ச்சியடைந்த இப் போது பற்றிக்கொண்டேன் என்றருளியபடி.

தாயானவள் அவ்வச் செவ்விக்கண்ணே நினைந்து பாலூட்டுவாள்; பிற நேரங்களில் அதனை விடுத்துத் தன் வேலையில் முனைந்திருப்பாள். இறைவனோ அவ்வாறுகிய நினைப்பு மறப்பின்றி ஒரு பெற்றியே அன்பினைப் பொழிந்தவாறிருப்பன் என்பது பற்றித் "தாயினும் சாலப் பரிந்து" என்றருளினர். குழந்தை தளர்நடை கற்கும்போது விழாமல் அக்குழந்தையின் மருங்கே தன்னிரு கைகளையும் அணைத்துத் திரிகின்ற தாய்போல இறைவனும் உடன்பயிற்றுவானுதலின் "புறம்புறம் திரிந்த" என்றருளினர். சிறிது வயதேறப் பெற்றதும், தாய் பிறதொழிலை மேற்கொண்டிருக்கும் போதும், விளையாட்டாக ஒளித்து நிற்கும்போதும், சேய் அவள் இருப்பிடத்தை யறிந்து, 'அம்மா! கண்டேன்! கண்டேன்! இனி விடமாட்டேன்!' என்று அவள் உடையை இறுகப் பற்றிக்கொண்டு ஒன்றி நிற்குமாறுபோலப் பிரிந்த இறைவனைப் பற்றிப் பிடித்துக்கொண்டு அடிகள் அருளிச் செய்வாராயினர் என்க.

பாலூட்ட அயர்ந்து போய்ப் பின் நினைந்தூட்டலுமாம்.

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடும் கோயிலாப் புகுந்துஎன்
என்பெலாம் உருக்கி எளியையா(ய்) ஆண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 10

இதனால், தொடர்ந்து பிடித்தமையால் இன்பம் தோன்றியமை கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) புல்லிய புலால் நாற்றத்தையுடைய யாக்கையின் மயிர்ப்புரைதோறும் நெகிழ்ச்சியுண்டாகுமாறு, பொன்னாலாகிய நீண்ட மாடத்தையுடைய கோயிலாக (அவ்வுடலினைக்) கருதி, அதனுட் புகுந்து, எனது என்பையெல்லாம் கட்டுவிடச் செய்து, எனக்கு அறிதற்கு எளியவனாகி வந்தாண்ட ஈசனே! குற்றமற்ற குருமணியே! துன்பம் பிறப்பு இறப்பு அவற்றின் மூலமாகிய அறியாமை ஆகிய இவற்றின் கட்டுக்களை எல்லாம் வேருக்கிய நல்ல ஒளியே! இன்பமே! யான் உன்னை உறுதியாகப் பற்றிக் கொண்டேன். ஆதலால் (நீ) எங்கு எழுந்தருளிச் செல்வது எ - று.

(வி - ரை.) ஒழிப்பனவற்றை ஒழித்துக் காட்டுவனவற்றைக் காட்டுதலின் "நற்சோதீ" என்றருளினர். தமக்குத் "தொடக்கறுத்த சோதியே" "இன்பம்" என்க. துன்பமே, இறப்பொடு பிறப்பாம். அவற்றையே இன்பம் எனக் கொண்டு மயங்கி என்க. அவற்றை "அறுத்து" என்க.

திருச்சிற்றம்பலம்

# திருவேசறவு

"வேசறவு" என்பதற்கு, விருப்பம், தோத்திரம், துக்கம் முதலிய பலபொருள்கள் உள. "ஏசறவு" என்று உரைத்தலும் அஃதே. அப்பர் அடிகளும் "ஈசனையே நினைந்து ஏசறுவேனுக்கு" (திருவாரூர் : திரு 4.) எனக் கூறியருளியதையும், திருநாவுக்கரச் சுவாமிகள் : நாலாம் திருமுறை ; திருவாலவாய் நேரிசை இரண்டாம் திருப்பாடலையும் நோக்குக இப்பதிகத்துள்ளே வருத்தம் பற்றிய பாக்களும் விருப்பம் பற்றிய பாக்களும் விரவி நடத்தலால், "வேசறவு" என்றதற்கு ஈண்டு, வருந்தி விழைந்த பகுதி எனப் பொருள்கொள்ள வேண்டியதாகின்றது. அடிகள் தம் வருத்தத்தையும் விருப்பத்தையும் இறைவன்பால் எடுத்துக் கூறிய திருப்பாக்களையுடைய பகுதி "திருவேசறவு" எனப் படுவதாயிற்றென்க. இறைவன் திருவடி சிக்கெனப் பிடித்தவர், அத்திருவடி யுடையாளுெடும் மனம் ஒன்றிய நிலையில் தம் கருத்தை வெளியிட்டருளினர் ஈண்டு 'வருத்தம்' என்றது, எவ்வாற்ருலும் இழிந்த தம்மை, எவ்வாற்ருனும் உயர்ந்த இறைவன், எத்தகைய கைம்மாறும் கருதாஞய், குருமணியாக ஈண்டு எளிவந்து வலிதிற் பிடித்து ஆண்டு உயர்வடையச் செய்தமைக்கு எத்தகைய கைம்மாறும் செய்ய முடியாமையானும், தம் சிறுமைக்கு அவன் பெருமை தகவின்மையானும் உண்டாய வருத்தத்தை என்க. 'விருப்பம்' என்றது, இதுகாறும் இறைவனுடன் நுகர்ந்த நுகர்ச்சிக் கடலுள் விலகாது மூழ்கிக் கிடந்து இன்னும் திளைத்தல் வேண்டுமென்றதை என்க.

முன்னர்ப் பகுதியில்,

"என் என்பெலாம் உருக்கி......தொடக்கெலாம்
அறுத்த நற்சோதீ......இன்பமே"

என்று அருளியமைக்கேற்ப அவ் இன்பத்தின் சுவையை இப்பகுதித் தொடக்கத்தில் புலப்படுத்திய இயைபால், மேலைப் பகுதியொடு இயைபுடைத்தாயிற்று.

இனி, இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு முறை, இறைவன் தம்மை ஆண்ட திறங் கூறியதும், திருவடி காட்டிய திறம் செப்பியதும், அருள்வகைகள் எடுத்தோதியதும், உய்ந்தவாறுரைத்ததும், தம் விருப்பு உரைத்ததுமென ஐந்து பெரும் பகுப்புடையது

| இ பொ. அ | | நூ. பொ. அ. |
|---|---|---|
| | முதலாவது பெரும் பகுப்பு : | |
| 1. | காமங் களைந்தெனை யாண்டனை யென்றல். | 6 |
| 2. | புரளுமெனைப் புகுந்தாண்டனை யென்றல். | 8 |
| 3. | என்பால் நோக்கியே ஆண்டனை என்றல். | 7 |
| | இரண்டாவது பெரும் பகுப்பு : | |
| 4. | நரகில் புகாதபடி நல்கினை என்றல். | 3 |
| | மூன்றாவது பெரும் பிரிவு : | |
| 5. | அகல ஊன்வாழ் வருளினன் என்றல். | 10 |
| 6. | நரிபரி யாக்கிய தொக்குநின் அருளெனல். | 1 |
| 7. | நரித்தவிசு ஒக்கும் எற்குநின் அருளெனல். | 5 |
| | நான்காவது பெரும் பகுப்பு : | |
| 8. | நீநினைவிக்க நினைந்து உய்ந்தேனெனல். | 4 |
| 9. | வாவெனப் பிரிய வாய்ந்தது கழலெனல். | 2 |
| | ஐந்தாவது பெரும் பகுப்பு : | |
| 10. | அருள் உலகத்தின் அனுபவம் அருளெனல். | 9 |

மங்கையர் ஆசையால் இடர்ப்பட்டு அஞ்சுவேனது அச்சத்தை அகற்றியும், மங்கையர்பால் மனம் ஈடுபடுதலால், அஃது இறைவன் பால் ஈடுபடாதாக, அவ்விறைவன்பால் அன்பு செலுத்தலின்றி, ஆராய்ச்சிவகையாற் புகுந்துழல, மற்று அதனின் நீக்கித் தன் பால் அன்புகொளச் செய்தும் ஆண்டுகொண்டமை, என் பொருட்டுத் தனிப்பட்ட முறையில் வந்தருளியபடியாலானவை யாமன்றே.

இவ்வுலகில் யாரும் பற்றுக்கோடாகாமையால், பிறப்பிறப்பாகிய நரகத்தின்பால் அழுந்தி வருந்திய எனக்குத் தானே பற்றுக் கோடாகவிருந்து திருவடி தந்து மீட்டு ஆக்கம் செய்தான்.

அவ்வாக்கங்களாவன, ஊனுடன் ஒன்றி வாழும், வாழ்க்கையை வெறுக்கச் செய்ததும், ஒரு காலத்தும் உயர்வடைதற்குரியேன் ஆகாத என்னை உயர்ந்தோன் ஆக்கியதும், உயர்ந்தோர்க்குரிய இடத்தை எனக்கு அருளியதும் என்பன.

எவ்வாற்றானும் இறைவனே என் பொறுப்பை மேற்கொண்டருளியமையால், அவன் தில்லைக்கு வா என்று பிரிதலும், அவன் திருவடி கண்டும், நினைந்தும் உய்ந்தேன். இங்ஙனமெல்லாம் இறைவன் என்பாற் செய்தான் , என் தகவின்மை எத்தன்மைத்து ? நான் அவனுக்குச் செய்யும் கைம்மாறும் உண்டோ என வருந்தியும், இங்ஙனம் முறையானே திருவடி மனத்திற் பிரியாதிருக்க, இறைவன் திறமெல்லாமும், அவனுடன் ஒழுகுமாறும் நினைதலால் பெருகிய இவ்வுலகானுபவமாகிய பெருங்கடற்கண் படிதலை, உன்

அருளுலகில் வைத்து நுகருமாறு செய்க என விழைந்தும் கூறி யருளினார் என்றவாறு கண்டு கொள்க.

இன்ப வடிவினனாகிய உன்னைச் சிக்கெனப் பிடித்தலும், நீயும் என்னை விடாது இழுத்துக் கரும்பின் சுவை போன்ற உன் திருவடியின் இன்சுவை காட்டிப் பின்னர்த் தில்லைக்கு வா என்று பிரிதலும் அப்பிரிவாகிய பேரருளினாலேயே உன் திருவடியின் அருமையை உள்ளவாறு உணர்ந்து கண்டு, அதுவே தியானமாய், பிறப்பிறப்புக் களையும், ஏனைய சிறு தெய்வப் பற்றுக்களையும் நீக்கி, கழலடி மறவாத இன்பச் செருக்குடன் மங்கையர் போகத்தையும் இழிவுடைத்தெனக் கருதி உய்ந்து கடைத்தேறும் வண்ணம், அகத்தும் புறத்தும் புகுந்து நின்று, உலகியலினின்றும் பெயர்த்தெடுத்து ஆண்டு கொண்டாயன்றோ ! அத்தகையேன் நின் மேலான அருட் கடலில் மூழ்கித் திளைக்குமாறு அருள் செய்க. நீதான் முன்செய்த அருள்களுக்கும், இன்னும் செய்யவிருக்கும் அருள்களுக்கும் ஏற்ற வாறு யான் தவஞ் செய்தேன் அல்லேன் , வாளா 'சிவாய நம' என்ற அத்துணையே யான் செய்தது. ஆதலின் சிறுமை, பெருமை, கைம்மாறு நோக்காத நின் கருணையின் பொருட்டு யான் செய்யக் கிடந்ததென் என, நன்றி போற்றி வருந்தியருளினார் என நூற் பொருளடைவிற்கேற்பக் கூறிக்கொள்க.

இஃது திருப்பெருந்துறையில் அருளிச்செய்யப்பட்டது என்ப.

# சுட்டறிவு ஒழித்தல்

## கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

இரும்புதரு மனத்தேனை ஈர்த்(து) ஈர்த்(து)என் என்புருக்கிக்
கரும்புதரு சுவைஎனக்குக் காட்டினைஉன் கழலிணைகள்
ஒருங்குதிரை உலவுசடை உடையானே நரிகள்எல்லாம்
பெருங்குதிரை ஆக்கியவா(று) அன்றேஉன் பேரருளே. 1

கழலிணையைக் காட்டியதும் நரியைப் பரியாக்கியதும் ஆகிய தனக்குரிய அருளும் பாண்டியனுக்குரிய பேரருளும் கூறியருளப்படுகிறது

(பொ - ரை.) கங்கையின் அலைகள் எல்லாம் சிறிதும் புறத்தே சென்று உலவாது அகத்துள் அடங்கி உலாவுகின்ற சடையையும்

எம்மையும் உடையவனே! இரும்பின் தன்மையையுடைய மனத்தை யுடைய என்னை, யான் புறத்தே செல்லச் செல்ல இழுத்து என் எலும்புக்கும் உணர்வு கொடுத்து உருகச் செய்து உன்னுடைய திருவடிகள் இரண்டின் கரும்பை ஒத்த சுவையை நான் நுகருமாறு எனக்குக் காட்டியருளினையாகிச் சிறுமைக்குரிய நரிகளை எல்லாம் பெருமைக்குரிய குதிரைகளாக்கிய வகை உன் பேரருளான் ஆயதன்றே எ – று

(வி - ரை.) இழிவுடைய என் பிறப்பியல்பை உயர்வுடைய பிறப்பிய லாக்கினன், செயற்கருஞ் செயல் என்றவாறு.

மனம் இரும்புதரு மனமாதலின், திருவடியின் சுவை கரும்புதரு சுவையோடு ஒப்பதாயிற்று. இரும்புதரு மனத்தே, அன்பென்னும் தீயை மூட்டி அதனை உருகுவித்து, அதன்வழியே என்பினையும் உருகுவித்தலும், கருமபின் சுவைபெறச் செய்யும் பல்வேறு ஆலைத் தொழில்களும் தம்முள் நேராயின. மனம் இரும்பால் இயன்றிலதாயின், திருவடியின் சுவை பாகின் சுவை போன்றவற்றோடு ஒக்குமென்க.

"உன் கழலிணைகள்" கரும்பு தரும் சுவைபோன்ற சுவையைத் தருவதைக் காட்டினாய் என்றுரைக்க.

நரியைப் பரியாக்கிய வரலாறு ஆனந்தமாலை ஏழாம் திருப்பாட்டிற் கூறப்பட்டுள்ளமையையும் நோக்குக. இஃது அடிகள் பொருட்டேயாகும் என்பதும் பெற்றும். இன்னும் இதனாலே அடிகள் தாமே முதற்கண் சென்று திருப்பெருந்துறையில் உபதேசம்பெற்று மதுரைக்கு மீண்டமை பற்றிய வரலாறுகட்கு அகச்சான்றுகள் கிடையாமையானும் புராணவரலாறு கள் முன்னொடு பின் முரணுதலானும் கொள்ளேமாயினம்.

**பண்ஆர்ந்த மொழிமங்கை பங்காநின் ஆளானார்க்(கு)**
**உண்ஆர்ந்த ஆரமுதே உடையானே அடியேனை**
**மண்ணார்ந்த பிறப்பறுத்திட்(டு) ஆள்வாய்நீ வாஎன்னக்**
**கண்ணார உய்ந்தவா(று) அன்றேஉன் கழல்கண்டே.** **2**

இதனால் உத்தரகோசமங்கையில் வா என்றருளியதன் ஆக்கமே ஈண்டு கழல்கண்டு உய்வித்தது என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) பண் இனிமை நிறைந்த சொற்களைப் பேசும் உமை மங்கை பங்கனே, நின் அடியவர்களானவர்களுக்கு உண் ணுதற்கு அமைந்த அரிய அமுதமுடையவனே! அடியேனை மண் ணில் நிறைந்த பிறப்பினை நீக்கி ஆள்வோனே, நீதான் என்னைத் தில்லைக்கு வருவாயாக என்று அன்று கட்டளை யிட்டமையானன்றே உன் திருவடிகளைக் கண்ணாரக் கண்டு இன்று யானும் உய்ந்தவா றும் எ – று.

(வி - ரை.) "நீ வா என்ன" என்றது, கோலமார்தரு பொதுவினில் வருகெனப் பணித்துப் பிரிந்தமை குறித்து நின்றதென்க. அப்பிரிவினால் இறைவன் திருவடியின் அருமை அறியப்படுவதாயிற்று.

இனி, இடைமருதில் இருந்த இறைவன் ஆங்குற்ற அடிகளை வருதி எனப் பணித்தலும், அடிகளும் முன்சென்று திருவடிகளைக் காணலுற்றார் என்றலும் ஒன்று.

முன்னர்க் கேளாது இகழ்ந்த ஆகமத்தைப் பின்னர்க் கயிலைக்கண் வந்துகேட்டுப் பாங்கில் வீற்றிருந்து பாடிப் பயின்றமை தோன்றப் "பண்ணார்ந்த மொழிமங்கை" என்றார். இவ்வரலாற்றால் தம்மைப் பண் படுத்தி யாண்டமை தோன்றியவாறு.

ஆதமிலி யான்பிறப்பு இறப்புஎன்னும் அருநரகில்
ஆர்தமரும் இன்றியே அழுந்துவேற்(கு) ஆஆஎன்று
ஓதம்மலி நஞ்சுண்ட உடையானே அடியேற்(கு)உன்
பாதமலர் காட்டியவா(று) அன்றேஎம் பரம்பரனே. 3

இதனால் அவன் அருளே தமராகி அவனது பாதமலர் காட்டியது என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) எங்கள் மிக்க மேலோனே, தேவரெல்லாரும் ஓல மிடக் கடற்கண் மிகுந்த நஞ்சை உட்கொண்டமையால் அத்தேவர் அனைவரையும் தமக்குப் பொருளாகவுடையவனே, பற்றுக்கோடு இல்லாது பிறப்பு இறப்பு என்னும் மீளற்கரிய நரகத்தில், ஆண்டு உறவினர் ஆரொருவரும் இல்லாது அழுந்துகின்ற அடியேனாகிய என்பொருட்டு நின் திரு அருளே எனக்குத் தமராக நிற்குமாறு ஆஆ என்று இரங்கி உன் திருவடி மலர்களைக் காட்டியவாறாயிற்று அன்றே எ - று.

(வி - ரை.) ஆதம் (- பற்றுக்கோடு) என்றது குறிக்கோள் என்க. தமர் - (ஈண்டுத்) தவறு கண்டவிடத்து இடித்தற்குரியார். அவ்விரண்டு மின்றியே அழுந்துதலின், ஒரு காலத்தும் மீள இயலாமை குறித்தவா றாயிற்று.

"ஆர்தமருமின்றியே" என்றதனால் அருள் தமராகக் கூறப்பட்டது. அழுந்துவேற்குப் "பாதமலர் காட்டிய" தோர்வியப்பு. "அடியேன்" என்றார் அவன் கடமை தோன்ற. "அடியேன்" என்றமையால் "ஆஆ" என்று இரங்கியமையும் தோன்றும். "பாதமலர்" என்றார் சென்னிக்கு அணி யாதல் தோன்ற. கடைந்தவனைக் காட்டினும் அமுதம் உண்ண வைத்தவன் பெரியோன் என்க. அஃதன்றியும் தக்கன் வேள்வியிற் பராமுகம் செய்த வற்கே உதவியருள்வான் என்பது தோன்றும். பாற்கடல், பிறவிக்கடல்; கடைவோன், மனம்; மந்தரமலை, நல்அறிவு; அமுதம், நல்வழிப்பட்ட

புலன்கள்; நஞ்சு, தீ வழிப்பட்ட புலன்கள். வானவர், ஆன்மா, என உருவகிக்கினுமாம். வானவர் அடைக்கலம் புக்காங்கு ஆன்மாவும் அடைக்கலம் புக்கதென்க.

**பச்சைத்தாள் அரவாட்டீ படர்சடையாய் பாதமலர்**
**உச்சத்தார் பெருமானே அடியேனை உய்யக்கொண்(டு)**
**எச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே அச்சோஎன்**
**சித்தத்தா(று) உய்ந்தவா றன்றேஉன் திறம்நினைந்தே. 4**

இதனால், கழல் காட்டிய திறத்தாலே, பிற தெய்வம் ஏத்தாது என் சித்தம் உய்ந்தது என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) பசுமைத்தாகிய புற்றின்கண்ணுள்ள பாம்பினை ஆட்டுவோனே, படருஞ் சடையுடையானே, திருவடிமலரால் உயர் வடைந்த அடியார்களுக்கெல்லாம் பெருமானே, என்றிங்ஙன மெல்லாம் உன் திறத்தையே நினைந்து, அங்ஙனம் என் சித்தம் நினைந்தவழியே பிற குறைபாடுடையார் வணங்கும் சிறு தெய்வங் களைத் துதியாதே யான் உய்ந்தவாறு, நீ அடியேனை உய்யக் கொண்டதன்றோ! அது எத்துணை வியப்புடையது எ - று.

(வி - ரை.) பச்சைத்தாள் - பசுமைத்தாகிய புற்று, 'பாம்பறியும் பாம்பின் கால்' (பழமொழி). ாண்டுக் கால் என்பதும் புற்றினை; திரு. நாரணையங்கார் சுவாமிகள் உரையை நோக்குக. "மூர்க்கப் பாம்பு பிடித்து" என்றார் திருநாவுக்கரசு சுவாமிகளும் (5-ம் திரு முறை, திருப்பழனம், திருக்குறுந். 40.) இதனால், ஆட்டிய அப்பாம்பு மூர்க்கமுடைத்து என்பதும், ஊரவர்க்கு ஊறு விளைத்துப் புற்றில் நுழைந்தது என்பதும் ஆகவே இறைவன் அதனைப் பிடித்து ஆட்டினார் என்பதும் ஆகிய ஒரு வரலாறு பெறப்பட்டது.

தீமையுடையாரும், உயர்ந்தோரும் இறைவன் சித்தத்தாறு அடங்குவர் என்றபடி. ஆணையின் சிறப்புரைத்தவாறும்.

பாத மலரால் உயர்வடைந்த கடவுளர்க்கெல்லாம் "பெருமானே" என்று உரைத்தல் சிறவாது, பின்னர் "எச்சத்தார் சிறுதெய்வம்" என வரு தலால். அவன் யாவர்க்கும் பெருமான் என்பது முன்னர்ப் பெறப்படவும், "பாதமலர் உச்சத்தார் பெருமானே" எனப் பினனர்க் கிளந்து உரைத் தது, எல்லாரும் அவன் கிழமையுணர்வாரல்லர்; பாதமலரால் உயர்வடைந்த அடியாரே அவன் கிழமையும் சித்தமும் உணர்ந்தொழுகுவர் என்னும் சிறப்புடைமை கருதி என்க.

எச்சத்தார் - மயக்கம் முதலிய பிறவிக் குறைபாடுடையவர். அவரால் வணங்கப்படும் தெய்வம் "சிறுதெய்வம்" எனப்பட்டது. எனவே, இறைவன் பரிபூரணன் என்பது பெற்றும்.

'உன் திறம் நினைந்து ஏத்தாது, உய்ந்தவாறு, நீ உய்யக் கொண்டன்றே? அச்சோ!' என்க. உன் திறம் நினைதலாவது, 'பச்சைத் தாள் அரவாட்ட, படர்சடையாய், பாதமலர் உச்சத்தார் பெருமானே' என, அவன் யாவற்றுக்கும் பற்றுக்கோடாகவும், ஆணை செய்வோனுகவும் இருக்குமாற்றைப் பல்லாற்ருனும் நினைதல். அந்நினைவிற்கும் மூலம் அவன் என்க. அவனருளால் அறியவேண்டியன அறிந்து என்றபடி. அறிவெல்லாம் இறைவன் அறிவும், அறியும் வினைமுதலறிவும் கலந்தேற் படுவன என்றுணர்க.

''உன் திறம் நினைதல்'' ஆவது நீ யாட்கொண்ட நெறிக்கு மாறுபடின் அபராதம் வரும் எனக் கருதி நினைதலாம். உன்னருளால் நினைந்து எனினுமாம் திருப்புறம்பயத்தில் பாம்பாட்டியாக வந்த கதை முன் கூறப் பட்டது. அப்பர் சுவாமிகள் தேவாரத்துள்ளும் இதனைக் காண்க.

**கற்றறியேன் கலைஞானம் கசிந்(து)உருகேன் ஆயிடினும்**
**மற்(று)அறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்(து)**
**உற்(று)இறுமாந்(து) இருந்தேன்எம் பெருமானே அடியேற்குப்**
**பொன்தவிசு நாய்க்(கு)இடுமா(று) அன்றேநின் பொன்அருளே 5**

கற்றறியாதவனுகிய தனக்கு அருள்செய்தது நாய்க்குத் தவிசிடுவது ஒக்கும் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ-ரை) எம்பெருமானே, ஞான நூல்களைப் படித்தும் உன்னை அறிந்திலேன், உள்ளமுருகிக் கசியவும் மாட்டேன், அவை அங்ஙனமாகவும், பிற தெய்வங்களின் தொடர்பேதும் அறிந்திலேன், ஆனுல், நின் அருள் வாக்கின் தன்மையினுல் நின் நெடுங்கழல் சேர்ந்து இறுமாந்திருந்தேன், இங்ஙனம் என்னை யாண்ட நின் பொன் போன்று அருமை வாய்ந்த திருவருட்செயல், பொன்னுலாகிய இருக்கையை நாய்க்கு இடுவது போன்றதன்றே எ-று.

(வி-ரை.) பிற தெய்வத்தை அறியாமை இயல்பாகவே உள்ளது என்றபடி. அருள்வாக்கு என்றது, தில்லைக்கு வா என்றதை. திருவைந்தெழுத்துமாம்.

அங்ஙனம் 'வா' என்ருவிடில் பிற தெய்வத்தைச் சார்ந்து கேடுற்றிருப்பேன். என்னை? நினக்கு உரிய கலையறிவும் உருகும் பெற்றியும் இலேனுதலால். ஆகம மார்க்கமும் அன்பு மார்க்கமும் கூறப்பட்டன. நாய் பொற்றவிசுக்கு அஞ்சுமாறே அடிகளும் அருளுக்கு அஞ்சினர் என்க. பொற்றவிசு அரசர் முதலியோர்க்கு உரியது. கழல் பேரன்பர்க்கு உரியது; அஃது உன் வாக்கினுல் கிடைத்தது என்றபடி.

'நாய்க்குத் தவிசிடுதல்' என்பதைப் பழமொழியாம் எனக் கொள்க. அங்ஙனமே நரியைப் பரியாக்கியமையையும் கொள்ளல் சாலாது என்பதை **ஆனந்தமாலை** ஏழாம் திருப்பாட்டை நோக்கி அறிக.

பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நஞ்சாய துயர்கூர நடுங்குவேன் நின் அருளால்
உய்ஞ்சேன்எம் பெருமானே உடையானே அடியேனை
அஞ்சேல்என்(று) ஆண்டவா றன்றேஅம் பலத்தமுதே. 6

இதனால், நாய் தவிசுக்கு அஞ்சியாங்கு, அருளுக்கு அடிகள் அஞ்சினாராக மங்கையர் கண்ணால் இடர்ப்பட்டேனை அஞ்சேல் என ஆண்டமை கூறியருளப்படுகின்றது

(பொ - ரை ) எம்பெருமானே, உடையானே, அம்பலத் தமுதே, பஞ்சுபோல் மெல்லடிகளையுடைய மாதர் கடைக்கண் பார் வையினால் இடர்ப்பாடுற்று, நஞ்சுபோன்ற துயர் மிகுதலினாலே நடுங்குமியல்புடையேன், நின் அருளினாலே உய்வு அடைந்தேன், அடியவனையும் (அங்ஙனம் உய்வு அடையுமாறு) அஞ்சாதே என்று உரைத்து ஆண்டவாறன்றே எ - று.

(வி - ரை.) உறுப்புக்கள் மென்மையவேனும் கட்பார்வை வன் மைத்து என்றபடி. இடர்ப்படுதல்-கட்பார்வையால் இழுக்கப்பட்டு வருந்து தல். அதனால் மனத்து எழுந்த காமம் மிக்க மயக்கத்தினை விளைவித்து மேன்மேற் பெருகுதலின " நஞ்சாய துயர்கூர " என்றருளினர். அதற்கு மருந்து அம்பலத்தமுதின் அருள் என்க. அவற்கு அஃது இயல்பாதலின் அவ்வருளாவது, " அஞ்சேலென்றாண்டது " என்க. ' அடியேனையும் ' என இழிவு சிறப்பும்மை விரிக்க. பஞ்சு, செம்பஞ்சுக் குழம்புமாம்.

தன்பால் நடந்து வந்தார் என்பது தோன்ற " பஞ்சாய அடிமடவார் " என்றார். " ஆய " உவம வாசகம். ஆகம நெறியும் அன்பு நெறியும் இல்லேன் என்பது தோன்ற, "நின் அருளால் உய்ஞ்சேன்" என்றார். தாம் நோக்கியமைக்கு அவரது ஆரவாரமே காரணம் என்பது குறிப்பு.

என்பாலைப் பிறப்பறுத்திங்(கு) இமையவர்க்கும் அறியவொண்
தென்பாலைத் திருப்பெருந் துறைஉறையும் சிவபெருமான் [ணாத்
அன்பால்நீ அகம்நெகவே புகுந்தருளி ஆட்கொண்டது
என்பாலே நோக்கியவா றன்றேஎம் பெருமானே. 7

இங்ஙனமெல்லாம் இடர்ப்படும் யான் உய்தற்குக் காரணம் நீ என்பால் நோக்கியதுவேயாகும் என்றருளிச் செய்யப் படுகின்றது.

(பொ - ரை ) இவ்வுலகில், என் பசையற்ற பிறவியை நீக்கி, அழகிய பாலையாகிய திருப்பெருந்துறைக்கண் வந்து உறையும் தேவர்க்கும் அறிதற்கரிய சிவபெருமானே, எம்பெருமானே, அன்பினாலே உள்ளம் நெகுமாறு அதனுட் புகுந்தருளி அவ்

வாயிலானே என்னை ஆட்கொண்ட அச்செயலானது என்னிடத்தே திருவுள்ளம் சார்த்தியருளிய வகையாலானதன்றே எ - று.

(வி - ரை.) என்னை ஆட்கொண்டது ஒருதனிப்பட்ட திருவருள் முறையாகும் என்றவாறு. "என்பாலே" என்புழி ஏகாரம் பிரிநிலை. அடியார் பலராயினும் "என்பாலே நோக்கியவாறும்" என்க. எனவே இறைவன் அடிகள் பொருட்டுக் குருபரனாய் மண்ணுலகில் வந்து, பலரையும் ஆட்கொண்டான் எனவுணர்க.

அன்பு - ஐந்திணை அன்பு.

**மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா**
**ஓத்தானே பொருளானே உண்மையுமாய் இன்மையுமாய்ப்**
**பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினால்**
**பேர்த்தேநீ ஆண்டவா றன்றேஎம் பெருமானே. 8**

இதனால், ஆராய்ச்சிவகையாற் புகுந்து புரள்கின்ற என்னைக் கருணையினால் பெயர்த்து ஆண்டனை என்றருளிச் செய்யப்படு

(பொ - ரை.) யாவற்றுக்கும் முற்பட்டவனே, மூப்பற்ற முதல்வனே, முடிவில்லாத அன்பின் ஐந்திணை ஆகமம், நான்மறை என்னும் நூல்கள் ஆனவனே, அவற்றைக் கடந்த பொருள் ஆனவனே, உள்பொருளும் இல்பொருளுமாகத் தோற்றியவனே, என்றின்னவற்றில் ஆராய்ச்சி வகையாற் புகுந்து புரள்கின்ற என்னை, திருவருளினாலே பெயர்த்தெடுத்து அன்பின் ஐந்திணை நெறிகாட்டி நீ ஆட்கொண்டதனால் யான் உய்ந்தவாறன்றே எ - று.

(வி - ரை.) மூத்தல் - யாவற்றுக்கும் முற்பட்டிருத்தல். மூவாமை - காலத்துட்பட்டு வயது முதிர்ந்து தளர்ந்து போகாமை. காலத்துட்படுதலும் படாமையுமுடையன் என்க. பொருள் - அவற்றுக்கு விஞ்சியபொருள். சொல்லெனவே பொருளும் பெறப்படுதலின், பின்னரும் பொருள் என்றலால், அவற்றுட்படாது எஞ்சிய பொருள் என, மூப்பும் மூவாமையும், உண்மையும் இன்மையும் என முன்னும் பின்னும் அடுத்துவந்த இரட்டைகளுக்கேற்ப உரைக்க. எனவே நூலுட்படுதலும் படாமையுமுடையன் என்ற வாறாயிற்று. காலத்துட்பட்டவனே, நூலுட்பட்டவனும் உளனுமாவன்; காலத்துட்படாதவனே, நூலுட்படாதவனும், இலனுமாவன் என்றுணர்க.

"இங்குப் புகுந்து புரள்வேனை" என்க. "இங்கு" என்றது "மூத்தான்" முதல் "இன்மை" வரையும் கூறப்பட்ட இறைவன் இயல்புகளை. புகுதல் - ஆராய்ச்சி வகையாற் புகுதல். புரள்தல் - முடிவு காணமல்

அவ்வாராய்ச்சியுள் ஆழ்ந்தும் மிதந்தும் கிடத்தல். பேர்த்தல் - அவ் வாராய்ச்சி நெறி நீக்கி அன்பு நெறியிற் புகுத்தல். குருவின் திறம் அறிவித்தபடி.

மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந்து உள்ளுருகத்
தெருவுதொறும் மிகஅலறிச் சிவபெருமான் என்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா(று)
அருள்எனக்(கு)இங்(கு)இடைமருதே இடங்கொண்ட
[அம்மானே. 9

இதனால், பேர்த்தாண்ட நீயே உன் அருட்கடலிற் படியுமாறும் அருள்செய்க என்றருளிச் செய்யப்படுகின்றது.

(பொ - ரை ) திருவிடைமருதூரை இடமாகக்கொண்ட அம் மானே, பொருந்தற்கினிய மலரடிகள் மனத்தில் வளர்ச்சி பெற்று, அதன் உள்ளிடத்தை உருகும்படி செய்ய, (ஆராமை ஏற்பட்டு) தெருக்கள்தோறும் புலம்பியழுது காண்பனயாவும் சிவனுகவே கண்டு துதித்து நுகர்ந்த நின் பெரிய கருணை யாகும் அகன்ற கடற் கண் திளைக்குமாறு எனக்கு இவ்விடத்தே அருள்க எ - று.

(வி - ரை.) முன் நூல் ஆராய்ச்சி வகையாற் புகுந்து புரண்ட வர்க்கு, பெயர்த்து உணர்த்தப்பட்ட அன்பு நெறிக்கண் இனிமை பயப்பது திருவடியே யாகலின் " மருவினிய மலர்ப்பாதம் " என்றருளினர்.

அத்திருவடி மனத்தில் வளர்ந்து உள்ளுருகுதலும், அலறுதலும் பிரி வால் ஏற்பட்ட ஆராமையால் எய்துவனவாதலின் ஆராமை ஏற்பட்டு என விரித்தாம். அங்ஙனம் இயற்றுவித்தான் அவனுகலின், அந்நுகர்ச்சியால் ஏற்பட்ட இன்பக்கடல் அவன் "பரங்கருணைத் தடங்கட"லாயிற்று. "கருணைக்கடல்" என்றது இறைவன் தன்பால் எளிவந்தமையையும், "தடங்கடல்" என்றது இறைவன் தம்பொருட்டாகப் பெருந்துறைக்கண் அளித்த பேருருவக் காட்சியையும், "பரங்கருணைக்கடல்" என்றது மீள வும் தம்மை ஐந்திணை அன்பைச் சார்பாகப் பற்றி ஒழுகவைத்தமையையும், "பரங்கருணைத்தடங்கடல்" என்றது வழுவகற்றி அன்புநெறியில் ஒழுக வைத்து ஆட்கொண்டருளியமையும், உட்கொண்டு "பரங்கருணைத்தடங் கடல்" என்றார் என்க. பருகிய - நுகர்ந்த. இறைவன் பிரிதலும், மீண்டும் அவனைப் புணர்தற்குரிய வழிவகைகளைச் சூழ்ந்து, அவனை இங்ஙனம் புணர்ந்து இன்புறுவல் எனக் கற்பனை செய்து நுகர்ந்தனவே ாண்டுப் "பரு கிய"வை எனப்பட்டன. படிதல் - உண்மையாகவே அவனேடும் புணர்ந்து திளைத்தல். கற்பனை வகையான் வந்த அவ்வின்பத் திறந்தோறும அவ னேடும் ஒன்றியிருந்து திளைத்து அனுபவித்தல் வேண்டினர் என்க.

'இங்கு எனக்கு அருள் செய்யவந்து நிற்கும் இடைமருதூரை இட மாகக் கொண்ட அம்மானே!' என்றார் என்க. இங்கு, தில்லை.

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய்இன் அமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான் [தான்
தானேவந்(து) எனதுள்ளம் புகுந்(து)அடியேற்(கு) அருள்செய்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே. 10

இதனால், எனது உடம்பொடு வாழ்ந்துவரும் வாழ்க்கையை அவன் ஒறுத்தலினால் என்னை வெறுக்கச்செய்து அவன் ஆண்டானேயன்றி நானோ தவம் செய்தேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) தேன் போன்றும் இன்னமுதம் போன்றும் இன்று தித்திக்கும் சிவபெருமான் ஊன் நுகர்வே விரும்பும் உயிர் வாழ்க்கையைக் கண்டித்தலால் என்னை வெறுத்துத் தள்ளும்படி செய்து, தானாகவே எழுந்தருளிவந்து என் உள்ளத்துள் புகுந்து அடியேனுக்கு அருள்செய்தான். சிவாயநம என உபதேசிக்கப் பட்டேன். ஆயினும் அவ்வுபதேச மாத்திரையேயன்றி அவ்வூனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடற்கு யானோ தவஞ் செய்தேன், (அல்லேன்; எல்லாம் அவன் செய்தனவே) எ - று.

(வி - ரை.) எல்லாம் இறைவன் பொறுப்பும் செயலும் என்றபடி. ஓகாரம் இழிவுசிறப்பு. ஏகாரவினா எதிர்மறை குறித்து நின்றது.

ஊனாரும் உயிர்வாழ்க்கை - உலோகாயத வாழ்க்கை. இறைவன் அருளிய வாழ்க்கை, ஆத்மீக வாழ்க்கை.

இரும்புதரு மனத்தேனாகவும், அருநரகில் அழுந்துவேனாகவும், கலையறிவும் கசிந்து உருகுதலும் இலனாகவும், மங்கையர் ஆசையுள் மூழ்கியேனாகவும், அதற்கேற்பத் தத்துவ ஆராய்ச்சி செய்வோனாகவும் இருந்த உலோகாயதனாகிய என்னை அன்புநெறியிற் பெயர்த்து ஆண்டான். அவன் செயல் எத்துணை அருமையானது. இதற்குக் கைம்மாறு முண்டாமோ என வருந்தியும், பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமாறு அருள்க என விழைந்தும் கூறியருளியவாறு உணர்க.

தவஞ்செய்தலாவது, நியமமாகத் திரு ஐந்தெழுத்தை உருவேற்றிப் பூசனை செய்து தியானிக்கும் யோகத்தில் இருந்துவரல். "சிவாயநம" என்றார் செவ்வி நிரம்பப்பெற்று உபதேசிக்கப்பட்டமையின்.

திருச்சிற்றம்பலம்

# திருப்புலம்பல்

" திருப்புலம்ப "லாவது, எல்லாப் பற்றினையும் விடுத்துத் தனித்து வருந்தும் பகுதியாம். இது மூன்று திருப்பாடல்களைக் கொண்டது. அஃதாவது, இறைவனுடைய பெருந்தகைமையினையும் தம்முடைய இழிதகைமையினையும் நினைந்து அவ்வாறாகிய இறைவன், இவ்வாறாகிய என்னை வலிந்து ஆண்டனனே, அவ்வாறு ஆண்டுகொள்ளற்கண் எவ்வளவு எளியனாய் இழிதக்கன எல்லாவற்றையும் என் பொருட்டு ஏற்றனனே, இஃதென்ன தகவின்மை என வருந்தியும் ஒருபுறத்தே இன்பந் தோன்றலின் அவனை விழைந்தும் ஒழுகிய அடிகள் தம்பொருட்டு அவன் ஏற்ற இழிதகைமைகளை எல்லாம் நினைக்குந்தோறும் ஆற்றாராய் அவ்வாற்றாமை தீர அவன் திருவடியை நினைந்து வருந்தினாரென்க.

இறைவன் கழல் காட்டியும் அக்கழலுட் கலத்தலாகிய வீடு பேற்றினை அருளாமையினாலே அதனை அருளிச் செய்யுமாறு பிரார்த்தித்த அடிகள் அது சித்தியாகுமாறு அக்கழலையே வேறு பற்றின்றி நினைத்தலும், புகழ்தலும், துணையாகக் கோடலும், ஆதியன செய்யவேண்டுதல் ஒரு தலையாகலின் அங்ஙனம் நின்றருளினர் என முன்னர்த் திருப்பதிகத்தின் இறுதிப் பெரும் பிரிவொடு இப்பதிகத்தினை இயற்கைப் பொருளடைவு செய்க

| பொருளடைவுத் தொடர் | பாடற்பொருள் | நூற்பா எண் |
|---|---|---|
| 1. | உன் தாட்கு உருகுமொன்றே வேண்டுவேனெனல் | 3 |
| 2. | உன்னை யல்லாதொரு துணியறியே னெனல் | 2 |
| 3. | பொன்னடி யன்றிப் புகழேன் என்றல் | 1 |

இத்திருப்பாடல்களை, கழற்சார்பு வேண்டியருளிய அடிகள், அக்கழல்கட்கு உருகவேண்டினர் எனவும், உருகிப் புகழ்ந்தருளினர் எனவும், அவ்வாற்றானே அவற்றை யுடையானைத் துணையாகக் கொண்டருளினர் எனவும் இயற்கைப் பொருளடைவு செய்க.

இஃது திருவாரூரில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# சிவானந்த முதிர்வு

## கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

பூங்கமலத்(து) அயனொடுமால் அறியாத நெறியானே
கோங்(கு)அலர்சேர் குவிமுலையாள் கூறுவெண் ணீறுடை
ஓங்(கு)எயில்சூழ் திருவாரூர் உடையானே அடியேன்நின்
பூங்கழல்கள் அவையல்லா(து) எவையாதும் புகழேனே 1

இதனால், நின் கழலைப்பற்றிப் புகழ்தலேயன்றி, வேறு எப் பற்றினையும் மனத்துட்கொண்டு அவற்றைப் புகழேன் என்பது அருளிச் செய்யப்படுகின்றது

(பொ - ரை.) தாமரைப் பூவின்கண்ணே வீற்றிருக்கின்ற அயனுடன் திருமாலும் அறியாத அன்பு நெறியால் அறியப்படு வோனே! கோங்கரும்பானது அலர் சேர்தற்குக் காரணமாகிய குவிந்த முலையையுடைய உமைப்பிராட்டியைப் பாகத்திலுடைய வனே! வெண்ணீறு பூசியவனே! உயர்ந்த மதிலாற் சூழப்பட்ட திருவாரூருடையானே! அடியேன் உன்னுடைய பூத்தொழில் நிரம்பப்பெற்ற கழலணிந்த திருவடிகள் இரண்டனையுமன்றி வேறு எவற்றையும் ஒரு சிறிதும் புகழேன் எ - று.

(வி - ரை.) அயனும் மாலும் பதவிபெறும் நெறியில் நின்று அவனை நாடுவாராகலின், ஞானநெறி அவரால் அறியப்படாததாயிற்று.

அவள் முலைக்கு நாணி வேற்றுருக்கொள்வான் அலர்ந்தது என்க. அலர், தூற்றுதலுமாம்.

திருவாரூர் சோழ அரசரது பண்டைத் தலைநகராதலின் அஃது "ஓங் கெயில்சூழ்" எனச் சிறப்பித்தருளப்பட்டது. அயன் மால் அறியாத நெறியை எனக்குத் தந்த பேரருளாளனும், படைத்தற்கும் காத்தற்கும் உரியவனும், சர்வ சங்காரக் கடவுளுமாகி, இம்மைக்கும் மறுமைக்கும் உடையனாயினன்; அவனே திருவாரூரன். அம்மையோ நீலோற்பலாம் பிகை. அத்திருவாரூரிற் பிறக்க முத்தி சித்தியாம். அவன் திருவடியடை தற்கு அவனையே துணையாகக் கொண்டேன் என அடுத்த திருப்பாட்டால் கூறப்படுகின்றது.

சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதீ பசுபதீ மழவெள்ளை [நான்
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாய் அடியேன்
உடையானே உனையல்லா(து) உறுதுணைமற்(று) அறியேனே. 2

இதனால், உன்னையன்றி வேறு துணையொன்றும் அறியேன் என்பது அருளிச் செய்யப்படுகின்றது

(பொ - ரை ) சடையுடையவனே ! தழலைக் கையிலேந்தி ஆடுவோனே ! மூன்று இலைகளாக விளங்கும் சூலப்படை யுடையவனே ! ஒளிகட்கெல்லாம் மேலான அறிவொளியானவனே ! பாசத்திறுற் கட்டுண்ட உயிர்களையெல்லாம் ஈடேற்றும் தலைவனே ! இளைய வெண்ணிற விடையைக் கொடியாகவும் ஊர்தியாகவும் கொண்டவனே ! விரிந்த பொழில் சூழ்ந்த திருப்பெருந்துறையை உடையவனே ! எல்லாவற்றையும் உடையவனே ! உன்னையல்லாது வேறு உற்ற துணையை அடியேன் அறியேன் எ - று.

(வி - ரை.) வேகம் கெடுத்து, மலமகற்றி, காத்து, ஞானத்தைக் கொடுப்பவனாதலினாலே "சடையான், தழலாடி, பசுபதி, பரஞ்சோதி" எனப்பட்டு, அவனே விடையூர்ந்து வந்தருளும் பெருந்துறைக் குருமணியுமாவன், என்னையுடையனுமாவன் என்றருளப்பட்டான் ; அவனையே துணையாகக் கொண்டேன் என்க. உறுதுணை - இடையூற்றில் கொள்ளற்குரிய துணை.

சர்வசங்கார காலத்தில் தழல் மத்தியில் கூத்தாடுவோனுமாம்.

**உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்**
**கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்**
**குற்றாலத்(து) அமர்ந்துறையும் கூத்தாஉன் குரைகழற்கே**
**கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. 3**

இதனால் துணைகொள்ளப்பட்ட அவன் மிகுதியும் அருள் செய்யுமாறு அவன் திருவடிக்கு உருகிக் கசிதலை வேண்டியருளுகின்றார்

(பொ - ரை.) திருக்குற்றாலத்து வீற்றிருந்து கூத்தாடுதலைச் செய்வோனே ! நின்னையல்லாது எனக்குத் துணையென உற்றாரையும் வேண்டுகிலேன் ; எனக்கென ஓரூரையும் வேண்டுகிலேன் ; உன் நற்றாள் தொழாது பல நூல்களையும் கற்றவரேனும் அவரையும் வேண்டுகிலேன் ; அவர்பாற் கற்பனவும் இனி அமையும், கன்றையுடைய பசுவின் மனம் அக்கன்றின் மேலேயே உருகிக் கசிந்து நிற்பதுபோல யானும் உனது ஒலிக்கின்ற கழலையணிந்த திருவடிக்கே உருகிக் கசிதலை வேண்டுவேன் எ - று.

(வி - ரை.) சுற்றத்தை ஓம்பி, மற்றதனால் ஊராட்சி எய்திச் சிறப்பைப் பூணச் செய்தலே உலகியற் கல்வியின் நோக்கமாதலின், அவ்வுலகியற் கல்வி "கற்பனவும் இனியமையும்" என்க. அங்ஙனம் அமைதலின், அக் கல்வியில் துறைபோயினார் நட்பும் வேண்டப்படாததாயிற்று.

கற்றுவின் மனம் கசிதல் காதல் நெறிபற்றியது. அதுவே தமது நெறி என்பது தோன்ற அங்ஙனம் அருளிச் செய்தார். தன் ஆக்கமெல்லாம் கன்றிற்கே அளிக்கும் ஆவைப்போல எனது ஆக்கமும் திருவடிக்கே உரிய தெனக் கூறியருளியபடி. திருவடியைக் கண்டாராகலின் "கசிந்துருக வேண்டி" யருளினர். 'உருகிக் கசிய' என மாற்றுக.

திருப்பெருந்துறைப் பெருமான் கோயிலின் வாசலில், பித்தனுக்கினுன் என அப்பெருமான்மேல் வெறுப்புற்ற அடிகள் திருவாரூர்ப் புக்கு அவன் கோயிலை அடைந்தபோது ஆங்கே சேய்மைக்கண் இனிய திருவாரூர்ப் பெருமானைக் காட்சி யளித்த அவனே, பின்னர் அண்மையிற் செல்லுங் கால் சகுணத் திருமேனிகொண்ட இனிய பெருந்துறைப் பெருமானைக் காட்சியளித்து, 'யானே பெருந்துறையான்' என ஞானந்தன்னை நல்கிய சிறப்பால் வெறுப்பற்று விருப்புற்று அவன் பூங்கழல்களையே புகழ்வேன் என்றும், 'மற்றதன்மேல் எனக்கு அந்தோ, துணையாகான்' என நினைத்து அவனே உறுதுணையாயினுன் என்றும் மற்றதன்மேல் அப்பெருந்துறை யானே 'குற்றாலத்திற்கு வருக' எனப் பணித்தமையின் ஆங்குச் சென்று "உன் குரைகழற்கே கற்றுவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவன்" என்றும், கூறியருளிய இயைபால் அடிகளது வரலாறு ஒருவாறு பெற்றும். இது நோக்கி இன்புறற்பாலது.

திருச்சிற்றம்பலம்

# குலாப் பத்து

"குலாப் பத்து" என்பது தில்லைப்பதியிற் குலாவும் இறைவனைக் கொண்டேனெனக் கூறும் பத்துப்பாட்டுக்களையுடைய நூற்பகுதி ஒவ்வொரு பாட்டினும் "குலாத்தில்லை" என வரும் பத்துப்பாட்டுக்களையுடைய பகுதி எனினுமாம்.

"திருப்புலம்ப"லால் இறைவனே துணையெனவும், அவனையல்லது யாதும் புகழேன் எனவும், அவன் கழற்குக் கற்றுவின் மனம்போலக் கசிந்துருகவேண்டும் எனவும் அறிவுறுத்திய அடிகள், அங்ஙனே அவனைத் துணைத் தலைமகனைக் கொண்டும் அவன் தன்னை இன்னும் தலைவியாக ஏற்றுக்கொண்டிலன் என்பது குறிப்பாற் புலப்படக் கூறுதலின் இஃது மேலைப் பகுதியோடு இயைபுடைத் தாயிற்றென்க.

இப்பகுதியில் ஒவ்வொரு திருப்பாட்டும் "கொண்டன்றே" என நிறைவெய்துகின்றது "கொண்டு" என்பதைக் கொண்டேன் எனப் பொருள் தரும் தன்மை யொருமை வினைமுற்றுகக் கொள்ளுதலே ஏற்புடைத்தாகும். "அன்றே" என்பது வினுவின் கண் வந்தது

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு — பொருள் ஒப்புமை நோக்கி இப்பகுதி ஆறு பெரும் பிரிவாகக் கொள்ளப்படும்.

முதலாம் பிரிவில் நான்காவது பாட்டும் இரண்டாம் பிரிவில் 2-ஆவது பாட்டும், மூன்றுவது பிரிவில் 6-ஆவது 3-ஆவது 5-ஆவது பாட்டுக்களும், நான்காவது பிரிவில் 10-ஆவது பாட்டும், ஐந்தாம் பிரிவில் 7-ஆவது 8-ஆவது பாட்டுக்களும், ஆறுவது பிரிவில் ஒன்பதாம் முதலாம் பாட்டுக்களும் அடங்குவனவாகும்.

சிவபதத்தை அடியார்களுக்கென வைத்திருப்போனைக் கண்டேன் (4), ஆகையால் மங்கையர் தோள் நசையாற் பிறந்திறவேன் (2), அங்ஙனம் பிறந்திறந்து யான் அவமாகாது நணுகும் பொருட்டு (6), முன்புள்ளன முழுதழிய உள்புகுந்து (3), பிறவி தூரும்படி செய்து (5), தன்பணி செய்வோனுக்கு இம்மை மறுமையருள்வோன் (10), வல்லரக்கனுக்கு அருளிய சீறிய திருவடியும் (7), நரனுக்கு அருளிய ஆறிய திருவடியும் (8) தந்து, தன் தொண்டு பேணச் செய்தானை (9), த்தலைமகனைக் கொண்டேன் (1), என இயற்கைப் பொருள்களை அடைவு படுத்துக.

இனி, நூற்பொருளடைவு வருமாறு —("திருப்புலம்ப"லிற் கசிந்துருகிய யான்) தெளிந்து குமண்டையிட ஆண்டானைக் கொண்டேன். அவ்வாறு கொண்டமையால் தீமைகள் எத்துணை செய்திடினும் முடியேனாகி துன்பங் களைந்து, துவந்துவங்கள் தூய்மை செய்து, அங்ஙனஞ் செய்த குணம் பெற்றியுடையான் மேலும் பிறவிதனைத் தூரும்படி, இடையிலே கெடாது என்னை ஒறுக்கச் சீறிய கருணைத் திருவடி வைத்தும், ஆறிய கருணையால் ஐவரை அடக்கியும், ஆட்செய்யச் செய்வித்து அம்மையொடு இம்மை அருளினன் என இயைத்துக் கொள்க.

இயற்கைப் பொருளடைவு ஆதியவற்றின் அட்டவணை :

| பெரும்பிரிவு | உட்பிரிவு | இ. பொ. அடைவு | நூ. பொ. அடைவு |
|---|---|---|---|
| I | | 1 | 4 |
| II | | 2 | 2 |
| III | 1<br>2<br>3 | 3<br>4<br>5 | 6<br>3<br>5 |
| IV | | 6 | 10 |
| V | 1<br>2 | 7<br>8 | 7<br>8 |
| VI | 1<br>2 | 9<br>10 | 9<br>1 |

ஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# அநுபவம் இடையீடுபடாமை

## கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

ஓடுங் கவந்தியுமே உறவென்றிட்(டு) உள்கசிந்து
தேடும் பொருளும் சிவன்கழலே எனத்தெளிந்து.
கூடும் உயிரும் குமண்டையிடக் குனித்துஅடியேன்
ஆடும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 1

இஃது உடம்புயிர்கள் கூத்தாட ஓடுங் கந்தையும் உறவாகக் கொண்டு தில்லைப் பெருமானைத் தலைமகனைப் பற்றிக்கொண்டேன் என்றருளியது.

(பொ - ரை ) உடம்பும் உயிரும் (ஒன்றோடொன்று கலந்து) கூத்தாட, அடியேனும் கூத்தியற்றி, ஓடுங் கந்தைப் போர்வையுமே உறவாவன எனக் கொண்டு உள்ள முருகித் தேடுதற்குரிய பொருளும் சிவனுடைய திருவடியே எனத் தெளிந்து, விளங்குந் தில்லையிலே கூத்தியற்றும் ஆண்டவனைப்பற்றி அவனைத் தலைமகனைக் கொண்டேன் அன்றே எ - று.

(வி - ரை.) ஆண்டான் தில்லைக்கண் கூத்தியற்றுதலால், உயிரும் உடம்பும் ஒன்றுடன் ஒன்றுகூட, அக்கூட்டுறவினலே அறிவும் இச்சையும் தொழிலகளுமுண்டாய், பற்றற்குரியது இது, உரியதல்லாதது இது என்று உணரந்து அவ்வாற்றானே ஓடுங் கவந்தியுமே இவ்வுலகத்துப் பற்றப் படும் பொருள எனப் பறறி, அதன்மேல், அவைகொண்டு தேடப்படுவது சிவன் கழல் எனத் தெளிந்து, ஆண்டவன் பற்றப்பட்டான் என்க. எந்த வொரு நிகழ்ச்சிக்கும் இறைவன் கூத்தே காரணம் என்றபடியாம்.

ஓடுங் கவந்தியும் உறவென்று பற்றி உள் கசிதலே சிவன் கழல் தேடப் புகுவார்க்குரிய செவ்வி என்க. மேல் ஈட்டப்படுவதாகலின் " தேடும் பொருள் " என்றார். " கழலே " என்புழி ஏகாரம் தேற்றம்.

" ஓடுங் கவந்தியும் உறவென்று " பற்றிய பின்னர்ப் பிரித்தற்குரியன இன்மையின் பிரிநிலை என்று கொள்ளற்க. கவந்தி - கோவணம் ; கந்தை.

குமண்டை - கூத்து. குனித்தலும் அஃதே. உயிர் கூட்டுடன் கூடியது. " அடியேன் " என்றது கூட்டுள் இருப்பினும் ஞானமயமாய் நின்று கூட்டுடன் ஒன்றுத ஆன்மாவை என்று உணர்க. அழுக்கடைந்த உயிரே கூத்தினால் அழுக்கு அகன்று தூய்மை பெற்றதாயிற்று.

ஓடுங் கவந்தியும் பற்றித் திருவடிபற்றி அதுகொண்டு ஆண்டானைப் பற்றியவாறு படி முறையே கூறியவாறும்.

"கொண்டு" டுகரவீறு பெற்ற இறந்தகாலத் தன்மை ஒருமை வினைமுற்று. "அன்றே" என்பது வினு; எச்சப்பொருள் தந்ததென்க. அவன் என்னைத் தலைமகளாகக் கொள்ளாவிடிற் பயன் யாது என்பது குறித்து நின்றது. இவ்வாறே ஒவ்வொரு திருப்பாட்டிற்கும் விரித்துக் கொள்க.

உடம்பு ஒடுங் கவந்தியுமே உறவென்று கூத்தாட உட்கசிந்து தேடும் பொருளும் சிவன் கழலே எனத் தெளிந்து குமண்டை இட என்க. அங்ஙனம் அவை குமண்டையிடுதலால் அடியேனும் குனித்து ஆடுங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டேன் என்க.

துடியேர் இடுகிடைத் தூமொழியார் தோள்நசையால்
செடியேறு தீமைகள் எத்தனையும் செய்திடினும்
முடியேன் பிறவேன் எனத்தனதாள் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 2

இஃது ஆண்டானைத் தலைமகனைக் கொண்டேனுகையால், எத்தனை பாவஞ் செய்தாலும், யான் இறந்து பிறவேன் என்றருளியது.

(பொ - ரை.) அடியேன், என்னைத் தன்னுடைய திருவடிகளைப் புணருமாறு செய்த, விளங்கும் தில்லையாண்டவனைத் தலைமகனைப் பற்றிக்கொண்டேனன்றோ? ஆதலால், உடுக்கை போன்று சுருங்கிய இடையையும், பரந்து வரும் சொல்லையும் உடைய மங்கையர் தோள் புணரும் விருப்பத்தால் பாவங்கள் ஏறிய தீய செயல்கள் எத்தனை தாம் இனிச் செய்தபோதிலும், யான் இறக்கவும் மாட்டேன், பிறக்கவும் மாட்டேன் எ - று.

(வி - ரை.) எனவே திருவடியே முயங்கி என்றும் ஒரே பெற்றியுடையேனுய் இருப்பேன்; வினைகளும் பிறவும் என்னைப் பற்றும் வலியுடையன வல்ல என எச்சமுரைக்க. பற்றற்ற செயலின் மேன்மை கூறியவாறு.

இறைவன் தாள் முயங்கியோர், தூமொழியார் தோள் முயங்குதல் என் கருதியவாறோ எனின், கருதியது பிறிதில்லை; திருவடிக் கருத்தொன்றேயாம் உள்ளது; அது பின்னர்த் தேடப்பட்டதொன்று. அரிவையர் தோள் முயக்கம் பிரகிருதியின்பாற்பட்டு உடல் இயங்குவது; பழவினையால் ஏற்பட்டது. மனத்தே திருவடி வளர்தலின், அப்பழவினைப் பயன் பற்றுதென்றுரைக்க.

"மனத்தகத் தழுக்கறுத மௌனயோக ஞானிகள்
வனத்தகத் திருப்பினும் மனத்தகத் தழுக்கறுர்

மனத்தகத் தழுக்கறுத்த மௌனயோக ஞானிகள்
முலைத்தடத் திருப்பினும் மனத்தகத் தழுக்கிலார்.''

என்றார் சிவ வாக்கியரும். மேலும்,

நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்,
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தராய் இருந்தும்
நின்மல ஞானத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்து மிறைஞானம்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
' குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே இருப்பர்.

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தத்தாலும் (சுபக். 308) இக் கருத்தை இனிதுணர்க.

"செடியேறு தீமைகள்" என்றார் பிறர் மதிப்பை உட்கொண்டு விளக்கு முகத்தானே. தம் நினைப்பில் தீமை இல்லை என்றபடி.

முடிவும் பிறப்பும் நல்வினையானும் தீவினையானும் வருவனவென்க. முடியாமைக்கும் பிறவாமைக்கும் காரணம் "ஆண்டானைக் கொண்டதே" என்க.

செடி - பாவம் ; ஓடுங் கவந்தியுமொழிய வேறு பற்றின்மை முந்திய திருப்பாட்டால் உணர்த்தினார். எனவே தூமொழியார் தோள் முயக்கம் பிரகிருதியால் (இயற்கையால்) ஏற்பட்டதென்றுணர்க.

" தூமொழியார் " என்றார் நெஞ்சில் வஞ்சம் தோன்ற.

**என்புஉள் உருக்கி இருவினையை ஈடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புஉள் ளவற்றை முழுதழிய உள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 3**

இஃது என்பு உருக்கி, வினையழித்து, துன்பங் களைந்து வேறு பாடுகளை நீக்கிப் பழையன கழிய உட்புகுந்தானைக் கண்டேன் என்றருளியது.

(பொ - ரை.) உடம்பின் உட்பகுதியை உருகச் செய்து, இரு வினைகளின் வலி தொலைத்து, துன்பத்தை அகற்றி, உடன்பாடும் எதிர்மறையுமாகப் போந்த நாம ரூப பேதங்களாலான பிரகிருதி யைத் தூய்மை செய்து, இங்ஙனமே முன்னர்த் தொட்டு இயல்பே போல இருந்துவந்த அவற்றை முற்றும் அழிக்குமாறு என்னுட் புகுந்த விளங்கு தில்லைக் கண்ணுள்ள, அன்பினால் ஆண்டவனைப் பற்றித் தலைமகனாகக் கொண்டேனன்றே எ - று.

(வி - ரை.) அவன் தானாகவே சிந்தித்து அன்பினாலே உட்புகுந்து அன்பைத் தோற்றுவித்து, இருவினையையும், இன்ப துன்பங்களையும், அவற்றாலான பிரகிருதியையும் தூய்மை செய்தானாக, யானும் தூய்மை பெற்றுத் தலைமகனைப் பற்றிக்கொண்டேன் என்றவாறு.

உயிர்களின் தொழில்கள் யாவும் இருவினையுள் அடங்கும். அவற்றாலாகிய நுகர்ச்சி இன்ப துன்பம் என்னும் இரண்டனுள் அடங்கும். அவற்றால் மனத்தில் ஏற்பட்ட தழும்பே குணமாகி நாம ரூப பேதங்களை அடக்கிய பிரகிருதியாகும். "பேருங் குணமும் பிணிப்புறு மிப்பிறவி" என மேற் கூறுவர். அதன்மேல் பிரகிருதியின் வழியே வினைகளும் இன்ப துன்ப உணர்வுகளுமுண்டாம். எனவே வினையாலும் இன்ப துன்ப உணர்வுகளாலும் பிரகிருதியும், பிரகிருதியால் மேற்கொண்டு வினையும் செயல்களும் உண்டாகின்றன ஆதலால் ஒவ்வொரு வினையும் இவ்விரண்டு பயனை உண்டாக்குகின்றன. ஒன்று இன்ப துன்ப உணர்வுகளை உண்டாக்கும்; மற்றொன்று, பிரகிருதியாய் அமைந்து மறித்தும் அவ்வினைகளை ஆற்றத் தூண்டுகின்றது என்க. "இருவினையை ஈடழித்துத் துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மை செய்" தலையே 'இருவினையொப்பு' எனச் சமய சாத்திரங்களும், 'நாண் நீங்குதல்' எனச் செந்தமிழ் ஒழுக்க இலக்கணங்களும் கூறுகின்றன.

"துவந்துவம்" என்றது, நன்மை தீமை, இன்ப துன்பம், குறுமை நெடுமை, விருப்பு வெறுப்பு என்றாங்கு வரும் எதிர்மறை இரட்டைகளாக விளங்கி நிற்கும் நாம ரூப பேதங்களாகிய பிரகிருதியின் பகுதிகளை. அவற்றின் தொகுப்பே பிரகிருதி என்க.

"முன்புள்ளவை" அப்பிரகிருதியின் பகுதிகளா யடங்கியவை. "அழிய" என்பதை, உருக்கி, அழித்து, என்பவற்றிற்கு ஏற்ப 'அழிக்க' எனப் பிறவினை எச்சமாக்குக. அன்றேல் 'வற்று'ச் சாரியை வேண்டா வழிச்சாரியையாகக் கொண்டு 'முன்புள்ளவை முழுதழிய' எனக் கொண்டுரைக்க. 'முழுதும்' என முற்றும்மை விரிக்க.

குறியும் நெறியும் குணமுமிலார் குழாங்கள்தமைப்
பிறியு மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்
செறியும் கருத்தில் உருத்தமுதாம் சிவபதத்தை
அறியும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 4

இஃது அன்புக்குரியர் அல்லாதாரை அணுகாதானாகிய பெருமானைத் தலைமகனாகக் கொண்டேன் என்றருளியது

(பொ - ரை.) குறிக்கோளும், அதனை அடையும் பயிற்சி நெறியும், நற்குணமும் இல்லாதவர்களுடைய கூட்டங்களை அணுகாது பிரிகின்ற மனமுடையவர்களைப் பிரிதற்கியலாத புணர்ச்சி இயல்புடையவனும், (குறியும் நெறியும் குணமும்) நிறைந்த உள்ளக்

கருத்தில் சுரக்கின்ற அமுதமாகும் சிவபதத்தை அறிதற்குரிய அறிவுருவனுமாகிய விளங்குந் தில்லை ஆண்டவனைத் தலைமகனைப் பற்றிக் கொண்டேனன்றே எ - று.

(வி - ரை.) குறியும் நெறியும் குணமும் இல்லாதவரை வடநூலார் பிராகிருதரென்பர். அவரைப் பிரியும் மனத்தார்க்குப் பற்றுக்கோடு இறைவனாகலின் "பிறிவரிய பெற்றியன்" என்றார்.

"உருத்த அமுது" எனக் கொள்க. உருத்தல் - சுரத்தல்; சிவபதத்தை அறியும் ஆண்டவன் என்க. அவனறிவே கண்ணாகக் கொண்டு பற்றினேன் என்பார், சிவபதத்தை "அறியும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டு" என்றார்.

"பெற்றியனை, சிவபதத்தை அறியும் ஆண்டானை" என "பிறியும் மனத்தார்" என்னும் ஒரு வகுப்பார்மேல் வைத்து இருவேறு வாய்பாடுகளால் ஓதினார், அவன் பற்றுக்கோடும் நுகர்ச்சியுமாதலின்.

பேரும் குணமும் பிணிப்புறுமிப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டர்எல்லாம்
சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி
ஆரும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 5

இஃது தொண்டர் எல்லாரும் பிறவி தூர அவனைப் பற்றியவாறே நானும் தலைமகனைப் பற்றிக்கொண்டேன் என்றருளியது.

(பொ - ரை) பேருங் குணமும் என்னும் இவற்றாற் கட்டப்பெறும் இப்பிறவியை, அது மீண்டும் வாராது தூர்ந்துபோமாறு, குற்றம் நீக்கிச் சேருதற்குரிய வகையினாலே தொண்டர் யாவரும் (சேர்ந்து) சிவனருள் ஆகிய தேனைப் பருகிக் களிப்படையும், விளங்குதில்லை ஆண்டானை அவ்வாறே சேர்ந்து தலைமகனைப் பற்றிக்கொண்டேனன்றே எ - று

(வி - ரை.) "பேருங் குணமும்" என்னும் இரண்டும் கொள்ளவே பிறவியுண்டாகுமென்க. "துரிசு" என்றது பேரும் குணமும் என்னும் இரண்டையும். "தூரும் பரிசு துரிசறுத்த"லாவது தத்துவ ஆராய்ச்சி செய்து உண்மை காண்டல். "சேரும் வகையாற்" சேர்தலாவது, உண்மை கண்டுழி அன்புலகம் கைவருதலால் அன்பு நெறிப் பயின்று அவனையடைதல். அது களவு கற்பென்னும் இரு பகுதித்தாய் பல ஒழுக்கத் துறைகளையுடையது. 'சேர்ந்து' என்னும் சொல்லெச்சம் வருவிக்க.

தொண்டர் - பண்டு ஒன்ற ஒன்ற உடன் கலந்த அடியார்; அவர் சேர்ந்தவாறே யானும் இன்று சேர்ந்தேன் என்றார் என்க. ஆரும் - அமைதி.

**கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காயாகி**
**வம்பு பழுத்(து)உடலம் மாண்டிங்ஙன் போகாமே**
**நம்பும்என் சிந்தை நணுகும்வண்ணம் நானணுகும்**
**அம்பொன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 6**

*இஃது மூப்புறு முன்னே முதிர்ந்து அவமே அழிந்து போகாது தில்லைப் பெருமானைத் தலைமகனாகக் கொண்டேன் என்றருளியது.*

(பொ - ரை.) மரக்கொம்பில் பூவரும்பாகவும், குவிந்த மலராகவும், காயாகவும் ஆகி, பருவமின்றிப் பழுத்து வீணே தீர்தல் போல உடலும் மூப்புவரு முன்னே முதிர்ந்து அவமே அழிந்து போகாதபடி உடலினாலாகிய பெரும் பயன் இஃதே என்று நம்பிக்கை கொள்ளும் என் சிந்தை அப்பயனை அடையுமாறு யான் முதலில் அடையும் அழகிய பொன்னின் விளக்கமுடைய தில்லையாண்டவனைப் பயன்பெறத் தலைமகனாகப் பற்றிக்கொண்டேனன்றோ எ - று.

(வி - ரை.) ஈண்டு அடிமரம் பிரகிருதியாகவும், மரக்கொம்புகள் குடும்பத்திலுள்ள நன்மக்கள் பலராகவும், அவற்றில் தோன்றும் அரும்பு, குவிமலர், காய் முதலியன முறையே உடம்பின் பல்வேறு வளர்ச்சிகளாகிய கரு, குழவிப் பருவம், இளமைப் பருவம் என்பனவாகவும் உருவகித்துக் கொள்க.

அரும்பில் மாண்டு, மலரில் மாண்டு, காயில் மாண்டு வம்பப் பழுத்து அழியாவாறே யானும் கருவிலும், குழவியிலும், இளமைப் பருவத்தும், அவ்விளமைப் பருவத்து மூப்புற்றுப் பழுத்தும், அவமே அழியாவாறே என உருவகித்துக் கொள்க.

காய் உதிராதாயினும் "வம்பிற் பழுத்தல்" கூடாது என்றார் என்க. இளமை முதிராதாயினும் அதன்கண் முதுமை எய்தல் தகாது என்றார்.

போற்றித் திருவகவல் 11-41 பகுதியையும் நினைவிற் கூருதல் நன்று.

அரும்பிற்கும் குவிமலருக்கும் இடையே விரிமலருங் கொள்க. வம்பிற் பழுத்தலை வெம்பல் எனக் கூறுவர். "மாண்டுபோகாமே நம்புதல்" என்றது, 'உலகமும், உடலும், உலக போகங்களைத் துய்த்தலுமே உண்மையாவது; ஆதலின் அவ்வளவிற்கு அப்பாற்பட யாதொன்றுமில்லை என்பதை உடன்படாது, ஈண்டுக் கூறிய உலகமும் உடலும், உலக போகங்களும் ஓராற்றான் உண்மையே எனினும், முடிந்த உண்மையன்று; அவற்றிற்கு அப்பாற்பட்ட ஆன்ம உலகும், ஆன்மாவும், ஆத்ம போகங்களும் உளவாம், அவற்றையும் ஒரு தலையான் எய்துதலே இவ்வுடலின் சம்பூரணமான பயனாகும்' என, இவ்வுலக அளவோடு நில்லாது, அதனைக் கடந்தவற்றையும் துணிந்து கொள்ளுதலை.

சிந்தை நணுகும் வண்ணம் அடிகள் நணுகியவாற்றை, இத்திரு வாசகம் முற்றும் உணர்த்துமேனும் சிறப்பாகத் திருச்சதகத்துள் நாலாவது பத்து வேண்டியவாறு உணர்த்துதல் ஓர்க. "சிந்தை நணுகும் வண்ணம் நான் நணுகும் ஆண்டான்" என்றுரேனும், 'என்னை நணுகுவிக்கும் ஆண்டான்' என்பதே கருத்தாகக் கொள்க.

**மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் தோள்நெரிய**
**மிதிக்குந் திருவடி என்தலைமேல் வீற்றிருப்பக்**
**கதிக்கும் பசுபாசம் ஒன்றும்இலோம் எனக்களித்து இங்கு**
**அதிர்க்கும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 7**

இஃது, இராவணன் தலையில் வைத்த திருவடி என் தலைமே லாயிற்றுதலின் பசுபாசங்களுக்கு அஞ்சேன் என்றருளியது

(பொ - ரை.) யாவரும் புகழ்தற்குரிய வலிமை பெற்ற வற்கென்ற குணமுடைய இராவணனுடைய தோள்கள் நெரிந்து போகும்படி மிதிக்குந் திருவடி என்னுடைய தலையின்மேலாக வீற்றிருத்தலால், கிளர்ந்தெழும் பசுவிற்குரிய பாசம் ஒன்றும் தொடரப் பெற்றிலேம் என உவகை எய்தி ஆரவாரித்தற்குரிய தில்லையாண்டானைத் தலைமகனைக் கொண்டேனன்றே எ - று.

(வி - ரை.) அரக்கனை மிதிக்குந் திருவடி என்தலைமேல் இனிதாக வீற்றிருப்ப என்க நகர் காவலர் விழிப்புடன் கடமையைச் செய்யும்போது கள்வர் முதலியோர் தலைகாட்டாது அடங்குதல்போல, திருவடி தலைமேல் இருப்பப் பசுபாசம் இல்லாதொழிந்ததென்க. தானே எதிர்த்த இராவணனைச் சீறியாண்ட திருவடி என்க.

**இடக்கும் கருமுருட்டு ஏனப்பின் கானகத்தே**
**நடக்கும் திருவடி என்தலைமேல் நட்டமையால்**
**கடக்கும் திறல்ஐவர் கண்டகர்தம் வல்லாட்டை**
**அடக்கும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே 8**

இஃது என் தலைமேல் வைத்த ஏனப் பின் சென்ற திருவடியால் என் ஐவரையடக்கும் தில்லையானைத் தலைவனைப் பெற்றேன் என்றருளியது

(பொ - ரை ) நிலத்தைத் தோண்டுகின்ற முருட்டுத் தன்மை வாய்ந்த பன்றியின் புறத்தே காட்டகத்துத் திரிந்த திருவடியை என்னுடைய தலையின்மேல் வேரூன்றிக் கிளைக்க நட்டுவைத்த மையால், நன்னெறியைக் கடக்கும் ஆற்றலையுடைய புலன்களாகும் ஐவராகிய கொடியவர்கள்தம்முடைய குறும்புத் தனத்தை அடக்கியாளும் அத்திருவடியுடையானாகிய தில்லையானைத் தலைமகனைப் பெற்றுக்கொண்டேனன்றே எ - று.

(வி - ரை.) முருடு - முரடு என வழங்கப்படும். இட தோண்டுதல். இழிவு தோன்ற இவர் என உயர்திணைமேற் கூறினர். ஏனத்தின் பின்சென்று அதனை அருச்சுனன்மேற் பாயாது அம்பெய்தற் காக நடந்த திருவடி. ஐம்புலன் அம்பலத்தைக் கண்டபோதே அடங்கப் பெறும் என்க. கண்டகர் - விலக்கப்பட்ட கீழ்மக்கள்.

வல்லாட்டு - குறும்புச் செய்கை. "இவர்" என்றமைக்கேற்பப் 'புலன்களார்' என்க. கருமுருடு, முருட்டின் இழிவுதோன்ற நிற்றலுமாம். நரனுக்கு அருளிய திருவடி ஆறிய திருவடி என்க.

**பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்**
**கீழ்ச்செய் தவத்தால் கிழியீடு நேர்பட்டுத்**
**தாட்செய்ய தாமரைச் சைவனுக்குஎன் புன்தலையால்**
**ஆட்செய் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 9**

இஃது, பாழில் உழைப்பேனைக் கீழைத் தவத்தால் வீடு பேற்றையருளி ஆட்செய்வித்த தில்லையானைத் தலைமகனுக்குக் கொண்டேன் என்றருளியது.

(பொ - ரை) விளைவு செய்யமுடியாத பாழான வயலினை உழுது பயன்பெறுதேனாய்க் கிடக்கும் எனக்கு, முன்னர்ச் செய்த தவச்செயலினாலே பொற்கிழி கிடைக்கப்பெற்று, சிவந்த தாமரை மலர்போன்ற திருவடிகளையுடைய சைவனுக்கு என் இழிந்த தலையினாலே அடிமைத் தொண்டு செய்யச் செய்விக்கும் தில்லை யானைத் தலைமகனாகப் பெற்றுக்கொண்டேனன்றே எ - று.

(வி - ரை.) "பாழ்ச்செய் விளாவுதல்" என்பது ஒருவகைக் குறிப்பு; 'விழலுக்கு இறைப்பது' என்றாற்போலக் கொள்க; பயனற்ற செயல் என்றபடி. 'பாழ்ச்செய்' என்றது ஈண்டு ஒரு பயனும் தராத புறப்பொருள் ஆராய்ச்சிகளைக் குறித்து நின்றது.

"கிழியீடு" என்றது ஈண்டு அகப்பொருளாகிய அன்பினைக் குறிக்கும். எதிர்பாராத வண்ணம் கிடைத்ததனால் கிழியீடு என்றார். அப்பேற்றைப்பற்றி உன்னியபோது, அது கிடைத்தவாறு, முன்னைய தவத்தினாலாயதென அனுமானித்தறிந்தார் என்க.

சைவன் - குருமணி; அவனுக்கு ஆட்செய்து ஆண்டானைக் கொணடது. ஆண்டான் ஆட்செய்வித்ததனால் ஏற்பட்டதாதலின், "ஆட்செய் ஆண்டான்" என்னும் வினைத்தொகைநிலைத்தொடரை ஆட் செய்விக்கும் ஏவுதற் கருத்தாவின் வினைவாய்ப்பட்டான் விரித்தாம்.

தவத்தால் அன்பும், அன்பினால் சைவனுக்கு அடிமைத்தொண்டும், அதனால் ஆண்டானைப் பெறுதலும் உளவாயின என்றவாறு.

முன்னர்ச் செய்த தவத்தால் சிவபுரத்தில் கற்பொழுக்கம் பூண்ட பழைய நிகழ்ச்சியைக் குறித்தற்குக் "கீழ்ச்செய் தவத்தால் நேர்பட்டு" என்றாருமாம்.

கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்
செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்(கு)
இம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்
அம்மை குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 10

இஃது இம்மையத்தனையும் ஒழித்து அம்மை முழுவதும் அளித்தவனைத் தலைமகனைப் பெற்றுக்கொண்டேன் என்றருளியது.

(பொ - ரை) திரண்டனவாய கச்சினால் வரியப்பட்ட முலைகளையுடைய கொம்பன்னாள் பாகத்தையுடையானுக்கு எனது நிறையுடைய உள்ளத்தினாலே அன்புப் பணிகள் செய்கின்ற எனக்கு இந்த உலகம் தருகின்ற பயன்கள் இத்தனையும் இவ்விடத்திலேயே என்னைப் பற்றுவாறு ஒழிந்துபோகச் செய்யும் அந்த உலகத்துத் தில்லையானைத் தலைமகனைப் பற்றிக்கொண்டேனன்றே எ - று.

(வி - ரை.) "செம்மை மனத்தால் திருப்பணி" செய்தல் என்னும் அத்துணையே தம் கடமையாவதன்றி அதன் பயனை ஒழித்தலும் தழுவுதலும் கடமையாகாமையின் "திருப்பணிகள் செய்வேனுக்கு" என்றொழிந்தார். அப்பயனைப் பற்றுது ஒழிக்கும் கடமை இறைவன் பாலதென்க.

இம்மை - இந்தவுலகம். இவ்வுலகம் தருதற்குரிய பயன் இவ்வளவுமே யாகும் எனப் பரந்த அறிவினால் அவை யாவற்றையும் முன்னிலையில் வைத்துக் கண்டாலொப்ப உணர்தலின், 'அத்தனையும்' என்னாது, "இத்தனையும்" என்றார்.

"இம்மை தரும் பயன் இத்தனையும்" ஒழிந்த இடம் "அம்மை" என்க. அம்மை - அந்தவுலகம்; பரலோகம் என்க. பற்றற்ற பணி ஒன்றினாலேயே பரவுலகம் கைவரப்பெறும் என்பதே இப்பதிகம் முற்றிலும் வற்புறுத்தப்பட்டது.

கொம்மைவரி முலைக் கொம்பனையாள் கூறனாயிருந்தும், "இம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்" ஆண்டான் என்க. கொம்பனையாளைக் கூற்றினுடையனாயிருந்து, கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிந்தானாயினும், அவ்வப்பயனுள் தோயானாய் அம்மைக்குரியனாய் ஆண்டான் இருந்தவாறே, துடியேர் இடுகிடைத் தாய்மொழியாரும், இன்ப துன்பங்களும், துவந்துவமும் குறியே நெறியே குணமே என்றின்னவற்றை இல்லாத பிராகிருதரும், பேரும் குணமும் உடம்பும் என்றின்னவற்றுள் கிடந்தாலும் வல்லரக்கன் தோள் நெரியுமாறு ஊன்றியதும், பன்றியின் பின்னே நடந்ததுமாகிய தலையின்மேல் வைக்கப்பட்ட திருவடியே பற்றிப் பற்றற்றுத் திருப்பணிகள் செய்தலே இப்பகுதியில் விவரிக்கப்பட்டனவாகும் என்க.

திருச்சிற்றம்பலம்

# அற்புதப் பத்து

"அற்புதப் பத்" தாவது இறைவனுடைய வியப்பினைத் தரும் செயல்களைக் கூறும் பத்துப் பாடல்களையுடைய பகுதி முன்னர் ஆண்டு கைவிட்ட அவனது அதிசயம் கண்டேன் என்ற அடிகள் அவன் தமக்கும் பிறர்க்கும் செய்த அற்புதச் செயல்களுக்குக் காரணமாகிய உட்கோளின் அற்புதம் விளம்பேனே என்று இப் பகுதியாற் கூறியருளுகின்றனர். இது ஆக்கம் பற்றிய வியப்பு, அஃது சிறுமை பற்றிய வியப்பு. அதனானே அதுவுமிதுவும் வேறு வேறென்க. அலங்கார நூலாரும் 'அதிசயம்' 'அற்புதம்' என்பனவற்றை வேறு வேறாக ஓதுவதுங் கருதற்பாற்று.

முன்னைப் பகுதியால் இம்மையொழியத் தில்லையானைத் தலைவனாகக் கொண்டருளிய அடிகள் இப்பகுதியால் அவன் தன்னை வரைந்து கொள்ளுமாறு தனக்கு அருளிய அற்புதச் செயல்களை விளம்ப அறியேன் எனக் கூறுதலால் இது அதனோடு இயைபுடைத்தாயிற்று.

இப்பத்து, பொருள் இயல்பால் இரு பெரும் பிரிவுகளையுடையது. அவை (I) ஆண்ட அற்புதம் கூறல் (II) அகம் புகுந்த பேறு கூறல் என்பன. அவற்றுள் முதலாவது பிரிவு, மூன்று உட்பிரிவுகளையும், இரண்டாவது பிரிவு இரண்டு உட்பிரிவுகளையும் கொண்டன.

முற்செய்த தவவிசேடத்தினாலே கிழியீடு நேர்படப் பெற்று, அதனுட் பொதிந்த செல்வத்தையே பெறு மதியாகக் கொடுத்து ஆண்டானைத் தலைமகனாகக் கொண்டமையினால் அவ்வாறு கொள்ளப்பட்ட ஆண்டான் தவிர்ந்து செல்ல ஒண்ணாமையினாலே, வியக்கும் தன்மையோடு கூடிய அடிகளை ஆட்கொண்டான் எனவும் அது நிலைபேறுடையதாம் வண்ணம் அகத்துள்ளும் புகுந்து கொண்டான் எனவும், இப்பெரும் பிரிவுகளை பொருளடைவு செய்து கொள்க.

இனி, இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு· முன் செய்த நற்றவமாகிய செல்வம் நேர்படப் பெற்றமையானே அதனைக் கொடுத்துத் தில்லையாண்டானைக் கொண்டருளியபடியால், அத் தில்லையாண்டானும் தம்மைக் கொண்டமையானே அடிகட்கு அணைந்து வந்தருளினான் எனவும், அவ்வாறு அணைந்தவனே இடரைக் களையும் துணைவனுமாயினான் எனவும், அவனே கீழ் நெறிக்கண் செல்லவொட்டாது குருவாய்த் திருவடி காட்டியாண்

டான் எனவும், அவ்வடிகளைக் காட்டியதோடு அமையாது, அத்திரு வடியோடு ஞானத்தையும் கொடுத்தாண்டான் எனவும், அறிவு தந்தமையானே உள்ளத்தும் புகுந்தாண்டான் எனவும், இவ்வா றெல்லாம் என்னைப் புரத்தற்கு வேந்தனுயினுன் எனவும், வேந்த னுனமையானே தீ நெறிக்கட் செல்லும் தன்மையை விலக்கற் பொருட்டு வலிந்து இழுத்துத் தண்டித்து, நன்னெறிக்கட் செலுத் தினுன் எனவும் இவை எல்லாம் படி முறையானே செய்ததற்பின் சிதாகாச வெளியைக் காட்டினுன் எனவும் அவ்வெளிக்கண் தோன்றும் இன்பம் நிலைபெறுமாறு அடியாருடன் கூட்டி வைத்தான் எனவும் அமைக்கப்படும்.

இப்பகுதிக்கு நூற் பொருளடைவு பின் வருமாறு .

பொய்யாயினவற்றையும் மெய்யனவாகவே கொண்டு மாலுற்று அலைவேனுக்குப் பொய்யாகிய பற்றுக்கள் என்னைவிட்டு ஒழிய வெளிகாட்டி (1), அவை காரணமாக யான் துன்பக் கடலுள் புகா வண்ணம் தானே வேந்தனுய் வந்து (2), ஒறுக்கவேண்டிய காலத்து ஒறுத்தும், அக்காரம் ஊட்டியும் (3), என்னை விட்டுப் பிரியாது அருந் துணைவனுக நின்றும் (4), எனது வெவ்விய வினைகள் ஒழியுமாறு ஆடுவித்து என் அகத்துள்ளே புகுந்து (5), குணக் கடலாகிக் கோமளத்தொடும் கூடிவந்து (6), அப்பன் (7), எனது ஆசைகளை நீக்கி அடியவர் கூட்டத்துள் என்னையும் ஒருவனுக்கி (8), அரியயன் அறியா விரை மலர்க்கழலடி காட்டி (9), அறிவு தந்து என்னை ஆண்டு கொண்ட (10) அற்புதத்தை இன்னதென்று அறிகின்றி லேன் என அமைத்துக் கொள்க

இவையனைத்தும் இறைவன் செயல்களாகவே அமைந்தன. அடிகளார் தன்மையையும் ஒருவாறு நிரல்படுத்திய அடைவு வருமாறு ·

வாழ்வெனும் ஆழியுள் தையலார் சுழித்தலைப்பட்டுத் தடு மாறுதும் (1), இறைதாள் வணங்காது அம்மங்கையரொடும் தலை தடுமாறித் துயர் புகா வண்ணமும் (2), பொய்யினைப் பல செய்து நான் எனது எனக் கழறியே திரிவேனும் (3), பொய்களே புகன்று போய்க் கருங்குழலார் தம்மொடும் கூடி (4), மாடும் சுற்ற மும் மற்றுள போகமும் ஆகிய குணங்களைக் குலவி (5), அவர் தம்மொடும் பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்தி (6), திரு ஐந்தெழுத்து ஓதாது தடமுலையாரக் கண்களால் ஏறுண்டு கிடப்பேனும் (7), ஊசலாடும் இவ்வுடலுயிருடன் (8), மேலும், ஏழையார்க்கே இச்சையாயின செய்து துவரொடும்

இணங்கிய பின் (9), அவர் செய்யும் கிறியும் கீழ்மையும் நினைத்தே கிடப்பேனும் ஆகிய என்னை ஆண்ட அற்புதம் அறியேன் எனவும் இயைத்துக் கொள்க இயற்கைப் பொருளடைவு ஆதியவற்றின் அட்டவனை வருமாறு :

| | இயற்கைப் பொருள் அடைவு எண் | நூற்பா எண் |
|---|---|---|
| பிரிவு I. ஆண்ட அற்புதம் கூறல் | | |
| (அ) அருளுடன் துணைவனாக ஆண்டமை கூறல் | | |
| அணைந்து வந்தாண்ட அற்புத மறியேன் எனல் | 1 | 6 |
| துணைவனாய் ஆண்ட அற்புதமறியேன் எனல் | 2 | 4 |
| (ஆ) அடிகாட்டி யாண்ட அற்புதம் கூறல் | | |
| ஐந்தெழுத்தறியேனை ஆண்ட அற்புத மறியேனெனல் | 3 | 7 |
| அடிகாட்டி யாண்ட அற்புதமறியேனெனல் | 4 | 9 |
| (இ) அடியொடு பிற அளித்தாண்டமை கூறல் | | |
| அறிவு தந்தாண்ட அற்புதமறியேனெனல் | 5 | 10 |
| அகம் புக்காண்ட அற்புதமறியே னெனல் | 6 | 5 |
| பிரிவு II. அகம் புகுந்த பேறு கூறல் : | | |
| (அ) வலிந்தாண்ட அற்புதம் கூறல் : | | |
| அடித்து அக்காரமுன் தீற்றிய அற்புதம் அடியேன்அறியேன் அரும்பொருளென்றல் | 7 | 3 |
| வேந்தனாய் நின்ற அற்புதம் விளம்பேனெனல் | 8 | 2 |
| (ஆ) அன்பரிற் கூட்டி வெளிகாட்டியமை கூறல் : | | |
| வெளிகாட்டிய அற்புதம் விளம்பேனெனல் | 9 | 1 |
| அடியாரடிக் கூட்டிய அற்புதம் அறியேனெனல் | 10 | 8 |

இஃது திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# அநுபவம் ஆற்ருமை

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மையலாய்இந்த மண்ணிடை
வாழ்வெனும் ஆழியுள் அகப்பட்டுத்
தைய லாரெனும் சுழித்தலைப்
பட்டுநான் தலைதடு மாருமே
பொய்ள லாம்விடத் திருவருள்
தந்துதன் பொன்னடி இணைகாட்டி
மெய்ய ஞய்வெளி காட்டிமுன்
நின்றதோர் அற்புதம் விளம்பேனே.

தையலார் என்னும் சுழியாகிய பொய்ந்நெறிக்கட் செல்லும் என்னைத் தன் திருவருளால் தடுத்து மெய்ந்நெறியின் வைத்து மெய்யான பரவெளியைக் காட்டிய அற்புதத்தைச் சொல லற்கு இயலேனுவேன் என்பதருளிச் செய்யப்படுகின்றது

(பொ - ரை ) மண்ணுலகத்திலே வாழ்க்கை என்னும் கடலுள் மையல் காரணமாக அகப்பட்டு, அம்மயக்க வாழ்விற்குக் காரணராய தையலார் என்கின்ற நீர்ச்சுழியில் பட்டுக் குறிக்கோளினின்றும் நான் தடுமாருமல், பொய்யாகிய பற்றுக்கள் எல்லாம் என்னை விட்டொழியுமாறு திருவருள் புரிந்து தனது பொன் போன்ற இரண்டு திருவடிகளையும் எனக்குக் காட்டித் தானே உள் பொருளாய் நின்று மெய்ம்மைத்தாகிய பரவெளியை இதுவே யெனக் காட்டி எனக்குக் கண் முன்னர் நின்றதொரு வியப்பினை இதுதான் எனக் கூறவறியாமையால் பேசாதிருப்பேன் எ - று.

(வி - ரை.) "மண்ணிடை வாழ்வு" என்பது குறிப்பு; தாழ்வைக் குறிக்கும். கடலில் நீர் சுழித்தலைப்பதுபோல் உலகில் மகளிரும் சுழித்து அலைப்பர். "மெய்யன்" என்றது பிரமத்தை. வெளி - பரவெளி. விசுவ ரூபங் காட்டக் கண்டருளியவாறு. அது வாக்கிறந்ததாகலின் "விளம் பேன்" என்றருளினர். அன்றியும் மனத்தானும் நினைப்பதற்கும் அரியது என்பது கொள்க.

வீட்டியலுக்கு எள்ளளவும் உதவாது முரண்பட்டுநின்ற எனக்குத் திருவருள் தந்து திருவடியும் பரவெளியும் காட்டி மேலேற்றியது "அற்புதம்" என்க.

ஏய்ந்த மாமலர் இட்டுமுட்
டாததோர் இயல்பொடும் வணங்காதே
சாந்தம் ஆர்முலைத் தையல்நல்
லாரொடும் தலைதடு மாருகிப்
போந்து யான்துயர் புகாவணம்
அருள்செய்து பொற்கழலிணை காட்டி
வேந்த ருய்வெளியே என்முன்
நின்றதோர் அற்புதம் விளம்பேனே.

இதனுல், அத்தகையேனை தையலாரிடம் புகாவண்ணம் அங்ஙனம் ஆட்கொண்டு அப்பரவெளியிலே வேந்தனுய் நின்ற அற்புதம் விளம்பேன் என்பது அருளிச் செய்யப்படுகின்றது.

(பொ - ரை.) அருச்சித்தற்கு ஏற்ற பெருமை பொருந்திய பூக்களைத் தூவிக் காலம் முதலியவற்ருல் தடைபடாததோர் நல்லியல் புடன் அவனை வணங்குதலின்றிச் சந்தனக்குழம்பு பூசிய முலைகளை யுடைய வனப்பு வாய்ந்த மகளிரோடு நிலைதடுமாறி என் நிலையை விட்டுப் போய்த் துயர்க்கடலுள் யான் வீழாவண்ணம் அருள் செய்து பொன்னுலாகிய கழல் அணிந்த பாதங்கள் இரண்டினை யும் காட்டி எல்லா ஆட்சியையும் தன்பாற்கொண்ட அரசனுய்ப் பரவெளியிலே என் கண்முன் நின்றவொரு வியப்பினை இதுதான் எனக் கூறவறியாமையால் பேசாதிருப்பேன் எ - று.

(வி - ரை.) வணங்காது தையலாரொடும் துயர் புகுதற்குரியேன் என்க. சாந்தம் - சந்தனக் குழம்பு. முட்டாது - கேடுவரினும் அதனுல் தடைபடாது. ஏய்ந்த - பூசனைக்குப் பொருந்திய

நடித்து மண்ணிடைப் பொய்யினைப்
பலசெய்து நான்என(து) எனும்மாயக்
கடித்த வாயிலே நின்று
முன்வினைமிக க்கழறியே திரிவேனைப்
பிடித்து முன்நின்றுஅப் பெருமறை
தேடிய அரும்பொருள் அடியேனை
அடித்(து)அ டித்துவக் காரம்முன்
தீற்றிய அற்புதம் அறியேனே. 3

இதனுல் மெய்யன்போல நடித்த தாம் விரும்பிலராகவும் இறைவன் விடாது வலிந்து அருள் செய்தமை கூறியருளப்படு

(பொ - ரை.) எல்லா நூல்களாலும் அஃதெனச் சுட்டுதற்

கரிய பெருமை வாய்ந்த வேதமும் தேடிக் காணுத அரும் பொரு ளாகிய இறைவன், மண்ணுலகிலே மெய்யன்போல நடித்துக் காட்டிப் பல பொய்யினையும் செய்து, நான் எனது என்னும் மயக்கங்களாகிய வடுப்பட்ட வாயினிடமாக நின்று, பழவினையைப் பற்றி மிகுதியாகக் கூறித் திரிகின்ற என்னை, யான் செல்லும் நெறிக்கு எதிர்நின்று பிடித்துத் (தன் அடியவனுக்கி) அவ்வடிய னேனை, (சிறுகுழந்தைகளை அடித்தடித்து, அங்ஙனம் அடிக்குந் தோறும் அடிக்குத் தோறும் அக்குழந்தை வாயைத் திறக்கும் போது, அதன் வாய்க்குள் சர்க்கரைச் சோற்றைத் தீற்றி உண்ணச் செய்யும் தாய் போல எனக்குத் தானே தாயாகி) வருத்தி வருத்தித் திருவருளாகிய அக்காரத்தை முன்னர்த் தீற்றிய வியப்பினை இது தான் எனக் கூறவறியாமையால் பேசாதிருப்பேன் எ - று.

(வி - ரை.) நான் என்னும் வாய்; எனதென்னும் வாய், மாய வாய்; "கடித்த வாய்" என்க. அவ்வாயால் முன்வினை கழறித் திரியும் என்னை என்க. "வினை" என்றது, "யான் எனது என்னும் மூலமலங் களினுலே" எவ்விடத்தும் அலைக்கப்பட்டுத் திரிந்ததை என்க.

"திரிவேனை அடியேனை அடித்தடித்து.........தீற்றிய" என்றருளி னர், திரிவேனை அடியவனுக்கித் தான் ஆண்டானுகி அவ்வாண்டான் அடிமைத் தொடர்பிறகேற்ப என்னைத் தண்டித்து மாசுநீக்கி இன்புறச் செய்தான் என்பது குறித்து.

துன்புற்ற காலத்தில் தன்னை நினையவைத்தமை குறித்து "அடித் தடித்து வக்காரம் முன்தீற்றிய" என்றருளினர்.

பொருந்தும் இப்பிறப்(பு) இறப்(பு)இவை
நினையாது பொய்களே புகன்றுபோய்க்
கருங்கு ழலினுர் கண்களால்
ஏறுண்டு கலங்கியே கிடப்பேனைத்
திருந்து சேவடிச் சிலம்பவை
சிலம்பிடத் திருவொடும் அகலாதே
அருந்து ணைவனுய் ஆண்டுகொண்
டருளிய அற்புதம் அறியேனே. 4

இதனுல் அத்தகையேனை, அவ்வழியினின்றும் நீங்கியுய்தற்குத் துணைவனுகி நின்று ஆட்கொண்ட அதிசயம் அறியேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை) தாமத குணத்தினுற் பொருந்துகின்ற இப்பிறப் பும் இறப்புமாகிய இவற்றின் இழிந்த இயல்பினை நினையாமல்,

பொய்களையே விரும்பிக் கூறிச் சென்று கரியகுழலையுடையராகிய மகளிரது கண் பார்வையால் தாக்குண்டு மனக்கலக்கமுற்றுக் கிடக்கும் என்னைத் திருந்திய சேவடிக்கண் அணிந்த சிலம்புகள் ஒலி செய்ய (உடன் வருகின்ற) திருவாகிய உமாதேவியுடன் அகலுதலின்றி, அரிய துணைவனாய் ஆண்டருளிய வியப்பினை இதுதான் எனக் கூற அறியாமையால் பேசாதிருக்கின்றேன் எ - று.

(வி - ரை.) புகலுதல் - விரும்பிக் கூறுதல். இவை - இவற்றாலாம் கேடு; இழிந்தவை என்பதுபட நின்றதுமாம் கலவிசெய்து கருங்குழலில் துஞ்சலாமென்று கண்களால் காட்ட அதனால் "ஏறுண்டு" என்க. திருந்து சேவடி - எல்லா இலக்கணங்களும் அமைந்த அடி; அம்மையின் திருவடி. திரு - உமையம்மை. இனி, 'சேவடி சிலம்பொலி செய்ய அருளாகிய செல்வத்தோடும் ஆண்டவன்' என்றலுமொன்று. அன்பனாய் மணந்தாண்டு கொண்டான் என்க.

**மாடும் சுற்றமும் மற்றுள**
**போகமும் மங்கையர் தம்மோடும்**
**கூடி அங்குள குணங்களால்**
**ஏறுண்டு குலாவியே திரிவேனை**
**வீடுதந்(து) என்றன் வெந்தொழில்**
**வீட்டிட மென்மலர்க் கழல்காட்டி**
**ஆடு வித்(து)என(து) அகம்புகுந்(து)**
**ஆண்டதோர் அற்புதம் அறியேனே. 5**

இதனால் அத்தகையேனை, கழல்காட்டி, அகம் புகுந்து, வீட அற்புதம் அறியேன் என்பது அருளிச் செய்யப்படு

(பொ - ரை) மங்கையர்களோடும், அம்மங்கையர் போகத்திற்குக் காரணமாகிய மாடும் சுற்றமும் மற்று ஒழிந்த பொருள்களால் ஆகிய போகமும் ஆயவற்றோடும்கூடி அவற்றின் குணங்களால் தாக்கப்பட்டு அவற்றின் வயமாகித் திரியும் என்னை, என்னுடைய வெவ்விய வினைகளெல்லாம் விடுபட்டு அழியுமாறு தன்னுடைய மலர்போன்ற திருவடிகளைக் காட்டி, அதனால் ஆனந்தக் கூத்தாடு வித்து, என்னுடைய உள்ளத்துள்ளே புகுந்து, வீடு பேற்றினைத் தந்து ஆண்டதாகிய வியப்பினை இதுதான் எனக் கூற அறியாமையால் பேசாதிருக்கின்றேன் எ - று.

(வி - ரை.) 'என்றன் வெந்தொழில் வீட்டிடக் கழல்காட்டி ஆடுவித்து அகம் புகுந்து வீடு தந்து ஆண்டதோர் அற்புதம்' என்க.

குலாவுதல் - லயப்படுதல்; மகிழ்தலுமாம். "மங்கையர் தம்மோடும்"

என்றதனுல் ஏனையவை அங்கமாயின. கழற்காட்சியானே வெந்தொழில் வீட்டப்படும் என்க. அவ்வாருய வழி ஏனையவை படிப்படியே ஆகும் என்ப.

வணங்கும் இப்பிறப்(பு) இறப்பிவை
நினையாது மங்கையர் தம்மோடும்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத்(து)
அழுந்திநான் பித்தனுய்த் திரிவேனைக்
குணங்க ளுங்குறி களும்இலாக்
குணக்கடல் கோமளத் தொடுங்கூடி
அணைந்து வந்(து)எனை ஆண்டுகொண்டு
அருளிய அற்புதம் அறியேனே. 6

இதனுல் அத்தகையேனை அவன் உமைபாகனுய் வந்து ஆண்ட அற்புதம் அறியேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) நம்மைச் சூழ்ந்துகொள்ளும் இந்தப் பிறப்பும் இறப்புமாகிய இவற்றை நினைவிற்கொள்ளாது, பெண்களோடும் புணர்ந்து அவரது பெருமை பொருந்திய எயிற்றின்கண் ஊறும் அமுதவெள்ளத்தை, வாயிதழைச் சுவைத்தலினுலே நுகர்ந்து, அதில் அழுந்திக் காமப் பித்துடையேனுய்த் திரியும் இயல்புடைய என்னைத் தனக்கென அமைந்த குணங்களும், அவற்றிற்கேற்ப அமைந்த வடிவங்களும் இல்லாத நிர்க்குணக் கடலாகிய இறைவன் இளமைச் செவ்வியுடைய அம்மையோடும்கூடி அண்மையில் வந்து ஆண்டருளிய வியப்பினை இதுதான் எனக் கூற அறியாமையால் பேசாதிருப்பேனுக எ - று.

(வி - ரை.) வணங்கும் - வளைந்து கொள்ளும். பிணைந்து - நெருங்கிச் சேர்ந்து. கோமளம் - பசிய இளமைச் செவ்வியுடைய அன்னை. நிர்க்குணப் பொருளாய் இருந்தவன், என்பொருட்டுக் குணமும் குறியும் கொண்டு படிப்படியே அவற்றின் நீங்கி, என்னையும் நீக்கியாண்டான் என்க. அலையாது தம்மைத் தடுத்தாட்கொண்டான் என்றருளியபடி.

இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான்
இயல்பொ(டு)அஞ்(சு) எழுத்(து)ஓதித்
தப்பி லாதுபொற் கழல்களுக்(கு)
இடாதுநான் தடமுலை யார்தங்கள்
மைப்(பு)உ லாம்கண்ணுல் ஏறுண்டு
கிடப்பேனை மலர்அடி இணைகாட்டி
அப்பன் என்னைவந்(து) ஆண்டுகொண்டு
அருளிய அற்புதம் அறியேனே. 7

இதனால் அத்தகையேனைத் திருவடி காட்டி அப்பனாக வந்து ஆண்ட அதிசயம் அறியேன் என்பது கூறியருளப்படுகின்றது

(பொ - ரை ) நான், இம்மக்கட் பிறப்பிலே பூசனைக்கு இயைந்த மலர்களைக் கொய்து, அர்ச்சனையில் போற்றி செய்தற்குரிய இயல்போடு கூடிய "சிவாயநம" என்னும் ஐந்தெழுத்தினை ஓதி, அம்முறைபாடுகளில் தவறிழையாது, பொன்னாலாகிய கழலணிந்த திருவடிக்கு இடாது, பெரிய முலையையுடைய மகளிரது கருமணி உலாவுகின்ற கண்களினால் தாக்குண்டு செயலற்றுக் கிடப்பேனாயினேன். அத்தகையேனை அப்பனாகிய இறைவன் தானே வந்து, தன் திருவடி மலர்களைக் காட்டி ஆட்கொண்டருளிய வியப்பினை இதுதான் எனக் கூற அறியாமையால் பேசாதிருப்பேன் எ - று.

(வி - ரை.) அர்ச்சிக்கும்போது "சிவாயநம" என்று ஓதலே மரபு என்க. மலரிட்டு ஐந்து எழுத்தோதினார்க்கேயுரிய திருவடியை எனக்குக் காட்டி. மைப்பு, ஆகுபெயர். உபதேசம் பெற்ற யான், பெற்றவாறு அவனை வணங்கி ஒழுகுதல் விதியாய் இருக்க, அவ்வாறு செய்யாது மாறுபட்டேன் என்றருளியபடி.

உபதேசம் போற்றாமை, நன்றி மறந்தமை ஆகிய இரு பழியும் சுமந்தேன் என்றவாறு.

ஊசல் ஆட்டும்இவ் உடல்உயிர்
ஆயின இருவினை அறுத்(து)என்னை
ஓசை யால்உணர் வார்க்(கு)உணர்(வு)
அரியவன் உணர்வுதந்(து) ஒளியாக்கிப்
பாச மானவை பற்றறுத்(து)
உயர்ந்ததன் பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்(து)அடி யார்அடிக்
கூட்டிய அற்புதம் அறியேனே. 8

இதனால், தன் அடி காட்டிப் பற்றுவித்த இறைவன், அப்பற்று வழுவாமைப் பொருட்டு அடியார் திருவடிகளிற் கூட்டிய அதிசயம் அறியேன் என்றருளுகின்றார்.

(பொ - ரை.) காணாதவொன்றைக் காணுமாறு புலப்படுத்த வல்ல சொல்லோசையினால் பொருள் வேறுபாடுகளை உணர்வார்க்கும் மற்று அதனைக் கடந்துள்ள தன்னை உணர்ந்துகொள்ள அரியவனான இறைவன், தனது உயர்ந்த பெரிய மேம்பட்ட கருணையினாலே, உடலையும் உயிரையும், பிறப்பும் இறப்பும் என்னும் ஈரிடங்களிலும் சென்று மீளுமாறு ஊசலாட்டிவரும் இருவினையையும் வேறுபடுத்து

அவற்றின் தொடர்புகளையும் நீக்கி, சொல்லோசையால் உணரும் உணர்வல்லாததோர் உணர்வினைத் தந்து, ஞான வொளியுடைய னுக்கி, ஏனைய கட்டுக்களையும் அறுத்து, எனது வேணவாவைத் தீர்த்து, அடியாரது திருவடிகளில் என்னைக் கூடுமாறு செய்த வியப்பினை இதுதான் எனக் கூற அறியாமையால் பேசாதிருப்பேன் எ - று.

(வி - ரை.) உடல், பொதுப்பட நின்றது. ஊசலாட்டுதல் - போக வரச் செய்தல். தடுத்தாட்கொண்டு, வாவென்று அழைத்து, திருவடி காட்டி வீடு தந்து ஆண்ட கருணையாகலின் "உயர்ந்த பரம் பெருங்கருணை" என்றடுக்கியருளினர்.

பொச்சை ஆனஇப் பிறவியிற்
கிடந்துநான் புழுத்(து)அலை நாய்போல
இச்சை ஆயின ஏழையர்க்
கேசெய்(து)அங்(கு) இணங்கியே திரிவேனை
இச்ச கத்(து)அரி அயனும்எட்
டாததன் விரைமலர்க் கழல்காட்டி
அச்சன் என்னையும் ஆண்டுகொண்
டருளிய அற்புதம் அறியேனே. 9

இதனால் அத்தகையேனை, அத்தனாகிய இறைவன், அன்பிலார் காணற்கரிய திருவடியைக் காட்டியாண்ட அதிசயம் அறியேன் என்றருளுகின்றார்.

(பொ - ரை.) குற்றமே தானாகிய இப்பிறவியில் செயலற்றுக் கிடந்து, காமம் காரணமாகக் கடிபட்ட புண்ணிற் புழுப்புழுத்து அலைகின்ற நாயைப்போல நானும் பெண்களிடத்தே சேர மனம் பொருந்தி, அங்கு அவர் விரும்பியவற்றைச் செய்து திரிவேன். அங்ஙனம் திரிகின்ற என்னை, அத்தனாகிய சிவன், திருமாலும் திசைமுகனும் தேடிச் சென்றும் அவர்க்கு எட்டாத தெய்வமணங் கமழுகின்ற திருவடி மலர்களை இவ்வுலகத்திலே எனக்குக் காட்டி ஆண்டுகொண்டருளிய வியப்பினை இதுதான் எனக் கூற அறியாமையால் பேசாதிருப்பேன் எ - று.

(வி - ரை.) பொச்சை - காடுமாம். கடத்தற்கரியதும், கடந்தே தீரவேண்டியதும், கொடிய விலங்குடையதும், அச்சுறுத்துவதும், ஊறு செய்வதும், பிறவும் பற்றி அஃது அங்ஙனம் உவமிக்கப்படுதலும் கூடும்.

அப்பெண்களிடத்துத் திரிவேனை இங்ஙனம் சேருமாறு செய்தான் உயர்ந்த பரம் பெருங்கருணையனாதலின், உயர்ந்த பரம் பெரும் திருவடியையும் தந்து அறிவும் கொளுத்தினான் என்க.

செறியும் இப்பிறப்(பு) இறப்(பு)இவை
நினையாது செறிகுழ லார்செய்யும்
கிறியும் கீழ்மையும் கெண்டையங்
கண்களும் உன்னியே கிடப்பேனை
இறைவன் எம்பிரான் எல்லையில்
லாததன் இணைமலர்க் கழல்காட்டி
அறிவு தந்(து)எனை ஆண்டுகொண்
டருளிய அற்புதம் அறியேனே. 10

இதனால் அத்தகையேனை, இறைவன் தன் கழல் காட்டி அதனால் அன்பு அறிவு வரச் செய்தாண்ட அற்புதம் அறியேன் என்றருளுகின்றார்.

(பொ - ரை) என்னை நெருங்கியிருக்கின்ற இப்பிறப்பும் இறப்பும் ஆகியவற்றின் இயல்புகளை நினையாது, அவற்றிலே செறியும்படி செய்கின்ற அடர்ந்த கூந்தலையுடைய மகளிர் செய்யும் மாயமும் இழிவுகளும் கயல்போன்ற கண்களின் பிறழ்வும் ஆதியவற்றையே நினைத்து, அவற்றின் வயப்பட்டுக்கிடக்கின்றேனை, எங்கும் தங்குதலையுடைய எம்பெருமான், முடிவற்ற தனது இரண்டு திருவடி மலர்களைக் காட்டி, அவ்வாற்றானே மெய்யன்பு அறிவு தந்து, என்னை ஆண்டருளிய வியப்பினை இதுதான் எனக் கூற அறியாமையால் பேசாதிருப்பேன் எ - று.

(வி - ரை.) "கெண்டையங் கண்களா"ல் மாயமும் கீழ்மையும் செய்வர் என்க. "கிறியும் கீழ்மையும் கெண்டையங் கண்களும் உன்னு" வார்க்கு அறிவு மழுங்கும். அவ்வாறாகவும் அன்பு அறிவு தந்தமை அற்புதமாயிற்றென்க.

திருச்சிற்றம்பலம்

# சென்னிப் பத்து

"சென்னிப்பத்"தாவது திருவடியின் இயல்பும் அதனைப் பணியுமாறும், அவ்வாறு பணியின் அத்திருவடி நம் சென்னிக் கணியாக மற்றதன்மேல் விளங்குமாறும் கூறியருளிய பத்துத் திருப்பாடல்களைக்கொண்ட பகுதி. இஃது, பொருளியல்பில்,

I. அத்தன் அடிப்பண்பு கூறல்.
II. தொண்டர்க் கருளிய திறம் கூறல்.
III. தமக்கு அருளிய பேறு கூறல்.
IV. அன்பரை ஆற்றுப்படுத்தல்.

என்ற நான்கு பிரிவுகளையுடையது.

இறைவன் காட்டியருளிய வெளி இறைவன் திருவடிக்கண்ணதாய் எம் தலைமேலதாய் உள்ளதெனவும் அவ்வெளியமைந்த திருவடிதான் தொண்டர்க்கு வழுவாதது எனவும், தொண்டர்க்கேயன்றி நமக்கும் அவன் சேவடி சென்னிமேல் வைத்தான், அதனைக் கண்டு கொண்டேன் எனவும், திருவடி இயல்புகளையும் அத்திருவடிகள் சென்னியில் வைக்கப்பட்ட உண்மைகளையும் விளக்கியருளி, தொண்டர்களே, நீவிரும் ஏத்துமின், ஏத்தினல் அத்திருவடி நும் சென்னிக்கும் அணியாகப் பொலியும் என ஆற்றுப்படுத்தியருளினர் என இப்பெரும் பிரிவுகளை இயற்கைப் பொருளடைவு செய்க.

இனி, இப்பகுதித் திருப்பாடல்களை, அடியார் கூட்டத்தொடு பயின்று பற்றப்பட்ட திருவடி செம்பொன் போன்றதும், செம்மையானதும், வட்டமானதும், ஒளியாற் பொங்குவதும், தூயதும், அத்தனுடையதும் ஆய திருவடியேயாம், அத்திருவடி சென்னி மன்னும் எனவும், அதுதான் தொண்டர்க்கு வழுவிலாததும் எனக்கும் திறம் காட்டி என் சென்னியிலும் வைக்கப்பட்டதெனவும் அதனலே தொண்டர்களே, நீவிரும் ஏத்துமின், ஏத்தினல் அத் திருவடி நும் சென்னிக்கு அணியாகப் பொருந்தும் எனவும் இயற்கைப் பொருளடைவு செய்க.

நூற்பொருளடைவு வருமாறு என் சென்னி மன்னிய திரு அடி தான் தூய்மையுடையதும் (1), வட்டத்ததாயும் (2), ஒளியினற் பொங்கும் தன்மையதும் (3), எம் பணிகொள்வான் வைத்ததும் (4), அமுதூறக் காட்டும் இயல்பினையுடையதும் (5), மூவுலகுக்கும் அப்பால் வைப்பதும் (6), வீடருளும் இறைவன் உண்மைப் பெருக்கத்தின் வகைகளாய் இருக்கும் இயல்புடையதும் (7), தொழு

வாராகிய தொண்டர்கட்கு வழுவாததும் (8), தொண்டர்க்கு இன்பமாகத் திளைப்பதுவும் (9), நம் சித்தத்து மன்னியதும் (10), ஆகும் என

இயற்கைப் பொருளடைவில் செய்யுட்கள் பொருட்கேற்ப அமையுமாற்றைப் பின்வரும் அட்டவணையான் அறிக —

| பெரும் பிரிவு | ஞ. பொ. தி. | பொருள் | நூ. பொ. தி. |
|---|---|---|---|
| I. | | அத்தன் அடிப்பண்பு கூறல் | |
| | 1 | செம்பொற் சேவடி சென்னிமன் னுமெனல் | 9 |
| | 2 | சேயமா மலரடி சென்னிமன் னுமெனல் | 5 |
| | 3 | வட்டமா மலரடி சென்னிமன் னுமெனல் | 2 |
| | 4 | பொங்குமா மலரடி சென்னிமன் னுமெனல் | 3 |
| | 5 | தூயமா மலரடி சென்னிமன் னுமெனல் | 1 |
| | 6 | அத்தன் மலரடி சென்னிமன் னுமெனல் | 6 |
| II. | | தொண்டர்க் கருளிய திறம் கூறல் | |
| | 7 | வழுவாத் திருவடி சென்னிமன் னுமெனல் | 8 |
| III. | | தமக்கருளிய பேறு கூறல் | |
| | 8 | திறங்காட் டியதாள் சென்னிமன் னுமெனல் | 7 |
| | 9 | சென்னிவை மலரடி சென்னிமன் னுமெனல் | 4 |
| IV. | | அன்பரை ஆற்றுப் படுத்தல் | |
| | 10 | என்னுளம் இயைதாள் ஏத்துமின் என்றல் | 10 |

இஃது திருப்பெருந்துறையில் அருளிச்செய்யப்பட்டது என்ப.

## சிவ விளைவு

### எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

தேவ தேவன் மெய்ச் சேவகன்
  தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலும் அறியொ ணாமுத
  லாய ஆனந்த மூர்த்தியான்

யாவ ராயினும் அன்ப ரன்றி
அறியொ ணாமலர்ச் சோதியான்
தூய மாமலர்ச் சேவடிக்கண்
நம் சென்னிமன்னிச் சுடருமே. 1

இஃது, மூவராலும் அறியொணாதவனாகிய இறைவனுடைய தூய மா மலரடியிடத்தே நம் சென்னி நிலைபெற்று ஒளிவிடும் என்றருளியது

(பொ - ரை ) தேவர் அனைவர்க்கும் தேவனும், மெய்ப் பொருளை ஆட்சி செய்யும் வீரமுடையவனும், தெற்கின்கண்ணுள்ள திருப்பெருந்துறைக்கு மன்னவனும், சிற்றின்பமாகிய பதப் பேறுடைய முப்பெருங்கடவுளராலும் அறிதற்கியலாத முதல்வனை பேரின்ப வடிவை உடையவனும், எவ்வாற்றலையுமுடைய எவரா யிருப்பினும் அன்பர்களைத் தவிர அறியவொண்ணாத ஒளி வடிவினனுமாகிய இறைவனது பிறிதொன்றும் கலவாத பெருமை பொருந்திய மலர்போன்ற செவ்விதாகிய திருவடியின் கண்ணே நமது சென்னி நிலைபெற்றுத் திகழாநிற்கும் எ - று

(வி - ரை.) தேவதேவனாய், மெய்ப்பொருள் காட்டும் வீரனாய், திருப் பெருந்துறைக்கண் குருமணியாய் வந்து, ஆனந்த மூர்த்தியாய், அன்புக் குரியவனாய் உண்மைப் பொருளாயினன் எனக.

உருத்திரரும் மெய்யறிவில்லார் என்பதைத் தக்கன் வேள்வியின் வை

துவாதசாந்தத்து இறைவன் நடிக்கும் திருவடிகளில் தமது சென்னி இணைந்து நிலைபெற்றமை கூறியருளியவாறு.

திருவடியைத் தொழுவித்துப் பற்றசெய்ய வேண்டி, அத் தொழுகை யினால் வரும் பேறாகிய திருவடியின் இயல்புகளை, மனம் கொள்ளுமாறு முதற்கண் ஓதியருளுகின்றார் என்க.

அட்ட மூர்த்தி அழகன் இன்னமு(து)
ஆய ஆனந்த வெள்ளத்தான்
சிட்டன் மெய்ச்சிவ லோக நாயகன்
தென்பெ ருந்துறைச் சேவகன்
மட்டு வார்குழல் மங்கை யாளைஓர்
பாகம் வைத்த அழகன்தன்
வட்ட மாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னி மலருமே 2

, இறைவியைப் பாகம் வைத்த இறைவனுடைய

(வட்டத்து) வட்டித்ததாகிய மலர்போன்ற சேவடிக்கண்ணே நமது முடி நிலைபெற்று விளங்கும் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) எட்டுத் திருவடிவங்களையுடையவனும், அழக னும், நுகர்வார்க்கு இனிய சுவையால் அமுதம் போன்ற ஆனந்த வெள்ளமானவனும், இல்லற துறவற ஒழுக்கங்களாகிய இடபத்தை ஊர்ந்து செல்வோனும், சிவலோகத்திற்குத் தலைவனும், தெற்கின் கண்ணுள்ள திருப்பெருந்துறையிலுறையும் வீரத் தொண்டனும், தேனொழுகுகின்ற கூந்தலையுடைய உமையாளை ஒப்பற்ற இடப் பாகத்தே வைத்த அருளழகனுமாகிய இறைவன் தனது வட்டத்த தாகிய பெரிய மலர்போன்ற சேவடிக்கண்ணே நமது சென்னி நிலைபெற்றுத் திகழா நிற்கும்.

(வி - ரை.) சிட்டம் - ஒழுக்கம். எல்லாமாய், அவற்றின் அழகாய், அவை திகழ அமுதாய், அவ்வமுது உண்டாம் ஆனந்த வெள்ளமாய், அதனை நுகர்தற்குரிய ஒழுக்கமாய் அவ்வொழுக்கப் பயிற்சியால் பேரானந்த வெள்ளத்தைச் சிவலோகத்தே கொடுக்க வல்லவன், பெருந்துறையிலே எம் பகை கடிந்த வீரனாய் மங்கையொடு கூடி அருள்செய்து, திருவடியை எமக்கு உரியனவாகத் தந்தான். அத்திருவடிக்கண் நம்முடி நிலைபெற்று விளங்கும் என்க. வட்ட மாமலர்த் தாளாகலின் முதலும் முடிவும் இன் றாயிற்று. ஆதலாற் "சென்னிமன்னும்" என்க.

அட்டமூர்த்தமாவன, பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், இயமானன் என்பனவாம்.

இல்லற துறவற ஒழுக்கங்களைத் தனக்கு உருவமாக உடையவனுமாம்.

தோற்றத்திற்கு இன்புடைத்தாயினும், செய்கையிலே எட்டிப்பழம் சுவைத்தார்க்குப் போலத் துன்பமும் தருமாதல்பற்றி "இன்னமுதாய ஆனந்த வெள்ளம்" என்றார் என்க.

நங்கை மீர்எனை நோக்குமின் நங்கள்
நாதன் நம்பணி கொண்டவன்
தெங்கு சோலைகள் சூழ்பெ ருந்துறை
மேய சேவகன் நாயகன்
மங்கை மார்கையில் வளையும் கொண்டெம்
உயிரும் கொண்டெம் பணிகொள்வான்
பொங்கும் மாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னிப் பொலியுமே. 3

இது மதுரைக்கண் காதல் காட்டி மங்கைமார் கையில் வளை கொண்டவாறே அவன் திருவடிக்கே காதல்தொண்டு செய்யுமாறு ஆங்கு என்னுயிரையும் அடிமையாகக் கொண்டானது சேவடிக் கண் சென்னி மன்னிப் பொலியும் என்றருளியது.

(பொ - ரை.) மங்கைமீர்! யான் உரைப்பதைக் கேட்டற்காக என்னை நோக்குவீராக. நங்கட்குத் தலைவனும், நம் பணியை ஏற்றுக்கொண்டவனும், தென்னஞ்சோலை சூழ்ந்த திருப்பெருந் துறையில் திருக்கோயில்கொண்ட வீரனாகிய நாயகனும், தாருக வனத்து முனிவர் மங்கையர்களின் கையிலுள்ள வளையல்களையும் கவர்ந்துகொண்டு, எம்முடைய உயிரையும் காதல் அடிமையாகக் கொண்டு இங்ஙனமே இனிமேலும் எமது பணிகளை ஏற்றருள் வோனுமாகிய தலைவனுடைய ஒளி விளங்குகின்ற பெரிய மலர் போன்ற சேவடிக்கண்ணே எமது சென்னி நிலைபெற்றுப் பொலியும். (நோக்குவீராயின் நுமது சென்னியும் அவ்வண்ணம் பொலியும்) எ - று.

(வி - ரை.) "நம் பணி கொண்டவன்" என்றது பொதுப்பட நின்றது. "எம் பணி கொண்டவன்" என்றது சிறப்புத் தோன்ற நின்றது. "வளைகொண்டது" தாருகவனத்து மகளிர்பால். வரலாறு திருவிளையாடல், வளையல் விற்ற படலத்துக் காணப்படும். "உயிர் கொள்ளு"தலாவது, தன்னைப் பிரிந்து தளையோடு கூடித்திரிந்த உயிரை மீட்டுக் காதல் அடிமையாக்குதல். "பணிகொள்ளுதலாவது" அங்ஙனம் மீண்டவுயிர் தலைவன்மேல் வைத்த காதலால், தன்னலமற்று, அவன் நலமே பேணிச் செய்யும் களவும் கற்புமாகிய தொண்டுகளை ஏற்றுக்கொண்டு அருள் செய்தல். "நம், எம்" என்றன ஆயத்தாரை.

இச்சென்னிப்பத்திலே நங்கைமாரை நோக்கிக் கூறிய அதனானும், "நம் எம்" என அவரை உளப்படுத்திக் கூறிய தன்மைப் பன்மையானும், அடிகள் தலைமகளாகவே இருந்தார் என்பது பெற்றும். இன்னும் இதனானே முன்னும் பின்னும் வருவனவற்றிற்கெல்லாம் ஏற்றவாறு அறிந்து அகப் பொருள் துறை வகுத்துக்கொள்க.

வளையலைப் பற்றிய வரலாற்றினொடு தம்மைப் பணிகொண்ட வரலாற்றையும் ஒருசேரக் கூறியமையான் பணிகொள்ள உயிரகொண்டமை யும் ஆங்கு நிகழ்ந்ததெனக் கொள்ளுதல் ஒருதலை. இதனானே அடிகட்கு மதுரைக்கண் முதலாவதாகக் காட்சி தந்தமையும் உடன் பெறப்படும்.

**பத்தர் சூழப் பராபரன் பாரில்**
**வந்துபார்ப் பான்எனச்**
**சித்தர் சூழச் சிவபி ரான்தில்**
**லைமூ தூர்ந டஞ்செய்வான்**
**எத்த னாகிவந்(து) இல்புகுந்(து) எமைஆ**
**ளுங்கொண்(டு) எம்பணி கொள்வான்**
**வைத்த மாமலர்ச் சேவ டிக்கண்நம்**
**சென்னி மன்னி மலருமே.** 4

எம்மை எத்தனுகியாண்டானுடைய எம்மைப் பணி கொள்ளுமாறு வைக்கப்பட்ட திருவடிக்கண் சென்னி மன்னி மலரும் என்றருளியது.

(பொ - ரை.) சித்த கணத்தவர் சூழ (நின்று காண) தில்லை மூதூரின்கண்ணே திருநடனம் செய்வோனும் மேலோனுமாகிய சிவபெருமான், அன்பர் புடைசூழ அந்தண உருவோடு சூழ்ச்சிக் காரனுகிவந்து, இல்லினுட் புகுந்து, எம்மை அடிமைகொண்டு, எம் பணியையும் கொள்ளும்படியாக அவன் சென்னிக்கண் வைத்த சேவடிக் கண்ணே நமது சென்னி நிலைபெற்று விளங்கும் எ - று.

(வி - ரை.) தேவதேவனும், மூவராலும் அறியப்படாதவனும், பராபரனும், இன்ன பலவாறுகவும், இருந்த அடைதற்கரியவனுடைய திருவடியில் "சென்னி மன்னி"யவாறு யாங்ஙனமெனின், அவன் தன் நடனத்திற்கேற்ப, தானென்று கருதிக்கொண்டு, அந்தணத் திருமேனி கொண்டு, எம்மை எத்தி, இல்லத்துட் புகுந்து ஆட்கொண்டு குற்றேவல் செய்விக்குமாறு எம் தலைமேல் தன் திருவடியை வைத்தான். அங்ஙனம் அவன் வைத்த திருவடியின்கண் நம்சென்னி நிலைபெற்று விளங்கும்; அஃதன்றி நம்மாற்றலாலாயது அன்றென்க.

"இல்"லென்றது ஈண்டு உடலை. மேல்வரும் திருப்பாடலில் 'காயத்துள்' என வருதலையும் நோக்குக.

**மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி**
**மதித்தி டாவகை நல்கினுன்**
**வேய தோள்உமை பங்கன் எங்கள்**
**திருப்பெ ருந்துறை மேவினுன்**
**காயத் துள்அமு(து) ஊற ஊறநீ**
**கண்டுகொள் என்று காட்டிய**
**சேய மாமலர்ச் சேவ டிக்கண்நம்**
**சென்னி மன்னித் திகழுமே.** 5

இது, சென்னியில் வைத்த திருவடியையே நெஞ்சத்துள்ளும் காணென்று காட்டினுன்; அங்ஙனம் கண்ட அத்திருவடியின் கண் நமது சென்னி மன்னி விளங்கும் என்றருளியது

(பொ - ரை.) மூங்கிலின் இயல்பினைக் கொண்ட தோள்களை யுடைய உமையைப் பாகத்தேகொண்டவனும், எங்கள் பெருந்துறை யில் விரும்பிக் கோயில் கொண்டவனும், பொய்யாகிய உலக வாழ்க்கையை மெய்யென்று கருதி மதிக்காதவண்ணம் தன் திரு வடியை எனக்குக் கொடுத்தருளியவனுமாகிய இறைவன், (தான் நல்கிய அத்திருவடியையே) "உன் உடம்பினுள்ளே இன்ப அமுதம்

மேன்மேலும் ஊற்றெடுக்கும்படியாக நீ மற்றதனைக் கண்டுகொள் வாயாக" என்று காட்டிய எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட பெரிய மலர்போன்ற திருவடிக்கண்ணே நமது சென்னி நிலைபெற்று விளங்கும் எ - று.

(வி - ரை.) இங்ஙனம் செய்தவன் திருப்பெருந்துறையான் என்க. அருளிடம் கொண்டானாகலின் காயத்துள் அமுதூறும்படி காட்டினன். வேய, குறிப்பு வினைஎச்சம்.

சித்த மேபுகுந்(து) எம்மை ஆட்கொண்டு
 தீவி னைகெடுத்(து) உய்யலாம்
பத்தி தந்துதன் பொற்க ழற்க
 ணேபன் மலர்கொய்து சேர்த்தலும்
முத்தி தந்(து)இந்த மூவுல குக்கும்
 அப்பு றத்(து)எமை வைத்திடும்
அத்தன் மாமலர்ச் சேவ டிக்கண்நம்
 சென்னி மன்னி மலருமே. 6

இது, தன்னருளாலே உயிர்க்குவேண்டிய ஆக்கமெல்லாம் பொருந்தச் செய்து, தன்னருள் நெறியிலே முயலவைத்து முத்தி தரும் அத்தன் திருவடிக்கண் நம் சென்னி மன்னி மலரும் என்றருளியது.

(பொ - ரை.) எம் சித்தத்தினுள்ளே புகுந்து, அடிமை கொண்டு, தீவினைகளைக் கெடுத்து, உய்தற்குரிய அன்பு தந்து, (அங்ஙனம் சித்தத்தே அவன் பிரியாவாறு இருத்தி, அடிமைப் பண்போடும் அன்போடும்) பல மலர்களைக் கொய்து தனது பொன் போன்று அரிய கழல் அணிந்த திருவடிக்கண்ணே அர்ச்சனை செய்து சேர்த்தலும் வீடுபேறு கொடுத்து, மூன்று உலகங்களுக்கும் அப்பாலே எம்மை இருக்கச்செய்யும் அதனுடைய பெரிய மலர் போன்ற திருவடிக்கண்ணே நமது சென்னி நிலைபெற்று விளங்கும் எ - று.

(வி - ரை.) இறைவன் உட்புகுதலானே அடிமைப் பண்பு உண்டாய்த் தொண்டு செய்யத் தீவினை உறைதற்கு இடமின்றிக் கெடும்; தீவினை கெட அன்பு உதயமாகும்; அன்பு உதயமானதும் கழலுக்கு மலர் சாத்தல் கை கூடும்; அவ்வாற்றானே வீடுபேறு உண்டாம் என்றருளியவாறு. இதனாலும், வீடு பேறளிக்கும் அவன் கழலின் பெருமை அருளிச் செய்யப் பட்டது.

"முத்தி தந்து மூவுலகுக்கும் அப்புறத்தெமை வைத்திடு" மென்ற

ருளினரேனும், 'மூவுலகுக்கும் அப்புறத்தே உள்ள முத்தி தந்து வைத்திடும்' எனக் கொள்க.

பிறவி என்னும்இக் கடலை நீந்தத்தன்
பேர ருள்தந்(து) அருளினன்
அறவை என்(று)அடி யார்கள் தங்கள்
அருட்கு ழாம்புக விட்டுநல்
உறவு செய்(து)எனை உய்யக் கொண்ட
பிரான்தன் உண்மைப் பெருக்கமாம்
திறமை காட்டிய சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே 7

இஃது, இறைவன் தனது உண்மையினல் பெருகப்பெற்ற தத்துவ பேதங்களாய் அமைந்த திருவடிக்கண் நமது சென்னி நிலை பெற்று விளங்கும் என்றருளியது.

(பொ - ரை.) இப்பிறவி என்று சொல்லப்படும் இந்தக் கடலை நீந்தி முத்திக் கரையடையுமாறு தன் பெரிய அருளாகிய தெப்பத்தினைத் தந்தருளினனும், இவன் தனித்தவன் (ஆதலால் இவனைப் பேணுதல் நுங்கடன்) என்று கூறி அடியார்களுடைய அருள் நிறைந்த கூட்டத்தினுள்ளே புகும்படிவிட்டு, அவ்வடியவர் களோடு நன்னட்புப் பூணச் செய்து யான் உய்யுமாறு என்னை ஆண்ட பிரானுடைய உண்மைப் பெருக்கத்தாலாகும் வகைகளைக் காட்டிய சேவடிக்கண்ணே நமது சென்னி நிலைபெற்று விளங்கும் எ - று.

(வி - ரை.) பிறவிக் கடலினின்றும் முத்திக்கரை ஏற்றுவித்தான். எங்ஙனமெனில், தத்துவப் பெருக்கங்களாகிய திருவடியாகத்தான் விரிந்து, அடியார்களாகிய ஆயத்தாரோடும் என்னைத் தலைமகளாகக் கூட்டி உறவு செய்து, அத்திருவடியைச் சென்னியில் வைத்துக் கடைப்பிடிக்கச் செய்தமையால் என்க.

எல்லாம் அவன் திருவடியாய் இருத்தலை உண்மையைப் பெருக்கிப் பார்ப்பின் உணரலாம். அல்லாதவிடத்து அவரவர் கொண்டவாறேயாம். உண்மைப் பெருக்கம் - தத்துவப் பெருக்கம். அறவை - தனித்தவன்.

புழுவி னுற்பொதிந் திடுகுரம் பையில்
பொய்த னையொழி வித்திடும்
எழில்கொள் சோதிஎம் ஈசன் எம்பிரான்
என்னுடை அப்பன் என்றென்று

தொழுத கையினர் ஆகித் தூய்மலர்க்
கண்கள் நீர்மல்கும் தொண்டர்க்கு
வழுவி லாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னி மலருமே. 8

*இது, மெய்யன்பர்க்குத் தவறாது சித்திக்கும் திருவடிக்கண் நம் சென்னி மன்னி மலரும் என்றருளியது*

(பொ - ரை.) *புழுக்களாற் பொதியப்பட்டுள்ள உடம்பிலே வாழ்ந்துவரும் பொய் வாழ்க்கையை நீக்கிவிடும் எழுச்சியைக் கொண்ட ஒளி வடிவான எம்மீசன், எமக்குப் பிரான், என்னைப் பொருளாக உடைய அப்பன் என்று என்று கருதிச் சொல்லிக் கும்பிட்ட கையையுடையவராகித் தூய மலர்போன்ற கண்களினின்றும் நீர் பெருகும் தொண்டர்கட்குத் தவறாத மலர் போன்ற சேவடிக் கண்ணே நமது சென்னி நிலைபெற்று விளங்கும் எ - று.*

(வி - ரை.) *பொய்யாகிய இருளை அகற்றும் மெய்யாகிய சோதி. இறைவன் திருப்புகழோடு அவ்வப்புகழ்களைக் கொண்ட திருப்பெயர்களையும் ஓதித் "தொழுதல்" என்க. "தூய்மலர்க்கண்" என்று அருளப்பட்டது, இறைவனைக் கண்ட கண்ணாகலின். திருவடி போற்றும் இச்செயல் பயன் தருமோவென்று ஐயுறாதவண்ணம் "வழுவிலாச் சேவடி" என்றருளினர்.*

வம்ப னாய்த்திரி வேனை வாவென்று
வல்வி னைப்பகை மாய்த்திடும்
உம்ப ரான்உல(கு) ஊட றுத்(து)அப்
புறத்த னாய்நின்ற எம்பிரான்
அன்பர் ஆனவர்க்(கு) அருளி மெய்யடி
யார்கட்(கு) இன்பம் தழைத்திடும்
செம்பொன் மாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே. 9

*இது, மெய்யடியார்கட்கு அவர்களின் வேறற இன்பமாகவே தழைத்து நிற்கும் சேவடிக்கண் நம் சென்னி மன்னித்திகழும் என்றருளியது.*

(பொ - ரை.) *நிலையற்றவனாய்த் திரியும் என்னை வாவென்று கூவி அழைத்து, என் வலிய வினைப்பகையை அழித்திடும் மேலானவனும், உலகங்கள் யாவற்றையும் ஊடறுத்துச்சென்று அப்புறத்தனாகி நின்ற எம்பிரானுமாகிய இறைவனுடைய அன்பரானவர்கட்கு அருள் செய்து, சிறப்பன்புடைய உண்மையான*

அடியார்களுக்கு இன்பமாகவே தழைக்கின்ற சேவடிக்கண்ணே நமது சென்னி நிலைபெற்று விளங்கும் எ - று.

(வி - ரை.) வம்பு - நிலையின்மை. உம்பர் - மேலுலகம். உம்பரானும், எம்பிரானுமாகிய இறைவனுடைய அன்பர்க்கருளி மற்றதன்மேல் அன்பினால் மேம்பட்ட மெய்யடியார்க்கு இன்பம் தழைக்கும் திருவடியென்க.

வம்பனாய்த் திரிந்து வல்வினைப் பகையால்; அதனை மாய்த்திடும் உம்பரான்; வினைமாய்ந்ததும் எம்பிரானாயினன். அன்பர்கட்கு அவ்வன்பர்களும் தானும் வேறு வேறாய் நிற்ப வைத்தருளிச் செய்வோன். அவ்வன்பின் முதிர்ந்த மெய்யடியார்கட்கு அவரும் தானும் இன்பமும் என்னும் வேறுபாடற இன்பமொன்றாகவே தழைப்போன் என்க.

இதுகாறும் திருவடியின் பெருமைகளையும், திருவடிவுடையான் பெருமைகளையும், அன்பர் பெற்ற பேறுகளையும் எடுத்தோதியருளிய அடிகள், இனி 'அத்திருவடிக்கண் நும் சென்னி மன்னித் திகழுமாறு பணிமின்' என இறைவன்பால் ஈடுபடுதற்குரியாரை ஆற்றுப்படுத்தியருளுகின்றார்.

முத்த னைமுதற் சோதியை முக்கண
அப்ப னைமுதல் வித்தினைச்
சித்த னைச்சிவ லோக னைத்திரு
நாமம் பாடித் திரிதரும்
பத்தர் காள்இங்கே வம்மின் நீர்உங்கள்
பாசம் தீரப் பணிமினோ
சித்த மார்தரும் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே. 10

இது, பத்தர்களைக் கூவித் திருவடி பணியுமாறு ஏவி ஆற்றுப்படுத்தியருளியது.

(பொ - ரை.) இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனும், ஒளிகட்கெல்லாம் ஒளிதரும் ஆதி ஒளியானவனும், முக்கண்ணுடைய அப்பனும், எல்லாவற்றுக்கும் மூலமாகித் தனக்கொரு மூலமில்லாதவனும், ஞானவடிவனும், சிவலோகத் தலைவனும் ஆகிய இறைவனை அங்ஙனமே அவன் திருநாமங்களைப் பாடித் திரிதலைச் செய்யும் அன்பர்களே! இங்கே வருதிர், அங்ஙனம் வந்த நீர் நுமது பாசந் தீருமாறு திருவடிபணிமின், அங்ஙனம் பணியின், நம் சித்தத்தே நிலைத்திருக்கும் சேவடிக்கண்ணே நம் சென்னி நிலைபெற்று விளங்கும் எ - று.

(வி - ரை.) வாளா திருநாமம் கூறித் திரிவதாற் பயனின்று; திருவடிக்குள் மறைந்திருக்கும் இறைவனைத் திருவடித் துணைகொண் டல்லது அறிதற்கியலா தென்றருளியபடி. ஈண்டுத் திருவடியுணர்வின்றி, இறைவன் விண்ணில் யாண்டோ இருப்பதாக நினைந்தோ நினைவின்றியோ திருநாம பாராயணஞ் செய்வாரைக் கூவி, இதனால் பாசந் தீராது; திருவடியை யுணர்ந்து, அதனை உளத்தே கொண்டு, அதன்பால் நம் சென்னி சார்த்தி வணங்கினாலன்றோ "பாசந் தீரப் பெறும்" என்றருளிய வாறு. முன்னர் "உண்மைப் பெருக்கமாம் திறங் காட்டிய திருவடி" யெனறருளினர், வெளிப்பட்ட திருவடி கொண்டன்றி வெளிப்படா இறைவனை அறிதல் சாலாதென்பதுபட.

"முதல் வித்தினை" என்றது ஏனைய வித்துக்களில் நின்று முளை தோன்ற அவை அழியுமாறு போலாது இறைவன் தன்னில் பல உயிர்கள் தோன்றினும் தானும் அழியாதிருத்தலை; மூலகாரணமாகிய வித்துமாம்.

திருச்சிற்றம்பலம்

# திருவார்த்தை

"திருவார்த்தை" என்பது இத்தகையோரே எம்பிரானார் ஆவர் என அவர் இயல்புகளைச் சிறப்பித்துக் கூறிய பகுதி வார்த்தையாடல் - ஒருவர்க்கொருவர் உரையாடிக்கொள்ளுதல் அஃது இறைவனைப் பற்றியதாகலின் "திரு" எனும் அடைமொழி புணர்க்கப்பட்டது.

சென்னிக்கண் திருவடியை வைத்த பேருவகை மிக்கு யோகெய்திய அடிகளாகிய தலைமகளின் நிலையைக் கண்டு, எஞ்சிய அன்பின் ஐந்திணைத் துறைகளையும் அவள் துய்த்து நிரம்புதற்பொருட்டு அவள் யோக நிலையைப் பெயர்த்துக் காதல் நெறியைப் பற்றச் செய்யும் பொருட்டாக, "இவ்வித்தகையர் எம்பிரானார் ஆவர்" என்று ஆயத்தார் தம்முள் கூறிக்கொண்டவற்றையே தொகுத்து இப்பகுதி தருதலின் இஃது மேலைப் பகுதியோடு தொடர்புடைத்தாயிற்று.

இப்பகுதி பொருளியல்படைவில் மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டது. அவை : I. காதலனாகிய தன்மை கூறல், II. குருவனாகிய தன்மை கூறல், III தாய்மைப் பரிசு கூறல் என்பனவாம்.

இப்பெரும் பிரிவுகளை, இறைவன் உள்ளத்து மன்னித் திருவடியையும் சென்னிமேல் இயைவித்து அவ்வாற்றானே இன்பம் அருளுவதில் காதலனாகவும், அறிவுறுத்துவதில் குருவனாகவும் பாதுகாப்பதில் தாயாகவும் விளங்குகின்றான் என இயற்கைப் பொருளடைவு செய்க :

இப்பொருளடைவில் திருப்பாடல்கள் இயையுமாற்றைப் பின் வரும் அட்டவணையால் உணர்க

| | பொ. | நூ. பொ. |
|---|---|---|
| பிரிவு I. காதலன் ஆகிய தன்மைகூறல் • | | |
| (1) உரிமைக்காதற் சிறப்புக்கூறல் | | |
| வலைவீசுவார் எம்பிரானார் எனல் | | 3 |
| (11) சார்புக்காதல் தன்மைகூறல் . | | |
| மதுரைநல்லார் மயக்கறிவார் | 2 | 10 |
| ஒவியமங்கையர்க்கு அருளியதறிவர் | 3 | 8 |
| வண்டோதரிக்கு அருளியதறிவார் | 4 | 5 |
| இடவைநல்லாட்டு அருளியதறிவார் | 5 | 2 |

| | இ. பொ. | நூ. பொ |
|---|---|---|
| பிரிவு II. குருவருகிய தன்மைகூறல் : | | |
| (i) அன்பர்க்கு அருளிய திறம்கூறல் | | |
| ஏடரையாண்ட இயல்அறிவார் | 6 | 4 |
| பேதம்கெடுத்ததறிவார் | 7 | 7 |
| ஆதிப்பிரமம் வெளிப்படுத்த | 8 | 1 |
| (ii) தமக்கருளிய திறம்கூறல் : | | |
| கேதம்கெடுத்தென்னை ஆண்டவர் | 9 | 9 |
| பிரிவு III. தாய்மைப்பரிசுகூறல் : | | |
| பால்தருகிடப்புஅறிவார் | 10 | 6 |

அன்புப்பணியில் ஈடுபட்டோர் இருவகையர். அவர், பாங்கரை வரைந்துகொள்ளும் பாங்கியர் ஒரு வகையினராகவும், இறைவனைத் தலைவனாக வரைந்துகொள்ளும் பேரன்பினளாகிய தலைமகளும் (அடிகள்) இறைவனும் பிறிதொருவகையினராகவும் அமைவர் என்க.

பாங்கு பட்டார்க்கு இறைவனும், இறைவியும் ஆண்டவர் ஆவார் என்க.

மற்றிதனை,

" எங் கொங்கை நின்னன்பர், அல்லார்தோள் சேறற்க,
எஙகை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க " (திரு எம். 19.)

என்னும் திருப்பாட்டானும் உணர்க.

பொருளடைவிற்குக் காரணம் :

1. பொருளடைவில் எட்டாவதாகிய ஆதிப்பிரமம் வெளிப் படுத்த என்பது, இறைவன் திருவடி தீட்சைசெய்து பின் ஆதிப் பிரமத்தை உபதேசித்தருளிய தன்மையைக் கூறியருளும் இயை பால் முந்திய பகுதியின் இறுதித் திருப்பாடலொடு இயைபுடைத் தாய் இப்பகுதிக்கு முதலாவதாயிற்று.

2 பொருளடைவில் ஐந்தாவதாகிய சீலம் மிகக் கருணையளிக் கும் என்பது, ஆதிப்பிரமம் வெளிப்படுத்தி அதனையடையும் ஒழுக லாறுகிய சீலத்தினை யருளியமையின் ஈண்டு இரண்டாவதாக அமைத்தருளப்பட்டது.

3 பொருளடைவில் முதலாவதாகிவ திருப்பாட்டு, தம்மால் அறிவுறுத்தப்பட்ட ஒழுகலாறு நிலைபேறுடையதாம் வண்ணம் தாம் பெண்பால் உகந்து மணிவலை வீசினன் என்னும் இயைபால் ஈண்டு மூன்றாவதாகக் கொள்ளப்பட்டது.

4. பொருளடைவில் ஆறுவதாகிய திருப்பாட்டு ஆகமத்தை மீட்டு உமையை மணந்தபிரான், அவ்வாற்றனே வேடுருவாகியும் பரிமா ஏறியும் ஏடர்களை ஆண்டருளினுன் என்றருளிய இயைபால் ஈண்டு நான்காவதாகக் கொள்ளப்பட்டது

5. பொருளடைவில் நான்காவதாகிய திருப்பாட்டு, வேடுரு வாயும் பரிமா ஏறியும் வந்தாண்ட இறைவன் காதலனுகியும் ஆண்டனன் என்றருளிய இயைபால் ஐந்தாவதாக அமைத்தருளப் பட்டது

6. பொருளடைவில் பத்தாவதாகிய திருப்பாட்டு, இறைவன் காடு நாடுகளிலுள்ள அடியார்களையேயன்றி பன்றியைக்கூட அருள்சுரந்து அளித்தனன் என்றருளிய இயைபால் ஆறுவதாக அருளப்பட்டது.

7. பொருளடைவிலே ஏழாவதாகிய திருப்பாட்டு, பலவழி யானும் அருள்செய்த இறைவனே குருவனுகி அன்பின் ஐந்திணை ஒழுகலாற்றினை உபதேசித்துப் பேதமகற்றினுன் என்றருளிய இயைபால் ஏழாவதாக அமைத்தருளப்பட்டது.

8 பொருளடைவிலே மூன்றுவதாகிய திருப்பாட்டு, ஒழுக லாற்றினை உபதேசித்தருளியவன் அவ்வாறே ஒழுகியும் அருளிய இயைபால் ஈண்டு எட்டாவதாக அமைத்தருளப்பட்டது.

9. பொருளடைவில் ஒன்பதாவதாகிய திருப்பாட்டு, அன்பர் களை யாண்டவாறே தமது துன்பத்தினையும் கெடுத்தாண்டான் என் றருளிய இயைபால் ஒன்பதாவதாக அமைத்தருளப்பட்டது.

10. பொருளடைவில் பத்தாவதாகிய திருப்பாட்டு, துன்ப மகற்றும் இறைவன், மதுரையில் உள்ளார் துன்பம் நீங்கி இன்ப மடைய அம்மதுரையைச் சேர்ந்தான் என்றருளிய இயைபால் ஈண்டுப் பத்தாவதாக அமைத்தருளப்பட்டது.

இஃது திருப்பெருந்துறையில் அருளிச்செய்யப்பட்டது என்ப.

# அறிவித்து அன்புறுதல்

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மா(து)இவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோ(து)இல் பரங்கரு ணைஅடியார்
குலாவு நீதிகுண மாகநல்கும்
போ(து)அலர் சோலைப் பெருந்துறைஎம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்து
ஆதிப் பிரமம் வெளிப்படுத்த
அருள்அறி வார்எம் பிரானுவாரே 1

இது ஆதிப்பிரமம் வெளிப்படுத்தியருளிய அவ்வருட்செயலை அறிபவர் யாவர்? அவரே எமக்குத் தலைவர் ஆவர் எனச் சென்னிக் கண் திருவடி பெற்று யோகெய்திய தலைமகளை எஞ்சிய அன்பின் ஐந்திணைத் துறைகளையும் துய்த்தற்பொருட்டுப் பெயர்க்கவேண்டித் தோழியர் தம்முள் கூறியது.

(பொ - ரை) உமையம்மை இருக்கின்ற இடப்பாகத்தை உடையவனும், சாம வேதம் பயின்று பாடும் திருவார்த்தை உடையவனும், பெருமையைப் பொருந்திய மலரிலே மேவியிருந்த சோதி வடிவானவனும் குற்றமற்ற மேலான திருவருளை அடியார்க்கு நிலைபேறு பொருந்திய நியதிப் பண்பாகக் கொண்டு நல்காநிற்கும், பேரரும்புகள் அலர்ந்த சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையின் கண்ணே கோயில்கொண்டெழுந்தருளிய எமக்குரிய புண்ணியனு மாகிய இறைவன் மண்ணிடை இறங்கிவந்து மூலப்பொருள் தானே யாதலை வெளிப்படுத்தியருளிய அருட்செயலை அறிபவர் யாரோ, அவரே எம்பிரானுர் ஆவர் எ - று.

(வி - ரை.) அவனே அன்றிப் பிறரால் அறிவுறுத்த ஒண்ணுது என்க. நீதி - நியதி. நீதிகுணம், வடமொழிப் புணர்ச்சி. அடியாரா யினுர்க்குக் கருணை நல்குதலே இறைவன் நியதிப்பண்பு; எனவே அடியார் செயல் எல்லாம் தன் செயல்களாகவேகொண்டு இடர் களைவான் என்க. அவன் அத்தகைய புண்ணியன்; புண்ணியனுதலால் ஆதிப் பிரமத்தை வெளிப்படுத்தினுன். பார்ப்பானுகி வந்தனன் என்பது தோன்ற "மறை பயின்ற வாசகன்" என்றருளினர். "மாதிவர்பாகன், மறைபயின்ற பார்ப் பானுகி அறிவுறுத்தியருளி ஆதிப்பிரமம் வெளிப்படுத்தினுன்" என்றபடி. இஃது திருப்பெருந்துறைக்கண் காட்சி தந்த விசுவரூபத்தை. "நீதி குண

மாக" என்பதற்கு குறையைக் குணமாக நல்கும் என்று உரைப்பாரும் உளர். அது 'தீதுகுணம்' என்றிருப்பின் அமையும்.

மால்அயன் வானவர் கோனும்வந்து
வணங்க அவர்க்(கு)அருள் செய்தஈசன்
ஞாலம் அதனிடை வந்திழிந்து
நன்னெறி காட்டி நலந்திகழும்
கோல மணிஅணி மாடம்நீடு
குலாவும் இடவை மடநல்லாட்குச்
சீலம் மிகக்கரு ணைஅளிக்கும்
திறம்அறி வார்எம் பிரானாவாரே. 2

இது இடவைப்பதி நல்லாட்குச் சீலம் மிகுமாறு கருணை செய்தமையை அறிவார் எமக்குப் பிரானார் ஆவர் எனத் தோழியர் தம்முட் கூறியது

(பொ - ரை.) தங்கள் தங்களின் பதங்களின் ஆட்சி நெடிது இனிது நிலைபெறத் திருமாலும் அயனும் இந்திரனும் கயிலைக்கண் வந்து வணங்க அங்ஙனம் வணங்கிய அவர்கட்கு அருள்புரிந்த ஈசன் அக்கயிலையில் வீற்றிருத்தலை ஒழிந்து மக்கள் வாழும் பூமியில் குருவனாகி இறங்கிவந்து நன்னெறியை உரையானும் ஒழுக்கத்தானும் அறிவுறுத்தி அங்ஙனம் ஒழுகிவரும்போது உள்ளே வாழுவோருடைய குணஞ்செயல்களின் நலன்கள் புறத்தே காணுமாறு விளங்குகின்ற பதுமை முதலியனவாகத் திகழும் அழகிய மணிகளால் இழைக்கப்பட்ட வரிசையை உடைமையால் நீண்டு விளங்குகின்ற இடவை என்னும் பதியில் இருக்கும் இளமை பொருந்திய நல்லாளாகும் அன்புடையாளுக்கு அன்பின் ஐந்திணை ஒழுக்கமாகிய கருணையை மிக அளித்தருளும் திறத்தினை அறிவார் யாரோ அவரே எம்தலைவர் ஆவார் எ - று.

(வி - ரை.) மாடத்திலுள்ள சித்திரம் முதலியவை அகத்திலுள்ளவற்றையே காட்டுதலின் அங்ஙனம் அருளிச்செய்தார். இதனை,

"மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோள் நல்லார்க்கு அணியும்போல்—நாடிமுன்
ஐதுரையா நின்ற அணிந்துரையை எந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது."

என்னும் வெண்பாவான் அறிக. சித்திரம் அகத்துள்ளவற்றையும் கோபுரம் வழியையும் அணி தன்மையையும் விளக்குதல்போலப் பாயிரமும் நூற்பொருளையும் நூலுட்புகும் வழியையும், நூலின்தன்மையையும் விளக்கும் என அறிக. மால் முதலியோர் தாமேவந்து வணங்கும் பெருமை

யையுடையனுயினும் அன்பர்க்கு எளியனுயினுன் என்பது விளக்கியருளப் பட்டது. நீடு, அழியாமையுமாம். 'இடையூர்' என்பதோர் தலமும், அதற்கு "இடவை" என்பது மருவும்போலும் 'மிடவை' என்றுங் கூறுப. இடைமருதூர் என்பாரும் உளர். மருதூர் என்பதே அதன் சிறப்புப் பெயராகலின் இடவை என்றல் பொருந்தாது. வரலாறு வந்துழிக் காண்க.

அணிமுடி ஆதி அமரர்கோமான்
ஆனந்தக் கூத்தன் அறுசமயம்
பணிவகை செய்து படவ(து)ஏறிப்
பாரொடு விண்ணும் பரவிஏத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறைஎம்
பேரருளாளன்பெண் பால்உகந்து
மணிவலை கொண்டுவான் மீன்விசிறும்
வகைஅறி வார்எம் பிராணுவாரே. 3

இதனுல் உமையம்மைக்கு அருளியது அறிவார் யார், அவரே எம்பிரானுர் ஆவார் என தோழியர் கூறியது

(பொ - ரை) பகுப்பு பகுப்பாக அணி செய்யப்பட்ட முடியை உடைய முதல்வனும், வானவர் தலைவனும், இன்பக் கூத்தனும், திருப்பெருந்துறைக்கண்ணே கோயில் கொண்டெழுந்தருளிய பெரிய அருளாளனும் ஆகிய இறைவன், மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் வணங்கி ஏத்த அறுவகைச் சமயமும் (அன்பு நெறிகொண்டு) பணியுமாறு செய்து உமைப்பிராட்டி தன்னைப் பிரிந்த பிரிவாலாகும் துன்பம் கெடுமாறு அருள் செய்து அவளை மணந்து இடப்பாகங் கொடுக்க மனம்கொண்டு சிற்ருேடத்தில் ஏறி, ஓரத்திற் கட்டிய முடிப்புக்களாகிய உருண்டைகளுடைய விளிம்பு பொருந்திய வலையைக் கையில் கொண்டு நந்தியாகிய பெரிய கெளிற்றுமீனை வீசிப் பிடிக்கும் தன்மையறிவார் எவரோ, அவரே எம்பிரானுர் ஆவர் எ - று.

(வி - ரை) அணி - பகுப்பு. விண்ணும் மண்ணும் அன்பு நெறி பற்றி ஏத்த என்க அவ்வனைவர்க்கும் உள்ள பிணி கெடா என்றுமாம். பிணி - கட்டுமாம். பெருந்துறைக்கண் வந்து கயிலைக்கரை யேற்றுதல்; இவற்றுக்கு அருளே காரணம். மீன் வீசிய வரலாற்றைக் கீர்த்தித் திருவகவலுட் காண்க.

வேடுரு ஆகி மகேந்திரத்து
மிகுகுறை வானவர் வந்துதன்னைத்
தேட இருந்த சிவபெருமான்
சிந்தனை செய்(து)அடி யோங்கள்உய்ய

ஆடல் அமர்ந்த பரிமா ஏறி
ஐயன் பெருந்துறை ஆதிஅந்நாள்
ஏடர் களை எங்கும் ஆண்டுகொண்ட
இயல்(பு)அறி வார்எம் பிரானுவாரே. 4

இது எங்குமுள்ள தொண்டர்களை ஆட்கொண்ட இயல்பறிவார் யாரோ அவரே எம்பிரானுர் ஆவர் எனத் தோழியர் தம்முட் கூறியது.

(பொ - ரை.) எனது தலைவனும், திருப்பெருந்துறை முதல்வனும், ஆகமத்தை இழந்து மிகுந்த குறையையுடைய வானவர்கள் மகேந்திர மலையில் தேட அவர்கட்குப் புலப்படாது இருந்த சிவபெருமானும், ஆகிய இறைவன், அந்நாளிலே காட்டிலே வேடுவ உருவங்கொண்டும் நாட்டிலே வலிமை பெருந்திய குதிரையின்மேல் ஏறியும் எவ்விடத்தும் சென்று தொண்டர்களை யாண்டுகொண்ட தன்மையை அறிவார்கள் யாவரோ, அவரே எமக்குத் தலைவர் ஆவார் எ - று.

(வி - ரை.) கடலகத்து வலைவாணனுயினவன், காட்டகத்து வேடனுய், நாட்டகத்துப் பரிபாகனுய்ப் போந்தவாறு காண்க. ஆகவே அந் நிலப்பண்புக்கு ஏற்றவாறு வந்து மக்களை ஆண்டனன் என்க. உமையையும் முருகனையும், ஆகமத்தையும் காணுத குறை ''மிகுகுறை'' என்க. இதனுல் தேவர் உலகத்துக்கு மதிப்பின்மை பெற்றும்.

வந்(து)இமை யோர்கள் வணங்கிஏத்த
மாக்கரு ணைக்கட லாய்அடியார்
பந்தனை விண்(டு)அற நல்கும்எங்கள்
பரமன் பெருந்துறை ஆதிஅந்நாள்
உந்து திரைக்கட லைக்கடந்(து)அன்று
ஓங்கு மதில்இலங் கைஅதனில்
பந்தணை மெல்விர லாட்(கு)அருளும்
பரி(சு)அறி வார்எம் பிரானுவாரே. 5

இது வண்டோதரிக்கு அருள் செய்த தன்மையை அறிபவரே எம்பிரானுர் ஆவர் எனத் தோழியர் கூறியது.

(பொ - ரை.) பெருந்துறைக்கண் இமையோர்கள் வந்து வணங்கித் தன்னை ஏத்தா நிற்க, அடியவர்கட்குப் பாசக்கட்டு நீங்குமாறு அருளை நல்கும் எங்கள் மேலோனும், திருப்பெருந் துறையில் வீற்றிருக்கும் முதல்வனும் ஆகிய இறைவன் அந் நாளில், வீசுகின்ற திரைகளையுடைய கடலைக் காலாலே கடந்து

சென்று, மதில் ஓங்கா நிற்கும் இலங்கை நகரதனுட்புக்கு, பந்தணைக்கும் மென்மையாகிய விரலையுடைய வண்டோதரிக்கு அருள் செய்த தன்மையை எவர் அறிவாரோ அவரே எம்பிரானுர் ஆவர் எ - று.

(வி - ரை.) அன்பர்க்கு அருள் செய்வோனுகலின் அன்புடையாட்கு ஒருவகைப்பட்ட அன்பு மணத்தையும் செய்தருளினன். வணங்கி ஏத்தவும் அவருக்கு அருளிச் செய்யாது இவர்க்கு அருளினன் என்க. அடியவர் யாண்டுளரோ ஆண்டெல்லாம் சென்று அருள் நல்கினுன் என்க.

இவ்வரலாறு பற்றிய குறிப்புகள் எல்லாம் கீர்த்தித் திருஅகவலுட் கூறினும், ஆண்டுக் காண்க.

வேவத் திரிபுரஞ் செற்றவில்லி
　　வேடுவ னாய்க்கடி நாய்கள்சூழ
ஏவற்செ யல்செய்யும் தேவர்முன்னே
　　எம்பெரு மான்தான் இயங்குகாட்டில்
ஏவுண்ட பன்றிக்(கு) இரங்கிஈசன்
　　எந்தை பெருந்துறை ஆதிஅன்று
கேவலம் கேழலாய்ப் பால்கொடுத்த
　　கிடப்(பு)அறி வார்எம் பிரானுவாரே 6

இதனுல் பன்றிக்கும் பால் கொடுத்தருளிய மனக்கிடையை அறிபவரே எம்பிரானுர் ஆவர் எனத் தோழியர் தம்முட் கூறியது.

(பொ - ரை.) திரிபுரங்கள் வெந்து போகுமாறு சினந்த வில்லையுடையவனும், ஈசனும், என் அப்பனும், திருப்பெருந்துறைக் கண்ணுள்ள ஆதியும் ஆகிய இறைவன், (அன்று ஒருநாள்) வேடுவனுகிக் காவல் நாய்கள் தற்சூழ, ஏவல் தொழிலைச் செய்யும் தேவர்கள் முன்னே செல்லத் தான் செல்லா நிற்கும், காட்டில் அம்பு தைத்திருந்த தாய்ப்பன்றிக்கு இரக்கங்கொண்டு, விடுத்தற்குரிய (எளிய) பெண்பன்றியாகி, அதனுடைய குட்டிகளுக்குப் பால் கொடுத்தருளிய உள்ளக் கிடக்கையை அறிபவர் யாவரோ, அவரே எம் தலைவர் ஆவார் எ - று.

(வி - ரை.) கடி - காவல், தன் குட்டிகளின் நிலை யாது என்று இரங்கிய பன்றிக்கு இரங்கி என்க. கேவல் (க்ஷேபம்) - விடுக்கப்படுவது. அதுவே தொழிற்பெயர் ஆகிக் "கேவல்" என நின்றது. அம் சாரியை ஆண்பாற் கிளவிக்குள்ளே 'கேழல்' விதந்தோதப்படாமையின், அஃது அருகிப் பெண் பன்றியையும் உணர்த்தும் என்க. இவ்வரலாற்றினைத் திருவிளையாடலுட் காண்க. " திரிபுரம் செற்ற வில்லி " என்றமையால் தாய்ப்பன்றியைக் கொன்று அதன் பிறப்பறுக்க வந்தான் என்பது பெற்றும். அக்

காலத்துப் புரம் செற்றவாறே இக்காலத்தும் அவன் தீயோரை அகற்றி நல்லோரை அருளிக் காத்து வருகின்றான் என்க. இதனால் தானே ஒறுப்பவனும் அருளுபவனும் ஆவன்; பிறர் அன்னராகார் என்பதும் பெற்றும்.

நாதம் உடையதோர் நற்கமலப்
போதினில் நண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்(து)அலர் தூவிஏத்த
ஒளிவளர் சோதிஎம் ஈசன்மன்னும்
போதுஅலர் சோலைப் பெருந்துறைஎம்
புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்
பேதங் கெடுத்(து)அருள் செய்பெருமை
அறியவல் லார்எம் பிரானாவாரே. 7

இதனால், அன்பின் ஐந்திணை நெறியை அளித்து வேறுபாடு நீக்கியமை அறியவல்லார் எம்பிரானார் ஆவர் எனத் தோழியர் தம்முட் கூறியது.

(பொ - ரை.) ஏனைய ஒளிகள் எல்லாவற்றையும் வளர்க்கின்ற சோதிவடிவாகிய ஈசன், ஆகிய எமது குருவன், வண்டாகித் திசைமுகன் பாடுதலால் ஓசையுடையதாகிய தாமரைப் பூவினில், ஒப்பற்ற நன்மை பயக்கின்ற நல்ல நுதலினையுடையராகிய திருமகளும் கலைமகளும் தன் புகழையே ஓதிப் போற்றி வணங்கித் திருவடியிலே மலர் தூவி ஏத்த மண்ணிடையிலே நிலை பெற்ற பேரரும்புகள் அலரா நிற்கும் சோலைகள் சூழ்ந்த திருப் பெருந்துறைக்கண் உறைகின்ற, எமது புண்ணியமே உருவானவன், பூமியின்கண் வந்து தோன்றி, தமக்கும் எமக்கும் உள்ள வேறுபாடுகளைக் களைந்து இன்பத்தை யருள்செய்த பெருமையை அறியவல்லார் யாவரோ, அவரே எம் தலைவராவார் எ - று

(வி - ரை.) திருவுந்திக் கமலத்திலே பிரமன் இருந்து வேதம் ஓதுதலின் "நாதம் உடையதோர் நறகமலம" எனப்பட்டது. அவன் நாவகத்தே கலைமகள் இருத்தலின் வெண்டாமரையும் கொள்ளப்பட்டது. நாதம் - சத்தம். ஓர் - ஒப்பறற.

இலக்குமியும் சரஸ்வதியும் முறையே திருமாலையும், திசைமுகனையும் தலைவர்களாகப் பெற்றுக் கொள்ளக் குறித்து, திருவாரூரை அடைந்து தவமியற்ற அவர்கள் குறித்தவாறே இறைவன் அவர்கட்கு அருளிச் செய்தான் என்க. இதன் விரிவை அத்தலபுராணத்துட் காண்க.

திருப்பெருந்துறையில் அருளிய பெருந்திணையின் பேதத்தை இப்பொழுது அன்பின் ஐந்திணையாக மாற்றி எனக் கொள்க.

பூஅலர் கொன்றைய மாலைமார்பன்
போர்உகிர் வன்புலி கொன்றவீரன்
மாதுநல் லாள்உமை மங்கைபங்கன்
வண்பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன்
ஏதில் பெரும்புகழ் எங்கள்ஈசன்
இருங்கடல் வாணற்குத் தீயில்தோன்றும்
ஓவிய மங்கையர் தோள்புணரும்
உருஅறி வார்எம் பிரானுவாரே. 8

மங்கையர் தோள் புணரும் உரு அறிவார் எவரோ அவரே எம்பிரானுர் ஆவர் எனத் தோழிகள் தம்முட் கூறியது.

(பொ - ரை.) கொன்றையனவாகிய மலரப்பட்ட பூவாலாகிய மாலை அணிந்த மார்பனும், வலியுள்ளனவாகிய நகங்களையுடைய புலியைக் கொன்ற வீரனும், காதலுக்கிடமாகிய உமையைத் தனது இடப்பாகத்திலே உடையவனும் வளம் பொருந்திய பொழில் சூழ்ந்த தெற்கின்கண்ணுள்ள திருப்பெருந்துறைத் தலைவனும் குற்றமற்ற பெருமை தரும் புகழையுடைய எங்கட்கு ஈசனும் ஆகிய இறைவன், கரிய கடல் வேந்தனுக்கு நெருப்பில் தோன்றும் ஓவியமே உயிர்ப் புப் பெற்ருலன்ன வடிவுடைய மங்கையர்களுடைய தோள்களைப் புணரும் அழகினை அறிவோரே, எமது தலைவர் ஆவர் எ - று.

(வி - ரை.) தாரும் மாலையும் கண்ணியும் கொன்றை என்பது முன்னர்க் கூறப்பட்டது. தாருக வனத்து முனிவரை மீமாஞ்சத்தி னின்றும் நீக்கியமையால் வீரன் என்று அருளப்பட்டான். இல் காணுப் புகழும் புகழ் ஏதுடைப் புகழ். ஏது - குற்றம். இறைவன் புகழ் குற்ற மற்ற புகழ் என்க. பெருந்துறைக்கோன் எங்கட்குக் குருவன் என்க. உகிர் - நகம். உரு - அழகு.

இன்னோரன்னவை பாங்கராயினர்க்குப் புலனுகுமாதலின், அவரே தலைவர் என இப்பகுதி முழுவதும் குறிப்பிட்டருளினர்.

தூவெள்ளை நீ(று)அணி எம்பெருமான்
சோதிம கேந்திர நாதன்வந்து
தேவர்தொழும்பதம் வைத்தஈசன்
தென்னன் பெருந்துறை ஆளிஅன்று
காதல் பெருகக் கருணைகாட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்(து) உருகக்
கேதங் கெடுத்(து) எம்மை ஆண்டருளும்
கிடப்(பு)அறி வார்எம் பிரான்ஆவாரே. 9

இதனால் எமது துன்பத்தைக் கெடுத்தருளிய உள்ளக் கிடையை அறிவார் யாவரோ அவரே எம் தலைவர் ஆவர் எனத் தோழியர் தம்முட் கூறியது.

(பொ - ரை.) உடம்பு முழுவதும் பரவப்பட்ட வெள்ளிதாகிய திருநீற்றை அணிந்த எம்பிரானும் ஒளி விடுகின்ற மலைக்குத் தலைவனும், தென்னாடுடையவனும், திருப்பெருந்துறையை ஆட்சி செய்வோனுமாகிய குருவன், தன்மேல் காதல் பெருகுமாறு தன் திருவருளைக் காண்பித்துச் சென்னியில் வைத்த திருவடியைக் கசிந்துருகும்படி எம்முள்ளத்தில் காட்டித் துன்பமெல்லாம் ஒழித்து எம்மை ஆண்டருளும் உள்ளக் கிடையை அறிபவர், எவரோ, அவரே எம் தலைவர் ஆவார் எ - று.

(வி - ரை.) தேவர்கள் தொழுகின்ற திருவடியை ஈண்டு வந்து என் தலைமேல் வைத்த ஈசன்; "தேவர் வந்து தொழும் பதம்" எனினுமாம். மகேந்திர சோதிநாதன், தென்னனாய், பெருந்துறை ஆளியாய் திருநீறு அணிந்து எம்பிரானாய்த் திருவடியை உலகத்தில் கசிந்துருகக் காட்டினான் என்க.

தலைவிக்கும் தோழியர்க்கும் வேறுபாடின்மை தோன்ற அவள் பெற்றதைத் தாமும் பெற்றனர் எனும்படி கூறினர் என்க. இங்ஙனம் வருதலை முன்னரும் விளக்கினும். 'என்னை' எனப் பாடங் கொள்வாருமுளர்.

அங்கணன் எங்கள் அமரர்பெம்மான்
அடியார்க்(கு) அமுதன் அவனிவந்த
எங்கள் பிரான்இரும் பாசம்தீர
இகபரம் ஆயதோர் இன்பம்எய்தச்
சங்கங் கவர்ந்துவன் சாத்தினோடும்
சதுரன் பெருந்துறை ஆளிஅன்று
மங்கையர் மல்கும் மதுரைசேர்ந்த
வகைஅறி வார்எம் பிரானாவாரே. 10

இது மங்கையர் வளையல்களை வசீகரத்தினாலே கவர்ந்து கொண்டு மதுரையில் வந்து சேர்ந்த வகையை அறிவார் எவரோ அவரே எம் தலைவர் ஆவார் எனத் தோழியர் தம்முட் கூறியது.

(பொ - ரை) அழகிய திருவருளாகிய கண்களையுடையவனும், வானவர் பெருமானும், அடியார்க்கு இன்ப நிலையை அருளும் அமுதானவனும், அவ்வடியாரைக் காத்தற் பொருட்டு அவனிக்கு வந்தருளிய எங்கள் பிரானும், சதுரப்பாடுடையவனும், பெருந்துறையை ஆள்வோனும், ஆகிய இறைவன் அக்காலத்துப்

பெரிய மும்மலப்பற்று நீங்க இம்மைக்கும் மறுமைக்கும் உள்ள தாகிய ஒப்பற்றவோர் இன்பத்தை எய்த மங்கைமாரை மயக்கித் தன் வயப்படுத்தலால், அவர் தம் வளையலையும் கவர்ந்து கொண்டு வளப்பம் பொருந்திய வணிகர் கூட்டத்தோடு வளையலை விற்க மங்கையர்கள் நிறைந்த மதுரையைச் சேர்ந்த வகையை அறிபவர் எவரோ, அவரே எம்பிரானுர் ஆவர் எ - று.

(வி - ரை ) "கவர்ந்து" என்றுர் துணிவு தோன்ற. 'இக்காட்டிற் புக்கான் கூறையற்றுன்' என்பது போல. தானே வலிந்து ஆண்டமையால் "அங்கணன்" என்றும், பிற தெய்வங்களை வழிபடாது தன்னை வணங்குமாறு செய்தான் என்பார், "அமரர் பெம்மான்" என்றும், அடியார்க்கு இன்பம் அளித்தான் என்பார் "அமுதன்" என்றும், மங்கையர்க்கு அன்பின் ஐந்திணை இன்பம் தந்தான் என்பார், "இகபர மாயதோர் இன்பம் எய்த" என்றும் அவ்வாறெல்லாம் செய்யும் வீரன் என்பார் "சதுரன்" என்றும் கூறியருளினர்.

ஆகவே, இறைவன் ஆணுக்கு ஆணுய்ப் பெண்ணுக்குப் பெண்ணுய்ப் பெண்ணுக்கு ஆணுமாய், ஆணுக்குப் பெண்ணுமாய், பன்றிக்குப் பன்றியாய் ஏனையவற்றிற்கும் அவ்வாறேயாய் அருளிச் செய்கின்றுன் என்பது பெற்றும்.

திருச்சிற்றம்பலம்

# எண்ணப் பதிகம்

"எண்ணப் பதிக"மாவது அடிகள் தம் கவலையை இறைவற்கு எடுத்துக் கூறிய பகுதி. எண்ணம் - கவலை 'எண்ணு வரையின்றிப் பலவகைப் பொருளைத் தொகுதியாகச் சொல்லப்படுவது பதிகம்' என்ப ஆகலின் இது பத்து என்னும் எண்ணு வரையின்றி ஆறு பாக்களான் நிறைவுற்றது என்க.

"சித்தம் ஆர்தரு சேவடிக்கண் நம் சென்னி மன்னித் திகழுமே" என, இறைவன் கழலடிகளே பற்றுக் கோடெனத் துணிந்து அடிகள், யோகெய்தினராகவும், அந்நிலையிலிருந்து அவரைப் பெயர்க்க ஆயத்தவர் இவ் இன்னுர் எம்பிரானுர் ஆவர் எனக் கூறுதலைக் கேட்டு, இறைவன் அருள் புரிவதற்குக் காலந் தாழ்த்தியமைக்கு இரங்கி, "நின்னைப் பிரிந்து உயிர் தரியேன், பிரியாவகை அடியார் நடுவுள் வைத்து என்னை ஆண்டருள்" என விண்ணப்பித்தருள்கின்றனர். மற்று இதனையே பொருளாக வுடையது இப்பகுதியாதலின், இஃது மேலைப் பகுதியொடு தொடர் புடையதாயிற்று.

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு

நின்னை நினைந்து, ஏத்திப் புகழ்ந்து அழைத்து அலறி என்னுள்ளே ஆற்றுவேனாக உடையேன், உடையவனே (6) என்றும், இன்னலறியாத அவன் இயல்பினையும், பிரிந்தமையாலுளதாகும் இன்னலறியப் பட்டமையின் இனி, கூடிப்பிரியின் ஆற்றேன், ஆதலாற் பிரியாது, கூடுதலையே வேண்டுவேன் (4) என்றும், தமது விருப்பத்தைப் புலப்படுத்தியும், அங்ஙனம் கூடிப் பிரியா இயல்பினையுடையது அடியார் தொகை நடுவுள் இருப்பதுவே (1) என்றும், யான் தகேன் என நீ கருதியதற்கு மாருக அதனை அருள்வதற்கு நாணுது அக்கூட்டுறவை எனக்கு அருள் (3) என்றும், கருணையினுல் யான் பெரியோன் ஒருவன் ஆவேன் எனக் கழல் காட்டி நீயும் கண்டுகொள் என என்னைத் தெளியவைத்தும், பிரியேன் என்று உண்மை கூறியதும் பொய்யே ஆகில் அருளாதொழி, மெய்யே ஆகில் நடுவிருக்க அருள் (2) என்றும், அவன் வஞ்சம் புலப்படுத்தியும் யான் அவற்றைப் பொய்யென்று கருதியே நின்னைக் காணுதும் அப்பொழுதே ஒழிந்து விட்டேன்; யான் காணப் பேணுதும் இனிவரினும் நான் வெள்குவேன் (5) எனச் செல்லாநிற்கும்.

இனி, நூற்பொருளடைவு வருமாறு :

அடியார் தொகை நடுவே இருக்க அருளாய், அருளாயாகில் நின் கழல் காட்டி நின்னிற் பிரியேன். என்றதும் பொய்யேயாகும்; மெய்யாமேல் நாணுது நண்பே அருள், புணர்ந்து பிரிவதற்கு யான் இனி ஆற்றேன், நின்னிலே அறிந்த யான் நின்னைக் காணுதும் பேணுதும் அப்பொழுதே ஒழிந்தேன். இனி வரினும் காணு நாணுவன், போற்றி, அளித்த இன்பம் நினைந்து ஏத்திப் புகழ்ந்து அழைத்து அலறி அலுத்துப் போனேன். ஆதலால் இங்ஙனம் வெஞ்சினங் கொண்டு விட்டேன். என் குறை பொறுத்து யான் ஆற்றியிருக்குமாறு அருள் புரி என்று செல்லா நிற்கும்.

இங்ஙனம்எல்லாம் தம் கவலை எடுத்துக் கூறிய அடிகள் அடுத்த யாத்திரைப் பத்தால் தன்னுடன் அடியார்களைக் கூடிப் பிரியா இன்பம் பெறுதற்குத் திருவருள் துணைகாட்டப் புறப்படு மாறு அறிவுறுத்துகின்றார்.

ஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# ஒழியா இன்பத்து உவகை

## ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

பார்உரு வாய பிறப்பற வேண்டும்
　　பத்திமை யும்பெற வேண்டும்
சீர்உரு வாய சிவபெரு மானே
　　செங்கம லமலர் போலும்
ஆர்உரு வாயஎன் ஆரமு தேஉன்
　　அடியவர் தொகை நடுவே
ஓர்உரு வாயநின் திருவருள் காட்டி
　　என்னையும் உய்யக்கொண் டருளே. 1

இதனால், என் பிறப்பினை அறுத்துப் பத்திமை யுண்டாக்கி, உன தருளினாலே என்னை உய்வடையச் செய் என அடிகள் வேண்டியருளுகின்றார்.

(பொ - ரை.) மிக்க புகழையே தனது வடிவமாகக் கொண்ட சிவமாகிய பெருமையுடையவனே, செவ்விதாகிய தாமரை மலரை ஒக்கும் அரிய அழகியதோர் வடிவுடைய, எனக்கு நுகர்தற்கரிய

அமுதம் போன்றவனே ! பிரகிருதியின் வடிவமாகிய எனது பிறப்பு ஒழியவேண்டும், அதற்குக் காரணமாகிய அன்புடைமை பெறுதலும் வேண்டும் ; அவ்விரண்டனுக்கும் காரணமாகிய உன்னடியவர் கூட்டத்தின் மத்தியிலே சிதைவில்லாமல் ஒரே பிழம்பாகிய நினது திருவருளைக் காட்டி, அடியேனாகிய என்னையும் உய்யுமாறு ஆண்டு கொண்டருள்வாயாக எ - று.

(வி - ரை.) பிறப்பறுதற்கு அன்புடைமையும், அன்புடைமைக்குச் சீருருவும் வேண்டப்படும். அங்ஙனம் வேண்டப்படும் "சிவபெருமானே" என்க

"பத்திமையா"வது அன்பர்கள் தியானித்துப் பேறடையும் முறையில் உளதாதல்.

"சீருருவங்கள்", அடியவர் சிந்தனை வேறுபாட்டாற் போந்தன; சிந்தனை வேறுபாடுகள் பரம்பரை வேறு பாடுகளாற் போந்தன ; பரம்பரை வேறுபாடுகள் காலத்தானும் இடத்தாலும் போந்தன வென்க. பெறுதற்கரிய சிவனை அன்பு செய்து பெறுதற் கெளியன் ஆக்கியவை இச்சீருருவங்கள் என்க.

அவற்றுள் ஒன்றே "செங்கமலமலர் போலும் ஆருருவாய அமுதம்" என்பது. ஆரமிழ்து - அடைதற்கரிய அமிழ்து. பொருளுக்கு ஓதிய அருமைப்பாடு உவமைக்குங் கொள்ளப் படுமாதலின், பறித்து நுகர்தற் கரிய சூழ்நிலையையுடைய "செங்கமல மலர்" என்று உரைக்க. மலர் அத் தகையதேனும் நுகரும் வேட்கையை விளைவித்தலின் "ஆருரு" என மேலுங் கூறினர். அன்பர்க்கு எளிமையும் பொதுவுமாய "சீருரு" எனக்கு அருமையும் சிறப்பு முடையதாயிற்று என்றவாறு.

இவ்வெளிமையும் அருமையும் முறையே அன்பினானும் ஆராய்வினானும் போந்தனவேனும், அவன் திருவருள் விளக்காற் போந்தனவென்றே காரணம் காட்டி, விகற்பமற்ற ஒருருவாய திருவருளை வேண்டி நின்றதும் அடிகள்பால் மெய்ம்மைத்தாயிற்று, அவனருளாலே அவன் தாள் வணங்குவாராகலின்.

"ஒருருவாய திருவருள்" என இங்குக் கூறப்பட்டதுவே "உன்னடியார் நடுவுள் இருக்கும் அருள்" என முன்னர்க் கூறப்பட்டதென்றறிக.

நுண்ணியதாய்ப் பிரகிருதியின்பால் ஒடுங்கியிருந்த உருவே மீட்டும் பருமைத்தாக வளர்தலின் "பாருருவாய" என்றார்.

* பிறப்பு, ஆகுபெயராய்ப் பிறப்பினாற் போந்த வாழ்க்கைத்துறைகள் யாவற்றையும் உணர்த்திற்று. அவ்வத்துறைகளின் அமைப்பே ஈண்டு உருவென ஓதப்பட்டதும்.

பத்திமையும் ஒருருவாய திருவருளும் பெற்றார் அடியாராகலின், "உன்னடியவர்" என உரிமையுடைமையும், ஆராய்வும் அருமைத்தாய

திருவருளும் பெற்றார் தாமாகலின் "என்னாரமுது" என உரிமையின்மையும், அவ்விருவேறு இயற்கையும் அவனாலேயே போந்தனவென அவன் திருவருள் விகற்பமும், விகற்பமின்மையும், அருளான மிகுபுகழ் உருவங்களும் அடியார்பாலும் அடிகள்பாலும் ஒன்றுக்கொன்று முரண்பட்டு நின்று மிக்க சுவை பயக்கின்றன.

உன்னைக் கண்ட கண்ணும் உன் புகழ் ஓதிய நாவும் கண்ட காட்சி படிந்த உள்ளமும், நின் அருளுபதேசம் கேட்ட செவியும் அன்ன பிறவும், இன்பங்கொள்ள "என்னையும் உய்யக்கொள்" என்றார் என்க.

உரியேன் அல்லேன் உனக்(கு)அடிமை
உன்னைப் பிரிந்திங்(கு) ஒருபொழுதும்
தரியேன் நாயேன் இன்னதென்(று)
அறியேன் சங்கரா கருணையினால்
பெரியோன் ஒருவன் கண்டுகொள்
என்றுன் பெய்கழல் அடிகாட்டிப்
பிரியேன் என்றென்(று) அருளிய அருளும்
பொய்யோ எங்கள் பெருமானே. **2**

இதனால் பெரியோனாய் வந்துன் கழல் காட்டி இனி ஒரு போதும் உன்னைப் பிரியேன் என அருளிச்செய்ததும் பொய்யாமோ என்பதருளிச் செய்யப்படுகின்றது.

(பொ - ரை) பெருமானே! சங்கரனே! நாயினேன் உனக்கு அடிமை கூறிக் கொள்ள உரியேன் அல்லேன், அங்ஙனமாயினும், ஒரு பொழுதேனும் நின்னைப் பிரிந்திருத்தலைச் செய்யேன், இங்ஙனமாக யான் இருத்தற்குக் காரணம் இதுதான் என்றலையும் அறியேன், யான் பெரியோன் ஒருவன் கண்டறிந்துகொள் என்று கூறி உன் கழல் காட்டி என்னிற் பிரியேன் என அறிவுறுத்திய அருட்சொல்லும் பொய்யாகுமோ, (ஆகாது) எ - று.

(வி - ரை.) சுகத்தைச் செய்வோன் துன்பம் செய்கின்றான் என்பது படச் "சங்கரா" என்றருளிச் செய்தார். 'அடிமைக்குரிமைத் தகுதியற்ற யான் நின்னைப் பிரியின் கலங்குதற்குக் காரணம் அறியேன். எது பொய்ப்பினும் அருள்பொய்யாதன்றோ? அதுவும் பொய்த்ததோ? அதனை இன்னதென்றறியேன்' எனவும் கொள்ளினும் கொள்க. 'அடிமைத் தொண்டும் செய்தற்கியலேன், அஃது அறிந்திலேன் ஆகலின். காணுமாறு அகத்துள் இருப்பது தகுமா? வெளிப்பட்டருள்க' என்றருளியவாறும்.

'பெய்கழல் அடிகாட்டிப் பெரியோன் ஒருவன் கண்டுகொள் என்றுணர்த்திப் பிரியேன் என்ற அருளும் பொய்யாமோ?' என இயைக்க.

என்பே உருக நின்னருள் அளித்துன்
　　இணைமல ரடிகாட்டி
முன்பே என்னை ஆண்டுகொண்ட
　　முனிவா முனிவர் முழுமுதலே
இன்பே அருளி எனையுருக்கி
　　உயிருண் கின்ற எம்மானே
நண்பே அருளாய் என்னுயிர்
　　நாதா நின்னருள் நாணுமே. 3

இது ஒவ்வாத பெருந்திணைக் காட்சியால் இன்னல் உறுகின்றேனுக்கு நின் சொல் நாணுது ஐந்திணை அன்பினை அருள் என்றருளியது.

(பொ-ரை.) எனது எலும்புகள் கட்டுவிட்டு உருகுமாறு, என்பால் காரணம் ஒரு சிறிதுமின்றி இருக்கவும், நினது திருவருளைப் புரிந்து, ஞானக்கண்ணுற் காணுதற்குரிய உனது மலர்போன்ற திரு அடிகளை என் புல்லிய கண்களாற் காணுமாறு காட்டிச் செவ்வி சிறிதேனும் இல்லாத முன்னர்க் காலத்தில் என்னையும் ஆண்டு கொண்ட அந்தணனே! முனிவர் எல்லோர்க்கும் முழுமைத்தாய முதன்மையுடையோனே! துன்பங் கலவாத இன்பத்தினையே (இப் புல்லியேனுக்கு) அருள்செய்து அவ்வின்பத்தைப் பெற்றுக் கொள்ளாமையால் என்னை உருகவைத்து எனது உயிரைமட்டும் உண்கின்ற எம்மவனே! என் ஆத்மநாதனே! நின்னைப் பிரியேன் என்று கூறிய நின் அருளானது நாணுருவண்ணம் யான் உய்யுமாறு அன்பின் ஐந்திணை நண்பினையே அருளிச் செய்வாயாக எ-று.

(வி-ரை.) நீ முனிவனும் முனிவர் தலைவனுமிருந்தும் நின் அருள் பொய்க்கலாமா என்றபடி. முனிமுதல்வன் - தக்கணுமூர்த்தி. அவனையே நோக்குங்கால் முனிவனுகவும், ஏனைய முனிவரொடு நோக்குங் கால் அவர் தமக்குத் தலைவனுகவும் தோன்றுதலின், "முனிவா, முனிவர் முழுமுதலே" என்ருர்.

பேருருவக் காட்சியால் பிரகிருதிக்கு அப்பாற்பட்ட பேரின்பத்தையே அளித்து, நான் நுகரமாட்டாமையால் என்னைப் பெரும் துன்பத்துள்ளவழுக்கினுய் என்பது தோன்ற "இன்பே...உயிருண்கின்ற எம்மானே" என்றருளினர்.

"உயிர் நாதா" என்றனர், எனது வருந்தி யுழல்கின்ற உயிர்க்குத் தலைவனே என்பது தோன்ற. காட்சிவளம் மட்டும் நல்கி, பின் அழைத்தருளாமையின் உண்டாய வருத்தம் தோன்ற இங்ஙனம் கூறியருளினர் என்க. இங்ஙனமே இப்பகுதியின் ஏனைய பாடல்களுக்கும் கொள்க.

பத்தில னேனும் பணிந்தில னேனும்உன்
உயர்ந்தபைங் கழல்காணப்
பித்தில னேனும் பிதற்றில னேனும்
பிறப்பறுப் பாய்எம் பெருமானே
முத்தனை யானே மணியனை யானே
முதல்வனே முறையோஎன்று
எத்தனை யானும் யான்தொடர்ந்(து) உன்னை
இனிப்பிரிந் தாற்றேனே. 4

இதனால் ஆற்றுமை காரணமாக யான் இனிமேல் உன்னைப் பிரிந்து உயிர்வாழேன். ஆதலினாலே எனது பிறப்பை அறுத்தலினாலே உன்னோடு ஒன்றியிருக்கச் செய்வாய் என்றருளிச் செய்யப்படுகின்றது

(பொ-ரை.) எமக்குப் பெருமானே! இழிந்த என்னிடம் தோன்றிய முத்தினை ஒத்தவனே! என் உள்ளத்தில் இருந்து ஒளிரும் மாணிக்க மணியே! என் தலைவனே! எவ்வளவு நேரிடினும் யான் உன்னைத் தொடர்ந்து பின்பற்றி வந்து இனிப் பிரிந்து, முறையோ என்று ஓலமிட்டு அப்பிரிவின்கண் ஆற்றியிருப்பேனோ? ஆதலால் யான் அன்பிலேன் எனினும், அவ்வன்பால் நின்னை வணங்கிலேன் எனினும், நின்னினும் உயர்ந்த நினது பசிய கழல் அணிந்த திருவடியைக் காணற்கு ஏற்ற பித்துக்கொண்டிலனேனும் அப்பித்து மிக்கு முரண்படப் பிதற்றிலனேனும் எனது பிறப்பு அறுத்து ஆள்வாய் எ-று.

(வி-ரை.) சிப்பியாகிய தனக்குள் இருக்கும் "முத்து" என்க. உள்ளக் கனியில் "மணி" என்க. பத்து-பற்று, பத்தி எனினும் அமையும். நெடும் பிரிவுக்கு ஆற்றேன் என்க.

பிறப்பறுக்க வல்லான் அது செய்யாமையால் ஒரு பொருள் தோன்றிற்று. அதுதான் வஞ்சம் என்பது. அஃது உணர்தலும் அன்பாலாகிய ஆற்றுமை மடிந்து வஞ்சத்தாலாய வெஞ்சினம் தோன்றிற்று. அதன் விளைவே அடுத்த திருப்பாடல்.

காணுமதொழிந்தேன் நின்திருப் பாதம்
கண்டுகண் களிகூரப்
பேணுமதொழிந்தேன் பிதற்றுமதொழிந்தேன்
பின்னைஎம் பெருமானே
தாணுவே அழிந்தேன் நின்நினைந் துருகும்
தன்மைஎன் புன்மைகளால்
காணுமதொழிந்தேன் நீ இனி வரினும்
காணவும் நாணுவனே. 5

இதனால் இறைவனிடத்தில் என் தீவினையால் எவ்வித ஆர்வமும் இல்லேனாயினேன் என்றருளியவாறு

(பொ-ரை) எமக்குப் பெருமானே! தாணுவே! நின்னுடைய திருவடிகளை என் நெஞ்சிலே காணும் தொழிலையும் விட்டொழிந்தேன்; அதுவுமன்றி நின்னைப் புறத்தே கண்டு கண் மகிழ்ச்சி மிகும்படி பேணும் தொழிலையும் ஒழிந்தேன் அவ்வாறு காணாமை யால் பிதற்றுதலையும் செய்திலேன்! மற்றதன் மேல் என் புல்லிய குணம் செயலால் நின்னை நினைந்துருகுகின்ற தன்மையும் இன்றி ஒழிந்தேன்! அத்தகைய யான், நீ இனி என்முன் வரினும் உன்னைக் காணுதற்கு நாணம் கொள்வேன், (இளையேன் ஆதலின்), எ - று.

(வி-ரை.) தாணு - குற்றி, 'குற்றிகட்குத் தலைவன்' என்பது உருத்திரம். கண்டு பேணவேண்டும் என்பது இல்லாமையினாலே பிதற்றுதலும், நினைத்தலும் இன்றாயிற்று. அவை இன்மையாலே காணுதலையும் செய்யேன்; உருகும் தன்மை அழிந்தேன் ஆகலின், "பிதற்றுதலும், பேணலும், காணலும், ஒழிந்தேன்." "காணுவதொழிந்த" யான், நீ இனி வரினும் "நாணுவன்" என்க. ஈற்றடியில் உள்ள "ஒழிந்தேன்" என்பது பெயர். நெடும் பிரிவாலாகிய இரக்கத்தினால் ஆற்றாமை கொண்டு அருளிச் செய்யப்பட்டது 'நீ யழைத்துக்கொள்ளாமை காரணமாக இங்ஙனம் இழிந்தேன் ஆயினேன்' என்றார் என்க.

பால்திரு நீற்றெம் பரமனை பரங்கரு
ணையோடும் எதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க்(கு) அருட்டுறை அளிக்கும்
சோதியை நீதியிலேன்
போற்றிஎன் அமுதே எனநினைந் தேத்திப்
புகழ்ந்தழைத் தலறிஎன் உள்ளே
ஆற்றுவ னாக உடையவ னேஎனை
ஆவஎன் றருளாயே. 6

இதனால், யானாகவே ஆற்றுக்கொள்ளுதலைத் துணையாகக் கொண்ட எனக்கு இனியேனும் நீ வந்து ஆற்றுவாயாக என்று அருளிச் செய்யப்படுகின்றது.

(பொ-ரை) நீதியற்ற யான், பகுதியாகத் திருநீறிட்ட எமக்குரிய மேலோனவனும், பேரருளோடும் எதிரே உருக்கொண்டு வந்து தோன்றி, மெய்யன்பர்க்கு அருளையும் அதன் குறைகளையும் கொடுத்தருளும் ஒளி வடிவானவனும் ஆகிய நின்னை என் அமுதே என நினைந்து போற்றிக் கூவியழைத்து அரற்றுதலைச்

செய்து ஆறுதலைப் பெற்றுக் கொள்வேனாக, என்னை அடிமையாக உடையவனே, ஐயோ என்று இனியேனும் என்னை அருள் செய் யாயோ எ - று.

(வி - ரை.) அலறுதற்குக் காரணம் அருளிச் செய்தார் பரமனாகிய சோதியை என்க. "என்னையுடையவனே ஆவ என்று எனக்கு அருள்."

தோன்றி எதிர்ந்து தோன்றி என்னுள்ளே அலறி இனி என் செயலாம், என ஆற்றுமையான் என்னுள் ஆற்றிக் கொள்வதேயன்றி நீயும் அருளுதி என்க. பால், பால் போன்ற எனினுமாம்.

தமக்குள்ளே தாம் பெறற்பாலவாய ஆன்மாவும் பரமான்மாவும் இல் பொருள்களாக உணர்ந்தும் இத்துணையளவும் முயன்றுவிட்டுப் பயன் பெருது வறிதுபட்டுப் போக நேரிடுதலால் இனிச் செய்யக்கடவதொன்று மில்லை எனத் துணிந்து மற்றிதனைப் பிறர்க்கு அறிவுறுத்தல் வாய்மை யாகாது என்னும் கருணை மேலீட்டால் தமக்குள்ளே ஆறி அடங்குவதே சால்பெனக் கொண்ட அடிகள், அங்ஙனம் ஆறினும் அகத்துநிலை ஆறுதல் பெறுதே என்னும் ஐய மேலீட்டால் அங்ஙனம் கருதல் பிறர்க்கேயுமின்றித் தமக்கும் பொல்லாங்கைத் தரும் எனக் கண்டு மறித்தும், இங்ஙனம் இவ்வெண்ணத்தைத் தந்ததும் அவனருளே எனக் காணும் மெய்ஞ் ஞானம் கொழுந்து விட்டுக் கதிர் எடுத்தலால் 'என்னுள் ஆற்றுவனே' என்றாராய் 'ஆற்றுவனாக உள்ளவனே' என்று உரைத்தருளி ஆத்திக உலகத்திற்கு ஆருயிர் கொடுத்தருளினார் என்க. இத்தகைய திண்ணிய மனப் பாங்கு அற்றவர் தமக்கும் பிறர்க்கும் கேடு சூழ்ந்தோராவர்.

திருச்சிற்றம்பலம்

# யாத்திரைப் பத்து

"யாத்திரைப் பத்" தாவது கைக்கிளை நெறிப்பட்டிருந்த அன்பர்களை அன்பின் ஐந்திணை நெறி பூணச்செய்து அவர்களையும் இறைவனருள் பெற்றுச் செவ்வி நிரம்பினோரையும் ஏனைய சித்தர், தொண்டர், புதிய யோகியர் என்னும் இவருள்ளிட்டாரையும் சிவலோகத்திற்குச் செல்லும் யாத்திரைக்கு இது காலம் என அறிவித்து ஆயத்தப் படுத்தலைக் கூறும் பத்துப் பாக்களைக் கொண்ட பகுதி.

"என்னை அன்பர் நடுவிலிருக்கச் செய்" என வழக்குரைத்து இறைவனருளை எண்ணப் பதிகத்தாற் பெற்றுக்கொண்ட அடிகள் இதனால் அன்பர்களை உடன் செல்ல ஆயத்தப்படுத்தலின், இது மேலைப் பதிகத்தோடு இயைபுடைத்தாயிற்று.

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு:—

I. விளையாட்டை அகலவிட்டு அடி வந்தடைந்து கடைக்கொண்டு (4) எனவும், இனி இடையூறடையாமே சென்று வணங்கி அடியார்முன் உருகி நிற்போம் (6) எனவும், முதலாம் பகுதி இருகூறுபடும்.

II. மிக ஓர் காலம் இனியில்லை; சாத்தோடு ஒருப்படுமின்; அணியார் கதவு அடையாமே அடைவோம் (5) எனவும், பின்னை அரற்றுது கதவு திறந்த வேளை தாள் சென்று சேர்வோம் (8) எனவும், இரண்டாம் பகுதி இரு கூறுபடும்.

III. நிற்பார் நிற்க, நில்லோம் செல்வோம், தாழாது நிற்கும் பரிசே ஒருப்படுமின் (7) எனவும், இன்று வந்து ஆளாகாதீர் பின்னர் மருள்வீர்; தெருள்வீராகில் இது செய்ம்மின் (10) எனவும், இம்மூன்றும் பகுதியும் இரு கூறுபடும்.

IV. தத்தம் நிலைகூறி, நினைக்கச் செய்து அவன் தன் குறிப்பே குறிக்கொண்டு போமாறமைமின் (3) எனவும், புலன் புகாமை கூறித் தான் மிக நினைக்கச் செய்து, மிக்கவெல்லாம் போக விடுமின்கள் (2) எனவும், சிந்தனையைத் திருந்த வைத்து, புயங்கள் அருளமுதம் ஆரப்பருகி, ஆராத ஆர்வங்கூர அழுந்துவீர் போரப் புரிமின் (9) எனவும், நான்காம் பகுதி மூன்று கூறுபடும்.

V. அன்பாய் ஆட்பட்டீர் காலம் வந்தது, போவோம், வந்து ஒருப்படுமின் (1) என்பது ஐந்தாம் பகுதி.

இப்பகுதிக்கு நூற் பொருளடைவு ஆங்காங்குத் தரப்பட்டுள்ளமை காண்க.

இயற்கைப் பொருளடைவு ஆதியன வருமாறு :—

| பெரும் பிரிவு | இ. பொருள் அடைவு | நூ. பொருள் அடைவு |
|---|---|---|
| I | 1 | 4 |
| | 2 | 6 |
| II | 3 | 5 |
| | 4 | 8 |
| III | 5 | 7 |
| | 6 | 10 |
| IV | 7 | 3 |
| | 8 | 2 |
| | 9 | 9 |
| V | 10 | 1 |

அருளிச் செய்யப்பட்டது என்ப.

## அநுபவாதீதம் உரைத்தல்

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

பூவார் சென்னி மன்னனென்
புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவாது உள்ளம் கலந்துஉணர்வாய்
உருக்கும் வெள்ளக் கருணையினால்,
ஆவா என்னப் பட்டன்பாய்
ஆட்பட் டீர்வந்து ஒருப் படுமின்
போவோங் காலம் வந்ததுகாண்
பொய்விட்டு உடையான் கழல் புகவே. 1

இதனால், நுமக்கு இன்னே ஆகூழ் வந்தது ; இக்காலம் வழு வாது சிவலோகம் போவோம் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) மலர்கள் நிறைந்த திருமுடியை உடைய மன் னனும், பாம்பையணிந்த பெருமையுடையவனும் ஆகிய எம் தலை வன் சிறியோங்களை ஒழிவின்றி உள்ளத்திலே கலந்து, உணர்வுரு வத்தோடிருந்து உருகச் செய்கின்ற வெள்ளம்போல், வரம்பற்ற கருணையினாலே அவன் ஆஆ என்றிரங்க, மாறுபடாத அன்பு வடி வாகி ஆட்பட்டவர்களே, நிலையற்ற உலகியலை நீக்கி எம்மை உடை யானது (நமக்குப் புகலிடமாகிய) திருவடியிற் புகுந்து வாழக் காலம் வந்துவிட்டது, போவோம், வந்து ஒன்று கூடுங்கோள் எ - று.

(வி - ரை.) "போவோம்," "ஒருப்படுமின்" என அறிவுறுத்த லின் எண்ணப்பதிகம் பாடியிரங்கிய அடிகட்கு, அடியார் நடுவிருக்க அரு ளுதற்கு இறைவன் ஆயத்தமாகினன் என்பது புலப்பட்டது என்க. எம் குறும்புகளை ஒழித்து எம்மையாட் கொண்டமையின், புகழ்வது போன்று இகழ்தலாகாத பொருள்சேர் புகழுரையாகும் என்பது தோன்றப் "பூவார் சென்னி மன்னன் என்புயங்கப் பெருமான்" என்றும், புறத்து உட னிராது பிரிந்து தான் முன்னர் அளித்த இன்பத்தினை உள்ளுதற்குக் காரணமாக உள்ளத்தில் இடையறவு படாது கலந்திருந்து இதுபோது பெறறுக் கொள்ளற்கரிய அப்புணர்ச்சி யின்பத்தினை எங்ஙனமேனும் பெற் றுக் கொள்ளல் வேண்டும் என்னும் உணர்ச்சியெழுப்பும் உணர்வாகி உருக்கி உருக்கி வருகின்றான் என்பது தோன்ற "ஓவாது......உருக்கும்" என்றும், அங்ஙனம் உருக்குவது அவனது வரம்பற்ற கருணையேயாகும் என்பது தோன்ற "வெள்ளக் கருணையினால்" என்றும் எம் ஆற்றாமை அவனாலும் ஆற்றற்கரியதாயிற்று என்பது தோன்ற "ஆவா என்னப் பட்டு" என்றும், இங்ஙனம் வரம்பின்றி உருக வைத்தமையால் அன்புருவ மாயினோம் என்பது தோன்ற "அன்பாய்" என்றும், அங்ஙனமாகிய அன்புருவத்தைப் பயன்படுத்த நும்மை அழைக்கின்றேன் என்பது தோன்ற "ஆட்பட்டீர்" என்றும் கூறினர்.

பூக்களினாலாகிய கண்ணியும், பாம்புகளாகிய பிற மார்பணி முதலா யினவும் உடையன் அவன் மன்னவன், எம்பெருமான் என்க. "பூ" என்றது சிறப்பாகக் கொன்றைப் பூவை. இவ்வணிகள் வீரத்தை விளக்கி நின்றன. இனி, "பூ" என்றதற்குப் 'பொலிவு' எனப் பொருள் கொண்டு கங்கை, திங்கள், கொன்றை முதலாய பூக்கள், நகுவெண்டலைகள், பாம்பு என்பவற்றைத் தாங்குதற்கு இடமாகியதும் இயல்பாகவே அழகுடை யதும் என கொள்ளினும் நனிபொருந்தும்.

"ஓவாது உள்ளங் கலந்திருந்து உணர்வாத"லாவது பிரிந்து வருத்தும் அவனது பெருமையும் இப்போது அவனது அருமையும்,

முன்னர் அருளிய அருள்களும் முதலாயவற்றை நினைந்து நினைந்து கிளர்ச்சி கோடற்காக அவனே தம் உணர்வாக இருத்தல். அவ்வுணர்வு அவனேயாகி ஒன்றுபட்டதென்க.

கழலும், தனித்து நின்ற உயிருமே மெய், ஏனையவெல்லாம் பொய் என்க.

நுமக்கு வீடு உடலாகாது, அவன் கழலேயாகும் ஆதலின் அவன் அதனையொழித்து நிலைபேறுடையதாகிய கழலாகிய வீடகத்துப் புகவிடு வான் ; நீயிரும் ஆங்குப் புக வந்தொருப்படுமின் என்க.

தாள் புந்தியில் வைத்து, வெகுளி வேட்கைகளை விட்டு, புலன்களிற் செல்லாது பூப்புனைந்து தொழுது புகழ் பாடிப் புரள்வதுவே நீவிர் இது போது கைக்கொள்ளற்பாலது ; புயங்கன் வந்து உடலைக் களைவான் என் பது கருத்து.

முன் ஒருபோதும் இங்ஙனம் வந்திலாத காலம் இன்னே வந்தது. அது பின் கிடைத்தலரிது என்க.

"காலமே உனை ஒத நீ வந்து காட்டினுய்." (திருக்கழுக். 15.) என முன்னும் கூறினர் என்க.

புகவே வேண்டா புலன்களில்நீர்
புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கவெல்லாம்
வேண்டா போக விடுமின்கள்
நகவே ஞாலத்து உள்புகுந்து
நாயே அனைய நமையாண்ட
தகவே உடையான் தனைச்சாரத்
தளராது இருப்பார் தாந்தாமே. 2

இதனுல் இறைவனைச் சார்தற்குப் புலன்களிற் செல்லாது பூங் கழல்கள் மிகவே நினைமின் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) எள்ளி நகையாடும்படியாக இவ்வுலகத்தே புகுந்து நாய் போன்ற நம்மை ஆட்கொண்ட தகுதிப்பாடே தனக் குப் பொருளாக உடையான் தன்னை அணைந்தால் அணைந்தவர் எவர் எவரோ, அவர் அவர், தாம் தாமே தளர்வு அகன்றிருப்பர். ஆதலால், நீவிர் ஐம்புலன்களிலும் போதல் வேண்டா. பாம் பணியை உடையானது பொலிவினையுடைய கழல்களணிந்த திரு வடிகளையே நினையுங்கோள். நீயிர் முன் அருளாமையின் நேர்ந்த இன்னல்களையெல்லாம் இனிக் கருதல் வேண்டா. அவை தம்மை ஒழிய விடுங்கோள் எ - று.

(வி - ரை.) புலன்கள் - ஐம்புலன்கள்; உபலக்கணம். மிக்கன (-மிகைப்பட்டன) என்றது ஆளவேண்டிய தகுதிப்படி ஆட்கொள்ளாது கயக்க வைத்ததை. நகவே நமை யாண்ட பெருமையை நினைக்கில் அது தானே ஒழியும் என்க.

"மிக்க எல்லாம்" என்றதற்குப் புலன்களொழிந்தன வெல்லாம் என்று பொருளுரைப்பது உபலக்கணம் அறியாதார் கூற்றென்க.

நகுதல் - எள்ளி நகையாடுதல். செவ்வி நிரம்பாத நமக்கு அருள் செய்யப் புக்கமையால் உலகோரும் பிறரும் எள்ளி நகையாடுந் தகுதிப் பாடே உடையவன். அந்நகை தீர அவன் அருளால் நாமும் செவ்வி நிரம்பப் பெற்று அவனும் நாமும் புகழ் பெறுவோம்; ஆதலின் புலன்களுட் புகாது அவன் செய்த பண்டைக் கொடுமைகளை ஒழிய விடுவோமாக என்க.

புலன்களிற் சென்றமையால் பிறவி அல்லலும், சிறிது நினைந்தமையால் அவனைப் பிரிந்து நம்முடன் அவனும் இழிக்கப்படுதலும் எய்திறோம் என்க.

தகவு, இழிவு குறித்தது. நம்மை ஆண்டு தன் தகுதி இழந்தான் என்க.

நம்மை ஆண்டமையானே இழிக்கப்பட்டான்; அதனைக் கருதியேனும் மிக்க வெல்லாம் விடுமின் என்றனர் என்க. ஒரு குறைக்கு இருமுறை தண்டனை விதிப்பது தக்கதன்றென்க. தளராதிருக்கும் பயனோக்கியும், அவன் தகவு நோக்கியும் மிக்கவெல்லாம் போக விடுமின் என்க. அங்ஙனம் இழிக்கப்பட்டானேனும் பிறர்பாலன்றி அவன் சார்பில் தளராதிருக்கும் தகுதிப்பாடுள்ளது என்க.

தாமே தமக்குச் சுற்றமும்
　　தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார்
　　என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
　　அவன்தன் குறிப்பே குறிக்கொண்டு
போமாறு அமைமின் பொய்நீக்கிப்
　　புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே. 3

சுற்றமும் விதிவகையும் தம்மையன்றிப் பிற இன்மையின் யாம் எமது பாசங்கள் என்னும் வெறுவினவாகிய மயக்கங்களை ஒழித்து அவன் அடி போமாறு அமையுங்கோள் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) தமக்குச் சுற்றம் தாமேயாகவும்,

விதிவகைகளை உளவாக்கலும் தாமேயாகவும், 'யாம், எமது பாசங்கள்' என்னும் இப்பாகுபாடுகள் உள்ளன யாவை? இவை என்ன அஞ்ஞானம்? இவைகள் எல்லாம் ஒழிய, பழைய அடியார்களுடன் கூடிய நம் தலைவனுடைய குறிக்கோளையே குறிக்கோளாகக் கடைப்பிடித்து, பொய்யை விலக்கிப் புயங்கனாகிய ஆள்வானது பொன்னடிக்கண் போமாறு அமைந்திருங்கோள் எ - று

(வி - ரை.) தாம் தாம் முன்னர்ச் செய்துகொண்ட வினை காரணமாகவே, பிறவி எய்திச் சுற்றங்களைச் சூழ்ந்துகொள்ளுதலின், "தாமே தமக்குச் சுற்றமும்" என்றார். இதனாற் பகையும் நொதுமலும் உடன் கொள்க. தாமும் சுற்றமும் இணைந்தொழுகுதற்காக, இஃது விதி, இஃது எடுத்தோத்து, இஃது இலேசு, இஃது புறனடை என விதியும் அதன் வகையும் தோன்றத் தாமே தமக்கு விதி வகையும் என்றார். எனவே விலக்காகிய வழுவும் வழுவமைதியும் உடன்கொள்க. இவற்றிற்குக் காரணமாகிய யாமும், எமது பாசங்களும் உளவாகலின் காரியம் ஒழியக் காரணமும் பயனற்றனவாகும். ஆதலின், "யாமார், எமது ஆர், பாசங்களார்" என்றார்.

"பண்டைத் தொண்டரொடும் போமாறு" என்றது அவரும் அவன் குறிப்பே குறிக்கொண்டு அவனோடு வேறுபாடற்று, அவனும் தாமும் வேறு வேறு என்னப்படாமல் ஒருமைத்தாகிய குறிக்கோளொடு நிலவியாங்கு, நாமும் அங்ஙனம் நிலவுதற்குப் போமாறு அமைவோம் என்பது கொள்ளப் "பண்டைத் தொண்டரொடும் அவன் தன் குறிப்பே குறிக்கொண்டு போமாறமைமின்" என்றார்.

பண்டையடியாரும், தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு விதி வகையும் எனத் துணிந்தமையால் "யாமார் எமதார் பாசமார் என்ன மாயம்" எனக் கருதி அவை ஒழிய அவன்தன் குறிக்கோளையே தமது குறிக்கோளாகக் கொண்டு ஆங்குப் போயினர். அந்நெறியினையே யாமும் பின்பற்றிப் போமாறமைமின் என்க.

'பண்டைத் தொண்டரோடும் கூடிய அவன்' என்க. இனி, பண்டைத் தொண்டரொடு நாமும் ஒன்றாகிப் போமாறுமாம்.

"பாசம்" என்றது யாம் (அகங்காரம்), எமது (மமகாரம்) என்றவற்றின் விரிவுகளை.

"இவைபோக" என்றதற்கு இவை கிடக்க எனப் பொருள்கொண்டு, சுற்றம், விதிவகை, யாம், எமது, பாசம் என்பவற்றின் ஆராய்ச்சித் துறையுட் புகுதற்கு இது தருணமாகாது எனக் கண்டு "இவை போக" என்றார் எனினும் பொருந்தும். என்றாரேனும் இவ்வறிவு தலைக்கூடின் அல்லது போமாறு அமைதல் சாலாது என்க.

பொய் என்றது யாம், எமது, பாசம் என்றவற்றை. பொய்யை நீக்கித் தாமே எல்லாம் என்று உணர்தற்கு அவன் குறிக்கோளைக் கடைப்பிடித்தல்

வேண்டும். எனவே இறைவனோடு பிரியாது பூரண சுதந்தரத்தொடு வாழ்வதுவே அவன் குறிப்பாயிற்று. இதனை,

"தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப்பன்று" (திருச்ச., 37.) என விளங்கவுரைத்தமை காண்க. அவனைப் பிரியாது, எனவே ஐம்புலன் முதலாயவற்றைப் பிரிதலும் அதுவாயிற்றென்க.

பொய்மை நீக்கி ஆள்வானாகிய புயங்கனது திருவடிக்குப் போமாறமைமின் என்க. அன்பர் அவன் கழல் நினைக்கில் அவன் பொய்ந்நீக்கி ஆள்வான் என்க.

அடியார் ஆனீர் எல்லீரும்
அகலவிடுமின் விளையாட்டைக்
கடிசேர் அடியே வந்தடைந்து
கடைக்கொண்டு இருமின் திருக்குறிப்பைச்
செடிசேர் உடலைச் செலநீக்கிச்
சிவலோகத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன்
பூவார் கழற்கே புகவிடுமே. 4

இதனால் பெரும் பேரின்ப விளையாட்டை விளையாடவேண்டிய இப்போது அதனிற் குறைந்த பேரின்ப விளையாட்டை அகலவிட்டு அப்பெரும் பேரின்பத்தைப் பெற்றுக்கொள்ளும்வண்ணம் வந்தடைந்து திருக்குறிப்பையே கடைப்பிடித்திருங்கோள் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) வெண்ணீறு பூசிய திருமேனியை உடைய புயங்கன் இப்போது இவ்வுடலை அழியும்படி நீக்கி நம்மைச் சிவலோகத்தின்கண் வைப்பானாகித் தனது பூத்தொழிலை உடைய அருமைத்தாகிய கழலை அணிந்த திருவடிக்கண்ணே குடிபுக விடுவான் ஆதலின், அடியவர் ஆனவர்களே, நீயிர் எல்லீரும் இப்பொழுது செய்துவரும் அன்பின் ஐந்திணை விளையாட்டை நீங்க விடுங்கோள், நமக்குக் காப்பாகச் சேர்ந்த அவன் திருவடித் தியானத்தில் மனம் மீளவந்தடைந்து அவன் திருக்குறிப்பினையே கடைப்பிடித்திருங்கோள் எ - று

(வி - ரை.) விளையாட்டை அகலவிடுத்து, அவ்விளையாட்டிற் சென்ற மனம் திருவடித் தியானத்துள் மீளவந்தடைந்து அவன் திருக்குறிப்பையே கடைப்பிடித்திருப்பின், அவன் சிவபுரப் புகுகைக்குத் தடையாகவுள்ள நம் உடலை அழித்துச் சிவபுரத்திற் கழற்கீழ் வைப்பான் என்க. இவ்வுடல் உள்ள வரையும் சிவபுரம் புகுதல் ஒண்ணாதாகலின் அவ்வுடல் கொண்டு ஆற்றப்படும் விளையாட்டும், அதனிற் சென்ற மனமும் சிவபுரம் புகுதற்குத் தடை

யாயின என்பது பெற்றும். இதனுல் அன்பின் ஐந்திணை ஒழுகலாற்றுக் குரியது இவ்வுடலாகாது; இவ்வுடலொழித்துப் பிறிதோர் ஏற்ற உடல் பெற்று நும் விளையாட்டைக் கைக்கொள்ளுமின் என்பது கருத்து. உடம்படு புணர்த்தலான் தமது யாக்கையை ஒழித்துத் தெய்வ யாக்கை பெற்ற அடிகளும் ஒளிவடிவத்தைக் கண்ட தலைமகளாயினர் என்பது ஈண்டு பெற்றும்.

முதற்கண் தம்மைத் தலைமகளிராகப் பாவித்து அன்பு செய்தும், அதன்மேல் அவனருளால் முன் செய்த பொய்யறத் துகளறுத்துச் சோதித் தலைமகளிராகிக் காதலிக்கச் செய்து மற்றதன்மேல், அவ்வுடலை அழித்துத் திருவடிக்கண் புகச்செய்து, சிவபுரத்தினும் நிலவுலகத்தினும் அன்ன பிற வற்றினும் இறைவன் எழுந்தருளியிருக்கும் ஏனைய இடங்களிலும் அவனைப் போலவே தாமும் தலைமகளிர்களாக அன்பு செய்து வருவதுவே இந்நூலகத்துக் கூறப்பட்ட அன்பர் வரலாருகும்.

அகத்திணைக்கண் வரும் தலைமகளிரும் சிவபுரத்துச் சென்றுவரும் தலைமகளிரும் ஒரு பெற்றியர் ஆவர். அவர்களை ஓரிடத்திற்கு உரியர் இன்ன பெயர்க்கு உரியர் எனலாகாது என்பதும் ஈண்டுக் கருதுக.

அன்பர் முதற்கண் தம்மைத் தலைமகளிர்களாகப் பாவனை செய்வர் என்பதை,

" கள்வன் கடியன் கலதி இவன் என்னுதே " (திருக்கோத். 19.)

என அகத்திணைத் துறையில் ஈடுபட்ட தம்மைக் கள்ளன் என்றுங்கு ஆடூவாக உரைத்துக்கொள்வதனுனும்,

" நனவே எனைப்பிடித் தாட்கொண்டவா நயந்துநெஞ்சம்
சினவேற் கண்நீர் மல்க " (திருத்தெள். 10.)

எனத் தம்மையும் உளப்படுத்திக்கொண்டு மகளிராகப் பாவனை செய்து கொண்டார் என்பதனுலும் தெளியலாம். அடிகளைப்போலவே ஏனைய அன்பரும் அங்ஙனமே பாவனையுடையார் ஆவர் என்பதும் இவற்றுற் பெறுதும். இப்பாவனை, திருஎம்பாவை முதலாகத் திருப்பள்ளி எழுச்சியிறுதியாகக் கொண்டவற்றுல் நிகழ்ந்தது என்க. இதனை,

" பாவனை யாய கருத்தினில் வந்த பராவமுது " (திருப்படை. 3.)

என்பர்.

இப்பாவனையின் அழுத்தத்தால் அடிகள் சோதித் தலைமகளாக மாற்றம் பெற்றனர் என்பதை,

" தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத் தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி ஆண்டு " (அதி. 8.)

எனவும்,

" சேலனகண்கள் அவன்திருமேனி திளைப்பன ஆகாதே "
(திருப்படை. 3.)

எனவும்,

" என் அணியார் முலை ஆகம் அளைந்துடன் இன்புறுமாகாதே "
(ஷை. 4.)

எனவும், வருவனவற்றாலும் நன்கு தெளியப்படும்.

சோதித் தலைமகளிர்களாக ஆக்கப்பட்ட உடலை இறைவன் அழித்த பின்னரே சிவபுரத்தில் திருவடியிற் புகுவிப்பான் என்பதற்கு,

" செடிசேர் உடலைச் செலநீக்கிச்
சிவலோகத்தே நமைவைப்பான் "

என இப்பத்தின் இப்பாட்டே போதிய சான்றாகும்.

சிவலோகம் புக்க அடியார் சிவலோகத்திலும் நிலவுலகத்திலும் தலைமகளிர்களாகி வணங்கி அன்பு செய்வர் என்பதையும்,

" பப்பற..................வணங்குகின்றார் " (திருப்பள்ளி. 6.)

என்றமையால் இனிது உணர்ந்துகொள்க.

இனி, சோதித் தலைமகளிராக அமைந்த அவ்வுடலும் முன்செய்த வினைகளே அறுக்கப்பட்டமையின் அழியினும் இனிவரும் புதுவினையால் பிறவி எய்துதலும் கூடும் ஆதலின் " செடிசேர் உடலைச் செல நீக்கி " என்றார். செடி – தீமை.

அவ்வுடலொடு வாழும் வாழ்க்கை, நல்லனவற்றை நயத்தலும் தீயனவற்றை ஒதுக்கலும் புரியாவிடிற் பெருந் தீங்கினுட் புகுத்தும் என்றதைத் திருப்படையாட்சியுள் உய்த்துணர்ந்துகொள்க.

கைக்கிளைப் பகுதியினரும், ஆன்மார்த்த பூசை புரியும் தொண்டர்களும், கோயிற்கண் வந்து வணங்காராய் யாண்டுந் திரிந்து பத்திசெய்து வருவோரும் (சென்னிப். 10), சித்தர்களும் யோகியரும் ஆகிய பகுதியினரை ஐந்திணை அன்பு நெறிப்பட்டு ஒழுகிவருமாறு, " அடியார் ஆனீர் எல்லாரும் " என அழைத்தார். எனவே அவர் அனைவரும் அடிகள் வழி நின்று ஏவல் கேட்டு ஒழுகி வருவோர் ஆவர் என்க. அங்ஙனமாதலை இப் பத்தில் ஏவிய ஏவல்களானும்,

"மன்னிய அன்பரில் என்பணி முந்துற வைகுவது" (திருப்படை. 4.)

என்பதனாலும் உணர்ந்துகொள்க.

' செடிசேர் உடலைக்கொண்டு விளையாடும் விளையாட்டை அகலவிடுமின் ' என்க. அவ்விளையாட்டை இவ்வுடலை அழித்துக் கழல்புக விடுத்த பின் வரப் பெறும் உடலைக்கொண்டு செய்ம்மின் என்றபடி. கடி – காப்பு; " கடிசேர் இருள் " என்றார். அது தன்னுட் குடிபுகச் செய்து ஐந்திணை அன்பு நெறி விளையாட்டை நிலைபெற்றுவர ஆற்றற்கேற்ற உடலை உதவுதலின் என்க.

வந்தடைந்து, மனம் மீள வந்தடைந்து என்க. திருக்குறிப்பாவது தன்னைப் பிரியாது ஒரு பெற்றியராகத் தன்னைப்போலிருத்தல் வேண்டும் என்னும் நோக்கம். வைப்பான் – வைப்பானாகி.

சிவபுரம் சென்று அருள்பெற்ற அன்பர் ஒடுங்கிய அவனொடு ஒடுங்

கியும் விரிந்து சிவலோகத்தில் அமர்ந்துழித் தாமும் தலைமகளிராய் விளையாடுவர் என்பதை,

" சிரிப்பார்..........தலைவா " (கோ. மூ. 9.)

என்பதனானும்,

" கூடிக்கூடி..........அருள் கலந்தே " (குழைத். 11.)

என்பதனானும் அறிந்துகொள்க.

இனிச் சிவபுரஞ் சேர்தற்குரிய பயிற்சி ஒன்றுளது: அது பாவனை முதலாயின புரியுங்காலத்தே இனிய என உவந்தவும், அவன் அருள் பெருமை காரணமாகின என்று வெறுத்தனவுமாகிய எல்லாவற்றையும் ஆனந்தம் தருவனவாகக் கொண்டு அவற்றைத் தலைமகளாகி நயந்து நுகர்தல் வேண்டும். அப்பயிற்சி கைவரப் பெற்றவரே சிவபுரம் புகுவர் என்க. எல்லாத் தலங்களையும் தலைமகளுக்கொப்பாக்கித் தான் தலைமகனுக நுகர்ந்த ஆனந்தப்பேறே திருக்கோவையாராகும் என்க.

தாம் முன்னரே ஆயத்தமுடையோராய்க் கடிசேர் அடிவணக்கத்திலே இருந்து திருக்குறிப்புக் கடைக்கொண்டு வருகின்றமையின் " கடிசேர் வந்தடைந்து " என்றார்.

ஈண்டு "உடல்" என்றது, முன் செய்த குற்றத்தான் வந்த மக்கள் உடலை; மற்றதன் துகளறுத்தமையால் அதனையுங் கெடுத்துத் தெய்வம் சான்ற தலைமகளிர்களாக ஆக்கிய சோதி உடலை. இதனை,

" முன்செய்த பொய்யறத் துகளறுத்
தெழுதரு சுடர்ச்சோதி ஆக்கி " (அதி. 8.)

என்பதனுன் அறிந்துகொள்க.

அடிகளை முதலாகக்கொண்ட அடியார்கள் அனைவரும், வீட்டுட்புகுந்து பந்தம் அறுத்தாராய் தலைமகளிர்களாகித் திப்பிய தேசங்களிலே இறைவனெடு காதல் நுகரும் அவ்வடியார்களோடு உடனுறைகின்றவர் ஆவர் என்க. அவ்வடியார் சிவபுரத்திலும் நிலவுலக முதலாயவற்றினும் ஒரே அமையத்தில் அங்ஙனம் இருந்துவருவோராவர். இவர் அன்னர் அல்லர் என்க.

தெய்வஞ் சான்ற சோதியாகிய மக்களுடல் ஒருபோழ்து பிறவிக்குட் புகுத்தினும் புகுத்தும் என்பது தோன்றச் " செடிசேர் உடலை " என்றார்.

அவ்வீட்டிருந்து வந்த அடியாரும் நீயிரும் ஒரே பெற்றியராக் கொண்டு விளையாடின், அவர் எப்போதும் எல்லாவிடத்தும் நலன் பெற்றவராவர்; ஆகலின் அவ்விளையாட்டை அகலவிடுத்துக் கடிசேர் அடியே வந்தடைந்து கடைக்கொண்டிருப்பின் நீயிரும் அவர்க்கொப்பாவீர் என்பது குறிப்பு.

எண்ணத்தை விளையாட்டுட் புகவிடாது, திருவடிக்கே புகவிடுங்கள் என்க.

ஈண்டுத் "திருவடி"யென்றது சென்னியில் வைக்க உள்ளத்தில் வளர்ந்து உருகவைக்கும் படிமப் பாதத்தை ; எனவே குறிக்கொண்டு ஒடுங்குமின் என்று உணர்த்தியபடி.

விடுமின் வெகுளி வேட்கைநோய்
மிகவோர் காலம் இனியில்லை
உடையான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோடு
உடன்போ வதற்கே ஒருப்படுமின்
அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள்
அணியார் கதவ(து) அடையாமே
புடைபட்(டு) உருகிப் போற்றுவோம்
புயங்கன் ஆள்வான் புகழ்களையே.

ின் மிக்க காலம் இல்லை; ஆதலின் உடன் சேர்தற்கொருப்பட்டுப்போய் அவன் புகழ்களை உருகிப்போற்று வோம் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) இதனின் மிக்க ஓர்காலம் இனி வரப்போவ தில்லை. ஆதலான் சிவபுரத்தின் அழகார்ந்த திருக்கதவம் அடை யாதபடி (அக்காலம் பயன்படுமாறு) வெகுளியையும் வேட்கை நோயையும் விடுங்கோள். எம்மை உடையானது திருவடி இடத்தே முன்னர் ஒன்றியுள்ள பெரிய அழகிய அந்தத் திரளொடு ஒன்றாய்ப் போதற்குத் துணியுங்கோள், (அங்ஙனம் துணிந்தால்) நாம் போய் அடைந்து புயங்கனாகிய ஆள்வானது புகழ்களையே மிகுதியாக மனமுருகி ஆண்டுப் போற்றுவோம் எ - று.

(வி - ரை.) காலந் தாழ்த்திச் செல்வதால் திறவாக் கதவம் என்பது போதரத் "திருக்கதவம் அடையாமே" என்றார். அடையாமே நமக்கு நியமித்த காலத்தாற் புக்கு ஆங்குப் போய் உருகுவோம் என்க.

வேட்கை - விரக தாபம். அது தீர்தற்குப் பற்றுக்கோடின்மையால் வெகுளி தோன்றிற்று. ஆதலின் "வெகுளி வேட்கை" என அடுக்கி மொழிந்தார். தம்மை வஞ்சித்துச் சென்றமையால் வந்த வேட்கையும் வெகுளியும் எனக் கொள்க. வேட்கையும் வெகுளியும் மாறி மாறி நிகழ் தலின், அவன் புகழ்களை ஓதியுணர்ந்து ஈடுபடுதற்கு ஒருப்படாராய், வசை கூற முற்பட்டு, மறமே காரியப்பட்டுச் செவ்விப்பயன் இன்றிக் கழிவர் ஆதலின், எவ்வாற்றானும் அவன் எத்தவறுகளைச் செய்த இடத்தும், ஊடுவ தன்றிப் புலத்தலும் தகாது, பொறுத்தல் கடமை என்பார், "விடுமின் வெகுளி வேட்கை நோய்" என்றார்.

முன்னர்த் திருப்பாட்டால் இவ்வுடலைக் கொண்டு ஐந்திணை அன்பு விளையாட்டை அகலவிடுமாறு கூறியவர் அவ்வன்பு நெறியினின்று வழுவச்செய்யும் புறத்துப் புலவியும் அது காரணமாகத் தோன்றும் வெகுளி யும் விலக்கப்படல்வேண்டும் என்கின்றார். நெஞ்சில் வெகுளாதவர்க்கு வேட்கை அழிவுறும் ஆகலின், புறத்துப் புலவியும் அகத்தில் வேட்கை நோயும் என விரித்தாம்.

இதனின் மிக்க ஓர் காலம் இனி இல்லை என்க.

அடிகளோடு கூடிய அடியவர் கூட்டத்தைப் "பெருஞ்சாத்து" என்றமையானும், உடன் சென்றொன்றிய அடியார்களை,

"அடியர் சிலர் உன் அருள்பெற்றார் ஆர்வங்கூர" (பிரார்த். 2.)

(இங்கே ஆர்வங்கூர அருள்பெற்றவர் என்றமையால் அவரை உடன் ஒன்றியவர் எனக் கொண்டாம்) என்றமையாலவர் சிலராவர் என்றும் ஆர்வம் ஒன்றாது வலிய உயிர்விடுத்து ஒன்றப் புகுந்தவர் சாத்து என்றும் கொள்ளல் வேண்டும் என்க. உடம்படு புணர்த்தலால் இவரும் சாத்தெனவே படுவர்.

வெகுளி முதலாயின உடையார்க்குச் சிவபுரத் திருக்கதவம் அடைக்கப்படும் ஆதலின் அஃது அடைபடாவாறு வெகுளி முதலியவற்றை விட்டு ஆங்கு அடைந்து புயங்கனாகிய ஆள்வோனது புகழ்களையே "புடைபட்டு உருகிப் போற்றுவோம்" என அறிவுறுத்தினார் என்க.

ஊடாதும் வெகுளாதும் அவன் புகழ்களையே புடைபட்டு உருகிப் போற்றுவோம் என்க. புடைபடுதல் - மிகுதிப்படுதல். சிவபுரத்தில் அவனைக் கண்டவுடன் ஊடலும் புலவியும் தோன்றுமாதலின் அவற்றைக் கருதோமாய் அவன் புகழ்களையே உருகிப் போற்றுவோம் என்க. ஊடல் புலவிகளைப் போலிக்கேனும் கொள்ளலாகாது என்பது தோன்ற "புடைபட்டுருகி" என்றார். இஃது அங்குச் சென்றவுடன் செய்யற்பாலது என்க. அங்ஙனம் உருகிப் புகழாவிடில், திருவடிக்கீழ்ப் புகுதலும், அதன்மேல் அவ்வடியவர் போல் தாமும் சிவபுரம் நிலவுலகத்த திப்பிய தேசங்கள் என்பவற்றில் தலைமகளிராக அமைதலும இன்றி மீண்டு வாளா வருதல் நேரும் என்க. புகழ்ந்து ஒன்றிய பின்னர்ப் பெற்றுக்கொண்ட தலைமகளிர் வாழ்க்கைக்கு எல்லாம் அமையும் என்க.

இனி விரைந்து சென்றாலன்றி உட்புகுதல் சாலாது; கதவம் அடைக்கும்போதே நாமும் உடன்சென்று அவன் புகழ்களைப் போற்றில் அக்கதவடைப்பது சிறிது தாழ்த்தப்படும். ஒருவரிருவர் செல்லின் அவர் பொருட்டுக் கதவம் திறக்கப்படாது; ஆதலின் "பெருஞ்சாத்தோடு" சேறல்வேண்டும் எனப் பொருளுரைப்பின் அக்கதவடைப்புடைக்கண் சென்று நின்று இன்னும் சிலர் வருதற்குரியாராக அமைந்தாலன்றி ஆங்கு நிற்றற்குக் காரணமில்லாமையானும், இறைவன் கட்டளை பெற்ற பின்னர் உட்சேரற்பொருட்டு அவ்வனைவரும் புடைபட்டிருந்தார் எனக் கொள்க. விரைந்து வழிச்செல்லற்பொருட்டு அங்ஙனம் ஏவினர் எனக் காரணமும் உடன் கூறிக்கொள்க.

அடியவர் எல்லாரையும் உடன்கொண்டு செல்வது அடிகள் கருத்தாகலின் அங்ஙனம் கூறினர் என்க.

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
　　புயங்கன்தாளே புந்தி வைத்திட்டு
இகழ்மின் எல்லா அல்லலையும்
　　இனிஓர் இடையூறு அடையாமே

திகழும் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்தாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே. 6

இதுறுற் சிவபுரம் சென்று முன்னும் பின்னும் செயற்பாலன இவை என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) (முதலில்) இனிமேல் எவ்வகை இடையூறும் நம்மை அடையாதபடி, விளங்கும் மிகுபுகழ் நிரம்பிய சிவபுரத்துட் சென்று, சிவன் சேவடிகளை வணங்கி, அதன்மேல் அங்குத் தங்கி வரும் அடியார்களுடைய முன்னிலையிற் சென்று மனமுருகி நிற்போம், (மற்றதன் பின்னர்) புயங்கன் திருவடிகளையே மனத்துட் பதித்துப் புகழ்தலையும், தொழுதலையும், பூவால் அலங்கரித்தலையும் செய்யுங்கோள்; முன்னர் அவனைப் பிரிந்தமையால் உளவாகிய எல்லாத் துன்பங்களையும் இகழ்ந்து ஒதுக்குங்கோள் எ - று.

(வி - ரை.) அவனருளிய சிவபதப் பேற்றை நினைக்கிற் புகழ்தலும் தொழுதலும் திருவடி நெஞ்சு வைத்தலும், அவ்வைப்பால் எல்லா அல்லல் களையும் இகழ்தலும் தாமே முறையே போதரும் என்க.

அடியார் முன்னின்று நெஞ்சம் உருகி நிற்பது, அவர் நடுவுள் தாமும் [illegible]

"நெஞ்சம் உருகி" எனவே வாழ்த்தும் வணக்கமும் உடன்கொள்ளப் பட்டன. முன்னிற்றல் வணக்கத்தையும், நெஞ்சுருகுதல் வாழ்த்தினையும் புலப்படுத்தின. நிகழ்தல் - தங்குதல்; நிற்போம், அவனருள் பெற்ற பின்னர் அவ்வடியவருடன் நாமும் ஒன்றுகூடிப் புகழ்தல் முதலியவற்றைச் செய்வோம் என்றபடி. அங்ஙனம் செய்து ஒன்றுகூடிய பின்னர் ஊடினும் உணர்த்த உணரினும் கூடினும் எல்லாம் அமையும் என்க.

சிவபுரத்துட் சென்றவுடனே எல்லா இடையூறுகளும் அடையாது அகலும் என்க.

இத்துணை அல்லலுற்று அவரைக் காண நேர்ந்தமையின் தம் மனம் உருகியாங்கே தம்பம்போல் நின்றனர் என்க. அவனை வணங்கியதும் அடியாரையும் கண்டு வணங்கப் புக்கவர் நெஞ்சமுருகித் தம்மை மறந்து அங்ஙனமே நிற்பதாவார் என்க.

தன்னைச் சார்ந்தார் இடையூறு எய்தாமல் திகழும் சிவபுரம் என்க.

முதற்கண் வணங்கி, முன்னின்று உருகி, அவருடன் கூடி, புகழ்தல் முதலாயவற்றைச் செய்யின் அடியவர் ஒப்பவே அருள்பெறலாம். பின்னர் நீயிர் விழைந்தவாறெல்லாம் ஆற்றலாம் என்றபடி.

இறைவனை நிலைபெறச் சார்தல் சிவலோகத்தானும், அங்ஙனமே தம்மை நிலைபெறுமாறு ஆக்கம் தரும் அடியார்களைச் சார்தல் அவன் தன்னானும் உளவாகும் ஆதலின் இடையூறு அடையாமைக்கும் அல்லலை இகழ்தற்கும் சிவன்தாள் வணங்குதலும் அடியார்முன் நெஞ்சு உருகி நிற்றலும் முதற்கண் செய்ம்மின் என்றார்.

இவை நிறைவேறிய பின்னர் புகழ்தல் முதலாயினவும் மற்றதன்மேல் நீயிர் விழைந்தவை எல்லாம் தாமே நிகழுதலும் ஆகும் என்பது குறிப்பு.

விழைந்தவையெல்லாம் என்றது இகழ்ந்து ஊடலும் புலத்தலும், உணர்ந்து புகழ்ந்து கூடுதலுமாகியவற்றை.

வெகுளி முதலாயவற்றை விடுத்துச்செல்ல இன்னே ஒருப்படிற் சிவலோகக் கதவம் அடைபடாது. உள்ளே புக்கு வணங்கி, உருகி, முன்னர் நின்று புகழ்தலாயவற்றைச் செய்ம்மின் என்றபடி.

நிற்பார் நிற்கநில் லாவுலகில்
நில்லோம் இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாம் திருமேனிப்
புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாம் தாழாதே
நிற்கும் பரிசே ஒருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தாற்
பெறுதற்(கு) அரியன் பெருமானே. 7

இதனால், காலந்தாழ்த்தின் பெம்மான் பெறுதற்கரியன் ஆகலின், நிற்பார் நிற்க நாம் தாழாது நிற்கும் பரிசே ஒருப்படுமின் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) எம்முடன் வாராது (பிறவிக்கு நல்லவராகி) நிற்பவர்கள் நிற்பாராக, நிலை பேறற்ற இவ்வுலகில் இனி, யாம் நில்லோமாய்ச் செல்லுவோம், குணத்தினால் ஒப்பாகிய திருமேனியையுடைய புயங்கனாகிய நம்மை ஆள்வோனுடைய பொன்னடிக்கண்ணே செல்லவேண்டுமென்று நிற்கின்றவர்களே, அச்செலவிற்கு உரியவெல்லாம் காலம் தாழ்த்தாது உடன்கொண்டு நிற்கும் இயல்பிலே ஒன்றுபடுங்கோள், அங்ஙனம் உடன்கொள்ளுதற்காக இன்னும் காலம் தாழ்த்துவீர்களாகில் எங்கள் பெருமான் பின்னர் பெறுதற்கியலாதவனாவான் எ - று.

(வி - ரை.) அடியார்களை ஒன்று சேர்தற்காக எவ்வளவு கூறியும் அவர் தெருளாமை கண்டு அடியாரானீரெல்லாரும் எனத்

விளித்து அறிவுறுத்தியும், கதவம் அடையாதபடி வெகுளி முதலாயவற்றை விடுத்து ஒருப்படுமின் ; மிக்கவோர் காலம் இனி இல்லை என்று நெருக்கி யும், அங்குச் சென்று செயற்பாலவற்றை அறிவுறுத்தியும் அவருட் சிலர் விரைவு கொள்ளாதிருத்தலைக் கண்டு ஊக்குதற்பொருட்டு " நிற்பார் நிற்க " என விரைவுறுத்தியும் மொழிந்தாரென்க.

" செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின் " (திருப்பாண்டி. 4.)
என்றது உலகத்தாருள் அடியாராகியோரைத் திரட்டியதைக் குறிக்கும். செவ்வி பெற்றோருட் காலந் தாழ்த்தியவர்களே " நிற்பார் நிற்க " எனறதனுல் குறிக்கப்படுவர் எனக் கொள்க.

" இனி " என்றது உலகத்தின் நிலையாமையை உணர்ந்து கொண்ட தருணத்தையும், அடியார்களுக்கு எவ்வளவு எடுத்துக் கூறி நெருக்கியும் தெருளாத கால இறுதியையும் உணர்த்தியது.

இவர்களை இன்னும் வழிப்படுத்தும்படி நில்லோம் என விரிக்க.

நில்லாவுலகம் - நிலையற்ற உலகம். தாமதிப்பின் இவ்வுலகத்து அல்லலுறுதல் வேண்டும் என இதனுல் அச்சுறுத்தியவாறு. நில்லாவுலகத் தில் நிற்பார் நிற்க, யாம் போவோம் என்க. " நில்லாவுலகம் " இரு பகுதிக்கும் ஒத்ததேனும் நிலையாமை உணர்ந்தவர் அங்கு நிற்பார் அல்லராகலின் அதனை " நாம் " என்பதனுக்கே கொண்டாம் என்க. நிலையாமையை உணர்ந்தவரேனும் உணரார்போலப் பேழ்கணித்தலின் அங்ஙனம் கூறினர் என்க. பொற்பு - நற்குணம்.

" பொற்பினின்றது பொலிவு " (கம்பரா. பால. நாட். 35.)

என்றதூஉம் காண்க. குணமும் மேனியும் ஒன்றுபட நின்றன என்க.

"பொற்பு" என்றதனை அழகெனக் கொண்டு தலைமகனும் தலைமகளும் 'உருவ முதலியவற்றுள் ஒத்திருத்தல் வேண்டும் என்பது கருதி அங்ஙனம் கூறினருமாம்.

" நிற்பீர் " என்றது முன்னரே போக்கு ஒருப்பட்டு நின்ற அடியார் பலரையும் என்க.

"எல்லாம் தாழாமே நிற்கும் பரிசா"வது எல்லாச் சுதந்தரமும் உடையவர் ஆதலும், புயங்கனுடைய பூங்கழலில் ஈடுபாடுடையராதலும், காலத்தின் அருமையறிதலும், அவன் திருக்குறிப்பறிந்து கடைப்பிடித்த லும் அன்ன பிறவும் என்க.

பேழ்கணித்தல் - காலந்தாழ்த்தல். அவரைப்போல நீங்களும் உணர் வின்றிப் பேழ்கணித்தல் என்க ; தெருளாதவரைத் தெருட்டும் பொருட்டுத் தாமும் நின்று காலந்தாழ்த்தலை. அங்ஙனம் நீரும் பேழ்கணித்தால் நுமக்கும் அவரே போன்று பிற்பாற் பெம்மான் அரியனுவான் ; ஆகவே நும்மொருப்பாட்டுச் செவ்வியும் பயனற்றதாகும் என்றபடி. இங்ஙனம்

எச்சரித்தார் என்க. ஒருப்பட்டு நிற்பாரை எச்சரிப்பதுபோலக் காலம் தாழ்ப்போரை ஊக்குவித்தார் என்க.

பெம்மான் பிற்பாற் பெறுதற்கு அரியன் ஆதலின் இன்னே செல்வாம் என்க. இவ்வுலகோர்க்குப் பொன்போன்றது அவ்வுலகத்தில் அவன் திருவடி என்க.

இனி, ஏனையோர்க்காகப் பேழ்கணித்து நிற்பீர், ஆள்வான் அடிக்கே நாம் நில்லாது செல்வோம் என்று பேழ்கணியாது ஒருப்பட்டு நிற்போரை உளப்பாட்டுத் தன்மையாக்கி நாமென்றும், பேழ்கணித்து நிற்பார்க்கு எச்சரிப்பதுபோல இன்னும் ஒருப்படாதாரை ஒருப்படுத்த ஊக்கியதுமாம்.

இனி, நகர் காவலர்கள், 'ஏடா ! கள்ளா ! ஏன் பதுங்குகின்றாய் ? ஏன் ஓடுகின்றாய் ?' என்றாங்கு ஏவி ஊரவர்களை எச்சரித்தற்கும் கள்வரை அகற்றுதற்கும் உபாயமாகுமாறே அடிகளும் 'பேழ்கணிப்பாரை விடுத்து யாம் செல்வோம்; செல்லாது நிற்பின் நாமும் அவனைப் பெறேம் ஆதலின்' என்றார்.

இன்னும் இதனால், ஒருப்பட்டு நிற்பார் அனைவரையும் தெருட்டி, ஊக்கங் குன்றாவாறு இங்ஙனம் எச்சரித்தார் என்க. இங்ஙனமே முன்னும் கூறிக்கொள்க.

பெருமான் பேரா னந்தத்துப்
  பிரியா திருக்கப் பெற்றீர்காள்
அருமால் உற்றுப் பின்னை நீர்
  அம்மா அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவம்
  திறந்த போதே சிவபுரத்துத்
திருமால் அறியாத் திருப்புயங்கன்
  திருத்தாள் சென்று சேர்வோமே. 8

இதனால் இங்ஙனம் பேழ்கணித்தால் சிவபுரத்துக் கதவம் அடைப்பட்டு அருமாலுற வேண்டுமாதலின் இன்னே சென்று திருவடி அடைவோம் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) பெருமான் அருளும் பெரிதாகிய ஆனந்த நுகர்ச்சியுள் பிரியாதிருக்கும் பேறு பெற்றவர்களே ! பின்னர் நீயிர் போக்குதற்கு அரியதாகிய மயக்கத்தினை எய்தி இரங்கிப் பலபடநும் குறை கூறாது, இறைவன் திருக்கோயிலினது அழகிய பெரிய மணிகள் கட்டிய, திருக்கதவம் திறக்கப்பட்ட இப்பொழுதிலேயே சிவபுரத்துள் வீற்றிருக்கும் திருவமைந்த புயங்கனது, திருமாலால் அறியப்படாத திருவடியைச் சென்று சேர்வோம் எ - று.

(வி - ரை.) ஒருப்பட்டிருக்கின்றமையின் அங்குக் கதவு திறக்கப்பட்டு அவனடியிலிருந்து பேரானந்தம் அவர்பால் வந்து பாய்கின்றது

என்பது தோன்ற, "பெருமான் பேரானந்தத்துப் பிரியாதிருக்கப் பெற்றீர்காள்" என அழைத்தார். அவர்க்கு வரும் பேரானந்தம் அவர்தம் செந்நெறி ஒழுகலாற் போந்ததென்க.

அந்நெறி தப்பின் அவ்வானந்தப் பேறும் தப்பும் என்க. அவர் நெறி தப்புதலென்பது பேழ்கணித்தலே.

அவ்வடியவர் அணுகுவதற்குரியது இந்நேரம் எனவும், அந்நேரத்தில் இத்துணை நேரந்தான் திறக்கப்பட்டிருத்தல் வேண்டும் எனவும், அந்நேரக் கழிவும் கதவடைப்பும் ஒருகணத்தே நிகழ்தல்வேண்டும் எனவும், இறைவன் ஏவியுள்ளான். ஆதலின் அது அங்ஙனம் திறக்கப்பட்டபொழுதே உட்செல்லுதல்வேண்டும். அவ்வுட்புகுநேரம் கடந்துபோயின் அது திறக்கப் படாது ஆதலின், இப்பொழுதே நாம் புறப்படினன்றி ஆங்கு அக்குறித்த நேரத்தில் அடைவதும் ஆங்குக் கதவம் திறக்கப்படுவதும் நிகழா எனவும்

திருக்கதவங்களின் பத்திகளிற் கூட்டிய "மணி" என்க. அவை திறக்கும்போதும் அடைக்கும்போதும் ஒளிசெய்யுமென்க. செவ்வியுடையார் பதன் கண்டு புகுநேரத்தில் திறந்தடைக்குங் கதவம் என்க.

அம்மா, விகாரம்; கேட்பிக்க வந்த இடைச்சொல்; அழுங்குதல் - இரங்குதல்; அரற்றுதல், பலபடியாகக் குறைகூறுதல். அஃதாவது அடிகள் நேரத்தோடு தம்மை ஊக்கிப் பயன்படுத்திலர் என்றுங்கு அடிகளைக் குறைகூறிப் பழி சுமத்தல்.இனி, அங்ஙனம் குறைகூறலாகாது என்பதுபட "பின்னை நீர் அம்மா அழுங்கி அரற்றுதே" என்றார். காலந் தாழ்த்தக் கதவம் திறவாமையால் "அருமாலுற்று" என்றும் அம்மால் நீக்கற் கியலாது என்பதுபட "அருமால்" என்றும் கூறினார்.

பின்னை - அதன்பின்னை; இன்னும் திறந்து அடைத்திலது என் பதனை மணி ஒலி கேளாமை காட்டி விரைவுபட ஊக்கினார் என்க.

மணிஒலி கேளாமையால் நமக்குரிய காலம் விரைந்து அணுகும். அப்பொழுது அணுகி அது திறந்தவுடனே தாள் புகுவோம் என்க. புகுதலினும் தாழ்த்தலாகாது என்பதுபடத் "திறந்தபோதே" என்றார்.

திருமகளினும் வீறுற்றது திருவடி என்பதனை உணர்ந்திருப்பின் அம்மால் அவனை விடுத்துத் திருவடியுட் புகுந்திருப்பான் என்பது தோன்றத் "திருமாலறியா.........திருத்தாள்" என்றார்.

இனி அவர்க்கு வரும் ஆக்கங் கருதி அது வருமுன்னே அவர் உடற்கண் வீற்றுத் தெய்வம் வந்து குடிபுகுதலின் அவ்வாக்கப் பொலிவு எய்துவர். அதனைக் கண்டு கூறினாருமாம்.

திருவும் மாலுமாம் திருவடியாகிய திருவுடைமையால் புயங்கன் "திருப்புயங்கன்" என்றும் அத்திரு அடியென்பது தோன்றத் "திருவடி" என்றும் கூறினார். இனிப் புயங்கனது 'சிவபுரத்தரசுத்திரு' எனினும் அமையும்.

செல்லாவிடில் சேரற்பாலேம் அல்லேம் என்க.

சேரக் கருதிச் சிந்தனையைத்
திருந்த வைத்துச் சிந்திமின்
போரிற் பொலியும் வேற்கண்ணாள்
பங்கன் புயங்கன் அருளமுதம்
ஆரப் பருகி ஆராத
ஆர்வம் கூர அழுந்துவீர்
போரப் புரிமின் சிவன்கழற்கே
பொய்யிற் கிடந்து புரளாதே.

இதனால் பொய்யில் உழலாது சேருமாறு திருவடியைச் செறிந்து, பொருந்துமாறு விரும்பிச் சிந்தனையைத் திருத்திச் சிந்தித்து அமுதம் பருகி அழுந்துவீர் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) இவ்வுலகப் பொய்களுள்ளே கிடந்து மாறிமாறி இறந்து பிறவாமல் சிவன் திருவடிக்கண்ணே செறியப் பொருந்து மாறு விருப்பம் கொண்டு, அதனகத்துக் குடிசேரக் கருதிச் சிந்தனையை அழகுற வைத்து எண்ணுங்கோள், போர்த்தொழிலிலே விளக்கமுற்றுத் தோன்றும் வேற்படைபோன்ற கண்ணையுடைய வளாகிய உமாதேவி பங்கனாகிய புயங்கன் அருளுகின்ற இன்ப அமு தத்தை நிறைய நுகர்ந்தும் நிறைவு அடையாத வேட்கையானது மீண்டும் மிகுதிப்பட அவ்வின்ப அமிழ்தத்துள் ஆழ்ந்துபோவீர் ஆவீர் எ - று

(வி - ரை.) திருந்துதல் - அழகுறுதல். போரிற் பொலியும் வேல் இரத்தம் முதலியன தோயப் பெற்றும் மாற்றாரைக் கொன்றும் விளங்கும்; அங்ஙனமே அம்மையார் அருட்கண்ணும் செவ்வரி படர்ந்து பிறவிப் பகையை ஒழிக்கவல்லது என்க.

போரல் - செறிந்து பொருந்துதல்; புரளுதல் - (இறந்து பிறந்து) மாறிமாறி வருதல்.

இவ்வுலகம் பொய்களுட் கிடந்து மாறிமாறி இறந்து பிறந்துவாராமல், சிவன் திருவடிக்கண்ணே செறியப் பொருந்த விருப்பங்கொள்ளிற் சேரக் கருதுதலும், அக்கருத்துமேலீட்டாற் சிந்தனைதானே அழகமைதலும், அவ்வழகமைதியால் அம்மையின் கடைக்கண் அருளுண்டாகி மாசுதீர்க்கப் பெற்று இவ்வுலகில் இன்ப நுகர்ச்சியும் பற்றுமையால அவ்வுலகிற் சென்று அவ்வமுத வெள்ளத்துள் அழுந்திக் கிடத்தலும் முறையே வரப்பெறும் என்க.

அழுந்துவர் என்றமையால் அவ்"வமுதம்" வெள்ளம் என்பது பெற் றும். முன்னுள்ள புலவியானும் வேணவாவானும் மிக்க வேட்கை தீர "ஆரப்பருகி" என்க. அதனைப் பருகியதும் மேலும் மேலும் பருக

வேண்டும் என்னும் பேரவாத் தோன்றும். அதுவுந்தீர அழுந்துவீர் என்றும், அவ்வழுந்துகையும் அதனுட்கிடந்து அழுந்தி வந்தாலொழியத் தீராது என்பது பட "ஆர்வங்கூர அழுந்துவீர்" என்றுங் கூறினர்.

சேரக் கருதுதல்வேண்டும், சேரக் கருதினல் சிந்தனையைத் திருந்த வைத்துச் சிந்தித்தல்வேண்டும். அங்ஙனம் சிந்தித்தால் இவ்வுலகில் அருளமுத நுகர்ச்சியும், அவ்வுலகில் அருளமுத வெள்ளத்துள் ஆழ்ந்து கிடத்தலும் நேரும். இங்ஙனம் நேர்தற்குப் பொய்யிற் கிடந்து உழத்தல் பொல்லாங்கு விளைக்கும் என்பதை யுணர்ந்துகொண்டு சிவன் சேவடிக் கண்ணே செறியப் பொருந்துமாறு விரும்புதல்வேண்டும் என்க.

சேரக் கருதிச் சிந்தித்தற்கும், பொய்யிற் கிடந்து புரளுதலில் வெறுப் புற்றுச் சிவன் சேவடிக்கண் விருப்புறுதற்கும் இடையே அருளமுதம் ஆரப் பருகுதலும் ஆர்வங்கூர அழுந்துதலும் வைக்கப் பெற்றமை அறிந்து இன்புறற்பாலது.

சிந்தித்தல் ாண்டையதாகலின் அதனுக்கு ஏற்ப ஆரப்பருகுதலையும், ஆராத ஆர்வங்கூர அழுந்துதலை அவ்வுலகத்திற்கும் உரிய எனக் கொண்டாம்.

இவ்வுலகத்துள் நுகரும் அமுதம் முன்னர்க் கொண்ட வேட்கையைக் களையும் அளவினது. அவ்வுலகத்து நுகர்ச்சி அளவற்றதென்க.

**புரள்வார் தொழுவார் புகழ்வாராய்**
**இன்றே வந்(து)ஆள் ஆகாதீர்**
**மருள்வீர் பின்னை மதிப்பார்ஆர்**
**மதியுட் கலங்கி மயங்குவீர்**
**தெருள்வீர் ஆகில் இதுசெய்ம்மின்**
**சிவலோ கக்கோன் திருப்புயங்கன்**
**அருள்ஆர் பெறுவார் அகலிடத்தே**
**அந்தோ அந்தோ அந்தோவே. 10**

இதனுல் ஆளாக வெருளுகின்றவர்களே! மதிப்பு இழவாதபடி நீயிர் தெருள்வீரேல் ஆளாகுங்கோள் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) அன்பின் மேலீட்டாற் புரள்வாராயும் தொழு வாராயும் புகழ்வாராயும் ஆட்படாதவர்களே! ஆட்படுதற்கு வெருளுகின்றவர்களே! நும்மைப் பின்னர் நன்கு மதிப்பவர் யார்? இயற்கையறிவும் அகத்தே கலங்கப்பெற்று நிலையழிவீர்கள்; யான் கூறியவற்றைத் தெளிந்துகொள்வீராயின் இதனைச் செய்யுங்கோள்; சிவலோகத்து வேந்தனுகிய திருப்புயங்கன் செய்யும் அருளை இவ் வகன்ற உலகிடத்தே அந்தகோ! அந்தகோ! அந்தகோ! யார் பெறுவதற்குரியவராவர் எ - று.

(வி - ரை.) ஆளாகாதீர்களே, ஆளாகத் தடை செய்யும் மருளுடைய வர்களே என்க. மருளுதல் - வெருளுதல். நுமக்குரிய மதிப்பு நும்மாற்ற லான் வந்ததன்று ; நும்மை உடையான் அருளான் வந்ததன்றே. ஆதலின் அவனுக்கு ஆட்படாதகாலே அவன் அருளான் எய்திய நன்கு மதிப்பும் தானே நீங்குமாதலின், மற்றதன் பின்னர் நும்மை மதிப்பவர் யார்? ஒரு வரும் இலர் என்றபடி.

மருட்சி காரணமாகப் பகுத்தறிவு கலங்க, இயற்கையறிவும் கலக்குற்ற தென்க. "உள்" என்றமையால் அகத்தறிவாகிய இயற்கையறிவு என்பது பெற்றும். பகுத்தறிவென்றது தம்மால் அறியப்பட்ட அறிவினை. தம்மால் அறியப்படாது இயல்பாக அறியவேண்டியவற்றை அறியவல்லது இயற்கை அறிவென்பு. புலன்களைக் கொண்டு அறியும் அறிவு பகுத்தறிவாகும். புலன் களின் உதவியால் தள்ளுவ தள்ளிக் கொள்ளுவ கொண்டு விழுங்கிய உணவு தம்மால் அறியப்படாதே இரத்தம் முதலியன ஆக்கம் பெறச் செய் வதே இயற்கையறிவு என்க. பகுத்தறிவின் உட்பகுதியாகிய அகவறிவும் கலங்கி என்க. மயங்குதல் - நிலை அழிதல்.

வெருட்சி காரணமாகப் பகுத்தறிவு கலங்கலின் அகத்தறிவும் கலங்கி நிலையழிந்தீர் என்க. இந்நிலை கேடு மருட்சியான் எய்தியதென்க.

தம்மை இறைவன் கயக்க வைத்து ஆண்டுகொண்டமையால் எய்திய புலவி முதலியவற்றால் அவன்மேல் எய்திய மருட்சியே ஆட்படாவாறு தடுத்ததென்க. அத்தடையால் மதிப்பின்மையும் நிலையழிதலும் எய்தின என்க.

அங்கப் பிரதட்சிணம் செய்யும்போதே தொழுதலும் புகழ்தலும் நிகழும் என்க.

இதுகாறுந் தாழ்த்திய பாவந் தீர இது செய்தல் வேண்டும் என்பதும், அதுவும் நாளை முதலாகப் பயன் தராது ஆதலின் இன்றே செய்தல் வேண்டும் என்பதும், இன்று வாளா ஆட்படுதலும் பயனின்றும் என் பதும் உணர்த்தப்பட்டன என்க. இன்றே வந்தாளாகாதீர்க்குப் பயன் மருளுதலாம் என்க.

'நும்மருள் தீர்ந்து தெளிவுறுதற்கு விருப்பங்கொள்வீராயின்' என விரிக்க. "இது செய்தல்" என்றது, புரண்டு தொழுது புகழ்ந்துகொண்டு இன்றே வந்து ஆளாகுதல். இது செய்யின் மருட்கையும் நிலைகேடும் நீங்கப்பெறும் என்க.

வற்புறுத்தேன் என்பது தோன்றத் "தெருள்வீராயின் இது செய்ம்மின்" என்றும், அவன் அருள் நுமக்கின்மையின் நும் முயற்றுளே ஆளாதலும் இயன்றிலது என்பது தோன்ற "சிவலோகக்கோன் திருப் புயங்கன் அருளார் பெறுவார்" என்றும், அவன் அருள் பெற்றுக்கோடற்கு ஏற்றது இவ்வுலகே என்பது தோன்ற "அகலிடத்து" என்றும்,

நிலையில் இவர் இன்னும் தெருளாது இருந்து வருகின்றனரே; இவர் செயலைக் கண்ட எனக்கு இரக்கம் வருகின்றதே, இறைவ, நீ இன்னும் இரங்கி அருள் செய்திலையே; நின் மனம் இரும்பா, கல்லா என்பன வெல்லாம் கருதி, "அந்தோ, அந்தோ, அந்தோவே" என்றும் கூறினர்.

இனி அவர்க்காகவும், அவர் நிலைகண்ட தமக்காகவும், இன்னும் இரங்கியருளாத இறைவனுக்காகவும் "அந்தோ" என்பதனை மும்முறை அடுக்கிக் கூறினர் என்றலும் ஒன்று. இவ்வுபாயத்தால் அவரைத் தெருண்டு ஆட்படச்செய்தார் என்பது பெற்றும்.

புயங்கன் அருள், திருவடியுமாம். பிறப்பிறப்பிற்குரிய அகலிடத்தே பிறவாமையாகிய வீடுபேற்றை என விரிக்க. "மதிப்பார் ஆர்; அருள் ஆர் பெறுவார்" என்றமையால் இருமையும் இழப்பார் என்பது பெற்றும். இப் பகுதிப் பாட்டுகளின் பொருள் செங்கதிரின் ஒளிபோன்று யாண்டும் சென்று பரத்தலைக் கண்டு இன்புறுக.

திருச்சிற்றம்பலம்

# திருப்படை எழுச்சி

"திருப்படை யெழுச்சி"யாவது அன்பராளுகிய திருவிதாகிய படை திரண்டு வானவர் நாட்டைக் கைக்கொண்டு, அந்நாட்டிலுள்ள மாயப் படை வந்து மயக்கிக் கலக்காது அந்நாட்டை அகப்படுத்திக்கொண்டு அடக்கி ஆளற்பொருட்டு எழுதல்.

அன்பராலாகிய படை என்பது தோன்ற அது "திருப்படை" யெனச் சிறப்பிக்கப்பட்டது. இப்படை இன்று செய்யாமையாகிய கோட்பாடுடையது என்பது தோன்ற மெய்யறிவு வாளாகவும், நுண்ஞெலி செய்யும் உடுக்கை போர்ப்பறையாகவும், தியானித்தல் வெண்குடையாகவும், திருநீறு மெய்புகுபையாகவும், தொண்டர் முதலியோர் போர்ப்படை வீரராகவும், இறைவன் போர்த்தலைவனுகவும் உருவகிக்கப்பட்டமை காண்க. திருப்படையாட்சியில் இறைவன் அன்பர்தம் படைத்தலைவனுக அமர்வது நன்கு தெளியப்படும்.

யாத்திரைப் பத்தால் அன்பர் செவ்வி நிரம்பியமை கூறி இதனுல் அவர் படை எழுதலைக் கூறுதலின் இஃது அதனேடு இயைபுடைத்தாயிற்று.

அணிந்துகொள்வனவற்றை அணிந்து கொள்ளுங்கள் எனவும், அங்ஙனம் அணிந்து கொண்டவரே ஆங்காங்குப் பின் முன்னுகப் படையில் சூழ்ந்து போதற்குரியராதலின், "தூசி செல்வீர்," "சூழப்போகீர்," "கடைக்கூழை செல்மின்கள்" எனவும் காரண காரிய இயைபுபட இப்பகுதிக்குரிய இரு திருப்பாட்டுக்களும் அமைக்கப்பட்டிருத்தலின் இயற்கைப் பொருளடைவு நூற்பொருளடைவு என்னும் இரண்டும் ஒன்றுபட்டன என்க.

இஃது திருத்தில்லையில் அருளிச்செய்யப்பட்டது என்ப

## பிரபஞ்சப் போர்

### கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

ஞானவாள் ஏந்தும்ஐயர் நாதப்பறை அறைமின்
மானமா ஏறும் ஐயர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவசம் அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம் மாயப்படை வாராமே.

தேவர் நாட்டை அடக்கிக்கொண்டு மாயப்படையின் ஆற்றலை அடக்குவது கூறப்படுகின்றது.

(பொ - ரை) அன்புநெறி வீரர்காள்! மெய்யறிவாகிய வாட் படையை ஏந்தும் நம் போர்த்தலைவருடைய நுண்ணொலியை யுடைய உடுக்கையாகிய போர்ப்பறையை அடியுங்கோள்! பீடு சான்ற எருத்தினை ஊர்தியாகக்கொண்டு ஏறும் தலைவர்க்குரிய தியானித்தலாகிய வெள்ளிதாகிய குடையைக் கவியுங்கோள்! தகுதி பொருந்திய வெண்ணீறாகிய மெய் புகு பைக்குள் முற்றும் புகுந்து கொள்ளுங்கோள்! நாம் மயக்கமாகிய பகைவனுடைய படைகள் அணுகிவாராதே விலக்கி வானவூரை அடக்கிக்கொள்வோம் எ - று.

(வி - ரை.) வாட்போரில் தலைவரும் எருத்தினைப் போர்முனையிற் செலுத்தும் தலைவரும் ஆவார் என்க. அவ்விரண்டினும் தலைமைப் பாடுடையவர் என்பார், "வாளேந்தும் ஐயர்" எனவும், "மானமா ஏறும் ஐயர்" எனவும் திறல் வேறுபாடு தோன்ற ஒருவரையே இருமுறையாகக் கூறினர்.

மானம் - கௌரவம். பீடுமா, எருதாகிய மா. அதனைக் குதிரையாகக் கோடல் ாண்டைக்கேலாது. ஏறுடை ாசனே அன்புநெறிக்கண் அடியவர் களை ஆட்கொள்ளும் பொருட்டு ஆனந்தக் குதிரையூர்ந்து வந்தான் எனக் கீர்த்தித்திருவகவற்கண்ணும், அது புலப்படவே,

"ஏறுடையா னெனையாளுடை நாயகன் என்னுள் புகுந்திடினே"

எனத் திருப்படையாட்சிக்கண்ணும் கூறுதலின் என்க.

மதி - மதித்தல், தியானித்தல்; மதிபோல வட்டத்ததாகிய வெள்ளிதா கிய குடை எனவும் தியானித்தலாகிய தூயகுடை எனவும் இயைக்க. மாயப்படையின் வெப்பம் அணுகாமல் அது நிழல் செய்யும் என்க. இங்ஙனம் ஆயத்தமாகி அவன் தலைமையில் வானவூரினைக் கொள்ளும் முகத்தால் ஆங்குள்ள மாயப்படையின் வலியையும் அடக்கிக்கொள்வோம் என்றபடி.

துறக்கம் இன்பமுடைத்தாகக் காட்டி இறுதிக்கண் பிறவியிற் கொண்டு சேர்த்தலின், அது "மாயப்படை" உடையதாயிற்று என்க. மாயம் - வஞ்சம்.

இனி, வானவூர் (அண்டநாடு) என்பதற்குச் சிவபுரி, சிவநாடு என்று பொருள் கூறுவாரும் உளர்.

"பிறவிப்பகை கலங்கப் பேரின்பத் தோங்கும் பருமிக்க நாதப்பறை" (திருத்தசாங். 8) என்றார் முன்னும்.

தற்காப்புக்கு வேண்டியவைமட்டும் கொண்டார், அதன் மேலும் வந்து தாக்குமெனில் தலைவன் ஏறூர்ந்து வந்து வாள்கொண்டு அப்படை சிதற வீசித் தொலைப்பான் என்க.

"நாதப்பறை" அறைதற்கும் மதிக்குடை கவித்தற்கும் வானவூர்

கொள்ளற்கும் உரியவராவர் என்றமையால் அவர் இறைவன் தானையவர் என்பதுதானே போதரும் என்க.

நாதப்பறை அறைதற்கும் மதிக்குடை கவித்தற்கும் நீற்றுக் கவசம் புகுதற்கும் உரிமை பெற்றவரே இறைவன்தன் படையாளர் ஆதற்கு அருகராவர் என்பது இதனாற் பெற்றாம். உடம்படு புணர்த்தலான் அடிப் படையாளர் அவ்வருகதை பெற்றார் ஆவர் என்பது பெறப்பட்டது. நம் கடனை நிறைவேற்றின் அவனும் தன் கடனைத் தானே வந்து தீர்ப்பான் என்க.

ஆனேறூர்தலும் வாளேந்துதலும் அவன் தொழில். ஒழிந்த தற் பாதுகாப்புக்கு ஆனவற்றைச் செய்தலே நம் கடன் என்றபடி. தற்பாது காப்புக்கும் அவனது இலச்சினையிட்ட பொருள்களே வேண்டப்பட்டன; அவன் பெருமை நினைந்து அவன் அடிமைகளை மாயப்பகைவர் வந்து நெருங்கார் ஆதலானும் அவைகளே உரிமையும் காப்பும் ஆகலானும் என்க.

சிவபுரிக்குச் செல்லும் நெறியிடைக்கண் அண்டர் நாட்டுச் சிற்றின்ப மாகிய மாயப்படை வந்து அல்லல் செய்யாது பாதுகாவல் கொண்டவாறும்.

தொண்டர்காள் தூசி செல்லீர், பத்தர்காள் சூழப்போகீர்;
ஒண்திறல் யோகிகளே பேரணி உந்தீர்கள்,
திண்திறல் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்;
அண்டர்நா டாள்வோம்நாம் அல்லற்படை வாராமே. 2

இதனால் அண்டர் நாட்டை அடக்கி மாயப்படையை ஒடுக்கற்கு ஏற்ற படை வகுத்துச் செல்ல ஏவப்படுகின்றது.

(பொ - ரை.) தொண்டர்களே! நீங்கள் முன்னணிப் படையாகச் செல்லுங்கோள் அன்பர்களே! புடைசூழ்ந்து செல்லுங்கோள்! ஒண்மையாகிய திறல் வாய்ந்த யோகிகளே! நடுவணதாகிய பெரும்படையைச் செலுத்திச் செல்லுங்கோள்! நிலையில் அசையாத திறல் வாய்ந்த சித்தர்களே! பின்னணியாகச் செல்லுங்கோள்! அங்ஙனம் நாம் செல்லின் அல்லல் செய்யும் படைகள் வாராமல் தேவநாட்டை அடக்கி ஆள்வோம் எ - று.

(வி - ரை.) தூசி - கொடிப்படை. "பேரணி" என்பது பின்னணி, நடுப்படை என்பவற்றைக் குறிக்குமேனும் பின்னணியாகிய கடைக் கூழைப்படை கிளக்கப்படுதலை நோக்கி ஈண்டு நடுப்படை எனவே கொண்டாம்.

ஒண்மை - இம்பரானும் உம்பரானும், இயம்பப்படும் புகழ். அதனுக் குக் காரணமாகிய திறல் என்க.

நெறிச்சென்று பூரண அருளைப் பெற்றவர் சித்தர். ஆகலின் அவர் "திண் திறல் சித்தர்" எனப்பட்டார்.

தொண்டர் - அடியவர் ; எது நேரினும், தாம் மேற்கொண்ட தொண்டினையே சாதித்து முடிக்கவல்லவர். அஃதாமாறு தொண்டர் புராணத் தானும் தெளியப்படும். பத்தர் - அன்புநெறி கைவரப் பெற்றவர்.

யோகியர் அன்பு நெறிக்குப் புதியவர் ஆகலின் அவர் பிறரால் இழுக்கப்படாதிருக்குமாறு அவர் தமக்கு முன்னர்த் தொண்டரும் பின்னர்ச் சித்தரும் பத்தரும் ஆகப் புடைசூழ அணி வகுத்துச் செல்லக் கட்டளையிட்டார் என்க.

அன்பு நெறி முற்றிய பூரண அடிமைகள் ஆயவர் "தொண்டர்" எனப் பட்டார் என்க. யோகிகளின் நெஞ்சம் அன்பு நெறியை நினைத்துச் செவ்வி கெடாது நிற்ப அவரைப் புடைசூழப் பத்தரை அணிவகுத்தார் என்க. தொண்டருட் சிறந்தார் தொண்டர் படைக்கும் பத்தருட் சிறந்தார் பத்தர் படைக்கும் யோகிகளுட் சிறந்தார் யோகியர் படைக்கும் சித்தருட் சிறந்தார் சித்தர் படைக்கும் தலைவராகவும் அணிவகுத்தார். இறைவனே அப் படைக்கு வேந்தன் ஆவான் என்க. அடிகள் அரசனோடு சிவணிய ஏனோர் என்க.

பத்தர்களுக்குள்ள கடமை தொண்டராலும் சித்தராலும் புதிய யோகிகளுக்கும் அவர் தமக்கும் ஊறு வராது காத்தலாகும்.

தொண்டர், சித்தர், யோகியர் ஆகிய அனைவர்க்கும் மேம்பட்டவர் அன்பர் என்பதும் அன்பருக்குத் தலைவர் அடிகளே என்பதும் ஈண்டே பெற்றாம்.

முன்னர்,

"அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்" (கோயி. மூ. 1.)

என்றும்,

"மன்னிய அன்பரில் என்பணி முந்துற வைகுவதாகாதே"
(திருப். ஆட். 4.)

என்றும் கூறிய இவற்றாலும் இன்ன பிறவற்றாலும், ஈண்டும் சிவபுரத்தும் சிவகணங்களுக்குத் தலைவர் அடிகளே யென்பதுதானே போதருதலின், அடிகளே சிவகணங்களுக்குத் தலைவராகிய நந்தியம் பெருமானுவர்போலும் என ஊகித்தற்கும் இடனுண்டு. திருப்பெருந்துறைக் கோவிலில் நந்தியம்பெருமான் இல்லாமையும் கருத்திற் கொள்ளுதற்குரியது.

பத்தராகவும் யோகிகளாகவும் சித்தராகவும் வந்த தொண்டராயினாரும் இறைவனால் ஆளப்பட்டமையின் இயல்பாகவே தொண்டராயினாரும் சித்தராயினாரும் எனத் தொண்டர் இருவகையினர் என்க. அவருள் ஈண்டுத் தொண்டர் என்பவர் பிந்தியவர் என்க. சித்தராய பின்பே தொண்டராவார் என்க.

ஈண்டுக் கூறியவாற்றால் அடிகளுக்கும், ஏனைய நெறியினும் அன்பு நெறியே செவ்விதாதல் பெற்றாம்.

திருச்சிற்றம்பலம்

# திருவெண்பா

"திருவெண்பா" வென்பது திருவிதாகிய வெண்பா யாப்பினால்
'ய ப

திருப்படையை எழுவித்துத் தம் நெஞ்சினை ஊடல் தீர்த்துத் தில்லைக்கண் உடன் கலக்கச் செவ்வி செய்துகொண்டமையின் இது திருப்படையெழுச்சியுடன் இயைபுடைத்தாயிற்று

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு .—

யான் செய்த பிழை ஈதென்று அறிவியாதும் உய்யும் வகையை ஓராதும் வருந்த என் சிந்தனைக்கண் வேல் மடுத்தான் (3) எனவும், அங்ஙனம் மடுத்தவன் என் நெஞ்சிற் பிரியாது உறையும் (5) எனவும், என்னை அங்ஙனம் ஆண்டுகொண்டு தன் பேரருளால் நோக்கவரும் பேரின்பம் என்னைப் பித்தேற்றிப் பேச்சரிதாம் மத்த மாக்கியது (6) எனவும், அங்ஙனமாக்கிய பேரின்பத்தால் தேனுந்து செந்தீ மருவப் பெருமையால் மெய்யும் பொடியாகி நிற்றிலேன் (1) எனவும், அவ்வமயத்தே உனக்கு நோய் செய்த பெருந்துறையானே நின்னோய் தீர்ப்பவனும் ஆவானென என்னை ஆற்றுப் படுத்தற்கு இங்கு ஒருவரையும் யான் பெறுமையானே இறைவனே நீயும் வந்து தேற்றுமை யானே ஆர்க்கோ! அரற்றுகோ! ஆடுகோ! பாடுகோ! நின்னை நாடிப் பார்க்கோ! இவற்றுள் யாது செய்கோ! (2) எனவும், அவன் அருளான்ஆய என் அன்பின் திண்மையான் நோய் செய்தவனே நோய்க்கு மருந்தாவான் எனத் துணிந் தேன் (4) எனவும், என் நெஞ்ச மத்தந்தீர அவன் பெருக்கும் அருளொளி எனக்கு முன்போல மருளாகாது ஆரமுதமாய் அமைந் தது (7) எனவும், என் சிந்தையைத் தன் ஊராகக் கொண்டு இன்பம் பெருக்கித் துன்பத் தொடர்பு அறுத்து இன்பச் சோதியாக அமைத்தான் (11) எனவும், அங்ஙனம் அமைந்த யான் அவன் கழலை வந்திக்க என் மெய்யகத்தே இன்பம் தரா நின்றது (9) எனவும், ஆதலின் நெஞ்சமே, என்னேபோல நீயும் திண்ணிய அன் புடையையாயிருந்து அவன் கழல் பணிந்து எல்லாம் பெறுவாய் (10) எனவும், அவ்வாறு பணிந்த கீழடியானுய என்னை யாரும் பெற்றறியா இன்பத்துள் வைத்தாய் (8) எனவும் பொருத்திக் கொள்க.

நூற்பொருளடைவு வருமாறு .—

பெருந்துறையான் தேனுந்து செந்தீ மருவாதிருந்தமையான் பொய்யும் பொடியாகிலது என்செய்வேன் (1), அச்செந்தீயை

மருவாதவாறு என் சிந்தனைக்கண் மத்தமால் ஏற்றியவன் முன்னர் நல்லருள் செய்தவனுதலைத் துணிந்து அவன்தான் நின் மத்தந் தீர்க்கவும் வல்லன் எனப் பிறராதல் தானுதல் என்னைத் தேற்றுதற் கில்லையே எனக் கவர்ச்சி மிக்குப் பித்துற்றுழல்வேனோ ? (2) இறைவனை அழைத்து அரற்றியமையான், செய்த பிழையை அறிவி யாதும் உய்யும் வகை காணுதும் சிந்தை மத்தங் கொள்ள வேலேந் தியோன் பெருந்துறையான் எனத் துணிந்து (3), நோய் தீர்க்கும் மருந்து அவனேயாகக் கண்டு (4), அவன்தான் சிந்தைக்கட் பிரியா னுதலை உணர்ந்து (5), அவனருளால் எய்திய பேரன்பே மத்தம் போற் காணப்பட்டதெனத் துணிந்தமையால் (5), அன்பொளி தோன்ற அம்மத்தம் மாறி ஆனந்த அமுதாக அதனை நுகர்ந்து (7), மூவர் முதலாய மதத்திஞேர்க்கும் எய்தற்கரிய இன்பத்துள் யாவர்க் குங் கடையேனுகிய என்னை வைத்தாய், வைத்த உன்னை இங்ஙனம் பிறழவுணர்ந்து பிதற்றினேன், இனிச் செய்யுங் கைமாறுளதோ எனக் கவன்றும் (8), அவன் கழலை வணங்கி மெய்யகத்தும் இன்ப மெய்தி (9), ஊடிய நெஞ்சினை உணர்த்தி வணங்குவித்தும் (10), இன்பம் பெருக்கி இருளகற்றித் துன்பத்தொடர்பு அறுத்துச் சோதி யாக அன்பு அமைத்து என் சிந்தையைத் தன் ஊராகக் கொண்டு வந்தான் எனவும் இயைத்துக் கொள்க.

இயற்கைப் பொருளடைவு செய்யுள் எண் · 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11.

நூற் பொருளடைவு · செய்யுள் எண் : 3, 5, 6, 1, 2, 4, 7, 11, 9, 10, 8.

இஃது திருப்பெருந்துறையில் அருளிச்செய்யப்பட்டது என்ப.

## அனைந்தோர் தன்மை

### நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

வெய்ய வினைஇரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகாது என்செய்கேன்—செய்ய
திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ
மருவா திருந்தேன் மனத்து. 1

இதனுல், அக்காலத்தே தேனுந்து செந்தீ மருவாமையால் இருவினை ஒழிய உடம்பு பொடியாகாமையால் யான் அவ்வுடலுட்

பட்டு இருவினைகளை நுகர்வதன்றி வேறென் செய்வேன் என்பது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) செப்பமுடைய திரு நிறைந்த பெருந்துறை யானுடைய (ஆனந்தத்) தேன் கொப்பளிக்கின்ற செஞ்சோதியை அடையாதிருந்த என் மனத்தின்கண் தங்கியுள்ள கொடிய இருவினை எரிந்து நீங்க, உடம்பும் உருகி எல்லாப் பொய்களும் பொடிப் பொடியாக அழிந்துபோகாது இருந்தன. ஆகலின் யான் என் செய்வேன் எ - று

(வி - ரை.) உத்தரகோசமங்கையில் முன்னரே செவ்வியருளப் பட்டிருப்பின், பொய்யின் நீங்கித் தேனுந்து செந்தீ மருவி நலம் பெற்றிருப்பேன்; அங்ஙனம் அருள் செய்யாமையின் என் காலமெல்லாம் வீணே கழிந்தன என எச்சம் விரிக்க. அன்று முதலாக அங்ஙனம் கழிந்தன என்று இரங்கினர் என்க. இன்றுதான் 'தேனுந்து செந்தீ மருவி பொய் நீங்கி' இறுமாந்திருக்கின்றார் என்றுணர்க.

தேனுந்து செந்தீ மருவாது காம மயக்கங்களை மருவி அன்றிருந்தேன் ஆகலின் அவற்றின் துணைகொண்டு வினைகளும் பொய்யுந் தாமே வளர்ந்தன; வளரப்பெற்ற யானும் அவற்றின் வழிப்படாது வேறு என் செய்வேன் என எச்சம் விரிக்க. உடம்படு புணர்த்தலான் தம் குறையின்மையும் அவனே பழி சுமந்தமையும் வெளிப்படுத்தப்பட்டன.

மனத்தின் மாசினால் இருவினையும், அவற்றால் உடலமும் போந்தன என்க. "பொய்" என்றது அங்ஙனம் போந்த இருவினையும் உடலமும் உலகமும் நுகர்ச்சியும் ஆகியவற்றின் தொகுதியை என்க.

தேனுந்து செந்தீ - ஆனந்தத் தேனுந்துஞ் செவ்விதாகிய சோதி. இதனைத் தோஜோமயானந்தம் என்பர்.

ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே என்செய்கேன்—தீர்ப்பரிய
ஆனந்த மால்ஏற்றும் அத்தன் பெருந்துறையான்
தான்என்பார் ஆர்ஒருவர் தாழ்ந்து. 2

இதனால் அவன் ஆக்கிய மத்தம் அவனாலேதான் தீரப்பெறும் என்பார் ஒருவரும் இலர் ஆதலின் யான் மத்தம் கொண்டொழிவேனோ என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) எவ்வாற்றானும் நீக்குதற்கரிய ஆனந்த மயக்கத்தை ஏற்றும் அத்தனாகிய பெருந்துறையான் எனக்கு அருளிய அம்மயக்கம் தீர்ப்பவன் அவன்தான் ஆவான் என்று இங்குத் தங்கி என்னை மீண்டும் அவன் திருவடிக்கே ஆற்றுப்படுத்தற்கு உரியாராய ஒருவர் இங்கியாவர் உளர்? (அவனேயும் அன்றி அவனடி

யாரும் வந்து உதவிற்றிலர் ஆகலின்) யான் மத்தனாகியே இருந்து ஆர்வாரிப்பேனோ? அரற்றுவேனோ? ஆடுவேனோ? பாடுவேனோ? நின்னை நாடிப் பார்ப்பேனோ? மேலானவற்றுக்கும் மேலோனே! இவற்றைச் செய்யாது வேறு எதனைச் செய்வேன் (எ – று.)

(வி - ரை.) *பிறரால் "தீர்ப்பரிய ஆனந்த மால்"* என்றமையின் அவனே தீர்த்தற்குரியவன் ஆவான் என்பது பெற்றும்.

*அவனே தீர்த்தற்குரியவன் என்று என்னை ஆற்றுப்படுத்தற்குரியார்* எல்லாரும் முன்னரே அவனது தேனுந்து செந்தீயை மருவினர் ஆதலின் *அதனைக் கூறற்குரியார் ஆர் ஒருவர் உளர் என்பதுபடத் "தீர்ப்பரிய...... யார் ஒருவர்"* என்றார்.

தாழ்தல் - தங்குதல்; 'எனக்குறு துணையாகத் தேனுந்து செந்தீயில் மருவாது இங்குத் தங்கி' என எச்சம் விரிக்க.

*எனக்கு உறுதுணையாக நிற்க அவருள் ஒருவரையேனும் எஞ்சவைத்* திலன். அவனும் இப்போது தேற்றினனல்லன் எனத் தம் ஆற்றாமையைப் புலப்படுத்தியபடி.

"ஆர்க்கோ" முதலாயின வெல்லாம் மத்தர் செயல்கள் என்க.

அறிவு தம்முட் கட்டுப்படாமையால் ஆர்த்தலும் ஓயாது பிதற்றும் அரற்றும் நிகழும்; அங்ஙனம் கட்டுப்படாதபோது ஆனந்தங் கொள்ளு வதாக நினைக்கையால் ஆடுதலும் பாடுதலும் நிகழும்; மத்தம் தாழ்ந்த விடத்துத் தலைவனை நாடிப் பார்த்தலும் நிகழும் எனக் கொள்க.

தேனுந்து செந்தீ மருவாது வினைமுதலாய பொய்களுள் உழல வைத்ததுமன்றி மத்தமும் ஆக்கினை. அம்மத்தம் உற்ற காலத்தில் நீயும் உதவாதும் நின்னைக் கலந்தவருள் ஒருவரையேனும் உறுதுணையாக எஞ்ச வைக்காதும் முன்னர் வஞ்சித்தாய் என இவ்விரண்டு பாக்களானும் எடுத்துக் கூறினர் என்க.

"பரம்பரன்" "அத்தன்" என்பன பெருந்துறையான் கொடும்பழி குறித்து நின்றன.

*பித்துற்றேன் யான் எனக் கூறி இகழுவார்களே யல்லாது தீர்த்தற்கரிய பித்தேற்றி மாலுறச் செய்தவன் பெருந்துறையான்தான், நீ யல்லை என்று* சொல்லி அந்தப் பழியை அவன்மேல் ஏற்றிக் கூறுவார் யாவர் உளர், ஒருவருமிலர் எனவும் பொருள் கொள்ளற்கும் இடனுண்டு.

**செய்த பிழைஅறியேன் சேவடியே கைதொழுதே**
**உய்யும் வகையின் உயிர்ப்பறியேன்—வையத்து**
**இருந்து உறையுள் வேல்மடுத்துஎன் சிந்தனைக்கே கோத்தான்**
**பெருந்துறையின் மேய பிரான். 3**

இதனால் அங்ஙனம் மத்தமாக்கி உழலவைத்தமைக்குத் தாம்

செய்த பிழை இன்னதென இன்னும் அறிவிக்கப்படாத கொடிய வஞ்சமுடையான் என்பது கூறப்படுகின்றது

(பொ-ரை.) திருப்பெருந்துறைக்கண் மேவிய பெருமான் யாவரும் நிந்திக்க, திருத்தப்பட்ட தன் உறையுள் அமைந்த வேற் படையை எடுத்து என் சிந்தனையைக் குறிவைத்து அதனைத் தடுத்து நிறுத்திக் கோத்தான், அங்ஙனம் அவன் கோத்தமைக்கு யான் செய்த பிழை இன்னது என்பதை இன்னும் அறியேன்; அதனோடு யான் அவன் திருவடிகளைக் கைகளால் தொழுது ஈடேறும் வகைகளினால் இளைப்பாறி யிருத்தலையும் அறியேன் எ-று.,

(வி-ரை.) உய்தல் - ஈடேறுதல்; உயிர்ப்பு - இளைப்பாறியிருக்கை; வைதல் - நிந்தித்தல். திருந்துவேல், உறையுள்வேல் என்க. 'எடுத்து மடுத்து' என ஒருசொல் வருவிக்க. மடுத்தல் - தடுத்தல்; "மடுத்தவா யெல்லாம்" (குறள். 624.) சிந்தனை என் இயல்பிற் செல்லாவாறு தடுத்து நிறுத்தல் கோத்தல் ஈண்டு விடுத்தலின் மேற்று. கோத்துப் பாய்ச்சிப் பித்தேற்றினான் என்க.

ஒருவன் செய்த பிழையையும் அதற்குரிய தண்டத்தினையும் அவனுக்கு எடுத்து உரைத்த பின்னரே அவனை அங்ஙனம் தண்டிப்பதுவே நீதி மரபாக இருக்கவும், நீயோ என் பிழையை எனக்கு அறிவியாது என்னைத் தண்டித்தாய் ஆகலின் நீ நிந்தித்தற்குரியை என்பதுபட "வைய......... கோத்தான்" என்றார். அங்ஙனம் அறிவியாது தண்டித்தமை "செய்த பிழை அறியேன்" என்றதனாற் பெறப்பட்டது.

இன்னும், 'ஆட்கொண்டபோதே என் பிழைகளைத் தீர்த்தாய் என் றிருந்தேன். நீ இப்போ பித்தேற்றியமையின் பிழையுடையேன் போலும். அங்ஙனம் நான்செய்த பழியை நீயும் அறிவித்தாயல்லை, நானும் அறியேன் ஆயினேன்' என இயைக்க.

நீ என்னைப் பிரிந்தாயாகிலும் நின் சேவடிகளைக் கைகளால் தொழுது உய்தியுற்று இளைப்பாறி வந்தேனை வேலினைச் சிந்தனைக்கண் கோத்தமை யால் மத்தமேறிச் சேவடி தொழுதலையும் விடுத்து ஆறுதல் எய்தாது உழலு கின்றேன் என்பது தோன்றச் "சேவடி.........யறியேன்" என்றார். வேல் விடுத்து ஆனந்த மாலேற்றி உய்யும் வகையின் உயிர்ப்பும் எய்தாது என்னை வருத்தினான் என்க.

"ஏற்றார் அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள்" (திருத்தசாங். 7.) என செவ்வியின்மை காரணமாக என் சிந்தனைக்கண் பாய்ந்து என்னை மத்தமாக்கியது என விரித்து இயைத்துக் கொள்க. சிந்தனைக்கே, ஏகாரம் பிரிநிலை. மலத்தை வளர விடுத்தது சிந்தனையே பாய்தற்கிலக் கானமையின் என்க.

முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—தென்னன்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும் மருந்து. 4

பித்தேறச் செய்தமையால் நேர்ந்த இடையூறுகளை முதன் மூன்று பாக்களான் எடுத்துரைத்த அடிகள் இப்பாட்டான் இறைவன் தமக்குப் பண்டைக்காலத்தில் தம் இருவினை அறுவித்து முன்னின்று அருளி ஆண்ட கருணைத்திறன் நினைந்து அவனே அத்துயர்க்கும் மருந்துமாவான் எனத் துணிந்துகொண்டமை கூறுகின்றார்.

(பொ - ரை) தென்னனாகிய பெருந்துறைக்கண் மேவிய பெரிதாகிய திருவருளாளன், பின்னர் வரக்கடவனவாகிய பிறவிகளை அறுக்கும் புகழாளன் திருவாரூரின்கண் முற்பிறவிகளின் பாற்பட்டுவந்த இருவினைகளையும் வேரறுத்து என்முன் வெளிப்பட்டு நின்றான் ஆகையால் அவனே எனக்கு இப்பிறவியில் வரும் துயரத்தையும் தீர்க்கும் மருந்தும் ஆவான் எ — று.

(வி - ரை.) அவன் தமக்குச் செய்த அருட்டிறனை நினைந்தார் என்பதுபட "முன்னை.........முன்னின்றான்" என்றும், பின்னும் அவன் அருளே தமக்கு இன்றியமையாததெனக் கண்டார் என்பதுபடப் "பின்னர்ப்...பேராளன்" என்றும், அவன்தன் கருணைப்பெருக்கால் அருளியது தம்முடைய செவ்விக் குறைவான் அவ்வருட்பேறு தமக்கு மத்தமாக, மயங்கினேன் எனத் தெளிந்து தமக்குச் செய்தது, கருணையுமாகாது, பெருங்கருணையே ஆகும்எனத் தெளிந்தார் என்பதுபடத் "தென்னன்......பெருங்கருணையாளன்" என்றும், அவனையே அடைக்கலம் புக்கு இத்துயரினையும் தீர்ப்பேன் எனப் புகுந்தார் என்பதுபட "வருந்துயர் தீர்க்கும் மருந்து" என்றும் கூறினார்.

முன்னை வினையற்றாலும், பழைய மலவாசனை காரணமாகப் புதுவினையும் தோன்றத் தோன்ற அவ்வப்போதே அறுத்து வருவான் ஆகலின் அவன், அவ்வினை காரணமாகப் பின்னர் வரும் பிறப்பினையும் அறுத்தவன் ஆவான் என்பதுபடப் "பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்" என்றார்.

புதுவினைகளாகிய இருவினையையும் அவற்றின் குணங்களாகிய மனமயக்கங்களையும் அவ்வப்போதே அறுத்து வருவோன் என்க.

அறையோ அறிவார்க்(கு) அனைத்துலகும் ஈன்ற
மறையோனும் மாலும்மால் கொள்ளும்—இறையோன்
பெருந்துறையுள் மேய பெருமான் பிரியாது
இருந்துறையும் என்நெஞ்சத்(து) இன்று 5

இனி வரும் துயரம் தீர்த்தற்கும் மருந்து அவனேயாவான்

எனத் துணிந்து கொண்ட அடிகள் இதனால் ஆராய்ந்தறியும் வன்மை சிறிதும் இல்லாத தம் நெஞ்சில் அவன் தானே வந்து பிரியாதிருத்தலை எடுத்துக்காட்டி ஆராய்ந்து அறியப் புகுவோரைத் தெருட்டா நின்றார் என்பது கூறப்படுகின்றது. (இனி, நெஞ்சமே, என் அறிவின்வழிச் செல்லாத நீயே சிறந்தனை ஆவாய் என நெஞ்சினைப் பாராட்டியதுமாம் )

(பொ - ரை ) எல்லாவுலகங்களையும் தோற்றுவித்த நான்-முகனும் (அவற்றை எல்லாம் வரையறை செய்து ஓம்பிவரும்) திருமாலும், அடிமுடி தேடப் புக்குக் காணமாட்டாமையால்) மயக்கங் கோடற்கு ஏதுவாகும் இறைவனாகிய பெருந்துறைக்கண் மேவிய பெருமான் என் நெஞ்சிடத்தே இன்று பிரியாது இருந்து வருவான் , இன்று இறைவன் யாண்டுளன் எனத் தேடி அறிய முற்படுவார்க்கு யான் கூறும் உறுதிமொழியாகும் இது எ - று.

(வி - ரை.) அவரவர் செய்த வினைப்பயன் ஆகலின் ஓகாரம் பிரிநிலை என்க. அனைத்துலகும் ஈன்ற மறையோன் ; அவனை ஈன்ற மால் என்க. நான்முகனோ வேதம் அனைத்தையும் ஓதியுணர்ந்தமையும் உலகனைத்தையும் தோற்றுவித்தமையும் ஆகிய பெருமை படைத்தோன் ; திருமாலோ அவனைத் தோற்றுவித்த பெருமையும் அவ்வுலகமெல்லாம் ஓம்பிவரும் பெருமையும் அப்பெருமை நிலைபெறுமாறு கடலுண் மறைந்த உலகினைத் தன் வராக உருவில் மீட்ட பெருமை முதலாயினவும் படைத்தோன் ; அத்தகைய பெருமை படைத்தோர்க்கு, வேதங்களையும் உலகங்களையும் பற்றி அறிதல் எவ்வளவு எளிதான செயல். அங்ஙனம் ஆகவும், அவர்கள் யாண்டும் ஆராயுந்தோறும் அவர்கள் ஆராய்ந்த இடம் எங்கும் தான் தங்கியிருந்தும் அவர்களான் முற்ற அறியப்படாதவனாய், மயக்கத்தையே அவர் ஆராய்ச்சிக்குப் பயனாகக் கொள்ளச் செய்தான் என்பார் “ அனைத்துலகும் ஈன்ற இறையோன் ” என்றார்.

அடிகள்தாம் பெற்ற மால் “ ஆனந்த மால் ” எனக் கூறுதலின், அவர் பெற்ற மாலும் மறையோன் மால்கள் பெற்ற மாலும் வேறு வேறெனவே படும் எனக் கொள்க.

இறைவனோ உலகமோ, ஏனைப் பிறவோ என்று இத்தொடக்கத்தன எல்லாம் இருந்தும் காணாக் குருடன்போல வெறும் நெஞ்சினையே வைத்துக்கொண்டு உதவியற்ற வீணனாய் இருந்த என் நெஞ்சிலே அதனையேதான் உகந்த இடமாகக் கொண்டு பிரிதற்கும் மனமில்லாத வனாய் நிலைபெற்று இன்று இருந்து வருகின்றான் என்பார் “ பிரியாது இருந்துறையும் என் நெஞ்சத்து இன்று ” என்றார்.

அன்று என் கண்முன்னரே அன்றி நெஞ்சத்தும் பிரிந்தான், இன்று இங்ஙனம் ஆயினன் என விரித்துரைக்க.

அயன் மால்கள் போன்றார் மால் கொள்ளும்படி கரந்து உறைதலும்

என் போன்றுர் ஆனந்தமால் கொள்ளும்படி இருந்துறைதலும் என்னும் அவனுடைய செய்கை ஆராய்ந்து அறியலுறுவார்க்கு என விரிக்க. அறை - பத்திராலாபனம், (சீவகசிந். 2180 ஆவது செய்யுளேயும் நோக்குக.) வஞ்சனேயுமாம்.

ஆராய்ந்து அறியலுறுவார் மால் அடைவர் என்பதற்கு அயன் மால்களும், அன்புடையார் ஆனந்தமால் அடைவார் என்பதற்கு அடிகளும் எடுத்துக்காட்டுகளாய் நின்றனர். இனி, ஆராய்விஞல் அறியப்புக்கார் தமது ஆராய்ச்சி வன்மையானும் அன்பிஞல் அறிந்தவர் என்பார் தமது ஆராய்ச்சி வன்மையின்மேல் உண்டாய அதனுனும் மாலும் இன்பமும் பெற்ருரன்றிப் பிறவில்லை என்பார்க்கு அங்ஙனம் ஆகாது, ஆராயும் வன்மை படைத்தவர்க்கெல்லாம் தலையாயினுர், அயன் மால்களைவிடப் பிறர் இலர் என்பது தேற்றமாகலின் ஆராய்விஞல் மாலும் அவ்வன்மையால் உண்டாய அன்புடைமையான் ஆனந்தமும் பெற்ருர் என்பவர்களுள் மிகக் கடையேன் ஆகலின் என் நெஞ்சில் அவன் உறைதலானும் அவர் நெஞ்சில் அவன் இன்மையானும் அக்கூற்றுப் பொருந்தாது. ஆராய்விஞல் அன்பு உண்டாகும் என்பது முக்காலத்திலும் இல்லை ; அன்பிஞல் இன்பம் உண்டாகும் என்பது ஒருதலை. எனவே, அன்பிஞல் இன்பம உண்டாம் என நிலை நாட்டியவாறு.

அன்பிஞல் ஆனந்தமெய்தி வந்த அடிகள் இறைவன் சில அன்பர்களை ஒன்ற ஒன்ற உடன்கலந்தமையும் தம்மை ஒழித்தமையும் யாது கருதியது என ஆராயப் புக்கமையால் இறைவன் அடிகட்கு அருளிய ஆனந்தம் அவரைப் பித்தேற்றி மத்தமாக்கினமை கண்டு அவ்வாராச்சியிற் புகுதலை விடுத்தொழிந்தார் என்பது குறிப்பாகும் என்க.

இங்ஙனம் இறைவன் ஒழுகுதல் வஞ்சனைப்பாலதோ என ஐயுற்ற அடிகள் ஆராய்வு தோன்றியமையால் மயங்குதலும், அங்ஙனம் மயங்கினமையாற் பின்னர் அன்பு தோன்றுதலும், அன்பு தோன்றிய வழி இடையே ஆராய்வு தோன்றி அவ்வானந்தம் மத்தமாக்கலும், அதனை விடுத்தமையால் பின்னர் ஆனந்தம் தோன்றுதலும் அவ்வவர்க்கு இயல்பாக அமைந்த வினைப்பயனும் என அமைதியுற்றதை என்க. “அறையோ” என்பதற்கு வஞ்சனையோ எனக் கொள்ளுங்கால் இசையெச்சத்தாற் பெற்றதாகக் கொள்க.

தம் நெஞ்சிற் பிரியாதிருக்கும் இறைவன், அடியார்களை ஆண்டு தம்மை ஒழித்தமைக்குக் காரணம் காணப் புக்க தம் அறியாமையால் அவன் அருளிய ஆனந்தம் அன்று தம்மைப் பித்தேறச் செய்தமை இனிக் கூறப்படும்.

**பித்தென்னை ஏற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்**
**மத்தமே யாக்கும்வந் தென்மனத்தை—அத்தன்**
**பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்**
**மருந்திறவாப் பேரின்பம் வந்து.** **6**

இதனால் ஏனைய அன்பர்களுக்கு அருளித் தம்மை ஒழித்த மைக்குக் காரணம் காணப் புக்க அடிகளை அக்காரணம் காணும் ஆராய்விற் புகாவாறு பித்தேற்றி மத்தமாக்கி அன்பு நெறியிற் புகச் செய்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) அத்தனாகிய பெருந்துறையான் ஆட்கொண்டு (முன்னர்ச் செய்த அருளையே அன்றும் இன்றும் என்றும் செய்து வரும் குறிப்புத் தோன்ற) பேரருளோடு நோக்கும் நோக்கமாகிய வருந் துயரம் தீர்க்கும் மருந்தாகி வந்து என்மேல் ஆனந்தப் பித்தினை (அன்று) ஏற்றும், (அப்பித்து ஆராய்விற் புகாவாறு அன்பு நெறிக்கண் மீட்டலின்) என் பிறப்பினை வேர் அறுக்கும், அதன்மேலும் வந்து என் மனத்தின்கண் சொல்லரிய களிப்பினை உண்டாக்கும் எ - று.

(வி - ரை.) அன்று ஆட்கொள்ளப்பட்ட யான் என் அறியாமையான் அன்பரைக் கலந்தமையும் என்னை ஒழித்தமையும் வஞ்சமுடையவாகக் கருதி ஐயுற்று ஆராயப் புக்கமையான் நின்னுன் அருள் காரணமாக நோக்குதலான் எய்திய பேரின்பம் என் திரிபு உணர்ச்சியான் என்னைப் பித் தேற்றி மத்தங்கொளச் செய்ததென்பது கருத்தாகக் கொள்க. நின் அருள் நோக்கு யாண்டும் ஒரு பெற்றியது என்பார் "பேரருளால் நோக்கும்" என்றும், அந்நோக்கு எனக்கு வருந்துயரம் தீர்க்கும் மருந்தாகும் என்பார், "மருந்து" என்றும், அதனால் ஆய இன்பம் மிகப் பெரிதும் அழிவற்றதும் ஆம் என்பார் "இறவாப் பேரின்பம்" என்றும், அஃது என்பால் வந்தது என்பார் "வந்து" என்றும், அங்ஙனம் வந்தமையான் என் சிந்தை, யான் எய்தற்குரியதற்கு மாறாக என் ஆராய்வு காரணமாகப் பித்தினை ஆக்கியது என்பார் "பித்தென்னை ஏற்றும்" என்றும், பித்துற்றேனாக யான் கருதி ஒருபால் மயங்கவும் தான் ஆராயப் புக்கமையால் எய்தற்பால பிறவியை அறுத்து வருகின்றான் என்பார் "பிறப்பறுக்கும்" என்றும், யான் என் இயல்பினை இன்னதெனச் சொல்லொணாவாறு யான் மயங்கவும், தான் யான் அறிந்துகொள்ளாவாறு என் மனத்தைப் பேரானந்தங் கொள்ளச் செய்தான் என்பார் "பேச்சரிதாம் மத்தமே யாக்கும் என் மனத்தை" என்றுங் கூறினார்.

பித்தேற்றுவான்போல் தன்மேல் அழுந்திய பற்றினையும் மத்தமாக் குதல்போல என் சிந்தையை ஆனந்தத்தில் மூழ்கவும் வைத்தான் என இன்று கண்டார் என்பது குறிப்பு.

வாரா வழியருளி வந்துஎனக்கு மாறின்றி
ஆரா அமுதாய் அமைந்தன்றே—சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. 7

இதனால் சிந்தை பித்தேற்றி மயக்கியதென அன்று பிறழ உணர்ந்தமையை இன்று அது பேரின்பம் ஊட்டியதெனக் கண்டு வியந்தது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) மிகுபுகழ் நிறைந்த திருவிதாகிய அழகினை யுடைய பெருந்துறையான் என்னும் என் சிந்தையில் நிலைபெற்ற ஒப்பற்றவன், ஆங்கிருந்துகொண்டு பெருகச் செய்யும் அன் பென்னும் ஒளியானது பிறவியில் மீண்டும் வந்து போதற்கு இல்லாத பேரின்பத்துள் இருத்தற்கு உரிய வழியை எனக்குக் காட்டி என்னுடன் மாறுபடுதலின்றித் தெவிட்டுதல் இல்லாத அமுதாய் அமைந்தது எ - று.

(வி - ரை ) "அன்று"ம் "ஏ"யும் அசைகள். ஒளி பெருகுதலாவது நுகர்ச்சிக்கண் குறைந்த அன்பு அவர் தம்மிற் பெற்ற குணங்களான் நிறைதல். வாராவழி - போதற்குமட்டும் உரிய வழி. அன்பு, ஒளியினால் விளக்கப்பட்ட வழி.

ஒளியும் இருளுமாக இருப்பின் அன்றே மாறுபடுவது ; யாண்டும் ஒளியே கண்டபோது மாறும் இன்றாயிற்று என்க. அமுதம், அன்பினா லாகிய நுகர்ச்சி.

சீரார் தென்திருப்பெருந்துறை என இயைக்க. சீரார்திரு, வீடுபேறு மாம்.

முன்னர் அடியவர்களைமட்டும் கலந்து தம்மை ஒழித்தமையாற் புகழும் பழியும் அவற்கு அமைந்தன. இன்று எனக்கு அருளியமையான் அப்பழியும் புகழாக மாறி மிகுபுகழ் ஆயது என்பார் " சீரார் " என்றும், அவ்வாறு படவே எல்லாரானும் விரும்பப்படும் தன்மைத்தாகும் என்பார் " திரு " என்றும், அத்தன்மையுடையதுவே அழகிதாகும் என்பார் " தென் " என்றும், அவ்வனைத்தையும் உடையான் இருக்கும் நகர்க்கும் இயையும் என்பார் " பெருந்துறையான் " என்றும், அவனே துன்புறுத் தவும் அதனை நீக்கவும் உரியான் என்பார் " ஒருத்தன் " என்றும், முன்னர் அன்பினைச் சுருக்கியவாறே பின்னர்ப் பெருக்கியும் வாரா நின்றான் என்பார் " பெருக்கும் " என்றும், அன்பிற்குப் பண்பாவது ஒளி என்பார் " ஒளி " என்றும், அன்பு நெறியே வீடுபேற்றைக் காட்டுவது, அதனையே எனக்கு அருளிச் செய்தான் என்பார் " வாரா வழியருளி " என்றும், முன்னர் அருளிய பேரின்பம், முன்னர் இனிதாகிப் பின்னர் இன்னாதாக மாறுபட்டதுபோலன்றி எப்போதும் இனியதாகவே இருந்தது என்பார் " வந்தெனக்கு மாறின்றி " என்றும், முன்னர் அருளிய இன்ப நுகர்ச்சிப் பின்னர்த் தெவிட்டியவாறன்றி நுகருந்தோறும் தெவிட்டாதது என்பார் " ஆராவமுதாய் " என்றும், முன்னரது மாறுபட்டது, பின்னரது பெற்றித்தாயமையின் எனக்கு அஃது அமைவுடைத்து என்பார் " அமைந் " என்றும் கூறினார்.

**யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்**
**யாவர்க்குங் கீழாம் அடியேனை—யாவரும்**
**பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்குஎன் எம்பெருமான்**
**மற்றறியேன் செய்யும் வகை. 8**

இதனால் யாவரும் பெற்றறியா இன்பத்துள் கடையிற் கடையேனை வைத்தமைக்குச் செய்யும் கைம்மாறு அறியேன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) எனக்கும் எம்பெருமானே! நீயோ சீர்களில் எத்தகைய ஏற்றம் பெற்றவர்களுக்கும் மேலாகும் அளவிடுதற்கரிய மிகுபுகழ்களை உடையவன் ஆகுவை யானோ இகழ்வில் எத்தகைய இகழ்வு பெற்றவர்க்கும் இழிந்தேன் ஆவேன். அத்தகையேனை எவரும் பெற்று நுகர்ந்தறியாத பேரின்பத்துள் பொதிந்து வைத்தும் அங்ஙனம் வைத்த நினக்குச் செய்யும் கைம்மாறு வேறு அறியேன் எ - று.

(வி - ரை.) நீ தந்த இன்பத்துள் முன்னர் அமையாத யான் இப்போது அதனுள் அமைந்து வருதலே நினக்குச் செய்யும் கைம்மாறு போலும் என்க. இதுவேயன்றி மற்றொன்றும் அறியேன் என்க.

"எம்பெருமான்" தன்மைப் பன்மைப் பெயராகத் தமர்க்கெல்லாம் பொதுவாக நின்றது. தனக்கும் அருள் செய்த பிரான் ஆனமையின் "என்னெம் பெருமான்" எனப்பட்டான். 'எம்பெருமான் என் பெருமானும் ஆயினன்' என்க.

யாவர்க்கும் "மேலாம் சீர்" அளவிலாச் சீர் என இயைக்க. கீழாய யாவர்க்கும் "கீழாம் அடியேன்" என்க. அன்புநெறி அருளமாட்டாத எவர்க்கும் என்க. ஏனைய நெறியெல்லாம் அளவையுட்பட்ட நெறி. அதனால் வரும் புகழும் அளவுட்பட்டது. இவ்வன்பு நெறியோ அளத்தற்கரிய சீருடையதென்க. அன்பு ஒன்றே அளத்தற்கியலாது என்றபடி மேலேறும் நெறிகளுள் ஒன்றேனும் கைவரப் பெறாத கீழோர் அனைவர்க்கும் கீழேன் என்க. அங்ஙனம் ஆய என்னை வைத்தலின் "அளவிலாச் சீருடையான்" என்றுருமாம். கைம்மாறு கருதாதவன் நீ ஆகையின் யான் உய்ந்தேன் என்றலுமாம். மற்று, பிரிதென்னும் பொருட்டு.

**மூவரும் முப்பத்து மூவரும் மற்று ஒழிந்த**
**தேவரும் காணாச் சிவபெருமான்—மாஏறி**
**வையகத்தே வந்துஇழிந்த வார்கழல்கள் வந்திக்க**
**மெய்யகத்தே இன்பம் மிகும். 9**

இதனால் முன்னர்த் தம்மை ஆட்கொள்ள மாவேறி வந்த கழல்களை அன்று வந்தித்தவாறே இன்றும் வந்தித்து மெய்யகத்து இன்ப மெய்தியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) மும்மூர்த்திகளும் முப்பத்து மூவர் எனப்படும் தேவர்களும் ஏனைய இந்திரன் முதலான தேவர்களும் காணமாட்டாத சிவபதத்தினை உடைய பெருமான் நிலவுலகில் குதிரைமேல் ஏறிவந்து இறங்கிய நீண்ட கழல் அணிந்த திருவடிகளை வணங்க உடம்பினிடத்தே பேரின்பம் மிகுத் தோன்றுநின்றது எ - று.

(வி - ரை.) மூவர், அயன் அரி அரன் என்போர. "முப்பத்து மூவர்" உருத்திரர் பதினொருவரும், ஆதித்தர் பன்னிருவரும், அசுவினி தேவர் இருவரும், வசுக்கள் எண்மரும் ஆகியோர். மற்றைய தேவர், இந்திரன் முதலியோர்.

அவ்வனைவரும் காணமாட்டாத அன்புநெறி என்க. மாவேறி வையகத்து வந்த காதலன் என்க. அவன் வார்கழலை வந்தித்தலாவது அன்பு நெறிபற்றி ஒழுகி அவன் திருவடிக்கண் அமைந்து இன்புறுதல். இனி "மெய்யகம்" என்றதற்கு உண்மைத்தாகிய அகத்திணை நெறி எனப் பொருள்கொண்டு அதனால் எய்தும் இனபம் எனக்குத் தரும் எனினும் இழுக்காது. ஈண்டு அவன் கழலை வந்திக்க அஃது இவ் இனபம் எனககுத் தரும் என விரிக்க.

"மூவரும் காணாச் சிவம்" என்றமையால் உருத்திரனுக்கும் அவ்வன்பு நெறிப் பேறு காணப்பட்டிலது என்பது பெறறும்.

முன்னர்க் காதலாக ஆண்டவாறே பின்னரும் வந்து ஆண்டுகொண்டமையும் அவற்றிடைக் கண் மாறுகியமையும் இதனானும் முந்திய பாட்டிற் கூறிய "மாறின்றி" என்றமையானும் பெறப்பட்டன என்க. "வையகம்" என்றாரேனும் மதுரை என்றே கொள்க.

குதிரையினின்று இழிந்த வரலாறு அவ்விடத்திலேயே நிகழ்ந்த தாதலின், 'சிவபெருமான் மாவேறி வந்து இழிநதவர் கழல்கள்' என முதல் வினை சினை வினையுடன் முடிந்தது. இனிச் 'சிவபெருமானது மாவேறி வந்திழிந்த வார்கழல' எனக் கொள்ளினும் நன்று என்க. உருத்திரர், பதினொருவர் பிரமன் வேண்டுகோளால் சிவமூர்த்தியால் அதிட்டிக்கப் பட்டுப் பிரமன் நெற்றியில் தோன்றிச் சிருட்டி செய்யப்பட்டோர். மூவருள் ஒருவனாகிய உருத்திரன் இயல்பாகவே உள்ளவன். எனவே இயல்பாகிய உருத்திரனே பதினொருவரினும் மேன்மையுடையோன்.

முன்னர் "மாவேறி வந்த வார்கழல்" என்றமையான் மதுரைக்கண் அடிகட்குக் காட்சி தந்தமையும் பெறறும்.

இருந்தென்னை ஆண்டான் இணையடியே சிந்தித்து
இருந்துஇரந்து கொள்நெஞ்சே எல்லாம்—தருங்காண்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத்தே வந்து. 10

இதனால் யான் இன்பம் பெற்றவாறே நெஞ்சே, நீயும் அவன்

அடியைச் சிந்தித்து இன்பம் பெற்றுக்கொள்ளுதி என்பது கூறப்ப(

• (பொ - ரை.) நெஞ்சமே, திருப்பெருந்துறைக்கண் மேவிய பேரருளாளன் என் மனத்தே மருந்துருவாக வந்து அமைந்திருந்து என்னை ஆண்டுகொண்டான், நீ இரந்த எல்லாம் நினக்கும் தருவான் ஆதலின் நீயும் அவனுடைய இரண்டாகிய திருவடிகளையும் சிந்தனை செய்து வேண்டியவெல்லாம் இரந்துகொள்வாயாக எ-று.

(வி - ரை.) யான் கால வயப்பட்டு ஆராய்ச்சி நெறியிற் புகவும் நீ அன்பு நெறியிற் புகவும் மாறுபட்டோமாகையால் அவன் அருளமுதம் நம்மை மத்தமாக்கியது. அவன் அருளால் யானும் நின்னை ஒப்ப அன்பு நெறிபற்றி உய்ந்தேன். யான் ஆராய்ச்சித் துறையிலிருந்தமையின் நீ விழைந்தவாறு ஒன்றேனும் அவன் தந்தானில்லை. இனி நாமிருவரும் ஒரு நெறிப்பட்டமையான் நீ விரும்பிய எல்லாம் அவனும் தருவான். ஆகலின் எல்லாம் இரந்து பெற்றுக்கொள்ளுதி எனத் தம் நெஞ்சினை இன்புறுத்தினர் என விரித்துக் கொள்க.

இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து. 11

இதனால் தம் அறிவும், நெஞ்சும் ஒரு பெற்றியவாகி அன்பு நெறி கைப்பற்றியமையான் எய்திய பேறு கூறப்படுகிறது.

(பொ - ரை.) மிகுபுகழ் நிறைந்த பெருந்துறையான் என் சிந்தைக்கண்ணே ஒளியுருவனாய் இருந்து கொண்டு, அன்பை நிலைநாட்டி, இன்பம் பெருகச் செய்து, இருளை விலக்கி, எக்காலத்தினும் துன்பந் தொடர்தலை வேருக்கி, என்னுடைய சிந்தையையே தான் குடியிருக்கும் ஊராக உவந்து கொண்டான் எ - று.

(வி - ரை.) இருத்தற்கு எவ்வாற்றானும் ஒவ்வாத என் சிந்தையை உதவக்கூடியதாக ஆக்கி உவந்திருந்தான் என்றவாறு.

சோதி - மாசு தீர்ந்த அறிவொளி; அஃதாவது அன்பு. அன்பால் ஆவது இன்பம். அறிவொளி இன்மையால் வருவது இருள்; அதனால் வருவது வன்பு; அதனால் வருவது துன்பம் என்க. சோதியை அமைத்து அறிவைத் தூயதாக்கி அதனால் வந்தவற்றைக் கொண்டு அறிவின்மையையும் அதன் காரியங்களையும் இறைவன் நீக்கினான் என்க.

திருச்சிற்றம்பலம்

# பண்டாய நான்மறை

"பண்டாய நான்மறை" யென்பது, 'பண்டாய நான்மறை' என்ற தொடரை முதலாகக் கொண்ட ஏழு திருப்பாட்டுக்களை யுடைய நூற்பகுதி.

திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், கோயில் மூத்த திருப் பதிகம், கோயில் திருப்பதிகம், பிரார்த்தனைப் பத்து, குழைத்த பத்து என்னும் இப்பகுதிகள் எல்லாம் ஒவ்வொரு பாட்டின் இறுதிச் சீர் அடுத்த பாட்டின் முதற்சீரொடும், இறுதிப்பாட்டின் இறுதிச்சீர் முதற்பாட்டின் முதற்சீரொடும் அந்தாதித் தொடை பெற்றமைந் துள்ளன.

இப்பண்டாய நான்மறையோ ஏழு பாக்களையே யுடையதாக அந்தாதித் தொடை பெற்றும் இறுதிப்பாட்டின் இறுதிச்சீர் முதற் பாட்டின் முதற் சீரொடு இயைந்திலது. ஆதலின் சில பாக்கள் விடப்பட்டனவோ என எண்ணுதற்கிடனுண்டேனும், யாத்திரைப் பத்தும் இங்ஙனே அந்தாதித் தொடையாக நடைபெற்று இறுதிப் பாட்டின் இறுதிச் சீர் முதற்பாட்டின் முதற்சீரொடு இயையாது நிற்குமாறே இதுவும் அமைந்துளதாகலின் அங்ஙனங் கோடற் காகாதென்க.

இனி, யாத்திரைப் பத்து என்னுந் தொகைப் பெயரால் அது பத்துப் பாக்களையுடையதென்பது புலப்படுமாறன்றி, பண்டாய நான்மறை என்பது முதலாவது பாட்டின் முதற்கண் வந்துள்ள "பண்டாய நான்மறை" என்பதைத் தனக்குப் பெயராகக் கொண்டமையால் அஃது எத்துணைப் பாட்டானும் வரப் பெறுமாகலின் அதனுட் சில பாக்கள் விடப்பட்டன போலும் என ஆராயப் புகுதலுந் துணிதலும் ஆகாவென விடுக்க. இயற்கைப் பொருளடைவு செவ்விதாக நிறைவுறுதலின் சில பாடல்கள் விடப் பட்டனவோவென ஐயுறுதற் கிடனின்றென்க.

கேடு நினைந்து, அக்கேடே துக்கமென உணர்ந்த தம் வரலாற்றினை மனத்திற்குக் கூறியது திருவெண்பா எனவும், ஆக்கம் கேடு உயர்வு தாழ்வு என்பன கருதாது எல்லாம் அவனருளேயெனக் கொள்ளவேண்டுமென மனத்திற்கும் ஆயத் திற்குங் கூறியது பண்டாய நான்மறை எனவுங் கொள்ளக்கிடத் தலின் இஃது மேலையதனோடு இயைபுடைத்தாயிற்றென்க.

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு

I நெஞ்சினுக்கு அறிவுறுத்தியது : இன்னுறுகியும், இனியனு கியும், முன் இனியனுகிப் பின் இன்னுறுகியும் நின்றவன் தில்லை யானே என்பது (5) அவனே வேடன், அவனே வலைவாணன் என்பது (3). இனி அவனை நல்லனெனக் கண்டாய், அவனுக்குச் செய்யுங் கைம்மாறு உளதோ என்பது (1) ஆதலின் பெருந் துறையானை மயக்க உணர்ச்சியால் முன் இகழ்ந்த பழிதீர இன்னே வாயாரப் புகழ்ந்து பேசுதி என்பது (6).

II மனச் செவ்வியால் தாம் பெற்ற பேறு . மருந்தின் அடி என் மனத்தே வைத்துப் பிறப்பறுத்தேன் என்பது (7).

III நம்மவர் பெற்ற பேறு தேவர் பேற்றினும் நனிபெரிதென வியப்பது (4).

IV அடியவர்களுக்குப் பயன் கூறி வாழ்வதற்கு அறிவுறுத் தியது (2).

நெஞ்சினுக்கு அறிவுறுத்தி, மனத்தை வயப்படுத்தி அதன்கண் திருவடி புணர்த்துப் பிறவி அறுத்து, அவ்வாறு பிறவி அறுத் தமையை வியந்து, அடியார்களுக்குப் பயன் இதுவெனக் கூறி வாழ்த்துமாறு ஏவியதென இயற்கைப் பொருளடைவும், உடம்படு புணர்த்தலால் அதன் காரணமுங் கண்டு கொள்க.

இனி, நூற் பொருளடைவு : இறுதிக்கண் செவ்வி நிரம்பிய அருளையருளிய கோகழியானையும் (1), அக்கோகழியான் அருளைப் பெறுதற்குக் காரணனுக நின்ற பெருந்துறையானையும் (2), அப் பெருந்துறையானே, வேடனுகவும், வலைஞனுகவும் அன்ன பிறனுகவும் அமைந்த திறத்தினையும் (3), அவனடி சார்ந்தா ரெய்தும் பெரும் பேற்றினையும் (4), அப்பெருந்துறையானே இன்னுறுகியும், கோகழியானுகி இனியனுகியும், உத்தரகோச மங்கையானுகி இனியனுகி இன்னுறுகியும் வருகின்றுன், தில்லையிலே அங்ஙனம் அமைந்தானென்றும் (5), பெருந்துறைக் கண் அவன் மத்தன் ஆக்கினுனல்லன் , அங்ஙனமாக நினைப்பது மயக்கவுணர்ச்சியே என்றும் (6), அப்பெருந்துறையான் நல்லன் எனத் துணிந்து அவனடி மனம் வைத்துப் பிறப்பறுத்தேன் (7) என்றும் அடிகள் முறைப்படுத்தினுரென்க.

இயற்கைப் பொருளடைவு ஆதியனவற்றின் அட்டவணை ·

| பெரும் பிரிவு | உட் பிரிவு | இ. பொ எண் | நூ. எண் |
|---|---|---|---|
| I | (1)<br>(2)<br>(3)<br>(4) | 1<br>2<br>3<br>4 | 5<br>3<br>1<br>6 |
| II | | 5 | 7 |
| III | | 6 | 4 |
| IV | | 7 | 2 |

இஃது திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# அனுபவத்துக்கு ஐயமின்மை உரைத்தல்

## நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனுங்
கண்டாரு மில்லைக் கடையேனை—தொண்டாகக்
கொண்டருளுங் கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே
உண்டாமோ கைம்மா றுரை. 1

இதனால் மறைக்கும் தேவர் முதல்வர்க்கும் அரியோன், யாவரினும் கடைப்பட்டேனை வந்தடிமை கொண்டமைக்குச் செய்யத்தக்க கைம்மாறு ஒன்றேனும் இலது என்பது கூறப்படு

(பொ - ரை) பழையனவாகிய நான்கு கூறுபட்ட வேதங் களும் அவன்பால் அணுகமாட்டா, திருமாலும் அயனும் ஆகிய அவ்விருவரும் அவனைத் தேடியுங் கண்டாரில்லை. யாவரினும் கடைப்பட்ட என்னை அடிமையாகக் கொண்டருளும் திருவா வடுதுறைக்கண் மேவிய எம் தலைவனுக்கு நெஞ்சமே, யாம்

செய்தற்குரிய கைம்மாறு ஒன்றுளதே என்னில் அதனை எனக்கு ஈதென உரையாய் எ - று.

(வி - ரை.) ஊழியிறுதிக்கண் உமை காண இறைவன் வேதம் பாடுவோன் ஆகலின், அவை "பண்டாய நான்மறை" எனப்பட்டன. அவனில் அவை தோன்றினவேனும், அவையும் அவனை அறிந்தில என்க. மிகச் சேய்மைக்கண் நிற்பன என்பது தோன்ற "பாலனுகா" என்றார்.

திருமாலுக்கும் அயனுக்கும் முன்னர் அவன் ஒளியுருவனுகை வெளிப் பட்டவிடத்தும் நாடியுங் காண்கிலர் என்க. அவர் கண்டும் கண்டிலர் என்க.

'அவனையே புகழ்ந்து ஓலமிடும் வேதங்கட்கும் அவன் உருவங் கண்டும் அவன் அடிமுடிகளை நாடிக் கண்டறிதற்கு இயலாத திருமால் அயன்களுக்கும் அப்பாற்பட்ட அவன் புகழுமாறும் நாடுமாறும் இல்லாத புல்லிய என்னைத் தன் தொண்டனுகக் கொண்டருளினன்; அன்னவனுக்கு யான் செய்யும் கைம்மாறு இதுவென்று ஒன்றறியேன். நெஞ்சமே! நீ அறியின் அதனை எனக்கு உரையாய்' என்க.

"நமச்சிவாய என்று உன்னடி பணியாப் பேயனுகினும்" (செத். 7.) என அடிகள் கூறுதலின், அதுகாறும் "சிவாய நம" என உபதேசம் பெற்றிலர் என்பது தேற்றம். தில்லையைக் காணுவதற்கு முன்பேயே கோகழியில் "சிவாயநம" என்னும் திருஐந்தெழுத்து உப தேசிக்கப்பட்டனர் எனக் கொள்ளற்கு இடனுண்டு.

சிவபுராணத்தில் "நமச்சிவாய வாஅழ்க" என்பதற்கு அடுத்து "கோகழியாண்ட குருமணி தன் தாள் வாழ்க" என்றமையானும், அதன் மேல்,

"கோகழி மேவிய கோவே போற்றி" (போற்றி. 157.)

என்றமையானும், இத்திருப்பாட்டில், "கோகழி எம்கோமாற்கு நெஞ்சமே உண்டாமோ கைம்மாறுரை" என்றமையானும், உத்தரகோச மங்கையை நண்ணித் தம்மொடு கழியாதிருந்தவன், கழிந்து, தமக்கு இடர் உண்டா கப் பெருந்துறையை நண்ணி, அவ்விடர் போயகலுமாறு, மற்று இதன் மேல் கோகழிக்கு எழுந்தருளினுன் என்றமையானும் (இப்பகுதி 5.), அன்ன பிறவற்றுனும், அடிகள் உபதேசம் பெற்ற முறை யாம் கூறிய வாறே இனிது பெறப்படுதல் காண்க

அவனடி பேணினும் அது கைம்மாருகாதே என்பது குறிப்பு. முன்னர்த் தம்மை அது வஞ்சித்துக் கெடுத்ததனை எடுத்து இடித்துக் கூறினுருமாம்.

தமக்குப் பதவி முதலாயவற்றைக் கொடுத்ததனை அறவே மறந்து செய்ந்நன்றி கொன்ற அத்தேவரினும் எல்லாங்கொன்ற நாம் எத்துணைப் பாதகர் ஆவேம் என இடித்தவாறு காண்க.

உள்ள மலமூன்று மாய உகுபெருந்தேன்
வெள்ளம் தரும்பரியின் மேல்வந்த—வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்து மின்கள் வாழ்த்தக்
கருவும் கெடும்பிறவிக் காடு. 2

இதனால் பெருந்துறையினின்று மதுரைக்கண் வந்து ஆனந்தம் தமக்குத் தந்த வள்ளலை, தம்முடன் கூடிய அடியவர்களை வாழ்த்துமாறு கூறுகின்றார்.

(பொ - ரை) உள்ளனவாகிய மும்மலங்களும் மறையச் சொரிகின்ற பெருந்தேனை ஒத்த இன்ப வெள்ளத்தைத் தரும் குதிரையின்மேல் வந்த அருள் வள்ளலாவோன் தங்கியிருக்கும் திருப்பெருந்துறையை வாழ்த்துங்கோள். அங்ஙனம் வாழ்த்தலும் பிறவியாகிய காட்டகத்தில் மீண்டும் தோன்றுவாறு நும் கருவாகிய வேரும் அறவே கெட்டுப் போகும் எ - று.

(வி - ரை.) பிறவிக்கு மூலமான "உள்ள மலம்" என்க. "மலம் மூன்று" யாம், எமது, அவ்விரண்டானுமாய பாசம் என்பனவாம்.

"யாம் ஆர் எமது ஆர், பாசம் ஆர் என்ன மாயம்" (யாத். 3.)

என்றார் முன்னும். ஆணவம், மாயை, கன்மம் என உரைப்பதுமுண்டு. மல மூன்றும் மாய உகுந்தேன் ஆதலின் அது பெருந்தேன் எனப்பட்டது.

"ஆனந்தமாக் கடவி" (திருப்பாண்டி. 4.)

என்றலின் இன்ப வெள்ளந் தருதலைக் குதிரைக் கேற்றினும் அமையும்.

"தேன்புரையும் சிந்தையராய்த் தெய்வப்பெண் ஏத்திசைப்ப
வான்புரவி யூரும் மகிழ்ந்து." (திருத்தசா. 6.)

என்றதும் நோக்கற்பாலது.

திருப்பெருந்துறையினின்று மதுரைக்கு வந்த "வள்ளல்" என்க. அக்காட்சியைத் தாம் வாழ்த்தி உய்ந்தவாறே நீயிரும் உய்யுங்கோள் என்றபடி. என்னைப் போல முதற்கண் மருளீராய் வாழ்த்துங்கோள் என்றபடி. அவனினும் அவனருளிய பெருந்துறையே சிறப்புடைத்து என்பது கருத்து. பிறவிக்காட்டில் தோன்றும் கருவாகிய வேர் என்க. நமக்கு வாய்த்த பிறவிக்காடு நம் கருவோடு கெடும் எனினும் அமையும்.

பிறவி கெடில் ஆனந்தம் எய்தும்; அப்பிறவி கெட அவனைச் செய்ந்நன்றி போற்றி வாழ்த்துதல் வேண்டும் என்க. மாய்தல் - மறைதல்; 'கழனிமாய் செந்நெல்' என்றாற்போல.

தில்லைக்கண் உள்ளாராயினும் தில்லைக்கண் இறுமாந்திருக்கும் ஆக்கம் நிலை பெறற்காகவும் அதனைத் தருதற்கு மூலமாகிய பெருந்துறையைத் தம் பிழை பொறுக்குமாறு செய்ந்நன்றி போற்றி வாழ்த்துகின்றவர், ஒரு செயலின் இருபயன் பெறும் நோக்கத்தோடு வாழ்த்துமின்கள் என்றார்.

காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிபாகன் நம்வினையை—வீட்டி
அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்
மருளும் கெடநெஞ்சே வாழ்த்து. 3

இது படையின்கண் செல்லும் அன்பு நெறியுட் பட்டாரை அறிவுறுத்தியது. வேடனும் வலைவாணனும் அன்ன பிறனாகவும், அவ்வவர்க்கு அருளியவன் நம் பெருந்துறையானே எனத் தெளிந்து அவ்வேடன் முதலாயினாரையும் நம் பெருந்துறையானாகவே கருதி வழிபடின் அன்றி நம் மருள் கெடாது ஆதலின் நெஞ்சமே, அங்ஙனம் கருதி வழிபட்டு மருள் கெடுவாய் என்பது கூறப்படுகின்றது.

[முதற் பாட்டால் நெஞ்சுக்குக் கூறி, இரண்டாவதால் படையினர்க்குக் கூறி, இதனால் தமது மனத்துக்கு வாழ்த்துதலே கைம்மாறாகும் எனக் கூறியது.]

(பொ - ரை) காட்டுலகின் வேடுவனாகவும், கடலுலகில் வலைவாணன் ஆகவும், நாட்டுலகில் குதிரைப் பாகன் ஆகவும் வந்து ஆட்கொள்ளும் கயிலைக் கிழவோன் நமக்கு ஏற்ப நாட்டுலகிற் பெருந்துறை நகரோனாய்க் குதிரைமீது இவர்ந்து வந்து நம் மயக்கத்தை அழித்தருளும் அவனது அழகிய தாமரைபோன்ற திருவடிகளை முன்னர் மயங்கிய மயக்கமும் இனி எய்தாது கெட்டொழிய என் நெஞ்சமே வாழ்த்துதி எ - று.

(வி - ரை.) காடு, குறிஞ்சி சார்ந்த பக்கக்காடு. வேடன், வேட்டுத் தொழில் புரியும் குன்றக் குறவன். "காடு" என்றது அழி காடாகிய பாலையையும், "வேடன்" என்றது ஆங்கு வேட்டுத்தொழில் புரியும் எயினனையும் குறிக்கும் எனவும் கொள்க. இன்னும் இதனான் முல்லைக் கண் ஆயனாகவும், அவனைக் கொள்க. நாடு, மருதவுலகம். அடிகளும் நாட்டுலகத்தார் ஆகலின் பரிபாகனாகி அவரை ஆட்கொண்டான் என்பது தானே பெறப்பட்ட தென்க. "நம்" என்றது அடிகளை முதலாகக் கொண்டவர்களைக் குறிக்கும். இனி, ஐவகை உலகின் கண்ணும் அவ்வவர்க்கேற்ற அவ்வவத் தலைவனாக அமர்ந்து அன்பர்களாகிய நம் அனைவரையும் ஆட்கொண்டான் எனினும் பொருந்தும். "ஈண்டு" என்றது குறவராகவும், எயினராகவும், ஆயராகவும், உழுதும் உழுவித்தும் வருவோராகவும், பரதராகவும் பிறந்த அன்பர்களைக் குறிக்கும். பெருந்துறை என்றது மருதவுலகத்துள்ளதோர் நகரை. மருதவுலகமும் அதன் நகர்களும் பலவுள்ளன. அவற்றுள் பெருந்துறை நகரமும் அதன் நாடும் ஒரு பகுதியவாம் என்க. இனி மருத நிலத் தலைவனாகிய பெருந்துறையானே வேடனாகவும், வலைவாணனாகவும் வந்தான் எனக் கோவைப் பண்பாடு கொண்ட

தெனினும் ஒக்கும். "மருள்" என்றது, குறவர், எயினர், ஆயர், பரத வர் என்பவருள் அன்பு நெறிப்பட்டாரை நாட்டவருள் அன்பு நெறிப்பட்ட தம்மினும் மிகத் தாழ்ந்த நிலையுடையார் என்றும், அவர்க்கு அருள் செய்ய வந்த குறவனாகவும், எயினனாகவும், ஆயனாகவும், பரதவனாகவும் வந்த குரவர்களும் தமக்கு அருள வந்த குதிரைப்பாகனிலும் மிகத் தாழ்நிலை யுடையவர்கள் என்றும், தாம் பெற்ற பேற்றினும் அவர் பெற்ற பேறு மிகத் தாழ்ந்ததென்றும் அடிகளும் அடிகளோடு கூடிய அடியார்களும் கருதி வந்த மயக்கத்தை.

குறவர் முதலாயினாரை நம் போன்றார் எனவும், அவர்க்கு அருளவந்த வேடன் முதலாயினாரை நம் "பரிபாகன்" எனவும், அவர் பெற்ற பேறே நாம் பெற்ற பேறாகும் எனவும் உறுதிப்படின் நம் "மருளுங் கெடும்" என்றபடி. அவ்வுறுதிப் பாட்டிற்கு வேடன் முதலாயினாரையும் நம் பெருந் துறையானாகவே பாவித்து அவன் திருவடிகளை வாழ்த்தி வணங்கின் நம் மருளும் கெடும் என்றபடி. உடம்படு புணர்த்தலால் அவ்வடியார்களை வணங்கி வாழ்த்துதலும் இன்றியமையாதன எனக் கொள்க.

இப்பாட்டால் இவ்வுண்மை கண்ட அடிகள் பின்னர் தம்மை இடித் துரைப்பான் வேண்டி, முன்னர் தம் நெஞ்சினுக்கு அறிவுறுத்துகின்றார்.

திருவடியை அங்ஙனம் பாவித்து வாழ்த்தி வருந்தோறும் மயக்கமும் தீர்ந்து கொண்டே வரும் என்க.

வேடன் முதலியோரை வணங்கி வாழ்த்தாது இது காறும் பெருந் துறையானையே வாழ்த்தி வந்தமையால் எய்திய "நம் மருள்" என்க.

வாழ்ந்தார்கள் ஆவாரும் வல்வினையை மாய்ப்பாரும்
தாழ்ந்துலகம் ஏத்தத் தருவாரும்—சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி ஏத்தும் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி ஏத்தும் நமர். 4

இதனால் பெருந்துறையை வீடுபேறு கருதி ஏத்தும் நம்மவரே வினைமாய்த்து வாழ்ந்தவர் ஆவார் எனத் தம் நெஞ்சினுக்கு அறி வுறுத்துதல் கூறப்படுகின்றது.

(பொ - ரை.) தேவர்கள் சூழ்ந்து வணங்கித் துதிக்கும் திரு வினால் நிறைந்த பெருந்துறையை நன்று வணங்கித் துதிக்கும் நம்மவர்களே, வாழ்ந்தாரும் வலி பெற்ற வினையை அழிப்பாரும் உலகம் பணிந்து துதிக்கத் தக்கவரும் ஆவார் எ - று.

(வி - ரை.) "வாழ்ந்தார்கள் ஆவாரும்" என்றதன்கண்ணுள்ள "ஆவார்" என்பதனைப் பிரித்து ஏற்றின்கண் இயைக்க.

பெருந்துறையை ஏத்துவார் இரு பகுதியினர் என்க. அவருள் ஒரு பகுதியினர் தேவரும் மற்றொரு பகுதியினர் நம்மவரும் ஆவார் என்க. நம்மவர் என்றது அடியார்களை. தேவர்கள், துறக்கம் முதலாய பதவிகளைப் பெறச் சூழ்ந்து சென்று இறைஞ்சி ஏத்துவர். நம்மவர், பிறப்பற வேண்டி

இறைஞ்சுதலும் ஏத்துதலும் நன்றெனச் சூழ்ந்து அவற்றைச் செய்து வருபவர் என்க.

பகை வெல்லுதல், பெரும்பதம் பெறுதல், வாளுட் பெறுதல் என்னும் இவை முதலாயவற்றைப் பெற்றுப் பிறர் தொழுமாறு தாம் வாழ்தலைப் பெற்றுக்கோடற்கு உரியது இறைஞ்சுதல் என்று "அமரர் சூழ்ந்து" என்க. பிற வழியால் அவை பெறப்படுமேல் அங்ஙனம் இறைஞ்சார் ஆகலின் அவர் வணக்கம் பொய் வணக்கம் என்பது பெற்றும். பொய் வணக்கத்தான் வாழ்வதுபோன்று தாழ்தலும், தீயன மாய்ப்பது போல அவற்றின் ஆக்கப்பாடும், உலகந் தமக்குத் தாழ்ந்து ஏத்துவதுபோல உலகத்தால் தாழ்த்தப்பட்டுப் பழிக்கப்படுதலும் நிகழும் என்க.

நன்றிறைஞ்சி ஏத்துவோர்க்குரியன வாழ்தலும், வினை மாய்த்தலும், உலகம் தாழ்ந்தேத்துதலும் உளவாம் என்றமையால் அங்ஙனம் ஏத்தாத அமரர் வணக்கம் நன்றன்று; அவர் வாழ்வதுபோல வாழாமையும், வினை மாய்ப்பது போல மாயாமையும், உலகம் தாழ்ந்து ஏத்துதல்போலத் தாழ்த்தப்பட்டும், பழித்தலையும் எய்துவர் என விரித்தாம்.

சூழ்தல் - ஆராய்தல். நன்று சூழ்ந்திறைஞ்சுதல், நன்றன்று சூழ்ந் திறைஞ்சுதல் என்க. "நன்றெ"ன்றது காலம் முடிந்தவுடன் பிறவியுட் புகுதலை.

நமரே ஆவரன்றித் தேவர் ஆகார், ஆதலின் நெஞ்சமே, நீ தேவர் வழிபாட்டில் இறங்கி இறுதியில் அவலப்படாது நம்மவர் வழிபாட்டினை மேற்கொண்டு வாழ்வாயாக என்று அறிவுறுத்தினர் என்க.

அமரர் மெய்ப்பொருள் காணாராய் நன்றன்று சூழ்ந்தார் என்க.

தேவர்கள் தமக்கு ஊறு நேர்ந்த காலத்தில் சூழ்ந்து வருவர்; அங் ஙனம் வந்து இறைஞ்சுவதும் வேடமாத்திரையே யன்றி உண்மைத்து ஆகாது என்க. நம்மவர் எப்போதும் அவன் பக்கத்தவர் என்க.

**நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல**
**எண்ணி எழுகோ கழிக்கரசைப்—பண்ணின்**
**மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்**
**கழியா திருந்தவனைக் காண். 5**

இதனால் பிரியாத அருள் தருவானாகவும் இடர்கொளப் பிரிந்தவனாகவும் அது தீர்ப்போனாகவும் ஆங்காங்கிருந்தவனை இப்போது தில்லைக்கண்ணே நெஞ்சமே காணாய், என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) பண்ணை ஒத்த இனிய மொழியாளாகிய உமையாளுடன் உத்தரகோசமங்கைத் திருக்கோயிற்கண் குருவனாக நிலைபெற்று நம்மை விட்டு நீங்காது முன் இருந்தவனையும் நாம் இடருறுமாறு நம்மைப் பிரிந்து பெருந்துறையை அடைந்து பேரிடர் செய்து, அப்பேரிடர்கள் சென்றொழியத் திருவுளங்கொண்டு

எழுந்தருளிய திருவாவடுதுறை அரசனை இங்குக் காண்பாயாக எ - று.

(வி - ரை.) "நண்ணிப் பெருந்துறையை" என வாளா தலமே கூறினமையின், முதற்கண் உத்தரகோசமங்கை எடுத்துக் கூறப்பட்டதென்க.

"பிரியேன்" (எண். 2.) என்று கூறியதற்கு முரணுகப் பிரிந்த விகழ்வு தோன்ற "மன்னிக் கழியா திருந்தானை" என்றும் உத்தரகோசமங்கையிற் பிரிந்தும், பிரிந்து பெருந்துறை சென்று அடியாருடன் ஒன்றியதோடு தமக்குக் காட்சி நல்கிப் பித்தனுக்கிய கொடுமை தோன்றப் 'பெருந்துறையானை' என்னுது "பெருந்துறையை" என்றும், பெருந்துறைக்கண் தாம் எய்திய பேரிடர் அனைத்தும் கோகழிக்கண் ஒழியப் பெற்றமையின் நம் இடர்கள் போயகல எண்ணி "எழுகோகழிக்கரசை" என்றும் கூறினுர்.

பொய்த்துப் பிரிந்திடர் செய்த மங்கையானும் மத்தனுக்கிப் பேரிடர் செய்த பெருந்துறையானும், அம் மத்தந் தீர்த்தருளிய கோகழியானும் இத் தில்லையான் ஆவான் எனத் தம் நெஞ்சினைத் தெருட்டினுர் என்க. முன்னர் வேடனும் வலைவாணனும் பெருந்துறையானைப் போற்றுமாறே ஒப்பப் போற்றுதல் வேண்டும் என்ருர், இதனுல் தில்லையானைப் போற்றுமாறே முன்னர் இன்பு செய்து பின்னர் இன்னுசெய்த உத்தரகோசமங்கையானையும், இன்னுவே செய்த பெருந்துறையானையும் இனியதே செய்த கோகழியானையும் போற்றி மருள்கெட்டு நெஞ்சமே, வாழ்வாயாக என நெஞ்சினைத் தெருட்டினுர் என்க.

சிறப்புடைய இம்மூன்று தலங்களே கூறப்பட்டனவேனும், ஏனைய கழுக்குன்றும், மதுரை, ஆரூர், அண்ணுமலை முதலாய பல தலங்களிலிருந்தவனையும் உடன் கொள்க.

இன்னுவே செய்த பெருந்துறையை முதற்கண்ணும், இனியதுவே செய்த கோகழியானை அதன் பின்னரும், இனிதும் இன்னுதும் செய்த உத்தரகோசமங்கை யானை அதனையடுத்தும் உரைத்தார்.

காணுங் கரணங்கள் எல்லாம்பேர் இன்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக்—காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு. 6

இதனுல் செவ்வி நிரம்பாமையின் மத்தனுக்கினுன் என வெறுத்த நெஞ்சமே! அவன் ஒருபோதும் பெருந்துறையின் நீங்கினுன் அல்லன் ஆகலின், நீ முன்னம் பழி கூறிய வாயின் பிழைதீர இப்போது புகழ்ந்து பேசுதி என நெஞ்சத்தினைத் தெருட்டிக் கூறுகின்ருர்.

(பொ - ரை.) காட்சிக்குரிய கருவிகள் எல்லாம் (காண்கின்ற

எல்லாவற்றையும்) பேரின்பம் உடையனவென்று அவற்றைப் பேணிக்கொள்கின்ற செவ்வி வாய்ந்த அடியார்கள், தங்கள் பிறப்பு நீங்குமாறு காணும் பெரியானும் அவ்வடியவர் காட்சிக்கு அப் பெருந்துறையை விட்டுப் பிரியாதிருப்பவனும் ஆகிய இத்தில்லை யுள்ளானை நெஞ்சமே, வாயாரப் புகழ்ந்து பேசாய் எ - று.

(வி - ரை.) "கரணங்கள் காணும் எல்லாம்" எனக் கொண்டு கரணங்களாற் காணப்படுவன எல்லாம் என்றுரைத்தலும் ஒன்று.

காண்பன எல்லாவற்றையும், அவற்றுட் சிவத்தையே காணலின், வெறுத்தலிலராய்ப் பேரின்ப மூட்டுவனவாகப் பேணி வருபவர் என்க.

பெருந்துறைக்கண் மத்தனுக்கினுன் என்று அழுதவை எல்லாம் மயக்கத்தாலாயவை. உத்தரகோச மங்கையுட் பிரிந்ததும், பெருந்துறைக் கண் மத்தனுக்கியதும் ஆகக் கருதியவெல்லாம் பொய் என்றவாறு. எல்லாம் ஒரே பெற்றியன என்க.

இஃது தெருண்ட நெஞ்சினுக்குப் பண்டைய நிகழ்ச்சிகளை எடுத்து உரைத்து இன்புறுத்தியவாறு. இங்ஙனமே முன்னுங் கொள்க.

பேசும் பொருளுக்கு இலக்கிதமாம் பேச்சிறந்த
மாசில் மணியின் மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி என்மனத்தே வைத்து. 7

இதனால் திருவடியை மனத்தில் வைத்து மணி வார்த்தை பேசிப் பெருந்துறையாய் அமைந்து பிறப்பறுத்தமை கூறப்படு கின்றது.

(பொ - ரை.) பிறவிப் பிணிக்கு நல்ல மருந்தாகிய இனிய திருவடிகளை என் மனத்தகத்திற் பதித்து, பேசப்படும் பொருள் தொகுதிக்கு இறுதியாக அமையும் பேச்சினைக் கடந்த மறுவில்லாத குருமணியின் மணிவார்த்தை பேசிப் பெருந்துறையே என்று அமைந்து பிறவிப் பிணியின் வேரினையும் அறுத்தேன் எ - று.

(வி - ரை.) மனத்தான் நினைத்தற்கரிய இறுதியான பொருள் திருவடி. பேச்சின் இறுதி மாசில் மணி. மாசு இல் மணி பேசும் பொருளின் இலக்கிதமும், பேச்சிறந்ததும் என்க. அவை மனத்தே நிலை பெறுதற்குரிய பேற்றைத் தந்தது பெருந்துறை என்க. இலக்கிதம் - இறுதியான பொருள்; குறி என்க.

மருந்தாகிய இனிய திருவடி என்க. அம்மருந்தையுடையவன் மருத்துவன் (வைத்தியநாதன்) ஆவான் என்க.

திருச்சிற்றம்பலம்

# திருப்படை ஆட்சி

"திருப்படை" என்பது, திருவருட் சார்பிற்குரிய செவ்வி யேறிய தொண்டர்களும் இருவகைப் பத்தர்களும் யோகிகளும் சித்தர்களும் சேர்ந்த ஞான வீரர் படை. வீரர்தமக்குள்ளே ஞானம் முதிர்ந்தவர்களே சிறந்தவர்களாவர் ஆதலால், அவர்கள் கூடிய படை "திருப்படை"யெனச் சிறப்பிக்கப்பட்டது. அப்படையினர்க் குத் திருநீறே மெய்புகு பையாகவும், ஞானவாள் ஏந்தும் ஐயர்க் குரியதாகிய நாதப்பறையே பறையாகவும் அமைந்துள்ளன. அங்ஙனமாதலைத் திருப்படை யெழுச்சி, கீர்த்தித் திருவகவல், திருத்தசாங்கம் என்பவற்றுள் கண்டு கொள்க. இப்படைக்குப் பெருந்தலைவனாக நிற்போன் ஏறுடை ஈசனே ஆவன் அங்ஙன மாதலை, "இறைவன் வெளிப்பட்டு" "எழுந்தருளப் பட்டு", "எதிர்ப்பட்டு என்னுட் புகுந்திடின்" என இப்பதிகத்துள்ளே பயின்றுவருந் தொடர்களால் அறியலாகும்.

'வெளிப்படுதல்' முதலாம் திருப்பாட்டாலும், 'எழுந்தருளப் பெறுதல்' நான்கு முதல் எட்டு வரையிலும் உள்ள திருப்பாட்டுக் களாலும், 'எதிர்ப்படுதல்' மூன்றும் திருப்பாட்டாலும், 'என்னுட் புகுந்திடுதல்' இரண்டாம் திருப்பாட்டாலும் கூறப்பட்டிருத்தல் கண்டுகொள்க.

"திருப்படைட் ஆட்சி" என்பது அன்பர்களாகிய படையை ஈசன் ஆட்சி புரிய வரும்திறனைக் கூறும் நூற்பகுதி.

விதிவழி ஒழுகுதலும் விலக்குவழி ஒழிதலும் நல்லனவாகவும், விதிவழி ஒழுகாமையும் விலக்குவழி ஒழுகுதலும் தீயனவாகவும் எம்மனோர்க்கு அமைந்தனவெல்லாம், இனி அவன் உட்புகுமேல் விதிவழி ஒழுகலும் ஒழுகாமையும் விலக்குவழி ஒழுகலும் ஒழுகாமை யும் ஆகிய எல்லாம் நல்லனவாகவே அமையும் என அடிகள் இப் பகுதியில் உரைத்தருள்கின்றார் என்க. திருஞான சம்பந்த சுவாமிகள் கோளறு பதிகத்திலே ஈறுதோறும், "அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே" எனக் கூறியருள்வதும் குறிக் கொள்ளற் பாலது.

முன்னர்ப் பகுதியால் ஆயத்தாரொடு நெஞ்சிற்கு அறிவுறுத்தி ஆற்றுப்படுத்த தலைமகளைத் தோழி கண்டு "நினக்கு இனி நல்லனவே ஆகும் அல்லன ஆகா" எனக் கூறியாட்கு, "எனக்கு இனி நல்லனவும் ஆகும் அல்லனவும் ஆகும்" என்னும் பொருள் பட "ஆகாதே" என எடுத்து மொழிந்தாள் தலைமகளென்க.

"நான் மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது
காதற் காமங் காமத்துச் சிறந்தது
விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி
புலத்தலிற் சிறந்தது கற்பே அதுதான்
இரத்தலும் ஈதலும் இவையுள் ளீடாப்
பரத்தையுள் ளதுவே பண்புறு கழறல்
தோள்புதி(து) உண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணி துவக்கும் சுணங்கறை அதுவே
கேளணங் குறமனைக் கிளந்துள சுணங்கறை
சுணங்கறைப் பயனு மூடலுள் ளதுவே, அதனால்,
அகறல் அறியா அணியிழை நல்லார்
இகறலைக் கொண்டு துனிக்குந் தவறிலரித்
தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழ் ஆய்வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்." (பரிபாடல் 9 ; 12-26.)

[நான்மறைப் பொருளை விரித்து அம்மறையது நல்லிசையை விளக்கும் புலவீர், சிறந்ததொரு பொருளைக் கேண்மின் :—

காமத்துச் சிறந்தது காதலையுடைய காமம், அஃதாவது, மெய்யுற்றறியாதார் இருவர் அன்பொத்து, பான்மை வகையால் தாமே மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சி.

இனி, அன்பு ஒவ்வாத கற்புப் புலத்தலாற் சிறந்தது, அப் புலவியாவது, தான் வாயில் வேண்டலும், வாயில் நேர்தலுமாகிய இவை யுள்ளீடாகத் தலைவனது பரத்தைமையான் வருவது. இனிப் புதிதாகத் தோள் நுகரப்பட்ட பரத்தை இல்லின்கண்ணே ஒருத்தியை நாட்காலையே செவ்வணி அணிந்து விட்டும், பூப்பு அறிவிப்ப அப்பண்புறு, கழறலால் தலைவன் வந்து உவக்கும் புணர்ச்சி உடைத்து, அப்புணர்ச்சிகடாம் தலைவிக்குப் பாங்கா யினர் கேட்டு வருத்தமுறப் பரத்தையால் தன் மனைக்கண் அவர் தூற்றப்பட்டுள. அப்புணர்ச்சி இன்பந்தான் உண்டாவது இயல்பா னன்றி ஊடலானுயது, அதனல் இக்கற்பிற்போலத் தலைவர் நீங்குதல் அறியாத களவிற் புணர்ச்சியை உடைய மகளிர் அவரொடு மாறுகொண்டு துனிக்கும் குற்றமுடையாரல்லார் ; இப் புணர்ச்சியை வேண்டுகின்ற பொருளிலக்கணத்தையுடைய தமிழை ஆராயாத தலைவர் களவொழுக்கத்தைக் கொள்ள மாட்டார்.

இனி, அக்களவிற் புணர்ச்சியை யுடைமையான் வள்ளி சிறந்தவாறும், அத்தமிழை ஆய்ந்தமையான் முருகன் சிறந்த வாறும் கூறுகின்றார்.]

என்னும் பரிபாடற் பகுதியும் அதற்கு உரைவகுத்த பரிமேலழகர் உரையும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன.

"ஆகாதே" என்பதில் ஏகாரம் எதிர்மறைப் பொருள் குறித்து வந்ததென்க. டாக்டர் ஜி யூ. போப்பையரும் இவ்வாறு எதிர்மறையாகக்கொண்டு மொழிபெயர்த்தனர் என்ப.

இப்பதிகத்துள்ளே கூறப்பட்டனவெல்லாம் அடிகளுடன் நெருங்கிய தொடர்புடையனவென்றலே, என் வாழ்வு கடைப் படல், மலர்ப்பாதம் வணங்குதும் படையாட்சி பாடுதும், நாமும் நண்ணுதும், என்னுட் புகுந்திடினே, அகண்டமும் நம்முள் அகப் படுதல், அன்பரில் என் பணி முந்துறுதல், சித்திகள் வந்தெனை எய்துவது, அடியாரஷ் என் தலைமீது தழைத்தல், தான் அடியோ முடனே வந்து தலைப்படுதல், துண்ணெனா என்னுள்ளம் மன்னிய சோதி, இந்து சிகாமணி எங்களை ஆள, சாதிவிடாத குணங்கள் நம்மொடு சலித்திடுதல், மறையோன் எனையாள எழுந்தருளப் பெறின் என்றுங்கு வருவனவற்றால் தெளியலாம் எனவே இப் பதிகம் அடிகளார்தம் வரலாறு கூறுகின்றதென்பது பெற்றும்.

இப்பகுதிப் பொருள்கள் பத்தொன்பது பிரிவுடையனவாகவும், அவற்றின் உட்பிரிவுகள் ஐம்பத்தாறுகவும் காணப்படுகின்றன. இவற்றின் விரிவைக் கீழே காண்க :

(உட் பிரிவுகளின் இறுதிதோறும் பிறைக் குறிகளினுள் உள்ள எண்ணுகளுள் முன்னது பாடலையும் பின்னது அதன் அடியை யும் குறிக்கும் )

### I. இறைவனது இந்திரஞால வித்தையால் அடிகள் அவன்சீர் மறந்து மண்ணுலகில் ஊனுட்புக்கது

1. மண்களில் வந்து பிறந்திடுமாறு மறந்திடுதல் (1-3).

### II. ஊனுடம்பு புகுதல்

2. ஊனுட் புகுந்தமையாற் காரணமாகும் அநாதி குணங்கள் கருத்துறுதல் (2-4)

3. பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடுதல் (3-1).

### III. காரிகையார் மையல்

4. வில்லியல் நன்னுதலார் மயல் இன்று விளைந்திடுதல் (7-5).

5. செங்கயல் ஒண்கண் மடந்தையர் சிந்தை திளைத்தல் (8-5).

6. மின்னியல் நுண்ணிடையார்கள் கருத்து வெளிப் படுதல் (6-3).

7. காரிகையார் தம் வாழ்வில் என் வாழ்வு கடைப்படுதல் (1-2).

### IV. தன் இந்திரஞாலவித்தை காரணமாக அல்லற்படும் அடிகளுக்கு இரங்கி இறைவன் காட்சி நல்குதல்

8. கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கு (2-3).
9. ஆதி முதற் பரமாய பரஞ்சுடர் அண்ணுவது (3-4).
10. தான் அடியோமுடனே உயவந்து தலைப்படுவது (6-6).
11. துண்ணெனா உளம் மன்னிய சோதி தொடர்ந்து எழுவது (7-2).
12. விண்ணவரும் அறியாத விழுப்பொருள் இப்பொருள். ஆவது (7-6).
13. எங்கும் நிறைந்து அமுதூறு பரஞ்சுடர் எய்துவது (8-7)
14. பல் இயல்பாய பப்பறவந்த பராபரம் ஆகுதல் (7-3).

### V. இறைவனைக்கண்டு வணங்குதல்

15. கண்களிரண்டும் அவன் கழல் கண்டு களித்தல் (1-1)
16. மாலறியா மலர்ப்பாதம் வணங்குதல் (1-4)
17. வானவரும் அறியா மலர்ப்பாதம் வணங்குதல் (5-2).
18. மறையும் அறியா மலர்ப்பாதம் வணங்குதல் (4-6).

### VI. இறைவன் அடிகளை அடியார்களோடு சார்ந்து வாழச் செய்தல்

19 ஆசையெலாம் அடியார் அடியோம் எனும் அத்தனை ஆகுதல் (8-4)
20. உன்னடியார் அடியோம் என உய்ந்தது (2-2).
21. தன் அடியாரடி என் தலைமீது தழைப்பது (6-5).
22. நாமும் எலாம் அடியாருடனே செல நண்ணுவது (2-6).
23. காதல் செயும் அடியார் மனம் இன்று களிப்பது (5-4).

### VII. அடியார் கூட்டுறவால் அடிகட்கு ஆகிய ஆக்கம்

24. மன்னிய அன்பரில் என் பணி முந்துற வைகுவது (4-5).
25. சீரடியார்கள் சிவானுபவங்கள் தெரிந்திடுதல் (8-6).

### VIII. சிவாநுபவ மேலீட்டாற் பாடலோடாடல் பயிலுதல்

26. பண்களி கூர்தரு பாடலோடாடல் பயின்றிடுதல் (1-5).

## IX. தம்மைத் தலைமகளாகப் பாவித்த பாவனையும் மற்றதன் விளைவும்

27. பாவனை ஆய கருத்தினில் வந்த பராவமுதாதல் (3-2).
28. என்னும் என் அன்பு நிறைந்த பராவமுதெய்துவது (2-7).

## X. மடவார் இடர் நீங்குதல்

29. செந்துவர்வாய் மடவாரிடர் ஆனவை சிந்திடுவது (3-5).

## XI. அநுபவங்களும் சித்திகளும்

30. பண்டறியாத பராநுபவங்கள் பரந்து எழுவது (7-4).
31. எண்ணிலி ஆகிய சித்திகள் வந்தெனை எய்துவது (5-7).
32. எல்லையிலாதவை எண்குணமானவை எய்திடுவது (7-7).

## XII. சித்திகளின் காட்சி

33. விண்களிகூர்வதொர் வேதகம் வந்து வெளிப்படுதல் (1-7).
34. அகண்டமும் நம்முள் வெளிப்படுதல் (3-3).
35. இன்னியம் எங்கும் நிறைந்தினிதாக இயம்பிடுவது (6-7).
36. சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பது (8-1).
37. நன்மணி நாதம் முழங்கி உன் உள்ளுற நண்ணுவது (4-3).
38. சொல்லியலாதெழு தூமணி ஓசை சுவை தருதல் (7-1).
39. வீணைமுரன்று ஓசையில் இன்பம் மிகுத்திடுதல் (6-4).

## XIII. எண்குணப் பேற்றால் எய்திய விளைவு

40. சாதிவிடாத குணங்கள் நம்மொடு சலித்திடுதல் (8-2).
41. நன்றிது தீது என வந்த நடுக்கம் நடந்தது (2-5).
42. காலம் அனைத்தும் வந்த கலக்கம் அற்றது (5-3).
43. மண்களில் மாயை மதித்து வகுத்த மயக்கற்றது. (5-1).
44. ஒன்றினொடொன்றும் ஓரைந்தினொடைந்தும் உயிர்ப் பற்றது (2-1).

## XIV. மாயையின் ஒடுக்கம்

45. அங்கிது நன்றிது நன்றெனும் மாயை அடங்கியது (8-3).

## XV. பிறவி அறுதல்

46. பெண் அலி ஆண் என நாம் என வந்த பிணக் கறுதல் (5-5)

47. அனேக பவங்கள் பிழைத்தன (5-6).

48 இந்திரஞால இடர்ப் பிறவித் துயர் ஏகியது (3-7).

## XVI அடிகள் சோதித் தலைமகள் ஆதலும் ஆக்கமும்

49. பொன்னியலுந் திருமேனி வெண்ணீறு பொலிந் திடுதல் (6-1).

50. நாதன் அணி திருநீற்றினை நித்தலும் நண்ணுவது (4-4).

51. இன்னியற் செங்கழுநீர் மலர் என்தலை எய்துவது (4-7).

52 என் அணியார்முலை ஆகம் அளைந்துடன் இன் புறுவது (4-1)

53 சேலன கண்கள் அவன் திருமேனி திளைப்பன வாதல் (3-6).

## XVII நுகர்ச்சிப்பேறு

54. எல்லையின் மாக்கருணைக்கடல் இன்றினிது ஆடுவது (4-2).

## XVIII. மாதவர் புட்பாஞ்சலி

55. பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடுவது (6-2).

## XIX. திருப்படையாட்சி பாடியருளல்

56. பாண்டி நன்னாடுடையான் படையாட்சிகள் பாடுவது(1-6).

ஆகாதன வருமாறு : இறைவன் தன்சீர் மறப்பிக்கத் தாமும் மண்ணகத்தில் வந்து பிறந்ததும், ஊனிற்புக அநாதியான குணங் கள் கருத்துற்றதும், அங்ஙனம் கருத்துற்ற பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திட்டதும், அங்ஙனம் பறிந்து மறிந்திடுதலினால் அடிகளைக் கண்ட மடவார்கள் அடிகள்பால் மயல் கொண்டு விளைந்து சிந்தை திளைப்பதனால் அவர்தம் காதற் குறிப்பு வெளிப் பட அம்மங்கைமார் வாழ்வினிலும் தம் வாழ்வு கடைப்பட்டதும் சார்புகளும் என்பன

ஆவன வருமாறு : தன் இந்திர ஞால வித்தை காரணமாக

அவமே அல்லற்பட்டுழலும் அடிகள்தம் நிலை கண்டிரங்கிய இறைவன், கன்றை நினைந்தெழு தாயென வந்து, அடிகளை அண்ணி அடிகளை உய்யத் தலைப்பட்டதும், அதன்மேல் அடிகளின் உள்ளந் துண்ணெனத் தோன்றியும் அங்ஙனமே ஒழியாது தொடர்ந்து விழுப்பொருளாகி அமுதூறு சோதியாகி அடிகள் பரப்பறப் பராபர மாகக் காட்சியளித்தருளியதும், ஆங்கு அவனருளாலே அவன் கழல்கள் புலப்படக் கண்டு களிப்புற்றதும், ஆராய்ச்சி வன்மையால் மாலும், பதவி ஆசையால் வானவரும், தன்னில் நின்று விரிந்தமை யால் மறையும் அறியாத திருவடிகளை வணங்க அவ்வணக்கத்தை ஏற்றுக் கொண்ட இறைவன் அடியாருடன் கூட்டக் கூடித் தம் ஆசை அனைத்தினையும் அடியார்மேல் ஆக்கி அடியார்க்கு அடியேம் என உய்ய நினைந்து அவர் திருவடிகளைத் தலைமீது தழைக்கச் சூடிச் சிவபுரத்திற்கு அவருடன் செல்ல, நண்ண, அவ்வடியார் மன மும் இன்று* களிப்புற்றதும், அவ்வடியவர்க்குத் தாம் புரிந்த தொண்டினுல் அடிகளார் தொண்டே தலைசிறந்ததுவும், அங்ஙனம் சிறந்தமையாலே அவர்கள் பாற் சிவாநுபவங்களை அடிகள் தெரிந்து கொண்டதும், அச்சிவாநுபவப் பேற்றினுலே பாடலோடு ஆடல் பயின்று தம்மைக் காதலியாகப் பாவித்துத் திருஎம்பாவை முதல் திருப்பள்ளி எழுச்சி இறுதியாகவுள்ள அகத்திணைப் பொருட் பகுதிகளைப் பாடியருளிக் காதலின்பம் துய்த்ததுவும், அப்பாவனைப் பேற்றினுல் மடவார் இடரனைத்தும் நீங்கப் பெற்றதுவும், பராநுப வங்கள் வரப்பெற்று எண்ணில்லாச் சித்திகளும் எண் குணங்களும் எய்தப் பெற்றதும், விண்களிகூர வேதகம் வெளிப்பட ஆங்கு அகண்டமுந் தம்முள் அகப்பட இன்னியம் இனிதாக இயம்பச் சங்கொலி தழைப்ப மணிநாதம் தம்முள்ளூற நண்ணிச் சுவைதர வீணையோசையின்பம் மிகுக்கவும், சாதிவிடாக் குணங்கள், நன்று தீதென வந்த நடுக்கம், காலம் அனைத்தும் வந்த கலக்கம், மண் களில் மாயை மதித்து வந்த மயக்கம் என்னும் இவையெல்லாம் அற்றுப்போக உயிரும் உடம்பும் பொறியும் புலனும் உயிர்ப்பற மாயை அடங்க ஆண் அலி பெண் என வந்த பிணக்கும் அநேக பவங்களும் அறப் பிழைக்கப் பிறவித்துயர் ஏகியதும், தெய்வச் சோதித் தலைமகளாகி அவன் பொன்மேனியிலே அணிந்த திருநீறு கலவியிலே தம்மேலும் விளங்கக் கண்டு அவன் தாராகிய செங்கழு நீர் மாலையைத் தம்*குழலிலே சூட்டச் சூடிக்கொண்டு தம் முலை அவன் ஆகம் அளைந்து திளைக்க அவ்வனைத்தினையும் கண் கண்டு களிக்க மாக்கருணைக் கடலாடியதும், மாதவர் புட்பாஞ்சலி செய்

வதும், தாம் திருப்படையாட்சி பாடியருளுவதும் ஆகிய அனைத்துமாம்.

ஆகாதனவும் ஆவனவும் ஆகிய இவ்விரண்டும் அவன் என்னுட்புகில் ஆவனவற்றுக்குள்ளே அமையும் என்க

இறைவன் இந்திரஞாலத்தாலே தன்சீர் மறந்து பிறக்க வைத்து உழலச் செய்தானென்று இப்போது உணர்ந்து கொண்டனர் ஆகலின் அப்போது ஆகாதனபோற் காணப்பட்டனவும் ஆவன வெனக் கருதியருளிச் செய்தாருமாம்.

இனிவரும் பதவியில் (வீடுபேற்றில்) நன்று இது, தீது இது என்று பயின்று வந்த நடுக்கம் நடந்துபோகும். அப்போது எல்லாம் எனக்கு ஆவனவேயாகும் எனவுங் கொள்க

திருப்படையாட்சி பாடியருளும்போதுள்ள அடிகளின் நிலைமை தெய்வச் சோதித் தலைமகள் என்க.

அவன் எதிர்ப்படின் இவ்வுருவமும் அறப்பெற்று அவன் திருவடிக்குட் புக்கு அவன் ஒடுங்கிய காலத்தில் தாமும் ஒடுங்கி அவன் தோன்றிய காலத்துத் தாமும் ஆங்காங்குத் தோன்றி வருவரென்க.

இப்பகுதி, அடிகள் எல்லாந் தமக்கு ஆகும் எனக் கொண்டருளியமையால் வைப்புமுறைக்கண்ணும், இயற்கைப் பொருளடைவிற்கும் நூற்பொருளடைவிற்கும் காரணம் புலப்படாதவாறு செய்தருளினர். இத் திருக்குறிப்பு இலக்கிய உலகம் உவந்து போற்றுதற்குரியதென்க.

இப்பகுதியைக் கீர்த்தியுள், பொதுநோக்கால் ஓதற்பிரிவின் பாற்படுத்தினும், நுணுகி ஆராயுங்கால் அஃது அன்னவாறன்றி ஈண்டுக் கூறியவாறே துறைப்படுத்தற்பாலதெனப் புலனாதலின் இவ்வாறே ஆங்கும் கொண்டுரைக்க.

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# சீவோபாதி ஒழிதல்

## பன்னிரு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

கண்கள் இரண்டும் அவன்கழல் கண்டு
களிப்பன ஆகாதே
காரிகை யார்கள்தம் வாழ்விலென் வாழ்வு
கடைப்படும் ஆகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு
மறந்திடும் ஆகாதே
மாலறி யாமலர்ப் பாதம் இரண்டும்
வணங்குதும் ஆகாதே
பண்களி கூர்தரு பாடலொ டாடல்
பயின்றிடும் ஆகாதே
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள்
பாடுதும் ஆகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து
வெளிப்படும் ஆகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து
வெளிப்படும் ஆயிடிலே. 1

(பொ - ரை.) (நந்தியாகிய கௌிற்று) மீனைப் பிடித்தற் பொருட்டு இறைவனாகிய வலைவீசிய வேடுவன் வந்து வெளிப்படுவானே ஆயின், நிலவுலகத்தில் வந்து பிறந்திடுதற்குக் காரணமாகிய அவன் பாதங்களை மறந்திடுதலும் அதனாற் தையலார் வாழ்விற் கடைப்படுதலும், விண்ணுலகும் களிப்பு மிக, அவனால் (இரசவாதம் போன்ற) சித்திகள் வெளிப்படுதலும், கண்கள் இரண்டும் அவன் கழல்களைக் கண்டு களிப்பனவாதலும், மாலும் அறியாத மலர்ப் பாதம் இரண்டையும் வணங்குதலும், அவற்றை வணங்கிப் பாடலோடாடல் பயிலுதலும், பாண்டி நாட்டையுடையவனாகிய இறைவனது படையாட்சிகள் பாடுதலும் ஆகாதே? ஆகும் எ - று.

(வி - ரை.) ஒவ்வொன்றும் ஏற்றபெற்றி ஆகுமெனவும் ஆகாதென வும் கூறிய தோழிக்கு எல்லாம் ஆகுமெனப் பொருள்பட "ஆகாதே" என விடையிறுத்தாள் தலைவி என்க. வனப்பைக் காட்டி மருளவைத்துத் தமக்குக் கீழ்ப்படிந்து தொண்டு செய்யுமாறு ஆற்றுவரென்பது தோன்றக் "காரிகையார் தம் வாழ்விலென் வாழ்வு கடைப்படுமாகாதே" என்றும் தன்

சீரை மறப்பித்து மண்ணிற் பிறக்க வைத்து உழலச்செய்தாஞதலின் "மண்களின் வந்து பிறந்திடுமாறு மறந்திடுமாகாதே" என்றும், வணங்கிய களிப்பால் பாடலும் ஆடலும் நிகழுமாதலின் "பண் களி கூர்தரு பாடலொடாடல் பயின்றிடுமாகாதே" என்றும், அவ்வாறு பாடி ஆடியும் ஆடிப்பாடியும் நிற்கும் நிலையில் அவன் வருவாஞதலின் அவன் "படையாட்சிகள் பாடுதுமாகாதே" எனவுங் கூறிஞர்.

வேதகம் - இரசவாத வித்தை.

'வெளிப்படுமாயிடின், மறந்திடுதலும், கடைப்படுதலும், வெளிப்படுதலும், களித்தலும், வணங்குதலும், பாடலோடாடல் பயின்றிடுதலும் படையாட்சிகள் பயிலுதலும் ஆகும்' என இயைக்க.

"ஆகாதே" என்பது ஆகும் எனப் பொருள் தருதலால் அது "களிப்பன" என்னும் பன்மையீற்றுடன் இயைவதாயிற்று. இதஞலும் ஏகாரங்களெல்லாம் எதிர்மறைப்பொருள் என்பது பெற்றும்

ஒன்றிஞெடொன்று மோரைந்தி ஞெடைந்தும்
உயிர்ப்பறும் ஆகாதே
உன்னடி யாரடி யார் அடியோம் என
உய்ந்தன ஆகாதே
கன்றை நினைந்தெழு தாயென வந்த
கணக்கது வாகாதே
காரணமாகும் அஞதி குணங்கள்
கருத்துறு மாகாதே
நன்றிது தீதென வந்த நடுக்கம்
நடந்தன ஆகாதே
நாமுமெ லாமடி யாருடனே செல
நண்ணுது மாகாதே
என்றுமென் அன்புநிறைந்த பராவமு
தெய்துவ தாகாதே
ஏறுடையான் எனை ஆளுடை நாயகன்
என்னுள் புகுந்திடிலே. 2

என்னும் இதஞலே அடியாருடன் சிவபுரம் நண்ணுதலும் ஆகும் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) இடபத்தையுடைய ஈசனும் என்னுடைய நாயகனுமாகிய இறைவன் என்னுள்ளே புகுவாஞயின், மாயையால் தொடக்கமற்ற குணங்களைக் கருத்திற் கொள்ளுதலும், நன்று இது தீது இது என்னும் (வேறுபாட்டு உணர்ச்சியால் வந்த) நடுக்கம்

நடந்தனவாதலும், கன்றை நினைந்து வருகின்ற தாய்ப் பசுவென வந்த நிலைமையும், உன் சீரடியார்க்கு அடியாரது அடித்தொண்டராவோமென உய்ந்தனவாகிய நிகழ்ச்சியும், என்றும் என் காதல் அன்புப் பாவனையாற் பாராட்டப்படுகின்ற இன்ப அமுதை எய்துதலும், ஒன்றாகிய உடம்பினேடு ஒன்றாகிய உயிரும், ஐந்தாகிய பொறிகளோடு ஐந்தாகிய புலன்களும் கலப்பறுதலும் யாங்கள் அனைவரும் அடியார்களுடனே கூடிச் சிவலோகஞ் செல்வதற்கு ஒருப்படுதலும் ஆகாதே? ஆகும் எ - று.

(வி - ரை.) ஒன்றினெடொன்று - உயிரோடு உடல். ஐந்தினெடு ஐந்து - பொறியோடு புலன். கணக்கு - செயல். "அடியாரடியார் அடியோம்" என்றார் அடியாரின் அருமைப்பாடு தோன்ற. பொதுவை நோக்கச் சிறப்புத் தோன்றலின் அங்ஙனம் மொழிந்தாருமாம் "உய்ந்தன" வென்றது உய்ந்தனவாகிய அந்நிகழ்ச்சியை என்க. முன்னர்க் "கற்றாவின் மனம்" என்றார் திருப்புலம்பலில், ஈண்டு தமது செவ்வி முதிர்ச்சியால் "கன்றை நினைந்தெழு தா"யென இறைவனை மொழிந்தார். காரணம், பிறவிக்குக் காரணம், அநாதி குணங்கள், பிறவிக்கு இயல்பாகவே அமைந்த தொடக்கமற்ற பண்புகள். "நன்றிது தீதென வந்த நடுக்கம்" என்பதனல் ஆயத்தாரும் அடிகளாய தலைமகளும் திருப்படையாட்சியைப் பாடியருளும்போது இருந்த செவ்வி நன்கு புலப்படும். எல்லாம் நல்லனவாகும் என்ற தலைவியின் குறிக்கோளை இது நன்கு புலப்படுத்துமென்க. "பராவமுது" என்பது அன்பினைந்திணை இன்பமாகும்; அது பராவுதற்குரிய அன்புமாம்.

'என்னுள் புகுந்திடின், அநாதி குணங்கள் கருத்துறுதலும், நடுக்கம் நடத்தலும், வந்த கணக்கதுவாதலும், உய்ந்தனவாதலும், பராவமுதெய்துதலும், உயிர்ப்பு அறுதலும், நண்ணுதலும் ஆகு'மென இயைத்துக்கொள்க.

பந்த விகார குணங்கள் பறிந்து
மறிந்திடு மாகாதே
பாவனையாய கருத்தினில் வந்த
பராஅமு தாகாதே
அந்தமிலாத அகண்டமும் நம்முள்
அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாயபரஞ்சுடர்
அண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிடரானவை
சிந்திடு மாகாதே
சேலன கண்கள் அவன்திருமேனி
திளைப்பன ஆகாதே

இந்திர ஞால இடர்ப்பிற வித்துயர்
ஏகுவ தாகாதே
என்னுடை நாயக ளுகிய ஈசன்
எதிர்ப்படு மாயிடிலே. 3

என்னும் இதனுல் அவன் மேனிகண்டு நிகர்வதும் ஆகாதே என்பது கூறப்படுகின்றது

(பொ - ரை.) என்னுடைய தலைவனுகிய இறைவன் எதிர்ப் படுவானேயாயின், தளையாகிய இயல்புக்கு மாறுபட்டகுணங்கள் நீங்கி மீளுதலும், காதற் பாவனையால் நெஞ்சத்துள் ஊற்றெடுத்து வந்த (அன்பினைந்திணைப் பேருய) மேலான இன்பமாதலும் சிவந்த பவளம்போலும் வாயையும் மடப்பண்பினையும் உடைய பெண் களால் வருகின்ற துன்பங்களானவை சிதைவுறுதலும், இந்திர ஞால வித்தையை ஒத்ததுங் துன்பத்தைத் தருவதுமாகிய பிறவித் துயர் ஏகுதலும், முடிவற்ற விசுவரூப தரிசனம் என்னுள் அகப்படு தலும், தோற்றத்தை முதலாகக் கொண்டு (ஆங்காங்குச் செவ்வி யேறுந்தோறும்) ஏற்ற வடிவங்களைக் காட்டி மேன்மையுடைத்தாய மேலான சோதி அடைதலும், எனது சேல்மீனை ஒத்த கண்கள் அவன் காதல் திருமேனியில் ஈடுபட்டுத் திளைத்தலும் ஆகாதே? ஆகும் எ - று.

(வி - ரை.) மறிந்திடுதல் - அவ்வதத்தத்துவங்கள் ஆங்காச்சென்று ஒடுங்க மீளுதல். பாவனை - காதற்பாவனை. அதனுலாய அமுது "பராவமுது" என்க. அகண்டக் காட்சியால் முன்னர்ப் பித்துற்ற அடிகள் இப்போது அதுவும் அமையுமென்கின்ருர். உத்தரகோசமங்கை முதலாய இடங்களில் ஐந்திணை அன்புநெறிக்கேற்ப அளித்த காட்சிகளை "ஆதிமுதற் பரமாய பரஞ்சுடர் அண்ணுவதாகாதே" எனக் குறிப்பிட்டார். தெய்வீகத் தலைமகளாகிய தம் நிலை தோன்றச் "சேலன கண்கள்" என்ருர். தாம் ஆடூஉ அல்லேன் என்பதை நனி புலப்படுத்த அவ்வாறு கூறினுரென்பது கண்டுகொள்க. தம்மை இந்திர ஞாலத்தாற் பிறக்கச் செய்தது குறித்து "இந்திர ஞால இடர்ப் பிறவித் துயர்" என்றருளினுர். எதிர்ப்படுதல்— காட்சி.

'ஈசன் எதிர்ப்படுமேல், குணங்கள் பறிந்து மீள, அமுதூற, மட வாரிடர் சிந்த பிறவியிடர் ஏக, அகண்டமும் நம்முள் வெளிப்பட, பரஞ் சுடர் அண்ண, கண் அவன் மேனி திளைப்பன ஆகாதே' என இயைக்க.

என்னணி யார்முலை ஆகம் அளைந்துடன்
இன்புறு மாகாதே
எல்லையில் மாக்கருணைக்கடல் இன்றினி
தாடுது மாகாதே

நன்மணி நாதம் முழங்கி யென் உள்ளுற
நண்ணுவ தாகாதே
நாதன் அணித்திரு நீற்றினை நித்தலும்
நண்ணுவ தாகாதே
மன்னிய அன்பரில் என்பணி முந்துற
வைகுவ தாகாதே
மாமறையும் அறியாமலர்ப் பாதம்
வணங்குது மாகாதே
இன்னியற் செங்கழு நீர் மலர் என்தலை
எய்துவ தாகாதே
என்னை யுடைப் பெருமான் அருள் ஈசன்
எழுந்தருளப் பெறிலே 4

என்னும் இதனால் நீறணிந்து கழுநீர் சூடி முலையாகம் அளைந்து இன்புற்றுக் கருணைக் கடல் ஆகுவது ஆகாதே என்பது கூறப்படு

(பொ - ரை.) என்னுடைய தலைமகனும் அருளையுடைய இறைவனுமாகியவன் எழுந்தருளுவானாயின், நல்ல மணியின் ஒலி செவிவழியாக முழங்கி என் உள்ளத்துள்ளே பொருந்துதலும், அவனோடு (சிவபுரத்தில்) நிலைபெற்ற அடியார்களுள் என் பணியே முற்படப் பெருவாழ்வடைதலும் பெருமையுடையனவாகிய வேதங் களாலும் அறியப்படாத சிறந்த மலர்போன்ற பாதங்களை வணங்கு வேமாதலும், தலைவனது அழகிய திருநீற்றினை (கலவி காரணமாக) நாள்தோறும் (என்னுடம்பில்) பொருந்தப் பெறுதலும், காதல் நெறிக்கு இனிய செங்கழுநீர் மலர் (அவன் சூட்ட) என் தலையில் எய்தப் பெறுதலும், எனது அணிகலன்கள் நிறைந்த முலைகளைத் தன் ஆகத்தால் அளைந்து அவனுடன் இன்புறுதலும், எல்லை யில்லாத பெரிய (அன்பினைந்திணைப் பேறாய) கருணைக்கடலில் இன்று இனிதாக ஆடுவோம் எனலும் ஆகாதே? ஆகும் எ - று

(வி - ரை.) "ஆகம்", என்றது ஈண்டுத் தலைமகனது ஆகத்தை யென்க. எல்லையில் மாக்கருணைக்கடல்-ஐந்திணை இன்பக்கடல். பிறி தொன்றினாலும் எல்லைப்படுத்தப்படாத ஒத்த இன்பம் என்பார் "எல்லையில் மாக்கருணைக்கடல்" என்றார். "நன்மணி நாதம் முழங்குதல்" முதலாய வற்றைத் திருமந்திரத்துட் காண்க. அடிகளே அடியார்களுக்குத் தலைமையுடையார் என்பதை ஈண்டும் "மன்னிய அன்பரில் என்பணி முந்துறு மாகாதே" என்பதனாற் குறிப்பிட்டருளினார். செங்கழுநீர் காதலுக் குரிய மலர் என்பதை முன்னுங் கூறினும். காதற்கிழமை தோன்ற

இன்பத்தின்பாற்பட்டு "என்னுடை ஈசன்" என்றார். முன்னர் இவ்வாறு பொருள் படக் கூறியனவெல்லாம் உபசாரமெனக் க

'அருள் ஈசன் எழுந்தருளப்பெறின் மணிநாதம் என்னுள்ளூற நண்ணணி, அன்பால் என் பணி முந்துறப் பாதம் வணங்கி, நித்தலும் நீற்றினை நண்ணணி, செங்கழுநீர் மலர் தலையில் எய்தி, மூலயாகம் இன்புற்றுக் கருணைக்கடல் இன்று ஆகாதே' என இயைக்க. "அணி" என்பது தொய்யிலுமாம்.

மண்ணணினில் மாயை மதித்து வகுத்த
மயக்கறு மாகாதே
வானவ ரும்அறி யாமலர்ப் பாதம்
வணங்குது மாகாதே
கண்ணணிலி காலம் அனைத்தினும் வந்த
கலக்கறு மாகாதே
காதல்செய்யும் அடி யார்மனம் இன்று
களித்திடு மாகாதே
பெண்ணலி ஆணென நாமென வந்த
பிணக்கறு மாகாதே
பேரறி யாத அநேக பவங்கள்
பிழைத்தன ஆகாதே
எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை
எய்துவ தாகாதே
என்னை யுடைப் பெருமான் அருள்ஈசன்
எழுந்தருளப் பெறிலே. 5

என்னும் இதனால் அடியார் மனம் இன்று களிப்பது ஆகாதே என்பது கூறப்படுகின்றது

(பொ - ரை) என்னுடைய தலைமகனும் அருளைச் செய்கின்ற ஈசனும் ஆய பெருமான் எழுந்தருளுவானெனில், விண்ணுலகத் தவரும் அறிந்து கொள்ளாத மலர் போன்ற பாதங்களை வணங்குவேமாதலும், நாம் பெண்ணே என அலியே என ஆணேயென வந்த பிணக்கறுதலும், வாளா முயன்ற காலம் அனைத்தினும் வந்த கலக்கம் அற்றுப் போதலும், பெயர்தானுஞ் சொல்லுதற் கொல்லாத அனேக பிறவிகள் தவறிப் போயினவாதலும், பவங்கள் துய்ப்பதற்கென மண்ணுலகில் மாயையால் கணித்து வகுக்கப்பட்ட மாயத்தை நீங்குவேமாதலும், எண்ணாற் குறிப்பிடுதற்கும் அரிய சித்திகள் வந்து என்னை எய்துதலும், காதல் அன்புடைய அடியார் மனம் இன்று களிப்படைதலும் ஆகாதே? ஆகும் எ - று

(வி - ரை.) இவர் இவர்க்கு இத்துணையளவே என வகுத்த மயக்க மென்பார் "மாயை மதித்து வகுத்த மயக்கம்" என்ருர். தம்மைச் சிவ புரத்தினின்றும் வறிதே நீக்கி இங்ஙனமெல்லாம் உழலவைத்ததாதலின் காலத்தைக் "கண்ணிலி" என்றருளினுர். முன்னர் இறைவன் மேல் ஏற்றிய குறையை ஈண்டுக் காலத்தின்மேல் ஏற்றி மொழிந்தார். கண்ணிலி-கண்ணிலாதது - குருடு. ஐந்திணை நெறிபற்றி நின்று அன்பு செய்வா ராதலின் "காதல் செய்யும் அடியார" ரெனக் கூறினுர். இறைவனருளிய இந்திரஞால வித்தையால் பெண்ணலி ஆண் என வந்த நினைவு பெற்று ராதலின் "பெண் அலி ஆணென நாமென வந்த பிணக்கறுமாகாதே" என்ருர். பிணக்கு - மாறுபாடு. சித்திகள் கீர்த்திக்கண் கூறப்பட்டன. எண்ணிலி - எண்ணிலாதது, அனந்தம் என்றபடி.

'அருளீசன் எழுந்தருளப் பெறின், மலர்ப்பாதம் வணங்கி, பெண் அலி, ஆண் எனும் பிணக்கற்று, காலம் அணைத்தினும் வந்த கலக்கற்று, பேரறியாத பல பவங்கள் பிழைத்துச் சித்திகள் எய்தி அடியார் மனம் இன்று களிப்பது ஆகாதே' என இயைக்க. பேரறியாத பவங்களில் தாம் பிழைத்ததாகக் கூறினுரெனினுமாம். அவ்வாறு கொள்ளின் பவங்கள் பல வாதலின் பன்மை வாசகத்தாற் கூறினுரென்க.

பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறு
பொலிந்திடு மாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து
பொழிந்திடு மாகாதே
மின்னியல் நுண்ணிடை யார்கள் கருத்து
வெளிப்படு மாகாதே
வீணைமுரன்றெழும் ஓசையில் இன்பம்
மிகுத்திடு மாகாதே
தன்னடி யாரடி என்தலை மீது
தழைப்பன ஆகாதே
தானடி யோம்உட னேஉய வந்து
தலைப்படு மாகாதே
இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக
இயம்பிடு மாகாதே
என்னைமுன் ஞளுடை யீசன்என் அத்தன்
எழுந்தருளப் பெறிலே. 6

என்னும் இதனுல் அவனெடு தலைப்படுதல் இனி அமையாதா என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) என்னை முன்னரே ஆட்கொண்டருளிய இறைவனாய என்னுடைய தலைவன் எழுந்தருள்வானாயின், பொன்னின் இயல்பு அமைந்த திருமேனிக்கட் பூசிய வெள்ளிதாகிய திருநீறு பொலிந்து விளங்குதலும், மின்னலின் இயல்பை ஒத்த நுண்ணிய இடையையுடைய காரிகையார்களது எண்ணம் மாயையானதாகியது என வெளிப்படுதலும், வீணையின்கண்ணே பயின்று எழுகின்ற ஓசையினால் இன்பம் மிகப்பெறுதலும், தனது அடியாரது திருவடிகள் என் சென்னிக்கண்ணே தழைப்பனவாதலும், பெரிய தவத்தாளராய அடியார்களது கைகள் ஒன்று சேர்ந்து புட்பமழை பொழிந் திடுதலும், இனிதாகிய கூறுபட்ட வாச்சியம் எங்கும் நிறைந்து மங்கலமாக இயம்பிடுதலும், இறைவன்தான் யாம் உய்யும்படியாகத் தோன்றி அடியோமுடனே கலந்திருப்பானாதலும் ஆகாதே? ஆகும் எ - று

(வி - ரை.) இறைவன் மெய்யிற் பூசிய திருநீறு இனி தம்மேற் பொலிந்திடுமாற்றையே முதலாமடியாற் குறிப்பிட்டாரென்க. மாதவர் மகிழ்ச்சியாற் புட்பமழை பொழிவாரெனக் கூறுமதனாலே இத்துணைக் காலமும் அடிகளை இறைவன் ஆளாமையால், அகத்தே துன்புற்றார் என்பது பெற்றாம். திருமேனிப் பொலிவும் திருநீற்று அழகுங் கண்ட காட்சியால் மின்னிடையார் கருத்தும் வெளிப்பட்டது என்க. இன்னுமிதனாலே ஆணெனவும் பெண்ணெனவும் அலியெனவும் நாம் ஆயினோமெனவும் அவ்வாறாகி இன்ப துன்பம் எய்தினோம் எனவும் எண்ணுவதெல்லாம் மாயையின் மயக்கேயன்றி உண்மைத்து அன்றெனவும் இறைவனாகிய தலைவன் மாட்டு தம்மைத் தலைவியாக்கி நுகர்ந்து வரும் இன்பமே உண்மையாகும் என்பதும் குறிப்பித்தார் என்க. ஒவ்வோரடியார்க்குந் தலை தாழ்ந்து அவர் திருவடி தம் தலைமீது சூடினாராதலின் " தன்னடியாரடி என்தலை மீது தழைப்பன ஆகாதே " என்றருளினார். இன்னும் அவ்வாறு அடியார்களைப் பெரிதுந் தாழ்ந்து வணங்கி வந்தமையானே அவர்க்கெல்லாந் தலைமை தாங்கும் பேறும் அடிகளுக்கு கிடைத்த தென்க.

பொலிந்திடும், பொழிந்திடும், வெளிப்படும், மிகுத்திடும் என்பனவற்றையும் அவைபோலப் பிறண்டு வருவனவற்றையும் விகுதி குன்றிய முதனிலைத் தொழிற்பெயராகக் கொள்க. தழைப்பன, களிப்பன முதலாயவற்றிற்கு 'ஆதல்' என வருவித்து இயைத்துக் கொள்க.

'எனைமுன் ஆளுடையான் எழுந்தருளப் பெறின், நீறு பொலிந்திட, நுண்ணிடையார் கருத்து வெளிப்பட, இன்பம் மிகுத்திட, அடி தலைமீது தழைப்ப, மாதவர் புட்பாஞ்சலி செய்ய, எங்கும் இனிதாக இயம் இயம்ப, உய்யவந்து " தலைப்படும் ஆகாதே ' என இயைக்க.

சொல்லிய லாதெழு தூமணி யோசை
சுவைதரு மாகாதே
துண்ணென என்னுளம் மன்னியசோதி
தொடர்ந்தெழு மாகாதே
பல்லியல் பாய பரப்பற வந்த
பராபர மாகாதே
பண்டறி யாத ப ரானு ப வங்கள்
பரந்தெழு மாகாதே
வில்லியல் நன்னுத லார்மயல் இன்று
விளைந்திடு மாகாதே
விண்ணவரும் அறியாத விழுப்பொருள்
இப்பொரு ளாகாதே
எல்லையி லாதன எண்குண மானவை
எய்திடு மாகாதே
இந்து சிகாமணி எங்களை ஆள
எழுந்தருளப் பெறிலே. 7

என்னும் இதனுனே விழுப்பொருளாகிய காதலொழுக்கம் யானும் இப்போது நுகர்ந்து வரும் இப்பொருள் ஆகாதே என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை ) சந்திரனைத் தலைமணியாக அணிந்த ஈசன் எங்களை ஆளுவதற்கு எழுந்தருளப் பெறுவானுயின், வில்லின் இயல்பையொத்த நெற்றியையுடைய நல்லாரால் வரும் மயக்கம் இன்று (வித்தி) விளைவித்தலும், அதனுல் வந்த பல வியல்பு அமைந்த பரபரப்பு நீங்கும்படியாக வந்த பராபரம் ஆதலும், அதனுல் துணுக்கமுற என்னுள்ளத்தில் நிலைபேறுற்ற சோதி யானது அவை பற்ருவாறு என்னைத் தொடர்ந்தெழுதலும், சொல்லின் இயல்பு கடந்தெழுகின்ற பரந்து செல்லும், மணியினது ஓசை இன்பந் தருதலும், அளவற்றனவாகிய எண்குணங் களானவை (சித்திகள்) எய்திடுதலும், இதற்கு முன் கண்டறியாத மேலான பயிற்சிப் பேறுகள் பரந்தெழுதலும் தேவர்களாலும் அறியப்படாத விழுமிதாகிய அவ்வன்பினைந்திணைப் பொருள் இப்பொழுது யான் நுகர்தற்குரிய பொருளாதலும் ஆகாதே? ஆகும் எ - று.

(வி - ரை.) "தூய நாதம்" என்பது தோன்றச் "சொல்லியலாதெழு தூமணியோசை" என்றும், யான்பற்றுக் கோடின்றி அலைப்புற்று வருந்தாநின்ற அக்காலத்து விரைந்து வந்தானென்பது தோன்ற

" துண்ணென மன்னிய சோதி " என்றும், நன்னுதலார் மாட்டுச் செய்ய வேண்டிய பலவாய கடப்பாடுகள் என்பது தோன்றப் " பல்லியல்பாய பரப் பற வந்த பராபரம் " என்றும் கூறினர். விழுப்பொருள் - கந்தருவத்தின் வேருய சிறந்த ஐந்திணை ஒழுகலாறு ; "விண்ணவரும் அறியா" என்பத னல் கந்தருவத்தின் வேறுபட்டதென்பதும், " விழுப்பொருள் " என்பத னல் அதனினுஞ் சிறந்ததென்பதும் பெற்ரும். எண்குணங்கள் தொகை வகை விரிகளால் எல்லையிலாதனவாயின என்க.

சந்திரனைச் சடைமீது தரித்து ஆண்டவாறே தம்மையும் அணைத்துக் கொள்வான் என்பது தோன்ற " இந்து சிகாமணி " என்ருர்.

எங்களை ஆள எழுந்தருளப் பெறின் நுதலால் மயல் இன்று விளைந் திட, என் புரப்பற, பராபரமாய் வந்து, உள்ளத்தில் துண்ணென மன்னி, மணியோசை சுவைதர, எண்குணம் எய்தி, அவ்விழுப் பொருளாகிய ஒழுக்கம் யான் நுகரும் இப்பொருளாவது " ஆகாதே " என இயைத்துக் கொள்க.

சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை
தழைப்பன ஆகாதே
சாதி விடாத குணங்கள் நம்மோடு
சலித்திடு மாகாதே
அங்கிது நின்றிது நன்றெனு மாயை
அடங்கிடு மாகாதே
ஆசைஎ லாம் அடி யாரடி யோம் எனும்
அத்தனை ஆகாதே
செங்கயல் ஒண்கண் மடந்தையர் சிந்தை
திளைப்பன ஆகாதே
சீரடி யார்கள் சிவானு பவங்கள்
தெரிந்திடு மாகாதே
எங்கும் நிறைந்தமு தூறு பரஞ்சுடர்
எய்துவ தாகாதே
ஈறறி யா மறை யோன்எனை ஆள
எழுந்தருளப் பெறிலே. 8

என்னும் இதனல், அன்புநெறி கைவந்தமை இனி ஆகாதே என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) முடிவு அறியப்படாத அந்தணன் எனை ஆள எழுந்தருளப் பெறின், செவ்விதாகிய கயல் போன்று பிறழும் ஒளி பொருந்திய கண்ணையுடைய மடப்பத்தையுடைய பெண்களது மனம் திளைப்புறுவன ஆதலும், அதற்குக் காரணமாகிய சாதித்

தன்மையின் நீங்காத குணங்கள் எம்மோடு சலனப்படுதலும், அங்கு அச்சாதியை விடாத காரணத்தால் இது நன்று (ஆகையால் எனக்கு) இது நன்று என்று கொள்ளக் காட்டி வஞ்சிக்கும் மாயை அடங்கிடுதலும், சங்கு வாத்தியம், ஒருசேரப் பெற்று இசைத்து எழுகின்ற ஓசை மிக்குவருதலும், (உலகின்மேல் வைத்த) ஆசை முழுவதுந் திரண்டு அடியார்க்கு அடியோம் என அவர்மேல் வைக்கும் ஆசை அளவே யாதலும், மிகுபுகழாளராய அடியார் களது சிவ அநுபவங்களை தெரிந்திடுதலும், எங்கும் நிறைந்து ஐந்திணை இன்பஞ் சுரக்கும் மேலான ஒளிவடிவினை அடைதலும் ஆகாதே? ஆகும் எ - று.

(வி - ரை.) முன்னர் இயைந்திருந்த சாதிவிடாத குணங்கள் இனி இவன் எமக்கு உதவான் பசையற்றவன் எனக் கண்டு "சலித்தன" என்க. கண்ட பொருளை வரை செய்து இது தீதன்று நன்றெனத் துணித லும், அங்ஙனம் துணிந்தவாறே பின்னர் இது நமக்கு இயைபுடைத்தாகும் எனக் கோடலும் இயல்பாகலின், இது "நன்றிது நன்று" எனக் குறித்தா ரென்க. இவ்வாறு அடுக்கிக் கூறிப் பல்வகைப் பொருளுங் கொள்ள வைப்பது தெய்வீகக் கவிஞருக்கெல்லாம் இயல்பென்க. பிறபொருளிடத்து ஆசை, பொருந்தாது ஆதலின் "ஆசையெலாம் அடியார் அடியோ மெனும் அத்தனையாகாதே" என்றருளினர்.

இந்நிலை எய்தாதுவிடின் என்நிலை யாதாகும் எனக் குறிப்புப் பொருள் கோடல் சாலாது. என்னை? இது துணிவுபற்றியதாகலின்.

[குறிப்பு: இறைவனுற் காதல் நெறிக்காகப் படைக்கப்பட்டது இவ் வுலகம். ஆதலால் கற்புநெறி புகுந்து காமத்தை ஒழுங்கு செய்யாது அக்காமத்தை விதிவிலக்குகளால் தடைப்படுத்தின் மனப்பித்தும் உடற் பிணியும் சொற்பிதற்றுதலும் உடையராகி இம்மை மறுமை யிரண்டும் இழப்பர். ஆதலின் கற்புக் காதலியோடு காதன்மை பூண்டொழுகி உலகத் தொண்டு பேணிவர, இறைவன் திருவருள் அறிவுறுத்த இக்காதலெல்லாந் திரண்டு ஓர் உருவாகி அவனைப் பற்றி அப்பற்றே பற்றுக, ஒழிந்த பிற பற் றெல்லாம் நீங்கி அவனே காதலனாகவும் தாம் காதலியாகவும் பேரின்பம் நுகர்ந்து வருவதே திருவாசகத்தின் திரண்ட பொருளாகும். கருவிலே திருவுடையார்க்காயின் இயல்பாகிய துறவும் பொருந்துமென்க.]

திருச்சிற்றம்பலம்

# ஆனந்த மாலை

''ஆனந்தமாலை''யாவது ஆனந்தத்தை நோக்காகக்கொண்டு இரங்கிக் கூறிய பாடல் வரிசை

திருப்படையாட்சி செய்துகொண்டிருக்கும் அடிகள், இன்னுஞ் சிவகணத்தலைவருள் எவரேனுந் தம்மை இறைவனழைத்தானென வந்து கூறிற்றிலராகலின் அவனுற்பெறும் ஆனந்தத்தை நோக்கி இரங்கிக் கூறினரெனத் திருப்படையாட்சியுடன் இதற்கு இயைபு கண்டுகொள்க.

தலைவன் கூறிய வஞ்சங் கரந்த செஞ்சொற்கள் போன்றன வற்றை வஞ்சச் சொற்களெனக் காட்டியமையும் இன்பத்தான் எழுந்தமையின் இது ஆனந்தமாலையெனப் பெயர் பெற்றதென்க.

''கூடற்கண் காட்சி தந்த பின்னர், உத்தரகோச மங்கைக்கண் முன்னர் இனியது செய்து பின்னர்ப் பிரிந்து இன்னுது செய்தும், திருவாரூர், கோகழி முதலான தலங்களில் இனியதுவே செய்தும் வந்தனை, தில்லைக்கண் பேரானந்தம் நல்குவையென நம்பிவந்த எம்முன் சிவகணத்துள் ஒருவரையும் அனுப்பினுயில்லை இங்கும் என்னை வஞ்சிப்பாய் போலும்'' எனக் கூறினுர் அடிகள் என்க

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு —

I ஊடுங்குறிப்பொடு தனது தவறும் ஆற்ருமையுங் கூறியது' என்னுல் அறியாப்பதம் எனக்குத் தர அஃதறியாதே யான் கெட்டேன்; உன்ருற் குறையில்லை, யான் அடிமைக்கு ஆர்? அடியாரொடுங் கூடாது யானே பிற்பட்டு வருந்தினேன் (2) என வரும்.

II யானே கூடுவது எனக்கு இயலாமையால் நீயேனும் என்னைக் கூடுமாறு இயம்புதி என்று அவன் கூட்டாமையால் அரும்பிய புலவிக் குறிப்பொடு கூறியது ஒழுகலாற்றுள் ஒன்றேனும் பற்றும் பெற்றியில்லேன்; கண்டும் எனக்குக் காட்டிய பலவும் பயன்படாமையின் யான் என்று நின்னைக் கூடுவது (3) எனவும், அத்தகைய யான் நின்னைக் கூடுமாறிருப்பின் இயம்புதி. இயம்புதற்கு ஒன்றுமின்றெனின் எற்றுக்கு என்னை ஆண்டாய் (1) எனவும் வரும்

III. அப்போது கூடும்வண்ணம் உளதேல் இப்போதேனும் அஃதியாதென இயம்பாமையின், செய்வதறியாது திகைக்கின்றேன் ஆதலின் இப்போதேனும் தேற்றுதி எனக் கூறியது: பிச்சேற்றுவோய், அன்பனே, கேடிலி, நாதா, இன்பமூட்டுவோனே, செய்வதொன்று அறியேன் (7) எனவும், கொடியேன் கெடில் நினக்குப் பழிவரும்; அப்போது செத்திருந்தால் நீயும் நின்னெறியும்

எந்நிலை யெய்தியிருக்கும் , திகைத்தேன் , நின் கேட்டைக் கருதிச் சாவாதிருந்த என்னைத் தேற்றுதி (6) எனவும் வரும்.

IV. தலைமகன் குறைகளை எடுத்துக் கூறி இடித்துரைத்தது: தாயென்று அடைந்தேன் , ஆண்டாய் , நின்பால் தாய்மையின்மையின் நான் வேண்டாவோ (5) எனவும், கெடுவேன் நான் கெடுகின்றேன் , நீ ஆள்வதற்கு முன்பே எண்ணுவதை எண்ணாது ஆண்டு அதன்பின் எண்ணும் இழுக்கினையும் பூண்டுகொண்டாய் (4) எனவும் வரும்.

இனி, இப்பொருள்களை அடிகள் அமைத்துக்கொண்ட அடைவு வருமாறு .—

உன்னைக் கூடும் வண்ணத்தை இப்போதேனும் இயம்புதி (1) எனவும், தக்கேன் தகேன் என்றுராயாது ஆண்டமையானன்றே யான் பிறப்பட்டொழிந்தேன் (2) எனவும், தகுதிப்பாடொன்றும் இல்லேனுக்குப் பல துறைகளையுங் காட்டியதாற் போந்த பயன் யாது ? யான் என்று எப்படிக் கூடுவதென்று நீ கருதியாண்டாய் (3) எனவும், ஆண்டபின்பு அடியாரோடு என்னையும் அங்ஙனே ஆள்வது நடுவுநிலை ; அதனை ஒழித்தது நன்றுவென நெருக்கியது (4) எனவும், இன்னும் என்மேல் தயையுடையாயல்லை , யான் வேண்டாவோ (5) எனவும், செத்திருந்தால் நினக்கும் நின் நெறிக்கும் யாது பயக்கும் (6) எனவும், நின் பழிக்கு நாணாது படிறு செய்த நீ இப்போது அகப்பட்டாய்; அகப்பட்ட பின்னும் உனக்குச் செய்யுந் தண்டம் இதுவெனக் காணாமையால், நின் திகைப்பினைக் கண்டு யானே பொறுக்கின்றேன் (7) எனவும் கொள்க.

இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு வருமாறு —

| பெரும் பிரிவு | உட் பிரிவு | இ. பொ. அடைவு | நா. பொ. அடைவு |
|---|---|---|---|
| I | | 1 | 2 |
| II | 1<br>2 | 2<br>3 | 3<br>1 |
| III | 1<br>2 | 4<br>5 | 7<br>6 |
| IV | 1<br>2 | 6<br>7 | 5<br>4 |

இஃது திருத்தில்லையில் அருளிச் செய்யப்பட்டது என்ப.

# சிவானுபவ விருப்பம்

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மின்னே ரனைய பூங்கழல்க
ளடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனைய மலர்கொண்டு
போற்றா நின்றார் அமரரெல்லாம்
கல்நே ரனைய மனக்கடையாய்க்
கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த
என்னே ரனையேன் இனியுன்னைக்
கூடும் வண்ணம் இயம்பாயே. 1

இதனால், அன்பர் இவ்வுலகைக் கடந்தார், தேவர் போற்றுகின்றார் கடையேனாய் அவலத்துள் ஆழ்ந்தேன் யான் கூடும்போது உண்டேல் அதனை இப்போதேனும் இயம்புவாய் எனத் தனக்குட் கூறிக்கொண்டது.

(பொ - ரை.) நின் அன்பர், அகன்ற நிலவுலகத்தைக் கடந்தவராகி, மின்னலே வந்து பொருந்தியதை ஒத்த பொலிவினையுடைய கழலை அணிந்த திருவடிகளை அடைந்தார். தேவர்கள் யாவரும் தூய்மையும் ஒளியுடைமையும் பொருந்திய பொன்னை ஒத்த மலர்களைக் கையகத்துட் கொண்டு போற்றி செய்யா நின்றனர் கல்லைப் பொருந்துதலை ஒத்த மனமுடைமையாற் கடைப்பட்டேனாய்க் கழிக்கப் பெற்றுத் துன்பக் கடலுள் வீழ்ந்த எனக்கு, யானே நேரும் யான் இனி ஒருபோது நின்னைக் கூடும் நெறியொன்றிருப்பின் அதனைக் கூறாய் எ - று.

(வி - ரை.) நேர்தல் - பொருந்துதல். அறம் பொருள் இன்பம் உடைமையால் நிலவுலகம் வியனுலகம் எனச் சிறப்பிக்கப்பட்டது. கழலடைதல் ஆவது அதனை இடையீடின்றி நினைத்துவருதல். "வியனுலகம்" கடவாராகில் அமரர் ஆகார் என்க. அமரர் கழலடையாராய்த் தம் உலகில் தாம் இனிது வாழ்தற் பொருட்டுப் "போற்றாநின்றார்" என்க. கழலடையின் துறக்க நுகர்ச்சிகளனைத்தும் துறக்கப்படல் வேண்டுமென அஞ்சினர் எனக. அடியார் பேரின்பம் அடைந்தார், அமரர் பதவி இன்பம் பெற்றார். யான் அவ்விரண்டு மிலியாய்க் கழிப்புண்டு அவலக் கடலில் வீழ்ந்து துன்புற்றேன். இந்நிலவுலக இன்பத்தையேனும் பெற்றிலேன் என்பது குறிப்பு. பொன்னுக்குத் தூய்மையும் ஒண்மையும் உளவேனும் அதன்கண் நறுமை அவர்தம் போற்றியில் அன்பில்லை என்பது பெற்றாம். கல்

மனத்தேன் என்று அறியாது ஆண்டாய் என்னில், நீயும் என்னோரனைய அறிவிலியாகுவை. என் இயல்பு கண்டும் ஆண்டாய். ஆண்டும் நான் நின்னைக் கூடினேனில்லை. இனிக் கூடுமாறுண்டேல் அதனை எனக்கு இயம்புதி என்றபடி.

என்னால் அறியாப் பதம்தந்தாய்
யானதறியா தேகெட்டேன்
உன்னால் ஒன்றுங் குறைவில்லை
உடையாய் அடிமைக் காரென்பேன்
பன்னாள் உன்னைப்பணிந் தேத்தும்
பழைய அடியா ரொடுங்கூடாது
என்நா யகமே பிற்பட்டிங்
கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே. 2

இதனால் கொடுப்போரும் ஏற்போரும் ஆகிய நாம் இருவேமும், மடம்பட்டமையால் நான் பிற்பட்டுத் துன்ப மிகுகின்றேன் என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) என்னால் ஓம்புதற்கு முடியாத திருவடியை என்பால் தந்தனை, யான் அதனை ஓம்ப முடியாமையால் கெட்டொழிந்தேன். உடையாயாகிய நின் அடிமையாதற்கு யான் எத்தகையேன் என என்னையே நொந்துகொள்வேன், பல நாட்களும் உன்னைப் பணிந்து துதி செய்யும் பழைமைப் பண்பு வாய்ந்த நின் அடியார்களோடு ஒருங்குகூட வியலாது, என் தலைவனே, பிற்போக்குடையேனாய் இவ்வுலகில் பிறவிப் பிணிக்கு விருந்தாக இருந்தேன் எ - று.

(வி - ரை.) நீ கொடுத்த அரிய பொருளின் பெருமையை அறியாத யான் துன்பமுறுகின்றேன் என்பார் "அறியாதே கெட்டேன்" எனவும், தக்கவற்றைக் கொண்டும் தகாதவற்றை விலக்கியும் ஒழுகினேன் அல்லன் ஆதலின் பிழை என்னதே என்பார் "உன்னால் ஒன்றுங் குறைவில்லை" என்றும், இத்தகைய யான் பெரியேனாகிய உனக்கு அடிமையாக ஒவ்லேன் என்பார் "அடிமைக்கு ஆர்" எனவும், நீ கூட்டிவைக்கவும் நான் செவ்விக் குறைவால் பிற்பட்டேன் என்பார் "அடியாரொடும் கூடாது பிறபட்டிருந்தேன்" எனவும், என்னை ஆளுபவனாகிய நீயே இப்போதாவது என் துன்புறு நிலை குறிக்கொள்வாயாக என்பார் "நாயகமே" எனவும் இனி ஆற்றேன் என்பது தோன்ற "நோய்க்கு விருந்தாயே" என்றுங் கூறினார்.

"என்னால் அறியாப்பதம்......கெட்டேன்" என்பதற்கு நின்பதப் பெருமையை அறியேனாய்க் கெட்டிருப்பேனேல் இங்கு வந்து நின்னொடு கூட முயலுமாறு அமையாது ஆகலின் அப்பதத்தை ஓம்புமாறு

நலன் பெற்றேன் என்பதும், " உன்னால் என்றும் குறைவில்லை " என்ற தற்கு ஒம்புதலையும் நலன் பெறுதலையும் நீ வஞ்சத்தால் தடுத்துக் கெடுத்த பழி பூண்டாய் என்பதும், " உடையாய் " என்பதற்கு " அடிமையுடை யாயல்லை வஞ்சமுடையாய் " என்பதும், " அடிமைக்கு ஆர் என்பேன் " என்பதற்கு வஞ்சமுடையாய்க்கு வஞ்ச அடிமையே பொருந்துவதல்லது யான் எத்தகையேன் என்று நொந்துகொண்டேன் என்பதும், "பன்னாள் உன்னைப் பணிந்து...கூடாது" என்பதற்கு அங்ஙனம் அவருடன் பயிலார்க்கு இங்ஙனம் நின்னொடு கூடுவது யாங்ஙனம் பொருந்தும் என்பதும், "நாயகமே" என்பதற்கு இத்தகைய நீ எனக்குத் தலைவனாக வாய்த்தனையே என்பதும், குறிப்பினால் போந்தன என அகப்பொருட்பாற் படுத்தி விரித்துரைக்க. இன்னும் நின்மாயம் ஒழிந்தாயல்லை என்றுருமாம். " பிற்பட்டிங்கிருந்தேன் " என்பது கோயில் மூத்த திருப்பதிகத்தில் "பிற்பட்டொழிந்தேன்" எனக் கூறியதோடு ஒப்பு நோக்கற்பாலது.

சீல மின்றி நோன்பின்றிச்
செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச்
சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி
வாரா உலக நெறியேறக்
கோலங் காட்டி ஆண்டானைக்
கொடியேன் என்றோ கூடுவதே. 3

இதனால் சீல முதலாயவற்றுள் ஒன்றேனும் இல்லாத என்னைக் காதல் முதலாயின கொண்டு நெறியேறச் செய்து ஆண்ட நின்னை என்றோ கூடுவது என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) நல்லொழுக்கம் இன்றி (அந்நல்லொழுக்கம் கை வரற்குக் காரணமாகிய) விரதம் இன்றி (அவ்விரதத்திற்கு இன்றி யமையாத) அடக்கம் இன்றி (அங்ஙனம் அடங்குவதற்கு ஏற்ற) அறிவின்றி, தோலாற் செய்யப்பட்ட பாவை கூத்தாடுமாறே சுழன்று விழுந்து கிடத்தற்குரிய என்னைக் காதலையுங் காட்டி அதனை நிறைவேற்றும் வழியையும் காட்டிப் பிறவிக்கு மீளவும் வருதல் இல்லாத இன்ப உலகிற்குச் செல்லும் வழியிலே மேற்கொண்டு செல்லற்கேற்ற முயற்சியைக் காட்டி ஆண்டவனை எப்போது கூடுவதாகும் எ - று.

(வி - ரை.) மால் - காதல் மயக்கம். நெறி - அன்பு நெறி, வாரா உலக நெறியாகிய அவ் அன்பு நெறி என்க. கோலம் - முயற்சி. அந் நெறிக்கண்ணே சென்று ஏற்றமுறற்கான முயற்சி என்க; இனிக் 'கோலம்

வடி'வெனக் கொண்டு ஆங்காங்கு மேற்சேரற் பொருட்டு அவன் தன் கோலத்தைக் காட்சி தந்து எனக் கொள்ளலும் அமையும்.

'காதல் மயக்கம்' என்றது, இனியனாக இன்புறுத்தியும், இன்னாகி மத்தனாக்கியும் மயங்க வைத்ததலை. மயக்கந் தீர நெறி காட்டி என்க.

"கொடியேன் என்றே கூடுவது" என்றதற்கு அத்தகைய கொடியேன் என்பதை இப்போதே உணர்ந்தேன். இனி ஊடாது கூடல் வேண்டும். எனினும் என் பொல்லா மனம் இடம் தருகின்றிலதே என இரங்குவதுபோல ஊடற்கண் ஏற விரைந்தாரென அகப்பொருள் விரித்துக் கொள்க.

கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடி லாதாய் பழிகொண்டாய்
படுவேன் படுவ தெல்லாம்நான்
பட்டாற் பின்னைப் பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே
காத்தாட் கொள்ளும் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றே எங்கள் நாயகமே. 4

இதனால் கெடுமாறு கெடுவேனை நீ வலியவந்து ஆண்டமையால் வாளா பழி பூண்டாய். இது நினக்குத் தகுமா என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை) கேடில்லாதவனே, கேடடைதற்குரிய இயல்புடையேன் ஆதலால் யான் எங்ஙனம் கேடடைய வேண்டும் என அமைந்துள்ளேனோ அங்ஙனமே தவறாது கேடடைந்து வருகின்றேன். அங்ஙனம் ஆகவும், யான் கெடாவாறு யான் ஆள்வேன் என்று உண்மை காணாது ஆட்கொள்ளப் புகுந்து அவமே பழியை ஏற்றுக்கொண்டாய். கொடிய பெரிய துன்பவுலகின்கண் இயல்பாக அழுந்தக் கடவேனை அங்ஙனம் அழுந்தாமல் காப்பாற்றி ஆட்கொள்ளும் குருமணியே! நான் பட்டுக்கொள்ள வேண்டிய எல்லாவற்றையும் யானே பட்டுக்கொள்வேன். அங்ஙனம் பட்டால் அதன் மேல் எய்தும் பயன் யாதாகும்? எங்கள் தலைவனே! நன்று தீதுகளுள் ஒன்றனையுஞ் சாராது நடுவு நிற்றற்குரிய நீ அங்ஙனம் நடுவு நிற்றலை ஒழிந்தக்கால் நினக்கு நல்ல தொன்றாகுமோ எ - று.

(வி - ரை.) "கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்" எவர் தடுப்பினும் கெடும் இயல்புடையேன் ஆதலின் நீ வந்து ஆட்கொண்டும் கேடடைந்து வருகின்றேன். அதனால் நீ பயன் பெற்றிலை; "கேடிலாதாய்" என்றது யான் கெடுவதால் நினக்கொரு கேடும் உளதாகாது என்பது

தோன்ற நின்றது. அங்ஙனமாகவும் ஆட்கொள வந்து அவமே பழி பூண்டாய் என்றபடி.

நன்று தீதுகளுக்கு நடு நிற்கும் நின்னிலையையும் இழந்ததோடு ஆட்கொள்ள வந்த பயன் காணுயாகிய பழிகொண்டாய் என்க. படுவேன் - யான் செய்த தீவினைப் பயன்களாலுளவாகிய துன்பப்பாடுகளையெல்லாம் பொறுத்துக் கொள்வேன்.

அங்ஙனம் படக்கடவேன் எல்லாவற்றையும் பொறுத்துப்பட்டுக் கொண்டால் அதன்பின் என் வினையொத்து நின்னைக் கூடுவேன் என்பது தோன்றப் "படுவதெல்லாம்......பயன் என்னே" என்றார். இதனால் ஊழியிறுதியில்தான் தன் கூட்டம்போலும் எனக் குறித்தாரென்க. பயன் - தலைமகனொடு கூடி இன்பம் நுகர்தல். உனக்கிலாததோர் வித்து மேல் விளையாமல் என்வினை ஒத்தபின்,

"கணக்கிலாத் திருக்கோலம் நீ வந்து காட்டினாய்" (திருக்கழுக். 1.) என்றார் முன்னும்.

"கொடுமா நரக......குருமணியே"

இகழ்வு குறித்து நின்றது. யான் நின் வஞ்சத்துட் பட்டிருப்பின் அழுந்தியிருப்பேன் என்றது குறிப்பு.

யான் செல்லுமாறே விட்டிருப்பின் இத்துணைக்கேடு எய்தப் பெறுதிருப்பேன் என்பதும், நின் நடுவு நிலையற்றதுவே அங்ஙனம் அதற்குக் காரணமாக நின்றது என்பதும் குறித்தாரென்க. குருவனுகிக் காதலனுகிய சிறப்பே ஒரு தனிச் சிறப்பாயது என்க. 'இனி அடியார்களுக்கும் எனக்கும் நடுவாய் நில்லாது' என உரைப்பினும் ஒருவாறு பொருந்தும்.

**தாயாய் முலையைத் தருவானே**
**தாரா தொழிந்தாற் சவலையாய்**
**நாயேன் கழிந்து போவேனே**
**நம்பி யினித்தான் நல்குதியே**
**தாயே யென்றுன் தாளடைந்தேன்**
**தயாநீ என்பால் இல்லையே**
**நாயேன் அடிமை உடனுக**
**ஆண்டாய் நான்தான் வேண்டாவோ. 5**

இதனால் அடைக்கலம் புகுந்த என்னில் அருள்கொண்டிலை; ஆதலின் யான்தான் நின்னால் வேண்டப்பட்டிலேனே என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) என்னை ஒழித்த ஏனையோர்க்கெல்லாம் தாயாக நின்று அருளமுதம் ஊட்டுதலைச் செய்வோனே! எனக்கு மட்டும் தாராது வஞ்சித்தால் மெலிவடையும் குழவியாய் நாயேன் அழி

வடைந்து போவேனோ? நம்பியே, இனியாகிலும் மெலிவுதீர அரு ளமுதம் ஊட்டுவிக்கின்றுயா? அதுவும் இல்லே. என் தாய் நீ தான் என்று கண்டு நின் திருவடிகளை அடைந்தேன், ஆனால் என்மேல் வைக்கத் தக்க தாய்மை நின்பால் இல்லேயன்றே? நாயேனை நின் பழைய அடியவருடன் அன்று ஒருசேர ஆண்டுகொண்டனே. இன்று அப்பலருள்ளும் யான் ஒருவன்தான் வேண்டப்பட வில்லேயோ எ - று.

(வி - ரை.) "தாயாய்......தருவோனே" என்றூர், யாவர்க்கும் ஒப்ப அருளல் வேண்டும் என்பதும், தாய் ஓம்பாக் குழவி அழியுமாறு நீ ஓம்பா நானும் அழிவேன் என்பதுந் தோன்ற. "தாரா தொழிந்தால் சவலேயாய் நாயேன் கழிந்து போவேனோ?" என்றூர் வஞ்சித்த தலே வனேயே நீங்காத நாயைப்போல, நானும், நீ ஏனைய அன்பர்க்குச் செய் யும் அருளமுத எச்சிலேயே உண்டு களித்திருப்பேன் என்பது தோன்ற.

"நம்பி," என்னே வஞ்சித்த நீயே ஆடவரிற் சிறந்தனே என்பதுபட நின்றது. "தாயேயென்று" என்றது என்மேல் நினக்குத் தாய்மை இல்லேபோலும் எனவும், "நான்தான் வேண்டாவோ" என்றது அன்பர் கள் பலருடனுக ஆண்டாய் ஆகலின் இதுபோது நீ என்னே வேண்டா என உரைக்கின், அவ்வடியவர்களே சான்றுகப் பழி நின்னதேயாகும் எனவும் பொருள் தந்தன. 'நாயேனை அடிமை உடன் ஆக' எனக் கொண்டு நாயேனை அடிமைகளுடன் ஒருசேர என்று உரைக்க. சவலே - பாலுண்ணுது மெலிவுற்ற குழவி. ஆங்கு அருளமுதமுண்ணுது மெலி வுறற என்னே எனக் கொள்க. தாயிருக்கக் குழவி சவலேயாயிற்றே என்பது மருட்கை. தயா - தாய்மை, அன்பு, அருள், இரக்கம்.

கோவே யருள வேண்டாவோ
கொடியேன் கெடவே அமையுமே
ஆவா வென்று விடிலென்னே
அஞ்சேல் என்பார் ஆரோதான்
சாவா ரெல்லாம் என்னளவோ
தக்க வாறன் றென்றுரோ
தேவே தில்லே நடமாடீ
திகைத்தேன் இனித்தான் தேற்றுயே. 6

இதனுல் நீ என்னேத் தேற்றுவிடின் உலகம் உன்னேத் தேற்று மாறு செய்விக்கும். அங்ஙனம் செய்து உன்பாற் பழி சுமத்தாது ஆண்டுகொள்வாய் என்றருளப்படுகிறது.

(பொ - ரை.) தலேவனே! எனக்கும் அருள்செய்ய வேண்டு வதில்லேயோ? வேண்டுவது இல்லேயேயானுல் (அத்துணேக்) கொடி

யேன் கேடெய்த நின் கைம்மாறு கருதாத அருள்வற்ருது நிலை பெறுமா? அன்றியும் அது நிற்க, ஆஆ என்று நீ என்பால் இரங்கா தொழியின் என்னை அஞ்சாதே என்று தேற்றுவார் பிறர் யாவருளர்? அதுவும் நிற்க, கெட்டுப்போகின்றவர்கள் எல்லாரும் யான் கெட்டுப் போன அவ்வளவிலா கெட்டார்கள்? அங்ஙனம் கெட்டுப்போனவர் களே நீயெனக்குச் செய்த இச்செயல் தக்கதாகாது என்று நின்னை ஏச மாட்டார்களா? தேவனே! தில்லைக் கூத்தா யான் திகைத்துப் போனேன், இனியேனும் தேற்றுவாயோ எ - று.

(வி - ரை.) தே - நாயகன்; தெய்வத்தன்மையுமாம். "கோவே அருள வேண்டாவோ" என்ருர் நின் அருள் பயன் எதிர்நோக்கியதோ என்பது தோன்ற. ஆண்டானுல் ஆளப்பட்டும், அடிமை நெறி கைவரப்பெற்றும், மிக்க கேடெய்துவதற்குக் காரணம் இம்மை வினையன்று என்பார் "கொடி யேன் கெட" என்றும், அருள் செய்வதற்குரிய நீயே அஃதுதொழித்துக் கலங்க வைத்தனை; மேலும் அழிந்து தளராவாறு தேற்றுவாயாக என்பார், "ஆவா என்ருவிடில்" என்றும், பிறர் என் கேட்டையும் நின் பழியையுமே கூறுவாரன்றித் தேற்ருர் என்பார், "ஆரோதான்" என்றும் கூறி யருளினர்.

இனி, "சாவார் எல்லாம் என்னளவோ" என்றது, எனது கேட்டினை நோக்கும்போது, கெட்டவர்களது கேடு ஒரு கேடாகத் தோன்ருது எனவும் "தக்கவாறு அன்று என்ருரோ" என்றது நீ எனக்குச் செய்ததனை அவரே இகழ்வர் எனவும் பொருள்பட நின்றன.

இங்ஙனம் கொடுமை செய்தோன் தேவனும், யாவற்றையும் ஒப்ப இயக்குவோன் ஆவானும் என்பார் "தேவே தில்லைநடமாடீ" என்ருர்.

தக்கவாறு அன்று என்பவர் உலகோர் என்று கொள்ளற்க; என்னை? அஞ்சேல் என்பார் ஆரோ என்ற வழி அவர் தக்கவாறு எனக் கூறியமை பெறப்பட்டதாகலின்.

நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞாலமெலாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்ச தேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே அவிநாசி
அப்பா பாண்டி வெள்ளமே
தெரிய அரிய பரஞ்சோதீ
செய்வ தொன்றும் அறியேனே. 7

இதனுல் தம் வரலாறு குறிப்பாலுணர்த்தித் தம் செயலற்று ஒடுங்கியடங்கியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை) நரியைக் குதிரை ஊர்தியாக்கி இந்திர ஞாலம் அனைத்தினையும் நிகழ்வித்துப் பெருமையையுடைய பாண்டியனது மதுரையில் உள்ளார் யாவரையும் பித்துறச் செய்யும் பெருந்துறையானே! அடைதற்கரிய உண்மைப் பொருளே! கேடற்றவனே! அப்பனே! பாண்டி நாட்டு அன்பொழுக்கத்தாற் பெருகும் பேரின்ப வெள்ளமே! அறிதற்கரிய மேலான அறிவொளியே! செய்தற்கும் தவிர்தற்கும் உரியன ஒன்றையும் அறியேன் எ - று.

(வி - ரை.) "நரியைக் குதிரை ...... பெருந்துறையான்" என்றது அவன் செய்த இந்திர ஞாலங்களால் தம்மையும் அடிமையாக்கிய வரலாற்றினைக் குறித்து நின்றது. அரிய பொருள் - ஐந்திணைக் காதல். "அவிநாசி" என்றது அக்காதலால் கேடற்றநிலையை அன்பர்க்கு அருளுதலை உணர்த்திற்று; ஒருதலமுமாம். "அப்பா" என்றது காதலினை. "பாண்டி வெள்ளம்" என்றது அவனொடு நுகரும் பேரானந்த வெள்ளத்தை. "தெரிய அரிய பரஞ்சோதி" என்றது தானே அவனே என்ற உணர்வின்றி இன்பவொளிக்குள் அமைந்திருத்தலை.

"செய்வதொன்றும் அறியேன்" என்றது ஊடலும் கூடலும் ஆகியவற்றுக்கு அறியாது அடங்கிப் போதலை.

ஞாலம் - இந்திரஞாலம். பெருந்துறையான் மதுரைக்கண் வந்து இங்ஙனம் செய்தான் என்க.

> "புரவியின் மேல் வரப்புந்தி கொளப்பட்ட பூங்கொடியார்
> மரவியன் மேல்கொண்டு தம்மையும் தாமறியார்"
>
> (திருப்பாண்டி. 9.)

என்றும் முற்கூறினர்.

'ஞாலமெலாம் ஒருங்குநிகழ நரியைப்பரியாக்கி' என்றியைக்க.

"ஞாலமிகப் பரிமேற் கொண்ட நமைஆண்டான்" (பொன்னூச. 8.) என்றார் முன்னும். "செய்வதொன்று மறியேனே" எனத் திகைத்தமையால் திருவருளே வாயிலாக வந்து நினக்கு இத்தகைய ஆக்கமெலாம் அளித்தற்கு நின்னை அழைக்கின்றான் இறைவன் எனக் கேட்ட அடிகள் அவ் ஆக்கம் பற்றிய மருட்கையால் அடுத்த பகுதியாகிய அச்சோப்பதிகத்தை அருளினார் என்க.

திருச்சிற்றம்பலம்

# அச்சோப் பதிகம்

"அச்சோப் பதிகம்" என்பது இறைவன் அருளிய ஆக்கப்பாடு குறித்து வியந்த திருப்பாட்டுக்களையுடைய பகுதி "அச்சோ" என்பது வியப்பின்கட் பயின்று வந்ததோரிடைச் சொல். அச்சன் - அப்பன் , அஃது அன் ஈறுகெட்டு ஓகாரம் பெற்று 'அச்சோ'வென் றுயிற்றென்க. அம்மா, அப்பா முதலிய பெயர்ச் சொற்கள் மருட்கை குறித்து வருதலுங் கருதற்பாலது.

இறைவன் தம்மைக் கைவிட்டானெனக் கருதி அயர்ந்த அடிகள், சிவக்ணத் தலைவரால் இறைவன் தமக்கு அருளவிருக்கும் ஆக்கப்பாடு கேட்டு வியந்தாராதலின் இது ஆக்கம் பற்றிய மருட்கை யென்க.

தலைமகன் இல்லத்திற்கு வருமாறு அழைத்ததைத் தோழியால் உணர்ந்த தலைமகள், அவன் இல்லத்திற்குச் சென்று வதுவை அயர் வது குறித்து மருட்கையெய்திருளென அகப்பொருள் துறை விரித்துக்கொள்க.

திருப்படையாய ஆயத்தாரைவிட்டு ஆனந்தம் வருவது குறித்துத் தனித்திருந்த கலைமகள் தலைமகன் வராமையால் புலந்து பின்னர்த் தோழியால் அவன் வரவுணர்ந்து இன்பங்கொண்டு அவன் இன்ன இன்ன ஆக்கஞ் செய்வானென உணர்ந்து வியந்தா ளென்க.

இறைவன் ஒருவனே தலைமகனுகவும் ஏனைய உயிர்களெல்லாம் அவனெடு நுகர்ந்துவருந் தலைவியராகவும் அமைதலே மறைபொதி யுண்மையாகும் அங்ஙனமே விண்டுபுராணமும், திருமால் ஒரு வனே தலைமகனுகவும் ஏனைய உயிர்களெல்லாம் அவனெடு நுகர்ந்துவரும் தலைவியராகவுங் கிளந்து கூறுநிற்கும்.

மாயை மயக்கினுல் அவ்வுண்மை காணமாட்டாத உயிர்களெல் லாம், இறைவன் இயல்பினையுந் தம்மியல்பினையும் அறவே மறந்து அவற்றுள் ஒரு பகுதி தம்மை ஆண்மக்களாகவும், பிறிதொரு பகுதி தம்மைப் பெண்மக்களாகவுங் கருதி ஒரு பகுதியினர் பிறிதொரு பகுதியினரைக் காதலித்து இன்பம் நுகர்ந்து மயங்கி வந்தமையான் நிலவுலகிற் பிறந்து இன்ப துன்பங்களை நுகர்ந்தும் தம் வினைவழிக்கேற்ப விலங்கு முதலாயினவாகவும், புண்ணிய மேலீட்டால் விண்ணவராகவும், பாவமேலீட்டால் நரர்களாகவும்,

அவற்றின் பயன் வற்றியபோது மண்ணுலகில் வந்து பிறவி யெய்தியும் வாராநிற்கும்.

பிறவியுட்பட்டு உழலும் உயிர்கள் இறைவன் திருவருள் நோக்கத்தானே மக்கள் யாக்கை எய்தி, இறைவன் ஒருவனே தலைவனுவான், தாம் அவனொடு நுகரும் தலைவியராகும் என்ற மறைபொதியுண்மை கண்டு, முன்னர்த் தாம் ஒழுகிவந்த நுகர்ச்சியை ஒழித்து அதனைக் கனவிலுங் கருதாது, இறைவன் ஒருவனே தமக்குத் தலைமகனுகவும் தாம் அவனொடு நுகருந் தலைவியர் ஆகவும் பாவித்து, அப்பாவனை முதிர்ச்சியான் தமக்குரிய இழிந்த யாக்கை ஒழியத் தெய்வீகச் சோதியாய தலைமகளிர் யாக்கை பெற்று அன்பு நெறி கைவர எல்லையிலா ஆனந்தத்துள் அழுந்தும் என்க. அம்முறைக் கேற்பவே ஆண்மகனுக அவதரித்த அடிகளும், தையலார் மையல் துழனிக்குள் அழுந்தி இடர்ப்பட நேருங்காலத்தே, இறைவன் ஆசானுக வந்து அருள்பாலித்தமையான், தம் நிலையும் தம் உரிமையும் கண்டு, தம்மைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனுகவும் பாவித்த பாவனை முதிர்ச்சியால் ஆண்மகன் யாக்கை ஒழியத் தெய்வீகச் சோதித் தலைமகளாகி அன்புநெறி முதிரப்பெற்று எல்லையிலா ஆனந்தம் அவனொடு நுகரா நின்றுர் என்க.

அங்ஙனம் நுகரா நிற்கையில் தம்மை அவமே பிறக்கவைத்து அருள்செய்துவந்த காலத்தும் ஏனைய அன்பர்களை ஒன்ற ஒன்ற உடன் கலந்தவாறு தம்மையுங் கலவாறுய்ப் பிரிந்து வஞ்சித்தான் இறைவனெனப் பிறழுவுணர்ந்த அடிகளுக்குத் திருவருளால் உண்மையுணர்ந்தபோது, தம் குறைவும் அவன் நிறைவுந் தோன்றப் பெற்றமையின் தம் பிழைக்கு நாணினுராய் மேலோரே பெறுதற்குரிய ஆக்கத்தைத் தாம் பெற்றமைக்கு வழிகாணுராய் மருண்டு கூறியனவே இப்பதிகத்துட் கூறப்படுகின்றனவெனக் கண்டு கொள்க.

அன்பர்கள் தம்மை உறுப்புக்களோடு கூடிய தலைவியர்களாகவும் இறைவனைத் தலைமகனுகவுங் கருதி ஊடலுங் கூடலும் ஆகிய அவற்றையெல்லாங் குறிப்புக்களாகக் கொண்டு அவற்றுக்குரிய வெளிப்படு பொருள்கள் இவையிவையென உரைக்கும் உரைப்பகுதிகளும் உள. அவ்வுரைப் பகுதிகளையே உண்மையவாகக் கொள்ளின் ஆங்கு மெய்ப்பாடு தோன்றப் பெறுமையின் அங்ஙனங் கோடற் பயனும் வற்றுமென விடுக்க.

இந்நூலகத்திலே தலைமகனது ஊரும் பெயருஞ் சுட்டி

வருதலின் இவ்வைந்திணையகத்து இன்ப வொழுக்கம் உலகியற் கந்தருவத்தின் பாற்படுமென்றுணர்க.

*இப்பகுதியின் இயற்கைப் பொருளடைவு :*

I. அஞ்சேல் வருக என்று அச்சந்தீர்த்து (5)

II. 1. சாதல் பிறப்புக்களுள் தடுமாறுது (8), 2 பொய்ந்நெறி களைந்து மெய்ந்நெறிபற்றி (3), 3. அன்பமைத்துத் தன் நீறணிந்து தூய்மைப்படுத்தி (4)

III. கூத்தை அறிவித்து (2)

IV. 1. பிறவியை அந்தமாக்கி (6), 2 சிவமாக்கி (1), 3. அம்மையெனக்கருளினுள் (9) எனக் கொள்க.

நூற்பொருளடைவு : (1) மூர்க்கரொடு திரிந்து, (2) சிறுமை நெறி சேராது, (3) பொய் மயக்கம் நீங்கத் தன் கூத்தால், (4) அன்பு அமைத்துத் தன் நீறு அளித்து, (5) அஞ்சேல் வருகவென அச்சம் தீர்த்து, (6) பாசம் அறுத்துப் பிறவிக்கு அந்தம் காட்டி, (7) ஓங்காரத்துட்பொருளை உணர்த்தி, (8) தன்கழல் சேர, (9) அம்மை எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோ என்ருரென்க.

இஃது திருத்தில்லையில் அருளிச்செய்யப்பட்டது என்ப.

# அனுபவ வழி அறியாமை

## கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட
அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே. 1

இதனுல் முத்திநெறியறியாத மூர்க்கரொடு பயிலும் தம்மைப் பத்திநெறி அறிவித்து ஆண்டமை கூறியருளுகின்ருர்.

(பொ - ரை ) விடுதலைபெறும் வழியைப்பற்றி ஒரு சிறிதும் அறியாத மூர்க்கர்களோடும் ஒன்றுகூடி முயல்கின்ற என்னை

அன்புநெறி அறியும்படி செய்து பழைய வினைத்தொடர்புகள் விழுந்து அழியும்படி சித்தத்தே வினைகளின் மலத்தை நீக்கிச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன் அங்ஙனம் எனக்கு அருளியவாறு பெறுதற்குரியார் ஒருவருமிலர். இஃது ஒரு வியப்பு எ - று.

(வி - ரை ) மூர்க்கர் - பிடிவாத குணமுடையவர். அறிவும் அன்புமின்றி வறிதே ஒன்றனைப் பின்பற்றித் தெருட்டினும் தெருளாது, கொண்டது விடாது சொற்போர் புரிதல். யானும் பண்டு அவர்களுடன் பயின்று அவர் குணஞ்செயல்களைக் கொண்டிருந்தேன் என்றபடி.

பத்திநெறி பற்றார் முத்திநெறி பற்றார் என்க. அவர் நெறியும் மூர்க்கநெறியாகும் என்க. பத்திநெறி - அன்புநெறி; அதுவே முத்தி நெறி என்க.

அன்பு நெறிப்படில் சித்தத்தே ஒளி பெருகுதலின், அதன்பாற் கிடந்தே மலம் வேரறுதலும், மேல் பழவினைகளின் தொகுதியாகிய மரம் பாறிக் கீழே விழுந்தழியும் என்க.

வேரறுதலின் அஃதழிந்ததென்க. சிவம் - அன்பொளி மிகுதியான் எய்தியவீறு.

‘பத்திநெறியொடு மாறுபட்டேனை அந்நெறிப்படுத்துப் பழவினை பாறச் சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கினான்; அத்தகையோனை வஞ்சனெனக்கருதியூடியது பெருவஞ்சனையாகும்’ எனத் தன்னை முனிந்து புலவி நீங்கித் தான் பெற்ற ஆக்கங்கண்டு மருண்டு இங்ஙனம் தலைமகள் தன்னெஞ்சிற்குக் கூறினாள் என்க. கொண்டது விடாத மூர்க்கனேனைப் பத்திநெறிப் படுத்தமை மருட்கைத்து என்க. இங்ஙனமே பின்வருவன வற்றுக்கும் உரைத்துக்கொள்க.

நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தை எனக்கு
அறியும்வண்ணம் அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே. 2

இதனால் சிறுநெறியே பெருநெறியாக நினைவேனைத் தன் கூத்தை அறிவித்து அறிய ஆண்டமை மருட்கைத்து என்பது கூறப்படுகின்றது.

(பொ - ரை.) இதுவும் ஒரு நெறியாகும் என்றற்கும் பொருந்தாத சிறுநெறியொன்றை இதுவே பெருநெறியாகும் என்று நினைத்து வருவேனை அந்நெறிக்கட் சேராது திருவருளாகிய பெருநெறியாகிய அன்பு நெறிக்கண் சேருமாறும்

பிறிதொரு குறிக்கோள் இல்லாத கூத்தப்பிரான் தன் கூத்தின் உட்கோளை யான் அறிந்து மனங்கொள்ளும்வண்ணமும் எனக்கு அவனருளியவாறு பிறர் எவர் பெறுவார். இப்பேறும் ஒரு மருட்கைத்து எ - று.

வி - ரை.) மிகச் சிறு நெறியாகலானும், ஏனைய நெறிகளை நோக்க நெறியென்றே தோன்றாது போதலானும், "நெறியல்லா நெறி" என்றார். நெறியல்லா நெறிகளாகிய மிகச் சிறு நெறிகள் என்க. யாவற்றையும் இணைத்துச் செல்லும் பெருநெறியுடன் இணைதலின்றி, வேறாக ஒரு குறிப்பிட்ட இடத்தில் தொடங்கிப் பிறிதொரு குறிப்பிட்ட இடத்தில் முடிவன. அந்நெறிச் சென்றோர் ஆங்கு இன்னல் எய்தியும் பிறிதொரு நெறி பற்றற்கின்றி வருந்தியொழியர் என்க. இத்தகையனவே சிறு நெறிகள் எனப்படும் வாளாநெறிகள் எனப்பட்டன. தம்மாட்டுச் சென்றோர்க்குப் பயன் போதாமை எய்துமிடத்து ஆண்டுத் தொடங்கிப் பெருநெறிச் சென்று பெரும்பயன் எய்துதற்குத் தாம் கருவியாக நிற்பன. நெறியல்லா நெறியை நெறியாகவும், ஏனைய நெறிகளைச் சிறுநெறி களாகவும் பிறழவுணர்ந்தமையால் "நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனை" என்றார். அங்ஙனம் கூறினார் அவர்பட்ட துன்பம் தோன்ற. நெறிகள் பலவற்றினும் சிறந்தது முத்திநெறியாகிய பத்திப் பெருநெறியே என்று தெளிக.

உயிர்களின் தன்னையே நுகரும் ஆக்கங் கருதியே ஐந்தொழில் ஆற்றுங் கூத்து இறைவனால் நடத்தப்பெறுகின்றது என்க.

அவனையே நுகர்வதாகிய உண்மையுணர்ந்து தொடக்கத்திலேயே ஏனைய நெறிகளைக் கைக்கொள்ளாது பெருநெறியாகிய முத்திப்பத்தி நெறியைத் தான் உணர்ந்துகொள்ளும வண்ணம் என்னைக் காதலியாகவும் தன்னைக் காதலனாகவும் கொண்டு ஆண்டமையே "தன் கூத்தை உணரும் வண்ணம் அருளல்" என்க.

"குறியொன்றும் இல்லாத" என்றது ஆருயிர்களையே நுகர்வதன்றித் தனக்கெனப் பிறிதொரு குறிக்கோள் இல்லாததை என்க.

நெறிக்கண் நேரும் இடையூறுகளை நீக்கி நெறிச்செல்ல நடத்தும் கருவியாகிய திருவருளை நெறியெனக் காரியமாக உபசரித்தார் என்க.

திருவருளே சேரும் வண்ணமும், தன் கூத்தை எனக்கு அறியும் வண்ணமும் அருளியவாறு எனக் கொள்க.

நெறியல்லா நெறியை நெறியாக நினைந்தமையால் மூர்க்கரொடு பயிலலும் தமக்கு நேர்ந்தது என்றார் என்க. தையலார் காமம், நெறியல்லா நெறியை நெறியாகக் கொள்வதையும், அதனானே அந்நெறிக்கண் மூர்க்க ரொடு முயல்வதையும் உளவாக்கியது என்க.

பொய்எல்லாம் மெய்என்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
அய்யன்எனக்(கு) அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே. 3

இதனால், மூர்க்கரொடு முயல்வதனாற் சிறுநெறி சேர்ந்து, காமம் காழ்த்து, மங்கையர் முலைப்போகத்தால் மாண்டுபோகாது, கழல்சேர அருளியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை) நிலையற்றனவற்றை நிலையினவென்றெண்ணிய மையான், (இடையீடின்றித் தம்முள்) நெருங்கிக் கிடக்கின்ற முலைகளையுடைய மங்கையர்களுடைய நுகர்ச்சிக்கண் மயங்கிக் கிடத்தற்குரிய என்னை, (அங்ஙனம் நுகர்ந்து) கேடு அடையாவண்ணம் காத்தருளி உமைப் பிராட்டியைத் தன் இடப்பாகத்தே கொண்டுள்ள தலைவனாகிய ஐயன் தன் திருவடிகளையே அடையும்வண்ணம் எனக்கு அருளியவாறு அச்சோ ஆர்பெறுவார் எ - று.

(வி - ரை.) மூர்க்கரொடு சேர்ந்தமையாற் சிறுநெறிப்பட்டுக் காமம் காழ்த்து முலையார் போகத்திற்கிடமாகி நரகிடை வீழ்வேனை மூர்க்கர் தொடர்பும், சிறுநெறிச் சேர்வும் மடவோர் நுகர்ச்சியும் நரகப்பேறும் களைந்து தன் கழல்சேர அன்புநெறிபற்றி உய்யச் செய்தான். அங்ஙனம் செய்தவன் "தையலிடம் கொண்டவன்" என்க.

மெய்யாகிய தன் கழல் என்க.

மண்ணதனிற் பிறந்துஎய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி எனையாண்டிட்டு என்னையுந்தன் [ம்
சுண்ணவெண்ணீறு அணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ண
அண்ணல்எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே. 4

இதனால் மங்கையர் நுகர்ச்சியால் மீண்டும் மீண்டும் பிறந்து இறவாதவாறு அன்பினை அருளி அன்பு நெறிப் பேற்றுக் காப்பாகிய திருநீற்றை அணிவித்துக் கலப்பற்ற அன்புநெறி சேரச் செய்தமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) மீண்டும் மீண்டும் நிலத்திலே பிறந்து, இளைத்து, இறந்து கீழ்ச்சென்று வீழ்தற்குரிய என்னை, எண்ணிச் செய்யப்படாத தன்மேல் வைக்கும் அன்பினை எனக்கருளி என்னை ஆண்ட பின்னர் என்னையும் தன்னுடைய திருவெண்ணீற்றுப் பொடியை அணிவித்துத் தூய அன்பு நெறியை அடையும்வண்ணம் பெருமை வாய்ந்தோன் எனக்கு அருளியவாறு அச்சோ பெறுவார் ஆர் எ - று.

(வி - ரை.) மண்ணகத்தில் மீண்டும் பிறத்தலும் எய்த்தலும் மாண்டு விழுதலும் நிகழாவாறு இன்ன பயன் கருதி இங்ஙனம் இறைவனிடத்து அன்புசெய்தல் வேண்டுமெனச் சூழாது, அவன்பால் தன்னியல் பால் பற்றி நெகிழ்ந்து இனிது அழுந்திய அன்பை "எண்ணமிலா அன்பு" என்றார் என்க. "என்னையும்" என்பது இழிவு சிறப்பு

"தன்னீறெனக்கருளி" (திருப்பொன். 3.)

என்றும்,

"நாதன் அணித்திருநீற்றினை நித்தலும் நண்ணுவது"
(திருப்படையாட். 4.)

என்றும் முன்னரும் கூறினர்.

சென்ற வினைகள் மீளாமலும் இனியிடையூறு வராமலும் அமையக் காப்பாகத் தன் நீறு அணிவித்தான் என்க. என்னை? அது கவசம் ஆகலின் என்க.

"எண்ணமிலா அன்பருளி" என்பதற்கு முன்னொருபோதும் என் எண்ணத்தில் இருந்திராத அன்பை எனக்கு அருளி என்றுரைத்தலும் ஒருவாறு பொருந்தும்.

இனிமேலும், எய்த்து, இறந்து துறக்க நரகங்களில் வினைப்பயன் நுகர்ந்து வற்றியவுடன் மண்ணதனிற் பிறந்து, எய்த்து மாண்டு விழக் கடவேனை என விரிக்க.

**பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு**
**நெஞ்சாய துயர்கூர நிற்பேன்உன் அருள்பெற்றேன்**
**உய்ஞ்சேன்நான் உடையானே அடியேனை வருகஎன்று**
**அஞ்சேல்என்று அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே. 5**

), மகளிர் பையவந்து கண்ணைக் காட்டிக் காமத்தால் துன்புறுத்துவதை நீக்கியதனால், தாமே தேருவதன்றி அவன்பால் அருள் பெற்று உயர்ந்தேன் என்றருளியது

(பொ - ரை.) பஞ்சு போன்ற மெல்லிய அடியையுடைய இளமகளிர் கடைக்கண் பார்வையால் இடர்ப்பாடடைந்து துயரத் தாலாகிய நெஞ்சு மேலும் துயரத்தால் வளர்ச்சியடைய நிற்பேனாகிய யான் உன் திருவருள் பெற்றேன், உய்வும் அடைந்தேன்; என்னை உடையவனே, உன் அடியேனை, வருவாயாக என்று அழைத்து, அஞ்சாதே என்று அபயம் அருளியவாறு அச்சோ பெறுவார் ஆர் எ - று.

(வி - ரை.) 'நிற்பேனாகவும், அருள் பெற்றேனாய், உய்ந்தேனாகிய, என்னுடையானே, அடியேனை வருக என்று, அஞ்சேலென்று அருளியவாறு' என விரிக்க.

'நான் அன்ன பாங்கனே' என்பது போல, "நான் உடையான்" என்பதும் நின்றது. உடையானே, நான் உய்ஞ்சேன் எனினும் ஆம்.

"பஞ்சாய" ஈண்டு ஆய என்பது உவம வாசகம். மெல்ல நடந்து வந்து கடைக்கண் காட்டிக் காமத்துயர் கூரச் செய்கின்றார் என்பார் "பஞ்சாய......நிற்பேன்" என்றும், மருள் பெறவேண்டிய யான் "உன் அருள் பெற்று உய்ஞ்சேன்" என்றும் கூறினார்.

முன்னர் முலை காட்டிப் போகம் நுகரவேண்டும் என்னும் வேட்கையை ஊட்டிய அவர் இன்னே பைய வந்து கடைக்கண் காட்டி மருட்டி நெஞ்சு துயர் கூரச் செய்யா நின்றார் எனக் கூறினும் கொள்க. 'மாள்வேன் உய்ஞ்சேன்' எனவும், 'மருள் பெறுது அருள் பெற்றேன்' எனவும் கூறிக் கொள்க. 'வா வென்னக் கண்ணுர உய்ந்தவாறு,' 'பாதமலர் காட்டிய வாறு' 'அச்சோ என் சித்தத்தாறு உய்ந்தவாறு,' 'அஞ்சேலென்று உய்ந்தவாறு' எனத் திருவார்த்தையுள்ளும் இங்ஙனே கூறியதும் காண்க. துயராலாய நெஞ்சுகூர எனக் கொண்டுரைக்க. பற்றினுரைக் கெடுக்கும் பற்றினைக் கொண்டு நிற்பேன் என விரிக்க.

**வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்**
**கொந்துகுழற் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்**
**பந்தம்அறுத்(து) எனைஆண்(டு) பரிசறஎன் துரிசும்அறுத்(து)**
**அந்தம்எனக்(கு) அருளியவா(று) ஆர்பெறுவார் அச்சோவே 6**

இதனால், கண் காட்டிய அவரே, துயிலற்குரிய இடமிது எனக் குழல் காட்டி, வளை ஒலிப்பச் சைகை காட்டி, முலையும் காட்டி வருத்த, அப்பந்தங்களையும், பந்தக் குற்றங்களையும் நீக்கியது கூறியருளப்படுகின்றது.

(பொ - ரை.) பின்னர் எரிந்து கேடடைதற்குரிய உடற் பிறவியை நிலையாதென்றெண்ணித் தீவினைகளை மிகச் செய்து, பூங்கொத்துக்களையணிந்த கூந்தலையும், திரண்ட வளையல் அணியையும் உடைய மகளிர் தம் குவிந்த முலைகளின்மேல் வேணவாக் கொள்வேனது கட்டுக்களை அறுத்து, எனை ஆண்டு என் இயல்பு நீங்க என்னுள் இருந்த குற்றங்களையும் களைந்து, என் பிறவிக்கு அறுதியருளியவாறு அச்சோ பெறுவார் ஆர் எ - று.

(வி - ரை.) உடற்பிறவி, இரு பெயரொட்டு. பிறவி - பிறப்பது. அதனை மெய்யென்று கருதி அதன் நிலை பேறின் பொருட்டு வேண்டிய நுகர்ச்சிகளைத் தேடிக் கொடுத்தற்கெனத் தீவினை பெருக்கினான்க. அதனால் உடல் தன்வழி நில்லாது மதங்கொள்ளுதலின் குவி முலைமேல் வீழ்வதாயிற்று.

மூர்க்கர் முயல்வாற் சிறுநெறிச் செலவும், உடலை நிலையதுவாகப் பேணிக் குவி முலைமேல் வீழ்வதும் உளவாயின என்க.

என்னைக் கைப்பிடித்து, குவி முலை நுகர்ந்து கூந்தற் பாயலுள் துயிலுதி என அவர் மருட்டுகின்றார் என்பார் "கொந்து......வீழ்வேனை" என்றார்.

அன்புநெறி ஒழுகாராய்ப் புறநெறி ஒழுகி வருவாரே நாளடைவிற் சிறுநெறி சேர்வர் என்பது இதனானும் பெறும்.

"பந்தம்" என்றது உடலும் வினையும் காமப் பகுதியும் அன்ன பிறவும் ஆகியவற்றை இவை புறத்திலுள்ள பந்தம். அவற்றைத் தூய்மை செய்தான் என்க.

பரிசு - இயல்பு. தனக்கென ஓர் இயல்பற்ற உயிர் புறப்பொருள்களின் கூட்டுறவால் பெற்றுக்கொண்ட இயல்பு. இஃது அகத்தது.

புறத்திருந்து வந்து தாக்குவது பந்தம். அதனால் பெற்றுக்கொண்ட உருவம் பரிசு ஆகிய துரிசு என்றவாறும். 'பாச ஞானம், பசு ஞானம்' என்றலும் ஒன்று.

**தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்**
**பையவே கொடுபோந்து பாசமெனும் தாழ்உருவி**
**உய்யுநெறி காட்டுவித்திட்(டு) ஓங்காரத் துட்பொருளை**
**ஐயன்எனக்(கு) அருளியவா(று) ஆர்பெறுவார் அச்சோவே. 7**

இதனால் அங்ஙனம் அவர்கள் மருட்டுகையினாலே அதற்கு ஒப்புரைக்க எண்ணிய தமக்கு ஓங்காரத்துட் பொருளை அறிவுறுத்தியமை கூறப்படுகின்றது

(பொ - ரை) புனைதலொடு கட்டழகும் வாய்ந்த பெண்கள் வந்து மயக்குவதாலுளதாகிய மாயையிலே வீழ்வதற்குரியேனை மெல்லக் கொண்டு சென்று, என்னைக் கட்டியிருந்த பாசம் என்னும் கயிற்றின் முடிச்சை உருவி அவிழ்த்து, உய்தி கூடும் வழியைக் காட்டுவித்து ஓங்காரத்தினுட்காணப்படும் பொருளாகிய தன்னை எனக்கு ஐயன் அருளியவாறு அச்சோ பெறுவார் ஆர் எ - று.

(வி - ரை.) மூர்க்கர் உறவாற் சிறுநெறிச் சென்று தையலார் மையலில் வீழ்வேனை யான் அறியாமல் என்பந்தமும் பரிசும் அறுத்து அன்பர் உறவு பூண்டு பெருநெறி சேரச் செய்தான் என்பார், "பையவே கொடு போந்து" என்றார். அச்செயல் மான்காட்டி மான்பிடிப்பது போன்றதென்க.

அங்ஙனம் கொண்டு சென்றவன், தான்கூறும் பொருளை அறிதற்கண் ஆர்வமுண்டாகும்படி என் சித்தத்தே இருந்த அழுக்கை அகற்றி, பெருநெறியாகிய அன்புநெறியை அருளிச்செய்து தன் திருக்கூத்தின்

திறங்காட்டித் தன் திருவடியைப் பற்றும்வண்ணம் அருள்செய்து, தூய அன்புநெறியில் சேரவைத்து, அதன்மேலும் அபயம் தந்து, அளவற்ற கருணைபுரிந்து, என் அகப்புறப் பந்தங்களை அடியோடு அழித்து, என்னைத் தூய்மை செய்தான் என்பது தோன்றப் "பாசம் எனும் தாழுருவி" என்றார். கட்டின் சிக்கல் மிகுதி தோன்றப் "பையவே" என்றருமாம்.

**சாதல்பிறப் பென்னுந் தடஞ்சுழியில் தடுமாறிக்**
**காதலின்மிக்கு அணியிழையார் கலவியிலே விழுவேனை**
**மாதொருகூ றுடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்**
**ஆதியெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 8**

இதனால் ஒப்புரைக்க எண்ணியதுமன்றி, கலவியில் விழப் புகுந் தமக்குப் பண்டுதான் பெற்றிருந்த திருவடிப்பேறே மீண்டும் அருளியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) பிறவியாகிய பெருங்கடலுள் அகப்பட்டு இறத்தல் பிறத்தல் என்னும் இரண்டு சுழிகளாற் சுழிக்கப்பட்டுத் தடுமாற்றங் கொண்டும், காமம் மிக்கு அழகிய இழை அணிந்த மகளிர் புணர்ச்சியிலே விழுதற்குரியேனை உமையை ஒரு கூற்றிலே உடைய சிவபிரான், தன் திருவடியையே அடையும்படி ஆதியில் யான் இருந்த நிலையை எனக்கு அருளியவாறு அச்சோ பெறுவார் ஆர் எ - று.

(வி - ரை.) சாதல், பிறப்பு என்னும் தடஞ்சுழியில் தடுமாறியும் என உம்மை விரிக்க. எனவே தம் நிலையாமையை உணர்ந்துவைத்தும் என்றபடி.

பிறவியாகிய பெருங்கடல்; அதனுட் சாதலும் பிறத்தலும் ஆகிய இரு சுழல்கள் உள்ளன என்க. ஈண்டுப் பிறவியும் வேறு, பிறத்தலும் வேறு எனக் கொள்க. அங்ஙனம் மகளிர் கலவியிலே விழுதலானது, பின்னர் யானை ஒன்று துரத்திவர, அஞ்சி ஓடிச் சென்றான் ஒருவன், அறியாது ஒரு பழுங்கிணற்றுள் வீழ்தலும், கீழேஇருந்த பாம்பொன்று சீறிக் கடிக்க வர, மேலேறவும் கீழ்இறங்கவும் முடியாமல் இடைநடுவில் தங்கமுடியாமல் கணத்துள் அறுந்து போதற்குரிய கொடியொன்றினைப் பற்றி, மேலிருந்த தேனிறாலினின்றும் ஒழுகிய தேன்துளியை, அந்நிலையில் வாய்மடுத்து இன்புறுவானுடைய வரலாற்றுடன் ஒப்பிட்டு உணர்தற்பாலது.

இங்ஙனம் நிலையற்றவற்றைப் பற்றி இன்புறும் எனக்கு நிலையுற்ற திருவடிகளைப் பற்றச் செய்து எல்லா மயக்கங்களையும் விலக்கி என்னுடைய பழைய நிலையை மீட்டுங் காட்டினான் என்க.

பழைய நிலையாவது சிவபுரத்திலே ஆயத்தார்க்குத் தலைமகளாக இருந்த தன் நிலையை.

" மன்னவன் தன்மகன் வேடரிடத்தே தங்கி
வளர்ந்(து) அவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன் நீ என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சூழற்பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறுந்தொல் லுயிரை
மன்னும் அருட் குருவாகி வந்(து) அவரின் நீக்கி
மலம் அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்."

(சிவஞான சித்தியார். 253.)

என்பதனானும் இனிதறிக.

[(3) மூலையார் போகத்தே என் சிறுநெறி நினைவால் மையலுறக் கடவேன் என்றும், (5) என் நெஞ்சில் மையலுறுமாறே மடவார்க்கும் என் மேல் மையலுளதாகப் பைய வந்து, கடைக்கண் காட்டி, நெஞ்சு துயர் கூறச் செய்வர் என்றும், (6) அதனால் யானும் அவர் போலவே குவிமுலை மேல் வேணவாக் கொள்வேன் என்றும், (7) வேணவாக் கொண்ட யான் அவர் மையலைத் தழுவி என்னை விழைந்தவாறே யானும் விழைவேன் என்றும், (8) அவர் என்னொடு கலவியிற் புக்காங்கு யானும் மருது விழுவேன் என்றும் உரை விரித்துக் கொள்க. அங்ஙனங் கொள்ளின் கூறியது கூறல் நிகழாதென்க.]

**செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை**
**மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்**
**நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த**
**அம்மைஎனக்கு அருளியவா றார்பெறுவார் அச்சோவே. 9**

இதனால், கலவியில் விழுதற்குத் துணையாகவுடைய சிதடரொடும் திரிகின்ற தமக்கு, அம்மை யருளியமை கூறப்படுகின்றது.

(பொ - ரை.) யாவற்றுக்கும் முதற் காரணனும், நிமித்த காரணனும் ஆகியவன்தான், வீட்டின்பத்தினை அறியாத அறிவிலிகளுடன் கூடித் திரிவேனை மும்மலங்களையும் அறும்படி செய்து, கீழாய நம்மையும் நிலைபேறுடையேமாக ஆக்கி, நாய் சிவிகையில் ஏற்றுவித்த அழகினை எனக்கு அருளியவாறு அச்சோ ஆர் பெறுவார் எ - று.

[குறிப்பு :—(1) பத்திநெறி அறிவித்ததும், (2) கூத்தை அறிய நிலைசெய்ததும், (3) கழல்சேர் நெறிக்கு ஊக்கியதும், (4) தூய்நெறி சேரக் காப்பளித்ததும், (5) அபயம் அளித்ததும், (6) பிறவிக்கு அந்தங் காட்டியதும், (7) ஓங்காரத்துட்பொருள் அறிவுறுத்தியதும், (8) கழலை அடைக்கலமாகக் கொள்ளச் செய்ததும், (9) அம்மை யருளியதும் ஆகியவற்றுள் முறையே ஒவ்வொன்றே அவ்வப்பாக்

களிற் சிறப்புறப் பயின்றுவரும் துறைப்பொருள்கள் ஆகுமெனக் கொண்டு, கூறியது கூறலாகாமை உய்த்துணரற்பாலது ]

(வி - ரை.) 'முதல்ஆய முதல்வன்ஆய தான்' எனக் கொள்க. முதல் ஆய தான் - முதற் காரணனாய தான்; முதல்வன் ஆய தான் - நிமித்த காரணனாய தான்.

"நாய் சிவிகை ஏற்றுவித்த" என்பதை பிறிது ஒட்டாகக்கொள்க. இழிந்த என்னை உயர்ந்தோரே எய்துதறகுரிய நிலையில் வைத்த அழ

பொருளாக்கி அருளியது "அம்மை" எனவும் கொண்டுரைக்க.

"அருளியது" என்றார் திருவருளே அவற்றைக் காட்டுதலின். இங்ஙனமே முன்னரும் உரைத்துக் கொள்க.

[மற்றிதன்மேல் அவள்பக்கல் நிற்பக் காதல் மிக்க இறைவன் திருவாசகத்தொடு கோவையாரும் பாடுக எனப் பாடியருளினர் என்க.]

செத்திடமும் பிறந்திடமும் இனிச்சாவா திருந்திடமும்
அத்தனையும் அறியாதார் அறியுமறிவு எவ்வறிவோ
ஒத்தநிலம் ஒத்தபொருள் ஒருபொருளாம் பெரும்பயனை
அத்தன்எனக்கு அருளியவா(று) ஆர்பெறுவார் அச்சோவே.

[அழியும் இடமும் தோன்றுமிடமும் இனிப் பிறப் பிறப்பின்றி என்றும் அழியாத ஒருதன்மைத்தாயிருக்குமிடமும், தலைவனான இறைவனையும் அறியாதவருடைய பிறவற்றை அறியும் அறிவு என்ன அறிவோ? பயனற்ற அறிவு அன்றே! ஒத்ததான நிலமும் பொருளும் ஒருபொருளே ஆகுவதாய அவனை அடையும் பெரும் பயனை இறைவன் எனக்கு இன்று அருளியவாறு உலகில் யார் பெறுவார்? ஒருவரும் இல்லை. (அடியேன் பெற்றது வியப்பே.)] என்னும் இப்பாடல் பழைய ஏட்டுப் பிரதியில் இருந்ததாக செந்தமிழ்ச்செல்வி திங்கள்தாளில் கண்டது, பாகனேரி வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின்கண் உள்ளது.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருவாசகமும்,
மாவைக் கவுணியன் வெண்ணெய்க் கண்ணனார் என்னும்
க. சு. நவநீதகிருஷ்ண பாரதி
கண்ட ஆராய்ச்சிப் பேருரையும் ஒருவாறு நிறைவேறிய.

திருச்சிற்றம்பலம்

# செய்யுள் முதற் குறிப்பகராதி


| பாட்டு | பக்கம் |
|---|---|
| அங்கணனே | 1086 |
| அங்கியருக் | 662 |
| அடர்புல | 439 |
| அடற்கரி | 433 |
| அடியாரானீ | 1102 |
| அடியார் | 951 |
| அடியேனல்லல் | 967 |
| அடியேனல்லே | 367 |
| அட்டமூர்த் | 1067 |
| அணிமுடி | 1081 |
| அண்டப்பகுதி—செய்யுள் | 133 |
| ,, உரை | 139 |
| அண்ணாமலை | 499 |
| அதுபழச் | 781 |
| அத்தனே | 1025 |
| அத்தியுரித் | 666 |
| அத்தேவர் | 575 |
| அப்பனே | 391 |
| அம்பரமாம் | 639 |
| அம்பலத் | 637 |
| அம்மையே | 1021 |
| அயனையந் | 623 |
| அயன்றலை | 560 |
| அரிக்கும் | 600 |
| அரியானே | 276 |
| அருணனிந் | 775 |
| அருந்தவருக் | 640 |
| அருவந்த | 602 |
| அருளாதொ | 799 |
| அருளாரமுத | 952 |
| அருளுடை | 1022 |
| அரைசனே | 808 |
| அரை, பொ | 795 |
| அரைசேய | 438 |
| அரையாடு | 603 |
| அலரவனு | 625 |
| அலலிக்கமல | 881 |
| அவமாய | 601 |
| அழகேபுரிந் | 978 |
| அழிவின்றி | 1014 |
| அழுகே | 375 |
| அளவறு | 302 |
| அளவிலாப் | 944 |
| அளித்து | 834 |
| அளிபுண் | 853 |
| அறவேபெற் | 955 |
| அறவையே | 1024 |
| அறிவனே | 323 |
| அறிவிலா | 298 |
| அறுகெடு | 545 |
| அறுக்கிலே | 829 |
| அறையோ | 1126 |
| அன்பராகி | 827 |
| அன்பினா | 807 |
| அன்றாலநீழ் | 660 |
| அன்றேயெ | 974 |
| அன்னேயி | 479 |
| ஆடரப்பு | 737 |
| ஆடுகின்றி | 296 |
| ஆட்டின் | 684 |
| ஆட்டுத்தேவர் | 828 |
| ஆணாவலி | 725 |
| ஆதமிலி | 1032 |
| ஆதியுமந்த | 468 |
| ஆமாறுன் | 271 |
| ஆயநான் | 285 |
| ஆயமொ | 768 |
| ஆர்க்கோ | 1123 |
| ஆர்த்தபிற | 490 |
| ஆவகைநாமு | 557 |
| ஆவாதிரு | 680 |
| ஆவாவரி | 604 |
| ஆற்றகில்லே | 879 |
| ஆனையாய்க் | 526 |
| ஆனைவெம் | 421 |
| இடக்குங் | 1051 |

| பாட்டு | பக்கம் | பாட்டு | பக்கம் |
|---|---|---|---|
| இணையார் | 647 | உள்ளப் | 588 |
| இந்திரனு | 513 | உள்ளமல | 1138 |
| இந்திரிய | 935 | உள்ளன | 424 |
| இப்பாடே | 765 | உற்றவாக் | 871 |
| இப்பிறப்பி | 1061 | உற்றுரை | 1041 |
| இயக்கிமார | 931 | உன்னற், சீரு | 739 |
| இரங்குநம | 798 | உன்னற், திரு | 726 |
| இரந்திரந் | 812 | உன்னையுகப் | 754 |
| இருகை | 313 | ஊசலாட்டு | 1062 |
| இருடிணிந் | 872 | ஊனுயுயிரா | 528 |
| இருதலை | 409 | எங்களுயக | 908 |
| இருந்தெ, டா | 1132 | எச்சம்மறிவே | 999 |
| இருந்தெ, டு | 419 | எண்ணிலேன் | 816 |
| இருப்பு | 362 | எண்ணுடை | 710 |
| இரும்பு | 1030 | எந்தையா | 193 |
| இல்லை | 386 | எந்தையெ | 648 |
| இழித்தன | 343 | எம்பிரான் | 344 |
| இன்பந் | 752 | எய்தலாவ | 358 |
| இன்பம் | 1133 | எய்த்தே | 854 |
| இன்பான் | 767 | எரிமூன்று | 652 |
| இன்றெனக் | 813 | எறும்பிடை | 426 |
| இன்னிசை | 777 | எனைநானெ | 985 |
| ஈசனேநீ | 360 | என்பாலைப் | 1035 |
| ஈசனேயென் | 324 | என்புள்ளுரு | 1047 |
| ஈண்டிய | 1013 | என்பே | 1092 |
| ஈரம்பு | 675 | என்னணி | 1155 |
| உகந்தானே | 793 | என்னப்ப | 621 |
| உங்கையிற் | 500 | என்னாலறிய | 1166 |
| உடையநா | 389 | என்னை | 417 |
| உடையாளு | 790 | என்றும் | 711 |
| உடையானே | 332 | ஏகாசமிட்ட | 694 |
| உணர்ந்த | 809 | ஏசாநிற்ப | 796 |
| உண்டொ | 314 | ஏசிறும்யா | 455 |
| உண்ணப் | 686 | ஏதமிலா | 762 |
| உத்தமனத்த | 252 | ஏய்ந்த | 1058 |
| உமபர் | 1019 | ஏராரிளங் | 761 |
| உய்யவல்லா | 677 | ஏர்தரு | 748 |
| உரியேனல் | 1091 | ஏழைத்தொ | 715 |
| உருகிப்பெ | 611 | ஏனையாவ | 308 |
| உருத்தெரியா | 937 | ஐயனின் | 354 |
| உரைமாண்ட | 716 | ஒண்ணித்தி | 473 |
| உலக்கை | 547 | ஒண்மை | 422 |
| உலவாக் | 329 | ஒப்புனக் | 1023 |
| உவலைச் | 612 | ஒருவ | 345 |
| உழிதரு | 261 | ஒன்றாய் | 579 |
| [illegible] | 449 | ஒன்றிரெ | 1153 |

| பாட்டு | பக்கம் |
|---|---|
| ஒன்றும்பொ | 968 |
| ஒடுங்கவந் | 1045 |
| ஓயாதே | 518 |
| ஓய்விலா | 310 |
| ஓரொருகா | 495 |
| கடகரியும் | 635 |
| கடலினு | 414 |
| கடலின்றிரை | 988 |
| கடலேயனைய | 956 |
| கடவுளே | 342 |
| கடையவ | 398 |
| கட்டறு | 321 |
| கண்களிரண் | 1152 |
| கண்டது | 434 |
| கண்ணஞ் | 734 |
| கண்ணப் | 573 |
| கண்ணுர் | 976 |
| கதியடி | 444 |
| கமலநான் | 910 |
| கயன்மாண் | 607 |
| கரணங்க | 580 |
| கருடக்கொ | 850 |
| கருவாயுல | 586 |
| கலந்துநின் | 949 |
| கல்லாதபுல் | 938 |
| கல்லாமன | 515 |
| களிவந் | 416 |
| கள்வன்கடி | 591 |
| கறங்கோலை | 604 |
| கற்போலு | 703 |
| கற்றறியேன் | 1034 |
| கனவேயுந் | 606 |
| கன்ணுரித் | 605 |
| காசணி | 543 |
| காட்டகத்து | 1139 |
| காணலாம் | 316 |
| காணுங் | 1142 |
| காணும | 1093 |
| காணுமாறு | 368 |
| காதார் | 493 |
| காப்பாய் | 887 |
| காமனுட | 712 |
| காருடைப் | 755 |
| காருறு | 401 |
| காலமுண் | 1012 |
| காணுர்புலித் | 631 |

| பாட்டு | பக்கம் |
|---|---|
| கிஞ்சுக | 765 |
| கிளியனுர் | 999 |
| கிளிவந்த | 530 |
| கிற்றவா | 301 |
| கீதமினிய | 747 |
| குதுகுது | 435 |
| குலங்க | 430 |
| குலம்பாடி | 615 |
| குழைத்தாற் | 966 |
| குறியுநெறி | 1048 |
| குறைவிலா | 810 |
| கூடிக்கடி | 961 |
| கூவின | 776 |
| கூறுநாவே | 971 |
| கூற்றை | 1016 |
| கெடுவேன் | 1168 |
| கேட்டாயோ | 516 |
| கேட்டாரு | 293 |
| கையார் | 525 |
| கையாற் | 856 |
| கொந்தணவு | 756 |
| கொம்பரி | 420 |
| கொம்பில | 1050 |
| கொம்மை | 1053 |
| கொழுமணி | 428 |
| கொள்ளு | 318 |
| கொள்ளேர் | 400 |
| கொள்ளேன் | 251 |
| கொன்றை | 743 |
| கோணிலா | 1005 |
| கோயில்சுடு | 622 |
| கோலமேனி | 928 |
| கோலவரை | 728 |
| கோலாலமா | 627 |
| கோவே | 1171 |
| கோழிசிலம் | 481 |
| கோற்றேனெ | 990 |
| கோற்றேன் | 766 |
| சங்கமரற்றச் | 555 |
| சங்கரா | 343 |
| சங்கு | 1161 |
| சச்சை | 432 |
| சடையா | 1040 |
| சட்டோநினை | 577 |
| சதுரை | 1010 |
| சந்திரனை | 527 |

| பாட்டு | பக்கம் | பாட்டு | பக்கம் |
|---|---|---|---|
| சலமுடைய | 638 | தந்ததுன் | 817 |
| சாடியவே | 679 | தரிக்கிலே | 339 |
| சாதல் | 1183 | தவமே | 256 |
| சாதிகுலம் | 939 | தறிசெறி | 1004 |
| சாவமுன் | 253 | தனித்து | 441 |
| சித்தமேபுகு | 1071 | தனியனேன் | 291 |
| சிந்தனை | 290 | தன்மை | 337 |
| சிந்தை | 361 | தாதாடு | 763 |
| சிரிப்பார் | 801 | தாதாய்மூவே | 885 |
| சிரிப்பிப்ப | 454 | தாமேதம | 1100 |
| சீரார்திரு | 665 | தாயாய் | 1170 |
| சீரார்பவ | 720 | தாரகை | 453 |
| சீலமின்றி | 1167 | தாராயு | 373 |
| சீவார்ந்தீ | 851 | தாராவருளொ | 959 |
| சுடர்பொற் | 877 | தாளியறுகி | 741 |
| சுந்தரத் | 752 | தானந்தமில் | 629 |
| சுந்தர நீ | 542 | திகழுத்திகழு | 882 |
| சுருள்புரி | 842 | திண்போர் | 663 |
| சூடகந்தோ | 548 | திருந்துவார் | 917 |
| சூடுவேன் | 529 | திருமாலும் | 598 |
| சூரியனார் | 689 | திருவார் | 599 |
| செங்கணெடு | 510 | தில்லைமூதூர் | 65 |
| செங்கணவ | 497 | தினைத்தனை | 572 |
| செடியாராக் | 857 | தீதில்லை | 707 |
| செப்பார் | 523 | தீர்க்கின் | 408 |
| செம்மை | 1184 | தீர்ந்தவன் | 348 |
| செய்த | 1124 | துடிகொ | 911 |
| செய்யவாய் | 764 | துடியேரிடு | 1046 |
| செய்வதறி | 325 | துணியாவுரு | 958 |
| செல்வநல் | 320 | துண்டப் | 520 |
| செழிகின் | 405 | துப்பனே | 912 |
| செழுக்கமல | 839 | தூவெள் | 1085 |
| செறியுமி | 1064 | தெங்குலவு | 729 |
| செறியும் | 1012 | தென்பாலுக | 628 |
| சேரக்கருதி | 1113 | தேரைநிறுத்தி | 693 |
| சொல்லிய | 1160 | தேவதேவன் | 1066 |
| சோதியாய் | 815 | தேவர்கோ | 296 |
| சோதியே | 906 | தேவாகமாம | 558 |
| சோலைப்ப | 769 | தேனுடுகொ | 651 |
| ஞாலமிந்தி | 833 | தேனைப் | 335 |
| ஞானக்கரு | 556 | தென்பழச் | 750 |
| ஞானவா | 1117 | தேன்புக்க | 634 |
| [illegible] | 1003 | தையலார் | 1182 |
| தக்கனு | 689 | தையலோர் | 742 |
| தக்கனையு | 624 | தொண்டர்கா | 1117 |
| தச்சுவிடு | 677 | தோலுந்து | 590 |

| பாட்டு | பக்கம் | பாட்டு | பக்கம் |
|---|---|---|---|
| நங்காயிதெ | 630 | பணிவார் | 376 |
| நங்கைமீரெ | 1068 | பண்சுமந் | 519 |
| நஞ்சமர் | 724 | பண்டாய | 1136 |
| நடித்து | 1058 | பண்பட்ட | 650 |
| நண்ணிப் | 1141 | பண்ணுர்ந் | 1031 |
| நமச்சிவாய | 7 | பண்ணினேர் | 896 |
| நரியை | 1172 | பத்தர்சூழப் | 1069 |
| நல்கா | 802 | பத்திமை | 943 |
| நல்லமலரி | 692 | பத்திலனே | 1093 |
| நன்ருக | 636 | பந்தணைவிர | 899 |
| நாடகத்தா | 266 | பந்தவிகார | 1154 |
| நாதமுடைடிய | 1084 | பப்பற | 779 |
| நாமகளுசி | 687 | பரந்துபல் | 257 |
| நாயிற்கடைப் | 649 | பரம்பர | 436 |
| நாயிற்கடை | 975 | பரவுவாரி | 275 |
| நாயேனை | 584 | பரவுவாரவர் | 867 |
| நாஞரடி | 984 | பரிந்துவந்து | 883 |
| நாஞரென் | 570 | பரிதிவாழொ | 898 |
| நானுமென் | 587 | பருவரை | 9100 |
| நானேயோ | 1038 | பவனெம் | 262 |
| நான்மறை | 687 | பழிப்பினி | 452 |
| நான்முகன் | 687 | பழுதிருல் | 901 |
| நான்றனக் | 585 | பறருங்கவை | 987 |
| நித்தமணு | 735 | பன்னுட்பரவி | 655 |
| நிருத்தனே | 908 | பாஙகினெடு | 944 |
| நிலநீர் | 704 | பாசம்பரஞ் | 470 |
| நினைப்ப | 357 | பாசவே | 1024 |
| நினையப்பிற | 884 | பாடவே | 393 |
| நிற்பார் | 1109 | பாடிமால்புக | 894 |
| | 870 | பாடிற்றிலே | 448 |
| நீண்டகர | 738 | பாதாள | 485 |
| நீண்டமாலு | 880 | பாரார்விசு | 512 |
| நீதியாவன | 864 | பாருருவாய | 1089 |
| நீரின்பவெ | 1011 | பாரொடு | 892 |
| நீலவுரு | 749 | பாரோர் | 855 |
| நெக்குநெக் | 884 | பார்பத | 814 |
| நெடுந்த | 413 | பார்பாடு | 609 |
| நெறிசெய் | 654 | பார்ப்பதி | 681 |
| நெறியல்லா | 1177 | பாலகனுர்க் | 691 |
| நோயுற்று | 581 | பாலுமமுத | 657 |
| பங்கயமா | 711 | பாவநாசா | 900 |
| | 1033 | பாழ்ச்செய் | 1052 |
| பஞ்சாய | 1035 | பாற்றிரு | 1094 |
| பஞ்சாயவ | 1180 | பானினைந் | 1026 |
| பஞ்சின்மெல் | 897 | பிட்டுநேர் | 923 |
| படமாகவெ | 661 | பிணக்கிலாத | 922 |

| பாட்டு | பக்கம் | பாட்டு | பக்கம் |
|---|---|---|---|
| பிணியெலா | 1000 | பேருங்குண | 1049 |
| பித்தனென் | 866 | பைங்குவ | 492 |
| பித்தென்னை | 1128 | பைந்நாப்ப | 983 |
| பிரமனரி | 713 | பொச்சை | 1063 |
| பிறவிதனை | 942 | பொதும் | 437 |
| பிறவியென் | 1072 | பொத்தை | 869 |
| பிறிவறியா | 845 | பொய்யவ | 407 |
| புகவே | 264 | பொய்யனே | 822 |
| புகவேவே | 1099 | பொய்யாய | 589 |
| புகழ்மின் | 1107 | பொய்யெல் | 1179 |
| புகுவதா | 304 | பொருட்ப | 702 |
| புகுவே | 338 | பொருத்த | 384 |
| புணர்ப்ப | 351 | பொருந்து | 1059 |
| புத்தன்புரந் | 611 | பொருளே | 418 |
| புத்தன்மு | 706 | பொலிகின் | 410 |
| புரந்தரனு | 682 | பொழிகின்ற | 841 |
| புரள்வார் | 1114 | பொன்னிய | 1158 |
| புலன்கடி | 429 | போகம் | 352 |
| புலையனே | 826 | போதுசேரய | 832 |
| புவனியிற் | 785 | போரேறே | 327 |
| புழுவினுற் | 1072 | போற்றியரு | 502 |
| புறமே | 372 | போற்றியிப் | 349 |
| புற்றில்வா | 996 | போற்றி-போ | 341 |
| புறுமாய் | 824 | போற்றி-வாழ் | 773 |
| புன்புலால் | 1027 | போற்றியென்று | 317 |
| பூங்கமல | 1040 | போற்றியோ | 340 |
| பூசுவதும் | 620 | மஞ்சுலா | 1004 |
| பூணொணாத | 926 | மடங்க | 420 |
| பூதங்கடோ | 778 | மண்ணதனிற் | 1179 |
| பூதங்களை | 945 | மண்ணினின் | 1157 |
| பூத்தாரும் | 699 | | 1051 |
| பூமேலயனோ | 593 | மத்துறு | 431 |
| பூவலர் | 1085 | மருவினிய | 1037 |
| பூவார் | 1097 | மருளனேன் | 916 |
| பூவியல் | 541 | மலங்கினேன் | 924 |
| பூவேறு | 569 | மலைமகளை | 626 |
| பெருநீற | 427 | மலையரை | 632 |
| பெருமான் | 1111 | மன்னவ | 446 |
| பெரும்பெரு | 841 | மன்னவெ | 392 |
| பெறறது | 423 | மறுத்த | 406 |
| பெற்றிபிறர்க் | 532 | மாடுஞ்சு | 1060 |
| பேசப்பட் | 365 | மாடுநகை | 552 |
| பேசிற்று | 287 | மாதாடு | 726 |
| பேசும் | 166 | மாதிவர் | 1079 |
| பேதமில்ல | 929 | மாயவாழ்க் | 1070 |
| பேராசை | 656 | மாயவனப் | 1014 |

| பாட்டு | பக்கம் | பாட்டு | பக்கம் |
|---|---|---|---|
| மாயனே | 830 | மெய்யனே | 913 |
| மாலயன் | 1080 | மேலைவா | 315 |
| மாலறியா | 475 | மேவுமுன்ற | 954 |
| மாலேபிரம | 610 | மைப்பொலி | 524 |
| மாவடுவகிர | 844 | மையமர் | 553 |
| மாவாரவேறி | 667 | மையலா | 1057 |
| மாழைமை | 843 | மையிலங் | 382 |
| மாறி-றெனை | 299 | மொய்ப்பா | 851 |
| மாறி-றென் | 805 | மொய்யார் | 489 |
| மாறிலா | 380 | யாவர்க்கு | 1131 |
| மாறுபட் | 412 | யானேதும் | 267 |
| மானமழிந் | 709 | யானேபொ | 379 |
| மானேநீ | 477 | வட்டமலர் | 561 |
| மா-க்கிம | 970 | வணங்கத் | 653 |
| மா-க்கியுடை | 369 | வணங்குநி | 355 |
| மானே-யுமை | 330 | வணங்குமி | 1061 |
| மானேர்பங்க | 960 | வண்ணந் | 288 |
| மிடைந்தெ | 853 | வந்திமை | 1082 |
| மின்கணி | 844 | வம்பனுய்த் | 1073 |
| மின்னிடை | 554 | வம்பனேன் | 893 |
| மின்னேர | 1165 | வருந்துவ | 269 |
| முடித்த | 333 | வலைத்தலை | 442 |
| முதலை | 443 | வல்லைவா | 895 |
| முத்தணி | 551 | வழங்குகின் | 846 |
| முத்தனே | 914 | வளர்கின் | 404 |
| முத்தனை | 1074 | வளைந்தது | 675 |
| முத்தன்ன | 472 | வன்புலால் | 998 |
| முத்திக்குழ | 608 | வன்னெஞ் | 583 |
| முத்திநெறி | 1176 | வாட்டடங் | 549 |
| முத்துநற்றும | 540 | வாராவழி | 1129 |
| முந்தியமுத | 782 | வாவிங் | 755 |
| முழுதயில் | 447 | வாழ்கின் | 279 |
| முழுமுதலே | 794 | வாழ்த்துவ | 273 |
| முழுவதுங் | 259 | வாழ்ந்தார் | 1140 |
| முன்னுய | 665 | வாளுலா | 1001 |
| முன்னுனை | 531 | வானநா | 387 |
| முன்னிக் | 496 | வானவன் | 658 |
| முன்னின்று | 792 | வானுகி | 272 |
| முன்னீறு | 721 | வான்கெட் | 613 |
| முன்னைப் | 483 | வான்பாவிய | 992 |
| முன்னையெ | 865 | வான்வந்த | 514 |
| முன்னைவி | 1126 | விச்ச | 838 |
| மூத்தானே | 1036 | விச்சுக் | 364 |
| மூவரு | 1131 | விச்சைதா | 294 |
| மூன்றங் | 721 | விடுமின் | 1106 |
| மெய்தா | 249 | விடைவிடா | 1020 |

| பாட்டு | பக்கம் |
|---|---|
| | 783 |
| விண்ணு | 521 |
| விண்ணேர் | 614 |
| விரவிய | 1015 |
| வினைக்கேட | 986 |
| வினைப்பிறவி | 936 |
| வினையிலே | 283 |
| வினையெ | 306 |
| வெஞ்சின | 683 |
| வெஞ்சேல | 857 |
| வெந்து | 1180 |
| வெய்யவ | 680 |
| வெய்யவி | 1122 |
| வெருவரேன் | 997 |
| வெள்ளத் | 415 |
| வெள்ளந் | 280 |

| பாட்டு | பக்கம் |
|---|---|
| வெள்ளைக் | 740 |
| வெறுப்பன | 840 |
| வேடுருவாகி | 1081 |
| வேண்டத்த | 973 |
| வேண்டுநி | 355 |
| வேண்டும் | 953 |
| வேண்டேன் | 989 |
| வேதமும் | 561 |
| வேதமொ | 733 |
| வேவத் | 1083 |
| வேனில்-க | 311 |
| வேனில்-ம | 278 |
| வைத்தநிதி | 577 |
| வைப்புமா | 862 |
| வையக | 550 |


